# வாழ்வியற் களஞ்சியம்

## தொகுதி இரண்டு




தமிழ்ப் பல்கலைக்கழகம்

தஞ்சாவூர்

ISBN : 81 - 7090 - 058 - 1

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு : 53 - 2

திருவள்ளுவராண்டு 2032 பங்குனி - ஏப்பிரல் 2001

| | | |
|---|---|---|
| நூல் | | வாழ்வியற் களஞ்சியம் |
| | | தொகுதி இரண்டு |
| முதன்மைப் பதிப்பாசிரியர் | : | முனைவர் நா. பாலுசாமி |
| மொழி | : | தமிழ் |
| பொருள் | : | களஞ்சியம் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு 1986 |
| | | மறுபதிப்பு 2001 |
| பக்கம் | : | 1016 |
| தாள் | : | டிஎன்பிஎல் எக்ஸ் எல் மேப்லித்தோ |
| அளவு | : | 1/4 டெம்மி |
| நூற்கட்டுமானம் | : | காலிகோ |
| விலை | : | உரூ. 700/- |
| படிகள் | : | 500 |
| அச்சு | : | தமிழ்ப் பல்கலைக்கழக மறுதோன்றி அச்சகம், தஞ்சாவூர். |

# வாழ்வியற் களஞ்சியம்

புரவலர்

மாண்புமிகு டாக்டர் திரு. **எம்.ஜி. இராமச்சந்திரன்**

முதலமைச்சர்

தமிழ் நாடு

வேந்தர்

மேதகு திரு. **எஸ். எல். குரானா**

ஆளுநர்

தமிழ்நாடு

இணைவேந்தர்

மாண்புமிகு திரு. **செ. அரங்கநாயகம்**

கல்வி அமைச்சர்

தமிழ்நாடு

துணைவேந்தர்

பேராசிரியர் டாக்டர். **வ. அய். சுப்பிரமணியம்**

# பதிப்புக் குழு

*முதன்மைப் பதிப்பாசிரியர்:*

பேராசிரியர் டாக்டர். நா. பாலுசாமி, எம்.ஏ.,பி.எல்.,எம்.லிட்.,பிஎச்.டி.
(4.4.84—)

*பதிப்பாசிரியர்:*

1. டாக்டர் (திருமதி) அரோமா குளோரி சாம், எம்.ஏ.,பிஎச்.டி. (28.9.83 –) ... பொருளியல், வணிகவியல்
2. ......... ... வரலாறு, அகழாய்வு
3. டாக்டர் அ.மா. பரிமணம், எம்.ஏ., எம்.லிட்.,பிஎச்.டி. (20.9.84 –) ... மொழி, மொழியியல்
4. டாக்டர் இரா. கோலப்பப்பிள்ளை, எம்.ஏ., பிஎச்.டி. (24.7.85 –) ... தத்துவம்
5. டாக்டர் பா. சூரியநாராயணன், எம்.ஏ., (வரலாறு), எம்.ஏ., (அரசியல்) எம்.லிட்.,பிஎச்.டி. (1.12.85 –) ... அரசியல்
6. ........... ... சட்டம்

*செய்தி திரட்டுவோர்:*

1. ........... ... முதன்மைப் பதிப்பாசிரியரின் செய்தி திரட்டுவோர்
2. திரு சு. இராசவேலு, எம்.ஏ., எம்.பில். (25.4.84—) ... வரலாறு, அகழாய்வு
3. திரு. வீ. சேகர், எம்.ஏ., எம்.பில்.,பி.எட். (1.8.84 —) ... மொழி, மொழியியல்
4. டாக்டர் சீ. தங்கசாமி, எம்.ஏ., எம்.எட்.,பிஎச்.டி. (7.1.85— ) ... கல்வியியல்
5. திரு சீ. பக்தவச்சலு, எம்.ஏ. (4.2.85— ) ... மானிடவியல்

*மொழி வல்லுநர் - மெய்ப்புத் திருத்துநர்:*

திரு. உ. பழநி, எம்.ஏ.,பி.ஓ.எல். (1.10.84—)

# இரண்டாம் தொகுதி: கட்டுரையாளர்கள்

அ.அ.ம.
டாக்டர் அ. அ. மணவாளன், எம்.ஏ.,பிஎச்.டி.
தமிழ் மொழித்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை.

அ.இரா.
பேரா. அ. இராமசாமி
வரலாற்றுத்துறை
அரசினர் கலைக்கல்லூரி
முசிறி.

அ.இரா.
டாக்டர் அ. இராமசுவாமி, எம்.ஏ.,எம்.லிட்,பிஎச்.டி.
பொருளியல் துறைத் துணைத் தலைவர் (ஓய்வு)
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்
அண்ணாமலைநகர்.

அ.கா.
டாக்டர் அ. காமாட்சிநாதன், எம்.ஏ.,பிஎச்.டி.
மொழியியல் துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்.

அ.கா.ப.
திரு.அ. கா. பச்சையண்ணன், எம்.ஏ.,பி.டி.
தலைமை ஆசிரியர்
அரசு பெண்கள் மேல்நிலைப்பள்ளி
பெருந்துறை.

அ.கி.
டாக்டர் அ. கிருட்டிணசாமி
வரலாற்றுப் பேராசிரியர் (ஓய்வு)
7 ஏ,புகையிலைத் தோட்டம்
அண்ணாமலைநகர்.

அ.கே.
பேரா. அ. கேசவன்
வரலாற்றுப் பேராசிரியர் (ஓய்வு)
3,மேட்டுக்கம்மாளத்தெரு
காஞ்சிபுரம்.

அ.ச.
திரு. அ. சங்கரநாராயணன்
எண் 9, நியூ பங்கசம் காலனி
மதுரை.

அ.ந.
புலவர் அ. நடராசன், எம்.ஏ.
டி 5, இர்ராசாசி சாலை
நெய்வேலி.

அ.பி.பொ.
திருமதி அ. பி. பொற்கொடி, எம்.ஏ.,எம்.எல்.
இளநிலைப் பேராசிரியர்
சட்டக் கல்லூரி
மதுரை.

அர.சி.
டாக்டர் அர. சிங்காரவடிவேலன்,
எம்.ஏ.,பி.டி.,பிஎச்.டி.
தமிழ்த் துறைத் தலைவர்
திருசேவுகன் அண்ணாமலை கல்லூரி
தேவகோட்டை.

அர.சு.
பேரா. அர. சுப்பிரமணியம், எம்.ஏ.,எம்.எல்.
இளநிலைப் பேராசிரியர்
சட்டக் கல்லூரி
கோயம்புத்தூர்.

ஆ.ச.
டாக்டர் ஆ. சந்திரசேகரன்
அஞ்சல்வழிக் கல்வித்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை.

ஆ.செ.
திரு. ஆ. செல்லபெருமாள் எம்.ஏ.,
ஆய்வாளர்
மானிடவியல் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை.

ஆ.ந.
டாக்டர் ஆனந்த நடராசதீட்சிதர், எம்.ஏ.,பிஎச்.டி.
விரிவுரையாளர்
தமிழ்த்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்.

ஆர்.கே.பா.
திரு. ஆர். கே. பாலசுப்பிரமணியம்

வழக்கறிஞர்
சித்திரக்குளம் வடக்கு
சென்னை.

ஆர்.சீ.
திரு. ஆர். சீனிவாசன்
ஆய்வாளர்
கல்வியியல் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை.

ஆர்.வி.
திருமதி ஆர். விமலா இரகோத்தமன்
சமூகப் பணியாளர்
இந்திய சமூக சுகாதார நிறுவனம்
சென்னை.

ஆறு.அ.
டாக்டர் ஆறு. அழகப்பன், எம்,ஏ.,எம்.லிட்.,பிஎச்.டி.
தமிழ்த் துறைத் தலைவர்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்.

இர.ஆ.
பேரா. இர. ஆலாலசுந்தரம், எம்.ஏ.
பதிவாளர்
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

இரா.கி.
திரு. இரா. கிருட்டிணன்
35 முருகப்ப முதலித் தெரு
விவேகானந்தர் இல்லம்
திருவல்லிக்கேணி
சென்னை.

இரா.கு.
திரு. இரா. குருநாதன், எம்.ஏ.,எம்.பில்,
துணைப் பேராசிரியர்
கரந்தைப் புலவர் கல்லூரி
கரந்தட்டாங்குடி
தஞ்சாவூர்.

இரா.கோ.
பேரா. இரா. கோலப்பப்பிள்ளை, எம்.ஏ.,பிஎச்.டி.
இணைப் பேராசிரியர்.
தத்துவத்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்.

இரா.சு.
திரு. இரா. சுவாமிநாதன்
சென்னை உரத்தொழிற்சாலை நிறுவனம்
இந்திரா நகர்
சென்னை.

இரா.செ.
டாக்டர் இரா. செயபால், எம்.ஏ.,பிஎச்.டி
தமிழ்ப் பேராசிரியர்
அ. வீ. வா. நினைவு திரு புட்பம் கல்லூரி
பூண்டி.

இரா.பி.தே.
டாக்டர் இராசம்மாள் பி. தேவதாசு
இயக்குநர்
டாக்டர் அவிநாசிலிங்கம் மனையியல் கல்லூரி
கோயம்புத்தூர்.

ஈ.ஞா.வே.
டாக்டர் செல்வி ஈ. ஞா. வேதநாயகம்
தலைவி
கல்விப் புலத் தலைமைப் பேராசிரியர்
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை.

ஈ.வே.மா.
பேரா. ஈ. வே. மாரியப்பன், எம்.ஏ.,எம்.பில்.
தமிழ்ப் பேராசிரியர்
தியாகராசர் கல்லூரி
மதுரை.

எ.எஸ்.பி.
டாக்டர் எ.எஸ். பிள்ளை, எம்.ஏ.,எம்.எட்.,பிஎச்.டி.
தத்துவத் துறைத் தலைவர்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்.

எ.டி.ச.
திரு. எட்வின் டி. சகாயம்
பணியாளர் மேலாளர்
சென்னை உரத்தொழிற்சாலை நிறுவனம்
மணலி
சென்னை.

எச்.நி.
பேரா. எச். நியூமன், எம்.ஏ.
முதல்வர்
பூ. சா. கோ. கிருட்டிணம்மாள் கலைக்கல்லூரி
பூளைமேடு
கோயம்புத்தூர்.

எம்.அ.
டாக்டர் எம். அப்துல்ரகிம்

பேராசிரியர்
வரலாற்றுத்துறை
அரசினர் கலைக்கல்லூரி
திருவெறும்பூர்
திருச்சி.

எம்.இரா.

டாக்டர் எம். இராமதாசு, எம்.ஏ.,பிஎச்.டி.
விரிவுரையாளர்
பொருளியல் துறை
பாரதிதாசன் மகளிர் கல்லூரி
பாண்டிச்சேரி.

எம்.எஸ்.கோ.

திரு. எம்.எஸ். கோபால்
41, மூன்றாவது குறுக்குத் தெரு
திருவான்மியூர்
சென்னை.

எம்.எஸ்.சு.

பேரா. எம். எஸ். சுப்பிரமணியன்,
எம்.ஏ.,எம்.எல்.,ஐ.எஸ்.
இளநிலைப் பேராசிரியர்
நூலகவியல் மற்றும் தகவல் இயல் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை.

எம்.நா.

டாக்டர் எம். நாகநாதன், எம்.ஏ.,பிஎச்.டி.
பொருளியல் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை.

எம்.வெ.

டாக்டர் எம். வெங்கட்ராமன், எம்.ஏ.,பிஎச்.டி.
தத்துவத் துறைத் துணைப் பேராசிரியர்
விவேகானந்தா கல்லூரி
சென்னை.

எல்.இரா.

பேரா. எல். இராமமூர்த்தி
118, ஜெயம்மாள் சாலை
அப்பாவு நாயுடு காலனி
சென்னை.

என்.இ.இ.

திரு. என். இ. இராமலிங்கம்
செக்சன் அலுவலர்
தென்னிந்திய இரயில்வே
பூங்கா நகர்
சென்னை.

என்.எஸ்.பா.

டாக்டர் என். எஸ். பாலசுப்பிரமணியன், எம். ஏ.,
பிஎச். டி.
துறைத் தலைவர்
பொருளியல் துறை
என்.எம்.எஸ்.எஸ். வெள்ளைச்சாமி நாடார் கல்லூரி
மதுரை.

என்.மா

டாக்டர் என். மாத்ருபூதம்
உளவியல் மருத்துவம்
அண்ணாநகர்
சென்னை.

எஸ்.அ.

டாக்டர் எஸ்.அகத்தியலிங்கம், எம். ஏ., பிஎச்.டி.
துறைத் தலைவர்
மொழியியல் துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்.

எஸ்.இரா.

திரு. எஸ். இராமச்சந்திரன், எம்.ஏ.,எம்.ஏ.,எம்.பில்.
ஆய்வாளர்
மக்கள் தொகையியல் மையம்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்.

எஸ்.எஸ். என்.து.

டாக்டர் எஸ். எஸ். என். துபே
168 புதுக் கட்டிடம்
பகதூர்கான்சி
பெய்சாபாத்து
உத்தரப்பிரதேசம்.

எஸ்.கு.

டாக்டர் எஸ். குருமூர்த்தி. எம். ஏ., எம். லிட்.,
பிஎச். டி.
பண்டைய வரலாறு - தொல்லியல் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை.

எஸ்.கோ.

பேரா. எஸ். கோபாலகிருட்டிணன்
39 படேல் தெரு
பெரம்பூர்
சென்னை.

எஸ்.ச.

பேரா. எஸ். சந்தானம்
முதல்வர் (ஓய்வு)

வேலூர்.

எஸ்.பு.

டாக்டர் எஸ். புருசோத்தமன்
கல்வியியல் கல்லூரி
இராமகிருட்டிண வித்தியாலயம்
கோயம்புத்தூர்.

எஸ்.மோ.

டாக்டர் எஸ். மோகன்
விரிவுரையாளர்
கல்வியியற் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை.

எஸ்.வி.நா.

திரு. எஸ். வி. நாராயணன்
மண்டல மேலாளர்
இந்திய ஆயுள் காப்பீட்டுக் கழக அலுவலகம்
சென்னை.

ஏ.ஆ.

டாக்டர் ஏ. ஆதித்தன், எம். ஏ., பிஎச். டி.
விரிவுரையாளர்
மொழியியல் துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை.

ஏ.டி.ப.

டாக்டர் ஏ. டி. பவானி
விரிவுரையாளர்
உளவியல் துறை
அனைத்திந்திய பேச்சு மற்றும் கேள்வி நிறுவனம்
மைசூர்.

ஏ.ப.செ.

பேரா. ஏ. பன்னீர் செல்வம்
அரசினர் கல்வியியல் கல்லூரி
சைதாப்பேட்டை
சென்னை.

ஏ.பா.

டாக்டர் ஏ. பாண்டுரெங்கன், எம். ஏ., பிஎச். டி.
தமிழ்ப் பேராசிரியர்
தாகூர் கலைக் கல்லூரி
பாண்டிச்சேரி.

ஏ.வி.அ.

திரு. ஏவி. அரங்காச்சாரி, எம். ஏ.
பொருளாதாரத் துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலை நகர்.

ஓ.சு.

திரு. ஓ. சுப்பிரமணிய பிள்ளை
தலைமைப் பேராசிரியர்
சமூகவியல் துறை
இந்துக் கல்லூரி
நாகர்கோவில்.

க.கி.

டாக்டர் க. கிருட்டிணசாமி, எம். ஏ., பிஎச்.டி.
458 வி.வி.செட்டி காலனி
புளிய குளம் சாலை
கோயம்புத்தூர்.

க.கு.

டாக்டர் க. குழந்தை வேலு
முதல்வர்
கலைக் கல்லூரி
இராமகிருட்டிண வித்தியாலயம்
கோயம்புத்தூர்.

க.ச.

திரு. க. சண்முக வேலாயுதம்
விரிவுரையாளர்
சமூகப் பணித்துறை
இலயோலாக் கல்லூரி
சென்னை.

க.சி.க.

திரு. க. சி. கமலய்யா
இராகவ ரெட்டி காலனி
சாபர்கான்பேட்டை
சென்னை.

க.தி.

டாக்டர் கமலேசு திவாரி
பேராசிரியர்
உளவியல் துறை
பனாரசு இந்துப் பல்கலைக்கழகம்
வாரணாசி.

க.ப.அ.

திரு. க. ப. அறவாணன், எம். ஏ., எம். லிட்., பிஎச்.டி.
தமிழ்த் துறைத் தலைவர்
இலயோலாக் கல்லூரி
சென்னை.

க.மு.

டாக்டர் க. முருகையன், எம். ஏ., பிஎச்.டி.

இணைப் பேராசிரியர்
மொழியியல் துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்.

கி.கோ.
பேரா. கி. கோதண்டபாணி, எம். ஏ., பி. ஓ. எல்.
பிரதாப சிம்மபுரம்
தஞ்சாவூர்.

கி.பி.
பேரா. கி. பிரகதாம்பாள்
வெளிப்பட்டணம்
கேணிக்கரை
இராமநாதபுரம்.

கி.ம.
பேரா. கி. மணி
வரலாற்றுத்துறை
எல். என். ஜி. கலைக்கல்லூரி
பொன்னேரி.

கி.ரா.
டாக்டர் கி. இராசேந்திரன்
விரிவுரையாளர்
உளவியல் துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணமலைநகர்.

கீ.
புலவர் கீரன், எம். ஏ., பி. லிட்.
93 முதல் தெரு
பரமசிவபுரம்
இலால்குடி.

கு.இரா.
திரு. கு. இராசாராம், பி. ஏ., பி. எல்.
சட்ட ஆலோசகர்
இலட்சுமி விலாஸ் பாங்கு தலைமை அலுவலகம்
கரூர்.

கு.சீ.
டாக்டர் கு. சீநிவாசன்
தொல் அறிவியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

கு.சு.
டாக்டர் கு. சுந்தரமூர்த்தி, எம். ஏ., பிஎச். டி.
முதல்வர்
தமிழ்க் கல்லூரி
திருப்பனந்தாள்.

கூ.ரா.ந.
டாக்டர் கூ. ரா. நஞ்சுண்டன், எம். ஏ., பிஎச். டி.
இயக்குநர்
தமிழ்ப் பல்கலைக் கழகத் தத்துவ மையம்
காஞ்சிபுரம்.

கே.சி.சா.
பேரா. கே. சி. சாந்தா
அரசினர் மகளிர் கல்வியியல் கல்லூரி
சென்னை.

கே.நா.
டாக்டர் கே. நாகு, எம்.ஏ., பிஎச்.டி.
தமிழ்ப் பேராசிரியர்
மாநிலக் கல்லூரி
சென்னை.

கே.வ.
பேரா. கே. வசந்திதேவி
துணைவேந்தர்
அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகம்
கொடைக்கானல்.

கே.வி.கா.
டாக்டர் கே. வி. காளியப்பன்
பேராசிரியர்
உளவியல் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை.

கே.வெ.சு.
டாக்டர் கே. வெஙகடசுபபரமணயம
திட்டக்குழு உறுப்பினர்
எழிலகம்
சென்னை.

கோ.ச.
டாக்டர் கோ. சங்கரநாராயணன் எம்.ஏ., பிஎச்.டி.
இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனம்
மானச கங்கோத்திரி
மைசூர்.

கோ.வி.
டாக்டர் கோ. விசயவேணுகோபால், எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.
இணைப் பேராசிரியர்
தமிழ்த் துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை.

ச.பா.
பேரா. ச. பாலசுந்தரம்
மேலராச வீதி
தஞ்சாவூர்.

சா.அர.
திருமதி சாந்தி அரங்கநாதன்
நோய்சார் ஆய்வு நிறுவனம்
சென்னை.

சி.அ.
பேரா. சி. அருணைவடிவேல் முதலியார்
சைவசித்தாந்த சிறப்புப் பேராசிரியர்
தமிழ்ப் பல்கலைக்கழகத் தத்துவ மையம்
காஞ்சிபுரம்.

சி.என்.ந.
டாக்டர் சி. என். நடராசன், எம்.ஏ., பிஎச்.டி.
இணைப் பேராசிரியர்
சமூகவியல் துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழக விரிவாக்க மையம்
பாளையங்கோட்டை.

சி.எஸ்.கி.
பேரா. சி. எஸ். கிருட்டிணதாசு
முன் பயிற்சிநிலையம் (பிற்பட்ட வகுப்பு)
மேற்கு சி. ஐ. டி. நகர்
நந்தனம்
சென்னை.

சி.க.
டாக்டர் சி. கதிர்மகாதேவன், எம்.ஏ., எம்.லிட்.,
பி.எச்.டி.
இணைப் பேராசிரியர்
தமிழ்த் துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை.

சி.கி.
டாக்டர் சி. கிருட்டிணமூர்த்தி
பேராசிரியர்
பண்டைய வரலாறு – தொல்லியல் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை.

சி.சி.
திருமறைத்தந்தை சி. சிரக்கல்
தலைவர்
சமூகப் பணித்துறை
இலயோலா கல்லூரி
சென்னை.

சி.பொ.
திரு. சி. பொன்னுசாமி
முதல்வர்
அரசினர் கல்வியியல் கல்லூரி
சென்னை.

சி.ம.
திரு. சி. மகேசுவரன், எம். ஏ., எம்.ஏ.
உதவிக்காப்பாட்சியர்
அரசு அருங்காட்சியகம்
சென்னை.

சீ.சொ.
திரு. சீ. சொக்கலிங்கம், பி.ஏ., பி.எல்.
இணைச் செயலர் – சட்டத்துறை
அரசு தலைமைச் செயலகம்
சென்னை.

சீ.ப.
திரு. சீ. பக்தவச்சலு, எம்.ஏ.,
மனை எண் 52 ஜெயராம் நகர்
கொளத்தூர்
சென்னை.

சு.ச.
டாக்டர் சு. சண்முகசுந்தரம், எம்.ஏ., பிஎச். டி.
தமிழ்ப் பேராசிரியர்
புனித சோசப் கல்லூரி
பெங்களூர்.

சு.சக்தி.
டாக்டர் சு. சக்திவேல், எம்.ஏ., பிஎச்.டி.
இணைப் பேராசிரியர்
மொழியியல் துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலை நகர்.

சு.சு.
டாக்டர் சு. சுவாமிஐயா, எம்.ஓ.எல்., பி.எச்.டி.
இணைப் பேராசிரியர்
தமிழ்த் துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்.

சு.ந.சொ.
திரு. சு. ந. சொக்கலிங்கம், எம்.ஏ.
துணைக் கல்லூரிக் கல்வி இயக்குநர்

மதுரை மண்டலம்
மண்டலக் கல்லூரிக் கல்வி இயக்குநரகம்
மதுரை.

சு.வ.
திருமதி சு. வசந்தா, எம்.ஏ., எம்.பில்.
தத்துவத் துறைப் பேராசிரியை
பச்சையப்பன் கல்லூரி
சென்னை.

சூ.இ.
பேரா. சூ. இன்னாசி
கிறித்தவத் தமிழ் இலக்கியத் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை.

செ.ப.
பேரா. செ. பரமார்த்தலிங்கம்
எஸ். எஸ். காலனி
மதுரை.

செ.வை.
பேரா. செ. வைத்திலியங்கம்,எம்.ஏ., எம் லிட்.
இணைப் பேராசிரியர்
தமிழ்த் துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்.

சே.இரா.
டாக்டர் சே. இராசேந்திரன் எம்.ஏ., பிஎச்.டி.
தமிழ்ப் பேராசிரியர்
மாநிலக் கல்லூரி
சென்னை.

சொ.சி.
டாக்டர் சொ. சிங்காரவேலன்,எம்.ஏ., பிஎச்.டி.
தமிழ்ப் பேராசிரியர்
ஏ.வி.சி.கல்லூரி
மயிலாடுதுறை.

சோமலெ.
திரு. சோமலெ
சாஸ்திரிநகர்
அடையாறு
சென்னை.

டி.ஆர்.இரா.
பேரா. டி. ஆர். இராமச்சந்திரன்
செனாய் நகர்
சென்னை.

டி.எஸ்.சு.
டாக்டர் டி. எஸ். சுந்தரம்
சமூகவியல் துறைப் பேராசிரியர்
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை.

டி.எஸ்.பா.
திரு. டி. எஸ். பார்த்தசாரதி
மேற்கு சி. ஐ. டி. நகர்
சென்னை.

த.கு.மு.
திரு. த. கு. முருகேசன், எம்.ஏ.
துணைப் பேராசிரியர்
பச்சையப்பன் கல்லூரி
சென்னை.

த.கோ.
திரு. த. கோவேந்தன்
பாவேந்தர் தெரு
கோடம்பாக்கம்
சென்னை.

த.ச.
பேரா. தனலட்சுமி சக்கரபாணி
அரசு மகளிர் கல்வியியல் கல்லூரி
கோயம்புத்தூர்.

த.ந.க.
டாக்டர் த. ந. கணபதி, எம்.ஏ., பிஎச்.டி.
தத்துவத் துறைத் தலைவர்
விவேகானந்தா கல்லூரி
சென்னை.

தி.சீ.
திரு. தி. சீனிவாசன்
துணைப் பேராசிரியர்
உளவியல் துறை
அரசு கலைக் கல்லூரி
கோயம்புத்தூர்.

தி.சு.மோ.
டாக்டர் தி. சு. மோகன், எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.
துறைத் தலைவர்
பொருளியல் துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்.

தீ.வீ.
திரு. தீ. வீரப்பன், எம்.ஏ.

மந்தைவெளி
சென்னை.

தொ.ப.
டாக்டர் தொ. பரமசிவன், எம்.ஏ., பிஎச்.டி.
துணைப் பேராசிரியர்
சாகர் உசேன் கல்லூரி
இளையான்குடி.

ந.ச.
பேரா. ந. சக்திவேலன், எம். ஏ.
ஆங்கிலத் துறை
தியாகராசர் கல்லூரி
மதுரை.

ந.சு.
திரு. ந. சுலைமான், எம்.ஏ.
அரசு அருங்காட்சியகம்
மதுரை.

ந.ந.
திரு. ந. நம்மாழ்வார்
உளநோய் நீக்கு உளவியலார்
இராசாசி மருத்துவ மனை – மருத்துவக் கல்லூரி
மதுரை.

ந.வ.
பேரா. ந. வரதப்பன், பி.ஏ (ஆனர்சு),எம்.ஏ.,பி.எட்.
முதல்வர்
அரசு கலைக் கல்லூரி
சிதம்பரம்.

நா.சி.
டாக்டர் நா. சின்னராசு, எம்.ஏ.,பிஎச்.டி.
பேராசிரியர்
தமிழ்த் துறை
பச்சையப்பன் கல்லூரி
சென்னை.

நா.ப.
பேரா. நா.பக்தவச்சலு
604 அண்ணாநகர்
சென்னை.

பா.ந.
டாக்டர் பா. நடராசன், எம்.ஏ.,பிஎச்.டி.,டி.லிட்.,
தலைவர்
நுட்பப் பொருளியல் நிறுவனம்
சென்னை.

பா.மா.
பேரா. பா. மாணிக்கவேலு, எம்.ஏ
முதல்வர்
முத்துரங்கம் அரசினர் கலைக்கல்லூரி
வேலூர்.

பா.வ.
டாக்டர் பா. வரதராசன், எம். காம்.
எம்.லிட்.,பிஎச்.டி.
விரிவுரையாளர் – வணிகவியல்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்.

பா.ஜ.
திரு. பா. ஜவகர்
காப்பாட்சியர்
அரசு அருங்காட்சியகம்
சென்னை.

பி.ஆர்.ந.
டாக்டர் பி. ஆர். நரசிம்மன், எம்.ஏ.,பிஎச்.டி.
தத்துவத் துறைப் பேராசிரியர்
பழனியாண்டவர் கலை பண்பாட்டுக் கல்லூரி
பழனி.

பி.இரா.
திரு. பி. இராசகோபாலன், எம்.காம்.,எம்.லிட்.
விரிவுரையாளர் – வணிகவியல் துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்.

பி.எஸ்.பா.
டாக்டர் பி. எஸ். பாலசுப்பிரமணியம்
இணைப் பேராசிரியர்
கல்வியியல் புலம்
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை.

பி.எஸ்.வி.
திரு பி. எஸ். விருத்தகிரிநாதன்
உளநோய் நீக்கு உளவியலார்
அரசு பொது மருத்துவ மனை
சென்னை.

பி.கி.அ.
திரு. பி. கிங்சுலி அரசகுமார், எம்.ஏ.
வரலாற்றுத்துறை
எல்.என்.ஜி.கலைக் கல்லூரி
பொன்னேரி.

பி.சி.க.
திரு. பி. சி. கல்யாணசுந்தரம்

புரசைவாக்கம்
சென்னை.

பி.தி.
திரு. பி. திருஞானசம்பந்தம்
தியாகராய நகர்
சென்னை.

பி.ம.
டாக்டர் பி. மருதநாயகம், எம்.ஏ.,பிஎச்.டி.
இணைப் பேராசிரியர்
ஆங்கிலத் துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை.

பீ.மு.அ.
பீ. மு. அஜ்மல்கான்
இசுலாமியத் தமிழ் இலக்கியத் துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை.

பொ.க.
திரு. பொ. கண்ணன்
வரலாற்றுத் துணைப் பேராசிரியர்
அரசு கலைக்கல்லூரி
கரூர்.

பொன்.சு.
பேரா. பொன். சுப்பிரமணியம், எம். ஏ.
வரலாற்றுத்துறை
அரசு கலைக்கல்லூரி
செங்கற்பட்டு.

பொன்.சௌ.
டாக்டர் பொன். சௌரிராசன், எம். ஏ., பிஎச். டி.
தமிழ்த் துறைத் தலைவர்
திருவேங்கடவன் பல்கலைக்கழகம்
திருப்பதி.

ம.இரா.
பேரா. ம. இராசசேகர, தங்கமணி எம். ஏ.
வரலாற்றுத்துறை
அரசு கலைக்கல்லூரி
கரூர்.

ம.ச.
திரு. ம. சதானந்தம், எம். ஏ., எம். எட்.
துணைப் பேராசிரியர்
தியாகராசர் கல்வியியற் கல்லூரி
மதுரை.

ம.ந.பு.
செல்வி ம. ந. புஷ்பா, எம். ஏ.
உதவிக்காப்பாட்சியர்
அரசு அருங்காட்சியகம்
சென்னை.

மா.ச.
திரு மா. சண்முகசுப்பிரமணியம், பி.ஏ., பி.எல்.
வழக்கறிஞர்
சென்னை.

மா.பா.கு.
டாக்டர் மா. பா. குருசாமி, எம்.ஏ., எம். லிட்., பிஎச்.டி.
துறைத் தலைவர்
பொருளியல் துறை
ஆதித்தனார் கல்லூரி
திருச்செந்தூர்.

மு.அ.ர.
டாக்டர் மு. அப்துல் ரகீம்
பேராசிரியர்
வரலாற்றுத் துறை
அரசு கலைக்கல்லூரி
திருச்சி.

மு.இரா.
டாக்டர் மு. இராசமாணிக்கம்
தலைவர்
உளவியல் துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்.

மு.த.
திரு.மு. தங்கதுரை
இயக்குநர்
ஆதிதிராவிடர் – பழங்குடியினர் நலத்துறை
சென்னை.

மு.த.
டாக்டர் மு. தங்கராசு, எம். ஏ., பிஎச். டி.
தமிழ்ப் பேராசிரியர்
கந்தசாமி நாயுடு கல்லூரி
சென்னை.

மு.மு.
டாக்டர் மு. முத்துராமன், எம். ஏ., பிஎச். டி.
முதல்வர்
பச்சையப்பன் கல்லூரி
காஞ்சிபுரம்.

மோ.இ.
டாக்டர் மோ. இசரயேல், எம். ஏ,. பிஎச். டி.
துறைத் தலைவர்
மொழியியல் துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை.

யு.க.
டாக்டர் திருமதி யு. கல்பகம், எம். ஏ., பிஎச்.டி.
ஆய்வாளர்
சென்னை முன்னேற்ற இயல் நிறுவனம்
அடையாறு
சென்னை.

வ.ஆ.தே.
டாக்டர் வ. ஆ. தேவசேனாபதி, எம்.ஏ.,பிஎச்.டி.
40 முத்தியாலு செட்டி தெரு
வேப்பேரி
சென்னை.

வ.இரா.
பேரா. வ. இராஜாராம்
வரலாற்றுத்துறை
எல். என். ஜி. அரசு கலைக்கல்லூரி
பொன்னேரி.

வ.தே.சு.
திரு. வ. தே. சுவாமிநாதன்
40 முத்தியாலு செட்டி தெரு
வேப்பேரி
சென்னை.

வி.ஆர்.கு.
பேரா. வி. ஆர். குப்புசாமி
பகுதி நேர இளநிலைப் பேராசிரியர்
சென்னை சட்டக் கல்லூரி
சென்னை.

வி.எ.
டாக்டர் வி. எத்திராசன், எம்.ஏ.,எம்.லிட்.,பிஎச்.டி.
துறைத் தலைவர்
பொருளியல் துறை
ஏ. வி. வி. எம். திரு புட்பம் கல்லூரி
பூண்டி.

வி.ச.
டாக்டர் வி. சச்சிதானந்தம், எம்.ஏ.,பிஎச்.டி.
ஆங்கிலத் துறைப் பேராசிரியர்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை.

வி.செ.
டாக்டர் வி. செல்வராசு
தலைவர்
தமிழ்நாடு சர்வோதயா சங்கம்
காந்தி அருங்காட்சியக அலுவலகம்
மதுரை.

வி.டி.தி.
டாக்டர் வி. டி. திவ்கர்
191 சுக்கார்வர்பேட்டை
பூனா.

வி.பா.
புலவர் வி. பாலகிருட்டிணன்
தில்லை கங்கா நகர்
சென்னை.

வீ.ப.கா.சு.
டாக்டர் வீ. ப. கா. சுந்தரம்
தமிழியல் துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை.

வெ.பா.
டாக்டர் வெ. பாலம்மாள்
இணைப் பேராசிரியை
இந்திய வரலாற்றுத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை.

வை.இர.
டாக்டர் வை. இரத்தினசபாபதி, பி.ஓ.எல்., எம்.ஏ., பிஎச்.டி.
சைவ சித்தாந்தத் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை.

வை.ந.
திரு. வை. நமசிவாயம், எம்.காம்.,எம்.லிட்
விரிவுரையாளர் – வணிகவியல் துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்.

ஜ.இரா.
பேரா. ஜ. இராசகோபாலன்
கல்வியியல் கல்லூரி
இராமகிருட்டிண வித்தியாலயம்
கோயம்புத்தூர்.

ஜி.எம்.ஜா.

ஜி. எம். ஜான்
கல்வி அலுவலர்
பிரிட்டிசு கவுன்சில்
சென்னை.

ஜி.சு.

டாக்டர் ஜி. சுப்பிரமணியன் பிள்ளை
இணைப் பேராசிரியர்
கல்வியியல் புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை.

ஜி.வி.ச.

டாக்டர் ஜி. வி. சரோஜா, எம்.ஏ.,பிஎச்.டி.
இணைப் பேராசிரியை
தமிழ்ப் பல்கலைக்கழகத் தத்துவ மையம்
காஞ்சிபுரம்.

ஜெ.இரா.

டாக்டர் ஜெ. இராமச்சந்திரன்
பேராசிரியர் துறைத் தலைவர் (ஓய்வு)
கல்வியியல் புலம்
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்
அண்ணாமலைநகர்.

ஜெ.மு.

திருமதி ஜெயா முனுசாமி, எம்.ஏ.,எம்.பில்.
தத்துவத் துறைப் பேராசிரியர்
பச்சையப்பன் கல்லூரி
சென்னை.

# நன்றியுரை

## இரண்டாம் தொகுதியில் இடம் பெற்றுள்ள ஒளிப்படங்களுக்குப் பயன்பட்ட நூல்கள்

The Encyclopaedia Americana, The New Caxton Encyclopaedia, Encyclopaedia Britannica, The World Book Encyclopaedia, Compton's Encyclopaedia, The Illustrated Encyclopaedia of Mankind, The New book of Knowledge, Larousse Encyclopaedia of Archaeology, Indian Architecture by Percy Brown, The Houses of Mankind by Colin Duly, An Introduction to Anthropology by Ralph L. Beals and others, Anthropology: A general Introduction by Victor Barnouw, Anthropology: Perspective on Humanity by Marc J. Swartz and David K. Jordan, Physical Anthropology by Philip L. Steine and Bruce M. Rowe, Ancient Civilization by Lamberg, Personality by William Samuel, Personality Theories by Carl Gustav Jung, The Art of India by Sivarama Murti, Archaeological Remains Monuments & Museums part I & II – A.S.I., Early Civilizations by Tull, *பரதக் கலை* by *பத்மா சுப்பிரமணியம், கலைக் களஞ்சியம் தொகுதி-1.*

## ஒளிப்படங்கள் வழங்கிய பொது நிறுவனங்கள் மற்றும் தனியார்

*பிரெஞ்சு இந்தியக் கலைக்கழகம், பாண்டிச்சேரி; அரசு அருங் காட்சியகம், சென்னை; பேராசிரியர் தனபாண்டியன், தஞ்சாவூர்; கலைக் காவிரி நாட்டியப் பள்ளி, திருச்சி.*

மேலே கண்ட நூல்களின் உரிமையாளர்களுக்கும், தனிப்பட்ட பெருமக்களுக்கும், பொது நிறுவனங்களுக்கும் தமிழ்ப் பல்கலைக்கழக வாழ்வியற் களஞ்சிய மையத்தின் சார்பில் எனது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். வாழ்வியற் களஞ்சியப் பணி காலத்தில் நிறைவெய்த உதவிய துணைப் பதிவாளர் திரு. இரா. சுப்பராயலு எம்.காம்.,எம்.பி.ஏ. அவர்களுக்கும் எனது நன்றி.

**நா. பாலுசாமி**
*முதன்மைப் பதிப்பாசிரியர்.*

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | — | அகநானூறு |
| அதி. | — | அதிகரணம் |
| அருச்சு. தீர்த். | — | அருச்சுனன் தீர்த்த யாத்திரைச் சுருக்கம் |
| இயற். | — | இயற்பா |
| உரு. | — | உருபாய் |
| எச். | — | எச்ச வியல் |
| எ-டு. | — | எடுத்துக்காட்டு |
| ஐங்குறு. | — | ஐங்குறுநூறு |
| ஐ.நா. | — | ஐக்கிய நாடுகள் |
| கட. கா. | — | கடலாடு காதை |
| கம்பரந். | — | கம்பரந்தாதி |
| கலி. | — | கலித்தொகை |
| களவு. | — | களவியல் |
| கா. | — | காதை |
| காட். | — | காட்சிக் காதை |
| கி.பி. | — | கிறித்துவுக்குப் பின் |
| கி.மீ. | — | கிலோ மீட்டர் |
| கி.மு. | — | கிறித்துவுக்கு முன் |
| குறள். | — | திருக்குறள் |
| குறிஞ். | — | குறிஞ்சிப்பாட்டு |
| ச.கி.மீ. | — | சதுரக்கிலோமீட்டர் |
| சிலப். | — | சிலப்பதிகாரம் |
| சிலம்பு. | — | சிலப்பதிகாரம் |
| சி.போ. | — | சிவஞான போதம் |
| சீவக. | — | சீவகசிந்தாமணி |
| செ.மீ. | — | சென்டி மீட்டர் |
| செய். | — | செய்யுள் |
| டி.எம். | — | (T.M.) ஆழ்நிலைத் தியானம் |
| திருக். | — | திருக்குறள் |
| திருக்கோ. | — | திருக்கோவையார் |
| திருவிளை. | — | திருவிளையாடற் புராணம் |
| திவ். | — | திவ்வியப் பிரபந்தம் |
| திவ்.பி. | — | திவ்வியப் பிரபந்தம் |
| தொல். | — | தொல்காப்பியம் |
| நச். | — | நச்சினார்க்கினியர் |

| | | |
|---|---|---|
| நம்பி. | — | நாற்கவிராச நம்பியகப் பொருள் |
| நரிபரி. | — | நரிபரியாக்கிய படலம் |
| நற். | — | நற்றிணை |
| நாலடி. | — | நாலடியார் |
| நூ. | — | நூற்பா |
| பத்து. | — | பத்துப்பாட்டு |
| பதி. | — | பதிப்பு |
| பாரத. | — | வில்லி பாரதம் |
| பி. | — | பிரிவு |
| புறம். | — | புறநானூறு |
| பெரிய. | — | பெரிய திருமொழி |
| பொ. | — | பொருளதிகாரம் |
| பொரு. | — | பொருநராற்றுப் படை |
| பொருள். | — | பொருளதிகாரம் |
| மணி. | — | மணிமேகலை |
| மீ. | — | மீட்டர் |

# வாழ்வியற் களஞ்சியம்

**அளவீடும் மதிப்பீடும்:** பள்ளியில் நிகழும் கற்பித்தல், கற்றல் ஆகியவற்றால் விளையும் பயன்கள் மதிப்பீடு செய்யப்படுகின்றன. மாணவர் பெற்றுள்ள நடத்தை மாற்றங்கள், குறிக்கோளுக்கு ஏற்ப, விரும்பியவாறு அமைந்திருக்கின்றனவா என்று தொடர்ந்து அறிந்து கொள்ளுவதுதான் மதிப்பீடு.

'ஏன்', 'எப்படி', 'எதன் மூலமாக', 'எவ்வாறு நிகழ்ந்தது', என்ற கேள்விகளுக்கு விடை காண்பதே மதிப்பீட்டின் அடிப்படைத் தத்துவம் ஆகும். 'ஏன்' என்ற கேள்வி, கல்வியின் குறிக்கோளைப் பற்றிய தாகும். மாணாக்கரிடையே விரும்பத்தக்க செயல் மாற்றங்களை விளைவிப்பதே கல்வியின் பொது நோக்கம் எனக் கூறலாம். மாணவருடைய அறிவு, உணர்ச்சி, செயற்கூறு ஆகியவற்றில் கல்வி எவ்வாறுமாற்றத்தை ஏற்படுத்துகிறது என்பதைச் சீரிய முறைகளில் அறிய முற்பட வேண்டும். இத்தகைய மாற்றங்களை எத்தகைய வழிமுறைகளைக் கொண்டு ஏற்படுத்தலாம் என்பது இரண்டாம் கேள்வியாகும். தேவையான கற்றல் அனுபவங்களைப் பாடப் பகுதிகள் மூலமாகச் சிறப்பு நோக்கங்களின் தேவைகளுக்கேற்பத் தேர்ந்தெடுப்பது, 'எதன் மூலமாக' என்ற வினாவிற்குரிய விடையாகும். எந்த அளவில் குறிக்கோள்களை ஒட்டிய விளைவுகள் ஏற்பட்டன என்பது மதிப்பீட்டின் கொள்கையாகும். இந்த வினாக்கள் ஒன்றுடன் ஒன்று பிணைந்து நெருங்கிய தொடர்புடன் செயறபடும். இத்தகைய மதிப்பீட்டைத்தான் புளூம் (Dr. Bloom) என்பவர் குறிக்கோள்களுடன் இணைந்த மதிப்பீடு என்று கருதுகிறார்.

இந்தக் கருத்தைப் பின்வருமாறு விளக்கலாம்:




அளவீடு (Measurement) என்பது தேர்வுகள் தொடர்பான நுணுக்கங்களை அடிப்படையாகக் கொண்டது. பள்ளியில் அளவீடு என்பது, மாணவன் ஒரு பாடத்தில் பெற்றிருக்கும் தேர்ச்சியைப் பற்றியது. நிறையீடு (Assessment) என்பது மாணவனின் ஒழுக்க நெறிகள், மனப்பான்மைகள், குறிக்கோள்கள், பாராட்டுதல் போன்றவற்றை அளக்க முற்படுகிறது. மதிப்பீடு (Evaluation), அளவீடும் நிறையீடும் ஆகிய இரண்டையும் உள்ளடக்கிச் செயற்படுவதாகும்.

அளவீடு என்பது, மாணாக்கரிடையே சோதனை செய்து அதன்மூலம் விடைகளைத் திருத்தி மதிப்பெண்கள் வழங்குவது. குறிப்பிட்ட கால அளவில் நடத்தை மாற்றங்கள் மாணாக்கரிடையே எந்த அளவில் ஏற்பட்டிருக்கின்றன என்பதைக் கண்டறிந்து முடிவு காண்பது அளவீட்டின் முதன்மையான நோக்க

மாகும். மதிப்பெண்களின் அடிப்படையில் மாணாக்கர்களின் பாடத் தேர்ச்சியினை எண் மூலமாக அளந்து காட்டுதல் அளவீடு ஆகும். மாணாக்கர்களின் தேர்ச்சியின் அளவை ஒப்பிட்டுப் பார்க்கவும், தரத்தை அறியவும், வேறுபாட்டைக் காணவும் அளவீடு முற்படுகிறது. மதிப்பீடும் அளவீடும் இணைந்தே செயற்படும்.

அளவீடு, மதிப்பீடு ஆகியவற்றின் வளர்ச்சியில் நான்கு நிலைகளை அமைக்கலாம். முதல் நிலையில் 1900-1915 வரையில் புதிய முறைகளில் முன்னேற்றம் ஏற்பட்டது. ஆல்பிரடு பினே (Alfred Binet), சிமான் (Simon) என்ற வல்லுநர்கள், 1905-1911-இல், குழந்தைகளின் 'மனவயது' என்ற கருத்தினை அமைத்து, அதற்கேற்ப ஒவ்வொரு வயது நிலைக்கும் சில சோதனைகளைத் தேர்ந்தெடுத்தனர். 1916-இல் இசுடான்போர்டு (Stanford) பல்கலைக் கழகமும், பின்னர் 1937-இல் தெர்மன், மெர்ரில் (Termen and Merrill) ஆகியோரும் பினே சோதனையை இரண்டு படிவங்களில் (Forms) புதிய முறையில் திருத்தி அமைத்தனர். பலவகைப் பாடத் தொடர்பான அடைவுச் சோதனைகள் தரப்படுத்தப்பட்டதும் இந்தக் காலத்தில் தான். சான்றாக இசுடோன் (Stone) என்பாரின் கணக்கியற் சோதனையையும் பக்கிங்காமின் (Buckingham) எழுத்துக் கூட்டுச் சோதனையையும் கூறலாம். இரண்டாம் நிலையில் 1915-1930 வரை பல பள்ளிப்பாடப் பகுதிகளில், அறிவு வளர்ச்சியிலும் நுண்ணறிவு அளவிடுதலிலும் குறிப்பிடத்தக்க முன்னேற்றத்தைக் காணலாம். ஆளுமை வளர்ச்சியின் சில கூறுகளில் கால்டன் (Galton) என்பவர் சில சோதனைகளை நிறுவினார். உரோர்சாக்கு (Rorschac) என்பவர் 1921-இல் சில வெளிப்பாடுகளின் மூலமாக மையினால் புள்ளி உருவங்கள் அமைந்த அட்டைகளின் உதவியால் ஆளுமை வளர்ச்சியை மதிப்பீடு செய்தார். இவற்றைத் தவிரக் குழுச் சோதனைகள் இந்தக் காலத்தில் பயன்படுத்தப்பட்டன. முதலாம் உலகப்போர் நிகழ்ந்தபோது பட்டாளத்திற்கு ஆள் சேர்ப்பதில் இந்தக் குழுச் சோதனைகளை அமைத்துப் பயன்படுத்தினர். மூன்றாம் நிலை, 1930-1945 வரை எனக் கூறலாம். முன்னதாக உருவாக்கப்பட்ட பல அளவு கருவிகளைச் சீர்படுத்திக் குறைபாடுகளை ஆராய்ந்து, அவற்றை மேம்படுத்த முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இரண்டாம் உலகப் போர் நடந்த பொழுது பலவிதச் சோதனைகள் அடங்கிய கூட்டுச் சோதனைத் தொடர்களும் (Test Batteries) உருவாக்கப்பட்டன. அவற்றைத் தவிர அறிவுடன் இணைத்தல் சோதனை (Thematic Apperception Test) என்ற ஆளுமைச் சோதனைகளை மர்ரேயும் மார்கனும் (Murray and Morgan) 1935-இல் உருவாக்கினர். தனித்தனி அட்டைகளில் 30 படங்களைப் பொருத்தி அவை ஒவ்வொன்றைக் கொண்டு கதை அல்லது கட்டுரை அமைக்கச் சொல்லி, ஆளுமையின் வளர்ச்சியை மதிப்பீடு செய்தனர்.

நான்காம் நிலை 1945-இல் இருந்து நடப்பு நாள் வரை என்று கொண்டால், அந்நிலையில் பலவித நுண்ணிய கருத்துகளும் சோதனைகளும் அமைக்கப் பெற்றமையைக் காணலாம். சோதனை செய்தல் கல்விப் பிரிவில் ஒரு தலையாய பண்பாகத் திகழ்ந்ததால் பதிப்பாளர்களும் பலவித சோதனைகளைத் தரப்படுத்தி அவற்றைப் பள்ளிகளுக்கும் கல்லூரிகளுக்கும் விற்பனை செய்தார்கள். இது ஒரு வாணிகமாகக் கல்வித் தொழிலில் அமைந்தது. பலவிதத் துணையேடுகளும் தரப்படுத்தப்பட்ட (Standardised Tests) சோதனைகளும் மிகுதியாகப் பள்ளிகளுக்குப் பயன்பட்டன.

இவ்வளவீடும் மதிப்பீடும் அறிவியல் அடிப்படையில் அமைந்திருக்கின்றன. மனிதருடைய நடத்தைக் கூறுகளை அறியப் பலவகைப்பட்ட முழு அணுகுமுறை நிலை வேண்டும். தனி ஆளுக்காகவும் குழுக்களுக்காகவும் சமூகத்தினரின் பகுதிகளுக்காகவும் சோதனைகள் நிறுவப்படுவதைக் காணலாம். கல்வித்துறையில், முடிவுசெய்தல் என்பது ஓர் அடிப்படைக் கருத்து. முடிவு எடுத்தலில் அளவிடுதலும் மதிப்பீடு செய்தலும் இன்றியமையாப் பங்கை வகிக்கின்றன. தகுந்தவாறு முடிவு எடுக்க வேண்டுமானால் ஆசிரியர்களுக்குச் சில செய்திகள் தேவைப்படும். இவை, முதலாவதாகத் தனி மாணாக்கனின் நுண்ணிய அறிவு ஈவு, இரண்டாவதாகக் கற்பித்தற் குறிக்கோளை அமைப்பதில் சோதனைகளின் தொடர்பு, மூன்றாவதாகச் சோதித்தல் மூலமாகக் கிடைக்கும் விளைவுகளைப் பொறுமையுடனும் அக்கறையுடனும் ஏற்றுக் கொள்ளுதல், நான்காவதாக மனித உள்ளத்தை அளவிடுதலில் ஏற்படும் குறைபாடுகளைக் கண்டு அவற்றின் கருத்துகளை மதிப்பீடு செய்தல் ஆகியனவாகும்.

குறிக்கோள்களின் அடிப்படையில் உருவான மதிப்பீடுதான் இப்போது வலியுறுத்தப்பெறுகிறது. மாணாக்கர்களின் நடத்தை மாற்றங்களாக, குறிக்கோள்களை மூன்று பெரிய வகைகளில், ப்ளூம் பிரித்துக் காண்கிறார். அவற்றை அறிவுப் பகுதி, உணர்ச்சிப்பகுதி, உள-உடல் செயற்பகுதி என்று அமைத்துப் பாகுபாடு செய்திருக்கிறார்கள். ஒவ்வொரு பகுதியிலும் விரும்பத்தக்க மாறுதல்களை ஏற்றுக் கொள்ளும்போது நாடு, சமுதாய எதிர்காலம், மாணவனின் வளர்ச்சி ஆகியவற்றை இணைத்தே பார்க்க வேண்டும். ஒவ்வொரு பகுதியிலும் எளியவற்றிலிருந்து கடின வகையான சிறப்பு நோக்கக் கூறுகளைப் ப்ளூம் அமைத்து, அவற்றின் இன்றியமையாமையை வலியுறுத்தியிருக்கிறார். இந்தப் படிகள் ஒன்றுக்கொன்று தொடர்புடைய கூறுகளேயாகும். முந்தைய படி

களின் சிறப்பு நிலையை அடைந்த பின்னரே மேல் படிகளுக்குச் செல்ல முடியும். அறிவுப் பகுதியில் கீழ்க் காணும் நிலைகளைப் புளூம் அமைத்துக் கொடுக்கிறார்.

புளூம், அறிவியல் பகுதியில் சிறப்புக்கூறுகளை அமைத்ததைப் போலவே கிராத்வால் (Dr. Krathwhol) என்பவர் உணர்ச்சிப் பகுதிக்கும் அமைத்துக் காட்டியிருக்கிறார். நாட்டங்கள், ஆர்வங்கள், மதிப்புக்




ஒவ்வொரு பிரிவிலும் சில செயல்களை அமைத்து, அவற்றை ஒட்டித் திறன்களை அடைய முற்பட வேண்டும். சான்றாக 'அறிவு பெறுதல்' என்பதை, நினைவு கூர்தல் (Recall), மீட்டறிதல் (Recognition), படவிளக்கம் கூறல், உற்று நோக்கல் என்றும் தெளிவு படுத்திக் கூறலாம். 'புரிந்து கொள்ளுதல்' என்ற தலைப்பின் கீழ்ப் பொருள் விளக்குதல், ஆராய்தல், வேறுபாடு காணல், சீர்தூக்கிப் பார்த்தல், தொடர்பு காணல் என்ற சில வினைப்பாடுகளை அமைத்துக் கொள்ளலாம். இவ்விதமாக ஒவ்வொரு பிரிவுக்கும்

காணல் என்ற பொது வகைகளைப் பிரித்து ஆராய்ந்து ஐந்து படிகளைக் காட்டியிருக்கிறார்.

ஒவ்வொரு பிரிவிலும் சிறப்பு விளைவுகளை அமைத்துக் காணுதல் வேண்டும். சான்றாக, பெறுதல் என்ற தலைப்பில் ஒருங்கே கவனித்தல், செய்திகளைப் பெறுதல், விழிப்பு நிலையில் இருத்தல் ஆகியவற்றைக் காணலாம்.




ஏற்பச் சிறப்புக் கூறுகளை அமைத்துக் கொண்டு மதிப்பீட்டை நுட்பமான அளவில் செயற்படுத்துதல் வேண்டும்.

மூன்றாவது பிரிவு, உள-உடல் திறன் வகையாகும். அவ்வகையில் சிம்சன் (Simpson) என்பார் ஐந்து படிகளை அமைத்துக் கொடுத்திருக்கிறார்.

5. இயல்பாக்குதல் (Naturalisation) — பழக்கப்பட்டவை
4. இணைத்தல் (Articulation)
3. துல்லியமாக்கல் (Precision)
2. திறன்படச் செய்தல் (Manipulation)
1. போலச் செய்தல் (Imitation) — புதியவை

இத்தகைய "வகுப்புத் தொகுப்பு" முறை மூலமாக அளவிடுதலும் மதிப்பிடுதலும் ஒவ்வொரு பிரிவிலும் மாணாக்கரின் தேவைகளுக்கும் பாடப்பகுதிகளுக்கும் ஏற்பத் தேர்ந்தெடுத்து அமைத்துக் கொள்வது ஆசிரியர்களின் இன்றியமையாத கடமையாகும்.

கற்பிப்பதில் மதிப்பீடு செய்ய முற்படும்போது, அதற்குள்ளடங்கிய மூன்று அடிப்படைகளைக் காணலாம். 1) கற்றலின் சூழ்நிலை, 2) கற்பவரின் அறிவு, சமூக வளர்ச்சி நிலை, 3) கற்றலின் வழி முறைகள்.

கற்றலின் சூழ்நிலை என்ற பகுதியின் கீழ், கல்வி ஏற்பாடு, பாட நூல்கள், வகுப்பறை, நூல் நிலையம், ஆசிரியர் திறமை, கால அளவு முதலியவை அடங்கும். கற்பவரின் வளர்ச்சியில் அவர்களின் அறிவு, ஆர்வம், நாட்டம், திறன்கள், தனியாள் வேற்றுமை பற்றிய செய்திகள் அடங்கும். பல்வேறு கற்றல் முறைகளில், கலந்தாய்தல், சொற்பொழிவு கேட்டல், உற்று நோக்கல், அலசி ஆராய்தல், சிக்கலை அவிழ்த்தல் முதலிய பல்வேறு முறைகளைக் கடைப்பிடித்தல் மூலமாகவும் மதிப்பீடு ஆராயப்படும்.

'மதிப்பீடு' என்ற பொதுக் கருத்தில் இரண்டு சிறப்பு வகைகளைக் காணலாம். முதல்வகை மதிப்பீடு கற்பிக்கும் அமைப்புச் சார்ந்த (Formative Evaluation) மதிப்பீடு. இது கற்பித்தல் முறையமைப்புகளில் வேண்டப்படும் மாறுதல்களைப் புகுத்துவதற்காக மேற்கொள்ளப்படும் மதிப்பீட்டு முறை. முன்னரே முடிவு செய்தபடி இது அமையாது போனால் கற்றல் முறைகளில் என்ன மாறுபாடுகளைச் செய்ய வேண்டும் என்பதை முடிவு செய்ய இம்மதிப்பீட்டு முறை உதவுகிறது.

இரண்டாம்வகை, மொத்த மதிப்பீடு அல்லது இறுதி மதிப்பீடு (Summative Evaluation). இத்தகைய மதிப்பீடு அளவிடுதலுடன் சேர்ந்தே செயற்படும். கற்பித்த பாடப்பகுதியில் ஒரு குறிப்பிட்ட பகுதியின் இறுதிநிலையில், தேர்வுகளை அமைத்து மாணாக்கர்களின் வளர்ச்சி நிலைகளை அறிவதுதான் இத்தகைய மதிப்பீட்டின் நோக்கமாகும். ஒரு நிலையில் மாணாக்கரின் மதிப்பெண்கள் கணக்கிடப்பட்டு மதிப்பீடு செய்தல் இங்கு வலியுறுத்தப் பெறுகிறது. நிலைபெற்ற மதிப்பெண்கள்தாம் (Status Scores) நம்முடைய செயற்பகுதியாக விளங்கும். மதிப்பெண்களின் வேறுபாடுகளை ஒப்பிட்டுப் பார்த்தல், தகுதிகளை அறிதல் போன்றவற்றை இவ்வகையான மதிப்பீட்டின் மூலம் அறியலாம். இதற்கு உகந்த சோதனையைத் தகுதி அடிப்படைச் சோதனை (Norm-based) என்று கூறலாம்.

அளவீட்டில், அடைவுச் சோதனைகள் சிறப்பிடம் பெறுகின்றன. பின்வரும் படத்தின் மூலமாக அடைவுச் சோதனைகளின் வகைகளைப் பார்க்கலாம்.

அடைவுச் சோதனைகள்
- வாய்மொழிச் சோதனை
- எழுத்துச் சோதனை
  - கட்டுரை வகை
  - குறுகிய விடைவகை
  - புறவயச் சோதனை
    - தரப்படுத்தப்பட்டவை
    - ஆசிரியர் உருவாக்கியவை

அளவீடும் மதிப்பீடும்

அடைவுச் சோதனைகளில் பயன்படுத்தப்படும் புறவய வினாக்களையும் பின் வருமாறு வகைப்படுத்தலாம்.




திறமான அளவிடும் கருவிகள் பின்வரும் சில இன்றியமையாத பண்புகளைக் கொண்டிருக்க வேண்டும்.

(1) ஏற்புடைமை: குறிப்பிட்ட ஒரு திறனையோ, பண்பையோ மதிப்பீடு செய்வதற்காகச் சோதனை அமைக்கும்பொழுது அந்தத் திறனையோ பண்பையோ சரியாக அளக்க அச்சோதனை உதவ வேண்டும். அதுதான் ஏற்புடைமை (Validity) என்பதன் பொருள். அதற்குப் புறம்பாக உள்ள வேறொன்றினை அளவிடுவதாக அது அமையக் கூடாது. எடுத்துக்காட்டாக ஒரு பள்ளிப் பகுதியில் நுழைவுத் தேர்வு அமைக்க வேண்டுமானால், அந்தத் தேர்வு அந்த நோக்கத்திற்கு மட்டும்தான் பயன்பட வேண்டும். தமிழ் உச்சரிப்புத் திறனில் சோதனை அமைத்தால் அது உச்சரிப்புத் தகுதியைத்தான் அளக்க வேண்டுமே ஒழிய மற்ற திறன்களான எழுத்துத் தேர்ச்சி, சொற்றொடர் அமைத்தல் பொருள் காணல் போன்றவற்றை அளத்தல் கூடாது. ஒருவரின் உடல் வெப்பநிலையை அளக்க வெப்பமானி பயன்படுமே ஒழிய அது அவருடைய இதயத் துடிப்பை அளக்க உதவாது. அதே போல, ஏற்றுக் கொண்ட குறிக்கோளுக்கு ஏற்பத்தான் நல்ல சோதனை அமையும். சிறப்பு நோக்கங்களைக் குறிப்பிட்ட பாடப்பொருளின் துணைக் கொண்டு சோதிப்பதற்காகவே ஒவ்வொரு வினாத்தாளும் அமைக்கப்படுகிறது. அச்சிறப்பு நோக்கங்களுக்கு ஏற்ப வினாத்தாள் அமைவது இன்றியமையாதது.

(2) நம்பகம்: ஒரு குறிப்பிட்ட மாணவர் குழுவிற்கு மீண்டும் மீண்டும் ஒரு சோதனை கொடுக்கப்பட்ட போதிலும் அவர்கள் அளிக்கும் விடைகளின் தரம் மாறுபடாமலிருந்தால் அந்தச்சோதனை நம்பகமானது என்றுசொல்லலாம். நம்பகம் (Reliability) என்பதற்கு நம்பும் தரமுடையது என்பது பொருள். ஒரு வெப்பமானி வெப்பத்தை அளக்க உதவும் என்பது ஏற்புடைமை. அது வெப்பத்தை எத்துணைத் துல்லியமாக அளக்க உதவுகிறது என்பது நம்பகம். நம்பகம் என்பதைத் திறமை என்றும் சொல்லலாம். சோதனையில் கேள்விகள் மிகுதியாகும் போது நம்பகமும் மிகும். ஒரு பாடப் பகுதியில் சில கட்டுரைக் கேள்விகள் அமைவதைவிடப் பற்பல புறவய (ஒரு விடை) வினாக்களை அமைப்பது நம்பகத்தை மிகச் செய்கிறது. ஒரு தேர்வினை அமைக்கும்போது வினா அமைப்பதில் மொழித் தெளிவு, தேவைப்படும் திட்டவட்டமான விடை, மதிப்பீடு செய்யப்படும் பாடப்பகுதி பற்றிய தெளிவான குறிப்புகள் கொடுத்தல் முதலியன நம்பகத்தை மிகுதிப்படுத்த உதவும். நம்பகத்தைச் சோதிக்க இரண்டு தடவை ஒரே சோதனையை இடைவெளிக்குப் பின் அதே குழுவிற்குக் கொடுத்து, விளைவுகளின் தொடர்பு ஈவைப் பார்த்து, மிகுதியாக இருந்தால் அந்தத் தேர்வு நம்பகத் தன்மையுடையது என்று கருதலாம். ஒரே தேர்வில் இரண்டு படிவங்களை ஏற்படுத்தி இரண்டு படிவங்களை மாணவர் குழுவிற்குக் கொடுத்தபின், அவ்விரண்டுக்கும் உள்ள தொடர்புக் கெழுவை கணக்கிட்டுப் பார்ப்பது மற்றொரு வழியாகும். ஒரே சோதனையை இரண்டு பிரிவுகளாகப் பிரித்து, ஒவ்வொரு பிரிவுக்கும் உள்ள விளைவுகளின் தொடர்புக் கெழுவைப் பார்த்து அறிதல் வேறொரு வழியாகும். நம்பகம் என்பது, எல்லாவகைச் சோதனைகளுக்கும் ஒரு பொதுவான பண்பு. ஏற்புடைமை என்பது ஒவ்வொரு தேர்வுக்கும் உரிய சிறந்த பண்பாகும். ஏற்புடைமையும் நம்பகமும் சேர்ந்தேதான் ஒரு தேர்வின் நற்பண்புகளை முடிவு செய்யும்.

3) புறவயத் தன்மை: ஒரு சோதனையின் முடிவுகள் சோதனையாளர்களின் மனப்போக்குக்கு ஏற்றவாறு மாறுபடாதிருக்க வேண்டும். ஒரே சோதனையாளர் அந்தச் சோதனையை மறுமுறை மதிப்பிட்டாலும் அல்லது பல சோதனையாளர்கள் தனித்தனியே மதிப்

பிட்டாலும், முடிவுகள் மாறுபடாதிருக்க வேண்டும். இம் மாறுபடாத தன்மையைப் 'புறவயத் தன்மை' (Objectivity) என்று சொல்லலாம். புறவகை வினாக்களில் மதிப்பிடும் முறை முன்னதாகவே வரையறுக்கப்பட்டு விடுவதால், சோதனையாளர்களின் அகவயக் குறுக்கீடுகள் மிகவும் குறைக்கப்படுகின்றன. கட்டுரை வகையில் அகவயத் தன்மை மிகுதியாக இருப்பதை வினா தேர்ந்தெடுத்தலிலும் விடைகளைத் திருத்தி மதிப்பெண்கள் வழங்குவதிலும் பார்க்கலாம். ஒரே விடைத் தாளை இரு சோதனையாளர் தனித்தனியே திருத்தி மதிப்பெண்கள் வழங்குவதில் மதிப்பெண்களின் வேறுபாடு மிகுதியாக அமைவதைக் காண்லாம். ஒரே தேர்வாளர் ஒரே விடைத்தாளைச் சிறிது இடைவெளிக்குப் பின் மதிப்பீடு செய்தபோதும் வேறுபாட்டைப் பார்க்கலாம். புறவயச் சோதனைகளில் இத்தகைய வேறுபாடுகளைப் பார்க்க முடியாது. மேனாடுகளில் உரிய விடையை முடிவு செய்த பின்பே திருத்தும் பணியை இயந்திரக் கருவி மூலமாகச் செய்கிறார்கள்.

4) **பயனுடைமை:** நல்ல சோதனையானது நடைமுறையில் பயன்படுமாறு எளிமையானதாக இருக்கும். அச்சோதனையை அமைக்கும் காலம், பொருள், மதிப்பீடு செய்வதற்கான நேரம், முடிவு காணும் முறைகளில் எளிமை, சிக்கனம் ஆகியவை அடங்கும். சோதனைகளை மாணாக்கர்களுக்கு நடத்தும் பொழுது அவற்றிற்குத் தேவையான குறிப்புகள், ஏற்பாடுகள், கேள்விகளின் எண்ணிக்கை, மொத்த மதிப்பெண்கள், கேள்விகளைத் தேர்ந்தெடுக்கும் விதிகள், மற்றும்சோதனையை நடத்துவதற்குரியவிதிமுறைகள் (Directions) ஆகியன தெளிவாக இருத்தல் வேண்டும். விடை திருத்தும்போதும் தேர்வாளர்களுக்கும் இத்தகைய விதிகளை வரையறை செய்வது சாலச்சிறந்ததாகும்.

5) **தரங்கள்:** ஒரு சோதனையை மாணவருக்கு நடத்தி, அதைச் செய்தவர்களுக்குக் குறிப்பிட்ட மதிப்பெண் வழங்கினால் மட்டும் போதாது. பிறர் அடைவுகளுடன் அதை ஒப்பிட்டுப் பார்க்கும் நிலை ஏற்பட்டால்தான் அது பொருளுள்ளதாகவும் பயனுடையதாகவும் ஆகும். இதற்குத் தரங்கள் (Norms) உதவுகின்றன. ஒத்த வயது, வகுப்பு அல்லது பள்ளி மாணவர்கள் தரப்படுத்தப்பட்ட சோதனைகளில் பெறும் சராசரி அடைவே தர எண்கள் ஆகும். இவற்றை வயதுத் தரங்கள் (Age Norms), வகுப்புத் தரங்கள் (Grade Norms), நூற்றுமானத் தரங்கள் (Percentile Norms)-என வகைப்படுத்தலாம். 'தரம்' என்ற சொல் குறிக்கோளாக அமையாது என்பதை இங்குக் குறிப்பிட வேண்டும். 'தரம்' என்பது ஒரு குறிப்பிட்ட சராசரி நிலையே. அது வேறொன்றையும் குறிக்காது. ஜெ.இரா.

*அளவை இயல்* என்பதை வடமொழியில் தருக்கம் என்று கூறுவர். பொதுவாக, அளவை இயலை மேல்நாட்டு அளவை இயல், இந்திய அளவை இயல் என்று இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். இன்றைய நிலையில், மேல்நாட்டு அளவை இயல் என்பது இதுதான் என்று திட்டமாகக் கூற முடியா வண்ணம் அது முன்னேறிப் பல பெரும் பிரிவுகளாக உள்ளது. இருப்பினும், அளவையியல் (Logic) என்றால் என்ன என்பதைச் சுட்டிக் காட்டி, அதன் பரப்பையும் அது ஈடுபட்டுள்ள துறையையும் அறிவது இன்றியமையாதது.

சொல்லிலக்கண முறைப்படி ஆங்கிலச் சொலாகிய "Logic" என்பது ஏற்புடைய சிந்தனை, மொழி ஆகிய இரண்டினைப் பற்றிப் படிக்கும் ஒரு துறை என்னும் பொருளினைக் கொடுக்கிறது. தமிழில், 'எண்' என்பது, தருக்கம் (அளவை இயல்) என்று பொருள்படும் எனப் பரிமேலழகர் திருக்குறள் உரையில் கூறியுள்ளார். அளவை இயல் (தருக்கம்) சிந்தனையைப் பற்றிய படிப்பு. சிந்தனை செய்வது என்பது ஆழ்ந்து முடிவு செய்தல் என்று பொருள்படும். சிந்தனைத் திறன் என்பது, பல நிகழ்ச்சிகளுக்கு ஊடே உள்ள தொடர்பினை அறிந்து கொள்ளுதல் ஆகும். கொடுக்கப்பட்ட சில உண்மைகளிலிருந்து கொடுக்கப்படாத உண்மையைப் பெறுவதே சிந்தனையாகும். எடுத்துக்காட்டாக, வானத்தில் கரு மேகங்கள் சூழ்ந்திருப்பதைப் பார்த்த ஒரு நிகழ்ச்சியினின்று மழை வரும் என்று கூறுவர். அவ்வாறே, வெள்ளம் கரைபுரண்டு ஓடும் நதியினைக் கண்டு அது வரும் வழியில் எங்கோ நல்ல மழை பெய்திருக்க வேண்டுமென முடிவு செய்வர். அதே போல், புகை இருப்பதைக் கண்டு நெருப்பு இருக்க வேண்டுமென்று முடிவு செய்வர்.

சிந்தனைச் செயல் மூலம்தான் உண்மையினை அறிதல்கூடும். உண்மையினை அறிவதாலேயே அறிவு பெறமுடியும். பெற்ற அறிவைப் பேணிக் காக்க மொழி தேவை. ஆகவேதான் அறிவுக்குச் சிந்தனையும் மொழியும் மிகத் தேவையானவை என அளவையியலார் கூறியுள்ளனர். குழப்பமான, முறையற்ற சிந்தனை உண்மையினை மறைக்கும். ஆகவே சிந்தனையில் தெளிவும் ஒரு முறையும் இருத்தல் வேண்டும். இச் சீரிய சிந்தனை முறைகளை ஆய்ந்து படிக்கும் துறையே அளவை இயல் ஆகும்.

சிந்தனை முறை என்பது, கொடுக்கப்பட்ட சில கருத்துகள் (Ideas) அல்லது கூற்றுகள் (Statements) ஆகியவற்றிலிருந்து ஒரு முடிவினைப் பெறுவதேயாகும். கொடுக்கப்பட்ட கருத்துகள் அல்லது கூற்றுகளுக்கு மேற்கோள்கள் (Premises) என்றும், மேற்கோள்களி

விருந்து பெறப்பட்ட பிறிதொரு கூற்றுக்கு முடிவு (Conclusion) என்றும் அளவை இயலில் கூறுவர். ஆகவே, சிந்தனை முறையில் இரண்டு பகுதிகள் உண்டு. ஒன்று மேற்கோள்கள்; பிறிதொன்று முடிவு. மேற்கோள்களிலிருந்து முடிவுக்குச் செல்லும் முறையினையே சிந்தனைமுறை அல்லது அனுமானம் எனப்படும்.

அனுமானம் அல்லது சிந்தனைமுறையைக் கீழ்க் காணுமாறு வகைப்படுத்தலாம்.

மேற்கூறிய இரண்டு முறைகளிலும் மேற்கோள் களிலிருந்து முடிவுக்கு வரலாம். முதல் முறையில் பொது உண்மையை மேற்கோளாகவும், இரண்டாம் முறையில் தனி நிகழ்ச்சிகளை மேற்கோளாக வும் கொள்ளலாம். பொது உண்மையை மேற் கோளாகக் கொண்டு தனிப்பட்ட நிகழ்ச்சிகளின் முடிவைத் தீர்மானிக்கும் முறைக்குப் பகுப்பு வழி அனுமானம் என்றும், தனிப்பட்ட நிகழ்ச்சிகளை மேற்கோளாகக் கொண்டு, பொது உண்மைகளை அவற்றினின்றும் தீர்மானிக்கும் முறைக்குத் தொகுப்புவழி அனு




பகுப்புவழி, தொகுப்புவழி அனுமானங்களைச் சான்றுகள் தந்து விளக்கலாம். இராமன் என்று ஒரு மனிதன் இருக்கிறான். அவன் இறப்பானா, மாட்டானா என்ற கேள்வியை எழுப்பினால், 'எல்லாரும் அவன் கட்டாயம் இறப்பான் என்றே கூறுவர். இதையே அளவை முறையில் கூறினால் அதற்குப் பகுப்புவழி அனுமானம் என்று பெயர்.

1. எல்லா மனிதர்களும் இறப்பார்கள்
2. இராமன் ஒரு மனிதன்
3. ஆகவே இராமனும் இறப்பான்.

இந்த மூன்றாவது கூற்று முடிவு ஆகும். முதல் இரண்டு கூற்றுகளும் மேற்கோள்கள் ஆகும். இங்கு மேற்கோளானது, முடிவினை உட்கிடையாகக் (தன்னகத்தே) கொண்டுள்ளது. இவ்வாறு, மேற்கோள், முடிவினை உட்கிடையாகக் (Implied) கொண்டிருந்தால், அவ்வனுமானம் பகுப்புவழி அனுமானம் எனப்படும்.

'மக்கள் தம் வாழ்வில், சண்முகம், சோசப்பு, இசுமாயில், இராதா, மேரி ஆகிய அனைவரும் இறந்ததைப் பார்த்திருக்கின்றனர். இந்தத் தனிப்பட்ட மேற்கோள்களிலிருந்து, 'எல்லா மனிதர்களும் இறப்பவர்கள்' என்ற கூற்று பெறப்படுகிறது. இவ்வாறு சில தனி நிகழ்ச்சிகளை மேற்கோளாகக் காட்டி ஒரு பொது உண்மையை முடிவாகப் பெறும் முறையே தொகுப்புவழி அனுமானம் எனப்படும்.

மானம் என்றும் விளக்கம் கொள்ளலாம். நியூட்டன் மரத்திலிருந்து கீழே விழுந்த ஓர் ஆப்பிளைக் கொண்டு, 'எல்லாப் பொருள்களும் பூமியின் ஈர்ப்புச் சக்தியால் இழுக்கப்படுகின்றன' என்ற உண்மையினைக் கண்டறிந்தார். இது பகுப்புவழி அனுமானம். மேலே எறியப்பட்ட பந்து கீழே விழும். ஏனென்றால் எல்லாப் பொருள்களும் பூமியின் ஈர்ப்புச் சக்தியால் இழுக்கப்படுகின்றன. இது தொகுப்புவழி அனுமானம். இந்த இரண்டு வகை அனுமானங்களிலும் ஒரு முடிவைத் தகுந்த சான்றுகளைக் (Evidence) கொண்டே நிறுவுகிறோம். எல்லா மனிதர்களும் இறக்கக் கூடியவர்கள் என்ற உண்மையினை நிறுவ அல்லது கண்டு பிடிக்க அதற்கேற்ற சான்றுகளைத் தனிநிகழ்ச்சிகளின் மூலம் அளிக்கலாம். இராமன் என்பவரும் இறக்கக் கூடியவர் என்பதைக் காட்ட 'எல்லா மனிதர்களும் இறக்கக் கூடியவர்கள்' என்கிற ஆதாரத்தைக் காட்டலாம்.

சான்றுகளைக் கொண்டு ஒரு முடிவினைப் பெறும் முறையினை அளவை இயலில் வாதம் (Argument) என்று கூறுவர். அனுமானத்தின் முடிவினை ஆதரிக்கும் கூற்று மேற்கோள் எனவும் மேற்கோளினால் ஆதரிக்கப்பட்ட கூற்று முடிவு எனவும் பெயர் பெறுகின்றன. பகுப்புவழி, தொகுப்பு வழி ஆகிய இருமுறைகளிலும் மேற்கோள்களிலிருந்தே முடிவினை அடையலாம். அனுபவத்தில் கிடைக்கப்

பெற்ற சில கூற்றுகளின் உண்மையினை மேற்கோளாகக் கொண்டு ஒரு பொது உண்மையை முடிவாக அடைவது தொகுப்பு வழி ஆகும். பொது உண்மையை மேற்கோளாகக் கொண்டு அதில் அடங்கியுள்ள சில தனிநிகழ்ச்சிகளின் உண்மையை முடிவாக அடைவது பகுப்புவழி ஆகும். பகுப்புவழி அளவையியலில் தனி நிகழ்ச்சிகளின் உண்மைகளைச் சான்றால் உறுதி செய்வதால் அதைச் சான்றுறுதி முறை (Method of Proof) என்றும், தொகுப்புவழி அளவை இயலில் பொது உண்மையினைக் கண்டுபிடித்து நிறுவுவதால் அதைக் கண்டுபிடிப்பு முறை (Method of Discovery) என்றும் கூறுவர். இதிலிருந்து அளவையியல், அனுமானங்களைப் பற்றிய அறிவியல் என்பதும், இது பகுப்புவழி அளவையியல், தொகுப்பு வழி அளவையியல் என இருவிதமாகப் பிரிந்துள்ளது என்பதும் அறியவரும்.

பொதுவாக அனுமானங்கள், வடிவ ஏற்புடைமை (Formal Validity), பொருள் ஏற்புடைமை (Material Validity)என இருவகை ஏற்புடைமைகளைக் கொண்டுள்ளன. வடிவ ஏற்புடைமை என்பது, மேற்கோள்கள், முடிவு இவற்றின் வடிவம் அல்லது அமைப்பினைப் பொறுத்து அமைகிறது. அனுமானத்தில் கூறப்பட்டுள்ள பொருள், உலகில் உள்ள நிகழ்ச்சிகளுக்குப் பொருத்தமாக, இசைவாக, இருக்கும்போது அந்த அனுமானம் பொருள் ஏற்புடைமை பெறுகிறது. எனவே, ஏற்புடைமை என்பது, அளவையியலில் வடிவத்தினாலும், பொருளினாலும் பெறப்படுகிறது. பொருளும் வடிவமும் வேறுபட்டவை என்பதைச் சில எடுத்துக்காட்டுகள் மூலம் அறியலாம். மண்ணும் பானையும்; இதில் மண்ணைப் பொருள் என்றும் பானையை வடிவம் என்றும் கூறலாம். மண்ணிலிருந்து பானை, சாடி, கொலுப் பொம்மைகள் ஆகிய பல வடிவங்களைச் செய்ய முடியும். இங்கு ஒரு பொருள் பல வடிவங்களைப் பெறுகிறது. அதே போல் சாடி என்ற ஒரு வடிவமானது மண், பீங்கான் ஆகிய இரு வெவ்வேறு பொருள்களாலும் பெறப்படலாம். மற்றொரு எடுத்துக்காட்டினைக்கொண்டு பொருளுக்கும் வடிவுக்கும் உள்ள வேறுபாட்டினை வெளிக்கொணரலாம். இசை பல இராகங்களைக் கொண்டது. ஒரே இராகத்தில் இரு பாடல்கள் இருக்கலாம். இவ்விரு பாடல்களும் இருவேறு பொருள்களைப்பற்றி இருக்கமுடியும். கடவுளைப் பற்றிய பாடலும், ஒரு வீரனைப் பற்றிய பாடலும் ஒரே இராகத்தில் இருக்கலாம். இதே போல், ஒரு பாடல் வெண்பாவிலும், மற்றொரு பாடல் ஆசிரியப்பாவிலும் இருக்கலாம். வெண்பா ஆசிரியப்பா என்பவை பாடலின் வடிவமாகும். பகுப்பு வழி அளவையியல் வடிவ ஏற்புடைமையையும், தொகுப்பு வழி அளவையியல் பொருள் ஏற்புடைமையையும் ஆய்கின்றன. இதனால் பகுப்பவழி அளவையியலை வடிவநிலை அளவையியல் (Formal Logic) என்றும், தொகுப்பு வழி அளவையியலைப் பொருள் அளவையியல் (Material Logic) என்றும் கூறுவர். பொதுவாகக் கூறுமிடத்து, எல்லாச் சிந்தனை முடிவுகளும், முழுமையாக வெளியிடப்படும்பொழுது, வடிவ நிலை, பொருள் ஆகிய இரண்டையும் தம்மிடத்தே கொண்டுள்ளன.

பகுப்புவழி அளவையியல், உரை வடிவங்கள், அனுமான வடிவங்கள் ஆகியவற்றைப் பற்றிக் கூறுகிறது. உரை வடிவம் என்ன என்பதைப் பின் வரும் எடுத்துகாட்டுகள் விளக்குகின்றன.

| உரை | வடிவம் |
|---|---|
| எல்லா வயது வந்தவர்களும் வாக்காளர்கள் ஆவர். | – எல்லா 'எ.எம்.பி' ஆகும். (A.M.P) |
| எல்லாப் பறவைகளும் முட்டையிடும் இனம் ஆகும். | – எல்லா 'எ.எம்.பி' ஆகும். (A.M.P) |

மேலே உள்ள எடுத்துக்காட்டுகளில் பொருள்கள் வேறாக இருப்பினும், அவை எல்லா 'எ. எம். பி' ஆகும் என்ற ஒரே வடிவத்தினைக் கொண்டுள்ளன. இவ்வடிவ நிலையினையே உரைகளின் வடிவம் எனலாம். உரைகளைப்பற்றி நன்கு அறிந்துகொள்ள அவற்றைச் சொற்றொடர்களுடன் ஒப்பிடுதல் பயனுள்ளது. மாறுபட்ட பல சொற்றொடர்கள் ஒரே உரையின் கருத்தினை வெளிப்படுத்தலாம்.

"இரண்டு மணி அடிக்க 15 நிமிடம் உள்ளது,"
"மணி இப்பொழுது 1.45",

"இரண்டு மணி அடிக்க இன்னும் கால் மணி உள்ளது" ஆகிய மூன்று சொற்றொடர்களும் ஒரே உரையின் கருத்தைத் தெரிவிக்கின்றன. இதே போல் ஓர் உரையின் உட்கருத்தைப் பலமொழிகளில் வெவ்வேறாக வெளியிடலாம்.

"சிறுத்தை தன் புள்ளிகளை மாற்றிக்கொள்ள முடியுமா? என்ற ஆங்கிலப் பழமொழியின் உட்கருத்தும் "நாய் வாலை நிமிர்த்த முடியுமா?" என்கிற தமிழ்ப் பழமொழியின் உட்கருத்தும் ஒன்றே. மேலும் ஒரே சொற்றொடர் ஒன்றுக்கு மேற்பட்ட உரைகளைத் தன்னகத்தே கொண்டிருக்கலாம். 'இராமனும் சீதையும் காட்டுக்குச் சென்றார்கள்' என்ற சொற்றொடரில் 'இராமன் காட்டுக்குச் சென்றான்' 'சீதை காட்டுக்குச் சென்றாள்' என்ற இரு உரைகள் உள்ளன. தவிர, ஒரு சொற்றொடர் 'இரட்டுற மொழிதல்' அல்லது சிலேடைக் கருத்தைக்கொண்டும் இருக்கலாம். 'நீர் இருக்கப் போருக்கு என்ன குறை?' என்பது ஒரு சொற்றொடர். இது உரை அன்று. ஏனெனில் இது இருபொருள் கொண்டது. இச்சொற்றொடரினை,

'நீங்கள் இருக்கும்போது போருக்குக் குறைவில்லை' என்றோ 'தண்ணீர் இருக்கும் போது போருக்குக் குறைவில்லை' என்றோ மாற்றி அமைக்கும் போது இது இருபொருள் (சிலேடை) அற்ற உரைகளாக மாறுகிறது. சுருங்கக் கூறின், எல்லா உரைகளும் சொற்றொடர்களே. ஆனால் எல்லாச் சொற்றொடர்களும் உரையாகா (Proposition).

அளவையியலார் உரைகளைச் (உரைவடிவங்களை) சார்பற்ற உரை, சார்புரை என இருவகைகளாகப் பிரிப்பர். சார்புரையைச் சார்புற்ற உரை என்றும் வேறுபட்ட உரை என்றும் மேலும் இருவகையாகப் பிரிப்பர். சார்பற்ற உரை என்பது கட்டுப்பாடு எதுவுமில்லாத சொற்றொடர் ஆகும்.

'சில மனிதர்கள் ஆசிரியர்கள்'-சில 'எ' 'ப' ஆகும்,

'காகங்கள் வெள்ளையல்ல' – எந்த 'எ' யும் 'ப' அன்று என்பவை சார்பற்ற உரைகளாகும். சார்புற்ற உரையில் கட்டுப்பாடு காரண-காரிய வடிவில் இருக்கும்.

'புகை உள்ளது எனில் நெருப்பு இருக்கும்' – இது 'எ' எனில் 'ப' ஆகும். வேறுபட்ட உரையில் கட்டுப்பாடானது மாறிவரும் பயனிலைகளைக் கொண்டது.

'இந்த எண் ஒற்றைப்படை அல்லது இரட்டைப் படை எண் ஆகும்' – 'எ' உரைகளின் தன்மைகளைக் கொண்டு உரைவடிவங்களைக் கீழ்க்காணுமாறு வகைப்படுத்தலாம்.




கொடுக்கப்பட்ட சில கருத்துகளிலிருந்து கொடுக்கப்படாத கருத்தினைச் சென்று அடைவது அனுமான வடிவம் ஆகும். கொடுக்கப்பட்ட கருத்தினை 'மேற்கோள்' என்றும், அதனின்று வரவழைக்கப்பட்ட (பெறப்பட்ட) கருத்தினை 'முடிவு' என்றும் கூறுவர். ஆகவே அனுமான வடிவம் என்பது மேற்கோளிலிருந்து முடிவுக்குச் செல்லும் முறையாகும்.

பகுப்பு வழி அனுமானம், நேர் அனுமானம் வழி அனுமானம் என இருவகைப்பட்டது. கொடுக்கப்பட்ட ஒரே ஒரு கருத்து அல்லது உரையிலிருந்து ஒரு முடிவுக்கு வருவது நேர் அனுமானம். எவ்வித ஒப்பீடுதலும் இல்லாமல், கொடுக்கப்பட்ட ஒரு மேற்கோளிலிருந்து ஒரு முடிவுக்கு வருவதால் இதனை உடனடி அனுமானம் என்றும் கூறுவர். இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட கருத்துகள் அல்லது உரைகளிலிருந்து, அக்கருத்துகள் அல்லது உரைகளை ஒப்பிட்டு, ஒரு முடிவுக்கு வருவது வழி அனுமானம் எனப்படும். வழி அனுமானத்தின் சிறந்த, எளிய எடுத்துக்காட்டு முக்கூற்று முடிவு ஆகும். முக்கூற்று முடிவில் இரண்டு உரைகளை (மேற்கோள்களை) ஒன்றுடன் ஒன்றினை ஒப்பிட்டுப் பார்த்துப் பிறகு ஒரு முடிவு பெறப்படுகிறது. இதுவரையில் கண்ட அனுமான வடிவத்தை அடுத்த பக்கம் காணலாம்.

மேற்கூறிய இருவகை அனுமான வடிவங்களுக்கும் பொதுவாழ்க்கையிலிருந்து சில எடுத்துக்காட்டுகள் தரலாம். ஓர் ஆசிரியர், வகுப்பிலுள்ள மாணவர்களைப் பார்த்து, 'இந்தக் காலாண்டுத் தேர்வில் இராமன் என்கிற ஒரு மாணவன் மட்டுந்தான் வெற்றி பெறவில்லை' என்று கூறுவதாகக் கொண்டால் அதிலிருந்து உடனடியாக 'அந்த வகுப்பு மாணவர்கள் இராமனைத் தவிர அனைவரும் காலாண்டுத் தேர்வில் வெற்றி பெற்று விட்டதாக' அனுமானிக்கின்றனர். இது நேர் அனுமானத்திற்கு ஓர் எடுத்துக்காட்டு. இந்த நேர் அனுமானம் முறையான ஒன்று. ஆனால் எல்லா நேர் அனுமானங்களும் முறையானவை என்று கூறமுடியாது. சில நேர் அனுமானங்கள் தவறாக இருக்கலாம் தமிழர்கள் எல்லோரும் இந்தியர்கள் என்ற கூற்றிலிருந்து, ஒருவர் 'இந்தியர்கள் எல்லோரும் தமிழர்கள்' என்று அனுமானித்தால் அது தவறான நேர் அனுமானம். இனி, முக்கூற்று முடிவுக்கு ஓர் எடுத்துக்காட்டு:

'பட்டதாரிகள் எல்லோரும் படித்த மனிதர்கள்,

'கல்லூரி ஆசிரியர்கள் எல்லோரும் பட்டதாரிகள்',

| அனுமான வடிவம் | நேர் அனுமானம் | வழி அனுமானம் (முக்கூற்று முடிவு) |
|---|---|---|
| மேற்கோளிலிருந்து முடிவுக்குச் செல்வது | ஒரு மேற்கோளிலிருந்து முடிவுக்குச்(ஒப்பிடுதல் இல்லாமல் )செல்வது. | இரு மேற்கோளிலிருந்து முடிவுக்கு (ஒப்பிட்டுப் பார்த்துச் )செல்வது. |

ஆகவே, கல்லூரி ஆசிரியர்கள் எல்லோரும் படித்த மனிதர்கள். மேற் சொன்ன முக்கூற்று முடிவு ஏற்பு டைய ஒன்று. ஆனால், எல்லா முக்கூற்று முடிவுகளும் ஏற்புடையனவாகா.

வழி அனுமானத்தின் ஒரு வகையாகிய நியாயக் கோவை என்பது மூன்று அல்லது மூன்றுக்கு மேற் பட்ட மேற்கோள்களைக் காட்டி ஒரு முடிவுக்கு வரும் முறை. இரண்டு மேற்கோள்களிலிருந்து ஒரு முடிவுக்கு வரும் முறை முக்கூற்று முடிவு ஆகும். ஒளவையாரின் ஒரு பாடல் நியாயக் கோவைக்கு ஒரு சிறந்த எடுத் துக்காட்டு.

'வரப்பு உயர நீர் உயரும்
நீர் உயர நெல் உயரும்
நெல் உயரக் குடி உயரும்
குடி உயரக் கோன் உயரும்
கோன் உயரக் கொற்றம் உயரும்.'

என்ற பாடலிலிருந்து வரப்பு உயரக் கொற்றம் உயரும் என்று அறிதல்கூடும்.

மேல் நாட்டு அளவையியலில் நியாயக்கோவையை அரிசுடாட்டிலின் நியாயக் கோவை, காக்ளியனின் நியாயக் கோவை என்று இரண்டு வகையாகக் கூறுவர்.

அளவையியலிலேயே ஒரு சுவையான பகுதி இரு தலைக் கொள்ளி வாதம் ஆகும். ஒரு மனிதனுக்கு இரு வழிகள் மட்டுமே இருந்து, அந்த இருவழிகளுமே அவன் விரும்பாத முடிவுகளைத் தருமென்றால், அவன் இருதலைக் கொள்ளி எறும்பாக இருக்கிறான் என்று கூறலாம். அளவையியலில் இது மாற்றானை முறியடிக்கும் கருவியாகப் பயன்படுத்தப்படுகிறது.

அலெக்சாந்திரியா நூலகம் எரிக்கப்பட வேண்டும் என்பதற்குக் காலிப் ஓமர் (Omar) என்பவர் ஓர் இரு தலைக்கொள்ளி வாதத்தைப் பயன்படுத்தினார்.

அலெக்சாந்திரியா நூலகத்தில் உள்ள புத்தகங்கள், குரானில் கூறப்பட்ட கருத்துகளையே எடுத்துக் கூறு வனவாயின், அவை தேவையற்றவை; அப்புத்தகங்கள் குரானில் இல்லாத கருத்துகளை எடுத்துக் கூறுவனவா யின் அவை மோசமானவை; ஆகவே அவை எரிக்கப் பட வேண்டும் என்று காலிப் ஓமர் கூறினார்.

போலிகள்: போலி என்பது என்ன? மூலத்தைப் போல் தோற்றமளித்து, ஆனால் மூலம் அல்லாத எந்த ஒன்றாகவும் விளங்குவது போலியாகும். 'போலி களைக்கண்டு ஏமாறாதீர்கள்' என்கிற எச்சரிக்கை, வாணிகத்துக்கு மட்டுமன்றி அளவை இயலுக்கும் பொருத்தமான ஒன்றே. அளவை இயலில் ஒரு வாதம் நியாயம் போன்ற தோற்றத்துடன்கூடி, ஆனால் உண் மையில் நியாயமில்லாததாக இருக்கும்போது ஏற்படும் குறையே போலியாகும். ஒரு வாதம் நியாயமானதா போலியானதா என்று அளவை இயலில் கட்டாயம் தீர்மானிக்கப்பட வேண்டும். இதனாலேயே போலிகள் என்று ஒரு தனி அத்தியாயம் எல்லா அளவை இயல் நூல்களிலும் காணப்படும். போலி என்பது பொய்ம் மையைக் குறிக்கும். கிரேக்கத் தத்துவ ஞானியான பிளாட்டோ என்பவர் போலிகளைப் பற்றிக் கூறும் போது வாதங்கள் மனிதர்களைப் போன்றே ஏமாற் றும் தன்மை வாய்ந்தன என்கிறார்.

அளவை இயலில் போலிகளைக் கீழ்க்காணுமாறு வகைப்படுத்துவது மரபு.




ஒழுங்கற்ற மாற்றம்: பக்தி உள்ளவர்கள் கோயிலுக்குச் செல்கிறார்கள் என்பதிலிருந்து, கோவிலுக்குச் செல்லுபவர்கள் பக்தி உள்ளவர்கள் என்று அனுமானிப்பது ஒழுங்கற்ற மாற்றமாகும். அதேபோல் தேர்வு எழுதிய சிலர் வெற்றி பெறவில்லை என்பதிலிருந்து வெற்றி பெற்ற சிலர் தேர்வு எழுதவில்லை என்று கூறுவது ஒழுங்கற்ற மாற்றப் போலியாகும்.

இலக்கண இரட்டுறு போலி: இது குழப்பமான இலக்கண அமைப்பில் தோன்றுவது. ஒரு சொற்றொடர் இரண்டு பொருள்களைத் தருவதாக இருப்பின் அதுவே இலக்கண இரட்டுறு போலியாகும். இதனால், ஒருவர் ஒன்று கூற, கேட்பவர் வேறு ஒன்றைப் பொருள் செய்து கொள்வர். எடுத்துக்காட்டு:

ஆடை நீக்கிய பால் = ஆடையில்லாத வெறும்பால்/மானங்கெட்ட பால்.

உச்சரித்தற் போலி: பேசும்போது சொற்றொடரில் உள்ள சில சொற்களை அழுத்தமாக உச்சரிப்பதன் மூலம், அச்சொற்றொடரின் பொருள் மாறுபட வாய்ப்புள்ளது. சொற்களின் உச்சரிப்பினால் கூற வந்த கருத்துக்கு மாறுபட்ட கருத்துத் தோன்றுமாயின் அது உச்சரித்தற் போலியாகும். 'கண்களே பெண்களை நம்பாதே!' என்பதை அழுத்தி உச்சரிப்பதன் மூலம் பெண்களை மட்டுந்தான் நம்பக்கூடாது என்றும், கண்களால் பார்க்கும் மற்றவற்றையெல்லாம் நம்பலாம் என்றும் கொள்ள வாய்ப்புள்ளது.

கூட்டுப்போலி, பிரிவுப்போலி: பகுதிகளுக்கு உண்மையாய் இருப்பது அதன் முழுமைக்கும் உண்மையாக இருக்கவேண்டும் என்று கருதுவது கூட்டுப்போலியாகும். ஒருவன் கோதுமை இல்லாமல் வாழ முடியும். அரிசி, கோதுமை, வெண்டை இவை உணவுப் பொருள்கள். இவற்றை அடிப்படையாக வைத்துக் கொண்டு, ஒருவன் உணவில்லாமல் வாழ முடியும் என்று கூறினால் அது, கூட்டுப் போலிக்குச் சிறந்த எடுத்துக்காட்டு. முழுமைக்கு உண்மையாக இருப்பது பகுதிகளுக்கும் உண்மையாக இருக்க வேண்டும் என்று வாதிடுவதால் தோன்றும் போலியே பிரிவுப் போலியாகும். ஒருவன் உணவில்லாமல் வாழ முடியாது. அரிசி ஓர் உணவு; மீனும் ஓர் உணவு. ஆகவே, ஒருவன், அரிசியோ மீனோ இல்லாமல் வாழ முடியாது என்பது பிரிவுப் போலியாகும்.

வந்தேறிய பண்புப் போலி: இது நேர்வகை, மறுதலை என்று இருவகைப்படும். சாதாரண நிலைமைகளில் நியாயமாக உள்ளது சிறப்பு நிலையிலும் நியாயமாக இருக்க வேண்டும் என்று கூறுவதால் தோன்றும் போலி நேர்வகை வந்தேறிய பண்புப் போலியாகும். இதே போல் சிறப்பு நிலைகளில் நியாயமாக இருப்பது எல்லா நிலைகளிலும் நியாயமாக

இருக்கவேண்டும் என்று வாதிடுவது மறுதலை வந்தேறிய பண்புப் போலியாகும்.

வினா வேண்டல் போலி: சான்றால் உறுதி செய்ய வேண்டிய கருத்தையே மேற்கோளாகக் கொண்டு வாதிடும் முறைக்கு வினா வேண்டல் என்றுபெயர் வினா வேண்டல் பல வகைப்படும். இவற்றில் இரண்டினை இங்குக் காணலாம். அவையாவன: மாற்றுப் பெயர் வினா வேண்டல், வட்டச் சிந்தனை என்பனவாம். எதனை விளக்கவேண்டுமோ அதனை அதற்குச் சமமான அதே பொருள் கொண்ட ஒரு சொல்லால் அல்லது சொற்றொடரால் விளக்குவது மாற்றுப் பெயர் வினா வேண்டல். ஆசிரியர் ஒரு மாணவனைப் பார்த்து, 'வகுப்புக்கு ஏன் காலந்தாழ்த்து வந்திருக்கிறாய்?' என்று வினாவும்போது அவன் 'தாமதமாகிவிட்டது ஐயா' என்று கூறினால், அது இவ்வகைப் போலிக்குச் சரியான எடுத்துக்காட்டு.

அ, ஆ என்று இரண்டு சொற்றொடர்கள் இருக்கின்றன என்று கொள்ளும்போது இதில் 'அ' உண்மை என்பதை 'ஆ' வைக்கொண்டும், 'ஆ' உண்மை என்பதை 'அ' வைக்கொண்டும் நிரூபித்தால் அது வட்டச் சிந்தனையாகும். எடுத்துக்காட்டு: வேதங்கள் பொய்யானவை அல்ல. ஏனெனில், அவை கடவுளால் உண்டாக்கப்பட்டவை. ஆனால் கடவுள் இருக்கிறார் என்பது எப்படித் தெரியும்? என்று வினவினால் வேதங்கள் கடவுள் இருக்கிறார் என்று கூறுகின்றன என்க் கூறுதல்.

சிக்கல் வினாப்போலி: ஒரு வினாவைக் கேட்பதன் மூலம் ஒருவரைத் தம் கருத்துக்கு உடன்படச் செய்வது சிக்கல் வினாப்போலியாகும். ஒருவரைப் பார்த்துக் கேட்ட கேள்விக்கு உண்டு அல்லது இல்லை என்று மட்டும் கூறுமாறு சொல்லி, 'நீங்கள் குடிப்பதை நிறுத்திவிட்டீர்களா?' என்று கேள்வி கேட்டால், அவன் எப்படி விடை அளித்தாலும் (உண்டு என்றாலும் இல்லை என்றாலும்) அது அவன் கள் குடிப்பவன் என்கிற நம் கருத்துக்கு உடன்படச் செய்யவைக்கும் ஒரு முறையாகும். ஆனால், இது ஏற்புடையதன்று. பொதுவாக வழக்கறிஞர்கள், நீதிமன்றங்களில் சாட்சிகளை இப்படிப்பட்ட சிக்கல் வினாக்களை எழுப்பி அடக்குவது வழக்கம்.

தொடர்பில்லா முடிவுப்போலி: வாதத்திற்கு எடுத்துக் கொண்டுள்ள கருத்தை நியாயமான முறையில் உறுதிப்படுத்தாமல் அக்கருத்துக்குத் தொடர்பில்லாத செய்திகளைக் கூறி, நியாயம் கற்பிக்க முயல்வதால் உண்டாகும் போலிக்குத் தொடர்பில்லா முடிவுப்போலி என்பது பெயர். இது பலவகைப்படும். அவற்றில் சில பின்வருவன:

ஒருவரைப் பற்றிய விவாதம்: ஒருவர் கூறிய வாதத்தில் உள்ள கருத்தினை மறுப்பதற்கு மாறாக அந்தக் கூற்றினை மறுக்க முயல்வதால் உண்டாகும் போலி இது. அரசியலிலும் பட்டிமன்றங்களிலும் இத்தகைய வாதம் மிகவும் பயன்படுத்தப்படுகிறது.

விருப்பு வெறுப்பு வாதம்: நிலைநாட்ட விரும்பும் கூற்றினை ஆராயாது, அதற்கு மாறாக உணர்ச்சிகளுக்கும் விருப்பு வெறுப்புகளுக்கும் மதிப்புக் கொடுத்து அவற்றை அடிப்படையாகக் கொண்டு வாதமிடுவதால் உண்டாகும் போலியாகும்.

எடுத்துக்காட்டு: தார்வினின் (Darwin) பரிணாமக் கொள்கை ஏற்கமுடியாத ஒன்று. ஏனெனில், நம் முன்னோர்கள் குரங்குகளா?

அனுதாபவழி வாதம்: வாதத்தில் உள்ள கருத்தினை ஆய்ந்து வெற்றி பெற முயற்சி செய்யாமல், மக்களின் அனுதாப உணர்ச்சியின் அடிப்படையில் காரியத்தைச் சாதித்துக் கொள்ளும் முயற்சியே அனுதாப வழி வாதம்.

எடுத்துக்காட்டு: தேர்தல் வேட்பாளர் ஒருவரின் வாதம்: 'இந்த முறை நீங்கள் எனக்கே வாக்களிப்பீர். ஏனென்றால், இதற்கு முன் ஐந்து முறை நான் தேர்தலில் நின்று தோற்றவன். இந்த முறையாவது என்னை வெற்றி பெறச் செய்யுங்கள்.

பக்திவாதம்: ஒரு கொள்கையை நிலைநிறுத்தஅதிலுள்ள உட்கருத்தில் நியாயத்தை எடுத்துரைக்காமல், மரபு, பெரிய நூல், தலைவர் ஆகிய இன்ன பிறவற்றைக் காட்டி நிறுவ முயலுவதால் தோன்றும் வாதம் பக்தி வாதம் ஆகும். எடுத்துக்காட்டு: ஆத்மா அழிவில்லாதது. ஏனெனில் பிளாட்டோ (Plato) அவ்வாறு கூறுகிறார்.

அறியாமை வாதம்: ஒரு வாதத்தின் கருத்தினை ஒருவரின் அறியாமையைப் பயன்படுத்தி நிறுவ முயலும் வாதமே அறியாமை வாதம்.

எடுத்துக்காட்டுகள்: 1. வசிய இயற்காட்சி(Telepathy) உண்மையானது என நான் கூறுவதை நீ ஒப்புக் கொள்ள வேண்டும். ஏனெனில், உனக்கு அதைப்பற்றி ஒன்றும் தெரியாது.

2. வானவியல் ஆராய்ச்சியாளர்கள் இவ்வுலகில் பல சூரியன்கள் இருக்கின்றன என்று கூறுகிறார்கள். அவர்கள் கூற்றை நாம் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். ஏனெனில், அவற்றைப்பற்றி நமக்குத் தெரியாது.

தண்டனை கொடுக்கும் வாதம்: சிலசமயம் மனிதர்கள் தங்கள் நியாயத்தை அச்சுறுத்தல் மூலம் நிலைநிறுத்த முயல்வார்கள். இதுவே தண்டனை கொடுக்கும் வாதம்.

எடுத்துக்காட்டு: வேலை நிறுத்தத்தில் ஈடுபடு; இல்லையேல் உன்னை உதைப்பேன்.

தொடர்பின்மை வாதம்: இது மேற்கோளுக்கும் முடிவுக்கும் தொடர்பில்லாமல் ஒரு வாதத்தை எடுத்துக் கூறி நிலை நாட்டும் முயற்சி.

எடுத்துக்காட்டு: மழை பெய்தால் நிலம் ஈரமாகும். ஆகவே நிலம் ஈரமாக இருப்பதால் மழை பெய்திருக்கவேண்டும்.

இந்திய அளவை இயலைப் பொறுத்த வரையில் இந்தியத் தத்துவ ஞானிகள் அனுமானத்தினை முறைப்படுத்தி ஆராய்ந்துள்ளனர். அதன்படி அனுமானத்தில் ஐந்து உறுப்புகள் உள்ளன.

அவையாவன:

| | |
|---|---|
| 1. பிரக்ஞை (சான்றால் உறுதிப்படுத்த வேண்டிய உரை) | : தூரத்தில் உள்ள மலையில் நெருப்பு உள்ளது. |
| 2. ஏது (சான்று) | : ஏனெனில் அங்கே புகை உள்ளது. |
| 3. உதாரணம் (தனி நிகழ்ச்சியினால் பொது உண்மையை நிலை நிறுத்துதல்) | : எங்கெல்லாம் புகை உள்ளதோ அங்கெல்லாம் நெருப்பு உண்டு. வீட்டுச் சமையலறையைப் போல. |
| 4. உபநயம் (காட்சியைப் பொது உண்மையுடன் தொடர்புபடுத்துதல்) | : தூரத்தில் உள்ள மலையில் காணும் புகை நெருப்புடன் தொடர்பு கொண்ட ஒன்றே. |
| 5. நிகமனம் (முடிவு) | : ஆகவே தூரத்தில் உள்ள மலையில் நெருப்பு உள்ளது. |

இந்திய அனுமானத்தின் சிறப்பு அது பேச்சு முறையில் (Dialogue) அமைந்துள்ளமையேயாகும். பொதுவாக இந்திய அனுமானம் இயற்கை முறையாக அமைந்ததெனலாம். த.ந.க.

**அளவை முறை நேர்காட்சிக்கொள்கை:** தத்துவ விசாரணை மனிதனுக்கு இயல்பான, இன்றியமையாத ஒன்றாக அமைந்துள்ளது. வாழ்க்கையின் அடிப்படைக் கூறுகள் பற்றிய முறைப்பட்ட, ஒருங்கிணைந்த, முழுமையான மெய்யறிவினைப் பெறத் தத்துவ ஆராய்ச்சி முயலுகிறது. ஊகித்துணர்தல், ஆழ்ந்து சிந்தித்தல், தரம் குறித்தல், செயல்முறை வகுத்தல்,சீர்தூக்கிப் பகுத்தாய்வு செய்தல் போன்றன தத்துவ ஆராய்ச்சியின் முறைகளாகும். இவற்றைப் பயன்படுத்தி, மனித வாழ்க்கை பற்றிய முழுமையான உண்மையினைத் தத்துவம் கண்டுணர்ந்து தெளிவுபடுத்த முற்படுகிறது. தத்துவ ஆராய்ச்சியின் ஒரு தலைசிறந்த பகுதியாக 'அறிவாராய்ச்சியியல்' (Epistemology) உள்ளது. இவ்வியலின் கொள்கைகள் சிறப்பாக இரு பெரும் கருத்துப் பிரிவுகளைச் சார்ந்து எழுந்துள்ளன. அவை, (1) பட்டறிவுகளுக்கு முற்பட்டனவும் அறிவாய்வின் துணைக்கொண்டு அடையக் கூடியனவுமான ஆதாரக் கருத்துகள் (Apriori ideas), அறிவு தோன்றி வளர்தலுக்கு அடிப்படைகளாகும் என்பதும், (2) பட்டறிவு வழிகளால் மட்டுமே அறிவு தோன்றுதல் இயலும் என்பதும் ஆகும். இவற்றுள், பிந்திய கோட்பாட்டிற்குத் துணை செய்வதாக, நேர்காட்சிக் கொள்கை (Positivism) உள்ளது. இக்கொள்கை, அறிவு வளர்ச்சியில் அளவையியல் முறைகளின் இன்றியமையாமையை வலியுறுத்துவதாகவும் அமைந்துள்ளது. இக்கருத்தினைத் தீவிரமாகப் பற்றி நிற்போர், தத்துவ ஆராய்ச்சியின் இறுதி நோக்கம் பற்றிய புதிய விளக்கம் ஒன்றைக் குறிப்பிடுகின்றனர். அறிவின் கருவிகளாகச் செயற்படும் மொழிச் சொற்களைப் பகுத்தாராய்ந்து இவற்றின் பொருளினைத் தெளிவாக உறுதிசெய்தல், பல்வேறு அறிவியல் பொதுக் கருத்துகளின் முறையில் அடிப்படைகளை (Methodological Bases) ஆராய்தல், ஆகியவையே தத்துவத்தின் நோக்கங்களாக இருத்தல் வேண்டுமென்பது இப்புதிய விளக்கத்தினைக் குறிப்பிடும் 'அளவை முறை நேர் காட்சிக் கொள்கை' (Logical Positivism) யினரது கருத்தாகும்.

பட்டறிவினின்றும் பெறப்படும் விவரங்களை ஆதாரங்களாகக் கொண்டுள்ள தத்துவ அமைப்புகள் பொதுவாக 'நேர்காட்சிக் கொள்கை' என்பதுள் அடங்கும். நேர்காட்சிக் கொள்கையினருக்கு, பட்டறிவிற்கு முற்பட்டனவும் உள்ளத்துள் இயல்பாகப் பொதிந்து கிடப்பனவுமாகிய கருத்துகளின் (Innate ideas) உண்மைத் தன்மையிலும், இத்தகைய கருத்துகளைப் பற்றியெழும் தத்துவக் கோட்பாடுகளிலும் நம்பிக்கை கிடையாது. எனவே நேர்காட்சிக் கொள்கையும் காலத்தால் இதற்கு முற்பட்ட அனுபவ வாயிற் கொள்கையும் (Empiricism) ஒரே தன்மையுடையவையாம். எனினும் அனுபவ வாயிற் கொள்கையினர் யாவரும் நேர்காட்சியினர் எனல் பொருந்தாது. எடுத்துக்காட்டாக சான் இலாக்கு (John Locke), தேவிடு இயூம் (David

Hume) போன்றோர் அனுபவவாயிற் கொள்கையினர். ஆனால் இவர்கள் தம் தத்துவ அமைப்பினை உருவாக்குதலில் பட்டறிவினைச் சார்ந்திராத கணித முற்கோள்களின் (Mathematical Postulates) மறுக்கவியலா உண்மையினை ஏற்கின்றனர். இவ்வாறே அனுபவ வாயிற் கொள்கையின் பிறிதொரு ஆதரவாளரான பாதிரியார் பெர்க்கிலி (Berkeley) என்னும் தத்துவ அறிஞரும் 'ஆன்மா' 'இறைக் கருத்து' போன்ற ஆதாரக் கருத்துகளை ஒப்புக் கொள்கிறார். இத்தகையோரை நேர்காட்சியினர் எனல் பொருந்தாது. தத்துவ வரலாற்றின் அடிப்படையில் நோக்கும்போது சான் இசுடுவர்ட்டு மில் (J.S. Mill) என்னும் ஆங்கில அறிஞரது 'அனுபவ வாயிற் தத்துவம்' தெளிவாக நேர்காட்சிக் - கொள்கையினை அடிப்படையாகக் கொண்டது எனலாம்.

தத்துவ ஆராய்ச்சியில் பல்வேறு மெய்யறிவு, மற்றும் இறையுணர்வுச் சிக்கல்கள் எழுகின்றன என்பதை நேர்காட்சிக் கொள்கை ஏற்கிறது; ஆனால் நமது அறிவுமுறைகளின் துணைக்கொண்டு இச்சிக்கல்களுக்கு விடைகாண்பது இயலுவதன்று என இக்கொள்கை திட்டவட்டமாகக் குறிப்பிடுகிறது. இவை போன்ற சிக்கல்களைத் தத்துவ ஆராய்ச்சியில் எழுப்புவது பயனற்ற செயலாகும் என்றும் இக்கொள்கையினர் சிலர் கருத்துத் தெரிவித்துள்ளனர். இக்கருத்து, பின்னர் எழுந்த 'பயனீட்டுக் கொள்கை'(Pragmatism), அளவை முறைக்கொள்கை ஆகியனவற்றிற்கு அடித்தளமாக அமைந்தது எனலாம். பாதிரியார் பெர்க்கிலி, ஹியூம் போன்றோரும் கருத்துகளின் உண்மையினை அனுபவ உரைகல்லில் சரிபார்க்க வேண்டும் என்று குறிப்பிட்டதும் நேர்காட்சி நோக்கினை ஆதரிப்பதாகும். அறிவியல்களில் சோதனைகளின் வழியே கண்டு பிடிக்கப்பட்டுள்ள பயன்மிக்க உண்மைகளின் சிறப்பினை நேர்காட்சிக் கொள்கை வலியுறுத்துவதாக அமைகிறது. ஆனால் அறிவியல் ஆராய்ச்சிகளிலும் சில ஆதாரச் சிக்கல்களுக்குச் சோதனைமுறை வழியே விடை காண்பது இயலாமற் போகக்கூடும். இத்தகைய சிக்கல்களுக்கும் அனுபவ வழிச் சான்றுகளின் அடிப்படையில் தீர்வுகாண முயலவேண்டுமேயன்றி வேறு முறைகளைப் பயன்படுத்துவது கூடாது என்று நேர்காட்சிக் கொள்கை குறிப்பிடுகிறது. நேர்காட்சிக் கொள்கையின் தோற்றத்திலும் வளர்ச்சியிலும் ஆகசுட்டு காம்தே (Auguste Comte, கி.பி.1798-1857) என்னும் பிரெஞ்சு நாட்டு அறிஞரது பங்கு மிகச் சிறந்ததொன்றாகும். சிலபோது இவரது தத்துவக் கருத்துகளை மட்டும் குறிப்பதாக 'நேர்காட்சிக் கொள்கை' என்னும் சொற்றொடர் பயன் படுத்தப்படுவதனின்றும் இது தெளிவாகும். மனிதனது சிந்தனை படிப்படியாகப் பல்வேறு நிலைகளின்வழியே வளர்ச்சி பெற்று வந்துள்ளது என்று காம்தே சுட்டிக்காட்டினார். தொடக்கத்தில் மனிதச் சிந்தனை சமய-இறைக்கருத்துகளின் அடிப்படையில் அமைந்திருந்ததென்றும், அடுத்து, தத்துவ நிலையினை அடைந்ததென்றும், இனி நேர்காட்சி அல்லது அறிவியல் நிலையினை மனிதச்சிந்தனை எட்டவேண்டிய கட்டாயம் எழுந்துள்ளது என்றும் காம்தே குறிப்பிட்டுள்ளார். இந்நிலையில் சிக்கல்களை ஆராய நேர்காட்சி அல்லது நேர் அனுபவம் சார் நோக்கு, தத்துவ ஆராய்ச்சி முறையாக அமைகிறது என்று சொல்லப்படுகிறது.

முன்னர்க் குறிப்பிட்டபடி, நேர்காட்சிக் கொள்கையின் இன்றைய வளர்ச்சிக்கிணையாகத் தத்துவத்தில் அளவைமுறைப் பகுப்பாய்வு (Logical Analysis) கையாளப்படுகிறது. இது தத்துவ ஆராய்ச்சியின் புதிய நோக்காக அமைந்துள்ளது. ஆசுத்திரியா (Austria) நாட்டுத் தத்துவ அறிஞர் விட்கென்சுடீன் (Wittgenstein-கி.பி.1889-1951), ஓகானர் (O,coonor), கெப்லர் (Keplar) போன்றோர் இத் தத்துவ மனப்பான்மையின் பேராளர்களுள் சிறந்த சிலராவர். தத்துவ ஆராய்ச்சிப் பொருளான 'உலகம்' (Universe) உண்மையானதெனினும் இதுபற்றிய பல்வேறு தத்துவக் கூற்றுகளின் உண்மை பற்றி உறுதியாக ஏதும் கூறவியலாது. மக்கள் பட்டறிவுகளின் வாயிலாகவே உலகினை அறிய முடிகிறது. ஆனால், இவ்வனுபவங்கள் உலகக்கூறுகளுக்குக் காரணங்களாகவோ அக்கூறுகளின் இயல்புகளைக் கட்டுப்படுத்துவனவாகவோ இருத்தல் இயலாது. எனவேதான், பட்டறிவின் வாயிலாக எழாத தத்துவக் கூற்றுகள் பற்றி நேர்காட்சியினர் கவலைப்படுவதில்லை. உலகப் பட்டறிவின் துணைக்கொண்டு அதன் இயல்பினை வரையறை செய்து விவரித்தலில் மொழியினை மேலும் திட்பமாகவும் சிறப்பாகவும் பயன்படுத்துவது உதவும் என்பதால் தத்துவக் கூற்றுகளில், பயன்படுத்தத் தக்க ஓர் இலட்சிய மொழியினை உருவாக்கவும் விட்கென்சுடீன் முற்பட்டார். நேர்காட்சிக் கொள்கையின் இப்புதிய விளைவு தத்துவத்திற்கு ஒரு புதிய நோக்கத்தினை அளித்துள்ளது. மொழிச் சொற்களின் பொருளினைப் பகுத்தாய்வு செய்து அளவையியல் முறைப்படி அவற்றைப் பயன்படுத்துவது, உலகம் பற்றி நம் பட்டறிவின் வழி எழும் விவரங்களின் உண்மைப் பொருளை அறிய உதவவல்லது என்பது இவ்விளைவின் பயனாக அமைகிறது.

விட்கென்சுடீனின் கருத்துகளின் அடிப்படையில், இந்நூற்றாண்டில் (1920-ஆம் ஆண்டு முதல்) நேர்காட்சிக் கொள்கையில் புதிய கிளையாக எழுந்தது அளவைமுறை நேர்காட்சிக் கொள்கை' யாகும். இது ஐரோப்பாவில் ஆசுத்திரியா நாட்டு வியன்னா நகரில் சில தத்துவ அறிஞர்களால் முதன்முதலில் விவரிக்கப்பட்டது. அறிவியல் முறைகளின் வழியே எழும்

அறிவு மட்டுமே உண்மையறிவு என்றும் பண்டைய தத்துவக் கருத்துகள் பொருளும் பயனும் அற்றவை என்றும் இக்கொள்கை கருதியது. அளவையியல் விதிகளின்படி ஆய்வு முறைகளின் துணைக்கொண்டு எடுக்கப்படும் முடிவுகள் மட்டுமே உண்மைகளாகும். உண்மையான தத்துவ ஆராய்ச்சி மொழியியல் ஆராய்ச்சியுடன் இணைந்திருக்க வேண்டுமென்றும் இக்கொள்கையினர் ஒரு சிலர் குறிப்பிட்டனர். இத்தகையோருள் ஆங்கிலேயத் தத்துவ அறிஞர்களும் பலர் இருந்தனர். உலகத்தை முழுமையாக உணர்ந்து விவரிக்க வியலாது என்றும் விவரிக்கத்தக்க உலகக் கூறுகள் மொழிச்சொற்களுடன் தொடர்பு கொண்டவை என்றும் அளவைமுறை நேர்காட்சிக்கொள்கை சுட்டிக் காட்டுகிறது. எனவே தான், விடைகாண முடியாப் பெரும் சிக்கல்களில் தத்துவம் தன் காலத்தையும் முயற்சியினையும் செலவிடுவதைக் காட்டிலும் மொழிச் சொற்களை ஆராய்ந்து பண்படுத்துவதில் முற்பட வேண்டும் என இக்கொள்கையினர் கருதுகின்றனர். இதன் விளைவாக, இக்கொள்கையினரின் ஆராய்ச்சிகள், சிறப்பாக மொழியியல் ஆராய்ச்சிகளுடன் தொடர்புடையனவாக அமைகின்றன. அளவையியல் அறிஞர், அறிவியல் அறிஞர் ஆகியோரும் இன்று இக்கொள்கையின் கோட்பாடுகளில் மிக்க ஆர்வம் காட்டி வருகின்றனர். அயர் (A.J. Ayer), மூர் (G.E. More) போன்ற ஆங்கிலேய அறிஞர்களின் நூல்களும் இக்கொள்கையினை மேலும் விரிவுபடுத்துவனவாக அமைகின்றன. தத்துவம், அறிவியல், அளவையியல், கணிதம், மொழியியல் ஆகிய பல்வேறு துறைகளை இணைக்கும் ஓர் ஆராய்ச்சிப் பாலமாக 'அளவைமுறை நேர்காட்சிக் கொள்கை' விளங்குகிறது.

எஸ். ச.

**அளிப்பு:** குறிப்பிட்ட நேரத்தில், குறிப்பிட்ட விலையில் எந்த அளவுக்குப் பண்டம் அல்லது பணி பிறருக்கு விற்பதற்கு அல்லது கொடுப்பதற்கு ஆயத்த நிலையில் இருக்கிறதோ அந்த அளவே அளிப்பு (Supply) எனப்படும். குறிப்பிட்ட நேரத்தில் குவிண்டால் ஒன்றுக்கு உரு. 100 விலை வீதம் விற்பதற்கு அங்காடியில் 1000 குவிண்டால் நெல் ஆயத்தமாக இருந்தால் அந்த நேரத்தில் அவ்வங்காடியில் நெல்லின் அளிப்பு 1000 குவிண்டாலுக்குச் சமம்.

அளிப்பும் இருப்பும்: அளிப்பும் இருப்பும் வெவ்வேறு கருத்துகளாகும். மிகக் குறுகிய அறிவிப்பிற்குள் அங்காடிக்கு வரத்தக்க வகையில் அங்காடியில் இருப்பது இருப்பு. இருப்பு முழுவதும் விற்பனைக்கு ஆயத்தமாக இருக்க வேண்டுமென்பதில்லை. எடுத்துக்காட்டாக, குறிப்பிட்ட ஒருமாதத்தில் 5000 குவிண்டால் நெல் விளைந்திருக்கிறதென்றால் அப்போதைய இருப்பு 5000 குவிண்டால் நெல். அப்போது சந்தை விலை குவிண்டால் ஒன்றுக்கு உரு. 100 என்றும் அவ்விலையில் 2000 குவிண்டால் நெல்லை மட்டும் விற்பதற்கு வேளாண்மையினர் ஆயத்தமாக இருக்கிறார்கள் என்றும் கருதிக் கொண்டால் நெல்லின் இருப்பு 5000 குவிண்டால்; நெல்லின் அளிப்பு 2000 குவிண்டால் ஆகும்.

பண்டத்தின் தன்மையும் அளிப்பும்: விரைவில் கெட்டுப் போகத்தக்க பால், பழம், இறைச்சி, மலர் போன்றவற்றின் இருப்பும் அளிப்பும் ஒன்றாக இருக்கின்றன. இப்பண்டங்களைச் சேமித்து வைக்க முடியாததே இதற்கான அடிப்படைக் காரணம். நீடித்து இருக்கத்தக்க பண்டங்களின் இருப்பும் அளிப்பும் மாறுபடலாம்.

அளிப்பு விதி: பொருளியலில் இரண்டு மாறிகளுக்கிடையேயுள்ள தொடர்பைப் பற்றிய கற்பிதக்கூற்றை விதி என்பர். மனிதனின் நடவடிக்கைகள் ஒரே விதத்தில் இருக்கமாட்டா என்பதாலும், பொருளாதார மாறிகளின் தன்மைகளும் மாறிக்கொண்டே இருக்கும் என்பதாலும், வேறு பல காரணங்களாலும் பொருளாதார விதிகளைப் பற்றிக் குறிப்பிடும்போது, "மற்றவை மாறாதிருக்கும்போது" என்ற சொற்றொடரைச் சேர்த்துக் கொள்வது வழக்கம்.

பொருளியலில் விலை மாற்றத்திற்கும் அம்மாற்றத்தினால் தோன்றும் அளிப்பு மாற்றத்திற்கும் உள்ள தொடர்பை விளக்குவது அளிப்பு விதி. 'மற்றவை மாறாதிருக்கும்போது, விலை மிகுந்தால் அளிப்பும் மிகுதியாகிறது. விலை குறைந்தால் அளிப்பும் குறைகிறது'. நுகர்வோரின் வருமானம், விருப்பு வெறுப்பு நிலை, குறிப்பிட்ட அப்பண்டத்தின் பதிலீட்டுப் பண்டங்களின் விலைகள் போன்றவற்றில் மாற்றம் எதுவும் இருக்கக் கூடாதென்பதையே "மற்றவை மாறாதிருக்கும்போது" என்ற சொற்றொடர் குறிக்கிறது. இவ்வாறாக, விலைக்கும் அளிப்புக்கும் உள்ள நேர் உடன் தொடர்பை அளிப்பு விதி விளக்குகிறது.

நிலை அளிப்பு, மாறும் அளிப்பு: தேவையில் எவ்வளவு மாற்றம் ஏற்பட்டாலும் ஒரு சில பண்டங்களின், பணிகளின் அளிப்பை உடனடியாகக் கூட்ட முடியாது. அத்தகைய அளிப்பு நிலை அளிப்பு, அல்லது மாறா அளிப்பு எனப்படும். இசுடோனியர் (Stonier), ஏகு (Hague) ஆகிய பொருளியல் அறிஞர்கள், "பொருளாதார முடிவுகளின் விளைவாக எத்தகைய பண்டங்களின் அளிப்பு மிகுதிப்படாத வகையில் இருக்கிறதோ அத்தகைய பண்டங்களின் அளிப்பு நிலை அளிப்பு" என விளக்கம் தந்திருக்கின்றனர். விலை மாற்றமடையும்போது பண்டங்களின் அளிப்பும் மாறும். விலை மாற்றமடையும்போது

அளிப்பு மாற்றமடையாமல் இருக்கும் என்பதும், பேரளவில் மாற்றமடையும் என்பதும் இயல்புக்கு மாறானவை. இதற்கு மாறாக, விலை மாற்றமடையும் போது அளிப்பும் மாற்றமடையும் என்பதே இயல்பு. எனவே, மாறும் அளிப்பை இயல்பளிப்பு என்று குறிப்பிடலாம்.

அளிப்புக் கோடுகள்: விலை மாற்றத்தினால் அளிப்பின் அளவில் தோன்றும் மாற்றத்தை வரைபடம் மூலம் விளக்கிக் காட்டலாம். இவ்வரைபடங்களின் மூலம் பெறும் கோடுகள் அளிப்புக் கோடுகளாகும். படம்- 1, நிலையான அளிப்புக்கான அளிப்புக் கோட்டையும், படம்-2, மாறும் அளிப்புக்கான அளிப்புக் கோட்டையும் காட்டுகின்றன.




படம் •1

இவ்விரு படங்களிலும் X அச்சாகிய படுகிடை அச்சில் அளிப்பின் அளவும் Y-அச்சாகிய செங்குத்து அச்சில் விலையும் குறிப்பிடப்பட்டுள்ளன.

படம் 1-இல் விலை உரு.10/- என்றிருக்கும்போது அளிப்பின் அளவு100 ஆக இருப்பதை 'a' என்ற புள்ளியும், விலை உரு. 15/- ஆகக் கூடும்போது அளிப்பு அதே அளவில் இருப்பதை 'b' என்ற புள்ளியும், விலை உரு. 5/- ஆகக் குறையும்போது அளிப்பு அதே அளவில் இருப்பதை 'c' என்ற புள்ளியும் காட்டுகின்றன. இப்புள்ளிகளை இணைத்து வரையப்படும் கோடு X அச்சுக்குச் செங்குத்துக் கோடாக இருக்கிறது. இத்தகைய அளிப்புக் கோட்டை அங்காடிக் கால அளிப்புக் கோடு (MPSC) அல்லது மிக மிகக் குறுகிய கால அளிப்புக் கோடு என்பர்.

படம் 2-இல் விலை உரு. 10/-ஆக இருக்கும்போது அளிப்பின் அளவு 100 ஆக இருப்பதை 'a' என்ற புள்ளியும், விலை உரு. 15/-ஆகக் கூடும்போது அளிப்பும் கூடி 150/-ஆக இருப்பதை 'b' என்ற புள்ளியும், விலை உரு. 5/-ஆகக் குறையும்போது அளிப்பும் குறைந்து 50ஆக இருப்பதை 'c' என்ற புள்ளியும் காட்டுகின்றன. இப்புள்ளிகளை இணைத்துப் பெறும் SS என்னும் கோட்டை மாறத்தக்க அளிப்புக்கோடு அல்லது இயல்பு அளிப்புக்கோடு அல்லது அளிப்புக் கோடு (SS) என்பர்.

விலை மாற்றத்திற்கும் தேவை மாற்றத்திற்கும் உள்ள நேர் உடன் தொடர்பை விளக்குவதால் இயல்பான அளிப்புக்கோடு கீழிருந்து வலப்புறமாக மேல்நோக்கிச் செல்லும் கோடாக அமைவது இயல்பு.

அளிப்பு நெகிழ்ச்சி: விலை மாற்றத்திற்கும் அளிப்பு மாற்றத்திற்கும் உள்ள பொதுவான தொடர்பை விளக்குவது அளிப்பு விதி. விலை மாற்ற விகிதத்




படம் 2

திற்கும் அளிப்புமாற்ற விகிதத்திற்கும் உள்ள தொடர்பை விளக்குவது அளிப்பு நெகிழ்ச்சி (Elasticity of Demand).எடுத்துக்காட்டாக, விலை 10 விழுக்காடு அளவுக்கு ஏற்றமடைந்தால் அளிப்பு, (1) மாறாமல் இருக்கலாம்; (2) 10 விழுக்காடு அளவுக்குக் குறைவாகக் கூடலாம்; (3) 10 விழுக்காடு அளவுக்கே கூடலாம்; (4) 10 விழுக்காடு அளவைக் காட்டிலும் மிகுதியான அளவுக்கு உயரலாம். இவ்வாறு விலை மாற்ற விகித அளவுக்கும் அளிப்பு மாற்ற விகித அளவுக்கும் உள்ள தொடர்பைக் கணக்கிட்டு அளிப்பு நெகிழ்ச்சியின் அளவை அறியலாம்.

அளிப்பு நெகிழ்ச்சியைக் கீழ்வரும் சமன்பாட்டின் மூலம் கணக்கிடலாம்.

$$\text{அ. நெ.} = \frac{\dfrac{\text{பண்டத்தின் அளிப்பு மாற்றம்}}{\text{பண்டத்தின் அளிப்பு}}}{\dfrac{\text{பண்டத்தின் விலை மாற்றம்}}{\text{பண்டத்தின் விலை}}} = \frac{\dfrac{\Delta Q}{Q}}{\dfrac{\Delta P}{P}}$$

(அல்லது)

$$\text{அ. நெ.} = \frac{\text{பண்டத்தின் அளிப்பின் விகித மாற்றம்}}{\text{பண்டத்தின் விலையின் விகித மாற்றம்}}$$

$$= \frac{\%\Delta Q}{\%\Delta P}$$

மேற்கண்ட சமன்பாட்டின் அடிப்படையில் கணக்கிடும்போது பெறுகிற ஈவைக் கருத்தில் கொண்டு அளிப்பு நெகிழ்ச்சியின் அளவைக் குறிப்பிடலாம். ஈவு ஒன்றுக்குச் சமமாக இருந்தால் அளிப்பு நெகிழ்ச்சி ஒன்றுக்குச் சமம் என்றும், ஈவு ஒன்றுக்கு மிகுதியாக இருந்தால் மிகுந்த அளிப்பு நெகிழ்ச்சி என்றும், ஈவு ஒன்றுக்குக் குறைவாக இருந்தால் குறைவான அளிப்பு நெகிழ்ச்சி என்றும், ஈவு பூச்சியமாக இருந்தால் நெகிழ்ச்சியற்ற அளிப்பு என்றும், விலையில் தோன்றும் மாற்றம், மாற்றமே இல்லை என்று சொல்லத் தக்க அளவுக்கு மிகக்குறைவாக இருந்து அளிப்பு பெருமளவில் மாற்றமடையுமானால் அதை முற்றிலும் நெகிழ்வுள்ள அளிப்பு (α) என்றும் குறிப்பிடலாம். கீழ்வரும் அட்டவணை இக்கருத்துக்களை விளக்குகிறது.

அளிப்புக் கோடுகளும் அளிப்பு நெகிழ்ச்சியும்: அளிப்புக் கோட்டின் அமைப்பைக் கொண்டும் அளிப்பு நெகிழ்ச்சியின் அளவைக் குறிப்பிடுவதுண்டு. அளிப்புக் கோடு தோற்றுவாய் (0) வழியாகச் செல்லும் நேர்கோடாக அமைந்திருந்தால் அளிப்பு நெகிழ்ச்சியை ஒன்றுக்குச் சமமானதென்றும், Y அச்சை வெட்டிக் கொண்டு செல்லும் நேர்கோடாக இருந்தால், அளிப்பு நெகிழ்ச்சியை ஒன்றுக்கு மிகுதியானதென்றும், X அச்சை வெட்டிக் கொண்டு செல்லும் நேர்கோடாக இருந்தால் அளிப்பு நெகிழ்ச்சியை ஒன்றுக்குக் குறைவானதென்றும், X அச்சுக்கு இணைகோடாக இருந்தால் அளிப்பு நெகிழ்ச்சி எல்லையற்றது (∝) என்றும், Y அச்சுக்கு இணைகோடாக இருந்தால் அளிப்பு நெகிழ்ச்சி பூச்சியத்திற்குச் சமம் என்றும் குறிப்பிடலாம்.

அடுத்தபக்கத்தில் காணப்படும் படங்கள் இக்கருத்துகளை விளக்கிக் காட்டுகின்றன. படம் 3-இல் அளிப்பு நெகிழ்ச்சி ஒன்றுக்குச் சமம். படம் 4-இல் அளிப்பு நெகிழ்ச்சி ஒன்றுக்குக் கூடுதல். படம் 5-இல் அளிப்பு நெகிழ்ச்சி ஒன்றுக்குக் குறைவு. படம் 6-இல் அளிப்பு

| இனம் | விலை (உருபாயில்) | அளிப்பின் அளவு | விலை மாற்ற விகிதம் (%) | அளிப்பு விகிதம் (%) | அ.நெ $= \frac{\Delta Q\%}{\Delta P\%}$ | அளிப்பு நெகிழ்ச்சியின் அளவு |
|---|---|---|---|---|---|---|
| 1 | $\frac{10}{15}$ | $\frac{100}{150}$ | 50 | 50 | $\frac{50\%}{50\%} = 1$ | = 1 |
| 2 | $\frac{10}{15}$ | $\frac{100}{200}$ | 50 | 10 | $\frac{100\%}{50\%} = 2$ | = > 1 |
| 3 | $\frac{10}{15}$ | $\frac{100}{125}$ | 50 | 25 | $\frac{25\%}{50\%} = .5$ | = < 1 |
| 4 | $\frac{10}{10}$ | $\frac{100}{150}$ | 0 | 50 | $\frac{50\%}{0} = \propto$ | = α |
| 5 | $\frac{10}{15}$ | $\frac{100}{100}$ | 50 | 0 | $\frac{0}{50\%} = 0$ | = 0 |

நெகிழ்ச்சி எல்லையற்றது, படம் 7-இல் அளிப்பு நெகிழ்ச்சி பூச்சியத்திற்குச் சமம் என்பது விளங்கும்.




அளிப்புக்கோடு நேர்கோடாகத்தான் இருக்க வேண்டுமென்பதில்லை; வளைகோடாகவும் இருக்கலாம். வளைகோடாக இருந்தால் வளை கோட்டின் எந்தப் புள்ளியில் அளிப்பு நெகிழ்ச்சியைக் கணக்கிட வேண்டுமோ அந்தப் புள்ளிக்கு ஒரு தொடுகோடு வரைய வேண்டும். அத்தொடுகோட்டின் அமைப்பைக் கொண்டு அளிப்பு நெகிழ்ச்சியைக் கணக்கிடலாம்.




படம் • 8

படம் 8–இல் SS என்னும் அளிப்பு வளைகோட்டில் 'a', 'b', 'c' என்ற மூன்று புள்ளிகளிலும் அளிப்பு நெகிழ்ச்சியைக் கணக்கிடுவதைக் காணலாம். 'a' புள்ளியின் வழியாக வரையப்பட்டுள்ள தொடுகோடு ($S_1S_1$) தோற்றுவாய் வழியாகச் செல்வதால் 'a' இல் அளிப்பு நெகிழ்ச்சி ஒன்றுக்குச் சமம். 'b'இல் வரையப்பட்டுள்ள தொடுகோடு ($S_2S_2$) Y அச்சை வெட்டிக் கொண்டு செல்வதால் 'b'இல் அளிப்பு நெகிழ்ச்சி ஒன்றுக்கு மேலானது. 'c' க்கு வரையப்பட்டுள்ள தொடுகோடு ($S_3S_3$) X அச்சை வெட்டிக்கொண்டு செல்வதால் 'c'இல் அளிப்பு நெகிழ்ச்சி ஒன்றுக்குக் குறைவானது.

நிறுவனம், தொழில், தொகுப்பு ஆகியவற்றின் அளிப்புக் கோடுகள் - உற்பத்தியும் உற்பத்திக் காரணிகளும்: பொருளியலில் மனித விருப்பத்தை நிறைவேற்றும் ஆற்றல் கொண்டது பயன்பாடு ஆகும். இப்பயன்பாட்டைக் காலப் பயன்பாடு, இடப் பயன்பாடு, வடிவப் பயன்பாடு அல்லது உருவப் பயன்பாடு என வகைப்படுத்துவர். பயன்பாட்டற்ற ஒன்றுக்குப் பயன்பாட்டைப் படைத்தல் உற்பத்தி. இயற்கையில் கிடைக்கும் ஒன்றின் வடிவத்தை மாற்றுவதன் மூலம் வடிவப் பயன்பாட்டைப் படைக்கலாம், இடத்தை மாற்றிக் கொடுப்பதன் மூலம் இடப் பயன்பாட்டைப் படைக்கலாம். தேவைப்படும் காலத்தில் கிடைக்கச் செய்வதன் மூலம் காலப் பயன்பாட்டைப் படைக்கலாம். பயன்பாட்டைப் படைக்கும் இப்பணியில் பயன்படும் உற்பத்திக் காரணிகளை நிலம், உழைப்பு, மூலதனம், அமைப்பு என்ற நான்கு வகைகளில் பொருளியல் வல்லுநர்கள் பிரித்துக் கூறியுள்ளார்கள்.

நிறுவனமும் நிறுவனத்தின் அடிப்படை நோக்கமும்: நிலம், உழைப்பு, மூலதனம், அமைப்பு ஆகிய நான்கு உற்பத்திக் காரணிகளைத் தன்னகத்தே கொண்டு உற்பத்திப் பணியில் ஈடுபட்டுள்ள ஓர் அமைப்பு, நிறுவனம். எந்த அள்வுக்கு உற்பத்தி செய்தால் நிறுவனம் பெறும் ஆதாயம் உயர் அளவில் இருக்குமென்பதைக் கவனத்தில் கொண்டு நிறுவனம் செயற்படுவது இயல்பு. அதாவது, உற்பத்தியில் ஓர் அலகினைக் கூட்டுவதால் கிடைக்கும் வருவாய் மிகுதி, அவ்வலகினை உற்பத்தி செய்ய ஆகும் செலவு ஆகியவற்றை நிறுவனம் கருத்தில் கொண்டு செயற்படும். உற்பத்தியில் ஓர் அலகினை அதிகரிப்பதால் கிடைக்கும் வருவாயை அல்லது ஓர் அலகினைக் குறைப்பதால் ஏற்படும் வருவாய்க் குறைப்பை இறுதி நிலை வருவாய் (Marginal Revenue) என்பர். உற்பத்தியில் ஓர் அலகைக் கூடுதலாக உற்பத்தி செய்வதற்காகும் செலவை, அல்லது ஓர் அலகைக் குறைப்பதால் ஏற்படும் செல்வுக் குறைப்பை இறுதி நிலைச் செலவு (Marginal Cost) என்பர். இறுதி

நிலைச் செலவு மிகும் நிலையில், இறுதிநிலை வருவாயும், இறுதிநிலைச் செலவும் சமமாக இருக்குமாறு உற்பத்தி நிகழும்போது நிறுவனம் உயர்ந்த அளவு ஆதாயத்தைப் பெறுகிறது.

நிறுவனத்தின் அளிப்புக்கோடு: நிறுவனம் உற்பத்தியில் ஈடுபடும்போது தொடக்க நிலையில் ஏற்படும் ஒரு சில நன்மைகளின் அடிப்படையில் வளர்ந்துசெல் விளைவு செயற்படுவதன் காரணமாக இறுதிநிலைச்செலவு குறைந்து செல்லும். குறிப்பிட்ட நிலைக்குப் பின், முன்னர்க் குறிப்பிடப்பட்ட நன்மைகள் குறைந்து மாறா விளைவு செயற்படுவதன் காரணமாக இறுதிநிலைச் செலவு மாறாதிருக்கும். குறிப்பிட்ட நிலைக்கு மேலும் உற்பத்தியை அதிகரிக்கும் போது ஏற்படும் ஒரு சில தீமைகளின் அடிப்படையில் குறைந்துசெல் விளைவு செயற்படுவதன் காரணமாக இறுதி நிலைச் செலவு கூடிக்கொண்டு செல்லும். இக்கருத்தை மேலே உள்ள அட்டவணையின் மூலம் எளிதாக அறியலாம்.

| உற்பத்தி அலகுகளின் எண்ணிக்கை | மொத்தச் செலவு (உருபாயில்) | சராசரிச் செலவு (உருபாயில்) | இறுதிநிலைச் செலவு (உருபாயில்) |
|---|---|---|---|
| 10 | 100 00 | 10 00 | — |
| 11 | 109 00 | 9 91 | 9 00 |
| 12 | 117 00 | 9 75 | 8 00 |
| 13 | 122 00 | 9 38 | 5 00 |
| 14 | 127 00 | 9 07 | 6 00 |
| 15 | 142 00 | 9 47 | 15 00 |

இறுதி நிலைச் செலவுக் கோடு தொடக்க நிலையில் குறைந்தும், பின்னர் மாறாமலும் இறுதியில் கூடிச் செல்வதால் இறுதி நிலைச் செலவுக் கோடு முதலில் இடமிருந்து வலமாகக் கீழ்நோக்கிச் சரிந்து, பின்னர் மேல்நோக்கிச் செல்வதாக மேற்கண்ட படத்தில் புள்ளிக் கோடாகக் காட்டிய வகையில் அமைகிறது. இவ்விறுதி நிலைச் செலவுக் கோடே (MC) நிறுவனத்தின் அளிப்புக் கோடாகும்.



படம். 9.

தொழில், தொகுப்பின் அளிப்புக் கோடுகள்: ஓரியல்பான பண்டங்களை உற்பத்தி செய்யும் நிறுவனங்களின் தொகுதியை நிறைவுப் போட்டி நிலவும் அங்காடியில் தொழில் என்றும், ஒத்த பண்டங்களை உற்பத்தி செய்யும் நிறுவனங்களின் தொகுதியை நிறை குறைப் போட்டி அங்காடியில் தொகுப்பு என்றும் குறிப்பிடுவர். ஒரு தொழிலிலுள்ள நிறுவனங்கள் உற்பத்தி செய்யும் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் மொத்தம் தொழில் அளிப்பு எனப்படும். தொகுப்பிலுள்ள நிறுவனங்கள் உற்பத்தி செய்யும் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் மொத்தம் தொகுப்பின் அளிப்பாகும். நிறுவன அளிப்புகளின் மொத்தமே தொழிலின் அளிப்பு என்பதைக் அடுத்த பக்கத்தில் உள்ள படங்கள் விளக்கிக் காட்டுகின்றன.

நிறைவுப் போட்டி அங்காடியில் குறுகிய காலத்தில் முதல் நிறுவனத்தின் அளிப்பு 6; இரண்டாம் நிறுவனத்தின் அளிப்பு 5; மூன்றாம் நிறுவனத்தின் அளிப்பு 4; ஆக தொழிலின் அளிப்பு 15 (6+5+4) ஆகிறது.

இவ்வரைபடங்களில் AR = MR என்று சராசரி வருவாய் இறுதி நிலை வருவாய்க்குச் சமமாகக் காட்டப்பட்டுள்ளன. அங்காடியில் நிறைவுப் போட்டி நிலவுவதே இதற்கான அடிப்படைக் காரணம். நிறைவுப் போட்டி அங்காடியில் தொழிலில் வரையறுக்கப்படும் விலையை — நிறுவனங்கள் அப்படியே ஏற்றுக் கொள்கின்றன என்பதோடு, விலையை அவற்றில் ஏதேனும் ஒரு நிறுவனம் மட்டும் தனித்துக் கூட்டவோ



உற்பத்தி நிறுவனம் 1
படம் - 10



உற்பத்தி நிறுவனம் 2
படம் - 11



உற்பத்தி நிறுவனம் 3
படம் - 12



தொழில் அளிப்பு
படம் - 13

குறைக்கவோ இயலாது என்பதையும் நினைவு கூருதல் இன்றியமையாததாகும். எனவேதான் சராசரி வருவாய்க் கோடும் (AR) இறுதிநிலை வருவாய்க் கோடும் (MR) ஒன்றுக்கொன்று சம்மாகக் காட்டப் பட்டுள்ளன. கீழ்வரும் அட்டவணை இக்கருத்தை மேலும் எளிமைப்படுத்துகிறது.

வது, விலையை மிகுதியான அளவில் வரையறை செய்வதால் குறைவான அளவையே நிறுவனங்கள் விற்பனை செய்ய இயலும். இதற்கு மாறாக, அதிக மான அளவில் விற்பனை செய்ய நிறுவனம் நினைத்தால், அப்பண்டம் அல்லது பணியின் விலையானது, தேவை அளிப்புக்கேற்ப அங்காடியில் குறைவாகத்தான்

| பண்டத்தின்/பணியின் உற்பத்தி அளவு | அங்காடி விலை (உருபாயில்) | மொத்த வருவாய் (உருபாயில்) | சராசரி வருவாய் (உருபாயில்) | இறுதிநிலை வருவாய் (உருபாயில்) |
|---|---|---|---|---|
| 1 | 10 | 10 | 10 | 10 |
| 2 | 10 | 20 | 10 | 10 |
| 3 | 10 | 30 | 10 | 10 |
| 4 | 10 | 40 | 10 | 10 |
| 5 | 10 | 50 | 10 | 10 |

நிறை குறைப் போட்டி அங்காடியில் நிறுவனத் திற்கெனத் தனிவிலைக் கொள்கை இருக்கும். அதா

அமையும். சுருங்கக்கூறின், விலையை நிறுவனமும் விற்பனை அளவை அங்காடியும் முடிவு செய்கின்றன



உற்பத்தி
(நிறுவனம் 1)
படம் - 14



உற்பத்தி
(நிறுவனம் 2)
படம் - 15



உற்பத்தி
(நிறுவனம் 3)
படம் - 16



தொகுப்பின் அளிப்பு
படம் - 17

விற்பனை அளவை நிறுவனம் முடிவு செய்தால் விலையை அங்காடி முடிவு செய்யும். ஆகவே, நிறுவனங்களின் சராசரி வருவாய்க்கோடு (தேவைக்கோடு) மேலிருந்து கீழ்நோக்கிச் சரிந்து செல்லும் கோடாக அமைகிறது. இறுதிநிலை வருவாய்க் கோடு (MR) Y அச்சுக்கும் சராசரி வருவாய்க் கோட்டிற்கும் (AR) மைய நிலையில் அமைந்திருக்கும். முன் பக்கத்தில் உள்ள படங்கள் நிறை குறைப் போட்டி அங்காடியில் தொகுப்பின் குறுகியகால அளிப்புக் கோட்டை விளக்குவதாய் அமைந்துள்ளன.

**குறுகியகால, நெடுங்கால அளிப்புக் கோடுகள் - நிலையான காரணிகளும் மாறும் காரணிகளும்:** உற்பத்தியில் ஈடுபட்டுள்ள நிறுவனங்கள் பயன்படுத்தும் காரணிகளை, நிலையான காரணிகள் மாறும் காரணிகள் என இருவகைப்படுத்தலாம். எடுத்துக்காட்டாக, அச்சகம் ஒன்றில் அதன் கட்டிடம், எந்திரங்கள் போன்றவற்றிற்கும், நிலையான ஊழியர்களுக்கும் ஆகும் செலவுகள் நிலையானவை. அச்சிடப்படும் காகிதம், மைபோன்றவற்றிற்கும் நிலையற்ற ஊழியர்களுக்கும் ஆகும் செலவுகள் உற்பத்தி அளவிற்கேற்ப மாறத் தக்கவை.

**அங்காடிக்காலம், குறுகியகாலம், நெடுங்காலம்:** பொருளியலில் 'காலம்' என்பது குறிப்பிட்ட நிலைகளையே குறிக்கும். தேவை மாற்றமடையும்போது நிலையான காரணிகள், மாறும் காரணிகள் ஆகிய இரண்டையும் மாற்ற இயலாத நிலைகளை அங்காடிக் காலம் என்பர். அல்லது மிக மிகக் குறுகிய காலம் என்பர். தேவை மிகும்போது உற்பத்தியைக் கூட்டவும், தேவை குறையும்போது உற்பத்தியைக் குறைக்கவும் உற்பத்தியாளர் விரும்புவர். இதைச் செயற்படுத்த உற்பத்திக் காரணிகளின் அளவை மாற்ற வேண்டும். இதில் நிலையான காரணிகளை மாற்றாமல் வைத்துக் கொண்டு மாறும் காரணிகளை மட்டும் மாற்றி உற்பத்தியைக் கூட்ட அல்லது குறைக்க வாய்ப்புண்டு. இத்தகைய நிலைகளைக் குறுகிய காலம் அல்லது குறுங்காலம் என்பர். இக்கால அளவில் விளைவு விதியின் அடிப்படையில் உற்பத்தியில் மாற்றங்கள் நிகழ்கின்றன. இதற்கு மாறாக, நிலையான காரணிகள், மாறும் காரணிகள் ஆகிய இரு காரணிகளின் அளவையும் மாற்றி அமைக்கத் தக்க நிலைகளை நெடுங்காலம் அல்லது நீண்டகாலம் என்பர்.

**குறுகியகால, நெடுங்கால அளிப்புக் கோடுகள்:** நிறுவனத்தின் அளிப்புக் கோடு அதன் இறுதிநிலைச் செலவுக் கோடு. குறுங்காலத்தில் உற்பத்தி அளவை மாற்றும்போது நிறுவனத்திற்கு ஏற்படும் இறுதி நிலைச் செலவுகள் (SMC) படத்தில் காட்டியுள்ள படி முனைப்பானவையாக இருக்கும். எனவே தொழிலின் அல்லது தொகுப்பின் குறுகியகால அளிப்புக் கோடும் முனைப்பாக மேல்நோக்கிச் செல்வதாக அமைந்திருக்கும். கீழேஉள்ள படங்கள் இவற்றை விளக்கிக் காட்டுகின்றன.




படம்.18 படம்.19 படம். 20 படம். 21



பல குறுகிய காலங்களைக் கொண்டதாக நெடுங் காலம் இருப்பதால் நீண்ட காலத்தில் நிறுவனத்தின் அளிப்புக் கோடாகிய இறுதிநிலைச் செலவுக் கோடு (LMC) முனைப்பாக இராமல் தட்டையான வளை கோடாக இருக்கும். இக்கோடுகளின் அடிப்படையில் அமையப் பெறும் தொழிலின் அல்லது தொகுப்பின் அளிப்புக் கோடும் முனைப்பாக இருக்காது. இவற்றைக் கீழே உள்ள படங்கள் விளக்கிக் காட்டுகின்றன.

நீண்ட காலத்தில் தொழிலில் அல்லது தொகுப்பில் உள்ள நிறுவனங்களின் செலவு நிலைகளுக்கேற்பத் தொழிலின் நீண்டகாலச் செலவுக் கோடு மூன்று வகையில் அமையலாம். தொழில் வளர்ந்துசெல் விளைவு /குறைந்துசெல் செலவு நிலைகளில் செயற்பட்டுக் கொண்டிருக்கும்போது அளிப்புக் கோட்டின் அமைப்பைப் படம் 26-உம், தொழில் மாறா விளைவு மாறாச் செலவு நிலைகளில் செயற்பட்டுக் கொண்டிருக்கும்போது அளிப்புக் கோட்டின் அமைப்பைப் படம் 27-உம், தொழில் குறைந்துசெல் விளைவு வளர்ந்துசெல் செலவு நிலைகளில் செயற்பட்டுக் கொண்டிருக்கும்போது அளிப்புக் கோட்டின் (LMC) அமைப்பைப் படம் 28-உம் விளக்கிக் காட்டுகின்றன.



படம்.22



படம் . 23



படம் . 24



படம் . 25

(OQ = OR + OS + OT)



படம் . 26



படம் . 27



படம் . 28

விலை வரையறையில் அளிப்பின் பங்கு: ஒரு பண்டத்தின் அல்லது பணியின் விலையை அதன் தேவையும் அளிப்பும் வரையறை செய்கின்றன. அங்காடிக் காலத்தில் அளிப்பின் அளவு மாறாமல் இருப்பதால் அளிப்பு, செயல் குறைந்த காரணியாக உள்ளது. குறுகிய காலத்தில் ஓரளவுக்கு அளிப்பின் அளவை அதிகரிக்க முடியுமாதலால் அளிப்பு ஓரளவுக்குச் செயல் திறன் உள்ள காரணியாக உள்ளது. நீண்ட காலத்தில் தேவை மாற்றத்திற்கேற்ப அளிப்பின் அளவும் மாற்றமடையத்தக்கது. ஆகையால் அளிப்பும் தேவையைப் போன்று செயல் திறன் மிக்க காரணியாக விளங்குகிறது. மேற்கண்ட படங்கள் இக் கருத்துகளை விளக்குகின்றன.



படம் 29



படம் 30



படம் 31

படம் 29-இல் தேவை அதிகரிக்கும்போது விலை மிகவும் அதிகமான அளவுக்கு அதிகரிக்கிறது; தேவை குறையும்போது விலை அதிகமான அளவுக்குக் குறைகிறது. இதற்குக் காரணம் அளிப்பு, செயல் திறன் அற்ற காரணியாக இருப்பதே. (படத்தில் MPSC என்பது அங்காடிக் கால அளிப்புக் கோடு).

படம் 30-இல் தேவை அதிகரிக்கும்போது விலை அதிகரித்தாலும் படம் 29-இல் காட்டியுள்ள அளவுக்கு விலை அதிகரிக்கவில்லை; தேவை குறையும்போது விலை குறைந்தாலும் படம் 29-இல் காட்டியுள்ள அளவுக்கு விலை குறையவில்லை. அளிப்பும் ஓரளவுக்குச் செயல் திறன் கொண்டதாக இருப்பதே இதற்கான காரணம் ஆகும். (படத்தில் SPSC என்பது குறுகிய கால அளிப்புக் கோடு).

படம் 31- இல் தேவை அதிகரிக்கும்போது விலை அதிகரித்தாலும் படம் 29, 30 ஆகியவற்றில் காட்டியுள்ள அளவுக்கு அதிகரிக்க வில்லை. தேவை குறையும்போது விலை குறைந்தாலும், படம் 29, 30-இல் காட்டியுள்ள அளவுக்குக் குறையவில்லை. அளிப்பும் தேவையைப் போன்று செயல்திறன் மிக்க காரணியாக இருப்பதே இதற்குக் காரணம். படம் 31-இல் காட்டப்பட்டுள்ள அளிப்புக் கோடு வளர்ந்துசெல் செலவு நிலையில் உள்ள நீண்டகால அளிப்புக் கோடு (LPSC) ஆகும். என். எஸ். பா.

துணை நூல்கள்:


Gupta, R. D., Keynes and Post-Keynesian Economics, Kalyani Publishers, New Delhi, 1977.

Stonier, A. W., and Hague, D. C., A Text Book of Economic Theory, Longman's Green, London, 1962.


**அளிப்புப் பொருளியல்:** பிரான்சு நாட்டைச் சேர்ந்த ஜே. பி. சே (J.B. Say) என்பவர் 'அரசியல் பொருளாதாரம்' (Political Economy) என்ற தனது நூலில் "ஒவ்வோர் அளிப்பும் (Supply) அதன் தேவையை உருவாக்கிக் கொள்கிறது" என்ற அடிப்படையான அங்காடி விதி ஒன்றினைக் குறிப்பிட்டு விளக்கியுள்ளார். இந்த விதியை ஏற்றுக் கொண்டு தங்கள் கருத்துகளை விளக்கியவர்கள் தொன்மைப் பொருளியல் அறிஞர்கள் (Classical Economists). பொருளாதாரத்தின் மொத்தத் தேவையில் எப்போதும் குறைவு இருக்க முடியாது என்று அவ்வறிஞர்கள் கருதியதால், நாட்டில் எப்போதும் உழைப்பு முதலிய உற்பத்திக் காரணிகள் முழுவேலை நிலையில்தான் (Full Employment Level) இருக்கும் என்ற அடிப்படை எண்ணத்தைக் கொண்டிருந்தனர். எனவே, தொன்மைப் பொருளியலாளருள் பெரும்பாலோர் தொகையினப் பொருளியல் (Aggregate Economics) அல்லது பேரியல் பொருளியல் (Macro Economics) என்று மிகவும் புகழ்பெற்று வரும் பகுப்

பாய்விற்கு இன்று சிறப்பிடம் கொடுக்கவில்லை. முழு வேலை நிலையைப் பெறுவதைக் காட்டிலும் உச்ச அளவு உற்பத்தியைப் பெறுவதற்கான வழிகளைக் காண்பதில் அவர்கள் பெருமளவில் கவனம் செலுத்தினார்கள்.

அரசின் தலையீட்டினாலும், இறுதிநிலை உற்பத்தித் திறனைக் காட்டிலும் கூலியின் அளவு மிகுதியாக இருப்பதனாலும், குறுகிய காலத்திற்கு வேலையின்மை தோன்றலாம் என்றும், அரசின் தலையீட்டை நீக்குவதன் மூலமும், உண்மைக் கூலியைக் குறைப்பதன் மூலமும் இவ்வேலையின்மையைத் தவிர்த்து விடலாம் என்றும் அவ்வறிஞர்கள் கருதினார்கள்.

தொன்மைப் பொருளாதார அறிஞர்கள் கருத்துப்படி, கூலியைக் குறைத்தால் ஆதாயம் அதிகரித்து முதலீடு அதிகரிக்க வேண்டும். ஆனால், 1930-ஆம் ஆண்டளவில் உலகில் தோன்றிய பெரும் பொருளாதார மந்த நிலையின்போது எவ்வளவோ முயன்றும் முதலீட்டின் அளவை அதிகரிக்க முடியவில்லை. இதற்கான காரணத்தைப் பேராசிரியர் கீன்சு (J. M. Keynes) தெளிவுபடுத்த முயன்றார்: (அ) வருமானம் அதிகரிக்கும்போது, பொதுவாக அதன் அளவைக் காட்டிலும் குறைந்த அளவில்தான் நுகர்வுச் செலவு அதிகரிக்கிறது. (ஆ) அதிகரிக்கப்படும் வருமானமானது சேமிப்பு, நுகர்வு ஆகிய இரு இனங்களினிடையே குறிப்பிட்டதொரு விகிதத்தில் பிரித்துப் பயன்படுத்தப்படுகிறது. (இ) வருமானம் அதிகரிக்காமல் இருந்த நிலையோடு ஒப்பிடும்போது, வருமானம் அதிகரித்திருக்கும் நிலையில் சேமிப்பு, நுகர்வு ஆகியஇரண்டின் அளவுகளும் பொதுவாக அதிகரிக்காமல் இருப்பதில்லை என்ற மூன்று அடிப்படைக் கருத்துகளை உள்ளடக்கிய உளவியல் விதியைத் தமது 'வேலை, வட்டி, பணம் ஆகியவற்றின் பொதுக் கோட்பாடு' (General Theory of Employment, Interest & Money) என்ற அரிய நூலில் விளக்கினார்.

**கீன்சின் உறுதித் தேவையும் (Effective Demand) ஜே.பி. சேயின் அங்காடி விதியும்:** வேலையின் அளவை அதிகரிக்கும்போது வருமானம் அதிகரிக்கும். அதிகரித்த வருமானத்தில் ஒருபகுதி நுகர்வுக்காகச் செலவிடப்படும்; மறுபகுதி முதலீட்டிற்காகப் பயன்படுத்தப்படும் என்பது ஜே.பி. சேயின் கருத்து. ஆனால், அதிகரித்த வருமானத்தில் நுகர்வுக்காகச் செலவிட்டது போக எஞ்சியுள்ள பகுதி முழுவதும் முதலீட்டிற்காகப் பயன்படுத்தப்பட்டே தீரும் என்ற கருத்தைக் கீன்சு ஏற்றுக்கொள்ளவில்லை. நுகர்வுக்காகப் பயன்படுத்தப்பட்ட பகுதி நீங்கலாக உள்ள மறுபகுதியில் ஒருபகுதி சேமிக்கப்படலாம். எனவே, வேலை அதிகரிக்கும்போது எதிர்பார்க்கும் அளவுக்கு முதலீட்டின் அளவும் அதிகரிக்காவிட்டால், அதிகரித்த வேலை நிலையிலான மொத்த அளிப்பு விலையைக் காட்டிலும் நுகர்வு, முதலீட்டுச் செலவுகளின் மொத்தம் குறைவாக இருக்கும் வாய்ப்பு ஏற்படுகிறது. இதனால் உற்பத்தியாளர்கள் உற்பத்தி அளவைக் குறைக்க வேலையின் அளவைக் குறைத்து விடுவார்கள். எனவே, வேலையின்மை நிலை தோன்றும். இதனைத் தவிர்க்க வேண்டுமானால், முதலீட்டுச் செலவில் உள்ள குறையைத் தவிர்க்க வேறு ஏதாவது வழியில் முதலீட்டுச் செலவை அதிகரித்து வருமானம் = நுகர்வு + முதலீடு (Income = Consumption + Investment) என்ற நிலையை உருவாக்க வேண்டும் என்பது கீன்சின் கருத்து.

சுருங்கக் கூறின், மொத்த அளிப்பு, மொத்தத் தேவை என்ற இரு காரணிகளின் அடிப்படையில் வருமானம் அமைகிறது; குறுகிய காலத்தில் மொத்த அளிப்பு மாறாதிருக்கும். எனவே, வருமானப் பெருக்கத்தை (வேலையை) உறுதிப்படுத்தும் செயல் திறன் மிக்க காரணி மொத்தத் தேவையே. மொத்தத் தேவையைத் திறம்படப் பயன்படுத்துவதன்மூலம் முதலீட்டை அதிகரிக்கலாம் என்பது கீன்சின் கருத்து.

**பொருளாதார வாட்ட-வீக்க நிலை:** உலகின் பல நாடுகளில் முனைப்பான பண வீக்கம், அதிகரித்து வரும் வேலையின்மை, பொருளாதார வாட்ட நிலை ஆகிய மூன்று இயல்புகளும் இணைந்துள்ள வாட்ட-வீக்க நிலை (Stagflation) தோன்றியது. 'தேவைப் பொருளியலின்'படி இந்நிலை தோன்ற வாய்ப்பு இல்லை. எனவே, தொன்மைப் பொருளாதாரக் காலத்தில் சிறப்புப் பெற்றிருந்த அளிப்புப் பொருளியல் (Supply-side Economics) மீண்டும் சிறப்புப் பெறத் தொடங்கியுள்ளது.

**தேவைப் பொருளியலின் குறை:** தேவைப் பொருளியல் 1930-70 ஆண்டுகளில் மிகவும் சிறப்புப் பெற்று விளங்கியது. பின்னர், உலக நாடுகளிடையே தோன்றிய பொருளாதார மாற்றங்களின் அடிப்படையில் அளிப்புப் பொருளியலை மீண்டும் பொருளியல் அறிஞர்கள் வலியுறுத்தத் தொடங்கினார்கள். பொது நிதிக் கொள்கையில் ஏற்படுத்தப்படும் மாற்றங்கள் ஏற்ற இறக்க விலைகளிலும், மொத்த அளிப்பிலும் ஏற்படுத்தத் தக்க ஒருசில விளைவுகளைத் 'தேவைப் பொருளியல்' (Demand Economics) விளக்கத் தவறிவிட்டதே இதற்கான அடிப்படைக் காரணம். ஒரு சில வேளைகளில், வரி வீதத்தைக் குறைக்கும்போது மொத்த அளிப்பும் வரிவருவாயும் அதிகரிக்க வாய்ப்புண்டு.

**இக்கால அளிப்புப் பொருளியல்:** அண்மைக் காலத்தில் அளிப்புப் பொருளியலைச் சிறப்புற விளக்

கிய பெருமை ஆர்தர் லாபர் (Arthur Laffer) என்பவரைச் சேரும். 'நுகர்வை, உற்பத்திக்கான காரணம் என்பதைவிட, உற்பத்தியின் விளைவு என்பதே மிகவும் பொருத்தமாகும்' என்பது அளிப்புப் பொருளியலின் அடிப்படை. வரியில் ஏற்படுத்தப்படும் மாற்றங்கள், ஏற்றத்தாழ்வான விலைகளிலும், மொத்த அளிப்பிலும், பொருளாதார வளர்ச்சியிலும் மாற்றங்களை ஏற்படுத்துகின்றன. இதனால், அளிப்பு அதிகரிக்கும் போது, தேவையும் அதிகரிக்கிறது என்ற அடிப்படையில் அளிப்புப் பொருளியல் விளக்கப்படுகிறது. உற்பத்தியின்மீதும், அதன் வழியாக அளிப்பின் மீதும் கவனத்தைச் செலுத்தும்போது இயல்பாகவே தேவையும் (நுகர்வும்) தோன்றுகின்றன. அதாவது, ஜே.பி.சே குறிப்பிட்டதைப் போன்று, அளிப்பு அதன் தேவையைத் தோற்றுவிக்கிறது என்பது கருத்து. பொதுவாக (அ) வேலை செய்யும் விருப்பம், ஓய்வை அனுபவிக்கும் விருப்பம், (ஆ) வருவாயை நுகர்வுக்காகச் செலவிடும் விருப்பம், சேமிப்பு—முதலீட்டிற்காகப் பயன்படுத்தும் விருப்பம், (இ)அங்காடி நடவடிக்கை, அங்காடித் தொடர்பற்ற நடவடிக்கை ஆகிய மூன்று இணைப்புகளில் நுகர்வோர் முடிவுகளை மேற்கொள்கிறார்கள்.

வரியின் அளவைக் குறைக்கும்போது, ஓய்வைக் குறைத்து வேலையை விரும்பும் நிலை ஏற்படுகிறது; நுகர்வைக் குறைத்துச் சேமிப்பு-முதலீட்டை அதிகரிக்கும் நிலை ஏற்படுகிறது; அங்காடித் தொடர்பற்ற நடவடிக்கையைக் குறைத்து அங்காடி நடவடிக்கையை அதிகரிக்கும் நிலையும் ஏற்படுகிறது. இவற்றின் ஒருங்கிணைந்த விளைவாக, மொத்த அளிப்பு அதிகரிக்கிறது; பொருளாதார வளர்ச்சி ஏற்படுகிறது. இவ்விளக்கத்தின் அடிப்படையில் வரி வீதத்திற்கும், வரி விதிக்கத் தக்க மொத்த அங்காடி உற்பத்திக்கும் உள்ள தொடர்பை அளிப்புப் பொருளியலார் (Supply-side Economists) விளக்குகின்றனர்.

வரி வீதம் வெறுமையாக (Zero) அல்லது வெறுமைக்கருகில் இருக்கும்போது, அங்காடி செயற்படுவதற்குத் தேவையான ஒருசில அடிப்படைப் பண்டங்களும் பணிகளும் உற்பத்திசெய்யப்படாத நிலை இருக்கிறது. எனவே, மொத்த உற்பத்தியும் மிகக் குறைவாக இருக்கும். வரி வீதங்கள் அதிகமாகும்போது இவ்வடிப்படைப் பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் உற்பத்தியும் அதிகரித்து, மொத்த உற்பத்தியும் அதிகரிக்கிறது. ஆனால், இந்நிலை தொடர்ந்து இதே போன்று செல்வதில்லை.

வரி வீதத்தை மாற்றியமைக்கும்போது இருவித விளைவுகள் தோன்றுகின்றன. உற்பத்தித் திறனில் ஏற்படும் மாற்றம் ஒன்று; ஊக்குவிப்பைக் (Incentive) கொடுக்கும் மாற்றம் மற்றொன்று. வரிவீதத்தை அதிகரிக்கும்போது உற்பத்தித் திறன் அதிகமாகவும் ஊக்குவிப்பின் அளவு குறைவாகவும் இருக்கும். வரி வீதத்தை மேலும் மேலும் அதிகரித்துக் கொண்டே செல்லும்போது, படிப்படியாக உற்பத்தித் திறனின் அதிகரிப்புக் குறைந்து கொண்டும், ஊக்குவிப்பின்மையின் அளவு அதிகரித்துக் கொண்டும் செல்லும். இந்நிலை தொடர்ந்து செல்லுமாயின், குறிப்பிட்ட நிலையில் வரி அதிகரிப்பினால் தோன்றும் இருவித விளைவுகளும் ஒன்றுக்கொன்று சமமாக இருக்கும். மேலும், வரி வீதத்தை அதிகரிக்கும்போது, ஊக்குவிப்பின்மையின் அளவு படிப்படியாக அதிகரித்தும், உற்பத்தித் திறன் அதிகரிப்பு படிப்படியாகக் குறைந்தும் செல்லும். இந்நிலையில் சேமிக்கும் விருப்பமும் முதலீடு செய்யும் விருப்பமும் குறைந்துவிடும்.

அளவுக்கு மேல் வரி வீதங்களை அதிகரிக்கும் போது, வேலை செய்யும் விருப்பம் குறைந்து, ஓய்வில் இருக்கும் விருப்பம் அதிகரித்துவிடும்; சேமிக்கும் மற்றும் முதலீடு செய்யும் விருப்பம் குறைந்து செலவு செய்யும் விருப்பம் அதிகரித்துவிடும்; அங்காடி நடவடிக்கைகளுக்கான விருப்பம் குறைந்து, அங்காடியற்ற நடவடிக்கைகளுக்கான விருப்பம் அதிகரித்துவிடும். இறுதியில், 100 விழுக்காடாக வரி வீதம் வரும் போது, வரி விதிக்கத்தக்க பண்டங்கள், பணிகள், மற்றும் உற்பத்திக் காரணிகள் நிலைத்து உற்பத்தி நின்றே விடும்.

வரி வீதங்களின் மாற்றங்கள் வரி வருவாயையும் மாற்றி அமைக்கத் தக்கவை. வரி விதிக்கத்தக்க வரித்தளத்தை வரி வீதத்தால் கணக்கிடும்போது கிடைப்பது வரி வருவாய். எடுத்துக்காட்டாக, 100 உருபாய் விலையில் 1000 பண்டங்களை உற்பத்தி செய்தால், 1,00,000 உருபாய் என்பது வரித்தளம். வரி வீதம் 5 விழுக்காடு என்றால், வரியின் அளவு 5000 உருபாய். இவ்வாறாக உற்பத்தியின் அளவு, விலை, வரி வீதம் ஆகியவற்றைச் சார்ந்து வரி வருவாயின் அளவு அமைகிறது.

வரி வீதத்தை அதிகரிக்கும்போது, மொத்த அளிப்பும் வரி வருவாயும் மாற்றமடையலாம். ஆர்தர் இலாபர் அவர்களின் பெயரால் அமைக்கப்பட்டிருக்கும் 'இலாபர் வளைகோடு' இதனை விளக்கிக் காட்டுகிறது.

வரி வீதம் வெறுமையாக இருக்கும்போது வரி வருவாயும் வெறுமையாக இருக்கிறது. வரி வீதம் அதிகரிக்க அதிகரிக்க, வரி வருவாயும் அதிகரித்துக் கொண்டு செல்கிறது. வரி வீதம் OT என உத்தம அளவில் இருக்கும்போது வரி வருவாயும் உயர் அளவில் ($OR_1$) அமைகிறது. வரி வீதம் மேலும் அதிகரிக்




கும்போது வரி வருவாய் குறையத் தொடங்குகிறது. வரி வீதம் 100 விழுக்காடாக அமையும்போது வரி வருவாய் முற்றிலும் மறைந்து வெறுமை நிலையை அடைகிறது. ORS என்பதை இலாபர் வளைகோடு எனலாம்.

வரி வீத உற்பத்தித் தொடர்பும் வரி வீத வருவாய்த் தொடர்பும் அளிப்புப் பொருளியியலில் பயன்படும் இன்றியமையாத இரு கருத்துகள் ஆகும். குறைந்த வருவாயுடையவர்களுக்குச் சலுகைகள் தருதல், வரித் தள்ளுபடி தருதல் என்பனவற்றைத் தவிர்த்து நிலையாக வரியின் வீதத்தைக் குறைத்தால், அது பண்டங்கள், பணிகள் ஆகியவற்றின் உற்பத்தியைப் பெருக்க உதவுகிறது; உற்பத்தி நாட்டம், சேமிப்பு நாட்டம் ஆகியவற்றை அதிகரிக்க உதவுகிறது; அதன் வழியாகப் பொருளாதார வளர்ச்சி ஏற்படுகிறது. வரி வீதம் குறைவாக இருக்கும்போது உற்பத்தி பெருகுகிறது என்பதோடு, வரிப் பாதுகாப்புடன் உள்ள குறைந்த உற்பத்தியிலிருந்தும், வரியைத் தவிர்க்கும் திருட்டுத் தனமான பொருளாதார நடவடிக்கைகளிலிருந்தும் விடுபட்டு, அதிக அளவு உற்பத்தியையும் சமுதாயம் விரும்பத்தக்க வகையிலான முதலீடுகளையும் ஊக்குவிக்கிறது.

சுருங்கக் கூறின், வரி வீதத்தைக் குறைக்கும் போது வேலையும் உற்பத்தியும் அதிகரிக்கின்றன; வேலையின்மை வீதமும் பணவீக்க வீதமும் குறைகின்றன என்பது ஆர்தர் லாபரின் கருத்து. வரியைக் குறைப்பதனால் வருவாய் அதிகரித்துப் பணவீக்கம் தோன்றினாலும் அந்த விளைவையும் குறைக்கும் வண்ணம், தனியார் சேமிப்பும் முதலீடும் அதிகமாக இருக்கும் என்று இக்கருத்தை வலியுறுத்துபவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

**அளிப்புப் பொருளியலின் வெற்றி:** அண்மைக் காலத்தில் ஐக்கிய அமெரிக்க நாட்டின் தலைவர் பலர், இவ்வகைப் பொருளியலை வலியுறுத்தி, இதன் அடிப்படையில் பொருளாதாரக் கொள்கைகளைக் கையாண்டு ஓரளவுக்கு வெற்றியையும் கண்டுள்ளனர்.

**அளிப்புப் பொருளியலும் வளரும் நாடுகளும்:** வளர்ந்து வரும் பணவீக்கம், பெருகி வரும் வேலையின்மைச் சிக்கல், பொருளாதார மந்த நிலை என்ற ஒன்றோடொன்று எதிர்மாறான பொருளாதார நிலைகள் ஒரே நேரத்தில் நிலவுகிற நாடுகளில், தேவைப் பொருளியல் விரும்பத் தக்க விளைவுகளை ஏற்படுத்தாமல் இருப்பதாலும், அமெரிக்க ஐக்கிய நாட்டில் அளிப்புப் பொருளியல் ஓரளவுக்கு வெற்றியைத் தந்திருப்பதாலும், இவ்வகைப் பொருளாதாரத்தை வளரும் நாடுகளும் பின்பற்றிப் பயன் பெறலாம் என்று சில அறிஞர்கள் வலியுறுத்துகிறார்கள்.

எண்ணெய் ஏற்றுமதி செய்யும் நாடுகள் நீங்கலாக உள்ள வளரும் நாடுகள் பலவற்றிலும் மொத்த நாட்டு உற்பத்தி மிகவும் அதிகரித்து வருகிறது. ஆனால், அதே காலத்தில் வேலையின்மையும் பணவீக்கமும் முனைப்பாக அதிகரித்து வருகின்றன. எனவே, அளிப்பை வலியுறுத்தும் அளிப்புப் பொருளியல் கோட்பாடுகளைக் கையாண்டு பொருளாதார வளர்ச்சிக்கு அடிப்படையான உற்பத்தியைப் பெருக்கலாம் என்பது கருத்து. இக்கருத்தும் ஓரளவுக்கு உண்மையே. ஆனால் அளிப்புப் பொருளியலில் உள்ள பல அடிப்படைக் குறைகளினால் இதனை முழு அளவில் ஏற்றுக்கொள்ள இயலாது.

**அளிப்புப் பொருளியலின் குறைகள்:** அளிப்புப் பொருளியல், வளர்ச்சி பெற்றிருக்கும் நாடுகளுக்குப் பொருந்தக் கூடியதாக இருக்கலாமே தவிர, வளரும் நாடுகளுக்குப் பொருத்தமாக இல்லை என்பதை வலியுறுத்துபவர்கள் சில குறைகளைச் சுட்டிக் காட்டியுள்ளார்கள். அவை, (அ) **சீரான வருவாய்ப் பகிர்வை வலியுறுத்தவில்லை:** அளிப்புப் பொருளியல் பொருளாதாரவளர்ச்சியை மட்டுமேவலியுறுத்துகிறது; எல்லோருடைய பொருளாதார வளமும் நன்றாக இருக்க வேண்டும் என்று வலியுறுத்தினாலும், எல்லோருக்கும் சமமான பொருளாதார முன்னேற்றம் ஏற்பட வழியேதும் இப்பொருளியலில் குறிப்பிடவில்லை. (ஆ) **தடையற்ற அங்காடி முறைக்கு ஆதரவு:** வரியைக் குறைத்துத் தனியார் சேமிப்பையும் முதலீட்டையும் பெருக்கி, அதன் மூலம் உற்பத்தியைப் பெருக்கிப் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற விரும்பும் அளிப்புப் பொருளியலார் தடையற்ற அங்காடி அமைப்பே சிறந்தது என்ற கருத்தை ஏற்றுக்

கொண்டிருப்பது இயல்பு. ஆனால் வளரும் நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவது எவ்வளவு முக்கியமானதோ, அதே அளவுக்குப் பொருளாதாரச் சமத்துவத்தைப் பெறுவதும் இன்றியமையாததாகும். **(இ) செல்வர்களுக்கும் வறியவர்களுக்கும் உள்ள இடைவெளி பெருகும் வாய்ப்பு:** வரியைக் குறைத்தால் சேமிப்பு அதிகரிக்கும் என்பது உண்மையே. ஆனால், வளரும் நாடுகளில் வரி செலுத்தும் தகுதி வாய்ந்தவர்களின் எண்ணிக்கை குறைவு. வரிக் குறைப்பினால் இப் பிரிவினரே பேரளவில் நன்மைகளைப் பெறும் வாய்ப்பு உண்டு. வருவாய் குறைவாக உள்ள பெரும்பான்மை மக்களுக்குப் பயன் மிக மிகக் குறைவாகவே இருக்கும். இதனைக் கருதும் போது செல்வர்களை மேன்மேலும் செல்வர்களாக்கிச் செல்வர்களுக்கும் மற்றவர்களுக்கும் உள்ள இடைவெளியை அதிகரிப்பதற்கே அளிப்புப் பொருளியல் உதவி செய்யும் என்று அஞ்சவும் வாய்ப்புண்டு. **(ஈ) நீண்ட காலம் காத்திருக்க இயலாமை:** செல்வர்களின் சேமிப்பும் தனியார் முதலீடும் பெருகி, அதன் வழியாகப் பொருளாதார வளர்ச்சியைப் பெறலாம் என்று குறிப்பிடும் அளிப்புப் பொருளியலில், பொருளாதார வளர்ச்சிக்கான அடிப்படையாக வலியுறுத்தப்படுவது செல்வர்களின் சேமிப்பே. வளரும் நாடுகள் இவ்வழியில் பொருளாதார வளர்ச்சியைப் பெற மிக நீண்ட காலம் காத்திருக்க வேண்டும். இக்கால நிலைகளில், வளரும் நாடுகள் நீண்ட காலம் காத்திருக்கவும் முடியாது. பொருளாதார வளர்ச்சியைப் பெறச் சிறுபான்மையினராக உள்ள செல்வர்களை மட்டும் நம்பியிருக்கவும் முடியாது. **(உ) வரிக் குறைப்பால் எதிர்பார்த்த பலன் கிடைக்காத நிலை:** வளரும் நாடுகளில் உள்ள நேர்முக வரி வீதங்கள் முனைப்பாக இருக்கின்றன என்றும், அதனால் வரி ஏய்க்கும் தன்மையும் பரவலாக இருக்கிறது என்றும் சொல்லப்படுவதில் உண்மை இருக்கிறது. எனவே, அவ்வப்போது வரியைக் குறைப்பதன் மூலம் வரி வருவாயைப் பெருக்குவதற்கும், சேமிப்பு முதலீட்டைப் பெருக்குவதற்கும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. ஆனால், இவற்றினால் பெறப்பட்டிருக்கும் விளைவுகள் எதிர்பார்த்த அளவுக்கு இல்லை. சேமிப்பும் முதலீடும் உற்பத்தியும் பெருக்குவதற்குப் பதிலாக, வரிக் குறைப்பினால் நுகர்வு அதிகரித்துப் பணவீக்கம் முன்பிருந்ததைக்காட்டிலும் முனைப்பாக அதிகரித்திருப்பதையே காண முடிந்தது. **(ஊ) இலாபர் வளைகோட்டின் ஏறுமுகத்தில் வளரும் நாடுகள் இருக்கும் நிலை:** ஐக்கிய அமெரிக்க நாட்டில் மொத்த தேசிய வருமானத்தில் வரி வருவாயின் பங்கு ஏறத்தாழ 30 விழுக்காடு அளவில் உள்ளது. இந்நிலையில் வரியைக் குறைக்கும்போது தனியார் சேமிப்பும் முதலீடும் அதிகரிக்கிறது என்றால், இலாபர் வளைகோட்டின் இறங்கு முகத்தில் அந்த நாட்டின் நிலை இருப்பதாகப் பொருள். ஆனால், பெரும்பாலான வளரும் நாடுகளில் மொத்தத் தேசிய வருமானத்தில் வரி வருவாயின் பங்கு மிகவும் குறைவாகவே உள்ளது. எனவே, இந்நாடுகள் இலாபர் வளைகோட்டின் தொடக்க நிலையான ஏறு முகத்தில் இருப்பதாகப் பொருள் கொள்ளலாம். எனவே, வரியைக் குறைத்தால் அளிப்புப் பொருளியலில் எதிர்பார்க்கும் பலனை இந்நாடுகள் பெற இயலாது என்பதோடு, பாதகமான நிலைகளும் தோன்றிட வாய்ப்புகள் உண்டு. அதாவது, வரிக் குறைப்பால் வரி வருவாய் குறைந்து, வரவு செலவுத் திட்டத்தின் பற்றாக்குறை மேலும் அதிகரித்து விடும் வாய்ப்புகள் தோன்றிவிடும். **(எ) வளரும் நாடுகளின் அடிப்படைச் சிக்கல்களும் வரிக் குறைப்பும்:** எண்ணெய் உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்யும் நாடுகள் நீங்கலாக உள்ள பிற வளரும் நாடுகளில் பணவீக்கத்தையும் வேலையின்மையையும் முனைப்பாக்கி, அளிப்பின் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தும் அடிப்படைச் சிக்கல்களில் சிறப்பானவை இரண்டு. எண்ணெய், மற்றும் இன்றியமையாத பண்டங்களின் விலைகளில் ஏற்பட்டுள்ள விரைவான ஏற்றம் ஒன்று; நாட்டில் உள்ள உழைப்பை ஏற்றுக்கொள்ளத் தக்க உண்மைக் கூலி நிலையில் வேலையில் ஈடுபடுத்துவதற்குத் தேவைப்படும் கூலிப் பண்டங்களின் (Wage Goods) பற்றாக்குறை மற்றொன்று. வரிக் குறைப்பை அதிகரிக்கும் அளிப்புப் பொருளியல் இவ்விரு சிக்கல்களைத் தீர்ப்பதற்கான வழிகளைத் தெளிவாக்கவில்லை. மேலும், இவ்வகைப் பொருளியலைப் பயன்படுத்தும்போது, முன்னரே உள்ள பணவீக்கம் மேலும் அதிகரிக்கும் வாய்ப்புகளே தோன்றுகின்றன. வளரும் நாடுகளில் உள்ள பணவீக்கம் என்னும் குறையைத் தீர்ப்பதற்கு நீண்ட கால மருந்தாக அளிப்புப் பொருளியல் பயன்படலாமே தவிரக் குறுகிய காலத்தில் பயன்பட வாய்ப்பில்லை.

என்.எஸ்.பா.

துணை நூல்கள்:

Gupta, R.D. Keynes and Post - Keynesian Economics, Kalyani Publishers, New Delhi, 1977.

Stonier, A.W & Hague, D.C., A Text Book of Economic Theory, Longman's Green, London, 1962.

*அளேபீடு* கருநாடக மாநிலத்தில் ஆசன்(Hassan) மாவட்டத்தில் உள்ள சிற்றூர். மைசூரிலிருந்து வடமேற்கே 80 கி.மீ. தூரத்தில் அமைந்துள்ள அளேபீடு (HALEBID), பெங்களூரிலிருந்து புனே (Pune) செல்லும் இருப்புப்பாதைத் தொடரில் பானவரம் (Bana-

vara) இருப்புப்பாதை நிலையத்திற்கு மேற்கே 32 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இதனைத் துவாரசமுத்திரம் என்றும் கூறுவர். இது கி. பி. 12-ஆம் நூற்றாண்டில் கருநாடகப் பகுதிகளை ஆண்ட ஒய்சல அரச மரபினரின் தலைநகரமாகும். இராட்டிர கூடர்கள் கி.பி 9-ஆம் நூற்றாண்டில் துவாரசமுத்திரம் என்ற குளத்தினை இங்கு அமைத்ததைத் தொடர்ந்து இவ்வூரின் வரலாறு தொடங்குகிறது. அவர்களுக்குப் பின் வந்த ஒய்சலர்கள் அளேபீடு நகரத்தை உருவாக்கித் தம் தலைநகரமாக அமைத்துக் கொண்டனர். அலாவுதீன் கில்சியின் தளபதியான மாலிக் காபூர், கி.பி. 1310-ஆம் ஆண்டு இந்நகரைத் தம் படைகளைக் கொண்டு சூறையாடினான். அளேபீடு, கோயில்களுக்குப் புகழ் பெற்றது. இங்கு இந்துக் கோயில்களும் சமணக் கோயில்களும் உள்ளன. இவற்றுள், ஒய்சலேசுவரர் கோயில், கேதாரேசுவரர் கோயில், சென்னகேசவர் கோயில், ஆதிநாதேசுவரர் கோயில், பார்சுவ நாதேசுவரர் கோயில் ஆகியன குறிப்பிடத்தக்கன. இங்குள்ள கோயில்கள் மிக்வும் வழவழப்பான கருங்கல்லினால் கட்டப்பட்டவை ஆகும். இக்கற்கள் அருகிலுள்ள புட்பகிரி என்னும் மலையிலிருந்து கொண்டு வரப்பட்டவை. ஏறத்தாழ 300 ஆண்டுகள் ஒய்சலர்களின் தலைநகரமாக விளங்கிய இவ்வூர், இன்று கோட்டை கொத்தளங்களின்றிப் புல்வளர்ந்த மண்மேடுகளாகத் தென்படுகிறது. மன்னர் மாளிகை இருந்த மண்மேட்டினை இக்காலத்தில் பென்னேகுட்டா என்று கூறுகின்றனர். ஒய்சல அரசர்கள் தம் யானைகளைக் கட்டி வைத்திருந்த இடமொன்று மண்மேட்டின் அருகில் உள்ளது. இதனை ஆனைகுந்தி எனக் கூறுகின்றனர்.

ஒய்சலேசுவரர் கோயில் இரு கோயில்கள் இணையக் கட்டப்பட்டது போன்று உள்ளது. உயர்ந்த அடிமேடை அமைத்து இக்கோயில்கள் கட்டப்பட்டுள்ளன. இரண்டு கோயில்களையும் ஒரு சுற்றுமதில் இணைக்கிறது. இரு கோயில்களும் ஒரே பரப்பளவைக் கொண்டவை. ஒவ்வொரு கோயிலும் 37 மீ. நீளமும் 33 மீ. அகலமும் கொண்டது. தனித்தனியான கருவறைகளைக் கொண்டுள்ள கோயில்களுக்குக் கிழக்காகச் சுற்றுமதிலும் நந்திமண்டபமும் உள்ளன. கோயில்கள் ஒவ்வொன்றும் விண்மீன் (Stellar) வடிவில் அமைக்கப்பட்டுள்ளது. கருவறைகளின் உயர்ந்த பீடத்தின்மீது இலிங்கம் செதுக்கப்பட்டுள்ளது. இக்கோயில்களுள் ஒன்றை ஒய்சலேசுவரர் கோயில் என்றும் மற்றொன்றைச் சாந்தலேசுவரர் கோயில் என்றும் கூறுகின்றனர். ஒய்சல மன்னர் முதலாம் நரசிம்மன் காலத்தில் பொதுப்பணித் துறைத் தலைமை அலுவலராக இருந்த கேதமல்லன் (Ketamalla) என்பவரின் மேற்பார்வையில் கோயிற் கட்டிடக்கலையில்



ஒய்சலேசுவரர் கோயில் - சிற்பம்

சிறந்து விளங்கிய கேதரோசன் (Kodaroja) என்பவரால் இக்கோயில் கட்டப்பட்டது என இங்குள்ள கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஒய்சலேசுவரர் கோயில் நான்கு நுழைவாயில்களைக் கொண்டது. கிழை வாயில்கள் இரண்டும், வடக்கில் ஒன்றும், தெற்கில் ஒன்றுமாக அமைக்கப்பட்டுள்ளன. தெற்குவாயில் மிக்க சிறப்புடையது. இக்கோயிலுக்குத் தெற்கே அரசரின் அரண்மனை அமைந்துள்ளது. நுழைவாயில்களின் மேல் முகப்புகள் சிற்ப வடிவங்களால் அழகுபட அமைக்கப்பட்டுள்ளன. அவற்றுள் மகரவளைவுகள், வருணன், அவர் மனைவி, போன்றவை குறிப்பிடத்தக்கன. சூரியனுக்கும் சந்திரனுக்கும் தனித்தனியாகக் கோயில்களை நந்தி மண்டபத்திற்கருகில் காணலாம். ஒவ்வொரு நுழைவாயிலிலும் ஒய்சல அரசர்களின் அரச முத்திரையான புலிச்சின்னம் பொறிக்கப்பட்டுள்ளது.

கோயிலின் வெளிச்சுவர்களில் வரிசைவரிசையாகப் பதினொரு சிற்பப் பட்டைகள் உள்ளன. ஒவ்வொரு சிற்ப வரிசையும் ஏறக்குறைய 233 மீ. நீளம்



ஒய்சலேசுவரர் கோயில் சிற்பப் பட்டைகள

உடையது. அடிவரிசையில் மட்டும் இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட யானைச்சிற்பங்கள் மிக அழகாகச் செதுக்கப்பட்டுள்ளன. பிற மேல்வரிசைகளில் புலிகள், சுருள் அணி வேலைப்பாடு, குதிரை வீரர்கள், விண்ணுலக விலங்குகளான யாளிகள் அன்னங்கள் ஆகியன காணப்படுகின்றன. தென் வாயிற் சுவரிலுள்ள திருநடனம் புரியும் அழகுமிகுந்த நடன விநாயகரின் சிற்பம், பெரியவடிவில் உள்ளது. கோயிலின் உள்ளும் பல அழகுமிக்க சிற்பங்கள் உள்ளன. அவற்றுள் நடன சரசுவதி, கோவர்த்தன மலையைக் குடை போன்று பிடித்து ஆனிரை காக்கும் கண்ணன் (கோவர்த்தன தாரி), இரணியனின் வயிற்றைக் கிழிக்கும் நரசிம்மன், துவ்ாரபாலகர் போன்றவை குறிப்பிடத்தக்கன. கோயிலின் சுவர்களில் மகாபாரத-இராமாயணக் கதைகள் சிற்ப வடிவில் உள்ளன. சிவபெருமான், திருமால், சக்தி ஆகியவர்களின் உருவங்கள் ஆங்காங்கே காணப்படுகின்றன. கோயிலின் உட்கூரைகளும் சிற்பங்களால் அழகு படுத்தப்பட்டுள்ளன. ஆடவல்லானின் சிற்பங்கள் மிகச் சிறந்த முறையில் உட்கூரைகளில் செதுக்கப்பட்டுள்ளன. கோயில் கதவுகள் சிறப்பாகச் செதுக்கப்பட்டுள்ளன. கோயிலின் உள்மண்டபத் தூண்கள் நன்கு இழைக்கப்பட்டு வழவழப்பாக உள்ளன. நந்தி மண்டபத்தில் காணப்படும் நந்தியின் கழுத்தில் உள்ள மணிகளும் துவாரபாலகர்களின் அணிகலன்களும் நேர்த்தியான முறையில் செதுக்கப்பட்டுள்ளன.

இந்தியத் தொல்லியியல் ஆய்வுத்துறை (Archaeological Survey of India) 1962-ஆம் ஆண்டு இங்கு ஓர் அருங்காட்சியகத்தை அமைத்துள்ளது. இவ்விடத்தில் கிடைத்த பழைமைச் சின்னங்கள், சிற்பங்கள் ஆகியவை இந்த அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளன.

***அற்ப இராகம்***: கருநாடக இசையில் கேதாரம் போன்ற சில இராகங்கள் நீண்ட ஆலாபனைக்கும் நிறைந்த சுரப் பிரத்தாரங்கட்கும் இடம் தருவதில்லை. இத்தகைய இராகங்கள் அற்ப இராகங்கள் எனப்படும்.

***அற்ப நியாசம்*** கருநாடக இசையில் ஒரு குறிப்பிட்ட சுரவகையைக் குறிப்பதாகும். நுட்பமும் மென்மையும்கொண்டு பாடப்படும் சுரம் அற்ப நியாசம்

எனப்படும். நியாசச் சுரங்களை அழுத்தமாகவோ நீட்டியோ பாடக்கூடாது. இதற்கு எடுத்துக்காட்டாக நாட்டைக்குறிஞ்சி இராகத்தில் வரும் பஞ்சம சுருதியைக் குறிப்பிடலாம். நாட்டைக் குறிஞ்சி இராகத்தில் வரும் பஞ்சம சுருதியைப் பாடும் முறையே இந்த இராகத்திற்கு இனிமையூட்டுவதாகவும், இந்த இராகத்தை இதனுடன் இயைந்த வேறு இராகங்களினின்றும் எளிதில் வேறுபடுத்திக் காட்டவல்லதாகவும் அமைகிறது. காண்க: இசை.

*அற்புதத்திருவந்தாதி*: சோழ மண்டலத்துக் காரைக்கால் என்னும் பட்டினத்தில் அவதரித்தபுனிதவதியார் திருவருட் சார்பினால் தெய்வநலப் பேய் வடிவம் பெற்றுக் காரைக்காலம்மையாராகி முதற் கண் பாடியருளியது இந்நூலாகும். அற்புதத் திருவந்தாதியின் இறுதிச் செய்யுளில் காரைக்காலம்மையார் தம்மைக் 'காரைக்காற்பேய்' எனக் கூறிக்கொள்வது குறிப்பிடத் தக்கது. அதனில், இந்நூலைப் பயில்பவர்கள் மட்டிலாக் கடவுட் காதல்கொண்டு, சிவனைச் சார்ந்து, போற்றிப்பணிந்து வாழ்வார்கள் என்று நூற்பயனுங் குறிப்பிடப்படுகிறது. எல்லாம் வல்ல சிவபரம்பொருளின் மாட்சியையும், ஓதியுணர்ந்து போற்றுதற்குரிய சிவஞானத்தின் பாங்கினையும், காரைக்காலம்மையாரின் பக்தியுறைப்பையும், சிவனது திருக்கூத்தின் சிறப்பினையும், திருவருள் நலத்தினையும், அடியார்களின் வியத்தகு செயல் திறனையும், இறைவனின் தத்துவ நுண்கூறுகளையும் அருளனுபவ உணர்வுடன் மருட்கைச் சுவை நலந் ததும்ப எடுத்துக் கூறுதலின் இந்நூல் 'அற்புதத் திருவந்தாதி' என்று அழைக்கப் பெறுவதாயிற்று. இது நூற்றொரு வெண்பாக்களைக் கொண்டது. இறைவனது திருவடியைத் தம் திருமுடியில் தரிக்கும் நோக்கில்- தாடலை (தாள்+தலை) யுணர்வில் – அந்தாதித் தொடையில் இந்நூலைப் பாடியுள்ளாரோ என்று சிந்திக்கத் தோன்றும். காரைக்காலம்மையார் பாடியருளிய நான்கு நூல்களுள் அற்புதத் திருவந்தாதியும் திருவிரட்டை மணி மாலையும் அந்தாதித் தொடையில் அமைந்த சிறப்பினைக் கொண்டவை என்பதும் நோக்கத் தக்கது. அற்புதத் திருவந்தாதியில் சிவபெருமானிடத்தில் கொண்ட பேரன்பினைக் காரைக்காலம்மையார் பல்வேறு கோணங்களில் புலப்படுத்திச் செல்கிறார். காலத்திற்கும் இடத்திற்கும் வடிவத்திற்கும் கட்டுப்படாத இறைவனைப்-பார்த்த இடமெல்லாம் பரவெளியாய்த் தோன்றும் பரம்பொருளைத் - தம் அருளனுபவச் சொற்களால் மக்களுக்குக் காட்ட இவர் முயல்கிறார். இவர் காலத்தின் ஒரு கூறாகிய நாளினை இறைவனாகக் கண்டு உரைக்கிறார். செங்கதிரோன் பொங்கொளி பரப்பும் குளிர்ந்த காலை நேரம் சிவனது பொன்னார்மேனியையும் வெள்ளைவெளேர் என்று வெண்கதிரொளி பரவும் நண்பகல் அவன் திருமேனியில் பூசிய வெண்ணீற்றையும், மாலைக் காலச் செவ்வண்ணம் அவனது செஞ்சடைக் கற்றையொளியையும், அந்திக்குப் பிறகு ஏற்படும் இருட்டு அவன் தேவர்களின் இடர் நீக்கத் திருமிடற்றில் வைத்த நஞ்சின் கருமையையும் நினைவூட்டுதலைக் கூறிக் காட்டுகிறார் (செய்-65). அன்பெனும் பிடியுள் அகப்படும் சிவனைத் தம் பிறப்புரிமையுடன் அன்பென்ற போர்வையால் தனி நெஞ்சில் உள்ளடைத்துள்ளாராம் அம்மையார். எனவே, அவனை அன்பினால் காணச் சொல்கிறார் (செய்.96). சிவன் திருக்கயிலையில் தம்மை நோக்கி 'அம்மையே' என்று அழைத்தமையால் பரிவு கொண்டு, நச்சுத் தன்மையுடைய நாகாபரணத்தை நீக்கிவிடுமாறு அவன்பால் தாயன்பைப் பொழிந்து வேண்டுகிறார் (செய். 27,57). பிறந்த உயிர்கள் துன்புறும்போது, தம்மையுணர்ந்து இறைவனிடம் முறையிட்டுக் காதலாகிக் கசிந்துருகி நின்றால் அவற்றின் பிறவிப்பிணியையும் மாற்றியருள்வான் எனக் கூறுகிறார் (செய்,5). இறைவன் திருக்கூத்து நிகழ்த்துகையில் செங்கனலை ஒரு திருக்கரத்தில் ஏந்தியாடுகிறான்; அக்காட்சியைக் கண்டு, 'அங்கையில் அனல் இருப்பதால் கை செந்நிறமாகத் தெரிகிறதா? அல்லது சிவனது திருக்கரத்தின் செம்மையால் தீ சிவந்த நிறம் பெற்றதா?' என இறைவனிடமே கேள்வி தொடுக்கிறார் (செய் 98). இறைவனது உறுப்பில் ஓர் அணு அசையினும் உலகமே நடுங்கும். இவ்வாறிருக்க எல்லா உறுப்புகளையும் அசைத்தாடும் திருக்கூத்தினை இந்த உலக அரங்கு தாங்குமா? என்றும், இறைவன் ஆடாவிட்டால், உலகம் இயக்கமின்றி நின்றுவிடுமாதலால் நிதானமாக ஆடுமாறும் ஆடல்வல்லானிடம் வேண்டிக் கொள்கிறார் (செய்.77). மாலும் அயனுங் காணாத இறைவன் திருவடி அடியவருக்கு (மார்க்கண்டேயருக்கு) அருள்சுரக்கும் மலரடியாகவும், வன்கணார்க்கு(இராவணனுக்கு)செருக்கினையடக்கும் வல்லடியாகவும் தோற்றுமென்பதைக் கூறுகிறார் (செய்.80).

செ.வை.

*அறக்கொடைகளும் அறக்கட்டளைகளும்*: அறக்கொடை என்பது அறத்தின் பொருட்டு வழங்கப்பட்டது அல்லது விடப்பட்டது என்னும் பொருளுடையது. இது நிவந்தம் எனவும் கூறப்படும். சமய நிறுவனங்களுக்கும், பல்வேறு அற நிலையங்களுக்கும், இன்ன பிறவற்றிற்கும் அசையும் சொத்தாகவோ அசையாச் சொத்தாகவோ வழங்கப்படுவதை அறக்கொடை (Charitable Endowment) என்பர். கோயில், மடம், மருத்துவ முதலியவற்றை நடத்துவதற்கோ அவை தொடர்பான ஏதேனும் ஒரு செயலுக்கோ நிறுவப்படுவது அறக்கட்டளை (Trust)என்று

கூறப்படும். ஏழைகளுக்கு அன்னதானம், கல்வி, மருத்துவ உதவி அல்லது ஏதேனும் பொது நல முன்னேற்றமான பணி முதலியவற்றிற்காக வழங்கப்படுவது அறக்கொடையாகும்.

ஆங்கிலச் சட்டவியல் வரலாற்றில் அறக்கட்டளை அல்லது பொறுப்புரிமை அமைப்பு (Trust) என்பது, எல்லாவகையான அறநெறியமைப்புகளுள்ளும் சிறப்பிடம் பெறத்தக்கது என்று அறிஞர் மெயிட்லாண்டு (Maitland) கூறுகிறார். இத்தகைய அமைப்பு ஏற்படுத்தப்பட்டதன் நோக்கங்கள் பல. அவை வரையறைக்கு உட்படாதவை. பல்வேறு வகையான நோக்கங்களை நிறைவேற்றுவதற்கு அறக்கட்டளை அமைப்பு ஒரு கருவியாக அமைகிறது. குடும்பத் தொடர்பான குறுகிய அமைப்பாக மட்டுமன்றி, வணிகத்துறையிலும் இது பெரிதும் பயன்படுகிறது. சட்ட முறைகளைப் பின்பற்ற வேண்டிய தேவையின்றி, அறக்கட்டளை வாயிலாகப் பெருந்தொகைகளைப் பல்வேறு அறச் செயல்களுக்காகச் செலவு செய்ய முடியும்.

**ஆங்கிலச் சட்ட வரலாற்றில்:** இங்கிலாந்தில் சில நூற்றாண்டுகளுக்கு முன்னரே அறக்கட்டளை ஒரு சட்ட முறையான அமைப்பாக உருப்பெற்றது. இவ்வாறு உருப்பெறுவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் ஏற்பட்ட வளர்ச்சியின் மையக் கருவாக அறநெறி (Equity) அமைந்திருந்தது. இன்று நடைமுறையில் இருக்கும் அறக்கட்டளை பற்றிய புதிய சட்டம், கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் உருப்பெற்றது.

**அமெரிக்காவில்:** அமெரிக்காவில் இவ்வமைப்பு நெடுங் காலமாகவே ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. அன்றியும், இது நடைமுறையில் பெரிய வளர்ச்சியும் அடைந்துள்ளது. கூட்டமைப்புக் கட்டளைகளை (Trusts) நிருவகிக்கும் ஆற்றலுடன் மிகச் சிறந்த வளர்ச்சியினை இது பெற்றிருக்கிறது. கூட்டமைப்புப் பொறுப்புரிமை நிறுவனம் அல்லது அறக்கட்டளை அமைப்பு உலகமெங்கணும் காணப்படுகிறது. இங்கிலாந்திலும் இம்முறை மிகுதியாகக் காணப்படுகிறது.

**இந்தியாவில்:** இந்திய மக்களுக்குப் பொறுப்புரிமை அமைப்புக் கருத்து புதியதன்று. இது தொடர்பான வழக்குகள் நீதிமன்றங்களின் தீர்ப்புக்குச் செல்வது மிகவும் அரிதாகவே காணப்பட்டது. இங்கிலாந்து நாட்டுச் சட்டமான இருவுரிமைக் கொள்கை (Dual Ownership) இந்தியாவிற்குப் புதியதாக இருந்தபோதிலும், பொறுப்புரிமையின் மிக விரிந்த தன்மையும், சொத்துக்களை நிருவகிக்கும் தன்மையும், கடமையும் தனிப்பட்டவரிடம் ஒருங்கு காணப்பட்டன என்பது, ஓர் இந்தியனின் வாழ்க்கையிலும் எண்ணத்திலும், நடைமுறையிலும் புலனாகிறது. மனிதக்குல மேம்பாட்டிற்குரிய அறக்கொடைகள் (Endowments) இந்திய மக்களால் பெரிதும் போற்றப்பட்டன. எழுதப்பட்ட சட்டங்கள் இல்லாதவிடத்து அறநெறி, தூய மனம் முதலியவற்றின் அடிப்படையில் அமைக்கப்பட்ட இங்கிலாந்து நாட்டு நீதிநெறிக் கோட்பாடு (Principles of Justice) நடைமுறைப்படுத்தப்பட்டது. பொய்ப் பெயரில் (Benami) சொத்துகளை வாங்குவதனாலும், கி.பி.1778-ஆம் ஆண்டுக்கு முன்னர் இந்தியாவில் ஏற்பட்ட வழக்குகளின்மீது வழங்கப்பட்ட தீர்ப்புகளினாலும் சட்ட முறைப் பொறுப்புரிமை அமைப்பு (Constructive Trust) ஏற்படுத்தப்பட்டது.

காலப்போக்கில் பொறுப்புரிமை அமைப்புப்பற்றி ஒரு சட்டம் இயற்றப்பட வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. ஐரோப்பியரும் பிற நாட்டவரும் நிறுவிய பொறுப்புரிமை அமைப்புகளினால் பல சிக்கல்கள் தோன்றின. இவையே சட்டம் உருவாக்குவதற்குரிய காரணங்களாக அமைந்தன. இந்தச் சிக்கல் கி.பி. 1879-ஆம் ஆண்டு நிறுவப்பட்ட இந்தியச் சட்டக் குழுவின் (Indian Law Commission) பார்வைக்கு அனுப்பி வைக்கப்பட்டு, பின்னர் இது இப்பொழுது நடைமுறையில் உள்ள இந்திய பொறுப்புரிமைச் சட்டத்திற்கு (Trust Act) அடிகோலியாக அமைந்தது. இதன் விளைவாக இந்திய அறக்கட்டளைச் சட்டம் கி.பி. 1882-ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்டு நடைமுறைப் படுத்தப்பட்டது.

'அறம்' என்பது சட்டப்படி நான்கு சிறப்புக் கூறுகளையுடையது, (1) ஏழைகளுக்குப் பயன்படுவது; (2) கல்வி வளர்ச்சிக்குப் பயன்படுவது; (3) சமய வளர்ச்சிக்குப் பயன்படுவது; (4) மேற்கூறப்பட்ட மூன்று பிரிவுகளுக்கு அப்பாற்பட்டு ஓர் இனத்தாருக்குப் பிற வகைகளில் பயன் படக்கூடிய அறங்கள். இவற்றுள் எவ்விதமான பிரிவிற்கு இந்த அறக்கொடை ஏற்பட்டாலும் அதில் பொது நலத் தன்மை இருக்க வேண்டும்.

குளங்களும் கிணறுகளும் வெட்டுவது, இந்துக்களிடையே உள்ள அறச்செயலாகும். ஏழை மக்களுக்கு உணவளிப்பது, அந்தணர்களுக்கு உணவளிப்பது, அறச்சாலை அல்லது சத்திரங்கள் ஏற்படுத்துவது, இன்னும் இவை போன்ற பலவும் அறச் செயல்களே ஆகும். மேலும், மகாபாரதம், இராமாயணம், புராணங்கள் முதலியன பற்றிச் சமயச் சொற்பொழிவுகள் செய்வது, பண்டிகை முதலிய நாட்களில் அந்தணர்களுக்கும் பண்டிதர்களுக்கும் அன்பளிப்பு வழங்குவது போன்றவையும் அறத் தொடர்புடையனவே யாகும். இவை அழியாமல் நிலைத்து நிற்பதற்காக,

நிலங்களையும் பொன்னையும் பொருளையும் அரசர்களும் பொதுமக்களும் மிகுதியாக வழங்கினர்.

மேலும், அரசர்களும் பொதுமக்களும் இறைவனை வழிபடுவதற்குரிய கோயில்களை நாடு முழுவதிலும் நிறுவினார்கள். அவ்வாறு ஏற்படுத்தப்பட்ட கோயில்களுள் சிறப்பாக இராமேசுவரம், கன்னியாகுமரி, மதுரை, காஞ்சிபுரம், சிதம்பரம், தஞ்சாவூர், திருச்செந்தூர், திருவிடைமருதூர், சிக்கல், திருச்சி, திருவாலங்காடு முதலிய இடங்களிலுள்ள கோயில்கள் குறிப்பிடத்தக்கவை. திருக்கோயில்களும் வேறு சமய நிறுவனங்களும், அறக்கொடைகளாகப் பெற்ற நிலமும் நகையும் மிகுதியாக உள்ளன. இவை மக்களால் பெரிதும் போற்றப்படுவனவாகவும் இருக்கின்றன.

அறக் கொடைகள் கோயில்களுக்கும் மடங்களுக்கும் வழங்கப்பட்டன. மடங்கள் தோன்றுவதற்கு முன்னரே, கோயில்கள் தோன்றிவிட்டன. இறைவழிபாட்டிற்குக் கோயில்களும், சமயத்தத்துவ விளக்கத்திற்கு மடங்களும் தோன்றின. கோயில் அறக்கொடைகள் அல்லது கட்டளைகள் இருவகைப்படும். ஒன்று, கோயிலின் சிறப்புப் பணிகளுக்கு, அதாவது, கோயில்நடைமுறைகளைப் பேணிக்காப்பதற்கு ஏற்பட்டது. மற்றொன்று, கோயில்களிலும் மடங்களிலும் பயணிகளுக்கு உணவு முதலியன அளிப்பதற்கென்று ஏற்பட்டது.

'அறக்கட்டளை' என்பது தங்கும் விடுதிகள், சத்திரங்கள், பள்ளிகள், கல்லூரிகள், மருத்துவ நிலையங்கள் போன்றவற்றை நிறுவுதற்கும் அவற்றைப் பேணிக் காப்பதற்கும் வழங்கப்பட்ட நிதியேற்பாடு ஆகும். இக்கட்டளைகள் ஒரு சமூகத்திற்கோ, சமுதாயம் முழுமைக்கோ பயன்படும் வகையில் நிறுவப்படலாம்.

'மடம்' என்பது துறவியின் உறைவிடம் ஆகும். தமிழக வரலாற்றில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி திருக்கோயில்களின் தோற்றமும் திருமடங்களின் தோற்றமுமாகும். தமிழகம் திருமடங்கள் நிறைந்த நாடு. இத்திருமடங்களின் தலையாய பணிகளாவன: மக்களின் சிந்தையைத் திருத்த அறிவுரைகளைக் கேட்குமாறு செய்தல், அவர்கள் இன்பம் அடைந்து மகிழத்தூண்டுதல், கற்பித்தல், நல்வழி நடக்கச் செய்தல், இவற்றிற்குத் துணை நிற்றல் முதலியன. மெய்யறிவு படைத்த துறவிகளை உருவாக்கி, அவர்கள் நாடெங்கும் சுற்றிச் சமரச சன்மார்க்க நெறிகளைப் பரப்பச் செய்தலும் நன்னெறிகளை அறிவுறுத்தும் நூல்களை உருவாக்குதலும் மடங்களின் பணியாகும்.

பலவகைச் சமயத் தத்துவங்களைக் கொண்ட மரபுவழிவந்த திருமடங்கள், மக்களுக்குப் பொதுவாக உள்ள சமய உண்மைகளை எடுத்துச் சொல்வது இன்றியமையாதது. இந்து சமயத்தின் முதன்மையான கருத்துகளையும் முனிவர்கள் வெளிப்படுத்திய சிறந்த உண்மைகளையும் எடுத்துக்கூறி, அவற்றின்படி ஒழுக வேண்டும் என்ற நினைவை இத்திருமடங்கள் ஏற்படுத்தவேண்டும்.

சங்கரர் சமுதாயத்தின் ஆன்மீக நலன்களைப் போற்றிப் பாதுகாக்கும் உபதேச பீடங்களை ஏற்படுத்தினார். அவற்றுள் நான்கு முக்கியமானவை: 1) பத்திரிநாத்தில் உள்ள சோதிர் மடம் (Jyotir Mutt) 2) பூரி என்னும் இடத்தில் ஏற்படுத்திய கோவர்த்தன மடம், 3) குசராத்தில் உள்ள சாரதா மடம், 4) கருநாடகத்தில் உள்ள சிருங்கேரி மடம்.

சங்கரருக்குப் பின்னர் இராமாநுசர் இரண்டு நூற்றாண்டுகள் கழித்துத் தோன்றினார். இவர் வானமாமலை மடத்தினை ஏற்படுத்தினார். மத்துவாச்சாரியர் கி.பி.12-ஆம் நூற்றாண்டில் தோன்றியவர். இராமாநுசரைப் போலவே இவரும் திருமாலை முழுமுதற் கடவுளாகக் கொண்டார். கண்ணன் வழிபாட்டு நெறியைப் பரப்பினார். பல மடங்களையும் நிறுவினார்.

தென்னிந்தியாவில் இந்து சமயத் தத்துவங்களைக் கடைப்பிடித்து வந்தவர்களும், சமயத்தைப் பரப்ப வேண்டுமென்று நோக்கங்கொண்ட சமயத்தலைவர்களும், மேற்கூறிய குருமார்களின் நோக்கங்களைப் பின்பற்றிப் பல இடங்களில் மடங்களை நிறுவினர். தமிழ் நாட்டில் அவ்வாறு ஏற்பட்ட மடங்கள் 'ஆதீனங்கள்' எனப்பட்டன. அவற்றின் தலைவர்கள் ஆதீனகர்த்தர்கள் என்று அழைக்கப் பெற்றனர். தருமபுரம், திருவாவடுதுறை, திருப்பனந்தாள் ஆகிய ஆதீனங்கள் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு அரும்பணியாற்றிவருகின்றன.

மடத்தின் தலையாய நோக்கம்: சமயக் கல்வியைப் பரப்புவது, சமய குரவர்களைப் போற்றுவது, மடத்தில்பற்றுள்ளவர்களுக்குச்சமயக் கொள்கையைப் போதிப்பது முதலியன மடங்களின் நோக்கமாகும்.

அறக்கொடை ஏற்படுத்த ஆவணம் வேண்டும் என்பதில்லை. அறக்கொடை ஏற்படுத்துகிறவர் தமக்கு அத்தகைய நோக்கம் இருப்பதாக அறிவித்து, அறக்கொடை ஏற்படுத்திவிட்டால், பின்னர் அதனை மாற்ற இயலாது. அறக்கொடை ஏற்படுத்துகிறவர் அறநிலையச் சொத்தில் தமக்கு எவ்விதத் தொடர்பும் இல்லாதவாறு ஏற்படுத்துவரானால், அது முழு அறக்கொடை என்றும், அவ்வாறில்லாமல் தாமோ தம் வழித்தோன்றல்களோ அதிலிருந்து நன்மை பெறுவதற்காக, ஒரு குறிப்பிட்ட தொகைமட்டும்

அறச்செயலுக்காகப் பயன்படுத்த வேண்டும்என்று வரையறை செய்து கூறினால், அது பகுதி அறகொடை என்றும் வழங்கப்படும். முழு அறக்கொடையினை ஏற்படுத்துகிறவர் தாம் வழங்கும் சொத்தை நிறுவனத்திடம் ஒப்படைத்துவிடலாம் அல்லது தாமும் தம் வழித்தோன்றல்களும் அறங்காவலர்களாக இருந்து மேற்பார்வையிட்டுவரலாம்.

அறங்காவலர்களுக்கு (Trustees) அறக்கொடையிலோ அதன் வருமானத்திலோ எவ்வித உரிமையும் இல்லை. அறக்கொடையின் நோக்கங்களுக்காகச் செயற்படும் பொறுப்பு மட்டுமே உடையவர்கள். இவர்கள் வழி வழியாகவோ ஒரு குறிப்பிட்ட காலத்திற்கோ பணியமர்த்தம் செய்யப்படலாம்.

தஞ்சை மராட்டிய மன்னர்கள் வடநாட்டுப் பயணிகளுக்காக இராமேசுவரம்வரை சாலைகள் அமைத்தார்கள். மராட்டிய மன்னர்கள் ஏற்படுத்திய பல்வேறு அறக்கட்டளைகளைப் பற்றித் தஞ்சைச் செப்பேடுகள் கூறுகின்றன.

**ஆங்கிலேயர் ஆதிக்கத்தில் ஒழுங்குமுறை விதிகள்:** ஆங்கிலேயர் ஆட்சிப் பொறுப்பினை ஏற்றுக் கொண்ட பின்னர்க் கோயில்களை நிருவகித்தவர்களுள் பலர், கோயில்களின் வருவாயினை வீணாகச் செலவிடுவதை அறிந்து, ஆங்கிலேய அரசு, இந்துக் கோயில்களின் சொத்துகளை மேற்பார்வையிடும் பொறுப்பினைக் கடமை எனக் கருதிக் கி.பி. 1810-ஆம் ஆண்டு, வங்காளத்திற்கென ஓர் ஒழுங்கு முறை விதியை (Regulation) அமைத்தது. இத்தகைய ஒழுங்குமுறை விதிகள் சென்னை, பம்பாய் மாநிலங்களுக்கு முறையே கி.பி. 1817, கி.பி. 1827-ஆம் ஆண்டுகளில் அமைக்கப்பட்டன. இவ்விதிகளின்படி அரசு தன் பணியாளர்களின் வாயிலாக இந்துக்கோயில்களை மேற்பார்வையிடும் கொள்கையை நடைமுறைப்படுத்தி வந்தது. இத்தகைய கண்காணிப்பு முறை கி.பி.1839-ஆம் ஆண்டுவரை தொடர்ந்து வந்தது.

கோயில்களையும் மசூதிகளையும் ஆங்கிலேயர் மேற்பார்வையிடுவது முறைமை அன்று என்று கிறித்தவப் பாதிரிமார்கள் நடத்திய கிளர்ச்சியால் கி.பி. 1839-இல் அரசினர் மேற்பார்வையிடும் பொறுப்பு, சிறிது தளர்ச்சி அடைந்து, இறுதியில் கைவிடப்பட்டது.

கோயில்களையும் அவற்றின் சொத்துகளையும் மேற்பார்வையிடும் அதிகாரத்தையும் பொறுப்பையும் ஆங்கில அரசினர் கைவிட்டதன் நோக்கம் கோயில்கள், அறநிலையங்கள், அவற்றின் நிதி ஆகியவற்றிற்கான நிருவாகம், அம்மதச் சார்பும் பண்பும் உடையவர்களால் நடத்தப்பட வேண்டும் என்பதாகும். அவ்வாறே கி.பி. 1843-ஆம் ஆண்டு செப்டம்பர் 5-ஆம் நாள் சென்னை மாநிலத்திலுள்ள கோயில்களின் உள்துறை நிருவாகப் பொறுப்புகளையும், மேற்பார்வையிடும் பொறுப்பினையும், அலுவலர்களைப் பணியமர்த்தம் செய்யும் பொறுப்பினையும், அவ்வக்கோயில்களைச் சார்ந்த தகுதி உள்ளவர்களுக்கு ஒப்படைத்துவிட்டதாகச் சென்னை அரசாங்கம் இந்திய அரசாங்கத்துக்குத் தெரிவித்தது. இந்துக் கோயில்களை மேற்பார்வையிடும் அனைத்துப் பொறுப்புகளையும் கி.பி. 1862 ஆம் ஆண்டில் அரசாங்கம் கைவிட்டது. ஆனால், அரசினர் தாங்கள் செய்து வந்த மேற்பார்வையைக் கைவிட்டதாலும், பொறுப்புள்ளவர்கள் அறநிலையங்களைப் பாதுகாக்கத் தவறியதாலும், ஒழுங்கற்ற நிருவாகம் ஏற்பட்டு, நிதிகள் கையாளப்படுதல் மிகுந்தது. இந்நிலை மேலும் மோசமடையாமல் அரசாங்கம் பாதுகாக்க வேண்டிய தேவை ஏற்பட்டது.

கோயில்களின் நிருவாகம் சட்ட முறையில் அமைக்கப்பட்ட மேற்பார்வையாளர்களிடம் இருக்க வேண்டுமென்ற இன்றியமையாமை ஏற்பட்ட காரணத்தால், ஒழுங்குமுறைவிதிகள் நீக்கப்பட்டு, கி.பி.1863-ஆம் ஆண்டு சமய அறக்கொடைச் சட்டம் (Religious Endowment Act) இயற்றப்பட்டது. இப்புதிய சட்டத்தினால், உள்ளூர்க் குழுக்கள் நியமிக்கப்பட்டன. ஆனால், இக்குழுக்களின் செயல்வரம்பு மிகக் குறுகி இருந்தது. இக்குழுக்கள் அறங்காவலர்களின் ஆளுமைக்குட்பட்ட கோயில்களை மட்டும் மேற்பார்வையிடும் அதிகாரத்தைப் பெற்றிருந்தன.

இந்துமத அறநிலையங்களின் நிருவாகம் செம்மையுறப் பல்வேறு வல்லுநர் குழுக்கள் கி.பி.1884 முதல் 1898 வரை நியமிக்கப்பட்டுப் பல பரிந்துரைகள்செய்யப்பட்டபோதிலும், அவை பல்வேறு காரணங்களால் நடை முறைப்படுத்தப்படவில்லை. முடிவாக, 1920-ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட சட்டத்தின்படி, இந்து அறநிலையங்களின் நிருவாகப் பொறுப்பு அரசாங்கத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

தமிழ்நாடு அரசு 1951-ஆம் ஆண்டில் இந்து அறநிலையப் பாதுகாப்புச் சட்டம் இயற்றியது. அதன்மூலம் மடங்கள், கோயில்கள், அறநிறுவனங்கள் முதலியவற்றின் சொத்துகளைச் சட்டப்படி சீரிய முறையில் பாதுகாப்பதற்கு வழி ஏற்பட்டது. இச்சட்டம் இந்திய வரலாற்றிலேயே வேறு எங்கும் காணப்படாத ஒரு சிறப்பு மிக்க அரும் பெரும் சட்டமாகும்.

நம் நாட்டில் எண்ணிறந்த முகமதிய அறக்கட்டளைகள் உள்ளன. முகமதியர்களின் சட்டப்படி ஓர் அறக்கட்டளை பொதுவாக ஒரு முதலாளியால்

நிருவாகம் செய்யப்படுகிறது. முதலாளிதான் அந்த அறக்கட்டளையின் மேற்பார்வையாளர். இந்த அமைப்புகளைக் கட்டுப்படுத்தும் வகையில் 'வகுப்'ச் சட்டம் (Wakf Act) செயற்படுகிறது.

அறநிறுவனங்கள் பற்றிய மத்திய சட்டமும் பல மாநிலங்களில் செயற்படுகிறது. சம்மு-காசுமீரம், உத்தரப்பிரதேசம், பீகார், மேற்கு வங்காளம் ஆகிய மாநிலங்களில் மட்டும் அந்தந்த மாநிலத்தின் அறக்கட்டளைச் சட்டம் செயற்படுகிறது. தமிழ் நாட்டில் மத்திய சட்டத்துடன் சென்னை 'வகுப்'ச் சட்டம் இணைந்து செயற்படுகிறது. இந்தியாவில் ஒரே ஒரு முகமதிய அறக்கட்டளைக்கு மட்டும் அதன் பெயரிலேயே ஒரு தனிச் சட்டம் செயற்படுகிறது. அந்த அறக்கட்டளை ஆசுமீரில் (Ajmir) உள்ள குவாசா மொயினுதீர் தர்காவைப் பற்றியதாகும்.

துணை நூல்கள்:

**Mukherjee, B.K.,** Hindu Law of Religious and Charitable Trusts, Eastern Law House, Calcutta, 1983.

**Pandit Pran Nath Saraswati,** Hindu Law of Endowments, Thacker Spinck, & Co., Calcutta, 1897.

*அறக் கொள்கைகள்*: வேதங்கள் கூறும் 'ரித' என்ற கருத்தில், இந்து சமய அறக்கொள்கையின் (Ethical Theories) தொடக்கத்தைக் காணலாம்: இச் சொல், பிரபஞ்சத்தைப் பிணைத்திருக்கும் ஒழுங்கமைப்பைக் குறிப்பிடுகிறது. நற்பண்புகள் 'ரித'த்கோடியைந்தவை. தீய செயல்கள் இதற்கு மாறானவை. அதன் பின்னர் அறநெறிகள் 'தருமம்' என்ற பெயரில் வழங்கப்படுகின்றன. சமயம், சட்டம், நேர்மை, கடமை, ஈகை, அறநெறி என்ற எல்லா ஒழுகலாறுகளையும் உள்ளடக்கியதாகத் 'தருமம்' என்ற கருத்து விளங்குகிறது. மனித முயற்சியால் வாழ்வில் அடைய வேண்டிய 'அறம், பொருள், இன்பம், வீடு' என்ற நான்கு குறிக்கோள்களுள் இது ஒன்று. வீடு அடைவதற்கு அறம் சாதனமாக விளங்குகிறது.

தருமம் இரண்டு வகைப்படும். (1) வருணாசிரம தருமம் அல்லது சுதர்மம். (2) சாதாரண அல்லது சாமானிய தருமம். மனிதன் சமுதாயத்திற்கு ஆற்ற வேண்டிய கடமைகள் 'வருண தருமம்' என்றும், தன் வாழ்வின் வெவ்வேறு நிலைகளில் செய்ய வேண்டிய கடமைகள் 'ஆசிரம தருமம்' என்றும் கூறப்படுகின்றன. ஒவ்வொருவரும் தம்முடைய இயல்புக்கு ஏற்ற தொழிலைச் செய்ய வேண்டும்; சுதர்மம் சுபாவத்தைப் பொறுத்தது என்ற கருத்து இதில் வெளிப்படுகிறது. அறிவிலி ஆசிரியனாகவும், கோழை படை வீரனாகவும், மெய்ப்பொருளை நாடியவன் வாணிகத்தில் ஈடுபடுபவனாகவும் இருத்தல் சமுதாயத்திற்கு நல்லதன்று என்ற உளவியல் உண்மை, இதில் மேலோங்கியிருக்கிறது.

சுதர்மத்தின் மற்றொரு பிரிவான ஆசிரம தர்மம், மாணவப் பருவம் (பிரமசரியம்), இல்வாழ்க்கை (கிரகத்தம்), ஓய்வு பெறுதல் (வானப் பிரத்தம்), துறவு (சந்நியாசம்) என்ற நான்கு பருவத்தில் ஒருவன் செய்ய வேண்டிய கடமைகளைப் பற்றியது.

வருணாசிரம தருமம், சார்புற்ற அல்லது கட்டுப்பாட்டுக்குட்பட்ட அறவொழுக்கத்தைக் (Relative Duties) குறிப்பிடுகிறது. ஒருவருடைய தொழில் அல்லது நிலையைப் பொறுத்து அவருடைய கடமைகள் அமைகின்றன. இதை 'விசேட தருமம்' என்றும் கூறுவர். இதைத்தவிர 'மனிதன்' என்ற முறையில் எல்லோரும் செய்ய வேண்டிய கடமைகள் (Absolute Duties) 'சாதாரண தருமம்' என்று கூறப்படும். அன்பு, அருள், ஈகை, தன்னடக்கம், கொல்லாமை, கள்ளாமை, வாய்மை முதலிய நற்பண்புகள் எல்லோருக்கும் பொதுவானவை. வருணாசிரம தருமம், மனிதனின் புறவொழுக்கத்தையும் (Objective Morality) சாதாரண தருமம் அவனது அகவொழுக்கத்தையும் (Subjective Morality) செம்மைப்படுத்துகிறது.

வினைப்பயன் (கருமம்): நம் ஒழுக்கத்திற்கு நாமே பொறுப்பு. ஆதலின் நம் வினையின் பயனை நாமே நுகர வேண்டும் என்ற கருத்தைக் கருமம் என்ற சொல் வெளிப்படுத்துகிறது. நற்செயல்கள் நமக்குத் துணையான பலன்களையும், பாவங்கள் கேடான பலன்களையும் தருகின்றன. இப்பிறவியில் இப்பலன்களை நுகர்ந்து முடிக்கவில்லையென்றால் எஞ்சியிருப்பதைத் தீர்ப்பதற்காக மீண்டும் பிறவி ஏற்படும். இதை அறிவியல் விதியான காரண காரிய ஒழுங்குக்கு ஈடான அறிவியல் விதி அல்லது மெய்ப் பொருளியல் விதி எனலாம். எல்லா இந்து அறக்கொள்கைகளும் இதில் நம்பிக்கையுடையவை.

இப்பிறவியை வரையறுப்பது முற்பிறவியில் நாம் செய்த வினைகள் என்றால், மனித முயற்சியால் ஆவதென்ன? நடப்பது நடந்தே தீரும் என்ற சோர்வு மனப்பான்மைதானே ஏற்படும் என்ற ஐயப்பாடு எழ வாய்ப்பிருக்கிறது. ஆனால், ஆராய்ந்து பார்த்தால் கருமக் கொள்கையானது மகிழ்ச்சி மனப்பான்மை (Optimism) க்குக் காரணமாவதே தவிர மனச் சோர்வை உண்டாக்குவதன்று என்பது தெரியும். இப்பிறவி அமைவது முற்பிறவியின் வினைப்பயனாக இருக்கலாம். ஆனால் இதில் அமைந்துள்ள சூழ்நிலைகளை நமக்குத் துணையாகப் பயன்படுத்திக் கொள்

வது நம் கையில்தான் இருக்கிறது. டாக்டர் இராதா கிருட்டிணன், வாழ்க்கையைப் பின்வருமாறு சீட்டாட்டத்திற்கு ஒப்பிடுகிறார்: 'சீட்டுகளை நாம் விருப்பப்படி தேர்ந்தெடுத்துக்கொள்ள முடியாது. அவை நமக்குக் கொடுக்கப்படுகின்றன. ஆனால்,கிடைத்த சீட்டுகளை வைத்துக் கொண்டு வெற்றியடைவதும் தோல்வியடைவதும் நம் விளையாட்டுத் திறமையைப் பொறுத்தது. அவ்வாறே நம் உடல், பெற்றோர், அறிவாற்றல், சூழ்நிலை முதலியவை நாம் தேர்ந்தெடுக்காமல் அளிக்கப்பட்டுள்ளன. ஆனால் இந்த வரம்புகளையே வாய்ப்புகளாக மாற்றியமைத்துக் கொள்ளக் கூடிய செயலுரிமையும் மனிதனுக்கு இருக்கிறது. அதனால் 'பெருமைக்கும் சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக் கல்' ஆகும்.

பற்றற்றுப் பணியாற்றல் (நிட்காம கருமக் கொள்கை): வினைப்பயனிலிருந்து மீறுகிற வழியே, நிட்காம கருமம் அல்லது பற்றற்றுப் பணியாற்றுகின்ற முறை என்று கீதையில் கூறப்பட்டுள்ளது. வீடுபேறு அடைவதற்குக் கருமம் தடையாகாமல் வழியாக அமைகிற முறையைச் சொல்வதனால் இது கரும மார்க்கம் என்றும் கூறப்படும். உலகப்பற்று வீட்டையடைவதற்குத் தடையாக இருக்கிறது. ஆனால்,எல்லோருமே உலகைத் துறந்து ஞானிகளாகவோ இறைவன் அடியார்களாகவோ முடியாது. இது ஒரு சிலருக்கு இயல்வது. சாதாரண மனிதர்கள் வீட்டுக்கும் நாட்டுக்கும் ஆற்ற வேண்டிய பணிகள் பல உள. இதனால்,சாதாரண மனிதர்கள் வீடுபேறு அடைய முடியாது என்பது பொருளன்று. பணிகளைச் செய்ய வேண்டிய முறைப்படி செய்தால் அதுவே பிறவித் தளைகளிலிருந்து விடுபட வழியாகும். அதுவே பற்றற்றுப் பணியாற்றும் முறை. உலகப் பற்றுடனோ இம்மை மறுமை பலனைக் கருதியோ பணி செய்யலாகாது. பணியின் உட்கோள் பலனாக இருக்கக்கூடாது. கடமையைச் செய்வதற்கு மட்டும் நமக்கு உரிமை இருக்கிறதே தவிர அதன் பிளவுகளைக் குறித்துக் கவலைப்படக் கூடாது. இதனால், கடமையைப் பொறுப்பின்றிச் செய்ய வேண்டும் என்பதாகாது. செய்யும் காரியத்தைக் கடவுள் தொண்டாகக் கருதிக் கவனத்துடன் செய்ய வேண்டும். இதனால், கருமம் கடவுளுக்குச் செய்யும் பணி ஆகிறது. பலன் கருதிச் செய்யாததால் கரும பலன்களுக்கு யாரும் பொறுப்பாளிகளாவதில்லை. இதுவும் ஒரு வகையில் துறவு நெறியே ஆகும். ஆனால்,இங்கு உலகத்தையும் கடமைகளையும் துறப்பதற்குப் பதிலாக உலகப் பற்றையும் வினைப் பயன்களையும் துறந்து விடலாம். இது 'கரும பல தியாகம்' எனப்படும். பலன்கள் நம்மைத் தொடராததனால் அப்பலன்களை நுகர்வதற்காகப் பிறவி எடுக்க வேண்டிய தேவையில்லை. இதனால் விடுதலை கிடைக்கிறது.

சாருவாக அல்லது உலகாயத அறிவியல்: இது வாழ்க்கையின் குறிக்கோள் இன்பம் என்ற கருத்துடையது. உலகாயதர்கள், பொருள் முதல் கொள்கையினர் (Materialists). இவ்வுலகமும் இதிலுள்ள பொருள்களுமே உண்மை; புலன்களால் உணர முடியாத ஆன்மா, கடவுள், மறுபிறப்பு என்பவையெல்லாம் பொய்; அதனால், இயன்றவரை இன்பத்தை நுகர்தல் நன்மை. ஒவ்வொருவரும் தம்முடைய இன்பத்தையே நாட வேண்டும். நன்மையும் தீமையும், தனிமனிதனால் அவனுக்குக் கிடைக்கும் இன்பம் அல்லது துன்பத்தை அளவு கோலாகக் கொண்டு முடிவு செய்யப்படுகின்றன. இவர்களது வாதம் கிரேக்க சோபிசுடுகளின் வாதத்தை ஒத்தது. 'நாளை' எமனுடைய நாளாக இருக்கலாம். அதனால் இன்றே, இப்பொழுதே இன்பத்தை நுகர வேண்டும். சில சமயம் இன்பத்துடன் துன்பம் கலந்திருக்கிறது. இது இன்பத்தைத் தெவிட்டாததாக்குகிறது. மீனில் முள் இருப்பதனால் அதை உண்ணாமலிருக்கிறோமா? அதனால் துன்பத்தை முடிந்தவரை நீக்கிவிட்டு, இன்பம் பெற வேண்டும். இன்பங்கள் எல்லாம் ஒரே தன்மை (Quality) யுடையவை; அளவு (Quantity) மட்டும் வேறுபடும். சுருங்கக் கூறின், இன்பம் தரும் செயலே நல்லொழுக்கம்.

பூர்வ மீமாம்சைக் கொள்கை: இந்து தத்துவங்கள் எல்லாம் தருமத்தை வலியுறுத்துகின்றனவென்றாலும், மீமாம்சைக் கொள்கையில் அது மிகச் சிறப்புடன் விளங்குகிறது. வேதங்கள் கூறும் கருமங்கள், வேள்விகள் முதலியவற்றைத் தவறாது கடைப்பிடிப்பது தருமம் என்று கருதியதால் இது 'கர்ம மீமாம்சை' என்றும் கூறப்படும். 'தருமம் கருமத்திற்காக' (நியோக சித்தி) என்னும் உன்னத குறிக்கோள் இதில் விளங்குகிறது. தருமம் 'அரிய பொருள்' என்ற சக்தியாகக் கருதப்படுகிறது. முற்கால மீமாம்சையினர் இன்பம் பொருள் அறம் என்ற மூன்று குறிக்கோள்களோடு நிறுத்திவிட்டனர். இவர்கள் கருத்துப்படி தருமத்திற்கு மேம்பட்டது யாதொன்றும் இல்லை. ஆனால், பிற்கால மீமாம்சையினர் தருமத்தை வீட்டிற்கு வழியாகக் கருதினர். அறவொழுக்கம் உலகியல் தொடர்புடையது (இலௌகீகம்) எனவும் சமயச் சார்புடையது (சாத்திரீகம்) எனவும் இருவகைப்படும். சமயச் சார்புடைய கடமைகள் இருவகைப்படும்.

1. கட்டுப்பாட்டிற்குட்பட்டவை (காமியக் கருமங்கள்) (Conditional Duties). இவை பயன் கருதிச் செய்யப்படுபவை.
2. கட்டுப்பாடுகளற்றவை (நித்திய நைமித்திக

கருமங்கள்) (Unconditional Duties). இவை ஒவ்வொருவரும் நாள்தோறும் செய்யவேண்டிய கடமைகளையும் சிறப்பு நாள்களில் கண்டிப்பாகச் செய்ய வேண்டிய கடமைகளையும் குறிப்பிடும்.

**சமண அறக்கொள்கை:** அறநெறிகள், வினைப் பயன் நம்மை அணுகாமல் வீடுபேறு அடைவதற்கு வழி வகுக்கின்றன என்பது இவர்கள் நம்பிக்கை. இவர்கள் அறநெறி 'இரத்தினத்திரயம்' எனப்படும். அந்த மூன்று இரத்தினங்கள் நன்னம்பிக்கை, நல்லறிவு, நல்லொழுக்கம் ஆகியன. இல்லறத்தாருக்குரிய அறவொழுக்கம் 'அணுவிரதம்' என்றும், துறவிகளுக்குரியது 'மகாவிரதம்' என்றும் கூறப்படுகின்றன. இன்னாசெய்யாமை (அகிம்சை), வாய்மை (சத்தியம்), கள்ளாமை (அசுதேயம்), சிற்றின்பம் விழையாமை (பிரமசரியம்), கவராமை (அபரிக்கிரகம்) முதலிய நற்பண்புகளை இல்லறத்தார் வரம்புக்குட்பட்டும் துறவிகள் வரம்பின்றியும் கடைப்பிடிக்க வேண்டும்.

இது வேதத்தையும் வேள்விகளையும் எதிர்ப்பது. வருணாசிரம தருமத்திற்கு இதில் இடமில்லை. 'எல்லா உயிர்களும் சமம்' என்ற கருத்தைக் கொண்டதால் இதை மக்கட் பண்புக் கொள்கை (Humanism) எனலாம். இதை அடிப்படையாகக் கொண்டதே இன்னா செய்யாமை. சொல்லாலும், செயலாலும் மனத்தாலும் கூடத தீங்கு செய்யக் கூடாது என்பது மிகக் கடுமையாக வற்புறுத்தப்படுகிறது. நம் இன்ப துன்பங்களுக்கு நாமே பொறுப்பு; நம் கருமங்களை நம் முயற்சியினால் நாமே களைந்து விடுதலை பெற வேண்டும். அவ்வாறு அறவழியொழுகி மனத் தூய்மையுடையோர் அனைவரும் கடவுளர்களே என்பது இவர்கள் கருத்து.

**பௌத்த அறவியல்:** சமணசமயத்தைப் போன்றே பௌத்தமும் முழுமுதற் பொருள் என்ற கடவுளற்ற 'அறச் சமயம்' (Non theistic Ethical Religion) எனலாம். இதுவும் வேதங்களையும் வருணாசிரம தருமத்தையும் மறுக்கிறது. உலகம் துன்பம் நிறைந்தது. இதன் காரணத்தை அறிந்து அதை அகற்றினால் துன்பத்திலிருந்து விடுதலை அடையலாம். இந்தப் பேருண்மை 'ஆரிய சத்தியம்' எனப்படும். துன்பத்தை நீக்கி, பற்றின்மை அடையச் செய்கிற நெறிமுறை எட்டு விதிகளைக் (Eight fold path) கொண்டது. அறிவு, நோக்கம், வாக்கு, செயல், ஒழுகலாறு, முயற்சி, மனம், தியானம், என்ற எட்டும் தவறின்றி, அறநேர்மையுடையதாக இருக்க வேண்டும். அறியாமை (அவித்தை)யின் காரணமாகச் செயல், உணர்வு, நாமரூபம், நுகர்ச்சி, வேட்கை, பற்று, சாதி, முதுமை, இறப்பு என்ற சங்கிலித் தொடர் தோன்றுகிறது. இக்கருமத் தொகுதியிலிருந்து மீண்டும் பிறப்பும் துன்பமும் ஏற்படுகின்றன. எனவே நல்லறிவு பெறவேண்டும். நேர்மையான நோக்கம், எவ்வுயிரையும் தன்னுயிராகக் கருதும் பண்பைக் குறிக்கும். இதில் நல்லறிவும், மனத்தூய்மையும் தன்னடக்கமும் முதன்மையே தவிரச் சமயச் சடங்குகள் அல்ல. சமணம் துறவு நெறியை வற்புறுத்துகிறது. ஆனால், பௌத்தம் புலனடக்கத் தேவையைக் கூறுகிறதே தவிரப் புலன்களை ஒறுக்கும்படி கூறவில்லை. எனவே இதை நடு நிலைவழி (Golden mean) என்பர்.

**அத்துவித அறக் கொள்கை:** அத்துவித அறவியல் அதன் மெய்ப்பொருளியலோடு பின்னிப் பிணைந்திருக்கிறது. தனி ஆன்மா (சீவாத்மா) பரம்பொருளிலிருந்து (பரமாத்மா) வேறுபட்டதன்று என்ற மெய்யறிவு மூலமே வீடு கிட்டும் என்பது அத்துவிதத் தத்துவம். அறவொழுக்கம் பிரம ஞானத்திற்குக் காரணமாக (Antecedent) அமைகிறது. இது நான்கு கட்டுப்பாடுகளைக் கொண்டது. 1. நிலையற்ற வற்றிலிருந்து நிலையானவற்றைப் பிரித்துணர்வது. 2. இம்மை மறுமை இன்பத்தை நாடாதிருப்பது. 3. மன அமைதி, தன்னடக்கம், தன்னம்பிக்கை முதலிய நற்பண்புகளைக் கொண்டிருப்பது. 4. வீடு பெற வேண்டுமென்ற பேராவல்.

மெய்யறிவு அறவொழுக்கத்தின் விளைவு என்றாலும் வீடுபேற்றிற்குக் காரணம் மெய்யுணர்வே தவிர அறம் அன்று. பரம்பொருள் அறத்திற்கு அப்பாற்பட்டது. நன்மை, தீமை என்ற வேறுபாடுகள், இரண்டற்ற, பாகுபாடுகளற்ற, உறவுகளற்ற பிரமத்தில் உள்ளவையல்ல. ஆனால், மனிதன் மாயையை மெய்யென்று நம்பும் வரை உலகமும் அதனைச் சார்ந்த அறங்களும் சிறப்புத் தன்மை வாய்ந்தவை; கனவு நீடிக்கும்வரை கனவுலக நுகர்ச்சிகளும் உண்மையானவை. மேலும் நல்லொழுக்கம் படிப்படியாக வீடுபேற்றிற்கு (கிரம முக்தி) வழி செய்கிறது.

**திருக்குறள் அறநெறி:** மனித வாழ்வின் குறிக்கோள்களான அறம், பொருள், இன்பம் என்ற மூன்றையும் பற்றிய விளக்கவுரை திருக்குறள் என்று கூறலாம். நான்காவது குறிக்கோளான வீடு இதில் விடப்பட்டிருக்கிறது. இதைப் பௌத்த, சமண சமயங்களிலும் காணலாம். நினைவுக்கும் நேர் காட்சிக்கும் அப்பாற்பட்ட ஒன்றை விவரிக்க முடியாது என்பதனாலும், வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் உறுதியாக வீடுபேறு அடைவான் என்பதனாலும் இது தவிர்க்கப்பட்டிருக்கலாம். வினைப் பயன், ஊழ்போன்ற பொதுவான இந்து நம்பிக்கைகள் இதில் இடம் பெற்றிருக்கின்றன. ஆனால்,

பௌத்த, சமண சமயங்களைப் போன்று குறளும் வருணாசிரம தருமத்தைத் தவிர்க்கிறது. 'பிறப் பொக்கும் எல்லா உயிர்க்கும்', 'அந்தணர் என்போர் அறவோர்' என்பது வள்ளுவர் வாக்கு. வேதங்கள் கூறும் வேள்விச் சடங்குகளையும் இது புறக்கணிக் கிறது. 'அவிசொரிந்து ஆயிரம் வேள்விகள் செய் வதை விட ஒன்றன் உயிரைக் கொன்று உண்ணாமை நல்லது' என்ற இன்னா செய்யாமைக் கருத்து இதில் கூறப்படுகிறது. மேலும் இந்து சமயம் துறவறத்தை வீடுபேற்றிற்குச் சிறந்த வழியாகக் கருதுகிறது. குறளிலும் துறவுநெறி கூறப்படுகின்றதென்றாலும் அது இல்வாழ்க்கையை விடச் சிறப்பானதாகக் கரு தப்படவில்லை. பொருளும் இன்பமும் இழிந்ததெனக் கொள்ளவில்லை. அறவழி இல்வாழ்க்கை நடத்து பவன், வானுறையும் தெய்வத்திற்கு ஒப்பாக மதிக் கப்படுகிறான்.

சோபிசுடுகள் (Sophists): 'மனிதனே அனைத் திற்கும் அளவுகோல்' என்பது இவர்களது பொன் மொழி. புரோட்டகோரசின் கருத்துப்படி முழுமை யான நன்னடத்தை என்று எதுவுமில்லை. எல்லா அறநெறிகளும் சார்புடையவை (Relative). ஒரு குறிப்பிட்ட சமுதாயத்திற்கு அவை நல்லவை என்று ஏற்றுக்கொள்ளப்படும் வரை பொருந்துவன. அற நெறிகள் இடத்திற்கு இடம், காலத்திற்குக் காலம் மாறுபடும். சோபிசுடுகள் அகநிலைக் கொள்கை யினர் (Subjectivists). நன்றென்பதும் தீதென்பதும், அகத்தைப் பொறுத்தனவே தவிரப் புறநிலை உண்மையைப் (Objective) பொறுத்தனவல்ல என்பது இவர்கள் கருத்து. இவர்கள் மரபுவழி ஒழுக்கத்திற்கு மாறானவர்கள்.

சாக்ரட்டீசு: 'தன்னைத்தான் அறிதல்' மனித னின் தலையாய கடமை. தன்னை அறிந்தவன், தான் எவ்வாறு ஒழுக வேண்டும் என்பதையும் அறிவான். நற்பண்பு எனப்படுவது அறிவே (Virtue is knowledge); எது நன்மை, எது தீமை என்பதை ஒருவன் அறிந்து கொண்டால் அவன் நன்மையையே நாடு வான். அறியாமையினால் தீமையைத் தனக்கு நன்மை என்று கருதித் தேர்ந்தெடுக்கிறான். நன்மை யும் தீமையும் தனிமனிதனின் விருப்பு வெறுப்பைப் பொறுத்தனவல்ல. அவை புறநிலை இருப்புடை யவை. சமூகத்திற்கும் மனிதனுக்கும் ஒரு அறப் பிணைப்பு இருக்கிறது. சமுதாயத்தில் வாழ்வதால் நமக்குச் சில உரிமைகள் கிடைக்கின்றன. இந்த உரிமைகள் கடமைகளைத் தழுவியவை. அதனால், சமூக நலத்தை நாடுவது (Common Good) மக்கள் கடமையாகும் என்பது அவர் கருத்து.

பிளாட்டோ: நம் மனம் மூன்று கூறுகளைக்கொண் டது. அவை 1. பசி அல்லது விழைவு (Appetitive), 2. ஊக்கம் (Spiritual), 3. சிந்தனை (Rational) எனப்படும். நடுநிலைமை அல்லது மிதம் (Temperance), வீரம் (Courage), அறிவு (Wisdom) என்ற மூன்று நற்பண்புகளும் முறையே இம்மூன்று கூறு களோடியைந்தவை. இந்த மூன்று கூறுகளும் ஒன் றோடொன்று இணங்கி (Harmony) யிருப்பதே தனி மனிதனுக்கு நீதி (Justice) என்ற நற்பண் பாகும். அதாவது பசியும் ஊக்கமும் அறிவுக்குக் கட்டுப்பட்டிருக்க வேண்டும். இந்த மூன்று குணங் களுள் ஏதாவதொன்று ஒவ்வொருவருக்கும் மே லோங்கி விளங்கும். இந்த இயல்பின் அடிப்படையில் மனிதர்களை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். 1. மிதமான குணம் உடையவர்கள் தொழிலாளர் கள் (Workers), 2 வீரம் உடையோர் படைவீரர்கள். 3. அறிஞர்கள் ஆள்பவர்கள் (Rulers). இங்குத் தொழில் குணத்தைப் பொறுத்து அமைகிறது. இது வருண தருமத்துடன் ஒப்பிடத்தக்கது. சாத்வீக குணம் உடையவர் அந்தணர். இரசோ குணம் உடை யவர் சத்திரியர்; இரசோ, தாமச குணம் படைத் தவர் வைசியர்; தாமச குணம் கொண்டவர் சூத்தி ரர். ஆனால், வருண தருமம் சமயச் சார்புடையது. பிளாட்டோவின் சமுதாயப் பிரிவுகள், அற அரசியல் முறையில் மட்டும் அமைந்தவை.

அரிசுடாட்டில்: 'மனிதன் பகுத்தறிவுள்ள பிராணி'. அதனால், அவன் பகுத்தறிவுடன் செய லாற்றும்பொழுதுதான் உண்மையான மனிதனா கிறான். பகுத்தறிவின் துணைக்கொண்டு நல் லொழுக்கத்தை முடிவுசெய்ய வேண்டும். எடுத்துக் காட்டாக, வீரம் என்ற நற்பண்பு மூர்க்கத் தன்மைக் கும் கோழைத் தன்மைக்கும் நடுவிலுள்ளது. வீண் செலவுக்கும் ஈயாமைக்கும் இடையில் அமைந்திருக் கிறது பெருந்தன்மை. வீணான சிந்தனைகளில் ஆழ்ந்துவிடும் மனத்திற்கும் புல்லறிவுக்கும் இடைப் பட்டது பகுத்தறிவு. நற்பண்புகளை அறிந்து கொள் வதுடன் அமையாமல் அவற்றை மக்கள் பழக்க மாக்கிக் கொள்ள வேண்டும் (Virtue is a habit) என்று அரிசுடாட்டில் கூறுகிறார். நல்லொழுக் கத்தின் குறிக்கோள் இன்பம். கிரேக்கச் சொல் லான இயூடிமோனியா (Eudeemonia) என்பது, நிறைவான வாழ்க்கையை அனுபவித்த நிறைவால் கிடைக்கும் இன்பத்தைக் குறிப்பிடுகிறது.

தன்னல இன்பக் கொள்கை: (Equistic Hedonism): பண்டைக்காலக் கிரேக்க அறிஞர்களான அரிசுடிப்பசு, எப்பிகியூரசு என்போர், ஒவ்வொருவ னும் தன்னுடைய இன்பத்தை நாட வேண்டும் என்ற னர். ஆனால், இதிலும் வேறுபாடு உண்டு. அரிசுடிப் பசு உடலைச் சார்ந்த இன்பமே சிறந்தது என் றும் நாளைய இன்பத்திற்காக இன்றைய இன் பத்தை விடலாகாது என்றும் கூறுகிறார். ஆனால்,

எப்பிகியூரசு உடல் இன்பத்தைவிட மன இன்பமே சிறந்தது என்றும் நீண்ட நேரம் நிலைக்கும் இன்பத்திற்காக இப்போதையசிற்றின்பத்தைத் தவிர்க்கலாம் என்றும் கருதினர்.

இக்கால இன்பக் கொள்கை (Modern Headonism): மக்களுடைய செயல்கள் எல்லாம் இன்பத்தைக் குறிக்கோளாகக் கொண்டவை என்று பெந்தம் (Bentham) கூறுகிறார். மக்கள் வலிய விரும்பிச் செய்யும் செயல்கள் சில சமயம் துன்பம் தருவன போல் மேற்போக்காகத் தோன்றினாலும், ஆராய்ந்து பார்த்தால் அவை இன்பத்தையே தருகின்றன. மில் (J.S. Mill) சிட்சுவிக்கு (Sidgwick) ஆகியோரும் இக்கொள்கையை நிலைநாட்டியவர்களே. எனினும் இக்கொள்கை கிரேக்கர்களின் கொள்கையைப்போல் தன்னலத்தில் அமைந்ததன்று. இந்த ஆங்கிலேய அறக்கொள்கை. பிறர் நலம் பேணுதல் (Altruism), என்ற அடிப்படையில் அமைந்தது. பிறர் நலத்தில் தன் இன்பமும் அடங்கும். நற்செயல்கள் மிக்க இன்பத்தை (Maximum Pleasure) மிகுதியானவர்களுக்குக் (Maximum Number) கொடுக்க வேண்டும். இதைப் "பயன் வழிக் கொள்கை" (Utilitarianism) என்பர். எல்லா இன்பங்களும் ஒரே நிலையுடையன (Quality) என்று பெந்தமும், அவை நிலையில் மாறுபட்டவை என்று மில்லும் கருதுகின்றனர்.

கிரேக்க இசுதாயிக்கொள்கை (Stoicism): இது இன்பக் கொள்கைக்கு முரணானது. இது அறிவின்படி செயலாற்ற வேண்டும் என்பதையும் பற்றுகளை அகற்ற வேண்டும் என்பதையும் வற்புறுத்துகிறது. அறிவும் ஆசையும் முரணானவை. எதையும் அறிவால் முடிவு செய்யவேண்டும். ஆசை வழிப்பட்டவன் உணர்ச்சிகளின் அடிமை. அவன் மாக்களை ஒத்தவன். ஆசைத் தளைகளிலிருந்து விடுபட்டவன் சுதந்திர மனிதன். அவன் அரசனானாலும் ஆண்டியானாலும் சூழ்நிலைகளால் பாதிக்கப்படுவதில்லை. அவன் இன்பத்தில் எக்களிப்பதும் துன்பத்தில் துவள்வதும் இல்லை. மன அடக்கமே இந்த அறநெறிகளின் சாரம்.

இக்கால அறிவுக் கொள்கை (Modern Rationalism): இது கான்ட்டு (Kant) என்னும் செருமானிய அறிஞரின் தத்துவத்தின் சிறப்பாக மிளிர்கிறது. இவர் கிரேக்க இசுதாயிக்குக் கருத்துகளை உறுதியான அடிப்படையில் நிறுவுகிறார். அறிவு மூலம் பெறும் அறச் சட்டம், பயன் கருதாது கடமைகளைச் செய்ய வேண்டும் என்கிறது. இது கீதை கூறும் பயன்கருதாப் பணி போன்றது. பயன்கள் ஆசை வழிப்பட்டவை. ஆசைவழியில் பிறக்கும் அறச்சட்டங்கள் ஒவ்வொரு விருப்பத்தைப் பொறுத்தும் மாறுபடுபவை (Hypothetical). கடமைகள் அறிவிலிருந்து பிறப்பவை. அதனால், பிரபஞ்சச் (Universal) சார்பற்றது. (Unconditional) அறச் சட்டம் விதிவிலக்கற்றது (Catogorical Imperative): புறத்தூண்டுதலின்றிப் புறக்கட்டுப்பாடின்றி மக்களே வகுத்துக் கொள்வது. அதனால், தனிமனிதனிலிருந்து அது தோன்றியதென்றாலும் பொதுச்சட்டமாக விளங்கும் பண்புடையது. அது முரண்பாடுகளற்றது (Consistant); மனிதமேன்மையை (Human Dignity) மதிப்பது. மனிதனின் செய்லுரிமை (Freedom of Will), ஆன்மாவின் அழியாமை, கடவுளின் இருப்பு முதலிய அடிப்படை உண்மைகளை அறத்தின் துணையால் மட்டுமே நிலைநாட்ட முடியும்.

கருத்து முதற்கொள்கை: (Idealism) ஏகல் (Hegal), கிரீன் (Green), பிராட்லி ஆகியோர் கருத்து முதற் கொள்கையினர். இதில் இன்பக் கொள்கையும் அறிவுக் கொள்கையும் ஒருங்கிணைந்துள்ளன. உணர்வு, அறிவு என்ற இரண்டும் மனிதனின் இயல்புகளாதலால் இவற்றில் ஒன்றை மட்டும் மிகைப் படுத்தி மற்றொன்றை இழிவாகக் கருதுதல் ஏற்புடையதன்று. ஆசைகளும் உணர்ச்சிகளும் அறிவுக்குக் கட்டுப்பட்டிருந்தால் அதுவே அறமாகும். அறத்தின் குறிக்கோள் மனிதன் முழுமையடைய வேண்டும் (Self-Fulfilment) என்பதே. இதற்கு மனிதன் தன் ஆளுமையை (Personality) வளர்த்துக் கொள்ள வேண்டும். தனிமனிதனும் சமுதாயமும் பிரிக்க முடியாதவை. அதனால், மனிதன் சமூகக் கடமைகளை (My Station and its Duties) ஆற்றுவதன் மூலம் ஆன்ம வளர்ச்சியடைகிறான் என்பது பிராட்லியின் கருத்து. கிரீன், பொதுநலம் (Common good) என்பது குடும்பம், நகரம், நாடு என்று படிப்படியாக வளர்ந்து, உலகம் முழுவதையும் உள்ளடக்கியதாக இருக்க வேண்டும் என்கிறார். யாவரும் கேளிர் என்ற மனப்பான்மை பெற வேண்டும். பொதுத் தொண்டு மூலமே மனிதன் நிறைவடைகிறான் என்பது கிரீனின்கொள்கை. மற்றக் கொள்கைகளிலுள்ள முரண்பாடுகளெல்லாம் இதில் நீங்கிவிடுவதால் கருத்து முதற்கொள்கையை நிறைவான அறக் கொள்கை எனலாம்.

படி முறைவளர்ச்சிக் கொள்கை: (Evolutionism): உயிர்களின் படிப்படியான வளர்ச்சி குறித்து, தார்வின் கூறிய கருத்துகள் அறிவியலிலும் ஒரு திருப்பத்தை ஏற்படுத்தின. இவரைப் பின்பற்றிய அறிவியலார், அறநெறிகளை 'உயிர்வாழ்தல்' (Life) என்ற அடிப்படையில் அமைத்தனர். இயற்கையால் தேர்ந்தெடுக்கப்படுகிற (Natural Selection) வாழ்க்கைப் போராட்டத்தில் தகுதியுடையவைகளே

வாழுகின்றன (Survival of the Fittest); சூழ்நிலைக் கேற்றவாறு தம்மைத் தகவமைத்துக் கொள்ளும் (Adaptability) உயிரினங்களே தகுதியுடையவை. எனவே போராட்டத்தில் வெற்றி பெற உதவிய பண்புகள் நன்மை என்றும், தோல்வியைத் தழுவியவை தீயவை என்றும் கருதலாம். இவற்றுடன் இசுபென்சர் (Herbert Spencer) இன்னும் சில கருத்துகளைக் கூறுகிறார். வளர்ச்சியின் தொடக்கக் காலத்தில் இருந்த ஒழுக்கத்தைவிட இப்போதைய நல்லொழுக்கம் சிறந்தது. மேலும் நல்லொழுக்கம், நீண்ட வாழ்க்கை, நிறைந்த வாழ்க்கை, இன்பம் என்ற மூன்று குறிக்கோள்களைக் கொண்டது.

பயன்வழிக் கொள்கை (Pragmatism): வில்லியம் சேம்சு, தூயி (Dewey), சில்லர் முதலிய அமெரிக்க அறிவியலார் இக்கொள்கையை உருவாக்கியவர்கள். இது அறிவியலை மெய்ப்பொருளியலிலிருந்து பிரிக்கிறது. நன்மை என்பது மனிதர்களின் தேவைகளை அடையச் செய்வது. எனவே செயலின் பயனைப் பொறுத்தே நன்மை தீமைகளை முடிவு செய்ய வேண்டும். சமுதாய முன்னேற்றத்திற்குக் காரணமாவது நன்மை, இதற்கு மாறானது தீமை. நன்மை தீமை முற்றிலும் சமூகச் சார்புடையன. அவை நிலையானவை அல்ல. ஒரு காலத்தில், ஓரிடத்தில் நன்மையானதே எல்லோருக்கும் எக்காலத்திற்கும் பொதுவான நன்மை என்ற பிடிவாதம் கூடாது. ஒவ்வொரு அறச்செயலையும் அது நிகழ்கிற காலம் சூழ்நிலை (Contemporary Situation), முதலியவற்றை மனத்திற் கொண்டு செய்ய வேண்டும். மேலும் மரபு அறக்கொள்கைகள் 'நன்மை ஒன்றே' (Single Supreme Good) என்கின்றன. ஆனால், பயன்வழிக் கொள்கையின்படி நன்மைகள் பல.

அளவைமுறை நேர்காட்சிக் கொள்கை (Logical Positivism): இசுடீவன்சன், ஏயர் (A. J. Ayer), கார்னாப்பு (Carnap) முதலியோர் அறிவியல் அறிவியலாகாது என்ற கருத்துடையவர்கள். அறக்கூற்றுகள் பொருளற்றவை (Meaningless). அறக்கருத்துகள் உண்மையற்றவை (Psuedo Concept). அவை உண்மை அல்லது பொய் என்று ஏற்றுக் கொள்ள முடியாதவை. அவை அறிவைத் தருகிற கருத்துகளாக இருந்தால் அவற்றில் ஒன்றை உண்மையென்று ஏற்றுக்கொள்ளவும் மற்றொன்றைப் பொய்யென்று தவிர்க்கவும் முடியும். ஆனால் நன்மை, தீமை, தவறு, தவறன்று என்று கூறுவதெல்லாம் ஒருவர் 'ஆ' (Ah!) என்றும் மற்றொருவர் 'ஓ' (Oh!) என்றும் கூறுவதற்குச் சமம். இவை மக்களின் உணர்ச்சி வெளிப்பாடுகளே தவிர உண்மையான தீர்ப்புகள் (Judgement) அல்ல. உணர்ச்சிகளை எது உண்மை, எது பொய் என்று எவ்வாறு முடிவு செய்வது? எனவே அறக்கருத்துகள் நம் மனநிலையின் வெளித்தோற்றங்களே (Emotion) தவிர அறிவைத் தரும் தீர்ப்புகளல்ல (Non-Cognition) என்று இக்கொள்கை கூறுகிறது. இவ்வாறு அறக்கொள்கைகள் பல நிலைகளில் விளக்கப் பெறுகின்றன.

ஜெ.மு.

***அறத்தொடு நிற்றல்:*** தமிழ் மொழியில் அமைந்துள்ள அகப்பொருள் இலக்கணம், தமிழ் மக்களின் இல்வாழ்க்கைச் சிறப்பினை எடுத்துக் காட்டி, அவர்களின் அகவாழ்வுப் பண்பாட்டினைக் காத்து நிற்பதாக அமைந்துள்ளது. அந்த அகப்பொருள் இலக்கணம் வகுத்துள்ள கிளவித் தொகைகள் பலவற்றுள் 'அறத்தொடு நிற்றல்' ஒன்றாகும். இது அறத்தொடு நிலை எனவும் கூறப்படும்.

ஒப்பாரும் மிக்காரும் இவர் என்று சிறப்பித்துக் கூறப்படும் தலைவனும் தலைவியும் தனித்துக் காணும் முதற்காட்சியில் அரும்பும் களவுக் காதல், கற்பு மணமாக நிறைவு பெறுதல் வேண்டும் என்பது தமிழ் மக்கள் குறிக்கோளாகும். அது அறம் எனப்பட்டது. அங்ஙனமின்றிக் களவுக் காதல் காதலர் மணத்தினால் கற்பு நிலையினை அடையாமல், இடையறவு படுமாயின், அந்நிலை அறமல்லாததாகக் கருதப்பட்டது. அகப்பொருள் இலக்கணம் அந்தக் காதல் இடையறவுகளை உடன்படுவதில்லை. அதனால், வேற்றார் மணம் பேசிவருதல், தலைவியின் மெய்வேறுபாடு கண்டு தாயார் வினவுதல் போன்ற காரணங்களால் மணத்தடை நிகழக்கூடும் என்னும் சூழ்நிலையில், அது நிகழாமல் தடுத்தற்காகவும், அக்காதலரின் மணம் தவறாது நடைபெறுவதற்காகவும், அவர்களுக்கிடையே தோன்றிய காதல் உறவினைப் பெற்றோருக்கு உணர்த்த வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. அது காதலர் இருவரும் திருமணம் பெற்றுக் கற்பு வாழ்வு மேற்கொள்வதற்கு இன்றியமையாத செயலாக அமைவதனால், அவ்வாறு, காதலர்க்கு இடையே உள்ள காதல் நிகழ்ச்சியை முறைப்படப் பெற்றோர்க்கு உணர்த்தும் செயல், தமிழ் மக்களது அகவாழ்வுப் பண்பாட்டின் உயர்வினை உணர்த்தும் ஒன்றாகும்.

தொல்காப்பியமும், அதற்குப்பின்னர்த் தோன்றிய அகப்பொருள் இலக்கண நூல்களும் அறத்தொடு நிற்றலைச் சிறப்பாக விளக்குகின்றன. சங்க நூல்கள், அடுத்துத் தோன்றிய இலக்கியங்கள் ஆகியவற்றில் அறத்தொடு நிற்றல் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. களவியலில் தோழிக்குரிய கிளவிகளைத் தொகுத்துக் கூறும்போது (தொல்-பொருள். களவு.23) அறத்தொடு நிற்றலைக் குறிப்பிட்ட தொல்காப்பியர், அறத்தொடு நிற்குங்காலம்,

அவ்வாறு நிற்றலின் வகைகள் பற்றிப் பொருளியலில் (நூற்பா. 12, 13) நன்கு விளக்கியுள்ளார். நாற்கவிராச நம்பியின் அகப்பொருள் விளக்கம், வரைவியலில் வரைவிற்குரிய கிளவித் தொகையுள் ஒன்றாக அறத்தொடு நிற்றலைக் குறிப்பிட்டு அதன் வகையினையும், தலைவி, தோழி ஆகியோர் அறத்தொடு நிற்கும் முறைமையினையும் குறிப்பிட்டுள்ளது (நம்பி. 172, 175-177). இந்த இலக்கணத்தைப் பின்பற்றி அமைந்த கோவைப் பிரபந்தங்கள், இவற்றிற்குரிய இலக்கியங்களைக் கொண்டுள்ளன.

அறத்தொடு நிற்கவேண்டிய சூழ்நிலை உண்டாகும்போது, தலைவி தோழிக்கும், தோழி செவிலிக்கும், செவிலி நற்றாய்க்கும், நற்றாய் தமையன்மார், தந்தையார் ஆகியோர்க்கும் முறையே அறத்தொடு நிற்பார்கள். தோழி அறத்தொடு நிற்குங்கால், தாய் அறிவோடும், தலைமகன் பெருமை கற்பு ஆகியவற்றோடும், தன் காவலோடும், உலகியல் ஆகியவற்றோடும் மாறுகொள்ளாமல் செயற்பட்வேண்டும். அவ்வாறு அறத்தொடு நிற்கும் பாங்கினை இறையனார் களவியல் உரை, தடைவிடைகளோடும் தக்க எடுத்துக் காட்டோடும் விளக்குகிறது (நூ, 14. உரை). நற்றாய் அறத்தொடு நிற்றலால் தலைவியின் களவுண்மை அறிந்த தமையன்மார், தந்தையர், முதலில் சினங்கொண்டு கிளர்ந்தாலும், இறுதியில் சினம் மாறி அவளது காதலுக்கு இசைவளித்து நிற்கும் இயல்பினை, 'அவரும் தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்து, ஒரு பகல் எல்லாம் உருத்து எழுந்து ஆறி, இருவர்கண் குற்றமும் இல்லையால் என்று, தெருமந்து சாய்த்தார் தலை' (கலி-39, 22-25), என்னும் கபிலரின் குறிஞ்சிக் கலிப்பாடற் பகுதி நன்கு உணர்த்துகிறது.

இவ்வாறு அறத்தொடு நிற்றலால் தலைவியின் தந்தைவரை அக்குடும்பத்தைச் சார்ந்த ஒவ்வொருவரும் உண்மை உணர்வதற்கும், அதனால், அவள் தன் காதலனை மணந்து கொள்வதற்குத் தடையாக உள்ளனவெல்லாம் நீங்கப் பெற்று, அவனையே மணந்து கொள்வதற்கும் வாய்ப்பு உண்டாகிறது. களவு, மணம், தவறுபடாமல் கற்புமணமாக மாறுவதற்கு உதவியாக அமைந்த செயலாதலால் அது 'அறத்தொடு நிற்றல்' எனப் பெயர் பெற்றது. தமிழ் மக்களின் அகவாழ்க்கைப் பண்பாட்டில் 'அறத்தொடு நிலை' பெறும் சிறப்பினை உணர்ந்த கபிலர், ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழ் அறிவுறுத்த நினைத்தபோது, 'அறத்தொடு நிற்றல்' என்னும் துறையினைத் தேர்ந்து, 'குறிஞ்சிப் பாட்டு' என்னும் 261 அடிகள் கொண்ட நெடிய பாடலை இயற்றித் தமிழ் அறிவுறுத்தியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

**அறநூல்கள்** மக்கள் வாழ்வில் மேற்கொள்ள வேண்டிய அறங்களைத் தொகுத்தும் வகுத்தும் உணர்த்தும் நூல்கள். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களுள், அறம், உணர்த்தும் நூல்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. சங்க இலக்கியங்கள் எனப்படும் பத்துப் பாட்டு, எட்டுத்தொகை நூல்களில் அறக் கருத்துக்களைக் கொண்ட தனிப் பாடல்கள் காணப்படுகின்றன. பின்னர்த் தனி நூலாக அறநூல்கள் எழலாயின. பதினெண் கீழ்க் கணக்கு நூல்களில் நாலடியார், நான்மணிக் கடிகை, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, திருக்குறள், திரிகடுகம், ஆசாரக் கோவை, பழமொழி, சிறுபஞ்ச மூலம்,முது மொழிக் காஞ்சி, ஏலாதி என்னும் பதினொரு நூல்கள் அறம் கூறும் நூல்களாக அமைந்துள்ளன. பிற்காலத்தெழுந்த அறநூல்கள் பலவாகும். இலக்கிய வரலாற்றில் இருண்ட காலம் எனக் கூறப்பெறும் கி.பி. 5-ஆம் நூற்றாண்டில் தோன்றியதாகக் கருதப்பெறுவது திருமந்திரம். இதனுள் அமைந்த முதல் மூன்று தந்திரங்களைத் திருமூலர் அறங்கூறும் பாங்கில் அமைத்துள்ளார். இப்பகுதி அக்காலத்தே அறச் சிந்தனைகளுக்கிருந்த நன்மதிப்பினைக் கோடிட்டுக் காட்டும் வகையில் அமைந்துள்ளது.

தனி மனிதனையும், சமுதாயத்தையும் செந்நெறிப்படுத்தும் ஒழுக்க நெறியாக அறத்தைக் கருதினர். இவ்வுலக வாழ்வு சிறப்பதற்கும், முன்னேற்றம் அடைவதற்கும், மனப்பண்பிற்கும் அறவாழ்வு இன்றியமையாததாகக் கருதப்பெறுகிறது. அறம் என்னும் சொல், குறிக்கும் பொருள்கள் பல எனினும் நற்பண்பு அல்லது ஒழுக்கம் என்னும் பொருளிலேயே பெரும்பாலும் வழங்கி வந்துள்ளமை கருதத்தக்கது.

வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ என்னும் துறைகளால் மன்னர்களுக்கும் வள்ளல்களுக்கும் அறத்தின் கூறுபாடுகளை உணர்த்திய தனிப் பாடல்களைப் புறநானூறு போன்ற சங்க நூல்களில் காணலாம். தொல்காப்பியரால் கூறப்பெற்ற முதுமொழி என்பதும் அறவுரையாக வழங்கப்பெற்றது எனலாம். முதுமொழிக் காஞ்சி என்னும் நூல் இவ்வகையில் தோன்றிய நூலாகலாம். முதுமொழி, பழமொழி என்னும் சொற்கள் ஒரு பொருளன என்பதும் கருதத்தக்கது. பழமொழி என்பது பொதுமக்கள் பேச்சு வழக்கில் மிகுதியாகப் பயில்வன. ஆனால், முதுரைகள், கல்வி சான்றவர்களின் கருத்துரையாக வெளிப்படுவன. நுண்மையும் சுருக்கமும் அறிவுடைமையும் எளிமையும் பெற்றுக் குறித்த பொருளை முடித்தற்கு வருவது முதுமொழி என்பது தொல்காப்பியர் கருத்து.

மக்களை நெறிபிறழா வகையில் நடத்திச் செல்

வது மூதுரை என்பதனைப் பல இலக்கியங்கள் சுட்டியுள்ளன. அகநானூறு (அகம். 66.1-5) மகாபுராணம் (மகாபுராணம் - 27) மணிமேகலை (மணி.கா. 25. 119) கலித்தொகை (கலி. 68.4) திவ்வியப் பிரபந்தம் (திவ். பி. பெரிய. 3:7:4) போன்ற இலக்கியங்களில் மூதுரை, முதுமொழி என்னும் சொற்கள் ஆளப் பட்டுள்ளமை கருதத்தக்கது. அறம் என்னும் சொல் நன்னெறியைக் குறித்து - வழங்கியமையை அறஞ்சாரான் மூப்பேபோல் (கலி. 38.19) எனவும், அறனிலாளன் (அகம். 207, 219) எனவும், அஞ்சுவதஞ்சா அறனிலி (கலி.42.26) எனவும், அறனுமது கண்டற்றாயின் (கலி. 62.16) எனவும், அறனுமார் அது (ஐங்குறுநூறு. 44) எனவும், உன்றனுக்கு ஒல்லும் நெறி அறம் உரைக்கேன் (மணி. கா. 16.113) எனவும் நூல்கள் கூறுகின்றமையால் அறியலாம்.

அறம் என்பது உயர்ந்தோர் வழக்கு என்பதனை வழக்கியலாணை என்று தொல்காப்பியம் கூறுகிறது. "அறத்தாறு இதுவெனத் தெரிந்து" (ஐங்குறுநூறு-371) எனவும், "அறத்தாறு அன்று என மொழிந்த தொன்று படுகிளவி" (அகம்.5) "அறனிழுக்கா தல்லவை நீக்கி" (குறள். 384) எனவும் அமைந்த பாடற் பகுதிகள் இதனை உறுதிப்படுத்தும்.

அறம் என்னும் சொல்லிற்கு நீதி என்னும் பொருளும் வழங்கியுள்ளது. "அறக் கழிவுடையன பொருட் பயன்பட வரின்" (தொல். பொ. 215), "அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை" (குறள். 32), 'அறநெறி முதற்றே அரசின் கொற்றம்' (புறம்.55), 'அறம் நனி சிறக்க' (ஐங்குறு. 7), 'அறன் கடைப் படாஅ வாழ்க்கை' (அகம். 155) என்னும் அடிகளில் இப்பொருளில் அறம் என்னும் சொல் ஆளப் பட்டுள்ளமையைக் காணலாம்.

அரசின் முறைசெய்யும் நிலையையும் அறம் என்னும் சொல் உணர்த்தியுள்ளது. "அறந்துஞ்சு செங்கோலையே" (புறம். 20) "அறம்புரி செங்கோல் மன்னனின்" (ஐங்குறுநூறு. 290) "அறம் கடைப் பிடித்த செங்கோலுடன் (அகம். 338) 'அறனொடு புரிந்த திறனறி செங்கோல்' (பத்து. பொரு. 230) 'அரசியல் பிழையாது அறநெறிகாட்டி' (பத்து. மதுரை. 192) 'அறனறி செங்கோல்' (சிலப். காட். 58) அறக்கோல் வேந்தன் (மணி. கா. 15.47) என்னும் இடங்களில் அரசியல் நெறி, நீதிமுறை ஆகியவற்றை உணர்த்தும் நிலையில் இச்சொல் பயின்று வந்துள்ளது.

அறம் என்னும் சொல்லை அறநூல் என்ற பொருளில் புறநானூறும் சிலப்பதிகாரமும் கூறியுள்ளன. முழுமையும் அறம் பேச வேண்டும் என்று கருதாது தனிப் பாடல்களிலும் காப்பியங்களிலும் இடை இடையே பேசப்பட்டவை, அறங் கூறுவதே நோக்கமாகக் கொண்டெழுந்தவை. அறத்தை நேரடியாகப் பேசாமல் முன்னுள்ள அறநூல் அடிகளை அமைத்துக் கதையால் விளக்குபவை, கதையாக அறக் கருத்துகளைக் கூறுபவை என்று அறக் கருத்துகளை நான்கு வகையாகப் பிரிக்கலாம்.

புறநானூறு, பத்துப்பாட்டு போன்ற நூல்களில் சில பாடல்களிலும், அகப்பாடல்கள் சிலவற்றிலும் அறக் கருத்துகள் இடம்பெற்றுள்ளன. மக்களிடம் அரசன் எவ்வாறு வரிபெற வேண்டும் என்பதைப் புறநானூறு ஒரு பாடலில் கூறுகிறது. பிறப்பதும் இறப்பதும் உலக இயற்கை என அறிவுறுத்தும் நிலையில் புறநானூற்றுப் பாடல் அமைந்துள்ளது. பண்புடையவர்கள் வாழ்வதாலேயே இவ்வுலகம் நிலை பெற்றுள்ளது எனக் கூறுகிறது. இவை போன்ற பல எடுத்துக்காட்டுகளைப் புறநானூற்றில் காணலாம். பத்துப் பாட்டில் உள்ள பாடல்களிலும் அறக்கருத்துகள் இடையிடையே பேசப்பட்டுள்ளன. மதுரைக் காஞ்சி என்னும் பாடல் அறங்கூறுகிற நிலையில் அமைந்த பாடலாகக் காணப்பெறுகிறது. அகப் பாடல்களாகத் தொகுக்கப் பெற்ற நூல்களிலும் இடையிடையே அறக் கருத்துகள் காணப்பெறுகின்றன. அன்பென்பது தன் சுற்றத்தினர்க்கு ஊறுவிளையாமை, பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகுதல், போற்றுதல் என்பது பகைவர் செயலையும் பொறுத்தல் எனப் பல்வேறு அறக்கருத்துகளை நெய்தற்கலி கூறுகிறது.

சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, பெருங்கதை, இராமாயணம், பெரியபுராணம், கந்த புராணம், மகாபாரதம், தலபுராணங்கள் பக்திப் பாடல்கள், சிற்றிலக்கியங்கள் ஆகியவற்றிலும் அறக் கருத்துகள் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன.

அறத்தை நேராகப் பேசுகிற நூல்கள் மிகக் குறைந்த அடிகளையுடைய பாடல்கள் வாயிலாகவே அவற்றைக் கூறுகின்றன. அவை ஓரடியால் அமைந்தவை, ஈரடி அல்லது குறளால் அமைந்தவை, வெண்பா அல்லது விருத்த யாப்பினால் அமைந்தவை என மூவகையில் அமைந்துள்ளன. ஔவையார் எழுதிய ஆத்திசூடி ஓரடியால் அமைந்த நூலுக்கு எடுத்துக்காட்டாகும்.

அறநூல்களுள் பெரிதும் போற்றப் பெற்ற நூல் ஆத்தி சூடி ஆகும். அறம் என்று கூறினாலே தமிழ் மக்கள் ஔவையாரை நினைக்கும் அளவிற்கு இந் நூல் பயிலப்பட்டு வந்துள்ளது. இந்நூல் அகர வரிசையில் பாக்களை அமைத்துச் சென்றமையால், முதலில் எழுத்துகளை வரிசைப்படக் கற்பிக்கலாம், ஆத்திசூடியைக் கற்பித்துப் பின்னர் எழுத்துகளைக் கற்பித்துள்ளனர் எனக் கருத இடமுள்ளது. ஆத்தி சூடி என்பது இறைவன் பெயர். அதனையே இந்

நூலுக்குப் பெயராக அமைத்துள்ளார். இதில் கூறப் பெற்றுள்ள உண்மைகள் அன்றாட வாழ்வில் மேற் கொள்ளத்தக்கவை. இவ்வுண்மைகள் ஓரடியால் கூறப்பெற்றுள்ளன. அவற்றுள், பல சிறுவர்கள் கொண்டொழுக வேண்டுவனவாகவும், பல வளர்ந்த நிலையில் எண்ணி அமைக்கத் தக்கனவாகவும் உள் ளன. ஆத்திசூடி மக்கள் மனத்தில் பெரியதொரு இடத்தினைப் பெற்றிருந்தது என்பதனைப் பாரதி யார், பாரதிதாசன் ஆகியோர் புதிய ஆத்திசூடி பாடியமை கொண்டும், மேலும் பலர் ஆத்திசூடி நூல்கள் படைத்துள்ளமை, கொண்டும் உணரலாம். ஆத்திசூடி வெண்பா, ஆத்திசூடி புராணம் போன்ற நூல்களும் எழுந்துள்ளன.

ஆத்திசூடியோடு ஒரு படித்தாகக் கொன்றை வேந்தனும் பயிலப் பட்டுள்ளது. ஔவையாரால் செய்யப் பெற்ற இந்நூல் கொன்றைவேய்ந்த இறை வன் பெயரையே கொண்டிருத்தலை அறியலாம். இதுவும் ஆத்திசூடி போன்றே ஓரடியால் அமைந்து மக்கள் மனத்தில் இடம்பெற்ற நூலாகும்.

வாக்குண்டாம் என்னும் தொடரைக்கொண்டு தொடங்கப்பட்ட "வாக்குண்டாம்" என்பதும் சிறு வர்களுக்கு நல்லறம் கூறும் நல்ல நூலாகும். சிறுவர் கள் இந்நூலை முழுமையாகக் கற்றறிய வேண்டும் என்னும் கருத்து நிலவி வந்துள்ளமை, இந்நூலின் செல்வாக்கை நன்கு புலப்படுத்தும்.

முப்பால் எனக்கூறப்பெறும் திருக்குறளும் நாலடி யாரும் அற நூல்களில் தலையாயவை என்னும் கருத்து இருந்து வருகிறது. "நாலும் இரண்டும் கற்றவர்களிடத்தில் வாயடி கையடி செல்லாது" என்றும், "ஆலும் வேலும் பல்லுக்குறுதி நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி" என்றும் வழங்குகிற பழமொழிகள் இக்கருத்தினை வலியுறுத்தும். பிற் காலத்தெழுந்த நூல்களில் பெரும்பாலன திருக் குறள் கருத்தினை எடுத்துக் கையாண்டுள்ளன. அது போன்ற அளவிற்கு இல்லையெனினும் நாலடி யாரையும் பெரும்பாலான நூல்கள் எடுத்தாண் டுள்ளன.

பிற்காலத்தில் அறம் கூறும் நிலையில் சில மாற் றங்கள் நிகழ்ந்துள்ளன. பதினெண்கீழ்க்கணக்கு நூல் கள் பல நேரடியாக அறங்களை மட்டுமே கூறின. இந்நிலை நாள்செல்லச் செல்ல மாறிக் கதை அமைப்புடைய அற நூல்கள் சமுதாயத்தில் செல் வாக்குப் பெறலாயின. புலவர்கள் தாமே அறக் கருத்துகளைக் கூறாமல் முன் நூல்களுள் கூறப் பெற்ற கருத்துகளை எடுத்து அதற்கு ஏற்றதொரு கதையினை அமைத்து நூல் செய்தனர். இவ்வாறு அமைந்த கருத்துகளில் திருக்குறள் கருத்துகளே தலைமை தாங்குகின்றன. திருக்குறளை எடுத்து அமைத்துச் செய்த நூல்கள் பல. சினேந்திர வெண்பா என்னும் நூல் ஆயிரத்து முந்நூற்று முப்பது வெண்பாக்களை உடையது என்று கூறுவர். பிறசைச் சாந்த கவிராயர் இயற்றியது இரங்கேச வெண்பா. இதில் நூற்று முப்பத்து மூன்று வெண்பாக்கள் அமைந்துள்ளன. இதன் சிறப்பு நோக்கி இதனை நீதிசூடாமணி எனவும் கூறுவர். அதிகாரந் தோறும் ஒரு குறளை எடுத்தமைத்துப் பாடிய தினகர வெண் பா என்னும் நூல் கி.பி. 16-ஆம் நூற்றாண்டின தாகக் கருதப்பெறுகிறது. பாகை அழகப்பன் என் பவரால் இயற்றப்பெற்ற வடமலை வெண்பா நூற்று முப்பத்து மூன்று வெண்பாக்களையுடையது. அது போன்றே திருமலை வெண்பா என்னும் நூலும் நூற்று முப்பத்து மூன்று வெண்பாக்களால் ஆனது. முதுமொழிமேல் வைப்பு என்னும் வெண்பாவாலான நூல் முதுமொழியாகிய திருக்குறளை முன்னர்க் கூறிப் பின்னர் எடுத்துக்காட்டமையப் பாடப்பெற் றது. திருப்புல்லாணிமாலை என்னும் நூல் கட் டளைக் கலித்துறையாலமைந்து நூற்று முப்பத்து மூன்று பாடல்களைக் கொண்டது. தினகர வெண் பாவின் முன்னுரையில் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையால் விருத்தப்பாவில் நூற்று முப்பத்து மூன்று பாடல்களைக் கொண்ட நூல் ஒன்று குறிக் கப் பெற்றுள்ளது. சிவஞான முனிவர் கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் பாடிய சோமேசர் முதுமொழி வெண்பா என்னும் நூல் குறிப்பிடத்தக்க சிறப்பினை யுடையது. இஃது அதிகாரத்திற்கு ஒரு குறளாகத் தேர்ந்துகொண்டு, அதனை விளக்கும் பாங்கில் பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், இராமா யணம் போன்ற இலக்கியங்களிலிருந்து கதைகளை எடுத்துக் காட்டுகளாக அமைத்துச் செல்கிறது. நூற்று முப்பத்து மூன்று வெண்பாக்களைக் கொண்ட இந்நூல் பிற்காலத்தே மிகவும் போற்றப்பட்ட நூல் களுள் ஒன்றாகும். திருத்தொண்டர்மாலை அல்லது திருத்தொண்டர்வெண்பா என்று கூறப் பெறும் நூறு வெண்பாக்களாலான நூலைக் குமாரபாரதி என்ப வர் இயற்றியுள்ளார். கி.பி. பதினெட்டாம் நூற் றாண்டில் வாழ்ந்த மல்லையர் என்பவர் சிவ சிவ வெண்பா என்னும் நூலை நூற்று முப்பத்து மூன்று வெண்பாக்களால் பாடியுள்ளார். அரசஞ்சண்முக னார் பத்தொன்பதாம் நூற்றாண்டில் இயற்றிய வள்ளுவர் நேரிசை என்னும் நூலும் இவ்வகையில் அமைந்ததாகும். சிதம்பரம் ஈசான மடத்து இராம லிங்கர் என்பவரும் முருகேசர் முதுநெறி வெண்பா என்னும் நூலை நூற்று முப்பத்து மூன்று பாடல் களால் இயற்றியுள்ளார். செகவீரபாண்டியன் என் பவர் இயற்றிய திருக்குறட் குமரேச வெண்பா ஆயிரத்து முந்நூற்று முப்பது வெண்பாக்களால்

ஆனது. பிற்காலத்தே மிகச் செல்வாக்குப் பெற்ற நூல்களுள் இது குறிப்பிடத்தக்கது.

பிற்கால நூல்களுள் சதகங்கள் அறக்கருத்துகளை மிகுதியும் போற்றியுள்ளன. காலப் போக்கில் கதைகளால் அமைந்த அறநூல்கள் போற்றப் பெற்றுள்ளன. புத்த சாதகக் கதைகளும் பஞ்ச தந்திரக் கதைகளும் நீதிகளைக் கூறும் நிலையில் அமைந்து சிறந்தன. இக்கதைகளைச் சிற்றிலக்கியங்களும் பேரிலக்கியங்களும் இடையிடையே கொண்டுள்ள நிலையினையும் காணலாம். புராணங்களிலும் அறம் கூறும் கதைகளை அமைத்து நூல் செய்யும் இயல்பு மேற்கொள்ளப்பட்டது. மணிமேகலை, சிலப்பதிகாரம், கம்பராமாயணம் போன்றவற்றில் சிறுகதை அமைப்புகளில் அறக் கருத்துகள் கூறப்பட்டுள்ளன.

சு.சு.

## அறநெறிச்சாரம்

**அறநெறிச்சாரம்** முனைப்பாடியார் என்னும் சமணசமயப் புலவர் இயற்றிய அறநூலாகும். சென்னைப் பச்சையப்பன் கல்லூரி, திரு.தி. செல்வகேசவராய முதலியாரால் 1919-இல் புதிய பதிப்பாக வெளியிடப் பெற்றது. இப்பதிப்பின் வாயிலாகப் பழைய பதிப்பு ஒன்று 1905-இல் வெளிவந்துள்ளதாக அறியமுடிகிறது.

அறநெறிச் சார வெண்பாக்களின் பாடுபொருள் கொண்டு இந்நூல் சமண சமயத்தைச் சார்ந்தது எனத் துணியலாம்.

பிரசங்காபரணம் எனச் சிறப்பிக்கப்படும் புறத்திரட்டில் அறிநெறிச் சார வெண்பாக்கள் சில உண்டு. புறத்திரட்டில் சங்கச் செய்யுட்கள் முதலாகக் கம்பராமாயணம் நளவெண்பா முதலிய பிற்கால இலக்கியங்கள் வரையில் பல நூல்களினின்றும் எடுத்த பாக்கள் சேர்க்கப்பட்டுள்ளமையால், அறநெறிச்சாரம் ஐந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட பழைய நூல் எனத் தெளியலாம்.

முதலில் தெய்வ வணக்கம் ஒன்றும்; இறுதியில் நூற்பயன் இரண்டும், நாந்தி ஒன்றும் நீங்க, இந்நூலில் 222 வெண்பாக்கள் உள்ளன. அருகக் கடவுளும், அருக சமயமும், அருகவாசகமும் சிறப்பாகப் பேசப் பெறும் வெண்பாக்கள் இந்நூலில் உண்டு. எனினும், சமயச் சார்பு இன்றி யாவரும் பின்பற்றும் திறமுடைய அறமும் ஒழுக்கமும் உரைக்கும் ஏனைய பாக்கள் செம்பாகமாய் உள்ளன. பல பாடல்கள் உருவக அணிநலம் பெற்றவை. எனவே, இதில் கூறப்படும் அறக்கருத்துகள் பசு மரத்தில் அறைந்த ஆணி போல் மனத்தில் வேரூன்றி நிற்கும் செவ்வி வாய்ந்தவை. காட்டாக, இளமையிலேயே அறஞ்செய்தல் நன்று என்பதை விளக்கும், "இன்சொல் விளைநிலமா ஈதலே வித்தாக", எனத்தொடங்கும் பாடலைக்குறிப்பிடலாம்.

"காட்சியொழுக்கொடு ஞானந் தலைநின்று" என்று தொடங்கும் பத்தாம் பாடல், இந்நூலின் செந்நெறிப் பாகுபாட்டை உட்கோளாகக் கொண்டுள்ளது எனக் கருதப்படுகிறது. இந்நெறிப்படி, ஆசிரியர் இந்நூலினைத் தற்சிறப்புப் பாயிரம், பாயிரம், அறம், அறமுரைப்பார் உரைக்கும் ஆறு செய்திகள், நற்காட்சி நல்லொழுக்கம், நன்ஞானம், மனை வாழ்க்கை, வீட்டுலகமெய்தல், பொது ஆகிய தலைப்புகளில் வெண்பாயாப்பில் அமைத்துள்ளார்.

சி.சு.

## அறப்பளீசுர சதகம் (கி.பி. 18-ஆம் நூ.)

கொல்லிமலைச் சாரலிலுள்ள சதுரகிரியாகிய திருத்தலத்தே அறப்பள்ளி என்னும் திருக்கோயிலில் எழுந்தருளிய ஈசன்மீது பாடப்பெற்ற நூறு பாடல்களைக் கொண்ட பிரபந்தம் ஆகும். அறப்பள்ளி ஈசுவரன் சதகம்–என்பது மருவி அறப்பளீசுர சதகம் ஆயிற்று. இதனை இயற்றியவர் சீர்காழியைச் சேர்ந்த அம்பலவாணக் கவிராயர். இராமநாடகக் கீர்த்தனை பாடியருளிய அருணாசலக் கவிராயரின் மூத்த மகனாராகிய இவர் நல்ல புலமையும் உலகியலனுபவமும் பக்தியுறைப்பும் கொண்டவர். தெய்வ நல ஈடுபாட்டுடன் இச்சதகத்து ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் 'அனுதினமும் மனதில் நினை தரு சதுர கிரிவளர், அறப்பளீ சுரதேவனே' என்று மகுடம் அமைத்துள்ளார். நீதி கூறுஞ் சதக இலக்கியங்களுக்கு இந்நூல் சிறப்பான முன்னோடியாக அமைந்துள்ளது.

நல்லவை தீயவை யுணர்ந்து முறையாக மக்கள் அறநெறிகளையும் நற்பண்புகளையும் பழக்க வழக்கங்களையும் ஒழுக்கக் கட்டுப்பாடுகளையும் கொண்டிருப்பின், அதுவே தெய்வநல மாட்சிக்குரியது என்பது நூலாசிரியரின் கருத்து. எனவே தாம் பாடும் அறப்பளீசுர சதகத்தில் உயர் பிறப்பு, இல்லாளின் சிறப்பு, நன்மக்கட்பிறப்பு, உடன் பிறப்பு, நல்லாசிரியரியல், நன்மாணாக்கரியல், பொருள் செயல் வகை என்னும் பொருளமைப்பில் தொடங்கித் திருமகள் இருப்பிடம், கற்பு மேம்பாடு, நற்சார்பு முதலியவற்றையும், நால்வருணத்தாரியல்புகளையும், முப்பத்திரண்டு அறங்களையும், தத்துவத்திரயம் என்னும் முப்பொருளுண்மைகளையும், புராணங்களையும், திருமாலவதாரங்களையும், சிவமூர்த்தியின் பெருமையையும் குறிப்பிட்டுள்ளார். இவை மட்டுமன்றிச் சகுன பலன், முழுக்கு நாள், புத்தாடையணியும் நாள், மனைகால் கொள்ளுதற்குரிய திங்கள், மாணிக்க இலக்கணம், மழைநாள்

குறிப்பு, வறுமையின் கொடுமை முதலிய செய்திகளையும் இந்நூலில் எடுத்துக் காட்டியுள்ளார்.

பெரும்பாலும் நீதிகளைத் தொகுத்துக் கூறும் நூலாக இது கருதப்படினும் இதன்கண் ஆர்வமுடன் பயன்கொள்ளும் கவிதை நலமும் செறிந்து காணப் படுகிறது.

உடன்பிறந்தவர்களுக்கு நேர்ந்த வருத்தம், இன்பம், பொருள், புகழ், நிந்தை, பழிப்பு, தவம் முதலியவை தமக்கு நேர்ந்தவை போலக் கொள்ளு தல் வேண்டும் என்னும் நீதி கூறப்படுகிறது. ஐந்து தலைப் பாம்பு தன் வாய்கள் ஐந்தாலும் ஏற்கும் உணவு ஒரே மிடற்றின் வழியே ஒரே வயிற்றுக்குச் செல்வதுபோல உடன்பிறந்தார் ஈட்டும் பொருள் ஒருங்கே பயன்படல் வேண்டுமென்று நூலாசிரியர் கூறுவது சிறப்பாக உள்ளது.

புராணச் செய்திகளும் இடையிடையே கூறப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக மன்மதனை நெற்றிக் கண்ணால் எரித்த சிவன் செயலை 'அழல் விழி கொடெரிசெய்து மதனவேள் தனைவென்ற அண்ணலே' (43) என்னும் குறிப்பினைக் கூறலாம். சுந்தரருக்காகப் பரவையாரிடம் தூதுசென்ற சிவன் செயலைக் 'கற்ற நாவலர்க்காகவே தூதுபோம், ஐயனே!' (35) என வருங் குறிப்பு உணர்த்துகிறது.

வடமொழிச் செல்வாக்கு மிகுந்திருந்த காலத்தில் இந்நூல் தோன்றியமையால் வடமொழிச் சொற்கள் பலவற்றைக் காணலாம். இலக்கிய வழக்குச் சொற்களேயல்லாமல் பேச்சு வழக்குச் சொற்களும் இடம் பெற்றுள்ளன. மக்கள் பயின்று பயன் கொள்ளத்தக்க திருக்குறட் கருத்துகள்பல இச்சதகத்தில் இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

செ.வை.

**அறவண அடிகள்** மணிமேகலையில் இடம் பெறும் காப்பியமாந்தருள் ஒருவர். அறநெறிகளைத் தழுவி வாழ்ந்த துறவி என்பதால் அறவண அடிகள் என அழைக்கப் பெற்றார். "அல்லவை கடிந்த அறவண அடிகள்" (மணிமேகலை 28-236) என்றும், "அறந்திகழ் நாவின் அறவணன்" (மணிமேகலை 29-2) என்றும் வரும் மணிமேகலை அடிகள் இதனை உணர்த்தும்.

காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்த பௌத்த விகாரத்தில் வாழ்ந்த பெருந்துறவி இவர். எனவே, இவரை 'மாதவர்' என்று அவ்விலக்கியம் போற்றும். இவர் வயதில் மிக முதியவர்; நாவாற்றலில் மிக்க திறன் பெற்றிருந்தவர். 'நரை முதிர் யாக்கை; நடுங்கா நாவின் உரை மூதாசான்' என்று மணிமேகலை இவரைப் புகழ்ந்துரைக்கிறது (அறவணர்த் தொழுதகாதை 3-4).

கொலை, களவு, காமவிழைவு என்ற உடல்வழித் தோன்றும் மூன்று பாவங்களையும், பொய்கூறல், புறங்கூறல், கடுஞ்சொற் கூறுதல், பயனில் சொற் பாராட்டுதல் ஆகிய சொல் வழித்தோன்றும் நான்கு பாவங்களையும், அவா, சினம், ஆகாக்காட்சி ஆகிய மனவழிப்பட்ட மூன்று பாவங்களையும் அறவே அகற்றி வாழ்ந்தவர் இவர். எனவே, 'மறவணம் நீத்த மாசறு கேள்வி அறவண அடிகள்' எனப் புகழப் பட்டார் (மணிமேகலை 2:60-61).

சிலப்பதிகார மாதவி, மணிமேகலை வாழ்வோடு, அறவண அடிகளின் வாழ்வும் ஒருங்கே இணைக்கப்பட்டுக் கூலவாணிகன் சாத்தனாரால் குறிக்கப்படுவதால், அறவண அடிகளின் காலம், சிலப்பதிகார, மணிமேகலைக் காப்பியங்களின் காலம் ஆகும். இவர் கி.பி. 3-ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டவர். காவிரிப்பூம்பட்டினம், கடல்கோளால் அழிந்தது. அச்சமயத்துக் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து அகன்று, காஞ்சிபுரத்திற்கு வந்து வாழ்ந்து வந்தார் அறவணர் என்று மணிமேகலை சுட்டுகிறது. எனவே கடைசிக் கடல்கோள் பூம்புகாரை அழித்தபோது வாழ்ந்தவர் இவர். சிலர், வட இந்தியநாலந்தாப் பல்கலைக் கழகத்தில் பணியாற்றிய, காஞ்சிபுரத்துத் தமிழர், அறிஞர் தர்மபாலர், அறவணர் ஆதல் கூடும் என்று கருதுவர்; எனினும் அக்கருத்தை உறுதிப்படுத்தும் வலுவான சான்றுகள் இல்லை.

கோவலன், கொலைப்பட்ட செய்தி கேட்டு, மாமலர் நெடுங்கண் மாதவி, ஆறாத் துயர் உறுகிறாள். தன் அருமை மகள் மணிமேகலையோடு, குழலும் தாமமும் களைந்து புத்தத் துறவியாக, பௌத்தச் சங்கத்தில் சேர்கிறாள் மாதவி. பூம்புகார்ப் புத்த விகார மாதவராக அன்று விளங்கிய அறவண அடிகள் அடிமிசை வீழ்ந்து, மாபெருந் துன்பங் கொண்டு, உளம் மயங்கித் தன் காதலன் உற்ற கடுந்துயரை எடுத்துக் கூறிய மாதவி நல்லாளுக்கு அடைக்கலம் நல்கி ஆறுதல் மொழிகிறார் அறவணர்.

மணிமேகலை, மணிபல்லவத் தீவினின்று, அமுதசுரபியுடன் திரும்பி, அறவண அடிகளை, அவர்தம் உறைவிடத்தில் சந்திக்கிறாள். தன் பழவினை உணர்வுகளை எடுத்துரைக்கிறாள். அறவணர், ஆபுத்திரனின் வரலாற்றையும் அமுதசுரபியின் மாண்பையும் எடுத்துரைக்கிறார். 'உலகில் பசிப்பிணி தீர்த்தல் ஒன்றே தவப்பெரும் நல்லறம்' என்று அறமுரைக்கிறார் (அறவணர்த் தொழுத காதை 118-

119). பின்னர், மணிமேகலை அமுதசுரபியைக் கொண்டு பல அறப்பணிகளை ஆற்றுகிறாள். உதய குமரனால் தொல்லை பல படுகிறாள். இறுதியில் புகாரை விட்டுக் காஞ்சியை அடைந்த அறவணரைக் காணுகிறாள். தவத்திறம் பூண்டு தருமம் கேட்ட மணிமேகலைக்குப் பவத்திறம் அறுந்திட நோற்க வேண்டிய சால்புகளை அறவணர் விரிவாக எடுத்து மொழிகிறார். இப்பகுதியில் புத்த தருமம் மிக விரிவாகத் தெளிவுபட, அறவணரால் எடுத்துக்காட்டப் படுகிறது. க.ப.அ.

**அறவியல்:** மனிதனின் நடத்தை பற்றிய ஆய்வைத் தமக்குரிய பணியாக அமைத்துக் கொண்ட பிரிவுக்கு அறஇயல் (Ethics) என்பது பெயர். மனிதன் என்பவன் மூவகைப் பேரியக்கங்களைத் தன்னுள் அமைத்துக் கொண்டு நடமாடும் தொழிற்சாலையாக விளங்குபவன்.

இச்சை அல்லது விருப்பு என நின்ற பேராற்றல், அறிவை உள்ளீடாகக் கொண்ட சிந்தனை ஆற்றல், செயற்படும் ஆற்றல் ஆகிய மூன்றன் இணைப்பு நிலையமாகவே மனிதன் கருதப்பெறுகிறான். சிந்தனையைச் செம்மைப்படுத்தி, நேர்மையான முறையில் சிந்திக்க வைத்து ஒருவனைப் பண்படுத்தும் துறை அளவையியல். அவ்வாறே, உணர்ச்சியை மிகுவித்து, விரும்பிய ஒன்றை விரைந்து பெறத் துடிக்கும் மனிதனின் உயர் குறிக்கோளை உள்ளிட்ட விருப்பத்திற்கு ஆட்படுத்தி, அவனுடைய விருப்பத்தை முறைப்படுத்தி, அவ்விருப்பம் பற்றிய துறையைச் செம்மைப்படுத்தி, இயக்குகிற மேனிலை அறிவியல் துறையே அழகியல். அறிவு, விருப்பம் ஆகியவற்றைப் பண்பட நிறுத்திய துறைகளைப் போலவே அவனுடைய நடத்தையைச், செம்மை செய்து வளமைப் படுத்தும் துறையே, 'அறவியல்'.

அளவையியல், அழகியல், அறவியல் என்ற மூன்றும் மனித முன்னேற்றத்துக்கெனவே அமைந்த உயர்நிலை அறிவியல் முறைகள் என வகுத்தும் தொகுத்தும் விளக்கியுள்ளார்கள்.

செயற்படுதல் என்ற ஒன்றுதான் எல்லா உயிர்களுக்கும் வாழ்வையும் வளத்தையும் அளிக்கக்கூடியதாக அமைந்த பேரியக்கப் பொதுநிலை. எந்த ஓர் உயிரும் செயற்பாட்டின் மூலந்தான் தன்னுடைய இருப்பினை வெளிப்படுத்திக் காட்ட இயலும். தனி மனிதனின் நடத்தையை முழுமையாக ஆராய்ந்து, இது தவறற்றது, இது தவறானது என்று வரையறை செய்து, விளக்கிக் கூறும் ஆய்வியற் பகுதியாக 'அளவியல்' விளங்குகிறது.

அளவியல் என்பதை ஒருவகைச் செயல்முறை சார்ந்த அறிவியல் எனக் கொள்ளவேண்டும். தனி மனிதன் தன்வாழ்வோடும் சமுக வாழ்வோடும் தன்னை இணைத்துக்கொண்டு வாழும் நிலையில், காலம், இடம், சூழ்நிலை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு, இவை இவை செய்யற்பாலன எனத் தேர்ந்தெடுக்கவும் அல்லாதவற்றை நீக்கவும் தேர்ந்தெடுத்தவற்றைச் செம்மையான முறையில் செயற்படுத்தவும் ஆகிய நிலைகளில் அவன் செயற்படுவதற்கு வேண்டிய செயலறிவைத் தருவதே அறவியல்.

அளவியல் ஒரு மனிதனைச் செயல் அறிவுடையவனாக ஆக்குகிறது. அறவியல் தருவதாய்ச் செயலறம் சார்ந்ததாய் அமைந்த அறிவையே 'அறிவு' என்று கொள்ளும் விளக்கத்தைத் திருவள்ளுவரிடம் காணலாம். நன்மை தீமைகளைப் பாகுபடுத்தி உணர்ந்து, தீமையினை விலக்கி, நன்மைகளைச் செயற்படுத்தி வாழும் நிலையில், நன்மைகளைச் செய்ய வைப்பதே 'அறிவு' என்று திருவள்ளுவர் கூறுகிறார். மனிதன் தன்னை விலங்கிடமிருந்து வேறுபடுத்தி அமைத்துக் கொள்ளக் கூடிய வகையில் தனி நிலை அறிவைப் பெற்றிருக்கிறான். விலங்கிலிருந்து வேறுபடுத்தி நிறுத்தக் கூடிய அறிவு எது என்ற வினாவை எழுப்பினால், அது அறவியல் தந்த செயலறம் சார்ந்த அறிவே என்பது பெறப்படும்.

புகைவண்டி நிலையம் கிழக்கே அமைய, பேருந்து நிலையம் மேற்கே அமைய, இடைநின்ற வீட்டில் வசிக்கிறான் ஒருவன். அவன் புகைவண்டி நிலையத்துக்குப் போகிறேன் என்று சொல்லிவிட்டு, வீட்டுக்கு மேற்கே செல்வானானால் அந்நிலையில் அவன் நடத்தையை 'அறவியல்' தன்னுடைய ஆய்வுப் பொருளாக எடுத்துக் கொள்கிறது. அவன் மேற்கே செல்வது தவறானது என அறவியல் முடிவு செய்கிறது. ஏன் தவறாக அமைகிறது? மேற்கு நோக்கிச் செல்வதே தவறு என்பதன்று. அவன் புகைவண்டி நிலையம் செல்ல வேண்டும் என்ற கொள்கையுடன் புறப்பட்டான். புகைவண்டி நிலையத்தை அடைதல் என்ற அவனுடைய குறிக்கோளின் அடிப்படையில், அவன் மேற்கே சென்ற செயல் தவறானது ஆயிற்று. எனவே, தனிமனித வாழ்வில் அவன் குறிக்கோளுடன் இணைந்து வாழும்வாழ்வுக்கு இன்ன இன்ன செயல் தவறற்றது; இன்ன இன்ன செயல் தவறானது என அவன் அறியவும், அறிந்தவாறே செயற்படுத்தவும் வேண்டிய அறிவை அவனுக்கு வழங்கி வாழவைப்பதே 'அறவியல்'.

'அறமே அறிவு, அறிவே அறம்' எனக் கிரேக்க நாட்டுத் தத்துவ ஞானிகளாகிய சாக்ரட்டீசு, பிளாட்டோ போன்றவர்கள் அளித்த வரையறைகளுக்கேற்ப, மனிதனுக்குச் செயற்பாட்டு அறிவைத்

தந்து, அவனைச் செயலறம் பேணும் அறப்பேரறிஞனாக வாழத் துணை நிற்பது 'அறவியல்' என விளக்கம் கூறுவது மரபு.

தனிமனிதனுடைய நடத்தையை மதிப்பீடு செய்ய முற்படுவதற்கு முன்னால், அவன் ஒரு செயலைத் தவறற்றது என்று தேர்வதற்குரிய அறிவைப் பெற்றிருக்கிறானா என்றும் அறிதல் வேண்டும். அறவியல் முதன்முதலில், தனிமனிதன் செய்யும் செயல்களில் எத்தகைய தகுதியுடைய செயல்களை ஆய்வு செய்யலாம் என்ற வினாவின் அடிப்படையில் சில தகுதிகளை வரையறை செய்து கொள்கிறது. அடிப்படைத் தகுதிகள் இரண்டு. அவை 1. இச்செயல் சரியானது என்று தேர்ந்தெடுப்பதற்குரிய அறிவு முதல் தகுதி. 2. தேர்ந்த பிறகு, அச் செயலைச் செய்து முடிக்கக்கூடிய நிலையில் கட்டற்ற நிலையில் இயங்குவதும் செயலாற்றும் திறமையுடன் இருப்பதும் இரண்டாம் தகுதி.

மனிதன் தன்னுடைய அறிவால் தானே ஆராய்ந்து, நல்லது என்றோ தேவை என்றோ விரும்பி, விரும்பிய அச்செயலைச் செய்தே விடுவது என முடிவு செய்து, முடிவு செய்த அதனைச் செய்து முடிக்கக்கூடிய கட்டற்ற தன்மையும் (சுதந்திரம்) செயலாற்றும் திறமையும் உடையவனாக இருந்து செய்கிற செயல்களே அறவியல் ஆய்வுக்குரிய செயல்களாம்.

எல்லா அடிப்படைகளையும் தெரிந்து, தானே விரும்பி ஏற்ற செயலே அறவியல் ஆய்வுக்குரிய செயல் என அமைந்து, எல்லா அடிப்படைகளையும் நன்றாகத் தெளிந்து தேர்ந்து, விருப்புடன் ஏற்றுச் செய்யப்பெறும் நிலையில் அச்செயல், நடத்தை (Conduct) எனப்பெறும். விருப்பாய் ஏற்ற செயலை முதலில் மிக்க விழிப்போடு செய்யவேண்டும். நாளடைவில் அது பழக்கம் என மாறும்போது, மனிதனின் உந்துதல் இல்லாமல் செயல் நடைபெறும். இதுவே பழக்கம். இங்கே மனமானது அறப்பண்பாகவே தன்னை அமைத்துக்கொண்டு, தன்னை இழந்துவிடுகிறது. இந்நிலையில் நினைந்து செய்வதோ முயன்று செய்வதோ தேவையில்லை என்ற பக்குவம்அமைய,அவனது அகநிலைஅறப்பண்பாகவே இருக்கும். அகநிலையில் நின்ற அறப்பண்பின் புறநிலயாகச் செயல் நடைபெறும். அகநிலை அறப்பண்பை (Character) நடத்தையின் அகநிலை அமைப்பு எனவும், அகநிலை அறப்பண்பின் வெளிப்புறச் செயலை நடத்தை (Conduct) எனவும் அறவியல் வரையறை செய்கிறது.

எனவே, தனிமனிதனுக்கு அறஞ்சார்ந்த செயல் இது எனத் தேர்தற்குரிய அறிவும், செய்து முடிக்கக் கூடிய கட்டற்ற நிலையும் அளிக்கப் பெற்றிருக்கின்றன. அத்தகைய அடிப்படையில் அறிவால் தேர்ந்து தவறற்ற செயல் இது என அறிந்தானாயினும், அதனைச் செயற்படுத்தக் கூடிய உரிமையும் செயல் திறமும் பெற்றிருக்கிறானா என்றும் ஆராய்வது அறவியல். அத்தகைய அடிப்படைத் தகுதிகள் பெற்றிராத வகையில், அவன் செயலை மதிப்பீடு செய்வதற்கு அறவியல் அனுமதி அளிப்பதில்லை.

அறவாழ்வே மனிதவாழ்வு என்றாலும் அறவாழ்வானது மூவகைப் படிநிலை வளர்ச்சிகளில் வளர்ந்து, இந்நிலையை அடைந்திருக்கிறது என்று அறவியல் அறிஞர்கள் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

1. அறஇயல் தந்த செயலறிவு இல்லாத நிலையில் காட்டுமிராண்டி என வாழ்ந்தாலும் மரபொழுக்கம், குலவழக்கம், என்பனவாகச் சில செயல் முறைகளை ஏற்றுக்கொள்வதும், ஏற்காவிட்டால் தண்டனை உண்டு என்ற நிலையில் மேற்கொண்டு நடப்பதும் ஆகிய ஒருவகைச் சமூக வாழ்வியல் நிலை முதற்படியாக அமைகிறது. இந்நிலையில் அறக்கூறுகள், அறச்செயல்கள் வாழ்வியலாக அமைந்தாலும் அவையெல்லாம் புறக்கட்டுப்பாடுகளின் அடிப்படையிலேயே பெரிதும் மேற்கொள்ளப் பெறுகின்றன. இம்முதற்படியில், இயல்பூக்க நிலையிலேயே அறச்செயல்கள் பல நடைபெறுகின்றன.

2. சமூகம், தனிமனிதனைத் தன்னுள் கட்டுப்படுத்தி நிற்க வைத்து, சமூக அடிப்படையில் அறச் செயல்களைச் சட்டங்களாக அமைத்து நடைமுறைப்படுத்தியது. விருப்பம் இருக்கிறதோ இல்லையோ, சமூகச் சட்டதிட்டங்கள் பின்பற்றப் பெற வேண்டும் என்பதே விதி. தனிமனிதன் அறம் என்பது பற்றிய சிந்தனையை வளர்த்துக் கொள்ளவும், சமூகம் கட்டாயப்படுத்திச் செய்ய வைக்கும் இன்ன இன்ன செயல்கள் அறமாகா என்று தேர்ந்து தெளியவும் உரிய வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்ததே இந்த இரண்டாம் நிலைதான். இது தனிமனிதன் பெற்ற பேறு.

3. தனிமனிதனின் மனச்சான்று, முதன்மைப்படுத்தப்பெறுகிறது. தனிமனிதன் இது அறம், இது அறமல்லாதது என உணர்ந்து தெளியும் மனச்சான்றுடன் இணைந்த செயலறஞ் சார்ந்த அறிவைப் பெற்றுச் சிறக்கும் பேற்றைப் பெற்றுவிடுகிறான். ஆதிக்க நிலை அவனைப் பொறுத்தவரையில் செயலிழந்துவிடுகிறது. சமூகத் தாக்கத்தைத் தகர்த்தெறியும் மனவலிமையும் தன்னுரிமை நிலையில் அறச் செயலைத் தேர்ந்து செய்யும் செயல் திறமும் அவனுக்கு உண்டாகி விடுகின்றன.

அறவியலின் இக்காலப்பணி: போர் முதலியவற்றாலும் அறிவியல் கண்டுபிடிப்புகளாலும் தொழிற்

கூட வளர்ச்சிகளாலும் அறவியற் கொள்கைகள் பல வற்றை மீளவும் மறு ஆய்வு செய்ய வேண்டிய நிலை அமைந்துள்ளது. அறப்பயிற்சி நிறுவனங்கள் எனப் பெறும் குடும்பம், கல்விக்கூடம், சமய நிறுவனங்கள், சமூக நிறுவனங்கள் ஆகியவற்றின் செயல் முறை களை மறு ஆய்வு செய்யும் பணியை இக்காலத்து அறவியல் மேற்கொண்டுள்ளது.

அறவியலில் இன்று தொழின்மை அறங்கள் **(Professional Ethics)** என்ற புதிய பிரிவு மிகவும் பெருகி வளர்ந்துள்ளது. மருத்துவர்கள், வழக்கறிஞர் கள், ஆசிரியர்கள் என்று இவ்வாறான தொழில் செய்பவர்கள் தத்தம் தொழின்மை அறம் இன்னது என வரையறை செய்தமைக்கத் தொடங்கியுள் ளார்கள்.

உலக அரங்கில் அறவியற் சான்றோர்கள் அற வியற் குறிக்கோட் கொள்கைகள் பலவற்றை வகுத் துக் கொடுத்துள்ளார்கள். அறவியற் குறிக்கோட் கொள்கைகள் பலவற்றை வகுப்பதற்கு மனச்சான்று **(Conscience)** என்ற ஒன்றே அடிப்படை நிலையில் நின்று பணி செய்துள்ளது என்பதை அறியலாம்.

உள்ளுணர்வுக் கொள்கை: 'மனச்சான்று' என்ற ஒன்று அறக்கொள்கையை வரையறை செய்கிறது என்று கூறுகிற எல்லாரும் 'மனச்சான்று' என் றால் என்ன, அது எவ்வாறு செயற்படுகிறது என்ப வற்றை விளக்க முடியாத நிலையில் உள்ளனர். இதன் வளர்ச்சியாக வருவதே ஆய்வறிவுடன் இணைந்து நின்ற உள்ளுணர்வுக் கொள்கை.

அறிவு நெறி என்னும் அறவியல் குறிக்கோட் கொள்கை: உலகளாவிய பொதுமை விதிகள் இன்றும் இயங்குகின்றன. அவை பகுத்தறிவினால் ஆய்ந்து தெளியக் கூடியவையே. அறநெறி என்பது தன்னலம் கருதாத நிலையில் பொதுமை நலம் அமைந்ததாக இருப்பது. அறிவாராய்ச்சி நிலையில் நின்றால் பொதுமை அறம் தெரியும். தன்னலம் இடங்கொண் டால், அறிவு அழிய, உணர்ச்சி பெருகும். எனவே, அறநெறி என்பது உணர்ச்சி வயப்பட்டவர்களால் அறியவோ அடையவோ முடியாத ஒன்று என இக் கொள்கை,விளக்கம் செய்தது. செருமானிய நாட்டுக் காண்ட்டு **(Kant)** என்ற தத்துவப் பேராசிரியர் இக்கொள்கையை விரிவாக விளக்கியுள்ளார்.

இன்பியற் கொள்கை: இது பலவகைப் படிநிலை களில் வளர்ந்து, பயன்முதற்கொள்கை என நின் றது. மிகப்பெரும்பாலானவர்களுக்குக் கிடைக்கப் பெறும் மிகப்பெரிய இன்பம் தரும் செயலைச் செய்தலே அறவியற் குறிக்கோள் என விளக்கி னார்கள்.

உயிரியற் படிநிலை வளர்ச்சியியலான இன்பியற் கொள்கை: பரிணாம வளர்ச்சியை ஏற்று விளக்கிய அறிவியல் அறிஞர்கள், படிமுறை வளர்ச்சி நிலை யில், புறமும் அகமும் இணைய நிற்கும் வகையில் அமையும் செயல்களே அறவியற் குறிக்கோட் கொள்கைச் செயல்கள் என அமைத்துக் காட்டி னார்கள்.

இந்து அற இயற் கொள்கை: இந்திய நாட்டில், மனிதன் அடைய வேண்டிய குறிக்கோள் நான்கு என்றும், அவை அறம், பொருள், இன்பம் என மூன்றாக முதலில் நின்று, பின்னர் அவற்றைக் கடந்த விடுதலை நிலை ஒன்று அமைகிறது என்றும் விளக்கம் அமைக்கப் பெறுவதைக் காணலாம்.

மனிதன் தன்னுடைய வாழ்வை முழுமையாக நோக்கிக் கண்டு, தனக்கு ஏற்ற குறிக்கோள் இன் னது எனத் தேர்ந்து, அதற்கு இணைவதாகிய அறச் செயல்களை அமைத்துக் கொள்ளும் அறவியற் கோட்பாடு மாறிவிட்டது.

இதைச் செய்க, இதைச் செய்யற்க எனத் தனித்தனிச் செயலறங்களை எடுத்துக் கூறும் நூல் கள் பெருகின. பகுத்தறிவு வளர்ச்சியும் தற்சுதந்திர மும், செயல் திறமும் உண்டா என்பதே கேள்விக் குறியாக அமைந்து விட்டது. மேலும், முன்வினைக் கொள்கை, இப்பிறவியில் ஒருவன் என்ன என்ன செய்ய வேண்டும் என்பன எல்லாம் முன்னமேயே முடிவு செய்யப் பெற்றுவிட்டன என்று கூறுகிறது. இது அறவியலில் முழுமையான ஆதிக்கம் செலுத்தும் வலிமையடைந்துள்ளது. இவ்வடிப்படையில், சமூகக் கட்டுப்பாடுகளுடன் இணைந்த விதிகள், அறக்கோட் பாடுகளாக வெளிப்படுத்தப்பெற்றன. இவ்வகையில் வருண அறச்செயல்கள், ஆச்சிரம அறச்செயல்கள், சாமானிய அறச்செயல்கள் என்ற மூவகை அறச் செயல்களை வகுத்துக்காட்டி விளக்கும் நூல்கள் எழுந்தன.

வருணம், ஆசிரமம் என்ற வேறுபாடுகளைக் கடந்து அனைவருக்கும் தேவையாக அடிப்படை அறங்கள் எனச் சில அறங்கள் விதிக்கப்பெற்றன. அவை அடக்கம், அன்பு, கொல்லாமை, வாய்மை, பிறருக்குத் துன்பம் செய்யாமை முதலியன.

தமிழகத்தில் அறவியற் கொள்கை: உலக அரங் கில் அறவியற் கொள்கையாளர்கள் அறத்தையும் அறஇயற் கொள்கையையும் சிந்தித்துத் தெளிந்த முறை வேறு, தமிழகத்தில் திருவள்ளுவர் சிந்தித்து வகுத்துக் கொடுத்தமுறை வேறு.

அறம், ஒழுக்கம் போன்ற சொற்களின் தோற் றம், பொருள் நிலை, வழங்கப்பெறும் முறை ஆகிய

வற்றைத் தெளிய ஆராய்வோமானால் தமிழர்களின் அறக்கொள்கையின் தொன்மை தெரியவரும்.

தொல்காப்பியத்தில் நிலப்பிரிவைக் கூறத் தொடங்கும்போது 'திணை' என்ற சொல்லால் நிலப்பிரிவு குறிக்கப் பெறுகிறது. இடமும் காலமும் இணைந்து இயங்கத் தொடங்கிய நிலையில், தனித்துக் கிடந்த நிலம், கருப்பொருள்களை உண்டாக்கும் 'ஒழுக்கம்' உடைய நிலம், உலகம் என்ற வளர்ச்சியைப் பெறுகிறது. இன்ன நிலத்தில், இன்ன காலத்தின் துணையினால், இங்குள்ள மக்கள், இத்தகைய மனநிலையுடன் இணைந்த செயல்களை இயல்பாகவே செய்வார்கள் என நிலத்தையும் நிலத்தோடு வரையறைபெற்ற செயலையும் (அறச் செயலை) இணைத்து 'உரிப்பொருள்' என்ற தலைப்பில் எடுத்து விளக்குகிறது தொல்காப்பியம். உரிப் பொருள் என்பது அவ்வந்நிலத்து மக்களின் ஒழுக்கத்தை வரையறை செய்து உரிமையாக்கப் பெற்ற பொருள் என்ற அடிப்படையில் அமைக்கப் பெற்றுள்ளது.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நான்கு நிலப் பெயர்கள் ஒழுக்கத்தின் அடிப்படையில் அவ்வந்நிலத்து மக்கள் முதலிய கருப்பொருள்களின் வரையறை பெற்ற செயல் அடிப்படையில் 'திணை' என்ற சொல்லோடு இணைத்து வழங்கப்பெறுகின்றன. நால்வகை நிலங்களுக்கு, நால்வகை ஒழுக்கங்களின் அடிப்படையில் பெயர்கள் அமைகின்றன. ஆயினும் நிலமே இல்லாத பாலை, ஒரு பொதுமை தழுவிய, நடுவண் நிற்கும் பெருமையுடைய, நால்வகை நிலத்து ஒழுக்கங்களையும், அவ்வந் நிலைகளில் நிலைநிறுத்தும் ஆற்றல் வாய்ந்த பேரொழுக்கமாக அமைகிறது.

மக்கள் வாழ்க்கையின் உயர் உறுதிப் பொருள் என அறமும் பொருளும் இன்பமும் கொள்ளப் பெற்றன. இம்மூன்றனுள்ளும் பொருளும், இன்பமும் அறத்தின் வழியில் இயங்குவன என்ற கருத்தைச் "சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும் அறத்துவழிப் படூஉம் தோற்றம்போல" என்ற புறநானூற்றுத் தொடர் விளக்குவதைக் காணலாம். இதனைத் திருவள்ளுவரும் 'அறன் வலியுறுத்தல்' என்று தலைப்பை அமைப்பதன் மூலம் சுட்டுகிறார்.

அறத்தின் அடிப்படையிலேயே அகவொழுக்கமும் புறவொழுக்கமும் அமைகின்றன என்பதையும், அகம் புறம் என்ற இரண்டும் ஒத்த நிலையில் இயங்குவன என்பதையும், அகம் புறம் என்ற இரண்டையும் ஒன்றி நின்று இயக்கும் அறம், அவ்விரண்டின் எல்லையைக்கடந்தும், உயர்ந்தும் விளங்கும் தன்மையுடையது என்பதையும், 'ஒன்றே வேறே என்றிரு பால்வயின் ஒன்றி உயர்ந்தபாலது ஆணை' என்று தொல்காப்பியம் வரையறை செய்கிறது.

அறம் என்பது பிற்பயன் நோக்கிச் செய்யப் பெறுவது அன்று என்று கூறுகிற புறநானூறு, "சான்றோர் சென்ற நெறி" என்ற வகையிலேயே அறநெறிகள் பின்பற்றப் பெற்றன என்று கூறுகிறது. மக்களின் வாழ்வியற் பொருளாக விரிந்து கிடந்த அறநெறிகளை இணைத்து ஒருவகை வாழ்வியற் கொள்கை என வகுத்தும் தொகுத்தும் தந்தவகையில் திருவள்ளுவப் பேராசான், அறம் பாடிய ஆசான் எனப்பெற்றார்.

அறக்கொள்கைகளை முழுமையாகப் பேணி நின்று, வாழ்ந்து மறைந்தவர்கள் 'சான்றோர்' எனப் பெற்றனர். அறத்தின் முழுமை 'சால்பு' எனப் பெற்று, 'சால்பு' என்பதைத் தம்மகத்தே நிறுத்தி, அதனை ஆளும் தகுதி பெற்றவர்கள் 'சான்றோர்' எனப்பெற்றனர். இக்கருத்தைத் திருக்குறட் 'சான்றாண்மை'யிற் காணலாம். சான்றாண்மையுடன், 'நீத்தார் பெருமை' என்ற தலைப்பில் திருவள்ளுவர் அமைத்துக்காட்டும் செய்திகளையும் இணைத்துக் காணுதல் வேண்டும். நெடுநுகத்துப் பகல்போல, நடுவு நின்ற நன்னெஞ்சினோர்' என்ற இலக்கியத்தை மூலமாகக் கொண்டு, திருவள்ளுவர் காட்டும் 'நடுவு நிலைமை' எத்தகைய அறம் என்பதைக் காணவேண்டும். 'நடுவுநிலைமை' என்பதற்கு இருமை வகை தெரிந்து, அதன் அடிப்படையில் அமைக்கப்பெறும் அறமே நடுநிலை அறம் எனக் கொண்டார் திருவள்ளுவர் என்பதை 'நீத்தார் பெருமையில்' அறியலாம். நடுவுநின்றோரை ஒழுக்கத்து நீத்தார் என அறிமுகம் செய்து, பின்னர் 'நீத்தார்' என்ற சொல்லாலேயே அமைத்துக் காட்டுகிறார். 'நீத்தார்' என்பவர்களைத் துறவற இயலிற் காட்டப் பெறும் துறவு என்ற அறநெறியைக் கடைப்பிடித்து ஒழுகுபவர்கள் என்ற அளவில் மட்டுமே, கருத்து விளக்கம் அமைத்துக்காட்டுவதும் உண்டு. திட்பமும், நுட்பமும் உடைதாய் நின்ற 'நீத்தார்' என்ற சொல்லே 'தமிழகத்தின் அறவியல்' சார்ந்த அனைத்து வினாக்களுக்கும் விடை அளிக்கக்கூடிய ஒரு மொழியாய், நிறைமொழி மாந்தரின் ஆணைக்கிணங்க மறைமொழியாய் நின்று விளக்கம் தரும். அச்சொல்லின் அரும்பொருள் விளக்கமே தமிழகத்துச் சான்றோர்களின் வாழ்வியல் அறம்.

'அறஇயல்' என்ற ஒரு தனித்துறை சார்ந்த பல்வேறு முடிவுகளையும் தமிழகச் சான்றோர் வாழ்க்கையையும் இலக்கியமாக அமைத்துக் கொண்டு, அறவியல் கொள்கை விளக்க நூலாக அமைந்திருப்பது திருக்குறள் ஒன்றே. திருக்குறளை ஒட்டி வருகிற, பதினெண் கீழ்க்கணக்கில் காட்டப்

பெற்ற நூல்கள் நீதிநூல்கள் எனப்படும். இதைச் செய்க, இதைச் செய்யற்க என்ற அடிப்படையில் மனித வாழ்க்கைக்கு வேண்டிய மேல்வரிச் சட்டங் களை அமைத்துக் கூறுபவை. உடலுக்கு உய்தி தரும் மருந்தைப் போல, உயிருக்கு உய்தி தரும் அறங்கள் அல்லது அறநெறிகள் என ஒருவகை அடிப்படை விளக்கம் தந்து, அவ்வகையில், மூன்று, நான்கு, ஐந்து என்ற எண்களின் அடிப்படையில் நீதிகளைக் கோவையாக்கிக் கூறும் நீதிநூல்கள், அறநூல் எனப் பெறும் இவற்றைத் திருக்குறளை அடியொற்றி எழுந்த நூல்களாகக் கொள்ளல் வேண்டும்.

நீதிகள், நடைமுறைப்படுத்த வேண்டிய மேல் வரிச் சட்டங்கள், காலத்தால் பழைமையும் வாழ்ந்து சிறந்த அனுபவப் பயிற்சி முறையால் அறிவின் நிறை யூற்று எனத்தகும் முதுமையும் கொண்டு சிறக்கும் மொழிகளாயின. அவ்வகையில் அறச்சட்டங்களே, நீதி வாக்கியங்களே பழமொழி எனவும் முதுமொழி எனவும் அமைந்து சிறந்தன. அவற்றை எடுத்து விளக்கும் தனி நூல்களும், பழமொழி, முதுமொழி என்ற பெயர்களோடு தோன்றி வழங்குவன வாயின.

வை.இர.

**அறவியல் வரலாறு:** வாழ்க்கையின் நோக்கமாக நன்மை என்னும் உயர்நிலையை விதித் தும், மனிதனின் இப்போதைய நடத்தையை அவ் வுயர் குறிக்கோளுடன் ஒப்பிட்டு அது எந்த அள விற்குச் சரியானது அல்லது தவறானது என்று அறத் தீர்ப்பு வழங்கியும், அவ்வுயர் குறிக்கோளை அடைய நடத்தை எவ்வாறு அமைய வேண்டும் என்று விளக்கி யும் கூறுகின்ற ஓர் உயர்நிலை அறிவியலே அறவிய லாகும்.

மனிதன் விரும்பிச் செய்யும் இயக்கு செயல் களுள் பரிசினைக் கருதியோ தண்டனைக்கு அஞ்சி யோ கட்டாயத்தின் பேரிலோ செய்யப்படும் செயல் கள், அற வரம்பிற்குள் வாரா. அறிவின் துணைக் கொண்டு தானே விரும்பிச் செய்யும் செயல்களும் பழக்கத்தின் காரணமாகச் செய்யப்படும் செயல் களும் அறச்செயல்களாகும். அறச்செயல்கள் மனி தன் செய்ய வேண்டிய கட்டமைகள் எனப்படும்.

மனிதனின் அற உணர்வு, மனித வரலாறு தோன்றிய காலத்திலேயே தொடங்கியதாகும். அற உணர்வு மனிதரிடத்தில் தன் உணர்வு போன்றே இயல்பாக அமைந்த ஒன்று. ஆனால் அவ்வற உணர்வு, இன்றைய பக்குவ நிலையை அடையுமுன் மூன்று நிலைகளைக் கடந்துள்ளது. அவையாவன: 1. இயல்பூக்க நிலை, 2. மரபொழுக்க நிலை, 3. மனச்சான்று நிலை.

இயல்பூக்க நிலை: தொடக்கக்கால மனிதனிடத் தில் இன்று நாம் காணும் அறஉணர்வுகள் இல்லை யாயினும் கூடிவாழும் தன்மை, இரக்கம், பார்த்து நடத்தல் போன்ற அறக்கூறுகள் காணப்பட்டன. அவை இயற்கை விருப்பத்தின் தூண்டல்களாகவும் புறக்கட்டுப்பாட்டின் விளைவுகளாகவும் இருந்தன. பகுத்தறிவினால் ஏற்பட்ட நன்னெறி வாழ்வின் பண்பு களல்ல அவை. ஆனாலும் அவ்வறக் கூறுகள் பழங் கால மனிதனிடத்தில் தோன்றியிராவிடில் அவன் விலங்கு நிலையிலேயே இருந்திருப்பான். எனவே மனித இனத்தின் சிறந்த பண்பான அறம், அதன் மூலத்தன்மையில் மனித வரலாற்றின் முதல் நிலை யிலேயே அமைந்திருந்தது எனலாம். இயல்பூக்க நிலையில் அறவுணர்வு, கட்டுப்பாட்டின்கீழ் அமைந்த அறக்கூறாகவே இருந்தது.

மரபொழுக்க நிலை: மரபொழுக்க நிலையில் சமுதாயத்தின் மரபுகளே, தனிமனிதனின் நடத்தை யைக் கட்டுப்படுத்தி வந்தன. சமூக மரபுகளுக்கு அஞ்சி அவற்றின் கட்டாயத்தினால் தூண்டப்பட்டுப் பொதுநலக் குறிக்கோளுக்காக வாழ்க்கை நடை பெற்றது. சமூக மரபுகள், பின்னர் விதிகளாகவும் வாழ்க்கைக்கு வழிகாட்டும் நூல்களாகவும் மாற்றி அமைக்கப்பட்டன. இந்நிலையில் அறத்தின் பிறப் பிடம் சமூகமாகவும் சமுதாய நன்மையே மரபு களுக்கு அடிப்படையாகவும் அமைந்தன. மரபுகளை முதியோரும், இன சமயத் தலைவர்களும் பாதுகாத்த னர். அறவுணர்வு, நல்லது, கெட்டது என்று முடிவு செய்தற்குரிய ஒரு அளவு கோலைப் பெற்றது. அறி வும் சமுதாய மனப்பான்மையும் தெளிவாக இருப்பி னும், மரபுகள் முழுமையான அறிவுடன் ஏற்படுத்தப் பட்டவை என்று சொல்வதற்கில்லை. மனிதன் மரபு களுக்குக் கீழ்ப்படிய வேண்டியிருந்தது. தன் விருப்ப மான செயற்பாடுகள் அனுமதிக்கப்படவில்லை. எனவே மரபொழுக்க நிலையும் முழுமையான அற உணர்வு அன்று.

மனச்சான்று நிலை: மனச்சான்று நிலையில் அறவாழ்க்கை, சமுதாயத்தின் மரபுப் பிடியிலிருந்து விடுபட்டுத் தனிமனிதனின் மனச்சான்றே நன்மை, தீமை ஆகியவற்றைத் தேர்வதற்குரிய அளவு கோலாக ஆயிற்று. ஒருவன், 'இது சரியான செயல்; இதனால், அனைவரும் பயனடையக்கூடும்; ஆதலால் இதனைச் செய்ய நான் கடமைப்பட்டவன்' என்ற அறிவோடும் முழு மனத்தோடும் முடிவு செய்து செயற்படும் நிலை மனச்சான்று நிலையாகும். மனச் சான்று நிலை அற உணர்வு வளர்ச்சியின் இறுதி நிலை ஆகும்.

அற உணர்வு வளர்ச்சியினால் அறிவின் துணைக் கொண்டு தன் விருப்பப்படி வாழ்க்கையின் குறிக் கோளை முடிவு செய்ய முடிந்தது. மேலும் சமூகத் திற்குப் பயன் தரும் செயல்களைத் தேர்ந்து

அவற்றைத் தன்னலமின்றிச் செய்யும் எண்ணம் தோன்றியது. தவிரவும் ஒருவன் செய்யும் அறச் செயல் மேன்மையான சமூகத்தைத் தோற்றுவிக்கும் என்பதையும், அச்சிறந்த சமுதாய அமைப்பில் தனி மனித முன்னேற்றமும் அடங்கியிருக்கும் என்பதையும் உணர முடிந்தது.

மேலைநாட்டு அறவியல்: அறவுணர்வு வளர்ச்சி படிமுறை வளர்ச்சிக் (Evolution) கோட்பாட்டிற்கு உட்பட்டதாகும். அத்தகைய அற உணர்வு வளர்ச்சி முறைக்கு யூத கிரேக்க உரோமானியர்களின் அற உணர்வு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது. இம்மக்களின் தொடக்கக் கால வரலாற்றில் அறக்கூறுகள் விளங்கியமையையும், பின்னர் அற உணர்வு மரபுகள், சடங்குகள், விதிகள், இறைக்கட்டளைகள் முதலியவற்றால் அவை வளர்க்கப்பட்ட நிலையினையும், இறுதியில் சாக்ரட்டீசு, அரிசுடாட்டில் பிளாட்டோ போன்றவர்களால் அறிவு, தன்னியல்பாக முடிவு செய்தல், ஏற்புடைய சூழல், சிறந்த அரசியல் திட்டம், நற்பழக்கம், உறுதியான மன இயல்பு ஆகியன அற உணர்வுக்கு அடிப்படைகளாக அமைக்கப்பட்ட நிலையினையும் காணலாம். உரோமானியர்கள் அரசியல், உள்ளாட்சி அமைப்புகள், பொருளியல், சமுதாயம் ஆகிய அனைத்துத் துறைகளுக்கும் உரிய அற விதிகளையும் அவை அடங்கிய அறநூல்களையும் இயற்றினர். அவை உலக மக்கள் அனைவருக்கும் ஏற்றதாக இன்றும் உள்ளன.

அற உணர்வு வளர்ச்சியின் நிலைகளில் அறத்தின் அளவு கோல்களாகப் பல குறிக்கோள்கள் அவ்வப்போது ஏற்கப்பட்டு வந்துள்ளன. அவை உள்ளுணர்வு, இன்பம், பரிணாமம், விதி, நிறைவு, பயன் என்பனவாம். அவை, ஒவ்வொரு நிலையில் அறத்தை முடிவு செய்யும் அளவுகோல்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

உள்ளுணர்வு மனச்சான்று எனவும் அக உணர்வு எனவும் கூறப்படுகிறது. உள்ளுணர்வு நன்மை தீமைகளைக் கருத்து வேறுபாட்டிற்கு இடமின்றி மக்களுக்கு அறிவுறுத்தி, அவர்களை நல்வழியில் செலுத்துகிறது. மனச்சான்றின்வழி நடப்பதே அறவழியாகும். கல்வி, சமூகக் கட்டுப் பாடு, நல்லொழுக்கம் முதலியவைகளால் பக்குவப்படுத்தப்பட்ட உண்மையான உள்ளுணர்வே, அறச்செயலின் குறிக்கோளாகும்.

இன்பம் அல்லது மகிழ்வுக் குறிக்கோளின்படி இன்பத்தைத் தரும் செயல்களே அறச்செயல்களாகும். இயற்கை மகிழ்வுக் கொள்கையினர், மக்கள் இன்பம் ஒன்றையே விரும்புவதாகவும். அதுவே அனைத்துச் செயல்களுக்கும் தூண்டுதலாகும் எனவும் கூறுகின்றனர். இக்கொள்கை இயற்கைக்கும் உலகியலுக்கும் பொருந்துவதன்று. அற மகிழ்வுக் கொள்கையின்படி, இன்பம் மட்டுமே வாழ்க்கையின் குறிக்கோள். அதை அடைவதே அறச் செயலாகும். இக்கொள்கை ஒவ்வொருவரும் தம் இன்பத்தை நாடும் தன்னலக் கோட்பாட்டை நோக்கிச் செல்வதால் இக்குறிக்கோளும் சிறந்த அறக் குறிக்கோளாகாது. பயன் முதல் மகிழ்வுக் கொள்கையினர், மிகுதியான மக்களுக்கு மிக்க இன்பம் தரும் செயலே அறமாகும் என்கின்றனர். மேலும் இன்பத்தைக் கணக்கிட்டுப் பலர் உணரக்கூடிய இன்பம் பயப்பதாக அறச்செயல் அமைய வேண்டும் எனவும், மக்கள் துன்பத்தை விட மிக்க இன்பத்தைத் தரவல்ல செயல்களையே செய்ய வேண்டும் எனவும் கூறுகின்றனர். தங்கள் கொள்கைக்குத் துணையாக இயற்கை, அரசு, சமூக, சமய, மனச்சான்று விதிகளைக் குறிப்பிட்டு அவைகளுக்குக் கீழ்ப்படிந்து செய்யப்படும் செயல்களே பிறருக்கு மிக்க இன்பம் அளிக்கும் என்றும் கூறுகின்றனர். இதுவும் அறக் குறிக்கோளாகாது. இன்பத்தை அறக் குறிக்கோளாகக் கொள்பவர் அனைவரும் மனிதனை உணர்வு மட்டுமே உள்ள ஒரு விலங்காகக் கருதுவதால் இக்கொள்கை ஏற்புடையதன்று.

உயிரியலின் கொள்கையான படிமுறை வளர்ச்சிக் கருத்தை மகிழ்வுக் கொள்கையினர், தங்களுக்குத் துணையாகக் கொண்டு, இயற்கையின் நெறிகளைப் பின்பற்றினால் இன்பம் தானே வந்தெய்தும் என்று கூறலாயினர். இக்கொள்கையினர், இயற்கையோடு இயைந்த வாழ்க்கை இயற்கைக்கு முற்றிலும் எதிரானது என்பதை உணரவில்லை. இயற்கை வழியை அடக்கி அறிவினால் உயர்ந்த வாழ்க்கையை நடத்துவதில்தான் அறம் அமைந்துள்ளதே தவிர இயற்கை வழியில் அன்று.

விதியை அறத்தின் குறிக்கோளாகச் சொல்லும் பொழுது அது, அரசு விதியையோ இயற்கை விதியையோ குறிக்காமல் அற விதியையே சுட்டுகிறது. அறவிதி என்பது, பகுத்தறிவினால் தேர்ந்தெடுக்கப்பட்ட செயல்களை அவற்றின் பொருட்டே செய்வதாகும். அவை சார்பற்ற கடப்பாடுகள் எனப்படும். அவை பொதுவான நிலையான கடமைகள். சார்பற்ற கடப்பாடு, பகுத்தறிவு முடிவின்படி நடப்பது ஆகியவற்றைக் குறிப்பிடும். ஆனால் கடமைகளை வரையறுத்துக் கூறும் சக்தி பகுத்தறிவுக்கு உள்ளதா என்பதை நோக்கும்போது பின்வருவனவற்றைக்கருத்தில் கொள்ள வேண்டும் என்று அறவிதிக் கொள்கையாளர் கூறுவர். அவை: 1. அறச்செயல் அனைவரும் முழுமனத்துடன் ஏற்றுச் செய்யக்கூடிய விதியாக இருக்க வேண்டும். 2. பிற மனிதர்களை ஒருவரின் நலத்திற்குக் கருவிகளாகக் கருதாமல் அவர்களது நலன், ஒருவர் மேற்கொள்ளவேண்டிய கடமையாக

அமைதல் வேண்டும். 3. ஒவ்வொரு மனிதனும் உணர்வுடன் கூடிய உயிர் என்பதை உணரவேண்டும். இம் மூன்று சார்பற்ற கட்டப்பாடுகள் அறிவு நிலையை அடிப்படையாகக் கொண்ட அறவிதிகளாதலால், அறச் செயல்களின் குறிக்கோளாகும். இக்கொள்கை பகுத்தறிவை உயர்த்தி, உள்ளுணர்வைப் புறக்கணிக்கிறது. அறச்செயல், உணர்வையும் பகுத்தறிவையும் அடிப்படையாகக் கொண்டது. உணர்வின்றிப் பகுத்தறிவினால் மட்டும் செய்யப்படும் செயல்கள் முழுமையான அறச்செயல்களாகா.

நிறைவு அல்லது ஆன்மிக உணர்வு: மனிதன் பகுத்தறிவையும் சமுதாய உணர்வையும் சிறந்த பண்புகளாகப் பெற்றுள்ளான். அவற்றை வளர்த்துக் குற்றமற்ற சமுதாயத்தை அமைப்பதுதான் அற வாழ்க்கையின் நோக்கம். அப்பண்புகள் வளர வளர மனிதன் தன்னலத்தை உலக நலத்துடன் இணைப்பதைக் கடமையாகக் கொள்வான். அக்கடமையை நன்முறையில் செய்து வருதலே நிறைவு அல்லது ஆன்ம உணர்வு என்னும் குறிக்கோளாகும்.

பயன்: செயல்களின் உள்ளார்ந்த நலன் பயப்பதையே அறச் செயலின் குறிக்கோளாகச் சொல்லலாம். புறப்பயனை விளைவிக்கக் கூடிய செயல் அறச் செயலாகக் கருதப்படுவதில்லை.

இந்து அறவியல்: இந்து சமயத்தின்படி ஒருவனிடம் தோன்றும் செயல் அறச்செயலாக இருக்க வேண்டுமெனில், அச்செயல் முழுமனத்துடன் விரும்பப்பட்டு அதன் விளைவிற்குப் பொறுப்பும் ஏற்றுக் கொள்ள வேண்டியது இன்றியமையாததாகும். மனிதன் தான் விரும்பிய செயலைத் தேர்வதற்கும், செய்வதற்கும் உரிய சுதந்திரம் உடையவனா என்ற வினாவிற்கு இந்து சமயம் வினைக் கோட்பாட்டை விடையாகத் தருகிறது. ஒருவர், தம் விருப்பத்திற்கு மாறாகச் சில நேரங்களில் நடக்க வேண்டி இருப்பதற்குக் காரணம் அவர் முன்னர்ச் செய்த வினையே என்று அக்கோட்பாடு கூறுகிறது.

வினைக் கோட்பாட்டின்படி ஒருவனது இன்றைய நிலைமை அவன் முன்பு செய்த வினைகளின் விளைவு. அதேபோன்று அவன் இப்பொழுது செய்யும் வினைகளே இனிமேல் அவன் அடையப்போகும் நிலையை முடிவுசெய்யும். வினைக்கோட்பாடு மனிதன் தன் விருப்பம் போல் எதையும் செய்யச் சுதந்திரம் அற்றவன் எனச் சுட்டுகிறது. ஒரு செயலைச் செய்வதற்குச் சுதந்திரம் இல்லையெனில் ஒருவன் செய்யும் செயலுக்கு அவன் பொறுப்பாளியாக மாட்டான். ஆனால் பொறுப்புணர்வு அறச்செயலின் அடிப்படையாகும்.

இந்து சமயம், வினை மனிதனுடைய முழுச் சுதந்திரத்தையும் பறித்து விடுவதில்லை; மனிதன் வினையை வெல்லமுடியும் என்று விளக்கம் கூறுகிறது. வினை ஆகாமியம், சஞ்சிதம், பிராரப்தம், என மூவகைப்படும். ஆகாமியம் என்பது நாம் ஈட்டிக் கொண்டிருக்கும் வினை. பிராரப்தம் என்பது இப்பொழுது பயனளித்துக் கொண்டிருக்கும் பழ வினை. சஞ்சிதம் என்பது நுகரப்படாமல் வைக்கப்பட்டிருக்கும் பழைய வினை.

இம்மூவகை வினைகளில் பிராரப்த வினைகளின் மீது மனிதனுக்கு எவ்வகைப் பிடிப்பும் கிடையாது. பிராரப்த வினை அளிக்கும் பயனைத் துய்த்தே தீர்க்க வேண்டும். ஆகாமிய, சஞ்சித வினைகளைச் செய்வதில் மனிதன் முழுச் சுதந்திரம் உடையவன். அவற்றை மீண்டும் பிறப்பையும் ஏனைய பயன்களையும் தரக்கூடிய பிராரப்தமாக மாற்றுவதோ, சஞ்சித அறச்செயல்களாகச் செய்து வீடு பேறு அளிக்க வல்லதாகச் செய்வதோ மனிதனின் சுதந்திரத்திற்கு உட்பட்டதாகும். எனவே பொறுப்புணர்வுடன் கூடிய அறச் செயல்கள் இந்து சமயத்தில் உள்ளன என்று அறியலாம். இந்து சமயம், செயல்களை அறச் செயல், மறச் செயல், அறமும் மறமுமான செயல், அறமும் மறமுமல்லாத செயல் என நால்வகைப்படுத்துகிறது. இவற்றுள் முதல் மூவகைச் செயல்களுமே எனது என்ற உணர்வுகளுடனும், பயனைக் கருதியும் செய்யப்படுவன. இச்செயல்களே வினைகளுக்கு அடிப்படையாகும். நான்காம் வகையான அறமும் மறமுமல்லாத செயல் நான், எனது என்ற உணர்வுகளின்றியும் பயனில் பற்றில்லாமலும் செய்யப்படுவதாகும். இச்செயலைச் செய்வதால் ஆகாமிய வினை ஏற்படுவதில்லை. வினைக் கோட்பாட்டின்படி எச்செயலும் உரிய பயனைத் தராமல் இராது. அதன்படி அறமும் மறமுமல்லாத செயல் அதற்குரிய பயனைத் தருமாயின் அப்பயனை இறைவனுக்கு விட்டுவிடுவதன் மூலம், சஞ்சித வினை இல்லாமற் செய்யலாம். அத்தகு செயல்களைச் செய்பவன் அவனுடைய பிராரப்த வினையின் பயனைத் துய்த்து முடிந்தவுடன் வீடுபேறு பெறுவான். இவற்றிலிருந்து மனிதன் தான் செய்யும் வினைகளினால் கட்டுண்டாலும் அவற்றினின்றும் விடுபடுவதற்குரிய சுதந்திரம் உடையவன் என்பதும் அதனால் அறச்செயல் செய்தற்குரிய பொறுப்புடையவன் என்பதும் தெளிவாகும்.

இந்து சமயம் அறம், பொருள், இன்பம், வீடு என நான்கு உறுதிப் பொருள்களைக் குறிக்கோள்களாக ஏற்றுள்ளது. பொருளும், இன்பமும் அறத்தை நாடவும், அறம் வீடு அளிக்கவும் பயன்படுவன. இக் குறிக்கோள்களை நோக்கிச் செய்யும் செயல்களே அறக்கடமைகளாகும்.

இந்து சமயத்தில் அறக்கடமைகள் வருண அறக் கடமைகள், ஆசிரம அறக்கடமைகள், பொது அறக் கடமைகள் என மூவகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

இந்து சமயம் மனிதரிடத்தில் சத்துவம், இராசதம், தாமசம் என்னும் மூன்று தன்மைகள் இருப்பதாகவும், அத்தன்மைகளுக்கு ஏற்ற செயல்களும் உண்டு எனவும் கருதுகிறது. அத்தன்மைகள், அவற்றின் செயல்கள் ஆகியவற்றின் அடிப்படையில் மக்களை நான்கு பிரிவுகளாக, வருணங்களாக இந்து சமயம் வகுத்துள்ளது. அதன்படி சத்துவத் தன்மை மிகுந்துள்ளவர் பிராமணர் எனவும், இராசதம் மிகுந்து சத்துவம் துணைபுரியும் அமைப்புக் கொண்டவர் சத்திரியர் எனவும், இராசதம் மிகுந்து தாமசம் துணைபுரியும் அமைப்பில் உள்ளோர் வைசியர் எனவும், தாமசம் மிகுந்துள்ளோர் சூத்திரர் எனவும் குறிக்கப்படுகின்றனர். பிராமணர் அறிவை வளர்க்கவும், சத்திரியர் சமூகத்தைப் பாதுகாக்கவும், வைசியர் பொருள் தேடித்தரவும், சூத்திரர் உடல் உழைப்பு நல்கவும் கடமைப்பட்டவர்கள். இவ்வாறு நான்கு வருணங்களும் அவற்றிற்குரிய அறக்கடமைகளும் வருணதருமங்கள் எனப்படுகின்றன. இம்மக்கட் பிரிவு இறுதியானதன்று. ஏதாவது ஒரு பிரிவினைச் சார்ந்த ஒருவர் அப்பிரிவிற்குரிய கடமைகளைச் செய்யாவிடில், அவர் வேறு பிரிவைச் சார்ந்தவராகக் கருதப்படுவார். மக்கள் பிரிவு, தன்மையையும் கடமையையும் அடிப்படையாகக் கொண்டது.

இந்து சமயம், நூறு ஆண்டுகளை முழு வாழ்க்கையாகக் கருத்தில் கொண்டு முதல் இருபத்தைந்து ஆண்டுகள் மாணவ நிலையாகவும் அடுத்த இருபத்தைந்து ஆண்டுகள் இல்வாழ்க்கை நிலையாகவும் அதற்கடுத்த இருபத்தைந்து ஆண்டுகள் காட்டு வாழ்வு நிலையாகவும், இறுதி இருபத்தைந்து ஆண்டுகள் துறவு நிலையாகவும் பிரிக்கிறது. இந் நிலைகளில் மக்கள் ஆற்ற வேண்டிய அறக் கடமைகளை, இந்து சமயம் விவரிக்கிறது. அவை, பொதுக் கடமைகள் அல்லது பொது அறம் எனப்படும். இதில் தூய்மை, அடக்கம், பற்றின்மை, உண்மை போன்றவை அடங்கும். இவ்வாறு இந்து அறவியல், வருண, ஆசிரம, பொது அறம் எனப்படும் அறக்கடமைகளையும் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு குறிக்கோள்களையும் விவரிக்கிறது.

தமிழர் அறவியல்: தமிழர் வாழ்க்கையில் அறப் பண்பு மிகப்பழமையானது. தமிழ் நூல்களில் மிகவும் தொன்மை உடையதான தொல்காப்பியத்தின் புறத்திணை இயலின் வாகைத் திணையிலும் காஞ்சித் திணையிலும் அறத்தாறுகள் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. அற ஒழுக்கங்கள் உள்ளத்தால் விரும்பிக் கடைப்பிடிக்கப்பட வேண்டும் எனவும் அதற்கிடையூறாக உள்ள ஐம்பொறிகளை அடக்கி வெற்றி காண வேண்டும் எனவும் தொல்காப்பியம் கூறுகிறது. அற ஒழுக்கங்கள் இல்லறத்தார்க்கும் துறவறத்தார்க்கும் தனித்தனியே கூறப்பட்டுள்ளன. அடக்கமுடைமை, நடுவு நிலைமை, பிறர் மனை நயவாமை, புறங் கூறாமை, தீவினையச்சம், அழுக்காறாமை, பொறையுடைமை, மூப்பு, பிணி, சாவு இவற்றிற்கு அஞ்சாமை, தம்மைப் பிழைத்தோரைப் பொறுத்தல், அவர்க்குத் துன்பம் வாராமல் காத்தல், எவ்வுயிர்க்குத் துன்பம் நேரிடினும் அதற்காக வருந்துதல், பிற உயிர்த் துன்பத்தை உயிரைக் கொடுத்தும் காத்தல், பொய்யாமை, கள்ளாமை ஆகியவை துறவறத்தார்க்குரிய அற ஒழுக்கங்களாகும். உலகியற் பொருள்கள் வீடுபேற்றைக் கருதுமிடத்து நிலையில்லாதனவாகும். இந்த எண்ணமே மக்களை அறச்செயலில் ஈடுபடுத்தும் என்பன போன்ற அறக் கருத்துகள் தொல்காப்பியத்தில் உணர்த்தப்படுகின்றன.

சங்க நூல்களும் அற ஒழுக்கங்களை ஆங்காங்குத் தெரிவிக்கின்றன. மக்கள் அறநெறி பற்றி நல்லவர்களாக விளங்குமிடமே நல்ல இடம் எனவும், சிறந்த மரபுப் பொருளும் இன்பமும் அறத்தினாலேயே தோன்றும் எனவும், மன்னர் சிறந்த அற ஒழுக்கங்கள் உடையவர் எனவும், எல்லா அறங்களிலும் செய்ந்நன்றி உயர்ந்தது எனவும், அதனைப் போற்றாதவர்க்குக் கழுவாய் இல்லை எனவும், மழை பெய்விக்கவும் மிக்க மழை பெய்யின் அது ஒழியவும் முருகக் கடவுளை வேண்டலாம் எனவும், மகளிர் தம் கற்புடைமையால் செம்மையான நிலையினைத் தோற்றுவிப்பர் எனவும், மற்றும் இவைபோன்ற அறக் கருத்துகள் பலவும் சங்க நூல்களில் மலிந்துள்ளன.

தமிழில் அறங்களைத் தொகுத்து உணர்த்தும் நூல்களாகத் திருக்குறள் முதல் ஆத்திசூடி வரை அளவற்ற நூல்கள் உள்ளன. தமிழ் மறையெனப் போற்றப்படும் திருக்குறளின் முப்பெரும் பிரிவுகளில் முதல் பிரிவு அறம் பற்றியதாகும். திருக்குறள் அறத்தை இல்லறம், துறவறம் என இருவகையாகப் பிரித்து அறவியல் கருத்துகளை நுட்பமாகக் கூறுகிறது.

**அறவியலும் சமயமும்:** இயற்கைக்கு அப்பாற்பட்டு விளங்கும் ஒரு பேருண்மையை நம்புவதுதான் சமயம் ஆகும். இதனை நம்பும் மனிதனிடத்தில் எழும் உணர்வு, அவனை அந்தப் பேருண்மையை நாடிச் செய்யும் செயல்களில் ஈடுபடுத்துகிறது. அச் செயல்களே சமயச் செயல்களாகும். மக்கள் அறநெறிக் கடமைகளைத் தேர்ந்து தெளிவதற்கு முன்பே, சமய நெறிக் கடமைகளை மேற்கொண்டிருந்தனர் என்று வரலாறு தெரிவிக்கிறது. மக்களுக்கு மக்கள் செய்யும் கடமைகள் கூட இறைவனால்

ஆணையிடப் பெற்றனவே என்ற நிலையில் பார்க்கும்போது சமயத்திலிருந்துதான் அறம் பிறந்திருக்க வேண்டும் எனலாம். சமயம் பழைமையைச் சார்ந்தே நிற்பது. சமயத்தில் ஈடுபாட்டுடன் விளங்கும் மனிதன் பொதுவில் அற ஈடுபாட்டுடன் விளங்குவதையும் காணலாம்.

அறம் கீழ்க்காணும் முறைகளில் சமயத்துடன் தொடர்பு கொண்டுள்ளது. 1. அறத்தின் அடிப்படைகளாக விளங்கும் செயல்களின் பொறுப்பு ஏற்கும் ஆன்மாக்களின் இருப்பு, காலத்தின் கட்டுப்பாட்டுத் தன்மை, தீமையின் இருப்பு ஆகியவை சமயம் அளித்த தத்துவங்களாகும். சமயத் தத்துவங்கள் அறவொழுக்கத்தை மேலும் சிறப்பானதாக்குகின்றன. இவை இல்லையெனில் அறச்செயல்கள் எப்பொருளையும் பயனையும் தர இயலா. 2. அறக் கருத்துகளான நன்மை, தீமை, அறப் போராட்டம், பிரபஞ்ச-மனித உறவுக் கருத்துகள் முதலியன பொருளியல் கருத்துகள் போன்றே உண்மையான இயற்கை விதிகளே என்பதைச் சமயம் உறுதிப்படுத்துகிறது. 3. அறத்தில் காணப்படும் உந்தல் அல்லது உணர்வு, சமயப் பேருண்மை எனக் கருதுகிற இயற்கைக்கு அப்பாற்பட்டு விளங்கும் ஆற்றலே ஆகும். சமயமும் அறமும் சமயப் பேராற்றலை நாடுவதையே குறிக்கோளாகக் கொண்டுள்ளன. 4. ஒருவன் தன்னிடத்திலே நம்பிக்கை கொள்வதை வலியுறுத்துவது அறம். அறவொழுக்கத்தின் இந்தக் கட்டுப்பாட்டைச் சமயம், தனி ஒரு பரம்பொருளுக்கு மக்கள் கடமைப்பட்டுள்ளனர்; அதுவே மக்களை அறவொழுக்கத்திற்கு இட்டுச் செல்கிறது என்று பொருத்தமாக விளக்குகிறது. 5. அறத்தின் உன்னத நிலைகளான தெய்விகப் பண்பை அல்லது மாபெரும் மானிடப் பண்புக்குரிய உள்ளார்ந்த மதிப்பைச் சமயம் அளிக்கிறது. அறத்தின் நிறைவு நிலையான ஆன்மிக நிலையைச் சமயம் தெளிவாக்கி அதன் மதிப்பை உயர்த்துகிறது.

சமயமும் அறமும் பின்வரும் முறைகளில் வேறுபட்டு நிற்கின்றன. 1. இறைவனைத் துதித்தல், தவம் செய்தல், கடமைகளைத் தவறாது செய்தல் போன்ற அறத்தை விடக் கூடுதலான கடமைகளைச் சமயம் ஏற்கிறது. ஆனால் அறம், சமுதாயத்தில் வாழும் மனிதனின் நடத்தையைப் பற்றிய கடமையை மட்டுமே ஏற்கிறது. சமயக் கடமைகள், இறைவனுடைய ஆணைகளாகக் கருதப்படுகின்றன. அறக் கடமைகள் அப்படிக் கருதப்படுவதில்லை. 2. அற வழிப்பாட்டில் செல்லும் ஒருவன், தான் செய்யும் கடமைகளுக்குத் தானே பொறுப்பு ஏற்பதையும் அவற்றில் தன் முனைப்பு ஓங்கி நிற்பதையும் காணலாம். சமயக் கடமைகளைச் செய்யும் ஒருவன், தன்னை இறைவனின் கையில் உள்ள கருவியாகக் கருதிச் செயற்படுகிறான். இவ்வேறுபாடு அறம், சமயத்தைச் சார்ந்திருக்கத் தேவை இல்லை என்பதையும் சமயம் ஒரு வகையில் அறத்தைச் சார்ந்திருப்பது தவிர்க்க முடியாது என்பதையும் காட்டுகிறது. 3. சமயம் நடத்தையையும் அறிவையும் குறிக்கிறது. அவ்வறிவைப் பெறுவதற்கே சமயத்தில் கடமைகள் செய்யப்படுகின்றன. ஆனால் அறக் கடமைகள் புரிவதற்கு அறிவு ஒரு கருவியாக மட்டுமே பயன்படுகிறது. சமயத்தில் அறிவு (இறைவனை அறியும் அறிவு) ஒரு முடிவு; அறவொழுக்கத்தில் நற்கடமைகளைத் தேர்தற்கு அறிவு ஒரு வழி. 4. இறைவனை அடிப்படையாகக் கொண்டது சமயம்; மனிதனை அடிப்படையாகக் கொண்டது அறம். இருப்பினும் இறைவனை அறவியலில் ஒரு முற்கோளாகக் கொள்வது பயனுடையது என்று கூறலாம். பி.ஆர்.ந.

***அறிஞர் புறப்பெயர்ச்சி***: தொழில் துறை வல்லுநர்கள் தம் சொந்த நாட்டிலிருந்து, மிகுந்த பொருளீட்டுவதற்காக வேறொரு நாட்டிற்கு இடம் பெயர்வார்களெனில் அது அறிஞர் புறப்பெயர்ச்சி **(Brain-Drain)** ஆகும்.

வளரும் நாடுகளிலிருந்து அமெரிக்கா, கனடா, பிரிட்டன் போன்ற மேனாடுகளுக்கு அறிவியல் அறிஞர்கள், மருத்துவர்கள், பொறியியல் வல்லுநர்கள், பல்துறை விற்பன்னர்கள் ஆகியோர் சென்று குடியேறுவது அண்மைக்கால வழக்கமாகிவிட்டது. அந்நாடுகளில் கிடைக்கும் உயர்ந்த ஊதியம், உயர் வாழ்க்கைத் தரம், ஆராய்ச்சி வசதி போன்றவை எல்லோரையும் ஈர்க்கின்றன. வெளிநாடுகளுக்குச் செல்பவர் பலரும் தொழிற்பயிற்சி பெற்றவர்களாகவும் அறிவியலாளர்களாகவும் இருப்பதனால், இது போன்ற குடிப்பெயர்ச்சி, அறிஞர் புறப்பெயர்ச்சி எனப்படுகிறது. வளரும் நாடுகள் இதனால் பெரும் இழப்பிற்கு ஆளாகின்றன. இப்பெயர்ச்சியைத் தடை செய்யப் பல்வேறு முயற்சிகள் மேற்கொண்ட போதிலும் அவை இதுவரை பலனளிக்கவில்லை.

அறிஞர் புறப்பெயர்ச்சியினால் வளரும் நாடுகளில் குறிப்பிட்ட சில துறைகளில் திறன் வாய்ந்தவர்களின் பற்றாக்குறை ஏற்படுகிறது. ஒரு காலத்தில் தொழில்துறைப் பயிற்சி பெற்றவர்களை இந்நாடுகளுக்கு மேற்கு நாடுகளிலிருந்து பெற வேண்டியிருந்தது. இப்போது இதற்கு நேர்மாறாக வளரும் நாடுகளிலிருந்து தொழில்துறை வல்லுநர்களும் மருத்துவர்களும் மேற்கு நாடுகளுக்குப் பணியாற்றச் செல்கின்றனர். எனவே, இதனைத் "தொழில்

நுணுக்க நேர் எதிர் இடமாற்றம்'' (Reverse Transfer of Technology) என்று பன்னாட்டு வாணிக வளர்ச்சிக் குழு கூறுகிறது. மக்கள் தொகை வல்லுநர்கள், 'அறிஞர் புறப்பெயர்ச்சியை உண்மையில் 'பணப் பெயர்ச்சி' (Money Drain) என்றே சொல்ல வேண்டும் என்று கூறுகின்றனர்.

கடந்த இருபது ஆண்டுகளுக்குள் அறிஞர் புறப்பெயர்ச்சியின் வழித்தடம் மாற்றமடைந்து வந்துள்ளது. முன்பு ஐரோப்பாவிலிருந்து அமெரிக்கா, ஆசுத்திரேலியா, நியூசிலாந்து போன்ற நாடுகளுக்கு அறிஞர்புறப் பெயர்ச்சி ஏற்பட்டது. இப்போது வளரும் நாடுகளிலிருந்து வளர்ச்சியடைந்த நாடுகளுக்கும் எண்ணெய் உற்பத்தி செய்யும் நாடுகளுக்கும் இப்பெயர்ச்சி ஏற்பட்டு வருகிறது. சொந்த நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம், குறைந்த ஊதியம் வேலையில் முன்னேறுவதற்கான வாய்ப்பின்மை, வசதிகளற்ற ஆராய்ச்சிக் கூடங்கள் ஆகியவைதாம், அறிஞர் புறப்பெயர்ச்சி ஏற்படுவதற்குச் சிறந்த காரணங்களாகும். இவற்றைத் தவிர வேலை பார்க்கும் இடங்களில் இருக்கும் சச்சரவுகள், இனவேறுபாட்டுக் காழ்ப்புணர்ச்சிகள் ஆகியவையும் இப் பெயர்ச்சிக்குக் காரணமாகின்றன. அறிஞர்புறப் பெயர்ச்சியினால் ஒரு நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் குறைகிறது என்றும் வெளிநாட்டுப் பணம் உள்நாட்டிற்கு வருகிறது என்றும் கூறப்படுவதுண்டு. ஆனால் உண்மையில் எந்த நாட்டிற்குள் அறிஞர் புறப் பெயர்ச்சி ஏற்படுகிறதோ அந்நாடுதான் மிகுதியான பலனை அடைகிறது. இவர்கள் குடியேறும் நாடுகளுக்குத் திறமையாக வேலை பார்ப்பதற்கு ஆட்கள் கிடைக்கின்றனர். உற்பத்தி பெருகுகிறது. வேண்டாம் என்னும்போது அந்நாடுகள் இவர்களை வெளியே அனுப்பித் தங்கள் பொருளாதாரத்தைச் சீர்செய்து கொள்ளலாம்.

அறிஞர் புறப்பெயர்ச்சியினால் அதிர்ச்சியடைய வேண்டுவதில்லை என்ற கூற்றும் உள்ளது. ''அறிவியலாளர் உலகக் குடிமக்கள்; அவர்கள் எங்கு வேலை பார்க்கிறார்கள், எந்நாட்டுக் குடிமக்கள் என்பது ஆராய்ச்சிக்குரியதன்று. அவர்கள் என்ன வேலை செய்கிறார்கள் என்பதுதான் ஆராயப்பட வேண்டிய தொன்று'' என்று கூறப்படுவதுண்டு. அறிஞர் புறப் பெயர்ச்சிக்குத் துணையாகக் கூறப்படும் இந்த அனைத்துலகக் கோட்பாடு பொருந்தாது என்பதனைக் கீழ்க்காணும் காரணங்களினால் அறிந்து கொள்ளலாம்.

பொருளாதார மேம்பாட்டிற்கு அறிவியலும் உதவுகிறது. ஒரு நாடு பொருளாதார முன்னேற்றம் காண விழையும்போது தன்நாட்டு அறிவியல் அறிஞர்களை வெளிநாட்டிற்கு அனுப்பிவிட்டு வளரவிருக்காது.

இந்தியாவிலிருந்து வெளிநாடுகளில் அலுவல் பார்ப்போர்களின் எண்ணிக்கை ஒரு கோடிக்கும் மேலிருக்கும் என்று புள்ளிவிவரக் கணக்கெடுப்புகள் கூறுகின்றன. இவர்களுள் தொழில்துறை வல்லுநர்கள் 30 விழுக்காடு இருப்பர். இவர்களுள் கணிசமான எண்ணிக்கையினர் வெளிநாடுகளில் குடியுரிமை பெற்று நிலையாகத் தங்கிவிட்டனர். ஏறத்தாழ 137 நாடுகளில் இந்தியர் வாழ்கின்றனர். உருமேனியா, மங்கோலியா, கொரியா, போன்ற நாடுகளில் இந்தியர்கள் காணப்படவில்லை. தொழில்துறைக் கல்வி பெற இந்திய அரசு ஒருவருக்கு இலட்சக்கணக்கான உருபாய்களைச் செலவழிக்கிறது. அறிஞர் புறப் பெயர்ச்சிக்கு மிகுதியாக உட்பட்டவர்கள் மருத்துவர்களாவர். நம் நாட்டில் நிலவும் வேலையில்லாத் திண்டாட்டம் அவர்களை வெளிநாட்டுக்கு அனுப்பும் உந்து ஆற்றலாக விளங்குகிறது. வெளிநாடுகளில் காணப்படும் ஊதிய முறையும் வாழ்க்கைத் தரமும் 'ஈர்க்கும்' ஆற்றல்களாக விளங்குகின்றன. இந்தியாவிலிருந்து அறிஞர் புறப்பெயர்ச்சி ஏற்படாமலிருக்கப் பல்வேறு முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. பரிந்துரைகளும் கூறப்படுகின்றன. தொழில் நுணுக்கத் துறையில் கற்போர் பத்து ஆண்டுக்காலம் வரையிலும் தாயகத்தில்தான் வேலைபார்க்கவேண்டும் என்னும் உறுதிமொழியில் கையெழுத்து வாங்க வேண்டும் என்றும், வெளிநாடு செல்பவர்களுக்கு வரிவிதிக்க வேண்டும் என்றும் பரிந்துரைகள் கூறப்படுகின்றன. வெளிநாடுகளில் குடியேற விரும்புகிறவர்களின் கல்விக்கு அரசு செலவழித்த தொகையில் இருமடங்குத் தொகையைத் திருப்பி அளிக்க வேண்டும் என்னும் விதி சில நாடுகளில் இருக்கிறது. நம் நாட்டு அரசின் உதவியால் பெற்ற கல்வியை இந்தியர்கள் வெளிநாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குப் பயன்படுத்துகின்றனர். பணத்தை அளவுகோலாக வைத்து இதனைக் கணக்கிடும்போது தாயகம் பல கோடி உருபாய்களை இழப்பதனை அறியலாம்.

வெளிநாடுகளில் தங்கி வாழும் இந்தியர்கள் தாயகத்தில் முதலீடு செய்யும் வகையில் இந்திய அரசு பல வரிச்சலுகைகளை வழங்கியுள்ளது. வெளிப்படையாக நோக்கும்போது வெளிநாட்டுப் பணம் இந்தியாவிற்கு வருவது போன்று தோன்றுகிறது. ஆனால், உண்மையில், இந்தியப் பணம் வெளிநாடுகளுக்குச் சென்றுவிடுகிற வாய்ப்பு ஏற்படுகிறது என்று பொருளாதார வல்லுநர்கள் கருத்துத் தெரிவித்துள்ளனர். ஓ. சு.

**அறிதல் சமநிலைக் கோட்பாடு** என்பது உளவியலார் அறிதல்பற்றி வகுத்துள்ள கோட்பாடு

களுள் ஒன்றாகும். தனிமனிதர்களிடத்தும் பொருள்களிடத்தும் ஒருவர் கொள்ளும் மனப்பான்மைகள் எவ்வாறு ஒன்றுக்கொன்று தொடர்புடையனவாக இருக்கின்றன என்பதை உளவியல் அடிப்படையில் வரையறுப்பது, அறிதல் சமநிலைக் கோட்பாடு (Cognitive Balance Theory) ஆகும். இக்கோட்பாட்டினை எடுத்துரைத்தவர் பிரிட்சு (Fritz Heider) என்பவர் ஆவார். இருமனிதர்கள் தொடர்புடையவர்களாக இருந்தால் ஒருவர் அவ்விருவரிடமும் கொண்டிருக்கும் மனப்பான்மை ஒரே தன்மையதாக இருக்கும். இருபொருள்கள் ஒன்றுக்கொன்று தொடர்பற்றனவாகவோ இரு மனிதர்கள் ஒருவருடன் ஒருவர் தொடர்பற்றவராகவோ இருப்பின் அங்கு ஒருவர் கொள்ளும் மனப்பான்மைகள் வெவ்வேறானவைகளாக இருக்கும். இக்கோட்பாட்டினைப் பின்வரும் படத்தினால் விளக்கலாம்.







உ: உடன்பாட்டு உறவு எ: எதிர்மறை உறவு.

முதல்படத்தில் 'அ' என்பவன் 'ஆ' 'இ' என்ற இருவரையும் விரும்புகிறான். ஆதலின் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தொடர்புடையவர் என எண்ணுகிறான்.

நான்காம் படத்தில் 'அ' என்பவன் 'ஆ' என்பவனை வெறுக்கிறான். 'இ' என்பவனை நேசிக்கிறான். அதனால் அவர்கள் இருவரும் எதிர்மறைத் தொடர்பு கொண்டவர்கள் என்று நம்புகிறான். இரட்டைப் படையான எதிர்மறை உறவுகள் இருப்பின் மூன்று அறிதல் நிலைகள் சமன்படுத்தப்படுகின்றன என்று ஈடர் கூறினார். இக்கருத்தையொட்டி இரண்டு கருதுகோள்கள் உருவாக்கப்பட்டன. 1) முக்கூறான தொடர்புகளில் ஒருவன், இரண்டை அறிந்தால், மூன்றாம் தொடர்பு மற்ற இரு தொடர்புகளையும் சமன்படுத்துவதாக இருக்கும் என்று ஊகித்துவிடுகிறான், 2) முக்கூறான அறிதல் சமநிலையை மாற்றும் வகையில் கருத்துகள் கிடைத்தால் தனிமனிதன், சமநிலை ஏற்படும் வகையில் இவற்றுள் ஒரு அறிதல் நிலையை மாற்றிவிடுவான்.

துணை நூல்:

Lyle E. Bourne, Jr. Bruce R. Ekstrand, Psychology, its Principles and Meanings, New York, 1982.

***அறிதல்சார் உளவியல்*** மனிதர்களின் எண்ணங்களும் அவற்றின் அடிப்படையில் நிகழும் செயல்களும் அறிதல் இயங்குமுறைகள் (Cognitive Processes) என்று கூறப்படுகின்றன. இந்த இயங்கு முறைகளைப் பற்றி விரித்துரைக்கும் உளவியல்துறை, அறிதல்சார் உளவியல் (Cognitive Psychology) எனப்படும். அனுபவங்கள், சூழ்நிலைகள் ஆகியவற்றை ஒட்டி மனிதர்கள் அடையும் அறிவினை வாழ்க்கையில் பயன்படுத்துவதும் அறிதல் நிகழ்முறையைச் சார்ந்ததாகும். வாழ்க்கையில் ஒருவரை எதிர்நோக்கும் பல சிக்கல்களும் தொல்லைகளும் அறிதல் நிகழ்முறையில் அவர் அவற்றை எந்த அளவில் தீர்வு காண்கிறார் என்பதற்கு அறைகூவல்களாக அமைந்து விடுகின்றன.

குறிப்பிட்ட தூண்டல்களுக்கு மனிதர்களின் துலங்கும் முறைகளின் அடிப்படையில் அமைவதே அறிவு ஆகும் என்று நடத்தைக் கோட்பாட்டினர் கூறினர். ஆக்கநிலையிருத்தம் பெறுதலின் பயனாகவே ஒருவரின் நடத்தைகள் அமைந்துள்ளன என்று வாட்சன் (Watson) கூறினார். சிந்தனை இயங்குமுறையுடன் உடல் தசைகளின் இயக்கமும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது என்று சிந்தனை இயக்கக் கோட்பாடு (Motor Theory of Thinking) குறிப்பிடுகிறது. ஒருவன் ஏதேனும் ஒரு கருத்து அல்லது செயல் பற்றி எண்ணத் தொடங்கியவுடன் அதனை அவன் எடுத்துரைக்கும் நடத்தையின் அறிகுறிகளாகத் தசை

இயக்கங்கள் அவன் உடலில் தோன்றுகின்றன என்பதே இக்கோட்பாட்டின் உட்பொருள் ஆகும். ஆனால், சிந்தனை இயக்கக் கோட்பாடு பின்வரும் சில விளக்கங்களை அளிக்கவில்லை. சிந்தனை முறையில் பொருள்கள், மனிதர்கள், காட்சிகள் பற்றிய உருவங்களும் அடங்கியுள்ளன. மருந்துப் பொருள்களாலோ நோயினாலோ உடல் பாதிக்கப்பட்ட போதிலும், சிந்தனையும் அதன் பயனாக ஏற்படும் கற்றல் நிகழ்முறையும் (Learning Process) தொடர்ந்து நடைபெறுகின்றன. ஆதலின் நடத்தைக் கோட்பாட்டினர் தியானக் கோட்பாடு (Meditation Theory) என்னும் கோட்பாட்டின் உதவியால் அறிதல் நிகழ்முறையை விளக்குகின்றனர். பொருள்கள் நிகழ்ச்சிகள் ஆகியவற்றைப் பற்றிய தியானம் அல்லது ஆழ்ந்த சிந்தனையே தூண்டலுக்கும் துலங்கல் சார் நடத்தைக்கும் இடைத்தொடர்பாக அமைந்துள்ளது என்பதே இக்கோட்பாடு ஆகும். முன் அனுபவங்களையொட்டி அமைந்திருக்கும் புதிய சூழ்நிலை எதிர்ப்படும்பொழுது ஆழ்ந்த சிந்தனையே முதல் துலங்கலாக அமைகிறது. ஓர் எண்ணத்தைக் காட்டிலும் மற்றொரு எண்ணம் வலுவானதாக இருப்பின் பிந்திய எண்ணம் முதல் எண்ணத்தை மறைத்து விடுகிறது. மனிதனின் நடத்தையும் வலுவான பிந்திய எண்ணத்தைச் சார்ந்தே அமைகிறது. முழுமைக் கோட்பாட்டின் (Gestalt Theory) ஒரு பொருளை அல்லது காட்சியை மனிதன் புலன் காணும் விதமே, அவன் நடத்தைக்குக் காரணமாக அமைகிறது என்று கூறுகின்றனர். ஒரு சிக்கலைப் பல்வேறு கோணங்களிலிருந்தும் அணுகி அதனைப் பற்றிய புலன் காட்சியை அடைந்து அதற்குத் தீர்வு காண்பதே அறிதல் இயங்குமுறை ஆகும். சிக்கல்களுக்குத் தீர்வு காண்பதன் பொருட்டுக் கருதுகோள்களை உருவாக்கி அவற்றை ஆராய்ந்து விளைவுகளை அறிதலும் கற்றல் இயங்குமுறை ஆகும் என்பது கருதுகோள் கோட்பாடு (Hypothesis Theory) ஆகும். சூழ்நிலைக்குப் பொருத்தமான கருதுகோள் கிடைக்கும் வரையில் பல கருதுகோள்களை முறையாக ஆராயலாம். உலகில் உள்ள எல்லாச் சிக்கல்களுக்கும் மக்கள் பல கருதுகோள்களைக் கொண்டிருக்கின்றனர். ஆதலின் கருதுகோள்களைக் கேட்டறிதலும் எளிதே.

அனுபவ அறிவின் அடிப்படையில் செய்திகளைக் கணிப்பொறியில் (Computer) திட்டமிட்டு அமைத்து அறிதல் இயங்குமுறையில் கணிப்பொறியை இயக்கிச் சிக்கல்களுக்குத் தகுந்த தீர்வுகளை அடையலாம் என்பது செய்தி இயங்கமைப்புக் கோட்பாடு (Information Processing Theory) ஆகும். கணிப்பொறி அமைப்பின் அடிப்படையில் எந்திர மனிதர்கள் (Robots) பல செயல்களைச் செய்து வருவதும், சிந்தனைக் கருத்துகளைக் கூறுவதும், சமன்பாடுகளுக்கு விடைகூறுவதும் உளவியல் ஆய்வுத் துறையில் பெருமளவில் பயன்படுவனவாக உள்ளன.

ஆலன் நிவல் (Alan Newell), எர்பர்ட்டு சைமன் Herbert Simen) ஆகியோர் ''பொதுச் சிக்கல்களைத் தீர்ப்போன்'' (GPS-General Problem Solver) என்னும் கணிப்பொறியைப் பற்றிவிளக்கியுள்ளனர். இப்பொறியில் மனித மூளையைப் போன்ற இயங்குமுறை அமைக்கப்பட்டுள்ளது. கி.ரா

**அறிதல்சார் சொற்பொருள் மருத்துவம்** என்பது எண்ணத் திரிபுகளும் செய்தித் தொடர்பில் ஏற்படும் குறியீட்டுச் சிக்கல்களுமே மனித நடத்தைப் பிறழ்வுகளுக்குக் காரணங்களாகின்றன என்னும் முற்கோளின் மீது அமைக்கப்பட்டுள்ள ஓர் உளமருத்துவ முறையேயாகும். இத்தகைய திரிபுகளை மனிதன் இயல்பாகவே அறியவும் கட்டுப்படுத்தவும் முடியும். இது ஓர் உளவழி மருத்துவ முறை ஆகும். எண்ணங்களில் ஏற்படும் கோளாறுகளைத் திருத்தவும், வாழ்க்கையின் பட்டறிவுகளை உண்மை நிலையிலிருந்து பார்க்கவும் இது வழி வகுக்கிறது. அறிதல்சார் மருத்துவத்தில் மனிதனின் தொல்லைகளுக்கு அடிப்படையாக அமையும் தவறான, முரண்பாடான கருத்துகளைக் களைவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. ஒவ்வொரு நோய்க் குறியுடனும் தொடர்புடைய கருத்தினை மாற்றி அமைக்கும் வகையில் நனவு நிலையினை ஆராய்வது இவ்வுள மருத்துவ முறையின் சிறப்பான கூறாகும். ஒருவருடைய சிந்தனையே அவருடைய மனநிலையை முடிவு செய்கிறது என்ற நினைவே இதற்கு அடிப்படையாகும். அறிதல் மருத்துவ முறையில் முதன்மையானது, ஆல்பர்ட்டு எல்லிசு (Albert Ellis) எடுத்துரைத்த பகுத்தறிவு - மனவெழுச்சி மருத்துவம் (Rational - Emotive Therapy) ஆகும். பெக்கு (Beck, Aron, I.) என்பவர், அறிதல் மருத்துவம் பற்றி விரிவாக எழுதியிருப்பதோடு, உளச்சோர்வுக் கோளாறுக்கான (Depression) உளவழி மருத்துவ முறைகளுள் சிறந்தது அறிதல் மருத்துவமே எனக் கூறுகிறார்.

பிறழ்வு நடத்தை ஏற்பட மொழித் தொடர்புத் தடைகளும் சில நேரங்களில் காரணங்களாக இருக்கின்றன என்னும் அடிப்படையில் சொற்பொருள் மருத்துவமுறை அமைந்துள்ளது. ஒருவர்தம் செய்தித் தொடர்பில் ஏற்படுத்தப்படும் முன்னேற்றம், அவரை மற்றவர்களுடன் தொடர்பு கொள்ளுதலில் முன்னேற்றமடையச் செய்கிறது. இம்முறையில் சொற்பொருள் ஆய்வியல் (Semantics), பயன்தரக்கூடிய செய்தித் தொடர்பு ஆகியவற்றின் வாயிலாக நல்ல அறிவியல் எண்ணங்களுக்கான வழிமுறைகள் கற்றுத் தரப்படுகின்றன.

சொற்பொருள் மருத்துவத்தில் மருத்துவரும் நோயாளியும் தாங்கள் பேசும் சொற்றொடர்கள் சரியான பொருளைத்தான் தருகின்றனவா என்று ஆராய்ந்து பார்க்கின்றனர். பிறகு நோயாளி தன் மொழித் திறமை பற்றியும் பேச்சுச் சிக்கல்கள் குறித்தும் அலசிப் பார்க்கிறார். கடைசியாக, நோயாளி தகுந்த குறியீடுகளையும் சொற்றொடர்களையும் பயன்படுத்துவதற்கான பயிற்சியளிக்கப்படுகிறார்.

மருத்துவத்தின் போது நோயாளியுடன் ஒரு நல்ல தொடர்பினை மருத்துவர் ஏற்படுத்திக் கொண்டவுடன் பேச்சுப் பயிற்சியும் புதிய சொற்கோப்புகளுக்கான பயிற்சியும் தரப்படுகின்றன. பேச்சின் குறைகளைத் தெளிவாக உணர்ந்து கொள்ளும் நோயாளி, தன் சிக்கல்களைத் தெளிவாக அறிந்து கொள்வதோடு, சுதந்திரமாகவும், தெளிவாகவும் செய்தித் தொடர்பு கொள்ளத் தன்னம்பிக்கையும் பெறுகிறார். இதன் வாயிலாக அவர் தம் கருத்துகளைத் தெளிவாக உருவாக்குவதோடு, பிறருடன் அவர் கொள்ளும் தொடர்பையும் பொருளுடையதாக்குகிறார்.

மெய்சென்பாம் (Meichenbaum) என்பார், மேற்சொன்ன அறிதல்சார் மருத்துவம், சொற்பொருள் மருத்துவம் ஆகிய இரண்டையும் இணைத்துள்ளார். இந்த மருத்துவ முறையை அறிதல் சார் சொற்பொருள் மருத்துவம் (Cognitive Semantic Therapy) என்று கூறலாம். எண்ணங்களில் ஏற்படும் தவறு, அவற்றை மற்றவர்க்கு வெளிப்படுத்துவதில் ஏற்படும் தவறு ஆகிய இரண்டுமே உளநோய்களுக்குக் காரணமாகின்றன. மருத்துவர் நோயாளிக்குத் தக்க நடத்தைப் பயிற்சி அளிப்பதன் வாயிலாகவும், நோயாளி தன் இயற்கையான ஆற்றலைப் பயன்படுத்துவதன் வாயிலாகவும் உளக்கோளாறுகள் குணப்படுத்தப்படுகின்றன. கே.வி.கா.

**அறிதல்சார் நடத்தை மருத்துவம்**, உளவழி மருந்துவ முறைகளுள் ஒன்று. இது, அறிதல் இயங்குமுறையும் நடத்தைக் கோட்பாடும் இணைந்த மருத்துவ முறை ஆகும். இந்த மருத்துவ முறையை அமெரிக்க ஐக்கிய நாட்டிலுள்ள ஆரன்பெக்கு (Aron T. Beck) என்பவர் 1970-இல் உருவாக்கினார். இந்த மருத்துவ முறை ஆல்பெர்ட்டு எல்லிசு என்பாரின் (Albert Ellis) பகுத்தறிவு மனவெழுச்சி மருத்துவ முறையை (Rational Emotive Therapy) ஒட்டியதாகும்.

மனிதன் புறஉலகின் புலன் காட்சியை எவ்விதம் பெறுகிறானோ அவ்விதமே அவனுடைய நடத்தை, சிந்தனைகள், மனக்கிளர்ச்சிகள் ஆகியன அமைகின்றன என்று பெக்கு கூறினார். அவருடைய கொள்கைப்படி மனிதனின் மனக்கோளாறுகளுக்கு அவனது மனப்பான்மை இன்றியமையாக் காரணியாகும். எடுத்துக்காட்டாக உளக்கோளாறுகளைக் கூறலாம். ஒருவன் தன்னைப் பற்றித் தவறான கருத்துக் கொள்வதால் உளச் சோர்வுக் கோளாறு உண்டாகிறது. இந்நோயாளிக்குத் தான் ஒன்றுக்கும் உதவாதவன் என்று தன்னைத் தானே இழிவுபடுத்திக் கொள்ளுதலும், உண்மை நிலையைத் தவறாகப் புரிந்து கொள்ளுதலும் இயல்பாகிவிடுகிறது. இக்கோளாறு உள்ளவர்கள் தம் சுற்றுப்புறச் சூழ்நிலைக்குத் தவறான விளக்கம் தருகிறார்கள். மேலும், இக்கோளாறு உள்ளவரின் செயல்கள் காரணமற்ற—பகுத்தறிவுக்கு அப்பாற்பட்ட-செயல்களாகத் தோன்றும். ஆனால், நோயாளிக்குச் சரியானவையாகத் தோன்றும். ஆதலின் மனப்பான்மை மாற்றமே இக்கோளாறுகளை நீக்குவதற்கு முதற்படியாகும்.

அறிதல்சார் நடத்தை மருத்துவத்தின் (Cognitive Behaviour Therapy) முதற்படி, நோயாளியின் சிந்தனைகளைத் தவறு என்று உணரவைத்தல் ஆகும். அதற்காக அவர் தொடர்ச்சியாக மருத்துவம் பெற வேண்டும் என்று பெக்கு குறிப்பிட்டுள்ளார். இம்மருத்துவத்தைக் கீழ்வருமாறு முறையாகப் பெறலாம்.

1. தவறான எண்ணங்கள், கருத்துகள் ஆகியவற்றைக் கொண்டிருப்பதனை நோயாளி முதலில் அறிய வேண்டும்.

2. நோயாளி தன்னுடைய அறிதல் சார் எண்ணங்கள் உண்மைக்குப் புறம்பானவையாக இருக்கின்றன என்பதனை உணர வேண்டும்.

3. தன் தவறான எண்ணங்களை மாற்றிக் கொள்வதற்கு நோயாளி முயலுதல் வேண்டும்.

4. அம்முயற்சியில், தவறான எண்ணங்களையும், திரிபுக் கருத்துகளையும் மாறுபட்ட குணங்களையும் நீக்குவதில் ஈடுபட வேண்டும்.

5. நல்ல சிந்தனைகளை வளர்த்தல் வேண்டும்.

இந்த மருத்துவத்தில் தன்னைத்தானே கட்டுப்படுத்துதல், நடத்தை ஆயத்தம் செய்தல், உள நாடகப் பங்கு ஏற்றல், பயிற்சி, மறுமதிப்பீடு, தன்னைத்தானே கண்காணித்தல் ஆகிய செயல் வகைகள் அடங்கும். அறிதல்சார் நடத்தை மருத்துவர் நோயாளிக்குத் தன்னம்பிக்கையை வளர்க்கவும், சுற்றுப்புறச் சூழ்நிலையைக் காரண காரிய முறையில் அணுகப் பயிற்சி அளிக்கவும், விருப்பு, வெறுப்பற்ற முறையினால் ஆராயவும் உதவுகிறார்.

இந்த மருத்துவத்தின் விளைவுகள் மற்ற மருத்துவ முறைகளைவிட நீண்டகாலப் பயனளிப்பனவாக

இருக்கின்றன எனப் பல ஆராய்ச்சி முடிவுகள் தெரிவிக்கின்றன. இந்த மருத்துவமுறை குறிப்பாக உளச் சோர்வுக் கோளாறு, பதற்றம், தலைவலி, மன அழுத்தம், கவலை, எதிர்பாரா நடத்தை ஆகியவற்றைக் குணப்படுத்த உதவி செய்கிறது. க.ச

*அறிதல்சார் மானிடவியல்*: பண்பாட்டைப் புதிய அணுகு முறையில் அறிய முகிழ்த்த அண்மைக்கால மானிடவியல் பிரிவே அறிதல்சார் மானிடவியல் (Congnitive Anthropology) ஆகும். இப்பிரிவின் ஆய்வுமுறைகள், ஆய்வுப் பரப்புகள், அணுகுமுறைகள் முதலானவை இன ஒப்பாய்வியல் (Ethnology), இனப்பரப்பியல் (Ethnography), இன உயிரியல் (Ethnobiology) முதலான துறைகளுடன் தொடர்புற்றிருப்பதால் இத்துறை இன அறிவியல் (Ethnoscience) என்றும், புலனுணர்வு மானிடவியல் என்றும் கூறப்படும்.

மக்கள் தாம் சார்ந்துள்ள உலகம், தம் சமூகம், பண்பாடு ஆகிய அமைப்புகள், தாம் செய்யும் செயலுக்கான காரண காரியங்கள் முதலானவற்றைப் பற்றி ஒவ்வொரு சமூகத்தினரும் அறிந்து கொள்ளும் முறைகளைப் பற்றியும் அறிந்து கொண்டுள்ளனவற்றைப் பற்றியும் அறிவதே அறிதல்சார் மானிட வியலாகும். ஒவ்வொருவரின் மனமும் தான் சார்ந்துள்ள உலகப் பொருள்களின்பாலும் அகிலத்தின் பாலும் தானாகப் பெறும் அகநிலை அறிதற் பண்பே 'அறிவாகும்'. மனிதன் உலகில் காணும் நிகழ்ச்சிகளின் அடிப்படையிலும் தான் ஈடுபடும்செயல் அடிப்படையிலும் அனுபவங்களைப் பெற்று, அந்த அனுபவங்களின் அடிப்படையிலேயே உலகத்தின் அமைப்பினைத் தன் மனத்திரையில் காண்கிறான். இது அவரவர் அகநிலை அறிவாக அமைந்து, இதன் வழியே அகத்தேயமைந்த உலகத் தோற்றத்தினையும் (Internalized Model of the World) காட்டும். இந்த அறிவைப் பெறுவதில் உணர்தல், கற்றல், நினைவாற்றல், மொழி முதலானவை துணை நிற்கின்றன.

மக்களின் சிந்தனையில் பிறக்கும் அக உணர்வுகளின் அடிப்படையில் புறச் செயற்பாடுகள் நிகழ்கின்றன. இச்செயற்பாடுகள் அனைத்தின் முழு வடிவமே 'பண்பாடாகும்'. மனித மனம் மிகவும் சிக்கலான அமைப்புகளையுடையதாகும். சூழ்நிலைக்கும் காலத்திற்கும் ஏற்ப மனிதச் சிந்தனை பல்வேறு முறைகளில் செயற்பட, அதனின்று வெளிப்படும் புற நிகழ்வு சமூகத்தில் ஒரு வடிவமாகவும் முறைமையாகவும் நிலைபெறுகிறது. இவையே பொதுமையாகக் காணப்படும்போது பண்பாட்டுக் கூறுகளாகவும் (Cultural Traits), பண்பாட்டு முழுமைகளாகவும் (Cultural wholes) உருப்பெறுகின்றன. இவை பண்பாட்டின் உட்பொருள், விதிகள், வகைபாடுகள் அனைத்தையும் காட்ட வல்லன.

ஒரு சமுதாயத்தின் பண்பாடு என்பது அச்சமுதாயத்தைச் சேர்ந்த ஒருவனால் அல்லது பலரால் ஏற்றுக் கொள்ளக்கூடிய நடவடிக்கைகள், வழக்காறுகள், விதிமுறைகள் ஆகியவற்றை அறிந்து அவற்றின் படி நடப்பதைக் குறிக்கும். இது ஓர் இயற்பொருள் அன்று; செயற்பாடுகள், பொருள்கள், உணர்ச்சிகள் ஆகியவற்றின் தொகுப்பேயாகும். இவை அச்சமுதாய மக்களின் மனத்தில் ஊன்றிக் காணப்பட்டு, அவர்கள் செயல்களில் ஒன்றோடொன்று தொடர்புடன் வெளிப்படக் கூடியவையாகும். இப்பண்பாட்டு விளக்கத்தினை அடிப்படையாகக் கொண்டே அறிதல்சார் மானிடவியல் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

ஒரு மொழி தன்னைப் பேசுபவர்களைச் சார்ந்த சுற்றுச் சூழலுடன் தன்னைத் தொடர்பு படுத்திப் பார்க்கவும், இயற்கைப் பண்பாட்டுக் கூறுகளை விளக்கிக் கூறவும், அவற்றைத் தம் சமுதாயச் செயற்பாடுகளுடன் தொடர்புபடுத்தி அறியவும் வழிவகை செய்கிறது. பண்பாட்டு அமைப்புகளுக்கும் அப்பண்பாட்டினரின் மொழிச் சொற்களின் பொருளுக்கும் ஒத்த பண்புகள் காணப்படுகின்றன. மொழி, பண்பாட்டின் ஓர் உறுப்பாகையால் அதன் தன்மைகளை அறிதல்சார் மானிடவியலாளர்கள் பண்பாட்டோடு இணைத்து ஆராய்கிறார்கள்.

அறிதல்சார் மானிடவியலாளர்கள், மக்கள் பல காலமாகத் தம் பொருள்கள், நிகழ்ச்சிகள், செயற்பாடுகள் ஆகியவற்றிற்குப் பயன்படுத்தும் சொற்களை ஆராய்ச்சி புரிவதில் நாட்டம் செலுத்தி வந்தனர். ஏனெனில், மொழியும் பண்பாடும் ஒன்றுக்கொன்று மிக நெருங்கிய தொடர்பு கொண்டு விளங்குகின்றன. மொழியின் வாயிலாகத்தான் பண்பாட்டை நன்கு புரிந்து கொள்ள இயலுகிறது. எனவேதான், தொடக்கக் கால அறிதல்சார் மானிடவியல் ஆய்வுகள் அனைத்தும் மொழியையே அடிப்படையாகக் கொண்டு அமைந்தன. சில எடுத்துக்காட்டுகளை இங்குக் காணலாம். முதலாவதாக, ஒருவன் குடி மயக்கத்தில் இருக்கும்போது வெளிப்படுத்தும் சொற்களிலிருந்து அவனது மயக்க மன நிலையில் உலக நோக்கு அறியப்படுகிறது. இரண்டாவதாக, ஒரே சொல்லுக்குப் பல பொருள்கள் இருப்பது குறித்து ஆராய்தலைக் கூறலாம். எடுத்துக்காட்டாகத் தமிழ் மொழியில் உள்ள 'அம்மா' என்னும் சொல், 'தாய்', 'சில பெண்பால் உறவினர்கள்', 'மாரியம்மன் கடவுள்', 'உதவி' ஆகிய பொருள்

களில் சூழலுக்கேற்பப் பயன்படுத்தப்படுகிறது. மூன்றாவதாக, உறவு முறைச் சொற்கள் பற்றிய உள்ளார்ந்த ஆராய்ச்சிகளைக் கூறலாம். 1950-60 ஆம் ஆண்டுகளில் பல்வேறு சமுதாயங்களில் மிருகங்கள், தாவரங்கள் ஆகிய இவற்றின் பெயர்கள் தொடர்பான இனவிலங்கியல் (Ethno Zoology), இனத் தாவரவியல் (Ethno Botany) ஆராய்ச்சிகள் தொடங்கின. இவ்வகை ஆராய்ச்சி இன அறிவியல் (Ethno Science) என அழைக்கப்படும். பின்னாட்களில் அறிதல்சார் மானிடவியலானது, சட்டம், மருத்துவம், சமயம் போன்ற பிற துறை சார்ந்த பிரிவுகளிலும் ஆராய்ச்சி முதன்மை பெற்றது. பண்பாடும் ஆளுமையும் (Culture and Personality) பற்றிய உளவியல் சார்ந்த இன்னொரு துறையும் அறிதல் மானிடவியலின் உருவாக்கத்தில் முதன்மைப் பங்கினை வகிக்கிறது. அது நாட்டுப்புற வகுப்புத் தொகுப்புமுறைக் கூறுகள் (Folk Taxonomies). இனச் சொற் பொருளியல் (Ethno Semantics), இன அமைவுப் பகுப்பாய்வு. (Cogenial Analysis), வண்ணப் பெயரியல் (Colour Terminology) போன்றவற்றைத் தன்னகத்தே கொண்டுள்ளன. இவை தகவலாளரின் பரப்பு மனக்காட்சிக்கும் விவரங்கள் சேகரித்தலுக்கும் இடையிலான ஒப்புமையை எடுத்துரைக்கின்றன.

அறிதல்சார் மானிடவியல் இனப்பரப்பளவியலின் ஆய்வு முறைகளை அடிப்படையாகக் கொண்டுள்ளதால், இத்துறை புதிய இனப்பரப்பளவியல் (New Ethnography) எனவும் வழங்கப்படுகிறது. இத்துறை பண்பாட்டு உறுப்பினர்களின் பரப்பு மனக்காட்சி (Perspectives) மூலமாக வைத்து அறிவார்ந்த ஆராய்ச்சியினை மேற்கொள்ள முனைகிறது. இத்தகைய துல்லியமான புலனுணர்வு அணுகு முறையைத் தொடக்கக் கால மானிடவியலாளர்கள் பயன்படுத்தவில்லை. மேலும் பல வேறுபாடுகள் பழைய இனப்பரப்பளவியலிலிருந்து புதிய இனப்பரப்பளவியலை வேறுபடுத்திக் காட்டுகின்றன. மனித வாழ்வில் மொழி மிக இன்றியமையாத பங்கினை வகிக்கிறது. புதிய இனப்பரப்பளவியலாளர்கள் மக்களின் மொழியையே ஆய்வுக்குப் பயன்படக்கூடிய தரவாகக் கொள்ளுகிறார்கள். ஆனால், முன்னாளில் மொழி தரவு சேகரிப்பதற்கான ஒரு கருவியாக மட்டுமே பயன்படுத்தப்பட்டது. சொற்களின் பொருளை ஆராயும் அதே நேரத்தில் அந்தச் சொற்கள் எந்தச் சூழ்நிலையில் சொல்லப்பட்டன, அதன் குறிப்பிட்டத்தக்க உட்பொருள் என்ன என்பனவற்றைப் பற்றியெல்லாம் அறிதல் சார் மானிடவியலாளர்கள் தொடர்புபடுத்திப் பார்க்கின்றனர். புதுமுறை ஆராய்ச்சியாளர், ஆராயப்புகும் சமுதாயத்தின் மொழியில் நன்கு தேர்ச்சி பெற்றிருப்பதால் சில சொற் சார்பற்ற நடவடிக்கைகளைப் (Non-verbal Behaviour) பற்றித் தாமாக ஒரு முடிவுக்கு வந்துவிடாமல் அது குறித்துத் தகவலாளரிடம் விளக்கம் கேட்டு, உண்மைப் பொருளை அறிந்து, அதைத் தம் ஆராய்ச்சிக்குப் பயன்படுத்துகின்றனர். இதனால், ஆராய்சியாளர் தாம் சார்ந்திருக்கும் சமுதாய நடைமுறைகளே உயர்வானது என்னும் இன மையத் தன்மை (Ethno-centrism) அவரது ஆராய்ச்சி முடிவுகளில் பாதிப்பினை ஏற்படுத்தி விடாமல் தவிர்க்கப்படுகிறது. எடுத்துக்காட்டாக, ஒரு சமுதாயத்து மக்களிடையே பயன்படுத்தப்படும் தாவரங்களின் பெயர்களை ஆராய முற்படும் அறிதல் மானிடவியலாளர் எக்காரணங் கொண்டும் மேலைநாட்டுத் தாவரவியல் வகைப்படுத்தும் முறையைப் பயன்படுத்தமாட்டார். ஏனெனில், அது அச்சமுதாயத்தினரால் தாவரங்களை வகைப்படுத்தி வைத்திருக்கும் தொன்மை முறையை எடுத்துக்காட்ட உதவாது. புதிய இனப் பரப்பளவியலார் தரவுகளைச் சேகரித்தலின் முறைகளையும் சீராக வகையாகப் பகுத்தாய்வு புரிகின்றனர். அவர்களின் நோக்குப்படி இனப்பரப்பளவியலானது வினா நிரலைக் கொண்டு சமூக அமைப்பு, தொழில் நுட்பம், போன்ற சில குறிப்பிட்ட தலைப்புகளின் கீழ் மட்டுமே கேட்டு அதற்கான விடைகளைப் பெறுவதாகும். துல்லியமான விவரத்தைப் பெற வேண்டுமானால் தகவலாளரிடம் இருந்து பெறப்படும் விடையை மட்டும் பதிவு செய்து கொள்ளாமல், அது எத்தகைய புறத் தூண்டுதல்களால் சொல்லப்பட்டது என்பதையும் பதிவு செய்து கொள்ள வேண்டுவது இன்றியமையாததாகும். சில புதிய இனப்பரப்பளவியலார்களால் பயன்படுத்தப் பெறும் வினாவிடை, இணை ஆய்வுத் தகவல் கொடுப்பவரின் புலனுணர்வு அமைப்பை அறிய உதவுகிறது. அறிதல் சார் மானிடவியலாளர்கள் ஒரு வரையறுத்த தொடர்பை (Definite Sequence) அடையும் அணுகு முறையைக் கொண்டுள்ளனர். இனவியலாளர் தாம் ஆராயும் சமுதாயத்திடம் விவரங்கள் சேர்ப்பதற்காக ஆயத்தம் செய்து கொண்டு செல்லும் வினாக்களுக்கு விடைகளைப் பெறுவதோடு, அச்சமுதாயத்தினரின் சூழலுக்கேற்ப அங்குத் தோன்றும் கேள்விகளுக்கான விடைகளையும் அவற்றின் பிற தூண்டுதல்களையும் ஆராய்வதையும் நோக்கமாகக் கொள்கின்றனர்.

இந்தப் புதுமையான ஆராய்ச்சி அணுகு முறையினால் ஏனைய மானிடவியலாளரும் ஒத்த பண்பாட்டைக் கொண்ட மக்களிடையே ஆராய்ச்சியை நிகழ்த்தும் போது, ஒரே மாதிரியான அணுகுமுறையைப் பயன்படுத்தித் தகவல் சேர்க்கலாம். மேலும் இது போன்ற விவரங்களை மிகுதியான தகவலாளர்

களிடம் சேகரித்துக் கணிப்பொறியின் மூலம் பின்னாளில் பகுப்பாய்வு செய்யவும் இயலும். ஆகதுல்லியம், நிரூபிப்பு, கணிப்பொறி ஆய்வு போன்றவற்றிற்கு வழிவகுக்கும் அறிதல் சார் மானிடவியலில் இந்தப் புதிய முறை பழைய முறையை விட அறிவியல் அடிப்படையில் சிறந்த முறையாகக் கருதப்படுகிறது. ஆ.செ.

துணை நூல்கள்


Stephen, A.T., Cognitive Anthropology, Holt Rinehart and Winston, New York, 1969.

Hymes, D., (Ed). Language in Culture and Society", Harper and Row, New York, 1964.


**அறிதல்சார் முரண்பாடு** என்பது தனி மனிதன், ஒரு பொருள் அல்லது செயல் அல்லது ஒரு மனிதர் மீது கொண்டுள்ள கருத்துக்கும் அவன் நடத்தைக்கும் இடையே அவன் காணக்கூடிய முரண்பாடு, அதன் காரணமாக அவன் உள்ளத்தில் தோன்றும் அமைதியின்மை போல்வனவற்றைக் குறிக்கும்.

ஒருவன் கருத்துக்கும் நடத்தைக்கும் இடையே முரண்பாடு காணப்படுவதை அவன் விரும்புவதில்லை. அம்முரண்பாட்டினை அவன் சில நேரங்களில் ஏற்றுக் கொள்வதும் இல்லை. அது மட்டுமன்றி அதனை ஏதோ காரணம் காட்டி விளக்கவும் முற்படுகிறான். எடுத்துக்காட்டாகக் குடிப்பழக்கம் உள்ள ஒருவன், குடி உடலைக் கெடுக்கும் என்று தெரிந்திருப்பினும் தொடர்ந்து குடிக்கிறான். இந்த முரண்பாட்டினை (Dissonance) விளக்க அவன் பல்வேறு காரணங்களைக் கூறலாம். குடிப்பழக்கம் பலர் கூறுவதைப் போல் தீமையானது அன்று என்றோ, மது வகைகள் பசியைத் தூண்டிச் சீரண சக்தியைப் பெருக்கக்கூடியன என்றோ அவன் அமைதி கூறலாம். இந்த முயற்சி எப்பொழுதும் வெற்றி பெறும் என்று சொல்ல இயலாது. அதனால், முரண்பாட்டு நிலை தொடர்ந்து, அவனிடம் மன அமைதியின்மையினைத் தோற்றுவிக்கும். இத்தகைய முரண்பாட்டு நிலைக்கும் அறிவு வளர்ச்சிக்கும் உள்ள தொடர்பு பற்றி இலியான் பெசுடிங்கர் (Leon Festinger) என்னும் உளவியல் அறிஞர் ஆராய்ச்சி செய்துள்ளார். தம்முடைய ஆராய்ச்சிகளை "அறிதல்சார் முரண்பாட்டுக் கோட்பாடு" (Theory of Cognitive Dissonance) என்னும் நூலில் அவர் தெளிவுபடுத்தியுள்ளார். பெசுடிங்கர் இந்த அமைதியின்மையை அறிதல்சார் முரண்பாடு என்று கூறினார். இந்நிலைமை ஒருவனை இதனின்றும் விடுபடத் தூண்டுகிறது. முரண்பாட்டினை அதிகரிக்கக்கூடியவற்றைத் தவிர்க்கவும் இது தூண்டவல்லது. ஒருவனுடைய அறிவு பல்வேறு கருத்துகளின் தொகுப்பாகும். அறிவு எனப்படுவதில் தன்னைப்பற்றிய கருத்துகள் மட்டுமன்றித் தன்னுடைய சூழ்நிலை நடத்தை பற்றிய கருத்துகளும் அடங்கும். இவற்றினிடையே முரண்பாடு நிலைமை எழுவது இதனைக் குறைக்க (Dissonance Reduction) ஒருவனைத் தூண்டும் வலுவான ஊக்கியாகும் என்று பெசுடிங்கர் கருதுகிறார்.

தனிமனிதனின் கருத்துகள், மனப்பான்மைகள், மதிப்புகள், நம்பிக்கைகள், செயல்கள் ஆகிய அறிவு சார் பகுதிகளிடையே முரண்பாட்டு நிலை ஏன் எழுகிறது என்பதனையும் பெசுடிங்கர் விளக்கியுள்ளார். முன்னரே ஒருவன் பெற்றுள்ள அறிவுடன் பொருந்தாத சில புதிய செய்திகள் அல்லது நிகழ்ச்சிகள் முரண்பாட்டினைத் தோற்றுவிக்கலாம். அல்லது அன்றாட வாழ்க்கையின் ஒரு பண்பாகவும் இம்முரண்பாடு இருத்தல் கூடும். ஏனெனில், வாழ்க்கையில் எழும் நிலைமைகள் யாவுமே முரண்பாடின்றித் திட்டவட்டமாக அமைபவை எனக் கொள்ள வியலாது. பல்வேறு காரணிகள் அறிவின் பகுதிகளிடையே பொருத்தமின்மையைத் தோற்றுவிக்கக் கூடும். இந்நிலையைத் தோற்றுவித்தலில் சமுதாயப் பழக்கங்கள் பண்பாட்டுத் தொடர்புடைய நடத்தை முறைகள் ஆகியவற்றுக்கும் பங்குண்டு. முரண்பாட்டு நிலை இதனைப் போக்க உதவும் புதிய செய்திகளைத் தேடிப்பெற ஊக்குவிக்கும். ஒருவன் தன் அறிவின் அமைப்பில் இருக்கும் முரண்பாட்டிற்கும் ஓர் உயர் அளவு உண்டு. ஒவ்வாத பகுதிகளில் எப்பகுதிக்கு மாற்றத்தை எதிர்க்கும் வலிமை குறைவாகக் காணப்படுகிறதோ அப்பகுதியினைச் சார்ந்து இவ்வுயர் அளவு அமையும் என்கிறார் பெசுடிங்கர்.

முரண்பாட்டு நிலைமையினைச் சமாளித்தலில் தனியாள் வேற்றுமைகள் இருத்தலைப் பெசுடிங்கர் சுட்டிக்காட்டுகிறார். சிலருக்கு முரண்பாட்டு நிலைமையினைப் பொறுத்துக்கொள்ளும் திறன் மிகக் குறைந்து காணப்படும். இவர்கள் தீவிரக் கருத்துகளைக் கொண்டிருப்பர். முரண்பாட்டு நிலைமையினை உள்ளத்தில் உருவாக்குவதில் சமூகக் குழுவின் கருத்துகளுக்குச் சிறப்பான பங்கு உள்ளது. முரண்பாட்டு நிலைமைக்கும் நடத்தைபற்றிய முடிவுகளை மேற்கொள்ளலுக்கும் இடையேயுள்ள தொடர்பு பற்றியும் பெசுடிங்கர் ஆராய்ச்சிகள் செய்துள்ளார். பெசுடிங்கரின் கருத்துகள் நடத்தையியலுக்கு மிகப் பயனுள்ளவை ஆகும். அறிவு வளர்ச்சியின் பொருட்டு ஊக்குவித்தலில் முரண்பாட்டுக் குறைப்பு இன்றியமையாக் காரணியாகும் என்பதை இவர் வலியுறுத்துகிறார்.

துணை நூல்:

Lyle E. Bourne, Jr. Bruce, R. Ekstrand, Psychology, its Principles and Meanings, New York, 1982.

**அறிதல் வளர்ச்சி:** மக்கள் குழந்தைப் பருவத்தில் சில அறிதல்சார் நிலைகளைக் கடந்து முழுமையான அறிதல் நிலையினை அடைகின்றனர். பியாசே என்னும் உளவியலறிஞர் (Piaget) குழந்தைகள் தம் சூழ்நிலைக்கேற்றவாறு எவ்வாறு ஒத்துப் போகிறார்கள் என்பதனை அறிவதில் மிகுந்த கவனம் செலுத்தி வந்தார். வளரும் குழந்தைகள் சங்கிலித் தொடர் போன்ற சில வளர்ச்சி (Cognitive Development) நிலைகளைக் கடந்து செல்வதை அவரது ஆய்வுக் காட்டியது. அவர், 'இக்குழந்தைகள் உலக அனுபவம் பெறும்பொழுது சூழ்நிலைகளின் தன்மையினைப் பற்றிப் பெரிதும் சிக்கலான எண்ணங்களை வளர்த்துக் கொள்கின்றனர்; அவற்றைப் பெரும் பாலும் மனத்தளவிலேயும் அடையாளங்கள் வாயிலாகவுமே கையாளுகின்றனர்' என்றும் கண்டார்.

புலனியக்கநிலையின் தொடக்கத்தில் குழந்தையிடம் உறிஞ்சுதல், பிடித்தல் என்னும் இருதிறன்கள் மட்டுமே காணப்படுகின்றன. ஒரு மாதத்திற்குப் பிறகு 4 மாதம் வரையில் குழந்தை தான் காணும் பொருள்களைப் பிடித்துக் கொள்ள முயல்கிறது. கண்ணுக்குத் தெரியும் பொருள்கள் மட்டுமே இருப்பனவாகவும், கண்ணுக்குத் தெரியாமல் மறைந்துள்ள பொருள்கள் இல்லாதனவாகவும் உணர்கிறது. பார்த்துக் கொண்டிருக்கும் பொம்மை மறைக்கப் பட்டவுடன் அதனைப் பற்றிய உணர்வு அல்லது எண்ணம் மறைந்து விடுகிறது. அதாவது பொருள் நிலைத்தல் என்னும் உணர்வு குழந்தையிடம் காணப் படுவதில்லை.

இதற்கு அடுத்த நிலையில் தனக்கு விருப்பமான அனுபவம் அல்லது ஒலியை மீண்டும் பெற விரும்புகிறது. அதனால், அவ்வொலி கேட்கும் பொழுது குழந்தை என்ன செய்து கொண்டிருந்ததோ (சிரிப்பு, கைகளை ஆட்டுதல் போன்ற செயல்கள்) அதனையே மறுபடியும் செய்கிறது. இதனையடுத்துத் தனக்கு மகிழ்ச்சி ஊட்டிய அந்த ஒலி எழும் என்று எண்ணுகிறது. இந்த உணர்வைப் பியாசே இனிய காட்சிகளை நீடிக்க வைக்கும் மாயாசாலங்கள் என்று கூறுகிறார். இந்நிலையில் குழந்தை பொருள் நிலைத்தலை உணரத் தொடங்குகிறது. கீழே விழுந்து விட்ட பொம்மைக்காகச் சிறிது நேரம் இங்குமங்கும் பார்க்கிறது. திரைக்குப் பின் தாய் மறைந்து கொண்டால் திரைக்குப்பின் வந்து அவளைக் கண்டுபிடிக்கிறது.

ஓராண்டு முடிவுறும்போது குழந்தை புலனியக்க நிலையின் அடுத்த கட்டத்தை அடைகிறது. குழந்தை இப்பொழுது மீட்டறியும் (Recall) திறன் அடைகிறது. தன் பார்வையிலிருந்து மறைக்கப்பட்ட பொருளை அது எந்த இடத்தில் முதலில் இருந்ததோ அந்த இடத்தில் மட்டுமே இருக்கும் என்று பார்க்கிறது. குழந்தை 1½ வயது அடையும் பொழுது பொருள் மறைக்கப்பட்டாலும் அது எங்காவது இருக்கலாம் என்னும் உணர்வை அடைகிறது.

இரண்டு முதல் ஏழு வயது வரையுள்ள குழந்தை தன் எண்ணங்களைப் பேசக் கற்றுக் கொள்கிறது. உலகின் அசையும் அசையாப் பொருள்களைக் காண்கிறது. அதன் அறிதல் எல்லை விரிவடைகிறது. ஆயினும் பிரித்தறிதல் என்னும் திறனைக் குழந்தை முழுமையாக அடைவதில்லை. இந்நிலையில் குழந்தைகள் அசையும் அசையாப் பொருள்களின் இயல்பு வேறுபாடுகளை அறிவதில்லை. தேவதைக் கதைகளை அவர்கள் உண்மை என எண்ணுகின்றனர். தம்மைச் சுற்றியுள்ள உலகினுக்கும் தமக்குமே முதன்மை கொடுக்கின்றனர். இதனைத் தன்முனைப்புச் சூழ்நிலை (Egocentrism) என்று பியாசே கூறுகிறார். இரண்டு வயதுக் குழந்தைக்கு அன்னை பாடும் 'காக்கா காக்கா கண்ணுக்கு மை கொண்டு வா' என்னும் பாடல் குழந்தைப்பொருள் பொதிந்ததாக மட்டுமன்றி, குழந்தை தானே ஒரு இன்றியமையாதவன் (VIP) என்றும் தனக்காகவே இயற்கையும் உலகும் இயங்குகின்றன என்றும் உணர்த்துவதாகவும் உள்ளது. இந்நிலையில் குழந்தைகள் எதனைக் காண்கின்றனரோ அதனால் அவர்கள் முழுமையாக ஈர்க்கப்படுகின்றனர். பின்னியக்கம் வளர்ச்சி பெறாததே இதற்குக் காரணம்.

ஏழு முதல் பதினொரு வயது வரையில் உருவம் கொண்ட–காணக்கூடிய –செயல்களை மட்டுமே குழந்தைகள் அறிகின்றனர். உருவிலாப் பொருள் பற்றிய சிந்தனை அல்லது அறிவு அவர்களுக்கு இப்போது ஏற்படுவதில்லை. ஆனால், பின்னியக்கப் புலனுணர்வுத்திறன் ஏற்பட்டு விடுகிறது. இதனைப் பியாசே ஒரு சோதனை வாயிலாக விளக்கினார். பதினொரு வயதுக்குட்பட்ட சில குழந்தைகளிடம் மரத்தாலான இருபது மணிகளைக் கொண்ட பெட்டியைக் கொடுத்தார். அதனுள் இருமணிகள் வெண் மணிகளாகவும் மற்றவை நீலமணிகளாகவும் இருந்தன. குழந்தைகளிடம் மரமணிகளைக் கொண்டு நீண்ட மாலைசெய்ய முடியுமா நீலமணிகளைக் கொண்டு நீண்டமாலை செய்யமுடியுமா என்று கேட்டதற்கு 7 வயதுக்கு உட்பட்ட குழந்தைகள் 'நீலமணிகளைக் கொண்டு' என்று கூறினார்கள். இக்கேள்வியைக் கேட்டதும் 9, 10 அல்லது 11 வயதுக் குழந்தைகள் நகைத்தனர். அவர்கள் எல்லா மணி

களும் மரத்தாலானவை என்ற புலன்காட்சியை மனத்தில் கொண்டிருந்தனர். இப்பருவத்தில் குழந்தைகள் மற்றவர்கள் எத்தகைய எண்ணங்களைக் கொண்டிருக்கிறார்கள் என்பதை ஊகித்து அறியும் திறனும் அடைகிறார்கள்.

பதினொன்று முதல் பதினைந்து வயது வரையிலான பருவத்தில் குழந்தைகள் புலன்கடந்த சிந்தனைத் திறன் பெறுகின்றனர். இப்பருவத்துக் குழந்தைகள் சிலரிடம் பல்வேறு விதப் பொருள்களைக் கொடுத்து அவற்றை மிதக்கக்கூடிய பொருள்கள், மிதக்காத பொருள்கள் என இரு பிரிவுகளாகப் பிரித்துக் காட்டுமாறு கூறப்பட்டது. பல்வேறு எடைகள் உள்ள கனசதுரங்கள், காகிதங்கள், மூடி. கூழாங்கற்கள் போன்ற பொருள்கள் இருந்தன. பியாசே குழந்தைகளிடம் ஒரு பாத்திரத்தில் நீரைப் பாதியளவு நிரப்பி, அதில் இப்பொருள்களைச் சோதனை செய்யுமாறு கூறினார். சில பொருள்கள் ஏன் மிதக்கின்றன மற்றவை ஏன் மூழ்கி விடுகின்றன என்று காரணம் கேட்டார். எட்டு ஒன்பது வயதுக் குழந்தைகள் அவற்றுள் வெவ்வேறு பொருள்களுக்குத் தனிப்பட்ட காரணங்களைக் கூறினார்கள். ஆனால் 10 வயதுக்கு மேற்பட்ட குழந்தைகள் ஆர்க்கிமிடிசின் மிதக்கும் விதியையும் தாம் சோதித்த பொருள்களையும் இணைத்து விடைகூறினார்கள். பொருள்களைப் பற்றிய புலன் கடந்த சிந்தனைத்திறன் 11 வயதுக்குப் பிறகு குழந்தைகளிடம் காணப்படுகிறது.

பியாசேயின் மேற்குறிப்பிட்ட சோதனைகளையொட்டி புரூனர் (Bruner) என்பாரும் பல சோதனைகளை நிகழ்த்தியுள்ளார். பியாசேயின் சோதனைகள் குழந்தைகளின் அறிவு வளர்ச்சியில் திட்டவட்டமான அறிதல்சார் வளர்ச்சி நிலைகள் காணப்படுகின்றன என்னும் உண்மையை உளவியல் ஆய்வாளர்களுக்குத் தெளிவாக்கின. ஆயினும், பியாசேயின் அறிதல்சார் வளர்ச்சி நிலைகள் எல்லாக் குழந்தைகளிடமும் ஒன்றுபோலக் காணப்படுவதில்லை. மேலும் வளர்ச்சி நிலைகள் பண்பாட்டுப் பொருளாதாரப் பின்னணிகளால் மாற்றம் அடையக்கூடும். பியாசேயின் வளர்ச்சி நிலைக்கருத்துகள் சீர்மைச் சூழ்நிலைக்குப் பொருந்துவனவாகும். கு.இரா.

**அறிதிறன்** என்பது ஒருவர் பேசுவதைப் பிறிதொருவர் விளங்கிக் கொள்ளும் பான்மையாகும். இது கேட்பவரை மட்டுமன்றிப் பேசுகிறவரையும் பொறுத்து அமைகிறது.

அறிதிறன் அளவு பேசுபவர் கேட்பவர் தொடர்பு, சூழல், செய்தி, அறிவு ஆகியவற்றின் அடிப்படையில் வேறுபடுகிறது. எடுத்துக்காட்டாக ஆங்கிலம் அல்லது இந்தியினை இரண்டாம் மொழியாக நன்கு பயின்ற ஒருவர் வானொலியில் ஒலிபரப்பப்படும் ஆங்கில அல்லது இந்திச் செய்தியினைப் புரிந்து கொள்ளுதல் தொடக்கநிலையில் அரிதாக உள்ளது. ஆனால் பயிற்சி, பழக்கம், ஈடுபாடு ஆகியவற்றால் அவர் அதைக் காலப்போக்கில், எளிதில் விளங்கிக் கொள்ள முடிகிறது. இதுபோன்று ஆங்கிலத் தாய்மொழியாளர் ஒருவர் நேருக்கு நேர் நின்று பேசினாலும் ஆங்கிலம் பயின்ற ஒருவன் தொடக்க நிலையில் அதனை நன்கு விளங்கிக் கொள்ளுவது அரிதாக உள்ளது.

அறிதிறன் பிறமொழிக் கல்வியிலும், பிறமொழி அறிவிலும் அளவிட்டு அறியக்கூடிய ஓர் ஆற்றல் ஆகும். பிறமொழியைப் பயிலும் ஒருவன் கல்வி நிலையத்தில் அல்லது தனியார் ஒருவரிடம் அதனைக் கற்று அறிந்து கொள்ளும் திறனில் பயிற்சி பெறுகிறான். பிறமொழியாளரோடு நாடோறும் உறவாடி உரையாடும் வாய்ப்பும் தேவையும் உடைய ஒருவன், தன் எண்ணங்களை அவர்களுக்கு வெளியிட்டு அவர்களின் எண்ணங்களைப் பெற்றுக் கொள்ளுகிறான். இங்குப் பிறமொழி அறிவு இன்றியமையாததாகிறது. ஏற்புத்திறன் (Receptive Control) வெளியிடுதிறன் (Productive Control) ஆகிய இருநிலைகளிலும் அல்லது ஏற்புத்திறனில் மட்டுமேனும் இருவருக்கும் பயிற்சி ஏற்பட்டால்தான் இது நிகழக்கூடியது. பிறமொழியைப் புதிதாகப் பயிலும் ஒருவனுக்கும், பிற மொழியாளனோடு தொடர்பு கொள்ளும் ஒருவனுக்கும் செய்தித் தொடர்பில் துணை நிற்பது அறிதிறனேயாகும். பிறமொழியைப் புதிதாகப் பயிலும் ஒருவனது அறிவின் அளவுக்கு அறிதிறனும், இருவேறுபட்ட மொழியாளர் தொடர்பு கொள்ளும் அளவுக்குத் தத்தம் அறிதிறனும் (Mutual Intelligibility) அடிப்படைகளாகின்றன.

ஒருவன் தன் தேவைக்கும் சூழலுக்கும் ஏற்ப ஏதேனும் பிறிதொரு மொழியைக் கற்கும் வாய்ப்பு ஏற்படுகிறது. அப்பிறமொழியில் அவனுக்குத் தொடர்பும் கேட்டல் பயிற்சியும், ஒலித்தல் – பேசுதல் பயிற்சியும் ஏற்படும் போது, படிப்படியே அவன்பால் அதனை அறியும் திறன் வளருகிறது. இதற்கடுத்த நிலையில் அவனுக்கு அம்மொழியின் ஒலியமைப்பு, ஒலி வேறுபாடு, இலக்கண அமைப்பு, சொற்கள், தொடர்கள், வாக்கியம், அம்மொழி பொருள் உணர்த்தும் நெறி ஆகியவற்றில் ஏற்படும் இடையறா ஈடுபாடும், தக்க பயிற்சியும் அறிதிறன் வளர்ச்சிக்குத் துணைசெய்கின்றன.

பிறமொழியைப் பயிலுகிறவர்களின் அறிதிறனைக் கண்டறியத்தக்க பல அறிதிறன் தேர்வு ஆய்வுகள் அவ்வப்போது ஆங்காங்கே கல்வி வல்லுநர்களா

லும் நிறுவனங்களாலும் நிகழ்த்தப் பெற்று வந்துள் ளன. ஒரு புதிய மொழியைக் கற்றுத் திறன் பெறுவ தற்கு எத்தகைய சூழல்கள், பயிற்சிகள், பயிற்சி யாளர், வாய்ப்புகள், பட்டறிவு ஆகியன தேவை என் பதை இவ்வகையான அறிதிறன் ஆய்வுகள் வாயி லாகக் கண்டறிந்துள்ளனர். மேலும் இவ்வாய்வுகள் புதுமொழி பயிலுகிறவர்களின் திறனை அறிந்து கொள்ளுவதற்கும், புதிய பயிற்சிகளை அளந்து அறிந்து தக்க முறையில் அளிப்பதற்கும் துணைநிற் கின்றன. எனினும் இவை இன்னும் சோதனை நிலை யில் (Experimental) உள்ளனவே தவிர நடைமுறைக் குத் தக்க தீர்வுகளைத் தருவனவாக இல்லை. எனவே அறிதிறன் ஆய்வுகள் தொடர்ந்து ஆங்காங்கே நடைபெற்று வருகின்றன.

சில சொற்பட்டியலைப் படிக்க அளித்து, அவற்றை அறிந்து கொள்ளும் திறனைக் கண்டறிந்து, வெவ் வேறு மொழி பேசுகிறவர் பிறிதொரு மொழியில் எந்த அளவுக்குப் படிப்படியே அறிதிறன் பெறுகின் றனர் என்பதை அறியலாம். மேலும், தன் தாய் மொழியாளரிடம் பிறமொழிப் பயிற்சி, தன் தாய் மொழியல்லாதாரிடம் அப்பயிற்சி பெறுதல் எந்த அளவுக்கு மொழியைக் கற்கிறவர்களின் அறிதிறனில் வேறுபாடு செய்கிறது என்பதைக் காண முயற்சி செய்யலாம். அடிப்படையில் ஒரே தாய்மொழியைப் பேசுகிறவர்கள் பிற மொழியைக் கற்பிக்கும்போது, அதே மொழியைப் பேசுகிற மாணவர்கள் எளிதாக விளங்கிக்கொண்டு விரைவில் வெளியிடு திறனையும் பெறுகிறார்கள். ஆனால், பிறமொழியைத் தாய் மொழியாகக் கொண்டவர் புதுமொழியைக் கற்பிக் கும் போது தொடக்க நிலையில் அம்மொழி அறி திறனில் சிக்கல் ஏற்படுகிறது.

பிறமொழியை நன்கு கற்றவர்களும் அம்மொழி யினைத் தாய் மொழியாகப் பேசுகிறவர்களோடு திடீரெனத் தொடர்பு கொள்ளும்போது தாங்கள் கற்றுத் தெளிந்தவற்றைக் கூடத் தெள்ளிதின் விளங் கிக் கொள்ளுவதில்லை. இதற்குத் தாய்மொழி யாளர் ஒருவர் பேசுகிற ஒலிப்புமுறை, ஒலியசை முறை, அவர் பயன்படுத்தும் சொற்கள் ஆகியவற்றில் தொடர்பும் பயிற்சியும் இல்லாமையே காரணம். ஒருவன் தனக்குப் பழக்கமான ஒன்றை எளிதாகப் புரிந்து கொள்ளுகிறான். அவன் அறிந்த ஒன்றை அவனிடம் பழகாத ஒருவர் ஒருமுறை சொல்லும் போது அவனுக்கு அதைப் புரிந்துகொள்ளுவதில் சிக்கல் உண்டு. ஆனால், அதை மறுபடியும் சொன் னால் அது அவனது அறிதிறனுக்கு எட்டுகிறது. எனவே பிறமொழிக் கல்வியில் அறிதிறன் என்பது ஈடுபாடு, பயிற்சி ஆகியவற்றின் அடிப்படையிலே அமைகிறது.

ஒரே மொழியைப் பேசுகிற இருவர் நாடோறும் வாழ்வின் நிகழ்வில் ஒருவரையொருவர் எளிதில் விளங்கிக் கருத்துத் தொடர்பு கொள்ளுதலைத் தத் தம் அறிதிறன் (Mutual Intelligibility) என்பர். அந் நிலையில் அவர்கள் இருவரும் தத்தம் அறிந்த தனி யார் மொழிகளைப் (Idiolects) பேசுகிறவர் ஆவர். இருவர் ஒருவரையொருவர் விளங்கிக் கொள்ள இயலாதாயின் அவர்கள் பேசுகிற தனியார் மொழி கள் தத்தம் அறிதிறனுக்கு உட்பட்டவை அல்ல.

குறிப்பிட்ட ஒரு காலத்தில் ஒருவரது முழுப் பேச்சுப் பழக்கம் அவரது தனியார் மொழி எனப் படும். இரு தனியார் மொழிகளைப் பேசுகிற இரு வர் தடையின்றித் தொடர்புகொள்ளமுடியுமானால், அவர்கள் ஒரே மொழியினைப் பேசுகிறவர் ஆவர். அவர்கள் ஒருவரையொருவர் விளங்கிக் கொள்ள இயலாதாயின் அவர்கள் பேசுகிற மொழிகள் வேறா னவை ஆகும்.

பல இயல்புகளில் ஒன்றுபட்ட பல தனியார் மொழிகள் அவற்றிடையே காணப்படும் பங்குபெறு இயல்புகளால் (Shared Features) ஒரு கிளைமொழி யாக (Dialect) இணைந்து அமைகின்றன. தம்முள் ஒத்த தனியார் மொழிகள் பலவற்றின் தொகுப்பு தான் கிளைமொழியாகவும் மொழியாகவும் (Language) அமைகிறது. இவை இரண்டும் அவற்றிடையே காணும் ஒப்புடைமை அளவில்தான் வேறுபடுகின் றன. ஒரு கிளைமொழியில் அடங்கும் தனியார் மொழிகளுக்குள் மிக நெருங்கிய ஒற்றுமை உண்டு. ஒரு கிளைமொழி அல்லது மொழியைப் பேசுகிறவர் களுக்குள் தத்தம் அறிதிறன் உண்டு. இரு வேறு மொழிகளையும் கிளைமொழிகளையும் பிரித்தறியக் கூடிய அடிப்படைகளுள் ஒன்று தத்தம் அறிதிறன் ஆகும். இருவேறு மொழிகளுக்குள் தத்தம் அறிதிறன் இராது. ஆனால், ஒருமொழியின் வெவ்வேறு கிளை மொழிகளுக்குள் தத்தம் அறிதிறன் மிகுதியும் உண்டு. கிளைமொழிகளுக்குள் பங்குபெறு மியல்புகள் மிகுதி யாகக் காணப்படுதலே இதன் காரணம். அதனைப் பேசுகிறவர்கள் தனியார் மொழிகள் எல்லாம் ஒரே பொது உள்ளிடத்தில் (Common Core) அமை கின்றன. இருவேறு மொழிகளைப் பேசுகிற இரு குழுவினர் ஒழுங்காகக் கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்ளுவர். கிளைமொழிகளுக்குள் தத்தம் அறி திறன் அளவு அவற்றின் ஒற்றுமையைப் பொறுத்த தாகும்.

இரு வேறுபட்ட மொழியினைப் பேசுகிறவர்கள் ஒருவரை யொருவர் புரிந்து கருத்துத் தொடர்பு கொள்ளுதல் இருமொழி வழக்கு (Bilingualism) எனப்படும். இருமொழி வழக்கு நிலை தேவையின் பொருட்டு நிகழும் தொடர்பு, ஈடுபாடு, பட்டறிவு

ஆகியவற்றால் ஏற்படுவது. இது பெரும்பாலும் அண்மையில் வழங்கக்கூடிய இருமொழியினருக்குள் அமைவதாகும். இங்கு நிகழ்கிற கருத்துப் பரிமாற்றத் தொடர்பும் தத்தம் அறிதிறன் அடிப்படையில் நிகழ்வதாகும். பொதுவாக இருவேறுபட்ட மொழியினருக்குள் தத்தம் அறிதிறன் எளிதாக அமைவதில்லை.

சில சூழல்களில் ஒருமொழியைப் பேசுகிறவர்கள் பிறிதொரு மொழியின் ஏற்புத்திறனைப் பெற்றிருப்பர். அவர்கள் அம்மொழியில் முழு அளவில் வெளியிடு திறன் பெறாதிருப்பினும் பிறமொழியாளர் ஒருவரோடு எளிதாகத் தொடர்பு கொள்ள முடிகிறது. அத்தகைய குறைநிலை இருமொழி வழக்கும் (Semi-bilingualism) தத்தம் அறிதிறன் அடிப்படையில் நிகழ்வதாகும்.

தத்தம் அறிதிறனை அளந்தறியப் பல ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன. இருவேறுபட்ட கிளைமொழியாளர் அல்லது மொழியாளர் ஒருவரையொருவர் எந்த அளவுக்குப் புரிந்து கொள்ளுகின்றனர் என்பதையும், அவர்கள் அத்திறனில் எந்த நிலையில் வேறுபடுகின்றனர் என்பதையும் அறியத்தக்கதாகச் சொல், வாக்கியம் ஆகியவற்றில் தேர்வு ஆய்வுகள் நிகழ்த்தலாம். ஆய்வாளர் தாம் அளவிட விரும்பும் கிளைமொழியின் அல்லது மொழியின் சிறு பகுதியைப் பதிவு செய்துகொண்டு, அதில் சில குறிப்பிட்ட கருத்துக் குறிப்புகளை (Points of contents) எண்ணிடங்களாகக் (Counts) குறித்துக் கொள்ளுகிறார்; பின்னர் ஒவ்வொரு கிளைமொழி அல்லது மொழி பேசுகிறவர்களைக் கேட்கச் செய்து அதில் அவர்களின் அறிதிறன் அளவினை எண்ணிடங்களின் அடிப்படையில் விழுக்காடு கணக்கிட்டுக் கொள்ளுகிறார். ஒருவர் பிறிதொரு கிளைமொழியின் எல்லாக் கருத்துக் குறிப்புகளையும் தெள்ளிதின் விளங்கிக் கொள்ளுதல் இயலாது என்பதை இவ்வகை ஆய்வு வெளிப்படுத்தும்.

நெருங்கிய ஒற்றுமை தத்தம் அறிதிறனுக்கு அடிப்படையாக அமைகிறது. எனினும் ஒருசில வேறுபாடு தத்தம் அறிதிறனை அறவே அகற்றி விடுவதில்லை. சில வேறுபாடுகள் இருப்பினும், சில- பங்குபெறு வியல்புகள் அடிப்படையில் ஒருவரையொருவர் விளங்கிக் கொள்ள முடியும்.

ஒரேமொழி பேசுகிறவர்களிடத்தில் காணப்படும் வேறு பாட்டிற்குக் காரணம், அவர்கள் மொழியைப் பேசும்போது ஏற்படும் வழிநிலை ஓசையும் (Channel Noice), தனிப்பட்ட ஒருவருடைய பேச்சில் ஏற்படும் ஒழுங்குமுறை ஓசையும் (Code Noise) ஆகும். இவ்வகை ஓசைகள் ஓர் எல்லை வரை கருத்துத் தொடர்பை இல்லாமல் செய்து விடுவதில்லை. எனினும் சில வேளைகளில் இவை கருத்துத் தொடர்பிற்கு இடையூறு விளைவிக்கும் தடைகளாக உள்ளன; அறிதிறனைக் குறைத்தும் விடுகின்றன.

தெளிவான தொடர்பை வழிநிலை ஓசை ஓரளவு குறைப்பினும் பேச்சில் பெரும்பான்மையான இயல்புகளில் திரிபு ஏற்படாமல் இருக்கும் வரை கருத்துப் பரிமாற்றத்தில் தடை ஏற்படுவது இல்லை. இருவரின் மொழியில் ஏற்படும் வரையறைக்குட்பட்ட புறஓசை (External Noise) ஒழுங்கு முறை எனப்படும். இரண்டு தனியார் மொழிகளில் இந்தப் புறவோசை இல்லாமல் அமைந்து வழிநிலை ஓசை மிகுதியாக இருப்பினும் தொடர்பு தடைப் படுவதில்லை. இரண்டு தனியார் மொழிகளுக்குள் ஒழுங்குமுறை ஓசை மிகுதியாக அமைந்தால் வழிநிலை ஓசை குறைவாக இருந்தால் மட்டுமே அவற்றிடையே தொடர்பு ஏற்படும். இவ்வற்றிற்கு எடுத்துக் காட்டாக நம் நாட்டுத் தொலைபேசியில் மிகுந்த வழிநிலை ஓசைக்கிடையே தன் தாய்மொழியைப் பேசுகிற ஒருவரை விளங்கிக் கொள்ள முடிவதனைக் கூறலாம். ஆனால், நாம் அறிந்த பிறமொழியைப் பேசுகிற ஒருவர் நம் முன்னிலையில் நின்று நேருக்கு நேராகப் பேசினாலும் அதை விளங்கிக் கொள்ளுவதில் சிக்கல் உள்ளது. இதற்குக் காரணம் அவர் பேச்சில் இடம் பெறும் ஒழுங்குமுறை ஓசையே ஆகும். இத்தகைய பிறமொழி பேசுகிறவர் பேச்சைத் தொலைபேசியில் கேட்டு அறிந்துகொள்ளுதல் அதனினும் அரிது. இவ்வாறாக, அறிதிறன் சில தடை ஓசைகளால் குறைபடுதலும் உண்டு. மோ.இ.

துணை நூல்கள் :

**Davies, Alen, E.D.** Language Teaching Symposium, Oxford University Press, Oxford, 1970.

**Hockett, C F.,** A Course in Modern Linguistics, The Macmillan Company, New York, 1958.

**Malmberg, Bertel, Ed.,** Manual of Phonetics, North Holland Publishing Company, Amsterdam, London, 1970.

**அறிதுயில்:** 'இப்னோ' என்னும் கிரேக்கச் சொல்லுக்குத் ''துயில்'' என்பது பொருள். அறிதுயில் என்பது, கருத்தேற்றல் முறையில் ஒருவரைத் துயிலச் செய்வதாகும். அறிதுயிலில் செலுத்தப்பட்டோரைத் (செல்வோரைத்) துயில்வோர் என்றும், துயில்நிலைக்குச் செலுத்துவோரைத் துயிற்றுவோர் என்றும் கூறுவர். ஆண்டன் மெசுமர் (Anton Mesmer) கி.பி. 18-ஆம் நூற்றாண்டின் இறுதியில் உரு

வாக்கிய மனோதத்துவச் சிகிச்சை முறையை 'மெசுமரிசம்' (Mesmerism) என்று கூறுவர். இந்த மருத்துவ முறைக்கு மெசுமரின் காலத்தில் வாழ்ந்த மருத்துவர்கள் போதிய வரவேற்பு அளிக்கவில்லை. பின்னர், இங்கிலாந்து நாட்டைச் சேர்ந்த சேம்சு பிரெய்டு (James Braid) என்பவர் இதனை 'அறிதுயில்' என்று முழுமையான உளவியல் அடிப்படையில் எடுத்துரைத்து விளக்கினார்.

பொதுவாக அறிதுயில் முறைக்குக் கைகள் பெரிதும் உதவியாயிருக்கின்றன. நினைக்கும் நினைவுகளைத் தெளிவாக மற்றவர்களுக்கு விளக்கிக் காட்டுங் கருவி கைகளேயாகும். இதற்குக் காரணம், நினைவுகள் பிறப்பதற்குக் கருவியாக இருக்கும் மூளையைக் கையோடு தொடர்பு படுத்துதற்குப் பல நரம்புகள் அமைந்திருப்பதே ஆகும். நினைவுகளை வெளிப்படுத்தும் பொழுது மூளை கைகளில் அசைவுகளைத் தோற்றுவிக்கிறது. எனவே, துயிற்றுவோர் தம் நினைவைக் கண்களின் வழியே செலுத்துதலோடு, கைகளின் வழியேயும் செலுத்தித் துயில்வோரை அவர்தம் உயிர்முனைத்து நிற்கும் இடங்களைத் தடவித் துயிலுறச் செய்யலாம்.

இத்தடவுதல், முதன்மையான இடங்களைத் தடவுதல், உடம்பை முன்னும் பின்னும் நீளத் தடவுதல், கீழ் நோக்கித் தடவுதல், மேல் நோக்கித் தடவுதல் என நான்கு வகைப்படும். இவற்றுள் முதன்மையான இடங்களைத் தடவுதலாவது நெற்றி, தலையின் உச்சி, பின்தலை, மார்பு, முதுகு முதலியவற்றை மெல்ல இனிதாய்த் தடவுதலாகும். அறிதுயிலில் செலுத்தப்படுவோர்க்கு இவ்விடங்களன்றி வேறிடங்களில் நோய் இருக்குமாயின் அவற்றையும் அவ்வாறு தடவுதல் வேண்டும். நீளத் தடவுதலாவது, உச்சந் தலையிலிருந்து தொடங்கிக் கீழ் இறங்கிக் கால் விரல்களின் முடிவு வரையில் முன்னாவது பின்னாவது தடவுதல். இது ஆழமான அறிதுயிலை வரவழைக்கவும், நோய் நீக்கவும் பெரிதும் பயன்படும். மூன்றாவது வகையான கீழ்நோக்கித் தடவுதலாவது அறிதுயில் வருவித்தற் பொருட்டு உள்ளங்கைகளைக் கீழ்நோக்கியபடி தடவுதலாகும். நான்காவது வகையான மேல் நோக்கித் தடவுதலாவது உள்ளங்கைகளை மேன்முகமாகத் திருப்பி உடலின் கீழிருந்து மேலே செலுத்துவதாகும். இது அறிதுயிலில் சென்றோரை அதனின்றும் எழுப்பி விழிப்பு நிலைக்குக் கொண்டு வருதற்பொருட்டுச் செய்யப் படுவதாகும்.

இந்த நான்கு வகைத் தடவுதல்களையும் துயில்வோரின் உடலை மருத்துவர் தொட்டோ தொடாமலோ செய்யலாம். சிலரைத் தொட்டால் கூச்சமும் அருவருப்பும் இயற்கையாக உண்டாகுமாதலின் அவருக்கு அறிதுயிலும் வாராமல் போகும். எனவே அத்தகையோரைத் தொடாமலே அவர் உடம்பிற்கு ஒரு விரற்கிடை அல்லது இரண்டு விரற்கிடை எட்டிய நிலையில் கைகளை நிறுத்தித் தொடாமல் தடவுதல் நலம் பயப்பதாகும்.

அறிதுயிலில் செலுத்தும் முறைகள் பல. ஒன்று துயில்வோராகத் தெரிந்தெடுத்த ஒருவரை ஒரு நாற்காலியில் இருக்கச் செய்து, உள்ளங்கையில் சிறிய ஒரு பளிச்சிடும் காசை வைத்து அதனை அவர் கண் இமைக்காமல் ஏழு, எட்டு நிமிடங்கள் உற்று நோக்கச் செய்தல் வேண்டும். பின், உச்சந்தலையிலிருந்து முழங்கால் வரை தொட்டோ தொடாமலோ கைகளால் கீழ் நோக்கிப் பலமுறை தடவித் துயிற்றுவோர் தம் இடக்கையின் பெரு விரலால் துயில்வோரின் நெற்றியில் புருவத்தின் நடுவிடத்தையும், தம் வலது கையின் பெருவிரலால் அவரது வலக்கையின் பெருவிரலையும் மெல்ல அழுத்த வேண்டும். துயில்வோர் தம் கண்களை மூடிக்கொள்ளும்படி கற்பித்து ஆழ்ந்த நீண்ட குரலில் "தூக்-கம், அயர்ந்-த தூக்-கம், நல்-ல-தூக்-கம்' என்று திருப்பித் திருப்பிச் சொல்லி நினைவை ஒருமுகப்படுத்தி அவரைத் தூங்க வைக்க வேண்டும்.

மற்றொரு முறையானது, துயில்வோரை ஒரு நாற்காலியில் வசதியாக அமரச் செய்து துயிற்றுவோர் அவர் எதிரில் நின்று கொண்டு தம் கண்களை அவர் உற்றுப் பார்க்கும்படி செய்து, தாமும் அவருடைய புருவங்களின் நடுவில் தம் பார்வையை நிறுத்தல் வேண்டும். அவ்வாறு இருவரும் ஐந்து நிமிடங்கள் உற்று நோக்கிய பின்பு, துயிற்றுவோர், துயில்வோர் பக்கத்தில் நின்று கொண்டு தம் இடக்கையால் அவர் பின் தலையைத் தாங்கி வலது கையை அவர்தம் நெற்றிமேல் மெல்ல தடவிக் கொண்டே 'தூக்-கம், நல்-ல-தூக்-கம்' என்று திருப்பித் திருப்பிச் சிறிது நேரம் சொல்லிய அளவிலேயே அவர் தூங்கத் தொடங்குவார்.

மற்றொரு முறையானது, துயில்வோரை வசதியான ஓர் இருக்கையில் அமரச் செய்து, பிடியுடன் கூடிய ஒரு சிறிய பளிங்கு உருண்டையைத் துயிற்றுவோர் தம் கையில் பிடித்துக் கொண்டு, அதனைத் துயில்வோருடைய கண்களுக்கு நேரே காட்டி அவர் அதனை உற்றுப்பார்க்கும்படி கற்பித்து அந்த உருண்டையை முதலில் மெல்ல வட்டமாகச் சுழற்றிய பின்பு வேகமாகச் சுழற்ற வேண்டும். இவ்வாறு இரண்டு, மூன்று நிமிடங்கள் சுழற்றிய பின், தாழ்ந்த ஒரே வகையான குரலில், "உன் கண் இரைப்பைகள் அலுப்படைகின்றன, உன் கண்கள் அயர்வடைகின்றன. இப்போது தெளிவாகப் பார்க்க முடியாது" என்று திருப்பித் திருப்பி மெல்லச் சொல்ல

வேண்டும். சிறிது நேரம் சொல்லிய அளவிலேயே அவர் தூங்கத் தொடங்குவார்.

பெரும்பாலும் ஒருவரை அறிதுயிலில் செலுத்துவதற்கு ஏறக்குறைய 25 நிமிடங்கள் போதுமானதாகும். இருபத்தைந்து நிமிடங்கள் முயன்றும் ஒருவரைத் துயிற்றுதல் முடியாதாயின் அன்றைக்கு அதை விடுத்து அடுத்த நாள் அவரைத் துயிற்ற முயல வேண்டும். இவ்வாறு இரண்டு, மூன்று நாட்கள் தொடர்ந்து முயன்றால் எத்திறத்தவரையும் துயிலச் செய்ய முடியும். ஒருமுறை ஒருவரை அறிதுயில் கொள்ளச் செய்து விட்டால் பிறகு அவரை அறிதுயிலில் செலுத்துதல் மிகவும் எளிது. அறிதுயில் பழகும் இடம், ஒலியோ, துயில்வோர் கருத்தைக் கவரத்தக்க பொருள்களோ இல்லாமல் மிக்க அமைதியாக இருத்தல் வேண்டும்.

ஒரே காலத்தில் பலரை அறிதுயிலில் செலுத்துவதைக் 'கூட்டு அறிதுயில்' என்பர். மனிதர் பல்வேறு வகையான இயல்புகள் உடையவராதலால் அவர்களைத் துயிலுறச் செய்யும் முறைகளும் பல்வேறு வகைப்படும்.

ஒருவருக்கோ பலருக்கோ பயன்படுத்தப்படும் அறிதுயில் மூவகைப்படும். அவை, 1. நினைவுத்துயில், 2. நினைவற்ற துயில், 3. நடைத்துயில் என்பனவாகும்.

நினைவுத்துயிலில் இருப்போர்க்கு நினைவு மாறாது. அத்தூக்கத்தில் நடப்பன எல்லாம் அது நீங்கியபின் நினைவுக்கு வரும். துயிற்றுவோர்க்கு இவர்களைத் தாம் கூறுகின்றவாறெல்லாம் நடக்குமாறு செய்ய முடியாது. ஆனால், உடம்பில் வலி உணர்வு இருக்காது.

நினைவற்ற துயிலில் இருப்போர்க்குச் சுற்றி உள்ள பொருள்களின் உணர்வு சிறிதும் இராது. வெளியில் தோன்றும் ஓசை எவ்வளவு பெரிதாய் இருந்தாலும் அதனைச் சிறிதும் கேளார். துயிற்றுவோரின் சொற்களையும் குரலொலியையும் தவிர வேறு எதுவும் கேளார்.

நினைவற்ற துயிலினும் ஆழ்ந்தது நடைத் துயிலாகும். நடைத் துயிலில் இருப்பவர்களின் கண்கள் மூடியிருந்தாலும் கண்ணால் கண்டு நடப்பவர்களைவிடத் திறமையாக அவர்கள் நடந்து செல்வர். தாண்ட இயலாத பள்ளங்களை எல்லாம் தாண்டி விடுவர். ஏறமுடியாத சுவர்கள், உயரமான இடங்கள் முதலியவற்றில் எல்லாம் உடம்பில் சிறிதும் காயம் படாமல் ஏறி இறங்கிவிடுவர். சுருங்கக் கூறின் இயல்பு நிலையில் அவர்களால் செய்ய இயலாத செயல்களை எல்லாம் நடைத் துயிலில் இருக்கும்போது செய்து விடுவார்கள்.

வேனிற் காலத்தில் காலை மாலைப் பொழுதுகளும், மழை, பனிக்காலங்களில் எல்லாப் பொழுதுகளும் அறிதுயில் வருவித்தற்கு ஏற்ற காலங்களாகும். வெப்பம் தெரியாமல் தண்மையாக இருக்கும் இடத்தில் நண்பகலாக இருந்தாலும் அறிதுயிலைச் செய்து பார்க்கலாம். உணவு அருந்திய பின்னும், பசியான நேரமும் அறிதுயிலுக்கு ஏற்ற காலங்கள் ஆகா. இவ்விரண்டிற்கும் இடைப்பட்ட காலமே பொருத்தமானதாகும்.

ஒருவர் உள்ளத்தில் தோன்றும் நினைவுகள் யாவும் அவர் கண்களில் குறிப்பாய்ப் புலப்படும். ஆதலின் கண்ணும் கருத்தும் ஒன்றுபட்டு நிற்கப் பெறுவோர்க்குப் பிறரைத் தம் வழியில் நிற்கச் செய்வது எளிது. கருத்தோடு கூடாத பார்வை எவ்வகைப் பயனையும் தராது. அறிதுயிலில் செல்வதற்குரிய இசைவு பலரிடம் காணப்பட்டாலும் சிலரை மட்டுமே அறிதுயில் நிலைக்குக் கொண்டு செல்லலாம். எனவே அறிதுயில் வருவித்தற்கு முதன்முதல் பழகுவோர், எளிதாக வருவித்தற்கு ஏற்றவரைத் தேர்ந்தெடுத்து அதனை அவரிடம் செய்து பழகுதல் வேண்டும். பின்னர் எத்தகையோரையும் அறிதுயிலில் செலுத்தும் ஆற்றல் மிகுந்து வரும்.

துயிற்றுவோருக்குரிய சில அறிவிப்புகள் வருமாறு: 1. ஒருவரை அறிதுயிலில் செலுத்துகிறபோது தொடக்கத்திலேயே அவரைத் தம் கட்டளைக்கு உடன்படுத்திக் கொள்ள வேண்டும். அதன் பிறகு அவரை அறிதுயிலில் செலுத்தவேண்டும்.

2. ஒருவர் அறிதுயிலில் இருக்கையில் நன்மையான சொற்களையே தெளிவாய், வலியுறுத்திச் சொல்ல வேண்டும். மறந்தும் தீமையான சொற்களைச் சொல்லக் கூடாது.

3. அறிதுயிலில் இருக்கையில் பின் நடக்க வேண்டியவற்றைச் செவ்வனே ஆராய்ந்து திருத்தமாகச் சொன்னால் அவர் அவ்வாறே சொன்னபடி செய்வார்.

4. மூவகைப்பட்ட அறிதுயில் நிலைகளுள் எதில் செலுத்தப்பட்டவராயினும் அந்நிலையில் இருக்குங்கால், அவர்களுக்குத் தோன்றுமாறு விளைவித்த இல்பொருள் காட்சிகளை (Hallucination) மறையுமாறு செய்து, அவரது உணர்வு எப்போதும் போல ஒழுங்கான நிலையில் உள்ளதெனவும் கற்பித்த பின்னர் அவரை விழிக்கச் செய்வதற்கு மறக்கக் கூடாது.

5. எவ்வகையான அறிதுயிலில் செலுத்தப் பட்டிருந்தாலும் அத்துயிலினின்று எழுப்ப வேண்டிய நேரத்தில் துயில்வோரை எழுப்பிவிடச் சிறிதும் மறக்கக் கூடாது.

துயில்வோரைக் குறிப்பிட்ட நேரம் தூங்க விட்டுப் பின்வரும் முறையில் துயிலெழுப்ப வேண்டும். பின்பு இரண்டு கைகளையும் நீட்டி, உள்ளங் கைகளையும் விரல்களையும் மேல் நோக்கித் திருப்பி அவரது காலிலிருந்தோ முழங்காலிலிருந்தோ மேல் நோக்கி முடிவரை தொட்டு அல்லது தொடாமல் பலமுறை தடவவேண்டும். பின்னர் அவர்தம் நெற்றி மீதும், கண் இரப்பைகள் மீதும் வாயினால் மெல்லிய காற்று உண்டாக ஊதி "விழித்துக் கொள்ளுங்கள்" என்று கூறினால் விழித்துக் கொள்வர். விழிக்கவில்லை என்றால் ஒரு நிமிடம் அந்நிலையிலேயே இருக்கவிட்டுப் பின் "கண்களைத் திறந்துபாருங்கள்" என்று கட்டளையிட்டால் அவர் விழிப்பார். அதுவும் இல்லை என்றால் "நான் இருபது எண்ணிய உடன் விழித்துக் கொள்ள வேண்டும்" எனக் கூறி "ஒன்று-இரண்டு-மூன்று ...." என ஆழ்ந்த குரலில் இருபது எண்ணியவுடன் கையைத் தட்டினால் விழித்துக் கொள்வர். பி.எஸ்.வி.

**அறிதுயில் மருத்துவம்** நெடுங்காலமாக உளநோய் மருத்துவர்களாலும் (Psychiatrists) உளவியலாளர்களாலும் உளநோயின் காரணங்களைப் பகுத்தறியவும் அதனைக் குணப்படுத்தவும் பயன்படுத்தப்பட்ட முறைகளுள் ஒன்றாகும். சில ஆண்டுகட்கு முன்பு அமெரிக்க மருத்துவக் கழகத்தின் சிறப்புக் குழு இம்முறையினைச் சிறந்ததெனப் பரிந்துரைத்துள்ளது.

அறிவியல் உலகிற்கு இம்முறை புதியதன்று. நம் நாட்டுப் பழம்பெரும் நூல்களிலும் இலக்கியங்களிலும் முனிவர் பலர் தாமாகவே அறிதுயில் நிலைக்குச் சென்றதாகவும், பிறரை இந்நிலைக்கு இட்டுச் சென்றதாகவும் குறிப்புகள் காணப்படுகின்றன. அறிதுயில் முறையினை முதல் முதலில் உளப்பிணிகளைத் தீர்ப்பதற்கு மருத்துவமுறையில் பயன்படுத்தியவர் மெசுமர் (Mesmer) என்ற பிரான்சு நாட்டு மருத்துவராவார். சேனே (Janet), சார்கோ (Charcot) போன்றவர்கள் இதனை உளநோயின் ஒரு கூறாகக் கருதினர். எனினும் இம்முறையின் மருத்துவப் பயன்களை உலகோர்க்கு உணர்த்திய பெருமை எரிக்சன் (Erikson) என்பவரையே சாரும்.

அறிதுயில் மருத்துவம் என்பது, ஒரு குறிப்பிட்ட உள மருத்துவ முறையைக் குறிப்பது எனினும் வழக்கில் இதனைப் பல நோக்கங்கள் கருதிப் பயன்படுத்துவாரும் உளர். சிலர் நீண்ட அறிதுயில் நிலையை ஏற்படுத்தி அன்றாட வாழ்வில் ஏற்படும் மன அழுத்தங்களால் உண்டாகும் உளக்கோளாறுகளைக் குணப்படுத்தலாம். வேறு சிலர், மறக்கப்பட்ட கடந்தகால நிகழ்ச்சிகளை நினைவுக்குக் கொண்டு வந்து, அதனால் உள, உடல் நோய்களைக் குணப்படுத்தும் முறையை அறிதுயில் மருத்துவம் என்று கூறுவர். ஒடுக்கப்பட்ட மனவெழுச்சிகளை (Repressed Emotions) வெளிக் கொணர்ந்து அதனால் மனநோய்களைக் குணப்படுத்துவதையும் அறிதுயில் மருத்துவம் என்று கூறுவர்.



நேரடியாக நோயின் அறிகுறிகளை (Symptoms) நீக்குவதும் அறிதுயில் மருத்துவத்தின்பாற்படும்.

ஒருவரை அறிதுயில் நிலைக்குக் கொண்டுவரப் பலமுறைகள் கையாளப்படுகின்றன. இவைகளுள் எரிக்சன் (Erikson) என்பவரின் கைதூக்கல் முறை (Hand Levitation), கண்களைக் குவித்தல் முறை (Ocular Fixation), கற்பனைக் காட்சி முறை (Visual Imagery), தசைகளை இறுக்கித் தளர்த்தல் (Tension-Relaxation) போன்ற பலமுறைகள் உண்டு. கிரோகர் (Kroger, 1963) என்பவர் இம்முறைகளை விளக்கமாகத் தம் நூலில் விவரித்துள்ளார். நடைமுறையில் இம்முறைகள் தேவைக்கு உகந்தாற்போல் மாற்றியமைக்கப்பட்டுப் பயன்படுத்தப்படுகின்றன. ஒவ்வொரு முறையிலும் நோயாளி அமைதியான சூழ்நிலையில் மருத்துவர் திரும்பத் திரும்பக் கூறும் சொற்களில் கவனம் செலுத்தத் தூண்டப்படுகிறார். இந்நிலையில் மருத்துவர் கூறுவதை நோயாளி மனத்தாலும் உடலாலும் அப்படியே ஏற்றுக்கொள்ளும் தன்மை பெறுகிறார். வெளி உலகத் தூண்டல் அனைத்தும் முழுமையாகச் செயல் இழந்துவிடுகின்றன. இந்நிலையில் இருப்பவர் மனம் ஒரே நோக்குடன் இருப்பதால் மருத்துவர் கூறும் செய்திகளை உற்றுக்கேட்கவும், அவற்றை மறுப்பின்றி ஏற்றுக் கொள்ளவும் முடிகிறது. இந்நிலையே அறிதுயில் நிலை (Hypnosis) எனப்படுகிறது. இந்நாளில் மனநோய் மருத்துவர்கள் பயன்படுத்தும் மயக்கப் பகுப்பாய்வையும் (Narcoanalysis) ஒருவகையான அறிதுயில் மருத்துவ முறை எனலாம். சோடியம் பென்டதால் (Sodium Pentathol) போன்ற மருந்துகளைப் பயன்படுத்தி, நோயாளிகளை அறிதுயில் நிலைக்குக் கொண்டுவருதல் மயக்கப் பகுப்பாய்வு எனப்படும்.

எல்லாவகையான மனநோய்கட்கும் இம்முறை பயனளிக்கும் என்ற கருத்து நிலவுகிறது என்றாலும், ஒரு சில வகையான நோய்களுக்கே இம்முறை முழுமையாக உதவுவதாகக் கண்டுள்ளனர். அவற்றுள் உளக்கோளாறுகள் (Neuroses), உடல்சார் உளநோய்கள் (Psychosomatic Disorders), தீராத வலிகள் (Intractable Pains), வேண்டாத பழக்கங்கள் (Addiction) ஆகியன குறிப்பிடத்தக்கவையாகும். உளப்பிணி (Psychosis), மனவளர்ச்சி குன்றியமை (Mental Retardation) போன்ற நிலைகட்கு இதன் பயன்கள் தெளிவாக்கப்படவில்லை. எக்குறைபாடா

யினும் முதலில் உளவழி மருத்துவர் (Psychotherapist) நோயாளிக்கு அறிதுயில் நிலையைக் கற்பித்து அவரது கவனத் திறனைப் பெருக்க முயல்வார். இதற்கு ஒரு முறை மருத்துவரைச் சந்தித்தாலே போதுமானது. பின்னர் நோயாளி உடலும் உள்ளமும் ஒன்றையொன்று சார்ந்தது என்றும், தன் உடலுக்குத் தானே பாதுகாவல் என்றும் உணர்கிறார். புகைபிடித்தல், மது அருந்துதல், அளவு மீறி உண்ணல் போன்ற பழக்கங்கள் தன் உடலின் அழிவுக்குக் காரணமாகின்றன என்ற தெளிவு பிறப்பதால் அப்பழக்கங்களை விட்டுவிடுகிறார். இப்பழக்கங்களின் தீங்குகளையும், விளைவுகளையும் உணர்த்துதல், உடலின்றி வாழ்வில்லை என்பதைத் தெளிவாக்குதல் போன்றவையும், நோயைத் தணிப்பதற்கு இன்றியமையாதனவாகும், மருத்துவர்கள் இவ்வாறான பழக்கங்களை அறிதுயில் நிலையில் அருவருக்கத்தக்க பொருள்களுடன் தொடர்பு படுத்தும் போது, அன்றாட வாழ்வில் நோயாளிக்கு மகிழ்ச்சியை ஏற்படுத்திய இப்பழக்கங்கள் அருவருப்பினை உண்டாக்குகின்றன. இதன் காரணமாக இத்தீய பழக்கங்களை இவர்கள் கைவிட்டுவிடுவர். தீய பழக்கங்களுடன் நேரடியாகப் போராடி நிறுத்துமாறு கூறுவதற்குப் பதில் இம்முறை நல்ல பலனைத் தருகிறது.

அறிதுயில் பகுப்பாய்வு (Hypnoanalysis) எனப்படும் முறையும் அறிதுயில் மருத்துவ முறையாகும். இம்முறையினைத் தடைப்பட்ட மன எழுச்சிகளை வெளிக்கொணரவும், குழந்தைப் பருவ நிகழ்ச்சிகளை நினைவு படுத்தி உணர்ச்சிகளை வெளிப்படுத்தவும் பயன்படுத்துகின்றனர். இதனை அறிதுயில் பின்னோக்கம் (Hypnotic Regression) என்று கூறுவர். ஆழ்ந்து அறிதுயில் நிலைக்குச் செல்லும் திறன் படைத்த பிணியாளர்களிடமே இம்முறைகளைப் பயன்படுத்த இயலுமாதலால், இதனைக் கையாளும் மருத்துவர்கள் மிகச்சிலரே.

இவையன்றித் தீராத வலிகட்கும் இம்முறை சிறந்ததாகக் கருதப்படுகிறது. ஆழ்ந்த அறிதுயில் நிலையை ஏற்படுத்தி வலி உள்ள உறுப்புகளில் உணர்வற்ற நிலையினை உண்டாக்குவதன் வாயிலாக வலிகளைப் போக்க முடிகிறது. பழங்காலத்தில் நம் நாட்டில் 80 விழுக்காடு அறுவை மருத்துவம் அறிதுயில் மருத்துவம் வழியாகச் செய்யப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது.

இரத்த அழுத்த நோய், இதய நோய்கள், குடிப் பழக்கம், ஆண்மைக் குறைவு, திக்குவாய், ஆத்துமா, தற்பாலுணர்ச்சி (Homosexuality) போன்றவைகளையும் இம்முறையினால் நீக்கலாம். எழுத்தாளர்கள், கவிஞர்கள், ஓவியர்கள், போன்றவர்கள் தங்கள் கற்பனைத் திறனை வளர்த்துக் கொள்வதற்கும் இம்முறையைக் கையாளுகின்றனர்.

இதனை ஒருவகைத் தூக்கநிலை என்றும், தன்னம்பிக்கை இல்லாதவர்களும் மனத்திறன் குறைந்தவர்களுமே இதற்கு உகந்தவர்கள் என்றும் நீண்ட நாள் கடைப்பிடித்து வரும்போது இது ஒருவரது மன நிலையைச் சீர்கெடச் செய்யும் என்றும் பல தவறான கருத்துகள் நிலவுகின்றன. தகுதிவாய்ந்த உளவழி மருத்துவரால் தக்க முறையுடன் பயன்படுத்தும் போது இது இடையூறில்லாத எளிய, சிறந்த முறையாகும். நோயுற்றோர் அந்நோயின் துன்பம் தெரியாமலே அதனின்று விடுபடவும், தீய எண்ணங்களை ஒருவர் உள்ளத்தில் இருந்து அகற்றவும் அறிதுயில் மிகவும் பயன்படுகிறது.

ஆழமான அறிதுயில் (Deep Hypnosis) மறதியைப் போக்குதற்கும், உடல்சார் கோளாறுகளின் மருத்துவத்திற்கும் போதைப் பழக்கம் உள்ளவர்கள் அப்பழக்கத்தில் ஈடுபடாமல் இருக்க மன வலிமையைப் பலப்படுத்துதற்கும் பெரிதும் பயன்படுகிறது.

அறிதுயில் மருத்துவத்தின் (Hypno Therapy) வாயிலாகச் சில வகையான மலச்சிக்கல் நோய்களையும் குணப்படுத்தலாம்.

ஆகசுட்டு போரல் (August Forel), அல்லூர் (Halluer), இலிப்மேன் (Liepmann), மேயர் (Mayer) போன்றவர்கள் பெண்குறிக்கசிவு (Vaginal Discharge), மாதவிடாய்க் கோளாறு (Dysmenorrhea) போன்ற சில மகளிர் நோய்களை அறிதுயில் மருத்துவம் வாயிலாகக் குணப்படுத்தியிருக்கிறார்கள். அறிதுயில் மருத்துவத்தினால் மகப்பேற்று வலி தெரியாமல் இருக்கவும் செய்யலாம்.

மேலும் சில தோல் வியாதிகள் (Skin Diseases), ஆத்துமா, உளக்கோளாறுகள் (Neurotic Disturbance), கிலிகள், தடிப்புகள் (Tics) திக்குவாய், உளக்கூறுமாற்றக் கோளாறு (Hysteria) போன்ற நோய்களையும் அறிதுயில் மருத்துவத்தின் வாயிலாகக் குணப்படுத்தலாம். சிறிய அறுவை மருத்துவத்தையும் அறிதுயில் வழியாக, மயக்க மருந்து கொடுக்காமல் செய்யலாம்.

அறிதுயில் சிகிச்சை குறுகியகாலப் பலனையே அளிக்கிறது என்று பெரும்பாலான உளவியல் வல்லுநர்கள் கருதுகின்றனர். ஆதலின் இக்காலத்தில் அறிதுயில் மருத்துவமுறை மருந்துசார் மருத்துவமுறையைப் போன்று பெருமளவில் பயன்படுத்தப்படுவதில்லை. போதிய முன்னேற்பாடு இன்றி, ஒருவரை இம்முறைக்குக் கட்டாயப் படுத்தலும், சந்தேக மனப்பாங்கு கொண்டவர்களுக்கும், உளச்சோர்வு

**சோர்வு (Depression)** உள்ளவர்களுக்கும் இம்முறையினைப் பயன்படுத்தலும் உகந்ததன்று. மேலும், மருத்துவருடன் ஒத்துழைக்க மனமில்லாதவர்கள், ஆர்வம் இல்லாதவர்கள், மனவளர்ச்சி குன்றியவர்கள், கவனக் குறைபாடுள்ளவர்கள், செவிடர்கள் ஆகியோருக்கும் இம்முறை ஏற்றதன்று. ந.ந.

துணை நூல்கள்:


Page, D. Jamse, Abnormal Psychology, Tata Mc Craw Hill Publishing Co., New Delhi, 1976.

Kroger, W.S., Clinical and Experimental Hypnosis, Lippincot Philadelphia, 1963.

Welberg, W.S., Medical Hyponosis, Curune & Stratton, New York 1958.


*அறியொணாமைக் கொள்கை:* உலகில் தோன்றிய காலந்தொட்டு, தன்னைச் சூழ்ந்து எழும் இயற்கை நிகழ்ச்சிகள் பற்றியும் பின்னர்த் தன் வாழ்க்கையின் அடிப்படை உண்மை இயல்புகள் பற்றியும் மனிதன் ஆராய்ந்துணர முயற்சி மேற்கொண்டு வந்துள்ளான். இம்முயற்சியின் விளைவாக எழுந்தவை தத்துவமும் வேறு பல அறிவியற் பிரிவுகளுமாம். சமயக் கோட்பாடுகளும் இதன் விளைவுகளாம். புற உலகின் இயல்புகளையும் இவற்றின் பின்னுள்ள இயற்கை விதிகளையும் கண்டறிதலில் பெருமளவு விரைவான முன்னேற்றம் எழுந்து, அறிஞர்களிடையே அறிவியல் துறைகளில் கருத்தொற்றுமை காணப்படுகிறது. ஆனால், மனித வாழ்க்கையின் அடிப்படைச் சிக்கல்களை ஆராய்ந்துணர்வதில் தத்துவ அறிஞர்களிடையே கருத்து வேற்றுமை தொன்மைக் காலந் தொடங்கி இன்று வரை இருந்து வந்துள்ளதனைத் தத்துவ வரலாறு தெளிவுபடுத்துகிறது. இது மேலை நாடுகளுக்கு மட்டுமன்றிப் பாரத நாட்டுச் சிந்தனை வளர்ச்சிக்கும் பொருந்துவதாகும். மனித இயல்பினை ஆன்மிக அல்லது சடப்பொருள் நோக்கினின்று விளக்க முற்படும் எதிரான இரு கோட்பாடுகள், தொடர்ந்து தத்துவ உலகில் மாறி மாறிச் செல்வாக்குப் பெற்று வந்துள்ளன. மேலும், மனிதனை உள்ளடக்கிய உலக இயல்பினை ஒருமை, இருமை அல்லது பன்மை நோக்கினடிப்படையில் அத்தத்துவ அறிஞர்கள் தம் கொள்கைகளுக்கொப்ப விளக்கியுள்ளார்கள். தத்துவ அணுகு முறைகளில் காணப்படும் இம்முரண்பாடு மனித வாழ்க்கையின் தலையாய சிக்கல்களை எதிர்நோக்குவதிலும், இறைக்கருத்து, மனித நடத்தையின் கட்டுப்பாட்டற்ற நிலை, ஆன்மாவின் அழிவற்ற தன்மை போன்றவற்றிலும் தெளிவாகவும் ஆழ்ந்தும் வெளிப்பட்டது. இவ்வடிப்படைச் சிக்கல்கள் சமயக் கொள்கைகளுடன் தொடர்புடையனவாதலின், பல்வேறு சமயக் கருத்துகளின் செல்வாக்கு இச்சிக்கல்களை ஆராய்தலில் மிகுந்து காணப்பட்டது. சிறப்பாக, மேலை நாடுகளில் கிறித்தவ சமயக் கருத்துகளின் அடிப்படையிலேயே இத்தகைய சிக்கல்களுக்கு விடைகாணத் தத்துவ அறிஞர் பலர் முற்பட்டனர். இவ்விடைகளை அறிவின் அடிப்படையில் எப்பாடுபட்டேனும் உறுதிப்படுத்தும் முயற்சியாகத் தத்துவ ஆராய்ச்சி பெருமளவு திசை மாறிச் செயற்பட்டது. இத்தகைய தெளிவற்ற நிலைக்கு ஒரு மாற்றாக 'அறியொணாமைக் கொள்கை' (Agnosticism) எழுந்ததெனலாம். தத்துவ அறிஞர்களிடையே காணப்பட்ட முடிவற்ற, தேவையற்ற கருத்துவேறுபாடுகளுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கும் முயற்சியாகவும் அறியொணாமைக் கொள்கை விளங்கியது.

தன் உடனடிப் புலனனுபவங்களுக்கப்பாற்பட்ட எவற்றையும் மனிதனால் அறிதல் இயலாது என்பது அறியொணாமைக்கொள்கையின் மையக் கருத்து. இக்கொள்கையினைக் குறிக்கும் ஆங்கிலச் சொல்லான 'Agnosticism' என்பதனை, கி.பி. 1869-ஆம் ஆண்டு தாமசு அக்சுலி (T.H. Huxley) என்ற ஆங்கில அறிஞர் உருவாக்கிப் பயன்படுத்தினார். ஆன்மிகப் பண்புகளெனப் படுவனவற்றைச் சார்ந்து எழும் இறைவன், ஆன்மா, இறத்தலுக்குப் பின்னர் மனிதன் நிலை போன்றனவற்றை ஆராய்ச்சி வழியே அறிந்ததும் இல்லை; இனி அறிவதும் இயலாது என்பது இவர் கருத்து. இதனைச் சுட்டிக்காட்ட இச்சொல்லினை இவர் உருவாக்கினார். இப்பெயர் புதிதெனினும் இத்தகைய கருத்து, பண்டைக் காலந்தொட்டே ஒரு சில அறிஞரிடையே இருந்து வந்துள்ளது. கிரேக்கத் தத்துவ அறிஞர்களுள் ஒரு சிலர் இவ்வாறு கருத்துக் கொண்டிருந்தனர் என்பதற்கு வரலாற்றுச் சான்றுகள் உள. தத்துவ மேதை சாக்ரட்டீசு என்பாரது ஆராய்ச்சி நோக்கினை இத்தகையது என்று கூறுவோரும் உள்ளனர். இந்திய நாட்டில், பௌத்த சமயத்தின் தொடக்க நிலை அறியொணாமை நோக்கினைச் சார்ந்திருந்தது எனலாம். கிரேக்க நாட்டின் அதீனிய நகர ஆலயம் ஒன்றில் காணப்பட்ட 'அறியவொண்ணா இறைவன்' (Agnosto Theo) என்ற கிரேக்க மொழிச் சொற்களின் அடிப்படையில் அக்சுலி, தம் கொள்கைக்கு ஆங்கிலத்தில் இப்பெயரிட்டார். மற்றும், இடைக்காலத்தில் (Middle Ages) ஐரோப்பிய நாடுகளில் உலவிய 'நாசுடிக்சு' (Gnostics) எனப்பட்ட தீவிர கிறித்தவ சமயப் பிரிவின் கொள்கைக்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் அறியொணாமைக் கொள்கை ஆங்கிலத்திலே (Agnosticism) எனப்பட்டதும் பொருத்தம். இத்

தீவிரப் பிரிவினர் இறைத் தத்துவம் பற்றித் தமக்குத் தனிப்பட்ட தெளிவுணர்ச்சி உள்ளது என்றனர். இதற்கு எதிர்ப்புத் தெரிவித்தோர், மனிதனது அறிவு அவனைச் சூழ்ந்துள்ள, அவன் புலன்களைப் பாதிக்கும் உலகினைப் (Phenomenal World) பற்றி மட்டுமே எழக்கூடியதென்று குறிப்பிட்டனர். இவ்வாறு கூறுவது, புலன்களுக்கப்பாற்பட்டதும் அவற்றின் மூல காரணமாக அமைவதுமான ஓர் உண்மையுலகினையோ 'ஆன்மா' போன்ற அருவக் கருத்துகளையோ மறுப்பதன்று என்றும் இவ்வெதிர்ப்பாளர் குறிப்பிட்டனர். செருமன் நாட்டுத் தத்துவ அறிஞர் இம்மானுவெல் காண்ட்டு (Immanuel Kant) என்பாரின் கருத்துகள் அறியொணாமைக் கொள்கையின் நிலையைத் தெளிவுபடுத்துவனவாம்.

அறியொணாமைக் கொள்கை, சடப்பொருட் கோட்பாட்டினையோ (Materialism) இறையின்மைக் கோட்பாட்டினையோ (Atheism) ஆதரிப்பதாக அமையாது என, காண்ட்டு திட்டவட்டமாகக் கூறியுள்ளார். இறைவன், ஆன்மா போன்றன பற்றி நமக்கு இதுவரை அறிவின் அடிப்படையில் ஏதும் தெரியாதென்றும் இனியும் இவை போன்றன பற்றி ஆராய்ந்துணர்தல் இயலும் என நம்புவதற்கிடமில்லை என்றும், குறிப்பிட்ட சில வரையறைகளுக்குட்பட்டுச் செயற்படும் மனித சிந்தனை, எல்லைகளற்றவை பற்றிப் புரிந்துகொள்ள அவனுக்கு உதவாதென்றும் காண்ட்டு கருத்துத் தெரிவித்துள்ளார். அறியொணாமைக் கொள்கையானது இறைக்கருத்துப் போன்றவற்றை மறுப்பதும் இல்லை; ஏற்பதும் இல்லை. அவற்றை ஆராய்ச்சியினின்றும் ஒதுக்கி வைக்கிறது.

அறியொணாமைக் கொள்கை, சிறப்பாக 18, 19-ஆம் நூற்றாண்டுகளில் முன்னிலையிற் காணப்பட்டது. அக்சுலி, திண்டல் (Tyndall), இசுபென்சர் போன்ற அறிஞர்தம் முயற்சியின் விளைவாக, ஐரோப்பிய நாட்டு மக்களிடையே செல்வாக்குப் பெற்றது. இசுபென்சரின் 'ஆதாரக் கோட்பாடுகள்' (First Principles) என்னும் நூலும், திண்டலின் பெல்பாசுடு நகரச் சொற்பொழிவுகளும் (Belfast Lectures) அறியொணாமைக் கொள்கைக்கு ஓர் உறுதிப்பாட்டினை அளிப்பனவாக அமைந்தன. மரபு வழி வந்த யூத-கிறித்தவ இறைக்கோட்பாடுகளையும் இதேபோன்ற இறையிலிக் கோட்பாட்டினையும் ஏற்கவியலாது என்பதனை 'அறிவியலும் கிறித்தவ மரபும்' என்னும் தம் நூலில் அக்சுலி குறிப்பிட்டுள்ளார். அறியொணாமைக் கொள்கைக்கு இவர் தரும் விளக்கம் வருமாறு:

"தான் ஏற்கும் எக்கருத்திற்கும் தருக்கத்தின் அடிப்படையிலமையும் சான்றுகளை எடுத்துக்கூற இயலாவிடின் அதனை ஒருவன் உண்மையெனக் கொள்வது தவறு". ஏற்கத் தக்க சான்றுகள் இல்லாவிடினும் சமயக் கருத்துகளை ஒருவன் ஏற்க மறுப்பது பாவச்செயலெனக் கூறுகிறார். வாழ்க்கையின் அடிப்படைச் சிக்கல்கள்பற்றி இறுதி முடிவுகளெடுத்தலைத் தள்ளிப் போடவேண்டும்; ஏனெனில் இத்தகைய முடிவுகளை எடுத்தலுக்குத் தேவைப்படும் சான்றுகளனைத்தும் நமக்குக் கிடைக்கவில்லை. இவை கிடைத்தலும் அரிது என்கிறார் இவர். அறியொணாமைக் கொள்கை, மரபு வழி ஏற்கப்பட்ட கிறித்தவ சமயக் கருத்துக்களை எதிர்க்கவும், பின்னர்ச் சார்லசு தார்வின் என்பாரது மனிதத்தோற்றம் பற்றிய படிவளர்ச்சிக் (Evolution) கருத்திற்குத் துணை செய்யவும் பயன்படுத்தப்பட்டது. இக்கொள்கையின் சமய எதிர்ப்பு காலப்போக்கில் இதனை ஆதரிப்போரின் எண்ணிக்கையைக் குறைக்கத் தொடங்கியது. எனவே, இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இக்கோட்பாட்டினை ஏற்போர், தம்மை 'ஐயுறவுக் கொள்கையினர்' (Sceptics) எனக் கூறிக் கொள்ளத் தொடங்கினர். இரசல் (Russell) போன்ற சிறந்த தத்துவப் பேரறிஞர்களும் ஐயுறவுக் கொள்கையினராகவே விளங்கினர். சில தத்துவ ஆராய்ச்சியில், உண்மையறிவு பெறுதலில் சான்றுகள், கருத்துகளை ஒப்புநோக்குதல் ஆகியவற்றை இன்று இக்கொள்கையினர் வலியுறுத்தி வருகின்றனர். இன்று எழுந்துள்ள தருக்கச் சார்புள்ள 'நேர்காட்சிக் கொள்கை' (Logical Positivism) போன்றன அறியொணாமைக் கொள்கையினின்றும் தோன்றியவையேயாகும். இக்கொள்கையும் சிந்தனைக்கப்பாற்பட்ட வாழ்க்கையின் அடிப்படையான வினாக்களுக்கு விடைகாண முற்படுவது பயனற்றது என்பதனை ஏற்கிறது. மக்களிடையே திறந்த உளப்பாங்கினையும் சிக்கல்களை அறிவியல் நோக்குடன் அணுகுவதன் தேவையினையும் பரப்புவதில் அறியொணாமைக் கொள்கை உதவியுள்ளது என்பது மறுக்கவியலா உண்மையாகும். எஸ்.ச.

**அறிவனார்** பஞ்சமரபு என்னும் நூலினை இயற்றியவர். அடியார்க்கு நல்லார் தாம் எழுதிய சிலப்பதிகார உரையில், அறிவனாரையும் அவர்தம் நூலான பஞ்சமரபினையும் குறிப்பிட்டுள்ளார். எனவே, இவர்தம் காலம் அடியார்க்கு நல்லார் காலமாகிய கி.பி. 13-ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டதாகும். அடியார்க்கு நல்லார் கடலாடு காதையில் ஒன்பது வகை இசைப்பாக்களைக் கூறும்போது ஒரு வெண்பாவைப் பஞ்சமரபிலிருந்து மேற்கோளாகக் காட்டி, அதன் ஆசிரியர் அறிவனார் என்பதனையும் குறிப்பிட்டுள்ளார்.

**அறிவாய்வு**: மனிதன், உடல் உள்ளம் ஆகிய இரு கூறுகள் இணைந்து செயற்படும் ஓர் உயிரியாகக் கருதப்படுகிறான். உள்ளம் என்று ஒன்று இருத்தலை அதன் செயல் விளைவுகளான பட்டறிவுகளின் (Experiences) வாயிலாக உணர்தல் கூடும். உள்ளப் பட்டறிவுகள் அடிப்படையில் மூவகைப்பட்டவை. அவை அறிதல், எழுச்சி, முயற்சி ஆகியவற்றினைச் சார்ந்து அமைகின்றன. அறிதலைச் சிந்தனை (Thinking) எனவும் குறிப்பிடுவர். சிந்தனைப் பட்டறிவின் வழியே நமக்கு அறிவு கிட்டுகிறது. சிந்தனை இரு நிலைப்படுவதாகும். புலன்காட்சி (Perception) வழியே பெறப்படும் உடனடி அறிவு, சிந்தனையின் அடிப்படை நிலையின் விளைவாகும். முடிவு செய்தல் (Judging), அறிவாய்வு (Reasoning) போன்றன சிந்தனையின் உயர்நிலையினைக் குறிப்பனவாம். இவ்வுயர் நிலைச்சிந்தனையின் சிந்தனைச் செயல்களில் பொதுமைக் கருத்துகள் (Concepts) உருவாக்குதலுக்கும் சிந்தனை தேவைப்படும். ஒரேவகைப்பட்ட பலவற்றை உற்றுநோக்கி, அவற்றின் சிறப்பு, பொதுப்பண்புகளைத் தனிப்படுத்தி இணைத்து, இப்பண்புகளின் ஒருங்கிணைப்பினை மொழிச் சொல் ஒன்றினால் குறிப்பிடுவது, பொதுமைக் கருத்து எழுதலின் அடிப்படையாகும். பொதுமைக் கருத்துகள் பொருள்கள் பற்றியனவாகவோ பண்புகள் அல்லது தொடர்புகள் பற்றியனவாகவோ இருக்கலாம். பல பொதுமைக் கருத்துகள், படிப்படியாக விரிவடைந்து மேல் நிலைகளுக்குச் செல்பவையாகவும் அமையும். 'பசு' என்னும் பொதுக் கருத்தைவிட 'விலங்கு' என்பது விரிவானது, 'உயிரி' என்பது இதனைக் காட்டிலும் விரிவானது. இத்தகைய பொதுமைக் கருத்துகளின்றிச் சிந்தனையின் உயர்நிலைச் செயல்களான அறிவாய்வு போன்றவை பயனுள்ள வகையிலும் சிக்கனமான முறையிலும் இயங்கவியலா. மற்றும் அறிவியல், தத்துவம் போன்ற துறைகளின் வளர்ச்சிக்கு இவ்வகைக் கருத்துகள் இன்றியமையாதவை. முடிவு செய்தலிலும் அறிவாய்தலிலும் இப்பொதுமைக் கருத்துகள் தொடர்பு படுத்தப்பட்டு; இத்தொடர்பின் அடிப்படையில் புதிய அறிவு பெறப்படுகிறது. முடிவு செய்தலில் இணைக்கப் பெறும் கருத்துகள், காட்சிப் பொருள்களைக் குறிப்பனவாகவோ (இவ்வாற்றில் வெள்ளம் வந்துள்ளது), கருத்துப் பொருள்கள் பற்றியனவாகவோ (நேர்மை நன்மை பயக்கும்) இருக்கக் கூடும்.

சிந்தனையின் உயரிய நிலையாகக் கருதப்படுவது அறிவாய்வு அல்லது 'ஆய்வு' எனப்படும். உள்ளச் செயல்களிலே சிக்கல் மிகுந்ததும், கடினமானதுமாகிய புதிய புதிய அறிவினை மக்களுக்குத் தருவதால் சிறப்பு மிகுந்ததாக அறிவாய்வுச் செயல் உளவியலறிஞர்களால் கருதப்படுகிறது. இதன் இயல்பு பற்றி, ஆழ்ந்து ஆராய்ந்த சான் தூயி (John Dewey) என்னும் அறிஞர் இச்செயலினைச் 'சிந்தனைச் செயலின் முழுமையானஉரு' எனக் குறிப்பிடுகிறார். ஏனெனில் இதில் பிற சிந்தனைச் செயல் முறைகளான புலன் காட்சிச் சிந்தனை, முடிவு செய்தல் போன்றன யாவும் பயன்படுத்தப்படுகின்றன.

அறிவாய்வு எனப்படும் உயர் உளச்செயல், மக்கள் தம் கருத்துகளைப் புதிய முறையில் அமைத்து அப்புது அமைப்பின் துணைக்கொண்டு தம்மை எதிர்நோக்கியுள்ள ஒருபுதிர் அல்லது சிக்கலுக்குத் (Problem) தீர்வு காண்பதாகும் என்று சான் தூயி விளக்கம் தருகிறார். அறிவாய்வின் இறுதி நோக்கம் சிக்கலுக்கு விடை காண்பதாகும். இச்செயல்முறை பகுத்தறிதல் (Deduction), தொகுத்தறிதல் (Induction) என வகைப்படுத்தப்படும். அனுமானித்தலில் (Inference) இருவகைகளும் இணைந்து காணப்படும். பகுத்தறிதல், ஏற்கெனவே அறிந்துள்ள பொது விதியொன்றினை அதனுள் அடங்கும் ஒரு கூற்றுடன் (Proposition) தொடர்பு படுத்தி, ஒரு முடிவினைப் (Conclusion) பெறுதலாகும். தொகுத்தறிதல், தனிப்பட்ட பல கருத்துகளைத் தொடர்புபடுத்திஆராய்ந்து, இவை யாவற்றுக்கும் பொதுவான ஒரு விதியினை வருவித்தலாகும். அறிவாய்வுச் செயலில் அடங்கிக் காணப்படும் பல்வேறு படிகளில் இவ்விரண்டு வகைச் சிந்தனை இயங்கு முறைகளும் இருத்தலைக் காணலாம்.

அறிவாய்வுச் செயலின்பின் ஏதாவது ஒரு நோக்கம் இருத்தல் தெளிவு. பல்வேறு சிக்கல்களுக்குத் தீர்வுகாணும் சிந்தனைக் கருவியாக இருத்தலோடு, அறிவாய்வு பலபோது புதிய அறிவினைப் பெற உதவுவதாகவும் உள்ளது. ஏனெனில், இச்செயலில் ஈடுபடும்போது பழைய கருத்துத்தொகுப்புகளினின்றும் வேண்டுவனவற்றைத் தேர்ந்தெடுத்தலுடன் நின்றுவிடாமல், மக்களை எதிர்நோக்கியுள்ள சிக்கல்களுக்கு விடைகாண உதவத்தக்க புது விவரங்களையும் இவற்றினிடையே புதுத்தொடர்புகளையும் ஒழுங்கான முறையில் தேடியறிய முற்படவேண்டும். ஒருவன் பெற்றுள்ள அறிவாய்வுத் திறனின் அளவு அவனது பொது நுண்ணறிவின் (General Intelligence) அளவினைப் பொறுத்து அமையும் என்பர் உளவியலறிஞர். நுண்ணறிவின் தன்மையினை ஆராய்ந்த இசுபியர்மேன் (Spearman) என்பார் குறிப்பிடும் 'தொடர்பு காணல்' (Education of Relations), 'தொடர்புப் பொருள் காணல்' (Education of Correlations) ஆகிய இரு செயல்களும், அறிவாய்வில் காணப்படுகின்றன. நுண்ணறிவின் அளவில்

மனிதரிடையே காணப்படும் வேற்றுமை அறிவாய்வுச் செயல்களிலும் காணப்படுகிறது.

அறிவாய்வு, சிக்கல்களுக்கு விடைகாண்பதற்கு உதவும் உயர் சிந்தனைச் செயல். மக்கள் வாழ்க்கையில் அவ்வப்போது பல சிக்கல்கள் எழுகின்றன. இத்தனிப்பட்ட சிக்கல்கள் மட்டுமன்றி, அறிவியலறிஞர்களின் ஆராய்ச்சியில் பல அடிப்படைப் பொதுச் சிக்கல்களும் காணப்படுகின்றன. மிக எளிய சிக்கல்களைத் தீர்க்க அறிவாய்தல் பயனற்றது. இவ்விரண்டு நிலைகளுக்கும் இடைப்பட்ட நிலையிலான சிக்கல்கள் எழும்போதும் ஒருவன் அறிவாய்தலில் ஈடுபடநேரிடுகிறது. சிக்கல்களின்றி அறிவாய்தல் எழாது. சிக்கல்களிலிருந்தே அறிவாய்தல் செயல் தொடங்குகிறது. சிக்கல்கள் அறிவாய்தலுக்குத் திட்டமான திசைப்பட்ட ஒரு பாதையை அமைத்துத் தருகின்றன. அறிவாய்தலில் புது வழித் தேடல், பொருள் காணல், சீர்தூக்கிப் பார்த்துத் தேர்வு செய்தல், படைப்புப் போன்றன யாவும் இணைந்து காணப்படுகின்றன.

அறிவாய்தலின் தன்மை பற்றிச் சான் தூயி என்பார் தந்துள்ள விளக்கம் தெளிவானதாகவும் பல அறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டதாகவும் உள்ளது. மேலும், இவ்விளக்கம், அறிவாய்தல் திறன் வளர்ச்சிக்கு உதவத்தக்க உளப்பயிற்சியை இளைஞர்களுக்கு அளித்தற்கும் பயனுள்ளதாக அமைந்துள்ளது எனப் பல கல்வியாளர்கள் கருதுகின்றனர். அறிவாய்வில் ஐந்து சிறந்த நிலைகள் (Steps) காணப்படுகின்றன என்கிறார் சான் தூயி. புதிர் அல்லது சிக்கலின் தன்மையினை உணர்தல் (Cognising the Problem), இதற்கு விடைகாண உதவக்கூடிய விவரங்களைத் தேடித் தொகுத்தல் (Collecting, organising and evaluating relevant data), இவ்விவரங்களினின்றும் புதிருக்கு விடைகளாக அமையக்கூடிய கருதுகோள்களைத் தோற்றுவித்தல், (Discovering relationship and Formulating hypotheses), இவற்றைச் சரிபார்த்து உண்மையறிதல் (Evalution and Verification), இறுதியில் உண்மையென்றறிந்த கருதுகோளினைப் பயன்படுத்திப் புதிருக்கு விடைகாணல் என்பன மேற்கூறிய ஐவகைச் சிறந்த நிலைகளாம்.

புதிரின் இயல்பினை உணர்தல், அறிவாய்வின் தொடக்கப்படியாகும். அறிவாய்வுச் செயலினைத் தொடங்கிவைக்கத்தக்க புதிர் அல்லது சிக்கல் மக்களை ஏதோ ஒருவகையில் பாதிப்பதாகவும், அவர்களின் தேவைகள் நலன்கள் ஆகியவற்றுடன் ஒரு சிறிதேனும் தொடர்புடையதாகவும் இருத்தல் வேண்டும். தமக்குத் தொடர்பற்றவற்றிற்கு அறிவாய்வுச் செயலின் வழியே விடைகாண எவரும் முற்படமாட்டார். புதிர்களின் இயல்பினை அறிதல் ஒருவன் ஏற்கெனவே பெற்றுள்ள பின்னணியறிவினையும் பழைய பட்டறிவுகளையும் பொறுத்திருக்கும். இவை பெருகப் பெருக, முன்னர் அவன் உணராத பல சிக்கல்களை உணர்ந்து இவை பற்றி அறிவாய்வு செய்யத் தொடங்குவான். எவ்வளவு தெளிவாகச் சிக்கலின் இயல்பினை அவன் உணர்கிறானோ அந்த அளவுக்கு அறிவாய்வின் விளைவும் பயனுள்ளதாக இருக்கும். விவரங்களைத் தேடித் தொகுத்தல் அறிவாய்வின் அடுத்த நிலையாகும். தேவைப்படும் விவரங்களிற் சில முன்னரே அறிந்துள்ளனவாக இருக்கும்; இவற்றுடன் மேலும் புதிய விவரங்கள் தேவைப்படின் இவற்றைத் தேடிப் பெறலாம். இவையாவற்றையும் ஒழுங்குபடுத்திக் கொள்ளலாம். அறிவாய்வுச் செயலின் அடுத்த நிலை மிகச் சிறந்ததொன்றாகும். இதனைக் 'கருதுகோள்களை உருவாக்குதல்' என்பர். பெற்றுள்ள விவரங்களிடையே புதிய தொடர்புகளைக் கண்டறிதலின் வழியே சிக்கலுக்கு விடைகளாகவமையக் கூடிய கருத்துகள் இக்கட்டத்தில் உருவாகப்படும். இவை கருதுகோள்கள் எனப்படும். ஒரு சிக்கலுக்கு விடையாகப் பல கருதுகோள்கள் உருவாக்கப்படலாம். உருவாக்கப்படும் நிலையில் இவை உண்மையானவையென்றோ தவறானவையென்றோ கூறவியலாது. அடுத்த கட்டத்திலேதான் இவற்றுள் எந்த ஒன்று உண்மையில் பயனுள்ளது என்பது தெரியவரும். பயனுள்ள கருதுகோள்களை உருவாக்குதலில் ஒருவனது சிறப்பு வெளிப்படும். வளமான கற்பனைத் திறன், உட்காட்சித் திறன் (Insight), ஆக்கச் சிந்தனையின் (Creativity) ஒரு கூறான பன்னோக்குச் சிந்தனை (Divergent Thinking) போன்றன யாவும் கருதுகோள்கள் உருவாதலுக்கு உதவுகின்றன. சிலபோது நனவிலி உள்ளமும் (Unconscious) கருதுகோள்கள் எழுதலில் பங்கு கொள்கிறது. கருதுகோள்களை உருவாக்கும் நிலையில்தான் சிறந்த சிந்தனையாளர்க்கும் பொதுமக்களுக்குமிடையே குறிப்பிடத்தக்க வேறுபாடு காணப்படுகிறது எனலாம். பொதுவாக, சிக்கலைப் பற்றிய தேவைப்படும் எல்லா விவரங்களையும் துல்லியமாக அறிந்திருத்தல், இடைவிடா ஆராய்ச்சியும் விடாமுயற்சியும் கொண்டு சிக்கலை அணுகுதல், ஒரு புறச்சார்பின்றி அறிவியல் நோக்கினின்றும் சிக்கலை அணுகுதல் போன்ற ஆக்கநிலைகள் கருதுகோள்களை உருவாக்க உதவுவனவாம்.

எந்த ஒரு சிக்கலையும் தீர்க்க உதவும் ஒரு கருதுகோள் பல காலங்களில் உடனடியாக எழாது; பல எழும். இவற்றுள் எந்த ஒன்று உண்மை நிலைமைக்கு ஏற்றது என்பதனை அறிவாய்வின் அடுத்த நிலையான சரிபார்த்தலும் மதிப்பிடுதலும் என்பதில்

உறுதிப்படுத்திக் கொள்ளலாம். கருதுகோள்களை உருவாக்கும் பொழுது தொகுத்தறி அனுமான முறை சிறப்பாகப் பயன்படுத்தப்படுவது போன்று, சரி பார்த்தல் நிலையில் பகுத்தறி அனுமானச் செயல் சிறப்பாகப் பயன்படுத்தப்படுகிறது. அறிவாய்வின் இறுதிக்கட்டத்தில் உரியதொரு மதிப்பீடு செய்யப் பட்ட, கருதுகோளினைக் கொண்டு சிக்கலுக் குத் தீர்வு காணலாம். இது போன்ற வேறு சிக்கல் களுக்குத் தீர்வு காணப் பயன்படுத்த முடியும். சரி பார்க்கப்பட்ட கருதுகோள் ஓர் அறிவியற் சிக்கலுக் கானதாகவிருப்பின் அதனை ஒரு பொது விதியாக உயர்த்தவும் கூடும். அறிவியல் ஆராய்ச்சியில் இந்த ஐந்து நிலைகளும் மிகத் தெளிவாக இருத்தலை எந்த ஓர் அறிவியல் ஆராய்ச்சியை உற்றுநோக்கினாலும் விளங்கும். அன்றாடவாழ்க்கை யில் எழும்எளிய சிக்கல்களுக்குத் தீர்வுகாண அறிவாய்வுச் செயலில் ஈடுபடும்போதும் இந்நிலை களை உணரக்கூடும். பலபோது இந்நிலைகள் ஒன் றுடன் ஒன்று மேற்படிந்து பிரித்துணரவியலாமற் காணப்படுதலும் உண்டு.

சான் தூயியின் இவ்விளக்கம் சிலரால் குறை கூறப்படுகிறது என்பதனையும் ஈண்டு சுட்டிக்காட்ட வேண்டும். இவர் அறிவாய்வு எவ்வாறு அமைய வேண்டும் என்பதனை விரித்துக் கூறுகிறாரே யன்றி, அச்செயல் இயல்பாக எவ்வாறு அமைந்துள் ளது என்பதனைப் பற்றிக் கவலைப்படவில்லை என் பர் ஒருசிலர். மேலும், அறிதல் திறன் வளர்ச்சி பற்றி இன்று பியாசே (Piaget) என்னும் அறிஞ ரால் எடுத்துக் கூறப்பட்டுள்ள புதிய விளக்கம் அறிவாய்வு பற்றிச் சில புது விவரங்களைக் கூறுவதாக அமைந்துள்ளது. உளவியலறிஞர் களின் இம்முயற்சிகள் யாவும் மனித சமுதாய வளர்ச்சிக்கும் அறிவியல் – தொழில் நுட்ப வளர்ச் சிக்கும் அடிப்படையான அறிவாய்வின் இயல்பினை ஓரளவேனும் வெளிப்படுத்தலில் உதவியுள்ளன. அறி வாய்வுத் திறமை இன்றைய இளைஞர்களிடையே வளர்த்தலுக்கு ஒரு சில முறைகளைக் கல்வியாளர் குறிப்பிடுகின்றனர். பொதுமைக் கருத்துகளும் உண் மையான விவரங்களும் போதிய அளவில் பெற்றி ருத்தல் அறிவாய்வின் வலுமிக்க அடித்தளமாக அமையும். தீர்வு காணப்பட வேண்டிய சிக்கல் எந்த அளவுக்குத் தொடர்புடையதாகத் தெளிவாக உணரப்படுகிறதோ, அந்த அளவுக்கு அது அறி வாய்வுக்குத் தூண்டுகோலாக அமையும். சார் பெண்ணங்கள் (Prejudices) இன்றியும் அறிவியல் பாங் குடனும் திறந்த உள்ளத்துடனும் சிக்கலை அணுகு தலும் பயன்மிகுந்த அறிவாய்வுக்குத் துணையாம். இன்று கல்விமுறையில், வெறும் பொருளறிவினை மட்டும் ஆசிரியர்கள் தங்கள் விரிவுரைகளின் வழியே மாணாக்கர்களின் உள்ளத்தில் பதிய வைப் பதற்கு மாறாக, அவர்களிடையே அறிவாய்வின் வழியே தாமே முயன்று புதுக்கருத்துகளையும் விடைகளையும் பெறும் சிந்தனைத் திறன் வளர்ச் சியை வலியுறுத்துவது வரவேற்கத்தக்க கல்வி மாற் றம் என்பது தெளிவு. எஸ்.ச.

**அறிவாராய்ச்சியியலும் கல்வியும்:** கல்விச் செயல்முறை குறிப்பிட்ட சில நோக்கங்கள் அடை வதை அடிப்படையாகக் கொண்டு இயங்குவதாகும். இந்நோக்கங்கள் கற்போனுக்கும் அவன் வாழ்ந்து வரும் சமுதாயத்துக்கும் ஒருசேர நலம் பயப்பன வாக அமைதல் வேண்டும். கல்வியின் இறுதி நோக் கங்கள் அதன் பல்வேறு கூறுகளான கல்வி ஏற்பாடு, கற்பிக்கும் முறைகள், கல்வி மதிப்பீட்டின் தன்மை, பள்ளியின் நிருவாக அமைப்பு போன்றவற்றைப் பாதிப் பனவாக உள்ளன. கல்வியின் நோக்கங்களுக்கு அடிப் படையாக அமைவன தத்துவக் கோட்பாடுகளாகும். தத்துவம் எனப்படும் பழம்பெரும் அறிவுத் துறைக்குப் பல்வேறு மாறுபட்ட விளக்கங்கள் அளிக்கப்படுகின் றன. தத்துவ விசாரணை மாந்தருக்கு இயல்பாக எழுவதாகும். தான் பெறும் அனுபவங்களைப் பற்றி நன்கு சிந்தித்து இவற்றுக்கு அடிப்படையாக அமைந் துள்ள மெய்யறிவுக் கோட்பாடுகளை உணரும் முயற்சியாகத் தத்துவம் உள்ளது. 'முறைப்பட்ட ஒருங்கிணைந்த முழுமையான அறிவினைப் பெற மனிதனால் மேற்கொள்ளப்படும் முயற்சி தத்துவ மெனப்படும்' என்று பால்சன் (Paulson) என்பார் குறிப்பிடுகிறார். இம் முயற்சியின் விளைவாக மனித வாழ்க்கை பற்றியும் மனிதன் வாழும் உலகம் பற்றி யும் அடிப்படையான சில கோட்பாடுகள் எழுந்து மனித மனப்பான்மையினையும் நடத்தை முறை யினையும் உருவாக்குகின்றன. கல்வி அமைப்பைத் திட்டமிடுதலிலும், இவை நடுவிடம் வகிக்கின்றன. தத்துவக் கருத்துகளுக்கு வாழ்க்கையில் செயலுருவம் தரும் முறையாகக் கல்வி அமைகிறது என்றும், எனவே கல்விக்கும் தத்துவத்திற்குமிடையேயுள்ள தொடர்பு மிக நெருக்கமானது என்றும் கல்வி வல்லுநர் சுட்டிக் காட்டியுள்ளனர். பல்வேறு கல்விச் சிக்கல்களை ஆராய்கையில் அவை தத்துவக் கோட் பாடுகளுடன் இணைந்த சிக்கல்களாக இருத்தல் தெளிவு என்பதையும் இவ்வல்லுநர்கள் விளக்கி, தத்துவக் கோட்பாடுகள் பற்றிய அறிவு, கல்விச் சிக்கல்களுக்கு விடைகாணலில் இன்றியமையாதது என்பதனையும் வலியுறுத்துகின்றனர்.

தத்துவத்தின் பல்வேறு பகுதிகளில் ஒன்று 'அறிவாராய்ச்சியியல்' (Epistemology) என்பதாகும்.

இத்தத்துவப் பிரிவு அறிவின் தன்மை பற்றியும், பெறப்பட்ட அறிவு உண்மை நிலையினைக் காட்டுகிறதா என்பது பற்றியும் ஆராய்கிறது. கல்வியின் நோக்கங்களுள் தற்போது அறிவு வளர்ச்சி நடுவிடம் பெறுகிறது. மாணாக்கனது வாழ்க்கை நலமுற அமைதற்குத் தேவைப்படும் பல திறப்பட்ட உண்மை விவரங்களைப் பள்ளிச் சூழ்நிலையினின்று அவன் பெறுவதுடன், புதிய உண்மை விவரங்களைத் தானே தனது உளமுயற்சியினால் முனைந்து பெறும் ஆற்றலையும் கல்வி அவனிடம் தோற்றுவிக்க வேண்டும். இவ்வாற்றல் வளர்ச்சிக்கு உறுதுணையாக ஆசிரியரது வகுப்புப்பணி அமையவேண்டும். அறிவுபெறுதல் பற்றிய தத்துவப் பிரிவான அறிவாராய்ச்சியியல் கருத்துகளைக் கல்வியாளர் புரிந்து கொள்ளுதல் இன்றியமையாததாகும்.

அறிவு வளர்ச்சியுடன், தொடர்புள்ள பல வினாக்களுக்கு 'அறிவாராய்ச்சியியல்' விடைகாண முற்படுகிறது. அறிவு எவ்வாறு எழுகிறது? அறிவின் தன்மை யாது? மக்கள் அறிவுக்கேற்பவும் அது எழுதற்கான காரணியாகவும் பின்னணியில் ஓர் உண்மையுலகு உண்டா? அவ்வாறாயின் அவ்வுலகின் பண்புகளை நேரடியாக உணர்தல் இயலுமா என்பன போன்ற பலவற்றிற்கு அறிவாராய்ச்சியியல் விடை கூற முற்படுகிறது. இவற்றிற்கான விடைகள் அறிவியல் முடிபுகள் போன்று திட்டவட்டமாக இருக்குமென எதிர்பார்க்கலாகாது; இவை பல திறப்பட்டும் பல போது ஒன்றுடன் ஒன்று முரண்பட்டும் இருத்தல் இயல்பு. சமுதாயத்தில் மக்களது சிந்தனையை உயர்நிலைப்படுத்தும் வலுவான ஒரு கருவியாகக் கல்வி திகழ்கிறது. பொதுமக்கள் பலர் தம்மைச் சுற்றிப் பரவலாகக் காணப்படும் கருத்துகளை ஆராயாமல் ஏற்பதன் விளைவாகச் சிந்தனையில் குழப்பம் எழுகிறது. பூசல்களுக்கு அடிப்படைகளான சார்பெண்ணங்கள் (Prejudices), கொள்கைப் பரப்பு (Propaganda), ஆதிக்கத்திலுள்ளோர் கூற்றுகளை மறுப்பின்றி ஏற்பது, சிந்தனையில் போலிகள் (Fallacies) உருவாதல் ஆகியனவும் எழுகின்றன. இவற்றைத் தவிர்த்து, உண்மை அறிவினைப் பெற மக்கட்குக் கல்வி உதவும் முயற்சிக்கு அறிவாராய்ச்சியியல் கோட்பாடுகள் துணையாக அமையும்.

அறிவு, பொதுவாக நான்கு வழிகளில் எழும். அவை புலனுணர்வு (Perception), உய்த்தறிதல் (Inference), பிறர் கூற்றுகளை ஏற்றல் (Verbal Testimony), மற்றும் அகக்காட்சி (Intuition) என்பனவாம். இவற்றுடன் 'ஒப்புவமை', 'அருத்தாபத்தி', 'அனுபலப்தி' போன்ற சில வழிநிலைக் காரணிகளையும் இந்தியத் தத்துவ அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். இவற்றுள் புலனுணர்வும், உய்த்தறிதல் சிந்தனையும் கல்விச் செயலில் முதன்மையான இடத்தினைப் பெறுகின்றன. இவ்விரு அறிவு எழும் முறைகள் பற்றிய விவரங்கள், இவற்றின் வழியே மாணாக்கர் உண்மையறிவினைப் பெற அவர்க்குப் பயிற்சியளித்தலில் உதவுவனவாம். இன்று கல்வியின் நோக்கங்களுள் ஒன்றாக, மாணாக்கரது ஆக்கத்திறன் வளர்ச்சியும் இதனுடன் இணைந்த விரிசிந்தனைத் திறனும் (Divergent Thinking) குறிப்பிடப்படுகின்றன. விரிசிந்தனைக்கு அகக்காட்சி உதவுகிறது.

அறிவாராய்ச்சியியலில் இரு எதிர்ப்பட்ட கோட்பாடுகள் வெவ்வேறு பிரிவினரால் வலியுறுத்தப்படுவதைத் தத்துவ வரலாறு சுட்டிக்காட்டுகிறது. அறிவுக் கொள்கையினர் (Rationalists) உண்மை அறிவில் பொதுக் கருத்துகள், விதிகள் ஆகியவற்றின் சிறப்பிடத்தை வலியுறுத்துவர். இவற்றுள் அடிப்படையான பல கருத்துகள் மனிதன் உள்ளத்துள் இயற்கையாகவே பொதிந்துள்ளன என்றும் இவ்வியற்கைக் கருத்துகளினின்றும் வேறு பல்வற்றைச் சிந்தனை வழியே வருவித்து அறிவு வளர்ச்சியடையலாம் என்றும் அறிவுக் கொள்கையினர் குறிப்பிடுகின்றனர். ஆனால், கல்வியாளர்களில் பெரும்பான்மையினர், 'அனுபவவழிக் கொள்கை' (Empiricism) எனப்படும் மாற்றுக் கொள்கையினை ஏற்று அதன் அடிப்படையில் தம் கல்வி முறையினை உருவாக்க முற்படுகின்றனர்; அனுபவவழிக் கொள்கை, அறிவு வளர்ச்சிக்குப் புலன் காட்சியனுபவங்கள் அடிப்படை என்றும், திருந்திய தெளிவான புலன் காட்சியனுபவங்களைப் பெற மாணாக்கர்களுக்கு வாய்ப்பளித்தல் அவர்களது கல்வி வளர்ச்சிக்கு இன்றியமையாதது என்றும் குறிப்பிடுகிறது. கல்வியில் இன்று நேரடி அனுபவங்கள், செயல் முறைகள் ஆகியன வலியுறுத்தப் பெறுவது இதனால்தான்.

அறிவின் வழியே நமக்கு அறிமுகமாகும் புற உலகின் தன்மை பற்றியும் தத்துவ அறிஞர்கள் முரணான கருத்தினைத் தெரிவிக்கின்றனர். உலகு உண்மையான ஒன்றா அல்லது உண்மை நிலையற்ற வெறும் தோற்றமா என்பது விவாதத்திற்குரியது. கல்வியாளர்கள் இதில் நேரடியாக ஈடுபடுவதில்லை, கல்வியைப் பொறுத்தவரை பெரும்பான்மையினர், மக்கள் உள்ளத்தினை முழுமையாகச் சார்ந்திராத ஒரு புற உலகு இருத்தலை ஏற்கும் முறையிலே, கல்வி வழியே அறிவியல் மனப்பாங்கினை மாணாக்கரிடையே தோற்றுவிக்க முயலுகின்றனர். இவ்வாறே, பெறும் அறிவின் உண்மைத் தன்மையினை உணரப் பல்வேறு கொள்கைகள் அறிவாராய்ச்சியியில் உள்ளன. புற உலகோடு தம் கருத்துகளை ஒப்பிட்டு உண்மையறிதல் என்பதை விட, கல்வியாளர்கள்,

கருத்துகளிடையே பொருத்தம் (Coherence), கருத்துகளின் நடைமுறைப் பயன் ஆகியவற்றின் அடிப்படையில் அறிவின் உண்மையினை மதிப்பிட முற்படுகின்றனர். எஸ்.ச.

**அறிவாற்றல் வளர்ச்சிப் படிகள்:** மக்களுக்குரிய சிறப்பியல்பு மனம் என்னும் அகக் கருவியைப் பெற்றிருத்தல் ஆகும். மன வளர்ச்சியை ஒட்டி அறிவாற்றல் ஒவ்வொருவருள்ளும் வளர்ந்து, அகன்று, பெருகிவரும். இவ்வாற்றலின் வளர்ச்சியையும், அது செயல்படும் விதத்தையும் உளவியலறிஞர்கள் ஆய்ந்து விளக்கியுள்ளனர். இவ்வாற்றலை இனங் கண்டு அளந்தறிய முற்பட்டோருள் முதன்மையானவர் பினே (Binet) என்னும் பிரான்சு நாட்டறிஞராவார். அவர், அறிவு சார்ந்த செயல்கள் அனைத்துக்கும் காரணமான ஒரு பொதுத் திறன் என்றே இவ்வாற்றலைக் கருதினார். முழுமையாகவே இவ்வாற்றல் செயற்படும் எனவும் நம்பினார். தார்ன்டைக்கு (Thorndike) என்னும் அமெரிக்க அறிஞர், மக்கள் பற்றியும் (சமூக நுண்ணறிவு), பருப்பொருள் பற்றியும் (பருமை நுண்ணறிவு), குறியீடுகள் பற்றியும் (நுண்மை நுண்ணறிவு) இவ்வாற்றல் படர்ந்து செல்லும் என்றார். காரணிப் பகுப்பாய்வு மூலம் இவ்வாற்றலில் பலவகை நுண்திறன்கள் அடங்கியுள்ளன என இவர் விளக்கினார். இவர்தம் கொள்கை அறிவாற்றல் பற்றிய பலகாரணிக் கொள்கை (Multi-Factor Theory) எனப்படும். இசுபியர்மேன் (Spearman) என்னும் ஆங்கில அறிஞர் பல காரணிக் கொள்கைக்கு எதிராக இரு காரணிக் கொள்கை (Two-Factor Theory) ஒன்றை நிறுவினார். எல்லாவகை அறிவு(மன)ச் செயல்கட்கும் அடிப்படையான பொதுக் காரணி ஒன்றும், சிறப்பான அறிவுச் செயல் ஒவ்வொன்றுக்குமான தனிக் காரணிகள் பலவும் அறிவாற்றலில் அடங்கியுள்ளன என்பதே இவர் கொள்கை. பொதுக் காரணித் திறனில் மக்கள் ஒருவருக்கொருவர் வேறுபடுகின்றனர். தனிக் காரணிகளில் ஒருவர்க்குள்ளேயே வேறுபாடுகள் உள்ளன. பல காரணிக் கொள்கை, இரு காரணிக் கொள்கை இரண்டிற்கும் இடைப்பட்டதாய்க் குழுக் காரணிக் கொள்கை (Group-Factor Theory) ஒன்றை, தர்சுடன் (Thurstone) என்ற அமெரிக்க நாட்டவர் வெளிப்படுத்தினார். 'முதன்மையான மன ஆற்றல்கள்' (Primary Mental Abilities) என எழுவகை ஆற்றல்களைக் காரணிப் பகுப்பாய்வு மூலம் இவர் கண்டார். காரணிப் பகுப்பாய்வு (Factor Analysis) என்ற புள்ளியியல் முறையைக் கொண்டே கில்போர்டு (Guilford) என்னும் அமெரிக்கர் அறிவாற்றல் அமைப்பு என்ற முப்பரிமாண விளக்கமொன்றை அறிவாற்றலுக்கு அளித்தார். இவ்விளக்கத்தில் அறிவுச் செயலின் உள்ளீடு (Content), செயற்படும் பாங்கு (Process), செயல் விளைவு (Product) என்ற முப்பரிமாணங்களை ஒட்டி நூற்றிருபது மனத் திறன்கள் குறிக்கப்படுகின்றன.

அறிவாற்றலின் வளர்ச்சி பற்றிய ஆய்வாளர்களுள் பியாசே (Piaget) என்ற சுவிட்சர்லாந்து நாட்டவரும், புரூனர் (Bruner) என்ற அமெரிக்க நாட்டவரும் குறிப்பிடத்தக்கவர்கள். பியாசேயின் அணுகுமுறை 'வளர்நிலைகளை' (Stage Approach) ஒட்டி அமைந்தது; புரூனரின் அணுகுமுறை, செயற்படும் பாங்கினை (Process Approach) ஒட்டியது. மனித அறிவாற்றல் வளர்ச்சியில் நான்கு நிலைகளைப் பியாசே குறிப்பிடுவார். இந்நிலைகள் ஒன்றன் பின் ஒன்றாய் ஒரே வரிசையில் எல்லோர்க்கும் அமையும். நிலைகளின் வரிசை அமைப்பில் வேறுபாடு இருப்பதில்லை. ஒவ்வொரு நிலையிலும் அமையும் அறிவாற்றலின் செயல்தன்மையில் வேறுபாடு உண்டு. குழந்தையின் அறிவாற்றல், செயல் தன்மை, சிந்தனைப் போக்கு இம்மூன்றும் இளைஞனின் சிந்தனைப் போக்கினின்று மாறுபட்டவை.

குழந்தையின் பிறப்பிலிருந்து இரண்டாண்டு வரையான காலம் அறிவாற்றல் வளர்ச்சியின் முதல் நிலை. இது புலன்-இயக்க (Sensory Motor) நிலை. புலன் உணர்வு (சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்), இயக்கம் (அசைவு) ஆகியவற்றை ஒட்டியே இந் நிலையில் குழந்தையின் வெளியுலகு பற்றிய சிந்தனை அமையும். இரண்டாம் நிலை, இரண்டாண்டு முதல் ஏழு அல்லது எட்டாண்டுகள் வரை நீடிக்கும். இது அறிவு செயற்படத் தொடங்குதற்கு முந்திய நிலை (Pre-Operational Stage) ஆகும். சிந்தனை, குறியீடுகளை ஒட்டி அமையத் தொடங்கும். அது குழந்தையின் தற்சார்பு நோக்கிலேயே அமையும். பிறர் நிலையிலிருந்து, சூழலை (Environment) எண்ணிப்பார்க்கும் அறிவாற்றல் இன்னும் குழந்தைக்குக் கைவரவில்லை. எண்ணப்போக்கும் புறத்தோற்றத்தை மையமாகக் கொண்டே இருக்கும். ஒரே அளவினதாயினும், வாய் குறுகிய, நீண்ட குவளையில் பெய்யப்பட்ட தண்ணீர் வாயகன்ற, குறுகிய குவளையில் பெய்யப்பட்ட நீரினும் மிகுந்துள்ளதாய்க் குழந்தை எண்ணும். தண்ணீரின் அளவை மாறாத் தன்மையை (Conservation) உணரும் திறனைக் குழந்தை இன்னும் பெறவில்லை. தான் கண்ட காட்சிகளை முறையாகப் பின்னோக்கி எண்ணிக் கூறும்ஆற்றலும்(Reversibility) இல்லை. மூன்றாம் நிலை எட்டு முதல் பன்னிரண்டாண்டு வரையான காலத்தில் அமைவது. இது பருப்பொருள் பற்றி அறிவு செயற்படும் நிலை (Concrete Operational Stage) எனப்படும். இரண்டாம் நிலை

யில், தனித்தனிச் சிதறல்களாய் இருந்த சிந்தனை, தொடர்புபடுத்தி இணைத்துத் தொகுத்து எண்ணும் ஆற்றலை மூன்றாம் நிலையில் பெறுகிறது; காரண, காரியத்தொடர்புகளைக் காணும் திறன் வளர்கிறது; இடம் பெயர்ந்தாலும் பொருள்களின் அளவும் எண்ணிக்கையும் மாறா என்ற உண்மை புலனாகிறது. பின்னோக்கில், நிகழ்ச்சிகளை அல்லது பொருள்களின் அமைப்பை வரிசையாக நினைவுகொள்ளும் ஆற்றலும் பெருகுகிறது. பருப் பொருள்களை ஒட்டி அமையும் இத்தகைய சிந்தனைப் போக்கு ஒரு பொது விதியை அடைய உதவுகிறது. இடம் பெயர்தல் அல்லது உருமாறல் பொருள்களின் அளவைப் பாதிப்பதில்லை என்பது அப்பொதுவிதி. இச்சிந்தனைப் போக்கை அறிவாற்றலின் செயற்பாடு (Operation) எனப் பியாசே குறிப்பிடுவார். இப்பொது விதிகாண்பதற்குப் பருப் பொருள்களை ஒட்டிய எண்ணங்களே அடிப்படையாதலால், இந்நிலை பருப்பொருள் பற்றிய செயற்பாட்டு நிலை எனப்பட்டது. இச்செயற்பாடுகளை அடைவதே மனவளர்ச்சிக்கு அடிப்படையாயமைகிறது. ஒரு சூழலைப் பிறர் நோக்கில் இருந்து காணும் திறன், காரண, காரியத் தொடர்புகளை உய்த்துணர்தல் போன்ற அறிவாற்றல்கள் இம்மூன்றாம் நிலையின் சிறப்பியல்புகள்.

அறிவாற்றலின் செயற்பாடுகள் பருப் பொருள்களைப் பற்றி நில்லாது, குறியீடுகளை (Symbols), கருத்துகளை (Abstraction) ஒட்டி அமையும் போது, அவை முறையான செயற்பாடுகள் (Formal Operation) ஆகின்றன. அறிவாற்றல் வளர்ச்சியில் இந்நிலை நான்காம்படி. இதுவே அறிவாற்றலில் உயர் படி ஆகிறது. பன்னிரண்டு வயதளவில் தொடங்கும் இந்நிலை, இளைஞராகும்போது முதிர்ச்சி பெறுகிறது. பருப்பொருட் பற்று விட்டு, நுண்பொருள் தொடர்பு கொண்டு, முதிர்ந்து வரும் அறிவாற்றற் செயற்பாடுகளை எண்ணித் துணிவதன் விளைவுகளேயாம். பொதுவிதிகள் முடிவுகள்–துணிவுகள்–எய்துவதற்குப் பருப்பொருள்களின் துணை இனி வேண்டுவதில்லை. கருத்துக்களைக் கொண்டு, கருதுகோள்களை (Hypotheses) அமைத்து, எதிர்ப்படும் சிக்கல்களுக்குத் தீர்வுகளை மனத்தில் எண்ணித் துணியும் திறன் பெறும் முழு மனநிலை இதுவாகும்.

இவ்வாறு, மனத்தாலாகிய உணர்ச்சி நான்கு நிலைகளாக வளர்ந்து வருகிறது. ஒவ்வோரெல்லைக்கும் குறிக்கப்பட்ட வயது வரம்புகள் பண்பாட்டுச் சூழல்களுக்கேற்ப மாறுபடலாம். ஆனால், நிலைகளின் அடுத்தடுத்து வரும் முறைகளாகிய புலன் – இயக்க நிலை அறிவு செயற்படுதற்கு முன்னருற்ற நிலை, பருப்பொருள் பற்றி அறிவு செயற்படுநிலை, முறையான செயற்பாட்டு நிலை ஆகியன மாறுவதில்லை. ஒவ்வொரு நிலையிலும் குழந்தை சூழலுக்கேற்பத் தன்னை அமைத்துக் கொள்கிறது. இது தகவமைப்பு (Adaptation) எனப்படும். இத்தகவமைப்பு, தன்வயமாக்கல் (Assimilation), பொருத்திக் கொள்ளல் (Accommodation) என்ற இருவழியிலும் இயலும். சூழலின் மூலம் பெறும் புதிய அறிவு, தான் முன்னரே பெற்றுள்ள அறிவுத் திரளொடு இயைந்து செல்லும்போது தன்வயமாக்கல் நிகழ்கிறது. இது நிகழாதபோது, புதிய அறிவைத் தனதாக்கிக் கொள்ள, குழந்தை தான் பெற்றுள்ள அறிவுத்திறன் அமைப்பில் வேண்டிய மாற்றங்களை அமைத்துக் கொண்டு, இப்புது அமைப்போடு புதிய அறிவைப் பொருத்திக் கொள்ளும்.

அறிவாற்றல் வளர்ச்சியை, அது செயற்படும் பாங்கினை ஒட்டி விளக்குதல் தனியொரு ஆராய்ச்சியாளரின் கோட்பாடாய் எழுந்ததன்று. பலர்தம் ஆய்வு முடிவுகளின் தொகுப்பிற் பிறந்த அணுகுமுறை அது. அறிவாற்றலின் அடிப்படைக் கூறுகளாய் (Units) அமைவன நான்கு. புறத்தே காணும் உலகை மனத்தில் அமைத்துக் கொள்ள இவ்வெண்ணக் கூறுகளைப் பயன்படுத்துவர். இவற்றுள் முதலாவதும், மிக எளியதுமான எண்ணக்கூறு, புறத்தேயுள்ள பொருள் தரும் புலன் உணர்வுகளைத் தொகுத்து, வகைப்படுத்தி, அப்பொருளை மனத்தில் காணும் புலன் உணர்வுத் திரளின் ஓர் அமைப்பாகும் (Schema). எடுத்துக்காட்டாக, புறத்தேயுள்ள தாய், தன் குழந்தையின் மனத்தே, அவள் முகம், அவள் எழுப்பும் ஒலி, அவள் அசைவு முதலிய புலன் உணர்வுகளின் திரளாலான ஓர் எண்ணக் கூறாய் ஆகிறாள். இவ்வெண்ணக்கூறே குழந்தையின் தாய் பற்றிய அறிவின் முதல் எண்ணக்கூறு. குறியீடுகள் இரண்டாம் வகை எண்ணக் கூறு. இக்குறியீடுகள், சொல்லாக (அம்மா), பிற குறிப்புகளாக (=, X) அமையலாம். கருத்துகள் (தாய்மை), பொதுவிதிகள் (தாய் கருணை மிக்கவள்) ஆகியவை மற்ற இரு எண்ணக் கூறுகள். இந்நால்வகை எண்ணக் கூறுகளும் குழந்தை வளர வளர (மனம் வளர வளர) விரிந்து அறிவாற்றலின் உயர்நிலையில் செயற்பட உதவுகின்றன. குறிப்பாக, கருத்துகளும் அனுபவமும் பெருகப் பெருக, மேலும் மேலும் பொருள்களையும் உட்கருத்துகளையும் உள்ளடக்கிக் கொண்டு இவ்வறிவாற்றல் வளர்கிறது.

அறிவாற்றல் நான்கு வகைகளிற் செயற்படும். புலன்களால் கட்டுணர்தல், நினைவுபடுத்தல், கருத்துகள் அமைத்தல், பகுத்தாய்தல் என்பன அவ்வகைகள். இச்செயற்பாட்டு வகைகளும் குழந்தை வளர வளர மேன்மேலும் திறனுடையனவாய், நல்ல பயன் விளைவிப்பனவாய் ஆகின்றன. தன்மையில் இவை

மாறுபடுவதில்லை. குழந்தைப் பருவத்தே இவை திறன் குன்றியனவாயும், தெளிவு பெறாதனவாயும் உள்ளன. அறிவாற்றல் வளர்ச்சி என்பது, சிந்தனைக்கு அடிப்படையான நால்வகை எண்ணக் கூறுகளைக் கொண்டு, நால்வகைப் பாங்கில்-புற உலகைத் தன்னுள் தெளியக் காண மனம் கொள்ளும் முயற்சியின் விரிவே.

மனங்கொண்ட உணர்ச்சியை (புற உலகு பற்றிய அறிவை) மூளை மூவகைகளில் வெளிப்படுத்த வல்லது. ஒருவகை, பொருள்களின் அல்லது நிகழ்ச்சிகளின் செயல்களை ஒட்டிய பாங்கிலேயே காட்டுவது. புருனர் (Bruner) இவ்வகையைச் 'செய்து காட்டு' வகை (Enactive Mode) என்பார். செயல்களைத் தவிர்த்துப் படங்கள், (நிழல்) உருக்கள் வழியாகக் காட்டும் வகை பிரதிமை அல்லது மாதிரி வகை (Iconic Mode) ஆகும். செயல், உரு இரண்டினையும் தவிர்த்துக் குறியீடுகள் மூலம் (மொழி, பிற குறிப்புகள்) வெளிப்படுத்தும் மூன்றாம் நிலை குறியீட்டு வகை (Symbolic Mode) எனப்படும். இம் மூவகை வெளிப்பாடுகளும் குழந்தைகளிடமும் பெரியோர்களிடமும் காணப்படுகின்றன. பியாசே, புருனர் ஆகியோர் கூறியதைப் போல் அறிவாற்றலையே (Cognition) வகைப்படுத்தித் தொகுத்துள்ளார் புளூம் (Bloom) என்ற அமெரிக்க நாட்டறிஞர். அறிவாற்றல் அறுவகை நிலைகளைக் கொண்டது. தெரிதல்(Perception), புரிதல் (Understanding), பயன்படுத்தல் (Application), பகுத்தல் (Analysis), தொகுத்தல் (Synthesis), மதிப்பிடல் (Evaluation) என்பன அவை. ஒரு பொருள் பற்றித் தெரிந்து, விளங்கப் புரிந்து, வேண்டும்போது பயன்படுத்தி, அதன் கூறுகளைப் பகுத்து, அக்கூறுகள் இணக்கமுறப் பொருந்தியுள்ள விதத்தைத் தொகுத்து, அது இத்தன்மையுடையது என மதிப்பிட்ட பின்னரே, அதனைப் பற்றிய முழு அறிவு பெறக்கூடும். இவ்வாறு, ஒரு பொருள் அல்லது கருத்துப் பற்றி முற்றும் அறிதற்கு, அறிவாற்றல் ஆறு படிகளைக் கடந்து, அப்பால் நின்று, அதனைப் பற்றி அறிய வேண்டும். இப் படிகளுள்ளும் ஒரு வரிசை முறை அமைந்திருத்தலைக் காணலாம். ஒன்றைத் தெரிந்து, பின்னரே அதனைப் புரிந்து கொள்ள வேண்டும். தெரியாதவற்றைப் புரிந்து கொள்ள முடியாது. இவ்வாறே, ஒவ்வொரு மேல்நிலையும், அதன் கீழுள்ள நிலைகளை உள்ளடக்கியிருக்கும். பயன்படுத்தல், தெரிதலையும் புரிதலையும் உள்ளடக்கியது; மதிப்பிடுதல், ஏனைய ஐந்து நிலைகளையும் தாண்டிச் சென்ற பின்னரே கைகூடும்.

கற்றல், அறிவாற்றலின் வளர்ச்சி நிலையை ஒட்டி அமையும் போது சிறப்புற அமைகிறது. ஆசிரியர், மாணவரின் அறிவாற்றல் வளர்ச்சி நிலைக்கு ஏற்பக் கற்றல் அனுபவங்களை (Learning Experience) அமைத்துத் தருதல் வேண்டும். இத்தகைய அனுபவங்களே மாணவர்க்குப் பொருளுடையனவாகும். வகுப்பறைச் சூழலில் இவ்வகை அனுபவங்கள் மிகும் போது, அவ்வந்நிலைகளில் அறிவாற்றல் முழு வளர்ச்சி பெறும். இத்தகைய அனுபவங்கள் இல்லாத போது அறிவாற்றல் முழுமையாக வளர்ச்சி பெறுவதில்லை. ஒரு நிலையில் முழுமையான வளர்ச்சியின்றேல், அது அடுத்து வரும் நிலைகளின் வளர்ச்சியைக் குன்றச் செய்துவிடும். பி.எஸ்.பா.

துணை நூல்கள்:


Ault, R.L., Children's Cognitive Development, Oxford University Press, New York, 1977.

Furth, H.G., Piaget for Teachers, Englewood Cliff, NJ, Prentice Hall, 1970.

Diggory, Sylvia Faruham, Cognitive Process in Education, Harper and Row, New York, 1972.


***அறிவிப்பு:*** ஒரு பொருள் இருக்கிறது என்பதைப் பொருண்மைகளின்றும் (Facts) அறிந்து கொள்ளும்படி அப்பொருண்மைகளை மட்டும் வழங்காது, அவற்றைப் பற்றி நேரடியாகவும் உறுதியாகவும் கூறும் கூற்றினை அறிவிப்பு (Notice) எனலாம். ஒருவர் அறியாதனவற்றை, அறியவைப்பதும் அறிவிப்பேயாகும். அறிவிப்பு சட்ட முறையில் உள்ளதாகவோ உண்மையானதாகவோ நடைமுறையில் உள்ளதாகவோ நேரடியானதாகவோ (Actual) ஆக்கச் சார்பானதாகவோ, கொள் நிலையானதாகவோ (Constructive) இருக்கலாம்.

உண்மையான அறிவிப்பு அல்லது நடைமுறையில் உள்ள அறிவிப்பு என்பது, ஒருவர் மற்றொருவருக்கு வெளிப்படையான சொற்கள் மூலமாகவோ, வாய்மொழியாகவோ, எழுத்து மூலமாகவோ அறிவிப்பது ஆகும். இதனை வெளிப்படையான அறிவிப்பு (Expressed Notice) அல்லது நேரடி அறிவிப்பு எனவும் கூறலாம்.

குறித்த சூழ்நிலைகளினின்று ஒருவருக்கு ஒரு பொருண்மை பற்றித் தெரிந்திருக்க வேண்டுமெனக் கருதப்படும் நிலையில் அது "கொள்நிலை அறிவிப்பு" எனப்படும்.

சொத்துரிமை மாற்றுச் சட்டத்தின் மூன்றாம் பிரிவு, அறிவிப்பினை வரையறை செய்கிறது. நேரடி அல்லது வெளிப்படையான அறிவிப்பு, கொள்நிலை அல்லது உட்கிடையான அறிவிப்பு என்பவற்றை அறிவிப்புக் கொள்கை விளக்கிக் கூறுகிறது.

ஒருவர், பொருண்மைகளை அறிந்திருக்கிறார் என்பதனைக் கீழ்க்காணும் வகையில் சட்டம் கருதுகிறது. 1) விசாரணை, தேடுதல் முதலியவற்றை வேண்டுமென்றே செய்யாதிருத்தல், 2) கவனக் குறைவு, 3) பதிவு, 4) நேரடி உடைமை, 5) முகவருக்கான அறிவிப்பு.

நேரடியான அறிவிப்பு ஒருவர் பெறவில்லையெனினும், பொது அறிவுடைய மனிதன் ஒருவன் செய்திருக்க வேண்டிய விசாரணை, தேடுதல் ஆகியவற்றை வேண்டுமென்றே செய்யாதிருக்கும்போது சட்ட நோக்கில், அவர் கொள்நிலை அறிவிப்புப் பெற்றிருக்கிறார் என்று கொள்ளப்படும். சாதாரண மனிதன் ஒருவன் செய்ய வேண்டிய செயலைச் செய்யாமையும் செய்யக் கூடாததைச் செய்தலும் கவனக்கேடு ஆகும். இத்தகைய கவனமின்மை என்பது, ஒருவரது நடத்தை அல்லது அதன் விளைவு குறித்து அவருக்குப் போதிய அக்கறையில்லாத மனநிலையாகும்; இது அவரது நடத்தைப் போக்கிலிருந்து கருதி அறியப்படும். கவனக்கேட்டினால் செய்ய வேண்டிய ஒன்றைச் செய்யத் தவறினால், அது பற்றிக் கொள்நிலை அறிவிப்பு இருப்பதாகக் கொள்ளப்படும். சட்டத்தினால் கட்டாயமாகப் பதிவு செய்யப்பட வேண்டும் என்பது கூறப்பட்டிருந்தது, அவ்வாறு பதிவு செய்யப்பட்டால், அச்சொத்தில் ஏதாவதொரு பகுதி, அல்லது பங்கு, அல்லது நலன், பதிவு செய்யப்பட்ட தேதியிலிருந்து இருப்பதாகக் கருதப்படும். சொத்தொன்று ஒருவர் கைவசத்தில் இருந்தால், அத்தகைய கைவச இருப்பு, உரிமை பற்றிய கொள்நிலை அறிவிப்பாகும். முகவருக்கு அறிவிப்புக் கொடுத்திருந்தால் முதல்வர் கொள்நிலை பெற்றிருந்ததாகக் கொள்ளப்படும்.

சட்ட நடைமுறையில், ஒருவர், தாம் சட்டப்படி செய்யப்போவதை முன்னறிவிக்கப் பிறிதொருவருக்கு, அனுப்பும் அறிவிப்பு முன்னறிவிப்பு எனப்படுகிறது.

ஒருவர், ஒரு பொருண்மையினைப் பற்றி எப்பொழுது அறிந்தாரெனக் கொள்ளப்படுகிறாரெனில், சொத்துரிமை மாற்றுச் சட்டம் மூன்றாம் பிரிவின் படி,

1. அப்பொருண்மை அவருக்கு உண்மையிலேயே தெரிந்திருக்கும்போது;
2. விசாரித்து அல்லது தேடி அறியக் கூடியதை, வேண்டுமென்றே அறியாதிருக்கும்போது;
3. கவனமற்று இருந்திருப்பாராயின் அறிந்திருக்கக் கூடும் என்ற நிலையில்;
4. கடமைப் பொறுப்புச் சட்டம் (Trusts Act II of 1882) மூன்றாம் பிரிவின்படி, ஒரு சில சூழ்நிலைகளில், முகவருக்கு (Agent) அறிவித்திருக்கும்போது ஒரு பொருண்மையினைப் பற்றி அறிந்துள்ளதாகக் கொள்ளப்படுகிறார்.

நடைமுறையில், உரிமையியல் நீதிமன்றத்தில் வழக்குத் தொடரும் முன்பு, எதிர்த்தரப்பினருக்கு அனைத்து விவரங்களுடன், வழக்குத் தொடுக்கும் காரணம், பெற விரும்பும் தீர்வழி ஆகியவற்றை எடுத்துக்கூறி ஓர் அறிவிப்பு அனுப்பப்படும். இவ்வறிவிப்பைப் பெற்றுக் கொண்ட எதிர்த்தரப்பினர் மறுத்தோ, ஏற்றோ பதிலறிவிப்பு (Reply Notice) விடுக்கலாம். மறுத்துப் பதிலறிவிப்பு விடுப்பின், வழக்குத் தொடர முற்பட்டவர் அதனை மறுத்து எதிருரை அறிவிப்பு (Notice Rejoinder) அனுப்பலாம். எதிர்த்தரப்பினர் அதற்குப் பதில் எதிருரை அறிவிப்பு (Reply to the Rejoinder Notice) அனுப்பலாம். அதன்பின், வழக்குத் தொடுப்பவர் நீதிமன்றத்தில் வழக்குத் தொடரலாம்.

உரிமையியல் நடைமுறைச் சட்டத்தின் எண்பதாம் பிரிவின்படி, அரசிற்கு எதிராக வழக்குத் தொடுக்கும்போது, வழக்குத்தொடுப்போரின் பெயர், முகவரி போன்ற விவரங்களுடன் வழக்கு எழுந்த மூலத்தினையும் நாடும் பரிகாரத்தையும் கூறி, அரசிற்கு ஒரு அறிவிப்பு அவசியம் அனுப்ப வேண்டும். இவ்வறிவிப்பு விடுத்து இரண்டு மாதம் கடந்த பின்பு தான், அரசின் மீது வழக்குத் தொடுக்கலாம். "அரசின் மீது வழக்குத்தொடுக்கும் முன்பு அறிவிப்பு அனுப்ப வேண்டும் என்பது கட்டாயமானது. அறிவிப்பின்றித் தொடுக்கும் வழக்கு சட்டத்திற்கு முரணானது. (அரசு அன்றி ஏனைய தனிப்பட்டோர் மீது வழக்குத் தொடரும் போது, அறிவிப்பின்றி (ஒரு சில நியாயமான சூழ்நிலைகளில்) வழக்குத் தொடுக்கலாம். ஆகவே, ஒரு வழக்கின் முறையீட்டிற்கு அறிவிப்பு முன்னோடியாகத் திகழ்கிறது.

தொழில் தகராறுகள் சட்டம், ஒன்பது (ஆ) பிரிவின்படி, பணியளிப்பவர், நான்காவது அட்டவணையில் கூறப்பட்ட பொருண்மைகளைப் பொறுத்த மட்டில் பணியாளரின் பணிநிலைகளை மாற்ற வேண்டுமானால், இருபத்தொரு நாள்கள் காலக் கெடு கொடுத்து அறிவிப்பு அனுப்ப வேண்டும். இவ்வறிவிப்பில் பணிநிலையினை மாற்றுவதற்கான காரணம், சூழ்நிலை ஆகியவற்றைத் தெள்ளத் தெளிவுறக் கூற வேண்டும். தீர்க்கும் அமைப்புகளில் (Adjudicating Bodies) ஒன்றான தொழில் தகராறுகள் மேன்முறையீட்டு நடுவர் மன்றச் சட்டத்தின்படி அமைக்கப்பட்ட மேன் முறையீட்டு நடுவர் மன்றம் அளித்த தீர்ப்பின் விளைவாகப் பணியாளரின் பணிநிலைகள் மாற்றப்படுமானால், குறிப்பிடப்பட்ட அறிவிப்பு அனுப்பத் தேவை இல்லை. மேலும், அடிப்

படைப் பிற்சேர்க்கை விதிகள் (Fundamental and Supplementary Rules) உரிமையியல் பணி விதிகள் (Civil Service Rules), இந்திய இருப்புப் பாதை நிறுவனச் சட்டத் தொகுப்பு (Indian Railway Establishment Code) அல்லது தகுதியுள்ள அரசால் அறிவிக்கப்படும் விதிகள் போன்ற விதிகட்குப் பணியாளர்கள் கட்டுப்பட்டிருப்பின், அத்தகைய பணியாளர்கள் பணிநிலைமையினை மாற்றுவதற்கு அறிவிப்புத் தேவையில்லை.

தொழில் தகராறுகள் சட்டத்தின், 22-ஆம் பிரிவின்படி, பொது மக்களுக்குப் பயன்படும் பணியில் (Public Utility Services) வேலை நிறுத்தமோ கதவடைப்போ செய்ய முற்படும்போது அரசிற்கு அறிவிப்பு அனுப்ப வேண்டும். இவ்வறிவிப்பு ஆறுமாத காலத்திற்கு உயிர் பெற்றிருக்கும். அறிவிப்பு விடுத்த ஆறுமாத காலத்திற்குள் வேலை நிறுத்தமோ கதவடைப்போ செய்ய வேண்டும். அவ்வாறு செய்யவில்லையெனில் மீண்டும் புதிதாக அறிவிப்பு அனுப்ப வேண்டும். அறிவிப்பு விடுத்த பதினான்கு நாட்களுக்குள் வேலை நிறுத்தமோ கதவடைப்போ செய்யக் கூடாது. இவ்வறிவிப்பில் வேலை நிறுத்தமோ கதவடைப்போ செய்யும் நாள், காரணங்கள் ஆகிய விவரங்களைக் கூறித் தேதியிட்டு அனுப்ப வேண்டும். வேலை நிறுத்தத்திற்கான அறிவிப்பை அதற்குரியவர் பெற்றவுடன் அரசிற்கு ஐந்து நாட்களுக்குள், விடுத்த அறிவிப்புகள் அல்லது பெற்ற அறிவிப்புகள் ஆகியவற்றின் எண்ணிக்கையை அரசிற்கு அறிவிக்க வேண்டும். அறிவிப்பின்றி மேற்கொள்ளும் வேலை நிறுத்தமோ கதவடைப்போ சட்டத்திற்கு முரணானதாகையால் தண்டனைக்குரியது. பொதுமக்களுக்குப் பயன்படும் நிறுவனங்கள் அல்லாமல், பிற தொழில் துறைகளில் வேலை நிறுத்தமோ கதவடைப்போ செய்வதற்கு முன்பு அறிவிப்பு விடுக்க வேண்டும் என்று கட்டாயமில்லை.

தொழில் தகராறுகள் சட்டத்தின் 25 (F) பிரிவின்படி, 1982-ஆம் ஆண்டில் திருத்தப்பட்ட சட்டத்தின்படி நூற்றுக்கும் குறைவான பணியாளர்கள் பணிபுரியும் தொழில் துறையில் பணியாளர்கள் ஆட்குறைப்புச் (Retrenchment) செய்ய வேண்டுமென்றால், ஒரு மாதகால அறிவிப்புக் கொடுக்க வேண்டும். அறிவிப்பு விடுக்க இயலாத நிலையில் ஒரு மாத ஊதியம் கொடுத்து ஆட்குறைப்புச் செய்யலாம். நூற்றுக்கும் மேற்பட்ட பணியாளர்கள் பணிபுரியும் தொழில் துறைகளில், ஆட்குறைப்புச் செய்வதற்கு முன்பு, மூன்று மாத கால அறிவிப்பு அல்லது மூன்று மாத ஊதியம் கொடுக்க வேண்டும். ஆகவே, தொழில் துறைகளில் பணியாளர்களை ஆட்குறைப்புச் செய்வதற்கு முன்அறிவிப்பு அனுப்ப வேண்டியது கட்டாயமாகிறது. பணி ஒப்பந்தத்தின்படி, ஒரு பணியாளர் குறிப்பிட்ட நாளில் ஆட்குறைப்புச் செய்யப்பட்டால் அறிவிப்பு விடுக்க வேண்டிய தேவையில்லை.

தொழில் தகராறுகள் சட்டத்தின் 25 (F P A) என்ற பிரிவின்படி, நூற்றுக்கும் குறைவான பணியாளர்கள் பணிபுரியும் தொழில் துறையினை முழுவதுமாகவோ ஒரு பகுதியையோ நிலையாக மூட அல்லது அடைக்க வேண்டுமென்றால், அறுபது நாட்கள் காலக் கெடுவுடன், உரிய அரசிற்கு அறிவிப்பு விடுக்க வேண்டும். நூற்றுக்கும் மேற்பட்ட பணியாளர்கள் பணிபுரியும் தொழில் துறையினை மூடுவதற்குத் தொண்ணூறு நாட்கள் காலக் கெடுவுடன் அறிவிப்பு அனுப்ப வேண்டும். இவ்வறிவிப்பில் மூட எண்ணும் நாள், மூடுவதற்கான காரணங்கள் ஆகியன குறிப்பிட்டிருக்க வேண்டும். அறிவிப்பின்றி மூடப்படும் தொழில் துறையின் உரிமையாளர்களுக்கு ஆறுமாத காலச் சிறைத் தண்டனையோ ஐயாயிரம் ரூபாய் ஒறுப்போ இரண்டுமோ விதித்துத் தண்டனையளிக்கப்படும்.

தொழிலாளர்கள் இழப்பீட்டுச் சட்டத்தின் 13-ஆம் பிரிவின்படி பணியாளர்கள் எதிர்பாராத இன்னல் நிகழ்ந்ததாயின் பணியளிப்பவருக்கு அறிவிப்பு அனுப்ப வேண்டும். இவ்வறிவிப்பில் காயமடைந்தவரின் பெயரும் முகவரியும் காயமடைந்ததற்கான காரணமும் அவ்வின்னல் நிகழ்ந்த தேதியும் தெளிவாகச் எளிதான மொழிநடையில் கூறப்பட வேண்டும்.

காப்பீட்டுச் சட்டத்தின்படி (Law of Insurance) உடைமைகளைக் காப்பீடு செய்த பின்பு, உரிமையை மாற்றினால், மாறுதலைக் குறித்த அறிவிப்பினைக் காப்பீட்டுக் கழகத்தினருக்கு அனுப்ப வேண்டும். காப்பீட்டுத் தொகையினைப் பெறுவதற்கும் உரிமை கோரி அறிவிப்பு (Notice of claim) அனுப்ப வேண்டும்.

இந்திய நிறுவனச் சட்டம், 117-ஆம் பிரிவின்படி, உறுப்பினர் பொதுக் கூட்டம் நடத்துவதற்கு 21 நாள்களுக்குக் குறையாது காலக்கெடு கொடுத்து, ஒவ்வொரு உறுப்பினருக்கும் அறிவிப்பு அனுப்ப வேண்டும். அவ்வறிவிப்பில் 172-ஆம் பிரிவின்படி, கூட்டம் நடைபெறும் இடம், நாள், காலம் ஆகிய விவரங்கள் குறிப்பிட்டிருக்க வேண்டும். ஆராயப்பட வேண்டிய பொருள்களும் கூறப்பட்டிருக்க வேண்டும். சில சூழ்நிலைகளில், 190-ஆம் பிரிவின்படி, முடிவு எடுப்பதற்குச் சிறப்பு அறிவிப்பினையும் (Special Notice) உறுப்பினர்களுக்கு அனுப்பப்படும்.

நொடிப்பு நிலைச் சட்டத்தின்படி (நகர நொடிப்பு நிலைச் சட்டம், Presidency Insolvency

Act) பிரிவு 9 மாநில நொடிப்பு நிலைச்சட்டம் (Provincial Insolvency Act) பிரிவு 6 (g) ஒரு கடன் பட்டவர் (Debtor) கடனளித்தவருக்குக் (Creditor) கடனைத் திருப்பிக் கொடுப்பதை அப்போதைக்கு நிறுத்திவிட்டதாகவோ நிறுத்தப் போவதாகவோ (Suspension of Payment) அறிவிப்பை விடுத்தால், அவர் நொடிப்பு நிலை ஆக்குவினை அல்லது நொடிப்பு நிலைச் செயல் (Act of Insolvency) புரிந்து விட்டதாகக் கொள்ளப்படும். அவர் கொடுக்கும் அறிவிப்பு எழுத்து வடிவில் இருக்க வேண்டும் என்று தேவையில்லை; வாய் மொழிக் கூற்றே போது மானது. இவ்வறிவிப்பினைக் கடனளித்தவருக்கோ அவர்தம் பேராளருக்கோ அனுப்ப வேண்டும்.

இளையவர்களுக்கான சட்டத்தின்படி (Law of Minors) நீதிமன்றம், அவர்களுக்குக் காப்பாளரை அமர்த்துவதற்கு முன் இளைஞர் அவருக்கு அமர்த் தப்படும் காப்பாளர், இளைஞரின் தந்தை அல்லது பொறுப்பாளர் ஆகியோருக்குக் காப்பாளர் அமர்த் துவது குறித்து அறிவிப்பு அனுப்ப வேண்டும். ஓர் இளைஞர் பருவம் எய்தியவுடன், தமக்காக வழக்குத் தொடுத்த தம் அடுத்த நண்பருக்குத் (Next friend) தாம் பருவம் எய்திவிட்டதாக அறிவிப்பு விடுக்க வேண்டும்.

கூட்டுப் பாங்காண்மைச் சட்டத்தின் 24-ஆம் பிரிவின்படி (Partnership Act) ஒரு நிறுவனத்தின் (Firm) தொழிலில் ஈடுபாட்டுடன் உழைக்கும் கூட்டுப் பங்காளிக்கு (Active Partner), நிறுவனத்தின் செயல் முறைகளுடன் அச்செயல் முறைகளோடு தொடர் புடைய பொருண்மைகளைப் பற்றி அறிவிப்பு விடுத் தால், அவ்வறிவிப்பு நிறுவனத்திற்கே விடுத்ததாகப் பொருள் கொள்ளப்படும்.

மேற்கூறிய சட்டத்தின் 30 (5)-ஆம் பிரிவின்படி, ஒரு நிறுவனத்தில் கூட்டுப்பங்காளியாக இருக்கும் இளைஞர், பருவம் எய்திய ஆறுமாத காலத்திற்குள் ளாகவோ நிறுவனத்தின் பலன்களை அடையக்கூடிய கூட்டுப் பங்காளியாக இளைஞர் சேர்க்கப்பட்ட ஆறுமாத காலத்திற்குள்ளாகவோ (எது பிந்தியதோ, அதிலிருந்து ஆறுமாத காலத்திற்குள்) பொது மக் களுக்குத் தான் நிறுவனத்தின் பங்காளியாகி விட்ட தாகவோ நிறுவனத்தின் பங்காளி ஆகவில்லையென் றோ ஒரு அறிவிப்பு விடுக்க வேண்டும். விருப்புக் கூட்டுப் பாங்காண்மையில், (Partnership at Will) 43-ஆம் பிரிவின்படி ஒரு கூட்டுப்பங்காளி நிறுவனத் தைக் கலைக்க எண்ணினால், கலைக்கும் எண்ணம் உள்ளதாக ஏனைய உடன் கூட்டுப் பங்காளி களுக்கு அறிவிப்பு அனுப்பவேண்டும். அவ்வறிவிப்பில் குறிப்பிடப்பட்ட நாளிலிருந்து நிறுவனம் கலைக்கப் பட்டதாகக் கொள்ளப்படும். அவ்வறிவிப்பில் நாள் குறிப்பிடப்படவில்லையெனின், அறிவிப்பு விடுத்த நாளிலிருந்து நிறுவனம் கலைக்கப்பட்டதாகக் கொள் ளப்படும். ஒரு கூட்டுப்பங்காளி நிறுவனத்தினின்றும் ஓய்வு பெறும் பொழுது பொதுமக்களுக்கும் பழைய வாடிக்கையாளர்களுக்கும் 32-ஆம் பிரிவின்படி, தான் ஓய்வுபெறுவதாக அறிவிப்பு விடுக்க வேண்டும். முதல்மட்டும் இட்டு, செயலாட்சி புரியாத கூட்டுப் பங்காளி (Sleeping Partner) நிறுவனத்தினின்றும் ஓய்வு பெறும் போது பொது மக்களுக்கு அறிவிப்பு விடுக்க வேண்டும் என்ற கட்டுப்பாடு இல்லை.

இந்திய நிறுவனச் சட்டத்தின்படி, நிறுவனத்தின் குறிப்புத் தொகுதியடங்கிய ஆவணமும், திட்ட விதிகளடங்கிய ஆவணமும் நிறுவனப் பதிவாளர் அலுவலகத்தில் பதிவு செய்யப்பட வேண்டும். நிறு வனப் பதிவாளர் அலுவலகம் ஒரு பொது அலுவல கம் (Public Office) ஆகையால், அவ்வாவணங்களும் பொது ஆவணங்களாகின்றன. அவற்றை, நிறு வனத்தில் தொடர்புடைய அனைவரும் ஆய்வு செய்து அறிய வேண்டுவது தேவையாகிறது. ஆகவே, ஆக்கச் சார்பான அறிவிப்புக் கொள்கையின்படி, நிறுவனத்தோடு தொடர்புடைய ஒவ்வொருவரும், அவ்வாவணங்களைப் படித்தறியாவிட்டாலும் படித் தறிந்ததாகக் கொள்ளப்படும். இதனை, ஆக்கச் சார்பான அறிவிப்பு அல்லது கொள்நிலை அறிவிப்பு எனலாம்.

மாற்று முறையாவணச் சட்டத்தின்படி, மாற்று முறையாவணத்தை ஒருவரிடம் அளிக்கும்போது அவர் அதை ஏற்க மறுத்தால், அவ்வாறு ஏற்க மறுத்ததை அறிவிக்க வேண்டும். அதனை மதிப்பு மறுப்பு அறிவிப்பு (Notice of Dishonour) என்று சொல்லலாம்.

குத்தகைச் சட்டப்படி, குறிப்பிட்ட ஆண்டுக்குக் குறிப்பிடப்படாத காலத்திற்கு நிலம் அல்லது வீடு குத்தகைக்கு விடப்பட்டிருந்தால், அக்குத்தகையை மற்றவர் இசைவின்றி முறிப்பதற்கு, நில மேலாளரோ நிலக்குடியாளரோ ஒருவர் மற்றவருக்கு அறிவிப்பு அனுப்பவேண்டும். இந்த அறிவிப்பு "வெளியேற்று அறிவிப்பு" எனப்படும்.

சட்டத்தின் அனைத்து மூலைகளிலும் அறிவிப்பு இடம் பெற்று, இன்றியமையாப் பகுதியாகத் திகழ் கிறது.

தொழிற்றகராறுகள் சட்டத்தின்படி, சமரசக் குழுவினால் செய்யப்பட்ட முடிவு அல்லது தீர்வு (Settlement) களில், தொடர்புடையவர்கள் கையெழுத் திட்டவுடன் இம்முடிவு செயலாக்கப்படுகிறது. இம் முடிவு ஆறுமாத காலத்திற்கு நீடித்திருக்கும்

அக்காலத்திற்கு மேல் நீட்டிக்கத் தொடர்புடையவர்கள் விரும்பினால் நீட்டித்துக் கொள்ளலாம். அந்நிலையில், ஒரு பகுதியினர் முன்பு செய்யப்பட்ட முடிவினை முறித்துக் கொள்ள முற்பட்டால் அல்லது எண்ணினால், மற்றொரு பகுதியினருக்கும் தகுந்த அரசிற்கும் அறிவிப்புக் கொடுத்து முறித்துக் கொள்ளலாம்.

இந்திய ஒப்பந்தச் சட்டம், 130-ஆம் பிரிவின்படி, தொடர்பொறுப்புறுதி ஒப்பந்தத்தில் பொறுப்புறுதியளிப்பவர், தமது கடப்பாட்டினைக் கடன் கொடுத்தவருக்கு அறிவிப்புக் கொடுப்பதன் மூலம் முறித்துக் கொள்ளலாம்.

இந்திய ஒப்பந்தச் சட்டம் 229-ஆம் பிரிவின்படி, முகவருக்குக் கொடுக்கும் அறிவிப்பு, முதலவருக்குக் கொடுத்ததாகக் கொள்ளப்படும். இது கொள்நிலை அறிவிப்பு (Constructive or Implied Notice) 206-ஆம் பிரிவின்படி, முதலர், ஒழுங்கின்றி முகவரியத்தை முறித்துக்கொள்ளும்போது, தகுந்த அறிவிப்புக் கொடுக்க வேண்டும். அறிவிப்புக் கொடுக்கவில்லையெனில், முகவருக்கு, முதலர் தகுந்த இழப்பீடு கொடுக்கக் கடப்பாடுள்ளவராகிறார்.

அதுபோன்று, கடல் வழியாகப் பொருள்கள் ஏற்றிச் செல்லுதல் (Carriage of goods by Sea) சட்டத்தின்படி, பொருள்களைக் காப்பீடு செய்து கொள்ளும் வகையில், வாங்குபவருக்கு அறிவிப்பு அனுப்ப வேண்டும். பொருள்களை விற்றல் (Sale of Goods Act) சட்டம் 52-ஆம் பிரிவின்படி, விலைத் தொகை பெறாத விற்றவர், பொருள்களை ஏற்றிச் செல்லும்போது வழியில் நிறுத்தும் உரிமையினை, யாரிடம் பொருள் உடைமை உள்ளதோ அவருக்கோ பொருள்களை ஏற்றிச் செல்பவருக்கோ அறிவிப்புக் கொடுப்பதன் மூலமாகச் செயற்படுத்தலாம். அவ்வறிவிப்பினைப் பொருள் உண்மையில் யாரிடம் உள்ளதோ அவருக்கோ அவர்தம் முதலருக்கோ கொடுக்கலாம். முதலருக்கு அறிவிப்புக் கொடுப்பதாயின், முதலர், தம் முகவர் அல்லது பணியாளர், வாங்குபவர் ஆகியோருக்குப் பொருள்களைக் கொடுத்துவிடாவண்ணம், குறிப்பிட்ட காலத்திற்குள், குறிப்பிட்ட சூழ்நிலைகளில் கொடுக்க வேண்டும். இவ்வறிக்கை எழுத்து வடிவிலோ குறிப்பிட்ட படிவத்திலோ இருக்க வேண்டும் என்ற கட்டாயமில்லை.

பற்றுரிமையினை அல்லது வழியில் நிறுத்தும் உரிமையினைச் செயற்படுத்திய விற்றவர், பொருள்களை மீண்டும் விற்க உரிமை பெற்றுள்ளார். அப்பொருள்கள் கெட்டுப் போகக் கூடியனவல்லவெனில், விற்றவர் அவற்றை மீண்டும் விற்கப் போவதாக வாங்கியவருக்குத் தகுந்த அறிவிப்புக் கொடுக்க வேண்டும். இவ்வறிவிப்புக் கொடுப்பதன் நோக்கம், மீண்டும் விற்பதற்கு முன்பாக வாங்கியவர், இறுதித் தறுவாயினும், விலைப் பணத்தைச் செலுத்தி ஒப்பந்தத்தினை நிறைவேற்றிக் கொள்ள வாய்ப்புத் தருவதேயாகும். இரண்டாவதாக முன்பு வாங்கியவர் அப்போதும் விலைப் பணம் செலுத்த இயலாதிருப்பின் அப்பொருள்கள் மீண்டும் விற்கப்படும்போது தகுந்த விலைக்கு விற்கப்படுவதற்கு முயலலாம். கெட்டுப் போகக் கூடிய பொருள்களை மீண்டும் விற்பதற்கு அறிவிப்புத் தேவையில்லை. கடற்றுறைக் காப்பீட்டுச் சட்டத்தின் (Marine Insurance Act) படி, தம்மிடத்தில் காப்பீட்டு ஒப்பந்த ஈட்டுறுதி ஆவணத்தினை (Policy) வைத்துள்ள தரகர், விட்டுவிடுகைக்கான (Abandonment) அறிவிப்பினை அனுப்பப் பொறுப்புள்ளவர். கொள்நிலை முழு இழப்பிற்கு (Constructive total loss) விட்டுவிடுகைக்கான அறிவிப்புக் கட்டாயமாகிறது. காப்புறுதி பெற்றவர் (Assured) கொள்நிலை முழு இழப்பிலிருந்து பலன் எய்த எண்ணினால், விட்டுவிடுகைக்கான அறிவிப்பைக் காப்புறுதி செய்பவருக்கு அனுப்ப வேண்டும். விட்டுவிடுகைக்கான அறிவிப்பு என்பது, காப்புறுதி பெற்றவர், காப்புறுதி அளித்தவரின் பயன்படுத்தலுக்கு அளிக்கப்போவதாகக் குறிப்பதாகும். இவ்வறிவிப்பு குறிப்பிட்ட படிவத்தில் இருக்க வேண்டும் என்பதில்லை. அது முழுமையானதாகவும் கட்டுப்பாடற்றதாகவும் இருக்க வேண்டும். இவ்வறிவிப்பு வாய்மொழியாகவோ எழுத்து மூலமாகவோ இருக்கலாம்.

தொழிற்சாலைகள் சட்டத்தின் 7-ஆம் பிரிவின்படி, தொழிற்சாலை உரிமையாளர், தொழிற்சாலைக்கான இடத்தைப் பதிவு செய்வதற்காகத் தொழிற்சாலை ஆய்வாளருக்கோ அரசிற்கோ அறிவிப்பு அனுப்ப வேண்டும். அவ்வறிவிப்பில் உரிமையாளர் பெயர், தொழிற்சாலையில் செய்யவிருக்கும் தொழில், இடம் போன்ற விவரங்கள் கூறப்பட்டிருக்க வேண்டும். அச்சட்டத்தின் 61-ஆம் பிரிவின்படி, வய்து வந்தோர் பணிபுரிய வேண்டிய காலம் குறிப்பிடப்பட்ட, ஓர் அறிவிப்பு தொழிற்சாலையில் வைக்கப்பட வேண்டும். அ.பி.பொ.

**அறிவியல் ஆசிரியர்:** அறிவியல் இன்றைய உலகில் ஓர் இன்றியமையாத இடத்தைப் பெற்றுள்ளது. அனைத்துப் பாடங்களைக் கற்பதற்கும் அறிவியல் அறிவு அடிப்படையாக அமைந்துள்ளது. ஆகவே பள்ளிப் பாடத் திட்டத்தில் அறிவியல் இன்றியமையாத பாடமாக இடம் பெற்றுள்ளது. தொடக்கக் கல்வி நிலையில் அறிவியல், புதுமுறை அறிவியல் எனவும், உயர் நிலைப்பள்ளி நிலையில் பொது அறிவியல்

எனவும் மேனிலைப்பள்ளி நிலையில் விருப்பப் பாடங்களாக அறிவியலின் பெரும்பிரிவுகளாக, இயற்பியல், வேதியியல், தாவரவியல், விலங்கியல் எனவும் சிறப்பாகக் கற்பிக்கப்படுகின்றன.

மனித வாழ்க்கையை எளியதாகவும் இனியதாகவும் ஆக்கும் அறிவியலின் தத்துவங்களைப் பள்ளி மாணவர்கள் நன்கு புரிந்து கொள்ள வேண்டும். அறிவியல் உண்மைகள், நுட்பங்கள் ஆகியன வாழ்க்கையில் பயன்படும் விதத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும். ஆகவே பள்ளிகளில் அறிவியல் பாடம் செம்மையாக, பயன் தரத்தக்க நிலையில் கற்பிக்கப்பட வேண்டும். அத்துடன் இன்றைய பொதுக் கல்வியின் நோக்கங்களும், அறிவியற் கல்வியின் நோக்கங்களும் மாணவர்களிடையே ஆக்கத்திறனை வளர்க்க வேண்டும் என்பதாகும். ஆகவே தொடக்க நிலையிலிருந்து மேல்நிலைவரை அறிவியல் கற்பித்தலில் இந்நோக்கத்தை நிறைவேற்ற முயலவேண்டும். பள்ளிகளில் ஆய்வக வசதி, நூலக வசதி, கட்டிட வசதி போன்ற அனைத்தும் சிறப்பாக அமைந்திருந்தாலும், அறிவியற் கல்வியின் தரம் அதைக் கற்பிக்கும் அறிவியல் ஆசிரியரின் திறமையையும் தரத்தையும் தகுதியையுமே சார்ந்துள்ளது.

அறிவியல் பாடத்தில் ஆர்வம், கவர்ச்சி, நாட்டம் ஆகியவற்றை ஏற்படுத்த நிறைந்த ஆர்வமும், பரந்த அனுபவமும், சிறந்த முயற்சியும், சுறுசுறுப்பும், தன்முனைப்பும் உள்ள ஆசிரியர் தேவை. ஆய்வக, நூலக வசதியின்மை, போதிய அளவு பயிற்சிக் கருவிகள் இல்லாமை ஆகியவற்றைப் பொருட்படுத்தாது உள்ளூரில் கிடைக்கும் மூலப்பொருள்களைப் பயன்படுத்தியும், சொந்தமாகத் துணைக் கருவிகளைச் செய்தும் அறிவியல் கற்பித்தலைச் செம்மையாக மேற்கொள்ளும் ஆசிரியர் வேண்டும். அறிவியல் ஆசிரியரின் தகுதிகளும், ஆளுமையும் பிற பண்புகளும், அறிவும் திறனும், அனுபவங்களும் உயர்நிலைப்பட்டதாக அமைந்திருத்தல் வேண்டும். இப் பண்புகள் எல்லா ஆசிரியர்களுக்கும் தேவைப்படுவனவாம்.

அறிவியல் ஆசிரியர்களைப் பல நிலையினராகப் பிரிக்கலாம். எல்லா நிலை ஆசிரியர்களும் அறிவியல் பாடத்தில் நல்ல ஆழ்ந்த, அகன்ற அறிவுடையவர்களாக இருத்தல் வேண்டும். தொடக்கக் கல்வி நிலையில் பள்ளி இறுதிப் படிப்புடன் ஆசிரியர் பயிற்சித் தகுதி பெற்றவர்களைப் பணியமர்த்தி உள்ளனர். அவர்கள் அறிவியலுக்கெனச் சிறப்புப்பயிற்சி எதுவும் பெற்றவரில்லை. உயர்நிலை வகுப்புகளுக்குக் கற்பிக்கும் ஆசிரியர், பி.எசி. பட்டமும், பி.எட். பயிற்சியும் பெற்றிருக்க வேண்டும். நடுநிலை வகுப்புகளுக்குப் பயிற்றுபவர், பள்ளி இறுதிப் படித்து ஆசிரியர் பயிற்சி பெற்றவராக உள்ளனர். எட்டாம் வகுப்புப் பாடத் திட்டம் உயர்த்தப்பட்டிருப்பதால் இந்த வகுப்புக்கு அறிவியல் கற்பிக்கும் ஆசிரியர், பி.எசி., பி.எட். ஆசிரியராக இருத்தல் நலம். மேல்நிலைப் பள்ளி வகுப்புகளுக்கு அறிவியல் கற்பிக்கும் ஆசிரியர் எம்.எசி. பி.எட். ஆசிரியராக இருத்தல் நலம். பதினொன்று, பன்னிரண்டாம் வகுப்புகளுக்கு அறிவியல் கற்பிக்க இயற்பியல், வேதியியல், தாவரஇயல், விலங்கியல் பாடங்களில் சிறப்புத் தகுதி பெற்றவர்கள்தாம் அந்தந்தப் பாடங்களைக் கற்பிக்கலாம். இந்தக் கல்வித்தகுதிகளோடு, புதிய கற்பிக்கும் முறைகளில் பயிற்சியும் பெற்றிருத்தல் வேண்டும். அறிவியலின் அனைத்துப் பிரிவுப் பாடங்களைப் பற்றிய தேவையான அறிவும் உடையவராயிருத்தல் வேண்டும். அறிவியலில் ஏற்படும் மாற்றங்களுக்கு ஏற்ப அறிவைப் புதுப்பித்துக் கொள்ள வேண்டும். ஒரு முறை பெற்ற பணிமுன் பயிற்சி போதுமானதாக இருப்பதில்லை. அதனால் தொழில் திறனில் தேர்ச்சியைக் கருத்தரங்கு, பணிமனை, மாநாடுகள், புத்தொளிப் பயிற்சி ஆகிய இவைமூலம் பெற்றுக்கொள்ள வேண்டும். இவற்றில் பெறும் அனுபவங்கள் ஆசிரியரை இக்காலக் கற்பித்தல் நுணுக்கங்களோடும், புதிய பயிற்றுக் கருவிகள், இணைப்பாடச் செயல்கள், அறிவியல் துறையின் பிறவளர்ச்சிகள் ஆகியவற்றோடும் அறிமுகப்படுத்தும்.

இவற்றைத்தவிர, ஆசிரியர், கல்வி உளவியல் அறிவு பெற்றிருத்தல் வேண்டும். ஒவ்வொரு குழந்தையும் ஒரு தனியாள் என்பதுடன், அக்குழந்தை தனது திட்டத்திற்குட்பட்டு வளர்கிறது என்று அறிந்திருத்தல் வேண்டும். குழந்தைகள் தங்கள் விருப்பம், திறமைக்கேற்ப வளர்வதற்கு ஆசிரியர் தமது உளவியலறிவைக் கொண்டு வழி காட்ட வேண்டும். குழந்தைகளின் மனப்பான்மைக்கு ஒத்துவராதவற்றை அவர்களுக்குச் சுமையாக்கக்கூடாது.

அறிவியல் ஆசிரியர் தாம் கற்பிக்கும் பாடத்தில் ஆழ்ந்த அறிவும் அகன்ற அனுபவமும் பெற்றிருக்க வேண்டும். மாணவர்களின் ஆர்வம், கவர்ச்சி, மனநிலை, விடுப்பூக்கம், திறமைகள், அறிவுத்தரம், நாட்டம், பொருளுணரும் திறன் பற்றிய அறிவைப் பெற்றிருக்க வேண்டும். அப்போதுதான் அவர்களின் திறமை-விருப்பத்துக்கேற்ற வேலைகளைப் பகிர்ந்து கொடுக்கவும் கல்வி நிலையில் வழிகாட்டவும் அறிவுரை பகரவும் இயலும். கற்றல் தொடர்பான உளவியல் விதிகளை அறிந்து அறிவியல் கற்பித்தலில் அவற்றைக் கடைப்பிடிக்க வேண்டும். அறிவியலின் அண்மைக் காலவெளியீடுகள், ஆய்வகக் கையேடுகள், ஆசிரியருக்கு வழிகாட்டும் நூல்கள், மாணவர், ஆசிரியர் மேற்கோள் நூல்கள், அறிவியல் கலைக்

களஞ்சியங்கள், அறிவியல் மாத, வார இதழ்கள் இவற்றோடு ஆசிரியர் தொடர்புடையவராயிருத்தல் வேண்டும்.

அறிவியல் கற்பித்தலில், விரிவுரை முறை, செய்துகாட்டல் (பரிசோதனை) முறை, கண்டறி முறை, செயல்திட்ட முறை, தலைப்பு முறை, வரலாற்று முறை, வாழ்க்கை வரலாற்று முறை, மாணவர்குழுப்போதனை முறை, தனிமாணவர் சோதனை முறை, சுழற்சி முறை, திட்டமிட்டுக் கற்றல் முறை, குழுக் கற்பித்தல் முறை, நுண்ணிலைக் கற்பித்தல் முறை ஆகிய பயிற்று முறைகளைப் பற்றிய தெளிந்த நல்லறிவு வேண்டும். தமது கற்பித்தலைச் சிறப்பாக மேற்கொள்ளக் கருத்துகளை எளிய இனிய நடையில் கூறி விளக்க நல்ல மொழியறிவு வேண்டும். அறிவியலில் கருத்தாழம் மிக்கவராகவும் மொழியில் சொல்லாற்றல் மிக்கவராகவும் இருத்தல் வேண்டும், ஆசிரியர் தமது துறையில் ஆய்வகக் கருவிகளை எளிமையாக உள்ளூர்ச் சூழலில் மலிவாக, சில போது விலையின்றிக் கிடைக்கும், வீணாகப் போகும் பலவிதமான பொருள்களைக் கொண்டு, தாமாகச் சொந்தமாகவும் தரமானதாகவும் உருவாக்கிக் கொள்ளும் மூலவளத்தைப் பயன்படுத்தும் திறனுமிக்கவராக இருத்தல் நன்று. பல்வேறு அறிவியல் கருவிகளைக் கையாளுந்திறனோடு கூர்ந்து நோக்கும் திறன், ஆராய்ந்தறியும் திறன், ஓவியத்திறன். சோதித்தறியும் திறன் ஆகியவற்றையும் பெற்றிருக்க வேண்டும்.

இவற்றுடன் ஆசிரியர் அறிவியல் கழகங்களைப் பற்றிய அறிவு, கற்பித்தல் இயந்திரங்கள் பற்றிய பொதுக்கருத்து, பாடங்களைத் திட்டமிடுதல், ஆய்வகம் அமைத்தல், நிருவாகம் ஆகியவற்றில் பயிற்சியும், பழம்பொருள் காட்சியகங்கள் அமைத்தல் பற்றிய நுணுக்கங்கள், தாவர, விலங்குகளைப் பதப்படுத்தும் முறை பற்றிய அறிவு, மீன் வளர்த்தல், பிறஉயிரினங்களை வளர்த்தல் பற்றிய அறிவு, கருவிகளைப் பராமரித்தல், பழுது பார்த்தல், சில கருவிகளில் சில மாற்றங்கள் அல்லது சில முன்னேற்றங்களைச் செய்தல், கற்பித்தல் பாடப் பொருள்களை உருவாக்குதல் போன்ற செயல்களில் அனுபவ அறிவும் பெற்றிருக்க வேண்டும்.

**அறிவியல் மனப்பான்மை:** ஒருபக்கம் சார்ந்து கூறும் மனப்பான்மை இல்லாமை, விருப்பு வெறுப்பின்றி உண்மைகளை நன்கு ஆராய்ந்து காரணம் காணும் மனப்பான்மை, திறந்த மனமுடைமை, சரியான அறிவைப்பெற விருப்பமும், அறிவை அடைவதற்கான வழிகளில் முழுநம்பிக்கையும் பெற்றிருத்தல், நிரூபிக்கப்பட்ட அறிவினைப் பயன்படுத்திச் சிக்கல்களுக்குத் தீர்வு காணுதல், எதையும் திறனாய்வு முறையில் சிந்தித்தல், உற்று நோக்கவும் செய்தல், சிக்கல்களை விருப்பு, வெறுப்பின்றித் தன்வயப்படாமல், நடுநிலைத்தன்மையுடன் அணுகுதல், அவற்றைத் தீர்க்கத் திட்டமிட்ட முறைகளைக் கையாளுதல், மற்றவர் கருத்துக்கு மதிப்புக் கொடுத்து, தமது முடிவு தவறு என்று அறிந்தால் திருத்திக் கொள்ளுதல், சுதந்திரமாகச் சிந்தித்தல், அடிப்படையற்ற கருத்துகளையும், மூட நம்பிக்கைகளையும் ஏற்றுக்கொள்வதைத் தவிர்த்தல், தம்மைச் சுற்றியுள்ள பொருள்களை உற்றுநோக்கி, அவற்றை அறிவியல் நோக்கில், "ஏன்? எப்படி? என்ன?" என அறிய ஆவல் கொள்ளுதல், தக்க சான்றுகள் இன்றி விரைவில் எந்த முடிவுக்கும் வராமல் இருத்தல் ஆகியவை அறிவியல் மனப்பான்மையின் கூறுகள் ஆகும். அறிவியல் ஆசிரியரே இந்த மனப்பான்மையினைப் பெற்று மாணவரிடம் இவற்றை வளர்க்க முயலவேண்டும்.

**ஆசிரியரின் பொறுப்பு:** அறிவியல் ஆசிரியரின் பொறுப்பு நன்கு அமைக்கப்பட்ட ஆய்வகத்தைச் சரியாக நிருவகித்து மேற்பார்வை செய்ய வேண்டுவதுமாகும். கவனமுள்ள, திறமையுள்ள மேற்பார்வையினால் விபத்துகளைக் குறைக்கவும் தவிர்க்கவும் முடியும். விபத்துகள் நேர்ந்துவிட்டால் எந்த வகையிலும் சமாளிக்கத் தெரிந்திருக்க வேண்டும். ஒரு விபத்து நேர்ந்தால் அந்த ஆசிரியர் முன்னெச்சரிக்கைகளைக் கையாண்டாரா? என்ற வினா எழுப்பப்படுகிறது. ஆகவே அறிவியல் ஆசிரியர் ஆய்வக விதிமுறைகளைக் கடைப்பிடிப்பதுடன் மாணவர்களும் கடைப்பிடிக்குமாறு செய்ய வேண்டும். ஆபத்தான பொருள்களைக் கவனமாகப் பாதுகாக்க வேண்டும். ஆய்வகத்தில் மாணவர்களுக்கு ஒழுங்கை வகுத்துக் கொடுப்பதும், எப்போதும் ஆய்வகத்தூய்மையைப் பாதுகாப்பதும், மாணவர்கள் பணிசெய்யும் சிறந்த மையமாக ஆய்வகத்தை நிருவகித்தலும் அறிவியல் ஆசிரியரது பொறுப்பு ஆகும்.

**அறிவியல் ஆசிரியரின் தொழில் வளர்ச்சி:** ஆசிரியரும் கல்வியும் பிரித்துணர முடியாத அளவுக்கு இவற்றிடையே இணைப்பு ஏற்பட்டுள்ளது. நல்ல தொழிற் பின்னணியுள்ள ஆசிரியர் இல்லையேல் கல்வியோடு தொடர்புடைய பிற கருவிகள் அனைத்தும் பயனற்றுப் போகும். ஆகவே ஆசிரியர் தமது தொழில்வளத் திறனை உயர்த்திக் கொள்ளப் பல்வேறு செயல்களில் பங்குபெறவேண்டும். தொழில் வளர்ச்சிக்குரிய செயல்களில் குறிப்பிடத்தக்கவை: பிற ஆசிரியர்களுடன் தொடர்பு, பயணங்கள், இடங்களைப் பார்வையிடல், அறிவியல் பொழுதுபோக்குகள், ஆராய்ச்சிகள், பயில் வட்டங்கள் (Study Circles), மாநாடுகள், மன்றங்கள், அதிக அனுபவமிக்க ஆசிரி

யர்களின் செயல்களைக் கூர்ந்து நோக்குதல், ஆசிரியர் தொழிற் சங்கங்களில் உறுப்பினராதல், பணியிடைப் பயிற்சி, பணிமனைச் செயல்கள், மாவட்ட, மாநில அனைத்துப் பள்ளி நிகழ்ச்சிகளில் பங்கு பெறுதல், வேலை அனுபவ நிகழ்ச்சிகள், பல்வேறு நிலையில் நடைபெறும் ஆராய்ச்சிகளில் பங்கு பெறுதல் போன்றவை ஆகும். இதனுடன் அனைத்து ஆசிரியர்களும் இணைந்து, அறிவியல் கழகங்களை அமைத்துக் கல்வி ஏற்பாட்டை முன்னேற்றவும், கருத்துப்பரிமாற்றங்கள் செய்து கொள்ளவும், கற்பித்தல் முறைகள் பற்றிக் கலந்து முடிவெடுக்கவும், அறிவியல் பொருட்காட்சிச் சோதனைச் செயல் திட்டங்கள், செய்து காட்டல் ஏற்பாடுகள் போன்றவற்றைச் செய்யவும் வழிவகைகளை மேற்கொண்டு தொழிலில் வளர்ச்சி பெறலாம். தங்கள் பள்ளியில் ஆண்டு இதழ்களுக்குக் கட்டுரை எழுதுவதன் மூலமும், பிற கல்வி இதழ்களுக்கு எழுதுவதன் மூலமும் அறிவை வளர்த்துக் கொள்ளலாம். ஆசிரியரின் தொழில் வளர்ச்சிக்கு மேல்படிப்புத்தகுதியும் உதவும். இது தொடர்பாக அண்மையில் பல்கலைக்கழக நிதிக்குழுவானது 'ஆசிரியர் கல்வி நிதியுதவி' (Teacher-Fellowship Scheme) என்ற திட்டத்தின் மூலம் அனைத்துக் கல்லூரி ஆசிரியர்களுக்கும் அவர்கள் ஆராய்ச்சிக் கால முழுமைக்கும் ஊதியமும் விடுப்பும் வழங்கி அவர்களை மேற்படிப்புப் படிக்கச் செய்ய உதவியுள்ளது. பள்ளி ஆசிரியர்களுக்கும் தங்கள் தொழில் தொடர்பான பயிற்சி பெறுவதற்கும், மேற்படிப்புக்கும் விடுப்பு வழங்கும் திட்டம் கொண்டு வரப்பட்டுள்ளது. இதை அறிவியல் ஆசிரியர்கள் பயன்படுத்தி ஆசிரியத் தொழிலில் வளர்ச்சி பெற வேண்டும். அறிவியல் வளர்ச்சியினால் கற்பிக்கும் இயந்திரங்கள் ஆசிரியரது பணியைச் செய்யத் தொடங்கிவிட்டபோதிலும் ஒரு போதும் ஆசிரியரது இடத்தை எந்த இயந்திரமும் நிரப்ப முடியாது. ஆசிரியர் அல்லாத ஒருவரும் நிரப்ப இயலாது. த.ச.

**அறிவியல் ஆய்வகம்:** சோதனை செய்யும் திறன்களை மாணவர்கள் வளர்த்துக் கொள்வதற்கும் அறிவியல் மனப்பான்மை பெறுவதற்கும் அறிவியல் கற்றுக் கொள்வதில் ஆர்வத்தை ஏற்படுத்துவதற்கும் ஆய்வகம் இன்றியமையாததாகும். ஆய்வகம் எனப்படுவது பொதுவாக மாணவர்கள் சோதனைகளை நிகழ்த்தும் இடத்தையே குறிக்கும். ஆய்வகத்துடன் இணைந்து வேறு அறைகளும் உள்ளன. எடுத்துக்காட்டாக, வேதியியல் ஆய்வகம் எனில், மாணவர்கள் சோதனை செய்யும் இடத்தைத்தவிர, வேதியியல் பொருள்களைச் சேமித்து வைக்கும் அறையும் (Store Room), தராசு அறையும் (Balance Room), தயாரிப்பு அறையும் (Preparation Room) தேவைப்படுகின்றன. பொருளியல் ஆய்வகமாயின், நிழற்பட வேலைக்கென, ஓர் இருட்டறையும் (Dark Room) பொருள்களைச் சேமித்து வைக்கும் அறையும், தயாரிப்பு அறையும் தேவைப்படுகின்றன. உயிரியல் ஆய்வகமெனில், தாவர அறையும் (Green Room) விலங்கு அறையும் (Animal Room) பொருட்காட்சி அறையும் சேமிப்பு அறையும் தேவைப்படுகின்றன.

நடுநிலைப் பள்ளிக்குப் பொது அறிவியல் கற்பிப்பதற்கென ஓர் ஆய்வகமும், உயர்நிலை, மேல்நிலைப்பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் அறிவியலின் ஒவ்வொரு பிரிவிற்கும் ஒவ்வொரு சிறப்பு ஆய்வகமும் அமைந்துள்ளன. ஒவ்வொரு அறிவியல் பிரிவின் ஆய்வகத்திற்கும் தேவைப்படுகின்றவை வேறு வேறாக இருப்பதால், தனித்தனி ஆய்வகங்களை ஏற்படுத்தி, அந்தந்தப் பிரிவு ஆசிரியர்களிடமும் பொறுப்புகள் ஒப்படைக்கப்படுகின்றன.

பொதுவாக ஆய்வகத்தில் மாணவர்கள் தனித்தனியாகச் சோதனைகளில் ஈடுபட வசதியாகச் செய்முறை மேசைகளும் (Work Tables) இருக்கைகளும் உள்ளன. ஆய்வகத் தேவைக்கேற்பச் செய்முறை மேசைகளுக்கு மின் இணைப்புகளும் வாயு இணைப்புகளும், நீர் இணைப்புகளுடன் கூடிய கழிவு நீர்த் தொட்டிகளும் அமைக்கப்படும். ஆய்வகங்களில் நல்ல காற்றோட்ட வசதி இருப்பதுடன், போதிய வெளிச்சமும் இருக்கும். இயற்கை வெளிச்சத்துடன் மின் விளக்குகளும் பொருத்தப்பட்டிருக்கும். வேதியியல் ஆய்வகத்தில் காற்றினை வெளியேற்றும் விசிறிகளும் அமைக்கப்படும். நச்சு வாயுக்கள் தயாரிக்கவென த் தாழ்வாரத்தில் தனி ஏற்பாடு இருக்கும். இவையன்றி ஆசிரியர் சில சோதனைகளைச் செய்து காட்டும் பொருட்டு ஆய்வகத்தில் செய்து காட்டும் மேசையும் இருக்கும். அதனை ஒட்டிய சுவரில், பெரிய அளவில் நீளமாகக் கரும்பலகை அமைப்பும் இருக்கும்.

ஆய்வகத்திற்குத் தேவையான பொருள்களைப் பட்டியலிட்டு, அவற்றைப் பற்றிய விலைப்பட்டியலைக் குறைந்தது மூன்று அறிவியல் கருவிகளை விற்பனை செய்யும் நிறுவனங்களிலிருந்து பெற்றுப் பொருள்களின் விலை குறைவாக உள்ள நிறுவனங்களிலிருந்தே பொதுவாக அவற்றை வாங்குவர். இதற்கு விதிவிலக்குத் தேவைப்படின் போதிய காரணங்கள் குறிப்பிடப்பட வேண்டும். இவ்வாறு பெற்ற பொருள்களை ஒப்பு நோக்கி, உடையக் கூடியவையா அல்லது நிலையாயுள்ள பொருளா எனப் பார்த்து அவை ஒவ்வொன்றையும் அதற்கென்வுள்ள ஆய்வகப் பதிவேடுகளில் குறித்துவைப்பர்.

ஆய்வகத்தில் இரும்பு, மரம், பித்தளை, கண்ணா

டிச் சாமான்கள், இரப்பர்க் குழாய்கள் எனப் பல வகையான பொருள்கள் இருக்கும். இவையன்றிப் பல் வேறுவகையான வேதியியல் பொருள்களும் உண்டு. அவற்றில் சில எளிதில் ஆவியாகக் கூடியவை; சில நீரை உறிஞ்சும் தன்மை உடையவை; சில பொரிந்து போகும் தன்மை உடையவை; சில தீப்பற்றி எரிபவை; சில நச்சுத்தன்மை உடையவை. ஆகவே இவற்றைப் பாதுகாப்பதுடன் முன்னெச்சரிக்கையாகச் சீசாக்களில் போட்டு நன்கு மூடி அவற்றின் மேல் தெளிவாக அப்பொருள்களின் பெயர்களை எழுதி வைத்திருப்பர். குறுகிய வாயுள்ள சீசாக்களில் நீர்மப் பொருள்களையும், அகன்ற வாயுள்ள சீசாக்களில் திடப் பொருள்களையும் வைத்திருப்பர்.

நன்முறையில் அமைக்கப்பட்டுச் செயற்படும் ஆய்வகத்தில் இன்னல்கள் விளைவது மிகவும் அரிது. இன்னல் ஏதாவது ஏற்படுமாயின் முதன் முதலாகக் கேட்கப்படும் கேள்வி 'வேண்டிய அளவு முன்னெச்சரிக்கைகள் செய்யப்பட்டனவா' என்பதே. ஆகவே ஆய்வக வேலை சிறந்து செயற்பட, மாணவருக்கும் ஆசிரியருக்கும் உதவக் கூடிய—அவர்கள் பின்பற்ற வேண்டிய அடிப்படை விதிகளையும் எச்சரிக்கைகளையும் தெளிவு படுத்துதல் வேண்டும். ஆய்வகத்தில் இன்னலை விளைவிக்கக்கூடிய சோதனைகளின் வகைகளை வேதியியல் ஆசிரியர் அறிந்து வைத்திருத்தல் நலம் பயக்கும்.

ஆசிரியரும் மாணவரும் பின்பற்ற வேண்டிய விதிகளை எவ்வளவு திருத்தமாக அமைத்து மிகவும் கவனமாகப் பின்பற்றினாலும் ஆய்வகங்களில் எதிர்பாராது இன்னல்கள் ஏற்படுவதுண்டு. அமிலம், காரம், பாசுவரம், சோடியம், பொட்டாசியம் போன்ற பொருள்கள் உடலில் படுவதால் புண் உண்டாதல், சாதாரண வெட்டுக் காயங்கள் ஏற்படுதல், கண்ணில் அமிலம் படுதல், நச்சுப் பொருள்களை விழுங்குதல், நச்சுக் காற்றை உள்ளிழுத்தல், மின் தாக்கு, மயக்கமுறுதல், தீ விபத்துகள் போன்றவை பொதுவாக ஆய்வகத்தில் ஏற்படும் இன்னல்களாகும். இவை ஒவ்வொன்றுக்கும் அறிவியல் ஆசிரியர் செய்யக்கூடிய முதலுதவியை அறிந்திருத்தல் இன்றியமையாதது. மேலும் ஆய்வகத்தில் முதலுதவிக்கென முதலுதவிப் பெட்டியும் தீ அணைப்பான்களும் இருத்தல் இன்றியமையாதன. ஏ.ப.செ.

**அறிவியல் ஆவணத் தொகுப்பு மையம்:** ஒரு நாடு பல துறைகளில் முன்னேற்றமடையத் திறமையாகத் திட்டமிடுதலும் நாட்டின் வளர்ச்சிக்காக ஆராய்ச்சி செய்வதற்குரிய சூழ்நிலையை ஏற்படுத்தலும் வேண்டும். மேலும், அவற்றை விரைவுபடுத்தத் தொழில் நுட்பக் கண்டுபிடிப்புகளையும் உடனுக்குடன் அத்துறையில் ஈடுபட்டிருப்பவர்கள் அறிய வேண்டும். அதற்காக அறிவியல் செய்திகள் எங்குக் கிடைப்பினும் ஒன்று திரட்டி உரிய காலத்தில் சரியான செய்திகளைக் கிடைக்கும்படி செய்ய வேண்டும். இத்தகு பணிகள் அரசால்தான் செய்யமுடியும். இதை உணர்ந்த ஐக்கிய நாடுகளின் கல்வி, அறிவியல் பண்பாட்டு நிறுவனம் (UNESCO) பல நாடுகளில் அந்தந்த அரசு உதவியுடன் தேசிய ஆவணத் தொகுப்பு மையங்களை (National Scientific Documentation Centre) ஏற்படுத்தப் பல வகைகளில் உதவி புரிந்து கொண்டே இருக்கிறது. இத்தகைய ஆவணத் தொகுப்பு மையம் இந்தியாவில் 1952-ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்டது.

**இந்திய அறிவியல் மையங்களின் வளர்ச்சி:** இந்திய அறிவியல் வளர்ச்சி கி.பி. 1784-ஆம் ஆண்டு 'வங்காள அரசாங்க ஆசியக் கழகம்' (Royal Asiatic Society of Bengal) என்ற நிறுவனத்தின் தொடக்கத்தோடு தொடங்குகிறது. இந்நிறுவனத்தைத் தொடர்ந்து, கி.பி. 1800-ஆம் ஆண்டின் தொடக்கத்தில் முக்கோணத்தின் கோணச் சிறை வீதங்களைக் கணித்தாயுங் கணக்கியல் துறை மதிப்பீடு (Trigonometric Survey) என்ற ஆய்வு நிலையமும், இந்நூற்றாண்டின் இறுதியில் தாவரவியல் (Botanical), புவியியல் (Geological), மருத்துவஇயல் (Medicine) ஆகியவற்றின் மதிப்பீட்டு ஆய்வுக் கழகங்களும் தொடங்கப்பட்டன. விலங்கியல் (Zoological), தொல் பொருள் ஆய்வியல் (Archaeological) மானிடவியல் (Anthropological) ஆகியவற்றின் மதிப்பீட்டு மையங்கள் 20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நிறுவப்பட்டன. மேலும் கி.பி. 1857-ஆம் ஆண்டில் கல்வித் துறை ஆராய்ச்சியில் பம்பாய், கல்கத்தா, சென்னை ஆகிய நகரங்களில் நிறுவப்பட்ட பல்கலைக்கழகங்களால் முன்னேறத் தொடங்கியது. சமூகப் பொருளாதாரத் தாக்கங்களால் ஏற்படும் அடிப்படைச் சிக்கல்களைப் பற்றிய ஆய்வு நிலையங்களும், இக்காலத்தில் இந்திய வேளாண்மை ஆராய்ச்சிக்கூடம் என்றழைக்கப்படும் இம்பீரியல் வேளாண்மை ஆய்வுக்கழகமும், வன ஆய்வு நிலையமும், மத்திய ஆய்வுக் கூடமும், கிங்கு ஆய்வுக் கூடமும், பாசுடர் ஆய்வு நிலையமும், இந்திய அறிவியல் வளர்ச்சிக் கழகமும், இந்திய ஆய்வு நிதிக் கழகமும், தேசியக் கட்டிட அமைப்புக் கழகமும், மத்திய வாரியங்களான நீர்ப்பாசனம், சக்தி ஆகியவற்றின் ஆய்வுக் கழகங்களும், நாட்டின் இயற்கை வளங்களைப் பயன்படுத்தும் வகையில் எண்ணெய், இயற்கை வாயுக் குழுவும், இந்தியச் சுரங்கத் துறையரங்கம் முதலிய ஆய்வுக் கழகங்களும் நிறுவப்பட்டன. சுதந்திரத்திற்குப் பிறகு இக்கழகங்களின் அறிவியல் ஆராய்ச்சிகளிலும் தொழில் நுட்ப அறிவியல்

ஆராய்ச்சிகளிலும் வேகம் முடுக்கிவிடப்பட்டன. மாநில அரசுகளும் ஆய்வுக் கூடங்களையும் தொழில் நுட்பக் கழகங்களையும் ஏற்படுத்தின.

**இந்தியத் தொழில்துறை ஆராய்ச்சி:** இந்திய அரசு தன் சீர்தூக்கினைத் தொழில் துறை ஆய்வின் மீது இரண்டாம் உலகப் போரின்போது திருப்பியது. அறிவியல் மற்றும் தொழில் ஆய்வுக் கழகத்தின் முன்னோடியான தொழில் வளர்ச்சி மதிப்பீட்டுத் துறையரங்கத்தை 1942-இல் அரசு தொடங்கியது. அறிவியல் மற்றும் தொழில் ஆய்வுக் கழகம் அறிவியல் ஆய்வுச் சோதனைச் சாலைகளை நாடு முழுவதும் நிறுவியும், ஆய்வுக் கூடங்களிலும் பல்கலைக் கழகங்களிலும் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகளுக்கு ஆதரவு அளித்தும் நாட்டின் ஆய்வுத் திறனை வளர்த்து வருகிறது. இது போன்றே இந்திய மருத்துவக் கழகம், இந்திய வேளாண்மையிலும் ஆய்வுகளை மேற்கொண்டது. நாட்டின் பாதுகாப்புப் படையின் வல்லமையை மிகுதிப் படுத்துவதற்காக 1948-ஆம் ஆண்டில் பாதுகாப்பு அறிவியல் ஆய்வுக் கழகமும், 1958-இல் பாதுகாப்பு வளர்ச்சி ஆய்வுக் கழகமும் நிறுவப்பட்டன. அணு ஆய்வுக் கூடம் ஒன்று 1948-ஆம் ஆண்டில்இயற்றப்பட்டஅணுச்சக்திச் சட்டத்தின் அடிப்படையில் 1954-ஆம் ஆண்டில் தராம்பேயில் அமைக்கப்பட்டது. இத்தகைய அறிவியல் ஆய்வு வளர்ச்சியால் நாடு முழுவதும் ஆய்வுக் கூடங்கள் மத்திய மாநில அரசுகளால் நிறுவப்பட்டன. இந்த ஆய்வுக் கழகங்கள் தங்களின் புதிய அறிவியல் ஆய்வுக் கண்டுபிடிப்புகளை ஆய்வுக் கட்டுரைகளாக்கித் தத்தம் ஆய்வு நிலையப் பருவ ஏடுகளாக வெளியிட்டன. இதனால் பருவ ஏடுகளின் வெளியீடு 25 ஆண்டுகளில் 140 முதல் 150 ஆக உயர்ந்தது. இந்த உயர்வு நாட்டில் ஒரு தேசீய ஆவணத் தொகுப்பு மையத்திற்கு அடிகோலியது.

**இந்தியத் தேசிய அறிவியல் ஆவணத் தொகுப்பு மையத்தின் தொடக்கம் (INSDCC):** அகில உலக ஆவணத் தொகுப்புக் கழகம் 1946-ஆம் ஆண்டில் ஒவ்வொரு நாட்டிலும் ஆவணத் தொகுப்பு மையங்கள் ஏற்படுத்த முயற்சி மேற்கொண்டது. இதன் அடிப்படையில் இந்தியாவில், பேராசிரியர் டாக்டர் சீ.ரா. அரங்கநாதன் அவர்களின் தலைமையிலான பொறுப்பாண்மைக் குழு ஓர் அறிக்கையினை 1947-இல் அரசிற்கு அனுப்பியது. ஆனால் இத்திட்டம் உடனே செயலாக்கப்படவில்லை. திரு சாந்தி சுவரூப் பட்நகர் அவர்களால் முயற்சி செய்யப்பட்டு, ஐக்கிய நாடுகளின் கல்வி அறிவியல் பண்பாட்டு நிறுவனத்தின் (UNESCO) உதவியுடன் 1950-ஆம் ஆண்டு நிறுவப்பட்ட அமைப்பு, 1952-ஆம் ஆண்டு இந்தியத் தேசிய ஆவணத் தொகுப்பு மையம் என்ற பெயரில் செயற்படத் தொடங்கியது. இந் நிறுவனம் தேசிய ஆய்வுக் கூடங்கள், அறிவியல் ஆய்வகங்கள், தொழில் மையங்கள், பல்கலைக் கழகங்கள் முதலியவற்றின் அறிவியல் ஆய்வு முடிவுகளையும், அண்மைக்காலக் கண்டுபிடிப்புகள் பற்றிய செய்திகளையும் தெரிவிக்கும் மையமாகவும், ஆய்வு நிலையங்களிடையே கருத்துப் பரிமாற்றம் ஏற்படுத்தும் மையமாகவும் செயற்படத் தொடங்கியது.

**குறிக்கோள்கள்:**

1) ஆய்வுக்குப் பயன்படும் அறிவியல் பருவ ஏடுகளை வாங்குவது, அவற்றை முறைப்படுத்துவது.

2) அறிவியலாளர்களுக்கும் பொறியியலாளர்களுக்கும் பயன்படும் ஆய்வுக் கட்டுரைகளின் சுருக்கத்தைச் சுருக்கக் குறிப்பு அறிக்கைகளாக வெளியிடுவது.

3) சிறப்புத் தகவல்கள் வேண்டுவோர்க்கு மையத்திலிருக்கும் செய்திக் குறிப்புகளைக் கொண்டு விடையிறுத்தல்.

4) ஆய்வாளர்களுக்குத் தேவையான நிழற்படங்களையும் மொழி பெயர்ப்புக் கட்டுரைகளையும் வழங்குதல்.

5) நாட்டில் வெளியிடப்பட்டதும் வெளியிடப்படாததுமான ஆய்வுக்கட்டுரைகளின் களஞ்சியமையமாகப் பயன்படுவது.

6) உள்நாட்டு, வெளிநாட்டு ஆய்வாளர்களிடையே ஓர் இணைப்பகமாகச் செயற்படுவது.

**இந்நிறுவனத்தின் பணிகள்:** பல்வேறு குறிக்கோள்களுடன் இந்தியத் தேசிய ஆவணத் தொகுப்பு மையம், ஆவணத் தொகுப்பகமாகவும், தேசிய நூலகமாகவும் செயற்படத் தொடங்கியது. இது தொடர்பாக அரசாங்கம் பல்வேறு பொறுப்பாண்மைக் குழுக்களை நியமித்தது. இது கூட்டு நடைமுறையில், ஆவணச்சேர்ப்புச் செயல்திட்டத்தினை மேற்கொள்ளுதல் தேசியக் கூட்டிணைப்பு ஆய்வுப் பட்டியலின் ஆய்வகச் சோதனைச்சாலைகளுடன் இணைந்து உருவாக்குதல், முறைசெய்யப்பட்ட ஆவணங்களைச் சார்பு நூலகங்களுக்கு நிழற்பட வடிவங்களாக்கி அனுப்புதல் ஆகிய செயல்களை மேற்கொள்கிறது. நாட்டில் வெளியிடப்படும் அறிவியல் பருவ ஏடுகளைப் பற்றி ஒரு மதிப்பீடு செய்து அவற்றினை முறைப்படுத்துகிறது. மிகப் பழைய பருவ ஏடுகளின் காப்பகமாக விளங்குகிறது. உள்நாட்டில் வெளியிடப்படும் பன்மொழி நூல்களையும் பருவ ஏடுகளையும் சேர்த்து வைக்கிறது. மேலும் இது நாட்டிலுள்ள நூலகங்களுக்கு ஆவணங்களைத் தேவைக்கேற்பக் கொடுத்துதவும் தொடர்புபடுத்தும் மையமாகவும் செயற்படுகிறது.

இந்தியத் தேசிய அறிவியல் ஆவணத் தொகுப்பு மையம் இக்காலம் மண்டலக் கூட்டிணைப்பு ஆவணப் பட்டியல் ஒன்றைத் தொகுக்க முற்பட்டுள்ளது. இத் தொகுப்பில் தில்லி, பெங்களூர், பம்பாய், கல்கத்தா, சென்னை முதலிய இடங்களிலுள்ள நூலகங் களில் தொகுத்து வைக்கப்பட்ட அறிவியல் பருவ ஏடுகளும் அடங்கும்.

கீழே கொடுக்கப்பட்டுள்ள அட்டவணை நாட்டி லுள்ள நூலகங்களையும் அவற்றின் தொகுப்புகளை யும் குறிக்கிறது.

1959-ஆம் ஆண்டு ஐக்கிய நாடுகளின் கல்வி, அறிவியல் பண்பாட்டு நிறுவனம் ஏற்றுக்கொண்டது. மாத மொருமுறை இந்திய அறிவியல் குறிப்புரை ஒன்றும், இந்தியப் பருவ இதழ்கள் தகவல் தொகுதி ஒன்றும், அறிவியல், தொழில்துறை நிலையங்கள் விவரத் திரட்டு ஒன்றும் 1965-ஆம் ஆண்டு வெளியிடப்பட்டன.

மேலும் இம்மையம் ஆவண நிழற்படப் படி வமைப்பு மையமாகவும் செயற்பட்டுவருவது குறிப் பிடத்தக்கதாகும். இது மொழிபெயர்ப்பு மையமாக வும் செயற்படுகிறது. செருமனி, உருசியா, பிரஞ்சு,

| வரிசை எண் | மண்டலப் பகுதியின் பெயர் | இணைக்கப்பட்ட நூலகங்களின் எண்ணிக்கை | பருவ இதழ்களின் எண்ணிக்கை |
|---|---|---|---|
| 1. | பெங்களூர் (1967) | 49 | 3249 |
| 2. | பழைய, புதிய தில்லி (1967) | 14 மருத்துவ நூலகங்கள் | 3080 |
| 3. | மைசூர் மாநிலம் (1968) | 43 | 2623 |
| 4. | வாரணாசி (1963) | 16 | 2643 |
| 5. | கேரளா (1969) | 25 | 2122 |
| 6. | தேராடூன், உரூர்க்கேலா (1971) | 15 | 3057 |
| 7. | பம்பாய்-புனே (1978) | 66 | 8083 |
| 8. | ஐதராபாத்து (1975) | 51 | 3840 |
| 9. | சென்னை நகரம் (1975) | 57 | 6017 |
| 10. | இலக்னோ (1976) | 21 | 3074 |
| 11. | மேற்கு வங்காளம் (1978) | 149 | 18349 |

அறிவியல் பருவ இதழ்களின் தொகுப்பான தேசியக் கூட்டிணைப்பு நூற்பட்டியல் ஒரு சிறந்த நூற்றொகையாகவும் பயன்படும் என்று எதிர்பார்க் கப்படுகிறது.

அறிவியலாளர்களுக்கும் பொறியியலாளர்களுக் கும் பயன்படும் வகையில் இந்தியத் தேசிய அறிவியல் ஆவணத் தொகுப்பு மையம் பல பருவ இதழ்களை வெளியிடுகிறது. இருவாரங்களுக்கொருமுறையாக 2000 கட்டுரைகள் அடங்கிய 650 பருவ இதழ்களின் பட்டியல் ஒன்றினை 1954-ஆம் ஆண்டு முதன்முறை யாக வெளியிட்டது. தெற்கு, தென்மேற்கு ஆசியா வில் 1955-இல் வெளியிடப்பட்ட அறிவியல் வெளி யீடுகளடங்கிய ஒரு காலாண்டு நூற்றொகையினை இது வெளியிட்டது. எட்டு நாடுகளில் வெளியிடப்பட்ட 300 அறிவியல் பருவ இதழ்களிலிருந்து எடுக்கப்பட்ட 550 கட்டுரைகளின் குறிப்புரைகளுடன் இந்நூற் றொகை 1958-ஆம் ஆண்டிலிருந்து மாதம் ஒரு முறை யாக வெளியிடப்பட்டது. இந்த வெளியீடுகளை

இத்தாலி, இசுபானிசு, சப்பான், சீனம் ஆகிய மொழிகளில் வெளியிடப்பட்ட ஆய்வுக்கட்டுரைகளை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்து தேவைக்கேற்ப வழங்குகிறது. இப்பணிக்காக இந்நிறுவனம் தகுதி யும் சிறப்பும் வாய்ந்த மொழிபெயர்ப்பாளர்களை அமர்த்தியுள்ளது. அண்மையில் இம்மையம் தேசிய மொழிபெயர்ப்பு என்ற வெளியீடு ஒன்றினை 28 தகவல் தொடர்பு நிலையங்களுடன் கூட்டாகச் சேர்ந்து வெளியிட்டுள்ளது. இப்பணிக்காக இந் நிலையத்திற்கு அமெரிக்கத் தேசிய அறிவியல் கழகம் மிகவும் ஆதரவு அளித்து ஊக்குவித்தது.

இம்மையம் காமன்வெல்த்திலுள்ள வெளியிடப் படாத மொழிபெயர்ப்பு அடைவு என்ற அமைப்பில் உறுப்பாகியுள்ளது. இதன் தொடர்பாக இந்தியாவில் மேற் கொள்ளப்பட்ட மொழிபெயர்ப்புகளைப் பற்றி இலண்டனில் அமைந்துள்ள மத்திய பிரதிநிதிக்குத் தெரியப்படுத்துகிறது. காமன்வெல்த்து அடைவினை அட்டைப்படிவமாக்கி வைத்துள்ளது. நெதர்லாந்து

தொழில் நுட்பப் பல்கலைக்கழகத்தில் அமைந்துள்ள ஐரோப்பிய மொழிபெயர்ப்பு மையத்துடன் இணைந்து செயற்படுகிறது. இது, 1971-ஆம் ஆண்டில் உருசியத் தகவல் நிலையத்தையும் தொடங்கியுள்ளது. இவ் வமைப்பின் மூலம் சோவியத்து நாட்டில் வெளியிடப் படும் ஆய்வுக்கட்டுரைகளை மொழிபெயர்த்து இந்திய அறிஞர்களுக்கு 'இணக்கப் பட்டியல்', 'சோவியத்து அறிவியல் பருவ இதழ்களின் நவீனப்பட்டியல்' என்ற இரு பட்டியல் மூலமாக அறிவிக்கிறது. இப்பொழுது அதிவிரைவுத் தகவல் தொடர்புப் பணியினைத் தொடங்கியுள்ளது. இதன் ஒவ்வொரு படியும் தேர்ந்தெடுக்கப்பட்ட உருசிய ஆய்வுக் கட்டுரைகளின் மொழிபெயர்ப்பினைக் கொண்டு வெளிவருகிறது. மேற்கூறிய ஆவணத் தொகுப்புப் பணிகளைத் தவிர இம்மையம் தனிப்பட்டவர்களுக்குத் தேவைப்படும் சிறப்புத் தகவல்களை இம்மையத்தில் கிடைக்கும் செய்திக் குறிப்புகளைக் கொண்டு தொகுத்துப் பணியாற்றி வருகிறது. இப்படிப்பட்ட பணியினைப் பலர் விரும்புவதால் உரிய காலத்தில் செய்திகளைத் தொகுத்து வழங்குவதற்கு இம்மையம், பல மண்டல மையங்களைச் சென்னை, பம்பாய், கல்கத்தா போன்ற நகரங்களில் அமைத்துக்கொண்டு வருகிறது. இம்மையம் ஓராண்டுக் கால ஆவணத் தொகுப்புப் பயிற்சி வகுப்பு ஒன்றையும் நடத்துகிறது. இவ் வகுப்பு 1964-ஆம் ஆண்டு முதல் நடைபெற்றுவருகிறது.

இந்தியத் தேசீய அறிவியல் ஆவணத் தொகுப்பு மையத்தை நவீன மையமாக்க வேண்டி இந்திய அரசு ஒரு திட்டக் குழுவை 1972-ஆம் ஆண்டில் ஏற்படுத் தியது. இக்குழு ஒரு தேசீய அறிவியல் மற்றும் தொழில் நுட்பவியல் தகவல் அமைப்பு (National Information System for Science and Technology (NISSAT) Programme) ஒன்றை உருவாக்கியுள்ளது. இந்தத் திட்டத்தால் இதன் பணிகள் கூடுதலா கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. எம்.எஸ்.சு.

**அறிவியல் கற்பிக்கும் முறைகள்:** அறிவியல் அறிவு, வாய்மொழியினாலோ நூலறிவி னாலோ மட்டும் வளர்ந்து விடுவதில்லை. எதனை யும் ஆராய்ந்து பார்த்து, செய்து கற்றலே (Learning by doing) சிறந்த முறையாகும். இம்முறைக்கு முன் னோடியாக விளங்குவது கண்டறியும் முறை (Heuristic Method) ஆகும். சென்ற 19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் அறிவியல் கற்பித்தலில் புரட்சிகரமான மாறுதலை ஏற்படுத்தியவர் பேராசிரியர் ஆர்ம்சு ட்ராங்கு (H.E. Armstrong) ஆவார். உயர் கல்விக்காக அவரை நாடிய மாணவர்களில் எவருக்கும் சோதனை கள் செய்வதற்குரிய அடிப்படை அறிவு இல்லாதிருந் தது குறித்து வருத்தமுற்று அவர் புதியமுறை ஒன் றினை உருவாக்கினார். புதிய அறிவினைக் காண்பதில் முனைந்து நிற்கும் அறிவியல் அறிஞர்கள் நிலையில் மாணவர்களை வைத்துப் புதிர்களை எழுப்பி, அவர் களுக்குத் தேவையான கருவிகளைக் கொடுத்து, அவர்களே சோதனை செய்து அறிவியல் உண்மைகளைக் காணுமாறு பணித்தல் இம் முறை யின் நோக்கமாகும். இம் முறையில் மாணவர் கள் எவ்வளவு கருத்துகள் கற்கிறார்கள் என் பதைவிட எப்படி அறிந்து கொள்கிறார்கள் என் பதே அடிப்படையாகும். மாணவர்கள் தாமாகவே எண்ணிச் சோதனைகளை அமைத்து, விவரங்களைச் சேகரித்து அவற்றிலிருந்து உண்மையை அறிகின் றனர். பிரிசுட்லி (Priestly), பெசுடலாசி (Pestalazzi), இலாக்கு (Locke), உரூசோ (Rousseau) போன்ற அறிஞர்களும், அறிவியற் செய்திகளை ஆராய்ந்து காண்பதே சிறந்த முறை என்று கூறியுள்ளனர். ஆல்பர்ட்டு ஐன்சுடைனும் (Albert Einstein) அறிவைப் பெறுவதைவிட ஆராயும் மனமே சிறந்தது என்றார்.

செய்து கற்றல் என்பது மிகச் சிறந்த கல்விக் கொள்கையாகச் சென்ற பல ஆண்டுகளாக இருந்து வருகிறது. அறிவியல் பாடங்களைக் கற்பிப்பதில் மாணவர்களைத் தனியாகவோ குழுக்களாகவோ பிரித்து, சில அறிவியல் செயல் திட்டங்களில் (Science Projects) அவர்களை ஈடுபடுத்திச் சிக்கல்களைத் தீர்க்கச் செய்யலாம். எடுத்துக்காட்டாகப் பல்வேறு இயற்கைப் பொருள்களைச் சேகரித்து ஒழுங்குபடுத்தி அமைத்தல், புதியனவற்றை வகைப்படுத்துதல், சில ஆராய்ச்சிகளில் ஈடுபட்டுப் புதிய கருவிகளை அமைத்தல், சோப்புச் செய்தல், வானிலைக் குறிப்பு களை நாடோறும் கருவிகளைப் பயன்படுத்தி அறிந்து வெளியிடுதல் போன்ற பல்வேறு வகைகளில் இந்த முறையைப் பயன்படுத்திக் கற்கச் செய்யலாம். அறிவியல் கற்பித்தலில் அறிவியல் மனப்பான் மையைப் பெற ஆய்வக முறை மிகவும் வலியுறுத்தப் படுகிறது. இம்முறையில் மாணவர், ஆசிரியர் மேற் பார்வையில், அவர் கொடுத்த குறிப்புகளின்பேரிலோ நன்கு உருவாக்கப்பட்ட ஆய்வகக் குறிப்பேடுகளின் (Laboratory Manuals) துணையுடனோ, சோதனை யைச் செய்யுமாறு அமைக்கலாம். ஆனால் இது போன்ற அமைப்பில் ஒரே தன்மையான பல கருவி கள் தேவைப்படுகின்றன. போதுமான கருவிகள் இல்லாவிடில் மாணவரைக் குழுக்களாகப் பிரித்து, குழுவினர் அனைவரும் பாடப் பகுதியிலுள்ள வெவ்வேறு சோதனைகளைச் செய்யுமாறு அமைக்க லாம். ஒரு நாளில் ஒரு சோதனையைச் செய்த குழுவினர், அடுத்த ஆய்வக வேளையில் வேறு சோதனையைச் செய்வர். சோதனை செய்யும் போது மாணவர்கள் தாங்கள் உற்று நோக்கிய செய்திகளை வகைப்படுத்தி, அட்டவணையிட்டு, உற்றுநோக்கிப் பெறப்பட்ட விவரங்களைக் குறிப்புப்

புத்தகத்தில் (Observation Record) குறித்து, கணக்கீடுகளைச் செய்து முடிவு காண்பர். பின்னர் அறிந்த உண்மைகளை விவரமாக எழுதி, ஆய்வகப் பதிவேட்டினை உருவாக்குவர். இம்முறையில் மாணவர் கருவிகளைத் தொட்டு உணர்ந்து செய்வதாலும் உற்றுநோக்கி அறிவதாலும் தெளிவாக அறிவியற் கருத்துகளை அறிந்து கொள்வதுடன் நினைவிலும் வைக்கின்றனர். மாணவர்களுக்கு வேண்டும் கருவிகளை அமைத்துக் கொள்ளும் திறனும் கருவிகளைக் கையாளுந் திறனும் தகவல்களைச் சேகரித்து வகைப் படுத்தும் திறனும் பொதுவிதி அமைப்பதில் சிந்திக்கும் திறனும் கருவிகளின் படம் வரையும் திறனும் ஆகிய பல்வேறு திறன்கள் வளர்கின்றன. சில நேரங்களில் கட்டுப்படுத்தப்பட்ட சோதனைகளையும் (Controlled Experiments) செய்யலாம். ஒரு சிக்கலுடன் தொடர்புள்ள சில காரணிகள் உள்ளபோது, அவற்றுள் எக்காரணி இன்றிமையாத் தொடர்பு கொண்டது என அறிய இவை போன்ற சோதனைகள் செய்வதுண்டு. எடுத்துக்காட்டாக, தாவரங்களின் வளர்ச்சிக்கும் வெளிச்சத்திற்கும் உள்ள தொடர்பினை அறிய, ஒரு தாவரத்தை இயற்கைச் சூழ்நிலையில் சூரிய ஒளி படும்படி வளர விடவேண்டும். ஒத்த தாவரம் வேறொன்றினை, எல்லாவகையிலும் முதல் தாவரத்தைப் போன்றே ஊட்டம் தந்து சூரிய ஒளி மட்டும் படாமல் இருட்டில் வளரவிட வேண்டும். வெளிச்சத்தைக் கட்டுப்படுத்துவதால் இதற்குக் கட்டுப் படுத்தப்பட்ட சோதனை என்று பெயர். பல நாட்களுக்குப் பின்னர் இரு தாவரங்களுக்குமுள்ள வளர்ச்சி வேறுபாட்டினை அறியலாம்.

போதிய அளவு கருவி இல்லாதபோதும், மாணவர்கள், கருவிகளைக் கையாளப் போதுமான திறன் வளர்ச்சி பெறாத போதும், செய்துகாட்டல் முறை (Demonstration Method) சிறந்த பயனளிக்க வல்லது. இதன் காரணமாகவே, அறிவியல் வகுப்புகளில் செய்துகாட்டும் மேசை சற்று உயரத்திலும், வேண்டிய முக்கிய இணைப்புகளுடனும் அமைந்துள்ளதைப் பார்க்கிறோம். இம்முறையில் மாணவர்கள் அவரவர் இருக்கையிலிருந்தே, செய்து காட்டும் மேசையின்மீது ஆசிரியர் செய்து காட்டும் சோதனைகளைக் கண்டு, விவரங்களை அறிந்து கொள்கின்றனர். சோதனைகளைச் செய்து காட்டும் போதே ஆசிரியர் மாணவரது ஆர்வத்தையும் கவனத்தையும் தூண்டும் பொருட்டுச் சில வினாக்கள் மூலமாக விளக்கிச் சோதனையைப் பற்றிய விவரங்களை இடையிடையே சொல்வதால், இதனை விரிவுரையுடன் செய்து காட்டும் முறை என்றும் கூறுவர். இம்முறையில் ஆசிரியர் அமைத்துக் காட்டும் சோதனைகளே பெரும்பாலும் வகுப்பறைகளில் இடம் பெறுகின்றன. எனினும், ஒரு சில நேரங்களில் மாணவர்கள் தனியாகவோ குழுவாகவோ அமைந்து மற்றவர்களுக்குச் சில சோதனைகளைச் செய்தும் காட்டலாம். செய்து காட்டும் சோதனைகள் வெற்றியடைய வேண்டுமானால், ஆசிரியர் முன் கூட்டியே சோதனைகளைச் செய்து சரிபார்த்து வகுப்பிற்குச் செல்ல வேண்டும். இம்முறையைப் பயன்படுத்த மாணவர்கள் அனைவரும் பார்க்கும்படி கருவிகள் பெரிய அளவிலும் மேசை உயரமாகவும், மாணவரது இருக்கை அமைப்புகள் படியடுக்கு மேடை (Gallery) முறையிலும், போதிய வெளிச்சம் உடையதாகவும் இருத்தல் வேண்டும். இம்முறையில் சோதனைக் கருவிகளை மட்டும்தான் அமைத்துக் கற்பிக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. சில பாடப் பகுதிகளைக் கற்பிக்கும்போது, அவை தொடர்பான படங்கள், காட்சி வில்லைகள் (Slides), நிழற்படங்கள், மாதிரி உருவங்கள் (Models) போன்றவற்றையும் பயன்படுத்தலாம்.

பன்னெடுங்காலமாக அனைத்து ஆசிரியர்களாலும் பயன்படுத்தப்படுகிற கற்பிக்கும் முறை விரிவுரை (Lecture Method) முறையாகும். இதனைப் பெரும்பாலும் கல்லூரிகளிலும் உயர்நிலை மேல்நிலைப் பள்ளிகளிலும் பயன்படுத்துகிறார்கள். இம்முறையில் ஆசிரியருக்கே பெரும் பங்கு உண்டு. இம்முறையைப்பயன்படுத்தும் ஆசிரியர்களில் சிலர், இடையில் ஐயம்தீரவேண்டி மாணவர்கள் கேட்கும் குறுக்குக் கேள்விகளை விரும்புவதில்லை; ஆசிரியரது கருத்தோட்டம் தடைப்படுவதாகக் குறைபடுவர். சில ஆசிரியர்கள் விரிவுரை முடித்தபின் இறுதியில் 5 அல்லது 10 மணித்துளிகள், மாணவர்தம் ஐயங்களைப் போக்குவதற்கென நேரம் ஒதுக்கலாம். எனினும் விரிவுரை முறையில் கற்பித்தல் என்பது ஒரு வழிப் பாதையாகவே பெரும்பாலும் அமைகிறது. இதில் சோதனை செய்வதற்கு வாய்ப்பு ஏற்படுவதில்லை. ஆதலின் அறிவியல் கற்பிப்பதற்கு இம்முறை முற்றிலும்ஏற்புடையது அன்று என்று பலரும் வாதிடலாம். எனினும் போதிய வளர்ச்சியடையாத மாணவர்களுக்குப் புத்தகங்களைப் படித்துப் புரிந்து கொள்வதைவிட, வாய்மொழி மூலமாக ஆசிரியர் விளக்கிக் கற்பிப்பது நன்மை பயக்கும். மேலும் சில ஆசிரியர்களின் எழுச்சி மிக்க பேச்சு மாணவரை அத்துறையில் ஈடுபடத் துணை செய்யும். அறிவியல் அறிஞர்களின் கண்டுபிடிப்புகளையும், அவற்றிற்காக அவர்கள் பட்ட துன்பங்களையும் அழகுற ஆசிரியர் விரிவுரை மூலமாக விளக்கும்போது மாணவரின் ஆர்வம் பன்மடங்கு பெருகும். விரிவுரை முறையைப் பயன்படுத்தும் ஆசிரியர், பொருத்தமுள்ள கேள்விக் காட்சிக்கருவிகளைத் (Audio-Visual Aids) தேர்ந்தெடுத்து

விளக்குவாராயின், மாணவருக்குப் பெரிதும் நன்மை பயக்கும். ஏதும் பயன்படுத்த இயலாததாயின், குறைந்தது வகுப்பறையில் உள்ள கரும்பலகையிலாவது வண்ணச் சுண்ணாம்புக் கட்டிகளால் எழுதியும் படங்கள் வரைந்தும் காட்டலாம்; விளக்கலாம். விரிவுரை நிகழ்த்தும் ஆசிரியர் தம் கருத்துகளை வலியுறுத்தவும் மாணவரது கவனத்தை நிலைநிறுத்தவும் சில உத்திகளைப் பயன்படுத்தலாம். பாட நேர முழுவதும் ஒரே இடத்தில் நின்று கற்பிப்பதைத் தவிர்த்து 10 மணித்துளிக்கு ஒரு முறையாவது இடம் மாற்றி நின்று கற்பித்தல், முகக் குறிகள் (Facial Expressions), அசைவுகள் (Gestures), குரலில் ஏற்றத் தாழ்வு, மாணவர் அனைவரையும் பார்த்துப் பேசுதல் போன்ற செய்கைகளால் மாணவரது கவனத்தை ஓரளவு நிலைநிறுத்தலாம். அதே போன்று, தொடர்ந்து பேச வேண்டுமாயின், பேச்சின் தொடக்கத்தில் எதைக் குறித்துப் பேச முற்படுகிறார் என்றும் பேசி முடிந்தபின் பேச்சின் சுருக்கத்தையும் கூறினால் விளக்கிய கருத்துகள் நினைவில் தங்குவதற்கு வாய்ப்பு ஏற்படும். பல அறிவியல் ஆசிரியர்கள், பாட நூல்களை வகுப்பில் மாணவரைக் கொண்டு படிக்கச் செய்து, பாடங்களை முடித்து விடுகின்றனர். அதிலுள்ள பல செய்திகளை மனப்பாடம் செய்யச் சொல்லி ஒப்புவிக்கச் சொல்கின்றனர். அதன் காரணமாகவே இம்முறை "பாடநூல் ஒப்புவிக்கும் முறை" என்றும் வழங்கலாயிற்று. பாட நூல்களை, அறிவியல் பாடம் கற்பித்தலில் வகுப்பறைகளில் பயன்படுத்துவதைத் தவிர்க்க வேண்டும். அதற்காகப் பாட நூல்களை அறவே ஒதுக்கித் தள்ள வேண்டும் என்பது கருத்தன்று. பாடநூல் புதியதாகப் பணியேற்கும் அறிவியல் ஆசிரியருக்கு மிகுந்த துணை செய்யும். பாடங்களின் இறுதியில் கொடுக்கப்பட்டிருக்கும் பயிற்சி வேலைகளும் வினாக்களும் சிறந்து அமையுமாயின், அவற்றையே பின்பற்றி மாணவரைச் செய்து முடிக்குமாறு செய்யலாம். நன்கு உருவாக்கப்பட்ட அறிவியல் பாடநூல்களில், ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் பயிற்சி வினாக்களும் மாணவர்கள் வீட்டில் செய்து பார்க்கக் கூடிய சோதனைக் குறிப்புகளும் கொடுக்கப்பட்டிருக்கும். இவை மாணவரது ஆர்வத்தைத் தூண்டி வளர்ப்பன. சில சமயங்களில் நூலில் உள்ள செய்திகளைப் படித்து, அவற்றில் விளக்கப்பட்ட எளிய சோதனைகளைச் செய்து பார்த்து, வகுப்பில் மற்ற மாணவர்களுக்குச் செய்து காட்டி விளக்குமாறு மாணவரை ஈடுபடுத்தலாம். பொதுவாக, ஒரு பாடத்தைப் பற்றிய செய்திகளை ஆசிரியர் கற்பித்து முடிக்கும் வரை, அதை வகுப்பில் படிப்பதைத் தவிர்க்க வேண்டும்.

அண்மைக் காலத்தில், கற்றல் செயலில் மாணவரைப் பெரிதும் ஈடுபடுத்துவது வலியுறுத்தப்படுகிறது. அம்முறையில் கலந்தாய்தல் முறை (Discussion Method) என்பதும் ஒன்று. இம்முறையில் ஏதாவது ஓர் அறிவியல் தலைப்பினை முற்கூட்டியே அறிவித்து அந்தத் தலைப்பினைப் பற்றிய புதிய சொற்களையும் கருத்துகளையும் ஆசிரியர் சிறிது விளக்கிய பின், மேற்கோள் நூல்களையும் கொடுத்தல் வேண்டும். மாணவர்கள் அவற்றைப் படித்துக் குறிப்பிட்ட நாளில் அத்தலைப்புப் பற்றிய கலந்தாய்வில் ஈடுபடுவர். கலந்து ஆய்வு செய்தல் தேங்கி விடுவதையும் ஒரு சிலரே அதில் முன்னின்று வாதிடுவதையும் பொருளற்ற விவாதங்களையும் தடுத்து நிறுத்தி, சிறந்த கருத்துகள் தோன்றுமாறு, ஆசிரியரே நடுவராக இருந்து பார்த்துக் கொள்ள வேண்டும். எடுத்துக்காட்டாகச் சுற்றுப்புறத் தூய்மை அழிவு (Pollution) சூழ்நிலையில் எவ்வாறெல்லாம் நடைபெறுகிறது என்றும் அவற்றை எவ்வாறு கட்டுப்படுத்தலாம் என்றும் விவாதிக்கலாம்.

தனிப்பட்ட வகையில் கற்பிக்கும் முறைகளில் இன்று மிகச் சிறந்து விளங்குவது திட்டமிட்டுக் கற்றல் (Programmed Instruction) முறையாகும். உளவியல் அறிஞர் இசுகின்னர் (B.F.Skinner) என்பவரால் இம்முறை உருவாகியது. கற்பிக்க வேண்டிய பாடப் பகுதியைச் சிறு சிறு பகுதிகளாக அல்லது அலகுகளாகப் பிரித்து, அவை சிறிது சிறிதாக மாணவர்களுக்குக் கற்பிக்கப்படும். அந்தச் சிறு பகுதியிலேயே மாணவரைக் கேள்வி கேட்க வேண்டும். அவர்களும் அதற்குரிய விடையினைக் குறிப்பிட்டுள்ள இடத்தில் எழுதவேண்டும். அவ்விடை சரியா என்பதை அறிந்து கொள்ளப் புத்தகத்தின் அடுத்த பக்கத்தில் சரியான விடை கொடுக்கப்பட்டிருக்கும். இதுபோன்று ஒவ்வொரு பக்கத்திலும் சிறு கருத்தினை வரிசைப்படுத்துக்க முறையில் அமைத்து, அச்சிறு பகுதியில் வினா எழுப்பி, அதை நிறைவு செய்தபின், அதற்குரிய விடையையும் கொடுத்துப் பாடப்பகுதி முழுவதையும் அறிந்து கொள்ளச் செய்தல் இம்முறையின் சிறப்பாகும். இம் முறையில் கற்பவர் மிகவும் சுறுசுறுப்பாக இருப்பதுடன், தங்கள் திறமைக்கேற்பவும் முன்னேறுகின்றனர். இம் முறையில், கருத்துகள் இரு வகைகளில் திட்டமிடப்படுகின்றன. ஒன்று, தொடர் முறை (Linear Type) என்றும் மற்றொன்று கிளை முறை (Branching Type) என்றும் சொல்லப்படும். இவையே கற்பிக்கும் எந்திரத்திற்கும் (Teaching Machine) கணிப்பொறி வழிக் கற்பித்தலுக்கும் (Computer Assisted Instruction) அடிப்படையாகும்.

அறிவியல் ஆசிரியர்கள் கற்பிக்க எந்த முறையைத் தேர்ந்தெடுப்பது என்பது, கற்பிக்க வேண்டிய பாடப் பொருளையும் அதனைக் கற்பிக்கும் நோக்கங்களை

யும் மாணவர்களின் நிலையையும், வகுப்பறை வசதிகளையும் பொறுத்து அமையும். செய்திகளைக் கற்பிப்பதைத் தலையாய நோக்கமாகக் கருதினால், விரிவுரை முறையையும் பாடநூல் முறையையும் செய்து காட்டும் முறையையும் பயன்படுத்தலாம். ஆராயும் மனப்பான்மையை மாணவர்களிடையே ஏற்படுத்த வேண்டுமானால், ஆய்வகமுறை சிறந்ததாகும். அண்மைக் காலத்தில் பியாசே (Jean Piaget), புரூனர் (Bruner), காக்னே (Gagne) போன்றோர் குழந்தைகளின் வளர்ச்சிப் பருவங்களை நன்கு ஆராய்ந்து, மன வளர்ச்சி எவ்வாறு ஏற்படுகிறது என்ற கருத்தினை வெளியிட்டிருக்கின்றனர். அவற்றின் அடிப்படையில், ஆசிரியரின் கற்பிக்கும் முறைகள் காட்சிப் பொருள்களைக் கொண்டும், நேரடி அனுபவங்களைக் கொண்டும் தொடக்க நிலைக் கல்வியில் அமைய வேண்டும். குழந்தைகள் தம்மைச் சுற்றியுள்ள பல பொருள்களைப் பற்றியும், இயற்கை நிகழ்ச்சிகளைப் பற்றியும் அறிய இயல்பாகவே ஆர்வம் காட்டுகின்றனர். மின்னல் எவ்வாறு ஏற்படுகிறது?கடல் நீர் ஏன் உப்பாக உள்ளது? காற்று எவ்வாறு வீசுகிறது? என்பன போன்ற பல கேள்விகளை எழுப்புகின்றனர். இவ்வாறு தோன்றும் ஆர்வத்தை வளர்த்து, எண்ணிப் பார்க்கச் செய்வதே ஆசிரியரது தலையாய நோக்கமாக இருக்க வேண்டும். களப் பணிகளுக்கு மாணவரை அழைத்துச் சென்று (Field Trips) இயற்கைப் பொருள்களைக் காணச் செய்வதிலும் இலை, பூ, விதை போன்ற பொருள்களைத் திரட்டி வகைப்படுத்துவதிலும் உற்றுநோக்கி ஒற்றுமை வேற்றுமைகளை ஆராயச் செய்வதிலும் குழந்தைகளை ஈடுபடுத்தலாம். அவர்கள் வளர்ச்சியடைந்து உயர்நிலைப் பள்ளியை அடையும்போது கருத்தியல் நுட்பப் பொருள்களைப் (Abstract Ideas) பற்றி ஆராயவும் தாமே சோதனைகள் செய்து கருத்துகளைத் திரட்டவும் திரட்டிய செய்திகளிலிருந்து தகுந்த முடிவுகளை அறியவும் ஊக்குவிக்கலாம்.

அறிவியலின் பகுதிகளான பொருளியல், வேதியியல், உயிர்நூல் போன்ற ஒவ்வொன்றுக்கும் தொடர்பான பல செய்திகள், உண்மைகள், விதிகள் உள்ளன. அறிவியல் ஆசிரியர்கள் இக்காலத்தில் அறிவியலின் ஒரு பகுதியை மட்டும் படித்துவிட்டு மற்றப்பகுதிகளைப் பற்றிய அறிவு சிறிது கூட இல்லாமல் இருக்கின்றனர். அறிவியல் ஆசிரியருக்குத் தாம் கற்ற பகுதியுடன் மற்றப் பகுதிகள் எவ்வாறு தொடர்புடையன (Inter-Disciplinary) என்னும் அடிப்படை அறிவு வேண்டும். எங்கெல்லாம் தொடர்பை ஏற்படுத்த முடியுமோ அங்கெல்லாம் தொடர்பைச் சுட்டிக்காட்டி அறிவியல் பாடம் கற்பிப்பதே சிறந்தது. ஏ.ப.செ.

***அறிவியல்சார் மேலாண்மை:*** நிறுவனங்களில் தம் மேற்பார்வையில் பணி செய்யும் பலரைக் கொண்டு பணிகளைச் செய்விப்பவர் மேலாளர் அல்லது மேலாண்மை செய்பவர் ஆவார். மேலாளர் பணிகளைத் தாமே செய்யா விட்டாலும் அவற்றின் வெற்றி தோல்விக்குத் தாமே பொறுப்பு ஆகிறார். ஆதலின் மேலாண்மையை அறிவியல் அடிப்படையில் செயற்படுத்தல் இன்றியமையாததாகும்.

உலகெங்கும் 20-ஆம் நூற்றாண்டில் ஏற்பட்டுள்ள தொழில் முன்னேற்றத்தின் விளைவாகப் பொறி, பொருள், முதலீடு பற்றியும் பணியாளர் பற்றியும் அறிவியல்சார் விதிகள் பல தோன்றியுள்ளன. தொழிலாளரின் வேலையை எளிதாக்கி உற்பத்தியைப் பெருக்குவதற்கான நுண்முறைகளைக் கண்டு பிடிப்பதும், இந்நுண்முறைகளைப் பயன்படுத்துமாறு தொழிலாளர்களை ஊக்குவித்தலுக்கான வழிமுறைகளைக் கண்டுபிடிப்பதும் மேலாண்மைத் துறைக்கு இரு பெரும் அறைகூவல்களாக அமைந்தன.

மாத்திய போட்டன் (Mathew Boulton), சேம்சு வாட்டு (James Watt) என்ற இரு பொறியாளர்கள் கி.பி. 1800-ஆம் ஆண்டில் இங்கிலாந்தில் நீராவிப் பொறிகளை உருவாக்கும் தொழிற்சாலை அமைக்கும் பொருட்டுக் கால இயக்க ஆய்வு (Time & Motion Study) ஒன்றினை நடத்தித் தொழிற்சாலைக்கான முறையான திட்டம் ஒன்றினை வரைந்தனர். தொழிலகத்தில் பல்வேறு நிலைப்பட்ட தொழிலாளர்களின் வேலைகளும் வரையறுக்கப்பட்டு பணி மதிப்பீட்டின் அடிப்படையில் ஊதியம் வழங்கப்பட்டது. இவ்விருவர் செய்த மேலாண்மை முறையே இக்கால அறிவியல்சார் மேலாண்மை முறைக்கு முன்னோடியாக விளங்கியது எனலாம். அறிவியல்சார் மேலாண்மை (Scientific Management) முறையை அமெரிக்க ஐக்கிய நாட்டில் புகுத்தியவர் பிரெடரிக்கு தெய்லர் (Frederick Taylor) என்பவர் ஆவார். தெய்லர் கி.பி. 1898-ஆம் ஆண்டில் பெத்லகெம் எஃகு ஆலையில் (Bethlehem Steel) விரிவாக நடத்திய ஆய்வுகள் தொழிலக ஆய்வுகளுக்கு அடிப்படையாய் அமைந்தன. இந்த ஆய்வுகளின் முடிவுகள் தெய்லருக்கு மேலாண்மைத் தத்துவத்தை அறிய உதவியாக இருந்தன. இவர் 1911-ஆம் ஆண்டு எழுதி வெளியிட்ட "அறிவியல்சார் மேலாண்மை விதிகள்" (Principles of Scientific Management) என்னும் நூலில் மேலாண்மைக் கருத்துகளைத் தெளிவுற விளக்கியுள்ளார். தெய்லரின் மேலாண்மைக் கருத்துகளைப் பின்வருமாறு சுருக்கமாகக் கூறலாம்:

தொழிலாளரின் வேலைப் பகுதிகளுக்குத் தக்க அறிவியல் அடிப்படையை அமைத்தல்.

தொழிலாளரை முறைப்படித் தேர்ந்தெடுத்து ஏற்ற தொழிலில் பயிற்றுவித்து அவர்களின் ஆற்றல்களை வளர்த்தல்.

அறிவியல்சார் மேலாண்மை விதிகளின் அடிப்படையில் பணிச்சிறப்பு முன்னேற்றம் அடைவதற்காக அவர்களுடன் ஒத்துழைத்தல்.

தொழிலாளருக்கு ஏற்ற பணிகளை அவர்களுக்குக் கொடுத்தலும் மேலாண்மைப் பொறுப்புகளை மேலாளர் செய்தலும்.

பிராங்கு கில்பிரெத்து (**Frank Gillbreth**), இலிலியன் கில்பிரெத்து (**Lillian Gillbreth**), என்றி. எல். காண்ட்டு (**Henry L.Gantt**), எரிங்டன் எமர்சன் (**Herrington Emerson**) போன்றோர் மேலாண்மைத் துறைக்குப் புதிய கருத்துகளைச் சேர்த்துள்ளனர். அறிவியல்சார் மேலாண்மை செயற்படும் முறையைப் பின்வருமாறு விளக்கலாம்:

சூழ்நிலைக்கேற்ப இன்று ஆற்ற வேண்டிய செயல் முறையைக் கணிப்பதே திட்டமிடுதல் ஆகும். திட்டமிடுதலினால் மக்கள் எதிர்நோக்கி இருக்கும் பாதையின் வளத்தையும், சீர்கேடுகள், நிறைகுறைகள் போன்றவற்றையும் சீர்தூக்கிப் பார்த்து இன்றைய செயல் திறனுக்கு ஏற்ப ஒருவழி முறையை உருவாக்க இயலும். திட்டமிடுதல் என்பது எதிர்காலத்தில் முழுமை அடையவேண்டிய ஒரு குறிக்கோள் பற்றி, நிகழ்காலத்தில் சிந்தித்து எழுப்பப்படும் ஒன்றாகும். திட்டமிடுவதற்குச் செலவு செய்யும் நேரமும் ஆற்றலும் எப்பொழுதும் வீணாவதில்லை. இது நாளடைவில் நல்லபயன்களைத் தரும். ஒழுங்கற்ற திட்டம் குறிக்கோளை அடைவதில் தாமதத்தையும், நட்டத்தையும் விளைவிக்கும். ஆதலின், முதற்படியான 'திட்டமிடுத' லில் மிகுந்த கவனம் செலுத்த வேண்டும். திட்டம் வகுக்க வேண்டிய காலத்தில் சிந்திக்க வேண்டியவற்றைப் பின்வருமாறு தொகுக்கலாம்:

அறிவியல்சார் மேலாண்மை இயங்குமுறை

| 1. வேலைத் தொடர்பு கொண்ட மாறிகளை ஆராய்தல் | 2. பயனுள்ள முறையை வகுத்தல் | 3. திறனுள்ள தொழிலாளரைத் தேர்ந்தெடுத்தல் | 4. சிறந்த முறையில் தொழிலாளரைப் பயிற்றுவித்தல் |
|---|---|---|---|

இந்த அணுக்களின் விளைவாக...




மேலாண்மையின் வெற்றி தோல்விகளுக்குரிய பல காரணங்களுள் மூலதனமும், செயல்களை நிறைவேற்றுபவர்களும் இன்றியாமையாத இரு காரணங்களாகும். மூலதனத்தையும் மனித ஆற்றலையும் செவ்வனே சீர்தூக்கிப் பயன்படுத்தி வெற்றி அடைவதே மேலாண்மை ஆகும். இதற்கு அடிப்படையாகத் திட்டம், கட்டுப்பாடு, அமைப்பு என்னும் மூன்று நிலைகள் உள்ளன.

மேலாண்மையியலில் திட்டமிடுதல் முதன்மையானதாகக் கருதப்படுகிறது. மாறிவரும் நாளைய

1. குறிக்கோளைத் தெளிவாக முடிவு செய்தல்.
2. தேவையான தகவல்களைத் திரட்டிச் சீர்தூக்கிப் பார்த்தல்.
3. இடையில் உண்டாகும் இடர்களை அறிதல்.
4. தெளிவான வழிநிலை இயங்கு முறைகளை முடிவு செய்தல்.
5. பயன்படுத்தக்கூடிய வெவ்வேறு வழிமுறைகளை ஆராய்தல்.
6. மாறுபட்ட வழிமுறைகளில் மிக்க பயன்தரும் வழிமுறையைத் தேர்ந்தெடுத்தல்.

7. ஒவ்வொரு செயலுக்கும் காலத்தை முடிவு செய்தல்.
8. தவிர்க்க முடியாத சூழல்களைச் சமாளிக்கும் வழிகளை முடிவு செய்தல்.
9. முதனிலைக் குறிக்கோளிற்கு உறுதுணையாகப் பல உதவித் திட்டங்கள் வகுத்தல்.

அறிவியல்சார் மேலாண்மையில் அடுத்த கட்டம் "கட்டுப்படுத்தல்" ஆகும். கட்டுப்படுத்தல் என்பது, முடிவுகள் திட்டமிட்டபடி நிறைவேறுவதை உறுதிப்படுத்தும் வழிமுறை ஆகும். முன்கூறியவாறு, மேலாளர் என்பவர் பிறரால் செயல்களைச் செய்விப்பவராயிருந்து செயல்களின் வெற்றி தோல்விகளுக்குப் பொறுப்பேற்பவராகவும் ஆவார். ஒரு செயல் பிறரால் செயற்படுத்தப்படும்பொழுது, அதன் செயல், வேகம், திட்ப நுட்பம் ஆகியவற்றைத் தெள்ளத் தெளிய அறிதல் வேண்டும்; இந்த அறிவிற்கு, ஏற்ப ஒரு வழிமுறையை வகுக்க வேண்டும். இதுவே கட்டுப்படுத்தல் ஆகும். ஒருசெயலின் செயற்பாடு பற்றிய சரியான தகவல்கள்; உரியகாலத்தில் மாற்று நடவடிக்கை எடுக்கவும், வருமுன் காக்கவும் பயன்படும். ஆதலின் கட்டுப்படுத்தல் என்பதை வருமுன் காத்தல் எனக்கொள்ளலாம்.

ஒரு மேலாளரின் வெற்றி, நெருக்கடி நிலைமைகளைத் தவிர்க்கும் வழிகளை அவர் கையாளும் திறனைப் பொறுத்து அமைகிறது. நெருக்கடிகள் வருமுன் காப்பதற்கும் வந்தவுடன் சமாளிப்பதற்கும் நெருக்கடி அறிகுறிகள் தக்க நேரத்தில் அறியப்பட வேண்டும். கட்டுப்படுத்தல் வழிமுறை இதற்குத் துணை செய்கிறது.

முதற்கண் தவறுகளைத் தடுக்கவும், சீரான பாதையில் நிலைத்து நிற்கவும் வழி வகுக்கவேண்டும். இவற்றைத் "தொடர் கட்டுப்பாட்டு வழி முறைகள்" என்லாம். ஒரு செயல் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கும் பொழுது அவ்வப்பொழுது அந்தச் செயலின் நிலைகள் நன்கு புலப்படுமாறு மேலாண்மைத் தகவல் அறிவிப்பு வழிமுறையை முடிவு செய்தல் வேண்டும். இத்தகைய செய்திகள் தமக்கு உரிய நேரத்தில் வந்து சேர மேலாளர் உறுதிப்படுத்த வேண்டும். இதனால், திட்டத்தையும் செயல் முறைகளையும் ஒப்புநோக்கி, ஒரு செயலின் வளர்ச்சியை உறுதிப்படுத்த முடிகிறது. எவ்வளவு தூரம் மேலாளரின் கண்காணிப்பு இருந்த போதிலும், செயல்கள் தவறாகப்போகும் இயல்புக் கூறுகள் உள்ளன. ஆகையால், இந்த நடைமுறையைக் கருத்திற் கொண்டு, தவறுகள் நேர்ந்துவிட்டால், அவை நேர்ந்த உடனேயோ, நேர்ந்து கொண்டிருக்கும் பொழுதோ, நேரக்கூடிய அறிகுறிகள் தென்படும் பொழுதோ அதுபோன்ற ஒரு சூழ்நிலையை அறிந்து கொள்ளக்கூடிய வழிமுறையை வகுத்தல் வேண்டும். இது "எச்சரிக்கைக் கட்டுப்பாட்டு வழிமுறை" எனப்படும்.

கட்டுப்படுத்தல் வழிமுறை, ஒரு செயல் செய்யப்படும் நேரத்தில் அதனைச் சரியான பாதையில் குறிப்பிட்ட இலக்கை நோக்கி இட்டுச் செல்லவும், பாதை தவறினால் திருத்தி அமைக்கவும் பயன்படும் இன்றியமையா வழிமுறையாகும். அறிவியல்சார் மேலாண்மையின் மற்றொரு நிலை "அமைப்பு" எனப்படும்.

எந்தச் செயலையும் திட்டமிட்டுத் தொடங்குவதற்குமுன் அச்செயலை நிறைவேற்றுவதற்கு ஓர் அமைப்பினை உருவாக்குவது இன்றியமையாததாகும். இந்த அமைப்பின் வழியாகப் பல செயல்முறைகள் உறுதிப்படுத்தப்பட்டுத் தெளிவாக்கப்படுகின்றன. ஒருங்கிணைந்த திட்டத்தின் புலங்களான துணைத் திட்டங்களைச் சரியான முறையில் ஒருங்கு இணைப்பதே அமைப்பு ஆகும்.

அமைப்பு என்பது தனிமனிதர்களைக் குறிப்பதில்லை. பணிகளையும் அவற்றுக்கு இடையே உள்ள தொடர்புகளையும் விளக்குவதே அமைப்பின் நோக்கமாகும். பல பணிகளை உள்ளடக்கிய ஒரு பெரும் ஒருங்கிணைந்த பணியின் உள்தொடர்புகளை விளக்குவதே அமைப்பு ஆகும். அமைப்பை உருவாக்குவதற்குப் பின்வரும் நான்கு நிலைகளை ஆராய்தல் வேண்டும்:

1. ஒவ்வொரு பணியையும் ஆராய்ந்து ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்புள்ள பணிகளை இணைத்துப் பணிவட்டங்கள் அமைத்தல்.
2. ஒவ்வொரு பணிவட்டத்திற்கும் அதற்கே உரித்தான குறிக்கோள்களை உறுதிப்படுத்துதல்; தரவீடு செய்தல்.
3. அதிகார வரம்புகளை முடிவு செய்து உரிமைகளையும் பொறுப்புகளையும் விளக்குதல்.
4. செய்தித் தொடர்பு வழிமுறைகளை வகுத்தல்.

பல பணிகளின் தொடர்புகளை விளக்குவதன் வாயிலாக அவற்றுக்கு ஊடே உள்ள உறவு முறைகள் தெளிவாக்கப்படுகின்றன. ஒரு பணியின் வளர்ச்சியோ தேக்கமோ மற்றுமோர் பணியை எவ்விதம் பாதிக்கும் என்பது தெளிவாகிறது. பலபணிகளின் ஒட்டு மொத்தமான சேர்க்கையே ஒருங்கிணைந்த முதனிலைக் குறிக்கோள் ஆகும் என்று கொள்ளும் பொழுது, அவை ஒன்றுக்கொன்று எவ்விதம் பின்னிப் பிணைக்கப்பட்டிருக்கின்றன என்பதைத் திட்ட வட்டமாக அந்தப் பணியில் தொடர்புடைய அனைவருக்கும் எளிதில் புரியும் வகையில் அமைத்தல் வேண்டும்.

பல பணிகளின் கூட்டுக் குறிக்கோளை நோக்கிச் செல்லும்பொழுது ஒவ்வொரு தனிப்பணிக்கும் அதற்குரிய காலத்தை முடிவு செய்தல் வேண்டும். எந்தப் பணியை எப்பொழுது தொடங்கி எப்பொழுது முடிக்க வேண்டும் என்பது உறுதி செய்யப்படவேண்டும். நெருங்கிய தொடர்புள்ள ஒரேவகையான பணிகளை இணைத்து ஒருங்கிணைந்த பணி அமைப்பு உருவாக்கப்படுகிறது. இந்த அமைப்பில் ஒவ்வொரு பணியின் முடிவான தரத்தையும் அறுதியிட வேண்டும். இலட்சியக் கனவுகளைத் தவிர்த்து நடைமுறை இயல்பு கூறுக் கண்ணோட்டத்துடன் தரத்தினை முடிவு செய்ய வேண்டும்.

ஒருங்கிணைந்த குறிக்கோளினை வெற்றிகரமாக அடைவதில் தலைமை மேலாண்மையாளருக்கு முழு அதிகாரமும் பொறுப்பும் இருக்கும்போது, சிக்கலான ஒரு பெரும் இலக்கை அடையப் பல பணிகள் நிறைவேற்றப்பட வேண்டியிருப்பதால் ஒவ்வொரு பணிக்கும் யார் அதிகாரி? அவருக்கு என்னென்ன உரிமைகள் வழங்கப்பட வேண்டும்? எந்தெந்தத் துறைகளுக்கு அவர் பொறுப்பேற்க வேண்டும்? என்பன போன்றவை விளக்கப்பட வேண்டும். இவைபோன்ற அதிகார வரம்புகள் உறுதியாக அமைக்கப்பட்டுவிட்டால் அதிகாரக் குறுக்கீடுகளினால் ஏற்படும் குழப்பங்கள் தவிர்க்கப்படும். பணிகளும் விரைவாகத் தடங்கலின்றி முடிக்கப்படும். மேலும் ஒரு பணியை ஆற்றக் கூடிய உரிமை அளிக்கப்படும்பொழுது அதைச் செவ்வனே முடிக்கும் பொறுப்பையும் ஏற்றுக்கொள்ள வேண்டும். வெற்றி தோல்விகளுக்குப் பொறுப்பேற்காத உரிமைகள் வழங்கப்பட்டால், அவ்வுரிமைகள் முன்யோசனையின்றிச் செலுத்தும் இயல்பு கூறினால் குழப்பமும் தாமதமும் ஏற்பட வாய்ப்புகள் பெருகும். உரிமை வழங்கப்படாமல் பொறுப்புகள் சுமத்தப்படுமேயாயின் நியாயம் பறிபோய்விடும். ஆகவே உரிமையும் பொறுப்பும் எப்பொழுதுமே ஒன்றுக்கொன்று இணைந்து கைகோத்துச் செயற்பட வேண்டும். இக்கூற்றினை அமைப்பு மெய்ப்பித்து விடுகிறது.

பல பணிகள் ஒன்றுக்கொன்று தொடர்புள்ளனவாக இருக்கும்பொழுது அப்பணிகள் பற்றிய தகவல்கள் பரிமாறிக்கொள்ளப்படவேண்டும். இவை போன்ற பரிமாற்றங்களால் சார்புடைய பணிகள் யாவும் ஒரு குறிப்பிட்ட இன்றியமையாத குறிக்கோளை நோக்கிச் செயற்படுகின்றனவா என்று முடிவாகக் கணிக்க ஏதுவாகிறது. தொடர்பு வழிமுறைகள் திட்டவட்டமாகத் தெளிவாக்கும்பொழுது குழப்பங்களும் அவற்றின் விளைவாக ஏற்படக்கூடிய தாமதங்களும் தவிர்க்கப்படுகின்றன.

நிறுவனத்தை நடத்திச் செல்லும் சிக்கலான பெரும் பொறுப்பினை வெற்றியுடன் முடிப்பதற்கு மேற்கூறியவாறு மேலாண்மை செயற்படவேண்டும். இத்தகைய முறையான மேலாண்மை அறிவியல்சார் மேலாண்மை எனப்படுகிறது. இரா.சு.

துணை நூல்கள்:

Hodgetts M. Richard, Management: Theory, Process & Practice, W.B.Saunders Company, Philadelphia, 1979.

Dennis Lock & Nigel Farrow, (eds.), The Gower Handbook of Management, Gower Publishing Company Ltd., England, 1983.

**அறிவியல் தத்துவம்:** தத்துவ இயலும் அறிவியலும் இரண்டு வேறுபட்ட ஆராய்ச்சிக் களங்களாகும். தத்துவ இயல் (Philosophy) உலகைப் பற்றிய முழுமையான அறிவும், அறிவியல் உலகின் பல்வேறு பகுதிகளைப் பற்றிய ஆய்வுமாகும். தத்துவ இயலின் நோக்கம் மிகவும் பரந்தது.அதுமனித அறிவிற்குட்பட்ட எல்லாப் பகுதிகளையும் ஆராய்ந்து அவை எல்லாவற்றையும் தொகுத்து அவற்றிற்கு அடிப்படையான ஒரு கொள்கையைக் கண்டுபிடித்தலாகும். அறிவியலானது (Science), புறநிலை மெய்ம்மை சார்ந்ததாகும். அது தனிச் சிறப்புக்குரியதும் எட்டிய புலனறிவிற்கும் சோதனைக்கும் பொருள்களைத் தொகுத்தலும் ஒழுங்குபடுத்தலும் வகைப்படுத்தலும் ஆகும். ஆகையினால் அறிவியலறிவு சிறப்பு வாய்ந்ததாகும். உலகமானது, வசதியாகப் பருப்பொருளாகவும் உயிருள்ளதாகவும் மனத்துக்குரியதாகவும் அறிவியல் ஆராய்ச்சிக்காகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. உலகைப் பற்றிய முழுமையான அறிவைக் கொடுக்க அறிவியலால் முடியவில்லை. இதனால் அறிவியலறிவு, அரைகுறையானதாகவும் நோக்கத்தில் குறுகியதாகவும், தத்துவ இயலைப் போல நிறைவில்லாததாகவும் இருக்கிறது.

தத்துவ இயலும் அறிவியலும் நோக்கத்தில் மட்டுமல்லாமல், கடைப்பிடிக்கும் முறையிலும் வேறுபாடாக உள்ளது. அறிவியலின் முறை, எப்பொழுதும் செயலறிவு சார்ந்ததாகவும் புற அனுபவமுடையதாகவும் பொருள்கடங்கியதாகவும் செயல்-திறமை வாய்ந்ததாகவும் அனுபவமுடையதாகவும் அவற்றைச் சார்ந்த விதிகளைக் கண்டுபிடிக்கும் தன்மை வாய்ந்ததாகவும் அமைந்திருக்கும். அறிவியல்ஆராய்ச்சிக்குத் துணையான முறையாக அமைவது தொகுப்பு வழிப் பொதுமைப்பாடாகும். மனம் அல்லது மனிதன், இத்தகைய செயலாராய்ச்சித் திறமையான பொதுமைப் பாட்டைப் புறக்கணித்து விட்டாலும் பட்டறிவும் பொதுமைப்பாடும் மனிதனுடைய ஒத்துழைப்

பில்லா விட்டால் முடியாத செயலாகும். தத்துவ இயலின் முறையானது, அறிவு வளர்ச்சிக்குத் துணை புரியும் பட்டறிவும் பகுத்தறிவும் சேர்ந்ததொன்றாகும். எல்லா வகைத் தத்துவ இயல் தொடர்பான அறிவும் தொடக்கத்தில் அனுபவ அடிப்படையில் எழுந்ததே. பிறகு தொகுப்பு அளவுத் தொடர்புடைய பொதுமைப் பாட்டை மேலும் மேலும் அடைந்து, அதன் பின்னர் மேலான தொகுப்பு அளவை தேவைப் பட்ட அறிவையடைய பயனற்றதாகப்போய்விடுகிறது. பொருள்களை விவரிக்க அத்தகைய அறிவு தேவையாக இருந்தாலும் அறிவியலின் தொகுப்பானது செயலறிவுக்கு எட்டாமல் போய்விடுகிறது. தத்துவ இயல், பொருள்களின் தன்மையை அறிந்துகொள்ளப் பகுத்தறிவைப் பயன்படுத்துகிறது. தத்துவ இயலின் முறை செயல்முறையாகவும் பகுத்தறிவு முறையாகவும் அமைகிறது. அறிவியலானது பொதுவான முடிவுகளைத் தெரிந்து கொள்ளத் தொகுப்பு அளவை முறையைப் பயன்படுத்தினாலும் தத்துவ இயலானது, அறிவியல் பொதுமைப்பாட்டை அறிந்து கொள்ள முடிவு எடுக்கப் பகுப்பளவையின் இன்றியமையாமையை வற்புறுத்துகிறது. ஆகையினால் அறிவியல் தத்துவம் தத்துவ இயல் முறையான தொகுப்பளவைப் பயன்படுத்துவதுமல்லாமல் அதற்கு அடிப்படையாகவும் உறுதியளிப்பதற்கும் பகுப்பளவைப் பெரிதும் பயன்படுத்துகிறது.

அறிவியலுக்கும் தத்துவ இயலுக்குமுள்ள சிறப்பான வேற்றுமை என்னவென்றால், அறிவியலானது அதன் பலன்களில் புலன்களுக்கு அப்பாற் பட்ட கருத்தியலாகவும், தத்துவ இயலானது அதனை விளக்கிக் கூறுவதில் பருப்பொருளாகவும் அமைகிறது. அறிவியல் ஆராய்ச்சிகளின் புலன்களுக்கெட்டாத தன்மையானது, தனிச் சிறப்பு வாய்ந்ததாக அமைவதோடு மற்றப் பொருள்களிடமிருந்து விலகியும் காணப்படுகிறது. மேலும் முழுமையான அறிவோடு அது தொடர்பு கொள்வதுமில்லை. ஆனால் தத்துவ இயலானது, எந்தப் பொருளை எடுத்துக் கொண்டாலும் அதைத் தனித்து அல்லது பிறபொருள்களிலிருந்து பிரித்துப் பார்க்காமல் எப்பொழுதுமே தொடர்பு கொண்டு பார்க்கிறது. இப்போதைய அறிவியலானது, கணிதம் இயற்பியல் போல் அதன் கண்டுபிடிப்புகளுக்கு கணித வாய்ப்பாட்டு ஒழுங்கு முறையைச் சார்ந்துள்ளது. ஆனால் தத்துவ இயலானது, இத்தகைய அறிவியல் சார்ந்த உலகத்தைப் புறக்கணிக்கிற தன்மையை ஒதுக்கிவிடுகிறது.

அறிவியலுக்கும் தத்துவத்திற்கும் குறிக்கோளில் ஒற்றுமை காணலாம். அறிவியலும் தத்துவ இயலும் விரித்துரை செய்ய வேண்டும் என்ற பொது நோக்கைக் கொண்டிருக்கிறது. விவரிக்க வேண்டும் என்பது, அறிவை ஒழுங்குபடுத்துவது. ஒழுங்குபடுத்துவதென்பது தனியான பகுதிகளைப் பொதுவிதிகளின் அடிப்படையில் கொணர்வது அல்லது இன்னும் மேலான பொது விதிகளின் கீழ்க் கொணர்வதாகும்.

தத்துவ இயலும் கணித இயலும் பொதுவான விவரித்தல் என்ற குறிக்கோளாக அமைந்திருந்தாலும், அறிவியல் ஒரு பொதுவிதியின் கீழ்க் கொண்டு வந்து நிறுத்துகிறது. ஆனால், தத்துவ இயல் அதற்கும் மேலாகச் சென்று பருப்பொருளான பொதுமைப்பாட்டை அடைகிறது. சட்டங்களெல்லாம் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகளைக் குறிப்பன; தத்துவ இயலானது, குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகளைப் பற்றிய அறிவைக் குறிப்பது. அவற்றைப் பற்றிய விரிவுரைகள் சில சமயங்களில் அவற்றிற்கு அப்பாற்பட்டதாக அமைகின்றன. அறிவியல் ஒவ்வொரு துறைகளின் விருத்தியுரையோடு அமைந்து விடுகிறது. ஆனால் தத்துவ இயல் கடைசியான விளக்க உரை நோக்கிச் செல்கிறது. விளக்க உரைகளில் கூட அறிவியலுக்கும் தத்துவத்திற்கும் வேறுபாடு காணப்படுகிறது. அறிவியல் தத்துவ ஞானிகளான இசுபென்சர், உண்ட்டு போன்றோர் தத்துவமானது, அறிவியலின் தொடர்ச்சி என்றும் அறிவியலுக்கப்பால் அறிவின் முடிவைத் தத்துவம் செயற்படுத்துகிறது என்றும் கூறுகின்றனர். இத்தகைய தத்துவத்தின் தொடர்பை ஒத்துக்கொள்ள வேண்டுமானால், இரண்டினுடைய பொருளும் ஒன்றாகக் கருதவேண்டும். இசுபென்சர் தத்துவ இயலைக் குறிப்பிடும்பொழுது, முழுமையான ஒற்றுமைப்படுத்துகிற அறிவு என்றும், அறிவியலானது பகுதியாக ஒற்றுமைப்படுத்துகிற அறிவு என்றும் விளக்குகிறார்.

அறிவானது, முழுமையாக ஒற்றுமைப்படுத்துவதாக இருந்தாலும் குறிப்பிட்ட நிகழ்ச்சிக்குள் அடங்கியிருப்பதால், தத்துவ இயலைச் சார்ந்த அறிவாகக் கொள்ள முடியாது. ஏனென்றால் அது பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. அறிவியலின் தோற்றமுறை, ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியைக் கூறுவது. ஆனால் அறிவானது தத்துவத்தைப் போல விரிவாக உணர்ந்துகொள்ளும்படி கூறாது.

அறிவியலானது தெரியமுடியாத பொருளின் தன்மையை மறந்து விடுகிறது. அறிவானது ஒரு பெரிய ஒழுங்கமைப்பாகும். ஆனால் அறிவியல் விரிவுரையானது அதில் ஒரு கருப்பொருளாகும். தத்துவம் அறிவை முழுமையுடையதாகத் தெளிவுறச் செய்யும்; ஆனால் அறிவியல் தத்துவத்தைப் பற்றிச் சிந்திக்காது.

வரலாற்றின் அடிப்படையில் தத்துவத்திற்கும் அறிவியலுக்குமுள்ள தொடர்பை ஆராயலாம்.

முதலில் கிரேக்க நாட்டின் தொன்மைக்கேற்ப, தத்துவமானது இயற்கையான அறிவியலாகும். இக் கருத்தினை தெமாக்கிரிட்டசு (Democritus), எப்பிக் கியூரியர்கள் (Epicureans), கெப்ளர் (Kepler), ஆப்சு (Aobbes) ஆகியோருடைய எழுத்துகளில் காணலாம். அறிவியல் மிகவும் ஆழமாகவும் நல்ல முறையிலும் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் நடுவில் வளர்ந்தது. அறிவியலையும் தத்துவத்தையும் இசுபென்சர் சமமாக நோக்கினார். இசுபென்சருக்குத் தத்துவமானது அறிவியலின் தொடர்பாகத் தோன்றியது; விரிவுரையாகப்படவில்லை. தத்துவமானது அறிவியல் அறிவின் தொகுப்பாகக் காணப்பட்டது.

அறிவியலினால் கையாளப்படும் தத்துவமானது இசுபென்சரால் தொடங்கப்பட்டு இப்போதைய நேர்காட்சியால் விரிவுபடுத்தப்பட்டது. இது, எகலின் (Hegel) பேரில் நம்பிக்கையில்லாமல், அவருடைய புத்திக் கூர்மையான கருத்தியலான உலகத்தைப் பல நேர்காட்சிகளாகப் பிரித்துப் பட்டறிவின் அடிப்படையிலும் பகுப்பாராய்ச்சியிலும் ஈடுபடுத்தியது.இதனைப் பெர்டிராண்டுஇரசல் என்பவர் சேம்சிடமிருந்து தெரிந்துகொண்டார்.

அவரது அளவையின் அணுக்கொள்கை, தத்துவத்தில் அறிவியல் முறையை வற்புறுத்தியது. தத்துவமானது, எல்லாவித அறிவியலைவிட, அறிவியல்களின் தொடர்பிலும் அவை தம்மில் ஏற்படும் வேறுபாடான கருத்துகளிலும் அடங்கி இருக்கிறது. உளவியலுக்கும் இயக்கவியலுக்கும் கருத்து வேறுபாட்டை உண்டு பண்ணவில்லை. உளவியலுக்கும் அளவியலுக்கும் வேறுபாடு ஏற்படுத்தவில்லை. தத்துவமானது புரியக் கூடியதாகவும் துணிவோடு உலகின் இப்போதைய கோட்பாட்டைக் கூறுவதாகவும் அமைகிறது. ஆனால் அறிவியல் அதை ஒத்துக் கொள்ளவுமில்லை; தவறு என்று மறுக்கவுமில்லை. ஆனால் தற்காலிகக் கோட்பாடாக உணர்த்தலாம். சமயங்களைப் போல் உறுதியாகக் கூறக்கூடாது.

சாமுவேல் அலெக்சாண்டர் ஒழுங்கான நேர்காட்சியை ஒத்துக் கொள்பவர். அவரும் அறிவியல் சார்ந்த தத்துவத்தை உடன்படுகிறார். அவர் கருத்துப்படி, அறிவியலும் தத்துவமும், ஒரே செயல் முறையைப் பயன் படுத்துவதல்லாமல் ஒழுங்கில்லாத இடத்தில் தொடர்பையும் ஒழுங்கையும் ஏற்படுத்துகின்றன. பலவற்றையும் புரிந்து கொள்ளக் கூடிய தன்மை அறிவியலுக்கு ஏற்படும்பொழுது, அறிவியல் தத்துவத்தோடு இணைகிறது. அறிவியல் முடிவடையும் நிலையையும், தத்துவம் தொடங்கும் நிலையையும் குறிப்பிட முடியாது. பொருள்களின் பரவலாயிருக்கும் தன்மையையும், மாறுபட்டதாக இருக்கும் தன்மையையும், பிரித்துணரும் பொழுது தத்துவத்திற்கு அறிவியலைவிட அறிவை ஒழுங்குபடுத்துவதில் சிறிது இடர் ஏற்படுகிறது. பரந்த தன்மை செயலற்றதாகவும் பட்டறிவிற்கு முந்தியதாகவும் அமைவது தத்துவத்தின கருத்தாகும். அலெக்சாண்டரைப் பொறுத்த மட்டில், அனுபவமும் அனுபவமில்லாத தன்மையும் உலக அனுபவத்தின் இரண்டு பக்கங்களே; அனுபவமற்ற நிலையும், அனுபவ நிலையும் ஒருவகை அனுபவங்களே. தத்துவ இயல் என்பது, செயலராய்ச்சி செய்ய முடியாததைச் செயலறிவு சார்ந்ததாகச் செய்தல். அலெக்சாண்டரின் எழுத்துகளிலும் அவருடைய வெளிப்படையான தத்துவக் கருத்துகளிலும் அனுபவத்திற்கு முன்னால் உள்ள நிலையும் பகுத்தறிவு நிலையும் காணப்படுகின்றன. தத்துவ உணர்வு ஒரு நேரான பாதையை நோக்கிச் செல்கிறது.

சி.டி. பிராடு (Broad, C.D.) என்பவர் தத்துவத்திற்கு நுண்ணாய்வுத் திறனும், ஆழ்ந்த ஆராய்ச்சித் திறனும் அமைந்திருக்க வேண்டும் என்கிறார். நுண்ணாய்வுத் திறனில் வாழ்க்கையில் ஏற்படும் அறிவியலின் கருத்துகளை ஆழ்ந்து ஆராய்ச்சி செய்ய வேண்டும். ஆராய்ச்சித் திறனில் அந்தக் கருத்துகளை நன்றாகச் சிந்தித்துப் பகுத்தறிவுக்குப் பொருத்தமாக அக்கருத்துகளின் உண்மைகளையும் பொருளையும் வேண்டுமென்றால் மாற்றியும் அமைக்க வேண்டும். பிராடு என்பவர், தத்துவத்தின் ஆய்வுத்திறனில் மேலும் ஒழுங்கான சமய அனுபவங்களையும் சேர்த்துப் புலனறிவுக்கெட்டாத ஆழமான கருத்துகளைக் கொள்ள வேண்டும்; அறிவியல் தத்துவ அறிஞர்கள் இவற்றை ஒப்புக் கொண்டால் தத்துவம் சிறப்படைவதோடு தத்துவ உணர்வு மேம்பட்டு, காண்ட்டு (Kant) கூறிய ஒழுங்கான சமயம் தொடர்பான தத்துவம் இருபதாம் நூற்றாண்டில் சிறப்படையும் என்கிறார். இலாய்டு மோர்கான் (Lloyd Morgan), ஒயிட்கெடு (White Head) ஆகிய இருவரும் இயற்கை உலகினைப் புறக்காட்சி, செயல்முறைகளோடு நன்றாக ஆராய்ந்து, ஒழுக்க, சமயத்தொடர்புடைய மேலான அனுபவங்களை உணர்ந்து, ஆராய்ச்சித் தத்துவத்தின் சிறப்பியல்புகளையும் புலனறிவுக்கெட்டிய கருத்துகளையும், புலனறிவுக்கெட்டாத உண்மைகளையும் உணர்த்த முடியும் என்று கூறுகின்றனர். மேலும் அவ்விருவரும் உண்மையான தத்துவம் அனுபவ அடிப்படையில் அமைந்திருக்க வேண்டும் என்றும் இத்தகைய அனுபவத்தில் அறிவியல் சார்ந்த கருத்துகளும் சமயக் கருத்துகளும் கலந்திருத்தல் வேண்டும் என்றும் உண்மைக்கும் குறிக்கோள் நெறிக்கும் வேறுபாடு இருக்கக் கூடாது என்றும் கூறுகின்றனர்.

தத்துவம், சமயக் கருத்துகளுக்கு ஏற்காத அனுபவங்களை அறிவியல் அனுபவங்கொண்டு தடை-

செய்யும். தத்துவ ஞானியின் சிக்கல்கள் அனுபவங்களும் சமய நம்பிக்கையும் அறநெறிக் கொள்கைகளும் உள்ளுணர்வுகளும் ஆம். இரா.கோ.

**அறிவியற் கல்வி:** கல்வித் திட்டங்களில் அறிவியற் கல்வி கி.பி. 18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து சிறப்பான இடத்தைப் பெறத் தொடங்கியது. அன்றைய அறிவியல் வளர்ச்சியின் வேகமும், அறிவியல் கண்டுபிடிப்புகள் மக்கள் வாழ்க்கையில் தோற்றுவித்த பெரும் பாதிப்பும் அறிவியற் கல்வியின் (Science Education) இன்றியமையாமைக்கு அடிப்படைக் காரணிகளாக இருந்தன. இசுபென்சர் (Spencer), அக்சுலி (Huxley) போன்றோரின் அறிவியல் கோட்பாடு கல்வியின் எல்லாக் கட்டங்களிலும் அறிவியற்பாடங்களின் சிறப்பிடத்தினைத் தெளிவாக்க உதவியது. அன்று ஓரளவு குறுகிய நோக்க முடையதாக இருந்த அறிவியற் கல்வியின் எல்லைகளும் இலக்குகளும், இன்று விரிந்தும் பெருகியும் உள்ளன. மனித இனம் இன்று எதிர் கொள்ள வேண்டிய சிக்கல்கள் பலவாகப் பெருகியுள்ளன. இப்பெருக்கத்திற்கும் அறிவியலின் வியத்தகு முன்னேற்றம் காரணமாகியுள்ளது. உலகின் பொருளியற் சீர்கேடுகள், எரிபொருள் நெருக்கடி, மக்கள் தொகைப் பெருக்கம், சூழ்நிலைத் தூய்மை கெடுதல் போன்ற பலவற்றிற்குத் தீர்வு காண வேண்டிய நிலை இன்று எழுந்துள்ளதுடன், தொழில் நுட்ப உலகில் இசைவுடன் வாழ்வதற்கு அறிவியல், பொருளியல் அறிவினை நடைமுறையில் செயற்படுத்தும் திறன் ஒவ்வொரு குடிமகனுக்கும் தேவைப்படும் நிலையும் தோன்றியுள்ளது. இத்தகைய அறிவையும் திறனையும் அளிப்பது அறிவியல். இதனை விளக்குவது கல்வியின் தலையாய நோக்கமாகும். இதே போன்று வேகமாக வளர்ச்சியுறும் அறிவியற் கருத்துகள் யாவும் பாடத்திட்டத்தில் இடம் பெறச் செய்தலைவிட, எவ்வாறு அறிவியல் உண்மைகள் கண்டறியப்படுகின்றன? எத்தகு மனப்பான்மையுடன் அணுகினால் அறிவியல் சிக்கல்களைத் தீர்வு காண்பதில் வெற்றியடையலாம் என்னும் நோக்கங்கள் இன்று அறிவியற் கல்வியில் வலியுறுத்தப்படுகின்றன. தனிப்பட்ட விவரங்களை விட இவற்றை நடைமுறைத் தேவைக்கேற்பப் பயன்படுத்தலில் தரப்படும் பயிற்சி முதன்மை இடம் பெறுகிறது. அறிவியற் கல்வி சூழ்நிலையை நன்றாக அறிந்து கொள்ளத்தேவையான அடிப்படைச் செய்திகளைத் தர வேண்டும். உடலைப் பாதுகாத்துக் கொள்ளத் தேவையான அறிவைத் தர வேண்டும். அறிவியல் முறையில் பயிற்சி அளிக்க வேண்டும். வாழ்க்கையில் ஏற்படும் சிக்கல்களைத் தீர்க்கத் தேவையான அறிவைக் கொடுக்க வேண்டும். ஓய்வு நேரத்தைச் சிறப்பாகக் கழிக்கும் முறைகளைக் கற்றுத் தர வேண்டும். விருப்பு வெறுப்பின்றி எந்தச் சிக்கலையும் ஆராயப் பயிற்சி அளிப்பதாகவிருத்தல் வேண்டும். அன்றியும், விடாமுயற்சி, தூய்மை, நேர்மை, கட்டுப்பாடு, உண்மைபோன்ற பண்புகளை வளர்ப்பதாக இருக்க வேண்டும். அறிவியலில் ஆர்வத்தைத் தூண்டி, மேலும் அறிவியல் துறையில் பெரிதும் ஈடுபடுத்துவதாகவும், அறிவியற் கருவிகளைப் பயன்படுத்தத் தேவையான அறிவை வளர்ப்பதாகவும், சோதனை செய்யும் ஆற்றலை வளர்ப்பதாகவும், மூட நம்பிக்கைகளையும் தவறான கொள்கைகளையும் நீக்குவதற்குத் தேவையான அறிவை அளிப்பதாகவும் அறிவியற் கல்வி இருத்தல் வேண்டும்.

கற்பிக்கப்படும் அறிவியல் தத்துவங்களும் கொள்கைகளும் மக்களின் அன்றாட வாழ்விலோ பிற்கால வாழ்விலோ பயன்படுத்தும்படியாக அமைய வேண்டும். இவற்றைப் பற்றிய அறிவை மட்டும் பெறுவதுடன் நின்றுவிடக் கூடாது. கருத்துகளைப் பயன்படுத்தித் தங்களைச் சூழ்நிலையுடன் பொருத்தப்பாடு செய்து கொள்ளல் வேண்டும். சூரியன் நிலவு, விண்மீன்கள், புவி, காலநிலை கொண்ட இவ்வண்டத்தைப் பற்றியும் பல்வேறு உயிரினங்களைப் பற்றியும் அறியும் செய்திகள், இயற்கையைப் பற்றி அறிந்து கொள்ள உதவுவன. எல்லா உயிரினங்களும் தங்களின் இனத்தைப் பெருக்குகின்றன; சக்திக்கு அழிவில்லை; ஆதலின் ஒரு சக்தியை பிறிதொரு சக்தியாக மாற்ற இயலும் என்பன போன்ற அறிவியல் தத்துவங்கள் புற உலகைப் பற்றித் தெளிவாக அறிந்துகொள்ள உதவும் கருத்துகள் ஆகும். இன்று அறிவியல் வளர்ச்சி மனித வாழ்வின் பல்வேறு கூறுகளையும் தொடாத இடமில்லை. ஆகவே, அவற்றை நன்கு புரிந்துகொண்டு செயலாற்றவும் வாழ்க்கையை இன்பமாக மாற்றிக் கொள்ளவும் அறிவியற் கல்வி இன்றியமையாதது.

இன்றைய அறிவியல் உலகம் எல்லையற்று விரிந்து பரந்து செல்கிறது. ஒவ்வொரு மனிதனுக்கும் அறிவியல் அறிவு தேவைப்படுகிறது. இதன் வளர்ச்சியால் பல எண்ணற்ற செயல்களைச் செய்து கொண்டு வருகின்றனர். சுற்றுப்புறத்தைப் புரிந்து கொண்டு, புதிய சிந்தனைப் போக்கோடு, இந்த அறிவை வாழ்வில் பயன்படுத்த ஒவ்வொரு மனிதனும் தெரிந்திருக்க வேண்டும். அறிவியற் கல்வியும் அதனை வலியுறுத்தும் நோக்கத்தோடு அமைதல் வேண்டும்.

**அறிவியற் கழகம்:** சோதனைச் சாலையில் எதிர்பாராது நிகழும் உண்மைகளைப் பற்றி ஆராய்வதற்கோ சிந்திப்பதற்கோ மாணவனுக்கு விருப்பமுள்ள வேறு சில சோதனைகளைச் செய்வதற்கோ வகுப்பறையில் வாய்ப்பளிக்கப் பல நேரங்களில் இயலுவதில்லை; இதற்கான நேரமும் வகுப்பறைகளில்

கிடைப்பதில்லை. இத்தகைய மாணவர்களுக்குக் கட்டுப்பாடு ஏதுமின்றித் தங்கள் விருப்பத்திற்கு இணங்கப் பிற சோதனைகளைச் செய்வதற்கும் புதிய கருவிகளை அமைப்பதற்கும் சிந்தித்துச் செயற்படுவதற்கும் அறிவியற் கழகங்கள் (Science Clubs) வழி வகுக்கின்றன. அறிவியற் கழகங்களை அமைக்கும் பணியில் வல்லுநராக விளங்கிய மீசுடர் (Meister) என்பவர், அறிவியற் கழகத்திற்கும் வகுப்பறைக்கும் உள்ள வேறுபாட்டினை நன்கு உணர்த்தியுள்ளார். "வகுப்பறைகளில் மாணவர் என்ன செய்ய வேண்டுமெனப் பணிக்கப்படுகின்றனர். வகுப்பறையில் ஏதேனும் ஒரு தலைப்பினைப் பற்றிக் கற்பிக்கும்போது முறைகள் அனைத்தும் ஆசிரியராலேயே வரையறை செய்யப்படுகின்றன. அறிவியற் கழகத்தில் எத்தகு முறையைக் கையாளுவது என்று மாணவர்களே தேர்ந்தெடுக்கின்றனர். வகுப்பறையில் ஆசிரியரை மதித்து அவருக்கு மகிழ்ச்சிதரும் வகையில் நடக்கின்றனர். அறிவியற் கழகத்தில் அவர்கள் தங்கள் விருப்பத்திற்காகவும் மகிழ்ச்சிக்காகவும் கழகத்தின் நன்மைக்காகவும் சில செயல்களில் ஈடுபடுகின்றனர்". சுருக்கமாகச் சொன்னால் வகுப்பறை என்பது ஒரு விதிமுறையும் கட்டுப்பாடும் உள்ள இடம் என்றும் அறிவியற்கழகம் என்பது சுதந்திரமாக இயங்குவதும் ஆற்றலை வெளிப்படுத்துவதுமாகிய இடமென்றும் கருதப்படுகின்றன.

மாணவரிடையே அறிவியல் மனப்பான்மையை வளர்க்கவும், அறிவியல் கற்பதில் மாணவர் பொறுப்பேற்கவும் பங்கேற்கவும் மாணவரது கற்றல் தூண்டப்படாமல் தானே மிளிரவும், அன்றாட வாழ்க்கை நிகழ்ச்சிகளிலும் சுற்றுப்புறத்திலும் ஈடுபாடு கொள்ளவும், அவற்றை ஆராயவும், அறிவியலை ஒரு சிறந்த ஓய்வு நேர வேலையாகக் கருதவும் வழி வகுப்பது அறிவியற் கழகங்களின் நோக்கமாகும்.

அறிவியற் கழகங்களைப் பொது அறிவியற் கழகங்கள் எனவும், தனிப்பட்ட ஆர்வத்தை வளர்க்கும் கழகங்கள் எனவும் இருவகையாகப் பிரிக்கலாம். பொதுஅறிவியற் கழகம் என்றோ, உயிர்நூல் கழகம் என்றோ, வேதியியல் கழகம் என்றோ, அமைப்பது முதல் வகையைச் சார்ந்ததாகும். வானொலிக் கழகம், நிழற்படக் கழகம், இயற்கைக் கழகம் (Nature Club) எனத் தனிப்பட்ட ஆர்வத்தை வளர்க்கும் கழகங்கள் இரண்டாம் வகையைச் சார்ந்தனவாகும்.

அறிவியற் கழகத்திற்கு விதி முறைகளைக் கொண்ட ஓர் அமைப்பை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். கழகத்தை முதலில் தோற்றுவிக்கும் போது அறிவியலில் ஆர்வமுள்ள மாணவர் சிலரைக் கொண்டு அமைக்கலாம். அறிவியற் கழகம் செயற்படப் பள்ளித் தலைமையாசிரியரைப் பாதுகாவலராகவும் அறிவியல் ஆசிரியரை அமைப்பாளராகவும் அமைத்து, மாணவர்களிலிருந்தே தலைவர், செயலாளர், பொருளாளர், நூலகர், விளம்பர அலுவலர் ஆகியோரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும். அமைப்பாளராக விளங்கும் அறிவியல் ஆசிரியர் ஆர்வம் உள்ளவராகவும் பிறர் தூண்டுதலின்றித் தாமே எவற்றையும் செய்யும் ஆற்றல் பெற்றவராகவும் இருத்தல் வேண்டும். கழகத்தில் குறைந்த அளவே மாணவரைச் சேர்ப்பது நல்லது. ஓர் ஆசிரியரது மேற்பார்வையில் பத்து அல்லது பதினைந்து மாணவர் இருந்தாலும் போதுமானது. அறிவியற் கழகம் முற்றிலும் மாணவர்களுக்காகவே நடத்தப்படுவது. எனவே வழக்கமாக நடைபெறும் கூட்டங்கள் போன்று பேச்சுகள் மட்டுமே இடம் பெறாமல், பல்வேறு திட்டங்களைச் செயற்படுத்த வேண்டும். வெளிப் பயணங்கள், பல்துறை அறிஞர்களுடன் கலந்துரையாடல், அறிவியல் அங்காடிக் கண்காட்சிகள் அமைத்தல், முதலுதவி செய்தல், மூடப்பழக்கங்களை அறிவியல் நோக்குடன் ஆராய்தல், வீட்டு விலங்குகளை வளர்த்தல், அறிவியல் கருத்தரங்குகளுக்கு ஏற்பாடு செய்தல், சமூகத் தொண்டுகளான சுற்றுப்புறத் தூய்மை செய்தல், வேளாண்மைக்கு மண், நீர் சோதனை செய்தல், மக்கள் நலம் பேணுதல் போன்ற பலதரப்பட்ட செயல்களில் மாணவர்க்கு ஆர்வமுண்டாக்கும் செயல்களை மேற்கொள்ள வேண்டும். இவையன்றித் திறமை வாய்ந்த மாணவர்கள் ஒரு சிலருக்கு ஆராய்ச்சியினைத் தனிப்பட்ட முறையில் செய்யப் பயிற்சி தரலாம்.

அறிவியற் கழகங்கள் மேலை நாடுகளில் சிறந்து செயற்படுகின்றன. இத்துறையில் அமெரிக்க நாட்டில் அமெரிக்காவின் அறிவியற் கழகங்கள் (Science Clubs of America) என்ற அமைப்பு, தானாகவே முன் வந்து எல்லாப் பள்ளிகளுக்கும் வேண்டும் உதவிகளைச் செய்கிறது. இது அண்மையில் ஏற்படும் வளர்ச்சிகளை 'அறிவியல் செய்தி மலர்' (Science News Letter) என்ற ஓர் இதழின் வாயிலாக வாரந்தோறும் வெளியிட்டுப் பள்ளிகளுக்கு அனுப்புகிறது; அவ்வப்போது தேவையான அறிவுரைகளையும் வழங்குகிறது.

இந்தியாவிலும் அறிவியற் கழகங்களைப் பள்ளிகளில் அமைப்பதற்கான முயற்சிகள் நன்முறையில் சென்ற சில ஆண்டுகளாகச் செய்யப்பட்டு வருகின்றன. இக் கழகங்களைப் பள்ளியில் நிறுவுவதற்குத் தேசியக் கல்வி ஆராய்ச்சிப் பயிற்சிக் கழகம் (NCERT) பொருளுதவி செய்கிறது. இதுவன்றி ஆர்வமுள்ள அறிவியல் ஆசிரியர்கள், அரசு உதவி ஏதுமின்றி மாணவர் ஊக்கத்தையும், தம் ஈடுபாட்டையும் முதலீடாக்க்

கொண்டு பல பள்ளிகளில் இக்கழகங்களை அமைத்துள்ளனர். ஏ.ப.செ.

**அறிவுடை நம்பி** சங்க காலப் புலவரும் அக்கால அரசருள் ஒருவருமாவார். பாண்டியன் அறிவுடை நம்பி என்று பெயர் குறிக்கப்படுவதால் இவர் பாண்டிய அரச மரபினரைச் சார்ந்தவராவார் என்பது தெரிகிறது. பிசிராந்தையார் இம் மன்னரைப் புறநானூற்றில் பாடாண்டிணை-செவியறிவுறூஉத் துறையில் பாடியுள்ளார் (புறம். 184). இதில், அரசன் நெறியறிந்து பொருள் கொள்வானேயாயின் நாடு பெரிதும் செழித்து விளங்கும் என்றும், இரக்கமின்றிப் பொருள் பெறும் அவாவில் செயற்பட்டால் அவனுக்கும் பயன்படாது, உலகமும் கெடும் என்றும் அறிவுரை கூறியுள்ளார். அறிவுடை நம்பியின் பாடல் குறுந்தொகையில் ஒன்றும் (230), நற்றிணையில் ஒன்றும் (15), அகநானூற்றில் ஒன்றும் (28), புறநானூற்றில் (188) ஒன்றுமாக நான்கு பாடல்கள் சங்கத்தொகை நூல்களில் இடம்பெற்றுள்ளன. பொதுவியல்திணை பொருண்மொழிக் காஞ்சித் துறையில் அமைந்துள்ள இவர்தம் புறநானூற்றுப் பாடல், 'மக்கட்பேறு இல்லோர்க்கு இருமைப் பயனும் இல்லர் தொழியும்' என்னும் கருத்தினைச் சிறப்பாக விளக்குகிறது. இவர்தம் அகநானூற்றுப் பாடல் குறிஞ்சித்திணையிலும், ஏனைய அகப்பாடல்கள் இரண்டும் நெய்தல் திணையிலும் அமைந்துள்ளன. பிசிராந்தையார், பொத்தியார், புல்லாற்றூர் எயிற்றியனார் ஆகிய புலவர்களும், கோப்பெருஞ்சோழனும் இவர் காலத்தினராவர்.

**அறிவுப் புயல்** அண்மைக் காலத்தில் அறிவியல்சார் மேலாண்மைத் துறையில் பல்வேறு அறிஞர்களின் கட்டுப்பாடற்ற சிந்தனைகளை வெளிக்கொண்டு வருதற்குப் பல வழிமுறைகள் கையாளப்படுகின்றன. அவற்றின் தலையாய வழிமுறை அறிவுப்புயல் (Brain Storming) ஆகும்.

அறிவுப்புயல் வழிமுறை அலெக்சு ஆசுபர்ன் (Alex Osborn) என்னும் மேனாட்டு அறிஞரால் 1938-ஆம் ஆண்டு கண்டுபிடிக்கப்பட்டது. பல்வேறு பின்னணிகளைக் கொண்ட, சம மதிப்புள்ள அறிஞர்கள் ஒன்று சேர்ந்து கட்டுப்பாடற்ற சூழலில் அவரவர் கருத்துகளையும் சிந்தனைகளையும் வெளிப்படுத்தும் வாய்ப்பை அளிப்பதே அறிவுப் புயல் கூட்டங்கள் ஆகும். இந்தக் கூட்டங்களில் பெரும்பாலும் ஆறு முதல் பன்னிரண்டு பேர்கள் மட்டுமே பங்கேற்பார்கள். இவர்கள், தீர்ப்புகளையும், திறனாய்வுகளையும் தவிர்த்துச் சிக்கலுக்கு விடைகாணும் முயற்சியில் மட்டுமே தங்கள் கவனத்தைச் செலுத்த உறுதி பூண்டவர்கள். அறிவுப் புயல் கூட்டத்தின் குறிக்கோள் தொடக்கத்திலேயே குழுவினருக்குத் தெளிவாக விளக்கப்பட வேண்டும். தன்னிச்சையாகக் கட்டுப்பாடற்ற சிந்தனைகளுக்கு வரவேற்பு அளிக்கப்படும் என்பது தெளிவாக்கப்பட வேண்டும். இதனால் எதிர்பாராத மரபுகளை மீறின எண்ணங்கள் வெளிப்படலாம் என்பதும் குழுவினருக்குத் தெளிவாக்கப்படல் வேண்டும். ஆயினும், நேற்று இயலாதன எனக் கருதப்பட்டவை இன்றைய நடைமுறைச் செயல்களாகிவிட்டதையும், நேற்றைய மரபு மீறல்கள் இன்றைய மரபுகளாகிவிட்டதையும் கண்கூடாகக் காணலாம். ஆதலால், இம்மாதிரியான அறிவுப் புயல் கூட்டங்களில் குழுவினரால் கட்டுப்பாடின்றி எண்ணங்கள் வெளிப்படுத்தப்படுகின்றன. வெளியிடும் எண்ணங்களின் எண்ணிக்கை மிகுதிப்பட அவற்றுள் விரும்பத்தகாதன ஒதுக்கப்பட்டு, இறுதியில் பயனுள்ள கூற்று மட்டும் இந்தக் கூட்டங்களில் பங்கேற்பவரால் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. கூட்டம் நடத்தப்படும் நாளுக்குப் பல நாள் முன்னதாகவே அதில் பங்கேற்பவர்களுக்கு, எடுத்துக் கொள்ளப்படும் சிக்கல்களைக் குறித்த விளக்கம் தரப்படவேண்டும் என்பது ஆசுபர்ன் அவர்களின் கருத்து. இதற்கு மறுதலையான கருத்தைக் கார்டன் கொண்டுள்ளார். அவர், சிக்கல் மேலோட்டமாக, விவரமாக இன்றிக் கூட்டத்தொடர் தொடங்கும் பொழுது தெரிவிக்கப்பட வேண்டும் என்று கருதுகிறார். இத்தகைய கூட்டத் தொடர்கள் அரை மணியிலிருந்து மூன்று மணி வரை நடத்தப்படலாம். கூட்டத்திற்குத் தலைவர் என எவரையும் அமர்த்தாமலிருப்பது இன்றியமையாததாகும். ஏனெனில் தலைமை என்பது அறிந்தோ அறியாமலோ ஒரு கட்டுப்பாட்டை ஏற்படுத்தி விடுகிறது. ஆகவே தெளிவான, ஆக்கமான, சிந்தனைகள் தோன்றுவதற்குக் கட்டுப்பாடற்ற தன்னிச்சையாய் இயங்கக்கூடிய சூழலில் நடத்தப்படும் அறிவுப் புயல் கூட்டங்கள் பெரிதும் துணையாகின்றன என்பதில் ஐயமில்லை.

இரா. சு.

**அறிவு மடக்கம்,** மனிதனின் சிந்தனையை ஏதேனும் ஒரு குறிப்பிட்ட முறையில் மாற்றும் செயல்முறையாகும். மனிதனின் மூளையே அறிவாற்றலுக்கும், உணர்வுக்கும் மையமாக இருக்கிறது. வன்முறையினால் மட்டுமே மனிதனின் சிந்தனையைத் திட்டமிட்ட முறையில் மாற்றுவது இயலாது. தனிமனிதனின் எதிர்ப்பாற்றலைத் திட்டமிட்ட முறையில் இழக்கச் செய்து பணியச் செய்வதன் மூலம் அவனுடைய சிந்தனைகள் வழிப்படுத்தப்பட்டால், அவன் அறிவு மடக்கம் (Brain-washing) செய்யப்பட்டான் என்று கூறலாம். மூளையின் செயல்முறைகள் சிந்தனை, செயல்கள் வழி வெளிப்படுத்தப்படுகின்றன. மூளையின் சிந்தனைத் திறன் முழுமையாகத் துடைக்கப்பட்டால் மனத்தை ஒரு

குறிப்பிட்ட முறையில் செயற்பட வைக்கமுடியும். இந்த நிலைக்கு மாற்றப்பட்ட மனத்தை அறிவு மடக்கம் செய்யப்பட்ட மனம் என்று கூறலாம்.

பிறப்பும் வளர்ச்சியும் நெருங்கிய தொடர்புடையனவாகும். மூளையின் செயற்பாடுகளைச் சிந்தனையின் மூலம் வெளிப்படுத்துவதும் வளர்ச்சியே ஆகும். குழந்தைக்கு உடல் வளர்ச்சி மட்டுமிருந்து மூளை வளர்ச்சியடையாமலிருந்தால் மன வளர்ச்சி குன்றிய நிலையை (Mental Deficiency) அடையும். இந்நிலையில் அது குறைப்பிறவி அல்லது ஒழுங்கு முறைக்குக் கட்டுப்படாத – வரைமுறைக்கு உட்படுத்தமுடியாத ஓர் உயிரி என்று கருதப்படும். மூளையின் செயற்பாடுகள் மனித இனத்திற்கு மட்டுமேயன்றி மற்ற உயிரினங்களுக்கும் இன்றியமையாதனவாகும்.

அறிவு மடக்கமென்பது சிந்தனையைக் கட்டுப்படுத்தும் வழிமுறையாகவும் அமைகிறது. தனிப்பட்ட பயிற்சியினால் சிந்தனையைக் கட்டுப்படுத்த முடியும். இதில் மூளையின் செயற்பாடும் அடங்கியுள்ளது. மூளையின் இயக்கம் குறிப்பிட்ட செயல்களின் காரணங்களைக் காண விழைகிறது. காரண காரியங்களை வேறுபடுத்தியுணர்ந்து தேர்வுசெய்கிறது. புலன் காட்சி வழியாக எது உணரப்படுகிறது என்பதை ஆராய்ந்து அறிந்த பின்பு தானாக ஒரு முடிவுக்கு வருகிறது. இதுவே மூளையின் இயல்பான இயங்கு முறையாகும். மூளையின் இத்தகைய சுதந்திரமான இயங்குமுறை அறிவு மடக்க நிலைக்கு நேர் மாறானதாகும். தனிப்பயிற்சிக்குட்பட்ட மூளை அதே போன்ற சொற்பயிற்சியை எதிர்பார்க்கிறது; ஒரே தன்மைத்தான சூழ்நிலையை எதிர்நோக்குகிறது. மற்றும் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலைக்கு ஒரே தன்மையில் துலங்குகிறது. இந்தவகையான மூளை எதைப் பார்க்க வேண்டுமென்றும், எதைக் கேட்கவேண்டுமென்றும், எதைக் கற்க வேண்டுமென்றும் கட்டளையிடப்படுகிறதோ அவற்றைச் செய்வதற்கு மட்டுமே விழைகிறது. அது வெளியிலிருந்து வரும் எதையும் கேட்கவோ, பார்க்கவோ விரும்புவதில்லை. வேறுபட்ட சூழ்நிலைகளுக்குத் தக்கவாறு துலங்கல்களைக் காட்டுகிறது. மிகவும் கடுமையாக அறிவு மடக்கம் செய்யப்பட்டால் ஏற்றுக்கொள்ள முடியாத சிந்தனைகளை வன்மையாக வெறுத்து ஒதுக்கியும் கிளர்ச்சி செய்யும் எதிர்வினையாற்றுகிறது. தனி மனிதனுக்கு ஒருவழிப் போதனை செய்வதன் வாயிலாகவோ மக்கள் திறன் ஒருவழிப் போதனையின் வாயிலாகவோ மக்கள் செய்தித் தொடர்பு சாதனத்தின் வாயிலாகவோ எண்ணங்களை மாற்றலாம். செய்தித் தொடர்புக் கருவிகளாகிய வானொலி, தொலைக்காட்சி, நாடகம், சுவரொட்டிகள், செய்தித்தாள்கள் ஆகியன பார்ப்பதற்கோ, படிப்பதற்கோ, கேட்பதற்கோ மூளைக்கு ஒரே செய்தியை அல்லது கருத்தைக் கொடுத்தால் மூளை அக்கருத்தையே புலனுணர்கிறது. மூளையின் இயங்கு முறைகள் பொருளாதார, சமூக, அரசியல் விளைவுகளைச் சார்ந்த சூழ்நிலைகளையும், வாழ்க்கைத் தரத்தையும் பொறுத்து அமைகிறது. வாழ்க்கையில் ஏற்படும் ஏமாற்றங்களாலோ, மனக்குலைவுகளாலோ, தோல்வியின் காரணத்தாலோ உள்ளத்தில் போராட்டம் ஏற்படுகிறது. இத்தகைய சூழலே அறிவுமடக்கத்திற்கு அதாவது மூளையை ஒரு வழிப்பட்ட இயங்கு முறைக்கு இழுத்துச் செல்வதற்குக் காரணமாக அமைகிறது.

அறிவு மடக்கத்தினால் சுதந்திரமாக நிகழும் சிந்தனைகளுக்குத் தடை ஏற்படுகிறது. இடைக்கருத்துகளோ, கலந்துரையாடலோ கருத்துப் பரிமாற்றமோ மடங்கிய அறிவினைப் பார்ப்பது இல்லை. மாற்றுக் கருத்துகளோ, போட்டிச் சிந்தனையோ மடங்கிய மூளையில் உருவாவதில்லை. அறிவுமடக்கம் போட்டியுணர்வை அகற்றுகிறது. கருத்துப் பரிமாற்றமே வளர்ச்சிக்குத் தேவையான கருத்துகளை உண்டாக்கவல்லது. அறிவுமடக்கம் செய்யப்பட்ட சமூக அமைப்பில் போட்டி மனப்பான்மையை எதிர்பார்க்க முடியாது. ஆனால், போட்டி மனப்பான்மையுள்ள சமூக அமைப்பு அறிவுமடக்கத்திற்கு இடம் தரலாம். அதாவது போட்டி அமைப்பு அறிவு மடக்கத்தை உண்டாக்கலாம். ஆனால், அறிவுமடக்கம் போட்டி அமைப்பை உண்டாக்குவதில்லை. அறிவு மடக்கம் நுண்ணறிவுத்திறனை மடங்கிய நிலையிலிருந்து எழவிடாமல் தடுக்கிறது. அறிவுமடக்கம் இரண்டு இன்றியமையாத நிலைகளைக் கொண்டுள்ளது. முதலாவதாக மூளையை ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள்ளேயே சிந்திக்க வைக்கிறது. இரண்டாவதாக மூளையை வேறு விதமாகச் செயற்படவோ, சோதித்துப் பார்க்கவோ விடாமல் தடை செய்கிறது. ஆர். கே. பா.

**அறிவுமடக்கமும் உளவியல் கூறுகளும்:** குற்றமற்ற ஒருவனை மக்களுக்கும் அரசுக்கும் எதிராகத் தான் சதி செய்ததாக ஒப்புக் கொள்ளச் செய்வதற்காகவோ, தன் அரசியல் கொள்கைகளை விட்டுவிட்டுப் புதிய கொள்கைகளை ஏற்றுக் கொள்ளச் செய்வதற்காகவோ பயன்படுத்தப்படும் நுண்முறை அறிவு மடக்கம் எனப்படும். கொள்கை மாற்றம், அறிவழிப்பு, சிந்தனைச் செப்பம் போன்ற சொற்களால் இந்த நுண்முறை குறிக்கப்பட்ட போதிலும் அறிவு மடக்கம் (Brain-washing) என்னும் சொல்லே பெரும்பாலும் பயன்படுத்தப்படுகிறது.

போரில் சிறைப்பட்டோரிடமிருந்து பகை நாட்டினர் படைமுறை பற்றிய உண்மைகளை வரவழைக்




கப் பயன்படுத்தும் வன்கண் முறைகள் அறிவுமடக்கம் ஆகா என்பது குறிப்பிடத்தக்கது.

அறிவுமடக்கம் என்பது கொள்கைப்பரப்பல், அரசியல், கல்வி, சமூக வயமாக்குதல் ஆகியவற்றுடன் இயைபுடையதாகும். ஏனெனில் இவை யாவும் அரசியல் கருத்தேற்றத்தின் கூறுகள் ஆகும். அரசியல் காரணங்களுக்காகச் சிறைப்பட்டோரை அறிவு மடக்கம் செய்வதற்காகப் பின்வரும் நுண்முறைகள் பயன்படுத்தப்படுகின்றன.

சிறைப்பட்டோனின் உணவு உறக்கம் அன்றாட அலுவல்கள் ஒவ்வொன்றையும் கட்டுப்பாட்டுக்கு உட்படுத்தி அவன் எந்தச் செயலையும் தனித்துச் சுதந்திரமாகச் செய்ய முடியாது என்ற உணர்வை அறிவு மடக்குநர் அவனுக்கு ஏற்படுத்துவர்.

சிறைப்பட்டோனிடம் அவன் சிறைப்பிடிக்கப்பட்டதன் காரணத்தைப் பல நாள்கள் கூறாமல் இருப்பர். தான் சிறைப்பிடிக்கப்பட்டதன் காரணம் கேட்டால் அது வன்மையாக மறுக்கப்படும். "உன் குற்றங்களை நீயே உணர்ந்திருப்பாய். அவைகளை உடனே ஒப்புக்கொள்" என வற்புறுத்துவர். குற்றம் சாட்டப் பெற்றவனுக்கு இவ்வாறு இருதலைக் கொள்ளி நிலையை ஏற்படுத்துவர். அவன் குற்றங்களை ஒப்புக்கொள்ளவும் முடியாது; மறுக்கவும் முடியாது. ஏனெனில் அவன் எக்குற்றங்களுக்காகச் சிறையிலடைக்கப்பட்டான் என்பதையே அவன் அறிந்திருக்க மாட்டான்.

சிறைப்பட்டோனுக்கும் வெளி உலகத்திற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லாமல் செய்துவிடுவர்.

சிறைப்பட்டோன் உடல் உளச் சித்திரவதைகளுக்கு ஆளாக்கப்படுவான். அவன் அத்தகைய குற்றங்களைச் செய்ததாக அவனுடைய நெருங்கிய நண்பர்கள் எழுதிக் கொடுத்துள்ளனர் என்றோ, அவன் மனைவி அவனை மணவிலக்குச் செய்துவிட்டாள் என்றோ பொய்யான செய்திகளை அவனிடம் கூறுவர். அவனிடம் 12 அல்லது 16 மணி நேரம் இடைவிடாமல் தொடர்ந்து கேள்விகள் கேட்கப்படும். அதன்பிறகு அவனை உறங்குவதற்கு அனுப்பி விடுவர். சிறிதுநேரம் சென்ற பிறகு அவனை எழுப்பி முன்போன்ற கேள்விக் கணைத் தாக்குதலுக்கு உட்படுத்துவர். இவ்வாறு செய்வதால் சிறைப்பட்டோனின் அறிவு இறுதியில் சுயமாகச் சிந்திக்கும் திறனை இழந்துவிடும்.

சிறைப்பட்டோன் தன் சொந்தத் தகுநிலையை இழந்துவிட்டதாக உணரும் வகையில் நடத்தப்படுவான்.

சிறை அதிகாரிகள் அவன் குற்றம் செய்தவன் என்னும் முற்கோளின் அடிப்படையிலேயே இயங்குகின்றனர். இதனால், சிறைப்பட்டோனிடமும் இத்தகைய உணர்வு ஏற்பட ஏதுவாகிறது.

மேற்கண்ட சூழ்நிலையில் இருப்பவன் தான் எப்போதாவது தன்னையும் அறியாமல் ஏதாவது குற்றம் செய்துவிட்டோமோ என்று தன்னைத்தானே ஐயுறத் தூண்டப்படுகிறான். இவ்வாறு செய்யப்படும் சிந்தனை மாற்றமே அறிவு மடக்கம் எனப்படுகிறது. குற்ற நிலைக்கும் குற்றமின்மைக்கும் இடையில் உள்ளவேறுபாட்டை அழித்தலே அறிவு மடக்கத்தின் குறிக்கோள் ஆகும். சிறைப்பட்டோன் தன்னால் இயன்றவரையில் தன் கொள்கைகளில் உறுதியாகவும் தான் குற்றம் இழைக்கவில்லை. என்ற நம்பிக்கையுடனும் இருப்பான். ஆனால், நாளடைவில் உடல் சோர்வு, களைப்பு, சித்திரவதை, தனிமை, தன்மான மிழப்பு, இழிநிலை இவை யாவும் ஒன்று சேர்ந்து அவனைத் தன் கொள்கைப் பிடிப்பிலிருந்து விடுபடச் செய்கின்றன. அவன் தன் மீது சாட்டப்பெற்ற குற்றங்களை ஏற்றுக் கொள்ள முற்படுந்தோறும் அவனுக்கு இழைக்கப்பட்ட உடல் ஊறுகள்குறைந்ததை அவன் உணருகிறான். தன் கொள்கைப் பிடிப்பில் அவன் சிறிதளவேனும் உறுதி காட்டுந்தோறும் அவனுக்கு உடல் ஊறுகள் அதிகமாயின என்பதையும் அவன் உணர்கிறான். இரண்டும் இரண்டும் ஐந்துதான் என்று நம்புவதற்கு அவன் தவிப்புடன் முயற்சி செய்கிறான் என்று இதனைக் கூறுவர்.

அறிவுமடக்கம் என்னும் நுண்முறை உளவியலார்களின் உதவியின்றியே அரசியல் துறையினரால் கையாளப்பட்டது. உருசிய, சீனப்பொதுவுடைமை வாதிகளும் அரசியல் காரணங்களுக்காக இம்முறையைப் பயன்படுத்தினர்.

அறிவு மடக்கத்தின் பின்வரும் உள இயங்குமுறைகள் செயற்படுகின்றன என்று உளவியலார்கள் கருதுகின்றனர்.

சமூகச் சூழ்நிலையினின்றும் அறவே ஒதுக்கப்பட்ட சிறைப்பட்டோனுக்குத் தன்னிடம் தொடர்பு கொள்ளும் ஒரே ஆளான வினாவாளருடன் (Interrogator) உள ஒன்றுதல் ஏற்படுகிறது. ஏனெனில் மற்றவரைக் காட்டிலும் வினாவாளர் மட்டுமே சிறைப்பட்டோனைச் சிறிது குறைவான கொடூரத்துடன் நடத்துகிறார். இதைப் போன்றே ஒரு குழுவினருக்கு அறிவு மடக்கம் செய்யும் பொழுது குழுவிலுள்ள ஒருவருடன் மற்றவருக்கு உள ஒன்றுதல் ஏற்படுகிறது.

உடல் உளச் சோர்வின் காரணத்தினால் சிறைப்பட்டோன் களைத்துத் தளர்ந்து விடுகிறான். இதன் விளைவாகச் சிந்தனைத் திறன் குறைகிறது.

தனிமைச் சிறை மிகக் கொடுமையான தண்டனை ஆகும். இத்தண்டனை மனவெழுச்சி, நுண்ணறிவு இனங்களைப் பெரிதும் பாதிக்கவல்லதாகும். சிறைப் பட்டோனிடம் இது முழுமையான புலனுணர்வு இழப்பு நிலையை ஏற்படுத்தி அதன் விளைவாக அவன் உள்ளத்தில் தூண்டல்பசி (Stimulus Hunger) யைத் தோற்றுவிக்கிறது. இது அவனை எளிதில் கருத்தேற்றமேற்பவனாக்கிவிடுகிறது.

இடைவிடாத கருத்தேற்றலினால் சிறைப்பட் டோன் தான் செய்யாத குற்றங்களைச் செய்ததாக நம்பும் நிலைக்கு வந்துவிடுகிறான். சுய சிந்தனைக் கும் கருத்தேற்றங்களுக்கும் வேறுபாடு தெரியாத நிலை ஏற்படுகிறது. இந்நிலையில் குற்ற ஒப்புதல் ஏற்படுகிறது.

சிறைப்பட்டோனிடம் திரும்பத் திரும்ப அவன் குற்றம் செய்தவன் என்று கூறப்படுகிறது. இடை விடாமல் கொள்கைகள் அவனுக்கு விளக்கப்படு கின்றன.

சிறைப்பட்டோனிடம் அவன் சிறைப்படுமுன் செய்த செயல்கள் ஆராய்ந்து விளக்கப்பட்டு அவை குற்றங்கள்தாம் என்று ஒப்புதல் கேட்கப்படுகிறது. இதனால்,அவனிடம் குற்ற உணர்வு தோன்றுகிறது.

சிறைப்பட்டோன் தன்னைச் சூழ்ந்தவரிடம் பணி வாக இருத்தலைத் தவிர வேறு வழி இல்லை என்ற நிலையில் இருப்பதால் அவனுடைய தன்மானம் அழிந்துவிடுகிறது. இழிநிலையும் அவமானமும் அவனால் ஏற்கப்படுகின்றன. வினாவாளரின் அதிகார நிலைக்கு முன் அவனுடைய ஆதரவற்ற நிலை தனிப் பட்டு நிற்கிறது. இதனால், அவனது தன்முனைப்பு அழிந்துவிடுகிறது. தண்டனையும் தண்டனை நீக்கமும் சிறைப்பட்டோனால் மாறி மாறிப் பட்டறியும் பொழுது தண்டனை நீக்க நடத்தை ஆக்கம் பெறு கிறது. (காண்க: ஆக்கநிலையிருத்தம்) உடல் ஊறு, அச்சம், சினம் போன்ற எதிர்பாராத பெருந் தூண்டல்கள் ஏற்படின் பலர் மனவெழுச்சி வயப் படுகின்றனர். எதிர்பாராமல் ஊறு, பழிப்பு, இவை களுக்கு உட்படும்பொழுது செய்வதறியாது நடத்தை மாறுபாடுகள் ஏற்படுகின்றன. சிறைப்பட்டோன் எத்தகைய கொடூரமான சித்திரவதைக் குட் படுத்தப் பட்டபோதிலும் எப்பொழுதும் நம்பிக்கையை இழக் கும்படியான நிலையில்விடப்படுவதில்லை. நரகத்தின் கொடுமைகளை எடுத்துரைத்துச் சமயச் சீர்திருத்த வாதிகள் கொள்கை மாற்றும் முயற்சியில் ஈடு படுவதைப் போல, அறிவுமடக்கம் செய்வோர் வரப் போகும் கொடுமைகளை எடுத்துரைத்து அறிவை மாற்றுகின்றனர்.

அறிவுமடக்கம் செய்யப்படுவோர் உளக் கோளாறு களுக்கு ஆளாகின்றனர். அரசியல் வழியில் குற்ற மேற்புகளுக்கும், கொள்கைப் பரப்பலுக்கும் அறிவு மடக்கம் பயன்படுகிறது.

**துணை நூல்கள்:**

**Brocon, James A.C., Techniques of Persuasion: From Propaganda to Brain-washing, Gloucester, 1964.**

**Lifton Robert J., Thought Reform and the Psychology of Totalism, A Study of Brain-washing in China, Norton, New York, 1961.**

**அறிவுமுதற் கொள்கை:** தத்துவத்தின் பெரும் பிரிவுகளில் ஒன்றான அறிவாராய்ச்சியியல் (Epistemology), உண்மை அறிவு எவ்வாறு எழுகிறது என்னும் சிக்கலுக்கு விடை காண முயலுகிறது. இவ் விடைகளுள் சிறப்பான ஒன்று அறிவு முதற்கொள்கை (Rationalism) என்பதாகும். அறிவு, புலனனுபவங் களை (Sense Experience) அடிப்படையாகக் கொண் டுள்ளது எனக் கூறும் 'அனுபவம் சார் கொள்கை' (Empiricism) என்பதற்கு எதிரிடையான கருத்தினை, அறிவுமுதற் கொள்கை வலியுறுத்துகிறது. அறிவு பெறுதலில் புலன்களினின்றும் பெறப்படும் விவரங் களைக் காட்டிலும் அறிவாய்வுச் செயல் (Reasoning) பெரும் பங்கினைக் கொண்டது. உண்மை அறிவுக்கு ஆதாரமாக அமையும் கருவி அறிவாய்வு ஆகும். நிலையான உண்மை அறிவினைப் பெறச் சிந்தனை மட்டும் போதுமானது. தத்துவம், சமயம், அறிவியல், அழகியல் போன்ற பல்வேறு அறிவுத் துறைகளில் குறிப்பிடப்படும் முடிவுகளின் உண்மையினை மதிப் பிட்டு ஏற்றலுக்கும் ஆய்வுச் செயல் அடிப்படை யாகும். எனவே, அறிவுமுதற்கொள்கை மனிதனது சிந்தனையை அல்லது ஆய்வுத் திறனின் சிறப்பினைக் கோடிட்டுக் காட்டுவதாக அமைகிறது. அறிவு முதற் கொள்கையினை உடன்படுவோர் கணித முறைக்கும் அளவையியல் முறையான விதிவிளக்க (Deduction) முறைக்கும் நடுவிடம் அளிக்கின்றனர். ஏனெனில் இம்முறைகள் சிந்தனைச் செயலினைக் கருவாகக் கொண்டவை. நம் உள்ளத்துள் இயற்கையாகவே பொதிந்துள்ள கருத்துகளின் (Innate Ideas) அடிப் படையில் அறிவு எழுவதாகும். இத்தகைய கருத்துகள் அனுபவங்களுக்கு முற்பட்டவை (Aprior). இவற்றைத் தெளிவாக வெளிக் கொணர்தலுக்குச் சிந்தித்தல் துணையாம் என்று பொதுவாக அறிவுமுதற் கொள்கையினர் கூறுவர். ஒருசில தீவிர அறிவுமுதற் கொள்கையினர், பொருளறிவியல், வரலாறு போன்ற பல்வேறு துறைகளைச் சார்ந்த உண்மைக் கருத்துகள் அனைத்தையுமே வெறும் சிந்தித்தல் வழியே அடைய

இயலும் எனக் கருதுகின்றனர். ஆனால்,இது பலரால் ஒப்புக் கொள்ளப்படுவதில்லை.

தத்துவப் பிரிவான அறிவாராய்ச்சியியலில் அறிவு முதற் கொள்கைக்கு வித்திட்டவர் கிரேக்கத் தத்துவ மேதை பிளாட்டோ (Plato) எனலாம். புலனனுபவங்களைச் சாராமல் சிந்தனை வழியே மனிதரால் அடையக்கூடிய, என்றென்றும் உண்மை நிலைப்பட்ட பல கருத்துகள் உள்ளத்துள் இருத்தலைப் பிளாட்டோர் தம் 'குடியரசு' (Republic) என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார். கற்றல் எனப்படுவது இத்தகைய உண்மைகளை நினைவு கூர்தலேயாம் என்றும் அவர் கூறியுள்ளார். இக்கருத்துகளிற் பல கணிதத் தொடர்புடையன எனவும் அவர் கருதினார். பிற்காலத்தில் ஐரோப்பிய நாடுகளில் பிளாட்டோவின் தத்துவச் செல்வாக்கு மீண்டும் வலுப்பெற்ற நிலையில் இத்தகைய அறிவுமுதற்கொள்கைக் கருத்துகள் மேலோங்கின. தூய அகசுடின் (St. Augustin), தூய ஆன்செல்ம் (St. Anslm) போன்ற இடைக்காலத் கிறித்துவத் துறவிகளின் கூற்றுகள் இதற்குச் சான்றுகளாம். அறிவு முதற்கொள்கை கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் இறுதியில் அதன் வளர்ச்சியின் உச்சக்கட்டத்தை எட்டியது. இதற்கு முன்னர்க் குறிப்பிட்ட பிளாட்டோவின் தத்துவக் கருத்துகளில் அறிஞர்களிடையே எழுந்த புதிய ஆர்வமும், கெப்லர் (Keplar), கோபர்னிகசு (Copernicus), கலிலியோ (Galileo), தேகார்ட்டு (Descartes) போன்றோர்தம் முயற்சிகளால் ஏற்பட்ட கணிதமுறை உருவாக்கம், பொருளறிவியல் வளர்ச்சி ஆகியனவும் காரணங்களாம். இவை, சிந்தனையின் வலிமைக்குச் சான்றுகளாயின. சிந்தனை, அறிவின் அடிப்படைக் கருத்துகளையும் (Axioms) முற்கோள்களையும் (Postulates) தரவல்லதென்றும் இவற்றினின்றும் எல்லா அறிவியல் உண்மைகளையும் வருவித்தல் இயலும் என்றும் கருதினர்.

அறிவுமுதற்கொள்கையினை விரிவாக விளக்கியவர் தேகார்ட்டு என்னும் பிரான்சு நாட்டு அறிஞராவர். இவர் கி.பி. 1637-ஆம் ஆண்டு எழுதிய 'ஆராய்ச்சி முறைகள் பற்றிய விளக்கம்' (Discourse on Method) என்ற நூலில் இவ்விளக்கம் காணப்படுகிறது. தேகார்ட்டு, அனுபவம் சார் கொள்கையினை மறுக்கிறார். இக்கொள்கை, மனித உள்ளம் தொடக்கத்தில் எப்பதிவுகளுமற்ற வெற்றுத்தாள் போன்று காணப்படுகிறதென்றும், புலனனுபவங்களின் வழியே தான் அறிவுக் கட்டிடக் கற்கள் உருவாக்கப்பட்டு இணைக்கப்படுகின்றன என்றும் குறிப்பிட்டது. இதற்கு மாறாக தேகார்ட்டு, உள்ளத்தில் அனுபவங்களைச் சாராத, அவற்றுக்கு முற்பட்ட (Aprior) கருத்துகள் உள்ளனவென்றும், இவற்றில் தொடங்கி, கணிதமுறைப்படி சிந்தித்துப் பெறக்கூடிய அறிவு முழுவதையும் நம்மால் பெறவியலும் என்றும் கூறுகிறார். உண்மை அறிவு, சிந்தனை வாயிலாக எழுமேயன்றி அகவுணர்வு, புலன், காட்சிகள் போன்றவற்றின் வழியே அன்று. சிந்தனை தரும் பொதுக் கருத்துகளும் இவற்றின் தொடர்புகளும் அறிவு வளர்ச்சிக்கான கருவிகளாகும். இத்தகைய அனுபவ முற்பட்ட கருத்துகளின் துணைக்கொண்டுதான், புலன்வழிப் பெறப்படும் விவரங்களும் பொருளும் தெளிவும் பெறுகின்றன. இன்று நம்மைச் சூழ்ந்துள்ள புறவுலகின் நிகழ்ச்சிகளைப் புரிந்து கொள்ள உதவுவது மட்டுமன்றி இனி இயலக்கூடிய, மாற்று இயல்புகளுடைய உலக நிகழ்ச்சிகளின் காரண-காரியத் தொடர்புகளைப் புரிந்து கொள்ளவும் இக்கருத்துகள் உதவும் என்பது தேகார்ட்டு அவர்களின் கூற்றாகும். இத்தகைய ஆதாரக் கருத்துகளுக்கு எடுத்துக்காட்டுகளாக, இருத்தல் நிலை (Being or Existence) எண்கள், காலம், இடம், உருவம், இயக்கம் போன்றன பற்றிய கருத்துகளை இவர் குறிப்பிட்டுள்ளார். மற்றும், மக்கள் சிந்தனைக்கேற்ப அமைந்துள்ள உலகிற்குப் பின்னால் எல்லைகளற்ற பேரறிவுப் பொருள் (கடவுள்) இருத்தலையும் தேகார்ட்டு ஓர் ஆதாரக் கருத்தாக ஏற்கிறார். அறிவுமுதற் கொள்கையின் அடிப்படையில், இவருக்குப் பின் வந்த இசுபினோசா (Spinoza) என்பாரும், கி.பி. 1677-ஆம் ஆண்டு தாம் எழுதிய 'அற ஒழுக்கம்' (Ethics) என்னும் நூலில் தம் தத்துவக் கருத்துகளை, சில ஆதாரக் கருத்துகள், முற்கோள்கள், வரையறைகள், கூற்றுகள் (Propositions) ஆகியவற்றினின்றும் கணிதமுறைப்படி விளக்க முற்பட்டார். அடுத்து வந்த அறிஞர் இலைப்னிட்சு (Leibnitz) அறிவுமுதற் கொள்கையின் அடிப்படையில், சிந்தனை வழி எழக்கூடிய எளிய ஆதாரக் கருத்துகளின் பட்டியல் ஒன்றையும், இவற்றை எத்தகு முறைகளில் இணைத்தால் மேலும் சிக்கலான கருத்துகளைப் பெறவியலும் என்பது பற்றியும் தம் நூல்களில் தெளிவுபடுத்த முயன்றார். இவரது இம் முயற்சி, அண்மையில் தோன்றிய கணித அளவையியலின் (Mathematical Logic) அடித்தளமாகும். இவருக்குப் பின் கிறிசுடியன் உல்ப்பு (Christian Wolff) என்பாரும் இக்கொள்கையினைப் பின்பற்றினார்.

இத்தகையோரின் கருத்துகளை அனுபவம்சார் கொள்கையினர் குறை கூறினர். புலன் அனுபவ விவரங்களின் துணையின்றி அறிவியல் அறிவினைப் பெறவியலாது என்பது இவர் கருத்து. அறிவு முதற் கொள்கையின் குறைபாடுகளைத் தெளிவாக்கியவர் காண்ட்டு (Kant) என்னும் தத்துவ அறிஞராவார். சிந்தனைக்குச் சில எல்லைகள் உள்ளனவென்றும் அவற்றைக் கடந்து அது செயற்படுவது இயலாதென்றும் காண்ட்டு சுட்டிக் காட்டினார். கண்ணிற்குத் தோன்றும் (Phenomenal World) உலகினை விளக்க

முற்படும் அறிவியல் ஆராய்ச்சியில், சிந்தனை உதவ வல்லதேயன்றி, இறைக்கருத்து, ஆன்மாவின் அழியா வியல்பு, மனிதனது இயக்கச் சுதந்திரம் போன்ற தத்துவச் சிக்கல்களை ஆய்ந்துணர உதவாது என்பதை இவர் தெளிவாக்கினார். அறிவு முதற் கொள்கை பற்றி இயூம் (Hume) என்பாரின் கடுமை யான திறனாய்வுக்குப் பின் இதனை முழுமையாக உடன்பட்டோர் எவரும் இல்லை எனலாம்.

எனவே அறிவு எழுதலை முழுமையாக விளக்க அறிவுமுதற்கொள்கை போதிய வலுப்பெற்றதாக இல்லை; எனினும் இது அறிவியல் மனப்பான்மை வளர்ச்சிக்கு ஓர் ஊக்கியாக அமைகிறது. இக் கொள்கையின் செல்வாக்கு அறிவியல், சமயம் ஆகிய துறைகளிலும் காணப்பட்டது என்பதனை நாம் மறக்க லாகாது. 'நல்லொழுக்கம் அறிவினின்றும் பிறக்கிறது' என்னும் சாக்ரட்டீசு கருத்தின் அடிப்படையில் பிளாட்டோவும், பின்னர்ச் சிசிரோ (Cicero) போன் றோரும் அறிவியலில் இயற்கை விதிகள், இயற்கை உரிமைகள் ஆகியவற்றைச் சிந்தனை வழியே கண்டறிந்து பின்பற்றுதலை உடன்பட்டனர். இசுபி னோசா, காண்ட்டு போன்றோர் தம் அறிவியல் கருத்து களும் இக்கொள்கையின் அடிப்படையில் விவரிக்கப் பட்டவையாகும்.

தந்தை பெரியாரின் பகுத்தறிவுக் கொள்கையும் அறிவுமுதற் கொள்கையின் பாற்பட்டது எனலாம். அறிவு முதற்கொள்கையின் இப்பல்வேறு விளைவு களைக் கருத்தில் கொண்டு இதனை மதிப்பிடும் இன்றைய அறிஞர்கள் இதனைத் திட்டவட்டமான ஒரு கொள்கை என்பதனினும் மேலாக, வாழ்க்கைச் சிக்கல்களை அணுக உதவும் பயன்மிக்க ஒரு மனப் பாங்கு என்று கருதுகின்றனர். எஸ்.ச.

**அறிவுரைபகர்தல்:** தனிமனிதனின் சிக்கல் களுக்கும் குழப்பங்களுக்கும் தீர்வு காணும் பொருட்டு உளவியல் அடிப்படையில் நெருங்கிய மனத்தொடர்பை உண்டாக்கி உதவி செய்தல் அறிவுரை பகர்தல் எனப்படும். தொல்லைகளுக்கும் மனப் போராட்டங் களுக்கும் உட்படுவோரின் இன்னல்களைக் களைந்து அவர்களைச் சமூகத்தில் பயனுள்ள வாழ்க்கை வாழவும் அவர்களின் உள்ளார்ந்த திறன்களை வெளிப் படுத்தவும், தன்னம்பிக்கை உள்ளவராக்குதலும் அறிவுரை பகர்தலின் (Counselling) குறிக்கோளாகும்.

சிக்கல்களுக்குத் தீர்வு காணவிழையும் தனி மனிதர் ஆட்படுநர் அல்லது அறிவுரை பெறுநர் எனக் கூறப் படுகிறார். அறிவுரையினைப் பகர்வோர், பெறு வோர் இருவர்க்கிடையே நேரிடைத் தொடர்பிருத்தல் வேண்டும். அறிவுரை பகர்வோர், ஆட்படுநரின் சிக்கல்களுக்குத் தாமே தீர்வு காண்பதில்லை. குழப்பங்களுக்கு ஆளானவர் எடுக்க வேண்டிய முடிவு களையும் தாமே கற்றுத் தருவதில்லை. ஒருவரின் சிக்கல்களுக்கு மற்றவர் தீர்வு காண்பது இயலாத தாகும். ஆட்படுநர், தம் சிக்கல்களை உளக்குழப்பம் நீங்கிய புதிய நோக்குடனும் புறவயத்துடனும் அணுகுவதற்கு உதவி செய்தலே அறிவுரை பகர் வோரின் தலையாய பணியாகும். இத்தகைய உதவி யினால் ஆட்படுநர், தம் குழப்பங்கள் தீரப்பெற்று நடத்தைச் செப்பம் அடைகின்றனர். தாம் சார்ந் துள்ள குழுமத்தினரின் ஏற்பினையும் பெறுகின்றனர். இன்னலுற்றோருக்கு நடத்தை மாற்றம் அடைதற் கேற்ற நன்னம்பிக்கையை ஏற்படுத்தல் அறிவுரை பகர்தல் என்னும் உளவியல் வழி நுண்முறையின் தனிச்சிறப்பு ஆகும். ஆட்படுநர் தம் பிரச்சினை களுக்குத் தாமே அறிவார்ந்த தீர்வுகளைக் காண்பதில் தான் அறிவுரை பகர்வோரின் வெற்றி அடங்கியுள்ளது.

அறிவுரை அமர்வுகளின் (Counselling Sessions) வாயிலாக அறிவுரை பகர்வோர், ஆட்படுநர் ஆகிய இருவருக்குமிடையே நெருங்கிய உளத் தொடர்பு ஏற்படும் செயற்பாடுகள் நிகழ்கின்றன. இச்செயற் பாடுகளைப் பின் வருமாறு தொகுத்துரைக்கலாம்:

அ) ஆட்படுநர், தம்மைப் பற்றி அறிந்து கொள்வதற்கு உதவி செய்தல்.

ஆ) கல்வி, தொழில் தொடர்பான சிக்கல்களில் தம் எதிர்காலத்திற்கு ஏற்ப முடிவெடுக்கத் துணை செய்தல்.

இ) நடத்தை மாற்றம் அமைவதற்குத் தேவை யான கற்றல் சூழ்நிலையை உண்டாக்கல்.

ஈ) நடத்தை மாற்றத்திற்குத் துணைசெய்யும் ஒப்பார் கருத்தொருமைப்பாட்டை உண்டாக்கல்.

உ) நடத்தை மாற்றத்திற்கு அவ்வப்போது தக்க துணைவலியூட்டல்.

ஊ) பிறரோடு பழகி உரையாடும் ஆற்றலை வளர்த்துக்கொள்ள உதவுதல்.

அறிவுரை பெறுவோரின் கூற்றுக்களிலிருந்து அவர்தம் இன்னல்களையும் குழப்பங்களையும் அவற்றின் காரணங்களையும் தெளிவாகப் புரிந்து கொள்ளுதல் அறிவுரை பகர்தலுக்கு முதற்படியாகும். அறிவுரை பகர்வோர், அறிவுரை பெறுவோர் கூறுவன வற்றைக் கேட்கும்போதே தம்மை அவரிடத்தில் வைத்து, அவர் அச்சூழ்நிலைகளை எவ்வாறு பார்க் கிறாரோ அவ்வாறே பார்த்தல் அடுத்தபடியாகும். ஒத்துணர்வு (Empathy) எனப்படும் இத்திறன், அறிவுரை பகர்வோருக்கு இருக்க வேண்டிய இன்றி யமையாத திறனாகும். ஆதலின் அறிவுரை பகர்தல்

ஒரு புலன்காட்சிச் செயல் முறையாகும் என்று கூறுதல் மிகையாகாது. அறிவுரை பகர்தலின் நுட்பங்களை நன்கு செயற்படுத்துவதற்கு உற்றுக்கேட்டல், நோக்குதல், புரிந்து கொள்ளுதல் ஆகிய திறன்கள் இன்றியமையாதனவாகும்.

தம்மிடம் கூறப்பட்ட சிக்கல்களைத் தாம் புரிந்து கொண்ட விதத்தை ஆட்படுநரின் உளநிலைக்கு ஏற்பச் சொல்லக் கூடிய திறமையை அறிவுரை பகர்வோர் வளர்த்துக் கொள்ள வேண்டும். ஆட்படுநர், அறிவுரை பகர்வோர் ஆகியோர்களுக்கிடையே சொற்பரிமாற்றத் திற்கும் அறிவுரை பகர் அமர்வுகளில் எதைச் சொல்லலாம், எதைச் சொல்லக்கூடாது என்பதற்கும் குறிப்பிட்ட ஒரு விதிமுறை கிடையாது. ஆட்படுநரின் உளநிலையைப் புரிந்து கொண்டமையைக் காட்டும் சொற்பரிமாற்றம் எதுவாயினும் அது அமர்வுகள் முன்னேறிச் செல்ல உதவும். அறிவுரை பகர்வோர், தாம் கூறும் சொற்கள் பற்றி மிகக் கவனமாக இருத்தல் வேண்டும். அவர் கூறும் சொற்கள் எவையும், ஆட்படுநரைத் தன்முனைப்புத் தற்காப்பு வழிமுறைகளை நாடும் நெருக்கடிக்குச் செலுத்திவிடக் கூடாது. ஆடபடுநர், அவர் சார்ந்துள்ள சமூகச் சூழ்நிலையில் பயனுறு பங்குகொள்பவராக்குதலில் உதவி செய்தலே அறிவுரை பகர்தலின் அடிப்படை நோக்கமாகும்.

தனி மனிதனின் சிக்கல்களுக்குத் தீர்வு காண்பதில் உதவி செய்தற்பொருட்டு, உளவியல் மற்றும் நடத்தைசார் அறிவியல் துறைகளின் நுண்முறைகளைப் பயன்படுத்தலைப் பற்றி அறியும் இயல்; அறிவுரைபகர் உளவியல் எனப்படும். தனி மனிதனின் ஆளுமை, வளர்ச்சி, பொருத்தப்பாடு உள்ளார்ந்த திறன் ஆகியவைகளை அறிவியல்சார் முறையில் ஆராய்ந்து அறியும் இயல் என்றும் இதனைக் கூறலாம். அறிவியல்பகர்தலை உளவியல் துறையினின்றும் பிரிக்க முடியாது. ஒவ்வொருவரும் தம் வாழ்நாளில் தீட்ட வேண்டிய திட்டங்களையும் எடுக்க வேண்டிய முடிவுகளையும் பற்றி அவருக்கு உளவியலார் ஆற்றக் கூடிய உதவியை அறிவியல் அடிப்படையில் அறிவுரை பகர் உளவியல் ஆராய்கிறது. கற்றவர், கல்லாதவர், செல்வர், வறியர், பெரியோர், சிறியோர் ஆகிய எத்தகையோராயினும் அவர்கள் அறிவுரை பெறுவோர் ஆதல் கூடும். உள்நோய் கொண்டவர்க்கு அறிவுரை பகர்தல் இயலாது. ஆதலின் அறிவுரை பெறுவோர் நோயாளி என்று சொல்லப்படுவதில்லை. அவர்கள் ஆட்படுநர் எனப்படுகின்றனர். அறிவுரைபகர் உளவியலின் தோற்றம் தொழில் வழி காட்டுதலில் ஏற்பட்டது. அமெரிக்கா, ஐரோப்பா போன்ற நாடுகளில் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் தொழில் முன்னேற்றம் ஏற்பட்டதைத் தொடர்ந்து தொழிற்சாலைகள் பல ஏற்பட்டன. இதனைத் தொடர்ந்து தொழில் வழி காட்டல் தனித்துறையாக வளர்ச்சியடையலாயிற்று. தனி மனிதர்களிடையே காணப்படும் வேற்றுமைகளைப் பற்றிக் காட்டெல் (Cattell) என்பார் செய்த ஆராய்ச்சிகளின் அடிப்படையில், உள அளவியல் நுண்முறைகள் மேலும் முன்னேற்றம் கண்டன. இதன் பயனாக உள அளவியல் கருவிகள், தனி மனிதனின் ஆர்வங்களையும் நாட்டங்களையும் மதிப்பீடு செய்து, அவனுக்கேற்ற தொழிலைத் தேர்ந்தெடுக்க உதவி செய்தன. காரல் உரோசர்சு (Carl Rogers) என்னும் உளவியலறிஞரின் ஆளுமைக் கோட்பாடு, அறிவுரை பகர்தலுக்கு உளவியல் அடிப்படையைக் கொடுத்து, அதனை உளவியலின் சிறந்த துறையாக ஆக்கியது. இதனைத் தொடர்ந்து சமூகவியல் மற்றும் கல்வித் துறைகள் அறிவுரை பகர்தலின் துணைத் துறைகளாக ஏற்கப்பட்டன. தொனால்டு ஈ சூபர் (Donald .E. Super) என்பார் 1957-ஆம் ஆண்டு எடுத்துரைத்த பணி வாழ்க்கை உளவியல் பற்றிய கருத்தாய்வுகளும், 1966-ஆம் ஆண்டு எரிக் பேர்ன் (Eric Berne) என்பாரால் விரித்துரைக்கப் பட்ட இடையீட்டுப் பகுப்பாய்வு (Transactional Analysis) என்னும் புதிய உளவியல் துறையும் அறிவுரை பகர் உளவியலை ஒரு துறையாக அமைத்தன. வேற்றுமை உளவியலும் உள அளவியல் கோட்பாடுகளும் அறிவுரை பகர் உளவியலுக்கு அடிப்படையாக அமைந்தன. கற்றல் இயங்கு முறைகள், புலன்காட்சி, இயல்பூக்கம், மனவெழுச்சி, ஊக்குவித்தல், ஆளுமைக் கோட்பாடுகள், ஆளுமை இயங்கியல், சமூக உளவியல் ஆகிய உளவியல் துறைகள் அறிவுரை பகர் உளவியலின் சார்புத் துறைகளாயின.

அமெரிக்க உளவியல் சங்கம், 1952-ஆம் ஆண்டுக்குப் பிறகு அறிவுரை பகர் உளவியலை ஒரு தனித் துறையாக அமைத்தது. இப்போது அமெரிக்க ஐக்கிய நாட்டில் நூற்றுக்கு மேற்பட்ட பல்கலைக் கழகங்களில் அறிவுரை பகர் உளவியலில் முதுகலை மற்றும் ஆராய்ச்சிக் கல்விக்கான துறைகள் உள்ளன. இந்தியாவில் சில தனியார் கல்வி நிறுவனங்களிலும் சில பெரிய தொழிலகங்களிலும் அறிவுரை பகர்வோர் அமர்த்தப்பட்டிருக்கின்றனர்.

கல்வி நிலையங்களில் மாணவர்கட்கு அறிவுரை பகர்தலுக்கான சூழ்நிலைகள் உள்ளன. இவற்றுள் சில சுருக்கமாகக் குறிப்பிடப்படுகின்றன. மாணவர் நாட்டத்திற்கும் அவர் பெறும் மதிப்பெண்களுக்கு மிடையேயான வேறுபாடு ஒருபெரும் சிக்கலாகும். தாம் பெற்றுள்ள நாட்டங்களின் வன்மை, வகைகளுக் கேற்ப மாணவர், பாடங்களில் தேர்ச்சி அடையாமல் போகலாம். இச்சிக்கல்களை ஆராயும்போது அறிவுரை

பகர்வோர், இவற்றோடு தொடர்புடைய, வீட்டில் உள்ள சிக்கல்கள், பதற்ற நிலை, பொருத்தப் பாடின்மை, உடல்நலமின்மை போன்றவற்றையும் கவனத்தில் கொள்ளவேண்டும். ஒப்பார் குழுத் தொடர்பு பற்றிய சிக்கல்களும் தீர்வு காணப்பட வேண்டியவைகளே. இவை தொடர்பாகப் பலவகைச் செய்திகளையும் உடன் ஆராய்தல் வேண்டும்.

மாணவர்களின் மற்றொரு சிக்கல் தொழில் தேர்வு பற்றியதாகும். உயர்நிலைப்பள்ளிக்குப் பின் அமையும் பயிற்சிகளில் பல, தொழில் வழிப்பயிற்சி களாகவே இருக்கின்றன. இவ்வகைப் பயிற்சிகளில் இடம் கிடைக்கும் வாய்ப்பு ஒருவர்க்கு, அவர் பெற்ற உயர்நிலைப் பள்ளிக் கல்வி வகையையும் அவர் பெறும் மதிப்பெண்களையும் ஒட்டியே அமைகிறது. எனவே உயர்நிலை, மேல்நிலைப் பள்ளிகளில் எவ்வகைப் பாடங்களைச் சிறப்புப் பயிற்சிக்காகத் தேர்ந்தெடுப் பது என்பதில் மாணவர்க்கு உதவுவது பள்ளி அறி வுரை பகர்வோரின் கடமையாகும். இதற்கு அறி வுரை பகர்வோரிடத்துச் சிறந்த திறனும் அறி வுடைமையும் இருத்தல் வேண்டும். உடல் குறையுடை யோரும் புதுச் சூழலுக்குத் தம்மைத் தகவுடையவர் களாக ஆக்கிக் கொள்ள முடியாதோரும், பள்ளித் தொடர்பில்லாத பிற சிக்கல்களை உடையோரும் அறிவுரை பகர்வோரிடம் உதவிக்கு வருதல் கூடும். இவ்வகைச் சிக்கல்கள் அடிக்கடி எழுவதாக இல்லாமல் இருக்கலாம். எனினும் அறிவுரை பகர்வோர், இச் சமயங்களில் மாணவர்களுக்குத் துணைபுரியும் வகை யில் தம் பொறுப்பினையும் மாணவரிடமிருந்து தாம் பெற வேண்டிய மதிப்பினையும் மரியாதையையும் உளங்கொண்டு அவர்கட்கு உதவுவதன் வாயிலாகவே அறிவுரை பகர்தல் சிறப்புற அமையும்.

சி.சி. & ஈ.ஞா.வே.

துணை நூல்கள்:

Corey Gerald, Theory and Practice of Counselling and Psychotherapy, Books/cole Publishing Co., Monterey,California, 1977.

Wrenn, Charles G., The Counseller in a Changing World, American Personnel & Guidance Association,Washington, 1962.

**அறுகை:** சங்க காலத்தில் வாழ்ந்த ஒரு குறுநில மன்னன்; கடல் பிறக்கோட்டிய செங்குட்டு வனுக்கு நண்பன். இவன் உழிஞை சூடி, மோகூர் மன்னனாகிய பழையனது அரணினைக்கொள்ளுதற் பொருட்டு அவனொடு பொருது, அப்போரில் தோற்றுப் பேரிடரில் அகப்பட்டுக் கொண்டான். பதிற்றுப் பத்து நான்காம் பத்தின் தலைவனாகிய செங்குட்டுவன் மோகூர் மன்னனொடு பொருது வென்று, அவன் காவல் மரமாகிய வேம்பினை வெட்டி, வெற்றி முரசையுங் கொண்டு இவனைக் காத்தான் (பதிற். 44:).

**அறுதியாவணம்:** அறுதியாவணம் என்பது அசைபொருள், நிலைபொருள் பற்றிய நலன்கள் வழிவழி இறங்கும் வகையை அல்லது சேரும் வகையை அறுதி செய்யும் அல்லது அறுதி செய்ய ஒப்புதலைக் காட்டும் முறையாவணம் ஆகும். அறுதி யாவணத்தில் (Settlement Deed) விருப்புறுதி ஆவணம் (உயில்) சேர்வதில்லை.

சொத்தின் மதிப்பு உரு. 100/-க்கு மேற்பட்டால் கட்டாயமாகப் பதிவு செய்யப்படல் வேண்டும். சொத்தின் மதிப்பு உரு. 100/-க்குக் குறைவானால் பதிவு செய்யத் தேவையில்லை.

**அறுதியான சான்றுறுதி** வழக்குகளின் முடிவுகள் சான்றுகளின் தன்மையைப் பொறுத்து அமைகின்றன. வழக்காடுகிற ஒருவர் தமக்கு ஆதர வாகத் தாம் கூறும் பொருண்மைகளை முறையான சட்ட வழிகளில் நீதிமன்றம் நிறைவுபடுகிற வகை யில் சான்றுகள் மூலம் மெய்ப்பிக்க வேண்டும். சான்றுகள் வாய்மொழியாகவோ ஆணைகள் மூல மாகவோ இருக்கலாம். இச்சான்றுகளின் வாயிலாக நீதிமன்றம் வழக்கின் முன் உள்ள பொருண்மை களுக்கு முடிவு செய்கிறது.

சில குறிப்பிட்ட பொருண்மைகளை அறுதியான சான்றுறுதி (Conclusive Proof) யாகச் சட்டம் கூறுகிறது. எடுத்துக்காட்டாக, ஏழு வயதிற்கும் குறைவாக உள்ள ஒரு குழந்தை செய்யும் எந்தச் செயலும் குற்றமாகக் கருதப்படுவதில்லை. ஏழு வயதிற்கும் குறைவான ஒரு குழந்தை குற்றத்தைச் செய்ய முடியும் அல்லது அச்செயலைக் குற்றமாகக் கருதமுடியும் என்பதை மெய்ப்பிக்கும் வகையில் சான்றுகள் கொடுக்க அனுமதிக்கப்படுவது இல்லை.

ஒரு குறிப்பிட்ட வகைச் சான்று ஒரு பொருண் மையைப் பொறுத்த வரையில் அறுதியான சான்று றுதியாக இருக்கும் என்று சட்டம் கூறும் பொழுது, அந்தப் பொருண்மையை அந்தக் குறிப்பிட்ட அறுதிச் சான்றுறுதியின் மூலம் மெய்ப்பிக்கலாம். அல்லது நீதி மன்றம் அனுமதிக்கும் பொழுதோ, கேட்கும் பொழு தோ வேறுவகைச் சான்றினால் மெய்ப்பிக்கலாம். அவ்வாறு வேறு வகைச் சான்று கொடுக்கும்பொழுது, அந்தச் சான்றில் இருந்து பொருண்மை இருக்கிறதா இல்லையா என்று நீதிமன்றம் கருத்தாய்வு செய்ய லாம். மாறாக, அறுதியான சான்றுறுதியாக்கப்பட்ட ஒரு சான்றை அளிக்கும் பொழுது, குறிப்பிட்ட பொருண்மை உள்ளது என்று கொள்வதைத் தவிர வேறு வழியில்லை.

இந்தியச் சான்றுச் சட்டத்தின் 4-ஆம் பிரிவு, மூன்றாம் பத்தியில் 'அறுதியானசான்றுறுதியை' வரையறை செய்கிறது. அது வருமாறு:

''ஒரு பொருண்மை, பிறிது ஒன்றிற்கு அறுதியான சான்றுறுதியாக இருக்கும் என்று இந்தச் சட்டம் கூறும்பொழுது, அந்தப் பொருண்மை மெய்ப்பிக்கப்பட்டால் அந்தப் பிறிது ஒன்றும் மெய்ப்பிக்கப்பட்டதாக நீதிமன்றம் கருதுவதோடு அதைப் பொய்ப்பிக்கும் நோக்கத்திற்காகக் கொடுக்கப்படும் சாட்சியத்தை அனுமதிக்கக் கூடாது''.

இந்தியச் சான்றுச் சட்டத்தின்படி, ஒரு பொருண்மை பிறிது ஒன்றினை மெய்ப்பிப்பதாகக் கருதப்படும்பொழுது, அதைப் பொய்ப்பிப்பதற்காகச் சான்று கொடுப்பதை இந்தப் பத்தி தடை செய்கிறது.

சான்று கொடுப்பதன் நோக்கம், ஒரு பொருண்மையை மெய்ப்பித்தல் ஆகும். இதற்காக, எந்த வகையான சான்று கொடுப்பதற்கு அனுமதிக்கப்பட்டுள்ளது என்றும், எப்பொழுது ஒரு பொருண்மை மெய்ப்பிக்கப்பட்டது என்பது பற்றியும் இந்தியச் சான்றுச் சட்டத்தின் மூன்றாவது பிரிவு கூறுகிறது.

வாய்மொழிச் சான்று, ஆவணச் சான்று எனச் சான்றுகள் இரு வகைப்படும்.

விசாரணையில் உள்ள பொருண்மைகளுக்குத் தொடர்பான பொருள்களைப் பற்றி நீதிமன்றம் அனுமதிக்கும் அல்லது சான்றுகளினால் நீதிமன்றத்தில் கொடுக்கப்படுமாறு வேண்டப்படும் அனைத்து வாக்குமூலங்களும் வாய்மொழிச் சான்று என்று கொள்ளப்படும்.

நீதிமன்றத்தின் ஆய்விற்காகக் கொடுக்கப்படும் எல்லா ஆவணங்களும் ஆவணச் சான்று எனக் கொள்ளப்படும்.

தன் முன்னால் உள்ள பொருண்மைகளின் கருத்தாய்ந்த பிறகு, நீதிமன்றம் அந்தப் பொருண்மை உள்ளது என்று நம்பினாலும் அல்லது ஒரு குறிப்பிட்ட வழக்கின் சூழ்நிலைகளில் ஓர் அறிவுள்ள மனிதன் அது உள்ளது என்ற நம்பிக்கையில் செயற்படுவான் என்று நீதிமன்றம் கருதினாலும் ஒரு பொருண்மை மெய்ப்பிக்கப்பட்டதாகக் கொள்ளப்படும்.

சாட்சியம் என்பது நீதிமன்றத்தினால் அனுமதிக்கப்படும் அல்லது வேண்டப்படும் அனைத்து வாக்குமூலங்களையும் உள்ளடக்கியது என்று பொருள்படுவதால், ஒரு குறிப்பிட்ட வகைச் சாட்சியம், ஒரு குறிப்பிட்ட பொருண்மை உள்ளது என்பதற்கு அறுதியான சான்றுறுதி என்று சட்டம் சொல்லும்பொழுது, அந்தக் குறிப்பிட்ட பொருண்மையை நீதிமன்றத்தினால் அனுமதிக்கப்படும் அல்லது வேண்டப்படும் வேறு வகைச் சாட்சியத்தினால் மெய்ப்பிக்கலாம் என்று சுட்டிக்காட்டப்படுகிறது. அவ்வாறு வேறு வகைச் சாட்சியம் கொடுக்கப்படும்பொழுது, அப்பொருண்மை உள்ளதா இல்லையா என்பதை அந்தச் சாட்சியத்தில் இருந்து கருதி முடிவு செய்வதற்கு நீதிமன்றத்திற்கு உரிமை உண்டு. ஆனால், ஒரு பொருண்மைக்கு அறுதிச் சான்றுறுதி ஆக்கப்பட்ட சாட்சியம் கொடுக்கப்படும் பொழுது அந்தப் பொருண்மை உள்ளது என்று கொள்ள வேண்டும். அவ்வாறு இல்லையென்றால், ஒரு குறிப்பிட்ட சாட்சியத்தை அறுதிச் சான்றுறுதி என்று கூறுவதற்குப் பொருள் இல்லாமல் போய்விடும். ஒரு குறிப்பிட்ட சாட்சியம் அறுதியானது என்று சட்டம் கூறும் பொழுது, அந்தச் சாட்சியத்தின் அறுதித் தன்மையைக் குறைக்கிற வகையில் வேறு சாட்சியம் கொடுக்க இயலாது, சுருங்கக் கூறினால் 'அறுதிச் சாட்சியத்திற்கும்' 'அறுதிச் சான்றுறுதிக்கும்' வேறுபாடு ஒன்றும் இல்லை. இந்திய உச்ச நீதிமன்றத்தினால் இது தெளிவுபடுத்தப்பட்டிருக்கிறது.

ஒரு பொருண்மையின் உண்மை அல்லது பொய்ம்மை பற்றி உறுதியாகத் தெரியாத பொழுது அவற்றை அனுமானித்து அறியவேண்டி உள்ளது. தெரிந்த அல்லது மெய்ப்பிக்கப்பட்ட பிற பொருண்மைகளில் இருந்து ஒரு பொருண்மையை உய்த்து உணர்வதே அனுமானம் எனப்படுகிறது. வேறு சாட்சியத்தினால் அவ்வுய்த்துணரலின் உண்மை பொய்ப்பிக்கப்படும் வரையில், ஒரு குறிப்பிட்ட பொருண்மையில் இருந்து ஒரு குறிப்பிட்ட உய்த்துணரலை நீதிமன்றம் கொள்ளலாம்.

அனுமானம் என்பது பொருண்மை அனுமானம் சட்ட அனுமானம் என இரு வகைப்படும். பொருண்மை அனுமானத்தை இயற்கையான அனுமானம் என்றும், சட்ட அனுமானத்தைச் செயற்கையான அனுமானம் என்றும் கூறலாம். சட்ட அனுமானத்தை இரு கூறுகளாகப் பிரிக்கலாம். 1) மறுக்கப்படக் கூடிய சட்ட அனுமானம் 2) மறுக்கப்பட முடியாத சட்ட அனுமானம். சட்ட அனுமானங்கள், சட்டத்தினால் ஏற்படுத்தப்பட்ட உய்த்துணரல்கள் ஆகும். இவை உண்மையில் சட்ட விதிகளேயாகும். எனவே இவை, சட்டத்தின் பகுதியாகவே கருதப்படுகின்றன.

சட்ட அனுமானங்களின் வலிமை, அவை மறுக்கக் கூடியவையா, அல்லது மறுக்க முடியாதவையா என்பதைப் பொறுத்து அமைகிறது. பொய்ப்பிக்கப்படாதவரைதான், மறுக்கக் கூடிய சட்ட அனுமானங்கள் பொலிவுடன் திகழுகின்றன. ஆனால், மறுக்க முடியாத சட்ட அனுமானத்தைப் பொய்ப்பிக்க முடி

யாது. சட்டம் அதை அறுதியான சான்றுறுதியாகக் கொள்கிறது. அறுதியான அல்லது மறுக்க முடியாத சட்ட அனுமானங்களின் உய்த்துணரல்களை எவ்வளவு வலிமையான எதிர்ச் சான்றினாலும் தள்ளுபடி செய்யச் சட்டம் அனுமதிப்பது இல்லை. மறுக்க முடியாத சட்ட அனுமானமே அறுதிச் சான்றுறுதியாகக் கொள்ளப்படுகிறது. அறுதிச் சான்றுறுதி பற்றி வரையறை செய்யும் இந்தியச் சாட்சியச் சட்டத்தின் நான்காம் பிரிவின் மூன்றாம் கூறு, மறுக்கப்பட முடியாத அறுதியான அனுமானங்களைச் சுட்டுகிறது.

இந்தியச் சான்றுச் சட்டம் பிரிவுகள் 41, 112, இந்தியத் தண்டனைச் சட்டம் பிரிவு 82, நிறுவனச் சட்டம் பிரிவு 132, இந்திய மரபுரிமைச் சட்டம் பிரிவு 381, இந்தியக் கிறித்தவர்களின் திருமணச் சட்டம் பிரிவு 61 ஆகிய பிரிவுகளில் எவையெவை அறுதிச் சான்றுறுதிகள் என்பது கூறப்பட்டுள்ளது.

ஒருவர், அவருடைய தாய்க்கும் ஓர் ஆணுக்கும் இடையே செல்லத் தகுந்த திருமணம் தொடர்ந்து இருந்து வரும்பொழுது, அல்லது அத்தகைய திருமணம் முறிந்த 280 நாட்களுக்குள், அவருடைய தாய் மறுமணம் செய்து கொள்ளாது இருக்கும்பொழுது பிறந்தால் அது அந்த ஆணுக்கு அவர் முறையாகப் பிறந்தவர் (மகன்) என்பதற்குரிய அறுதிச் சான்றுறுதியாகும். ஆனால், அவர் கருவில் உருவாகும்பொழுது கணவன் மனைவிக்கிடையே தொடர்பு ஏற்பட்டிருக்க வாய்ப்பு இல்லை என்று காட்டினால் மேலே கூறப்பட்டது அறுதிச் சான்றுறுதியாகக் கொள்ளப்பட மாட்டாது. (இந்தியச் சான்றுச் சட்டம் பிரிவு 112).

சமூகத்தில் ஒருவருடைய நிலையைப் பிறப்பு முடிவு செய்வதால் ஒரு நபர் முறையாகப் பிறந்தவர் என்பதற்கு ஆதரவாகச் சட்டம் உறுதியாக அனுமானிக்கிறது. சட்ட வழியான திருமணத்தால் குழந்தை பிறந்தால், கணவனும் மனைவியும் தங்களுக்குள் உடலுறவு கொண்டார்கள் என்றுதான் சட்டம் அனுமானிக்கிறது. பெற்றோர்கள் தங்களுக்குள் தொடர்பு கொண்டிருக்கும்போது, குழந்தையின் தந்தை யார் என்பது பற்றி விசாரணை செய்வது விரும்பத்தக்கதன்று என்ற கொள்கையின் அடிப்படையில் இந்த விதி அமைந்திருக்கிறது.

மறுக்க முடியாத சட்ட அனுமானங்களைக் கூட மறுக்கக்கூடிய போக்கு இப்பொழுது உள்ளது. எடுத்துக்காட்டாக, திருமணப் பிணைப்பில் பிறந்த குழந்தை முறையானது என்ற அனுமானம் மறுக்க முடியாததாக முன்பு கொள்ளப்பட்டது. ஆனால், இப்பொழுது மறுக்கக் கூடிய ஒன்றாக அது கருதப்படுகிறது. எனவே முறையாகப் பிறந்தவர் என்ற அனுமானம் மறுக்கப்படக் கூடிய சட்ட அனுமானமாகும். மணமுறிவு, கணவன் மனைவிக்கிடையே மிக நீண்ட தொடர்ந்த பிரிவு, உடல் உறவை இயலாமை ஆக்கும் வகையில் நோய்வாய்ப்பட்டிருத்தல்; மலட்டுத் தன்மை போன்ற மிகவும் நம்பத்தகுந்த சாட்சியங்கள் மூலம், கணவன் மனைவி தங்களுக்குள் தொடர்பு வைத்திருக்கவில்லை என்று மெய்ப்பிப்பது மட்டுமே ஒருவர் முறையாகப் பிறந்தவர் என்ற அனுமானத்தை மறுப்பதற்கு உள்ள ஒரே வழியாக அமையும். வேறு எந்த வகையிலும் இந்த அனுமானத்தை மறுக்க முடியாது.

இந்தியச் சான்றுச் சட்டத்தின் 49–ஆம் பிரிவின் படி விருப்புறுதி மெய்ப்பிதழ், மணவியல், நொடிப்பு நிலை போன்றவற்றை விசாரணை செய்யும் அதிகாரத்தைச், செயற்படுத்தி ஒரு தகுதி வாய்ந்த நீதிமன்றம் வழங்கும் இறுதியான தீர்ப்பாணையானது ஒருவருக்கு அளிக்கப்பட்ட அல்லது அவரிடம் இருந்து எடுக்கப்பட்ட சட்டத் தன்மைக்கு அறுதியான சான்றுறுதியாகக் கொள்ளப்படும்.

இந்திய மரபுரிமைச் சட்டத்தின்படி வழங்கப்பட்ட விருப்புறுதி மெய்ப்பிதழ், விருப்புறுதியை நிறைவேற்றுபவர்களின் உரிமைக்கும் அதன் மெய்யான தன்மைக்கும் அறுதிச் சான்றுறுதியாகத் திகழ்கிறது.

மண முறிவு அளித்து அல்லது திருமணம் செல்லாது என்று மணவியல் நீதிமன்றம் வழங்கும் தீர்ப்பு, தொடர்புடைய நபர்கள் மண முறிவு செய்யப்பட்டவர்கள் என்றும், அவர்கள் இப்பொழுது கணவன் மனைவியாக இல்லை என்றும் அனைவருக்கும் தெரிவிக்கும் ஒரு அறுதியான சான்றுறுதியாகும்.

ஒருவரை நொடிப்பு நிலையர் என்று அறிவிக்கும் தீர்ப்பு, அவர் நொடிப்பு நிலையர் என்பதற்கு அறுதியான சான்றுறுதியாகும்.

உரிமைப் பட்டயங்களின் மூலம் பல உயர் நீதிமன்றங்கள், கடலில் புரியப்படும் குற்றங்களை அல்லது வழக்குகளை விசாரிப்பதற்கு அதிகாரம் பெற்றிருக்கின்றன. இந்த அதிகாரத்தைப் பயன்படுத்தி வழங்கப்படும் தீர்ப்புகளும் அறுதிச் சான்றுறுதிகள் எனச் சட்டம் கூறுகிறது. இவை பற்றி இந்தியச் சான்றுச் சட்டத்தின் 49-ஆம் பிரிவில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

நிறுவனச் சட்டத்தின் 132–ஆம் பிரிவின் படி, பற்றுப் பதிவு செய்யப்பட்டிருக்கும்பொழுது, எவ்வளவு தொகைக்குப் பற்று உண்டாக்கப்பட்டிருக்கிறது என்பதைக் குறிப்பிட்டுப் பதிவாளர் ஒரு சான்றிதழ் வழங்க வேண்டும். இது, பதிவுச் சான்றிதழ் என்று

அழைக்கப்படும். இவ்வாறு பதிவாளர் வழங்கிய பதிவுச் சான்றிதழ் வேண்டிய விதிமுறைகள் அனைத்தும் கடைப்பிடிக்கப்பட்டுப் பற்றுப் பதிவு செய்யப்பட்டுள்ளது என்பதற்கு அறுதியான சான்றுறுதியாகும். பதிவு செய்யப்பட்டு ஆவணத்தில் கூறப்பட்டுள்ள பொருள்களுக்கு 132-ஆம் பிரிவு அறுதிச் சான்றுறுதித் தன்மையை அளிப்பதில்லை.

இந்திய உரிமையிறக்கச் சட்டத்தின்படி மாவட்ட நீதிபதியால் கொடுக்கப்பட்ட உரிமையிறக்கச் சான்றிதழ் அதில் கூறப்பட்டுள்ள பொருண்மைகளுக்கு அறுதிச் சான்றுறுதியாக இருக்கிறது. இச்சான்றிதழ் பெற்ற ஒருவர், அதில் குறிப்பிடப்பட்டுள்ள நபர்களிடமிருந்து கடனை வசூலித்துக் கொள்ளும் உரிமையைப் பெறுகிறார். உரிமையிறக்கச் சான்றிதழில் ஒருவர் மரணம் அடைந்த நபரின் கடனாளி என்று குறிப்பிடப்பட்டிருந்தால், அது அவ்வாறு குறிப்பிடப்பட்டவருக்கு எதிரான அறுதிச் சான்றுறுதியாகும். எனவே உரிமை இறக்கச் சான்றிதழ், கடனாளிக்கு எதிரான அறுதிச் சான்றுறுதியாகும்.

திருமணம் செய்து கொள்ளும் இந்தியக் கிறித்தவர்கள், தங்களுக்குத் திருமணச் சான்றிதழ் வழங்குமாறு அதற்கென்று அரசினரால் நியமிக்கப்பட்ட நபரிடம் விண்ணப்பித்துக் கொள்ளலாம். இந்தியக் கிறித்தவர்கள் திருமணச் சட்டத்தின் 60-ஆம் பிரிவில் உள்ள நிப்பந்தனைகள் மீறப்படாமல் இருந்தால் அவர் திருமணச் சான்றிதழை வழங்குவார். பிரிவு 60-இல் கூறப்பட்டுள்ள நிப்ந்தனைகள் வருமாறு:

(1) திருமணம் செய்து கொள்ளும் ஆண் 21 வயதிற்கும் குறைவாக இருக்கக் கூடாது. மணப்பெண் 18-வயதிற்கும் குறைவாக இருக்கக் கூடாது.

(2) மணம் செய்துகொள்ள இருக்கும் ஆணுக்கு இன்னொரு மனைவியோ பெண்ணிற்கு இன்னொரு கணவனோ இருத்தல் கூடாது.

(3) சான்றிதழ் வழங்குவதற்காக நியமிக்கப்பட்ட நபர் மற்றும் இரண்டு சாட்சியங்களின் முன்னிலையில், மணமக்கள் தாங்கள் கணவன் மனைவியாகிறோம் என்று உறுதிமொழி எடுத்துக் கொள்ள வேண்டும்.

இந்தக் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டுத் திருமணம் நடந்திருந்தால், திருமணச் சான்றிதழ் வழங்கப்படும். இது, திருமணம் நடந்ததற்கான அறுதிச் சான்றுறுதியாகும்.

அறுதிச் சான்றுறுதிகள் என்று சட்டத்தில் கூறப்பட்டுள்ளவை மிகவும் சிலவேயாகும். அறுதிச் சான்றுறுதியாக்கப்பட்ட சான்றுகள் கொடுக்கப்படும் பொழுது, அவற்றை நீதிமன்றம் ஏற்றுக் கொண்டு, எந்தப் பொருண்மைகளுக்கு அவை அறுதிச் சான்றுறுதிகளோ அந்தப் பொருண்மைகள் மெய்ப்பிக்கப்பட்டவையாகக் கொள்ளும். இவற்றைப் பொய்ப்பிப்பதற்காகச் சாட்சியம் கொடுத்தால் அது ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது. அ.ர.சு.

***அறுதி வாக்கு*** ஒரு குழுவினர் ஏதேனும் ஒரு செயலினைக் குறித்து ஆராயும்பொழுது அக்குழுவில் உள்ள உறுப்பினர்கள் தத்தம் கருத்துக்களைத் தெரிவிக்கிறார்கள். அதன் பின்னர், அச்செயலைக் குறித்து ஒரு முடிவு எடுக்க வேண்டிய இன்றியமையாமை ஏற்படலாம். ஒன்றினைச் செய்வதா, செய்யாதிருப்பதா என்று உறுதியான ஒரு முடிவினை அக்குழுவினர் தெரிவிக்க வேண்டிய நிலையில், குழுவின் உறுப்பினர்கள் தத்தம் கருத்தினை "வேண்டும்" அல்லது "வே... ம்" என்று கூறி வாக்குகளை (Votes) அளிக்கிறார்கள். பெரும்பாலான உறுப்பினர்கள் எந்தக் கருத்தைத் தெரிவிக்கிறார்களோ அதுவே அக்குழுவினரின் முடிவும் ஆகிறது.

சில சூழ்நிலைகளில் உறுப்பினர்களின் வாக்குகள் சரிசமமாக இருப்பதுண்டு. இவ்வித இக்கட்டான நிலைமையைச் சமாளிப்பதற்கென்று ஓர் உத்தி கையாளப்பெறுகிறது. அக்குழுவின் தலைவர் அறுதி வாக்கு (Casting Vote) என்ற வாக்கினை அளித்து, சரிசமமாக உள்ள இரு பிரிவினரில் ஒரு பிரிவினரின் வாக்குகளைப் பெரும்பான்மை வாக்குகளாக மாற்றி, அதன்படிக் குழுவின் முடிவினைத் தெரிவிக்கிறார்.

அறுதிவாக்கு அளிக்கும் முறை கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் தோன்றியதாகும். நாடாளுமன்றத்தில் உறுப்பினர்கள் ஏதேனும் ஒன்றினைப் பற்றிச் சரிசமமான வாக்குகளை அளிப்பதால், அச்சபையின் முடிவு அறுதியிடப்படாத நிலையை அடையுமாயின் அவைத்தலைவர் அறுதிவாக்கு அளிக்கலாம் என்றமுறை கையாளப்பட்டது. அவைத்தலைவர் நாடாளுமன்றத்தின் உறுப்பினர்தாம், எனினும், உறுப்பினர் என்ற முறையில் எதைக் குறித்தும் அவர் தமது வாக்கினை அளிப்பதில்லை. ஆனால், நாடாளுமன்ற உறுப்பினர் அளித்த வாக்குகள் சரிசமமாக இருந்து, முடிவு அறுதி செய்யப்படாத நிலையை யடையும் போது மட்டுமே தலைவர் தம் அறுதி வாக்கினை அளிக்கிறார்.

அவைத் தலைவர் நாடாளுமன்றத்தை நடத்திச் செல்லும் பொறுப்புடையவர். விருப்பு வெறுப்பு இன்றி நடுநிலையில் நின்று அவர் செயற்படுவார். எனவே, சபையின் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்படும் ஒவ்வொரு பொருளைக் குறித்தும் அவர் தம் வாக்கினை அளித்துக் கொண்டிருந்தால் அவரது நடு

நிலைப் பண்புக்கு இழுக்குண்டாகும். இதனால்தான் உறுப்பினர் என்ற முறையில் அவர் வாக்கு அளிப்ப தில்லை.

மேலே குறித்த சூழ்நிலைகளில் அவைத்தலைவ ரின் வாக்கே நாடாளுமன்றத்தின் முடிவை உறுதி செய்வதால், அவருடைய அறுதிவாக்கு மிகவும் பொறுப்புடையதாகிறது. எனவே, எந்த எந்தச் சூழ்நிலைகளில் அவைத்தலைவர் தமது அறுதிவாக் கினை அளிக்கவேண்டும் என்பதைப் பற்றிய மரபு களை இங்கிலாந்தில் வளர்த்துள்ளனர். அப்பொழு திருக்கும் நிலையில் மாறுதல் இல்லாதிருக்கவேண்டும்; சட்டத்தில் மாறுதல் ஏற்படாதிருக்க வேண்டும்; நாடாளுமன்றத்தின் முந்தைய மரபு பாதுகாக்கப்பட வேண்டும் என்ற அடிப்படையிலேயே அவைத்தலைவர் தமது அறுதி வாக்கினை அளிக்கிறார்.

சில குழுக்களின் குழுவின் தலைவருக்கு இரு வகை வாக்குரிமை இருக்கலாம். குழுவின் உறுப்பினர் என்ற முறையில் மற்ற உறுப்பினர்களைப்போல் வாக்களிக்கும் உரிமையும், தலைவர் என்ற முறையில் அறுதி வாக்களிக்கும் உரிமையும் இருப்பதுண்டு. இதை இரண்டாம் வாக்கு அல்லது அறுதிவாக்கு என்பார் கள். அந்தந்தக் குழுக்களின் விதிமுறைகளுக்கு ஒப் பவே தலைவரின் அறுதி வாக்குரிமை அமைவதாகும்.

மா.ச.

**அறுபடை வீடுகள்** என்னும் பெயர், முருகனுக்குரியனவாகக் கருதப்பெறும் ஆறு தலங் களைக் குறிக்கிறது. கடவுளர் விரும்பிய தலங்களாகச் சிலவற்றைத் தொகுத்துப் போற்றுவது பக்தி இயக்க மரபாகும். 'ஆறுபடை வீடுகள்' போன்றவற்றைத் ''தொகைத் தலங்கள்'' என்று கூறலாம். சக்தி (பார்வதி)க்குரிய ஆறுபீடங்கள், சிவனுக்குரிய ஐந்து அம்பலங்கள், அட்ட வீரட்டானங்கள், திருமாலுக்குரிய நவதிருப்பதிகள், எட்டு சுயம் வியத்த (தாமே வெளிப்பட்டுத் தோன்றிய) தலங்கள் முதலியன தொகைத் தலங்கள் ஆகும். இவ் வகையில் முருகன் ஆறுபடை வீட்டிற்குரியவன் என்பது தமிழர்களின் நம்பிக்கையாகும். பரங்குன்றம், அலைவாய், (திருச்செந்தூர்) ஆவினன்குடி (பழனி) ஏரகம், குன்றுதோறாடல், பழமுதிர் சோலை (அழகர் கோவில்) ஆகிய ஆறும் அறுபடை வீடுகள் எனப்படும். சங்க இலக்கியங்களுள் ஒன்றான திரு முருகாற்றுப்படையினை இக்கருத்துக்கு முதற் சான்றாகக் காட்டுவர். குன்று தோறாடலை விடுத்துத் திருத்தணியைச் சேர்த்துக் கூறும் வழக்கமும் உண்டு. இக்கருத்[illegible] [illegible]ளைப் படங்களையும் ([illegible]s) தமிழ் நாட்டில் நிறையக் காணலாம்.

முதல் மூன்று தலங்களும் இன்னும், முருகன் கோயிலை உடையனவாக விளங்குகின்றன. குன்று தோறாடல், பழமுதிர்சோலை ஆகிய தலங்கள் பல ஐயப்பாடுகளைத் தோற்றுவிக்கின்றன. சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர் (கி.பி. 13–ஆம் நூற்றாண்டு) குடந்தைக்கு அருகில் உள்ள சுவாமிமலையை 'வெண் குன்றம்' என்று குறிப்பிட்டுள்ளார். அருணகிரி நாதர் (கி.பி. 15–ஆம் நூற்றாண்டு) அதனை ''ஏரக வெற் பெனும் அற்புதமிக்க சுவாமி மலைப்பதி'' என்று குறித்துள்ளார். அருணகிரி நாதருக்குமுன் ''சுவாமி மலையே திருவேரகம்'' என்று குறிப்பதற்குக் கல்வெட்டு – இலக்கியச் சான்று ஏதும் இல்லை. வெண்குன்றமும் திருவேரகமும் இரண்டு ஊர்கள் எனச் சிலப்பதிகாரம், தெளிவாகக் குறிப்பிடுகிறது.

குமரி மாவட்டத்தில் தக்கலைக்கு அருகில் உள்ள குமாரபுரமே திருவேரகம் என்று சிலரும், நெல்லை மாவட்டத்தில் உள்ள வள்ளியூரே திருவேரகம் என்று சிலரும் கருதுகின்றனர். டாக்டர் மா. இராச மாணிக்கம் அவர்கள் ''தென்கன்னட மாவட்டத்தில் புத்தூர் வட்டத்திலுள்ள குமார பர்வதமே திரு வேரகம்'' என்று குறிப்பிட்டுள்ளார்.

குன்றுதோறாடல் என்னும் தலம் எங்கிருக்கிறது என்று இதுவரை யாராலும் கண்டறியப்படவில்லை. கந்தபுராண ஆசிரியர் (கி.பி. 14–ஆம் நூற்றாண்டு) பழமுதிர் சோலை என்பது முருகனின் ஒரு தலம்எனத் தம் நூலின் பாயிரத்தில் பாடியுள்ளார். அருணகிரி நாதரும் அழகர் மலையே பழமுதிர்சோலை மலை என்று கருதிப் பாடியுள்ளார்.

நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப்படையே அறுபடை வீடுகள் என்னும் கருத்துக்கு முதற்சான்றாகும் என் பதனை ஆராய்ந்த டாக்டர் மா. இராசமாணிக்கம் அவர்கள், பழமுதிர்சோலை எனப்படும் அழகர் மலையில் முருகன்கோயில் இருந்ததில்லை என்றும், 'பழமுதிர் சோலை மலை கிழ வோனே' என்ற தொடர் திருமுருகாற்றுப்படையில் எழுவாயாகவே வந்துள்ளது என்றும் கருத்துரைத்துள்ளார். அது போலவே குன்றுதோறாடல் என்பதற்கு 'முருகன் மலைதோறும் ஆடல் கொண்டவன்' என்பது அவர் கொண்ட பொருளாகும். குன்றுதோறாடல் என்னும் தலைப்பில் அமைந்த திருப்புகழ்ப் பாடல்கள் ஐந்தும் ''பலகுன்றிலும் அமர்ந்த பெருமாளே'' ''பல மலை யுடைய பெருமாளே'' ''மலை யாவையும் மேவிய பெருமாளே''''குன்று தோறாடல் மேவு பெருமாளே'' என்றே முடிகின்றன. இவற்றால் டாக்டர் மா.இராச மாணிக்கத்தின் முடிவு வலிவு பெறுகிறது. குன்று தோறாடல் என்னும் பெயரில் ஒரு முருகன் தலம் இருந்தது என்று கூறிட இயலாது.

முருகன் ஆறுபடை வீடுகளுக்குரியவன் என்ற

கருத்துக்குக் கி.பி. 14-ஆம் நூற்றாண்டிற்கு முன்னர்த் தமிழ் இலக்கியங்களில் சான்றுகள் இல்லை. பழைமையான முருகத் தலமாகிய திருச்செந்தூரைப் புறநானூற்றில் (55) ஒரு பாட்டும், ஆவினன்குடியைப் ''பொதினி'' என்ற பெயரில் அகநானூற்றில் (1, 61) இரண்டு பாடல்களும், செந்தில், செங்கோடு, வெண்குன்றம், ஏரகம் ஆகிய நான்கு முருகத்தலங்களைச் சிலப்பதிகாரமும் குறிக்கின்றன. பரிபாடல், திருமுருகாற்றுப்படை ஆகிய இரு இலக்கியங்களும் அகநானூற்றில் ஒரு பாட்டும் (59) திருப்பரங்குன்றத்தைக் குறிக்கின்றன.

படைவீடு என்னும் சொல் போர்வீரர் தங்கியிருக்கும் இடத்தைக் குறிப்பதாகும். இதனைப் 'பாடிவீடு' என்று குறிப்பிடுவதும் உண்டு.

முருகன் அலைவாய் எனப்படும் திருச்செந்தூரில் சூரபதுமனைப் போரில் அழித்தான். எனவே அது படை வீடு எனப்படும் தகுதி பெற்றது. ஆனால், பரங்குன்று, ஆவினன்குடி, திருவேரகம் ஆகிய இடங்களில் முருகன் போர்க்கோலம் கொண்டதாகவோ போரிட்டதாகவோ குறிப்பிடும் புராணச் செய்தி ஒன்று கூட இல்லை. எனவே படைவீடு என்ற பெயர் அவற்றுக்குப் பொருந்தாது.

அவ்வாறாயின் ஆறுபடை வீடுகள் என்ற வழக்கு எவ்வாறு வந்தது? நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப்படை இலக்கியம் முருகனுடைய தலங்களைக் குறித்தது. திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய் திருஆவினன்குடி, திருவேரகம் ஆகிய நான்கும் நக்கீரர் காட்டும் ஆற்றுப்படை வீடுகளாகும். 'ஆற்றுப்படை வீடு' என்னும் சொல்லே வழக்கில் 'ஆறுபடை வீடு' எனத் திரிந்தது. அதனால் முருகாற்றுப்படையில் வரும் குன்றுதோறாடல், பழமுதிர் சோலைமலை என்னும் இரண்டினையும் இரண்டு முருகத்தலங்களின் பெயர்களாகக் கருதும் நிலை ஏற்பட்டது. கந்தபுராண ஆசிரியரின் காலமான கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் இக்கருத்து உருவாகி கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் அருணகிரி நாதரால் ஏற்கப்பட்டு, மக்கள் நம்பிக்கையோடு இணைந்து வளர்ந்துவிட்டது. சங்க இலக்கிய காலந்தொட்டே தமிழ்நாட்டில் தொன்மையான முருகத்தலங்கள் பல உள்ளன. ஆனால், ஆறுபடை வீடுகள் என்னும் கருத்து வரலாற்றடிப்படையிலான தன்று, மக்களின் நம்பிக்கையில் பிறந்ததாகும். கடவுளருக்குத் 'தொகைத் தலங்கள்' குறித்துப் போற்றும் பக்தி இயக்க மரபை ஒட்டியே இது எழுந்ததாகும். தொ.ப.

**அறுவகைச் சமயங்கள்:** மனிதன் நேர்மையாக ஒழுகி அமைதியாக வாழ்ந்து இன்புறும் வழியையே இந்து சமயம் கூறுகிறது. அன்பு, உண்மை இன்சொல், பொறுமை, அடக்கம், கருணை ஆகிய இந்த ஆறு ஒழுக்கங்களும் இந்து சமய நெறிகளாகும்.

இந்து சமத்திற்கு வைதிக சமயம் என்று ஒரு பெயரும் உண்டு. வேதத்தை அடிப்படையாகக் கொண்டு வாழ்க்கையை நெறிப்படுத்தி இறைவனுடைய திருவருளைப் பெறுகிற வழியே வைதிக வழியாகும்.

சமயங்களை அகச் சமயங்கள், புறச் சமயங்கள், அகப்புறச் சமயங்கள், புறப்புறச் சமயங்கள் என்று வெவ்வேறாகப் பகுத்துக் கூறுவதுண்டு. சமயங்கள் பெயரளவுக்கு வேறுபட்டாலும் கொள்கையளவுக்கு முரண்பாட்டோடு காணப்பட்டாலும் பரம்பொருளை மக்கள் அடையும் வழியைத்தான் வெவ்வேறு வகையில் எடுத்துக்கூறுகின்றன.

வழிபாட்டு முறையில் மூர்த்திகளை வழிபடுகிற சமயங்கள் ஆறு. அவை, காணாபத்தியம் (கணபதி வழிபாடு), கௌமாரம் (முருக வழிபாடு), சாக்தம் (சக்தி வழிபாடு), சைவம் (சிவன் வழிபாடு), வைணவம் (திருமால் வழிபாடு), சௌரம் (சூரிய வழிபாடு) என்பனவாகும். ''எங்கும் நிறைந்திருக்கும் மெய்ப் பொருள் ஒன்றுதான்; அதற்குச் சான்றோர் பல பெயரிட்டு அழைக்கின்றனர்'' என்று இருக்கு வேதம் கூறியுள்ளது. அந்த ஒரு பொருளுக்கு ஒவ்வொரு சமயமும் ஒவ்வொரு சிறப்புப் பெயர் கொடுத்துள்ளது. ஆறு சமயத்திற்குரிய ஆறு கடவுளர்களும் வழிபாட்டு மூர்த்திகளே. ஆறு சமயங்களின் தொகையே இந்து சமயம் என வழங்கப்படுகிறது.

உலகம் இயங்கத் தேவையான சக்தி வழிபாட்டையும், இயங்கும் உலகில் வாழவழிகாட்டக் காணாபத்தியத்தையும், செல்வத்தையும் இன்பத்தையும் பெற்றுச் சிறப்பாக வாழ வைணவத்தையும், அவ்வாறு வாழ்ந்து இன்பத்தை அனுபவித்தபின் பரம்பொருளின் பேரருள் நிலையை அணுக அரிய தொரு வழிகாட்டியாகக் கௌமாரத்தையும், மற்றும் நோய் நொடியில்லா வாழ்க்கைக்குச் சௌர வழிபாட்டையும், எல்லா மங்களங்களையும் பெற்று இம்மையிலும் மறுமையிலும் பேரருள் நிலையையடையச் சைவத்தையும் இப்படி ஆறுவகை வழிபாட்டை ஆதி சங்கரர் இந்து மதத்தில் நிலை நாட்டினார். அவர், அறுசமய வழிபாட்டில் சமரச உணர்வையும் அத்துவித உண்மைகளையும் கண்டு, அவற்றுடன் இவ்வழிபாட்டுமுறையில் சென்று பரம்பொருளை அடைவதற்கான நெறிமுறைகளையும் காட்டியுள்ளார்.

பரம்பொருளிடத்து ஆறுவகைத் தன்மையுண்டு. அவையாவன, ஒளித்தன்மை, ஒடுக்குந்தன்மை, உதவுந்தன்மை, காக்குந் தன்மை, இடையூறு நீக்குந் தன்மை, ஞானம் அருளுந்தன்மை ஆகியவையாம்.

இவைமுறையே பரிதி, ஈசன், பராசக்தி, மாயவன், கரி முகன், குகன் என்ற ஆறு தன்மைகளிலும் காணலாம்.

இந்த ஆறு மூர்த்திகளையும்தனித்தனியே முதற் கடவுளாக வைத்து வழிபடும் சமயத்தில் யாவரும் தமக்கென்று வரையறுக்கப்பட்ட நெறிமுறைகளைக் கொண்டிருந்தாலும், எல்லாவற்றிக்கும் அடிப்படை, வேதம் என்ற உணர்வோடு மாறுபாடின்றி வாழ்வது தான் இந்து சமயத்தின் அடிப்படையான நெறி யாகும்.

ஒன்றையும் பற்றி நில்லாது அலையும் நெஞ்சை ஒன்றிப் பொருத்தி நிறுத்தும் ஆற்றல் உருவ வழி பாட்டிற்கே உண்டு. உருவ வழிபாடு ஒன்றே மக்கள் உள்ளங்களை ஈர்க்கக்கூடியது. கருத்துக்கு மட்டுமே விளங்கும் பரம்பொருளை ஞானிகளில்கூட ஒருசிலரே தான் உணருகிறார்கள். அவர்களும் ஞானம் முற்றிச் சித்திபெற உருவமாகத் தெரியும் பரம்பொருளிலேயே முதலில் மனத்தை நிலை நிறுத்துகிறார்கள்.

இந்த ஆறு சமயங்களாலும் போற்றப்படுகிற இந்துக் கடவுள்கள் வெவ்வேறு திருப்பெயரில் வெவ் வேறு திருவுருவில் காட்சியளிக்கின்றன. பல பெயர் களிலும் பல பண்புகளிலும் பல வடிவங்களிலும் அவை காட்சியளிக்கின்றன.

ஒவ்வொரு சமயமும் தனக்குரிய கடவுளைத் தனக்குகந்த முறையில் விளக்குகிறது. இவ்வாறு சண்மதம் எனவும், அறுவகைச் சமயம் எனவும் உபாசனா மார்க்கம் எனவும் கூறப்படும் பரம் பொருளின் தன்மைகள் வருமாறு:

**காணாபத்தியம்:** கணபதிதான் முழுமுதற்கடவுள் என்ற கொள்கையைக் கொண்டது காணாபத்தியம். இந்து சமய நெறியில் குறிகளும் அடையாளங்களும் சிறப்பிடம் பெற்றுள்ளன. தத்துவ விளக்கமாக எழுந் தவையெல்லாம் இந்து சமயக் கடவுளர் வடிவங்க ளும் திருக்கோயில் அங்கங்களுமாகும். பிரணவ வடிவ மாக அமைந்த விநாயகப் பெருமான் ஒரு வியக்கத் தக்க வடிவமாகும். எந்தச் செயலையும் இடையூறு இன்றித் தொடங்கி முற்றுப்பெற முன்னின்றுதவும் அருட்சக்தி எதுவோ அதனையே விநாயகர், விக்கி நேசர் என்ற பெயரைக் கொடுத்து வழிபடுகிறார் கள்.

இந்து சமயத்தில் அனைவரும் வழிபடும் கடவுள் களுள் முதலிடம் பெறுபவர் கணபதி. இவரைத்தம் கணங்களுக்குத் தலைவராக்கி முடிசூட்டினார் சிவ பெருமான். எனவே இவருக்குக் கணபதி, கணேசர் என்னும் பெயர்கள் ஏற்பட்டன. விநாயகர் என்றால் எல்லோருக்கும் மேலான நாயகர் என்பது பொருள். கணபதி தத்துவக் கடவுளாகத் திகழ்கிறார்.

இவரே முழுமுதற் கடவுள் என்பதை இவரது திருவுரு வலியுறுத்துகிறது. யானை வடிவு ஓங்காரத் தினை நினைவூட்டுவதாக உள்ளதால், விநாயகன் ஓங்கார வடிவினன் என்பது புலப்படுகிறது. இவர் தம் நான்கு கைகள் வானவர் இயல்பையும், தும்பிக்கை விலங்கு இயல்பையும், ஏனைய வடிவு மனித இயல் பையும் குறிக்கின்றன. மத்தள வயிரும் குறுகிய கால் களும் பூத இயல்பையும், ஒரு பக்கம் கொம்பு இருப்பது பெண் இயல்பையும், மற்றொருபுறம் உள்ள கொம்பு ஆண் இயல்பையும் காட்டுகின்றன. முகம் அஃறிணையையும், ஏனைய வடிவு உயர்திணையையும் குறிக்கின்றன.

கணபதியின் வடிவங்கள் பதினாறு. அவருக்குச் சித்தி, புத்தி, வல்லபை ஆகியோர் சத்திகள். ஔவையார் இயற்றிய விநாயகர் அகவல் என்னும் பாராயண நூல் யோக தத்துவத்தை விளக்கும் அருமையான நூலாகும். தேவாரத் திருமுறைகளை உலகுக்குக் காட்டிய பெருமை விநாயகரையே சாரும். திருமுறைகளை உலகுக்குக் காட்டிய கணபதி ஆனந்த மய கோசத் தலைவர். எனவே, பேரின்பம் வேண்டு வோர் கணபதியை வழிபட வேண்டும் என்று ஆன் றோர் கூறுகின்றனர்.

**கௌமாரம்:** குமார சமயம் கௌமாரம் என் றாயிற்று. குமரக் கடவுளைப் பரம்பொருளாகக் கொண்டு வழிபடுவோர் கௌமாரர்.

பரம்பொருளாகிய இறைவன் அருவ நிலையில் உலகெல்லாம் மனத்தால் உணரவும் வாக்கால் ஓத வும் அரியவனாக விளங்குகிறான். கருணையினால் அன்பர்களுக்கு அருள்செய்யும் பொருட்டு உருவத் திருமேனி தாங்கித் தரிசனம் தந்து அருள் வழங்கு கிறான். தண்ணீரில் குளிர்ச்சி சேர்ந்தபோது பனிக் கட்டியாக மாறுவதுபோலவும், நெய்குளிர்ச்சி சேர்ந்த போது உறைவது போலவும், கடவுள் அன்பர்களது வேண்டுதலால் அருவுருவமாகவும் உருவமாகவும் திரு மேனி தாங்குகிறார். அத்தகைய பரம்பொருள் அருவ நிலையிலிருந்து அருவுருவ நிலை பெற்றுப் பின், உருவநிலையில் முருகப் பெருமானாக உதித்ததாகக் கந்த புராணம் கூறுகிறது.

நிலப்பரப்பை ஐந்தாகப் பிரித்து, அதில் குறிஞ்சி நிலமாகிய மலைக்கும் மலைசார்ந்த இடத்திற்கும் முருகனைத் தெய்வமாக்கினார்கள் தமிழர்கள். மனி தனுக்கு முதலில் தெய்வ உணர்ச்சி தோன்றிய காலத்தில் முருகனே முதல் தெய்வமாகத் தோன்றி னான்.

முருகன் மூன்று சக்திகளையுடையவன். தெய்வ யானை கிரியா சக்தி; வள்ளி நாயகி இச்சா சக்தி; வேல் ஞானசக்தி. அவன் எழுந்தருளும் மயில் பிரணவ வடிவம். எல்லாத் தத்துவங்களுக்கும் முதலிலே

தோன்றியது நாதம். எனவே அவனது சேவற்கொடி நாத தத்துவம். அன்னையாகிய பராசக்தியைக் கைவேலாயுதமாகவும், தந்தையாகிய சிவபிரானைத் தம் மாணவராகவும் கொண்ட 'பரமசற்குரு' குமரக் கடவுள்.

கௌமாரத்தில் உலக கௌமாரம், மகாவிரத கௌமாரம், துவித கௌமாரம், அத்துவித கௌமாரம், சமரச கௌமாரம், அதீத கௌமாரம் என்ற ஆறு பிரிவுகள் உண்டு. அவற்றிக்குக் குமரக் கடவுளின் வடிவ வேறுபாடுகளும் வழிபாட்டு முறைகளும் தனித்தனியே உண்டு. அவற்றையெல்லாம் கௌமார முறைமை, கௌமார தீபம், கௌமார லகரி முதலிய நூல்களில் காணலாம். குமார தந்திரம் என்னும் நூலில் குமரனின் வடிவங்களும் வழிபாட்டு முறைகளும் விளக்கப் பெற்றுள்ளன.

ஆணவ இருளை அகற்றி, ஞான ஒளி வழங்கிய கந்தப் பெருமானுக்குக் கார்த்திகை மாதத்துச் சட்டியன்று கந்த சட்டிப் பெருவிழாச் சிறப்பாக நடைபெறும். கந்தனுக்குத் திருமுழுக்குப் பொருள்களையே பூசித்துப் பக்தியாகவும் நன்னம்பிக்கையோடும் எடுத்துப்போகும் முறைதான் "காவடி" என்ற காணிக்கை.

கௌமார சமயத்தை உலகில் நிலைநிறுத்தியவர் அருணகிரியார். அவரது திருப்புகழ் கௌமார சமய அன்பர்களுக்கு வேதம் போன்றது. அதில் சமரசக் கருத்துப் பொங்கித் ததும்புகிறது. வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், பாம்பன் அடிகள் முதலியோர் கௌமாரத்தில் ஊற்றத்தோடு இனிது வாழ்ந்தவர்கள்.

வடஇந்தியாவில் பிரமசாரியாக கார்த்திகேயன் என்று வழிபடப் பெறும் குமரன், தமிழ்நாட்டின் தனிப்பெரும் கடவுளாக வள்ளி, தேவசேனையுடன் காட்சியளிக்கிறார். சிவமும் சக்தியும் இணைந்த அன்பு நிலையே குமரனாகும். வேதமே மயிலாகவும் ஓங்காரமே குமரனாகவும் பிரமவித்தையையே சக்தி வேலாகவும் உள்ள இந்த மூர்த்தியை வழிபடுவதால் முத்தி கிடைக்கிறது என்பது ஆன்றோர் துணிபு.

**சாக்தம்:** 'அருளே சக்தி'. அருள் சிவனது பிரிவிலா ஆற்றல்; அதுவே அன்னை பராசக்தி.

எல்லா உயிர்களும் உயிர்வாழப் பிராண சக்தியும் பல செயல்களைச் செய்வதற்கு உயிராற்றலும் ஆக எல்லாவற்றிற்கும் அடிப்படையாகவுள்ளது ஆதிபராசக்தி.

அதிகாரம், படைப்பு, காப்பு, மாற்றுதல், அழித்தல் முதலிய எல்லாத் தொழில்களிலும் காற்று, நெருப்பு, நீர், பூமி, ஆகாயம் முதலிய ஐம்பூதங்களிலும் இவற்றின் ஒவ்வொன்றிலும் ஐந்தாகப் பிரிந்து உலவிடும் சக்தி பராசக்தி.

வடிவமற்றதும் குணமற்றதுமாயிருக்கும் இந்த மேலாய தத்துவத்தோடு உறவாடுவது கடினம். ஆனால், இந்தப் பரம்பொருளுக்கு ஒருவடிவம் கற்பித்து, அதைத் தாயே என்று வணங்கி உறவாடத் தொடங்கி விட்டால் மனிதனுடைய உணர்ச்சியோடு உறவாடும் பொருளாகி விடுகிறது

'ஆதிப்பரம்பொருளின் ஊக்கம், அதை அன்னை எனப் பணிதல் ஆக்கம்' என்று அப்பரம்பொருளை உள்ளத்தே கண்ட பாரதியார் கூறுகிறார். பெண்ணினத்தின் எண்ணரிய பெருஞ் சிறப்புகளை யெல்லாம் இனிதுணர்ந்து போற்றிய சமுதாய வாழ்வின் விளைவே, அன்னை வழிபாடாகிய சக்தி வழிபாடு எனலாம். இந்தத் தத்துவமே சாக்தம் என்ற சமயமாகும்.

'சக்த' என்ற சொல் திறமை, ஆற்றல் ஆகியவற்றைக் குறிக்கும். இதனை விளக்குவதே சாக்தம்.

மகத்தானது, பெரிது, சிறிது, அணுவளவானது என்று அனைத்துயிரிலும் சக்தியின் தன்மை உயிரினங்களுக்கு ஏற்றபடி விரிந்தும் சுருங்கியும் கருணையுடனும் அரக்கத் தன்மையுடனும் காலத்திற்கேற்றவாறு பெயரையும் செயலையும் உடையதாக மாறி நிற்கும் நிலையே நாம் வழிபடும் பராசக்தி வடிவம். இது, ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களுக்கும் மூலதேவதையாக விளங்குகிறது. படைப்புக் கடவுளான பிரமதேவனுக்குக் கலைமகள் என்ற நாயகியாகவும், காத்தல் கடவுளான திருமாலுக்குத் திருமகள் என்ற நாயகியாகவும், அழித்தல் கடவுளான உருத்திரனுக்கு மலைமகள் என்ற நாயகியாகவும் சக்தி தேவியின் அம்சங்களே இருந்து, அக்கடவுளின் தொழில்களை இயக்கச் செய்கின்றன. தோற்றுவிக்கும் சக்தி பெண்மையிடமே இருக்கிறது. மகா சக்தியின் அசைவால் உலகங்களே உற்பத்தி ஆகிறது.

இறைவழிபாட்டிலே சக்தி வழிபாடு பரந்த இவ்வுலக மக்களால் பெரும்பாலும் விரும்பி மேற்கொள்ளப்பெற்றுள்ளது. இது பலவகையாலும் பல வடிவங்களிலும் இவ்வுலகில் படர்ந்து நிலவுகிறது.

இந்தியாவின் 'சக்தி பீடங்கள்' என்று சிறப்பாக 64 இடங்களைச் சாக்தர்கள் குறிப்பிடுகிறார்கள். மகேசுவரி, மகாகாளி, மகாலட்சுமி, மகாசரசுவதி ஆகிய நான்கு வடிவில் பராசக்தி இந்நிலவுலக வாழ்வைச் செம்மைப் படுத்துகிறாள். சக்கர வழிபாடு என்பது சாக்தத்தில் சிறப்பான தொன்றாகும்.

**சைவம்:** சிவனைப் பரம்பொருளாக வழிபடும் சமயம் சைவ சமயம். இச்சமயத்தார் சைவர் எனப் படுவர்.

சிவம் என்னும் சொல் செம்மை, நன்மை, மங்கலம், அன்பு என்னும் பொருள்களையுடையது. எனவே சைவ சமயத்தை அன்பு நெறி என்று கூறலாம். 'அன்பும் சிவமும் இரண்டல்ல: அன்பே சிவம்' என்பது திருமூலர் வாக்கு. மங்கல வடிவினராகிய சிவன் தன்னை அடைந்தார்க்கு எல்லா மங்கலங்களையும் அளித்து அருளுவான் (சங்கரன் — மங்கலத்தைச் செய்பவன்).

சைவசமயம் மிகப் பழைமையானது. உலக முழுவதும் பரவியிருந்தது. வட அமெரிக்காவில் கொலரேடோ நதிக்கரையில் பல்லாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட சிவன் கோயில் இருந்ததாக அமெரிக்கத் தொல்பொருள் ஆராய்ச்சியாளர் கண்டு பிடித்துள்ளனர்.

சைவசித்தாந்தத்தில் சிவம், சதாசிவம், மகேசுவரன் என்ற மூன்று தத்துவங்கள் சிறப்புடையன. அவை முறையே அவரது அருவம், அருவுருவம், உருவம் என்னும் சிறப்பியல்புகளைக் காட்டுகின்றன. சிவபெருமானின் ஐந்து முகங்களான ஈசானம், தத்புருடம், அகோரம், வாமதேவம், சத்யோசாதம் ஆகியவற்றிலிருந்து 28 சைவ ஆகமங்களும் 25 வடிவங்களும் தோற்றுவிக்கப் பெற்றுள்ளன என்பர்.

சிவபெருமான் உயிர்களை உய்வித்தற்பொருட்டு ஏற்கும் வடிவங்கள் மூவகைப்படும். உயிர்களின் இம்மை வாழ்விற்கும் உலகியல் இன்பங்களை நுகர்விப்பதற்கும் அவர் 'இன்ப வடிவங்களாகத்' திகழ்கிறார். உயிர்களின் மறுமை வாழ்விற்கு ஞான நன்னெறியில் நலம்பெறச் செய்யும் 'யோகவடிவினராக' விளங்குபவரும் அவரே. உயிர்களின் குற்றங்களைக் கடிந்து வினை மாற்றி, மறக் கருணையினால் தண்டித்து ஆட்கொள்ள அவர் அருள் சுரக்கும் வடிவங்களிலும் வெளிப்படுகிறார்.

சைவ சமயம் பலவகைப் பிரிவுகளை உடையது. சாமானிய சைவம், சுத்த சைவம், மிசிர சைவம், வீர சைவம், மார்க்க சைவம், ஆகம சைவம், நிராதாரவீர சைவம், சௌட சைவம், பாசுபத சைவம், காளாமுக சைவம் என்பன.

சைவ சமயத்தில் முப்பொருள் உண்மையாவன: கடவுள், உயிர்கள், கட்டு (பதி, பசு, பாசம்) என்பனவாகும். கடவுள் ஒருவர், அவர் சிவபெருமான். உயிர்கள் எண்ணிறந்தன. பாசமானது ஆணவம், கன்மம், மாயை என மூவகைப்படும்.

கடவுளும் உயிர்களும் அறிவுடைய பொருள்கள். கடவுளுக்கு எட்டுக் குணங்களுண்டு. உயிர்கள் என்றும் உள்ளவை; பாசத்தால் கட்டுப்பட்டவை; தாமேயறியும் தன்மையில்லாதவை; அறிவிக்க அறியும் இயல்புடையவை; பாசத்தின் ஒரு பகுதியான ஆணவம் உயிர்களைப் பற்றிக்கொண்டு அவற்றின் அறிவு, விருப்பம், செயல் ஆகியவை வெளிப்படாதபடி மறைத்துத் துன்பம் செய்து கொண்டிருக்கும்.

உயிர்களைப் பற்றிக்கொண்டு துன்பம் செய்யும் ஆணவத்தை நீக்கிப் பேரின்பப் பெருவாழ்வை அவைகளுக்குக் கொடுக்க எண்ணிக் கடவுள் உயிர்களுக்கு உடலையும், வினைகளைச்செய்து இன்பதுன்பங்களை நுகர்ந்து அதனால் அறிவு விளக்கம் பெற உலகங்களையும் மாயையிலிருந்து படைத்துக் கொடுக்கிறார்.

அறிவு விளக்கம் அடைந்தபிறகு, உயிர்கள் 'நான்', 'எனது' என்னும் அகப்பற்று, புறப்பற்றுகளே பிறவிகளில் அனுபவிக்கும் துன்பங்களுக்குக் காரணம் என்பதை அறியும். அவ்வாறு அறிந்தபின் உயிர் அதனைப் போக்கும் வழியாகக் கடவுளிடத்தும் தன்னைப்போன்ற உயிர்களிடத்தும் பயன் கருதாமல் அன்புப்பணி செய்ய வேண்டும் என்பதை அறியும். அவ்வாறு அன்புசெய்து சிவத்தோடு இரண்டறக் கலக்கும் பேரின்ப நிலையை அடையும். உருவ வழிபாடு, திருக்கோயில் வழிபாடு, அடியார்கள் கூட்டுறவு, திருநீறு, உருத்திராக்கம் அணிதல், திருவைந்தெழுத்தை ஓதுதல், திருமுறை ஓதுதல் ஆகியவை பேரின்ப நிலையை அடையத் துணை செய்யும்.

திருவுந்தியார் முதல் சங்கற்பநிராகரணம் வரை உள்ள பதினான்கு சித்தாந்த சாத்திரங்களும் சைவத்திற்குச் சிறந்த நூல்களாகும்.

**வைணவம்:** விட்டுணுவைப் பரம்பொருளாகக் கொண்டு வழிபடப் பெறும் சமயம் வைணவம். தமிழர்கள் முல்லை நிலமாகிய காட்டிற்கும் காடு சார்ந்த பகுதிகளுக்கும் திருமாலைத் தெய்வமாக வைத்து வழிபட்டு வந்துள்ளனர். கருணையை மழையாகப் பொழிந்து உயிர்களைக் காக்கும் கடவுள் திருமால்.

திருமாலை வழிபடுவோர் ஐந்து நிலைகளில் வழிபடுகின்றனர். அவை பரத்துவம், வியூகம், விபவம் (அவதாரம்) அந்தர்யாமித்வம், அர்ச்சாவதாரம் என்பனவாம். பரமபதத்தில் தேவியரோடு இருக்கும் பரமானந்த நிலையே பரத்துவம். தேவர்கள் குறைகளைக் கேட்டு அதனைக் களையப் பள்ளி கொண்ட நிலை வியூகம். அறத்தை நிலைநிறுத்த, நல்லவர்களைக் காக்க எடுக்கும் அவதார நிலை விபவம். எங்கும் நிறைந்து கருதுதற்கு அரிய உயிருக்கும் உயிராய் உயிர்களில் உளதாகி ஒன்றியிருந்து விடுபடும் நிலையே அந்தர்யாமித்துவம். அடியார்கள் விரும்பும் வகையில் பொன், வெள்ளி முதலிய உலோகங்களிலும் மரம், மண், கல் முதலிய அனைத்திலும் சிலையாகவும் ஓவிய வடிவிலும் எழுந்

தருளி அருள்கொடுக்கும் நிலை அர்ச்சாவதார மாகும்.

தத்துவம் அல்லது கடவுள்; இதம் அல்லது அடையும் வழி; புருடார்த்தம் அல்லது பேறு ஆகிய மூன்றும் வைணவ சமயக் கோட்பாடுகள். வைணவத்தின் தத்துவம் நாராயணனே. நாரம் என்பது உலகில் உள்ள அனைத்துப் பொருள்களையும் உயிர்க் கூட்டங்களையும் குறிக்கிறது. அயனம் என்னும் சொல் இவையனைத்துப் பொருள்களுக்கும் உயிர்க்கூட்டங்களுக்கும் அடிப்படையாக இருப்பவரைக் குறிக்கிறது. எல்லாவற்றிலும் ஊடுருவி அமைந்து இவைகளை இயக்குபவன் என்றும் கூறலாம்.

நாராயண தத்துவத்தை அடைவதற்கு அவன் திருவடிகளே வழி. ஞான மார்க்கம், கரும மார்க்கம், பக்தி மார்க்கம் ஆகியவற்றை விட எளியவழி பிரபத்தி என்னும் அடைக்கல மார்க்கமே என்பது வைணவத்தின் தலையாய கொள்கை. அவன் திருவடிகளையே புகலிடமாகக் கொண்டு அவனை அடைவதே உயர்ந்த எளியவழி. அவன் திருவடிகளில் புரியும் குற்றேவல் அல்லது தொண்டே அவனை அடைகிற பேறு. தத்துவத்திற்கு நாராயணனும் இதத்திற்கு அவன் திருவடியும் புருடார்த்தத்திற்குத் தொண்டும் ஆகும்.

**சௌரம்:** ஒளிக்கடவுளான சூரியனைத் தனிப் பெரும் கடவுளாகக் கொண்ட சமயம் சௌரம்.

ஒளி ஒன்றே உலகை இயக்கும் ஒப்பற்ற பேராற்றல். நிலம், நீர், வளி, வான் ஆகிய ஏனைய ஆற்றல்கள் ஒளி ஒன்றிலே உள்ளடங்கி நிற்கின்றன. எனவே ஒளியின் பயனையும், பேராற்றலையும் உணர்ந்து செங்கதிரோனைத் தெய்வமாக வழிபட்டனர்.

தொல்காப்பியத்தில் சூரிய வழிபாடு சிறப்பாகக் குறிப்பிடப்படுகிறது. சூடாமணி நிகண்டில் சூரியன் பனிப்பகை (பனியை அழிப்பவன்), தினகரன் (நாளை உண்டாக்குபவன்) என்றெல்லாம் கூறப்படுகிறான். சிலப்பதிகாரத்தில் "ஞாயிறு போற்றுதும்" என்று குறிப்பிடுவதையும் காணலாம். எனவே சூரிய வழிபாடு தொன்மையாகத் தமிழகத்தில் இருந்து வந்துள்ளதை அறியலாம்.

சூரிய கிரணங்களினால்தான், மழை, பனி, வெப்பம் ஆகியவை உண்டாகின்றன. கதிரோனின் ஒளியினால் உயிர் வாழ்க்கைக்கு மிகவும் இன்றியமையாத உணவுப் பொருளான செந்நெல் செழிக்கிறது. அதனை விளைவிப்பதற்குரிய உடல்வலியும் உணர்வும் தங்களுக்கு ஏற்பட்டுள்ளது என்று உணர்ந்து, தங்களின் நன்றியறிதலுக்கு அடையாளமாகத் தைமாதம் முதல் நாள் பொங்கல் படைத்துச் சூரிய வழிபாடு செய்கிறார்கள். அவ்வழிபாட்டில் சிறப்பாகத் திகழும் புதுமஞ்சள் மங்கலத்தையும், கரும்பு வாழ்வின் இனிமையையும் அரிசி, வாழைப்பழம், தேங்காய் முதலியன அந்தக் காலத்தின் வளத்தையும் குறிக்கின்றன.

சூரியன் வெண்தாமரையில் வீற்றிருப்பவன் என்று ஆகமங்கள் கூறுகின்றன. சூரிய மண்டலத்தின் நடுவே சிவபெருமான் வீற்றிருக்கும்போது அவர் சிவ சூரியனாகத் திகழ்கிறார் என்று சிவாகமம் கூறுகிறது. சூரிய மண்டலத்தின் நடுவே திருமால் திகழும்போது சூரியநாராயணன் என்று சொல்லப்படுவதாக விட்டுணுபுராணம் குறிப்பிடுகிறது. சந்தியாவந்தனம் என்னும் காயத்திரி வழிபாடே சூரியவழிபாடுதான்.

வெளியுலகின் பெருவிளக்காம் சூரிய வழிபாட்டைப் போன்றே வீட்டினுள்ளே சிறுவிளக்கை ஏற்றி வைத்து வழிபடுவதும் ஒளி வழிபாடேயாகும். இராமாயணத்தில் 'ஆதித்திய இருதயம்' என்ற பகுதியில் சூரிய வழிபாடு குறித்துச் சிறப்பாகச் சொல்லப் படுகிறது.

இவ்வாறாக இந்து சமயநெறியில் தத்துவமுறையில் அறுவகை வழிபாட்டு முறைகள் அமைந்துள்ளன.

இரா. கி.

***அறுவடைப் பாடல்*** என்பது வயலில் அறுவடை நிகழும்போது பாடப்படும் பாடல்களைக் குறிக்கும். இதனை அறுவடைத் தொழிலில் ஈடுபடும் ஆண்களும் பெண்களும் சேர்ந்து பாடுவர்.

ஆண்களும் பெண்களும் சுறுசுறுப்பாக அறுவடை வேலையைத் தொடங்குவர். வரிசையாக வயலில் இறங்கி நிரை நிரையாகச் சென்று அரிவாளால் அறுக்கும்போது அரிவாளில் கட்டப்பட்டுள்ள சலங்கை மணிகள் ஒலி செய்யும். அவர்கள் கதிரை அறுத்ததும் நிமிர்ந்து நின்று கதிரை வீசிப் பின்புறமாகப் போடுவர். இவ்வேலைக்கேற்ற கையசைப்பில் பாடல் அமைந்திருக்கும்.

"கண்ணாடி வளையல் போட்டுக்
கதிரறுக்கும் பெண்மயிலே
கண்ணாடி மின்னுதடி - உன்
கதிரறுப்பு பிந்துதடி".

என்று இவர்களின் பாடல் தொடரும். 'ஏலோ ஏலோ ஏலோலங்கடி." என்று இப்பாடல்களின் இசையமைப் புச் செல்லும்.

தொழிலில் ஈடுபடும்போது அலுப்புத் தோன்றாமல் இருக்க ஒருவரை ஒருவர் கேலி செய்து பாடுவதுண்டு. இது அவர்களுக்கு உற்சாகத்தையும் புதியதோர் விறுவிறுப்பையும் அளிக்கும். தொழில் பாடல்களுள் இதுவும் ஒருவகை. இதனை ஆண்பெண் ஏசல்

என்றும் குறிப்பிடுவர். இப்பாடல் அகச்சுவை மிக்குக் காதல் விளையாட்டுப் பாடல் போலவும் தோன்றும்.
சு.ச.

**அறுவை வணிகன் இளவேட்டனார்** சங்க காலப் புலவர்களுள் ஒருவர். இவர் பெயர் மதுரை அறுவை வணிகன் இளவேட்டனார் எனவும் காணப்படுகிறது. இவர் பாடிய பாடல்கள் அகநானூற்றில் ஆறும் (56,124, 230, 254, 272, 302) புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை ஆகியவற்றில் ஒவ்வொன்றும், திருவள்ளுவ மாலையில் ஒன்றுமாக (35) உள்ளன. இவருடைய அகத்திணைப்பாடல்கள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நான்கு திணைகளில் அமைந்துள்ளன. இவருடைய அகப்பாடலொன்று (அகம் 230) இல்லற மாட்சியினை நன்கு காட்டுவதாக உள்ளது. தலைவி தன் தோழியரோடு புன்னை மரத்தடியில் மணல் வீடு கட்டி இரவலர்க்குப் பொன் கொடுப்பது போல, இரவலராக வரும் தோழிமாருக்குப் பொன்போலும் பூந்தாதினைத் தந்து இல்லறம் பேணும் நீ என் மனைக்கு வந்து செய்வாயாக என்று கூறுகிறான். குறுந்தொகைப் பாடலில் அழகிய உவமை ஒன்றினைக் கையாண்டுள்ளார். அப்பாடலில் தலைவன் நாட்டினைப் "பாம்புபை அவிழ்ந்தது போலக் கூம்பிக் கொண்டலில் தொலைந்த ஒண்செங் காந்தள் கன்மிசைக் கவியும் நாடு" என்று குறிப்பிட்டுள்ளார். காற்றால் அலைப்புண்டு கிடக்கும் செங்காந்தள் மலருக்குச் சுருங்கிய பாம்பின் படத்தினை உவமையாகக் கூறியுள்ளமை சிறப்பாக உள்ளது. திருவள்ளுவ மாலையில் இவர் பெயரால் அமைந்துள்ள பாடல், 'மக்கள் இன்பமும் துன்பமும் ஆராய்ந்தறியவும் தம் மேலுள்ள அன்பு நீங்காமல் இருக்கவும், அவர்களுக் கெல்லாம் வாயுறை வாழ்த்தாகத் திருவள்ளுவர் திருக்குறளைக் கூறியுள்ளார்' என்று கூறுகிறது.

**அறையணி நல்லூர்** நடுநாட்டிலுள்ள தேவாரப் பாடல்பெற்ற தலங்களுள் ஒன்று. தென்னார்க்காடு மாவட்டத்தில் திருக்கோவலூர் அருகில் உள்ள இத்தலம் பெண்ணையாற்றின் வடகரையில் அமைந்துள்ளது. இக்காலத்தில் இவ்வூர் அரகண்டநல்லூர் என்று வழங்கப்படுகிறது. திருக்கோயில் சிறிய மலைமீது அமைந்துள்ளது. மேற்குப் பார்த்து அமைந்துள்ள இதற்கு அருகில் பஞ்ச பாண்டவர் குகை உள்ளது. கோயிலுக்கு எதிரில் பெண்ணையாற்றின் தென்கரையில் திருக்கோவலூர் வீரட்டம் உள்ளது. இறைவன் பெயர் இறையணிநாதர்; இறைவியின் பெயர் அருள்நாயகி. இத்தலத்தினைத் திருஞானசம்பந்தர் பதிகம் பாடிப் பரவியுள்ளார். பிரசண்ட இருடி வழிபட்ட தலம்.

**அன்சென்பிரபு** (கி.பி. 1697-1762) என்பவர் ஆங்கிலக் கடற்படைத் தலைவர். இவர் கி.பி.1697-ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதம் 23-ஆம் நாள் இங்கிலாந்திலுள்ள இசுடாபோர்டுசயர் (Staffordshire) சக்பரோவில் (Shugborough ) பிறந்தார். நான்காண்டுகள் உலகத்தைச் சுற்றிவந்த இவர் தம் குறிப்புகளை 'உலகைச் சுற்றி வந்த பயணம்' என்னும் நூலில் வெளியிட்டார். இது கடற்பயணம் செய்வோரின் கருத்தைக் கவர்ந்த முதன்மையான நூலாகும்.

அன்சென் (Anson) 14-ஆம் வயதில் ஆங்கிலக் கடற்படையில் சேர்ந்தார். இவர் கி.பி. 1724-ஆம் ஆண்டில் கடற்படைத் தலைவராகப் பதவி உயர்வு பெற்றார். அமெரிக்காவில் இருந்த கரோலினாக் கடற்படையைக் கடற்கொள்ளையரிடமிருந்தும், இசுபானியக் (Spain) கொள்ளையரிடமிருந்தும் காக்கும் பொறுப்பு இவருக்குக் கொடுக்கப்பட்டது. இவர் கி.பி 1740-ஆம் ஆண்டில், ஆறு கப்பல்களைக் கொண்ட குழு ஒன்றுடன் சென்று பசிபிக்குப் பெருங்கடலில் இசுபானியக் கப்பல்களுக்குத் தொல்லைகள் கொடுக்கவேண்டுமெனப் பணிக்கப்பெற்றார். இத்தருணத்தில் இவர் கொடிமரக்கப்பலில் பசிபிக்குப் பெருங்கடலின் மையப் பகுதிக்குச் சென்று, இசுபானியப் பெருங் கப்பல் ஒன்றைக் கைப்பற்றி அக்கப்பல் ஏற்றிவந்த ஐந்து இலட்சம் பொற்காசுகளையும் கொள்ளையடித்தார். உலகைச் சுற்றி வரும் கடற்பயணத்தை வெற்றியுடன் முடித்துக் கொண்டு கி.பி. 1744 ஆம் ஆண்டு இவர் இலண்டன் திரும்பினார். இரண்டாண்டுகளுக்குப் பின்னர்ப் பிரஞ்சுக் கப்பல் படையொன்றை அட்லாண்டிக்குப் பெருங்கடலில் இசுபெயின் நாட்டைச் சார்ந்த பினிசுட்டர் முனைக்கருகில் (Cape Finisterre) தோற்கடித்தார். சோபர்டன் (Soberton) பகுதியின் பாரன் (Baron) பிரபுவாக அன்சென் நியமிக்கப்பெற்றார். வட கரோலினாவில் அன்சென் கவுண்டி என்பது, கி.பி. 1750-ஆம் ஆண்டில் இவர் பெயரால் உருவாக்கப்பெற்றது.

அன்சென் பிரபு ஆங்கிலக் கப்பற்படையைத் திருத்தி அமைப்பதில் அக்கறை காட்டினார். இவர் கி.பி. 1751-56 மற்றும் கி.பி. 1757-62-ஆம் ஆண்டுகளில் இருமுறை கப்பற் படையின் முதல் படைத் தலைவராக அமர்த்தப்பெற்றுச் செயலாற்றினார். இவர், கி.பி. 1762-ஆம் ஆண்டு சூன் மாதம் 6-ஆம் நாள், எர்ட்போர்டுசயரிலுள்ள (Hertfordshire) மூர் பார்க்கு (Moor park) என்னுமிடத்தில் காலமானார்.

**அன்டனானரிவோ** தென் ஆப்பிரிக்காவின் அண்மையிலுள்ள மடகாசுகரின் (Madagascar) தலைநகரம். இந்நகரம் மடகாசுகர் தீவினையும் அருகிலுள்ள பிற தீவுகளையும் கொண்டது; முன்பு தானானரீவு (Tananarive) என்று சொல்லப்பட்டது. இதன் பரப்பளவு 57,775 ச.கி.மீ. மக்கள் தொகை 2,322,019

(1978). இந்நகரம், இருப்புப் பாதைகளால் பிற நகரங்களுடன் இணைக்கப்பட்டுள்ளது. இங்கு வாழ்பவர்களுள் பெரும்பாலோர் இந்தோனேசியர்களின் வழிவந்தவர்கள். பிரெஞ்சுக்காரர்களும் இங்கு வாழ்கின்றனர். பல அறிவியல் ஆராய்ச்சிக் கழகங்களும் மடகாசுகர் பல்கலைக் கழகமும் இந்நகரத்தில் உள்ளன. இந்நகரத்தில் மடகாசுகர் இராணி கி.பி. 1800-ஆம் ஆண்டில் கட்டிய அரண்மனை பெரும்புகழ் பெற்றது. பிற நாடுகளுடன் இந்நகரத்திற்கு விமானத் தொடர்புண்டு.

***அன்பிலாலந்துறை*** சோழ நாட்டிலுள்ள தேவாரப் பாடல்பெற்ற தலங்களுள் ஒன்று. திருச்சி மாவட்டத்திலுள்ள இலால்குடி எனப்படும் திருத்தலத்திற்குக் கிழக்கே மூன்று கல் தொலைவில் உள்ளது. அன்பில் என்றும், அம்பில் என்றும் இக்காலத்தே வழங்கப்படுகிறது. இத்தலத்தில் உள்ள திருக்கோயிலுக்கு ஆலந்துறை என்பது பெயராகும். திருஞான சம்பந்தர் திருநாவுக்கரசர் ஆகிய இரண்டு நாயன்மார்களின் தேவாரப் பதிகங்கள் இத்தலத்திற்கு உள்ளன. கொள்ளிடத்தின் தென்கரையில் நின்று பாடிய சம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகியோரின் பாடல்களைக் கேட்டமையால் இங்குள்ள விநாயகர் செவி சாய்த்த விநாயகர் என்று அழைக்கப்படுகிறார். இறைவன் பெயர் சத்திய வாசீகர்; இறைவி பெயர் சௌந்தர நாயகி.

***அன்பிற் செப்பேடுகள்*** சுந்தரசோழனின் (கி.பி. 967-970) நான்காம் ஆட்சி ஆண்டில் வெளியிடப்பட்டன. திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் இலால்குடி வட்டத்தில் உள்ள அன்பில் என்னும் ஊரினை அநிருத்த பிரமாதிராசன் என்னும் அமைச்சருக்கு இறையிலியாக அளித்த செய்தியை இச்செப்பேடுகள் குறிக்கின்றன. இச்செப்பேடுகளில் சோழ அரச பரம்பரைச் செய்திகளும், அவர்தம் வெற்றிச் செய்திகளும் காணப்படுகின்றன. ம.இரா.

***அன்மொழித்தொகை*** என்பது ஒரு சொல் நடையினவாகப் பொருளுணர்த்தும் ஆறு தொகை மொழிகளுள் இறுதியாக உள்ளதொரு தொகை மொழி. இது தொகைப்பட்டு நிற்கும் இருசொல்லும் அல்லாததொரு மொழிப்பொருள் இறுதிக்குள் மறைந்து நின்று (தொக்கு நின்று) அத்தொகையாற்றலால் பொருள் விளங்கவரும். அல்லாத மொழிப் பொருள் தொகை என்பது, அன்மொழித்தொகை எனப் பெயர் பெற்றது.

வேற்றுமைத் தொகை, பண்புத் தொகை, உவமத் தொகை, உம்மைத் தொகை, வினைத் தொகை என்னும் ஏனைய ஐந்தனுள் வேற்றுமைத்தொகை, பண்புத்தொகை, உம்மைத்தொகை ஆகிய மூன்றும் தமக்குரிய சொற்களைப் பெற்று வரும். நன்னூல் முதலிய வழிநூல்கள் 'ஐந்தொகை மொழி மேல் பிறதொகல் அன்மொழி' எனக்கூறும். உவமத் தொகையும் வினைத்தொகையும் பெரும்பான்மையும் உறுப்புகளைப் புனைந்து கூறும் வழி வருதலின் அவை ஆகுபெயராக அடங்கிவிடும். சிறுபான்மையாக அன்மொழி பற்றி வரும். அவற்றை உத்தியால் தழுவிக் கொள்ள வைத்தார் தொல்காப்பியர்.

சொற்கள் இரண்டு முதலாக இணைந்து ஒரு பொருளைச் சுட்டிவருவனவெல்லாம் தொகைச் சொல்லாயினும், நிலங்கடந்தான், வேலெறிந்தான் எனப்பெயரும் வினையுமாகத் தொகுதலை விலக்கிப் பெயரும்பெயருமாகத் தொகுதலையே தொகை மொழி எனக்கொண்டனர் தமிழியலார். வெள்ளாடை, செங்கோல் என்பவை பெண்மகளையும் நீதியையும் குறித்து நிற்பின், அவை பண்பு தொக வரும் கிளவிகளால் அமைந்த அன்மொழித் தொகைகள். பொருள் உணர்த்துங்கால், வெள்ளாடை வந்தாள், செங்கோல் புரிந்தான் என வினை காரணமாக உணர்த்தும். தகரஞாழல், புலிவிற்கயல் என்பவை சாந்தினையும், கொடியையும் குறிக்கத் தகர ஞாழல் பூசினாள், புலிவிற்கயல் பறந்தது என்பவை உம்மைத் தொகைக்குரிய பெயர்களான் அமைந்த அன்மொழித் தொகைகள். பொற்றொடி, மணிமேகலை என்பவை பொற்றொடி சென்றாள் மணிமேகலை பாடினாள் எனவரின், அவை வேற்றுமை தொக்க பெயர்களான் வந்த அன்மொழித் தொகைகளாம்.

மேற்கூறிய அன்மொழித் தொகைகளை விரிக்குங்கால், வெள்ளாடை உடுத்தற்குரிய பெண்மகள் எனவும், செங்கோன்மையால் பெறப்படும் நீதி எனவும், தகரமும் ஞாழலும் கூட்டிய சாந்தினைப் பூசிய பெண்மகள் எனவும், புலியும் வில்லும் கயலும் எழுதிய கொடி எனவும், பொற்றொடி அணிந்த பெண்மகள் எனவும் விரித்தல் வேண்டும்.

வெள்ளாடை செங்கோல் என்னும் தொகைச் சொற்கள், அன்மொழிப் பொருள்களாகிய பெண்மகளையும் நீதியையும் உணர்தற்குச் சார்பாக நின்றனவேயன்றி, அவற்றுள் பெண்மகளும் நீதியுமாகிய பொருள் இன்மையான், அன்மொழித் தொகையின் கண் சுட்டப்படும் பொருள் 'ஈற்றில் நின்று இயலும்' என இலக்கணங் கூறுகிறது. அன்மொழித் தொகையுள் தொக்குநிற்கும் சொற்களை விரித்தல் கூடாது. அதாவது வெள்ளிதாகிய ஆடையை உடுத்தவள், செம்மை புரிவதாகிய கோலானாகிய நீதி, பொன்னாலாகிய தொடியை அணிந்தவள் என விரித்தல் கூடாது என்பது தமிழிலக்கண நெறி. அங்ஙனம் விரிப்பின் அவை காரணமாக நின்று, பெருந்தீனி தின்பவனைப் பெருந்தீனி என அழைத்தல்போல ஆகுபெயர

ராகி விடும். வெள்ளாடை என்பதைப் பண்புத் தொகை எனக்கூறியபின் அதுவே அன்மொழித் தொகையுமாம் எனக் கூறுதல் மயக்கந்தரும் குற்ற மாம். அதனான் 'பண்புதொகை வரும் கிளவியானும்' எனத் தொல்காப்பியர் நுட்பந்தோன்ற இலக்கணங் கூறினார், ''ஐந்தொகை மொழி மேல் பிறதொகல் அன்மொழி'' எனப் பவணந்தியார் கூறுவது அறிவிய லுக்கு முரணாகும். அன்மொழியாக மறைந்து நிற் பது ஒரு பொருளேயாகும். ''பிறதொகல்'' என்பதும் பிழையாகும்.

துடியிடை, மதிமுகம், பவளவாய் எனவரும் இருபெயரொட்டுகள் இடை, முகம், வாய் என்னும் உறுப்புகளின் இயைபுகளால் அவற்றை உடையாளைச் சுட்டி வருதலின் அவை அடையடுத்து வநத ஆகு பெயராதலை அறியலாம். அவ் இயைபின்றிச் சிறு பான்மையாகப் பால்வளை (பால்போலும் வளை யலையணிந்தவள்) தொடலைக் குறுந்தொடி (தொடலை போலும் குறுந்தொடியை அணிந்தவள்) எனவரின், அவை உவமத் தொகைக்குரிய சொற்க ளான் வந்த அன்மொழித் தொகையாதற்கு ஏற்பன வாகும்.

அவ்வாறே தாழ்குழல், திரிதாடி என்னும் வினைத்தொகைகளுள் குழல், தாடி என்பவை சினை யிற்கூறும் முதலறி கிளவிகளாக நின்று குழலையுடை யாளையும் தாடியை உடையானையும் புலப்படுத்த லின் அவை ஆகுபெயர்களேயாகும். அங்ஙனம் இயை பின்றிச் சிறுபான்மை கோல்வளை, பணிமொழி என வருவன வினைத்தொகைக்குரிய சொற்களான் வந்த அன்மொழித் தொகைகள் என்பதற்கு ஏற்கும்.

இவ்வாறு உவமத்தொகைக்குரிய கிளவிகளாலும் வினைத்தொகைக்குரிய கிளவிகளாலும் அன்மொழித் தொகைகள் சிறுபான்மைவருதலின்,

> பண்பு தொக வருஉம் கிளவி யானும்
> உம்மை தொக்க பெயர்வயி னானும்
> வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்
> ஈற்றுநின் றியலும் அன்மொழித் தொகையே
> (சொல். எச். 21)

எனத் தொகை மொழிகளை நிறுத்தமுறையால் கூறாமல் தலை தடுமாற்றமாகக் கூறிக் கொள்ளும் படி செய்தார் தொல்காப்பியர். இது தலை தடு மாற்றந் தந்து புணர்ந்துரைத்தல் என்னும் நூல் நெறியாகும்.

> அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
> மாதர்கொல் மாலும்என் நெஞ்சு, என்னும்

திருக்குறள் பரிமேலழகர் உரையுள் ''கனங்குழை ஆகு பெயர்'' எனக்காணப்படும் பிழையான பாடத்தை (இதன் சரியானபாடம் 'கனங்குழல்' என்பது அவ்வுரை யின் பிற்பகுதியால் தெளியக்கிடக்கிறது) உண்மைப் பாடமாகக்கருதிக் ''கனங்குழை''என்பது அன்மொழித் தொகையாதலன்றி ஆகுபெயராகாது என உரைத்த சிவஞான முனிவரை மறுத்துத் தன்புலமைத் திறத்தைப் புலப்படுத்துவதற்காக அரசஞ் சண்முகனார் அவர்கள் அன்மொழித்தொகைக்குரிய தொல்காப்பிய நூற்பா விற்கு வலிந்தும் நலிந்தும் பொருள் கூறிப் பண்புத் தொகை, உம்மைத் தொகை, வேற்றுமைத் தொகை களின் கண்ணும், 'பாயினமேகலை' என்றாற்போல வரும் பெயரெச்சத்தின் கண்ணும் 'திருநுதல்' என்றாற் போலவரும் உரிச்சொற்றொடரின் கண்ணும் அன் மொழிப்பொருள் விரியுமென விளக்கஞ் செய்துள் ளார். மேலும் அவர், அன்மொழித் தொகைகளை விரிக்கு மிடத்து வெள்ளாடையாள் தகரஞாழலாள் பொற்றொடியாள் எனவிரியுமென்பார். இங்ஙனம் அரசஞ் சண்முகனாரும் உரையாசிரியர் பலரும் பல வாறாக விளக்கங் கூறியதற்குக் காரணம், ஆகுபெயர்க் கும் அன்மொழித் தொகைக்கும் உரிய இலக்கணங் களை வடமொழியில் ஒன்றாகக் கலந்து அமைத் தாற்போல, தமிழினுங் கூறுதல் வேண்டுமென விழைந்ததே யாகும் எனத் தெரிகிறது. தமிழியலார் கூறும் தொகைமொழியும் வடநூலார் கூறும் சமா சனும் மேற்போக்கில் சில ஒற்றுமை உடையவாயினும் அடிப்படையில் மிக்க வேறுபாடுடையவையாகும்.

ஆகுபெயர்க்கும் அன்மொழித் தொகைக்கும் உள்ள அடிப்படை வேறுபாடுகளை நோக்கின், ஆகு பெயர் சுட்டப்படும் பொருளொடியாதானும் ஓர் இயைபு பற்றி நிற்கும்; பெரும்பான்மையும் ஒரு சொல்லாக வரும்; சிறுபான்மை அடையடுத்தும் இருபெயரொட்டாயும் வரும்; இருபெயரொட்டாக வரின் அவற்றுள் ஒன்று பொருளொடு இயைபுபட்டு ஆகுபெயர்க்குரிய இயல்பினைப் பெற்று நிற்கும்; மற் றொன்று அவ்வாகு பெயர்ச் சொல்லுக்கு அடையாக, விளக்கமாக நிற்கும். அதாவது அறுகால், வகரக் கிளவி, கனங்குழல் எனநிற்கும்.

அன்மொழித்தொகை, வேற்றுமைத் தொகை முதலாய ஏனைய தொகைகளுக்குரிய சொற்களைச் சார்பாகக்கொண்டு, சினையிற்கூறும் முதலறிகிளவி முதலிய யாதொரு இயைபுமின்றி, இருசொல்லாகவே வரும். உம்மைத்தொகை அடிப்படையாயின் இரண்டற்கு மேலும் பெற்றுவரும். ஆகுபெயர் இரு வகை வழக்கிற்கும் உரிய மரபுபற்றித் தோன்றி நியதிப் பெயராக வரும். அன்மொழித்தொகை செய்யுள் வழக்கிற்குரிய மரபு பற்றித் தோன்றிப் புனைவுப் பெயராக வரும். ச.பா.

**அன்னபூர்ணா** இமயமலையில் உள்ள மலையுச்சியாகும். இமயமலையில் உள்ள மிகஉயர்ந்த

மலையுச்சிகளுள் இது பதினோராம் இடத்தைப் பெறுகிறது. இதன் உயரம் 8078 மீ. வட-மத்திய நேபாளத்தில் உள்ள இம்மலையுச்சி, அறுவடைகளின் தெய்வத் தாயாக நேபாள மக்களால் கருதப்படுகிறது. அன்னபூர்ணா (Annapoorna) மலையுச்சிக்குக் கீழேயுள்ள செழிப்பான போக்ரா மேட்டுநிலத்தை அன்னபூரணி அம்மனின் அருள்விழி பார்க்கிறது என்றும், அதுவே செழுமைக்குக் காரணம் என்றும் அவர்கள் நம்புகிறார்கள். ஒன்பது பேர் கொண்ட பிரெஞ்சுப் பயணக் குழுவினர், 1950-ஆம் ஆண்டில் மாரிசு எர்சாக்கு (Maurice Herzog) என்பாரின் தலைமையில், அன்னபூர்ணாவின் உச்சிவரை ஏறினர். அப்பயணக் குழுவினர் 1953-இல் எவரெசுட்டு மலையுச்சியை அடையும்வரை, இதுவே உலகில் மிக உயர்ந்த மலையுச்சியாகக் கருதப்பட்டது. அன்னபூர்ணா IV மலையுச்சியை, 1955-ஆம் ஆண்டு மே மாதம் 30-ஆம் நாள், எச். பில்லர் (H. Biller), எச். இசுடெயின்மெட்சு (H. Steinmetz) சே. வெல்லன் கேம்ப்பு (J. Wellencamp) ஆகியோர் சென்றடைந்தனர். அன்னபூர்ணா II மலையுச்சியை 1960-ஆம் ஆண்டு மே மாதம் 17-ஆம் நாள், ஆர். எச். கிராண்ட்டு (R.H. Grant), சி.சே. போனிங்டன் (C.J. Bonington) ஆகியோர் சேம்சு ஓ.எம். இராபர்ட்சு என்பாரின் தலைமையில் சென்றடைந்தனர். அன்னபூர்ணா III - மலையுச்சியை 1970-ஆம் ஆண்டில் அனைத்துச் சப்பானியப் பெண்களைக் கொண்ட குழுவொன்று சென்றடைந்தது.

**அன்னமீசு** என்பது ஆசுத்திரோ-ஆசிய (Austro-Asiatic) மொழிக் குடும்பத்தின் மான்-கிமிர் (Mon-Khmer) என்ற துணைக்குழுவில் வியட்-முவாங் (Viet-Muong) என்னும் பிரிவினுட்பட்ட வியட்நாமியர் பேசுகிற மொழிக்குச் சீனர் வழங்கிய பெயராகும். இதனை இந்தோ சீனாவின் கொச்சின் சீனா, வடவியட்நாம், தென்வியட்நாம், இலாவோசு (Laos), கம்போடியா ஆகிய நாடுகளில் வாழும் ஏறத்தாழ நான்கு கோடி மக்கள் பேசுகிறார்கள். இம்மொழியில் வட்டார வழக்குகள் (Dialects) பல உளவாயினும் ஆனோய் (Hanoi) பகுதியில் கற்றோரால் பேசப்படும் மொழி, இதன் பொதுநிலை மொழி (Standard Language) என்னும் தகுதியினைப் பெற்றுள்ளது.

அன்னமீசு (Annamese) மொழி, பெரும்பாலான சொற்களைத் தன் முந்தைமொழியான (Proto-language) மான்-கிமிரினின்றும், குரலிசை வேறுபாட்டினையும் (Tonal Distinction) இலக்கண வேறுபாட்டினையும் தாய் (Tai) மொழியினின்றும், இலக்கண இலக்கிய மெய்யியல் கலைச் சொற்களையும் எழுத்து வடிவத்தினையும் சீனத்தினின்றும் பெற்றுள்ளது. இம்மொழி ஏறத்தாழ ஐம்பது விழுக்காடு சொற்களைச் சீனத்தினின்று கடன் வாங்கியுள்ளது என்ற கருத்தும் உள்ளது.

இம்மொழி ஓர் ஓரசை (Monosyllabic) மொழியாகும். இதன்கண் சொற்கள் குரலிசையால் (Tone) பொருள்வேறுபாடு செய்யப்படுகின்றன. தொடரமைப்புகள் சொற்களின் வரன்முறைக் (Order of Words) கட்டுப்பாட்டால் பொருள் தந்து நிற்கின்றன. அடைகள்தாம் வினைச் சொற்களில் இலக்கண வேறுபாடுகளைக் குறிக்கின்றன. பெயர்ச்சொல், வினைச்சொல், இணைப்புச்சொல் (Conjunction), வாக்கியத்தின் இறுதியில் நின்று வினா, ஐயம் போன்றவற்றை உணர்த்தும் ஒட்டி (Clitics) ஆகிய நால்வகைச் சொற்களே இம்மொழியில் இடம்பெற்றுள்ளன.

முதன்முதல் கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் அறிஞர்கள் சு-நோம் (Chu-nom) என்ற சீன எழுத்து வடிவத்தை இம்மொழிக்கு அமைத்து இலக்கியம் படைத்தனர். பின்னர்க் கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் போர்த்துகீசியக் கிறித்தவத் திருத்தொண்டர்கள் இம்மொழிக்குக் குவோ-ங்கே (Quo-nge) என்னும் இலத்தீன் எழுத்து முறையை அமைத்தனர். இவ்வெழுத்து முறையில் வரிவடிவங்களில் பல ஒலிவேறுபாட்டுக் குறியீடுகள் (Diacritic Marks) பயன்படுத்தப்படினும் பள்ளிகளிலும் பிற இடங்களிலும் இதுவே இன்று மிகுதியும் வழக்கில் உள்ளது.

அன்னமீசு மொழிக்கென மரபு இலக்கியம் மிகுதியாக இல்லை. இம்மொழி அறிஞர்கள் மிகுதியும் சீன இலக்கியத்தில் ஈடுபாடு கொண்டிருந்தனர். எனினும் இக்கால நாடோடிப் பாடல்களும், செய்யுள் இலக்கியங்களும் இம்மொழிக்குச் சிறப்பைத் தந்து நிற்கின்றன.

மோ.இ.

**அன்னமையா** (**கி.பி. 1424 கி.பி.1505**) ஆந்திர மாநிலத்திலுள்ள திருப்பதியில் வாழ்ந்த தெலுங்கு மொழிக் கவிஞர். வேங்கடவனைப் பாடுவதையே பணியாய்க் கொண்டவர்; மறையோர் குலத்தவர்; பரத்துவாச குடியைச் சேர்ந்த நாராயண சூரி என்பவரின் திருமகனார். இவர் தாய் இலக்கமாம்பா ஆவார். இவர்முன்னோர் ஆந்திர மாநிலம் கடப்பை மாவட்ட இராசம்பேட்டை வட்டத்தில் உள்ள தாள்ளபாக்கத்தில் பரம்பரையாக வாழ்ந்தோராவர். இவர்கள் மறையோராயினும் வேளாண்மையில் ஈடுபட்டு வந்தனர். அன்னமையா பெற்றோர் வழியிலேயே திருவேங்கடப் பெருமாளிடம் பேரார்வம் கொண்டு வழிபாட்டில் ஈடுபட்டிருந்தார். இளமையிலேயே கல்வியும் தெய்வப் பற்றும் ஒன்றியதால், குடும்பத் தொழிலான வேளாண்மையில் நாட்டம் செலுத்தாமல் இறைவழிபாட்டிலேயே காலம் கழித்தார். இளமையிலேயே இவர்க்குத் திருமலம்மா, அக்கலம்மா என்னும் இரு மகளிரை மணம் செய்வித்த

தனர் பெற்றோர். இவர் அகோபில மடத்தை நிறுவிய ஆசாரியர்களுள் ஒருவராகிய ஆதி வண்சடகோப முனியிடம் வேதாந்தபாடம் கேட்டார்.

கல்வி கற்கையிலேயே வான்மீகி இராமாயணத்தை இசைப் பாடலாக எழுதினார். தெலுங்கு மாநிலம் எங்கும் இவர் புகழ் பரவியது. பிறகு பாடும் பணியையே முழுமையாக மேற்கொண்டார். சிறந்த கவிஞராக விளங்கினார். தம் வாழ்நாளில் இவர் முப்பத்தீராயிரம் இன்னிசைப் பாக்கள் (கீர்த்தனை) பாடியுள்ளார். இவையன்றிச் சிருங்கார சங்கீர்த்தனங்கள், ஆத்யாத்மிக சங்கீர்த்தனங்கள், சிருங்கார மஞ்சரி, பன்னிரண்டு சதகங்கள், இரண்டடி இராமாயணம், வேங்கடாசல மகாத்மியம், சங்கீர்த்தன இலட்சணம் ஆகிய நூல்களையும் இயற்றினார். இவரை, அன்னமய்யங்கார், அன்னமய்யாச்சாரியார், அன்னய்ய குரு, அன்னையார்யா, கோனேடி அன்னமையா என்றும் அழைப்பர். இவர் முதல் மனைவி தாள்ளபாக்கம் திம்மக்கா 'சுபத்திரா பரிணயம்' என்னும் நூலை எழுதினார். இரண்டாம் மனைவியின் மகன் பெரிய திருமலாசாரியார் (கி.பி. 1458-1554) தமிழிலும் தெலுங்கிலும் பல நூல்களை எழுதியுள்ளார். இவர் பரம்பரையினர் தெலுங்கு இலக்கியத்தில் நூற்றைம்பது ஆண்டுக்காலம் சிறந்து விளங்கினர். த.கோ

**அன்னா அய்வநோவ்னா** (கி.பி. 1693-1740) கி.பி. 1730 முதல் 1740 வரை உருசியா நாட்டின் அரசியாயிருந்தவர். மாசுகோவில் கி.பி. 1693-ஆம் ஆண்டில் பிறந்தவர். மகாபீட்டர் இவரை வளர்த்து ஆளாக்கினார். கூர்லாந்து (Courland Duke) கோமகன் பிரடரிக்கு வில்லியம் (Frederick William) என்பாரை இந்த அம்மையார் மணம் செய்து கொள்ள வேண்டுமென மகாபீட்டர் ஏற்பாடு செய்தார். திருமணமான சிறிது காலத்திற்குள் பிரடரிக்கு வில்லியம் காலமானார். கணவர் காலமான பின், அன்னா அய்வநோவ்னாவின் (Anna Ivanovna) வாழ்வில் மாற்றம் ஏற்பட்டது. இவர் கி.பி. 1730-இல் உருசியாவின் அரசியாக முடிசூட்டிக் கொண்டார். இவர் 10 ஆண்டுகள் வல்லாட்சி செய்தார். இவரது வெளி நாட்டுக் கொள்கையால் உருசியாவின் பெருமை வெளிப்படலாயிற்று. ஆனால், உள்நாட்டில் பொருளாதார வளர்ச்சிக்கும் கல்வி முன்னேற்றத்திற்கும் இவர் செய்த பணிகள் மிகக் குறைவு. இவர் போலந்து வாரிசுரிமைப் போரில் பங்குகொண்டு வெற்றி பெற்றார். இவர் ஆசுத்திரியாவுடன் (Austria) இணைந்து துருக்கியுடன் போரிட்டார். பெல்கிரேடு (Belgrade) உடன்படிக்கையின்படி அசாவு (Azov) என்ற ஊரைப் பெற்றார். இவர் கி.பி. 1740-இல் காலமான போது மகாபீட்டரின் மகள் எலிசபெத்து அரியணை ஏறினார்.

**அன்னி** சங்கப் பாடல்களில் குறிப்பிடப் பெறும் ஒரு குறுநில மன்னன். சோழ நாட்டில் பாபநாசத்திற்கு அருகில் உள்ள 'அன்னிகுடி' இவன் ஊராக இருக்கலாம் என்பர். இவனைப் பற்றிய செய்திகள் அகநானூற்றிலும் நற்றிணையிலும் வருகின்றன. அவை ஒன்றுக்கொன்று மாறுபடுகின்றன. இவன் மகள் அன்னி மிஞிலி எனப்பட்டாள். அர.சி.

**அன்னி பெசண்டு** (கி.பி. 1847-1933) இலண்டன்மாநகரில் வாழ்ந்து வந்த ஓர் ஐரிசுக் (Irish) குடும்பத்தில் பிறந்தவர். பெற்றோர் இட்ட பெயர் அன்னி உட்டு (Annie Wood). திருமணமான பின் திருமதி அன்னி பெசண்டு (Annie Besant) என்று இவர் அழைக்கப்பெற்றார்.

இவர் கி.பி. 1893-இல் பிரமஞான சபைப் (The Osophical Society) பணிக்காக இந்தியாவுக்கு வந்து சேர்ந்தார். நாவன்மையாலும் எழுத்தாற்றலாலும் அடுத்த 40 ஆண்டுகளில் இவர் இந்தியாவின் மிகப் பெரிய அறிஞர்களுள் ஒருவராகத் திகழ்ந்தார். சென்னை அடையாறு இவர்தம் பணிகளுக்கு உரிய இடமாக அமைந்து புகழ்பெற்றது.

தேசிய இயக்கத்திற்கு அன்னி பெசண்டு அம்மையார் உறுதுணையாக இருந்தார். அந்தக் கண்ணோட்டத்துடன் செய்திகளை வெளியிட 'நியூ இந்தியா' என்ற நாளிதழை வீறுடன் நடத்தினார். "அந்த இதழைப் பின்பற்றியே தமிழ் இதழ்கள் நடத்த நான் தூண்டப்பட்டேன்", என்கிறார் திரு. வி.க. அவர் அம்மையாரைக் குறித்து எழுதிய போதெல்லாம் அன்னை பெசண்டு என்றே எழுதி வந்தார்.


அன்னிபெசண்டு அம்மையார்

மகாத்மா காந்தி இந்திய அரசியல் வானில் புகும் வரை, பெருஞ் செல்வாக்குப் பெற்றிருந்த தலைவர் அன்னி பெசண்டு அம்மையாரே ஆவர். இவர் 'ஓம்ரூல்' (Home Rule) என்னும் தன்னாட்சி இயக்கத்தைத் தொடங்கித் திலகருடன் சேர்ந்து பணியாற்றினார். கல்கத்தாவில் 1917-இல் நடைபெற்ற

இந்தியத் தேசிய காங்கிரசு மாநாட்டிற்கு இவர் தலைமை தாங்கினார். இந்தப் பெரும் பதவிவகித்த முதல் பெண்மணி இவரே ஆவார். இவரை ஆங்கிலேய அரசு சிறையில் அடைத்தபோது அச்செய்தி, அமெரிக்காவிலும் பரபரப்பை ஏற்படுத்தி,அமெரிக்கத் தலைவர் உட்ரோ வில்சனின் (Woodrow Wilson) கவனத்தையும் ஈர்த்தது.

காந்தியடிகள் அரசியல் தலைமை ஏற்றபிறகு, அன்னி பெசண்டு ஏனைய பணிகளில் ஈடுபட்டார். பல்லாண்டுகள் (1907-1933) பிரம ஞானசபையில் (Theosophical Society) தலைவராக இருந்தார். சாரண இயக்கத்தை (Scout Movement) இந்தியாவில் இவர் பரப்பினார்; கல்வித் துறையில் பெரும் பணியாற்றினார்.இவர் காசியில் தொடங்கிய பள்ளி, பிற்காலத்தில் காசி இந்துப் பல்கலைக் கழகமாயிற்று. இரவீந்திரநாத தாகூரின் ஆதரவுடன் இவர் சில ஆண்டுகள் சென்னையில் தேசிய பல்கலைக் கழகம் ஒன்றை நடத்தி வந்தார்.

இந்து சமயத்தைப் பற்றி இந்துக்களே கேவலமாக நினைத்துக் கொண்டிருந்தபோது, அன்னி பெசண்டு அந்தச் சமயத்தின் அருமைகளையும் பெருமைகளையும் பாரெங்கும் எடுத்துரைத்தார். இந்து சமயம் சிறந்த நிலையில் பேணப்படாவிடில், இந்தியாவுக்கு எதிர்காலம் கிடையாது என்று முழங்கினார்.

இந்திய மகளிர் சங்கம் நிறுவி, இளமைத் திருமணத்தை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தார். பெண்களுக்குச் சம உரிமை வழங்கவும், மாதர் மறுமணம் செய்துகொள்ளவும் குரல் கொடுத்தார். தம் வாழ் நாளெல்லாம் இந்தியரின் மேம்பாட்டுக்கும் பெண்களின் விடுதலைக்கும் உழைத்தார்.

இவர் 1933-இல் சென்னையில் காலமானார். இவருடைய சமாதி அடையாற்றில் உள்ளது. இவர் பெயரால் சென்னை அடையாற்றுப் பகுதியில் ஒரு நகரமும் மேனிலைப் பள்ளியும், காசியில் ஒரு கல்லூரியும் பம்பாயில் ஒரு நெடுஞ்சாலையும் உள்ளன. சென்னை மெரினாக் கடற்கரையில் இவர் திருவுருவச் சிலை நாட்டப்பெற்றிருக்கிறது. சோமலெ.

**அன்னி மிஞிலி:** அன்னியின் மகள் மிஞிலியாவாள். அன்னி, மிஞிலி ஆகிய இருவர்தம் வரலாற்றுக் குறிப்புகள் அகநானூறு (45:9—12; 126:12-17; 145: 10—3; 196:8—12; 262:1—13), நற்றிணை (180;6-8) ஆகிய நூல்களில் காணப்படுகின்றன. அன்னி, சோழ நாட்டுப் பாபநாசத்திற்கு அருகில் உள்ள ஓர் ஊரின் சிற்றரசன். அவன் இருந்தவூர் பிற்காலத்தில் அவன் பெயராலேயே அன்னிகுடியென்று வழங்கி வருகிறது. இது தஞ்சை மாவட்டத்துப் பாபநாசம் புகைவண்டி நிலையத்திற்கு அருகில் உள்ளது. இவனைப் பற்றிய வரலாறு இருவகையாக உள்ளது. ஒரு வகை, வெள்ளி வீதியார் (அகம் 45), நக்கீரர் (அகம் 126), கயமனார். (அகம் 145) ஆகியோரும் ஆசிரியர் பெயர் தெரியாத ஒரு நற்றிணைப்பாடலும் (நற். 180) கூறும் வரலாறு. அன்னி இன்றைய மயிலாடுதுறைக்கு மேற்கிலிருந்த திருவழுந்தூரில் வாழ்ந்த வேளிர் மரபினனாகிய திதியனுக்குரியதும், நந்திபுர விண்ணகரம் என்னும் நாதன் கோயிலை அடுத்த குறுக்கையென்னும் ஊரிலுள்ளதும் ஆகிய காவல்மரம் (புன்னை) பூத்திருக்கும்பொழுது வெட்டிச்சாய்த்தான். அன்னியின் செயலினைத் தடுக்க எவ்வி என்னும் சிற்றரசன் எவ்வளவோ முயன்றும் முடியவில்லை. திதியனுக்கும் அன்னிக்கும் போர் மூண்டது. அப்போரும் புன்னையை வெட்டி வீழ்த்திய குறுக்கையிலேயே நடந்தது; அப்போரில் திதியன் வெற்றி பெற்று அன்னியைக் கொன்றான் (நக்கீரர் அகம் 126;12-17).

அகநானூற்றில் பரணர் இது பற்றிக் கூறும் வரலாறு வேறுவகையாக உள்ளது. கோசர்களுக்குச் சொந்தமான வளம்மிகு புன்செய் நிலத்தில் பசிய இலைகள் நிறைந்த பயிற்றங்கொல்லையில் அன்னியின் பசு மேய்ந்தது. அன்னி அதனைக் கோசரிடம் மறையாமல் உரைத்தான். பசு மேய்ந்த சிறு பிழைக்கு இரங்கி அருளாமல் அக்கோசர்கள் அன்னியின் கண்களைப் பறித்து விட்டனர். அதனால் சினம் கொண்ட அன்னியின் மகள் மிஞிலி என்பவள் அன்னிக்கு இழைக்கப்பட்ட கொடுமையை ஆற்றல் வாய்ந்த படையினை உடைய திதியன் என்பவனுக்கு உரைத்தாள். அவன்அக்கோசரோடுபொருது அவரைக்கொன்றான். திதியன் கோசரோடு போர்புரிந்த இடம் அழுந்தூர். அவ்வாறு கொல்லும்வரை, கலத்தில் இட்டு உண்ணாமலும், தூயதாகிய உடையினை உடாமலும், சினம் மாறாமலும் இருந்த மிஞிலி, கோசர் இறந்த பிறகு, தன் நோன்பை விட்டுச் சினம் மாறிப் பெரிதும் மகிழ்ந்தாள்.

அன்னிமிஞிலியை ஆணாகக் கூறுவாரும் உளர். அபிதான சிந்தாமணியும், அ. நாராயணசாமி ஐயரின் நற்றிணை உரையும் மிஞிலி அன்னியின் புதல்வன் என்று கூறிப் பரணர் பாடிய அகநானூற்றுப் பாடல்களைச் (அகம் 196;262) சான்று காட்டும்.

சினத்திற் கொண்ட படிவம் மாறாள் (அகம் 262: 5—8) 'இன்னுயிர் செகுப்பக் கண்டு சினம் மாறிய அன்னிமிஞிலி போல' (அகம் 282:11, 12) என்று பரணர் அன்னிமிஞிலியைப் பெண்ணாகவே கூறியிருத்தலால் மிஞிலி அன்னியின் மகளாகவே கருதப்பட வேண்டும். மேலும் அன்னிமிஞிலி வேறு: மிஞிலி வேறு என்பதைப் பரணரின் பாடல்கள் தெளிவிக்கின்றன. மிஞிலி என்பவன் நன்னன் என்பானுடைய படைத் தலைவன். இவனைப் பரணர் நற்றிணைப் பாடலில் (265:3—4) 'பெருமகன் பூந்தோள் யாப்பின் மிஞிலி

என்பார். மிஞிலி நன்னன் சார்பாகப் போரிட்டு ஆய்எயினன் என்பானைப் பாழிப்பறந்தலையில் நண் பகல் போதில் கொன்றான் (அகம்:5—9) என்று பர ணர் குறிப்பிடுகிறார். பரணரின் பிற அகநானூற்றுப் பாடல்களும் (அகம் 181:3—5: 142:9—13:396:4—6) இச் செய்தியை அறிவிக்கின்றன. சே.இரா.

**அன்னிய சுரம்**: கருநாடக இசையில் ஒரு மேளகருத்தா ராகத்தில் தாய் இராகத்தின் சுரம் அல்லாத மற்றொரு மேளகருத்தா இராகத்தின் சுரம் ஒலித்தால், அது அன்னிய சுரம் எனப்படும். இது சில இராகங்களிலேயே வரும். அன்னியசுரம் இராகத் திற்கு அழகூட்டுவதாக அமைகிறது.

எடுத்துக்காட்டு: பைரவியில் சதுசுருதிதைவதம். இதனை நட்சத்திரக் குறியினால் குறிப்பிடுவர்.

**அன்னியூர்** சோழ நாட்டில் காவிரியின் வட கரைப் பகுதியிலுள்ள தேவாரப்பாடல் பெற்ற தலங் களுள் ஒன்று. தஞ்சை மாவட்டத்தில் மயிலாடு துறைக்கு அருகிலுள்ள நீடூருக்கு மேற்கில் இரண் டரைக் கல் தொலைவில் உள்ளது. இக்காலத்தில் இவ் வூர் பொன்னூர் என அழைக்கப்படுகிறது. திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகிய இருவரின் தேவா ரப் பதிகங்கள் இத்தலத்திற்குண்டு. இது வருணன் வழிபட்ட தலம். இங்கு வருணதீர்த்தம் உள்ளது. இறைவன் பெயர் ஆபத்சகாயநாதர்; இறைவி பெயர் பெரியநாயகி.

**அன்னை (கி.பி. 1878-1973)**: இவர் அரவிந் தரைஉலகறியச் செய்தவர். அன்னையின் இயற்பெயர் மிர்ரா ஆல்பாசா. இவர் கி.பி. 1878-ஆம் ஆண்டு பிப்பிரவரி 21-இல் பாரிசில் பிறந்தார். தந்தை மாரிசு; தாய் மத்தில்டா இசுமாலூன். இருவரும் சிறந்த கல்வியாளர்; மிகுந்த நெஞ்சுறுதி படைத்தவர்கள். சமயம் என்பது மூடத்தனமானதென்றும், கோழை களுக்குரியதென்றும், கற்பனைத் திறத்தில் காலத் தைச் செலவிடுவது என்றும் கருதியவர்கள்.

மிர்ரா, தமது 19 வயதுவரை பெற்றோர்களுடன் பாரிசிலேயே வாழ்ந்தார். கண்டிப்பான ஒழுக்க நெறியில் வளர்க்கப் பெற்றார். தென்னிசுப் பந்தாட் டத்தில் (Tennis) இவர் திறன் வாய்ந்தவர். இசை, கவிதை, ஓவியம் ஆகிய கலைகளில் ஈடுபாடு மிகுதி. பியானோ வாசிப்பதிலும் ஓவியம் தீட்டுவதிலும் கவிதை எழுதுவதிலும் தம் நேரத்தைச் செலவிடு வார். உறக்கத்திலும் இவருக்குக் கவிதைக் கருத்துத் தோன்றும். விழித்தெழுந்து கவிதை எழுதிவிட்டே உறங்குவார்.

இவர் கி.பி. 1897-ஆம் ஆண்டில் என்றி மோரி செட்டு என்ற ஓவியரை மணந்தார். மிர்ரா 1908-ஆம் ஆண்டு வரையில் ஓவிய உலகிலேயே வாழ்ந்தார்.



அன்னை

ஆன்மிக எண்ணம் வலுப்பெற்றதால் இவர் தம் கணவரிடமிருந்து பிரிந்தார். அன்றுமுதல் தியான வாழ்வு மேற்கொண்டார். 'தியானம் குறித்தோ தியானம் எவ்வாறு செய்வது என்றோ எனக்கு யாரும் கற்பிக்கவில்லை. நான் மரத்தடியில் அமர்ந் திருப்பேன். அப்போது, ஒருவகை மன அமைதியும் ஒரு முகச் சிந்தனையும் என்னிடம் குடிகொள்வதை உணர்வேன். புறவுலக நினைவுகள் அறவே அகன்று, நான் மரத்தோடு மரமாக ஒன்றிப் போவேன். அப் போது எனக்குப் பேரானந்தமாக இருக்கும்' என்று இவர் எழுதியுள்ளார்.

இவர் தமது ஆன்மிக ஆராய்ச்சியின்போது, பல்வேறு சமய, சமூக, அரசியல் முறைகளைக் கூர்ந்து, ஆழ்ந்து, பாகுபடுத்திப் பார்த்தார். பண்டைக் காலப் பழக்க வழக்கங்களிலிருந்து விடுபட வேண்டிய இன்றியமையாமையை உணர்ந்தார்.

இவர், 1910-ஆம் ஆண்டில் மறுமணம் செய்து கொண்டார். கணவருடன் இந்தியாவிற்கு வந்தார். பல இடங்களைச் சுற்றிப் பார்த்து இறுதியில், அரவிந் தரும் அவர்தம் மாணவர்களும் புதுச்சேரியில் வாழ்ந்து வந்த வளமனையில் 1914-ஆம் ஆண்டு

மார்ச்சு 19-ஆம் நாள் புகுந்தார். அரவிந்தரைக் கண்டார். இருவரும் ஒருவரை ஒருவர் அறிந்தவரில்லை எனினும் புரிந்து கொண்டு அன்புடன் உரையாடினர்.

'ஆழ்ந்த அறியாமையில் அமுழ்ந்தியுள்ள பல்லாயிரக்கணக்கானவர்கள் இருக்கிற இந்த உலகில், நேற்று நாம் சந்தித்த மனிதரும் இருக்கத்தான் செய்கிறார். அவர் இங்கு இருப்பது ஒன்றே இங்குள்ள இருளை நீக்கி ஒளியேற்றும் நாள் ஒன்று வரும் என்பதைப் புலப்படுத்துகிறது என்று மிர்ரா தம் குறிப்பேட்டில் சந்திப்பின் மறுநாளே எழுதினார்.

பின்னர் அரவிந்தரின் தத்துவங்களில் ஈடுபட்டு, ஆன்மிக நெறிக்குரிய இந்தியப் பண்பாட்டின் அடிப்படைகளை அறிந்தார். மனித இன ஒற்றுமைக் குறிக்கோளை அறிந்து கொண்டார். தெய்வ வாழ்வுக்குத் தியானத்தால் ஒருமைப்படுத்தும் மண்ணில், ஒரு விண்ணகம் அமைக்கும் வழிகளைக் கண்டறிந்தார்.

நனவு நிலை, புலனுணர்வு நிலை ஆகிய இவற்றில் புதிய செயல் முறைகளை வகுப்பதற்குத் துணையாகும் நிலை மாற்றத்தைக் கண்டறிவதில் மிர்ரா முனைந்தார். இவரது ஆன்மிகப் பயணம் தொடரத் தொடரத் தம்மைச் சிந்தனையாளர் என்றும் மன வுறுதிப்பாடு மிக்கவர் என்றும் உலகறியச் செய்தார்.

புதுச்சேரியில் அரவிந்தரும் அன்னையும் (மிர்ரா) இணைந்து நிறுவிய ஆசிரமத்தில் உலகின் பல்வேறு சமூகத்தினருக்கும் வழங்கிய அறிவுரைகளில், இவர் தம் தெளிவான, விழிப்புணர்வுமிக்க, மறைமொழிகளைக் காணலாம்.

மனிதனுக்கு உண்டாகும் தூண்டுதல்களின் தோற்றத்தை உணர்ந்து கொள்வதற்கு மனிதனைப் பற்றியும், உடலைப் பற்றியும், அதன் இயக்கத்தைப் பற்றியும், மனிதனைச் செயற்படுத்துகிற எதிர்வினைகள் பற்றியும் அறிந்துணர்வதே தன்னுணர்வின் முதல் நிலை என்பதை அன்னை போதித்தார். இவர் தம் போதனைகளில் சில வருமாறு:

''நன்மையும் தீமையும் சமநிலையானவை. இருள், ஒளி என எத்தனையோ முரண்கள் உள்ளன. இவற்றைத் தனித் தனியாகப் பகுத்தறியும் வடிகட்டியாக ஒவ்வொருவரும் விளங்க வேண்டும். உடல், உயிரோடிருப்பதற்கு இதுவே முதற்காரணம்''.

''உலகம் வியக்கத்தக்க ஒன்று; கிடைத்தற்கரிய பேறு; மக்கள் இதனை உணரவில்லை. இவ்வுலகில் மிக உயர்ந்த பருப்பொருள்களும் மேலான ஆன்மிகமும் ஓர் ஒழுங்கமைதியுடன் அமைக்கப் பெற்றுள்ளன. தனி மனிதனிடம் இவ்விரண்டும் இணைந்துள்ளன. ஏதோ ஒரு மைய உயிர்ப்பாற்றலின் ஆளுகைக்கு இவை உட்பட்டிருக்கின்றன''.

''எல்லாவகைத் தத்துவங்களையும் கோட்பாடுகளையும் ஆழ்ந்து, நுணுகி ஆராய்ந்து, சிந்தனை முறைகள் அனைத்தையும் உற்றறிந்து, முற்றிலுமாக உணர்ந்து கொண்ட பின்னரே மனவளர்ச்சி முழுமையாகிறது. எல்லாக் கோட்பாடுகளும் உண்மைதாம் என்ற மெய்யுணர்வு ஏற்படுவதைத் தொடர்ந்து, இவற்றை ஒருங்கிணைக்க வேண்டும் என்ற உணர்வு வளர்கிறது. அந்த ஒருங்கிணைப்புக்கு அப்பால் ஒலி மிகுந்த உண்மைப் பொருள் ஒன்று உள்ளதையும் உணரலாம்''.

''நிறைவு செய்யப்படாத எந்த ஓர் ஆசையும், தடைகளில் மோதிக் கொள்ளும் எந்த ஒரு தூண்டுதலும், மனத்திற்குப் பிடிக்காத எந்த ஒரு தூண்டுதலும், வெளியுலகத் தொடர்பும், மிக எளிதில் சோர்வையோ புரட்சியையோ ஏற்படுத்தி விடுகின்றன.''

''வாழ்வில் ஏற்படும் துயரங்களை அவற்றின் புறத் தோற்றங்களைக் கொண்டு மதிப்பிடாதே. உண்மையில் அவை பெருஞ்செயலுக்கான வழியாகும்.''

''அனைத்தையும் பெற அனைத்தையும் துறக்கத் தெரிந்திருக்க வேண்டும். மேலும், அதிக நிறைவுடன் படிக்கப்பழையதைக் களைந்தெறியத் தெரிந்திருக்க வேண்டும்.'' இந்தப் பேருண்மைகளையெல்லாம் தியானத்தின் வழியே படிப்படியாக அன்னை தெரிந்து கொண்டார்.

அரவிந்தர் ஆசிரமத்தில் தொடக்கத்தில் ஒரு சில மாணவர்களே இருந்தார்கள். அன்னை, உலகியலோடு ஒன்றிய சிந்தனைக்கும் செயலுக்கும் மனித இனத்தை உயர்த்தும் அரவிந்தரின் ஆற்றலனைத்தையும் பரப்பினார். மனித இனத்திற்குப் பின், மற்றோர் இனம் தோன்றும்; விலங்கோடு ஒப்பிடப்பெற்ற மனிதன் எப்படியோ, அப்படியே மனிதனுக்கு அப்புதிய இனம் இருக்கும். முதலில் உணர்வு, மாற்றம் அடைய வேண்டும்; அதன் பின்னரே வாழ்க்கை; அடுத்துத் தோற்றங்கள். இந்தப் படிமுறையில் புதிய படைப்பு நிகழும்'' என்ற பேருண்மை நாள்தோறும் பரவப் பரவ மாணவர்களின் எண்ணிக்கையும் பெருகியது. புதிய புதிய இல்லங்கள் கட்டப் பெற்றன. ஆசிரமத்தார் தன்னிறைவுடன் வாழக் கற்றுக்கொண்டனர்.

அரவிந்தர் 1950-ஆம் ஆண்டில் இயற்கை எய்தினார். ஆசிரமத்தின் பொறுப்பையும் பணியையும் அன்னை ஏற்றார். ஈராண்டுகளுக்குப்பின் 'அரவிந்தர் பன்னாட்டுக் கல்வி நிலையம்' நிறுவப் பெற்றது. இங்கு, அரவிந்தர் அறிவித்த சுதந்திர முன்னேற்றக் கல்வி முறையின் அடிப்படையில் பள்ளிப் படிப்பு முதல் பல்கலைக்கழகக் கல்விவரை கற்பிக்கப்படு

கிறது. அன்னை, மாணவர்களுக்கு 1958-ஆம் ஆண்டு வரையில் பிரஞ்சு மொழி கற்பித்து வந்ததுடன் தியானப் பாடங்களையும் கற்பித்தார்.

சிறிதும் சோர்வடையாத நல்லாசிரியையாகிய அன்னை தொடர்ந்து மாணவர்களுக்கு வழிகாட்டினார். உலகெங்கிலுமிருந்து வந்த பார்வையாளர்களைச் சந்தித்தார். அறிவுத் திறனால் இயங்கும் மனத்தின் அரசு, ஆன்மிக அரசு ஆகியவை அமைய வேண்டும் என அவர் வலியுறுத்தினார். இவரது சிந்தனையே ஆன்மிக அரசுதான். இவ்வுலகில் உள்ளவர்கள் எத்துணை வல்லவர்களாயினும், தன்னந்தனியாக இவ்வுலகை மாற்றிவிடவோ புதிய உலகின் மேம்பட்ட உண்மையினை அடையவோ இயலாது என்று அன்னை அடிக்கடி கூறுவார்.

மனித குல ஒருமைப்பாட்டை ஏற்படுத்தும் புதிய முயற்சிகளில் முனைந்து ஈடுபடுவதற்கு உலகம் ஆயத்தமாக உள்ளது என்பதை உணர்ந்த அன்னை, 1968 ஆம் ஆண்டில் தமது 90-ஆம் வயதில் அரவிந்தர் காட்டிய நெறியின்படி அனைத்துலக மக்களும் ஒருங்கிணைந்து வாழ்வதற்கு 'ஆரோவில்' (Auroville) என்னும் நகரத்தை அமைத்தார். இப்பன்னாட்டு நகரம் மத்திய அரசின் மேற்பார்வையில் இப்போது உள்ளது. அன்னை 1973-ஆம் ஆண்டு தமது 95-ஆம் வயதில் இயற்கையெய்தினார். த.கோ.

**அன்னை தெரசா மகளிர் பல்கலைக் கழகம்**: சமுதாயத்தில் செம்பாதியாக இருக்கும் பெண்களின் நிலையை அறிந்து கொள்ள எந்த விதமான ஆய்வும் புள்ளி விவரமும் இல்லாத நிலையில், அவர்களின் நிலையை உயர்த்த வழி முறைகளை அறியவும், ஆய்வினை மேற்கொள்ளவும் தமிழக அரசு, ''மகளிர் பல்கலைக் கழகத்தை'' மகளிருக்காகக் கோடைக்கானல் மலையில் நிறுவியுள்ளது.

முதுகலைக் கல்விக்குப் பின் ஆய்வினை மேற்கொள்வதும், சமூக நலத் திட்டங்களுக்குப் பொருள் உதவி செய்வதும், சிறந்த ஆக்கவழிச் சிந்தனைகளைத் தருவதும் இப்பல்கலைக் கழகத்தின் சீரிய நோக்கங்களாகும்.

பிற பல்கலைக் கழகங்களைப்போல் கலை, அறிவியல், தொழில் நுட்பப் பட்டதாரிகளையும், முதுகலைப் பட்டதாரிகளையும் உருவாக்குவது இதன் நோக்கமன்று. சமூக, பொருளாதார, அரசியல், சட்டம், பண்பாட்டு நிலைகளில் பெண்கள் நிலையை ஆய்ந்து, சமூகத்தில் அவர்கள் ஒடுக்கப்பட்டவர்களாக இருக்கும் நிலையை அகற்றுவதே இப்பல்கலைக் கழகத்தின் அடிப்படை நோக்கமாகும்.

தமிழகத்தில் பெண்களால் பெண்களுக்காக ஏற்படுத்தப்பட்ட ''முன் மாதிரியான முதல் பல்கலைக் கழகம், அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகம்'' என்னும் சிறப்பு இப்பல்கலைக் கழகத்திற்கு உண்டு.

அன்னை தெரசா மகளிர் பல்கலைக் கழகம் 1984 மார்ச்சு மாதம் தமிழக முதலமைச்சர் மாண்புமிகு டாக்டர் எம்.ஜி. இராமச்சந்திரன் அவர்கள் தலைமையில் அன்னை தெரசா அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. இப்பல்கலைக்கழகத்தின் முதல் துணைவேந்தர் பேராசிரியர் திருமதி வசந்தி தேவி.

அறிவியல், தொழில் நுணுக்கம் ஆகியவை விரைந்து வளர்ந்து வரும் இந்நாளில் சமூகப் பொருளாதார மாற்றம் மிக வேகமாக ஏற்படுகிறது. இத்தகைய சூழ்நிலையில் இந்திய அரசியல் சட்டம் அளித்திருக்கும் சமத்துவ உரிமையை நடைமுறைப்படுத்த, இப்பல்கலைக் கழகத்தின் தோற்றம் மிகவும் இன்றியமையாதது.

தாழ்வு மனப்பான்மையோடு யாரையேனும் சார்ந்த நிலையில் இருக்கும் பெண்களுக்கு நம்பிக்கையையும் தனித்து நிற்கும் துணிவையும் தர இப்பல்கலைக்கழகம் பணி புரிந்து வரும்.

பல்வேறுபட்ட மகளிர் நிறுவனங்களோடும் குழுக்களோடும் தொடர்பு கொண்டு, வாழ்வின் பழைய மதிப்பீடுகள் மாறுவதை உணர்ந்து, பழைய மரபுகள் மாற்றப்படவும், புதிய மரபுகள் தோற்றுவிக்கப்படவும் இப்பல்கலைக் கழகத்தில் ஆய்வுகள் மேற்கொள்ளப்படும்.

பொதுவாக, சமூக நல நிறுவனங்கள் பெண்களுக்காகச் செய்யும் பணிகளை மதிப்பீடு செய்து, மேலும் அவர்களுக்கான உதவி செய்தலும் இப்பல்கலைக் கழகத்தின் கடமைகளுள் ஒன்றாகும். பெண்களின் நலனுக்காகச் செயற்படும் மகளிர் நிறுவனங்களோடு தொடர்பு கொண்டு அவர்களின் நிலையை உயர்த்த இப்பல்கலைக்கழகம் உதவி செய்யும்.

தமிழ்நாடு சமூக நலத்துறையிலுள்ள பெண்கள் நலத் துறையுடன் இணைந்து இப்பல்கலைக் கழகம், 1. மக்கள் தொகை அமைப்பு, 2. கல்வியின் தரத்தில் ஏற்றத்தாழ்வு, 3. கல்வி முறை அமைப்பு, 4. வேலை வாய்ப்பு நிலைமை, 5. வருவாய்த் தரம், 6. உடல்நலம் பற்றிய அமைப்பு முறை அதற்குரிய வசதி வாய்ப்பு, 7. குடும்பநலத் திட்டம் அதில் பங்கு பெறும் நிலைமை, 8. பெண்கள் நலத் திட்டம் 9. அரசியலில் பெண்கள், 10. சட்டத்தில் பெண்ணுரிமை நிலை போன்றவற்றை அறியப் புள்ளி விவரங்களைச் சேகரிக்க முயன்று வருகிறது.

மகளிர் பல்கலைக் கழகத்தில் எம்.பில்., ஆராய்ச்சிப் படிப்புக்காகப் பின்வரும் துறைகள்

உள்ளன: 1. பொருளாதார வளர்ச்சி, 2. கல்வி, 3. ஆங்கிலம், 4. குடும்ப வாழ்வு அமைப்பு, 5. வரலாற்றியல், 6. சமூகவியல், 7. தமிழ்.

இப்பல்கலைக் கழகத்தில் பகுதிநேர எம்.பில்., பிச்.எச்டி. ஆய்வு ஆகியவை பள்ளி ஆசிரியர்களுக்கும் பிற துறையில் பணிபுரிபவர்களுக்கும் வழங்கப்படுகின்றன. டி.லிட். (D Litt.) பட்டத்திற்கு இங்குப் பணிபுரியும் பேராசிரியர்கள் மட்டுமன்றித் தகுதியுடைய பெண்களும் இந்தப் பல்கலைக் கழகத்தில் பதிவு செய்து கொள்ளும் வாய்ப்பு அளிக்கப்பட்டுள்ளது. கே.வ.

**அனக்சா கோரசு** (கி.மு. 500 – 428) கிரேக்கத்தைச் சேர்ந்த அயோனியா (Ionia) நாட்டைச் சார்ந்தவர். இவர் ஏதென்சின் முதல் தத்துவ ஞானி; பெரிகிலிசின் (Pericles) நண்பராகவும் ஆசிரியராகவும் விளங்கினார். சமயச் சார்பின்றிக், கடவுளைக் காரணம் காட்டாமல், அறிவியல் முறையில் இயற்கையை விளக்கியதால், இவர் நாத்திகர் என்று கருதப்பட்டு ஏதென்சு அரசரால் தண்டிக்கப்பட்டார்.

இவருக்கு முற்பட்ட ஏராக்லிட்டசு (Heracleitus) என்பவர், இயற்கை மாறுதலுக்குட்பட்டது என்றார். இவர் இயக்கத்தையும் மாறுதலையும் தவிர எதுவும் நிலையானதன்று என்ற கருத்தைக் கொண்டிருந்தார். ஆனால், எலியாட்டிகர்கள் (Eleatics) இவர் கூறிய இயக்கத்தையும் மாறுதலையும் மறுத்தனர். இவ்வாறு முரண்பட்ட இரண்டு கருத்துகளையும் இணைக்கும் பாலமாக அனக்சா கோரசு (Anaxagoras) விளங்குகிறார். அடிப்படைப் பொருள் நிலையானது; மாறாதது; எதுவும் புதியதாகத் தோன்றுவதோ அழிவதோ கிடையாது. இதனால், மாறுவதே இல்லை என்று வாதிட முடியாது. அடிப்படைப் பொருள்களின் கலவையால் பல புதிய பொருள்கள் தோன்றுகின்றன; அந்தக் கலவையிலிருந்து அடிப்படைப் பொருள்கள் பிரியும்பொழுது அவை அழிகின்றன; எனவே தோற்றமும் அழிவும் கலவைக்கும் பிரிவுக்கும் தானே தவிர, அடிப்படைப் பொருள்களுக்கு அல்ல; மூலப் பொருளில் எவ்வித மாறுதலும் ஏற்படுவதில்லை.

உலகின் மூலப்பொருள், இவருக்கு முன்னிருந்தவர்கள் கூறியபடி, ஒன்றோ நீர், நிலம், நெருப்பு, காற்று என்ற நான்கு தனிப்பொருள்களோ அன்று. அடிப்படைப் பொருள்கள் பல. காற்று, நெருப்பு, நீர், மண் முதலியவை தனிப் பொருள்கள் அல்ல. அவை, கூட்டுப்பொருள்கள் என்று இவர் கூறுகிறார். எல்லாப் பொருள்களின் கூறுகளும் மற்ற எல்லாப் பொருள்களிலும் இருக்கின்றன. எந்தப் பொருளுமே கலப்பற்ற தனிப் பொருள் அன்று. எடுத்துக்காட்டாக ஊன் அல்லாததிலிருந்து ஊன் வரமுடியாது. அதனால், உண்ணும் பொருள்கள் எல்லாவற்றிலும் ஊன் இருக்கிறது; இல்லையென்றால் அந்த உணவுப் பொருள்களிலிருந்து அதற்கும் முற்றும் மாறான ஊன் வர வழியில்லை. அவ்வாறே எலும்பு இல்லாததிலிருந்து எலும்பு வர முடியாது. மண் அல்லாததிலிருந்து மண்பொருள் வரமுடியாது. ஒவ்வொரு பொருளிலும் மற்றெல்லாப் பொருள்களின் அணுக்களும் இருக்கின்றன. இந்தக் கூறுகளின் விகிதத்தைப் பொறுத்தே பொருள் அமைகிறது. எந்தப் பொருளின் கூறுகள் மிகுதியாக அமைந்திருக்கின்றனவோ அந்தப் பொருளாக அது அமைகிறது. இயற்கையில் வெற்றிடம் என்பதே இல்லை. பொருள்களின் அடர்த்தி குறைவாக இருந்தால் அது வெற்றிடம் போல் தோன்றுகிறது.

உலகத் தொடக்கத்தில் அடிப்படைப் பொருள்களான விதைகள் மட்டுமே இருந்தன. இவை பல வகைப்பட்டவை. இவற்றின் சேர்க்கை, பிரிவு ஆகியவற்றின் காரணமாக உலகம் தோன்றியது. ஆனால், ஒழுங்கமைப்பில்லாமல் சிதறிக்கிடந்த இந்த விதைகளிலிருந்து இயற்கை ஒழுங்குகளும், ஒழுங்கமைப்பான உலகமும் தோன்றியதற்குக் காரணம் இயக்கம் ஆகும். மிக வேகமான சுழற்சியால் அடிப்படைப் பொருள்களின் தொகுதியிலிருந்து கூறுகள் பிரிந்தன. அடர்த்தியான பொருள்கள் நுண்மையானவற்றிலிருந்தும், வெப்பம் குளிர்ச்சியிலிருந்தும், ஒளி இருளிலிருந்தும், உலர்தல் ஈரத்திலிருந்தும் பிரிந்தன. அடர்த்தி, குளிர்ச்சி, இருள், ஈரம் முதலிய கூறுகள் இப்போது பூமி உள்ள இடத்திற்கு வந்தன. நுட்பம், உலர்தல், வெப்பம், ஒளி முதலிய கூறுகள் இயக்கத்தின் சுழற்சியால் பூமியிலிருந்து வெகு தொலைவுக்குச் சென்றன. பூமியிலிருந்து மேன்மேலும் இயக்கத்தின் காரணமாகப் பொருள்கள் பிரிந்தன. ஒரே இடத்தில் நிலைத்து நிற்கும் பூமியிலிருந்து அண்டச் சுழற்சியின் விளைவால் பல பொருள்கள் வான மண்டலத்தில் வீசியெறியப்பட்டன. இவையே சூரியன், சந்திரன், விண்மீன்கள் முதலியவை. சூரியன் நெருப்பால் சூடேறிய பெரிய கல். சந்திரன் மண்ணாலாகியது; அதற்குத் தன் ஒளி கிடையாது. அது சூரியனிடமிருந்தே ஒளியைப் பெறுகிறது.

அனக்சாகோரசின் மேற்கூறிய இயற்கை விளக்கம் அறிவியல் முறையில் அமைந்தது என்பதை இதிலிருந்து அறியலாம். சூரியன், சந்திரன் முதலியவை தெய்வங்களாகக் கருதப்பட்ட காலத்தில், வெறும் அறிவியல் காரணங்களை மட்டும் வைத்து இயற்கை முழுவதையும் இவர் விளக்கினார். அதனால், இவரைப் பொருளியல் வாதத்தின் தந்தை எனலாம். சூரியன் பழுக்கச் சூடேறிய கல்; பூமி நிலையாக ஓரிடத்தில் இருப்பது என்ற இவருடைய கருத்து

தவறு என்று பிற்காலத்தில் மெய்ப்பிக்கப்பட்டாலும் ஏனைய கருத்துகள் அறிவியல் முறையில் அமைந் தவை என்பதே எல்லோருடைய கருத்துமாகும். பூமியைப் பற்றி அவர் கருதியது பொய்க் கருது கோளே தவிர மூட நம்பிக்கையின் அடிப்படையில் எழுந்த மலட்டுக் கருதுகோள் அன்று.

ஏதென்சில் தண்டனைக்குள்ளானவர் அயோனி யாவில் சீராட்டிப் பாராட்டப் பெற்றார். நகரின் சிறந்த பொதுவிடத்தில் அவருக்கு நினைவுச் சின்னம் நிறுவப்பட்டது. அவர் மறைந்த நாள் ஆண்டு தோறும் விடுமுறை நாளாக்கப்பட்டு அவரது நினைவு போற்றப்படுகிறது. ஜெ.மு.

**அனக்சிமாண்டர் (கி.மு. 610-547)** சாக் ரட்டீசு காலத்திற்கு முற்பட்ட தத்துவஞானி. கிரேக் கத் தத்துவத்தின் பிறப்பிடம் என்று கருதப்படும் அயோனியா (Ionia) தீவிலுள்ள மைலிடசு (Miletus) நகரத்தில் வாழ்ந்தவர்; ஐரோப்பியத் தத்துவத்தின் தந்தை; மைலிடசுக் கொள்கை நிறுவனர் என்று கூறப்படும் தேலிசு (Thales) என்னும் தத்துவஞானி யின் தலைமாணாக்கர்.

மைலிடசுக் கொள்கையைச் சேர்ந்தவர்கள், இயற் பியல், வானியல், கணிதம் ஆகியவற்றைத் தோற்று வித்தவர்கள் என்று கூறலாம். இதில் பெரும் பங்கு அனக்சிமாண்டரைச் சேரும். சூரிய கடிகாரமும் (Sun dial) கோளமும் (Sphere) இவரால் முதன் முதலில் உருவாக்கப்பட்டவை. சந்திரன் தன்னொளி உடையதன்று; வேறு ஒளியின் மூலம் ஒளி வீசுகி றது என்ற அறிவியல் உண்மையை முதன்முதலில் கண்டுபிடித்தவர் இவரே. உலகம் உருண்டையானது; அண்டத்தின் மையத்தில் உள்ளதால் சமநிலையில் இருக்கிறது. சூரியன் ஒரு நெருப்புக் கோளம்; பார்ப் பதற்குச் சிறியதாகத் தோன்றினாலும் பூமியைப் போலப் பெரியது என்பன இவர்தம் கருத்துகளாகும். இவற்றையெல்லாம் கடவுளர்களாகக் கருதிய அக் காலக் கட்டத்தில் நோக்கும்பொழுது இவை மிக முற்போக்கான கருதுகோள்கள் எனலாம்.

உயிரினங்களின் தோற்றம் பற்றிய இவரது முடிவுகளும், இக்கால உயிரியல் ஆராய்ச்சியை ஒட்டி யதாக விளங்குகின்றன. உயிரினங்கள் முதலில் நீரில் தோன்றின. பின்னர் நிலத்திற்கு வந்து அதற்கேற் றாற் போலத் தம்மை மாற்றியமைத்துக் கொண்டன. மனிதன் மீனிலிருந்து தோன்றியவன். இவை இக் காலப் பரிணாமக் கொள்கைக்கு அண்மையில் வரு கின்றன.

அனக்சிமாண்டரின் (Anaximander B.C.) ஆசிரி யரான தேலிசு எல்லாப் பொருள்களுக்கும் அடிப் படைப் பொருள் நீர் என்று கருதினார். ஆனால் அனக்சிமாண்டர் நீர், நிலம், நெருப்பு, காற்று முதலியவற்றை முதற்பொருளாகக் கருதவில்லை; இவரது கருத்துப்படி எல்லாப் பொருள்களுக்கும் அடிப்படைப் பொருள் 'எல்லையுற்றது' என்பதாகும். இந்த எல்லையற்ற ஒன்றிலிருந்தே எல்லாம் தோன்றி மீண்டும் இதிலேயே ஒடுங்குகின்றன. இது வரையறை செய்ய முடியாதது; அழிவற்றது; உருவற்றது. இதன் குணம் இன்னதென்று திட்டவட்டமாகக் கூற முடியாது. தண்மை, வெப்பம், ஒளி, இருள் போன்ற எதிர்மறைப் பாகுபாடுகள் எல்லாம், பாகுபாடுகளற்ற இந்த மூலப்பொருளின் இயக்கத்திலிருந்தே ஏற்பட் டவை. எனவே, இதை வேறுபடுத்திக் காட்ட முடி யாது; கூட்டுப் பொருள் அல்லது கலவை என்று கூறலாம்.

இந்த மூலப் பொருளின் இயக்கத்தினால், நீர், நிலம், காற்று, நெருப்பு முதலிய பொருள்கள் பிரிந் தன. முதலில் நெருப்பும் பின்னர் நீரும் அதிலிருந்து பிரிந்து வந்தன. தண்ணீரைச் சுற்றி நெருப்பு ஒரு வளையமாக அமைந்தது. இந்த வெப்பத்தினால் நீர் ஆவியாகிக் காற்றாகியது. காற்று மிகுதியாக விரி வடைந்ததனால், அது நெருப்பு வளையத்தை உடைத்துப் பல அனல் கோளங்களாக்கியது. காற் றின் அழுத்தத்தினால் அவை தனித்தனியாகப் பிரிந்து வெவ்வேறு தொலைவில் பூமியைச் சுற்றி வருகின் றன. பூமிக்கு மிகத் தொலைதூரத்தில் சூரியன் இருக் கிறது. அதற்கு அடுத்தபடியாகச் சந்திரனும் விண் மீன்களும் மற்றக் கோள்களும் இருக்கின்றன.

ஒரே எல்லையற்ற பொருளிலிருந்து பல பொருள் கள் தோன்றித் தனித்தனியாகவும் வேறுபட்டும் எதிர்மறைப் பண்புகளைப் பெற்றும் விளங்குவது 'முறை கேடு' ஆகும். எனவே இது காலத்தின் ஆணை யால் பொருள்களுக்குக் கிடைக்கும் தண்டனை யாகும். தனிப்பட்ட பொருள்கள் அழிந்து மீண்டும் 'எல்லையற்ற பொருளில்' ஒடுங்குவதே இயற்கையின் நியதி என்று அனக்சிமாண்டர் கூறினார். ஜெ.மு.

**அனக்சிமீன்சு (கி.மு. 545):** இவர் ஆசியா மைனரில் உள்ள மைலிடசு (Miletus) என்ற இடத்தில் பிறந்தார். இவர் கி.மு. ஐந்தாம் நூற் றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர்; அனக்சி மாண் டரின் (Anaximander) மாணவர். எனினும் இவர் ஆசிரியருடைய கருத்துகளிலிருந்து மாறுபடுகிறார். அனக்சிமாண்டர், காற்று, நீர், நிலம், நெருப்பு எல்லா வற்றுக்கும் அடிப்படையான பொருள் ஒன்றுண்டு; அது "எல்லையற்றது" என்று கூறுகிறார். ஆனால், அனக்சிமீன்சு (Anaximenes). காற்றே எல்லாவற்றுக்கும் அடிப்படையான எல்லையற்ற பொருள் என்று கூறு கிறார்; ஏனெனில் நெருப்பின் குணமான உலர்தல், தண்ணீரின் தன்மையான குளிர்ச்சி என்ற வேறுபட்ட இரண்டு குணங்களும் காற்றுக்கு உண்டு. மேலும் காற்றே நம்முடைய உயிர். காற்றில்லையென்றால்

மூச்சு இல்லை. எனவே உயிரினங்களின் மூச்சாக விளங்குகின்ற காற்றே இயற்கைக்கும் அடிப்படைப் பொருளாகும் என்பது இவரது வாதம்.

காற்றிலிருந்தே எல்லாப் பொருள்களும் தோன்றுகின்றன. காற்று நாம் காணமுடியாதது. அது விரிவடைவதனால் நுண்ணிய நிலையடைந்து நெருப்பாகிறது. காற்று, குளிர்ச்சியினால் சுருங்கும்பொழுது வேகமாக, நீராக, நிலமாக, கல்லாக மாறுகிறது. அதனால் பொருள்கள் தோன்றுவதற்கு மூலகாரணம் காற்று விரிவடைதலும் சுருங்குதலுமே ஆகும். காற்று அணுக்களுக்கு இடையிலுள்ள இடைவெளி குறைந்தால் பொருள்கள் கட்டியாகின்றன. அந்த இடைவெளி மிகுந்தால் அதற்குத் தகுந்தாற்போலப் பொருள்களின் தன்மை நுட்பமாகிறது. அதனால் மூலப் பொருளின் மிகுதி அல்லது குறைவே பொருள்களின் வேறுபாட்டுக்குக் காரணம் என்று விளக்குகிறார். பொருள்களின் குணங்களிலே தோன்றும் வேறுபாடெல்லாம் அவற்றின் அளவைப்பொறுத்ததே என்பது இவரது கூற்று. இவர்கொள்கை பிற்காலத் தெமாகிரட்டிசின் (Democritus) பொருள் முதல் வாதம், அணுக்கொள்கை முதலியவற்றிற்கு முன்னோடியாக விளங்குகிறது. ஜெ. மு.

**அனகாப்பள்ளி** ஆந்திர மாநிலத்தில் விசாகப் பட்டினத்திலிருந்து மேற்கே 34 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள பட்டணம். சாரதா ஆறு இவ்வூரின் அண்மையில் ஓடுகிறது. இவ்வூர் நல்வாழ்வு நகரமாகக் கருதப்படுகிறது. இங்குள்ள நூகலம்மா கோயிலில் தெலுங்கு ஆண்டுப்பிறப்பன்று எருமையைக் காவு கொடுப்பர். பித்தளை, இரும்புப் பாத்திரங்களுக்கும், துணி, சர்க்கரை ஆகியவற்றிற்கும் பெயர் பெற்றது இவ்வூர்.

**அனகில்லாப்புரம்** என்பது குசராத்து மாநிலத்தில் உள்ள அன்கில்வாட்டு என்னும் ஊரைக் குறிக்கும். இவ்வூர் அன்கில்வாரா என்று இசுலாமிய வரலாற்றாசிரியர்களால் குறிக்கப் பெறுகிறது. கபோத்கதர் மரபினைச் சார்ந்த முதல் அரசர் வனராசன் இவ்வூரை அமைத்தார். பின்னர் இதுவே குசராத்தின் தலைநகராயிற்று. பிரவந்த சிந்தாமணி என்னும் நூலில் அதன் ஆசிரியரான மேருதுங்கர் என்னும் சமண நூலாசிரியர், இந்நகரைக் கட்டிய அரசனைப் பற்றிய விவரத்தைக் குறிப்பிட்டுள்ளார். இளம் பருவத்தில் கபோத்தகர் கொள்ளையடித்து வந்தார் எனவும், அரசராக வேண்டும் என்னும் பேரவாவிலும், தமக்குப் பின் அரசமரபு ஒன்றினை நிலைநாட்டும் உணர்விலும் செயற்பட்டார் எனவும், தலைநகர் ஒன்றைக் கட்ட எண்ணியபோது பெருந்தொகை தேவைப்பட்டதை அறிந்து, அதைப் பெற அரசாங்க அலுவலரான பஞ்சகுலன் என்பவரைக் கொலை செய்துவிட்டு, வரிப்பணமாக அவர் கொணர்ந்த 24 இலட்சம் வெள்ளிப் பணங்களையும் 4000 தரமான குதிரைகளையும் கவர்ந்து சென்றார் எனவும் கூறப்படுகிறது. வனராசன் பின்னர்த் தன் தலைநகரை அமைக்கச் சரியான இடத்தைத் தேடி அலைந்துகொண்டிருந்தபோது அனகில்லா என்பவரைச் சந்தித்தார். வனராசன், அவரிடம் புதுத் தலைநகரமைக்க இடம் தேடி அலைவதைப் பற்றிக் கூறினார். தம்முடைய கோரிக்கை யொன்றினை ஏற்றுக் கொண்டால், உரிய இடத்தைக் காட்டுவதாக அனகில்லா வாக்களித்தார். தலைநகருக்கு அவர் காட்டும் இடம் தெரிந்தெடுக்கப்படுமாயின், அந்நகர் தம்முடைய பெயராலேயே விளங்க வேண்டும் எனக் கேட்டுக் கொண்டார். அவருடைய விருப்பத்தையறிந்த வனராசன், அனகில்லாவின் விருப்பத்தை ஏற்றுக் கொண்டார். அதன் பின்னர் அனகில்லா வனராசனையும் அவருடைய துணைவர்களையும் சாலி மரம் இருந்த இடம் ஒன்றிற்கு அழைத்துச் சென்று, அங்குத் தலைநகருக்கான இடத்தைச் சுட்டிக் காட்டினார். அங்கு முயல் நாயைத் துரத்திய நிகழ்ச்சியை அனகில்லா கூறக் கேட்ட வனராசன், அந்த இடத்தையே தேர்ந்தெடுத்து, அழகிய மாளிகையொன்றினைக் கட்டிப், பின்னர் அதைச் சுற்றித் தலைநகரை அமைத்தார். முன்பு தந்த வாக்குறுதிப்படி புதிய தலைநகருக்கு அனகில்லாவின் பெயரையே வைத்தார். நல்லோரையில் வனராசன் அங்கு அரசராகவும் முடிசூட்டிக்கொண்டார். அவருடைய மரபினர் பல்லாண்டுகள் அங்கு ஆட்சி நடத்தினர்.

**அனங்கப்பூர்** தில்லியிலிருந்து மதுரா செல்லும் சாலையில், 17 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளதொரு சிற்றூர். இச்சிற்றூர் அரங்பூர் என்றும் சொல்லப்படுகிறது. இங்குள்ள அணைக்கட்டு உருவாவதற்குக் காரணமானவர் தோமர் மரபினைச் சார்ந்தஅரசர் அனங்கபாலர். இவரே இலால்கோட்டு (Lol Kot) அரணையும் கட்டியவர். இங்கு மழை நீர் வரும் பள்ளத்தாக்கிற்குக் குறுக்காக அணைகட்டப்பட்டுள்ளது. மழைக்காலத்தில் இவ்வணையில் மிகுதியாக நீர் தேங்குகிறது. இதன் அண்மையிலிருக்கும் நிலங்களுக்குப் பாசனத்திற்குரிய நீர் விடப்படுகிறது. இப்பள்ளத்தாக்கிற்கு அருகில் இருக்கும் குன்றுகளில் அழிந்துபோன பல அரண்கள் உள்ளன. இந்த அழிவுகளிலிருந்து அனங்கப்பூர் முற்காலத்தில் ஒரு நகரமாக இருந்திருக்க வேண்டும் என்பதும், அனங்கபாலர் இந்நகரை உருவாக்கியிருக்கக் கூடும் என்பதும் தெரிகின்றன.

**அனடோலியா** என்பது துருக்கி நாட்டிற்கு கி.பி.ஒன்பதாம் நூற்றாண்டில் வழங்கிய பெயர். அனடோலியா துருக்கியின் ஒரு பகுதியாக இருந்தது. ஆசியா மைனரின் எல்லைகளே இதன் எல்லைகள்.

ஆசியாவின் துருக்கிப் பகுதியில் இருக்கும் முக்கிய மேட்டு நிலத்தை அனடோலிய மேட்டுநிலம் என்பர்.

**அனதாரியப்பர்** கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் தொண்டை நாட்டுச் செங்காட்டுக் கோட்டத்தில் வாயல் என்னும் வயலூரில் பிறந்த புலவராவார். சோழவள நாட்டில் உள்ள உறத்தூரில் வாழ்ந்த ஓர் அந்தணரிடம் கல்வி பயின்றார். அந்த அந்தணரிடமே அடிமைபோல வாழ்ந்து வந்தார். திருவாரூருக்கு அருகில் உள்ள கன்றாப்பூர் என்னும் ஊரில், சிற்றரசன் எனப் போற்றத்தக்க பெரும் செல்வம் படைத்த சிங்கராயன் வாழ்ந்து வந்தான். அச்செல்வன், ஒரு நாள் உறத்தூரில் அனதாரியப்பரை அடிமைபோல ஆண்டுவந்த அந்தணரைக் காண வந்தான். அப்போது அனதாரியப்பரின் புலமைத் திறத்தினைக் கண்டு வியந்து பெரும் பொருளை அந்தணருக்கு ஈடாகக் கொடுத்து, தன்னுடன் அழைத்துச் சென்றுவிட்டான்.

செல்வன் சிங்கராயன், தன்னுடன் இருக்கும் புலவர் அனதாரியப்பரின் உதவியால் தன் பகைவன் தண்டாயுதன் என்பானை இழிவுபடுத்த வேண்டும் என்று எண்ணி அவனுக்கு ஒரு சீட்டுக்கவி எழுதச் சொன்னான். அனதாரியப்பரும் பசு ஒன்று வேண்டும் என்பது போலவும், அதே சமயத்தில் தண்டாயுதனை இழித்தும் ஒரு கவி எழுதிக் கொடுத்தார்.

இச்சீட்டுக் கவியினைக் கண்ட தண்டாயுதன் அனதாரியப்பரின் புலமை மேன்மையைப் பாராட்டினான். இத்தகைய அருமையான புலமைத்திறம் படைத்தவரைச் சிங்கராயன் அடிமை போல வைத்திருப்பது தவறு என அறிவுறுத்திச் சிங்கராயனுக்குத் தண்டாயுதன் ஒரு சீட்டுக்கவி எழுதியனுப்பினான். அதனால், சிங்கராயன் புலவரை எங்கும் உரிமையாகச் செல்ல அனுமதித்தான் என்னும் இச்செய்தியினைத் தொண்டை மண்டல சதகம் வாயிலாக அறியலாம்.

சிங்கராயனிடமிருந்து விடைபெற்ற அனதாரியப்பர் நேராக மதுரைக்குச் சென்றார். அங்குக் கல்லூருக்குத் தலைவராகவும், மதுரையை ஆண்ட கச்சி கிருட்டிணப்ப வீரப்ப நாயக்கனுக்கு அமைச்சராகவும் விளங்கிய சனிப்பெருமாள் மகன் திருவிருந்தான் என்பவனிடம் சென்றடைந்தார். அந்தத் திருவிருந்தான் ‘சுந்தர பாண்டியம்’ என்ற வடமொழி நூலைத் தமிழில் பாடியருளுமாறு அனதாரியப்பரிடம் வேண்ட, இவரும் தமிழில் மொழி பெயர்த்தார்.

இறைவனின் திருவிளையாடல்களைக் கூறும் இந்நூல் வேம்பத்தூரார் திருவிளையாடல், பரஞ்சோதியார் திருவிளையாடல் போன்று செல்வாக்குப் பெறவில்லை. இப்போது இந்நூல் சிதைந்த ஒன்றாகவே கிடைத்துள்ளது. குறைப்படியாக மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் உள்ள இந்நூலில் 2034 விருத்தப் பாடல்கள் உள்ளன.

அனதாரியப்பர் கம்பனைப் போலவும், ஒட்டக்கூத்தரைப் போலவும் கவி வல்லவராகத் திகழ்ந்தார் என்று ஒரு புலவர் இவருடைய புலமைத் திறத்தைப் போற்றிப் பாடியுள்ளார்.

**அனந்தசயனம்** உலகத்தைக் காக்கும் கடவுளாகிய திருமால் உலகசிருட்டி முதலியவைகளைச் சிந்திக்கும் தியானயோகத்தில் ஆதிசேடன் மீது, பள்ளிகொள்ளும் சயனக்கோலம். திருமாலின் சயனக்கோலம், அனந்தசயனம், புசங்க சயனம், தருப்ப சயனம், யோக சயனம், போக சயனம், தல சயனம், வடபத்திரசயனம், வீரசயனம் எனப் பல வகைப்படும். அவற்றுள், திருப்பாற் கடலில் ஆதிசேடன் மீது பள்ளி கொண்ட சயனக் கோலம் அனந்த சயனம் எனப்படும். ஆதிசேடனுக்குள்ள அனந்தன் என்னும் மற்றொரு பெயரால் ‘அனந்த சயனம்’ என்னும் பெயர் அமைந்தது. திருமால் தமிழ்நாட்டிலுள்ள பல தலங்களில் சயனக்கோலத்தில் காட்சியளிக்கிறார்.

திருவனந்தபுரம் இக்காலத்திய கேரள மாநிலத் தலைநகரமாக உள்ளது. இங்கு அனந்த பத்மநாப சுவாமி கோயில் உள்ளது. இங்குள்ள மூர்த்தம் அனந்த சயனக் கோலத்தில் அமைந்துள்ளது. தாயார் பெயர் சிரீஅரி இலக்குமி நாச்சியார். திருக்கோயில் விமானம் ஏமகூட விமானம் ஆகும். மச்ச தீர்த்தம் இங்குள்ளது. இது ஆழ்வாரால் மங்களா சாசனம் செய்யப்பட்ட திருத்தலங்களுள் ஒன்று. ஏ.வி.அ.

**அனந்தசயனம் அய்யங்கார் (கி.பி.1891–1962)** இந்தியத் தேசிய தலைவர்களுள் ஒருவர். இவர் ஆந்திரப்பிரதேசம் சித்தூர் மாவட்டத்தில் திரிசந்தா என்னும் சிற்றூரில் கி.பி. 1891–ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதம் 4–ஆம் நாள் பிறந்தார்; சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் கல்வி பயின்று பட்டம் பெற்றார். இவர் 1919–ஆம் ஆண்டில் திருமதி சூடம்மா என்பாரைத் துணைவியாகக் கொண்டார். தொடக்கக் காலத்தில் அதாவது 1912–13–ஆம் ஆண்டுகளில், இவர் கணக்கு ஆசிரியராகப் பதவியைத் தொடங்கினார். வழக்குரைஞராகவும், சித்தூர் நகராட்சிக் குழுவின் உறுப்பினராகவும், குற்றப்பரம்பரை விசாரணைக் குழுவின் தலைவராகவும், இந்திய அரசியல் நிருணய அவையின் வழிப்படுத்துக்குழுவின் உறுப்பினராகவும், அரிசன சேவா சங்கத்தின் தலைவராகவும், சித்தூர் மாவட்டக் காங்கிரசுக் கட்சியின் தலைவராகவும், ஆந்திர மாநிலக் காங்கிரசு, அனைத்து இந்தியக் காங்கிரசு ஆகியவற்றின் குழுவில் உறுப்பினராகவும், இராமவிலாசு சபா, சித்தூர் நாடகக்குழு ஆகியவற்றின் துணைத்தலைவராகவும், அரசியல் அமைப்புச்

சட்ட அவையின் செயலராகவும், இந்திய மறுமலர்ச்சிக் கழகத்தின் தலைவராகவும் பல்வேறு பொதுப் பணிகளில் மிக்க ஈடுபாடு கொண்டு இவர் செயலாற்றினார். காந்தியடிகள் தொடங்கிய ஒத்துழையாமை இயக்கத்தில் (1921) இவர் பங்கு கொண்டார். சத்தியாக்கிரகத்தில் பங்கு கொண்டமைக்காக 1940-ஆம் ஆண்டில் எட்டு மாதங்கள் சிறையில் அடைக்கப்பட்டார். 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்தின் போது இவர் சிறை செய்யப்பெற்று, 1942-ஆகஸ்ட்டு முதல் 1944 டிசம்பர் 4-ஆம் நாள் வரை சிறையில் இருந்தார். உலகக் கூட்டாட்சி அரசாங்க நிறுவனத்தின் இந்தியக் கிளையின் தலைவராகவும், 1952-இல் கனடா நாட்டிலுள்ள ஆட்டாவாவில் (Ottowa) நடைபெற்ற காமன்வெல்த்துப் பாராளுமன்ற மாநாட்டின் பேராளராகவும் பணியாற்றிய அனந்தசயனம் அய்யங்கார் பல்லாண்டுகள் இந்திய நாடாளுமன்ற மக்களவையின் சபாநாயகராகப் பணியாற்றிப் புகழ் ஈட்டினார். இவர் 1962-ஆம் ஆண்டில் காலமானார்.

**அனந்தநாகு** சம்மு-காசுமீர மாநிலத்தில் உள்ளதோர் ஊரும் மாவட்டமுமாகும். சிரீநகருக்குத் தென்கிழக்கில் ஏறத்தாழ 50 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள இந்த ஊர், பண்டைய காசுமீரக் கோயில் கட்டடக் கலைக்குச் சான்றாகவுள்ளது. இக்கோயிலைக் கட்டியவர் இலலிதாதித்திய மன்னர். இது கி.பி. 8-ஆம் நூற்றாண்டில் கட்டப்பெற்றது. இக்கோயிலின் பெரும்பகுதி கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் இசுலாமிய அரசர் ஒருவரால் அழிக்கப்பட்டது. அம் முகமதிய மன்னர் இந்நகருக்கு இசுலாமாபாத்து என்று பெயர் வைத்தார்; எனினும் அப்பெயர் நீடித்து நிற்கவில்லை.

**அனந்தப்பூர்** ஆந்திரப் பிரதேசத்திலுள்ள அனந்தப்பூர் மாவட்டத்தின் தலைநகர். சிக்கப்ப உடையார் என்னும் விசய நகரப் பேரரசின் திவான் தம் மனைவி அனந்தம்மையின் பெயரால் இவ்வூரை அமைத்தார்; இம்மாவட்டம் கி.பி. 1882-இல் பெல்லாரியிலிருந்து பிரிக்கப்பட்டது. இதன் வட, மத்திய பகுதிகள் குன்றுகள் நிறைந்த பீடபூமி; தெற்குப் பகுதி மலைகள் நிறைந்தது. குத்தியிலும் (Goody) பெனுகொண்டாவிலும் (Penukonda) உள்ள குன்றுகளில் கோட்டைகள் போன்ற பாறைகள் உள்ளன. புன்செய்ப் பயிர்கள், எண்ணெய் வித்துகள், பருத்தி போன்றன இங்கு விளையும் சிறப்பான பொருள்கள். அனந்தப்பூர், ஆங்கில ஆட்சியின் கொடை மாவட்டங்களுள் ஒன்றாகக் கருதப்பட்டது.

**அனந்தமங்கலம்** செங்கற்பட்டு மாவட்டம் அச்சரப்பாக்கம் வட்டத்தில் உள்ளதோர் ஊர். இவ்வூர் சமணர்களின் மையமாகும். இங்குள்ள மலையின் உச்சியில் தீர்த்தங்கரர் உருவங்கள் சில வடிக்கப்பட்டுள்ளன. இங்குக் கல்வெட்டுகளும் உள்ளன. முதலாம் பராந்தக சோழனது காலத்திய கல்வெட்டும் இங்கு உள்ளது. ஒரு கல்வெட்டு 'ரெட்டநேமி அடிகள்' என்றும், மற்றொரு கல்வெட்டு 'அரட்டநாத நேமிகள்' என்றும் குறிக்கின்றன. இதனால் இச்சமணச் சான்றோர்களுடன் இச்சமண மையம் தொடர்பு கொண்டிருந்தது புலனாகும்.

**அனந்தாச்சார்யலு (கி.பி.1843-1908)** இந்தியக் காங்கிரசுக்கு அடிகோலியவர். இவர் சென்னை மாநிலக் கல்லூரியில் கல்வி பயின்றார். சட்டக்கல்வி பெற்றபின் கி.பி.1869 முதல் 1891 வரை சென்னையில் வழக்கறிஞராகப் பணியாற்றினார். தென்னிந்தியாவின் உறுப்பினராக கி.பி. 1885-இல் பம்பாயில் நடந்த முதல் காங்கிரசு மாநாட்டிற்குச் சென்றார் இவர். இவர் கி.பி. 1895-இல் பம்பாயில் நடந்த காங்கிரசு மாநாட்டிற்குத் தலைமை தாங்கினார். நாட்டுப் பற்று மிக்கவர்; ஆங்கில ஆட்சியை அகற்ற இவர் ஆற்றிய சொற்பொழிவு சிறப்பானது. இவர் 1908-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 28-ஆம் நாள் காலமானார்.

**அனலை** என்பது ஓர் ஊர். திருச்சி-கரூர்ச் சாலையில், திருச்சியிலிருந்து மேற்கே 15 கி.மீ. தொலைவில் காவிரியின் தென்கரையில் உள்ள திருப்பராய்த் துறையில் இறங்கித் தெற்கே ஒரு கி.மீ. சென்றால், அனலையை அடையலாம். தென்புறம் உய்யக்கொண்டான் ஆறும் வடபுறம் கொடிங்கா என்னும் சிற்றாறும் இவ்வூரை அணி செய்கின்றன. நன்செய் வளம் மிக்கது இவ்வூர். நெல்லும் வாழையும் சிறப்பான பயிர்கள். இவ்வூரில் 1955-ஆம் ஆண்டு பெருமழை பெய்தபோது, பொற்காசுகள் பல கண்டெடுக்கப்பட்டன.

இங்குச் சோமநாதர் ஆலயம், ஏகிரியம்மன் கோயில், ஊருடையான் கோயில் (ஊருடைக் கருப்பு), சங்கிலியாண்டவன் கோயில் முதலானவை உள்ளன. இவ்வூரில் முத்தரையர் பெரும்பான்மையினராக உள்ளனர். இவ்வூரில் வெளிங்காடு என்னுமிடத்தில் 1983-இல் மிகப் பெரிய புத்தர் சிலை ஒன்று கண்டெடுக்கப்பட்டுத் திருச்சி நீதி மன்றத்திற்கு அருகில் உள்ள அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளது. பெருமாள் கோயில் ஒன்றும் பாழடைந்த நிலையில் உள்ளது. இவ்வூர் பழம் பெருமையும் வரலாற்றுச் சுவடும் கொண்டது.

**அனவரத விநாயகம்பிள்ளை (கி.பி. 1877-1940)** நெல்லையில் பிறந்த தமிழறிஞர். தந்தை சுப்பிரமணியப்பிள்ளை; அன்னை ஈசுவர வடிவு. இளமையில் சொந்த ஊரில் படித்து மேற்படிப்பைச் சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் தத்துவப் பாடத்தை முதன்மையாகக் கொண்டு பயின்று மாநிலத்தில் முதல் மாணவராகத் தேர்வு பெற்றார்

முதுகலைத் தேர்விற்குத் தமிழை முதற்பாடமாகக் கொண்டு வெற்றிபெற்று அங்கேயே கல்லூரிப் பயிற்சித் துணைவராகப் (Tutor) பணிபுரிந்தார். பிறகு மொழிக் கல்விக் கண்காணிப்பாளராகப் பல்லாண்டு பணிபுரிந்தார். சில காலம் கொழும்புப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றினார்.

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதிக்குழு உறுப்பினராக இருந்ததுடன் ஆராய்ச்சியாளராகவும் இருந்துள்ளார். தமிழ்மொழி பற்றிப் பல ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதியுள்ளார். தமிழ்ப் புராணங்கள் சிலவற்றினை ஆராய்ச்சி முன்னுரையுடன் பதிப்பித்துள்ளார். இவர் செய்த நூல்கள் தமிழ்ப் பெருமக்கள் வரலாறு, நச்சினார்க்கினியர், ஔவையார், ஏசுநாதர், சைவசித்தாந்த வரலாறு, பழமொழி அகராதி, மாணவர் அகராதி முதலியன.

த.கோ.

**அனாதபிண்டிகர்** என்பார் சிராவத்தி நகரில் கௌதம புத்தரின் காலத்தவரான செல்வச் செழிப்புமிக்க வணிகருள் ஒருவர். இவரைச் சாவத்திச் செட்டி என்றும் கூறுவர். அதாவது சிராவத்தி நகரச் செட்டியாருள் ஒருவர் என்பது பொருள். இராசகிருகத்திற்கு வாணிகத்தின் பொருட்டுச் சென்றிருந்த அனாதபிண்டிகர், புத்தரின் பெயரை முதன் முதலாகக் கேள்வியுற்றார். அங்கு இவர்தம் மைத்துனர்; புத்தருக்குச் சிறப்பானதொரு விருந்து கொடுக்க ஏற்பாடு செய்துகொண்டிருந்தார். விருந்து கொடுக்கப்படவிருக்கும் பெரியவரின் பெயரை அறிந்த அனாதபிண்டிகர், புத்தரைத் தரிசிக்க ஆவல் கொண்டார். புத்தபிரான் தங்கியிருந்த சீதாவாகனம் என்னும் இடத்திற்குச் சென்று அனாதபிண்டிகர் புத்தரைத் தரிசித்தார். அவரிடம் சில சிக்கல்களைக் குறித்துக் கலந்துரையாடி, அவருடைய போதனைகளைப் பெரிதும் விரும்பித் தாமும் பௌத்த சமயத்தவராக மாறிவிட்டார். பௌத்தரான இவர் பின்னாளில் சோதபண்ணா என்னும் புதிய பெயரில் அழைக்கப்பெற்றார். இவர் சேதகுமார பூங்கா எனப் பெறும் சேதவனராமாவை 18 கோடிக்கு விலைக்கு வாங்கிப் புத்தரும் இவர்தம் சீடர்களும் தங்க அமைதியான இடம் அமைத்துத் தந்தார். இவரது உண்மைப்பெயர் சுதத்தா என்றாலும், இவரை அனாதபிண்டிகர் என்ற பெயரிலேயே இன்றும் அழைப்பர். வரம்பிலா வள்ளலான அனாதபிண்டிகர் வரைவிலாமற் கொடுத்து ஏழையானார். இறுதியில் புத்தபிரானின் அருகிலேயே அனாதபிண்டிகர் உயிர் துறந்தார்.

**அனாய்** வட வியத்நாம் நாட்டின் தலைநகரமும் அந்நாட்டின் இரண்டாம் பெருநகரமுமாம். ஓ—சி-மின் என்னும் பெயர் கொண்ட இந்நகரம் மக்கள் தொகையில் முதலிடம் வகிக்கிறது. அனாய் செவ்வாற்றின் (Hanoi Red River) கழிமுகத்தின் முகப்பில் அமைந்துள்ளது.

பன்னாட்டு உடன்படிக்கையின்படி (1954) வியத்நாம் இரண்டாகப் பிரிந்தது. அனாய் வட வியத்நாமின் தலைநகராயிற்று. வியத்நாம் போரின் போது அனாய் நகரில் நிலைநாட்டப் பெற்றிருந்த பல தொழிற்சாலைகளை அமெரிக்க ஐக்கிய நாட்டின் வெடிகுண்டுத் தாக்குதலிலிருந்து காக்கும் நோக்குடன் நாட்டுப் புறப்பகுதிகளுக்கு மாற்றிவிட்டனர். வெடிகுண்டு தொழிற்சாலைகளைக் கொண்டிருந்த நாட்டுப் புறங்கள் தாக்கி அழிக்கப்பட்டன. ஆயினும் அனாய் அழியாமல் தப்பியது. போர் முடியும் தறுவாயில் வட வியத்நாம், தென் வியத்நாமையும் 1975-ஆம் ஆண்டிலிருந்து கட்டுப்படுத்த வியத்நாம் என்னும் பெயரில் ஒரே நாடாகியது. அனாய், வியத்நாமின் தலைநகராயிற்று.



அனாய்

அனாய் சிறப்பான வணிக மையமும் ஆற்றுத் துறைமுகமுமாகும். அனாய் நகருக்கு 89 கி.மீ. தொலைவில் தோங்கின் வளைகுடாவிற்கு (Tonkin Gulf) அண்மையில் அமைந்துள்ள அய்பாங்கு (Haip-Hong) என்னும் ஊர், அனாய்க்கு ஆழ்கடல் துறைமுகமாக இலங்குகிறது. உணவுப் பொருள்களைப் பதப்படுத்துவது, அனாயின் சிறப்பான தொழிலாகும். மிதிவண்டிகள், சிகரெட்டுகள், பண்ணைக்குத் தேவைப்படும் இயந்திரங்கள் போன்றவற்றையும் இங்கு உற்பத்தி செய்கிறார்கள்.

நிருவாக அலுவலகங்கள், கடைகள், தனியாருக்குச் சொந்தமான வீடுகள் போன்றவை அனாயின் பெருஞ்சாலைகளில் அமைக்கப்பட்டுள்ளன. மிதிவண்டிகளும் தெருக்களில் ஓடும் கார்களும், உந்து வண்டிகளும் இரவுபகலாகச் சாலைகளை அடைத்துச் செல்கின்றன. வடவியத்நாமின் மேல்நிலைக் கல்வி நிலயங்களைக் கட்டுப்படுத்தும் அனாய்ப் பல்கலைக்

கழகம் இங்குள்ளது. அனாயின் மக்கள் தொகை 25,70,905 (1979) ஆகும்.

***அனிச்சம்***: குறிஞ்சிப்பாட்டில் கபிலர், "ஒண் செங்காந்தள் ஆம்பல் அனிச்சம்" என்னும் அடியில் (குறிஞ்:62) அனிச்ச மலரைக் குறிப்பிடுகிறார். 'அரி நீர் அவிழ் நீலம் அல்லி அனிச்சம்" என்பது கலித்தொகை (91:1). இவ்விரு அடிகளிலும் "அனிச்ச மலர்" கூறப்படுகிறது. திருக்குறள், அனிச்சமலரின் மென்மையைச் சிறிது மிகுத்துக் கூறுகிறது.

அனிச்சமலர், மோந்து பார்க்கும் அளவில் குழையும் தன்மையது என்று அதன் மென்மையைக் கூறுகிறார் வள்ளுவர் (திருக். 90). இதனால், மலரின் உயிர்த்தன்மை காட்டப் பெறுவது புலனாகும். மேலும், அவர் அனிச்ச மலருக்குக் காம்பு உண்டு என்பதையும், அது மலரைக் காட்டிலும் கனமுள்ளது என்பதையும், அது மென்மையும் நொய்மையும் உடையது என்பதையும் (1115) புலப்படுத்துகிறார்.

இவ்வளவு மென்மை வாய்ந்த 'அனிச்சமலர்' என்பது யாது? இது மலைப் பூவா? நிலப் பூவா? சினைப் பூவா? சுனைப் பூவா? எந்நிறமானது? எங்குள்ளது? எப்பொழுது பூக்கும்? என்ற வினாக்களுக் கெல்லாம் சங்க இலக்கியத்தில் விளக்கம் இல்லை.

சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ் அறிஞர் கா. நமச்சிவாய முதலியார், இலுசிங்டன் (Lushington) என்ற தாவரவியல் அறிஞருக்குத் தமிழ் நாட்டு மரஞ் செடி கொடிகளின் தமிழ்ப் பெயர்களை அறிவுறுத்தினார் என்பர். அது கொண்டு இலுசிங்டன் அன்றைய சென்னை மாகாணத்தில் வளரும் மரம், செடி, கொடிகளின் தமிழ்ப் பெயர்ப் பட்டியல் ஒன்றினை அவற்றின் தாவரப் பெயர்களுடன் வெளியிட்டுள்ளார். அப்பட்டியலில், அனிச்சம் என்பது தாவரவியலில், "இலாகர் சுரோமியா பிளாசுரீசினே" (Lagerstromoea flos Reginae) என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அயல்நாடுகளில், தாவரவியலில் இப்பெயர் கொண்ட சிறுமரத்தை, "அனிச்சம்" என்று கூறுகின்றனர்.

தாவரப் பெயருடன் தமிழ்ப் பெயரைச் சேர்த்து, எழுதும் இரு பெரும் பூங்காக்கள் உள்ளன. ஒன்று, சிரீலங்காவில் உள்ள 'பாரதேனியா' (Peradeniya) தாவரத் தோட்டம்; மற்றொன்று, மலேசியாவில் உள்ள கோலாலம்பூர்த் தாவரத் தோட்டம். இவ்விரு தோட்டங்களிலும் 'இலாகூர் சுரோமியா பிளா சுரீசினே" என்னும் சிறு மரத்திற்கே அனிச்சம் என்ற பெயர் சூட்டப்பட்டுள்ளது.

இப்போது, இச்சிறு மரம் பங்களூரிலுள்ள "இலால்பாக்கு" (Lal Bagh) தாவரத் தோட்டத்தில் வளர்க்கப்படுகிறது. இதன் மலர் மிக அழகானது; மிக மிக மெல்லியது. ஆயினும், மோப்பக் குழையும் இயல்பு இதில் இல்லை. ஆதலின், இது அனிச்சமன்று என்று கூறுவாரும் உளர். அன்றி, வேறு சில புதர்ச் செடிகளை "அனிச்சம்" என்று கூறுவாரும் இந் நாளில் உள்ளனர். "அனிச்சம் இப்போது உலகில் இல்லை; அது அழிந்து போய்விட்டது" என்பாரும் உளர். உரோசுவித்தா சிமித்து (Roswittha Schmid) என்ற பேராசிரியர், இன்றைய உலகில் ஏறத்தாழ 20,000 தாவர இனங்கள் அழிந்தும், அழிவை நோக்கியும் உள்ளன என்பர். ஆகவே, அனிச்சம் இவற்றுள் ஒன்றாக இருக்கலாமோ என்ற ஐயமும் எழுகிறது.

மற்று, இலுசிங்டன் கூறுவது போல, "இலாகர்சுரோமியா பிளாசுரீசினே" என்பதுதான் அனிச்சம் என்று கொண்டால், இதன் இயல்புகள் வருமாறு: இச்சிறு மரம் 20 அடி உயரம் வளரும்; இலைகள் அகன்றவை; பசுமையானவை; இலையின் அடிப்புறம் வெளிர் பச்சை நிறமுள்ளது. இதன் கொத்து 1 முதல் 2 அடி வரை நீளமானது; இலைக் கோணத்தில் தோன்றும். மலர் இளஞ் சிவப்பு நிறமானது; அழகானது; பசுமையான 6 புறவிதழ்களையும், செந்நிறமான 6 அகவிதழ்களையும் உடையது; அகவிதழ்களில் சிறு காம்பு காணப்படும். இம்மலரில் பல மகரந்த இழைகள் ஒன்றாகத் திரண்டு அகவிதழ்களின் நடுவே மஞ்சள் நிறமான வட்டம் போல் காட்சி தரும். ஆதலின், மலரை மேலோட்டமாகப் பார்த்தால் அகவிதழ்ச் செம்மையும், மஞ்சள் நிற நடுவட்டமும் கண்கவர் வனப்புடன் இருக்கும். இதனால் இத்தாவரத்தை "இந்தியப் பெருமிதம்" (Pride of India) என்று பாராட்டுவர் தாவர நூலார். கு.சீ.

***அனுசாரணி***: தம்பூராவில் சாரணி என்னும் சுருதிக்கான தந்தி உண்டு. இதற்குப் பக்கத்தில் சாரணியின் ஒலியேற்றத்திற்கு இயைபாக, அதாவது மத்தியத்தாயி சட்சம் என்ற சுருதிக்கேற்ப ஒலி அமைக்கப்பட்டுள்ள தந்தி அனுசாரணி எனப்படும். பாணினி முனிவர் இசையில் உதாத்தம், அனுதாத்தம், சுவரிதம் என்ற மூன்று சுர வகைகள் இருப்பதாகவும், இம்மூன்றில் ஏழு சுரங்களும் அடங்கி இருப்பதாகவும் குறிப்பிடுகிறார். இதில் சுவரிதம் என்ற வகைச் சுரத்தின் அடிப்படையில் தம்பூராவின் சாரணி, அனுசாரணித் தந்திகள் அமைக்கப்பட்டுள்ளன என்று பாணினி கூறுகிறார்.

***அனுசுரம்***: சுரங்களை ஒலிக்கும்போது அவைகளைச் சார்ந்து ஒலிக்கும் சுரங்கள் அனுசுரங்கள் எனப்படும். இது அழுத்தமாகவும், தெளிவாகவும் கேட்கப்படுவது இல்லை. ஆனால், பாடும்பொழுது இடையே ஒலித்து இனிமை வழங்குகிறது. எடுத்துக்

காட்டு: பூர்வகல்யாணி. இதில் சட்சத்திற்கும் தைவதத்திற்கும் (விளரி) இடையில் ஒலிக்கும் இடபம் ஓர் அனுசுரமாகும்.

**அனுசூயை** அத்திரி முனிவரின் மனைவி. கற்புக்கரசி என்று அனைவராலும் போற்றப்படுபவள்.

இந்துப் புராணங்கள் தக்கன் மகள் அனுசூயை என்று கூறுகின்றன. பிரம்மாவின் பாதத்திற் பிறந்த கற்புடை வேதவல்லி தக்கனைத் திருமணம் செய்து கொண்டாள். இவர்கள் இருவரும் ஆண் மக்களைப் பெற்றது போதும் என்று கருதிப் பெண்களையே பெற வேண்டுமென உறுதி செய்து கொண்டு இருபத்து மூன்று பெண்களைப் பெற்றெடுத்தனர். இந்த இருபத்து மூன்று பெண்களுள் ஒருத்தி அனுசூயை. அத்திரி முனிவர் அனுசூயையினைத் திருமணம் செய்து கொண்டார். இவர்களுக்குச் சத்திநேத்திரன், சந்திரன், சனி, சங்கநானன் என்னும் ஆண் மக்கள் பிறந்தனர் என்று கந்த புராணம் கூறுகிறது.

தன் கற்பைச் சோதிக்க வந்த மூன்று தேவரையும் குழந்தைகளாக்கிய பெருமை இவளுக்கு உண்டு. இராமன் காட்டிற்குச் சென்றபோது அத்திரி முனிவர் ஆசிரமத்தில் தங்கினான். அந்த ஆசிரமத்தில் விருந்து அளித்த அனுசூயை பற்றிக் கம்பன் கூறுகையில்,

"அரும் பன்னி கற்பின் அனுசூயை"

என்று குறிப்பிட்டுள்ளார்.

மரவுரி தரித்து வந்த சீதைக்கு அனுசூயை அணிகலன்களும், ஆடையும், சந்தனமும் கொடுத்து ஒப்பனை செய்து அனுப்பினாள் என்பது கூறப்படுகிறது. தன் கணவனைத் தெய்வமென்று உணர்வதோர் மேற்கோளினை அனுசூயை சீதைக்கு அறிவுறுத்தினாள் என்பது வான்மீகத்திலும் சொல்லப்பட்டுள்ளது. ஈ. வே. மா.

**அனுதாபவேபனம்:** வீணை போன்ற இசைக்கருவிகளில் ஒரு தந்தியை மீட்டி அதில் அதிர்வு உண்டாக்கினால், அது அதன் அருகில் அதே ஒலி எல்லையில் அமைக்கப்பட்டிருக்கும் வேறொரு தந்தியையும் அதிர்வு கொள்ளச் செய்யும். இதற்கு "அனுதாப வேபனம்" (Sympathetic Vibration) என்பது பெயர். இவ்வொலி மிகவும் இனிமையும், மென்மையும் கொண்டதாக இருக்கும். தம்பூராவில் சாரணி, அனுசாரணித் தந்திகள் இவ்வித ஒலி எழுப்பவல்லன. கோட்டு வாத்தியம், சாரங்கி ஆகிய கருவிகளிலும் இந்த அனுதாப வேபனம் ஏற்படுத்தலாம்.

**அனுநாதம்:** ஒரே அதிர்வெண் கொண்ட இரு இசைக்கவைகளில் ஒன்றை அதிரச் செய்து அதனருகே மற்றதை வைத்தால் அது தானாகவே அதிர்வதைக் காணலாம். இந்த அதிர்வு வாதியின் அடிப்படையிலேயே இசைக்கருவிகளில் அனுநாதக் கலங்கள் (Resonators) அமைக்கப்பட்டுள்ளன. அனுநாத விளைவின் காரணமாக ஒலியின் அழுத்தம் அதிகமாகிறது. இருமுனைகளும் திறந்த குழல் ஒன்றை, அதன் ஒருமுனை நீரில் அமிழ்ந்திருக்குமாறு பொருத்தி வைத்து, அதன் மறுமுனையில் ஓர் இசைக்கவையைப் பிடித்து அதனை ஒலிக்கச் செய்தால் குழாய்க்குள்ளிருக்கும் காற்று இசைக்கவையின் அதிர்வெண்ணுடன் அதிர்ந்து ஒலி தரும். இப்போது காற்று இயற்கையாக அதிரும். அதிர்வெண் வேறாக இருந்தால் ஒலியின் அழுத்தம் குறைவாக இருக்கும். அதிரவைக்கும் பொருளின் இயற்கை அதிர்வெண்ணுடன் அதிர்வதால் இது உடனிகழ் அதிர்வு எனப்படும். இசைக் கவையின் அதிர்வெண்ணுடன் சமமாக இருக்குமாறு குழாயின் நீளத்தை மாற்றியமைத்தால் அதிர்வு வீச்சு மிகுந்திருக்கும். இதனால், ஒலி அழுத்தமும் அதிகமாகும். இத்தகைய விளைவு அனுநாதம் (Resonance) அல்லது பரிவதிர்வு எனப்படும்.

**அனுப்பீடு:** சரக்குரிமையாளர் உரிமையை மாற்றித்தராமல், விற்கவிரும்பி மற்றவருக்கு அனுப்பும் பொருள் அனுப்பீடாகும் (Consignment). சரக்குரிமையாளர் 'அனுப்புநர்' (Consignor) என்றும், பொருளைப் பெறுபவர் 'பெறுநர்' (Consignee) என்றும் குறிக்கப்படுவர். அனுப்புநர் ஆணைப்படி பெறுநர் பொருள்களை விற்றுப் பணத்தை அனுப்புநருக்குச் செலுத்துவார். இப்பணிக்கு ஊதியமாக விற்பனைத் தொகையில் குறிப்பிட்ட விழுக்காடு கழிவுத்தொகையாகப் (Commission) பெறுநருக்குத் தரப்படும். அனுப்பீட்டு நடவடிக்கை விற்பனையன்று. விற்பனையில் வாங்குநர் பொருளின் முழு உரிமையைப் பெறுகிறார். அனுப்பீட்டில் உடைமை மாற்றம் மட்டுமே நிகழ்கிறது. உரிமை அனுப்புநரிடமே உள்ளது. ஆதலின், அனுப்புநர் 'முதல்வர்' (Principal) நிலையிலும், பெறுநர் 'முகவர்' (Agent) நிலையிலும் உள்ளனர். அனுப்பப்படும் பொருள் அழிந்தாலும் சிதைந்தாலும் ஏற்படும் இழப்பு அனுப்புநருக்கே. பெறுநர் இவ்விழப்பினை ஏற்க வேண்டியதில்லை. உற்பத்தியாளர், மொத்த வணிகர் முதலியோர் தம் பொருளை வேற்றூர் அல்லது வெளிநாட்டில் விற்க அனுப்பீட்டுச் செயலை மேற்கொள்கின்றனர். தானியங்கி ஊர்திகள் போன்ற உயர்ந்த மதிப்புடைய பொருள்களை விற்கவும் அனுப்பீட்டு முறை பயன்படுகிறது.

அனுப்புநர், பொருளை அனுப்பும்போது அதனுடன் ஒப்படைப்புப் பொருள் விவரப் பட்டியல் (Proforma Invoice) அனுப்புவர். அதில் அனுப்பப்படும் பொருளின் விவரம், அளவு, விலை விகிதம்

முதலியன இருக்கும். அடக்க விலை, ஆதாய விழுக்காடு ஆகியவற்றைப் பெறுநர் அறியாமலிருக்க, அதில் விற்க வேண்டிய விலை குறிக்கப்படும். குறிப்பிட்ட விலைக்குக் கீழ் விற்கக் கூடாது அல்லது நல்ல விலையில் பொருளை விற்க வேண்டும் என்ற குறிப்புகளும் காணப்படும். பெறுநருக்குத் தான் செலுத்தும் 'துறைமுகக் கட்டணம்' (Dock Dues), 'சுங்க வரி' (Customs Duty), "வந்துள்ள பொருளை அகற்றுஞ் செலவு" (Clearing Charges), 'சுமை கூலி' (Freight), 'பண்டகசாலை வாடகை', 'காப்பீட்டுறுதிக் கட்டணம்' (Insurance Premium), 'விளம்பரக் கட்டணம்', 'விற்பனையாளர் ஊதியம்' முதலிய செலவுகளைத் திரும்பப் பெற்றுக் கொள்ளும் உரிமை உண்டு. பெறுநர் விற்பனைத் தொகையிலிருந்து, மேற்கூறிய செலவுகளுக்கான தொகை, தமக்குச் சேர வேண்டிய கழிவுத் தொகை, முன்னரே தாம் அனுப்பிய தொகை ஆகியவற்றைக் கழித்துக் கொண்டு மீதியை அனுப்புநருக்குச் செலுத்த வேண்டும். இவ்விவரங்கள் முழுதுமடங்கிய 'விற்பனைக் கணக்கறிக்கையை' (Account Sales) பெறுநர், குறிப்பிட்ட கால இடைவெளிகளில் அனுப்புநருக்கு அனுப்பி, உடனடிப்பணம் அல்லது கடனுக்குப் பொருளை விற்பனை செய்வார். கடன் விற்பனையில் வாராக் கடன் (Bad Debts) ஆகி, இழப்பு ஏற்பட்டால் அனுப்புநரே ஏற்கவேண்டும். இவ்விழப்புக்குப் பெறுநரைப் பொறுப்பாக்க விரும்பினால், அனுப்புநர் அவருக்குக் கூடுதலாகத் தனிக்கழிவு தர வேண்டும். இது பிணைக்கழிவு (Del Credere Commission) எனப்படும்.

அனுப்புநரும், பெறுநரும் தத்தம் கணக்கு ஏடுகளில் தனித்தனியே அனுப்பீட்டு விவரங்களைப் பதிவு செய்து கொள்வர். ஒவ்வோர் அனுப்பீட்டிலும் தனித் தனிக் கணக்குகள் வைத்திருத்தல் மூலம் ஒவ்வொரு அனுப்பீட்டிலும் ஏற்பட்ட ஆதாயம் அல்லது இழப்பினைக் கணக்கிடலாம். வை.ந.

துணை நூல்கள்:

குமாரராசு, அ., கணக்கியலின் கோட்பாடுகள், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1973.

Shukla. M.C. and Grewal., T.S., Advanced Accounts, S. Chand and Company Limited, New Delhi, 1983.

**அனுபல்லவி**: கருநாடக இசையில் ஒரு கீர்த்தனையின் இரண்டாம் அங்கம் அனுபல்லவி எனப்படும். இது பல்லவிக்குப் பிறகு பாடப்படுவது. இதன் முடிவில் மறுபடியும் பல்லவியைப் பாட வேண்டும். சரணத்திற்கு முன்னால் இது பாடப்படுவது. சில கருநாடக இசைக் கீர்த்தனைகளும் முத்து சாமி தீட்சிதரின் கீர்த்தனைகளும் இவ் அனுபல்லவி இல்லாமலும் அமைந்துள்ளன.

**அனுபவக் கல்வி** கல்வியின் நோக்கங்களுள் சிறந்தது, மாணாக்கர்களுக்குப் பயனுள்ள அறிவினைப் புகட்டுவதாகும். அவர்கள்பெறும் அறிவு நிகழ்கால வாழ்க்கையிலும் எதிர்கால வாழ்க்கையிலும் சிறப்பாக உதவக் கூடியதாக அமைந்திருத்தல் வேண்டும். பள்ளிச் செயல்களும் பாடங்களும் இத்தகைய அறிவினை வளர்ப்பனவாம். முற்காலக்கல்வி முறைக்கும் இன்றைய கல்வி முறைக்குமிடையே வேறுபாடு காணப்படுகிறது. சொற்களின் வழியே பெறும் கல்வியறிவைவிட அனுபவங்களின் விளைவாக எழும் அறிவே பயன்மிக்கது என்று உணரப்பட்டு வருகிறது.

கல்வியின் வழியே வாழ்க்கையில் பயன் மிக்க அறிவினைப் பெறுதற்கு, நேரடியான அனுபவங்களைப் பெறுதல் அடிப்படையாகும். செய்து பயில்வதின் வழி (Learning by Doing) பெறப்படும் அனுபவங்கள் இவ்வகைப் பட்டவையாம். அறிவும் செயல் திறன்களும் இணைந்து வளர்ச்சிபெறச் செயல் வழிக் கற்றல் உதவுகிறது. பள்ளிப் படிப்பு வாழ்க்கைக்குப் பயனற்றது எனப்படும் குற்றச்சாட்டிற்கு மாறாக அனுபவவழிக் கல்வி முறை அமைகிறது. பள்ளிப் படிப்பிற்கும் வாழ்க்கைக்குமிடையே காணப்படும் இடைவெளி, நேர் அனுபவங்களின் பங்கு மிகுதலின் விளைவாகப் படிப்படியாகக் குறையும். கல்வி வழியே பெறப்படும் அறிவு, அன்றாட வாழ்க்கையின் எதிர்ப்படும் சிக்கல்களைத் தீர்க்கவும், புதிய நிலைமைகளைப் புரிந்து வெற்றி கொள்ளவும் பயன்படுதல் வேண்டும். செயலாற்றி நேரடியாகப் பல்வேறு கல்வி அனுபவங்களை மாணாக்கர் அடையும்போது, அவற்றின் அடிப்படையில் எழும் அறிவு அவர்களது முயற்சியின் பயனாக இருத்தலால் புதிய நிலைமைகளுக்கும் பொருத்திச் செயற்படுத்தக் கூடியதாகவிருக்கும். செய்து கற்றலில், புலன்களையும் தசைகளையும் இயக்கிச் செயலாற்றுதல் மட்டுமன்றி, சிந்தித்து ஒரு சிக்கலுக்கு விடைகாணல், விவரங்களைத் தேடித் தொகுத்து ஆராய்ந்து பொதுக் கருத்துகளைக் கருதுதல் ஆகியனவும் அடங்கும். நேரடியாகக் கற்றல், அனுபவங்களை அளிக்கவல்ல செயல் வழிக் கல்வி முறைகள் ஆகியவை இளம் மாணாக்கரின் இயல்புகளுடனும் பயில்நிலை உளவியல் தன்மையுடனும் பொருந்தி இருக்கும்.

உண்மையான வாழ்க்கைப் பயனுள்ள அறிவு பல்வேறு சிக்கல்களைத் தீர்க்க உதவக்கூடியதாக அமைதல் வேண்டும். இத்தகைய அறிவு, அனுபவங்கள் செயல்கள் ஆகியவற்றின் அடிப்படையில் எழுகிறது. அனுபவங்களினின்றும் பெறப்படும் அறிவு

உள்ளத் திறனாக மாறி உதவ வல்லது. ஒருவன் கல்வி கற்றுத் தேர்ந்ததன் சின்னம் அவன் பெற்றுள்ள பொருளறிவின் அளவு மட்டுமன்று; அவ்வறிவினை அவன் எவ்வாறு பெற்றான் என்பதனைச் சார்ந்து அது அமையும். மாணவன் தானே பல பயனுள்ள அனுபவங்களைப் பெறுவதன் மூலம் பெறும் அறிவு தான் நடைமுறைப் பயனுள்ளது. பள்ளிக்குச் செல் லும் குழந்தை 'நான் கற்கிறேன்' என்பதைவிட 'நான் பல அனுபவங்களைப் பெறுகிறேன்' என்று கூறும்போதுதான் உண்மையான கல்வியைப் பெறு கிறது எனலாம் என்று சான் தூயி (John Dewey) என்னும் கல்வியாளர் கூறியுள்ளார். செய்து கற்றல், வாழ்ந்து கற்றல் போன்ற கல்விக்கருத்துகள் யாவும் இதன் அடிப்படையில் எழுந்தவையாகும். விளை யாட்டு முறைகள், செயல் திட்டங்கள் (Projects) ஆகியவற்றின் வழியே இணைந்த முறையில் பல விவரங்களை அறிதல், தாமே ஆர்வத்துடன் செயற் பட்டு உண்மைகளைக் கண்டறிதல், பணியனுபவங் களைப்(Work Experience) பெறுதல் மூலம் அறிவினை யும் திறன்களையும் இணைத்துப் பெறுதல் ஆகியன நேரடி அனுபவங்களாகும். இவற்றின் துணைக் கொண்டு மாணாக்கர்கள் பெறும் அறிவு வாழ்க்கைப் பயனுள்ளதாகும்.

பயனுள்ள அறிவு பெறுதலின் நேரடி அனுபவங் களின் சிறப்புத் தன்மையை வலியுறுத்துகையில், பாடநூல்களோ ஆசிரியரின் கூற்றுகளோ கல்விப் பயனற்றவை என்பதாகக் கொள்ளக்கூடாது. பாட நூல்களும் அனுபவங்களின் சுருக்கங்களேயாம். மனித இனம் பல்லாண்டுகளாக முயன்று பெற்ற அறிவினை மொழிச் சொற்கள் ஏற்றுள்ளன. இவற்றின் துணைக் கொண்டு அமைக்கப்பட்ட கருவூலங்களாகப் பாட நூல்கள் உள்ளன. இவை மறைமுக அனுபவங்களாக அமைகின்றன.

இன்றைய முற்போக்குக் கல்வியில், சிறப்பாக இளம் பருவத்தினர்க்கான கல்வியில், செய்து கற்ற லும் அதனுடன் இணைந்து வாழ்ந்து கற்றலும் நடு விடம் பெறுகின்றன. இவை பள்ளி — சமுதாயத் தொடர்பினை வலுப்படுத்துவனவாகவும் அமைந்து, பள்ளிகளின் சமூகப் பொறுப்புகள் நிறைவுற உதவு கின்றனவென்பதும் குறிப்பிடத்தக்கது.

காந்தியடிகளது ஆதாரக் கல்வித் திட்டம் கைத் தொழிலை மையமாகக் கொண்டு செயலாற்றிக் கல்வி அனுபவங்களை நேரடியாகப் பெற மாணாக்க ருக்கு உதவுகிறது. பணி அனுபவங்கள் கற்றலுக்குத் துணை செய்தலுடன் மாணக்கர்களிடையே தொழில் மனப்பான்மையினை உருவாக்கி, எதிர் கால நல்வாழ்விற்கும் பயன் அளிப்பனவாம். செய்து கற்றல் பாடச் செயல்களுக்கும் பாட இணைச் செயல்களுக்கும் (Co-curricular Activities) முன்பு காணப்பட்ட இடைவெளியினை அகற்றி, பாட இணைச் செயல்களின் கல்வி இன்றியமையாமையை உணர்த்தியுள்ளது. பள்ளி வாழ்க்கையில் கட்டுப்பாட் டினை உருவாக்கப் பயன்படும் மாணாக்கர் தன் னாட்சி (Pupil Self Government), சமுதாயப்பணிகள் ஆகியனவும் ஒழுக்க வளர்ச்சிக்கான செய்து கற்றல் வாய்ப்புக்களாக அமைகிறது. எஸ். சி.

**அனுபவக் கூம்பு:** அனுபவத்தின் அடிப் படையாக அமையும் கல்வியே பயனுடையதாக இருக் கும் என்பது கல்வியாளரின் முடிபு. நேரடியான அனுபவங்களைப் (Direct Experiences) புறக்கணித்து வெறும் வாய்ச்சொல் மூலம் அளிக்கப்படும் கல்வி பொருளற்றதும் பயனற்றதுமாகும். ஆனால், நேரடி யான வாழ்க்கைச் செயல்களினின்றும் எழும் அனுப வங்களின் துணைக்கொண்டு அறிவின் அடிப்படையை வளர்த்து, படிப்படியாகச் செயற்கையும் கருத் தியல் நுட்ப (Abstract) மும் மிக்க அனுபவங்களைத் தொடர்பு படுத்திய முறையில் அளித்தால் கருத்தி யல் நுட்பங்கள் வெறும் வாய்ச் சொற்களாகவோ வெற்றுக் குறியீடுகளாகவோ ஆகாமல், சிக்கனமான மன அனுபவங்களாக அமையும். சொற்களும் குறியீ டுகளும் பொருள் தெளிவு பெற வேண்டுமானால், அவற்றிற்கு இயற்கையான நேரடி அனுபவ அடிப் படையும் தகுந்த பொருத்தமும் வேண்டும். இல்லை யேல் வெற்றுச் சொற்கள், பொருள் மதிப்பற்ற வெற்றுச் செலாவணிக்குச் சமமாகும். வாய்ச்சொல், குறியீடு முதலியவற்றை அனுபவத்திற்கு முரணாகக் கருதாமல், இவை நுட்பமான உச்சநிலை அனுபவங் கள் என்றும், இவற்றின் அடிப்படை, நோக்கமுடைய நேரடி அனுபவங்கள் என்றும், இந்த உச்சநிலைக் குறியீட்டு அனுபவங்களுக்கும் அடித்தளமாக அமையும் நேரடி அனுபவங்களுக்கும் இடையே படிப்படியாக உருவநிலை குறைந்தும் அருவநிலை பெருகியும் வரும் படிநிலை அனுபவங்கள் அமைந்துள்ளன என்றும், எட்கார் டேல் (Edgar Dale) என்னும் அமெரிக்கக் கேள்விக் காட்சிக் கல்வி (Audio - Visual Education) வல்லுநர், அனுபவக் கூம்பு (Cone of Experience) என்னும் உருவப் படிவத்தில் தெளிவாக விளக்கியுள் ளார். (காண்க: கருத்துப் படம்) கல்வியில் நாம் பயன்படுத்தும் கேள்வி-காட்சித் துணைக் கருவிகள் (Audio Visual Aids) இக்கூம்பில் கீழிருந்து மேலாகப் பத்துப் படிகளாக அமைகின்றன. அவை:

1) நோக்கமுடையநேரடிஅனுபவங்கள், 2) ஒப்ப மைப்பு அனுபவங்கள், 3) நடிப்பு அனுபவங்கள், 4) செய்து காட்டல், 5) களப் பயணம், 6) காட்சிப் பொருட்கள், 7) தொலைக்காட்சி, திரைப்படங்கள்,

8) ஒலிப்பதிவு, வானொலி, படங்கள், 9) காட்சிக் குறியீடுகள், 10) மொழிக் குறியீடுகள் ஆகியன.




அனுபவக் கூம்பின் கருத்துப்படம்
Diagram Representing Cone of Experience

சிறிய குழந்தைகளுக்கும் ஒரு பாடத்தைப் புதிதாகக் கற்பவர்களுக்கும் நோக்கமுடைய நேரடி அனுபவங்கள் இன்றியமையாதன. ஒரு துறையில் புலமை மிக்கவர்கள் உரையாடலில் வாய்ச்சொல்லையும் பிற குறியீடுகளையும் அதிகமாகப் பயன்படுத்தலாம். கூம்பின் சிகரம் சிறிதாக இருப்பதால், வாய்ச் சொற்களையும் குறியீடுகளையும் பயன்படுத்தும் போது மிகக் குறைந்த நேரத்தில் அதிகப் பொருளை எடுத்துக் கூற முடியும். நேரடி அனுபவமுறையில் கற்பிக்க அதிக நேரம் பிடிக்கும் என்பதைப் பருத்துள்ள கூம்பு காட்டுகிறது. ஆனால், நேரத்தை மிச்சப்படுத்தும் நோக்கில் நேரடி அனுபவத்தை விடுத்து வாய்ச் சொற் குறியீடுகளைப் பயன்படுத்துவது, கால்கோள் இல்லாது வீடு கட்டுவதைப் போலாகும்.

அடித் தளத்திற்கும் கூம்பின் நுனிக்கும் இடையேயுள்ள ஒவ்வொரு படிக்கும் இன்றியமையாத இணைப்புப் பயன் உண்டு. எடுத்துக்காட்டாக, செயற்கையான ஒப்பமைப்பு அனுபவங்களுக்கு நேரடி நோக்கமுடைய அனுபவத்தைப் போன்ற உண்மைத் தன்மை கிடையாது. ஆனால், இவற்றிற்குத் தனிப்பட்ட விளக்கத் தன்மை உண்டு. நேரடி அனுபவத்தில் உள்ள இடர்ப்பாடுகள் ஒப்பமைப்பு அனுபவங்களில் குறையும். இவ்வாறே திரைப்படம், படம், ஒலிப்பதிவு கருத்துப் படம் முதலிய ஒவ்வொன்றிற்கும் சிறப்பான கல்விப் பயன் உண்டு.

இவ்வாறு கல்விக்கு நேரடி அனுபவத்தில் கால்கோள் நாட்டி, இடைநிலை அனுபவங்களின் மூலம் இணைத்துப் படிப்படியாக வளர்த்து, உச்ச நிலையாக வாய்ச்சொல் அனுபவங்களைப் பயன்படுத்தினால் கல்வி பொருளுடைமை, சிக்கனம் முதலிய பலவற்றைப் பெறும். க.கு.

துணை நூல்கள்:

K. Kulandaivel, Audiovisual Aids, Sri Ramakrishna Vidyalaya, Coimbatore, 1961.

Sampath, K., Pannerselvam, A. and Santhanam, S., Introduction to Educational Technology, Sterling Publishers, New Delhi, 1984.

**அனுபவ வழிக்கொள்கை** அறிவு சார்ந்த அனுபவக் கொள்கை எவ்வாறு பகுத்தறிவுச் சிந்தனைக்கு முதலிடம் அளிக்கிறதோ, அதைப் போன்றே, புலன்களுக்கும் அவற்றிடைத் தொடர்புகளுக்கும் (Relations) சிறப்பிடம் அளிக்கிறது. புலன்வழி அனுபவக் கொள்கை (Empiricism). வெளிவுலகச் செய்திகள் புலன்களின் வாயிலாக நுழைந்து அவற்றிடையே ஏற்படும் தொடர்புகளால்-உறவால் – தோன்றும் அனுபவமே அறிவு; எனவே புலனுணர்ச்சியும், அவற்றின் உள்ளிடை உறவும் (Internal Relations) அமையாமல்,

அறிவு ஏற்பட வியலாது. அத்தொடர்புகள் ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் ஏற்றவாறு தோன்றுகின்றன. சுருங்கக் கூறின், அறிவு அமைப்புக்குத் தேவையானவை புலன்களின் செயல், அவற்றுள் ஏற்படும் உறவுகள், அவற்றை இணைக்கும் கால நிலைமைகள் (நிகழ் காலம், இறந்த காலம், எதிர் காலம்) ஆகியன. இவ் விளக்கத்திற்கு அடிப்படையாக அமையும் அளவியல், தொகுப்பு வழி அளவியலாகும் (Inductive Logic). அம்முறையே அறிவியல் முறைக்கும் (Scientific Method) அடிகோலியாக அமைவது என்பதும் கவனிக்கத்தக்கது. இவ்வாறு அறிவியல் முறையிலும் தத்துவ முறையிலும் அறிவு பெறுவதென்பது, புலன்களின் வாயிலாகச் சேகரிக்கப்பட்ட செய்திகளின் உறவு-அமைப்பில் உண்டாகும் அனுபவத்தின் அடிப்படையில்தான் என்பதே புலன் வழிக் கொள்கையின் அறிவைப் பற்றிய முடிவாகும். இக்கருத்தினை விரித்துக் கூறுகையில், புலன்கள் இல்லையேல், அவற்றின் தொடர்புகளும் இல்லையாகையால், அனுபவ அமைப்பு உறுதியாக ஏற்படாது. ஆகவே அறிவு ஏற்படுவதும் இயலாது. எடுத்துக் காட்டாக, செவிப்புலன் செயற்படாத செவிடன் ஒலியினைக் கேட்கவும் முடியாது; அதன் அறிவைப் பெறவும் முடியாது. அவனைப் போன்றே குருடன் காணவும் முடியாது; அதன் அறிவைப் பெறவும் முடியாது. அதனால், இக்கொள்கையில் ஆர்வம் கொண்டவர்கள் புலன்களைத் தவிர்த்து மற்றவற்றிற்கு முதலிடம் அளிப்பதில்லை. இக்கொள்கையில் ஆர்வம் கொண்டவர்களுள் தலை சிறந்தவர்கள்: சான் இலாக்கு (John Locke,1632-1704); சார்சு பெர்க்கிலி (George Berkely. 1685-1753); தேவிடு இயூம் (David Hume, 1711-1776) ஆகியோராவர். அம்மூவருக்கிடையிலும் கருத்து வேற்றுமைகள் காணப்பட்ட போதிலும் அவர்களனைவரும் புலன்களுக்கு முதலிடம் கொடுக்கிறார்கள் என்பதில் ஒற்றுமைப்படுகிறார்கள்.

அறிவு ஏற்படுவதற்குப் புலன்களும் அவற்றின் உள்தொடர்புகளுமே போதுமென்றால் அகவுணர்வின் பங்கு என்ன? அகவுணர்வு ஏற்படுவதற்கு மனமே (Mind) காரணமாகும். ஆனால் மனம் என்று தனியாகக் குறிப்பிடுவதற்கு எதுவுமில்லை. அது உணர்வுகளைப் பதிவு செய்யும் ஒரு வெற்றிடமே (Empty Chamber) என்பது, அதற்கு அவர்கள் அளிக்கும் சிறப்புப் பெயர் எழுத்திலாப் பட்டிகை (Tabula rasa). பிறந்த ஒவ்வொருவரும் அத்தகைய எழுத்திலாப் பட்டிகையுடன்தான் பிறக்கின்றனர் என்பதும் குறிப்பிடத்தக்கன. வளர்ச்சி பெறும் போது அன்றாட வாழ்க்கையில் ஏற்படும் உணர்ச்சிப் பதிவுகளே (Imprinted Impression) அனுபவமாக அமைவதற்கும், அறிவு உண்டாவதற்கும் துணையாக அமைகின்றன. 'புலன்களின் வழியே கிடைக்கப் பெற்றாலன்றி அறிவு அமைவதற்கில்லை' என்ற ஒரே சொற்றொடரில் அக்கருத்தினை வலியுறுத்திக் கூறுகின்றனர்.

இவ்வாறு புலன்வழிக் கொள்கை பொதுவாக அறிவையும், சிறப்பாக நுண்ணறிவையும் (Intelligence) புலன்களின் வரையறைக்குள்ளேயே கொண்டு விளங்கும் என்பது அக்கொள்கையில் ஆர்வம் கொண்டவர்களின் கருத்து. எனவே, மனத்தின் திரிபினைச் செய்யும் (Interpretation) அதற்கு உதவும் பகுத்தறிவுச் சிந்தனையும் ஏற்பதற்கில்லை. அக்கருத்தினை அறிவியல் முறையில் விளக்குவதற்காகவே தொகுப்பு வழி அளவை இயலையும் ஏற்றுப் போற்றுகின்றனர். இவ்வாறான அடிப்படைக் கருத்தினைக் கொண்ட புலன் வழிக் கொள்கையினர் உயிர், கடவுள் என்பன போன்ற கருத்துப் பொருள்களைப் பற்றிப் பேசவில்லை; பேசுவதற்கு விருப்பமும் இல்லை. காரணம், அக்கருத்துப் பொருள்கள் புலன்களுக்குப் புலப்படுதலுமில்லை; புலன்களின் அமைப்புக்குட்பட்ட அனுபவத்தில் அறியப்படுவதுமில்லை. எனவே, அவற்றைப் பற்றிய கேள்விகளுக்கு அவர்கள் விடையளிப்பதுமில்லை. அதனால்தான், இக்கொள்கையைப் புலனுக்குப்பின் எழும் (A Posteriori) கோட்பாடென்றும், புலனுக்குப் பின் எழும் அறிவு என்றும் கூறுவர்.

புலன்வழிக் கொள்கையை ஏற்றுக் கொண்டோருள்ளும் கருத்து வேறுபாடுகள் உண்டென்பது முன்பே கூறப்பட்டுள்ளது. அவர்களிடையே உள்ள கருத்து வேறுபாடுகளினாலேயே அக்கொள்கைமேலும் வளர்ச்சி அடைந்து வெவ்வேறான கொள்கைகளையும் ஏற்படுத்தியுள்ளது. அவ்வாறான கொள்கைகளுள் குறிப்பிட்டுக் கூறத்தக்கவை, ஐயக்கொள்கையும் (Scepticism) அறியொணாமைக் கொள்கையுமாகும் (Agnosticism). அவை இரு வேறு கொள்கைகளாகக் காணப்பட்ட போதிலும், இரண்டும் ஒரே நாணயத்தின் இருவேறு பக்கங்கள் போன்றன என்றே கூறலாம். ஐயக்கொள்கைதான் தொடக்கம் என்றால், அதன் முடிபு அறியொணாமைக் கொள்கைதான் எனலாம். ஆயினும், அவற்றில் காணப்படும் வேறுபாடுகளையும் முரணான முடிபுகளையும் விரித்துக் கூறுதல் பயனுடையதாகும். பெர்க்கிலி, பருப்பொருள் உண்மையை மறுக்கிறார். இரண்டாந் தரமான குணங்கள், மனத்திலில்லாமல் இடம் பெறுவதில்லை. முதல் தரமான குணங்களும் அவ்வாறே. தண்ணீரில் ஒரு தடியை மூழ்கடித்தால் அது வளைவாகக் காணப்படுகிறது.

பெர்க்கிலியின், கருத்துப்படி மக்கள் நுகர்வது கருத்துகளே அல்லாது வேறு இல்லை. அதே போல் நிறமுடைய ஒரு பொருளைக் காணும் பொழுது

மேலே உள்ள நிறங்களைப் பார்க்கலாம். ஆகையினால் எண்ணுகிற மனமும் எண்ணங்களும் தான் இருக்கின்றன. பெர்க்கிலி ஒரு முழுமையான அனுபவ வழிக் கொள்கை உடையவரல்லர். மக்கள் எண்ணங்கள் புலனறிவு சார்ந்திருப்பதற்கும் அவர்கள் உலகில் இருப்பதற்கும் கடவுள்தான் காரணம் என்று கூறுகிறார். இயூம், மனிதத் தன்மையைப் பற்றி ஒரு நூல் வெளியிட்டிருக்கிறார். அறவியல், அரசியல், சமயம், முதலியனவற்றிலும் நூல் எழுதியிருக்கிறார்.

ஆன்மா என்பது எல்லாவகைப் புலனறிவுகளும் தொடர்ந்து வந்து கொண்டேயிருக்கும் ஒரு காட்சி, ஆகையினால் ஒரு நிலையுள்ள, மாற்றமில்லாத ஆன்மாவை அறியமுடியாது.

முடிவாகக் கூறுமிடத்து, இலாக்கு, பெர்க்கிலி, இயூம் முதலியவர்களின் ஆராய்ச்சி மிகவும் குறுகியது. அறிவுத் தொகுதியில் ஒரு பெரிய உலகக் கருத்து (Universal Element), முதல் மையமாகக் கொண்டிருப்பதைக் காண்ட்டு (Kant) வலியுறுத்துகிறார். அனுபவமில்லாமல் அத்தகைய கருத்துகளை அறிந்து கொள்ள முடியாது. மேற்கூறிய எல்லாவற்றையும் உட்படுத்திய கொள்கையினை அறியத்துணை செய்வது ஒரு புதிய அனுபவவழிக் கொள்கை ஆகும் (New Empiricism). அதனை அறிமுகப்படுத்தியவர்கள் சி.இ.மூர் (G.E.Moore), வில்லியம் சேம்சு (William James), பெர்ட்ராண்டு இரசல் (Bertrand Russell) முதலியவர்கள். மு.மு.

**அனுபவவழிக் கொள்கை-கல்வியில்:** மனித உள்ளத்துள் அறிவு எவ்வாறு எழுகிறது என்பதற்கான ஒரு விடையாக அனுபவவழிக் கொள்கை (Empiricism) உள்ளது. தொடக்கத்தில் உள்ளம் வெற்றுத் தாள் போன்று எந்த ஒரு கருத்தும் பதிவு பெற்றிராத நிலையில் உள்ளது என்றும், புலன்களின் வழியே பெறப்படும் பல்வேறு அனுபவங்கள் அறிவு எழுதலுக்கான அடிப்படைக் கருத்துகளை அளிப்பனவாகுமென்றும், அனுபவ வாயிலாக எழும் இக் கருத்துகளின் துணைக் கொண்டு அறிவு பெருகிச் சிறிது சிறிதாக விரிவும் ஆழமும் அடைகிறது என்றும் இக்கொள்கை குறிப்பிடுகிறது. புலன்களின் வழியே நுழையாத எந்த ஒரு கருத்தும் உள்ளத்துள் இருத்தல் இயலாது. அறிவு வளர்ச்சிக்கு உதவும் உய்த்தறிதல் (Inference) போன்ற முறைகளும் புலக்காட்சி அனுபவங்களை அடித்தளமாகக் கொண்டே அமைவன என இக்கொள்கையினர் சுட்டிக் காட்டுகின்றனர். இன்றைய கல்வியுலகில் புதுமையும் புரட்சியும் தோற்றுவித்துள்ள கல்வியாளர் பலர்தம் கருத்துகளை உருவாக்குதலில் அனுபவவாயிற் கொள்கைக்குப் பெரும் பங்குண்டு. இதன் செல்வாக்கு வகுப்பறைக் கற்பித்தல் முறைகள் பலவற்றிலும் பரவலாக இன்று காணப்படுதலும் தெளிவு.

கல்வி வரலாற்றில் காணப்படும் இயற்கைக் கோட்பாடு, உளவியல் கோட்பாடு, கட்டுப்பாட்டுக் கொள்கை, அறிவியற் போக்கு போன்ற பல்வேறு நிலைகளின் பேராளர்களாக விளங்கிய பல கல்வியாளர்களின் கருத்துகளில் அனுபவவாயிற் கொள்கை உள்ளமைந்திருத்தலைக் காணலாம். உளவியலறிஞர் பியாசே (Piaget), அறிவு வளர்ச்சிக்கு முதற்படியாகப் 'புலன்-இயக்க' நிலையினை வைத்துள்ளார். ஏறத்தாழ 300 ஆண்டுகளுக்கு முன்னரே கல்வியாளர் கமீனியசு (Comenius, 1592-1670) என்பார் புலன் காட்சி வழியே பெறப்படும் அனுபவங்கள் குழந்தைக் கல்வியின் அடிப்படை என்பதனை வலியுறுத்தியுள்ளார். கல்வியில் கட்டுப்பாட்டுக் கொள்கையினை விளக்கிய சான் இலாக்கு (John Locke, கி.பி. 1632-1704) என்னும் ஆங்கிலேயக் கல்வியாளர், அறிவு யாவும் புலன்களின் வழியேதான் பெறப்படுகின்றன வென்றும், கட்டுப்பாட்டினைப் பெற்ற உள்ளத்தினால் மட்டுமே புலனுணர்ச்சிகளுக்கு நன்கு பொருளுணர்ந்து அவற்றை ஒருங்கிணைந்த அறிவாக உருவாக்க முடியும் என்றும் குறிப்பிட்டார். உரூசோ (Rousseau, கி.பி. 1712-1778) வின் இயற்கைக் கோட்பாட்டில், கற்கும் குழந்தை நேரடியாகத் தன் புலன்களைப் பயன்படுத்திப் பல கல்வியனுபவங்களைப் பெறுவதன் சிறப்பை விளக்கியுள்ளார். இவருக்குப் பின் வந்த கல்வியாளர் பெசுடலாசி (Pestalozzi, கி.பி. 1776 - 1841) உற்று நோக்கல், அனுபவங்களைப் பெறுதல் ஆகியவற்றின் வழியே குழந்தைகள் கல்வியறிவு பெறுதலை வலியுறுத்தி, அதற்கு வகுப்பறைச் செயல் வடிவமும் அளித்தார். கல்வி உளவியலின் தந்தை எனக் குறிப்பிடப்படும் எர்பார்ட்டு (Herpart, கி.பி. 1776-1841) என்பாரது கொள்கையும் அனுபவ வாயிற் கொள்கையினைச் சார்ந்தமைவதாகும். புலன் காட்சியனுபவங்களை அவர் அடிப்படை அனுபவங்கள் என்கிறார். இவற்றினின்று உள்ளத்தின் வளர்ச்சி தொடங்குகிறது என்றும், இவ்வளர்ச்சிக்குத் தொடர்பினையும் முழுமையையும் அளித்தலில், உள்ளத்தின் 'முன்னறிவுடன் இணைக்குந்திறன்' (Apperception) துணை செய்கிறதென்றும் எர்பார்ட்டு விளக்கியுள்ளார். புலன்காட்சியனுபவங்களைப் பெறுதல், உற்று நோக்குதலின் தேவை, தொகுத்தறி முறையின் (Induction) பங்கு ஆகியவற்றை கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் எழுந்த அறிவியற் போக்கு, கல்வியாளரைப் பரவலாக உணருமாறு செய்தது. கல்வியில் சமூகவியற் போக்கின் சிறப்புப் பேராளரான சான் தூயி (John Dewey, கி.பி. 1859-1952), தமது முற்போக்குக் கல்வியின் மையக் கருத்தாகச் செயல்களில் பங்கு பெற்று அனுபவ

வாயிலாகக் குழந்தைகள் பயனுள்ள கல்வியைப் பெறுதலை வலியுறுத்தினார். தூயியின் கருத்துகளுடன் பெருமளவு இசைவு பெற்றுள்ள 'பயன்வழிக் கோட்பாடும்' (Pragmatism) அனுபவ வாயிற் கொள்கையினை ஏற்பதுடன், புலன் காட்சியனுபவங்களைப் பெறுதலில் உள்ளம் செயலுறு (Active) நிலையிலுள்ளது என்பதனையும் சுட்டிக் காட்டியுள்ளது. இரசல் (Russell), ஒயிட்கெட் (Whitehead) போன்ற புற உண்மையாளரின் (Realists) கல்விக் கருத்துகளிலும் அனுபவ வாயிற் கொள்கையின் சாயல் உள்ளது. காந்தியடிகளும் தம் ஆதாரக் கல்வித் திட்டத்தில், செயல்களினின்று எழும் நேரடியான அனுபவங்களின் கல்விச் சிறப்பினைச் சுட்டிக்காட்டியுள்ளார். இன்று, நம் நாட்டின் புதிய கல்வித் திட்டங்களில் வலியுறுத்தப் பெறும் பல்வேறு கருத்துகள், செயல்முறைகள், போன்றன பலவும் அனுபவ வாயிற் கல்வியினைத் தெளிவாக்குவனவாம். 'பணியனுபவம்', 'வாழ்ந்து கற்றல்', 'செய்து கற்றல்' 'கைத்தொழில் சார்ந்த கல்வி' போன்றன இதற்கு எடுத்துக்காட்டுகளாகும்.

எஸ்.ச.

**அனுமகொண்டா** ஆந்திரப் பிரதேச மாநிலத்தில் வாரங்கல் மாவட்டத்தில் உள்ள ஊர். காகத்தியர் காலத்திய ஆயிரங்கால் மண்டபக் கோயிலொன்று அனுமகொண்டாவில் (Hanamkonda) உள்ளது. காகத்திய அரசன் பிரதாபருத்திரனால் கி.பி. 1162-ஆம் ஆண்டு இக்கோயில் கட்டப்பட்டது. இது சிவன், திருமால், சூரியன் ஆகிய கடவுளர்க்குத் தனித்தனிக் கருவறைகளைக் கொண்டுள்ள முக்கோயிலாகும். இக்கருவறைகளுக்கு எதிரே பொதுவான மண்டபத்தில் உள்ள தூண்கள், பல தூண்களை ஒருங்கிணைத்து அமைக்கப்பட்டவை போன்று தோற்றமளிக்கின்றன. ஒரே கல்லினாலான இத்தூண்கள் வழவழப்பாகவும், நுட்பமான சிற்பங்களைப் பெற்றும் திகழ்கின்றன. நந்தி மண்டபம் ஒன்றினையும் இக்கோயில் பெற்றுள்ளது. இக்கோயிலின் வெளிப்புறச் சுவர்களில் உயர்ந்த பீடத்தில் பல்வேறு சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. நடனமாடும் பெண்களின் சிற்பங்கள் குறிப்பிடத்தக்கன. இப்பெண்களின் நீண்ட, கூர்மையான மூக்கு, முகவாய்க்கட்டை, வளைந்த புருவங்கள், அழகிய கண்கள், காதணிகள், பிற அணிகலன்கள், பருத்த மார்புகள் முதலியன திறமையான சிற்பிகளால் செதுக்கப்பட்டுள்ளன. காகத்திய மரபினரின் கட்டிடத் திறனுக்கு இக்கோயில் சிறந்த சான்றாக இன்றும் விளங்குகிறது.



அனும கொண்டா கோயில்

**அனுமந்திரம்**: வீணையின் நான்காம் தந்தி அனுமந்திரம் எனப்படும். இது கீழ் அமைக்கப்பட்ட தந்தியாகும். இதில் பஞ்சமத்திற்கு ஒலி கூட்டப்பட்டிருக்கும்.

**அனுமன்**: அனுமன் இராமாயண காவியத்தின் இன்றியமையாத கதை மாந்தருள் ஒருவன். திருமால் கோயில்களுக்குள்ளும் தனியாகவும் அனுமனுக்குப் பல திருக்கோயில்கள் உள்ளன.

இவன், கேசரிராசன் என்னும் வாயுவுக்கும் அஞ்சனை என்பவளுக்கும் மகனாகத் தோன்றியவன்;



அனுமன்

சுக்கிரீவன் என்னும் வானரத் தலைவனுக்கு அமைச்சனாக இருந்தவன். இராமன் புகழுக்குக் காரணமானவன்; குரங்கு வடிவினன்.

உடல்வலிமை, நாவன்மை, கல்வி, அமைதி ஆகிய பண்புகளுக்கு உருவமாக வடிக்கப் பெற்றவன். பரம்பொருள் என்றும், பரமபதம் என்றும் போற்றப் பெறுபவன். இவன் காலை முதல் மாலை வரை சூரியனை நோக்கியபடி இருந்தே நவவியாகரணம் முதல் எல்லா நூல்களையும் கற்றான். நீதியின் நெறியில் நின்றவன். வாய்மையுடையோன். மாதரைக் கனவிலும் கருதாதவன். 'நித்திய பிரமசாரி' என்று போற்றி வழிபடப் பெறுபவன். 'ஈண்டிய கொற்றத்து இந்திரன்' முதல் யாரும் பின்பற்றும் ஒழுக்கம் உடையவன். பொன்னிறமான மேனியுடையவன்.

அனுமனை வணங்குவோர் அறிவுத் திறனும் உடல்வலியும் பெறுவர் என்ற நம்பிக்கை பற்றியே மகாபாரதத்தில் பீமன் அனுமனைச் சந்தித்து இராமாயணம் கூறி, வாழ்த்துப் பெற்றான் என்பது கூறப்பட்டுள்ளது.

சாவா மூவாத் தன்மைகொண்ட சிரஞ்சீவிப் பதம் பெற்ற எழுவருள் அனுமன் ஒருவன். மற்றையோர் அசுவத்தாமா, மாபலி, வியாசன், வீடணன், கிருபன், பரசுராமன் ஆகியோராவர்.

திருமாலுக்கு எப்போதும் அடிமை செய்யும் கருடன் 'பெரிய திருவடி' என்று அழைக்கப் பெறுவது போல், இராமாவதாரத்தில் திருமாலுக்குத் தொண்டு செய்த அனுமன் 'சிறிய திருவடி' என்று அழைக்கப் பெறுவது வைணவ மரபு.

சிவன் அமிசமாகக் கருதப்பெறும் அனுமன், அஞ்சனைக்கு நேயமகன் என்பதாலும், சீதை சிறையுற்ற இடத்தை ஆய்ந்த நேயன் என்பதாலும் ஆஞ்சநேயன் என்றும் அழைக்கப் பெற்றான். பிறந்தவுடனேயே இளஞ்சூரியனைப் பிடிக்கப் பாய்ந்த போது இந்திரன் வச்சிராயுதத்தால் கன்னத்தில் அடிபட்டவன். இதனால் வந்த பெயரே அனுமான் என்பது. அனு-கன்னம், மான்-சிறப்புடையவன்

இன்றும் துவைதக் கொள்கையுடையோர், மத்துவரை அனுமன் அவதாரமாகவே கருதிப் போற்றுகின்றனர். எங்கு இராமாயணம் பேசப்பட்டாலும் அங்கு மானசீகமாக அனுமன் இருந்து கேட்கிறான் என்ற நம்பிக்கை, அனுமனின் இராம பத்தியைக் காட்டுவதாகும். கீ.

**அனுமன்கர்** காக்கர் ஆற்றின் வடகரையில் அமைந்துள்ள ஊர். அனுமன்கர், சோத்பூர் பிக்கானிர் இருப்புப் பாதையில் பிக்கானிரிலிருந்து 232 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இது இராசசுதானின் வளமான ஊர்களிலொன்று. இவ்வூரின் பழைய பெயர் பாட்னா ஆகும். இது பட்டியின மக்களின் வாழ்விடமாகத் திகழ்ந்தது. பட்டியின மக்கள் யாதவ-இராசபுத்திரர்களின் வழிவந்தவர்கள்; பின்னர் இசுலாமியராக மாறினர்.

அனுமன்கர் நகரைச் சுற்றிலும் உள்ள பகுதி மிகப் பழைமையானதாகும். பல சுடுமண் பொம்மைகளும், பிற்காலக் குசானர்களின் வேலைப்பாடு மிக்க மட்பாண்ட ஓடுகளும் நாணயங்களும் இங்குக் கிடைத்துள்ளன. இங்குள்ள மண்மேட்டில் 5 மீ. ஆழத்தில் சுடுமண்ணால் செய்யப்பட்ட தூணின் இரண்டு தலைப்பகுதிகள் கிடைத்துள்ளன. இதன் முனைகளில் படிக்கட்டுகளுடன் கூம்பு போன்று அமைந்த கோபுரம் காணப்படுகிறது. இதன் அருகில் சுடுமண் உருவச் சிலையின் அடிப்பகுதி இரண்டாக உடைந்து காணப்படுகிறது. செம்மணற் பாறையில் செய்யப்பட்ட கதவின் நிலை ஒன்று இங்குக் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது. இதன் முகப்புகளில் இரண்டு காதலர்களின் உருவங்களும், சூரியக் கடவுளின் உருவமும் உள்ளன. சூரியக் கடவுள் காலில் காலணிகளையும், கையில் இரு தாமரை மலர்களையும் வைத்திருக்கிறார். அவர் அமர்ந்த நிலையில் உள்ளார்.

முகம்மது கசினி கி.பி. 1004-ஆம் ஆண்டு அனுமன்கர் மீது படையெடுத்தார். பால்பனின் மாமன் மகன் செர்கான் கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் இப்பகுதியின் ஆளுநரானார். இவர் பாடிண்டா, பட்னர் கோட்டைகளைச் செப்பனிட்டார். செர்கான் கி.பி. 1269-ஆம் ஆண்டு இங்கு இறந்தார். இவர் நினைவாகக் கல்லறை ஒன்று கி.பி. 1391-ஆம் ஆண்டு கட்டப் பெற்றது. அனுமன்கர் சமண சமயத் தொடர்புடைய ஊராகும். இங்குப் பழைமை மிக்க சாந்திநாதரின் கோயிலும் உள்ளது.

**அனுமான் மந்திர்** தில்லியில் பாபா கரக்சிங்கு சாலையில் (பழைய இர்வின் சாலை) கன்னாட்டு வளாகத்தில் இருந்து 250 மீட்டருக்கு அப்பால் தென் மேற்குப் பகுதியில் அமைந்துள்ள கோயில். இக்கோயில் கட்டிடக் கலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். இதனைக் கட்டியவர் மகாராசா இரண்டாம் செய்சிங்கு (கி.பி. 1699-1743). இக்கோயிலைத் தில்லி இந்துக்கள் புதுப்பித்தார்கள்.

**அனுமான இலக்கணம்:** உலக வரலாற்றை நோக்கும்போது பண்டைக் கிரேக்கர்களும் உரோமானியர்களும் தத்துவம், இலக்கணம், இலக்கியம் போன்ற பல்துறை ஆராய்ச்சியிலும் உயர் நிலையில் இருந்ததை அறியலாம். அவர்தம் மொழியாராய்ச்சி தத்துவ, தருக்க அடிப்படையில் அமைந்திருந்தது. மொழிகளுக்

கென்று இலக்கணம் படைத்தல், குறிப்பாகப் பயிற்று இலக்கணம் (Pedagogical Grammar) படைத்தல் அவர்தம் நோக்கமாக இருந்தது. அவர்தம் மொழி விவரணையில் சொல்வகை, சொற்பிறப்பு, வரலாற்று விளக்கம் ஆகியன சிறப்பிடம் பெற்றன. கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் கிறித்தவ சமயம் உயர்ந்த நிலையில் இருந்தபோது, இலத்தீன் மொழி வேத மொழியாகவும் அறிஞர்களின் மொழியாகவும் அரசியல் மொழியாகவும் விளங்கியதால், அதனைப் பயிற்றும் நோக்கத்திற்காக இலக்கணங்களை உருவாக்கினர்.

இடைக் காலத்தில் ஒரு மொழியைப் பயிற்றுவிப்பதற்காக இலக்கணம் படைக்க வேண்டும் என்ற நிலை மாறி, மொழியின் பொதுத் தன்மைகளை விளக்கி ஒரு மொழிக் கொள்கையை உருவாக்குவதற்காகவே இலக்கணம் படைக்க வேண்டும் என்ற உணர்வு மேலோங்கி நின்றது. இக்கால இலக்கண ஆசிரியர்களான தொனாட்டசு, பிரிசியன், பீட்டர் இலாசு, பேக்கன் போன்றவர்கள் அரிசுடாட்டிலின் தருக்கக் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு புதுமையான இலக்கணங்களைப் படைத்த போதிலும் அவர்தம் ஆராய்ச்சி, சொற்களை வகைப்படுத்துவதோடு மட்டுமே நின்றது. இவர்களுக்குப் பின் வந்த இலக்கணிஞருள் சிலர் அரிசுடாட்டிலின் தத்துவக் கருத்துகளோடு, நுண்பொருள் ஆராய்ச்சி (Metaphysics) சார்ந்த கருத்துகளையும் கைக்கொண்டு, பழைய இலக்கண நெறிமுறைகளைச் சீர்படுத்தி இலக்கண ஆய்வில் ஒரு புதிய அணுகுமுறையைத் தோற்றுவித்தனர். மொழியையும் மொழியின் கூறுகளையும் செயல் தன்மை (Modes) அடிப்படையில் ஊகித்து விளக்க முயன்ற காரணத்தால், இவர்கள் அனுமான இலக்கணத்தார் என்று குறிப்பிடப்பட்டனர். இவர்கள் படைத்த இலக்கணமே அனுமான இலக்கணம் எனப்படுகிறது. இவர்களுள் கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புனித தாமசு, மார்ட்டின், கைகர் ஆகியோர் குறிப்பிடத்தக்கவராவர்.

பொருள்களின் மூல இயல்பு, உளதாந் தன்மை, புறவுலக நிகழ்வுகள் என்ற மொழியியல் தவிர்த்த (Extra Linguistics) வாதங்களின் அடிப்படையில் தங்கள் மொழிக் கொள்கையை அனுமான இலக்கணிகள் நிறுவினர். மனித மனத்தில் ஏற்படக் கூடிய கருத்துக் கூறுகளையும் (Concepts) புற உலகின் உண்மை நிகழ்வுகளையும் (Reality) தொடர்புபடுத்துவதன் மூலம், மொழியின் இலக்கண விதிகள் அனைத்திற்குமுரிய ஆதாரத்தை அறியலாம் என்பது இவர்தம் அடிப்படைக்கோட்பாடாகும். மனிதன் தன் அறிவால் ஏற்றுக்கொள்வதற்குரிய செய்திகள் அனைத்தையும் மொழியின் மூலம் வெளியிட இயலும் என்பதும் அனுமான இலக்கணத்தின் கருத்தாம்.

ஒரு மொழி அதற்கேயுரிய சிறப்புக் கூறுகளை மட்டுமன்றி மனித மொழிகள் அனைத்திற்குமுரிய பொதுப் பண்புகளையும் உள்ளடக்கிக் கொண்டுள்ளது என்பது இவ்விலக்கணிகளின் நம்பிக்கையாகும். மேற்குறிப்பிட்ட வாதங்களின் அடிப்படையில், இலத்தீன் மொழி இலக்கணத்தை அடிப்படையாகக் கொண்டு உலக மொழிகள் அனைத்திற்கும் பொதுவான ஒரு இலக்கணக் கோட்பாட்டை (Universal Theory of Language) அனுமானிப்பதே இவர் தம் ஆழ்ந்த ஆராய்ச்சியின் நோக்கமாக அமைந்தது.

அனுமான இலக்கணத்தாரின் மொழி விவரணையில் கூறுகள் (Elements), வகைகள் (Categories) என்ற இரு பொதுத் தன்மைகள் உண்டு. அவற்றுள் கூறுகள், சாதாரண ஒலித்தொடர் (Vox) என்றும், குறிபொருள் ஏற்கத்தக்க ஒலித்தொடர் (Signum) என்றும், குறியீட்டுப் பொருள் ஏற்ற கூறு (Dictio) என்றும், இலக்கணக் கூறு (Partes Orationis) என்றும் நால்வகைப்படும். மனிதனால் உச்சரிக்கப்படும் பொருளற்ற ஒலிகளின் அடுக்கைச் சாதாரண ஒலித்தொடர் எனலாம். எ-டு. 'காகம்' என்ற ஒலி. குறியீட்டுப் பொருளைக் குறித்துக்காட்டும் ஆற்றல் பெற்ற ஒலித் தொடர்களைக் குறி பொருள் ஏற்கத் தகுந்த ஒலித்தொடர் எனலாம். எ. டு. 'காகம்' என்ற ஒலித்தொடர் பருப்பொருளை உணர்த்தும் தன்மை பெற்றதாக உள்ளமை. குறியீட்டுப் பொருளைச் சுட்டுகிற ஒலித்தொடர் குறியீட்டுப் பொருள் ஏற்ற கூறு எனப்படும். எ-டு. 'காகம்' என்ற ஒலித்தொடர் பருப்பொருளைச் சுட்டி நிற்பது.

குறியீட்டுப் பொருள்களைச் சுட்டுவதும் மொழியின் இலக்கண அமைப்பில் ஒரு நிலையைக் கொண்டதுமான ஒலித் தொடர்கள் இலக்கணக் கூறு எனப்படும். எ.டு. 'காகம்' என்பது பெயர்ச் சொல் என்ற இலக்கணத் தன்மை பெறுவது.

மனித அறிவு, சாதாரண ஒலித்தொடர்களுடன் ஒரு பொருளை அதன் குறியீட்டுப் பொருளாகத் தொடர்புபடுத்தும்போது அச்சாதாரண ஒலித்தொடர் சொல் (Dictio) ஆகிறது. சொல்லுக்கு இலக்கண அமைப்பில் ஒரு குறிப்பிட்ட ஒரு நிலையை மனிதன் கொடுக்கும்போது அச்சொல் இலக்கணச் சொல்லாக (Partes Orationis) மாறுகிறது. இதிலிருந்து ஒலித் தொடர்களைப் பொருள் கொண்டவையாக்குவதிலும் இலக்கணத் திறன் கொண்டவையாக்குவதிலும் மனிதனின் பங்கு இன்றியமையாதது என்பது தெளிவு.

அனுமான இலக்கணத்தார், இலக்கண அமைப்புகளையும் (Grammatical aspects) பொருள் (Semantics) அடிப்படையில் விளக்க முற்பட்டனர்.

வெளி உலகில் பொருள்கள் நிலைபெற்றிருக்கும். அவற்றை மனிதமனம் உணரும் தன்மை கொண்டது. மனிதமனம், தான் உணர்ந்தவற்றைச் சில குறியீடுக ளால் உணர்த்தும் தன்மையும் கொண்டது. ஆகவே, புறப் பொருளின் இருப்புச் செயல் தன்மை (Modus essendi) பொருளை மனம் செயல் தன்மை (Modus intelligendi) தான் உணர்ந்த பொருளை மனம் பிறருக் குக் (கேட்போருக்கு) குறியீடுகளால் உணர்த்தும் செயல் தன்மை (Modus significandi) ஆகிய மூன்று அடிப்படைப் பண்பு வகைகள் மொழிப் பயன்பாட்டில் அமைந்திருப்பதாகக் கூறப்படுகின்றன. பொருள்களின் இருத்தல் தன்மையில் கிடத்தல் செயல் தன்மை (Modus entis), மாறுஞ் செயல் தன்மை (Modus esse) என இருவகைத் தன்மைகள் அடங்கும். கிடத் தல் தன்மை பருப்பொருளின் சலனமற்ற நிலை பேற்றையும், மாறுந்தன்மை புறப்பொருள்களின் சலனச் செயல் தன்மையையும் உணர்த்தும்.

பொருள்களை உணரும் நிலையில் இயங்கு நிலை உணர்தல் செயல் தன்மை (Modus intelligendi activus) அதாவது பொருள்களை முயற்சியின் மூலம் உணரும் இயல்பு, இயங்காநிலை உணர்தல் செயல் தன்மை (Modus intelligendi passivus) அதாவது பொருள்களை மனம் தன்னிச்சையாக உணரும் இயல்பு என்ற இரு வகைகளைக் கூறுவர்.

பொருள்களைக் குறியீட்டால் உணர்த்தும் நிலை யில் இயங்கு நிலை உணர்த்தல் செயல் தன்மை (Modus significandi activus) அதாவது குறியீடு களை முயற்சியினால் குறித்துக் காட்டல், இயங்கா நிலை உணர்த்தல் செயல் தன்மை (Modus significandi passivus) அதாவது மொழிக் குறியீடுகளைத் (பொருளைக் குறிப்பதற்காக) தன்னிச்சையாகப் பயன்படுத்துதல், தனித்தன்மை உணர்த்தும் செயல் தன்மை (Modus significandi absolutus), தனித் தன்மை கொண்ட குறியீடுகளைப் பயன்படுத்தல், தொடர்பு நிலை உணர்த்தும் செயல் தன்மை (Modus significandi respectivus), சார்புத் தன்மை கொண்ட இலக்கணக் கூறுகளைப் (வாக்கியங்களில் அமையும் எண், பால், இடம் போன்ற கூறுகள்) பயன்படுத்துதல், முதன்மைக் கூறுகளுணர்த்தும் செயல் தன்மை (Modus significandi essentials) அடிப்படை இலக்கணக் கூறுகளைப் (பெயர், வினை) பயன்படுத்தல், சார்புக் கூறுகளுணர்த்தும் செயல் தன்மை (Modus significandi accidentales) அடிப் படைக் கூறுகளைச் சார்ந்து வரும் கூறுகளை (வேற்றுமை எண், பால், கால இடைநிலை போன் றவை) பயன்படுத்துதல் ஆகியன அடங்கும்.

சிறப்புநிலை மொழி ஆராய்ச்சி: அனுமான இலக் கணத்தாரின் மொழியாராய்ச்சி சொல்லாராய்ச்சி (Etymologia) சொற்றொடர் ஆராய்ச்சி (Diasythetica) என்று இரு பிரிவாக அமையும்.

இவர்கள், மொழியமைப்பை ஆராயும்போது சொற்களையும் (Parts of Speech) சொற்றொடர் களையும் விரிவாக விளக்க முற்பட்டனர். சொற்களை விளக்கும்போது அவற்றின் தனித்தியங்கும் இலக்கண வகைபாடுகளையும், பயன்பாட்டையும், சொல்லாக் கத்தையும் விளக்க முற்பட்டனர். சொற்களில் தனித் தியங்கும் நிலையிலுள்ள சொற்களை, திரிபுக்கு உட்படும் கூறு (Dedinable), திரிபுக்கு உட்படாக் கூறு (Indedinable) என இருவகையாகப் பிரிப்பர். திரிபுக் கூறுகளில், பெயர், வினை, பெயர்ப்பதிலி, எச்சம் ஆகியவற்றை விளக்குவர். திரிபுக்கு உட்படாக் கூறுகளாக, வினையடை (Adverb), இணைப்புக் கூறு கள் (Conjunctions), பெயர் முன்னடை (Prepositions), வியப்புக் கூறுகள் (Interjections) ஆகியவற்றை விளக்குவர்.

அனுமான இலக்கணிகள் நிலைத்துவத் தன்மை (Entis), மாறும் தன்மை (Esse) என்ற தன்மைகளை இலக்கணக் கூறுகளோடு தொடர்புபடுத்தி விளக்கி னர்.

பெயரும், பெயர்ப்பதிலியும் நிலைத்துவத் தன்மை அல்லது கிடத்தல் தன்மை (Stability or Permanence Entis) கொண்ட பொருட்களைக் குறிப்பனவாகவும், வினையும் எச்சமும் பொருள்களின் மாறுபடும் தன்மையைக் (The property of change and succession Esse) குறிப்பனவாகவும் இவ்விலக்கணத்தர் அனு மானித்தனர். ஆகவே, இந்த நான்கு வகைக் கூறுகளை யும் மொழியின் அடிப்படைக் கூறுகளாகக் கொண்ட னர். மேற்கூறிய நான்கு வகைக் கூறுகளும் சில சார் புக் கூறுகளோடு சார்வதன் மூலம் திரிபுக் கூறுகளா கின்றன. எண், பால், இடம், வேற்றுமை, காலம் முதலியவற்றைக் காட்டும் உருபுகள் சார்புக் கூறுக ளாம். இவற்றைத் தற்செயலாக அமையும் இலக் கணக் கூறுகள் (Accidental categories) என்று கூறு வர்.

ஒவ்வொரு சொல்லையும் விளக்கும் முறையிலும் ஒன்றை மற்றொன்றிலிருந்து நுட்பமாக வேறுபடுத் தும் விதத்திலும் இவர்கள் சிறப்பாகச் செயற்பட்டுள்ள னர். பெயர்ச் சொல் என்பது கிடத்தல் செயல் தன்மையைக் (Mode of existence) கொண்ட பொருள் களைச் சுட்டுவதற்காகப் பயன்படுத்தப்படும் ஒரு சொல்வகை. வினைச் சொல் என்பது காலத்தைச் சார்ந்துவரும் (பொருட்களின்) செயற்பாட்டைக் குறிக்கும் செயல் தன்மை (Mode of temporal process) கொண்ட ஒரு சொல் வகை. இச்சொல் எந்தப் பெயர்ச் சொல்லின் பயனிலையாக வருகிறதோ அதிலிருந்து விலகியிருக்கும். பெயர்ப்பதிலி என்பது

கிடத்தல் செயல் தன்மை கொண்ட பொருட்களைச் சுட்டுகிற பெயர்ச் சொல்லுக்கு ஈடாக நிற்கும் ஒரு சொல்வகை. இதற்கென அமைப்பு உண்டு; ஆனால், குறிபொருள் கிடையாது.

**எச்சம்** என்பது காலத்தோடு பொருள்களை யும் சுட்டும் தன்மை கொண்ட ஒரு சொல் வகை. இச்சொல் எந்தப் பெயர்ச் சொல்லின் பயனிலை யாக வருகிறதோ அதிலிருந்து விலகியிராது. பொருள் களைச் சுட்டுத் தன்மையினாலும், பெயர்ச் சொல்லி லிருந்து விலகியிராத தன்மையினாலும் இது வினைச் சொல்லிலிருந்து வேறுபட்டு நிற்கிறது.

திரிபுக்கு உட்படாக் கூறுகளையும் இவ்விதம் நுட்பமாக விளக்குவர்.

**சொற்றொடர் ஆராய்ச்சி:** அனுமான இலக்கணத் தார், தொடரியல் ஆய்வில் குறிப்பிடத் தகுந்த முன்னேற்றத்தையும் புதுமையையும் ஏற்படுத்தியுள்ள னர்.

தனித்தியங்கும் இலக்கணக் கூறுகளைத் (Partes Orationis) தொடராக அமைப்பதன் மூலம் உருவாக் கப்படும் சொற்கோவை (Constructio) யின் அமைப்பை யும் அதன் செயல்தன்மையையும் (Modes) விவரிப் பதன் மூலம் விளக்குவர்.

சொற்கோவை என்பதே தொடரியலின் கருப் பொருளாம். சொற்கோவையில் சில அங்கக் கூறுகள் (Constructibles) காணப்படும். இந்த அங்கக் கூறுகள் மனத்தால் உணரப்படும் எண்ணத் துகளைச் (Concepts) சுட்டுவதற்காகப் பயன்படுத்தப்படும் கூறு களாம். தொடரியலில் ஏற்றுக் கொள்ளப்படும் சொற் கோவை, ஏற்றுக் கொள்ள இயலாச் சொற்கோவை என இருவகைச் சொற் கோவைகளை விளக்குவர். சொற்கோவை ஏற்றுக் கொள்ளப்பட்டு மொழியில் நிலைபெற வேண்டுமானால், அவற்றின் அங்கங்கள், ஒரு இலக்கணத் தொகுதியின் அங்கமாக விளங்குதல் (Material), தொடர்நிலையில் நிற்றல் (Formal), மனித மனமும் வாக்கியமும் எதிர்பார்க்கிற இலக் கணத் தொடர்புகளைக் காட்டல் (Efficient), வாக்கி யங்கள் முழுமையான எண்ணத்தைச் சுட்டல் (Final) ஆகிய நான்கு இயல்புகளைக் கொண்டிருத்தல் வேண் டும்.

பொதுவாகச் சொற்கோவையில் எல்லை அங்கம் (Terminus), சார்பு அதிகம் (Dependentia) என்னும் இரு அங்கங்கள் உள்ளனவர்கக் கூறுவர். இவ்விரு அங்கங்களுக்கிடையிலான உறவின் அடிப்படையில் சொற்கோவை வகைகளை விளக்க முயல்வர்.

| எல்லை அங்கம் | சார்பு அங்கம் | சொற்கோவை |
|---|---|---|
| பெயர் | வினை | மாணவன் ஓடினான் |
| பெயர் (இரண்டாம் வேற்றுமையில்) | வினை | புத்தகத்தைப் படித்தான் |

சொற்கோவையில் தன்வினை வாக்கியம் பிற வினை வாக்கியம் ஆகியவற்றையும் விளக்கினர். மேலும் சொற்கோவை அங்கங்களினிடையே காணப் படும் முற்றிசைவுத் தன்மையையும் (Congruitas) அதன் சிறப்பினையும் விளக்க முயன்றனர். (எ.டு) மரம் பட்டது — இயைபுத் தன்மைஉள்ளது; மரம் ஓடியது — இயைபுத் தன்மை இல்லாதது.

அனுமான இலக்கணிகளின் மொழியாராய்ச்சி யில் இக்கால மொழியியல் ஆய்வின் மெருகைக் காண முடியாவிட்டாலும் மொழியியல் ஆய்வில் இவ்விலக் கணம் ஒரு குறிப்பிடத் தகுந்த மாற்றத்தை ஏற் படுத்தியுள்ளது என்பதனை மறுக்க முடியாது. ஒரு மொழியின் சொல் வகையை மட்டும் விளக்குவதோடு நின்றுவிடாது. மேலும் ஆழமாகச் சென்று ஒரு மொழிக் கொள்கையை (Theory of Language) உரு வாக்குவதில் இவர்கள் முனைந்து நின்றது இவர்தம் ஆராய்ச்சியின் பெருமையைச் சுட்டி நிற்கும். இவ் விலக்கணிகளின் காலச் சூழ்நிலையை நோக்கின் இவர்தம் ஆய்வின் சிறப்பு நன்கு விளங்கும். பொரு ளியல் ஆய்விற்குரிய பல சிறந்த கருத்துகளை இவர் தம் ஆராய்ச்சி வெளிப்படுத்தியுள்ளது. கருவி மொழிக் கும் (Meta Language) இயற்கை மொழிக்கும் (Natu- ral Language) இடையிலான வேற்றுமைகளைச் சிறப் பாக வெளிப்படுத்திய பெருமை இவர்களுக்குண்டு. ஒரு இலக்கண நூலில் காணப்பெறும் இலக்கணக் கலைச் சொற்களின் நுட்பம் இலக்கணச் சிந்தனையின் வளர்ச்சியையும் மேன்மையையும் சுட்டிநிற்கும்.

கோ.ச.

**அனுமானம்:** அறிவைப் பெறத் தருக்க நூலார் குறிப்பிடும் பத்து அளவைகளுள் காட்சியை அடுத்து எண்ணப்படுவது அனுமானம் (Inference) எனப்படும் அளவையாகும். அனுமானம் என்ற சொல் காட்சியால் பெறப்படும் அறிவை ஒட்டிப் பெறப் படும் மற்றொரு அறிவு எனப் பொருள்படும். இச் சொல் அனுமானத்தின் எதிர்ச் செயல் அதன் முடிபு ஆகிய இரண்டையும் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது. அனுமானப் பிரமாணம் தமிழில் கருத்தளவை எனப் படும்.

புலன்களால் அறிந்துணரப்பெற்ற முன்னறிவு இன்றேல் அனுமானம் தோன்ற முடியாது. மக்கள் மலைமேல் புகை எழுவதைக் காண்கிறார்கள் என்றால் உடனே அங்கு நெருப்பு உள்ளது என முடிவு செய்கிறார்கள். ஏனெனில், புகைக்கும் நெருப்பிற்குமிடையே நீக்கமற்ற தொடர்பு உள்ளது என்ற முன்னறிவு மக்களிடம் உள்ளது. எனவே, அனுமானம், முன்பு கண்டறிந்த அறிவு, இரு பொருள்களிடையே நிலவும் நீக்கமற்ற தொடர்பு பற்றிய முன்னறிவு ஆகிய இரண்டின் அடிப்படையில் அமைகிறது.

அனுமானத்தில் மூன்று உறுப்புகள் உள்ளன. அவைகள் சாத்தியம், பக்கம், இலிங்கம் எனப்படும். நெருப்பு சாத்தியம் என்றும், புகை இலிங்கமென்றும் ஏதுவென்றும், மலை பக்கமென்றும் கூறப்படும். நெருப்பிற்கும் புகைக்குமிடையே உள்ள நீக்கமற்ற தொடர்பு வியாப்தி எனப்படும். இந்த வியாப்தி தான் அனுமானம் தோன்றுவதற்கு ஆதாரமாக உள்ளது. அனுமானத்தின் தன்மையைப் பின்வரும் எடுத்துக்காட்டின் வாயிலாக உணர்த்தலாம். மலைமேல் புகையுள்ளது. எங்கு எங்குப் புகை உண்டோ அங்கு அங்கு நெருப்புண்டு; சமையலறையில் உள்ளது போல. எனவே மலை மேல் நெருப்பு உள்ளது. புகையுள்ள விடத்து நெருப்புண்டு என்ற முன்னறிவின் அடிப்படையில் மலை மேல் புகையைக் கண்டு அங்கு நெருப்புள்ளது எனத் துணியலாம். இதுதான் அனுமான அறிவு. இது நமக்கு மறைமுக அறிவை அளிக்கிறது. அனுமானம் தன் பொருட்டனுமானம், பிறர் பொருட்டனுமானம் என இரு வகைப்படும். ஒருவன் தான் மட்டும் அறிவு பெற வேண்டும் என்பதற்காக அனுமானித்தால் அது தன் பொருட்டனுமானம் எனப்படும். இதில் வெவ்வேறு உறுப்புகளைத் தன்னகத்தே கொண்ட வாக்கியத்தை அமைத்துக்கொள்ள வேண்டியதில்லை. உளவியலின் அடிப்படையில் அந்த அறிவு பெறப்படுகிறது. பிறர் பொருட்டனுமானத்தில் பிறருக்கு அறிவுறுத்த வேண்டி மொழியைப் பயன்படுத்தி, சாத்தியம், பக்கம், இலிங்கம் ஆகியவற்றை வாக்கிய வடிவில் அமைக்க வேண்டியுள்ளது. இதில் அமையும் ஐந்துறுப்புகள் பிரதிக்ஞை, ஏது, உதாரணம், உபநயம், நிகமனம் என்பனவாகும்.

அவை அமையும் முறை வருமாறு:

1) இம்மலை மேல் நெருப்புள்ளது — பிரதிக்ஞை அல்லது மேற்கோள்,

2) ஏனெனில் அங்குப் புகையுள்ளது — ஏது,

3) எங்கெங்குப் புகையுண்டோ அங்கங்கு நெருப்புண்டு — எடுத்துக்காட்டு, சமையலறையில் உள்ளது போல்,

4) இந்த மலையில் நெருப்போடு நீக்கமற்ற தொடர்புடைய புகை உள்ளது — உபநயம்,

5) ஆகையால் இம்மலை மேல் நெருப்புள்ளது — நிகமனம் (முடிபு)

இந்திய நியாயத்திலும் மேலை நாட்டு அளவையியலிலும் மேலே சுட்டப்பட்டுள்ள ஐந்துறுப்புகள் தேவையில்லையென்றும் அவற்றில் முதல் மூன்றோ பின் மூன்றோ போதும் என்றும் கருதப்படுகிறது. அதை முக்கூற்று முடிபு (Syllogism) என்பர் தருக்க நூலார்.

அடிநிலையின் அடிப்படையில் அனுமானத்தை மூன்று வகையாகப் பிரிப்பதுண்டு. அம்மூன்றாவன: (1) பூர்வவத்து, (2) சேடவத்து, (3) சாமான்யதோ திருட்டம்.

(1) காணாத காரியத்தைக்கண்ட காரணத்திலிருந்து அனுமானிப்பது பூர்வவத்து எனப்படும். எடுத்துக்காட்டு: வானத்தில் நீருண்ட கரிய மேகங்களைக் கண்டு பெருமழை பெய்யக்கூடும் என அனுமானிப்பது.

(2) கண்ட காரியத்திலிருந்து காணாத காரணத்தை அனுமானிப்பது சேடவத்து எனப்படும். எடுத்துக்காட்டு: ஆற்றில் புரண்டோடும் வண்டல் கலந்த வெள்ளத்தைக் கண்டு பெருமழை பெய்திருக்கிறது என அனுமானிப்பதைச் சேடவத்து என்பர்.

(3) காரணத்தைக் கண்டு அனுமானிக்காமல் மாறுபட்ட இரண்டு பொருள்களின் பொதுத் தன்மையை மட்டும் கொண்டு அனுமானிப்பது சாமான்யதோ திருட்டம் எனப்படும்.

நிறம் என்பது ஒரு குணம்.
அது ஒரு பொருளில் உறைகிறது.
அறிவு என்பது ஒரு குணம்.

ஆதலின் அறிவும் ஒரு பொருளில் உறைகிறது. ஆகையால் அறிவின் உறைவிடமாக ஆத்துமா என்ற ஒரு பொருள் உள்ளது.

இவ்வகை அனுமானம் புலன்களால் அறிய முடியாத பொருளை அறிய உதவுகிறது.

இலிங்கத்திற்கும் சாத்தியத்திற்குமிடையே நிலவும் நீக்கமற்ற தொடர்பு அடிப்படையில் அனுமானத்தை மேலும் மூன்று விதமாகப் பிரிக்கலாம். அவை முறையே அன்வயவெதிரேகி, கேவலான்வயி, கேவலாவெதிரேகி எனப்படும்.

(1) இலிங்கம் சாத்தியம் இரண்டிற்குமிடையே உறுதிசெய் முறையிலோ மெய்விலக்குகிற முறை

யிலோ தொடர்பு இருந்தால் அது அன்வய வெதிரேகி எனப்படும்.

எடுத்துக்காட்டு: புகையிருந்தால் நெருப்புண்டு (உறுதி செய்முறை).
புகையின்றேல் நெருப்பில்லை (மெய் விலக்குமுறை).

(2) இலிங்கம் சாத்தியத்தோடு உறுதி செய்முறையில் தொடர்புடையதாயிருந்தால் அது கேவலான்வயி அனுமானம் எனப்படும்.

எடுத்துக்காட்டு: அறிபடு பொருள்கள் பெயர் கொள்வன:
பானை அறிபடுபொருள்.
எனவே பானை பெயர் கொள்ளும்.

(3) சாத்தியம் இல்லாத விடத்து இலிங்கமும் இருப்பதில்லை என்பதைக் கண்டறியும் முறை கேவலா வெதிரேகி எனப்படும்.

எடுத்துக்காட்டு: உயிருள்ள உடல்களில் ஆத்துமா உண்டு. ஆத்துமா இல்லாத பொருள்களில் உயிர் இருக்காது; புத்தகத்தைப் போல.

அனுமானத்தில் சில நேரங்களில் இலிங்கம் அல்லது ஏது போதிய வாத ஆதாரமுடைய அறிவுக்குக் காரணமாக இருப்பதுபோல் தோற்றமளித்தாலும், அது அவ்வாறு இருக்காது. அதை நியாய நூல் வல்லுநர் போலி என்பர். போலியின் பொருள், எண்ணிக்கை ஆகியவை பற்றி மாறுபட்ட கருத்துகள் நிலவுகின்றன. எனினும் போலி ஐவகைத்து என்பதைப் பலரும் ஏற்றுக் கொள்கின்றனர். ஐவகைப் போலிகள் முறையே 1) அசித்தம், 2) சவ்வியாபிசாரம் அல்லது அநைகாந்திகம், 3) சத்பிரதிபக்கம், 4) பாதிதம், 5) விருத்தம் எனப்படும். இவ்வைந்தில் முதல் இரண்டில் மும்மூன்று பிரிவுகள் உள்ளன.

அறிவைப் பெற நாம் பெற்றுள்ள கருவிகளில் அனுமானத்தின் இன்றியமையாமையைச் சாருவாக மதத்தினர் தவிர ஏனைய அனைவரும் ஒப்புக் கொண்டுள்ளனர். இது அனுமானத்தின் தனிச் சிறப்பு. கூ. ரா. ந.

***அனுராகமாலை*** என்பது தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்கள் எனப்படும் சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று. ஒரு தலைவன் கனவில் தலைவியைக் கண்டு இன்பந் துய்த்த செய்தியினைத் தன்னுயிர்ப் பாங்கனுக்கு எடுத்துக் கூறுவதாக அமையும். இப்பிரபந்தம் கலிவெண்பாவால் யாக்கப் பெறும். நேரிசைக் கலிவெண்பாவாக அமைவது சிறப்புடையதாகும். 'கனவில் ஒருத்தியைக் கண்டு கேட்டு உண்டுஉயிர்த்து இனிதிற் புணர்ந்ததை இன்னுயிர்ப் பாங்கற்கு -- நனவில் உரைத்தல் அனுராகமாலை' என்று இலக்கண விளக்கம் இதற்கு இலக்கணம் வகுத்துள்ளது. பிரபந்த மரபியல், சிதம்பரப் பாட்டியல், முத்து வீரீயம், பிரபந்த தீபிகை, சுவாமி நாதம் ஆகிய பாட்டியல் இலக்கணங் கூறும் நூல்களில் இதன் இலக்கணம் கூறப்பட்டுள்ளது. இதற்குப் பண்டைய இலக்கியம் இல்லை.

***அனுராதபுரப் போர்*** **(கி.பி. 1064-65)** ஈழ நாட்டின் பண்டைய தலைநகரமான அனுராதபுரத்தில் நடைபெற்றது. முதலாம் இராசராசசோழன் பொலனருவாவினைத் தலைநகராக்கினார். சோழருக்கும் ஈழத்தினருக்கும் பல போர்கள் நடைபெற்றுள்ளன. முதல் இராசேந்திரனது ஆட்சிக் காலத்தில் ஈழம், சோழரது ஆட்சிக்கு உட்பட்டது. இருப்பினும் தென்ரோகண நாட்டில் சில கலகங்கள் நடைபெற்று வந்தன. முதலாம் இராசேந்திரனின் மகனான இராசாதிராசனின் காலத்திலேயே மூன்று முறை ஈழத்தவர் தோற்கடிக்கப்பட்டனர். துளுவநாட்டில் கி.பி. 1046-இல் அடைக்கலம் புகுந்த மகாலான கித்தியின் மகன், தோல்வியுற்றுத் தன் முடியை இழந்து ஓடினான். மகாவம்சம் இவனை விக்கிரம பாண்டு எனக் குறிப்பிடுகிறது; சோழர் ஆதாரங்கள் விக்கிரம பாண்டியன் எனக் குறிப்பிடுகின்றன. இதுவே சோழரின் முதல் வெற்றி.

இரண்டாம் வெற்றியும் கி.பி. 1046-இல் தான் கிட்டியது. கன்னர மரபினனான ஈழவேந்தன் சீவல்லபன், மதனராசனை வென்றதாகச் சோழர் ஆதாரங்கள் கூறுகின்றன. ஆனால், மகாவம்சமோ சோழரிடம் தோற்று உயிரிழந்தவன் (கி.பி 1053) விக்கிரம பாண்டுவின் மகனான இராசேந்திர பாண்டு எனக் குறிப்பிடுகிறது.

உரோகணத்தைக் கி.பி. 1047 முதல் 1051 வரை ஆண்டுவந்த சகதிபாலன் (Jagatipala) என்னும் அயோத்தி அரசகுமாரன், சோழரால் தோற்கடிக்கப்பட்டு மாண்டான் என மகாவம்சம் குறிப்பிடுகிறது. ஆனால், சோழரின் ஆதாரங்களில் கன்னியாகுப்சத்தை ஆண்ட சலாமேகனே சோழரால் கொல்லப்பட்டான் எனக் கூறப்பட்டுள்ளது. கலிங்க மன்னனான சலாமேகன், கி.பி. 1054-1055-இல் இரண்டாம் இராசேந்திரனின் ஆட்சிக் காலத்தில் கொல்லப்பட்டான்.

தொடர்ந்து நடைபெற்ற ஈழ-சோழப்போர் கி.பி. 1064-65 - இல் உச்ச நிலையை அடைந்தது. சோழரைப் பழிவாங்க இலங்கைவேந்தன் விசயபாகு முடிவெடுத்துப் படைதிரட்டினான். வீரராசேந்திரனது சோழப்படைக்கும் விசயபாகுவின் படைகளுக்

கும் கி.பி. 1065-இல் அனுராதபுரத்தில் கடும்போர் நடந்தது; சோழர் வெற்றி பெற்றனர். ஆனால், காலம் பார்த்திருந்த விசயபாகு, புலத்திக் கோட்டையைக் கைப்பற்றிக் கொண்டான். இருவருக்கும் இறுதிப் போர் கி.பி. 1067-இல் நடைபெற்றது. இதில் விசயபாகு தோற்றோடி ஒளிந்து கொண்டான். ஈழவேந்தனின் பெண்டிரும் கருவூலமும் சோழரால் கைப்பற்றப்பட்டன. இதன் விளைவாகச் சில ஆண்டுகள் ஈழத்தில் அமைதி நிலவியது.

ஒளிந்திருந்த விசயபாகு, படைதிரட்டி மீண்டும் சோழருக்கெதிராகப் போர்க் கொடி உயர்த்தினான். சோழப்படை கி.பி. 1073-இல் ஈழப்படையை அனுராதபுரத்தில் சந்தித்துப் போர் புரிந்தது. இதனை இரண்டாம் அனுராதபுரப்போர் என்பர். சோழர் வெற்றி பெற்றனர். தோல்வியுற்ற விசயபாகு பொலனருவாவிற்கு ஓடினான். சோழப்படை அவனைத் துரத்திக்கொண்டு பொலனருவாவிற்கு ஓடியது. அவன் பொலனருவாவில் வெற்றிபுரத்தின் மீது படையை ஏவினான். களைத்துப் போன சோழர் படைக்கும் புதிய படைகளைச் சேர்த்துக் கொண்ட விசயபாகுவின் படைகளுக்கும் அனுராதபுரத்தில் இறுதிப்போர் நடைபெற்றது. இதனை மூன்றாம் அனுராதபுரப்போர் என்பர். இப்போர் கி.பி. 1073-ஆம் ஆண்டில் நடந்தது. இப்போரின் விளைவாக இலங்கை முழுவதும் விசயபாகுவின் ஆட்சிக்குட்பட்டது. சோழர் இலங்கை அரசை இழந்தனர். அனுராதபுரப்போர், இலங்கையின் எழுச்சியையும் சோழரின் கடல் கடந்த பேரரசின் இழப்பையும் எடுத்துக்காட்டுகிறது. இதன்பின் சோழ ஈழப்போர் நட்புறவாக மாறிற்று.

**அனுலோமம்:** கருநாடக இசையைப்பாடும் நுணுக்கங்களுள் ஒன்றாகும். பாடலை ஒன்று, இரண்டு, மூன்றாம்காலங்களில் பாடும்பொழுது, பாட்டின் வேகம் மட்டும் ஒன்று, இரண்டு நான்கு பங்கு மிகுதியாகலாம். ஆனால், தாளம் மட்டும் முதலில் எடுத்த காலத்திலேயே இருக்க வேண்டும். இவ்வாறு பாடுவதற்குச் சிறந்த இசை அறிவும் தாளக்கட்டும் தேவைப்படும். இத்தகைய பாடல் முறைக்கு அனுலோமம் என்பது பெயர். பெரும்பாலும் பல்லவி பாடும்பொழுது அனுலோமம் செய்யப்படும்.

**அனுன்சியா** கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் இத்தாலி நாட்டில் தோன்றிய கவிஞர்; புதின ஆசிரியருமாவார். இவர் படைவீரராகவும் பணியாற்றியுள்ளார். கல்வி பயிலுங் காலத்திலேயே கவிதைகள் பல எழுதி வெளியிட்டார். இவர் எழுதி வெளியிட்ட பியாசிர் என்னும் புதினம் மக்களிடம் செல்வாக்குப் பெற்று விளங்கியது. இவர் நாடகங்கள் சில எழுதியிருப்பினும் அவை இவர்தம் கவிதைகளைப் போல அத்துணைச் சிறந்தனவாகக் கருதப்படவில்லை. முதல் உலகப் போர்க் காலத்தில், தம்நாட்டு மக்களிடையே நாட்டுப்பற்றினைத் தட்டிஎழுப்ப வல்ல பேச்சுகளின் வாயிலாக நாட்டுப் பணி புரிந்தார். கவிஞராகத் திகழ்ந்து நலமிக்க வாழ்வில் மகிழ்ந்த இவர், போர்க் காலத்தில் நாடு காக்கும் பணியில் ஈடுபட்டார். படை விமானம் ஓட்டுநராகப் பணிபுரிந்தபோது தம் கண்களில் ஒன்றினை இழந்தார். படைவீரராகப் பணிபுரிந்த இக்கவிஞர்தம் போர்ப்பாடல்கள் கவின்மிக்கனவாக விளங்கின என்று கூறப்படுகிறது. அனுன்சியா (Annunzio) பாசிச இயக்கத்தை ஆதரித்தார்; 1924-இல் இளவரசர் பட்டம் பெற்ற இவர் 75 ஆண்டுகள் வாழ்ந்து 1938-இல் காலமானார்.

**அனேகதங்காவதம்**[1] தேவாரப் பாடல் பெற்ற வடநாட்டுத் தலங்களுள் ஒன்று. இமயமலைச் சாரலில் உள்ள திருக்கேதாரம் (கேதார்நாத்) செல்லும் வழியில் உள்ள "கௌரி குண்டம்" தான் அனேகதங்காவதம் என்று சொல்லப்படுகிறது. இது அனேகதங்காபதம் என்றும் கூறப்படும். அம்பிகை தவஞ்செய்ததாகக் கூறப்படும் இத்தலத்திறைவர் அருள்மன்னேசுரர்; இறைவி - மனோன்மணியம்மை. திருஞானசம்பந்தர் இத்தலத்தை ஒரு பதிகத்தால் போற்றியுள்ளார். இத்தலத்தினை இவர் காளத்தியிலிருந்தே பாடியுள்ளார். இது சூரிய சந்திரர் வழிபட்ட தலமாகும்.

அனேகதங்காவதம்[2]: தொண்டை நாட்டிலுள்ள காஞ்சிபுரத்தில் அனேகதங்காவதம் என்னும் தலம் உள்ளது. சுந்தரமூர்த்தி சுவாமிகளின் தேவாரப் பாடல் பெற்ற இத்தலம், கச்சி அனேகதங்காவதம் எனப்படும். இறைவன் பெயர் அனேகதங்காவதேசுவரர்; இறைவி காமாட்சியம்மை. கணபதியும் குபேரனும் வழிபட்ட தலமாகும். கைலாய நாதர் கோயில் இங்கே உள்ளது. இதனைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம் தேவாரத்தில் பாடியுள்ளார்.

**அனைத்திந்திய ஊரகக் கைத்தொழில்கள்:** மிகுதியான மனித உழைப்பின் அடிப்படையில் ஊரகங்களைச் சார்ந்திருக்கும் தொழில்கள் ஊரகக் கைத்தொழில்கள் எனப்படும். உழைப்பை மிகுதியாகக் கொண்ட இத்தொழில், வேளாண்மை, கால்நடைப் பாதுகாப்பு முதலியவற்றின் அடிப்படையிலும் அமையலாம். மைய அரசின் திட்டக்குழு இத்தொழில்களைக் கீழ்க்காணுமாறு வகைப்படுத்தியுள்ளது: (அ) மரபு வழி ஊரகக் கைத்தொழில்கள் (Traditional Industries): கைவினைக் காகிதம், கயிறு திரித்தல், எண்ணெய் ஆட்டுதல், பனைச்சாறு எடுத்

தல், கரும்புச் சாறு எடுத்தல், நெல் அடித்தல், தேனீ வளர்த்தல் முதலியன. (ஆ) கைவினைத் தொழில்கள் (Handicrafts): உலோகச் செய்கலன், தந்தம் தொடர்பான தொழில்கள், மரம் செதுக்குதல், துணிவகைத் தொழில்கள் முதலியன. (இ) கதர், கைத்தறித் தொழில்கள். (ஈ) தோல் தொடர்பான தொழில்கள். (உ) மட்பாண்டத் தொழில்கள். (ஊ) சர்க்கரை, வெல்லத் தொழில்கள். (எ) பட்டுப் புழு வளர்ப்பு, தீப்பெட்டித் தயாரிப்பு, ஊதுவத்தி செய்தல், தச்சு வேலை பொம்மை வேலை, மரச்சாமான் வேலை முதலியவை.

இந்தியாவில் பல நூற்றாண்டுகளாக வளர்ச்சி பெற்றிருக்கும் தொழில்களில் ஊரகக் கைத்தொழில் சிறப்பிடம் பெறுகிறது. வெள்ளையர் ஆட்சி இந்தியாவில் ஏற்பட்டதும், நாட்டுப்புறச் சமுதாய அமைப்போடு இயங்கிவந்த ஊரகத் தொழில்கள் நலிவுற்றன. நலிவுற்ற தொழில்கள் வலிவு பெறவேண்டும் என்று அண்ணல் காந்தியடிகள் இந்திய விடுதலைப் போராட்டத்தின்போது வலியுறுத்தினார். இதற்கென 1934-ஆம் ஆண்டில் வார்தாவில் மகன்வாடியில் அனைத்து இந்தியக் கைத்தொழிற் சங்கம் என்ற அமைப்பை நிறுவினார். ஊரகக் கைத்தொழில்களின் மூலம் பெரும்பாலான ஊரக மக்களின் வாழ்க்கை வளம்பெறும் என்று நம்பினார்.

இந்தியாவில் வறுமைக் கோட்டிற்குக் கீழ் வாழும் மக்களுள் பெரும்பாலோர் ஊரகங்களில் வாழ்கின்றனர். மக்கள்தொகையில் 75 விழுக்காட்டுக்கு மேல் ஊர்ப்புறங்களிலேயே வாழ்கின்றனர். ஆகவே ஊரகத் தொழில்களின் முன்னேற்றம், இந்தியாவின் சமுதாய, பொருளாதார வளர்ச்சியுடன் பின்னிப் பிணைந்துள்ளது. இதற்காகத் திட்டக் காலங்களில் பல்வேறு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு, ஊரகங்களில் வாழும் கைவினைஞர்களின் திறனை வளர்க்கவும், அவர்களால் உற்பத்தி செய்யப்படும் பொருள்களுக்கு ஊக்கம் அளிக்கவும், தொழில்நுட்பத் திறனை வளர்க்கவும் வழிவகை செய்யப்பட்டுள்ளது.

ஊரகத் தொழில்களின் இன்றியமையாமை உணரப்பட்டதால், இந்தியாவின் முதல் தொழிற் கொள்கைத் தீர்மானத்தில் (Industrial Policy Resolution, 1956) இத்தொழிற் பாதுகாப்புப் பற்றி வலியுறுத்தப்பட்டது. கார்வே நிபுணர் குழுவின் (1955) பரிந்துரையால் கதர், ஊரகக் கைத்தொழில் கழகம் 1957-இல் நிறுவப்பட்டது. மாநிலங்களில் 1955-56-இல் கதர்-ஊரகத் தொழில் வாரியங்கள் ஏற்படுத்தப்பட்டன. இவ்வகையில் 1980-ஆம் ஆண்டுப் புள்ளிவிவரப்படி 25 கதர்-ஊரகத் தொழில் வாரியங்களும், இவ்வமைப்புகளின் கீழ் 735 பதிவு செய்யப்பட்ட நிறுவனங்களும், 27,800 கூட்டுறவு அமைப்புகளும் உருவாக்கப்பட்டன. இவ்வமைப்புகள் ஏறக்குறைய இலட்சம் கிராமங்களில் அமையப் பெற்றுள்ளன. ஊரகத் தொழில்களில் ஒரு கோடியே நாற்பது இலட்சம் மக்களும், கைத்தறித் தொழிலில் 57 இலட்சம் மக்களும், பட்டுப்புழு வளர்ப்பதில் 36 இலட்சம் மக்களும் ஈடுபட்டுள்ளனர் (1980). இருப்பினும், இவ்வேலைவாய்ப்பு முழுநேர வேலையாகவும் நல்ல வருமானம் தரத்தக்கதாகவும் உள்ளதென்று அறுதியிட்டுக் கூற இயலாது.

மேலும் 1980-ஆம் ஆண்டு சூலை மாதம் வெளியான இந்தியாவின் தொழிற் கொள்கை அறிக்கை (Industrial Policy Statement of July 1980) ஊரகக் கைத்தொழில் வளர்ச்சியை மேலும் வலியுறுத்தியது. அவ்வறிக்கையின்படி, அரசு உறுதியான ஊரக அமைப்பின் மூலம் பொருளாதார வளர்ச்சியில் நிலையான தன்மையை ஏற்படுத்தும் நோக்கத்தோடு ஊரகத்தொழில்களை ஊக்குவிக்க முடிவு செய்துள்ளது. கைத்தறி, கைவினைத் தொழில்கள் கதர், மற்றும் ஊரகத் தொழில்கள்மீது பெரும் கவனம் செலுத்தப்பட்டது. ஆறாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் நகல் அறிக்கையில், தொழிலில் பின்தங்கிய மாவட்டங்களில் புதிய மையங்களை உருவாக்கி, ஊரகக் கைத்தொழில்கள் வளர்ச்சியடைவதற்கு உறுதி அளிக்கப்பட்டுள்ளது. கொள்கை அறிவிப்பின் அடிப்படையில் ஆறாம் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் பின்வரும் வழிமுறைகளின்படி முன்னேற்றச் செயல்முறைத் திட்டம் மேற்கொள்ளப் பட்டுள்ளது. அவையாவன: (1) பல்வேறு முன்னேற்றத் திட்டங்களை 'ஒருங்கிணைப்பு முறை' (Cluster Approach) யில் செயற்படுத்த வேண்டும். (2) மாவட்ட அளவிலுள்ள அமைப்புமுறை அடிப்படையை மாற்றிப் பயனுள்ளதாகவும் நல்ல விளைவுகளை உருவாக்கக் கூடியதாகவும் மாற்ற வேண்டும். (3) தேவையான தொழில்நுட்பத் திறனை (Technological Skill) வளர்த்து, விரிவாக்கி, அக்கொள்கையைப் பரவச் செய்ய வேண்டும். (4) தேவையான அளவிற்கு மூலப்பொருள்கள் (Raw materials) கிடைக்கும் வகையில் அவற்றை அதிக அளவில் இருப்பு வைக்க வேண்டும். குறிப்பாக, அரிதான மூலதனப் பொருள்களுக்கு இத்தகைய இருப்பு மிகவும் தேவை. (5) நிறுவன நிதியமைப்புகளிலிருந்து (Institutional Funds) ஊரகத் தொழில்களுக்குத் தொடர்ந்து நிதி கிடைக்கும்படி செய்தல் வேண்டும். சிறப்பாக, நிதி வசதி, தொழில் முயல்வோருக்கும் மிகச் சிறிய அமைப்புகளுக்கும் கிடைத்தல் வேண்டும். வட்டிவிகித அமைப்பில் (Interest Rate Structure) சீர்திருத்தம் வேண்டும். (6) கூட்டுறவு முறை அமைப்பை உறுதிப்படுத்தி, ஊரகத் தொழிலுக்குப் பயன்படும் வகையில் விரிவாக்கம் செய்தல் வேண்டும்.

(7) சீரான புள்ளிவிவர அமைப்பை (Data Base) உருவாக்கிக் கொள்கைகளைச் செயற்படுத்தவும், செயற்பாட்டுத் திறனை வளர்க்கவும் வேண்டும்.

ஊரகத் தொழில்கள், பிற தொழில்களின் வரிசையில் சேர்க்கப்பட்டாலும், அத்தொழில்களில் கிடைக்கும் வருமானம் கைவினைஞர்களுக்குக் (Artisans) கிட்டுவது அரிதே. இக்கைவினைஞர்கள் சிதறிக் கிடப்பதனாலும், அவர்களுக்கான விற்பனை வசதிக் குறைவினாலும், உற்பத்தி செய்த பொருள்களை நியாய விலைக்கு விற்க முடிவதில்லை. கைவினைப் பொருள்களுக்கான அங்காடி அமைப்பும் (Market Structrue) சிறியதென்பதால், போதிய பலனின்றி, வருமானத்தில் எவ்விதச் சேமிப்பும் இருப்ப தில்லை. போதிய கல்வி அறிவு பெறாத காரணத்தினால், வருமானத்தைச் சிக்கனமாகச் செலவு செய்வதில்லை. ஆகவே, கடன் சுமைக்கு ஆளாகின்றனர். அரசாங்கத்தின் ஒத்துழைப்பால் கூட்டுறவு நிறுவனங்களிலிருந்தும், மற்றத் துறைகளிலிருந்தும் கடன் பெற வழி வகுக்கப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக, நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகளின் மூலம் 686 கோடி உருபாய் அளவிற்கு 1973-இல் கடன் வழங்கப்பட்டுள்ளது. 1979-ஆம் ஆண்டு முடிவில் உரு. 2630 கோடி வரை கடனுதவி அளிக்கப்பட்டுள்ளது. மண்டல ஊர்ப்புற வங்கிகளின் (Regional Rural Banks) மூலம் 14 கோடி உருபாய் அளவில் கடன் வழங்கப்பட்டுள்ளது. மைய அரசின் திட்டக்குழுவின் ஆய்வின்படி இருப்பினும், இக்கடனுதவி எதிர்பார்த்த அளவில் கைவினைஞர்களைச் சென்றடையவில்லை. இக்காரணங்களால், கடன் பெறுவதற்கான விதிமுறைகள் தளர்த்தப்பட்டு, வங்கிகளின் மேலாளர்கள் கைவினைஞர்களிடம் துணைப் பிணையம் (Collateral Security) இல்லாமல் கடன் உதவியை அளிப்பதில்லை. இதன் விளைவாக, அண்மையில் இந்தியாவின் மைய இருப்பு வங்கி (Reserve Bank of India) விதிகளைத் தளர்த்தித் துணைப்பிணையம் இல்லாமல் ஊரகத் தொழில்களுக்குக் கடன் உதவி வழங்க வேண்டும் என்று உத்திரவிட்டுள்ளது. மேலும், தாழ்த்தப்பட்ட சமுதாயத்தில் உள்ள கைவினைஞர்களுக்கும், மலைவாழ் கைவினைஞர்களுக்கும் குறைந்த வட்டி விகிதத்தில் கடனளிக்க ஆணையிடப்பட்டுள்ளது. நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகள் இல்லாத பகுதிகளிலும், வட்டார ஊர்ப்புற வங்கிகளைத் தொடங்குவதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு, இந்திய மைய இருப்பு வங்கியின் கிளை வங்கியான இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கியிடம் (Industrial Development Bank of India). ஊரகத் தொழில் வளர்ச்சித் தொடர்பான கடன் வசதிகளைப் பெருக்கவும், அவற்றை வழி நடத்தவும், ஒருங்கிணைந்து செயல்படும் பொறுப்புகள் ஒப்படைக்கப்பட்டுள்ளன. ஊரகத் தொழில்களின் கடனுதவிக் குழு (Credit Committee for Small and Village Industries) என்ற ஓர் அமைப்பும் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இவ்வமைப்பு, தொழில் வளர்ச்சி வங்கியோடு தொடர்பு கொண்டு ஊரகத் தொழில்களை வளர்ப்பதற்கான கருத்துகளை வழங்குகிறது.

போதிய ஊரகத் தொழில்நுட்பத் திறனை வளர்ப்பதற்குப் பல்வேறு முன்னேற்றத் திட்டங்கள் ஆறாம் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் வகுக்கப்பட்டுள்ளன. இப்போதுள்ள தொழில் நுட்பத் திறன் போதிய அளவில் நாட்டுப்புறத் தொழில்களை வளர்ப்பதாக இல்லை. அன்றியும் தொழில் நுட்பக் கருவிகள், வேலை நேரத்தை நீட்டிப்பதாகவும், கைவினைஞர்களுக்கு உடற் சோர்வை ஏற்படுத்தக் கூடியனவாகவும் உள்ளன. ஆகவே, இக்கருவிகளைப் பற்றிய ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இந்தியாவில் உள்ள பல ஊரகங்களில் இயங்கும் ஊரகத் தொழில்களின் பயன்பாட்டிற்கு ஒரே தன்மையான அமைப்பைக் கொண்ட கருவிகளைச் செய்வதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. முன்பே, பல தனியார் நிறுவனங்களும் இந்தக் கருவிகளைச் செம்மைப்படுத்தும் முயற்சிகளை மேற்கொண்டுள்ளன. இத்தொழில்களை மேம்படுத்த சம்னாலால் பசாசு (Jamnalal Bajaj) ஆய்வு நிலையம், மையத் தேனீ வளர்ப்பு ஆய்வு நிலையம், பானை, பீங்கான் தொழில் தொடர்பு ஆய்வு நிலையங்கள் ஆகியவை, பல ஆராய்ச்சிப் பணிகளில் ஈடுபட்டுள்ளன. அறிவியல், ஆய்வுக் கழகம், தொழில் ஆய்வுக் கழகம், இந்திய வேளாண்மை ஆய்வுக் கழகம் போன்ற நிறுவனங்கள், ஊரகக் கைத்தொழில் வளர்ச்சியை மேம்படுத்துவதன் நோக்கமாகப் பல்வேறு ஆய்வுகளை மேற்கொள்கின்றன. புதிய கருவிகளைக் கொண்டு கைவினைஞர்கள் உற்பத்தி செய்யும் வேலையில் ஈடுபடும்போது பல சிக்கல்கள் ஏற்படும். ஆகவே, அவற்றைக் கையாள்வதற்குப் பயிற்சி மையங்கள் ஏற்படுத்த முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

ஊரகத் தொழில்களுக்கான மூலப்பொருள் போதிய அளவிலும் குறித்த காலங்களிலும் கிடைக்காததாலும் இத்தொழில் பெரும் பாதிப்புக்குள்ளாகிறது. கிடைத்த மூலப் பொருள்களைச் சேமிப்பதற்கும் கைவினைஞர்களுக்கு இட வசதியில்லை. இக்குறைகளைப் போக்குவதற்கு 1980-ஆம் ஆண்டு வெளியான தொழிற் கொள்கை அறிக்கை, பல்வேறு நடைமுறைத் திட்டங்களை உருவாக்கியுள்ளது.

தேவையான மூலப் பொருள்களைப் பெரிய அளவில் சேமித்து வைப்பதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டு வருகின்றன. மேலும், நாட்டளவில் தேசிய சிறுதொழிற் கழகமும், மாநிலங்களளவில் சிறுதொழில் வளர்ச்சிக் கழகங்களும் தோற்றுவிக்கப்பட்டுள்ளன. இக்கழகங்கள், எதிர்கால மூலப்பொருள்களின் தேவையைக் கணக்கிட்டு அவற்றைப் பகிர்ந்தளிக்கும் முயற்சியில் ஈடுபடுகின்றன. ஊரகப்புற அங்காடி மையங்கள் மூலப் பொருள்களை முன்னோடி முறை யில் (Pilot Basis) கைவினைஞர்களுக்கு வழங்கு கின்றன. ஊரகத் தொழில்களின் முன்னேற்றத்திற்கு மற்றொரு தடையாக இருப்பது விற்பனைக் கூடங்கள் சிறந்த முறையில் இயங்காமையாகும். விற்பனைக் கூடங்களில் விற்கப்படும் பொருள்கள் ஒரே தன்மை யனவாகவும் தரமுள்ளனவாகவும் இருக்கவேண்டும். மிகப் பெரும்பான்மையான கைவினைஞர்கள், தாம் உற்பத்தி செய்த பொருள்களை விற்பதற்குத் தரகர் களை நம்பி இருப்பதால் போதிய ஆதாயம் இவர் களுக்குக் கிடைப்பதில்லை. இடைத் தரகர்கள் (Middlemen) கைவினைஞர்களுக்குத் தேவையான உற்பத்திப் பொருள்களை வழங்கும் நிலையில் இருப் பதால், இவர்களுடைய பிடியில் கைவினைஞர்கள் சிக்க வேண்டிய நிலையில் உள்ளனர். தேசிய சிறு தொழிற் கழகம், சிறுதொழில்கள் பணி நிறுவனங்கள், கதர் மற்றும் ஊரகக் கைத்தொழிற் குழு, கைவினைப் பொருள் ஏற்றுமதிக் கழகம் போன்ற அமைப்புகள் கைவினைஞர்களை இடைத்தரகர்களிடமிருந்து பாது காக்கின்றன. மத்திய அரசின் ஊரகப்புற விற்பனைக் கூடங்களை 1978-79-ஆம் ஆண்டில் மண்டல அளவில் முன்னோடியாக அறிமுகப்படுத்திக், கைவினைஞர் களுடைய தேவைகளை நிறைவுசெய்ய முடிவெடுக்கப் பட்டுள்ளது. அரசு விற்பனைக் கூடங்களின் மூலம் கைவினைஞர்களின் பொருள்களை வாங்கிச் சேக ரித்து வைக்கிறது. சிறிய தொழில்களிலிருந்து 379 பொருள் வகைகளை விலைக்கு வாங்கி இத் தொழிலுக்குப் பாதுகாப்பு அளிக்கிறது. பெரிய, நடுத் தரத் தொழில்கள் மூலம் உற்பத்தியாகும் பொருள் களுக்குக் கொடுக்கும் விலையைவிட 15 விழுக்காடு மிகுதியான விலையும் கொடுக்கப்படுகிறது.

கூட்டுறவு நிறுவனங்களின் மூலமும், ஊரகக் கைத் தொழில்களை அனைத்திந்திய அளவிலும், மாநில அளவிலும் வளர்க்கப் பல்வேறு முயற்சிகள் மேற் கொள்ளப்படுகின்றன. ஊரகத் தொழில்களில் சுரண்டல் முறையை (Exploitation) அகற்றி, தற்சார்பு வேலைவாய்ப்பை உருவாக்குவதற்குக் கூட்டுறவு முறை சிறப்பானது. ஆனால், மரபு வழித் தொழில்களிலும் ஊரகத் தொழில்களிலும் கூட்டுறவுத் துறை சிறப்புப் பங்கு வகித்தாலும் பயன்கள் மனநிறைவளிப்பனவாக இல்லை. கூட்டுறவு நிறுவனங்கள் 50, 60 விழுக்காடு செயற்படாமல் உள்ளன. மிகச் சிலவே சிறப்பாகச் செயற்படுகின்றன. ஆறாம் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் கூட்டுறவுத் துறை சிறப்பாகச் செயற்படப்பல்வேறு முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன.

ஊரகக் கைத்தொழில்கள் சிறப்பாகச் செயற்படு கின்றனவா என்பதைக் கண்டறியவும், ஆய்வு செய்ய வும், முன்னேற்றத் திட்டங்கள் தீட்டவும் அடிப்படை யாக அமைவன புள்ளிவிவரங்களே. தொழில் பற்றிய ஆண்டுக் கணக்கெடுப்பில் (Annual Survey of Industries) பதிவு செய்யப்பட்ட சிறிய தொழிற் கூடங்கள் மட்டும் அடங்குகின்றன. தேசிய மாதிரிக் கணக்கெடுப்பின் (National Sample Survey) புள்ளி விவரங்களும் தொழில் ஆண்டுக் கணக்கெடுப்பின் புள்ளி விவரங்களும் ஒன்றோடு ஒன்று சார்ந்து முழுமையான கண்ணோட்டத்தைத் தர இயலாத தால், ஊரகக் கைத்தொழில் புள்ளிவிவரங்கள் ஒழுங்காகக் கிடைக்கவில்லை. கதர், மற்றும் ஊரகக் கைத்தொழில்களின் குழு தரும் புள்ளி விவரங்களில் மிகப் பெரும்பான்மையான ஊரகங்கள் விடுபட்டுப் போகின்றன.

தமிழ்நாட்டில் பனை வெல்லம், எண்ணெய், சோப்பு, ஆகியவற்றை உற்பத்தி செய்தல், மரத் தொழில், பானைத் தொழில், செங்கல் அறுத்தல், தோல் பதனிடுதல், கையால் காகிதம் செய்தல், பழச்சாறு எடுத்தல், மூங்கில், கரும்புத் தொடர் பான தொழில்கள் செய்தல் முதலியவை ஊரகத் தொழில்களாகக் கருதப்பட்டு வருகின்றன. பனை வெல்லத் தொழிலின் உற்பத்தி மதிப்பு 15 கோடியே 50 இலட்சம் உருபாயும், ஊரகத் தோல் உற்பத்தி மதிப்பு 3 கோடியே 73 இலட்சம் உருபாயும், மரத் தொழில் 3 கோடியே 73 இலட்சம் உருபாயும் என மதிப்பிடப் பட்டுள்ளன (1980). மேலும், 14 ஊரகத் தொழில்களில் 6 தொழில்களுக்கு மட்டும் வளர்ச்சி விகிதத்தின் புள்ளிவிவரங்கள் உள்ளன.

பொதுவாக, நாடு முழுவதும் உள்ள ஊரகக் கைத் தொழில்கள் ஒரே வகையான தொழில் அமைப்பு முறைகளைக் கொண்டவை. சில மாநிலங்களில் ஊரகக் கைத்தொழிற் பொருள்களிற் சில மாற்றங் கள் இருப்பினும், ஊரகப் பொருளாதார வளர்ச்சிக்கு இத்தொழில்கள் உதவுவதோடு, ஊரகங்களில் நிலவும் வறுமையையும் வேலையில்லாத் திண்டாட் டத்தையும் போக்க உதவும் சமூகப் பொருளாதார மையங்களாகவும் இவை விளங்குகின்றன. மூன்றாம் உலக நாடுகள் (Third World Countries) என்று சொல்லப்படும் இந்தியா, சீனா, இலத்தீன் அமெரிக்க

நாடுகள், ஆப்பிரிக்க நாடுகள் போன்றவற்றில் வறுமையும், வேலையில்லாத் திண்டாட்டமும் பெரும் சிக்கல்களாகக் கருதப்படுகின்றன. எனவே, ஊரகப் பொருளாதாரத்தை வலுப்படுத்த இந்நாடுகளில் முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. சீனா, இந்தியா ஆகிய நாடுகள் மக்கள்தொகையில் உலகில் முதலாவதாகவும் இரண்டாவதாகவும் கருதப்படுவதாலும், பெரும்பாலான மக்கள் ஊரகங்களில் வாழ்வதாலும், தொழில் வளர்ச்சி நகரத்தையொட்டியே வளர்ந்திருப்பதாலும், ஊரகக் கைத்தொழில்களின் முன்னேற்றம் சிறப்பான கவனத்தைப் பெறுகிறது. உலக வங்கியின் அறிக்கை (1981) வறுமையை அகற்றுவதிலும், மக்களின் அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்வதிலும் சீனாவின் வளர்ச்சியை எடுத்துக்காட்டாகக் கூறியுள்ளது. ஊரக அமைப்பு முறையில் வேளாண்மை, ஊரகக் கைத்தொழில்கள், சிறுதொழில்கள் முதலியவற்றை ஒருங்கிணைத்துத் திட்டங்களைச் செயற்படுத்தியதே இதற்குக் காரணமாகக் கொள்ளப்படுகிறது. கடந்த ஆறு ஐந்தாண்டுத் திட்டங்களில் ஊரக வளர்ச்சிக்கும் ஊரகக் கைத்தொழில் வளர்ச்சிக்கும் திட்டங்கள் தீட்டிச் செயற்படுத்திய பின்னும், மேலும் வளர்ச்சியடைய வேண்டிய நிலையுள்ளது. ஆகவே, ஊரகத் தொழில் வளர்ச்சி இந்தியப் பொருளாதார வளர்ச்சியின் ஓர் உறுப்பாகக் கருதப்படுகிறது.

எம்.நா.

துணை நூல்கள்:

Sibnath Bhattacharya, Rural Industrialisation in India, Nature and Problems, B.R. Publishing Corporation, Delhi, 1980.

Thomas A.M., The place of Khadi and Village Industries in National Economy, Yojana, Delhi, 1980.

***அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகம்:*** இந்தியத் தொழிலாளர் சமூகத்தினிடையே 1920-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 31-ஆம் நாளில் தோன்றிய அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகம் (All India Trade Union Congress) இந்தியாவில் முதன் முதல் தோன்றிய அமைப்பாகும். குடியேற்ற ஆதிக்கத்தின் சுரண்டல், உலகம் தழுவிய பேரரசு அமைப்பின் வளர்ச்சி, வளர்ந்து வந்த முதலாளித்துவ ஆதிக்கம் ஆகியவற்றுக்கு எதிர்ப்பாக நடந்த போராட்டத்தின் காரணமாக இக்கழகம் உருவாயிற்று. உருசியாவில் (1917) நடந்த அக்டோபர்ப் புரட்சி இக்கழகம் உருவாவதற்கான எழுச்சியை இத்துணைக் கண்டத்தில் ஏற்படுத்தியது. கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டு முதல் தொழிலாளர் அமைதியின்மை தொடங்கி ஆங்கில ஆட்சியின் அடக்குமுறை காரணமாக வலுப்பெற்றதோடு, அப்போது நிலவிய பொதுவேலை நிலையும் இதற்குக் காரணமாகியது. ஆங்கிலக் குடியேற்ற ஆட்சி (Colony Rule), ஊரகத் தொழில்கள் சீரழியவும், கைவினைஞர்கள் வறுமையில் மூழ்கவும் வழி வகுத்தது. இரயில்வேக்கள், பருத்தி, சணல் ஆலைகள், நிலக்கரிச் சுரங்கங்கள் ஆகியவற்றின் தொழில் வளர்ச்சி இக்கழகம் விரைவில் உருவாக அடித்தளமாயிற்று.

தொழில் வளர்ச்சியினால் நகர்ப்புற இடமாற்றமும் இடைக்காலத் தொழிற் படை ஒன்றும் உருவாயின. தொழில் வளர்ச்சி, தொழிலாளர்களை மோசமான நிலையில் சுரண்டியதைத் தவிர, எவ்வகைப் பலனும் அளிக்கவில்லை. அமெரிக்காவில் கி.பி. 1886-இல் வேலை நேரத்தைக் குறைக்கும்படி தேசியத் தொழிலாளர் கழகம் போராடியபோது முதல் பன்னாட்டுச் செனிவாக் கழகம் (Geneva Convention) அதனை ஆதரித்தது. உலக அரங்கில் தோன்றிய தொழில் அமைதியின்மை இந்தியாவில் இவ்வியக்கம் வேரூன்றப் பின்னணியாக அமைந்தது. இந்தியாவில் கி.பி. 1877-ஆம் ஆண்டு நாகப்பூர் 'எம்பிரசு' ஆலையில் (Empress Mills) கூலி உயர்வுக்காக வேலைநிறுத்தம் தொடங்கியது. அதன்பின் இரயில் வேக்களும், ஆமதாபாத்து, பம்பாய் நகரங்களின் பருத்தி ஆலைகளும், சணல் ஆலைகளும் போராட்டங்களில் குதித்தன. நாடுமுழுவதும் கி.பி. 1882-1890 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் 25-க்கும் மேற்பட்ட வேலைநிறுத்தப் போராட்டங்கள் நடந்தன. இப்போராட்டங்கள் தோட்டத் தொழில்களிலும் நிலக்கரிச் சுரங்கங்களிலும் நடைபெற்று வேலைகள் தடைப்பட்டன. இதற்கு முந்தைய வேலைநிறுத்தங்களின் புள்ளிவிவரங்கள் கிடைக்காமல் இருப்பினும், கி.பி. 1820-ஆம் ஆண்டுத் தொடக்கத்திலிருந்து பல்லாக்குச் சுமப்போர், மாட்டுவண்டிக்காரர், குதிரை வீரர், சலவைத் தொழிலாளர், பால் விற்பனையாளர், அச்சுக் கோப்போர் ஆகிய தொழிலாளர்களிடையே போராட்டங்கள் நடந்துள்ளன என ஆதாரங்கள் கூறுகின்றன. இவற்றுக்கும் முன், இரயில்வேத் தொழிலாளர் போராட்டங்களும் நடந்துள்ளனவாகக் கூறப்படுகிறது.

இப்போராட்டங்கள் தொழிற்சங்கம் என்ற அமைப்பொன்று இல்லாதிருந்த காலத்தில் நடைபெற்றவை. தொழிற்சங்க அமைப்பு முறையை அத்தொழிலாளர்கள் அறியாமல் இருந்தனர். ஆயினும், முதலாளிகளிடமிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ளும் எண்ணத்துடன் தங்களுக்குள் "சமாத்து" (Jamaat) என்னும் அமைப்பினை உருவாக்கிக்

கொண்டனர். இவ்வமைப்புகள் சாதியின் அடிப் படையில் அமைந்தனவே தவிர, ஒரு சமூக அமைப் பாகத் திகழவில்லை. ஆகவே, ஒரு சில முயற்சிகளின் விளைவாகச் சாதித் தடைகள் நீங்கி, இந்தியத் தொழிலாளர் கட்டுக்கோப்பான ஓர் அமைப்பின் கீழ் வரவேண்டும் என்ற நோக்கத்தில் இந்தியா, மற்றும் பர்மா தொழிலாளர் இணைப்புச் சங்கம், வங்க இந்தியத் தொழிலாளர் சங்கம், பம்பாய் ஆலைத் தொழிலாளர் சங்கம் ஆகிய அமைப்புகள் தோன்றின. இச்சங்கங்களும் ஒரு சமூக அமைப்பாக மட்டும் விளங்கினவே தவிர, எவ்விதச் சீரிய கருத்துகளையும் கொண்டவையாக இருக்கவில்லை. ஆகவே, இக்கட்டத்திலும் தொழிற்சங்கம் என்ற அமைப்பு உருவாகவில்லை. தொழிலாளரிடையே நிலவிய கட்டுப்பாட்டுணர்வு, வகுப்புணர்வு ஆகியவற் றின் விளைவாக அவ்வப்பொழுது வேலைநிறுத்தங்கள் அதிகரித்தன. பால கங்காதர திலகருக்கு 1908-இல் 6ஆண்டுக் காலச் சிறைத் தண்டனை கொடுக்கப்பட்ட போது, அதனை எதிர்த்து நடந்த போராட்டமே இக்காலப் பகுதியில் நடந்தேறிய மிகப் பெரிய அள விலான வேலைநிறுத்தமாகக் கருதப்படுகிறது.

அரசியல் முறையில் இந்தியத் தேசிய இயக்கம் ஆங்கிலப் பேரரசின் கீழ்த் தன்னாட்சியின் மூலம் தன் தாய்நாட்டை அமைதி வழியில் மீட்கும் நிலை ஏற் பட்டது. முதல் உலகப்போர் வலிமை மிக்க மேற்கு ஏகாதிபத்தியத்தை முறியடித்தது. உருசியப் புரட்சி யும் (1917) அப்போது நிலவிய பொருளாதார நெருக்கடிகளும் உலகெங்கிலும் ஒரு வகைப் புரட்சிக் கனல் வீசக் காரணமாயின. இந்தியாவில் கொண்டு வரப்பட்ட இரௌலட்டுச் சட்டமும் (Rowlett Act), சாலியன்வாலாபாக்குப்(Jalian Walabag)படுகொலை யும் நாட்டில் அமைதியைச் சீர்குலைத்தன. இச்சூழ லில் பம்பாய்ப் பருத்தி ஆலைத் தொழிலாளர்கள் 1918-ஆம் ஆண்டில் மாபெரும் வேலைநிறுத்தம் ஒன்றினைத் தொடங்கினர். எதற்கும் முன்னோடி நகராகிய பம்பாயில் 1919-ஆம் ஆண்டு சனவரியில் தொடக்கமான வேலைநிறுத்தம், பின்னர் அம்மாநக ரின் அனைத்து ஆலைகளிலும் பணியாற்றிய 1,20,000 தொழிலாளர்களும் பங்குகொள்ளக் காரணமாகியது. இப்போராட்டங்கள் 1920 ஆம் ஆண்டின் முதல் ஆறு மாதக் காலத்தில் நாடு முழுவதுமாக 15,00,000 தொழிலாளர்கள் பங்குகொள்ளும் அளவிற்கு வளர்ந்து உச்சக்கட்டத்தை அடைந்தன. இவ்வகையில் 200 வேலைநிறுத்தப் போராட்டங்கள் நாடு முழு வதும் நடந்தேறின. இப்போராட்டங்களின் வெற்றி யால் நாடு முழுவதும் தொழிற்சங்க அமைப்புகள் உருவாயின. உருவாகிய அமைப்புகள் போராட்டம் ஒன்றினை நடத்துவதற்கான குழுக்களாக அமைந் தனவே தவிர, நீண்ட காலங்களுக்கு நிலைத்திருக்க வில்லை. ஒருசில அமைப்புகள் நிலைத்திருந்தும் ஓரிரு ஆண்டுகள் மட்டுமே செயலாற்றின.

திரு.வி. கல்யாணசுந்தர முதலியார், இ. ஐ. ஐயர் ஆகியோர் உதவியோடு பி.வி. வாடியா என்பவரால் முதன் முதலில் சென்னைத் தொழிலாளர் சங்கம் தொடங்கப்பட்டது. முதலில் அனைத்துத் தொழி லாளர்களையும் கொண்டு நிறுவப்பட்ட இச்சங்கம் பின்னர்ப் பக்கிங்காம், மற்றும் கருநாடக ஆலையின் (Buckingham and Karnatic Mills) முதன்மை அமைப்பாகத் திகழ்ந்தது. இந்நிலையில் தொழி லாளர்கள் ஒன்றுபட்டுப் போராடக்கூடிய மன உரத் தினைக் கொண்டிருந்தபோதிலும், தொழிற் சங்கங் களின் செயலாண்மை பிறரைச் சார்ந்திருந்ததால் தங்கள் உணர்ச்சிகளை வெளிப்படுத்த இயலவில்லை. வளர்ந்து வரும் தொழிலாளர் இயக்கத்தைச் சீரிய முறையில் வழிநடத்திச் செல்லும் ஆற்றலற்றனவாக இவை திகழ்ந்தன. பல சங்கங்களும் தனித்தனியே செயற்பட்டு, ஒருமைப்பாடின்றி விளங்கியமையால், அனைத்திந்திய அளவில் ஓர் இயக்கம் தோன்ற வாய்ப்பு ஏற்படவில்லை.

பன்னாட்டுத் தொழிலாளர் நிறுவனம் (International Labour Oganisation) தொடங்கப்பட்ட வுடன் அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகம் உடனே நிறுவப்படவேண்டும் என்ற கட்டா யத் தேவை ஏற்பட்டது. அதனால், 1919-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்களில் நடைபெற்ற பன் னாட்டுத் தொழிலாளர் மாநாட்டிற்கு என்.எம். சோசி (N.M. Joshi) என்பவரைத் தொழிலாளரின் சார்பாளராகவும், பி. வி. வாடியா என்பவரை ஆலோசகராகவும் இந்திய அரசாங்கம் நியமித்தது. நாட்டின் பல்வேறு இடங்களில் அமையப்பெற்ற தொழிற் சங்கங்களுடன் கலந்தாலோசிக்கப்படாமல் இந்தியமன முடிவு எடுக்கப்பட்டதால், நாடெங்கிலும் பல தலைவர்கள் தத்தம் எதிர்ப்பைத் தெரிவித் தனர். இதன் காரணமாக, அனைத்திந்திய அளவில் தொழிலாளர் மாநாடு கூட்டப்பட்டு அனைத்திந்தியத் தொழிலாளர் சங்கம் என்ற அமைப்பொன்று உரு வாக்கப்பட வேண்டும் என்ற எண்ணத்தினை என்.எம். சோசி தெரிவித்தார். இவ்வாறு கூட்டப் பட்டு உருவாகும் ஒரு தேசியக் குழுவிற்கே அனைத்து நாடுகளின் மாநாட்டிற்குச் சார்பாளரை நியமிக்கும் அதிகாரம் கொடுக்கப்பட வேண்டும் என்று வலி யுறுத்தினார். இதன் பின்னர், அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகம் உருவாக்கப்பட்டு, அதன் முதல் மாநாடு இலாலா இலசபதிராய் (Lala Lajpat Rai) தலைமையில் 1920-ஆம் ஆண்டு அக்டோ பர்த் திங்கள் 31-ஆம் நாளில் நடந்தேறியது. இம்

**மாநாட்டிற்கு**, நாட்டின் சிறந்த அரசியல் தலைவர் **களும், மாறுபட்ட** கருத்துகளைக் கொண்டவர்களு **மான எம்.எ.** சின்கா, மோதிலால் நேரு, அன்னி **பெசண்டு,** வி.சே. படேல், பி.டி. வாடியா, வாலு **பாய் சமல்** தாசு, சம்னா தாசு, துவாரகா தாசு, **பி.டபிள்யூ.**வாடியா போன்றோர் சார்பாளர்களாகக் **கலந்து** கொண்டனர். இங்கிலாந்து தொழிலாளர் **ஒற்றுமைக்** கழகத்தின் சார்பில் சே.சி. வெட்சுவிட்டு **(Wedgewit)**கலந்து கொண்டு, இவ்வியக்கம் தொடக்க முதல் மக்களாட்சி முறைப்படி செயற்படச் சிறப்புப் பணியாற்றினார்.

தொடக்கத்தில் 1,40,854 உறுப்பினர்களுடன் 64 தொழிற் சங்கங்கள் அனைத்திந்தியத் தொழி லாளர் ஒற்றுமைக் கழகத்துடன் இணைந்தன. தங்கள் ஒத்துழைப்பையும், கருத்து ஒப்புதல்களையும் தொடர்ந்து வழங்க 43 சங்கங்கள் உறுதியளித்தன. உறுப்பினர் எண்ணிக்கையின் அடிப்படையில் பன் னாட்டுத் தொழிலாளர் நிறுவனத்திற்குத் தனிச் சங்கங்கள் ஒவ்வொன்றும் தன் பேராளரை **(Delegate)** அனுப்ப முடிவு எடுக்கப்பட்டது. நாட்டின் **அனைத்துப்** பகுதிகளிலுமுள்ள பன்முகப்பட்ட தொழி **லாளர் நிறுவன** அமைப்புகளை ஒருமுகப்படுத்துதல், **தொழிலாளர்** நலன், சமூக, அரசியல் பொருளாதார மேம்பாட்டை வலுப்படுத்துதல் ஆகியவற்றை இக் **கழகம்** நோக்கமாகக் கொண்டு விளங்கும் என்று **இதற்கான** பட்டயத்தை (Charter) உருவாக்கப் **பணித்த குழு** அறிவித்தது.

**ஒவ்வொரு** மாநாட்டிலும் 1945-ஆம் ஆண்டு **வரை பன்னாட்டுத்** தொழிலாளர் இயக்கத்தில் எப் **பக்கம் சார்ந்து** இணைந்து கொள்வது **என்பது** குறித்த **சிக்கல்களும்** கருத்து வேறுபாடுகளும் மிகுதியாக **நிலவி வந்தன.** உலக அரங்கில் இங்கிலாந்துப் பேரர சின் **ஆதரவுடன்** பன்னாட்டுக் கூட்டுத் தொழிலாளர் **சங்கங்களும்** (International Federation of Trade Unions), சோவியத்து உருசியாவின் ஆதரவைப் பெற்ற புரட்சித் தொழிலாளர் சமூகத்தினருக்கான சிவப்புப் பன்னாட்டுத் தொழிலாளர் சங்கங்களுமாக (Red International Trade Unions) இரு பெரும் பிரிவுகள் இயங்கின. பெரும்பாலான உலக நாடுகள் விடுதலைக்காகப் போராடிக் கொண்டிருந்த காலத் தில் 1945-ஆம் ஆண்டு உலகக் கூட்டுத் தொழிலாளர் சங்கம் (World Federation of Trade Unions) உரு வாயிற்று.

அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகத்திற்கு 1921-ஆம் ஆண்டுக் கூட்டம், புதிய திட்டங்களையும் கொள்கைகளையும் வகுத்துப் பின் னைய ஆண்டுகளுக்குத் தேவையான ஆற்றல் மிக்க தலைவர்களையும் வழங்கியது. தொழிலாளர்களின் தொழில் தொடர்பான, அரசியல், பொருளாதார உரிமைகளைப் பேணும் ஒரு **தேசிய நிறுவனமாகவும்,** கூட்டுறவுத் தொழிற்சங்கம், மற்றும் **சமத்துவ** இயக் கங்களாகவும் பணியாற்றும் (Co – operative Trade Union and Socialistic Movements) குறிக்கோளை அந்தக் **கூட்டம் இன்றியமை** யாததாகக் கொண்டது; **உழைப்போர் அனை** வரையும் உறுப்பினர்களாகச் **சேர்த்தது; தொழில்** துறையினருக்குக் காப்பீடு, **கூட்டுப் பேரம், இயற்றப்** பட்ட சட்டங்களின்படி **சலுகைகள் ஆகியவற்றை** அளிக்கும் வழிமுறைகளை **ஆராய முனைந்தது.** அரசி யல் கொள்கையில் **தீவிரத் தனியுரிமையையும்,** போல்சுவிக்குக்(Bolsvik)**கோட்பாடுகளையும்.**பேபியன் சமதருமத்தையும் **(Fabian Socialism) ஊக்குவித்தது.** முதல் அரசியல் **தீர்மானம் உடனடியாக** நாடு தன் னாட்சி பெற **வேண்டும் என்றும்,கைவினைப் பொருள்** கள், துணிகள் **ஆகியவற்றை ஊக்குவித்துக் கைவினைத்** தொழில் துறையை **வளர்ச்சியடையச் செய்ய** வேண் டும் என்றும் வலியுறுத்தியது; **போரில் ஈடுபடுவதையும்** வன்முறைகளையும் **கண்டித்தது. தொழிற் சங்கங்கள்** 1925 வரையில் கணிசமான **அளவிற்கு** முன்னேற்ற மடைந்தாலும், **அவை நாட்டின்** ஒரு சில வட்டாரங் களில் குறிப்பிட்ட சில வாணிகத் **துறைகளில்** முற்றிலும் இல்லாதிருந்தன. **தொழிற் சங்க அமைப்** புச் சட்டத்திற்கு மாறான ஒரு சூழ்ச்சித் திட்டம் (Illegal Conspiracy) **இது** எனச் சென்னை உயர்நீதி மன்றம்,சென்னை **'பி'** அண்டு**'சி'ஆலைத்** தொழில் வழக்கில் **தீர்ப்பாக அறிவித்தது.** அதன் பின்னரும் சென்னையில் பல துறைகளிலும், குறிப் பாக மண்ணெண்ணெய் விற்றுவந்த தொழிலாளர் போன்ற பின்தங்கிய அட்டவணைப்படுத்தப்பட்ட சாதியினரிடையேயும், திரு.வி. கலியாணசுந்தரமுதலி யார், சிங்காரவேலுச் செட்டியார் முதலானோரின் தலைமையில் பல தொழிற் சங்கங்கள் வளர்ந்தன.

தொழிற் சங்கங்களின் நடவடிக்கைகள் வேலை நிறுத்தங்களாகவும், விளைவுகள் ஊதியக் குறைப் பும், வேலை நீக்கமுமாகவும் இருந்தன. வேலை நிறுத்தம் சட்டத்திற்குப் புறம்பானதன்று என்ற உரிமைப் போராட்டத்தை அனைந்திந்தியத் தொழி லாளர் கழகம் தன் அடிப்படை நோக்கமாகக் கொண்டு, உழைப்பாளர்களின் சமுதாய, பொருளா தார நலன் உயரவும், பல்வேறு சாதி, சமயப் பிரி வினரிடையே அமைதியும் ஒற்றுமையும் நிலவவும் பாடுபட்டு வந்தது. போர் முனைப்புடன் பணியாற் றும் தலைவர்கள் நாடு முழுவதும் பல வேலைநிறுத் தப் போராட்டங்களைத் திட்டமிட்டுச் செயலாற்றி னர். எசு.எ. தாங்கே (S.A. Dange) தம் தலைமை யில் சமதருமக் கொள்கையுடன், உழைப்பாளரின் கருத்தியல் கோட்பாட்டையும் வகுப்புவாதப் பிரி

வினையை ஒழிக்கும் திட்டங்களையும் பன்னாட்டுக் கடைநிலை வகுப்பினர் புரட்சியையும் தொடங்கினார்.

ஆங்கில இந்தியாவிலுள்ள (British India) தொழிற் சங்கங்களைப் பதிவு செய்வதற்கான கட்டுப்பாடுகளை 1926-இல் தொழிற் சங்கச் சட்டம் நிறைவேற்றியது. தொழிற் சங்கங்கள் 1925 வரை சட்டத்திற்குப் புறம்பானவையாகக் கருதப்பட்டு வந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கது.

முதல் முறையாக 1927-இல் இந்தியத் தொழிலாளர்கள் "தொழிலாளர் நாளை" மே முதல்நாளில் கொண்டாடினர். அதே ஆண்டில் பொதுவுடைமைக் கட்சியின் தலைமையில் புரட்சித் தொழிற் சங்கங்கள் உருவாயின. இடதுசாரிக் கட்சியினர் (Left Wing), இந்தியத் தேசிய காங்கிரசுடன் இணைந்ததாலும் அனைத்திந்திய உழவர்-உழைப்பாளர் கட்சி (All India Workers & Peasants Party) அமைக்கப்பட்டதாலும், புரட்சிகரமான உழைப்பாளர் தலைவர்களின் (Revolutionary Working Class Leaders) எண்ணிக்கை மிகுந்ததால் வகுப்புவாத, பொருளாதார, அரசியல் உரிமைக் கோரிக்கைகள் பெருகி, அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகத்தின் நடவடிக்கைகளைப் பெரிதும் பாதித்தன. சீர்திருத்தவாதிகளின் மிதமான தலைமையை எதிர்த்துப் புரட்சி அரசியலை மையமாகக் கொண்ட உழைப்பாளர் தலைவர்கள் மேலோங்கினர். 'சைமன் கமிசனுக்கு' (Simon Commission) எதிரான பொதுவுடைமைவாதிகளின் தீவிர வேலை நிறுத்தப் போராட்டங்களைத் தொடர்ந்து, அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகமும் 'சைமன் கமிசனை'ப் புறக்கணிப்பதாக (Boycott) அறிவித்தது. நாட்டில் 1928-ஆம் ஆண்டில் மட்டும் 203 வேலை நிறுத்தங்களினால், 50,685 உழைப்பாளரின் 3,16,47,404 நாள் உழைப்பு இழப்பு (Mandays Lost) நேர்ந்தது. இடதுசாரிக் கட்சி வலிமை யுடையதாய் அரசுத் தொழிற் சங்கங்களின் கட்டுப்பாடான அமைப்பைக் குலைக்க நடவடிக்கை எடுத்தது. அதனால் தொழில் தகராறுகள் சட்டம் (Industrial Disputes Act) செயற்படுத்தப்பட்டது.

அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகத்தில் 1929-ஆம் ஆண்டளவில் பொதுவுடைமையரும் இடதுசாரி, வலதுசாரி, மிதவாதக் (Left Wing, Right Wing & Liberal) கட்சிகளைச் சார்ந்த உறுப்பினர்களும் அரசியல்வாதிகளுமிருந்தனர். ஆயினும், இடதுசாரிக் குழுவினர் பெருவாரியான தொழிற் சங்கங்களின் மதிப்பைப் பெற்றிருந்ததோடு அவற்றுக்குத் தலைமையேற்று நடத்தும் ஆற்றலையும் வலிமையையும் பெற்றிருந்தனர். அனைத்துப் பசுபிக்குத் தொழிற்சங்கச் செயலகத்தை (Panpacific Trade Union Secretariat) அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகத்துடன் இணைப்பதற்கான தீர்மானம் கொண்டு வரப்பட்டவுடன், அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகம் பிளவுபடுவதற்கான வாய்ப்புகள் வெளிப்படையாகத் தெரியத்தொடங்கின. என்.எம்.சோசி, வி.வி. கிரி (V.V. Giri) ஆகியோரின் ஆதரவுடன் 30 தொழிற் சங்கங்கள் பிரிந்து சென்று இந்தியத் தொழிற்சங்கக் கூட்டமைப்பு (Indian Trade Union Federation) என்ற பெயரில் 1931-இல் ஓர் அமைப்பாக உருவாயின. பன்னாட்டுத் தொழிற் சங்கங்களுடன் ஏற்பட்ட இணைப்பாலும் அரசியல் கருத்து வேறுபாடுகளாலும் பிரிவினைச் சக்திகள் வலுப்பெற்றன. தேசிய இடதுசாரித் தீவிரவாதிகள் (The Left Nationalist Radicals) பொதுவுடைமைக் கட்சியின் அரசியல் போக்கைக் கண்டித்ததன் விளைவாகப் பொதுவுடைமைவாதிகள் அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகத்தை விட்டுப் பிரிந்து, சிவப்புத் தொழிற் சங்கக் காங்கிரசை (Red Trade Union Congress) அமைத்தனர். இப்பிரிவு அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகத்திற்குப் பெரும் இழப்பாக அமைந்து அதனை வலுவிழக்கச் செய்தது. அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகம், இந்தியக் கூட்டுத் தொழிலாளர் கழகத்துடன் கலந்தாலோசித்து 1935-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில் சங்க ஒற்றுமைக்கான தேவையின் அடிப்படையில் இணைப்புக் குழுமங்களை அமைத்தன. இரு கழகங்களின் தலைவர்களும் தொழிலாளர் நலன் பற்றிய கொள்கை அடிப்படையில் கருத்துப் பரிமாற்றங்கள் செய்துகொள்ள வழி வகுக்கப்பட்டது. அதே ஆண்டில் சிவப்புத் தொழிலாளர் சங்கக் காங்கிரசும் (RTUC) கலைக்கப்பட்டு, வரலாற்றுச் சிறப்புமிக்க முடிவுடன் அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகத்துடன் இணைந்தது. அது தொழிற்சங்க ஒற்றுமையின் பொருட்டு இந்தியக் கூட்டுத் தொழிலாளர் கழக அறிக்கையினைப் பின்பற்றுவதாகவும் தெரிவித்தது.

அதன் பின்னர், அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழக ஆதரவுடன் 1945 வரையில் பல வேலைநிறுத்தங்கள் உழைப்பாளர் நலன் பெருக நடைபெற்று வந்தன. இந்திய உழைப்பாளர்களும், மக்களும் உலகப் போரை ஆதரித்து நாட்டின் விடுதலையைப் பெறவேண்டுமென அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகம் அறிக்கை விடுத்தது. சென்னையில் 1945-ஆம் ஆண்டு நடந்த பொது மாநாட்டில், போர் முடிந்தவுடன் பின்பற்ற வேண்டிய கொள்கைகள் பற்றிய திட்டம் விவாதத்திற்குப் பின் ஏற்றுக்கொள்ளப்பட்டது. அதன்படி அனைத்

திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகம் சமுதாய நலத் திட்டங்களுக்காகவும், வறுமையை ஒழிக்கவும், சமதருமக் கொள்கை அடிப்படையில் செயலாற்றிட வும் உறுதி பூண்டது. உற்பத்திப் பொருளைச் சமு தாயத் தேவையின் அடிப்படையில் ஒதுக்கவும், மனிதனை மனிதன் சுரண்டும் முறைகளை ஒழிக்கவும் சிறப்பாகப் பொதுமக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும் பாடுபடுவதோடு, இடைக்காலத் திட்டங்களும் மக்களின் விருப்பத்துடன் அரசால் நிறைவேற்றப்பட வேண்டும் என்றும் கூறியது. அரசு நிலம், அடிப்படைத் தொழில்கள், சுரங்கம், கல்லு டைப்பு, போக்குவரத்துத் தொடர்பு, வங்கி, காப்பீடு முதலியவற்றை நாட்டுடைமையாக்க வேண்டு மெனவும் அறிவித்தது.

உலகப் போர் முடிவடைந்தவுடன் 1946-ஆம் ஆண்டில் தொழிற்சங்கங்களும் பொதுவுடைமைக் கட்சியும், நாடு முழுவதும் வேலை நிறுத்தங்களும் கதவடைப்புகளும் நடைபெறத் தூண்டின. தொழி லாளர்களின் பொருளாதாரத் தேவைகளை முன் னிட்டு, அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழக அழைப்பினை ஏற்று, அனைத்திந்தியத் தபால்-தந்திப் பொது வேலைநிறுத்தம், அதன் எல்லா மாவட்ட, மண்டல நிலையங்களிலும் நடந்தேறியது. இதற்குப் பொதுமக்களின் கூட்டு ஒத்துழைப்பு முழு மையாக இருந்தது. தலைவர்களிடையே தேவையான ஆற்றல் குறைவாகக் காணப்பட்டது. அக்காலப் பகுதியில் வரலாற்றுப் பெருமைமிக்க உலகக் கூட்டுத் தொழிலாளர் சங்கம் (World Federation of Trade Unions) உலக அரங்கில் உருவானது. அனைத் திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகம், இவ் வமைப்பினை நிறுவிய உறுப்பினர் (Founder Member) களுள் ஒன்று என்ற பெருமையைப் பெற்றது.

தொழிற்சங்கங்கள் 1947-ஆம் ஆண்டில் கடுமை யான அடக்கு முறைக்குள்ளாயின. அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகத்தின் தலைமைப் பதவிக்காகப் பொதுவுடைமைக் கட்சி, காங்கிரசுக் கட்சி ஆதரவாளர்களிடையே தீவிரப் போட்டியும் சண்டையும் மூண்டன. இவ் வேளையில், இந்தியத் தேசியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகம் (INTUC) காங்கிரசுக் கட்சியின் தனிப்பட்ட ஆதரவுடன் தொடங்கப்பட்டது. அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகத்திலிருந்து 17,000 உறுப்பினர்கள் வெளியேறி, இந்தியத் தேசியத் தொழிலாளர் ஒற்று மைக் கழகத்தில் சேர்ந்தனர்.

இந்தியத் தேசியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகம் தொடங்கப்பட்டவுடன், அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகத்திலும் பிளவு உண் டாயிற்று. பிரிவினைகள் எழுந்தன. பி.டி. இரணதவே (B.T. Randeve) தலைமையின் கீழ் மார்க்சிய (Marxist) ஆதரவாளர் பிரிந்து, இந்தியத் தொழிற் சங்க மையம் (The Centre for India Trade Union) என்ற அமைப்பை 1970-இல் உருவாக்கினர். அதன் பின்னர், அனைத்திந்தியத் தொழிலாளர் ஒற்றுமைக் கழகம் அரசுடன் மிகவும் நெருங்கிச் செயலாற்றியது. நெருக்கடிக் கால ஆட்சியைத்தொடக்கத்தில் ஆதரித் தாலும், அதனால் தொழிலாளர்களின் நலன் உரி மைகள் பாதிக்கப்பட்டதை இது வன்மையாகக் கண் டித்தது. நெருக்கடிக் காலத்திற்குப்பின் இது தனித் தன்மையுடன்செயலாற்ற முனைந்தது.பொதுத்துறை யிலும், நூற்பாலைத் தொழிலாளர்களிடையேயும் பின்னர் நடந்த வேலை நிறுத்தங்களை இது ஆதரித் தது;அவற்றில் பங்கேற்றது. தேசிய விளக்கக் குழுவை (National Campaign Committee) அமைத்து, அதில் தன்னை உறுப்பினராக்கி, நாடு முழுவதும் தொழி லாளர் நலனுக்கான போராட்டங்களை இது நடத்தி வருகிறது. பிற தொழிலாளர் சங்கங்களுடன் ஒத் துழைத்துத் தொழிலாளர் உரிமைகளுக்காக 1982-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 19-ஆம் நாளில் நாடு தழுவிய வேலைநிறுத்தத்தை வெற்றியுடன் செய்தது.

யு.சு.

துணை நூல்கள்:


Sharma G.K., Labour Movement in India - Its Past and Present - From 1885 to 1980, Sterling Publishers Private Limited, New Delhi, 1982.

Gupta Prem Sagar, A Short History of All India Trade Union Congress (1920-1947) AITUC Publication, New Delhi, 1980.

Karnik V.B., Indian Trade Unions a Survey, Popular Prakashan, Bombay, 1978.


**அனைத்திந்திய நூற்போர்சங்கம்:** காந்தி யடிகள் தென்னாப்பிரிக்காவில் வாழ்ந்தபோது தென் னாப்பிரிக்க இந்தியர் சார்பில் 1908-ஆம் ஆண்டில் இலண்டனுக்குத் தூதுசென்றார்.அங்கு இந்தியச் சுதந் திரத்தில் ஆர்வமுள்ள தலைவர்களையும் மாணவர் களையும் சந்தித்துக் கருத்துப் பரிமாற்றம் செய்த காலத்தில் இராட்டை பற்றிய சித்திரம் காந்தியடி களின் சிந்தனையில் தோன்றிற்று. இதனை "இந்திய சுயராச்சியம்" என்ற மூல நூலில் "நூற்கும் இராட்டை இல்லையெனில் இந்தியருக்குத் தன் னாட்சி இல்லை என்ற கருத்துத் திடீரென உருவா யிற்று" என்று கூறியுள்ளார். இதற்கு முன்னரோ இதற்குப் பின் பத்தாண்டுகள் வரையிலோ அவர் இராட்டையைப் பார்த்ததில்லை என்பது குறிப் பிடத்தக்கது. அடிகள் 1915-ஆம் ஆண்டில் இந்தியா

வுக்குத் திரும்பி ஆமதாபாத்து நகர் அருகிலுள்ள சமர்பதி நதிக்கரையில் ஆசிரமம் நிறுவி, ''ஆசிரம வாசிகள் தங்களுக்குத் தேவையான உடைகளைத் தாமே நெய்து கொள்ள வேண்டும்'' என்ற விதி வகுத்தார். அப்போது இராட்டை கிடைக்காத காரணத்தால், ஆலை நூலைக் கொண்டு கைத்தறியில் நெய்யும் நிலை இருந்தது. அடிகள் இராட்டையைத் தேடுவதில் முனைந்திருந்த காலத்தில் 1917-இல் கங்காபென் மசும்தார் என்ற பெண்மணியிடம் தம் ஆவலைத் தெரிவித்தார். இவ்வம்மையார் குசராத்திலுள்ள பல கிராமங்களில் ஓராண்டுக் காலம் அலைந்து, 1918-இல் விசப்பூர் என்னும் சிற்றூரில் ஓர் இசுலாமியப் பெண்மணியின் வீட்டுக் கூரையில் ஓர் இராட்டை முடங்கிக் கிடந்ததைக் கண்டு அதனைக் காந்தியடிகளிடம் கொணர்ந்தார். அதனை மாதிரியாகக் கொண்டு இராட்டைகள் பல உருவாயின. அன்று முதல் இராட்டையில் நூற்றனர். அதனால் கைத்தறியில் நெய்யும் துணி உருவாயிற்று.

அமிருதசரசில் 1919-இல் நடந்த அனைத்திந்தியத் தேசிய காங்கிரசு மாநாட்டில் கைராட்டையையும் கைத்தறியையும் ஆதரிக்க வேண்டும் என்ற முடிவினை அடிகள் நிறைவேற்றச் செய்தார். கல்கத்தாவில் 1920-இல் நடைபெற்ற காங்கிரசின் செயற் குழுக் கூட்டத்தில் இத்துணிக்குக் கதர் என்று பெயர் சூட்டப் பெற்றது. காங்கிரசு மாநாட்டில் கதர் இயக்கம் பற்றிய முடிவு 1921-இல் இடம் பெற்றது. அதே ஆண்டில் அயல்நாட்டுத் துணிகளைப் புறக்கணித்தல் தொடங்கப் பெற்றது. கதர் இயக்கத்திற்குச் சிறப்பான ஊக்கம் அளிக்கும் நோக்கத்தோடு 1922-இல் காங்கிரசு மாநாட்டின் கிளையாக ''அகில பாரத கதர் இலாக்கா'' உருவாயிற்று. அதுதான் பின்னர் 1925-இல் ''அகில பாரத சர்க்கா சங்கம்'' என்ற பெயரில் ஒரு சுதந்திர நிறுவனமாகப் பதிவு செய்யப்பட்டது. அதன் நிலையான தலைவர் காந்தியடிகள். பண்டித சவகர்லால் நேரு, சங்கர்லால் பேங்கர் ஆகிய இருவரும் செயலாளர்களாகப் பணியாற்றினார்கள். இந்நிறுவனத்தின் தலைமையகம் 1940 வரை ஆமதாபாத்திலும் பின்னர் வார்தாவிலும் இயங்கிற்று. இச்சங்கத்தின் தமிழ் நாட்டுக் கிளையின் தலைமையகம் திருப்பூரில் நிறுவப்பெற்று, இன்று வரை அங்கேயே நிலவுகிறது.

காந்தியடிகளின் மறைவுக்குப் பின்னர், அவரால் தோற்றுவிக்கப் பெற்ற பல்வேறு செயலாற்றும் நிறுவனங்கள் அனைத்தையும் ஒருங்கிணைக்கும் பணியை வினோபா அடிகள் மேற்கொண்டார். அதன் பயனாகத் தோன்றிய அகில பாரத சர்வ சேவா சங்கத்தில் அனைத்திந்திய நூற்போர் சங்கம் இணைந்தது. பின்னர், வினோபா அடிகள் பூமிதான இயக்கத்தின் சார்பில் நாடளாவிய நடைப்பயணம் மேற்கொண்ட காலத்தில், கதர் இயக்கப் பணியைப் பரவல் முறையில் மாநில அளவில் சுதந்திரமாக இயங்க அனுமதிப்பது நலம் என்று கருதினார். அடிகள் தமிழகத்தில் பூமிதான நடைப்பயணம் மேற்கொண்டிருந்த காலத்தில் (1958-இல்) திருநெல்வேலி மாவட்டம் கரிவலம்வந்த நல்லூரில் கூடிய 'சர்வ சேவா சங்கக்' கூட்டத்தில் நிறைவேறிய முடிவின்படி மாநிலக் கிளைகள் சுதந்திரமான கதர் நிறுவனங்களாக மாறின. அன்று முதல் தமிழ் நாட்டுக் கிளை ''தமிழ்நாடு சருவோதய சங்கம்'' என்ற பெயரில் இயங்கி வருகிறது. வி.செ.

**அனைத்திந்திய வானொலி** என்பது ஆங்கிலேயராட்சியின் தொடக்க காலப் பெயர். பின்னர் இது ஆகாசவாணி என்னும் பெயரைப் பெற்றது. ஆங்கிலத்தில் இந்தப் பெயர் சுருக்கமாக AIR என்று அழைக்கப்படுகிறது. AIR என்ற மூன்றெழுத்துச் சொல் ஐம்பூதங்களில் ஒன்றான காற்றைக் குறிப்பது மிகவும் பொருத்தமாகும். காற்றிலே மிதந்து வருவதுதான் வானொலி.

இந்தியாவில் மிகச் சிறந்த மக்கள் தொடர்புச் சாதனமாக விளங்குவதும், ஒருமைப்பாட்டை உணர்த்தும் ஒப்பற்ற சாதனமாகத் திகழ்வதும் வானொலி, நாடு தழுவிய முறையில் அனைத்திந்திய வானொலி (All India Radio) என்ற ஆக்க முறையிலமைந்த பெயரும், அழகுற அமைந்த அதன் சின்னமும் நாட்டு ஒருமைப்பாட்டைக் கோடிட்டுக் காட்டுகின்றன.

தோற்றம்: இந்தியாவில் ஒலிபரப்பின் தோற்றம் 1924-ஆம் ஆண்டு என்றே கூறவேண்டும். அவ்வாண்டு சனவரி மாதம் 31-ஆம் நாள், சென்னையில் சென்னை மாகாண இரேடியோச் சங்கம் (Madras Presidency Radio Club) முதன் முதலாக ஒலிபரப்பு முயற்சிகளை மேற்கொண்டது. ஆனால், பணமுடையின் காரணமாக இந்த முயற்சி 1927-ஆம் ஆண்டு கைவிடப்பட்டது. அதே ஆண்டு இந்திய ஒலிபரப்புக் கழகம் (Indian Broad - Casting Company) என்ற தனியார் நிறுவனம் பம்பாயிலும் கல்கத்தாவிலும் தோற்றுவிக்கப்பட்டது. இந்நிறுவனம் கல்கத்தாவிலும் பம்பாயிலும் வானொலி நிலையங்களை அமைத்தது, இந்த நிறுவனத்தின் நடவடிக்கைகளை இந்திய அரசு 1930-ஆம் ஆண்டு மேற்கொண்டு 'இந்திய ஒலிப்பரப்புச் சேவை' (Indian Broad-Casting Service) என்ற பெயரில் நாட்டில் ஒலிபரப்புப் பணியை நடத்தி வந்தது. இந்த அமைப்பு

1936–ஆம் ஆண்டு முதல் அனைத்திந்திய வானொலி (All India Radio) என்னும் புதிய பெயரைப் பெற்றது.

அனைத்திந்திய வானொலி ஓர் அரசுத் துறையாக மத்திய அரசால் நடத்தப்பட்டு வருகிறது. மத்திய அரசின் செய்தி ஒலிபரப்பு அமைச்சகத்தின் கீழ் இயங்கிவரும் இதன் நிருவாகம், தில்லியில் அகில இந்திய வானொலியின் தலைமை இயக்குநரின் கட்டுப்பாட்டிலும் மேற்பார்வையிலும் இயங்குகிறது. இவருக்கு உதவ ஒரு கூடுதல் தலைமை இயக்குநரும் நான்கு துணைத் தலைமை இயக்குநர்களும் தலைமை அலுவலகத்தில் பணியாற்றுகிறார்கள். செய்தி ஒலிபரப்புகளைக் கவனிக்க ஒரு துணைத் தலைமை இயக்குநர் தகுதியில் செய்தித்துறை இயக்குநரும், பொறியியல் சம்பந்தப்பட்ட எல்லாப் பணிகளையும் கண்காணித்து வழிநடத்தத் தலைமைப் பொறியாளரும், அவருக்கு உதவியாகப் பல உயர் அதிகாரிகளும் பணியாற்றுகின்றனர். இவர்களின் மேற்பார்வையிலும் கட்டுப்பாட்டிலுந்தான், தலைமைக் காரியாலயத்திலும் நாட்டின் எல்லா வானொலி நிலையங்களிலும் உள்ள பல்வேறு பிரிவுகளும் இயங்கி வருகின்றன.

வானொலியில் பணியாற்றும் ஊழியர்களைப் பின்வருமாறு ஐந்து வகையாகப் பிரிக்கலாம்:

1) ஒலிபரப்பு நிகழ்ச்சிகளைத் திட்டமிட்டு வழிநடத்துபவர்கள்,
2) பொறியாளர்கள்,
3) நடத்தும் பிரிவு அலுவலர்கள்,
4) நிகழ்ச்சிகளில் பங்கு பெற்றுப் பணியாற்றும் நிலையக் கலைஞர்கள்,
5) கடைநிலை ஊழியர்கள்.

இந்தப் பரந்த துணைக்கண்டத்தின் பல்வேறு மொழி, சமயம், பண்பாடு, இலக்கியம், கலைகள் ஆகிய பலவகைப்பட்ட தேவைகளை நிறைவேற்றும் வகையில் அனைத்திந்திய வானொலி பணியாற்றி வருகிறது. நாடு முழுவதும் பரவிக்கிடக்கும் வானொலி நிலையங்கள் வளர்ந்து வரும் சுதந்திர இந்தியாவில் மக்களின் தேவைகளையும் விருப்பங்களையும் காட்டும் முறையில் திட்டமிட்ட பலவகை நிகழ்ச்சிகளை ஒலிபரப்பி வருகின்றன. நாட்டின் எல்லாவகுப்பு மக்களின் எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் நம்பிக்கைகளையும் சாதனைகளையும் காட்டும் வகையில் தேசிய, மாநில, வட்டார ஒலிபரப்புகள் திட்டமிடப்படுகின்றன. இந்தியப் பண்பாட்டின் தொன்மையையும் பெருமையையும் இந்தியத் தத்துவத்தின் மாண்பினையும் உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் விளங்கச் செய்யும் நற்பணியையும் அனைத்திந்திய வானொலி மேற் கொண்டுள்ளது. எல்லாவற்றிற்கும் மேலாக நாட்டின் ஒருமைப்பாட்டு உணர்வையும் சுதந்திரக் கனவையும் மக்களாட்சியின் மேன்மையையும் நிலை நாட்டுவதற்கு அது பாடுபட்டு வருகிறது.

இந்தியா 1947–ஆம் ஆண்டு சுதந்திரம் அடைந்த போது நாட்டில் ஆறு வானொலி நிலையங்கள் மட்டுமே இருந்தன. சுதந்திரம் பெற்றதன் பயனாக நாட்டில் வானொலி மிக வேகமாக வளர்ச்சி பெறத் தொடங்கியது. இவ்வளர்ச்சி இரு வகைப்படும். ஒன்று, நாட்டின் எல்லாப் பகுதிகளுக்கும், மக்களுக்கும் வானொலியின் பயன் கிட்டும் வகையில் ஒலிபரப்பை விரிவு படுத்துவது. மற்றொன்று சுதந்திரம் பெற்ற நாட்டின் தேவைகளையும் வேட்கைகளையும் நிறைவேற்றுவதிலும் வளர்ச்சியுறும் நாட்டின் தேசியச்சீர்திருத்தப் பணிகளுக்கு உதவி புரிவதிலும் வானொலியை ஒரு மிகப்பெரிய மக்கள் தொடர்பு சமுதாய வளர்ச்சித் துணையாகப் பயன்படுத்துவது. இந்தக் குறிக்கோளை அடையும் பொருட்டு வானொலி வளர்ச்சியில் அரசு மிக்க அக்கறை எடுத்துக் கொண்டதன் காரணமாக, அனைத்திந்திய வானொலி இன்று நாடு தழுவிய வகையில் 85 வானொலி நிலையங்களைக் கொண்டுள்ளது. ஒலிபரப்புகளின் எண்ணிக்கை 147. இவற்றின் மூலம் நாட்டின் மொத்த நிலப்பரப்பில் ஏறக்குறைய 79 விழுக்காடு அளவிலும் மக்கள் தொகையில் கிட்டத்தட்ட 90 விழுக்காடு அளவிலும் வானொலி பரவியுள்ளது. நாட்டின் எல்லா மாநிலங்களிலும் மையஅரசின் நேராட்சிப்பகுதிகளிலும் வானொலி நிலையங்கள் இயங்கி வருகின்றன. அகில இந்திய வானொலி மேலும் வளர்ந்து கொண்டே வருகிறது.

முற்றிலும் பொழுதுபோக்கு வகையாக மனமகிழ் நிகழ்ச்சிகளையும் வாணிக விளம்பரங்களையும் ஒலிபரப்பும் விவிதபாரதி வாணிக ஒலிபரப்புகளைத் தனியே 30 நிலையங்கள் வழங்கி வருகின்றன.

அனைத்திந்திய வானொலியில் ஒலிபரப்பாகும் நிகழ்ச்சிகளை நான்கு வகைகளாகப் பிரிக்கலாம்:

1. நாடு தழுவிய வகையில் தேசிய அடிப்படையில் திட்டமிடப்பட்டு ஒலிபரப்பாகும் நிகழ்ச்சிகள். இவை பெரும்பாலும் தில்லியிலிருந்து ஒலிபரப்பாகி மற்ற நிலையங்களால் அஞ்சல் செய்யப்படுகின்றன. இவற்றில் தேசிய இசை நிகழ்ச்சிகள், சொற்பொழிவுகள், உரையாடல்கள், நாடகங்கள், உரைச்சித்திரங்கள் ஆகியவை அடங்கும். தேசியச் சொற்பொழிவுகளும் உரையாடல்களும் ஆங்கிலத்திலும் இந்தியிலும் ஒலிபரப்பாகின்றன. தேசிய நாடகங்களும் உரைச்சித்திரங்களும் அந்தந்த மாநில மொழிகளில் ஒலிபரப்பாகின்றன.

2. தேசிய மட்டத்தில் தில்லியிலிருந்து ஆங்கிலத்திலும் இந்தியிலும் ஒலிபரப்பாகும் செய்தி அறிக்கைகளை நாட்டின் எல்லா வானொலி நிலையங்களும் அஞ்சல் செய்கின்றன. ஏனைய நாட்டு மொழிகளில் ஒலிபரப்பாகும் அறிக்கைகளை அந்தந்த மொழிவாரி மாநிலங்கள் அஞ்சல் செய்கின்றன. சொற்பொழிவுகள், உரையாடல்கள், செய்தி மலர்கள், நாட்டு நடப்பு, உலகச் செய்திகள் பற்றிய நிகழ்ச்சிகள் ஆகியவை பல்வேறு நிலையங்களால் அஞ்சல் செய்யப்படுகின்றன. இவையாவும் மத்திய செய்திப்பிரிவினரால் திட்டமிடப்பட்டு ஒலிபரப்பாகின்றன.

3. மண்டல அடிப்படையில், தில்லி, கல்கத்தா, பம்பாய், சென்னை ஆகிய நான்கு பெருநகரங்களிலிருந்து முறையே வடக்கு, கிழக்கு, மேற்கு, தெற்கு ஆகிய மண்டலங்களைத் தழுவிய பன்மொழி ஒலிபரப்புகள் நிகழ்கின்றன.

4. நாட்டு அடிப்படையில் ஒவ்வொரு பகுதியிலும் வட்டாரத்திலும் நிறுவப் பட்டிருக்கும் நிலையங்களிலிருந்து அந்தந்தப் பகுதி மக்களின் தேவைகளை நிறைவேற்றும்வகையில் நடைபெறும் ஒலிபரப்புகள், நிகழ்ச்சிகள் ஆகியவைஅந்தந்தப் பகுதி மக்களின் மொழி, இலக்கியம், கலை, பொருளாதார வளர்ச்சிகளைக் காட்டும் பாங்கில் அமைகின்றன.

வானொலி ஒலிபரப்புகளில் பல்சுவை நிகழ்ச்சிகள் இடம் பெறுகின்றன. இவற்றுள் சிறப்பாகப் பல்வகை இசை நிகழ்ச்சிகள், சொற்பொழிவுகள், உரையாடல்கள், நாடகங்கள், உரைச்சித்திரங்கள், செய்திகள் ஆகியவற்றைக் குறிப்பிடலாம். குறிப்பிட்ட பிரிவினர்களுக்காகத் தனித்தனியே நிகழ்ச்சிகளும் ஒலிபரப்பாகின்றன. உழவர், தொழிலாளர், மகளிர், இளைஞர், கல்லூரி - பள்ளி மாணவர், சிறுவர், இராணுவத்தினர், பழங்குடியினர் என்னும் சமுதாயத்தின் பல்வேறு பிரிவினர்களுக்கும் ஏற்றவாறு நிகழ்ச்சிகள் வழங்கப்படுகின்றன. வானொலி நிகழ்ச்சிகள் மக்கள் விரும்பத்தக்க வகையில் கல்விக் கண்ணோட்டத்தோடும் அறிவு ஒலிபரப்பும் குறிக்கோளோடும் அமைக்கப்படுகின்றன.

உலகின் பல்வேறு நாடுகளுக்குப் பல்வேறு மொழிகளில் வெளிநாட்டு ஒலிபரப்புகள் தனியே நடைபெறுகின்றன. உள்நாட்டு ஒலிபரப்புகள், பதினாறு தலைமை மொழிகளிலும் நூற்றுக்கும் மேற்பட்ட வட்டார வழக்கு மொழிகளிலும் நிகழ்கின்றன. வெளிநாட்டினர்க்கும் வெளிநாடுகளில் வாழும் இந்தியர்களுக்குமாக இருபத்தைந்து மொழிகளில் (எட்டு இந்திய மொழிகளிலும் பதினேழு அயல் மொழிகளிலும்) நாளொன்றுக்கு ஐம்பத்தாறு மணி நேரம் ஒலிபரப்புகள் நிகழ்த்தப்படுகின்றன. உள்நாட்டின் பல்வேறு நிலையங்களிலிருந்து நாளொன்றுக்குச் சராசரி ஆயிரத்தைந்நூறு மணி நேர நிகழ்ச்சிகள் வெவ்வேறு மொழிகளில் ஒலிபரப்பாகின்றன. இவற்றில் இசை நிகழ்ச்சிகளும் செய்திகளும் பெருமளவில் இடம் பெறுகின்றன. இசை- 43.6 விழுக்காடு; செய்திகள் - 22.5 விழுக்காடு.

முற்றிலும் பொழுது போக்கு முறையில் அமைந்த விவிதபாரதி ஒலிபரப்புகள் 1957-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டன. இந்த ஒலிபரப்புகளில் திரைப் படப்பாடல்கள், மெல்லிசைப் பாடல்கள், பக்திப் பாடல்கள், நாடக மேடைப் பாடல்கள் ஆகியவை சிறப்பாக இடம் பெறுகின்றன. மக்கள் விரும்பும் நகைச்சுவை நாடகங்களும் கவிதைகளும் சேர்க்கப் படுகின்றன. விவிதபாரதி நிகழ்ச்சிகளோடு வாணிக விளம்பரங்கள் சேர்க்கப்பட்டு 1967-ஆம் ஆண்டிலிருந்து வாணிக ஒலிபரப்புகள் நடைபெற்று வருகின்றன. இந்த வாணிக ஒலிபரப்புகள் அகில இந்திய வானொலிக்குக் கணிசமான அளவில் வருவாயைத் தேடித் தருகின்றன. 1981-ஆம் ஆண்டு வாணிக ஒலிபரப்புகள் மூலம் கிடைத்த வருமானம் ரூபாய் 12 கோடி.

**செய்திப்பிரிவு:** வானொலியில் செய்திப் பிரிவு சிறந்த அமைப்பாகும், வானொலியில் பல்வேறு மொழிகளில் ஒலிபரப்பாகும் செய்திகள், செய்தி மலர்கள், நாடாளுமன்ற நடவடிக்கைகள் பற்றிய விமரிசனம், நாட்டு நடப்பு ஆகியவை செய்திப் பிரிவில் அடங்கும்.

வெளிநாடுகளில் வாழும் இந்தியர்களுக்கு இந்திய மொழிகளில் ஒலிபரப்புகள் வழங்கப்படுகின்றன. இந்த ஒலிபரப்புகள் யாவும் உலகின் பல்வேறு நாடுகளைச் சென்றடையும் வண்ணம் தில்லி, பம்பாய், கல்கத்தா, சென்னை நகரங்களிலுள்ள உயர்சக்தி ஒலிபரப்பிகள் மூலம் கொண்டு செல்லப்படுகின்றன.

**நிகழ்ச்சிகள் கொண்டு கொடுத்தல்:** தில்லி அனைத்திந்திய வானொலி இயக்கத்தில் அமைந்துள்ள ஒலிப்பதிவு மற்றும் நிகழ்ச்சிகள் கொண்டு கொடுத்தல் பிரிவு, நாட்டின் புகழ்பெற்ற இசைக் கலைஞர்கள், தேசியத் தலைவர்கள், அறிஞர்கள், கலைஞர்கள், கவிஞர்கள், அறிவியல் அறிஞர்கள் பலதுறைகளைச் சார்ந்த புகழ்பெற்ற வல்லுநர்கள் ஆகியோரின் குரல்களை ஒலிப்பதிவு செய்து வானொலிக் களஞ்சியமாகப் பாதுகாத்து வருவதோடு, வானொலி நிகழ்ச்சியிலும் அவ்வப்போது பயன்படுத்த உதவுகிறது. தேசத்தந்தை காந்தி அடிகளின் பேச்சு 51 மணி நேரம் ஓடும் ஒலிப்பதிவுகளும் சுதந்

திர இந்தியாவின் முதல் தலைமை அமைச்சர் பண்டித சவகர்லால் நேரு அவர்களின் சொற்பொழிவுகள் 800 மணி நேரம் கொண்ட 3000 ஒலிப்பதிவுகளும் ஆகிய கிடைத்தற்கரிய குரல் களஞ்சியங்கள் போற்றிப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இசை நிகழ்ச்சிகள், சொற்பொழிவுகள், அயல் நாட்டு வானொலி நிலையங்களுக்குக் கொண்டு கொடுத்தல் அடிப்படையில் வழங்கப்படுகின்றன.

வானொலி ஏடுகள்: பல்வேறு நிலையங்களிலிருந்து ஒலிப்பரப்பாகும் வானொலி நிகழ்ச்சிகள் பற்றிய விவரங்களை மக்கள் அறிந்து கொள்வதற்கு உதவியாக எட்டு மொழிகளில் வானொலி ஏடுகள் அச்சிடப்பட்டு வெளிவருகின்றன. அவையாவன:

1. ஆகாசவாணி – ஆங்கிலம்,
2. ஆகாசவாணி – இந்தி,
3. அவான்–உருது (இம்மூன்று ஏடுகளும் தில்லியிலிருந்து வெளியிடப்படுகின்றன),
4. பேதார்சகத்து – வங்காளி (கல்கத்தா),
5. ஆகாசி–அசாம் (கல்கத்தா),
6. வானொலி–தமிழ் (சென்னை),
7. வாணி–தெலுங்கு (விசயவாடா),
8. நபோவாணி–குசராத்தி (அகமதாபாத்து).

இவற்றுள், ஆங்கிலத்தில் வெளியாகும் ஆகாசவாணி வார இதழாகும். மற்றவை யாவும் மாதம் இரு வெளியீடுகளாக வெளிவருகின்றன.

செயற்கைக்கோள் மூலம் ஒலிபரப்புகள்: தில்லி போன்ற தொலைதூர நிலையங்களிலிருந்து சிற்றலைகள் மூலம் நிகழ்ச்சிகள் அஞ்சல் செய்வதில் காணப்படும் கோளாறுகளைத் தீர்வு காணும் வகையில் இப்பொழுது விண்ணில் இயங்கும் நமது (INSAT I B) இன்சாட் I B என்ற செயற்கைக் கோளோடு அகில இந்திய வானொலியின் 28 நிலையங்கள் இணைக்கப்பட்டுள்ளன. இந்த ஏற்பாட்டின் படி தில்லியிலிருந்து ஒலிபரப்பாகும் நிகழ்ச்சிகளைத் தொலைதூரத்திலுள்ள நிலையங்கள் செயற்கைக் கோள் மூலம் அஞ்சல் செய்கின்றன. இதன் பயனாக நிகழ்ச்சிகளைத் தடங்கலின்றி மிகத் தெளிவாகக் கேட்க முடியும். வருங்காலத்தில் மேலும் பல நிலையங்களைச் செயற்கைக் கோளோடு இணைக்கத் திட்டமிடப்பட்டு வருகிறது.

இந்தியாவில் நூற்றுக்கு 65 விழுக்காடு மக்கள் இன்னும் எழுத்தறிவில்லாதவர்களாக இருக்கும் நிலையில், படித்தவரும் படிக்காதவர்களும் பயன் பெறும் வண்ணம் அறிவுச் செல்வத்தைச் செவிச் செல்வமாக வாரி வழங்கி வருகிறது வானொலி. அகில இந்திய வானொலி, மக்கள் வானொலியாக, மக்கள் இயக்கமாகத் தொண்டு புரிகிறது. இந்தியாவில் உரிமம் பெற்ற வானொலிப் பெட்டிகளின் எண்ணிக்கை ஏறத்தாழ 2 கோடியாகும். ஐக்கிய நாடுகள் கல்வி பண்பாட்டு அறிவியல் நிறுவனத்தின் கணிப்பின்படி இந்தியாவின் மக்கள் தொகையைக் கணக்கில் எடுத்துக் கொண்டால் நாட்டின் தேவை இன்னும் எட்டு மடங்கு பெருக வேண்டும். வானொலியின் முழுப்பயனையும் அடைய அந்த நிலைமை விரைவில் ஏற்படவேண்டும். எம்.எஸ்.கோ.

**அனைத்திறைக் கொள்கை:** இது இறைவனே எல்லாம்; எல்லாமே இறைவன் என்பதைக் குறிக்கும். பொதுவாக இறைவனைக் 'கடந்த' நிலையிலும் 'உள்ளுறை' நிலையிலும் கருதுவர். உள்ளுறை நிலையில் இறைவன் இவ்வுலகுப் பொருள்கள் அனைத்துமாக விளங்குவதையே அனைத்திறைக் கொள்கை (Pantheism) என்கிறோம். எல்லாமே இறைவன் என்பதில், இறைவனுக்குப் புறம்பாக ஒன்றும் இல்லை என்றாகிறது. அவ்வாறே இறைவனே எல்லாம் என்பதில், பொருள்கள் இறைவனுள் அடங்குவதால், இறைவனுக்குப் புறம்பாக ஒன்றும் இல்லை என்றாகிறது. அனைத்திறைக் கொள்கையில் இறைவனும் பொருள்களும் ஒத்த நிலையில் கருதப்படுகின்றன.

அனைத்திறைக் கொள்கையின் தோற்றம், சமயம் சார்ந்ததாகவோ மெய்ப்பொருளியலைச் சார்ந்ததாகவோ இலக்கியம் சார்ந்ததாகவோ அமையலாம். இந்தியாவில் அனைத்திறைக் கொள்கை, சமயம், மெய்ப்பொருளியல் ஆகியவற்றைச் சார்ந்துள்ளது. இந்தியர்களின் நம்பிக்கை, நோக்கம், கொள்கை ஆகியவை "எல்லாம் இறைவன்" என்பதைச் சார்ந்தே அமைந்துள்ளன. இவ்வகையில் இந்திய அனைத்திறைக் கொள்கை, இறைவனின் உள்ளுறை நிலையைக் கொண்டதாக இருப்பினும், இறைவனின் கடந்த தன்மையைக் கருத்து முதல் வாதக் கொள்கையாக ஏற்கிறது. இந்திய அனைத்திறைக் கொள்கை, சில அனுபூதிமான்களைத் தவிர்த்து மக்களின் நம்பிக்கைக்கும் செயலுக்கும் அடிப்படை உந்துதலாக விளங்குகிறது.

அனைத்திறைக் கொள்கையின் வளர்ச்சி கீழை மேலை நாடுகளில் ஒரே தன்மையாகக் காணப்படுகிறது. தொடக்கக் காலத்தில் பல கடவுட் கோட்பாடாக இருந்த நிலை, பின்னர் ஒரே கடவுள் கோட்பாடாக மாறியது. கடவுள்களை ஒருங்கிணைக்கும் பொருளாக நெருப்பு, நீர், காற்று, பொருள், எண், இருப்பு ஆகியவை அமைந்திருந்ததை மெய்ப் பொருளியலில் காணலாம்: இப்பொருள்கள், அனைத்திலும் பரவி இருப்பதனாலேயே இவை ஒருங்

கிணைப்புப் பொருள்களாகக் கருதப்பட்டுள்ளன. அடுத்தக் கட்டத்தில், கடவுள்களை ஒருங்கிணைக்கும் பொருளின் தன்மை உணர்த்தப்பட்டு, அனைத்தையும் கடந்து நிற்கும் பரம்பொருளாக, பிரமமாக, மனமாக அல்லது உயிராக விளங்கியது. இப்பரம்பொருள் கருத்துமுதலாக மட்டுமே அமைந்திருந்தது. பரம்பொருள் உள்ளுறை நிலையின் அனைத்துப் பொருள்களிலும் வெளிப்பட்டு எல்லாமே இறைவனாக விளங்கும் அனைத்திறைக் கொள்கை நடைமுறைக்கு வந்தது. இதில் எல்லாப் பொருள்களிலும் இறைவன் உள்ளுறை நிலையில் அடங்கி இருப்பினும், அவற்றிற்குப் புறம்பாகக் கடந்த நிலையிலும் இறைவன் உள்ளவனாக அமைகிறான். பொருள்களில் இறைவன் வெளிப்பட்டு இருந்தாலும் அனைத்துப் பொருள்களிலும் ஒரே தன்மையில் நிறுத்தி மரியாதை செலுத்தவோ வழிபடவோ இயலாததின் பொருட்டுச் சில பொருள்களையோ உருவங்களையோ ஒரு சிலரையோ இறைவனாகக் கருதி அஞ்சலி செய்யும் முறையே இப்போது நிலவி வருகிறது. இதற்குச் சான்றாக இதிகாச, புராண சமயத் தலைமைகள் விளங்குவதைக் காணலாம். ஆனால், அனைத்திறைக் கொள்கை விதி போன்ற கோட்பாடுகளையும் அறக் கோட்பாடுகளையும் தன்னுள்ளே அடக்கிக் கொண்டுள்ளது. எல்லாமே இறைவன் என்னும் கோட்பாட்டில் பொருள்களுக்குப் புறம்பாக இறைவன் இல்லை என்ற கருத்துப் புலப்படுகிறது. அவ்விறைவன் உள்ளுறையாக விளங்கும் தோற்றமே பொருள்கள் அனைத்தும் என்னும் அனைத்திறைக் கொள்கையின் விளக்கம் ஏற்புடையதே. அனைத்திறைக் கொள்கை சமய மெய்ப்பொருளியல் அடிப்படைகளில் அமைந்த காரணத்தினாலேயே இன்றளவும் நிலைத்துள்ளது.

பி.ஆர்.ந.

**அனைத்து அமெரிக்கக் கொள்கை** என்பது, அமெரிக்காக் கண்டங்களில் அமைந்துள்ள ஏறத்தாழ இருபத்தொரு நாடுகள் தங்களுக்கிடையே அரசியல், பொருளாதாரம், சமூகம், வாணிகம் முதலான துறைகளில் ஒத்துழைப்பதன்மூலம் நலஞ்சேர்க்கும் நல்லியக்கமாகும்.

இலத்தின் அமெரிக்க (Latin America) விடுதலை வீரரான சைமன் பொலிவர் (Simon Boliver) இக்கொள்கைக்கு வித்திட்டார். "போர், அமைதிக் கால நலன்கள் ஆகியவற்றைக் காக்க அமெரிக்காவிலுள்ள குடியரசுகள், முடியரசுகள், 'பேரரசுகள் முதலானவற்றின் பேராளர்கள் கொண்ட மாநாட்டை" என்றாவது ஒரு நாள் தம்மால் கூட்டமுடியும் என்று கி.பி. 1815-ஆம் ஆண்டிலேயே அவர் நம்பிக்கை வெளியிட்டார். என்றி கிளே (Henry Clay) என்பார் அனைத்து அமெரிக்கக் கொள்கையைக் கி.பி. 1820-இல் ஒருவாறு வரையறுத்தபோதிலும், அவ்வாண்டிறுதியில் சைமன் போலிவர் கூட்டிய பனாமா மாநாடு, இக்கொள்கைக்கு உருக்கொடுத்தது. அதனையடுத்து கி.பி. 1881 வரையில் கூடிய அனைத்து அமெரிக்க மாநாடுகளில் பாதுகாப்புப் போன்ற கோட்பாடுகள் நிலைநிறுத்தப்பட்டபோதிலும், அமெரிக்க ஐக்கிய நாடு போன்ற பல அமெரிக்க நாடுகள் இவற்றில் பங்கு கொள்ளவில்லை. வாசிங்டனில் கி.பி. 1889-இல் கூடிய அனைத்து அமெரிக்க மாநாடு, இக்கொள்கைக்கு ஒரு திருப்பமாக அமைந்தது. அதில் அமெரிக்க ஐக்கிய நாடு உள்ளிட்ட இருபது நாடுகள் உறுப்பினர்களாகக் கலந்து கொண்டன. அவை அனைத்து அமெரிக்க ஒன்றியம் (Pan American Union) என்னும் பெயர்பெற்ற நிலையான நிருவாக அமைப்பையும் உருவாக்கின. வாசிங்டன் மாநாட்டையடுத்து மெக்சிகோ (Mexico), இரியோடி செனிரோ (Rio de-Janeiro), போனசு அயர்சு (Buenos Aires), அவானா (Havana), மாண்ட்டிவிடியோ (Montevideo), இலிமா (Lima), பகோட்டா (Bogota) ஆகிய இடங்களில் நடைபெற்ற மாநாடுகளிலும் வேறுசில கூட்டங்களிலும் அனைத்து அமெரிக்கக் கொள்கைக்குப் பல வெற்றிகள் கிட்டின. அமெரிக்க நாட்டின் கூட்டுப் பாதுகாப்பு, அவைகளுக்கிடையே தோன்றும் சிக்கல்களை அமைதி வழியில் தீர்த்துக் கொள்ளுதல், சமூகப் பொருளாதாரப்பண்பாட்டு ஒற்றுமையை வளர்த்தல் போன்றவை இக்கொள்கையின் அடிப்படை நோக்கங்களாயின. இந்நோக்கங்களைத் தொடர்ந்து நடைமுறைப்படுத்தவே அனைத்து அமெரிக்க ஒன்றியம் வாசிங்டன் நகரில் அமைக்கப்பட்டது.

அனைத்து அமெரிக்க இயக்கத்தின் அரசியல் அமைப்பில் 1948-ஆம் ஆண்டில் மேலும் மாறுதல் தோன்றியது. அப்போது அனைத்து அமெரிக்க ஒன்றியத்திற்கு மாறாக, அமெரிக்க நாட்டின் நிறுவனம் (Organisation of American States) என்னும் பெயரில் புதியதொரு அமைப்பு உருவெடுத்தது. மேலும் உறுப்பு நாடுகளின் உள் விவகாரங்களில் தலையிடலாகாது என்பது போன்ற கொள்கைகளை உள்ளடக்கிய அரசியல் அமைப்புச் சட்டமும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. வரலாற்றுச் சிறப்புடைய இந்தப் பகோட்டா (Bogota) மாநாட்டில்தான் வல்லாட்சி முறை கண்டிக்கப்பட்டது. வெனிசுவேலாவில் (Venezuela) கூடிய மாநாடு (1954) குடியேற்றநாட்டு ஆட்சிக்கும் ஏகாதிபத்தியத்திற்கும் பொதுவுடைமைச் சார்புள்ள ஆட்சி வளர்ச்சிக்கும் எதிராகக் குரல் கொடுத்தது. இங்ஙனம் அமெரிக்க நாடுகளை ஒன்றுபடுத்தி ஒத்துழைப்பிற்கு வழிகோலிய

அனைத்து அமெரிக்கக் கொள்கையில் சில சிக்கல்கள் இருந்தன. மாறுபட்ட அரசியல் அமைப்புகளைக் கொண்ட, இருபதிற்கும் மேற்பட்ட நாடுகளிடையே முழு மன ஒற்றுமை காண்பது அரிதாக இருந்தது. தொடக்கக் காலத்தில் அமெரிக்க ஐக்கிய நாடு மீது கொண்ட நம்பிக்கையில்லாக் கொள்கை மாறி, ஒற்றுமை மனப்பான்மை வளர்ந்துள்ளபோதிலும், மாறுபட்ட அரசியல் அமைப்புகள், பொருளாதாரப் பண்பாட்டு வேற்றுமைகள், கியூபா போன்ற நாடுகளில் பொதுவுடைமைக் கொள்கையின் ஊடுருவல் முதலியன அவ்வப்போது நடைமுறைச் சிக்கல்களைத் தோற்றுவித்தன. இருப்பினும் ஐ.நா. அவையில் அமெரிக்க ஐக்கிய நாடும் இலத்தீன் அமெரிக்க நாடுகளும் ஒத்துழைத்து வருவதைப்பார்த்தால், அனைத்து அமெரிக்கக் கொள்கையானது, அமெரிக்கக் கோளத்து நாடுகளிடையே ஒற்றுமையையும் ஒத்துழைப்பையும் வளர்ப்பதில் பெரிதும் வெற்றி பெற்றுள்ளது என்றே கூறலாம். பா.மா.

*அனைத்து அமெரிக்க முன்னேற்ற வங்கி* **(Inter American Development Bank):** இவ்வங்கியை அமைத்திடுவதற்கான வரையறைகளை 1959-இல் அமெரிக்க நாடுகளுக்கிடையேயான பொருளாதாரச் சமூகக் குழு முடிவு செய்தது. அதன் விளைவாக 1960 அக்டோபர்த் திங்களில் வாசிங்டன் நகரில் இதன் தலைமைச் செயலகம் நிறுவப்பட்டுச் செயற்படத் தொடங்கியது. அமெரிக்க நாடுகளுக்கிடையே ஒற்றுமையை வளர்த்துப் பொருளாதார முன்னேற்றத் திட்டங்களுக்கான நிதி வசதிகளை ஏற்படுத்தித் தருவது மட்டுமே இவ்வங்கியின் சிறப்பான நோக்கமாகும்.

**வங்கியின் உறுப்பினர்கள்:** தென் அமெரிக்க மண்டல நாடுகளுடன் பிற மண்டல நாடுகளும் வங்கியின் அனுமதிக்கப்பட்ட உறுப்பினர்கள். இப்போது 44 நாடுகள் இதில் பங்கு கொண்டுள்ளன.

**பணிகள்:** இவ்வங்கி அமெரிக்க நாடுகளிடையே பொருளாதார ஒற்றுமையை நிலைநாட்டவும், அவற்றின் முன்னேற்றத்திற்கான உதவிகளை அளித்திடவும் பல திட்டங்களை வகுத்துச் செயலாற்றுகிறது. வங்கியின் சிறப்புச் செயல்முறைகளுக்கான நிதி, ஒன்று முதல் ஐந்து விழுக்காடு அளவிற்கு வட்டிச் சலுகை அளிக்கிறது. கடன்களுக்கு 5 முதல் 10 ஆண்டுக் கால்க்கெடு அளிப்பதுடன் 20 முதல் 40 ஆண்டுகளுக்கு நீண்டகாலக் கடனும் வழங்குகிறது. திருப்பிச் செலுத்தும் கடன்களை உள்நாட்டுச் செலாவணியிலும் ஏற்றுக் கொள்கிறது.

மண்டலம் சாரா நாடுகள் வங்கியின் உறுப்பினர்களாக அனுமதிக்கப்பட்டதாலும், வெனிசுவேலா அரசு, பின்தங்கிய தென் அமெரிக்க நாடுகளின் முன்னேற்றத்திற்கெனக் கடன்தொகை வழங்கியதாலும் வங்கியின் நிதிவளம் இப்போது பெருமளவில் வளர்ந்துள்ளது. உறுப்பு நாடுகளின் பங்குகளில் 92 பிலியன் உரூபாயை ஒப்புதலளிக்கப்பட்ட மூலதனத்திற்கெனவும் (Authorised Capital) 20 மிலியன் உரூபாயைச் சிறப்புச் செயல்முறை நிதிக்கெனவும் உயர்த்த ஆளுநர் குழு 1978-இல் முடிவெடுத்தது. அதன்படி அமெரிக்க ஐக்கிய நாடுகள் 8050 மிலியன் உரூபாயும், மண்டலம் சாரா நாடுகள் 6,037.5 மிலியன் உரூபாயும், கனடா 6416 மிலியன் உரூபாயும், இலத்தீன் அமெரிக்கநாடுகள் 5370.5 மிலியன் உரூபாயும் சிறப்புச் செயல்முறை நிதிக்கெனச் செலுத்த வேண்டுமென்றும் பணித்தது. இந் நிதி; 1980-ஆம் ஆண்டில் 110 பிலியன் உரூபாயாகவும் வங்கியின் மொத்த நிதி வளம் 276 பிலியன் உரூபாயாகவும் வளர்ச்சியுற்றது.

இவ்வங்கி மண்டல ஒற்றுமையை ஊக்குவிக்கவில்லை எனவும், வறிய நாடுகளின் தேவைகள் புறக்கணிக்கப்பட்டன எனவும் அறியப்பட்டது. ஆகவே, பல தீவிர முன்னேற்றத் திட்டங்கள் புதிய கண்ணோட்டத்துடன் வரையப்பட்டுச் செயற்படுத்தப்பட்டன. அர்செண்டைனா, பிரேசில், மெக்சிகோ போன்ற வளம் மிக்க நாடுகள் வளர்ச்சியடைந்து வரும் நாடுகளுக்கு அளிக்கப்படும் உதவிகளைக் குறைத்துத் தேவை மிகுந்த மற்ற மண்டல் நாடுகளின் அகக் கட்டமைப்புத் திட்டங்களுக்கு முதலிடம் கொடுத்துக் கடன் வழங்குகின்றன. இவ்வங்கி 1979-ஆம் ஆண்டு வரையில் 759 பிலியன் உரூபாய் மதிப்புள்ள திட்டங்களுக்கு 204.7 பிலியன் உரூபாய் அளவிற்கான கடனை வழங்கியுள்ளது.

*அனைத்து ஐரோப்பியக் கூட்டுறவு* என்பது கி.பி. 16, 17-ஆம் நூற்றாண்டுகளில் ஐரோப்பாவில் உருவாக்கப்பட்டது. முதல் உலகப் போருக்குப் பின்னர்ச் சர்வ தேசிய உணர்ச்சி மெல்ல மெல்ல மக்களிடையே வளரலாயிற்று. அதன் விளைவாக எழுந்ததே சர்வ தேசச் சங்கமாகும். இச்சங்கம் ஏற்படுவதற்கு ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பே அதாவது கி.பி. 1625-ஆம் ஆண்டிலேயே இயூகோ குரோசியசு (Hugo Grotius) என்ற தச்சு (Dutch) அறிஞர், அனைத்துலகுக்கும் பொதுவான பல சட்டங்களை ஆக்கி வெளியிட்டார். மெய்ன்சு (Mainz) நகரத் தலைமைக்குருவின் தலைமையில் கி.பி. 1658-ஆம் ஆண்டில், செருமானிய நாடுகளின் கூட்டுறவு ஒன்று ஏற்பட்டது.

*அனைத்துக் கல்வி வளாகம்:* ஆசிரியர்

கல்வியில் இப்போது காணப்படும் குறைகளைப் போக்குவதற்கு டாக்டர். டி. எசு. கோத்தாரியின் தலைமையில் அமைக்கப்பட்ட கல்வி ஆய்வுக் குழுவின் பரிந்துரைகளுள் (1964—66) அனைத்து நிலை ஆசிரியக் கல்வி வளாக (Comprehensive College) அமைப்பும் ஒன்றாகும். ஆசிரியர் பயிற்சி நிறுவனங்கள் இன்று மூன்று வகைகளில் தனிப்படுத்தப்பட்டுள்ளன. அவை (1) பல்கலைக் கழகங்களின் அறிவுத் துறைகளுடன் தொடர்பின்மை, (2) பள்ளிகளில் நாள்தோறும் நிகழும் கல்விச் செயல் முறைகளுடன் தொடர்பின்மை, (3) இக் கல்லூரிகளில் பல்வேறு நிலைகளுள் ஒன்று மற்றொன்றினின்றும் தொடர்பின்றித் தனித்தியங்குதல் ஆகியனவாம்.

கோத்தாரி ஆய்வுக்குழு பின்வருமாறு கூறுகிறது. கல்வியியல் ஒரு சமூக அறிவியல் பாடமாகவோ ஓர் அறிவுத் துறையாகவோ கருதப்பட்டு, உயர் கல்வியில் இளநிலையிலும் முது நிலையிலும் இடம் பெற வேண்டும். பள்ளிகளோடும் பள்ளிக் கல்வியை முன்னேற்றும் நிறுவனங்களோடும் கல்வியியல் கல்லூரிகள் நெருங்கிய தொடர்பு கொள்ள வேண்டும். முன்தொடக்கப்பள்ளி, தொடக்கப் பள்ளி, முதலிய நிலைகளுக்கு ஆசிரியர்களைப் பயிற்றுவிக்கும் நிலையங்கள் ஒன்றுடன் ஒன்று நோக்கு நிலைகள், ஆட்சியமைப்புகள், ஆசிரிய நிறுவன வசதிகள் முதலியவற்றில் வேறுபட்டு, தொடர்பின்றித் துண்டுபட்டு நிற்கும் நிலையைத் தவிர்த்து, ஏற்றத்தாழ்வுகள் குறைந்த, ஒழுங்குபட்ட நிலையை எய்த வேண்டும். நாளடைவில் ஆசிரியர் கல்வி பிற துறைகளைப் போன்று உயர்கல்வி நிலையை எய்த வேண்டும்.

இக் குறிக்கோளை அடைய இடைக்கால உத்தியாகக் கோத்தாரி ஆய்வுக்குழு அளித்துள்ள மூன்று பரிந்துரைகளிலும் முதலிடம் பெறுவது அனைத்து நிலை ஆசிரியக் கல்வி வளாகமாகும். இக்கல்லூரிகளில் கல்வியின் பலநிலைகளிலும், பல தனித்துறைகளிலும் கற்பிக்கும் ஆசிரியருக்குப் பயிற்சி அளிக்கப்படும். இத்தகைய "பலநிலை", "பலதுறை" ஆசிரியருக்கான கல்வி அளிக்கும் நிலையங்கள் இப்பொழுதும் சில உள்ளன. இவ்வகைக் கல்வி அளிக்கும் நிறுவனங்களின் எண்ணிக்கையைப் பெருக்க வேண்டும். இந்நிலைகளையும் பல துறைக் கல்வி முறைகளையும் ஒருங்கிணைக்கவும் வேண்டும்.

அமெரிக்க ஐக்கிய நாடு முதலிய சில மேலை நாடுகளில் சிறந்த ஆசிரியர் கல்லூரிகள் இவ்வாறு அனைத்து நிலை ஆசிரியக் கல்வி வளாகங்களாகத் திகழ்கின்றன. ஆனால், கோத்தாரி ஆய்வுக் குழுவின் இச்சிறந்த பரிந்துரையின் அடிப்படையில் ஆசிரியக் கல்வி நிலையங்கள் நிறுவப்படுவதில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் இன்னும் இந்திய நாட்டில் ஏற்படவில்லை.

**அனைத்துலக ஒலியியல் கழகம்** உலக மொழிகளின் ஒலிகள் அனைத்திற்கும் பொதுவான குறியீடுகளை அமைத்துத் தந்துள்ளது. ஓர் ஒலிக்கு ஒருகுறியீடு என்னும் அடிப்படையில் அமைக்கப்பட்ட அனைத்துலக ஒலியியல் நெடுங்கணக்கு, உலக மொழிகள் அனைத்தையும் பொதுவான வரிவடிவில் எழுதுவதற்கும், இவ்வாறு எழுதப்பட்ட மொழிகளின் இலக்கணங்களை ஆராய்வதற்கும் உதவுகிறது. மேலும், தாய்மொழி அல்லாத வேற்றுமொழிகளைச் சரியான உச்சரிப்புடன் கற்றுக் கொள்வதற்கும் இது பயன்படுகிறது.

மொழியாராய்ச்சி வரலாற்றில் அனைத்துலக ஒலியியல் கழகம் (International Phonetic Association) நிறுவப்பட்டது ஒரு சிறப்புமிக்க நிகழ்ச்சியாகும். பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஒலியியல் ஆராய்ச்சி (Study of Phonetics) ஒருதனித் துறையாக வளரத் தொடங்கியது. அப்பே ழீன் பியர் (Abbe Jean Pierre), உரூசுலோ (Rousselot) போன்ற அறிஞர்கள் இவ்வளர்ச்சிக்கு வித்திட்டார்கள். ஒலியியல் ஆராய்ச்சிமேலும் மேலும் வளர்ந்த நிலையில், ஆராய்ந்த ஒலிகளை (Phones) வகைப்படுத்துவதிலும் அவற்றிற்குச் குறியீடுகளை அமைப்பதிலும் அறிஞர்களின் சிந்தை திரும்பியது. இவ்வறிஞர் குழுவில் போல் பாசி (Paul Passy), என்றி சுவீட்டு (Henry Sweet), தானியேல் சோன்சு (Daniel Jones) ஆகியோர் குறிப்பிடத் தக்கவர்கள். என்றி சுவீட்டு, இலத்தீன் நெடுங்கணக்கிற்குப் பயன்படுத்தப்பட்ட எழுத்து வடிவங்களைத் தாம் கண்டறிந்து வகைப் படுத்திய ஒலிகளுக்கும் பயன்படுத்தினர். இதனை அவர் உரோமிக்கு (Romic) வரிவடிவம் என்று குறித்தார். இவ்வரிவடிவே நாளடைவில் அனைத்துலக ஒலியியல் கழகம் வெளியிட்ட நெடுங்கணக்கிற்கு அடிப்படையாக அமைந்தது.

போல் பாசி, என்றி சுவீட்டு, தானியேல் சோன்சு ஆகிய ஒலியியல் அறிஞர்களின் முயற்சியால் பிரான்சு நாட்டில் பாரிசு நகரில், கி.பி. 1886-ஆம் ஆண்டு அனைத்துலக ஒலியியல் கழகம் தோற்றுவிக்கப்பட்டது. மனிதன் பேசுகிற மொழிகளில் உள்ள ஒலிகள் ஒவ்வொன்றுக்கும் ஒரு குறியீடு அமைக்க வேண்டும் என்பது இதன் அடிப்படை நோக்கங்களுள் ஒன்று. ஒவ்வோர் ஒலிக்கும் ஒரு குறியீடு இருத்தல் வேண்டும்; ஆனால், ஒன்றன் ஒலி மதிப்பை (Phonetic Value) மாற்றிவிடக்கூடிய சிறப்புக் குறியீடு (Diacritic) எதுவும் ஒரு குறி

யீட்டின் மேல் இடம் பெறக்கூடாது என்று திட்டம் இடப்பட்டது. என்றி சுவீட்டு பயன்படுத்திய உரோமிக்குக் குறியீடுகள் தக்க மாற்றங்களுடன் அனைத்துலக ஒலியியல் நெடுங்கணக்கிற்கும் பயன்படுத்தப் பட்டன.

மானிடவியல் (Anthropology) அறிஞர்கள் மொழியாராய்ச்சியில் ஆர்வம் காட்டத் தொடங்கினார்கள். பேச்சு வழக்கில் மட்டும் இருந்துவந்த, மறைந்துகொண்டிருந்த மொழிகளையும் ஆராய்வதில் அவர்கள் நாட்டம் செலுத்தினார்கள்; மொழியியல் அறிஞர்களும் இம்முயற்சியில் ஈடுபட்டார்கள். இவ்வாராய்ச்சிகளின் விளைவாகப் புதுப்புது மொழிகள் வரிவடிவம் பெற்றன. இப்புதுமொழிகளில், ஒலியியல் அறிஞர்கள் முன்னர் எதிர்பார்த்திராத புதுப்புது ஒலிகள் இருப்பது கண்டறியப்பட்டது; சில ஒலிகளில் நுட்பமான ஒலிச்சாயல்கள் (Phonetic Shades) இருப்பதும் தெளிவாயிற்று. எனவே, மனிதன் பேசுகிற மொழிகள் அனைத்திலுமுள்ள ஒலிகளுக்குப் பொதுவான குறியீடுகளை அமைக்க இயலுமா என்னும் ஐயம் தோன்றியது. மேலும், இரண்டு குறியீடுகளைச் சேர்த்து எழுதித்தான் சில ஒலிகளைக் காட்ட முடிந்தது. இந்நிலையில் இரண்டு குறியீடுகளால் ஓர் ஒலியைக் குறிப்பதைக் காட்டிலும், அதன் ஒலிமதிப்பை விளக்குவதற்குச் சிறப்புக் குறியீடுகளைப் பயன்படுத்துவது சிறந்தது என்பது ஒப்புக்கொள்ளப்பட்டது. அனைத்துலக ஒலியியல் கழகம் அவ்வப்போது கூடிப் புதிதாக ஏற்பட்டுள்ள வளர்ச்சியினை ஆராய்ந்து மதிப்பிட்டு, நெடுங்கணக்கில் தேவையான மாறுதல்களைச் செய்து கொண்டுவந்தது. இதன் பயனாக அனைத்துலக ஒலியியல் கழகம் வெளியிட்ட அனைத்துலக ஒலியியல் நெடுங்கணக்குக் காலத்தின் தேவைக்கு ஏற்பச் சீர்திருத்தம் செய்யப்பட்டு வந்தது.

ஒலியியல் ஆராய்ச்சி மேலும் வளர்ந்துகொண்டு வந்தது. இந்நிலையில் ஒவ்வொரு மொழியிலும் ஏராளமான ஒலிகள் இருப்பது புலப்பட்டது. இவை அனைத்திற்கும் தனித் தனியான வரிவடிவங்களைக் கொடுப்பதிலும் சிக்கல் தோன்றியது. ஒரு மொழியில் உள்ள ஒலிச்சாயல்களை எல்லாம் வரிவடிவில் கொண்டுவருதல் எளிதன்று என அறிஞர்கள் உணர்ந்தார்கள். ஒலியனியல் கோட்பாடு (Phonological Theory) இச்சிக்கலைத் தீர்த்து வைத்தது.

செக்கோசுலாவியா நாட்டில் ஒலியியல் ஆராய்ச்சியை மேற்கொண்ட நிக்கோலசு துருபெத்சுகோயும் (Nicholas Troubetzkoy), அமெரிக்க நாட்டில் ஒலியியல் ஆராய்ச்சியை மேற்கொண்ட எட்வர்டு சபீரும் (Edward Sapir), இலியோனார்டு புளூம்பீல்டும் (Leonard Bloomfield) தனித் தனியாக ஆராய்ந்து ஒரே முடிவுக்கு வந்தனர். மொழிகளில் காணப்படும் எல்லா ஒலிகளும் மொழிக்கு அடிப்படையானவை அல்ல; ஒரு மொழியைப் பொறுத்தமட்டில் சில ஒலிகளே அம்மொழியின் அடிப்படையை விளக்கும் தனித்தன்மை (Distinctive) வாய்ந்த அலகுகள்; அவ்வலகுகளே மொழியின் பயன்பாட்டு நிலையில் (Functional) செயற்படுகின்றன. பயன்பாட்டு நிலையில் அமைந்த, தனித்தன்மை வாய்ந்த, அடிப்படையான ஒலிகளை இவ்வறிஞர்கள் ஒலியன்கள் (Phonemes) என்கிறார்கள். இதற்கு மாறாக, ஓர் ஒலியினைச் சார்ந்து நிற்கும் ஒலிகளை மாற்றொலியன்கள் (Allophones) எனக் குறிப்பிட்டார்கள். ஒவ்வோர் ஒலியனும் ஒன்றுக்கு மேற்பட்ட மாற்றொலியன்களைக் கொண்டுள்ள ஓர் ஒலிக்குழு என்று விளக்கப்பட்டது. உலக மொழிகள் பலவற்றிலும் மிகக் குறைந்த அளவில் ஒலியன்கள் இருப்பது கண்டறியப்பட்டது. எனவே, அனைத்துலக ஒலியியல் நெடுங்கணக்கில் உள்ள குறியீடுகள் உலக மொழிகளில் உள்ள பல்வேறு ஒலியன்களை விளக்குவதற்குப் போதுமானவை என்று அறிஞர்கள் கண்டறிந்தார்கள். உலக மொழிகளை ஆராய்வதற்கு மொழியியல் இதனைத் தொடர்ந்து பயன்படுத்தி வருகிறது. அகராதிகளிலும் இக்குறியீடுகள் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

கி.பி. 1951-ஆம் ஆண்டு வரை திருத்தப்பட்ட அனைத்துலக ஒலியியல் நெடுங்கணக்கு அடுத்த பக்கத்தில் தரப்பட்டுள்ளது. மெய்யொலியன்களின் பட்டியலில் இடமிருந்து வலமாகப் பதினொரு கட்டங்களும், மேலிருந்து கீழாக எட்டுக்கட்டங்களும் உள்ளன. இடமிருந்து வலமாக அமைந்துள்ள பதினொரு இடங்களும் ஒலிப்பிடங்களையும் (Points of Articulation); மேலிருந்து கீழே அமையும் எட்டு இடங்களும் ஒலிப்பு முறையினையும் (Manner of Articulation) குறிக்கின்றன. பல கட்டங்களில் இரண்டு ஒலிகள் உள்ளன. முன்னர் உள்ள ஒலி, குரல் ஒலி (Voiceless Sound); அடுத்துள்ள ஒலி, ஒலிப்புடை ஒலி (Voiced Sound) எனப்படும்.

மெய்யொலியன்களின் பட்டியலை அடுத்து உயிரொலியன்களின் பட்டியல் இடம்பெறுகிறது. உயிரொலியன்கள் இரண்டு வகையாகப் பிரித்துக் காட்டப்பட்டுள்ளன. அண்ணத்தை நோக்கி நா மேல் எழும்போது, இரண்டிற்கும் இடையில் உள்ள காற்று அறையின் (Air Chamber) தன்மையையொட்டி உயிரொலியன்களைப் பாகுபடுத்துவது முதல் முறை. இதழ்களின் வடிவம், நா அண்ணத்தை நோக்கிச் செல்லும் உயரம், நா முன்னோக்கிச் செல்லும் அளவு ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு உயிரொலியன்களைப் பாகுபடுத்துவது இரண்டாம் முறை. இரண்டு வகைகளும் உயிரொலியன்களை ஆராயப் பயன்படுகின்றன.

ஏ.பா.

அனைத்துலக ஒலியியல் நெடுங்கணக்கு.
(1951–ஆம் ஆண்டுவரை திருத்தப்பட்டது)

மெய்யொலியன்கள் :

| | ஈரிதழ் ஒலி | இதழ் பல்லொலி | பல் நுனியண்ண ஒலி | நாவளை ஒலி | இடையண்ண நுனியண்ண ஒலி | நுனியண்ண இடையண்ண ஒலி | இடையண்ண ஒலி | கடையண்ண ஒலி | உள் நாக்கு ஒலி | முன் தொண்டை ஒலி | குரல்வளை ஒலி |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| வெடிப்பொலி | p b | | t d | t d | | | c J | k g | q G | | ? |
| மூக்கொலி | m | | n | η | | | n | | N | | |
| மருங்கு உரசொலி | | | | | | | | | | | |
| உரசொலியல்லா மருங்கொலி | | | l | | | | | | | | |
| உருளொலி | | | r | | | | | | R | | |
| அடியொலி | | | | r | | | | | R | | |
| உரசொலி | ɸ B | f v | ƌ /sz/ | S | ʃ 3 | C Z | c j | x y | x | | |
| உராய்வில்லாத் தொடர் ஒலி அரை உயிர்கள் | W Y | v | | | | | j (y) | (w) | (y) | | |

உயிர் ஒலியன்கள் :

அடைப்புயிர் ........................ (y u u)
அரை அடைப்புயிர் ... (ɸ )
அரை திறப்புயிர் ............... (oe ɔ)
திறப்புயிர் ........................ (ɐ)

| முன்னுயிர் | நடுவுயிர் | பின்னுயிர் |
|---|---|---|
| i y<br>e ɸ<br>ɛ oe<br>ae<br>a | i tt<br>ə<br>ɐ | ω u<br>r o<br>ʌ ɔ<br>a b |

இராபர்ட்டு எ.ஆல். குனியருடைய (Robert A.Hall. Junior) "மொழியியல்-அறிமுகம்" என்னும் நூலிலிருந்து பட்டியல் கொடுக்கப் பட்டுள்ளது. (பக்:486-87)

**அனோவர்** [1]: செருமனி நாட்டின் வடமேற்கு எல்லையிலுள்ளதொரு மாநிலம். இது பண்டைய பிரசியா (Prussia) அரசின் பகுதியாகும். அனோவர் (Honover) 1946-ஆம் ஆண்டில் வடகடலை அடுத்துள்ள கீழ்ச்சாக்சனியின் பகுதியாயிற்று. பிரன்சுவிக்கு (Brunswick), எம்டன் (Emden), அனோவர், ஒல்டன்பர்கு (Oldenburg) போன்ற நகரங்கள் இதனுள் அடங்குவன. அப்பகுதியிலுள்ள ஆர்சு மலைத் தொடர்ப்பகுதி (Harz Mountains), மரத் தொழில்களுக்கும் கனிமப் பொருள்களுக்கும் பெயர்பெற்றது. இங்குப் பண்ணைத் தொழில் சிறப்பானதாகும். மக்கள் தொகை 5,31,100 (1981) ஆகும்.

**அனோவர்** [2]: அமெரிக்க ஐக்கிய நாட்டில் நியூ ஆம்சயர் (New Hampshire) என்னும் மாநிலத்திலுள்ளதொரு நகரத்தின் பெயரும் அனோவர் எனப்படும். இது கனக்டிகட்டு(Connecticut) ஆற்றங்கரையிலுள்ள நகரம். இந்நகரம் கி.பி. 1765-ஆம் ஆண்டில் மக்கள் குடியேற்றமாகியது. இந்நகர மக்கள் கூட்டம் கூடித் தம் அரசை நடத்துகின்றனர்.

**அனோவர்** [3]: அனோவர் என்னும் பெயரில் மூன்றாம் ஊரொன்று மேற்கிந்தியத் தீவுக் கூட்டங்களைச் சார்ந்த செமய்க்கா (Jamaica) நாட்டில் உள்ளது. இதன் மக்கள் தொகை 64,200 (1980) என்று மதிப்பிடப்பட்டுள்ளது.

**அனோவர்** [4]: இப் பெயரில் கனடா நாட்டிலுள்ள ஒண்டாரியோவில் ஓர் ஊர் உண்டு. இந்நகரம், சாகீன் ஆற்றங்கரையில் ஓவன் சவுண்டுக்குத் (Owen Sound) தெற்கில் 61 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இங்கு மக்கள் குடியேற்றம் கி.பி. 1849-ஆம் ஆண்டில் தொடங்கியது. பின் 1904-இல் நகரமாகியது. இந்நகர மக்களுள் பாதிக்கு மேற்பட்டவர்கள், செருமானியத் தொடர்பு கொண்டவர்கள். மரப்பொருள்கள் உற்பத்தி செய்வது இந்நகரத்தின் முதன்மையான தொழிலாகும். கம்பள நெசவு, தட்டு முட்டுப் பொருள்களைச் செய்தல், பால்பண்ணைப் பொருள்கள் வீடு கட்டுமானப் பொருள்கள் போன்றவற்றைச் செய்தல் ஆகியன இந்நகரின் ஏனைய உற்பத்தித் தொழில்களாம். மக்கள் தொகை: 5691 (1976).

**அனோவர்** [5] என்னும் பெயரில் அமெரிக்க ஐக்கிய நாட்டில் உள்ள மசாசுசெட்சு மாநிலத்தின் கிழக்குப் பகுதியில் ஒரு நகரம் உள்ளது. பாசுடனுக்கு 34 கி.மீ. தென்கிழக்கில் அமைந்துள்ள இந்நகரில், உலோகப் பொருள்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. அதனைச் சுற்றியுள்ள இடங்களில், கோழிப் பண்ணைகளும் பால் உற்பத்திக்கான கால்நடைப் பண்ணைகளும் சிறப்பானவை. இவ்வூரில் மக்கள் குடியேற்றம் கி.பி. 1649-இல் தொடங்கியது. இவ்வூர் கி.பி. 1727-இல் நகரமாக மாறியது. மக்கள் தொகை 10,107 (1970).

**அனோவர் மரபினராட்சி(கி.பி.1714-1917):** இங்கிலாந்தை ஆண்ட அரசமரபுகளுள் அனோவர் மரபும் ஒன்று. இம்மரபினர் ஏறத்தாழ இரு நூறாண்டுகள் அரசோச்சினர். இங்கிலாந்தை நீண்ட காலம் ஆட்சி செய்த மரபுகளுள் இது முதன்மையானது. இம்மரபினரில் அரசராக ஐவரும் அரசியாக ஒருவரும் இருந்துள்ளனர். அவர்கள் 1. முதலாம் சார்சு (George I), 2. இரண்டாம் சார்சு (George II), 3. மூன்றாம் சார்சு (George III), 4. நான்காம் சார்சு (George IV), 5. நான்காம் வில்லியம் (William IV), 6. விக்டோரியா (Victoria) என்பவர்களாவர். பின்னர் வந்த விக்டோரியாவின் மகன் ஏழாம் எட்வர்டும் (Edward VII), பேரன் ஐந்தாம் சார்சும் (George V) இம்மரபினரே. ஆனால், அவர்கள் அரசாண்ட காலம் இங்கிலாந்தின் வரலாறு உருமாறிய காலமாகும். அனோவரின் பேரரசுத் தேர்வு உரிமையாளரான சோபியா (Sobhia) வின் வழித்தோன்றல்கள் இவர்கள். இங்கிலாந்தை ஆண்ட இசுடுவர்ட்டு (Stuart) மரபினைத் தோற்றுவித்தவரான முதலாம் சேம்சின் பேத்தியும், இசுகாட்டரசி மேரி இராணியாரின் கொள்ளுப்பேத்தியுமான சோபியாவின் வழி வந்தவர்கள் அனோவர் மரபினர் எனப்படுவர். சோபியா (Sobhia) கி.பி. 1714-இல் காலமானார். அவரையடுத்து இங்கிலாந்தின் அரசியாய் ஆட்சிபுரிந்த ஆன் இராணியார் அதே யாண்டு சூன் மாதத்தில் காலமானார். அவருக்கு மகப்பேறு இல்லை. வாரிசுரிமைச் சட்டப்படி (1701) ஆன் அரசியாருக்குப் பின் அரசுரிமை, சோபியாவின் மூத்த மகனான முதலாம் சார்சுக்கே என முடிவாயிருந்தது. அதன்படியே அரசர்கள் ஆட்சி செய்தனர். முதலாம் சார்சு (கி.பி. 1660-1727) செருமனியில் அனோவர் என்னும் ஊரில் பிறந்தார். இவர் கி.பி. 1714-இல் இங்கிலாந்தின் அரசராக இலண்டனில் பதவி ஏற்றார். இவருக்கு ஆங்கில மொழி தெரியாது. இவர் பழிக்குப்பழி வாங்கும் இயல்பினர்; தன்னலக்காரர்;பேராசை பிடித்தவர் கொடூரமானவர். இவரையும் இவருடைய துணைவர்களையும் இங்கிலாந்து மக்கள் வெறுத்தனர். இவருக்குத் தலைமை அமைச்சராக,சர் இராபர்ட்டு வால்போல் (Sir Robert Walpol) பணியாற்றினார். கத்தோலிக்கர்களை ஆதரித்தமைக்காக அவர் தோரி (Tory) கட்சியினரை எதிர்த்தார். விக்குக் (Whig) கட்சியினருக்கு ஆட்சியில் இடம் கொடுத்தார். இவருடைய ஆட்சிக் காலத்தில்தான் சர் இராபர்ட்டு வால்போல் தலைமை அமைச்சராகி அரசின் பெரும் பொறுப்புகளை வகித்தார். அமைச்சுக்குழு ஆட்சி

முறையை (Cabinet Government) ஏற்படுத்தியவர் இவரே. முதலாம் சார்சு கி.பி. 1727-இல் காலமானார்.

இரண்டாம் சார்சு முதலாம் சார்சின் மகன். இவரும் அனோவர் மரபினரே. இவர் கி.பி. 1727 முதல் 1760 வரை அரசாண்டார்.

மூன்றாம் சார்சு, இரண்டாம் சார்சின் பேரன். அனோவர் மரபினரான இவர் இங்கிலாந்திலேயே பிறந்தவர். இவருடைய ஆட்சிக் காலத்தில்தான் அமெரிக்க ஐக்கிய நாடு விடுதலை பெற்றது. இங்கிலாந்திற்கு அதனால் பேரிழப்பு ஏற்பட்டது. இவர் கி.பி. 1760 முதல் 1820 வரை அரசாண்டார். இவரை 'ஐரோப்பாவின் முதல் பண்பாளர்' என்று குறிப்பிட்டனர். இவராட்சியின்போது கத்தோலிக்கர் விடுதலைச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. நான்காம் சார்சு கி.பி. 1820 முதல் 1830 வரை அரசாண்டார்.

மூன்றாம் சார்சின் மகனும், நான்காம் சார்சின் தம்பியுமான நான்காம் வில்லியம் கி.பி. 1830-இல் அரசராக முடிசூட்டிக் கொண்டார். இவர் காலத்தில் இங்கிலாந்து நாடாளுமன்றம் பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டங்களையும், வறியவர்களுக்கான புதிய தொரு சட்டத்தையும், அடிமை ஒழிப்பு ஆகியவற்றையும் நிறைவேற்றியது. இவர் கி.பி. 1837-இல் காலமானார். நான்காம் வில்லியத்திற்குப் பின்னர்க் கி.பி. 1837-இல் விக்டோரியா இராணியார் பட்டத்திற்கு வந்தார். இவர் 64 ஆண்டுகள் ஆட்சி செய்தார். இவர் காலத்தில் மெல்பர்ன் பிரபு (Lord Melbourne), இராபர்ட்டு பீல் (Robert Peel), கிளாடுசுடன் (Gladstone), திசுரேலி (Disraeli) போன்ற தலைசிறந்த அரசியல்வாதிகள் தலைமை அமைச்சர்களாக இருந்து பணியாற்றிப் பேரும் புகழும் படைத்தனர். விக்டோரியா இராணியார் 1901-இல் காலமானார்.

ஏழாம் எட்வர்டு மன்னர் விக்டோரியாவுக்கு மகன் ஆவார். இவர் சாக்சு-கோபர்க் கோதா மரபு ஆகியவற்றின் முதல் அரசர். இவரையும் அனோவர் மரபினராகக் கொள்வோரும் உண்டு. இவரை அடுத்துவந்த ஐந்தாம் சார்சு மன்னரின், ஆட்சிக்காலத்தில் அனோவர் மரபு மாற்றியமைக்கப்பட்டு விண்ட்சர் (Windsor) மரபு என்னும் பெயர் வழக்கத்திற்கு வந்தது.

**ஆ** தமிழ் நெடுங்கணக்கில் இரண்டாம் எழுத்து. இது நெட்டுயிர், நெடில் எனவும் வழங்கப்படும். ஏழு நெட்டெழுத்துகளுள் முதலாவது. பிற இந்திய மொழிகளிலும் இவ்வாறே இரண்டாமெழுத்தாக அமைந்தது. இதனை எழுத்தாகக் கூறும்போது 'காரம்' எனும் சாரியை சேர்த்து ஆகாரம் என வழங்குவர். பேச்சுத் தமிழில் 'ஆவன்னா' என அன்னா என்னும் சாரியை சேர்த்து வழங்கப்படும். 'அகரம்' பிறப்பது போன்றே, அங்காத்தலால் பிறக்கும் என்பர். நெட்டெழுத்துகள் இரண்டு மாத்திரை பெறும். தமிழிலக்கண மரபின்படி இதன் ஒலிப்புக் காலம் இரு மாத்திரையளவினதாம். நெட்டெழுத்துகள் தம் இரு மாத்திரை ஒலிப்பினின்றும் மிகுந்து ஒலிக்கப்பெறுதலை உயிர் அளபெடை என்பர் தமிழிலக்கண நூலார். 'அளபிறந்துயிர்த்தல்' என்பர் தொல்காப்பியர். இவ்வாறு அளபெடுத்தமையைக் குறிக்க நெட்டெழுத்தின்பின் அதற்கினமாய குற்றெழுத்தினை எழுதிக் காட்டுதல் மரபு.

(எ-டு) ஆஅ.

அளபெடுத்து நிற்கும் வழக்கினைத் தொல்காப்பியர் மூன்றுவகையில் காட்டுகிறார்.

(i) அகரவீற்றுச் சொற்கள் அகரமுதற் சொற்களோடு சேரும்போது அளபெடுத்தல். (எ-டு) மர + அடி > மராஅடி; குள + ஆம்பல் > குளாஅம்பல்.

(ii) இயற்சொற்கள் செய்யுள் வழக்கில் அளபெடுத்து நிற்றல்.

(எ-டு) பல > பலாஅம்; சில > சிலாஅம்.

(iii) புணர்ச்சியில் அகர முதலல்லாப் பிற சொற்கள் சில வருமொழியாக வரும்போது அளபெடுத்தல். இவ்வாறு உம்மைத் தொகைப் பொருளில் வந்தனவாகக் கருதுவர்.

(எ-டு) இரா + பகல் > இராஅப்பகல்;
உவா + பதினான்கு > உவாஅப் பதினான்கு.

அகரச்சுட்டு செய்யுளில் நீண்டு 'ஆ' எனநிற்றலும் உண்டு என்பது தொல்காப்பியர் சுட்டும் வழக்கு.

(எ-டு) அ + இடை > ஆயிடை.

இன்றைய பேச்சுவழக்கில் வருவான், இருப்பான் போன்ற சொற்களில் ஈற்று னகரம் கெட்டு, ஈற்றயல் ஆகாரம் மூக்கொலிச் சாயல்பெற்ற நிலையில் வருவா, இருப்பா என ஒலிக்கப்பெறும். ஐகார ஈற்றுப் பெயர்ச் சொற்கள் விளியேற்கும்போது, ஐ உயிர் ஆய் எனத் திரியும். (எ-டு) எந்தை > எந்தாய். இவை போலவே அன்னீற்றுச் சொற்களில் வரும் அகரம் விளியேற்கும்போது ஆ எனத் திரியும்.

(எ-டு) கணவன் > கணவா.

வினையாலணையும் பெயர்கள் முதலானவற்றில் வரும் ஆகாரம் செய்யுள் வழக்கில் ஓகாரமாதலும் உண்டு என்பது இலக்கண மரபு. (எ-டு) வந்தான்-வந்தோன்; வில்லான்-வில்லோன்.

ஆகார ஈற்றில் முடியும் வடமொழிச் சொற்கள் தமிழில் ஐகாரம் பெற்று முடியும்.

(எ-டு) சுவாலா — சுவாலை;
சீதா — சீதை.

வடிவம்:

i) தமிழ்:

இவ்வெழுத்தின் வடிவ வரலாற்றைக் கீழ் வரும் பட்டியலில் காணலாம்:

அசோகன் (கி.மு. 3-ஆம் நூ.) ... ... ... ... 𑀆

ஆனைமலை (கி.மு. 1-ஆம் நூ.) ... ... ... ... 𑀆

பல்லவன் பரமேசுவர வர்மன் I — கூரம் செப்பேடுகள் (கி.பி. 680) ... ... ஆ

பல்லவன் பரமேசுவர வர்மன் II — திருவதிகைக்கல்வெட்டு (கி.பி. 730) ... ... ஆ

பல்லவன் நந்தி வர்மன் — காசாக்குடிச் செப்பேடுகள் (கி.பி. 750) ... ...

பெரும்பிடுகு முத்தரையன் சுவரன் மாறன் — செந்தலைக் கல்வெட்டு (கி.பி. 8-ஆம் நூ.) ... ...

பல்லவன் நந்தி வர்மன் — திருவல்லம் கல்வெட்டு (கி.பி. 795) ... ...

பல்லவன் நிருபதுங்க வர்மன் — இலால்குடிக் கல்வெட்டு — (கி.பி. 9-ஆம் நூ.) ... ...

சோழர் காலம் இராசராசன் I - தஞ்சைக் கல்வெட்டு (கி.பி. 10-ஆம் நூ.) ... ...

,, ,, மேல்பாடிச் சோமேசுவரர் கோவில் கல்வெட்டு (கி.பி. 10-ஆம் நூ.) ... ...

,, ,, திருவாலங்காட்டுச் செப்பேடுகள் (கி.பி. 10-ஆம் நூ.) ... ...

,, குலோத்துங்கன் I — திருக்கழுக்குன்றம் (கி.பி. 1112) ... ...

பாண்டியர் காலம் (கி.பி. 13-ஆம் நூ.) ... ...

இராசராசச் சம்புவராயன் — குன்றத்தூர் — (கி.பி. 1343) ... ...

விசயநகர அரசர் — அச்சுததேவ ராயர் — (கி.பி. 1534) ... ...

இக்காலம் ... ... ஆ

(ii) வட்டெழுத்து:

இவ்வெழுத்து வட்டெழுத்துகளில் கீழ்க்காணுமாறு திரிந்து வளர்ந்து வந்துள்ளது.

திருநாதர் குன்றுக் கல்வெட்டு (கி.பி. 5-ஆம் நூ.) ... ...

பாண்டியன் நெடுஞ்சடையன் பராந்தகன் — சென்னை அருங்காட்சியகச் செப்பேடுகள் (கி.பி. 760) ... ...

,, ஆனைமலைக் கல்வெட்டு (கி.பி. 8-ஆம் நூ.) ... ...

,, வரகுணன் — திருச்செந்தூர்க் கல்வெட்டு (கி.பி. 870) ... ...

,, இராசசிம்மன் — சின்னமனூர்ப் பெரிய செப்பேடுகள் (கி.பி. 10-ஆம் நூ.) ... ...

சோழன் பராந்தகன் — ஆனைமலை (கி.பி. 939) ... ...

வேணாடு பாசுகர ரவிவர்மன் — திருக்கடித்தானம் (கி.பி. 11-ஆம் நூ.) ... ...

உதயமார்த்தாண்ட வர்மன் — கொல்லூர்மடம் செப்பேடுகள் (கி.பி. 1188) ... ...

,, ,, ,, ,, ... ...

கல்பாத்திக் கல்வெட்டு (கி.பி. 15-ஆம் நூ.) ... ...

பாளையம் செப்பேடுகள் (கி.பி. 1603) ... ...

மீஞ்சிறைமடம் செப்பேடுகள் (கி.பி. 1770) ... ...

(iii) கிரந்த எழுத்து:

இவ்வெழுத்து கிரந்தத்தில் கீழே காட்டியுள்ள முறைகளில் திரிந்து வளர்ந்துள்ளது.

பல்லவன் மகேந்திர வர்வன் – மண்டகப்பட்டுக் கல்வெட்டு — (கி.பி.7-ஆம் நூ.)... ...

பல்லவன் பரமேசுவர வர்மன் — கூரம் செப்பேடுகள் (கி.பி. 680) ... ...

பல்லவன் நந்திவர்மன் — காசாக்குடிச் செப்பேடுகள் (கி.பி. 750) ... ..

சோழன் — சுந்தர சோழன் — அன்பிற் செப்பேடுகள் (கி.பி. 960) ... ...

பாண்டியன் — இராச சிம்மன் — சின்னமனூர்ப் பெரிய செப்பேடுகள் (கி.பி. 10-ஆம் நூ.) ... ...

சோழன் — இராசராசன் I — காஞ்சிபுரக் கல்வெட்டு (கி.பி. 993) ... ...

,, இராசேந்திரன் I — திருவாலங்காட்டுச் செப்பேடுகள் (கி.பி. 1025) ... ...

,, விக்கிரம சோழன் — செவிலிமேடுக் கல்வெட்டு — (கி.பி. 1134) ... ...

பாண்டியன் சடையவர்மன் சுந்தர பாண்டியன் — திருவரங்கக் கல்வெட்டு (கி.பி.1260) ... ...

பாண்டியன் வரதுங்க ராமன் — தளவாய்ச் செப்பேடுகள் — (கி.பி. 1588) .. ...

பொருள்:

i. இரக்கக் குறிப்புப் பொருளில் வரும்.
(எ-டு) 'ஆவம்மா வம்மா வெண்ணம்மா வகன்றனையே' (சீவக. 1804).

ii. வியப்புப் பொருளில் வரும்.
(எ-டு) 'ஆ கற்றவா கடவானிச் சுனைப்புனமே' (திருக்கோ. 60).

iii. இகழ்ச்சிப் பொருளில் வரும். (எ.டு) ஆ இது நன்று.

iv. துன்ப உணர்வைப் புலப்படுத்தப் பயன்படுத்தப் பெறும்.
(எ-டு) ஆ! (கால் வலிக்கிறதே).

v. மொழியீற்றில் வினாப்பொருளில் வரும்.
(எ-டு) நீயா?

vi. உடன்பாட்டுப் பொருளில் இறந்த கால வினையெச்ச விகுதியாக வரும்.
(எ-டு) கல்லாக் கழிப்பர் தலையாயார் (நாலடி.366)

vii. இது அல்லது அது / இவர் அல்லது அவர் என்னும் பொருளில் (ஆங்கிலத்தில் or என்பது போல) வரும்.
(எ-டு) தேவரா ......... அசுரரா வந்து கேட்டிலர்
(திருவிளை. இந்திரன் பழி. 26).

viii. பெயரெச்ச, வினையெச்சங்களில் எதிர்மறை இடைநிலையாக வரும்.
(எ-டு) உண்ணாக் குதிரை
உண்ணாது சென்றான்.

ix. அஃறிணைப் பன்மையில் எதிர்மறையில் வரும்.
(எ-டு) பசுக்கள் உண்ணா.

x. உண்டாதல் (எ-டு) உண்டு ஆதல்

xi. சம்பவித்தல் (எ-டு) அவருக்கு ஒன்று ஆயிற்று.

xii. முடிதல் / தீர்தல் (எ-டு) காரியம் ஆகிவிட்டது. தண்ணீர் ஆகிவிட்டது.

xiii. இணக்கமாதல். (எ-டு) அவனுக்கும் இவனுக்கும் ஆகும்;
அவனுக்கும் இவனுக்கும் ஆகாது.

xiv. பெருகுதல் (எ-டு) ஆகிறகுடி அரைக்காசால் ஆகும்.

xv. அமைதல் (எ-டு) இதற்கு இது பொருள் ஆகும்.

xvi. ஒப்பாதல் (எ-டு) எனக்காவாராரொருவர் (திவ். இயற். 1.89)

xvii. யாத்தல், கட்டுதல் (எ-டு) ஆத்தல் (சீவக. 1882)

xviii. அமைத்தல் (எ-டு) அடுஞ்சமர மாத்து (பாரத வெண்பா)

xix. ஆகுகை (எ-டு) இலயித்தவாறுளதா வேண்டும். (சிவ. போ. 2,2)

xx. பெற்றம், மரை, எருமை இவற்றின் பெண்பாற் பெயர்.
(தொல். பொருள். 615)

xxi. காளை, இடபம் (எ-டு) ஆவார் கொடியாய் (திருவிளை. நரிபரி. 19).

xxii. ஆன்மா (எ-டு) ஆ திருக்கச்சிவம் (கம்பரந். 39)

xxiii. ஒரு வகை மரம்; இதனை ஆச்சாமரம் எனவும் வழங்குவர்.
(எ-டு) ஆவு மாரமு மோங்கின வெங்கணும் (சிலப். 12.76)

xxiv. ஏழாம் வேற்றுமை இடப் பொருளுணர நின்ற இடைச்சொற்களில் வரும்.
(எ-டு) அங்காக் கொண்டான். (தொல். சொல். 231. நச். உரை)

xxv. விதம் என்னும் பொருளில் வரும்; ஆறு என்பதன் சுருக்க வடிவமாக வரும்.
(எ-டு) சிவமான வாபாடி (திருவாசகம் 11:4)

xxvi. தொடங்கி ..... வரை / யில் யிலும் என்னும் பொருளில் வரும்.
இதனை வடமொழியில் அவ்யயம் என்னும் உபசர்க்கம் என்பர்.
(எ-டு) ஆபால விருத்தர், ஆகன்ன முற (பாரத. அருச்சு. தீர்த். 49)

xxvii. இசைமரபில் சரிகமபதநிச என்பவற்றுள் முதற்சுரமாகிய 'ச' வைக் குறிக்கும் எழுத்தாகத் தமிழிசை மரபில் குறிப்பர். இது 'குரல்' எனப்பெயர் பெறும். (காண்க. திவாகரம்). —கோ.வி.

**ஆக்கக் கல்வி :** கண்டோர் இன்புறும் வண்ணம் ஓவியம் தீட்டுதலும், களிப்புறும் வண்ணம் கவிதை எழுதலும், புதிய சிக்கல்களைத் தீர்த்தலும், விடை காணப்படாத புதிர்கட்குத் தீர்வு காணலும் ஆக்கச் செயல்களின் பல வகைகளாகும். சுவையுடன், சுவைப்போர் மகிழும் வண்ணம் சமைக்கப்பட்ட குழம்பும் ஆக்கத்தின் பாற்பட்டதுதான் என்பர் அறிஞர் மாசுலோ (Maslow).

நுண்ணறிவு ஏறக்குறைய 150 காரணிகளால் ஆனது என்றும், அவற்றுள் 96 காரணிகளின் அளவினைச் சோதித்துணர உதவும் கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன என்றும் கில்போர்டு (Guilford) என்னும் அறிஞர் கூறுகிறார். அவற்றுள் சிந்தித்தல் பற்றிய திறன்களை அறிதல், தயாரித்தல், மதிப்பிடல் என்ற மூவகைகளாகப் பகுப்பர். திறனைக் குவிமுகத்திறன், விரிமுகத் திறன் என்றும் பகுப்பர். விரிமுகத் திறன் என்பது விரிமுகச் சிந்தனையின் காரணிகளாகச் சொல்வளம், கருத்துவளம், சேர்ப்பு, கருத்து வெளிப்பாடு, தொடர், ஒருமித்த வடிவு, குறியீடு, சுய வெளிப்பாடு, விரிவீடு எனப் பகுத்துக் காணப்படும்.

எந்த ஒரு கருத்தையும் எடுத்துக் கொள்ளும் பாங்கும், அதில் நெகிழ்வுத் தன்மையும், ஈடுபட்டுள்ள கருத்து அல்லது செயலில் தம்மை மறந்து ஈடுபடும் நிலையும், தான் கொண்டுள்ள பொருளோடு ஒன்றுதலும், ஒருமித்த வெளிப்பாடும், புதிய வெளிப்பாடுகளில் தன்னை மறத்தலும் ஆக்கத்திறனின் மூலக் கூறுகளாகும். நுண்ணறிவு ஆக்கத் திறனுடன் இணைந்த தெனினும் அதனைப் பெற்றுள்ளோர் ஆக்கத்திறன் மிக்கோர் எனல் பொருந்தாது.

காலத்திற்கேற்ப இடைவிடாது திட்டமிட்டுத் தேர்ந்தெடுத்துப் புதிய கோணங்களில் வடிக்கப்படுவதே ஆக்கக் கல்வியாகும். ஆக்கமும், புத்துணர்வும், புதிய பார்வையும், தொலைநோக்கும், ஆக்கக் கல்வியின் அடித்தளங்களாகும். பெருகிவரும் அறிவியல் தொழில் நுட்ப மாற்றங்கள், தாக்கங்கள், புதியன காண வேண்டியதின் இன்றியமையாமையை விளக்குகின்றன. நேற்றைய வழிமுறைகள், கொள்கை விளக்கங்கள், இன்றைய நெறியின் கடந்த காலச் செய்திகளாக விளங்கி வருகின்றன. அதிக வேகத்தில் செல்லக்கூடிய துகள், ஒளி ஒன்றுதான் என்ற கொள்கை மாறி இன்று அதைவிட ஏறத்தாழ 15 மடங்கு வேகத்தில் துகள்கள் அண்டத்தில் செல்கின்றன என்னும் அறிவியல் கொள்கை, ஆக்கக் கல்வியின் மேன்மையினைப் புலப்படுத்தும்.

இயற்கையில் கிடைக்கும் காய்கனிகளில் இருந்து, அடைத்து வைக்கப்பட்டுப் பாதுகாக்கப்படும் உணவு வரை, மரவுரிகளில் இருந்து மசுலின் துணி வரை, பறவைகளில் இருந்து விண்வெளிக்கூடுகள் வரை, மீனில் இருந்து நீர்மூழ்கிக் கப்பல்கள் வரை, இயற்கைக் கருவில் இருந்து சோதனைக் குழாய்க் குழந்தை வரை பரந்து காணப்படும் கண்டுபிடிப்புகள் யாவும் ஆக்கக் கல்வியின் தாக்கங்களே. வருங்காலம் எவ்வாறு இருக்கும்? எவ்வித வழியொற்றிப் போக வேண்டும்? என்ற கேள்விகட்குச் சமுதாயம் விடைகாண முயன்றால் அது ஆக்கக் கல்வியின் துணைக் கொண்டுதான் இயலும். கற்காலம் முதல் அணுயுகம் வரையுள்ள எல்லாக் காலத்திலும் சமுதாய முன்னேற்றம் ஆக்க முனைப்பின் அடித்தளத்தில்தான் அமைந்துள்ளது என்பது தெள்ளிய கருத்தாகும்.

ஆக்கத் திறன்களை, புதியன படைக்கும் இயல்புக் கூறுகளை, மனஎழுச்சியை, எல்லையற்ற வினா வேட்கையை, சிக்கலைத் தீர்க்க நினைக்கும் கொள்கைப் பாங்குகளைப் பள்ளிக் குழந்தைகள் எவ்விதம் பெறுகின்றனர் என்பதும் ஆராய வேண்டிய ஒன்றாகும். மாணாக்கர்கள் ''ஏன்'' என்ற கேள்வியைக் கேட்கும் வண்ணம் மன எழுச்சி பெற்றுள்ளனரா? ஆசிரியர்கள் 'தான்' என்னும் எண்ணம் கொண்டு, 'ஏன்' என்னும் மன எழுச்சிகளை அழுத்தி விடுகின்றனரா என்று பார்க்க வேண்டும். இத்தகைய கேள்விகளைக் குழந்தைகள் கேட்க இயலாத அளவிற்கு அவர்களின் ஆர்வங்களையும் உணர்வுகளையும் அழித்து விடுவதால்தான் அவர்கள் பள்ளியில் தோல்வி யுறுகின்றனர் என்பது கல்வியியல் அறிஞர்களின் கருத்து.

இக்கருத்தின் அடிப்படையிலேயே அறிஞர் பால் தாரன்சு (Paul Torrance) ''பள்ளி ஆக்கத் திறன்களை வளர்த்திட வேண்டுமானால் வகுப்பறைச் சூழ்நிலை, சுதந்திர மிக்கதாக, எண்ணிய எண்ணியாங்கு அடைய ஏற்றதாக இருக்க வேண்டும்'' என்கிறார். குழந்தைகள் இயல்பாகவே ஆக்கத்திறன் கொண்டவை. ஆனால், முழுக் கட்டுப்பாட்டுச் சூழ்நிலையும், ஆர்வம் ஊட்ட இயலாத அளவிற்கு அமைக்கப்பட்ட பாட நூல்களும், நெகிழ்வுத் தன்மையற்ற பாடப் பகுப்பும் ஆக்கத்திறனை அழித்து விடுகின்றன. மேலும் இன்றுள்ள கல்விச் சூழ்நிலை, ஆசிரியர்கட்கும் பாடப் புத்தகங்கட்கும் மட்டுமே இணைந்து செய்ற்பட வேண்டிய நிலையில் உள்ளது. எதைச் சொன்னாலும் சரி என்று அப்படியே மாணாக்கர்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற ஆசிரியரது எதிர்பார்ப்புகள், நினைவாற்றலுக்கு மட்டுமே நிறைவு அளிக்க வேண்டிய நிலை, தானாகச் சிந்தித்துச் செயலாற்றும் முனைப்புக்குத் தடை போன்ற சூழ்நிலைச் சீர்கேடுகளே ஆக்கக் கல்வியின் தடுப்புச் சுவர்களாக அமைகின்றன. இவற்றைத் தவிர ஆக்கக் கல்வித்தொடர்பான தவறான எண்ணங்

களும் தடுப்புகளாக அமைகின்றன. எடுத்துக்காட்டாக, "ஆக்கக் கல்வி என்பது சிலருக்குப் பிறவியிலிருந்தே உருவாகிறது; அது எல்லோரிடமும் இருத்தல் இயலாது; படைப்பாற்றலைவிட நுண்ணறிவே சிறந்தது; படைப்பாற்றல் உள்ளவர்கள் வாழ்வு துன்பமயமானது முதலிய தவறான கொள்கைகள் மாணாக்கர்களிடம் ஆக்கத் திறனை வளர்க்க இயலாது என்ற சூழலை ஏற்படுத்துகின்றன.

தன்னையும் தன் அனுபவத்தையும் ஒன்றோடு ஒன்று இணைத்தல், அனுபவத்திற்கேற்ற வகையில் வெளிப்படும் ஊக்க உணர்வு, எந்தச் சிக்கலுக்கும் தீர்வு காண வேண்டிய வகையில் வெளிப்படுத்தும் திறன், புதியன கண்டுபிடிப்பதில் சோதனைகள், இடைவிடாத முயற்சிகள், அனுபவங்கள் வழித் தன் மன இறுக்கத்தைக் குறைத்துக் கொள்ளல் போன்ற பண்புகளைக் குழந்தைகளிடம் செம்மைப்படுத்துவதன் வாயிலாக ஆக்கத் திறனை வளர்க்க இயலும்.

மேற்குறிப்பிட்ட வாயில்களினால் வெளிப்படும் ஆக்கக் கல்வியின் தன்மையைத் தனி மனிதனின் உள்ளார்ந்த நெறிகள் மூலமும் நெறிப்படுத்தல் சிறப்புடையதாகும். அவை அனுபவங்களைப் பெறுவதில் எத்தகைய குறுக்கீடும் இன்றி முழுமையாகப் பெறுதல்; அனுபவங்களின் தன்மைகளைத் தரங்காணுதல்; கருத்துகளைப் புதிய முறைகளில் தொடர்புபடுத்தி அவற்றின் வழியே பெற்ற இன்ப அனுபவங்களை நுண்ணறிவின் தொடர்போடு விளக்குதல் ஆகும்.

ஆக்கத் திறனை இல்லமும், பள்ளியும், தொழிலும், சேர்ந்து முன்னேற்ற இயலும் என்பார் அறிஞர் பால் தாரன்சு. இத்தகு திறனால் பெறும் பயனை உடனே துய்க்க எண்ணாது, மேன்மேலும் உழைத்துப் பின்னர்த் துய்க்க வேண்டும் என்று தன்னை வரையறுத்துக் கொண்டு அதன்படி ஒழுகுதலே இதன் சிறந்த நெறியாகும் என்றும் அவர் கூறுவார்.

குழந்தையின் அகப்புறச் சூழ்நிலைகள், பள்ளிச் சூழ்நிலை, சமுதாய அமைப்பு, ஆகியவையும் ஆக்கக் கல்வியின் தாக்கத்தை உறுதிப்படுத்துவதில் பெரும் பங்கு வகிக்கின்றன. ஆக்கக் கல்வியை வளர்ப்பதில் கல்வி நோக்கில் தெளிவும், குறிக்கோள்களை அமைப்பதில் ஆசிரியர்களின் பங்கும், நட்பியல் உணர்வும், புதிய உத்திகளைக் கையாளுதலும், புதிய நோக்குகளும் இடம் பெறுதல் வேண்டும். பாடங்கள் பயிற்றலில் பாடங்கட்கு முன்னுரிமை தராமல் அவற்றைப் பயிற்றும் முறைகட்கு முன்னுரிமை தருதலும், வகுப்பறைகட்கும் பயிற்றுவித்தலுக்கும் முதன்மை தராமல், சோதனைச் சாலை, நூலகம், கருத்தரங்கு போன்றவற்றிற்கு முதன்மை தருதலும் வேண்டும்.

அடக்கு முறைகளை மிகுதியாகக் கையாளும் ஆசிரியர்களிடம் பயிலும் மாணாக்கர்களில் பெரும்பாலோர் பிடிவாதமும்,முரட்டுத்தன்மையும் உடையவர்களாக, ஆக்கத் திறன் அற்றவர்களாக உள்ளனர் என்று கல்வியியல் ஆராய்ச்சிகள் கூறுகின்றன. ஆசிரியர் ஆக்கக் கல்வியின்பால் நெகிழ்வுடையவர்களாகவும் பொறுமை உடையவர்களாகவும் தன்னம்பிக்கையும் சகிப்புத் தன்மையும் உடையவர்களாகவும் மாணாக்கர்களிடம் புதிய கருத்துகளை ஊட்டுபவர்களாகவும் மாணாக்கர் உணர்வுகளை மதிப்பவர்களாகவும் இருத்தல் வேண்டும்.

மாணாக்கர்களுக்கு அளிக்கப்படும் கல்விப் பணியில், அவர்களின் எல்லாப் புலன்கட்கும் ஏற்புடைய வகையில் அனைத்து அனுபவங்களும் அமைத்தால் விழிப்புணர்ச்சி பெருகும். மேலும் இத்தகு அனுபவங்கள் வாயிலாக உற்று நோக்கும் திறன், ஒருமுகப் படுத்தும் திறன், எதையும் நேரிய முறையில் செய்து முடிக்கும் திறன், சிந்திக்கும் திறன், பகுப்புத் திறன், முதலிய திறன்கள் சிறப்படையும். இத்திறன்கள் சிறப்படைந்தால் மாணாக்கர்கள் ஆக்கக் கல்வித் திறன் பெறுவார்கள்.

பாட வழிமுறைகளும் பாடத் திட்டங்களும் வெறும் நூல் அறிவை மட்டும் தரும் வகையில் இல்லாமல் எதையும் ஐயந் திரிபற ஆய்ந்து தோய்ந்து கற்றல், ஆய்ந்து நுணுகி உண்மையைத் தெளிதல் என்ற கொள்கையின்பாற்பட்டு அமைந்து இருத்தல் வேண்டும். அவை மாணாக்கரின் தனிப்பட்ட வேறுபாடுகளை ஒட்டியனவாகவும், நெகிழ்ச்சித் தன்மை கொண்டனவாகவும் அமைதல் நலமுடையது. கற்றல் அனுபவங்கள், மாணாக்கர்களிடம் என்ன கற்கிறோம் என்பதைவிட, ஏன், எப்படி, எவ்வாறு கற்கிறோம் என்பதைத் தெளிவுபடுத்தும் அனுபவங்களாக இருத்தல் வேண்டும். பாட நூல்கள் ஆர்வமூட்டும் வகையிலும், பிழையற்றனவாகவும், சுருங்கக் கூறி விளங்க வைக்கும் தன்மை பெற்றனவாகவும் மட்டுமல்லாமல் சிந்தனைத் திறனை வளர்க்கக் கூடியனவாகவும் நடைமுறைக்கு ஏற்றனவாகவும் அமைய வேண்டும்.

ஆக்கத் திறனை வளப்படுத்தக் குழந்தைகளிடையே கற்பனைத் திறனையும், கதை புனையும் ஆற்றலையும் வளர்த்திடல் வேண்டும். அத்திறன்களை வளர்க்கும் வகையான பாட முறைகள், பாட நூல்கள் அமைக்கப்படல் வேணடும். மரபு வழி நின்றுதான் பயிற்றல் வேண்டும் என்ற நிலையின்றி மரபின் மேம்பட்டும் கற்பனை வழி நின்றும்

பயிற்றலாம். ஆக்கத் திறன் உள்ள குழந்தைகள், குறும்புத்தனம் மிக்கவை; மிக நுண்ணிய இயல்பான விளையாட்டுத் தன்மை மிக்கவை; மரபுகளை மீறும் பாங்குடையவை என்பதை ஆசிரியர்கள் உணர வேண்டும். இவ்வகைக் குழந்தைகளைத் துன்புறுத்தாமல், குற்றங்களைப் பெரிது படுத்தாமல், அன்போடும் அரவணைப்போடும் நடத்திச் செல்ல வேண்டும். நிறையக் கதைகள் கூறியும் குழந்தைகளைக் கதைகள் புனைய வைத்தும் படம் பார்த்துக் கதைகள் கூறவைத்தும் அவர்களின் ஆற்றலைத் தூண்ட வேண்டும். இப்பருவத்தில் ஆக்கத் திறன் வெளிப்படவில்லை என்றால், ஆக்கத்திறன் என்ற ஒரு திறனையே பிற்கால வாழ்வில் அம்மாணாக்கர்கள் இழந்து கிளிப்பிள்ளைகள் போல் வாழ வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டு விடும்.

குழந்தை வளரும்போது சுற்றுப்புறத்தை நன்கு தெரிந்து அதனோடு இயைந்து அறியும் நிலைக்கு வந்துவிடுகிறது. அந்நிலையில் செய்து கற்றல், அனுபவங்கள் மூலமும், செய்முறைகள், சுற்றுலாக்கள் போன்ற வெளி அனுபவங்களை அமைத்துத் தருவதன் மூலமும் ஆக்கக் கல்வியின்பால் ஆர்வம் ஊட்ட வேண்டும். வரைதல், வண்ணம் தீட்டுதல், கலைப் பயிற்சிகள் அளித்தல் ஆகியவற்றின் மூலமும் குழந்தைகளின் ஆக்கத்திறனை வளர்க்க இயலும். மேலும் செயல்முறை விளக்கம், நூலகம், சோதனைச் சாலை போன்றவற்றின் வாயிலாகவும் அனுபவங்களைப் பெறவைத்தல் சிறப்புடையது.

தானாகக் கற்றல், தன்முனைப்புடன் கற்றல், குழுக்களுடன் செயலாற்றல், தனித்தும் குழுவோடும் செலாற்றல் ஆகிய கற்றல் அனுபவங்கள் மூலமும் ஆக்கத் திறனை வளர்க்க இயலும். பாவனை ஏற்பு (Simultation), பங்கேற்பு (Role Play), சிந்தனை வீச்சு (Brain Storming) போன்ற மரபுவழியல்லாத கற்றல் முறைகளின் மூலமும் ஆக்கத் திறன்களைக் குழந்தைகளிடத்தே வளர்க்கலாம்.

எஸ். மோ.

துணை நூல்கள்:

Torrance, E. P., Guiding Creative Talent, Angle wood Cliffs N. J. Prentice Hall, New Delhi, 1962.

Pillai, J. K., From Pedagogy to Mathematics, Sarvodaya Ilakiya Pannai, Madurai, 1982.

**ஆக்கத்திறன்:** ஆக்கத்திறனை அல்லது உற்பத்தித் திறனை (Productivity) ஒட்டியே ஒரு நாட்டின் வேளாண்மை, தொழில் ஆகிய துறைகளின் மொத்த உற்பத்தி அமைகிறது. ஆக்கத்திறன் உயர்வாக இருந்தால், அத்தகைய நாட்டின் மொத்த உற்பத்தியும், அதனைச் சார்ந்து வருவாயும் மிகுதியாக இருக்கும். இதன் விளைவாக மக்களின் வாழ்வு வளமானதாகவும், வாழ்க்கைத்தரம் சிறப்பானதாகவும் அமையும். பொருளாதாரத்தில் ஆக்கத் திறனும், உற்பத்தியும் தனி இடத்தைப் பெறுகின்றன. நாட்டின் பொருளாதார முன்னேற்றம், ஆக்கத்திறனையும், உற்பத்தியையும் சார்ந்திருப்பதால் அரசு இவற்றில் தனிக்கவனம் செலுத்துகிறது.

வேளாண்மையில் ஆக்கத்திறன் எப்படி அமைகிறதென்பதை அறிந்துகொள்ள நிலத்தின் தனித்தன்மைகளை முதலில் தெரிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாததாகிறது. இயற்கைத் தாயின் அருட்கொடையாக நிலம் விளங்குகிறது. நிலத்தையும், அதன் வளத்தையும், அதனைச் சார்ந்த தட்பவெப்ப நிலைகளையும், மனிதனால் உருவாக்க இயலாது. நிலத்தின் மொத்தப் பரப்பளவு ஒரு குறிப்பிட்ட அளவிலேயே உள்ளது. ஆதலால், இதனைக் கூட்டுவதென்பது இயலாத ஒன்று. இருக்கிற நிலத்தை எவ்வாறு, எதனை உற்பத்தி செய்யப் பயன்படுத்துவது என்பனவற்றை முடிவுசெய்வதில் தக்க கவனம் செலுத்துவது தேவையாகிறது. நிலம் இடம்பெயர்ந்து செல்லாமல் ஓரிடத்திலேயே நிலைத்திருக்கிற காரணியாகும். ஆதலால், அது அமைந்திருக்கிற சூழ்நிலையிலேயே அதனைப் பயன்படுத்த வேண்டும். நிலத்தின் வளம் குறையலாம்; அன்றிக் கூடலாம். ஆனால், நிலத்திடம் என்றும் அழியாத ஒரு தன்மை உள்ளது. அதாவது, உற்பத்திக்குப் பயன்படுத்துவதன் மூலம் நிலம் அழியாது. மேலும், நிலம் வளத்தால் வேறுபடும் ஒரு காரணி. ஆகவே, நிலத்தின் ஆக்கத்திறன் இடத்திற்கு இடம் வேறுபடுகிறது.

பொதுவாக, ஒரு நிலத்தின் ஆக்கத்திறன் அதன் உள்ளார்ந்த மூல வளத்தைச் சார்ந்தது. வளமான நிலத்தில் மிகுதியான விளைச்சல் கிடைக்கும் வாய்ப்புண்டு. மேலும், புவியியல் அமைப்பிற்கும் உற்பத்திக்கும் தொடர்புண்டு. ஆகவே, எந்த அளவில் நிலத்தோடு உழைப்பையும் மூலதனத்தையும் இணைக்கிறார்களோ, அந்த அளவில் நிலத்தின் விளைச்சல் வேறுபடுகிறது.

**விளைவு விதிகள்:** உற்பத்தியில் ஆக்கத்திறன் தொடர்பாகப் பொருளியல் அறிஞர் விளைவு விதிகளை உருவாக்கியுள்ளனர். நிலம், உழைப்பு, முதல், அமைப்பு (Organization) ஆகியவற்றை இணைத்து உற்பத்தி செய்யும்போது ஆக்கத்திறன் எப்படிக் கூடுமென்பதை விளைவு விதிகள் (Laws of Returns) விளக்குகின்றன. உற்பத்திக் காரணிகள்

இணையும் விகிதத்தில் ஏற்படும் வேறுபாட்டினால் உற்பத்தியின் அளவில் ஏற்படும் மாற்றத்தையே விளைவு விதி விளக்குகிறது. தொன்மைப் பொரு ளியலறிஞர் (Classical Economists) ஏதாவது ஓர் உற்பத்திக் காரணி (அதாவது நிலம்) நிலையாக இருக்கிறபொழுது, மற்றைய உற்பத்திக் காரணி களைக் கூட்டுவதால் மூன்று வகையான விளைவுகள் ஏற்படலாம் என்பதைச் சுட்டிக் காட்டினர்.

முதலாவதாக, உற்பத்திக் காரணிகள் கூடுகிற அளவை விட அதிக விகிதத்தில் உற்பத்தி கூடலாம். அதாவது, இறுதிநிலை ஆக்கத்திறன் (Marginal Productivity) அதிகரித்துக் கொண்டு செல்லும். இதனை வளர்ந்து செல் விளைவு விதி (Law of Increasing Returns) என்பர். இரண்டாவதாக, எந்த அளவில் உற்பத்திக் காரணிகள் கூடுகின் றனவோ, அந்த அளவில் உற்பத்தியும் கூடுவதை மாறாத விளைவு விதி (Law of Constant Returns) எனக் கூறுவர். இறுதிநிலை ஆக்கத்திறன் ஒரே அளவில் மாறாமல் இருக்கிறபொழுது இவ்விதி செயற்படுகிறது. மூன்றாவதாக, உற்பத்திக் காரணிகள் கூடுவதை விடக் குறைந்த அளவில் உற்பத்தி கூடுவது குறைந்து செல் விளைவு விதி (Law of Diminishing Returns) ஆகும். இதில் இறுதிநிலை ஆக்கத்திறன் குறைந்துகொண்டு வரும். இம்மூன்று விதிகளையும் ஓர் எடுத்துக்காட்டின் மூலம் விளக் கலாம். ஒருவரிடம் ஐந்து ஏக்கர் நிலம் இருப்பதாக வைத்துக் கொண்டால் அவர் இந்த நிலத்தின் அளவை மாற்றாமல், இதனுடன் உழைப்பையும் முதலையும் இணைத்து ஒவ்வொரு அலகாகக் (Unit) கூட்டுவதாகக் கருதலாம். இங்கு உழைப்பும், முதலும் உள்ளீடுகளாகும். இதனால், எவ்வளவு விளைச்சல் கூடுமென்பதை ஒரு அட்டவணையின் மூலம் விளக்கமுடியும்.

அட்டவணை 1-ஐக் கவனித்துப் பார்த்தால் இத னை அறிந்துகொள்ள முடியும். உள்ளீடுகளைக் கூட்டுகிற பொழுது மொத்த உற்பத்தி தொடர்ந்து கூடுகிறது. ஆனால், இறுதிநிலை விளைச்சல், முதல் மூன்று நிலைகளில் உள்ளீடுகளின் அளவை விட அதிக மாகக் கூடுகிறது. நான்காம் உள்ளீடு கூடுகிற பொழுது இறுதி விளைச்சல் மாறாமலும் பின்னர்க் குறையவும் செய்கிறது. இந்த மூன்று நிலைகளை யும் ஒரு வரைபடத்தின் மூலம் மேலும் தெளிவாக விளக்கலாம்.



படம். 1.

அட்டவணை-1.

| உள்ளீடு அலகுகள் உழைப்பு + முதல் | மொத்த விளைச்சல் நெல் (மூடைகள்) | சராசரி விளைச்சல் (மூடைகள்) | இறுதிநிலை விளைச்சல் (மூடைகள்) |
|---|---|---|---|
| 1 | 40 | 40.0 | 40 |
| 2 | 90 | 45.0 | 50 |
| 3 | 150 | 50.0 | 60 |
| 4 | 210 | 52.5 | 60 |
| 5 | 260 | 52.0 | 50 |
| 6 | 300 | 50.0 | 40 |
| 7 | 330 | 47.1 | 30 |

படம் 1-இல் OX என்ற கிடைக்கோட்டில் உள்ளீடுகளின் அளவையும், OY என்ற செங்குத்துக் கோட்டில் இறுதிநிலை விளைச்சலின் அளவையும் குறிக்கலாம். முதல் மூன்று உற்பத்திக் காரணிகளைக் கூட்டுகிற பொழுது இறுதிநிலை விளச்சல் கூடுவதை 'A' முதல் 'B' வரை உள்ள கோடு காட்டுகிறது. இது வளர்ந்து செல் விளைவு விதியால் ஆவது. நான்காம் உள்ளீடு கூடுகிறபொழுது இறுதிநிலை விளைச்சலில் மாற்றமில்லை. இந்த மாறாத விளைவு விதியை வரைபடத்தில் 'B' முதல் 'C' வரை உள்ள கோடு குறிக்கிறது. ஐந்து, ஆறு, ஏழாம் உள்ளீடுகளின் அளவு கூடும்பொழுது, இறுதிநிலை- விளைச்சல்குறைவதை 'D' முதல் 'E' வரை இருக்கும் கீழ்நோக்கிச் செல்லும் வரைகோடு காட்டுகிறது. இது குறைந்து செல் விளைவு விதியால் உண்டாவது.

வேளாண்மையில் விளைவுவிதி: தொன்மைப் பொருளியலறிஞர்களான ஆடம் சுமித்து, (Adam Smith) தேவிடு இரிக்கார்டோ (David Ricardo), மால்தசு (Malthus) ஆகியோர் வேளாண்மையின் ஆக்கத்திறனை ஆராய்ந்தனர். வேளாண்மையில் குறைந்து செல் விளைவுவிதி செயற்படுகிறதென்பதை விளக்கிக் கூறினர். வேளாண்மையில் விரிவு முறைச் சாகுபடி (Extensive Cultivation) செய்யவாய்ப்புகள் குறைவு. ஆகவே, நிலத்தின் அளவைக் கூட்ட முடியாத நிலையில் உழவர்கள் செறிந்த முறைச் சாகுபடியைப் (Intensive Cultivation) பின்பற்றுகின்றனர். இயற்கையின் செல்வாக்கு மிகுதியாக இருப்பதால் உள்ளீடுகள் கூடுகிற அளவிற்கு இறுதிநிலை ஆக்கத்திறன் கூடுவதில்லை. இவ்விதியை ஆல்பிரடு மார்சல் (Alfred Marshall) "வேளாண்மை முறையில் முன்னேற்றம் இல்லாத பொழுது, பொதுவாகச் சாகுபடி செய்யப்படும் குறிப்பிட்ட நிலத்தில் அதிகமாக ஈடுபடுத்தப் பெறும் முதலும் உழைப்பும் அவற்றை அதிகப்படுத்திய விகிதத்திற்கும் குறைவாகவே விளைச்சலை அளிக்கும்" என்று தெளிவாக விளக்கிக் கூறியுள்ளார்.

விளைவு விதிகளைக் காட்டுகிற வரைபடத்தில் 'C' முதல் 'D' வரையான வளைகோடு குறைந்து செல் விளைவு விதி வேளாண்மையில் செயற்படுவதைக் காட்டுகிறது. நான்காம் உள்ளீட்டிற்குப் பிறகு விளைச்சல் 60, 50, 40, 30 என்று குறைகிறது. வேளாண்மையில் குறைந்து செல் விளைவு விதி செயற்படுவது எடுகோள்களின் (Assumptions) அடிப்படையில் விளக்கப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட நிலைக்குப் பின்னரே இறுதிநிலை ஆக்கத்திறன் குறைகிறது. முதலில் ஆக்கத்திறன் கூடலாம். உற்பத்திக் காரணிகளில் ஒன்று (நிலம்) நிலையாக - ஒரே அளவில் இருக்கிறது. மற்றைய உள்ளீடுகளில் அளவு மட்டும் கூடுகிறது. உற்பத்திக் காரணிகள் இணையும் விகிதத்தில் வேறுபாடு ஏற்படுவது தேவையாகும். உற்பத்தியில் ஈடுபடுத்தப்படும் உழைப்பு, முதல் (Capital) ஆகிய உள்ளீடுகளின் இயல்பில் மாறுதல் இருக்கக் கூடாது. அவை ஒரே அளவிலும், இயல்பாகவும் இருக்கவேண்டும். உற்பத்தி முறைகளிலும் தொழில் நுட்ப அறிவிலும் மாற்றம் ஏற்படக்கூடாது. இவ்விதி விளைச்சலின் அளவை மட்டும் குறிக்கிறதே தவிர அதன் மதிப்பைக் குறிப்பதில்லை.

குறைந்து செல் விளைவு வேளாண்மையில் செயற்படுவதற்கான காரணங்களைப் பின்வருமாறு சுட்டிக் காட்டலாம்:

1) வேளாண்மைக்கு இன்றியமையாத நிலம் ஒரே அளவில் இருக்கிறது. ஆதலால், மொத்தவிளைச்சலை அதிகரிக்க நிலம் தவிர பிற உள்ளீடுகளை மிகுதியாகப் பயன்படுத்துகின்றனர். இந்நிலையில் இறுதிநிலை ஆக்கத்திறன் குறைவது இயல்பான ஒன்றாகிவிடுகிறது.

2) வேளாண்மையில் இயற்கையின் செல்வாக்கு மிகுதியாக இருக்கிறது. பருவ மாற்றங்கள் வேளாண்மையைப் பாதிக்கின்றன. இயற்கைச் சூழ்நிலைகளை மனிதனால் கட்டுப்படுத்த இயல்வதில்லை. விளைச்சலில் இயற்கையின் பங்கு குறைந்து செல் விளைவு விதியைச் செயற்படுத்துவதாக உள்ளது.

3) வேளாண்மையில் உற்பத்தி சிறிய அளவில் நடைபெறுகிறது. தொழில்களைப் பெரிய அளவில் அமைக்கவும், அதன் மூலம் சில சிக்கனங்களைப்பெறவும் முடியும். ஆனால், வேளாண்மை சிறிய அளவில் நடைபெறுவதால் விரைவிலேயே குறைந்துசெல் விளைவு விதி செயற்படத் தொடங்குகிறது.

4) அறிவியல், தொழில் நுட்ப முறைகளைப் பின்பற்ற வேளாண்மையில் வாய்ப்புக் குறைவு. சாகுபடி நில அளவு குறைவாக இருக்கும் பொழுது பெரிய எந்திரங்களைப் பயன்படுத்தவோ, வேலைப்பகுப்பு முறைகளைக் கையாளவோ நடைமுறையில் இயல்வதில்லை.

5) மற்றைய உற்பத்திக் காரணிகளை நிலத்திற்கு மாற்றாகப் பயன்படுத்த இயலாது. ஆகவே, பிற உள்ளீடுகளின் அளவு கூடுகிறபொழுது, விளைச்சலில் நிலத்தின் பங்கு குறைந்து வருகிறது.

6) நிலத்தின் வளம் நிலையாக இருப்பதில்லை. மேலும் மேலும் அதனைப் பயன்படுத்தும்போது அதன் வளம் குறைவதால், இறுதிநிலை ஆக்கத்திறன் குறைந்து விடுகிறது.

வேளாண்மையில் குறைந்துசெல் விளைவு விதி செயற்படுவதன் பொருளியற் சிறப்பை உணர்ந்து கொள்வது இன்றியமையாதது. நிலத்தில் இவ்விதி செயற்படாமல் இருந்தால், ஒரு குறிப்பிட்ட அளவு நிலத்தில் உலக மக்களுக்குத் தேவையான அவ்வளவு உணவையும் உற்பத்தி செய்துவிடலாம். வேளாண்மையில் குறைந்து செல் விளைவு விதி செயற்படுவதால் விரைவாக வளர்கிற மக்கள் தொகைக்கு வேண்டிய உணவை அளவோடு இருக்கும் நிலத்தைப் பயன்படுத்தி விளைய வைக்க இயலாமல் திண்டாடும் நிலை ஏற்படுகிறது. மால்தசு, குறைந்து செல் விளைவு விதியின் அடிப்படையில்தான் உலகப் புகழ்பெற்ற அவரது ''மக்கள் தொகைக் கோட்பாட்டை'' (Theory of Population) உருவாக்கினார். மேலும் இவ்விதியின் துணையோடு தேவிடு இரிக்கார்டோ தன் ''வாரக் கோட்பாட்டை'' (Theory of Rent) உருவாக்கினார். குறைந்து செல் விளைவு விதியை வேளாண்மையோடு தொடர்பு படுத்தி விளக்கினாலும், இது அனைத்துத் துறைகளிலும் செயற்படும் விதி எனலாம். தொழில் துறைகளில் இது காலம் தாழ்த்திச் செயற்படலாம். ஒரு நிலைக்குப் பின் எந்த உற்பத்தியிலும் இவ்விதி செயற்படுவதால் இதனை ''வாழ்க்கை விதி'' என்று குறிப்பிடுவர்.

**தொழில்களில் ஆக்கத்திறன்:** பொதுவாகத் தொழிகளில் ஆக்கத்திறன் வளர்ந்து வருகிறது. தொழில்கள் இயல்பாலும் அளவாலும் வேளாண்மையிலிருந்து வேறுபடுகின்றன. தொழில்களுக்கு வேண்டிய உற்பத்திக் காரணிகள் அளிப்பு நெகிழ்வுடையதாக இருக்கிறது. அதாவது, எல்லா உற்பத்திக் காரணிகளையும் தேவைக்கு ஏற்ப உயர்த்திக் கொள்ள வாய்ப்புண்டு. ஒரு தொழில் விரிவடையும் உற்பத்தியில் சில சிக்கனங்களும் நன்மைகளும் கிடைக்கின்றன. இதன் விளைவாக உள்ளீடுகளின் கூடுதல் அளவை விட, அதிகரிக்கிற இறுதிநிலை ஆக்கத்திறன் மிகுதியாக இருக்கும். இதனை ''வளர்ந்து செல் விளைவு விதி'' எனலாம். மார்சல் என்பவர் இதனை விளக்கும்போது, ''பொதுவாக உழைப்பும் முதலும் கூட்டுறவு முறையில் முன்னேற்றத்தை ஏற்படுத்துகின்றன. எனவே, மூலதனம், உழைப்பு ஆகியவற்றின் உற்பத்தித் திறன் கூடுகிறது'' என்கிறார். உற்பத்திக் காரணியை மேலும் மேலும் கூட்டுகிற போது அமைப்பில் முன்னேற்றம் ஏற்படுகிறது. இதனால், மற்றைய உற்பத்திக் காரணிகளும் திறமையாகச் செயற்படுகின்றன. கூட்டுகிற உற்பத்திக் காரணியின் ஆக்கத்திறன் வளர்கிறது. இதனை ஓர் எடுத்துக்காட்டின் மூலம் விளக்கலாம். பேனா (Pen) உற்பத்தி செய்யும் ஒரு நிறுவனம் உழைப்பையும் முதலையும் ஒரு குறிப்பிட்ட அளவில் தொடர்ந்து கூட்டுகிறதென்று வைத்துக் கொண்டால். கூட்டுகிற ஓர் அலகு உழைப்பு, முதலின் மதிப்பு உரு. 100 என்று கருதலாம். உற்பத்தி அளவுகள், அதாவது, ஆக்கத்திறன் விளைவுகள் எப்படி இருக்குமென்பதைக் கீழ்க்காணும் அட்டவணை 2-இன் மூலம் விளக்கலாம்.

உள்ளீடுகளின் அலகு ஒவ்வொன்றாகக் கூடுகிறது ஆனால், இறுதிநிலை உற்பத்தி 20 25, 33, 50, 100 என்று வளர்ந்து செல் நிலையில் கூடுகிறது. இதன் விளைவாக இறுதிநிலைச் சராசரிச் செலவு உரு. 5, 4, 3, 2, 1 என்று குறைவதைக் காணலாம். தொழிற்சாலைகளின் ஆக்கத்திறனில் ஏற்படும் இந்த வளர்ந்து

அட்டவணை –2

| உழைப்பு முதல் அலகுகள் | உழைப்பு முதல் மதிப்பு உரு. | மொத்த உற்பத்தி (பேனா) | இறுதிநிலை உற்பத்தி (பேனா) | இறுதிநிலை செலவு உரு. | ஓர் அலகின் செலவு உரு. |
|---|---|---|---|---|---|
| 1 | 100 | 20 | 20 | 100 | 5 |
| 2 | 200 | 45 | 25 | 100 | 4 |
| 3 | 300 | 78 | 33 | 100 | 3 |
| 4 | 400 | 128 | 50 | 100 | 2 |
| 5 | 500 | 228 | 100 | 100 | 1 |

செல் விளைவு விதியைக் கீழ்க்காணும் வரைபடத்தின் மூலமாகவும் விளக்கலாம்.




படம். 2.

படம் 2-இல் 'O' 'X' என்ற கிடைக்கோட்டில் உள்ளீடுகளும் 'O' 'Y' என்ற செங்குத்துக் கோட்டில் இறுதிநிலை ஆக்கத்திறனும் குறிக்கப் பட்டுள்ளன. இறுதிநிலை ஆக்கத்திறன் வளர்ந்து செல்வதை MR கோடு தெளிவாகக் காட்டுகிறது.

பொதுவாக, பெரிய அளவில் அமைகிற ஆலைத் தொழில்களில் வளர்ந்து செல் விளைவு விதி செயற்படுகிறது. தொழில்களில் பெரிய எந்திரங்களைப் போன்ற பகுபடாக் காரணிகளைப் (Indivisible Factors) பயன்படுத்துகின்றனர். அவற்றை மேலும் மேலும் பயன்படுத்தும்போது சராசரிச் செலவு குறைகிறது. எடுத்துக்காட்டாக, பேனாக்கள் செய்யும் ஓர் எந்திரத்தைக் கூறலாம். இதைப் பயன்படுத்தி ஒரு நாளில் 100 பேனாக்கள் செய்யலாம் என்று வைத்துக் கொண்டால் அதற்கு ஒரு நாளைக்குத் தேய்மானச் செலவு உரு. 10/-என்றால், 20 பேனாக்கள் செய்கிறபோது ஒரு பேனாவின் சராசரி எந்திரச் செலவு 50 பைசாவாக இருக்கும். 40 பேனாக்கள் செய்தால் 25 பைசாவாகக் குறையும். இப்படியே பேனாக்களின் உற்பத்தி கூடக் கூட இறுதிநிலைச் செலவு குறைகிறது.

உற்பத்திக் காரணிகளைக் கூட்டுகிறபொழுது, அவை இணைந்து செயற்படுவதன் காரணமாக அவற்றின் ஆக்கத்திறன் பெருகும். ஒரு தொழிற்சாலையில் 5 பேர் வேலை பார்ப்பதற்கும் 50 பேர் வேலை பார்ப்பதற்கும் வேறுபாடு உண்டு. மிகுதியாகத் தொழிலாளர்கள் வேலை செய்யும் போது வேலைப் பகுப்புப் போன்ற முறைகளைப் பின்பற்றி ஆக்கத்திறனைக் கூட்டலாம். ஒரு நிறுவனம் உற்பத்திக் காரணிகளைப் பெருக்கிப் பேரளவு உற்பத்தியில் ஈடுபடுகிறபொழுது அதற்குச் சிலவகையான அகச் சிக்கனங்கள் (Internal Economics) கிடைக்கின்றன. அகச் சிக்கனங்கள் என்பன ஒரு நிறுவனத்தின் உள்ளார்ந்த வளர்ச்சியால் பெறப்படுவன. ஒரு நிறுவனம் எவ்வளவு குறைந்த அளவில் உற்பத்தி செய்தாலும் எந்திரம், நிருவாகம் போன்றவற்றை ஓரளவு ஈடுபடுத்தியாக வேண்டும். எந்திரத்தையோ நிருவாகத்தையோ பங்கிட்டுப் பயன்படுத்த முடியாது. இப்படிப்பட்ட பகுபடாக் காரணிகளினால் உற்பத்தி கூடக்கூடச் செலவு குறையும். ஒரு பெரிய நிறுவனத்தின் அங்காடிச் செலவு பிற ஆராய்ச்சிகளுக்காகும் சராசரிச் செலவு ஆகியவை உற்பத்தி கூடக் கூடக் குறைந்து வரும். ஒரு நிறுவனம் வளரும் தொழிலைச் சார்ந்ததாக இருந்தால் அதற்குத் தொழில் வளர்ச்சியினால் சில நன்மைகள் கிடைக்கும். இவை புறச் சிக்கனங்கள் (External Economics) எனப்படுகின்றன. ஓரிடத்தில் ஒரே வகைத் தொழில் செய்யும் நிறுவனங்கள் இருப்பதால் சில பயன்கள் உண்டு. எடுத்துக்காட்டாகப் பயிற்சி பெற்ற தொழிலாளர்கள் எளிதில் கிடைக்கலாம். மேலும் அங்காடிச் செய்திகள் விரைவில் கிடைக்கலாம்.

தொழில்களில், சிறந்த தொழில்நுட்பத்தைப் பயன்படுத்துவதாலும் ஆக்கத்திறன் கூடுகிறது. உற்பத்தி முறையிலுள்ள குறைகளை நீக்க அறிவியல் வளர்ச்சி துணை செய்கிறது. புதிய கண்டுபிடிப்புகள் உற்பத்தியைப் பெருக்குகின்றன. தொழில்களில் இயற்கையின் செல்வாக்கு மிகவும் குறைவு. பொதுவாகப் பருவ மாறுதல்கள் வேளாண்மையைப் பாதிப்பதைப் போன்று தொழில்களைப் பாதிப்பதில்லை. ஆகவே, தொழில்களில் உற்பத்தி தொடர்ந்து நடைபெறுகிறது. தொழிலில் பயன்படும் காரணிகளை ஓரளவுக்குப் பெருக்கிக் கொண்டு போகலாம். எல்லா உற்பத்திக் காரணிகளும் தேவையான அளவில் கிடைத்துக் கொண்டிருக்கும் வரை வளர்ந்து செல் விளைவு விதி செயற்பட வாய்ப்புண்டு.

வளர்ந்து செல் விளைவு விதி தொடர்ந்து செயற்படுமென்று கூற முடியாது. உற்பத்திக் காரணிகளில் ஏதாவது ஒன்று பற்றாக்குறையாக இருந்தாலும் இந்நிலை மாறி இறுதிநிலை ஆக்கத்திறன் குறையும். மேலும் வளர்ந்து செல் விளைவு விதி எப்

பொழுது செயற்படத் தொடங்கி, எவ்வளவு காலத்திற்குச் செயற்படுமென்று கூற முடியாது. ஒரு நிலைக்குப்பின் குறைந்துசெல் விளைவு விதி எப்படியும் செயற்பட்டே தீரும். அதனை ஒத்திப்போடலாமே தவிர, முழுக்கத் தவிர்க்க முடியாது.

உற்பத்தி விளைவு விதி: உற்பத்திக் காரணிகளை ஒரே அளவில் கூட்டுகிறபொழுது ஆக்கத்திறனில் என்ன மாற்றம் ஏற்படும் என்பதை உற்பத்தி விளைவு விதி விளக்குகிறது. ஒரு பொருளுக்குரிய தேவை கூடுகிறபொழுது அதனை உற்பத்தி செய்யத் தொழில் நிறுவனம் முயலுகிறது. தான் ஈடுபடுத்துகிற இடம், எந்திரம், உழைப்பு ஆகியவற்றை ஒரே அளவில் அதிகரிப்பதாக அனுமானித்தால் உற்பத்தி விளைவு விதி (The Law of Returns to Scale) தொழில் முயல்வோரைத் தவிர மற்றைய உற்பத்திக் காரணிகளை மாற்றுவதாகக் கருதுகிறது. தொழிலாளர்கள் இருக்கிற கருவிகளைப் பயன்படுத்தி உழைப்பார்கள். எந்த வகையான தொழில்நுட்ப முன்னேற்றமும் இல்லாத நிலையில் உற்பத்தி நடைபெறுவதாகவும் நிறைவுப் போட்டி நில்வுவதாகவும் அனுமானித்து இவ்விதியை விளக்கலாம்.

ஒரு நிறுவனம் தொழிலாளியையும், முதலையும் ஒரே அளவில் கூட்டுகிறபொழுது உற்பத்தி எப்படி மாறுகிறதென்பதைக் கீழ்க்காணும் அட்டவணை (3) காட்டுகிறது.

உற்பத்தி விளைவு விதியும், விளைவு விதிகளைப் போன்றே அமைகிறது. விளைவு விதிகளில் நிலம் நிலையான காரணியாகவும் பிற மாறுகிற காரணிகளாகவும் எடுத்துக் கொள்ளப்பட்டன. உற்பத்தி விளைவு விதியில் தொழில் முயல்வோர் தவிர மற்றைய எல்லா உற்பத்திக் காரணிகளும் மாறுகின்றன.

சம அளவு உற்பத்தி வளைகோடுகள்: (Isoquants): பல்வேறு அளவுகளில் உழைப்பையும் முதலையும் இணைத்து உற்பத்தியில் ஈடுபடுத்தும்போது ஒரே அளவு உற்பத்தி கிடைப்பதைச் சம அளவு உற்பத்தி (Isoquant Isoproduct) எனலாம். இதனால் பெறப்படும் வளை கோட்டை உற்பத்திச் சமநோக்கு வளைகோடு (Production Indifference Curve) என்றும், மாறா உற்பத்தி வளைகோடு (Constant Product Curve) என்றும் கூறலாம். ஒரு நிறுவனம் உழைப்பையும் முதலையும் இணைத்துத் துணி உற்பத்தி செய்வதாக வைத்துக் கொண்டால் 100 மீட்டர் துணி உற்பத்தி செய்ய உழைப்பையும் முதலையும் எந்த அளவுகளில் இணைக்கலாம் என்பதை அட்டவணைக் (4) காட்டுகிறது.

முதல் இணைப்பில், 9 அலகு முதலையும் 5 அலகு உழைப்பையும் இணைத்து 100 அலகுத் துணி உற்பத்தி செய்யலாம். இரண்டாவது இணைப்பில் 6 அலகு முதலையும் 10 அலகு உழைப்பையும் பயன்

அட்டவணை 3

| உள்ளீடு அலகுகள் | உள்ளீடு அளவுகள் | மொத்த உற்பத்தி (நாற்காலிகள்) | இறுதிநிலை ஆக்கத் திறன் | |
|---|---|---|---|---|
| 1 | 1 தொழிலாளி +2 அலகு முதல் | 7 | 7 | வளர்ந்து செல் விளைவு |
| 2 | 2 ,, +4 ,, | 16 | 9 | |
| 3 | 3 ,, +6 ,, | 27 | 11 | |
| 4 | 4 ,, +8 ,, | 40 | 13 | மாறாத விளைவு |
| 5 | 5 ,, +10 ,, | 53 | 13 | |
| 6 | 6 ,, +12 ,, | 66 | 13 | |
| 7 | 7 ,, +14 ,, | 77 | 11 | குறைந்து செல் விளைவு |
| 8 | 8 ,, +16 ,, | 86 | 9 | |
| 9 | 9 ,, +18 ,, | 93 | 7 | |

அட்டவணை—4

| இணைப்பு | உள்ளீடு | | மொத்த உற்பத்தி (துணி அலகுகள்) |
|---|---|---|---|
| | முதல் | உழைப்பு | |
| 1 | 9 | 5 | 100 |
| 2 | 6 | 10 | 100 |
| 3 | 4 | 15 | 100 |
| 4 | 3 | 20 | 100 |

படுத்தி 100 அலகுத் துணி உருவாக்கலாம். உள்ளீடு களின் அளவில் உழைப்பின் பங்கு கூடக்கூட முதலின் பங்கு குறைகிறது, அதாவது, முதலுக்கு உழைப்பு பதிலீடாகப் (Substitute) பயன்படுத்தப்படுகிறது. மூன்றாவதாக, அதே அளவு துணியை உற்பத்தி செய்ய 4 அலகு முதலையும் 15 அலகு உழைப்பை யும் ஈடுபடுத்தலா மென்பதும், நான்காவதாக, 3 அலகு முதலையும் 20 அலகு உழைப்பையும் கொண்டு உற்பத்தி செய்யலாமென்பதும் காட்டப்பட்டுள்ளன.

இதேபோல், 200 அலகுத் துணியையும் 300 அலகுத் துணியையும் உற்பத்தி செய்ய உள்ளீடு களை எப்படிப் பயன்படுத்தலாமென்று பட்டியல் போடலாம். இந்தப் பட்டியல்களை வரைபடமாக வரைந்தால் சம உற்பத்தி வளைகோடுகள் எப்படி அமையும் என்பதையும் அறியலாம்.




படம் 3-இல் 'O' 'X' என்னும் கிடைக்கோட்டில் உழைப்பு அலகுகளும் 'O' 'Y' என்னும் செங்குத்துக் கோட்டில் முதல் அலகுகளும் குறிக்கப்பட்டுள்ளன. $IP_1$ (Iso-Product Curve) என்ற சம அளவு உற்பத்தி வளைகோடு 100 அலகுத் துணி உற்பத்தி செய்ய உழைப்பையும் முதலையும் எந்த அளவில் இணைக் கலாம் என்பதைக் காட்டுகிறது. A,B,C,D என் னும் புள்ளிகள் பட்டியலிலிருக்கும் முதலாம், இரண் டாம், மூன்றாம், நான்காம் இணைப்புகளின் அள வைக் காட்டுகின்றன. இதேபோல $IP_2$ வளைகோடு 200 அலகுகள் துணி உற்பத்தி செய்யத் தேவை யான இடுமானங்களின் இணைப்பையும், $IP_3$ வளை கோடு 300 அலகுகள் துணி உற்பத்தி செய்வதற்குத் தேவையான இணைப்புகளையும் சுட்டிக் காட்டுகின் றன. இங்கு, உள்ளீடுகளின் அளவுகள் வேறுபட் டாலும் உற்பத்தி சம அளவுகளில் இருப்பது குறிப் பிடத்தக்க ஒன்றாகும். ஆகவேதான் இவை சமஅளவு உற்பத்திக் கோடுகள் எனப்படுகின்றன.

சம அளவு உற்பத்தி வளை கோடுகள் உற்பத்தி யாளர் எப்படி வெவ்வேறு அளவுகளில் உற்பத்திக் காரணிகளை இணைத்துப் பயன்படுத்தி ஒரே அள வில் உற்பத்தியைப் பெற முடியுமென்பதை விளக்கு கின்றன. சம அளவு உற்பத்தி வளைகோட்டின் இயல்புகளைப் புரிந்து கொள்வது ஆக்கத்திறனை அறிந்துகொள்ளத் துணை செய்யும். சம அளவு உற் பத்தி வளைகோடு எப்பொழுதும் மேலிருந்து கீழாக உட்குவிந்து வளைந்து செல்லும் கோடாகவே இருக் கும். மேல்நோக்கிச் செல்லும் கோடாகவோ, படுக் கைக் கோடாகவோ, செங்குத்துக் கோடாகவோ இருக்க முடியாது. இந்நிலையில் ஓர் உற்பத்திக் காரணியின் அளவு கூடுகிற பொழுது அடுத்த உள்ளீட்டின் அளவு குறைய வேண்டும். அப்பொழுது தான் உற்பத்தி சம அளவில் இருக்க முடியும்.

வரைபடம் 4-இல் வலப்புறமாக மேலுள்ள சம அளவு உற்பத்தி வளைகோடு அதிக உற்பத்தியைக் காட்டுகிறது. IP வளைகோட்டைவிட $IP_1$ வளை

கோட்டில் உற்பத்தி அளவு அதிகமாக இருப்பதைப் பார்க்கலாம். மேல்நிலை உற்பத்தியில் அதிக அளவில் உழைப்பையும் முதலையும் இணைப்பதே இதற்குக் காரணமாகும்.

எந்த உற்பத்தியாளரும் உற்பத்தியில் ஈடுபடு கின்றபொழுது உயர்நிலை ஆதாயத்தைப் பெறுவ தையே தம் தலையாய நோக்கமாகக் கொள்வர். நிறைவுப் போட்டி நிலவும் அங்காடிச் சூழலில் அவ ரால் அங்காடியிலிருக்கும் விலையை மாற்ற இய லாது. அப்பொழுது அவர் ஆதாயத்தின் அளவைக் கூட்ட வேண்டுமானால் உற்பத்திச் செலவைக் குறைப்




படம் - 4

பதிலும் உற்பத்தியை மிகுதிப்படுத்துவதிலும் தனிக் கவனம் செலுத்த வேண்டியிருக்கும். வளர்ந்து செல் விளைவு விதி செயற்படுகிறபொழுது, உற்பத்தி கூடக் கூட உற்பத்திச் செலவு குறையும். ஆதலால், உற்பத்தியாளர் அகச் சிக்கனங்களையும் புறச்சிக்கனங் களையும் பெறுகிற வகையில் நிறுவனத்தின் நிலையை விரிவாக்கிக் கொண்டு செல்வார். குறைந்து செல்விளைவு விதி செயற்படுவதைத் தள்ளிப் போட, வேண்டிய அனைத்தையும் செய்வார். வேலைப்பகுப்பு, தொழில்நுட்ப முறை, நிருவாகத் தைச் செம்மைப்படுத்தல் ஆகியவற்றின் மூலம் உற் பத்தித் திறனைக் கூட்ட முடியும். சம அளவு உற் பத்திக் கோடுகள் ஒரே அளவு பொருள்களை உற் பத்தி செய்ய எந்த அளவில் உற்பத்திக் காரணி களை இணைக்கலாமென்பதைக் காட்டுகின்றன.

உற்பத்தியாளர் உழைப்புக்கும் முதலுக்கும் ஆகும் செலவைக் கணக்கிட்டுப் பார்ப்பார். இரு உற் பத்திக் காரணிகளில் எது குறைந்த விலையில் கிடைக்குமோ அதை மிகுதியாகப் பயன்படுத்தி உற்பத்திச் செலவைக் குறைக்க முயலுவார்.

ஆக்கத்திறன் தொடர்பான விளக்கம் நாட்டின் பொருளாதாரத்தில் எவ்வகையில் உற்பத்தியைப் பெருக்கி மக்களின் நலனைக் கூட்ட முடியும் என்பதை எடுத்தியம்புகிறது. உற்பத்திக் காரணிகளைச் சரி யான முறையில் இணைத்துத் திட்டமிட்டபடி உற் பத்தியைப் பெருக்க முடியும், இவ்வாறு உற்பத்தி யைக் கூட்ட முடியுமென்று காட்டுவதையே உற்பத்தி வாய்ப்பு (Production Possibility) எனலாம்.




படம் - 5

படம் 5-இல் 'O' 'X' என்னும் கிடைக்கோட்டில் உணவையும், 'O' 'Y' என்னும் செங்குத்துக் கோட் டில் துணியையும் அளித்தால் 'PP' வளைகோடு மொத்த உற்பத்தி வாய்ப்பினைக் குறிக்கிறது. இப் பொழுது உற்பத்தி நடைபெறுவதை 'K' என்ற புள்ளி காட்டுகிறது. இது மிகக் குறைந்த உற்பத்தி நிலையாகும். இந்நிலையிலிருந்து மாறி உற்பத்தி வாய்ப்புக் கோட்டிற்குச் சென்றால் 'A' முதல் 'E' வரை அதிக அளவு உற்பத்தி கிடைப்பதைக் காணலாம். குறிப்பாக, B,D புள்ளிகளுக்கிடையில் உற்பத்தி அமையுமானால், துணி, உணவு ஆகிய இரண்டின் உற்பத்தியும் மிகுதியாக இருக்கும்.

பொருளியலின் அடிப்படைக் கருத்துகளில் ஒன்றாக ஆக்கத்திறன் அமைகிறது. இதனை உணர்ந்து செயற்பட்டால் நாட்டின் உற்பத்தி, வேலை வாய்ப்பு, வருவாய் ஆகியவை உயர்நிலையில் இருக்குமென்பது தெளிவு. மேலும், நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தில் ஆக்கத்திறன் மிகவும் இன்றியமையாத பங்கு வகிக்கிறது என்பது வரலாறு காட்டும் உண்மை. எடுத்துக்காட்டாக, சப்பானின் மிக விரைவான பொருளாதார வளர்ச்சிக்கான காரணங்களுள் ஆக்கத்திறனில் தோன்றிய வியத்தகு முன்னேற்றமும் ஒரு காரணமாகும். இந்தியப் பொருளாதாரத்தின் திட்டமிட்ட வளர்ச்சிக் காலத்தில் உழைப்பு, மற்றும் பிற உற்பத்திக் காரணிகளின் ஆக்கத்திறனில் ஏற்பட்டிருக்கும் முன்னேற்றம் போதுமான அளவில் இல்லை என்பதால் தான் இந்தியாவின் ஏழாம் திட்டத்தில் (1985-90) 'அடைய வேண்டியவை' என்ற பட்டியலில் 'ஆக்கத்திறனை மிகையாக்கல்' என்பதும் சேர்க்கப்பட்டிருக்கிறது. வறுமையைப் போக்க, வேலைவாய்ப்பினை அதிகரிக்க, வட்டார ஏற்றத் தாழ்வுகளைத் தவிர்க்க, முன்னரே உள்ள சமூகப் பொருளாதார வசதிகளை முழு அளவில் பயன்படுத்திக் கொள்ள, சுருங்கக் கூறின் சமுதாய நன்மையுடன் கூடிய பொருளாதார மலர்ச்சியைப் பெற, ஆக்கத்திறனில் வியத்தகு மாற்றங்கள் ஏற்படவேண்டியது இன்றியமையாததாகும்.

மா.பா.கு.

துணை நூல்கள்:


Alfred. W. Stonier & Douglas C. Hague, A Text Book of Economics Theory, Longmans Green & Co., London, 1957.

Frederic Benham, Economics – A General Introduction, Sir Isaac Pitman and Sons, London, 1955.

Paul A. Samuelson, Economics – An Introductory Analysis, Mc Graw-Hill Book Company, New York, 1955.

George Leland Bach, Economics, Prentice-Hall of India Private Limited, New Delhi. 1977.


**ஆக்கநிலையிருத்தம்:** கற்றல் இயங்கு முறைகளின் அடிப்படையாக அமையும் துலங்கல் முறை 'ஆக்கநிலையிருத்தம்' எனப்படும். இது 'இயல்பு ஆக்கநிலையிருத்தம்' (Classical Conditioning) என்றும், 'தானியங்கு ஆக்க நிலையிருத்தம்' (Operant Conditioning) என்றும் இரு வகைப்படும். இயல்பு ஆக்கநிலையிருத்தம் என்பதனை முதன்முதலாக உளவியல் துறைக்கு அறிமுகப்படுத்தியவர் 'ஐவான் பாவ்லாவு (Ivan Pavlov-கி.பி. 1849-1936) என்னும் சோவியத்து நாட்டு உளவியல் அறிஞராவார். இவர் விலங்குகளைக் கொண்டு செய்த சோதனைகள் மூலம் துலங்கல்சார் நடத்தை பற்றிய பல ஆய்வு முடிவுகளை வெளியிட்டார்.

பாவ்லாவு தம் ஆய்வுச் செய்முறையினை ஆக்க நிலையிருத்தம் என்று குறிப்பிட்டார். இயல்பு ஆக்க நிலையிருத்தத்திற்கு இரு தூண்டல்களின் இயைபு காரணமாக இருக்கிறது. இவ்விரு தூண்டல்களுள் ஒன்றினை ஆக்கநிலையிருத்தம் பெறாத் தூண்டல் (Unconditioned Stimulus) எனவும், மற்றொன்றினை ஆக்கநிலையிருத்தத் தூண்டல்(Conditioned Stimulus) எனவும் கொள்ளலாம். ஆக்கநிலையிருத்தம் பெறாத் தூண்டல், ஆக்கநிலையிருத்தம் பெறாத் துலங்கலுக்குக் (Response) காரணமாக இருக்கிறது. சுருங்கக் கூறின், ஆக்கநிலையிருத்தத் தூண்டல் ஒன்றும் ஆக்கநிலை பெறாத் தூண்டல் ஒன்றும் பல முறை இயைபு கொண்டால், இத்தகைய தூண்டல்கள் நிகழ்வதற்கு முன்பிருந்த துலங்கல் நிலை ஏற்படும். இதுவே பாவ்லாவின் சோதனை முடிவு ஆகும். இதனைப் பாவ்லாவு கீழ்க்காணும் சோதனை மூலம் விளக்கினார்.



பாவ்லாவின் சோதனை

பாவ்லாவின் சோதனைத் திட்டத்தின்படி, பசியோடிருக்கும் ஒரு நாய் சோதனைக் கூடத்தின் ஒரு மேசையின் மீது நிறுத்தப்பட்டது. அவ்வறை ஒலிகளினின்றும் கட்டுப்படுத்தப்பட்டிருந்தது. நாயின் தாடையின் கீழ் ஒரு சிறு அறுவைசிகிச்சை செய்யப்பட்டுச் சோதனைக் குழாய் ஒன்று, உமிழ்நீர்ச் சுரப்பிகளுள் ஒன்றுடன் பொருத்தப்பட்டது. இந்நிலையில் நாயின் வாயில் உமிழ்நீர் சுரக்கும்

போதெல்லாம், சுரக்கிற உமிழ்நீர் குழாய் வழியாகச் சென்று ஒரு கண்ணாடிக் குடுவையை அடைந்தது. இதன் மூலம் சுரக்கிற உமிழ்நீர் அளவிடப்பட்டது.

மணியொலி ஒரு தூண்டலாகப் பயன்படுத்தப்பட்டது. இதனை ஒட்டி நாய் துலங்கவில்லை. அதாவது, நாயின் வாயில் உமிழ்நீர் சுரக்கவில்லை. அடுத்த முறை, நாய்க்குப் பழக்கப்பட்ட உணவுப் பொருள் அதன்முன் வைக்கப்பட்டது. இப்பொழுது நாயின் வாயிலிருந்து உமிழ்நீர் சுரந்தது. இவ்வாறு உணவுப்பொருளுக்கு நாயிடம் துலங்கல் காணப்பட்டது; உணவுத்தூண்டல் துலங்கலை உண்டாக்கிற்று. ஆனால், மணியொலியாகிய தூண்டல் எந்த விளைவையும் ஏற்படுத்தவில்லை.

சோதனையின் இரண்டாம் கட்டத்தில் மணியொலியையும் உணவையும் இணைத்து இணைத்துப் பல முறை நாய்க்கு உணவளிக்கப்பட்டது. இதனையடுத்து நாய்க்கு உணவு அளிப்பதற்குச் சற்று நேரத்திற்கு முன்பே மணியொலி எழுப்பப்பட்டது. மணியொலி எழுப்பப்பட்டவுடனே துலங்கல் காணப்பட்டது. அதாவது முதல்கட்டத்தில் நாயின் வாயில் உமிழ்நீரைச் சுரக்க வைக்க முடியாத மணியொலி, இரண்டாம் கட்டத்தில் தூண்டலாக இருந்து உமிழ்நீரைச் சுரக்க வைத்தது. இக்கட்டத்தில் மணியொலியானது உணவு வழங்கப்படுவதற்கான முன் அறிகுறி என்று நாய் கற்றுக்கொண்டு விட்டது. முன்பு பல முறை மணியொலியோடு உணவை இணைத்துத் தரப்பட்டதால் நாயின் நடத்தையில் இந்த மாற்றம் ஏற்பட்டது. பிறகு உணவு அளிக்கப்படாமல் மணியொலியை மட்டும் எழுப்பினாலும் நாய் கற்ற பட்டறிவைக் கொண்டு மணியொலி உணவின் முன் அறிகுறி என்று அறிந்தது. இவ்வாறு உண்மையான, தூண்டலான உணவுக்குத் துலங்குவது போன்றே உணவல்லாத வேறொரு புதிய தூண்டலுக்கும் துலங்குவதற்கு நாய் ஆயத்தம் செய்யப்பட்டது. இச்செயல்முறையே ஆக்கநிலையிருத்தம் எனப்படுகிறது.

இச்சோதனையின் முடிவைக் கொண்டு உளவியலாரும், உடற்கூற்றியலாரும் பலவகையான விலங்குகளிடையேயும், மனிதர்களிடையேயும் ஆக்கநிலையிருத்தத் துலங்கல் பற்றி எண்ணற்ற ஆராய்ச்சிகள் நடத்தியுள்ளனர்.

ஆக்கநிலையிருத்தச் செயல்முறையினைப் பின்வரும் வரைகட்டம் மூலம் விளக்கலாம்:

| ஆக்கநிலையிருத்தத்திற்கு முன்பு | | ஆக்கநிலையிருத்தத்தின் போது | | ஆக்கநிலையிருத்தத்திற்குப் பின்பு | |
|---|---|---|---|---|---|
| தூண்டல் | துலங்கல் | தூண்டல் | துலங்கல் | தூண்டல் | துலங்கல் |
| ஆக்கநிலையிருத்தத் தூண்டல் (CS) மணியொலி | துலங்கல் இல்லை (உமிழ்நீர் சுரக்கவில்லை) | ஆக்கநிலையிருத்தத் தூண்டல் (CS) மணியொலி | ஆக்கநிலையிருத்தம் பெறாத துலங்கல் (UCR) உமிழ் நீர் சுரத்தல் | ஆக்கநிலையிருத்தத் தூண்டல் (CS) மணியொலி | ஆக்கநிலையிருத்தம் பெற்ற துலங்கல் (CR) (உமிழ் நீர் சுரத்தல்) |
| ஆக்கநிலையிருத்தம் பெறாத தூண்டல் (உணவு) (UCS) | ஆக்கநிலையிருத்தம் பெறாத துலங்கல் (UCR) உமிழ்நீர் சுரத்தல் | ஆக்கநிலையிருத்தம் பெறாத் தூண்டல் (UCS) உணவு | | | |

ஆக்கநிலையிருத்தம் பெறாத எந்த ஒரு தூண்டலின் விளைவாக நிகழும் ஆக்கநிலையிருத்தம் பெறாத துலங்கலையும் ஆக்கநிலையிருத்தம் செய்ய முடியும். ஆக்கநிலையிருத்தம் செய்வது ஆக்கநிலை யிருத்தம் பெறும் தூண்டலையும் (மணியொலியை யும்) ஆக்க நிலையிருத்தம் பெறாத தூண்டலையும் (உணவையும்) நெருக்கமாக இணைப்பதைப் பொறுத் திருக்கிறது. இந்த இரண்டும் பொருத்தமில்லாத முறையிலும் மனம் போனபோக்கிலும் அளிக்கப் படுமானால், ஆக்கநிலையிருத்தம் நடைபெறாது.

பிறந்தது முதல் மனிதர்கள் கற்பதற்குத் தொடங்குகின்றனர். குழந்தைகளும் சிறுவர்களும் ஒரு பேரொலியைக் கேட்கும்பொழுது தங்கள் கண் களை இமைக்கக் கற்றுக் கொள்ளுகின்றனர். வயது வந்தவர்களும் இது போன்ற ஆக்கநிலையிருத்தத்தின் மூலம் கற்கின்றனர். கண்இமைகளை ஆக்கநிலை யிருத்தம் செய்யும் சோதனை, நாய்களின்மீதும் குரங்குகளின்மீதும் கல்லூரி மாணவர்களின்மீதும் ஆன்ரெப்பு (Anrep) என்பவரால் மிகவும் வெற்றியுடன் செய்து காட்டப்பட்டது. ஆதலின், ஆக்கநிலை யிருத்தச் செயல்முறை இந்த மூன்று வகையான உயிர்களிடமும் ஒரே தன்மையாகத்தான் நடை பெறுகிறது.

உயிரியின் நடத்தையில் இயல் ஆக்கநிலை யிருத்தம், ஒரு நிலையான மாற்றத்தை ஏற்படுத்துவ தில்லை. ஆக்கநிலையிருத்தம் செய்யப்பட்ட தூண் டல் பல முறை தனித்துத் தோன்றுகிறபோது கற்ற ஓர் உயிரி, ஆக்கநிலையிருத்தம் செய்யப் படாத தூண்டலோடு அதைத் தொடர்புபடுத்தத் தவறி விடுகிறது. அதனால், உமிழ்நீர் சுரத்தலாகிய துலங்கல் நிறுத்தப்பட்டு மங்குதல் நடைபெறுகிறது.

ஆனால், ஆக்கநிலையிருத்தம் செய்யப்பட்ட துலங்கல் ஒருமுறை அகற்றப்பட்டபொழுது என்ன நிகழ்கிறது? அது எப்பொழுதுமே தோன்றாத அளவுக்கு மங்கிப்போய்விடுகிறதா? என்பதைப் பாவ்லாவு அவரது சோதனை நாயிடம் கண்டறிந் தார். நாய் கற்ற செயல்முறை மங்கி மறைந்து போவதை ஏற்றுக் கொண்டார். சில நாட்களுக்குப் பிறகு அதே நாய் அவருடைய சோதனைச் சாலைக்குக் கொண்டுவரப்பட்டது. அதே முறையைப் பாவ்லாவு திருப்பிச் செய்தார். மணி யொலி யைக் கேட்ட அளவில் நாயின் வாயில் உமிழ் நீர் சுரந்தது. ஒரு முறை கற்ற துலங்கல் மங்கி மறைந்து போன பிறகு, எந்தவிதமான மறு பயிற்சியுமின்றி மறுபடியும் தோன்றிற்று. இச்செயல் முறையைப் பாவ்லாவு இயல்பாக மீளுதல் என்று கூறுகிறார். இந்தத் துலங்கல் மங்குதலுக்கு முன்பு தோன்றியதைப் போன்று அவ்வளவு வலிமையுள்ள தாக இல்லாவிட்டாலும், இயல்பாக மீண்டும் நிகழ்தல், காட்டுவது என்னவென்றால், மங்குதலின் போது கற்றல் நிலையாக இழக்கப் பட்டுவிடவில்லை என்பதாகும். அந்த விலங்கு, தான் முதலில் கற்றவையனைத்தையும் உண்மையிலேயே மங்கி மறைந்து போகும்படி செய்து விட்டதா? அவ்வாறு நடைபெற்றிருந்தால் இயல்பாக மீண்டும் நிகழ்தல் ஏற்பட்டிருக்காது.

குறிப்பிட்ட துலங்கலைச் செய்வதில் அவ்விலங்கு தடையொன்றை வளர்த்துக் கொண்டது. அவ் விலங்கு, கற்றலினால் ஒரு புறமும் தடையினால் மறுபுறமும் இழுக்கப்பட்டது. கற்றலின் இழுப்பு தடையின் இழுப்பைவிட வலிமையானதாக இருந்த தால், கற்றல் துலங்கல் நீடித்தது. தடையின் வலிமை கற்றலின் வலிமைக்குச் சமமாக இருந்தால் அவ்விலங்கு ஆக்கநிலையிருத்தத் துலங்கலைச் செய்வதில்லை. மங்குதல் செயல்முறைதான் நடை பெறும். ஆனால், காலம் செல்லச் செல்லத் தடைச் செயல்முறை வலிமையிழந்து விடுகிறது. இயல்பாக மீளுதல் நடைபெறுகிறது. ஆக்கநிலையிருத்தத் துலங்கல் மறுபடியும் ஏற்படுகிறது.

இயல்பு ஆக்கநிலையிருத்தத்தில் ஒரு துலங் கலை அப்பொழுதைக்குத் தடுத்து நிறுத்துகிற இயங்குமுறை, தடை இயங்கு முறை (Inhibition) எனப்படும். கற்றல் சூழ்நிலையில் திடீரென்று ஏற் படும் ஒரு மாற்றமும், ஆக்கநிலையிருத்தம் பெற்ற ஒரு துலங்கலைத் தடை செய்யலாம். ஒருமுறை, பாவ்லாவின் சோதனைக் கூடத்தில் ஒருசோதனை நடந்து கொண்டிருந்தபோது பாவ்லாவு திடீ ரென்று அங்குச் சென்றார். இந்த நிகழ்ச்சியானது, நாய் வழக்கமாக ஈடுபடும் செயலுக்கு இடை யூறாக இருந்தது. அப்பொழுது, அதை, பாவ் லாவு புறவெளித்தடை (External Inhibition) என்று குறிப்பிட்டார். அதாவது, வழக்கத்திற்கு மாறாக அந்த அறையில் ஏற்பட்ட ஒரு மனி தனின் தோற்றம் இத்தடையை ஏற்படுத்திற்று. ஆனால், இழக்கப்பட்ட துலங்கலை மீண்டும் ஆக்க நிலையிருத்தம் பெறாத தூண்டலோடும் (உணவு) ஆக்கநிலையிருத்தம் பெற்ற தூண்டலோடும் (மணி யொலி) இணைத்து அளிப்பதன் மூலம் மறுபடியும் அதைப்பெற முடியும். இச்செயல்முறை வலுப்படுத் தல் (Reinforcement) என்று சொல்லப்படுகிறது. இது ஆக்கநிலையிருத்தம் பெற்ற துலங்கலை வலிமையுறச் செய்யும் ஒரு செயல் முறையாகும்.

ஆக்கநிலையிருத்தம் பெற்ற துலங்கல் பல பண் புக் கூறுகளைக் கொண்டிருக்கிறது. அவற்றுள் முக் கியமானவை என்று கருதப்படுபவை, பொதுமை

யாக்கல் (Generalization), வேறுபடுத்திக்காணல் (Discrimination), மேல்நிலை ஆக்கநிலையிருத்தம் (Higher Order Conditioning) என்பன ஆகும்.

குறிப்பிட்ட சில பொருள்கள் அல்லது நிகழ்ச்சிகள், வேறு சில பொருள்களை அல்லது நிகழ்ச்சிகளை ஒத்திருக்கலாம். அப்படி ஒத்திருத்தலின் பண்பு மிகவும் நெருக்கமாக இருந்தால், கற்றல் இயங்குமுறை உயிரியிடம் ஏற்படுகிறது. ஆக்க நிலையிருத்தம் செய்யப்பட்ட துலங்கலைப் பொறுத்த வரையில் ஒரு குறிப்பிட்ட தூண்டலுக்காக எழுந்த ஒரு துலங்கல், அத்தூண்டலுடன் ஏதோ ஓர் ஒற்றுமையைக் கொண்டுள்ள மற்றொரு தூண்டலாலும் எழுப்பப்படலாம். ஆக்கநிலையிருத்தம் பெற்ற ஒரு துலங்கல் இவ்வாறு மற்றொரு தூண்டலுக்கும் விரிந்து செல்லுதல் தூண்டல் பொதுமையாக்கல் எனக் கூறப்படுகிறது. மணியொலிக்கு ஆக்கநிலையிருத்தம் செய்யப்பட்டு உமிழ்நீர் சுரக்க வைத்த பாவ்லாவின் நாய், இரீங்கார ஒலிக்கும் "மட்ரோனம்" ஒலிக்கும் உமிழ்நீர் சுரக்கிறது. இவ்வாறு மணியொலிக்கு ஆக்கநிலையிருத்தம் செய்யப்பட்ட துலங்கல், மற்ற ஒலி வகைகளுக்கும் பொதுமையாக்கப்படுகிறது. இதையே மற்றச் சூழ்நிலைகளுக்கும் பொதுமையாக்கிக் காட்டலாம். மோட்டார் வாகனத்தின் விபத்துக்கு உள்ளாகி அடிபட்ட ஒருவன், பேருந்துவண்டி, புகைவண்டி, சரக்கு உந்து, விமானம் போன்ற வாகனங்களுக்கெல்லாம் கூட ஆக்கநிலையிருத்தம் செய்யப்பட்ட அச்சமாகிய துலங்கலை வளர்த்துக் கொள்கிறான். இவ்வகையான பொதுமையாக்கல் எல்லா உயிரிகளுக்கும் இயற்கையானதாகும்.

கற்றல் செயல்முறையில், தூண்டல் விளைவுகளின் பரப்பைக் குறுகலாக்க வேண்டுமாயின் செயலில் ஒருவர் மிக்க முயற்சியை மேற்கொள்ள வேண்டும். இவ்வாறு செய்வதன் மூலம், உயிரி பொதுமையாக்குகிற செய்வினைத் தடுத்து, ஒரு குறிப்பிட்ட தூண்டலுக்கு எதிர்வினை செய்யும் விளைவை ஏற்படுத்துகிறது. இச்செயல்முறை வேறுபடுத்தும் பயிற்சி என்று கூறப்படும். இதனால் உயிரி, பல தூண்டல்களிடையே ஒன்றை வேறுபடுத்தியறிந்து அதற்கு மட்டும் துலங்குகிறது. பொதுவாகப் பிரித்தறிதல் பயிற்சி மக்களுடைய அன்றாட வாழ்க்கையில் நன்றாகச் செயற்பட்டு வருகிறது. கல்லூரி மணி யொலியைப் புகைவண்டி நிலைய மணியொலியிலிருந்தும், கோயில், நெருப்பணைக்கும் படை ஆகியவற்றின் மணியொலியிலிருந்தும், இன்னும் வேறு பல மணியொலிகளிலிருந்தும் மக்கள் வேறுபடுத்தி அறிகின்றனர். எனவே, வேறுபடுத்திக் காணல் கடந்த காலக் கற்றலினால் தொடர்பு படுத்தப்படுகிறது.

இயல்பு ஆக்கநிலையிருத்தத்தின் மற்றொரு சிறந்த பண்புக்கூறு மேல்நிலை ஆக்கநிலையிருத்தம் ஆகும். அதாவது ஆக்கநிலையிருத்தம் செய்யப்படாத ஒரு தூண்டலுக்கு ஆக்கநிலையிருத்தம் செய்யப்பட்டு நிலைநாட்டப்பட்ட ஒரு துலங்கல் புதியதொரு துலங்கலுக்கும் ஆக்கநிலையிருத்தம் செய்யப்படுகிறது. எடுத்துக் காட்டாக, மணியொலியைக் கேட்ட அளவில் நாய் உமிழ்நீர் சுரக்கக் கற்றுக் கொள்கிறது. ஆனால், ஒரு கருப்புச் சதுரத்திற்காகவும் நாய் உமிழ்நீர்சுரக்க வேண்டும் என்று பாவ்லாவு விரும்பினார். எனவே, நாய்க்கு உணவளிக்கும்போது ஒரு கருப்புச் சதுரத்தையும் அதற்குக் காட்டினார். அடுத்தமுறை உணவை நாய்க்கு அளிக்காமல் மணியொலியை எழுப்பி, மணியொலியுடன் கருப்புச் சதுரத்தையும் காட்டினார். இதில் கருப்புச் சதுரம் உணவோடு தொடர்புபடுத்தி முதலில் அளிக்கப்பட்டதால், கருப்புச் சதுரத்தைக் கண்டதும் நாய்க்கு உமிழ்நீர் சுரந்தது. இங்குக் கருப்புச் சதுரம் ஓர் ஆக்கநிலையிருத்தம் செய்யப்பட்ட தூண்டலாகப் பயன்படுத்தப்பட்டது. இத்தகைய கற்றல், முன்பு கற்ற பட்டறிவின் அடிப்படையில் ஏற்படுகிறது. இச்செயல் முறையைப் பாவ்லாவு மேல்நிலை ஆக்கநிலையிருத்தம் என்று கூறுகிறார். ஏனென்றால் நாய் இயல்பூக்கமாகத் (Instinctively) துலங்கும் நிலையைக் கடந்த கற்ற பட்டறிவிற்குத் துலங்கக் கற்றுக் கொண்டதால், இச்செயல்முறை மேல்நிலைக் கற்றலாகவும் கருதப்படுகிறது.

இயல்பு ஆக்கநிலையிருத்தம், பொதுவாக ஒரு துலங்கலை ஏற்படுத்த முடியாத ஏதோ ஒரு தூண்டலுக்குத் துலங்கக் கற்றுக் கொள்வதை உள்ளடக்கியதாக இருக்கிறது. அதாவது, ஒரு செயற்கையான தூண்டலினால் ஒரு இயற்கையான தூண்டல் ஏற்படுத்தப்படுகிறது. மணியொலிக்கு உமிழ்நீர் சுரக்க நாய் கற்றுக் கொள்கிறது. உமிழ்நீர் சுரக்க வைக்கும் நடத்தை வெளிப்புற நிகழ்ச்சிகளால் பெறப்படுகிறது. மற்றொரு வகையான ஆக்கநிலையிருத்தமும் உண்டு. அது தானியங்கு ஆக்கநிலையிருத்தம் (Operent Conditioning) அல்லது கருவிசார் ஆக்கநிலையிருத்தம் (Instrumental Conditioning) எனக் கூறப்படுகிறது.

இயல்பு ஆக்கநிலையிருத்தத்தில் சூழ்நிலையில் நிகழ்ச்சிகள் எதிர்பார்க்கப்படுகின்றன. ஆனால், தானியங்கு ஆக்கநிலையிருத்தத்தில் நிகழ்ச்சிகள் ஏற்படுத்தப்படுகின்றன அல்லது உயிரி அதனுடைய

சூழ்நிலையில் மாறுதல்களைச் செய்கிறது. மக்களுடைய பெரும்பாலான நடத்தைகள் தாமாக வெளிப்படுவனவாகவும் விருப்பமானவையாகவும் உள்ளன. நடத்தையானது வெளிப்புற நிகழ்ச்சிகளால் திடீரென்று தூண்டப்படுவதில்லை. எடுத்துக்காட்டாக: ஓர் இளம்குழந்தை தன்னுடைய அழுகையொலியை எழுப்பித் தன் தாயாரின் கவனத்தை இழுக்கிறது, ஒரு வீட்டு நாய் குரைத்துத் தன் உடைமையாளரை எழுப்புகிறது. அதிகாரி, தன் அறையிலுள்ள அழைப்பு மணியை அடித்துத் தன்னுடைய வேலையாளை அழைக்கிறார். புகைவண்டி நிலைய அதிகாரி, கைக்காட்டியை உயர்த்திப் புகைவண்டி வருவதைப் பயணிகளுக்குத் தெரிவிக்கிறார். இவ்வகையான நடவடிக்கைகளெல்லாம் தானியங்கு நடத்தைகளாகும். சூழ்நிலையைக் கையாளுவதற்கு இந்த நடவடிக்கைகள் உருவாக்கப்படுகின்றன. இச்செயல்கள், தேவைப்பட்டதொன்றை ஏதோ ஒரு வழியில் பெறுவதற்குக் கருவியாகச் செய்யப்படுகின்றன. மகிழ்ச்சி தரத்தக்க தொன்றைப் பெறவோ துன்பம் தரும் ஒன்றைத் தவிர்க்கவோ இவை கருவிகளாக அமைகின்றன. இவை தானியங்கு ஆக்கநிலையிருத்தத்தின் மூலமாக நடைபெறுகின்றன.

விரும்பப்பட்ட தன் விருப்பமான நடத்தையை வரவேற்பதும் தவறான துலங்கல்களைப் புறக்கணிப்பதும் அல்லது தண்டிப்பதுமான ஒருவகைக் கற்றல் வகை தானியங்கு ஆக்கநிலையிருத்தம் எனப்படும். இந்த வகையான கற்றல், விலங்குகளிடமும் மனிதர்களிடமும் நடைபெறுகிறது. களம்சார் ஆக்கநிலையிருத்தம், உளவியல் ஆராய்ச்சியில் அண்மைக்காலத்தில் சேர்க்கப்பட்டதாகும். ஆனால், விலங்குகளைப் பாதுகாக்கிறவர்கள், பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே களம்சார் ஆக்கநிலையிருத்தத்தைப் பயன்படுத்தி வந்திருக்கின்றனர். பூனைகளையும் நாய்களையும் வளர்ப்பவர்கள், குரங்குகள், குதிரைகள், யானைகள், இன்னும் மற்ற விலங்குகளையும் பயிற்றுவிக்கின்றவர்கள் விலங்குகளின் நடத்தையில் கண்ட புதிய தந்திரங்களைக் கையாளுகின்றனர். வித்தை விளையாட்டுக் கூடாரங்களில் விலங்குகளிடம் விளையாட்டுக் காட்டுகிறவர், ஒரு கையில் சாட்டையுடனும் மற்றொரு கையில் ஓர் இரும்புத் தடியுடனும் தோன்றுகிறார். உடனே சிங்கம், புலி போன்ற விலங்குகள் அவைகளுக்கென்று போடப்பட்டுள்ள இருப்பிடங்களில் சென்று உட்காரும்படி ஆக்கநிலையிருத்தம் செய்யப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட விலங்கு அதற்கிடப்பட்ட பணியை வெற்றியாகச் செய்து முடித்ததும் ஒரு பாராட்டைப்பெறுகிறது. தவறாகச் செய்தாலோ செய்யத் தவறினாலோ சாட்டையால் அடித்தும் இரும்புத் தடியால் குத்தியும் பழக்குநர் தண்டனை தருகிறார். மனிதராக இருப்பினும் விலங்காக இருப்பினும் களம்சார் ஆக்கநிலையிருத்தத்தில் சரியான துலங்கல் வலிமையூட்டப்பட்டுத் திருப்பிச் செய்யப்படுகிறது. இவ்வாறு,அது கற்றல் செயல்முறை யாகிறது.

உளவியல் பரிசோதனைக் கூடங்களில் நடைபெறும் களம்சார் ஆக்கநிலையிருத்தச் சோதனைகளில் பல்வேறு வகையான கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன. தானியங்கு ஆக்கநிலையிருத்தச் சோதனைக்கு மிகுதியாகப் பயன்படுத்தப்படும் கருவி இசுகின்னர் பெட்டியாகும் (Skinner Box). இப்பெட்டியைக் கொண்டு சோதனைகள் நடத்திய இசுகின்னர் தானியங்கு ஆக்க நிலையிருத்தத்திற்கான பல நுணுக்க முறைகளை வகுத்தளித்துள்ளார். தானியங்கு ஆக்கநிலையிருத்தத்தின் அடிப்படையான கருதுகோள் வலுப்படுத்தியாகும்.

ஓர் உயிரியிடம் ஒருவர் விரும்பிய துலங்கலைப் பல்வேறு வழிகளில் பெறமுடியும். தானியங்கு ஆக்கநிலையிருத்தத்தில் விரும்பிய துலங்கல் சரியாகத் திருப்பிச் செய்யப்படவேண்டும் என்பதும் சிறந்ததாகும். விலங்குகளிடமும் இம்முறையைப் பயன்படுத்தும்போது ஒரு விலங்கு செய்கிற ஒவ்வொரு சரியான துலங்கலுக்கும் அதற்குப் பரிசு அளிக்கப்படுகிறது. விலங்கு பெறுகிற பரிசு அது செய்யவேண்டிய துலங்கலை வலுப்படுத்துகிறது. மேலும், அதையே திருப்பிச் செய்வதற்கான வாய்ப்பை மிகுதிப்படுத்துகிறது. சரியான துலங்கலுக்கு உயிரி பெறுகிற பரிசை உளவியலார் வலுப்படுத்தி' என்று கூறுகின்றனர்.

வலுப்படுத்தி, முதனிலை வலுப்படுத்தி (Primary Reinforcement), வழிநிலை வலுப்படுத்தி (Secondary Reinforcement) என்றும், உடன்பாடான வலுப்படுத்தி (Positive Reinforcement) எதிர்மறையான வலுப்படுத்தி (Negative Reinforcement) என்றும், பகுதியான வலுப்படுத்தி (Partial Reinforcement) என்றும் வகைப்படுத்தப்பட்டுள்ளது. ஒரு வலுப்படுத்திப் பொருளின் பயன்மதிப்பு, உள்ளார்ந்ததாக அல்லது கற்கப்படாததாகஇருப்பின் அது, முதனிலை வலிமையூட்டல் எனப்படும். அது தன்னளவில் பயனளிப்பதாக இருக்கிறது. உணவு, தண்ணீர், பாலுணர்வு, துன்பத்தை அகற்றுதல் முதலியவை முதனிலை வலுப்படுத்திகளாகும். வழிநிலை வலுப்படுத்தல் பொருள்களின் பயன் மதிப்புக் கற்கப்பட்டதாகும். மேலும் இது முன்பே பெறப்பட்ட முதனிலை வலிமையூட்டுப் பொருள்களுடன் இயைபுடையதாகும். இது கற்கப்பட்டால் வழிநிலையாகும். துலங்கல் நடவடிக்கை, கற்பவனுக்கு இனிமையானதாகவோ

நன்மை பயப்பதாகவோ இருந்தால் அது உடன்பாடான வலுப்படுத்தல் என்று கூறப்படுகிறது. எடுத்துக்காட்டாக, உணவும் பணமும் உடன்பாடான வலிமையூட்டல்களாகும். துன்பத்தைத் தரும் துலங்கல்களான மின் அதிர்ச்சி, வலிதரும் நிகழ்ச்சிகள், இடையூறுகள் போன்றவற்றை விளக்குதல் எதிர்மறையான வலிமையூட்டலாகும். ஒரு துலங்கலைச் செய்யும்போது இரண்டு வகையான வலிமையூட்டல்களும் கற்றல் இயங்குமுறைக்குக் காரணமாக அமைகின்றன. வீட்டுக்கணக்கைச் சரியாகப் போட்டுக் காட்டுகிற பள்ளி மாணவன் ஆசிரியரிடம் பாராட்டைப் பெறுகிறான். இது உடன்பாடான வலிமையூட்டல் ஆகும். சரியாகப் போட்டுக் காட்டத் தவறினால் ஆசிரியரிடம் தண்டனை கிடைக்கிறது. சரியாகப் போட்டுக் காட்டினால் தண்டனையிலிருந்து தப்புகிறான். எனவே, இது எதிர்மறையான வலிமையூட்டலாகவும் இருக்கிறது. அதாவது மகிழ்ச்சியற்ற அனுபவத்தைத் தவிர்க்கிறான்.

ஒரு முறை ஒரு துலங்கல் ஆக்கநிலையிருத்தம் செய்யப்பட்டால், அது சில வலிமையூட்டல்களின் மூலம் நிலை நிறுத்தப்படலாம். எடுத்துக்காட்டாக ஆக்கநிலையிருத்தம் செய்யப்பட்ட துலங்கல்களுக்குப் பலன் உடனடியாக முதலில் கிடைக்கிறது. அடுத்த கட்டத்தில் உடனடியாகக் கிடைக்காமல் மூன்று சரியான துலங்கல்களுக்கு ஒரு முறை வீதமும் ஐந்து துலங்கல்களுக்கு ஒருமுறை வீதமும் பலன் கிடைக்கலாம். இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டு இசுகின்னர் என்பவர் எலிகளிடம் பல சோதனைகளை நடத்திப், பகுதியான வலிமையூட்டலைச் செயல் விளக்கம் செய்துள்ளார். அச்சோதனையில் பயன் படுத்தப்பட்ட எலி, நூறு தடவை ஒரு துலங்கலைச் செய்த பிறகுதான் உணவைப் பெற முடிந்தது. எனவே, உணவு வேண்டிய எலி நூறு முறை துலங்கி ஒரு முறை உணவைப் பெறக் கற்றுக்கொண்டது. அதாவது எல்லாத் துலங்கல்களுக்கும் பலன் கிடையாது. பல சரியான துலங்கல்களுக்குப் பிறகு தான் ஒரு முறை பயன் பெறப்படும். **இவ்வாறு கற்றல் முறை பகுதியான வலிமையூட்டல் என்று கூறப்படுகிறது. எனவே ஆக்கநிலையிருத்தம் என்ற செயல்முறை, கற்றல் நடத்தையில் சரியான துலங்கலை நிலைநிறுத்தும் இரண்டு வகைச் செயல்முறைகளைப் பற்றிக்கூறும் ஓர் உளவியற் கோட்பாடு ஆகும்.**

மு.இரா.

துணை நூல்கள்:


**Bugalski, B. R.**, The Psychology of Learning, Holt, Rinehart & Winston, New York, 1956.

**Hilgard, E.R.**, **The Nature of Conditioned Response 1. The Case for and against Stimulus Substitution.** Psy. Rev., 1936.

**Morris, C.G.**, Psychology: An Introduction, Englewood Cliffs, New Jersey Prentice-Hall, INC., 1973.

**Skinner, B.**, Drive and Reflex strength, II. Journal of General Psychology, 1932.

**Strasslenger, R.C.**, Resistance to Extinction of a Conditioned Operant as Related to Drive Level of Reinformement, Jl. Exp. Psychol., 1950.


## ஆக்கப் பொருளியல்

**ஆக்கப் பொருளியல்** மனிதனின் பொருள் சார்ந்த ஆக்க நடவடிக்கைகளைப் பற்றி ஆராய்கிறது. மனித வாழ்விற்குப் பொருளே ஆதாரம். பொருளாதார நடவடிக்கைகளுக்கு அடிப்படையாக 'விருப்பங்கள்' (Wants) அமைகின்றன. அவை எண்ணற்றவை. அவை மனிதனைச் செயற்படத் தூண்டுகின்றன. அவற்றை நிறைவேற்ற 'முயற்சிகள்' (Efforts) மேற்கொள்ளப்படுகின்றன. இத்தகைய முயற்சிகள் பல்வேறு பொருளாதார நடவடிக்கைகளாக உருவாகின்றன. இவற்றால் கிடைக்கும் வருவாயைக் கொண்டு விருப்பங்களை நிறைவு செய்கிற பொழுது மனநிறைவு (Satisfaction) ஏற்படுகிறது. மனித விருப்பங்கள் பொருளாதார நடவடிக்கைகளுக்குக் காரணங்களாக இருக்கின்றன. மனநிறைவு, பொருளாதார நடவடிக்கைகளின் விளைவாகிறது. விருப்பம்-முயற்சி-மனநிறைவு என்னும் பொருளாதார வட்டம் தொடர்ந்து சுழல்கிறது. ஒரு விருப்பம் நிறைவேறியதும் மற்றொரு விருப்பம் தோன்றுவதால், பொருளாதார நடவடிக்கைகள் தொடர்ந்து நடைபெறுகின்றன.

பொருளாதார நடவடிக்கைகள் பல நிலைகளில் பல அளவுகளில் நடைபெறலாம். எடுத்துக்காட்டாக, உணவு உற்பத்தியைக் கூறலாம். ஒருவன் தனக்கு வேண்டிய உணவை மீன் பிடித்தோ வேட்டையாடியோ பெறலாம். ஒருவன் மற்றவர்களோடு சேர்ந்து தனக்கு வேண்டிய உணவை வேளாண்மை செய்வதன் மூலம் பெற்று வாழலாம். ஒரு நாடு, திட்டமிட்டு, பெரிய பண்ணைகளை அமைத்து, உணவுத் தானியங்களை உற்பத்தி செய்யலாம். இவை எல்லாம் பொருளாதார நடவடிக்கைகளே. இவை போன்ற மனிதனின் செயல்களைப் பயில்கிற, ஆராய்கிற இயலாகப் பொருளியல் (Economics) உருவாகியுள்ளது. அறிவியலாக வளர்ந்து வருகிற பொருளியலின் தன்மையை விளக்கும் வகையில் இதனை, 'ஆக்கப் பொருளியல்'(Positive Economics) என்று சில பொருளியலறிஞர் கூறுகின்றனர்.

**பொருளியல் – ஓர் அறிவியல்:** ஒழுங்குப்படுத்தப் பெற்ற அறிவின் தொகுதி அறிவியல் (Science) எனப் படுகிறது. இத்தகைய அறிவு, ஒன்றிற்கும் மற்றொன் றிற்கும் உள்ள காரண (Cause) காரியத் (Effect) தொடர்பினை விளக்குகிறது. ஓரிடத்தில் நோய் பரவி விட்டால் அறிவியல், மக்கள் வாழ்கிற சூழ்நிலையை ஆராய்ந்து, எக்காரணத்தினால் நோய்வருகிற தென்று கூறுகிறது. அதனை ஆராய்வதற்கான முறைகளை மருத்துவ இயல் உருவாக்கி வழங்கியுள் ளது. பொருளியலும் ஓர் அறிவியல் என்ற முறையில், சமுதாயத்தில் ஏற்படும் பொருளாதாரச் சிக்கல்களுக் கான காரண, காரியங்களை ஆராய்ந்து கூறுகிறது. எடுத்துக்காட்டு, விலையேற்றம், விலைகள் கூடுவ தால் மக்கள் துன்பப்படுகின்றனர். இதற்கான பொருளாதாரக் காரணங்களைப் பொருளியல் ஆராய்கிறது. ஒரு பக்கம், மக்கள் தொகைப் பெருக் கத்தாலும் மக்களின் வருவாய் கூடுவதாலும் பொருள் களின் தேவை பெருகுகிறது. ஆனால், பல காரணங்க ளால் நாட்டில் தேவை கூடுகிற அளவிற்கு உற்பத்தி கூடவில்லை. இதனால் விலை ஏறுகிறது. இவற்றை நுட்பமாக ஆராய்ந்து கூறுவதாலும், அதற்குரிய ஆய்வுமுறைகளை உருவாக்கியிருப்பதாலும் பொரு ளியல் ஓர் அறிவியலாக மாறிவிட்டது.

**இருவகை இயல்கள்:** அறிவியலை, அறிஞர்கள் இருவகையாகப் பிரிக்கின்றனர். அறிவியல் செய்கிற பணியின் இயல்பை ஒட்டி, அது ஆக்க அறிவியலா கவோ (Positive Science) இயல்பு அறிவியலாகவோ (Normative Science) இருக்கும். "ஆக்க அறிவியல்" ஒன்று எப்படி 'இருக்கிறது', 'இருந்தது', 'இருக்கும்' என்று ஆராய்கிறது. அதாவது, உள்ளதை உள்ளபடி ஆராய்ந்து, காரண–காரிய விளக்கமாகப் பகுக்கிறது. 'இயல்பு அறிவியல்', ஒன்று 'எப்படிஇருக்க வேண்டும்' என்று கருத்துரை கூறுகிறது. ஒன்றைச் 'சரியா' 'தவறா' என்று மதிப்பீடு செய்யும் இயலாக இயல்பு அறிவியல் விளங்குகிறது. இத்தகைய கருத்து, நடை முறையில் உள்ள விவரங்களை மட்டும்சார்ந்துவெளிப் படுவதில்லை. மக்களின் பண்பாடு, நம்பிக்கை, சமு தாய, சமயச் சூழல் ஆகிய எல்லாவற்றையும் ஒட்டிய 'மதிப்பீடாக' (Value Judgement) இயல்பு அறிவிய லின் முடிவுகள் இருக்கும்.

ஆக்க அறிவியலுக்கும் இயல்பு அறிவியலுக்கும் உள்ள வேறுபாட்டினை அருமையாகக் கீன்சு (Keynes J.M.) என்பவர் "ஆக்க அறிவியலை என்ன இருக்கிற தென்று (What is) கூறுகிற, முறைப்படுத்தப்பட்ட அறிவின் தொகுதி என்றும், இயல்பு அறிவியலை அல்லது நெறிப்படுத்தும் அறிவியலை (Regulative Science) என்ன இருக்க வேண்டும் (What ought to be) என்பதைப்பற்றி முறைப்படுத்தப்பட்ட அறிவின் தொகுதி என்றும், உண்மையில் இருப்பனவற்றி லிருந்து எப்படி இருக்க வேண்டும்" என்ற இலக்கை வேறுபடுத்திக் காட்டுவதென்றும் கூறுகிறார். மேலும் அவர் ஆக்க அறிவியலின் நோக்கம் ஒருமைப்பாடுகளை நிலை நிறுத்துவதாகும் என்றும், இயல்பு அறிவியலின் நோக்கம் குறிக்கோள்களை (Ideals) முடிவு செய்வதாகும்" என்றும் கூறுகிறார்.

**பொருளியலின் தன்மை:** ஆங்கிலேய தொன்மைப் பள்ளியைச் சேர்ந்த பொருளியலறிஞர்கள், பொருளி யல் ஓர் ஆக்க அறிவியல்தான் என்ற கருத்தை வலியுறுத்தினார்கள். பேராசிரியர் இலயனல் இராபின்சுவின் (Lional Robins) கருத்துப்படி, பொருளியல் மனிதனின் நடவடிக்கையை ஆராய்கிற அறிவியலாகும். இது மனித நடவடிக்கையை விருப்பங்களுக்கும் கிடைப்பருமையுள்ள, மாற்று வழிகளில் பயன்படுத்தத் தக்க பொருள்களுக்கும் உள்ள தொடர்பின் அடிப்படையில் ஆராய் கிறது. இராபின்சுவின் வரையறையில் நான்கு கருத்துகள் அடங்கி யிருக்கின்றன. முதலாவது; மனிதனுக்கு எண்ணற்ற விருப்பங்கள் உள்ளமை. அவற்றிற்கு ஓர் அளவில்லை. விருப்பங்கள் வளர் கின்றன. நாகரிக வளர்ச்சியும் உலகத் தொடர்பும் மனித விருப்பங்களைப் பெருக்குகின்றன. ஒரு விருப் பத்தை நிறைவு செய்தவுடன் அடுத்த விருப்பம் முன் வருகிறது. எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றும் நிலை என்றும் வரப்போவதில்லை. இரண்டாவது, விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ளப் போதுமான அளவில் வளங்கள் இல்லாமை அதாவது,அவைபற்றாக் குறை நிலையில் உள்ளன. இதுதான் பொருளா தாரச் சிக்கலுக்குக் காரணமாகிறது. மூன்றாவது, பற்றாக்குறையான வளங்களை மாற்றிப் பயன்படுத் துவது. எல்லாவற்றையும் வாங்க முடியாவிட்டா லும், ஏதாவது ஒன்றை வாங்க இருக்கிற வளத்தைப் பயன்படுத்தலாம். இப்படி மாற்றிப் பயன்படுத்தும் இயல்பு, பற்றாக்குறையான வளங்களில் இருப்பது குறிப்பிடத்தக்கதாகும். நான்காவது, வளங்கள் பற்றாக்குறையாக இருப்பதாலும், அவற்றைமாற்றிப் பயன்படுத்தி எண்ணற்ற விருப்பங்களில் சிலவற்றை மட்டும் நிறைவு செய்யக் கூடிய நிலை இருப்ப தாலும், வளங்களையும் விருப்பங்களையும் தெரிவு (Choice)செய்ய வேண்டியுள்ளமை.வேண்டிய அளவிற் குப் பொருள்களை உற்பத்தி செய்ய நாட்டில் வளம் இருப்பதில்லை. ஆதலால், இயற்கை வளங்களில் எவற்றை எந்த அளவிற்கு எப்படிப் பயன்படுத்தி, என்னென்ன பொருள்களை, எந்த அளவில் உற்பத்தி செய்வதென்பதை முடிவு செய்ய வேண்டும்.

பொருளாதாரத்தின் கருப்பொருளான பற்றாக் குறையுள்ள வளங்களையும் எண்ணற்ற விருப்பங்களை யும் அவற்றிற்கிடையில் உள்ள தொடர்பையும் கருது கிறபொழுது, பொருளியலின் அணுகுமுறை தெளிவா கிறது. பொருளியலறிஞர் விருப்பு வெறுப்பின்றி, நடுநிலையில் நின்று செயற்பட வேண்டும். அறநெறி யியலுக்கும் (Ethics) பொருளியலுக்கும் தொடர்பு இல்லை என்று இராபின்சு கருதுகிறார். ஒரு பொருளியல் நடவடிக்கை சரியானதா தவறானதா என்பதைக் கூறுவது, பொருளியலறிஞனின் வேலை யன்று என்பது அவர் கருத்தாகும். எடுத்துக்காட் டாக, சமுதாயத்தில் பணங் கொடுக்கல் வாங்கல் நிகழ்கிறது. அதன் விளைவாக வட்டி உருவாகி யுள்ளது. இந்த வட்டியைப் பற்றி ஆராய்கிற ஒருவர், அது தொடர்பான எல்லா விவரங்களையும் சேகரித் துத் தொகுத்து ஆராய்வார். என்னென்ன காரணங் களுக்காக எப்படி யாரிடமிருந்து கடன் வாங்குகின் றனர் என்பதையும், எவ்வளவு வட்டி நடைமுறையில் உள்ளதென்பதையும் கூறுவார். ஆனால், இராபின்சு கருத்துப்படி, வட்டி வாங்குவது சரியா தவறா என்றோ, எவ்வளவுதான் வாங்க வேண்டும் என்றோ கூறுவது பொருளியலறிஞர் வேலையன்று. செரு மானிய வரலாற்றுப் பள்ளியைச் (The Historical School of Germany) சேர்ந்த பொருளியலறிஞர்கள், மாறுபட்ட கருத்தைக் கொண்டிருக்கிறார்கள். அவர் கள் பொருளியல், அறத்தைச் சார்ந்திருக்க வேண்டு மென்றும், எது சரி, எது தவறு என்ற மதிப்பீட்டின் அடிப்படையில் திட்டமிட வேண்டுமென்றும் வலி யுறுத்துகின்றனர். இயற்பியல் (Physics), வேதியியல் (Chemistry) போன்ற தூய அறிவியல்களுக்கும் பொருளியல், அரசியல் போன்ற சமூக இயல்களுக்கும் ஓர் அடிப்படை வேறுபாடு இருக்கிறது. தூய அறி வியலில் நச்சுப் பொருளைப் பற்றி ஆராயலாம். அது எப்படி மனிதக் குலத்தைத்தாக்கும் என்பதைவிளக்கிக் கூறுவதோடு நின்றுவிடலாம். ஆனால், சமூக இயல்கள் (Social Sciences) அதனோடு நின்றுவிட முடியாது. நச்சுப் பொருளை எப்படித்தான் பயன்படுத்த வேண்டும் என்றும், எப்படிச் சமுதாயத்தைக் காக்க வேண்டும் என்றும் கூறுவது, பொருளியலறிஞர் களின் கடமையாகும். பொருளியல் முறை, சிந்திக்க வும் சிறப்பாக முடிவுக்கு வரவும் ஒரு வழி காட்டு கிறது.

ஆக்கப் பொருளியலில், 'பகுத்தாய்வு முறை' (Deductive Method), தொகுத்தாய்வு முறை (Inductive Method), ஆகிய இரு முறைகளையும் பயன் படுத்தி, விதிகளையும் கோட்பாடுகளையும் உருவாக்கு கின்றனர். இந்த முறைகளை அளவை இயலிலிருந்து (Logic) பொருளியல் பெற்றிருக்கிறது. பொருளியலில் பகுத்தாய்வு முறையைப் பயன்படுத்திப் பல கோட் பாடுகளை உருவாக்கியுள்ளனர். எடுத்துக்காட்டாக, ஒன்றைக் கூறலாம். எந்தப் பொருளின் இருப்புக் கூடினாலும் அதன் இறுதிநிலைப் பயன்பாடு குறை யும். இந்தப் பொது உண்மையைக் 'குறைந்து செல் பயன்பாட்டு விதி' (Law of Diminishing Utility) கூறுகிறது. இந்த உண்மை பணத்திற்கும் பொருந்தும். செல்வர்களிடம் பணம் மிகுதியாக இருப்பதால், அவர்களுக்குப் பணத்தின் இறுதிநிலைப் பயன்பாடு (Marginal Utility) குறைவாக இருக்கும். இந்த அடிப்படையில்தான் செல்வர்கள் மீது வளர்வீத வரி (Progressive Tax) விதிப்பதைப் பொருளியல் நிலை நிறுத்துகிறது. தொகுத்தாய்வு முறை, தனிப்பட்ட வற்றை ஆராய்ந்து, அவற்றிலிருந்து பொது உண் மைக்கு (Generalization) வருகிறது. ஓரிடத்தில் விலை குறைகிறபொழுது அதற்கான தேவை கூடுவதையும், மற்றுமோரிடத்தில், இன்னொரு பொருளின் விலை குறையும்பொழுது, அதற்குரிய தேவை மிகுவதையும் காணலாம். இப்படிப் பல நிகழ்ச்சிகள் நடைபெறு வதனை ஆராய்ந்து, அவற்றின் அடிப்படையில் ''விலை குறைந்தால் தேவை கூடும்'' என்ற பொது விதி உருவாயிற்று.

ஆக்க இயலாக வளர்ந்து வருகிற பொருளியல், முற்றிலும் அறிவியலைப் புறக்கணித்துவிட்டு, 'நடுநிலை' என்ற பெயரால் 'சமுதாய நோக்கு' இன்றி இருப்பதனை எல்லோரும் ஏற்றுக் கொள்ளவில்லை. உள்ளதை ஆராய்ந்து கூறுவதோடு, எப்படி இருக்க வேண்டும் என்று வழிகாட்டுவதும் பொருளியலறிஞர்களின் கடமையாகும். காத்ரே (Hawtrey) ''பொருளியலை அறிவியலிலிருந்து பிரிக்க முடியாது,'' என்கிறார். பிரேசர் (Fraser) என்பவர், ''பொருளியல் என்பது, மதிப்புக் கோட்பாட்டை யும் சமநிலைப் பகுத்தாய்வையும் விட மிகுதி யானது,'' என்று சுட்டிக் காட்டுகிறார். பொருளிய லாளர்கள் சமுதாயச் சூழலிலிருந்து ஒதுங்கிவிட்டால், அவர்கள் உருவாக்குகிற கோட்பாடுகளால் மனிதக் குலத்திற்கு நன்மை இராது; 'எது நல்லது', 'எது கெட்டது' என்பதை இனம் பிரித்துக் காட்டுகிற பொழுதுதான் பொருளியல் 'ஒளி தருவதாக' (Light-bearing) மட்டுமன்றிப் 'பயன் தருவதாகவும்' (Fruit-bearing) இருக்க முடியும். பொருளியலின் முன்னோடிகளில் ஒருவரான மார்சல் (Marshall), ''பொருளியல் ஓர் அறிவார்ந்த பயிற்சியாக இருப்பதாலோ, உண்மையை உண்மைக்காகவே கண்டுபிடித்துக் கூறும் வழிமுறையாக இருப்பதாலோ மட்டும் பயனுடைய இயலாக இருப்பதில்லை. அறிவியலின் துணையாளாகவும் நடைமுறையின் பணியாளாகவும் இருப்பதால்தான் சிறப்பிடம்

பெறுகிறது'', என்று கூறுவது கவனிக்கத் தக்கது. இந்தியாவில் சான்றோர்களும் அறிஞர்களும் பொருளியல், அறத்தைச் சார்ந்ததாக இருக்க வேண்டுமென்று கருதுகின்றனர். திருவள்ளுவரும் அறஞ்சார்ந்த பொருளையே கூறுகிறார். பொருள் தேடும் வழிமுறையும் தூயதாக இருக்க வேண்டு மென்பதைத் ''திறனறிந்து தீதின்றி வந்த பொருள்'', என்று வள்ளுவர் கூறுவதிலிருந்து அறியலாம்.

காந்தியடிகளின் கருத்துப்படி, பொருளாதாரத்தின் உள்ளொளியாக – உயிர்நாடியாக – அறம் திகழ வேண்டும். அறத்தைப் புறக்கணித்துவிட்டு உரு வாக்குகிற பொருளியற் கோட்பாடுகள், உயிரற்ற உடலாக, சமுதாயத்திற்குப் பயனற்ற கருத்துக் குவியலாக இருக்குமென்பது, காந்தியடிகளைப் பின்பற்றுவோர் கருத்தாகும். இப்போது பொரு ளியலின் ஒரு துறையாக 'நலப் பொருளியல்' (Welfare Economics) வளர்ந்து வருகிறது. பெரும் பாலான மக்களின் வறுமை, வேலையின்மை போன்ற வற்றை ஒழிக்கவும், எல்லோருக்கும் தேவைப் பொருள்கள் கிடைக்கவும், எத்தகைய பொருளாதார முன்னேற்றத்தை உண்டாக்கவேண்டும் என்பதை எல்லாப் பொருளியலறிஞர்களும் ஆராய்கின்றனர். இதிலிருந்து ஆக்க இயலாக இருக்கும் பொருளியல், அறநெறி இயலின் தன்மையையும் ஏற்றுக் கொண்டிருப்பதைக் காணலாம்.

சமுதாய இயலான பொருளியலைப் பயில்வதால் பல நன்மைகள் கிடைக்கின்றன. ஒரு நாட்டில் இருக்கிற வளங்கள் அளவோடு இருந்தாலும் அவற்றைத் திறமையாகப் பயன்படுத்தி நலமாகவும் வளமாகவும் வாழ வழி காட்டும் இயலாகப் பொருளியல் விளங்குகிறது. மா.பா.கு.

**துணை நூல்கள்:**


George Leland Bach, Economics, Prentice - Hall of India Private Limited, New Delhi, 1977.

Jhingan .M.L., Micro Economic Theory, Vikas Publishing House, New Delhi, 1977.

Mithani .D.M., Principles of Economics, Himalaya Publishing House, Bombay, 1981.

Richard G. Lipsey, An Introduction To Positive Economics, English Language Book Society, London, 1978.


**ஆக்கமும் திரிபும்** என்பது ஒரு மொழியின் உருபனியல் செயற்பாடுகளைக் குறிக்கும். உரு பனியல் (Morphology) நிலையில் சிறப்பிடம் பெறு வன சொல்லாக்கமும் (Derivation), சொல்திரிபும் (Inflection) ஆகும். இவ்வடிப்படையில் உருபனிய லைச் சொல்லாக்க உருபனியல் (Derivational Morphology/ Lexical Morphology), சொல்திரிபு உருபனியல் (Inflectional Morphology) என இரு வகைப்படுத்துவர் அறிஞர்.

அடிச்சொல்லுக்குள்ளேயே (Stem) மாற்றம் நிகழ்வதன் வாயிலாகவும், அடிச்சொல்லுடன் சொல்லாக்க உருபினை (Derivational affix) இணைப்பதன் வாயிலாகவும், அடிச்சொல்லுடன் பிறிதோர் அடிச்சொல்லை இணைப்பதன் வாயிலாக வும் சொல்லாக்கம் நிகழ்கிறது. ஒரு மொழியில் சொல்லாக்கத்தின் வாயிலாகப் புதிய சொற்கள் ஆக்கம் பெறுகின்றன.

எடுத்துக்காட்டாகப் 'பாடு' என்னும் வினையடி யிலுள்ள (Verbal stem) மெய் இரட்டிப்பதனால் 'பாட்டு' என்னும் பெயர்ச்சொல் ஆக்கம் பெறுகிறது. 'செய்' என்னும் வினையடியோடு 'கை' என்னும் சொல்லாக்க உருபினைச் சேர்க்கும் நிலையில் 'செய்கை' என்னும் பெயர்ச்சொல் கிடைக்கிறது. 'வேகம்' என்னும் பெயரடியோடு (Nominal stem) 'ஆக' என்னும் வினையடையாக்க அடிச்சொல்லை இணைப்பதன் வாயிலாக 'வேகமாக' என்னும் வினையடை (Adverb) கிடைக்கிறது.

இவ்வாறு அடிச்சொற்களுக்குள் மாற்றம் ஏற்படு வதன் வாயிலாகவும், அடிச்சொற்களோடு சொல் லாக்க உருபுகள் அன்றிப் பிற அடிச்சொற்களை இணைப்பதன் வாயிலாகவும் புதிய சொற்கள் உரு வாகும் நிலையே சொல்லாக்கம் எனப்படும்.

சொல்லாக்க உருபுகளை அடிச்சொற்களோடு இணைத்துப் புதிய சொற்கள் ஆக்குந்தன்மை சொல்லாக்கம் எனவும், இரண்டு அல்லது மூன்று அடிச் சொற்களை இணைத்துப் புதிய சொற் கள் ஆக்குந்தன்மை கூட்டுச் சொல்லாக்கம் (Compounding) எனவும் கருதப்பெறும்.

சொல்லாக்கம் சொற்களுக்குள்ளே ஏற்படும் மாறுதல்களைச் சுட்டி நிற்கும். இது சொல்திரி பினைப் போன்று ஒரு வாக்கியத்திலுள்ள சொற் களுக்கிடையே காணப்படும் இலக்கண உறவினைப் (Grammatical Relation) புலப்படுத்துவதில்லை.

'வரு' என்னும் வினையடியும் 'கை' என்னும் சொல்லாக்க உருபும் இணைவதால் 'வருகை' என்னும் பெயர்ச்சொல் கிடைக்கிறது. ஈண்டுச் சொல்லாக்கம் வினைச்சொல் பெயர்ச் சொல்லாக மாற்றம் பெறும் பான்மையினைச் சுட்டிச் சொல் நிலையில் ஏற்படும் மாற்றத்தினைப் புலப்படுத்து கிறது.

தொடரில் சொல்லாக்கத்தால் ஆக்கம் பெற்ற சொற்கள் அதே நிலையில் காணப்பெறும் மிகச் சிறிய கூறுகளைப் போன்று செயலாற்றும்.

'வாழ்க்கை', 'செய்கை', 'சூழ்ச்சி' போன்ற சொல்லாக்கச் சொற்கள் (Derivatives), பன்மை உருபு (Plural Suffix) ஏற்பதில் அதே நிலையில் காணப்பெறும் மிகச்சிறிய கூறாகிய 'கல்' என்பதனைப் போன்று செயற்படுகின்றன.

'கல்' என்னும் வடிவம் எவ்வாறு வாக்கியத்தின் எழுவாயாகவும், செயப்படுபொருளாகவும் செயற்படுகிறதோ அதைப் போன்று ஈண்டுச் சுட்டப் பெற்ற சொல்லாக்க வடிவங்களும் செயற்படுகின்றன. சுருங்கக் கூறின் சொல்லாக்க வடிவங்கள், அதே செயலுடைய மிகச் சிறிய கூறுகளின் சொல்வகையினை (Part of speech) ஒத்ததாக அமைந்திருக்கும்.

சொல்லாக்க அமைப்பு (Derivational formation) காரணமாகப் பெரும்பாலும் அடிச்சொல்லின் சொல்வகை மாற்றம் பெறும். 'செய்' என்னும் வினையடியோடு '-தல்' என்னும் சொல்லாக்க உருபினைச் சேர்க்கும் நிலையில் 'செய்தல்' என்னும் பெயர் கிடைக்கிறது. அடிச்சொற்களின் சொல்வகையினை மாற்றாத சொல்லாக்க உருபுகளும் மொழியின்கண் காணப்பெறுகின்றன.

ஒரு மொழியின் சொல்லாக்க அமைப்பில் செயற்படும் சொல்லாக்க உருபுகளின் எண்ணிக்கையே சொல்திரிபு உருபுகளைக் காட்டிலும் மிகுதியாகக் காணப்படுகிறது.

தமிழில் சொல்திரிபு உருபுகளாகிய காலம், இடம், பால், எண், வேற்றுமை ஆகியவற்றைச் சுட்டும் உருபுகளின் எண்ணிக்கையினைக் காட்டிலும் சொல்லாக்க உருபுகளின் எண்ணிக்கையே மிகுதியாக உள்ளது.

சொல்லாக்க உருபும் சொல்திரிபு உருபும் ஒரே சொல்லில் காணப்பெறும் நிலையில் சொல்லாக்க உருபு பெரும்பாலும் சொல்லின் இறுதியில் அமைவதில்லை; சொல்திரிபு உருபே சொல்லின் இறுதியில் அமையப்பெற்று வரும்.

'வாழ் – க்கை – ஐ' என்பதில் '–ஐ' என்னும் சொல்திரிபு உருபு '–க்கை' என்னும் சொல்லாக்க உருபினைத் தொடர்ந்து சொல்முடிப்பு உருபாக (Word closing Affix) அமையப்பெற்றுள்ளது. சில விடத்து (கண்–ட்–அமை) சொல்லாக்க உருபு, சொல்திரிபு உருபினைத் தொடர்ந்து வருதலும் உண்டு. சொல்லாக்க அமைப்பின் வடிவங்களும் அவற்றின் வருகையும் ஒழுங்கற்றனவாக அமையப்பெறும்.

சொல்லாக்க அமைப்பில் செயற்படும் சொல்லாக்க உருபுகளின் வருகை கட்டுக்கடங்கியதாகவே இருக்கும். இன்னின்ன சொல்லாக்க உருபுகள் இத்தகைய அடிச்சொற்களோடு இணைந்து வரும் என்பதனை வரையறை செய்ய முடியும். சொல்லாக்க அமைப்பிற்குப் புதியன ஆக்கும் திறன் இல்லை. சொல்லாக்க அமைப்பில் சொல்திரிபு அமைப்பினைப் போன்று ஒப்புமையாக்கத்தால் (Analogical Creation) புதிய வடிவங்களைப் பெறுதல் அரிது. சொல்லாக்கத்தால் தோன்றும் புதிய வடிவங்கள் அனைத்துமே அகராதியில் இடம்பெறும். சொல்லாக்க அமைப்பில் பெயருக்கும் வினைக்கும் இலக்கணக்கூறுகளால் ஏற்படும் திரிபுகள் இல்லை. ஈண்டுச் சொல்திரிபினைப் போன்று முறையான விதிகளும் இல்லை.

சொல்லாக்க அமைப்பில் அடிச்சொற்களோடு இணைக்கப்பெறும் உருபுகள் சொல்லாக்க உருபுகள் எனப்படும். அடிச்சொற்களோடு இணையும் நிலையில் அவ்வடிச்சொற்களின் சொல்வகை மாற்றம் பெறும் நிலையினை அடிப்படையாகக்கொண்டு, சொல்லாக்க உருபுகளைச் சொல்வகை மாற்றுச் சொல்லாக்க உருபுகள் (Class changing derivational affixes) எனவும், சொல்வகை மாற்றாச் சொல்லாக்க உருபுகள் (Class maintaining derivational affixes) எனவும் இருவகைப்படுத்தலாம்.

ஆங்கிலத்தில் 'Man', 'Nation', என்பனவற்றோடு இணையும் '–hood' என்னும் சொல்லாக்க உருபு அடிச்சொற்களின் சொல்வகையினை மாற்றுவதில்லை. தமிழில் அடிச்சொல்லின் சொல்வகையினை மாற்றாத சொல்லாக்க உருபுகள் காணப்பெறவில்லை. இவ்வாறு அடிச்சொல்லின் சொல்வகையில் மாற்றம் நிகழாது அமையப்பெறும் சொல்லாக்கம் சொல்வகை மாற்றாச் சொல்லாக்கம் எனப்படும்.

தமிழில் 'புகழ்', 'சூழ்' என்னும் வினையடிகளோடு இணையும் '–ச்சி' என்னும் சொல்லாக்க உருபு அடிச்சொற்களின் சொல்வகையினை மாற்றுகிறது. அடிச்சொல்லின் சொல்வகையில் மாற்றம் நிகழும் வகையில் அமையப்பெறும் சொல்லாக்கம் சொல்வகை மாற்றுச் சொல்லாக்கம் எனப்படும். ஆங்கில மொழியில் சில சொல்லாக்க உருபுகள் ஈண்டுச் சுட்டப்பெற்ற இருவகைப் பண்புகளையும் கொண்டு விளங்குகின்றன.

Man–ly சொல்வகை மாற்றுச் சொல்லாக்கம். பெயர் > பெயரடை Kind–ly சொல்வகை மாற்றாச் சொல்லாக்கம். பெயரடை > பெயரடை.

ஒன்றிற்கு மேற்பட்ட சொல்லாக்க உருபுகள் அடுக்கி வருதலை ஆங்கில மொழியில் காணமுடியும். எடுத்துக்காட்டு: Man–li–ness; Modern–iz–ation.

அடிச்சொல்லுடன் சொல்திரிபு உருபினை (Inflectional affix) இணைப்பதன் வாயிலாகச் சொல் திரிபு ஏற்படுகிறது. சொல்திரிபு அமைப்பே (Inflectional Formation) ஒரு மொழியின் இலக்கணத் திட்டத்தில் (Grammatical System) முதன்மை இடத்தினைப் பெற்றுள்ளது. சொல்திரிபு, வாக்கியத்தில் காணப்பெறும் சொற்களுக்கிடையேயுள்ள தொடரியல் உறவினைப் (Syntactic Relation) புலப்படுத்தி நிற்கும். 'கண்ணன்' என்னும் அடிச்சொல்லோடு '-ஐ' என்னும் சொல்திரிபு உருபினைச் சேர்க்கும் நிலையில் 'கண்ணன்' என்னும் எழுவாய் 'கண்ணனை' எனச் செயப்படுபொருளாக மாற்றம் பெறுகிறது. ஈண்டுச் சொல்திரிபு ஒரு வாக்கியத்திலுள்ள சொற்களுக்கிடையே காணப்பெறும் இலக்கண உறவினைச் சுட்டிநிற்கக் காணலாம்.

ஓர் அடிச்சொல்லுடன் சொல்திரிபு உருபினை இணைக்கும்போது வாக்கியத்தில் அச்சொல் சுட்டும் இலக்கண உறவினைப் புலப்படுத்தும் வகையில் அச்சொல் அடையும் மாற்றமே சொல்திரிபு எனப்படும்.

சொல்திரிபினைப் பெயர்த்திரிபு (Declension), வினைத்திரிபு (Conjugation) என இருவகைப்படுத்துவர் அறிஞர். தமிழில் பெயரடி, வேற்றுமை உருபுகளாகிய சொல்திரிபு உருபுகளை ஏற்று வருதல் பெயர்த்திரிபிற்கும், வினையடி காலம், இடம், பால், எண் உருபுகளாகிய சொல்திரிபு உருபுகளை ஏற்று வருதல் வினைத்திரிபிற்கும் தக்க சான்றுகளாகும்.

சொல்திரிபு வாக்கியத்தில் காணப்பெறும் சொற்களின் இலக்கண உறவினைப் புலப்படுத்தும். 'பாம்பு கடித்தது' என்னும் வாக்கியத்தில் 'பாம்பு' எழுவாயாகவும், 'கடித்தது' வினைப் பயனிலையாகவும் (Verbal Predicate) செயற்படுகின்றன. 'பாம்பு' என்பதோடு '-ஐ' என்னும் சொல்திரிபு உருபு இணையும் நிலையில், 'பாம்பை' என மாற்றம் பெற்றுச் செயப்படுபொருள் என்னும் இலக்கண உறவினைச் சுட்டி நிற்கிறது.

தொடரில் சொல்திரிபு அமைப்பினால் ஆக்கம் பெற்ற வடிவங்கள் அதே நிலையில் காணப்பெறும் சிறிய கூறுகளைப் போன்று செயற்படுவதில்லை.

'கல்லை' என்னும் சொல்திரிபேற்ற வடிவம் (Inflected Form) 'கல்' என்னும் சிறிய கூறு போன்று ஒரே இலக்கண உறவினைச் சுட்டுவதில்லை. ஒன்று செயப்படுபொருளாகவும் பிறிதொன்று எழுவாயாகவும் செயற்படுகின்றன.

சொல்திரிபு அமைப்பினால் சொல்திரிபு உருபுகள் சேர்க்கப்பெறும் அடிச்சொற்களின் சொல்வகை பெரும்பாலும் மாற்றம் பெறுவதில்லை. 'மரம்' என்னும் பெயர் '-கள்' என்னும் சொல்திரிபு உருபினை ஏற்று 'மரங்கள்' என மாற்றம்பெறும் நிலையிலும் இதன் சொல்வகை மாற்றம் பெறுவதில்லை.

ஒரு மொழியில் சொல் திரிபு உருபுகளே சொல்லாக்க உருபுகளைக் காட்டிலும் எண்ணிக்கையில் மிகக் குறைவாகக் காணப்படுகின்றன.

சொல்லாக்க உருபும் சொல்திரிபு உருபும் ஒரே சொல்லில் காணப்பெறும் நிலையில் சொல் திரிபு உருபு பெரும்பாலும் சொல்லின் இறுதியில் காணப்படும்.

சொல்திரிபு அமைப்பின் வடிவங்களும் அவற்றின் வருகையும் பெரும்பாலும் ஒழுங்காக அமையப் பெறும்.

பார் — த்த் — ஆ — ன்
பார் — க்கிறு — ஆ — ன்
பார் — ப் — ஆ — ன்

சில சொல்திரிபு அமைப்புகள் இப்பான்மைக்கு விதிவிலக்காக அமையப்பெறுதலும் உண்டு.

சொல்திரிபு அமைப்பில் செயற்படும் சொல் திரிபு உருபுகளின் வருகை கட்டுக் கடங்காததாகவே (Extensive) அமையும். எந்தெந்தச் சொல்திரிபு உருபுகள் எந்தெந்த அடிச்சொற்களோடு இணைந்து வரும் என்பதனை வரையறை செய்யமுடியாது.

சொல்திரிபு அமைப்பிற்குப் புதியன ஆக்கும் திறன் பெரிதும் உண்டு. பன்மை விகுதியாகிய '-கள்' என்னும் சொல்திரிபு உருபினைப் பெரும்பான்மையான பெயர்ச்சொற்களுடன் இணைத்துப் புதிய சொல்திரிபு அமைப்பினை அமைக்க முடியும்.

ஒப்புமையாக்கத்தின் காரணமாகச் சொல்திரிபு அமைப்பில் 'நானுக்கு', 'நடுத்தான்' போன்ற மாற்றங்கள் நிகழப் பெறுதலுண்டு.

சொல்திரிபு அமைப்பில் செயற்படும் பெயர் வினை போன்ற வடிவங்கள் ஒருமுறைதான் அகராதியில் இடம் பெறும்.

பெயர்ச்சொல், வினைச்சொல் போன்றவற்றிற்குக் குறிப்பிட்ட இலக்கணக்கூறுகளால் ஏற்படும் திரிபுகள் குறிப்பிட்ட எண்ணிக்கைக்கு உட்பட்டவை ஆகும்.

சொல்திரிபு அமைப்பில் அடிச்சொற்களோடு இணைக்கப்பெறும் உருபுகள் சொல்திரிபு உருபுகள் எனப்படும். தமிழில் காலம், எண், இடம், பால், வேற்றுமை ஆகியவற்றைச் சுட்டும் உருபுகள் சொல்திரிபு உருபுகளாகக் கொள்ளற்குரியன. இவ்வுருபுகள், தாம் இணையப்பெறும் அடிச்சொற்களின் சொல்வகையினை மாற்றுவதில்லை. ஓர் அடிச்சொல் வெவ்வேறு சொல்திரிபு உருபுகளை ஏற்று

நிற்கும் பான்மையினைச் சொல்திரிபு வகை (Inflectional Category) என்பர் அறிஞர். தமிழ் மொழியில் எண், இடம், காலம் போன்ற இலக்கண வேறுபாடு களைச் சொல்திரிபு வகை எனலாம்.

செய் — த் — ஏ — ன்
செய் — கிறு — ஏ — ன்
செய் — வ் — ஏ — ன்

ஆங்கில மொழியில் அடிச்சொல்லில் மாற்ற மின்றி அமையும் சொல்திரிபு (Sheep) இன்மைச் சொல்திரிபு (Zero Inflection) எனப்படும். இம் மொழியில் சொல்திரிபு தொடர் நிலையிலும் அமை யப்பெறுவதுண்டு.

More beautiful
Most beautiful

இத்தகைய தொடர்கள் சொல்திரிபுத் தொடர் கள் (Inflectional Phrases) எனப்பெறும்.

ஒரே பொருண்மையினைச் சுட்டும் உருபுகள் அனைத்து மொழியிலும் ஒரே வகையினவாக அமை வதில்லை. ஆங்கில மொழியில் எண்ணைச் சுட்டும் உருபுகள் சொல்திரிபு உருபுகளாக அமைய, சப்பா னிய மொழியில் இவை சொல்லாக்க உருபுகளாக அமைந்துள்ளன.

சொல்திரிபு உருபுகள் ஒரே சொல்லில் அடுக்கி வருதலும் உண்டு. வினைச் சொற்களில் (கேள் — த் — ஆ — ன்) காலம், இடம், பால், எண் இவற் றைக் குறிக்கும் சொல்திரிபு உருபுகள் அடுக்கி வரும்.

சொல்லாக்கம், சொல்திரிபு இவற்றிடையே தெளிவான வேறுபாடுகள் காணக்கிடந்தாலும் சில விடத்து இவ்விரண்டிற்கிடையே மயக்கம் (Over lapping) காணப்படுகிறது.

தமிழில் 'அ' என்னும் சுட்டடையுடன் (Demonstrative Adjective) '- அன்' உருபினைச் சேர்க்கும் நிலையில் 'அவன்' என்னும் பதிலிப் பெயர் (Pronoun) கிடைக்கிறது.

ஈண்டு 'அன்' உருபு சேர்க்கப்பெறும் நிலையில் பெயரடை (Adjective) பெயராக மாற்றம் பெற் றுப் புதிய சொல்லாக்கம் அமையப் பெறுகிறது. தமிழில் பால் - எண் உருபுகள் சொல்திரிபு உருபு களே. ஈண்டுக் குறிப்பிடப்பட்ட எடுத்துக்காட்டில் '- அன்' என்னும் சொல்திரிபு உருபு' சொல்லாக்க உருபாகச் செயற்படுகிறது.

இதுபோன்று 'முயற்சி' (முயல்+சி) என்னும் பெயர்ச் சொல்லுடன் காலம், இடம், பால், எண் உருபுகளைச் சேர்க்கும் நிலையில் 'முயற்சித்தான்' என்னும் வினைவடிவம் கிடைக்கிறது. ஈண்டும் பெய ரினின்று வினைச் சொல்லாக்கம் அமையத் துணை புரிவன சொல்திரிபு உருபுகளாகும். ஏ.ஆ.

**ஆக்காட்சுக் கடல்** வட பசிபிக்குப் பெருங் கடலில் உருசியாவின் கிழக்கெல்லையாக அமைந் துள்ளது. இக்கடல் 1,600 கி. மீ. நீளமும், 970 கி.மீ. அகலமும் கொண்டது. இக்கடலையும் பேரிங்குக் கடலையும் (Bering Sea) காம்சட்சுகி முந்நீரகம் (Kamchatsky Peninsula) பிரிக்கிறது. குரில் தீவுகள் (Kuril Islands) இக்கடலைப் பசிபிக்குப் பெருங்கடலி லிருந்து பிரிக்கிறது. ஆக்காட்சுக் கடல் (Okhotsk Sea) நவம்பர் முதல் ஏப்பிரல் வரை பனிக் கட்டியால் மூடப்பட்டிருக்கும். மகதன் (Magadan) ஆக்காட்சுக், Okhotsk) துறைமுகங்களுக்கு வரும் கப்பல்கள் இக் கடல் வழியே வருகின்றன. இக்கடலின் பரப்பு 15,27,600 ச. கி. மீ.

**ஆக்காடு:** பண்டைய பாபிலோனியாவின வடமாநிலத்தின் பெயர். இந்நகரத்தை அக்காடின் மன்னரான சார்கோன் (Sargon) என்பவர் கி.மு. 2350-இல் உருவாக்கினார். ஆக்காடு (Akkad) நகரம் கி.மு. 2000த்தின் இடைப்பட்ட காலத்தில் புகழ் பெற்று விளங்கியது. அக்காடியர்களுக்குப்பின் பார சீக மலையின மக்கள் இந்நகரைக் கைப்பற்றினர். பின்னர் இந்நகரம் பாபிலோனியாவின் தலைநகர மாயிற்று.

**ஆக்கின்சு, சர் சான்:** (கி.பி. 1537-1595) இந் தப் பெயர் கொண்டமாலுமி, எலிசபெத்து அரசியார் காலத்தில் வாழ்ந்தவர்; புகழ் மிக்க கப்பற் படைத் தலைவர்; பிளிமத்து (Plymouth) என்னும் ஊரில் பிறந்தவர். இவர் நெஞ்சுரம் மிக்க நடவடிக்கைகளில் ஈடுபாடு கொண்டவர்; அடிமை வாணிகத்தை, அஞ்சாது செய்த வணிகர். ஆக்கின்சு (Hawkins) கி.பி. 1573-இல் ஆங்கிலக் கப்பற்படையின் கருவூலத் தலைவரானார். கப்பற் படையில் ஒரு பிரிவுக்குத் தலைமை தாங்கி இசுபெயின் நாட்டுக் கப்பற் படையான ஆர்மடாவை (Armada) கி.பி. 1588-இல் தோற்கடித்தார். வெற்றி வாகை சூடிய இவருக்குக் கப்பல்தளத்திலேயே விருது வழங்கப்பட்டது.

**ஆக்கினேயபுராணம்:** பதினெண் மகா புராணங்களுள் ஒன்று. இது 8000 கிரந்தம் உடையது; சிவதீட்சை, விட்டுணுதீட்சை விதிகள், பிரபஞ்ச விவரண விதிகள், அக்கினி காரியம், அரசு நீதி, திருமால் அவதாரச் சிறப்பு, சோதிடம், ஔடதம் முதலியவற்றைப் பற்றிக் கூறுகிறது.

**ஆக்கூர்** தேவாரப் பாடல்பெற்ற தலங்களுள் ஒன்று. சிறப்புலி நாயனார் தலம். ஆலயத்திற்குத் தான்தோன்றி மாடம் என்பது பெயர். இறைவர்-

தான்தோன்றியப்பர்; அம்பிகை – வாணெடுங்கண்ணி யம்மை. "வேளாளர் என்றவர்கள் வள்ளன்மையான் மிக்கிருக்கும் தாளாளர் ஆக்கூரில் தான் தோன்றி மாடமே" என்பது சம்பந்தர் தேவாரம். அப்பரும் போற்றியுள்ள இத்தலத்தை அருணகிரியாரும் பாடியுள்ளார். இத்தலம் மயிலாடுதுறையிலிருந்து கிழக்கே 10 கல் தொலைவில் உள்ளது. இங்குள்ள "ஆயிரத்தில் ஒருவர்" செப்புத் திருமேனி சிறப்புடையது. இரா.கி.

**ஆக்கூர் அனந்தாச்சாரி:** இவர் திருவல்லிக்கேணி ஆ. சீனிவாச ஐயங்காரின் மகனாவார். இவர் 1903 – ஆம் ஆண்டு பிறந்தார். பள்ளியிறுதி வகுப்பு வரை படித்த இவர் 1921 – ஆம் ஆண்டில் விடுதலை இயக்கப் போரில் முதன்மையான பங்கு ஏற்றுப் பத்து ஆண்டுகள் கடுங்காவல் சிறைத்தண்டனை பெற்றார்.

பாரதியார் சங்கத்தின் பொதுச் செயலாளராகப் பணியாற்றிய இவரே, வாலாசா பேட்டையில் உள்ள தீனபந்து ஆசிரமத்தை நிறுவியவர் ஆவார்.

பொதுவாழ்வில் ஈடுபட்டிருந்த இவர் சிறந்த இலக்கியப் படைப்பாளியாகவும் விளங்கினார். தினமணி, சுதேசமித்திரன் போன்ற நாளிதழ்களிலும், ஆனந்தவிகடன், கல்கி போன்ற வார இதழ்களிலும் பல கட்டுரைகளை எழுதியுள்ளார். இவர் இந்தி, வடமொழி, பிரெஞ்சு, இலத்தீன் ஆகிய மொழிகளைக்கற்ற பன்மொழிப் புலவர்.

கவிச்சக்கரவர்த்தி சுப்பிரமணிய பாரதியார் சரித்திரம், தால்சுதாய் சரித்திரம், இராசாசி சரித்திரம், சவகர் சரித்திரம், காந்தி சரித்திரம், தியாகராசு சுவாமிகள் சரித்திரமும் கீர்த்தனைகளும் போன்ற பல வாழ்க்கை வரலாற்று நூல்களைப் படைத்துள்ளார். பக்த விசயம் என்னும் நூலும் இவர் எழுதியது ஆகும். பிரேம் சந்து சிறுகதைகளை 'என்கதைக் கொத்து' என்னும் தலைப்பில் மொழிபெயர்த்துள்ளார். 'காலி டமாரம்' என்ற தலைப்பில் தால்சுதாயின் கதை ஒன்றினைத் தமிழ்ப் படுத்தியுள்ளார். நாடகத் துறையில் சிறந்து விளங்கிய எசு. சி. கிட்டப்பா அவர்களைப் பற்றியும் ஒரு நூல் இயற்றியுள்ளார். இவர் பல துறைகளிலும் 48 நூல்களைப் படைத்துள்ளார். மு.த.

**ஆக்கொடாட்டே** என்பது சப்பானிய நகரங்களுள் ஒன்று. இது ஆக்கைடோ (Hokaido) தீவின் தெற்குக் கடற்கரைப் பட்டினம். ஆக்கைடோ சப்பானின் வடக்கிலுள்ள தீவாகும். இங்குள்ள துறைமுகத்திலிருந்துதான் கி. பி. 1859 - ஆம் ஆண்டில் சப்பான் உலக வாணிகத்தைத் தொடங்கியது. இந்நகரத்தின் மேற்குப் பகுதிகளில் பழைய திருச்சபைகளும், ஐரோப்பியப் பாணிக் கட்டடங்களும் இன்றும் நிலைத்துள்ளன. ஆக்கொடாட்டே (Hokadate) கி.பி. 1880 முதல் 1890 வரை போடப்பட்ட இருப்புப் பாதைகளினால் மேலும் சிறப்புறலாயிற்று. இந்நகரம் 1934 - ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் தீக்கிரையாய் அழிந்துபோயிற்று. அத்தீயில் 2000 மக்கள் மாண்டனர். மீண்டும் இந்நகர் புதுப்பிக்கப்பட்டுள்ளது. மக்கள்தொகை 3, 20, 000 (1980).

**ஆக்சசு ஆறு** உருசியாவின் ஆறுகளுள் ஒன்று. சோவியத்து ஆசியாவின் இடையிலுள்ள பகுதி. இது அமுதாரியா (Amu Darya) என்றும் கூறப்படும். இந்த ஆறு பாமீர் பீடபூமியில் (Pamir Plateau) உற்பத்தியாகி ஆரல் கடலில் கலக்கிறது. ஆக்சசு ஆறு (Oxsus) 2400 கி.மீ. நீளமுள்ளது; ஆழம் குறைவானது. கால்வாய்கள் பல வெட்டப்பட்டு, இந்த ஆறு வேளாண்மைக்குப் பயன்படுகிறது.

**ஆக்சியம் போர்:** இது வரலாற்றில் சிறப்பான தாகக் கருதப்பெறும் கடற்போர். இப்போர், கி.மு. 31–ஆம் ஆண்டில் கிரீசு நாட்டு மேற்குக் கடற்கரையை அடுத்த கடலில் நடைபெற்றது. உரோமானியப் படைத் தலைவர்களுள் ஒருவரான ஆக்டேவியன் (Octavian) என்பாரை எதிர்த்து, மற்றொரு உரோமானியத் தலைவரான மார்க் அந்தோனியும் (Mark Antony), எகிப்துப் பேரரசி கிளியோபாத்ரா (Cleopatra) என்பவளும் இணைந்து போரிட்ட போது, ஆக்டேவியன் வெற்றி பெற்றார். இதனை உரோமானிய உள்நாட்டுப்போர் என்றும் கூறலாம். ஆக்டேவியனின் தலைசிறந்த கப்பற்படைத் தளபதியான அக்ரிப்பா (Agrippa) என்பவர், கப்பற்படையை முன்னின்று தலைமை தாங்கி நடத்தி வெற்றி பெற்றார். இவ்வெற்றியின் பயனாக ஆக்டேவியன் உரோமாபுரியில் வலிமை மிக்கவரானார். ஆக்சியம் (Actium) போருக்குப் பின்னர், ஆக்டேவியன் பேரரசர் அகசுடசு (Augustus) என்று முடிசூட்டிக் கொண்டு, உரோமானியப் பேரரசினை நிலை நாட்டினார்.

**ஆக்சுபர்கு** ஐரோப்பிய வரலாற்றை உருவாக்கிய செருமானிய நகரங்களுள் ஒன்று. இந்நகரம் தெற்குச் செருமனியில் உள்ள பவேரியா (Baveria) என்னுமிடத்தில் வெர்டாக்கு (Wertach), இலெக்கு (Lech) ஆகிய ஆறுகள் ஒன்று கூடும் இடத்தில் அமைந்திருக்கிறது. இதன் மக்கள் தொகை 1981–ஆம் ஆண்டின் கணக்குப்படி 2,48,000 ஆகும். இந்நகரத்தில் கண்ணாடி, பீங்கான், கடிகாரம், இரசாயனப் பொருள்கள் போன்றவை உற்பத்தியாகின்றன. செருமானியர்கள் இவ்விடத்தில்தான் இரண்டாம் உலகப் போர் மூளும் தருவாயில் நீர்மூழ்கிக் கப்பல்களை உருவாக்கினர்.

ஆக்சுபர்கின் (Augsburg) வடபகுதியில் கிறித்தவ மாதா கோயில் ஒன்று அமைந்திருக்கிறது. மேற்குப் பகுதியில் அமைந்திருக்கும் நிலவறை கி.பி. 944-ஆம் ஆண்டுக்கும் கி.பி. 1006-ஆம் ஆண்டுக்கும் இடைப் பட்ட காலத்தில் கட்டப்பட்டது. கோதிக்குக் கலைப் பாணியில் (Gothic Style) அமைந்துள்ள அதன் கல்லறைத் தோட்டம் (Nave) கி.பி. 1331 – ஆம் ஆண்டுக்கும் 1343-ஆம் ஆண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் கட்டப்பட்டது. அதன் உட்பகுதி 1934-ஆம் ஆண்டு பழுது பார்க்கப்பட்டது.



ஆக்சுபர்கு

கி.பி. பதினோராம் நூற்றாண்டில் நிறுவப்பட்ட வெண்கலக் கதவுகளும், புதைவிடத்திலுள்ள ஐந்து சாளரங்களும், மேற்றிராணியாரின் அரியணையும், மூத்த ஆன்சு எல்பின் (Hans Helbin) என்பார் தீட்டிய வண்ணங்களும் மாதாகோவிலுக்கு மேலும் மெருகூட்டுகின்றன. தென் பகுதியில் உள்ள தூய உல்ரிக்சு (St. Ulrich's Church) திருச்சபைப் பணி கி.பி. 1467-ஆம் ஆண்டு பர்க்கார்டு ஏங்கல்பர்கு (Burkhard Engelberg) என்பவரால் தொடங்கப்பட்டது. இதன் பணி முடிவதற்கு இருநூறாண்டுக் காலம் ஆயிற்று. இதில் கி.பி. 1500-இல் பிற்காலக் கோதிக்குக் கலைப்பாணி முறையில் அமைந்த மதோனாவின் (Madona) திருவுருவச் சிலையும், கி.பி. 1712-ஆம் ஆண்டளவில் திருக்கோயில் துணைத் தொழுகை இடங்களும், சிற்பவேலைகள் அமைந்த இரும்புக் கதவுகளும் பொருத்தப்பட்டன. இந்நகரின் நடுவிலுள்ள சாவடியைக் கி.பி. 1615-ஆம் ஆண்டுக்கும் கி.பி. 1620-ஆம் ஆண்டுக்கும் இடைப்பட்டகாலத்தில் எலியாசு ஆல் (Elias Holl) என்பவர் கட்டினார். ஆனால், இரண்டாம் உலகப் போரின்போது இச் சாவடியும், இதன் தங்கக் கோபுரமும் தீக்கிரையா யின.

ஆக்சுபர்கு நகரில் பெரிய அருங்காட்சியகம் ஒன்றும், இரண்டு கலைமாடங்களும், ஒரு நூலக மும் அமைந்திருக்கின்றன. இசைப் பேரறிஞர் இலியோபால்டு மொசார்ட்டு (Leopold Mozart) வாழ்ந்த இல்லம் இப்பொழுது அருங்காட்சியகமாக விளங்குகிறது. இதைத்தவிர, திறந்த வெளி அரங்கு ஒன்றும், விளையாட்டரங்கு ஒன்றும், விலங்குக் காட்சிச் சாலை ஒன்றும், பூங்கா ஒன்றும் உள்ளன. மேலும், இங்கு மூன்று இசைக் கல்லூரிகளும், ஒரு தத்துவப் பள்ளியும், ஒரு தொழிற்பள்ளியும் உள்ளன.

பிராங்க்பர்ட்டுப் (Frankburt) பெருஞ்சாலையில் அமைந்துள்ள இந்நகரம், பல இருப்புப்பாதைகளும், பேருந்துச் சாலைகளும் இணையும் இடமாக அமைந்திருக்கிறது. வின்சுடன் சர்ச்சிலும் இட்லரும் 1938-ஆம் ஆண்டு சந்தித்து ஒப்பந்தம் செய்து கொண்ட இடமான மியூனிச்சு (Munich) ஆக்சுபர்கி லிருந்து 60 கி.மீ. தொலைவிலுள்ளது.

ஆக்சுபர்கு தென் செருமனியின் தொழில்வளம் மிக்க நகரமாகும். இரும்புத் தொழிற்சாலைகளும், பருத்தித் தொழிற்சாலைகளும், வெள்ளீயம், இரசாயனம் மின்சாரப் பொருள்கள் போன்றவற்றிற் கான தொழிற் சாலைகளும், மகிழ்வுந்துகள், விமானங்கள், காகிதம், காலணிகள், செய்வதற்கான தொழிற்சாலைகளும் இங்கு மிக்குள்ளன. இங்கு உற்பத்தி செய்யப்படும் டீசல் எஞ்சின்கள், அச்சு இயந்திரங்கள் போன்றவை பெருமளவில் வெளி நாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றன.

ஆக்சுபர்கு நகரின் தென்பகுதியில் வெண்கலக் காலத் தொடக்க நினைவுச் சின்னங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. துரூசசு (Drusus) என்னும் உரோமப் பேரரசரால் கி.மு.15-ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட இந்நகரம், செருமானியப் பேரரசர் தைபீரியசு (Tiberius) என்பவரின் ஆட்சியின்கீழ் இருந்துவந்தது. இந்நகரம் கி.பி. ஏழாம் நூற்றாண் டில் மேற்றிராணியார்களின் கீழ் இருந்தது. பேரரசர்

மகா ஆட்டோ மேற்றிராணியார் உல்ரிச்சு (Bishop Ulrich) தலைமையில் அமைந்த அங்கேரியப் படைகளைக் கி.பி. 953-இல் இலெக்பெல்டு (Lechfeld) என்னுமிடத்தில் தோற்கடித்தார். ஆக்சுபர்கு கி.பி. 1276-இல் பேரரசின் ஒரு தன்னாட்சி பெற்ற நகரமாயிற்று. இது செருமானியச் சங்கத்தில் கி.பி. 1331-இல் உறுப்பினராகச் சேர்ந்தது.

பக்கர் (Fugger), வெல்சர் (Welser) என்ற இரண்டு வணிகக் குடும்பங்கள்தாம், ஆக்சுபர்கை ஒரு செழிப்புமிக்க நகராக மாற்றின. செல்வச் செழிப்பினால் கலையும், அறிவியலும் வளர்ந்தோங்கின. மூத்த ஆன்சு ஆல்பின் (Hans Holbein the Elder) என்பாரும் அவர் தம் உடன்பிறந்தாரான இளைய ஆல்பினும் (Holbein the Younger) இந் நகரத்தைச் சார்ந்தவர்களே.

ஆக்சுபர்கு வரலாற்று நிகழ்ச்சிகளுக்குப் பெயர் பெற்றது. இந்நகரில்தான் புனித உரோமானியப் பேரரசர் ஐந்தாம் சார்லசு (Charles V) கி.பி. 1555-ஆம் ஆண்டுச் செப்டம்பர்த் திங்கள் 25-ஆம் நாள், தயட்டு (Diet) என்னும் செருமானிய நாடாளு மன்றத்தில் சமயப் பொறையை அறிவித்தார். அதனை விரும்பாத சாக்சானிய இளவரசர் மாரிசு (Marrice) என்பாரும், அவர்தம் கூட்டாளிகளும் மன்னருக்கு எதிராகக் கலகம் செய்தனர். இதற்கு முன்னர்க் கி. பி. 1548-இல் மன்னர் அப்போதைக்குப் பயன்படுவதான ஆணை ஒன்றைப் பிறப்பித்துச் சமயப் பொறை நல்கினார். அதனைத் தொடர்ந்து கி.பி. 1552-ஆம் ஆண்டுப் பாசாவு (Passav) என்னுமிடத்தில் புராட்டசுடண்டுகளும், கத்தோலிக்கர்களும் கூடி அமைதி கோரினர். மேனாட்டுக் கிறித்தவ உலகில் சமயப் பிளவை விரும்பாத பேரரசர், அப் போதைக்குப் பாசாவு உடன்படிக்கையின் முடிவுகளை ஏற்றுக்கொண்டார்.

சார்லசு கி.பி. 1555-ஆம் ஆண்டுப் பிப்பிரவரித் திங்கள் 5-ஆம் நாள் ஆக்சுபர்கில் நாடாளு மன்றத்தைக் கூட்டினார். சமயப் பிரிவினை வாதிகளின் அப்போதைய சமரச ஏற்பாட்டினை விரும்பாத பேரரசர், தம் சகோதரர் முதலாம் பெர்டினாண்டை (Ferdinand I) அனுப்பினார். இம் மன்றத்தில் செருமானிய அரசுகள், சமயச் சண்டைகள் இருத்தலாகா எனவும், அனைத்துக் கிறித்தவச் சமயங்களும் ஒருங்கிணைந்து செயற்படும் வரை பாசாவு உடன்பாடு நடைமுறையில் இருக்கவேண்டும் எனவும் முடிவு செய்தன. கத்தோலிக்கச் சமயமும் புராட்டசுடண்டு சமயமும் பேரரசால் ஏற்றுக் கொள்ளப்பட்ட சமயங்களாயின. பேரரசின் எந்த ஒரு பகுதியிலும் ஒன்றிற்கு மேற்பட்ட கிறித்தவச் சமயம் நடைமுறையில் இருத்தலாகாது என்பதும், மாற்றுச் சமயத்தார் அச்சமயம் நடைமுறையிலிருக்கும் பகுதிக்குச் சென்று அங்கு வாழவேண்டும் என்பதும் முடிவுசெய்யப்பட்டன. பெரிய நகரங்களுக்கும் சிறிய நகரங்களுக்கும் இவ்விதமுறைகளிலிருந்து விலக்குஅளிக்கப்பட்டது. இச்சமயப் பொறை 'நைட்டு' (Knight) வீரர்களுக்கும் வழங்கப்பட்டது.

மேல்குருமார்களிடமிருந்து (Prelates) பெறப் பட்ட திருச்சபை நிலங்கள், புராட்டசுடண்டுகளிடம் ஒப்படைக்கப்பட்டன. புராட்டசுடண்டு சமயத்தைத் தழுவும் கத்தோலிக்கக் குருமார்கள் தங்கள் பதவிகளையும், நிலங்களையும் விடவேண்டியவராயினர். இதனை விரும்பாத புராட்டசுடண்டுகள் பாசாவு உடன்படிக்கையின் ஓரிரு விதிமுறைகளை நடைமுறையினின்றும் தள்ளிவைத்தனர்.

ஆக்சுபர்கு உடன்படிக்கை தயட்டு மன்றத் தாருக்கு முழு மகிழ்ச்சியை வழங்கவில்லையென்றாலும், அடுத்துவந்த ஐம்பது ஆண்டுகளுக்கு அது புனித உரோமப் பேரரசைச் சமயப் பிளவினின்றும் காப் பாற்றியது.

பிரான்சை எதிர்க்கும் பொருட்டுக் கி.பி. 1686-ஆம் ஆண்டு பேரரசர் முதலாம் இலியோபால்டுவும் (Leopold I) ஏனைய இளவரசர்களும் கூட்டினை ஏற்படுத்தினர். இதுவே ஆக்சுபர்குக் கூட்டாகும். பிரெஞ்சு மன்னர் பதினான்காம் உலூயி கி.பி. 1688-ஆம் ஆண்டு பலாட்டினேட்டைத் தாக்கவே பேரரசர் ஆக்சுபர்கு கூட்டு மூலம் அதனை முறியடித்தார்.

ஏழு புராட்டசுடண்டு இளவரசர்களும் இரண்டு நகரச் சமயப் பெருமக்களும் இணைந்து, கி.பி. 1530-ஆம் ஆண்டு சூன் திங்கள் 25-ஆம் நாள், செருமானிய, இலத்தீன் மொழிகளில் அமைந்த புராட்டசுடண்டுச் சமயக் கோட்பாடு ஒன்றினை வெளியிட்டனர். இவர்களுள் முதன்மையானவர் பிலிப்புமெலங்தன் (Philipp Melanchthon) என்பவராவார். இக்கோட்பாட்டின் சீரிய நோக்கம், புராட்டசுடண்டு சமயத்தின் கோட்பாடுகளை விளக்குவதும், கத்தோலிக்கர்கள் ஏற்றுக் கொள்ளும் வகையில் புராட்டசுடண்டு அறிக்கை ஒன்று உருவாக்குவதுமாகும்.

ஆக்சுபர்குக் கோட்பாடு இருபத்தெட்டு விதிமுறைகளைக் கொண்டது. முதல் இருபத்தொரு விதிமுறைகள் பின்வருவன. மும்மை (Trinity), பாவச் செயல், இயேசுநாதர், பாவமன்னிப்பு, சமயக்குருமார் தொகுதி (Ministry), பணிவு, திருச்சபை, புனிதச் சடங்குகளின் (Sacrament) மாட்சி, பெயரீட்டு விழா (Baptism), இயேசுநாதரின் இறுதிவிருந்துச் சடங்கு (Eucharist), பாவமன்னிப்புக் கோரல், கழிவிரக்கம் (Repentence), புனிதச் சடங்குகளின் பயன், திருச்சபை மரபுமுறை, திருச்சபைச் சடங்குகள்,

நாட்டுப் பாதுகாப்புச் செயல் (Civil affairs), இம்மை மறுமைக் கோட்பாடு (Eschatology), தன்நோக்கு, பாவச் செயலுக்கான காரணங்களை ஆய்தல், நற்காரியங்கள், துறவிகளின் கோட்பாடு (Cult of the Saints) ஆகியவையாகும். இக்கோட்பாடுகள், புராட்டசுடண்டுக் கோட்பாடுகள், கத்தோலிக்கச் சமயக் கோட்பாடுகள் ஆகியவற்றினின்றும் சற்றேனும் மாறுபடவில்லை என்பதைப் பறைசாற்றின. எஞ்சிய ஏழு விதிமுறைகள் சமயச் சீர்திருத்தத்திற்கு முன் திருச்சபையில் இருந்த குறைபாடுகளைக் குறிப்பிட்டதோடு, அவை எவ்வாறு நீக்கப்பட்டன என்றும் குறிப்பிட்டன. அவை முறையே: ஒரே முறையில் அமைந்த தூய நற்கருணை விருந்து, மணத்துறவு (Celibacy), இறுதி விழா (Mass) வைப் பாவத்தைப் போக்குவதற்காகப் பயன் படுத்துதல், கட்டாயப் பாவமன்னிப்புக் கோருதல், தகுதி அடிப்படையில் நியமனங்கள் அளித்தல், மேற்றிராணியார்கட்கு அதிக அதிகாரம் வழங்குதல் ஆகியவை. ஆனால், அதற்குக் கத்தோலிக்கர்கள் எதிர்ப்புத் தெரிவித்தனர். அதனைத் தொடர்ந்து பேரரசரும் புராட்டசுடண்டுகளின் வாதத்தை ஏற்க மறுத்தனர். இந்நிகழ்ச்சி (கி.பி. 1531) "ஆக்சுபர்குக் கோட்பாட்டின் மன்னிப்பு" (Apology of the Augsburg Confession) என்று குறிக்கப்படுகிறது.

ஆக்சுபர்குக் கோட்பாடு (கி.பி. 1530) புராட்டசுடண்டு மறைநூலாக விளங்குகிறது. இதில் சில திருத்தங்களைச் செய்து சுவிங்கிலியப் பிரிவினரும் (Swingli) கால்வினியப் பிரிவினரும் (Calvinists) இதனை ஏற்றுக் கொண்டனர்.

இரிச்சர்டு தாவர்னர் (Richard Taverner) என்னும் பெரியார் கி.பி. 1536-ஆம் ஆண்டில் ஆக்சுபர்குக் கோட்பாடுகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். ஆங்கிலத் திருச்சபையின் 'முப்பத்தொன்பது விதிமுறைகளும்' வெசுலியின் 'இருபத்தைந்து விதிமுறைகளும்' இதன் திரிபே.

இவ்வாறு பல வரலாற்று நிகழ்ச்சிகள் உருவாவதற்குப் பிறப்பிடமாக இருந்த ஆக்சுபர்கு நகரம், இரண்டாம் உலகப்போரில் ஓரளவு சிதைவுண்டதெனினும் தன் அழகை இன்னும் இழந்துவிடவில்லை.

செ.ப.

**ஆக்சும்** கிழக்கு ஆப்பிரிக்காவில் இருந்த பண்டைய வலிமைமிக்க அரசு. எத்தியோப்பியா நாட்டின் வடக்கில் உள்ள ஆக்சும் கி.பி. 50-ஆம் ஆண்டளவில் சிறப்பானதாகக் கருதப்பட்டது. இது 300 ஆண்டுகளில் மிகப் பெரியதாக உருமாறியது. பாரசீகர்கள் படையெடுத்தபோது ஆக்சும் (Aksum) நலிவுற்றது. காலப்போக்கில் ஆக்சும் வலிவிழந்தபோது அதன் பண்பாட்டை எத்தியோப்பியா ஏற்றுக் கொண்டு வளர்த்து வருகிறது.

**ஆக்டன் பிரபு (கி.பி. 1834-1902)** ஆங்கில வரலாற்றாசிரியர். இவர் கி.பி. 1834-ஆம் ஆண்டில் நேபில்சு (Naples) நகரில் வாழ்ந்த செல்வச் செழிப்புள்ள ஆங்கில – உரோமானியக் கத்தோலிக்கக் குடும்பத்தில் பிறந்தவர். தனியாரிடம் கல்வி கற்று முதிர்ச்சி அடைந்த இவர் உருசியா, அமெரிக்கா, இத்தாலி போன்ற நாடுகளில் விரிவாகப் பயணம் செய்தார். செருமானியப் பல்கலைக் கழகங்களில் பல ஆண்டுகள் பயின்று, வரலாற்றை அறிவியல் நோக்குடன் ஆய்வு நடத்தும் திறன் பெற்றார். கிளாடுசுடோன் (Gladstone) நெருங்கிய நண்பரான ஆக்டன் (Acton) கி. பி. 1859 முதல் 1865 வரை முற்போக்குக் கட்சியின் நாடாளுமன்ற உறுப்பினராக இருந்தார். இவர் கி.பி. 1869-இல் ஆக்டன் பிரபு வாக்கப் பெற்றார். இவர் 59,000 நூல்களைக் கற்றவர் என்னும் புகழ் பெற்றார். ஆங்கில வரலாற்றுக் குறிப்பு என்னும் இதழைக் கி.பி. 1886-இல் தோற்றுவிக்க உதவினார். இவர் கி.பி. 1895 முதல் 1902 வரை கேம்பிரிட்சுப் பல்கலைக் கழக வரலாற்றுப் பேராசிரியராகப் பதவி வகித்தார். 'கேம்பிரிட்சு இக்கால வரலாறு' (Cambridge Modern History) என்னும் தொகுதியை வெளியிடத் திட்டம் தீட்டினார். அதற்காக இவர் மிகுதியாக எழுதவில்லை. இவர் காலமான பின்னர் இவருடைய சொற்பொழிவுகளும் கட்டுரைகளும் மூன்று தொகுதிகளாக வெளியிடப்பெற்றன. வரலாற்றைப் பொருள் அடிப்படையில் கண்ட பொதுவுடைமைக் கொள்கையுடன் நோக்குபவர்களோடு இவர் மாறுபட்டவர். ஆங்கிலமொழி பேசும் உலகில் இவருடைய வரலாற்றுப் பாடங்கள் பெரும் செல்வாக்கினைப் பெற்றுள்ளன.

**ஆக்பர்ன், வில்லியம் (கி.பி. 1888-1959):** இருபதாம் நூற்றாண்டில் சமூகவியலின் பல துறைகள் பற்றிய நூல்களை எழுதிப் புகழ்பெற்றவர் ஆக்பர்ன் வில்லியம் (Ogburn William) ஆவார். இவர் அமெரிக்காவில் சியார்சியா (Georgia) மாநிலத்தைச் சேர்ந்தவர். இவர் நூல்களில் பண்பாட்டுத் தேக்கம் பற்றிய விளக்கங்களைக் காணலாம். இவர் சமூகவியல் துறைகள், ஒன்றுடன் ஒன்று நெருங்கிய தொடர்புடையன என்று கருதினார். கண்டுபிடிப்பு, திரட்டு, பரவல், பொருத்தப்பாடு ஆகிய காரணிகள் பண்பாட்டு மலர்ச்சியை உருவாக்குகின்றன என்று இவர் கருதினார்.

ஆக்பர்ன் ஒரு குறிப்பிட்ட சமூக அறிவியல் துறையில் மாத்திரம் கவனம் செலுத்தாமல், பல்வேறு சமூக அறிவியல் துறைகளிலும் கவனம் செலுத்தினார். இவர் கொலம்பியாவில் பொருளியல் பயின்று

பட்டம் பெற்றார். வெசுலி சி. பிட்செல் என்ற பொருளியல் அறிஞர், இராபர்ட்டு லூஇயிசு (Robert Louis), ஆல்பிரடு எல். குரோபர் (Alfred. L. Kroeber) போன்ற மானிடவியல் அறிஞர்களால், இவர் ஈர்க்கப்பட்டார்.

ஆக்பர்ன் 1950–இல் 'சமூக மாற்றம்' என்னும் நூலையும், கோல்டன் வெயிசருடன் இணைந்து 'சமூக அறிவியலும் அதனிடையுறவுகளும்' என்னும் நூலையும், நிம்காப்புடன் இணைந்து 'சமூகவியல்' என்ற நூலையும் எழுதினார். மேலும், இவர் சமூக அறிவியல் களஞ்சியத்திற்கு எழுதிய சமூக மாற்றம் என்ற கட்டுரையும், சமூக மலர்ச்சியின் மறு ஆய்வு, சமூகவியல்சார் ஆய்வுகள், உற்றுநோக்கல், ஓனாய்க் குழந்தையைப் பற்றிய ஆய்வு, புள்ளியியலின் வரையறை எல்லை போன்ற பல கட்டுரைகளும் குறிப்பிடத்தக்கனவாம்.

துணை நூல்கள்:

**Horton and Hunt, Sociology, (Fifth Edition), Mc Craw-Hill, Tokyo, 1980.**

**David Popenoe, Sociology, Prentice Hall, New Jersey, 1977.**

**ஆக்ரா** இந்தியாவிலுள்ள பெரும் மாநிலமான உத்தரப் பிரதேசத்தில் உள்ள மூன்றாம் பெரிய நகரம். ஆக்ரா மாவட்டத்திற்கும், ஆக்ராக் கோட்டத்திற்கும் தலைமைநகரமாகவும் இது விளங்குகிறது. இந்நகரம் இயமுனையாற்றின் தென்கரையில் அமைந்துள்ளது. இது இந்தியாவின் தலைநகரான புது தில்லியிலிருந்து 187 கி.மீ. தொலைவிலும் கல்கத்தாவிலிருந்து 1344 கி.மீ. தொலைவிலும் உள்ளது.

வரலாறு: ஆக்ரா பற்றிய தொன்மையான குறிப்புகள் மகாபாரதத்திலேயே உள்ளன. அக்காலத்தில் 'தேவருலகம்' என்ற பொருளில் இது ஆக்ரபானா என்று குறிக்கப்பட்டது. ஆனால், மொகலாயர் காலத்தில்தான் இந்நகரம் பெருமையுற்றது. இந்திய வரலாற்றின் இடைக் காலத்தில், பழைய கோட்டையான பதால்கர் அமைந்திருந்த இடத்தில் ஆக்ரா தோற்றுவிக்கப்பட்டதென்பது தெரிகிறது. ஆனால், பதால்கர் கோட்டையின் தோற்றமும், வரலாறும் தெளிவாகத் தெரியவில்லை. இராசபுத்திரர் வசமிருந்த இந்நகரைக் கசினி மாமூது கி.பி 1018–ஆம் ஆண்டில் கொள்ளையிட்டார். பின்பு, சிக்கந்தர் சா லோடி என்ற ஆப்கானியச் சுல்தான் காலத்தில் (கி.பி 1505–ஆம் ஆண்டு) நிலநடுக்கம் காரணமாகப் பதால்கர் பாழானது. சிக்கந்தர் லோடி இந்நகரத்தைத் தன் நாட்டின் தலைநகராக்கிப் புதிய கோட்டையையும் நகரையும் தோற்றுவித்தார். இந்நகரைத் தம் பெயரால் சிக்கந்தரா எனக் குறிப்பிட்டார். இப்போது அப்பகுதி அழிந்த நிலையில் உள்ளது.

ஆக்ரா நகரைக் கி.பி. 1526–ஆம் ஆண்டில் பாபர் கைப்பற்றினார். அவர் தம் நான்காண்டு ஆட்சிக் காலத்தின் பெரும் பகுதியை இங்கேயே கழித்தார். பாபருடைய உடல் முதலில் ஆக்ராவில் புதைக்கப் பட்டுப் பிறகே காபூலுக்குக் கொண்டு செல்லப்பட்டது. பிற்காலத்தில் ஒரு புதிய தலைநகரைத் தோற்றுவிப்பதற்காக, அக்பர் ஆக்ராக்கோட்டையை இடித்துத் தரைமட்டமாக்கினார். இங்கு அவர் செங்கோட்டைக்கு அடித்தளம் அமைத்தார். ஆக்ரா ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகள் மொகலாயரின் தலைநகரமாக விளங்கியது. தலைநகர் கி.பி.1658–ஆம் ஆண்டில் தில்லிக்கு மாற்றப்பட்டதால், இதன் சிறப்பு ஓரளவு குறைந்தது எனலாம்.

இந்நகரத்தைச் சாட் இனத்தவரும், மராத்தியரும், குவாலியர் அரசரான சிந்தியாவும் கி.பி. 18–ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கைப்பற்றினர். இறுதியில் கி.பி. 1803– ஆம் ஆண்டில் ஆங்கிலேயர் ஆக்ராவைக் கைக்கொண்டனர். ஆக்ரா கி.பி.1833–இலிருந்து 1858 வரை கிழக்கிந்திய வாணிகக் குழுவின் ஆட்சியில் மாநிலத் தலைநகரமாகவும் திகழ்ந்தது. ஆக்ரா கி.பி. 1863–இல் நகராட்சியாகவும், 1959–இல் மாநகராட்சியாகவும் ஆயிற்று.

நினைவுச் சின்னங்கள்: ஆக்ராவில் பல நினைவுச் சின்னங்கள் உள்ளன. ஆக்ராவிற்கே பெருமை சேர்க்கும் தாசுமகால் (Taj Mahal) அவற்றுள் ஒன்று. ஆக்ராக் கோட்டையிலிருந்து ஒன்றரைக் கி.மீ. தொலைவில், இயமுனையாற்றின் வடக்குக் கரையில் இது அமைந்துள்ளது. பேரரசர் சாசகான், அவர் மனைவி மும்தாசு நினைவாகத் தாசுமகாலைக் கட்டினார். இக்கட்டிடம் வெள்ளைச் சலவைக் கற்களால் இரத்தினங்கள் இழைத்துக் கட்டப் பெற்றுள்ளது. இதற்காக ஏறக்குறைய இருபதாயிரம் தொழிலாளர்கள் நாள்தோறும் வேலை செய்து, இக்கட்டிடத்தை இருபது ஆண்டுகளில் கட்டி முடித்தனர். தாசுமகாலை வடிவமைத்துத் தந்தவர் ஓர் ஐரோப்பியச் சிற்பி என்பதும், கட்டி முடித்தவர் துருக்கி நாட்டவரான உசுதாத்து ஈசா என்ற சிற்பி என்பதும் அறியக்கிடக்கின்றன. தாசுமகால் உலக அதிசயங்களுள் ஒன்றாகத் திகழ்கிறது. இன்றளவும் அதன் அழகை மக்கள் குறிப்பாக முழுநிலவுக் காலங்களில் கண்டு களிக்கின்றனர்.

தாசுமகாலுக்கும் காலத்தால் முந்தையது ஆக்ராக் கோட்டை. இக்கோட்டையைக் கட்டியவர் அக்பர். இது கி.பி. 1564–1573–ஆம் ஆண்டுகளில் முப்பத்தைந்து இலட்ச ரூபாய் செலவில் அமைக்கப்பட்டது.



புலந்துதர்வாசா

இக்கோட்டை ஏறக்குறைய ஒரு முக்கோணம் போல அமைந்துள்ளது. இதன் கிழக்குப்புறம் இயமுனை யாற்றின் கரையோரமாக ஏறத்தாழ ஒரு கி.மீ. நீளம் உள்ளது. இக்கோட்டையின் மொத்தச் சுற்றளவு 2½ கி.மீ. ஆகும். கோட்டை அழகான வளைவுகளுடனும், உயரமான காவல் முகப்புகளுடனும் விளங்குகிறது. இதன் சுற்றுச்சுவர் எழுபது அடி உயரமுள்ளது. இச்சுவரைக் கட்ட, சிவப்பு நிறமுடைய மணற்பாறைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. அபுல் பாசல் (Abul Fazl) கூற்றுப்படி, ஆக்ராக் கோட்டையினுள் ஐந்நூற்றுக்கும் மேற்பட்ட அழகான பெரும் மாளிகைகள் இருந்தன. ஆனால், இப்போது அவை இல்லை. மதிற்சுவரும், வாயில்களும், அக்பரி மகால் கட்டிடமும் அக்பரால் கட்டப்பட்டன. சகாங்கீர் மகாலையும், சலீம்கரையும் சகாங்கீர் கட்டினார். செரிகாசி என்று சொல்லப்படும் மதில் மேலமைந்த மேடைகளையும், ஐந்து புதிய வாயில்களையும், கோட்டையைச் சுற்றி அகழியையும் பேரரசர் அவுரங்கசீபு கட்டினார். மற்றக் கட்டிடங்களுள் பெரும்பான்மையானவற்றைச் சாசகான் கட்டுவித்தார். கோட்டையின் உள்ளே உள்ள முத்து மசூதி கி.பி. 1648-1655 ஆம் ஆண்டுகளில் சாசகானால் மூன்று இலட்சம் ரூபாய் செலவில் கட்டி முடிக்கப்பட்டது. இம் மசூதி எளிமையாக வெள்ளைச் சலவைக் கற்களால் கட்டப்பட்டுள்ளது. இதன் அழகும் வடிவமைப்பும் மிகச் சிறப்பான முறையில் அமைந்துள்ளன. இம் மசூதி, இந்தியாவில் சரசனிய (Saracenic) அல்லது இசுலாமியக்கட்டிடக் கலையின் எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

ஆக்ராக் கோட்டையை அடுத்துச் சும்மா மசூதி என்று சொல்லப்படும் பெரிய மசூதி உள்ளது. அது சாசகான் காலத்தில் கி.பி. 1644-1649-ஆம் ஆண்டுகளில் சாசகான் மகள் சகானாராவால் கட்டப்பட்டது. இன்றளவும் மக்கள் இம் மசூதிக்குத்தான் மிகுதியாகச் செல்கிறார்கள்.

ஆக்ரா அருகில் வளைந்து செல்லும் இயமுனை ஆற்றின் கிழக்குக் கரையோரமாக அமைந்துள்ள மற்றொரு சிறந்த கட்டிடம் நூர்சகானின் தந்தை இதிமத் உத்தௌலாவின் (Itimad-Ud-daulah) சமாதியாகும். இது கி.பி. 1628-1630-ஆம் ஆண்டுகளில் கட்டி முடிக்கப்பட்டது. பாரசீகப் பல்வண்ணக் கல் இணைப்பு வேலைப்பாட்டைப் போன்று, சலவைக் கல்லைச் செதுக்கி, அதன் உள்ளே வேற்று நிறத்தில் விலை உயர்ந்த இரத்தினக் கற்களைப் பதிக்கும் கலை அப்போதுதான் மொகலாயர் காலத்தில் முதல் முறையாக உருவெடுத்தது எனலாம்.

ஆக்ராவிற்கு 8 கி.மீ. வடமேற்கே சிக்கந்தரா என்ற இடத்தில், அக்பரின் சமாதி எழுப்பப்பட்டுள்ளது. ஐந்தடுக்குக் கொண்ட இச்சமாதியைக் கி.பி 1613-ஆம் ஆண்டில் புதிய முறையில் சகாங்கீர் கட்டி முடித்தார். பிற்காலத்தில் சாட் இனத்தவர் இங்குக் கொள்ளையிட்டு, அக்பர் சமாதியின் புனிதத்தைக் குலைத்திருந்தாலும் இன்றளவும் இச்சமாதி



தாசுமகால்

சிறந்த முறையில் அழகிய சூழ்நிலையில் அமைந்துள்ளது. இச்சமாதிக்குச் செல்ல மிகப் பெரிய வாயில் ஒன்றும் உண்டு. இங்கு நான்கு மெல்லிய தூபிகளும் (தூண்களும்) உண்டு.

ஆக்ராவிலிருந்து தென்மேற்கே 37 கி.மீ. தொலைவில் பதேபூர் சிக்ரி என்ற புதிய தலைநகர் பேரரசர் அக்பரால் நிறுவப்பட்டது. எனினும் அக்பரே தம் வாழ்நாளில் இந்நகரைக் கைவிட்டார் எனலாம். இக்காலத்தில் மிகக் குறைந்த அளவில் மக்கள் இங்கு வசித்தாலும், இன்றளவும் அக்காலக் கட்டிடங்கள் அழியாமல் உள்ளன. இங்கு அமைந்துள்ள புலந்து தர்வாசா என்ற நுழைவாயில் ஆசியாவிலேயே மிகப் பெரியதாகும். இங்குள்ள சலீம் சிசுடி என்ற சமயப் பெரியாரின் சமாதியில் சலவைக் கற்களைச் செதுக்கியே, மிகச் சிறந்த வேலைப்பாடுகளுடன் கூடிய பலகணிகள் அமைக்கப்பட்டுள்ள முறை, இன்றளவும் வியக்கற்பாலது. இதைத் தவிர, பாஞ்சு மகால் என்னும் ஐந்தடுக்கு மாளிகையும், சதுரங்கம் ஆட மிகப் பெரிய அளவில் அமைக்கப்பட்ட திடலும் இன்றும் வியப்புடன் காணத்தக்கவை. தண்ணீர்ப் பற்றாக்குறை காரணமாகவே அக்பர் தலைநகரைப் பதினான்கு ஆண்டுகளுக்குள் மறுபடியும் ஆக்ராவிற்கு மாற்றியதாகத் தெரிகிறது. இருப்பினும், ஏறக்குறைய மூன்று நூற்றாண்டுகள் ஆனபிறகும் பதேபூர் சிக்ரி சேதமுறாமல் உள்ளது.

ஆக்ரா நகரம் மக்கள்தொகைமிகுந்த நகரமாக விளங்குகிறது. கோட்டைக்கு அருகில் அலுவலகங்களும், வணிக நிலையங்களும் அமைந்து நகரம் சுறுசுறுப்புடன் விளங்குகிறது. நகரத்துடன் புறநகர்ப் பகுதியும் இணைந்துள்ளது. தரைப்படை, விமானப் படை ஆகியவற்றின் தளமாகவும் ஆக்ரா விளங்குகிறது. இங்குள்ள படையினர் நகரம் சிறப்பாக அமைக்கப்பட்டுள்ளது. ஆக்ராவில் மாநில அரசின் மனநோய்த் தலைமை மருத்துவ நிலையமும் உள்ளது.

ஆக்ராவின் புற நகர்ப்பகுதியில் கி.பி.1861-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட இராதாசாமி இயக்கத்தின் தலைமையகம் உள்ளது. இதன் தலைமையாளர் சிவ தயாள் என்பவரின் மரபினர் இப்பகுதியில் ஒரு வளமான பல்தொழிற்கூடத்தையும் நிறுவி உள்ளனர். ஆகவே தயால்பாக்குக் குடியிருப்பு சமயச் சிறப்போடு பொருளாதாரச் சிறப்பினையும் பெற்று விளங்குகிறது.

ஆக்ராப் பல்கலைக் கழகம் 1927-ஆம் ஆண்டு தோற்றுவிக்கப்பெற்று, உத்தரப்பிரதேசத்தில் உள்ள ஏறக்குறைய நூறு கல்லூரிகள் வாயிலாகக் கல்விப் பணியாற்றிவருகிறது. ஆக்ரா நகரத்திலேயே மருத்துவக்கல்லூரியும், பொறியியற் கல்லூரியும், கல்வியியற் கல்லூரியும், பெண்கள் கல்லூரிகளும் அமைந்துள்ளன.

தில்லி-பம்பாய் விமானப் பாதையிலும், தில்லி-கல்கத்தா சாலை வழியிலும் ஆக்ரா அமைந்துள்ளது. இது இருப்புப் பாதைகளின் சந்திப்பாகவும் விளங்குகிறது. தில்லி-பம்பாய் மத்திய இரயில்வே பாதையும், ஆக்ரா-பம்பாயைப் பரோடா வழியாக இணைக்கும் மேற்கு இரயில்வே பாதையும், ஆக்ரா-கான்பூர் வடக்கு இரயில்வே பாதையும் ஆக்ராவைத் தொடுகின்றன. ஆக்ராவை இராசசுதான் மாநிலத்தோடு இணைக்கும் மேற்கு இரயில்வேயின் அகல இருப்புப் பாதையும் இங்கிருந்தே தொடங்கி மேற்கு நோக்கிச் செல்கிறது.

ஆக்ரா நகரம் பல பொருள்களுக்கு வணிகச் சந்தையாகவும், தொழிற்சாலை மையமாகவும் விளங்குகிறது. இங்குள்ள சிறப்பான தொழிற்சாலைகளில் பருத்தியிலிருந்து பஞ்சைப் பிரித்தெடுப்பது, கம்பளம் நெய்வது, தோல் பதனிடுவது, மிதியடிகள் செய்வது ஆகிய தொழில்கள் நடக்கின்றன. இங்கிருந்து விலையுயர்ந்த காலணிகள் பெருமளவில் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இங்குக் கண்ணாடிப் பொருள்களும், இரும்புக் குழாய்களும்கூட மிகுதியான அளவில் உற்பத்தியாகின்றன. ஆக்ரா நகரம் இந்தியாவிலேயே மாபெரும் சுற்றுலா நகரமாக இக்காலத்தில் விளங்குகிறது.

அண்மைக் காலத்தில் ஆக்ராவிற்கு அருகே மதுரா என்னுமிடத்தில் பெட்ரோலியம் சுத்திகரிப்புத் தொழிற்சாலை ஒன்றும் நிறுவப்பட்டுள்ளது. அதன் காரணமாக, இப்பகுதி மேலும் சிறப்பு வாய்ந்ததாகவும், மிகுந்த வளர்ச்சிக்கு வாய்ப்புகள் உள்ள பகுதியாகவும் விளங்குகிறது.

ஆக்ரா மாவட்டத்தின் மொத்தப் பரப்பளவு 4820 ச.கி.மீ. இப்பகுதி முழுவதுமே சமவெளியான ஆற்றுப் படுகையாக உள்ளது. மலைப்பாங்கான பகுதி தென்மேற்குக் கோடியில் மட்டுமே உள்ளது. மாவட்டத்தின் மேற்கு எல்லைக்கு அப்பால் இராசசுத்தான் மாநிலத்தின் தார் பாலைவனம் தொடங்குகிறது. இம்மாவட்டத்திற்கு இயமுனை யாற்றின் மூலமும், ஆக்ராக் கால்வாய் மூலமும் வேளாண்மைக்குத் தண்ணீர் கிடைக்கிறது. இதனால், ஆக்ரா மாவட்டம் வேளாண்மைச் சிறப்புள்ள பகுதியாகவும் விளங்குகிறது. இங்குத் தினை வகைகள், பயறு வகைகள், பார்லி, கோதுமை, பருத்தி ஆகியவை சிறப்பாகப் பயிரிடப்படுகின்றன, கரும்பும் மிகுந்த அளவில் இங்குப் பயிராகிறது.

ஆக்ரா கோட்டத்தில் ஆக்ரா, அலிகார், ஈட்டா, மைன்புரி, மதுரா ஆகிய மாவட்டங்கள் அடங்கியுள்ளன. இப்பிரிவின் மொத்தப் பரப்பளவு **22,180** ச.கி.மீ. ஆக்ரா நகரின் மக்கள் தொகை **7,70,352** ஆகும் **(1981).**

கி.ம.

துணை நூல்கள்:

Majumdar, R. C. and others, An Advanced History of India, Macmillan India Ltd., New Delhi, 1979.

Percy Brown, Indian Architecture (Islamic-Period), Taraporevala Sons & Co. Pvt. Ltd., Bombay, 1981.

***ஆக்லகாமா:*** இது, அமெரிக்க ஐக்கிய நாட்டின் மாநிலங்களுள் ஒன்று. உணவு, எரிபொருள்போன்றவை சிறந்து விளங்கும் மாநிலம் இது. எண்ணெய்க் கிணறுகளும் இயற்கை வாயுக் கிணறுகளும் பெருமளவில் உள்ளன. செவ்விந்தியர்கள் கி.பி. 1800–ஆம் ஆண்டிலிருந்தே இம்மாநிலத்தைப் பொருளாதார முன்னேற்றப் பகுதியாக்கினர். ஆக்லா என்றால் மக்கள்; காமா (Komma) என்றால் சிவப்பு. ஆக்லகாமா (Oklahoma) என்றால் சிவப்பு மக்கள் வாழும் நிலம் என்பது பொருள். இம்மாநிலத்தில் குடியேற்றங்கள் உண்டாக்க அரசு அனுமதிக்கும் முன்னரே பலர் இங்குக் குடியேறி, தங்கள் குடியேற்றங்களை அமைத்தனர்.

வெள்ளையர்கள், இங்குக் கி.பி. 1889-ஆம் ஆண்டு ஏப்பிரல் 22 – ஆம் நாள் குடியேற அனுமதிக்கப் பட்டனர். இதன் அருகிலுள்ள பிறபகுதிகளும் 1907–ஆம் ஆண்டு இதனுடன் இணைக்கப்பட்டு அமெரிக்க ஐக்கிய நாட்டின் மாநிலங்களுள் ஒன்றாக உருவாக்கப்பட்டது.

ஆக்லகாமாவின் வடக்கில் கான்சாசும் (Kansas) வடகிழக்கில் மிசௌரியும் (Missouri), கிழக்கில் அர்கான்சாவும் (Arkansas), தெற்கில் தெக்சாசும் (Texus), மேற்குக் கோடியில் நியூ மெக்சிகோவும், கொலராடோவும் (Colorado) எல்லைகளாக உள்ளன. இம்மாநிலத்தின் பரப்பளவு 1,81,089 ச.கி.மீ. மக்கள் தொகை 30,25,266 (1980). ஆக்லகாமாவை




ஆக்லகாமா

10 நிலப்பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை 1 ஓசார்க்கு பீடபூமி (Ozark Plateau), 2 பிரெய்ரி சமவெளி (The Prairie Plains), 3 ஓசிடா மலைகள் (Ouachita Mountains), 4 மணப்பாறைக் குன்றுகள் (The Sandstone Hills), 5 ஆர்பக்கிள் மலைகள் (Arbuckle Mountains), 6 விசிட்டா மலைகள் (Wichita Mountains), 7 சிவப்பு ஆற்றுப் பகுதி (The Red River Region), 8 சிவப்புச் சமவெளி (The Red Bed Plains), 9 சிப்சம் குன்றுகள் (The Gypsum Hills), 10 மேட்டுச் சமவெளி (The High Plains) என்பன.

இம்மாநிலத்தின் மக்கள் தொகையுள் மூன்றில் இரண்டு பங்கினர் நகரங்களில் வாழ்கின்றனர். அவர்களுள் பாதிப்பகுதியினர் ஆக்லகாமா (Oklahoma), துல்சா (Tulsa), இலாட்டன் (Lawton) ஆகிய பெரு நகரங்களில் வாழ்கின்றனர். இங்குள்ள பல்வேறு நகரங்களும் ஆக்லகாமா, துல்சா நகரங்களுக்கு அருகில் அமைந்துள்ளன. ஆக்லகாமா நகரம் மாநிலத்தின் தலைநகரமாகும். இந்நகரம் தொழிலுக்கும் வாணிகத்திற்கும் மையமாக விளங்குகிறது. ஆக்லகாமா மக்களுள் 95 விழுக்காட்டினர் அமெரிக்க ஐக்கிய நாட்டில் பிறந்தவர்கள்; 4 விழுக்காடு மக்கள் பழங்குடிகளான செவ்விந்தியர்கள்.

பெட்ரோலியம், இயற்கை வாயு, நிலக்கரி, செம்பு, களிக்கல் (Gypsum), உப்பு போன்றவை இங்குக் கிடைக்கிற கனிப் பொருள்களாகும். இங்குப் பெட்ரோலியமும் இயற்கை வாயும் பெருமளவில் கிடைக்கின்றன.

வேளாண்மைக்கு உகந்த நல்ல வளமான மண்ணை இம்மாநிலம் பெற்றுள்ளது. காடுகள் 34,45,090 எக்டேர் பரப்பிலுள்ளன. பைன் மரங்கள் பெருமளவில் வளர்ந்து பைன் மர வாணிகத்தைப் பெருக்கியுள்ளது. ஓக்கு, தேவதாரு அல்லது அசோக மரம் (Ash), கிக்கோரி (Kickory), வாதுமை மரம் போன்றவற்றை இம்மாநிலத்தில் காணலாம். இம்மாநிலம் கால்நடைகள் மேய்ச்சலுக்குத் தக்க புல்வெளிகளைக் கொண்டுள்ளது.

கோதுமை, பருத்தி, உணவுப் பயிர்கள், வைக்கோல், நிலக்கடலை, சோயாபீன்சு போன்றவை இம்மாநிலத்தில் விளையும் வேளாண்மைப் பொருள்களாகும். மாட்டிறைச்சி விற்பனையில் இம்மாநிலம் சிறந்த இடத்தைப் பெற்றுள்ளது.

மின்தொடர்பற்ற இயந்திரப் பொருள்கள், உலோகத்தால் ஆக்கப்படும் பொருள்கள், பெட்ரோலியம், நிலக்கரி போன்றவை இங்கு உற்பத்தியாகின்றன. ஆக்லகாமா, துல்சா ஆகிய நகரங்களில் தொழிற்சாலைகள் பல அமைந்துள்ளன. மின்சாரச் சாதனங்கள், இரப்பர், வார்ப்படப் பொருள்கள், அச்சு எந்திரங்கள், இரசாயனப் பொருள்கள் போன்றன தயாரிக்கும் தொழில்களும் இங்கு நடைபெறுகின்றன.



மாநிலச் சட்டமன்றத்தின் முன் உள்ள சிலை.

ஆக்லகாமா 1907-இல் அமெரிக்க ஐக்கிய நாட்டின் மாநிலமாக்கப்பட்டது. ஆளுநர், மாநிலத்தின் நிருவாகத்தைக் கவனித்துக் கொள்கிறார். அவருக்கு உதவியாகத் துணை ஆளுநர் ஒருவரும் தேர்ந்தெடுக்கப்படுகிறார். இங்கு 18 வயதுள்ளவர்கள் வாக்குரிமை பெற்றுள்ளார்கள். இம்மாநிலம் 77 பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

ஆக்லகாமா மாநிலத்தின் தலைநகரம்; மிகப் பெரிய நகரம். இது அமெரிக்க ஐக்கிய நாட்டின் எண்ணெய் உற்பத்தி நகரங்களுள் ஒன்று. இந்நகரம் வடக்கு கனடியன் (Canadian) ஆற்றங்கரையில் அமைந்துள்ளது. முதன்முதல் கி.பி. 1884-ஆம் ஆண்டு இந்நகரில் வெள்ளையர்கள் குடியேறினர். இந்நகரம் 1,681 ச. கி. மீ. பரப்பளவுள்ளது, பரப்பளவில் அமெரிக்க ஐக்கிய நாட்டில் மூன்றாம் இடத்தை இந்நகரம் பெறுகிறது. குதிரை மீது அமர்ந்திருக்கும் ஒரு மனிதனின் சிலை, ஆக்லகாமா நகரின் சட்டப் பேரவையின் முன் வைக்கப்பட்டுள்ளது. இது இந்நகரின் சிறப்பான சிலையாகும். இந்நகரிலுள்ள மிகவுயர்ந்த கட்டடம் 35 அடுக்குள்ள இலிபர்ட்டி பேங்க் டவர் (Liberty Bank Tower) என்னும் கட்டடமாகும். இந்நகரில் கல்விக் கூடங்கள் பல உள்ளன.

**ஆக்லந்து பிரபு (கி.பி. 1836-42)** சார்லசு மெட்காப் (Charles Metcalfe) பிற்குப் பின்னர் இந்தியாவின் அரசப் பிரதிநிதியாகப் பதவியேற்றவர். ஆக்லந்து (Aucland) மிண்டோ பிரபுவின் நெருங்கிய

உறவினர். சிறப்புச் செயலர் சான் கால்வின் (John Calvin) கருத்துரையின்படி ஆட்சி செய்தார். நெருக்கடிக் காலங்களில் சிறந்த முறையில் ஆட்சி செலுத்தும் திறனற்றவராய்க் காணப்பட்டார்.

இந்தூர் நாட்டு அரசன் அரிராவ் ஒல்கார் ஒழுங்காக ஆட்சி செய்யவில்லை. ஆக்லந்து அவரை எச்சரித்த பிறகு, ஆட்சி ஒழுங்காக நடைபெற்றது. சதாரா நாட்டு அரசர் எதிரிகளிடம் தொடர்பு வைத்துக் கொண்டு தம்முடைய ஆற்றலற்ற நிலையை வெளிப்படுத்தினார். ஆக்லந்து, அவரைப் பதவியிலிருந்து நீக்கி வாரணாசிக்கு அனுப்பிவிட்டு, அம்மன்னரோடு உடன்பிறந்தானை அரியணையில் அமர்த்தினார்.

ஆக்லந்து, அயோத்தி நாட்டு மன்னருடன் ஓர் உடன்படிக்கையைச் செய்து கொண்டார். இந்த உடன்படிக்கையின் ஒரு பகுதியை மட்டும்தான் உள்துறை அரசு மாற்றியது என்று அவரிடம் கூறியது ஆக்லந்தின் பொறுப்பற்ற செயலாகும். கிழக்கிந்திய வாணிகக் குழுவுக்குத் தொல்லைகளைக் கொடுத்த கர்நால் (Karnal) பகுதி இவர் காலத்தில் ஆங்கிலேயர் ஆட்சியின் கீழ் வந்தது.

ஆக்லந்தின் ஆட்சிக் காலத்தில் முதல் ஆப்கானியப் போர் நடைபெற்றது. உருசியாவும் பாரசீகமும் சேர்ந்து ஆப்கானிசுத்தானத்தின்மீது போர் தொடுத்தால், ஆப்கானிய அமீர் தோசுது முகமது, போர் தொடுப்பதைவிடச் சமாதானத்தையே செய்துகொள்வார் என்று இங்கிலாந்து மக்கள் அஞ்சினர். ஆங்கிலேயர்கள் ஆப்கானிய அமீருடன் நட்புச் செய்து கொள்ள விரும்பினார்கள். பாரசீக மன்னர், உருசியர்களின் தூண்டுதலால் ஈரட்டைக் (Herat) கைப்பற்ற முயன்றபோது, தோசுது முகம்மது அதனைத் தடுக்க எந்த முயற்சியையும் எடுத்துக் கொள்ளவில்லை. ஆகவே, ஆப்கானிய நடவடிக்கைகளில் ஆக்லந்து காரணமின்றித் தலையிட்டார்.

பிரிட்டன் அயல்நாட்டுச் செயலாளர் பாமர்சுடன் (Palmerston), ஆக்லந்து ஆகிய இருவரும் ஆப்கானிசுத்தானத்தைக் கைப்பற்ற விரும்பி, அலெக்சாந்தர் பர்னசு (Sir Alexander Burnes) என்பவரைக் காபூலுக்கு அனுப்பினர். இரஞ்சித்சிங்கிடம் உள்ள பெசாவரை (Peshawar) மீட்டுக் கொடுத்தால் தோசுது முகமது ஆங்கிலேயருடன் நட்பாக இருக்கமுடியும் என்று கூறியதாகப் பர்னசு, ஆக்லந்திடம் கூறினார். பெசாவரை இரஞ்சித்சிங்கிடமிருந்து மீட்டுத்தர இயலாதென்று ஆக்லந்து திட்டவட்டமாகக் கூறினார். உடனே தோசுது முகமது (Dost Mohammad), உருசியர்களின் உதவியை நாடினார். உருசியாவின் செயல் தலைவரான விகோவிட்சும் (Vikovitch) காபூலுக்கு வந்தார்.

ஆக்லந்து, தோசுது முகமதைப் பதவியிலிருந்து நீக்கிச் சா சுசாவை ஆப்கானிய அமீராகச் செய்ய வேண்டுமென்ற நோக்கத்துடன், கி. பி. 1838-இல் இரஞ்சித்சிங்கு, சா சுசா (Shah Shuja) ஆகியோருடன் ஓர் உடன்படிக்கையைச் செய்து கொண்டார். சீக்கியர்களின் உதவியுடன் சா சுசாவை ஆப்கானிய அமீராகச் செய்வது இவர் நோக்கமாகும். ஆங்கிலேயப் படை பாரசீக வளைகுடாப் பகுதியிலுள்ள கர்ராக் (Karrack) கைக் கைப்பற்ற முயன்றதையறிந்த பாரசீக மன்னர் அஞ்சி, ஈரட்டின் முற்றுகையைக் கைவிட்டார். உருசியாவும் காபூலிலிருந்த தன் தூதுவரை அழைத்துக் கொண்டது.

சா சுசா, மக்னாக்டன் (Macnaghten) ஆகியோரின் தலைமையில் காபூலை நோக்கிச் சென்ற ஆங்கிலேயப் படையை இரஞ்சித் சிங்கு, தமது நாட்டின் வழியாகச் செல்ல அனுமதிக்கவில்லை. போலன் கணவாயைக் கடந்த ஆங்கிலேயப் படை கி.பி. 1839-இல் காந்தகார், கசினி ஆகிய இடங்களைக் கைப்பற்றி, இறுதியில் காபூலையடைந்தது. தோசுது முகமது கி. பி. 1840-இல் சரணடைந்தார். கல்கத்தாவுக்குக் கைதியாக அனுப்பப்பட்டார். சா சுசா ஆப்கானிசுத்தானத்தின் அமீராக அமர்த்தப்பட்டார். சா சுசா திறமையற்றவராகவிருந்த காரணத்தால் அவரை ஆப்கானியர் வெறுத்தனர். ஆங்கிலேயப் படைத் தலைவர் எல்பின்சுடன் காபூலில் உள்ள படையின் பெரும் பகுதியுடன் வெளியேறியதால் கி. பி. 1841-இல் ஆப்கானிசுத்தானத்தில் கிளர்ச்சி ஏற்பட்டது. தோசுது முகமது மகன் முகமது அக்பர்கான் ஆப்கானியர்களின் தலைவரானார். முகமது அக்பர்கான், மக்னாக்டனைக் கொன்றார். சா சுசாவும் கொல்லப்பட்டார். ஆப்கானியர்களின் தொந்தரவால் ஆங்கிலேயப்படை மிகுந்த நட்டத்தோடு திரும்பியது. ஆப்கானிசுத்தானத்தின் உள்நாட்டுச் செய்திகளில் காரணமின்றித் தலையிட்டது ஆக்லந்து செய்த பெருந்தவறு என்று கருதப்பட்டது.

கல்கத்தாவிலுள்ள தலைமை நீதிமன்றத்திற்கு முறையீடு செய்து கொள்ள ஆங்கிலேயர்களுக்கு மட்டும் அளிக்கப்பட்டிருந்த சலுகையினை ஆக்லந்து நீக்கினார். பல புதிய பள்ளிகளை நிறுவியும் மாணவர்களுக்கு உதவித்தொகை வழங்கியும் கல்வி வளர்ச்சியைப் பெருக்கினார். பாடங்களை மாநில மொழிகளில் கற்பிக்க அனுமதித்தார். சென்னையிலும் பம்பாயிலும் மருத்துவக் கல்லூரிகளை நிறுவினார். முதல் ஆப்கானியப் போர் ஏற்பட்டதால் சில நீர்ப்பாசனத் திட்டங்களை ஆக்லந்து கைவிட நேர்ந்தது. இந்தியாவில் கடும் பஞ்சம் கி. பி. 1837-இல் தோன்றியபோது ஆக்லந்து பஞ்சத்தை நீக்கும் வேலைகளை மேற்கொண்டு ஏறக்குறைய 40 இலட்சம்

ரூபாய் வரை செலவு செய்தார் என்பது கூறப்படுகிறது. அ. கே.

**ஆக்லூத்து இரிச்சர்டு** (கி. பி. 1552-1616) இங்கிலாந்து நாட்டைச் சார்ந்த நிலநூலார்; பத்திரிகையாசிரியர்; சமய குரு. இவர் கி. பி. 1589-ஆம் ஆண்டில் 'ஆங்கில நாட்டின் முக்கிய கடற்பயணங்கள், யாத்திரைகள், கண்டுபிடிப்புகள்' என்னும் நூலை வெளியிட்டார். அதில் ஏறத்தாழ இருநூறுக்கும் மேற்பட்ட கடற்பயணங்களில் நேரில் கண்டவற்றைப் பற்றிய குறிப்புகளும், ஏனைய ஆவணங்களும் உள்ளன. இவரது நூல் கடற்பயணம், குடியேற்ற நாடுகளை நிலைநாட்டும் பேரார்வம் ஆகியவற்றைத் தூண்டிவிட்டது. வர்சீனியா (Virginia) குடியேற்றத்தை அமைக்கப் பின்னர் இவர் உறுதுணை நின்றார்.

இன்று ஏர்போர்டு ஓர்செசுடர் (Hereford and Worcester) எனப்படும் மாவட்டத்தில் ஆக்லூத்து (Hakluyt Richard) பிறந்தார். இவர், ஆக்சுபோர்டு பல்கலைக்கழகத்தில் படித்துப் பட்டம் பெற்றார். பின்னர்ச் சமயகுருவானார். பயணம், வாணிகம் பற்றிய ஆவணங்களை ஆர்வத்துடன் இவர் சேகரித்தார். அமெரிக்கக் கண்டத்தைக் கண்டுபிடித்தது பற்றிய இவரது நூலொன்று கி. பி. 1582-இல் வெளியிடப்பட்டது. இவர் பிரான்சில் ஆங்கிலத் தூதருக்குச் சமய குருவாக அமர்த்தப்பட்டார். பின்னர் வெசுட்டுமினிசுடர் (Westminister) தேவாலயத்தின் பெருந்தலைவராகப் (Archdeacon) பொறுப்பேற்றார். எரனாண்டோ திசோட்டோ (Hernando Desoto) என்பாரால் விவரிக்கப்பட்ட பயணக் குறிப்புகளை இவர் மொழி பெயர்த்தார்.

**ஆகசுட்டுப் புரட்சி** இந்திய விடுதலைப் போராட்டத்தின் போது ஏற்பட்டது. இரண்டாம் உலகப்போர் நடைபெற்றுக் கொண்டிருந்த போது இங்கிலாந்தின் தலைமை அமைச்சர் வின்சுடன் சர்ச்சில் (Winston Churchill), கிரிப்சு தூதுக்குழுவை (Cripps Mission) இந்தியாவிற்கு அனுப்பினார். அக்குழு இந்தியாவிற்கு ஆங்கில இறைமைக்குட்பட்ட தன்னாட்சி தர முன்வந்தது. ஆனால், காங்கிரசு அதை ஏற்றுக் கொள்ளவில்லை. 'வீழ்ச்சியுறும் வங்கிக்குக் கொடுக்கப்பட்ட பின் தேதியிட்ட காசோலை' என, ஆங்கில இறைமைக்குட்பட்ட தன்னாட்சியைப் பற்றிக் காந்தியடிகள் கூறினார். முழு விடுதலையைத் தவிர, வேறு எந்தத் திட்டத்தையும் ஏற்றுக் கொள்ள முடியாது எனக் காங்கிரசு கூறியது. 'வெள்ளையனே வெளியேறு' என்பதே முடிவாயிருந்தது.

கிரிப்சு திட்டம் தோல்வியடைந்தது. சப்பான் இந்தியாவின் கிழக்கே வெற்றிகளைக் குவித்துக் கொண்டே வந்தது. இந்தியாவையும் அது கைப்பற்றி விடும் என்ற பதற்றநிலை ஏற்பட்டது. எனவே, இந்தியா விடுதலையைப் பெற்றாக வேண்டும் எனக் காங்கிரசு கருதியது.

காந்தியடிகள் வன்முறையற்ற கிளர்ச்சி ஒன்றினைத் தொடங்க வேண்டுமென்ற முடிவிற்கு வந்தார். காங்கிரசின் செயற்குழு 1942-ஆம் ஆண்டு சூலை மாதம் 14-ஆம் நாளில் வார்தாவில் கூடி வரலாற்றுச் சிறப்புடைய தீர்மானம் ஒன்றினை நிறைவேற்றியது. காந்தியடிகள் தலைமையில் 'வெள்ளையனே வெளியேறு' என்னும் இயக்கம் நடத்த வேண்டுமென்பதே அத்தீர்மானம். செயற்குழுவின் தீர்மானத்தைப் பம்பாயில் 1942ஆகசுட்டு 7-ஆம் நாளில் கூடிய பம்பாய்க் காங்கிரசு ஏற்றுக் கொண்டது.

இப்புதிய இயக்கத்தைக் குறித்துக் காந்தியடிகள், 'இது பொது மக்கள் போராட்டமாக இருக்கும் இதில் மறைபொருள் ஏதுமில்லை. இது வெளிப்படையான போராட்டம்' என்று கூறினார்.

பம்பாயில் தீர்மானம் நிறைவேற்றப்பட்ட மறுநாளே காந்தியடிகள், சவகர்லால் நேரு உட்பட நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்த காங்கிரசுத் தலைவர்கள் சிறையிலடைக்கப்பட்டனர். அகிம்சைப் போருக்கான திட்டத்தை அறிவிக்க வாய்ப்பு ஏற்படுவதற்கு முன்பே, காந்தியடிகள் சிறையிலடைக்கப்பட்ட செய்தியினைக் கேட்டு மக்கள் மனங்கலங்கினர். எனினும், நாடு முழுவதும் மக்கள் வன்முறையற்ற கிளர்ச்சிகளில் ஈடுபடலாயினர். இவற்றை ஒடுக்கிட அரசு கடுமையான நடவடிக்கைகளை மேற்கொள்ள முடிவு செய்தது. கடைகளையும் உணவு விடுதிகளையும் மூடி வைப்பது இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ்க் குற்றம் என அறிவிக்கப்பட்டது. ஊர்வலங்களையும் கூட்டங்களையும் கலைப்பதற்குத் தடியடி பயன்படுத்தப்பட்டதுடன், துப்பாக்கிச் சூடும் நடைபெற்றது. அரசு மேற்கொண்ட இக்கொள்கையின் விளைவாகச்சிலர் பயங்கரவாதிகளாக மாறி, வன்முறைச் செயல்களில் ஈடுபடவும் செய்தனர்.

காங்கிரசு நவம்பர் 1942-இல் ஒரு வேண்டுகோளை மக்கள் முன்னிலையில் வைத்தது. இவ்வேண்டுகோளின்படி உழவர்கள் நிலவரி செலுத்த மறுக்க வேண்டும்; உணவுப் பொருள்களை விற்கக் கூடாது; காகிதப் பணத்தை ஏற்கக் கூடாது; உணவு துணிப் பஞ்சத்தின் கேடுகளை மக்களிடையே வலியுறுத்த வேண்டும்; சுதந்திரப் பஞ்சாயத்துகள் ஏற்படுத்த வேண்டும். காவல் துறை அதிகாரிகளைப் புறக்கணிக்க வேண்டும்; இப்படிச் செய்வதன் மூலம் இராணுவ நடவடிக்கைகள் குறையும் என்பது எதிர்பார்க்கப்பட்டது.

மேற்குறிப்பிட்ட வேண்டுகோள் மக்களால் ஏற்கப்படாமலே போயிற்று. இத்திட்டத்தினை வழி நடத்திச் செல்லத் தலைவர்கள் இல்லாமையே இதற்குக் காரணமெனலாம்.

அரசு மேற்கொண்ட அடக்குமுறைக் கொள்கையின் விளைவாக இப்போராட்டம் வன்முறையாகவே மாறிவிட்டது. பம்பாயில் தலைவர்கள் கைது செய்யப்பட்டனர். பெரும் திரளான மக்கள் கொவாலியா ஏரித்திடலிலும் சிவாசி பூங்காவிலும் கூடிக் கண்டனக் குரல் எழுப்பினர். கூட்டத்தைக் கலைக்கத் தடியடிகளும் துப்பாக்கிச் சூடுகளும் நடைபெற்றன. பலர் படுகாயமுற்றனர்; பலர் உயிர் துறந்தனர். கல்வி நிலையங்கள் மூடப்பட்டன. தந்தி, தொலைபேசித் தொடர்புகள் துண்டிக்கப்பட்டன. மாதுங்கா புகை வண்டி நிலையம் சேதப்படுத்தப்பட்டது. அரசுக் கட்டிடங்கள் குண்டுகளால் தகர்க்கப்பட்டன. இது போன்ற நிகழ்ச்சிகள் கருநாடகம், தில்லி, இராசசுதான், பஞ்சாபு, சிந்து, வடமேற்கு எல்லைப்புற மாநிலம், புனே, அகமநாபாத்து, பீகார், உத்தரப் பிரதேசம், நாகபுரி, வார்தா, பண்டாரா, அமராவதி, வங்காளம், அசாம், ஒரிசா, ஆந்திரப்பிரதேசம், தமிழ்நாடு போன்ற இந்தியாவின் அனைத்து மாநிலங்களிலும் தீவிரம் அடைந்தன. மாதங்கினி அசிரா என்னும் பெயர் கொண்ட 70 வயது வீராங்கனை 1942 செப்டம்பர் 29-இல் கையில் மூவர்ணக் கொடியுடன் உயிர் துறந்தார்.

சென்னை, அண்ணாமலைநகர், மதுரை, கும்பகோணம், கோயமுத்தூர் போன்ற இடங்களிலெல்லாம் தேசியப் போரொலிகளை முழங்கிக் கொண்டு மாணவர்கள் கல்லூரிகளை விட்டு வெளியேறினர். கோயமுத்தூரில் இருந்த படை விமானத்தளம் எரிக்கப்பட்டது. அருகிலிருந்த சிற்றூர் மக்களை ஒரு வாரம் முழுவதும் நிற்கவேண்டுமென்ற கட்டளையைப் படையினர் விதித்தனர். படைத் தளம் ஒன்று கோயமுத்தூரில் கொளுத்தப்பட்டது. புகழ்பெற்ற பக்கிங்காம் கர்னாடிக்குப் பஞ்சாலை முதல் அனைத்து ஆலைகளிலும் வேலை நிறுத்தங்கள் நடைபெற்றன. கல்லூரிகள் மட்டிலுமன்றிப் பள்ளிகளிலும் வேலைநிறுத்தங்கள் நடைபெற்றன. காமராசர், சத்தியமூர்த்தி போன்ற தலைவர்கள் சிறையில் அடைக்கப்பட்டனர். ஆங்கிலேய ஆட்சிக்கெதிராகப் பொதுமக்கள் ஆற்றலைத் தூண்டிவிடுவதில் காமராசர் பெரும்பங்கு கொண்டார். இவ்வியக்கத்தில் இராசாசி கலந்து கொள்ளவில்லை.

இப்புரட்சியில் ஈடுபட்ட கிளர்ச்சிக் கும்பல் மீது காவலர் 538 முறை சுட்டனர் எனவும், அதன்விளைவாக 940 பேர் இறந்து போயினர் எனவும், 1630 பேர் காயமுற்றனர் எனவும் அரசு அறிக்கையொன்று வெளியிட்டது. ஆனால், சவகர்லால் நேருவின் மதிப்பீட்டின்படி 10,000 பேர் கொல்லப்பட்டிருக்க வேண்டும் என்றும், 60,000 பேர் சிறை செய்யப்பட்டிருக்க வேண்டும் என்றும் தெரியவருகிறது. ஆகவே, இதனை வன்முறையற்ற புரட்சி என்று கூற முடியாது. இதனை வன்முறைப் புரட்சி என்றே நேரு, ஆசாத்து, பட்டேல் போன்ற தேசியத் தலைவர்கள் ஏற்றுக் கொண்டனர். காங்கிரசு வரலாறும் இதனை ஒப்புக் கொண்டது. ஒருங்கிணைந்து செயற்பட முடியாது போனதாலும், வாய்ப்பான அமைப்பு இல்லாது போனதாலுமே புரட்சி தோல்வியடைந்தது எனச் செயப்பிரகாசநாராயணன் குறிப்பிட்டார். காந்தியடிகள் தலைமையேற்று நடத்தியிருந்தாலும்கூட வெற்றி பெற்றிருக்க முடியாது என்பது மசூம்தார் அவர்களின் கருத்தாகும். நன்கு அமையப்பெற்ற நிருவாகமும், படைத்திறனும் பலவகையான வசதிகளுங்கொண்ட வல்லாட்சிக்கு எதிராகப் போரில் எளிதில் வெற்றிபெற முடியாது என்றும் அவர் கூறினார். காந்தியடிகள் எண்ணியது போல அரசு கடுமையான நடவடிக்கை எடுக்காமலிருந்து, அமைதியான முறையில் போராட்டம் நடைபெற்றிருந்தால் ஓரளவு வெற்றி அடைந்திருக்கலாம் என்பதும் அவர் கருத்தாகும்.

இவ்வியக்கம் முழுத் தோல்வியடைந்தது என்றும் கூறலாகாது. மக்களின் வீரத்தையும் நாட்டின் விடுதலைக்கு உடல், பொருள், ஆவி ஆகிய எதனையும் இழக்க ஆயத்தமாயிருந்த சிறப்புப் பண்பையும் இப்புரட்சி வெளிப்படுத்தியது. இமயம் முதல் குமரி வரை காங்கிரசு அழைப்பிற்கு மக்கள் செவிசாய்த்தனர் என்பது, இவ்வியக்கத்தின் மற்றொரு சிறப்பாகும். இவ்வியக்கம் செப்டம்பருக்குள்ளாகவே அரசினால் ஒடுக்கப்பட்டது. எனினும், இது இந்திய விடுதலைக்கு வாயில் திறந்துவிட்டது எனலாம். எல்.இரா

**ஆகமங்கள்** : வடமொழியில் 'வேதம்', 'ஆகமம்' என்று இரண்டு வகையாக விளங்கும் நூல்கள் சைவ சித்தாந்தத்திற்கு அடிப்படையாகத் திகழ்வனவாகும். இவற்றுள் 'வேதம்' என்ற சொல், 'அறிதல்' என்னும் கருத்தை உடைய 'வித்' என்னும் வினையடியாகப் பிறந்த 'வேத' என்னும் வடசொல்லின் தமிழ் வடிவம் என்பர். 'ஆகமம்' என்பது (ஆ-கமம்) உயிர்கள் தம்முடைய மலங்கள் கெட மோட்சமாகிய வீடு பெறுவிப்பது என்று பொருள் தருவது என்பர். ஆ,க,ம,ம் என்னும் இவற்றுள் ஆ-பசு, க-பதி, ம-மலம் எனப் பொருள் கூறுதலும் உண்டு. வேதங்களையும் சிவாகமங்களையும் ஒப்ப மதித்துப் போற்றுவர் தத்துவம் வல்லோர். "வேத சிவாகமங்களுக்குப் பேதம் காண்கின்றிலம், வேதமும் சிவனாற் செய்யப்படுதலின் ஆகமம் எனப்படும்",

என்பர் நீலகண்ட சிவாசாரியார். "இனி, வேதமும் சிவாகமும் ஒன்றேயாயினும் இரு பகுதிப்பட்டது; வேதம் மூன்று வருணத்தாருக்கும், சிவாகமம் நான்கு வருணத்தாருக்கும் பொதுவாதல் பற்றி. ஆதலால், சிவாகமங்கள் பிரமாணமென்பது தெற்றென உணர்க" என்பர் சிவஞான முனிவர். இவ்விரண்டையும் 'வேதம் பசு; அதன் பால் ஆகமம்' என்று ஒப்பிட்டுப் பேசுவதும் உண்டு.

படைப்புக் காலத்தில் இறைவன் ஆன்மாக்களுக்கு உறுதிப் பொருள்கள் கிடைக்கும் பொருட்டு ஐந்து வகைப்பட்ட ஞானத்தை வெளிப்படுத்தினார். தம்முடைய சத்யோசாதம், வாமதேவம், அகோரம், தத்புருடம், ஈசானம் ஆகிய ஐந்து திருமுகங்களினின்றும் இருபத்தெட்டு ஆகமங்களைத் தோற்றுவித்தருளினார் என்று காரணாகமம் கூறுகிறது. 'சத்யோசாதம்' என்ற திருமுகத்தினின்றும் காமிகம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம் என்ற ஐந்து ஆகமங்கள் தோன்றின. 'வாமதேவம்' என்ற திருமுகத்தினின்றும் தீப்தம், சூக்குமம், சகசுரம், அம்சுமான், சுப்பிரபேதம் என்ற ஐந்து ஆகமங்கள் தோன்றின. 'அகோரம்' என்ற திருமுகத்தினின்றும் விசயம், நிச்சுவாசம், சுவாயம்புவம், அநிலம், வீதம் என்ற ஐந்து ஆகமங்கள் தோன்றின. 'தத்புருடம்' என்ற திருமுகத்தினின்றும் இரெளரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், பிம்பம் என்ற ஐந்து ஆகமங்கள் தோன்றின. 'ஈசானம்' என்ற திருமுகத்தினின்றும், பிரோத்கீதம், இலளிதம், சித்தம், சந்தானம், சருவோக்தம், பாரமேச்சுவரம், கிரணம், வாதுளம் என்ற எட்டு ஆகமங்கள் தோன்றின. இவற்றுள் முதற் பத்து ஆகமங்கள் 'சிவபேதம்' எனப்படும், பின்னுள்ள பதினெட்டும் 'உருத்திரபேதம்' எனப்படும்.

இவ்வாகமங்கள் கூறும் சிறப்புச் செய்திகளாவன: சிவ சிருட்டியின் தொடக்கக் காலத்தில், சிவசக்தியின் சேர்க்கையினின்றும் இச்சா சக்தியினால் புவனங்களின் உற்பத்தியின் பொருட்டு யோக மாயையினால் சிருட்டிபீசம் கலக்கப்பட்டது. அதினின்றும் நாதம் தோன்றிற்று. அதினின்றும் சரத்காலத்துச் சந்திரன் போன்று விந்து தோன்றிற்று. அதினின்றும் அம்பிகை என்ற சக்தி தோன்றிற்று. பின்னே வாமை, சியேட்டை, இரெளத்திரி என்ற மூன்று சக்திகள் தோன்றின. வாமாசக்தியின் அபர ரூபமாக சயா, விசயா, அசிதா, அபராசிதா, நிவிருத்தி, பிரதிட்டா, வித்தியா, சாந்தி, இசந்திகா, தீபிகா, உரோசிகா, மோசிகா, வியோமரூபா, அநந்தா, அனாதா, அனாச்சுருதா என்ற சக்திகள் தோன்ற அவர்களாலேயே உலகங்கள் விரிந்தன. அவர்களிடமிருந்தே ஐம்பது அட்சரங்கள் தோன்றின. இவ்வாறு பெளட்கராகமம் கூறுகிறது. திருமந்திரத்தில் (தமிழாகமம் என்றும், ஆகமசாரம் என்றும் கூறப்பெறும் திருமுறை) ஆகமக் கருத்துகள் தெளிவாக்கப்பட்டுள்ளன.

வேதங்களைப் போன்றே ஆகமங்களையும் இறைவனே அருளினர் என்று ஆகமங்களிற் கூறப்பெறும் கருத்துத் தமிழாகமமாகிய திருமந்திரத்திலும் உரைக்கப்பட்டுள்ளது.

மூன்று பதார்த்தங்களுடனும் நான்கு பாதங்களுடனும் கூடிய மகாதந்திரத்தைப் பரமேசுவரன் செய்தார். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன நான்கு பாதங்கள். சிரவுதம், அச்சிரவுதம் என்பன இரண்டு பிரிவுகள். வேதசாரமாக உள்ளது சித்தாந்தம். சித்தாந்தத்தால் கூறப்படும் ஆசாரம் வைதிகாசாரம் என்று மகுடாகமம் கூறும். ஞான பாதத்தால் பதி, பசு, பாச இலக்கணங்கள் அறியப்படும். கிரியா பாதத்தால் சருடயம் (உழுதல்), பிரதிட்டை வரையுள்ள கிரியைகளும், உத்சவ, பிராயச்சித்த, நித்திய, நைமித்திக, காமிய பூசைகளும், சமய, விசேட, நிருவாண தீக்கைகளும், வருணாசிரம தருமங்களும் அறியப்படும். யோக பாதத்தால் பிராணாயாமம் முதலியவற்றின் இலக்கணங்களும் ஆத்துமசுத்தி, அந்தர்யாகம் முதலியவையும் அறியப்படும். பதி, பசு, பாச இலக்கணங்களுடன், முப்பத்தாறு தத்துவங்கள் பற்றிய விளக்கங்கள், தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆத்தும ரூபம் ஆத்தும தரிசனம், ஆத்தும சுத்தி, சிவரூபம், சிவ தரிசனம், சிவ யோகம், சிவ போகம் ஆகிய தசகாரியங்களின் விளக்கங்கள் ஆகியவையும் ஞான பாதத்தில் காணப்படுகின்றன.

கிரியா பாதத்தில், மந்திரம், கிரியை, பாவனை ஆகிய மூவகைப்பட்ட செய்திகள் விளக்கப்பட்டுள்ளன. குருமுகமாக உணரத்தக்க பஞ்சாக்கரம், சடாட்சரம், சம்கிதை மந்திரம், அத்திர மந்திரம் முதலியவை உணர்த்தப்பட்டுள்ளன. தேவதா தாபனம் முதலிய எல்லாக் கிரியைகளும் மந்திரத்தினாலேயே செய்யப் பெற வேண்டும் என்று ஆகமங்கள் அறிவுறுத்துகின்றன.

கோயில் கட்டுதற்குரிய நிலத்தை உழுதல் முதலாக அனைத்தும் கூறப்படுகின்றன. கிழ்த்திசையில் சூரியன் கோயிலையும், தென்கிழக்கில் சண்முகன் கோயிலையும், தென்மேற்கில் ஐயனார் கோயிலையும், மேற்கில் விட்டுணு கோயிலையும், வடமேற்கில் துர்க்கையின் கோயிலையும், வடக்கில் சப்தமாதாக்கள் கோயிலையும், வடகிழக்கில் சிவாலயத்தையும் கட்ட வேண்டும் என்கிறது காரணாகமம்.

மானாங்குலம், மாத்ராங்குலம், தேகலப்தாங்குலம் என்ற அளவு மூவகை ஆகமங்களிற் கூறப்படும். இனி, கர்ப்ப நியாசம், சிவா சங்கிரகணம் (இலிங்கம்,

பிம்பம் செய்வதற்கு வேண்டிய சிலையை எடுக்கும் முறை) முதலியன மிகத் தெளிவாக உரைக்கப் பட்டுள்ளன.

திருக்கோயில்களின் விமானங்கள், 'வேசரம்', 'திராவிடம்', 'நாகரம்' என்று மூவகையாக மொழியப்பட்டுள்ளன. கண்டம் முதல் விருத்தமாக உள்ளவை 'வேசரம்' எனப்படும். கழுத்து முதல் எண் கோணமான விமானங்கள் 'திராவிடம்' எனப்படும். பீடம் முதல் அனைத்தும் சதுரமாக உள்ளவை 'நாகரம்' எனப்படும். இவ்விமானங்களின் கீழ்ப்புறம் குமாரனையும், தென்புறம் தட்சிணாமூர்த்தியையும், மேல்புறம் விட்டுணுவையும், வடபுறம் பிரமாவையும் சுதையால் செய்ய வேண்டும் என்றும், மேல்தளத்தின் மூலைகளில் இடபமாவது, பூதமாவது அமைக்கப்பட வேண்டும் என்றும் கூறப் பெற்றுள்ளது. இதற்கு விமானம், 'தூல லிங்கம்'; சிவன், 'சூக்கும லிங்கம்'; பலிபீடம், 'பத்ரலிங்கம்'. ஆலயம், மண்டபம், கோபுரம், பிரகாரம் முதலிய யாவும் இலிங்கத்தின் அளவு கொண்டு செய்யப்பெற வேண்டும் என்பதும் ஆமக விதி.

மணி ஓசை போன்ற நாதமுடைய கல் 'ஆண்' என்றும், தாளத்தின் ஒலி போன்ற நாதமுடைய கல் பெண்' என்றும், நாதமற்றது 'அலி' என்றும் கூறப் பெற்றுள்ளது. ஆண் உருவங்கள் 'ஆண்' கல்லாலும், பெண் உருவங்கள் 'பெண்' கல்லாலும், 'அடிப் பீடங்கள் 'அலிவகைக் கல்லாலும் அமைக்கப்பட வேண்டும் என்று காரணாகமம் கூறும். இரேகை, பிந்து, களங்கம் என்ற குற்றமுள்ள கற்கள் கடவுட் படிமங்கள் அமைக்க ஏற்றவை அல்ல என்பதும் ஆகமத் துணிவு.

இவ்வாறு பரிசோதனை முறைகளால் தேர்ந் தெடுக்கப் பெற்ற கற்களால் இலிங்கம், பிம்பம் ஆகியவற்றை அமைப்பர். சமகண்டம், வர்த்த மானம், சைவாதிக்கியம், திரிராசிகம் என்று இலிங்கங்களை நால்வகையாகப் பகுப்பர்; இது இலிங்கங்களின் வடிவ அமைப்புப் பற்றியதாகும். ஆகமங்களிற் கூறப்படும் சிறப்புச் செய்திகளை இவ் வாறு சுருக்கிக் கூறலாம். சொ.சி.

**ஆகர்கர் (கோபால் கணேச - கி.பி. 1856-1895)** மகாராட்டிர மாநிலத்தைச் சார்ந்தவர். இவர் மூடப்பழக்க வழக்கங்களை எதிர்த்த சமூகச் சீர்திருத் தக்காரரும் பத்திரிகையாளரும் ஆவார்; சிறந்த தேசியவாதி, சமூகத்தில் புரையோடிக் கிடந்த அனைத்துத் தீமைகளையும், ஏமாற்று வித்தைகளை யும் கடுமையாகத் தாக்கும் நெஞ்சுரம் கொண்டவ ராக இவர் விளங்கினார். கோலாப்பூரைச் சார்ந்த திவான், ஆகர்கர் மீதும், பாலகங்காதர திலகர் மீதும் கி.பி. 1882-ஆண்டு சூலைத் திங்களில் அவமதிப்புக் குற்ற வழக்கொன்றைத் தொடுத்தார். கடுஞ்சொல் கூறுவதில் வல்லவராயினும், இவர் சமூகநீதி அனை வருக்கும் வேண்டுமெனப் பாடுபட்ட நல்லவர்.

**ஆகன்** மேற்குச் செருமனியில் உள்ள நகரம். எய் லா சாபேல் **(Aix-la-Chapelle)** என்றும் இவ் வூரைச் சொல்லுவர். இது மேற்குச் செருமனிக்கு உள் ளேயும்வெளியேயும் போக உதவும் சிறப்பான நுழை வாயில் நகரம். தாழ்ந்த குன்றுகளுக்கிடையில் அமைந் துள்ள இந்நகருக்கருகில் நெதர்லாந்து, பெல்சியம், மேற்குச் செருமனி போன்ற நாடுகளின் எல்லைகள் சந்திக்கின்றன. உரோமானியர் காலந்தொட்டு இருக்கும் ஆகன் **(Aachen)** நகரில் வெந்நீர் ஊற்று களைச் சுற்றி மிக வசதியான குளியலறைகளை உரோமானியர் கட்டியிருந்தனர்.

புனித உரோமானியப் பேரரசின் முதலாம் பேரரசரான சார்லமென் **(Charlemagne)** என்பார் ஆகன் நகரில் பிறந்தவர் என்பர். அவர் கி.பி. 796-ஆம் ஆண்டில் இங்குள்ள சிறப்புமிக்க மாதா கோயி லைக் கட்டத் தொடங்கினார். இந்நகரை ஐரோப் பியப் பண்பாட்டின் மையமாகவும், ஆல்ப்சு மலைத் தொடருக்கு வடபால் அமைந்திருந்த அவருடைய ஆட்சிப் பகுதிகளின் தலைநகராகவும் உருவாக்கி னார். பேரரசர் சார்லமெனுக்கு இந்நகரின் மீதிருந்த பற்றின் விளைவாக இந்நகர மக்கள் இராணுவப் பணியிலிருந்தும், வரி விதிப்பிலிருந்தும் சிறையில் அடைபடுவதிலிருந்தும் விலக்களிக்கப் பெற்றனர். மாபெரும் பேரரசை நிலைநாட்டிய அப்பேரரசர் இங்குத்தான் கி.பி. 814-ஆம் ஆண்டில் காலமானார். அவருடைய பூதவுடல் மாதா கோயிலுடன் இணைந் துள்ள கல்லறையில் புதைக்கப்பட்டது.

அவர் மறைவுக்குப் பின்னர்ப் படையெடுத்த நார்மானியர் **(Normans)** இங்குக் கட்டப்பெற்று வந்த மாதா கோயிலின் ஒரு பகுதியை அழித்துவிட் டனர். ஆனால், கி.பி. 983-ஆம் ஆண்டில் பேரரசர் மூன்றாம் ஆட்டோ என்பார் அதனை மீண்டும் திருத்தி அமைத்தார்.

இந்நகரம் கி.பி. 14 ஆம் நூற்றாண்டில் ஏன்சி யாடிக்கூட்டு **(Hanseatic)** என்னும் வாணிகக் கழகத் தின் மையமாகத் திகழ்ந்தது. ஐரோப்பிய நாடு களுக்கிடையே நடைபெற்ற மாநாடுகளின்போது மூன்று உடன்படிக்கைகள் இவ்வூரிலேயே கையொப் மாயின. முதல் உடன்படிக்கை, பிரான்சுக்கும் இசு பெயினுக்கும் நடைபெற்ற வழி உரிமையை வற்புறுத் தும் போரின் **(War of Devolution)** முடிவில் கி.பி. 1668-ஆம் ஆண்டில் கையெழுத்தாயிற்று. இரண்டாம் உடன்படிக்கை ஆசுத்திரிய வாரிசுரிமைப் போரின் முடிவில் எழுந்த அமைதி உடன்படிக்கையின் வரை

யறைகளைத் தீர்மானிக்கும் வகையாகக் கி.பி. 1748-இல் கையெழுத்தாயிற்று. மூன்றாம் உடன்படிக்கை கி.பி. 1818-ஆம் ஆண்டில் நெப்போலியனின் போர்களுக்குப் பின்னர் நிலவிய குழப்பமான நிலையைக் கட்டுப்படுத்தும் நோக்குடன் கையெழுத்தாயிற்று. இதற்குப் பின்னர் ஆகன், அரசியல் இராணுவச் சிறப்பிழந்தது. பின்னர் 19-ஆம் நூற்றாண்டின் இறுதிக் கட்டத்தில், இந்நகருக்கு அருகிலுள்ள குன்றுகளில் கண்டுபிடிக்கப்பெற்ற வளமான நிலக்கரிப் படிவங்களின் விளைவாக இந்நகர், தொழிற்சாலை நகரமாக உருமாறியதுடன், இருப்புப் பாதை மையமாகவும் மாறியது. இரும்பு உருக்கு உற்பத்திப் பொருள்கள், துணிமணிகள், கண்ணாடி, தோல் போன்ற பொருள்கள் இங்கு உற்பத்தி செய்யப்பட்டன.



சார்லமென் கட்டிய மாதா கோயில்

அமைதியான வாணிக மையமாக இருந்த இந்நகர், உலகப் போர்களினால் மீண்டுமொரு மாற்றத்தைப் பெற்றது. முதல் உலகப் போரில் 1914-இல் செருமானியர், ஆகன் நகரிலிருந்துதான் பெல்சியத்தைத் திடீரெனத் தாக்கினர். மீண்டும் 1940-இல் இங்கிருந்துதான் நாசிப்படைகள் பெல்சியம், ஆலந்து நாடுகளைக் கைப்பற்றின. இரண்டாம் உலகப் போரின் இறுதிக்கட்டத்தில், நேசப் படைகள் செருமனியை விரட்டியடித்தபோது அவர்களும் இந்நகரின் போக்குவரத்து வசதிகளைப் பயன்படுத்திக் கொண்டனர். இங்கிருந்துதான் நேசப்படைகள் செருமனிக்குள்ளும் முன்னேறின. இந்நகரின் அழிவிற்கு இட்லரும் காரணமாயிருந்தார். இந்நகரைக் காத்து வந்த படைகள் சரணடையக் கூடாதென்ற இட்லரின் ஆணையால் இந்நகர் கடுந்தாக்குதலுக்கு ஆளானது. அமெரிக்க ஐக்கிய நாட்டுப் படைகள் 1944-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 21-ஆம் நாள் நடந்த கடுமையான போருக்குப் பின்னர் ஆகன் நகரை இறுதியாகக் கைப்பற்றின. சார்லமென் கட்டிய மாதா கோயில் இன்றும் இங்குக் காணப்படுகிறது. போரின் போது கோயிலுக்குள்ளிருந்த நினைவுச் சின்னங்கள் அப்புறப்படுத்தப்பட்டன. நகரம் பெரும் சீரழிவுக்குள்ளாகியது. போருக்குப் பின்னர் ஆகன் நகரின் தொழிற்சாலைகள் புதுப்பிக்கப்பட்டன. இந்நகரின் மக்கள் தொகை 1,77,600 (1975).

**ஆகாகான்** இசுமாலி இசுலாமியத் தலைவரின் பட்டப் பெயர். இவரைச் சமயத் தலைவராகக் கொண்ட மக்கள் இந்தியா, ஆப்கானிசுத்தானம், பாரசீகம், மத்திய ஆசியா, கிழக்கு ஆப்பிரிக்கா, சீனா, பர்மா, மலேயா ஆகிய நாடுகளில் வாழ்கின்றனர்.

**முதலாம் ஆகாகான் (ஆசன் அலிசா கி.பி. 1800-1881):** இவர் நபிநாயகத்தின் மகளான பாத்திமாவின் பரம்பரையில் வந்தவர். இவர் பாரசீகத்தின் கெர்மான் மாநிலத்தின் ஆளுநராக இருந்தார். முகம்மது சாவிற்கு எதிராகக் கி.பி. 1838-இல் கிளர்ச்சி செய்த போது இவர் தோற்கடிக்கப்பட்டார்; பின்னர் இந்தியாவிற்கு ஓடி வந்து பம்பாயில் தங்கினார். முதலாம் ஆப்கானியப் போரின்போது இவர் ஆங்கிலேயருக்கு உதவி செய்தார். ஆங்கிலேயர் இவருக்கு அரசருக்குரிய பட்டத்தை அளித்துச் சிறப்பித்தனர்.

**இரண்டாம் ஆகாகான்:** முதலாம் ஆகாகான் கி.பி. 1881-இல் இறந்தபின், அவர் தம் மூத்த மகனான அலிசா இரண்டாம் ஆகாகான் ஆனார். தந்தையின் கொள்கைப் படியே நடந்த இவருக்கு விக்டோரியா அரசியார் சர் பட்டம் அளித்தார். இவர் கி.பி. 1885-இல் இறந்தார்.

**மூன்றாம் ஆகாகான் (முகம்மது சா, கி.பி. 1877-1957):** சமயம், மேலை நாட்டுக் கல்வி ஆகியவற்றில் இளமையிலேயே நன்கு தேர்ச்சி பெற்ற இவர், விரைவிலேயே இந்தியாவில் உள்ள அனைத்து இசுலாமியரின் தலைவரெனக் கூறிக் கொண்டார். இவர் 1906-இல் மிண்டோ பிரபுவைக் காணச்சென்ற இசுலாமியத் தூதுக்குழுவிற்குத் தலைமை தாங்கிச் சென்று, இந்தியாவில் ஏற்படுத்த இருக்கும் மக்க

ளாட்சிஅமைப்புகளில் இசுலாமியருக்குப் போதிய பிரதி நிதித்துவம் தரப்பட வேண்டும் எனக் கோரினார். அதன் விளைவாக 1909-இல் கொண்டுவரப்பட்ட மிண்டோ-மார்லி சீர்திருத்தங்கள் இசுலாமியருக்குத் தனித் தொகுதிகளை ஏற்படுத்திக் கொடுத்தன. இவர் அனைத்திந்திய முசுலிம் லீக்கின் தலைவராகச் சிறிதுகாலம் செயலாற்றினார். அலிகார் முசுலிம் கல்லூரியைப் பல்கலைக் கழகமாக உயர்த்துவதற் கான நிதி திரட்டுவதைத் தொடங்கி வைத்தார். முதலாம் உலகப் போரில் ஆங்கிலேயரை ஆதரித்தார். இவருடைய போர்க்காலப் பணியைப் பாராட்டிப் பதினொரு பீரங்கிக் குண்டுகள் மரியாதை இவருக்கு வழங்கப்பட்டது. இவர் 1930-32-ஆம் ஆண்டுகளில், இலண்டனில் நடைபெற்ற வட்டமேசை மாநாட்டில் முசுலிம் தூதுக்குழுவின் தலைவராகக் கலந்து கொண் டார்; 1932-இல் செனிவாவில் நடைபெற்ற படைக் குறைப்பு மாநாட்டிலும், சர்வதேசச் சங்கக் கூட்டத்தி லும் இந்தியாவின் பேராளராகக் கலந்து கொண்டார். இவர் 1957 சூலை 11-ஆம் நாள் சுவிட்சர்லாந்தில் இறந்தபின், இவர் பேரன் இளவரசன் கரீம் நான் காம் ஆகாகான் ஆனார். அ.இரா.

**ஆகாபூல்கோ** மெக்சிகோ நாட்டின் துறை முகப் பட்டணமும் பயணிகள் விரும்பும் நகரமு மாகும். இது தென் மெக்சிகோவில் பசிபிக்குப் பெருங் கடலைச் சார்ந்த கடற்கரை நகரம். கண்களைக் கவரும் அழகிய இயற்கைக் காட்சியும், வெதுவெதுப் பான தட்பவெப்ப நிலையும் கொண்டமையால் இந்நகர், விடுமுறை நாட்களில் பொதுமக்கள் பெரிதும் விரும்பி வரும் நகரமாக விளங்குகிறது. விடுமுறையைக் கழிக்க வருபவர்களுக்கு ஆகாபூல்கோ (Acapulco) பலவகை மகிழ்ச்சி விளையாட்டுகளுக்கு வசதி செய்து கொடுக்கிறது. வெயிலாடல் (Sunbath), நீச்சல், படகோட்டுதல், ஆழ்கடலில் மீன்பிடித்தல், நீர்சறுக்கி விளையாடுதல் போன்றவை இத்துறைமுக நகரின் இன்ப விளையாட்டுகள். அழகான சிற்றுண்டி திகவிடுளும், இரவு விடுதிகளும் இங்குவரும் பயணி களுக்குப் பொழுது போக்கும் இடங்களாம். மலை யுச்சியிலிருந்து நீருள் தாவிக் குதித்து விளையாடும் நீர்விளையாட்டைக் காண்போர் மயிர்கூச்செறிந்து நிற்பர். அவ்விளையாட்டு வீரர்களுள் சிலர் 37 மீ. வரை நீருக்குள் மூழ்கித் தம் துணிச்சலைக் காட்டுவர்.

ஆகாபூல்கோவின் சிறப்பான தொழில் சுற்றுலா வாகும். இந்நகரைச் சுற்றியுள்ள இருபது கடற் கரைகளில் 250-க்கும் மேற்பட்ட உணவகங்களும் சாலையோர உணவகங்களும் (Motels) அமைந்துள் ளன. இந்நகரையும் மெக்சிகோ மாநகரையும் இணைக்கும் வானவூர்தி வழியும் உண்டு.



ஆகாபூல்கோ நகரம்

ஆகாபூல்கோ நகரைக் கி.பி. 1530-ஆம் ஆண்டில் இசுபானியர் அமைத்தனர். தூரக்கிழக்கு நாடு களுக்கும் இசுபெயின் நாட்டிற்கும் இடையில் வாணிக வழியில் உள்ள இந்நகரம் கி.பி. 1600-ஆம் ஆண் டளவில் சிறப்புறத் தொடங்கியது. வாணிகத் தொடர்பு கி.பி. 1800-ஆம் ஆண்டளவில் குறையத் தொடங்கவே இத்துறைமுகம் சிறப்பிழக்கத் தொடங் கியது. இந்நகரம் 1930-ஆம் ஆண்டளவில் மீண்டும் சீரடையலாயிற்று. இத்துறைமுகம் 1960-ஆம்ஆண்டுக் குப் பின் மக்களைக் கவரும் தன்மையைப் பெற்றது. இந்நகரின் மக்கள்தொகை 4,21,088 (1978).

**ஆகாய நிழற்பட முறை** இராணுவம், புவியியல், தொல்லியல் துறைகளில் பெரிதும் பயன் படும் முறை இது. அறிவியல் வளர்ச்சியினால் பல புதிய முறைகள் இப்போது அகழாய்வு செய்வதற் குரிய இடத்தினைத் தேர்வு செய்வதற்குப் பயன் படுத்தப்பட்டு வருகின்றன. அவற்றுள் ஒன்று ஆகாய நிழற்பட முறையாகும். வானூர்திகளிலிருந்து நிலத் தினை நிழற்படம் எடுத்தலே ஆகாய நிழற்பட முறையாகும். இத்தகைய நிழற்படத்தை எடுத்துப் பார்க்கும்போது அவற்றில் நிழல் வேறுபாடுகள் தெரியும். அவ்வேறுபாடுகளைக் கொண்டு மண்ணினுள் மறைந்திருக்கும் கட்டிடங்கள், சாலைகள் முதலிய வற்றைக் கண்டுபிடிக்கலாம். அதாவது அந்நிழற் படங்களில் மண்ணின் நிற வேறுபாடுகளினால் ஏற் படும் மெல்லிய நிழற் பகுதி மக்கள் வாழாத இடங்கள் எனவும், நன்கு நிழல் தெரியும் பகுதி முன்பு

மக்கள் வாழ்ந்து அழிந்த கட்டிடங்களின் இடிபாடு களைக் கொண்ட பகுதி அல்லது மரங்கள் நிறைந்த இடங்கள் என்றும் கூற முடியும். இதன் அடிப்படையில் குறிப்பிட்ட ஓர் இடத்தை அகழாய்விற்கெனத் தேர்வு செய்து கொள்ளலாம். ஆனால், புவியின் மேற்பரப்பில் மிகுதியான குழிகள் தோண்டப்பெற்று நிலப்பரப்புச் சிதைக்கப்பட்டாலோ நிலத்தை உழுது சீர்படுத்தினாலோ ஆகாயத்திலிருந்து எடுக்கப்படும் நிழற்படங்களில் சரியான நிழல் வேறுபாடுகள் தெரியா.

**ஆகாய விமானப் படைச்சட்டம்:** இந்தியா விடுதலை அடையுமுன் 1932-ஆம் ஆண்டில் இந்திய ஆகாய விமானப்படைச் சட்டம் செயல் முறையில் இருந்தது. இந்தியா விடுதலை அடைந்த பின்னர், இந்திய இராணுவத்துக்கும் ஆகாயவிமானப் படைக் கும் பொருந்தக் கூடிய வகையில் ஒரு சட்டம் மட் டும் இயற்ற வேண்டும் என்ற எண்ணம் தீவிரமாகப் பரிசீலனை செய்யப்பட்டது. இயலாது என்ற காரணத் தால் அந்த எண்ணம் கைவிடப்பட்டது. இரண்டு படைகளுக்கும் தனித்தனியாகச் சட்டங்கள் இயற்றப் பட்டன. இராணுவப்படைக்கு இராணுவச் சட்டமும் (The Army Act), ஆகாயவிமானப்படைக்கு ஆகாய விமானப்படைச் சட்டமும் (The Air Force Act) 1950-ஆம் ஆண்டில் இந்திய அரசால் இயற்றப்பட்டன. இரண்டு சட்டங்களும் ஒரே நாளில் அதாவது 1950-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 22-ஆம் நாளில் செயல் முறைக்கு வந்தன. இரண்டு சட்டத்தின் வாசகங் களும் ஏறத்தாழ ஒத்த முறையில் அமைந்துள்ளன. இராணுவச் சட்டம் என்ற கட்டுரையில் அதன் விளக் கம் குறித்து விரிவாக எழுதப்பட்டுள்ளது. எனவே இக்கட்டுரையில் இச்சட்டத்தின் அதாவது ஆகாய விமானப்படைச் சட்டத்தின் சாராம்சம் மட்டும் குறிப் பிடப்படும். முழுவிவரம் அறிய விரும்புபவர் இராணு வச் சட்டம் என்னும் கட்டுரையையும் படிக்கவும்.

கீழ்க்காணுபவர்கள் இச்சட்டத்தின் ஆளுகைக்குட் பட்டவர்கள்:

1. ஆகாய விமானப்படையைச் சேர்ந்த அதிகாரி கள் மற்றும் பற்றாணை அலுவலர்கள், (Warrant Officers).
2. இச்சட்டத்தின்படி தேர்வு செய்யப்பட்டவர் கள்.
3. நிலையான ஆகாயக் கையிருப்புப் படை (Regular Air Force Reserve) அல்லது ஆகாயப் பாது காப்புக் கையிருப்புப்படை (Air Defence Reserve) அல்லது துணை ஆகாயப்படை (Auxiliary Air Force)-யைச் சேர்ந்தவர்கள்.
4. பொதுவாக ஆகாயவிமானப் படைச் சட்டத் துக்குக் கட்டுப்படாதவர்களும் ஆனால் போர்க் காலத்தில் ஏற்படும் பாசறை, நெடுந்தொலைக் கடுநடை (March) அல்லது நாட்டின் எல்லைப் பகுதியில் உள்ள பாளையத்தில் பணியமர்த்தப் பட்டவர்கள்.

மேற்கூறியவர்கள் தங்கள் பணியிலிருந்து ஓய்வு பெறு தல், பதவியிலிருந்து விடுதலை அளிக்கப்படுதல், பதவி நீக்கம் செய்யப்படுதல் போன்ற நிலைகள் ஏற்படும் வரை இச்சட்டத்தின் ஆளுகைக்குட்பட்டவர்கள்.

இச்சட்டத்தின்படி தேர்வு செய்யப்படும் முறை, பணித் தொடர்புடைய கட்டுப்பாடுகள், பணியிலிருப் போர் செய்யக்கூடிய குற்றங்கள். அக்குற்றங்களுக் காக விசாரணை செய்யக்கூடிய முறைகள், விதிக்கக் கூடிய தண்டனைகள், தண்டனைகள் நிறைவேற்றப் படும் முறை எல்லாம் ஏறத்தாழ இராணுவச் சட் டத்திலுள்ள வாசகங்களுடன் ஒத்த முறையில் உள் ளன. இராணுவச் சட்டத்தின் கீழ் இராணுவ முதன்மைத் தளபதிக்கு அளிக்கப்பட்டுள்ள அதிகாரங் கள், இச்சட்டத்தின் கீழ் ஆகாய விமானப் படையின் முதன்மைத் தளபதிக்கு வழங்கப்பட்டுள்ளது. இச் சட்டத்தின்படி இயங்கக்கூடிய இராணுவ நீதிமன்றத் தின் (Courts-Martial) முன் நடக்கும் விசாரணைக்கு இந்தியச் சாட்சியச் சட்டம் பொருந்தக்கூடியது ஆகும்.

இராணுவச் சட்டத்தின்கீழ் நான்கு இராணுவ நீதிமன்றங்கள் இயங்கலாம். ஆனால் இச்சட்டத்தில் மூன்று நீதிமன்றங்களுக்குத்தான் வகை செய்யப் பட்டுள்ளது. அவையாவன (1) பொது இராணுவ நீதிமன்றம் (General Courts-Martial), (2) மாவட்ட இராணுவ நீதிமன்றம் (District Courts-Martial), (3) சுருக்கமான பொது இராணுவ நீதிமன்றம் (Summary General Courts - Martial). இராணுவச் சட்டத்தில் உள்ள சுருக்கமான இராணுவ நீதிமன்றம் (Summary Courts - Martial) ஆகியவை இச்சட்டத் தில் இடம் பெறவில்லை.

பொது இராணுவ நீதிமன்றத்தின் நீதிபதிகளாகப் பணிபுரியக் குறைந்தது ஐந்து அதிகாரிகள் தேவை. அவர்களுள் ஒவ்வொருவரும் குறைந்தது மூன்றாண்டு காலத்துக்குத் தனிக்கட்டளை (Commission) பெற்ற வராயிருந்திருக்க வேண்டும். மேலும், அவர்களில் குறைந்தது நால்வர் பிளைட்டு லெப்டினன்ட்டு (Flight Lieutenant) பதவிக்குக் குறையாதவர்களாக இருக்க வேண்டும். மாவட்ட இராணுவ நீதிமன்றத்தில் நீதி பதிகளாகப் பணிபுரியக் குறைந்தது மூன்று அதிகாரிகள் இருக்க வேண்டும். அவர்கள் ஒவ்வொருவரும் குறைந் தது இரண்டு ஆண்டுகளுக்குத் தனிக்கட்டளை பெற்ற வராயிருந்திருக்க வேண்டும். சுருக்கமான பொது இராணுவ நீதிமன்றத்தில் நீதிபதிகளாகப் பணிபுரியக்

குறைந்தது மூன்று அதிகாரிகள் இருக்க வேண்டும். மேற்கூறிய அதிகாரிகளில் முதன்மையான அதிகாரி தலைவராகப் பணியாற்றுவார். நீதிபதி வழக்கறிஞர் (Judge Advocate) என்பவர் கட்டாயமாகப் பொது இராணுவ நீதிமன்றத்தின் நடவடிக்கைகளிலும் தேவையானால் மற்ற இரண்டு நீதிமன்றங்களின் நடவடிக்கைகளிலும் பங்கு கொள்ள வேண்டும். பொது மற்றும் சுருக்கமான பொது இராணுவ நீதிமன்றங்கள் இச்சட்டத்தின் படியான எக்குற்றத்துக்காகவும் இச்சட்டத்துக்குட்பட்ட எவரையும் விசாரணை செய்யலாம். எல்லாவிதமான தண்டனைகளை விதிக்கவும் அதிகாரமுண்டு. அதிகாரியையும் பற்றாணை அலுவலரையும் தவிர்த்து மற்றவர் எவரையும் மாவட்ட இராணுவ நீதிமன்றம் விசாரணை செய்யலாம். ஆனால், இந்நீதிமன்றத்துக்கு இறப்புத் தண்டனை, நாடுகடத்தல், இரண்டாண்டுக்கு மேற்பட்ட சிறைத் தண்டனை விதிக்க அதிகாரமில்லை.

பெரும்பான்மையினர் கருத்துப்படி நீதிமன்றம் முடிவு எடுக்க வேண்டும். குற்றவாளியா இல்லையா என்பதை முடிவு செய்வது குறித்தும், தண்டனை குறித்தும் நீதிபதிகள் சம அளவில் கருத்து வேறுபாடு கொண்டிருந்தால் அதன்பலன் குற்றம் சாட்டப்பட்டவருக்கு வழங்கப்பட வேண்டும். ஏனைய விவகாரங்கள் குறித்துச் சம அளவில் கருத்து வேறுபாடு இருந்தால் தலைவரின் கருத்துப்படி முடிவு எடுக்கப்படும். மூன்றுக்கு இரண்டு என்ற விழுக்காட்டில் பொது இராணுவ நீதிமன்றத்தின் நீதிபதிகள் முடிவு எடுத்தால்தான் இறப்புத் தண்டனை விதிக்கலாம். ஒரு மனமாக முடிவு எடுத்தால்தான் சுருக்கமான பொது இராணுவ நீதிமன்றம் இறப்புத் தண்டனை விதிக்கலாம்.

**ஆகார நியமம்** என்பது சிரீ வேதாந்த தேசிகர் எழுதியுள்ள தமிழ்ப் பிரபந்தங்களுள் ஒன்று. உண்ணும் உணவில் மனிதர் கொள்ளுவனவும் தள்ளுவனவும் பற்றிக் கூறும் ஒரு வைணவ நூல். உணவு தூய்மையானதாக இல்லையென்றால் மனம் தெளிவடைவதில்லை. மனத்தெளிவற்றவர் எந்த நற்பணியும் செய்யும் உரிமையற்றவர் என்று விளம்புவது, 21 எண்சீர் விருத்தங் கொண்ட இந்நூல்.

த.கோ.

**ஆகிரான்** அமெரிக்க ஐக்கிய நாட்டில் ஒகியோ வின் (Ohio) வடகிழக்குப் பகுதியிலுள்ள நகரம். உலகத்திலேயே இரப்பர்த் தொழில் நடைபெறும் நகரங்களுள் முதன்மையானது. உலக இரப்பரின் தலைநகரம் (Rubber Capital of the World) என்று இது சொல்லப்படுகிறது. ஆகிரான் (Akron) என்பதற்கு உயரமான இடம் என்பது பொருள். இந்நகரம் கடல் மட்டத்திலிருந்து 290 மீட்டர் உயரத்திலுள்ளது. ஆகிரான் மாநிலம் 142 ச.கி.மீ. பரப்புடையது. இங்கு இரப்பர்த் தொழிற்சாலைகள் பெருமளவில் உள்ளன. இது அமெரிக்காவின் பெரிய விமானத் தளங்களுள் ஒன்றாகும். ஆகிரான்-கேன்டான் விமானத்தளமும் ஆகிரான் நகராண்மை விமானத்தளமும் இங்குள்ளன. இந்நகரத்தில் ஆகிரான் கலைக்கழகம், இயற்கை வரலாற்று அருங்காட்சியகம் போன்றவை உள்ளன. ஆகிரான் நகரத்திலுள்ள ஆகிரான் பல்கலைக் கழகத்தில் இரப்பர் ஆராய்ச்சி மையம் உள்ளது. ஆகிரானின் மக்கள் தொகை 2,36,820 (1980).

**ஆகுபெயர்** என்பது யாதானும் ஓர் இயைபு பற்றிப் பிறிதொரு பொருளை உணர்த்திக் குறிப்பில் தோன்றும் சொல்லாகி வரும். பெயர் என்பது ஒரு பொருளை உணர்த்தற்கு அப்பொருளின் இயல்புகளைக் கருதி அமைக்கப்பெறும் குறியீடாகலின் அது ஆக்கப்பெயர் எனப்படும். அவ் ஆக்கப்பெயர் தனக்குரிய பொருளையேயன்றி அப்பொருளொடு தொடர்புடைய பிறிதுபொருளைக் குறித்து நிற்குமிடத்து ஆகுபெயர் எனப்படும். ஆகுபெயர் என்பது ஆகியபெயர் ஆகிறபெயர் ஆகும்பெயர் என முக்காலத்திற்கும் பொதுவாகிய வினைத்தொகை மொழியாதலின், அது தோன்றுதொட்டு இருவகை வழக்கின் கண்ணும் பயின்றுவரும் இலக்கணமுடையதாக அமைந்துள்ளது.

வெளிப்படைச் சொல் குறிப்புச் சொல் என்னும் இருவகையுள் இது குறிப்புச் சொல்லின்பாற்படும். எழுவாய் வேற்றுமை எனப்படும் பெயர் தன் பொருளினின்று நீங்காமலும் நீங்கியும் தன்னொடு தொடர்புடைய பிறிது பொருளொடு மயங்கிவருதலின் இதனை வேற்றுமை மயங்கியலின் இறுதியில் வைத்துக் கூறுகிறார் தொல்காப்பியர். ஆகுபெயர் எழுவாய் வேற்றுமையினது மயக்கம் என இளம்பூரணர் தேர்ந்துரைத்தார். ஒருபெயர் தனக்குரிய பொருளையும் பிறிதாகிய பொருளையும் சுட்டி இடத்திற்கேற்ப வருதலின் பெயர்ப் (வேற்றுமை) பொருள் மயக்கம் என்பது விளங்குகிறது.

ஆக்கப்பெயர் ஆகுபெயராகிப் பிறிதுபொருளை உணர்த்தி வரும்போது அது பலவகையாக வரும். தொல்காப்பியர் சிறப்பாக ஏழுவகையைக் கூறி "அனைமர பினவே ஆகுபெயர்க் கிளவி" (வே.ம.31) என்பார். அளவுப்பெயர்கள் ஆகுபெயராக வரும் நிலை சிறிது வேறுபட்டதாகலின் அதனைப் பிரித்துக் கூறுவார் (வே.ம.34). பொருள், இடம் காலம், சினை, குணம், தொழில் என்னும் ஆறினோடு அளவை, சொல், தானி, கருவி, காரியம், கருத்தா ஆகியவற்றுள், ஒரு பெயர் அதனோடு தொடர்புடைய மற்றொரு பொருளைத் தோன்றுதொட்டு

உணர்த்தி வருவது ஆகுபெயராகும் என்பார் பவணந்தி முனிவர். ஏனைய வழி நூல்கள் நன்னூலை ஒட்டியே கூறுகின்றன. கடுத்தின்றான் என்பதனுள் கடு என்னும் மரத்தை உணர்த்தும் சொல் தின்றான் என்னும் வினை காரணமாகக் கடுவினது காயை உணர்த்தி நின்றது. இதனை முதலிற் கூறும் சினையறி கிளவி என்பார் தொல்காப்பியர் பொருளாகுபெயர் என்பார் நன்னூலார். வெற்றிலை நட்டு வளர்த்தான் என்பதனுள் வெற்றிலை என்னும் சினைச்சொல் நட்டு வளர்த்தான் என்னும் வினை காரணமாக அதன் முதற் பொருளாகிய வெற்றிலைக்கொடியை உணர்த்தி நின்றது. இதனைச் சினையிற் கூறும் முதலறி கிளவி என்பார் தொல்காப்பியர். சினையாகு பெயர் என்பார் நன்னூலார் குழிப்பாடி உடுத்தினான். என்பதன்கண் குழிப்பாடி என்னும் (ஊர்) இடப்பெயர் உடுத்தினான் என்னும் வினைகாரணமாக அவ்வூரின் கண் நெய்து உருவாக்கிய ஆடையை உணர்த்தி நின்றது. இதனைப் பிறந்தவழிக்கூறல் என்பார் தொல் காப்பியர். ஆறு பெருகிற்று, குளம் நிறைந்தது என்பனவற்றுள் ஆறு குளம் என்பவை அவற்றின்கண் நிகழும் நீரை உணர்த்தி நிற்றலும் இதன் பாற்படும். இவற்றை இடவாகுபெயர் என்பார் நன்னூலார். நீலஞ் சூடினாள் என்பதனுள் நீலம் என்னும் பண்புப் பெயர் சூடினாள் என்றதனால் மலரை உணர்த்தலை யும், கார் அறுத்தான் என்பதனுள் கார் (கருமை) என்னும் பண்புச் சொல் கார்காலத்து விளைந்த நெல்லை உணர்த்தலையும் பண்பாகு பெயர் என்பார் தொல்காப்பியர். கார் என்னும் பண்புப் பெயர் நேரே நெல்லொடு தொடர்பு கொள்ளாமல் கருமைநிறம் முகிலுக்காகிப் பின்னர் மழைக்காகிப் பின்னர் அம்மழைக்காலத்து விளைந்த நெல்லுக்காகி வந்தது. இவ்வாறு அடுக்கி வரும் நிலையை மடித்து வரல் என்பார். அதனால், வரை (மலை) புளி(மரம்) போல்வனவற்றை மும்மடியாகு பெயர் இருமடியாகு பெயர் என்பார். இனிப்பு உண்டான் என்பதன்கண் சுவைப்பெயர் அச்சுவையை உடைய பொருளை உணர்த்துகிறது. கூனும் குறளுமாகிய இருவர் சென்றனர் என்னுமிடத்துக் கூன் குறள் என்பவை அவ்வடிவினரை உணர்த்திநின்றன. இவைஎல்லாம் பண் பாகுபெயருள் அடங்கும். பொன் அணிந்தான் மணி யணிந்தான் என்பவை அவற்றால் ஆகிய அணிகளை உணர்த்தி நின்றன. இவற்றை இயன்றது மொழிதல் என்பார் தொல்காப்பியர். கருவியாகுபெயர் என்பார் நன்னூலார். இயன்றது மொழிதலைப் போல இயல்வது மொழிதல் பயின்று வருதலில்லை. சிறு பான்மை நேர்கூற்றின் கண் காட்சியள்வையாக வரும். நெல்லைப் பெற்றவனைச் சோறுபெற்றான் என்றும், கல்வி பெற்றவனை வாழ்வு பெற்றான் என் றும் கூறுவது இயல்வது கூறலாகும். இவற்றைக் காரிய ஆகுபெயர் எனக்கூறுவார் நன்னூலார். இங்ஙனம் காரணத்தைக் காரியமாகவும், காரியத்தைக் காரண மாவும் கூறுதலைப் பரிமேலழகர் உபசார வழக்கு என்பார். யாழ் கேட்டான் என்னும்போது யாழைக் கருவியாகக் கருதின் இயன்றது மொழிதல் என்னும் ஆகுபெயராகும்; இடமாகக் கருதிய வழிப் பிறந்த வழிக் கூறலாய் அடங்கும். பவளவாய், திரி தாடி, அறுகால் என்பவை இருபெயரொட்டு ஆகு பெயர். வாய், தாடி, கால் என்பவை ஆகுபெயர்ப் பொருளோடு தற்கிழமையாகிய தொடர்புடையவை ஆதலான் ஆகுபெயராயின. பவளம், திரிபு, ஆறு என்பவை வாய் தாடி கால் இவற்றை விளக்கி நின்ற அடைமொழிப் பெயர்கள். இவ்வாறு அடையாக வாராமல் திருமகள், திருக்கோவையார் எனச் சிறப்புப்பற்றிய சொல் அடையாகவரின் அவற்றை அடையடுத்த ஆகுபெயர் என்று கூறுவர்.

பவள்வாய், திரிதாடி என்பவற்றை அன்மொழித் தொகை என்று சிலர் கருதிக் கூறுவது பொருந்தாது (காண்க – அன்மொழித்தொகை). உவமத்தொகை மொழியும் வினைத் தொகை மொழியும் பால்வளை (பால்போலும் வெள்ளிய வளையலை அணிந்தவள்) பெய்வளை (பெய்த வளையலை அணிந்தவள்) என்றாற்போல இருசொற்களும் சுட்டப்படும் பொருளுக்கு இயைபின்றிவரின் அன்மொழித் தொகையாகும். இயைபுடையனவாகவரின் ஆகு பெயரே.

கம்பரைக் கற்றான் என்பது கம்பராற் செய்யப் பெற்ற நூலை உணர்த்தலின் வினை முதலுரைக்கும் கிளவியாகும். இதனைக் கருத்தா ஆகுபெயர் என நன்னூல் கூறும்.

ஆக்கப்பெயர் ஆகுபெயராகுங்கால் அது தற் கிழமையும் பிறிதின் கிழமையுமாகிய தொடர்புடை யதாக நிற்கும். தொல்காப்பியம் இதனை "அவை தாம், தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவண லும், ஒப்பில் வழியாற் பிறிது பொருள் சுட்டலும், அப்பண் பினவே நுவலுங் காலை" (வே. ம. 32) எனக்கூறும். கடுத்தின்றான், தெங்குதின்றான், இலை நட்டுவளர்த்தான், பொன்னணிந்தாள் என்பவை தத்தம் பொருள்வயின் தம்மொடு கூடிவந்தவை. குழிப்பாடி உடுத்தான். வாள்வெட்டு ஆறியது என வருபவை ஒப்பில் வழியாற் பிறிது பொருள் சுட்ட லாகும். இவற்றை உரையாசிரியர்கள் விடாத ஆகு பெயர், விட்ட ஆகுபெயர் என்று கூறுவார்.

வகரக் கிளவி, பெயர்ச்சொற் கிளவி என இரு பெயரொட்டாகிவரும் பண்புத் தொகையில் கிளவி என்பது எழுத்தையும், பெயரையும் உணர்த்தி நிற்றலின் இவ்வாறு வருவனவற்றை முன்மொழி ஆகு பெயர் எனக்கூறுவர். பொற்றொடி எனவரும் அன்மொழித்தொகையை அன்மொழிமேல் வந்த

ஆகுபெயர் எனக்கூறுவாரும் உளர். அன்மொழித் தொகை வேறு ஆகுபெயர் வேறு. தொகைமொழி நோக்கில் அன்மொழித் தொகை என்றும், இயற்கைப் பெயர் ஆகுபெயர் என்னும் வகை நோக்கில் ஆகுபெயரென்றும் கூறலாம் என அவர் அமைதி கூறுவார். அறிவியல் நோக்கில் அது தவறாகும் (காண்க-அன்மொழித் தொகை).

ஆகுபெயர்த் தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணி வந்துளதா ஒப்பில் வழியாற் பிறிதுபொருள் சுட்டி வந்துளதா என்பதை அப்பெயரின் வேற்றுமை நிலை நோக்கி அறிந்து கொள்ள வேண்டுமென்பார் தொல்காப்பியர் (வே. ம. 33). அம்முறைப்படி இரண்டாம் வேற்றுமையும் ஆறாம் வேற்றுமையும் தம்மொடு சிவணியும், ஏழாம் வேற்றுமை ஒப்பில் வழியாற் பிறிது பொருள் சுட்டியும், மூன்றாம் வேற்றுமை இருநிலைமையாயும் வரும். மஞ்சள் உடுத்தாள் என்பது மஞ்சள் தோய்த்த ஆடையை உடுத்தாள் எனவும், கடுத்தின்றான் என்பது கடுவினது காயைத் தின்றான் எனவும் தம்பொருளொடு ஒன்றி வந்தன. குழிப்பாடி உடுத்தான் என்பது குழிப்பாடி என்னும் ஊரில் நெய்த ஆடை என ஒப்பில் வழியாற் பொருளைச் சுட்டி வந்தது. பொன் அணிந்தான் என்பது பொன்னாலாகிய அணியை உணர்த்தித் தம்மொடு சிவணி வந்தது. வாள்வெட்டு ஆறியது என்பது வாளால் வெட்டப்பட்ட புண்ணை உணர்த்தி ஒப்பில் வழியாற் பொருளைச் சுட்டி வந்தது. அளவுப் பெயர்பற்றி வரும் ஆகுபெயர்கள் இஃதொரு கழஞ்சு எனக் கருவியையும் நிறுக்கப்பட்ட பொருளையும் இடத்திற்கேற்ப, உணர்த்திவரும். இது ஒரு மா என்பது நிலத்தை உணர்த்தி நின்றது. இது ஒரு கோல் என்பது கருவியையும் அளக்கப்பட்ட பொருளையும் உணர்த்தும். ஒன்று இரண்டு முதலிய எண்ணலளைவைப்பெயர் எண்ணப்படும் பொருள் பற்றியே வருதலின் இயற்கைப் பெயரெனக் கருதுவாரும் உளர். இலக்கண நெறிப்படி அவற்றை ஆகுபெயராகக் கொள்ளுதலே நேர்மையாகும்.

பாவை போல்வாளைப் பாவை என்பது உவம ஆகுபெயர் என்பர். நரியின் பண்புடையானை நரி என்பதும் அதன்பாற்படும். வழக்கின்கண் சிறப்பாகப் பயின்றறிந்தமை கருதிச் சிலம்பு வந்தான், சிந்தாமணி வந்தான் என்பதும், இடையறாது கொண்டிருப்பது பற்றிப் பட்டுருமாலை வந்தான், குடை வந்தான், கண்ணாடி வந்தான் என்பதும், வரிவடிவங்களையும் அடையாளங்களையும் அவ்வப் பொருளாகக் கருதிக் கூறுவதும் ஆகுபெயரேயாம்.

ஒரு பெயர் பொருளான் மயங்கி வருதலை நோக்கி, அம்மயக்கவியல்பினைச் சொல்லதிகாரத்து வேற்றுமை மயங்கியலுள் வைத்துக் கூறியுள்ளார் தொல்காப்பியர். ஆகுபெயரை வடமொழியாளர் கூறும் இலக்கணை வகையாகக் கருதி மயங்கி விளக்கங்கூறுவர் சிலர். ஆகுபெயரிலக்கணத்தையும் அன்மொழித்தொகை இலக்கணத்தையும் அலங்கார நூலிற் கூறவேண்டுமென எண்ணுவோரும் உளர். அலங்காரம் செய்யுள் பற்றியது; ஆகுபெயர் சொல்லைப் பற்றியது. ஆதலின் அவர் கருத்துத் தமிழ் மரபிற்கு முரணாகும். ஆகுபெயர் என்பது தமிழிலக்கணத்திற்கே உரிய சிறப்புக் கூறு என்பார் சிவஞான முனிவர். ச.பா.

***ஆகூரா மசுதா*** பாரசீகர்கள் பின்பற்றும் சொரசுடிரிய சமயத்தின் நற்றெய்வமாகும். பாரசீகர்கள் இச்சமயத்தைத் தழுவுவதற்குமுன் இயற்கையில் கண்ட பொருள்களிலெல்லாம் கடவுள் இருக்கிறார் என்ற நம்பிக்கையில் இருந்து வந்தனர். ஏறத்தாழக் கி.மு. 7-ஆம் நூற்றாண்டில் சொராசுடர் (Zoroaster) என்ற பெரியார் சொராசுடிரிய சமயத்தை நிலை நாட்டினார். அதிலிருந்து பாரசீகர்கள் இச்சமயத்தைப் பின்பற்றலாயினர். உலகில் காணும் ஒவ்வொரு சமயத்தையும் நிலைநாட்டிய பெரியார்களின் வாழ்க்கை வரலாறு தெளிவாகத் தெரியாததுபோல், சொராசுடரின் வாழ்க்கை வரலாறும் தெளிவாகத் தெரியவில்லை. இம்மதக் கொள்கையின்படி உலகில் நன்மைக்கும் தீமைக்குமிடையே போராட்டம் நடந்து கொண்டேயிருக்கிறது. 'ஒளி தெய்வம்', ஞான ஆன்மா என்று சொல்லப்படும் ஆகூரா மசுதா (Ahora Masdaa) என்னும் நன்மைத் தெய்வம், நல்லெண்ணம், நன்னடத்தை, நல்லரசு, நற்சட்டம், அழியாத்தன்மை ஆகியவற்றிற்கு இருப்பிடமாகும். இதற்கு நேர் மாறான குணங்களைக்கொண்ட சாத்தான், ஆகிரிமான். நன்மை தீமைகளுக்கிடையே ஏற்படும் போராட்டம், மனித வாழ்க்கையில் மட்டுமன்றி ஏனைய பொருள்களிலும் காணப்படுகிறது. ஆக்கும் சக்தி அழிக்கும் சக்தியால் தாக்கப்படுகிறது. புயலும் வெள்ளமும் பயிர்களை அழிக்கின்றன. களைகள், பயிர்களைப் பாழாக்குகின்றன. பயனுள்ள எருதுகளை நச்சுப் பாம்புகள் தீண்டிக் கொல்கின்றன. போராட்டம் நடத்திக் கொண்டிருக்கும் இவ்விரு சக்திகளுள் ஒன்றினை மனிதன் ஏற்க வேண்டும்.

ஆகூரா மசுதாவை ஏற்றுக் கொண்டால் மசுதாவின் குறிக்கோளுக்காகப் பாடுபட வேண்டும். அவை யாவன: இரக்கம் காண்பிக்கத் தேவையில்லை; ஆனால், நியாயம் நிலைநாட்டப்பட வேண்டும். கடினஉழைப்பு, தன்னலம் கருதாதிருத்தல், பெரியோருக்குக் கீழ்ப்படிதல், அன்புடைமை ஆகிய பல நன்னடத்தைக்குரிய கூறுகளை ஏற்று நடக்க வேண்

டும். தமக்கு நல்லதன்று என்பதைப் பிறர்க்குச் செய்யலாகாது. நெருப்பு ஆகூரா மசுதாவின் சின்னமாகும். தூய்மைப்படுத்தும் நெருப்புக்கு ஈடு இணை கிடையாது. அழியா ஆன்மாவையும் அழியும் உடலையும் பெற்றுள்ள மனிதன் இறந்தபின்னும் இப்போராட்டம் தொடரும். ஆகூரா மசுதாதான் 12,000 ஆண்டுகளுக்குத் தொடரும் இப்போராட்ட இறுதியில் வெல்லும். மசுதாவின் வெற்றி நாளிலிருந்து அமைதி நிலவும். இறந்தோர் உயிர் பெற்றெழுவர். அன்றுதான் கடவுளின் இறுதித் தீர்ப்பு நாள். நல்லோர் விண்ணுலகம் செல்வர். பாவம் செய்தவர்கள் அவ்வரவர் செய்த பாவத்திற்கேற்பத் தண்டனைபெற்றுத் தொல்லை அனுபவித்துப் பாவத்தைக் கழித்து, இறுதியில் விண்ணுலகம் செல்வர்.

சமயத்தலைவர் சொராசுடர், ஆகூரா மசுதாத் தெய்வத்தை மட்டிலும் கொண்ட 'ஒருகடவுள் கோட்பாடு' முறையைப் போதித்தாரா, நல்தெய்வம் ஆகூரா மசுதா, சாத்தான் ஆகிரிமான் இரண்டையும் கொண்ட 'இருகோட்பாடு' முறையைப் போதித்தாரா என்பது இன்னும் சிக்கலான பொருளாகவே இருக்கிறது. பாரசீக மன்னராகிய முதலாம் தேரியசு (Darius, கி. மு. 521-485), ஆகூரா மசுதாவை வணங்கி, தமது வெற்றிக்கெல்லாம் ஆகூரா மசுதாதான் துணையென்று கூறி, ஆகூரா மசுதா வழிபாட்டைத் தம் நாட்டுச் சமயமாக்கினார். இச்சமய போதனையெல்லாம் செண்டு அவசுதா என்ற சொராசுடிரிய வேத நூலில் அடங்கியுள்ளன. இன்றும் இந்தியாவில் இச்சமயத்தைத் தழுவுகிறவர்கள் பலர் இருக்கின்றார்கள். கி.பி.

**ஆங்கோ** சீன நாட்டு நகரம். இக்காலத்தில் ஊகான் (Wuhan) என்பர். ஆங்கோ (Hankow), ஆன்யாங்கு, ஊசாங்க்கு என்னும் அடுத்தடுத்து அமைந்துள்ள நகரங்களின் கூட்டுப்பெயர் ஊகான் என்பதாகும். இந்நகரங்கள் சீனாவில் ஊப்பே (Hupeh) மாநிலத்தில் உள்ளன. இந்நகரங்கள் அனைத்தையும் அரசியல் வகையிலும் பொருளாதார வகையிலும் ஒரே ஊராகக் கருதுவர். ஊசாங்கு யாங்கிட்சி ஆற்றின் தென்கரையில் அமைந்துள்ளது. ஆங்கோவும் ஆன்யாங்கும் வடகரைப் பட்டணங்கள். ஆன் ஆறு (Han River), ஆங்கோவையும் ஆன்யாங்கையும் பிரிக்கிறது. ஆன் ஆற்றின் குறுக்கே கட்டப்பெற்றுள்ள பாலமும் படகுத் துறைகளும் இவ்விரு நகரங்களுக்கிடையேயான போக்குவரத்திற்குப் பயன்படுகின்றன. யாங்கிட்சி பாலம், ஊசாங்க்கை ஆன்யாங்குடன் இணைக்கிறது. ஊகான் நகரம்தொழிற்சாலைமையம். சீனப்புரட்சி 1911-ஆம் ஆண்டு இவ்வூரில்தான் பிறந்தது. ஊகாவின் மக்கள்தொகை 42,50,000 ஆகும்.



ஆங்கரேசு நகரம்

**ஆங்கரேசு** அமெரிக்க ஐக்கிய நாட்டின் மாநிலங்களுள் ஒன்றான அலாசுகா (Alaska) மாநிலத்தின் மிகப் பெரிய நகரம். அம்மாநிலத்தின் சிறந்த வாணிகப் போக்குவரத்து மையமுமாகும். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைசிறந்த பாதுகாப்பு மையமாகவும் இது விளங்குகிறது. தென் அலாசுகாவில், குக்கு உட்குடாவில், (Cook Inlet) சுகாக்கு (Chugach) மலைத்தொடரின்மேற்கில் இந் நகரம் அமைந்துள்ளது. சிப்பு கிரீக்கு என்றும் பின்னர் உட்ரோ என்றும் சொல்லப்பட்ட இவ்வூர் 1915-இல் தான் ஆங்கரேசு என்னும் பெயர் பெற்றது. கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சி இங்கு நின்றமையால் நங்கூரம் பாய்ச்சி எனப் பொருள்படும் ஆங்கரேசு (Anchorage) என்னும் பெயர் இதற்குண்டாயிற்று. இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் இந்நகரம் பல்கிப் பெருகியது. ஆங்கரேசு நகரத்திற்குத் தெற்கில் 1957-இல் பெட்ரோல் கண்டுபிடிக்கப் பட்டதால் நகரம் மேலும் விரிவாக வளர வாய்ப்பு ஏற்பட்டது. இந்நகரில் 1964-இல் ஏற்பட்ட நில நடுக்கத்தால் பலர் இறந்துபட்டனர். மக்கள் தொகை 1,74,430 (1980).

**ஆங்காங்கு** சீனாவின் தென்கிழக்குக் கடற்கரையில் அமைந்துள்ள ஆங்கிலக் குடியேற்றப் பகுதி; உலகின் அழகிய துறைமுகங்களுள் ஒன்று. ஆங்காங்கு (Hongkong) என்னும் சீனமொழிச் சொல்லுக்கு

'நறுமணத் துறைமுகம்' என்பது பொருள். பேர்ல் (Pearl) ஆற்றின் கழிமுகத்திற்கு 32 கி.மீ. கிழக்கிலுள்ள ஆங்காங்கு, ஒரு தீவு. இது காண்டன் நகருக்குத் தென்கிழக்கில் 130 கி.மீ. தொலைவிலுள்ளது. இத்தீவின் பரப்பளவு 78.12 ச.கி.மீ. சீனாவின் உள் நாட்டிலிருந்து பிரிந்திருக்கும் இது ஓர் அழகிய இயற்கைத் துறைமுகம். இதன் எதிரில் கவுலூன் (Kowloon) என்னும் தீபகற்பம் உள்ளது. அதன் பரப்பளவு 10.48 ச.கி.மீ. அதனைச் சுற்றியுள்ள 235 தீவுகளும் இதனைச் சார்ந்தவையே. எனவே ஆங்காங்குத் தீவு, கவுலூன் தீபகற்பம், அதனைச் சுற்றியுள்ள 235 தீவுகள் ஆகிய அனைத்தையும் தன்னகத்தே கொண்டது. சீனாவின் உள் நாட்டில் இலங்கும் பகுதியை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை 1. வடக்கிலுள்ள புதிய பகுதிகள், 2. அதன் தென்பால் அமைந்துள்ள கவுலூன் தீபகற்பம். கவுலூன் தீபகற்பத்திற்கு நேர் தெற்கில் உள்ள சிறப்பான தீவே ஆங்காங்குத்தீவாகும்.

ஆங்காங்கு 1916 ச.கி.மீ. பரப்பளவு கொண்டது. அதில் 1046 ச.கி.மீ. நிலப்பகுதி; ஏனையது நீர்ப் பகுதி. மக்கள் தொகை 52,30,000 (1982).



ஆங்காங்கின் தலைநகர் விக்டோரியா

கரடுமுரடான மலைகளையும் வளைந்து நிற்கும் குன்றுகளையும் கொண்டு ஆங்காங்கு விளங்குகிறது. புதிய பகுதியில் உள்ள சில மலைத் தொடர்கள், 910 மீட்டருக்கு மேல் உயரமுள்ளவை. ஆங்காங்கு தீவின் மலையுச்சியை விக்டோரியா உச்சி என்பர். இதன் உயரம் 554 மீ. மலைப்பாங்கான கடற்கரைகளைக் கொண்ட ஆங்காங்கின் தீவுகளிலும் சீனாவின் உள்நாட்டைச் சார்ந்த ஆங்காங்கின் பகுதியிலும் மீன்பிடிக்கும் சிற்றூர்களைக் கொண்ட பல சிறு துறைமுகங்கள் உள்ளன. பத்து விழுக்காட்டு நிலம் பண்ணைகளுக்கேற்றது. ஆங்காங்கையும் சீனாவையும் சாம்சன் (Shamchun) என்னும் சிற்றாறு பிரிக்கும் எல்லையாயுள்ளது.

ஆங்காங்கு வெப்ப மண்டலத்தைப் போன்ற தட்பவெப்ப நிலையைக் கொண்டது. கோடையில் சூடாகவும் ஈரக்கசிவாகவும் இருக்கும். இங்குப் பொழியும் மழையின் அளவு ஆண்டிற்கு 224 செ.மீ. குளிர்காலம் தண்மையாகவும் வறண்டும் காணப்படும். குடிநீர்ப் பற்றாக்குறையால் ஆங்காங்கு, ஆண்டுதோறும் பலகோடி லிட்டர் தண்ணீரைச் சீனாவிடமிருந்து விலைக்கு வாங்குகிறது.

பன்னாட்டு வாணிகம், செல்வம், சுற்றுலாப் பயணம் போன்றவற்றின் மையமாய் ஆங்காங்கு விளங்குகிறது. மக்கள்தொகையுள் 40 விழுக்காட்டினர் செய்பொருள் நிலையங்களிலும் 40 விழுக்காட்டினர் பணியாளர்களாக வணிக நிறுவனங்களிலும் ஏனையோர் அரசு ஊழியர்களாக அரசு நிறுவனங்களிலும் வேலை செய்கின்றனர். பண்ணைகளிலும் மீன்பிடிக்கும் தொழிலிலும் 3 விழுக்காட்டிற்கும் குறைந்தவர்கள் ஈடுபட்டுள்ளனர்.

ஆங்காங்கு சுங்க வரியற்ற துறைமுகம். அதனால், பல பொருள்களை விலை குறைவாக உற்பத்தி செய்யவும் விற்கவும் இயலும். இங்குள்ள வங்கிகள் வீடுகட்டவும் செய்பொருள் செய்யவும் வாணிகம் செய்யவும் முதலீடு செய்வதுடன், உலகின் ஏனைய பகுதிகளுக்கும் உதவி செய்வதால், இதன் பொருளாதாரம் உயர்ந்த நிலையிலுள்ளது. ஆண்டுதோறும் இருபது இலட்சம் சுற்றுலாப்பயணிகள் ஆங்காங்கிற்கு வந்து பெருமளவு பொருளைச் செலவழிப்பதால், இதன் பொருளாதாரம் பெருகி வளர்ந்துள்ளது. இக்காலத்தில் ஆயிரக்கணக்கான தொழிற்சாலைகள் நிறுவப்பெற்றுப் பலவிதமான பொருள்களை உற்பத்தி செய்கிறார்கள். இங்கு உற்பத்தியாகும் பொருள்கள், அமெரிக்க ஐக்கிய நாடு, மேற்குச் செருமனி, இங்கிலாந்து, சப்பான் போன்ற நாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றன. உணவுப் பொருள்கள், இயந்திரக் கருவிகள், எஃகு, இரும்பு, ஏனைய மூலப் பொருள்கள் ஆகியவை சப்பான், சீனா, அமெரிக்க ஐக்கிய நாடு, தைவான் போன்ற நாடுகளிலிருந்து இறக்குமதியாகின்றன.

விக்டோரியாவும் கவுலூனும் ஆங்காங்கின் வாணிகத்திற்கும் தொழிற்சாலைகள், சுற்றுலாப் பயணம் போன்றவற்றிற்கும் மையங்களாம். இவ்விரு

மாநகரங்களிலும் சிறு கடைகள், உயர்ந்த பல மாடிக் கட்டிடங்கள் ஆகியவற்றைக் குறுகிய சாலைகளில் காணலாம். ஆங்காங்குத் தீவையும் கவுலூன் தீபகற்பத்தையும் நீருக்குள் அமைக்கப்பட்டிருக்கும் 16 கி.மீ. நீளமுள்ள சுரங்கப் பாதையொன்று இணைக்கிறது.

விக்டோரியா, ஆங்காங்கின் தலைநகரும் பொருளாதார மையமுமாகும். இங்கு மக்கள்தொகை 5½ இலட்சத்தைத் தாண்டியுள்ளது.

கவுலூன், விக்டோரியாவைவிடப் பரந்தது; மக்கள் நெரிசல் மிக்கது. இங்கு 22½ இலட்சம் மக்கள் வாழ்கிறார்கள்.

ஆங்காங்கு கி.மு. 220-ஆம் ஆண்டிலிருந்தே சீனாவின் பகுதியாய் இருந்தது. அது கி. பி. 1800 - ஆம் ஆண்டு வரை மீன் பிடிக்கும் பண்ணைச் சிற்றூராக இருந்தது.

இங்கிலாந்துக்கும் சீனாவுக்கும் நிகழ்ந்த அபினிப் போரில் (கி. பி. 1839) இங்கிலாந்து வெற்றி பெற்றது. அதன் பயனாகக் கி.பி. 1842-ஆம் ஆண்டு ஏற்பட்ட நான்கிங் உடன்படிக்கையின்படி, ஆங்காங்குத் தீவை இங்கிலாந்து பெற்றது. கவுலூன் தீபகற்பம் கி. பி. 1860 - இல் கிட்டியது. சீனா கி. பி. 1898-ஆம் ஆண்டில் புதிய பகுதிகளைப் பிரிட்டனுக்கு 99 ஆண்டுகளுக்குக் குத்தகைக்கு விட்டது. இரண்டாம் உலகப் போரின்போது ஆங்காங்கு, நான்காண்டுகள் சப்பானியரின் ஆட்சிக்குட்பட்டிருந்தது.

அண்மையில் பிரிட்டனுக்கும் சீனாவுக்கும் ஏற்பட்ட உடன்படிக்கையின்படி 1997 - ஆம் ஆண்டில் ஆங்காங்கைச் சீனாவுக்குத் திரும்பக் கொடுத்துவிடப் பிரிட்டன் ஒப்புக் கொண்டுள்ளது.

**ஆங்கில இலக்கிய வரலாறு** பல கோணங்களிலிருந்து நோக்கப்படலாமெனினும், பெரும் பெயர் பெற்ற நூலாசிரியர்களின் கால எல்லைகளைக் கொண்டு ஆராய்வது, இலக்கிய வரலாற்று ஆசிரியர்கள் பலர் மேற்கொண்ட முறையாகும். அவர்கள் சாசருக்கு முன்னுள்ள காலம் (கி.பி.500-1340), சாசர் காலம் (கி.பி.1340-1400), சாசரிலிருந்து 'இடாட்டல்' தொகுப்பு வரை உள்ள காலம் (கி.பி. 1400-1557), சேக்சுபியர் காலம் (கி.பி. 1557-1625), மில்ட்டன் காலம் (கி.பி.1625-1660), திரைடன் காலம் (கி.பி.1660-1700), போப்புக்காலம் (கி.பி. 1700-1745), சான்சன் காலம் (கி.பி. 1754-1798), வேட்சுவொர்த்துக் காலம் (கி.பி. 1798-1832), தென்னிசன் காலம் (கி.பி. 1832-1887), ஆர்டியின் காலம் (கி.பி.1887-1920), டி. எஸ். எலியட்டின் காலம் (கி.பி. 1920-1960) எனக்கால வரையறைகளை வகுத்துக் கொண்டுள்ளனர். ஆங்கில இலக்கிய வரலாற்றைத் தொடர்ச்சியாகக் கூறிச் செல்ல இவ்வெல்லைகள் பயன்படும். ஆனால், அவற்றிற்கு அளவுக்கு மீறிய முதன்மை அளித்தல் தவறாகும்.

இங்கிலாந்தில் கி.பி. 5-ஆம் நூற்றாண்டில் குடியேறிய ஆங்கில, சாக்சானிய, சூட் இனத்தவர் (Angles, Saxons, Jutes) கி.பி. 6-ஆம் நூற்றாண்டில் கிறித்தவ சமயத்தைத் தழுவினர். இதன் பின்னரே பழைய ஆங்கிலத்தில் (Old English) நூல்கள் தோன்றலாயின. இக்குடியேறிகளால் அவர்கள் தாயகங்களிலிருந்து கொண்டு வரப்பட்ட கதைப் பாடல்கள், புலவர் ஒருவரால் காவிய உருப்பெற்றுப் பெயவுல்ப்பு (Beowulf) என்ற பெயரில் ஒரு நூல் கி.பி. 8-ஆம் நூற்றாண்டில் வெளிவந்தது. இது, பெயவுல்ப்பு என்ற வீரன் கிரெண்டல், கிரெண்டலின் தாய் ஆகிய பூதங்களை வென்று, இறுதியில் நாட்டைக் காக்க ஒரு பெருவிலங்கைக் கொல்லும் முயற்சியில் உயிர்விட்ட கதையைக் கூறுகிறது. அக்கால ஆங்கிலேயரின் வாழ்வு பற்றி அறிய இந்நூல் ஓரளவுக்குத் துணை புரிகிறது.

கேட்மென் (Caedmon) கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த கிறித்தவக் கவிஞர்களுள் குறிப்பிடத்தக்கவர், ஆவார். இவர் எழுதியனவாகக் கூறப்படும் கவிதைகள் விவிலிய நூலின் சில பகுதிகளைச் சுருக்கித் தருகின்றன. மனிதனின் தோற்றமும், சுவர்க்க நீக்கமும், இசுரேலியர்கள் எகிப்திலிருந்து தப்பிச்செல்லலும், எகிப்தியர்கள் செங்கடலில் அழிதலும், தேனியலின் (Daniel) வரலாறும் இவற்றுள் அடங்கும்.

கின்உல்ப்பு (Cynewulf) கி.பி. 8-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். "கிறித்து" (Christ) என்ற கவிதை, கிறித்துவின் வரலாற்றைத் தோற்றத்திலிருந்து தருகிறது. இலத்தீன் மூலங்களுக்குப் புலவர் கடன்பட்டுள்ளார். "சூலியானா" (Juliana) என்ற கவிதை, கன்னியொருத்தி சமயத்திற்காக மரணத்தைத் தழுவிய வரலாற்றைச் சித்திரிக்கிறது. "எலீன்" (Elene) அவரது தலைசிறந்த கவிதையாகும். புனித சிலுவையொன்றை நாடிச் செல்லும்போது ஏற்படும் இடையூறுகளை இது விவரிக்கிறது. "சிலுவைக்கனவு" (The Dream of the Rood) சமயக் கவிதைகளுள் தலைசிறந்த ஒன்றாகும். கவிஞனின் கனவில், சிலுவையொன்று, ஏசு சிலுவையில் அறையப்பட்ட நாளில் நடந்த நிகழ்ச்சிகளைக் கூறுவதாக அமைந்துள்ளது.

வெசக்சு அரசரான ஆல்பிரடு (Alfred) கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் சிறந்த அறிஞராகவும் கவிஞராகவும் திகழ்ந்தார். இலத்தீனிலிருந்து சில நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். இவருடைய நூல்களுள் தலைசிறந்தது பொயீத்தியசு (Boethius) எழுதிய 'தத்துவம் அளிக்கும் மனநிறைவு' (De Consolatione Philosophiae) என்னும் மொழி

பெயர்ப்பு நூலாகும். இவர் மூலநூலின் கருத்து களைத் தொகுத்தும் விரித்தும் அழகுபடச் செய்துள்ளார். இம்மன்னர் அளித்த ஊக்கத்தினால் ஆங்கில அரசுகளின் தொடர்ச்சியான முதல் வரலாறு (Old English Chronicle) எழுதப்பட்டது. இதனை ஆங்கிலத்தில் எழுதப்பட்ட சிறந்த முதல் உரைநடை நூலாகக் கருதலாம்.

நார்மன் மன்னரான வில்லியம் கி.பி. 1066-இல் இங்கிலாந்தை வென்று தம் ஆட்சிக்குட்படுத்தினார். ஆள்வோரின் மொழியாக இல்லாது போயினும், ஆங்கிலம் தன் சொல்வளத்தையும் பொருள் வளத்தையும் பெருக்கிக் கொள்ளும் வாய்ப்புப் பெற்றது. நார்மன் வெற்றிக்குப் பிறகு ஏறக்குறைய நூற்றைம்பது ஆண்டுகள் அது தன் செல்வாக்கை இழந்திருந்தாலும், சான் மன்னர் காலத்தில், தேசிய உணர்வு தலைதூக்கியதன் காரணமாக, மீண்டும் தன் உயர்வை நிலைநாட்டி, அழியாத இலக்கியங்களைத் தரத் தொடங்கியது. இலயமன் (Layamon) என்னும் துறவி எழுதிய "பிரட்" (Brut) 30,000 வரிகள் கொண்ட பெருங்கவிதை. இந்நூல் கி.பி. 1205-இல் முற்றுப் பெற்றது; பிரித்தானிய அரசர்கள் பற்றிய கதைகளையும் வரலாற்றையும் கூறுகிறது. ஆர்ம் (Orm) விவிலிய நூல் கருத்துகளை விளக்கும் பொருட்டு ஆர்முலம் (Ormulum) என்னும் நூலை எழுதினார். 20,000 சிறு வரிகள் கொண்ட இக்கவிதையில் எதுகையும் மோனையும் தவிர்க்கப்பட்டுள்ளன. சொற்கள் பலவற்றில் உச்சரிப்புக்கேற்ற எழுத்துகளைக் கையாண்ட முதல் நூல் என்னும் பெருமை இதற்குண்டு. பெயர் தெரியாத ஆசிரியர் ஒருவர், பெண் துறவிகள் கருத்தில் கொள்ள வேண்டிய விதிகளைத் தரும் 'ஆங்கிரென் ரிவ்லே' என்னும் நூலைக் கி.பி.1225-இல் வெளியிட்டார். இது இனிமையும் அழகிய உரைநடைச் சிறப்பும் கொண்டதாகும். "ஆந்தையும் குயிலும்" (The Owl and the Nightingale) என்னும் 1794 வரிக் கவிதை, கி.பி. 13-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் எழுதப்பட்டது. இரண்டு பறவைகள், உலக இன்பம், துறவறம் பற்றி உரையாடுவதாக அமைந்த இக்கவிதையில் பிரெஞ்சு நூல்களின் தாக்கம் உண்டு. மகிழ்வூட்டி நீதி உணர்த்தும் நோக்குடன் எழுதப்பட்ட "உலக வரலாறு" என்னும் கவிதை நூல், 24,000 வரிகளில் பல முனிவர்கள் பற்றிய கதைகளைத் தருகிறது. பெயர் தெரியாத இந்நூலாசிரியரின் பரந்த கல்வியறிவை நூலில் தெளிவாகக் காணலாம்.

இடைக்கால ஆங்கிலத்தில் (Middle English) கவிதை எழுதியோருள் தலைசிறந்தவர் சாசர் (கி.பி. 1340-1400) ஆவார். இவர் தம் வாழ்நாளில் சில ஆண்டுகள் பிரான்சிலும் சில ஆண்டுகள் இத்தாலியிலும் பல ஆண்டுகள் இங்கிலாந்திலும் கழித்தவராதலால், இவருடைய நூல்களில் இம்மூவிலக்கியங்களின் தாக்கத்தையும் காணலாம். முதலில் எழுதப்பட்ட நூல்களுக்குப் பிரெஞ்சு மூலங்களும், இடையில் எழுதப்பட்ட நூல்களுக்கு இத்தாலி மூலங்களும் உண்டு. "உரோசாவின் அற்புதம்" (The Romance of the Rose), "குறைபாடுகள்" (Complaints), "சீமாட்டியின் கதை" (The Book of the Duchess) ஆகியவையும் சில கதைப் பாடல்களும் முதலில் எழுதப்பட்டன. "திராய்லசும் கிரெசிடாவும்" (Troilus and Criseyde), "நல்ல பெண்களின் கதை" (The Legand of Good Women) ஆகியவையும், காண்டர்பரிக் கதைகளுள் சிலவும் இடைக்காலத்தில் எழுதப்பட்டவை. ஏனைய காண்டர்பரிக் கதைகள் (The Canterbury Tales) இறுதியில் தோற்றம் பெற்றன. "சீமாட்டியின் கதை" எண்சீர்வரிகள் 13,000 கொண்ட கவிதையாகும். "குறைபாடுகள்" எனக் கூறப்படும் மூன்று கவிதைகளில் சாசர் சில புதிய சீரமைப்புகளைப் புகுத்தி, யாப்புச் சோதனைகளை நடத்தினார். எனினும், அவை உயர்ந்த தரமுடைய கவிதைகள் அல்ல. "பறவைகளின் கூட்டம்" (The Parliament of Fowls) என்ற கவிதையில் சாசரின் முத்திரை அழுந்தப் பதிந்துள்ளது. "திராய்லசும் கிரெசிடாவும்" பழங்கதையொன்றை அழகுறச் சொல்லும் கவிதையாகும். ஆங்கிலத்தில் எழுதப்பட்ட முதல் உளவியல் புதினமென்று இதனைக் கருதலும் தகும். சாசரின் தலைசிறந்த நூல், "காண்டர்பரிக் கதைகள்" ஆகும். இதில் கி.பி. 14-ஆம் நூற்றாண்டைய ஆங்கிலேயர் வாழ்வுபடம் பிடிக்கப்பட்டுள்ளது. பிரபுக்கள், இடைத்தர மக்கள், கிறித்தவத் துறவிகள் முதலான பல்தரப் பட்டவர்களின் பண்பு நலன்களும் வாழ்வு முறைகளும் அன்பு கலந்த எள்ளல் மிகுந்த நகைச்சுவை நடையில் சித்திரிக்கப்பட்டுள்ளன. "சீமானின் கதை" (The Knight's Tale) ஒரு காவியமாகவே கருதப்படும் சிறப்புடையது. சாசர் படைத்துள்ள சில கதைமாந்தர்கள், அழியாச் சிறப்புப் பெற்றவர்களாவார்கள்.

சாசர் காலத்துக் கவிஞர்களுள் குறிப்பிடத்தக்கவர் கவரும் (Gower) இலாங்கிலாந்தும் (Longland) ஆவர். இவர்கள் (1332-1408) பிரெஞ்சு, இலத்தீன், ஆங்கிலம் ஆகிய மூன்று மொழிகளிலும் கவிதைகள் எழுதிய வல்லுநர்கள். பழைமைப் பிடிப்பு மிகுந்த இவர்கள் சாசரிலும் மாறுபட்ட கொள்கையும் குணமும் உடையவராவார்கள். இவர்கள் நூல்களுள் குறிப்பிடத்தக்கது "கன்பெசியோ அமாண்டிசு" (Confessio Amantis) ஆகும். பெரும் பாவங்கள் ஏழினால் விளையும் கேடுகளைப் பற்றிக் கூறும் இக்கவிதை, சாசருடைய நூல்களோடு ஒப்பிடத்தகும் சிறப்புடையது. இலாங்கிலாந்து, மக்கள் கவிஞராவார். இவரது 'பியர்சு என்னும் உழவன் பற்றிய வில்லியத்தின் காட்சி' (The Vision

of William Concerning Piers the Ploughman) 15,000 வரிகள் கொண்ட நீண்ட தொடர் உருவகக் கவிதை யாகும். இக்கவிதை ஏழைகளின் அவல நிலையையும் செல்வர்களும் மதவாதிகளும் அவர்களுக்குத் தரும் தொல்லைகளையும் படம் பிடித்துக் காட்டுகிறது.

உயர்ந்த கவிதை நூல் ஒன்றும் கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் தோன்றவில்லை. முதலாம் சேம்சு மன்னர் எழுதிய "அரசனின் நூல்" (The King's Quair) என்ற நீண்ட காதல் கவிதையும், தன்பார் (Dunbar) எழுதிய "திசுலும் உரோசாவும்" (The Thistle and the Rose) என்ற கவிதையும் குறிப்பிடத் தக்கவை. இசுகாட்லாந்தில் (Scotland) எழுதப்பட்ட கவிதைகளில் தரமுடைய இயற்கை வருணனைகளைக் காணலாம். இந்நூற்றாண்டின் உரைநடைகளில் சிறப்புடையது மாலரி (Malory) எழுதிய ஆர்தரின் மரணம் (Morte D'Arthur) ஆகும். ஆர்தர் அரசரைப் பற்றியும் அவர்தம் வீரமிக்க வட்டமேசைத் தோழர்கள் (Knights of the Round Table) செய்த அருஞ் செயல்களைப் பற்றியும் பிரஞ்சு மொழியில் வளர்ந்திருந்த கதைகளின் தொகுப்பே இந்நூலாகும்.

இத்தாலியில் கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் தோன்றிய இலக்கிய மறு மலர்ச்சி (The Classical Renaissance) செர்மனி, பிரான்சு, இங்கிலாந்து ஆகிய நாடுகளுக்கும் நாளடைவில் பரவத் தொடங்கியது. கிரேக்க, இலத்தீன் இக்கியங்கள் எங்கும் பயிலப்பட்டன. அவற்றின் மொழி பெயர்ப்புகள் ஆங்கில இலக்கியத்தின் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவின. ஆக்சுபோர்டு, கேம்பிரிட்சுப் பல்கலைக்கழகங்கள், கல்வி வளர்ச்சிக்கு வழி செய்தன. பதிப்பகத்தின் தோற்றமும் அறிவுப் பெருக்கத்திற்கு உரமிட்டது. வில்லியம் காக்சுடன் (William Caxton) கி.பி. 1476-ல் முதல் பதிப்பகத்தை நிறுவிப் பல நூல்களை வெளியிட்டார். நூலின் ஆங்கில மொழி பெயர்ப்புகள் ஆங்கில உரைநடையைச் செம்மைப்படுத்தின. வில்லியம் திண்டேல் புதிய ஏற்பாட்டை மொழி பெயர்த்தார். மைல்சு கவர்டேல் (Miles Goverdale) விவிலிய நூல் முழுவதையும் ஆங்கிலத்தில் தந்தார். சர் தாமசு மோர் (Sir Thomas More) எழுதிய உடோபியா (Utopia) என்னும் நூல் பிளாட்டோவின் "குடியரசு" (Republic) கருத்துகளை அடியொற்றி, வாழ்வு, அரசு மதம் ஆகியவை பற்றிப் பல சிந்தனைகளை இலத்தீன் மொழியில் வெளியிட்டது. இதன் ஆங்கில மொழிபெயர்ப்பு கி. பி. 1551-இல் உருக்கொண்டது. ஆங்கில இலக்கிய வரலாற்றில் ஒரு மைல் கல்லான இட்டட்லின் தொகுப்பு (Tottel's Miscellany) கி.பி. 1557-இல் பதிப்பிக்கப்பட்டது. வொயட்டு (Wyatt), சர்ரி (Surrey) ஆகியோர் உள்ளிட்ட பல கவிஞர்கள் எழுதிய பாடல்களும் ஈரேழ்வரிப்பாக்களும் (Sonnets) இதில் இடம்பெற்றன. இது புதிய யுகம் ஒன்று பிறக்க வழி வகுத்தது.

ஆங்கில நாடக இலக்கியத் தோற்றத்திற்கு வித்திட்டவர்கள் கிறித்தவப் பாதிரிமார்களேயாவர். அவர்களே எழுதித் தேவாலயங்களில் நடித்த கிறித்துப் பற்றியும் அவர்தம் அடியார்கள் பற்றியும் அமைந்த நாடகங்களே (Mysteries, Miracle Plays) முதலில் தோற்றம் பெற்றன. பின்னர் நீதி புகட்டும் நாடகங்களும் (Morality Plays) அங்கதச்சுவை விரவிய குறு நாடகங்களும் (Interludes) முகிழ்த்தன. இவையும் கிரேக்க இலத்தீன் மொழிகளிலிருந்து பெயர்க்கப்பட்ட இன்பியல் துன்பியல் நாடகங்களும், ஆங்கில நாடக ஆசிரியர்களுக்கு வழிகாட்டிகளாய் அமைந்தன. ஆங்கிலத்தில் முதல் இன்பியல் நாடகம் என்று கருதத்தக்க இராய்சுடர் தாய்சுடர் (Roister Doister), நிகோலாசு யூடல் (Nicholas Udall) என்பவரால் கி.பி. 1550-இல் எழுதப்பட்டது. முதல் துன்பியல் நாடகமான 'கார்பொடக்', சாக்வில், நார்ட்டன் என்னும் இரண்டு ஆசிரியர்களால் உருவாக்கப்பட்டுக் கி.பி. 1561-இல் அரங்கேற்றப்பட்டது. அகவல் நடையில் (Blank verse) அமைந்த முதல் நாடகம் இதுவே யாகும்.

முதலாம் எலிசபெத்தின் காலத்தை ஆங்கில இலக்கியத்தின் பொற்காலம் எனலாம். இதன் தலையாய கவிஞருள் ஒருவரான இசுபென்சரின் கவிதைகள் பெருஞ் சிறப்புடையவை. இவரது இடையரின் நாள்காட்டி (Shepherd's Calender) நீதிகளையும் பிராட்டசுடண்டு மதக்கருத்துகளையும், இடையர் பாடல்களின் உரையாடல்கள் மூலம் தெரிவிக்கிறது. ஈரேழ்வரிப் பாக்களாலான அமாரெட்டி (Amoretti), எலிசபெத்து பயில் என்ற நங்கையின் பால் அவர் கொண்ட காதலை விவரிக்கிறது. அப்பெண்ணை மணந்த மகிழ்ச்சியில் எழுதப்பட்ட திருமணப் பாடலான எபிதலேமியம் (Epithalamium) குறிப்பிடத்தக்கதாகும். அவர்தம் தேவதைகளின் அரசி (The Fairy Queen), ஏழு பாகங்கள் கொண்ட முற்றுப் பெறாத பெருங்கவிதையாகும். ஆர்தர் அரசரும் அவர்தம் தோழர்களும் நிகழ்த்திய வீரச் செயல்களை அடிப்படையாகக் கொண்ட இந்நூல் நீதியுணர்த்தும் சிறந்த காவியமாகும். கதை மாந்தர்களும் நிகழ்ச்சிகளும் குறியீட்டுப் பொருள் கொண்டவை.

ஆங்கிலத்தில் திறனாய்வுக் கட்டுரைகள் கி. பி. 16-ஆம் நூற்றாண்டிலேயே எழுதப்பட்டன. ஆசுகம், செக்கு, தாமசு வில்சன் ஆகியோர் "கேம்பிரிட்சு" குழுவைச் சேர்ந்த திறனாய்வாளர்களாவர். இவர்கள் எளிய தூய ஆங்கிலத்தின் சிறப்பை வலியுறுத்தினர். சர் பிலிப்பு சிட்னி (Sir Philip Sidney) எழுதிய 'கவிதையின் சார்பாக ஒரு விண்ணப்பம்' (Apologie

for Poetrie), ஓர் இலக்கிய விவாதத்தின் காரணமாகத் தோற்றம் பெற்றது. இசுடீபன் காசன் (Stephen Gossen) என்பார், கவிதையையும் கவிஞர்களையும் தாக்கி எழுதியநூலுக்கு விடையளிக்கு முகமாகச் சிட்னி, கவிதையின் சிறப்புகளையும், அது எவ்வாறு தத்துவம், வரலாறு ஆகியவற்றிலும் உயர்ந்தது என்பதையும் நிலைநாட்டுகிறார்: தமக்கு முன்னும் சமகாலத்தும் வாழ்ந்த கவிஞர்களின் நூல்களைப் பற்றித்தமது மதிப்பீட்டையும் புலப்படுத்துகிறார்.

எலிசபெத்துக் கால இலக்கிய வகைகளுள் பெருமபீடு எய்தியது, நாடகமேயாகும். இலில்லி (Lyly), கிடு (Kyd), பீல் (Peele) இலாட்சு (Lodge), கிரீன் (Greene), மார்லோ (Marlowe), நாசே (Nashe) ஆகிய பல்கலைக் கழக மேதைகள் நாடகத் துறையில் சேக்சுபியரின் முன்னோடிகளாவர். இலில்லியின் இன்பியல் நாடகங்களில் அலங்கரிக்கப்பட்ட செயற்கையான உரைநடை புகுத்தப்பட்டது. உயர்வருக்கத்தாரும் காணத்தக்க முறையில் கண்ணியமும் அழகும் நுண்மையும் கொண்ட நாடகங்களை ஆங்கிலத்தில் முதலில் எழுதிய பெருமையும் இவருக்குண்டு. கிடு எழுதிய இசுபானிசு துயரம் (The Spanish Tragedy) என்னும் துன்பியல் நாடகம், பெரு வெற்றி பெற்றது. இது வஞ்சம் தீர்த்தலைக் கருவாகக் கொண்ட முதல் ஆங்கிலத் துன்பியல் நாடகமாகும். உரோம் நாட்டுச் செனெகாவின் நாடகங்களை அடியொற்றிச் சென்று, சேக்சுபியரின் ஆம்லெட்டிற்கு முன்னோடியாக அமைந்தது. கிடு எழுதிய நாடகங்களில் மக்களைக் கவரும் நாடக மேடைக் கூறுகள் பல புகுத்தப்பட்டன. பீல் சில ஆண்டுகளே எழுதினாராயினும், பல்தரப்பட்ட நாடகங்களை உருவாக்கினார். இவர் நாடகங்களுள் தலையாயதான முதியோரின் கதை (The Old Wives Tale) அங்கதச் சிறப்புடையது. இதன் நகைச் சுவையில் இலக்கியத்திறனாய்வும் இரண்டறக் கலந்திருக்கக் காணலாம். நாடக வளர்ச்சியில் இலாட்சின் பங்கு மிகவும் குறைவானதே. துண்டுப்பிரசுரங்கள், கதைகள் ஆகியவை எழுதிப் பெயர் பெற்ற நாட்சே, நாடகத் துறையிலும் நுழைந்தாராயினும் இதில் அவரது பணி சிறப்பாக அமையவில்லை. 'சம்மரின் இறுதி விருப்பமும் ஏற்பாடும்' (Summer's Last Will and Testament) என்ற நாடகமும், அவரது முழுத்திறமையைக் காட்டும் தன்மையதன்று.

இக்குழுவில் அருஞ்செயல் ஆற்றியவர், மார்லோ ஆவார். அவரே ஆங்கிலத்தில் உண்மையான துன்பியல் நாடகங்களை முதலில் உருவாக்கினார். அதற்கேற்ற அகவல் நடைக்கு மெருகூட்டியவரும் அவரே. அவர் நாடகங்களான மாவீரன் தாம்பர்லின் (Temburlaine the Great), டாக்டர் பாசுடசு (Dr. Faustus), மார்லோவின் யூதன் (The Jew of Malta), இரண்டாம் எட்வர்டு (Edward the Second) ஆகியவை அழியாவரம் பெற்றவை. ஏதேனும் ஒருவகையான பேராசையால் உந்தப்பட்டு அழிவை நோக்கி நடைபோடும் தலைவனைக் கொண்ட துன்பியல் நாடகமே இவருக்குக் கைவந்ததாகும்.

ஆங்கில இலக்கியப் பேரரசின் முடிசூடாமன்னர் வில்லியம் சேக்சுபியர் (கி.பி. 1564—1616) ஆவார். இவரது வாழ்வு பற்றி நமக்கு அதிகம் தெரியவில்லை. இவர் தம் நாடகங்கள் இவருக்குப் பெரும் வெற்றி ஈட்டித் தந்தன என்பது உறுதி. இவர் பல்கலைக்கழகக் கல்வி பெறாவிடினும் ஆழ்ந்த நோக்கும் தெளிந்த சிந்தனையும் கூர்த்த மதியும் உடையவராதலின், மனித வாழ்வைப் பல கோணங்களிலிருந்து படம் பிடித்துக் காட்டினார். இவர் இயற்றிய 'வீனசும் அடோனிசும்' (Venus and Adonis), இலுக்ரீசின் மானபங்கம் (The Rape of Lucrece) என்னும் கவிதைகளும், ஈரேழ்வரிப் பாக்களும் இவரது கவிதையாற்றலுக்குக் கட்டியம் கூறுபவை. தவறுகள் விளைத்த நகை (The Comedy of Errors), காதல் உழைப்பின் தோல்வி, (Love's Labour's Lost) வெரோனாவின் சீமான்கள் இருவர் (The Two Gentlemen of Verona), நன்மையாக முடிவனவெல்லாம் நன்றே (All's Well That Ends Well), அடங்காப் பிடாரியின் ஒடுக்கம் (The Taming of the Shrew) என்பன போன்ற நாடகங்களிலேயே இவரது ஆழ்ப்பதிந்த முத்திரையைக் காணலாம். பாத்திரப் படைப்பிலும் வசன அமைப்பிலும் நல்ல பயிற்சியை இந்நாடகங்களில் பெற்றார். உரோமியோவும் சூலியட்டும் (Romeo and Juliet) காதல் நாடகங்களுள் வெற்றிச் சிகரத்தை எட்டியது.

ஒரு கோடையிரவின் கனவு (Midsummer Night's Dream) என்னும் நாடகத்தை நீண்ட கற்பனைக் கவிதையெனவே கூறலாம். மன்னர்கள் நான்காம் என்றி, ஐந்தாம் என்றி, ஆறாம் என்றி, இரண்டாம் இரிச்சர்டு, மூன்றாம் இரிச்சர்டு, சான் பற்றிய வரலாற்று நாடகங்களில் இங்கிலாந்தின் அரசியல் வரலாற்றின் சாரத்தைப் பிழிந்து தருகிறார். அற்பத்தைப் பற்றிய கூக்குரல் (Much Ado About nothing), நீ விரும்பியபடியே (As You Like It), பன்னிரண்டாம் இரவு (Twelfth Night) ஆகிய மூன்றும் முதிர்ச்சியுற்ற இன்பியல் நாடகங்களாகும். திராய்லசும் கிரெசிடாவும் (Troilus and Cressida), ஏதென்சின் தைமன் (Timon of Athens) என்னும் கிரேக்கத் தொடர்புடைய இரு நாடகங்களும்; சூலியசு சீசர் (Julius Ceasar), காரியலேனசு (Coriolanus), அந்தோனியும் கிளியோபாத்ராவும், (Antony and Cleopatra) என்னும் உரோம் நாட்டுத் தொடர்பு

டைய மூன்று நாடகங்களும், இவரது ஆற்றல் வளர்ச்சியைக் காட்டுகின்றன. இவர்தம் ஆம்லெட்டு, ஓதெல்லோ, இலியர்மன்னன், மாக்பெத்து என்னும் நான்கு துன்பியல் நாடகங்களும் நாடக இலக்கியத்தின் மணிமுடிகளாகக் கருதத் தக்கன. சிம்பலீன் (Symbeline), கார் காலக் கதை (The Winter's Tale) பெரிக்லிசு (Pericles), புயல் (The Tempest) ஆகிய நான்கும் இறுதியில் எழுதப்பட்ட நாடகக் கவிதைகளாகும். இவற்றில், அன்பும் மன்னிக்கும் தன்மையும் மனிதக்குலத்திற்குத் தேவையானவை என்பது சுட்டப்படுகிறது.

சேக்சுபியரின் நாடகங்கள் புனைவியல் நாடகப் போக்குடையன. அவர் காலத்து அறிஞரான பென் சான்சனின் (Ben Jonson) நாடகங்கள் செவ்வியல் நாடகங்களாகும். இவர் நாடகத்தில் மனிதர்களை உள்ளவாறு படைக்க வேண்டுமென்றும், அவர்கள் மொழியும் செயலும் வாழ்க்கையில் காணுமாறு அமைய வேண்டுமென்றும் கருதினார். மனிதர்களின் குறைகளை நன்றியுணர்வோடு சுட்டலே சிறப்பென்றும் கருதினார். அற்புத நவிற்சி நாடகங்களுக்கு எதிராகப் போர்க்கொடி தூக்கினார். இவரது நாடகக் கோட்பாடு, இடைக்கால மனிதவுணர்வுக் கோட்பாட்டை (Medieval Theory of Humours) அடிப்படையாகக் கொண்டது. உடலில் சுரக்கும் நான்கு வகை நீர்களைக் குறிக்க, முன்னாளில் கியூமர் (Humour) என்ற சொல்லைப் பயன்படுத்தினர். அவர்கள், ஒரு மனிதனின் உள்ளத் தன்மையைக் குருதி, (Blood) சடைவு (Melancholy), மதம் (Cholor), கபம் (Phlegm) ஆகிய நான்கு வகை நீர்களே முடிவு செய்வதாகக் கருதினார்கள். இவற்றில் ஏதேனும் ஒரு நீரின் ஆதிக்கத்தால் ஏற்படுகிற மனிதக் குறைபாட்டை எள்ளல் சுவையோடு தருவனவே இவர் நாடகங்கள். இரசவாதி (The Alchemist), பார்த்தலோமியோ சந்தை (Barthalomew Fair), வால்பொனி (Valpone) என்பன, இவர்தம் இன்பியல் நாடகங்களாகும். செசானசு (Sejanus), கேடிலின் (Catiline) என்னும் இரண்டும் துன்பியல் நாடகங்களாகும். கட்டுக்கோப்புடைய கதையையும் அரிய பாத்திரப் படைப்பையும் வேகமுள்ள அகவல் நடையையும் இவர்தம் நாடகங்களில் காணலாம்.

இவரை அடுத்து, கி.பி. 16, 17-ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த நாடகாசிரியர்களுள் சாப்மென் (Chapmen), மார்சுடன் (Marston), தெக்கர் (Dekker), மிடில்ட்டன் (Middleton), ஏவுடு (Heywood), போமெண்ட்டு (Beaumont), பிளெட்சர் (Fletcher), மாசிஞ்சர் (Massinger) தேனர் (Tourneur), வெப்சுடர் (Webster), போர்டு (Ford), சர்லி (Shirley) ஆகியோர் இலக்கிய வரலாற்றில் இடம் பெறத் தக்கவர். தெக்கர் எழுதிய செருப்புத் தைப்போரின் விடுமுறை (The Shoemaker's Holiday) என்னும் நூல், செருப்புத் தைப்போன் ஒருவன் மேயரான கதையை நயம்படக் கூறுகிறது. மிடில்ட்டன் எழுதிய மாற்றப்பட்ட குழந்தை (The Changeling) என்னும் துன்பியல் நாடகம், சிறப்பான பாத்திரப்படைப்பிற்காக இன்னும் படிக்கப்படுகிறது. ஏவுடு எழுதிய அன்பால் கொல்லப்பட்ட ஒரு நங்கை (A Women Killed with Kindness), குடும்பத் துன்பியல் நாடகங்களுள் பெருமை பெற்றது. போமெண்ட்டும் பிளெட்சரும் கூட்டாக எழுதிய நாடகங்கள் பல. பிளாசுடரின் கன்னியின் துயரம் (The Maid's Tragedy), மன்னனும் மன்னன் அல்லோனும் (A King and No King) என்பன போன்ற நாடகங்களில் விறுவிறுப்பும் விந்தைகளும் நிறைந்த கதைகளை இவர்கள் திறம்பட நடத்திச் செல்லக் காணலாம். மாசிஞ்சர் இளைஞர் உள்ளங்களை இழுக்கும் பாலுணர்வுக் காட்சிகளைத் தம் நாடகங்களில் புகுத்தினார். இவரது கண்ணியமுள்ள கன்னி (The Maid of Honour) ஓர் உண்மை வீரமுள்ள மங்கையை நாடகத் தலைவியாகக் கொண்டது. பழைய கடனை நீக்க ஒரு புதிய வழி (A New Way to Pay Old Debts) என்னும் இன்பியல் நாடகம், பல ஆண்டுகள் நடிக்கப் பெறும் வாய்ப்புப் பெற்றது. தேனர் எழுதியவையாகக் கருதப்படும் வஞ்சம் தீர்ப்போனின் துன்ப முடிவு (The Revenger's Tragedy), நாத்திகனின் துன்பமுடிவு (The Atheist's Tragedy) என்னும் இரண்டும் வஞ்சம் தீர்க்கும் நாடகங்களாகும். இரண்டாம் நாடகத்தில் வஞ்சம் தீர்த்தலின் குறைபாடும் மன்னித்தலின் பெருமையும் வெளிப்படுகின்றன. வெப்சுடர் எழுதிய வெள்ளைப் பேய் (The White Devil), மால்பி நகரச் சீமாட்டி (The Duchess of Malfin) ஆகிய இரண்டும் இத்துறையைச் சார்ந்தவையே. பழி தீர்ப்பது ஒரு கொடிய மனித உணர்வாகவும், பழி தீர்ப்போர் கொடியோராகவும் காட்டப்படுகின்றனர்.

இனி கி.பி. 17 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சான் டன் (John Donne) எர்பர்ட்டு (Herbert) வான் (Vaughan), கிராசா (Crashaw) மார்வெல் (Marvell) ஆகியோர் எழுதிய கவிதைகளை நுண்புலக் கவிதை (Metaphysical Poetry) என்ற தொடரால் குறிப்பர். இவர்கள் கவிதைகளில் அறிவாற்றல், பொருள்களின் வேற்றுமைகளில் உள்ள ஒற்றுமைகளைக் காணப் பயன்படுகிறது. செயற்கை நுண்புலவுவமைகளைப் (Concepts) பயன்படுத்தி, இவர்கள் விளையாட்டுத் தன்மையையும் கருத்தாழத்தையும் ஒருங்கிணைக்கிறார்கள். இவர்கள் நடை, பேச்சு மொழியைச் சார்ந்ததாயினும் ஆழமுடையது. எர்பர்ட்டு, கிராசா,

வான் ஆகியோரின் சமயக் கவிதைகள் உள்ளத்தை உருக்கும் தன்மையன.

மில்ட்டன் (கி.பி. 1608-74) கி.பி. 17-ஆம் நூற்றாண்டு இலக்கியத்தின் விடிவெள்ளி ஆவார். பெரும் புலவராகிக் கால வெள்ளம் அழிக்க இயலாத ஒப்பற்ற நூலைப் படைக்க வேண்டும் என்ற நோக்குடன் நிறை கல்வி பெற்ற மில்ட்டன் உரைநடை, கவிதை ஆகிய இரண்டையும் திறம்படக் கையாண்டார். இவர் மன்னராட்சிக்கு எதிராகப் போராடியோர்க்கு எழுத்து மூலம் துணைபுரிந்து இன்னல்களுக் காளானார். அரியோபசிடிகா என்னும் நூலில் எழுத்துரிமைக்காக வாதாடினார். விவாகரத்துப் பற்றிய ஒழுங்கும் கோட்பாடும் (The Doctrine and Discipline of Divorce) என்னும் நூலில், விவாகரத்தின் இன்றியமையாமையை விளக்கினார். கிறித்துவின் பிறப்புப் பற்றிய செய்யுள் (Ode on the Morning of Christ's Nativity), கற்பின் சிறப்பைப் போற்றும் கோமசு (Comus), மக்களைப் புறக்கணித்த மதத்துறவிகளைக் கண்டிக்கும் லிசிடாசு (Lycidas) என்னும் கையறு நிலைப் பாடல் ஆகியவை இளமையிலேயே எழுதப் பட்டன. மில்ட்டனின் தலைசிறந்த நூல் சுவர்க்க நீக்கம் (Paradise Lost) ஆகும். பன்னிரண்டு பாகங்களைக் கொண்ட இக்காவியம், கடவுள், ஆதாம் ஏவாளுக்கு அளித்த தண்டனை முறையானதே என்று வாதிடுகிறது. முதல் மனித தம்பதியர்க்குச் சாத்தான் இழைத்த கொடுமையையும் அவன் கடவுளோடு போராடித் தோற்றதையும் ஒலிநயமும் பொருள் ஆழமும் உடைய இப்பெருங் கவிதை சித்திரிக்கிறது. சுவர்க்க மீட்சி (Paradise Regained) இதன் தொடர்ச்சியாகும். சாம்சன் அகொனிசுடசு (Samson Agonistes) என்னும் துன்பியல் நாடகம், மில்டனின் வாழ்வு நிகழ்ச்சிகள் பலவற்றை மறைமுகமாகக் கூறுகிறது.

மில்ட்டனைப் போன்றே பியூரிடன் பிரிவைச் சார்ந்த பன்யன் (Bunyan) புனிதப் பயணியின் முன்னேற்றம் (The Pilgrim's Progress) என்னும் தொடர் உருவகத்தை எளிய இனிய உரைநடையில் எழுதினார். மனிதன் வாழ்க்கையில் நிகழ்த்த வேண்டிய போராட்டங்களையும் நன்மைக்கும் தீமைக்கும் உள்ள தீராத பகையையும் சிறு நிகழ்ச்சிகளாலும் உருவகப் பாத்திரங்களாலும் இந்நூல் விளக்குகிறது. புனிதப்போர் (The Holy War), ஏழைத் தொழிலாளி பற்றி எழுதப்பட்ட மற்றொரு தொடர் உருவகமாகும்.

திரைடன் (கி.பி. 1631-1700) கவிதை, நாடகம், உரைநடை, திறனாய்வு ஆகிய பலதுறைகளிலும் முயன்று வெற்றி பெற்றார். இவர் எழுதிய கவிதைகளில் அப்சலமும் அகிடாபெலும் (Absalom and Achitophel) என்ற அரசியல் அங்கதம், பெருஞ் சிறப்புடையதாகும். இதில் வருணிக்கப்படும் பாத்திரங்கள் மறக்க முடியாதவை. மாவோ பிளெக்னோ (Mao Flecknoe) ஆங்கிலத்தில் உள்ள முதல் கேலிக் காப்பியம் (Mock Epic) ஆகும். ஐந்து சீர் கொண்டு, ஏற்ற இறக்கச் சந்தத்துடனும் எதுகை மோனையோடும் அமைந்த இணையடிக் குறள் (Heroic Couplet) இவரால் திறம்படக் கையாளப்பட்டது. மானும் சிறுத்தையும் என்ற நீண்ட கவிதையில் தம் சமயச் சார்பு பற்றிய கொள்கைக்கு விளக்கம் தந்தார். இவர்தம் நாடகங்களில் 'எல்லாம் காதலுக்கே' (All for Love) என்பது, சேக்சுபியர் கையாண்ட கதையில் திரைடனின் முத்திரை பெற்றதாகும். இவர் நூல்களுக்கு எழுதிய முன்னுரைகளும், நாடகக் கவிதை ஒரு கட்டுரை (Of Dramatic Poesy, An Essay) என்ற நீண்ட உரையாடல் வடிவில் அமைந்த கட்டுரையும், இவர் காலத்துக் கவிதைக் கொள்கையைத் தெள்ளிய உரைநடையில் எடுத்தியம்புகின்றன.

இங்கிலாந்தில் முடியாட்சி மீட்சியிலிருந்து (கி.பி. 1660) கி.பி. 18-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி வரை ஒரு குறிப்பிட்ட வகையான செயற்கைத் தன்மையுள்ள இன்பியல் நாடகங்கள், மக்களைக் கவர்ந்தன. சிந்திக்க வைக்கும் நகைச்சுவையும் காம உணர்வுகளைத் தூண்டும் உரையாடலும் கொண்ட இந் நாடகங்கள், காங்கிரீவ் (Congreve கி.பி. 1670-1729), வான்புரு (Vanbrugh கி.பி. 1664-1726), பார்கர் (Fanguhar கி.பி. 1678-1707) போன்றோரால் எழுதப்பட்டன. ஒழுக்கக் கேட்டுடன் வாழ்ந்த பிரபுத்துவ உலகினைப் பின்னணியாகக் கொண்டு, திருமணம் முதலிய சமூகக் கட்டுப்பாடுகளையும் எள்ளி நகையாடும் முறையில் இந்நாடகங்கள் அமைந்தன.

துண்டுப் பிரசுரங்கள் மூலம் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்ட தேனியல் டீபோ (கி.பி 1659-1731) புதின இலக்கிய முன்னோடிகளுள் ஒருவராவார். இவர்தம் இராபின்சன் குரூசோ (Robinson Grusoe) மால்பிலாண்டர்சு (Moll Flanders) ஆகியவை, புதினக் கூறுகளில் பலவற்றைப் பெற்றிருந்தன. இரண்டாம் நூலில் சமூகத்தின் கீழ்த்தட்டு மக்கள் வாழ்க்கையை, அதன் உண்மை நிலையில் சித்திரித்துள்ளார். அடிசன் (Addison) இசுடீல் (Steele) ஆகியோர் எழுதிய பல சமூக, இலக்கியக் கட்டுரைகள் தரம் வாய்ந்தவை. இவர்கள், டாட்லர், இசுபெக்டேட்டர், கார்டியன் போன்ற இதழ்களை நடத்திச் சமுதாயத்திற்கும் இலக்கியத்திற்கும் தொண்டாற்றினர்.

அலெக்சாண்டர் போப்பு (கி. பி. 1688-1744) தம் அங்கதக் கவிதைகளில் தனிப்பட்ட மனிதர்

களைத் தாக்கினாலும், சமுதாயச் சீர்குலைவைச் சுட்டிக் காட்டினார். முடி பற்றி (The Rape of the Lock), தான்சியடு (The Dunciad) என்ற கவிதைகளில் இணையடிக் குறளை யாவரும் வியக்கும் வண்ணம் கையாண்டார். அர்பூத்நாட்டுக்குக் கடிதம் (Edpistle to Dr. Arbuthnot) என்னும் நூல் சுயசரிதக் குறிப்புகள் கொண்ட சொல்லோவியமாகும்.

உரைநடை அங்கதத்தை உயர்நிலைக்குக் கொண்டு சென்றவர் சுவிப்ட்டு (Swift, கி.பி.1667-1754) ஆவர். இவர் எழுதிய 'நூல்களின் போர்' (The Battle of the Books) பழைய தலைமுறை ஆசிரியர்க்கும் புதிய தலை முறையினர்க்கும் நடக்கிற கற்பனைப் போர் வாயிலாக அவர்களின் நிறைகுறைகளை எடையிடுகிறது. ஒரு தொட்டியின் கதை (A Tale of a Tub) சமய வாதிகளைச் சாடுகிறது. கலிவ்ரின் பயணங்கள் (Gulliver's Travels) நான்கு பாகங்களில் மனிதக் குலத்தின் சிறுமையை விவரிக்கிறது. இவர்தம் கவிதைகள் அத்துணைச் சிறப்புடையனவல்ல.

ஆங்கிலப் புதினங்கள் கி. பி. 18-ஆம் நூற்றாண்டில் தலைதூக்கின. இரிச்சர்டுசன் (Richardson) (கி. பி. 1689-1754) தம் பமீலா (Pamela), கிளாரிசா என்னும் புதினங்கள் வாயிலாக, இதற்கு வலுமிக்க அடிக்கல் நாட்டினார். பீல்டிங்கு (Henry Fielding) (கி. பி. 1707-1754) தம் சோசப்பு ஆண்டரூசு, தாம் சோன்சின் வரலாறு, அமீலியா ஆகியவற்றின் வாயிலாகப் புதின வளர்ச்சிக்கு மேலும் வழி செய்தார். இசுமாலட்டு (கி. பி. 1721-1771) எழுதிய அம்பிரி கிளிங்கர் (Humphrey Glinker) இதற்குத் துணை செய்தது. இசுடெர்ன் (Sterne, கி. பி. 1713-68) தம் திரிசுடிரம்சாண்டி, ஓர் உணர்ச்சிப்பயணம் (A Sentimental Journey) என்னும் புதினங்களில், புதிய உத்திகளைக் கையாண்டார்.

கிரே (Grey, கி. பி. 1716-71) குறைந்த அளவில் எழுதினராயினும் சிறந்த கவிஞராக ஏற்றுக் கொள்ளப்படுகிறார். இவரும் காலின்சு, கோல்டு சுமித்து, கூப்பர், பிளேக்கு (Blake) ஆகியோரும் புனைவியல் இயக்கத்திற்கு முன்னோடிகளாக அமைந்தனர். சான்சனின் (கி. பி. 1709-84) படைப்புகள், திறனாய்வுக் கட்டுரைகளிலும் செவ்வியல் நோக்கிலிருந்து புனைவியல் நோக்கிற்குச் செல்லுதலைக் காணலாம். இவர் பல புலவர்களின் வாழ்க்கைச் சாதனைகள் பற்றிய 'புலவர்களின் வரலாறுகள்' (The Lives of the Poets) என்னும் நூலை எழுதினார். சேக்சுபியரின் நிறைகுறைகளைத் தமக்கே உரிய நுண்மாண் நுழைபுலன் கொண்டு முன்னுரையொன்றில் ஆராய்ந்தார். இராசலசு (Rasselas) என்ற கதையில் பல நீதிகளைப் புகட்டினார். தனியொருவராக அரிதின் முயன்று ஆங்கில அகராதி ஒன்று தொகுத்தார். இவர்தம் இலண்டன், மனித விருப்பங்களின் வியர்த்தம் (The Vanity of Human Wishes) ஆகிய கவிதைகளும் நீதி புகட்டுவதையே தலைமைநோக்காகக் கொண்டவை. இவர் மாணவரான பாசுவெல் எழுதிய சான்சனின் வாழ்க்கை (The life of Samuel Johnson), வாழ்க்கை வரலாற்று நூல்களுள் ஒப்புயர்வற்றது.

புனைவியற் கவிஞர்களுள் மூத்தவர் வோர்ட்சுவொர்த்து (கி. பி. 1770-1850) ஆவர். இவர்தம் டின்டெர்ன் ஆபி' (Tintern Abbey), 'பிரெல்யூடு'' (The Prelude), அமரநிலை அலைகள் பற்றிய இசைப் பாடல் (Ode on the Intimation of Immortality) முதலியவற்றை, இயற்கை அன்னையே இவர் மூலம் எழுதினாள் என்பது தகும். இவர் தம் கவிதைகளுக்கெழுதிய முன்னுரையொன்றில் எச்சொல்லையும் கவிதையில் முறையாகக் கையாள முடியுமென்றும், எளிய நடையே சிறப்புடையதென்றும், சிற்றூர்களில் வாழும் பாமர மக்களே கவிதைக்குரிய சிறப்பான பாத்திரங்களென்றும் வாதிடுகிறார். புனைவியல் இயக்கத்தின் பெரும் சிந்தனையாளர் கோலரிட்சு (கி. பி. 1772-1834) ஆவார். இவர் தம் பயோகிரேபியா லிடரேரியா (Biographia Literaria) என்னும் நூலில் கற்பனாசக்தி, கவிதை பற்றிய கொள்கைகளைத் தத்துவம், மனோதத்துவம், இலக்கியம் ஆகியவற்றின் துணைக்கொண்டு விளக்குகிறார். இவர்தம் "கிறிசுடபெல்" (Christabel), குப்லாகான் (Kubla Khan), பழைய கப்பலோட்டி (The Ancient Mariner) என்ற கவிதைகளில் இயற்கை இகந்த நிகழ்ச்சிகளை, நடந்தவை போலத் தம் கவித்திறன் வாயிலாகப் படைத்துள்ளார். பிளேக்கின் அநுபவம் பற்றிய பாடல்கள் (Songs of Experience), சுவர்க்க நரகக் கூட்டு (The Marriage of Heaven and Hell) ஆகிய இரண்டு தொகுப்பும், கள்ளமின்மை பற்றிய பாடல்கள் (Songs of Innocence) என்ற உரைநடை நூலும், இவரது தனித்தன்மையைப் பறை சாற்றுவன. பர்னசு (Burns) என்ற இசுகாட்லாந்துக்கவிஞர் கிராமியப் பின்னணி கொண்ட உழவர்கள் பற்றிய கவிதைகளில் சிறந்து விளங்குகிறார்.

வால்டர் இசுகாட்டு (Sir Walter Scott, கி. பி. 1771-1832) எழுதிய கவிதைகளை விட அவர் தம் வரலாற்றுப் புதினங்கள் புகழ் மிக்கன. அவர் பதினெட்டே ஆண்டுகளில் பல புதினங்கள் எழுதினாராயினும் மிட்லோதியனின் இதயம் (The Heart of Midlothian), இலாமர்மூரின் மணப்பெண் (The Bride of Lammermoor), ஐவன்கோ, கெனில்வோர்த்து, குவெண்டின் தர்வர்டு ஆகியவை பின்னால் வந்த புதின ஆசிரியர்களுக்கு வழிகாட்டிகளாய் அமைந்தன. அவர் எடுத்துக்கொண்ட காலத்து மக்களின்

வாழ்க்கை முறையை உள்ளபடியே வருணிக்கும் வல்லமை அவருக்கிருந்தது. பைரன் (கி.பி. 1788–1824) புனைவியல் கவிஞராயினும் செவ்வியல் கூறுகளும் கொண்ட கவிதைகளை யாத்தார். மான்பிரெடு செயின், சுவர்க்கமும் பூவுலகும் முதலிய கவிதைகளில் புனைவியல் கூறுகளும், மரினோ பலியரோ (Marino Faliero), இரண்டு பசுகரி (The Two Foscari) ஆகிய வற்றில் செவ்வியல் கூறுகளும் மேலோங்கி நிற்கக் காணலாம். தான்சுவான் (Don Juan) இவரது வெற்றிச் சிகரமாகும். செல்லி (கி.பி. 1792-1822) தம் புரட்சிக் கருத்துகளையும் இலட்சிய நோக்கையும் நீண்ட கவிதைகளிலும் தன்னுணர்ச்சிப் பாக்களிலும் புலப்படுத்தினார். "இசுகைலார்க்கு", "மேல்காற்று", "மேகம்" ஆகியவை பற்றிய கவிதைகளில் இசைச் சிறப்பையும் இவர்தம் விஞ்ஞான அறிவையும், விடுதலை பெற்ற புரோமீதியசு (Prometheus Unbound) என்ற நாடகக் கவிதையில், மனிதக் குலம் மேம்பட வேண்டுமென்ற இவர்தம் அவாவையும், செஞ்சி (The Cenci) என்ற துன்பியல் நாடகத்தில் இவர் பெண் குலத்தின்பால் கொண்ட பரிவையும் காணலாம். இவரது 'கவிதையின் இன்றியமையாமை' (A Defence of Poetry) என்னும் நூல், கவிதை நடையில் அமைந்த கட்டுரையாகும்.

ஏழைக் குடும்பத்தில் பிறந்த கீட்சு (கி.பி. 1795–1821) இருபத்தாறு ஆண்டுகளே வாழ்ந்தாராயினும் நிலைத்த புகழுடைய தன்னுணர்ச்சிப் பாக்கள் பலவும் எண்டிமியன் (Endymion) என்ற நீண்ட கவிதையும், இசபெல்லா (Isaballa) என்னும் அழகிய கதைப் பாடலும், முற்றுப்பெறாத ஐபீரியன் (Hyperion) என்னும் மில்டனின் அடியொற்றிய கவிதையும் எழுதி முடித்தார். வறுமையும் காதல் தோல்வியும் உறவினர் இழப்பும் இவரை வாட்டியபோதும், கவிதையின்பால் கொண்டிருந்த மாளாக்காதல் இவரைப் பெரும் புலவர்கள் வரிசைக்கு உயர்த்தியது.

புனைவியல் காலத்தில் வாழ்ந்த உரைநடை ஆசிரியர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் ஆசுலிட்டு (Hazlitt), இலாம்பு (Lamb), இலாண்டார் (Landor), திக்வின்சி (De quincey) ஆகிய நால்வராவர். ஆசுலிட்டின் 'கவிஞர்களுடன் எனது முதல் சந்திப்பு' (My first Acquaintance with Poets), கோலரிட்சு பற்றிய அவரது மதிப்பீட்டைத் தருகிறது. சேக்சுபியர் நாடகங்களின் கதைமாந்தர்கள் (Characters of Shakes-Peare's Plays) என்னும் நூலில், இன்றைய திறனாய்வாளர்களும் ஏற்றுக்கொள்ளத்தக்க பல கருத்துகளைத் தந்துள்ளார். அவர் காலத்தில் வாழ்ந்த புலவர்களின் பெருமை சிறுமைகளைக் காலவுணர்வு (The Spirit of the Age) என்னும் நூலில், காய்தல் உவத்தல் இன்றி வெளிப்படுத்தியுள்ளார். இறுதிக் காலத்தில் நெப்போலியனின் வாழ்க்கை வரலாற்றை நான்கு பாகங்களில் எழுதினார். இலாம்பின் கட்டுரைகள் பல பொருள் பற்றியவை; மனித இதயத்தை ஊடுருவிப் பார்ப்பவை; உள்ளத்தைத் தொடுபவை. தமக்கென ஒரு விந்தையான நடையை இவர் உருவாக்கிக் கொண்டார், "தென்கடல் இல்ல நினைவுகள்" (Recollections of the South-Sea House), "பழையசீனம்" (Old China), "முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன் கிறித்து ஆசுபிடல்" (Christ's Hospital Five and ThirtyYears Ago), "சுடப்பட்ட பன்றிபற்றி ஓர் ஆய்வுக் கட்டுரை" (A Dissertation upon Roast Pig) என்பவையெல்லாம் கவித்துவம் நிறைந்த கட்டுரைகள். தம் திறனாய்வுக் கட்டுரைகள் வாயிலாகக் கி.பி. 16,17-ஆம் நூற்றாண்டு நாடக ஆசிரியர்களுக்குப் புத்துயிர் அளித்த பெருமையும் இவருக்கு உண்டு. இலாண்டார் (W.S. Landor) எழுதிய கட்டுரை, கவிதை ஆகிய இரண்டிலும் செவ்வியல் கூறுகள் பல காணலாம். கற்பனை உரையாடல்கள் (Imaginary Conversations) என்னும் நூலில் அவரது வீச்சும், அவர் கையாளும் உத்திகளும் வியக்கத்தக்கவை. திக்வின்சியின் 'ஒரு ஆங்கிலப் போதைப் பொருள் நுகர்வோனின் ஒப்புதல்கள்' (The Confessions of an English Opium Eater) என்னும் நூலில் அவர் தம் வாழ்வு நிகழ்ச்சிகள் பலவற்றை அழகுபடக் கூறியுள்ளார்.

ஆசுடின் சேன் (கி.பி.1775-1817) நார்த்தாங்கர் ஆபி (Northanger Abbey), மென்சுபீல்டு பார்க்கு (Mansfield Park), தற்பெருமையும் தவறான மதிப்பீடும் (Pride and Prejudice), அறிவும் உணர்வும் (Sense and Sensibility), எம்மா (Emma), ஏற்கச்செய்தல் (Persuasion) ஆகிய புதினங்களில் மனித வாழ்வில் நடைபெறும் எளிய நிகழ்ச்சிகளையும் பாத்திரங்களையும் பார்க்காத நிகழ்ச்சிகளையும் ஒதுக்கித் தள்ளியதால், உயிருள்ள கலைப் படைப்புகளை உருவாக்க முடிந்தது.

உரைநடையைக் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் சிறப்புறக் கையாண்டவர்களுள் நியுமென் (Newman), கார்லைல் (Carlyle), இரசுகின் (Ruskin) ஆகியோர் முறையே சமயம், சமூகம், கலை பற்றித் தம் கருத்துகளைப் படிப்போர் உளங்கொள வெளிப்படுத்தினர். கார்லைல், வீரர்களின் குணச்சிறப்புகள், உண்மைத் தொண்டின் உயர்வு, நல்ல தலைமையின் இன்றியமையாமை ஆகியவை பற்றித் தம் கட்டுரைகளில் இடியென முழங்கினார். இரசுகின், ஓவியம், சிற்பம் பற்றியும், கலையில் நீதியும் நேர்மையும் பெறவேண்டிய பங்கு பற்றியும், விவிலிய நூல் நடையில் விளக்கினார்.

அரசி விக்டோரியா காலத்துக் கவிஞர்களுள்

முன்னணியில் நிற்பவர் தென்னிசன் (கி.பி. 1809-92) ஆவார். செவிக்கினிய இசைநலம் வாய்ந்த இவர் கவிதைகளுள் "யுலிசீசு" (Ulysses), "மாடு" (Maud), "இலுக்ரீசியசு" (Lucretius) "நினைவாக" (In Memoriam) ஆகியவையும் மன்னன் ஆர்தர் பற்றியவையும் சிறப்புடையவை. இவையெல்லாம் கருத்துகளுக்கேயன்றிக் கலை நுணுக்கத்திற்காகப் போற்றப்படுபவை. பிரௌனிங்கு (கி.பி. 1812-89) இவரினின்றும் முற்றிலும் வேறுபட்டவராவார். இவர் நாடகத் தன்னுரை (Dramatic Monologue) என்ற பாடல் வகையைச் செம்மைப்படுத்தினார். நாடக உடனடி உணர்வும் (Dramatic Immediacy) மனித மனங்களை ஊடுருவும் பாங்கும் கொண்ட நாடகத் தன்னுரைகள் பல எழுதினார். இவர் மனிதக்குல மேம்பாட்டில் கொண்டிருந்த முழுநம்பிக்கையையும் பல கவிதைகளில் அறிவிக்கிறார். "சார்டெல்லோ" (Sordello) "மோதிரமும் நூலும்" (The Ring and the Book) ஆகிய கவிதைகள், சற்றுக் கடினமானவையாயினும் படிப்போர்க்குப் பயன்தருபவை. மேத்யூ ஆர்னால்டு (கி.பி. 1822-88) கட்டுரை, திறனாய்வு, கவிதை ஆகிய மூன்று துறைகளில் முயன்று சமூகம், சமயம், கல்வி, கலை, இலக்கியம் ஆகிய பல பொருள்கள் பற்றி எழுதியவர். "சோரபும் ருசுதமும்" (The Sohrab and Rustum) "நாடோடி மேதை" (The Scholar Gipsy), "கைவிடப்பட்ட கடல் மனிதன்" (The Forsaken Merman) ஆகிய கவிதைகள் நெஞ்சை அள்ளும் தன்மையவை. திறனாய்வுக் கட்டுரைத் தொகுதிகள் இரண்டும் பின்னர் வந்த திறனாய்வாளர்களுக்கு வழிகாட்டியாய் அமைந்தவை. சமுதாயச் சிக்கல்கள் பற்றிய கருத்துகளைப் பண்பாடும் குழப்பமும் (Culture and Anarchy) என்ற நூலில் தமக்கே உரிய உரைநடையில் தந்துள்ளார்.

இராசட்டி (D. G. Rossetti), மாரிசு போன்ற கவிஞர்கள், கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இரண்டாம் பகுதியில் இரபேலுக்கு முன் வாழ்ந்த இத்தாலிய ஓவியர்களின் பாணியில், ஓவியம், கவிதை இரண்டையும் கொண்டு செல்ல வேண்டுமென்ற நோக்குடையவராய் இருந்தனர். எளிமையும், நேர்மையும், இயற்கை வருணனை நுண்மையும் இவர்களால் வலியுறுத்தப்பட்டன. இத்தகைய கவிதைக்கு இராசட்டி எழுதிய "சுவர்க்கத்தில் நங்கை" (The Blessed Damozel) என்ற கவிதை எடுத்துக்காட்டாய் அமைந்தது. ஓசை நயத்திற்கு ஆள்னாலும் பிறகு தமக்கே உரிய நடையில் நீதி போதனையை முற்றும் ஒதுக்கி, இசை மழை பொழிந்தார்.

தாக்கரே (கி.பி. 1811-63) பல இலக்கிய வகைகளைக் கையாண்டாராயினும், புதின ஆசிரியராகவே திகழ்ந்தார். பல புதினங்கள் எழுதினாரேனும், வீணரின் சந்தை (Vanity Fair), எசுமாண்டு (Esmond), பெண்டென்னிசு (Pendennis) ஆகியவையே இன்றும் படிக்கத் தக்கனவாக உள்ளன. இவர்தம் பாத்திரப் படைப்பும் உரைநடை வளமும் பெருமை உடையவை. புதின ஆசிரியர்களில் என்றும் குன்றாத புகழ் அடைந்தவர் திக்கன்சு (Dickens கி.பி. 1812-70) ஆவார். மறக்க முடியாத பாத்திரங்கள், யாவரையும் கவரும் நகைச்சுவை, பலவகையான கதைகள் ஆகியவையே இவரது வெற்றிக்குக் காரணங்கள். பிரச்சாரத்திற்கு அவர் அளித்த முக்கியத்துவமும் மிகைப்பட்ட உணர்ச்சியைத் தூண்டுவதற்காக அவர் நுழைத்த நம்ப முடியாத சில பாத்திரங்களும், நிகழ்ச்சிகளும், பாலுணர்வைப் புறக்கணித்ததும் அவருக்கு எதிராகச் சொல்லப்படும் குற்றச்சாட்டுகள். அவர் தம் 'பிக்விக்கு பேப்பர்சு' (Pickwick Papers), ஆலிவர் டிவிசுடு, நிகோலசு நிக்கல்பி, தேவிடுகாப்பர் பீல்டு, துன்பநேரங்கள் (Hard Times), இரண்டு நகரங்களின் கதை (A tale of Two Cities) ஆகியவை பாமரர்களிலிருந்து பண்பட்ட திறனாய்வாளர் வரை யாவராலும் விரும்பிப் படிக்கப்படுபவை.

சார்சு எலியட்டு (கி.பி. 1819-81) தம் புதினங்களில் கதைமாந்தர்களின் உள்ளுணர்ச்சி, சிந்தனை ஆகியவற்றை ஆய்கிறார். 'ஆடம்பீடு' (Adam Bede) எனும் புதினத்தின் உயிர்நாடி அதன் கதையாகும். சார்லட்டு, எமிலி, ஆன் (Anne) ஆகிய பிராண்ட்டே (Bronte) சகோதரிகள் மூவரும் புதின ஆசிரியைகள் ஆவர். சார்லட்டின், சேன் அயர் (Jane Eyre) ஓர் எளிய குடும்பப் பெண்ணின் காதலை ஒளிவுமறைவின்றிச் சித்திரித்தது. எமிலியின் 'உதரிங்கு கைட்சு' (Wuthering Heights) தனித்தன்மை வாய்ந்த புதினமாகும்.

சார்சுமெரிடித்து (கி.பி. 1828-1909), தாமசுஆர்டி (கி.பி. 1840-1929) ஆகியோர் ஒருவரிலிருந்து மற்றவர் முற்றிலும் மாறுபட்ட புதின ஆசிரியர்கள் ஆவர். மெரிடித்து, கவர்ச்சி வாய்ந்த பாத்திரங்களை நாடினார். ஆர்டி எளிய பாத்திரங்களைத் தெரிந்தெடுத்தார். அவர்தம் புதினங்கள் விதிக்கு எதிராக மனிதன் நடத்தும் வீணான போராட்டங்களை அடுக்கடுக்காக எடுத்துரைத்தன. மனித வாழ்க்கையின் அவலங்களை, கேசுடர் பிரிட்சின் மேயர், தெகி ஆகிய புதினங்களில் எளிய பாத்திரங்கள், நிகழ்ச்சிகளைக் கொண்டே படம் பிடித்துக் காட்டியுள்ளனர்.

அரசி விக்டோரியாவின் காலத்தைச் சார்ந்தவராயினும், 20-ஆம் நூற்றாண்டுக் கவிஞர்களோடு சேர்த்து எண்ணத்தக்க பல தன்மைகளையுடைய கவிதைகள் எழுதியவர் ஆபகின்சு (கி.பி. 1844-89). கத்தோலிக்கப் பாதிரியாரான இவர், தம் சமயக் கவிதைகளில் கடவுள் மனித உறவு பற்றியும்,

தம் ஆத்மாவின் போராட்டங்கள் பற்றியும், சிறப்புடைய உருக்கள், உயிரோட்டமுள்ள நடை ஆகியவற்றைப் பயன்படுத்தித் தமக்குப் பின்வந்த கவிஞர்களுக்கு வழிகாட்டியானார். இவரது "சிதைந்த கப்பல்" (The Wreck of the Deutschland) என்ற கவிதையும், இவர்தம் மனப் போராட்டத்தைச் சுட்டும் ஈரேழ்வரிப் பாக்களும் (Terrible Sonnets) சமயக் கவிதை வேண்டுவோர்க்குத் தெவிட்டாத விருந்தாகும்.

ஆங்கில இலக்கிய வரலாற்றில் 20 - ஆம் நூற்றாண்டில் தலையாய இடம்பெறும் டி. எஸ். எலியட்டு, கவிஞரும் நாடகாசிரியரும் திறனாய்வாளரும் ஆவார். எசுரா பவுண்டு, கியூம், பிரெஞ்சுப்படிமக் கவிஞர்கள், ஆங்கில நுண்புலக் கவிஞர்கள் ஆகியோரின் தாக்கத்திற்குள்ளான எலியட்டு, செவ்வியல் நெறியையே பெரிதும் விரும்பி, நவீன உலகில் மனித வாழ்வின் அலங்கோலங்களை, நிறை பொருள் தரும் குறைந்த சொற்கள், அதிர்ச்சி தரும் உருக்காட்சிகள் மூலம் எடுத்துக்காட்டியுள்ளார். இவருடைய "பாழ்நிலம்" (The Waste Land), "ஒரு பெண்ணின் ஓவியம்" (Portriat of a lady), "வெற்று மனிதர்" (Hollow Men). "மதியூகிகள் பயணம்" (Journey of the Magi), "நான்கு பகுதிகள்" (Four quarters) ஆகியவை புதிய கவிதையின் சிறப்புக் கூறுகளுக்குத் தலையாய எடுத்துக்காட்டுகள். இவர் தம், கோவிலில் கொலை (Murder in the Cathedral), மீண்டும் கூடிய குடும்பம் (Family Reunion) முதலானவை கவிதை நாடகத்திற்கு (Poetic Drama) மறுவாழ்வு அளித்தன.

அயர்லாந்து தந்த கவிஞர்களுள் தலைசிறந்தவரான ஏட்சு (Yeats - கி. பி. 1865 - 1939) தம் நாட்டுப் புராணக் கதைகளைத் தம் கவிதைகளுக்குப் பயன்படுத்திக் கொண்டார். உரைநடை, நாடகம், கவிதை ஆகிய மூன்று வகைகளையும் கையாண்டார். பிரெஞ்சுப் படிமக் கவிஞர்களின் தாக்கத்தினால் படிமங்களை முருகுணர்ச்சிச் சுவையோடு பயன்படுத்தினார். இளமைக் காதலிலிருந்து முதுமையின் அவலம் வரை வாழ்வின் பல கூறுகள் பற்றியும் அயர்லாந்தின் தேசியம் பற்றியும் புதிய நடையில் புதிய உத்திகளோடு கவிதைகள் பல எழுதினார். ஐரிசு எழுத்தாளர்களுள் குறிப்பிடத்தக்க மற்றொருவர் சிங்கு (Synge கி.பி. 1871 - 1909) ஆவார். மேலை உலகின் விளையாட்டுப்பிள்ளை (The Play boy of the Western World) உள்ளிட்ட ஆறு நாடகங்களால் ஐரிசு நாடக இயக்கத்திற்கு உயிரூட்டினார்.

ஆங்கிலப் புதின இலக்கியத்தில் 20-ஆம் நூற்றாண்டில் வியக்கத்தக்க சாதனை புரிந்தவர் போலந்தைச் சேர்ந்த கான்ராடு (கி. பி. 1857-1924) ஆவார். தாய்மொழியல்லாத ஆங்கிலத்தைக் கற்றுப் பிளாபேர், துர்கனீவ், என்றி, சேம்சு ஆகியோரின் தாக்கத்தினால் மனப் போராட்டங்களையும் தரும சங்கடங்களையும் சித்திரிக்கும் புதினங்களை எழுதினார். கடல்வாழ்வு பற்றிய இலார்டு சிம் (Lord Jim) போன்றவை அவர் பெயரை நிலை நிறுத்தின. ஈ.எம். பார்சுடர் (E.M. Forster) தம் இந்திய அனுபவங்களால் உந்தப்பட்டு எழுதிய 'இந்தியாவுக்கு ஒரு வழி' (A Passage to India) முதலான நூல்கள் தரமுடையவை. டி.எச்.இலாரன்சு (D.H. Lawrence) கவிஞராகவும் புதின ஆசிரியராகவும் நாடக ஆசிரியராகவும் திறனாய்வாளராகவும் பெரும் சாதனைகள் புரிந்தார். ஆண்மக்களும் காதலர்களும் (Sons and Lovers), அன்புப் பிடியில் பெண்கள் (Women in Lover), வானவில் (The Rainbow) போன்றகதைகளும், அமெரிக்க இலக்கியத்தின் உயர்தனி நூல்கள் என்ற திறனாய்வு நூலும், ஏராளமான கவிதைகளும், அவர் கொண்டிருந்த தனித்தன்மையுடைய மனித வாழ்வுக் கொள்கைகளைப் பறைசாற்றுகின்றன.

நினைவோடைப் புதினத்தை ஆங்கிலத்தில் சிறப்புற எழுதியவர்களுள் வர்சீனியா உல்பு (கி. பி.1882-1941) ஒருவராவார். பல்வேறுபட்ட அனுபவங்களால் உள்ளும் புறமும் தாக்கப்படும் மூளையின் ஒழுங்குபடுத்தப்படாத எண்ணங்களின் தொகுதியை இவர் தம் 'திருமதி டாலோவே' (Mrs. Dalloway), கலங்கரை விளக்கத்திற்கு (To The Light House) ஆகிய புதினங்களில் காணலாம். சேம்சு சாய்சு (கி.பி. 1882-1941), இத்துறையில் மேலும் முன்னேற்றம் கண்டார். யூலீசிசு (Ulyssess) போன்ற புதினங்களில் மனித மனம் ஓர் எண்ணத்திலிருந்து மற்றொரு எண்ணத்திற்குத் தாவுவதை மிகுந்த திறமையுடன் படம் பிடிக்கிறார். பின்னிகனின் விழிப்பு (Finnegan's Wake) என்னும் புதினத்தில் தலைமைக் கதைமாந்தர், கதை முழுவதும் உறங்க, நிகழ்ச்சிகள் நடக்கின்றன. சார்சு ஆர்வெல் (கி. பி. 1903 - 50) எழுதிய கதைகளும் கட்டுரைகளும் இன்றைய உலக வாழ்வின் குறைகளை அங்கதச் சுவையோடு சுட்டுவன.

உரைநடை நாடகத்தைத் துடிப்புடன் சமுதாய நலனுக்காகக் கையாண்டவர் பெர்னார்டுசா (கி. பி. 1856 - 1956) ஆவார். நார்வீசிய நாடக ஆசிரியர் இப்சனின் தாக்கத்திற்கு ஆளான சா வற்றாத நகைச்சுவை, யார்க்கும் அஞ்சாத போக்கு, நுண்ணிய கலையாற்றல் ஆகியவற்றின் துணையால் சமுதாயத்தின் சீர்கேடுகளை, திருமதி வாரனின் தொழில் (Mrs. Warren's Profession), ஆயுதங்களும் மனிதனும் (Arms and the man), கேன்டிடா (Candida), புனித சோன் (St. Joan) ஆகிய நாடகங்களில் கடுமையாகச் சாடினார்.

இங்கிலாந்து மட்டுமே எண்ணற்ற எழுத்தாளர்களை ஆங்கிலத்துக்குத் தந்து வந்த நிலை மாறி, அதன் முன்னைய குடியேற்ற நாடுகள் பலவும் தரமுடைய படைப்பாளர்களைக் கொடுத்துதவும் நிலை தோன்றியுள்ளது. இவர்கள்தம் படைப்புகளெல்லாம் ஆங்கில இலக்கியக் கடலின் ஆழத்தையும் பரப்பையும் மிகுதிப்படுத்தும் என்பதில் ஐயமில்லை. பி. ம.

துணை நூல்கள்:


Sampson, G., The Concise Cambridge History of English Literature, The English Language Book Society and Cambridge University Press, London, 1970.

Edward Albert, History of English Literature, Oxford University Press, Calcutta, 1979.

David Daiches, A Critical History of English Literature, 1960.

Boris Ford, A Guide to English Literature, 1961.

A.C.Baugh, A Literary History of England, 1967.

Grierson H.J.C. and Smith, J.C. A Critical History of English Poetry, 1944.


**ஆங்கிலக் கால்வாய்** பிரிட்டனையும் பிரான்சையும் பிரிக்கும் கால்வாயாகும். இது அட்லாண்டிக் பெருங்கடலின் கிளையாக வடகடல்வரை நீண்டுள்ளது. ஏறத்தாழ 560 கி.மீ. நீளத்தையும் 240 கி.மீ. அகலத்தையும் கொண்ட ஆங்கிலக் கால்வாய் (English Channel) சில இடங்களில் 36 மீ. முதல் 54 மீ. வரை ஆழமும், சிலஇடங்களில் 105 மீ. ஆழமும் கொண்டுள்ளதாய் அமைந்துள்ளது. இது இங்கிலாந்து முனையில் தோவரையும் (Dover), பிரான்சு முனையில் கிரிசு-நெசு (Gris-Nez) முனையையும் கொண்டுள்ளது. இக்கால்வாயின் மிகக் குறுகிய அகலம் 33 கி.மீ.

ஆங்கிலக் கால்வாய், கடல் கொந்தளிப்புகளுக்கும் சீர்கெட்ட தட்பவெப்ப நிலைக்கும் பெயர்பெற்றது. அட்லாண்டிக்குப் பெருங்கடலிலிருந்து வரும் நீர்ப்போக்கு, கொந்தளிப்பான கடலலைகளை உருவாக்கித் தருகிறது. இங்கு வீசும் மேல் காற்றுகளும் புயல்களை உண்டாக்கக் கூடியவை. பனிமூட்டம் மிகுதியாக உள்ளதால் இக்கால்வாயை அமைதியாகக் காண்பது இயலாது. இக் கால்வாயில் அடிக்கும் அலைகளும் ஒழுங்கற்றவை. இருப்பினும், இக் கடலலைகள் கப்பல் போக்குவரத்திற்குப் பெரிதும் பயன்படுவன. இது ஒருகாலத்தில் பிரிட்டனையும் ஐரோப்பாக்கண்டத்தையும் இணைத்த நிலமாகலாம்; அறுபடாத நிலப்பாகமாக இருந்திருக்க வேண்டுமென்றும் கருதுவர். கடலரிப்பினால் பல மாறுதல்கள் ஏற்படுவது இயற்கை. ஆங்கிலக் கால்வாயும் அவ்வண்ணம் கடலரிப்பினால் உருவானதுதான் என்று கருதுவர்.




ஆங்கிலக் கால்வாய்

இக் கால்வாய் கப்பற் போக்குவரத்திற்கும் மீன் பிடிப்பதற்கும் பயன்படுகிறது. பிளிமத்து, சௌத்தாம்ப்டன், போர்ட்சுமத்து, போக்சுடோன், தோவர் ஆகியவை இங்கிலாந்துப் பகுதியிலும், செர்பர்க்கு, இலாவர், கலே ஆகியவை பிரான்சுப் பகுதியிலும், உள்ள துறை முகங்களாகும். வைட்டு தீவும் (Wight), சேனல் (Channel) தீவுகளும் இங்குள்ள சிறப்பான தீவுகளாகும்.

இங்கிலாந்தையும் பிரான்சையும் கடலுக்குள் போடப்பட்டுள்ள இரும்புக் குழாய்கள்மூலம் இணைத்துப் போக்குவரத்தை எளிதாக்கும் முயற்சி கி.பி. 1875 முதல் நடைபெற்று வந்தாலும், இத்திட்டம் இடையில் கைவிடப்பட்டது. மீண்டும் இத்திட்டத்தை 1950-இல் தொடர்ந்தார்கள். இருபது உறுப்பினர்களைக் கொண்ட குழுவொன்று 1970- ஆம் ஆண்டு சூலை மாதத்தில் இது தொடர்பான கருத்துகளையும் குறிப்புகளையும் தொகுத்துக் கொடுத்தது. பிரிட்டனும் பிரான்சும் 1971 சனவரி மாதத்தில் இக்கருத்துகளை ஆய்வு செய்து, சுரங்கப் பாதையை அமைக்க முயற்சி செய்யும் என்று எதிர்பார்க்கப்பட்டது.

இக் கால்வாயில் வரலாற்றுச் சிறப்புமிக்க பல போர்கள் நிகழ்ந்துள்ளன. வைக்கிங்குப் (Viking) படையெடுப்புகள், ஆர்மடா படையெடுப்பு, மூன்றாம்

வில்லியம் அரசர் இங்கிலாந்திற்கு வருகை புரிந்தது போன்ற நிகழ்ச்சிகள் இக்கால்வாயில் நடைபெற்றன. ஆங்கிலேயர் 1940-இல் இடங்கர்க்கை (Dunkirk) விட்டு வெளியேறியதும், நேசநாட்டுப்படைகள் 1944-இல் நார்மண்டியில் படையெடுத்ததும் ஆங்கிலக் கால்வாய் வழியாகத்தான் என்பது குறிப்பிடத்தக்கது.

## ஆங்கிலக் கிழக்கிந்திய வாணிகக் குழு

கீழை நாடுகளுடன் வாணிகம் செய்ய உருவாக்கப் பட்டதோர் அமைப்பாகும். இங்கிலாந்தின் அரசி முதலாம் எலிசபெத்து, கி.பி. 1600-இல் கிழக்கிந்திய வாணிகக் குழுவிற்குக் கீழ்நாடுகளில் வாணிகம் செய்யும் தனி உரிமையைச் சாசனம் மூலமாகக் கொடுத்தார். ஆங்கிலத் தளபதி பெசுட்டு (Best) கி.பி. 1612-இல் போர்த்துகீசியரைச் சூரத்துக்கருகில் தோற்கடித்து, அங்கு ஒரு பண்டசாலையை நிறுவினார். மசூலிப் பட்டினத்தில் ஆங்கிலேயர் கி.பி. 1643-இல் ஒரு கோட்டையைக் கட்டிக் கொண்டனர். இப்பொழுது சென்னை என்று வழங்கும் இடத்தை கி.பி. 1639-இல் பிரான்சிசு டே(Francis Day) என்பவர், சந்திரகிரி மன்னரிடமிருந்து வாங்கினார். அங்குச் செயின்டு சார்சு என்னும் கோட்டையைக் கி.பி. 1640-இல் ஆங்கிலேயர் கட்டி முடித்தனர். கி.பி.1651-இல் கூக்ளி ஆற்றங்கரையில் அவர்கள் ஒரு பண்டசாலையைக் கட்டிக் கொண்டனர். இங்கிலாந்து அரசர் இரண்டாம் சார்லசு என்பவருக்குச் சொந்தமான பம்பாயை ஆங்கில வாணிகக்குழு கி.பி. 1661-இல் வாடகைக்குப் பெற்றது. மொகலாய அரசர் அவுரங்கசீப்பு அனுமதியின் பேரில் காளிகட்டம் என்னுமிடத்தில் ஒரு பண்டசாலையைக் கி.பி. 1690-இல் ஆங்கிலேயர் கட்டிக் கொண்டனர். அதே ஆண்டில் அங்கு ஒரு கோட்டையைக் கட்டி அதற்கு வில்லியம் கோட்டை என்று பெயரிட்டனர்.

இதற்கிடையில் ஆங்கிலேயர்களுக்கும் தச்சுக்காரர்களுக்கும் கிழக்கிந்தியத் தீவுகளில் மோதல்கள் ஏற்பட்டமையால், ஆங்கிலேயர்கள் அத்தீவுகளிலிருந்து விரட்டியடிக்கப் பட்டனர். ஆகவே ஆங்கிலேயர்கள் இந்திய வாணிகத்தையே சிறப்பாக நம்பி வாழ வேண்டியவர்களாயினர்.

வாணிகம் செய்ய வந்த ஆங்கிலக் கிழக்கிந்திய வாணிகக்குழு இந்தியாவில் சிறிதுசிறிதாக வளர்ந்து, எதிரிகளுடன் வெற்றியாகப் பல போர்களைச் செய்து, ஒரு பேரரசையே நிறுவியது. புதுச்சேரியின் ஆளுநர் தூப்ளே(Dupleix)தமக்குப் போட்டியாயிருந்த ஆங்கிலேயர்களைத் தென்னிந்தியாவினின்றும் விரட்டி அங்குப் பிரெஞ்சு ஆட்சியை நிறுவத் திட்டமிட்டார். ஆங்கிலேயர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் கி.பி. 1746-இலிருந்து 1763 வரை மூன்று கருநாடகப்போர்கள் நிகழ்ந்தன. கருநாடக நவாபு பதவிக்கு அன்வாருதீனுக்கு எதிரியாகச் சந்தா சாகிபு போட்டியிட்டார். சந்தாசாகிபு பிரெஞ்சு ஆளுநர் தூப்ளேயின் உதவியினால் அன்வாருதீனைக் கொன்று, கருநாடக நவாபு ஆனார். அன்வாருதீனின் மகன் முகம்மது அலி, தப்பி ஓடித் திருச்சிராப்பள்ளி மலைக் கோட்டைக்குள் ஒளிந்து கொண்டார். தூப்ளேயும் சந்தா சாகிபும் திருச்சிராப்பள்ளியை முற்றுகையிட்டனர். முகம்மது அலி ஆங்கிலேயரின் உதவியை நாடினார். ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியில் கணக்கராய்ப் பணிபுரிந்து பிறகு படையில் சேர்ந்த இராபர்ட்டு கிளைவு ஒரு பெரும்படையுடன் கருநாடகத்தின் தலைநகரான ஆர்க்காட்டைக் கைப்பற்றத் திட்டமிட்டார். சந்தாசாகிபு திருச்சிராப்பள்ளியிலிருந்த தம் படையின் பெரும்பகுதியைத் தம் மைந்தனின் தலைமையில் ஆர்க்காட்டை விடுவிக்க அனுப்பினார். கிளைவு அப்படையைத்தோற்கடித்து ஆர்க்காட்டைக் கைப்பற்றியதுடன், ஆர்க்காட்டு வீரர் என்று பெயரையும் பெற்றார். ஆரணி, காவேரிப்பாக்கம் என்னுமிடங்களிலும் பிரெஞ்சுக்காரரைத் தோற்கடித்தார். கிளைவு திருச்சிராப்பள்ளியிலிருந்த முகமது அலியை விடுவித்து, அவரைக் கருநாடக நவாபு ஆக்கினார். ஆங்கிலேயரின் செல்வாக்குக் கருநாடகத்தில் மிகுதியாயிற்று. நெருக்கடியான நிலை இருந்த போதிலும் பிரெஞ்சுப் படைத்தலைவர் புச்சி (Bussy) க்கு எதிராக அனுப்பிய படை, வட சர்க்காரைக் கைப்பற்றியது. நிசாமும் ஆங்கிலேயருக்குத் தலை வணங்கினார். ஆங்கிலப்படைத்தலைவர் சர் அயர் கூட்டு (Sir Eyre Coote) என்பவர், வந்தவாசியில் பிரெஞ்சுப் படைத்தலைவர் இலாலியைக் கி.பி. 1760-இல் தோற்கடித்தார். புதுச்சேரியும் ஆங்கிலேயருக்கு உரியதாயிற்று. பிரெஞ்சுக்காரர்கள் கி.பி. 1763-இல் ஏற்பட்ட பாரிசு உடன்படிக்கையின்படி புதுச்சேரியைத் திரும்பப் பெற்றனர். சந்தா சாகிபு கொல்லப்பட்டார். மூன்றுகருநாடகப் போர்களாலும் பிரெஞ்சுக்காரர்கள் இந்தியாவில் தங்கள் உரிமையை நிலை நாட்ட இயலவில்லை.

வங்காளத்தையாண்ட சிராசு-உத்-தௌலா, கல்கத்தாவிலிருந்த ஆங்கிலேயருக்குப் பல கொடுமைகளை இழைத்தார். சிராசு-உத்-தௌலா, கி.பி. 1756-இல் 146 ஆங்கிலேயர்களைச் சிறிய அறை ஒன்றில் அடைத்துப் பூட்டியதில் 123 பேர்கள் உயிரிழந்தனர். இருட்டறை நிகழ்ச்சி என்ற இது வரலாற்றில் இடம் பெற்றுள்ளது. பிரெஞ்சுக்காரர் உதவியுடன் சிராசு-உத்-தௌலா கல்கத்தாவைத் தம்தாக்கிக் கொண்டார். சென்னை

யிலிருந்து சென்ற கிளைவு கி.பி. 1756-இல் அதனை மீட்டார். பிறகு அவர் ஒரு சதித்திட்டம் தீட்டினார். அதன்படி சிராசு-உத்-தௌலாவை அரியணையிலிருந்து நீக்கி அவர் படைத்தலைவர் மீர்சாபரை வங்காள நவாபுவாக அமர்த்துவதாகக் கூறி அவரைத் தம் வயப்படுத்தினார். சிராசு-உத்-தௌலா கி.பி. 1757-இல் மீண்டும் பிரெஞ்சுக்காரர் உதவியுடன் ஆங்கிலேயர்மீது போர் தொடுத்தார். பிளாசி என்னுமிடத்தில் நடந்த போரில் சிராசு-உத்-தௌலாவைக் கிளைவு தோற்கடித்து, படைத்தலைவர் மீர்சாபரை வங்காள நவாபுவாக்கினார். மீர்சாபர், ஆங்கிலேய வாணிகக் குழுவிற்குக் கல்கத்தாவைச் சுற்றியுள்ள 24 பர்கானாக்களைக் கொடுத்தார். இதுவே ஆங்கிலேயர்கள் முதன் முதலாக ஆட்சி செய்வதற்குப் பெற்ற இந்திய இடமாகும். கிளைவு வங்காளத்தின் முதல் ஆளுநராகக் கி.பி. 1758-இல் அமர்த்தப் பெற்றார்.

கிளைவு கி.பி. 1760-இல் இங்கிலாந்து சென்றிருந்தபோது, கல்கத்தாவிலுள்ள ஆங்கிலேய அதிகாரி வான்சிட்டார்ட்டு மீர்சாபரை நீக்கி விட்டு, அவர் மருமகன் மீர்காசிமை நவாபுவாக்கினார். ஆங்கிலேயர் சிட்டகாங்கு, பர்த்துவான், மிட்னாபூர் ஆகிய மாவட்டங்களைப் பெற்றனர். நாளடைவில் ஆங்கிலேயருடன் சச்சரவிட்டுக்கொண்ட மீர்காசிம், மொகலாய மன்னர் சா ஆலம் என்பவருடனும் அயோத்தி நவாபு சூசா-உத்-தௌலா என்பவருடனும் சேர்ந்து கொண்டு ஆங்கிலேயருடன் போர் செய்தார். பக்சார் என்னுமிடத்தில் கி.பி. 1764-இல் நடந்த போரில் மீர்காசிம் தோல்வியடைந்தார். மீர்சாபர் மீண்டும் நாவாபு ஆக்கப்பட்டார். ஆங்கிலேயர் அலகாபாத்தைக் கைப்பற்றினர். ஆங்கிலேயப் படையின் மேலாதிக்கத்தை இப்போர் வெளிப்படுத்தியது.

இரண்டாம் தடவையாக கிளைவு வங்காள ஆளுநராகப் பதவியேற்றார். அவர் கி.பி. 1765-இல் சா ஆலத்துடனும், சூசா - உத் - தௌலாவுடனும் அலகாபாத்தில் ஓர் உடன்படிக்கையைச் செய்து கொண்டார். வங்காளம், பீகார், ஒரிசா ஆகிய மாநிலங்களில் திவானி அல்லது வரிவசூல் செய்யும் உரிமையையும் நீதி நிருவாகத்தையும் மொகலாய அரசர் சா ஆலமிடமிருந்து ஆங்கிலேயர் பெற்றனர். வங்காளத்தில் சிவில், உள்துறை ஆட்சி, பாதுகாப்பு, வரி வசூல், நியாயம் வழங்குதல் ஆகியவற்றை உள்ளூர் அலுவலர்களே நடத்தவும், படை, காவல்துறை, நிருவாகம் ஆகியவற்றை வாணிகக்குழு அதிகாரிகள் நடத்தவும் கிளைவு ஏற்பாடு செய்தார். அவர் வங்காளத்தில் ஏற்படுத்திய இரட்டையாட்சி இதுவேயாகும்.

கிளைவு இந்தியாவில் அடிகோலிய ஆங்கிலப் பேரரசை வலிமையுடையதாகச் செய்தவர் கி.பி. 1772-இல் வங்காள ஆளுநராகப் பதவியேற்ற வாரன் ஏசுடிங்சு (கி.பி. 1772-1785) ஆவார். கிளைவு வங்காளத்தில் ஏற்படுத்திய இரட்டையாட்சியை இவர் ஒழித்தார். வங்காளம், பீகார் ஆகிய மாநிலங்களைப் பல மாவட்டங்களாகப் பிரித்தார். மாவட்டத்தின் வரிவசூலையும் ஆட்சிமுறையையும் செய்வதற்கு மாவட்ட ஆட்சித் தலைவரை அமர்த்தினார். மாவட்டத்தில் உரிமையியல் குற்றவியல் வழக்குகளைத் தீர்ப்பதற்குத் தனித்தனி நீதிமன்றங்களை ஏற்படுத்தினார்; காவற் படையைச் சீர்திருத்தினார்.

கம்பெனியின் ஆட்சிமுறையைச் சீர்திருத்தம் செய்வதற்கு இங்கிலாந்து நாடாளு மன்றம் கி.பி. 1773-இல் ஒழுங்குமுறைச் சட்டத்தை இயற்றியது. இச்சட்டத்தின்படி வாரன் ஏசுடிங்சு இந்தியாவின் முதல் தலைமை ஆளுநர் ஆனார். சென்னை ஆளுநரும் பம்பாய் ஆளுநரும் இவர்தம் கீழ் அதிகாரிகள் ஆனார்கள். நான்கு உறுப்பினர்கள் கொண்ட ஆலோசனைக் குழு ஒன்று அமைக்கப்பட்டது. குற்றவியல் வழக்குகளை விசாரிக்கக் கல்கத்தாவில் ஒரு தலைமை நீதிமன்றம் நிறுவப்பட்டது. வாணிகக் குழுவின் அரசியல் விவகாரங்களில் ஆங்கில அரசாங்கத்தின் தலையீடு விரிவாக்கப்பட்டது.

மைசூரையாண்ட ஐதர் அலி ஆங்கிலேயருடன் இரண்டு போர்கள் நடத்தினார். முதல் மைசூர்ப் போரில் (கி.பி. 1767-69) ஆங்கிலப் படைத்தலைவர் கர்னல் சுமித்து கி.பி. 1767 - இல் ஐதர் அலியைத் தோற்கடித்தார். இரண்டாம் மைசூர்ப் போரில் (கி.பி. 1780-84) ஆங்கிலப் படைத்தலைவர் சர் அயர் கூட்டு ஐதர் அலியைப் பரங்கிப்பேட்டை என்னுமிடத்தில் தோற்கடித்தார்.

இரகோபா என்னும் இரகுநாதராவ் பம்பாய் அரசுடன் கி.பி. 1775 இல் சூரத்து உடன்படிக்கையைச் செய்து கொண்டார். சால்செட்டு, பேசின் ஆகிய இடங்களை ஆங்கிலேயருக்கு அளிப்பதாய் உறுதியளித்தார். வங்காள அரசு சூரத்து உடன்படிக்கையை ஒத்துக் கொள்ளாமல் புதிய பேசுவாவான நானா பட்னாவிசுடன் புரந்தர் உடன்படிக்கையைச் (கி.பி. 1776) செய்து கொண்டு பேசின் தீவைப் பெற்றது. மராட்டியர்கள் ஆங்கிலேயர்களின் வல்லாட்சிப் போக்கை விரும்பவில்லை. ஆங்கிலேயர்கள் கி.பி. 1778-இலிருந்து 1782 வரை மராட்டியர்களுடன் செய்தபோர் முதல் மராட்டியப் போர் எனப்படும். மராட்டியர் தோல்வியடைந்தனர். ஆங்கிலேயர் மராட்டியருடன் சால்பை என்னுமிடத்தில் உடன்படிக்கை செய்துகொண்டனர். தானா, சால்செட்டு ஆகிய இடங்கள் ஆங்கிலேயர் வசமாயின.

சர் சான் மாக்பர்சன் ஆட்சிக்குப்பிறகு காரன்

வாலிசு (கி.பி. 1786-1793) தலைமை ஆளுநராகப் பதவியேற்றார். ஆங்கிலேய வாணிகக் குழுவின் நட்பு நாடான திருவிதாங்கூரை மைசூர் அரசர் திப்பு சுல்தான் தாக்கியதே மூன்றாம் மைசூர்ப் போருக்குக் (கி.பி. 1790 – 92) காரணமாகும். காரன்வாலிசு தலைமையில் கி.பி. 1791-இல் சென்ற படை பெங்களூரைக் கைப்பற்றியது. சீரங்கப்பட்டணத்தில் போர் செய்ததில் திப்புசுல்தான் தோல்வியடைந்தார். திப்புசுல்தான் கி.பி. 1792 – இல் சீரங்கப்பட்டண உடன்படிக்கையைச் செய்து கொண்டு தமது நாட்டில் பாதிப்பாகத்தை இழந்தார். அவர் மலபார், குடகு, திண்டுக்கல், பாரமகால் ஆகிய இடங்களை ஆங்கிலேயருக்குக் கொடுத்தார்.

கல்கத்தா நிருவாகக்குழுவின் மூத்த அதிகாரியான சர் சான் சோர் (கி.பி.1793-98) தலைமை ஆளுநராகப் பதவியேற்றார். அயோத்தி நவாபு வசீர் அலி ஆங்கிலேயரைப் பகைத்துக் கொண்டதால் அரச பதவியினின்றும் நீக்கப்பட்டு, சதாத் அலிகான் நவாபுவாக அமர்த்தப்பட்டார். சதாத் அலிகான் அலகாபாத்து அரணை ஆங்கிலேயருக்கு அளித்தார். அயோத்தியைப் பாதுகாக்கும் பொறுப்பு ஆங்கிலேயரிடம் ஒப்படைக்கப்பட்டது. பிட்டின் (Pitt) இந்தியச் சட்டம் கி.பி. 1784-இல் தலைமை ஆளுநருக்கு மிக்க அதிகாரத்தை வழங்கியது. ஆங்கில அரசின் கட்டுப்பாடு வாணிகக்குழுவின்மீது மிகுதியாயிற்று.

வெல்லெசுலி (கி.பி. 1798-1805) தலைமை ஆளுநர் பதவியேற்றவுடன் இந்தியாவில் ஆங்கிலேய ஆட்சிமுறை பரவத் துணைப்படைத் திட்டம் என்பதனைச் செயற்படுத்தினார். அதன்படி ஆங்கிலேய உதவியைப் பெற விழையும் இந்திய மன்னர்கள் ஓர் ஆங்கிலப் படையையும் ஆங்கிலப் பேராளர் ஒருவரையும் தங்கள் செலவில் ஏற்றுக்கொள்ள வேண்டும்; பிற ஐரோப்பியர்களுடன் வாணிகக் குழுவின் ஒப்புதலின்றி எவ்விதத்தொடர்பையும் வைத்துக்கொள்ளக்கூடாது என்பது துணைப்படைத் திட்டத்தின் விதியாகும். துணைப்படைத் திட்டத்தை கி.பி. 1798-இல் முதன் முதலாக ஐதராபாத்தை, யாண்ட நிசாம் மன்னர் ஏற்றுக்கொண்டார். அயோத்தி நவாபுடன் ஆங்கிலேயர் கி.பி. 1801-இல் ஓர் உடன்படிக்கையைச் செய்து கொண்டனர். கோரக்பூர், ரோகில்கண்டு, தோவாப் பகுதிகளைத் தருமாறு அயோத்தி நவாபை வற்புறுத்தினர்.

தஞ்சாவூர் அரசர் தமது ஆட்சிப் பொறுப்பை கி.பி. 1799-இல் வாணிகக் குழுவிடம் ஒப்படைத்து விட்டு உதவித்தொகையைப் பெற்றார். தஞ்சாவூர் ஆங்கிலேய அரசுடன் இணைக்கப்பட்டது. கருநாடக நவாபு, மைசூர் அரசர் திப்புசுல்தானுடன் கி.பி. 1801-இல் தொடர்புகொண்டிருந்ததால்கருநாடகம் ஆங்கிலேயராட்சிப் பகுதியுடன் சேர்த்துக் கொள்ளப்பட்டது. சூரத்தையாண்ட நவாபு ஓய்வு ஊதியம் கொடுக்கப்பெற்றார். சூரத்து ஆங்கிலேய அரசுடன் இணைத்துக்கொள்ளப்பட்டது.

மைசூர் அரசர் திப்பு சுல்தான் துணைப்படைத் திட்டத்தை விரும்பாததாலும், பிரெஞ்சு அரசன் நெப்போலியனுடன் தொடர்பு கொண்டிருந்ததாலும் ஆங்கிலேயர் திப்புசுல்தானுடன் கி.பி. 1799-இல் போர் தொடங்கினர். இது நான்காம் மைசூர்ப் போராகும். ஆங்கிலேயப் படைகளுடன் திப்பு சுல்தான் போர் செய்து சீரங்கப்பட்டணத்தில் இறந்தார். தென் கன்னடம், கோயம்புத்தூர், சீரங்கப்பட்டணம் ஆகியவை ஆங்கிலேயர் வசமாயின. பழைய இந்து அரச பரம்பரையைச் சேர்ந்த கிருட்டிணராச உடையார் மைசூர் அரசராக்கப் பட்டார். இவர் துணைப்படைத் திட்டத்தை ஏற்றுக் கொண்டார்.

பேசுவா இரண்டாம் பாசிராவ்பேசின் உடன்படிக்கையில் கி.பி. 1802 – இல் கையெழுத்திட்டுத் துணைப்படைத் திட்டத்தை ஏற்றுக்கொண்டார். தௌலத்ராவ் சிந்தியா, இரகோசி பான்சுலே ஆகியவர்கள், பேசுவா செய்துகொண்ட பேசின் உடன்படிக்கையை (Bassin) ஒத்துக் கொள்ளவில்லை. இவ்வுடன்படிக்கை மராட்டியர்களை வேதனைக்குள்ளாக்கியது. இதுவே இரண்டாம் மராட்டியப் போருக்குக் (கி.பி. 1802-04) காரணமாகும். சிந்தியா, பான்சுலே படைகளுடன் வெல்லெசுலி கடும்போர் செய்து அசேயி (Assaye) என்னுமிடத்தில் அவற்றைத் தோற்கடித்தார். சிந்தியா துணைப்படைத் திட்டத்தை ஏற்றுக்கொண்டார். ஒரிசாப் பகுதியை ஆங்கிலேயர் பெற்றனர். இவ்விருவரும் மீண்டும் ஆங்கிலேயருக்குத் தொல்லை கொடுத்தனர். பான்சுலே ஆங்கிலேயருடன் கி.பி 1804-இல் ஆரகான் என்னுமிடத்தில் போர் செய்து தோல்வியடைந்தார்; தியோகன் (Deogaon) உடன்படிக்கையைச் செய்து கொண்டு கட்டாக்கு என்னும் மாவட்டத்தை ஆங்கிலேயருக்குக் கொடுத்தார்; துணைப்படைத் திட்டத்தையும் ஏற்றுக் கொண்டார். சிந்தியா தன்னந்தனியாகப் போர் செய்தார். சிந்தியாவின் படைகளை இலாசுவாரி (Laswari) என்னுமிடத்தில் வெல்லெசுலி தோற்கடித்தார். அர்ச்சுன்கான் (Arjungaon) உடன்படிக்கையில் சிந்தியா கி.பி. 1804-இல் கையெழுத்திட்டார். அகமதுநகரம், புரோச்சு, கங்கை யமுனை ஆறுகளுக்கிடையேயுள்ள தோவாப் பகுதி ஆகியவற்றை ஆங்கிலேயருக்குக் கொடுத்தார். சசுவந்தராவ் ஓல்கார் ஆங்கிலேயப் படையுடன் போர் செய்து சில வெற்றிகளைப் பெற்றபோதிலும் இறுதியில் திகு (Dig) என்னுமிடத்

தில் தோல்வியடைந்தார். இந்தியாவில் மராட்டியர்களின் செல்வாக்கும் அதிகாரமும் குறையலாயின.

தலைமை ஆளுநராக மிண்டோ (கி.பி. 1807-13) ஆட்சி செய்த காலத்தில் இரஞ்சித் சிங்குடன் கி.பி. 1809-இல் அமிர்தசரசில் ஓர் உடன்படிக்கை செய்து கொள்ளப் பட்டது. சட்லெசு ஆறு, இரஞ்சித் சிங் நாட்டின் எல்லையையும் ஆங்கிலேய வாணிகக்குழு அரசின் எல்லையையும் பிரிக்கும் கோடாக அமைந்தது. சிசு சட்லெசுப் (Cissutlej) பகுதி ஆங்கிலேயருக்குக் கிடைத்தது. ஆங்கிலேய எல்லைப் புற ஆதிக்கம் யமுனை ஆற்றங்கரையிலிருந்து சட்லெசு ஆறுவரை பரவியது. சட்லெசு ஆற்றின் மேற்கில் இரஞ்சித்சிங்கு தம் ஆதிக்கத்தை நிலைநாட்டினார்.

தலைமை ஆளுநர் ஏசுடிங்சு பிரபுக்(கி.பி. 1813-23) காலத்தில் நேபாளப் போர் (கி.பி. 1814-18) நடைபெற்றது. நேபாள மக்களான கூர்க்கர்கள் பட்வால், சியோரசுப் பகுதிகளைக் கைப்பற்றியதால், ஏசுடிங்சு போர் தொடுத்தார். கூர்க்கத் தலைவர் அமிர்சிங்கு ஆங்கிலேயரிடம் சரணடைந்தார்; சாகவ்லி உடன்படிக்கையைச் செய்து கொண்டார். கார்வால், குமாண் மாநிலங்கள் சரணடைந்தன. ஆங்கிலேயர் சிம்லாவைப் பெற்றனர்.

துணைப்படைத் திட்டத்தை ஏற்க மறுத்த பேசுவா பாசிராவுடன் ஏசுடிங்கு செய்தபோர் மூன்றும் மராத்தியப் (கி.பி. 1817-18) போராகும். ஆங்கிலேயர் பேசுவா பாசிராவைக் கிர்க்கி என்னுமிடத்தில் தோற்கடித்தனர். பேசுவா கி.பி. 1818-இல் சரணடைந்தார். மராட்டியப் படைபலம் அழிக்கப்பட்டது.

தலைமை ஆளுநர் ஆம்கர்சுடு பிரபு (கி.பி.1823-28) ஆட்சிக் காலத்தில் முதல் பர்மியப் போர் (கி.பி. 1824-26) நடைபெற்றது. பர்மியர்கள் சிட்டகாங்கிற்கருகிலுள்ள சாபுரியைக் கி.பி. 1823 - இல் தாக்கினார்கள். ஆம்கர்சுடு பர்மியர்களைத் தோற்கடித்துப் பர்மிய அரசருடன் இயண்டபூ (கி.பி. 1826) உடன்படிக்கையைச் செய்து கொண்டார். அரகான், தென்னாசரீம் இடங்கள் வாணிகக்குழுவுக்குக் கிடைத்தன. அரசுரிமையினால் ஏற்பட்ட போட்டியின் காரணமாக ஆம்கர்சுடு பரத்பூரைக் கைப்பற்றினார்.

தலைமை ஆளுநர் ஆக்லண்டின் (கி.பி. 1836-42) ஆட்சிக் காலத்தில் முதல் ஆப்கானியப் போர் நடைபெற்றது. பெசாவரை இரஞ்சித்சிங்கிடமிருந்து மீட்டுத்தர இயலாதென்று ஆக்லண்டு கூறியதால், ஆப்கானிய அமீர் தோசுத்து முகமது உருசியர்களின் உதவியை நாடினார். தோசுத்து முகமதைப் பதவியினின்றும் நீக்கிச் சா சுசாவைப் பதவியில் அமர்த்த ஆக்லண்டு விரும்பினார். இப்போர் காரணமின்றி மேற்கொள்ளப்பட்டுப் பொறுப்பின்றி முடிக்கப்பட்டது. ஆங்கிலேயர் பல தொல்லைகள் அடைந்தனர். தலைமை ஆளுநர் எல்லன்பரோ (கி.பி. 1842-44) பதவியேற்றதும் முதல் ஆப்கானியப் போரை வெற்றியாக முடித்தார். இவர் சிந்துவைக் (கி.பி. 1843-இல் கைப்பற்றியது குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும்.

தலைமை ஆளுநர் ஆர்டிஞ்சு பிரபு (கி.பி. 1844-48) ஆட்சிக் காலத்தில் சீக்கிய இராணுவத்தை ஆங்கிலேயருக்கெதிராகப் போர்புரியும்படி இலல்சிங்கும், இராணி சிந்தன் என்பவரும் தூண்டிவிட்டனர். ஆங்கிலேயருக்குச் சொந்தமான சட்லசுப் பகுதி தாக்கப்பட்டது தான் முதலாம் சீக்கியப் போருக்குக் (கி.பி. 1845-46) காரணமாகும். முத்கி, பிரோசா ஆகிய இடங்களில் சீக்கியர்கள் தோல்வியடைந்தனர். சீக்கியர்கள் இலாகூர் உடன்படிக்கையை கி.பி. 1846-இல் செய்து கொண்டனர். தோவாப், சலந்தர், அசாரா ஆகிய இடங்கள் ஆங்கிலேயருக்குக் கிடைத்தன.

ஆங்கிலேய வாணிகக்குழுவின் ஆட்சியை விரிவுபடுத்தத் தலைமை ஆளுநர் தல்அவுசி (கி.பி. 1848-56) நாடிழக்கும் கொள்கையைப் பின்பற்றினார். அதாவது இந்திய அரசர்கள் குழந்தையில்லாமல் இருந்தால், வாணிகக்குழுவின் அனுமதியுடன் மகன்மை செய்து கொள்ளவேண்டும். வாணிகக்குழுவின் அனுமதியின்றி மகன்மை செய்து கொண்டால் அந்த அரசர்களின் ஆட்சிப்பகுதிகள் அவர்கள் இறந்தவுடன் வாணிகக்குழு ஆட்சியின்கீழ் இணைத்துக்கொள்ளப்படும் என்பதாகும். இக்கொள்கையின்படி கி.பி.1848-இல் சதாராவும், கி.பி. 1849-இல் செயபுரியும்,சாம்பல்புரியும், கி.பி. 1850-இல் பகத்தும், கி.பி. 1852-இல் உதயபுரியும், கி.பி. 1853-இல் சான்சியும் பேராரும், கி.பி. 1854-இல் நாகபுரியும் வாணிகக்குழுவின் ஆட்சிப் பகுதியுடன் இணைக்கப்பட்டன. அயோத்தியும் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

பர்மிய அரசு இயண்டபூ உடன்படிக்கையை மீறியதாலும், தல்அவுசியின் நிபந்தனைகளை ஏற்றுக் கொள்ளாததாலும் இரண்டாம் பர்மியப்போர் (கி.பி. 1852) நடைபெற்றது. ஆங்கிலப் படைத்தலைவர் கார்வின் இரங்கூன், புரோம், பெகு ஆகிய இடங்களைக் கைப்பற்றினார். பர்மாவின் கீழ்ப்பகுதி வாணிகக்குழுவின் ஆட்சியின்கீழ் இணைக்கப்பட்டது.

ஆங்கிலேயர் கேட்ட பொருளை மூல்தானின் ஆளுநர் மூல்ராசு தர மறுத்ததால், இரண்டாம் சீக்கியப் போர் (கி.பி. 1848-49) மூண்டது. ஆங்கிலப் படைத்தலைவர் ஆண்டர்சன் மூல்ராசைத் தோற்கடித்துக் கி.பி. 1848- இல் மூல்தான் கோட்டையைக் கைப்பற்றினார். ஏர்சிங்கின் தலைமையில் உள்ள சீக்

கியப் படையை ஆங்கிலேயர் தோற்கடித்தனர். சிலியன்வாலா என்னுமிடத்திலும் சீக்கியப்படை தோல்வியடைந்தது.

படைக்கலகத்திற்குப் பின் (கி.பி. 1858) இந்தியாவின் நிருவாகப் பொறுப்புகள், ஆங்கிலேயக் கிழக்கிந்திய வாணிகக் குழுவினிடமிருந்து, இங்கிலாந்தின் அரசி விக்டோரியாவின் நேரடியான அதிகாரத்தின் கீழ்க் கொண்டுவரப்பட்டன. கானிங்குப்பிரபு ஆங்கிலேய வாணிகக் குழுவின் இறுதித் தலைமை ஆளுநரும் இந்தியாவில் பிரிட்டிசு அரசின் முதல்அரசப் பேராளரும் ஆவர். அ.கே.

**ஆங்கில - சாக்சானிய வரலாற்றுக் குறிப்பேடு** ஆங்கில-சாக்சானியரைப் பற்றி அறிய உதவும் நூல். இது ஆங்கில மொழியில் எழுதப்பட்டதாகும். இந்நூல் கி.பி. 9-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தொகுக்கப்பட்டது. பிரிட்டனை உரோமானியர் வெற்றி கண்டது முதல் மகா ஆல்பிரடு முடிய உள்ள காலத்திற்கான வரலாற்று மூலங்களையும் தடயங்களையும் கொண்டு இவ்வரலாற்றுக் குறிப்பேடு உருவாக்கப்பட்டது. இதன் மூலப்படிவமும் இதன் படிகளும் அழிந்துவிட்டன. திருத்தப்பெற்ற நிலையில் ஏழுபடிகள் இன்றும் நிலைத்துள்ளன. இவை ஆங்கில வரலாற்றின் தொடக்கக் காலத்தைப் பற்றி அறிய உதவும் மதிப்பு மிக்க சான்றுகளாம். ஆங்கிலோ-சாக்சன் வரலாற்றுக் குறிப்பேடு (Anglo-Saxon Chronicle) ஆங்கில மொழியின் வளர்ச்சியையும் அறிய உதவுகிறது.

**ஆங்கிலம் கற்பித்தல்:** இந்தியாவில் முதலில் ஆங்கிலம் பள்ளிகளில் கற்பிக்கப்பட்டபொழுது மொழிபெயர்ப்பு முறையே (Translation Method) கையாளப்பட்டது. இம்முறையில் ஆங்கிலச் சொற்களையும் ஆங்கிலச் சொற்றொடர்களையும் தாய் மொழியில் மொழிபெயர்த்துக் கற்பித்தனர். இம்முறையில் காலம் வீணானதாலும், ஆங்கிலம், தமிழ் ஆகிய மொழிகளின் அடிப்படை வேற்றுமைகளால் இடர்ப்பாடுகள் உண்டானமையாலும், மொழியை நடைமுறையில் பயன்படுத்துவதற்கு இது உதவாததாலும் இம்முறை கைவிடப்பட்டது.

இதையடுத்து இலக்கண வழிப்போதனை முறைக்குக் (Grammatical Approach) கவனம் திரும்பியது. இம்முறையில் ஆங்கில மொழி இலக்கண விதிகளை விளக்கி, ஆங்கிலச் சொல், சொற்றொடர் அமைப்புகளைக் கற்பிக்க முற்பட்டனர். இலக்கண முறையின் மூலம் ஆங்கிலம் பயின்ற மாணவர்களுக்குத் தடையின்றி ஆங்கிலம் பேசவும் எழுதவும் இயலவில்லை. ஆகையால் நேர்முக முறை (Direct Method) வற்புறுத்தப்பட்டது. இம்முறையில் சிறிதும் தாய்மொழிக் கலப்பில்லாமல் ஆங்கிலச் சொற்களும் சொற்றொடர்களும் பொருள், சூழல் தொடர்பின் மூலம் நேர்முகமாகக் கற்பிக்கப்பட்டன.

நம் பள்ளிகளில் இப்பொழுது ஆங்கிலமொழி, அமைப்பியல் முறையைப் (Structural Approach) பின்பற்றிக் கற்பிக்கப்பட்டு வருகிறது. இம்முறை இரண்டாம் உலகப்போர்க் காலத்தில் உருவானதாகும். நேச நாட்டுப்படை வீரர்கள், ஐரோப்பாவின் பல பகுதிகளிலிருந்தும் கிழக்காசிய நாடுகள் பலவற்றிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்டு வந்ததால், அவர்கள் ஆங்கில மொழி அறிவு சிறிதும் இல்லாமல் இருந்தார்கள். அவர்கள் அமெரிக்கப் படைத்தலைவர் ஆங்கிலப் படைத்தலைவர் ஆகியோரின் கீழ்ப் பணியாற்ற வேண்டிய கட்டாயம் இருந்தது. பலநாட்டுப் படை வீரர்களுக்குப் பொதுவாகக் கட்டளைகள் இடவும் அவ்வகைளைப் படைவீரர்கள் புரிந்து கொண்டு செயற்படவும் தேவையான ஆங்கில மொழிச் சொற்களும் சொற்றொடர் அமைப்புகளும் இம்முறையில் கற்பிக்கப்பட்டன. இம்முறை மிக விரைவில் பயன் தந்ததால் அமெரிக்க ஐக்கிய நாட்டில் மிச்சிகனில் இருக்கும் ஆன் ஆர்பர் நகரில் (Ann Arbor) உள்ள மொழிக் கழகம் இதைப்பற்றி ஆராய்ச்சி செய்தது. இக்கழகத்தினர், மாணவர்கள், ஆசிரியர்கள், தொழிலாளர்கள், வணிகர்கள் மற்றும் பல துறையிலுள்ள ஆண் பெண்கள் ஆகியோரின் உரையாடல்களை அலசி ஆராய்ந்தனர். இதன் மூலம் பெரும்பாலோர் பயன்படுத்தும் சொற்றொடர்கள் ஒரு சில சொற்றொடர் அமைப்புகளுள் (Structures) அடங்கும் என்று தெரிந்து கொண்டனர்.

மேலும், மொழி இலக்கணத்தை எளிதாக்கலாம் எனவும் கண்டனர். இம்முறைகளைப் பின்பற்றி ஒரு சொற்றொடர் அமைப்பைக் கொண்டு (Sentence Structure) பல சொற்றொடர் அமைப்புகளை உண்டாக்கலாம் என்றும், ஆங்கிலம் செம்மையாகப் பேசவும் எழுதவும் ஒரு சில வாக்கிய அமைப்புகளும் குறிப்பிட்ட சொற்களும் போதும் என்றும் அறிந்தனர். இத்துறையில் தார்ண்டைக்கு (Thorndike) என்பாரின் எண்ணிக்கை அடிப்படையில், அடிக்கடி புழங்கப்படும் சொற்களின் பட்டியலும் (Word Frequency Lists), ஓக்டன் (Ogden) என்பாரின் அடிப்படை ஆங்கில மொழியும் (Basic English) குறிப்பிடத்தக்கவை. இம்முயற்சியை ஒட்டி இந்நாட்டிலும் ஆங்கிலச் சொற்களின் புழங்கல் பட்டியல்கள் (Word (Frequency Lists) உருவாக்கப்பட்டன.

ஆங்கில மொழியில் சொற்களின் அமைவிடம் (Word Order) மிகவும் இன்றியமையாததாகும். சொற்றொடர் அமைப்பில் ஒவ்வொரு சொல்லுக்கும் தனியிடமுண்டு. இதை மாற்றினால் அச்சொற்

றொடர் அமைப்பின் பொருளே மாறுபடும். எடுத்துக்காட்டாக, 'This is a book' என்ற சொற்றொடர் அமைப்பு 'இது ஒரு புத்தகம்' எனப் பொருள்படும். இதிலுள்ள சொற்களை மாற்றியமைத்த 'Is this a book' என்னும் சொற்றொடர் 'இது ஒரு புத்தகமா?' எனப் பொருள்படும். ஒரு சொற்றொடர் அமைப்பு சொற்களின் மாற்றத்தினால் கேள்வியாக உருப்பெறுகிறது. தமிழைப் பொறுத்தவரை சொற்றொடர்களில், சொற்களின் அமைவிடம் முதன்மையானதன்று. தமிழில் பெயர்களும் வினைகளும் உரிய பின்னொட்டுகளைக் கொண்டு பொருள் மாறி நிற்பதால், இத்தொகுதிகளை இடம் மாற்றினாலும் வாக்கியத்தின் பொருள் மாறுவதில்லை. ஆங்கிலம் இத்தகைய சொல்திரிவு மிகுதியாக இல்லாத மொழியாகும். ஆங்கிலத்தில் சுட்டு, காலம், எண், வேற்றுமை ஆகியவற்றைக் குறிப்பதற்குத் தனித்தனிச் சொற்கள் உள்ளன. ஆனால், தமிழில், ஒரு சொற்றொடரின் பெயரும் வினையும் மாற்றம் பெற்று மேற்கூறிய அனைத்தையும் விளக்கிக் காட்டும். 'படித்துக் கொண்டிருக்கிறான்' என்ற சொற்றொடரில் 'கொண்டிருக்கிறான்' என்ற சொல் காலம், பால், இடம், எண் ஆகிய அனைத்தையும் காட்டும். மேலும் 'Rama killed a snake' என்ற ஆங்கிலச் சொற்றொடரில் சொற்களை மாற்றி 'A snake killed Rama' என்று அமைத்தால் பொருள்மாறுபடும். தமிழில் 'இராமன் பாம்பைக் கொன்றான்' என்ற சொற்றொடரில் சொற்களை மாற்றியமைத்துப் 'பாம்பை இராமன் கொன்றான்' என்று படித்தாலும் பொருள் மாறுபடாது.

ஆங்கில மொழியிலுள்ள சொற்கள் இரண்டு வகைப்படும். பேனா, மாணவன், மேசை, வீடு, உணவு, போன்ற பொருள் குறி சொற்கள் ஒரு வகை. இவை ஆங்கிலத்தில் 'Content Words' எனப்படும். இத்தகைய சொற்கள் அவற்றைக் குறிக்கும் பொருள்களை நம் கண்முன் தோற்றுவிக்கின்றன. மற்றவை அமைப்புச் சொற்களாகும் (Structural Words). இவை எப்பொருளையும் குறிக்காமல் ஒரு பொருளுக்கும் மற்றொரு பொருளுக்கும் உள்ள தொடர்பை வெளிப்படுத்தும். The book is on the table என்ற சொற்றொடரில், நூலுக்கும் (Book) மேசைக்கும் (Table) உள்ள தொடர்பை 'மேல்' (on) என்ற அமைப்புச் சொல் விளக்குகிறது. அமைப்புச் சொற்கள் ஆங்கிலச் சொற்றொடர்களின் பொருளை வரையறை செய்கின்றன. எடுத்துக்காட்டாக 'Sugar Bag' என்பது வெற்றுச் சர்க்கரைச் சாக்கையும், 'Bag of Sugar' என்பது ஒரு சாக்கில் உள்ள சர்க்கரையையும் குறிக்கும். ஆங்கில மொழியில் அமைப்புச் சொற்களைப் பயன்படுத்தும் முறையில் சில வேளை குழப்பம் ஏற்படும். இதைத் தவறில்லாத சொற்றொடர்களைப் பழகுவதன் மூலம் தீர்க்கலாம். ஆகவே, ஆங்கிலச் சொற்றொடர் அமைப்பியல் முறையில் (Structural Approach) மொழிப் பழக்கமும் மொழிப் பயிற்சியும் மிகச் சிறந்தனவாகும். அதேபோல் இலக்கண விதிகளைத் தெரிந்து கொள்வதைவிடச் சொற்களின் அமைவிடங்களைப் பற்றிய பயிற்சியும் சொற்றொடர் அமைப்புப்பற்றிய அறிவும் இன்றியமையாதவை.

ஆங்கில மொழி கற்பித்தலில் சொற்றொடர் அமைப்பு விளக்கமும் சொற்களின் ஆட்சியும் நேரடியான வாய்மொழிப் பழக்கமும், இடையறாத மொழிப் பயிற்சியும் இன்றியமையாதவையாகும். ஆனால், இம்முறையில் மொழிப் பழக்கமும் (Habit) மொழிப்பயிற்சியும் (Drill) செயற்கையான சூழ்நிலையில் ஏற்படுவதாகவும், தொடர்ந்த மொழிப் பயிற்சி (Language Drill) எந்திரத் தன்மை கொண்டதாகவும் உணரப்பட்டதால், மற்றுமொரு புதிய கற்பித்தல் முறைக்கு இது வழிகோலியது.

அண்மைக் காலத்தில் தோற்றுவிக்கப்பட்ட தொடர்பு வழிக் கற்பித்தல்முறை (Communicational Approach) இன்னும் நமது நாட்டில் சோதனை நிலையிலேயே இருக்கிறது. இதைத் தோற்றுவித்தவர் விடோசன் (H. G. Widdouson) என்பவராவர். இம்முறையில் ஆங்கில மொழியின் சொற்றொடர் அமைப்புகளைவிடச் சொற்றொடர் அமைப்புகளின் புழக்கம் (Usage) அல்லது ஆங்கிலத்தை இயல்பான சூழ்நிலையில் நேரிடையாகப் பயன்படுத்துவது மிகத் தேவையானதாகக் கருதப்படுகிறது. ஏனெனில் ஒரு சொற்றொடரின் முழுப்பொருளும் அது எந்த நேரத்தில் எந்தச் சூழ்நிலையில் வெளிப்படுகிறது என்பதையே பொறுத்துள்ளது. சொற்றொடரின் உண்மையான முழுப்பொருளும் அது பேசப்படும் முறை, வேகம், அது வெளிப்படும் சூழ்நிலையின் தன்மை ஆகியவற்றைப் பொறுத்திருப்பதால், சொற்றொடர் அமைப்புகளை எந்திர முறையில், உண்மைக்குப் புறம்பான சூழ்நிலையில் சொல்லிக்கொடுப்பது பொருந்தாது என்பது எச். சி. விடோசன் என்பவர் கருத்தாகும். மொழி பிறருடன் தொடர்பு கொள்வதற்கே என்ற அடிப்படையில், ஆசிரியர் ஏதேனும் ஒரு செய்கையை அல்லது தலைப்பைத் தழுவி மாணவர்களை ஆங்கிலத்தில் கலந்துரையாடும்படி செய்யவேண்டும். இதனால், அந்தச் சூழ்நிலைக்கேற்ப மாணவர்கள் தங்கள் எண்ணங்களை இலக்கணக் குறுக்கீடு இல்லாமல், நேரிடையாக ஆசிரியர்கள் கற்பிக்கும் மொழியிலேயே வெளிப்படுத்துவர். இதில் மாணவர்கள் கலந்துரையாடும் போது முதலில் தவறுகள் செய்தாலும் பிறகு தாமா

கவே மொழிப் புழக்கத்தினால் தவறுகளைத் திருத்திக்கொள்வர். இம்முறையில் ஆசிரியர்களின் மொழித் தூண்டலும் மாணவர்களின் செயல் ஈடுபாடும் மிக இன்றியமையாதனவாகும். இம்மொழிவழிக் கற்பித்தலில் புதிர்களை மையமாகக் கொண்ட பாடத்திட்டங்களும், செயல்களை மையமாகக் கொண்ட பாடத்திட்டங்களும் சிறப்பான இடம் பெறுகின்றன. இவை மாணவர்களின் கவனத்தைப் பெரிதும் கவர்கின்றன. மேலும் மாணவரின் சிந்தனையைத் தூண்டி ஆங்கிலத்திலேயே எண்ணங்களை வெளிப்படுத்த இம்முறை உதவுகிறது. நமது நாட்டிலுள்ள மண்டல ஆங்கில நிறுவனங்கள் (Regional Institute of English) இம்முறையைப் பற்றிய ஆராய்ச்சியில் இப்போது ஈடுபட்டுள்ளன.

மேலும் ஆங்கிலம், பலவகைப்பாடத் திட்டங்களின் அடிப்படையில் கற்பிக்கப்பட்டு வருகின்றது. இதையொட்டிச் சொற்றொடர் அமைப்புப் பாடத்திட்டம் (Structural Syllabus) வழக்காடுதற்கேற்ற தலைப்புகளைக் கொண்ட பாடத்திட்டம் (Topical Syllabus), மொழித்திறமைகளைக் கொண்ட பாடத்திட்டம் (Skill Based Syllabus), எண்ணங்களை அடிப்படையாகக் கொண்ட பாடத்திட்டம் (Notional Syllabus) எனப் பலவகைப் பாடத்திட்டங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. நம் நாட்டில் எல்லாப் பள்ளிகளிலும் சொற்றொடர் அமைப்புகளை அடிப்படையாகக் கொண்ட பாடத்திட்டம் (Structural Syllabus) இப்போது நடைமுறையில் உள்ளது. இதன்படி ஆங்கில மொழிப் பாடம் கற்பிக்கப்படுவதற்கு முன்பு அந்தப் பாடத்தில் வரும் சொற்றொடர் அமைப்பையும், புதிய சொற்களையும் முதலில் அறிமுகப்படுத்தி, தொடர்ந்த மொழிப்பயிற்சி மூலம் (Language Drill) அவைகளைக் மனத்தில் நிலை நிறுத்துகிறார்கள்.

இந்தியக் கல்வி ஆய்வுக்குழு அறிக்கையின்படி ஆங்கிலம் ஒரு நூலக மொழியாகக் கருதப்படுகிறது. இதனால், மாணவர்களுக்கு ஆங்கில மொழி நூல்களைப் படித்துப் புரிந்துகொள்ளவும் குறிப்புகள் எடுக்கவும் பயிற்சி கொடுத்தலில் மிக்க கவனம் செலுத்தப்படுகிறது.

ஜ. இரா.

துணை நூல்கள்:

French, F. G., The Teaching of English Abroad, Parts I, II & III-Oxford University Press, 1955.

Widdouson, Teaching English as Communication, Oxford University Press, 1978.

**ஆங்கில மொழி** வரலாறு, அரசியல், பொருளியல் ஆகியவற்றின் தொடர்புடைய காரணங்களால், இன்று உலகில் பெரும்பான்மையோரால் பேசப்படும் மொழியாக உள்ளது. எளிதில் மற்ற மொழிகளிலிருந்து சொற்களைக் கடன் வாங்கித் தனதாக்கிக் கொள்ளும் திறமை, சிக்கலில்லாத முறையில் சொற்கள் முடியும் அல்லது உருவமாறும் தன்மை, நிலையான வாக்கிய அமைப்பு, எக்கருத்தையும் சுற்றி வளைத்துச் கூறும் அழகு ஆகியவை உலக மொழியான ஆங்கிலத்தின் சிறப்புக் கூறுகள் எனலாம். இதனைப் பிழையுடன் பேசுவது எளிது; பிழையில்லாமல் பயன்படுத்துவது கடினம்.

ஆங்கில மொழி பழைய ஆங்கிலம் (Old English), இடைக்கால ஆங்கிலம் (Middle English), இற்றைய ஆங்கிலம் (Modern English) என்று படிப்படியாக வளர்ந்து செழிப்படைந்திருக்கிறது. பழைய ஆங்கிலம் கி.பி. 1150 வரையிலும், இடைக்கால ஆங்கிலம் கி.பி. 1150-இலிருந்து 1500 வரையிலும் வழக்கிலிருந்தன. இன்று வழக்கிலிருக்கும் ஆங்கிலம் கி.பி. 1500-க்குப் பின்னர் வளர்ந்ததுதான். இம்மூன்று நிலைகளிலும் இது இந்தோ - ஐரோப்பிய மொழிக் குடும்பத்தைச் சார்ந்தது. இக்குடும்பத்தைச் சார்ந்த மொழிகள் ஐரோப்பாவிலும் இந்திய நாட்டில் விந்தியமலைக்கு வடக்கேயும் பேசப்படும் ஆரிய மொழிகளாகும். இக்குடும்பத்தின் உட்பிரிவுகளுள் ஒன்றான செருமானிய (Germanic) த்திலிருந்துதான் பழைய ஆங்கிலம் தோன்றியது. பழைய ஆங்கிலத்தை ஆங்கிலோ-சாக்சான் (Anglo-Saxon) என்று கூறுவாருமுளர்.

பிரிட்டன் (Britain) என்ற பழைய பெயருடைய ஆங்கில நாட்டில் தொன்றுதொட்டுப் பேசப்பட்டு வந்த மொழி ஆங்கிலமன்று. இம்மொழி கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில்தான் வழக்கத்திற்கு வந்தது. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மனிதர்கள் அந்நாட்டில் வாழ்ந்திருந்தாலும், அங்கு முதன் முதலில் பேசப்பட்ட மொழி இந்தோ - ஐரோப்பியக் குடும்பத்தைச் சார்ந்த கெல்ட்டு (Celt) மொழியாகும். அதைப் பேசியவர்கள் கெல்ட்டுகள் (Celts) எனப்பட்டனர். இங்கிலாந்தின் மேற்குப் பகுதியான வேல்சு மாவட்டத்தில் வாழும் கெல்ட்டுகளின் மரபினரால் கெல்ட்டு மொழி இன்றும் பயன்படுத்தப்படுகிறது.

ஐரோப்பாவின் வடபகுதியில் கி.பி. 449-ஆம் ஆண்டிலிருந்து வாழ்ந்த டியூடானிய இனத்தைச் சார்ந்த சூட்டுகள் (Jutes), சாக்சானியர்கள் (Saxons), ஆங்கிலேயர்கள் (Angles) ஆகிய மூன்று பிரிவினர் இங்கிலாந்தில் ஒருவர் பின் ஒருவராகப் படையெடுப்பின் மூலம் குடியேறினார்கள். அவர்களுடைய மொழிதான் நான்கு வட்டாரப் பிரிவுகளில் சில வேற்றுமை

களுடன் பேசப்பட்ட பழைய ஆங்கிலம். நமக்குத் தெரிந்த ஆங்கில எழுத்துகளையும் தெரியாத பல எழுத்துகளையும் உடைய அம்மொழியை இன்று எளிதாகப் புரிந்து கொள்ள முடியாது. எழுத்து முறையிலும் உச்சரிப்பிலும் சொல் தொகுதியிலும் இலக்கண விதிகளிலும் அம்மொழி இன்று வழங்கும் ஆங்கில மொழியிலிருந்து வேறுபட்டது. பழைய ஆங்கிலத்திலுள்ள சொற்களில் 85 விழுக்காடு இன்று வழக்கொழிந்த சொற்களாகும். அவை தியூடானிய மொழி வகையைச் சேர்ந்தவை. எஞ்சியிருக்கும் man (மனிதன்), hus (வீடு), god (நன்மை), feohtan (போரிடு) போன்ற சொற்கள் இன்று வழக்கிலுள்ள ஆங்கிலச் சொற்களை நமக்கு நினைவூட்டும்.

பழைய ஆங்கிலத்திற்கும் இன்றைய ஆங்கிலத்திற்கும் திரிவு (Inflection) முறையில் குறிப்பிடத்தக்க வேறுபாடு உண்டு. ஆங்கிலம் அளவற்ற முன்னுருபுகளையும் (Prepositions) துணை வினைகளையும் (Auxiliary Verbs) பயன்படுத்துவது மட்டுமன்றி, பொருள் விளக்கத்திற்குச் சொல்லமைப்பை (Word order) நம்பியுமிருக்கிறது. ஆனால்,வடமொழி, தமிழ், இலத்தீன், செருமானியம் போன்று, பழைய ஆங்கிலம் திரிவுகளின் மூலம் பொருள் விளக்கம் செய்கிறது. பெயர்ச் சொல்லிலும் அடைச்சொல்லிலும் ஒருமையில் நான்கு வேற்றுமைகளையும், பன்மையில் நான்கு வேற்றுமைகளையும் உடையது. இது அம்மொழிக்கும் செருமானிய மொழிக் குழுவுக்குமுள்ள காரண காரியத் தொடர்பின் விளைவு. மேலும்,அம்மொழியில் பெயர்ச் சொற்களுக்கு இயற்கைப் பால் பகுப்பு (Natural gender) இல்லை. செருமானிய மொழியை ஒத்து stan (கல்), mona (சந்திரன்) ஆகிய சொற்கள் ஆண்பாலைக் குறிக்கும். ஆனால், 'sunne' (சூரியன்) பெண்பாலைக் குறிக்கும். பெயர்ச்சொல், அடைச்சொல்லைப் போன்று சிறப்புச் சுட்டும் (Definite article) திரிவுகளை உடையது.

இங்கிலாந்தின் அரசியல், பண்பாட்டு வரலாற்றிலு மட்டுமன்றி, ஆங்கில மொழியின் வளர்ச்சியிலும் கி.பி. 1066-ஆம் ஆண்டு குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இவ்வாண்டில் இறந்த ஆங்கில மன்னனின் நெருங்கிய உறவினனும், பிரெஞ்சு நாட்டினனுமான நார்மண்டிக் கோமகன் இங்கிலாந்து அரசைக் கைப்பற்றினான். அதைத் தொடர்ந்து ஏற்பட்ட பிரெஞ்சுப் பண்பாட்டுத் தாக்கத்தினால் ஆங்கில மொழியில் பெருத்த மாற்றங்கள் பல நிலைகளிலும் தோன்ற, அது இன்று பழக்கத்திலிருக்கும் ஆங்கிலத்தை ஒத்து வளர்ந்தது. இத்தகைய பெரும் மாற்றங்கள் ஆங்கில மொழி வளர்ச்சியின் இடைக்காலத்திற்கு (கி.பி. 1150-1500) முன்பும் பின்பும் நிகழவில்லை.

நார்மானிய கைப்பற்றுதலுக்குப் பிறகு, ஆங்கில இலக்கண அமைப்பும் சொற்றொகுதியும் மிகுதியான மாறுதலுக்குள்ளாயின. இலக்கண நோக்கில், ஆங்கிலம் திரிவு சார்ந்த மொழியிலிருந்து பாகுபாட்டு (Analytic) மொழியாக மாறியது. திரிவுகளை இழந்து, முன்னுருபுகளையும் துணை வினைகளையும் அம் மொழி பரவலாகப் பயன்படுத்தத் தொடங்கியதுமன்றி, வாக்கியச் சொல்லமைப்பில் எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் என்னும் நிலையான அமைப்பைப் பின்பற்றவும் செய்தது. இடைக்கால ஆங்கிலம் திரிவுகளைப் படிப்படியாக இழந்ததின் விளைவாக, இலக்கணப் பால் பகுப்பு முறை மறைந்து, இயற்கைப் பால் பகுப்பு முறை வழக்கத்திற்கு வந்தது. இதை ஒரு திடீர் மாற்றமென்று சொல்வதிற்கில்லை. பழைய ஆங்கிலத்தில் இயற்கைப் பால் பகுப்பு முறையிலேயே சிறப்புச் சுட்டுப் பெயர்கள் (Personal Pronouns) பயன்படுத்தப்பட்டன. இப் பால் பகுப்பு முறை நாளடைவில் வழக்கொழிந்தபொழுது, பெயர்ச் சொற்களின் பால் பகுப்பு, ஆண் – பெண் வேற்றுமை அடிப்படையில் செய்யப்பட்டது.

ஆங்கில மொழியின் வளர்ச்சியை, இலக்கணம், புதிய சொற்கள், மொழிக்கடன் ஆகிய மூன்று கோணங்களில் ஆராயலாம். பழைய ஆங்கில இலக்கணத்திற்கும் இன்றைய ஆங்கில இலக்கணத்திற்கும் திட்டவட்டமான வேறுபாடுகள் இருந்தாலும், பின்னது முன்னதிலிருந்து உண்டானது. திரிவுகள் போன்ற பல உறுப்புகளைக் கழித்தும், எஞ்சியுள்ள பல உறுப்புகளுக்கு இடையே உள்ள தொடர்புகளை விளக்கப் புதிய இலக்கண வரையறைகளை உண்டாக்கியும் மொழி வளர்ந்தது.

காலப்போக்கில் திரிவுகளை இழப்பது ஆங்கிலத்திற்கு மட்டுமன்றி, வழக்கொழியாத மற்ற மொழிகளுக்கும் உள்ள பொதுவான மரபேயாகும். சான்றாக, இன்று வழக்கிலிருக்கும் செருமானிய மொழி பல திரிவுகளையுடையதென்றாலும், ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் பேசப்பட்ட அதே மொழியை விடத் திரிவுகளைக் குறைவாக உடையதாகும். மக்களிடம் குடிகொண்டுள்ள மறதியும், அவர்கள் மொழியைப் பயன்படுத்தும்போது அதில் இசைவை (Consistency) நாடுவதும் காலம் மாற மாற இணைச் சொற்களையும் திரிவுகளையும் விட்டுவிடத் தூண்டுகின்றன. இக் கூற்று ஆங்கிலத்திற்கும் பொருந்தும். ஆங்கில இலக்கண அமைப்பு, காலப்போக்கில் எளிதாயிற்று. சொற்களை ஒலிப்பதில் ஏற்பட்ட மாறுதலாலும் பலதரப்பட்ட மக்கள் மொழியைப் பேசியதாலும் பேச்சு வழக்கில் மக்கள் தெளிவை நாடியதாலும், இலக்கண உறுப்புகளாகப் பதிலிடு பெயர்கள் (Pronouns), ஆறாம் வேற்றுமைத் திரிவு

போன்றவற்றில் இயற்கையாக மாறுதல்கள் ஏற்பட்டன. இன்னொரு இன்றியமையா மாற்றம், பெயர்ச்சொல் தொடர்களில் பெயர்ச்சொல்லையே அடைமொழியாகப் பயன்படுத்துதல் ஆகும்.

புதுப் புதுச் சொற்களின் தோற்றத்தாலும் ஆங்கில மொழி விரைவாக வளர்ந்தது. இத்தகைய சொற்பெருக்கத்திற்கு மூன்று வழிகள் கையாளப் பட்டன. அவை ஏற்கனவே பழக்கத்திலுள்ள இரண்டு சொற்களைச் சேர்த்துக் கூட்டுச் சொற்களை (Compounds) உண்டாக்குதல்; ஒரு பழைய சொல்லை முன் ஒட்டு (Prefix) அல்லது பின் ஒட்டு (Suffix) வழியாகப் புதிய சொல்லாக மாற்றுதல்; மொழியிலேயே இல்லாத ஒரு சொல்லை உணர்ச்சி உந்துதலினாலேயோ அல்லது ஒரு ஒலியைப் பின்பற்றுதலினாலேயோ உண்டாக்குதல் ஆகும். பெயர்ச்சொல்லைப் பெயர்ச்சொல்லுடன் சேர்த்து tree-frog, house-boat போன்ற சொற்களை மொழி பேசுபவர்கள் உண்டாக்கியதன்றி, பெயரடையையும் பெயர்ச்சொல்லையும் சேர்த்து black – bird, hot – bed போன்ற கூட்டுச் சொற்களையும் உண்டாக்கினர். பெயர்ச் சொற்களைக் கொண்டோ அல்லது பெயரடைகளைக் கொண்டோ breakfast, spend-thrift போன்ற கூட்டுச் சொற்கள் கி.பி. 15-ஆம் நூற்றாண்டிலிருந்து உருவாக்கப்பட்டன. இத்தகைய சொற்கள் ஒவ்வொன்றிலும் முதற்கூறு ஒரு வினைச்சொல் தண்டாகவும், இரண்டாம் கூறு ஒரு செயலைக் குறிக்கும் பெயர்ச் சொல்லாகவும் இருப்பதைக் காணலாம்.

பல வினைச்சொற்கள் பழைய ஆங்கிலச் சொற்களைத் தக்கவைத்துக் கொண்டமையால் உருவாக்கப் பட்டன. (எ-டு) talu > tale; salu > sale. இலத்தீன் அல்லது பிரெஞ்சு மொழியிலுள்ள பழைய சொற்களோடு அம்மொழிகளின் பின்னிணைப்புச் சொற்களைச் சேர்த்துப் புதிய ஆங்கிலச் சொற்கள் படைக்கப் பட்டன. (எ-டு) derivation. condemnation. இலத்தீன் முன்னொட்டுச் சொல்லான re ஐக் கொண்டு உருவாக்கப்பட்ட செயல் சுட்டு வினைச்சொற்களும் பெயர்ச் சொற்களும், un- முன்னொட்டுச் சொல்லின் வழியாகத் தோற்றுவிக்கப்பட்ட பெயரடைகளும் அவ்வற்றவை.

சொற்பொருளோசை இசைவணி (Onomatopoeia) வாயிலாக உண்டாக்கப்பட்ட எதிரொலிச் சொற்கள், அதாவது, சொல்லின் பொருளை அதன் ஒலியால் சுட்டிக்காட்டும் சொற்கள், ஆங்கிலத்தில் மிகுதியாகக் காணப்படுகின்றன. இதற்கு bang, hum, mumble போன்ற சொற்களை எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

ஆங்கிலத்தில் வேறு சில மாற்றங்களும் ஏற்பட்டன. எடுத்துக்காட்டாகச் சொற்களின் பொருள் மாற்றம் வாயிலாகவும் ஒரு மொழி வளர்ச்சியடைகிறது என்பதனைக் குறிப்பிடலாம். இன்று வழக்கிலுள்ள 'வெள்ளம்' என்னும் சொல் பண்டைக்காலத் தமிழிலும் இன்றைய மலையாளத்திலும் 'தண்ணீர்' என்று பொருள்படும். இதைப்போன்று பல சொற்கள் ஆங்கிலத்திலுள்ளன. காலப்போக்கில் பொருள் மாற்றத்தின் விளைவு,ஒரே சொல் முரண்பட்ட இரண்டு அல்லது மூன்று பொருள்களைக் கொடுப்பது ஆகும். Fast என்ற சொல்லிற்கு 'அசையாத', 'விரைவான' என்ற இரு வேறுபொருள்கள் உண்டு. Fine என்னும் சொல் குறைந்தது நான்கு பொருள்களையாவது தன்னுள்ளடக்கியது. முதிர்ச்சியடைந்த மொழிகளுக்கெல்லாம் பொருள் மயக்கம் ஒரு சீரிய பண்பாகக் கருதப்படும்.

உலகத்திலுள்ள மொழிகளெல்லாவற்றையும் விட ஆங்கிலந்தான் மிகுதியான சொற்களை உடையது. ஆயிரத்து முந்நூறாண்டுக் கால வளர்ச்சியில் அது பல மொழிகளிலிருந்தும் பலவகையான சொற்களை மிகுதியாகக் கடன் வாங்கியிருக்கிறது. அதே காலத்தில் தக்கவைத்துக் கொண்ட ஆங்கிலச் சொற்கள் இன்னும் பழக்கத்திலிருக்கின்றன. அம்மொழியின் வளைந்து கொடுக்கும் தன்மையினாலும், நெகிழ்வுத் திறனாலும், கடன் வாங்கப்பட்ட சொற்கள் மொழியின் சொற்றொகுதியில் இயற்கையான முறையில் எளிதில் இடம்பெற்று விட்டன. இலத்தீன் பிரெஞ்சு மொழிகளிலிருந்து தமிழ் வரை பல மொழிகளும் ஆங்கிலத்திற்குச் சொற்களை வழங்கியிருக்கின்றன. Catamaran (கட்டமரம்), Mulligatawny (மிளகுத் தண்ணீர்) போன்ற சொற்கள் தமிழ் மொழியிலிருந்து உருமாறிச் சென்றனவாகும். குறிப்பாக, அறிவியல், பண்பாடு, பொருளியல் துறைகளில் ஆங்கிலம் இன்னும் சொற்களைக் கடன் வாங்கிக் கொண்டிருப்பதால், அதன் சொல்வளம் பெருகிக் கொண்டிருக்கிறது என்பது உண்மை.

இவ்வளர்ச்சியின் முதல் நிலை ஏசுநாதர் பிறப்பதற்கு முன்பும், கி.பி. ஆறாம் ஏழாம் நூற்றாண்டுகள் வரையிலும் உரோமானியர் கிறித்தவ சமயத்தை இங்கிலாந்தில் நுழைத்த காலமுமாகும். அப்பொழுது அச்சமயமும், சமயச் சடங்குகள் தொடர்பான Bishop, Candle, Priest போன்ற சொற்களும் இலத்தீன் மொழியைத் தழுவிப் பயன்படுத்தப் பட்டன.

உரோமானியர்களுக்குக் கடமைப்பட்டிருப்பது போன்றே, இங்கிலாந்தை ஒரு காலத்தில் ஆண்ட இசுகாண்டிநேவியக் குடும்பத்தைச் சேர்ந்த தேனியர்களுக்கும் (Danes), வடக்கிலுள்ளவர்களுக்கும் (North men) ஆங்கில மொழி கடமைப் பட்டிருக்கிறது.

**Law, Outlaw, Riding** போன்றவை தேனிசுச் **(Danish)** சொற்கள். **Cross** (சிலுவை) இலத்தீன் மொழியிலிருந்து பழைய நார்சு **(Old Norse)** மொழிக்குச் சென்று, பழைய ஐரிசு **(Old Irish)** மொழி வழியாகப் பழைய ஆங்கிலத்தில் புகுந்து, இன்று எல்லோராலும் பரவலாகப் பயன் படுத்தப்படும் சொற்களுள் ஒன்றாகத் திகழ்கிறது.

இங்கிலாந்து கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் நார்மானியர் வயப்பட்டபொழுது, பிரெஞ்சு மொழியிலிருந்து மிகப்பல சொற்கள், குறிப்பாக அன்றாடப் பேச்சு வழக்கிலுள்ள சொற்கள், ஆங்கிலத்தில் கலந்து விட்டன. இங்கிலாந்தை ஆண்ட பிரெஞ்சு அரச குடும்பத்தைப் பொறுத்து, இத்தகைய சொற்கள் அந்நாட்டின் வடக்கு வட்டாரத்திலிருந்தோ நடு வட்டாரத்திலிருந்தோ வந்தன. இதன் விளைவு சுவையானது. ஒரே சொல் இரண்டு உருவங்களில் கடன் வாங்கப்பட்டது. **carch-chase, warden-guardian.** சட்டம், அரசு, சொத்து, போர், பெருமக்கள், குடி, உணவு, குடும்பம் ஆகியவற்றோடு தொடர்புடைய சொற்கள் கி.பி. 13-ஆம் நூற்றாண்டிற்குள் ஆங்கில மொழியிற் கலந்து அதனை வளம் மிக்கதாகச் செய்தன. அத்தகைய சொற்களுள் சில; **Court, Parliament, Rent, Battle, Duke, Mutton, Uncle.**

ஆங்கிலத்தில் கலந்துவிட்ட பிரெஞ்சு மொழிச் சொற்கள் பல இலத்தீனிலிருந்து உருப்பெற்றவையாகையால், ஆங்கிலம் இலத்தீனிற்கு நேர் முகமாகவும் மறைமுகமாகவும் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறது. இலத்தீனிலிருந்து இன்னும் சொற்கள் வந்து கொண்டிருக்கின்றன. இதற்கு ஒரு காரணம் இலக்கிய வல்லுநர்களில் பலர் நேற்றுவரை அம்மொழியை நன்கு கற்றறிந்திருந்ததுதான். ஆங்கிலத்தில் ஒரு புதுச் சொல்லைப் படைப்பதைவிட ஒரு இலத்தீன் மொழிச் சொல்லிற்கு ஆங்கில உருக்கொடுப்பதோ இலத்தீன் மொழிக் கூறுகளிலிருந்து ஒரு ஆங்கிலக் கூட்டுச் சொல்லை அமைப்பதோ எளிது. இலத்தீன் சொல்லை ஆங்கில மயமாக்குவதனை ஒட்டுச் சேர்க்கையின் வழியாகச் செய்யலாம். அதற்கு **Continuum, Continuous** போன்ற சொற்கள் எடுத்துக்காட்டுகளாகும்.

மறைந்து கிடந்த பழைய கிரேக்க நூல்கள் கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் கண்டுபிடிக்கப்பட்டபொழுது, ஆங்கில மொழி வளம் மேலும் பெருகுவதற்கு மற்றொரு வாயில் கிடைத்தது. அறிவியல், தத்துவம் தொடர்புடைய கலைச்சொற்கள் பல கி.பி. 17-ஆம் நூற்றாண்டு வரை கிரேக்க மொழியிலிருந்து கடன் வாங்கப்பட்டன. அதற்குப் பின்பு இன்று வரை அறிவியல் வளர்ந்து கொண்டு வர, பல புதுச்சொற்கள் ஆங்கிலத்தில் கலந்து கொண்டே இருக்கின்றன: **Stereotype, Telephone, Cinematograph** போன்றவை எடுத்துக்காட்டுகளாகும்.

சொல் வளத்தையும் மொழி வளத்தையும் பெருக்கியதில் சில எழுத்தாளர்களுக்குப் பெரும் பங்குண்டு. அவர்கள் புதிய சொற்களையும் புதிய சொற்றொடர்களையும் கற்பனை நயத்துடன் படைத்தார்கள். அவர்களுள் முதன்மையானவர் தலைசிறந்த இலக்கியப் படைப்பாளரான சேக்சுபியர் ஆவார். அவர் பேச்சு நடை வழக்கங்களையும் எழுத்து நடை வழக்கங்களையும் தமக்கே உரிய நடையில் கேலி செய்வதன் வாயிலாகவும், குழு வழக்குகளைத் தழுவுதல் வாயிலாகவும் புதுமை முறைகளைக் கையாண்டும், வழக்கொழிந்த சொற்களைப் புதுப்பித்தும் தம் தாய்மொழியின் சொற்றொகுதியைப் பெருக்கினார். தம் நாடகங்களில் அவர் 30,000-ற்கும் மேற்பட்ட ஆங்கிலச் சொற்களைப் பயன்படுத்தியிருக்கிறார் என்பது உண்மை.

பழைய மொழிகளில் புலமைமிக்கவரான மில்ட்டன் தாய்மொழிப் பற்றுடையவர்; கிரேக்க, இலத்தீன் மொழிக் காப்பியங்களுக்கு ஈடாக வீறார்ந்த நடையில் கவிதை எழுதியவர். இவர் இலத்தீன் மொழியமைப்பைப் பின்பற்றி, ஆங்கிலச் சொல்லமைப்பையும் கட்டமைப்பையும் படைத்தவர். **'A tower of strength', 'Full of sound and fury', 'One's pound of flesh'** போன்ற சொற்றொடர்களை இன்றும் நாம் பயன்படுத்துவதன் வாயிலாகச் சேக்சுபியர் ஆங்கிலமொழியை வளப்படுத்த உதவினாரெனில், மில்ட்டனும் மறக்கமுடியாத சொற்றொடர்களான **'Darkness visible', 'The human face divine' 'That bad eminence'** போன்றவற்றினால் அம்மொழியின் கருத்து வெளிப்படுத்தும் திறனை வலிமையடையச் செய்துள்ளார்.

ஆங்கில மொழியின் வளர்ச்சி விவிலிய நூலின் தாக்கத்திற்கும் உள்ளாகியது. விக்ளிப்பு, பிண்டேல் போன்ற தனி மனிதர்கள் காலச் சூழ் நிலைக்கேற்ப விவிலியத்தை மொழி பெயர்த்து மக்களின் மனத்தைக் கவர்ந்தாலும், முதலாம் சேம்சு அரசரின் ஆணையினால் கி.பி. 1611-இல் ஆங்கிலத்தில் பெயர்க்கப்பட்ட விவிலிய நூலின் தாக்கம் அம்மொழியில் மிகுதியாக அமைந்தது. விவிலியச் சொற்றொடர்கள் பல, **'A labour of love', 'The shadow of death,' The eleventh hour'** என ஈப்ரூ, கிரேக்க மொழியின் வேர்ச்சொற்களிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டன.

ஆங்கில மொழி அமெரிக்கா, கனடா, தென் ஆப்பிரிக்கா, ஆசுத்திரேலியா, இந்தியா போன்ற நாடு

களில் பரவலாகப் பயன்படுத்தப்படுகிறது. இங்கிலாந்து உட்பட, இந்நாடுகளிலெல்லாம் பயன்படுத்தப்படும் மொழி வகைகளை வட்டார வழக்குகள் என்றும், 'ஆங்கிலம்' என்ற சொல் ஓர் இல்ட்சிய மொழி என்றும் கூறுவோரும் உளர். இது ஒரு ஆய்வுக்குரிய கருத்தென்றாலும், இங்கிலாந்தில் ஆங்கிலேயர்களால் பேசப்படும் ஆங்கில மொழிதான் மற்றெல்லா ஆங்கில மொழி வழக்குகளைவிடச் சிறந்தது என்று கூற முடியாது. இந்திய ஆங்கிலம் (Indo -English) உட்பட, இவ்வகைகளெல்லாம் இங்கிலாந்தில் பேசப்படும், எழுதப்படும் ஆங்கிலத்திலிருந்து மாறுபடும் முறையில் சில சிறப்புக் கூறுகளை உடையவை. குறிப்பாக, அமெரிக்காவில் பயிலும் மொழி எழுதும் முறையிலும் உச்சரிப்பிலும் இலக்கிய வளத்திலும் தனக்கென்று ஒரு பாணியை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறது. அமெரிக்க ஆங்கிலம் (American English) என்று சொல்லப்படும். அம்மொழியில் எழுதும் முறைக்கும் பேசும் முறைக்கும் உள்ள இடைவெளி குறைக்கப்பட்டிருக்கிறது. மேலும், பெயர்ச்சொற்களை வினைச்சொற்களாகப் பயன்படுத்தும் முறை இப்பொழுது அமெரிக்காவிலிருந்து இங்கிலாந்திற்கும் பரவிவிட்டது. 'Research' என்ற சொல்லை இதற்குச் சான்றாகக் கூறலாம். அமெரிக்கர் பொதுவாக எல்லாத் துறைகளிலும் ஆய்வு நோக்கைக் கடைப்பிடிப்பவர்களாயிருப்பதாலும், அந்நாட்டின் வளர்ச்சிக்கு அடிகோலிய அறிஞர்கள், விஞ்ஞானிகள், எழுத்தாளர்கள் ஆகியோருள் பலர் ஐரோப்பாவிலிருந்து இரண்டாம் உலகப் போருக்கு முன்பும் பின்பும் குடிபெயர்ந்தவர்களாக இருப்பதாலும், அமெரிக்க ஆங்கிலம் புதிய சொற்களையும் சொற்றொடர்களையும் உண்டாக்குவதன் வாயிலாக மிக வேகமாக வளர்ச்சியடைந்து வருகிறது. பொதுவாக, ஒருவருக்கு ஆங்கில மொழியில் நல்ல பயிற்சியிருந்தால், அறிவியல் உலகத்திலும் இலக்கிய உலகத்திலும் பரந்து காணப்படும் கருத்துகளை எளிதில் புரிந்து கொள்ளலாம். அதனால், இந்திய நாட்டைப் பொறுத்தவரை, ஆங்கிலம் வெளி உலகத்தின் நுழைவாயில் என்று வருணிக்கப்படுகிறது. வி.ச.

துணை நூல்கள்:

**Otto Jespersen**, Growth and Structure of the English Language, Oxford, 1969.

**Henry Bradley**, The Making of English, Macmillan, 1965.

**Simeon Potter**, Our Language, Penguin, 1976.

**C.L. Wrenn**, The English, Language. Vikas, 1976.

**Albert C. Baugh**, A History of the English Language, Allied Publishers, 1977.

***ஆங்கிலோ சாக்சானியர்கள்*** நார்மானியர் இங்கிலாந்திற்கு வரும் முன்னர் அந்நாட்டில் குடியேறியவர்கள். இவர்களுக்குச் செருமானியத் தொடர்புண்டு. இவர்களையே ஆங்கிலோ-சாக்சானியர் (Anglo Saxons) என்பர். இவர்கள் இங்கிலாந்தில் கி.பி. 400-க்கும் 500-க்கும் இடைப்பட்ட காலத்தில் குடியேறினவர்கள். அவ்வாறு குடியேறிய இனங்கள் மூன்று. அவை 1. ஆங்கில்கள் (Angles), 2. சாக்சானியர்கள், 3. சூட்டுகள் (Jutes) என்பனவாம். ஒர்ட்டிசர்ன் என்னும் பிரிட்டானிய அரசர் கி.பி. 449-ஆம் ஆண்டில், செருமானிய இனங்களை, இங்கிலாந்துக்குப் படையெடுத்து வந்த பிக்டுகள் (Picts), இசுகாட்டுகள் (Scots) போன்றோரை விரட்டியடிக்கத் தமக்கு உதவும்படி வேண்டினார். உதவ வந்தபோது அவர்களுக்கிடையே சச்சரவுகள் எழுந்தன. எனவே, சொந்தக்காரராயிருந்த பிரிட்டானியர்களைச் (Britons) செருமானிய இனமக்கள் விரட்டியடிக்கத் தொடங்கினர். ஆங்கில்கள் (Angles), சாக்சானியர்கள், சூட்டுகள் (Jutes) ஆகியோர், கி.பி. 500-ஆம் ஆண்டு முடிவில், இங்கிலாந்தின் பெரும் பகுதிகளை வேல்சு, இசுகாட்லாந்து எல்லை வரை கைப்பற்றிக் கொண்டனர். ஆங்கில்கள் தங்கின நிலமானபடியால் அந்நாடு இங்கில்லாந்து எனப்பட்டது.

இங்கிலாந்தில் ஆங்கிலோ-சாக்சானிய அரசுகளுள் சிறப்பானவை ஏழாகும். அவை 1. நார்த்தம்பிரியா (Northumbria), 2. மெர்சியா (Mercia), 3. கிழக்கு ஆங்கிலியா (East Anglia), 4. எசக்சு (Essex), 5 சசெக்சு (Sussex), 6. கெண்ட்டு (Kent), 7. வெசெக்சு (Wessex) என்பனவாம். அவற்றை 'எப்டார்க்கி' (Heptarchy) என்பர். 'எப்டார்க்கி' என்பது ஏழு அரசுகளின் அமைப்பு எனப் பொருள்படும். வெசெக்சின் அரசரான எக்பர்டு என்பார் கி.பி. 829 - ஆம் ஆண்டளவில் ஏனைய அரசுகளை வென்று, பிரிட்டானியத் தீவுகளில் அரசியல் ஒற்றுமையை நிலைநாட்டும் முதல் முயற்சியை மேற்கொண்டார். வெசெக்சின் புகழ்பெற்ற அரசரான மகா ஆல்பிரடு, தேனியப் (Danish) படையெடுப்பாளர்களைக் கி.பி. 878-ஆம் ஆண்டில் தோற்கடித்தார். இங்கிலாந்தில் அமைதியை நிலைநாட்டி ஒற்றுமை ஏற்படுத்திய பணி ஆல்பிரட்டின் சீரிய செயலாகும். அவர் வழித்தோன்றல்கள்தாம் முதன் முதலாகத் தங்களைப்பிரிட்டன் முழுமைக்கும் அரசர்கள் என்ற பட்டப் பெயரைச் சூட்டிக் கொண்டவர்கள்.

ஆங்கிலோ-சாக்சானியர்கள் ஆங்கில மொழிக்கு அதன் இலக்கணத்தையும் ஆயிரக்கணக்கான சொற்களையும் வழங்கிப் பேருதவி செய்தார்கள்.

இச்சொற்கள் வட இங்கிலாந்து சொல்வழக்கிலிருந்து பிறந்திருக்கவேண்டும் என்று சிலர் கருதுவர். தென் இங்கிலாந்தின் சொல் வழக்கிலிருந்துதான் இங்கிலாந்தில், ஆங்கிலோ-சாக்சானிய இலக்கிய மொழி வளர்ந்திருக்க வேண்டும். கவிதைகளை எழுத அச் சொல் வழக்கு மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டது.

**ஆங்கிலோ - சாக்சானியர் சட்டங்கள்** இங்கிலாந்தின் சட்டத்திற்கு அடிகோலியவை. இங்கிலாந்தில் வாழ்ந்த ஆங்கிலோ-சாக்சானியரின் சட்டங்கள், நார்மானியரின் ஆட்சிக்கு முன்னர் இங்கிலாந்தில் நடைமுறையிலிருந்த சட்டங்கள் எனலாம். இச் சட்டங்களின் சிறப்புத் தன்மை என்னவெனில், ஏனைய நாடுகளின் ஆதிக்கம் இங்கிலாந்திற்கு வருவதற்கு முன்னரே வந்தமையால், அவற்றின் செல்வாக்கினைக் காண இயலாமையாகும். மற்றொரு சிறப்புத் தன்மை இவ்வாங்கிலோ-சாக்சானியச் சட்டங்கள் ஆங்கில மொழியில் எழுதப்பெற்றவையாம். ஐரோப்பியச் சட்டங்கள் அனைத்தும் இலத்தீன் மொழியில் எழுதப்பெற்றவை.

ஆங்கிலோ-சாக்சானியச் சட்டங்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம். முதலாம் வகை, மரபு முறைகளை விளக்கும் விதிகள். இரண்டாம் வகை அரசாங்கத்தால் பிறப்பிக்கப்பெற்ற சட்டங்கள். மூன்றாம் வகை சட்டத் தொகுப்புகள். இச்சட்டங்கள் சமூகத்தின் பொது அமைதியைப் பேணிக்காக்கும் வண்ணம் உருவாக்கப்பெற்றவை. தந்தை, பெருமகன், ஆண்டான் முதலியவர்கள் பயன்படுத்திய உரிமைகள் இச்சட்டத்தில் இருந்தன. எனினும் அவர்களின் உரிமைகளை விட மன்னரின் ஆட்சி சிறப்புடையது என்ற உணர்வால்தான், நாட்டில் அமைதி நிலவும் என்று அவர்கள் நம்பினர். தனிப்பட்ட மனிதனின் பாதுகாப்புரிமை, சொத்துரிமை, திருமணம், வாரிசுரிமை போன்றவையும் ஆங்கிலோ-சாக்சானியச் சட்டங்களால் கட்டுப்படுத்தப்பெற்றன. நிலமானியத் திட்டம் பொதுவாக ஐரோப்பாவிலும் பின்னர் இங்கிலாந்திலும் செயற்பட்டபோது, ஆங்கிலோ-சாக்சன் சட்டங்கள், மாற்றியமைக்கப்பெற்று, நிலமானிய முறைச் சமூக ஏற்பாட்டையொட்டித் திருத்தப்பெற்றன. இவை கி.பி. 10, 11-ஆம் நூற்றாண்டுகளில் ஏற்பட்ட மாறுதல்கள்.

**ஆங்கோர் தோம்** கம்போடியா நாட்டின் சிறப்பு வாய்ந்த தொன்மையான நகரம். ஏழாம் சயவர்மன் (கி.பி. 1181-1219) என்னும் கெமர் மரபு மன்னன் இந்நகரைத் தலைநகரமாக அமைத்தான். இம் மன்னன் எதிரிகளின் தாக்குதலுக்கு அசையாத ஒரு தலைநகரை உருவாக்க விரும்பி இதை அமைத்தான். இத்தலைநகரைத்தன் மேற்பார்வையிலேயே அமைக்க விரும்பினான். அதற்காக இந்நகரின் வடகிழக்கே 'நகர சயசிரி' என்ற இடைக்காலத் தலைநகரத்தை அமைத்துக் கொண்டான். கம்போடிய நாகரிகத்தினை எடுத்துக் காட்டும் சின்னமாக ஆங்கோர் தோம் தோற்றமளிக்கிறது.



ஆங்கோர் தோம் கோயில்

ஆங்கோர் தோம் சதுர வடிவில் அமைந்த நகரம். நகரத்தைச் சுற்றி எட்டுக் கல் சுற்றளவுள்ள ஓர் அகன்ற அகழி வெட்டப்பட்டுள்ளது. அகழியைச் சுற்றி உறுதியான கற்சுவரும், ஒவ்வொரு பக்கமும் அகழியைக் கடக்கும் பாதைகளும் உண்டு. பாதைகளின் இருபுறமும் நல்லபாம்புகளைத் தங்கள் மடியில் தாங்கி நிற்கும் குட்டையான பூதவடிவச் சிலைகள் உள்ளன. தென்கிழக்கு மூலையில் அமைந்த நுழைவாயில் நேரே அரண்மனையில் கொண்டு போய் விடும். ஒவ்வொரு நுழைவாயிலிலும் ஒரு கோபுரம் உண்டு. கோபுரங்களின் மூன்று புறங்களிலும் மகாயான போதிசத்வா லோகேசுவராவின் தோற்றத்தோடு கூடிய ஏழாம் சயவர்மனின் முகங்கள் காட்சியளிக்கின்றன. அகழியைக் கடந்து நகரத்திற்குள் செல்லும் நான்கு பாதைகளும் நகரத்தின் மையத்தில் அமைந்திருந்த பயான் (Bayon) கோயிலைச் சென்றடையும். கெமர்களால் அமைக்கப்பட்ட சின்னங்களில் மிகவும் புதுமையானது இந்தப் பயான் கோயில். இக்கோயில் கூம்பு வடிவமுள்ளது. கோயிலின் மத்தியில் நான்கு முகங்கள் கொண்ட தங்கக் கோபுரம் அமைந்துள்ளது.

அதனைச் சுற்றிலும் நான்கு முகங்கள் கொண்ட ஐம்பது கோபுரங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இக்கோபுரங்களில் காணப்பட்ட முகங்கள் அனைத்துமே லோகேச்வராவின் தோற்றத்தோடு கூடிய ஏழாம் சயவர்மனின் முகந்தான். கோயிலின் படிக்கட்டுச் சுவர்களிலெல்லாம் தெய்வீக உருவங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இக் கோயில்தான் கெமர்களின் சிறப்பு மிக்க கட்டிடக் கலைப் பண்பினை வெளிப்படுத்துகிறது. இப்பொழுது இக்கோயில் பாழடைந்த நிலையில் தோற்றமளிக்கிறது.

ஆங்கோர் தோமில் அமைந்த மற்றொரு முதன்மையான கட்டிடம் அரண்மனையாகும். இந்த அரண்மனையின் யானைத்தள மட்டங்களும், படிக்கட்டுகளின் அடிப்பாகங்களுந்தாம் இப்பொழுது காணப்படுகின்றன. பெரும்பாலும் மரத்தால் கட்டப்பட்டதால் பெரும்பகுதி அழிந்து விட்டது. அரண்மனை வாசலுக்கெதிரே தூதர்கள் தங்குவதற்கும், மேற்பார்வை செய்ய வரும் அரசு ஊழியர்கள் தங்குவதற்கும் பெருமளவில் வரிசையாகக் கட்டிடங்கள் கட்டப்பட்டிருந்தன. ஆங்கோர் தோமை அமைத்த ஏழாம் சயவர்மன் மகாயான புத்த மதத்தைப் பேணி வளர்த்தான். கி.பி.

**ஆங்கோர் வாட்டு** கம்போடியா என்னும் நாட்டிலுள்ள ஆங்கோர் என்ற இடத்தில் காணப்படும் மிகப்பழைய திருமால் கோயிலாகும். இந்தியக் கலைப் பாணியையும் கம்போடியக் கலைப்பாணியையும் இணைத்து உருவாக்கிய சிறந்த படைப்பு ஆங்கோர் வாட்டு (Angkor, Vat) திருமால் கோயில். இக்கோயிலைக் கட்டியவர் இரண்டாம் சூரியவர்மன் (கி.மு. 1113-1150) என்ற கம்போடிய மன்னர்.



ஆங்கோர் வாட்டுக் கோயில்

தேவேந்திரனே பூவுலகிற்கு வந்து இக்கோயிலை அமைத்தான் என்பது வழக்காறாகும். ஆனால், இக்கோயிலைத் தனது கல்லறையாகக் கொள்ள எண்ணியே சூரியவர்மன் கட்டினான் என்றும் குறிப்பர். இக்கோயில் நீள் சதுர அமைப்புடையது. இதனைச் சுற்றி 1000×850 மீ. நீள அகலங்களில் ஒரு மதிற்சுவர் உண்டு. இம்மதிலைச் சுற்றி 200 மீ. அகலமுள்ள நீர் நிறைந்த அகழி ஒன்றும் உண்டு. அகழியைக் கடந்து கோயிலுக்குள் செல்வதற்குப் பாலங்கள் அமைக்கப்பட்டுள்ளன. மேற்குப் புறத்தில் மண்ணாலும் கல்லாலும் அகழியின் குறுக்கே கட்டப்பட்ட பாதை, கோயிலின் மத்திய நுழைவாயில் வரை செல்லும். இவ்வாயிலின் இரு புறமும் யானைகள் செல்வதற்காக வழிகள் அமைந்துள்ளன. இந் நுழைவாயில் மிகவும் அழகாக அலங்கரிக்கப்பட்டுள்ளது. மூன்று அழகிய கோபுரங்கள் நுழைவாயிலை அணி செய்கின்றன.

கோயிலின் உட்புறத்தின் முற்பகுதியில் சற்றே உயர்ந்திருந்த நாகப்பாம்பு வடிவக் கைப்பிடிச்சுவர்களும், நடைபாதைத் தளங்களும் கொண்ட 450 மீ. நீளமுள்ள பாதை ஒன்று உள்ளே செல்கிறது. பாதையின் இரு புறங்களிலும் மதகுருவின் இருப்பிடமும் நூலகமும் அமைந்துள்ளன. இக்கோயில், மூன்று நீண்ட சதுர நுழைமாடங்களையும், நடுவில் 70 மீ. உயரமுள்ள கோபுரத்தையும், அதனைச் சுற்றித் தாமரை மொட்டு வடிவத்தில் அமைக்கப்பட்ட பல சிறுசிறு கோபுரங்களையும் கொண்டுள்ளது. இவை அனைத்தும் தங்கப் பூச்சுடன் மிளிர்கின்றன. பாழடைந்த நிலையிலும் இக்கோயில் எடுப்பான தோற்றமளித்துக் கொண்டிருக்கிறது.

நுழைமாடங்களின் சுவர்களின் உட்புறத்தில் திருமாலின் முக்கிய அவதாரங்களாகிய இராமாவதாரம், கிருட்டிணாவதாரம் பற்றிய காட்சிகள் முழு வடிவில் செதுக்கப்பட்டிருக்கின்றன. இவை தவிர சைவசமயக் கதைகள், கம்போடிய மக்களின் அன்றாட வாழ்க்கை, படைகள் போர்க்களம் செல்லுதல், மன்னனின் ஊர்வலம், கைத்தொழிலாளர்கள் வேலை செய்தல் உழவுத்தொழில் செய்தல், கம்போடியா நாட்டு மரம், செடி கொடி வகைகள், மிருகங்கள் ஆகியவைகளும் செதுக்கப்பட்டிருக்கின்றன.

கோயிலின் மையத்தில் பொன்னால் செய்யப்பட்ட திருமால் படிமம் கருட வாகனத்தில் காட்சியளிக்கிறது. விழாக்காலங்களில் மட்டும் அச்சிலை கருப்பக்கிரகத்திலிருந்து வெளியே வைக்கப்படும். மன்னரின் கல்லறையாக வகுக்கப்பட்ட இக்கோயிலில் மன்னரே திருமாலின் அவதாரமாகக் கருதப்பட்டார். திருமால் இருந்த இடத்தில் தேவராசா என்னும் வழிபாட்டு முறை புகுத்தப்பட்டது. கி.பி.

**ஆங்-செள** சீன நாட்டின் சீகியாங்கு மாநிலத் தலைநகரும் சுற்றுலா மையமுமாகும். இது சாங்கை

நகருக்குத் தென்மேற்கில் 160 கிலோ மீட்டர் தொலைவில் விரிகுடாவொன்றில் அமைந்துள்ளது. இங்குள்ள அழகான இசி ஏரியைக் (Hsi Lake) காணப் பெரும் எண்ணிக்கையில் பயணிகள் வருகின்றனர். ஏரிக்கரையொட்டிய இடங்களிலும், ஏரிக்குள் இருக்கும் நான்கு சிறு தீவுகளிலும் பல தோட்டங்களும் சிலைகளும், கோயில்களும் அமைந்துள்ளன. இப்பகுதியிலுள்ள தொழிற்சாலைகளில், இரசாயனப் பொருள்கள், எலக்ட்ரானிக் கருவிகள், இரும்பு-உருக்குப் பொருள்கள், பட்டுப் போன்றவை உற்பத்தியாகின்றன.

மீன்பிடிக்கும் சிற்றூராக இருந்த ஆங்-சௌ (Hong-Chow) கி.பி. ஆறாம் நூற்றாண்டில் வாணிக மையமாய் விளங்கியது. பின்னர்க் கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் சுங் மரபைச் சார்ந்த பேரரசர்களின் தலை நகரமாயிற்று. இது உலகில் சிறந்த நகரங்களுள் ஒன்றாக கி.பி. 13-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் திகழ்ந்தது. தைபிங் கலகத்தில் (கி.பி. 1850-1864) இந்நகர் அழிவுற்றது; பின்னர்த் திரும்பவும் புதுபிக்கப்பட்டது. இரண்டாம் உலகப் பெரும் போர் முடிவு வரை (1937-1945) இந்நகரம் சப்பானியர் வசமிருந்தது. சீனப் பொதுவுடைமைக் கட்சி 1949-இல் இந்நாட்டை வென்றபின், ஆங் சௌவின் தொழிற் சாலைகள் சீராகப் பெருகி வளர்ச்சியுற்றன. இந்நகரத்தின் மக்கள் தொகையைத் திட்டவட்டமாகக் கூற இயலவில்லை. மக்கள் தொகை மூன்று இலட்சத்திலிருந்து பத்து இலட்சம் வரை இருக்கக் கூடும் என்று கருதுகிறார்கள்.

**ஆசம்** மொகலாயப் பேரரசர் அவுரங்கசீப்பின் பிள்ளைகளுள் ஒருவர். வாரிசுரிமைப் போரின்போது இவர் அண்ணன் மூவாசம் என்னும் இளவரசரோடு போட்டியிட்டதில் ஆசம் தோற்கடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டார். இவர் பிறந்த நாளைத் திட்டவட்டமாகக் கூற இயலவில்லை.

***ஆசன் சேக் நிசாமுதீன்*** பாரசீகக் கவிஞர். இவருக்கு ஆசன்-இ-தெகல்வி என்னும் புனை பெயருமுண்டு. தில்லி சுல்தானிய அரசர் அலாவுதீன் கில்சி (கி.பி. 1296-1326)யின் காலத்தில் வாழ்ந்தவர் இவர்.

***ஆசாத்து, சந்திரசேகர*** **(1906-1931)** இந்தியப் புரட்சிவாதத் தியாகி. இவர் கி.பி. 1906-ஆம் ஆண்டு சூலைத்திங்கள் 23-ஆம்நாள் மத்திய பிரதேச மாநிலம் சாபுவா (Jhabua) மாவட்டத்தில் போரா (Bhora) என்னும் ஊரில் பிறந்தார். ஆசாத்து என்னும் சொல்லுக்குச் சுதந்திரம் என்பது பொருள். பெயரில் அமைந்த பொருளுக்கேற்ப இவர் சிந்தனையிலும் செயலிலும் சுதந்திரமானவராகவே விளங்கினார். புரட்சிவாதியாக மாணவப்பருவத்திலேயே திகழ்ந்த



சந்திரசேகர ஆசாத்து

இவர், 1921-ஆம் ஆண்டில் ஒத்துழையாமை இயக்கத்தில் பங்குற்றுத் தம் பதினான்காம் வயதிலேயே சிறை செய்யப் பெற்றார். விடுதலையானவுடன், 1922-இல் இந்தியப் புரட்சிவாதக் கட்சியிலும் இந்துசுதானச்சமதருமக் குடியரசுப் படையிலும் சேர்ந்தார். பகத்சிங்கு, இராசகுரு, முதலிய புரட்சிவாதிகளுடன் இவருக்கு நெருங்கிய தொடர்பு இருந்தது. அரசியல் கொள்கைகளில் தீவிரப் பங்கு கொண்ட இவர், கக்கோரி மெயில் வண்டியை நிறுத்திக் காவல் துறைத் துணைக் கண்காணிப்பாளரான சே.பி. சாண்டர்சு என்பாரைச் சுட்டுக்கொன்றார். மத்திய சட்ட மன்றத்தின் மீது 1929-ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள் 8-ஆம் நாள் மற்றவர்களுடன் சேர்ந்து கொண்டு குண்டு வீசியதற்கு இவர் காரணமாயிருந்தார். இவரைப் பிடிக்க உளவு சொல்கிறவர்க்கு உரூ. 30,000 அன்பளிப்பாகக் கொடுக்கப்படும் என்ற காவல் துறையினரின் ஆணைக்குப் பின்னரும், இவர் காவல் துறையினரை ஏமாற்றி வெற்றியுடன் பல்லாண்டுகள் தப்பி வந்தார். நண்பன் ஒருவனால் ஆசாத்து 1931-ஆம் ஆண்டு பிப்பிரவரித் திங்கள் 27-ஆம் நாள் அலகாபாத்து ஆல்பிரடு பூங்காவில் காட்டிக்கொடுக்கப்பட்டுத் துப்பாக்கிச் சூட்டில் மாண்டார். சந்திர சேகர ஆசாத்து பயன்படுத்திய, அமெரிக்க ஐக்கிய நாட்டைச் சார்ந்த துப்பாக்கியை அலகாபாத்து அருங்காட்சியகத்தில் இன்றும் காணலாம்.

***ஆசாத்து, மௌலானா அபுல்கலாம்*** **(கி.பி. 1888-1958)** சிறந்த தேசபக்தர்; அறிஞர்; இந்தியச் சுதந்திரப் போராட்டத்தில் காந்தியடிகளின்

அணுக்கத் தோராய் இருந்தவர்; இந்தியா விடுதலை பெற்றதும் சவகர்லால் நேருவின் அமைச்சரவையில் கல்வி அமைச்சராகப் பணியாற்றியவர்.



அபுல் கலாம் ஆசாத்து

ஆசாத்து, மௌலானா அபுல்கலாம் (Azad, Maulana Abulkalam) கி.பி. 1888-ஆம் ஆண்டில் அரேபியா நாட்டிலுள்ள மெக்கா (Mecca) நகரில் பிறந்தார். இவர் தந்தையார் ஓர் இசுலாமிய அகதி; தாயார் ஓர் அராபியப் பெண்மணி. ஆசாத்தின் தந்தையார் கி.பி. 1898-ஆம் ஆண்டில் இந்தியா வந்து கல்கத்தாவில் குடியேறினார். தம் மகன் ஆசாத்தை அவர் எகிப்து நாட்டிலுள்ள அல் அசார் (Al Azhar) பல்கலைக் கழகத்தில் அரபு மொழியில் உயராய்வுக் கல்வி கற்க அனுப்பி வைத்தார். தம் இருபதாம் வயதில் கல்லூரிக் கல்வியை முடித்துக்கொண்டு ஆசாத்து இந்தியாவுக்குத் திரும்பி வந்தார். உடனே இந்திய அரசியலில் நுழைந்தார்; அல் இலால் (Al Hilal) என்னும் உருதுமொழி வார இதழை 1912-ஆம் ஆண்டில் தொடங்கினார். இவர் அரசியல் ஈடுபாட்டின் காரணமாக 1915-ஆம் ஆண்டில் வங்காளத்திலிருந்து பீகார் மாநிலத்தைச் சார்ந்த இராஞ்சி (Ranchi) என்னும் நகரில் தங்கியிருக்க வேண்டுமென வற்புறுத்தப்பட்டார். அங்கு இவர் 1920-ஆம் ஆண்டு வரை தங்கியிருந்தார். ஆசாத்துக்குக் காந்தி அடிகளுடன் ஒத்துழையாமை இயக்கத்தின்போது நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. அவ்வியக்கத்தில் பங்கு கொண்டதன் விளைவாக இவர் பலமுறை சிறையில் அடைக்கப்பெற்றார்.

இந்தியத் தேசிய காங்கிரசுக் (Indian National Congress) கட்சியின் அனைத்திந்தியத் தலைவராக இவர் 1940-ஆம் ஆண்டில் தேர்ந்தெடுக்கப்பட்டார். அக்கட்சியின் சார்பாக இவர், 1946-ஆம் ஆண்டில் இந்தியாவுக்கு வருகைபுரிந்த கிரிப்சுத் தூதுக்குழு (Cripps Mission) வுடன் உரையாடி உடன்படிக்கை செய்து கொண்டார். நேருவின் தலைமையில் இடைக்கால அரசாங்கத்திலும், பின்னர் அமைந்த அமைச்சரவையிலும் கல்வி அமைச்சராகப் பணியாற்றினார். சுதந்திர இந்தியாவின் கல்விக் கொள்கையை வரையறுத்துக் கால்கோள் நாட்டியவர் ஆசாத்தேயாவர். வேறுகட்சி ஒன்றிலும் சாராது, தாம் இறக்கும் வரை இந்தியத் தேசிய காங்கிரசுக் கட்சியின் உறுப்பினராகவேயிருந்து நாட்டிற்குத் தொண்டாற்றினார். இவர் ஆழ்ந்த நாட்டுப்பற்றும் மதிநுட்பமும் இந்தியச் சுதந்திரப் போராட்டத்தின்போது பெரிதும் பயன்பட்டன. இதனைக் குறித்துக் காந்தி அடிகளே இவரைப் புகழ்ந்து பாராட்டியுள்ளார். தேசியத்தில் இவருக்கிருந்த ஆழ்ந்த பற்றைப்போல் இசுலாம் சமயத்திலும் இவருக்குத் தலைசிறந்த நம்பிக்கை இருந்தது. இவரை முதன்மையான தேசியவாதி என்று கூறுவது பொருத்தமுடையதாகும். அபுல்கலாம் ஆசாத்து 1958-ஆம் ஆண்டில் காலமானார். இவர் பல நூல்களை அரபு மொழியில் எழுதியுள்ளார். இவர் ஆங்கிலத்தில் எழுதிய "இந்தியா சுதந்திரம் பெறுகிறது" (India Wins Freedom) என்னும் நூல் குறிப்பிடத்தக்கதாகும்.

**ஆசாரக்கோவை:** தமிழிலுள்ள பதினெண் கீழ்க்கணக்கு என்னும் நூல் தொகுப்பில் இடம்பெற்றுள்ள ஓர் அறநூலாகும். ஆசாரம் என்பது ஒழுக்கத்தினைக் குறிக்கும். அதனால் ஆசாரங்களின் கோவை, ஆசாரங்களைத் தொகுத்தமைத்த கோவை என்று இப்பெயர் பொருள்படும். பொதுவகையான ஒழுக்கங்களோடு. நாள்தோறும் வாழ்க்கையில் பின்பற்றி ஒழுகத்தக்க கடமைகளையும் தொகுத்துக் கூறும் இந்நூல் 100 செய்யுள்களைக் கொண்டுள்ளது. ஆசாரங்களைக் கூறுங்கால் சிலவற்றைச் செய்கவென விதித்தும், சிலவற்றைச் செய்யற்கவென விலக்கியும் இந்நூல் வகுத்துக் காட்டுகிறது. இந்நூலிற் கூறியுள்ள ஆசாரங்களுள் பெரும்பாலன வடமொழி சுமிருதிகளில் கூறப்பட்டுள்ளவற்றைப் பின்பற்றி அமைந்துள்ளன. 'யாவருங்கண்டநெறி', 'நல்லறிவாளர் துணிவு' என்று கூறுவதிலிருந்து, இந்நூலாசிரியர் தம் காலத்திற்கு முன் வாழ்ந்த பெருமக்களின் நல்லுரைகளை ஏற்று இவ்வொழுக்க நூலைச் செய்திருப்பதனை அறியக்கூடும்.

இந்நூலாசிரியர் பெயர் கயத்தூர்ப் பெருவாயில் முள்ளியார் என்பதாகும். முள்ளியார் என்பது இவரது

இயற்பெயர். பெருவாய் என்பதனை இவர்தம் தந்தை பெயரென்று கருதுவோருமுளர். கயத்தூரினைச் சேர்ந்த பெருவாயில் என்னுமிடத்தில் வாழ்ந்த முள்ளியார் என்று இவர் பெயரை விளக்குவர். இந்நூற் சிறப்புப்பாயிரம், நூலாசிரியரையும் அவர் ஊரையும் "திருவாயில் ஆயதிறல்வண் கயத்தூர்ப்பெருவாயில் முள்ளியான்" என்று கூறுகிறது. மேலும் அச்சிறப்புப் பாயிரம் 'ஆர் எயில் மூன்றும் அழித்தான் அடி ஏத்தி ...... ஆசாரக்கோவை எனத் தொகுத்தான்' என்று இந்நூலாசிரியரைக் குறிப்பிடுவதனால் இவர் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்பது புலனாகிறது.

குறள், சிந்தியல், நேரிசை, இன்னிசைப் பஃறொடை முதலிய பலவகையான வெண்பாக்களும் இந்நூலுள் இடம் பெற்றுள்ளன. பத்துப்பாட்டு, சீவகசிந்தாமணி முதலிய இலக்கியங்களின் உரைகளிலும் நன்னூல், இலக்கண விளக்கம் போன்ற இலக்கணங்களின் உரைகளிலும் இந்நூற் செய்யுள்கள் மேற்கோளாக எடுத்துக்காட்டப்பெற்றுள்ளன. இந்நூலுக்குப் பழைய பொழிப்புரை ஒன்றுள்ளது.

**ஆசிபிர்க் கணவாய்** காசுமீர் மாநிலத்தில் இந்தியா, பாகிசுத்தான் எல்லையில் அமைந்துள்ளது. இந்திய–பாகிசுத்தான் போரின்போது (1965) ஆசிபிர்க் கணவாய் (Hajipir Pass) பிடிபட்டது. தாசுகண்டு (Tashkant) ஒப்பந்தப்படி இந்தியா இதைப் பாகிசுத்தானுக்கு விட்டுக் கொடுத்துவிட்டது.

**ஆசியச் சங்கம்,** இந்தியக்கலை, வரலாறு, பண்பாடு ஆகியவற்றை உலகிற்குப் பறைசாற்றிய கல்கத்தா கழகம் ஆகும். இதனை வங்க ஆசியச் சங்கம் என்றும் கூறுவர். வங்க ஆசியச் சங்கம் கி.பி. 1784–ஆம் ஆண்டு தலைமை ஆளுநர் வாரன் ஏசுடிங்சின் காலத்தில் நிறுவப்பட்டது. கிழக்கு நாடுகளின் கலைகள், மொழிகள், பண்பாடு ஆகியவற்றில் ஈடுபாடும் நாட்டமும் கொண்ட வாரன் ஏசுடிங்சு, இந்த ஆசியச் சங்கம் (Asiatic Society) நிறுவப்படுவதற்கும் இதன் வளர்ச்சிக்கும் அக்கறை காட்டினார். கல்கத்தாவின் பழைய தலைமை நீதிமன்ற நீதிபதி சர் வில்லியம் சோன்சு என்பார் இச்சங்கத்தின் தலைவராயிருந்து இதன் வளர்ச்சிக்கு அரும்பாடுபட்டார். சிறந்த கல்வியாளராகத் திகழ்ந்த சோன்சு, ஆசிய மொழிகளிலும் வரலாற்றிலும் மிகுந்த நாட்டங் கொண்டு, பல ஐரோப்பியப் பெரியார்கள் உதவியோடு இச்சங்கத்தினைப் பெரும் நிறுவனமாக்கினார்.

பழங்கலைப் பொருள்களையும் வரலாற்றுப் பொருள்களையும் பாதுகாத்து நாட்டின் சீரையும் சிறப்பையும் வருங்காலத்துக்கு உணர்த்தவும், கல்வி சார்ந்த ஆய்வுகட்கு ஊக்கமளிக்கவும், நாட்டின் பழம்பெரும் பண்பாட்டினை மக்கள் கற்றுணர்ந்து அப்பண்பாட்டிற்கு மேலும் வளமூட்டவும் ஆசியச் சங்கம் நிறுவப்பட்டது.

ஆங்கில அரசு, இச்சங்கத்துக்கெனத் தனிக் கட்டிடம் அமைப்பதற்கு விலையின்றி நிலம் வழங்கியது. அக்காலத்தில் கட்டப்பட்ட கட்டிடத்திற்கு அருகிலேயே புதிய பல மாடிக்கட்டிடம் ஒன்று 1965–ஆம் ஆண்டு கட்டி முடிக்கப் பட்டது. நூற்றுக் கணக்கான சான்றோர்களும் சாதனையாளர்களும் இச்சங்கத்தின் பெரும் வளர்ச்சிக்கு அரும்பாடு பட்டுள்ளனர்.

கடந்த இருநூறு ஆண்டுகளில் இச்சங்கம், எண்ணற்ற இலக்கியம், அறிவியல், கணக்கியல், வரலாறு பற்றிய கையெழுத்துப் படிகளையும், கலைப் பொருள்களையும் திரட்டியுள்ளது. இவற்றில் பெரும்பாலானவை, கீழ்த்திசை மொழிப்புலமை கொண்ட ஐரோப்பியரால் அன்பளிப்பாக வழங்கப் பட்டவையாகும். திப்பு சுல்தான் நூலகத்திலிருந்து கொண்டுவரப்பட்ட பல அரும்பொருள்களும் இங்குள்ளன. கிழக்கிந்திய வணிகக் குழுவின் அதிகாரிகளும் அலுவலர்களும் பணி ஓய்வு பெற்றுத் தம் நாடு திரும்பு முன் அளித்து விட்டுச் சென்ற அன்பளிப்புப் பொருள்களும் இங்குக் காணக் கிடக்கின்றன. பெருமளவு இங்குக் காணப்படுகிற ஐரோப்பிய வண்ண ஓவியங்கள், இராபர்ட்டு ஓம் (Robert Home) என்ற கலையுள்ளங் கொண்ட செல்வரால் அளிக்கப் பட்டவையாகும். அவர், அவது (Awadh) நாட்டு நவாபின் அரசவை ஓவியராக கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பணிபுரிந்தார். இச்சங்கப் பொருட்காட்சி மண்டபத்தினை உரூபன் (Ruben), இரேனால்டு (Reynold) போன்றோர் வழங்கிய வனப்பு மிக்க ஓவியங்கள் அழகு செய்கின்றன.

இச்சங்கத்தில் இந்தியப் பழம்பெரும் கலைப் பொருள்களும் முசுலிம்களின் வேத நூலான புனிதகுர்ஆனின் படிகளும், மற்றைய சமய நூல்களும் திரட்டி வைக்கப்பட்டுப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இவ்வாறு பழங்காலக் கலைப் பொருள்களையும் வரலாற்றுப் பொருள்களையும் திரட்டிவைத்துப் பழங்காலத்தின் பெருமையையும் சிறப்பையும் அறிவித்து நிற்கும் அருங்களஞ்சியமாக ஆசியச் சங்கம் இலங்கி வருகிறது.

உலகில் உள்ள பல்வேறு ஆசியச் சங்கக் கிளைகளைக் காட்டிலும், இச்சங்கமே மிகப் பழமையான நிறுவனமாகும். இந்தியாவில் உள்ள இந்த ஆசியச் சங்கம், ஆசியக்கலை, இலக்கியம் ஆகியவற்றின் கரு

லமாகும். இங்குள்ள நாற்பத்திரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட அரிய, பழைய ஏடுகளும் கையெழுத்துப் படிகளும் நூல்களும் படங்களும் பழைய நாணயங்களும் கலைப் பொருள்களும் வண்ண ஓவியங்களும் மனிதப் பண்பாட்டின் மாட்சியினை எடுத்தியம்புகின்றன. உரு பன், சர் சோசுவா ரேனால்டு ஆகியோரின் ஒப்பற்ற ஓவியங்களும், இரென்னல் என்பாரின் இந்தியா பற்றிய பழைய படங்களும், தானியல், சால்வின், பிரின்செப், பிரேசர் போன்ற ஆங்கில, பிரெஞ்சுக் கலைஞர்களின் செதுக்கு வரி வேலை செய்யப்பட்ட அச்சுப் பாளத்தின் மூலம் அச்சிடப்பட்ட படங்களும் கலை வண்ணங்களின் சீர்மையைப் பகர்ந்து நிற்கின்றன.

தொன்மையின் மாண்பினை இச்சங்கத்திலுள்ள ஒவ்வொரு பொருளும் பறைசாற்றி நிற்கிறது. கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த விலை மதிப்பற்றதும் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்ததுமான பேரரசர் அசோகர்தம் சோகாரா பிராமி மொழிச் செப்பேடும், கி.பி. ஏழாம் நூற்றாண்டிலும் அதற்குப் பின்னரும் எழுதப்பட்ட பனை ஓலைச் சுவடிகளும், அழகிய கையெழுத்துகளால் எழுதப்பட்ட இசுலாமிய ஏடுகளும், மொகலாய மன்னர்களின் காலத்தில் எழுதப்பட்ட வரலாற்றுக் குறிப்புகளும் சாசகானின் கையெழுத்தும், அவர்மகள் செய்புன்னிசாவின் கவிதைத்திரட்டும், பழங்கால ஐரோப்பிய நூல்களும், கி.பி. 1499-இல் இலத்தீன் மொழியில் அச்சிடப்பட்ட வானநூல் முதலான பழைய நூல்களும், குப்தர் காலத்தையும் அதற்குப் பிந்திய காலத்தையும் சேர்ந்த 24,000 அரிய நாணயங்களும், வங்க ஆசியச் சங்கத்தின் விலைமதிப்பற்ற அரும்பொருள்களாகும்.

ஆசியச் சங்கம் 'ஆசிய ஆய்வு' என்னும் பெயரில் ஏடு ஒன்றைப் பல்லாண்டுகளாக வெளியிட்டு வந்திருக்கிறது. நாட்டின் பழம் பண்பாடு, வரலாறு ஆகியவை பற்றிய கட்டுரைகளைத் தாங்கியதாய் இக்காலாண்டு வெளியீட்டேடு உள்ளது.

இப்பொழுது ஆசியச் சங்கம் பெருமளவு மைய அரசின் நிதியுதவியாலும், ஓரளவு மேற்குவங்க மாநில அரசின் நிதியுதவியாலும் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

பழம்பெரும் கலை, வரலாறு, பண்பாடு பற்றிய பொருள்களின் கருவூலமாகவும் சீர்மிகு கல்விக் கோயிலாகவும் திகழ்கிற கல்கத்தாவிலுள்ள இந்த வங்க ஆசியச் சங்கம், உலகப் பண்பாட்டு வரலாற்றில் சிறப்புள்ள ஓரிடத்தைப் பெற்றுள்ளதெனில் அது மிகையாகாது.

ஆ.ச.

**ஆசியப் பண்பாட்டுப் பகுதிகள்:** ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பில் வாழும் இனக்குழுவினர் தமக்கென்ற நிலையான பண்பாட்டைப் கொண்டிருப்பர். அகப்பண்பாடு, புறப்பண்பாடு ஆகிய இரண்டிலுமே இவர்கள் வேற்றுப் பரப்பில் வாழும் மக்களிடமிருந்து வேறுபடுவர். இப்பண்பாட்டுக் கூறுகள், பல காலக்கட்டங்களில் வெவ்வேறு காரணிகளால் வேறுபட்டாலும், ஒவ்வொரு பரப்பிலும் அல்லது இனக்குழுவிலும் உள்ளோர் அவர்களின் தனித்தன்மையை மரபுவழிக் கொண்டுசெல்வர். இவ்வாறாக, ஒருபடித்தான பண்பாட்டுக் கூறுகளை ஒரு நிலப்பரப்பில் மக்கள் கொண்டிருப்பின், அப்பரப்பு 'பண்பாட்டுப் பரப்பு' அல்லது 'பண்பாட்டுப் பகுதி' என்று கூறப்படும். இடம்விட்டு இடம்பெயரும் இனக்குழுக்கள் தாங்கள் செல்லுமிடங்களிலெல்லாம் தங்களின் பண்பாட்டையும் பரவச்செய்கின்றனர். இதனாலும் 'பண்பாட்டுப் பரப்புகள்' (Culture areas) உருவாக்கப்படுகின்றன. எவ்வாறிருப்பினும், வாழிட இயற்கைச் சூழ்நிலைகள், பண்பாட்டு அமைப்புகளின் எல்லையைக் கட்டுப்படுத்துகின்றன. ஒரே தன்மையான பண்பாட்டைக் கொண்ட குழுக்களைப் பகுத்து ஆய்வதில் முதன்மையான இரண்டு முறைகள் உள்ளன. ஒன்று, பண்பாட்டுத் தொடர்புகளை அறிந்து கொள்ள அடிப்படையான பல அளவைகளைக் கொள்ளுதல்; மற்றொன்று, இனப்பரப்பளவியலார் வாயிலாகக் கிடைக்கும் பல்வேறு விவரங்களை ஒப்பிட்டறிதல்.

தான் சார்ந்திருக்கும் சமூகத்தின் உறுப்பினர்களோடு கூடிவாழ்ந்து, தன் வாழ்க்கை நெறிகளையும் வாழ்க்கைச் செய்ற்பாடுகளையும் நன்கு வெளிப்படச் செய்வதே பண்பாடாகும். இது, கற்றுக்கொள்ளக் கூடியதும் தன் சமூகத்தின் உறுப்பினர்களுடன் முழுமையாகப் பகிர்ந்து கொள்ளக் கூடியதுமாகும். பண்பாட்டின் அகக்கூறுகள், சமூக உறுப்பினர்களிடையே அவர்களின் சிந்தனை, உணர்வு, நடத்தை, ஆகிய அமைப்புகளில் வெளிப்படும் தன்மையுடையன. இது, ஒரு குறிப்பிட்ட இனக்குழு, சூழ்நிலை, புவியமைப்பு, மொழி, பொருளாதாரம், அரசியல், சமூக அமைப்பு, முதலான காரணிகளைச் சார்ந்து வேறுபட்டுக் காணப்படும். மேற் கூறப்பட்ட அமைப்புகளுடன் வெளிப்படும் பல்வேறு உலகப் பண்பாட்டுப் பரப்புகளை உடன் காணுதல் இக்கருத்தைத் தெளிவுபடுத்தும்.

உலகின் முதன்மையான சில பண்பாட்டுப் பரப்புகளாக நடுகிழக்குப் பகுதி, ஐரோப்பா, ஆப்பிரிக்கா, வடக்கு ஆசியா, தெற்கு ஆசியா, ஓசியானியா, வட அமெரிக்கா, தென் அமெரிக்கா ஆகிய எட்டுப் பகுதிகளைக் கூறலாம். ஆசியாவின் பண்பாட்டுப் பரப்புகளை நோக்குங்கால் ஆசியாவைத் தெற்கு ஆசியா, வடக்கு ஆசியா என்று இரு பகுதிகளாகப் பிரிக்கலாம்.




1. தொன்மை சைபீரியா 2. சைபீரியா
3. யூரேசிய வன்பாலை/மங்கோலியப் பீடபூமி




1. தென் மையம் 2. வடசீனா 3. கொரியா - சப்பான்
4. தென் சீனா 5. இந்தோனேசியா

ஆசியப்பண்பாட்டுப் பகுதிகள்

வடக்கு ஆசியப் பண்பாட்டுப் பரப்பு இசுகாண்டிநேவியா (**Scandinavia**) முந்நீரகத்தின் பெரும்பகுதியாகும். இது ஆர்க்டிக்குப் பகுதியின் வடபாகத்தில் உள்ளடங்கியதாகும். இது கிழக்கே யூரல் மலைத்தொடர் பகுதியையும், தெற்கே யூரேசியப் பாலைப் பகுதியையும் கொண்டது. இசுடெப்பீசுப் (**Steppes**) பகுதியை அடுத்து அதன் எல்லை தியான் சானுக்கு வடக்காகவும், அல்டாய் மலைகள் கோபி பாலைவனம் ஆகியவற்றிற்குக் கிழக்காகவும் விரிகிறது. வடக்கில், சிங்கான் பகுதியும், கிழக்கிலும் தெற்கிலும் சக்காலன் குறில் தீவுகளும் அமைந்துள்ளன.

வடக்கு ஆசிய மக்களிடையே நாடோடி வாழ்க்கை பல்லாயிர ஆண்டுக் காலமாகப் பரவிக் காணப்பட்ட ஒரு பண்பாட்டுக் கூறாகும். ஆர்க்டிக்குக் கடலுக்கு அருகில் வாழும் மக்கள் துருவப் பகுதிக்குரிய பண்பாட்டுத் தகவமைப்புகளைக் கொண்டுள்ளனர். கடல் பாலூட்டி வகைகளை வேட்டையாடுதலையும் மீன்பிடித்தலையும் தங்கள் பிழைப்புத் தொழிலாகப் பேலியோ சைபீரியத் துணைப் பரப்பில் வாழும் மக்கள் கொண்டிருக்கின்றனர். சுக்சி, யாகாகிர், அய்னு ஏனைய வட சைபீரியப் பகுதிகளில் கலைமான்கள் வளர்ப்புக் காணப்படுகின்றது. இப்பகுதிக்குத் தென்பாகங்களில் மேய்ச்சல் நிலம் மிகுந்திருப்பதால் குதிரைகள், ஆடுகள் முதலான கால்நடைகள் வளர்த்தலை முதன்மைத் தொழிலாகக் கொண்டிருக்கின்றனர்.

இசுடெப்பீசுப் பகுதிகளில் இருவகைச் சிறப்புப் பண்பாடுகள் காணப்பட்டன. மேற்குப் பீடபூமிப்பகுதி மிக்க நீர்வளமும் தானிய விளைச்சலும் பால்வளமும் நிறைந்த பொருளாதாரப் பகுதியாகும். இவ்விடத்தில் நாகரிகம் புதிய கற்காலத்திலிருந்தே தொடர்ந்து படிப்படியாக வளர்ச்சியடைந்து வந்துள்ளது. இப்பகுதியை அடுத்து வறண்ட மங்கோலியப் பீடபூமி உள்ளது. இங்கு ஆடுகள், ஒட்டகங்கள், குதிரைகள் முதலான கால்நடைகளை மேய்த்து வாழும் பண்பாடு காணப்படுகிறது. குதிரைகள் நிறைந்த இக்கிழக்குப் பகுதி, வடக்குச் சைபீரியாவின் இடைக் கற்காலக் காலத்தில் மேய்ச்சல் நாகரிகமாகக் காணப்பட்டது என்று கூறப்படுகிறது.

தெற்கு ஆசியப் பகுதி என்பது முன்னர்க் குறிப்பிட்ட பகுதிகள் நீங்கலாக, எஞ்சிய ஆசியக் கண்டப் பரப்பைக் குறிக்கும். இதில் சப்பான், பிலிப்பைன்சு, இந்தோனேசியா, இந்தியப் பெருங்கடலில் உள்ள மடகாசுகர் தீவுக் கூட்டம் ஆகியவை அடங்கும்.

புதிய கற்காலத்தில் தென்மேற்கு ஆசியாவில் நாடோடி மக்களின் நாகரிகம், 6000 ஆண்டுகளுக்கு முற்பட்ட சிந்து சமவெளி நாகரிகத்தில் காணப்படுகிறது. மொகஞ்சதாரோ, அரப்பா ஆகிய வளர்ச்சியடைந்த நாகரிகப் பகுதியிலிருந்து தட்பவெப்ப நிலை மாற்றத்தாலும், நிலப்பரப்பை மிகுதியாகப் பயன்படுத்தும் தேவையாலும், வடபகுதிகளிலிருந்து பெருமளவு மக்கள் இடப்பெயர்ச்சி அடைந்ததாலும் இந்த நாகரிகப் பரப்பிலிருந்து மற்றப் பகுதிகளுக்கு மக்கள் குடியேறினர். இந்தியாவின் மேற்குப் பகுதியினருக்கும், மையக் கிழக்குப் பகுதியினருக்கும் இடையே 4000 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே கடல்வழி வணிகம் நடந்து வந்தது. இந்தியத் துணைக் கண்டத்தில் காணப்படும் பண்பாட்டு வேறுபாடுகள் வடபகுதியிலிருந்தும் மேற்குப் பகுதியிலிருந்தும் அடிக்கடி நடந்த கைப்பற்றுதலின் சான்றுகளாக விளங்கு

கின்றன. இன்றும் ஏராளமான சிற்றூர்களில் பயிர்த் தொழில் முதன்மைத் தொழிலாகவும், கால்நடை வளர்த்தல் துணைத் தொழிலாகவும் காணப் படுகின்றன.

கிழக்கிலும் தெற்கிலுமான விந்திய மலைத் தொடர்கள் வறண்ட வடபகுதியையும் வெப்ப மண்டலத் தென்னிந்தியாவையும் பிரிக்கின்றன. சீனா வில் உண்டான வேளாண்மை முறைகள் மற்றப் பகுதி களிலும் பரவின. இந்தியா, இலங்கை, அந்தமான் தீவுகளில் இன்றும் மையக்கிழக்கு அல்லாத நாகரிகப் பண்புகளின் கூறுகள் காணப்படுகின்றன. கிழக்குப் பகுதியில் காணப்பட்ட வேட்டையாடுதல், உணவு சேகரித்தல் போன்ற பொருளாதார முறை படிப் படியாக மாறி விவசாயத்தை ஏற்றுக்கொண்டது.

உயர் பகுதித் தாவரங்கள், குறிப்பாக வட்சீனப் பகுதியில் யாக் என்னும் மாட்டுவகை சார்ந்த மேய்ச் சல் நிலம் ஆகியவை இமாலய, திபேத்தியப் பகுதிகளில் மக்களின் வாழ்க்கைக்கு அடிப்படையாக இருந்தன.

சுமார் 8000 ஆண்டுகளுக்கு முன்பு வடக்கு மையச் சீனாவின் உட் பகுதியான வெய், மஞ்சள் ஆறுகளின் சந்திப்பு முதலான பகுதிகள், தென்மேற்கு ஆசிய அல்லது நடு அமெரிக்க நாடுகளின் வேளாண்மையைச் சார்ந்த நாகரிகத்தைப் பெற்றிருந்தன. இப் பண்பாடு 'யாங்-சான்' பண்பாடு எனக் கூறப் பட்டது. இப்பகுதி மக்கள் தினைப் பயிரை விளை வித்து வாழ்ந்து வந்தனர். இத்தகைய பண்பாடு கிழக்குப் பகுதி, தெற்குப் பகுதி, சதுப்பு நிலப்பகுதி முதலான பகுதிகளுக்குப் பின்னாளில்தான் பரவியது. வடகிழக்குச் சீனாவின் கொன் டங்குப் பகுதியில் 5000 ஆண்டுகட்கு முன்பே இலுங்தான் நாகரிகம் பரவி யது. இது யாங்-சான் பண்பாட்டை அடிப்படை யாகக் கொண்டு தென்மேற்கு ஆசியாவிலிருந்து கொண்டுவரப்பட்ட தானியங்கள், கால்நடைகள் முதலானவற்றை ஏற்றுக் கொண்டதாகும். சோயா பீன்சு என்னும் பயிர்வகை இந்தப் பகுதியில்தான் முதன் முதலில் தோன்றியதாகக் கருதப்படுகிறது. ஏறக்குறைய 3700 ஆண்டுகளுக்கு முன்பு சீனாவின் மிகத் தொன்மையான சாங் என்னும் அரசர்குடி தோன்றிய இடமாகவும் இது கருதப்படுகிறது.

துருவப் பகுதித் தொழில் நுட்ப முறைகளைக் கொண்ட சைபீரிய மக்கள் சுமார் 10,000 ஆண்டு கட்கு முன்பு கொரியாவிலும் சப்பானிலும் வந்து குடியேறினர் என்பது கூறப்படுகிறது. இவர்கள் கடல் வாழினங்கள், தோட்டப் பயிர், தானியவகைகள், மாமிசம் முதலானவற்றை உண்டனர். அரிசியும் கிழங்கு வகைகளும் இத்தகைய குளிர்ப் பகுதிக்கு ஏற்ற வவாக உணரப்பட்டு மலாயாத் தீவுகளில் ஏறக்குறைய 4000 ஆண்டுகட்கு முன்பு பரவத் தொடங்கின. ஆனால், இங்கு மேய்ச்சல் நாகரிகம் காணப்பெற வில்லை. ஏறக்குறைய 3000 ஆண்டுகட்கு முன்பு கொரியா முந்நீரகத்திலிருந்து இடப் பெயர்ச்சி யடைந்த மக்கள் பயிர்த் தொழிலின் உயர்ந்ததொழில் நுட்ப முறைகளைத் தென்பகுதித் தீவுகளில்பரப்பினர். பின்னர், இந்தோனேசியாவின் தொன்மையான மக்களையும் அய்னு மக்களையும் வென்று வட பகுதிக்குச் சென்றனர்.

தென் சீனாவிலும், மலேசியா முந்நீரகத்திலும் சுமார் 8000 ஆண்டுகட்கு முன்பு தொல்குடியினர் வந்தேறினர். இவர்கள், வள்ளிக்கிழங்கு, சேப்பங் கிழங்கு, எலுமிச்சம்பழம், தேங்காய், நெல் போன்ற வடசீனாப் பயிர்களைச் சாகுபடி செய்யத் தொடங்கி னர். வெப்பப் பகுதிகளில் வசிக்கும் மக்களுக்கு ஏற்ற பயிர் வகைகளைத் தோட்டங்களில் விளைவிக்கும் முறைகளை இப்பகுதியில் பரப்பினர். தென்சீனாவின் பெரிய சமூகங்கள் வடபகுதியிலிருந்த அரசாங்கங்க ளுடன் இணைக்கப்பட்டன.

இந்தக் கடற்கரை முந்நீரகம், தீவுகள் ஆகிய வற்றில் வாழ்ந்த மக்கள் கடல் வாழ்க்கைக்குத் தேவை யான படகு கட்டுதல் முறைகளைப் பெரிதும் மாற்றி யமைத்தனர். இவர்களின் தெற்கு ஆசியத் தோட்ட வாழ்க்கை இச்சூழ்நிலையில் மிகவும் இயல்பானதாக அமைந்தது. அதனால், அடுத்த 6000 ஆண்டுகளில் வெப்பப் பகுதி, மித வெப்பப் பகுதிகளான மடகா சுகர், ஆப்பிரிக்கக் கடற்கரை, கிழக்குத் தீவுகள், சிலித்தீவுக் கடற்கரை ஆகியவற்றில் வசித்தனர். இதன் பாதிப்பு ஆப்பிரிக்காவின் உட்பகுதியிலும் உண்டாகியது. அலைந்து திரியும் கோங்கோ சமுதா யத்தினர் தோட்டப் பயிர்த் தொழிலுக்கான சூழலை மழை ஏற்படுத்தித் தரும்வரை வேட்டை உணவு சேகரித்தலையே தொழிலாகக் கொண்டிருந்தனர்.

ஆ.செ.

துணை நூல்கள்:

Linton, Ralph. The Tree of Culture, Knopf, New York, 1955.

Murdock, G. P. Outlines of World Cultures, Human Relation Area Files, New Haven, 1972.

**ஆசிய-பசுபிக்குத் தேங்காய்க் குழு:** தேங் காய் உற்பத்தி செய்யும் ஆசிய நாடுகள், தேங்காய், மற் றும் அதனைச் சார்ந்த தொழில்களைப் பெருமளவில் வளர்ச்சியுறச் செய்யும் நோக்குடன் 1969-ஆம் ஆண்டு சூலைத் திங்கள் 30-ஆம் நாள் ஆசியத் தேங்காய்க் குழு என்ற அமைப்பினை உருவாக்கின. இதற்குப் பின் 1975-இல் ஆசிய பசுபிக்கு நாடுகளுக்

கான ஐக்கிய நாட்டுப் பொருளாதார, சமுதாய நிறுவனம் (ESCAP), தூரக் கிழக்குப் பசுபிக்கு நாடுகளின் ஒத்துழைப்பின் தேவையை வலியுறுத்தியது. ஆகவே, ஆசியத் தேங்காய்க் குழு, பசுபிக்கு நாடுகளையும் உறுப்பினர்களாக்கி, ஆசியப் பசுபிக்குத் தேங்காய்க் குழுவாக (Asia & Pacific Cocanut Community) உருப்பெற்றது.

**குழுவின் நோக்கங்கள்:**

1. தேங்காய் உற்பத்தியைப் பெருக்குவதன் மூலம் விரைவான முன்னேற்றத்தை அடைதல்.
2. தேங்காய் சார்ந்த தொழில் முறைகளில் புதிய உத்தியைக் கையாண்டு அவற்றைப் புதுமைப்படுத்துதல்.
3. தேங்காய் விற்பனையை மிகுதியாக்கல்.
4. கூட்டுறவு முறையில் இத்தொழிலுக்கான ஆராய்ச்சி வசதிகளை உருவாக்கிப் புரட்சிகரமான முறையில் பலன்களைப் பெறுதல் ஆகியன.

இக்குழுவின் தலைமைச் செயலகம் இந்தோனேசியத் தலைநகரான சகர்த்தா (Jakarta) வில் செயற்படுகிறது.

குழுவின் இப்போதைய உறுப்பு நாடுகள்: இந்தியா, இந்தோனேசியா, மலேசியா, பாபுவா (Papua), நியூ கினியா (New Guinea), பிலிப்பைன்சு, சாலோமன் தீவுகள், சிரீலங்கா (SriLanka), தாய்லாந்து, மேற்குச் சமோவா ஆகியன.

**ஆசியப் பசுபிக்குப்பொருளாதார, சமூக நிறுவனம்:** இந்நிறுவனம் ஆசியப் பசுபிக்கு மண்டல நாடுகளின் பொருளாதார வளர்ச்சியை ஊக்குவித்துச் சமுதாய நலனைப் பேணவும், அதற்கான பன்னாட்டு ஒத்துழைப்பை உருவாக்கவும் 1947-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 28-ஆம் நாள் தொடங்கப்பட்டது. இது மண்டல நாடுகளுக்கிடையே புதிய தொழில் நுட்ப அறிவியல் கலைகளைப் புகுத்துதலும், பொருளாதார, சமூக முன்னேற்றத் திட்டங்களுக்கான அறிவுரைகளை வழங்குதலும் ஆகிய நோக்கங்களைக் கொண்டது, தலைமைச் செயலகம் பாங்காக்கு (Bangkok) என்னுமிடத்தில் அமைக்கப்பட்டுள்ளது. இந்நிறுவனத்தில் இந்தியா உட்பட 35 ஆசிய, பசுபிக்கு மண்டல, பொதுவுடைமை, முதலாளித்துவ, சமத்துவ நாடுகள் உறுப்பு நிலை பெற்றுள்ளன. புருணை (Brunei), குக்குத் தீவுகள் (Cook Islands), குவாம் (Guam), ஆங்காங்கு (Hong Kong), கிரிபடி (Kiribati), நியு (New), பசுபிக்குத் தீவுகளின் பொறுப்பாட்சிப் பகுதி (The Trust Territory of the Pacific Islands), துவாலு (Tuvalu), வானாது (Vanuatu) ஆகிய நாடுகள் துணை உறுப்பு நாடுகளாகவும் பங்கு பெற்றுள்ளன.

இந்நிறுவனத்தின் செயலகத்துடன் பல திட்ட வாரியங்களும், செயல்முறைக் கூடங்களும் (Operational Units) இணைந்தும் தனித்தனியாகவும் திட்டங்களின் தேவைக்கேற்றவாறு செயலாற்றுகின்றன. அவற்றுள் உணவு, வேளாண்மை, பன்னாட்டு வாணிகம், தொழில், மக்கள் குடியமைப்பு மற்றும் நுட்ப அறிவு (Human Settlement & Technology), முன்னேற்றத் திட்டமிடல் (Development Planning), தேசியப் போக்குவரத்துக் கழகம் (Trans National Corporation), போக்குவரத்துத் தொடர்புச் சுற்றுலா, புள்ளி விவரம் (Statistics), மக்கள்தொகை, சமூக முன்னேற்றம், உள்நாட்டு நீர்வழி, துறைமுகம் ஆகிய திட்ட வாரியங்களும் குழுமங்களும் சிறப்பானவை.

இந்நிறுவனத்தின் 36-ஆம் கூட்டத்தொடரில், 10 ஆண்டுக்கான திட்டங்கள் 1980 மார்ச்சில் விரிவான கலந்துரையாடலுக்குப் பின் வரையறை செய்யப்பட்டன. பன்னாட்டு முன்னேற்றக் குறிக்கோளுக்காக மண்டல நாடுகளின் பங்கு ஆராயப்பட்டது. திட்ட ஒதுக்கீடுகளுக்காக உடனடியாக 18 மிலியன் தாலர் வழங்க உறுப்பு நாடுகள் ஒப்புதல் அளித்தன. ஆசிய பசுபிக்கு முன்னேற்ற மையத்துடன் (Asian Pacific Development Centre) இணைந்து செயலாற்ற, ஆராய்ச்சிப் பயிற்சி நிறுவனங்கள் தொடங்கப்பட்டன. மண்டல நாடுகளுக்கிடையே மறு காப்பீட்டுக் கழகம் (Re-Insurance Corporation) ஒன்று அமைக்கப்பட்டது. குறுகிய கால எரிபொருள் ஆற்றலின் தேவைக் கொள்கை பற்றிய ஆய்வு இதன் செயலகத்தால் மேற்கொள்ளப்பட்டது. ஆசிய பசுபிக்குத் தொலைத் தகவல் தொடர்பு நிலையமும் (Asia-PacificTele-Communication) நிறுவப்பட்டது. இந்நிறுவனம், ஐக்கிய நாட்டு முன்னேற்றத் திட்டங்களுடன் இணைந்து 22.5 மிலியன் தாலர் மதிப்புள்ள நுட்ப அறிவியல் ஒத்துழைப்புத் திட்டங்களை 1982 முதல் 1986-ஆம் ஆண்டு வரை செயற்படுத்தவிருக்கும் பணிக்கென மேற்கொண்டுள்ளது. அவற்றைச் செயற்படுத்துவதற்காக 42 பணி மனைகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. மண்டல நுட்ப வல்லுநர்கள் எனப் பதினொருவர் அறிவுரையாளர்களாக அமர்த்தப்பட்டுள்ளார்கள்.

இந்நிறுவனத்தின் உணவு, வேளாண்மை பற்றிய வாரியம், உணவைப் பாதுகாக்கும் நுட்ப முறைகளிலும், வேளாண்மை உற்பத்தியைப் பன் மடங்காகப் பெருக்குவதற்கான திட்டங்களிலும் முனைந்துள்ளது. இந்தோனேசியாவில் போகோர் (Bogore) என்னும் இடத்தில் தானியங்கள், பருப்பு வகைகள், கிழங்கு, தண்டு வகைகளின் நுட்ப அறிவை வளர்த்து,

அவற்றை மண்டல நாடுகளுக்குப் பரப்புவதற்கென் ஆராய்ச்சியும் முன்னேற்றமும் ஒருங்கிணைந்த மண்டல மையம் அமைக்கப்பட்டது. பன்னாட்டு வாணிகத் திட்டத்தின்கீழ் முன்னேற்றம் அடைந்த நாடுகள், பின்தங்கிய நாடுகள், மண்டலத்திற்குள் வாராத பிற நாடுகள் ஆகியவற்றில் வாணிகம் சிறக்க, வாணிகக் கூட்டுறவுக் குழு (Trade Co-operation Group) வும், வளரும் நாடுகளின் பணிக்கென வாணிக வளர்ச்சி மையமும் (Trade Promotion Centre) செயற்படுகின்றன. நில எல்லையை மட்டுமே கொண்ட நாடுகள் (Land-locked Countries) தங்களுக்குள் கலந்துரையாடி ஒப்பந்தங்கள் செய்து கொள்வதற்கெனத் தனி அமைப்பு ஒன்று 1981-ஆம் ஆண்டு உருவானது.

தொழில், மக்கள் குடியமைப்பு நுட்ப அறிவுத் திட்ட வாரியம், மண்டலத்தின் 6 நாடுகளில் உள்ள வேளாண்மைத் தொழில் துறைகள் பற்றி ஆராய்ச்சி செய்து அறிக்கை கொடுத்துள்ளது. மக்கள் குடியமைப்பிற்கான தொழில்நுட்ப அறிவு வளர்ச்சியடையப் பல கருத்தரங்குகளும் கூட்டாய்வுகளும் (Seminars & Symposia) நடத்தியுள்ளது. இவை தொடர்பான திட்டங்களை ஐக்கிய நாடுகளின் துணையுடன் செயற்படுத்துகிறது. பத்தாண்டுப் பன்னாட்டுக் குடிநீர் அளிப்புச் சுகாதாரத் திட்டத்தின் கீழ் (International Drinking Water Supply & Sanitation Decade 1980-90), இயற்கை வளங்களைப் பயன்படுத்தும் நோக்கத்துடன் மண்டல நாடுகளின் எரிபொருள் ஆற்றல், கடலியல் ஆற்றல் (Ocean Energy), நீர்ப்பாசன முன்னேற்றத் திட்டங்கள் ஆகியவை நிறைவேற்றப்படுகின்றன. சுற்றுப்புறச் சூழ்நிலைகளின் நலத்தைப் பாதுகாக்கவும், தரத்தை உயர்த்தவும் தேவையான சட்டங்களை நிறைவேற்றவும் அக்கறை கொண்டுள்ளது. அண்மைக் காலத்தில் சீனா, இந்தோனேசியா, மலேசியா, பிலிப்பைன்சு, தாய்லாந்து ஆகிய நாடுகளில் மிகுதியான நீர்மக்கரியக (Hydro Carbon) வளம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளதால், அதன் அளவை மதிப்பீடு செய்யத் தென்கிழக்கு ஆசிய நாடுகளின் கடற்கரையை ஒட்டியுள்ள பகுதியில் (Off shore), ஆராய்ச்சிக்கெனத் தனிச் சிறப்புத் திட்டங்களை மேற்கொண்டுள்ளது. ஐக்கிய நாட்டு முன்னேற்றத் திட்டம், தாதுப்பொருள் (Mineral) வள ஆய்வுக்கென 2.5 மிலியன் தாலர் உதவித்தொகை வழங்கியுள்ளது. போக்குவரத்துத் துறையில் எரிபொருள் ஆற்றலைச் சிக்கனமாகப் பயன்படுத்தும் முறைகளை ஆராயவும், போக்குவரத்துத் துறையை முன்னேற்றமடையச் செய்து புதுமை மயமாக்கவும், இருப்புப்பாதை (Railways), பெருஞ்சாலை, உள்நாட்டு நீர்வழி, கடல்வழி வசதிகள் ஆகியவற்றைப் பெருக்கவும், துறைமுகம், தொலைத் தொடர்பு முன்னேற்றத் திட்டங்கள் ஆகியவற்றிற்குச் சிறப்பிடம் கொடுக்கப்பட்டுள்ளது. புள்ளிவிவர வாரியமானது, மக்கள்தொகை இயல், குடியமைப்புப் போன்ற பிற ஆய்வுத் திட்டங்களுக்கான நம்பத்தக்க புள்ளி விவரங்களை அவ்வப்போது சேகரித்துத் தருகிறது. மக்கள் தொகைக் குழுமம், இனப்பெருக்க நாட்டத்தினால் (Fertility Behaviour) ஏற்படும் விளைவுகளை மதிப்பிட்டு, ஒப்பீடு ஆய்வுகளை, ஐக்கிய நாட்டு உலக இனப்பெருக்க வள ஆராய்ச்சியுடன் ஒருங்கிணைத்து, நான்காண்டுத் திட்டமாக (1982-1985) நடத்தி வருகிறது.

சமூக முன்னேற்றக் குழுமம், 1980-ஆம் ஆண்டு தொடங்கப் பெற்று, மண்டல நாடுகளுக்கிடையே சமுதாய நலம் காக்கும் நோக்கத்துடனும், பெண்கள் நல ஒற்றுமையைப் பேணும் நாட்டத்துடனும் கருத்தரங்குகளும் மாநாடுகளும் நடத்துகிறது. இது 1980-ஆம் ஆண்டில் நடந்த ஐக்கிய நாடுகளின் பத்தாண்டு உலகப் பெண்கள் மாநாட்டில் பசுபிக்குப் பெண்களின் பங்கு, காடு வளத்துறை, தொழில்துறை, வருவாய்ப் பெருக்கம், தொழில்களில் பெண்களின் நிலை ஆகியவை பற்றிய ஆய்வுகள் நடத்தியது. தொழில்நுட்பத் திறனை வளரும் நாடுகளிடையே ஊக்குவிப்பதற்காக, 1950-ஆம் ஆண்டு பிப்பிரவரித் திங்களில், இரண்டாம் ஆசியப் பசுபிக்கு நாடுகளின் சமூக நல அமைச்சர்கள் மாநாடு புதுதில்லியில் நடைபெற்றது.

இலாவோசு (Laos), தாய்லாந்து, வியட்நாம், கம்பூச்சியா (Compuchea) நாடுகளைக் கொண்ட இடைக்கால மீகாங்குக் (Interim Mekong) குழுமம், மீகாங்கு ஆற்றுப் படுகைத் திட்டத்தின்கீழ் நீரின் பண்பியல் (Hydrology), வானிலை (Meterology), படுகைத் திட்டம் (Basin Planning), தலையான கிளை ஆறு (Main Stream Tributary), நீர்வழிப் போக்குவரத்து, வேளாண்மை, மீன்வளம், சமூகத் திட்டம் ஆகியவற்றைச் சார்ந்த 32 திட்டங்களைக் கண்காணித்துச் செயல்முறைப்படுத்துகிறது. இவற்றுள் தனிச் சிறப்புப் பெறும் திட்டங்களை மீகாங்கு ஆற்றுப் பொறுப்புக் குழு (Mekong River Commission), தொடர்புள்ள நாட்டு அரசின் உதவியுடன் நிறைவேற்றுகிறது. ஐ.நா. முன்னேற்றத் திட்டம் 1982 ஆம் ஆண்டு மீகாங்கின் 5-ஆம் கட்டத் திட்டப் பணிக்காக் (Phase V Project) 4.5 மிலியன் தாலர் வழங்கியது. பாங்காக்கு 1980-ஆம் ஆண்டு (Bangkok & Hochi Minh) நகரங்களில் நடைபெற்ற 9-ஆம் மாநாடுகளில் திட்டங்களின் வளர்ச்சி மீண்டும் ஆய்வு செய்யப்பட்டது. புதிய திட்டங்களுக்கு அனுமதி வழங்கப்பட்டது. திட்டங்கள் விரைவாக நிறைவேற்றப்பட வெளிநாட்டுச் செலாவணியாகவும் கடனாகவும் கொடையாகவும் 62 மிலியன் தாலர் நிதி உதவி வழங்கத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன.

**ஆசிய முன்னேற்ற வங்கி:** ஐக்கிய நாட்டுப் பொருளாதாரச் சமுதாயத் திட்டக் குழுவின் ஆதர வில் 1966-ஆம் ஆண்டு திசம்பர் 19-இல் ஆசிய முன்னேற்ற வங்கி (Asian Development Bank - ADB) உருவாகிச் செயற்படத் தொடங்கியது. இவ்வங்கி 31 உறுப்பு நாடுகளுடன் தொடங்கி இப்போது 29 மண்டல நாடுகளுடன் 43 உறுப்பினர்களைக் கொண்ட தாக வளர்ந்துள்ளது.

பல்வகைச் சிறப்பு நிதி, வேளாண்மைச் சிறப்பு நிதி போன்றவற்றின் பொறுப்புகளும் 1974 சூன் திங்களிலிருந்து இவ்வங்கியின்கீழ்க் கொண்டுவரப் பட்டன. இவற்றுடன் மென்மைக் கடன்களையும் (Soft Loans) இவ்வங்கி வழங்குகிறது. வங்கியின் நிதி, தொழில் வளர்ச்சியடைந்த உறுப்பு நாடுகளின் உதவித்தொகையைக் கொண்டே அமைகிறது. உறுப்பு நாடுகளின் உறுப்பினர் கட்டணம், உலக மூலதன அங்காடியில் இருந்து கிடைக்கும் பெரும் கடன்கள் ஆகியவை இவ்வங்கியின் பொதுவான மூல தன வளத்தைப் பெருக்குகின்றன.

வங்கி ஒப்புதல் பெற்ற மொத்தக் கடன் மதிப்பு (1980-ஆம் ஆண்டின்படி) 15,000 மிலியன் உருபாய் (1044 மிலியன் தாலர்) ஆகும். அத்தொகையில் ஏற்கனவே கொடுக்கப்பட்ட கடனின் மதிப்பு 6369 மிலியன் உருபாய் (579 மிலியன் தாலர்) ஆகும். அத் தொகையானது இதற்கு முந்தைய கடன் மதிப்பைக் காட்டிலும் 15 விழுக்காடு மிகுதியாகும். மொத்தக் கடன் அளிப்பில் மூன்றில் ஒரு பங்கு வளர்ந்து வரும் உறுப்பு நாடுகளுக்குச் சலுகையின் அடிப்படையில் வழங்கப்படுகிறது. கடன் அளிப்பில் உச்ச நிலையைத் தாண்டி விட்டது மட்டுமன்றிப் பல புதிய கடன் வழி முறைகளிலும் முன்னேற்ற நிதி ஈடுபாடுகளிலும் முனைந்து செயற்படுகிறது. தனிப்பட்ட திட்டங் களுக்கு என ஒதுக்கப்படாமல் பொது முன்னேற்றத் திற்காக ஒதுக்கப்பட்ட துறைக் கடன்கள் இப்போது இந்தோனேசியா, தாய்லாந்து போன்ற நாடுகளுக்கு அடிப்படைப் பொருளாதார முன்னேற்றத்திற்காக வும் மூல வளத்தைப் பயன்படுத்துதற்காகவும் வழங்கப்படுகின்றன. இவ்வங்கியின் சார்பில் மண்டல அளவிலான எரிபொருள் ஆராய்ச்சி மேற்கொள்ளப் பட்டு, உறுப்பு நாடுகளின் எரிபொருள் முன்னேற்றத் திற்கான திட்டங்கள் வகுக்கப்படுகின்றன. நுண்ணி யல் (Technical) மற்றும் கடன் வசதிகளுக்கான உதவிப் பணியையும் இவ்வங்கி ஏற்று நிறைவேற்று கிறது. எரிபொருள் நெருக்கடியின் காரணத்தால் வணிக வங்கி மூலம் 'துணை நிதியம்' என்ற கோட் பாட்டின் கீழ், 179.3 மிலியன் உருபாய் (16.3 மிலியன் தாலர்) மதிப்பிற்கு மின் உற்பத்தித் திட்டங்களுக் காகத் தாய்லாந்து, கொரியாக் குடியரசு போன்ற நாடுகளுக்கு நிதி வழங்கியுள்ளது.

இவ்வங்கி 1980-ஆம் ஆண்டில் மட்டும் 17 உறுப்பு நாடுகளுக்கு 2 துறைக் கடன்களும், 2 திட்டக் கடன் களும், 50 திட்டங்களுக்கான ஒரு பல்வகைக் கடனும் உட்பட மொத்தம் 58 கடன்கள் வழங்க அனுமதி அளித்தது. மூன்றில் ஒரு பங்குக் கடன் வங்கியின் ஏழ்மை நாடுகளுக்கும், வளர்ச்சி குறைந்த நாடு களுக்கும் என ஒதுக்கப்படுகிறது.

இந்நிறுவனம் மூலதன வளத்திலிருந்து இந்நாள் வரை அளிக்கப்பட்ட கடனின் மதிப்பு 10,494 மிலியன் உருபாய் (959 மிலியன் தாலர்) ஆகும். மேலும் 56 நாடுகளுக்குத் திட்டங்கள் மற்றும் செயல்முறைகளுக் கெனக் கூட்டுறவு வகை உதவி 156.2 மிலியன் உருபாய் (14.2 மிலியன் தாலர்). தொழில் நுட்ப அறிவைப் பெறுவதற்கான வசதியும் செய்து தரப்படுகிறது.

**துறைக் கடன்கள்:** வேளாண்மை, வேளாண்மை சார்ந்த தொழில் துறை, எரிபொருள் வளர்ச்சித் துறைகளின் முன்னேற்றம் ஆகிய பொறுப்புகளை இவ்வங்கி மேற்கொண்டுள்ளதால், இத்துறைகளுக்கு மிகுதியாகக் கடன்களை வழங்குகிறது. இவ்வங்கி 1980-ஆம் ஆண்டில் 33 விழுக்காடு வேளாண்மைத் துறைக்கும், 27 விழுக்காடு மூல எரிபொருள் துறைக் கும், 15.6 விழுக்காடு போக்குவரத்துத் துறைக்கும் கடனாக வழங்கியுள்ளது. கல்வி, நகராண்மை, சுகாதாரம் ஆகிய துறைகளுக்கு முதன்மை அளித்துச் 'சிறப்பு நிதி' என்ற வகையில் கடன்களும் வழங்கு கிறது.

ஆசிய முன்னேற்ற வங்கி அளிக்கும் கடன் வசதி கள் நல்ல பயன் விளைவித்தல் வேண்டும் என்ற நோக்கத்துடன் இதன் ஒழுங்குமுறைகள், மற்றைய நிதி நிறுவனங்களின் மூலமாகவும் கூட்டாகவும் அமைகின்றன. இதனால், மேற் கொண்டு கடன் இழப்புகள் தவிர்க்கப்படுகின்றன. மற்றைய நிதி நிறு வனங்கள் 1980-ஆம் ஆண்டு 4,301 மிலியன் உருபாய் (391 மிலியன் தாலர்) கடனாக வழங்கிய போது இவ் வங்கி மட்டும் தனியே, 6,600 மிலியன் உருபாயை (600 மிலியன் தாலர்) 22 நாடுகளுக்கு வழங்கியுள்ளது. தற்போக்கில் நாடுகள் மற்ற நாடுகளுடன் ஏற் படுத்திக் கொள்ளும் நேரடித் தொடர்பின் மூலம் பெறும் உதவி முறையினால், இவ்வங்கியின் நிதி உதவி குறைந்து வருகிறது.

ஆசியப் பொருளாதார வங்கியின் கடன் விகித முறையைச் சீர்தூக்கும் திட்டத்தின் கீழ் 1981 இல். கடன் வீதம் 9.25 விழுக்காடாக உயர்த்தப்பட்டது. சிறப்பு நிதிக் கடன்களுக்கு வட்டியின்றி ஒரு விழுக்

காடு பணிக்கட்டணம் மட்டுமே வசூலிக்கப்படுகிறது. ஆளுநர்குழு வளர்ச்சியடைந்த உறுப்பு நாடுகளிலிருந்து, 22,000 மிலியன் உருபாய் (2 மிலியன் தாலர்) அடிப் படைப் பங்காகவும், 1,650 மிலியன் உருபாய் (150 மிலியன் தாலர்) பின் சேர்க்கையாகவும் பெற்றுக் கொள்ள 1978-ஆம் ஆண்டிலிருந்து இந்த வங்கி அதிகாரம் பெற்றது.

இவ்வங்கி 1980-ஆம் ஆண்டு இறுதி வரை 24 நாடுகளுக்கு 455 திட்டங்களுக்காகக் கொடுத்துள்ள மொத்தக் கடனின் மதிப்பு 88,990 மிலியன் உருபாய் (8.09 மிலியன் தாலர்) ஆகும். சாதாரண மூலதன வளத்தைப் பெருக்குவதற்காக 1980-இல் 7 கடன் ஒப்பந்தங்களுக்கு ஒப்புதலிட்டுள்ளது. இக்கடன் தொகையின் மொத்த மதிப்பு 50.358 மிலியன் உருபாய் (457.8 மிலியன் தாலர்). இவ்வங்கி 1981-ஆம் ஆண்டின் தொடக்கத்தில் சவுதி அரேபியச் செலாவணி நிறுவனத்திலிருந்து கடன் பெறவும், சுவிசு, தச்சு (Dutch), சப்பான் ஆகிய நாடுகளின் மூல தன அங்காடிக் கடன்களைப் பெறவும் திட்டமிட்டது.

இதன் ஆளுநர் குழு 1983-87 காலத்திற்கான மூலதனத்தேவைகளையும் அதற்கான திட்டங் களையும் வகுத்திட 1981-ஆம் ஆண்டு ஏப்பிரல், மே ஆகிய திங்களில் செனிவாவில் கூடியது. நிதி வழங்கும் நாடுகளின் தளர்ச்சி நிலையினாலும், அமெரிக்க ஐக்கிய நாடு தன் உதவித்தொகையை 600.16 மிலியன் உருபாய் (54.56 மிலியன் டாலர்) அளவிற்குக் குறைத்ததன் காரணமாகவும் வங்கியின் பணியில் பாதிப்பு ஏற்படும் நிலை உருவாகியுள்ளது. இந்தியா விண்ணப்பித்துள்ள அதன் முதல் கடன் கோரிக் கையையும் இவ்வாளுநர் குழு இப்போது அறிவித் துள்ளது.

துணை நூல்கள்:

**Bhagwati, Jagdish,** The Economics of Under Developed Countires, World University Library. London, 1971.

**Denoon, David. B.H.,** The New International Economic Order, The Macmillan Press Limited, New York, 1980.

**Kindle Berger, Charles. P. & Bruce Herrick,** Economic Development, Mc Graw-Hill Kogakusha Limited, Tokyo, 1977.

**Tiwari M.M.,** External Resources and Economic Development in India, B.R. Publishing Corporation, New Delhi, 1982.

***ஆசியா*** உலகிலேயே பரப்பளவிலும் மக்கள் தொகையிலும் மிகப்பெரியதொரு கண்டமாகும். உலகப்பரப்பளவில் ஏறத்தாழ மூன்றில் ஒருபங்கு ஆசியாவைச் சார்ந்ததாகும்; மக்கள் தொகையில் சற்றேறக் குறைய ஐந்தில் மூன்று பங்கு மக்கள் இக் கண்டத்தில் வாழ்கிறார்கள். மேற்கில் ஆப்பிரிக்கா, ஐரோப்பாவிலிருந்து கிழக்கில் பசிபிக்குப் பெருங்கடல் வரை இக்கண்டம் விரிந்து பரந்துள்ளது. ஆசியாவின் வடகோடிப் பகுதி, உறைந்த பனிக் கட்டிகளைக் கொண்ட ஆர்க்டிக்கு வட்டத்தில் உள்ளது. ஆனால், தெற்கில் ஆசியா உலகநடுக்கோட்டிற்கு அண்மையில் மிகுந்த வெப்பமண்டலத்தைத் தொட்டு முடிகிறது.

இயற்கைத் தோற்றத்தைப் பொறுத்தமட்டில் ஆசியாவில் காணும் பலவிதமான காட்சிகளைப் போல் வேறு எந்தவொரு கண்டத்திலும் காண முடியாது. உலகப் பெருமலையான இமயமலை இக் கண்டத்தில்தான் உள்ளது. அதேபோல் நீண்ட ஆறுகள், பரந்த பாலைநிலங்கள், விரிந்த சமவெளிகள், உயர்ந்த மேட்டுநிலங்கள், அடர்ந்த காடுகள், வளமான வனங்கள் போன்றவற்றையும் இங்குக் கண்டு மகிழலாம். உலகிலேயே உயர்ந்த இடமும் தாழ்ந்த இடமும் ஆசியாவில்தான் அமைந்துள்ளன. எவரசுட்டு மலையுச்சிமிக உயர்ந்தது. அதன் உயரம் 8,848 மீ. இறந்த கடலைச் (Dead Sea) சார்ந்த கடற் கரை மிகத்தாழ்ந்த இடம். இக்கடற்கரை கடல் மட்டத்திலிருந்து 396 மீ. தாழ்வாக உள்ளது.

ஆசியாக் கண்ட நாடுகள் விதவிதமான அரசியல் அமைப்புகளைக் கொண்டு விளங்குகின்றன. சீனா, உருசியா போன்றவை பொதுவுடைமை நாடுகள்; சவுதி அரேபியா, தாய்லாந்து போன்றவை முடி யாட்சி நாடுகள்; பகுரின், கட்டார், ஐக்கிய அராபிய எமிரேட்டுகள் போன்றவற்றைச் சேக்குகள் ஆள் கின்றனர். இந்தியா, இசுரேல், சப்பான் போன்ற நாடுகள் மக்களாட்சிக் கோட்பாடுகளின் அடிப் படையில் செயற்படுபவை. தொல்லைகள் மூளும் போது ஆசியாவின் பல நாடுகளில் படைத்தலைவர்கள் ஆட்சி நடத்தியும் வருகிறார்கள். மலேசியாவில் உள்ள அரசுகளை ஆளும் ஒன்பது சுல்தான்கள் ஐந் தாண்டுகளுக்கு ஒருமுறை ஒவ்வொருவரும் மாறிமாறி நாட்டின் தனிப்பெரும் தலைவர்களாக இருந்து ஆட்சிபுரிகின்றனர்.

ஆசிய மக்கள் பல்வேறு மாறுபட்ட கூறுபாடு களைக் கொண்டவர்களாகத் திகழ்கின்றனர். மரபுகள், பழக்கவழக்கங்கள், மொழிகள், சமய நம்பிக்கைகள், வாழ்க்கை முறைகள் போன்றவற்றிலும் மக்கள் மாறுபடுகின்றனர்.

ஆசியாவின் நாகரிகம் சற்றேறக்குறைய 5000 ஆண்டுகளுக்குமுன் தொடங்கியது. அப்போது மேலை நாடுகளில் நாகரிகமே தோன்றியிருக்கவில்லை. ஆசியாவில் வாழ்ந்தமக்களே, அங்கு நகரங்

களை அமைக்கவும், முதல் சட்ட அமைப்புகளை உருவாக்கவும் செய்தனர். வேளாண்மைத் தொழிலும் வாணிகமும் முதன்முதல் செய்யத் தொடங்கினர். ஆசியர்களே முதன்முதலாக எழுதும் முறையைக் கண்டவர்கள்; தொடக்ககால இலக்கியங்களை உருவாக்கியவர்கள். உலகில் காணப்படும் பெரும் சமயங்களை தோற்றுவித்தவர்களும் ஆசிரியர்களே. கௌதம புத்தர், கன்பூசியசு, ஏசுநாதர், நபிகள் நாயகம் போன்றவர்கள் புதியசமயங்களை உருவாக்கியவர்கள். காகிதம், வெடிமருந்து, காந்தம் வைத்த திசையறி கருவி, அசையும் எழுத்துகள் போன்றவற்றைக் கண்டுபிடித்தவர்களும் ஆசியர்களே.

ஆசியப் பொருளாதாரம் கி.பி. 16–ஆம் நூற்றாண்டில் வீழ்ச்சியுற்றது. மேலைநாடுகள் விரைந்து முன்னேறத் தொடங்கின. ஐரோப்பிய நாடுகள் கி.பி. 16–ஆம் நூற்றாண்டிற்கும் கி.பி. 19–ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் ஆசியாவின் பெரும் பகுதிகளை வெற்றி கொண்டன. குடியேற்றப் பகுதிகள் ஆசியாவில் அமைக்கப்பெற்றன. ஆனால், 1950–ஆம்ஆண்டுக்குப் பின்னர்ப் பெரும்பாலான ஆசிய நாடுகள் விடுதலை பெற்றன. இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் ஆசியாவில் பொதுவுடைமை நாடுகளுக்கும் பொதுவுடைமையை ஏற்றுக்கொள்ளாத நாடுகளுக்குமிடையே சச்சரவுகள் மூண்டன.

ஆசியாவில் ஏறத்தாழ 266,90,00,000 மக்கள் வாழ்கின்றனர். உலக மக்கள் தொகையில் ஆசியாவின் எண்ணிக்கை மட்டும் 59 விழுக்காடாகும். சீனாவில்தான் ஆசியாக்கண்டத்திலேயே ஏன் உலகிலேயே-மிகுதியான மக்கள் வாழ்கிறார்கள். இந்தியா இரண்டாம் இடத்தைப் பெறுகிறது. சீனாவிலும் இந்தியாவிலும் மட்டும் உலக மக்கள் தொகையில் 36 விழுக்காடு மக்கள் வாழ்கின்றனர்.

ஆசியாவின் பல பகுதிகள் குளிர்மிகுந்தும், வெயில் மிகுந்தும் வேளாண்மை செய்ய வசதியான உழுநிலம் குறைந்தும் மலைப்பாங்கான பகுதிகள் மிக்கும் இருப்பதால் அங்கு மக்கள் வாழ இயலாது. எனவே, ஆசிய மக்களில் பெரும்பாலோர் வசதிகள் மிகுந்த ஆற்று வெளியிலோ பள்ளத்தாக்கிலோ மிகுதியாக வாழ்கின்றனர். அங்கு அவர்கள் வேளாண்மை செய்தோ மீன்பிடித்தோ வாழ இயலும்.

கிழக்குச் சீனா, இந்தியா, சப்பான் மற்றும் இந்தோனேசியாவின் சாவாத் தீவு போன்ற பகுதிகள் மக்கள் நெருக்கம் மிகுந்தவை. இந்நாடுகளிலுள்ள பெரிய நகரங்களில் பல இலட்ச மக்கள் வாழ்கின்றனர்.

**இனப்பாகுபாடுகள்:** ஆசியாவின் மக்கள் இனங்களை மானிடவியல் வல்லுநர்கள் மூன்று பிரிவுகளாகப் பிரித்துள்ளார்கள். அவை 1 வெள்ளைநிறத்தவர்களான காகசாயிடுகள், 2 மஞ்சள் நிறத்தவர்களான மங்கோலாயிடுகள், 3 கறுப்பு நிறத்தவர்களான நீக்கிராயிடுகள் என்பன. ஆனால், இருபதாம் நூற்றாண்டைச் சார்ந்த மானிடவியல் வல்லுநர்கள்



மங்கோலியப் பெண்



பீகார் (இந்தியா) பழங்குடி

இப்பிரிவுகளை ஏற்றுக் கொள்ளவில்லை. இன்று ஆசியமக்களை நிலநூல் அடிப்படையில் ஒன்பது அல்லது பத்துப் பிரிவுகளாகப் பிரித்துள்ளனர். எனினும், பண்பாட்டுப் பின்னணிமுறையாக மொழி, சமயம், மரபு ஆகிய கூறுபாடுகளின் ஒற்றுமையைக் கொண்டு, மானிட இன ஆராய்ச்சிப்படி, ஆசிய மக்களை மூன்று பெரும் பிரிவாகப் பிரிக்கலாம். தென் மேற்கு ஆசியாவில் வாழும் அராபியர்கள், இந்தியாவில் வாழும் இந்துக்கள், கிழக்கில் வாழும் சீனர்கள் ஆகியவையே அப்பிரிவுகளாம்.

**சமயங்கள்:** உலகில் காணப்படும் சிறப்பான சமயங்கள் அனைத்தும் ஆசியாவிலேயே தொடங்கின. இந்து சமயம், பௌத்த சமயம், சமண சமயம், கன்பூசிய சமயம், கிறித்தவம், இசுலாம், சூடாயிசம், சிண்டோ சமயம், தாவோயிசம் போன்றவை ஆசியாவின் சிறப்புச் சமயங்களாம்.

ஆசியர்களில் பெரும்பாலோர் இந்துசமயத்தைப் பின்பற்றுகிறார்கள். இச்சமயம், இந்தியா, நேபாளம் ஆகிய நாடுகளின் முதன்மையான சமயமாகும்.

இசுலாம் சமயத்தை மிகுதியான ஆசியமக்கள் பின்பற்றினாலும் அவர்கள் எண்ணிக்கை இந்து சமயத்திற்கு அடுத்தபடியானதே. ஆசியாவின் மேற்கிலுள்ள நாடுகளில் வாழும் பெரும்பாலான மக்கள் இசுலாமியர்கள். அதேபோல் இந்தோனேசியாவின் பெரும்பாலான மக்கள் இசுலாம் சமயத்தைச் சார்ந்தவர்களே.

இந்தியாவிற்குக் கிழக்கே சிறப்பான சமயமாகத் திகழ்வது பௌத்த சமயமாகும். கன்பூசிய சமயமும் தாவோயிசமும் சீனாவின் தலைசிறந்த சமயங்கள். சிண்டோ சமயம் சப்பான் மக்களின் சமயமாகும். பௌத்த சமயத்தை ஏனைய சமயங்களுடன் இணைத்து ஆசியர்களில் பலர் பின்பற்றுகின்றனர். சமணம் இந்தியாவில் பின்பற்றப்படுகிறது.

ஆசியாக் கண்டத்தில் கிறித்தவமும் சிறப்பான சமயமாக விளங்கி வருகிறது. சைப்பிரசு, பிலிப்பைன்சு, இலெபனான், ஆசிய உருசியா போன்ற ஆசியப் பகுதிகளிலுள்ள மக்கள் பலரால் கிறித்தவம் பின்பற்றப்படுகிறது. இசுரேல் நாட்டின் தனிப் பெரும் சமயமாகச் சூடாயிசம் திகழ்கிறது.

கம்பூச்சியா, சீனா, இலாவோசு, மங்கோலியா, வடகொரியா, உருசியா, வியட்நாம் போன்ற ஆசிய நாடுகள் பொதுவுடைமை நாடுகளாகும். இந்நாடுகளின் அரசுகள் சமயத்தை ஆதரிப்பதில்லை. எனினும் பொதுவுடைமைக் கொள்கையினரால் சமய நம்பிக்கையை அறவே அகற்றவும் முடியவில்லை.

**மொழிகள்:** ஆசியாக் கண்டத்தில் பல மொழிகளும் வட்டார வழக்கு மொழிகளும் உள்ளமையால் அது போக்குவரத்திற்குத் தடையாகவுள்ளது. ஆசியாவின் மொழிகளை வல்லுநர்கள் ஒன்பது பெரு மொழிக் குடும்பங்களாக வகுத்துள்ளார்கள்.

அராபி மொழியும், எபிரேய மொழியும் தென் மேற்கு ஆசியாவின் சிறப்பு மொழிகள். இவை ஆப்பிரிக்க-ஆசிய மொழிக் குடும்பத்தைச் சார்ந்தவை. உருசிய மொழியும், ஆப்கானிசுத்தானம், வட இந்தியா, ஈரான், பாகிசுத்தான் போன்ற பகுதிகளில் பேசப்படும் மொழிகளும் ஆங்கிலத்தைப் போன்று இந்தோ-ஐரோப்பிய மொழிக் குடும்பத்தைச் சார்ந்தவை. தென் இந்தியாவிலும், சிரீலங்காவின் வடபாகத்திலும் பேசப்படும் மொழிகள் திராவிட மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தவை. ஆசியா, உருசியா, மங்கோலியா, துருக்கி ஆகிய பகுதிகளின் மொழிகள் யூராலிய-அட்லாயிக்குக் குடும்பத்தைச் சார்ந்தவை. சீனமொழி, சினோ-திபேத்தியக் குடும்பத்தின் தலையாய மொழியாகும். பர்மியமொழி, இலாவோ, தாய், திபேத்திய மொழிகளும் மேற்கூறிய சினோ-திபேத்தியக் குடும்பத்தின் பாற்பட்டவை. கம்பூச்சிய மொழியும், வியட்நாமிய மொழியும் மோன்-கெமர் மொழிக் குடும்பத்தைச் சார்ந்தவை. தென்கிழக்கு ஆசியாவிலுள்ள தீவுகளில் வாழும் மக்களின் மலாய்-பாலினேசிய மொழிக் குடும்பம் வழக்கில் உள்ளது. இந்தோனேசிய மொழி, மலாய் மொழி, பிலப்பினோ மொழி போன்றவை, மலாய்-பாலினேசியக் குடும்பத்தைச் சார்ந்தவை. சப்பானிய மொழியும் கொரிய மொழியும், சப்பானிய-கொரிய மொழிக் குடும்பத்தைச் சார்ந்தவை.

**ஆசியா – இடமும் நில அமைப்பும்:** உலகிலேயே மிகப்பெரிய கண்டம் ஆசியா. அதன் பரப்பளவு 4,40,96,000 ச.கி.மீ. அதாவது உலகின் மொத்த நிலப் பரப்பில் 30 விழுக்காடு நிலத்தை இக்கண்டம் தன்னுள் அடக்கிக் கொண்டுள்ளது. மேற்கில் அராபிய முந்நீரகம், துருக்கி, யூரல் மலைத்தொடர் முதல் கிழக்கில் பசிபிக்குப் பெருங்கடல் வரையில் பரந்துள்ளது. வடக்கில் ஆர்டிக்குப் பெருங்கடலிலிருந்து தெற்கில் இந்தியப் பெருங்கடல்வரையிலும் ஆசியாக் கண்டம் நீண்டுள்ளது. இவற்றைத் தவிர, ஆயிரக்கணக்கான தீவுகள் இக்கண்டத்தையொட்டியுள்ளன. அவையும் இக்கண்டத்தின் பகுதிகளாகக் கருதப்படும். எடுத்துக்காட்டாக, சைப்பிரசு, மாலத் தீவுகள், சிரீலங்கா, இந்தோனேசியாவின் பெரும் பகுதிகள், பிலிப்பைன்சு, தைவான், சப்பான் போன்றவை ஆசியாவைச் சார்ந்த தீவுகள்.

ஆசியாவும் ஐரோப்பாவும் இணைந்த நிலப்பரப்பாகவேயிருக்கின்றன. எனவே ஆசியாவையும் ஐரோப்

பாவையும் இணைத்து யூரேசியா என்று கூறுவர். ஆசியா, ஆப்பிரிக்கா, ஐரோப்பா ஆகிய மூன்றையும் இணைத்து யூராப்ரேசியா என்று கூறுவோருமுண்டு.

மிக உயர்ந்த மலைத்தொடர்கள், பரந்து விரிந்த பாலைநிலங்கள், சமவெளிகள், தலைசிறந்த ஆறுகள் பலவகைப்பட்ட மண்வகைகள் போன்றவற்றால் ஆசியா சிறந்து விளங்குகிறது.

**நிலப்பகுதிகள்:** ஆசியாவை ஆறு பெருநிலப் பகுதிகளாகப் பிரிக்கலாம். அவை 1 தென்மேற்கு ஆசியா, 2 தெற்காசியா, 3 தென்கிழக்காசியா, 4 கிழக்காசியா, 5 வடஆசியா, (6) மத்திய ஆசியா என்பனவாம்.

**மலைத்தொடர்கள்:** மற்றெல்லாக் கண்டங்களையும் விட ஆசியாக் கண்டத்தில்தான் மலைத்தொடர்கள் மிகுதி, ஆசியாவின் பல பகுதிகளில் உள்ள மலைத்தொடர்கள் போக்குவரத்திற்கு இடையூறாக அமைந்துள்ளன. அவை மக்களையும் பிரித்துவைத்து, ஒருவரோடொருவர் பேசிப் பழகுவதற்கும் கருத்துப் பரிமாற்றத்திற்கும் தடையாகவுள்ளன. ஆனால், அவை பல ஆசிய ஆறுகளின் தோற்றத்திற்கான மலையூற்றுகளையும் கொண்டுள்ளன. பல இலட்சக் கணக்கான உழவர்கள் வேளாண்மை செய்ய இவ்வாறுகளையே நம்பி உள்ளனர்.

யூரல் மலையைத் தவிர்த்து ஏனைய ஆசியாவின் பெரும் மலைத்தொடர்கள் பாமீர் முடிச்சு என்னும் பகுதியிலிருந்து கிளைத்துச் செல்கின்றன. ஆப்கானிசுத்தான், சீனா, உருசியா, பாகிசுத்தான் ஆகிய நாடுகள் சந்திக்குமிடத்தில் பாமீர் முடிச்சு என்னும் இப்பகுதி இருக்கிறது. இதனை உலகின் கூரை என்றும் கூறுவர். பாமீர் முடிச்சில் உள்ள மலையுச்சிகளில் சில கடல்மட்டத்தைவிட 7650 மீ. உயரமானவை.

தியன் சான் (Tien Shan), ஆல்டாய் மலைத்தொடர்கள், பாமீர் முடிச்சிலிருந்து வடகிழக்காக மங்கோலியா வரை நீண்டு செல்கின்றன. இந்த உயர்ந்த மலைத்தொடர்களுக்கப்பால் இசுடனோவாய், யாப்ளோன்வாய் போன்ற உயரம் குறைந்த சிறு மலைத்தொடர்கள், சைபீரியாவின் குறுக்கே ஒகாட்சுக் கடல்வரை நீண்டுள்ளன.

பாமீர் முடிச்சுக்குக் கிழக்கில் காரகோரம் என்னும் மலைத்தொடர் திபேத்து வரை நீண்டு செல்லுகிறது. திபேத்தில் காரகோரம், குன்லுன் என்னும் பெயரைப் பெற்றுப் பின்னர் நான்சான் மலைத்தொடராகிறது. நீண்டு செல்லும் இம்மலைத்தொடர்கள், மத்திய சீனாவில் உள்ள சின்லிங்சான் (Tsinlingshan) மலைத்தொடருடன் முடிவடைகின்றன.

உலகப்புகழ்பெற்ற இமயமலை, பாமீர் முடிச்சின் தென்கிழக்கில் உயர்ந்து திபேத்தின் தெற்கு எல்லை வரை நீள்கிறது. தேவர்களின் ஆன்மா என்று பேசப்படும் இமயமலையே உலகில் மிக உயர்ந்த மலையாகும். உலகிலேயே உயர்ந்த மலையுச்சிகள் பலவற்றை இங்குக் காணலாம். நேபாளம் திபேத்து ஆகியவற்றின் எல்லையில் உள்ள இமயமலையில்தான் எவரசுட்டு மலையுச்சி (Mount Everest) 8848 மீ. உயரமுள்ளதாய் வானளாவி நிற்கிறது.

பாமீர் முடிச்சிலிருந்து மேற்கில் ஆப்கானித்தானத்தின் குறுக்காக நீண்டிருப்பது இந்துகுசு மலைத்தொடராகும். அதற்கும் மேற்கில், எல்புருசு, சார்கோசு முதலிய மலைத்தொடர்கள் ஈரான் மேட்டுநிலத்தை உள்ளிட்டுச் செல்கின்றன. பாண்டிக்கு, தாரசு (Taurus) என்னும் மலைத்தொடர்கள், துருக்கி நாட்டிலுள்ள அனடோலியா மேட்டுநிலத்தைச் சுற்றியுள்ளன. இதுவே ஆசியாவின் மேற்குக் கோடியாகும்.

**ஆறுகள்:** ஆசியாக் கண்டத்தின் ஆற்றுப் பள்ளத்தாக்குகளிலும் கழிமுகங்களிலும் பல இலட்சக்கணக்கான ஆசியர்கள் கூடி வாழ்கிறார்கள். மக்களின் வாழ்வில் இவ்வாறுகள் சீரிய பங்குபெறுகின்றன எனல் மிகையாகாது. வண்டல் மண்ணைக்கொண்டு வந்து பல ஆறுகள் உழவர்களுக்கு மண் வளத்தைக் கொடுத்து உறுதுணை செய்கின்றன. அவை நீர்ப்பாசனத்திற்குத் தேவையான நீரையும் கொண்டு வருகின்றன. வாணிகத்திற்கும் சுற்றுலாப் பயணத்திற்கும் அவை போக்குவரத்துத் தடங்களாகவும் பயன்படுகின்றன.

தென்மேற்கு ஆசியாவில் பாயும் பேராறுகள் இப்பகுதியின் வடபகுதி வழியாகப் பாய்கின்றன. தைகிரிசு, யூப்ரடீசு ஆறுகள், துருக்கி நாட்டில் தோன்றி, ஈராக்கில் இணைந்து சாட்டல் அரபு என்னும் பெயருடன் பாரசீக வளைகுடாவில் கலக்கின்றன. மேற்கில் சோர்டான் ஆறு, இலெபனான் நாட்டின் வழியாகத் தெற்கில் பாய்ந்து இறந்த கடலில் (Dead Sea) வீழ்கிறது.

தெற்காசியாவில் பல ஆறுகள் வடக்குமலைத்தொடர்களில் தோன்றித் தெற்காகப் பாய்கின்றன. சிந்து, பிரமபுத்திரா, கங்கை ஆகியவை சிறப்பான ஆறுகளாம். சிந்து ஆறு, இமயமலையில் தோன்றி பாகிசுத்தானின் வழியாகப் பாய்ந்து அரபிக் கடலில் வீழ்கிறது. பிரமபுத்திராவும் கங்கையும் வட இந்தியாவிலும் வங்காளதேசத்திலும் பாய்ந்து, வங்காள விரிகுடாவில் விழுகின்றன.

தென்கிழக்காசியாவில் பாயும் நான்கு சிறப்பான ஆறுகள், திபேத்திலோ அதன் அண்மையிலோ

ஒன்றினை அடுத்து மற்றொன்றாக நிற்கும் மலைத் தொடரில் தோன்றுகின்றன. அவை ஐராவதி. மீகாங்கு, மீனாம், சால்வீன் என்பனவாம். தென் கிழக்கு ஆசியாவின் நிலப்பாகத்தில் நீள ஓடிவரும் இவ்வாறுகள் இறுதியில் கடலில் கலக்கின்றன.

மஞ்சள் ஆறு, யாங்கிட்சி (Yangtese Kiang) என்னும் இரு கிழக்காசிய ஆறுகள், திபேத்தில் தோன்றிக் கிழக்காகப் பாய்ந்து சீனாவின் குறுக்காக ஓடுகின்றன. மஞ்சள் ஆறு பாய்ந்து ஓடி மஞ்சள் கடலில் கலக்கிறது. யாங்கிட்சி, கிழக்குச் சீனக்கடலில் கலக்கிறது. யாங்கிட்சி ஆறு 6300 கி.மீ. நீளமுடையது; அதுவே ஆசியாவின் மிக நீண்ட ஆறாகும். தென்-மத்தியசீனாவில் பாயும் சி-சியாங்கு என்னும் ஆறு, தென் சீனாவில் உள்ள சிறப்பான ஆறாகும்; அது தென் சீனக்கடலில் கலக்கிறது.

இலேனா, ஒப்பு, எனிசி என்பவை வட ஆசியாவின் ஆறுகளாகும். அவை தெற்கு வடக்காக ஓடி வட சைபீரியாவில் பாய்கின்றன. அவை ஆர்டிக்குப் பெருங்கடலில் கலக்கின்றன. தொலைதூர சைபீரியாவின் சிறப்பான ஆறு ஆமூர் ஆறாகும்.

மத்திய ஆசியாவின் பெரும்பகுதிகளில் ஆறுகளே இல்லை. ஆனால், பாயும் ஆறுகள் அப்பகுதியில் இருக்கும் மலைத்தொடர்களில் தோன்றுகின்றன.

**பாலைநிலங்களும் சமவெளிகளும்:** ஆசியாவின் பாலைநிலங்கள், மூலைவிட்டமாக அராபியத் தீபகற்பத்திலிருந்து வடகிழக்காகச் சீனா, மங்கோலியா வரை நீண்டுள்ளன. இப்பரந்த பாலைநிலங்கள், வேளாண்மைக்குத் தகுதியற்றவை; எனவே, அங்கு மக்கள்தொகை மிகக் குறைவு.

அராபியத் தீபகற்பத்தில் இருக்கும் பாலை நிலத்தை இரபு அல் கலி (Rub' al Khali) என்பர். பிற பாலைநிலங்கள் தென்மேற்கு ஆசியாவின் ஏனைய இடங்களை அடைத்துக்கொண்டுள்ளன. கரகும், கயில்கும் பாலைநிலங்கள்; தென்மேற்கு ஆசியாவின் வடகிழக்கில் அதாவது தென் உருசியாவில் உள்ளன. கிழக்கில் மேற்குச் சீனாவில் தக்கல மக்கான் பாலை நிலமும், சீனாவிலும் மங்கோலியாவிலும் கோபி பாலைநிலமும் பெரும் தரிசுநிலங்கள்போல் காணப்படுகின்றன. உருசியாவில் பனிஉறைந்து காணப்படும் தூந்திரப் பகுதி, சில சமயங்களில் குளிர்ந்த பாலை நிலம் என்று பெயர் பெறுகிறது. ஏனெனில் அப்பகுதியில் பயிர்பச்சைகள் வளர்வது அருமை.

பாலைநிலங்களைப் போல் சமவெளிகள் தட்டைநிலங்களாகப் பெரும்பாலும் மரங்களின்றியே நிற்கின்றன. ஆனால், இச்சமவெளிகளினூடே பாயும் ஆறுகளும் அவ்விடங்களில் பொழியும் மழையும் மண்ணை வளமுள்ளதாக்குகின்றன. தென் உருசியா, வட இந்தியா, கிழக்குச் சீனச் சமவெளிகள் ஆகியன ஆசியாவின் பெருஞ்சமவெளிகளாம்.

**கடற்கரை, விரிகுடாக்கள், கடல்கள், ஏரிகள:** ஆசியாவின் கடற்கரை 1,29,077 கி.மீ. நீளமுடையவை. கடற்கரையையொட்டியுள்ள பல துறைமுகங்கள் ஆழமற்றவை. பன்னெடுங்காலமாக ஆறுகள் கொண்டுவந்த களிமண்ணும், வண்டல் மண்ணும் துறைமுகங்கள் பலவற்றை ஓரளவு தூர்த்துள்ளன. ஆர்க்டிக்குப்பெருங்கடலிலுள்ள ஆசியாவின் வடதுறைமுகங்கள், ஆண்டில் பெரும்பாலான நாள்களில் பனியால் உறைந்துவிடுகின்றன. தென்கிழக்கு ஆசியாவின் தென்கோடித் தீவுநகரமான சிங்கப்பூர்த் துறைமுகம் ஆசியாவிலேயே மிகுந்த சுறுசுறுப்பான துறைமுகமாகும்.

இந்தியப் பெருங்கடலில் உள்ள இருபெரும் விரிகுடாக்கள் தெற்கு ஆசியாவின் கடற்கரையில் உள்ளன. வங்காள விரிகுடாவும் அரபிக் கடலும் அவ்விரு விரிகுடாக்களாகும்.

ஆசியாவின் கிழக்குக் கடற்கரையில் தீவுகளும் தீபகற்பங்களும் பசிபிக்குப் பெருங்கடலின் பகுதிகளாகிப் பல கடல்களாகப் பிரிந்துள்ளன. வடக்குத் தெற்காக இக்கடல்கள் பேரிங்கு, ஒகாட்சு, சப்பான், மஞ்சள், கிழக்குச் சீனா, தென்சீனாக் கடல்கள் என்று பெயர் பெறுகின்றன. ஆசியாவுக்கும் ஆப்பிரிக்காவுக்கும் இடையில் செங்கடல் அமைந்துள்ளது. ஆசியாவுக்கும் ஐரோப்பாவுக்கும் எல்லைகளாக மத்தியதரைக்கடலும் கருங்கடலும் இருக்கின்றன.

ஈரான், ஆசிய உருசியா, ஐரோப்பிய உருசியா, ஆகிய பகுதிகளின் இடையில் காசுபியன் கடல் உள்ளது. இக்கடல் உலகிலேயே மிகப் பெரிய உள்நாட்டு நீர்நிலையாகும். உண்மையில் அது ஒரு மாபெரும் ஏரியாகும். அதன் பரப்பு 3,72,000 ச. கி. மீ. ஏரல்கடல், பால்காசு ஏரி, பைக்கல் ஏரி ஆகிய மூன்றும் ஆசிய உருசியாவில் அமைந்துள்ளன. இறந்த கடல் கடல்மட்டத்தைவிட 396 மீ. தாழ்வாக உள்ளது. இதுவே உலகில் மிகத் தாழ்ந்த பகுதியாகும்.

**தட்பவெப்பநிலை:** ஆசியாக் கண்டம் விரிந்து பரந்ததாக இருப்பதால், அதன் தட்பவெப்பநிலைப் பகுதிகளும் வெவ்வேறாய் ஏற்றத்தாழ்வான தட்பவெப்பத்தைக் கொண்டுள்ளன. வடதுருவப்பகுதி கடுங்குளிருக்குப் பெயர்பெற்றது. இடையிலும் தென் கிழக்கிலும் வெப்பம் மிகுந்த வறண்ட பாலைநிலப் பகுதியும், தெற்கில் பருவக்காற்று மண்டலத்தைக் கொண்ட வெப்பமானதும், ஈரக் கசிவானதுமான பகுதியும் உள்ளன.


ஆர்க்டிக்குப் பெருங்கடல்
ஐரோப்பா
ஆசிய ருசியா
மத்தியத் தரைக்கடல்
கருங்கடல்
காசுபியன் கடல்
துருக்கி
சூயசு கால்வாய்
ஈராக்கு
ஈரான்
சவுதி அராபியா
செங்கடல்
ஏமன்
ஓமன்
வளைகுடா
ஆப்கானித்தானம்
பாகிஸ்தான்
மங்கோலியா
சினா
கொரியா
சப்பான்
நேபாளம்
பூட்டான்
பங்களாதேசம்
இந்தியா
பர்மா
தாய்லாந்து
வியட்நாம்
தைவான்
பிலிப்பைன்சு
ஆப்பிரிக்கா
அரபிக்கடல்
வங்காள விரிகுடா
சிரீலங்கா
மலேசியா
இந்தோனேசியா
இந்தியப் பெருங்கடல்
பசிபிக்குப் பெருங்கடல்

ஆசிய நாடுகள்

ஆசியாவின் பெரும்பகுதிகள் பருவக் காற்றுகளால் தாக்குறும் தட்பவெப்ப நிலைகொண்டவை. பருவக் காற்று குறிப்பிட்ட பருவத்தில் குறிப்பிட்ட திக்கிலிருந்து தவறாது வீசும் காற்றாகும். குளிர் காலத்தில் பருவக் காற்றுகள் வடக்கிலிருந்து கிழக்கு ஆசியாவை நோக்கி வீசுகின்றன. அதன் விளைவாகக் குளிர்ந்ததும், வறண்டதுமான தட்பவெப்பநிலை அப்பகுதியில் காணப்படுகிறது. கோடைக் காலத்தில் இக்காற்றுத் திசைமாறிக் கடலிலிருந்து வீசி, தெற்கு, தென்கிழக்குப் பகுதிகளைத் தாக்கும். அதன்விளைவாக வெப்பமானதும் ஈரக் கசிவு கொண்டதுமான தட்பவெப்ப நிலை நிலவுகிறது. கிழக்காசியாவின் பெரும்பாலான மழைப்பொழிவு ஏப்பிரல் முதல் அக்டோபர் வரையிலான மாதங்களில் பொழிகிறது. இப்பகுதியின் கிழக்குப் பாகம் பெருமழையைப் பெறுகிறது. கடலிலிருந்து வரும் போது மழை குறைந்து விடுகிறது.

வட திசையிலிருந்து வீசும் பருவக் காற்றுகள் தென் ஆசியாவின் மீதும் தென்கிழக்கு ஆசியாவின் மீதும் அக்டோபர் அல்லது நவம்பர் முதல் பிப்பிரவரி வரை வீசுகின்றன. இவ்விரு பகுதிகளிலும் இப்பருவக் காற்றுகள் மிகக் குளிர்ந்த தட்பவெப்ப நிலையை உண்டாக்குகின்றன. பிப்பிரவரி மாதத்தில் தொடங்கி, தெற்கிலிருந்து வீசும் பருவக் காற்றுகள் ஈரக் கசிவையும், வெப்பத்தையும் மிகுதியாக்குகின்றன. மே மாதத்திலிருந்து அக்டோபர் வரை, ஈரக் கசிவு மிகுந்த பருவக் காற்றுகள், தென்கடல்களிலிருந்து வீசிப் பெருமழையைப் பெய்விக்கின்றன. பருவக் காற்றுகள் சிலவேளைகளில் வெள்ளப் பெருக்கையும் உண்டாக்குகின்றன. தென்மேற்கு ஆசியாவில் பருவக் காற்றுகள், அராபியத் தீபகற்பத்தின் தெற்கு, தென்மேற்குக் கடற்கரைகளை மட்டும் தாக்குகின்றன. தென்மேற்கு ஆசியாவின் பெரும்பகுதிகள் நீண்ட கடுங்கோடையையும் மிதமான குளிர்காலத்தையும் கொண்டுள்ளன. உள்நாட்டில் வெப்பம் 46° சென்டிகிரேடு அளவிற்கு உயரும். இப்பகுதியில் குளிர்காலத்தில் மழை பெய்கிறது. கருங்கடல், காசுபியன் கடல், மத்தியதரைக் கடல் போன்ற பகுதிகளில் கனத்த மழை பெய்கிறது. அராபியத் தீபகற்பத்தின் சில பகுதிகளில், பல்லாண்டுகளுக்கு ஒருமுறை கூட மழை பெய்வதில்லை.

வடசைபீரியாவில் நிலவும் கடுங்குளிரினால் வடதுருவப் பகுதியில் ஆண்டு முழுவதும் பனி உறைந்து காணப்படுகிறது. எஞ்சியுள்ள வட ஆசியாவில் தட்பவெப்பநிலை குளிர்காலத்தில் மிகத் தாழ்ந்து பனி உறையும் நிலைக்கு வெப்பம் குறைகிறது; கோடைக்காலம் குளிர்ச்சியாக இருக்கும். மத்திய ஆசியாவின் பெரும்பகுதிகள் வறண்டும் குளிர்ந்தும் உள்ளன.

**விலங்குகள்:** பழக்கப்படுத்தப்பட்ட விலங்குகளைப் பல ஆசியர்கள் பல்வேறு பணிகளைச் செய்யப் பயன்படுத்துகின்றனர். பலவிலங்குகள் உணவிற்கும் பயன்படுகின்றன. தென்மேற்கு ஆசியாவில் உள்ள ஒற்றைத் திமில் கொண்ட ஒட்டகமும் ஏனைய ஒட்டகங்களும் பயன்படும் வீட்டு விலங்குகளில் அடங்கும். தெற்காசியாவில் யானையும் அத்தகையதே. பாக்டீரியா ஒட்டகமும், மத்திய ஆசியா யாக்கும் வீட்டு விலங்குகளே. தென்கிழக்கு, கிழக்காசியாவில் நீர் எருமைகளும், வட ஆசியாவின் கலைமான்களும் வீட்டு விலங்குகளே.

**கொடூரமான விலங்குகள்:** ஆர்க்டிக்கு நரிகள், ஆர்க்டிக்கு முயல்கள், இலெமிங்கு எனப்படும் எலியைப் போன்ற சிறு கொறிவிலங்குகள், கலைமான்கள் போன்ற விலங்குகள் கோடைக் காலத்தில் வடதுருவத்திற்கண்மையில் ஆர்க்டிக்கு வட்டத்தில் வாழ்கின்றன. இலெமிங்கைத் தவிர ஏனைய விலங்குகள் குளிர் காலத்தில் தென்பகுதிக்கு ஓடிவிடுகின்றன. இலெமிங்கு விலங்குகள் பனி மண்டலத்திலேயே தங்கி வாழ்கின்றன. ஆர்க்டிக்கு வட்டத்திற்குத் தெற்கிலுள்ள வட ஆசியாவில் பல விலங்குகள், அவற்றின் உரோமத்திற்காக விலைமதிப்பு மிக்கவையாகக் கருதப்படுகின்றன. பழுப்புநிறக் கரடிகள், எல்க்கு என்னும் காட்டு மான் வகை, எர்மின்கள், மின்குசுகள், ஓட்டர்கள் சாபல்கள் முதலியன மேற்கூறிய விலைமதிப்பு மிக்க உரோம விலங்குகளாம்.

ஆண்டிலோப்பு என்னும் மான் வகைகள் வளையில் வாழும் விலங்குகள். எலிபோன்ற உயிரினங்கள், வெட்டுக்கிளிகள் போன்றவை மங்கோலியாவிலும் வடமேற்குச் சீனாவிலும் வாழ்கின்றன. அவ்வப்போது வெட்டுக்கிளிகள் படையெடுத்து வடசீனாவின் வயல்களைத் தாக்கி, வழியில் கிடைக்கும் உணவுப் பயிர்களை உண்டு தொல்லை கொடுக்கின்றன. தென்மேற்குச் சீனாவிலும், கிழக்குத் திபேத்திலும் கருப்பும் வெள்ளையும் கலந்த கரடிவகை, பண்டா (Panda) என்னும் விலங்குகள் ஆகியவை வாழ்கின்றன. அவை உருவில் பருத்துள்ளவை. கிழக்கு ஆசிய நாடுகளில் மக்கள் நெருக்கம் மிகுதியாகவுள்ளமையால் கொடூர விலங்குகள் வாழ்வது அருமை.

தென்ஆசியாவிலும் தென்கிழக்கு ஆசியாவிலும் வகைவகையான கொடூர விலங்குகளைக் காணலாம். வாலில்லாக் குரங்குகள், குரங்குகள், அழகான வெப்ப மண்டலப் பறவைகள் போன்றவை இப்பகுதிகளில் மிகுதியாக வாழ்கின்றன. முதலைகள், சிறுத்தைப் புலிகள், காண்டாமிருகங்கள், தேள்கள், புலிகள்,



இந்தியக் காண்டா மிருகம்



வங்காளப்புலி

நஞ்சு மிகுந்த பாம்புகள் போன்றவைகளால் நாட்டுப் புற மக்கள் இடருக்குட்படுகிறார்கள். ஆண்டிலோப்புகள் என்னும் மான் வகைகள், காட்டுப்பூனை வகைகள், காட்டுக் கழுதை வகைகள், உள்வாங்கிய பெரிய கொம்புகளையுடைய மலையாடுகள், மற்றும் பல கொடூர ஆடுகள், தென்மேற்கு ஆசியாவின் கொடூர விலங்குகள்.

**செடி கொடிகள்:** வடஆசியாவைச்சார்ந்த ஆர்க்டிக்குப் பகுதியில் செடிகொடிகள் வளர்வது அரிது. ஆனால், உலகிலேயே மிகுதியாக வளரும் பர் மரங்களும், பைன் மரங்களும் ஆர்க்டிக்கு வட்டத்திற்குத் தெற்கேதான் மிகுதியாக உள்ளன. அத்தகைய மரங்கள், உருசியாவிற்கு மரத்துண்டுகள், காகிதம் செய்ய உதவும் மரக்கூழ் முதலிய பொருள்களையும் வழங்குகின்றன.

மத்திய ஆசியாவின் வறண்ட நிலப்பகுதிகளில் செடிகொடிகள் வளர்வது அருமை. அங்குப் புல்வகைகள் வளரும். புல்வகைகள் கால்நடைகளுக்குத் தீவனமாகின்றன. மத்திய ஆசியாவின் பொருளாதாரமே அதன் அடிப்படையில்தான் சிறக்கிறது.

கிழக்கு ஆசியாவின் கிழக்கில் நல்லமழை பொழிவதால் மிகுதியான செடிகொடிகள் செழித்து வளரும். இங்குள்ள மரங்கள் கிழக்கு ஆசிய மக்களுக்குப் பழவகைகள், மரத்துண்டுகள், காகிதம் போன்றவற்றைக் கொடுத்து உதவுகின்றன. மல்பரி மரத்தின் இலைகளைப் பட்டுப் பூச்சிகள் உண்டு வளர்ந்து பட்டு ஆடைகளுக்குப் பயன்படுகின்றன.

வெதுவெதுப்பானதும் ஈரக் கசிவுள்ளதுமான தென்கிழக்காசியா, தெற்காசியாப் பகுதிகள் ஆகியவற்றின் தட்பவெப்பநிலை, செடிகொடிகள் செழித்து வளரப் பெரிதும் உதவுகின்றது. செடிகொடிகளில் உற்பத்தியாகும் பொருள்கள் இப்பகுதிகளில் பெருமளவில் ஏற்றுமதிக்கு உதவுகின்றன. சாதிக்காய், இரப்பர், தேக்கு மரங்கள், தேயிலைப் புதர்கள், மூங்கில் புல்கள் போன்றவற்றால் உற்பத்தியாகும் பொருள்களை உலகின் பல பகுதி மக்கள் துய்த்துப் பயனடைகிறார்கள்.

தென்மேற்கு ஆசியாவின் வறண்ட பகுதிகளில் பெரும்பாலும் செடிகொடிகள் வளருவதில்லை. ஆனால், பாலை நிலங்களிலுள்ள பாலை நிலச் சோலைகளைச் சுற்றிலும் உள்ள பேரீச்ச மரங்கள், ஒலிவ மரங்கள், பெரும் எண்ணிக்கையிலான மக்களுக்கு உண்ண உணவுப் பொருள்களையும் ஏற்றுமதிக்கு உதவும் பொருள்களையும் கொடுக்கின்றன.

அபினி தரும் கசகசாச் செடி வகைகள், இலாவோசு, இந்தியா, துருக்கி உள்ளிட்ட ஆசியநாட்டுப் பகுதிகளில் விளைவிக்கப்படுகின்றன. இதன் மலரிலிருந்து இரோயின், மார்பின், அபினி போன்ற போதைப் பொருள்கள் உற்பத்தியாகின்றன. வலிநீக்கும் மாற்றுகளாக மருத்துவர்கள் அவற்றைக் கூறுவர். ஆனால், இலட்சக்கணக்கான மக்கள் ஆசியாவிலும் அதற்கு வெளியிலும் இத்தகைய போதைப் பொருள்களைப் பயன்படுத்துகிறார்கள்.

வேளாண்மைத் தொழிலே ஆசியாவின் பொருளாதாரத்திற்கான தலைசிறந்த தொழிலாகும். மூன்றிலிரண்டு பங்கு மக்கள் பயிரிட்டுப் பிழைக்கிறார்கள்; பண்ணைப் பொருள்களே ஆசியாவின் ஏற்றுமதிப் பொருள்களிலும் பெரிய இடத்தைப் பெறுகின்றன.

ஆசியாவின் பெரும்பாலான பகுதிகளில் உழவுத் தொழிலுக்கு இயந்திரப் பொறிகளையோ செயற்கை உரங்களையோ விதைதூவும் கருவிகளையோ ஏனைய இக்கால உதவிகளையோ பயன்படுத்துதல் அருமை யிலும் அருமை. உழவர்களில் பெரும்பாலோர் கைக ளையே கருவியாகப் பயன்படுத்துவர்; அல்லது உழு கலப்பைகளை இழுக்கக் கால்நடைகளைப் பயன் படுத்துவர்.

இக்கால உழுகருவிகளைப் பயன்படுத்தாமை யால் சாகுபடி குறைந்து வறுமைக்கு வழிகோலுகி றது. சீனா, இந்தியா போன்ற ஆசிய நாடுகளில் உழு நிலத்தின் பரப்பளவைப் பெருக்கி உணவுப்பொருள் உற்பத்தியைப் பெருக்கி வருகிறார்கள். இருப்பினும் மக்கள்தொகைப் பெருக்கத்தால் சில வேளைகளில் உணவுப் பற்றாக்குறை ஏற்படுகிறது.

இசுரேல், சப்பான், உருசியா போன்ற நாடுகளில் இக்கால உழு கருவிகளையும், புதிய முறைகளையும கையாண்டு வேளாண்மை செய்கிறார்கள். பசுமைப் புரட்சியால் ஆசியாவின் வருங்காலம் சிறக்க வழி யுண்டு. பசுமைப் புரட்சி என்னும் சொற்றொடர், புது வகை வீரிய நெல், கோதுமை, விதை ஆகிய வற்றை அறிவியல் உணர்வுடன் இருபதாம் நூற் றாண்டின் இடைக்காலத்திற்குப் பின் பயன்படுத்திய முறையைக் குறிப்பதாகும். இதன் பயனாக ஆசிய உழவர்கள் உற்பத்தியை இரண்டு மூன்று மடங்காகப் பெருக்க வழி பிறக்கிறது. அதனால் பசிப்பிணியைப் போக்கி, வாழ்க்கைத் தரத்தை உயர்த்த முடியும்.

பண்ணைப் பொருள்களை உற்பத்தி செய்வதில் ஆசியாவில் மூன்று வகையான முறைகளைப் பின் பற்றி வருகிறார்கள். தனியார் சொந்தமாக உழுது பயிரிடுதல், குத்தகைக்காரர்கள் துணைக்கொண்டு உழுதுபயிரிடல், கூட்டுப்பண்ணை முறையில் பயிரிடு தல் என்பன அவை.

ஆசியாவின் எல்லாப்பகுதிகளிலும் சில உழவர் கள் தத்தம் சொந்தப் பண்ணைகளைக் கொண்டுள் ளார்கள். ஆனால், தனியார் நடத்தும் பண்ணைத் தொழில், தெற்காசியாவிலும் தென்கிழக்குப் பெரு நிலப் பகுதியிலும் பொதுவாக நடைமுறையிலுள்ளது.

குத்தகைக்காரர்களின் துணையால் உழுது பயிரிடு தல் தென்மேற்கு ஆசியாவில் பொதுவாக இருக்கிறது. செல்வச் செழிப்பான நிலக்கிழார்களிடம் நிலத்தைக் குத்தகைக்கு எடுத்துப் பெரும்பாலான உழவர்கள் இப்பகுதியில் பயிரிடுகிறார்கள். கூலமாகவோ பண மாகவோ அவர்கள் நிலக்கிழார்களுக்குக் குத்தகை செலுத்துவர்.

ஆசியாவின் பொதுவுடைமை நாடுகளில்தான் கூட்டுப் பண்ணை முறை நடைமுறையிலுள்ளது. ஒரு சில உழவர்கள் சிறுநிலங்களைச் சொந்தமாகக் கொண்டிருந்தாலும், ஏனையோர் அரசுக்குச் சொந்த மான பண்ணைகளில் கூட்டுப் பண்ணை முறையைக் கையாண்டு பயிரிடுவர். இம்முறையில் பயிரிடும் பண் ணைகளில் உற்பத்தியாகும் பொருள்கள் அனைத்தும் அரசுக்குச் சொந்தமானவை. உணவையும் ஏனைய இன்றியமையாத தேவைகளையும் தொழிலாளர் களுக்கு அரசே கொடுக்கிறது. இசுரேல் நாட்டில் கூடப் பல கூட்டுப்பண்ணைகள் உள்ளன. அவற்றைக் கிப்புட்சிம் (Kibbu:zim) என்பர். இசுரேல் பொது வுடைமை நாடன்று.

**உணவுப் பயிர்கள்:** தென் ஆசியா, தென்கிழக் காசியா, கிழக்காசியா, தென்மேற்கு வட ஆசியா போன்றன ஆசியாவில் உணவுப் பயிர்கள் விளை விக்கும் பகுதிகள் ஆகும். தென்மேற்கு ஆசியா, மத்திய ஆசியா, வடஆசியாவின் பெரும் பகுதிகள் ஆகியவை பண்ணைத் தொழிலுக்கு ஏற்ற நிலத்தையும், தட்ப வெப்ப நிலையையும் கொண்டிருக்கவில்லை.



ஆசியப் பாவைப் பயிர்-பேரீச்சை

ஆசியாவின் சிறப்பான உணவுப் பொருள்கள் அரிசி யும் கோதுமையுமாகும். சீனாவும், இந்தியாவும் உலக அரிசி உற்பத்தியில் 90 விழுக்காட்டை உற்பத்தி செய்கின்றன. உருசியா கோதுமை உற்பத்தியில் முதலிடத்தையும் சீனா இரண்டாமிடத்தையும் பெறு கின்றன. உலக உற்பத்தியில் அதிக அளவில் இயற்கை ரப்பரையும் தேயிலையையும் ஆசியாவே தருகிறது. இந்தோனேசியா, மலேசியா, சிரீலங்கா,

தாய்லாந்து ஆகியவை இயற்கை இரப்பர் உற்பத்தியில் முதலிடம் பெறும் ஆசிய நாடுகள். சீனா, இந்தியா, சப்பான், சிரீலங்கா ஆகிய நான்கு நாடுகளும் தேயிலை உற்பத்தியில் முதலிடம் பெறுகின்றன.

பருத்தி, சணல், கரும்பு போன்றவை ஏனைய விளைபொருள்கள். சீனா, இந்தியா, பாகிசுத்தான், உருசியா, துருக்கி ஆகிய நாடுகள் பருத்தி உற்பத்தியில் முன்னணியில் நிற்பவை. வங்காள தேசம் இந்தியா, இந்தோனேசியா, மலேசியா, தாய்லாந்து, போன்ற நாடுகளில் சணல் சிறப்பாகப் பயிராகிறது. இந்தியா, மற்றெல்லா நாடுகளைக் காட்டிலும் மிகுதியாகக் கரும்பினை உற்பத்தி செய்கிறது.

**கால்நடைகள்:** ஆசியாவில் உணவுப் பயிர்கள் உற்பத்தி செய்யும் பகுதிகளில் வாழும் உழவர்கள், தமக்கு உழவுத்தொழிலில் உறுதுணையாகக் கால்நடைகளைப் பயன்படுத்துகிறார்கள். செழுமை குறைந்த பகுதிகளான மத்திய ஆசியா, வட ஆசியா, தென்மேற்கு ஆசியா போன்ற பகுதியில் வாழ்பவர்கள் கால்நடைகளைக் கொண்டு பிழைக்கிறார்கள். பாலாடைக் கட்டி, பால், இறைச்சி போன்ற பொருள்களை அவர்கள் தாம் பயன்படுத்தும் கால்நடைகளின் மூலம் பெறுகிறார்கள். அவற்றின் பர்போன்ற முடியும் தோலும் உடுத்தும் ஆடையாகவும், பாதுகாப்புப் பொருளாகவும் உதவுகின்றன. கால்நடை விலங்குகளில் சில போக்குவரத்திற்கும் பயன்படுகின்றன. கால்நடைப் பண்ணைக்காரர்கள் அவற்றை விற்றோ அவை கொடுக்கும் பொருள்களை விற்றோ தமக்குத் தேவையான பிற பொருள்களை வாங்கிக்கொள்வர்.

ஒட்டகங்கள், செம்மறியாடுகள், ஆடுகள் போன்றவை தென்மேற்காசியாவில் மிகவும் குறிப்பிடத்தக்க கால்நடைகளாகும். மத்திய ஆசியா, பாக்டீரியா ஒட்டகங்களையும் செம்மறியாடுகளையும் ஆடுகளையும் யாக்கு எனப்படும் எருதுகளையும் வளர்க்கிறது. வடஆசியாவின் தெற்கில் கால்நடையும் ஆடுகளும் சிறப்பிடம் பெறுகின்றன. கலைமான் வளர்ப்பு. வடக்கில் நடைபெறும் சிறந்த கால்நடை வளர்ப்பாகும்.

**தொழில்கள்:** பெரும்பாலான ஆசிய நாடுகளின் பொருளாதாரம் வேளாண்மைத் தொழிலின் அடிப்படையிலேயே ஊன்றி நிற்கிறது. கைத்தொழில்களோ ஏனைய தொழில் முயற்சிகளோ இல்லை. அத்தகைய நாடுகளில் பொருளாதார நெருக்கடி ஏற்படுத்தும் அ[illegible]ம் எப்போதும் இருந்துவரும்.

**சுரங்கத்தொழில்கள்:** தொழில் மூலப்பொருள் ஏற்றுமதியே ஆசியாவின் ஏற்றுமதியில் சிறப்பிடம் பெறுகிறது. தென்மேற்கு ஆசியா, உலக உற்பத்தியில் பெரும்பங்கு பெட்ரோலியப் பொருள்களை உற்பத்தி செய்கிறது. தென்கிழக்கு ஆசியா, உலகத் தகர உற்பத்தியில் 50 விழுக்காட்டளவினைக் கொடுக்கிறது. ஆண்டிமனி எனப்படும் நீலம்கலந்த வெண்மை நிற உலோகத்தையும் தங்குடனையும் சீனா பெருமளவில் ஏற்றுமதி செய்கிறது. சீனாவிலிருந்தும் இந்தியாவிலிருந்தும் மாங்கனீசும் காக்காய்ப் பொன்னும் துருக்கியிலிருந்தும் பிலிப்பைன்சிலிருந்தும் குரோமைட்டும் [illegible]கின் பல பாகங்களுக்கும் கொண்டு செல்லப்படுகின்றன. தொழில் மூலப் பொருள்களைப் பயன்படுத்தி அவற்றைத் தொழிற்சாலைகளின் உதவியுடன் முற்றுப்பெற்ற பொருள்களாக்கும் திறமையை ஆசிய நாடுகள் பெற்றால் அவற்றின் பொருளாதாரம் விரைவில் பெருகி வளர வழிபிறக்கும்.

**செய்தொழில்கள்:** ஆசியாவின் செய்தொழில்கள்



அரேபிய உழவர்



சீனா-இயந்திர வேளாண்மை

ஐரோப்பியக் குடியேற்ற ஆட்சியால் நலிந்தன. ஐரோப்பியர் ஆசியாவின் மூலப்பொருள்களைத் தம் தொழிற்சாலைகளுக்குப் பயன்படுத்திக் கொண்டனர். அதன் விளைவாகச் செய்தொழில் முன்னேற்றம் பெருகி வளரவில்லை.

இக்காலத்தில் செய்தொழிலில் ஆசியாவின் பல நாடுகள் முன்னணியில் நிற்கின்றன. சீனா, இசுரேல், சப்பான், உருசியா போன்ற நாடுகளில் பெரும் தொழிற்சாலைகள் உருவாகியிருக்கின்றன. பேருந்துகள், மின்னணுக் கருவிகள், தொழிற்சாலைகளுக்கான எந்திரங்கள், இரும்பு உருக்குப் பொருள்கள், போர்க்கருவிகள், கப்பல்கள், நெசவாலைப் பொருள்கள் போன்றவற்றை அந்நாடுகள் உற்பத்தி செய்கின்றன.

**பிற தொழில்கள்:** கடற்கரையோரங்களிலும் ஆற்றோரங்களிலும் வாழும் இலட்சக்கணக்கான ஆசியர்கள் மீன்பிடித்து வாழ்கிறார்கள். மீன்பிடிக்கும் தொழிலில் ஈடுபட்டுள்ள பத்துத் தலையாய நாடுகளில் ஐந்து நாடுகள் ஆசியாவின் கரைகளையொட்டியோ கரைகளின் பகுதியாகவோ உள்ளன எனலாம். அவை சீனா, இந்தியா, இந்தோனேசியா, சப்பான், உருசியா என்பனவாம்.

சுற்றுலாத்துறைத் தொடர்பான தொழிற்சாலைகள், கைவினைப் பொருள்கள் போன்றவை ஆசியாவின் பல பகுதிகளில் பெரும் பொருளாதாரச் சிறப்புப் பெற்றுள்ளன. ஆண்டுதோறும் பல்லாயிரக் கணக்கான ஆசியரல்லாதவர்கள் ஆசியாவைக் காணப் பயணிகளாக வருகின்றனர். பயணிகள் உணவிற்கும் போக்குவரத்திற்கும் தங்கிச் செல்வதற்கும் பெரும் பொருளைச் செலவிடுகிறார்கள். அவர்கள் ஆசியர்கள் செய்த கைவினைப் பொருள்களையும் விலை கொடுத்து வாங்கிச் செல்கின்றனர். சிற்பங்கள், தோற்பொருள்கள், உலோகப் பொருள்கள், மட்பாண்டங்கள், கம்பளங்கள், நெசவாலைப் பொருள்கள் போன்றவை கைவினைப் பொருள்களாகும். இசுரேல், சப்பான், ஆங்காங்கு, தாய்லாந்து, சிங்கப்பூர் போன்ற நாடுகள், சுற்றுலாத் தொடர்பான தொழில்களில் முன்னணியில் நிற்கின்றன.

**போக்குவரத்து:** ஆசியாவின் போக்குவரத்து, வாணிகம் ஆகியவற்றின் முன்னேற்றத்திற்குத் தடையாக அதன் நிலவியல் அமைந்துள்ளது. பரப்பளவில் பரந்து விரிந்த மிக உயர்ந்த மலைத்தொடர்களையும் பரந்த பாலைநிலங்களையும் கொண்டுள்ளதால் ஆசியாவில் சாலைவசதி மிகக் குறைவு. அதன் விளைவாக வாணிகமும் பெருகவில்லை. அண்மைக் காலம் வரை மங்கோலியா, திபேத்து போன்ற ஆசிய நாடுகளை அணுகுவதும் கடினமாக இருந்தது.



சீன-உருசியத் தொடர்வண்டிப் போக்குவரத்து

ஆனால், இரண்டாம் உலகப்போருக்குப் பின்னர் இக்கால வசதிமிகுந்த போக்குவரத்துச் சாதனங்கள் பயன்படத்தொடங்கியுள்ளன.

கடற்கரையையொட்டியும் அருகிலும் உள்ள இடங்களிலேயே போக்குவரத்து மிக எளிதாக அமைந்திருந்தது. மக்கள் கடலிலும் பெரிய ஆறுகளையொட்டியும் பல நூற்றாண்டுகளாகப் பயணம் செய்து வந்தனர். ஆனால், சோவியத்துச் சைபீரியாவின் பல துறை முகங்கள், பனி உறைந்து மூடிக்கிடப்பதால் ஆண்டின் பெரும்பகுதியில் அவை பயன்படுவதில்லை. ஆசியாவின் பல பகுதிகளில் இன்றும் பண்டைய முறையில் செயற்படும் போக்குவரத்துச் சாதனங்களையே காணலாம். தென்மேற்கு ஆசியாவிலும் மத்திய ஆசியாவிலும் வணிகர்கள் இன்றும் போக்குவரத்திற்கு ஒட்டகங்களையே பயன்படுத்துகிறார்கள். ஒட்டகங்களுக்கு மாறாகப் பாலைநிலங்களில் பயணம் செய்யப் புதிய ஊர்திகள் வந்திருந்தும்கூட அவர்களால் ஒட்டகங்களைக் கைவிட முடியவில்லை.

ஐரோப்பியர்களின் வருகைக்குப் பின்னரே இருப்புப்பாதைகள் அமைக்கப்பட்டன. இருப்புப் பாதைகள் ஆசியாவின் பலபகுதிகளில் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும், அமைக்கப்பட்டன. சில புதுத் தொடர்கள் இரண்டாம் உலகப்பெரும்போருக்குப் பின்வரும் ஏனைய இடங்களில்இப்போதும்இருப்புப்பாதைகளாக அமைக்கப்பட்டு வருகின்றன. ஒவ்வொரு நாட்டிலும் வெவ்வேறான அகலத்தில் இருப்புப் பாதைகள் அமைக்கப்படுவதால், ஆசியாவின் ஒருபகுதியைப் பிறிதொரு பகுதியுடன் இணைப்பது கடினமாகிறது. கடற்கரையினையொட்டியுள்ள பகுதிகளில் அமைக்கப்பட்டிருக்கும் பல இருப்புப் பாதைத் தொடர்கள், உள்நாட்டிற்குள்ளேயே பிற பகுதிகளை இணைப்பதில்லை. ஒரே ஓர் இருப்புப்பாதைத் தொடர்தான் கிழக்காசியாவை மேற்காசியாவுடன் இணைக்கிறது.

இதுதான் திரான்சு சைபீரிய இருப்புப் பாதை எனப்படும். இருவழித்தட அமைப்புமுறையில் இயங்கும் இப்பாதை, ஐரோப்பாவை ஆசியாவின்பசிபிக்குக் கடற்கரையுடன் இணைக்கிறது. இருப்பினும் ஆசியாவின் இருபெரு நாடுகளான இந்தியாவுக்கும் சீனாவுக்குமிடையே இருப்புப் பாதை கிடையாது. இன்று இந்தியா, சீனா, சப்பான் போன்ற நாடுகளில் ஆசியாவிலேயே மிக வளர்ச்சியுற்ற இருப்புப் பாதைத் தொடர்கள் உள்ளன. மத்திய ஆசியாவில் சோவியத்து ஒன்றியம் (உருசியா) பல இருப்புப் பாதைத் தொடர்களை அமைத்து அப்பகுதியை வளர்த்து வருகிறது. இருப்பினும் கடுமையான தட்பவெப்பநிலையும் கரடு முரடான நிலப்பகுதியும் இதற்குச் சொல்லொணாத் தொல்லைகளைக் கொடுத்து வருகின்றன. ஆசிய நாடுகளின் அரசுகள், பெரும்பாலான இருப்புப் பாதைப் போக்குவரத்தை நடத்திவருகின்றன. தொழில்மயமாக்கும் திட்டங்களால் இருப்புப்பாதைத் தொடர்கள் ஆண்டுதோறும் பல்கிப்பெருகி வருகின்றன. ஆசியாவின் சாலைகளும் நெடுஞ்சாலைகளும் பொதுவாகத் தரக்குறைவானவை. அச்சாலைகளிலும் நெடுஞ்சாலைகளிலும் ஓடும் ஒரு சில சீர் ஊர்திகளும் வண்டிகளும் பெரு நகரங்களில் மட்டும் அங்கொன்றும் இங்கொன்றுமாகத் தென்படுகின்றன. ஆனால், இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் உந்து வண்டிகளும் ஏனைய பொருள் ஏற்றும் வண்டிகளும் பெருமளவில் உற்பத்தியாகின்றன. இந்தியாவும் சப்பானும் இன்று பெரும் எண்ணிக்கையில் பேருந்து வண்டிகளை உற்பத்தி செய்வதில் முன்னணியில் நிற்கின்றன.

இரண்டாம் உலகப் போரிலிருந்து பெரும்பாலான ஆசிய நாடுகள் வானவூர்திப் போக்குவரத்தைப் பெருமளவில் பயன்படுத்தி வருகின்றன. பாலை நிலங்களையும் மலைப் பகுதிகளையும் எளிதாகக் கடக்க வானஊர்திகள் உதவுகின்றன. செட்டு விமானங்கள் **(Jet Planes)** ஆசியாவின் உள்நாட்டுப் பகுதிகளை இப்போது விரைந்து இணைத்துவருகின்றன. ஆசியாவின் மாநகரங்கள் அனைத்திலுமிருந்து வானவழிகள், ஆப்பிரிக்கா, ஆசுத்திரேலியா, ஐரோப்பா, வட, தென் அமெரிக்கா போன்ற பகுதிகளை இப்போது இணைக்கின்றன. அதேபோல் மேலைநாடுகளின் முன்னணி வான்வழித் தடங்கள், ஆசியாவை இணைக்கின்றன. இப்போது ஆசியநாடுகள் பல தம் சொந்த வான ஊர்திகளை உருவாக்கி இயக்குகின்றன.

வாணிகம்: போக்குவரத்துச் சாதனங்கள் பெருகி வளர்ந்து வரும் காரணத்தால் ஆசியாவின் வாணிகமும் பெருகிவளரத் தொடங்கியுள்ளது. ஆசியாவின் மூலப் பொருள்களை அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கும் ஐரோப்பாவிற்கும் விற்றுச் செய் தொழிலால் உருவாக்கப்பெற்ற இயந்திரங்களை இறக்குமதி செய்த பழைய நிலை மாறிவருகிறது. இன்று ஆசிய நாடுகளே பல்வேறு நுகர் பொருள்களை உற்பத்தி செய்யத் தொடங்கிவிட்டன. அத்துடன் ஆசிய நாடுகள், இன்று தம் மூலப் பொருள்களைப் பயன்படுத்திப் பல பொருள்களை உருவாக்கி, உலகச் சந்தையில் போட்டியிடுமளவிற்கு முன்னேறி உள்ளன.

ஆனால், இன்றும் ஆசியாவின் மூலப் பொருள்கள் பெருமளவில் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றன என்பதும் உண்மைதான். மலேசியாவும் இந்தோனேசியாவும் இரப்பர் உற்பத்தியில் முன்னணியில் நிற்கும் நாடுகளாகையால் இரப்பர் ஏற்றுமதியில் அந்நாடுகள் முதலிடம் பெறுகின்றன. தென்மேற்கு ஆசியா பெட்ரோல் பொருள்களைப் பெருமளவில் உற்பத்தி செய்து உலகநாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிறது. உலக உற்பத்தியில் பெரும்பகுதித் தேயிலையை இந்தியா, சீனா, இந்தோனேசியா, சிரீலங்கா போன்ற நாடுகள் உற்பத்தி செய்துவருகின்றன. அரிசியும் ஆசியாவில் தான் பெருமளவில் உற்பத்தியாகிறது. தகர ஏற்றுமதியில் மலேசியா உலகிலேயே முதலிடம் பெறுகிறது. சீனா, தங்சுடனை உலகம் முழுவதற்கும் கொடுக்கும் முதல் நாடாகும்.

வரலாறு: நாகரிகத்தின் பிறப்பிடம் என்று அறிஞர்கள் உலகில் நான்கு பகுதிகளைச் சுட்டி, அவ்விடங்களில்தான் முதலில் நாகரிகங்கள் தோன்றின என்பர். அந்நான்கில் ஒன்று எகிப்து ஆகும். அது வட ஆப்பிரிக்காவில் உள்ளது. ஏனைய மூன்றும் ஆசியாக் கண்டத்தைச் சார்ந்தவை. ஆசிய நாகரிகப் பிறப்பிடம் மூன்றும் பின் வருமாறு: (1) தென்மேற்காசியாவில் தோன்றிய செழித்த பிறைவடிவப் பகுதி **(Fertile-Crecent)** நாகரிகம். இது தைகிரிசு-யூபரெட்டிசு ஆற்றங்கரையில் பிறந்த நாகரிகம். (2) தென் ஆசியாவில் சிந்து ஆற்றங்கரையில் தோன்றிய சிந்துவெளி நாகரிகம். இது இன்றைய பாகிசுத்தான் நாட்டில் உள்ளது. (3) குவாங்கோ - யாங்கிட்சிஜியாங்கு ஆற்று நாகரிகம். இது கிழக்காசியாவில் சீனாவில் உள்ளது.

**செழித்த பிறைவடிவப் பகுதி நாகரிகம்:** ஆசியாவில் மிகத் தொன்மையான நாகரிகம் செழித்த பிறைவடிவப் பகுதியில்தான் தோன்றி வளர்ந்தது. இப்பகுதியில்தான் தைகிரிசு-யூபரெட்டிசு ஆறுகள், வடக்கிலிருந்தும் மேற்கிலிருந்தும் பாய்ந்து பாரசீக வளைகுடாவில் விழுமுன்னர்த் தெற்காக வளைந்து அவை சோர்டான் ஆற்றுப் பள்ளத்தாக்கில் பாய்ந்து ஓடுகின்றன. இவ்வாறுகள், இக்காலத்தில் ஈராக்கு, இசுரேல், சோர்டான், இலெபனான், சிரியா போன்ற நாடுகளில் அடங்கும்.

செழித்த பிறைவடிவப் பகுதியில் பண்டைய நகரங்களின் அழிவுச் சின்னங்கள் ஆங்காங்கே தென்படுகின்றன. தொல்லியல் வல்லுநர்கள் கி.மு. 3000-ஆம் ஆண்டிற்கும் கி.மு. 300-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் வளர்ச்சியுற்றிருந்த பண்டைய நாகரிகங்களைக் கண்டுபிடித்துள்ளார்கள். சுமேரியர், பாபிலோனியர், அசிரியர், பாரசீகர் போன்றவர்களின் பேரரசுகளைச் சுட்டிக் காட்டுவன இந் நாகரிகங்கள்.

சுமேரியர் கி.மு. 3000-ஆம் ஆண்டளவில் தலைசிறந்த நாகரிகத்தைக் கொண்டிருந்தனர். அவர்கள் ஆப்பெழுத்துகளைக் கண்டுபிடித்து, அவற்றைக் களிமண் பலகைகளில் வரைந்தார்கள். சுமேரியர்கள், எகிப்தியர்கள் உள்ளிட்ட பலருடன் விரிவான வாணிகம் செய்தார்கள். தாம்செய்த வாணிகத்தில் சுமேரியர்கள் எடைகள், படிகள் முதலியவை குறித்துச் சிக்கலான சட்டதிட்டங்களை உருவாக்கியிருந்தார்கள்.

சுமேரியரின் நாகரிகம் நலிவுற்று அழிந்ததற்கான காரணங்கள் நன்றாகத் தெரியவில்லை. அவர்களையடுத்துப் பாபிலோனியரின் நாகரிகம் சுமர் என்னும் ஊருக்கு வடபால் வளர்ச்சியுற்றது. பாபிலோனிய மரபினர் பாபிலோன் என்னும் ஊரைத் தம் தலைநகராகக் கொண்டு சிறந்த சட்டங்கள், சமயம், சுற்றுச் சுவர் கட்டப்பட்ட மாநகரங்கள் ஆகியவற்றுடன் நல்லாட்சி நடத்தினர்.

பாபிலோனியாவுக்கு வடக்கே அசிரியப் பேரரசு தொடங்கிக் கி.மு. 883-ஆம் ஆண்டிற்குப்பின் விரிந்து பரந்து கிடந்தது. அசிரியர் கி.மு 729-ஆம் ஆண்டிற்கும் கி.மு. 625-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட நூற்றாண்டுகளில் பாபிலோனியாவைக் கட்டுப்படுத்தினர். அசிரியாவின் அரசர் ஆசுர்பானிபல் கி.மு. 627-இல் காலமான பிறகு, பாபிலோனியா விடுதலை பெற்றது. ஆனால், கி.மு. 539-ஆம் ஆண்டளவில் பாரசீகர்கள் அசிரியப் பேரரசை வெற்றி கண்டார்கள்.

பாரசீகப் பேரரசு கி.மு. 520-ஆம் ஆண்டளவில் பேரும் புகழும் பெற்றுப் பெருநிலை பெற்றிருந்தது. அக்காலத்தில் அப்பேரரசு, "தென்மேற்காசியாவின் பெரும்பகுதிகளும் தென்னாசியாவின் பகுதிகளும் தென் உருசியா, வட ஆப்பிரிக்கா போன்ற பகுதிகளும் கொண்டதாக இருந்தது. பாரசீகம் ஏறத்தாழ 200 ஆண்டுகள் சிறப்புற்று விளங்கியது. மாவீரன் அலெக்சாந்தர் கி.மு. 330-ஆம் ஆண்டளவில் பாரசீகப் பேரரசை வெற்றி கண்டார்.

**சிந்துவெளி நாகரிகம்:** கி.மு. 2500 இலிருந்து கி.மு. 1500 வரை தென் ஆசியாவில் வெண்கலக்கால நாகரிகம் சிறந்த நிலையில் வளர்ந்திருந்தது. இந் நாகரிகம் சிந்து ஆற்றங்கரையில் தோன்றி வளர்ந்ததாகும். இப்போது இது பாகிசுத்தான் நாட்டிலுள்ளது. சிந்துவெளிச் சமூகம், தோன்றிய வரலாற்றை வல்லுநர்கள் கூட அறிந்துகொள்ள இயலவில்லை. அத்துடன் அவர்களுக்குத் தென்மேற்கு ஆசியாவில் வாழ்ந்த மக்களுடன் இருந்த உறவு பற்றிய விவரமும் தெரியவில்லை.

ஆரியர் என்னும் நாடோடி இனத்தவர் கி.மு. 1500-ஆம் ஆண்டளவில் இந்தியாவுக்கு வந்தனர். அவர்கள் காசுபியன் கடலுக்கு வடபாலிருந்து ஒருவேளை வந்திருக்க வேண்டும். இந்தியாவில் சப்தசிந்து பகுதியில் குடியேறிய ஆரியர், படிப்படியாகக் கங்கைவெளி வரை பரவித் தம் பண்பாட்டைப் பரப்பினர். ஆரியர் உருவாக்கிய சமய, சமூகப் பழக்கவழக்கங்களின் அடிப்படையில் எழுந்தது தான் பின்னர்வந்த இந்துப் பண்பாடாகும். சிந்துவெளி, பாரசீகரின் ஆட்சிக்குட்படவும் நேரிட்டது.

அலெக்சாந்தர் கி.மு. 327-க்கும் 325-க்கும் இடையில் சிந்துவெளியைக் கைப்பற்றினார். ஆனால் விரைவில் அலெக்சாந்தர் இப்பகுதியை விட்டுவிட்டார். இந்தியாவில் மௌரியர்கள் ஆட்சியைக் கைப்பற்றினர். அம்மரபினருள் ஒருவர்தான் அசோகர். அசோகர் தென் ஆசியாவின் மூன்றில் இரண்டு பகுதியை ஆண்டிருக்கவேண்டும். அக்காலத்தில் கலைகளும் இலக்கியமும் பெருவளர்ச்சியுற்றன.



சீனப்பெருஞ்சுவர்

**ஓயாங்கோ-யாங்கிட்சி வெளி நாகரிகம்:** சீனாவில் பண்டைய நாகரிகம், ஓயாங்கோ ஆற்று வெளியிலும் யாங்கிட்சி ஆற்று வெளியிலும் தோன்றி வளர்ந்தது. வட, மத்திய சீனப் பகுதிகளில் நாகரிக முதிர்ச்சி பெற்ற மக்களைக் காணலாம். ஓயாங்கோ பள்ளத்தாக்கில் கி.மு. 1700-ஆம் ஆண்டளவில் சாங்கு

(Shang) மரபினர் நாகரிகத்தைத் தோற்றுவித்தனர். சாங்கு மரபுக் குருமார்கள் ஓவிய எழுத்துகளைப் பயன் படுத்தித் தம் வரலாற்று நிகழ்ச்சிகளைக் குறித்து வைத்துப் பாதுகாத்தனர். இதுவே சீன மொழியின் இலக்கிய அடிப்படையாயிற்று.

சௌ மரபினர் ஆட்சி யாங்கிட்சி ஆற்றுவெளி யில் எழுந்தது. இது கி.மு. 1122-ஆம் ஆண்டில் சாங்கு மரபினரை ஆட்சியிலிருந்து மாற்றும் வரை வளர்ந்து வந்தது. சௌ மரபினர் ஆட்சிக் காலத்தில் சீனர்களின் கலையும் கல்வியும் மேலோங்கின. கன்பூசியசு, உலோத்சேபோன்றசான்றோர்கள்கீழைநாட்டுத் தத்துவ அடிப்படைக்கான அடிக்கல் நாட்டினார்கள். நிலமானியப் பிரபுக்களிடையே தோன்றிய போர் களினால் கி.மு. 403-ஆம் ஆண்டில் சௌ மரபினர் தளர்ந்து போகவே, அதனைச் சின் மரபினர் கி.மு. 221-ஆம் ஆண்டளவில் மாற்றினர்.

சின் மரபினரின் ஆட்சிக் காலத்தில்தான் சீனா வில் முதல் சீனப் பேரரசு உருவாக்கப்பட்டது. அவர் கள்தாம் சீனாவின் பெருஞ்சுவரைக் கட்டினார்கள். வடக்கிலிருந்து காட்டுமிராண்டிகளின் தாக்குதல்களி லிருந்து பேரரசைக் காப்பாற்ற முயற்சி மேற்கொள் ளப்பட்டது. ஆனால், போர் வெறிகொண்ட கலகக் காரர்கள் கி.மு. 200-ஆம் ஆண்டளவில் சின் மரபின ரைத் தோற்கடித்தனர். அடுத்து வந்த ஆன் (Han) மரபினர் கி.மு. 202-ஆம் ஆண்டு முதல் கி.பி. 220-ஆம் ஆண்டுவரையாண்டனர்.

**நாடோடிப் படையெடுப்புகள்:** ஆசியாவின் அனைத்துப் பகுதிகளிலும் கி. பி. 300-ஆம் ஆண் டுக்குப் பின்னர்த் தொன்மையான நாகரிகங்களை நாடோடிப் படையெடுப்பாளர்கள் அழித்தார்கள். சில நூற்றாண்டுகளில் நாடோடிக் காட்டு மிராண்டிகள் மத்திய ஆசியாவிலிருந்தும் வட ஆசி யாவின் தென்பாகத்திலிருந்தும் அலைஅலையாகப் படையெடுத்தார்கள். கிழக்கு ஆசியாவில் மங்கோலி யாவிலிருந்து கி. பி. 300-ஆம் ஆண்டளவில் வந்த ஊணர்கள் (Huns) வடசீனாவை வென்றனர். அவர் கள் பின்னர் மேற்குத் திசையில் திரும்பி ஐரோப்பா மீதுபடையெடுத்தார்கள். அப்படையெடுப்பால்உரோ மானியப் பேரரசு வீழ்ச்சியுற்றது. ஊணர்கள் கி.பி. 500 ஆம் ஆண்டு அளவில் ஏறத்தாழ 200 ஆண்டுகள் ஆட்சி செய்த குப்தப்பேரரசை வீழ்த்தினார்கள்.

கிழக்கு ஆசியாவில் கி. பி. 600-ஆம் ஆண்டு முதல் 1100-ஆம் ஆண்டு வரை அமைதி நிலவிற்று. அக் காலத்தில் ஆசியாவின் மேற்குப் பகுதிகளை நாடோ டிகளின் படையெடுப்புகளும் சமயப்போர்களும் நலியவைத்தன. அந்தக் காலக்கட்டத்திலேயே தாங்கு மரபினரும் சுங்கு மரபினரும் சீனாவை ஆண்டனர். வெடிமருந்து, அச்சடிக்கும் முறை, காகிதப் பணம், சீன மட்பாண்டம் போன்றவற்றைக் கண்டுபிடித்தவர் களும் அவர்களே.

இசுலாமியர்கள் கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் தென்மேற்கு ஆசியாவை வெற்றி கண்டு, வட ஆப் பிரிக்கா, இசுபெயினின் பெரும் பகுதிகள் ஆகியவற் றைக் கொண்ட பேரரசு ஒன்றை உருவாக்கினார்கள். கிழக்கு மத்திய தரைக்கடலையொட்டிய பகுதி களில் கி.பி. 300-இலிருந்து 1100 வரை நிலைத்திருந்த ஒரேயொரு கிறித்தவ நாடு பைசாண்டியப் பேரர சாகும். மத்திய ஆசியாவிலிருந்து இசுலாம் சமயத் தைச் சார்ந்த செல்சுக்குத் துருக்கியர்கள் அந்தக் கிறித்தவ நாட்டையும் கைப்பற்றி, கிறித்தவச் செல் வாக்கையே முடிவுக்குக் கொணர்ந்தார்கள்.

மத்திய ஆசியாவிலிருந்து புதிய காட்டுமிராண்டி இனக் கூட்டத்தினர் கி. பி. 1206-ஆம் ஆண்டுக்குப் பின்னர்ப் படையெடுத்து வந்தபோது செங்கிசுகான் என்னும் பெயரினர், மங்கோலிய இனங்களை இணைத்துச் சீனா, வட இந்தியா, ஈரான், ஐரோப் பாவின் பகுதிகள் போன்றவற்றை வெற்றி கண்டன. மங்கோலியப் பேரரசு, சீனா, கொரியாவிலிருந்து ஐரோப்பாவில் தான்யூப்பு ஆறுவரை விரிந்து பரந் தது. அதுவே வரலாற்றில் மிகப் பெரிய பேரர சாகும். மங்கோலியப் பேரரசு கி. பி. 1368-ஆம் ஆண்டுவரை நீடித்தது. குப்ளேகான் என்ற பேரர சர் காலத்தில் அது பெரும் புகழ் பெற்றிருந்தது.

மங்கோலியப் பேரரசு வீழ்ச்சியுற்றபோது, சீனாவை மிங்கு மரபினர் ஆண்டனர். அவர்கள் கிழக் காசியா முழுவதிலும் தம் ஆட்சியைப் பரப்பினார்கள். ஏறத்தாழ 300 ஆண்டுகள் ஆட்சி நடத்திய மிங்கு மர பினரின் காலத்தில், சீனாவின் கலையும் இலக்கி யமும் செழித்து வளர்ந்தன.

மங்கோலியர் கி. பி. 1526-இல் மீண்டும் இந்தி யாவின் மீது படையெடுத்து மொகலாயப் பேரரசை நிலைநாட்டினர். அந்தக்காலத்திலேயே தென்மேற்கு ஆசியாவில் உதுமானியத் துருக்கர்களின் தலைமையில் இசுலாமியப் பேரரசு சிறந்தோங்கிய நிலையில் விளங்கியது. அவர்களது ஆட்சி வட ஆப்பிரிக்காவி லும் தென்மேற்கு ஐரோப்பாவிலும் பரவிற்று.

எனினும் மேற்கூறிய பேரரசுகள் திறமைவாய்ந் தவையாக நீடிக்கவில்லை. ஐரோப்பியர்கள் பண் பாட்டிலும் பொருளாதாரத்திலும் வளர்ச்சியுற்று இறுதியில் ஆசியாவை வெற்றிகொள்ளும் நிலைக்கு வந்தார்கள்.

**ஆசியாவில் மேலை நாட்டவரின் வெற்றி:** பதி னாறாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆசியாவின்

செல்வ வளத்தைக் கேள்வியுற்ற ஐரோப்பியர்கள் அதைக் கொள்ளையிடப் பேரார்வம் கொண்டார்கள். அதன் விளைவாக ஆசியாவின் பல பகுதிகள், ஐரோப்பிய நாடுகளின் குடியேற்றப் பகுதிகளாயின. போர்ச்சுகீசியர்கள் கி.பி. பதினாறாம் நூற்றாண்டில் மகோவா என்னும் துறைமுகப்பட்டினத்தைத் தம் வாணிக மையமாகக் கொண்டு, இந்தியப் பெருங்கடலைத் தம் கட்டுப்பாட்டின் கீழ்க் கொணர்ந்தனர். இசுபானியர்கள், கி. பி. 1565- ஆம் ஆண்டளவில் பிலிப்பைன்சுத் தீவுகளுடன் வாணிகத்தைத் தொடர்ந்தார்கள். ஆங்கிலேயரும் தச்சுக்காரர்களும் கி. பி. 17-ஆம் நூற்றாண்டில் சாவகத்தைக் (சாவா) கைப்பற்றினர். தச்சுக்காரர்கள் (Dutch) போர்ச்சுகீசியரிடமிருந்து இன்று மலேசியாவில் இருக்கும் மலாக்காவைக் கி. பி. 1641-ஆம் ஆண்டில் பறித்துக் கொண்டார்கள். அங்கிருந்து நடைபெற்ற மணப்பொருள் (Spice) வாணிகத்தைத் தச்சுக்காரர்கள் கட்டுப்படுத்திக் கொண்டார்கள்.

சப்பானைக் கி. பி. 1639- ஆம் ஆண்டில் தோக்குகவா மரபினர் ஆட்சி செய்தனர். அவர்கள் இசுபானியப் போர்ச்சுகீசிய வணிகர்களை நாட்டைவிட்டு வெளியேற வைத்தார்கள். சப்பானியர் தச்சுக்காரர்களை மட்டும் ஏற்றுக்கொண்டு அவர்களை ஆண்டுக்கொருமுறை நாகசாகி என்னும் நகரத்திற்கு வரச்செய்து, தாம் செய்து வந்த வாணிகத்தினை இடையூறில்லாது தொடர்ந்தனர். சீனர்கள், மஞ்சு மரபினரின் ஆட்சி மேலை நாடுகளுக்குப் பயன்படாத வகையில் தம் வாணிகத்தை வரையறுத்துக் கொண்டார்கள். அயல்நாட்டு வாணிகர்கள் காண்டன் நகர் ஒன்றில் மட்டும் அனுமதிக்கப்பட்டார்கள். ஆங்கிலேயரும் தச்சுக்காரரும் சீனாவுடனும் சப்பானுடனும் தமக்கிருந்த வாணிகத்தை நிறுத்திவிட்டுத் தென்கிழக்கு ஆசியாவின்மீது தம் கவனத்தைத் திருப்பினர். ஆங்கிலேயர்கள் படிப்படியாக இந்தியாவின் பெரும்பாகத்தை வெற்றி கண்டார்கள். தச்சுக்காரர்கள் கிழக்கிந்தியத் தீவுகளில் வாணிகத்தை நடத்தினார்கள். அதே சமயத்தில் ஐரோப்பாவிலிருந்து உருசியர்கள் மேற்கிலிருந்து சைபீரியாவுக்குள் நுழைந்தார்கள்.

**குடியேற்ற நாடுகள் அமைக்கப்பட்ட காலம்:** மேலை நாடுகளில் குறிப்பாக ஐரோப்பியர் தம் நாடுகளின் பொருளாதார, படைவலிமைகளால் கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் பெரும்பாலான ஆசியப் பகுதிகளைத் தம் கட்டுப்பாட்டின் கீழ்க் கொணர்ந்தனர். தம்நாட்டின் ஐந்து சிறந்த துறைமுகங்களுடன் இங்கிலாந்து வாணிகம் செய்வதைத் கி.பி. 1842-ஆம் ஆண்டில் சீனா ஒப்புக் கொண்டது. ஈராண்டுகளுக்குப் பின்னர் அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கும் சீனாவுக்குமிடையே வாணிகத் தொடர்பு ஏற்பட்டது. மாத்திபெரி என்பார், கி.பி. 1854-ஆம் ஆண்டில் அமெரிக்கக் கப்பற்படைக் குழுவினரின் தலைவராக வந்தார். அமெரிக்க ஐக்கிய நாடு, சப்பானுடன் மட்டும் வாணிகத்தை வைத்துக் கொள்ள இணங்கியது.

ஆசியாவுடன் வாணிகம் செய்யும் கடும் போட்டியிலும் குடியேற்றப் பகுதிகளையும் விரிவாக்கும் பணியிலும் மேலைநாடுகள் இறங்கின. தென்மேற்கு ஆசியா, இந்தியா, தென் சீனா போன்ற பகுதிகளில் இங்கிலாந்தின் செல்வாக்கு ஓங்கி வளர்ந்தது. மத்திய ஆசியாவிலும் மஞ்சூரியாவிலும் உருசியா தன் ஆட்சியை விரிவாக்கிக் கொண்டது. பிரெஞ்சுக்காரர் இந்தோ சீனாவில் குடியேற்றங்களை நிலைநாட்டினர். அமெரிக்க ஐக்கியநாடு, கி.பி. 1898-ஆம் ஆண்டில் இசுபெயினின் கட்டுப்பாட்டின் கீழிருந்த பிலிப்பைன்சுத் தீவுகளை - இசுபானிய அமெரிக்கப் போருக்குப் பின்னர்த் தம் வயமாக்கிக்கொண்டது.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆசியாவில், மேலைநாட்டின் செல்வாக்கால் பெரும் மாற்றங்கள் தோன்றின. குடியேற்ற நாட்டு ஆட்சியின் பயனாகக் கீழை நாட்டு மேலை நாட்டு நாகரிகங்களைப் பிரித்த பண்பாட்டுத் தடைகள் தேய்ந்து மெலியத் தொடங்கின. மேலைநாடுகளின் கலையால் ஆசியக்கலை தாக்குற்றுத் தன்னிலை இழந்தது. குடியேற்றப் பகுதிகளாய் இருந்த ஆசியப் பகுதிகளின் பெருநகரங்களில் மேலை நாட்டுப்பாணியில் கட்டடங்கள் கட்டப்பெற்றன. ஆசியாவின் பொருளாதார, அரசியல் வாழ்வுகள் பெரும் தாக்குதலுக்கு உள்ளாயின.

ஆசியாவைக் கட்டுப்படுத்தியதன் விளைவாகக் குடியேறிய நாடுகள் பெரும் பலன்களை நுகர்ந்தன. எனினும் கோடிக்கணக்கான ஆசியர்கள் வறுமையால் வாடினார்கள். அதனால், வெறுப்புற்ற ஆசியர்கள் 'ஆசியா ஆசியர்களுக்கே' என்று குரலெழுப்பித் தன்னாட்சிபெற விழைந்தார்கள். ஆசியக்கண்டத்தின் பல பகுதிகளில் நாட்டுணர்ச்சி பெருகி வளரலாயிற்று. காலப் போக்கில் நாட்டுணர்ச்சி இயக்கத்தால் குடியேற்றவாதிகளின் ஆட்சியை முடிவுக்குக்கொணர முடிந்தது.

**சப்பான் பேரரசாக எழுச்சிகொளல்:** தோக்குகவா அரசாங்க அமைப்புமுறையைச் சப்பான் கி.பி.1867-இல் அகற்றியது. அரசியல் அமைப்புத் திட்டத்திற்குட்பட்ட முடியாட்சியை, கி.பி. 1889 இல் ஏற்றுக்கொண்ட பின்னர்க் கிழக்காசியாவில் மாபெரும் வல்லரசாக விரைவில் சப்பான் வீறுகொண்டெழுந்தது. சீனாவுடனும் உருசியாவுடனும்

கி.பி. 1894-ஆம் ஆண்டுக்கும் 1905-ஆம் ஆண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் நடந்த போர்களில், சப்பான், தைவான் தீவை வென்றதுடன் மஞ்சூரியா, கொரியா ஆகிய நாடுகளிலும் கா லூன்றியும் விளங்கியது.

மஞ்சு மரபினரை 1912-ஆம் ஆண்டில் அகற்றிய பின்னர்ச் சீனாவில் புதியதொரு குடியரசு நிலை நாட்டப்பெற்றது. இருப்பினும் சீனா வலுவான புதிய அரசாங்கத்தை நிலைநாட்ட முடியாமல் தவித்தது. பல்லாண்டுகள் தலைவர்கள் நாட்டின் அரசைக் கட்டுப்படுத்தத் தமக்குள் சண்டையிட்டுக் கொண்டார்கள். சியாங்கு-கே-சேக்குஎன்பார் 1927-ஆம் ஆண்டில் சீனாவில் தேசிய அரசினை நான்கிங்கு என்னும் ஊரில் நிலைநாட்டினார்; பல்வேறு குழுக்கள் போட்டி யிட்டுக் கொண்டதால் அரசும் நாடும் நலியத் தொடங்கின. சப்பானியர், 1931-இல் மஞ்சூரியாவின் மீது படையெடுத்தனர். ஆறு ஆண்டுகளுக்குப்பின்னர் அப்படைகள் மத்திய சீனாவரையிலுள்ள பகுதிகளைக் கைப்பற்றின. சீனாவை ஓரளவு வென்ற உணர்வோடு படைகள் திரும்பின. பின்னர் அவை தென் கிழக்காசியாவையும் பசிபிக்குத் தீவுகளையும் கைப் பற்றப் படையெடுத்தன.

சப்பான், செருமனி, இத்தாலி ஆகிய நாடுகள் 1941-ஆம் ஆண்டில் ஒன்றாக இணைந்து இரண்டாம் உலகப் போரில் ஈடுபட்டன. சப்பான் பேரரசு 1943-இல் பெரும் வல்லரசாக உருமாறி, வடக்கில் அலுசியன் தீவிலிருந்து தெற்கில் பிலிப்பைன்சு, இந்தோனேசியா வரை பரந்திருந்தது. சப்பான் 1945-இல் தோல்வியுற்றபோது அப்பேரரசு வீழ்ச்சியுற்றது.

**குடியேற்ற நாட்டாட்சி முடிவுக்கு வரல்:** இரண்டாம் உலகப் போரில் நேசநாடுகள் வெற்றிபெற்றதால் மேலைநாடுகள் குடியேற்ற நாடுகளைச் சிறிது காலம் தம் ஆட்சிக்குள் வைத்துக் கொண்டிருந்தன. ஆசியாவில் சுடர்விட்டெழுந்த நாட்டுணர்ச்சியால் மேலைநாடுகளின் குடியேற்ற ஆட்சி முடிவுக்கு வந்தது. காந்தியடிகள் இந்தியாவை ஆங்கிலேயரிடமிருந்து விடுவிக்கச் சுதந்திரப் போராட்ட இயக்கத்தைத் தொடங்கி அதற்குத் தலைமை தாங்கினார்.

பர்மா, இந்தியா, இந்தோனேசியா, சோர்டான், இலெபனான், பாகிசுத்தான், பிலிப்பைன்சு, சிரீலங்கா போன்ற குடியேற்றப் பகுதிகள் 1943-க்கும் 1949-க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் விடுதலைபெற்ற நாடுகளாயின. தென்மேற்கு ஆசியாவிலும் பல அரசுகள் ஐக்கியநாடுகளின் ஆணைப்படி பாதுகாக்கப்பட்ட பகுதிகளாய் இருந்து சுதந்திர நாடுகளாயின. அவற்றுடன் புதியதொரு நாடான இசுரேலும் 1948-ஆம் ஆண்டில் உருவாக்கப்பட்டது. ஐரோப்பாவில் வாழ்ந்த பல யூதர்கள் இப்புது நாட்டிற்கு வந்து குடியேறினார்கள். ஆசியாவில் மேற்கத்திய நாடுகளின் குடியேற்றப் பகுதிகளை 1949-இல் கொண்டிருந்தது இந்தோசீனா என்னும் ஒரே நாடுதான். அங்கு ஏற்பட்ட கலகங்களினால் அந்நாடு விடுதலை பெறுவது ஐந்தாண்டுகள் நீட்டித்தது.

குடியேற்ற நாடுகள், அந்நியராட்சியிலிருந்து பெற்ற வெற்றியால் சுதந்திரம் பெற்றுத் தன்னாட்சி நடத்தி முன்னேறத் திட்டம் தீட்டின. ஆனால், பல்லாண்டுகள் அடிமைகளாக இருந்ததன் விளைவாக ஆசிய நாடுகளினால் இக்கால உலகை எதிர்நோக்கியுள்ள சிக்கல்களைச் சமாளிக்க இயலவில்லை.

பொருளாதாரத் துறையில் ஆசியா, மேலை நாடுகளைவிடப் பின்னணியில் நின்றது. தொழில் புரட்சியின் விளைவாக ஐரோப்பிய நாட்டு மக்களுக்குப் போதுமான வேலைவாய்ப்புகள் கிட்டின; அவர்களின் மக்கள் தொகையும் விரைவாக வளர்ந்து பெருகியது. அரசுகளின் வருமானம் பெருகி, பெரும் வாணிகர்களின் செல்வாக்கும் உயர்ந்தது. பெரும்பாலான மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்ந்து காணப்பட்டது. மேலைநாடுகள், பண்ணைக்கான இயந்திரப் பொருள்களை உண்டாக்கிப் புதியமுறைகளைக் கையாண்டு, பல துறைகளில் பெரு முன்னேற்றம் கண்டன. குடியேற்றநாடுகளாக இருந்தபோது ஆசியாவின் தொழில் மூலப் பொருள்களைத் தம் தொழிற்சாலைக்கு மேலைநாடுகள் பயன்படுத்திக் கொண்டன. அதனால், ஆசியா தொழில் வளர்ச்சியில் இயந்திரமயமாகும் வாய்ப்பினைப் பெறவில்லை. அதுபோலவே வேளாண்மைத் துறையிலும் போதுமான அளவு முன்னேற்றம் ஏற்படவில்லை. இதனால் ஆசியநாடுகளில் வறுமை பெருகியுள்ளது.

குடியேற்ற நாடுகளாக விளங்கிய காரணத்தால் ஆசியாவின் அரசியல், படைக்கல முன்னேற்றங்கள் ஆகியவை வளர்ச்சி குறைந்தன. ஐரோப்பியர்கள் குடியேற்ற நாடுகளை விட்டகன்றபின், ஆசியநாடுகளில் அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றிக் கொள்ளப் போராட்டங்கள் நடந்தன. பதவிக்கு வந்த சிலர் தம் அதிகாரத்தை நிலைநாட்டி அனைத்து மக்களையும் ஆளுவதில் தொல்லைகள் ஏற்பட்டன. பொதுவுடைமைக் கட்சியினரும் ஏனைய புரட்சிக்காரர்களும் பல நாடுகளில் புதிய அரசுகளை எதிர்த்தனர்.

மேலைநாடுகள் படைப்பெருக்கம், தொழில்வள முன்னேற்றம், அரசியல் வளர்ச்சி போன்றவற்றைக் குடியேற்றப் பகுதிகளைக் கொண்டிருந்தபோது பெற்றிருந்தன. மேலைநாடுகள் தம்மை விட்டுச் சென்றபோது குடியேற்ற நாட்டுப் பகுதிகளில் உள்ள

வர்கள், வேலையில்லாத் திண்டாட்டம், போதுமான படைப்பாதுகாப்பின்மை போன்ற சிக்கல்களினால் தொல்லைப்பட்டனர்.

**பொதுவுடைமைக் கருத்துகள் வளருதல்:** இரண்டாம் உலகப் போருக்கு நீண்டகாலத்திற்கு முன்னரே ஆசியாவின் இருநாடுகளான உருசியாவும் மங்கோலியாவும் பொதுவுடைமை நாடுகளாயின. இக்கண்டத்தின் பல்வேறு பகுதிகளில் 1939-ஆம் ஆண்டில் போர் தொடங்கும் வேளையில் பொதுவுடைமைக் கட்சிகள், வலிமை பெறாமல் இருந்தன. பொதுவுடைமைக் கட்சிக்காரர்கள், மேலைநாடுகளின் குடியேற்ற ஆட்சியைக் கண்டித்துப் பேசியும் புதிய உறுப்பினர்களைத் திரட்டியும் வந்தார்கள். இரண்டாம் உலகப் போரின் போது பொதுவுடைமைக் கட்சிக்காரர்கள் நேசநாட்டுப் படைகளுடன் இணைந்து போராடினார்கள். அப்படிப்பட்ட நாடுகளில் சில, குடியேற்றப்பகுதிகளைக் கொண்டவையாகும். ஆனால், போர் முடிவடைந்த போது பொதுவுடைமைக் கட்சிகள், குடியேற்ற நாடுகளை விட்டுவிடவேண்டும் என்றும் அப்பகுதிகளை அந்நாட்டினரே ஆட்சி செய்ய வேண்டுமென்றும் கோரின.

சீனாவின் தேசியவாதிகளைச் சீனப் பொதுவுடைமைக் கட்சிக்காரர்கள் 1949-ஆம் ஆண்டில் வென்றார்கள். பொதுவுடைமைக் கட்சிக்காரர்களை மா-சே-துங்கு வழிநடத்தினார். இப்போது ஆசியாவின் இரு மிகப் பெருநாடுகளான உருசியாவிலும் சீனாவிலும் பொதுவுடைமைக் கட்சிகள் ஆட்சி நடத்துகின்றன.

இரண்டாம் உலகப் போரின் முடிவில் கொரியாவிலிருந்த பொதுவுடைமைக் கட்சிக்காரர்கள் வட கொரியாவைத் தம் கட்டுப்பாட்டின் கீழ்க் கொணரவே, தென்கொரியா பொதுவுடைமையல்லாத கட்சிக்காரர்களின் கீழ் வந்தது. வட கொரியர்கள் 1950-ஆம் ஆண்டில் தென் கொரியாவின் மீது படையெடுத்தனர். இப்போரே பொதுவுடைமைக்காரர்களுக்கும், பொதுவுடைமையல்லாதவர்களுக்குமிடையே மூண்ட முதல் பன்னாட்டுப் போர் ஆகும். தென் கொரியாவின் சார்பாக அமெரிக்க ஐக்கிய நாடுகளும் ஏனைய பொதுவுடைமைக் கொள்கைச் சார்பில்லா நாடுகளும் சேர்ந்துகொண்டு போராடின. வடகொரியாவிற்குச் சார்பாகச் சீனாவும் உருசியாவும் துணை நின்றன. சீனா படைவீரர்களையும் உருசியா போர்க்கருவிகளையும் அனுப்பின. கொரியப் போர் 1953-இல் முடிவுற்றது. ஆனால், கொரியா இன்றும் வடகொரியா, தென் கொரியா என்று பிரிந்தே உள்ளது.

பொதுவுடைமைக் கொள்கை தென்கிழக்கு ஆசியாவிலும் உறுதியாகக் காலூன்றியுள்ளது. குடியேற்ற நாடாக இருந்த இந்தோ-சீனாவில் வாழ்ந்த ஆசியர்கள், 1946- இல் பிரெஞ்சுப் படைகளுடன் நீண்ட போரைத் தொடங்கினர். ஆசியர்களை வியட்மின் என்னும் பெயர் கொண்ட தேசியவாதிகள் வழிநடத்தினார்கள். வியட்மின்களைத் தலைமையேற்று நடத்திய கோ-சி-மின் என்பார் பொதுவுடைமைக் கொள்கையைக் கொண்டவர். கோ-சி-மின்னின் படைகள், 1954-இல் வாகை சூடிப் பிரெஞ்சுப் படைகளைத் தோற்கடித்தன. இந்தோ-சீனா, பின்னர் நான்கு சுதந்திர நாடுகளாகப் பிரிந்தது. அவை (1) பொதுவுடைமைச் சார்பு கொண்ட வட வியட்நாம் (2) பொதுவுடைமைச் சார்பற்ற கம்யோடியா எனப்படும் கம்பூச்சியா (3) இலாவோசு (4) தென் வியட்நாம் என்பனவாம்.

பிரெஞ்சுக்காரர் அகன்ற பின்னும் இந்தோசீனாவில் போர் நின்றபாடில்லை. பொதுவுடைமைச் சார்பில்லாப் புதிய அரசுகளைக் கம்போடியா, இலாவோசு, தென்வியட்நாம் ஆகிய நாடுகளிலிருந்து பொதுவுடைமைக்காரர்கள் தொடர்ந்து எதிர்த்தனர். வட வியட்நாம், அவர்களுக்கு உறுதுணையாகப் படைவீரர்களையும் போர்க்கருவிகளையும் அளித்தது. சீனாவும் உருசியாவும் கூடப் போர்க்கருவிகளை அனுப்பின.

தென் வியட்நாம் 1960-ஆம் ஆண்டில் தொடக்கத்தில் பொதுவுடைமைக்காரர்களின் தாக்குதலால் வீழ்ச்சியுறுமோ என்ற நிலை தோன்றியது. தென்-வியட்நாமைக் காக்க அமெரிக்க ஐக்கிய நாடுகள், படைவீரர்களை அனுப்பின. 1973 -ஆம் ஆண்டில் ஏற்பட்ட போர் நிறுத்த ஒப்பந்தம், அமெரிக்க ஐக்கிய நாடுகளின் ஈடுபாட்டை முடிவுக்குக் கொணர்ந்தது. எனினும் வியட்நாமியப் பொதுவுடைமைக்காரர்களுக்கும், பொதுவுடைமைக்காரர்கள் அல்லாதவர்களுக்குமிடையே தொடர்ந்து மோதல்கள் நிகழ்ந்து வந்தன. கம்போடியாவிலும் இலாவோசிலும் 1960-ஆம் ஆண்டிலும் 1970-ஆம் ஆண்டின் தொடக்கத்திலும் சண்டைகள் மூண்டன. பொதுவுடைமைக்காரர்கள் 1975-ஆம் ஆண்டில் தென் வியட்நாம், கம்போடியா, இலாவோசு ஆகிய நாடுகளைக் கைப்பற்றிக் கொண்டனர். வட வியட்நாமும் தென் வியட்நாமும் ஒன்றாக 1976-இல் இணைந்தன.

இப்போது ஆசியாவின் ஏழுநாடுகளில் பொதுவுடைமைக்காரர்கள் ஆட்சி நடத்துகிறார்கள். அவை (1) கம்போடியா (2) சீனா (3) இலாவோசு (4) மங்கோலியா (5) வடகொரியா (6) உருசியா (7) வியட்நாம் என்பனவாம்.

**ஏனைய போராட்டங்கள்:** பொதுவுடைமைக் கட்சிக்காரர்களுக்கும் பொதுவுடைமைச் சார்பில்

லாதவர்களுக்கும் இடையே ஆசியாவில் நடைபெறும் சண்டை சச்சரவுகளை நிறுத்திவிட முடியாது. இக் கலகங்கள், நாடுகளுக்கிடையே பதவிக்கான சண்டைகள், எல்லை சச்சரவுகள் போன்றவற்றால் பல ஆசியர்களிடையே நடைபெற்று வருகின்றன.

தென்மேற்கு ஆசியாவில் இசுரேலியர்களுக்கும் அராபியர்களுக்குமிடையே 1948-இல் பெரும் போராட்டம் நிகழ்ந்தது. அதேபோல் வட ஆப்பிரிக்காவிலும் தொல்லைகள் மூண்டன. இசுரேலியர்கள் தமக்கெனத் தனித்ததொரு யூத நாட்டினை நிறுவிக் கொண்டதை ஏற்றுக்கொள்ள அராபியர்கள் மறுத்ததால் 1948-இலிருந்து அராபியர்களும் இசுரேலியர்களும் நான்கு முறை போரிட்டுக் கொண்டார்கள். இசுரேலியர்களுக்கும் எகிப்தியர்களுக்கும் 1970 முதல் நல்லுறவு நீடித்தாலும் ஏனைய அராபிய நாடுகளுடன் இணக்கம் ஏற்படாமலேயுள்ளது.

தென்மேற்கு ஆசியாவின் வேறு பகுதியிலும் 1960-இல் சண்டை சச்சரவுகள் நடந்தன. ஈராக்கு, சிரியா, ஏமன் (சன்னா) ஆகிய நாடுகளில் கலகக்காரர்களுக்கும் அங்குள்ள அரசுகளுக்குமிடையே சண்கள் மூண்டன. ஏமன் கலகத்தில் அரபு நாடுகளுக்குள் ஒற்றுமையில்லையென்பது வெளிப்படையாகத் தெரிந்தது. அங்கு மூண்ட சண்டையின்போது எகிப்து, கலகக்காரர்களையும் சவூதி அராபியா அரசினையும் ஆதரித்தது. 1970-ஆம் ஆண்டின் இடையில் இலெபனான் நாட்டில் கிறித்தவர்களுக்கும் இசுலாமியர்களுக்குமிடையே உள்நாட்டுப்போர் மூண்டது. போரின் போது சிரியா நாட்டுப் படைகள், பாலசுத்தீன விடுதலை இயக்கத்திற்கு எதிராகப் போரிட்டு, இலெபனானிய இசுலாமியர்களை எதிர்த்தன.

இந்தியா 1960-ஆம் ஆண்டைத் தொடர்ந்து மூன்று போராட்டங்களில் ஈடுபடலாயிற்று. கோவா, தாமன், தையூ ஆகிய இடங்களைப் போர்ச்சுகல் நாட்டுடன் 1961-இல் போராடிப்பெற்றது. இந்தியாவுக்கும் சீனாவுக்குமிடையே 1962-இல் போர் மூண்டது. சீனா முறைகேடாக இந்தியாவின் வடகிழக்குப் பகுதியின் மீது படையெடுத்துப் பெரும் நிலப்பரப்பைக் கைப்பற்றியபோது, இந்தியாவுக்கும் சீனாவுக்குமிடையே போர் மூண்டது. அவ்வாண்டின் இறுதியில் சீனா, தன் படைகளை இந்தியாவின் உள்நாட்டுப் பகுதிகளிலிருந்து விலக்கிக் கொண்டது. இந்தியாவுக்கும் பாகிசுத்தானுக்குமிடையே காசுமீரம் குறித்து 1965-இல் சிலநாள்களில் போர் மூண்டது. போர்நிறுத்த உடன்பாட்டால் போர் நின்றது. காசுமீரம் இந்தியாவுடன் இணைந்த மாநிலங்களுள் ஒன்றாகும்.

பாகிசுத்தானத்தின் இரு பாகங்களாயிருந்த மேற்குப் பாகிசுதானத்திற்கும் கிழக்குப் பாகிசுதானத்திற்குமிடையே 1971-இல் போர் மூண்டது. இந்தியாவின் உறுதுணையால் கிழக்குப் பாகிசுத்தான் வெற்றிபெற்றுப் பங்களாதேசம் என்னும் பெயரில் சுதந்திர நாடாகியுள்ளது.

தென்கிழக்கு ஆசியாவில் 1950-க்கும் 1960-க்கும் இடையில் பொதுவுடைமைக் கொள்கை நாடுகளுக்கும் பொதுவுடைமைச் சார்பில்லா நாடுகளுக்கும் பல சண்டைகள் மூண்டன. பொதுவுடைமைச் சார்பில்லா நாடுகளான இந்தோனேசியாவுக்கும் மலேசியாவுக்கும் எல்லைப்புறப் பகுதிகள் குறித்து 1963-க்கும் 1966-க்கும் இடையில் சண்டைகள் எழுந்தன.

பொதுவுடைமைக் கொள்கையைக் கொண்ட நாடுகளான உருசியாவுக்கும் சீனாவுக்கும் இடையில் நிலவிய நட்புறவு நலிந்து, மனக்கசப்பான சூழல் ஏற்பட்டது. அவ்விருநாடுகளும் ஒன்றையொன்று குறைகூறிக்கொண்டன. இரு நாடுகளும் எல்லைப்புறங்களில் 1969-இல் மோதிக் கொண்டன. பொதுவுடைமை நாடுகளான கம்பூச்சியாவும் வியட்நாமும், சீனாவும் வியட்நாமும் கூட 1970-க்குப் பின்னர் மோதிக் கொண்டன.

**ஆசியாவில் புத்தெழுச்சி:** ஆசியாக் கண்டத்தில் இன்றும் பல சிக்கல்கள் எழுந்துள்ளன. கோடிக்கணக்கான ஆசியர்கள் வறுமைக் கோட்டிற்குக் கீழே வாடித் தவிக்கின்றனர். தமக்குள் மோதிக் கொள்ளும் ஆசியர்களுக்கும் பஞ்சமில்லை. எனினும் ஆசியாவில் முன்னேற்றத்திற்கான அறிகுறிகளும் தென்படுகின்றன.

சப்பான், ஆங்காங்கு, மலேசியா, சிங்கப்பூர், தென் கொரியா, தைவான், தாய்லாந்து போன்ற நாடுகளில் பொருளாதார முன்னேற்றம் விரைந்து ஏற்பட்டு வருகிறது. சப்பான், பொருளாதாரத்திலும் தொழில் நுட்பத் துறையிலும் மிகுதியாக முன்னேறி மேலைநாடுகளையே விஞ்சக்கூடிய நிலைக்கு வந்துள்ளது. வீரிய வகை நெல், கோதுமை விதைகள் இம் முன்னேற்றத்திற்கு உறுதுணையாக நிற்பனவாம்.

ஆசியாவின் உருசியா, ஐரோப்பிய உருசியாவை விடப் பொருளாதார வளத்தில் குறைந்திருந்தாலும், உருசிய அரசின் தீவிர முயற்சியால் அங்கும் முன்னேற்றம் ஏற்படத்தொடங்கியுள்ளது.

தென்மேற்கு ஆசியாவில், இசுரேல் நாடு மிகவும் முன்னேறியுள்ளது. தென்மேற்கு ஆசியாவின் முசுலிம் நாடுகள் பெட்ரோலியப் பொருள் வளத்தால் செழித்து வளர்ந்து வருகின்றன.

பொருளாதார முன்னேற்றத்தால் பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள், தொழில் நுட்பக்

கல்லூரிகள், பொறியியல், மருத்துவக் கல்லூரிகள் பெருகி, கல்லாமையின் விழுக்காடு குறைந்து வருகிறது. இந்தியாவும் பலதுறைகளில் மிகுதியாக் முன்னேறி வருகிறது. சீனாவின் முன்னேற்றமும் போற்றுதற்குரியது.

ஆசியாக் கண்டத்திலுள்ள விடுதலை பெற்ற நாடுகள்

| நாட்டின் பெயர் | தலைநகரம் | ச.கி.மீ. பரப்பளவு | மக்கள்தொகை | விடுதலை பெற்ற ஆண்டு |
|---|---|---|---|---|
| 1. அய்க்கிய அராபிய எமிரேட்டுகள் | அபுதாபி | 92,100 | 10,40,275 | 1971 |
| 2. ஆசிய ருசியா | மாசுகோ | 16,831,900 | 7,01,61,000 | ... |
| 3. ஆப்கானிசுத்தானம் | காபூல் | 6,47,497 | 2,24,50,000 | 1971 |
| 4. இசுரேல் | செருசலம் | 29,770 | 39,96,000 | 1948 |
| 5. இந்தியா | புதுதில்லி | 31,66,828 | 68,38,10,051 | 1947 |
| 6. இந்தோனேசியா | சாகர்த்தா | 19,19,443 | 14,74,90,298 | 1949 |
| 7. இலாவோசு | இலியண்டியானே | 2,36,800 | 37,94,000 | 1949 |
| 8. இலெபனான் | பெயிருட்டு | 10,400 | 26,87,000 | ... |
| 9. ஈராக்கு | பாக்தாத்து | 4,34,924 | 1,36,11,000 | ... |
| 10. ஈரான் | தெக்ரான் | 16,48,000 | 3,79,89,000 | ... |
| 11. ஏமன்(ஏடன்) | ஏடன் | 3,32,968 | 20,31,000 | 1967 |
| 12. ஏமன் (சனா) | சனா | 1,95,000 | 60,70,000 | ... |
| 13. ஓமன் | மசுகட்டு | 2,21,457 | 9,27,000 | ... |
| 14. கட்டார் | தோகா | 11,000 | 1,76,000 | 1971 |
| 15. கம்பூச்சியா (கம்போடியா) | நோம்பென் | 1,81,035 | 96,49,000 | 1953 |
| 16. குவைத்து | குவைத்து | 20,118 | 14,31,000 | 1961 |
| 17. சப்பான் | தோக்கியோ | 3,77,389 | 11,99,00,000 | ... |
| 18. சவுதி அராபியா | இரியாத்து | 21,53,090 | 84,87,000 | ... |
| 19. சிங்கப்பூர் | சிங்கப்பூர் | 616 | 24,50,000 | 1965 |
| 20. சிரியா | தாமசுகசு | 1,85,180 | 89,33,000 | 1946 |
| 21. சிரிலங்கா | கொழும்பு | 65,160 | 1,50,27,000 | 1948 |
| 22. சீனா | பீக்கிங் | 95,27,200 | 95,18,80,000 | ... |
| 23. சைப்பிரசு | நிகோசியா | 9,251 | 6,61,000 | 1960 |
| 24. சோர்டான் | அமான் | 97,740 | 32,53,000 | 1946 |
| 25. தாய்லாந்து | பாங்காக்கு | 5,14,000 | 4,91,82,000 | ... |
| 26. துருக்கி | அங்காரா | 7,56,953 | 4,17,46,000 | |

| | | | | |
|---|---|---|---|---|
| 27. தென்கொரியா | சியோல் | 98,484 | 4,05,50,000 | 1948 |
| 28. தைவான் | தைப்பே | 35,961 | 1,80,51,000 | ... |
| 29. நேபாளம் | காட்மண்டு | 1,40,797 | 1,45,55,000 | ... |
| 30. பகரீன் | பனாமா | 622 | 3,02,000 | 1971 |
| 31. பங்களாதேசம் | தாக்கா | 1,43,998 | 9,29,08,000 | 1971 |
| 32. பர்மா | இரங்கூன் | 6,76,552 | 3,51,38,000 | 1948 |
| 33. பாகிசுத்தான் | இசுலாமாபாத்து | 8,03,943 | 8,53,86,900 | 1947 |
| 34. பிலிப்பைன்சு | மணிலா | 3,00,000 | 5,04,83,000 | 1946 |
| 35. புருணை | பண்டார்சேரி பெகாவன் | 5,800 | 1,91,770 | 1983 |
| 36. பூட்டான் | திம்பு | 46,600 | 11,00,000 | ... |
| 37. மங்கோலியா | உலன் படார் | 15,65,000 | 17,21,000 | ... |
| 38. மலேசியா | கோலாலம்பூர் | 3,29,749 | 1,40,72,000 | 1963 |
| 39. மாலத்தீவுகள் | மாலி | 298 | 1,50,000 | 1965 |
| 40. வடகொரியா | பியாங்யாங்கு | 1,20,538 | 1,96,19,000 | 1948 |
| 41. வியட்நாம் | அனோய் | 3,29,556 | 5,49,18,000 | 1954 |

ஆசியாவிலிருக்கும் ஏனைய அரசியல் பகுதிகள்

| | | | | |
|---|---|---|---|---|
| காசா துண்டு நிலம் | காசா | 378 | 4,67,000 | எகிப்து நாட்டிற்குச் சொந்தமான இப்பகுதி இசுரேலின் வசம் உள்ளது. |
| ஆங்காங்கு | விக்டோரியா | 2916 | 48,67,000 | இங்கிலாந்தின் ஆட்சிக்குட்பட்டது. |
| மாகோவா | மாகோவா | 16 | 2,86,000 | போர்ச்சுகல் நாட்டின் ஆட்சிக்குட்பட்டது. |

துணை நூல்கள்:

Stemp, L.D., Asia: A Regional and Economic Geography, 12th ed., Harper, 1966.

Lands and People, Vol. 2, Grolier Incorporated, U.S.A. 1983.

Roberts, John G., The Colonial Conquest of Asia, Watts, U.S.A., 1976.

**ஆசிரம தருமம்**: சமூகத்தில் தனிமனிதனின் வாழ்க்கை நிலைகளுக்கு உரிய கடமைகளை ஆற்றுதல் ஆசிரம தருமம் என்று இந்துசமய நூல்கள் கூறுகின்றன. தனிமனிதனின் வாழ்க்கை, ஒழுக்கம் ஆகியவற்றைப் பாதிப்பவைகளாகப் பல காரணிகளை இந்துமதச் சிந்தனையாளர்கள் கூறுகின்றார்கள். அவற்றுள் சிரமம் அல்லது முயற்சி என்பதும் ஒன்றாகும். மனித வளர்ச்சியின் பல்வேறு படிகளின் அடிப்படையில், ஆசிரமதருமம் நோக்கப்படுகிறது. தனிமனிதனின் வாழ்க்கையில் நான்கு படிகள் உள்ளன என்றும், அவை பிரமசரியம் (மாணவனாக உள்ள காலம்), கிரகத்தம் (இல்லற நிலை), வானப்பிரத்தம் (காட்டில் வாழும் நிலை), சந்நியாசம் (துறவு நிலை) எனப்படும் என்றும் இந்துமதக் கோட்பாடு கூறுகிறது.

பிரமசரியம் என்னும் மாணவ நிலை, முதல் நிலைக் கல்விக்கும் கட்டுப்பாட்டிற்கும் உரிய காலமாகக் கருதப்படுகிறது. கல்வி கற்கும் நிலை முடிந்தவுடன், கிரகத்தநிலை என்னும் இல்லற நிலையில் திருமணம் செய்துகொண்டு குடும்பத்தை அமைக்கி

றான். தனி மனிதனின் வாழ்க்கையில் திருமணம் ஒரு கடப்பாடாகவும் தவிர்க்க முடியாத நிகழ்ச்சியாகவும் அமைகிறது. இந்நிலையில் மனிதன் தன் குடும்பத்திற்கும் சமூகத்திற்கும் தான் ஆற்ற வேண்டிய கடமைகளைச் செய்ய வேண்டியவனாகிறான். இக்கடமைகள், பொருள் (அருத்தம்), காதல் (காமம்) என்னும் இருபெரும் பிரிவுகளில் அடங்குகின்றன.

மூன்றாம் நிலையான வானப்பிரத்தம் அல்லது ஒதுங்கி வாழும் நிலையில் மனிதன் சமூக வாழ்க்கையின் பொறுப்புகளினின்றும் ஓய்வு பெற்றுத் தன் மனைவியுடன் காட்டிற்குச் சென்று உலக நடவடிக்கைகளிலிருந்து ஒதுங்கி நின்று, அவற்றோடு ஒட்டாமல் வாழ்கிறான். இந்நிலையில் அவன் வாழ்க்கையின் அடிப்படைத் தத்துவத்தை ஆராய்ந்து நோக்கத் தொடங்குகிறான். இந்நிலையில் வீட்டுலகு (முத்தி) மட்டும் கவனத்தை ஈர்க்கிறது.

வாழ்க்கையின் இறுதிப்படியாகச் சந்நியாசம் என்னும் துறவுநிலை அமைந்துள்ளது. இந்நிலையில் மனிதன் உலகப்பற்றுகள் எல்லாவற்றையும் துறந்துவிட்டுத் தன்னைச் சமூக உறவுகள், சமூகத் தொடர்புகள் ஆகியவற்றிலிருந்து விடுவித்துக் கொள்கிறான். இந்நிலையிலுள்ள மனிதன் ஒரு குடும்பத்தையோ ஒரு குழுவையோ சார்ந்தவனல்லன். இவன் பொதுவாக மனித இனத்தைச் சேர்ந்தவனாகக் கருதப்படுகிறான். வாழ்க்கையின் முடிவிற்குத் தன்னை ஆயத்தம் செய்துகொள்கிறான். மேற்குறிப்பிட்ட நான்கு நிலைகளுள் ஒவ்வொரு நிலையிலும் மனிதன், தன்னை அடுத்த நிலைக்கு ஏற்றவனாகப் பயிற்சி செய்து கொள்கிறான். ஒவ்வொரு நிலைக்கும் உரிய கடமைகள் வகுக்கப்பட்டிருக்கின்றன. காண்க: தருமம், இந்தியச் சமுதாய அமைப்பு.

**ஆசிரியத் தாழிசை** என்பது ஆசிரியப்பாவின் மூவகை இனங்களுள் ஒன்றாகும். இது அகவற்றாழிசை என்றும் வழங்கப்பெறும். தம்மில் அளவு ஒத்துவிளங்கும் மூன்றடிகளால் அமையும் செய்யுள் ஆசிரியத் தாழிசை என்று வழங்கப்பெறும். இவ்வகைச் செய்யுள்கள் ஒருபொருள் மேல் மூன்றாக அடுக்கி வருவது சிறப்புடையதாகும். அங்ஙனமின்றித் தனித்து வந்தாலும் அது ஆசிரியத் தாழிசை எனவே சொல்லப்படும். நால்வகைப் பாக்களுக்கும் பாவினங்களை வகுத்து இலக்கணங் கூறும் மரபு தொல்காப்பியத்திற்குப் பின்னர் யாப்பிலக்கணத்தில் உருவாகிய ஒன்றாகும். யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை போன்ற பிற்கால யாப்பிலக்கண நூல்களிலும், காக்கைபாடினியார் மயேச்சுரர் போன்ற பின்னர் வந்த யாப்பிலக்கண ஆசிரியர்களாலும் பாவினங்களுக்கு இலக்கணம் வகுக்கப்பட்டுள்ளது. 'தருக்கிய தாழிசை மூன்றடி ஒப்பன' என்பது ஆசிரியத் தாழிசை பற்றிய யாப்பருங்கலக் காரிகை விதியாகும். காக்கை பாடினியார் 'அடிமூன்று ஒத்திறின் ஒத்தாழிசையே' என்றும், மயேச்சுரர் "ஒத்த ஒரு பொருள் மூவடி முடியின் அது ஒத்தாழிசையாம் உடன் மூன்று அடுக்கின்" என்றும் இதற்கு இலக்கணம் வகுத்துள்ளனர். 'கன்று குணிலா', 'பாம்புகயிறா' 'கொல்லையஞ்சாரல்' எனத் தொடங்கும் சிலப்பதிகாரச் செய்யுள்கள் மூன்றும் ஒரு பொருள்மேல் மூன்றடுக்கிவந்த ஆசிரியத் தாழிசைக்கு எடுத்துக்காட்டாகும்.

**ஆசிரியத் துறை** என்பது ஆசிரியப்பாவின் மூவகை இனங்களுள் ஒரு வகையினைக் குறிக்கும். இவ்வினச் செய்யுள் பலவகையாக அமையும். அவை யாவன: நான்கு அடிகளுடையதாய், ஈற்றயலடி குறைந்து வருவது; நான்கு அடிகளுடையதாய், ஈற்றயலடி குறைந்து இடைமடக்காக வருவது; நான்கு அடிகளுடையதாய் இடையிடையே குறைந்து வருவது; நான்கு அடிகளுடையதாய் இடையிடையே குறைந்து இடைமடக்காய் வருவது ஆகும். இவ்வினச் செய்யுள் எவ்வகைச் சீரானும் அடியானும் அமையும். நான்கு அடிகளுள் முதலயலடி குறைந்தும், நடுவிலுள்ள இரண்டு அடிகள் குறைந்தும் மிக்கும் வரும். இடையில் ஓரடி குறைந்து வருவது ஆசிரிய நேர்த்துறை என்றும், இரண்டடிகள் குறைந்து வருவது ஆசிரிய இணைக்குறட்டுறை என்றும் கூறப்படும். நால்வகைப் பாக்களுக்கும் பாவினங்கள் வகுத்து இலக்கணங்கூறும் மரபு தொல்காப்பியத்திற்குப் பின்னர்த் தோன்றியதாகும். யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை போன்ற யாப்பிலக்கண நூல்கள் ஆசிரியத்துறை முதலிய பாவினங்களுக்கு இலக்கணம் வகுத்துள்ளன. "நான்கடியாய் எருத்தடிநைந்தும் இடைமடக்காயும் இடையிடையே சுருக்கடியாயும் துறையாம்" என்பது யாப்பருங்கலக் காரிகை கூறும் ஆசிரியத்துறை இலக்கணமாகும்.

**ஆசிரிய நிகண்டு** கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஆண்டிப் புலவரால் இயற்றப்பட்ட நூல். இவர் தொண்டை மண்டலத்திலுள்ள செஞ்சியைச் சார்ந்த ஊற்றங்கால் என்னும் ஊரினர். ஞானப் பிரகாசர் என்பவரின் மாணவராவார். இவர் இந்நிகண்டு நூலை ஆசிரிய விருத்த யாப்பினால் செய்துள்ளார். இந்நூலின் பாயிரச் செய்யுளொன்றில் திவாகரம், பிங்கலந்தை, உரிச்சொல் நிகண்டு, கயாதரம், அகராதி நிகண்டு ஆகியவற்றிலுள்ள சொற்களையெல்லாம் பயன்படுத்தியுள்ளதாக இவர் குறிப்பிட்டுள்ளார். அதனால், கயாதர நிகண்டின் காலத்திற்குப் பிற்பட்டவர் இவராவார் என்பது புலனா

கிறது. நெடிய அடிகளாலாகிய விருத்தங்களால் அமைந்த இந்நிகண்டு நூல், பொருட் பெயர்களை மிகுதியாகக் கொண்டுள்ளது. இதன்கண் ஒவ்வொரு சொல்லிற்கும் இத்தனை பொருள்கள் என்று எண்களால் வரையறுத்து உணர்த்தப் பெற்றுள்ளது. இவர் இந்நூலில், உரிச்சொல்நிகண்டு பற்றியும், கயாதரம் பற்றியும் குறிப்பிட்டுள்ளார். இதன்கண் 17 பகுதிகள் உள்ளன. இந்நூல் 263 ஆசிரிய விருத்தங்களால் அமைந்துள்ளது. முதல் பத்துப் பகுதிகளில் ஏறத்தாழ 12,000 சொற்கள் இடம் பெற்றுள்ளன.

***ஆசிரியமாலை*** என்பது புறத்திரட்டு என்னும் தொகை நூலால் அறியப்படும் ஒரு பழந்தமிழ் நூலாகும். இதன் ஆசிரியர் பெயர் அறியக் கூடவில்லை. புறத்திரட்டின் காலம் 500 ஆண்டுகட்கு முற்பட்டது என்று பேரா. வையாபுரிப் பிள்ளை குறிப்பிட்டுள்ளமையால், இந்நூல் அதற்கு முற்பட்ட காலத்தின தாகும். இளம்பூரணர் தம் தொல்காப்பியப் பாயிர உரையில் 'குடிப்பிறப்புடுத்து' எனத் தொடங்குமொரு பாடலை எடுத்தாண்டுள்ளார். அவர் நூலின் பெயரைக் குறிப்பிடவில்லை. அவர் எடுத்தாண்டுள்ள இப்பாடல் ஆசிரியமாலை என்னும் நூலைச் சேர்ந்தது என்பது புறத்திரட்டினால் தெரிகிறது. இராம சரிதத் தொடர்பான நான்கு பாடல்களும், நிரைகோடல் பற்றி ஒரு பாடலும், கொடுங்கோன்மை பற்றி ஒரு பாடலும், நிலையாமை பற்றி நான்கு பாடல்களும், தவம் பற்றி ஒரு பாடலும், அறன் வலியுறுத்தல் பற்றி ஒரு பாடலும் ஆகப் பன்னிரு பாடல்கள் இந் நூலிலிருந்து எடுக்கப் பெற்றுப் புறத்திரட்டில் சேர்க்கப்பட்டுள்ளன. அப்பாடல்கள் அனைத்தும் ஆசிரியப் பாவில் அமைந்திருப்பதாலும், ஆசிரியமாலை என இந்நூல் பெயர் பெற்றுள்ளமையாலும், நூல் முழுவதும் ஆசிரியப் பாவினால் ஆகியது என்பது புலனாகிறது: புறப்பொருள் வெண்பாமாலை புறப்பொருளை வெண்பாக்களால் விளக்குவது போல, புறப்பொருள் பற்றிய செய்திகளை ஆசிரியப்பாக்களால் விளக்கும் நூலாக இது இருந்திருத்தல் கூடும். பல புலவர்களால் இயற்றப்பட்ட ஆசிரியப் பாக்களால் உருவாகியதோர் தொகுப்பு நூலாக இந்நூல் இருக்கலாம் என்று கருதுவாருமுளர். இப்பொழுது இந்நூல் முழுவதும் கிடைக்கவில்லை. புறத்திரட்டினால் தெளிவாக அறியக்கூடும் இந்நூற் செய்யுட்களையும், இந்நூலைச் சார்ந்தனவாகலாம் எனக் கருதப்படும் சில செய்யுட்களையும் சேர்த்து 'ஆசிரியமாலை' என்னும் பெயரில் அண்மையில் வெளியிட்டுள்ளனர். 'மாவண் சோணாட்டு ஊர்தொறும், ஏரோர் களவழி' என்று சோணாட்டுச் சிறப்பையும், 'பாண்டியர் பாடுதமிழ் வளர்த்த கூடல்' எனப் பாண்டி நாட்டுக் கூடற் பெருமையையும் இந்நூற் பாடல்கள் சிறப்பித்துள்ளன.

***ஆசிரியர் சிறப்புப் பண்புகள்*** என்பன ஆசிரியருக்கு வேண்டப்படும் குணநலன்கள் ஆகும். எவ்வகைப் பண்புகள் மாணவர் நன்கு கற்றுக் கொள்வதற்கு உதவும் செய்கைகளை ஆசிரியரிடமிருந்து வெளிப்படுத்துவதற்குக் காரணமாக அமைகின்றனவோ அவையெல்லாம் ஆசிரியரின் சிறப்புப் பண்புகளாம். ஆசிரியர்க்கான இச்சிறப்புப் பண்புகள் மனிதர்க்கான பொதுப் பண்புகளினின்றும் வேறுபடலாம். ஓராசிரியரைக் குறிப்பிட்டு 'இவர் நல்ல ஆசிரியர்' என்பதை அவர் கொண்டுள்ள ஆசிரியருக்கான சிறப்புப் பண்புகளை ஒட்டியே முடிவு கூறலாம். ஆயின் 'இவ்வாசிரியர் நல்லவர்' என்னும் போது அவர் கொண்டுள்ள மனிதர்க்கான பொதுப் பண்புகளையே மனத்துட்கொள்ளுகிறார்கள். நல்ல ஆசிரியர் நல்ல மனிதர் அல்லர் ஆதலும் கூடும். நல்ல ஆசிரியர் நல்லவர் ஆயின் அது 'பொன்மலர் நாற்றமுடைத்து' என்பது போலாகும்.

நம்நாட்டில் பண்டுதொட்டு ஆசிரியர் நல்லவராதல் வேண்டும் என்றே விதித்தனர். ஆசிரியர்க்கு இலக்கணங் கண்ட பவணந்தி முனிவர் போன்றோர் மனிதர்க்கான பொதுப் பண்புகளை மிகுத்தும், ஆசிரியர்க்கான சிறப்புப் பண்புகளை ஒன்றிரண்டாய்க் குறைத்தும் (கலைபயில் தெளிவு, கட்டுரை வன்மை) விதி செய்தனர். ஆசிரியராதற்குத் தகவிலார் தன்மைகள் என அவர் குறிப்பிடுவனவற்றுள்ளும் பொதுவான மனிதப் பண்புகளே மிகுதியாகக் காணப்படுகின்றன. எழுத்தறிவித்தவனை இறைவனாய்க் காண்போர், ஆசிரியரிடத்து மக்கட் பண்பு நலம் சிறக்க அமைய வேண்டும் எனக் கருதுதல் இயல்பே.

நல்லவராதலும், நல்ல ஆசிரியராதலும் வேறு வேறு தன்மைகள். எனவே, நல்ல ஆசிரியரின் பண்புகள் எவை எனக் கண்டறிய ஆராய்ச்சியாளர் தலைப்பட்டனர். நல்ல ஆசிரியரிடம் எவ்வகைப் பண்புகள் அமையும் என மாணவர்களையும் மேற்பார்வையிடுவோரையும் பெற்றோரையும் மற்றும் கல்வி பற்றியறிந்தாரையும் கேட்டும், அவர் கருத்தை எழுத்து வடிவில் பெற்றும், அப்பண்புகளையெல்லாம் தொகுத்து இவை நல்லாசிரியரின் சிறப்புப் பண்புகள் என வகைப்படுத்தினர். இவ்வாறான பண்புத் தொகுப்புகளில் முரண்படும் பண்புகளும், பகுத்தறிவுக்குப் பொருந்தாப் பண்புகளும் இடம் பெற்றிருந்தன. பிறிதொரு முறையில் நல்லாசிரியர் ஒருவரையும், கற்பித்தலைச் சரியாகச் செய்யாத ஓர் ஆசிரியரையும் ஒப்பு நோக்கி, நல்லாசிரியர் எப் பண்புகளில் மற்றவரினின்றும் வேறுபடுகிறார், எப்பண்புகள் அவரிடம் அமைந்தும், மற்றவரிடம் இல்லாதும் உள்ளன என முடிவு செய்த அப்பண்புகளே நல்லாசிரியர் பண்புகள் என முடிவு செய்தனர்.

ஆசிரியரின் சிறப்புப் பண்புகள் பற்றிய ஆய்வில் இரயான்சு (Ryans) என்பாரது ஆய்வு குறிப்பிடத் தக்கது. ஆசிரியர்கள் வகுப்பறையில் கற்பிப்பதைக் கவனித்துப் பின் அவர்கள் கற்பித்த தன்மையினை மதிப்பிட்டு, இம்மதிப்பீடுகளைக் காரணிப் பகுப்பு முறையில் ஆய்ந்து, ஆசிரியர் சிறப்புப் பண்புகளாய் மூன்று தனித்தனியான பண்புத் தொகுப்புகளைக் கண்டார். இவற்றை X,Y,Z எனக்குறிப்பிட்டு X=இணக்கமுடைமை, புரிந்து கொள்ளுதல்; Y= பொறுப்புடைமை, வகுப்பறைக் கருமமே கண்ணாதல்; Z=மாணவரைச் செயற்படத் தூண்டல், கற்பனை யாற்றல் என விளக்கினார். பி.எஸ்.பா.

துணை நூல்:

Ryans, D.G., Characteristics of Teachers, American Council on Education, Washington W.C., 1960.

**ஆசிரியர் செய்கை:** வகுப்பறையில் ஆசிரியர் செயற்படும் பாங்கே ஆசிரியர் செய்கை எனக் குறிக்கப்படுகிறது. கற்பித்தல் ஒரு செயல். இச் செயல் நிகழ, ஆசிரியர் பல செய்கைகளை வெளிப் படுத்துகிறார். காண்போர்க்குப் புலப்படுமாறு ஆசிரியர் வெளிப்படுத்தும் செயல்களே, ஆசிரியர் செய்கை(Teacher Behaviour)எனக் கருதப்படுகின்றன.

கற்பித்தல் பயனுடையதாக அமையவேண்டும். அதன் பயன், கற்போர் கற்று முடிந்த பிறகு என்ன பெறுகிறார்கள் என்பதை ஒட்டியே அமையும். கற்போர் அறிவு பெறக் காரணமாய் அமைவன யாவை எனக் கண்டறிய முற்பட்டோர், மாணவர்க்குக் கற்றலை அமைத்துத் தரும் ஆசிரியர் பண்புகளை ஆராயத் தலைப்பட்டனர். நன்கு கற்றறிந்த மாணவர்க்குக் கற்றுத் தந்த ஆசிரியர்களின் பண்பு களை அறிந்து, இவ்வகைப் பண்புகளைப் பெற்றுள்ள ஆசிரியரே பயன் தரக் கற்பிக்கும் ஆசிரியர் ஆவர் என முடிவு கூறினர். பயன் தரக் கற்பிக்கும் ஆசிரி யரின் பண்புகள் எனப் பல்வேறு ஆராய்ச்சியாளர் கள் கண்டு கூறிய முடிவுகள் தம்முள் முரண்பட்டன. அவர்கள் கூறிய பண்புகளையுடைய ஆசிரியர்களின் கற்பித்தல் நல்ல விளைவைத் தராமலும் போயிற்று. குறிப்பிட்ட சில பண்புகளைக் கொண்டிருத்தல் மட்டும் போதாது. ஆசிரியர் வகுப்பில் என்ன செய் கிறார் என்பதே மாணவர் கற்றலை உறுதி செய்யும் எனக் கருதிய ஆராய்ச்சியாளர், ஆசிரியர் செய்கைக் கும் மாணவர் கற்றலுக்கும் உள்ள தொடர்பினை ஆராய்ந்தனர். இதன் விளைவாய் ஆசிரியர் செய்கை பற்றிய பலவித ஆராய்ச்சிகள் தோன்றின.

மாணவர் கற்றலின் அளவும் தன்மையும் தரமும் வகுப்பறை நிகழ்ச்சிகளை ஒட்டி அமைவன. வகுப் பறை நிகழ்ச்சிகள், ஆசிரியர் செய்கைகள், மாணவர் செய்கைகள் ஆகியவற்றால் ஆவன. ஆசிரியர் செய்கை கள், மாணவர் செய்கைகள் இவற்றின் ஊடாட்டத் தின் விளைவாய்க் கற்றலுக்கான சூழல் அமைகிறது. ஒருவர் செய்கைகட்கு மற்றொருவர் செய்கை காரணமாய் அமையும்போது இருவரிடையேயும் ஊடாட்டம் நிகழ்கிறது. வகுப்பறையில் பெரும் பான்மையும் மாணவர் செய்கைகட்குத் தூண்டல் களாய் அமைவன ஆசிரியர் செய்கைகளே. ஆசிரியர் செய்கைகள் வகுப்பறை ஊடாட்டங்களைத் தொடங்கி நடத்திச் செல்லுகின்றன. இவ்வூடாட் டங்கள் கற்றல் சூழலை அமைத்துத் தருகின்றன. கற்றல் சூழலில் மாணவரிடையே செய்கை மாற்றங்கள் உண்டாகின்றன; புதுச் செய்கைகளும் தோன்றுகின் றன. செய்கை மாற்றங்களும் புதுச் செய்கைத் தோற்றங்களுமே கற்றலின் விளைவுகளும் அடைவு களுமாம். கற்றலின் விளைவுகளே கற்பித்தலின் பயன்கள். எனவே, கற்பித்தலின் பயனுடைமை பற்றிய ஆய்வுகள், ஆசிரியர் செய்கைகளையொட்டி அமைதல் வேண்டும் என இலெவின் (Levin), விதால் (Withall) போன்ற ஆராய்ச்சியாளர்கள் கருதினார்கள்.

இதன் பயனாக ஆசிரியரின் பண்புகள் பற்றிய ஆராய்ச்சிகள் குறைந்து, செய்கைகள் பற்றிய ஆராய்ச்சிகள் மிகுந்தன. ஆராய்ச்சியாளர்கள் வகுப் பறைக்குட் சென்று ஆசிரியர் செய்கைகளை உற்று நோக்கினார்கள். உற்றுநோக்குதல் புறவயத்ததாக வும் ஏற்புடைத்தாகவும் அமைதற்கு உற்றுநோக்கு தற்கான படிவங்களையும் முறைகளையும் செம்மைப் படுத்தினர். சிலர், கற்றல் நன்கமைதற்கான சூழலை உருவாக்கத்தக்க ஆசிரியர் செய்கைகள் எவையாக லாம் என முடிவுசெய்து அவற்றிற்கான பட்டியலை அமைத்தனர். இப்பட்டியலின் அடிப்படையில் ஆசிரியர் செயல்களைக் குறித்தனர். கற்பித்தல் பயனை அறிவதற்கு இக்குறிப்புகள் பெரிதும் பயன்பட்டன. ஆசிரியர், தம் வெளிப்பாடுகளை அறிவதற்கும் இப் பட்டியல் பயன்பட்டது. தாம் இன்னும் எவ்வெச் செய்கைகளையும் கற்பித்தலில் வெளிப்படுத்த வேண்டும் என்பதை இப்பட்டியலைக் கொண்டு ஆசிரியரால் அறிய முடிந்தது. ஆசிரியர் செய்கை களின் வெளிப்பாடு பற்றிய குறியீடுகளை, உற்று நோக்கல் படிவத்தில் குறித்து வருவதால் இவ்வா றான உற்றுநோக்கல் முறை குறியீட்டு முறை (Sign System) எனப் பெயர் பெற்றது. 'மெட்லே மிட்சல்' (Medley-Mitzel) முறையும் இம்முறையைப் பின்பற்றியதே.

ஆசிரியர் செய்கைகளை உற்று நோக்குதற்குப் பிறிதொரு முறையும் உண்டு. இம்முறையில்

ஆசிரியர் செய்கைகள் சில பெரும் பிரிவுகளாக வகைப்படுத்தப்படுகின்றன. பிரிவுகள் சிலவாகவே இருத்தலின் அவற்றை வரிசைப்படுத்தி, அவ்வரிசையிலேயே நினைவு வைத்துக்கொள்ளுதல் எளிதாகும். வகுப்பறையில் கற்பித்தல் நிகழும்போது ஆசிரியரும் மாணவரும் வெளிப்படுத்தும் செய்கைகளை உற்று நோக்குவோர் உன்னிப்பாகக் கூர்ந்து நோக்கி, மிகக் குறுகிய கால அலகினுள் (3 அல்லது 5 விநாடிகள்) வெளிப்படுத்தப்படும் செய்கை இன்னதெனத் தெரிந்து, அது எப்பிரிவின் வரிசை எண் எனக் குறித்துக் கொண்டு வருவார். மூன்று அல்லது ஐந்து விநாடிகட் கொருமுறை அக்கால எல்லைக்குள் வெளிப்பட்ட செய்கைகள் பற்றிய குறிப்பை எப்பிரிவில் அடங்குமோ அப்பிரிவின் எண்ணை எழுதிப் பதிவு செய்வார். இம்முறை, பிரிவுத் தொகுப்பு முறை (Category System) எனப் பெயர் பெறும். பிளான்டர்சு (Flanders), ஆண்டர்சன் (Anderson), விதால் போன்றோர் வகுத்த முறை இவ்வாறானதாகும்.

வகுப்பறைச் செய்கைகளில் மூன்றில் இருபங்கு வாய்மொழிச் செய்கைகளாகவே அமைகின்றன என்பதைப் பிளாண்டர்சு அறிந்தார். இவ்வாய்மொழிச் செய்கைகளுள் மூன்றில் இருபங்கு ஆசிரியர் வாய்மொழிச் செய்கைகளே என்பதையும் அறிந்தார். எனவே கற்பித்தலின் பயனுடைமை பற்றிய ஆய்வுகள் வகுப்பறையில் வெளிப்படும் வாய்மொழிச் செய்கைகளை உற்றுநோக்கி ஆராய்ந்தவையே ஆகும்.

ஆசிரியரின் செய்கைகளே, கற்றலுக்கான சூழலை அமைத்துத் தருகின்றன என்ற கருத்தின் அடிப்படையில் அவர் செய்கைகளை ஆராய்ந்தவர்கள், அவர்களின் வெவ்வேறு வகையான செய்கைகள் வெவ்வேறு வகைச் சூழல்களை உண்டாக்குகின்றன எனக்கண்டார்கள். ஆசிரியர் செய்கைகளின் தன்மைகளையொட்டிக் கற்பித்தல் பயிலுதல் சூழலை வல்லாட்சிச்சூழல்-குடியாட்சிச் சூழல் (Lippitt), ஆசிரியர் முந்துறு சூழல் - ஒருங்கிணை சூழல் (Anderson), ஆசிரியர் மையச் சூழல்-மாணவர் மையச் சூழல் (Withall), ஒதுக்கற் சூழல்-சேர்த்தற் சூழல் (Kogan), நேரிடைத் தூண்டற் சூழல்-மறைமுகத் தூண்டற் சூழல் (Flanders) எனப் பலவாறாகப் பலர் வகைப்படுத்தினர்.

இவ்வாறு இணைகளாக வகைப்படுத்தப்பட்ட சூழல்களுள் ஒவ்வோர் இணையுள்ளும் இரண்டாவதாகக் காணும் சூழல், கற்றல் நன்கு அமைய உதவும் எனவும், முதலில் உள்ள சூழல், கற்றல் சிறப்புற அமையத் துணைபோகாதென்வும் விளக்கினர். ஆசிரியர் செய்கைகளை உற்று நோக்கி, அவை எவ்வகைச் சூழலை உருவாக்கலாம் என முடிவு கூறலாம். அவர் செய்கைகள், கற்றல் நன்கமைய உதவாத வல்லாட்சிச் சூழல், தான் முந்துறு சூழல், ஒதுக்கற் சூழல் போன்றவற்றை உருவாக்குவதாயமையின், அவர்க்கு இவ்வுண்மையை எடுத்துக் காட்டிச் செய்கைகளை மாற்றிக்கொள்ள உதவலாம். ஆசிரியர் செய்கைகள் பற்றி உற்றுநோக்கி உண்மை காணல், வேண்டியவிடத்து அவர்தம் செய்கை மாற்றத்திற்கு உதவும். இத்தகைய செய்கையின் மாற்றம், கற்பித்தல் மேலும் மேலும் பயனுடையதாக அமைய வழிகோலும். தாம் வெளிப்படுத்தும் செய்கைகள் பற்றியும் அவை தரும் விளைவுகள் பற்றியும் ஆசிரியர்கள் பெறும் அறிவு, சரியான செய்கைகளைச் சரியான முறையில் வெளிப்படுத்தவும், கற்பித்தல் பயன் விளைவிப்பதாயும் திறன் உடையதாயும் அமையவும் அவர்க்கு உதவும்.

ஆசிரியர் செய்கைகளை உற்று நோக்கி, திரட்டிய விவரங்களைப் வகுத்தும் தொகுத்தும் வெளியிடுதற்கான பலமுறைகளை ஆராய்ச்சியாளர்கள் தந்துள்ளார்கள். இம்முறைகளுள் பிளாண்டர்சு என்பாரின் முறையே பெரிதும் வழக்கத்தில் உள்ளது. இம்முறை, பிரிவுத்தொகுப்புமுறை வகையைச்சாரும். வகுப்பறையில் நிகழும் வாய்மொழிச் செய்கைகளை ஆசிரியர் வாய்மொழி, மாணவர் வாய்மொழி என இருவகைப்படுத்தி, ஆசிரியர் வாய்மொழிச் செய்கைகளை ஏழுபிரிவுகளாகவும் மாணவர் வாய்மொழிச் செய்கைகளை இரு பிரிவுகளாகவும் தொகுத்து, அமைதி தெளிவில்லாக் குழப்பமான வாய்மொழி ஆகியவற்றை ஒரு பிரிவாக்கி, மொத்தம் பத்துப் பிரிவுத் தொகுப்புகளைப் பிளாண்டர்சு அமைத்தார். ஆசிரியர் செய்கைப் பிரிவுகளுள் நான்கு, மறைமுகத் தூண்டற் சூழலை உருவாக்குவனவாயும் ஏனைய மூன்றும் நேர்முகத்தூண்டல் சூழலை உருவாக்குவனவாயும் செயற்படும் எனக் கருதினார். மாணவர் செய்கைகள், ஆசிரியரின் அல்லது பிற மாணவரின் தூண்டல்களுக்காகும் துலங்கற் செயல்களாகவும், தாமாய்த் தோன்றும் தூண்டற் செயல்களாகவும் இருவகைப் படுவன. பத்தாம் பிரிவு பேச்சற்ற அல்லது குழப்பமான பேச்சுடைய நிகழ்வைக் குறிக்கும். உற்று நோக்குவோர் மூன்று விநாடிகட்கு ஒருமுறை, அக்கால இடைவெளியில் வெளிப்படும் வகுப்பறைச் செயல்களை இனங்கண்டு, பிரிவுப்படுத்தி அப்பிரிவுக்குரிய எண்ணைக் குறித்துக் கொள்வர். ஒவ்வோரெண்ணும் ஒரு சிறு நிகழ்வைக் குறிக்கும். தொடர்ந்து வரும் இந்நிகழ்வுகளை, ஒவ்வொரு நிகழ்வினையும் முன்னுள்ள நிகழ்வோடும் பின்வரும் நிகழ்வோடும் இணைத்து, இணைத்தொடர்புகளை அமைத்து, இவ்விணைத் தொடர்புகளைக் குறுக்கிலும் நெடுக்கிலும் பிரிவுகளைக் காட்டும் ஒரு கட்ட அமைப்புக்குள் (Matrix) குறித்துக் காட்டுவர். இவ்வாறு நிகழ்வுகள்

குறிக்கப்பட்டுள்ள கட்ட அமைப்பிலிருந்து, கற்பித்தல் நடைபெற்றபோது வெளிப்படுத்தப்பட்ட செய்கைகள் பற்றிய விவரங்களைக் கண்டறியலாம்.

ஆசிரியர் செய்கைகளை உற்று நோக்குதற்காக ஆராய்ச்சியாளர் பற்பல முறைகளை உருவாக்கியுள்ளனர். 'செய்கைக்கான கண்ணாடி' (Mirrors for Behaviour) என்னும் நூலில் எழுபதுக்கும் மேற்பட்ட முறைகள் பற்றிய விவரங்கள் காணப்படுகின்றன. இம்முறைகளை விரித்தும் சுருக்கியும் சிறு சிறு மாற்றங்களை ஆக்கியும் பின்வந்த ஆராய்ச்சியாளர் உற்று நோக்கல் முறைகளைப் பெருக்கியுள்ளனர். ஆசிரியரின் வாய்மொழிச் செய்கைகளேயல்லாமல், பேச்சல்லாச் செய்கைகளும் உற்று நோக்குதற்கான முறைகளும் உள.

ஆசிரியர் செய்கைகள் பற்றிய ஆய்வு, கற்பித்தல் எவ்வாறு நிகழ்கிறது என விவரிக்கவும், கற்றல் அமையக் காரணமாகும் ஆசிரியர் செய்கைகளை ஆசிரியர் கற்றுக் கொள்ளப் பயிற்சி தரவும், கற்பித்தலை முறைப்படுத்திச் செயலாற்றவும், மாணவர் கற்றுப்பெற்ற அடைவுகளோடு கற்பித்தலை இணைத்துக் காணவும் பயன்படுகிறது. பி.எஸ்.பா.

துணை நூல்கள்:

Simon A. and Boyer E. G., Mirrors for Behaviour, Philadelphia, Research for Better Schools, 1970.

Flanders, N,A., Analysing Teaching Behaviour, Mass: Addison - Wesley, 1970.

**ஆசிரியர் செயலுரம்:** ஆசிரியர்க்கே உரித்தான கற்பித்தலாகிய செயல் பயனுற அமைதலை ஆசிரியர் செயலுரம் (Teacher Effectiveness) குறிக்கும். எச்செயற்கும் குறிக்கோள் வேண்டும். மக்கள் ஏதாயினுமொன்றை நாடியே—குறியாகக்கொண்டே, ஒருசெயலில் ஈடுபடுகிறார்கள் நாடியபொருள் கைகூடின் செயல் பயனுடையதாகிறது. குறிக்கோள் நிறைவுபெறாதபோது செயல் பயனற்றதாய் வெறுமையாய்ப் போய்விடுகிறது. செயல் உரமுடைத்தாயின், எதிர்நோக்கும் பயன் விளைகிறது. உரங் குன்றிய செயல் நிறைபயன் தாராது.

மாணவர்க்குக் கற்றல் நன்கு அமையும்போது கற்பித்தல் பயனுடையதாகிறது. கற்பித்தலின் நோக்கம் மாணவர் கற்றலுக்கு உதவலே; அவர்கள் செய்கைகளில் விரும்பத்தக்க மாற்றங்களை உண்டாக்கலே. இம்மாற்றங்கள் அவர்களின் அறிவு, உணர்வு, செயல்சார்ந்த பணிகளில் அமைய வேண்டும். ஆசிரியர் செயல், அதாவது கற்பித்தல், மாணவர் கற்றலாகிய பயனுக்கு உரமாதல் எவ்வாறு? ஆசிரியர் செயலுரத்தை, கற்பித்தலாகிய பயன் விளைதன்மையைப் பற்றி ஆராய்ந்தோர் மூன்று வேறுபட்ட அணுகுமுறைகளைப் பின்பற்றினர். ஒருசாரார் ஆசிரியரின் பண்பு நலன்கள், அவர் கற்பித்தலைப் பயனுடையதாக்கும் எனக் கருதினர். நல்லாசிரியர் பண்புகள் இவை என விதித்தனர். ஆசிரியர்க்காகாத பண்புகளையும் குறிப்பிட்டனர். நன்னூல் ஆசிரியர் பவணந்தியார் 'இனையவும் அமைபவன் நூலுரை யாசிரியன்னே' எனவும், இவை'உடையோரிலர் ஆசிரியராகுதலே' எனவும் கூறுதல் இவ்வாறான அணுகு முறையை ஒட்டியே. கற்பித்தல் பயனுற அமையக் காரணமாகும் ஆசிரியர் குணங்கள் பற்றிய ஆய்வுகள் ஒருமித்த முடிவுகளைத் தரவில்லை; சில சமயங்களில் முரண்பட்ட முடிவுகளையும் தந்தன.

ஆசிரியர் கற்பிக்கும்போது வெளிப்படுத்தும் செய்கைகளே கற்பித்தலின் பயனுடைமையை முடிவு செய்கின்றன என்ற கருத்துடையோர், ஆசிரியர் செய்கைகளை ஆராயும் முறையைப் பின்பற்றினர். கற்பித்தலும் கற்றலும் உடனிகழ்வுகள். ஆசிரியர் செய்கைகளும் மாணவர் செய்கைகளும் வகுப்பறையில் கற்பித்தல் - கற்றல் நிகழும்போது ஊடாடுகின்றன. இவ்வூடாட்டங்களின் தன்மையும் தரமும் செறிவும் கற்பித்தல் எவ்வளவிற்குப் பயனுடைத்தாகிறது, அதாவது கற்றல் எவ்வளவிற்கு நடைபெறுகிறது என்பதை முடிவு செய்கின்றன. எனவே ஆசிரியரின் செயலுரம் ஆசிரியரின் வகுப்பறைச் செய்கைகளை ஒட்டியே அமையும் என்பது இச்சாரார் துணிபு.

ஓரிடத்தே ஒருகாலத்தே ஒருவகை மாணவரிடையே கற்றல் நன்கு அமைய உதவிய ஆசிரியர் செய்கைகள் எஞ்ஞான்றும் எவ்விடத்தும் எவ்வகை மாணவர்கட்கும் கற்றல் நன்கமைய உதவும் என உறுதி கூற முடியாது. எனவே, இவ்வகை ஆசிரியர் செய்கைகளே உரமுடையன, அதாவது கற்பித்தல் பயனுடையதாவதற்குக் காரணமாவன எனப் பொதுவிதி காண முடியாது. ஆசிரியர் செயலுரம், கற்பித்தலின் பயனுடைமை, ஆகியவை ஆசிரியரின் பண்பு நலன்களை ஒட்டியோ, அவர்தம் வகுப்பறைச் செய்கைகளை யொட்டியோ அமைவனவல்ல. எச்செயலும் உரம்பெறுவதும் பயனுடையதாவதும் அச்செயலின் நோக்கங்கள் நிறைவுபெறும்போது மட்டுமேயாம். கற்பித்தலின் பயனுடைமையையும் அதன் நோக்கமாகிய மாணவர் அடைவை ஒட்டியே மதிப்பிடவேண்டும். மாணவரிடையே கற்றல் நன்கு அமையுமானால், அதற்குக் காரணமான ஆசிரியர் செய்கைகள் உரமுடையன; அவர்தம் கற்பித்தல் பயனுடையது என முடிவு கூறலாம். கற்றலை விளைவிக்கும் கற்பித்தலே பயனுடையது. இக்கற்

பித்தலில் வெளிப்படும் ஆசிரியர் செய்கைகளே உர முடைச் செயல்கள்.

ஆசிரியர் செயலுரத்தை, கற்பித்தலின் பயனுடைமையை, மதிப்பிடும் பிற முறைகள் பொருத்தமுடையன அல்ல. முன்னரே முடிவு செய்யப்பட்ட சில கட்டளைக்கல் விதிகளின் அடிப்படையில், மாணவர்களோ பிற ஆசிரியரோ மேற்பார்வையாளரோ ஆசிரியர் தாமாகவோ செயலுரத்தை மதிப்பிடுதல் ஏற்புடைய முறையன்று என்பர் இம்மூன்றாம் பிரிவினர். இவர்தம் கொள்கை, ஆசிரியர் செயலுரத் திறனுக்கு மாணவர் கற்றலே கட்டளைக்கல் என்பதாகும்.

ஆசிரியர் செயலுரத்தை, அவர்தம் பண்புநலன் வகுப்பறைச் செய்கைகள், மாணவரிடத்து அமையும் கற்றல் விளைவு போன்ற தனித்தனி அடிப்படைகளை ஒட்டி முடிவு செய்தல் செயலுரத்தை முழுமையாகக் கண்டறிய உதவாது. கற்பித்தலின் பெருமைக்கும் அதாவது பயனுடைமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் (பயனுறாது போதற்கும்) ஆசிரியர் வகுப்பறையில் வெளிப்படுத்தும் கருமமே (செய்கைகளே) கட்டளைக் கல். ஆசிரியரின் செய்கைகள் அவர் பண்பு வழிப்படும் பயன் விளைவிக்கும் செய்கைகளே உண்மைப் பணிகள் எனக்கூறத் தகுவன. ஆசிரியர் செயலுரத்தைக் குறிப்பிட்ட தனியொரு அடிப்படையில் முடிவு கூறாமல் மாணவர் கற்றல் நன்கமைய உதவும் பல்வேறு காரணிகளின் அடிப்படையில், அக்காரணிகளை, மாணவர் கற்றலுக்கு ஏற்ற வகையில் ஆசிரியர் எவ்வாறு பயன்படுத்துகிறார் என்பதையொட்டி முடிவு செய்தல் வேண்டும் என்பதே, ஆசிரியர் செயலுரம் பற்றி இந்நாள்வரையான ஆய்வுகள் காட்டும் பொது முடிவாகும். பி.எஸ்.பா.

துணை நூல்கள்:

Mitzel, H.E., Teacher Effectiveness. Encyclopedia of Educational Research. Macmillan. New York, 1960.

Flanders, N.A., Analysing Teaching Behaviour. Addison Wesly Publishing Company, California. 1970.

**ஆசிரியர் தேசியக்குழு:** இந்திய மத்திய அரசு, ஆசிரியர்கள் நிலையை அறிந்து, அவர்கள் மேம்பாட்டுக்குரிய வழிவகைகளை ஆய்ந்து அறிவுரை கூற 1983-இல் இரண்டு தேசியக் குழுக்களை அமைத்தது. முன்னாள் மத்திய அமைச்சர் பேராசிரியர் திரு. டி.பி. சட்டோபாத்யாயா தலைமையில் பள்ளி ஆசிரியர்களுக்கான குழுவும், பல்கலைக்கழக மானியக் குழுத் துணைத் தலைவர், பேராசிரியர் இரயிசு அகமது தலைமையில் கல்லூரி ஆசிரியர்களுக்கான குழுவும் அமைக்கப்பட்டன. ஒவ்வொரு குழுவிலும் இருபது கல்வியாளர்கள் உறுப்பினர்களாக இடம் பெற்றார்கள். இந்த இரண்டு குழுவிற்கும் மத்திய அரசின் கல்வித் துறைச் சிறப்புச் செயலர் திரு. கிரீத் சோசி உறுப்பினர்-செயலராக இருக்கிறார். இவ்விரு குழுக்களும் ஒருசேரக் கூடும்போது பேராசிரியர் சட்டோபாத்யாயா தலைமை ஏற்பார்.

இதுவரை அனைத்திந்திய அளவில் கல்வி பற்றி ஆராய்ந்து அறியப் பல்வேறு குழுக்கள் அமைக்கப்பட்ட போதிலும், ஆசிரியர் சிக்கல்களைத் தனியே ஆராய்ந்து கண்டறிய அமைக்கப்பட்ட முதல் ஆசிரியர் தேசியக்குழு இதுவேயாகும்.

ஆசிரியர் பணிக்கான திட்டவட்டமான குறிக்கோள்களைக் கண்டறிந்து, ஆசிரியர்களின் நிலை பற்றி ஆய்ந்து அவர்கட்கு உரிய இடத்தைச் சமூகத்தில் அளிக்க வழி வகைகள் காணல், திறமை மிக்கோர் ஆசிரியத் தொழிலை விரும்பி ஏற்று, அதிலேயே தங்கும் சூழ்நிலையினை ஏற்படுத்துதல், ஆசிரியர்களுக்கான நல்ல பயிற்சி முறைகள் அமைத்தல், கற்பித்தலில் புதிய உத்திகள் காணல், மாணவர்களின் அறிவாற்றல் சிறந்தோங்க ஆசிரியப்பணி அமையும் வழிகளைச் சுட்டிக்காட்டுதல், சமுதாய முன்னேற்றத்துக்கான கல்வியாக இந்தியக் கல்வி முறை அமைய வழிவகைகள் கண்டுபிடித்தல் போன்றவை இக்குழுக்கள் ஆய்ந்து அறிய வேண்டிய பணிகளுள் அடங்கும். பல்வேறு மாநிலங்களுக்குச் சென்று இக்குழுக்கள், கல்வியாளர்கள், ஆசிரியப்பெருமக்கள், அதிகாரிகள், அமைச்சர்கள் முதலியவர்களின் கருத்தை அறிந்து வந்துள்ளன. இக்குழுக்கள் 31. 12.1984-க்குள் தம் அறிக்கையை மத்திய அரசுக்கு அளிக்க வேண்டும். ஆனால், இவ்வறிக்கைகள் 1985 ஏப்பிரலில்தான் மத்திய அரசிடம் அளிக்கப்பட்டன. கே.வெ.சு.

**ஆசிரியர் தொழில் திறன்:** கற்போர் சிறந்த ஊக்கம் உடையவர்களாயிருந்தால் அவர்கள் எளிதில் கற்பர். ஆனால், மாணவர்கள் அனைவரும் தாங்களே மிகுந்த ஊக்கமுடையவராயிருத்தல் அரிது. அந்நிலையில் கற்பிக்க முற்படும் ஆசிரியர், தாமே வலிதின் முயன்று, கற்றலுக்கு மாணாக்கரை ஊக்குவித்தல் வேண்டும்.

நன்கு கற்பிக்க, ஆசிரியர் திட்டமிடுதல் வேண்டும். இத்திட்டமிடல் பலநிலைகளில் அமையவேண்டும். நீண்ட கால அடிப்படையில் திட்டமிடுதலோடு ஒவ்வொரு பாட வேளைக்கும் திட்டமிடல் வேண்டும். பாடப் பொருளைத் தகுந்தபடி சிறுசிறு பகுதிகளாகப் பிரிப்பது முதல், கற்பிப்பதற்குரிய துணைக் கருவிகள் அமைத்து நல்ல அணுகுமுறையுடன் கற்பிப்பது வரை எண்ணித் திட்டமிடல் வேண்டும்.

தடையில்லாமல் வினாக்கள் கேட்பது, பன்முக வினாக்கள் கேட்பது, மேலும் மேலும் மாணவர்களை ஆழ்ந்து சிந்திக்க வைப்பது, சரியான விடைகள் கொடுத்த மாணவர்களை ஊக்கப்படுத்தி மகிழ்வுறச் செய்வது, அமைதி, உடல் அசைவுகள் குறிப்புகள் ஆகியவற்றை முறையாகப் பயன்படுத்துவது, எடுத்துக்காட்டுகள் கொடுப்பது, விளக்கங்கள் கொடுத்துக் கற்பிப்பது, குறுகிய விளக்கம் கொடுப்பது, மாணவர்களுக்கு நினைவூட்டுதற்காகத் திரும்பக் கூறுவது, குரலில் ஏற்றத்தாழ்வு, மாணவர்கள் கவனத்தைப் பாடத்தில் நீடிக்கச் செய்வது, கரும் பலகையைச் சிறப்பாகப் பயன்படுத்துவது போன்ற பல்வேறு திறன்களை ஆசிரியர் கையாள வேண்டும். இவை நன்கு நடைபெறும்போதுதான் கற்றல் சிறப்பாக நிகழும். இவையே, ஆசிரியரின் தொழில் திறன் (Teacher Competency) வளர்ச்சி பெற்றமைக்கான அறிகுறிகளாகக் கொள்ளப்படும்.

கற்பித்தல் நடைபெறுமுன், கற்பிக்கப் போகும் பாடத்தைப் பற்றியும் அதைக் கற்பிப்பதன் நீண்ட கால, உடனடி நோக்கங்கள் பற்றியும் மாணவர்கள் பெற வேண்டிய அடைவுகள் பற்றியும் ஆசிரியர் நன்கு முடிவு செய்திருக்க வேண்டும். இவ்வடைவு அறிவும் திறமையும் மனப்பான்மைகளும் சார்ந்தனவாக இருக்கும். ஆகவே இவ்வொவ்வொன்றிலும் எவ்வளவு தூரம், என்னென்ன திறமைகள் பெற வேண்டும் என்பதை ஆசிரியர் அறுதியிட்டிருக்க வேண்டும். அப்போதுதான் மாணவர் அவற்றைப் பெறும் விதத்தில் தம் கற்பித்தலைத் திட்டமிட முடியும்.

அதன்பின்னர்க் கற்பித்தலைக் கோவை செய்து வைத்தல் வேண்டும். இதற்குப் பல்வேறு கற்பித்தல் கொள்கைகளைச் சூழ்நிலைக்குத் தகுந்தவாறு பயன்படுத்தல் இன்றியமையாதது. எளிமையிலிருந்து கடினத்திற்கு, தெரிந்ததிலிருந்து தெரியாததற்கு, பருப்பொருளிலிருந்து நுண்பொருளுக்கு, எடுத்துக்காட்டுகளிலிருந்து பொதுவிதிக்கு, அண்மையிலிருந்து சேய்மைக்கு முதலிய விதிகள் கற்பித்தலில் கைக்கொள்ளப்பட வேண்டும். மேலும், ஓர் எடுத்துக்காட்டை ஆசிரியர் கூறி, மற்ற எடுத்துக்காட்டுகளை மாணவரிடமிருந்து வருவித்தல், விதியைக் கூறி எடுத்துக்காட்டுகளை வருவித்தல், எடுத்துக்காட்டுகளைக் கூறிப் பொதுவிதியை வருவித்தல் முதலிய முறைகளையும் கற்பித்தலில் பயன்படுத்தலாம்.

கற்றல் சிறப்புற நிகழ, வகுப்பறையில் ஒழுங்கும் கட்டுப்பாடும் குறிப்பிட்ட அளவு இருக்க வேண்டும். அவற்றைப் பாதுகாப்பதும் ஆசிரியருடைய தொழில் திறனைச் சார்ந்ததேயாகும். வகுப்பறையில் ஆசிரியருக்கும் மாணவருக்குமிடையே நல்லுறவு நிலவ வேண்டும். மாணவர்கள் கற்றலில் பங்கேற்கும் அளவுக்குச் சுதந்திரம் இருக்க வேண்டும். ஐயங்களை உடனுக்குடன் கேட்டுத் தெளிவு பெற வாய்ப்புக் கொடுக்க வேண்டும்.

மதிப்பீடு செய்தல் ஆசிரியர் தொழிலுக்கு மிகவும் தேவை. கற்றுக்கொடுத்த பாடத்தில் மாணவனின் தேர்ச்சி எவ்வாறுள்ளது என அறிந்து கொள்ளும் திறமை ஆசிரியருக்குத் தேவை. அம்மதிப்பீடு பலவகைகளில் செயற்படுத்தப்பட வேண்டும். பாடம் நடத்திக்கொண்டிருக்கும்போதே வாய்மொழிக் கேள்விகள் கேட்டு மதிப்பிடலாம். ஆண்டிறுதியில் அல்லது ஒரு பருவ முடிவில் தேர்ச்சியை வரையறுக்கலாம். மேலும், கற்றல் வளர்ச்சியின்போது முறைகளை மாற்றிக்கொள்வதற்கும் கற்றலில் மாணவர்களின் தேவையை அறிந்து கொள்வதற்கும் மதிப்பீட்டைப் பயன்படுத்தலாம். இவற்றிற்குக் கட்டுரை வினாக்கள், ஒரு பொருள் விடை வினாக்கள், சூழ்நிலைக்கேற்ற வினாக்கள் (Situation Questions) ஆகியன தகுந்த இடத்தில் பயன்படுத்தப்பட வேண்டும். நல்ல தேர்வின் பண்புகளாக நம்பகத்தன்மை, ஏற்புடைமை, புறவயத் தன்மை, நடைமுறைக்கு ஒத்துவரும் தன்மை ஆகியவற்றைப் பற்றிய தெளிவான அறிவு ஆசிரியருக்கு வேண்டும். இவை ஒரு சோதனைத் தாளில் அல்லது தேர்வில் உள்ளதா என்பதைக் காணும் ஆற்றலொடு அவற்றை ஏற்படுத்தும் வழிமுறைகளும் ஆசிரியருக்குத் தெரிந்திருக்க வேண்டும்.

கேள்வி-காட்சிக் கருவிகள் முதலியவற்றைக் கற்பித்தலில் பயன்படுத்தினால் கற்றல் திறனும் விளைவுகளும் மிகும். கடையில் விற்கப்படும் கேள்வி காட்சிக் கருவிகளைவிட மாணவர்கள் உதவியுடன் ஆசிரியர் தாமே உருவாக்கும் கற்பித்தல் கருவிகள் மிகவும் பயன் விளைவிக்கும்.

ஆசிரியர் தொழில் திறனை வளர்த்துக் கொள்வதில் கல்வித் தொழில் நுட்பவியல் (Educational Technology) உதவி செய்கிறது. இது கற்பித்தலில் ஆசிரியர் பயன்படுத்தக்கூடிய கருவிகள், அவற்றிற்காக உருவாக்கப்படும் பொருள்கள் ஆகியன பற்றிய விளக்கத்தைச் சிறப்பாகத் தருகிறது. திரைப்படம் காட்டும் கருவிகள், காட்சி வில்லை (Slide) காட்டும் கருவிகள், கற்பித்தல் பொறிகள் முதலியன கற்பித்தல் கருவிகளுக்கு எடுத்துக் காட்டுகளாகும். இவற்றில் பயன்படுத்தப்படும் படச்சுருள்கள், காட்சி வில்லைகள், பாடச் சட்டங்கள் ஆகியன மென் பொருள்களாகும். இவற்றை ஆசிரியர் தம் பாடத்திற்கேற்ப அமைத்துக் கொள்ளலாம். ஆசிரியருக்கு உதவியாக இருக்கும் பல்வேறு கல்வித் தொழில் நுட்ப உதவிகளை அவர்

பயன்படுத்தி, மாணவர்கள் பயன் அடையச் செய்ய வேண்டும். நிரல் வழிக் கற்றல் (Programmed Learning) முழுமையான சிறுசிறு பாடப்பகுதிகளின் அடிப்படையிலான அணுகுமுறை (Modular Scheduling) ஆகிய முறைகளில் ஆசிரியருக்குப் பயிற்சியும், இம்முறைகள் மூலம் உருவாக்கப்பட்ட நூல்கள், கருவிகள் ஆகியவற்றைப் பயன்படுத்தும் ஆற்றலும் இருக்க வேண்டும். பாடத்தைத் திருப்பிப் பார்ப்பதற்கும் தாமே படித்துப் பயனடைதற்கும் மேலும் பாடத்தைத் தெளிவுபடுத்திக் கொள்ளுதற்கும் இவை உதவி செய்யும். இவற்றை உரிய இடத்தில் முன்னேற்பாடுகளுடன் பயன்படுத்திவருவது ஆசிரியர் தொழில் திறனை மிகச் செய்வதுடன் அவருக்கு வேலையில் மன நிறைவையும் கொடுக்கும்.

வகுப்பறையில் ஒரே ஆசிரியர் கற்பிப்பதைத் தவிர்த்துச் சில ஆசிரியர்கள் ஒன்று சேர்ந்து பாடத்தை நடத்தலாம். இம்முறையில் ஆசிரியர் கற்பிக்கும்போது மற்ற ஆசிரியர்களும் வகுப்பில் மாணவர்களுடன் அமர்ந்திருப்பார்கள். அக்குழு, மாணவர்கட்கு உதவுவதுடன் பாடத் தலைப்பின் வெவ்வேறு பகுதிகளைக் கற்பிக்கும் ஓர் ஆசிரியரால் விடப்பட்ட கருத்துகளையும் தொகுத்துரைக்கும். இது குழுக் கற்பித்தல் முறை (Team Teaching) எனப்படும். இம்முறையில் கற்பித்தலும், ஆசிரியரது தொழில் திறனை வளர்க்க உதவும்.

நான்கு அல்லது ஐந்து மாணவர்களுக்கு, நான்கு அல்லது ஐந்து மணித்துளி நேரத்திற்கு ஒரு சிறிய பாடத் தலைப்பில் ஒரு குறிப்பிட்ட கற்பித்தல் திறன் வருமாறு கற்பித்துப் பழகுதல், நுண்ணிலைக் கற்பித்தல் எனப்படும். இக்கற்பித்தலைக் கேள்வி நாடா, காட்சி நாடா (Tape Recorder and Video Cassette Recorder) முதலியவற்றில் பதிவு செய்து, பின்னர்க் கற்பித்த ஆசிரியரே அவற்றைப் பயன்படுத்தித் தம்மைத் திருத்திக் கொள்ளலாம். தம்முடன் பணியாற்றும் ஆசிரியர்கள், மேல் அலுவலர்கள், மாணவர்கள் ஆகியோரும் அக்கற்பித்தலை மேற்பார்வையிட்டுக் கருத்துகள் கூறலாம். கிடைத்த அறிவுரைகளின்படி மீண்டும் அப்பாடத்தையோ அதையொத்த வேறொரு தலைப்பையோ குறிப்பிட்ட அத்திறனுக்காக முன்பு கற்பித்த அதே மாணவர்களுக்கோ வேறு ஒருசில மாணவர்களுக்கோ கற்பிக்கலாம். இப்போது ஆசிரியரிடம் முன்பு கற்பித்தலைவிட முன்னேற்றம் ஏற்பட்டிருப்பது தெரியும்.

விரிவுரையாற்றல் என்ற பழைய கற்பித்தல் முறையைத் தவிர்த்துஇன்று பலரும் மேற்கொள்ளும் குழுக் கற்பித்தல் முறை மிகவும் விரும்பப்படுகிறது. கருத்தரங்கு, சொற்போர், உரைக்கோவை (Symposium), கருத்துப்பட்டறை (Work Shop) முதலியன இம்முறைகளில் அடங்கும். இவற்றைச் சீரியமுறையில் கையாளும்போது மாணவர்கள் நன்கு கற்பர்.

ஜி.சு.

**ஆசிரியர் நல்லந்துவனார்** கடைச்சங்கப் புலவருள் ஒருவர். 'நல்லந்துவனார்' என்று தனித்தும் 'ஆசிரியர் நல்லந்துவனார்' என்று அடையொடு சேர்த்தும் அழைக்கப்படுவார். இவர் மதுரையைச் சேர்ந்தவர். அதனால், இவரை 'மதுரையாசிரியர் நல்லந்துவனார்' என்று சிறப்பித்தும் கூறுவர். எட்டுத்தொகையில் கலித்தொகை என்னும் இலக்கியத்தைத் தொகுத்தவர் இவராவார். கலியுள் நெய்தற் கலியினைச் சிறப்பாகப் பாடியுள்ளார். இந்நூலிற்கு இவர் பாடிய கடவுள் வாழ்த்துப் பாடல் முதலியவற்றால் இவர் சிவ வழிபாடுடையராவர் என்று எண்ணத் தோன்றுகிறது. பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் என்னும் முறையில் இந்நூல் தொகுக்கப்பட்டுள்ளது.

நெய்தல்நிலப் பழக்க வழக்கங்கள் பலவற்றையும் வைதிக ஒழுக்கங்கள் சிலவற்றையும் இவர் தம் நெய்தற் கலியுள் விளக்கியுள்ளார். உலக மக்களுக்கு நன்னெறி காட்டும் அறிவும், அறமும் சார்ந்த நல்லொழுக்க நெறிகளை இவர் பாடல் விளக்குவதால் இவர்தம் ஒழுக்கச் சிறப்பும், கல்விச் சிறப்பும் புலனாகின்றன. இவருடைய பாடல்கள் நற்றிணையில் ஒன்றும் (88), பரிபாடலில் நான்கும் (6,8,11,20), அகநானூற்றில் ஒன்றுமாக (43) இடம்பெற்றுள்ளன. திருவள்ளுவமாலையில் ஒருபாடல் இவர் பெயரில் அமைந்துள்ளது. நற்றிணைப் பாடல் குறிஞ்சித் திணையில் தோழி கூற்றாகவும், அகநானூற்றுப் பாடல் பாலைத் திணையில் தலைமகன் கூற்றாகவும் அமைந்துள்ளன.

கி.கோ.

**ஆசிரியர் நிலை:** இந்தியாவில் அவ்வப்போது அமைக்கப் பெற்ற கல்வி ஆய்வுக் குழுக்கள், கல்வியின் அமைப்பினைப் புதுப்பித்து மேலும் பயனுள்ளதாக மாற்றப் பல பரிந்துரைகளைக் கூறுவதுடன், ஆசிரியர்கள் நிலையினை உயர்த்தவும் பரிந்துரைகளைக் குறிப்பிட்டுள்ளன. இராதா கிருட்டிணன் தலைமையில் 1948-ஆம் ஆண்டு அமைக்கப்பட்ட கல்விக்குழு பல்கலைக் கழகங்களின் சிக்கல்களை ஆராய்ந்தது. இக்குழுவின் பரிந்துரைகளுட் சில, ஆசிரியர்களைப் பற்றியவை: ஆசிரியர்களின் திறன், மனப்பான்மை ஆகியவற்றைச் சார்ந்து ஒரு கல்வித் திட்டத்தின் வெற்றி அமைவதாகும். என்பதனைச் சுட்டிக்காட்டி, பல்கலைக் கழகக் கல்வியின் தரம் ஓரளவு தாழ்ந்து காணப்பட்டதற்கு ஆசிரியர்களும் ஒரு காரணமாவர் என்று இவ்வறிக்கை குறிப்பிட்டது. பல்கலைக் கழகங்களில் ஆய்வக, நூலக வசதிகள், ஆராய்ச்சி வசதிகள் போன்றன போதிய அளவு இல்லாமையும் உயர்

கல்வி நிலையங்களில் அரசியல் நுழைவு, ஊதியக் குறைவு, பணி நிலைமைக் குறைபாடுகள் போன்ற பல காரணிகளும் ஆசிரியர்கள் ஊக்கத்தினைக் குறைத்து, அவர்கள் செம்மையாகப் பணிபுரிவதற்கு இடையூறாக உள்ளனவெனக் குறிப்பிட்டது. இந் நிலை மாறிப் பல்கலைக் கழக ஆசிரியர்கள் நிலை முன்னேற்றமடைய இக்கல்விக் குழு சில பரிந்துரை களையும் அளித்தது. பல்கலைக்கழக ஆசிரியர்களுள் பேராசிரியர்கள், இணைப் பேராசிரியர்கள், விரிவுரை யாளர்கள், பயிற்றுநர்கள் என நான்கு நிலையினரும் இவர்களுடன் ஆராய்ச்சியாளர்களும் அமைய வேண் டும் என்றும், இந்நிலைகளில் பதவி உயர்வு ஆசிரியர் களின் தகுதி அடிப்படையில் இருத்தல் வேண்டும் என்றும் இராதாகிருட்டிணன் அறிக்கை கூறுகிறது. ஆசிரியர்களுக்குப் பதவி உயர்வு வாய்ப்புகள் மிகும் வகையில் இவர்களில் முதுநிலைப் பதவி வகிப்போர் பதவி எண்ணிக்கை, இளம் ஆசிரியர்களின் எண்ணிக் கையில் 50 விழுக்காடாகிலும் இருக்கவேண்டுமென் றும், பல்கலைக்கழக ஆசிரியர்களின் ஓய்வு வயது 60 ஆக இருத்தல் வேண்டுமென்றும், சிறந்த பேராசிரியர் களின் பணிக்காலம் தேவைப்பட்டால் 64 வயது வரையும் நீட்டிக்கப்படலாம் என்றும் இவ்வறிக்கை குறிப்பிட்டுள்ளது. மேலும், ஆசிரியர்களின் வேலைப் பளு, வேலை நேரங்கள் போன்றவை பற்றியும் அவர் களுக்கு ஒய்வுக்கால நிதியின் அளவினை மிகுதிப்படுத் தலின் இன்றியமையாமை பற்றியும், அவர்களுக்குக் குடியிருப்பு வசதிகள் போன்றவற்றைச் செய்து தருவது பற்றியும் இக்குழுவின் அறிக்கையில் பல பரிந்துரைகள் உள்ளன. ஊதிய உயர்வு, ஆசிரியர், நிருவாகத்தினர் ஆகியோரின் சிக்கல்பற்றியும் இக் கல்விக்குழு தம் பரிந்துரைகளை வழங்கியுள்ளது. செய்வுரமிக்க ஆசிரியர்களை உருவாக்கக் கல்வியியல் கல்லூரிகளின் பாடத்திட்டம் புதுப்பிக்கப்பட்டுக் கற் பித்தல் பயிற்சிக்கும் (Practice Teaching) பிற செய் முறைப் பயிற்சிகளுக்கும் சிறப்பிடம் அளிக்கப்பட வேண்டுமென்றும், கற்பித்தல் பயிற்சிக்கெனச் சிறந்த பள்ளிகள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்றும், அப் பள்ளிகளில் பின்பற்றப்படும் கற்பித்தல், தேர்வு முறைகள் ஆகியவற்றைத் தங்கள் பட்டறிவின் அடிப்படையில் மதிப்பீடு செய்யவும் ஆசிரிய -மாணாக் கர்களுக்குப் பயிற்சியளிக்கப்பட வேண்டுமென்றும் இக் குழு பரிந்துரை செய்துள்ளது.

தமது பணியினை 1952-இல் தொடங்கி, 1953- ஆம் ஆண்டில் ஆய்வறிக்கையை வெளியிட்ட உயர்நிலைக் கல்வி ஆய்வுக் குழுவின் பரிந்துரைகள், நம் நாட்டுக் கல்வி வரலாற்றில் சிறப்பிடம் பெற் றவை ஆகும். அதன் தலைவர், சர். ஏ. இலட்சுமண சுவாமி முதலியார் ஆவார். எந்த ஒரு கல்விச் சீர் திருத்தத்திலும் ஆசிரியரே அடிப்படையாவார் என் பதனை இக்கல்விக் குழு வலியுறுத்துவதுடன், ஆசிரி யர்களின் தரம், திறமை, சமூகமதிப்பு நிலை, இவற் றிற்குதவும் பொருளாதார நிலை, ஆகியவற்றை உயர்த்தப் பல கருத்துகளையும் எடுத்துக் கூறியுள் ளது. ஆசிரியர்களைத் தேர்ந்தெடுத்துப் பணியமர்த் தும் முறை நாடு முழுவதற்கும் ஒரே தன்மையதாக அமைந்திருக்க வேண்டுமென்றும், இவ்வாறு தேர்ந் தெடுப்பதற்குத் தேர்வுக் குழுக்கள் அமைக்கப்பட்டு, இவற்றில் பள்ளித் தலைமையாசிரியர்களும் இடம் பெற வேண்டுமென்றும் இக்கல்விக்குழு பரிந்துரைத் துள்ளது. பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் மட்டுமே பணிக்கு அமர்த்தப்பட வேண்டுமென்பதனை வலி யுறுத்தி, ஆசிரியப் பயிற்சி மேலும் பயனுள்ளதாக அமையவும் பல பரிந்துரைகளைச் செய்துள்ளது. இரு வகை ஆசிரியப் பயிற்சியினை இக்கல்விக்குழு குறிப் பிட்டுள்ளது. மெட்ரிகுலேசன் அல்லது உயர்நிலைப் பள்ளி இறுதி வகுப்பு வரை படித்தோர்க்கு 2 ஆண்டு களும்; பட்டதாரிகளுக்கு ஓராண்டும் ஆசிரியப் பயிற்சி தேவை என்றும், புதுப்பித்தல் பயிற்சி, செய லரங்குகள், கருத்தரங்குகள் போன்றன பயிற்சிக் கல்லூரிப் பணிகளில் இடம்பெறவேண்டுமென்றும், பயிற்சிபெற்ற ஆசிரியர்களது பற்றாக்குறையைத் தீர்க்கத் தனியாகப் பகுதி நேர ஆசிரியப்பயிற்சி வகுப்புகள் ஏற்படுத்தப்பட வேண்டுமென்றும் இக்குழு விரும்பியது.

ஒரேபடிப்புத் தகுதியினைப் பெற்ற ஆசிரியர்கள் எந்நிலையில் பணியாற்றினாலும் ஒரே சீரான ஊதி யம் அளிக்கப்படவேண்டும்; சேமநலநிதி, ஓய்வுக் கால ஊதியம், காப்புவசதி என்ற முந்நலத்திட்டம் (Triple Benefit Scheme) எல்லா ஆசிரியர்களுக்கும் அளிக்கப் படவேண்டும்; ஆசிரியர்களது ஊதியத்தினை ஆராய்ந்து அவற்றினை மாற்றியமைத்தற்காக ஒரு குழு அமைக்கப்பட வேண்டும்; உயரும் வாழ்க்கைப் புள்ளிக் கேற்ப ஆசிரியர்களது ஊதியம் உயர்த்தப்பட வேண்டும் என்பன போன்ற பரிந்துரைகளையும் உயர்நிலைக் கல்வி ஆய்வுக் குழு குறிப்பிட்டது. ஆசிரியர்கள் ஒருசில மாணாக்கர்களுக்குத் தனிப் பயிற்சி அளித்தல் (Tutions) ஆசிரியர்களது மதிப் பைக் குறைத்து வேறு சில சிக்கல்களையும் தோற்று விக்கக் கூடுமாதலால், தனிப் பயிற்றுதலைத் தடை செய்தல் வேண்டும் என இக்குழு விரும்பியது. ஆசிரியர்களின் குழந்தைகளுக்கு இலவசக் கல்வி அளித்தல், அவர்கள் தேவைகளுக்கு எளிய விதி களுக்குட்பட்டுக் கடன் வழங்குதல், பயணவசதி கள், தளர்த்தப்பட்ட விடுப்பு விதிகள் போன்ற ஆசிரியர்களுக்கு நலம் பயக்கத்தக்க பலவற்றைப் பரிந்துரை செய்தது.

இந்திய நாட்டின் கல்வி அமைப்பினை 1964-இல் முழுமையாக ஆராய்ந்து அறிவுரைகள் வழங்க இந்திய அரசு, ஒரு கல்வி ஆய்வுக் குழுவினை அமைத்தது. கோத்தாரிக் கல்விக் குழு எனப்பட்ட இக்குழு, 1966-ஆம் ஆண்டில் ''கல்வியும் நாட்டின் வளர்ச்சியும்'' என்ற தலைப்பைக் கொண்ட தமது அறிக்கையை அரசுக்குக் கொடுத்தது. கல்வித் தரத்தை உயர்த்த மேற்கொள்ளப்படும் முயற்சிகள் யாவற்றுக்கும் ஆசிரியப்பயிற்சி தலையாய பகுதியாகுமென்றும் ஆசிரியக் கல்வி சிறப்புற அமைய வேண்டுமாயின், அது பல்கலைக் கழகக் கல்வியுடன் இணைந்தும், பள்ளிக்கல்வி, சமுதாய வாழ்க்கை ஆகியவற்றுடன் இணைந்தும் செயற்பட வேண்டுமென்றும் கோத்தாரிக் கல்விக்குழு குறிப்பிட்டது. பல்கலைப் பட்டப் படிப்பில் கல்வியியலை ஒரு விருப்பப் பாடமாக அமைத்தல், கல்வியியலில் உயர்நிலை, ஆராய்ச்சிப் படிப்பு ஆகியவற்றிற்குரிய வசதிகளைப் பல்கலைக் கழகங்கள் ஏற்படுத்துதல், ஆசிரியப் பயிற்சிக் கல்லூரிகளில் விரிவாக்கப் பணிக்காக (Extension Services) ஒரு துறை ஏற்படுத்திப் பல்வேறு செயல்களை மேற்கொள்ள ஊக்குவித்தல், புதிய கல்விக் கருத்துகளை ஆசிரியர்களிடையே பரப்ப உதவும் கல்விக் கழகங்களை நிறுவுதல் போன்றன இவற்றுள் சிலவாம். ஒவ்வொரு கல்வியியல் கல்லூரியிலும் பல்வேறு நிலைகளுக்கான ஆசிரியப் பயிற்சிப் பிரிவுகள் ஒருங்கிணைந்திருத்தலைக் (Comprehensive College) கோத்தாரிக் கல்விக்குழு ஆதரித்தது.

ஆசிரியப் பயிற்சியின் தரம் உயர மேலும் பல வழிகளையும் இக்கல்விக் குழு பரிந்துரை செய்துள்ளது. கற்பித்தல் பயிற்சியை மேலும் சிறப்பாக்குதல், பட்டப்படிப்பு ஆசிரியக் கல்வி ஆகிய இரண்டும் இணைந்த வகுப்புக்கு ஏற்பாடுசெய்தல், கல்விக்குறிக்கோள்களுக்கேற்ப ஆசிரியக் கல்விக்கான பாடத் திட்டங்களை உருவாக்குதல், சிறந்த பட்டதாரிகளை ஆசிரியப் பயிற்சி பெற ஊக்குவித்தல், கல்லூரி ஆசிரியர்க்கான பயிற்சித் திட்டங்களை உருவாக்குதல் போன்றன இவற்றுள் அடங்கும். கற்பித்தல் முறைகளை மேலும் சிறப்பானவையாக உயர்த்தவும் பல கருத்துகள் கோத்தாரிக் கல்விக் குழுவினால் குறிப்பிடப்பட்டுள்ளன. நெகிழ்ச்சி, தேவைக்கேற்ப மாற்றம் பெறுதல் ஆகிய அடிப்படையில் கற்பித்தல்முறைகள் அமைதல் வேண்டும்; சிறந்த ஆசிரியர்கள் புதிய முறைகளை உருவாக்கிச் செயற்படுத்த ஊக்குவிக்கப்பட வேண்டும்; கற்பித்தலுக்குரிய புதிய துணைக் கருவிகள் பொருள்கள் போன்றவற்றை ஆக்கித் தருதல் ஆகியன பயிற்சிக் கல்லூரிகளின் பொறுப்பாக அமைதல் வேண்டும்; இவை, எளிதில் கிடைக்கும் பொருள்களைக் கொண்டு மிகக் குறைந்த செலவில் உருவாக்கக் கூடியவையாக இருத்தல் நல்லது என்றெல்லாம் கோத்தாரிக் கல்விக்குழு பரிந்துரைத்தது.

ஆசிரியர்களின் பொருளாதார, சமூக, பணி நிலைகளை உயர்த்துவதற்கான பரிந்துரைகளையும் கோத்தாரிக் கல்விக்குழு அளித்துள்ளது. ஆசிரியர்களது ஊதிய உயர்வுக்கு அரசு முன்னுரிமை அளிப்பதன் இன்றியமையாமையையும், பல்வேறு நிலை ஆசிரியர்களுக்குக் குறைந்த அளவு ஊதிய விகிதத்தை அரசு அமைக்க வேண்டியதன் முதன்மையையும் இக்கல்விக் குழு வலியுறுத்தியுள்ளது. ஆசிரியர்களது ஊதிய அமைப்பு 5 ஆண்டுகளுக்கு ஒருமுறை மறு ஆய்வு செய்யப்பட வேண்டுமென்றும், பதவி உயர்வளிப்பதில் தகுதி, திறமை ஆகியவற்றுக்குப் போதிய இடம் அளிக்கப்பட வேண்டுமென்றும் இக்குழு குறிப்பிட்டுள்ளது. ஒவ்வொரு மாநிலத்திலும் ஆசிரியர்களது நலனைப் பாதுகாக்க ஓர் அமைப்புத் தேவை. சிறந்த ஆசிரியர்களுக்குத் தேசிய அளவில் விருதுகள் அளிக்கும் திட்டத்தை மேலும் பரவலாக்கிச் சமுதாயம் அவர்களது தொண்டிற்குக் மதிப்பளிக்கிறது என்பதனை ஆசிரியர்கள் நன்கு உணரச் செய்வது இன்றியமையாதது என்பதும் கோத்தாரி கல்விக் குழுவின் கருத்தாகும்.

அண்மையில் மைய அரசு இரு தேசிய ஆய்வுக் குழுக்களை அமைத்துள்ளது, முதற் குழு, பள்ளி ஆசிரியர்களின் சிக்கல்களையும், இரண்டாம் குழு தொழில்நுட்பக் கல்வி உட்பட்ட உயர்கல்வி ஆசிரியர்களின் சிக்கல்களையும் ஆராயும். பேராசிரியர் டி.பி. சட்டோபாத்யாயா முதல் கல்விக் குழுவின் தலைவராகவும், பேராசிரியர், இரயீசு அகமது இரண்டாம் குழுவின் தலைவராகவும் அமர்த்தப் பட்டுள்ளனர். இருகுழுக்களும் 1984 ஆம் ஆண்டின் இறுதிக்குள் தங்கள் அறிக்கைகளை அரசுக்கு அனுப்ப வேண்டும். (ஆனால், 1985 ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதம் இறுதிவரை அறிக்கை வெளிவரவில்லை). இக்குழுக்கள், நாட்டின் குறிக்கோள்களுக்கு ஏற்ற ஆசிரியக் கல்வி இலக்குகளை வரையறுத்தல், ஆசிரியர்களுக்குச் சமுதாயத்தில் ஏற்ற ஒரு நிலையினை அளித்தற்கான வழிகளைச் சுட்டிக் காட்டுதல், ஆசிரியப் பணிக்குச் சிறந்த இளைஞர்களை, குறிப்பாகப் பெண்களைத் தேர்ந்தெடுத்து இப்பணியில் ஆர்வத்துடன் செயலாற்ற ஊக்குவிக்கும் வழிகளைக் குறிப்பிடுதல், ஆசிரியப் பயிற்சி, ஆசிரியர்க்கான பணியிடைப் பயிற்சி ஆகியவற்றுக்கான உயர் முறைகளை ஆராய்தல், முறைசாராக் கல்வியில் பள்ளி ஆசிரியர்களது பணியினை வரையறுத்தல், ஆசிரியர்க்கான ஒரு பொது நடத்தை நெறித் தொகுப்பை உருவாக்குதல், ஆசிரிய நலத்

திட்டங்களை ஆராய்தல் போன்றவற்றைப் பரிந்துரை செய்யும். இக்குழுக்களின் பரிந்துரைகள் வெளிவந்த பின், இவற்றை மைய, மாநில அரசுகள் ஆராய்ந்து ஏற்கப்பட்டவற்றைச் செயற்படுத்தும்.

எஸ்.ச.

**ஆசிரியர் பங்கு:** தாம் மேற்கொண்டுள்ள பணியில் ஓர் ஆசிரியர் என்னென்ன செய்யவேண்டும் எனப் பிறர் எதிர் பார்க்கின்றனரோ, அவ்வெதிர் பார்ப்புகளின் மொத்தமே ஆசிரியர் பங்கு (Teacher Role) எனப்படும். எதிர்பார்ப்போர் பலர்; எனவே எதிர்பார்ப்புகளும் பலவகையாகலாம். எதிர் பார்ப்புகளில் சில, ஒரிரு வேளைகளில் ஒன்றுக்கொன்று எதிரெதிர் ஆகலாம்.

சமுதாய மக்கள், மாணவர், பிற ஆசிரியர், தலைமையாசிரியர், மேற்பார்வையாளர், பெற்றோர் ஆகியோரின் எதிர்பார்ப்புகள் எனப் பலவகை எதிர் பார்ப்புகள் ஆசிரியரை ஒட்டி அமையும். இவ்வெதிர் பார்ப்புகள் சமுதாயத்திலும் கல்வியிலும் ஏற்படும் மாறுதல்களுக்கேற்ப மாறிவரும். ஆசிரியர் நற் பண்பாளராக இருக்க வேண்டுமென்று எதிர் பார்த்த சமுதாயம், அவரிடத்து விரும்பத்தக்க அனைத்து மக்கட் பண்புகளும் அமைய வேண்டும் என விதித்தது. ஆசிரியரை இறைவனுக் கொப்பாக்கி, மன்னரினும் மேல்நிலையில் வைத்துத் தம்மிடம் கற்றுக் கொள்ள வரும் மாணவர்க்கேயன்றிச் சமுதாயத்தில் உள்ள பிறர்க்கும் வாழ்க்கை நெறியில் வழிகாட்டியாய் இருத்தல் வேண்டும் எனக் கருதியது.

இன்று காணும் சமுதாயச் சூழலில் மாணவர் அறிவும் ஒழுக்கமும் ஆசிரியரிடமிருந்து மட்டுமே பெறுவதில்லை. பெருகிவரும் ஆசிரியர் கூட்டத்துள்ளும் ஒழுக்கத்தின் எய்திய மேன்மை கொண்டார் மிகச் சிலராகவே உள்ளனர். எனவே, மாணவரைப் பண்புடையராக்கும் பணியில் ஆசிரியர் பங்கின் அளவு மிகக் குறைந்ததே. ஆயின், புதுச் சமுதாயப் பங்குகள் ஆசிரியர்க்காய் அமைந்தன. சமுதாய வளர்ச்சிக் கேற்ற மாற்றங்களைத் தாம் பணியாற்றும் சமூகத்தினிடையே புகுத்தி அச் சிறு சமூக முன்னேற்றத்திற்கு உதவும் பங்கினை ஆசிரியர் மேற்கொள்ள வேண்டும் என இன்று எதிர்பார்க்கிறோம். சமுதாய மாற்றத்திற்கு ஒரு முகவராய் (Agent) ஆசிரியர் பணியாற்றல் வேண்டும்.

ஆசிரியரைச் சுற்றி மையம் கொண்டிருந்த கல்வி, இப்போது மாணவரை மையமாகக் கொண்டு அமைகிறது. ஆசிரியரே அறிவுக் கருவூலம் என்றிருந்த நிலைமாறி, இன்று அறிவு பல வழிகளில் மாணவரை அடைதற்கான வாய்ப்புகள் பெருகியுள்ளன. கல்வியின் நோக்கங்களிலும் முறைகளிலும் எதிர்பார்க்கப்படும் விளைவுகளிலும் மாற்றங்கள் பல நிகழ்ந்து வருகின்றன. வகுப்பு மாணவர் அனைவர்க்கும் ஒன்றாய் ஒரே வகையில் கற்பித்து வந்த நிலைமாறி, தனி மாணவர் தேவைகளையொட்டித் தனியாகவும் சிறு குழு அமைப்பிலும் கற்பித்தல் அமைந்து வருகிறது. கற்றலில் கட்டுப்பாடு, மாணவர்க்குச் சுதந்திரம் என்ற நிலைகளிலிருந்து அனுபவம் பெறுதல் என்ற நிலைக்கு மாணவரை ஆசிரியர் இட்டுச்செல்ல வேண்டும். திறன்பெறுதல், புதியன காணல் என்ற கற்றல் விளைவுகளைக் காட்டிலும் புதியன படைத்தல் என்ற விளைவு வேண்டற்பாற்று. மாணவரிடத்துக் கல்விப் பயனாய்க் கட்டுப்பாடு, சுதந்திரம் ஆகியவற்றைக் காட்டிலும் பொறுப்புடைமை மிகுதியும் வளரவேண்டும். பிறர் சார்பின் நீங்கித் தற்சார்பின் ஒழுகித் தன்னிறைவு காண்பவராய் மாணவர் வளர்தல் வேண்டும்.

அவ்வப்போது ஏற்பட்டுவரும் சமூக, கல்வி மாறுதல்களுக்கு ஒப்ப ஆசிரியரைப் பற்றிய எதிர்பார்ப்புகளும் மாறிவரும். இன்றைய ஆசிரியர் மாணவர் அறிவுபெற-கற்றுக்கொள்ள-ஏற்ற சூழலை அமைத்துத் தருதல், தாமாக மாணவர் கற்றுக்கொள்ள ஊக்குவித்தல், வழிகாட்டல், அறிவிருக்கும் இடங்காட்டல், கொள்வோன் கொள்வகையறிந்து அவன் உளங்கொள நூல் கற்பித்தல், மாணவர்க்குக் கல்வியிலும் தொழில் தேர்விலும் அவர்களின் தனிப்பட்ட குறைபாடு நீங்க வழிகாட்டுதல், அறிவுரை பகர்தல், கல்வியில் அவ்வப்போது ஏற்படும் வேண்டத்தகும் மாறுபாடுகளைத் தெரிந்து, ஏற்று அவற்றைக் கடைப்பிடித்தல் போன்றவற்றைத் தம் தொழிலில் மேற்கொள்ள வேண்டும் என எதிர் பார்க்கப்படுகிறது. இவையே கல்வி பற்றிய ஆசிரியர் பங்கு ஆகும்.

பி.எஸ்.பா.

**ஆசிரியர் பணியிடைப் பயிற்சி:** பணியிடைக் கல்வி என்பது ஆசிரியர் தொழிலுக்கான தகுதியைப் பெற்று ஆசிரியராக இருப்பவர்களுக்கு, அவர்களது பணியின் தன்மையை உயர்த்தும் கல்வித் தொடர்பான பயிற்சியாகும். ஆசிரியர்கள் தங்களின் கற்பித்தல் தொடர்பாகப் படித்தல், கருத்தரங்குகள், பட்டறைகள், கலந்துரையாடல்கள் போன்றவற்றில் பங்கு கொண்டு புதிய அனுபவங்களைப் பெற்றுத் தங்கள் கற்பித்தலில் காலத்திற் கேற்றவாறு திறமையாகச் செயற்பட உதவுதல் ஆகியன இப்பயிற்சியின் நோக்கமாகும்.

அறிவியல் அறிவும் தொழில்நுட்ப அறிவும் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே வருகின்றன. மாறுதல்களைப் பெற்றுக் கொண்டே வரும் இக்காலத்தில், இன்றைய தேவைகளுக்கேற்பப் பணியாற்ற ஆசிரியர்

களுக்குத் தொடர்ச்சியான பயிற்சி தேவைப்படுகிறது. பணியிடைப் பயிற்சி (In Service Education) ஆசிரியர்களின் முன்பணிப் பயிற்சியை முழுமைபெறச் செய்யவும், அவ்வாசிரியரின் தனிப்பட்ட பாடத்தில் ஏற்படும் புதிய முறைகளைத் தெரிந்துகொள்ளவும், கல்வியில் ஏற்படும் மாறுதல்களைத் தெரிந்து கொள்ளவும் மிக இன்றியமையாததாகக் கருதப்படுகிறது.

**பணியிடைக் கல்வியின் பயன்கள்:** பணி முன் கல்வி, ஆசிரியர்கள் எவ்வாறு கற்பிப்பது என்ற பொதுப்படையான கருத்துகளையே தருகிறது. பணியிடைக்கல்வி, கற்பித்தலில் ஏற்படும் புதிய சிக்கல்களைத் தீர்க்க உதவுகிறது. அறிவியல், தொழில் நுட்பம் - இவ்விரண்டு துறைகளும் மிக விரைவாக வளர்ந்து வருகின்றன. இவற்றின் புதிய கருத்துகளை அறிய இப்பயிற்சி மிக இன்றியமையாதது. ஆசிரியர்கள் தங்கள் தொழிலில் முன்னேற்றமடைய இப்பயிற்சி வாய்ப்பினை அளிக்கிறது. பயிற்சிக் கல்லூரிகளில் புதிய கருத்துகளை நடைமுறைப்படுத்துவதை நன்கு செயற்படுத்த உதவுகிறது. கல்வியின் தரத்தை உயர்த்தப் பணியிடைக் கல்வி, ஆசிரியர்களுக்குப் பெருந்துணை புரிகிறது. ஆசிரியரிடையே தன்னம்பிக்கை, கட்டுப்பாடு ஆகியவற்றை வளர்க்கிறது பணியிடைக் கல்வியினைப் பின்வரும் முறைகளில் பெறலாம்.

**கருத்தரங்கு:** கருத்தரங்கு என்பது புதிய, கல்வித்தொடர்பான செய்திகளைத் தங்களுக்குள் பரிமாறிக் கொள்ளுதலாகும். கருத்தரங்கில் பங்கு கொள்ளும் குழுவினர், பல சிறு குழுக்களாகப் பிரிக்கப்பட்டுக் கொடுக்கப்பட்டுள்ள தலைப்பில் உள்ள பொருள் பற்றியோ அத்தலைப்பில் வெவ்வேறு கூறுகளைப் பற்றியோ கருத்துத் தெரிவிப்பர். இவ்விதம் பங்கு கொள்பவர்களின் கூட்டு முயற்சியால் அனைவரின் அறிவும் அனுபவமும் தொழில் நுணுக்கமும், பரிமாற்றம், செய்து கொள்ளப்படுகின்றன.

**கருத்துப் பட்டறை:** அனுபவமும் தேர்ச்சியும் பெற்றவர்கள் பல தரப்பட்ட வல்லுநர்களோடும் விளக்க உரையாளர்களோடும் கலந்து, தங்கள் துறைத் தொடர்புடைய சிக்கல்களைக் குறித்து ஆலோசித்து, அவற்றைத் தீர்ப்பதற்கான வழிமுறைகளைக் காண்பதே கருத்துப்பட்டறையாகும்.

**செயல்முறை விளக்கம்:** பங்கு கொள்பவர்களுக்குப் புதிய முறைகளையும் நுண்திறன்களையும் வளர்த்து, ஒரு செயலை எப்படிச் செய்வது என்று விளக்குவதாகும்.

**வெளியீடுகள்:** ஆசிரியர்கள் தங்களுடைய அனுபவங்கள், தாம் செய்துள்ள சோதனைகளின் முடிவுகள் ஆகியவற்றை வெளியிடலாம். பள்ளிகள், விரிவாக்கச்சேவைத் துறைகள், ஆசிரியர் தொழிலுக்குத் தேவையானவை முதலியவற்றை மற்ற ஆசிரியர்களும் தெரிந்து கொள்வதற்காகவும் வெளியிடலாம்.

**கோடைக்கால, பனிக்கால நிறுவனங்கள்:** கோடைக்காலம் அல்லது பனிக்கால நிறுவனங்களில் பங்கேற்பதன் மூலம் ஆசிரியர்கள் தங்களுடைய விடுமுறைகளைப் பயனுள்ள வகையில் கழித்துத் தங்கள் தொழிலில் மேம்பாட்டை அடையலாம். இம்முறையின் மூலம் பிற பள்ளிகளிலிருந்து பங்கு கொள்ளும் ஆசிரியர்களிடமிருந்து அவர்களுடைய அனுபவங்களையும் புதிய வழிமுறைகளையும் அறிந்துகொள்ளலாம்; கல்வி வல்லுநர்களையும் சந்திக்கலாம்.

**களப்பயணங்கள்:** இதில் ஆசிரியர்கள் தங்கள் பாடங்களோடு தொடர்புடைய இடங்களை நேரடியாகச் சென்று பார்க்கின்றனர். அவரவர்களின் நிதி நிலைமைகளுக்கேற்ப இடங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு, பயணம் மேற்கொள்ளப்படுகிறது. சுற்றுலாவுடன் கூட விரிவுரை, வழக்காடுதல், படிப்புப்போன்ற நிகழ்ச்சிகளும் இடம் பெறலாம்.

**பணியாளர் மன்றம் — படிப்புக் குழுக்கள்:** ஆசிரியர்கள் தங்கள் கருத்துகளைப் பகிர்ந்து கொள்ளவும் சிக்கல்களைத் தீர்த்துக் கொள்ளவும் ஆசிரியர்களின் சந்திப்புகள் நல்ல வாய்ப்பாகும். தனிப்பட்ட பாட ஆசிரியர்கள் தம்மோடு பணியாற்றும் பிற ஆசிரியர்களுடன் ஒன்று கூடி ஒரு படிப்புக் குழுவை ஏற்படுத்தி, அதன்மூலம் அவர்களிடையே ஏற்படும் அனுபவங்களைப் பகிர்ந்து கொள்வதோடு எதிர்ப்படும் சிக்கல்களைத் தீர்க்கும் முறைகளையும் தெரிந்து கொள்ளலாம்.

**படக்காட்சி:** கண், செவி ஆகிய புலன்களின் மூலம் கல்வி பெறப்படுவதால் இது பணியிடைப் பயிற்சிக்கு ஏற்றது. படவிளக்க விரிவுரைகள் கொடுக்கப்படலாம்; கலந்தாய்தலும் மேற்கொள்ளப்படலாம்.

ஆசிரியப் பயிற்சி, கற்பித்தல் ஆகியன பற்றிய புதிய உத்திகளை விளக்கும் சில நிகழ்ச்சிகள், இப்போது பல்கலைக்கழக மானியக் குழுவின் உதவியுடன் ஒளிபரப்பப்படும் உயர்கல்விக்கான தொலைக்காட்சித் திட்டத்தில் இடம் பெறுகின்றன. இவையும் ஆசிரியர் தரம் உயர உதவும்.

**தேசியக் கல்வி ஆராய்ச்சிப் பயிற்சிக் கழகம்:** ஆசிரியர்களுக்குப் பணியிடைப் பயிற்சி அளிக்கும் நிறுவனங்களில் இது தலையாயதும் தேசிய அளவில் உள்ளதுமாகும். ஓர் ஆசிரியர் தம் தொழிலைத் திறம்படச் செய்யப் பாடத் திட்டம், பாடப் புத்தகங்

கள், ஆசிரியர் வழிகாட்டிகள், கற்பிக்கும் கருவிகள், கையேடுகள், சோதனைக் கருவிகள், மாணவர் குறிப்பேடுகள் ஆகியன, கருத்தரங்குகள், கருத்துப் பட்டறைகள் மூலம் முறையாக உருவாக்கப்பட வேண்டும். கல்வி நிலையைப் படிப்படியாக உயரச் செய்வதற்குத் தொடர் மதிப்பீடும் தேவைப்படுகிறது. இத்தொடர் மதிப்பீட்டில் நீண்ட, நிலையான, கடினமான ஆராய்ச்சிகள் மூலம், கற்றல்-கற்பித்தலுக்குத் தேவையான மதிப்பீட்டுக் கருவிகள் கிடைக்கின்றன. இக்கருவிகளை நல்ல முறையில் பயன்படுத்திக் கல்வி நிலையை உயரச் செய்வது தேசியக் கல்வி ஆராய்ச்சிப் பயிற்சிக் கழகத்தின் செயலாகும். இப்பொழுது தில்லியைத் தலைமையகமாகக் கொண்டு இக்கழகம் இயங்கி வருகிறது. இதன் கள அலுவலர் நாட்டின் பல்வேறு மாநிலங்களில் பணியாற்றுகின்றனர். இக்கழகம் பல்வேறு வகைகளில் சாதனைகளை நிகழ்த்தியுள்ளது. அவற்றில் ஒன்று ஆசிரியர்கள், ஆசிரியப் பயிற்சியாளர்கள், கல்வி நிருவாகிகள், ஆராய்ச்சியாளர்கள் ஆகியோர்க்குப் பணியிடைப் பயிற்சி அளிப்பதாகும்.

**மாநிலக்கல்வி ஆராய்ச்சிப் பயிற்சிக் கழகம்:** தரமுள்ள கல்வியின் தேவைக்கேற்ப வளர்ந்து வரும் கல்வி ஆராய்ச்சிப் பயிற்சியின் தேவைகளை நிறைவு செய்ய மாநில அளவில் மாநிலக் கல்வி ஆராய்ச்சிப் பயிற்சிக் கழகம் தோற்றுவிக்கப்பட்டுள்ளது. இந்நிறுவனமும் ஆசிரியர்களுக்குப் பலவகையான பணியிடைப் பயிற்சிகளை அளிக்கிறது.

**விரிவாக்கப் பணித்துறை:** ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிகள், பள்ளிகளுடன் தொடர்பு கொண்டு அப்பள்ளிகள் தேவைக்கேற்பக் கருத்தரங்குகள், கருத்துப் பட்டறைகள், செயல்முறை விளக்கங்கள், குழுவிவாதம் போன்ற வகைகளில் ஆசிரியர்களுக்குப் பயிற்சி அளிக்கின்றன.

**தேசிய ஆசிரியர் கல்விக் கழகம்:** தேசியக் கல்வி ஆராய்ச்சிப் பயிற்சிக் கழகத்தின் ஓர் உறுப்பாகும். இத்துறையும் ஆசிரியர்களுக்குப் பல வகையான பணியிடைக் கல்விப் பயிற்சிகளை அளித்து ஆசிரியர்களின் நிலையினை மேம்படுத்துகிறது.

**பல்கலைக் கழக நிதிக்குழு:** இக்குழு பல்கலைக் கழகக் கல்வித் துறைகளுடன் இணைந்து உயர்கல்வி ஆசிரியர்களுக்காகப் பல பணியிடைப் பயிற்சிகளை அளித்து வருகிறது. கே.சி.சா.

**ஆசிரியர்-பெற்றோர் உறவு:** மாணாக்கரின் ஒழுங்கின்மை, கட்டுப்பாடற்ற தன்மை, கவலையற்ற போக்கு, சில ஆசிரியர்களின் பொறுப்பற்ற தன்மை, மதிப்புகளை மறந்த போக்கு, பெற்றோரின் பொறுப்பற்ற நெறி போன்ற கல்விச் சூழ்நிலைச் சீர் கேடுகளை அகற்றும் அருமருந்து பெற்றோர் – ஆசிரியர் நல்லுறவாகும்.

பெற்றோர் ஆசிரியர் உறவு பழங்காலத்தில் இருந்த நிலையை இலக்கியங்கள் இயம்புகின்றன. மாணாக்கரின் நல்வாழ்வில் மிகுந்த அக்கறை கொண்டிருந்த ஆசிரியர்களைப் பெற்றோர் மிகவும் மதித்து அவர்களின் குடும்ப நலன்களைப் போற்றிய தன்மையை வரலாற்றுச் செய்திகள் பகரும்.

பற்பல நூற்றாண்டுகளாகப் பல்வேறு அரசியல், சமூகப் பொருளாதாரப் பின்னணிகளால் பெற்றோர் – ஆசிரியர் உறவு பழுதுற்று வருதலைக் காணலாம். இவ்வுறவுச் சீர்கேடு மாணாக்கர் நல்வாழ்விற்கு ஒரு தடைக்கல் என்பது அனைவரும் அறிந்த உண்மை. இவ்வுறவு சீரடைந்தால் மாணாக்கரின் வாழ்வு ஒளி மயமாகும்.

பெற்றோர், ஆசிரியருக்கிடையே உறவை மேம்படுத்த எண்ணிய தமிழகக் கல்வி இயக்குநரகம், பெற்றோர் ஆசிரியர் கழகங்களை ஒவ்வொரு பள்ளியிலும் ஏற்படுத்த நெறிமுறைகளை அமைத்து, அவை எவ்வாறு சிறந்த முறையில் இயங்க வேண்டும் என்று வழியமைத்துள்ளது. பல பள்ளிகளில் இப்பெற்றோர் ஆசிரியர் உறவு சிறந்து விளங்குவதால், பள்ளிக் குழந்தைகள் கல்வி மேம்பாடடைந்து சிறப்புறுகின்றனர் என்பது கண்கூடு. பல பள்ளிகளில் இவ்வுறவு, ஏட்டளவிலும் சில பள்ளிகளில் பேச்சளவிலும் சில பள்ளிகளில் வெறும் கற்பனை வடிவிலுமே உள்ளது.

பெரும்பாலான பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளைப் பள்ளிகளில் சேர்க்கும் காலத்திலும், பள்ளிக் கல்வி முடிந்து விடுப்புச் சான்றிதழ் பெறும் நேரத்திலும், கையெழுத்து இட வேண்டிய கட்டாயச் சூழ்நிலைகளிலும் மட்டுமே பள்ளிகட்கு வருகின்றனர். பள்ளிக் கல்வி என்பது, மாணாக்கர் ஆசிரியர் என்ற இருவரைப் பொறுத்தது என்பது பெற்றோர்களின் கோட்பாடாக உள்ளது. குழந்தைகள் கல்வி மேம்பாட்டின் ஒவ்வொரு பகுதியிலும் தங்கட்குப் பெரும் பொறுப்பு உண்டு என்பதைப் பெற்றோர் உணர வேண்டும். ஆனால், பெற்றோர்களுள் மூன்றில் இருபங்கினர் எழுத்தறிவற்றவர்கள் என ஆய்வுகள் சான்று பகர்கின்றன.

பள்ளிகளில் கேட்கப்படும் பொருள்களை வாங்கிக் கொடுப்பதும் சீருடைகள் தைத்துக் கொடுப்பதும் தேர்ச்சி அறிக்கைகளில் கையெழுத்து இடுவதும், மதிப்பெண்கள் குறைத்துப் பெற்றால் தனிப்பாடக் கூடத்தில் குழந்தைகளைச் சேர்ப்பதுந்தான் கல்வி எனப் பெரும்பாலான பெற்றோர்கள் எண்ணி வருகின்றனர்.

தங்கள் குழந்தைகளின் ஆசிரியர்கள் யார்? குழந்தைகளின் கல்வி இடர்ப்பாடுகள் யாவை? அவர்கள் எவ்வாறு கற்கின்றனர்? கற்றல் சூழ்நிலை பள்ளிகளிலும் வீடுகளிலும் எவ்வாறு உள்ளது? தங்கள் குழந்தைகளிடம் எவ்வகைப் பழக்க வழக்கங்கள் உள்ளன? நற்பழக்கங்கள் வேரூன்றி உள்ளனவா? தீய பழக்கங்கள் மெல்ல மெல்லச் சூழ்கின்றனவா? பள்ளிகளில் எதிர்பார்ப்புகள் மிகுதியாக உள்ளனவா, பள்ளியின் எதிர்பார்ப்புகளும் குழந்தைகளின் இயற்கைத் திறன்களும் சமன் நிலையில் உள்ளனவா? இல்லை எனில் அவ்வாறாக ஏன் இல்லை? என்பன போன்றவற்றைப் பெரும்பாலான பெற்றோர் எண்ணுவதேயில்லை. இத்தகு சூழ்நிலையில் பெற்றோர் ஆசிரியர் உறவு சிறந்திருக்குமேயானால், இப்புதிர்களுக்கு, சிக்கல்கட்குத் தீர்வுகாண முடியும்.

பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளைக் கல்விக் கூடத்திற்கு அனுப்பியவுடன் பொறுப்பு முடிந்து விட்டதாக எண்ணாமல் கல்வி அனுபவங்கள் ஒவ்வொன்றிலும் தோன்றாத் துணையாக இருத்தல் வேண்டும். அச்சூழ்நிலையில் எக்காரணங் கொண்டும் குழந்தைகளின் முன்னிலையில் ஆசிரியர்களைப் பழித்தல் கூடாது. பள்ளிக் கல்வி அனுபவங்கள் வெறும் ஏட்டு அனுபவங்களாக இருந்து விடாமல், வெளியுலகில் மெய்யானதாக அமையப் பெற்றோர் துணை புரிதல் வேண்டும். பீட்டர் உட்சு (Peter Woods) என்ற அறிஞர் "நாம் நம் குழந்தைகட்கு நல்ல பழக்கங்களைக் கற்றுத் தருகின்றோம். ஆனால், அவை அனைத்துமே வெளியுலகில் மெய்யற்றனவாக ஆக்கப்படுகின்றன. அவற்றைப் பயனுள்ளனவாக்குவதில் பெற்றோரின் பொறுப்பு மிகப் பெரியது" என்கிறார். எனவே, ஒரு குழந்தையைச் சீர்தூக்கி வளர்க்க, அதன் பெற்றோரைச் சீர்படுத்துதல் முதற்படி மேலும் பெற்றோர், ஆசிரியரிடம் நல்லுறவு கொண்டு அவ்வுறவுப் பின்னணியில் பள்ளி, வீடு ஆகியவற்றிற்கிடையே ஓர் இறுக்கமான பிணைப்பை அன்பு, நம்பிக்கை, கூட்டுறவு என்னும் நற்பண்புகளின் மூலம் ஏற்படுத்த வேண்டும்.

நகரங்களில் வாழும் பெற்றோர் பலரிடம், உலகியற் பெருநோக்கு பின்னிப் பிணைந்துள்ளதால் அவர்கள் தங்கள் குழந்தைகட்கெனச் சிறிது நேரம் கூட ஒதுக்காமல் சமூகத் தொண்டு, மனமகிழ்மன்றம், பற்பல களியாட்டங்கள், பொழுது போக்குகள், திண்ணைப் பேச்சு, ஊர் வம்பு போன்றவற்றில் நேரத்தைச் செலவிடுகின்றனர். குழந்தைகளின் கல்விச் செயல்களில் பங்கு ஏற்பதே இல்லை. பள்ளி-வீடு ஆகியவற்றின் சுமுக உறவிற்கும் மாணாக்கரின் தேர்ச்சித் திறனிற்கும் மிகை நேரியல் உறவு (Positive Correlation) இருப்பதாகப் பிளொடன் (Plowdone-1967) ஆராய்ச்சி முடிவுகள் அறிவிக்கின்றன.

ஐ.நா கல்வி, விஞ்ஞான, பண்பாட்டு நிறுவனம், (UNESCO) "வாழக்கற்றல்" (Learning to be) என்னும் நூலில், பெற்றோர், ஆசிரியர்கள் மூலமே பள்ளியின் பயன்கள் சமுதாயத்திற்கு எட்டும் என்றும், சமுதாய நோக்கில் பெற்றோர் ஆசிரிய உறவு மேம்பட வேண்டுமென்றும் வலியுறுத்துகிறது. பள்ளிகளிலும் வீடுகளிலும் தோல்வியுற்ற மாணவர்களே வீட்டை விட்டு ஓடுகின்றனர் என்று பலவகைச் செய்தித் திரட்டுகளும் சான்றுகள் தருகின்றன.

டாக்டர் அர்னால்டு தாயின்பி (Arnold Toynbee) கூறியவாறு வழிவழியாகச் சமூகப் பண்பாட்டுப் படிமுறைகளை வளர்த்து வரும் பணிகள், ஆசிரியர்களாலும் பெற்றோர்களாலும் சமுதாயத்தில் உள்ளவர்களாலும் நிகழ்ந்து வருகின்றன. மேலும் தேசிய அளவில் தமிழகத்தில்தான் இளங்குற்றவாளிகள் எண்ணிக்கை மிகுதியாக உள்ளன என்று புள்ளி விவரங்கள் புலப்படுத்துகின்றன. இச்சூழ்நிலையில், பெற்றோர் ஆசிரியர் உறவு சிறந்திருந்தால்தான், கல்வித் திட்ட இலக்குகளை (Educational Objectives) செயல் வெளியீடுகள் (Tasks) மூலம் அடைய இயலும். ஆசிரியர் பெற்றோர் இருசாரார் மட்டுமன்றிச் சமுதாயமும் இவ்வுறவுப் பாலம் சிறக்க அடிகோலிட வேண்டும். மேலும் சமுதாயப் பொதுநலக் கழகங்கள் அனைத்துமே, ஆசிரியர் பெற்றோர் உறவு மேம்பாட்டுக்கான விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும்.

எஸ்.மோ.

**ஆசிரியர்-பெற்றோர் கழகம்:** பெற்றோர் குழந்தையின் முதல் ஆசிரியராகவும் ஆசிரியர் குழந்தையின் இரண்டாம் பெற்றோராகவும் கருதப்படுவர். ஆதலின் குழந்தையின் மன நலத்திலும் கல்வி வளத்திலும் இரு திறத்தாருக்கும் பொறுப்புண்டு. இவர்களுக்குள் ஆழ்ந்த ஈடுபாடும் நெருங்கிய இணக்கமும் மிக மிக இன்றியமையாதவையாகும். இவ்விணைப்பு, ஆசிரியர்களைப் பெற்றோர்கள் தெரிந்து கொள்வதற்கும் பெற்றோர்களை ஆசிரியர்கள் புரிந்து கொள்வதற்கும் குழந்தையின் வளர்ச்சியில் பெற்றோரும் ஆசிரியரும் முரண்படாது ஒத்துழைத்துச் செயல் புரிவதற்கும் பெரிதும் துணை செய்கிறது. இதற்குரிய வாய்ப்புகளை ஆசிரியர் பெற்றோர் கழகங்கள், பெருமளவில் நல்குவதுடன், கற்றலும் கற்பித்தலும் முழுமை அடைய வழியையும் வகுக்கின்றன.

ஐக்கிய அமெரிக்க நாட்டில் வாசிங்டனிலுள்ள, ஆர்லிங்டன் என்னும் சிற்றூண்டி விடுதிக்

கூடத்தில் 17.2.1897 அன்று முதல் தேசிய அன்னையர் காங்கிரசின் சார்பில் ஒரு கூட்டம் கூட்டப்பட்டது. அவ்வமயம், திருமதி மெக்கலின் (Meckelin) அம்மையார் தலைமை தாங்கினார். அக் கூட்டமே பின்னர்ப் பெற்றோர் ஆசிரியர் கழகங்கள் தோற்றம் பெற வித்திட்டது எனக் கூறலாம்.

புரொபல் (Frobel), இசுடேன்லி ஆல் (Stanley Hall) போன்ற கல்வியாளர்கள் கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டில், குழந்தைகளின் நன்னடத்தையை வலியுறுத்தத் தொடங்கினார்கள். இதன் விளைவாகச் "சிறந்த குழந்தைகளுக்குச் சிறந்த அன்னையர்கள்" என்னும் குரலை எழுப்பி, அன்னையர் கழகங்களும் குழந்தைகளின் பூங்காப்பள்ளி ஆசிரியர்களும் உளவியல் அறிஞர்களும் ஒருங்கிணைந்து ஓர் இயக்கத்தினைத் தொடங்கினார்கள்.

குழந்தைகளின் உடல்நலம், மனவளம், கல்வி வளம் ஆகியவற்றின் மேம்பாடு, பெற்றோர்கள் மாநாடு நடத்துதல், ஆகியவற்றிற்குத் தக்க பயிற்சி அளிக்கக் கல்வியாளர்களும், நாடாளுமன்ற உறுப்பினர்களும் இணைந்து செயற்படல், குழந்தைகளின் வளர்ச்சிச் சிக்கல்களைத் தீர்க்க உதவும் புத்தறிவு அளித்தல் ஆகிய நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டு அமெரிக்க நாடெங்கிலும் அன்னையர் கழகங்கள் பல நிறுவனங்களைத் தோற்றுவித்தன.

இவ்வியக்கத்தின் தொடக்க நிலையில், அன்றைய அமெரிக்க நாட்டுப் பண்பாட்டிற்கிணங்கக் குழந்தைகளின் தந்தையர், குடும்ப வருவாயைப் பெருக்குவதில் ஆர்வம் செலுத்தினரேயன்றி, அன்னையர் போல் தம் குழந்தைகளின் வளர்ப்பு, கல்வி, பண்பு ஆகியவற்றில் நாட்டம் செலுத்தவில்லை. நாளடைவில் குழந்தையின் கல்வி வளர்ச்சியில், தந்தையருக்கும் ஈடுபாடு மிகவே, தந்தையர் கழகங்களும் தோன்றலாயின. குழந்தைகளின் நலம் பேணிக்காக்கும் நோக்குடன் 1918-இல் செனிவாவில் அனைத்துலக மாநாடு நடந்தது. அதனைத் தொடர்ந்து, 1927-இல் வீடு பள்ளி ஆகியவற்றின் நல்லிணைப் புரக்கும் குறிக்கோளுடன், அன்றைய அமெரிக்கக் குடியரசுத் தலைவரின் தலைமையில், ஆசிரியர்-பெற்றோர் கழகம், அனைத்துலக நாடுகளின் சார்பில் அமைக்கப்பட்டது. பின்னர் அன்னையர் கழகங்களையும் தந்தையர் கழகங்களையும் இணைத்து ஆசிரியர் பெற்றோர் உறவை வலுப்படுத்தும் வகையில் 1930-இல் சில இடங்களில் பெற்றோர் ஆசிரியர் கழகங்கள் தோன்றின. ஐக்கிய அமெரிக்கத் தேசியப் பெற்றோர் ஆசிரியர் கழகத்தின் தலைமையில் 1956-இல், மாநிலஅளவில் 50 கிளைக் கழகங்களும் உள்ளூர் அளவில் 40,396 கழகங்களும் தோன்றின. அவை பத்து இலட்சத்திற்கு மேற்பட்ட உறுப்பினர்களைப் பெற்று விளங்கின. உலக அரங்கில் அமெரிக்காவின் செல்வாக்கு வளர்ந்தோங்கியதன் விளைவாகப் பிற நாடுகளிலும் பெற்றோர் ஆசிரியர் கழகங்கள் பரவலாயின.

**சோவியத்து நாட்டில்:** சோவியத்து நாட்டில், பள்ளிகளுக்கும் மாணவர்களின் குடும்பங்களுக்கும் நெருங்கிய உறவு இன்றியமையாதது என்ற அடிப்படையில் கல்வி அமைக்கப்பட்டுள்ளது. அந்நாட்டுப் பெற்றோர் பொது அவையிலிருந்து பேராளர்களைத் தேர்ந்தெடுத்துப் பள்ளிகளில் இயங்கும் பெற்றோர் கழகங்களுக்கு அனுப்பி வைக்கின்றனர். ஒவ்வொரு பள்ளியிலும் ஒரு பெற்றோர் கழகம் தவறாது அமைந்திருக்கும். இக் கழகத்தில், வகுப்புகளின் எண்ணிக்கைக்கேற்ப அவ்வவ்வகுப்புகளில் பயிலும் மாணவர்களின் தந்தையர்களுள் ஒருவர் உறுப்பினராய் அமர்த்தப்படுவர். பள்ளிகளில் வற்புறுத்தப் பெறும் ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் மாணவர்கள் தங்கள் வீடுகளிலும் கடைப்பிடித்தொழுக இவ்வமைப்புத் துணை செய்கிறது.

பள்ளியிலுள்ள பெற்றோர் கழகம், விரிவுரைகள் நடத்துதல், பள்ளியின் நடைமுறைகளில் பங்கு கொள்ளுதல், பள்ளி விழாக்கள், கலை நிகழ்ச்சிகள் நடத்துதல் முதலியவற்றைப் பணியெனக் கொண்டு செயலாற்றுகிறது. மாணவர்களின் கல்வி வளர்ச்சியில் நாட்டமில்லாப் பெற்றோர்களை இக்கழகம் விசாரணைக்குட் படுத்தும் உரிமையும் பெற்றிருக்கிறது. இக்கழகம், தன் பொறுப்பில் கலை நிகழ்ச்சிகளை நடத்தி, அதன் வாயிலாக ஈட்டிய தொகையிலிருந்தே மாணவர்களுக்குப் பரிசு வழங்கல், இன்பப் பயணம் அழைத்துச் செல்லல் ஆகியவற்றை நடத்தும் பொறுப்பேற்றுள்ளது. பள்ளிக்குத் தொடர்பான செய்திகள், கல்விச் சிக்கல்கள், மாணவர்களின் மேம்பாடு, அமைப்பு, கூட்டுறவு, மற்றும் அரசுப் பண்ணைகள் ஆகியவை கூட்டங்களில் ஆராயப்படுகின்றன.

**இங்கிலாந்தில்:** இங்கிலாந்து நாட்டில் பள்ளிகளின் ஆக்க வேலைகள், பள்ளி நூலகம் நிறுவுதல், கட்டிட வசதி பெருக்குதல், தோட்டம் அமைத்தல் ஆகிய பணிகளை ஆசிரியர் பெற்றோர் கழகங்களே கவனித்துக் கொள்கின்றன. மாணவர்களின் முன்னேற்ற அறிக்கைகளில், ஆசிரியர்களின் குறிப்புகள் இடம் பெறுவது போன்று பெற்றோர்களின் கருத்துரைக்கும் இடம் அளிக்கப்பட்டுள்ளது. பள்ளிக்குப் பெற்றோர்கள் வரவழைக்கப்பட்டு, அவர்களுடன் தலைமை ஆசிரியர், வகுப்பாசிரியர், ஆகியவர்களின் கலந்துரையாடலுக்கு வழிவகை செய்து தருவதும் இக் கழகங்களேயாகும். சில குறிப்பிட்ட நாட்களில்

பெற்றோர் பள்ளிக்கு வந்து பள்ளியின் பணிகளையும் நடைமுறைகளையும் நேரில் காண வாய்ப்பளிக்கப் படுகிறது. பள்ளிகளில் பெற்றோர்களுக்கும் பொறுப் புண்டு என்பதனை உணர்த்துவது மட்டுமன்றி, ஆசிரியருக்கும் சமூகத்தில் பங்குண்டு என்பதை அறி விக்கும் வகையில் ஆசிரியருக்குச் சமூக ஊழியப் பயிற்சிகள் நடத்தப்படுகின்றன.

பிளௌடன் (Plowdone) அறிக்கையில் (1967-இல் வந்தது) ஆசிரியர்-பெற்றோர் கழகங்களின் குறைந்த அளவுச் செயல்திட்டங்கள் சுட்டிக் காட்டப்பட்டுள் ளன. அவையாவன: 1. பெற்றோர்களுக்குப் பள்ளி யில் நல்வரவு தருதல், 2. பள்ளியில் சேர்ந்த ஆறு திங்களுக்குப்பின், பெற்றோர் தவறாது வருகை தந்து, வகுப்பாசிரியருடன் தங்கள் பிள்ளைகளின் கல்வி நிலையைப் பற்றி ஆய்தல், 3. ஒரு நாளைக் குறிப்பிட்டு, அந் நாளில் பெற்றோர்களை வர வழைத்துப் பள்ளிப் பணிகளைப் பார்வையிட வாய்ப் பளித்தல், ஆகியவை பெற்றோர் ஆசிரியர் கழகம் மேற்கொள்ள வேண்டிய இன்றியமையாப் பணிக ளாகும்.

**இந்தியாவில்:** இந்திய நாட்டில், தேசிய அளவில் 1952-இல் இந்தியத் தேசிய ஆசிரியர்-பெற்றோர் கழகம், தில்லியில் நிறுவப்பட்டது. ஆண்டுதோறும் மாநாடுகள் ஒவ்வொரு மாநிலத்திலும் நடத்தப் பெறுகின்றன. 1975-ஆம் ஆண்டில் இந்தியத் தேசிய ஆசிரியர் பெற்றோர் கழகத்தின் சார்பில் சென்னையில் நடைபெற்ற மாநாடு குறிப்பிடத் தக்கதாகும். இக் கழகம், மூன்று திங்களுக்குரிய இதழை நடத்திக்கருத்துப் பொதிந்த செய்திகளை வெளியிட்டு வருகிறது.

தமிழ் நாட்டில் 1964 ஆம் ஆண்டில் தமிழ்நாடு ஆசிரியர் - பெற்றோர் கழகம், தோற்றுவிக்கப் பெற்றது. இக் கழகம், சென்னையில், பள்ளிக் கல்வி இயக்குநர் அலுவலகத்தில் செயற்படுகிறது. தமிழக அரசின் கல்வி அமைச்சர் இக் கழகத்தின் பதவி வழித் தலைவராவர். இக் கழகம், பள்ளியில் பயிலும் மாணவ மாணவியர்தம் பெற்றோர்கள் - பணி யாற்றும் ஆசிரியர்கள் இவர்களிடையே நட்புறவையும் கூட்டுறவையும் தோற்றுவித்துக் கல்வி வளர்ச்சியில் தனிக் கவனத்துடன் செயலாற்றி வருகிறது. சாதி, சமய, மொழி வேறுபாடுகளைக் கடந்து, தக்க விதி முறைகளை வகுத்துப் பணியாற்றுகிறது. மேலும் மாவட்ட அளவிலும் பள்ளி அளவிலும் கிளைகளை அமைத்துக் கொண்டுள்ளது.

இக்கழகம், 1964-65 ஆம் ஆண்டுகளில் 22 கிளைக் கழகங்களைக் கொண்டு தன் பணியைத் தொடங் கிற்று. இப்போது 27,632 கிளைக் கழகங்களைத் தோற்றுவித்து, அவற்றின் தலைமைக் கழகமாக விளங்குகிறது. சமூகம், பொருளாதாரம், கலை, கல்வி முதலிய துறைகளில், இளம் தலைமுறையினர் முன்னேற்றம் பெறுதல்; வாழ்வில் உறுதியான முதலிடம் பெறவும் தலைமைப் பொறுப்பு ஏற்கவும் சிறந்த குடிமக்களாகத் திகழவும் தொண்டாற்றுதல்: பள்ளிக்கும் வீட்டுக்கும் இடையே நெருங்கிய உறவை ஏற்படுத்திச் சிறுவர்களின் நல்வளர்ச்சிக்கு ஆசிரி யர் பெற்றோர் ஒத்துழைப்பின் வாயிலாக வாய்ப்பு களைத் தோற்றுவித்தளித்தல்; பெற்றோர், ஆசிரியர், மாணவர் ஆகியவர்களிடையே தேசிய ஒருமைப் பாட்டுணர்ச்சி ஓங்கவும், தங்களுக்குள் தடையின்றிக் கருத்துகளைப் பரிமாறிக் கொள்ளவும் உரிய வாய்ப்புகளைத் தருதல் போன்ற பல்வேறு நோக்கங் களில் இக்கழகம் பணியாற்றிவருகிறது.

மாவட்டங்கள்தோறும், உள்ள மாவட்டப் பெற் றோர்ஆசிரியர் கழகங்கள், பள்ளிப் பெற்றோர் ஆசிரி யர்கழகத்திற்கும், மாநிலப் பெற்றோர் ஆசிரியர் கழ கத்திற்கும் இணைப்புப் பாலமாக அமைந்து மேற் கூறிய நோக்கங்கள் ஈடேறும் வகையில் செயற்படு கின்றன. மாவட்ட முதன்மைக் கல்வி அலுவலர் இக் கழகத்தின் பதவிவழித் தலைமைப் பொறுப்பை ஏற்கி றார். பொதுக்குழு, நிருவாகக்குழு, நிதிக்குழு குறிப் பிட்ட பணிகளுக்காக அமைக்கப்படும் குழு என நான்கு உட்பிரிவுகளைக் கொண்டு இக் கழகம் செய லாற்றுகிறது.

பள்ளி ஆசிரியர்-பெற்றோர் கழகம், அவ்வப் பள்ளிக் கட்டிடத்தில், தனக்கென ஓர் அலுவலகம் பெற்று இயங்குகிறது. பள்ளி மாணவர்களின் பெற் றோர்கள் ஆசிரியர்கள் அடங்கிய பொதுக்குழு அமைக்கப்பட்டு, அதிலிருந்து பத்துப் பெற்றோர் களும் ஐந்து ஆசிரியர்களும் கொண்ட நிருவாகக் குழு தேர்ந்தெடுக்கப்பெற்று இயங்குகிறது. பெற்றோரே தலைமைப் பொறுப்பை ஏற்கிறார். பள்ளியின் தேவைகள், கட்டிட வசதிகள், நூலகம் நிறுவுதல் முதலிய பணிகளுக்குத் தேவையான நிதிவசதிகளைப் பெற ஆசிரியர் - பெற்றோர் கழகங்கள் பெரிதும் துணை புரிகின்றன. சமுதாயத்தில் ஆசிரியர்களின் மதிப்பு நிலையினை உயர்த்தவும் இக்கழகங்கள் உதவுகின்றன.

சி.பொ.

***ஆசிரியர் மாணவர் உறவு:*** ஆசிரியர் திறம்படக் கற்பிக்கவும் மாணவர்கள் செம்மையுறக் கற்றிடவும் வகுப்பறையில் மாணவர்களுக்கும் ஆசிரி யருக்கும் இடையே நிலவும் நல்லிணக்கச் சூழலே ஆசிரியர், மாணவர் உறவு (Teacher Student Relationship) எனச் சொல்லப்படும்.

பண்டைக் காலத்தில் கல்வி வாழ்வோடு இயைந்து கற்பிக்கப்பட்டு வந்தது. செய்து கற்றல்,

செய்யக் கற்றல், வாழ்ந்து கற்றல், வாழக் கற்றல் என்பதற்கிணங்கக் கல்வி கற்றல் என்பது வாழ்வோடு இரண்டறக் கலந்ததாக இருந்ததே தவிரத் தனிப்படுத்திக் காணப்படவில்லை. மாணாக்கர் எக்குடியில் பிறந்தாலும், ஆசிரியருடன் தங்கி அவர்களுக்குப் பணிவிடை செய்து அவர்தம் மனப்பாங்கு அறிந்து கற்றனர். கல்வி கற்றல், ஆசிரியர் இல்லத்திலேயே நடந்தது. இன்று கல்வி கற்பிக்கப்படும் இடம் பள்ளி, கல்லூரி, பல்கலைக் கழகம் என்றும், கற்பதற்கும் கற்பிப்பதற்கும் உரிய தகுதிகள் இவை என்றும் வரையறுக்கப்பட்டுள்ளன.

கல்விச் சூழ்நிலையில் ஆசிரியர் மாணவர்உறவு என்பது இன்றியமையாதது. எனவேதான் மாணவர் கல்விப் பயன் அடைதற்குரிய ஆசிரியர் இலக்கணங்கள் வரையறுக்கப்பட்டன. குலம், அருள், இறை வழிபாட்டு நம்பிக்கை, கொள்கை, மேன்மை, கலைபயில் தெளிவு, கட்டுரைவன்மை நிலம் போல் பொறுமை, மலை போல் பெருமிதம், மலர் நிகர் மாட்சி, உலகியல் அறிவு, உயர்குணம் அனைத்தும் உள்ளடக்கிய பண்பு நலன்கள் கொண்டவரே நல்லாசிரியர் எனச்சொல்லப் பட்டனர்.

மாணவர்கள் ஆசியரிடம் சென்று அவர்களை வழிபட்டுக் கற்றனர். இக்கற்றல் முறைகளும் மாணாக்கர் பண்பும் ஆசிரியர் மேம்பாடும் இயைந்து ஆசிரியர் – மாணவர் உறவினை வளர்த்தன.

ஆனால் இன்று அத்தகைய உறவு தளர்ந்து விட்டது. சமுதாயச் சீர்கேடுகள், ஒருவர் நலனுக்காக மற்றவர் நலனைப் பலியிடல், உயர்ந்த நிலையினின்றும் தாழ்தல், சீர் குலைந்து வரும் ஒழுக்க நிலைகள் ஆகியவை ஆசிரியர் மாணவர் உறவைப் பாதித்துள்ளன.

கல்வித் திட்டத்தின் குறிக்கோள்கள் மாணாக்கர்களை எங்குக் கொண்டு செல்கின்றன? அவை சமுதாயத் தேவைகளை நிறைவு செய்கின்றனவா? மாணாக்கர்களின் மனத்தில், நிறைவை ஏற்படுத்தி வருகின்றனவா? தொடர்ந்து அந்த வழியில் சென்று கொண்டிருப்பதால் என்ன பயன்? என்று இன்று பல ஆசிரியர்கள் எண்ணிப் பார்க்காததால் ஆசிரியர் மாணவர் உறவு சீர் குலைகிறது.

வேலை இல்லாத் திண்டாட்டம், சாதி சமயப் பூசல்கள், விலை ஏற்றம், போதிய வருவாய் இன்மை, கற்ற கல்விக்கும் பெற்ற வேலைக்கும் தொடர்பின்மை, நம்பிக்கைத்தன்மையற்ற தேர்வு முறை போன்றவையும் உறவுச் சீர்குலைவிற்குக் காரணமாகின்றன.

மாணாக்கரிடம் நல்லுறவு வளர்த்திட விழையும் ஆசிரியர் கீழ்க்காணும் வினாக்களைத், தாங்களே எழுப்பி விடை காண வேண்டும்.

1. அறிவுத் திறன் குறைந்த மாணாக்கர்கள் ஆர்வமுடன் கற்க முயலும்பொழுது அவர்களை உற்சாகப்படுத்துகிறோமா?
2. மாணாக்கர்கள்தோல்வியுறும் பொழுது அவர்களுடன் சேர்ந்து வருத்தமடைகிறோமா?
3. மாணாக்கர்கள் வெற்றி பெறும்பொழுது அவர்கள் வெற்றியில் பங்கு கொண்டு மகிழ்கிறோமா?
4. மாணாக்கர்களின் திறன்கள் வெளிப்படுமாறு அவர்களை ஊக்கப்படுத்துகிறோமா?
5. மாணாக்கர்கள் தவறுகள் புரியும்பொழுது அவர்களுடைய குற்றங்களைப் பெரிதுபடுத்திச் சுட்டுகிறோமா?
6. மாணாக்கரின் சிறிய தவறுகள் பெரிதுபடுத்தப் பட்டும் பெரிய தவறுகள் பொருட்படுத்தப் படாமலும் உள்ளனவா?
7. மாணாக்கர்களுக்குத் தங்களுடைய கல்வி மேம்பாட்டைத் தாங்களே தேர்வு செய்யக் கூடிய சூழ்நிலைகளை உருவாக்கித் தருகிறோமா?

மாணாக்கர்களின் தேர்ச்சியையும் தேர்ச்சி முறையையும் ஆண்டு இறுதியில் அளிப்பது என்ற நிலை மாறவேண்டும். தொடர்ந்த தேர்வு நிலையாக (Continuous Evaluation) இருக்கவேண்டும். அப்பொழுதுதான், தங்களது முன்னேற்றத்தில் ஆசிரியர்கள் இடைவிடாத, அயராத, ஊக்கம் கொண்டுள்ளார்கள் என்பதை மாணவர்கள் உணர ஏதுவாக இருக்கும்.

ஆசிரியருக்கும் மாணவருக்கும் உள்ள உறவை மேம்படுத்தும் காரணிகள் எவையென இந்தியாவில் செய்யப்பட்ட ஆய்வுகள் கண்டறிந்துள்ளன. அவற்றுள் சில:

1. ஆதாரக் கல்வி (Basic Education), மாணவருக்கும் ஆசிரியருக்கும் இடையே உறவை மேம்படுத்துகிறது.
2. மாணவர்கள் விடுதியில் தங்கிப் பயிலும் பள்ளிகளில் (Residential Schools) ஆசிரிய மாணவ உறவு மேலோங்கி உள்ளது.
3. எல்லோராலும் விரும்பப்படும் ஆசிரியர்களால் (Popular Teachers) மட்டுமே மாணவர்களிடம் நல்லுறவை ஏற்படுத்த முடிகிறது.
4. ஆசிரியர், மாணவர் விகிதம் குறைந்துள்ள பள்ளிகளில் ஆசிரியருக்கும் மாணவருக்கும் உறவு சிறந்து விளங்குகிறது.

5. ஆசிரியரின் மேம்பட்ட கற்பித்தல் திறம் (Effective Teaching) மாணவர் நல்லுறவுக்கு அடிப்படையாக அமைகிறது. எஸ்.மோ.

துணை நூல்கள்:


Amos R., Teacher's Attribution of Responsibility, Un published Doctoral Disertation, Indiana University, 1973.

Drophy J. E., and Thomas L. Good, Teacher - Students Relationships, Holt, Rinehart & Winston, New York, 1974.


***ஆசிரியர் மையங்கள்***: முதலில் ஆசிரியர் மையங்கள் இங்கிலாந்து நாட்டில் 1960-ஆம் ஆண்டிற்குப் பின்னர்த் தோன்றியது. அரசாங்கக் கையேடு 1976-ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட தொன்று இங்கிலாந்து நாட்டில் மட்டும் 560 ஆசிரியர் மையங்கள் உள்ளனவென்று கூறுகிறது. இதைத் தொடர்ந்து பல்வேறு நாடுகளில் இத்தகைய மையங்கள் தோன்றலாயின. தமிழ் நாட்டில் 1983-ஆம் ஆண்டிலிருந்து ஏழு ஆசிரியர் மையங்கள் செயற்படுகின்றன.

இவை ஆசிரியர்களுக்காக ஆசிரியர்களாலேயே நடத்தப்படும் அமைப்புகளாம். இவை ஒன்றுக்கொன்று வேறுபட்டிருந்தாலும் ஆசிரியர்கள் ஒருவருக்கொருவர் கருத்துப் பரிமாறிக் கொள்ளவும் தங்கள் தொழில் திறமைகளை வளர்த்துக் கொள்ளவும் தேவையான வாய்ப்புகளை வழங்குவதே இம்மையங்களின் இன்றியமையாத நோக்கம். கல்விக்குத் தேவையான கையேடுகள், துணைக்கருவிகள் போன்றவற்றை ஆசிரியர்கள் தங்கள் சொந்த முயற்சியால் உருவாக்கிக் கொள்ளத் தேவையான வசதிகள் இம்மையங்களில் உள்ளன. இதைத் தவிர ஆசிரியர்களது தொடர் கல்விக்குத் தேவையான நூல்கள், படங்கள் போன்றவை இங்கு இடம் பெறுகின்றன. அவர்களது தேவைக்கு ஏற்பப் பணியிடைப் பயிற்சிகளையும் இம்மையங்கள் வழங்குகின்றன. ஆசிரியர்கள் தங்கள் சொந்த முயற்சியாலேயே தங்கள் தொழில் தொடர்பான தேவைகளை நிறைவு செய்து கொள்ளக் கூடிய வாய்ப்புகள் இம்மையங்களில் உள்ளன. பிற இடங்களிலிருந்து வரும் ஆசிரியர்கள் சில நாட்கள் தங்குவதற்கும் இம்மையங்கள் இடமளிக்கின்றன. கல்வியின் தரத்தை உயர்த்தும் நோக்கத்தோடு அமைக்கப்படும் கண்காட்சிகளுக்கு இம்மையங்கள் ஊக்கமளிக்கின்றன.

குறிப்பிட்ட ஓர் இடத்திலுள்ள ஆசிரியர்கள் அதிக இடர்ப்பாடின்றி வந்து பயன்படுத்தக்கூடிய இடங்களில் இம்மையங்களை அமைத்திருக்கிறார்கள். இதன் வெவ்வேறு பணிகளைக் கவனிக்கப் பணியாளர்கள் இருந்தாலும் இதனை மேற்பார்வை இடும் பொறுப்பு ஆசிரியர் குழுக்களிடம் இருக்கிறது. இம்மையங்களை நடத்துவதற்குத் தேவையான பண உதவியைப் பெரும்பாலும் அரசாங்கமே தந்து உதவுகிறது. ஜி.எம்.ஜா.

***ஆசிரியரும் சமுதாயமும்***: ஒரு சமுதாயத்தின் வளர்ச்சி, முன்னேற்றம், அமைதி, ஆக்கப்பண்பு ஆகியன, அச்சமுதாயத்தில் பரவியுள்ள கல்வி முறையினைச் சார்ந்து அமைவனவாம். இவ்வுண்மையினைக், கோத்தாரி தலைமையில் 1964-ஆம் ஆண்டு அமைக்கப்பட்ட கல்வி ஆய்வுக் குழு தமது அறிக்கையில் சுட்டிக்காட்டியுள்ளது. மேலும், "இந்திய நாட்டின் எதிர்காலம் வகுப்பறைகளில் உறுதிப் படுத்தப்படுகிறது", என்றும் அது குறிப்பிட்டுள்ளது. சமுதாய முன்னேற்றத்திற்குத் தேவைப்படும் ஆற்றலையும் வேகத்தையும் வழிமுறையையும் தோற்றுவிப்பவர்கள் ஆசிரியராவார்கள். இவ்வாசிரியர்கள் குழந்தைகளின் வளர்ச்சியை நெறிப்படுத்தி, அவர்களின் உள்ளார்ந்த திறன்களை வெளிக் கொணர்ந்து முழுமையாக்கத் தக்கவர்கள்; மேலும், சமூகப் பண்புகள் சமுதாய மதிப்புகள் ஆகியன தோன்றி வளர வித்திட்டு, அவர்களின் நல்வாழ்வினையும் சமுதாயத்தின் நலத்தினையும் பேணுபவர்கள். ஆசிரியர்கள் சமுதாயச் சிற்பிகளாகச் செயலாற்றுகிறார்கள். சீராக இயங்கும் சமுதாயத்தில்தான் நல்லாசிரியர்கள் உருவாகிறார்கள். பள்ளிகள் சமுதாயத்திற்கப்பாற்பட்ட தனித்தியங்கும் நிலையங்கள் அல்ல; அவை தேவைகளை நிறைவு செய்வதற்கெனச் சமுதாயத்தினால் உருவாக்கப்பட்டு, அதன் தொடர்ந்த ஆதரவுடன் செயற்படும் சமூக நிலையங்கள் (Social Institution) ஆகும். ஆசிரியர்கள் சமுதாயத்தின் மதிப்பு மிக்க பணிப்பிரிவினருள் ஒரு வகையினர். எனவே, ஆசிரியர்களுக்கும் சமுதாயத்திற்குமிடையே காணப்படும் தொடர்பு நெருக்கமானதாகவும் இருபுறச் சார்புடையதாகவும் அமைகிறது.

ஆசிரியர்கள் தங்கள் பணியினை நேரிய மனப்பான்மையுடன் அணுகினால், அவர்களால் தம் மாணாக்கர்களின் உள்ளத்தில் ஒரு புத்துணர்ச்சியினையும் புரட்சியினையும் தோற்றுவிக்க முடியும். இம்மனப் புரட்சி சமுதாய முன்னேற்றத்திற்கும் நாட்டு வளர்ச்சிக்கும் இன்றியமையாததாகும். தங்களது செல்வாக்கினைப் பயன்படுத்திச், சுதந்திரப் பண்பும் சமூக நுண்ணுணர்ச்சியும் உடைய ஆளுமையினை (Personality) ஒவ்வொரு மாணாக்கனும் பெற ஆசிரியர்கள் பாடுபடுவார்களாயின், தம்

மாணாக்கர்களின் தனி வாழ்க்கையைப் பயன்படுத்த உதவுவதுடன், நாட்டு வளர்ச்சிக்கேற்ற தலைவர்களையும், கட்டுப்பாட்டுடன் செயலாற்றத்தக்க உழைப்பாளிகளையும் உருவாக்கவும் அவர்கள் உதவுவார்கள்.

பள்ளிகள் சமூக நிலையங்களாகும். இவை, சமுதாயத்தின் இளம் தலைமுறையினரான சிறுவர் சிறுமியருக்கு முறையான கல்வியை அளிப்பதற்காக நிறுவப்பெற்று, அச்சமுதாயத்தின் தொடர்ந்த ஆதரவினைப் பெற்று இயங்குகின்றன. குழந்தை வளர்ப்புப் பள்ளி முதல், பல்கலைக் கழகங்கள், உயர் ஆராய்ச்சி நிலையங்கள் வரை எல்லாக் கல்வி அமைப்புகளும் சமூக நிலையங்களேயாகும். கட்டாயக் கல்வி முறையின் விளைவாகக் கற்போர் எண்ணிக்கை தொடர்ந்து அதிகரித்து வருகிறது. நாட்டின் எல்லாப் பிரிவினரும், குறிப்பாக, நலிவுற்ற மக்கள், கல்வி வசதிகளைப் பயன்படுத்திக்கொள்ள ஊக்குவிக்கப்படுகின்றனர். சமுதாய ஏற்றத் தாழ்வுகளை அகற்றி, நலிவுற்றோர் மேம்பாடடையக் கல்வி ஒரு வன்மைமிக்க கருவியாகும். சமுதாயத்தில், முன்பு கீழ்நிலைப்பட்டிருந்தோர் உயர்நிலை எய்தவும், அவர்களின் சமூக-பொருளியல் நிலை மேம்படவும் கல்வி துணை செய்ய வேண்டும் என்பது இன்று வலியுறுத்தப்படுகிறது. எல்லோர்க்கும் தரமான கல்வி, தொழில் நுட்பச் சமுதாயப் பொருத்தப்பாடுடைய கல்வி, மக்களாட்சிப் பண்புகளை யாவரிடத்திலும் வளர்க்கத் தக்க கல்வி, பல்லாண்டு காலமாக வசதிகள் குன்றிய வாழ்க்கை நிலையிலிருந்து வந்துள்ள குடும்பங்களிலுள்ள குழந்தைகளது நிலையினை உயர்த்த உதவும் கல்வி, பெண்களது சமுதாய நிலையினை உயர்த்தத் துணை செய்யும் கல்வி ஆகிய கொள்கைகள் இன்று ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ளன. இவற்றுக்கு ஏற்ற செயல் திட்டங்கள் தீட்டப்படுகின்றன. இத்திட்டங்களை உருவாக்குதலிலும், இவற்றைப் பயன்மிகு முறையில் பள்ளிகளில் செயற்படுத்துதலிலும் ஆசிரியர்களுக்கு இன்று சிறப்பான பங்கு உள்ளது. இதன் விளைவாக, அவர்களின் பொறுப்புகள், குறிப்பாகச் சமுதாயப் பொறுப்புகள் பெருகியுள்ளன.

மாணாக்கரின் சமுதாயப் பின்னணி, குடும்பச் சூழ்நிலை போன்ற சமுதாயத் தொடர்புடைய கூறுகள், அவர்களது கல்வி வளர்ச்சியினைப் பாதிக்கின்றன என்னும் உண்மையினை ஒவ்வோர் ஆசிரியரும் உணரவேண்டும். கல்விக்கான வாய்ப்புகள், சமுதாயத்தின் பல்வேறு நிலைப்பட்ட குழந்தைகள் எல்லோர்க்கும் ஒரே சீராக அளிக்கப்பட்டாலும், அவ்வாய்ப்புகளை எந்த அளவுக்குப் பயன்படுத்திக் கொண்டு கல்வியில் முன்னேறுகிறார்கள் என்பது, குழந்தைகளின் குடும்ப-சமுதாய நிலை, அதன் விளைவாக எழுகின்ற, ஊக்குவிக்கும் அல்லது தடை செய்யும் அனுபவங்கள் ஆகியவற்றைப் பொறுத்தது என்பதனை அமெரிக்க நாட்டு அறிஞர் கோல்மென் (Coleman) என்பாரது ஆராய்ச்சி அறிக்கை தெளிவுபடுத்தியுள்ளது. இது, நம் நாட்டிற்கும் பொருந்துவதாகும். சமுதாயத்தில் பிற்பட்ட குழந்தைகளது நிலை உயர்த்தப்படுதல், அவர்களது கல்வி வளர்ச்சியின் முதற்படியாகும் என்பதன் அடிப்படையில் இன்று நம் நாட்டில் பல சமுதாய நலத் திட்டங்கள் செயற்படுத்தப்படுகின்றன. இவ்வகைக் குழந்தைகளுக்கான குடும்பப் பொறுப்புகளை நன்கு நிறைவேற்றுதற்கான வசதிகளை அவர்கள் பெற்றோர்கள் பெற்றிருக்க மாட்டார்கள். ஆதலின், இப் பொறுப்புகள் பலவற்றை இன்று பள்ளிகளும் ஆசிரியர்களும் மேற்கொள்வது இன்றியமையாததாகிறது. பள்ளிச் சத்துணவு, இலவசச் சீருடை, பாடநூல்கள் போன்ற இலவசக் கல்விச் சாதனங்கள், உதவித் தொகை, கல்வி நிலையங்களில் நலிவுற்ற சமுதாயப் பகுதியினர்க்கான இட ஒதுக்கீடு, இத்தகைய குழந்தைகளுக்கென சிறப்புத்தனிப் பயிற்சி போன்றன யாவும் இதில் அடங்கும். இச் செயல் திட்டங்களைப்பயனுள்ள வகையில் நிறைவேற்றுதல் ஆசிரியர்களின் முதன்மையான சமுதாயப் பொறுப்பாகும் என்பதனை ஆசிரியர்கள் யாவரும் உணர்தல் வேண்டும். இந்திய நாட்டின் சீரிய கொள்கைகளாக ஏற்கப்பட்டுள்ளவை, மதச்சார்பின்மை, ஏற்றத்தாழ்வின்மை, மக்களாட்சியில் பற்றுறுதி ஆகியனவும், பல்லாண்டுகளாக வலியுறுத்தப் பெறும் நேர்மை, வாய்மை, சகிப்புத் தன்மை, அகிம்சை போன்றனவும் ஆகும். இவற்றின் அடிப்படையில் மக்களின் நடத்தை முறையும் அரசியல்-பொருளியல் அமைப்பும் எழுந்து, கல்வித் திட்டங்கள் உருவாதலில் செல்வாக்குப் பெறுகின்றன. கல்வியின் நோக்கங்களைத் தம் பள்ளிப் பணிகளின் வழியே அடைய முற்படும் ஆசிரியர், இவற்றின் சமுதாயப் பின்னணியினை அறிவதுடன் சமுதாய மதிப்புகளில் முழுநம்பிக்கையுடன் செயற்படவும் வேண்டும். சமுதாய அமைப்பில் பல்வேறு காரணிகளால் எழும் மாற்றங்களும் புதிய தேவைகளும் கல்வி அமைப்பிலும் எதிரொலிக்கும். இந்திய நாட்டில் ஆங்கில ஆட்சிக் காலத்தில் இருந்த கல்வி முறையினை இப்போதுள்ள சுதந்திர இந்தியக் கல்வி முறையுடன் ஒப்புநோக்கினால் இக்கருத்துத் தெளிவுறும். கல்வியில் +2 எனப்படும் மேல்நிலைப்பள்ளி நிலை, உயர்பட்டப் படிப்பு வரை தாய்மொழி வழியே கல்வி, கல்வியினைத் தொடக்கப் பள்ளி நிலையிலிருந்தே தொழில் சார்புடையதாக மாற்றியமைத்தல் (Vocationalisation), சமுதாய வளர்ச்சிக்கு அடிப்படையான அறிவியல், தொழில் நுட்பக் கல்விக்கு ஆக்கமளித்தல், நாட்டின்

எதிர்கால வளர்ச்சித் தேவைகள், மனித சக்தித் தேவைகள் ஆகியவற்றிற்கேற்பக் கல்வித் திட்டங்களை உருவாக்கல் போன்ற பல கருத்துகள் சமுதாய மாற்றத்தின் கல்வி விளைவுகளாகும். சமுதாய உணர்வு மிக்க ஆசிரியர்களால்தாம் இக்கல்விக் கருத்துகளுக்குச் செயல் வடிவம் தரவியலும்.

கல்வியின்பால் சமுதாயம் பெற்றுள்ள பெருஞ் செல்வாக்கின் விளைவாக, ஆசிரியர்களுக்குச் சில தலையாய பொறுப்புகள் வந்தடைந்துள்ளன. இன்றைய கல்வியின் நோக்கம் மாணாக்கர்களைச் சமூகவியல்பு (Socialization) பெறச் செய்தலாகும் என்றும், பள்ளி நிருவாகம், கல்வி அமைப்பு, பாடத் திட்டங்கள், பாடச் செயல்கள், பிற இணைச் செயல்கள் ஆசிரியர்களது நடத்தை போன்ற கல்விக் கூறுகள் ஆகியன யாவும் இதற்குதவுவனவாக அமைதல்வேண்டும் என்றும் சான் டூயி(John Dewey) போன்ற கல்வி அறிஞர்கள் வலியுறுத்தியுள்ள சமூக நோக்கம் (Social aim) குறிப்பிடுகிறது. காந்தியடிகளின் ஆதாரக் கல்வியிலும் சமுதாய நலன் அடிப்படையாகவுள்ளது. பல்வேறு சிக்கல்களுக்குத் தீர்வு காண முற்படும் கல்வி அமைப்பின் முதற்படியாகக் காணப்படுவது, மாணாக்கர் சமூகவியல்பு பெற ஆசிரியர்கள் பயிற்றுவிப்பதாகும். சமூகவியல்பு பெறும் செயல் முறையில் மூன்று நிலைகள் காணப்படுகின்றன. அவை, சமுதாயத்தில் தான் ஓர் உறுப்பினன் என்பதனை உணர்தலும், சமுதாயத்தில் பிறருடன் இணைந்து செயற்படும்போது மகிழ்ச்சியும் மன நிறைவும் அடைதலும், அதன் விளைவாக மாணாக்கர்கள் தம் சமூகப் பொறுப்புகளை அறிந்து சமூக முதிர்ச்சியினை (Social maturity) அடைதலுமாம். மக்களைப் பிரித்து அவர்களிடையே பூசல்களையும் போராட்டங்களையும் (Social Conflicts) தோற்றுவித்தலில், தவறான விவரங்களின் அடிப்படையில் எழுந்துள்ள வலுவான மனவெழுச்சிகளைக் (Emotions) கொண்டுள்ள எண்ணங்கள் அடிப்படைகளாகும். இத்தகைய சார்பெண்ணங்கள் (Prejudices) எழாமல் கற்பித்தல் ஆசிரியர்களது கடமையாகும். இதற்கு, ஆசிரியர்கள் தாமே சமூக முதிர்ச்சி சார்ந்த நடத்தைக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாக விளங்குதல் வேண்டும். எந்த நகரம் அல்லது சிற்றூரில் பணியாற்றப் போகின்றனரோ அதில் ஓர் ஆண்டு முன்னதாகத் தங்கி, மக்களுடன் பழகி அவர்களின் தேவைகளை அறிந்து, அவர்களிடையே காணப்படும் பழக்க வழக்கங்களைப் புரிந்து கொள்வது சோவியத்து ஒன்றியத்தில் இளம் ஆசிரியர்களுக்குக் கட்டாயப் பயிற்சியாக்கப்பட்டுள்ளது கவனத்திற்குரியது.

சமுதாயம், கல்வி ஆகியஇரண்டும் நெருக்கமான தொடர்பு கொண்டவை. அதன் விளைவால் ஆசிரியர்களுக்கும் புதிய பொறுப்புகள் பல வந்துள்ளன. பள்ளி அமைந்துள்ள சமுதாயம், அச்சமுதாயத்தினை உள்ளடக்கிய சமூகம் ஆகியவற்றில் வழிவழியாக வந்துள்ள பண்பாடு, மரபு ஆகியவற்றைச் சிதையாமற் பாதுகாத்து அவற்றின் சிறப்புக் கூறுகளை இன்றைய தலைமுறைச்சிறுவர் சிறுமியருக்கு அறிமுகப்படுத்துதல் ஆசிரியர்களது பொறுப்பாகிறது. பண்பாடு எனப்படுவது முன்னோர்களின் உயர்சிந்தனைகள், சீரிய மனவெழுச்சிகள், பயன்மிக்க செயல்கள் ஆகியவற்றின் நிலைத்த விளைவுகளான இலக்கியம், கலைகள், கண்டுபிடிப்புகள், அறநெறிகள், செய்திறன்கள், மதிப்புகள், நடத்தை முறைகள் ஆகிய யாவற்றையும் குறிக்கும். கல்வி ஏற்பாடும் பாடத் திட்டங்களும் இவற்றை உள்ளடக்கிக் காணப்படும். சமூக மரபினை மாணாக்கர்க்கு அறிமுகப்படுத்த முற்படும் ஆசிரியர்கள் தாமே அப்பண்பாட்டினை நன்கு உணர்ந்திருத்தல் வேண்டும். சமூக மாற்றம் பயனுள்ள வகையில் எழவும், புதிய நிலைமைகள், தேவைகள் ஆகியவற்றிற்கேற்பவும் இளம் தலைமுறையினரிடம் புதிய கருத்துகள், மனப்பான்மைகள், செயல் திறன்கள், நடத்தை முறைகள் போன்றவற்றைத் தோற்றுவித்தல் ஆசிரியர்களது பொறுப்பாகிறது. வளர்ச்சிக்குதவும் சமுதாய மாற்றங்களை எதிர்க்கும் பழமைப்பற்று, குறுகிய தன்னலம், சாதிப்பற்று, மொழி இனவெறி, புதியன பற்றி எழும் அச்சம் போன்றனவற்றை நீக்கி, சமுதாயச் சிக்கல்களை அறிவியல் கண்கொண்டு ஆராய்ந்து தெளியும் மனப்போக்கினை (Scientific outlook) மாணாக்கர்களிடம் ஆசிரியர் தோற்றுவித்தல் வேண்டும். இன்றைய தொழில்நுட்பச் சமுதாயத்தில் மகிழ்ச்சியுடன் வாழ்க்கை நடத்த, நவீனப்படுத்த (Modernization) உதவும் கூறுகளை ஆசிரியர்கள் கல்வி முறையில் வலியுறுத்த வேண்டும். சமுதாய நோக்குடைய ஆக்கத்திறன் மிக்க மக்களாட்சிப் பண்பு பெற்ற எதிர்காலத் தலைவர்களைப் பள்ளிக் கல்வி வழியே உருவாக்குதலும் ஆசிரியர்களது பொறுப்பாகிறது. சமுதாய நெறிகளுக்குட்பட்டுச் செயலாற்றுதலின் சிறப்பினை ஆசிரியர்கள் தங்கள் கற்பித்தல் மூலமும் நடத்தை வழியேயும் மாணாக்கர்களது உள்ளத்தில் இளம்பருவத்திலே பதிய வைத்தல் வேண்டும். இவ்வாறு செய்ப்படும் போது, இச்சட்டங்களின் தேவையினை அறிவால் மாணாக்கர் உணர்ந்து இவற்றுக்கு விரும்பிக் கட்டுப்பட வேண்டிய வகையில் ஆசிரியர் அவர்களை ஊக்குவிக்க வேண்டும். ஆசிரியர்களது எடுத்துக்காட்டு நடத்தையினின்றும் மாணாக்கர் பலவற்றைக் கற்பதனால், ஆசிரியர்கள் தாமே ஒழுங்கினையும் கட்டுப்பாட்டினையும் கடைப்பிடித்தல் இன்றியமையாதது. இதனால்தான், பிறரிடம் காணப்படும் வேலை நிறுத்தம் போன்ற செயல்களைச் சிறிதும் பொருட்

படுத்தாத சமுதாயம்; இவை ஆசிரியர்களால் மேற் கொள்ளப்படும் போது வன்மையாகக் கண்டிக்கிறது.

இறுதியாக, ஆசிரியர்கள் தாமே சமுதாயத்தின் உறுப்பினர்கள் என்பதனை மறக்கக்கூடாது. இவர்களுக்குத் தம் பணிசார்ந்த சமுதாயக்கடமைகளுடன், நேரடியாகவும் பல சமுதாயப் பொறுப்புகள் உள்ளன. இப்பொறுப்புகளைச் சிறப்பாக நிறைவேற்றுவதன் மூலம் ஆசிரியர்களது சமுதாய மதிப்பு உயர்வது உறுதி. சமூக-முதியோர் கல்வித் திட்டங்கள், குடும்ப நல்வாழ்வுத் திட்டங்கள், சுற்றுப்புறத் தூய்மைப் பாதுகாப்புச் செயல் திட்டங்கள், பல்வேறு முறைசாராக் கல்வித் திட்டங்கள் போன்ற எல்லாவற்றிலும் ஆசிரியர்கள் ஆர்வத்துடன் நேரடிப்பங்கு பெறவேண்டும். இது சமுதாய-பள்ளிப் பிணைப்பினையும், ஆசிரியர் – பெற்றோர் தொடர்பினையும் வலுப்படுத்தும். கல்வி ஏதோ ஒரு குறிப்பிட்ட காலக்கட்டத்துள் முடிவடையும் ஒன்றன்று; அதன் தேவை இன்றைய சமுதாயத்தில் வாழ்நாள் முழுதும் எழுகிறது. அதற்கான வாய்ப்புகள் தொடர்ந்து மக்களுக்கு அளிக்கப்படவேண்டும். இவற்றை "வாழ்க் கற்றல்" (Learning to be) என்று 'யுனெசுகோ' கல்வி அறிக்கை குறிப்பிடுகிறது. இக் கருத்தின்படி, ஆசிரியர்கள் தம் சமுதாயப் பொறுப்புகளை நிறைவேற்றுதல் வேண்டும். அதுபோலவே, வாழ்க்கை வசதிகளையும், பணிச்சூழ்நிலையினையும் எல்லா ஆசிரியர்களுக்கும் ஏற்படுத்தித் தருவது சமுதாயத்தின் மிக இன்றியமையாக் கடைமையாகும்.

எஸ்.ச.

**ஆசிரிய விருத்தம்** என்பது ஆசிரியப்பாவின் மூவகை இனங்களில் ஒன்றாகும். இது அகவல் விருத்தம் என்றும் வழங்கப்பெறும். தம்மில் அளவொத்து அமையும் கழிநெடிலடி நான்கு கொண்டு பாடப்பெறும் செய்யுள் ஆசிரிய விருத்தம் எனப்படும். கழிநெடிலடி என்பது ஆறுசீரும் அதற்கு மேற்பட்ட சீர்களும் கொண்ட அடியினைக் குறிக்கும். ஆசிரிய விருத்தச் செய்யுளின் ஒவ்வோரடியிலும் இடம்பெறும் சீர்களைக் கொண்டு அவை அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம், எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் என்பனவாகப் பெயர் பெறும். 6 முதல் 8 சீர்கள் வரை கொண்ட அடிகளால் அமையும் ஆசிரிய விருத்தங்களே சிறப்புடையனவாகக் கருதப்படும். 9,10 முதலான சீர்களால் ஆகிய அடிகளைக் கொண்டு அமையும் விருத்தங்கள் சிறப்பிலவாகக் கருதப்படும். எனினும் 64 சீர்கள் கொண்ட அடிகளால் ஆகிய ஆசிரிய விருத்தங்களும் பாடப்பட்டுள்ளன. நால்வகைப் பாக்களுக்கும் இனம் வகுத்து இலக்கணங் கூறும் மரபு தொல்காப்பியத்திற்குப் பின்னர்த் தோன்றியதாகும். யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை போன்ற பிற்கால யாப்பிலக்கண நூல்கள் ஆசிரிய விருத்தம் போன்ற பாவினங்களுக்கும் இலக்கணம் வகுத்துள்ளன. "குறைவில் தொல்சீர் அகவல், விருத்தம், கழிநெடில் நான்கு ஒத்து இறுவது" என்பது யாப்பருங்கலக் காரிகை கூறும் ஆசிரியவிருத்த இலக்கணமாகும். பிற்காலத்தில் பாவினங்கள் பலவற்றுள்ளும் ஆசிரிய விருத்தம் முதன்மை பெற்றது. பெருங்காப்பியங்கள் பல விருத்தப்பாக்களினால் உருவாகும் நிலைதோன்றியது. சீவகசிந்தாமணி, விருத்தப்பாவினத்தால் தோன்றிய முதற் காப்பியமாகும்.

**ஆசிரியன் பெருங்கண்ணன்** சங்ககாலப் புலவர். இவரது ஒரு பாடல் குறுந்தொகை 239-ஆம் பாடலாகத் தொகுக்கப்பட்டுள்ளது. இது குறிஞ்சித் திணையில், தலைவிகூற்றாக அமைந்துள்ளது. இவர் ஓர் ஆசிரியராக விளங்கினார் என்பது பெயரடையிலிருந்து புலனாகிறது. இவர், காந்தள் மலரை ஊதும் தும்பி, பாம்பு உமிழும் மணிபோலத் தோன்று மென்று உவமை காட்டியுள்ளார். த.கோ.

**ஆசீவகர்** மாக்கலி கோசலரின் சீடர்கள். ஆசீவகர்களுக்குத் துணை நின்ற அரசாங்க அலுவலர்கள் ஒரு காலத்தில் போற்றப்பெற்றார்கள்; பொது வாழ்வில் பெரும் பதவி வகித்தார்கள். ஆசீவகர் பல்வகையான நோன்புகளை நோற்றனர். இவர்கள் குதிகாலில் குந்தியிருக்கும் பழக்கத்தையும் வானில் வௌவால்களைப் போல் பறக்கும் திறமையையும் பெற்றிருந்தார்கள். சோதிடத்தில் திறமை பெற்றிருந்த இவர்கள் மக்களுக்குச் சகுனம், நல்ல நாள் ஆகியவற்றைப் பார்த்துக் கருத்துரைகள் வழங்கினார்கள். இவர்கள் இல்லறத்திலுள்ள சமணர்கள். கோசலர் என்பவர் கௌதம புத்தருக்கும் மகாவீரருக்கும் பின் வந்தவர். ஆசீவகர்களைப் பற்றிய விவரங்கள், அசோகரின் கல்வெட்டுகளிலும் பௌத்த சமய சாதகக் கதைகளிலும் குறிப்பிடப்பட்டுள்ளன.

**ஆசீவக வாதம்:** புத்தர், மகாவீரர் வாழ்ந்த அதே காலத்தில் மகசுரின்புத்த கோசாலா என்ற ஒரு சமயத்தலைவர் வாழ்ந்தார். அவரைத் தமிழ் நூல்கள் மற்கலி என்னும் பெயரால் குறிப்பிடுகின்றன. மற்கலியினால் தோற்றுவிக்கப்பட்ட சமய வாதம் ஆசீவக வாதம் எனப்படுகிறது. ஆசீவக வாதக் கருத்துகள் மற்கலிக்கு இரண்டு தலைமுறைக்கு முன்பே தோன்றிவிட்ட போதிலும், அவை உருப் பெற்றது மற்கலியின் முயற்சியினால்தான் எனச் சொல்வது சாலப் பொருத்தமானது.

இவ்வாதத்தின் அடிப்படைக் கருத்தோட்டத்தைத் தெளிவாக அறிவிக்கும் நூல்கள் வட

மொழியிலோ பாலி அல்லது பிராகிருத மொழியிலோ இன்று இல்லை. தமிழ்க் காப்பியங்களான மணிமேகலையிலும் நீலகேசியிலும் பிற்காலத்தே தோன்றிய சமய உரை நூல்களிலுந்தான் இதைப் பற்றிய விவரங்கள் கிடைக்கின்றன.

ஆசீவக வாதிகள், நில அணு, நீர் அணு, வளி அணு, தீ அணு, உயிர் அணு ஆகிய ஐம்பொறிகளைப் படைப்பின் மூலப் பொருள்களாக எண்ணுகின்றனர். இவ்வணுக்களின் சேர்க்கை ஒரு குறிப்பிட்ட அளவிலேயே ஏற்படும். அச்சேர்க்கையின் விளைவாக பிறப்பு இறப்பு, இன்ப துன்பம் ஆகியவை உண்டாகின்றன. பிறப்பு ஆறு வகையானது என்பது ஆசீவக வாதிகளின் துணிபு. அவை கருமை, நீலம், செம்மை, பொன்மை, வெண்மை, தூய வெண்மை எனப்படுவன. அவற்றில் தூய வெண்மைப் பிறப்புத்தான் உயர்நிலைப் பிறப்பு. அதை அடைந்தவர்தாம் விட்டுலகம் எய்துவர்.

உயிர்கள், எண்பத்துநான்கு லட்சம் மகா கல்ப காலம் வரையில் மீண்டும் மீண்டும் பிறப்பு இறப்பில் பட்டு உழலும். அதன் பின்னரே அவை வீட்டுலகை அடையும். இந்த நியதி எக்காலத்தும் மாறாது. இந்த உலக வாழ்வில் நல்லறிவு பெற்று, கூடவே நற்செயல்களை ஒருவன் செய்வானேயானால் படிப் படியாக உயர்ந்து, பின் தனக்குரிய காலம் வந்ததும் வீடு பேறு அடைவான்.

உயிர்கள் நியதியினால் கட்டுப்படுத்தப் படுகின்றன. அவை எக்காலத்தும் தம் விருப்பப்படி செயற்பட முடியாது. எனவே, அவை தாம் செய்யும் நன்மை தீமைகளுக்குப் பொறுப்பல்ல. ஆசீவக வாதம், ஆன்மா உண்டென்றும் அது உணர்வுள்ள தென்றும் உருப்பெற்றதென்றும் கருதுகிறது.

ஜி.வி.ச.

**ஆசுக்வித்து** (கி.பி. 1852-1928) ஆங்கில அரசியல் வல்லுநர்; மார்லி என்னும் ஊரில் கி.பி. 1852 ஆம் ஆண்டில் பிறந்தவர். இங்கிலாந்தின் தலைமை அமைச்சராக 1908 முதல் 1916 வரை இருந்தவர். ஆசுக்வித்து (Asquith) 1908 ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பெற்ற முதியோர் ஓய்வூதியச் சட்டத்தைக் கொணர்ந்தமையால், இவருடைய அமைச்சரவை சீரிய இடத்தைப் பெற்றது. தேசிய ஆயுட் காப்பீட்டுச் சட்டம் (1911), பாராளுமன்றச் சட்டம் (911) ஆகியவை பிற சிறப்பான சட்டங்களாம். பிரபுக்கள் சபையின் அதிகாரத்தைக் கி.பி. 1911 ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பெற்ற பாராளுமன்றச் சட்டம் கட்டுப்படுத்தியது. ஆசுக்வித்து 1914 ஆம் ஆண்டில் ஐரிசுத் தன்னாட்சி முன்வரைவைக் கொணர்ந்த போதிலும், அவ்வாண்டில் மூண்ட முதல் உலகப் போரின் விளைவாக, அந்த முன்வரைவு ஒத்தி வைக்கப் பெற்றது. ஆசுக்வித்துக்குப் பின்னர் தேவிடு இலாயிடு சார்சு (David Lloyd George) என்பார் 1916-ஆம் ஆண்டில் தலைமை அமைச்சரானார். ஆசுக்வித்துக்கும் இலாயிடு சார்சுக்கும் இடையே எழுந்த கருத்து வேறுபாடுகளினால், முதல் உலகப் போருக்குப் பின்னர் இலிபரல் கட்சி (Liberal Party) நலியத் தொடங்கிற்று. இவர் 1925-ஆம் ஆண்டில் ஆக்சுபோர்டு பிரபுவாக்கப்பட்டார்.

**ஆசுகவிராச சிங்கம்** கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். இயற்பெயர் கவிராச பிள்ளை என்பது. இவரைச் சேறைக் கவிராச பிள்ளை என்றும் கூறுவர். சேறை என்பது இவர் பிறந்தவூராகலாம். கருணீகர் மரபில் வந்த இவர் வண்ணக் கவி வல்லவராதலின் "வண்ணக் களஞ்சியம்" என்றும் சிறப்பிக்கப்பட்டார். "திருக்காளத்தி நாதர் உலா", "திருவண்ணாமலையார் வண்ணம்", "திருவாட்போக்கி நாதர் உலா" என்னும் நூல்களும் இவரால் இயற்றப்பட்டுள்ளன என்பதை, அந்தகக் கவி வீரராகவ முதலியார் தாம் இயற்றிய சேயூர் முருகன் பிள்ளைத் தமிழில் குறிப்பிட்டுள்ளார். இவர் திருக்காளத்தி வேங்கடாசல முதலியாரால் ஆதரிக்கப்பெற்றார்.

வி.பா.

**ஆசுகார் ஒயில்டு** (கி.பி. 1856-1900) ஆங்கில இலக்கியத்தில் சிறப்பிடம் பெற்றவர். ஐரிசுக்காரராகிய இவர் கவிஞரும், நாடகாசிரியரும், நாவலாசிரியரும், சிறுகதையாளரும், கட்டுரையாளரும், ஆராய்ச்சியாளரும், அழகியல் வழிபாட்டினருமாவர்.

தப்ளின் நகரத்துத் திரினிட்டி கல்லூரியிலும், ஆக்சுபோர்டு மாக்டலின் கல்லூரியிலும் கல்வி பயின்றவர். மும்மொழிப்புலவர்; ஆங்கிலம், பிரெஞ்சு, இலத்தீன் ஆகிய மொழிகளில் தம் இலக்கியப் படைப்புகளைத் தந்தவர்.

திசுரேலியைப் போல் மிக ஆடம்பரமான ஆடைகளை உடுத்துபவர். செரிடனைப் போல் அறிவுக் குறும்பாகவும் வேடிக்கையாகவும் பேசுவதில் வல்லுநர். "வாழ்க்கை எனக்கு ஒரு புதிர், ஆனால் நானும் வாழ்க்கைக்கு ஒரு புதிர்தான்" என்பது போன்ற அறிவார்ந்த முரண் சிந்தனை கொண்டவர்.

இவருடைய முதல் கவிதைத் தொகுதி கி.பி. 1881 இல் வெளிவந்தது. 'தோரியன் கிரேயைப் பற்றிய சித்திரம்' என்ற இவர் புதினம் சிறந்தது. இவர் தம் புகழ் பெற்ற நாடகங்கள்: 'சீமாட்டி விண்டர்மியரின் விசிறி', 'முதன்மையில்லாத பெண்', 'உண்மையாயிருப்பதன் இன்றியமையாமை' என்பவை இன்பியல் சார்ந்தவை. இவரது 'சலோம்' என்பது புகழ்பெற்ற துன்பியல் நாடகம் ஆகும். இவருடைய

சிறையனுபவம் (De Profundis) உலகக் கடித இலக்கியத்தில் தனிச்சிறப்புடையது. த.கோ.

**ஆசுட்டிரோ கார்சுகி, மோயிசியக்கோவ் லெவிக்கு** (கி.பி. 1854-1919) உருசிய அரசியல் வல்லுநர். பீட்டர்சுபர்கில் (Petersburgh) கல்வி கற்ற இவர் சிறிது காலம் உருசிய அரசின் நீதித்துறையின் வெளியீட்டுப் பகுதிப் பணியில் அமர்ந்திருந்தார். பின்னர்ப் பிரான்சு நாடு சென்று அங்கு அரசியல் கலையைக் கற்றுத் தேர்ச்சி பெற்றார். அங்கு ஆசிரியராகவும் எழுத்தாளராகவும் விளங்கினார். ''மக்கள் ஆட்சியும் அரசியல் கட்சிகளின் அமைப்பும்'' என்னும் இவரது நூல் ஐரோப்பிய மொழியான பிரெஞ்சிலும் மொழியாக்கம் செய்யப்பட்டது. சிறிது காலம் இவர் இங்கிலாந்திலும் வாழ்ந்தார். இவர் 1906-ஆம் ஆண்டு தாயகம் திரும்பினார். அங்கு உருசியச் சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றார். இவர் 1919-இல் காலமானார்.

**ஆசுட்டின் ஏரி** மேற்கு ஆசுத்திரேலியாவில் மாக்னெட் குன்றுகளுக்கு அண்மையிலுள்ளது. ஆசுட்டின் ஏரியின் (Austin Lake) அருகில் மிக்கா தாராத் தங்கச் சுரங்கம் உள்ளது. இதன் பரப்பு 829 ச.கி.மீ. இவ்வேரி அடிக்கடி வறண்டு விடும் தன்மையுடையது. இந்த ஏரி பெர்த்து (Perth) நகருக்கு வடக்கு வடகிழக்கில் அமைந்துள்ளது.

**ஆசுட்டின், சேன்** (கி.பி.1775-1817) ஆங்கிலப் புதின எழுத்தாளருள் ஒருவர். இவர், ஆரவாரம், பரபரப்பு நிகழ்ச்சிகள், விந்தையான சூழல், குண பாத்திரங்கள், புரட்சிச் சாயல், கலையாரவாரம், புத்தார்வக் (Romance) கதைப் பாங்கு, உணர்ச்சிப் பகட்டு, வெற்றுப் பகட்டுரை ஆகியவற்றோடு கொச்சை மரபும் பெருகி மலிந்துள்ள நெடும்புனைகதைத் (Novel) துறையில், அவற்றினின்றும் அறவே நீங்கி, மெல்லடைவான நடையில், அன்றாடப் பொது நிகழ்ச்சிச் சூழலில் நம் கவனத்துக்கு அப்பால் ஆங்காங்கே மலிந்து கிடக்கும் நகுதிறல் இயலை (Comedy) நுட்பமாகத் தமக்கே உரிய நயமிகு உரையாடல் பாணியில் ஆறு புதினங்களை இயற்றினார். அவை அங்கதச் சாயலும் (Satire), நகை ஏளனச் சுவையும், உள்ளுறை முரண் நயமும் (Irony) விரவி அமைந்தன. அவற்றால், ஆசுட்டின் சேன் (Austin Jane) செம்பாங்கு இலக்கியத் தரத்தில் (Status of a Classic) சேர்க்கப்பட்டு, ஆழ்புலமையாளர் மதிப்பீட்டில் உயர்ந்து விளங்குகிறார்.

அடக்கமாக ஒதுங்கி வாழும் இயல்புடைய இவர் செல்வாக்கு நாட்டத்தையோ செல்வம் ஈட்டலையோ குறியாது, எந்தத் தனி முறை மரபுக் குழுவிலும் சாராது, இலக்கியச் சீர்மையையே முதன்மை இலக்காகக் கருதி எழுதினார்.

இவரது கலையின் வள நேர்த்திப் பட்டியலில் இடங்கொள்ளும் மேம்பாடுகள் - நடுநேர்மை நோக்குடன் இன்ப துன்ப நிகழ்ச்சிகளைக் கையாளுதல், கூர் நோக்கும் (Observation) நுண்காட்சித் திறனும் (Insight) கொண்டு மெய்ம்மை மாறுபடாமல் சித்திரிக்கும் பாங்கு, நுண்ணிய ஒப்பீடு - மாறுபாட்டுத் திறன் (Discrimination), நல்லறிவு நலம் (Sanity) போற்றல், (Precision), எளிமை, உயர்வு நேர்த்தி ( Good taste), குறுகிய எல்லையுள் மிக நுட்பமாக விரித்துரையாடும் வித்தகம் (Subtle Commentary) முதலியனவாகும். இத்தகைய நலங்களால் நெடும் புனைகதைப் படிவத்திற்குக் (Novel form) குறிப்பாக நகுதிறல் கதைக்கு (Comedy) ஆழ்ச்சியும் முதிர்ச்சியும் அளித்த பெருமை இவருக்கே உண்டு.

தாம் நன்கறிந்த சின்னஞ்சிறு துறையைப் பற்றியே எழுதும் பிரெஞ்சு எழுத்தாளர்களைப் போல் இவர் எழுதியவை, பின்னர் என்றி சேம்சு, (Henry James) செம்மைப்படுத்திய பாணிக்கு முன்னோடியாயின எனக் கருதலாம்.

அன்று ஐரோப்பாவை உலுக்கி வந்த போர்களும், நெப்போலியனின் போர்களும், இயந்திரப் புரட்சியினால் சமுதாயத்தில் எழுந்த ஏற்றத்தாழ்வுப் பிறழ்ச்சிகளும் எழுத்தாளர்கள் கவனத்தைக் கவர்ந்த போது, இவர் எடுத்தாண்டதோ மிகக் குறுகிய செயற் பரப்புச் சூழல் ஆகும். தேர்ந்த எழுத்தாளரையும் மனந்தளர்ந்து பின்வாங்கச் செய்யும் அளவுக்குக் குறுகிய நிகழ்ச்சி எல்லை வரையறை பரபரப்புப் போக்கில் ஈடுபட்டிருந்த வாசகர்களுக்கு இந்தப் பாணி எடுபடுமோ என்ற ஐயத்தைத் தோற்றுவித்தது.

செல்வம் பெருகி வரும் இடைத்தர மாந்தரின் (Rising middle class) நாட்டுப்புற மாளிகை, திருக்கோயில் கூட்டங்கள், விருந்தினர் வரவேற்பறை, பூங்கா ஆகிய இடங்களில், நிலம் படைத்துச் செயல்படாதோரின் அளவளாவல் கூட்டம், கூட்டருந்தல் குழுமம், குழு நடனம், இணைவு முயற்சி (Match-making), மண ஒப்பந்தம் (Engagement), எளிய சடங்குகள் ஆகியவை இவர்தம் கதை மூலப்பொருளாகும். இவர் இவற்றைக் கட்டுக்கோப்பான நிகழ்ச்சிக் கோவையில் (Plot) அமைத்தார்.

இவரது இலக்கிய நோக்கிற்கு இலக்கானவை; இடைத்தரக் குடும்பங்கள் வளம் மிகுந்து வருங்காலத்தில் புதிதாக உண்டான சமுதாய ஏற்ற இறக்க உணர்வுகள் (Status Consciousness), சிறுமாகாணச் சம்பிரதாயச் சிற்றலைகள், தலைமுறைட்

பிளவுகளும் பிணைப்புகளும் (Generation gap, Generation bond), தனிப்பட்டவரின் தேவை கூறுகளுக்கும் சமுதாய மரபமைதிக் கட்டாயத்திற்கும் இடையே எழும் முரண்பாடு, செல்வப் படி நிலையும் காதல் வளர்ச்சியும் முரணிப் பின்னியதன் விளைவுகள், காதல் போக்கில் காணும் முன்னேற்றம், சுணக்கம், தயக்கம், ஐயப்பாடு, மறைகாதல், உட்சூழ்ச்சி ஆகியனவாகும். இவற்றைக் கொண்டு இவர் நகுதிற நாடகச் சூழலை (Comic situation) மரபொழுங்கு பிழையாமல் கையாண்டார்.

சர் வால்ட்டர் இசுகாட்டு (Sir Walter Scott) மூன்றாம் முறை படித்தும் குன்றா வியப்புக்கு ஆளாகி இவருடைய கலை நுட்பத் திறனைப் போற்றினார். இவர்தம் நூல்களுள் 'நல்லுணர்வும் மெல்லுணர்வும்' (Sense and Sensibility) என்னும் நூல், தங்கை தமக்கை உளப்பாங்கு ஒப்பிட்டு உருவமைப்புடையது. இந்நூல் காதல் ஏமாற்றம் எதிர்ப்பட, மரியானின் (Marianne) துயர் உள்ளடக்க இயலாது ஊறு விளைத்த பாங்கினையும், எலினார் (Elinor) படிப்படியாகத் தற்கட்டுப்பாட்டையும் உள்ளச் சமநிலையையும் வளர்த்துக் கொண்ட பாங்கினையும் சித்திரிக்கிறது. இருமுறை திருத்தி எழுதப்பெற்றுப் பதிப்பேறு முன் இந்நூல் இரிச்சர்டுசன் (Richardson) கையாண்ட கடிதப் பாணியில் அமைந்திருந்தது. முன்னைய தலைப்பு 'எலினாரும் மரியானும்' என்பதாகும். இந்நூலை வெளியிட்ட போது அதில் இவர்தம் பெயர் குறிப்பிடாமல் 'ஒரு பெண் எழுதியது' என்று மட்டுமே குறிப்பிட்டிருந்தார்.

பெருமிதச் செருக்கும் முற்சாய்வு உணர்வும் "Pride and Prejudice" என்னும் புதினம் புறக்கணித்துப் புண்படுத்தும் நயமற்ற இயல்புடைய தார்சியும் (Darcy) கூர்மதி படைத்த எலிசபெத் (Elizabeth) தும் முதலில் முரணி, பல நிகழ்ச்சிகளுக்குப் பின் இருவரும் பண்பட்டு இணைதலைச் சித்திரிக்கிறது. ஆங்கிலப் புனைகதை இலக்கியங்களில் இடம்பெறும் ஆறு தலைசிறந்த தலைவியருள் எலிசபெத்தும் ஒருவராகக் கருதப் பெறுகிறாள். மணமாகாத ஐந்து பெண் பிள்ளைகளும் (பின்னர் மணம் செய்து கொள்கின்றனர்), கேலி நகைக்கு உரிய மடமை சார்ந்த தாயும், நகைச்சாயல் கொண்டு உள்ளச் சமநிலை சார்ந்த தந்தையும், தன்மதிப்பற்ற செயற்கைப் பகட்டுக் கோமாளி கார்லின்சும் (Collins) அவர்தம் பெண் புரவலர் காதரின் சீமாட்டியும் (Lady Catherine) நல்ல நகுதிறல் ஓவியங்கள். இன்று மிகவும் விரும்பிப் படிக்கப் பெறும் இந்நூலை வெளியிடப் பதினாறு ஆண்டுகள் பதிப்பாளர்கள் தயங்கினார்கள். "நல்லுணர்வும் மெல்லுணர்வும்" என்னும் நூல் எழுதியவரால் இந்நூல் எழுதப் பெற்றது, என்று அச்சுப் பதிப்பில் குறிக்கப் பெற்றது.

மான்சுபில்டு பூங்கா (Mansfield Park) - என்பது இவரது மற்றொரு புதினமாகும். பண்போவிய உருப் (Character) புத்தாய்வுக்குரிய இந்நூலில் ஏழைப் பெண் பானி பிரைசு (Fanny Price) பெர்ட்ராம் (Bertram) குடும்பத்தினரால் எடுத்து வளர்க்கப்பட்ட போது நிகழ்ந்த நிகழ்ச்சிகள் சித்திரிக்கப்பட்டுள்ளன.

இதில் தன்னலமற்ற நேர்மையோடு பிறர் நலம் கருதும் பானி பிரைசின் மனப்பாங்கும், கடுங்குணம் கொண்ட மாரிசு அம்மையாரின் (Ars Morris) பழி சூழ் கொடு நோக்கும் பின்னப் பெறுகின்றன. இறுதியில் பெர்ட்ராமைப் பானி பிரைசு மணந்து கொள்கிறாள். இவர் படைத்த புதினங்களுள் எம்மா (Emma) என்பதும் ஒன்றாகும். ஒற்றையாக வாழத் திட்டமிட்டுக் கொண்டும் பிறர் நலம் விரும்பியும் மண இணைவு (Match-making) செய்யும் எம்மா பல நிகழ்ச்சிகளுக்குப் பின் தலையீடு எத்துணைப் பேதைமையானது என்று உணர்கிறாள்.

உள்ளுறை முரண்சுவை (Irony) நலத்துடன் விளங்கும் இந்நூலின் சிறப்பு கதாநாயகியின் பேரில் வாசகரின் மதிப்பீடும் (Judgement) உள்ளன்பும் (Affection) விரவிவருதல் ஆகும். இதில் பல இயல்புடைய மாந்தர் சித்திரிக்கப் பெறுகின்றனர். இது, வகுப்புப் படிநிலை உணர்வுகளின் ஒரு நகுதிறல் முற்றாய்வு (Comic analysis) ஆகும்.

'நார்த்தேங்கர் திருமடம்' "Northanger Abbey" என்னும் புதினத்தின் கதைத்தலைவி காதரின் (Catherine) ஒரு சமயம் தில்னி (Tilney)யின் இடைக்காலப் பாணியில் கட்டப்பட்ட மாளிகைக்குச் சென்றபோது நிகழ்ந்தவற்றைச் சித்திரிக்கிறது. அக்காலத்தில் மயிர்க் கூச்செறியும் மர்மக் கதைகளும் அச்சமூட்டும் கதைகளும் கையாண்ட உத்திகளை, அங்கதப் பாணியில் தாக்குவதை இந்நூலில் காணலாம். எனினும் திருமணம் நோக்கிச் செல்லும் நிகழ்ச்சிக் கோவையில் அங்கதப் பாணி மேலிடாமல் தணிக்கப் பெறுகிறது. இது இவர் இறந்த பின் வெளியிடப்பட்ட நூலாகும்.

இணங்குவித்தல் "Persuasion" என்னும் புதினம் உள இயல்புத் தொடர்பானது. இந்நூலில் நகையியல் கணைகள் தணிவு செய்யப்பட்டுள்ளன. பரிவிரக்க உணர்வுடனும் சீரிய மெய்யார்வத்துடனும் எழுதப்பட்ட இந்நூல், ஆன் எலியட்டின் (Anne Elliot) டின் சுணங்கிய காதல் பற்றியது. இந்நூல் இவர் இறந்தபின் வெளியிடப்பட்டது.

இவர் ஒளி-நிழல் இயைபு மிக்க கதைகள்

புனைந்து தம் நாற்பத்திரண்டாம் வயதில் முது கன்னியாய் இறந்துவிட்டார்.

சிறு வயதில் இவர் எழுதியவற்றுடன் பதிப்பேறா இரு நூல்களும் உள. ஒன்று சூசான் சீமாட்டி (Lady Susan) என்பது. இது கடித வடிவில் அமைந்தது. மற்றொன்று, வாட்சன் குடும்பத்தினர்(The Watsons) என்னும் முடிவு பெறாக் கதை. இவர் இறக்கும் போது, சான்டிட்டன் (Sanditon) என்ற தலைப்பில் முதல் நிலைக் குறிப்பு நிலையில் (Sketch) ஒரு நூலை விட்டுச் சென்றார்.

கிறித்தவக் குருமார் குடும்பத்தில் ஏழாம் குழந்தையாகப் பிறந்த இவர்தம் ஆறு அண்ணன் மார்களுள் இருவர் கடற்படையில் பெருந்தலைவர் களாக (Admirals) இருந்துள்ளனர். தங்கை காசாண்ட்ரா இவரைப் போலவே முதுகன்னியாகவே காலங் கழித்தார். சேன் ஆசுட்டின் பள்ளி சென்று பயிலாதவர். ந.ச.

**ஆசுட்ராகான்** சோவியத்து உருசிய நாட்டின் தென்பகுதியில் வோல்கா ஆற்றின் கழிமுகத்தில் உள்ளதொரு நகரம். ஆசுட்ராகான் (Astrakhan) கசிபியன் கடலுடனும், வோல்கா ஆற்றுத் துறை முகங்களுடனும் நல்ல நீர்த் தொடர்புகளைக் கொண்டுள்ளதால், சீரிய வாணிக மையமாக விளங்குகிறது. மீன்பிடித்தல் இங்கு நடைபெறும் முக்கிய தொழில்களுள் ஒன்றாகும். உப்பிட்டு உலர்த்திய உயர்தர மீன்வகையின் கருச் சினையும் ஆசுட்ராகான் என்னும் கவர்ச்சியான ஆட்டுத்தோலும் இப்பகுதியின் குறிப்பிடத்தக்க உற்பத்திப் பொருள்கள்.

**ஆசுடா** வட இத்தாலியில் பீட்மாண்டில் உள்ள ஊர். தூரின் (Turin) என்ற நகருக்கு வடமேற்கில் 80 கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. 550 மீட்டர் கடல் மட்டத்திற்கு மேல் உள்ள நகரம். ஆல்ப்சு சிகரங்கள் முப்பக்கம் நிற்கும் பள்ளத்தாக்கில் உள்ள ஆசுட்டர் (Austor) நல்ல தட்பவெப்ப நிலைக்குப் பெயர் பெற்ற இடம். இங்கிருந்து பிரான்சுக்கும் சுவிட்சர்லாந்திற்கும் சுரங்கப் பாதைகள் செல்கின்றன.

**ஆசுத்திரியா** நடு ஐரோப்பாவில் அழகிய மலைத்தொடர்களுக்கும் இயற்கைக் காட்சிகளுக்கும் பெயர்பெற்ற சிறு நாடு. உயர்ந்த ஆல்ப்சு மலைகளும் அந்நாட்டின் மேற்கிலும் தெற்கிலும் நடுவிலும் படர்ந்த மலையடிவாரங்களும் கண்கொள்ளாக் காட்சியாகும். பல பகுதிகளில் விரிந்து அகன்ற பசும் பள்ளத்தாக்குகள் மலைத்தொடரைப் பிரித்துள்ளன. கண்ணாடி போன்று தெளிந்த நீர் நிறைந்த ஏரிகளும், அடர்ந்த காடுகளும் இந்நாட்டைப் போர்வை மூடினாற்போன்று மூடியுள்ளன. ஆசுத்திரியா ஓர் உள்நாட்டுப் பகுதி; கடற்கரைகள் இல்லை.




ஆசுத்திரியா

**எல்லைகள்:** ஆசுத்திரியாவின் மேற்கில் இலீச்டென்சுடீன் (Liechtenstein) நாடும் சுவிட்சர்லாந்தும் அமைந்துள்ளன. வடக்கில் மேற்குச் செருமனியும், செக்கோசுலோவாகியாவும் இத்தாலியும் இதன் எல்லைகள்.

**தலைநகர்:** ஆசுத்திரியா நாட்டின் தலைநகர் வியன்னா. அது தான்யூப் (Danube) ஆற்றங் கரையில், நாட்டின் வடகிழக்குப் பகுதியில் அமைந்துள்ளது.

ஆசுத்திரிய மக்களுள் பெரும்பாலோர் மாநகரங்களிலும் நகரங்களிலும் வசிக்கின்றனர். நாட்டின் மக்கள் தொகையில் ஐந்திலொரு பங்கினர் தலைநகரான வியன்னாவில் வாழ்கின்றனர். ஆசுத்திரியாவின் இயற்கைக் காட்சிகளைக் கண்டுகளிக்கும் நோக்குடன் பல இலட்சம் பயணியர் ஒவ்வோராண்டும் இந்நாட்டுற்கு வந்துசெல்கின்றனர்.

ஆசுத்திரியா ஒருகாலத்தில் ஐரோப்பாவின் வலிமைவாய்ந்த நாடுகளுள் ஒன்றாகக் கருதப் பெற்றது. ஆப்சுபர்க்கு என்னும் பெயர் கொண்ட அரசக் குடும்பத்தினர் கி.பி. 13-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து ஆசுத்திரியாவை ஆண்டு, பெரும் பேரரசு ஒன்றினையும் நிலைநாட்டினர். இப்பேரரசு 1918-ஆம் ஆண்டில் முதல் உலகப் போரின்போது வீழ்ச்சியுற்றது. பின்னர் ஆசுத்திரியா குடியரசானது. இருப்பினும் பொருளாதார மந்தமும் அரசியல் குழப்பமும் மிகுந்திருந்தன. ஆனால், 1950-ஆம் ஆண்டிலிருந்து ஆசுத்திரியா தொழில்வளர்ச்சியுற்ற நாடாக உருமாறிப் படிப்படியாகப் பொருளாதார முன்னேற்றம் பெற்றுவரும் நாடுகளுள் ஒன்றாகத் திகழ்கிறது. இது வல்லரசுக் குழுக்களில் சேராமல் நடுநிலை வகிக்கிறது.

**அரசியல் பிரிவுகள் :** ஆசுத்திரியா ஒரு கூட்டாட்சிக் குடியரசு நாடாகும். அங்கு ஒன்பது மாநிலங்கள் உள்ளன. அவை 1. பர்கன்லாந்து (Burgenland), 2. கீழை ஆசுத்திரியா (Lower Austria), 3. சால்சுபர்க்கு (Salzburg), 4.இசுடிரியா (Styria), 5. தைரோல் (Tyrol), 6. மேலை ஆசுத்திரியா (Upper Austria), 7. வியன்னா (Vienna) மாநகர், 8. காரிந்தியா (Carinthia), 9. வோரார்ல் பர்க்கு (Vorarlberg) என்பனவாம். ஆசுத்திரியாவின் அரசியல் அமைப்புத் திட்டம் 1920-ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்டது. ஆசுத்திரியாவில் 19 வயதைக் கடந்த அனைவருக்கும் வாக்குரிமையுண்டு.

**அரசியல் அமைப்பு:** ஆசுத்திரிய நாட்டின் ஆட்சித் தலைவர் குடியரசுத் தலைவர். அவர் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு ஆறு ஆண்டுக் காலத்திற்குப் பதவி வகிக்கிறார். தொடர்ந்து இருமுறை மட்டும் பதவி வகிக்கலாம். இடைவெளி விட்டு மீண்டும் பதவியைப் பெற அவருக்கு வாய்ப்புண்டு. குடியரசுத் தலைவர் பதவி பெரும்பாலும் பொறுப்புகள் குறைந்தது. தூதர்களை அமர்த்துதல், இராணுவத்தின் சிறப்புப் படைத்தளபதியாகக் கருதப்படல் போன்றவை அவர் வகிக்கும் பணிகளாகும். போரைத் தொடங்குதல், பாராளுமன்றம் நிறைவேற்றிய மசோதாக்களை நீக்குதல் போன்ற அதிகாரங்கள் அவருக்கு வழங்கப்பெறவில்லை.



ஒப்பேரா மாளிகை வியன்னா

**தலைமையமைச்சரும் நாடாளுமன்றமும்:** ஆசுத்திரிய அரசாங்கத்தை நடத்துபவர் தலைமை அமைச்சரும் (Chancellor) அவரது அமைச்சரவையும் ஆகும். தலைமையமைச்சராகப் பதவி ஏற்பவரே அரசாங்கத்தை நடத்தும் உண்மையான தலைவராவார். தேர்தலில் மிகுதியான இடங்களைக் கைப்பற்றிய உறுப்பினர்களைக் கொண்ட கட்சியின் தலைவரைத் தலைமை அமைச்சராகக் குடியரசுத் தலைவர் அமர்த்துகிறார். ஆசுத்திரிய நாடாளுமன்றம் இரு அவைகளைக் கொண்டது. கீழ்ச்சபையை நேசனல்ராட்டு (Nationalrat) அல்லது தேசியக்குழு என்பர். மேலவையைப் பன்ட்சுராட்டு என்பர். கீழ்ச்சபையில் 183 உறுப்பினர்கள் நான்கு ஆண்டுகளுக்கொருமுறை மக்களால் நேரிடையாகத் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். சான்சலரின் கருத்துப்படி கீழ்ச்சபை செயற்படும். தேசியக்குழுவான கீழ்ச்சபை மேலவையைவிட முக்கியமானது. தலைமையமைச்சரின் கருத்துப்படி அமைச்சரவை உறுப்பினர்களையும் குடியரசுத் தலைவர் அமர்த்துகிறார். தலைமையமைச்சரும் அமைச்சரவை உறுப்பினர்களும் இணைந்தே அரசாங்கக் கொள்கைகளை முடிவு செய்வர். அவர்கள் தேசியக் குழுவிற்குப் பொறுப்பானவர்கள். அதன் நம்பிக்கையை இழந்துவிட்டால் தலைமையமைச்சரும் அமைச்சரவையும் பதவி விலக வேண்டும்.

**மாநிலத் தல ஆட்சி:** மாநிலங்களில் வாழும் மக்கள் தங்கள் சட்டமன்றத்திற்கான உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கின்றனர். மாநிலச் சட்டமன்றம் இலேண்ட்டாகு (Landtag) எனப்படும். மாநிலச் சட்டமன்றங்களின் பதவிக்காலம், நான்கு முதல் ஆறு ஆண்டுகள் வரை மாநிலங்களின் முடிவிற்கேற்ப நிலவுகிறது. ஒவ்வொரு மாநிலச் சட்டமன்றமும் அந்தந்த மாநில ஆளுநர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்கிறது. நாடு முழுவதையும் 2320 ஆட்சிப் பகுதிகளாகப் (Commune) பிரித்துள்ளனர். ஒவ்வொரு ஆட்சிப்பகுதியிலும் உள்ள வாக்காளர்கள், அந்தந்தப் பகுதியை ஆட்சி செய்யக் குழுவொன்றினைத் தேர்ந்தெடுப்பர். தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுள் ஒருவர் மாநகராட்சித் தலைவராக அமர்த்தப்படுகிறார். வியன்னா, மாநிலமாகவும் ஆட்சிப் பகுதியாகவும் கருதப்படுகிறது அதன் ஆட்சிக் குழுவே மாநிலத்தின் சட்டமன்றமாகவும், வியன்னாவின் மாநகராட்சித் தலைவரே அதன் ஆளுநராகவும் பணியாற்றுகிறார்.

**அரசியல் கட்சிகள்:** ஆசுத்திரியாவில் நான்கு அரசியல் கட்சிகள் உள்ளன. ஆனால், அவற்றில் இரு கட்சிகளான கன்சர்வேட்டிவ் கட்சியும், முன்னேற்றச் சமதருமக் கட்சியும் தேசியச் சட்டமன்றத்தில் பெரும்பாலான இடங்களைப் பிரித்துக் கொள்கின்றன. பொதுவுடைமைக் கட்சியும், வலதுசாரிச் சுதந்திரக் கட்சியும் ஆசுத்திரியாவின் ஏனைய இரு கட்சிகள்.

**நீதிமன்றங்கள்:** ஆசுத்திரியாவின் மிக உயர்ந்த நீதிமன்றத்தை உச்ச நீதிமன்றம் என்பர். குடிமையியல், குற்றவியல் வழக்குகளின் மேல் முறையீடுகளை இந்த உச்ச நீதிமன்றமே கவனிக்கும். தாழ்நிலை நீதிமன்றங்களிலிருந்து வரும் மேல் முறையீடுகளின் முடிவுகளை விசாரிக்க நான்கு வட்டார நீதிமன்றங்கள் உள்ளன. இளம் வயதுக் குற்றவாளிகள், தொழிலாளர் சச்சரவுகள், நிருவாகம் தொடர்பான வழக்குகள், அரசியல் அமைப்புத் தொடர்பான வழக்குகள் ஆகியவற்றை விசாரிக்கச் சிறப்பு நீதிமன்றங்கள் உள்ளன.

**இராணுவம்:** ஆசுத்திரியாவின் இராணுவத்தில் 52 ஆயிரம் படைவீரர்கள் உள்ளனர். அங்கு, 18 வயது நிரம்பிய ஆண்கள், இராணுவத்தில் எட்டு மாதங்கள் பணிபுரிய வேண்டும் அல்லது விமானப்படையில் குறைந்த அளவு மூன்றாண்டுகள் பணியாற்ற வேண்டும்.

**மக்கள் இனவரலாறும் தொகையும்:** ஆசுத்திரிய நாட்டில் பல இனமக்கள் குடியேறி வாழ்ந்து வந்தனர். இனக்கலப்பு ஏற்பட்டு அதன்மூலம் உருவானவர்களே இன்றைய ஆசுத்திரிய மக்கள். பழங்காலத்தில் செல்ட்டுகளும் உரோமானியர்களும் ஆசுத்திரியாவின் மக்களாயிருந்தனர். பின்னர், ஆசியாவைச் சார்ந்தவர்கள், பல்வேறு செருமானியக் குழுக்கள், மாக்கியார்கள் எனப்படும் அங்கேரியர்கள் ஆகியோர் ஆசுத்திரியாவில் குடியேறினர். இந்நாடு, கி.பி. 14-ஆம் நூற்றாண்டிலிருந்து ஆசுத்திரியா ஆப்சுபர்க்குப் (Hapsburg) பேரரசின் அனைத்துப் பகுதிகளிலிருந்தும் மக்களைக் கவர்ந்தது. அப்படிக் கவரப்பட்டவர்கள் இத்தாலியர்களும் பல்வகைப்பட்ட சுலாவிய குழுவினரும் ஆவர். செக்கோசுலோவாகியாவிலிருந்தும் அங்கேரியிலிருந்தும் 1950 க்கும் 1960 க்கும் இடையில் பொதுவுடைமைக் கட்சியின் ஆட்சியை விரும்பாதவர்கள் ஆசுத்திரியாவுக்கு ஓடி வந்தனர்.

ஆசுத்திரியாவின் மக்கள்தொகை 1981-ஆம் ஆண்டுக் கணக்குப்படி 75,55,338 ஆகும். நாட்டின் தாழ்நிலப் பகுதிகளில், குறிப்பாக, தான்யூ ஆற்றின் கிழக்கிலும் தெற்கிலும் ஆசுத்திரியாவின் பெரும்பாலான மக்கள் வாழ்கிறார்கள். மாநகரங்களிலும் நகரங்களிலும் 55 விழுக்காட்டிற்கும் மேற்பட்ட மக்கள் வாழ்கிறார்கள். மக்கள் தொகையுள் ஐந்தில் ஒரு பங்கினர் நாட்டின் தலைநகரான வியன்னாவில் வசிக்கிறார்கள். கார்சு (Garz), இன்சுபர்க்கு (Innsburck), இலின்சு (Linz), சால்சுபர்க்கு (Salzburg) ஆகிய ஆசுத்திரியாவின் நான்கு நகரங்கள் ஒவ்வொன்றிலும் இலட்சத்திற்கு மேற்பட்ட மக்கள் வாழ்கிறார்கள்.

**மொழி:** ஆசுத்திரியர்களுள் 98 விழுக்காடு மக்கள் செருமானிய மொழியைப் பேசுகிறார்கள். அம்மொழியே அந்நாட்டின் ஆட்சி மொழியுமாகும். செர்போ-குரோசியன் (Serbo-croatian), மாக்யார் (Magyar), சுலோவினி (Slovene) செக்கு மற்றும் சுலோவாக்கு மொழிகளும் பேசப்படுகின்றன. ஆனால், பேசுவோர் எண்ணிக்கை குறைவு.

**வாழ்க்கை முறை:** மாநகர மக்களுள் பெரும்பாலோர் நான்கு அல்லது ஐந்து மாடிகளைக் கொண்ட கட்டட அறைகளில் வாழ்கிறார்கள். ஏனையோர் நெடிதுயர்ந்த கட்டட அறைகளிலோ ஒரு குடும்ப வீடுகளிலோ வசிக்கின்றனர். பண்ணைகளில் வாழும் பெரும்பாலோரும், நாட்டுப்புறக் குடும்பங்களில் வாழ்வோரும் தனிக் குடும்ப வீடுகளில் வாழ்கிறார்கள். சில இடங்களில் எளிய வீடுகளிலும், வேறு சில இடங்களில் மரத்தாலான வீடுகளிலும் மக்கள் வாழ்கிறார்கள்.

ஆசுத்திரியர்கள் விழா நாட்களில் மரபுவழிவந்த தேசிய உடைகளையும், அவரவர் பகுதிகளுக்கான ஆடைகளையும் அணிந்து மகிழ்வர்.

**உணவு:** ஆசுத்திரியர்கள் நல்லுணவை விரும்புவர். செக்கோசுலோவாக்கியா, செருமனி, அங்கேரி ஆகிய நாடுகளின் சமையலின் செல்வாக்கினை அவர்களின் உணவு வகைகளில் காணலாம். மாடு, பன்றி, கன்று, கோழி ஆகியவற்றின் இறைச்சியையும் காரப்பணியாரத்தையும் பொதுமக்கள் விரும்பி உண்பர். கொழுக்கட்டை, சந்தவை, உருளைக்கிழங்கு போன்றவை துணை உணவு வகைகள். மக்கள் பீர், அல்லது பிராந்தி போன்ற சாராய வகைகளை உணவுடன் உட்கொள்வர்.

விழாக்களும் விடுமுறை நாள்களும் ஆசுத்திரியர்களின் வாழ்வில் முதன்மையான பங்கினை வகிக்கின்றன. விழாக்களில்சில கிறித்துப் பிறப்பதற்குமுந்தைய காலத்திலிருந்தே வருபவை. வசந்த காலத் தொடக்கத்தில் கொண்டாடப்படும் விழாக்களுள் ஒன்று, தைரோல் (Tyrol) பகுதி முழுமையும் கொண்டாடப்படுகிறது. அப்போது குளிர்காலப் பேய்களை விரட்டுவது போன்று நடிப்பர். சிறப்பான ஆடைகளையும் முகமூடிகளையும் அணிந்து கொண்டு, தெருக்களில் அணிவகுத்தும் நீண்ட பெருந்தடிகளை வானத்தில் ஆட்டியும் செல்வர். இந்த விழா, இடத்திற்கிடம் வேறுபட்ட நாள்களில் வேறு பெயர்களில் கொண்டாடப்படுகிறது.

**சமூகநலம்:** மக்களுக்குத் துணை செய்யும் நல்ல பல சமூக நலத்திட்டங்களை ஆசுத்திரிய அரசு மக்களுக்கு வழங்குகிறது. ஆசுத்திரியத் தேசியக் காப்பீட்டுக் கழகம், தொழிலாளர்களுக்குப் பல்வேறு உதவிகளைச்

செய்கிறது. அது, பணிசெய்ய முடியாநிலையினர், மகப்பேறுகாலத்தவர், வயதுமுதிர்ந்தோர், பணியாளர்கள், வேலையற்றோர் முதலானவர்களுக்கு உதவி செய்கிறது. அனைத்துக்குடிமக்களுக்கும் தேசிய நல்வாழ்வுக் காப்பீட்டுத் திட்டம் பயன்படுகிறது. இத்திட்டங்களுக்கான செலவினைக் கூட்டாட்சி அரசும் மாநில அரசுகளும் தல அரசுகளும் ஏற்றுக் கொள்கின்றன.

ஆசுத்திரிய அரசு 1919-ஆம் ஆண்டிலிருந்து நாளொன்றுக்கு எட்டு மணி நேரம் வேலை செய்ய வேண்டும் என்னும் கட்டுப்பாட்டை நிலைநாட்டியுள்ளது. நிலையான தொழில் செய்யும் பணியாளர்களுக்கு ஆண்டு விடுமுறை நாள்களையும் அரசு அனுமதித்துள்ளது. ஆறு மாதங்களோ அதனை விட மிகுதியாகவோ தொடர்ந்து பணி செய்யும் பணியாளர்களுக்கு ஆண்டொன்றுக்கு 18 நாள் விடுமுறையும் ஊதியமும் அளிக்கிறது. வாரத்திற்கு நாற்பது மணிநேர வேலை என்பது 1975-ஆம் ஆண்டிலிருந்து வரையறுக்கப்பட்டுள்ளது.

**பொழுது போக்கு:** ஆசுத்திரியர்கள் வெளியிடம் சென்று விளையாட விழைவர். அவர்கள் நாட்டில் காணப்பெறும் காடுகள், ஏரிகள், மலைகள் போன்றவை அவர்களுக்கு விதவிதமான வாய்ப்புகளை நல்குவதால், வெளியிட விளையாட்டினை அனைவரும் விரும்பியேற்பர். குளிர்காலத்தில் பனிமீது சறுக்கு விளையாட்டு, பனி நடைக் கட்டையிட்டு நடத்தல், பனிச்சரிவுச் சறுக்கல் போன்ற விளையாட்டுகளில் ஈடுபடுவர். பட்டு விடுதல், மீன் பிடித்தல், மலையேறுதல், நீச்சல், நீரில் விளையாடுதல் போன்றவை இவர்களின் கோடைக்காலப் பொழுதுபோக்கு விளையாட்டுகள். சைக்கிள் விடுதல், முகாமிடல், சுற்றுலாச் செல்லுதல், பந்து விளையாடல் போன்றவற்றிலும் ஈடுபட்டு மனம் மகிழ்வர்.

ஆசுத்திரியர் கலைகளையும் விளையாட்டுகளையும் விரும்புவர். இசையரங்கம், திரைப்படம், இசை நாடகம், ஓரங்க இசை நாடகம், முழு நாடகங்கள் போன்றவற்றால் கவரப்பெற்றுப் பெருங்கூட்டமாக இன்பத்தில் திளைப்பர்.

**கல்வி:** வயது வந்த ஆசுத்திரியர்களுள் பெரும்பாலும் அனைவருக்கும் எழுதப்படிக்கத் தெரியும். இங்கு 6 வயது முதல் 15 வயது வரையிலான குழந்தைகள் கட்டாயம் பள்ளி செல்ல வேண்டும். பெரும்பாலான மாணவர்கள் இலவசப் பொதுப்பள்ளிகளுக்குச் செல்கிறார்கள். ஏனையோர் தனியார் நடத்தும் பள்ளிகளுக்குச் செல்லுகிறார்கள்; அவர்கள் படிக்கக் கட்டணம் செலுத்துகிறார்கள். தொடக்கப் பள்ளிகளில் எட்டாண்டுகளும், தொழிற் பள்ளிகளிலோ தொழில் நுட்பப்பள்ளிகளிலோ ஓராண்டும் படிக்க வேண்டும். பின்னர்ப் பல்கலைக்கழகப் படிப்பிற்கும் மாணவர்கள் விரும்பினால் செல்லலாம். ஆசுத்திரியாவில் நான்கு பல்கலைக் கழகங்களும் பதின்மூன்று உயர்நிலைக் கல்விநிறுவனங்களும் உள்ளன. வியன்னாப் பல்கலைக் கழகம் அந்நாட்டின் பெரிய பல்கலைக் கழகமாகும்.

**சமயம்:** ஆசுத்திரியர்கள் பெரும்பாலும் உரோமன் கத்தோலிக்கக் கிறித்தவச் சமயத்தைச் சார்ந்தவர்கள். ஆசுத்திரியாவுக்கும் போப்பாண்டவருக்கும் இடையே ஏற்பட்ட ஒப்பந்தப்படி, ஆசுத்திரிய உரோமன் கத்தோலிக்கத் திருச்சபை அந்நாட்டுத் தேசிய அரசிடமிருந்து பொருளுதவி பெறுகிறது. எனினும் ஆசுத்திரியர்களுக்கு மதச் சுதந்திரம் உண்டு. மக்கள் தொகையுள் 90 விழுக்காடு உரோமன் கத்தோலிக்கர்கள்; 6 விழுக்காடு பிராட்டசுடண்டு சமயத்தினர். ஆசுத்திரியாவில் ஏறத்தாழ 12,000 யூதர்கள் வாழ்கிறார்கள். அவர்களுள் பெரும்பாலோர் வியன்னாவில் வசிக்கின்றனர்.

**கலைகள்:** ஐரோப்பாவில், கலைகளின் மையங்களுள் ஒன்றாக ஆசுத்திரியா பன்னெடுங்காலமாகக் கருதப்பட்டு வந்துள்ளது. கட்டடக் கலை, இலக்கியம், ஓவியம் போன்ற கலைகளில் இந்நாடு பல சாதனைகளைப் பெற்றுள்ளது. குறிப்பாக, இசையில் உயர்ந்த இடத்தை ஆசுத்திரியா அடைந்துள்ளது.

இசைக்கலையில் சோசப்பு ஐடின் (Joseph Haydin) என்பார் தலைசிறந்த கலைஞர். அவர் கி. பி. 18, 19 – ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்தவர். இருபதாம் நூற்றாண்டில் தலைசிறந்த இசைமேதையாக ஆர்னால்டு சோன்பர்க்கு (Arnold Schonberg) என்பாரைக் குறிப்பிடலாம். வியன்னாவில் பல்வேறு இசைக் குழுக்கள் செயற்படுகின்றன.

**கட்டடக்கலை:** பராக் கட்டடக்கலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளை ஆசுத்திரியாவில் காணலாம். சான் பெர்ன்ஆர்டு பிசர் வான் எர்லாக்கு (Johun Bernhard Fischer Won Erlach) என்பார் இந்த வகைக் கட்டடக்கலையின் சிற்பியாகக் கருதப்படுகிறார்.

இங்குள்ள திருச்சபைகள், மாளிகைகள் ஏனைய கட்டடங்கள் எண்ணற்றவை. இவை ஆசுத்திரியாவில் வளர்ந்து வந்த உரோக்கோகோ பாணி (Rococo Style) யைச் சுட்டிக் காட்டும்.

**இலக்கியம்;** ஆசுத்திரியர்கள் சிறந்த நாடகங்களை எழுதி அவற்றைக் கலை அரங்கங்களில் நடித்துப் புகழ் பெற்றுள்ளார்கள். அவர்கள் எழுதிய நாடகங்கள் மனித உணர்ச்சிகளைப் படம்பிடித்துக் காட்டுவன.

ஓவியக் கலையிலும் ஆசுத்திரியர்கள் சிறந்தவர்கள். கசுடவ் கிளிம்ட்டு (Gustaw Klimt) என்பார் தலைசிறந்த ஓவியராகக் கருதப்படுகிறார்.

**ஆசுத்திரியா-நிலமும், தட்ப வெப்பநிலையும்:** ஆசுத்திரியாவின் நான்கில் மூன்று பங்கு இடத்தில் மலைகள் சூழ்ந்துள்ளன. நாட்டின், மேற்கு, தெற்கு, நடு ஆகிய பகுதிகளில் ஆல்ப்சு மலைத்தொடர் விரிந்து படர்ந்துள்ளது. வடக்கில் கருங்கல் மேட்டு நிலம் மலைப்பாங்கான பகுதியாகத் தனித்து நிற்கிறது. ஆசுத்திரியாவின் நடுப்பகுதியில் கடல் மட்டத்திற்கு மேல் 3797 மீ. உயரமுள்ள கிராசுகிளாக்கர் (Grossglocker) என்னும் மலையுச்சியே இந்நாட்டின் மிக உயர்ந்த இடமாகும்.

**வரலாறு:** ஆசுத்திரியாவில் மக்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வாழ்ந்தாலும், அங்கு வாழ்ந்த தொன்மையான குடிமக்கள் குறித்து வரலாற்று அறிஞர்களுக்கு ஒன்றும் தெரியவில்லை. அந்நாட்டின் தொல்குடிகள் கி. மு. 800-ஆம் ஆண்டளவில் இரும்புத் தாதுக்களை வெட்டியெடுக்கும் சுரங்கங்களில் பணிபுரிந்தனர். இரும்புத்தாது, உப்புப் போன்ற பொருள்களை விற்றனர். கெல்ட்டிய இன மக்கள், கி. மு. 400 - ஆம் ஆண்டளவில் ஆசுத்திரியாவின் நடுப்பகுதியிலும் கிழக்குப் பகுதியிலும் குடிபுகுந்தார்கள்.

உரோமானியர்கள் கி. மு. 15-ஆம் ஆண்டில் தான்யூபு ஆற்றுக்குத் தென்பாலிருந்த ஆசுத்திரியப் பகுதிகளைக் கட்டுப்படுத்தி, அதைத் தம் பேரரசின் பகுதியாக்கியிருந்தனர். பின் கி. பி. முதல் நூற்றாண்டின் பிற்பகுதியில் உரோமானிய ஆசுத்திரியாவை வடபாலிருந்து காட்டுக்கூட்டம் படையெடுத்துத் தாக்கியது. அதன் விளைவாக உரோமானியரின் பிடி தளரலாயிற்று. அங்குக் கி. பி. 476 - ஆம் ஆண்டில் உரோமானியப் பேரரசு வீழ்ச்சியுற்றது. அவ்வேளையில் ஆசிய இன மக்களும், செருமானியரும், இசுலாவு (Slov) இன மக்களும் ஆசுத்திரியாவின் மீது படையெடுத்து அங்கேயே நிலையாகத் தங்கலாயினர்.

ஆசுத்திரியா, கி. பி. எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், பிராங்கியர் (Franks) எனப் பெயர் தாங்கிய செருமானிய மக்களின் அரசரான சார்லிமேன் என்னும் அரசரின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. சார்லிமேன் கி. பி. 814-ஆம் ஆண்டில் காலமானபோது, பிராங்கியப் பேரரசும் சிதறுண்டது. மாகிய இனத்தவர் (Magyar) கி. பி. பத்தாம் நூற்றாண்டில் ஆசுத்திரியாவைக் கைப்பற்றிக் கொண்டனர். ஆனால், செருமனியின் அரசரான முதலாம் ஆட்டோ என்பார், அவர்களைக் கி.பி. 955-ஆம் ஆண்டில் தோற்கடித்தார். ஆசுத்திரியா அவருடைய ஆளுகைக்குட்பட்டது. போப்பாண்டவர் கி. பி. 962-ஆம் ஆண்டில், ஆட்டோவைப் புனித உரோமானியப் பேரரசராக நியமித்து முடிசூட்டினார். அன்றிருந்து கி. பி. 1806-ஆம் ஆண்டுவரை, செருமானிய அரசர் புனித உரோமானியப்பேரரசர் என்ற பட்டப் பெயருடன் அப்பகுதியை ஆண்டார். பேரரசின் மிக முக்கியமான பகுதியாக ஆசுத்திரியா அமைந்தது.

பேரரசர் இரண்டாம் ஆட்டோ, ஆசுத்திரியாவின் வடகிழக்குப் பகுதியைக் கி. பி. 976-இல் பாபன்பர்க்கு அரச குடும்பத்தைச் சார்ந்த முதலாம் இலியோபோல்டு என்பாரின் ஆளுகைக் குட்படுத்தினார். பின் கி. பி. 1156-ஆம் ஆண்டில் பேரரசர் முதலாம் பிரடரிக்கு, அதைக் கோமகன் ஆட்சிப் பகுதியென அறிவித்தபோது அதன் சிறப்புத் தன்மை மேலும் பெருகியது. இதன்பின் கி.பி. 1186-இல் ஆசுத்திரியக் கோமகன் ஆட்சிப் பகுதிக்குத் தென்பால் அமைந்திருந்த இசுடிரியா கோமகன் ஆட்சிப் பகுதியும் (Duchy of Styria) பாபன்பர்க்கு ஆட்சியின் கீழ் இணைந்தது.

**ஆப்சுபர்க்குகள்:** பாபன்பர்க்குக் கோமகன் கி.பி. 1246-இல் வாரிசு எவருமின்றிக் காலமானார். பொகீமியாவின் அரசராய் இருந்த ஒட்டோக்கர், (Ottokar), பாபன்பர்க்குக் கோமகன் ஆட்சிப் பகுதிகளாயிருந்த ஆசுத்திரியாவையும் இசுடிரியாவையும் அவற்றின் தென்பாலிருந்த வேறு சில பகுதிகளையும் கைப்பற்றிக் கொண்டார். செருமானிய இளவரசர்கள் கி.பி.1273-ஆம் ஆண்டில் சுவிட்சர்லாந்தைச் சார்ந்த ஆப்சுபர்க்கு அரசு குடும்பத்தைச் சார்ந்த முதலாம் உருடால்பு என்பாரைத் தேர்ந்தெடுத்துப் புனித உரோமானியப் பேரரசராக அவரை அறிவித்தனர். உருடால்பு கி.பி. 1278-ஆம் ஆண்டில் ஒட்டோக்கரைத் தோற்கடித்துவிட்டு, அவர் கைப்பற்றியிருந்த பகுதிகளைத் தம் குடும்பத்தின் ஆட்சிக்குள் கொணர்ந்தார்.

புனித உரோமானியப் பேரரசு உரிமையை ஆப்சுபர்க்குகள் கி.பி. 1300-ஆம் ஆண்டளவில் இழந்தனர். பேரரசு, கட்டுக் கோப்பில்லாமல் ஆப்சுபர்க்குகள் உள்ளிட்ட பல அரசக் குடும்பங்களால் ஆளப்பட்டு வந்தது. முதலாம் உருடால்பின் (Rudolf I) கொள்ளுப் பேரரான நான்காம் உருடால்பு ஆசுத்திரியாவின் பெருங்கோமகன் (Archduke) என்னும் பட்டத்தைக் கி.பி. 1359-ஆம் ஆண்டில் பெற்றார். ஆனால், அவரது உரிமையை ஏனைய ஐரோப்பிய அரசர்கள் கி.பி. 1453-ஆம் ஆண்டுவரை ஏற்றுக் கொள்ளவில்லை. காலப்போக்கில் ஆப்சுபர்க்குகள் பிறபகுதிகளையும் கைப்பற்றி, இன்றைய ஆசுத்திரியாவை உருவாக்கினர்.

ஆப்சுபர்க்கு அரச குடும்பத்தைச் சார்ந்த ஒருவர், கி.பி. 1438-ஆம் ஆண்டில் மீண்டும் புனித உரோமானியப் பேரரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அப்போதிருந்து, ஆப்சுபர்க்கு அரச குடும்பத்தினரே தொடர்ந்து அப்பதவியை வகித்தனர். ஆசுத்திரியாக் கோமகன் ஆட்சிப் பகுதியே பேரரசின் முதன்மை நாடாகியது. ஆப்சுபர்க்கு அரசர்களுள் தலைசிறந்தவர் முதலாம் மாக்சிமிலியன் என்பவராவார். இவர் மகன் பிலிப்பு என்பவர், கி.பி. 1496-ஆம் ஆண்டில் இசுபானிய அரசரின் மகளை மணந்து கொண்டார். பிலிப்பின் மகன் கி.பி. 1516-ஆம் ஆண்டில், இசுபெயின் நாட்டின் அரசர் முதலாம் சார்லசு எனவும், கி.பி. 1579-ஆம் ஆண்டில் புனித உரோமானியப் பேரரசர் ஐந்தாம் சார்லசு எனவும் கருதப்பட்டார். சார்லசு கி.பி. 1556-இல் தம் பதவிகள் அனைத்தையும் துறந்தார். இசுபெயின் சார்லசின் மகனுக்கும், ஆசுத்திரியாவும் புனித உரோமானியப் பேரரசுப் பட்டமும் அவர்தம் தம்பி முதலாம் பெர்டினாண்டுக்கும் (Ferdinand I) சென்றன. இவ்வண்ணம் ஆப்சுபர்க்குகள் இசுபானிய அரசக்குடும்பமாகவும், ஆசுத்திரிய அரசக் குடும்பமாக பிரிந்தனர்.

பெர்டினாண்டு கி.பி. 1526-இல் பொகீமியா, அங்கேரி ஆகிய பகுதிகளின் அரசரானார். உதுமானியத் துருக்கர்களுடன் (Ottoman Turks) போராடிப் பல ஆண்டுகளைக் கழித்தவர் அவர். துருக்கர்கள் அங்கேரியின் பெரும் பகுதிகளை வென்றிருந்தனர். துருக்கியர்கள் இருமுறை வியன்னாவைத் தாக்கிய போதிலும், அவர்களால் அந்நகரைப் பிடிக்க இயலவில்லை. அவர்கள் கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில்; அங்கேரியிலிருந்து விரட்டப்பட்டனர்.

பொகீமியாவிலிருந்த பிராட்டசுடண்டுக் கிறித்தவர்கள் கி.பி. 1618-ஆம் ஆண்டில் ஆப்சுபர்க்கு அரசருக்கெதிராகக் கலகம் செய்தனர். ஆனால், அவர்கள் கி.பி. 1620-இல் தோற்கடிக்கப்பட்டனர். இக்கலகமே முப்பதாண்டுப் போரின் (கி.பி. 1618-1648) தொடக்கமாகும். சமயத்திற்காகவும் அரசியல் காரணங்களுக்காகவும் தொடங்கப்பட்ட இப்போர்களில் பெரும்பாலான ஐரோப்பிய நாடுகள் பங்கு பெறலாயின. முப்பதாண்டுப் போரை வெசுடுப்பேலியா (Westphalia) உடன்படிக்கை முடிவுக்குக் கொணர்ந்தது. அதன்படி ஒவ்வொரு செருமானிய அரசரும் அவருடைய நாட்டின் சமயத்தை உறுதிப்படுத்தும் அதிகாரத்தைப் பெற்றார். ஆப்சுபர்க்கு அரசர்கள், இவ்வகையில் கத்தோலிக்கச் சமயத்தைத்தம் நாடுகளில் நிலைநாட்டினர்.

இசுபெயின் நாட்டின் கடைசி ஆப்சுபர்க்கு மன்னர், கி.பி. 1700-ஆம் ஆண்டில் காலமானார். இக்காலத்தில் ஆசுத்திரியாவும் பிரான்சும் இசுபானிய அரசுக்கு உரிமை கொண்டாடின. அதன் விளைவாக எழுந்ததுதான் இசுபானிய வாரிசுரிமைப் போர் (1701-1714). ஆசுத்திரியா, பெல்சியத்தையும் இசுபெயினுக்குச் சொந்தமாயிருந்த இத்தாலியப் பகுதிகளையும் பெற்றது. பிரான்சு இளவரசர் ஒருவர், இசுபெயின் அரசரானார்.

ஆசுத்திரியப் பெருங்கோமகனான ஆறாம் சார்லசு, கி.பி. 1711-ஆம் ஆண்டில் புனித உரோமானியப் பேரரசரானார். அவருக்கு மூன்று பெண்மக்கள், இருந்தனர்; ஆண்வாரிசு இல்லை. பழைய ஐரோப்பியச் சட்டம் ஒன்றின்படி அரசுரிமையைப் பெண்ணொருத்தி பெற முடியாது என்ற நிலையிருந்தது. ஆனால், கி.பி. 1713-இல் சார்லசு, பேரரசனின் தனிக்கட்டளை ஒன்றைப் பிறப்பித்தார். அதன்படி அவர் தம் மூத்த மகள் மேரியா தெரசாவை (Maria Theresa) ஆப்சுபர்க்குச் சொத்துகளுக்கு வாரிசாக அமர்த்தினார். ஐரோப்பிய நாடுகள் அதை ஏற்றுக் கொள்வதாக வாக்களித்தன.

ஆறாம் சார்லசு கி.பி. 1740-இல் காலமான போது, பல நாடுகள் முன்னர்க் கொடுத்த வாக்குறுதியை மீறி, மேரியா தெரசா அரசாளும் உரிமையை ஏற்க மறுத்தனர். அவர்கள் கி.பி. 1740-1748-ஆம் ஆண்டுகளில் நடைபெற்ற ஆசுத்திரிய வாரிசுரிமைப் போரின்போது, மேரியா தெரசாவின் நிலப்பகுதிகளைக் கைப்பற்ற முயன்றனர். அப்போது நடைபெற்ற போரில் மேரியா தெரசா, சைலீசியா (Silesia) என்னும் பகுதியைப் பிரசியாவுக்குக் கொடுக்க வேண்டியவரானார். ஐரோப்பிய நாடுகள், அவளை ஆசுத்திரியா, பொகீமியா, அங்கேரி ஆகிய பகுதிகளின் அரசியாக ஏற்றுக் கொண்டன. ஏழாண்டுப் போரின் போது (கி.பி. 1756-1763), மேரியா தெரசா சைலீசியாவைத் திரும்பப் பெற முயன்றும் வெற்றி பெறவில்லை.

ஆசுத்திரியா கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் நெப்போலியனுடன் நடைபெற்ற போர்களின் போது பெரும் பகுதிகளை இழந்தது. இப்போர்களின்போது முதலாம் நெப்போலியன், ஆசுத்திரியாவுடன் போரிட்டதுடன் இங்கிலாந்து, பிரசியா, உருசியா ஆகிய நாடுகளின் கூட்டுடனும் மோதினார். புனித உரோமானியப் பேரரசின் பெரும் பகுதிகளை நெப்போலியன் வெற்றி கண்டதுடன், கி.பி. 1806-ஆம் ஆண்டில் போரரையே ஒழித்துவிட்டார். புனித உரோமானியப் பேரரசராயிருந்த இரண்டாம் பிரான்சிசின் பட்டப் பெயரான பெருங்கோமகன் என்பது, கி.பி. 1804-இல் ஆசுத்திரியாவின் பேரரசர்

என்றாக்கப்பட்டது. அவர் கி.பி. 1806-ஆம் ஆண்டுக்குப் பின்னர் ஆசுத்திரியாவின் பேரரசர் முதலாம் பிரான்சிசு என்னும் பெயருடன் அரசாண்டார்.

**மெட்டர்நிக்கும் புரட்சியும்:** ஆசுத்திரியாவின் அரசியலில் கி.பி. 1814-க்கும் 1848-க்கும் இடைப்பட்ட காலத்தில் தலைவராக விளங்கியவர் மெட்டர்நிக்கு **(Metternich)** என்பவராவார். அவர் வெளியுறவு அமைச்சராகப் பதவி வகித்தவர். வியன்னா மாநாட்டில் மெட்டர்நிக்கு அரும்பாடுபட்டார். நெப்போலியனுடன் நடந்த போர்களுக்குப் பின்னர், ஐரோப்பாவின் அரசியல் தலைவர்கள், இம்மாநாட்டில் புதியதொரு அமைதி உடன்படிக்கையைச் செய்து கொண்டனர். முன்னர் இழந்த பகுதிகளில் சிலவற்றை இம்மாநாடு, ஆசுத்திரியாவுக்குத் திரும்பக் கொடுத்தது. ஆனால் ஆசுத்திரியா, பெல்சியத்தை விட்டுக் கொடுக்க வேண்டியதாயிற்று. செருமானியக் கூட்டமைப்பு ஒன்றின் மூலம், செருமனியில் இருந்த சுதந்திர நாடுகளை இம்மாநாடு, புதிதாக உருவாக்கியது. ஆசுத்திரியாவும் பிரசியாவும் இக்கூட்டமைப்பின் தலைமைக்காகச் சச்சரவிட்டுக் கொண்டன.



மெட்டர்நிக்கு

கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஐரோப்பாவெங்கும் மக்களாட்சி, தேசிய உணர்வு போன்ற கோட்பாடுகளின் அடிப்படையில், புத்தெழுச்சி பிறந்தது. பல பகுதிகளில் புரட்சிகள் வெடித்தன. மெட்டர்நிக்கு ஆசுத்திரியப் பேரரசில் கிளம்பிய எல்லா மக்களாட்சி இயக்கத்தையும் பிற தேசிய எழுச்சி இயக்கங்களையும் கடுமையாக அடக்க முயன்றார். ஆனால், கி.பி. 1848-ஆம் ஆண்டு புரட்சி பிரான்சில் தொடங்கி, பொகிமியா, அங்கேரி, வியன்னா ஆகிய நகரங்களிலும் பரவியது. வியன்னாவில் புரட்சிக்காரர்கள், மெட்டர்நிக்குப் பதவி விலகவேண்டுமென்றும், நாட்டில் அரசியல் அமைப்புத்திட்ட அடிப்படையில் நிறுவப்பெற்ற அரசு வேண்டுமென்றும் கூறினர். மெட்டர்நிக்கு இங்கிலாந்திற்குத் தப்பியோடினார். ஆசுத்திரியாவின் கட்டுப்பாட்டின் கீழிருந்த இத்தாலிப் பகுதிகளிலும் கலவரங்கள் மூண்டன. ஆனால், கி.பி. 1851-ஆம் ஆண்டில் ஆசுத்திரியப் பேரரசில் எழுந்த அனைத்துக் கலவரங்களையும் ஆசுத்திரிய இராணுவம் அடக்கியது.

அடுத்துவந்த ஆண்டுகளில் இத்தாலியிலும் செருமனியிலும் தோன்றிய ஒருமைப்பாட்டு இயக்கங்களின் விளைவாகப் பேரரசு வலுவிழந்தது. இத்தாலியில் அமைந்திருந்த பல நாடுகளில், சார்டீனியா **(Sardinia)** அரசரின் தலைமையில் தேசிய ஒருமைப்பாடு வேண்டுமென மக்கள் விழைந்தனர். சார்டீனியா மீது ஆசுத்திரியா கி.பி. 1859-ஆம் ஆண்டில் போர் தொடுத்தது.

இத்தாலிய-பிரெஞ்சுப் படைகள் ஆசுத்திரியப் படைகளைத் தோற்கடித்தன. இத்தோல்வியின் விளைவாக வட இத்தாலியிலிருந்த இலம்பார்டி**(Lombardy)** அரசினை ஆசுத்திரியா விட்டுக் கொடுத்ததுடன் ஏனைய இத்தாலிய நாடுகளிலும் செல்வாக்கினை இழக்கலாயிற்று. செருமனியிலும் அதன் வட பகுதி அரசுகளை பிரசியா தன் ஆதிக்கத்தின் கீழ் இணைக்க முயன்றது. சிறு சிக்கலின் விளைவாகக் கி.பி. 1866-ஆம் ஆண்டில் எழுந்த ஏழு வாரப் போரின்போது இத்தாலியும் பிரசியாவும் விரைவாக ஆசுத்திரியாவைத் தோற்கடித்தன. செருமானியக் கூட்டமைப்புக் கலைக்கப் பட்டது. ஆசுத்திரியாவைத் தவிர்த்து விட்டு, பிரசியா புதியதொரு கூட்டமைப்பினை உருவாக்கியது.




1914-இல் ஆசுத்திரியா அங்கேரி

**ஆசுத்திரியா-அங்கேரி:** அங்கேரியர்கள் கி.பி. 1867-ஆம் ஆண்டு பேரரசர் பிரான்சிசு சோசப்பை

வற்புறுத்தி, அங்கேரிக்கு ஆசுத்திரியாவைப் போன்ற சம மதிப்பினைப் பெற்றனர். அதன் மூலம் ஏற்பட்டதுதான் ஆசுத்திரியா-அங்கேரியில் ஏற்பட்ட இரட்டை முடியாட்சி அமைப்பு முறையாகும். இம்முறையால் ஆசுத்திரியப் பேரரசும் அங்கேரி அரசும் பிரான்சிசு சோசப்பின் மேலுரிமையை ஏற்றுக் கொண்டன. வெளியுறவு, இராணுவ, பொருளாதார விவகாரங்கள் போன்றவற்றை இருநாடுகளும் இணைந்தே செயற்பட ஒப்புக் கொண்டன. ஆனால், ஒவ்வொரு நாடும் மேற்கூறப்பட்ட துறைகளைத் தவிர்த்து. ஏனைய துறைகளில் அதனதன் அரசியல் அமைப்புத் திட்ட அரசாங்கத்தின் அடிப்படையில் செயற்பட்டன.

ஆசுத்திரியா-அங்கேரியில் வாழ்ந்த இசுலாவு இனமக்களும், ஏனைய சிறுபான்மைக் குழுவினரும் கி.பி.பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் தங்களைத் தாங்களே ஆண்டு கொள்ளும் தன்னுரிமையை வேண்டினர். அங்கேரியின் தென்பால் அமைந்திருந்த இசுலாவிய இனமக்கள் செருபியா (Serbia) பகுதியில், இசுலாவிய தேசிய இயக்கத்தைத் தொடங்கினர். செருபிய தேசியவாதி ஒருவன், 1914-ஆம் ஆண்டில் ஆசுத்திரிய அங்கேரிய அரியணையின் வாரிசான கோமகன் பிரான்சிசு பெர்டினான்டு என்பாரைக் கொலை செய்தான். இதன் பயனாக ஆசுத்திரியா-அங்கேரி, செருபியாவின்மீது போர் தொடர்ந்தது. இதுவே முதல் உலகப் போரின் தொடக்கமாகும் (1914-1918). செருமானியும் ஏனைய நாடுகளும் ஆசுத்திரியா-அங்கேரியுடன் சேர்ந்து கொண்டு, நேச நாடுகளை எதிர்த்துப் போராடின. நேச நாடுகளில் பிரிட்டன், பிரான்சு, உருசியா, அமெரிக்க ஐக்கிய நாடு ஆகியவை இணைந்திருந்தன.

முதல் உலகப் போரினால் ஆசுத்திரியா அங்கேரி தோல்வியுற்று, 1918-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 3-ஆம் நாள் அமைதி உடன்படிக்கை கையெழுத்தாயிற்று. ஆப்சுபர்க்கு அரசக் குடும்பத்தின் இறுதிப் பேரரசர் நவம்பர் 12-ஆம் நாள் பதவியிலிருந்து இறக்கப்பட்டார். ஆசுத்திரியா குடியரசு நாடாயிற்று. ஆசுத்திரியர்களுள் பலர் ஆசுத்திரியாவைச் செருமானியின் பகுதியாக்க வேண்டுமென விழைந்தவர். ஆனால் செயிண்ட் செருமேய்ன் (Saint Germain) உடன்படிக்கை அத்தகைய இணைப்பை ஏற்றுக்கொள்ளவில்லை. இவ்வுடன்படிக்கை ஆசுத்திரியாவுக்கும் நேசநாடுகளுக்குமிடையே கி.பி. 1919-ஆம் ஆண்டு கையெழுத்தாயிற்று. இன்றைய ஆசுத்திரியாவின் எல்லைகளையும் இவ்வுடன்படிக்கையே வரையறுத்தது. ஆசுத்திரியா, மக்களாட்சி அடிப்படையில் அரசியலமைப்பு முறை அரசாங்கத்தை 1920-ஆம் ஆண்டில் நிலைநாட்டியது.

முதல் உலகப் போருக்குப் பின்னர், ஆசுத்திரியாவில் பல அரசியல் சிக்கல்கள் எழுந்தன. கிறித்தவ சமூகக் கட்சிக்கும், சமூக மக்களாட்சிக் கட்சிக்குமிடையே இருந்த வேறுபாடுகளின் அடிப்படையில் கிளர்ந்தவையே மேற்கூறிய அரசியல் சிக்கல்கள். ஒவ்வொரு கட்சியும் தனியார் இராணுவத்திற்கு ஆதரவு நல்கின. இந்த இராணுவங்கள் அடிக்கடிக் கடுமையாக ஒன்றுடன் ஒன்று தாக்கிக் கொண்டதுடன், ஆசுத்திரிய நாசிக் கட்சி எனப்படும் மூன்றாம் குழுவுடனும் மோதிக் கொண்டன. நாசிக் கட்சி ஆசுத்திரியாவைச் செருமனியுடன் இணைக்க விரும்பியது.

கிறித்தவ சமூகக் கட்சியைச் சார்ந்த தலைமை அமைச்சர் எங்கல்பர்ட்டு தோல்பசு (Engelbert Dollfuss) என்பவர் 1933-ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் நாடாளுமன்றத்தை ஒத்திவைத்தார். இதன் விளைவாக அவர்தம் ஆதரவாளருக்கும், சமூக மக்களாட்சிக் கட்சியினருக்குமிடையே நான்கு நாள்கள் (1934 பிப்பிரவரி) போர் மூண்டது. கிறித்துவ சமூகக் கட்சியினர் போரில் வென்றனர். பின்னர்த் தோல்பசு வல்லாட்சியாளராக ஆசுத்திரியாவை ஆண்டார். நாசிக் கட்சி ஆசுத்திரியாவைச் செருமனியுடன் இணைக்க விழைந்ததைத் தீவிரமாக எதிர்த்த தோல்பசைக் கி.பி. 1934 சூலை மாதத்தில் நாசிகள் கொன்றனர். தோல்பசை அடுத்து கேர்ட் வான் சுசினிங்கு (Kurt Van Schusching) பதவியேற்றார். அவரும் ஆசுத்திரியா தனி நாடாக இருப்பதையே விழைந்தார்.

செருமானியப் படைகள் ஆசுத்திரியாவை 1938 ஆம் ஆண்டில் கைப்பற்றின. அடால்பு இட்லர் அப்போது செருமனி வல்லாட்சியாளராக இருந்தார். அவர் ஆசுத்திரியாவும் செருமனியும் இணைந்து விட்டதாக அறிவித்தார். இட்லரின் பேரரசு 1939-ஆம் ஆண்டில் தொடங்கிய இரண்டாம் உலகப் போருக்கு வழிவகுத்தது. பிரான்சு, பிரிட்டன், உருசியா, அமெரிக்க ஐக்கிய நாடு ஆகிய வல்லரசுகளை உள்ளிட்ட நேச நாடுகளால் 1945-ஆம் ஆண்டு செருமனி தோற்றது.

இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் அமெரிக்கா, பிரிட்டன், பிரான்சு, உருசியா ஆகிய நான்கு நாடுகளும் தத்தம் பிடிக்குள் கிடைத்த ஆசுத்திரியப் பகுதிகளைத் தம் வசம் வைத்துக் கொண்டன. ஆனால், வெற்றி பெற்ற மேற்கூறிய நான்கு நாடுகளும் ஆசுத்திரியாவில் ஒரே ஒரு தற்காலிக அரசாங்கம் நிலைநாட்டப்படுவதை ஏற்றுக் கொண்டன. அவ்வரசு 1920-ஆம் ஆண்டில் ஏற்றுக்கொள்ளப் பெற்

றிருந்த அரசியல் அமைப்புத் திட்டத்தின் அடிப்படையில் பணியாற்றத் தொடங்கியது. ஆசுத்திரியாவில் 1945 நவம்பர் மாதத்தில் நடைபெற்ற தேர்தலை அடுத்து அங்குத் தேசிய அரசாங்கம் ஒன்று உருவாக்கப்பட்டது. அவ்வரசாங்கத்தில் இரு கட்சியின் தலைவர்களும் பங்கு கொண்டனர். இவ்விரு கட்சிகளின் கூட்டாட்சி அரசாங்கத்தால் நாட்டில் நிலையான அரசியலுக்கு வழி பிறந்தது. வல்லரசுகளும் 1955-ஆம் ஆண்டு ஆசுத்திரியாவைக் கைவிட்டன. சுதந்திரத்தைப் பெறும் பொருட்டு ஆசுத்திரியா நடுநிலைமை நாடாக இருக்க ஏற்றுக்கொண்டது. ஆசுத்திரியா, 1955-ஆம் ஆண்டின் பிற்பகுதியில் ஐக்கிய நாடுகள் அவையில் சேர்ந்தது.

ஆசுத்திரியாவில் 1966-ஆம் ஆண்டு வரை கூட்டாட்சி அரசாங்கங்களே நீடித்தன. அந்த ஆண்டில் மக்கள் கட்சியின் தலைவரான சோசபு கிளாசு (**Josef Klaus**) என்பார் பெரும்பான்மை இடங்களைப் பெற்று ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டார். பின்னர் 1970-ஆம் ஆண்டுத் தேர்தலில் சமதருமக் கட்சிக்குப் (**Socialist Party**) பெரும்பான்மை இடங்கள் கிடைக்காவிட்டாலும் வலிமை மிகுந்த கட்சியாக மாறியது. அக்கட்சி, ஆசுத்திரியாவின் முதல் சமதரும அரசாங்கத்தை நிலைநாட்டியது. புரூனோ கிரிசுக்கி (**Bruno Kreisky**) தலைமை அமைச்சரானார். சமதருமவாதிகள் 1971-ஆம் ஆண்டுத் தேர்தலில் நாடாளுமன்றத்தில் பெரும்பான்மை பெற்று கட்சியை நிறுவினர். பின்னர் 1975, 1979 ஆண்டுகளில் நடைபெற்ற தேர்தல்களிலும் அவர்களே ஆட்சியைப் பிடித்தனர்.

ஆசுத்திரியா தொடர்ந்து நடுநிலை நாடாகவே திகழ்கிறது. அதன் தலைநகரான வியன்னாவில் ஐக்கிய நாடுகளின் இரு அமைப்புகள் இயங்குகின்றன. அவை (1) பன்னாட்டு அணுசக்தி நிறுவனம், (2) ஐக்கிய நாடுகள் தொழில் வளர்ச்சி நிறுவனம். ஐக்கிய நாடுகளின் மையம் 1979 இல் சொந்தக் கட்டடத்தையே வியன்னாவில் கட்டிக் கொண்டுள்ளது. இங்கு ஐக்கிய நாடுகளின் மாநாடுகள் பல கூடும். குர்ட்டு வால்தைம் (**Kurt Waldheim**) என்னும் ஆசுத்திரிய நாட்டு அறிஞர் ஐக்கிய நாடுகளின் பொதுச் செயலாளராக 1972 இல் தேர்ந்தெடுக்கப்பட்டு அண்மையில் அப்பதவியிலிருந்து ஓய்வுபெற்றார். சமதருமக் கட்சி 1982-இலும் ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டு இன்று தொடர்ந்து பதவியில் உள்ளது.

**துணை நூல்கள்:**


**Leeper, Alexander W.A., A History of Mediaeval Austria, New York and London, 1941.**

**Taylor, Alan J.P., The Habsburg Monarchy, 1809-1918, London, 1948.**

**Taylor, Alan J.P., A History of the Austrian Empire and Austria-Hungary, London, 1948.**

**Graf, Max., The Legernd of a Musical City, New York, 1945.**


**ஆசுத்திரேலியா** ஒரு கண்டம். உலகில் ஒரு கண்டமே ஒரு நாடாக இருப்பது ஆசுத்திரேலியா (**Australia**) மட்டும்தான். பரப்பளவில் இது உலகில் ஆறாவது பெருநாடாகும். ஆனால், கண்டங்களில் மிகச்சிறியது இதுவே. இந்தியப் பெருங்கடலுக்கும் தென் பசிபிக்குப் பெருங்கடலுக்கும் இடையில் ஆசுத்திரேலியா அமைந்துள்ளது. ஆசுத்திரேலியா என்னும் பெயர் ஆசுட்ராலிசு (**Australis**) என்னும் இலத்தீன் சொல்லிலிருந்து பிறந்தது. 'ஆசுட்ராலிசு' என்றால் 'தெற்கு' என்று பொருள். உலக உருண்டையின் தென்பாதியில் அமைந்துள்ளதால் இப்பெயர் பெற்றது போலும்.

ஆசுத்திரேலியா வறண்டதும், மக்கள் தொகை மிகக் குறைந்ததுமான நாடாகும். இக்கண்டம் தெற்கு வடக்காக 3153 கி.மீ. கிழக்கு மேற்காக 4005 கி.மீ. பரந்துள்ளது. தாசுமேனியாவை (**Tasmania**) உள்ளிட்ட இக்கண்டத்தின் பரப்பளவு 76,86,413 கி.மீ.

ஆசுத்திரேலியா — அரசியல் பிரிவுகள்

**இயற்கைப் பிரிவுகள்:** ஆசுத்திரேலியாவை மூன்று பெரும் இயற்கைப் பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

அவை 1. கிழக்கு மேட்டு நிலங்கள், 2. மத்திய தாழ்நிலங்கள், 3. மேற்குப் பீடபூமி என்பனவாம்.

கிழக்கு மேட்டு நிலங்கள் ஆசுத்திரேலியாவின் மிக உயர்ந்த மலைத்தொடர்களைக் கொண்டுள்ளன. வடக்கே யார்க்கு முந்நீரக முனையிலிருந்து தெற்கே தாசுமேனியாக் கடற்கரை வரை நீண்டுள்ளது இப் பிரிவு. இப்பிரிவின் தென்கிழக்கு மூலையில், பிரிசு பேனிலிருந்து மெல்போர்ன் வரையிலுள்ள பகுதியில் தான் ஆசுத்திரேலியாவின் பெரும்பாலான மக்கள் வாழ்கிறார்கள். கிழக்கு மேட்டுநிலங்களைப் பெரும் பிரிவு மலைத்தொடர்கள் (Great Dividing Range) என்றும் குறிப்பர். மேட்டுநிலங்கள் என்று குறிக்கப் பட்டாலும் இது ஒரு மலைத்தொடராகவோ மலைப் பாங்கானதாகவோ இல்லை என்பதையும் நினைவிற் கொள்ளவேண்டும். இப்பிரிவில்தான் ஆசுத்திரேலியா வின் மிக உயர்ந்த மலையான காசியசுகோ (2228 மீட்டர்) அமைந்துள்ளது.

மத்திய தாழ்நிலங்கள் ஆசுத்திரேலியாவில் மிகக்




ஆசுத்திரேலியா - இயற்கைப் பிரிவுகள்

குறைந்த உயரமுடையவை. இப்பகுதி பொதுவாகத் தட்டையாகத் தென்படும். பெருமழைக்குப் பின்னர்ப் பல ஆறுகள் இப்பகுதியின் வழியாகத்தான் பாய்கின்றன. மத்திய தாழ் நிலங்களின் தென் பகுதியில் வாழும் உழவர்கள் கோதுமை விளைவிக்கிறார்கள். இப்பகுதியில் புல்வெளிகள் நிறைய இருப்பதால் இங்குக் கால்நடைகளுக்கான மேய்ச்சல் தரைகள் மிகுதியாக உள்ளன. இப்பகுதியில்தான் ஆசுத்திரேலியாவின் மிகத் தாழ்ந்த ஏர் ஏரி அமைந்துள்ளது. இது கடல் மட்டத்தை விட 16 மீ. தாழ்ந்ததாகும்.

மேற்குப் பீடபூமி ஆசுத்திரேலியாவின் மூன்றில் இரண்டு பங்கு பகுதியை உள்ளடக்கியுள்ளது. இப்பகுதியின் நடுப்பிரிவில் பாலைவனங்கள் பரந்துள்ளன. பாலைநிலத்தை அடுத்துள்ள நிலங்களில் புல்வெளிகள் உள்ளமையால், அவற்றிலுள்ள புல் கால்நடைகளுக்குத் தக்க தீவனமாகிறது. இப்பீடபூமியில் அடிலேய்டு, பெர்த்து என்னும் இரு பெரும் நகரங்கள் அமைந்துள்ளன.

**மலைகள்:** கிழக்கு மேட்டு நிலங்களின் தென் பகுதி மூலையில் ஆசுத்திரேலியாவின் மிக உயர்ந்த மலையான ஆசுத்திரேலிய ஆல்ப்சு மலை அமைந்துள்ளது. ஆசுத்திரேலிய ஆல்ப்சு பல தொடர்களைக் கொண்டது. அங்குள்ள பனிமலை சிறப்பானது. இப்பனிமலையில்தான் காசயசுகோ என்னும் மலையுச்சி உள்ளது. மத்திய ஆசுத்திரேலியாவில்மக்டொனால்டு, மசுரேவு ஆகிய மலையுச்சிகளும் உள்ளன.

**ஆறுகள்:** இந்நாட்டு மக்களின் நல்வாழ்விற்கு உறுதுணை நிற்கும் மூல வளங்களாக ஆறுகள் திகழ்கின்றன. ஆறுகள், நகரங்களுக்கும் மா நகரங்களுக்கும் குடிநீர் கொடுக்கின்றன; ஆனால், அவ்வாறுகளில் ஆண்டு முழுவதும் தண்ணீர் ஓடுவதில்லை; மழைக் காலங்களில் நீர் நிரம்பி ஓடும்; கோடைக்காலத்தில் வறண்டுவிடும். வட ஆசுத்திரேலியாவில் மழைக்காலம் கோடைப் பருவத்திலும், தென் ஆசுத்திரேலியாவில் மழைக்காலம் குளிர்காலத்திலும் தொடங்குகிறது. பெரும் ஆறுகளுக்குக் குறுக்கே கட்டப் பெற்றுள்ள அணைகளும் நீர்த்தேக்கங்களும் வறண்ட காலத்தில் பயன்படுகின்றன.

மர்ரே ஆறு இந்நாட்டின் நீண்டதும், நீர் வற்றாத்துமாகும். பனிமலையில் தோன்றி அடிலேய்டு மாநகருக்கருகில் கடலில் கலக்கும் இந்த ஆறு 2750 கி.மீ. நீண்டுள்ளது. இதன் துணையாறுகளுள் சிறப்பானது தார்லிங்கு **(Darling)** ஆறாகும். குளிர்காலத்தில் தார்லிங்கு ஆறு வறண்டுவிடும்.

சிறிய ஆறுகளுள் சில ஏரியில் பாய்கின்றன. வடக்கே கார்பெண்டேரியா வளைகுடாவில் பல வட ஆறுகள் வீழ்கின்றன.

**ஏரிகள்:** இந்நாட்டிலுள்ள ஏரிகள் செயற்கையாக உருவாக்கப் பெற்றவை. மேற்கு ஆசுத்திரேலியாவில் உள்ள ஆர்கைல் ஏரியும், தாசுமேனியாவிலுள்ள கார்டன் ஏரியும் சிறப்பானவை.




ஆசுத்திரேலியா - ஆறுகள்

**தட்பவெப்பநிலை:** இந்த நாடு உலக உருண்டையின் தென்பாதியில் அமைந்திருப்பதால், இங்குக் குளிர்காலம் சூலைமாதத்திலும் கோடைக்காலம் திசம்பர் மாதத்திலும் வருகிறது. ஆசுத்திரேலியா கண்டத்தின் மூன்றிலொரு பங்கு மகரரேகைக்கு வடபாலில் உள்ளதால், அப்பகுதியில் வெப்பமண்டலத் தட்பவெப்பநிலை நிலவுகிறது. வடகடற்கரையிலுள்ள மார்வின் நகரத்தில் (27° செ.) ஆசுத்திரேலியாவின் ஏனைய பகுதிகளில் காணப்படும் மிதமான தட்பவெப்பநிலையே காணப்படுகிறது. கோடைக்காலம் பொதுவாக வெப்பமாகவும், குளிர்காலம் மிதமாகவும் இருக்கிறது.

**மழை:** இந்த நாட்டின் பெரும்பகுதிகள் போதுமான மழையைப் பெறுவதில்லை. சிலவிடங்களில் அவ்வப்போது வறட்சிநிலை தோன்றுகிறது. ஏனைய விடங்களில் வறட்சி அவ்வப்பருவங்களில் தோன்றும்; மழையின்மையே ஆசுத்திரேலியாவின் மக்கள்தொகை குறைவிற்குக் காரணம். தாசுமேனியாவிலும் ஆசுத்திரேலிய ஆல்ப்சு மலையுச்சியிலும் பனி மூடியுள்ளது. இக்கண்டம் மூன்றிலொரு பங்கு பாலைநிலமாக இருப்பதால், அப்பகுதியில் ஆண்டில் 25 செ.மீ.க்குக் குறைவாகவே மழை பெய்கிறது. பாலைநிலங்கள்

மிகுந்த வறட்சியால் பாதிக்கப்பட்டுள்ளமையால் இங்குக் கால்நடைகள் மேய்ச்சலுக்குக் கூடப் புல் கிடைப்பதரிது. ஆசுத்திரேலியாவின் ஏனைய பகுதியில் ஆண்டொன்றுக்கு 50 செ.மீ. மழை பெய்கிறது. நீர்ப்பாசன வசதியில்லையேல் இங்கு விளைபொருள்களை விளைவிப்பது இயலாது. வடக்கு, கிழக்கு, தென்கிழக்கு, தென்மேற்குக் கடற்கரை போன்ற பகுதிகளில் நல்ல மழை பெய்கிறது. குவின்சுலாந்து மாநிலத்தின் கிழக்குக் கடற்கரையே ஆசுத்திரேலியாவில் பலத்த மழைபெறும் பகுதியாகும். இக்கடற்கரையை அடுத்துள்ள பட்டினங்கள் சில, ஆண்டொன்றுக்கு 380 செ.மீ.க்கு மேல் மழைபெறுகின்றன.

**விலங்குகள்:** இந்நாட்டு விலங்குகள் மற்றக் கண்டங்களில் காணப்படும் விலங்குகளிலிருந்து மாறுபட்டவை. கங்காரு, கூலா (Koala), வாலபி, வாம்பட்டு, பைப்பாலூட்டிகள் போன்றவை ஆசுத்திரேலியாவின் சொந்த விலங்குகள், பைப்பாலூட்டிகள் குட்டி போட்டுப்பால்கொடுக்கும் இனத்தவை. ஆசுத்திரேலியாவில் நூற்றைம்பது வகைப் பைப்பாலூட்டிகள் இருக்கின்றன. பிளாட்டிபசு என்னும் வாத்தின் அலகைக் கொண்ட நீர்வாழ்விலங்கும், எக்கிட்னா என்னும் முள்ளெலி போன்ற குழிபறிக்கும் பல்லில்லாத விலங்கும் ஆசுத்திரேலியாவில் மட்டும் காணப்படும் வியப்பான விலங்கினங்கள் ஆகும். எனினும் கங்காருவே ஆசுத்திரேலியாவின் தேசிய விலங்காகக் கருதப்படுகிறது.

இங்குச் சற்றேறக்குறைய எழுநூறு வகைப் பறவையினங்கள் உள்ளன. அவற்றுள் கருப்பு அன்னம், கக்கூட்டு என்னும் நாட்டுக்கிளி, பாராகித்து என்னும் நீண்டவாலுடைய சிறுகிளி, மற்றும் ஏனைய கிளி வகைகள் பறவைகளுள் சிறப்பானவை. ஈமு, காசாவரி பறக்காத பறவையினத்தவை. அவற்றை ஆசுத்திரேலியாவில் மட்டுமே காணலாம். கூக்கபுரா என்பது பெரும் மீன்கொத்திப் பறவையாகும்.

இந்நாட்டில் ஏறத்தாழ 140 பாம்பு வகைகளும், 340 பல்லி வகைகளும் உள்ளன. பெரும்பாலான பாம்புகள் நஞ்சுடையவை. தைப்பான் (Taipan), புலிப்பாம்பு (Tiger snake) ஆகிய இருவகைப் பாம்புகள் உலகிலேயே கொடிய நஞ்சு கொண்டவை. பல்லியினங்கள் அனைத்தும் நஞ்சற்றவை.

**மரவினங்கள்:** இந்நாட்டில் இருவகை நாட்டு மரங்களைச் சிறப்பாகக் காணலாம். அவை வேலமரங்களும் (Acacias) யூகலிப்டசு என்னும் தைலமரங்களும் ஆகும். வறண்ட நிலப்பகுதிகளில் புதர்ச் செடிகளையும் மழைநீர் பெறுமிடங்களில் மரவகைகளையும் பொதுவாகக் காணலாம்.

இங்கு 700 வகையான வேலமரங்கள் உள்ளன. பலவற்றிற்குப் பளபளப்பான மலர்களும் உண்டு. முட்புதர்களும் எண்ணற்றன. சில்வர் வேட்டல், (Silver wattle), பிளாக்வுட்டு (Black wood) என்பன நீண்ட மரவகைகள். யூகலிப்டசு நாடுமுழுதும் காணப்படுவதாகும். இந்நாட்டில் ஏறத்தாழ 500 வகை யூகலிப்டசு மரங்கள் உள்ளன. அவற்றின் இலைகளில் மணக்கும் எண்ணெய் எடுக்கிறார்கள். யூகலிப்டசு மரங்களே இந்நாட்டின் மிக உயர்ந்த மரங்கள். ஆசுத்திரேலியர்கள் அவற்றைப் பிசின் மரங்கள் என்பர். மலை ஆசு (Mountain ash) காரி என்னும் இருவகை மரங்கள் 91 மீ. உயரம் வரை வளருகின்றன. ஆசுத்திரேலியாவில் பலவகைப்பட்ட புல்லைக் காணலாம். மிச்சல்புல் கால்நடைகளுக்கு நல்ல தீவனமாகும்.

இந்நாட்டில் ஆயிரக்கணக்கான காட்டுமலர்களும் உள்ளன. அவற்றுள் பல பாலைநிலங்களில் மலருபவை. அவற்றின் விதைகள் நிலத்தில் பொதிந்துகிடக்கும். கனமழைக்குப் பின்னர் அவை புத்துயிர்பெற்று முளைக்கும். அத்தகைய காலங்களில் பாலைநிலங்கள் விதவிதமான மலர்களால் கம்பளம் விரித்தாற்போல் எழிலாகக் காணப்படும்.

**புதிதாகப் புகுத்தப்பெற்ற விலங்குகள்:** ஆசுத்திரேலியாவில் தொடக்ககாலம் முதல் முதன்முறையாகக் குடியேறியவர்கள் வரும்வரை, வாழ்ந்த விலங்குகள் பாலூட்டிகள், வௌவால், எக்குட்னா, சுண்டெலி, பிளாட்டிபசு, எலி, பலவகையான மதலைப்பையுடைய உயிரின வகைகள் ஆகும். இங்குக் குடியேறிய பழங்குடிமக்கள் 'திங்கோ' (Dingo) என்னும் ஒரு வகை நாயைத் தம்முடன் கொண்டு வந்தனர். அவற்றுள் சில அவர்களிடமிருந்து தப்பியோடி முரட்டு விலங்குகளாகிவிட்டன. அவற்றின் வழிவந்தவை இன்று கொடிய விலங்குகளாகமாறி, ஏனைய விலங்குகளை அடித்துக் கொன்று உணவாகக் கொள்கின்றன. பூனைகள், மாடுகள், மான்கள், நரிகள், ஆடுகள், குதிரைகள், பன்றிகள் முயல்கள், செம்மறியாடுகள் போன்றவை ஐரோப்பாவிலிருந்து வந்து குடியேறியவர்களால் ஆசுத்திரேலியாவில் புகுத்தப்பட்ட பாலூட்டிகள். காலப்போக்கில் குடியேற்றவாதிகள் ஒட்டகங்கள், நீர் எருமைகள் போன்ற விலங்குகளையும் பலவகையான பறவைகளையும் நூற்றுக்கணக்கான செடி கொடிகளையும் இக்கண்டத்தில் புகுத்தினர்.

ஒட்டகங்கள், நீர் எருமைகள், மேலும் புதிதாகப் புகுத்தப்பெற்ற விலங்குகள் ஆகியவை முரட்டுவிலங்குகளாகி மற்ற விலங்குகளுக்குத் தொல்லை கொடுத்தன. எனவே அவற்றை அழிப்பதும் தேவையாயிற்று. முரட்டு முயல்கள், சாகுபடியாகும் பயிர்வகைகளை

யும், மேய்ச்சல் தரைகளையும் பெருமளவில் சீரழிக் கவே, அவற்றை நோய் நொடிக்கு ஆளாக்கியும் கொன்றும் குறைத்துவிட்டனர்.



கங்காரு

**பொருளாதாரம்:** உலகிலேயே செல்வச் செழிப் பால் வளர்ச்சியுற்ற நாடுகளுள் ஒன்று ஆசுத்திரேலியா. ஆசுத்திரேலியாவின் செல்வச்செழிப்புக்குக் காரணம் அதன் வேளாண்மையும் சுரங்கத் தொழிலுமேயாம். இக்கண்டத்திலும் பல பொருள்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. ஆனால், அவை உள்நாட்டுத் தேவைகளையே நிறைவு செய்கின்றன. செல்வச் செழிப்பு ஏற்றுமதிப் பொருள்களால்தான் ஏற்பட முடியும். ஆசுத்திரேலியா பண்ணைப் பொருள்களை யும், கனிமப் பொருள்களையும் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிறது. அதன் வாயிலாக மிகுதியான பொருளைப் பெறுகிறது. இவ்வாறு பெறப்படும் அயற் செலாவணியில் சிறு பாகமே, பண்ணையை வைத்திருக்கும் தோட்டக்காரர்களுக்கும், கனிம நிறு வனங்களுக்கும் செல்கிறது. பெருந் தொகை அப் பொருள்களை நேர்த்தி செய்து விற்பனை செய்யும் நிறுவனங்களுக்குப் போய்ச்சேர்கிறது. இவ்வாறாக வேளாண்மைப் பொருள்கள். கனிமப் பொருள்கள் ஆகியவற்றின் ஏற்றுமதியால் இந்நாட்டின் பொருளா தாரம் பெருகி வளர்ந்துள்ளது. அதன் பயனாக ஆசுத்திரேலியர் பலரின் வாழ்க்கைத்தரம் மிகுதியாக உயர்ந்துள்ளது.

ஆசுத்திரேலியாவுக்கு மூலதனம் வெளிநாடுகளி லிருந்து வருகிறது. கனிம நிறுவனங்கள் பலவற்றுக்கு அமெரிக்கர்களும் ஆங்கிலேயர்களும் ஏனைய அயல் நாடுகளிலிருந்து முதலீடு செய்பவர்களும் பெரும் மூல தனத்தை முதலீடு செய்துள்ளனர்.

**வேளாண்மை:** இந்நாட்டின் பண்ணைகள் பெரும் பாலும் எந்திர சாதனங்களைக் கொண்டுள்ளமையால் அவற்றில் பணிபுரியும் தொழிலாளர் எண்ணிக்கை மிகக் குறைவு. நாட்டின் தொழிலாளர்களுள் ஏழு விழுக்காட்டினரே வேளாண்மைத் தொழிலில் ஈடுபட் டுள்ளனர். எனினும் அவர்கள் நாட்டு மக்களுக்குத் தேவையான அனைத்து உணவுப் பொருள்களையும் உற்பத்தி செய்கிறார்கள்.

வேளாண்மைக்குப் பயன்படும் பண்ணைநிலம் ஆசுத்திரேலியாவின் மொத்தப் பரப்பில் அறுபத் தைந்து விழுக்காடாகும். எனினும் இந்நிலத்தில் பெரும் பகுதி வறண்ட மேய்ச்சல் நிலம்தான் என்ப தையும் நினைவிற் கொள்ளவேண்டும். ஐந்து விழுக் காட்டளவு உணவுப்பொருள்கள் பண்ணைநிலத்தி லேயே பயிரிடப்பெறுகின்றன. ஆனால், உழவர்கள் புதிய எந்திரக் கருவிகளையும் பயன்படுத்திப் பெரு மளவில் உற்பத்தியைப் பெருக்குகிறார்கள். பத்து விழுக்காட்டு விளைநிலமே நீர்ப்பாசன வசதிபெற் றுள்ளது.

இந்நாட்டின் பண்ணைப் பொருள்களில் சிறப் பிடம் பெறுபவை ஆடுமாடுகள், கோதுமை, உரோமம் ஆகியவை. அவற்றையடுத்துப் பால் பண்ணைப் பொருள்கள், பழவகைகள், கரும்பு போன்றவற்றைக் குறிப்பிடலாம். மேற்கூறிய பொருள்களே ஆசுத்திரே லியாவின் ஏற்றுமதிப் பொருள்கள். இந்நாடு உரோம உற்பத்தி செய்து அதை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதில் உலகிலேயே முதலிடம் பெறுகிறது. மாட் டிறைச்சி, சர்க்கரை, கோதுமை ஆகியவை சிறப் பான ஏற்றுமதிப் பொருள்கள். பார்லி, முட்டை, ஆடுகள், செம்மறியாடுகள், காய்கறிகள் ஏனைய ஏற்றுமதிப் பொருள்கள்.

கால்நடைகள், ஆசுத்திரேலிய மாநிலங்கள் அனைத் திலும் வளர்க்கப்பட்டாலும், நியூசௌத்வேல்சும் மேற்கு ஆசுத்திரேலியாவும் இணைந்து நாட்டின் ஐம் பது விழுக்காட்டிற்கு மேற்பட்ட ஆடுகளையும், ஏறத்தாழப் பாதி அளவு உரோமத்தையும் உற்பத்தி செய்கின்றன. குயின்சுலாந்தும் நியூசௌத்வேல்சும் இந்நாட்டில் ஏற்றுமதி செய்யப்படும் மாட்டிறைச்சி யில் பாதிக்குமேல் ஏற்றுமதி செய்கின்றன. விக்டோ ரியா மாநிலம் பால்பண்ணைப் பொருள் உற்பத்தி யில் முதலிடம் பெறுகிறது. அளவான மழையையும், தட்பவெப்ப நிலையையும் கொண்ட நாட்டின் அனைத்துப் பகுதிகளிலும் கோதுமை பயிரானாலும் கூட, நியூசௌத்துவேல்சிலும் மேற்கு ஆசுத்திரேலி

யாவிலும் கோதுமை மிகுதியாகப் பயிராகிறது. குயின்சுலாந்தின் கிழக்குக் கடற்கரைப் பண்ணைகளில் கரும்பு வாழை, அன்னாசி, போன்றவை உற்பத்தியாகின்றன. ஆப்பிள், பியர்சு (Pears) போன்ற பழவகைகள், அனைத்து மாநிலங்களிலும் பயிராகின்றன. நியூ சௌத்வேல்சிலும், தென் ஆசுத்திரேலியாவிலும் கிச்சிலிப் பழங்கள் பயிராகின்றன. திராட்சைச் சாற்றிலிருந்து சாராயம் உண்டாக்கும் தொழில் தென் ஆசுத்திரேலியாவில் நடைபெறுகிறது. அங்கு மிகுதியாகத் திராட்சை பயிராவதே இதற்குக் காரணம்.

**சுரங்கத் தொழில்:** இந்நாட்டில் மிகுதியான கனி வளங்கள் உள்ளன. ஆனால், கனிமப் படிவங்கள் மக்கள்தொகை குறைந்த – வறண்ட பகுதிகளில் காணப்படுகின்றன. அவற்றைத் தோண்டியெடுக்கப் பெருஞ் செலவாகிறது. அச்சுரங்கப் பகுதிகளுக்கு இருப்புப் பாதைகளையும் சாலைகளையும் போட வேண்டியுள்ளது. சுரங்கத் தொழிலாளர்களுக்கும் அவர்களின் குடும்பத்தினருக்கும் புதிய நகரங்களை அமைத்தாக வேண்டும். கனிமப் பொருள்களைத் தோண்டியெடுக்கத் தேவையான முதலீட்டை வெளி நாட்டு நிறுவனங்கள் செய்துள்ளன. இத்தொழிலில் அறுபது விழுக்காடு நிறுவனங்கள், அயல்நாட்டினர் வசம் உள்ளன. ஆசுத்திரேலிய அரசு 1975–ஆம் ஆண்டு அத்தகைய நிறுவனங்களில் குறைந்தது ஐம்பது விழுக்காடாவது ஆசுத்திரேலியர்களின் கைகளிலேயே இருக்க வேண்டுமெனச் சட்டம் இயற்றியுள்ளது. இருப்பினும் இச்சட்டத்தை அரசினால் செயற்படுத்த இயலவில்லை.

ஆசுத்திரேலியா கி.பி. 1800–ஆம் ஆண்டளவில் அதன் கனிச் செல்வத்தைப் பெருக்க முனைந்தது. அது கி.பி. 19–ஆம் நூற்றாண்டின் இறுதிக்குள் செம்பு, தங்கம், ஈயம், வெள்ளி, தகரம், துத்தநாகம் போன்ற கனிமங்களைப் பெருமளவில் ஏற்றுமதி செய்ய முற்பட்டது. மேற்கூறிய கனிமங்களே கி.பி. 20–ஆம் நூற்றாண்டின் முற்பகுதி வரை சிறந்த சுரங்கப் பொருள்களாய் இருந்தன. மண்ணியல் வல்லுநர்கள் 1950க்குப் பின்னர் ஆசுத்திரேலியாவில் பெருமளவில் பாக்சைட்டு, நிலக்கரி, இரும்புத் தாதுகள் இருப்பதைக் கண்டறிந்தனர். அவர்கள் 1960–ஆம் ஆண்டளவில் மாங்கனீசு, நிக்கல், பெட்ரோலியம் போன்றவை இருப்பதையும் ஆய்ந்து கண்டனர். இக்காலத்தில் சுரங்கப் பொருள்களை ஏற்றுமதி செய்யும் தலைசிறந்த நாடுகளுள் ஒன்றாக ஆசுத்திரேலியா திகழ்கிறது. பாக்சைட்டு உற்பத்தியில் இது முதலிடத்தில் உள்ளது. நிலக்கரி, செம்பு, பொன், இரும்புத் தாது, ஈயம், மாங்கனீசு, நிக்கல், வெள்ளி, தகரம், தங்குடன், துத்தநாகம் போன்ற கனிமப் பொருள்களை உற்பத்தி செய்யும் தலைசிறந்த நாடாகக் கருதப்படுகிறது. பலநிறங்களைக் காட்டும் ஓபல் எனப் பெறும் இரத்தினக் கற்களை வெட்டி எடுப்பதில் ஆசுத்திரேலியா உலகிலேயே முதலிடம் பெறுகிறது.

மேற்கு ஆசுத்திரேலியா, குயின்சுலாந்து, நியூ சௌத்வேல்சு மாநிலங்களில் சிறந்த சுரங்கங்கள் அமைந்துள்ளன.

வடக்குப் பகுதியில் வளர்ச்சி பெறாத நிலையில் உரேனியப் படிவங்கள் உள்ளன. இதுவும் உலகின் முதலிடத்தைப் பெறுகிறது.

**மீன் பிடித்தல்:** ஆசுத்திரேலியாவைச் சுற்றிலும் கடல்கள் சூழ்ந்திருந்தாலும் மீன் பிடிக்கும் தொழில் ஓரளவுதான் நடைபெறுகிறது. கரையை அடுத்துள்ள கடல்களில் ஆயிரக்கணக்கில் வகைவகையான மீனினங்கள் வாழ்ந்தாலும், சில வகை மீனினங்களே மிகுதியாக, நல்லுணவாகப் பயன்படுகின்றன. இங்கு மீன் பிடிக்கும் தொழில் சிறிய அளவினதுதான்; எனினும் இந்த நாடு மீன் பண்ணையால் பெரும் பொருள் ஈட்டுகிறது. கிளிஞ்சல் தொழிலால் பெரும் ஆதாயம் கிடைக்கிறது. முல்லட்டு, சாலமன், துனா என்னும் மீன்வகைகள் சிறப்பானவை. கிளிஞ்சல், சிப்பி, மீன் ஆகியன ஏற்றுமதியாகின்றன.

**சுற்றுலாத் துறை:** சுற்றுலாப் பயணிகளைக் கவரும் விதவிதமான கவர்ச்சிப் பொருள்கள் ஆசுத்திரேலியாவில் மிகுதியாக உள்ளன. வனவிலங்குப் புகலிடங்கள், மணற் பாங்கான கடற்கரைகள், பிரிக்கும் பெரிய மலைத்தொடர், ஆசுத்திரேலிய ஆல்ப்சுமலைத் தொடர், இன்னும் எண்ணற்ற வரலாற்றுச் சிறப்பு மையங்கள் போன்றவை பயணிகளைக் கவருகின்றன. எனினும் சுற்றுலாப் பயணிகள் போதுமான அளவில் வருவதில்லை. ஆசுத்திரேலியர்கள் வெளிநாடுகளுக்குச் சென்று சுற்றுலா செய்யுமளவில், பாதியளவினர் கூட ஆசுத்திரேலியாவுக்கு வருவதில்லை. அதற்குக் குறிப்பிடத்தக்க காரணங்கள் இரண்டு. முதலாவது தூரம்; இரண்டாவது பெருஞ் செலவு. ஆசுத்திரேலியாவைச் சுற்றியுள்ள நியூசிலாந்து, பசிபிக்குப் பெருங்கடல் தீவுகள், சப்பான், தென்கிழக்கு ஆசியா போன்ற நாடுகளிலிருந்தே பயணிகள் வருகிறார்கள்.

**அயல்நாட்டு வாணிகம்:** இந்நாட்டிலிருந்து 1950–ஆம் ஆண்டில் ஏற்றுமதியாகிய பொருள்களில் எண்பத்தைந்து விழுக்காடு, பண்ணைப் பொருள் வாணிகத்தின் வழியாகவே வந்தது. இன்றும் பண்ணைப் பொருள்கள் ஏற்றுமதி வருவாயே நாட்டு வருமானத்தின் பெரும் பங்காக விளங்குகிறது. ஆனால், 1950–ஆம் ஆண்டுக்குப் பின்னர்க் கனிமப்

பொருள்களையும் பிறஆலை உற்பத்திப் பொருள்களையும் அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து விற்கும் முறையால் பெரும் வருவாயைப் பெற்று வருகிறது. இன்று பண்ணைப் பொருள்கள் ஏற்றுமதியால் 30 விழுக்காடு வருவாயும், ஆலை உற்பத்திப் பொருள்களால் 20 முதல் 25 விழுக்காடுவரை வருவாயும் கிட்டுகிறது. ஆசுத்திரேலியாவின் 75 விழுக்காடு இறக்குமதிப் பொருள்கள் ஆலை உற்பத்திப் பொருள்களாகும். இந்நாடு பல்லாண்டுகளாக இங்கிலாந்துக்கே தன் உற்பத்தியின் பெரும் பகுதிப் பொருள்களை அனுப்பி வந்தது. இக்காலத்தில் இங்கிலாந்து மேலை ஐரோப்பிய நாடுகளுடன் வணிகத் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டுள்ளமையால் ஆசுத்திரேலிய வாணிகம் சுருங்கிவிட்டது. இந்த நாடு இன்று சப்பானுடன் பெரும் வாணிகத் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டு வருகிறது.

**போக்குவரத்து:** ஆசுத்திரேலியாவின் போக்குவரத்து, சிறப்பாகப் பேருந்துப் போக்குவரத்தின் வாயிலாக நடைபெறுகிறது. பெரும்பாலான குடும்பங்கள், சொந்த மகிழ்வுந்துகளை உள்ளூர்ப் பயணங்களுக்குப் பயன்படுத்துகின்றன. இந் நாட்டில் 8,21,000 கி.மீ. தொலைவிற்கு இருப்புப் பாதைகள் போடப்பட்டுள்ளன. இப் பாதைகள் மாநிலத் தலைநகரங்களையும் உள்நாட்டுப் பெருநகரங்களையும் இணைக்கின்றன. ஆசுத்திரேலியாவில் திரான்சு-ஆசுத்திரேலிய விமான வழி யென்றும், ஆன்செட்டு ஆசுத்திரேலிய விமானவழி என்றும் இரு பெரும் உள்நாட்டு விமானப் போக்குவரத்து அமைப்புகள் உள்ளன. நடுவண் ஆட்சி முந்தைய அமைப்பையும், தனியார் நிறுவனங்கள் பிந்தியதையும் இயக்குகின்றன. நடுவண் அரசு குவாண்டாசு (Quantas Airways Limited) என்னும் வானவழி அமைப்பினை நடத்துகிறது. உள்நாட்டு நகரங்களுக்குக் கொண்டு செல்லும் பொருள்களை இருப்புப் பாதைகளும் வானூர்திப் பேருந்துகளும் (Air Bus) எடுத்துச் செல்கின்றன.

**செய்திப் போக்குவரத்து:** அஞ்சல், தொலைபேசி, தொலைவரி (Telex) அமைப்புகள் இங்கு நடுவண் அரசின் கண்காணிப்பில் உள்ளன. இங்கு 225 வானொலி நிலையங்களும், 135 தொலைக்காட்சி நிலையங்களும் உள்ளன. பெருநகரங்களில் குறைந்த அளவு ஒரு நாளிதழாவது அச்சிடப் பெறுகிறது. தேசிய நாளிதழ்களும் உள்ளன.

**வரலாறு:** ஆசுத்திரேலியாவின் பழங்குடிகள் இக் கண்டத்திற்கு 40,000 முதல் 50,000 ஆண்டுகளுக்கு முன்னர் வந்திருக்க வேண்டும். ஆசியாக் கண்டத்திலிருந்து நியூகினி வழியாக அவர்கள் இங்கு வந்திருக்கக் கூடும். வெள்ளைக்காரர்கள் கி.பி.1700-ஆம் ஆண்டளவில் முதன்முதலாக இங்கு வந்தபோது, ஏறத்தாழ 3,00,000 பழங்குடி மக்கள் வாழ்ந்தார்கள் என்பது தெரிகிறது.

**ஆசுத்திரேலியா கண்டுபிடிக்கப்படல்:** போர்ச்சுகீசிய, இசுபானிய ஆய்வாளர்கள், நியூகினியைக் கி.பி. 1500-ஆம் ஆண்டளவில் கண்டுபிடித்தபோது ஆசுத்திரேலியாவை ஐரோப்பிய ஆய்வாளர்கள் கண்டுபிடிக்கத் தொடங்கினர். ஆசியாவிற்குத் தெற்கே புரியாத புதிரானதொரு கண்டம் இருப்பதாக நம்பி, புதிய நாடுகளைக் கண்டுபிடிக்க முனைந்த மேற்கூறிய ஐரோப்பிய நாட்டினர் ஆசுத்திரேலியாவை 'ஒருவருக்கும் தெரியாத தென் நிலம்' என்றனர்.

இலூயி வாசு-டி-தோரசு (Luis Vaez De Torres) என்னும் பெயர் கொண்ட இசுபானிய ஆய்வாளர் நியூகினி, ஆசுத்திரேலியா அன்று என்பதைத் திட்டவட்டமாக உறுதிப்படுத்தினார். அவர் நியூகினிக்கும், 1606-ஆம் ஆண்டில் ஆசுத்திரேலியாவுக்கும் இடையிலிருக்கும் நீர்ப்பிரிவின் வழியாகப் பயணம் செய்து, நியூகினி ஒரு தீவு என்பதைக் காட்டினார். இருப்பினும், 160 கி.மீ.க்குத் தென்பால் பெரியதொரு கண்டம் இருப்பதைத் தோரசு அறியவில்லை. அதே ஆண்டில் வில்லியம் சேன்சு (William Janes) என்னுந் தச்சு (Dutch) ஆய்வாளர் கடற்பயணம் செய்து நியூகினி கடற்கரையைக் கண்டார். உண்மையிலேயே அவர் கண்டது, வடகிழக்கு ஆப்பிரிக்காவின் கோடியில் இருக்கும் யார்க்கு முந்நீரக முனையாகும். ஆசுத்திரேலிய மண்ணில் காலடி வைத்த முதல் ஐரோப்பியர்



ஆசுத்திரேலியப் பாராளுமன்றம்-கான்பெர்ரா

சேன்சுதான். ஏனைய தச்சு மாலுமிகள் கி.பி.1616-ஆம் ஆண்டுக்கும் 1636-ஆம் ஆண்டுக்கும் இடையில் ஆசுத்திரேலியாவின் மேற்கு, தென்மேற்கு, வட மேற்குக் கடற்கரைகளைக் கண்டறிந்தனர். அதற்குப் பின்னர்த்தான் ஆசுத்திரேலியா என்னும் தென்பால் அமைந்துள்ள கண்டத்தைக் கண்டுபிடித்து விட்ட தாகப் புது நாடுகளைக் கண்டு ஆராய்ந்த ஆய் வாளர்கள் நம்பினர். ஏபல் சான்சன் தாசுமன் (Abel Janszoon Tasman) என்னும் தச்சுக் கப்பல் தலைவர் கி.பி. 1642, 1643 ஆகிய ஆண்டுகளில் ஆசுத்திரேலியாக் கண்டத்தைக் காணாமலேயே அக் கண்டத்தைக் கப்பல் வழியாகச் சுற்றி வந்தார். அப்பயணத்தின் போது அவர் பெரும் நிலப்பரப்பு ஒன்றினைக் கண்டு அங்குக் குறுகிய காலம் தங்கி னார். அதற்கு அவர் வான் தைமன் நிலம் (Van Diemen's Land) என்று பெயரிட்டார். அதுவும் ஆசுத்திரேலியாவின் ஒரு பகுதியே எனக் கருதினார். உண்மையில் அவர் கண்டது ஒரு தீவு. அது தாசு மேனியா என்னும் பெயரில் தாசுமனின் நினைவைப் போற்றும் வகையில் இன்றும் ஒரு தீவாக விளங்கு கிறது.

**சேம்சு குக்கின் ஆய்வு:** தொடக்கக் காலத்தில் ஆசுத்திரேலியாவைக் காணவந்த ஆய்வாளர்கள் அக்கண்டம் வாழ்வதற்கு வசதி குறைந்தது எனக் கூறினர். நிலம் வறண்டு, பாலை நிலம்போல் தென்பட்டது. அங்கு வாழ்ந்த மக்களிடம் பொன்னோ பொருளோ இருக்கவில்லை. ஆங்கிலக் கப்பற்படையைச் சார்ந்த சேம்சு குக்கு என்பாரே கி.பி. 1770-ஆம் ஆண்டில் முதன் முதலாக ஆசுத்திரேலியாவின் செழிப்பான கிழக்குக் கடற் கரையைக் கண்டறிந்த ஐரோப்பியராவார். தாம் கண்டறிந்த பகுதியை அவர் இங்கிலாந்திற்கு உரிமை யாக்கி அதற்கு நியூசௌத்வேல்சு எனப் பெயரிட் டார்.

**ஆசுத்திரேலியாவின் குடியேற்றம்:** அமெரிக்க விடுதலைப் போராட்டத்திற்கு முன், இங்கிலாந்து தன் குற்றவாளிகளை அமெரிக்கக் குடியேற்றப் பகுதிகளுக்கு அனுப்பி வந்தது. குற்றவாளிகளை இப்படி அனுப்பிய முறைக்கு இடப் பெயர்வு (Transportation) என்பது பெயர். இம் முறை யினால் இங்கிலாந்துச் சிறைகளில் ஏற்பட்ட நெரிசலைத் தவிர்க்க முடிந்தது. அமெரிக்கா கி.பி. 1783-ஆம் ஆண்டில் விடுதலை பெற்றபின், குற்றவாளிகளை இடப்பெயர்வு செய்யப் புதிய தொரு இடத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டிய தேவை ஏற்பட்டது. ஆசுத்திரேலியாவிலுள்ள நியூ சௌத்வேல்சில் கி.பி. 1786-ஆம் ஆண்டில் புதிய தொரு சிறைச்சாலையை அமைப்பதென முடிவு செய்தது. கப்பற்படையிலிருந்து ஓய்வுபெற்ற கேப்டன் ஆர்தர் பிலிப்பு இக்குடியேற்றத்தை நிலைநாட்ட அமர்த்தப் பெற்றார். அவரே அதன் ஆளுந ராகவும் பொறுப்பேற்றார்.

பிலிப்பு கி.பி. 1787-ஆம் ஆண்டு மே மாதம் 570 ஆண் குற்றவாளிகளுடனும் 160 பெண் குற்றவாளி களுடனும் அவர்களைப் பாதுகாக்க ஏறத்தாழ 200 ஆங்கிலப் படைவீரர்களுடனும் படைவீரர்களின் முப்பது மனைவிமார்களுடனும் ஒரு சில குழந்தை களுடனும் இங்கிலாந்திலிருந்து கப்பலில் புறப்பட் டார். இக்குழுவினர் 11 கப்பல்களில் பயணம் செய்து ஆசுத்திரேலியாவின் கீழ்க்கரையில் 'பாட்டனி பே' என்னும் விரிகுடாவில் கி.பி. 1788-ஆம் ஆண்டு சனவரி மாதம் 19-ஆம் நாள் இறங்கினர். சனவரி 26-ஆம் நாள் பிலிப்பு, ஆசுத்திரேலியாவில் புதிய குடி யேற்றத்தை நிலைநாட்டினார். அதுவே பின்னர்ச் சிட்னி நகரமாக மாறியது.

புதிய குடியேற்ற மக்கள் தொடக்கத்தில் வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டு வாழ்ந்தனர். குற்றவாளிகள் அங்கு அமைக்கப் பெற்ற சமூகப் பண்ணைகளில் பணியாற்றினர். குடியேற்ற நிரு வாகம், கி.பி. 1790-ஆம் ஆண்டளவில் படைவீரர் களுக்குச் சிறுசிறு நிலங்களைக் கொடையாக வழங் கிக் குற்றவாளிகளையும் விடுவித்தது. அவர்களை அடுத்துச் சுதந்திரக் குடியேற்ற மக்களும் அதே ஆண்டில் முதன்முதலில் ஆசுத்திரேலியாவுக்கு வந்து சேர்ந்தனர்.

**புதிய கண்டத்தில் ஆய்வு:** நியூசௌத்வேல்சில் புதிய குடியேற்றம் நிலை நாட்டப்பட்டபோது ஆசுத்திரேலியாவைப் பற்றிய முழுவிவரமும் மக்களுக் குத் தெரியவில்லை. அது பெரிய நிலப்பகுதியா? ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட தீவுகளைக் கொண்டதா என்று ஒருவரும் அறிந்திலர். வட மேற்கு, மேற்கு, தென்கிழக்குக் கடற்கரைகளைத் திட்டவட்டமாகப் படம் பிடித்த பின்னர்த்தான் மேற்கு ஆசுத்திரேலியா ஒரே நிலப்பகுதி என்பது தெளிவாயிற்று. தாசுமன் அதனை 'நியூஆலந்து' என்று பெயரிட்டார். குக்குக் கண்டுபிடித்த கிழக்குக் கடற்கரையையும் படம் பிடித்தார்கள். எனினும் தென் கடற்கரைப் பகுதியின் பெரும்பகுதியும், வடகரையின் ஒரு பகுதியும் கண்டுபிடிக்கப்படாமலேயே இருந்தன. எனவே நியூசௌத்வேல்சும் நியூஆலந்தும் தனித் தனித் தீவுகளாக ஒருவேளை இருக்கக் கூடுமோ என்று எண்ணினர்.

சார்சு பாசு, மாத்தியூ பிளிண்டர்சு என்னும் இரு ஆங்கில மாலுமிகள் கி.பி. 1796, 1799-ஆம் ஆண்டு

களில் தாசுமேனியாவைக் கப்பலில் சுற்றி வந்து அது ஒரு தீவு என்பதை உறுதிப்படுத்தினர். பிளிண்டர்சு கி.பி. 1801 முதல் 1803 வரை கப்பல் வழிப் பயணம் செய்து ஆசுத்திரேலியாக்கண்டத்தைச் சுற்றி வலம் வந்தார். அவருடைய பயணத்தின்போது இதுவரை படம் பிடிக்காத பகுதிகளையும் அவர் படம் பிடித்து, ஆசுத்திரேலியா ஒரு பெரிய நிலப்பகுதி என்பதனைத் திட்டவட்டமாக அறிவித்தார். அவர் கி.பி.1820-ஆம் ஆண்டளவில் சிட்னி நகரைச் சுற்றியுள்ள பகுதிகளை ஆய்வு செய்தார். ஆமில்ட்டன் கியூம், வில்லியம் கோவல் என்னும் இருவர் கி.பி. 1824-ஆம் ஆண்டில் சிட்னியிலிருந்து மெல்பர்ன் போகும் வழித் தடத்தைக் கண்டறிந்தனர். அப்போது மெல்பர்ன் உருவாகவில்லை என்பதை நினைவிற் கொள்ளவேண்டும். அவர்கள் சென்ற வழியில் பெரியதொரு ஆற்றினைக் கண்டார்கள். சார்லசு இசுட்ர்ட்டு (Charles Sturt) என்பார் கி.பி. 1820, 1830-ஆம் ஆண்டுகளில் இந்த ஆறு பாயும் பகுதியின் வழியாகப் பயணம் செய்து இவ்வாற்றின் கழிமுகம் வரை சென்றார். இன்றைய அடிலேய்டு நகரம் இருக்கும் இடம்வரை அவர் பயணம் செய்தார். அவர் முயற்சியில் நிலைநாட்டப் பெற்றதுதான் தென் ஆசுதிரேலியக் குடியேற்றப் பகுதியாகும். இசுடர்ட்டு அந்த ஆற்றிற்கு 'மர்ரே' என்று பெயரிட்டார்.

சார்லசு பிரிமாண்ட்ல் என்னும் ஆங்கிலக் கடற்படைத் தலைவர் ஆசுத்திரேலியாவின் தென் மேற்குக் கடற்கரையில் கி.பி. 1829-ஆம் ஆண்டில் இறங்கினார். இவர் ஆசுத்திரேலியாக் கண்டத்தின் மேற்குப் பகுதி முழுவதையும் ஆங்கிலேயருக்கு உரிமையாக்கினார். அதே ஆண்டின் இறுதியில் மேற்கு ஆசுத்திரேலியாவிலும் அதன் தலைநகராகிய பெர்த்து என்னும் ஊரிலும் சற்றேறக்குறைய எழுபது ஆங்கிலேயர்கள் குடியேறினர்.

நியூசௌத்வேல்சினைச் சார்ந்த மக்கள் கி.பி. 1820-ஆம் ஆண்டளவில் இங்கிலாந்திற்கு உரோமத்தை ஏற்றுமதி செய்தமையால் சிறப்பு வாய்ந்த பொருளாதாரத்தை நிலைநாட்டினர். உரோம வாணிகத்தால் அவர்கள் பெரும் ஆதாயம் பெற்றதன் விளைவாகக் குடியேறியவர்களுள் பெரும்பாலோர் ஆடுகளை வளர்க்கும் தொழிலில் ஈடுபடலாயினர். ஆனால் நியூசௌத்வேல்சு அரசாங்கம், குடியேறியவர்களைக் குறிப்பிட்ட ஒரு பகுதியில் மட்டும் நிலத்தை வாங்கவோ மேய்ச்சல் நிலத்தைக் குத்தகைக்கு விடவோ அனுமதித்தது. குறிப்பிட்ட நிலத்திற்கு அப்பாற்பட்ட நிலப்பகுதி அரசாங்கத்தின் சொத்து எனக் கருதப்பட்டது. ஆடுகளை வளர்க்க முடிவு செய்த குடியேறியவர்கள் அரசாங்கத்திற்குச் சொந்தமான நிலத்தைச் சட்டத்தை மீறிக் கைப்பற்றத் தொடங்கினர். இவ்வகையாகச் சட்டத்தை மீறி நிலத்தைப் பறித்துக் கொண்டவர்கள் 'குந்தியவர்கள்' (Squatten) எனக் குறிக்கப்பட்டனர். காலப் போக்கில் வலிய நிலத்தைப் பறித்துக் கொண்ட குந்தியவர்கள் சட்டத்தால் பாதுகாக்கப்பட்டு, அவர்கள் கைப்பற்றிய நிலம் நீண்டகாலக் குத்தகைக்கு விடப் பட்டதாகக் கருதப்பட்டது. அவ்வாறு கைப்பற்றிய சிலர், ஆசுத்திரேலியாவிலே பெரும் நிலக்கிழார்கள் என்னும் தகுதி பெற்றனர்.

ஆட்டுப் பண்ணைக்காரர்களுள் பலர் கி.பி. 1830-ஆம் ஆண்டளவில் தாசுமேனியாவிலிருந்து நியூசௌத்வேல்சின் தென்பாகத்திலும் சிட்னியைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் குடியேறினர். அவர்களே மெல்பர்ன் நகரத்தை உருவாக்கியவர்கள். அவர்கள் மர்ரே ஆற்றுக்குத் தென்பாலிருந்த செழுமையான நிலங்களில் தங்கினர். தமக்குத் தனியாகக் குடியேற்றப் பகுதி வேண்டுமென இங்கிலாந்து அரசை வேண்டினர். ஆங்கில அரசு கி.பி. 1851-ஆம் ஆண்டு அவர்களுக்கு அனுமதியளித்தது. அந்த ஆண்டில்தான் மர்ரே ஆற்றுக்குத் தெற்கிலுள்ள பகுதிகள் விக்டோரியா என்னும் பெயர் கொண்ட புதிய குடியேற்றப் பகுதியாயிற்று.

**உள்நாட்டைத் துருவி ஆய்தல்:** உள்நாட்டுப் பகுதிகளைத் துருவி ஆராயும் நீண்ட ஆய்வுப் பணிகள் கி.பி. 1830-ஆம் ஆண்டளவிலேயே முதன்முதல் தொடங்கியது. எட்வர்டு சான் அயர் என்பவர் கி.பி. 1839, 1840-ஆம் ஆண்டுகளில் அடிலேய்டு நகருக்கு வடமேற்கில் பரந்து காணப்பட்ட வறண்ட உப்பு ஏரிகளைக் கண்டுபிடித்தார். இராபர்ட்டு ஓ' அர பர்க்கு (Robert O Hara Burk) என்பாரும் வில்லியம் வில்சு (William John Wills) என்பாரும் கி.பி. 1860, 1861-ஆம் ஆண்டுகளில் ஆசுத்திரேலியக் கண்டத்தைத் தெற்கிலிருந்து வடக்காகக் கடந்தனர். ஆயினும் வடக்கிலிருந்து தெற்கே திரும்புங்கால் உண்ண உணவின்றிப் பசிக் கொடுமையால் இறந்தனர். சான் மாக்டுவல் இசுடுவேர்ட்டு (John Mc Douall Stuart) என்பார் கி.பி. 1861, 1862-ஆம் ஆண்டுகளில் வட தென் கடற்கரைகளை முதன் முதலாகச் சுற்றி வந்தார்.

**பொன்னைத் தேடித் திரண்டு வந்த கூட்டம்:** நியூசௌத்வேல்சில் கி.பி. 1851-இல் தங்கம் கண்டு பிடிக்கப்பட்டது. சில மாதங்களுக்குப் பின்னர் விக்டோரியாவில் நியூசௌத்வேல்சைவிடப் பெரும் பொன்வயல் இருப்பது தெரிந்தது. தங்கத்தைக் கைக்கொள்ளக் கடல்கடந்த நாடுகளிலிருந்து தங்க வயல்களை நாடி ஆயிரமாயிரவர் ஆசுத்திரேலியா

வுக்கு வந்தனர். சிலர் பெரும் பணக்காரர்களாயினர். பலருக்குப் போக்குவரத்துச் செலவை ஈடு செய்யு மளவுக்குக் கூடப் பொன் கிட்டவில்லை. பொன் கிட்டாதவர்களுள் பலர் ஆசுத்திரேலியாவிலேயே தங்க முடிவு செய்தனர். அதன் விளைவாகக் கி.பி. 1850-இல் 4 இலட்சமாக இருந்த ஆசுத்திரேலியாவின் மக்கள் தொகை கி.பி. 1860-இல் 11 இலட்சமாகி விட்டது.

இங்கிலாந்து கி.பி. 1850-ஆம் ஆண்டின் தொடக்கத்திலிருந்தே குற்றவாளிகளை ஆசுத்திரேலியாவின் கிழ்ப் பகுதிகளுக்குக் குடியேற்றும் திட்டத்தைக் கைவிட்டது. எனினும் மேற்கு ஆசுத்திரேலியாவில் அவர்களைக் குடியேற்றுவது கி.பி. 1868-ஆம் ஆண்டு வரை நீடித்தது. அதற்குப் பின்னர் அப் பழக்கம் ஒழிந்தது. ஆசுத்திரேலியாவுக்கு கி.பி. 1788-இலிருந்து 1868- வரையிலான காலத்தில் 1,60,000 குற்றவாளிகள் அனுப்பப்பட்டனர்.

**அரசியல் பொருளாதார முன்னேற்றம்:** ஆசுத்திரேயாவில் குடியேறியவர்களின் எண்ணிக்கை பெருகப் பெருக, அவர்கள் தன்னாட்சிக் கோரிக்கைகளை வெளியிடலாயினர். மேற்கு ஆசுத்திரேலியாவைத் தவிரப் பிற பகுதிகளுக்கு இங்கிலாந்து கி.பி. 1856-ஆம் ஆண்டளவில் தன்னாட்சி வழங்கியது. ஒவ்வொரு குடியேற்றப் பகுதியிலும் அப்பகுதி மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபையும் அமைச்சர்களும் நிலைநாட்டப் பெற்றுக் குடியேற்றப் பகுதியின் உள்நாட்டுச் செயல்களை அவர்களே செய்தனர். அயல்நாட்டு உறவினையும் குடியேற்றப் பகுதிகளின் பாதுகாப்புப் பணிகளையும் மட்டும் இங்கிலாந்து தொடர்ந்து கண்காணித்து வந்தது. இதனிடையில் பிரிசுபேன் நகருக்கு வடக்கிலும் மேற்கிலிருந்து நியூ சௌத்வேல்சுப் பகுதியிலும் நாடு பறிக்கும் 'குந்தியவர்கள்' குடியேறியிருந்தனர். இங்கிலாந்து கி.பி. 1859-இல் இப்பகுதிகளைக் குயின்சுலாந்து குடியேற்றப் பகுதியாக அறிவித்தது. பிரிசுபேன் அதன் தலைநகராயிற்று.

பொன் சுரங்கத்தை நாடி வந்து ஏமாற்றமுற்ற பல்லாயிரவர்கள் கி.பி. 1860-ஆம் ஆண்டளவில் நிலத்தை விலைக்கு வாங்கி, வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டனர்.

**புதுநாடு பிறத்தல்:** அனைத்து ஆசுதிரேலியக் குடியேற்றப் பகுதிகளும் கி.பி. 1890-ஆம் ஆண்டிற்குள் தன்னாட்சி பெற்றிருந்தன. இருப்பினும் அவை இங்கிலாந்தின் அரவணைப்பின் கீழேயே இருந்தன. எனவே ஆசுத்திரேலியர்களுள் பலர், ஆசுத்திரேலியா முழுவதும் விடுதலை பெற்ற நாடாகி, ஒருமைப் படுத்தப்பட்ட அரசு இருப்பதே நல்லது என்று கருதினர். அத்தகைய அரசுஇல்லாவிடின், அவர்களிடையே எழும் சிக்கல்களைத் தீர்ப்பது முடியாது போய் விடும். தேசிய உணர்வு ஆசுத்திரேலிய மக்களிடையே இத்தருணத்தில் பீறிட்டெழுந்ததும் அவர்கள் விடுதலை கேட்டமைக்கு ஒரு காரணமாகும். என்றி லாசன் (Henry Lawson), பான்சோ பேட்டர்சன் (Banjo Paterson) போன்றோர் எழுதிய நாட்டுப்புற மரபு இலக்கியங்களும், நாட்டுணர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் கொடுத்தன.

கூட்டாட்சி மாநாடு கி.பி. 1897-98-ஆம் ஆண்டுகளில் ஆசுத்திரேலியாவுக்கான அரசியல் விதியமைப்புத் திட்டத்தை உருவாக்கியது. மக்கள் வாக்குகள் வழியாக அதை ஏற்றுக்கொண்டதற்கான இசைவைக் கி.பி. 1898, 1899-ஆம் ஆண்டுகளில் கொடுத்தனர். அதை இங்கிலாந்து 1900-ஆம் ஆண்டில் ஏற்றுக் கொண்டது. 'ஆசுத்திரேலியா காமன்வெல்த்து' என்னும் புதுநாடு, 1901-ஆம் ஆண்டு சனவரி முதல் நாள் உருவாகியது. அதில் முன்னர் இருந்த ஆறு குடியேற்றப் பகுதிகளும் அடங்கியிருந்தன. இங்கிலாந்து அரசர், புது நாட்டின் தலைவராக ஏற்றுக் கொள்ளப் பெற்றார். தேசியத் தலைநகருக்கான இடம் தேர்ந்தெடுக்கப்பட்டுக் கூட்டாட்சி நாடாளுமன்றம் மெல்பர்ன் நகரில் கூடலாயிற்று.

தொடக்கத்தில் ஆசுத்திரேலியாவில் மூன்று அரசியல் கட்சிகள் இருந்தன. அவை 1) பாதுகாவலர் கட்சி, 2) தங்குதடையற்ற வாணிகத்தில் நம்பிக்கையுள்ள கட்சி, 3) தொழிற்கட்சி என்பன. ஆசுத்திரேலியாவின் தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் பொருள்களை அயலார் போட்டிகளிலிருந்து காக்க, இறக்குமதிப் பொருள்களுக்கு மிகுதியாக வரி விதிக்க வேண்டுமெனக் கோரியது பாதுகாவலர் கட்சி. தங்கு தடையற்ற வாணிகக் கட்சி மிகக் குறைந்த வரியையும் வரி வாங்காத நிலையையும் வலியுறுத்தியது. தொழிற்சங்கங்களை ஆதரித்தது தொழிற்கட்சி. நாடாளுமன்றம் 1909-ஆம் ஆண்டில் சில வரிகள் விதிக்கப்படுவது தேவை எனக் கொண்டு வரி விதிப்புப் பற்றிய சிக்கலை முடிவுக்குக் கொணர்ந்தது. தங்கு தடையற்ற வாணிகக் கட்சியும் பாதுகாவலர் கட்சியும் பின்னர் இணைந்து இன்றைய தாராளக் கட்சி (Liberal Party) என்று சொல்லப்படும் முற்போக்குக் கட்சியாயின. ஆசுத்திரேலியா நாட்டுக்கட்சி 1919-இல் நிலைநாட்டப்பட்டது. அதுவே 1975-இல் தேசிய நாட்டுக் கட்சியாயிற்று.

**முதல் உலகப் போர்:** இங்கிலாந்து செருமனியின் மீது 1914-இல் போர் தொடுத்தபோது, ஆசுத்திரேலியா இங்கிலாந்துக்கு உறுதுணையாக நின்றது. நான்கு இலட்சம் ஆசுத்திரேலியப் படைவீரர்கள்

போரில் ஈடுபட்டனர். ஆசுத்திரேலியாவும் நியூசிலாந்தும் இணைந்து போரிட்ட படைகள் துணிச்சலுக்கு எடுத்துக்காட்டாய் நின்றன. அப்போரில் ஏறத்தாழ 59,000 ஆசுத்திரேலியர்கள் கொல்லப்பட்டனர். இரு பெரும் போர்களுக்கிடைப்பட்ட காலத்தில் ஆசுத்திரேலியர்கள் தம் கூட்டாட்சிக்கான புதிய தலைநகரைக் கான்பெர்ராவில் நிலைநாட்ட முற்பட்டார்கள். நாடாளுமன்றம் கூட்டாட்சித் தலைநகருக்கான இடத்தை 1908-ஆம் ஆண்டிலேயே தேர்ந்தெடுத்துவிட்டது. கட்டிடப் பணி 1913-ஆம் ஆண்டில் தொடங்கியது. 1927-ஆம் ஆண்டில் கூட்டாட்சி, தலைநகரை மெல்பர்னிலிருந்து கான்பெர்ராவுக்கு மாற்றியது.

உலகமெங்கும் 1930-ஆம் ஆண்டில் ஏற்பட்ட பொருளாதார மந்தம் ஆசுத்திரேலியப் பொருளாதாரத்தையும் பெரிய அளவில் பாதித்தது. உரோமம், கோதுமை, சர்க்கரை ஆகியவற்றின் உற்பத்தியாளர்களுள் பலர் இதன் விளைவாகப் பெரும் பொருளிழந்தனர். அதனால் நாட்டில் மூன்றிலொரு பங்கு தொழிலாளர்களுக்கு வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்பட்டது.

**இரண்டாம் உலகப் போர்:** இப்போரின்போதும் ஆசுத்திரேலியா இங்கிலாந்துடன் இணைந்து கொண்டு 1939 செப்டம்பர் 3-ஆம் நாள் போரில் ஈடுபட்டது. செருமானியப் படைகளை எதிர்த்துப் போராடக் கிரீசு, கிரீட்டு, வட ஆப்பிரிக்கா போன்ற பகுதிகளுக்கு ஆசுத்திரேலிய அரசு படைகளை அனுப்பியது. செருமனிக்கு உதவியாகச் சப்பான் போரில் ஈடுபடவே, ஆசுத்திரேலியப் படைகள் தம் நாட்டைச் சப்பானியத் தாக்குதலிலிருந்து காக்க, 1941-ஆம் ஆண்டில் தாயகம் திரும்பின. சப்பானியப் போர் விமானங்கள் 1942-ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதத்தில் வட அயர்லாந்தில் தார்வின் (Darwin) நகரத்தைக் குண்டுகளால் தாக்கின. மார்ச்சு மாதத்தில் சப்பானியர் நியூகினியில் இறங்கி ஆசுத்திரேலியாவின் மீது படையெடுக்க ஆயத்தமாயினர். அமெரிக்க ஐக்கிய நாட்டின் படைபலத்தைக் கண்ணுற்ற சப்பானியர், ஆசுத்திரேலியப் படையெடுப்பைக் கைவிட்டனர். நியூகினியிலிருந்த சப்பானியத் துருப்புகளை விரட்டும் நோக்குடன் போர் முடிவடையும் வரை ஆசுத்திரேலியர் தொடர்ந்து போரிட்டு வந்தனர்.

இரண்டாம் உலகப் போரின்போது 9,25,000 படைவீரர்களும் 65,000 வீர மகளிரும் ஆசுத்திரேலியப் படையில் பணியாற்றினர். அவர்களுள் போரில் இறந்தோரும் சிறையுற்றோரும் 29,000 பேர்.

**போருக்குப் பின்னர் ஆசுத்திரேலியா:** தொழிற் கட்சியினர் ஆசுத்திரேலியாவில் 1941 முதல் 1949 வரை அரசோச்சினர். தேர்தலில் தொழிற்கட்சியினர் தோல்வியுறவே, தாராளக் கட்சி என்னும் முற்போக்குக் கட்சியும் தேசிய நாட்டுக் கட்சியும் சேர்ந்து ஆட்சி நடத்தின. இக்கூட்டணி அரசு 1972-ஆம் ஆண்டு வரை ஆட்சியில் இருந்தது.

ஐக்கிய நாடுகள் 1945-இல் உருவாக்கப்பட்டபோது, அதனை உருவாக்கிய நாடுகளுள் ஒன்றாக ஆசுத்திரேலியாவும் இருந்தது. பின்னர்த் தொடர்ந்து உலக நிகழ்ச்சிகளிலும் ஆசுத்திரேலியா ஈடுபாடு கொள்ளலாயிற்று. கொரியாவில் நடைபெற்ற போரில் 1950 முதல் 1953 வரை ஆசுத்திரேலியா ஐ.நா.விற்குப் படைகளை அனுப்பிப் பங்கு கொண்டது. தெற்கு, தென்கிழக்கு ஆசிய நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவும் கொழும்புத் திட்டத்திற்கு ஆசுத்திரேலியா உதவி செய்தது. நியூசிலாந்தும் அமெரிக்க ஐக்கிய நாடும் சேர்ந்த இராணுவ ஒப்பந்தத்தில் 1951-இல் ஆசுத்திரேலியாவும் இணைந்து கொண்டது. வியட்நாம் போரின்போதும் 1964 முதல் 1972 வரை ஆசுத்திரேலியப் படைகள் அமெரிக்க ஐக்கிய நாட்டுடன் துணை நின்றன.

ஆசுத்திரேலியாவில் கண்டுபிடிக்கப்பட்ட கனிவளத்தின் பயனாக அந்நாட்டில் 1960-ஆம் ஆண்டுக்குப் பின்னர்ப் பொருளாதார வளர்ச்சியும் வளமும் பெருகின. பாக்சைட்டு, நிலக்கரி, இரும்புத்தாது, நிக்கல் போன்ற பொருள்களின் உற்பத்தியாலும் ஏற்றுமதியாலும் நாட்டின் வருமானம் பெரிதும் உயர்ந்தது.

**அண்மைக்கால முன்னேற்றம்:** காப் விட்லம் என்பார் 1972 முதல் 1974 வரை ஆசுத்திரேலியாவின் தலைமை அமைச்சராக இருந்தார். தொழிற் கட்சியைச் சார்ந்த அவருக்கு மக்கள் அவையில் பெரும்பான்மை பலம் இருந்தும் மேலவையில் பெரும்பான்மை கிட்டவில்லை. நாட்டில் 1975-இல் பணவீக்கமும் வேலையில்லாத் திண்டாட்டமும் பரவிப் பெருகியதால் தொழிற்கட்சி, மக்களின் வெறுப்புக்கு ஆளாகியது. மேலவையில் தமக்கிருந்த பெரும்பான்மை பலத்தை வைத்துக்கொண்டு, முற்போக்குக் கட்சியும் தேசிய நாட்டுக் கட்சியும் இணைந்து, அரசாங்கத்தின் அன்றாடச் செலவுக்குக் கூடப் பணம் வழங்காது முட்டுக்கட்டையிடப் போவதாக அச்சுறுத்தின. அதனால் விட்லம் பதவியிலிருந்து விலகப் புதிய தேர்தல் வரும் என்று அவர்கள் நம்பினர். விட்லம் பதவி விலக மறுக்கவே, எதிர்க்கட்சிகள் அரசாங்கத்திற்குப் பொருள் வழங்க மறுத்தன. ஆசுத்திரேலியாவின் அரசப் பேராளராக இருந்த சர் சான் கெர் (Sir John Kerr) என்பார் தலைமை அமைச்சராக இருந்த விட்லமைப் பதவியிலிருந்து விலக்கி, 1975-இல் மால்கம் பிரேசர் (John Malcolm

Fraser) என்பாரைத் தலைமை அமைச்சராக்கிச் சிக்கலைத் தீர்த்து வைத்தார். பிரேசர் முற்போக்குக் கட்சியைச் சார்ந்தவர். அக்கட்சி 1975, 1977-ஆம் ஆண்டுகளில் நடைபெற்ற தேர்தல்களில் வெற்றி பெற்றமையால், அவரே தொடர்ந்து தலைமை அமைச்சராக இருந்தார்.

சுரங்கத் தொழில் வளர்ச்சியுறுவதால் 1980-ஆம் ஆண்டிற்குப் பின்னர் ஆசுத்திரேலியா பொருளாதார முன்னேற்றம் பெறப் பெரும் வாய்ப்புள்ளது. உரேனியம் அங்குக் கிடைக்கும் விலைமதிப்பற்ற கனிப்பொருளாகும். வருங்காலத்தில் அத்தொழிலின் முன்னேற்றம் பற்றிக் கூறுவது எளிதன்று. அணு ஆயுதங்களை ஆசுத்திரேலியா உற்பத்தி செய்யாமையால், உரேனியம் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகிறது.

இப்போது (1984) ஆசுத்திரேலியாவின் தலைமை அமைச்சராய் இருப்பவர் இராபர்ட்டு ஆக்கு (Robert Hawke) என்பவராவார்.

துணை நூல்கள்:


Appleyard, Reginald T., British Emigration to Australia, Toronto, 1964.

Commonwealth Scientific and Industrial Research Organization, The Australian Environment, 3rd Ed., Melbourne, 1960.

Shann, E. O. G., An Economic History of Australia, Melbourne, 1963.

Overacker, Lourise, Australian Party Politics Melbourne, 1964.

Scott, Sir Ernest, A Short History of Australia, 7th. Ed., Oxford, 1947.


**ஆசுத்திரேலியா ஆதிக்குடிகள்:** ஆசியாவிற்குத் தென்கிழக்கே அமைந்துள்ளது ஆசுத்திரேலியா. இக்கண்டம் மேற்கு, வடக்கு, தெற்கு; ஆகிய மூன்று திசைகளில் இந்தியப் பெருங்கடலினாலும் கிழக்கில் தென் பசிபிக்குக் கடலினாலும் சூழப்பட்டுள்ளது. வளைதடி, கங்காரு என்ற பெயர்களைக் கேட்டவுடன் நம் நினைவிற்கு வருபவர் ஆசுத்திரேலிய ஆதிக்குடிகளாவர். அக்கண்டம் பிற கண்டங்களிலிருந்து தனித்து நிற்பதால், இவ்விடத்தில் மக்கள் குடியேற்றம் மிகத்தாமதமாக ஏற்பட்டது. கருப்புத் தோலினையுடைய ஆதிக்குடிகள் இக்கண்டத்தில் கடைசிப் பனியுகத்தில் குடியேறியிருக்கக் கூடும் என்பது கருதப்படுகிறது. இவர்கள் கருப்பு நிறத்துடனும், சராசரி உயரத்துடனும் திகழ்கிறார்கள். இவர்களின் உடலமைப்பு ஐரோப்பிய நீக்ரோக்கள், மெலனேசியர்கள், மங்கோலியர் முதலியோரினின்றும் மாறுபடுவதால் மானிடவியலார் இவ்வினத்தை "ஆசுத்திரலாயிடு" (Australoid) என்னும் தனிப் பெயரிட்டு அழைத்தனர். இவர்களின் தலைமுடி, அலை அலையாகவும் சுருண்டும் பொதுவாகக் கருத்த நிறத்துடனும் காணப்படுகிறது. இவர்கள் உயர்ந்த முன் நெற்றி, பருத்த புருவங்கள், உள் அடங்கிய பழுப்பு நிறக் கண்கள், அகன்ற தாடை எலும்புகள், சதைப்பற்றான உதடுகள் அகன்ற நாசித்துளை முதலிய உடற்கூறுகளைக் கொண்டுள்ளனர்.

ஆசுத்திரலாயிடு வகை, முதன் முதலில் எங்குத் தோன்றியது என்பதை அறிய முடியவில்லை. பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே, இவ்வினமக்கள் தென்னிந்தியாவில் வாழ்ந்திருந்து, பின்னர் மக்கள் பெருக்கத்தினாலோ முன்னேற்றமடைந்த மக்களின் செல்வாக்கினாலோ அங்கிருந்து இலங்கையிலும் மலாயாத் தீபகற்பத்திலும் குடியேறிப் பின்னர், கிழக்கிந்தியத் தீவுகளின் வழியாக ஆசுத்திரேலியாவை அடைந்தனர் என அறிஞர்கள் கருதுகின்றார்கள்.



ஆசுத்திரேலிய ஆதிக்குடிகள்.

ஆசுத்திரேலிய ஆதிக்குடிகளுள் உங்காரின்யுன், வொரோரா, நியுல்-நியுல், கரட்செரி (வடமேற்கு ஆசுத்திரேலியா), அரண்டா (Aranta) (நடு ஆசுத்திரேலியா), இண்டவருந்தா அரபானா (தெற்கு ஆசுத்திரேலியா), விக்முன்கள், கபி, கமிலரொயி (கிழக்கு ஆசுத்திரேலியா) போன்ற பல வட்டார வகை வேறுபாடுகள் உள்ளன. எனினும் இவ்வினக்குழுக்கள் அனைத்தும் பொதுத் தன்மையினைக் கொண்டவை.

ஆசுத்திரேலியா முழுமையிலும் பலதார மணம் காணப்படுகிறது. தந்தை அவரது மனைவியர்

குழந்தைகள் ஆகியோரைக் கொண்டதே குடும்பம் எனப்பட்டது. இவர்களின் திருமண முறையில், ஒருவன், தன் உடன்பிறந்தானின் மனைவியையும், தன் இரண்டாம் மனைவியாகக் கொள்ளும் முறை உள்ளது. இம்மணமுறை 'பிராவ்ரூ' அல்லது 'பிரங்குரு' என்று சொல்லப்படுகிறது. இவர்களின் உறவு முறையில் பெருங்கால்வழிப் பிரிவும், அதன் கீழ்ப் பல உட்பிரிவுகளும் காணப்படுகின்றன.

இவர்கள் மழைக்காலங்களில் இடைக்கால அமைப்பாகக் கட்டப்படும் எளிய வீட்டில் வசிக்கின்றனர். இவ்வீடுகள் வலுவான மரக்கிளைகளைக் கொண்டு கட்டப்பட்டு, மேலே சிறிய கிளைகள், புல், முதலானவற்றால் மூடப்பட்டுள்ளன. கடினமான, கூர்முனையினை உடைய தடியை, மென்மையான மரத்திலுள்ள ஒரு துளையில் செருகித் தீப்பொறி வரும் வரையில் கையால் கடைந்து நெருப்பினை உண்டாக்குகின்றனர். கங்காரு, ஈமூ, மீன்கள், பாம்பு, தேன், முட்டை, காட்டுப் பழங்கள், கொட்டைகள் ஆகியவை இவர்களின் சில உணவுப் பொருள்களாகும்.

தாவரங்களை உணவுக்காகப் பயன்படுத்துவதுடன், அவற்றைச் சளியைப் போக்கவும் காயத்தை ஆற்றவும் பயன்படுத்துகின்றனர். இவர்கள் திறமை வாய்ந்த வேடுவர்களாகவும் நீச்சல்காரர்களாகவும் திகழ்கின்றனர். அச்சம் மிக்க அலைகளைக் கூட எளிய கட்டுமரத்தினைக் கொண்டு கடக்கின்றனர். மரப்பட்டைகளாலான படகுகளையும், மரத்தினைக் குடைந்து செய்யப்படும் படகுகளையும் பயன்படுத்துகின்றனர்.

ஆசுத்திரேலிய ஆதிக்குடிகள் எளிமையான கருவிகளையே பயன்படுத்துகின்றனர். பொருள்களை, வெட்டவும் சுரண்டவும் துண்டாக்கவும் செதுக்கவும் பயன்படும் தட்டையான கருவிகளைப் பல்வேறு அளவுகளில் செய்கின்றனர். இவர்களின் கருவிகளில் குறிப்பிடத்தக்கது வளைதடியாகும் (Boomarang). இவ்வளைத்தடி இருவகையானதாகும். போர்களில் பயன்படுத்தும் பெரிய வளைதடி திரும்பிவராத வகையினையும், விலங்குகளை வேட்டையாட உதவும் சிறிய வளைதடி, திரும்பிவரும் வகையினையும் சேர்ந்தவை. அரண்டா ஆதிவாசிகள் வளைதடி (Boomarang), கேடயம், இரகசியச் சடங்கில் பயன்படுத்தும் சுருங்கா ஆகியவற்றில் வண்ணம் தீட்டி அவற்றில் பல படங்களை வரைகின்றனர். இது இவர்களின் கலைத் திறனை எடுத்துக்காட்டுகிறது. இவர்கள் ஈட்டி, ஓமரா தடி (Wommora), கற்கோடரிகள், கத்தி ஆகியவற்றையும் பயன்படுத்துகின்றனர். இந்த ஆதிக்குடிகள் ஈட்டி, வளைதடி ஆகியவற்றைப் பயன்படுத்துவதில் தனித்திறமையுடையவர்கள்.

பெண்கள் மரத்தினால் செய்யப்பட்ட வட்டிலை உணவு அல்லது நீர் வைக்கப் பயன்படுத்துகின்றனர். குழந்தைகளுக்குரிய தொட்டிலாகவும், உமியை நீக்கவும் புடைக்கவும் இவ்வட்டிலைப் பயன்படுத்துகின்றனர். மரத்தால் செய்யப்பட்ட முனைக் கூர்மையான தோண்டும் கழியினை, வேர் கிழங்கு ஆகியவற்றைத் தோண்டவும் வேட்டையாடவும் பயன்படுத்துகின்றனர்.

இவர்கள் வாழ்க்கையில் காணப்படும் சடங்குகள், சமயத் தொடர்பான கதைகள், கடவுள் நம்பிக்கை முதலியன அறிதற்குரியனவாகும். இந்த நூற்றாண்டில்தான் இவர்களின் சடங்குள் தொடர்பான விளக்கமான செய்திகள் அறியப்பட்டன. இந்த ஆதிக்குடிகளின் நம்பிக்கை, ''கனவுலகம்'', ''இயற்கை உலகம்'', என இரு வேறுபட்ட உலகங்களின் மேல் அமைந்துள்ளது. இயற்கை உலகம், அதன் வாழ்க்கைச் சாரத்தைக் கனவுலகிலிருந்தே பெற்றது எனவும், எவற்றாலும் பற்றப்படாமல் இருந்த உலகத்தில் ஆவி ஆற்றலால் இயற்கை எழில், தாவரம், விலங்குகள், மனித இனம், முதலானவை தோன்றின என்றும் நம்புகின்றனர். இதன்வழி, காற்று, நெருப்பு, சந்திரன் போன்ற இயற்கையினை வழிபட்டனர். புனித இடங்களை அழித்தால் உணவு கிடைக்காமல் அழிவர் எனவும், அதனால் நோயும் இறப்பும் ஏற்படும் எனவும் நம்பினர். ஆற்றல் வாய்ந்த மந்திரப் பார்வை, தீமை செய்யும் மந்திரம் ஆகியவற்றையும் செய்கின்றனர்.

ஆசுத்திரேலிய ஆதிக்குடிகள் தாவரம் அல்லது விலங்கினைக் குலக்குறியாகக் கொண்டு வழிபடுகின்றனர். தம் குலக்குறியான விலங்கு ,அல்லது தாவரம் முதலானவற்றை உண்பதில்லை. இயற்கைக்கும் ஆதிக் குடிகளுக்கும் இக்குலக்குறி வழிபாடு ஒரு வலுவான சமயப் பிணைப்பினை உண்டாக்குகிறது.

இச்சடங்கின்போது பயன்படுத்தும் 'சுருங்கா' என்னும் கருவியினைப் புனிதமான சொத்தாகப் பேணி, அறிவிலும் வயதிலும் முதிர்ந்த சான்றோர்கள் மட்டுமே அறிந்த மறைவிடங்களில் அதனை வைக்கின்றனர். சுருங்கா என்பது இருபக்கமும் செதுக்கப்பட்ட, பல வட்டமான கோடுகளைக் கொண்ட முட்டை வடிவப் பொருளாகும். இதன் ஒரு முனையிலுள்ள துளையினுள் நார் அல்லது முடியினைக் கொண்டு சுழற்றுவதால் அது தன்னைத்தானே சுற்றிக்கொண்டு உண்டாக்கும் ஒரு வித ஒலியினைத் தம் தேவதைகளிடமிருந்து வரும் ஒலியெனக் கருதுகின்றனர். இவ்வொலியினூடே ஏற்புச் சடங்கிலுள்ள ஓர் இளைஞன் உலக ஆக்கம், தன் இனத் தொடக்கம், சமயம் வாழ்க்கை முறை ஆகியவற்

றினை அறிகிறான். ஏற்புச் சடங்கு செய்து கொள்ளும் இளைஞன்மீது கட்டுடல் உள்ளோர், தங்கள் இரத்தத்தை ஊற்றுவதன் வாயிலாக அவனுக்கு எதையும் தாங்கும் இதயத்தையும் பெரியோர் இடத்தையும் அளிக்கின்றனர்.

அச்சம் தரும் ஒலியினூடே வலிதரும் வகையில் முன்பல்லைத் தட்டி எடுப்பதும், உடலில் கற்கத்திகளைக் கொண்டு கீறி உண்டாக்கும் வடுக்களும், அவன் அவ்வினத்தைச் சார்ந்தவன் என்பதையும், அவ்வினத்திற்கு அவன் செய்ய வேண்டிய கடமையினையும் வலியுறுத்துகின்றன.

முழுமையாக ஏற்புச் சடங்கினைப் பெற்றவர் மட்டுமே இதில் கலந்து கொள்ளவியலும். இச்சடங்கின் மூலம் இயற்கை வளம் மிகுந்து, எல்லாப் பருவங்களிலும் வளம் பெருகும் என்பதில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டுள்ளனர். கங்காரு வேட்டைக்குச் செல்லும் முன்னரும் பின்னரும் ஒரு சடங்கினைச் செய்கின்றனர். இதனைக் 'கங்காருச் சடங்கு' என்கின்றனர். இது போன்றே வறட்சியின்போது மழைதரும் சடங்கினை மேற்கொள்கின்றனர்.

ஆதிக்குடிகளின் எண்ணிக்கை, கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் அங்குக் குடியேறிய ஐரோப்பியருடன் செய்த போரினாலும், பெரியம்மை, மேக நோய் ஆகியவற்றாலும் குறைந்தது. அவர்கள், தங்கள் பண்பாட்டுப் பெருமையினை உணராத ஐரோப்பியரால் கீழ்த்தரமாக நடத்தப்பட்டு நிலத்தையும் வாழிடங்களையும் இழந்து ஒருவித மனநோயால் தாக்கப்பட்டனர். அங்கு 1930-ஆம் ஆண்டு மக்கள் கணிப்பின்படி 61,000 கலப்பற்ற ஆதிக்குடிகளும் 18,000 கலப்பு ஆதிக்குடிகளும் மட்டுமே எஞ்சினர். பொதுக் குடி ஒப்பந்தத்தின் விளைவாக 1967-ஆம் ஆண்டில், ஒட்டுரிமை அளிக்கப்பட்டது. இவர்களிடையே பெரும்பாலும் காணப்பட்ட குடிப்பழக்கம், 'டிராகோமா' என்னும் கண்நோய் ஆகியவற்றை ஒழிப்பதற்கான நிதியொன்றும் அமைக்கப்பட்டது. முற்போக்கு அரசாங்கத்தால் 1977-ஆம் ஆண்டு மே மாதம், ஆதிக்குடிகள் நலனுக்காக மூன்று உயர்நிலைக் குழுக்கள் அமைக்கப்பட்டன.

இன்று ஆசுத்திரேலியாவிலுள்ள 1,35,000 ஆதிக்குடிகள், மொத்த மக்கள் தொகையில் ஒரு விழுக்காடு மட்டுமேயாவர். இதில் 45,000 பேர் மட்டுமே கலப்பற்ற ஆதிக்குடிகளாவர். எனினும் இந்த ஆதிக்குடிகளுள் முதிய தலைமுறையினரும் நாட்டுப் புறங்களில் வாழ்வோரும் இன்றும் தம் பண்பாட்டுப் பெருமையினைப் பாதுகாத்து வருகின்றனர்.

ம.ந.பு.

துணை நூல்கள்:

**Loffler, Race and Warner, The Australian People Hutchinson Group, Pvt.,Ltd., Victoria, 1977.**

**Elkin A.P., The Australian Aborigines, Halstead Press, Sydeny, 1956.**

***ஆசு துருபல்*** கார்த்தசீனியப்படைத்தலைவர். இவர் ஆமில்கர் பார்க்காவின் மருமகன்; ஆமில்கர் கி.மு. 229-இல் நீரில் மூழ்கி இறந்துபோனபிறகு, இசுபெயினில் கார்த்தேசின் படைகளின் தலைவரானார். அரசியல் சூழ்நிலையைப் பயன்படுத்தி இசுபெயினில் கார்த்தசீனியரின் அதிகாரத்தையும் செல்வத்தையும் பெருக்கிக் கொண்டார். புதிய கார்த்தேசு (**Carthage**) நகரத்தை அமைத்தவரும் இவரே. உரோமானியருடன் கி.மு. 226-இல் உடன்படிக்கை செய்து கொண்டு இசுபெயினில் தற்காலிகமாக உரோமானிய விரிவை நிறுத்தினார். ஆசு துருபல் (**Hasdrubal**) கி.மு. 221-இல் கொலை செய்யப்பட்டார்.

மற்றொரு ஆசு துருபல், ஆமில்கரின் மகனும் ஆனிபாலின் தம்பியும் ஆவார். இரண்டாம் பியுனிக் குப்போர் தொடங்கிய போது அவர் இசுபெயினில் தங்கியிருந்தார். அப்போர் கார்த்தேசுக்கும் உரோமா புரிக்குமிடையே (கி.மு. 218-201) நடந்தது. இசுபெயினில் தங்கி அங்குப் படை வீரர்களையும் பொருளையும் திரட்டி, ஆனிபாலின் இத்தாலியப் படையெடுப்பிற்கு உதவினார். அவர் கி.மு. 207-இல் காலமானார்.

***ஆசு துரை:*** இராபர்ட்டு வில்லியம் தெசுட்கோட் ஆசு (**Robert William Diestcouat Ashe**) திருநெல்வேலியின் மாவட்ட ஆட்சியாளராக (**Collector**) இருந்தவர். வாஞ்சிநாதன் என்ற தமிழ்நாட்டுப் புரட்சிவீரர் 1911-ஆம் ஆண்டு மணியாச்சிப் புகைவண்டிச் சந்திப்பில் இவரைச் சுட்டுக் கொன்றார்.

இவர் 1911-ஆம் ஆண்டு சூன் 19-ஆம் நாள் முற்பகல் 11 மணி அளவில் தம் மனைவியுடன் திருநெல்வேலியிலிருந்து மணியாச்சிச் சந்திப்பு வந்து சேர்ந்தார். அங்கு அவர்கள் தூத்துக்குடி விரைவு வண்டியை எதிர்பார்த்துக் கோடைக்கானல் போகக் காத்திருந்தார்கள். மனைவியை முதல் வகுப்புப் பெட்டியில் ஏற்றிவிட்டு மணியாச்சிப் புகைவண்டி நிலையத்தில் மேடையில் உலவிக் கொண்டிருந்த போது இச்சம்பவம் நிகழ்ந்தது. ஆசு துரையின் உடல் பாளையங்கோட்டை ஆங்கிலத் திருச்சபைக் கல்லறையில் நல்லடக்கம் செய்யப்பட்டு நினைவுத் தூணும் எழுப்பப் பெற்றுள்ளது.

**ஆசுதோசு முகர்சி (கி.பி.1864-1924)** என்பவர் 20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த மிகச் சிறந்த கல்வியாளர்; நீதியாளர். இவர் வங்காள மாநிலத்தில் தோன்றிய இலக்கிய மறுமலர்ச்சி; இந்திய மறுமலர்ச்சிக்கே வழிகாட்டியாக உயர்ந்திருந்த காலத்தில் வாழ்ந்தவர். இவர் காலத்தில் தேசிய இயக்கத்தில் தீவிரவாதிகளின் தீரச் செயல்கள் மிகுந்திருந்தன. அக்காலம்தான் வங்காளப் பிரிவினைக் காலம். அதுவரை ஆங்கில இந்தியப் பேரரசின் தலைநகராக இருந்த கல்கத்தா 1912-ஆம் ஆண்டில் மாற, புதுதில்லி இந்தியப் பேரரசின் தலைநகராக உயர்வு பெற்ற காலம். சுதேசி இயக்கம், மகாத்மா காந்தியின் தேசியத் தலைமையின் தொடக்கம், அவரது ஒத்துழையாமை, வரிகொடா இயக்கம் ஆகியவற்றின் தொடக்கக் காலம். அது இந்திய வரலாற்றின் எழுச்சி மிகு காலமும் ஆகும். இந்தக் காலக்கட்டத்தில்தான் ஆசுதோசு முகர்சி **(Astosh Mukerjee)** கல்கத்தா உயர் நீதிமன்றத்தில் ஏறத்தாழ இருபது ஆண்டுக்காலம் (1904-1923) நீதிபதியாகவும், அதே காலத்தில் இருமுறை (1906-1914, 1921-1922) கல்கத்தாப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராகவும் அரும்பணியாற்றினார். மேலும் கி.பி. 1899 லிருந்து 1903-ஆம் ஆண்டு வரை வங்காளச் சட்டமன்றம், பேரரசுச் சட்டமன்றக் குழுக்களின் உறுப்பினராகவும் பணியாற்றினார். இவர்தம் சிந்தனையும் செயல்களும் தொடக்க முதலே இந்திய உயர்கல்வியினைத் திருத்தியமைத்து, அது இந்தியரனைவருக்கும் உகந்ததாகச் செய்ய வேண்டும் என்பதில் நாட்டம் கொண்டிருந்தன. இரவின் முடிவில் இளஞாயிறு எழுந்து ஒளிபரப்புவது போன்று, அறிவொளி பெற்ற பின்னர் அரசியல் விழிப்புணர்வும், சுதந்திர வேட்கையும் எழுமென இவர் உறுதியாக நம்பினார்.

அரசியல்வாதிகளின் தன்னலம், அரசு அதிகாரிகளின் அதிகாரத் தலையீடு போன்றவையின்றிக் கல்விமுறை உருவாக்கப்பட வேண்டும். அவ்வாறு உருவாக்கப்படும் கல்விமுறைதான் இளைஞர்களிடையே விடுதலை உணர்வினைத் தட்டியெழுப்பித் தேசிய உணர்வினை ஊட்டுவிக்கும். எனவே, அத்தகு சிறப்பு நிலை உருவாக்கப்பட ஆசுதோசு முகர்சி நான்கு வழிகளைக் குறிப்பிட்டிருந்தார். 1) அதுவரை உயர் குலத்தோரின் – செல்வந்தரின் தனிச்சொத்தாக இருந்த உயர் கல்வித் துறையின் கதவுகள் முழுவதுமாகத் திறக்கப்பட வேண்டும். ஏற்றத்தாழ்வின்றி அனைவருக்கும் உயர் கல்வி என்ற நிலை ஏற்பட வேண்டும். இந்தியச் சமுதாயத்தில் புரையோடியிருந்த மூடப்பழக்க வழக்கங்கள் அகற்றப்பட வேண்டும். இவையே இந்தியாவில் புத்தொளி பிறக்க வழிவகை செய்யும். 2) மேலை நாடுகளில் உள்ள சிறந்த



ஆசுதோசு முகர்சி

பல்கலைக் கழகங்களும் திருத்தியமைக்கப்பட வேண்டும். 3) தேர்வுகள் நடத்திப் பட்டங்களை மட்டுமே வழங்கும் நிலையினை மாற்றிக் கற்பித்தல், ஆராய்தல் என்ற பணிகளை உள்ளடக்கியதாகக் கல்கத்தாப் பல்கலைக் கழகம் மாற்றப்பட வேண்டும். 4) அதிகார வருக்கத்தினரின் பிடியிலிருந்து விடுவிக்கப்பட்டு, சுதந்திரமாகப் பாடத் திட்டங்களை உருவாக்கிச் செயற்படுத்தும் உரிமையினைப் பல்கலைக் கழகங்கள் பெற வேண்டும் என்பன அவையாகும்.

இந்து சமய மரபுகளில் பற்றுறுதி கொண்டிருந்த அந்தணர் குலத்தில் தோன்றி ஆசுதோசு முகர்சி இந்தியச் சமுதாயப் பணிகளை எதிர்க்கும் நெஞ்சுரம் கொண்டவராகத் திகழ்ந்தார். திருமணத்தின் போது சீதனம் வாங்கும் கொடுமையினைச் சாடுவதற்கு இவரே எடுத்துக்காட்டாக விளங்கினார். விதவைகள் மறுமணத் திட்டத்தினை ஆதரித்தார். குழந்தைப் பருவத்திலேயே மணந்து கைம்பெண்ணாகி விட்ட—தம் செல்வ மகளுக்கு மறுமணம் செய்வித்தார். தீண்டாமை ஒழிப்பினையும் முழுமனத்தோடு ஆதரித்தார். மற்றவர் இவற்றைப் பற்றிச்

சிந்திப்பதற்கே அஞ்சிய காலத்தில் செயற்கரிய செய்த செயல் வீரராக ஆசுதோசு முகர்சி விளங்கினார். இவர் சமத்துவம், உரிமை போன்றவற்றிற்காகப் போராடும் திண்மை மிக்கவர். தமது கருத்திற்கொவ்வாத எதனையும் எவ்வளவு செல்வம், செல்வாக்கு அளிப்பதாக இருப்பினும் மறுக்கும் மாண்புடையவர்.

கல்கத்தாவில் டாக்டர் கங்கா பிரசாத்து முகர்சிக்கும் சகத்தாரிணிதேவிக்கும் முதல் மகனாகக் கி.பி. 1864-ஆம் ஆண்டு சூன் மாதம் 29-ஆம் நாள் ஆசுதோசு முகர்சி பிறந்தார். டாக்டர் கங்கா பிரசாத்து முகர்சி ஊக்லி மாவட்டத்திலிருந்து கல்கத்தா நகர் நோக்கிப் பிழைக்க வந்த ஓர் எளிய அந்தண குலத்தினர். கல்கத்தா மாநகரின் சிறந்த மருத்துவர் என விரைவிலேயே புகழ்பெற்ற கங்கா பிரசாத்து முகர்சி முதன் முதலாக வங்க மொழியில் மருத்துவ நூல் ஒன்றினையும் எழுதினார். தம் தந்தையின் கல்வி ஆர்வத்தினையும், உயர் பண்புகளையும் தாயின் செயலாக்கத்தினையும், உரிமை வேட்கையினையும் ஆசுதோசு தம்மகத்தே கொண்டிருந்தார். தமது பதினைந்தாம் வயதில், கல்கத்தா மாநிலக் கல்லூரி நுழைவுத் தேர்வு எழுதி, அதில் மூன்றாம் இடத்தினைப் பெற்றுக் கல்லூரியிற் சேர்ந்தார். கணிதம் இவருக்கு மிகவும் விருப்பத்தை ஊட்டும் பாடம். இவர் கி.பி. 1886-ஆம் ஆண்டில் இயற்பியலில் மூதறிவியல் பட்டம் பெற்றார். கல்கத்தா பல்கலைக் கழகத்திலேயே பெருமை மிகுந்த "பிரேம் சந்த்-இராய்சந்த் மாணவர் மானியம்" பெறுவதற்கு ஆசுதோசு தேர்ந்தெடுக்கப்பட்டார். கல்வி முடிந்த பின் அந்த ஆண்டிலேயே இவர் சோகமாயாதேவி என்பவரை மணந்துகொண்டார்.

தாம் பயின்ற கல்கத்தா மாநிலக் கல்லூரியில் கணிதப் பேராசிரியராக நியமிக்கப்பட்டார். ஆனால், அங்கே பணியாற்றிய வெள்ளையருக்கு இணையான மதிப்பு, ஊதியம் ஆகியவற்றை வேண்டினார். தமது நேர்மையான வேண்டுதல் மறுக்கப்படவே தமக்களிக்கப்பட்ட பதவியினை உதறிவிட்டு வெளியேறினார். ஆங்கிலேயரின் இனஉயர்வுக் கொள்கையினால் பாதிக்கப்பட்ட ஆசுதோசு, தமது வாழ்நாளில் அந்த இனஉயர்வுக் கொள்கையினை முறியடிப்பதென உறுதிபூண்டார். தமது வஞ்சினம் நிறைவேற வேண்டுமெனில் உயர் கல்வித்துறையில் வெகுவான மாற்றங்கள் ஏற்படுத்தப்பட வேண்டும் என்பதைத் தம் குறிக்கோளாகக் கொண்டார்.

கல்கத்தா மாநிலக் கல்லூரியில் தமது வாழ்வினைத் தொடங்க இயலாமல் ஆசுதோசு சட்டத்துறையினை நாடவேண்டியதாயிற்று. கணிதப் படிப்பிற்குத் தேவையான நுண்ணோக்கு, பகுத்தறிதல், தெளிதல் ஆகிய பண்புநலன்களைச் சட்டக்கல்வியிலும் பயன்படுத்தி, மூன்றாண்டுகள் தொடர்ந்து 'தாகூர்ச் சட்டக் கல்விப் பதக்க'ங்களை வென்று சட்டத்துறைப் பட்டம் பெற்று, வழக்குரைஞராகத் தம்மைக் கி.பி. 1889-ஆம் ஆண்டில் கல்கத்தா உயர் நீதிமன்றத்தில் பதிவு செய்து கொண்டார். பின், கி.பி. 1897-ஆம் ஆண்டில் சட்டத்துறையில் டாக்டர் பட்டம்பெற்ற ஆசுதோசு சட்டத்துறைப் பேராசிரியராக நியமிக்கப் பெற்றார். கல்கத்தாச் சட்டக் கல்லூரியில் பயின்றபோது மாணவர்கள் நடத்திய தேசியப் போராட்டங்களிலும் ஆசுதோசு பங்கேற்றார். சுரேந்திரநாத்து பானர்சி சிறையிலடைக்கப்பட்டதை எதிர்த்து நடத்தப்பட்ட மாணவர் போராட்டங்களில் இவர் முன்னிலை வகித்தார்.

இவருக்கு ஈசுவர சந்திர வித்தியாசாகர், சிவநாத சாத்திரி, சி.எச். தானே, குருதாசு பானர்சி, பேராசிரியர் எச்.எம். பெர்சிவல் போன்றோர்களின் தொடர்பும் ஆதரவும் கிடைத்தன. மேலும் நரேந்திரநாத்து தத்தா (சுவாமி விவேகாநந்தர்), பி. சக்ரவர்த்தி, பி.என்.சீல், பி.சி. ராய் போன்றவர்களுடன் பயின்ற பெருமையும் ஆசுதோசு அவர்களுக்கு உண்டு. மற்றும் தினேசு சந்திரசென், பிராசுகுமார் மசும்தார்,பி.ஈ. ஆர்டாக்கு, எசு. இராதாகிருட்டிணன் சி.வி. இராமன் போன்ற மேதைகளோடு பணியாற்றிய பேற்றினையும் இவர் பெற்றிருந்தார்.

அக்காலத்தில் டபுள்யூ. சி. பானர்சி, தாரகநாத்து பாலித்து,இராசுபிகாரி கோசு, குருதாசு பானர்சிஆகியோர் சட்டத்துறையில் இணையற்று விளங்கினர் அத்தகு வித்தகர்களுடன் பணியாற்றிய ஆசுதோசு வழக்குரைஞராகத் தமக்கென ஒரு மதிப்புமிகு இடத்தினை ஏற்படுத்திக் கொண்டு, அவர்களுக்கிணையாகச் செல்வாக்குப் பெற்றார். தமது நாற்பதாம் வயதில், கல்கத்தா உயர்நீதிமன்றத்தின் நீதிபதியாக ஆசுதோசு நியமிக்கப்பட்டார். நீதிபதி பதவியினை ஏற்றுக் கொள்வதால் தமக்கு வருமான இழப்பு ஏற்படினும், அப்பதவியினை ஏற்றுக் கொள்வதன் மூலம் தம் கனவுகள் நனவாக வாய்ப்புகள் ஏற்படக் கூடும் என இவர் நம்பினார். உயர்நீதிமன்ற நீதிபதியாகப் பதவியேற்ற இரண்டே ஆண்டுகளில் கல்கத்தாப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராக நியமிக்கப்பட்டார் (1906). ஆசுதோசின் கனவும் நனவாயிற்று.

நீதிபதியாக இருந்து ஆசுதோசு வழங்கிய தீர்ப்புகளில் பொதுவாக இவரது ஆழ்ந்த சட்ட அறிவு, நுணுகி அலசிப் பார்த்த தெளிவு, நேர்மை ஆகியவை காணப்பட்டன. தாம் நீதிபதியாக இருந்த காலத்

தில் நிருவாகத்தினரின் எதேச்சாதிகாரப் போக்கினைக் கண்டிக்க இவர் ஒருபோதும் தவறியதில்லை.

துணைவேந்தராக நியமிக்கப்படுவதற்கு முன்னரே ஆசுதோசு, பல்கலைக் கழகம் சார்ந்த அனைத்துத் துறைகளிலும் தேர்ச்சி பெற்றிருந்ததோடு, தமது திறமையினையும் வெளிப்படுத்தியிருந்தார். பதினாறு ஆண்டுகள் கல்கத்தாப் பல்கலைக் கழகத்தின் ஆட்சிக்குழு உறுப்பினராக இருந்து சிறப்பாகப் பணியாற்றினார். கணிதத் துறைப் பாடத்திட்டக் குழுவின் தலைவராக இருந்தார். கணிதம், சட்டத் துறைகளில் தேர்வாளராகப் பலமுறை பணியாற்றிய பேரனுபவம் இவருக்கு இருந்தது. இவர் 1909-ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்ட இந்தியப் பல்கலைக்கழகக் குழுவின் உறுப்பினராகவும் திகழ்ந்தார்.

ஆசுதோசு முகர்சி, 1906-ஆம் ஆண்டிலிருந்து 1914-ஆம் ஆண்டுவரை தொடர்ந்து கல்கத்தாப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராக 1906-1916 வரை பணியாற்றினார். அப்போது இவர்காட்டிய ஆர்வமும், செயல்திறனும், அதே பதவியினை மீண்டும் இவருக்கு 1921-ஆம் ஆண்டில் பெற்றுத் தந்தன. இவரது பதவிக் காலத்தில், பல்கலைக் கழகத்தின் தன்னாட்சி உரிமையினை நிலைநிறுத்த மிகவும் பாடுபட்டார். இலிட்டன் பிரபு வங்காள ஆளுநராக இருந்தபோது, பல்கலைக் கழகத்தின் தன்னாட்சி உரிமையினைப் பாதிக்கும் வகையில் சில நிதித்துறைக் கட்டுப்பாடுகளைக் கொண்டுவர முனைந்தார். அவரது அதிகாரத் தலையீட்டினை எதிர்த்த ஆசுதோசு 1922-ஆம் ஆண்டில் துணைவேந்தர் பொறுப்பினை உதறிவிட்டு வெளியேறினார்.

கல்கத்தாப் பல்கலைக் கழகத்தினைத் திருத்தியமைத்து அதனை இந்தியப் பல்கலைக்கழகங்களின் முன்னோடியாக்க வேண்டும் என்று விரும்பிய இவர், ஒரு பல்கலைக் கழகம் எவ்வாறு அமைய வேண்டும் என்பதனைக் குறித்த தம் எண்ணங்களை ஒரு பட்டமளிப்பு விழாச் சொற்பொழிவின் போது வெளியிட்டார். இவரது கணிப்பின்படி பல்கலைக் கழகம் என்பது 'ஓர் அறிவுக் கருவூலம்: தகுதியினை முடிவு செய்யும் செயலகம்: ஓர் அறிவுப் பட்டறை: சிந்தனைச் சிற்பிகளையும், செயலாற்றல் மிக்கோரையும் உருவாக்கும் அறிவுக் களஞ்சியம்' என வருணித்தார்.

இவர் துணைவேந்தராக இருந்தபோதுதான் நாட்டில் தேசிய உணர்வு கொந்தளித்து எழுந்தது. சுதேசி இயக்கம் அயல்நாட்டுப் பொருள்களைப் புறக்கணிக்கும் இயக்கமாக வலுவடைந்தது. தீவிர தேசியவாதிகள் அயல்நாட்டுப் பொருள்களை, துணிமணிகளை, இயந்திர சாதனங்களை, அறிவுசார்ந்த கல்விக் கலைகளை ஒதுக்க முனைந்தனர். அதே நேரத்தில் இந்தியர்களில் பலர், அயல்நாட்டுப் பண்பாட்டு மோகத்தில் திளைத்து, தேசிய பாரம்பரியங்களைத் துச்சமென மதித்து ஒதுக்கியிருந்தனர். இவ்விரு நிலைகளையும் கண்டு மனம் வெதும்பிய ஆசுதோசு, 1907-ஆம் ஆண்டில் ஒரு பட்டமளிப்பு விழாப் பேருரையின்போது இந்திய இளைஞர்களை ஆற்றுப் படுத்தும் வகையினில் தமது அறிவுரைகளை வழங்கினார்.

பட்டமளிப்பு விழாப் பேருரையின்போது முழங்கிய தமது நாட்டுப் பற்றினை, தாய்மொழிப் பற்றினை, செயலாக்க உடனடி முயற்சிகளை மேற்கொண்டார். அதன் முதற்படியாகக் கல்கத்தாப் பல்கலைக் கழகம், வெறும் தேர்வுகள் நடத்திப் பட்டம் வழங்கும் அலுவலமாக இருப்பதை மாற்றி, கற்பித்தல், ஆராய்தல் என்ற பணிகளை நடத்தும் கூடமாக விரிவாகும் செயல் திட்டங்களை வகுத்து, விரைந்து செயலாற்றத் தொடங்கினார். இவரது அயராத பணியின் விளைவாக இந்திய மொழிகளில் பட்டப் படிப்பு, பட்டமேற் படிப்புத் துறைகளும் உருவாயின. அது வரை மேலைநாட்டுக் கல்வி முறையின் உறைவிடமாகவே இருந்த கல்கத்தாப் பல்கலைக் கழகம் அதன் பின்னர் இந்திய மொழி இலக்கியக் கலைகளையும் கற்பிக்கும் மிக்குயர் நிலையினை அடைந்தது. பல அறிவியல் துறைகளில் பட்ட மேற்படிப்பு, ஆராய்ச்சிப் பணி வசதிகள் தோன்றின, கொடையாளர்கள் பலர் அப்பல்கலைக் கழகத்தில் 'அறக் கட்டளை'களை நிறுவினர். பட்ட மேற்படிப்பு, ஆராய்ச்சிப் பணிகள் ஆகியவற்றிற்கு மேலும் ஆக்கமும் ஊக்கமும் அளிக்கும் வகையில் பரிசுகளையும் உதவிகளையும் நல்கினர்.

கல்கத்தாப் பல்கலைக்கழகத்தின் சட்டக்கல்லூரி ஒன்று 1909-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது, அது இலண்டன் மாநகரின் 'ஆர்வர்டு சட்டப் பள்ளியின்' மாதிரியில் அமைக்கப்பட்டிருந்தது. 'சட்டம் என்பது வெறும் வர்த்தகப் பொருளோ சொற்சிலம்பமாடும் தகைமைத்ததோ அன்று; அது ஓர் உயிரோட்டமுள்ள வளரும் கலை' என்று சட்டத் துறைக் கல்வியின் மேன்மையினை ஆசுதோசு விளக்கினார். பின்னர் மருத்துவக் கல்லூரியும் தொடங்கப்பட்டது. கலை அறிவியல் துறைகளில் ஆராய்ச்சிப் பட்டங்கள் வழங்கவும் வகை செய்யப்பட்டது. ஆசுதோசு முகர்சி துணைவேந்தராகப் பணியேற்றபோது (1906) கல்கத்தாப் பல்கலைக் கழகத்தில் ஒரே ஒரு பேராசிரியர் பதவி மட்டுமே இருந்தது. ஆனால் 1914 ஆம் ஆண்டில் இவர் பதவி விலகிய போது 25 பேராசிரியர் பதவிகளும், நூற்றுக்கு அதிகமான விரிவுரையாளர் சிறப்பு விரிவுரையாளர் பதவிகளும் உருவாக்கப்பட்டிருந்தன.

துணைவேந்தர் பதவியினின்று விலகிய பின்னரும் ஆசுதோசின் கல்விப் பணி மேலும் தொடர்ந்தது. இவரது, கல்விப்பணியின் மேன்மையினை உணர்ந்த ஆங்கில அரசு, பலத்த எதிர்ப்புகளுக்கிடையிலும் இவரைச் 'சாட்லர் பல்கலைக் கழகக் குழு' (1917)வின் உறுப்பினராக்கியது.

இலிட்டன் பிரபுவுடன் ஏற்பட்ட மோதலின் விளைவாகத் துணைவேந்தர் பதவியினை உதறித் தள்ளிய பின்னர், அரசியலில் ஈடுபட்டு, அநீதிகளை எதிர்க்கும் தமது போராட்டப் பணியினைத் தொடர எண்ணினார். செல்வர்கள் மட்டுமே அரசியலில் செல்வாக்குப் பெற முடியும் என்ற நிலையிருந்த போது, அதற்கான தகுதியோ மனப்பாங்கோ தம்மிடம் இல்லாமையால், ஆசுதோசு அரசியலில் ஈடுபட விரும்பவில்லை. இவர் 1923-ஆம் ஆண்டு திசம்பர் மாதம் 31-ஆம் நாள் நீதிபதி பதவியினின்றும் ஓய்வு பெற்றுப் பின்னர் 1924-ஆம் ஆண்டு மே மாதம் 25-ஆம் நாள் இவ்வுலக வாழ்வினைத் துறந்தார்.

ஆசுதோசு முகர்சி பெற்ற சிறப்புகள் பின்வருமாறு:

1. ஆங்கில அரசிடமிருந்து 'சர்' பட்டம் பெற்றார் (1911).
2. கல்கத்தா ஆசியக் கழகத்தின் தலைவர்.
3. இலண்டன் நகரிலிருந்த பேரரசு ஆசியக் கழகத்தின் உறுப்பினர்.
4. இலண்டன், எடின்பரோ, பாரிசு,பாலர்மோ, நியூயார்க்குப் போன்ற நகரங்களின் கணிதக் கழகங்களில் உறுப்பினர்.
5. எடின்பரோ அரசக்கழகத்தின் உறுப்பினர்.
6. அரச வானியல் கழக உறுப்பினர்.
7. அயர்லாந்து அரசக் கழக உறுப்பினர்.
8. இந்திய அருங்காட்சியக ஆட்சிக் குழு உறுப்பினர்.
9. கல்கத்தாக் கணிதக் கழகத்தினைத் தோற்றுவித்துப் பல ஆண்டுகள் தலைமையேற்று நடத்தியவர்.
10. இந்திய-இலங்கைப் பௌத்த சமய நிலையங்கள் வழங்கிய 'சம்புத காம சக்கரவர்த்தி' என்ற பட்டத்தினைப் பெற்றவர்.

நீதித்துறைத் தீர்ப்புகள், பல கழகங்களில் ஆற்றிய சொற்பெருக்குகள், இந்திய, அயல்நாட்டு இதழ்களுக்கு எழுதிய எண்ணற்ற கட்டுரைகள் ஆகியவற்றைத் தவிர மேலும் சில நூல்களையும் ஆசுதோசு முகர்சி எழுதியுள்ளார். வ.இரா.

**ஆசுபெட்டு:** கருநாடக மாநிலத்துப் பெல்லாரி மாவட்டத்தில் உள்ள நகரம். இவ்வூரில் இருப்புப் பாதை நிலையம் ஒன்று உள்ளது. பெல்லாரியிலிருந்து ஏறத்தாழ 60 கி.மீ. தொலைவிலுள்ளது ஆசுபெட்டு (Hospet). இவ்வூருக்கு 10 கி.மீ. வடமேற்கில் விசயநகரப் பேரரசின் அழிவுச் சின்னங்களைக் கொண்டு விளங்கும் அம்பி (Hampi) அமைந்துள்ளது.

**ஆசுபேசியா** ஆதன்சின் அரசியல் வல்லுநராகிய பெரிக்கிளிசின் (Pericles) மனைவி. கிரீசு நாட்டில் மயிலிடசில் (Miletas) பிறந்தவள் (கி. மு. 500). ஆசுபேசியா (Aspasia) பெரிக்கிளிசுடன் ஏறத்தாழ இருபது ஆண்டுகள் வாழ்ந்தாள். பெரிக்கிளிசுக்குப் புத்துணர்ச்சியையும் மனத்திட்பத்தையும் அளித்தவள் ஆவாள். எனினும் இவர்களின் திருமணத்தை அதீனியச் சட்டம் ஏற்றுக்கொள்ளவில்லை. பெரிக்கிளிசின் முதல் மனைவிக்குப் பிறந்த இரு பிள்ளைகளும் காலமானபோது, ஆசுபேசியாவுக்குப் பிறந்த மகன் ஆதன்சின் குடிமகனாக ஏற்றுக் கொள்ளப்பட்டார். ஆதன்சில் பெண்கள் குடும்பப் பொறுப்பை நிருவகிப்பவர்கள்; பொது வாழ்வில் ஈடுபாடு கொள்வதில்லை. ஆனால் ஆசுபேசியா புதிய கருத்துகளைக் கொண்டவள்; பொது வாழ்வில் பெரிதும் ஈடுபாடு கொண்டவள். சாக்ரட்டீசு அவளை மதித்தார். அவர்தம் சீடர்கள் ஆசுபேசியாவின் நினைவைச் சாகாமல் காத்தனர். அவள் மீது சுமத்தப்பட்ட வழக்குகள் தள்ளப்பட்டுக் குற்றமற்றவள் என்று நிரூபிக்கப்பட்டாள். பெரிக்கிளிசு காலமான பின்னர் ஆசுபேசியா இலைசிக்கிளிசு (Lysicles) என்னும் கால்நடை வணிகரைக் கணவனாக அடைந்து தம் இரண்டாம் மகனைப் பெற்றாள்.

**ஆசுமூர்-கார்ட்டியர் தீவுகள்** ஆசுத்திரேலியாவுக்குச் சொந்தமான நிலப்பகுதி. இந்தியப் பெருங்கடலில் ஆசுத்திரேலியாவின் வடமேற்குக் கடற்கரையையொட்டியுள்ள ஆசுமூர்-கார்ட்டியர் தீவுகள் (Ashmore Cartier Islands) ஆசுத்திரேலியாவிலிருந்து 282கி.மீ. தொலைவில் அமைந்துள்ளன. இப்பகுதியில் ஆசுமூர்த் (Ashmore) தீவுக் கூட்டமும், கார்ட்டியர் (Cartier) தீவும் அடங்கும். ஆசுமூர்த் தீவுக் கூட்டத்திற்கு மத்திய கிழக்கு, மேற்குத் தீவுகள் என்ற பெயரும் உண்டு. இத்தீவுகளில் மக்கள் வாழவில்லை. மொத்தப் பரப்பளவு 199 ச.கி.மீ. இங்கிலாந்து கி.பி. 1878-இல் ஆசுமூர்த் தீவுகளையும், 1909-இல் கார்ட்டியர் தீவையும் உரிமை கொண்டாடியது. இவையனைத்தையும் ஆசுத்திரேலியாவுக்கு (Australia)1931 இல் ஆங்கிலேயர் கொடுத்து விட்டனர். வடக்கு ஆசுத்திரேலிய மாநிலம் 1938-இல் இவற்றைக் கைப்பற்றிக் கொண்டது. ஆசுமூர்-கார்ட்டியர் தீவுகள் 1978-இல் காமன்வெல்த்து நிறுவனத்தின் நேரடிப்

பொறுப்பில் வந்தன. ஆசுத்திரேலியாவுக்கும் இந்தோனேசியாவுக்கும் இடையே ஏற்பட்ட ஒப்பந்தத்தின் படி, இந்தோனேசியா இத்தீவுகளில் மீன் பிடிக்கும் உரிமையையும், தண்ணீர் கொள்ளும் உரிமையையும் பெற்றுள்ளது. ஆசுத்திரேலியக் கப்பற் படையைச் சார்ந்த கப்பல்களும் விமானங்களும் அவ்வப்போது இத்தீவுகளில் ஆய்வு நடத்துகின்றன.

**ஆசுலோ** நார்வே நாட்டின் தலைநகரம். ஐரோப்பாக் கண்டத்தின் வடக்கிலுள்ள இசுகாண்டிநேவியத் (Scandinaviya) தீபகற்பத்தில் நார்வே, சுவீடன் என்னும் இரு நாடுகள் உள்ளன. நான்காம் கிறித்தியன் என்னும் அரசரால் இந்நகரம் கி.பி. 1624-இல் புதுப்பிக்கப்பட்டது. இதை 1925-ஆம் ஆண்டு வரை கிறித்தியானியா (Christiania) என்று குறிப்பிட்டனர். இக்காலத்தில் நார்வே மக்கள் தங்கள் தாய் மொழிச் சொல்லாகிய ஆசுலோ (Oslo) என்னும் பெயராலேயே இந்நகரைக் குறிப்பிடுகிறார்கள். வட கடலையும் பால்டிக்குக் கடலையும் இணைக்கும் நீர்ப்பிரிவு இசுகாகராக் (Skagerrak) கிலிருந்து தென் கிழக்காக ஆசுலோ நீர்த்துறையின் முகப்பில் இந்நகரம் அமைந்துள்ளது. ஆசுலோ நார்வே நாட்டின் பொருளாதாரத்திற்கும் போக்குவரத்திற்கும் பண்பாட்டிற்கும் மையமாகும்.



ஆசுலோ நகரம்

நார்வேயின் தொன்மையான பல்கலைக் கழகம் ஆசுலோவில்தான் அமைக்கப் பெற்றுள்ளது. அதனைப் பிரடெரிசானாப் பல்கலைக் கழகம் என்பர். இந்நகரம் இரண்டாம் உலகப் போரின் போது செருமானியரின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. போருக்குப் பின்னர் விடுதலை பெற்றது. மக்கள் தொகை 4,50, 386(1982).

**ஆசூர் பானிபல்:** அசிரிய நாட்டின் கடைசி மன்னர். இவர் தந்தையின் பெயர் இசார் ஆடோன் (Esar Haddon). இவர் கி.மு. 668-ஆம் ஆண்டில் அசிரிய நாட்டு மன்னராக முடி சூட்டிக் கொண்டு கி.மு. 627-ஆம் ஆண்டுவரை அசிரியாவின் பேரரசராக ஆட்சி செய்தார். இவரை அசுர் பானிபல் என்றும் அழைப்பதுண்டு. இவர் கொடுங்கோலாட்சிக்கும் வீரத்திற்கும் வெற்றிக்கும் பெயர் பெற்றவர். இவரது தலைநகர் நினேவா (Ninevah) ஆகும். இவருடைய ஆட்சியின்போது தம் நாட்டின் செல்வாக்கை எகிப்தில் நிலை நாட்டியதும், பாபிலோனை ஒடுக்கியதும் சிறப்புமிகு சாதனைகளாக அமைந்தன. பின்னர்ப் பாரசீகமும் சிரியாவும் பாலசுத்தீனமும் (Palestine) இவரது மேலாதிக்கத்தை ஏற்றுக்கொண்டன. பினீசியாவைச் சேர்ந்த ஒரு சில நகரங்களும் ஆசியாமைனர் பகுதியைச் சேர்ந்த பல மாநிலங்களும் இவரது தலைமைக்குப் பணிந்தன.

இவரை யூதர்கள் 'அசுனாப்பர்' (Asnapper) என்ற பெயராலும், கிரேக்கர்கள் 'சர்தானாபாலசு' (Sardanapallos) என்ற பெயராலும், உரோமர்கள் 'சர்தானாபாலுசு' (Sardanapalus) என்ற பெயராலும் குறிப்பிடுவர்.

இவரது ஆட்சிக்குப் பின்னர் இவர் பிள்ளைகள் ஆசூர்-எதிலிலானி (Ashur-Etililani), சின்-சார்-இசுகுன் (Sin-Shar-Ishkun) ஆகியோர் போதிய திறமையின்மையின் காரணமாக, நான்கு ஆண்டுகளுக்குள்ளாகவே பழம்பெருமையை இழந்த நிலையில் தங்கள் ஆட்சி அழியக் காரணமாகிவிட்டார்கள். எனவே கி.மு. 612-ஆம் ஆண்டில் பாபிலோனியர்களும் சித்தியக் குடியினரும் (Seythians), மீட்சுக் குடியினரும் (Medes) ஒரு கூட்டணியை அசிரியாவுக்கு எதிராக அமைத்துப் படையெடுத்து நினேவாவை முற்றுகையிட்டு, அசிரியப் பேரரசைச் சூறையாடியதோடு மக்களையும் அடிமைப்படுத்தினர்.

ஆசூர் பானிபல் (Ashur Banipal) ஒரு சிறந்த கலைஞர். பாபிலோனியா, சுமேரியா, அசிரியா போன்ற பண்டைய நாகரிகங்களைச் சேர்ந்த பல்வகை எழுத்து முறைகளைத் தம் அரண்மனையிலே வைத்துப் பாதுகாத்தார். களிமண் வரைபட்டித் தொகுதிகளைக் (Tablets) கொண்டே ஒரு நூல் நிலையத்தையும் அமைத்தார். அந்த நூல் நிலையம் இன்று ஆங்கில அருங்காட்சியகத்தில் உள்ளது. மெசபொடோமியாவின் பண்டைய வரலாற்றையும், பண்பாட்டையும் அறிவதற்கு இந்த நூல்நிலையம் தான் சிறந்த சான்றுகளை அளிக்கிறது. ஆசூர் பானிபல் இலக்கியத் துறைக்கும் கட்டிடக் கலைக்கும் அறிவியல் துறைக்கும் வேண்டிய அரசு ஆதரவைத் தந்தவர்.

ஆசூர் பானிபல் தம் 43-ஆம் வயதில் அளவுக்கு மீறிய செல்வத்தைக் குவித்துப், பகட்டான அரச வாழ்க்கையை அனுபவித்தார். விண்மீன்களின் வரலாற்றை அறிவதில் மிகுந்த நாட்டம் செலுத்தினார். மேன்மேலும் படிக்க வேண்டும் என்ற வேட்கையுடையவராக விளங்கினார். தலைநகராகிய நினேவாவில் உள்ள நூல் நிலையத்தில் வரலாற்றுத் தொடர்பான பதிவேடுகளையும், சமயச் சார்பான நூல்களையும், அரசுச் சார்பான கடிதங்களையும், பல்வேறு செய்யுட் பகுதிகளையும், வரலாறு, அறிவியல், வாழ்க்கைவரலாறு ஆகியவை பற்றிய நூல்களையும், இலக்கிய, இலக்கண நூல்களையும் வைத்துப் பாதுகாத்தார். பொன்.சு.

**ஆஞ்சு** மேற்குப் பிரான்சில் இருந்த முன்னாள் மாநிலங்களுள் ஒன்று. இதன் வடக்கே மெய்ன் **(Maine)** என்னும் மாநிலமும், கிழக்கே தூரேய்ன் மாநிலமும், தெற்கே பாய்ட்டோ **(Poitou)** என்னும் மாநிலமும் மேற்கே பிரெடிக்னி மாநிலமும் எல்லைகளாக உள்ளன. உலோயர் ஆற்றுப் பள்ளத்தாக்கு ஆஞ்சு மேட்டு நிலத்தை இரண்டாகப் பிரிக்கிறது. இம்மாநிலத்தின் மேற்கில் சமவெளிகளும், தெற்கில் மாயின், சார்தே **(Sarthe)** ஆகிய ஆறுகளின் தாழ்நில வடிநிலங்களும் உள்ளன. வரலாற்றுக்கு முந்தைய கால மனிதன் வாழ்ந்ததற்கான பெருங்கற்காலச் சின்னங்கள் இப்பகுதிகளில் கண்டுபிடிக்கப்பெற்றன. உரோமானிய ஆட்சியின் போது இப்பகுதி பேபியசு என்பவரால் வென்று கொள்ளப் பெற்றது. மூன்றாம் வேலன்டினியன் (கி.பி. 419 - 455) ஆட்சியின்போது மேலை உரோமானியப் பேர்ரசின் கட்டுப்பாட்டிலிருந்து விடுவித்துக் கொண்டு ஆர்மோரிகன் கூட்டாட்சிக் குழுவில் இணைந்து கொண்டது. ஆஞ்சுவின் முதல் கோமகனாகக் கி.பி. 720-இல் இரெயின் பிராய் என்பார் அமர்ந்தார். ஆஞ்சுவின் **(Anjou)** பதினோராம் கோமகனாகிய சியோப்ரோவைப் பிளாண்டாசெனட்டு என்றனர். அவர் கொப்பூழ்க் கொடியொன்றை அணிந்து கொண்டமையால் இப்பெயர் பெற்றார். அவர் இங்கிலாந்து மன்னர் முதலாம் என்றியின் மகள் மாடில்டாவை மணந்து கொண்டார். அவருக்குப்பின் அவர் மகன் ஆஞ்சுவின் கோமகனானார். அவரே பின்னர் இரண்டாம் என்றி என்னும் பட்டத்துடன் இங்கிலாந்தின் அரசரானார். இங்கிலாந்து அரசர்கள் கி.பி. 1203-ஆம் ஆண்டுவரை ஆஞ்சுவைத்தம் பிடியில் வைத்திருந்தனர். இங்கிலாந்து அரசராகிய சான் மன்னரிடமிருந்து பிலிப்பு அகசுடசு என்பார் கி.பி. 1203க்குப் பின்னர் ஆஞ்சுவைக் கைப்பற்றிக் கொண்டார். பிரான்சு மன்னர்களாகிய ஒன்பதாம் லூயி, ஆறாம் பிலிப்பு ஆகியோர்களின் காலத்தில் ஆங்கிலேயர் ஆஞ்சுவை ஆண்டனர். பதினோராம் லூயி மன்னர் ஆஞ்சுவைப் பிரான்சுடன் இணைத்து விட்டார். பிரெஞ்சுப் புரட்சியின் போது குடியரசுவாதிகளுக்கெதிராக ஆஞ்சு மாநிலம் போரிட்டது. ஆஞ்சு மாநிலம் கி.பி. 1790-இல் மெய்ன்-யத்-லோயா என்னும் நிருவாகப் பிரிவின் பகுதியாயிற்று.

**ஆட்கொணர்விக்கும் நீதிப்பேராணை:** குறிப்பிட்ட ஒன்றைச் செய்யுமாறோ செய்யாதிருக்குமாறோ ஒருவருக்கு எழுத்து மூலம் உத்தரவிடும் உயர்நீதி மன்ற, உச்ச நீதிமன்ற ஆணைதான் நீதிப் பேராணை என்பதாகும்.

இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் 225-ஆம் பிரிவின்படி இந்திய உயர்நீதிமன்றங்கள், இவ்வாணை பிறப்பிக்கும் அதிகாரத்தைப் பயன்படுத்தலாம். உச்ச நீதிமன்றமும் 32-ஆம் பிரிவின்படி இந்தப் பேராணையை வழங்கலாம். அடிப்படை உரிமைகள் பாதிக்கப்பட்ட அல்லது பறிபோன ஒருவர், இவ்வாணை அதிகாரத்தைப் பயன்படுத்துமாறு உயர் நீதிமன்றத்தில் முறையீடு செய்யலாம். சிறப்பாக இந்த நீதிப் பேராணைகள் நெறிமுறை உறுத்தும் நீதிப்பேராணை **(Writ of Certiorari)**, ஆட்கொணர்விக்கும் நீதிப்பேராணை **(Writ of Habeas Corpus)**, தடையுறுத்தும் நீதிப்பேராணை**(Writ of Prohibition)**, செயலுறுத்தும் நீதிப்பேராணை**(Writ of Mandamus)**, தகுதி முறை வினவும் நீதிப்பேராணை **(Writ of Quo Warranto)** என நீதிப்பேராணைகள் ஐந்து வகைப்படும். இவ்வாணைகளைக் கொண்டு சீர்குலைந்த அல்லது பறிக்கப்பட்ட உரிமைகளை உயர்நீதி மன்றத்தின் மூலம் நிலைநிறுத்தச் செய்யலாம்.

உரிய காரணமின்றிச் சிறைப்படுத்தப்பட்டவரை நீதி மன்றத்தின் முன் கொண்டுவந்து, சிறைப் படுத்தியதற்கான காரணத்தை விளக்கும்படி சிறைப் படுத்தியவருக்கு இடப்படும் ஆணையே ஆட்கொணர்விக்கும் நீதிப்பேராணையாகும். ஒருவரை மற்றொருவர் சிறைப்பிடித்து வைத்திருந்தால், சிறைப் படுத்திவைக்கப்பட்டிருப்பவரைச், சிறைப்படுத்தியவர் நீதிமன்றத்தின் முன்னர்க் கொண்டுவந்து காட்டி, என்ன காரணங்களுக்காகச் சிறைப்படுத்தி வைத்திருக்கிறார் என்பதை நீதிமன்றத்தில் எடுத்துரைக்க வேண்டும். சிறைப்படுத்தியிருப்பதற்கான காரணம் உகந்ததல்லாமல் இருந்தால், நீதிமன்றம் அவரை விடுவிக்கும். இந்த நீதிப்பேராணையை நடைமுறைப் படுத்துவதில், குறிப்பிட்ட வழக்குகளில் பின்பற்றப் படும் சுருக்கமான நடைமுறை **(Summary Procedure)** பின்பற்றப்படும். இப்பேராணை, குற்றமிழைத்தவரைத் தண்டிப்பதில்லை. முறையின்றிச் சிறைப்

படுத்தப் பட்டவரை அச்சிறைப் பிடியிலிருந்து நீதி மன்றம் மூலம் வெளிக்கொண்டு வந்து விடுவிக்கிறது. இந்த நீதிப்பேராணை, தவறு இழைக்கும் அரசுக்கும் தனிப்பட்டவருக்கும் எதிராகச் செலுத்தப்படும்.

சிறையில் இருப்பவர் சார்பில் அவர்தம் உறவினரோ நண்பரோ அவரை விடுவிக்கக்கோரி நீதி மன்றத்தில் மனுச் செய்யலாம். அவ்வாறு மனுச் செய்யும்போது, சிறையில் இருப்பவர், மனுச்செய்ய இயலாமைக்குரிய காரணங்களைக் கூறவேண்டும். குழந்தைகளைப் பொறுத்தவரை அவர்களின் சட்ட முறையில் அமைந்த காப்பாளர்களே இந்த நீதிப் பேராணைக்காக மனுச் செய்யலாம். அவர் அவ்வாறு மனுச் செய்ய இயலாதவராக இருந்தால், குழந்தையின் உறவினர்கள் உரிய காரணங்களுடன் மனுச்செய்யலாம்.

இந்த நீதிப்பேராணை மனு, உயர்நீதி மன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டு, வழக்கின் தகுதிகள் அடிப்படையில் முடிவெடுக்கப்பட்டுத் தள்ளப்பட்டு விட்டால், அதே காரணங்களுக்கான அடிப்படையில், உச்ச நீதிமன்றத்தில் வழக்குத் தொடர இயலாது. மேல்முறையீடு மட்டில் உண்டு. ஆனால், ஆட்கொணர்விக்கும் நீதிப்பேராணையைப் பொறுத்தவரை இந்த விதி ஏற்புடையதாக இல்லை என்று குலாம் சார்வார் எதிர் (Vs) 'ஏர் இந்திய யூனியன்' (Air 1967 S. C. 1335) என்ற வழக்கில் தீர்ப்புச் சொல்லப்பட்டது.

சட்டத்திற்கு மாறாக, அரசைத் தவிர வேறு ஒருவரால் ஒருவர் சிறைப்படுத்தப்பட்டு அல்லது பிறர் அறியாமல் ஓரிடத்தில் வைக்கப்பட்டிருந்தால், உச்சநீதி மன்றத்தின் முன் இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் 32-ஆம் பிரிவின் கீழ், நேராக மனுச் செய்து ஆட்கொணர்விக்கும் நீதிப்பேராணை கேட்க இயலாது. ஒருவர் சட்டப்படி பாதுகாப்பில் வைக்கப் பட்டிருந்தாலோ சட்டப்படி தண்டிக்கப்பட்டுச் சிறைப்படுத்தப்பட்டிருந்தாலோ இந்த நீதிப் பேராணை எழாது. வழக்குத் தொடரப்பட்ட தேதியில் உள்ள நிலையைக் கருத்திற்கொண்டு இந்த நீதிப்பேராணை வழங்கப்படுவதன்று; நீதிப் பேராணை பிறப்பிக்கப்படும் தேதியில் உள்ள நிலையைக் கருத்திற்கொண்டே வழங்கப்படுவதாகும்.

ஒரு சட்டம் நிருவாக முறையில் செயற்படுத்தப் படும்பொழுது, ஏற்படும் குறைகளை நிறைவு செய்து கொள்ளும் தீர்வழியினை அச்சட்டத்திலேயே குறிப் பிடின் பாதிக்கப்பட்டவர், அவற்றை நாடியே குறைகளை நிறைவு செய்து கொள்ள வேண்டுமேயன்றி, 226-ஆம் பிரிவின் கீழ்த் தீர்வழியினைத் தேடலாகாது. அவ்வாறுதேடி உயர்நீதிமன்றத்தை நாடினால், அது ஆணை பிறப்பிக்கத் தயங்கவே செய்யும்.

உயர்நீதிமன்றம், இராணுவ நீதிமன்றங்களின் தீர்ப்பு நடவடிக்கைகளில் காணப்படும் ஒருசில நடைமுறை ஒழுங்கீனங்களைப் பற்றிக் கண்டுகொள்ளாது. ஆயினும், இராணுவ நீதிமன்றத்தின் அதிகார ஆட்சி எல்லைகள் வரம்பு மீறாமலிருக்கின்றனவா என்று முறையிட்டுக் கொண்ட இவ்வாணையின் வேண்டு கோளினை விசாரணை செய்யலாம்.

துணை நூல்கள்:

**Basu D.D.,** Constitutional Law of India, Prentice-Hall of India Pvt. Ltd., New Delhi, 1983.

**Kaghi M.C.,** Constitution of India, 2v. Metropolitan Book Co., Pvt. Ltd., New Delhi, 1984.

***ஆட்சிச் சொற்கள்*** என்பது, ஓர் அரசு தன் ஆட்சிமுறையில் பயன்படுத்தும் கலைச் சொற்களைக் குறிக்கும். தனக்கென ஆட்சிமுறை ஒன்றை அமைப்பதும், தன் ஆட்சிமொழியை வரையறை செய்வதும் ஒரு நாட்டிற்கு இன்றியமையாத செயல்களாகும். தமிழ் நாட்டில் கி. பி. 1956-ஆம் ஆண்டு தமிழ் மொழி ஆட்சிமொழியாக (Official Language) ஏற்றுக்கொள்ளப்பட்டது. இன்றும் ஆங்கிலேயர் விட்டுச் சென்ற ஆட்சி முறையே பின்பற்றப்பட்டு வருவதால், ஆட்சிச் சொற்கள் இன்றுவரை ஆங்கில மொழியில் அமைந்துள்ளன.

தமிழ் ஆட்சிமொழியாக அறிவிக்கப் பெற்ற வுடன் அரசு ஓர் ஆட்சிச் சொல் அகராதியினைத் (Dictionary of Administrative Terms) உருவாக்கி வெளியிட்டது. அதன் பின்னர்க் கடிதப் போக்கு வரத்தில் பயன்படுத்திக் கொள்ள ஒவ்வொரு துறைக்கும் ஒவ்வோர் அகராதியாகச் சிறப்புச் சொல்லகராதிகள் நாற்பத்தாறு துறைகளுக்கு வெளியிடப்பட்டுள்ளன. இவை தவிர, அறிஞர் சிலர் ஆட்சிச் சொல் அகராதிகள் சிலவற்றை உருவாக்கி வெளியிட்டுள்ளார்கள்.

தாய் மொழியில் ஆட்சிச் சொற்களைப் புதிதாக அமைக்கும்போது சில சிக்கல்கள் ஏற்படலாம். தமிழில், ஆங்கிலச் சொற்களுக்கு இணையான கலைச்சொற்கள் இல்லை எனவும், புதிதாகத் தமிழில் ஆக்கப்பெறும் சொற்கள் பொருட்செறிவு இன்றிப் புரிந்து கொள்வதற்குக் கடினமாகவும் குழப்பத்தை விளைவிப்பனவாகவும் அமையும் எனவும் பலர் கருதுகின்றனர்.

ஆட்சித் துறையில் தமிழைப் புகுத்தும் நிலையில் முதலில் ஒரு சொல்லுக்குப் பல மொழிபெயர்ப்

புகள் அல்லது சீர்மையற்ற பல ஆக்கச் சொற்கள் காணப்பெறலாம்; காலப்போக்கில் இவற்றுள் ஒன்று மட்டில் நிலைபெறும். தொடக்கத்தில் எல்லா நிலையினருக்கும் தமிழ் ஆட்சிச் சொற்களைப் புரிந்து கொள்வதும், மனத்தில் நிலைநிறுத்திக் கொள்வதும் கடினமாகத் தோன்றினாலும், காலப் போக்கில் இப்பான்மை மிகவும் எளிமையாக அமையும்.

ஆங்கில முறையில் பழகியவர்களுக்குப் புதிய தமிழ் ஆட்சிச் சொற்களில் ஆர்வம் குறைந்து காணப்படலாம். புதுப் பழக்கத்தை மேற்கொள்ளும் போது பரந்துபட்ட உணர்வோடு செயற்படுதல் வேண்டும். அனைவரும் ஒத்துழைத்தால் சட்ட வழுக்கள் நேராவண்ணம் தமிழில் ஆட்சிச் சொற்களைக் கையாளலாம்.

இன்றைய அலுவலர்களுக்கு ஆங்கிலச் சொல் எளிதில் புரியலாம். புதிதாக ஆக்கப் பெறும் தமிழ் மொழிச் சொல் புரியாமலிருக்கலாம். ஆனால், இனி வரும் தமிழ் இளைஞர்களுக்கு இந்நிலை ஏற்படாது. ஆட்சிச் சொற்களைச் செயற்படுத்தும் போது சில குறைகள் காணப்படினும் காலப்போக்கில் அனைத்து இடர்ப்பாடுகளும் நீங்கிவிடும். புதிய ஆட்சிச் சொற்களை உருவாக்கும் நிலையில் சில விதிமுறைகள் பின்பற்றப்படல் நன்று. இன்றேல், ஆட்சிச் சொற்கள் செய்திகளைத் திட்டவட்டமாக எடுத்துரைக்க இயலாது போகும்.

ஆட்சிச் சொற்களை உருவாக்குவதற்கு இலக்கிய வழக்குச் சொற்கள், கல்வெட்டுச் சொற்கள், பேச்சுவழக்குச் சொற்கள், கடன் சொற்கள், புதிய ஆக்கச் சொற்கள் முதலியன அடிப்படைகளாக அமையலாம். அரிய ஆட்சிச் சொற்கள் பல இலக்கியங்களில் காணக் கிடக்கின்றன. சான்றாக, 'புல வரை' (Survey) போன்றவற்றைக் கூறலாம். கல்வெட்டுகளிலும் சிறந்த பல ஆட்சிச் சொற்கள் அமைந்துள்ளன. அவற்றுட் சில இன்று பயன்படுத்தப்பட்டும் வருகின்றன. 'கருவூலம்' (Treasury), 'நோக்கர்' (Care-taker), 'ஆவணம்' (Document), 'தண்டம்' (Fine) போன்ற ஆட்சிச் சொற்கள் கல்வெட்டுகளிலிருந்து பெறப்பட்டு, இன்று நிலைபெற்றுள்ளன. அன்றாட வாழ்வில் நாம் பயன்படுத்தும் சொற்களுள் பல, ஆட்சித் துறைக்குப் பெரிதும் பொருந்தும். 'கட்டுமானம்' (Construction) போன்றவை வெவ்வேறு கிளைமொழிகளைச் (Dialects) சார்ந்த பேச்சு வழக்கிலிருந்து பெறப்பட்ட ஆட்சிச் சொற்களாகும்.

அடிப்படைச் சொல் (Original Form) உணர்த்தும் கருத்தினைப் புலப்படுத்தும் வகையில் புதிதாக ஆட்சிச் சொற்கள் (பேருந்து-Bus, தந்தி-Telegram) ஆக்கம் பெறலாம்.

இங்குக் கூறப்பெற்ற நான்கு நிலைகளிலும் ஆட்சிச் சொற்களின் உருவாக்கம் அமையப் பெறாத நிலையில், பிறமொழிச் சொற்களை (பாங்கு -Bank, பென்சில் - Pencil) இடைக்கால ஏற்பாடாக ஏற்றுக் கொள்ளலாம்.

மேலும் வழக்கிலில்லாத பழைய சொற்களைச் சீர் செய்து, புதிய பொருளில் கையாளலாம். இவ்வடிப்படையில் 'மாவட்டம்' (District), 'வட்டம்' (Taluk), 'வாரியம்' (Board) போன்ற ஆட்சிச் சொற்கள் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

அடிச்சொற்களோடு (Stems) விகுதிகளை (Suffixes) இணைத்தும், இரண்டு அடிச்சொற்களை இணைத்தும் புதிய ஆட்சிச் சொற்களை ஆக்கமுடியும். விகுதிகளை அடிச்சொல்லோடு இணைத்துப் புதிய சொல் ஆக்கும் முறைமைக்கு 'அலுவலர்' (Officer), 'தருநர்' (Payer), 'தீர்ப்பு' (Judgement) போன்றவை தக்க எடுத்துக்காட்டுகளாகும்.

இரண்டு வினையடிகளை (Verbal Stems) அல்லது இரண்டு பெயரடிகளை (Nominal Stems) இணைத்தும் புதிய ஆட்சிச் சொற்களை அமைக்கலாம். 'சட்டமன்றம்' (Assembly), ஊராட்சி (Panchayat), 'பாகுபாடு' (Classification) என்பன இம்முறையில் ஆக்கப் பெற்றவை ஆகும்.

அன்றியும் பிற மொழிச் சொற்களை ஒப்பொலியாக்கத்தாலும் ஏற்கலாம். பிறமொழிச் சொற்களுக்கு ஒத்த ஒலியுடைய தமிழ்ச்சொற்களை ஈடாக வழங்குதல் ஒப்பொலியாக்கம் எனப்படும். இதற்கு எடுத்துக்காட்டாகப் 'பாரீஸ்'- பாரி, கெல்லிஸ்'- கிள்ளி என்பவற்றைக் காட்டலாம்.

புதிய ஆட்சிச் சொற்களை ஆக்கும்போது ஒலிபெயர்ப்பு, வேற்றொலிக் கலப்பு ஆகியவற்றைத் தவிர்த்தல் நன்று. இங்ஙனம், புதிதாக ஆக்கப் பெறும் ஆட்சிச் சொற்கள் கூடியவரையிலும் தாய்மொழிச் சொற்களாக அமைதல் வேண்டும்; பொருள் பொருத்தமுடையனவாகவும், நுண்ணிய வேறுபாடுகளை எடுத்துக்காட்டும் பாங்குடையனவாகவும் (நிகழ்நிரல் - Programme., பொருள்நிரல் - Agenda) இருத்தல் வேண்டும்.

ஆட்சிச் சொல் உருவாக்குதல், வெறும் மொழிபெயர்ப்பாக மட்டும் அமைந்துவிடக் கூடாது. அடிப்படைச் சொல் உணர்த்தும் முழுப் பொருளையும் புதிதாக ஆக்கப் பெறும் சொல் சுட்டுவதாக அமைந்து, கருத்தாக்கமாக அமைதல் வேண்டும். ஆட்சிச் சொற்களை உருவாக்குவதில் ஒருமைப்பாடு பின்பற்றப்படல் வேண்டும். ஒவ்வொரு துறையிலும் தேர்ச்சி பெற்றவர்களை இப்பணியில் ஈடுபடுத்தல் வேண்டும்.

ஏ. ஆ.

**ஆட்சிப்திகா:** கருநாடக இசையில் இராக ஆலாபனையின் முதற்பகுதி. இதனை "ஆயத்தம்" என்று கூறுவதுமுண்டு. தொடக்கத்தில் சிற்சில ஒலிக்கோவைகளின் மூலம் இராகத்தின் சாயலைக் கேட்பவருக்குப் புரியும்படியாக மிகச் சுருக்கமாக இதைப் பாடவேண்டும். மத்தியத்தாயி (அரக்கு) சட்சத்தில் தொடங்கி, வரிசையாகத் தாரபஞ்சமம் வரையில் பாடி, மீண்டும் மத்தியத்தாயி சட்சத்தில் (குரல்) கொண்டு வந்து இராகத்தைச் சுருக்கமாகப் பாடும் இப்பகுதிக்கு ஆட்சிப்திகா என்பது பெயர். இது குறைந்தது 5 நிமிட நேரத்திற்குள் முடிய வேண்டும்.

**ஆட்சி மொழிகள் சட்டம்:** பாரதம் பல மொழி பேசும் மக்களைக் கொண்ட பரந்த நாடு ஆகும். ஆங்கிலேயர்களின் ஆட்சிக் காலத்தில் ஆங்கிலம், இந்த நாட்டின் நிருவாக மொழியாக இருந்தது. இப்போது இந்தி மொழி, அலுவலக மொழியாக அரசியல் சட்டத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டாலும், ஆங்கில மொழியும் இணைந்து செயற்பட வேண்டும் என்று இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் ஏற்றுக் கொண்டது. இந்திய அரசியல் சட்டம் 15 ஆண்டுகள் வரை ஆங்கிலமும் இணைந்து செயற்பட வேண்டும் என்று வரையறை செய்தது. இந்தப் பதினைந்து ஆண்டுக் காலம் 1965, சனவரி மாதம் 25-ஆம் தேதியுடன் நிறைவு பெற்றது. இப்பதினைந்து ஆண்டுகளுக்குப் பின்னரும் பாராளுமன்றம், ஆங்கிலத்தைத் தொடர்ந்து நீடிக்கும் படியும், தேவநாகரி எண்களைத் தொடர்ந்து செயற்படுத்தும்படியும் சட்டம் இயற்றியுள்ளது.

இந்தியக் குடியரசுத் தலைவர் 1952-ஆம் ஆண்டு பிறப்பித்த கட்டளை ஒன்று, மாநில ஆளுநர்கள், உயர்நீதிமன்றம், தலைமை நீதிமன்றம், ஆகியவற்றின் நீதிபதிகள் ஆகியவர்களின் பணி அமர்த்தல் பற்றிய கட்டளைகள் ஆங்கில மொழியில் மட்டுமல்லாமல் இந்தி மொழியிலும் இருக்க வேண்டுமென்று கூறியது. இதுபோன்று 1955-ஆம் ஆண்டும் குடியரசுத் தலைவர்பிறப்பித்த கட்டளை ஒன்று, பொது மக்களுடன் அரசு வைத்துக் கொள்ளும் தொடர்பு, நிருவாக அறிக்கைகள், நாடாளுமன்ற அறிக்கைகள், அரசின் தீர்மானங்கள், சட்டங்கள், இந்தி மொழியைப் பணிமொழியாக ஏற்றுக் கொண்டுள்ள மாநிலங்களுடன் மத்திய அரசு வைத்துக் கொள்ளும் தொடர்புகள், இந்திய அரசு ஏற்றுக் கொள்ளும் ஒப்பந்தங்கள், வெளிநாடுகளுடன் வைத்துக் கொள்ளும் தொடர்புகள், தூதரகத் தொடர்பு, பன்னாட்டு அமைப்புகளுடன் கொள்ளும் தொடர்புகள், தூதர்களுக்கும் வணிகத் தொடர்பு பற்றிய தூதரக அலுவலர்களுக்கும் கொடுத்தனுப்பும் சான்றிதழ்கள் (Credentials), இந்தியப் பேராளர்கள் பன்னாட்டு அமைப்புகளில் பயன்படுத்தும் மொழி ஆகிய வற்றிலெல்லாம் இந்தி மொழியே இடம் பெற வேண்டும் என்று கூறியது.

இந்தி மொழி, இந்தியத் தேசிய ஆட்சிமொழியாக ஏற்றுக் கொள்ளப்பட்டபோதிலும், ஆங்கில மொழியும் தொடர்ந்து பயன்படுத்தப்பட வேண்டுமென நாடாளுமன்றம் சட்ட மூலம் தேவையான வழிவகைகளைச் செய்து கொள்ளலாம் என அதிகாரம் வழங்கப்பட்டது. நாடாளுமன்றம், 1963-ஆம் ஆண்டில் ஆட்சி மொழிகள் சட்டம் (**Official Languages Act, 1963, No. 19 of 1963**) ஒன்றை ஏற்படுத்தியது. அச்சட்டம், ஆங்கிலம் 1965-ஆம் ஆண்டிற்குப் பின்னும் இந்தி மொழியுடன் இணைந்து பயன்படுத்தப்படவேண்டும் என்றும், இருமொழிகளும் அனைத்துப் பணிகளுக்கும், பாராளுமன்ற நடவடிக்கைகளுக்கும் பயன்படுத்தப்பட வேண்டுமென்றும் கூறியது. அச்சட்டம், 1968-ஆம் ஆண்டு திருத்தியமைக்கப்பட்டது. திருத்தப்பட்ட அச்சட்டம், "இந்தி மொழியுடன் ஆங்கிலம் தொடர்ந்து பயன்படுத்தப்படும்" என்று கூறுகிறது. பல்வேறு சிக்கல்களை நீக்கும் பொருட்டு, இந்த இரண்டு மொழிகளையும் தொடர்ந்து நீட்டிக்கவேண்டுமென்று நாடாளுமன்றம் சட்டத்தின் மூலம் வழிவகை செய்துள்ளது. உலகின் பல நாடுகளில் ஒன்றுக்கு மேற்பட்ட ஆட்சி மொழிகளை மக்கள் பயன்படுத்தி வருகிறார்கள். எடுத்துக்காட்டாக, கனடா, ஆங்கிலத்தையும் பிரெஞ்சு மொழியையும் இணைத்துப் பயன்படுத்துகிறது. சுவிட்சர்லாந்து நான்கு மொழிகளைப் பயன்படுத்துகிறது. அதில் ஒரு மொழியைத் தவிர, மற்ற மூன்று மொழிகளை ஆட்சிமொழியாகப் பயன்படுத்துகின்றது. பெல்சியமும் தென் ஆப்பிரிக்கக் குடியரசும் இரு மொழிகளைப் பயன்படுத்துகின்றன. சிங்கப்பூரில் நான்கு மொழிகள் ஆட்சிமொழிகளாகச் செயற்பட்டு வருகின்றன.

**ஆட்சி வேண்டாக் கொள்கை** என்பது கட்டுப்பாடில்லாத சமுதாய அமைப்பு முறையை ஆதரிக்கும் கொள்கை. இந்த அமைப்பில் நாடு (**State**), அரசு (**Government**), தனி உடைமை (**Private Property**), சமயம் ஆகியவற்றிற்கு இடமில்லை. இக்கொள்கைக்கு வித்திட்டவர் பிரௌதான் (**Proudhon**) ஆவார். அறிவியல் சார்ந்த வகையில் இக்கொள்கையை அறிவித்தவர் மைக்கேல் பாக்குனின் (**Michael Bakunin**) ஆவார். அவர், தாம் இயற்றிய 'கடவுளும் நாடும்' (**God and the State**) என்ற நூலில் இக் கொள்கையைப் பற்றிய கருத்துகளை வெளியிட்டுள்ளார். பீடர் கிரோபாட்கின் (**Peter Kropotkin**)

ஆட்சி வேண்டாக் கொள்கையின் (Anarchism) தலையாய விளக்குநராக விளங்குகிறார்.

நாடு, அரசு ஆகியவற்றை முற்றிலும் ஒதுக்கிவிட வேண்டும் என்பது இக் கொள்கையின் முக்கியமான கூறாகும். மனிதன் தோன்றிய காலத்திலிருந்து அவனுடைய நடத்தையை மிருக உணர்ச்சிகள் கட்டுப்படுத்தி வருகின்றன. அந்த நிலையை விட்டு உண்மையான விடுதலையையும் மகிழ்ச்சியையும் எப்போது பெறுகிறானோ அப்போதுதான் அவன் முழு வளர்ச்சியை அடைந்தவனாகக் கருதப்படுவான். அரசியல் அதிகாரம், தனி உடைமை, சமயம் ஆகியவை மனிதன் முழு வளர்ச்சியடையாத காலத்தில் இருக்க வேண்டிய அமைப்புகள் ஆகும். மனிதனுடைய உடல் சார்ந்த விருப்பங்களை நிறைவேற்றவும் அவனுக்கு ஏற்படக்கூடிய பயங்களைப் போக்கவும் அவை தேவைப்படுகின்றன. மனிதன் முழு வளர்ச்சியை எய்தும் போது இயற்கைச் சட்டங்கள் (Natural Laws) நடைமுறைக்கு வந்துவிடும். அப்போது அரசு இயற்றும் சட்டங்களுக்கு இடம் இராது. எனவே நாடு, அரசு போன்ற அமைப்புகள் மறைந்துவிடும்.

ஆட்சி வேண்டாக் கொள்கையின் முக்கிய எதிரி, நாடாகும். நாடு என்பது வேறு; சமுதாயம் என்பது வேறு. நாடு இல்லாத சமுதாயத்தையே ஆட்சி வேண்டாக் கொள்கையினர் ஆதரிக்கின்றனர். நாடு ஏன் அழிக்கப்பட வேண்டும் என்பதற்கு அவர்கள் பல காரணங்களைக் கூறுகின்றனர். நாடு அண்மைக் காலத்தில் தோன்றிய ஓர் அமைப்பாகும். நாடு என்பது வன்முறைக்கும் கொள்கைக்கும் பிறந்த குழந்தையாகும். வலுக் கட்டாயத்திற்குக் (Force) கடவுள் அளித்த ஒப்புதலின் விளைவே நாடாகும். கொடுங்கோன்மை என்பது நாட்டினுடைய சாறாகும். ஏற்றத் தாழ்வுகளின் வெற்றிச் சின்னமாகவும் அது விளங்குகிறது. தனி உடைமையைக் கட்டிக் காப்பது நாடேயாகும். தனி உடைமை தொழிலாளர்களை அடிமைப்படுத்துகிறது. ஒரு சிலருக்கு மட்டும் அளவு மீறிய தேவையற்ற வசதிகளை அளிக்கிறது. மனிதனுடைய அறவாழ்க்கையையும் அவனுடைய சிந்தனையையும் நாடு கெடுக்கிறது. சில சமயங்களில் நாடு நல்லதைச் செய்யுமாறு ஆணையிடலாம். அப்போது கூட அது நல்லதைக் கெடுக்கும் வகையிலேதான் செயற்படுகிறது. ஏனெனில் ஆணையிடுவதன் வாயிலாக அதிகாரம் பெற்ற சிலரை இழிநிலைக்கு அது கொண்டு செல்கிறது. அதிகாரம் மனிதனை இழிநிலைக்குக் கொண்டு செல்லும் என்பதை மறுக்க இயலாது. அதிகாரம் உடையவர்கள் தங்களை மற்றவர்களைவிட மேலானவர்களாகக் கருதுகின்றனர். எனவே அவர்கள் பிறருக்கு அளிக்கப்படாத உரிமைகளை வேண்டிப் பெறுகின்றனர். அதன் விளைவாக மக்களிடையே வகுப்புப் பாகுபாடு தோன்றுகிறது. மேலும் பொதுப்பணியைக் காரணங் காட்டித் தனி மனிதனுடைய நலன்களைக் கைவிடுகின்றனர். மக்களுள் ஒரு சிலரைக் கொடுங்கோலர்களாகவும் பலரை வேலைக்காரர்களாகவும் மாற்றுவது நாடேயாகும். ஒருவனை ஒருவன் ஏய்த்துப் பிழைக்க உதவி செய்வது நாடாகும். அரசை நடத்தும் ஒருசில தனி உடைமைக்காரர்களின் நலன்களைப் பாதுகாக்கும் நிறுவனமாக நாடு விளங்குகிறது. நாடு இருக்கும் வரை மனிதனுடைய கூட்டுறவு உணர்ச்சிகள் வெளிவர வாய்ப்பில்லை. மேலும் மனிதனுடன் கூடவே பிறந்த இயல்புகளுக்கு எதிராக நாடு பணி செய்கிறது. அதாவது, மனிதத் திறன்கள் தாமாகவே செயற்படும் ஆற்றல் உடையனவாகும். அத்தகைய நிலை உருவாகும்போதுதான் அவன் வளர்ச்சி பெற முடியும். அதற்கு மாறாக நாடு தலையிட்டு அவன் திறன்களைக் கட்டுப்படுத்தி இயக்க முற்படுமேயானால் அவனுடைய வளர்ச்சி தடைப்படும். கட்டுப்பாடுகள் இன்றியமையாதன அல்ல என்று கூறுவதற்கில்லை. ஆனால்,அக்கட்டுப்பாடுகள் தம்க்குத் தாமே சுமத்தப்படுவனவாக இருத்தல் வேண்டும். நாடு இருக்கும்வரை அத்தகைய நிலை உருவாவதற்கு இல்லை.

நாடு, அரசு ஆகியவை இல்லை எனில், சமுதாயத்தில் இணக்கத்தை ஏற்படுத்த இயலாது. எனவே குழப்ப நிலை உருவாகும் என்பதை இக் கொள்கையினர் ஏற்றுக் கொள்வதில்லை. அரசு வாயிலாகக் கட்டாயப்படுத்தி உருவாக்கப்படும் இணக்கத்திற்கு மாறாக மற்றொரு விரும்பத்தக்க இணக்கம் ஏற்படும். அரசு இல்லையெனில் பலவித சங்கங்கள் தோன்றும். அச் சங்கங்கள் தனி மனிதனுடைய தேவையின் விருப்பங்களை நிறைவு செய்யும் வகையில் அமைந்திருக்கும். சில சங்கங்கள் நிலப் பகுதியை அடிப்படையாகக் கொண்டு நிறுவப்படலாம். மற்றும் சில தொழிலை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்படலாம். அவை யாவும் பிற சக்திகளால் உந்தப்பட்டு மனிதன் விருப்பத்திற்கு எதிராக உண்டாக்கப்பட்டனவாக இரா. பொருள் உற்பத்திக்கும் பொருளை நுகர்வதற்கும் மக்கள் தாங்களாகவே மனமுவந்து தோற்றுவித்த சங்கங்களாக அமையும். அச்சங்கங்கள் யாவும், தாமே விருப்பப்படி செய்து கொண்ட உடன்பாடுகள் வாயிலாக அமைதியை நிலைநாட்டும்.

இந்த வகையான ஒரு சமுதாயத்தை உருவாக்குவதென்பது நிகழக்கூடியதா என்று சிலர் ஐயப்படக்கூடும். இன்றைய சமுதாயத்திலே தோன்றி வளர்ந்து வருகிற சில போக்குகளைக் கவனிக்குமிடத்து இது நிகழக் கூடியதாகக் கருத

இடமுண்டு. அரசியல் காரணங்களன்றி வேறு காரணங்களுக்காகப் பல சங்கங்கள் தாமாகவே இக்காலத்தில் தோன்றி இருக்கின்றன. அத்தகைய சங்கங்கள் தேவைப்படும்போது தாமாகவே உடன் பாடுகள் செய்து கொள்ளும் என்று இக்கொள்கை யாளர்கள் கூறுகின்றனர். தாமாகவே தோன்றிய பல்வகைச் சங்கங்கள் இன்று வளர்ந்து வருகின்றன என்பதை யாரும் மறுக்க முடியாது. ஆனால்,இக் கொள்கையாளர்கள் குறிப்பிடுகிறபடி அவை, நடக் குமா என்பது ஐயத்திற்கிடமாகும்.

ஆட்சி வேண்டாக் கொள்கையின் மற்றொரு சிறப்புக் கூறு, தனி மனித விடுதலைக்கு மதிப்புக் கொடுப்பதாகும். மனிதன் தன்னுடைய தனித் தன்மையினை ஆட்சியற்ற சமுதாயத்தில்தான் வளர்க்க இயலும். அதனை முழுமையாகப் பெற முடியும். ஏனெனில் அங்குத்தான் வெளியேயிருந்து கட்டுப்பாடுகள் சுமத்தப்படுவது தவிர்க்கப்படுகி றது. அந்த நிலையில்தான் அவன் உண்மை விடுதலையைப் பெற முடியும். உண்மையான விடுதலை என்பது எந்தவிதமான அதிகாரத்திற்கும் உட்படாமை என்பது பொருள். ஆட்சி வேண்டாக் கொள்கையினர் மூன்று அதிகாரத்தைக் குறிப் பிட்டுள்ளனர். முதலாவது, முதலாளியின் அதி காரம். ஒவ்வொரு மனிதனும் ஓர் உற்பத்தியாளன். அவனுடைய உற்பத்தித் திறனை முதலாளிகள் கட்டுப்படுத்தி வருகின்றனர். அக் கட்டுப்பாட்டி லிருந்து அவனை விடுவிக்க வேண்டும். இரண்டாவது ஒவ்வொருவனும் ஒரு குடிமகன். குடிமகன் நிலை யில் அவன் அரசினால் கட்டுப்படுத்தப்பட்டு வருகி றான். அக் கட்டுப்பாட்டிலிருந்து அவனை மீட்க வேண்டும். மூன்றாவது தனி மனிதன் என்ற முறை யில் அவன் சமய விதிகளுக்குக் கட்டுப்படுத்தப் பெறுகிறான். அவற்றிலிருந்து அவனுக்கு விடுதலை அளித்தல் வேண்டும். இம்மூன்று கட்டுப்பாட்டிலிருந்து விடுவிக்கப்பட்டால் அவன் உண்மை விடுதலையை எய்தியவனாவான். ஆட்சி வேண்டாக் கொள்கை யினர் தங்கள் கவனத்தை இரண்டாவது வகை விடுதலையில் மிகுதியாகச் செலுத்தியுள்ளனர்.

பொருளாதாரத் துறையில் முழுமையான பொது வுடைமைக் கோட்பாட்டை இக்கொள்கை யினர் பின்பற்றுகின்றனர். எல்லாப் பொருள்களும் ஒவ்வொருவருக்கும் சொந்தமாகும். ஒவ்வோர் ஆணும் பெண்ணும் தேவையான பொருள்களின் உற்பத்திக்குத் தனது பங்கைக் கொடுத்து உதவ நேரும்போது, மற்றவர்கள் உற்பத்தி செய்யும் பொருளில் பங்கு பெற உரிமை பெறுகின்றனர் என்பது, அவர்கள் எடுத்துக் கூறும் கொள்கை. ஒவ்வொருவருடைய பங்கு நியாயமான அளவில் இருக்கச் செய்வதற்கு ஓர் அரசு வேண்டாமா என்ற கேள்வி எழக்கூடும். இதுகாறும் ஒவ்வொருவருடைய பங்கும் நியாயமற்ற வகையில் இருக்கச் செய்வதே அரசினுடைய பணியாக இருந்து வருவதால், அரசை ஒழித்துவிட வேண்டும் என்கின்றனர். தனி மனிதர் ஆட்சியும் சிறு குழு ஆட்சியும் நடைபெறுகின்ற இடத் தில் அவர்களுடைய கூற்று உண்மையானதாகத் தெரி யும். மக்களின் பேராளர்களால் நடத்தப்பெறும் ஆட்சியின்கீழ அத்தகைய நிலை உருவாகுமா என்ற கேள்வி எழக்கூடும். இக் கொள்கையினர் அங்கும் அதே நிலைதான் ஏற்படுகிறது என்று வாதாடுகின் றனர். இன்று தோன்றியிருக்கும் நாடு மட்டிலும் அன்றி, எந்தக் காலத்தில் எந்த வகை நாடு நிறுவப் பட்டாலும், அந்த வகை நாடு தேவையற்றதாகவும் தீங்கு விளைவிக்க வல்லதாகவும் இருக்கும் என்று அழுத்தம் திருத்தமாக இவர்கள் கூறி வருகின்றனர்.

இன்று தோன்றியிருக்கும் நாட்டையும் மக்கள் பேராளர்கள் நடத்தி வரும் அரசையும் கருவியாகப் பயன்படுத்திச் சமுதாயத்தில் ஏற்பட்டிருக்கும் தீமை களை ஒழித்துச் சீர்திருத்தி அமைக்க இயலாதா என்று சிலர் கேட்கக் கூடும். எல்லோருக்கும் பொது வாக இருக்கவேண்டிய பொருள்கள் மீது சிலர் நடுவுநிலை தவறி, கொண்டிருக்கும் தனியுரிமைக ளைக் காக்கும் கருவியாக இன்று நாடு செயற் பட்டுவருகிறது. அவ்வாறிருக்கும்போதுதான் காத்து வரும் தனியுரிமைகளை ஒழிக்க நாட்டரசு முற் படுமா? முடியாதன்றோ? எனவேதான் சீரமைப்புப் பணியில் நாட்டைப் பயன்படுத்த இயலாது. அத் தகைய பணியை மேற்கொள்ள நாடு இருக்கும் இடத்தில் வேறோர் அமைப்பைப் புகுத்த வேண்டும். ஆகவேதான், இன்று அரசு மேற்கொண்டிருக்கும் பணிகளைப் பெருக்க இக் கொள்கையினர் விரும்புவ தில்லை. மேலும் தொழிலாளிகள் அரசியல் கட்சி களில் சேருவதையோ வேட்பாளர்களாக நிற்பதை யோ இவர்கள் ஊக்குவிப்பதில்லை.

மேலும் நாடு, மக்கள் பேராளராக இருந்து தனது அதிகாரத்தை இன்று செலுத்தி வருகிறது என்பது உண்மையே. ஆயினும் ஒவ்வொரு சிக்கல் எழும்போது அது மக்களுடைய விருப்பத்தை அறிந்து செயற்படுவதில்லை. அதனால்,பேராளர்கள் அரசை ஏற்படுத்துகிறார்கள். அதன்படி ஒரு குறிப்பிட்ட காலம் வரை மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் மக்கள் சார்பிலே ஆட்சி நடத்துகின்றனர். ஒருவன் சார்பாளர் அவனுடைய கருத்தை முழுமை யாக வெளிப்படுத்த இயலாது. அவ்வாறிருக்க ஒரு கூட்டத்தினருடைய கருத்தை எவ்வாறு ஒரு மனிதன் வெளிப்படுத்த இயலும்? மேலும் எல்லாச் சிக்கல் களையும் தீர்க்க வேண்டிய அறிவு முழுவதையும் ஒருவன் பெற இயலாது. ஒரு காரியத்தை ஒழுங்காகச் செய்ய முடியாதபோது தேவையான அறிவுடைய

வர்களைக் கொண்டு அமைப்பதே மக்கள் ஆட்சியாகும். அல்லது ஒரு காரியத்தை நல்லபடியாகச் செய்து முடிப்பதற்கு வேண்டிய அறிவு பெறாதவர்கள் நடத்தும் ஆட்சியே மக்கள் ஆட்சியாகும். மக்களாட்சி முறை, அரசியல்வாதிகளை உருவாக்குகிறது. அரசியலை அது ஒரு தொழிலாக மாற்றுகிறது. எனவே மக்கள் ஆட்சி உண்மையிலேயே மக்கள் ஆட்சியாக அமைவதில்லை. அது தேவையற்றதும் கூட என்பது இக்கொள்கையினர் கருத்தாகும்.

அதிகாரம் ஒருவனைத் தன்னலங் கருதுபவனாக மாற்றுகிறது; செருக்குடையவனாக மாற்றுகிறது; கொடுங்கோலனாக மாற்றுகிறது; அவனை அதிகாரத்தில் கொண்டு வைத்த மக்களின் நலன்களைப் புறக்கணிக்கச் செய்கிறது. ஓர் அரசியல்வாதி கெட்டவனாவதற்குக் காரணம் அவனுடைய பதவியேயன்றி அவனுடைய மனிதத் தன்மையன்று. ஆகவே எவரிடமும் பிறரை ஆளும் அதிகாரத்தை ஒப்படைக்கக் கூடாது.

வலிமையைக் காட்டுவது அரசின் தன்மை. அந்த வலிமை, நண்பர்களைப் பிரித்து அவர்களை ஒருவரோடொருவர் மோதவிடுவதற்கும், தேசிய இனங்களைப் பிரிப்பதற்கும் உடன்பிறப்புகளைப் பிரித்து ஒன்றுக்கொன்று எதிர்த்து நிற்கும் வகுப்புகளை உருவாக்குவதற்கும் பயன்படுகிறது. உள்நாட்டுக் கலவரங்களும் அயல்நாட்டுடன் போரிடும் அரசினால் தான் ஏற்படுகின்றன என்பது இவர்களுடைய கருத்தாகும். அரசு என்பது வலுக்கட்டாயம், பிரிவு, ஒதுக்குதல் என்று பொருள்படும். ஆட்சியற்ற சமுதாயம் என்பது சுதந்திரம், ஒற்றுமை, அன்பு என்று பொருள்படும் என ஆட்சி வேண்டாக் கொள்கையினர் கூறியுள்ளனர். பயம், தான் என்ற கர்வம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு அரசு இயங்குகிறது. அரசு இல்லாத சமுதாயம் உடன்பிறப்புக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டிருக்கும். மக்கள் பல தேசிய இனங்களாகப் பிரிந்து இருக்கிற காரணத்தால்தான் படைக் குவிப்பினால் ஏற்படும் துன்பத்தைப் பொறுத்துக் கொள்ளுகிறார்கள். மனிதர்கள் ஒருவரை விட்டு மற்றொருவர் விலகுவதால் சட்டத்தின் பாதுகாப்பை நாடுகிறார்கள் என்பது இக்கொள்கையினருடைய கருத்தாகும்.

நாடு தேவையற்றது என்பதை இக் கொள்கையினர் பல எடுத்துக்காட்டுகள் வாயிலாக விளக்கியுள்ளனர். கல்வி வளர்ச்சிக்கு நாடு தேவையில்லை என்று கூறுகின்றனர். தொழிலாளிகளுக்குத் தேவையான ஓய்வு நேரம் இருந்தால் அவர்களே ஒருவருக்கொருவர் பாடம் கற்பிக்கலாம். அதன் விளைவாகப் பல கல்விச் சங்கங்களை அவர்களே விருப்பப்பட்டு ஏற்படுத்தலாம். சமுதாயப் பாதுகாப்புப் பணிக்குக் கூட நாடு தேவையில்லை. ஏனெனில் நிலைப்படை எதிரியைத் தோற்கடிக்கத் தவறிவிட்டதற்கும் தாமாகவே கொதித்தெழுந்த மக்கள் படை, எதிரியைத் தோற்கடித்ததற்கும் வரலாற்றில் பல எடுத்துக்காட்டுகள் உள்ளன. தனி மனிதனுக்குப் பாதுகாப்பு வழங்குதற்கும் நாடு தேவையில்லை. ஏனெனில் தீயவர்களிடமிருந்து குடிமக்களைக் காப்பதற்குப் பதிலாக அத்தீயவர்களை நாடு உருவாக்குகிறது. பொருளாதார முறையை நேர்மையான வகையில் அமைக்கத் தவறிவிட்டமையால், மக்களுக்குத் துன்பம் விளைவித்து அவர்களைக் குற்றம் புரியத் தூண்டுகிறது. குற்றம் செய்ததற்காக அவர்களைச் சிறையில் தள்ளி அதன் விளைவாக, நல்ல முறையில் வாழ்க்கையை நடத்தும் முயற்சியில் ஈடுபடாதவாறு செய்துவிடுகிறது. மேலும் நாடு தலையிடாத துறைகளில் மனிதன் மிகுந்த ஆர்வத்துடன் செயற்படுவதையும் மக்கள் காணலாம். அதற்கு இராயல் சொசைட்டி, பிரிட்டிசு அசோசியேசன் போன்றவற்றை எடுத்துக்காட்டாகக் காட்டுகின்றனர்.

ஆட்சியற்ற சமுதாயம் எவ்வாறு இயங்கும் என்பதை இக் கொள்கையினர் கூறியுள்ளனர். ஒவ்வொரு தொழிலும், அத்தொழிலில் ஈடுபட்டவர்களை உறுப்பினர்களாகக் கொண்ட, தாமாக ஏற்படுத்திக் கொண்ட, ஒரு சங்கத்தின் வாயிலாக நடத்தப் பெறும். அச்சங்கத்தின் அலுவலர்கள் எல்லா உறுப்பினர்களாலும் தேர்ந்தெடுக்கப்படுவர். அவர்களை நீக்கவும் அவ்வுறுப்பினர்களுக்கு அதிகாரம் உண்டு. சங்கத்தின் கொள்கையை அவர்களே வரையறுப்பார்கள். அதுபோன்ற ஏனைய சங்கங்களுடன் எந்த வகை வற்புறுத்தலுமின்றி மேற்கொள்ளப்பெறும் உடன்பாடுகள் வாயிலாக உறவு கொள்ளுவர். எங்குப் பார்த்தாலும் சங்கங்கள் அமைக்கப்பட்டிருக்கும். எங்கும் வலுக்கட்டாயம் இராது. அதே நேரம் எங்கும் அமைதி நிலவும். எல்லாச் சங்கங்களும் சமநிலையில் வைக்கப்பட்டிருக்கும். உரிமை பெற்றவர்கள், உரிமையற்றவர்கள் என்ற பாகுபாடு இராது. நாடு என்னென்ன பணிகளை மேற்கொண்டிருக்கிறதோ அந்தப் பணிகள் அனைத்தையும் அச்சங்கங்கள் நிறைவேற்றி வரும். அதாவது அதிகாரம் ஓரிடத்தில் குவிக்கப்படுவதற்குப் பதிலாகப் பரவலாக்கப்படும். இந்த வகைச் சமுதாயத்தின் அடிப்படையில் அமைக்கப் பெறுவது ஒரு கிராமமாகவோ, தொழிற்கூடமாகவோ இருக்கும். இதில் சச்சரவுகளுக்கோ கருத்து வேறுபாடுகளுக்கோ இடமிராது. மக்கள் உரிமையுடன் செயற்படுவர். அவர்களுக்கிடையே போட்டி மனப்பான்மை இராது. எனவே பகைமை ஏற்படாது. இதுவே இக்கொள்கையினர் எதிர்நோக்கும் சமுதாய அமைப்பாகும்.

ஆட்சியற்ற சமுதாயத்தை அமைப்பது எப்படி? சமுதாயப் படிமுறை வளர்ச்சி புரட்சி ஆகியவற்றின் வாயிலாக அதனை அமைக்கமுடியும் என்று பாகுனினும், கிரோபாட்கினும் கருதுகின்றனர். படிமுறை வளர்ச்சி புரட்சியின் வாயிலாகத்தான் முற்றுப்பெற இயலும். புரட்சி முதலில் நாசத்தையும் வன்முறையையும் விளைவிக்கும். எல்லா நிறுவனங்களும் ஒழிக்கப்படும். ஆளுநர்கள் நீக்கப்படுவார்கள். சிறைகளும் கோட்டைகளும் தகர்க்கப்படும். படைகளும் காவற் படைகளும் கலைக்கப்படும். நீதிமன்றங்களும் அலுவலகங்களும் அழிக்கப்படும். மேலே குறிப்பிடப்பட்ட நடவடிக்கைகளை எவரேனும் எதிர்த்தால் அவர்களும் அழிக்கப்படுவர். அதனால், இரத்தம் சிந்த வேண்டியிருந்தால் அதற்குத் தயக்கம் கொள்ளக் கூடாது என்று பாக்குனின் கூறியுள்ளார்.

அரசியல் அதிகாரம் பெற்ற நிறுவனங்களை ஒழித்த பின்னர் தனிஉடைமையை ஒழிக்கவேண்டும். நிலச் சொந்தக்காரர்களைக் குடியானவர்கள் துரத்துவர். தொழிலதிபதிகளைத் தொழிலாளர்கள் விரட்டுவார்கள். போதுமான வீட்டு வசதி பெறாதவர்கள் தேவைக்குமேல் இடவசதி பெற்றிருப்போரின் வீட்டில் குடிபெயர்வார்கள். புதிய சமுதாயத்தை அமைக்குமுன்னர் வேறு வகை அரசு எதனையும் ஏற்படுத்தக் கூடாது. அவ்வாறு ஏற்படுத்தினால் புரட்சிக்குச் சமாதி கட்டி விட்டதாகும். நாடு அழியத் தொடங்கியவுடன், தாமாக ஏற்படுத்தப்பெறும் சங்கங்கள் உடனே தோற்றுவிக்கப்படும். நாடு அழிந்த மறுகணமே, சுதந்தர சமுதாயம் அமைக்கப்பெறும். அவற்றினுக்கிடையே இடைவெளி இராது.

**ஆட்சிவேண்டாக் கொள்கைக்கு இக்கால மறுப்பு:** ஆட்சி வேண்டாக் கொள்கை என்பது கருத்தளவில் உள்ள ஒரு கவர்ச்சியான கற்பனையே ஆகும். நடைமுறையில், மனிதர்களிடையே இயல்பாகக் காணப்படுகிற திறமை, ஏற்றத்தாழ்வுகள், விருப்பு வெறுப்புகள், அறியாமைகள் முதலியவைகளையும், அவற்றின் காரணமாக எழுகிற தீயசெயல்களையும், அவற்றால் மறறவர்களுக்கு ஏற்படும் துன்பங்களையும் பார்க்கும்பொழுது, ஒவ்வொருவருடைய உரிமைக்கும் வரையறை ஏற்படுத்தி, அதை நல்ல முறையில் செயற்படுத்துவதற்கும், இந்த வகையாக யாவருடைய உரிமைகளையும் பாதுகாத்தற்கும் நல்ல சட்டங்களும் காவல் துறையும் நீதி நிருவாகத் துறைகளும், சுருங்கச் சொல்லின் இறைமை யுடைய ஓர் அரசு (Sovereign State) என்ற அமைப்புத் தேவையே என்ற முடிவுக்குத்தான் மக்கள் வருவர். சங்கங்களை வைத்துக்கொண்டே பொருள் உற்பத்தி, பங்கீடு முதலியவைகளை நல்ல முறையில் செய்து விடுதல் இயலுமென்பதும், ஓரளவு தான் உண்மையாகும்; அரசு என்ற ஓர் அமைப்பு இல்லாவிடில் இச்சங்கங்களிடையே மட்டுமல்லாமல், மற்றச் சங்கங்களிடையேயும், ஒவ்வொன்றின் அதிகார எல்லை குறித்து மோதல்கள் ஏற்படுமென் பதையும், பொதுவாகச் சங்கங்களிடையே ஏற்படும் மோதல்களைத் தவிர்க்கவும், ஒவ்வொன்றின் உரிமையைக் காக்கவும், பொதுவாக ஒரு நடுவணர் போலப் பணிசெய்தற்கு இறைமை அரசால் தான் இயலும் என்பதையும் மக்கள் உணர வேண்டும். இந்தக் கழகமுறைக் கோட்பாடு பொதுவுடைமை என்னும் சோசலிசக் கோட்பாட்டில் சி.டி.எச். கோல் (G.D.H. Colf) என்ற ஆங்கிலச் சிந்தனையாளரால் புகுத்தப்பட்டது. அவரே பின்னர் அரசின் தேவையை ஒப்புக்கொண்டார். அரசு ஒன்றுக்குத்தான் இறைமை என்ற தலைமை அதிகாரம் இருத்தல் வேண்டுமென்ற ஆசுட்டினின் இறைமை பற்றிய ஒருமைக் கோட்பாட்டை (Austin's Monistic Theory of Sovereignty) ஒப்புக்கொள்ள மறுத்து, சங்கங்களுக்கு அல்லது கழகங்களுக்கு இறைமை அதிகாரம் பகிர்ந்தளிக்கப்படுதல் வேண்டுமென்ற இறைமை பற்றிய பன்மைக் கோட்பாட்டை (H.J. Laski's Pluralistic Theory of Sovereignty) ஆதரித்த எச்.சே. இலாசுக்கி போன்ற பன்மைக் கோட்பாட்டாளர்களும், இறுதியில் அரசு ஒன்றுக்குத் தான் தலைமையான அதிகாரம் (அல்லது இறைமை) இருத்தல் வேண்டுமென்று ஒப்புக்கொண்டனர். ஆகையால் ஆட்சி அல்லது அரசு வேண்டா நிலை நடைமுறைக்கு வர இயலாத ஒரு கருத்தென்றும், வாழ்க்கையின் எல்லாத்துறைகளிலும் தங்களுடைய உரிமைகளை அரசு, அதிகாரிகள் போன்றவர்கள் கட்டுப்படுத்தாமல் தாங்களே கட்டுப்படுத்தக்கூடிய அளவுக்கு முழுமனவளர்ச்சி பெற்றுள்ள காந்தியடிகள், தால்சுதாய் போன்றவர்களுக்கும் மற்றவர்களிடமிருந்து பாதுகாப்பை அளிப்பது இறைமை அரசுதான் என்றும், இறைமை என்பதற்கு மற்றவர்களைக் கட்டுப்படுத்துவதற்குரிய தலைமையான அதிகாரம் என்று மட்டும் (Supreme coercive force) பொருள் கொள்ளக்கூடாதென்றும், பாதுகாப்பளிப்பதோடு, ஆக்கப்பணிகளுக்கேற்ற சூழ்நிலைகளை அமைத்துக் கொடுப்பதற்குமுள்ள அதிகாரமென்று பொருள் கொள்ளுதல் வேண்டுமென்றும் இக்கால அரசியல் சிந்தனையாளர் கூறுவர். இக்கருத்து ஏற்புடையதாகும்.

டி. ஆர். இரா.

**துணை நூல்:**

Appadorai, A., The Substance of Politics, Oxford University Press, 1972.

## ஆட்டங்களும் விளையாட்டுகளும்:

ஓய்வு வேளையில் மன மகிழ்ச்சிக்காகச் செய்யக்

கூடிய எளிய அல்லது வேடிக்கையான செய்கைகளை விளையாட்டு எனலாம். மக்கள் தொன்று தொட்டு ஆட்டத்திலும் (Games), விளையாட்டிலும் (Sports) பொழுதைக் கழிப்பதில் மகிழ்ச்சி பெற்று வந்திருக்கிறார்கள். எல்லாக் காலங்களிலும் எல்லா வயதினராலும் விளையாட்டுகள் விரும்பப்படுகின்றன. பண்டைய சமூகங்களில் உடற் பயிற்சியே விளையாட்டுகளின் தலையாய நோக்கமாக இருந்தது. இளைஞர்களுக்கு வலிமையையும் உள்ளத் துணிவையும் அளித்து, அவர்களை வீரர்களாக்குவதற்காகப் பண்டைக் காலங்களில் மன்னர்கள் விளையாட்டுகளுக்கு ஊக்கமளித்து வந்தார்கள். பெண்களும் சொக்காட்டான், கும்மி, அம்மானை, பந்தாட்டம், கோலாட்டம் போன்ற விளையாட்டுகளில் ஈடுபட்டு வந்தனர்.

**விளையாட்டுகளின் தோற்றம்:** பண்டைய மனிதனுக்கு வாழ்க்கையே ஒரு போராட்டமாக இருந்தது. இயற்கையுடனும் விலங்குகளுடனும் அவன் போராட வேண்டியிருந்தது. இப்போராட்டம் அவன் வாழ்க்கைக்குப் பல படிப்பினைகளை உணர்த்துவதாக அமைந்தது. தற்காப்பிற்காகத் தாண்டவும் ஓடவும் நீந்தவும் மரம் ஏறவும் மனிதன் பழகியிருந்தான். முடிந்தால் கையிலுள்ள குச்சி, கல் ஆகியவற்றின் உதவியால் எதிர்த்துத் தாக்கவும் பழகினான். இவ்வாறு வேட்டை ஆடுதல் தோன்றிற்று எனலாம். இதனையடுத்துக் குறி பார்த்து எறிதல், வீழ்த்துதல், போர்க் கருவிகளைப் பயன்படுத்துதல் போன்றவற்றில் பயிற்சிகள் வளரலாயின. மக்கள் தம்முடைய நாடோடி வாழ்க்கையினை விட்டுவிட்டு நிலைத்த வாழ்வு வாழத் தொடங்கிய காலத்தில் குழுக்களிடையே அடிக்கடி போர்கள் நிகழ்ந்தன. அதற்காகப் போர்ப் பயிற்சிகள் தரப்பட்டன. நாகரிக முதிர்ச்சியில் மக்கள் பயிர்செய்து வாழத் தொடங்கியவுடன் வேட்டையின் தேவை குறைந்தது. மன மகிழ்ச்சிக்காகவும் பலர் காணத் தன் வீரத்தினைப் புலப்படுத்துவதற்காகவும் விளையாட்டுகள் தோன்றலாயின. மக்கள் குழுக்களாக நிலைத்து வாழத் தொடங்கிய காலத்தில், சமய நம்பிக்கை தொடர்பான செய்திகளும் செல்வாக்குப் பெற்றன. இந் நம்பிக்கையினை அடிப்படையாகக் கொண்டும் சில விளையாட்டுகள் தோன்றலாயின. எடுத்துக்காட்டாகத் தொட்டு விளையாடும் விளையாட்டினைக் கூறலாம். இதில் 'விரட்டி வருபவரை', 'கெட்ட ஆவியுடன்' இணைத்துக் கூறலாம். விரட்டி வருபவரிடமிருந்து தப்புவதற்காக மரத்தினைத் தொடும் பழக்கமும் சில விளையாட்டுகளில் உள்ளது. ஊர்ப்புறங்களில் பேய் நம்பிக்கையுடையவர், தூய காற்றுக்காகவும் பேய் நெருங்காதிருக்கும் பொருட்டும், நிழலுக்காகவும் வேப்பமரத்தினை வளர்ப்பர்.

**இந்திய விளையாட்டுகள்:** சிலம்பம், மற்போர், கத்திச் சண்டை போன்ற வீர விளையாட்டுகள் இந்தியாவில் புகழ்பெற்று விளங்கின. இங்கு இன்றும் பல பகுதிகளில் விழாக்களின்போதும் சிறப்பு நிகழ்ச்சிகளின்போதும் சிலம்பம், மஞ்சு விரட்டு, ஆட்டுக் கடாச் சண்டை போன்ற விளையாட்டுகள் நடத்தப்படுகின்றன. பந்தாட்டங்கள், கோலி விளையாட்டு, சடுகுடு ஆட்டம் போன்றவை நெடுங் காலமாக வழக்கத்தில் உள்ளன. இக்கால விளையாட்டான கிரிக்கெட்டை ஒத்திருக்கும் கிட்டிப் பந்து, கிட்டிப்புள் ஆகிய பழைய விளையாட்டுகள் குறிப்பிடத்தக்கவை.

**தமிழ்நாட்டு விளையாட்டுகள்:** எளிய அல்லது வேடிக்கையான செயல்களில் சில வரையறைகள் வகுக்கப்பட்டு, ஒழுங்குமுறை ஆட்டம் உருவாக்கப்படுகிறது. குறிப்பிட்ட ஒழுங்குமுறை ஆட்டத்தில், யார் வெற்றி பெறுகிறார்கள் என்று அறிய வேண்டிய சூழ்நிலையில் போட்டி ஏற்பட்டு விடுகிறது. போட்டி, ஆட்டத்தின் முடிவு வெற்றி அல்லது தோல்வியினைச் சுட்டுவதாய் அமைகிறது. போட்டி ஆட்டத்தின் முடிவின்படி, வெற்றி பெற்றவர் ஏதேனும் பரிசுப் பொருளினைப் பெற்றால், அது 'பந்தய ஆட்டமாக' மாறி விடுகிறது. இப்பந்தய ஆட்டம், சூதாட்டமாகவும் விளையாடப்படுகிறது. போட்டியாட்டத்தில் உடல் திறனுக்கும் உடற் பயிற்சிக்கும் மிக்க வாய்ப்புக் கொடுத்தால், அவை வலிய விளையாட்டுகளாகின்றன. தொழில், போர், வேட்டை, போலச்செய்தல் போன்றவை விளையாட்டுகள் தோன்றும் நிலைக்களன்களாகின்றன.

**மேனாட்டு விளையாட்டுகள்:** சடங்குகள் நிரம்பிய பண்டைய கிரேக்க நாகரிகம் உன்னத நிலையில் இருந்தபோது, அங்கு மிகப் பெரிய ஆட்டப் பந்தயங்கள் நடைபெற்றன. அவற்றுள் ஒலிம்பிக்கு விளையாட்டுகள் குறிப்பிடத்தக்கவை. பந்தயத்தில் ஈடுபடும் இளைஞர் பல மாதங்களுக்குக் கடுமையான பயிற்சி பெற்றனர். அப்பந்தயங்கள் பல நாட்கள் தொடர்ந்து நடைபெற்றன. அவற்றைக்காணப் பல நாடுகள் திரண்டு வந்தன. ஓட்டம், மற்போர், குதித்தல், குத்துச் சண்டை முதலியன பல பந்தய விளையாட்டுகளாகும். இப் பந்தயங்களில் வெற்றி பெறுவோர்க்கு அவை சித்திரிக்கப்பெற்ற மகுடம் சூட்டப்படும். மேனாட்டு ஆட்டங்கள் பல, இந்திய நாட்டில் இப்பொழுது வழக்கத்திற்கு வந்துள்ளன. கைப்பந்து, கால் பந்து, கூடைப் பந்து, பூப்பந்து, ஆக்கி (Hockey), தென்னிசு (Tennis)

போன்ற விளையாட்டுகள் இந்திய நாட்டின் பல பகுதிகளிலும் விளையாடப்படுகின்றன.

**விளையாட்டுகளின் வகைகள்:** பங்கு பெறுவோரின் எண்ணிக்கையின் அடிப்படையில் விளையாட்டுகளை ஒருவர் விளையாட்டு, இருவர் விளையாட்டு, குழுவிளையாட்டு என மூவகைப்படுத்தலாம். சிறுவர், சிறுமியர் பெரும்பாலும் குழு விளையாட்டுகளில் ஈடுபடுகின்றனர். விளையாட்டுகளை அக விளையாட்டுகள், புற விளையாட்டுகள் எனவும் இரு வகைகளாகப் பிரிக்கலாம். விளையாட்டுகளை உடல் திறன், அறிவுத் திறன், வாய்ப்பு நிலை, மனமகிழ்ச்சி நிலை எனப் பல பகுதிகளாக விளக்கலாம்.

**உடல்திறன் விளையாட்டு:** வீர விளையாட்டுகளில் ஈடுபடுவோர் தம் உயிரினைப் பணயம் வைத்துத் துணிச்சலுடன் விளையாடுகின்றனர். வீர விளையாட்டுகளில் அமையும் போட்டியை மனிதனுக்கும் மனிதனுக்கும் இடையே நிகழும் போட்டி, மனிதனுக்கும் விலங்கிற்கும் இடையே நிகழும் போட்டி என இரு வகைப்படுத்தலாம். மனிதனுக்கும் மனிதனுக்குமிடையே அமையும் போட்டிக்குச் 'சிலம்ப விளையாட்டினையும்', 'புலி வேட்டத்தினையும்' எடுத்துக்காட்டாகக் கூறலாம். இவ்விரண்டு விளையாட்டுகளுக்கும் மிகுந்த பயிற்சி தேவைப்படுகிறது. பயிற்சி பெற்றவர் தம்மில் யார் மிக்க திறன் படைத்தவர் என்ற அடிப்படையில் வீரத்தினைச் சோதிப்பதற்காகப் போட்டி விளையாட்டில் ஈடுபடுகின்றனர். மனிதனுக்கும் விலங்கிற்கும் இடையே அமையும் போட்டியில் சல்லிக்கட்டினையும், பாரி வேட்டையினையும் சான்றாகக் கூறலாம். சல்லிக்கட்டில் 'அடக்குதல்' என்ற முறையில் வீரம் புலப்படுகிறது. முரட்டுக் காளையுடன் மனிதன் மோதி வெற்றி கொள்கிறான். அதில் வெற்றி பெற்றவர் பரிசினைப் பெறுகிறார். சிலம்பத்தில் வெற்றி பெற்றவர் 'வீரம் நிறைந்தவர்' என்ற புகழினைப் பெறுகிறார். இக்காலத்தில் கிரிக்கெட்டுப் போன்ற நகரத்து விளையாட்டுகளைச் சிலர் விளையாடப் பலர் பார்த்து மகிழ்வது போல, இத்தகைய விளையாட்டுகளில் சிலர் பங்கு கொள்ளப் பலர் பார்த்து மகிழ்வர். பலர் பிடித்துக் கொள்ள, அவர்தம் பிடியிலிருந்து விலகிவர உடல் திறன் பயன்படுத்தப்படுகிறது. இங்கு ஒருவருக்கும் பலருக்கும் இடையில் போட்டியமைந்து, உடல் திறன் சோதிக்கப்படுகிறது. (எ-டு. சடுகுடு) மற்றவர் செய்ய இயலாத வீரச் செயலை ஒருவர் தம் உடல் திறனை வெளிப்படுத்திச் செய்தல் சில விளையாட்டுகளில் காணப்படுகிறது. (எ-டு. இளவட்டக்கல், ஓட்டம்), வண்டியில் மாடுகளைப் பூட்டி வேகமாகச் செலுத்துவது ஒரு வகைப் போட்டி விளையாட்டாக விளங்குகிறது. இதில் வண்டி ஓட்டுபவர் தம் உடல் திறன் எதனையும் பயன்படுத்துவது இல்லை. மாடுகளின் உடல் திறன் அடிப்படையில் வெற்றி அல்லது தோல்வி முடிவு செய்யப்படுகிறது.

கரணம் போட்ட நிலையில் பொருள்களைக் கொண்டு வருதல் என்ற செய்கை நல்ல பயிற்சியின் பயனாக ஆடப்படும் விளையாட்டெனினும் இது இறை நம்பிக்கையுடன் தொடர்புடையதாகக் கருதப்படுகிறது. (எ-டு. மோடி விளையாட்டு).

**அறிவுத்திறன் விளையாட்டுகள்:** இவை பெரும்பாலும் அக விளையாட்டுகளாக அமைந்துள்ளன. ஒருவர் பங்கு கொண்டு தமது திறமையினை வெளிப்படுத்தும் இயல்பினை நட்சத்திர விளையாட்டில் காணலாம். 'கட்டம்' போன்ற இருவர் பங்குகொள்ளும் விளையாட்டுகளில் ஒருவர் தம் காய்களை நேர்கோட்டிற்குக் கொண்டு வந்தால் வெற்றி பெற்றவராகக் கருதப்படுகிறார்.

**வாய்ப்புநிலை விளையாட்டுகள்:** உடல் திறனுக்கோ, அறிவுத் திறனுக்கோ முதன்மை கொடுக்காமல், வாய்ப்பு நிலையில் வெற்றி தோல்வியினை முடிவு செய்யும் விளையாட்டுகளை 'வாய்ப்பு நிலை விளையாட்டுகள்' எனலாம். முழுவதும் வாய்ப்பு நிலையினைச் சார்ந்த விளையாட்டுகள் பெரும்பாலும் சூதாட்டங்களாக உள்ளன. சூது விளையாட்டுகளில் வெற்றி அல்லது தோல்வி என்ற முடிவு இருந்தாலும், வெற்றி பெற்றவர் பணம் பெறுதல் என்ற நிலையினையும் தோல்வியுற்றவர் பணம் இழத்தல் என்ற நிலையினையும் எதிர் கொள்ள வேண்டியிருக்கும்.

ஊகித்தறியும் நிலையிலுள்ள வாய்ப்பு நிலை விளையாட்டுகளுக்குப் 'பானை உடைத்தலையும்', 'உறிப் பானை விளையாட்டினையும்' எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். கண் கட்டப்பட்ட நிலையில் பானையினை உடைக்க வேண்டுமென்றால் அது வாய்ப்பு நிலையாகக் கருதப்படுகிறது. இருப்பினும், சுற்றுப்புறச் சூழ்நிலைகளை உய்த்துணர்ந்தால் எளிதில் வெற்றியடையவும் கூடும். வாய்ப்பு நிலையில் விளையாடப்படும் விளையாட்டுகளனைத்தும் பெரும்பாலும் விழாக்காலங்களில் நிகழ்கின்றன.

பண்டைக் காலத்தில் அறிவுத் திறன் சார்ந்த தாயம் போன்ற வாய்ப்பு நிலை விளையாட்டுகள் மகளிரால் பெரும்பாலும் விளையாடப்பட்டன. விழும் எண்களுக்குத் தகுந்தவாறு காய்களை நகர்த்துவது முழுவதும் வாய்ப்பு நிலையினைச் சார்ந்தது. இருப்பினும், விழும் எண்களுக்குத் தகுந்தவாறு எந்தக் காயினை நகர்த்தினால் எதிரியின் காயினை

வெட்டலாம் அல்லது பழம் நோக்கிச் செல்லலாம் அல்லது தான் வெட்டுப்படாமல் இருக்கலாம் என்பன போன்ற செயல்களில் அறிவுத் திறன் தேவைப்படுகிறது.

'பல்லாங் குழியில்' எந்தக் குழியினைப் பிரித்தால் எத்தனை கல் கிடைக்கும் என்பது தெரியாது. ஆகவே, இவ்விளையாட்டையும் வாய்ப்பு நிலை ஆட்டம் என்று கொள்ளலாம். இவ்விளையாட்டில் பயிற்சி பெற்றவர்க்கு எந்தக் குழியினைப் பிரித்தால் எத்தனை கல் கிடைக்குமென்பது அனுபவத்தின் அடிப்படையில் தெரிந்து கொள்ள வாய்ப்புண்டு. பல்லாங் குழி யென்பது பண்ணாங்குழி, பன்னாங்குழி, பள்ளாங் குழி, பதினாங்குழி, பரவாடும் குழி, பாண்டி எனப் பலவகைப் பெயர்களில் அவ்வவ்விடத்தினைப் பொறுத்து வழங்கப்படுகிறது. இந்த விளையாட்டு ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னரே எகிப்து நாட்டில் வாரி என்ற பெயரில் ஆடப்பட்டு வந்தது. ஆப்பிரிக்காவின் பல பாகங்களுக்கும் ஆசியாவிற்கும் இந்த ஆட்டம் பரவிற்று. வாரி ஆட்டத்தில் உலர்ந்த பட்டாணி விதைகள் காய்களாகப் பயன்படுத்தப்பட்டன. இந்த ஆட்டம் இன்றும் ஆப்பிரிக்க நாடுகளில் விளையாடப்படுகிறது.

**தாயம்:** 'தாயம்' என்ற சொல்லிற்கு 'உரிமை' யென்னும் பொருள் உண்டு. உரிமைச் சுற்றத்தாரைக் குறிப்பதற்குத் 'தாயத்தார்' என்று கூறுவது அதற்குச் சான்றாகும்.

விளையாட்டில் பங்கு கொள்வோர் பணம் கட்டுவதுண்டு. அப்பணமெல்லாம் தம்மை வந்தடைய வேண்டும் என்ற 'உரிமை' கருதி ஒவ்வொருவரும் விளையாட்டில் ஈடுபட்ட காரணத்தினால் 'தாயம்' என்ற பெயர் ஏற்பட்டிருக்கலாம். சோழியினைக் குலுக்கிப் போடுகையில் 'ஒன்று' விழுந்தால், 'தாயம்' என்று கூறுகின்றனர். மற்ற எண்களையெல்லாம் அவ்வெண்ணின் பெயரினைக் கொண்டு இரண்டு, மூன்று என்று குறிப்பிடுகையில் 'ஒன்றினை' மட்டும் 'தாயம்' என்று சொல்வது குறிப்பிடத்தக்கதாகும்.

நடைமுறையில் மக்கள் ஒரு வழக்கத்தினைக் காணலாம். நெல்லினையோ மற்ற தானியங்களையோ அளக்கும்போது 'ஒன்று' என்று சொல்வது இல்லை. அதற்குமாறாக 'இலாபம்' என்று சொல்வர். செய்யக்கூடிய செயல்கள் யாவும் இலாபம் உடையவவாக இருக்கவேண்டும் என்ற நம்பிக்கையில் அவ்வாறு கூறப்படுகிறது. அதற்கிணங்க விளையாட்டின் தொடக்கத்திற்கும் 'ஒன்று' என்ற எண் காரணமாக அமைகிறது. உரிமைப் பொருளைப் பெறவேண்டுமாயின் வெற்றியடைதல் வேண்டும். அதற்கு வெற்றியைக் கருதி விளையாட்டின் தொடக்கமாகிய ஒன்றினையும் 'தாயம்' என்று குறித்து அடுத்துவரும் எண்களை முறைப்படி கூறியிருக்கலாம்.

அவ்வாறு தாயம் விளையாடுவதற்கு வரையப்படும் கட்டம் 'தாயக் கட்டம்' எனவும், தாயம் உருட்டும் பகடை 'தாயக் கட்டை' எனவும் வழங்கலாயின.

**சதுரங்கம்:** அறிவுத்திறன் விளையாட்டுகளுள் மிக்க புகழ் பெற்ற ஆட்டம் சதுரங்கம் ஆகும். இது கி.மு. ஏழாம் நூற்றாண்டில் இந்தியாவில் விளையாடப்பட்டு வந்தது. அக்காலத்தில் சதுரங்கம் என்று குறிப்பிடப்பட்ட தேர்ப்படை, யானைப்படை, குதிரைப் படை, காலாட் படை என்ற பிரிவுகள் இந்தச் சதுரங்க விளையாட்டில் காணப்பட்டன. இந்தியாவிலிருந்து இந்த ஆட்டம் ஐரோப்பாவிற்கும் பாரசீகம், அரேபியா ஆகிய நாடுகளுக்கும் பரவியது. காலப்போக்கில் இந்த விளையாட்டில் பயன்படுத்தப்படும் காய்களுக்கான பெயர்களில் பல மாறுதல்கள் ஏற்பட்டன. ஐரோப்பாவின் பல நாடுகளிலும் அரசக் குடும்பத்தினர் சதுரங்கத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தனர். இது இக்காலத்தில் மேனாடுகளில் 'செசு' (**Chess**) என்று குறிப்பிடப்படுகிறது. அனைத்துலகச் சதுரங்கப் போட்டிகளும் நடைபெறுகின்றன. இப்போட்டிகளுக்கான விதிகள் இங்கிலாந்துச்சதுரங்கக்கழகத்தினால்வரையறுக்கப்பட்டுள்ளன. இது இருவர் விளையாடும் அகவிளையாட்டு ஆகும். ஒவ்வொரு ஆட்டக்காரருக்கும் 16 காய்கள் உண்டு. இரு அணியினரின் காய்களும் வெவ்வேறு நிறங்களானவை.

இந்த விளையாட்டினின்று தோன்றியவையே சீன, சப்பானிய ஆட்டங்களான சூ-ஆங்-கி, சோகி (**Shogi**) ஆகிய விளையாட்டுகள். இக்காலத்தில் விளையாடப்படும் செக்கர்சு (**Checkers**) என்னும் விளையாட்டு வகைகளும் சதுரங்கத்தை யொட்டியவையே. செக்கர்சு ஆட்டங்களில் சீனச் செக்கர்சு (**Chinese Checkers**) என்பது புகழ்பெற்றதாகும். ஒருவர் மட்டும் தனித்து ஆடக்கூடிய அசால்ட்டோ (**Asalto**) என்னும் ஆட்டம் இங்கிலாந்து, பிரான்சு ஆகிய நாடுகளில் விளையாடப்பட்டு வந்தது.

கேரம் என்னும் ஆட்டம் எகிப்து நாட்டில் தோன்றியதாகும். இந்த ஆட்டம் இருவர் அல்லது நால்வரால் ஆடப்படுவதாகும். இது சிறுவர்களாலும், பெரியவர்களாலும் விரும்பி விளையாடப்படும் அகவிளையாட்டு. ஆட்டக்காரர் இருவருக்கும் தனித்தனியே வெண்மை, கருமை ஆகிய இரு நிறங்களிலும் 9 காய்கள் இருக்கும். இவைகளைத் தவிர, சிவப்பு நிறமுள்ள 'அரசி' என்ற காயும், வெண்மை நிற அடிப்பான் (**Striker**) ஒன்றும் இருக்கும். கேரம் விளை

யாட்டுப் பலகை சதுர வடிவமாக இருக்கும். பலகையின் நான்கு மூலைகளிலும் ஆட்டக்காரர்களால் அடித்துத் தள்ளப்படும் காய்கள் விழுவதற்கான சிறு பள்ளம் இருக்கும். அரசி என்ற காயை மட்டும் தனித்து அடிக்க முடியாது. இதை அடித்ததும் மற்றொரு காயையும் அடித்தாக வேண்டும். எந்த ஆட்டக்காரர் தம் காய்கள் அனைத்தையும் முதலில் அடித்துத் தள்ளுகிறாரோ அவரே வெற்றி பெற்றவராவார். கேரம் விளையாட்டு இக்காலத்தில் உலகிலுள்ள பல நாடுகளில் விளையாடப்படுகிறது.

புற விளையாட்டுகளுள் சில அகவிளையாட்டுகளாகவும் விளையாடப்படுகின்றன. மேசை தென்னிசு (Table Tennis), பில்லியார்ட்சு (Billiards), மேசை ஆக்கி (Table Hockey) ஆகியவற்றை இத்தகைய விளையாட்டுகளாகக் குறிப்பிடலாம். மேசை ஆக்கி என்பது, சோவியத்து நாட்டில், குளிர் காலங்களில், மக்கள் வெளியில் எங்கும் செல்ல முடியாதவாறு மிகுதியான பனி பெய்து கொண்டிருக்கும் பொழுது, வீட்டினுள் இருந்தவாறே ஆடக்கூடிய வகையில் அமைக்கப்பட்டுள்ளது. இந்த ஆட்டத்தில் ஒரு நீண்ட சதுரப் பலகை இருக்கிறது. இதில் ஆட்டக்காரர்களின் சிறு படிமங்கள் நிறுத்தப்பட்டிருக்கின்றன. ஆட்டம் தொடங்கியவுடன் இரு அணியினரின் சார்பாக விளையாடும் ஆட்டக்காரர்கள், தத்தம் அணியினரைப் பந்து வரும் பக்கம் நோக்கித் தடுத்து நிறுத்தவும், நகர்த்தவும் வசதியாக ஆக்கிப் பலகைக்கு அடியில் பிடிகள் அமைக்கப்பட்டுள்ளன. இவற்றை நகர்த்தினால் ஆட்டப்படிமங்களும் நகரும். இவ்விளையாட்டு விறுவிறுப்பும் துடிதுடிப்பும் நிறைந்த ஆட்டமாகும்.

**சீட்டாட்டம்:** அகவிளையாட்டுகளில் சீட்டு என்னும் விளையாட்டு, இந்தியாவிலும் சீனாவிலும் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலேயே விளையாடப்பட்டு வந்தது. இவ்விளையாட்டு அரேபியாவில் பரவி, அங்கிருந்து ஐரோப்பிய நாடுகளுக்குச் சென்றது. காலப் போக்கில் இது பணம் கட்டி விளையாடப்படும் சூதாட்டமாக மாறியது. ஐரோப்பிய நாடுகளில் கிறித்தவத் திருச்சபை இதற்கு எதிர்ப்புத் தெரிவித்தது. இக்காலத்தில் இவ்விளையாட்டு பல வகையான பெயர்களில் அமைந்த ஆட்டங்களாக உலகெங்கிலும் விளையாடப்படுகிறது. சூதாட்ட முறையில் பெரிய தொகைகளைப் பந்தயமாக வைத்தும் இது விளையாடப்படுகிறது. சீட்டு விளையாட்டைப் போன்ற இலோட்டோ (Lotto) என்னும் இத்தாலிய விளையாட்டு, இப்பொழுது பல நாடுகளிலும் விளையாடப்படுகிறது. சீட்டாட்டப் பலகை (Cribbage Board) என்னப்படும் விளையாட்டு, சீட்டு விளையாட்டு வகையின்பாற்படும். ஆட்டக்காரர்கள் சீட்டு ஆட்டத்தில் எடுத்த புள்ளிகளை அடையாள ஆணியினை வைத்துக் குறிப்பதற்காக ஒரு பலகையில் சிறுகுழிகள் அமைக்கப்பட்டுள்ளன. இதுவே சீட்டாட்டப் பலகை ஆகும். போச்சு (Poach) எனப்படும் செருமானியச் சீட்டு விளையாட்டும், இக்காலத்தில் சில நாடுகளில் விளையாடப்படுகிறது. சீட்டினின்று வேறுபட்ட வணிக விளையாட்டு (Trade) சிறுவர்களால் பெரும்பாலும் விளையாடப்படுகிறது. இதனை இருவர் நால்வர், ஐவர் அதற்கு மேற்பட்டவர்கள் விளையாடலாம். மனிதர்கள் தம் வாழ்க்கையில் அடையக் கூடிய பல நிலைமைகளும் நலன்களும் உயர்வுகளும் இழப்புகளும் தனித்தனி இடங்களாகக் குறிக்கப்பட்டிருக்கும். ஆட்டக்காரர்களின் காய் எந்தக் கட்டத்திற்கு வருகிறதோ அந்தக் கட்டத்திற்குரிய நற்பலன் அவர்களுக்குக் கிட்டும். ஆதாயமோ இழப்போ வரலாம். இவ்விளையாட்டைப்போன்ற வேறொரு கட்ட விளையாட்டு இந்தியாவில் பழங்காலத்திலிருந்து விளையாடப்படுகிறது. இது பரமபத சோபான படம் என்று தமிழ்நாட்டிலும், மோட்சபதமு என்று ஆந்திர நாட்டிலும் வழங்கப்படுகிறது. இவ்விளையாட்டு, மேனாடுகளில் பாம்புகளும் ஏணிகளும் என்ற பெயரால் வழங்கப்படுகிறது.

**பகடை உருட்டல்:** எகிப்திலும் பல ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக இந்தியாவிலும் பகடை ஆட்டம் ஆடப்பட்டு வந்தது. இது சூதாட்ட முறையில் பணம், விலையுயர்ந்த பொருள்கள் ஆகியவற்றைப் பணயமாக வைத்து ஆடப்பட்டு வந்தது. பண்டைய கிரேக்க, உரோமானிய, சுமேரிய வரலாற்றுக் குறிப்புகளில் பகடை பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. பகடை ஆட்டத்தில் ஏமாற்றும் முறைகளும் விளக்கப்பட்டுள்ளன. சிறுவர்களின் புற விளையாட்டுகளில் கோலியும் ஒன்றாகும். இது உலகெங்கிலும் பல்வேறு பெயர்களில் விளையாடப்படுகிறது. தமிழ்நாட்டில் சிறுமியர் விளையாடும் பாண்டி ஆட்டம், வேறு பல நாடுகளில் ஆப்காட்ச்சு (Hopscotch) என்று வழங்கி வந்துள்ளது. இவ்விளையாட்டு எப்பொழுது எந்த நாட்டில் முதன்முதலில் விளையாடப்பட்டது என்பது எவருக்கும் தெரியாது. இவ்விளையாட்டில் பலவகைகள் உள்ளன. எல்லாவற்றிலும் ஒரு சிறிய தட்டையான கல், தரையில் வரையப்பட்டுள்ள கட்டங்களில் எறியப்பட்டு, ஆட்டக்காரர்கள் ஒற்றைக் காலில் அதன் மீது குதித்து, அதனை வேறு கட்டங்களுக்குத் தள்ளி விளையாடுவர். இது சிறுமியர்களின் மனமகிழ் ஆட்டம் ஆகும். சிறுமியர் வளையம் எறியும் ஆட்டங்களும், பல பெயர்களில் விளையாடப்பட்டு வருகின்றன.

**சட்டில்காக்கு (Shuttle Cock)** என்னும் ஆட்டம் பண்டைய சீன சப்பானிய நாடுகளில் விளையாடப்

பட்டு வந்ததாகும். சிறுவர்கள் விளையாடும் பம்பரம் உலகெங்கிலும் காணப்படும் ஆட்டமாகும். பண்டைய உரோமானிய நாட்டில் சிறுவர்கள் பம்பரம் விளையாடியதாகக் குறிப்புகள் காணப்படுகின்றன. இவற்றைத் தவிரக் 'கயிறு தாண்டுதல்' (Skipping) சிறுவர் சிறுமியரால் பெரிதும் விரும்பி விளையாடப்படும் ஆட்டமாகும். நீர் நிலைகளும் ஆறுகளும் மிகுதியாக இருக்கும் நாடுகளில் படகுப் பந்தயங்களும் நீச்சல் போட்டிகளும் பெரும்பாலும் மக்களின் கவனத்தை ஈர்க்கின்றன. இந்தியாவில் கேரள நாட்டிலும் வங்காளத்திலும் காசுமீரத்திலும் படகு விளையாட்டுகள் மிகுதியாக நடைபெறுகின்றன. சப்பானிய நாட்டில் காற்றாடிகள் விடுதல், பெரியவர் முதல் சிறுவர் வரை எல்லோராலும் விரும்பப்படுகிறது. மாபெரும் காற்றாடிகள் பலவேறு நாடுகளைச் சேர்ந்தவர்களாலும் செய்யப்பட்டுப் பறக்கவிடப்படுகின்றன. சப்பான் நாட்டில் நடக்கும் காற்றாடிப் போட்டிகளில் பல்வேறு உருவங்களுடைய காற்றாடிகள் பறக்கவிடப்படுகின்றன. மேற்குறிப்பிட்ட விளையாட்டுகளைத் தவிர, புதிர் விளையாட்டுகளும் மக்களால் பெரிதும் விரும்பப்படுகின்றன, மாயக்கட்டம், மாயச்சதுரம் போன்றவை பல எண்களும் வண்ணங்களும் குறிக்கப்பட்டுப் புதிர்களை விடுவிக்கும் முறையில் அமைக்கப்பட்டுள்ளன.

**சல்லிக்கட்டு:** தமிழ்நாட்டு வீர விளையாட்டுகளுள் சல்லிக்கட்டுத் தொன்மையானதும் சிறப்பானதும் ஆகும். இது மாடுபிடி, எருதுபிடி, மஞ்சுவிரட்டு, மஞ்சுவெருட்டு முதலிய பல்வேறு பெயர்களால் குறிக்கப்படுகிறது. இது காளையை அடக்கும் விளையாட்டு. இப்போது, கிராம தேவதைகளின் வழிபாட்டு விழா, பொங்கல் விழா ஆகியவற்றுடன் தொடர்புடையதாக இது உள்ளது. சங்க இலக்கியத்தில் இது ஏறு தழுவுதல் என வழங்கியது. சல்லிக் கட்டில் பங்கு கொள்ளும் காளை 'சல்லிமாடு' எனப்படும். கன்றுப் பருவத்திலிருந்து அதனைப் பழக்கத் தொடங்குவர். சிவப்புத் துண்டினைக் காட்டி மருளச் செய்வர். இதற்கு 'உர்ர்ரி காட்டுதல்' என்பது பெயர். இது ஓர் ஒலிக்குறிப்புச் சொல். இதன் மூலம் பாய்ச்சலுக்குப் பழக்குவர்.

சல்லிமாட்டிற்கு காயடிக்கப்படுவதில்லை. அரிசி, பருத்தி விதை, கீரை போன்றவைகளை உணவாகக் கொடுத்துத் திமிராக வளர்ப்பர். அவ்வாறு வளர்த்தால்தான் காளைப் போரில் அது பாய்ந்து எதிர்க்கும்.

சல்லிக் கட்டில் கலந்துகொள்வதற்கு முன் காளைகளைப் பல வகையாக அணி செய்வர். காலிலும் கழுத்திலும் சலங்கை மணி அணிவிப்பர். நெற்றியில் காசுமாலை அணியாக இருக்கும். கழுத்தில் சிறு புளியங்கொம்பினாலான வளையம் இருக்கும்.

சல்லிக்கட்டுத் துணிக்குச் 'சண்டி' என்பது பெயர். மாட்டின் கொம்பில் இத்துணி சுற்றப்பட்டிருக்கும். 'வாடிவாசலில்' யார் காளையினை அடக்குகிறாரோ அவருக்கு அச்சண்டித் துணி பரிசாக வழங்கப்படும். வாடிவாசல் என்பது காளை நுழைவாயில் ஆகும். இது முன்வாடி வாசல், உள்வாசல், பின்வாடி வாசல் என மூன்று பிரிவுகளை உடையதாயிருக்கும். உள் வாசலின் முன்புறமுள்ள பகுதிக்கு முன்வாடி வாசல் என்பது பெயர். உள்வாசலிலிருந்து முன்வாடி வாசலுக்கு வருவதற்குத் திறப்பு இருக்கும். ஆனால், கதவு இராது. இத் திறப்பின் வழியாகக் காளை வெளிவருதல் வேண்டும். முன்வாடி வாசலின் முன் பகுதி திட்டி வாசலாகும். திட்டி வாசலில் மூன்று வழிகள் கிடைக்குமாறு இடுக்குமரம் வைத்திருப்பர். புதிதாக வெட்டப்பட்ட தென்னை அல்லது பனைமரம் இடுக்கு மரமாகப் பயன்படுத்தப்படும். வாடிவாசலை அடுத்து, சல்லிக்கட்டுக் களத்தில் சல்லிமாடு அவிழ்த்துவிடப்படும். சல்லிக்கட்டில் கலந்துகொள்ளவிருக்கும் காளைகளைக் கட்டுவதற்காக உள்வாசலுக்குப் பின்புறம் தொழுவம் இருக்கும். இதனைப் பின்வாடிவாசல் என்று குறிப்பிடுவர். பின்வாடி வாசலிலிருந்து உள்வாசலுக்கு வருவதற்குத் திறப்பு இருக்கும். இத்திறப்பும் கதவினையுடையதாக அமைந்திருக்கும். உள்வாசலுக்கு வந்த காளை திரும்பப் பின்வாசலுக்குச் செல்லாதவாறு கதவு தடுக்கும்.

திட்டி வாசலை விட்டுக் காளை வெளியே புறப்பட்டுவிட்டால் காளையைத் தழுவுபவர் தயாராகி விடுவார். முதலில் கொம்பினைப் பிடித்துக் காளையின் ஓட்டத்தினைத் தடைப்படுத்துவார். இதற்கு மிகுந்த திறமை வேண்டும். தன் உடல் வலிமை முழுவதையும் ஒருங்கிணைத்துக் கைக்குக் கொண்டுவருதல் வேண்டும். காளை தலையினைத் தாழ்த்திப் பின் கொம்பினை உயரத் தூக்கும். இதற்குத் 'தூக்கியெறிதல்' என்பது பெயர். கொம்பினை உயரத் தூக்கவிடாமல் செய்தால் காளை தாவும். ஒரு தாவிற்கு ஈடுகொடுக்க மிகுந்த திறன் வேண்டும். இரண்டு மூன்று தாவிற்கு ஈடுகொடுத்துவிட்டால் அவர் சிறந்த வீரராக மதிக்கப்படுவார்.

பண்டைக் காலத்தில் ஐவகை நிலங்களுள் ஒன்றாகிய முல்லை நிலத்தில் அத்திணைக்குரிய ஆயர்களிடம் 'ஏறு தழுவுதல்' இடம் பெற்றிருந்தது. மேலும், ஏறு தழுவுதல் மணவினையுடன் தொடர்புடையதாகவும் அமைந்திருந்தது. ஏறு தழுவுதலுக்கும் குரவைக் கூத்திற்கும் தொடர்பிருந்தது. குரவைக் கூத்து, ஏறு தழுவுதற்குரிய நாளின் முன்னாள் மாலையிலாவது ஏறுதழுவும் நாளின் மாலையிலாவது ஊர்ப் பொதுமன்றத்தே நிகழும். முன்னாளாயின், தம் காதலரை ஏறுதழுவுதற்குத் தூண்டும் பாட்டுகளும், ஏறுதழுவிய நாளாயின் தன் காதல்

வெற்றியைக் கண்டு கொண்டாடிப் பாடும் பாட்டுகளும் நிகழும்.

இசுபெயின் (Spain), போர்ச்சுகல், மெக்சிகோ முதலிய நாடுகளில் காளைப்போர் முக்கியமான தேசியப் பொழுதுபோக்கு விளையாட்டாக இன்றும் நடைபெறுகிறது. காளைகளை அரங்கத்திற்குள் விரட்டி, ஆத்திரமூட்டிக் கொல்வதே காளைப்போரின் நோக்கம். கலந்துகொள்வோரும் பயிற்சி பெற்ற வீரராக இருப்பர். மேனாட்டுக் காளைப் போரும், சல்லிக்கட்டும் ஒன்றுபோல் தோன்றினும், அவை முற்றிலும் வேறுபட்டவை.

சிலம்பம்: இது தமிழ் நாட்டில் பழங்காலத்திலிருந்தே வழக்கத்தில் இருக்கும் வீர விளையாட்டாகும். இது மராட்டிய நாட்டில் இலட்டி என்றும், குசராத்தில் தாலக்கடி என்றும், பெங்களூர் மைசூர்ப் பகுதிகளில் தண்டாவரிசை என்றும், ஆந்திரத்தில் கரடி ஆட்டம் என்றும், கேரளத்தில் நெடுவடி என்றும் சொல்லப்படுகிறது.

சிலம்பு விளையாட்டு செயல் திறன் நிறைந்த வீர விளையாட்டாகும். இதற்கான பயிற்சியினைத் தருபவர் தமிழ்நாட்டில் 'சிலம்ப வாத்தியார்' என்று குறிப்பிடப்படுகிறார்.

விளையாட்டில் ஈடுபடுவதற்கு நீளமான கம்பு ஒன்று வேண்டும். விளையாடுபவரின் உயரத்திற்கு அளவாகக் கம்பின் நீளமும் இருக்கும். பெரும்பாலும் மூங்கில் கம்புகளையே பயன்படுத்துவர். கம்பு வீசுந்திறன், காலடி எடுத்து வைக்கும் முறை, வேகமாகச் செயற்படும் திறமை ஆகிய இம்மூன்றும் சிலம்ப விளையாட்டின் அடிப்படைக் கூறுகளாக உள்ளன.

விளையாட்டின் தொடக்கத்தில் வணக்கம் செலுத்தும் முறை உண்டு. முதலில் இறை வணக்கமும் அடுத்துக் குருவணக்கமும் இடம்பெறும். போட்டி விளையாட்டாக இருந்தால் எதிர்த்து விளையாடக்கூடியவர்க்கும் வணக்கம் செலுத்துவர். இது தமிழர் விளையாட்டின் ஒரு சிறப்புக்கூறு. எதிரியின் கம்பு தன் உடல் மேல் படாமல் தடுத்தலும், தன்னுடைய கம்பினால் எதிரியின் உடலைத் தொடுதலும் ஆகிய செயல்களைக் கொண்டு வெற்றியும் தோல்வியும் முடிவு செய்யப்படுகின்றன. கம்பின் நுனியில் வண்ணப் பொடியினைத் தடவியிருப்பர். எதிரியின் உடலில் எத்தனை தடவைகள் கம்பின் நுனி பட்டிருக்கிறது என்பதனை வண்ணப்பொடியின் துணைக்கொண்டு கணக்கிடுவர்.

சிறிய கம்பினை வைத்தாடும் 'களியல்' ஆட்டம் எனப்படும் விளையாட்டு, விழாக் காலங்களில் கேளிக்கையாட்டமாகவும், பாடல் பாடியாடும் ஆட்டமாகவும் விளையாடப்படுகிறது.

புலியாட்டம்: புலியாட்டம் என்பதும் ஒரு வீர விளையாட்டு. சிலம்பு விளையாட்டில் தமக்கு நிகர் எவரும் இல்லை என்று அறிவிப்பதற்கு இவ் வீர விளையாட்டில் ஈடுபடுகின்றனர். புலியாட்டத்தில் புலிவேடமிடுபவர் கையில் புலி நகம் மாட்டப்பட்டிருக்கும். உடல் முழுவதும் புலியினைப்போல் கோடுகள் போடப்பட்டிருக்கும். இரும்பு வளையத்துடன் கூடிய நீண்ட வால் இடுப்பில் கட்டப்பட்டிருக்கும். இவ் வாலைப் பிடிப்பதற்கென ஒருவர் பின் நிற்பார். வேடமிடுபவர், ஆடும் ஆட்டத்திற்கேற்ப முன்னும் பின்னும் அவர் நடக்க வேண்டும். எனவே, வால் பிடிப்பவரும் சிலம்பப் பயிற்சியில் தேர்ச்சியடைந்தவராக இருப்பர். மற்றோர் ஆட்டக்காரரும் புலிவேடமிட்டிருப்பார். ஆனால், இவருக்கு வால் பிடிப்பதற்கென யாரும் இருப்பதில்லை. எனவே, இவர் 'ஒண்டிப்புலி' யென்று சொல்லப்படுகிறார். இரண்டு புலிகளுக்குமிடையே மோதல் வந்துவிடக்கூடாது என்பதற்காக மூங்கில் கழியினைக் குறுக்கே வைத்துப் பிடித்தபடி இருவர் நிற்பர்.

சிலம்புப் பயிற்சி அளித்த ஆசிரியர் வீட்டிலிருந்து ஆட்டம் தொடங்கும். 'நகரா' என்ற இசைக் கருவியின் ஒலிக்கேற்பப் புலியாக இருப்பவரும் ஒண்டிப்புலியாக இருப்பவரும் நடிப்பு விளையாட்டுகளில் ஈடுபடுவர். நடிப்பு விளையாட்டுகள் சிலம்பப் பயிற்சியுடன் தொடர்புடையனவாய் இருக்கும். சில நேரங்களில் போட்டி காரணமாகப் புலிகளாக இருப்பவர்களுக்கு இடையே மோதல் வந்துவிடவும் கூடும். அவ்வமயம் ஒண்டிப்புலிக்காரர் பக்கத்தில் ஓர் ஆடு நிறுத்தப்பட்டிருக்கும். புலி வேடமிட்டவர் நடுவிலுள்ள கம்பினைத் தாண்டி வந்து அவ்வாட்டினைப் பல்லினால் கடித்துத் தன் பக்கம் தூக்கியெறிய வேண்டும். ஆட்டினைத் தூக்கவிடாமல் ஒண்டிப்புலியாக இருப்பவர் கம்பு வீச்சினால் தடை செய்வார். புலியாக இருப்பவர் தம் கம்பு வீச்சுத் திறமையினால் தடைகளை யெல்லாம் தகர்த்தெறிந்து செயற்பட வேண்டும்.

சிலம்ப விளையாட்டில் தம்மை யாராலும் எதிர்க்க முடியாது அல்லது எதிர்த்தாலும் வெல்ல முடியாது என்று நினைப்பவர், புலிவேடத்தின்போது இரட்டை வாலினைக் கட்டுவதுண்டு. அவ்வமயம், உள்ளூர்க்காரரோ விழாவினைப் பார்க்க வந்தவரோ போட்டிக்கிழுப்பின் போட்டி விளையாட்டு தொடங்கும்.

விழாக் காலத்தில் நடைபெறும் இவ்வாட்டம் 'சிலம்ப வாத்தியாரின்' வீட்டிலிருந்து தொடங்கிக் கோவிலுடன் முடிவு பெற்றுவிடும். போட்டியாட்டத்தில் ஈடுபட்டவர்கள் மனவேற்றுமை நீங்கி ஒன்றாக இறைவழிபாடு செய்வார்கள்.

**ஆடுபுலி ஆட்டம்:** தமிழ்நாட்டில் ஆடவர் விளையாடும் அக விளையாட்டுகளுள் ஆடுபுலி ஆட்டம் ஒன்றாகும். 'ஆடுபுலி ஆட்டம்' பதினைந்தாம் புலி, எனவும் சொல்லப்படும். இது அறிவுத் திறமையைச் சோதிக்கும், இருவர் பங்கு பெறும் விளையாட்டாகும். இவ்விளையாட்டில் ஒரு கட்டத்தில் உள்ள புள்ளிகளில் காய்கள் நகர்த்தப்படுகின்றன. பதினைந்து காய்கள் 'ஆடுகள்' ஆகவும், மூன்று காய்கள் 'புலிகள்' ஆகவும் வைக்கப்பட்டிருக்கும்.

இவ்விளையாட்டில் இளைஞர்களைவிட முதியவர்கள் பெரும்பாலும் ஈடுபடுகிறார்கள். ஊர்ப் பொது இடங்களில் ஆடுபுலி ஆட்டத்திற்கான கட்டம் வரையப்பட்டிருப்பதைப் பார்க்கலாம். இவ்விளையாட்டில் ஒருவர் 'ஆடாகவும்' மற்றவர் 'புலியாகவும்' இருப்பர். 'ஆடாக' இருப்பவர்க்குப் பதினைந்து காய்களும், 'புலியாக' இருப்பவர்க்கு மூன்று காய்களும் இருக்கும். கட்டத்தில் காய்களை வைத்து நகர்த்தக்கூடிய புள்ளிகள் இருபத்துமூன்று இருக்கும். 'ஆடாக' இருப்பவர் ஒரு காயினை வைத்தவுடன் 'புலியாக' இருப்பவர் ஒருகாயை நகர்த்துவார். 'ஆடாக' இருப்பவர்க்குப் பதினைந்து காய்கள் இருப்பதால் தொடர்ந்து வைத்துக் கொண்டே வரமுடியும். அதனால் 'புலியாக' இருப்பவர் காய்களைக் கட்டத்தில் ஒரு புள்ளியிலிருந்து வேறு புள்ளிக்கு நகர்த்தும்போது மிக ஆராய்ந்து நகர்த்துதல் வேண்டும்.

ஒரு காய் வைக்கும் புள்ளியிலிருந்து ஒரு புள்ளி தள்ளிக் காய் இல்லாத புள்ளியிருந்தால், அவ்விடத்திற்குக் காயினைத் தூக்கி வைக்கலாம். இடைப்பட்ட புள்ளியிலிருக்கும் காயினை எடுத்துவிட வேண்டியிருக்கும். இதற்கு 'வெட்டுதல்' என்பது பெயர். 'புலியாக' இருப்பவர் மட்டுமே வெட்டலாம். வெட்டுப்பட்ட காய்களை வெளியே எடுத்துவிட வேண்டும். கட்டத்தில் இருக்கும் இருபத்து மூன்று புள்ளிகளுள் பதினெட்டுப் புள்ளிகள் (ஆடு 15, புலி 3) அடைபட்டுப் போக, மீதமுள்ள ஐந்து புள்ளிகளில் காய்களை அங்குமிங்கும் நகர்த்தலாம். புலியாக இருக்கும் காய்களை அங்குமிங்கும் நகர்த்த முடியாதவாறு சுற்றிக் காய்களினால் அடைத்துவிட்டால் 'ஆடாக' இருப்பவர் வென்றவராகக் கருதப்படுவார். சுற்றி வரும் காய்களைக் கவனித்துக்கொண்டு அடைபடாமல் தப்பித்து, எதிரியின் காய்களை வெட்டி முடித்து விட்டால், புலியாக இருப்பவர் வெற்றி பெற்றவராகக் கருதப்படுவார். 'புலியாக' இருப்பவர் அடைபடாமல் கட்டத்தின் மேற்பகுதியில் இருந்தால் போதும். காயினை வெட்ட வேண்டுமென்ற எண்ணத்தில் கீழ்க் கட்டங்களுக்கு வந்துவிட்டால் 'ஆடாக' இருப்பவர் மேலே அடைத்து விடுவார். பின்னர்க் கீழ்க் கட்டங்களில் அடைப்பது சுலபமாகிவிடும். எனவே, மேற்பகுதியிலும் அதற்கடுத்த கீழ்ப்பகுதியிலும் காய்களை நகர்த்திச் சமயம் பார்த்துக் கீழே நகர்த்தி வெட்டி விட்டு மேலே சென்றுவிட வேண்டும்.

**உரிமரம் ஏறுதல்** என்பது தமிழ்நாட்டில் விளையாடப்பட்டு வரும் நாட்டுப்புற விளையாட்டுகளுள் ஒன்றாகும். பட்டை உரிக்கப்பட்ட மரத்தினையே 'உரிமரம்' என்று சொல்வர். உரிக்கப்பட்ட மரத்தில் ஏறி விளையாடுவதால் இவ்விளையாட்டும் 'உரிமரம் ஏறுதல்' என்று குறிப்பிடப்படுகிறது.

இவ்விளையாட்டு கண்ணன் பிறந்த நாள் விழாவின்போது நடைபெறுகிறது. இவ்விளையாட்டிற்கு உதியமரத்தின் பட்டையினை மட்டும் உரிப்பர். உதிய மரம் கைப்பிடிக்கு அடங்காது பருத்திருக்கும். பட்டை உரிக்கப்பட்டபின் உள்ள தண்டுப் பகுதியில் விளக்கெண்ணையினைத் தடவி விடுவர். உரிக்கப்பட்ட மரமே வழுக்கல் உடையதாக இருக்கும். விளக்கெண்ணெயினையும் தடவுவதால் மிகவும் வழுக்குவதாக இருக்கும். மரத்தின் உச்சியில் பரிசுப்பொருள் வைக்கப் பட்டிருக்கும். வழுக்க வழுக்கப் பிடியினை விடாமல் தொடர்ந்து உச்சியிலேறியவர்க்கு அப்பரிசுப் பொருள் கிடைக்கும். தமிழ்நாட்டின் பல இடங்களில் இவ்விளையாட்டு விளையாடப்படுகிறது.

**கபடி:** இவ்விளையாட்டு, பலீஞ்சடுகுடு, பலிஞ்சப்பளம் முதலிய பல்வேறு பெயர்களில் இந்தியாவின் பல மாநிலங்களிலும் விளையாடப்படுகிறது. கபடி இந்தியாவின் தேசிய விளையாட்டாகும். தமிழ் நாட்டில் இவ்விளையாட்டு பல ஆண்டுகளாகச் சடுகுடு என்னும் பெயரால் விளையாடப்படுகிறது. கபடி, சடுகுடு போன்ற சொற்கள் விளையாடுவோர் தொடர்ந்து மூச்சினை அடக்குவதற்காகக் கூறப்படும் ஒலிக் குறிப்புகள் ஆகும். ஊர்ப் புறங்களில் கபடி, சடுகுடு போன்ற ஒலிக் குறிப்புகளுக்கு மாறாக வேறு ஒரு சொல்லோ ஒலிக்குறிப்போ இந்த ஆட்டக்காரர்களால் பயன்படுத்தப்பட்டு வந்தது. இக்காலத்தில் கபடி ஆட்டக்காரர்கள் கபடி கபடி என்ற ஒலிக்குறிப்பையே பயன்படுத்துகிறார்கள். இவ்விளையாட்டு இரண்டு அணியினருக்கு இடையே விளையாடப்படுகிறது. இரண்டு அணியினருக்கும் இடையே நடுக்கோடு வரையப்படும். ஓர் அணியிலிருந்து ஓர் ஆட்டக்காரர் கபடி கபடி என்று தொடர்ந்து சொல்லிக் கொண்டே எதிர்த்தரப்பினரின் களத்திற்குள் செல்வார். இவரை எதிர்த் தரப்பினர் பிடிக்க முயற்சி செய்வர். இவர் எதிர்க் கட்சிக்காரர்களுள் எவரேனும் ஒருவரைத் தொட்டுவிட்டுப் பிடிபடாமல் மூச்சடக்கிக் கொண்டு நடுக்கோட்டினைத் தொட்டு விட்டால் இந்த ஆட்டக்காரரால் தொடப்பட்டவர் களத்தினின்று வெளியேறி விடவேண்டும். அவ்வாறன்றி, இவர் எதிர்த்தரப்பினரால் பிடிபட்டுவிட்

டால் இவர் ஆட்டம் இழந்து களத்தை விட்டு வெளியேறிவிடவேண்டும். ஆட்டக்கரார்கள் பிடிபடுவதற்கும் தொடுவதற்கும் உரிய பல விதிகள் இருக்கின்றன. இவ்விதிகளைக் கபடி ஆட்டக்காரர் பின்பற்ற வேண்டும்.

பழங்காலத்தில் மூச்சடக்கிக் கொண்டு எதிர்த்தரப்பினரின் களத்தினுள் செல்பவர்கள் பல வகையான நையாண்டிப் பாடல்களையோ நாட்டுப்புறப் பாடல்களையோ பாடிக் கொண்டு, பாடலில் வரும் ஏதேனும் ஒரு இறுதிச் சொல்லைத் திரும்பத் திரும்பக் கூறிக்கொண்டே ஆட்டத்தில் ஈடுபடுவார்கள்.

கபடி ஆட்டம் சில வேறுபாடுகளுடன் இந்தியாவின் பல இடங்களில் விளையாடப் படுகிறது.

**கிரிக்கெட்டு:** இது மரப்பந்தாட்டம் எனத் தமிழில் வழங்கும். இக்காலத்தில் இது இந்தியா, இங்கிலாந்து, ஆசுத்திரேலியா, நியூசிலாந்து, தென்னாப்பிரிக்கா, கானடா, பாகிசுத்தான், சிரிலங்கா, மேற்கிந்தியத் தீவுகள் முதலிய நாடுகளில் தேசிய அளவில் புகழ்பெற்று விளங்கும் விளையாட்டாகும். தொடக்கக் காலத்தில் நாட்டுப்புற மக்களின் பொழுது போக்கிற்காகக் கிரிக்கெட்டு (Cricket) விளையாடப்பட்டு வந்தது. இங்கிலாந்தில் பெரிய நிலக்கிழார்கள் கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் தம் பண்ணையாட்களை வைத்துத் தம் பரந்த நிலத்தில் இவ்விளையாட்டினை நடத்தி வந்தார்கள்.

இந்தியாவில் இவ்விளையாட்டு கி. பி. 19-ஆம் நூற்றாண்டில் குறுநில மன்னர்களால் பெரும்பாலும் விளையாடப்பட்டது. நவநகர் மன்னர் இரஞ்சித்சிங்கு என்பவர் இத்துறையில் மாபெரும் வீரராக விளங்கினார். ஜி. கே. நாயுடு என்னும் இளைஞரும் அரும்பெரும் சாதனைகள் புரிந்து இந்தியக் கிரிக்கெட்டிற்குப் புகழ் தேடித்தந்தார். இருபதாம் நூற்றாண்டில் இந்தியாவில் இலாலா அமர்நாத்து, விசய் அசாரே (Vijay Hazare), வினு மன்காடு (Vinoo Mankad), பட்டோடி நவாபு, பரூக் எஞ்சினியர், விசய்மர்ச்சென்ட் போன்றவர்கள் கிரிக்கெட்டில் புகழ் பெற்று விளங்கியவர்கள். தமிழ் நாட்டிற்கு இவ்விளையாட்டின் மூலம் பெருமை தேடித் தருபவர்கள் வேங்கடராகவன், சிரீகாந்து, சிவராமகிருட்டிணன் முதலியோர் ஆவர். 1983-ஆம் ஆண்டு முதல் இந்திய அணி தொடர்ச்சியாக ஒற்றை நாள் ஆட்டங்களில் வாகை சூடி உலகப் புகழ் பெற்றுள்ளது. இந்தியாவில் இவ்விளையாட்டில் இப்பொழுது பெரும் புகழ் பெற்று விளங்குபவர்களுள் சுனில் கவாசுகர், கிர்மாணி, விசுவநாத்து, கபில்தேவு, இரவி சாத்திரி, அசாருத்தீன் முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

கிரிக்கெட்டு விளையாட்டு அணியில் 11 ஆட்டக்காரர்கள் இருப்பார்கள். மட்டையைக் கையில் ஏந்தியிருப்பவர் ஓட்டங்கள் எடுப்பதும், களத்தில் இருப்பவர் மட்டை ஏந்தியிருப்பவரை ஆட்டம் இழக்கச் செய்வதும் இவ்விளையாட்டின் தலையாய நோக்கங்கள். பந்தயங்கள் குறிப்பிட்ட நாட்கள் வரை விளையாடப்படும். ஆட்டம் முடிவதற்குக் குறைந்தது 2 அல்லது அதற்கு மேற்பட்ட நாட்கள் தேவைப்படும். நாடுகளுக்கு இடையே நடைபெறும் சோதனைப் பந்தயங்கள் குறைந்தது 5 நாட்கள் அல்லது 30 மணி நேரம் நடைபெறுகின்றன.

பந்தை எறியும் அணியினர் களத்தில் இருக்கும் முக்கிய நிலைகள் பின்வருமாறு: வீச்சாளர் (Bowler), இலக்கு முனைக் காவலர் (Wicket Keeper), ஓரம் நிற்போர் (Slips), பின்பக்க வாட்டம் (Gulley), மூன்றாம் ஆள் (Third Man), காப்போன் (Cover), முன் நடுவன் (Silly Mid-off), நெடுநடுவன் (Silly Mid-on) இவையன்றி இன்னும் சில நிலைகளும் உள்ளன.

**தென்னிசு:** இது தமிழில் வரிப்பந்து என வழங்கும். இருவர் அல்லது நால்வர் மட்டையைக் கொண்டு பந்தை அடித்துச் செலுத்தி விளையாடும் ஆட்டம் தென்னிசு (Tennis) ஆகும். இரண்டு அணிகளுக்கு நடுவில் ஒரு வலைத்தடுப்பு இருக்கும். பந்தை அடிப்பதன் நோக்கம் வலையின் மறுபுறத்தில் இருக்கும் ஆட்டக்காரரால் பந்தைத் திருப்பி அடிக்க முடியாமல் செய்வதாகும். இவ்விளையாட்டு இங்கிலாந்தில் முதன் முதல் விளையாடப்பட்டது. அக்காலத்தில் புல் தரையின் மீது இந்த ஆட்டம் நிகழ்ந்து வந்ததால் இது புல்வெளித் தென்னிசு (Lawn Tennis) என்று குறிப்பிடப்பட்டது. திடல் தென்னிசு (Court Tennis) என்னும் ஆட்டத்திலிருந்து இதனை இவ்வாறு வேறுபடுத்திக் குறிப்பிட்டனர்.

தென்னிசு தனிப்பட்டோரின் உடற் பயிற்சிக்காகவும், மன மகிழ்வுக்காகவும் விளையாடப்படுகிறது. பன்னாட்டுப் புல்வெளித் தென்னிசுப் பேராயம் (International Lawn Tennis Federation) நாடுகளுக்கு இடையே நடைபெறும் தென்னிசுப் போட்டிகளின் விதிகளை வரையறை செய்கிறது. விம்பிள்டன் (Wimbledon) என்னும் இங்கிலாந்தின் தென்னிசுப் போட்டியும், நியுயார்க்கில் நடைபெறும் யு.எசு. ஓப்பன் (U.S. Open) என்னும் போட்டியும் புகழ்பெற்ற தென்னிசுப் போட்டிகளாம். இவற்றைத் தவிர துவைட்டு தேவிசு (Dwight Davis) என்பவரால் அமைக்கப்பட்ட தேவிசு கோப்பைப் (Davis Cup) போட்டியில் உலகெங்கிலுமிருந்து ஐம்பதிற்கும் மேற்பட்ட நாடுகள் பங்கு கொள்கின்றன. இப்போட்டி 1900-ஆம் ஆண்டு தொடங்கப்பட்ட பின் சுவீடன்,

ஆசுத்திரேலியா, அமெரிக்க ஐக்கிய நாடுகள், இங்கிலாந்து, பிரான்சு ஆகிய நாடுகளைச் சேர்ந்த ஆட்டக்காரர்கள் இக்கோப்பையை அடைந்துள்ளார்கள்.

விம்பிள்டன் போட்டிகள் கி.பி. 1877 - இலிருந்து நடைபெற்று வருகின்றன. பெண்களுக்கான தென்னிசுப் போட்டிகளும் நடைபெறத் தொடங்கின. இவ் விளையாட்டு கி.பி. 1874-ஆம் ஆண்டிலிருந்து அமெரிக்க ஐக்கிய நாட்டில் புகழ்பெறலாயிற்று. கடந்த இருபது ஆண்டுகளில் தென்னிசு விளையாட்டில் புகழ் பெற்று விளங்கியவர்களுள் சிம்மி கானர்சு (Jimmy Connors), பியான்போர்கு (Bjorn Borg), இலீ நசுடாசே (Ilie Nastase), திரேசி ஆசுதின் (Tracy Austin), சான்மெக்கன்ரோ (John Mckenroe) போன்ற மேனாட்டாரும், விசய அமிர்தராசு, கிருட்டிணன், இரமேசு போன்ற இந்தியரும் குறிப்பிடத் தக்கோர்.

**ஆக்கி:** இரு அணியினருக்கு இடையே ஆடப்படும் விறுவிறுப்பான ஆட்டங்களுள் ஆக்கியும் (Hockey) ஒன்று. ஒவ்வொரு அணியிலும் 11 ஆட்டக்காரர்கள் விளையாடுகின்றனர். இவ்விளையாட்டு 1908-ஆம் ஆண்டிலிருந்து ஒலிம்பிக்கு விளையாட்டுகளுள் ஒன்றாக ஆடப்பட்டு வருகிறது. பண்டைய கிரேக்க நாட்டில் ஆக்கியைப் போன்ற ஒரு வகையான விளையாட்டு ஆடப்பட்டு வந்ததாகக் குறிப்புகள் காணப்படுகின்றன. இவ்விளையாட்டு பிரான்சு தேசத்திலும் இங்கிலாந்திலும் பல ஆண்டுகளுக்கு முன்பே ஆடப்பட்டு வந்தது. இங்கிலாந்தில் கி.பி. 1889 -ஆம் ஆண்டில் பெண்கள் ஆக்கிக் கழகம் தோன்றியது. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இவ்விளையாட்டின் தொடக்கத்தில் பெண்களே ஈடுபட்டு வந்தனர். பின்னர் ஆண்களும் ஆக்கி விளையாட்டில் ஈடுபட்டனர். ஆக்கித் திடல் 82 முதல் 91 மீட்டர் வரையில் நீளமும் 46 முதல் 55 வரை அகலமும் கொண்டதாக இருக்கும். திடலில் இரு எல்லைகளிலும் 'கோல்' (Goal) போடும் கழிகள் நிறுத்தப்பட்டிருக்கும். 'கோல்' போடுவதற்கான வலை இக்கழியுடன் இணைக்கப்பட்டிருக்கும். ஆக்கி மட்டை 89 செ.மீ. நீளம் உடையது. மட்டையின் ஒரு பக்கம் உருண்டையாகவும் மறுபக்கம் தட்டையாகவும் இருக்கும். தட்டையான பக்கத்தினால் பந்தினை அடிக்க வேண்டும். ஆக்கிப் பந்து 23 செ.மீ. சுற்றளவும் கெட்டியான தோல் சுற்றும் உடையது. ஆட்டம் தொடங்குவதற்குமுன் இரு தரப்பினரும் களத்தில் வெவ்வேறு இடங்களில் நிற்கின்றனர். இரு ஆட்டக்காரர்கள் களத்தின் நடுவில் ஒருவருக்கொருவர் எதிராக நிற்கின்றனர். இவர்கள் மூன்று முறை களத்தின் தரையைத் தம்மட்டையினால் தட்டுகின்றனர். எதிர் அணியினரின் மட்டையைத் தட்டுகின்றனர். இதற்குப் பின் ஒவ்வொரு அணியினரும் பந்தைத் தம் அணியினர் புறமாகத் தள்ளிவிட முயற்சி செய்கின்றனர். பந்தை எதிர்த் தரப்பு அணியினரின் 'கோல்' வளையத்திற்குச் செலுத்தி அங்கிருந்து 'கோல்' போட வேண்டும். ஒரு 'கோல்' போட்டவுடன் ஒரு புள்ளி எடுத்ததாகக் கொள்ளப்படும். குளிர் நாடுகளில் பனிக்கட்டி (Ice Hockey) ஆக்கியும் விளையாடப்படுகிறது.

**கால் பந்து:** இது எல்லோராலும் விரும்பி விளையாடப்படும் ஒரு விறுவிறுப்பான ஆட்டம் ஆகும். இவ்வாட்டம் சாக்கர் (Soccer) என்னும் உதை பந்து ஆட்டத்தினின்று தோன்றியது. சாக்கர், இரக்பி (Rugby) ஆகியவையும் கால் பந்து ஆட்டங்களே.

இவ்வாட்டம் இரு அரைமணி நேரப் பகுதிகளாக விளையாடப்படுகிறது. பதினைந்து நிமிடம் விளையாடியபின் இரு அணியினரும் ஆட்டப் புறங்களை மறுமுனைகளுக்கு மாற்றிக் கொள்கின்றனர். கால் பந்து 19-ஆம் நூற்றாண்டில் ஐரோப்பாவிலும் வட அமெரிக்காவிலும் பல இடங்களில் விளையாடப்பட்டு வந்தது. அக்காலத்தில் கால்பந்து விளையாட்டிற்கான விதிமுறைகள் வகுக்கப்படவில்லை. ஆதலின் இவ்விளையாட்டு, அணியினருக்கு இடையே நிகழும் போராட்டமாக அமைந்து இருந்தது. ஆட்டத்தின் இடையே பலர் காயமுற்றனர். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கால் பந்து விதிமுறைகள் வகுக்கப்பட்டன. உலகக் கால் பந்துக் கழகம் (World Foot ball League) 1974-ஆம் ஆண்டு நிறுவப்பட்டது.

ஒவ்வோர் அணியிலும் 11 ஆட்டக்காரர்கள் இருப்பார்கள். அவர்கள் களத்தில் நிற்கும் நிலைகள் இடக் கோடி (Left Extreme), இட உள்நிலை (Left-In), இடக் காவல் (Left Full Back), மைய முன்னிலை (Centre Forward), மையப் பின்னிலை (Centre Half), வலக் காவல் (Right Full Back) வலக் உள்நிலை (Right-In), வலக் கோடி (Right Extreme), வலப் பின்னணி (Right Back), இடப் பின்னணி (Left Half Back), கோல் (Goal) என்று குறிப்பிடப் படும். இரு அணியினருள் சிலர் தாக்கும் முறையிலும், வேறு சிலர் தடுக்கும் முறையிலும் ஆட்டத்தில் ஈடுபடுவர்.

களத்தில் பந்தைத் தடுக்கும் நுண்முறை, செயலற்று நிறுத்தும் திறன், உதைக்கும் திறன், பந்துடன் விரைவாக ஓடுந்திறன், பந்தை வீசி எறியும் திறன், பந்தைப் பிடிக்கும் திறன், தாக்கும் நுண்முறைகள் ஆகியவற்றை இவ்வாட்டக்காரர் ஒவ்வொருவரும் பெற்றிருக்கவேண்டும்.

**கூடைப்பந்து:** கல்வி நிலையங்களில் மாணவரால் விரும்பி விளையாடப் படும்விளையாட்டுகளுள் ஒன்று.

இது கி.பி. 1891-ஆம் ஆண்டு அமெரிக்க ஐக்கிய நாட்டில் முதலில் விளையாடப்பட்டது. இவ்விளையாட்டு நைசுமித் (Naismith) என்பவரால் கண்டுபிடிக்கப் பட்டது. இவர் அமெரிக்க ஐக்கிய நாட்டில் மசாசுசெட்சு (Massachussets) மாநிலத்தைச் சேர்ந்த இசுபிரிங்பீல்டு (Springfield) என்னும் ஊரிலிருந்து கல்லூரியிற் பயிற்சி ஆசிரியராக இருந்தபோது இதைக் கண்டுபிடித்தார்.

குத்துச் சண்டை என்பது இருவர் தங்கள் கைகளினால் ஒருவரை ஒருவர் எதிர்த்துப் போட்டியிடும் விளையாட்டாகும். ஆட்டக்காரர் தம் கைகளில் உறைகளை அணிந்திருப்பர். குத்துச்சண்டைத் திடல் வளையம் (Ring) என்று குறிப்பிடப்படுகிறது.

இவ்விளையாட்டு மிகப் பழைமையானதாகும். ஏறக்குறைய 5000 ஆண்டுகளுக்கு முன்னர்ச் சுமேரியர்கள் இவ்விளையாட்டில் ஈடுபட்டு வந்ததைத் தொல் பொருள் குறிப்புகள் சுட்டுகின்றன. பண்டைக் கிரேக்கத்தில் இவ்விளையாட்டு கொடூரம் நிறைந்ததாக இருந்தது. உரோமானியர்களும் இத்தகைய காட்டு மிராண்டித்தனமான குத்துச் சண்டையில் ஈடுபட்டு வந்தனர். காலப்போக்கில் இதில் காணப் பட்ட கொடூரங்கள் மிகுந்து வந்தமையால் கி.மு. முதலாம் நூற்றாண்டில் இவ்விளையாட்டு உரோமானிய நாட்டில் தடை செய்யப்பட்டது.

இங்கிலாந்தில் கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டில் குத்துச் சண்டை மறுபடியும் தொடங்கப்பட்டது. கி.பி.1872-ஆம் ஆண்டில் குவீன்சுபரி விதி முறைகள் (Queensberry Rules) வரையறுக்கப்பட்ட பின்னர்க் குத்துச் சண்டை ஆட்டக்காரர்கள் தம் கைகளில் உறை அணியத் தொடங்கினர். கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் அமெரிக்க ஐக்கியநாட்டில் இது தடை செய்யப்பட்டிருந்தது. இருபதாம் நூற்றாண்டில் சிறிது சிறிதாகச் சில மாநிலங்களில் இவ்விளையாட்டு பரவத் தொடங்கியது. முகமது அலி என்பவரால் இவ்விளையாட்டு உலகெங்கும் புகழ் பெற்றது. இரு ஆட்டக் காரருள் ஒருவர் தாக்குண்டு கீழே விழுந்து விட்டால் பத்து வினாடிகளுக்குள் மீண்டும் எழுந்து சண்டையைத் தொடங்க வேண்டும். இல்லாவிட்டால் நடுவரும் வளையத்திற்குள் இருக்கும் இரு நீதிபதிகளும் ஆட்ட முடிவை அறிவிப்பர். வீழ்ந்தவர் தோல்வியை ஏற்றுக்கொள்ள வேண்டும். குத்துச் சண்டை வளையம் 16 முதல் 24 அடி வரையிலான சதுரத்திடல் ஆகும். இரப்பரால் (Rubber) ஆன தரையின்மீது முரட்டுத் துணி விரிக்கப்பட்டிருக்கும். ஆட்டத்தைக் காண்பவர் அமரும் நிலத்திலிருந்து 4 அடி உயரத்தில் வளையம் அமைக்கப்பட்டிருக்கும். குத்துச் சண்டைப் போட்டி சுற்று (Round) என்று குறிப்பிடப்படுகிறது. போட்டிகளில் 4 முதல் 15 சுற்றுகள் வரை ஆடுவர்.

உலகக் குத்துச் சண்டைக் கழகமும் (World Boxing Council), உலகக் குத்துச் சண்டைச் சங்கமும் (World Boxing Association) பன்னாட்டு அளவில் குத்துச்சண்டைப் போட்டிகளுக்கான விதிமுறைகளை வரையறுத்துள்ளன. காண்க: விளையாட்டுகள்.

எஸ். கோ.

**ஆட்டத் தந்திரக் கோட்பாடு** என்பது பொருளாதாரப் போட்டித் தந்திர ஆட்டங்களில் பங்கு கொள்ளும் ஆட்டக்காரர்களுக்கு உயர் ஆதாயம் தரக்கூடிய ஆட்ட வகை எது என்பதை ஆராய்ந்து, அவற்றின் தன்மையையும் போக்கையும் கணக்கியல் முறையில், ஐயப்பாடற்ற வகையில் வகுத்துக் கூறும் கோட்பாடாகும்.

போர் முனையில் எதிரிகள் தங்கள் போர்த் தந்திரங்களையும் உத்திகளையும் பயன்படுத்தித் தங்களுக்குக் கிடைக்கக் கூடிய வெற்றிப் பயனை உச்சமாக்கிக் கொள்ள முனைகிறார்கள். ஒரு வேளை தோல்வி ஏற்படின், அதன் அளவைக் குறைத்துக் கொள்ள முனைகிறார்கள். அவ்வாறே, பண்டங்களை உற்பத்தி செய்வோரும், விற்பனை செய்வோரும் அங்காடியில் தங்கள் ஆதாயத்தை உச்சமாக்கிக் கொள்ள முயல்கின்றனர்; அல்லது இழப்பின் அளவைக் குறைவாக்கிக் கொள்ள முயல்கின்றனர். இவ்வாறு, போர்க்களத்திலும், அரசியல் அரங்கிலும், விற்பனைக் களத்திலும் போட்டியிடும் மக்கள் தம்முடைய ஒவ்வொரு நடவடிக்கைக்கும் பதில் நடவடிக்கையொன்றில் எதிராளி உடனுக்குடன் இறங்கக் கூடும் என்பதையும் உணர்வார்கள். அதன் விளைவாக, தொடக்கத்தில் தாம் எதிர்பார்த்த ஆதாயத்தின் அளவை எதிராளி குறைக்கும் வாய்ப்பைப் பெற்றிருக்கிறான் என்பதையும் உணர்வார்கள். சதுரங்க (Chess) ஆட்டத்தில், எதிர் எதிரான அணிகளில் வெட்டுகள் நிகழ்த்தி, விளையாட்டுக் காரர்கள் தங்கள் வெற்றி வாய்ப்பினைப் பெருக்கிக் கொள்ள, அல்லது இழப்பின் அளவை மிகவும் குறைவாக்கிக் கொள்ள முனைவர். இது போன்றே, அங்காடிப் போட்டியாளர்களும் (Market Competitors) எதிர் எதிர் ஆட்டங்கள் ஆடி, ஆதாயப் பெருக்கலில் ஈடுபடுகிறார்கள்.

போர்த் தந்திரமானாலும், அரசியல் தந்திரமானாலும், அங்காடியில் ஆதாய வேட்டைக்குரிய தந்திரமானாலும், ஆட்டத்தந்திரக் கோட்பாடு (Game Theory) அவற்றிற்கெல்லாம் மாதிரியாகப் பொருந்தக் கூடியதே என்பதைச் சில கணித மேதைகளும், பொருளியல் வல்லுநர்களும் எடுத்துக் காட்டியுள்ளனர். இக்கோட்பாட்டின் இன்றியமையா

மையைக் கி.பி.1710-ஆம் ஆண்டிலேயே செருமானிய கணித தத்துவ வல்லுநராகிய இலெபினிசு (Leibniz) என்பார் உணர்ந்தார். வெற்றிக்கான தந்திரத்தைப் பற்றிய கோட்பாடு ஒன்றை வகுக்க வேண்டியதன் தேவையையும் சாத்தியக் கூறுகளையும் இவரே கண்டறிந்து கூறினார். ஆங்கிலேயப் பொருளியல் வல்லுநராகிய எட்சுவொர்த்து (Edgeworth) என்பார் கி.பி. 1881-இல் போர்த்தந்திர ஆட்டங்களுக்கும் அங்காடிப் போட்டியில் தோன்றும் ஆட்டத் தந்திரங்களுக்குமிடையே காணப்படும் ஒற்றுமைப் பண்புகளைச் சுட்டிக் காட்டினார். சதுரங்க ஆட்டத்தில் காணப்படும் ஆட்டங்களுக்குரிய கோட்பாடு ஒன்றை மைக்கேல் சிகாரின் (Mikhail Chigoren) என்பார் வகுத்தார். இன்னும் பலர் தனித்தனி ஆட்டங்களுக்குரிய தனித்தனிக் கோட்பாடுகளை ஆராய்ந்துள்ளனர். ஆயினும், வான் நியூமன் (Von Neumann) என்பார் இவ்வகை ஆட்டத் தந்திரக் கோட்பாட்டின் அடிப்படை மெய்ம்மையை 1928-இல் உறுதிப்படுத்திய பின்னரே, மெய்ம்மையான ஆட்டத் தந்திரக் கோட்பாடொன்று உருவானது. வான் நியூமனும் மார்சென்சுடெர்ன் (Morgenstern) என்பாரும் இணைந்து 1944-இல் வகுத்த ஆட்டத் தந்திரக் கோட்பாட்டின் விரிவாக்கம் அண்மைக் காலத்தில் இத்துறையில் விளைந்துள்ள முன்னேற்றம் அனைத்திற்கும் முன்னோடியாக அமைந்தது. பின்னர், இக்கோட்பாட்டினைப் பற்றி உலகெங்கிலும் பல நூல்கள் தோன்றலாயின. இக்கோட்பாட்டின் சிறப்புக் கூறுகள் பலவும் இன்று ஆழ்ந்தும், விரிந்தும் வரையப்பட்டு வருகின்றன. புதிய கருத்துகளும் புதிய பயன்களும் மேலும் மேலும் தோன்றி வருகின்றன. குன் என்பாரும் தக்கர் என்பாரும் (Kuhn and Tucker) 1950-59-ஆம் ஆண்டுகளுக்கிடைப்பட்ட காலத்தில் நான்கு நூல் தொகுதிகளை வெளியிட்டு, ஆட்டத் தந்திரக் கோட்பாடு தொடர்ந்து விரிவடையும் ஓர் அறிவியக்கத் துறை என்பதை உறுதி செய்தனர். மார்டின் சுபிக் (Shubik) என்பவர் ஆட்டத் தந்திரக் கோட்பாடு எவ்வாறு பொருளியல் துறையில் அங்காடிப் போட்டித் தந்திரங்களை விளக்குகிறது என்பதைத் தெளிவாக்கினார். இப்போட்டியாளர்களின் ஆதாயச் சமநிலை (Equilibrium) எவ்வாறு அமையும் என்பதையும் இவர் வகுத்துக் காட்டியுள்ளார்.

ஆட்டச் சூழ்நிலையில், இறுதியில் ஒரு போட்டியாளனுக்குக் கிடைக்கக் கூடிய வெற்றி அவன் திறமையை மட்டில் பொறுத்ததன்று. அன்றியும், அவ்வெற்றியின் விளைவானது முற்றிலும் இயற்கை நிகழ்ச்சிப் போக்குகளினால் முடிவு செய்யப்படுவதுமன்று. போட்டியில் பங்குபெறும் எதிரிகளின் ஆட்டத் தந்திரத்தையும் செயல்களையும் பொறுத்தே வெற்றி பெரும்பாலும் முடிவுசெய்யப் படுவதாயிருக்கும். ஆட்டக்காரர்களின் நோக்கங்களும் நலன்களும் ஒன்றுக்கொன்று முரண்பாடானவையாக இருக்கும். மேலும், இவை ஒன்றுக்கொன்று இணையானவையாகவும் இருக்கலாம். அதாவது, ஒருவரோடு ஒருவர் ஒத்துப் போய், இறுதியில் இருவருக்கும் வெற்றி கிட்டுகிற வகையில் ஆட்டத் தந்திர நடவடிக்கைகளை அமைத்துக் கொள்வதாகவும் அவர்களின் நோக்கம் இருக்கலாம். ஆகவே, போட்டித் தந்திர ஆட்டங்களில் ஈடுபடுபவர்களிடையே ஒருவர் நலன் மற்றொருவர் நலத்திற்குக் கேடாக அமையலாம்; அன்றியும் ஒருவருக்கொருவர் கூட்டுறவாக, மொத்தப் பயனைப் பகிர்ந்து கொள்ளும் பாங்கிலும் அமையலாம். ஆட்டத்தில் பங்குபெறும் போட்டியாளர்களின் எதிர் நடவடிக்கைகள் எவையாயிருக்கும் என்று எந்த ஆட்டக்காரரும் உறுதியாக முன்கூட்டியே முடிவுசெய்ய இயலாத ஓர் உறுதியற்ற சூழலில்தான் எந்த ஓர் ஆட்டமும் நடைபெறும் என்பதை உணர வேண்டும். ஆகவே, எதிரி என்ன செய்யக்கூடும் என்று முன்கூட்டியே ஒரு போட்டியாளன் கணிக்கவோ, எதிர்பார்க்கவோ இயலாத சூழலில்தான் போட்டி ஆட்டம் நடைபெறும். காசைச் சுண்டினால் எத்தனை முறை பூவும் தலையும் மாறி மாறி விழும் என்பதை நிகழ் தகவுக் கணிப்பு முறை (Probability Calculation) கூறினாலும் இம்முறை ஆட்டத்தந்திரக் கோட்பாட்டிற்குப் பொருந்துவதில்லை. ஏனெனில், விளையாட்டுப் போட்டிகளில் போட்டியிடுபவர்களில் யார் எதைச் செய்வார் என்பதை முன்பே அறுதியிட்டுக் கூறவியலாது. எந்த ஒரு போட்டி ஆட்டத்தையும் விவரிக்கும்போது, அந்த ஆட்டத்துக்குரிய விதிகளை வைத்துக் கொண்டு, அவ்விதிகளுக்குட்பட்டுப் போட்டியாளர் ஆடுவதற்கு என்னென்ன மாற்றுக் கூறுகள் உள்ளன என்பதைக் குறிப்பிட்டாக வேண்டும். எடுத்துக்காட்டாக, ஒரு விற்பனை அங்காடியில் பொருளாதாரப் போட்டி ஆட்டங்கள் நிகழ்வனவாக வைத்துக்கொண்டு, அவை ஒருசில விதிகளுக்குட்பட்டே நிகழ்வனவாக வைத்துக் கொண்டால், அங்காடியில் வாங்குவோரும் விற்போரும் போட்டியற்ற சூழ்நிலையில் பேரங்களில் ஈடுபடுவதாகக் கொள்ள வேண்டும். ஆகவே, நுகர்வோர் வன்முறையில் இறங்கிப் பண்டங்களை வற்புறுத்திப் பெறவோ, பண்டத்தின் விலையை பயமுறுத்தி மாற்றவோ ஆட்ட விதிகளில் இடமில்லை.

ஆட்டத்தில் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் விவரிக்கும்போது, விதிகளின்படி பயன்மிகு நகர்வுகள் (Moves) அனைத்திலும் எந்தெந்த நகர்வு எந்தெந்த வரிசையில் நடைமுறையில் தேர்வு செய்யப்படுகிறது என்பதைக் குறிப்பிட வேண்டும். ஆட்டத்தில் இறுதியான நகர்வு (Final Move) முடிந்தவுடன், நடுவர்

ஒருவர் ஒவ்வோர் ஆட்டக்காரருக்குரிய ஆதாயத்தை முடிவு செய்வார். இவ் ஆதாயச் செல்லுகள் பொதுவாகப் பணமாகவோ, பயன்படு பொருள்களாகவோ கணிக்கப்படுவதாயிருக்கும். இங்குப் பயன்பாடு என்பது ஒரு பண்டம் அல்லது பணியின் வரவிலிருந்து ஒருவருக்குக் கிடைக்கக்கூடிய மனநிறைவைக் குறிக்கிறது.

ஆட்டத் தந்திரக் கோட்பாட்டின் சிறந்த கருத்துகளாவன: 1) ஆட்டக்காரர்களின் அடுத்தடுத்த ஆதாய நகர்வுகள்; 2) இந்நகர்வுகளுக்கு எதிராக எதிரி ஆட்டக்காரர்கள் செயற்படும் ஆதாய நகர்வுகள்; 3) ஒவ்வொரு ஆட்டக்காரரும் ஒவ்வொரு நகர்வுக்குரிய முடிவைச் செய்யும் நேரத்தில் அவருக்குத் தெரிந்த செய்தி விவர நிலைமை; 4) ஒவ்வொரு முறை முடிவு செய்யும்போது அவருக்குப் புலப்படும் மாற்று வாய்ப்புகள் பற்றிய விவரம்.

இவற்றை நுட்பமானதொரு கணக்கியல் முறையில் பின்வருமாறு கூறலாம்: ஒவ்வோர் ஆட்டக்காரருக்கும் எண்ணற்ற விளையாட்டு வாய்ப்புகள் இருக்கக்கூடும்; எனினும் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையான நகர்வு-வாய்ப்புகள் மட்டிலுமே அவரால் கையாள இயலும். அவர் தம் எண்ணிக்கைக்கடங்கிய (Finite) அல்லது அடங்காத (Infinite) விளையாட்டு வாய்ப்புகள் ஒவ்வொன்றிற்கும் ஒரு குறியீட்டு எண் கொடுப்பதாக வைத்துக் கொள்வோம். இவ் வாய்ப்புகளுள் ஒன்றை அவர் தேர்ந்தெடுக்கும்போது அதனைக் குறிக்க ஒரு குறிப்பிட்ட எண்ணை மட்டில் அவர் தேர்ந்தெடுப்பதாகக் கொள்வோம். இவ்வகையில் ஆட்டக்காரர் பலருடைய தெரிவு (Choice) எண்களைத் தனித்தனியே குறித்து வைத்துப் பார்த்தால் கணக்கியல் வாயிலாக ஆட்டக்காரர்களின் ஆட்டத் தந்திரத்தை அறிந்துகொள்ள இயலும். தவிரவும், எல்லா ஆட்டக்காரர்களும் தம் சொந்தத் தெரிவுகளைச் செய்து முடித்தபின், நடுவர் ஒருவர் அவரவர்க்குச் சேர வேண்டிய வரவுகளைச் (ஆதாய இழப்புகளை) சேர்ப்பார்.

இத்தகைய ஆட்டத் தந்திர விளையாட்டில் எந்த ஓர் ஆட்டக்காரரும் மற்ற ஆட்டக்காரர்களின் தெரிவுகளைப் பற்றியும், ஆதாய நகர்வுகளைப் பற்றியும் முன்கூட்டியே கணிக்கவியலாது. ஆகவே, இயற்கை நிகழ்ச்சிகளை உணர்ந்து தம்முடைய விளையாட்டுத் திட்டம் முழுமையையும் வகுத்துக் கொள்கிறார். இவ்வாறு செய்வது ஓர் எடுகோளாகக் (Assumption) கருதப்படும். ஆட்டக்காரரின் இழப்பு வரவு (Pay off) அவரது வரவைப் பற்றிய கணக்கியலான எதிர்பார்ப்பின் அடிப்படையிலேயே தீர்மானிக்கப்படும். இங்குத் தரப்பட்டுள்ள (படம் 1) ஆதாய எண் கூடு (Pay off matrix) இச்கருத்தை நன்கு தெளிவுபடுத்தும்.

ஆட்டத் தந்திரக் கோட்பாட்டின்படி ஆட்டக்காரர் ஒவ்வொருவரும் மற்ற ஆட்டக்காரர்களின் நகர்வுகளைப் பற்றியும், ஆட்டத் தந்திரங்களினால் இவர்களுக்கு விளையக்கூடிய வரவு-வாய்ப்புகளைப் பற்றியும் அறிவார் என்பது மற்றோர் எடுகோளாகும். மேலும், அவர் இந்த அறிவு பெற்றமையால், தமக்கு உச்ச நன்மை அளிக்கக்கூடிய விளையாட்டு நகர்வுகள் எவை எவை என்பதை முடிவு செய்துகொள்ளத் தக்க கணிப்புகளைச் செய்து கொள்ளவும் இயலுமென்று இக் கோட்பாடு வலியுறுத்துகிறது. ஆயினும், ஓர் ஆட்டக்காரர் தாம் அடையக் கூடிய உச்ச வரவு அல்லது மிகக் குறைந்த வரவு எந்த அளவிலிருக்கும் என்பதை முன்கூட்டியே உறுதியாகக் கூற இயலாது. ஏனெனில், அவர் ஆடும் ஆட்டத்தில் இடம்பெறும் அத்தனை மாறிகளும் (Variables) அவருடைய குழுக் கட்டுப்பாட்டில் அடங்குவதாயிருந்தால் மட்டிலுமே மிக உச்சமான வரவை அல்லது மிகக்குறைந்த இழப்பைத் தம் விருப்பப்படி அடைய இயலும். இது இயலாததால் எந்த ஆட்டக்காரரும் தம் விருப்பப்படி உயர்வரவை முடிவுசெய்ய இயலாது.

**சூனிய-வரவு ஆட்டங்கள்:** ஆட்டத் தந்திரங்களை அவற்றின் இறுதி வரவின் அடிப்படையில், சூனிய-வரவு ஆட்டங்கள் (Zero-Sum Games), சூனியமற்ற வரவு ஆட்டங்கள் என இரு வகைப் படுத்தலாம். சூனிய-வரவு ஆட்ட வகையில் ஆட்டக்காரர்களின் வரவுகள் அல்லது செல்லுகளை இறுதியில் மொத்தமாகக் கூட்டினால் கிடைக்கக்கூடிய தொகையானது சில நேரங்களில் சூனிய எண்ணிக்கையிலும் இருக்கக் கூடும். இத்தகைய ஆட்ட வகையில் ஆட்டக்காரர்கள் சிலரின் இழப்பு-வரவு மற்றவரின் ஆதாய-வரவுக்குச் சமமாக இருக்குமானால், இவ்விரு வகை வரவுகளையும் கூட்டும்போது கிடைக்கக் கூடிய மொத்த வரவு சூனியமாக இருக்கும். பொழுதுபோக்குச்சூதாட்டங்கள் பலவும்இவ்வகையைச் சார்ந்தவையாகவே இருக்கும். சூனியமற்ற வரவு ஆட்ட வகையில் எல்லா ஆட்டக்காரர்களின் செல்லுகளையும் சேர்த்து மொத்தமாகக் கூட்டும்போது கிடைப்பது சூனியமாக இராது; மாறாக, அது ஒரு மாறா எண்ணாகவோ (Constant), மாறியாகவோ அமைவதாயிருக்கும். இத்தகைய ஆட்டங்களில் ஒன்று ஆட்டக்காரர்கள் எல்லோரும் ஆதாய வரவைப் பெறுவதாக இருக்கும்; அல்லது அனைவருமே இழப்பைப் பெறுவதாயிருக்கும். பொருளாதார அங்காடிப் போட்டி, அரசியல் போட்டி, போர்க்களப் போட்டி ஆட்டங்களில் ஈடுபடும் அனைவருக்கும் அவை ஆதாய வரவு அல்லது இழப்பாகவே இருக்கக்கூடும். எடுத்துக்காட்டாக, அங்காடியில் ஒரு பண்டத்தை வாங்குபவரும் விற்பவரும் ஆதாய வரவை அடையும் வாய்ப்புண்டு. மாறாக,

போரில் ஈடுபடும் நாடும் எதிரி நாடும் போரின் முடிவில் இழப்பை அடையும் நிலை நேரிடலாம்.

**இருவர் சூனிய வரவு ஆட்டங்கள்:** சூனிய வரவு ஆட்ட வகையில் மிகவும் எளிதாகப் புரிந்துகொள்ளக் கூடிய ஆட்டத்தந்திர வகையானது இருவர் சூனிய வரவு ஆட்ட வகை ஆகும். இந்த ஆட்டத்தில் ஈடு படும் இருவரையும் 'A' என்றும் 'B' என்றும் வைத் துக் கொண்டால், இவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையான ஆட்டத் தந்திர வாய்ப்புகள்தாம் இருக்குமென்பது எடுகோள். இவர் கள் ஒவ்வொருவரும் அடுத்தவருக்குத் தெரியாதவகை யிலேயே தம் தெரிவுகளை, அதாவது, தம் ஆதாய நகர்வு பற்றிய முடிவுகளைச் செய்துகொள்வர். மேலும், இவ்விருவரின் ஆதாய-இழப்பு வரவு வாய்ப் புகளைப் பட்டியலிட்டும் காட்டலாம். அதற்குத் துணையாக வரவு எண்-கூடு ஒன்றை அமைத்துக் கொண்டு அதன் வாயிலாக இருவரின் ஆட்டத்தந்தி ரத் தெரிவுகளின் தன்மைகளையும், செல்லுகைக் கணக்கையும் கீழ்க்காணுமாறு தெளிவுபடுத்த முடியும்:

இருவர் சூனிய வரவு ஆட்டத்தின் ஆதாய-இழப்பு எண் கூடு:

| | ஆட்டக் காரர்-'B' $B_1$ | (இழப்பு வரவுகள்) $B_2$ |
|---|---|---|
| $A_1$ | 3 | 9 |
| ஆட்டக்காரர்-A (ஆதாய-வரவுகள்) | | |
| $A_2$ | 4 | 6 |

படம்-1.

இந்த ஆட்டத்தில் A,B என்ற இருவரில் ஒருவர் பெறும் ஆதாய வரவு மற்றொருவருக்கு இழப்பு-வரவாக அமையும். ஆகவேதான் ஆதாய வரவையும் இழப்பு வரவையும் கூட்டினால் கிடைப்பது சூனிய மாயிருக்கும். மேலேயுள்ள எண்கூட்டில் A,B என்ற இருவரும் தத்தம் விளையாட்டுத் தெரிவுகளின் விளைவாகப் பெறக்கூடிய A-யின் ஆதாய வரவும், B-யின் இழப்பு வரவும் அவரவருக்குரிய கூடுகளில் குறிக்கப்பட்டுள்ளன. செங்குத்தான அச்சில், A-யின் இரு ஆதாய வரவு வாய்ப்புகளான $A_1$ $A_2$ குறிக்கப்பட் டுள்ளன. கிடைமட்ட அச்சில், B-யின் இரு இழப்பு வரவு வாய்ப்புகளான $B_1$ $B_2$ குறிக்கப்பட்டுள்ளன. அதாவது A-யின் தெரிவுகள் நேர்வரிசையிலும் (Rows) B-யின் தெரிவுகள் மேல்கீழ் வரிசைகளிலும் (Columns) காணப்படுகின்றன.

B என்ற ஆட்டக்காரர் $B_1$ தெரிவைச் செய்வார் என்பது A என்ற ஆட்டக்காரருக்குத் தெரிந்தால், A என்பவர் $A_2$ என்ற தெரிவைத்தான் தேர்ந் தெடுக்க வேண்டிவரும். ஏனெனில், $A_1$ என்ற தெரி வின் வரவை விட $A_2$ என்ற தெரிவின் வரவுதான் அவருக்கு மிகுதியானதாயிருக்கும். எவ்வாறெனில், A என்பவரின் வரவு 3-க்குப் பதிலாக 4-ஆக அமை யும். மாறாக, B என்பவர் $B_2$-வினைத்தான் தெரிவு செய்வார் என்பது A-க்குத் தெரியுமானால், இவர் $A_2$-வைத் தவிர்த்து $A_1$-வினைத்தான் தெரிவு செய் வார் ஏனெனில் $A_1$ என்ற தெரிவுதான் 6-க்குப் பதி லாக 9 என்ற இழப்பு வரவை அளிக்கும்.

B எந்தத் தெரிவை மேற்கொள்வார் என்று ஊகிக்க A என்பவர் ஒரு பகுத்தறி கணிப்பைச் செய் வதாகக் கொள்வோம். B என்ன செய்யக் கூடு மெனில், $B_1$ என்ற தெரிவைத் தான் செய்தால் தனக்கு ஏற்படக் கூடிய உச்சமான இழப்பு வரவு 4ஆக இருக்கும் என்பதாகும். ஆனால், இதற்கு மாறாக, தான் $B_2$ என்ற தெரிவை மேற்கொண்டால் இதை விட உச்சமான இழப்பைத்தான் பெறக்கூடும் என்பது அவருக்குத் தெரியும். அதாவது, இழப்பு 9 ஆகிவிடும். ஆகவே, தனக்கு உயர்நலமான தெரிவு அதாவது, தனக்கு மிகக் குறைந்த இழப்பைத் தருகின்ற தெரிவு $B_1$ என்பதை B முடிவு செய்வார். இதன்படி A-க்கு இருக்கக்கூடிய உயர்நலம் தரும் ஆட்டத் தந்திரத் தெரிவு (Optimum Choice of Strategy) $A_2$ வாகத் தான் இருக்க முடியும் என்பது A-க்கும் புலனாகும். இவ்வகையான தெளிவு மிக்க பகுத்தறிவு அடிப்படை யிலான B-யின் முடிவைத்தான் ஆட்டத் தந்திரவிய லார் சிறுபெருமம் (Minimax) என்ற வகை முடிவெ னப் பெயரிடுவர். அதாவது, இவ்வகை ஆட்டத்தின் அடிப்படை நோக்கமாவது, ஆதாய வரவு பெறக் கூடியவருக்கு (A) சாத்தியமாகக் கூடிய உச்ச ஆதாய வரவை, இழப்பு வரவு பெறக்கூடியவர் (B) அதனை மிகக் குறைந்ததாக்கி அதன் மூலம் தன் இழப்பு வரவை மிகக் குறைந்ததாக்கிக் கொள்ளுதலேயாம். இங்கு அத்தெரிவு ($A_2$ $B_1$) ஆகத்தான் இருக்கக்கூடும். இதன் எண்-மதிப்பு எண் கூட்டில் 4 ஆக இருப்ப தைக் காணலாம்.

இதுபோலவே 'A' எத் தெரிவைச் செய்வார் என்று 'B' யும் பகுத்தறிவு அடிப்படையிலான கணிப்பை மேற்கொள்ள வேண்டியிருக்கும். ஏனெ னில், இத்தகைய கணிப்பின் அடிப்படையில்தான்

'B' அதற்கு இணையானதும், தனக்கு உச்சநலம் கொடுக்கக்கூடியதுமான ஆட்டத் தெரிவு ஒன்றைச் செய்துகொள்ளக் கூடும். இதன்படி 'B' யின் கருத்து பின்வருமாறு அமையும்: எதிராளி 'A' தமக்கு '$A_2$' என்ற தெரிவைச் செய்து கொள்வாரானால், அது அவருக்குக் குறைந்த அளவு ஆதாய வரவான 3என்ற எண்-மதிப்பை உறுதியாக அளிக்கக்கூடும். அவ்வாறன்றி 'A' தமக்கு '$A_1$' என்ற தெரிவைச் செய்து கொள்வாராயின் அவருக்குக் கிடைக்கக்கூடிய குறைந்த அளவான ஆதாய வரவு 4 என்ற எண் மதிப்பாகவே இருக்கும். ஆகவே, 'A' தமக்கு '$A_1$' என்ற தெரிவைத்தான் செய்துகொள்வார் என்று 'B' பகுத்தறிவை யொட்டிய ஒரு முடிவுக்கு வருவார். அதாவது; 'A' என்பார் தமக்குச் சாத்தியமான குறைந்த அளவு ஆதாய வரவுகளில் எது உச்சமானதோ அதைத்தான் தேர்ந்தெடுப்பார் என்பதாகும். அப்படியானால் 'B' தமக்கு வரக்கூடிய இழப்பை மிகவும் குறைவாக்கிக் கொள்ளும் வகையில் '$B_2$' என்ற தெரிவைச் செய்துகொண்டு, 4 என்ற எண்-மதிப்புடைய இழப்பைத்தான் ஏற்க இசைவார். இவ்வாறு பகுத்தறிவு அடிப்படையிலான 'A'- யின் முடிவைத்தான் பெரு சிறுமம் (Maximin) என்று இவ்வியலார் கூறுகின்றனர். ஆதாவது, ஆட்டத் தந்திரப் போட்டியாளர்கள் ஒவ்வொருவரும் தமக்குச் சாத்தியமான குறைந்த அளவு ஆதாய வரவை எவ்வளவு பெருக்கிக் கொள்ள முடியுமோ அவ்வளவு உயர்வாக்கிக் கொள்ளவேண்டும்; அல்லது, தமக்குத் தவிர்க்க வியலாத உயர்ந்த அளவு இழப்பு வரவை எவ்வளவு குறைத்துக் கொள்ள முடியுமோ அவ்வளவைக் குறைவாக்கிக் கொள்வர் என்பதே இவ்வகை ஆட்டத் தந்திரத்தின் கொள்கையாகும். இதையே இந்த ஆட்டத்தின் தெரிவுக் குறியீடுகளின்படி சொல்வதாயின், 'A,B' இருவரின் தெரிவுகளும் ($A_2$ $B_1$) என்பதாகவே அமையும்.

'AB' என்ற இருவரின் இத்தகைய இரண்டு இணையான தெரிவுகளுமே '$A_2$ $B_1$' என்ற அதே வகைத் தெரிவாகத்தான் அமையும் என்பதை இங்கு வற்புறுத்திக் கூறவேண்டும். இவ்வாறு 'A,B' என்ற இரண்டு ஆட்டக்காரர்களுமே ஓரியல்பானதொரு இணைத்தெரிவையே (Same Strategy Combination) அதாவது '$A_2B_1$'- ஐத் தேர்ந்து எடுப்பதுவே இருவருக்கும் மிகச் சாதகமானதொரு தெரிவு என்று கண்டுகொள்கின்றனர். அதனுடன், எதிராளி ஆட்டக்காரர் ஆட்டத் தந்திரத் தெரிவை வகுத்துக் கொள்ளும்போது, முதலவர் எந்தஆட்டத் தந்திரத் தெரிவு தமக்கு வெற்றி வாய்ப்புத்தரும் என்று எதிர்பார்த்தாரோ அத் தெரிவையே தமக்குத் தேர்ந்து கொள்வதையும் இந்த ஆட்டத்தின் வாயிலாகக் காணலாம். அதாவது, இந்த ஆட்டத்தந்திரச் சூழலில், ஆட்டக்காரர் இருவருள் எவரும் தமக்குக் கிடைக்கக்கூடிய ஆதாய-இழப்பு வரவை இதைவிடப் பயனுடையதாக ஆக்கிக் கொள்ள முடியாது என்பதாகும். மேற்குறிப்பிட்டதை விட உயர்வான மாற்றம் ஒன்று நிகழவேண்டுமானால், ஆட்டக்காரர்களுள் யாராவது ஒருவர் தம் ஆட்டத் தந்திரத்தை மாற்றிக் கொள்ள முனையவேண்டும். அப்போதுதான் மாற்று வாய்ப்புகளைத் தேடி வேறு புதிய தெரிவுகளைத் தேர்வு செய்ய இயலும். ஆகவே, மேலே குறிப்பிட்ட இணைத் தெரிவுதான் ($A_2B_1$) இந்த இரண்டு ஆட்டக்காரர்களுக்கும் ஒரே நேரத்தில் மனநிறைவளிக்கக் கூடியதாய் அமையும். ஆகவே, இவர்களுள் எவரும் தமது நிகழ் ஆட்டத்தந்திரத் தெரிவை மாற்றிக்கொள்ளும் வகையில் வேறு எந்த எண்ணத்திற்கும் வித்திடமாட்டார் என்பது தெளிவு.

மேற்கூறியபடி, இருவர் சூனியவரவு ஆட்டத் தந்திரத்திற்குரிய முடிவு ஒன்றைக்காண வேண்டுமெனில், அதற்குச் சில கட்டுப்பாடுகள் உள்ளன. அதாவது, மேலே கொடுக்கப்பட்டுள்ளவாறு வரவு எண்-கூடு ஒன்றில் ஆட்டக்காரர் இருவரின் எல்லா வாய்ப்பு வரவு எண்களையும் போட்டுப் பார்க்க வேண்டும். அவ்வெண்களில், அதாவது, ஒரு எண் மேலிருந்து கீழாகப் பார்க்கும் போது செங்குத்து வரிசையில் மிக உயர்ந்த எண்ணாகவும், இடமிருந்து வலமாக நேர்கோடாகப் பார்க்கும்போது அதில் மிகக்குறைந்த எண்ணாகவும் இருக்குமேயானால், இவ்வகை ஆட்டத் தந்திரத்திற்கு அவ்வெண் ஒரு முடிவாக அமையக் கூடும். இத்தகைய முடிவு தரும் எண்கூட்டையே இவ்வியலார் நன்னிலை இடம் (Saddle Point) என்பர். அதுவே இவ்விரு ஆட்டக் காரர்களின் சிறப்புமிக்க சமநிலையைக் குறிக்கும்.

ஆனால், ஆட்டக்காரர்களின் எண்ணிக்கை இரண்டிற்கு மேற்படுமேயானால், அவர்களிடையே நிகழும் ஆட்டத்தந்திர விளையாட்டுகள் சிக்கலானதொரு நிலையை ஏற்படுத்துவதாக இருக்கும் என்பதையும் அறிய வேண்டும். ஆட்டத்தில் ஈடுபடுபவர்கள் பலராயிருக்கும்போது (N-Person Games) அவர்களுள் சிலர் தங்களுக்குள் கூட்டுச் சேர்ந்து தனித் தனியாகப் பல அணிகளை உருவாக்கி, அவ்வணிகளுக்கிடையே போட்டி ஆட்டம் மேற்கொள்ளலாம். இவ்வாறு, வெவ்வேறு கூட்டணிகள் உருவாகி அவற்றிடையே ஆட்டம் நிகழ்ந்தால், இறுதியாக வெற்றி பெறும் கூட்டணி தன் ஆதாய வரவைத் தன் உறுப்பினர் அனைவருக்கும் பகிர்ந்தளிக்க வேண்டியிருக்கும். இப் பகிர்வானது உறுப்பினர்களுக்கு மனநிறைவு அளிப்பதாக இருந்தாலொழிய இவ்வணிகளுக்கிடையே நிகழும் ஆட்டங்களில் உறுதியானதொரு முடிவோ சமநிலையோ ஏற்படுவது கடினம்.

**சூனியமற்ற-வரவு ஆட்டங்கள்:** சூனியமற்ற-வரவு ஆட்டங்கள் என்ற மற்றொரு வகை ஆட்டமும் உண்டு. இவ்வகை ஆட்டத்தில் ஆட்டக்காரர்கள் அனைவரின் ஆதாய-இழப்பு வரவுகளையும் சேர்த்துக் கூட்டினால் சூனியமற்ற மொத்த எண் ஒன்று கிடைக்கும். அதாவது, ஆதாயங்களே இழப்புகளை விட மிகுதியாய் இருக்கும்; அன்றி, இழப்பே இல்லாமல் அனைவரும் ஆதாயம் பெறுவதாகவும் இருக்கும். இத்தகைய ஆட்டங்களில் சம நிலையானதொரு தீர்வை அடைவது எவ்வாறு என்பதைக் கணக்கியல் முறையில் கண்டுகொள்வது எளிதன்று. ஆகவே, இக் கோட்பாட்டியல் வல்லுநர்கள் சிலர் சூனியமற்ற-வரவு ஆட்டங்களைக் கூட சூனிய-வரவு தரும் ஆட்டங்களாக மாற்றிக்கொண்டு, எளிதாக முடிவு ஒன்றைப் பெறும் வழி கண்டுள்ளனர். இதற்காக, பொய்யான ஒருவரையும் ஆட்டத்தில் சேர்த்துக் கொண்டு இவர் ஒரு பக்கமும், மற்ற அனைவரும் அணிசேர்ந்து மற்றொரு பக்கமும் ஆட்டத்தில் ஈடுபடுவர். இதில் பொய்யானவரின் ஆதாய அல்லது இழப்பு-வரவு மற்றவர்களின் ஆதாய அல்லது இழப்பு-வரவுக்கு எதிர்ச்சமமாக ஆகக் கூடிய ஓர் அமைப்பை உருவாக்கிக் கொள்கிறார்கள். ஆகவே, இவை இருவர் சூனிய-வரவு ஆட்டங்களாகி, மேலே கண்ட எளிதானதொரு முடிவுக்கு வழி செய்யக்கூடும்.

அடுத்து, ஆட்டத்தந்திரக் கோட்பாடானது, நடைமுறை வாழ்வில், ஆட்டத்தந்திர சூழ்நிலைகளில் நிகழும் போட்டிகள் பற்றியும், மோதல்கள் பற்றியும் கணக்கியலாக ஆராயத் துணைபுரியக் கூடும் என்பதைக் குறிப்பிடலாம். இப்போட்டிகளின் முடிவு நடைமுறைகளையும், வாய்ப்புகளையும் அது எவ்வாறு எடுத்துக்காட்ட உதவக்கூடும் என்பதையும் சுட்டிக் காட்டலாம். இவற்றின் வாயிலாக ஆட்டத்தந்திரக் கோட்பாடு எவ்வாறு நடைமுறையில் பயனுள்ள செயல்முறைகளைக் (Application) கொண்டதாகும் என்பது விளங்கும். ஆட்டத்தந்திரக் கோட்பாடு பின்வரும் சூழ்நிலைகளில்தாம் பெரும்பாலும் நடைமுறையில் பயன்படுவதாய் இருக்கும்: பல்வகைச் சமூக நிகழ்ச்சிகளில் பங்குபெறுவோர், அவற்றில் தங்கள் சொந்த ஆதாய வரவுகளைப் பெருக்கிக்கொள்ள முனைவர். ஆனால், அவர்களைப் பாதிக்கும் நிகழ்ச்சிகளின் அடிப்படைக் காரணிகளை அவர்கள் பெரும்பாலும் கட்டுப்படுத்த இயலாது. இத்தகைய சூழ்நிலைகளிலெல்லாம் ஆட்டத்தந்திரக் கோட்பாடு பயனுள்ளதாக அமையும். அந்நிகழ்ச்சிகளை ஆராய்ந்து, அவர்கள் ஒவ்வொருவரின் ஆதாய-விளைவு வாய்ப்புகளையும், வரவு மதிப்பெண்களையும் முன்னறிந்து கூறுவதற்கு ஆட்டத்தந்திரக் கோட்பாட்டைப் பயன்படுத்தக்கூடும். இத்தகைய நிகழ்ச்சிகள், சமுதாயத்தில் மிகவும் பரந்து காணப்படுவதை யாவரும் உணர்வர். குறிப்பாக, அரசியல், பொருளாதார சமூகப் பாதுகாப்புத் துறைகளில் இக்கோட்பாடு நடைமுறையில் பயனளிப்பதாய் அமையும். இத்துறைகளில் வெவ்வேறு அளவுக்கு இக்கோட்பாடு இதுவரை பயன்பட்டு வந்துள்ளது. சிற்சில பயன்களின் விளைவாக இக்கோட்பாட்டின் தன்மையைப் பற்றிப் பல புதிய கோணங்களில் புதுக் கருத்துகளும் உருவாகியுள்ளன. குறிப்பாக, பொருளியல் துறையில் பேரங்கள் (Bargaining) என்ற அங்காடி நடைமுறைப் போராட்டத்தின் தன்மையை மேலும் தெளிவாகப் புரிந்து கொள்ள இக்கோட்பாடு, துணை செய்துள்ளது. இவை தவிர, புள்ளியியல் துறை, தத்துவத் துறை, செய்தியியல் கோட்பாடு விளைவு-எதிர் விளைவுகளின் பிணைப்பியல், விலங்கின் உடலியல் போன்ற துறைகளுக்கும் இதன் பயன் பொருந்துவதாகும். பொருளியல் துறையில் ஆட்டத்தந்திரக் கோட்பாடு அண்மைக் காலத்தில் மிக விரிந்த சூழ்நிலைகளில் பயன்பட்டுள்ளது என்றால், அது இக்கோட்பாட்டின் பயன்பாட்டுச் சிறப்பேயாகும். தன்னலமான ஆட்டத்தந்திர விளையாட்டுகளில் பங்குபெறுவோர் ஒவ்வொருவரின் வரவும், ஆதாய-நகர்வும், தனி ஒருவராலேயே முடிவெடுக்கப்படுவதன்று; மற்ற விளையாட்டுப் பங்காளர்களின் ஆதாய நகர்வுகளை எதிர்பார்த்தே ஒவ்வொருவரும் முடிவெடுப்பர்.

ஒன்றோடொன்று பிணைக்கப்பட்ட ஆட்டத் தீர்வுகளின் தன்மையும் சிறப்பும் சில்லோர் போட்டி (Oligopoly) என்ற ஒரு வகையான பொருளாதார அங்காடி நிலையில்தான் தெளிவாகத் தோன்றுகிறது. எடுத்துக்காட்டாக, உலக பெட்ரோல்-எண்ணெய் விற்பனை அங்காடியில் ஒரு சில உற்பத்தியாளர்களே காணப்படுகின்றனர். இவர்களிடையே நிகழும் போட்டி ஆட்டத்தில், ஒவ்வொருவரும் தம் சொந்த ஆதாய வரவை உயர்நிலையாகக் கொள்ளவே முனைகின்றனர். ஆனால், அவ்வரவின் விளைவோ மற்றப் போட்டியாளர்களின் வரவு-விளைவுகளோடு இணைந்துள்ளது. இந்நிலையில் தான் போட்டியாளர்கள் ஆட்டத்தந்திர விளையாட்டில் ஈடுபட வேண்டியுள்ளது. இவர்களிடையே ஒரே நிலையான சமநிலை (Stable equilibrium) வந்தடைய ஒரு குறிப்பிட்ட பாணியிலான ஆட்டமும், ஆதாய நகர்வுகளும் தேவைப்படுகின்றன. இந்த நடவடிக்கைகளை ஆராயவும், முன்கூட்டியே ஆதாய வரவுகளையும் ஆதாயப் பங்கீட்டையும் அளவறிந்து கூறவும் ஆட்டக் கோட்பாடு மிகவும் துணை புரிகிறது. இதுபோலவே, தொழிலாளர் சங்கம், முதலாளிகளின் சங்கம் என்ற இருபெரும் எதிர்ப் போட்டியாளர்களிடையே நிகழும் கூலிப் பேரங்களையும் ஆராய்ந்து, அவற்றின் விளை பயன்களை முற்

கூறவும் ஆட்டத் தந்திரக் கோட்பாடு துணை புரிகிறது. பேரங்கள் நிகழும் நிலைமைகள் எங்கெங்கே காணப்படுகின்றனவோ அங்கெல்லாம் ஆட்டக் கோட்பாடு பயன் படக்கூடும். ஒரு நாட்டின் பொருளாதாரம் முழுவதிலும் காணப்படும் எல்லாப் பண்ட அங்காடிகளையும் ஒன்றாக இணைத்து, அவற்றில் நிகழும் வாங்குவோர் விற்போர் போட்டி முழுவதற்கும் பொருந்தும் ஒரு பொதுச் சமநிலை (General equilibrium) ஒன்றை ஆராயவும், அப்போட்டியின் முடிவுகளை முன்னறியவும் ஆட்டக் கோட்பாடு பயன்படும். தி.சு.மோ.

**துணை நூல்கள்:**


**Baumol William J.**, Economic Theory and Operations Analysis, Prentice-hall of India Limited, Delhi, 1968.

**Koutsoyiannis.**, Modern Micro Economics, The Macmillan Press Limited, London, 1975.

**Thomas Schelling**, The Strategy of Conflict, Oxford Galaxy, New York, 1961.

**Von Neumann, John & Morgenstern, Oskar**, Theory of Games and Economic Behaviour, Willey, New York, 1964.


**ஆட்டனத்தி** வஞ்சி நகரிலிருந்து அரசுபுரிந்த சங்க காலச் சேர மன்னர்களுள் ஒருவன். ஆடற்கலை பயின்று ஆட்வல்லான் என விளங்கியதால் கலைத்தொழில் சிறப்புப் பற்றி 'ஆட்டன் அத்தி' என்றும், 'பொருநன்' என்றும் இவன் பெயர் பெற்றான். இவன் மிக்க அழகினன்; திரண்ட தோளினன்.

ஆடற்கலையில் சிறந்தவனாகிய அத்தி எழுதெழில் சிறப்புடைய கரிகாலன் மகள் ஆதி மந்தியைக் காதலித்து மணந்து இல்வாழ்க்கை இனிது நடத்திக் கொண்டிருந்தான். இடர் அதிகம் நேரினும் உள்ளம் கலங்காதவன். கழார் நகரினை அடுத்த காவிரித் துறையில் ஒரு சமயம் புது வெள்ளப் பெருக்கு விழா ஒன்று நிகழ்ந்தது. ஆட்டனத்தி விழாக் காலத்தில் கரிகாற்சோழன் கண்டிருப்ப, காலில் கழல் புரள, அரையில் கட்டிய கச்சையின் மேல் பொன்னால் செய்த பாண்டில் மணிகள் ஒலிப்ப, அழகுபெற ஆடிக் கொண்டிருந்தான். மிகுதியாகவும் விரைவாகவும் வந்த வெள்ளம் ஈர்த்துச் சென்றது. இவன் சிறிதும் கலங்காது கடல் வரை நீந்திக் கொண்டு சென்றான். பிறகு ஒருவாறு கரை சேர்ந்து மருதியின் உதவியால் தன் மனைவியிடம் வந்து சேர்ந்தான். இவன் காவிரிக்கு இரையானான் என்று கலங்கியிருந்த ஆதிமந்தி இவனைக் கண்டதும் கரை காணாத மகிழ்ச்சி அடைந்தாள். (அக. 222, 236, 376. 396; குறு. 31; சிலப். 21; 11-15). த.கோ.

**ஆட்டோ, முதலாம், மகா (கி.பி. 912-973)** இடைக்கால ஐரோப்பாவை ஆண்ட தலைசிறந்த மன்னர்களுள் ஒருவர். இவர் இடைக்காலத்தில் செருமனியை ஐரோப்பாவிலேயே தலைசிறந்த நாடாக்கினார். சார்லமேன் என்பவரால் கி. பி. 800-இல் தோற்றுவிக்கப்பட்ட புனித உரோமானியப் பேரரசு பல ஆண்டுகளுக்குப் பின் சிதைவுறத் தொடங்கியது. அவ்வாறு சிதறியிருந்த அப்பேரரசுக்குப் புத்துயிர் அளித்த பெருமை முதலாம் ஆட்டோவைச் சாரும்.

முதலாம் ஆட்டோ கி.பி. 912-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 23-ஆம் நாள் என்றி பௌலருக்கும் மாடில்டாவுக்கும் பிறந்தார். இவர் கி.பி. 936-இல் செருமனிக்கும், கி.பி. 962 முதல் 973 வரை புனித உரோமானியப் பேரரசுக்கும் மன்னராகத் திகழ்ந்தார்.

முதலாம் ஆட்டோ மூன்று தலையாய குறிக்கோள்களைக் கொண்டிருந்தார். அவை: (1) தம் அதிகாரத்தை அண்டைய கோமகனார் நாடுகள்மீது செலுத்தி அவற்றைத் தம் ஆட்சியின்கீழ்க் கொண்டு வருதல், 2) புனித உரோமானியப் பேரரசுக்குப் புத்துயிர் அளித்தல், 3) செருமனியை ஒரு வலுவுள்ள நாடாக ஆக்கி, அங்கேரியர்களின் தாக்குதல்களை முறியடித்தல்.

முதலாம் ஆட்டோவின் ஆட்சிக்காலத் தொடக்கத்தில் அவருக்கும், பிரபுக்களுக்குமிடையே நல்லுறவு இருந்து வந்தது. ஆனால், மிகவிரைவில் பிணக்கு ஏற்பட்டது. இதற்குக் காரணம், பிரபுக்கள் மன்னராட்சியை எதிர்த்ததேயாகும். இதனால், அவர் பிரபுக்களுடன் தொடர்ந்து மூன்றாண்டுக் காலம் போர் செய்ய வேண்டியிருந்தது. பிரான்கோனியா கோமகனார் கி.பி. 939-இல் முதலாம் ஆட்டோவுடன் தகராறு மேற்கொண்டதால், மன்னர் அவருடன் போரிட வேண்டியதாயிற்று. பிரான்கோனியாவைப் போன்று பவேரியா, சுவேபியா, இலோத்தேரிங்கியா போன்ற கோமகனார் நாடுகளும் அவரை எதிர்த்தன.

**முதலாம் ஆட்டோவின் இத்தாலியப் படையெடுப்பு:** இத்தாலிய நாடு இலோதார் என்பாரின் மறைவிற்குப் பின்னர் நலிவுறத் தொடங்கியது. வெர்டன் உடன்படிக்கையினால் (கி.பி. 843) ஏற்பட்ட இத்தாலியப் பேரரசு, செருமனி, பிரான்சு போன்ற நாடுகளின் செயலினால் சிதறுண்டது. ஆட்டோவின் காலத்தில் இத்தாலியின் அரசியாகப் பழைய மன்னரின் கைம்பெண்ணான அடிலேய்டு

(Adelaide) என்பார் ஆட்சிபுரிந்து வந்தார். பெரிங்கர் கோமகன் இத்தாலிமீது படையெடுத்து, அரசியாரைக் கைது செய்தார். இச்சூழ்நிலையிலிருந்து தப்பும் நோக்குடன் அவ்வரசியார் முதலாம் ஆட்டோவிடம் உதவி வேண்டினார். இவ்வாய்ப்பைப் பயன்படுத்தக் கருதிய மன்னரும் இத்தாலிமீது படையெடுத்தார். அவர் கி.பி. 951-இல் இத்தாலி நோக்கி விரைந்து, பெரிங்கரைப் போரில் தோற்கடித்தார். அடிலேய்டு அரசியாரையும் திருமணம் செய்து கொண்டார். பெரிங்கர் கி.பி. 952-இல் முதலாம் ஆட்டோவை இத்தாலிய மன்னராக ஏற்றுக்கொண்டு திறை செலுத்தினார்.

**முதலாம் ஆட்டோவும் மாக்யார்களும்:** மாக்யார்கள் என்ற அங்கேரியர்கள் முதலாம் ஆட்டோவுக்குப் பெரும் தொல்லை கொடுத்து வந்தார்கள். அவர்கள் திடீரென்று பெரும் வேகத்தில் இலெச்சு ஆற்றங்கரையை முற்றுகையிட்டனர். ஆட்டோ உடனடியாகத் தம் படைவீரர்களுடன் இலெச்சு ஆற்றின் பக்கமுள்ள ஆக்சுபர்க்கு என்னுமிடத்திற்கு விரைந்து அங்கேரியரின் எதிர்ப்புகளை முறியடித்தார். இவ்வெற்றியானது மேற்கு ஐரோப்பாவில் மாக்யார்களின் அரசியல் செல்வாக்கிற்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தது. நடு ஐரோப்பா அவர்களைக் கண்டு அஞ்சுவதும் குறைந்தது. இத்தோல்விக்குப் பின்னர்தான் மாக்யார்கள் கிறித்தவ சமயத்தைத் தழுவி, தான்யூப்பு ஆற்றுப் பகுதியில் குடியேறினர். இவ்வகையில் அவர்கள் அங்கேரி நாட்டுக்கு வித்திட்டார்கள். இவ்வெற்றிக்குப் பின்னரே முதலாம் ஆட்டோ 'மகா ஆட்டோ' என்றும், 'திருச்சபையின் காவலர்' என்றும் அழைக்கப்பட்டார்.

**முதலாம் ஆட்டோவும் திருச்சபையும்:** முதலாம் ஆட்டோ கோமகன்களின் அதிகாரத்தை ஒடுக்கும் பொருட்டுத் திருச்சபையுடன் சுமுகமான உறவு முறை வைத்திருந்தார். பாதிரிகளுக்கும், போப்பாண்டவர்களுக்கும் தம் ஆட்சிக்குட்பட்ட பகுதியில் நிலங்களும், பல்வேறு சிறப்புரிமைகளும் வழங்கினார். நாடு முழுவதும் முப்பத்தைந்து புனிதாலயங்களுக்கு வேண்டிய குருமார்களையும், ஏனையோரையும் நியமனம் செய்தார். மன்னரால் பதவி பெற்ற திருச்சபையினர், அரச நிருவாகத்திலும் பயிற்சி பெற்றனர். இது மன்னரின் கையை வலுப்படுத்துவதாக அமைந்தது. திருச்சபை அதிகாரிகள் மன்னர் இத்தாலியில் இல்லாத வேளைகளில் அரச நிருவாகத்தையும் நடத்தி வந்தனர். அவர்கள் மன்னருக்குப் படை உதவியும் அளித்து வந்தார்கள். நிலமானிய முறையில் திருச்சபை அமைப்பு முறையை ஏற்படுத்தியவரும் இவரே. அரசு நிருவாகங்களில் பாதிரிகள் பொறுப்புகள் ஏற்றுக்கொண்டிருந்த போதிலும், அவர்கள் மன்னரது கட்டுப்பாட்டிற்கு உட்பட்டே இருந்து வந்தனர். இவ்வகையில் அவர் திருச்சபையினரை ஊக்குவித்தது, பிற்காலத்தில் மன்னரா? போப்பாண்டவரா? என்ற போராட்டத்துக்கு இட்டுச் சென்றது.

**முதலாம் ஆட்டோவின் ஆட்சி முறை:** முதலாம் ஆட்டோ ஒரு சிறந்த வெற்றி வீரராகத் திகழ்ந்ததோடு சிறந்த ஆட்சியாளராகவும் திகழ்ந்தார். பல்வேறு கோமகன்களின் நாடுகளைத் தம் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவந்து ஒரு வலுவான ஆட்சியை அவர் ஏற்படுத்தினார். இக்காரணம்பற்றியே அவரது ஆட்சிக் காலத்தில் செருமனி ஐரோப்பாவிலேயே முதன்மையான நாடாகத் திகழ்ந்தது. ஈசுடர் (Easter) விழாவைக் கொண்டாட விரும்பி, கி.பி. 973-இல் முதலாம் ஆட்டோ ஒரு பேரவையைக் கூட்டினார். அப்போது உரோமாபுரி, கான்சுடான்டிநோபிள் ஆகிய இரு நகரங்களிலிருந்தும், அங்கேரி, பல்கேரியா, உருசியா தென்மார்க்கு முதலிய நாடுகளிலிருந்தும் பல்வேறு தூதுக்குழுக்கள் வந்து பேரரசரைப் பெருமைப்படுத்தின. பேரரசர் ஆட்டோவின் அயரா உழைப்பும் இடைவிடா முயற்சியும் எதிர்காலத்தில் ஒருங்கிணைந்த செருமனி உருவாவதற்குக் காரணங்களாக அமைந்தன. தமக்கென்று ஓர் ஆட்சிமுறையை அமைத்துக்கொண்ட முதலாம் ஆட்டோ மன்னர், தம் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளைக் கண்காணிப்பதற்குத் தம் நாட்டில் பல்வேறு பாலன்டைன் கோமகனார்களை (Counts Palantine) நியமித்தார்.

**முதலாம் ஆட்டோவும் புனித உரோமானியப் பேரரசும்:** தம்மைப் புனித உரோமானியப் பேரரசின் வழித்தோன்றல் என்று கருதிய முதலாம் ஆட்டோ, கி.பி. 962-இல் இரண்டாம் முறையாக இத்தாலி மீது படையெடுத்தார். மீண்டும் பெரிங்கர் போப்பாண்டவருக்குத் தொல்லை கொடுக்கவே, போப்பாண்டவர் பன்னிரண்டாம் சான், முதலாம் ஆட்டோவின் உதவியை நாடினார். திருச்சபையை எதிர்த்தவர்கள் ஒடுக்கப்பட்டனர். உரிய நேரத்தில் தமக்கு உதவிபுரிந்த ஆட்டோவுக்குக் கைமாறாகப் போப்பாண்டவர் அவரை உரோமாபுரிக்குப் பேரரசராக முடிசூட்டினார்.

எனினும், சிறிது காலத்திற்குப் பின், போப்பாண்டவருக்கும், பேரரசருக்குமிடையே கருத்து வேறுபாடு ஏற்பட்டது. அதற்குக் காரணம் போப்பாண்டவர் பெரிங்கரை ஆதரித்ததேயாகும். எனவே, பேரரசர் மூன்றாம் முறையாக கி.பி. 963-இல் இத்தாலிமீது படையெடுத்து, போப்பாண்டவரைப் பதவியிலிருந்து நீக்கி, அவருக்குப் பதிலாக எட்டாம் இலியோ (Leo-VIII) என்பாரைப் போப்பாண்டவராக்கினார். விரைவிலேயே எட்டாம் இலியோ காலமானார்; மன்னர்,

பதின்மூன்றாம் சானைப் போப்பாண்டவராக நிய மித்தார். ஆனால், மக்கள் அவரை ஏற்கமறுத்து ஐந்தாம் பெனடிக்ட்டு என்பாரைப் போப்பாண்டவ ராக நியமித்தனர். இதனையறிந்த முதலாம் ஆட்டோ ஒரு பெரும் படையுடன் உரோமாபுரி சென்று கிளர்ச்சியை அடக்கினார். பதின்மூன்றாம் சான் மீண் டும் போப்பாண்டவரானார். கிழக்கில் பிசைண்டைன் பேரரசு வரையிலும் சென்ற பேரரசர், தம் மகன் இரண்டாம் ஆட்டோவுக்குப் பிசைண்டைன் இளவரசி தியோபேனோ என்பாரை மணமுடித்தார். இவ் வெற்றிக்குப் பின் அவர் நீண்ட நாள் வாழ்வில்லை. மெம்பிள்பின் என்னுமிடத்தில் கி.பி. 973-ஆம் ஆண்டு மே திங்கள் 7-ஆம் நாள் காலமானார். மேக்டிபர்க்கு என்னுமிடத்தில் அவரது உடல் அடக்கம் செய்யப் பட்டது.

முதலாம் ஆட்டோவின் மிகப்பெரிய சாதனை இரெய்ச்சு (Reich) என்ற பெயர் கொண்ட கீழை நாட்டுப் பிராங்குகளின் பழைய பேரரசுக்குப் புத் துயிர் அளித்ததாகும். ஆட்சியை வலுப்படுத்தும் பொருட்டு அவர் "ஆட்டோவின் திருச்சபை அமைப்பு" என்ற ஓர் அமைப்பினை ஏற்படுத்தித் திருச்சபையினருக்கு உதவிகள் பல புரிந்தார். அரச நிருவாக முறைக்கு இது உதவி புரிந்தது.

மகா ஆல்பிரடைப் போன்று, மகா ஆட்டோ செருமனியை அயலவர் தாக்குதலிலிருந்து காப்பாற்றி னார். செருமனியை ஐரோப்பாவின் வலிமை பொருந்திய அரசாக மாற்றினார். புனித உரோமானி யப் பேரரசுக்குக் கி.பி. 962-இல் பேரரசரானதன் மூலம், பழைய கரோலின்சிய மரபு முறையை அவர் உயிர்ப்பித்தார்.

செருமனியின் பண்பாட்டு வரலாற்றிலும் மகா ஆட்டோ ஒரு சிறப்பிடத்தை வகிக்கிறார். அவர் காலத்தில் கிறித்தவ சமயமும் செருமானிய இலக் கியமும் புத்துயிர் பெற்றன. அவரது அவையில் புல வர் பெருமக்கள் பலர் இருந்தனர். வரலாற்றறிஞர் களும் கவிஞர்களும் நாடக ஆசிரியர்களும் இலக்கி யத்திற்குப் பெருந் தொண்டு புரிந்தனர். ஏசுநாத ருடைய வாழ்க்கை வரலாறு செருமானிய மொழியில் எழுதப்பட்டது. இக்காரணத்தைப்பற்றியே மகா ஆட்டோவின் ஆட்சி செருமானியப் பண்பாட்டின் மறுமலர்ச்சிக் காலம் என்று சொல்லப்படுகிறது.

செ.ப.

**ஆட்படுநர் உளமருத்துவம்:** என்பது அன்றாட வாழ்க்கையில் ஏற்படும் சிக்கல்களைத் தனிப்பட்ட முறையில் எதிர்த்து நின்று தீர்வு காண முடியாதவர்களுக்கு உளமருத்துவ முறையில் அளிக்கப் படும் வழிகாட்டலாகும். தனிமனிதன் தன் சிக்கல் களுக்குத் தானே தீர்வுகாண்பதற்கு முன்னேற்பாடு செய்யப்படுவதே இம்மருத்துவ முறையின் சிறப்புக் கூறு ஆகும்.

ஆட்படுநரை மையமாகக் கொண்ட உளமருத்துவம் (Client Centered Therapy), தனிப்பட்ட அல்லது குழு மருத்துவம் மூலம் அளிக்கப்படுகிறது. உளநோய் மருத்துவர்களும் சமூகப் பணியாளர்களும் கையாண்டு வந்ததை அடுத்து இப்பொழுது செவிலியர், ஆசிரியர் மற்றும் பல துறையைச் சார்ந்த வல்லுநர்கள், இம் மருத்துவத்தினை அளிக்கக் கூடிய தேர்ச்சி பெற்றுக் கொண்டு வருகின்றனர்.

ஆட்படுநர்களைப் பற்றிய ஆராய்ச்சி பலவகைச் செயல்முறைகளைக் கொண்டதாகும். உளவழி மருத்துவர் (Psycho-therapist) தம் கருத்துகளை ஆட்படுநர்களுக்குப் பல வழிகளில் சிறப்புறத் தெரியப்படுத்துகின்றனர். மருத்துவரின் நடை முறையில், ஆட்படுநர்களிடம் காட்டும் பரிவு, இரக்கம், மதிப்பு ஆகியவற்றால் அங்குச் சிகிச்சை அளிக்கும் சூழ்நிலை உருவாக்கப்படுகிறது. குழு உளவழிமருத்துவமுறையைப் (Group Therapy) பயன்படுத்தலாம். இவ்வித மருத்துவமுறையினால் மற்றவர்களுக்கும் தம்மைப் போலவே சிக்கல்கள் உண்டு என்ற உணர்வினை ஆட்படுநர்களிடம் ஏற் படுத்தல் இயலும். ஆட்படுநர் மருத்துவ முறையில், இரண்டு செயல் நுட்பங்கள் உள்ளன. முதலாவது, அவர்களிடமிருந்து எந்தெந்த நிகழ்ச்சிகள் சிறப்பாக இந்தச் சிக்கல்களுக்குப் பிறகு நடந்தன என்பது பற்றிய விவரங்களைச் சேகரிப்பதாகும். அடுத்தது அவர்கள் நடந்து கொள்ளும் முறைக்கு அவர்களையே காரணம் கண்டுபிடித்து விளக்கம் கூறச் சொல்வது போன்றமுறைகளால் மிக எளிதில் அவர்களின் உள்ளத்தில் அடைபட்டுக் கிடக்கும் எண்ணங்களை அறிய முற்படலாம். மருத்துவர்களுக்கு, ஆட்படு நர்கள் எந்தத் திசையிலிருந்து வருகிறார்கள், எத்தனை நேர்முக அறிவுரைகள் பெற்றிருக்கிறார்கள், எவ்வகைச் சிக்கலை நோக்கியுள்ளனர் என்பன போன்ற விவரங்களைப் பற்றிய அறிவு இருக்க வேண்டும். எடுத்துக்காட்டாகக் குடும்பத் தொல்லைகளாலோ கணவன் மனைவியிடையே ஏற்பட்ட பிளவாலோ வறுமை, உடல் ஊனமுற்றது ஆகியவற்றால் ஏற்பட்ட உளப் போராட்டங்களாலோ சிக்கல்கள் தோன்ற லாம். வேறு காரணங்களாலும் சூழல்களாலும் சிக் கல்கள் ஏற்படலாம். உளவழிமருத்துவர்கள் இவற்றை யெல்லாம் நன்கு ஆராய்ந்து, ஆட்படுநரின் எண்ணங் களை மனத்தில் கொண்டு, அவர்களின் கருத்து களுக்கும் சொற்களுக்கும் பொருளில்லை என்றும், ஏதோ அமைதியற்ற நிலையில் எடுத்துரைக்கி றார்கள் என்றும், கற்பனை செய்துகொண்டு கூறு கிறார்கள் என்றும், அவற்றை ஒதுக்கித் தள்ளாமல்

நோயாளரும் மனிதர்கள், அவர்களுக்கும் தம் எண்ணங்களை எடுத்துரைக்க உரிமை உண்டு என் பதைக் கருத்தில் கொண்டு மருத்துவம் அளித்தால் நல்ல பலன் கிடைக்கும். ஆர்.வி.

**ஆட்பதுக்கல்** என்பது தண்டனைக்குட் படாதவாறு ஆளைப் பதுக்கி வைத்தலாகும். இந்தியத் தண்டனைச் சட்டம் 52(அ) பிரிவு, ஆட்பதுக்கல் **(Harbouring)** பற்றியதாகும். இது ஒருவருக்கு உணவு, உடை, உறையுள், பொருள், போர்க்கருவிகள், வெடிமருந்து, வாகனவசதி முதலியன கொடுத்து, இவை காரணமாக ஒருவரைச் சட்டப்படி தேட முடியாமல் தடுக்கும் முயற்சியைக் குறிக்கும்.

அரசுக் கைதி அல்லது போர்க் கைதி தப்பிச் செல்ல உதவுதல், மீட்டல், பதுங்குதலுக்கு இடமளித் தல் தொடர்பான குற்றங்களுக்குரிய தண்டனை களைப் பற்றி இந்தியத் தண்டனைச் சட்டம் 130-ஆம் பிரிவு குறிப்பிடுகிறது. இப்பிரிவின்படி, கைதி தப்பிச் செல்வதற்கு அறிந்தே உதவி செய்வதும், துணை புரிவதும், மீட்பதும் அல்லது மீட்க முயல்வதும், புகலளிப்பதும், மறைத்து வைப்பதும் குற்றமாகும். மேலும் தப்பி ஓடிய கைதியைப் பிடிப்பதைத் தடுப் பதோ தடுக்க முயல்வதோ, ஆயுள் தண்டனை அல்லது பத்து ஆண்டுச் சிறைத்தண்டனையோடு ஒறுப்புத் தொகையும் சேர்ந்த தண்டனை ஆகியவற்றிற் குரியதாகும்.

சட்டத்திற்குப் புறம்பான ஒரு கூட்டத்திற்கு அடைக்கலம் அளிப்பது குற்றம் என்று இந்தியத் தண்டனைச் சட்டம் 157-ஆம் பிரிவு கூறுகிறது. இப்பிரிவின்படி, சட்டத்திற்குப் புறம்பான ஒரு கூட் டத்தை அல்லது கூலிக்கு அமர்த்தப்பட்டவர்களை ஒருவர் தமது வீட்டில் அல்லது இடத்தில் கூடுவதற்கு இசைவளிப்பது குற்றமாகும். இக்குற்றத்திற்கு ஆறு மாதச் சிறை அல்லது ஒறுப்புத் தொகை அல்லது இரண்டையும் தண்டனையாக வழங்கலாம்.

**ஆட்புலா** என்பது தில்லியில் உலோடி தோட் டத்தில் அமைந்திருக்கும் ஒரு பழஞ் சின்னமாகும். உலோடி தோட்டம் முன்பு பழைய வெல்லிங்டன் சீமாட்டிப் பூங்கா என்று சொல்லப்பட்டது. இங்குச் சையது, உலோடி (தில்லி சுல்தானிய) மரபுகளின் நினைவுச் சின்னங்கள் பல உள்ளன. அவற்றில் ஆட் புலாவும் **(Athpula)** ஒன்றாகும். இது ஏழு வளைவு களைக் கொண்டதொரு பாலம்; ஒரு சிற்றோடை யின் மேல் இது கட்டப்பட்டுள்ளது. இந்தப் பால வளைவின் அகலம் சிற்றோடையின் நடுக்கரையில் இருந்து குறைந்து கொண்டே வருகிறது. 'ஆட்' என் றால் எட்டு என்பது பொருள். 'புல' என்பதற்கு வளைவு என்பது பொருள். இதன்படி இங்கு எட்டு வளைவுகள் இருந்தன என்பது விளங்கும். இதைப் போன்ற பல பாலங்கள் முகலாயர்களின் காலத்தில் கட்டப்பட்டன. ஆட்புலா பாலம் அக்பரின் காலத் தில் நவாபு பகதூர் என்பவரால் கட்டப்பட்டது என்று கருதப்படுகிறது.

**ஆட்லர், ஆல்பிரெடு:** காண்க: ஆளுமைக் கோட்பாடு.

**ஆட்லெசு** என்பவன் கிரேக்கப் புராணத்தில் குறிப்பிடப்படும் அசுரர்களுள் ஒருவன். இவன் தைட் டன் ஈபிடசு **(Titan Eapedus)** என்பவனுக்கும் கிளைமென் **(Clymene)** என்ற கடல் தேவதைக்கும் பிறந்தவன். இவன் சகோதரன் பிரமிதீயசும் **(Prometheus)** ஆட்லெசும் தம் நண்பருடன் சேர்ந்து சீவுசு **(Zevs)** போன்ற ஒலிம்பிக்குக் கடவுளர்களுடன் போர்புரிந்தனர். சீவுசு ஆட்லெசுவின் தோளின் மீது விண்ணுலகை ஏற்றித் தாங்கச் செய்து தண்டனை அளித்தான்.



ஆட்லசு

கிரேக்க வீரன் எர்குலிசு, ஆட்லெசை அணுகி, எசுபிரிட்சு **(Hesperides)** என்பவரிடமிருந்து ஆப்பிள் பழத்தை எடுத்துவருமாறு வேண்டினான். ஆட்லெசு அதற்கு இணங்கி, எர்குலிசை விண்ணுலகைத் தாங்கு மாறு செய்து ஆப்பிளை எடுத்துவரச் சென்றான்.

ஆட்லெசு நிலையாக எர்குலிசை விண்ணுலகைத் தாங்கி இருக்கும்படி சூழ்ச்சி செய்தான். ஆனால், எர்குலிசு தன் அறிவுக் கூர்மையால் ஆட்லெசை வென்று மீண்டும் விண்ணுலகை ஆட்லெசின் தோளின் மீது இருக்கச் செய்தான். அவனே, இப் பொழுது ஆட்லாசு மலையாக ஆப்பிரிக்காவில் இருப்பதாகக் கூறுவர்.



ஆடம்சு என்றி புருக்சு

**ஆடம்சு, என்றி புருக்சு (கி.பி. 1838-1918)** அமெரிக்க வரலாற்று அறிஞர். அமெரிக்க ஐக்கிய நாட்டின் ஆறாம் அதிபரான சான் குவின்சி ஆடம்சு (John Quincy Adams) என்பாரின் பேரர். வாசிங்டன் மாநகரில் காங்கிரசு சபையின் உறுப்பின ரான தம் தந்தையாரின் தனிச் செயலாளராகப் பணி யாற்றினார். அமெரிக்க உள்நாட்டுப் போரின்போது அதிபர் ஆபிரகாம் லிங்கன் இவரை அமெரிக்காவின் தூதராக இலண்டனில் நியமித்தார். இவர் கி.பி. 1870 முதல் ஏழாண்டுகள் ஆர்வர்டு பல்கலைக்கழகத் தில் இடைக்கால வரலாற்றுத்துறையின் துணைப் பேராசிரியராகப் பணிபுரிந்தார். அதே தருணத்தில் இவர் ''வட அமெரிக்க விமர்சனம்'' (North American Review) என்ற இதழின் பதிப்பாசிரியராகவும் இருந்தார். பின்னர் ஆடம்சு (Adams, Henry Brooks) இக்கால (நவீன) வரலாற்றை ஆராயப் புகுந்து, அரசியல் பற்றிய புதுவிளக்கமொன்றைக் கூறினார். அரசியல் என்பது மனிதர்களுக்கிடையே நடைபெற்ற போராட்டமன்று; படைகளுக்கிடையே ஏற்பட்டதே என்னும் கொள்கையை நிலை நாட்டினார். ஆடம்சு கி.பி. 1889-ஆம் ஆண்டில் 'அமெரிக்க ஐக்கிய நாடு களின் வரலாறு கி.பி. 1801 முதல் 1817 வரை' என் னும் ஒன்பது நூலின் தொகுதியுள் முதல் தொகுதி [illegible] வெளியானபோது, சிறப்புமிக்க வரலாற்றாசிரியர் என்று தம்பெயரை நிலை நாட்டினார். செபர்சன், மாடீசன் (Madison) என்னும் அதிபர்களின் நிருவாகத் துறை பற்றிய ஆய்வுக்கு அந்நூல் மூலச்சான்றாகக் கருதப்படுகிறது. தனியாரால் பதிப்பிக்கப்பெற்ற 'மாண்ட்டு செயிண்ட்டு மைக்கேல் மற்றும் சார்ட் டீரிசு, என்னும் இவரது நூல், இடைக்காலத்தைப்பற்றி அறிவதற்கான நூல்களுள் ஒன்றாகும். இந்நூல் பதின் மூன்றாம் நூற்றாண்டில் இயங்கிய சக்திகளைக் குறிப்பாக உணர உதவும் நூலாகும். 'என்றி ஆடம்சின் கல்வி' என்னும் இவருடைய பிறிதொரு நூல், தனி யாரால் 1906-ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பெற்றது. இந்நூலை அவருடைய தன்வரலாறு எனலாம். அதில் கி.பி. ஆடம்சு 18-ஆம் நூற்றாண்டின் கல்விக்கோட் பாடுகள் 20-ஆம் நூற்றாண்டுக்கு ஏற்றவையல்ல என்பதைத் தெளிவு படுத்த முயன்றிருக்கிறார். அமெரிக்கப் பண்பாட்டை அவர் கடுமையாகச் சாடி அதன் குறைகளைப் படம் பிடித்துக் காட்டியுள்ளார். ஆடம்சு, 1918-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 27-ஆம் நாள் வாசிங்டனில் காலமானார்.

**ஆடம்சு, சான் (கி.பி. 1735-1826)** அமெரிக்க ஐக்கிய நாட்டின் இரண்டாம் அதிபர். இவர் கி.பி. 1797 முதல் கி.பி. 1801 வரை குடியரசுத் தலைவ ராகப் பணியாற்றினார். மசாசுசெட்சு (Massachusetts) என்பாரின் மகனான சான் ஆடம்சு (John Adams) கி.பி. 1735 அக்டோபர் 30-ஆம் நாள் பிறந் தார். இவர் வழக்குரைஞராகவும், மசாசுசெட்சுக் குக் குடியேற்றப்பகுதியின் அரசியலமைப்புச் சட்டப் போராட்டத்தின் தலைவராகவும் பதவி வகித்தார். சுதந்திரத்திற்கான அறிக்கையை ஆயத்தம் செய்ய நியமிக்கப் பெற்ற குழுவின் உறுப்பினரான இவர் கி.பி. 1783-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில், பாரிசு உடன்படிக்கை மூலம் அமெரிக்கச் சுதந்திரத்தைக் குறித்துப் பேச்சுகள் நடத்தவந்த கழகத்திலும் உறுப் பினராய்த் திகழ்ந்தார். இலண்டனில் அமெரிக்கா வின் தூதராகவும் கி.பி. 1785-1788 வரை பதவி வகித்தார். அரசியல் அமைப்புத் திட்டத்தை மறு ஆய்வு செய்யக் கோரிய கூட்டாட்சிவாதிகளான நியூ இங்கிலாந்து நிலக்கிழார்கள், வணிகர்கள் ஆகியோர் களின் துணையாளராகச் சான் ஆடம்சு இருந்தார்.

சான் ஆடம்சு அமெரிக்க ஐக்கிய நாட்டின் முதல் துணைக் குடியரசுத் தலைவராகக் கி.பி. 1789-ஆம் ஆண்டு தேர்ந்தெடுக்கப் பெற்றார். சார்சு வாசிங்டன் (George Washington) அதிபராகப் பதவி வகித்த எட்டாண்டுகளும் இவர் துணைக் குடியரசுத் தலை வராகவேயிருந்தார். மூன்றாம் முறையாகத் தேர்ந் தெடுக்கப்பெறுவதை வாசிங்டன் ஏற்க மறுத்த போது, கி.பி. 1796-இல் ஆடம்சு குடியரசுத் தலை வராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவரை எதிர்த்து



ஆடம்சு சான்

நின்ற வர்சீனியக் குடியரசுக் கட்சி வேட்பாளர் தாமசு சபர்சனை (Thomas Jefferson) விட மிகுதியாக மூன்று தேர்தல் வாக்குகளைப் பெற்றே இவர் வெற்றி பெற்றார். பின்னர்த் தாமசு செபர்சன் துணைக் குடியரசுத் தலைவரானார். ஆடம்சு தம் ஆற்றலிலேயே நிற்கும் தன்னிறைவு பெற்றவராய்த் திகழ்ந்தார். இவருடைய கட்சி, புரட்சியால் பாதிக்கப்பெற்ற பிரான்சுடன் போருக்குப்போக வற்புறுத்தியதையும் ஆடம்சு ஏற்க மறுத்துவிட்டார். அரசியலில் தம்மை எதிர்த்த குடியரசுக் கட்சியின் செல்வாக்கைக் குறைக்க அனைத்து முயற்சிகளையும் மேற்கொண்டார். குடியரசுத் தலைவரைக் குறைகூறும் நோக்குடன் வெளியிடப்பெற்ற வெளியீடுகளை ஏற்க மறுக்கும் சட்டங்களான கி.பி. 1798-ஆம் ஆண்டு அயலார்மற்றும்ஆட்சி எதிர்ப்புக் கிளர்ச்சிச் சட்டங்கள் ஆகியவற்றைக் கொணர்ந்து எதிர்க்கட்சியை அடக்கினார்.

பயனற்ற சச்சரவுகளில் பங்கு கொண்டாராயினும், ஆடம்சு துணிச்சலுக்குப் பெயர்பெற்றவராயும் அரசியலமைப்புச் சட்ட வழக்குரைஞராயும் புகழப் பெற்றார். செபர்சனிடம் கி.பி. 1800-ஆம் ஆண்டு தேர்தலில் இவர் தோற்றபோதிலும், பதவிவகித்த கடைசிச் சில நாட்களில் கூட்டாட்சி அணியினரின் பலத்தைப் பாதுகாக்கும் நோக்குடன், உள்துறை அமைச்சராக இருந்த சான் மார்சல் (John Marshall) என்பாரைத் தலைமை நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியாகப் பணி அமர்த்தினார்.

சான் ஆடம்சு குடியரசுத் தலைவர் பதவியிலிருந்து ஓய்வு பெற்ற பின்னர், மசாசுசெட்சில் தனிப்பட்ட வாழ்க்கை நடத்தி வந்தார். பின்னர்த் தாமசு செபர்சனின் உற்ற நண்பராகி அவருடன் கடிதத் தொடர்பையும் வைத்துக் கொண்டார். இவர் மகன் கி.பி. 1825-ஆம் ஆண்டில் குடியரசுத் தலைவராகப் பதவியேற்ற பெருமகிழ்ச்சியில் திளைத்தார். சான் ஆடம்சு கி.பி. 1826-ஆம் ஆண்டு சூலை 4-ஆம் நாள் காலமானார்



ஆடம்சு, சான் குவின்சி

**ஆடம்சு, சான் குவின்சி (கி.பி. 1767-1848)** அமெரிக்க ஐக்கிய நாட்டின் ஆறாம் குடியரசுத் தலைவர். ஆடம்சு, சான் குவின்சியின் (Adams John Quincy) பதவிக்காலம் கி.பி. 1825 முதல் கி.பி. 1829 வரையாகும். இவர் கி.பி. 1767-ஆம் ஆண்டு சூலைத் திங்கள் 11-ஆம் நாள் மசாசுசெட்சு மாநிலத்தில் உள்ள பிரெயிண்ட்ரீ (Braintree) என்னும் ஊரில் பிறந்தார். பிரெயிண்ட்ரீயை இக்காலத்தில் குவின்சி என்று கூறுவர். இவர் தந்தையார் அமெரிக்காவின் இரண்டாம் குடியரசுத் தலைவரான சான் ஆடம்சு (John Adams) என்பார். சான் குவின்சி ஆடம்சும் அமெரிக்க ஐக்கிய நாட்டின் குடியரசுத் தலைவராகிப் பல அருஞ்செயல்களைச் செய்தார். இவர் அமெரிக்காவின் தலைசிறந்த அரசியல் ஞானி. தம் வாழ்நாளின் இறுதிப் பதினாறு ஆண்டுக்காலம் காங்கிரசின் கீழ்ச் சட்டமன்றத்தின் உறுப்பினராய் இருந்து அடிமை ஒழிப்புப் பணியில் ஆர்வங்காட்டி உழைத்தார்.

ஆடம்சு பாரிசிலும் இலெய்டனிலும் (Leiden) கல்வி கற்று ஆர்வர்டு (Harward) பல்கலைக் கழகத்

தில் பட்டம் பெற்றார். இவர் கி.பி 1803 முதல் கி.பி. 1808 வரை (மேல்சபை) செனட்டு அவையின் உறுப்பினராய்ப் பதவியில் இருந்தார். பின் பதவியை உதறிவிட்டு அமெரிக்க ஐக்கிய நாட்டின் தூதராக நியமிக்கப் பெற்று, நெதர்லாந்து, பிரசியா (Prussia), உருசியா போன்ற நாடுகளில் பணியாற்றினார். போரை நிறுத்த வேண்டி கி.பி. 1814-ஆம் ஆண்டில் பிரிட்டனுடன் பேச்சுவார்த்தை நடத்திய குழுவில் இவரும் ஓர் உறுப்பினராய் இருந்தார். இவர் கி.பி. 1815-இல் இலண்டன் தூதராகப் பணி அமர்த்தப் பெற்றார். இவர் தந்தையாரும் அதே பதவியில் முன்னர் இருந்தார். சேம்சு மன்றோ குடியரசுத் தலைவராகப் பதவி வகித்தபோது, ஆடம்சு உள்துறை அமைச்சராகப் பொறுப்பேற்றார். அப்போது இவர் பேச்சுகளின் மூலம் உடன்படிக்கை செய்து கி.பி.1819-ஆம் ஆண்டில் பிளாரிடாவை அமெரிக்க ஐக்கிய நாட்டிற்குப் பெற்றுத் தந்தார். திசம்பர்த் திங்களில் மன்றோ (Munroe) அறிக்கையைக் கி.பி. 1823-ஆம் ஆண்டு வெளியிடக் குடியரசுத் தலைவருடன் பணியாற்றினார்.

சான் குவின்சி ஆடம்சு அமெரிக்க ஐக்கிய நாடுகளின் குடியரசுத் தலைவராகக் கி.பி.1824-ஆம் ஆண்டு தேர்ந்தெடுக்கப் பெற்றார். ஆனால், அவ்வாண்டுத் தேர்தலில் எந்தவொரு வேட்பாளரும் பெரும்பான்மையான தேர்தல் வாக்குகளை பெறாத காரணத்தால், காங்கிரசின் கீழ்ச்சபை இவரைத் தேர்ந்தெடுத்தது. அதன் விளைவாக இவருக்கு எதிராக இவர் பகைவர்கள், இவரது ஆட்சிக் காலத்தில் சிறப்பான செயலெதுவும் நடக்கவில்லை என்று குறை கூறினர்.

ஆண்ட்ரூ சாக்சன் என்பவர் கி.பி. 1828-ஆம் ஆண்டில் நடைபெற்ற தேர்தலில் பெரும்பான்மையான வாக்குகளைப் பெற்றுக் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். சான்குவின்சி ஆடம்சு தம் சொந்த ஊரான குவின்சிக்குச் சென்றார். ஆனால், கி.பி. 1831-ஆம் ஆண்டில் மீண்டும் கீழ்ச் சட்டமன்ற அவையின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றுத் தம் வாழ்நாளில் இறுதி 17 ஆண்டுகள் அப்பதவியில் இருந்தார். அடிமைத்தளையை அறவே நீக்க வேண்டுமென்னும் கருத்தினைக் கொள்ளாதவராயினும், அடிமைத்தளை நீடிப்பதை இவர் எதிர்த்தார். எட்டு ஆண்டுகள் அதைக் கடுமையாகச் சாடி எதிர்த்துப் புகழ்பெற்றார். அடிமைத் தளை எதிர்ப்புக்கான விவாதத்தைத் தடுக்க முயன்ற கருப்புச் சட்டங்களை எதிர்த்து இறுதியில் வெற்றி பெற்றார்.

ஆடம்சு சீரிய சுதந்திர உணர்வும், பொதுநலம் பேணும் மனத்திட்பமும் மன உறுதியும் கொண்டவர். எனினும் இவரது தனித்தன்மையின் காரணமாக இவரால் மக்களது கவனத்தையும், அன்பையும் முழு அளவுக்குப் பெற முடியவில்லை.

இவரது இறுதிக்காலம் மனத்தை உருக்கக்கூடியது. மெக்சிகோ போரில் பங்குபெற்ற தளபதிகளுக்கு உடைவாள் கொடுக்க வேண்டுமென்ற சட்டமுன் வரைவு காங்கிரசில் வந்தது. அப்போர் அறக்கோள்கைகளுக்குப் புறம்பானது என வாதிட்டபோது பக்கவாத நோய்க்கு ஆளாகிக் கீழ்ச்சட்டமன்ற அவையிலேயே சாய்ந்தார். இரண்டு நாட்களுக்குப் பின்னர் அதாவது கி.பி. 1848- ஆம் ஆண்டு பிப்பிரவரித் திங்கள் 21-ஆம் நாள் காலமானார்.

**ஆடம்சு மலை** அழிந்தொழிந்த எரிமலைகளுள் ஒன்று. இது 3751 மீட்டர் உயரமுள்ளது. அமெரிக்காவில் வாசிங்டன் மாநிலத்தின் தென் மேற்குப் பகுதியில் யாகிமா மாவட்டத்தில் உள்ளது. காசுகேடு மலைத் தொடரின் (Cascade Range) பகுதியான இம்மலையுச்சி காசுகேடுவின் கிழக்குப் பக்கத்தில் உள்ளது. மழை குறைவாக இருப்பினும், ஈரக்கசிவு போதுமானதாக உள்ளமையால், ஊசியிலைக் காடுகள் இங்குக் காணப்படுகின்றன.

**ஆடம்பரப் பொருள்கள்:** வருவாய் மிகும் விகிதத்திற்கு இணையாகத் தனிப்பட்ட சில பணிகள் அல்லது பொருள்களுக்குச் செலவிடும் செலவு ‘ஆடம்பரச் செலவு’ எனப்படுகிறது. ஒரு நாட்டின் பொருளாதார நிலை, மக்களின் வாழ்க்கைத் தரம் ஆகியவற்றின் அடிப்படையில் ஆடம்பரப் பொருள்கள், பணிகள், செலவுகளின் வகைகள் ஆகியவை மாறுபடுகின்றன. வளர்ச்சியடையா நாடுகளில் ஆடம்பரப் பொருளாகக் கருதப்படுவது, வளர்ச்சியடைந்த நாடுகளில் இன்றியமையாத கட்டாயத் தேவையாக வழக்கிலிருப்பது மரபு. பந்தய உந்தூர்தியை (Race Car) ஆடம்பரப் பொருளாகக் கருதும் அமெரிக்கா வீட்டிற்கு ஓர் உந்தூர்தியை அடிப்படைத் தேவையாகக் கருதுகிறது. அத்தேவையே ஆசிய நாடுகளில் ஆடம்பரப் பொருளாகக் கருதப்படுகிறது.

ஆடம்பரப் பொருள்களின் (Luxury Goods) தேவை, அங்காடியில் அவற்றின் அளிப்பைப் பொறுத்து அமைகிறது. பொதுவாக, மக்கள் தங்கள் காரியங்களை விரைவாகவும் எளிதாகவும் செய்து முடிக்க விரும்புவது இயற்கையே. இவ்வகை விருப்பமே, ஆடம்பரப் பொருள்களின் வளர்ச்சிக்குக் காரணமாக உள்ளது. மேலும், அறிவியல், தொழில் நுட்ப வளர்ச்சி ஆகியவற்றின் விளைவாக உண்டான புதிய கண்டு பிடிப்புகள் ஆடம்பர வாழ்க்கையினை மேற்கொள்ளக் காரணமாகின்றன. எடுத்துக்காட்டாக, உண்கலன்களைச் சுத்தம் செய்யும் எந்திரம் (Dish Washer) அங்காடிக்கு வந்ததன் காரணமாக, அதன் தேவை வளர்ச்சியடைந்த நாடு

களில் மிக விரைவாகப் பரவி வளர்ந்து விட்டது. எனவே, ஆடம்பரப் பொருள்களின் வளர்ச்சிக்கு மக்களின் வாழ்க்கைத் தரம், பொருளாதார நிலை, வருமான வளர்ச்சி, அறிவியல் வளர்ச்சி, புதிய கண்டுபிடிப்புகள், மனிதன் விரைவில் பெற விரும்பும் இன்ப வசதிகள் போன்றவை காரணங்களாகின்றன.

ஆடம்பரப் பொருள்களின் விற்பனை மிகுதியாவதிலிருந்து ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சியையும் முன்னேற்றத்தையும் கண்டறியலாம். ஆகவே, இதனை நாட்டின் முன்னேற்றத்தையும் வளர்ச்சியினையும் சுட்டிக் காட்டும் அறிகுறியாகவும் கருதுகின்றனர். பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் மிகுதியாக உள்ள நாடுகளில் இப்பண்டங்களின் உற்பத்தியைப் பெருக்குவதோ இறக்குமதியை ஊக்குவிப்பதோ அந்நாட்டில் மேலும் ஏற்றத்தாழ்வினை மிகுதிப்படுத்தும். அடிப்படைத் தேவைகளுக்கான மூலப் பொருள்களையும், அரிதான உற்பத்திக் காரணிகளையும் ஆடம்பரப் பொருள்களின் உற்பத்திக்காகப் பங்கீடு செய்வதால் நாட்டின் முன்னேற்றம் பெருமளவில் சீர்குலைகிறது. மேலும், இன்றியமையாப் பண்டங்களின் உற்பத்திச் செலவு மிகுவதால், உற்பத்தியின் அளவு குறைந்துவிட வாய்ப்புள்ளது. இக்காரணங்களே தேவைப் பண்டங்கள் (Necessities) அரிதாவதற்கும் வறுமை, நாட்டில் வளர்வதற்கும் பணவீக்கத்திற்கும் இடங் கொடுக்கின்றன.

**ஆடல்: ஆடலின் தோற்றமும் வளர்ச்சியும்:** அறிவு வளர்ச்சியும் நாகரிகமும் முதிர்வு பெறுவதற்கு ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பிருந்தே மனிதன் ஆடலிலும் பாடலிலும் ஈடுபட்டு வந்திருக்கிறான். ஆதிக்கால மனிதன் பாடிய இசையையும் ஆடிய கூத்தையும் கலை வடிவங்கள் என்று கூற முடியாது. அவற்றிற்கு இலக்கணம் வகுக்கப் பெறவில்லை. அவை பண்படாத நிலையிலேயே இருந்து வந்தன. இன்றும் இத்தகைய இசையையும் நடனத்தையும் பழங்குடி மக்கள், மலைவாழ் மக்கள் ஆகியோர்களிடையே காணலாம்.

நாகரிகம் வளர்ச்சி அடைய அடைய இசை, ஆடல் முதலியவை முன்னேற்றம் அடைந்து, கலை வடிவங்களாகத் திகழ்ந்தன. மேலும் அவை பல வகைகளாகப் பிரிக்கப்பெற்றன. இந்தியாவில் மிகத் தொன்மையான கூத்துநூல் என்று கருதப்பெறும் நாட்டிய சாத்திரத்தை இயற்றிய பரத முனிவர், (கி.பி. 2-ஆம் நூற்றாண்டு) நாட்டியம் என்ற சொல்லுக்குப் பாடல், ஆடல், அபிநயம், உரையாடல், ஒப்பனை, காட்சித்திரைகள் ஆகியவை ஒருங்கு அமைந்த 'நாடகம்' என்றே பொருள் கூறினார். அவருடைய காலத்திலிருந்து ஆடல், தாண்டவம் (ஆண்களுக்கு ஏற்ற கூத்து), இலாசியம் (பெண்களுக்கு ஏற்ற கூத்து), நிருத்தம் (சுத்த நடனம்) என்ற வகைகளில் வழங்கி வந்தது. பின்னர் நிருத்தமும் அபிநயமும் கலந்த நிருத்தியம் என்ற வகையும் தோன்றியது. சிவபெருமான் ஆடிய ஆடல் தாண்டவம் என்றும், பார்வதி ஆடிய ஆடல் இலாசியம் என்றும் சொல்லப் பெறுகிறது. பிற்காலத்து ஆடல் இலக்கண நூல்களில், எண்ணற்ற நடன வகைகள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. பரதர் தமது நாட்டிய நூலில், விந்திய மலைக்குத் தெற்கே வாழ்ந்த மக்கள் இசையிலும், நடனத்திலும் சிறப்புற்று விளங்கினர் என்று புகழ்கிறார்.

தமிழ் நாட்டில் வழங்கி வந்த ஆடல் வகைகளை விவரிக்கும் ஐந்து நூல்கள் சிகண்டியின் "இசை நுணுக்கம்", சியாமளேந்திரரின் "இந்திர காளியம்", அறிவனாரின் "பஞ்ச மரபு", ஆதிவாயிலாரின் "பரத சேனாபதீயம்" மதிவாணரின் "நாடகத் தமிழ் நூல்" என்பனவாகும் என்று அடியார்க்கு நல்லாரின் உரையிலிருந்து அறியலாம். இப்பெயர்கள் கொண்ட சில நூல்கள் இக்காலத்தில் வழக்கில் இருந்தபோதிலும், இவற்றின் முதனூல்கள் முற்றிலும் மறைந்து போயின என்றே தோன்றுகிறது.

தென்னாட்டில் வழங்கிவந்த இசையையும் ஆடலையும் விவரிக்கும் கருவூலம் போன்ற நூல் சிலப்பதிகாரம் ஆகும். இதன் உரைகளையும் கலித்தொகை முதலிய சங்க இலக்கியங்களையும் ஆராய்ந்தால், அக்காலத்தில் ஆடற்கலை, கூத்து, குனிப்பு முதலிய பெயர்களுடன் வழங்கி வந்தது என்றும், அகக்கூத்து, புறக்கூத்து என்ற பிரிவுகளைக் கொண்டிருந்தது என்றும் அறியலாம். இவற்றைத் தவிர, கடவுளர் ஆடிய அல்லியம், கொடுகொட்டி, குடை, குடம், பேடி, கடையம், பாண்டரங்கம், மல், துடி, மரக்கால், பாவை என்று பதினொரு வகைக்கூத்துக்களும் விவரிக்கப்படுகின்றன. மக்களிடையே குரவை, கலி நடம், நோக்கு முதலியகூத்துகளும் வழக்கில்இருந்தன.

1)பரத நாட்டியம்: தென்னிந்திய நடன வகைகளுள் மிகத் தொன்மை வாய்ந்ததும் உலகப்புகழ் பெற்றதுமான ஆடல் வகை பரத நாட்டியமாகும். இதற்குக் கி. பி. 19-ஆம் நூற்றாண்டில் தாசியாட்டம், சின்னமேளம், சதிர் என்ற பெயர்களே வழங்கி வந்தன. பி.ஆர். இராசமய்யரின் "கமலாம்பாள் சரித்திரம்" (கி.பி. 1893) என்னும் நூலில் இது 'சதிர்' என்றே குறிப்பிடப்பெறுகிறது. கவி சுப்பிரமணிய பாரதியார் இதைக் கூத்து என்று கூறினார். பரத நாட்டியம் என்ற பெயர், இதற்கு இருபதாம் நூற்றாண்டில்தான் அமைந்தது. பாவம், ராகம், தாளம் என்ற சொற்களின் முதல் எழுத்துக்களைக் கொண்டு உருவாக்கப் பெற்றது 'பரதம்' என்ற கலைச்சொல் என்றும் கருதப்படுகிறது.

இக்காலத்தில் பரத நாட்டியம் என்ற பெயருடன் வழங்கி வரும் ஆடல்வகை, தமிழ் நாட்டின் பற்பல ஆலயங்களில், வழிபாட்டுத் தொடர்புடன் தேவதாசிகள் என்று அழைக்கப்பெற்ற தேவரடியார்களால் ஆடப் பெற்று வந்த தனிப்பட்ட நடனங்களை அடிப்படையாகக் கொண்டது. சோழ மன்னர்கள் தஞ்சைப்பெருவுடையார் கோயில் போன்ற ஆலயங்களில், நூற்றுக்கணக்கான தேவதாசிகளை அமர்த்தி, அவர்களுக்கு மானியங்கள் அளித்திருந்தனர் எனக் கல்வெட்டுகள் கூறுகின்றன. இம்மரபு, பின்னர் ஆட்சி புரிந்த பாண்டிய மன்னர்கள், நாயக்க அரசர்கள், மராத்திய அரசர்கள் ஆகியோரின் காலங்களிலும் தொடர்ந்து வழங்கி வந்தது. மேலும், தஞ்சாவூர், கும்பகோணம், சிதம்பரம், திருவண்ணாமலை, விருத்தாசலம் ஆகிய ஐந்து தலங்களில்உள்ள ஆலயங்களில் அக்காலத்து மன்னர்கள் 'கரணங்கள்' எனப்படும் நாட்டிய அடவுகளைச் சிற்பங்களாகச் செதுக்கி வைத்திருப்பதிலிருந்து அவர்களுக்கு ஆடற்கலையிலிருந்த ஆர்வம் நமக்குத் தெரிய வருகிறது. ஆகவே பரத நாட்டியம் என்ற கலை, நடன உலகிற்குத் தமிழகம் அளித்திருக்கும் ஒரு பெருங்கொடை ஆகும்.

தஞ்சையை ஆண்டு வந்த சரபோசி மன்னர் காலத்தில் (கி.பி. 1832-ஆம் ஆண்டுவரை) பரத நாட்டியம் 18 உறுப்புகள் கொண்டதாக இருந்தது. ஆயினும் அவருடைய சபையில் ஆடலாசிரியர்களாக இருந்தவர்களும், 'தஞ்சை நால்வர்' என்று புகழ் பெற்றவர்களுமான சின்னய்யா, பொன்னய்யா, சிவாநந்தம், வடிவேலு ஆகியோர் பரத நாட்டியத்திற்கு ஒரு புதிய குறுகிய அமைப்பை ஏற்படுத்தி அலாரிப்பு, சதிசுரம், சப்தம், வர்ணம், பதம், சாவனி, தில்லானா என்ற அடவை அறிமுகம் செய்து வைத்தனர். இந்த அமைப்பிற்கு ஏற்ற இசை வடிவங்கள் பலவற்றையும் இந்நால்வரும் இயற்றி நாட்டியத்திற்குப் புத்துயிரளித்தனர். காண்க: அவிநயம்.

சென்னையில் 1930-ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட ஒரு சட்டத்தின்படி கோயில்களில் தேவதாசிகள் நாட்டியமாடும் முறை அகற்றப்பட்டபிறகு, ஆடற்கலையின் ஒளி மங்கலாயிற்று. அச்சமயம் ஈ. கிருட்டிணய்யர், உருக்குமணி தேவியார், டாக்டர் வே. இராகவன் முதலியோரின் பெருமுயற்சி காரணமாகப் பரதநாட்டியம் புதுமெருகு பெற்றுப் பொலிவுறலாயிற்று. இந்த மறுமலர்ச்சியில் தோன்றி உலகப்புகழ்பெற்ற ஆடற்கலைஞர் பாலசரசுவதி ஆவார். காண்க: பாலசரசுவதி பரதநாட்டியம்.

**2) பாகவத மேள நாட்டியம்:** கி.பி. பதினாறாம் நூற்றாண்டில் தஞ்சையை ஆண்டுவந்த நாயக்க மன்னர் ஒருவர், ஆந்திர நாட்டிலிருந்து நாட்டியத்தில் திறமையுடைய நூற்றுக்கணக்கான அந்தணக் குடும்பங்களை மெலட்டூர் முதலிய கிராமங்களில் குடியேறச் செய்து, நடனக்கலைக்கு ஆதரவு அளித்தார். இவர்களுடைய மரபினர் இன்றும் ஆடிவரும் ஆடல்வகைக்குப் 'பாகவத மேள' நாட்டியம் என்று பெயர். இது சூலமங்கலம், சாலியமங்கலம், ஊத்துக்



பாகவத மேளம்

காடு, நல்லூர், தேப்பெருமாள் நல்லூர் முதலிய ஊர்களுக்கும் பரவியது. இக்கலைஞர்கள் ஆடும் நாட்டியங்கள் தெலுங்கு மொழியில் இயற்றப்பட்ட இசை நாடகங்களை அடிப்படையாகக் கொண்டவை. இவற்றுக்கும் ஆந்திர நாட்டின் கூச்சுப் புடி நடனத் திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. காண்க: பாக வத மேள நாட்டியம்.

**(3) குறவஞ்சி நாட்டியங்கள்:** தமிழ் நாட்டில் உருவான மற்றொரு வகை நாட்டியம், குறவஞ்சி நாடகங்களில் அடங்கியுள்ளது. இந்த நாடகங்களும் ஆதியில் மன்னர்களின் ஆதரவுடன் தேவதாசிகளால் கோயில்களில் ஆடப்பெற்று வந்தன. இவற்றில் இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழின் வடிவம் அழகு டன் அமைந்துள்ளது. தமிழ் நாட்டிற்கே உரிய குறி சொல்லும் குறத்தி, குறவன், (சிங்கி, சிங்கன்) முதலிய பாத்திரங்கள் தோன்றும் இந்நாடகங்கள் நகைச்சுவையுடன் அமைக்கப்பட்டுள்ளன. இவற்றுள் முக்கியமானவை குற்றாலக்குறவஞ்சி, தியாகேசர் குறவஞ்சி, கும்பேசர் குறவஞ்சி, அழகர் குறவஞ்சி, செந்தில் குறவஞ்சி, சரபேந்திர பூபால குறவஞ்சி ஆகியவை. மேற்கூறிய மூன்று வகைகளைத் தவிர தமிழ்நாட்டின் ஒவ்வொரு மாவட்டத்திலும் கிராம மக்கள் ஆடும் எண்ணற்ற நாடோடி நடன வகை களும் இருக்கின்றன.



கதகளி

**கதகளி:** கேரள நாட்டிலும் ஆந்திரப் பிர தேசத்திலும் முறையே வழங்கிவரும் கதகளி, கூச்சுப்புடி ஆகிய இருநடனங்களும் தென்னிந்தியப் பாரம்பரிய ஆடல்வகைகளுள் முக்கியமானவை. கேரள நாட்டின் புகழ்பெற்ற சாக்கியார் கூத்து



குறவஞ்சி நாட்டியர்

ஆடல்: ஆடலின் தோற்றமும் வளர்ச்சியும்

சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்பெறுகிறது. கதகளி என்னும் நடனம் கி.பி. 17–ஆம் நூற்றாண்டில் தோன்றிக் கள்ளிக்கோட்டைச் சாமூதிரி மன்னர், கொட்டாரக்கரை அரசர் ஆகிய இருமன்னர்களாலும் ஆதரிக்கப்பட்டு, இப்பொழுது உலகப்புகழ் பெற்று விளங்குகிறது. கதகளி ஆட்டம் நாடகங்களை அடிப்படையாகக் கொண்டது. இதில் நடிகர்கள் அணியும் உடைகளும் முகப் பூச்சும் வலிமையும் வீரமும் விளங்கும் ஆடலும் சிறப்பான கூறுகளாகும். காண்க: சாக்கியார்கூத்து, கதகளிநடனம்.

**கூச்சுப்புடி:** ஆந்திர நாட்டில் கூச்சுப்புடி என்ற சிறு கிராமத்தில் அந்தண வகுப்பைச் சேர்ந்த நடிகர்களால் கோயில்வழிபாட்டிற்காக உருவாக்கப்பட்டது கூச்சுப்புடி நடனம். ஆதியில் இதில் ஆண்களே நடித்து வந்தனர். இதற்காகப் பெரும்பாலும் கண்ணனின் வரலாற்றை அடிப்படையாகக் கொண்ட நாடகங்கள் இயற்றப்பெற்றன. காண்க: கூச்சுப்புடி நடனம்.



கூச்சிப்புடி

**ஒடிசி:** ஒரிசா மாநிலத்தின் மிகத்தொன்மை பொருந்திய பாரம்பரிய ஆடல் வகை ஒடிசி நடனம். இந்திய நடன வகைகளுள் இது மிகுந்த எழில் வாய்ந்ததாகக் கருதப்பெறுகிறது. இதற்கென ஒரு தனி இலக்கணமும் அமைந்துள்ளது. செயதேவர் என்ற கவிஞர் கி.பி. 13–ஆம் நூற்றாண்டில் இயற்றிய கீதகோவிந்த காவியத்தின் பாடல்கள் ஒடிசி நடனத் திற்குச் சிறப்பை அளிக்கின்றன.



ஒடிசி

**கதக்கு:** வட இந்திய நடனங்களுள் மிகவும் புகழ்பெற்ற கதக்கு நடனத்தில், இந்துக்களின் பாணியும் இசுலாமியர் பாணியும் கலந்து காணப்படுகின்றன. மொகலாய மன்னர்களின் சபைகளிலும் உத்தரப்பிரதேசம், இராசசுத்தான் முதலிய மாநிலங்களின் அரசர்கள் முன்னிலையிலும் இது ஆடப்பெற்று வந்தது. தபலா என்ற பறையில் மிக விரைவாக

வாசிக்கப்பெறும் சொற்கட்டுகளுக்கு ஏற்பக் கால்கள் நடம்புரிய, பம்பரம் போற் சுழன்று ஆடுவது, கதக்கு நாட்டியத்தின் தனிச்சிறப்பாகும். இந்தி, விரசமொழி ஆகியவற்றில் அமைக்கப்பெற்ற பாடல்களுக்கு உள்ளத்தைக் கவரும் அவிநயமும் இதில் இடம் பெறும்.



கதக்கு

மணிப்புரி: இந்திய நாட்டின் கிழக்கெல்லையிலுள்ள மணிப்பூர் மாநிலம் ஓர் அருமையான நாட்டிய வகைக்குப் புகழ் பெற்றது. மைதை (Maithai) என்ற இனத்தைச் சேர்ந்த இம்மாநில மக்கள் கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் வைணவ மதத்தைத் தழுவினர். பாக்கியசந்திரர் என்னும் மன்னர் மணிப்புரி நடனத்திற்கு இலக்கண நூல் ஒன்றை வடமொழியில் இயற்றியுள்ளார். பெரும்பாலும் கண்ணன் மேல் இராதை கொண்ட காதலை அடிப்படையாகக் கொண்ட இந்த ஆடலைப் பத்திச்சுவையும் எழில் மிகுந்த கோபியர் நடனமும் அழகுபடுத்துகி[illegible].

டி.எஸ். பா.



மணிப்புரி

**ஆடல் வல்லான்:** இசையும் ஆடலும கலைஞர்களுக்கு உரிய கலைத் தொழில். இறைவனுக்கு உரிய தொழிலும் ஆடல் பாடலே ஆகும். கடவுளுக்கு இப்படி ஒரு நடனப் புலவனாகக் கலை உருவம் தந்து, வழிபட்டுப் பெருமையடையும் நாகரிகம் உலகிலேயே தமிழ் நாட்டில் மட்டுமே உண்டு.

ஆடல் வல்லான் வடிவங்கள் உலக மக்களைக் கவர்ந்தது போல் வேறு எந்த உருவமும் கவர்ந்ததில்லை. இத்தெய்வத் திருவுருவத்திற்கு உரிய கவர்ச்சி உலக முழுவதும் பரவியிருப்பதை, மேலை நாடுகளில் பல காட்சிக் கூடங்களிலும் காணலாம். தமிழ் மக்களுடைய வழிபாட்டிற்குரிய நடராச வடிவம், முற்றிலும் வேறுபட்ட நாகரிகத்தைக் கொண்டுள்ள மக்களையும் கவர்ந்துள்ளது.

உலக இயக்கங்களின் உயிர்த்துடிப்பு ஆடல் வல்லானின் ஆடலால் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. உயிர்கள் பிறப்பதும் வாழ்வதும் இறப்பதும் பேரின்ப நிலையில் சாவா மூவாப் பெருவாழ்வில் பொருந்துவதும் ஆடல் வல்லானின் அசைவினாலேயே நிகழ்கின்றன. நுண்ணிய அணுக்கூட அசைவற்றிருப்பதில்லை. இயக்கம் எனப்து உலகின் மாபெரும் அறிவியல் தத்துவம். இதனைக் காட்டும் இணையற்ற இறை வடிவம் நடராச வடிவமாகும்.

இறைவன் தன் அடியார்களைப் பாதுகாத்து, அரக்கர் முதலிய எதிர்ப்பாற்றல்களை வென்று வெற்

றிக் களிப்பில் ஆடிய ஆடல்களே தாண்டவங்களாகும்.

தட்டுதலை உடையது தாண்டவமாகும். தட் - பூமியைத் தட்டுதலாகிய சதியே இதன் சிறப்பு அம்சம். பரதம் என்ற சொல் பாவம், ராகம், தாளம் என்ற மூன்றின் முதல் எழுத்தொலியான ப, ர, த என்பதன் இணைப்பு என்பர். இதனை நாட்டியம் எனவும் கூறுவர்.

நாட்டியம் தாண்டவம், இலாசியம் என இரண்டு வகைப்படும். மென்மையான கூத்துகள் இலாசியம் அல்லது இலளிதம் எனப்படும். காமச் சுவையைச் சிறப்பாகக் கொண்டவை இவை. இவை சுத்த இலாசியம் முதலான ஏழுவகைகளைக் கொண்டவை. சுத்த இலாசியம், சிவபெருமான் ஆடியதாகும். அது வலப்பக்கமாகச் சுழலுதல், பாம்புபோலச் சுழன்று ஆடுதல், மின்கொடி போல் அசைந்தாடுதல், கொடி போல் ஆடுதல், காலை மேலே தூக்கி நின்றாடுதல் முதலிய ஏழுவகைப்படும்.



ஆடல் வல்லான்

சிவபெருமானின் ஏழுவகை ஆடல்கள் ஆகமங்களில் சிறப்பாகப் பேசப்படுகின்றன. அவை 1. ஆனந்தத் தாண்டவம் (இது தில்லையில் ஆடிய திருச் சிற்றம்பலத்தாண்டவம்), 2. சந்தியா தாண்டவம், 3. உமா தாண்டவம், 4. கௌரி தாண்டவம், 5. காளிகா தாண்டவம், 6. திரிபுர தாண்டவம், 7. சங்கார தாண்டவம் எனப்படும்.

சிவனின் தாண்டவங்கள் அனைத்துள்ளும் முதன்மையாகத் திகழ்வது நடராசர் தாண்டவ அமைப்பாகும். இவ்வடிவம் தில்லைச் சிதம்பரத்தில் சிறப்பாகவும் ஏனைய தலங்களில் பொதுவாகவும் அமைந்துள்ளது.

காளிகா தாண்டவம் படைத்தல் தொழிலையும், கௌரி தாண்டவம் காத்தல் தொழிலையும், சம்கார தாண்டவம் அழித்தல் தொழிலையும், திரிபுர தாண்டவம் மறைத்தல் தொழிலையும், ஊர்த்துவ தாண்டவம் அருளுதலையும், ஆனந்தத் தாண்டவம் ஐம்பெருந் தொழில்களையும் குறிப்பதாகப் பொருள் கொள்வர்.

ஆடல் வல்லான் பின் வலக்கையில் உள்ள உடுக்கையை அடிப்பதால் ஒலி பிறக்கிறது. பெருவெளியில் உண்டான ஓங்கார ஒலியினின்றும் உலகம் தோன்றியதாகக் கருதப்படுகிறது. எனவே ஒலியை உண்டாக்கும் உடுக்கை, படைத்தல் தொழிலைக் குறிப்பதாகக் கொள்ளப்படுகிறது. முன் வலக்கை அபய முத்திரையில் உள்ளது; அது தன்னைப் புகல் அடைந்தாருக்கு அபயம் அளிக்கிறேன் என்று கூறுவது போல் உள்ளதால், அது காத்தல் தொழிலைச் சுட்டிக் காட்டுகிறது. பின் இடக்கையில் உள்ள தீ, அழித்தல் தொழிலைச் சிவபெருமான் மேற்கொண்டுள்ளார் என்பதைக் காட்டுவதாகக் கொள்ளப்படுகிறது. அவரது ஊன்றிய வலக்கால் மறைத்தல் தொழிலைக் காட்டுகிறது. இடக்கால் தூக்கி இருக்க முன் இடக்கை தண்டமுத்திரையாய்த் தூக்கிய காலைச் சுட்டிக் காட்டுகிறது. அதாவது, தனது காலில் அடைக்கலம் அடைந்தவர்கள் அருளப்படுவார்கள் என்று சொல்வதுபோல் உள்ளதால் அது அருளல் தொழிலை எடுத்துக்காட்டுகிறது. இவ்வாறு ஐம்பெருந்தொழில்களையும் ஒருங்கே காட்டும் ஆடல் வல்லான் திருவுருவாகிய சிவபெருமான்தான், முத்தொழிலையும் புரியும் மூவரில் ஆதியும் அந்தமும் அற்ற முழுமுதற் பொருள் என்னுங் கருத்து வலியுறுத்தப்படுகிறது. நமசிவாய என்னும் ஐந்தெழுத்து மந்திரமும் ஆடல் வல்லான் திருவுருவும் ஒன்றே என்பதை உண்மை விளக்கம் வலியுறுத்துகிறது.

சிவபெருமானது நடன வடிவம், அவர் வல்லமை யாவற்றையும் பெற்றவர்; எங்கும் நீக்கமற நிறைந்தவர்; அவர் இன்றி அணுவும் அசையாது என்ற

உண்மைக்கேற்ப எல்லாவற்றையும் இயக்குபவர்; காலத்தைக் கடந்தவர் என்பதையெல்லாம் காட்டுகிறது. அவர் செய்த எட்டு வீரச்செயல்கள் அட்ட வீரட்டம் எனப்படும். திரிபுரங்களைச் சிரித்து எரித்தபின் ஆடிய நடனம் அவரது பேராற்றலைக் குறிக்கிறது. இதனை எல்லாம் வல்ல ஆற்றல் (Omnipotence) என்பர். அவர் எட்டுத் தோள்களையும் வீசி ஆடுவது, எட்டுத்திசைகளைக் குறிப்பதாகவும் அவருடைய நீக்கமற நிறைந்துள்ள தன்மையைக் காட்டுவதாகவும் கொள்ளலாம். இதனை எங்கும் நிறைந்திருத்தல் (Omnipresence) என்பர். வடஇந்தியாவில் ஆடல் வல்லான் வீணையைக் கையில் ஏந்தி நடனம் ஆடுவதைப்போன்று காணப்படுகிறார். வீணை இசைக்கருவிகளையும் இசையையும் மட்டுமின்றி எல்லாக் கலைகளையும் குறிக்கிறது. கூற்றுவனை மாய்த்தபின் அவர் ஆடிய நடனம் காலத்தை வென்றதைக் காட்டும்.

சங்க இலக்கியங்களில் இறைவனின் பாண்டரங்கம், கொடுகொட்டி,காபாலம் என்னும் ஆடல்கள் குறிக்கப் பெறுகின்றன. உமையொருபாகனாக இறைவன் நின்று அச்சம், வியப்பு, விருப்பு, அழகு முதலியன பொருந்த அவுணர்கள் இறந்த போர்க்களத்தில் ஆடியது கொடுகொட்டி; இது காத்தற் பொருளைக் கொண்டது. இறைவன் திரிபுரம் எரியும் காலத்துக் கைக்கொட்டி ஆர்த்து ஆடியதால் அப்பெயர் பெற்றது. இது கொட்டிச் சேதம் என்று சிலப்பதிகாரத்தில் கூறப்படுகிறது.

ஆடல் வல்லானை அகத்தேயும் புறத்தேயும் கண்டு இன்புற்ற திருமூலர், இறைவனது கூத்தினைச் சிவானந்தக் கூத்து, சுந்தரக் கூத்து, பொற்பதிக் கூத்து, பொற்றில்லைக் கூத்து, அற்புதக் கூத்து என ஐந்து வகையாகக் காட்டுகிறார். இவற்றையன்றித் திருக்கூத்துத் தரிசனம் என்னும் தலைப்பில், ஆடல் வல்லானின் திருக்கூத்தின் தத்துவத்தையும் திருவுருவ அமைப்பையும் நன்கு விளக்குகிறார். காரைக்காலம்மையார் தமது திருவாலங்காட்டு முத்த திருப்பதிகத்தில் 'அறவா நீ ஆடும்போதுன் அடியின் கீழ் இருக்க வேண்டும்' என்று ஆடல் வல்லானைப் பரவுகிறார். தேவார ஆசிரியர்களும் தில்லைக் கூத்தனைத் தெய்வத் தமிழில் தித்திக்கப் பாடுகிறார்கள். சேரமான் பெருமாள் நாயனார் பொன் வண்ணத்தந்தாதியில் ஆனந்தக்கூத்தனின் அழகு வெள்ளத்தில் நம்மைத் திளைக்கச் செய்கிறார். பட்டினத்தார் பாடியுள்ள கோயில் நான்மணிமாலையும் நம்பியாண்டார் நம்பிகளின் திருப்பண்ணியர் திருவிருத்தமும் ஆடல்வல்லானை அனுபவித்துப் பாடியனவாகும். தில்லைக் கூத்தனின் இன்பவெள்ளமே பெரியபுராணமாகும்.

ஆடுவதில் வல்லான்-ஆடல் வல்லான் எனப்பட்டார். இப்பெயரை உலகறியச் செய்தவன் மாமன்னன் முதலாம் இராசராசன். அவன் தன் நாட்டில் பயன்படுத்தப்பட்ட எடைக் கல்லுக்கும் மரக்காலுக்கும் ஆடல் வல்லான் எனப் பெயரிட்டு அழைத்தான். கோயில் அமைப்பில் ஆடல் வல்லானுக்கு என்று தனியாக மண்டபம் கட்டுவது இவன் காலத்தில்தான் தொடங்கியது. இவன் காலம் முதற்கொண்டு, ஆடல் வல்லானின் செப்புப் படிமங்கள் உன்னத வளர்ச்சி பெற்று உலகப்புகழ் அடைந்தன.

சிவபெருமான் 108 வகை நடனங்களை ஆடியதாகக் கூறப்படுகிறது. பரத நாட்டிய நடன வடிவங்களைச் சிதம்பரம் நடராசர் கோயில், கும்பகோணம் சாரங்கபாணி கோயில், விருத்தாசலம் விருத்தகிரீசுவரர் கோயில், திருவண்ணாமலை அருணாசலேசுவரர் திருக்கோயில், தஞ்சாவூர்ப் பெரிய கோயில் ஆகியவற்றில் காணலாம். இந்தியாவில் முதன்முதலாகத் தஞ்சாவூர்ப் பெரியகோயிலில்தான் நடன வடிவங்கள் கல்லில் செதுக்கப் பட்டன என்பது ஆராய்ச்சியாளர் முடிவு.

பல்லவர் காலத்துக் குடவரைக் கோயில்களில் அமைக்கப்பட்ட ஆடல்வல்லான் வடிவங்களில் திருவாசி இல்லை. காலடியில் முயலகன் இல்லை. திருவாசியும் முயலகனும் அமைப்பது பிற்காலத்தில் ஏற்பட்ட வளர்ச்சி என்பது அறிய முடிகிறது. ஆடல் வல்லானுக்குச் சிறப்பாக அமைந்த அம்பலங்கள் ஐந்து. அவை திருவாலங்காடு - மணி அம்பலம் (இரத்தினசபை) சிதம்பரம்-பொன் அம்பலம்: மதுரை-வெள்ளியம்பலம்; திருநெல்வேலி – தாமிர அம்பலம்; திருக்குற்றாலம் – சித்திர அம்பலம் என்பனவாகும்.

இவ்வாறாக உலகப் புகழ் பெற்ற ஆடல் வல்லானின் அற்புதத் திருவுருவம் கலை உலகில் மிக உயர்ந்த இடத்தில் வைத்துப் போற்றப் பெறுகிறது. சமயம், கலை, தத்துவம், அறிவியல் ஆகிய பல துறையினரும் போற்றும் வகையில் அமைந்த அரிய படைப்பு ஆடல்வல்லான் திருவுருவம். இரா.கி.

**ஆடானை** தேவாரப் பாடல்பெற்ற பாண்டி நாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. இன்று திருவாடானை என்று வழங்கப்படுகிறது. இராமநாதபுரத்திலிருந்தும் பரமக்குடியிலிருந்தும் சென்று இத்தலத்தினை அடையலாம். திருஞானசம்பந்தர் இத்தலத்தினைப் பாடியுள்ளார். நீல நிறமுடைய இரத்தினத்தால் சிவலிங்கம் இயற்றிச் சூரியன் வழிபாடு செய்த தலம் இதுவாகும். வருணனின் புதல்வர் துருவாச முனிவரை அவமதித்தமையால் ஆட்டுத் தலையும் யானை உடம்பும் பெறுமாறு அவர் இட்ட சாபம் இத்தலத்தில் நீங்கியது என்பது புராண

வரலாறு. இறைவன் பெயர் ஆடானை நாதர்; இறைவி பெயர் அம்பாயிரவல்லி. திருக்கோயிலில் சூரிய தீர்த்தம் உள்ளது. தலமரம் வில்வமாகும். இத்தலத்திற்கு அருணகிரிநாதர் பாடிய திருப்புகழும் உண்டு.

**ஆடிப்பூரத் திருவிழா** என்பது தமிழகக் கோவில்களில் கொண்டாடப்படும் திருவிழாக்களுள் ஒன்று. ஒவ்வோர் ஆண்டும் ஆடித்திங்கள் பூரநாளில் இவ்விழா நடைபெறும். இவ்விழா உமா தேவியை வழிபடுவதற்குக் கொண்டாடப்படுவதாகும். ஆடித் திங்கள் பூரநாளில் சூடிக் கொடுத்த நாச்சியாராகிய ஆண்டாள் பிறந்தாள். சிவில்லிபுத்தூரில் பூரத் திருவிழா சிறப்பாகக் கொண்டாடப்படும். அட்டசித்திகளையும் பெற நன்முயற்சிகளைத் தொடங்கும் நன்னாள் ஆடிப்பூரம். நிலமகளே ஆடிப்பூரத்தில் ஆண்டாளாக அவதரித்தாள் என்றும் கூறுவர். "திருவாடிப் பூரத்தில் செகத்துதித்தாள் வாழியே" என்னும் வாழ்த்துரையினை வைணவ உலகம் நன்கு அறியும்.

ஆடிப்பூர நன்னாள் சக்தியை உவப்பிக்கும் திருநாளாகும். அதிலும் ஆடிப்பூரநாள் வெள்ளிக் கிழமையில் அமைந்துவிட்டால் மிகமிகச் சிறப்புடையதாகக் கருதப்படுகிறது. வி.பா.

**ஆடிப் பெருக்கு** என்னும் விழா ஒவ்வோர் ஆண்டும் ஆடித் திங்கள் பதினெட்டாம் நாள் கொண்டாடப்படுவதாகும். தென்மேற்குப் பருவக் காற்றினால் மேற்குத் தொடர்ச்சி மலையில் நன்கு மழை பொழியும். அதன் பயனாகக் காவிரி, வைகை முதலிய ஆறுகளில் நீர் பெருகி ஓடும். அதனைத் தமிழ்நாட்டு மக்கள் மகிழ்ச்சியுடன் வரவேற்று விழா எடுக்கிறார்கள். அவ்விழா ஆடிப்பெருக்குவிழா, பதினெட்டாம் பெருக்கு என்று சிறப்பிக்கப்படுகிறது.

வெள்ளம் பெருகி ஓடும் ஆடிப் பதினெட்டாம் நாளன்று ஆடவர், பெண்டிர், சிறார் அனைவரும் ஆற்றங்கரைக்குச் சென்று நீரிலும் கரையிலுமாக நின்று மன மகிழ்ச்சியோடு விளையாடுவர். பின்னர்த் தாம் கொண்டு வந்த உணவுவகைகளைக் களிப்புடன் உண்டு மகிழ்வர். இது பழந்தமிழ் இலக்கியங்கள் கூறும் "புனலாடல்" அல்லது "புதுப்புனல் விழா" ஆகும்.

தமிழ்நாட்டில், சிறப்பாகச் சோழ நாட்டில், ஆண்டுதோறும் "காவிரிப் புதுப்புனல் விழா" நடைபெறும். சோழப் பேரரசன் கரிகாலன் தம் அமைச்சர்களுடனும் அவையோருடனும் சுற்றத்தாருடனும் 'கழார்' என்னும் ஊரிலுள்ள காவிரித்துறையில் நடைபெறும் "காவிரிப் புதுப்புனல் விழா" வினைக் காணச் சென்றான். இம்மன்னன் புதுப்புனல் விழாக் கொண்டாடிய செய்தியினை இளங்கோவடிகள், தாம் இயற்றிய சிலப்பதிகாரத்தில் குறிப்பிட்டுள்ளார் (சிலப். கட. கா. 155-165).

காவிரிப் பூம்பட்டினத்தில் நடந்த இந்திரவிழாவிற்குப் பின் மக்கள் கடலில் நீராடச் சென்றனர். அப்பொழுது கடற்கரையில் ஏற்பட்ட ஆரவாரம், கரிகால் வளவன் காவிரிப் புதுப்புனல் விழாக் கொண்டாடும் சிறந்த நாளில் எழும் ஆரவாரத்தைப் போன்றது என்று இளங்கோவடிகள் கூறியுள்ளார்.

ஆட்டனத்தி காவிரி வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டுப் பிறகு உயிருடன் மீண்டமை ஆடிப் பெருக்கை ஒட்டிய காவிரிப் புதுப்புனல் விழாவில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியாகும். இது சங்க காலத்திலேயே கதை வடிவம் பெற்றது. பரிபாடலில் வைகையில் வந்த புது வெள்ளத்தில் ஆடவரும் பெண்டிரும் குழுக்களாகச் சென்று நீராடும் நிகழ்ச்சிகள் குறிப்பிடப்பட்டுள்ளன. அ.கா.ப.

**ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்** சங்க காலத்துச் சேர வேந்தருள் ஒருவன். சேரநாட்டை ஆண்டு வந்த உதியஞ்சேரல், அந்துவஞ்சேரல் என்னும் இரு அரச மரபினருள் இவன் உதியஞ்சேரல் மரபினைச் சேர்ந்தவன். சேரநாடு, குடநாடு, குட்டநாடு என்னும் இருபிரிவுகளாகப் பிரித்தாளப்பட்டு வந்தது. குடநாட்டு வேந்தனான இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கு மக்கள் மூவர். அவருள் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன், சோழன் மணக்கிள்ளியின் மகள் வழிப்பிறந்தவன். வேளாவிக் கோமான் பதுமன் என்பவன் மகள் வழியாகப் பிறந்தவர்கள் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலும் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனுமாவர். களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலின் தம்பி, ஆடு கோட்பாட்டுச் சேரலாதன். இவன் குடநாட்டுக் கடற்கரையில் இருந்த தொண்டியைத் தலைநகராகக் கொண்டு முப்பத்தெட்டாண்டுகள் அரசு வீற்றிருந்தான். தண்டகாரணியம் என்னும் இடத்தில் வடநாட்டவரால் கவர்ந்து செல்லப்பட்ட வருடைகளை மீட்டுத் தொண்டியில் சேர்ப்பித்ததால் இப்பெயர் பெற்றான். பார்ப்பனர்களுக்குக் கபிலைப் பசுக்களையும் குடநாட்டு ஊர்களுள் ஒன்றினையும் கொடுத்து, 'வானவரம்பன்' என்ற சிறப்புப் பெயரைப் பெற்றான். வானவரம்பன் என்பது சேர அரசர்களுக்குப் பொதுவாய் அமைந்த பெயராயினும், இவன் அதனைத்தனக்குரியதாகஆக்கிக்கொண்டான். சேரர் படைகளுள் விற்படை சிறந்தது; சேரவேந்தர் தம் கொடியில் வில்வடிவினைப் பொறித்தனர். இவனை 'வில்லோர் மெய்ம்மறை' என்று பதிற்றுப் பத்துப் பாராட்டுகிறது. மேலும் இவன் மழவர் மெய்ம்மறை, சான்றோர் மெய்ம்மறை (58;11),

செல்வர் செல்வன் என்றெல்லாம் பாராட்டப் படுகிறான். இவன் சேரர்க்குரிய எல்லாப் பொதுப் பெயர்களையும் தனக்குரிய சிறப்புப் பெயர்களாக ஆக்கிக் கொண்டான் என்பது தெரிகிறது.

சேர வரலாற்றைச் சிறப்பித்துக் கூறும் பதிற்றுப் பத்தில் ஆறாம்பத்து இவனைப் பற்றியது. ஆறாம் பத்தின் பதிகம் இவன் வரலாற்றைத் தொகுத் துரைக்கிறது. இவன் ஆறாம்பத்தில் தன்னைச் சிறப் பித்துப் பாடிய காக்கை பாடினியார் நச்செள்ளை யாருக்குக் 'கலன் அணிக' என்று கூறி ஒன்பது காப் (துலாம்) பொன்னும், நூறாயிரம் காணமும் (பொற் காசு) கொடுத்து அவரைத் தன் அவைக்களப் புலவராக ஆக்கிக்கொண்டான். சே.இரா.

**ஆடுதுறை மாசாத்தனார்** சங்க காலத்தில் வாழ்ந்த புலவர்களுள் ஒருவர். ஆடுதுறையில் வாழ்ந்த இப்புலவர் பெயர் மாசாத்தன் என்பதாகும். ஆடு துறை என்னும் பெயரில் காவிரியின் தென்பகுதியில் ஒன்றும், வடபகுதியில் ஒன்றும், வடவெள்ளாற்றங் கரையில் ஒன்றுமாக மூன்று ஊர்கள் உள்ளன. மூன்றும் சிவத்தலங்களாகும். முன்னவை இரண்டும் தென்குரங்காடுதுறை வட குரங்காடுதுறை என்னும் பெயர்களில் தேவாரப் பாடல் பெற்றுள்ளன. ஏனையது புராணச் சிறப்புடையதாகும். இப்புல வரது ஒரேபாடல் புறநானூற்றில் 227-ஆம் பாட லாக அமைந்துள்ளது. பொதுவியல் திணையில் கையறுநிலைத் துறையில் உள்ள அப்பாடல், சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவன் இறந்தபோது இரங்கிப் பாடப்பட்டதாகும். 'கூற்றுவனே, அறி யாமையால் விதையினைக் குற்றி உண்பவன் போல, வளவன் உயிரைக் கொண்டமையால் நீ அறிவிலி யானாய்' என்னும் கருத்தில், 'நனிபேதையே நயனில் கூற்றம் விரகின்மையின் வித்தட்டுண்டனை' என்று ஏங்கிக் கூறும் கூற்றில் அரசன் இறப்பினால் உண்டாகிய அவலத்தின் ஆழம் புலனாகிறது.

**ஆடுபுலியாட்டம்,** காண்க: ஆட்டங்களும் விளையாட்டுகளும்.

**ஆடை அணிகள்:** மாந்தரின் அடிப்படைத் தேவை உணவு, உடை, உறைவிடம் ஆகிய மூன்று மாகும். இவற்றுள் மானத்தைப் பெரிதும் காப்பது ஆடையாகும். "கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம் உண்பதூஉம் இன்றிக் கெடும்" என்ற வள்ளுவர் வாக்கு இதனை உறுதிப்படுத்துகிறது. 'ஆடையில்லா மனிதன் அரைமனிதன்', 'ஆள் பாதி, ஆடை பாதி' என்ற முதுமொழிகளும் ஆடையின் சிறப்பை விளக்குகின்றன.

இயற்கையழகை மேலும் அழகுபடுத்துவதற்கு ஆடையும் அணிகளும் பெரிதும் துணைபுரிகின்றன. மானவுணர்வுக்குத் துணையாதல், அழகினை மிகுதிப் படுத்தல், தட்ப வெப்ப நிலையினின்றும் பாது காத்தல், தன் தகுதி இயம்பல், கலை உணர்வினை எடுத்துக் காட்டுதல் போன்ற பல்வேறு பயன்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது ஆடை. அது நாட்டின் தட்ப வெப்பம் உற்பத்தியாகும் மூலப் பொருள், மனவியல், சமுதாய நிலை, உடலின் தன்மை, பொருளாதாரம் ஆகிய பல நிலைகளுக்கு ஏற்ப அமையும் பொழுது, மக்களுக்கு மேம்பாடும் நிறைவும் ஏற்படுகின்றன. ஆடைகளோடு சேர்த்து அழகிய பொருத்தமான பல்வேறுபட்ட அணிகளும் அழகுக்கு அழகூட்டுகின்றன.

ஆதி மக்கள், தமக்கு வேண்டிய ஆடைகளைத் தோல், மரப்பட்டை இலை ஆகியவற்றால் செய்து அணிந்து வந்தார்கள். விவிலிய நூலில், உலகத்தின் முதல் படைப்புகளான ஆதாமும் ஏவாளும் தங்கள் நிருவாணத்தை மறைக்க இலைகளைப் பயன் படுத்தியதாகக் குறிப்பு உள்ளது. இராமாயணம், இராமன் காட்டிற்குச் சென்ற பொழுது மரவுரி அணிந்து சென்றதைக் கூறுகிறது. ஆப்பிரிக்காவில் மரவுரி இடுப்பாடை ஆண்களுக்கும், பனை ஓலை கள்ளாலாகிய சிறு பாவாடை பெண்களுக்கும் ஆடை யாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஆசுத்திரேலியப் பழங்குடி மக்கள் மரப்பட்டையாலாகிய ஒரு கச்சையை ஆடையாக அணிந்துள்ளார்கள். வட அமெரிக்கச் சமவெளியில் வாழும் சிவப்பு இந்திய மக்களும், ஆடுமாடுகளின் தோல்களினால் ஆகிய ஆடையை உடுத்தியுள்ளார்கள். பனிக் கட்டியும் கடுங்குளிரும் உள்ள வட துருவத்தை ஒட்டிய நாடு களில் எசுக்கிமோ என்ற மக்கள் இன்னும் திமிங்கிலத் தோலினாலாகிய ஆடைகள் அணிந்து உடலைக் கதகதப்பாக வைத்துக் கொள்ளுகிறார்கள்.

இந்தியாவிலுள்ள காடர்களும், கோண்டர்களும் பல பழங்கால இனத்தவர்களும் திருமணம், ஆடல் போன்ற சடங்குகளில் தமக்கே உரிய தோல், மர ஆடைகளுடன் எலும்பு, பல் ஆகியவற்றால் ஆன அணிகளையும் அணிந்து கொள்கிறார்கள். வட கிழக்கு மலைப் பகுதி இனமக்களும் தெற்கே தொதவ ஆண்களும் பெண்களும் உடல் முழுவதும் மறையும்படி தாங்களே நெய்த அழகிய சமுக் காளங்களை அணிந்து கொள்ளுகிறார்கள். இந்தியா வின் எல்லா மாநிலங்களிலும், சிறப்பான ஆடைகள் ஆண்களுக்கும் பெண்களுக்கும் வழக்கத்தில் உள்ளன. அவை அணியப்படும் தோற்றத்திலிருந்தே மாநிலங் களைக் கண்டு கொள்ளலாம்.

முதன் முதலில் கூடை பின்னுவதிலிருந்துதான் ஆடை நெய்யும் தொழிலே தெரிந்தது. நூற்றலுக்கு

வேண்டிய கச்சாப் பொருள்களும் கண்டுபிடிக்கப் பட்டன. முதலில் இரண்டு குச்சிகள் மட்டுங் கொண்ட நெசவுத்தறி இருந்தது. ஆனால், இன்று பல நுட்பங்களோடு பொருந்திய தறிகளையும் இயந்திரங்களையும் கண்டு பிடித்துப் பல வண்ணங் கள், ஓவியங்கள் பொருந்திய துணிகளை அழகு ததும்பும்படி நெய்கின்றனர்.

பழங்கால மக்கள் குறைந்த அளவு ஆடைகளை அணிந்து கொண்டாலும் தங்களை அழகுபடுத்திக் கொள்வதற்குச் செம்மை, மஞ்சள், வெண்மை, பழுப்பு நிறமான இயற்கை மண்ணைப் பூசிக் கொண்டார்கள். ஐரோப்பாவில் வாழ்ந்த பழங்கற் கால வேடர்கள் இம்முறையைக் கையாண்டு வந்த தற்குச் சான்றுகள் உள்ளன. ஆசுத்திரேலியாவின் ஆதிக்குடிகள் "கராபெரி" என்னும் நடனத்தின் போது உடலின் மீது நன்றாகத் தெரியும்படி பட்டை பட்டையாகவும், புள்ளிபுள்ளியாகவும் பல வகை நிறங்களைக் கொண்டு சித்திரங்களைத் தீட்டிக் கொள்வார்கள். அமெரிக்கச் சிவப்பு இந்தியர் களும் வெற்றியின் அறிகுறியாக நடனமாடும்போது ஒரு வித நிறத்தால் உடலை அழகுபடுத்திக் கொள்ளு கிறார்கள். பழங்காலந் தொட்டுக் கீழ் நாடுகளில் விரல்கள், உள்ளங்கை, பாதங்கள் இவற்றை மரு தோன்றி இலையால் செந்நிறமாக்கிக் கொள்வது வழக்கம். வாசனைக்காகச் சந்தனம், நறுமணமுள்ள பட்டைகள், மஞ்சள் போன்ற கிழங்குகள் ஆகிய வற்றை அரைத்து முகத்திலும் உடலிலும் பூசிக் கொள்ளுகிறார்கள். பூசைக்கும் பெரும் அளவில் நெற்றிக்கும் குங்குமம், மஞ்சள் பொடி ஆகியவற் றைத்தான் இந்தியர் பயன்படுத்துகின்றனர்.

பச்சை குத்தி உடலை அழகு செய்வதும் உலகம் முழுவதும் வழக்கமாயிருக்கிறது. புள்ளிகள், கோடு கள் மலர்கள், பறவைகள், விலங்குகள், கோலங்கள் முதலானவையும் பச்சை குத்துவதில் அடங்கி யுள்ளன. நெற்றியிலும் கையிலும் புறங் கையிலும் விரல்களிலும் பச்சை குத்திக் கொள் வது இந்தியப் பெண்களிடையே பெரு வழக்காயிருந் திருக்கிறது. இன்று ஆண்களும், பல காரணங்களுக் காக மனித உருவங்களையும் சின்னங்களையும் தங்கள் கையில் பச்சை குத்திக் கொள்கிறார்கள்.

ஆதிக்குடிகள் கிளிஞ்சல்களையும் மணிகளையும் மலர்களையும் இறகுகளையும் தலையிலும் தலைப் பாகையிலும் அணிகளாக அணிந்து அழகு செய்து கொள்கிறார்கள். பெண்கள் உச்சி முதல் உள்ளங் கால் வரையிலும் கூந்தல் அணிகள், கழுத்து வளை யங்கள், மூக்கில் நத்து முதலிய வளைகள், காதணி கள், கடகங்கள், கைக் காப்புகள், கால்அணிகள் முதலியவற்றால் அழகு செய்து கொள்கிறார்கள். தேங்காய் ஓடு, கிளிஞ்சல், செம்பு ஆகியவற்றாலாகிய வளையல்களும் புல்லாலும் நாராலும் செய்த காலணிகளும் இடம் பெறுகின்றன. ஆதிக் குடிகள் சமுதாயத்தில் ஆண்களும் காதுகளையும் மூக்கின் நடுச்சுவரையும் நகை அணிவதற்காகத் தொளைத்துக் கொள்வதோடு, மோதிரங்களையும் கைக் கடகங் களையும் அணிந்துகொள்கிறார்கள். இன்று தந்தம், பவளம், வெள்ளி, பொன், விலையுயர்ந்த கற்கள் ஆகியவற்றால் பலவிதமான அணிகலன்கள் செய்து அவற்றால் பெண்கள் உள்ளங்கால் முதல் உச்சிவரை தங்களை அழகு படுத்திக் கொள்கிறார்கள். இக் காலச் சூழ்நிலையில், இவ்வணிகலன்கள் சமுதாயத் தில் அவர்களுடைய நிலையையும் செல்வச் செருக் கையும் வெளிக் காட்டுவனவாய் இருக்கின்றன.

ஒவ்வொரு காலத்து ஆடை அணிகளை அறிந்து கொள்வதற்கு அவ்வக்காலத்துத் தோன்றிய சிற்பங் கள், சித்திரங்கள், இலக்கியங்கள் பெரிதும் துணை புரிகின்றன. இவற்றுள் சித்திரங்கள், சிற்பங்கள் ஆகியன காட்சிச் சான்றாகப் பயன்படுகின்றன. இலக்கியங்கள் ஆடை வரலாறு, ஆடையுடுத்தும் முறைகள், ஆடையோடு தொடர்புடைய மாந்தர் வாழ்வியற் கூறுகள் ஆகிய பல உண்மைகளை விளக்கி நிற்கின்றன. சிற்பங்கள் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்துதான் கிடைக்கப் பெற்றுள்ளன. வரலாற்றுக் காலத்திற்கு முந்திய குகைச் சிற்பங் களின் வடிவங்கள், பெரும்பாலும் ஆடையின்றியே காணப்படுகின்றன. சிந்துவெளி நாகரிகக் காலத்திய சிற்பங்கள் பெரும்பாலும் ஆடையின்றியும் சில ஆடை போர்த்தியும் காணப்படுகின்றன. ஆடவர் கள், சீர்திருத்தாத தலைப்பாகை, முழங்கால்வரை தொங்கும் சுருக்கங்களுள்ள ஆடை, பூவேலை கொண்ட கயிற்றினால் செய்யப்பட்ட இடைக்கச்சு ஆகியவற்றையும், பெண்கள் புடவைகளையும் கி.மு. 200-முதல் கி.பி. 400 வரை அணிந்துள்ளனர்.

வரலாற்றுக் காலத்திற்கு முன், ஆதிச்சநல்லூரில் தோண்டி எடுக்கப்பட்ட நகைகளும், பொம்மைகளின் மேல் காணப்படும் நகைகளும் அக்கால அணிகலன் களைத் தெளிவாக உணர்த்துகின்றன. பண்டைக் கால மக்களின் ஆடை அணிகளைப் பற்றிச் சங்க இலக்கியங்கள் சிறப்பாக எடுத்துக் காட்டுகின்றன. குழந்தைகள், போர்வீரர்கள், காவலர், முனிவர், துறவியர், புலவர், பொதுமக்கள், மகளிர் ஆகியோர் களுக்குத் தனித் தனி ஆடைகள் இருந்தன. குழந்தை கள் கிண்கிணியும் இடையிலேமணிகளாலாகியவடமும் பூந்துகிலும் அணிந்த சிறப்பையும் காணலாம். நெற்றியில் சுட்டியும், கழுத்தில் ஐம்படைத்தாலி யும், இடுப்பில் அரைஞாணும் சிறுவர் அணிந்தனர். அரசர்கள் நிலந்தோயும் அளவிற்குத் துகில் அணிந்

23, 91

தனர். இன்று துண்டு என்று வழங்கப்படும் மேலாடையை இடத்தோளில் அணிந்திருந்தனர்.

மெய்காப்பாளர் கஞ்சுகத்தையும், வாயிற்காப்பாளரும் துறைக் காப்பாளரும் சட்டையையும் அணிந்தனர். போர் வீரர்கள் கச்சை, கவசம் ஆகிய இரண்டையும் அணிந்தனர். இவற்றோடு கால்களுக்கும் கைவிரல்களுக்கும் கவசம் அணிந்தனர். முனிவர்கள் சங்ககாலம் முதல் இன்றுவரை சீரையுடனே காட்சி அளிக்கின்றனர். புலவர்கள் சிதார் அணிந்துள்ளனர். "பொன்னிற்றிகழும் பொலம்பூ வாடையன்" என்று மணிமேகலை ஆடை வகையினைக் குறிப்பிடுகிறது. துறவியர்கள் அணியும் காவியாடையை இன்றும் காணலாம்.

பொதுமக்கள் உடைகளைப் பொறுத்த அளவில், செல்வர்கள், தொழிலாளர்கள், உழைப்பாளிகள் என்ற பாகுபாடுகளுக்கேற்ப ஆடைகளைப் பார்க்கலாம். உயர் மக்களின் உடை கலிங்கம், உத்தரீயம், ஒள்ளிய பூந்தொழில்களையுடைய ஆடை என்று மதுரைக்காஞ்சியும், கீழ்நிலை மாந்தர் உடை காழகம், தோல், புலியின் வால் ஆகியவை என்று கம்பராமாயணமும் கூறுகின்றன. இடையர்தம் ஆடையாகத் துவராடையையும் ஆறலைகள்வர் செந்துவராடையையும் அணிந்துள்ளனர்.

பெண்டிர் ஆடைகளும் அணிகலன்களும் என்றும் தனிச் சிறப்பு வாய்ந்தவை. பெண்களை அரசியர், உயர்நிலை மகளிர், தாழ்நிலைப் பெண்கள், துறவியர் என்ற நிலைகளில் காணலாம். அரசியர் பூந்துகில், கலிங்கம் ஆகியவற்றையும், செல்வமகளிர், பட்டு, துகில், கலிங்கம், தூசு, தழை, மடி, கூறை ஆகிய உடைகளையும் அணிந்துள்ளனர். பெண்கள், துகிற் பட்டுடன் பட்டுடையும் அணிந்துள்ளனர் என்று பெருங்கதை கூறுகிறது.

தழை ஆடையினைப் பெண்கள் அணிந்ததைச் சங்க இலக்கியம் குறிக்கிறது. பட்டினப்பாலை; பட்டாடை அணிந்த சிறப்பைக் கூறுகிறது. பூங்கரை நீலம் என்ற உடையினைப் புடை தாழ உயர்நிலை மகளிர் உடுத்தியிருந்தனர் என்று சங்க இலக்கியம் கூறுகிறது. விறலியரும் வேலை செய்யும் மகளிரும் துகிலையும், வேட்டுவப் பெண்கள் தழையையும் அணிந்துள்ளனர். ஆடைகளைப் போன்றே அணிகளும் மாந்தர் வாழ்வில் பெரும்பங்கு கொள்ளுகின்றன. பெருஞ் செல்வர்கள் முத்து அல்லது வைரங்கள் கொண்ட ஆரங்களையும் பொற் கடகங்களையும் அணிந்தனர். அரசர்களும் சிற்றரசர்களும் கால்களில் மணிகள் கட்டிய வீரக் கழல்களை அணிந்தனர். அது மட்டுமல்லாமல் சங்குகளாலும் மணிகளாலும் ஆன அணிகலன்களையும் அணிந்தனர். மாதவி மேகலையை அணிந்த சிறப்பைச் சிலப்பதிகாரத்தில் காணலாம்.

அவள் கால்விரல்களுக்கு மோதிரம், பீலி, அடிகளில் சிலம்பு, பாடகம், கைகளில் முத்து, பவளம், சங்கு, பொன் ஆகியவற்றால் செய்யப்பட்ட வளையல்கள், கழுத்தில் சங்கிலி, தலையில் தலையணிகள் ஆகியன அணிந்ததையும் அது சுட்டுகிறது.

சீவக சிந்தாமணியில், பெண்கள் சிலம்பு அணிந்ததையும், பட்டினப்பாலையில் மகளிர் காதில் குழை அணிந்ததையும், மணிமேகலையில் அணிகலன் அணிந்ததையும், சிலம்பில் வளை அணிந்ததையும் மேகலை அணிந்ததையும் காணலாம்.

திருவெம்பாவை, பெண்டிர் குழை அணிந்ததைச் சுட்டுகிறது. ஆண்டாள் இறைவனை நினைத்து மனமுருகிப் பாடும் பொழுது தங்களுக்குச் சூடகம், தோள்வளை, தோடு, செவிப்பூ, பாடகம், போன்ற பல அணிகள் கிடைக்கும் என்று கூறுகிறாள். குற்றாலக் குறவஞ்சியும் மகளிர் சிலம்பும் தண்டையும் அணிந்த செய்தியைக் கூறுகிறது. ஆடைகளை மக்கள் காலத்திற்கேற்றவாறு அணிந்த தன்மையையும் அறியலாம். சிலப்பதிகாரம், குளிர்காலத்தில் சிவப்புப் பட்டாடை உடுத்திய சிறப்பை விளக்குகிறது. மேலும் குளிர் காலத்தில் கம்பளி ஆடை அணிந்த தன்மையினையும் அது குறிக்கிறது.

இன்று பகலாடை, இரவு ஆடை என்ற பழக்கம் மேனாடுகளிலிருந்து வந்திருப்பதாகத் தோன்றினாலும் இரவில் பட்டு நீக்கித் துகிலுடுக்கும் பெண்களைப் பட்டினப்பாலையில் காணலாம். அதே போன்று பிறப்பு, மணம், துறவு ஆகிய சடங்குகளுக்கும் ஏற்றவாறு உடை அணிந்தனர் என்பதையும் நாம் அறியலாம். சான்றாகப் பிறந்த நாளன்று வெள்ளணி அணிவர். இன்றும் பிறந்த நாளன்று புத்தாடை அணிந்து மகிழ்கிறார்கள். திருமணத்தின்போது புத்தாடைஅணிவது பல ஆயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்தே இருந்துவரும் வழக்கமாகும்.

துன்பத்தைக் கொடுக்கும் இறப்புச் சூழ்நிலையில், ஆடையின் பயன்பாட்டை இருநிலைகளில் பார்க்கலாம். ஒன்று இறந்தவர்க்குக் கோடி எடுத்துப் போடுதல் வழக்கமாக இருக்கிறது. அந்நிலை இன்றும் தொடர்ந்து வருகிறது. தங்களுக்கு உடுப்பதற்கு இல்லை என்றாலும் நீத்தார் கடமை செய்ய வேண்டுமென்ற நோக்கத்தோடு இறந்தவர்களுக்குப் புத்தாடை போடுவதைத் தவறாது கடைப்பிடிக்கின்றனர். இன்றும் மக்கள் குளிர்காலங்களில்; கம்பளியால் தைக்கப்பட்ட பல வண்ணங்களிலும் வடிவங்களிலும் அமைந்த கம்பளிச் சட்டைகள், போர்வைகள்; சால்வைகள்; கையுறை, காலுறை ஆகியவற்றை அணிகிறார்கள். இக்காலத்தில் மகளிர் பொழுது போக்கிற்காகவும் குடிசைத்தொழிலாகவும் கம்பளிச்

அமராவதிச் சிற்பங்களில் ஆடைகள்





கி.மு. 2 ஆம் நூற்றாண்டு





கி.பி. முதல் நூற்றாண்டு





கி.பி. 2 ஆம் நூற்றாண்டு





கி.பி. 3 – 4 ஆம் நூற்றாண்டு

ஆடைகள் – சாளுக்கியச் சிற்பங்களில்






கி.பி. 5-7 ஆம் நூற்றாண்டு

## ஆடைகள்






பல்லவர் கி.பி. 7-9 ஆம் நூற்றாண்டு






சோழர் கி.பி 9-13 ஆம் நூற்றாண்டு






விசயநகர் கி.பி. 13-16 ஆம் நூற்றாண்டு



சங்கு வளையல்கள்






பல்லவர்






சோழர்


கிரீடங்கள்


விசயநகர் ஒய்சாளர்




முற்கால அணிகள்




பல்லவர்




சோழர்



விசயநகர்



இக்காலம்

அணிகளைக் காட்டும் சிற்பங்கள்

## தலையணிகள்

(இக்காலம்)



சந்திரவில்லை





நாகவில்லை



முன்வில்லை



முன்வில்லை

பின்னல் அணி



முன்வில்லை



இராக்கடி



முன்வில்லை















குண்டலங்கள்














ஆரங்கள்

சட்டைகள் பின்னுகிறார்கள். மழைக் காலங்களில் மழையிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ளு தற்கும் பள்ளி, கல்லூரி, அலுவலகம் ஆகியவற்றிற் குச் செல்லுவதற்கும் மழைக்காப்புடைகளும், தொப்பிகளும் அணிகிறார்கள். இன்று பள்ளி செல் லும் சிறுவர்கள் சீருடை அணிந்து செல்கிறார்கள். அது போன்று அலுவலகங்களில் வேலை செய்வோர் சீருடை அணிகின்றனர்.

கணவனை இழந்து வாழும் கைம்பெண்டிர்கள் மங்கல அணியை நீக்கிப் பின் ஏனைய அணிகலன் களையும் துறந்து குங்குமம், சாந்து இழந்து, கழுத் தினைப் போர்த்திக் கொண்டு, மிக எளிமையாக இருப்பார்கள். இன்றும் கணவனை இழந்த பெண் கள் அணிகலன்களின்றி வெள்ளாடை உடுத்து கிறார்கள்.

துறவற வாழ்க்கையில் ஈடுபட்டோரின் ஆடை தனித்தன்மையுடையது. அவர்கள் ஆடையே மக்க ளிடையே பெருமதிப்பைக் கொடுக்கும் தன்மையுடை யது. துறவிகள் காவி உடை அணிகின்றனர். இன் றும் பெண் துறவிகளும் காவி உடை அணி கிறார்கள்.

இவ்வுலக இன்பத்தைப் பெற்ற மனிதர் வீடு பேற்றைப் பெற வேண்டுமென்ற நோக்கோடு இறை வனை வழிபட்டனர். அவ்வாறு இறைவனை வழிபட உடலைத் தூய்மை செய்து ஆடைகளை அணிந் தனர். இன்றும் இந்துக்கள் நீராடி, ஈர ஆடையுடன் இறைவனை வணங்குகின்றனர். இசுலாமியர் வெண் ணிற ஆடை அணிகின்றனர். கோயிலுக்குப் போகும் போது தூய்மையான நூற்புடவை அல்லது பட்டுப் புடவை அணிந்து செல்கின்றனர். காவடி எடுப் போர் காவி ஆடையுடன் செல்லுகின்றனர். தீ மிதித் தலுக்கு மஞ்சள் ஆடை அணிகின்றனர். ஐயப்ப பக்தர்கள் நீலம், அல்லது கருமை நிற ஆடையினை உடுத்துகின்றனர்.

ஆடை அணிகளை அன்பளிப்பாகக் கொடுக்கும் நிலையையும் காணலாம். மணிமேகலையில் "விலை மரம் மென்றுகில் விழுநிதிக்குப்பை" என்ற அடி, ஆடை கொடுத்த சிறப்பைக் கூறுகிறது. கம்ப இராமாயணம் ஆடை, அணிகள் பரிசாகக் கொடுத் ததையும், ஏலாதி உண்டி, உறையுள், உடுக்கை கொடுப்போர் சிறந்த வாழ்வு வாழ்வார் என்பதையும் கூறுகின்றன. இந்தியாவில் பல நூற்பு ஆலைகள் தோன்றிவிட்டதால் பல வண்ணங்களிலும், வடிவங் களிலும் ஆடைகள் நெய்யப்படுகின்றன. அவ்வாடை கள், பல பெயர்களில் அணியப்படுகின்றன. சிறு குழந்தைகளுக்கு அழகிய விலங்குகள், பறவைகள், சித்திரங்கள் அமைந்த உடைகளும், பள்ளி செல்லும் சிறார்கள், பல வண்ணங்களில் பெரிய பூக்களோடு கூடிய பாவாடை கப்தான், சல்வார் கமிசு, மேக்சி, மிடி, சுரிதார் போன்ற ஆடைகளும், பெண்கள், பன்னிரண்டு முழம் முதல் பதினெட்டு முழம் வரை புடவைகளையும் அணிகிறார்கள். அமெரிக்கா, சப்பான், இங்கிலாந்து, பிரான்சு போன்ற நாடுக ளில் வாழும் மக்கள் பாகுபாடின்றி உடை அணிகி றார்கள். இந்திய நாட்டின் பண்பாட்டினை உணர்த் தும் வண்ணம், தங்களுடைய பல்வேறு மாநிலத் தின் பண்பை அறிவுறுத்தும் வகையில் பெண்களும் ஆண்களும் ஆடைகளை அணிகிறார்கள். குறிப்பாக வடஇந்தியர்கள், சல்வார் கமிசும், தமிழகத்தைச் சேர்ந்தவர்கள் அழகிய, சிறப்பு மிக்க, வனப்புப் பொருந்திய புடவைகளையும் ஆண்கள், நான்கு முழம் முதல் எட்டு முழம் வரை உடைய வேட்டி களையும் கதர் ஆடைகளையும் அணிகிறார்கள். பலவித இயந்திரங்கள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளதால் அவற்றின் துணைக்கொண்டு பலவகையான உடைகள் கண்டு பிடிக்கப்படுகின்றன. சான்றாக, நைலான், நைலெக்சு, ஆர்கண்டி, ஆர்லான், ஆர்கன்சா, தெர் லின், பாலியசுடர் ஆகிய துணிகள் உற்பத்தி செய் யப்பட்டு எண்ணிறந்த நிறங்களையும் வடிவங்களை யும் கொண்டு விளங்குகின்றன.

"ஆடையின் சிறப்பெல்லாம் அணிவோர் சிறப்பே" என்பதற்கிணங்க அணியும் மக்களின் ஆடை களைக் கொண்டு அவர்கள் நிலையையும் தன்மை யையும் அறிந்து கொள்ள முடிகிறது. ஆடையோடு மக்கள் எக்காலத்தும் விரும்பி அணியும் அணிகலன் களும் சிறப்பினைப் பெறுகின்றன. இவ்வணிகலன் கள் மக்களின் செல்வ வளத்தையும் சமுதாயத்தில் அவர்கள் பெற்றிருந்த நிலைமையையும் தெள்ளிதின் விளக்குகின்றன. இரா: ப. தே.

**ஆண்டப்பன் ஊரணி** என்பது ஒரு தெப் பக்குளம். இது குடுமியான் மலை புதுக்கோட்டை சாலையின் வடபுறம் உள்ளது. தொண்டைமான் களின் ஆட்சிக் காலத்தில் ஆண்டக்குளம் ஆண்டப்ப மன்ன வேளார் என ஒருவர் இருந்தார். இத்தெப்பக் குளம் இவரது நினைவாகவே வெட்டப்பட்டது என லாம். ஆண்டப்ப மன்ன வேளார் குறவஞ்சி என்னும் நூல் இவர் பெயரில் எழுந்ததேயாகும்.

**ஆண்டாள்** திருவில்லிபுத்தூரில் ஆடிப்பூர நன்னாளில் தோன்றியவர்: ஆழ்வார்களுள் ஒருவ ரான பெரியாழ்வாருடைய நந்தவனத்தில் திருத் துழாய்ச் செடியின் கீழ்க் கண்டெடுக்கப்பட்டவள். கோதை என்னும் அழகிய பெயரை இவளுக்கு வளர்ப்புத் தந்தையான பெரியாழ்வார் சூட்டினார். கூந்தலழகால் சிறப்புற்று விளங்கியமை பற்றிச் 'சுரும்பார் குழல்கோதை' என்றும் அழைக்கப் பட்டாள். பிற்காலத்தில் ஆண்டாள் என்றே உலகத்

தாரால் வழங்கப்பட்டாள். இவர் காலம் கி.பி. 8-ஆம் நூற்றாண்டாகும்.

இறைவனுக்கு மலர் மாலை கட்டித் தொண்டாற்றும் தன் வளர்ப்புத் தந்தையாகிய பெரியாழ்வாரிடம் இளமையிலேயே கண்ணன் கதைகளைக் கேட்டு அக்கண்ணனிடம் மையல் கொண்டாள். அவனையே கணவனாகப் பெறவேண்டும் என்றும் ஆசைப்பட்டாள். இவள் ஞானத்திலும் பத்தியிலும் உயர்ந்தாள்.



ஆண்டாள்

இறைவனை நாயகனாகவும் தம்மை நாயகியாகவும் பாவனை செய்து கொண்டு ஆழ்வார்கள் பாடிய பாசுரங்களை விட, இயற்கையிலேயே பெண்ணான ஆண்டாளுடைய தலைவி நிலைப் பாசுரங்கள் மிக்க சிறப்புடையனவாகத் திகழ்கின்றன.

பெரியாழ்வார் பெருமாளுக்குக் கட்டி வைத்த மாலையைத் தான் அணிந்து தன் அழகு பார்த்து மகிழ்வாள். இப்படிப் பல நாள் நடந்து வர ஒரு நாள் இவள் செயலைக் கண்டுவிட்ட ஆழ்வார், ஆண்டாளைக் கடிந்து கொண்டார். புதிய மலர்களைப் பறித்து வேறு மாலை கட்டி இறைவனுக்கு அளித்து மன்னிப்பும் கேட்டார். ஆனால், இறைவன் அன்றிரவு அவரது கனவில் தோன்றிக் கோதை சூடிக்களைந்த மாலையின் மணத்தையே தாம் பெரிதும் விரும்புவதாகக் கூறினார். இதைக் கேட்ட பெரியாழ்வார் கண்விழித்துத் திகைத்துக் கோதையின் பெருமையை உணர்ந்து நெஞ்சுருகினார். கோதை இறைவனையே ஆண்டு விட்டதால் அவளை ஆண்டாள் என்று அழைத்தார். அன்று தொட்டுக் கோதை, ஆண்டாள் என்னும் பெயர் பெற்றாள்.

ஆண்டாள் சூடிக்களைந்த மாலையை இறைவன் மிக விரும்பி ஏற்றதனால் 'சூடிக் கொடுத்த சுடர்க் கொடி' யானாள். நற்றமிழால், நல் இசையால் இறைவனைப் பாடிப் பரவியதால் பாடவல்ல நாச்சியாரானாள். ஆண்டாளுக்குக் கண்ணனிடம் பத்திக் காதல் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே வந்தது. பருவம் வந்தது. கண்ணனையே மணாளனாக நினைந்து வாழ்ந்தாள். இந்நிலையில் அவள் பாடிய பாடல்களே 'திருப்பாவை', 'நாச்சியார் திருமொழி' என்னும் இரு திவ்வியப் பிரபந்தங்களாக அமைந்துள்ளன. இவற்றுள் திருப்பாவை, தைந் நீராடல், சுனையாடல் என்னும் பழந்தமிழர் மரபை ஒட்டி எழுந்த பிரபந்தமாகும். நாச்சியார் திருமொழி, பெரும்பாலும் அக இலக்கியப் பாடல்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குவது. இப் பிரபந்தங்களில், பல திவ்விய தேசங்களில் பல பெயர்களில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் கண்ணனாகிய பரமன் திருவரங்க நாதனே என்று உணர்ந்து அவனுடைய அழகுகளை வருணித்துப் பாடியுள்ளாள். பத்திக் காதல் முற்றிய நிலையில் அவள் திருவரங்க நாதனின் திருவடிகளில் சேர்ந்து, அவன் கால் பிடிக்கும் தொண்டை விரும்பி ஏற்றுக் கொண்டாள் என்று வைணவக் குருபரம்பரை நூல்கள் கூறுகின்றன.

ஆண்டாள் பாடிய நாச்சியார் திருமொழியும் திருப்பாவையும் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்துள் தொகுக்கப்பட்டுள்ளன. திருப்பாவை வேதம், உபநிடதங்கள் ஆகியவற்றின் சாரம் என்று சான்றோர் போற்றியுள்ளனர். இதனை "வேதமனைத்துக்கும் வித்தாகும் கோதை தமிழ்" என்னும் சொற்றொடராலும் அறியலாம். இத்திருப்பாவையில் விரிகிற காட்சிகள், எழுகிற ஒலிகள் எல்லாம் மிகச் சிறப்பாக, இயற்கையாகவே கூறப்பட்டுள்ளன. துயிலெழும் பறவைகளின் ஒலியும், கோயில்களில் விளிக்கப்படும் சங்கின் பேரரவமும், நறுமணமும், மலர்களைக் கூந்தலில் சூடிய ஆய்ப்பாடிப் பெண்டிர் தயிர் கடையும்போது உண்டாகும் துள்ளல் ஓசையும் செவிகளில் மெல்லப் பாய்வது போல் பாடப்பட்டுள்ளன.

புழக்கடைத் தோட்டத்து வாவியுள், செங்கழுநீர் மலர்வதும், ஆம்பல் வாய் கூம்புவதும் பொழுது புலர்வதற்கு அடையாளமாகக் கூறப்பட்டுள்ளன. பெரியாழ்வார் மகளாக வளர்ந்த ஆண்டாள், திருப்பாவை பாடுங்கால், "வந்தெங்கும் கோழி யழைத்தனகாண்" என்றும், இடையர் குடும்பங்களிலேயே அறியக்கூடிய "எருமை சிறுவீடு மேய்வான் பரந்தன காண்" என்றும், "மத்தினால் ஓசைப்படுத்தும் தயிரரவம் கேட்டிலையோ" என்றும் பாடியிருப்பது, முற்றிலும் தன்னை இடைக்குல மடந்தையாகவே கருதிவிட்டாள் என்பதனை அறிவிக்கிறது. மேலும் "வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்று" என்று அவள் பாடியுள்ள தொடர் வான சாத்திரக் கலையில் அவளுக்கிருந்த புலமையை விளக்குகிறது. இத்தொடரை அடிப்படையாக வைத்து மு. இராகவையங்கார் ஆண்டாளின் காலத்தை நிறுவ முயல்கிறார். ஆண்டாள் திருப்பாவையில் 'ஆழிமழைக் கண்ணா' என்ற பாடலில் தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ள 'வினை பயன் மெய் உரு' என்ற நால்வகை உவமைகளும் அமைந்து கிடக்கும் பாங்கினை அறியலாம். சிங்கத்தின் இருப்பிடத்தையும், இயல்புகளையும் மிக அழகாக 'மாரி மலை முழஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும் சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீ விழித்து' என்று தொடங்கும் பாடலில் கூறியுள்ளாள். 'ஆண்டவனை அடைந்து அவனுக்குத் தொண்டாற்றுவதுதான் ஆன்மாக்களின் தலையாய குறிக்கோளாய் இருத்தல் வேண்டும்; மற்றைய விருப்பங்களை மாற்றிக் கொள்ள வேண்டும்' என்னும் செய்தியை வழங்கித் திருப்பாவையை முடித்துள்ளாள்.

நாச்சியார் திருமொழியில், ஆண்டாள் தன்னைக் கண்ணனோடு சேர்க்குமாறு காமதேவனை வேண்டியதும் தானும் தோழிமார்களுமாகத் தெருவில் மணல்வீடு கட்டி விளையாடியதும், அப்பொழுது கண்ணன் வந்து அம்மணல் வீடுகளைச் சிதைத்ததும், அவன் யமுனையில் நீராடும் பெண்களின் சேலையை ஒளித்து வைத்ததும் ஆகிய செய்திகளும், பிற அகத்துறைச் செய்திகளும் அடங்கிய நூறு பாடல்கள் உள்ளன. 'வாரணமாயிரம்' என்னும் பதிகத்தில், கண்ணன் ஆயிரம் யானை புடை சூழ வந்து தன் கைத்தலம் பற்றியதாகக் கனவு கண்டு பாடிய பாடல்களைப் பாடுவதனை வைணவர்கள் இன்றும் தங்கள் திருமணச் சடங்குகளுள் ஒன்றாகப் போற்றி வருகின்றனர்.

ஆண்டாளது திருப்பாவை மற்ற சாத்திர நூல்களை விடச் சிறந்தது என்று கருதி இராமாநுசர் நாடோறும் திருப்பாவையை ஓதி வந்தார். இவர் தம் சீடர்களுக்கும் அருளுரையாக இதனையே வழங்கினார். இதனால், இவர் திருப்பாவைச் சீயர் என்றே அழைக்கப்பட்டார். ஆண்டாள் பெருமையை விளக்கும் வகையில், வேதாந்த தேசிகரால் 'கோதாத்துதி' என்னும் வடமொழி நூல் ஒன்று இயற்றப்பட்டுள்ளது. தெலுங்கு மொழியில், விசயநகரப் பேரரசர் கிருட்டிணதேவராயர் 'ஆமுக்த மாலியதா' என்னும் பெயரில் ஆண்டாள் புகழ் பேசும் நூல் ஒன்றினை இயற்றியுள்ளார். அ.அ.ம.

**ஆண்டாள் பிள்ளைத் தமிழ்:** கண்ணனைக் குழந்தையாகப் பாவித்துப் பாடி அதனால் பிள்ளைத் தமிழ் நூல்களுக்கு வழி காட்டியவர் பெரியாழ்வார். தம் தந்தையாகிய பெரியாழ்வார் குழந்தையாகக் கண்டு பாடிய கண்ணனைக் காதலனாகக் கண்டு காமுற்றுப் பாடியவள் ஆண்டாள். அந்த ஆண்டாளைக் குழந்தையாக, குமரியாகக் கண்டு பாடப்பட்டதே ஆண்டாள் பிள்ளைத்தமிழ். இந்நூல் பெண் கவிஞரைப் பாட்டுடைத் தலைவியாகக் கொண்டு அமைந்த தமிழ் நூல்களுள் ஒன்று. இந்நூலாசிரியர் பெயர் தெரியவில்லை. இவர் 'பூர்வசிகை' வைணவர். இவரூர் மாணவாள மாமுனிகள் சில காலம் தங்கியிருந்த மூங்கிற்குடி ஆகும். இது இராமநாதபுரம் மாவட்டத்தில் பரமக்குடிக்கு அருகே உள்ளது.

நம்மாழ்வார் பிள்ளைத் தமிழில் உள்ளதைப் போலப் 'பழிச்சினர் பரவல்' என்னும் பகுதியுடன் நூல் தொடங்குகிறது. பெண்பாற் பிள்ளைத் தமிழுக்குரிய காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி ஆகிய பருவங்களை அமைத்துப் பின், ஆண்பாற்குரிய சிற்றில் பருவத்தில் எதிர்மறையாக வருவதை உடன்பாட்டில் வைத்துச் சிற்றில் இழைத்தருள்க என்றும், நீராடல் பருவத்தை நீக்கிவிட்டுச் சிறுசோற்றுப் பருவத்தை இணைத்துத் 'தென் அரங்கேசன் முதல் ஐவரும் விருந்துணச் சிறுசோறு இழைத்தருள்க' என்றும் பாடியுள்ளார். ஊசலை அடுத்துப் புதியதாகக் 'காம நோன்பு தவிர்கவே' என்று கூறி முடித்துள்ளார். பிள்ளைத் தமிழ், பேதைப்பருவத்தோடு முடிவுறும். இந்நூலில் அம்புலிப் பருவத்தோடு பேதைப் பருவம் முடிவுறுகிறது. அடுத்து மூன்று பருவங்களிலும் மங்கைப் பருவம் காட்டப்படுகிறது. நாச்சியார் மொழியின் நறுந்தொடர்கள் இடைமிடைந்த பாடல்கள் செம்பாகமானவை. ஒவ்வொரு பருவத்திற்கும் 11 பாடல்கள் பாடியுள்ளார் நூலாசிரியர். ஒரு சில பருவங்களில் சில பாடல்கள் கிடைக்கவில்லை. இந்நூலின் காலம் கி.பி. 17-ஆம் நூற்றாண்டு என்பர். த.கோ.

**ஆண்டிகுவா,** குவாட்டிமாலா நாட்டின்

நகரங்களுள் ஒன்று. இசுபானிய (Spanish) குடியேற்ற காலத்துக் கட்டடக் கலைக்கு இந்நகரம் நல்லதோர் எடுத்துக்காட்டு. குவாட்டிமாலா (Guatemala) நகருக்குத் தென்மேற்கில் 24 கி.மீ. தொலைவில் ஆண்டிகுவா (Antiqua) அமைந்துள்ளது. இது ஒரு வணிக மையம், காப்பி, கரும்பு, தானிய வகைகள் இங்கு விளையும். மட்பாண்டங்கள் வனைதல், இரும்புத் தொழில், நெசவுத் தொழில் போன்றவை இங்கு நடைபெறும் தொழில்களாகும். இசுபானியர்கள் இந்நகரைக் கி.பி. 1542-ஆம் ஆண்டில் நிறுவினர். பின்னர், அது குவாட்டிமாலா நாட்டின் மாநிலங்களுள் ஒன்றாகியது. பண்பாட்டிற்கும் கல்விக்கும் மையமாக விளங்கிய இந்நகரின் மக்கள்தொகை கி.பி.17-ஆம் நூற்றாண்டில் ஏறத்தாழ 80,000 ஆகும். இந்நகர் கி.பி. 1773-ஆம் ஆண்டில் ஏற்பட்ட நிலநடுக்கத்தால் பெரும்பாலும் அழிந்தது. எனவே, தலைநகரை குவாட்டிமாலாவிற்கு மாற்றினர். மக்கள் தொகை 26,631 (1976).

**ஆண்டிகோனசு** மாசிடோனியாவை ஆண்ட மூன்று அரசர்களின் பெயராகும்.

முதலாம் ஆண்டிகோனசு (Antigonus I) கி.மு. 382-301 வரை ஆண்டவர். இவர் மகா அலெக்சாந்தரைஅடுத்து மாசிடோனியாவின் அரசரானார். முதலாம் தெமிட்ரியசு போலியோரெசிடசு (Demetrius I Poliorcetes) என்பாரின் தந்தை.

இரண்டாம் ஆண்டிகோனசு கொனடாசு (Antigonus II Gonatas) கி.மு. 320 முதல் கி.மு. 239 வரை வாழ்ந்தவர். முதலாம் தெமிட்ரியசு,போலியோரெசிடெசின் மகன்.

மூன்றாம் ஆண்டிகோனசு தோசன் (Antigonus III Doson) இரண்டாம் ஆண்டிகோனசின் ஒன்று விட்ட சகோதரர். இவர் கி.மு. 227-ஆம் ஆண்டில் அரசராக அறிவிக்கப்பெற்றவர். இவர் காலத்தில் மாசிடோனியர் எகிப்தினை வென்றனர். இவர் கி.மு 221-ஆம் ஆண்டில் காலமானார்.

**ஆண்டிப்பட்டிக் காசுகள்:** இவை வட ஆர்க்காடு மாவட்டம், செங்கம் வட்டத்தில் உள்ள ஆண்டிப்பட்டி என்னும் ஊரில் கண்டெடுக்கப்பட்டன. ஏறக்குறைய 168 ஈயக் காசுகள் இவ்வூரில் கண்டெடுக்கப்பட்டன. இவை வட்ட வடிவமானவை. இக் காசுகளில் ஒருபக்கம் தமிழ்-பிராமி (தமிழி) எழுத்தில் சில எழுத்துகள் காணப்படுகின்றன. ஒரு காசில் "அதிண்ணன் எதிரன் சேந்தன்" என்ற எழுத்துகள் பொறிக்கப்பட்டுள்ளன. மறுபக்கம் நெளி கோடுகளும் முக்கோண வடிவப் பொறிப்பும் அமைந்துள்ளன. இக்காசுகள் சேந்தன் என்பவனால் வெளியிடப்பட்டிருக்கலாம். இக்காசுகளில் பொறிக்கப்பட்ட எழுத்தமைப்பு, இவை கி.பி. 2-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை எனக் காட்டும். திண்ணன், சேந்தன் என்ற பெயர்கள் சங்க காலப் பெயர்களாகும்.

**ஆண்டிப்புலவர்** தென்னார்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த செஞ்சிக்குப் பக்கத்தில் உள்ள ஊற்றங்கால் என்னுமூரில் தோன்றிய புலவராவார். தந்தை பெயர் பசுதேவன். இவர் கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தார். இவருக்குப் பாவாடை உபாத்தியாயர் என்ற பெயரும் உண்டு. இவர் வளையறுக்கும் குலத்தினர். அதனால், இக்குலம் பற்றி இவருக்கு நக்கீரன் என்ற பெயரும் உண்டு. இவர் ஆசிரிய நிகண்டும், நன்னூல் நூற்பாக்களின் பொருளுணருமாறு 'நன்னூலாசிரிய விருத்தம்' என்னும் உரை நூலும் செய்துள்ளார். இந்த உரைநூல், உரையறி நன்னூல் எனவும் வழங்குகிறது. "இயம்பிய நிகண்டின் உரையறி நன்னூலினொடு இரண்டுமே செய்து வைத்தான்" என்பது ஆசிரிய நிகண்டுப் பாயிரம். இவர் செய்த உரை இப்போது கிடைக்கவில்லை. மதுரைத் தமிழ்ச் சங்கத்து நூலகத்தில் நன்னூலுக்குச் சங்கர நமசிவாயர் உரை அல்லாத வேறோர் உரை உண்டு என்றும், அவ்வுரை ஆண்டிப்புலவரின் உரையாக இருக்கலாம் என்றும் கூறுவர். ஆசிரிய நிகண்டு அடிமிக்க பாவினத்தாலும், மிகுந்த பொருட் பெயர்களாலும் ஆனது. ஒவ்வொரு சொல்லும் இத்தனை பொருள்கொண்டது என்று எண்களால் வரையறுத்து உணர்த்தப் பெற்றுள்ளது. இவர் தம் ஆசிரிய நிகண்டில், 'உரிச்சொல் நிகண்டு' பற்றியும், கயாதர பற்றியும் குறிப்பிட்டுள்ளார்.

**ஆண்டியன் குழு:** இக்குழு ஆண்டியன் துணை மண்டலக் குழு என்ற பெயரிலும் ஆண்டியன் பொது அங்காடி அன்கம் (Ancom) என்ற பெயரிலும் குறிக்கப்படுகிறது. ஒருதரப்பட்ட பொருளாதார நிலைகளையுடைய தென் அமெரிக்க மண்டல நாடுகளின் ஒற்றுமைக்காகவும் பொருளாதார வலிமைக்காகவும் 1969-ஆம் ஆண்டில் இக்குழு உருவாகியது. இதற்காக ஒப்பந்தச் சாசனங்களும் அவ்வாண்டு மே திங்கள் 26-ஆம் நாளில் கையெழுத்தாயின. முதலில் இவ்வொப்புதலுக்கு உடன்பட்ட நாடுகள் சிலி, கொலம்பியா, ஈக்குவடார், பெரு ஆகியனவாகும். 'மெக்சிகோ' 1972-இல் பணியாற்றும் பங்கு உறுப்பினராகச் சேர்ந்தது. பின்பு 1974-இல் அர்செண்டைனா தான் உறுப்பு நாடாகச் சேரும் விருப்பத்தைத் தெரிவித்தது. சிலிநாடு 1976-இல் இக்குழுவிலிருந்து வெளியேறுவதாக அறிவித்தவுடன், இதன் துணை நாடான பனாமாவும் பண்பாட்டுத் திட்டங்கள் தவிர்த்து மற்றையவற்றில் இருந்து வெளியேறுவதாக அறிவித்தது. மாநாடு 1980-இல் நடந்தபோது கோசுடாரிகா, சனநாயக தொமினிகன், பனாமா

ஆகிய நாடுகளுக்கு நிலையான பார்வையாளர் என்ற நிலை அளிக்கப்பட்டது.

ஆண்டியன் குழுவின் (Andean Group) 10-ஆம் ஆண்டு மாநாட்டு நிறைவு விழாவில் இக்குழு நிறைவேற்றிய பணிகள் குறித்து ஒரு தீவிர ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட்டது. மண்டல நாடுகளின் அரசியல் நிலை, சூழ்நிலை, ஆகியவற்றைப் பொறுத்து அந்நாடுகளின் பொருளாதாரத் திட்டங்கள் மாற்றி அமைக்கப்பட வேண்டும் என்ற தேவையினை வலியுறுத்தியது. ஆண்டியன் குழு நாடுகளின் ஒற்றுமையை அடிப்படையாகக் கொண்டு, தென் அமெரிக்க நாடுகளின் ஒற்றுமைக்கான ஒப்பந்தம் உருவாகியது. அரசியல் சார்ந்த ஆலோசனைக் குழுக்கள், தேசிய நாடாளு மன்றங்கள், தொழிலாளர் ஒற்றுமைக் கழகங்கள், உயர் தொழிலாளர் நிறுவனங்கள் ஆகியவற்றை ஏற்று அவற்றின் கொள்கை கோட்பாடுகளை வகுப்பதன் மூலமே மண்டல ஒற்றுமையை நிலைநிறுத்த முடியும் என்பதை உணர்ந்தனர் உறுப்பு நாடுகள் புதிய எழுச்சியுடன் குழுவின் திட்டங்களில் பங்குகொள்ளக் குழுவின் மேலாண்மையும் செயல்முறைகளும் முற்றிலும் திருத்தி எழுதப்பட்டன. இக்குழு இலத்தீன் அமெரிக்கத் தடையிலா வாணிகக் கழகத்துடன் (Latin American Free Trade Association-LAFTA) உறுப்பு நாடுகள் ஒத்துழைக்க வேண்டியதன் தேவையை வலியுறுத்தியது.

ஆண்டியன் குழுவின் உள்ளமைப்பாக ஆண்டியன் நீதிமன்றம், ஆண்டியன் அமைச்சர் குழு, பாராளு மன்றம் ஆகிய மூன்று புதிய செயலாண்மைக் குழுக்கள் 1979-இல் உருவாக்கப்பட்டன. ஆண்டியன் குழுச் சாசனத்தின்படி உறுப்பு நாடுகளின் ஒற்றுமைக்காகவும் அந்நாடுகளுக்கிடையே ஏற்படக்கூடிய பூசல்களை நியாயமான முறையில் தீர்த்து வைக்கும் நோக்குடனும் ஆண்டியன் நீதிமன்றம் செயற்படுகிறது. உறுப்பு நாடுகளிடையே ஒற்றுமை உணர்வைப் புகுத்தி அந்நாடுகளின் முன்னேற்றத்திற்கான திட்டங்களை ஆண்டியன் பாராளு மன்றம் வகுத்து வருகிறது.

மேலும் உறுப்பு நாடுகளுக்கிடையேயுள்ள உறவு முறைகளை ஆராய்ந்து சிக்கல்களை நல்ல வழிகளில் தீர்த்து வைப்பது, இந்நாடுகளுக்கிடையே ஒற்றுமையை வளர்ப்பது, ஏற்படுத்தப்பட்ட ஒப்பந்தங்களின் செயற்பாட்டை ஆராய்ந்து அதன் முட்டுக்கட்டைகளைத் தவிர்ப்பதற்கான திட்டங்களை வகுப்பது போன்றவற்றுக்காக ஆண்டியன் குழுவின் வெளிநாட்டு அமைச்சர் குழு அவ்வப்போது கூடிக் கலந்து கருத்து வழங்குகிறது.

உறுப்பு நாடுகளின் பேராளர்களே இவ்வகை ஒப்பந்தங்களை ஏற்படுத்தி வைக்கும் அதிகாரங்களைப் பெற்றிருப்பதோடு குழுவின் பொறுப்பாண்மை உறுப்பினர்களாகவும் முதன்மை அலுவலர்களாகவும் செயற்படுகின்றனர். சிக்கல்கள் குறித்துக் கலந்தாலோசித்து முடிவெடுக்கும் வண்ணம் இக்குழுவின் சிறப்புக் கூட்டங்கள் ஒழுங்கான முறையில் நடைபெற்று வருகின்றன. கொள்கை முடிவுகளையும் அவற்றைச் செயற்படுத்தும் முறைகளையும் குறித்து அவ்வப்போது பொறுப்பாண்மைக்குழு வல்லுநர்கள், பிற வல்லுநர்களோடு கலந்து அவர்களின் அறிவுரைகளையும் பெற்று வருகிறார்கள்.

ஆண்டியன் ஒதுக்கீட்டு நிதி (Andean Reserve Fund) உறுப்பு நாடுகளின் செலாவணி இருப்புநிலை தொடர்பான திட்டங்களுக்குத் தேவையான அறிவுரைகளை வழங்குகிறது. மேலும் கடன் அளிப்பது, நுட்ப உதவியினை வழங்குவது போன்றவற்றை ஆண்டியன் முன்னேற்றக் கழகம் கவனித்து வருகிறது. இப்போது நிலவிவரும் அரசியல் நெருக்கடிகளினால் ஆண்டியன் குழுவின் முன்னேற்ற நடவடிக்கைகள் யாவும் பாதிப்புக்குள்ளாகின்றன.

பொலிவியா நாட்டில் 1980-ஆம் ஆண்டில் இராணுவம் அதிகாரத்தைக் கைப்பற்றியபோதும் அதற்குப் பிந்தைய ஆண்டில் ஈக்குவடார், பெரு ஆகிய நாடுகளிடையே எல்லைத் தகராறு ஏற்பட்ட காலத்திலும், தொடர்புடைய நாடுகள் தங்களின் உறுப்பினர் பதவிகளை அப்போதைக்கு இழக்க நேர்ந்தன. பின்னர்ப் பொலிவியா மறுபடியும் உறுப்பினராக இக்குழுவில் சேர்ந்தது.

ஆண்டியன் குழு தன் நிதியினை மிகுந்த அளவில் ஆராய்ச்சி, கருத்தரங்கு, சமூகப் பொருளாதாரத் திட்டங்கள் ஆகியவற்றிற்குச் செலவு செய்கிறது. அண்மைக் காலத்தில் தானியங்கித் தொழில்களைப் புதுமைப்படுத்துதல், அடிப்படைத் தொழில்களை ஒன்றுபடுத்தி மண்டல நெடுஞ்சாலைகள் அமைத்தல், ‘உணவுக் குழுத் திட்டம்’ (Group Food Plan) என்ற பெயரில் ஓர் அமைப்பை உருவாக்குதல் ஆகிய செயல்களில் முனைப்பாக உள்ளது.

மண்டலப் பொருளாதார வளர்ச்சிக்கான திட்டங்களை முறைப்படுத்தித் தடையிலா வாணிகம் முன்னேறவும், சிறிய தொழில்கள் நடுத்தரத் தொழில்கள் வளர்ச்சி பெறவும் பொதுவான சுங்கவரி ஒன்றை மட்டும் அனுமதிக்க வேண்டிய தேவையை உணர்த்தியது. இதன் விளைவாக 1983-ஆம் ஆண்டிற்குள் உள்நாட்டுச் சுங்க வரிகளுக்கு முற்றுப்புள்ளி வைக்கும் நோக்குடன் கொலம்பியா,

பெரு, வெனிசூலா ஆகிய நாடுகள் படிப்படியாக இவ்வரி விலக்கினை நடைமுறைப்படுத்தின. மேலும் பொலிவியா, ஈக்குவடார்ஆகிய நாடுகளும் இவ்வரியினை விலக்கிவிடுவதாக ஒப்புதல் அளித்துச் செயற்படவும் தொடங்கியுள்ளன.

பன்னாட்டுப் பொருளாதாரக் குழுக்கள், கழகங்கள், நிதி நிறுவனங்கள், ஐக்கியநாட்டு நிறுவனங்கள், பொது மன்றங்கள் ஆகியவற்றுடன் இக்குழு தொடர்பு கொண்டு, தனது ஒத்துழைப்பையும் அவற்றின் வளர்ச்சிக்கான ஊக்கத்தையும் அளித்து வருகிறது. ஐரோப்பியப் பொருளாதாரச் சமூகத்துடன் (European Economic Community) கூட்டுச் சேர்ந்து செயலாற்றுவதற்கான பேச்சுகளும் இப்பொழுது நடைபெற்று வருகிறது.

துணை நூல்:

**Odell P.R. & Prestion D.A.,** Economics And Societies in Latin America, John Wiley & Sons, New York, 1978.

**ஆண்டியாக்கு** துருக்கி நாட்டின் வணிகத் தலம். இதனை அண்டாக்கியா என்றும் கூறுவர். மத்தியதரைக் கடலிலிருந்து 11 கி.மீ. தொலைவில் உள்ளது. ஆண்டியாகசு (Antiochus) என்பாரின் மகன் செலுகசு (Seleucus) என்பவரால் கி.மு. 300-ஆம் ஆண்டளவில் இந்நகரம் நிறுவப்பட்டது. இது கி.பி. 900 க்கும் கி.பி. 1000 க்கும் இடைப்பட்ட காலத்தில் சிரியா நாட்டின் தலைநகரமாயிருந்தது. இது ஒரு கிறித்தவ மையமாகவும் இருந்தது. மக்கள்தொகை 1,28,412 (1970).

**ஆண்டியால்கிடாசு** என்பவர் கிரேக்க மன்னர்களுள் ஒருவர். இந்தியாவில் மகதப் பேரரசு வீழ்ச்சியுற்றதும் அங்குச் சுங்க மரபினரும் கன்வ மரபினரும் ஆட்சி செய்தனர். வடமேற்கில் அயலவர் இந்திய நாட்டைத் தாக்கி யவன அரசுகளை அமைத்துக் கொண்டனர். அவர்களுள் கிரேக்கர் ஒரு பிரிவினர். அப்பிரிவினருள் ஒருவர் ஆண்டியால்கிடாசு (Andial kides) என்பவர். இவர் பெயர் பேசுநகர் சாசனத்தில் (Besnagar Inscription) குறிப்பிடப்பெற்றுள்ளது. இச்சாசனம் கருட உருவமுள்ள கற்றூண் ஒன்றில் பொறிக்கப்பெற்றுள்ளது. இதில் ஆண்டியால்கிடாசின் அரண்மனைக்கு எலியோடாரசு என்ற தூதர் வந்தார் என்றும், குறிப்பிடப்பெற்றுள்ளது ஆண்டியால்கிடாசின் தலைநகர் தட்சசீலம் என்றும், அவர் தம் தூதரை விதிசாவின் அரசரிடம் அனுப்பித் தமக்குப்படை உதவி வேண்டினார் என்றும் கூறுவர். அவர் கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்.

**ஆண்டீசு மலைத்தொடர்** உலகின் மிக நீண்ட மலைத்தொடர். தென் அமெரிக்காக் கண்டத்தின் மேற்குக் கடற்கரையோரம் வடக்கே பனாமாவிலிருந்து தென்கோடியில் ஆர்ன் முனை வரை நீண்டு செல்லும் ஆண்டீசு (Andes) மலைத்தொடர் 7240 கி.மீ. நீளமுள்ளது. ஆண்டீசு மலைத்தொடரில் பல மலையுச்சிகள் 6120 மீட்டருக்கு மேல் உயரமுடையவை.



ஆண்டீசின் உயரமான மலை உச்சி

ஆண்டீசு மலைத் தொடரை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை தெற்கு ஆண்டீசு, நடு ஆண்டீசு, வட ஆண்டீசு என்பன.

தென் ஆண்டீசு உயரம் குறைந்தது. 3000 மீட்டருக்கும் குறைந்த உயரமுள்ளது. அகன்காகுவா உயர்ந்த மலையுச்சியாகும். அகன்காகுவா ஆர்செண்டினா (Argentina) நாட்டில் உள்ளது.

நடு ஆண்டீசுப் பகுதியில் இம்மலைத் தொடர் மிக அகன்றுள்ளது. வடமேற்காக ஒன்றும், தென்கிழக்காக மற்றொன்றுமாக இரு தொடர்கள் இப்பிரிவில் அமைந்துள்ளன. இவ்விரு தொடர்களுக்கிடையில் அகன்று உயர்ந்த சமவெளிகளும் மேட்டு நிலங்களும் உள்ளன. இம்மேட்டு நிலங்களுக்கிடையே பெரு நாடும், மேற்குப் பொலீவியா நாடும் உள்ளன. வடக்கே செல்லச் செல்ல இரு தொடர்களும் குறுகி ஏறத்தாழ இணைந்தே விடுகின்றன. நடு ஆண்டீசிலும் பல மலையுச்சிகள் உள்ளன.

வட ஆண்டீசுப் பகுதியில் மூன்று மலைத் தொடர்கள் பிரிகின்றன. ஒரு பிரிவு கடற்கரையையொட்டிக் கொலம்பியா, பனாமா ஆகிய நாடுகளில் நீள்கிறது. இடையிலுள்ள மலைத்தொடரில் குறுகிய காக்கா ஆற்றுப் பள்ளத்தாக்கும், மகதலீனா ஆற்றுப் பள்ளத்தாக்கும் குறிப்பிடத்தக்கவை.

ஆண்டீசு மலைத்தொடரில் பல எரிமலைகள் உண்டு. இம்மலையிலிருந்துதான் அமேசான் ஆறு உற்பத்தியாகிறது. பரானா, ஒரினாக்கோ போன்றவை பிற ஆறுகளாம்.

**ஆண்டுக் குறியீட்டு முறைகள்:** ஆதிமனிதன் 'மாற்றங்களைப்' பருவங்களாகக் குறிக்கத் தொடங்கிய காலக் குறியீட்டு முறையின் வளர்ச்சியே இன்று ஆண்டுக் குறியீட்டு முறையாக (Calender System) வளர்ந்திருக்கிறது. வான்வெளியிலுள்ள பல்வேறு கிரகங்களின் அமைப்பு, நிலவின் தோற்றம் முதலியவற்றைக் கண்டு கொண்டதுடன், பூமி தன்னைத் தானே சுற்றிக்கொண்டு சூரியனையும் சுற்றி வருவதால் சூரியன் தோன்றி மறைவதையும் அதனால் பகல் இரவு ஆகியவற்றையும், பூமியை நிலவு சுற்றி வருவதால் மாதத்தையும், பூமி பருவத்திற்கேற்பச் சூரியனைச் சுற்றி வருவதால் ஆண்டையும் குறிக்கத் தொடங்கினர். பருவங்களின் தொடர்பாக மனிதன் பண்டிகைகளைக் கொண்டாடினான். இந்நிலையில், சமயத் தொடர்புப் பண்டிகைகளைக் கொண்டாடி நினைவிற் கொள்வதற்காகவும், பல்வேறு வாழ்க்கை வசதிகளுக்காகவும் காலத்தைக் குறிக்க வேண்டியதன் இன்றியமையாமையை உணர்ந்த மனிதன் உருவாக்கியதே ஆண்டுக் குறியீட்டு முறை.

நாட்கள், வாரங்கள், மாதங்கள் ஆகியவற்றின் தொகுப்பை வரிசைப்படி காட்டும் அமைப்பே இன்றைய ஆண்டுக் குறியீட்டு முறையாகும். பல விதிகளைக் கொண்டு அமைக்கப்பட்டிருக்கும் ஆண்டுக் குறியீடு, நில்வின் ஒளிக்கலை (Moon Phase), சூரியத் தோற்றம், சூரிய மறைவு, கிரகணம், நாளின் நீளம், விடுமுறைகள், சமயப் பண்டிகைகள், வரலாற்று நினைவு நாட்கள் முதலான பிற செய்திகளையும் கொண்டிருக்கும்.

ஒளி மிகுந்த விண்மீன்களின் எழுச்சியினை அடிப்படையாகக் கொண்டு அவற்றினிடையே சூரியன் பயணமாவதை எகிப்தியர், பாபிலோனியர், கிரேக்கர், உரோமானியர் முதலானோர் கண்டு கொண்டனர். பிறகு, இதன் அடிப்படையில் பருவங்களை அடையாளங் கண்டனர். எடுத்துக்காட்டாக, சோத்திசு அல்லது சிரியசு விண்மீனின் எழுச்சியின் பொழுது கோடைக்காலம் தொடங்குகிறது எனவும், அப்பொழுதுதான் நைல் நதியில் வெள்ளப்பெருக்குத் தொடங்குகிறது எனவும் அறிந்து கொண்டனர்.

வெப்ப ஆண்டின் காலம் பன்னிரண்டு நிலவின் மாற்றங்களுக்கு மேல் பதினொரு நாட்கள் கூடுதலாக இருப்பதால் இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை பதின்மூன்றாம் மாதம் ஒன்றை ஏற்படுத்த வேண்டியிருந்தது. இதனால் பண்டிகைகளை உரிய பருவங்களில் கொண்டாட முடியவில்லை. எனவே, காலம் செல்லச் செல்லச் சமய குருமார்கள் ஆண்டுக் குறியீட்டு முறையினைச் சீர்திருத்துவதைத் தங்களின் முதன்மையான கடமைகளுள் ஒன்றாக எண்ணத் தொடங்கினர். இதன் விளைவாகப் பல தரப்பட்ட மக்கள் குழுக்களிடையே பல்வேறு காலக் கட்டங்களில் ஆண்டுக் குறியீட்டு முறைகள் பலவாறாகத் தோன்றலாயின. இருப்பினும் ஆண்டுக் குறியீட்டின் அடிப்படை அலகுகள் பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

**ஆண்டுக் குறியீட்டின் அலகுகள்:** காலத்தினை அளவிடுதலை அடிப்படையாகக் கொண்டதே ஆண்டுக் குறியீட்டு முறையாகும். நாள், மாதம், ஆண்டு ஆகியவையே ஆண்டுக் குறியீட்டின் அடிப்படை அலகுகளாகும். இவ்வலகுகள் பூமி, சூரியன், சந்திரன் ஆகிய இவற்றின் நகர்ச்சியின் அடிப்படையில் அமைவனவாகும். பூமி தன் அச்சில் சுழலும் காலத்தை வைத்து நாளைக் கணக்கிடுவர். விண்மீன்களின் நிலையை ஒத்துத் தன் அச்சில் பூமி ஒரு முழுச் சுற்றிற்கு எடுத்துக் கொள்ளும் காலமே 'விண்மீன் நாளாகும்' (Sidereal or Star Day). இருப்பினும் மனிதன் அன்றாட வாழ்வில் இரவு பகலையே அடிப்படையாகக் கொண்டுள்ளமையால் சூரியனின் நிலையைப் பொறுத்து அமையும் 'சூரியநாளே' (Solar Day) 'பொது ஆண்டுக் குறியீட்டு முறையில்' (Civil Calender) முதன்மையாகக் கையாளப்படுகிறது. சூரிய நாள் விண்மீன் நாளை விட 4 நிமிடம் கூடுதலாகும்.

சந்திரன் தன் ஒரு சுற்றுக்கு எடுத்துக் கொள்ளும் காலத்தையே சந்திர மாதம் என்று அழைக்கின்றனர். இதன் காலம் சராசரியாக 29.5 நாட்களாகும். ஒரு சந்திர மாதம் (Lunar Month) அதன் சராசரி காலமாகிய 29.5 நாட்களில் 6 மணி நேரம் கூடுதலாகவோ குறைவாகவோ காணப்பெறும். இருப்பினும் அடுத்தடுத்த சந்திர மாதங்களின் காலத்தைச் சராசரிப்படுத்தும்போது அதன் காலம் 29.5306 நாட்கள் ஆகக் காணப்படுகிறது.

வட அரைக்கோளத்திலிருந்து (Northern Hemisphere) நிலநடுவரை (Equator) வழியாகத் தென் அரைக்கோணத்திற்குச் (Southern Hemisphere) சூரியன் சென்றடைய எடுத்துக்கொள்ளும் காலமே 'வானவியல் ஆண்டு' (Astronomical Year) எனக் கணக்கிடப்படுகிறது. மற்றொரு ஆண்டுக் குறியீட்டு அலகான 'வாரம்' ஒரு செயற்கை அமைப்பு அலகாகும். இது சந்திரனின் ஒளிக்கலையோடு (Phase) தொடர்புற்று அமைவதாகும். இதன் காலம் 7 நாட்களாகும். ஆண்டுக் குறியீட்டு முறைகள்

பின்வரும் மூன்று வகைகளாக வளர்ச்சியடைந்துள்ளன.

சந்திர ஆண்டுக் குறியீட்டு முறை மிகவும் தொன்மை வாய்ந்ததும் பண்டைக் காலத்தில் மிகப் பரவலாகப்பயன்படுத்தப்பட்டதுமானமுறையுமாகும். இம் முறையில் 'பொது நடைமுறை மாதம்'(Civil Month) சந்திர மாதத்தைப் பெரிதும் ஒத்திருக்கிறது. வளர்பிறையின் முதல் நாளே மாதத்தின் முதல் நாளாகும். இவ்வகை முறையில் ஒருவர் ஆண்டுக் குறியீட்டை அறிய முடியாதவராக இருப்பினும் சந்திரனின் ஒளிக்கலையைக் கொண்டு மாதத்தின் குறிப்பிட்ட நாளைக் கணக்கிட முடியும். சந்திர ஆண்டுக் குறியீட்டு முறையில் வெப்ப ஆண்டு (Tropical Year) இல்லை.

29.5306 நாட்களைக் கொண்ட சந்திர மாதம் 29 அல்லது 30 நாளைக் கொண்ட பொது நடைமுறை மாதத்தை விட 0.0306 நாள் மிகுந்துள்ளது. பின்னர், 354 நாட்களைக் கொண்ட சந்திர ஆண்டு 12 பொது நடைமுறை மாதங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. இதனால், ஒவ்வொரு மாதமும் 0.0306 நாளைக் குறைவாகக் கொண்டுள்ளதால், ஆண்டு 0.3672 நாளைக் குறைவாகக் கொண்டிருக்கிறது. இதனைச் சமன் செய்ய மூன்றாண்டுகளுக்கு ஒரு நாளையோ, 8 ஆண்டிற்கு 3 நாட்களையோ, 91 ஆண்டிற்கு 7 நாட்களையோ, 30 ஆண்டிற்குப் 11 நாட்களையோ சேர்க்க வேண்டியதாயிற்று.

365.25 நாட்களைக் கொண்ட சூரிய ஆண்டினைப் பரவலாக ஏற்றுக் கொள்ள முற்பட்டபோது சூரிய ஆண்டிற்கும் சந்திர மாதத்திற்கும் இடையிலான தொடர்பினையும் அறிந்தனர். சூரிய ஆண்டு சந்திர ஆண்டைக் காட்டிலும் 11 நாட்கள் மிகுதியாகக் கொண்டிருப்பதை அறிய இதன் காலத் தொடர்பினை அறுதியிட முயன்றனர். இதன்வழி மூன்று ஆண்டிற்கு ஒருமுறை ஒரு மாதத்தை இணைப்பது அல்லது 8 ஆண்டிற்கு மூன்று மாதங்களைச் சேர்ப்பது எனக் கணக்கிட்டனர். இது 'மெட்டானிக்குச் சுழற்சி' (Metonic Cycle) எனப்படும். கிரேக்கர், 19 சந்திர ஆண்டில் 7 மாதங்களை இணைப்பது என்ற கணக்கீடு துல்லியமானது என அறிந்தனர்.

சூரிய ஆண்டுக் குறியீட்டு முறை, பொது நடைமுறை மாதத்திற்கும் சூரிய ஆண்டிற்கும் இடையேயான ஏற்புடைய தொடர்பினை அமைக்கச் சந்திர மாதத்தைப் பெருமளவில் இக்காலத்தவர்கள் புறக்கணித்தனர். சூரிய ஆண்டு சராசரியாக 365.2422 நாட்கள் காலமுடையது என அறுதியிட்டனர். 0.2422க்கு மிகவும் அணுக்கமாக 0.25 இருப்பதால் 365 நாட்களே நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டன. ஒரு ஆண்டில் இழக்கப்படும் 0.25 நாளினை நான்கு ஆண்டுகளுக்கு ஒருமுறை ஒரு நாளாக ($0.25 \times 4 = 1$ நாள்) ஈடு செய்தனர். இதற்கு இலீப்பு ஆண்டு (Leap Year) எனப் பெயரிட்டனர்.

எகிப்திய ஆண்டுக் குறியீட்டு முறை: பண்டைக் காலத்தில், ஓர் ஆண்டை வெள்ளப் பெருக்குக் காலம், விதைப்புக் காலம், அறுவடைக் காலம் என மூன்று பருவங்களாகப் பிரித்திருந்தனர். ஒவ்வொரு பருவமும் நான்கு மாதங்களைக் கொண்டதாகக் கணக்கிடப்பட்டது. 'சிரியசு' விண்மீனின் எழுச்சிக்குப் பிறகு பிறைச்சந்திரன் கண்ணுக்குப் புலப்படாத முதல்நாளே ஆண்டின் தொடக்கம் எனக் கருதிக் கொண்டாடினர். எகிப்தியர் இந்நாளைத் 'தொத்து' என அழைத்தனர். அடுத்தடுத்த சோத்திசு விண்மீனின் எழுச்சிக்கு இடைப்பட்ட காலம் பன்னிரண்டு மாதங்களுக்குப் பதினொரு நாட்கள் அதிகமாக அமைந்தமையால் இரண்டு ஆண்டுகளுக்கொருமுறை பதின்மூன்றாம் மாதமும் கணக்கிடப்பட்டது. இவ்வாறு, நிலவு அடிப்படை ஆண்டினை அடிப்படையாகக் கொண்டு மக்கள் ஆண்டினை அமைப்பது தொடர்பான சிந்தனை செயல்வடிவமாகத் தொடங்கியது. இவர்களின் நிலையான மக்கள் ஆண்டுக் குறியீட்டு முறையில் 365 நாட்களைக் கொண்டது, 'ஆண்டு' எனவும், ஆண்டுக்கு மூன்று பருவங்கள் எனவும் பொதுவாகப் பிரிக்கப்பட்டு மீதமுள்ள ஐந்து நாட்களும் ஆண்டின் முதல் மாதத்திற்கு முன் கூடுதல் நாட்களாக அமைக்கப்பட்டன.

இத்தகைய 'மக்கள் ஆண்டுக் குறியீட்டு முறை'யைச் சமயமல்லாத ஏனையவற்றிற்கும், 'நிலவு அடிப்படை ஆண்டுக் குறியீட்டு முறை'யைச் சமயத் தொடர்பானவற்றிற்கும் பயன்படுத்திக் கொண்டனர். இதற்கு அடுத்த நிலையில், இவ்விரு ஆண்டுக் குறியீட்டு முறைகளையும் இணைப்படுத்தும் வகையில் ஒரு சிறப்பான நிலவு அடிப்படை ஆண்டுக் குறியீட்டு முறையையும் உண்டாக்கினர். எனவே, ஆண்டின் கால அளவை 365 நாட்கள் என்று வரையறை செய்த முதல் மக்கள் எகிப்தியர் என்பது புலப்படுகிறது. பிறகு, தாலமி எவர்செட்டிசின் 9ஆம் ஆண்டில், அதாவது கி.மு. 293-இல் 'கெனோப்பசு' என்னுமிடத்தில் சமய குருமார்கள் கூடி, ஒவ்வொரு நான்காம் ஆண்டுக்கும் ஒரு நாளைக் கூடுதலாகக் கணக்கிடும் முறையை நடைமுறைப்படுத்தினர். கி.மு. 46-இல் 'உரோமானிய ஆண்டுக் குறியீட்டு முறை' என்ற வகையில் எகிப்தியரின் மக்கள் ஆண்டுக் குறியீட்டு முறை வரலாற்றில் முதன்மையான இடத்தைப் பெறுகிறது.

**பாபிலோனிய ஆண்டுக் குறியீட்டு முறை:** பாபிலோனிய ஆண்டுக் குறியீட்டு முறை பற்றிய செய்திகள் கி.பி. 3-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் கிடைத்தன. முதன்முதலில் பிறைச் சந்திரன் கண்ணுக்குப் புலப்படும் நாளை அடிப்படையாகக் கொண்டு ஆண்டின் தொடக்கத்தைப் பாபிலோனியர் குறித்தனர். பொதுவாகப் பன்னிரண்டு மாதங்களைக் கொண்டு ஆண்டு குறிப்பிடப்படுகிறது என்றாலும், பருவங்களைக் குறிப்பதில் சீரான நிலையை ஏற்படுத்தப் பதின்மூன்றாம் மாதமொன்றும் இடையிடையே அறிமுகப்படுத்தப்பட்டது. இதன் அடிப்படையில், வானவியல் போக்குகளைக் குறிப்பதற்காகவும், கணக்கிடும் முறையில் வசதிக்காகவும் 365 நாட்களைக் கொண்ட நிலையான ஆண்டு பின்பற்றப்பட்டது. இந்நிலையில், கி.மு. 529-இல், 99 நிலவின் மாற்றங்களைக் கொண்ட எட்டாண்டுச் சுழற்சியை அறிமுகப்படுத்துவதனால் மாதங்களின் மிகுதியை ஒழுங்குபடுத்தும் முயற்சியொன்று மேற்கொள்ளப்பட்டது. பின்னர்க் கி.மு. 383-இல் 235 நிலவு மாற்றங்களுக்கு இணையான பத்தொன்பது ஆண்டுகளைக் கொண்டு கணக்கிடும் முறை சால்டிய நகர வானவியலார் 'கிடினு' என்பவரால் அறிமுகப்படுத்தப்பட்டது. மிடான் என்பவரால் கி.மு. 432-இல் ஏதன்சு நகரத்தில் பத்தொன்பது ஆண்டுகளைக் கொண்ட சுழற்சி நடைமுறைப்படுத்தப்பட்டிருந்தாலும், கிடினுவால் அறிமுகப்படுத்தப்பட்ட பத்தொன்பது ஆண்டுகளைக் கொண்டு கணக்கிடும் முறையே பாபிலோனிய ஆண்டுக் குறியீட்டு முறையின் அடுத்தடுத்த நிலைகளிலெல்லாம் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளது.

**கிரேக்க ஆண்டுக் குறியீட்டு முறை:** பாபிலோனிய ஆண்டுக் குறியீட்டு முறை போலவே கிரேக்க ஆண்டுக் குறியீட்டு முறையும் நிலவினை அடிப்படையாகக் கொண்டது. இம்முறையில், சூரியனின் மறைவிற்குப் பின் அந்தி வானில் முதன்முதலில் பிறைச் சந்திரன் தோன்றுவதைக் கொண்டு ஒவ்வொரு மாதத்தின் தொடக்கமும் முடிவு செய்யப்பட்டது. மேலும், பொதுவாக ஒவ்வொரு மாதமும் 29 அல்லது 30 நாட்களைக் கொண்டதாகக் கணக்கிடப்பட்டது.

குறிப்பிட்ட பருவங்களின் தொடர்பாகப் பண்டிகைகள் கொண்டாடப்பட்டன. பன்னிரண்டு மாதங்களைக் கொண்ட இந்த ஆண்டானது, பருவங்களை அடிப்படையாகக் கொண்ட ஆண்டுக்குச் சற்றுக் குறைவானதாக அமைந்திருந்ததனால், பதின்மூன்றாம் மாதம் ஒன்றும் கணக்கிடப்பட வேண்டியது இன்றியமையாததாயிற்று. கிரேக்க ஆண்டின் பண்டைப் பாகுபாடு வசந்தம், கோடை, குளிர் காலங்கள் என மூன்று பருவங்களாக அமைந்திருந்தது. குளிர் காலம் பிளீயட்சின் மறைவில் தொடங்கி வசந்த காலத்தில் முடிவடைய, வசந்த காலம் பிளீயட்சின் உதயம் வரை தொடர்கிறது. கோடைக் காலமோ, ஆர்க்டியூனசின் உதயம் வரை தொடர்கிறது.

இந்தக் கோடைக் காலத்தினைத் தொடர்ந்து இலையுதிர் காலம் பிளீயட்சின் அடுத்த மறைவு வரை ஆண்டின் எஞ்சிய காலம் முழுவதும் தொடர்கிறது. இவ்வாறு, பருவங்களின் அடிப்படையில் ஆண்டுக் குறியீட்டு முறையைக் கொண்டிருந்த கிரேக்கர், கிறித்தவ சமயத்தைத் தழுவியது முதல் சூலியன் ஆண்டுக் குறியீட்டு முறையைப் பின்பற்றத் தொடங்கினர்.

**யூத ஆண்டுக் குறியீட்டு முறை:** பண்டை யூதரின் ஆண்டுக் குறியீட்டு முறை நிலவின் அடிப்படையிலானது. நாள், அந்தியில் தொடங்குவதாகவும், சூரியன் மறைவுக்குப் பின் பிறைச் சந்திரன் முதன் முதலில் வானில் தோன்றும் பொழுது மாதம் தொடங்குவதாகவும் கணக்கிடப்பட்டது. ஏழு நாட்களைக் கொண்டதாக வாரம் கணக்கிடப்பட வேண்டும் என்ற நியதியே பண்டை யூதர் ஆண்டுக் குறியீட்டு முறையின் சிறப்புக் கூறு எனலாம். ஏனெனில், ஏழு நாட்களைக் கொண்ட வாரம் தெய்வத்தன்மை கொண்டது எனவும், இதனால், அனைவரும் உலகம் படைக்கப்பட்ட காலத்திற்குக் கொண்டு செல்லப்படுகின்றனர் எனவும் யூதர் நம்பியதால், இத்தகைய வாரத்தின் தொடர்ச்சியைத் துண்டிக்கும் எந்த ஆண்டுக் குறியீட்டு முறையையும் வன்மையாக எதிர்த்தனர். 'மொசைக்குச் சட்டம்', இசுரேலியர் எகிப்திலிருந்து வெளியேறிய 'அபிப்' மாதத்தை ஆண்டின் முதல் மாதமாகக் கடைப்பிடிக்க வேண்டும் என்றது. இடைட்டசினால் எருசலேம் அழிக்கப்பட, யூதர் எல்லோரும் அதனைவிட்டு வெளியேறியதற்குப் பிறகு நிலையான விதிகளின் அடிப்படையில் உருவான ஆண்டுக் குறியீட்டு முறை, பண்டை ஆண்டுக் குறியீட்டு முறையின் இடத்தைப் பிடித்துக் கொண்டது. இந்தப் புதிய ஆண்டுக் குறியீட்டு முறை பாபிலோனிய கிடினுவின் பத்தொன்பது ஆண்டுகளைக் கொண்ட சுழற்சியின் அடிப்படையிலானது என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

யூத ஆண்டுக் குறியீட்டு முறையில் மாதங்கள் முழுமையாக 30 நாட்கள் கொண்டவை அல்ல; 29 நாட்களே கொண்டன. எஞ்சியிருக்கும் நாட்கள் அரசு அதிகாரிகளின் ஆணைப்படி பல ஆண்டுகளுக்கு ஒருமுறை சேர்க்கப்பட்டுவிடும். பிற்காலத்தில் இம்முறையை மாற்றியமைத்தனர். 19 ஆண்டு

காலத்தினைக் கொண்ட ஒரு சுழற்சியில் எஞ்சியுள்ள நாட்கள் 3, 6, 8, 11, 14, 17, 19- ஆம் ஆண்டு களின் 6-ஆம் மாதத்தில் சேர்க்கப்பட்டன. பொது வாக ஓர் ஆண்டு 353, 354 அல்லது 355 நாட் களைக் கொண்டிருக்கும். எஞ்சியுள்ள நாட்களைச் சேர்க்கும் ஆண்டுகள் 383, 384 அல்லது 385 நாட் களைக் கொண்டிருக்கும். இவர்கள் முறையில் மேலும் சில சிக்கல்கள் காணப்படுகின்றன. ஞாயிறு, புதன், வெள்ளி ஆகிய கிழமைகளில் புத்தாண்டு பிறப்பதில்லை. இக்கிழமைகளில் பிறப்பதாயின் இதற்கு முந்தைய நாளின் சூரிய மறைவின்பொழுது பிறப்பதாகக் கணக்கிடப்படும்.

**சீன ஆண்டுக் குறியீட்டு முறை:** பண்டைய சீன முறை சூரிய சந்திரனின் அடிப்படையிலான தாகும். இவர்கள் ஆண்டு 12 சந்திர மாதங்களைக் கொண்டதாகும். சூரிய ஆண்டினை உடனொத்து அமைக்க 13-ஆம் மாதத்தை ஓர் ஆண்டில் சேர்ப் பர். இவ்வாண்டிற்கு முழுவருடமெனப் (Full Year) பெயரிட்டனர். இவர்களின் புதுவருடம் சனவரி 20-ஆம் நாள் முதல் பிப்ரவரி 19-ஆம் நாளுக்குள் பிறக்கும் எனக் கணக்கிட்டனர்.

**மாயா ஆண்டுக் குறியீட்டுமுறை:** மாயா ஆண்டுக் குறியீட்டு முறை கி.பி. 3-ஆம் நூற்றாண்டி லிருந்து 6-ஆம் நூற்றாண்டு வரையில் கண்டெடுக் கப்பட்ட கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்டுள்ளது. மாயா ஆண்டுக் குறியீட்டு முறையில் யூனல் (Unial) என்று அழைக்கப்படும் இவர்களின் மாதத்திற்கு 20 நாட்களேயாகும். 18 யூனல் மாதங்கள் அல்லது 360 நாட்களைக் கொண்ட ஆண்டு 'துன்' (Tun) எனப் பெயரிடப்பட்டது.

தொடர்ச்சியான 20 ஆண்டுகளைக் 'கட்டுன்' (Katun) என்று குறிப்பிடுகின்றனர். இதனைத் தவிர்த்து இரண்டாவதாக, ஓர் ஆண்டில் 5 நாட் களைச் சேர்த்து 365 நாட்களாக வரையறை செய் கின்றனர். 'சோல்கின்' (Tzolkin) எனப்படும் மூன்றாம் அமைப்பில் 20 நாட்களைக் கொண்ட 13 பிரிவுகளாகப் பகுத்து 260 நாட்கள் கொண்ட காலத்தைக் கணக்கிட்டு மூன்று வகையான கால முறையினையும் கையாண்டனர்.

**மெக்சிகோ (அசுதெக்கு) ஆண்டுக் குறியீட்டு முறை:** மாயா முறையினை ஒத்துக் காணப்பட்ட இவர்கள் முறை காலப் போக்கில் வளர்ந்து 365 நாட் களையும் 18 மாதங்களையும் கொண்டிருந்தது. ஒவ் வொரு மாதமும் 20 நாட்களைக் கொண்டதாகும். எஞ்சியுள்ள 5 நாட்கள் நெமோன்டமி (Nemontemi) என்று கூறப்படுகிறது. இவை சிறப்பற்ற நாட்களாகவும் பலனைக் கொடுக்கக் கூடியதல்லாதன என்றும் நம்பப் பட்டன. மக்கள் 584 நாட்களைக் கொண்ட வெள்ளி யின் பருவம் முடியும் போது பிறக்கும் ஆண்டினைச் சிறப்பாகக் கொண்டாடுவர். இது எட்டாண்டுகளுக்கு ஒரு முறை நடைபெறும். இரண்டு 52 ஆண்டுகளைக் கொண்ட ஒவ்வொரு சுழற்சியும் வெள்ளிக் கிரகமும் ஒன்று சேரும்போது 'ஒரு பழைய காலத்தை' (One Old Age) ஏற்படுத்துகிறது. இம்முறை மாயா ஆண்டுக் குறியீட்டு முறையிலும் காணப்பட்டது.

மெக்சிகோவினர் உலகம் ஒரு காலத்தில் அழியும் எனவும் அதன் பின்னர்ப் புது உலகம் உருவாக்கப் படும் எனவும் நம்பினர்.

**உரோமனிய ஆண்டுக் குறியீட்டு முறை:** உரோமாபுரியைத் தோற்றுவித்த உரோமுலசு, 304 நாட்களையும், பத்து மாதங்களையும் கொண்ட ஆண்டை ஏற்படுத்தினார். நாகரிக உலகம் முழுவ தும் இன்று பின்பற்றப்பட்டு வரும் ஆண்டுக் குறி யீட்டு முறை இந்த ஆண்டுக் குறியீட்டு முறை யைப் பின்பற்றியதே என்று வரலாறு கூறுகிறது. 'மரசு' என்ற உரோமுலசின் தந்தைக்குப் பெருமை சேர்க்கும் வகையில் 'மார்ச்சு' எனும் பெயரும், ஆமி யன் இனத்தின் முன்னோராகிய 'அசுப்ரோடைட்டு' அல்லது 'வீனசின்' பெயர் அடிப்படையில் 'ஏப்ரல்' என்னும் பெயரும், மூத்தோர் எனப் பொருள்படும் 'மெசோராசு' என்பதன் அடிப்படையில் 'மே' என்னும் பெயரும், இளையோர் எனப்பொருள்படும் 'சூனியோரசு' என்பதன் அடிப்படையில் 'சூன்' என்னும் பெயரும் மாதங்களுக்கு வழங்கப்பட்டன என்னும் செய்தியினை இந்த ஆண்டுக் குறியீட்டு முறையால் அறியலாம்.

சூலியசு சீசர் கி.மு. 63-இல் மாமன்னராக அரியணை ஏறிய பொழுது ஆண்டுக் குறியீட்டு முறையில் நேரிடும் சீரில்லாப் போக்குகளைக் கவனிக் காமல் விட்டதால் கி.மு. 47-இல் மாதங்கள் அவற் றிற்குரிய சரியான பருவங்களிலிருந்து தள்ளப்பட, தவறான காலங்களில் பல்வேறு பண்டிகைகளும் கொண்டாடப்பட்டன. இதனால், ஆண்டுக் குறி யீட்டு முறையில் சீர்திருத்தம் செய்ய விரும்பிய சூலியசு சீசர் அலெக்சாண்டிரியாவைச் சார்ந்த சோன்சிசீன்சு என்ற வானவியலாரை அழைத்து அறி வுரையும், திருத்தம் செய்வதில் உதவியும் கேட்டார். இக்காலக்கட்டமே உரோமானிய வரலாற்றில் 'குழப்பமான ஆண்டு' என்று குறிக்கப்படுகிறது. இவ் வாண்டு 445 நாட்களைக் கொண்டிருந்தது. சோன் சிசீன்சின் அறிவுரைப்படி ஆண்டுக்கு 365¼ நாட்கள் என்பது முடிவு செய்யப்பட்டது. இதை நடைமுறைப் படுத்த ஆண்டுக்கு 365 நாட்கள் எனவும், ஒவ்வொரு நான்காம் ஆண்டுடனும் ஒரு கூடுதல் நாளைச் சேர்ப் பது எனவும் முடிவு செய்யப்பட்டது.

**கிரிகோரியன் ஆண்டுக் குறியீட்டு முறை:** சூலியன் ஆண்டுக் குறியீட்டு முறையில் சீர்திருத்தங்களை மேற்கொண்டு 13-ஆம் போப்பு கிரிகோரி என்பவர் கி.பி. 1582-இல் ஒரு புதுவகை ஆண்டுக் குறியீட்டுமுறையை நடைமுறைப் படுத்தினார். அது பின்னாளில் கிரிகோரியன் ஆண்டுக் குறியீட்டு முறை என அழைக்கப்பட்டது. இத்தாலி, இசுபெயின், போர்ச்சுகல், பிரான்சு, போலந்து ஆகிய நாடுகளில் இம்முறை உடனடியாகப் பின்பற்றப்பட்டது. இங்கிலாந்தில் கி.பி. 1750-இல் கொண்டு வரப்பட்ட 'ஆண்டுக் குறியீட்டுப் புதுமுறைச் சட்டம்' என்பதன் வழியாக, 'கிரிகோரியன் ஆண்டுக் குறியீட்டு முறை' கி.பி. 1752-இல் சட்ட முறையில் நடைமுறைக்கு வந்தது. அதே சமயத்தில், புத்தாண்டு நாளும் மார்ச்சு 25-ஆம் நாளிலிருந்து சனவரி முதல்நாளுக்கு மாற்றப்பட்டது. சனவரி 1 புத்தாண்டுநாள் என்பதனை முதலில் நடைமுறைப்படுத்தியது இசுகாட்லாந்து (Scotland) நாடே என்பது குறிப்பிடத்தக்கது. இந்த ஆண்டுக் குறியீட்டு முறையில், ஒரு நடைமுறை ஆண்டு 365 நாட்கள் கொண்டது என்பதும், ஒவ்வொரு நான்காம் ஆண்டுடனும் ஒரு கூடுதல் நாளைச் சேர்ப்பது என்பதும் முடிவு செய்யப்பட்டன. இதுவே 'இலீப்பு ஆண்டு' என்று கொள்ளப்பட்டு, பிப்பிரவரி மாதத்தில் அந்த ஒரு நாள் கூட்டப்பட்டது. மற்றை ஆண்டுகள் 365 நாட்கள் கொண்டவையாகக் கணக்கிடப்பட்டன. சனவரி முதல் ஒன்றுவிட்டு ஒரு மாதத்திற்கு 31 நாட்களும், மற்றை மாதங்களுக்கு முறையே 30 நாட்களும், பிப்பிரவரிக்கு 28 நாட்களுமாக ஆண்டுக்கு 365 நாட்கள் நிறுவப்பட்டன. நான்காண்டுகளுக்கொருமுறை பிப்பிரவரிக்கு 29 நாட்கள் அமையும் என்பது முடிவு செய்யப்பட்டது.

**இசுலாமியர் ஆண்டுக்குறியீட்டு முறை:** சமயத் தொடர்பானவற்றிற்காக இசுலாமியர் பின்பற்றும் ஆண்டுக் குறியீட்டுமுறை நிலவின் அடிப்படையிலானது. முதல் பிறைச் சந்திரன் அந்தி வானில் தோன்றும் காலத்தினைக் கொண்டு ஆண்டின் தொடக்கம் முடிவுசெய்யப்படுகிறது. ஆண்டுக்குப் பன்னிரண்டு மாதங்கள் கணக்கிடப்பட்டன. மக்காவிலிருந்து மதினாவுக்கு கி.பி. 622 சூலை 15-ஆம் நாள் வியாழன்று முகமது நபி சென்ற முதல் மாதத்திலிருந்து இந்த ஆண்டுக் குறியீட்டு முறை தொடங்குகிறது. இது இசிராக்களில் (Hegira) ஒன்று என அழைக்கப்படுகிறது. இத்தகைய இசுலாமிய ஆண்டுக்குறியீட்டு முறையில், புத்தாண்டு 32½ ஆண்டுகளுக்கு ஒருமுறை பருவங்களின் வழியே பின்னோக்கிச் செல்கிறது என்பது கணக்கிடப்பட்டுள்ளது.

**சூலியன் காலம்** ''சுகேலிசர்'' என்பவரால் தோற்றுவிக்கப்பட்ட சூலியன் முறை பல்வேறு வானியல் காரணங்களின் அடிப்படையில் மிகப்பயனுடையதென உணரப்படுகிறது. நிலவின் பத்தொன்பது ஆண்டுக்காலச் சுழற்சியின் தொடர்ச்சியான பயன்பாட்டினால் இந்தச் சூலியன் காலம் உருவாக்கப்பட்டுள்ளது. சூலியன் நாள் நடுப்பகலில் தொடங்குவதாக இம்முறை குறிக்கிறது.

பொதுவாக ஆண்டுக் குறியீட்டு முறை ஒவ்வோர் ஆண்டும் மாற்றம் பெறுவதனாலும், முந்தைய அல்லது வரப்போகும் ஆண்டிலிருந்து வேறுபடுவதனாலும் ஒப்பீடு செய்வது இயலாததாகிறது வரும் ஆண்டு அல்லது கடந்த ஆண்டின் கிழமை நாட்கள் ஆகியன ஒத்துப் போகாதிருப்பதனால் அடுத்தடுத்த இரண்டாண்டுகள் அல்லது மூன்றாண்டுகள் ஒன்றாக இருப்பதில்லை. இச்சூழ்நிலை பதினான்கு வகை ஆண்டுகளை உருவாக்குகிறது ஒவ்வோர் ஆண்டும் ஏழு நாட்களைக் கொண்ட 5 வாரங்களையும் ஒரு கூடுதல் நாளையும், 'இலீப்பு ஆண்டு'இரண்டு கூடுதல் நாட்களையும் கொண்டிருப்பதனாலுமே இக்குழப்பம் உண்டாகிறது. மேலும் இந்த ஆண்டுக் குறியீட்டு முறை 28 வகை மாதங்களைக் கொண்டிருப்பது மற்றொரு காரணம் ஏனென்றால், இந்த மாதங்கள் 28,29,30 அல்லது 31 நாட்களைக் கொண்டிருப்பதுடன், ஏழு நாட்களில் ஏதேனும் ஒரு கிழமையில் தொடங்குவதனால் ஒரு நிலையான குழப்பம் இருந்து கொண்டேயிருக்கிறது. இக்காரணங்களால் உலக ஆண்டுக் குறியீட்டு முறை சீரான ஒன்றாகவும் செலவு மிக்கதாகவும் கருதப்படுகிறது.

சூலியசு சீசரால் உருவாக்கப்பட்டு, மாவீரன் கான்சுடான்டைனால் சீர்திருத்தம் செய்யப்பட்டுப் பிறகு பதின்மூன்றாம் போப்பு கிரிகோரியினால் மீண்டும் திருத்தம் செய்யப்பட்ட ஆண்டுக் குறியீட்டு முறையையே இக்காலத்தில் பின்பற்றி வருகின்றனர். கத்தோலிக்கச் சமயகுருமாரான அப்பெமார்க்கோ மாசுடிரோபிலி என்பவரால் கி. பி. 1834-இல் உலக ஆண்டுக் குறியீட்டு முறை உருவாக்கப்பட்டது. இம்முறையில், ஆண்டுக்கு 364 நாட்களும், ஆண்டு முடிவில் 365-ஆம் நாள் வார இறுதியின் கூடுதல் நாளாகவும் சேர்க்கப்பட்டது. இதற்குப் பிறகு ஒவ்வொரு புத்தாண்டும் தவறாமல் சனவரி 1 ஞாயிற்றுக் கிழமையில் அமைந்து காலத்தைக் கணக்கிடுவதில் நம்பிக்கைக்குரிய, சீரான கருவியாக, ஆண்டுக் குறியீட்டு முறையில் விளங்கத் தொடங்கியது. இதன் விளைவாக, மறந்து வரும் கிரிகோரியன் ஆண்டுக் குறியீட்டு முறையின் குறைகள் நீக்கப்பட்டுப் புதிய முறையொன்று கிடைத்துள்ளது எனலாம்.

காலத்தைக் கணக்கிடுவதற்கு வானவியலைப் பயன்படுத்தும் ஆண்டுக் குறியீட்டு முறை இக்காலத் தேவைகளை நிறைவேற்றவில்லை என்பது வானவியலாரால் உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. இக்குறைகளை நீக்க வந்த உலக ஆண்டுக் குறியீட்டு முறை வாரத்திற்கு எட்டு நாட்களைக் கொண்டுள்ளதால் பழங்கால முதல் நடைமுறையிலுள்ள ஏழு நாட்களைக் கொண்ட வாரத்தில் இடைவிடாத தொடர்ச்சியை மீறுகிறது என இந்த முறையும் குறை கூறப்பட்டுள்ளது.

**தமிழ் ஆண்டுக் குறியீட்டு முறை:** இந்தியா, கிரிகோரியன் ஆண்டுக் குறிப்பேட்டு முறையினையே கி. பி. 1757-ஆம் ஆண்டு முதல் பின்பற்றி வந்தது. இதைப்போன்றே இசுலாமியப் பண்டிகைகளை உறுதி செய்ய இசிராப் பஞ்சாங்கம் பயன்பட்டு வந்தது. கி. பி. முதல் நூற்றாண்டு முதல் அதன் நடுப் பகுதி வரை இந்திய மன்னர்களின் கல்வெட்டுச் சாசனங்கள் பலவகைப்பட்ட பஞ்சாங்கங்களின்படி பொறிக்கப்பட்டுள்ளன. இந்தியாவில் தோன்றிய இந்து, புத்த, சமண சமயங்களும் வேறு வேறான ஆண்டு முறைகளையும் ஆண்டுத் தொடக்கங்களையும் கொண்டு, பழைய வான நூல்களான சூர்ய, ஆர்ய, பிரம்ம போன்ற பல்வேறு கணித முறைகளைப் பயன்படுத்துகின்றன.

இந்து சமய ஆண்டுக் குறிப்பேட்டு முறையின்படி உலக நாட்கள் சூரிய உதய முதலாகக் கணிக்கப்படுகின்றன. எனினும் கி. பி. 4-ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சூரிய சித்தாந்தத்தில் கூறப்படும் சிடீரியல் (Sidereal) விண்மீனின் அளவை அடிப்படையாகக் கொண்டு ஆண்டின் அளவை அப்படியே கடைப்பிடித்தது தவறாகும். இந்தியாவில் கி. பி. 1200-ஆம் ஆண்டில் துருக்கியர் படையெடுத்து வந்தபோது, பல இந்திய வான் ஆராய்ச்சி நிலையங்கள் அழிக்கப்பட்டன. அது முதல் ஆண்டுக் குறியீட்டு முறை சோதிடர்களின் துறையானது.

இப்போது கடைப்பிடிக்கும் திருவள்ளுவர் ஆண்டு நாள் காட்டியில் திருவள்ளுவரின் பிறந்த ஆண்டு, ஏசுகிறித்துப் பிறப்பதற்கு 31 ஆண்டுகளுக்கு முன்பு இருந்திருக்க வேண்டும் என்று கணிக்கப்பட்டுள்ளது. இப்போதுள்ள தமிழ் நாட்காட்டியில், திருவள்ளுவர் ஆண்டு 2015 என்று குறிக்கப்பட்டுள்ளது. இது திருவள்ளுவர் மறைவிற்குப் பின்னர் நடக்கும் 2015-ஆம் ஆண்டு என்பதனைக் குறிக்கிறது.

தமிழ் மாதப் பிரிவுகள் கதிரவன் வெவ்வேறு மீன் கூட்டத்தினிடையே புகும் நிகழ்ச்சியின் அடிப்படையிலேயே அமைக்கப் பெற்றன. இம்மீன் கூட்டங்களின் பெயரே 'ஓரை' எனப்படும். ஒவ்வோர் ஓரையினையும் அடையாளம் கண்டுகொள்ள ஒவ்வோர் உருவத்தினை அக்கூட்டங்களுக்குக் கற்பனையாகப் பொருத்தி வழங்கியுள்ளனர் பண்டைய வானவியலார். பின்னர் அவ்வுருவங்களின் பெயர்கள், அந்தந்த மாதங்களுக்குரிய பெயர்களாக வழங்கப்பட்டன. பண்டைத் தமிழர் மாதங்களின் பெயர்களை, ஓரைப் பெயர்களாகவே வழங்கினர். பின்னர் வடமொழிச் செல்வாக்கால் அத்தூய தமிழ்ப் பெயர்கள் வட சொற்களாகத் திரிந்து வழங்கின.

ஆரியர் தாம் அமைத்த ஆண்டமைப்பிற்குச் 'சௌரமானம்' என்றும் மாதங்களுக்குச் சௌரமான மாதங்கள் என்றும் பெயர் வைத்துக் கொண்டனர்.

ஓர் ஓரையில் புகுந்த கதிரவன் பிறிதோர் ஓரைக்குப் போகும் வரையிலுள்ள காலம் ஓர் இராசி அல்லது ஒரு மாதம் எனப்படுகிறது. இக்கணக்கீடு பண்டைத் தமிழருடையதே. ஒவ்வோர் ஓரைப்பெயராலும் அழைக்கப்பெற்ற மாதப் பெயர்களே சைத்திரம், வைசாகம், ஆகாரம் (ஆனி), ஆசாம் (ஆடி) முதலியனவாகும். இவ்வழக்குகள் தமிழரின் ஓரைப் பெயர் வழக்கை அடியொற்றி அமைந்தன.

தலைமை மீனின் பெயரே அந்த மீன் சார்ந்த கூட்டத்திற்கும் வழங்கப் பெற்றது. வெள்ளாடு மேல் அமைந்த மீன் கூட்டத்திற்கு மேடம் என்றும், ஆணும் பெண்ணும் இணைந்த இரட்டைத் தோற்றம் போல் உள்ளதற்கு மிதுனம் என்றும், நண்டினைக் கடகம் என்றும் வழங்கினர். மேலும் மடங்கல் (சிங்கம்), கன்னி, துலை (தராசு), நளி (தேள்), சிலை (வில்), சுறவம் (முதலை), கும்பம், மீன் ஆகிய அமைப்பிற்கு முறையே சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என்றும் வழங்கினர். இவ்வழக்கில் கடகம், கன்னி, துலாம், கும்பம், மீனம், என்பன தூய தனித் தமிழ்ச் சொற்கள். எனினும் ஆரிய வழக்குத் தலையெடுத்தபின் ஓரைப் பெயர்களால் மாதங்களைக் குறிக்கும் தமிழ் வழக்கு மறையலாயிற்று.

தமிழ் ஆண்டுக் குறிப்பேட்டு முறையில் வழங்கப்படும் மாதப் பெயர்கள், மாதப் பெயர்களுக்கு அடிப்படையாக அமைந்த ஓரை மற்றும் இராசிப் பெயர்கள், தமிழ் மாதங்களுக்கு இணையான ஆங்கில மாதங்கள் முதலியவை அடுத்த பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ளன.

சமயச் சார்பற்ற பொது நடைமுறைகளுக்குக் கிரிகோரியன் ஆண்டுக் குறியீட்டு முறையை இந்திய அரசு ஏற்றுக்கொண்டுள்ளது. இந்து மதத்தினர் நிரம்பிய இந்திய சமய வாழ்க்கை, மரபு சார்ந்த பஞ்சாங்க முறையினையே கடைப்பிடித்து வருகிறது.

ஆண்டு, மாதம், நாட்களைக் குறிப்பதில் சௌர மானம், சௌரசாந்திரமானம், சாந்திரமானம் ஆகிய மூன்று முறைகள் பஞ்சாங்கத்தில் கையாளப்படுகின் றன. இந்திய அரசு புதிதாக ஏற்படுத்தியிருக்கும் 'சக வருட முறை' (Saka National Calendar) சௌர மானத்தில் மூன்றாம் வகையாகும். இம்முறை கிரி கோரியன் முறையினைப் பெரிதும் ஒத்துள்ளது. ஆனால், வசந்த காலத்தில் பகலிரவு சமமுடைய நாளில் சூரியன் புகும் கால முதல் வருடம் தொடங் கும். ஆதலின் மார்ச்சு 22-ஆம் நாள் ஆண்டின் முதல் நாளாக அமையும். இலீப்பு ஆண்டில் மார்ச்சு 21-ஆம் நாளே முதல் நாள் ஆகும்.

| இராசி மற்றும் மாதப் பெயர்கள் | தமிழ் மாதங்களுக்கு இணையான வட மொழித் திரி பெயர்கள் | தமிழ் மாதங்களுக்கு இணையான ஆங்கில மாதப் பெயர்கள் |
|---|---|---|
| மேடம் | சித்திரை | ஏப்பிரல்-மே |
| விடை | வைகாசி | மே-சூன் |
| ஆடவை | ஆனி | சூன்-சூலை |
| கடகம் | ஆடி | சூலை-ஆகசுட்டு |
| மடங்கல் | ஆவணி | ஆகசுட்டு-செப்டம்பர் |
| கன்னி | புரட்டாசி | செப்டம்பர்-அக்டோபர் |
| துலை | ஐப்பசி | அக்டோபர்-நவம்பர் |
| நளி | கார்த்திகை | நவம்பர்-திசம்பர் |
| சிலை | மார்கழி | திசம்பர்-சனவரி |
| சுறவம் | தை | சனவரி-பிப்பிரவரி |
| கும்பம் | மாசி | பிப்பிரவரி-மார்ச்சு |
| மீனம் | பங்குனி | மார்ச்சு-ஏப்பிரல் |

தமிழ் ஆண்டுக் குறியீட்டு முறையில் கிழமைகளின் பெயர்கள் பின் வருமாறு குறிப்பிடப்படுகின்றன.

ஞாயிறு — (கோள்களுக்கு எல்லாம் தலையாயது ஞாயிறு எனவே கிழமைப் பெயர்களிலும் இதுவே முதலாக வைக்கப் பட்டது).

திங்கள்

செவ்வாய்

அறிவன் (இப்போது புதன் என வழங்கப்படுகிறது).

வியாழன்

வெள்ளி

காரி (இப்போது சனி என வழங்கப்படுகிறது).

இக்கால ஆண்டுக் குறியீட்டு முறை பல மாறுதல்களை ஏற்று வளர்ச்சியடைந்து துல்லியமானதாகக் காணப்படினும் சில குறைபாடுகளைக் கொண்டுள்ளது. மாதங்களில் நாட்களின் எண்ணிக்கை சீராக இல்லை. இதன் வேறுபாடு 12 விழுக்காடாகும். பிப்பிரவரி மாதம் 28-நாட்களையும் ஏனைய மாதங்கள் 30 நாட்கள் அல்லது 31 நாட்களைக் கொண்டிருக்கிறது. ஒரு வாரத்தில் ஒரு குறிப்பிட்ட நாள், அது முந்தைய ஆண்டில் பெற்ற தேதியினைப் பெறுவதில்லை. இது ஆண்டிற்கு ஆண்டு மாறி வருகிறது. கடந்த ஆண்டின் ஒரு குறிப்பிட்ட தேதியினைக் கொண்ட நாளினை இவ்வாண்டுக் குறியீட்டில் அறிய இயலா. இக்குறைபாடுகள் அனைத்தையும் அகற்றி 'நிலையான ஆண்டுக் குறியீடு' (Fixed Calendar) 'உலகளாவிய பொது ஆண்டுக் குறியீடு' (Universal Calendar) ஆகிய இரண்டு முறைகளைக் கொண்டுவர விழைந்தனர். இந்த இரண்டு ஆண்டுக் குறியீட்டு முறைகளும் 52 வாரங்களையும் 364 நாட்களையும் கொண்டிருக்கின்றன. 365-வது நாள் வெற்றிடமாகக் காணப்படுகிறது. இதனால், ஒவ்வொரு நான்காம் ஆண்டும் வேறொரு வெற்றிடம் தோன்றுகிறது. இதனையடுத்து 'நிலைபேறுடைய ஆண்டுக் குறியீடு' (Perpetual Calendar) முறையை அமைத்தனர். இம்முறையில் எந்த ஒரு நாளையும் அவ்வாண்டில் அது குறிக்கும் நாளினைக் கணக்கிட முடியும். கிரிகோரியன், சூலியன் முதலான அனைத்து முறைகளிலும் நிலைபேறுடைய ஆண்டுக் குறியீட்டு முறையைப் பயன்படுத்த முடியும். ம.ந.பு.

துணை நூல்கள்:

Charles Singer Holyard E.J., Hallar and Williams Trevor I., A History of Technology, Volume-III, 'The Calendar' Clarendon Press, Oxford, 1957.

Elizabeth Achelis, The Calendar for the Modern Age, Thomas Nelson and Sons, New York, 1959.

Watkins Harold, Time Counts, London, 1953.

**ஆண்டுத் தொகை** என்பது குறிப்பிட்ட கால அளவுக்கோ வாழ்நாள் முழுமைக்கோ ஆண்டுதோறும் குறிப்பிட்ட நாளில் முறையாக அளிக்கப்படும் பணத்தொகை ஆகும்.

காப்பீடு செய்து கொள்பவர், ஒரு குறிப்பிட்ட தவணையைச் செலுத்தி வருகிறார். காப்பீட்டு நிறுவனம் ஒவ்வோர் ஆண்டும் அவருக்கு ஒரு குறிப்பிட்ட தொகையை வழங்கி வருகிறது. ஒப்பந்தப்படி ஒரு குறிப்பிட்ட காலம் வரையில் அவர் நலன்களைப் பெறலாம். எடுத்துக்காட்டாக, ஆண்டுஒன்றுக்கு உரு. 500/- என்ற வீதத்தில் அவர் ஐந்து ஆண்டுகளுக்கோ, பத்து ஆண்டுகளுக்கோ இவ்வாறு தொகைகளைத் தொடர்ந்து பெற இயலும். அன்றி, அவர் வாழ்நாள் முழுமைக்கும் இவ்வாறு வழங்கப்பட வேண்டும் என்றும் ஒப்பந்தம் செய்து கொள்ளலாம். இவ்வாறு ஆண்டுக் காப்பீடு செய்து கொள்பவர் ஆண்டுத் தொகை பெறுதற்குரியவர் (Annuitant) என்று அழைக்கப்படுவார்.

ஆண்டுத் தொகையை (Annuity) ஓய்வூதியத் தொகையுடன் ஒப்பிடலாம். ஓய்வூதியம் (Pension) ஒருவர் தமது சொந்தச் சேமிப்பிலிருந்து தமக்கே அளித்துக் கொள்வதாகும். ஒரு தொகையை ஆயுள் காப்பீடு அல்லது வேறு முறையில் சேமித்து வைத்திருக்கும் ஒருவர் அதனைத் தமக்கு எஞ்சியுள்ள வாழ்நாளில் தாமே அனுபவிக்க வேண்டும் என்று விரும்பலாம்.

ஆயுள் காப்பீட்டில் தவணை முறைகளில் தொகையினைச் செலுத்த வேண்டும். ஆண்டுத் தொகையாகத் தொடக்கத்திலேயே ஒரு குறிப்பிட்ட தொகையைச் செலுத்திவிட வேண்டும். பின்னர், எந்தத் தவணையையும் செலுத்த வேண்டியதில்லை. அத்தொகையிலிருந்து ஒவ்வோர் ஆண்டும் அவர் குறிப்பிட்ட தொகையைப் பெற்றுப் பயனடையலாம். ஆயுள் காப்பீட்டு ஈட்டுறுதியாளரின் (Policy Holder) வாரிசுகள் அவரது இறப்பிற்குப் பின் தொகையைப் பெறுவார்கள்.

ஆண்டுத் தொகையில், ஆண்டுத் தொகை பெறுபவர் மதிப்பிடப்பட்ட காலத்தையும் கடந்து உயிர் வாழ்ந்தால், அவர் செலுத்திய தொகையினை விட மிகுதியாகப் பெற்றுப் பயனடையலாம். ஆண்டுத் தொகை ஒருவர் வருமானம் ஏதுமின்றி நீண்ட நாட்கள் வாழப் பாதுகாப்புக் கொடுக்கிறது.

ஆண்டுத் தொகைகள் பல வகைப்படும். அவற்றுள் முக்கியமானவை வருமாறு:

அ. உடனடி ஆண்டுத் தொகை (Immediate Annuity),

ஆ. இறப்புக்குப் பின் வழங்கப்படும் ஆண்டுத் தொகை (Depart Annuity),

இ. ஆண்டுத்தொகை உறுதியாக்கம் (AnnuityCertain), தனிஆள் ஓய்வூதிய ஆண்டுத்தொகை (Personal Pension Annuity),

ஈ. பின்னடை உரிமையர் ஆண்டுத்தொகை/மீள்புரிமையோர் ஆண்டுத்தொகை (Reversionary Annuity).

ஆண்டுத் தொகைகள், ஈட்டிறுதியாளர்கள் பணியிலிருந்து ஓய்வு பெறும்போது, ஓய்வு காலச் சலு

ஒருவரைக் கூட்டத்திற்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கலாம். உறுப்பினர் அக்கூட்டத்தில் வாக்களிக்கலாம்; மற்றொருவரைத் தன் மாற்றாளாக நியமித்து அவரை வாக்களிக்கச் செய்யலாம். மாற்றாளுக்குக் கூட்டத்தில் பேசும் உரிமை இல்லை. செயல்முறை விதிகள் வேறு விதமாகக் குறிப்பிட்டிருந்தாலொழிய, ஒரு மாற்றாள் தேர்தல் நடந்தால் மட்டிலுந்தான் வாக்களிக்கலாம். மாற்றாள் நியமனப் பத்திரம் உரிய முறையில் முத்திரையிடப்பட்டு, அமர்த்துவோரின் கையெழுத்துடனும் இருக்க வேண்டும். இவ்வாறு, நிறுவனத்தில் கொடுக்கப்பட்ட மாற்றாள் பத்திரங்களை ஒவ்வோர் உறுப்பினரும் பார்வையிட உரிமை உண்டு. ஒரு பொதுக் கூட்டத்தின் தீர்மானத்தின்மேல் வாக்களிக்கையில் கைதூக்கும் முறையே கையாளப்பட்டு வருகிறது. இவ்வாறு வாக்களித்து அறிவிக்கப்பட்டுக் கூட்ட நடவடிக்கைக் குறிப்பேட்டில் பதிந்துவிட்டால், அது நிகழ்ச்சிக்குச் சான்றாகக் கருதப்படும். தலைவருக்கு வாக்களிக்கும் உரிமை பொதுவாக இல்லை; கைதூக்கும் முறையில் ஒவ்வோர் உறுப்பினருக்கும் ஒரு வாக்கு உண்டு. கைதூக்கும் முறையில் நடந்த வாக்களிப்பின் முடிவைத் தெரிவிக்கும்போது குறிப்பிட்ட ஒரு பகுதி உறுப்பினர்கள் இரகசிய வாக்கெடுப்புக் கேட்கலாம். அதன் பேரில் தலைவர் 48 மணி நேரத்திற்குள் வாக்கெடுப்பு நடத்த ஆணையிடலாம். கடன் பெற்றபின் உரிய காலத்தில் பணத்தைத் திரும்பச் செலுத்தாதவருக்கு வாக்களிப்பு மறுக்கப்படும்.

ஒரு நிறுவனத்தின் இறுதி நிலையினை உறுதி செய்வது பங்குரிமையாளர் கையில் உள்ளது. ஆகையால், ஆண்டுக்கு ஒரு முறை கூடும் இக்கூட்டத்தில் நிறுவனத்தின் வளர்ச்சியையும், அதன் வருங்கால வாய்ப்புகளையும் கலந்துரையாடி ஆவன செய்கின்றனர். இப்பொதுக் கூட்டங்களில் வழக்கமாகக் கவனிக்கப்படும் அலுவல்கள் பின்வருவன:

அ) தணிக்கை செய்யப்பட்ட கணக்குகள், ஐந்தொகைக் குறிப்பு, ஆதாய இழப்பீட்டுக் கணக்குகள் முதலியன.

ஆ) ஆண்டு அறிக்கையை ஆய்வு செய்து ஏற்றல்.

இ) பங்கு ஆதாயம் வழங்கல்.

ஈ) இயக்குநர்களையும் தணிக்கையாளர்களையும் தேர்ந்தெடுத்து, அவர்களின் ஊதியத்தை வரையறுப்பது.

**சிறப்புப் பொதுக் கூட்டம்:** சட்ட முறையான கூட்டமும் ஆண்டுப் பொதுக் கூட்டமும் தவிர, பிற பொதுக் கூட்டங்கள் சிறப்புப் பொதுக் கூட்டங்களெனப்படும். இக் கூட்டம் ஆண்டுப் பொதுக் கூட்டத்தில் ஆய்வு செய்யப்படாத அலுவல்களைக் கவனிக்கவும் மிகவும் இன்றியமையாத அலுவல்களைக் கவனிக்கவும் கூட்டப்படுகிறது. இக்கூட்டத்தை இயக்குநர்கள் தாமே கூட்டலாம். பங்குரிமையாளர் வேண்டுகோளின்படி இயக்குநர்கள் கூட்டலாம். அன்றி, பங்குரிமையாளரோ நீதிமன்றமோ கூட்டலாம்.

நிறுவனம் பங்குத் தொகையைக் கொண்டதாயின் பங்குத்தொகையில் பத்தில் ஒரு பங்கு உடையவர்களோ, பத்தில் ஒரு பங்கு வாக்குரிமை பெற்றவர்களோ கையெழுத்திட்டு, அலுவல்களைக் குறிப்பிட்டு நிறுவனத்தின் அலுவலகத்திற்கு அனுப்பினால், அதன்படி இயக்குநர்கள் பொதுக் கூட்டத்தைக் கூட்டவேண்டும்.

மேற்படி கூட்டம் விண்ணப்பம் செய்த 21 நாட்களுக்குள் கூட்டப்பட வேண்டும். தவறினால், விண்ணப்பம் கொடுக்கப்பட்ட 45 நாட்களுக்கு மிகாமல் கூட்டத்தைக் கூட்டுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். அன்றி விண்ணப்பம் செய்தவர்களே மேற்படி கூட்டத்தை விண்ணப்பம் செய்த 3 மாதங்களுக்குள் கூட்டலாம். அந்தக் கூட்டத்துக்கான செலவுகளை நிறுவனத்திடம் பெற்றுக் கொள்ளலாம்.

நிறுவனச் சட்டம் 186-ஆம் பிரிவின் படி, ஓர் இயக்குநர் அல்லது ஓர் உறுப்பினர் கேட்டுக் கொண்டால் நிறுவனத்தைக் கூட்டம் கூட்டும்படி நீதிமன்றம் நிறுவனத்திற்கு ஆணையிடலாம். அக்கூட்டம் நிறுவனத்தால் கூட்டப்பட்டதைப் போல் கருதப்படும்.

**வகுப்புக் கூட்டம்:** இது ஒவ்வொரு வகையான பங்குரிமையாளர்கள் நடத்தும் கூட்டத்தைக் குறிக்கிறது. பல்வகைப் பங்குகளை வெளியிடும் நிறுவனங்களிலேயே இக்கூட்டம் கூட்டப்படுகிறது. ஒவ்வொரு வகையான பங்குகளின் உரிமை மாற்றம் நிகழுவதைப் பற்றி விவாதிப்பதுதான் இக்கூட்டத்தின் சிறப்புத் தன்மையாகும்.

**கூட்டத்திற்குத் தலைமை:** தலைவர் இல்லை எனினும், கூட்டத்திற்கு வரவில்லை எனினும், தலைமை வகிக்க இசையவில்லை எனினும் இயக்குநர்கள் தங்களுக்குள் ஒருவரைத் தலைவராகத் தேர்வு செய்து கொள்ளலாம். செயல்முறை விதிமுறைகள் அனுமதித்தால் கூட்டத்திற்கு வந்த பங்குரிமையாளர்களே தலைவரைத் தேர்வு செய்யலாம்.

கூட்டத்திற்கு வரும் பங்குரிமையாளர் நேரடி

யாகவோ மாற்றாள் மூலமாகவோ கலந்து கொள்ள லாம்.

கூட்டங்களில் நிறுவனங்கள் செய்யும் தீர்மானம் பொதுத் தீர்மானம், சிறப்புத் தீர்மானம் என இரு வகைப்படும். ஒவ்வொரு நிறுவனமும் நிகழ்ச்சிக் குறிப்பேடு வைத்திருக்க வேண்டும். அதில், அனைத்துப் பொதுக் கூட்டங்கள், இயக்குநர் குழுக் கூட்டங்கள், பிற குழுக்கூட்டங்கள் முதலானவற்றின் செயல் முறைகளைப் பதிவு செய்ய வேண்டும்.

துணை நூல்கள்:

Singh, A., Company Law, Ed. 7, Eastern Book Company, Lucknow, 1982.

Shah, S.M., Lectures on Company Law, Ed. 18, N.M. Tripathi Private Limited, Bombay, 1981.

**ஆண்டுராசு** மத்திய அமெரிக்கக் கண்டத்தில் உள்ள குடியரசு நாடு. வடக்கில் கரீபியன் கடலும், கிழக்கிலும் வடகிழக்கிலும் நிக்கராகுவா நாடும், மேற்கில் குவாத்திமாலா நாடும், தென் மேற்கில் எல் சால்வடார் என்னும் நாடும் ஆண்டுராசின் (Honduras) எல்லைகளாம். இந்நாட்டின் கிழக்கே அட்லாண்டிக்குப் பெருங்கடலின் பிரிவான கரீபியன் கடலும், மேற்கே பசிபிக்குப் பெருங்கடலும் உள்ளன.

பரப்பும் மக்கள்தொகையும்: ஆண்டுராசு குடியரசின் பரப்பளவு 1,12,088 சதுர கி.மீ. மக்கள் தொகை 36,91,027 (1980). தெகூசிகால்பா (Tegucigalpa) இதன் தலைநகராகும். சான் பெட்ரோ சூலா (San Pedro Sula) என்பது இங்குள்ள இரண்டாம் சிறந்த நகரம். இலெசீபா (Laceiba), தேலா (Tela), கோமாயாகுவா (Comayagua), சோலூட்டேக்கா (Choluteca) என்பவை பிற பட்டணங்கள்.



ஆண்டுராசு

ஆண்டுராசின் பெரும்பகுதி மலைப்பாங்கானது. கரடு முருடான மலைநாடாக இருப்பதால் இந்நாடு முன்னேற்றமடையவில்லை. இங்குச் சாலை அமைப்பது கடினம். இந்நாட்டில் மிகுதியாக வாழை பயிராகிறது.

இந்நாட்டின் உயரமான மலையுச்சி ஏறத்தாழ 3500 மீட்டர் உயரமுள்ளது. இம்மலையுச்சி தென் மேற்கில் யோசாவோ ஏரிக்கு (Lake Yoja) அண்மையில் தென்படுகிறது. இந்நாட்டில் முக்கிய ஆறுகள் மலைகளில் தோன்றி, குறுகிய பள்ளத்தாக்குகளுக்கிடையே பாய்ந்து வடக்குக் கடற்கரையையொட்டியுள்ள தாழ்நிலங்களின் வழியாக ஓடி வருகின்றன.

உலுவா (Ulua) ஆறு வேளாண்மைச் செழிப்பு மிக்க பகுதிகளுக்கு நீர்ப்பாசனம் கொடுக்கிறது. பட்டுக்கா (Patuca) என்பது மிக நீண்ட ஆறு. வளம் குறைந்த பகுதிகளில் பாய்கிறது.

ஆண்டுராசு வெப்ப மண்டலத்தில் உள்ளது. உயர்ந்த மலைப் பகுதிகள் வசந்தகால இனிமை பயப்பவை. மே மாதம் முதல் நவம்பர் முடிய மழைக்காலம். மழை மிகுந்த மலைப்பகுதிகளில் காடுகள் உள்ளன. மகாகனி சிறப்பான மரங்களில் ஒன்று.

ஆண்டுராசில் வாழும் மக்கள் கலப்பினத்தவர்கள். மெசிடிசோசு (Mestizos) என்னும் பெயர் கொண்ட அவர்கள் இசுபானியருக்கும் (Spaniards) செவ்விந்தியருக்கும் பிறந்தவர்கள். அவர்களுள் பெரும்பாலோர் உழவர்கள்; மேட்டுநிலப் பள்ளத்தாக்குகளில் உழுது பயிரிடுவர். அமெரிக்க ஐக்கிய நாட்டைச் சார்ந்த பழ வாணிகக் குழுக்களின் கடும் உழைப்பால் இங்கிருந்த சதுப்பு நிலங்கள் வாழைத் தோட்டங்களாயின. நோய் பரப்பும் கொசுக்களை ஒழித்தும், குடிநீர் வழங்க ஏற்பாடுகள் செய்தும் அப்பகுதிகள் வாழ வசதி மிக்கவையாயின.

செவ்விந்தியர் குவாத்திமாலாவை அடுத்துள்ள மலைகளில் வாழும் சிறுபான்மையினர். அவர்கள் இன்றும் பண்பாட்டு முதிர்ச்சி பெறாதவர்களாகவே வாழ்கிறார்கள். நீக்கிரோக்கள் வட பாகக் கடற்கரைத் தோட்டங்களில் பணியாற்றுகிறார்கள். இங்குள்ள வெள்ளைக்காரர்கள் மக்கள் தொகையில் மிகச் சிலரே. சாலைப் போக்குவரத்து அரிதாக இருப்பதால், உழவர்களில் பலர் தத்தம் தேவைக்குப் போதுமான பொருள்களையே உற்பத்தி செய்கிறார்கள். பீன்சு, பழங்கள், கோதுமை, உருளைக் கிழங்கு போன்றவை உற்பத்தியாகின்றன. சிலவிடங்

களில் காப்பி, புகையிலை, அபேகா (Abeca) போன்ற பணப்பயிர்கள் ஏற்ற இடங்களில் பயிராகின்றன.

மேட்டுநிலங்களில் தொழிற்சாலைகளே இல்லை என்று கூறலாம். பொன், வெள்ளி, ஈயம், செம்பு, துத்தநாகம், இரும்பு, அஞ்சனக்கல் போன்ற கனிப் பொருள் படிவங்கள் இந்நாட்டில் இருந்தாலும், அவற்றைத் தோண்டியெடுக்க வகையறியாது இம் மக்கள் வாழ்கிறார்கள்.

சாலை வசதி பெருகப் பெருக பைன் மரக்காடு களில் மரமறுக்கும் தொழில் சிறப்பாக அமைந் துள்ளது. படிக்காரம், தீக்குச்சி, மாவரைத்தல், துணி நெய்தல் முதலியன பற்றிய சில தொழிற்சாலை களை இங்குக் காணலாம்.



மாயாப் பண்பாட்டுச் சிற்பம் - ஆண்டுராசு

வடக்குக் கரைத் தாழ்நிலம் வாழைப்பழம் தொடர்பான தொழில்களில் ஈடுபட்டுள்ளது. வாழை சிறப்பான ஏற்றுமதிப் பொருள். துறைமுகப்பட்டினங் களிலும் தொழிற்சாலைகள் அமைந்துள்ளன. இங்குக் கல்வி செலவின்றிக் கற்றுக்கொடுக்கப்படுகிறது. தாகூசிகால்பா தேசியப் பல்கலைக் கழகமும் பல பள்ளிகளும் இங்கு இயங்குகின்றன.

கிறிசுதோபர் கொலம்பசு (Christopher Columbus) ஆண்டுராசுக் கடற்கரையைத் தம் இறுதிப் பயணத் தின்போது கண்டறிந்தார். இசுபானியர்கள் பொன், வெள்ளிக்காக இங்குப் பெரும் பாடுபட்டார்கள். ஆண்டுராசு கி.பி. 1838-ஆம் ஆண்டில் விடுதலை பெற்றது. இந்நாட்டில் பலமுறை புரட்சிகள் நடந்தன. எல்சால்வடார் நாடு (Elsalvador) 1969-இல் ஆண்டு ராசின்மீது படையெடுத்தது. மக்களால் தேர்ந் தெடுக்கப்பட்ட குடியரசுத் தலைவரை விலக்கிவிட்டு 1972-இல் படைத்தலைவர், ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டார். பெருநாட்டில் (Peru) 1980-இல் கையெழுத்தான உடன்படிக்கையொன்றின் மூலம் எல்சால்வடாருக்கும் ஆண்டுராசுக்குமிடையே எழுந்த எல்லைச் சிக்கல் முடிவுக்கு வந்தது.

இந்நாட்டின் அரசியல் அமைப்புச் சட்டம் 1965-இல் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அரசியல் கட்சிகள் பல இந்நாட்டில் இயங்குகின்றன.

**ஆணத்தி** அரசு ஆணைகளை நடைமுறைப் படுத்தும் அலுவலர். கல்வெட்டுகளில் ஆணத்தி என்ற அலுவலர் குறிப்பிடப்பட்டுள்ளார். பல்லவர், பாண்டி யர், சோழர் ஆகியோர் ஆட்சி அமைப்பில் இவ்வலு வலர் பணியாற்றியுள்ளார். ஆணத்தியை ஆக்ஞாபதி என்றும் கூறுவர். அரசனின் நம்பிக்கையைப் பெற்ற அமைச்சரோ படைத்தலைவரோ தேவை ஏற்படும் போது இவ்வலுவலில் நியமிக்கப்படுவர்.

**ஆணவ மலம்**: கண்ணை மறைக்கும் புற இருள்போல அறிவை மறைக்கும் அக இருள் எனச் சைவ சித்தாந்தம் இதனைக் கூறும்.

'ஆணவம்' என்பது காரணப் பெயர். விரிவுடைய தாகிய உயிரின் அறிவை மிகச் சுருங்கியதாய் - அணுத்தன்மையதாய்ச் செய்தல் பற்றி ஆணவம் எனப்பட்டது.

ஆணவம் உயிர்களுக்குத் தொன்றுதொட்டே உள்ள இயற்கைக் குற்றமாகும். செம்பு என்று உண்டோ அன்றே அதற்குக் களிம்பும் உண்டு. அது போல உயிர் என்று உண்டோ அன்றே அதற்கு ஆணவமும் உண்டு. இது பற்றியே ஆணவமலம் 'சகச மலம்' எனப்படுகிறது.

உயிர்கள் அடையும் எல்லாத் துன்பங்களுக்கும் அடிப்படைக் காரணம் ஆணவ மலமேயாகும். இத னால், அதற்கு 'மூலமலம்' என்ற பெயரும் உண்டு.

விறகு, நெருப்பு என்பதொன்று இல்லை என்று சொல்லும்படி அதனைத் தன்னுள் பொதிந்து கொண்டு தான் ஒரு பொருளேயாய் நிற்றல் போல, ஆணவமலம் உயிர் என்பதொன்று இல்லை என்று சொல்லும்படி அதனைத் தன்னுள் பொதிந்து கொண்டு உயிரோடு இயைந்து நிற்கும்.

அஞ்ஞானத்தைச் செய்வதாகிய ஆணவமலத்தின் உண்மையைக் கொள்ளாத பிற சமயத்தார் அஞ்

ஞானத்தைப் பற்றி வேறு வகையாகக் கூறுவர். ஞானத்தின் இன்மையே அஞ்ஞானம் என்பர் தருக்க நூலார். மயக்கவுணர்வே (பிராந்தி ஞானமே) அஞ்ஞானம் என்பர் ஏகான்மவாதிகள். முக்குணங்களுள் தாமத குணமே அஞ்ஞானம் என்பர் பஞ்சராத்திரிகர். இயற்கையில் தோன்றும் அவிச்சையே அஞ்ஞானம் என்பர் சாங்கியர். சிவசக்தியின் ஒரு கூறே அஞ்ஞானம் என்பர் சிவாத்துவித சைவர், ஆன்மாவின் குணமே அஞ்ஞானம் என்பர் பாடாணவாத சைவர். மாயை கன்மங்களே அஞ்ஞானத்தைச் செய்யும் என்பர் ஐக்கியவாத சைவர்.

உயிர்களுக்கு உண்டாகிற அறியாமையை மாயை, கன்மம் ஆகியவற்றால் வருவதாகக் கொள்ளுதல் உண்மைக்கு மாறானதாகும். மாயையும் கன்மமும் உயிர்களின் அறிவை விளக்க வந்தவை; மாயை உடம்பாயும் மனம் முதலிய கருவிகளாயும் அமைகிறது. மாயையும் கன்மமும் உள்ளபோது அறிவு விளங்குதலையும் அவை செயற்படாத நிலையில் அறிவு விளங்காமற் போதலையும் அனுபவத்திற் காணலாம். மாயை போலவே கன்மமும் செயல் செய்யத் தூண்டி அறிவை விளங்கச் செய்யுமேயன்றித் தடை செய்யாது. ஆகவே, மாயையும் கன்மமும் உயிர்களுக்கு விளக்கத்தைத் தரும் என்று சைவ சித்தாந்தம் கூறுவது பிற சமயங்களுக்குப் புதுமையான செய்தியாகும்.

அறியாமையைச் செய்வதே ஆணவத்தின் உண்மையியல்பு. அது ஆன்மாவின் அறிவு, விருப்பம், செயல் என்னும் மூன்றையும் சிறிதும் நிகழவொட்டாது தடுத்து நிற்கும். ஆணவம் மாயை கன்மங்களோடு பொருந்தியபோது, உறவைப் பகை என்றும், பகையை உறவென்றும் மாறி உணருமாறு திரிபுணர்ச்சியை உண்டாக்கும். இது ஆணவத்திற்குப் பொது இயல்பாகும்.

உயிர்களின் அறிவு, விருப்பம், செயல் ஆகிய ஆற்றல்களை மறைத்து நின்ற ஆணவ இருளை நீக்கக் கூடிய மாயை கன்மங்கள் சேருமாயின், அவ்விருள் சிறிது நீங்க, முன் மறைந்து நின்ற அறிவு, விருப்பம், செயல் ஆகியவை சிறிதே வெளிப்படும். இது நெருப்பின் சுடும் சக்தி தடை மந்திரத்தால் தடுக்கப்பட்டபோது சுடாது நின்று, பின் விடை மந்திரத்தால் அத்தடை நீங்கச் சுடுதல் தொழிலைச் செய்தல் போன்றதாகும்.

ஆணவ மலம் ஒன்றே; ஆயினும் எண்ணிறந்த ஆற்றல்களை உடையதாய் எண்ணற்ற ஆன்மாக்களை மறைத்து நிற்கும். அது தோற்றமும் அழிவும் இல்லாத, என்றும் உள்ள சடப் பொருளாகும். அது ஆன்மாவை விட்டு நீங்குதல் என்பது, அழிந்தொழிவதன்று. தனக்கு மடங்கிச் செயலிழந்து நிற்பதேயாகும். இவ்வாறு ஆணவமலம் ஒன்றாய், சடமாய், எண்ணில்லாத ஆற்றல்களை உடையதாய், தனக்கு மறுதலைப் பொருளால், ஆற்றல் மடங்கப் பெறுவதாய் உள்ளது என்று சைவ சித்தாந்தம் கூறுகிறது.

அ.ச.

**ஆறூர்ப் போர்**: பல்லவ மன்னன் நந்திவர்மனுக்கும் பாண்டிய மன்னன் சீமாற சீவல்லபனுக்கும் ஆறூர் என்னும் இடத்தில் நடந்த போர். இது கி.பி. 858-இல் நடந்தது. இப்போரில் பாண்டிய மன்னன் வெற்றி பெற்றான். ஆறூர், ஈரோடு–காங்கேயம் பெருவழிச் சாலையில் நொய்யலாற்றங் கரையிலுள்ள இன்றைய ஆறூராகவே இருத்தல் வேண்டும். அங்குப் பழைய கோட்டை ஒன்று உள்ளது.

**ஆணைக் குழுக்கள்** இந்திய அரசிற்கெனப் பொதுப் பணியாளர்களைத் தேர்வு செய்யத் தனி ஆணைக்குழு (Commissions) ஒன்று செயற்பட்டு வருகிறது. இக்குழுவின் தலைவர், உறுப்பினர்கள், குடியரசுத் தலைவரால் பணி அமர்த்தப்படுகிறார்கள். உறுப்பினர்களின் சிறப்புத் தகுதிகள் பற்றி எதுவும் அரசியல் சட்டத்தில் குறிப்பிடப்படவில்லை. இக்குழுவிலுள்ள மொத்த உறுப்பினர்களுள் இயன்ற வரை பாதிக்குக் குறையாமல், மத்திய அல்லது மாநில அரசுகளில் பத்து ஆண்டுகளுக்குக் குறையாமல் பணியாற்றி இருக்க வேண்டும் என்பதுதான் தகுதியாகக் கருதப்படுகிறது. உறுப்பினர்களின் எண்ணிக்கை வரையறை செய்யப்படவில்லை. இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் 318–ஆம் விதிப்படி, குடியரசுத் தலைவர், இக்குழு உறுப்பினர்களின் எண்ணிக்கையை ஒழுங்குபடுத்தவும் அவர்களின் பணி நிலைகளை விதிகள் மூலம் தீர்மானிக்கவும் அதிகாரம் பெற்றுள்ளார்.

இக்குழுவின் உறுப்பினர்கள், தாம் பணிப் பொறுப்பினை ஏற்றுக் கொண்ட நாளிலிருந்து ஆறு ஆண்டுகள் அல்லது 65 வயது, இவற்றில் எந்த நிலை முன்னதாக வருகிறதோ, அதைப் பின்பற்றி ஓய்வு பெறுவார். ஓர் உறுப்பினர் தாமாகப் பதவியிலிருந்து விலக விரும்பினால், அவர் குடியரசுத் தலைவருக்கு எழுதிப் பதவி விலகிக் கொள்ளலாம். இக்குழுவின் தலைவரோ உறுப்பினரோ முறைகேடாக நடந்துகொண்டால், குடியரசுத் தலைவரின் ஆணையால் நீக்கப்படுவார். குடியரசுத் தலைவரால் இந்திய உச்ச நீதிமன்றத்திற்கு அம் முறைகேடான நடத்தை பற்றி எடுத்துக் கூறப்படும். அதன்பேரில் உச்ச நீதிமன்றம் விசாரணை ஒன்றை நடத்தி, அதனடிப்படையில் குறிப்பிட்ட உறுப்பினரை வெளியேற்றலாம்.

என்று பரிந்துரை செய்தால், குடியரசுத் தலைவர், குழுவின் தலைவரை அல்லது உறுப்பினரை வெளியேற்றும் ஆணையைப் பிறப்பிக்க முடியும்.

இந்தியக் குடியரசுத் தலைவர், கீழ்க்காணும் சூழ்நிலைகளில் குழுவின் தலைவரை அல்லது உறுப்பினரைப் பற்றி உச்ச நீதிமன்றத்தின் கவனத்திற்குக் கொண்டு போகாமலேயே பதவிப் பொறுப்பிலிருந்து நீக்கலாம்.

குழுவின் தலைவர் அல்லது உறுப்பினர் கடனைத் தீர்க்க இயலாதவராகி விடுவாராயினும், அவர்களுடைய பணிக்குரிய காலத்தில் ஊதியம் பெறும் பிற தொழில்களைச் செய்வார்களாயினும், குடியரசுத் தலைவரின் கருத்திற்கு அவர் உள்ளத்தாலும் உடலாலும் குழுவின் பணியினை ஆற்ற இயலாதவராகி விட்டாரெனத் தோன்றுவாராயினும், முறைகேடான நடத்தை உடையவரெனக் கருதப்படுவாராயினும் குடியரசுத் தலைவரால் நீக்கப்படலாம்.

பொதுப் பணியாளர் தேர்வாணைக் குழுவின் உறுப்பினர் ஒருவர், அப்பதவி முடிந்தபின் மீண்டும் அக்குழுவில் உறுப்பினராக இயலாது. மேலும் மைய, மாநில அரசுகளில் எந்தப் பதவியையும் வகிக்கத் தகுதியற்றவராகி விடுகிறார். ஆயினும், அவர் அக்குழுவின் தலைவராகப் பணி அமர்த்தப்படலாம்; அல்லது மாநில அரசின் ஆள்தேர்வுக் குழுவின் தலைவராகப் பணி அமர்த்தப்படலாம்.

இவ்வாணைக் குழுவின் பணியின் பொருட்டு ஏற்படும் செலவுகள், ஊதியங்கள், உதவித் தொகைகள், ஓய்வுக் கால ஊதியம் ஆகியவை இந்தியத் தொகு நிதியிலிருந்து பெறப்படுகின்றன. இந்தியக் குடியரசுத் தலைவர், இவ்வாணைக் குழுவின் அலுவலர்கள், பணியாளர்கள் ஆகியவர்களின் எண்ணிக்கை பற்றியும், அவர்கள்தம் பணிக்குரிய தகுதிகள், கட்டுப்பாடுகள் ஆகியவைபற்றியும் விதிமுறைகளை இயற்றி வழங்குவார். மேற்கூறிய பாதுகாப்புகள், நாடாளுமன்றத்தின் அதிகாரத்திலிருந்தும் பிற அரசியல் அதிகாரத்திலிருந்தும், இவ்வாணைக் குழுவிற்கு அரசியல் அமைப்புச் சட்டத்தால் அளிக்கப்படுகின்றன. இதன் ஊதியம் பாராளுமன்ற ஒட்டெடுப்பிற்குட்படுவதில்லை. இவ்வுறுப்பினர்கள் பதவியிலிருந்து விலகிய பின்னர், அரசின் அலுவலர்களுக்குத் தகுதியற்றவர்களென அரசியல் அமைப்புச் சட்டம் கூறுகிறது.

**ஆணைக்குழுவின் பணிகள்:** இவ்வாணைக்குழு, இந்திய அரசின் பல்வேறு பணிகளுக்குரிய தேர்வுகளை நடத்தும் பணியினைச் செய்கிறது; இவ்வெழுத்துத் தேர்வுகளின் முடிவின் பின்னர், வாய்மொழித் தேர்வு நடத்திப் பணி அமர்த்தம் செய்கிறது.

சிறப்புத் தகுதி பெற்றவர்களைத் தேர்வு செய்தற்குப், பணி அமர்த்தும் முறைகளையும் வழிகளையும் அமைத்துக் கொடுப்பதில் உதவ வேண்டுமென இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட மாநிலங்கள் இணைந்து இவ்வாணைக் குழுவினைக் கேட்டுக் கொண்டால், அவ்வேண்டுகோளின்படி சில பணிகளைச் செய்ய இது கடமைப்பட்டுள்ளது.

1. இவ்வாணைக்குழு, அரசின் பணிக்குப் பணி அமர்த்தம் செய்யும் முறைகள் பற்றிய அனைத்து நிலைகளிலும் கலந்து கருத்துரை கூறும்.

2. பொதுப் பணிக்குரிய பணி அமர்த்தங்களைச் செய்யும்பொழுது, ஒரு பணியிலிருந்து மற்றொரு பணிக்கு மாற்றம் வழங்கும்பொழுது என்ன கொள்கைகளைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பது பற்றியும், நியமனங்களுக்குரியவர்களுக்கு உரிய தகுதி பற்றியும், பதவி உயர்வு பெறுபவரின் தகுதி பற்றியும், அவ்வாறு ஒரு பணியிலிருந்து மற்றொரு பணிக்கு மாற்றம் பெறுபவர்களின் தகுதி பற்றியும், இக்குழு ஆலோசனை வழங்கும்.

3. இந்திய அரசின்கீழ்ப் பணியாற்றும் பணியாளர்கள் மீது எடுக்கும் ஒழுங்கு நடவடிக்கைகள் பற்றியும், அதுபற்றிய விண்ணப்பங்கள், வேண்டுகோள்கள் பற்றியும் கருத்துக் கூறும்.

4. அரசு அலுவல்களைச் செய்தபொழுது, ஒரு பணியாளரை எதிர்த்து எடுக்கப்பட்ட வழக்கு நடவடிக்கைக்குச் சட்டப்படி பதிலளித்து, கடமையைக் கட்டிக் காக்கும் வகையில் ஏற்பட்ட செலவுகளை அலுவலர்களுக்காக இந்தியத் தொகு நிதியிலிருந்து வழங்கப்பட வேண்டுமென்ற கோரிக்கை பற்றியும் கருத்துக் கூறும்.

5. அரசுப் பணியாளர் ஒருவர் அரசுப் பணியில் இருக்கும்பொழுது ஏற்பட்ட ஊறுபாடுகளுக்கும் உடல் குறைகளுக்கும் கோரப்பட்ட ஓய்வூதியம் வழங்குவது பற்றியும், அவ்வோய்வூதியம் எவ்வளவு வழங்கப்பட வேண்டுமென்பது பற்றியும் கருத்து வழங்கும்.

6. இக்குழுவினால் பணி அமர்த்தம் பெற்ற பொது அலுவலர்கள் தொடர்பான ஒழுங்கு நடவடிக்கை பற்றிய கருத்தினைக் கூறும் பணியினையும் இக்குழு மேற்கொண்டுள்ளது.

**மாநில அரசுப் பணியாளர் தேர்வாணையம்:** ஒவ்வொரு மாநிலமும் ஒரு பொதுப் பணியாளர் தேர்வு ஆணைக்குழு ஒன்றை ஏற்படுத்திக் கொள்ள, அரசியல் அமைப்புச் சட்டம் அதிகாரம் அளித்துள்ளது. ஆயினும், இரண்டிற்கு மேற்பட்ட மாநில அரசுகள் இணைந்து, ஒரு கூட்டுப் பணியாளர் தேர்வு ஆணைக் குழுவினை ஏற்படுத்திக் கொள்ளவும் அரசியல் அமைப்புச் சட்டம் வகை செய்கிறது.

மாநில அரசின் பணியாளர் தேர்வாணைக் குழு, ஒரு தலைவரையும் ஏனைய பல உறுப்பினர்களையும் கொண்டது. குழுத் தலைவரையும் உறுப்பினர்களையும் மாநில ஆளுநர் பணிஅமர்த்துகிறார். மத்திய பணியாளர் தேர்வு ஆணைக் குழுவைப் போன்று இயன்றவரை பகுதி உறுப்பினர்களுக்கு மேல் அரசுப் பணியாளராகப் பத்து ஆண்டுகள் பணியாற்றி இருக்க வேண்டும் என்ற தகுதி, அரசியல் அமைப்புச் சட்டத்தினால் வரையறை செய்யப்பட்டுள்ளது.

மாநிலப் பணியாளர் தேர்வாணைக் குழுவினைப் பொறுத்தவரை, எத்தனை உறுப்பினர்கள் இருக்க வேண்டும் என்று அரசியல் சட்டம் திட்டமாகக் கூறவில்லை. மாநிலக் குழுவின் பணிக் காலத்தைப் பொறுத்தவரை இந்திய அரசின் தேர்வாணைக் குழுவின் நிலை போன்றதுதான். ஆயினும், சில வேறுபாடுகள் காணப்படுகின்றன. மாநிலத் தேர்வாணைக் குழு உறுப்பினர்களின் பணிக்கால உச்சவரம்பு வயது அறுபது ஆகும். மைய அரசின் தேர்வாணைக் குழு உறுப்பினர்களின் பணிக்கால உச்சவரம்பு வயது அறுபத்தைந்தாகும். மாநில அரசின் தேர்வாணைக்குழு உறுப்பினர் அல்லது தலைவர் தங்களுடைய பதவி விலகல் கடிதங்களை மாநில ஆளுநருக்கு அனுப்ப வேண்டும். இக்குழுவின் நிருவாகப் பணிக்குரிய செலவுத் தொகை மாநில அரசுத் தொகு நிதியிலிருந்து பெறப்படுகிறது. மாநிலப் பணியாளர்களின் மொத்த எண்ணிக்கையையும் அவர்களின் பணிக் கட்டுப்பாடுகளையும் ஆளுநர் வரையறை செய்வார். இவ்வாணைக் குழுவின் உறுப்பினர், அவரது பணிக்காலம் நிறைவு பெற்ற பின் மீண்டும் அப்பணியில் நியமனம் பெறத் தகுதியில்லாதவரென அரசியல் அமைப்புச் சட்டம் கூறுகிறது. மாநில அரசின் தேர்வாணைக் குழுவின் தலைவர், மத்திய அரசின் தேர்வாணைக் குழுவின் உறுப்பினராகப் பணி அமர்த்தப்படலாம்; தலைவராகவும் பணி அமர்த்தப்படலாம்; அல்லது வேறு மாநிலத் தேர்வாணைக் குழுவின் தலைவராகவும் பணி அமர்த்தப்படலாம். ஆனால், பதவிக் காலத்திற்குப்பின் அவர்கள் மத்திய மாநில அரசுகளின் கீழ் எக்காரணத்தைக் கொண்டும் பணி அமர்த்தப்படக் கூடாது.

மாநில அரசின் தேர்வாணைக் குழுத் தலைவரைத் தவிர, பிற உறுப்பினர்கள் அதே குழுவின் தலைவராகப் பணி அமர்த்தப்படலாம், அல்லது மத்தியத் தேர்வாணைக்குழுவின் உறுப்பினராகவோ அதன் தலைவராகவோ பணி அமர்த்தம் செய்யப்படலாம்.

**மாநில அரசுத் தேர்வாணையத்தின் பணிகள்:** மைய அரசின் தேர்வாணைக்குழு, மத்திய அரசுத் தொடர்பான பணிகளுக்குரிய பணியாளர்களைத் தேர்வு செய்து செயலாற்றுவது போன்று, மாநில அரசின் தேர்வாணைக்குழு, மாநில அரசின் பணிகளுக்குத் தேவையான அலுவலர்களைத் தேர்வு செய்து அனுப்பும் பணியினை ஆற்றுகிறது. மத்திய அரசின் தேர்வாணைக் குழுவைப் போன்று இக்குழுவும் செயலாற்றுகிறது.

மாநிலத் தேர்வாணைக் குழுக்கள் ஒவ்வொன்றும் ஒவ்வோராண்டும் மாநிலச் சட்டமன்றங்களுக்குத் தாங்கள் செய்த பணி அமர்த்தம் பற்றியும், மற்ற அரசியல் சட்டம் கூறும் பணிகளைப் பற்றிய விவரங்களையும், அறிக்கையாகத் தொகுத்து, மாநில ஆளுநரின் மூலம் அனுப்பி வைக்கிறது. இவ்வறிக்கைகள், மாநிலச் சட்டமன்றங்களின் முன்பு, அரசின் விளக்கங்களுடன் அனுப்பி வைக்கப்படுகின்றன. மாநிலங்களுக்கிடையேயுள்ள கூட்டுக்குழுவின் அறிக்கையாக இருப்பின், தொடர்புள்ள மாநில ஆளுநர்களுக்கு அனுப்பி வைக்கப்பட்டு, அவ்வாளுநர்களால் அந்தந்த மாநிலச் சட்டசபையின் முன்னர் வைக்கப்படுகின்றன.

**ஆணைச் சட்டம்:** சட்டசபையால் இயற்றப்படாமல் ஆட்சியிலுள்ள அலுவலர்கள் ஓர் அவசர நிலைமையை முன்னிட்டுப் பிறப்பித்து, உடனே நடைமுறை செய்யும் அரசாணைகளுக்கு ஆணைச் சட்டங்கள் (Ordinances) என்று பெயர். இங்கிலாந்தில் இடைக்காலத்தில் இவ்வகைச் சட்டங்கள் பிறப்பிக்கப்பட்டன. பல காரணங்களால் அந்நாட்டில் பிற்காலத்தில் ஆணைச் சட்டங்கள் பிறப்பிக்கும் முறை குறைந்து வந்துள்ளது. இங்கிலாந்தில் இவ்வகைச் சட்டங்களைத் தற்காலத்தில் குழு (Council) உத்தரவுகள் என்று கூறுகின்றனர். இவற்றை அமைச்சரவையே இயற்றுகிறது.

இந்தியாவில் ஆங்கிலேயர் ஆட்சி நடந்தபோது இயற்றப்பட்ட ஆணைச் சட்டங்கள் பல. தேசிய இயக்கத்தை அடக்கி ஒடுக்கவும், போர்க்காலத் தேவையை முன்னிட்டும் பல ஆணைச் சட்டங்கள் இயற்றப்பட்டன. விடுதலைக்குப் பிறகும் இந்தியாவில் ஆணைச் சட்டங்கள் பிறப்பிக்கப்படுகின்றன. இவற்றைச் சட்டசபை கூடியவுடன் அங்கீகரிக்க வேண்டும் என்று இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் 123, 213-ஆம் பிரிவுகள் கூறுகின்றன. இவ்வாணைச் சட்டத்தினை மிக்க குறுகிய காலம் மட்டுமே நடைமுறைப்படுத்தவேண்டும். மேலும் நீட்டிக்க வேண்டுமாயின், ஒருமுறை நீட்டிக்கலாம். இவ்வாறு பிறப்பிக்கப்படும் ஆணைச் சட்டங்கள் நாடாளுமன்றத்தின் இரு சபைகளின் முன் வைக்கப்படவேண்டும். நாடாளுமன்றம் கூட்டப்பட்ட ஆறு வாரங்களுக்குப் பிறகு அந்த ஆணை செயலற்றுப் போகும். அந்த ஆறுவாரக் காலம் முடிவதற்குள், அதனை எதிர்த்து

நாடாளுமன்றத்தின் இரு சபைகளிலும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டால், அத்தகைய தீர்மானம் நிறைவேற்றப்பட்ட பின்னர்ச் செயலிழக்கும். மக்களாட்சியில் சட்டசபையாலன்றி நிருவாகக் குழுக்களால் பிறப்பிக்கப்படும் ஆணைச் சட்டங்கள் மிகக் குறைவாயிருக்க வேண்டும். இல்லையேல் அது வல்லாட்சியாக மாறிவிடும் என்பது அரசியல் நூலறிஞர் கருத்து ஆகும்.

**ஆணையுறுதி** என்பது இறைவனுக்கு ஏற்கப் பொறுப்புடன் தமது சான்றுறுதி அல்லது வாக்குறுதி அமைவதாகக் காட்டும் வகையில் ஒருவர் புலப்படுத்தும் உறுதிச் சின்னம். பொது அலுவலர் முன்னிலையிலோ நீதிமன்றத்திலோ வேறு சூழ்நிலையிலோ ஒன்றை மெய்யெனக் காட்டும் வகையில், சட்டப்படி எடுக்க வேண்டிய மெய்யுறுதி அல்லது விளம்புறுதியை இது குறிக்கும்.

நீதிமன்றத்தில் சான்று கூறும் ஒவ்வொருவரும் உண்மை உரைக்க வேண்டிய கடமையுடையர். அவர் உண்மை பிறழாமல் இருப்பதற்காக இறைவன் பெயரால் கூறும் ஆணையுறுதி (Oath) என்னும் கட்டுப்பாட்டைச் சட்டத்தில் வகுத்துள்ளனர். அதனால், ஆணையுறுதி செய்து சான்று கூறினால் அச்சான்று உண்மை என்றே கொள்ளப்படும். ஆணையுறுதி செய்பவர் இறைவனுக்குப் பயந்து உண்மை கூறுவார் என்பது இதன் கருத்து. இந்த ஆணையுறுதி முறையானது இறைவன் உண்மையில் நம்பிக்கை ஏற்பட்ட காலத்திலிருந்தே இருந்து வருகிறது. ஒருவனை உண்மை கூறும்படி செய்வதற்கு அனைத்துச் சமயங்களும் இந்த முறையையே கையாண்டு வருகின்றன.

நீதிமன்றத்தில் காணும் இத்தகைய ஆணையுறுதி ஒன்று. மற்றொன்று அரசாங்கத்தில் சில குறிப்பிட்ட உயர் பணிகளை ஏற்பவர் தாம் அதை முறையாக நிருவகிப்பதாக ஏற்கும்போது கூறும் உறுதிமொழியாகும். நீதிமன்றங்களில் வாங்கும் ஆணையுறுதி கி.பி. 1873-ஆம் ஆண்டு இயற்றிய இந்திய ஆணையுறுதிச் சட்டத்தின்படி (Indian Oaths Act of 1873) நடைபெறும். மற்ற ஆணையுறுதி அதனை வகுக்கும் ஆவணத்திலே குறிக்கப்பட்டிருக்கும். ஆணையுறுதி என்பதன் இலக்கணம், கி.பி.1897-ஆம் ஆண்டு பொது வகைமுறைகள் சட்டத்தில் (General Clauses Act of 1897) வரையறுக்கப்பட்டுள்ளன.

இறைவன் பேரில் உறுதி கூறாமல் (Swearing) உறுதி செய்யவோ (Affirmation) சான்றுரைக்கவோ (Declaration) சட்டம் அனுமதித்தால், அந்த உறுதிமொழியும் சான்றுரையும் ஆணையுறுதியில் அடங்கும். இவர்கள் இறைவன் பேரால் ஆணையிட்டதாகக் கொள்ளப்படும் (பிரிவு 3, உட்பிரிவு 36). ஆனால், இதை ஆணையுறுதியின் இலக்கணம் என்று கூற முடியாது.

ஆங்கில நாட்டுச் சட்டக் கலைக்களஞ்சியம், ஆணையுறுதி என்பது, ஒருவர் கூறும் சான்று இறைவன் சாட்சியாக உண்மை என்று, சான்று கேட்க அதிகாரம் பெற்றவர் முன்னிலையில் கூறுவதாகும் என்று ஆணையுறுதிக்கு இலக்கணம் கூறுகிறது.

ஆணையுறுதி செய்வதில் காலம், களன் ஆகிய இவற்றிற்கேற்பவும், மக்களின் எண்ணங்களுக்கேற்பவும் பல படிகள் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. பொய்ச் சாட்சி கூறினால் இறைவனின் கோபத்திற்குள்ளாக வேண்டுமென்று ஆதிக்கொள்கை வெளிப்படையாகக் கூறவில்லை. இறைவனையும் அவர்தம் தண்டனையையும் பயன்படுத்தியது ஆணையுறுதி செய்வதில் மற்றும் ஒருபடி முன்னேற்றமாகும். இயற்கையை வழிபட்ட காலத்திலே மனிதன் சூரியன், சந்திரன், ஆறு ஆகியவற்றை நோக்கி ஆணையுறுதி செய்துவந்தான். கங்கைநீரைக் கையிலேந்தியோ, கற்பூரத்தைக் கொளுத்தியோ அவித்தோ சூளுரைப்பதை இன்றும் இந்துக்கள் ஆணையுறுதியாகக் கொண்டுளர். இவையெல்லாம் மனிதன் இயற்கையை முன்னிறுத்திச் சூள் எடுத்துக்கொண்டான் என்பதற்கு எடுத்துக்காட்டுகளாகும். மிகப் பழங்காலத்தில் மக்கள் தங்களிடம் இருந்த வாள், போர்க் கருவிகள், பொருள் ஆகியவற்றை வைத்தும் ஆணையுறுதி செய்தனர். ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன் (புறம். 71), தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் (புறம். 72), சோழன் நலங்கிள்ளி (புறம். 71) ஆகியோர் பாடலிலும் சூளுரை காணப்படுகிறது. இறைவனை மனித உருவத்தில் கற்பனை செய்தது ஆணையுறுதி செய்வதில் மற்றும் ஒருபடி முன்னேற்றமாகும். பொய்ச் சாட்சி கூறினால் அல்லது பொய் ஆணையுறுதி செய்தால் இப்பிறப்பிலும் மறுபிறப்பிலும் இறைவனின் தண்டனைக்குத் தப்ப முடியாது என்ற நம்பிக்கை உண்டாயிற்று. ஆனால், இக்காலத்தில் இறைவனை முன்னிறுத்தி ஆணையிட மறுப்போர் உறுதிமொழி கூறலாம் என்று ஏற்பட்டுள்ளது. இறை நம்பிக்கை இல்லாதவர்கள் இந்த முறையைப் பின்பற்றலாம். எதைப் பின்பற்றினாலும் பொய்க்கரி (பொய்ச்சத்தியம்) கூறுவோர்க்குச் சட்டம் தண்டனை விதிக்கிறது.

'சத்தியம் செய்யாதே' (மத்தேயு 5:34) என்பது இயேசுவின் கட்டளை. ஆகவே கிறித்தவச் சமயச் சார்பின்படி ஆணையுறுதி செய்வதில் நீண்ட நாட்களாகவே கருத்து மாறுபாடு இருந்து வந்தது. ஆனால், பேச்சுவழக்கில் ஒருவித ஆணையுறுதி

இருந்து வந்தது. இந்துச் சட்டம் சான்றுரைப்போரைக் கட்டுப்படுத்தி வந்தது. பண்டைய இந்துச் சட்டத்தில் நான்கு வருணத்திற்கும் நான்கு வகையான சூளுரைப்புகள் வகுக்கப்பட்டன. முகம்மதியர்கள் இந்தியாவைக் கைப்பற்றிய பிறகு இவை வழக்கொழிந்தன. ஐயத்திற்கிடமான வழக்குகளில் மனிதச் சான்று கிடைக்காத போது தெய்வச் சான்று (Trial by Ordeal) தேவைப்பட்டது. இது புறநடை; பொது வழக்கன்று.

இப்போது இந்திய நீதி மன்றங்களில் கி.பி.1873-ஆம் ஆண்டு இந்திய ஆணையுறுதிச் சட்டப்படியே ஆணையுறுதி செய்யப்படுகிறது.

ஆணையுறுதி என்பது உண்மை கூறுதலாகும்; 'உள்ளத்தால் பொய்யாது ஒழுகுதலுமாம்'. நீதி மன்றங்கள் முறையாக நீதி செலுத்துவதற்கும் அனைத்து வழக்குகளிலும் நேர்மையான தீர்ப்புகள் வழங்குவதற்கும் சாட்சிகளின் சான்றுகளைச் சட்ட முறைப்படி ஏற்றுக்கொண்டு நடவடிக்கைகள் எடுப்பதற்கும் ஆணையுறுதி மிகவும் பயன்படுகிறது. இதைப் பற்றி, 1969-ஆம் ஆண்டு இந்திய ஆணையுறுதிகள் பற்றிய சட்டம் விரிவாகவும் தெளிவாகவும் விளக்குகிறது.

ஆணையுறுதிகள் சட்டத்தின் 3-ஆம் பிரிவு, ஆணையுறுதிகளை வழங்குவதற்கு அதிகாரமளிக்கும் பிரிவாகும். அப்பிரிவின்படி அனைத்து நீதிமன்றங்களும் சட்டத்தின் மூலமாகவோ தரப்பினர்களின் இசைவின்படியோ சாட்சியத்தை எடுத்துக்கொள்வதற்கு உரிமையுடையன. நீதிமன்ற நடவடிக்கைகளுக்காகத் தாக்கல் செய்யப்படுகிற ஆணையுறுதிகளுக்கு எந்த நீதிமன்றமும் அல்லது நடுவர் எவரும் ஆணையுறுதியை வழங்கலாம். நீதிமன்ற நடவடிக்கைகள் அல்லாதவற்றிற்கு மாநில அரசு ஆணையுறுதியை வழங்கலாம்.

இச்சட்டத்தின் 4-ஆம் பிரிவு சிறப்புப் பிரிவாகும். இப்பிரிவு, சாட்சிகள், மொழி பெயர்ப்பாளர்கள், சான்றாயர்கள் ஆகியோர் ஆணையுறுதியை எடுத்துக் கொள்வதன் இன்றியமையாமையைப் பற்றிக் கூறுகிறது. இப்பிரிவின்படி (1) நீதிமன்றம் முன்பாக சட்டப்படி விசாரிக்கப்படத்தக்கவர்கள் அல்லது சாட்சியம் அளிப்பதற்கு வேண்டுபவர்கள் அல்லது சட்டத்தின் வழியாக அல்லது தரப்பினர்களின் இசைவின் பேரில் அத்தகைய ஆட்களை விசாரணை செய்யவோ அல்லது சாட்சியத்தைப் பெற்றுக் கொள்ளவோ தகுதியுடையவர்கள், (2) சாட்சிகளுக்கு அல்லது அவர்களிடமிருந்து, கேள்விகள் கேட்டு அவற்றின் மீது சாட்சியம் பெற்றுக்கொள்ளும் மொழி பெயர்ப்பாளர்கள், (3) சான்றாயர்கள் ஆகியோர் அனைவரும் கட்டாயமாக இந்த ஆணையுறுதியை எடுத்துக்கொள்ள வேண்டும். இருபது வயதுக்குட்பட்ட சிறுவர்களுக்கு, நீதிமன்றம், அச்சிறுவர்கள் உண்மையைக் கூறுவதன் இன்றியமையாமையை உணர்ந்து கொண்டிருந்தாலும், அந்த ஆணையுறுதியின் தன்மையைப் பற்றி நன்றாக உணரக்கூடிய நிலையில் இல்லை எனக் கருதுமானால், அச்சிறுவர்கள் இந்த ஆணையுறுதியைச் செய்ய வேண்டிய தேவையில்லை என மேற்கூறிய பிரிவு கூறுகிறது.

ஆணையுறுதியின் படிவத்தைப் பற்றிப் பிரிவு 6 கூறுகிறது. ஆணையுறுதி வழக்கின் சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறு அச்சட்டத்தின் இணைப்புப் பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ள படிவங்களில் ஏதேனுமொன்றின்படி, நீதிமன்ற நடவடிக்கை எதிலும், எவரேனும் தாம் சார்ந்துள்ள பிரிவைச் சார்ந்துள்ளவர்களுக்கிடையே நடைமுறையில் பொதுவாக அனைவராலும் பின்பற்றப்பட்டு, அவர்கள் கட்டுப்பட்டுள்ளதாகக் கருதும் ஆணையுறுதி ஏதேனுமிருந்து, அவ்வாணையுறுதியானது 'நீதிக்கு அல்லது பண்பு நலத்திற்கு முரணாக இல்லாமலிருந்து, அது பிறரைத் தாக்காத வகையில் அமையுமானால், அந்த மனிதர் அந்த ஆணையுறுதியின் பேரில் சாட்சியம் கூற விரும்பினால், நீதிமன்றம் அந்த ஆணையுறுதியின் பேரிலேயே சாட்சியம் கூற அனுமதிக்கலாம். உச்ச நீதிமன்றம், உயர் நீதிமன்றங்கள் நீங்கலாக மற்றைய அனைத்து நீதிமன்றங்கள் முன்பாக எடுக்கப்படும் ஆணையுறுதிகள் எல்லாம், அந்த நீதி மன்றங்களின் நடுவர்களால் தான் வழங்கப்பட வேண்டும் என அப்பிரிவு கூறுகிறது.

இந்த ஆணையுறுதி கடவுளின் பேராலேயோ உளமார்ந்த மனவுறுதியின் பேராலேயோ எடுக்கப்படுகிறது. அச்சட்டத்தின் இணைப்புப் பட்டியலில் உள்ள படிவத்தின்படி இந்த ஆணையுறுதி கீழ்வருமாறு எடுக்கப்படுகிறது:

"நான் சொல்வதெல்லாம் உண்மையே யென்றும், முழுக்க முழுக்க உண்மையே என்றும் உண்மையைத் தவிர வேறொன்றுமில்லை என்றும் கடவுளின்பேரில் உளமார்ந்த உறுதியாக ஆணையிட்டுக் கூறுகிறேன்".

இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின்படி குடியரசுத் தலைவர், துணைக் குடியரசுத் தலைவர், பிரதமர், மைய அரசு அமைச்சர்கள், நாடாளுமன்ற உறுப்பினர்கள், மாநில முதலமைச்சர்கள், மாநிலச் சட்ட மன்ற உறுப்பினர்கள், இந்தியத் தலைமைநீதிபதி, உச்ச நீதிமன்ற நீதிபதிகள், மாநில உயர்நீதி மன்றங்களின் தலைமை நீதிபதிகள் ஆகிய அனைவரும் தத்தம் பதவிகளை ஏற்பதற்கு முன்னர் ஆணை

யுறுதிகள் எடுத்துக்கொள்ள வேண்டும். இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் 60-ஆம் பிரிவு, குடியரசுத் தலைவரின் ஆணையுறுதி அல்லது உறுதியுரையைப் பற்றியதாகும். அந்தப் பிரிவின்படி குடியரசுத் தலைவர் ஒவ்வொருவரும், குடியரசுத் தலைவராகச் செயற்படும் அல்லது குடியரசுத் தலைவரின் அலுவல்களை ஆற்றிவரும் ஒவ்வொருவரும் பதவியேற்பதற்கு முன்னர் இந்தியாவில் தலைமை நீதிபதி முன்னிலையில் அல்லது உச்ச நீதிமன்றத்தில் அப்போது பொறுப்பில் உள்ள மிக முதுநிலை நீதிபதி முன்னிலையில் ஓர் ஆணையுறுதியை எடுத்துக்கொள்ள வேண்டும். இந்த ஆணையுறுதி கீழ்க்காணுமாறு உள்ளது.

> ''அ' ஆகிய நான் உண்மையோடு இந்தியக் குடியரசுத் தலைவர் பதவியை நிருவகிப்பேன் (அல்லது குடியரசுத் தலைவரின் அலுவல்களை ஆற்றுவேன்) என்றும், என்னுடைய முழுத் திறமையுடன் இந்திய அரசமைப்புச் சட்டத்தையும் பேணுவேன், ஆதரிப்பேன் மற்றும் பாதுகாப்பேன் என்றும், இந்திய மக்களின் சேவைக்கும் அவர்களின் நல்வாழ்வுக்கும் என்னையே நான் உரிமைப் படுத்துவேன் என்றும் கடவுளின் பேரால் ஆணையுறுதி செய்கிறேன்; பயபக்தியுடன் உறுதி கூறுகிறேன்''.

இதுபோன்று துணைக் குடியரசுத் தலைவரும் இந்த ஆணையுறுதியைப் பதவியேற்பதற்கு முன்னர் எடுத்தாக வேண்டும் என்று அரசியல் அமைப்புச் சட்டத்தில் வலியுறுத்தப்பட்டிருக்கிறது. அரசியல் அமைப்புச் சட்டத்தில் 99-ஆம் பிரிவு நாடாளுமன்ற உறுப்பினர்களின் ஆணையுறுதி அல்லது உறுதியுரையைப் பற்றிக் கூறுகிறது. அப்பிரிவின்படி ஒவ்வொரு நாடாளுமன்ற உறுப்பினரும் தமது பதவியில் பொறுப்பு ஏற்பதற்கு முன்னர் இந்த ஆணையுறுதியைக் குடியரசுத் தலைவரின் முன்னிலையில் அல்லது அதன் பொருட்டு அவரால் நியமிக்கப்படும் ஒருவர் முன்னிலையில் செய்து, கையொப்பமிடுதல் வேண்டும். குறிப்பாக, அரசியல் அமைப்புச் சட்டத்தின் 104-ஆம் பிரிவு, நாடாளுமன்ற உறுப்பினர் எவரும் இந்த ஆணையுறுதி எடுத்துக்கொள்வதற்கு முன்னரே தமது பதவியில் அமர்ந்தாலும் அல்லது நாடாளுமன்ற நடவடிக்கை எதிலும் கலந்து கொண்டு வாக்களிப்புச் செய்தாலும் தண்டனை வழங்க வகைசெய்கிறது. இந்தியத் தண்டனைச் சட்டத்தின் 51-ஆம் பிரிவின்படி, இந்த ஆணையுறுதி, பொது அலுவலர் முன்னிலையிலோ நீதிமன்றத்திலோ, வேறு சூழ்நிலையிலோ ஒன்றை மெய்யெனக் காட்டும் வகையில், சட்டப்படி எடுக்க வேண்டிய முறையான மெய்யுறுதி அல்லது விளம்புறுதியைக் குறிக்கும். சீ.சொ.

**ஆத்திகம்:** 'அத்தி' என்னும் வடசொல் 'உள்ளது' என்று பொருள்படும். ''உள்ளது'' என்னும் கொள்கையை ஆத்திகம் என்பர். இந்தியமெய்ப்பொருளியல் வளர்ச்சியில், துறக்கவுலகம் உள்ளது என்றும் இறைவன் உள்ளவன் என்றும் வேதங்கள் ஏற்றுக்கொள்ளத் தக்கவை என்றும் ஒப்புக் கொள்கிறவர்கள் ஆத்திகர்கள் என்று கூறப்படுகிறார்கள்.

இந்திய மெய்ப்பொருளியலில், பன்னிரண்டு வகை மெய்ப்பொருள் இயலார் உள்ளனர். அவர்கள் சௌத்திராந்திகர்கள், வைபாசிகர்கள், யோகாச்சாரர் அல்லது அறிவியல்வாதிகள், மாத்யாமிகர்கள், அல்லது இன்மைக் கொள்கையினர் (சூனிய வாதிகள்), உலகியல்வாதிகள், சமணர்கள், நையாயியர்கள், வைசேடிகர்கள், சாங்கியர்கள், யோகர்கள், மீமாம்சகர்கள், வேதாந்திகள் எனப்படுவர். இவர்களுள் முதல் நால்வகையினர் பௌத்த சமயத்தவர்.

ஆத்திகவாதிகள் அனைவரும் துறக்கவுலகம், இறையுண்மை, வேதங்களின் ஏற்புடைமை ஆகியவற்றில் ஏதாவது ஒன்று அல்லது இரண்டு கொள்கைகளையோ மூன்றையுமோ ஏற்றுக் கொள்பவர்கள். இக்கொள்கைகளில் ஏதேனும் ஒன்றை மறுத்தாலும் அவர்களை நாத்திகர் என்பர். அவ்வகையில் முதல் ஆறு மெய்ப்பொருள் காட்சியியலார் நாத்திகர்கள் ஆவர். இவர்கள் அனைவரும் முதலில் கூறப்பட்ட முக்கொள்கைகளையும் மறுப்பவர். சாங்கியர்கள், யோகர்கள், மீமாம்சகர்கள் இறைத் தொடர்பின்றி அனைத்தையும் விளக்குவதால் நாத்திகர் எனப்பட்டாலும், இறையுண்மையை நேரடியாக மறுக்காததாலும் இறைவனைப் பற்றிய குறிப்புகள் அவர்களுடைய இலக்கியங்களில் காணப்படுவதாலும் அவர்களும் ஆத்திகர்களே. இவ்வகையில் பின் ஆறு மெய்ப்பொருள் காட்சியியலாரும் ஆத்திகராவர்.

இந்து சமய வளர்ச்சியில், துறக்கவுலக உண்மை வேதகாலத்திலும் இறையுண்மை ஆரணிய காலத்திலும் வேத ஏற்புடைமைக் கொள்கை வேத ஏற்புடைமையை மறுத்து எழுந்த சமண, பௌத்த வளர்ச்சிக் காலத்திலும் தோன்றியிருக்கக்கூடும். பழங்கால மக்கள் தமக்கு உதவிய ஆறு, மலை, காடு ஆகியவற்றைக் கடவுளாகக் கருதி வழிபட்டனர். பின்னர் அவற்றிற்கு வேள்விகளின் மூலம் நன்றி செலுத்தினர். இது வினை நெறிக்கு (கர்ம மார்க்கம்) வித்திட்டது. நாளடைவில் அனைத்து இறைவர்களுக்கும் மேலாக ஒரு பரம்பொருள் உண்டு என்று கருதி அதற்குத் தொண்டு செய்து வழிப்பட்டனர். இது பக்தி நெறிக்கு அடிகோலியது. இறுதியில் 'அனைத்துமே ஒரே பரம்பொருள்' என்ற கொள்கை மலர்ந்தது. இதனை அறிவுநெறி அல்லது ஞானநெறி என்பர். பொதுவாகச் சமயம் சார்ந்திருக்கும் அனைவரையும் ஆத்திகர் என்று கூறலாம். பி.ஆர்.ந.

**ஆத்திசூடி** என்பது பிற்காலத்தில் வாழ்ந்தவராகக் கருதப்பெறும் ஔவையாரால் இயற்றப்பெற்ற அறநூல்களுள் ஒன்றாகும். சிறிய அடிகளால் அரியபொருளை விளக்கும் அறநூல்களுள் தனிச்சிறப்புடையது. நூலின் முதற்குறிப்பினால் ஆத்திசூடி என்னும் பெயரமைந்தது. 'ஆத்திசூடி அமர்ந்த தேவனை ஏத்தி ஏத்தித் தொழுவோம் யாமே' என்பது, இந்நூலின் கடவுள் வாழ்த்தோடு கூடிய தொடக்கமாகும். இந்நூல் 109 அடிகளைக் கொண்டது. ஒவ்வொன்றும் நூற்பாவினைப் போல அமைந்துள்ளது. தமிழிலுள்ள உயிர் எழுத்து உயிர் மெய் எழுத்து ஆகியவற்றை முதலாவதாகக் கொண்டு அகர வரிசையில் ஒவ்வோர் அடியும் அமைக்கப்பட்டுள்ளது. மொழிக்கு முதலில் வராத ட,ன போன்றவற்றை, இடம்பட வீடு எடேல், அனந்தலாடேல் என்று அவற்றிற்குரிய உயிர்த்துணை எழுத்தோடு கூடிய சொல்லைக் கொண்டு அறமுரைக்கப்பட்டுள்ளது. அதனால், மொழியினை வழங்குமுறையில் இலக்கண விதியினைப் பிழையாது போற்றும் மரபு பின்பற்றப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. 'அறஞ் செய விரும்பு', 'ஆறுவது சினம்', 'இயல்வது கரவேல்' என அகர வருக்க வரிசையில் நூல் அமைந்திருப்பதால் கற்போர் எளிதில் உளத்தமைத்து, நினைவு படுத்திக் கூறுவதற்கு வாய்ப்பாக உள்ளது. இந்நூல் அண்மைக் காலம் வரையில் தமிழில் அரிச்சுவடி கற்கும் சிறுவர்களுக்கு மனப்பாடமாகப் பயிற்றுவிக்கப்பட்டு வந்தது. ஆத்திசூடி என்பது பெயராயினும் எச்ச மாயினும், ஆத்தி மாலையை அணிந்துள்ள சிவபெருமானைக் குறிக்கிறது. அதனால், இதனைப் பாடியவராகக் கருதப் பெறும் ஔவையார் சைவ சமயத்தைக் சார்ந்தவராக இருத்தல் கூடும். 'ஆத்தி சூடி அமர்ந்த தேவன்' என்பது, சிவனைக் குறிப்பதோடு, விநாயகரைக் குறிப்பதாகவும் உள்ளது.

இந்நூலுக்குப் பலர் உரை வரைந்துள்ளனர். இராமானுசக்கவிராயர் உரை எழுதியுள்ளார். நாவல பண்டித ந.மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களும் உரை எழுதியுள்ளார்கள். ஆத்திசூடி நூலின் பொருட்சிறப்பையும் செல்வாக்கையும் உணர்ந்த புலவர்கள், ஆத்திசூடி வெண்பா, ஆத்திசூடி புராணம் என நூல்கள் செய்துள்ளனர். ஆத்திசூடிச் சிந்து என்றொரு நூலும் தோன்றியுள்ளது.

ஆத்திசூடி அமைப்பினை அப்படியே பின்பற்றி மகாகவி பாரதியாரும் ஒரு ஆத்திசூடி பாடியுள்ளார். அவ்வாறே புரட்சிக் கவிஞர் பாரதிதாசனும் புதிய ஆத்திசூடி படைத்துள்ளார். இவர்களைப் பின்பற்றிப் பதின்மருக்கு மேற்பட்டோர் புதிய ஆத்திசூடி நூல்களை எழுதியிருப்பது, இந்த நூலின் பெருமையையும் செல்வாக்கினையும் எடுத்துக்காட்டுவதாக உள்ளது. இதே அமைப்பினைப் பின்பற்றி 'முத்து சூடி' என்னும் நூலும் எழுந்துள்ளது. 'அறஞ்செய விரும்பு', 'அச்சம் தவிர்', 'அனைவரும் உறவினர்', அறிவைப் பெருக்கு', 'அறிவே ஆன்மா', 'அகத்தமிழ் படி', 'அறஞ்செயல் அரசு', 'அறிவியல் முறைபேண்', 'அன்பு நெறிநில்', 'அழகினை விரும்பு', 'அழகியல் உணர்வுகொள்' என்பன சில ஆத்திசூடி நூல்களின் தொடக்கங்களாகும்.

**ஆத்திரலோபிதிகசு:** பல்வேறு வேறுபாடுகளுடைய வாயில்லாக் குரங்குகள் அல்லது மனிதக் குரங்குகள் மியோசின் (Miocene) பிளியோசின் (Pliocene) காலங்களில் ஆப்பிரிக்கா, ஆசியா, ஐரோப்பாக் கண்டங்களில் வாழ்ந்திருந்தன. இக்குரங்குகள் ஆத்திரலோபிதிகசு (Australopithecus) என்று கூறப்படும். அவற்றின் புதை படிவங்கள் (Fossil) மனிதனுட்பட்ட உயர் பாலூட்டிகளின் (Primates) படிமுறை வளர்ச்சியை அறியத்தக்க சான்றுகளாக விளங்குகின்றன. அக்காலங்களில் வாழ்ந்த எல்லா உயர் உயிரினங்களும் மனித இனத்துடன் நெருங்கிய தொடர்பினைப் பெற்றிருக்கவில்லை.

பிளியோசின் காலத்தில் சில வகை மனிதக் குரங்குகள் அற்றுப் போயின. சில மனிதக் குரங்குகளின் இனங்கள் உருவ மாறுபாடுகளடைந்து இக்காலத்திய கிப்பன், கொரில்லா சிம்பன்சி (Chimpanzee) ஆகிய மனிதக் குரங்குகளாக வாழ்கின்றன. மேலும் சில மனிதக் குரங்குகள், ஓமினிடே (Hominidae) குடும்பத்தைச் சேர்ந்த அற்றுப்போன மனிதன் (Extinct Man), தற்கால மனிதன் ஆகிய இனங்களின் படிமுறை வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைந்தன. மனிதக் குரங்குகள் இத்தகைய படிமுறை வளர்ச்சியைப் பெற்றதற்குப் பல்வேறு புதை படிவங்கள் சான்றுகளாக உள்ளன.

தென்னாப்பிரிக்காவில் சோகன் சுபர்க்கு என்னுமிடத்தில் பேராசிரியர் இரேமாண்டு தார்ட்டு என்பவர் 1925-ஆம் ஆண்டு நன்கு வளர்ச்சியுறாத மனிதக் குரங்கின் மண்டையோட்டுப் பகுதியைக் கண்டெடுத்தார். இம் மண்டை ஓட்டில் 20 பால்பற்களும் நான்கு நிரந்தர முன்கடைவாய்ப் பற்களும் இருந்தன. இம் மண்டை ஓடு தென்னாப்பிரிக்காவில் தாங்கு என்ற இடத்தில் குகைப் படிவங்களிலிருந்து கண்டெடுக்கப்பட்டது. பேராசிரியர் ஆர்.ஏ. தார்ட்டு (R.A. Dart) இந்தப் புதைபடிவத்திற்கு "ஆத்திரலோபிதிகசு" அல்லது "தென்னாப்பிரிக்க மனிதக் குரங்கு" எனப் பெயரிட்டார்.

மேலும் சில ஆண்டுகள் கழித்து, வளர்ச்சியுற்றதும் வளர்ச்சியுறாததுமான மனிதக் குரங்கு வகைகளின் மண்டை ஓடுகள், தாடை எலும்புகள்,



ஆத்திரலோபிதிகசு

கை, கால் எலும்புகள் ஆகியவற்றைப் தார்ட்டு திரான்சுவால் பகுதியில் அமைந்த சுண்ணாம்புப் பாறைப் படிவங்களிலிருந்து கண்டெடுத்தார். பிறகு டாக்டர் திருமதி இலீக்கி என்பவர் தங்கனீகாவில், ஒல்டுவாய் (Olduvai) என்னுமிடத்திலிருந்து முழு மண்டை ஓடு ஒன்றைக் கண்டெடுத்தார். இம் மண்டை ஓடுகள் அனைத்தும் "ஆத்திரலோபிதிகசு" தொகுதியைச் சேர்ந்தவை என்று கருதப்பட்டன. ஆனால், அவை பிளிசியான்த்ரோபசு, பாரான்த்ரோபசு (Paranthropus), தெலந்த்ரோபசு (Telanthropus), சின்சான்த்ரோபசு (Zinjanthropus) ஆகிய பேரினங்களினுடையவை எனப் பின்னர் ஏற்றுக் கொள்ளப்பட்டன.

அம்மண்டை ஓடுகளனைத்தையும் பற்றி அவை ஒரு பேரினத்தைச் சேர்ந்த பல இன மனிதக் குரங்குகளினுடையவை என்றும், ஒரு சிறப்பினத்தைச் சேர்ந்த பல வகை மனிதக் குரங்குகளினுடையவை என்றும் இருவேறு கருத்துகள் நிலவின. பிறகு அம் மண்டையோடுகளனைத்தும் துணைக் குடும்பத்தைச் சேர்ந்த மனிதக் குரங்குகளினுடையவை என்று ஏற்றுக் கொள்ளப்பட்டன.

அற்றுப்போன அம்மனிதக் குரங்குகளின் மண்டையோடுகளை ஒப்பு நோக்கிப் பார்த்தபோது அவையனைத்தும் பிளிசுடோசின் (Pleistocene) காலத்தின் முற்பகுதியில் அதாவது ஒரு மிலியன் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தனவாகக் குறிப்பிடப்பட்டது. ஒல்டுவாய் மண்டை ஓட்டின் காலம் ஏறக்குறைய 2 மிலியன் ஆண்டுகளுக்கு முற்பட்டது எனக் கணக்கிடப்பட்டது.

எனவே "ஆத்திரலோபிதிசினே" (Australopithecinae) தொகுதியைச் சேர்ந்த மனிதக் குரங்குகள், முதன் முதலில் பிளியோசீன் காலத்தில் வாழ்ந்த "இராமாபிதிகசு" (Ramapithecus) மூதாதையர்களிலிருந்து கிழக்கு ஆப்பிரிக்காவில் தோன்றிப் பிறகு திரான்சுவால் பகுதிகளுக்குச் சென்றிருக்கலாம் என்று கருதப்பட்டது.

ஆத்திரலோபிதிகசின் பொதுப் பண்புகளாகச் சிலவற்றைச் சுட்டலாம். இக் குடும்பத்தைச் சேர்ந்த மனிதக் குரங்குகளின் மூளையின் கன அளவு 600 க.செ.மீ. ஆகும். இது மனித மூளையில் அரை மடங்கு அளவேயாகும்.

இக்கால மனிதக் குரங்குகளுக்கு மண்டை ஓட்டில் இந்த நீள்வரை மேட்டுடன் கழுத்துத் தசைகள் இணைக்கப்பட்டுள்ளன. ஆத்திரலோபிதிகசின் குடும்பத்தைச் சேர்ந்த மனிதக் குரங்குகளுக்கு மண்டை ஓட்டில் இந்த நீள்வரை மேடு மிகவும் கீழ் மட்டத்தில் அமைந்துள்ளது. இத்தகைய அமைப்பு மிகப் பழமையான கற்படியுருவ மனித மண்டை ஓடுகளில் காணப்பட்டது.

மேலும் கன்ன எலும்பமைப்பு, கீழ்த்தாடை எலும்புகளுடன் மண்டை ஓட்டின் கீழ்ப்பகுதி இணைப்பின் அமைப்பு, சில மண்டை ஓட்டு எலும்புகளின் இணைப்பு ஆகியன, மனிதக் குரங்குகளின் மண்டை ஓடுகளில் உள்ளன போன்றில்லாமல் மனித மண்டை ஓட்டின் அமைப்பை ஒத்திருந்தன.

வெட்டும் பற்கள் மிகச் சிறியனவாகக் காணப்பட்டன. கோரைப் பற்கள் மனிதனின் கோரைப் பற்களைவிடப் பெரியனவாகவும் வலிமையானவையாகவும் அமைந்திருந்தன. ஆனால், அவை மனிதக் குரங்குகளுக்கு உள்ளன போன்று கூர்மையாக நீண்டிராமல், மனிதனின் கோரைப் பல்லைப் போன்றே தட்டையாக இருந்தன. தென்னாப்பிரிக்கக் கற்படியுருவ மண்டை ஓடுகளில் காணப்பட்ட பால் பற்கள் மிகவும் சிறப்பு வாய்ந்தனவாகும். பால் கோரைப் பற்கள் கற்கால மனிதக் குரங்குகளின் பற்களைவிட மிகச் சிறியனவாக இருந்தன. மேலும் முதல் பால் கடைவாய்ப் பல் மனிதனின் பால் கடைவாய்ப் பல்லைப் போன்றிருந்தது. பற்களமைப்பில் குறிப்பிடத்தக்க மற்றொரு கூறு, அதன் எல்லாப் பற்களும் மனிதப் பற்களைப் போன்று இரு தாடைகளிலும்ஒழுங்காக இலாட வடிவான அமைப்பில் அமைந்திருந்தமையாகும். எனவே, ஆத்திரலோபிதிகசின் பற்களமைப்பு மனிதக் குரங்குகளின் பற்களமைப்பிலிருந்து முற்றிலும் வேறுபட்டிருந்தது.

மேலும் மனிதக் குரங்குகளின் இடுப்பெலும்

பிலுள்ள இலியம் (Illium) குறுகியும் நீண்டும் அமைந்துள்ளது. மனித இடுப்பெலும்பிலுள்ள இலியம் அகலமாகவும் தட்டையாகவும் அமைந்துள்ளது. இவ்வமைப்பு மனிதன் நேராக நிமிர்ந்து நிற்பதற்கான தகவமைப்பாக அமைந்துள்ளது. ஆத்திரலோபிதிகசின் இடுப்பெலும்பிலுள்ள இலியத்தின் அமைப்பு மனித இடும்பெலும்பிலுள்ள இலியத்தின் அமைப்பையே ஒத்துள்ளது. அது எவ்வகையாலும் மனிதக் குரங்கின் இடுப்பெலும்பை ஒத்தில்லை.

ஆத்திரலோபிதிகசின் தொடை எலும்பின் கீழ்ப் பகுதி, மனிதத் தொடை எலும்பின் அமைப்பையே ஒத்துள்ளது. இந்த அமைப்பும் ஆத்திரலோபிதிகசு நேராக நிமிர்ந்து நிற்க ஏதுவாக இருந்தது.

மேற்குறிப்பிட்ட உடற்கூற்றியல் சான்றுகளின் படி ஆத்திரலோபிதிகசு, இக்கால மனிதனைப் போன்று நேராக நிமிர்ந்து நிற்கவும் நடக்கவும் முடிந்தது என்பது தெரிகிறது.

ஆத்திரலோபிதிகசின் கை எலும்புகளில் மேற்கை எலும்பும் முழங்கை எலும்பும் மிகவும் மென்மையாக இருந்தன. அவற்றிற்கு வலிமை வாய்ந்த தசை நீள் வரை மேடுகள் கிடையா. அவை மனிதனின் கை எலும்புகளை ஒத்திருந்தன.

எனவே, ஆத்திரலோபிதிகசு மனிதனின் பண்புகளையும் மனிதக் குரங்குகளின் பண்புகளையும் பெற்றிருந்தன என்பது மிகவும் தெளிவாகிறது. ஆத்திரலோபிதிகசின் மண்டை ஓடும் முகமும் மனிதக் குரங்குகளைப் போன்றும், பற்களின் தோற்றம் மனிதனுடையதைப் போன்றும் அமைந்திருந்தன. கை, கால், எலும்புகள், இடுப்பெலும்பு ஆகியவை மனித எலும்புகளைப் போன்ற அமைப்பைப் பெற்றிருந்தமையால் மனிதனைப்போன்றே ஆத்திரலோபிதிகசும் நிமிர்ந்த நடையுடையனவாய் இருந்தன என்பது புலனாகிறது; அவற்றின் கை, கால் எலும்புகளின் நீளம் குறைவாக இருந்ததால் அவை சுமார் நான்கு அல்லது ஐந்து அடி உயரமே இருந்திருக்கலாமென்பதும் புலனாகிறது.

ஆத்திரலோபிதிகசின் உடற்கூற்றியல் கொண்டு அவை மனிதக் குரங்குகளின் பொங்கிடே குடும்பத்தைச் சேர்ந்தவை அல்ல என்பதும், மனிதனின் பண்புகளைப் பெற்றிருந்ததால் ஓமினிடே குடும்பத்தைச் சேர்ந்தவை என்பதும் ஏற்றுக் கொள்ளப்பட்டன.

ஆத்திரலோபிதிகசு இக்கால மனிதக் குரங்குகளைப் போன்று காடுகளில் வாழாமல் உலர்ந்த சமவெளிப் பகுதிகளில் தரையில் வாழ்ந்தன. இவற்றின் எச்சங்கள் கண்டெடுக்கப்பட்ட தென்னாப்பிரிக்காவில், அண்மையில் சில கரடு முரடான ஆயுதங்களும் கண்டெடுக்கப்பட்டன.

ஆத்திரலோபிதிகசின் கை விரல் எலும்புகளின் அமைப்பிலிருந்து, அவை கல் அல்லது எலும்புகளைப் பயன்படுத்திச் சிறிய ஆயுதங்களைச் செய்யும் திறன் பெற்றிருந்தன என்பது தெரிகிறது. அவற்றின் மண்டை ஓடுகள் கண்டெடுக்கப்பட்ட தாங்கு என்ற இடத்திலிருந்து பல பபூன் குரங்குகளின் மண்டை ஓடுகளும் கண்டெடுக்கப்பட்டன. இதனைக் கொண்டு ஆத்திரலோபிதிகசு, பபூன் குரங்குகளை உணவுக்காக வேட்டையாடியிருக்கலாம் என்று ஊகிக்கலாம்.

ஆத்திரலோபிதிகசு மனிதக் குரங்குகளுக்கும் ஆதி மனிதனுக்கும் இடைப்பட்ட நிலையைப் படிமுறை வளர்ச்சியில் குறிப்பிடுவதாக உறுதி செய்யப்பட்டாலும், இக்கால மனிதனுக்கு முன்னோடியாக இருந்திருக்க முடியாது என்பது கருதப்படுகிறது.

பா. ஜ.

துணை நூல்கள்:

**Legros Clark, W. E.,** The Fossil Evidence for Human Evolution, Chicago University Press, Chicago, 1955.

**Rosen, S. I.,** Introduction to the Primates: Living and Fossil, Prentice-Hall, New Jersy, 1974.

**ஆத்திரியப் பொருளியற் கோட்பாடுகள்:** பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் (கி. பி. 1870- 1900) புறவய (Objective) விதிகளால் பொருளியற் கோட்பாடுகளில் எளிதாகப் பகுத்தறிய முடியாத சிக்கல்களை அகவய (Subjective) முறையில் ஆராய்ந்து, "இறுதிநிலை"ப் (Marginalism) புரட்சியை உருவாக்கிய கருத்துத் தொகுப்பே, ஆத்திரியப் பொருளியற் கோட்பாடுகள் (The Austrian School of Economics) ஆகும். இக்கோட்பாடுகளைப் பல கோணங்களில் ஆராய்ந்து கருத்துகளை வெளியிட்ட வல்லுநர்களுள், ஆத்திரிய (Austria) நாட்டைச் சார்ந்தவர்கள் முன்னோடிகளாயிருந்தார்கள். எனினும், பிற ஐரோப்பிய நாட்டு அறிஞர்களும் சிதறிக் கிடந்த கருத்துகளைத் தொகுத்து, அவற்றிற்கு ஒரு வடிவம் கொடுத்தனர். வில்லியம் இசுடான்லி செவான்சு (William Stanely Jevons, கி. பி. 1835-1882), இலியான் வால்ரசு (Leon Walras, கி. பி. 1834- 1914), கார்ல் மெங்கர் (Karl Menger, கி. பி. 1840-1921), பிரடெரிக்கு வான் வீசர் (Fredrich Von Wieser, கி. பி. 1851-1926), போகம் பீவார்க்கு (Bohm Bewark, கி. பி. 1851-1914) ஆகிய பொருளியல் அறிஞர்கள், இதன்சிறப்புச் சிந்தனையாளர்கள். இக் கருத்தின் அடிப்படைக் கூறுகள்: (1) உற்பத்திச் செலவு மதிப்புக் கோட்பாடுகளுக்கு (Cost of

Production Value Theory) மாறாக, உண்மை மதிப்பு (Real Value), ஒரு பொருளிலிருந்து தனி மனிதன் பெறும் பயன்பாட்டை (Utility) வெளிப்படுத்து கிறது. (2) குறிப்பிட்ட ஒரு பொருளைத் தொடர்ந்து வாங்கும் போது அதன் பயன்பாடு குறைந்து எங் குக் கடைசி நிலையை அடைகிறதோ அங்கு இறுதி நிலையில் (Margin) இந்த மதிப்பு உறுதி செய்யப் படுகிறது. (3) நுகரும் பொருள்கள் உற்பத்திக் கார ணிகளின் விளைவு மதிப்பு, விலையை வெளிப்படுத்து கிறதே தவிர, விலையைப் பொறுத்தன்று. மனி தன் அகவய உணர்வால் மட்டும் பயன்பாட்டை மதிப்பிடுகிறான்.

ஆத்திரியப் பொருளியற் கோட்பாடுகளை முன்னரே உணர்ந்து உரைத்த பலருள் கோர்னாட்டு, கோசென் (Cournot and Gosson) என்போர் சிறப் புக் குரியோர். அகசுடின் கோர்னாட்டு (கி. பி. 1870-77) கணக்கியல் ஆய்வு முறைக்கு வித்திட்ட வர். அவரது 'செல்வக் கோட்பாட்டில் கணக்கியல்'' (Application of Mathematical Principles of Theory of Wealth) என்ற ஆய்வுக் கட்டுரை, அவரது காலத் திற்குப் பின்பு வந்த செவான்சு என்பவரால் மேற் கோளாக ஆளப்பட்டது. செருமானிய நாட்டவ ரான கோசன் (கி. பி 1810-58) 1954- இல் வெளி யிட்ட "பொருளாதாரக் கணக்கியல் கோட்பாடு கள்" (Mathematical Economic Theories) பொருளியலில் பெரிய மாறுதல்களை ஏற்படுத்தும் என எதிர்பார்த்தார், அவர்தம் கருத்துகளும் செவான்சு என்பவரால்தான் ஒரு கோட்பாடாக உருவாயின. செவான்சு, கோசனைத் தம் முன் னோடியாகக் குறிப்பிட்டிருக்கிறார். வால்ராசும் இவரைப் பெரிதும் புகழ்ந்து போற்றியிருக்கிறார்.

இங்கிலாந்து நாட்டவரான செவான்சு பொரு ளியல், கணக்கியலைச் சார்ந்து மட்டிலுமே வளர்ச்சி யடையும் என்பதை முதன் முறையாகச் சுட்டிக் காட்டினார். இவர், தொன்மைப் பொருளியலாரின் கருத்துகளிலிருந்து மாறுபட்டு, பயன்பாட்டை அடிப் படையாகவும் மையமாகவும் வைத்து, மதிப்புக்கோட் பாட்டை ஆராய்ந்தார். குறைந்து செல் இறுநிநிலைப் பயன்பாட்டு விதி (Law of Diminishing Marginal Utility), சம இறுதிநிலைப் பயன்பாடு (Equi-Marginal Utility), உழைப்புக் கோட்பாடு. (Theory of Labour) ஆகியவற்றிற்கு இவர் அடிப்படை விளக் கங்கள் அளித்தார். பொருளியலைத் தூய அறிவிய லாகப் (Pure Science) பகுத்தறி முறையில் (Deductive) கணக்கியல் நாட்டத்துடன் கண்டார். நுகர்வைத் தனியாகப் பிரித்து, உற்பத்திக்கும் பகிர்வுக்கும் மேலான சிறப்பிடம் அளித்தார். அதன் நோக்கம், மனிதனின் தேவையை நிறைவு செய்வது. அதனை நேரடியாக அளவிட முடியாது. விருப்பம், மனநிறைவு போன்றவைகளைத் திட்டவட்டமாக அளவிட இய லாமலிருப்பினும், ஒப்பீட்டு நிலையில் மதிப்பிட இயலும் என்று கூறியுள்ளார். உழைப்பு, மதிப்பை முடிவு செய்கிறது என்ற கோட்பாட்டை எதிர்த்து, உழைப்பினால் ஆக்கப்படும் பொருள், உழைப்பின் மதிப்பை முடிவு செய்யும் என்று கூறுகிறார். உழைப்பு, சூழ்நிலை அளிப்பு ஆகிய பயன்பாட்டின் மூலம் பொருளின் மதிப்பைத் தாக்குகிறது எனக் கூறியிருப் பது, பயன்பாட்டிற்கு மிகையான சிறப்பிடம் வழங்கப் படுவதைக் காட்டுகிறது.

ஆத்திரியச் சிந்தனைத் தொகுப்பிற்கு அடி கோலியவராகக் கருதப்படுவர் பிரான்சு நாட்டு இலியோன் வால்ரசு என்பவர். இவர் சுவிட்சர்லாந்து நாட்டின் உலூசன் (Lausane) பல்கலைக் கழகத்தில் பொருளியற் பேராசிரியராகப் பணியாற்றி, ஆராய்ச் சிகளை மேற்கொண்டார். அவர் கருத்துகள் அறி வார்ந்த தனித் (Intellectual & Independent) தன்மை வாய்ந்தன. அவர் செவான்சைவிடமிகுதியாகக் கணித முறைப் பகுத்தாய்வுக்குச் சிறப்பிடம் நல்கினார். அவ ரது கருத்தியல் ஆய்வுகள்(Abstract Analysis),உயர்ந்த தரம் காரணமாகவும் கணக்கியல் முறை காரணமா கவும் தெளிவற்றனவாகக் கருதப்பட்டன. கடைசி விருப்பத்தின் (Last Want) நிறைவை விளக்க "இறுதி நிலைப் பயன்பாடு" என்ற கலைச் சொல்லுக்கு மாற் றாக, அரிது (Rarity) என்ற சொல்லைப் பயன்படுத் தினார். மிகுதியான பொருள்களும், வாங்குவோரும் உள்ள தடையிலாப் போட்டியில் (Free Competition) கொடுக்கல் வாங்குதலும் (Exchange), உற்பத்தியும் மதிப்பும் எவ்வாறு உள்ளன என்பதை விளக்குங்கால், சமநிலை விலை(Equilibrium Price) எவ்வாறு ஏற் பட்டுக் கொடுக்கல்-வாங்கல் நடைபெறுகிறது என் பதையும் விளக்கியுள்ளார்.

வால்ரசு உச்ச மனநிறைவுக் கோட்பாட்டை (Doctrine of Maximum Satisfaction) உருவாக்கினார். அவரது கருத்துப்படி, கணக்கியல் முறையிலானபொரு ளாதாரம், தூய போட்டி நிலவவும், சமநிலை அடையவும் வழி வகுக்கும். மிகச் சிறந்த முறையில் அருமைப் பண்ட ஒதுக்கீடு (Allocation of Scarce Resources) அமைய நாட்டுடைமையாக்கலை அவர் ஆதரித்தார். அரசின் ஈடுபாடும், கட்டாயக் கல்வியும், உழைப்பு நேர ஒழுங்கும், வருமானத்தில் கட்டுப் பாடும் தேவை எனக் கருதினார். வால்ரசின் கருத் துகளை இர்விங் பிசர் (Irving Fisher), விக்செல் (Wicksell), கிக்சு (Hicks J. R.) சும்பீட்டர் (Schumpeter) போன்ற மேதைகள் பெரிதும் பாராட்டினர்.

ஆத்திரிய நாட்டவர்களான காரல் மென்கர், வீசர், போகம் பீவார்க்கு ஆகிய மூவரும் வியன்னாப்

பல்கலைக்கழகப் பேராசிரியர்களாகப் பணியாற்றி, இறுதிநிலைப் பயன்பாட்டுக் கோட்பாட்டை (Theory of Marginal Utility) முழுமையாக உருவாக்கினர். இம்மூவரின் கருத்துகளே ஆசுத்திரியக் கருத்துப் படைப்புக்கான மூலக் கருவூலம். பல்வேறு கருத்து வேறுபாடுகளுக்கிடையேயும் மூலக் கருத்துகளை ஒரே தன்மையாக வெளியிட்டனர். வரலாற்றுப் பொருளியல் கோட்பாடுகளை எதிர்த்துக் கருத்தியல் முறையில் ஆராய்ந்தனர். கணக்கியல் முறையிலிருந்து நழுவி, அகவய அணுகுமுறையைக் கையாண்டனர்.

செவான்சின் இறுதிநிலைக் கோட்பாட்டை விடக் கார்ல்மென்கர் கோட்பாட்டுக்கு மிகுந்த ஆதரவு கிடைத்தது. செவான்சின் கணித அணுகுமுறையை விட மென்கரின் வரைபடங்கள் இல்லாத, எளிதான ஆனால், நுண்ணிய விளக்க முறை, எவராலும் எளிதில் புரிந்து கொள்ளும்படி இருந்தது. காரண-விளைவு விதி (Law of Cause and Effect) பொருளியல் ஆய்வின் அடிப்படையாகும். பொருள்கள் இயல்பாக மன நிறைவை அளித்து, மனிதனின் தேவையை நிறைவு செய்யுமானால் அவை பயன்பாட்டுப் பண்டங்கள் (Utility Goods) எனப்படும். ஒரு பொருளின் நல்ல தன்மை பிற்காணும் நான்கு நிலைகளைச் (Conditions) சார்ந்தது: 1. மனிதத் தேவை அல்லது விருப்பம், 2. மன நிறைவு அளிக்கும் பிற பண்டங்களுடன் ஒப்பிடத் தக்கது, 3. அந்த ஒப்பீடு ஒத்துக்கொள்ளப்படத் தக்கது, 4. தேவை அல்லது விருப்பத்தை நிறைவேற்றத் தக்கதான 'மனநிறைவு'. மேலும் பொருள்களை, நுகர்வோர் பெறும் மனநிறைவினை அளிக்கும் ஆற்றல் அளவின் (Rank) படி வரிசைப்படுத்தி அவர் வகைப்படுத்தினார். நேரடியாகவும் உடனடியாகவும் மனித விருப்பத்தை மனநிறைவு செய்யும் அப்பத்தை (Bread) முதல் வகையில் வைத்து, பின்பு முறையே மாவு, கோதுமை, வயல், உழவுக் கருவிகள், உழவரின் உழைப்பு ஆகியவற்றை வரிசையாக வகைப்படுத்தி, இறுதிநிலைப் பயன்பாட்டுத் தத்துவத்தை எளிதாக விளக்கினார். இந்த வேறுபாட்டின் சிறப்புக் கூறு என்னவெனில், எந்தப் பண்டத்தின் அலகுகள் மிகுதியாகக் கிடைக்கின்றனவோ அந்தப் பண்டத்தின் இறுதி அலகுக்குப் பயன்பாடு, மதிப்பீடு ஆகியவை குறைவாயிருக்கும். இருவேறு பண்டங்கள் ஒப்பிடப்படும்போது, அதனதன் அளவுக்கேற்ப இறுதி நிலைப் பயன்பாடு காணப்படும். இறுதிநிலைப் பயன்பாடுகளை ஒப்பிட்டு, அதிகப் பயனைத்தரக்கூடிய பண்டத்தை நுகர்வோன் தேர்ந்தெடுப்பான்.

மேலும்அவர் பண்டங்களைப் பொருள்சார் பண்டங்கள் (Economic Goods) பொருள்சாராப் பண்டங்கள் (Non-Economic Goods) எனப் பிரித்து, அவற்றிற்குத் தேவையும் அளிப்பும் காரணங்கள் எனச் சுட்டிக் காட்டியிருக்கிறார். அளிப்புக் குறைவாக உள்ள பண்டங்கள் கிடைப்பதற்கு அரியனவாகும். அவை பொருள்சார் பண்டங்கள் எனப்படும். வரையறையின்றிப் பெறப்படும் பொருள்கள், பொருள் சாராப் பண்டங்களாகும். இவ்வகைப் பகுப்பாய்வு, பண்டங்களின் மதிப்பை அளவிடப் பயன்படுகிறது.

பொருளின் மதிப்பு, விருப்பத்தையும் அதன் அளிப்பையும் சார்ந்தது. மதிப்பு, பொருளைச் சார்ந்தது அன்று; நுகர்வோரின் மன மதிப்பீட்டு முடிவைச் (Judgement of the mind) சார்ந்தது. இது தன்னல அணுகுமுறை (Hedonistic approach) ஆகும். நுகர்வோன் இதனை உணர வேண்டும். மனிதனுக்கு மனிதன் விருப்பு வெறுப்புகள் மாறுபடுவதால் மதிப்பின் தன்மையும் மாறுபடும். மனிதனின் தனிப்பட்ட நாட்டங்களினாலும் ஊக்கங்களினாலும் (Attitudes and motives) பொருட் பரிமாற்றம் செயற்படுவதாக விளக்கியிருக்கிறார். அகவய அணுகுமுறையில், விருப்பத்தை அடிப்படையாகக் கொண்டு, உழைப்பின் அளவினையும் ஆக்கச்செலவுக் (Quantity of Labour and Cost of Production) கோட்பாடுகளையும் வலியுறுத்தியிருப்பதால், மென்கரின் கருத்துகளில் புறவய அணுகுமுறைக்கு இடமேயில்லை.

நாட்டின் செல்வம் (Wealth), மனநிறைவு அளிக்கும் தனிப்பொருளாதார நிறுவனங்களுக்கு வழங்கப்பட வேண்டும். தொடர்ந்து செல்வம் மிகுதியாகப் பயன்படுத்தப்படுமானால் இறுதியில் குறைந்துவிடும். பொதுவாக, தேவையை விடச் செல்வம் குறைவான அளவில் உள்ளது. பொருள்கள் அங்காடியில் விற்கப்படும் தன்மையையுடையன என்ற கருத்து மட்டும், மென்கரின் புறவய அணுகுமுறையைச் சார்ந்தது. மென்கர் பணக் கண்டுபிடிப்பின் (Inventing of Money) அருமையைப் பாராட்டினார். ஆனால், அது அரசின் கண்டு பிடிப்பு அன்று என்றும் சட்டப்படி அதனைக் கட்டுப்படுத்தக் கூடாதென்றும் கூறினார். அரசு, பணக் கோட்பாடுகளைப் பின்பற்றுவதை எதிர்த்தார். வருங்காலத் தேவைக்குப் பயன்படும் பண்டங்களையும், உற்பத்திக்கு அரிதாகக் கிடைக்கும் பொருள்களையும் மூலதனம் (Capital) என விளக்கினார்.

வீசரின் ஆய்வு முறை முற்றிலும் உளவியலைச் (Psychological) சார்ந்தது. இவர் மென்கரைப் போன்று கருத்தியல் அணுகுமுறையைப் பின்பற்றினார். மதிப்பை, இயற்கைமதிப்பு (Natural Value) எனக் குறிப்பிட்டார். பயன்பாட்டிலிருந்து மதிப்பு பெறப்படுகிறது. விருப்பங்களின் அருமையிலும் விருப்பத்தை

நிறைவு செய்யும் ஆற்றலிலும் மதிப்பு அடங்குகிறது. சமுதாயம் உயர்ந்த பொருளாதார முன்னேற்றக் கட்டத்தை அடையும்போது, பணமும் பரிமாற்றமும் இல்லாமல் அடையும் மதிப்பு 'இயற்கை மதிப்பு' என்றார். உள்ளார்ந்த மதிப்புக் கோட்பாடு என்பதை (Law of Imputation value) விளக்கும் போது, ஆக்கக் காரணிகளான நிலம், உழைப்பு, மூலதனம் ஆகியவற்றுக்குக் குறிப்பிட்ட தேவையும் அளிப்பும் இயற்கையாகவும் உடைமையாகவும் உள்ளன என்றும், அதுவே உள்மதிப்பு என்றும் விளக்கியிருக்கிறார். ஆக்கக் காரணிகளிலிருந்து இறுதிநிலைக்கு மதிப்பு தொடர்ந்து செல்கிறது. மிகக் குறைந்த உள்ளார்ந்த மதிப்பு, எல்லாத் தனி ஆக்கக் காரணிகளுடைய அலகுகளின் மூலமாகவும் பொருளாதார ஆக்கத்தில் பங்கு பெறுகிறது. உள்ளார்ந்த மதிப்பு, இறுதிநிலை விதியின் அடிப்படையில்தான் உள்ளது. மதிப்பு, கடைசி அலகை இழந்து விடாமல் அதனை வைத்துக் கொள்வதால் பெறும் பயன்பாட்டினால் முடிவு செய்யப்படுகிறது. செலவு (Cost) மதிப்பை முடிவு செய்ய முனைந்தாலும், பயன்பாட்டிற்கு அது அடிமைப்பட்டதே. இவர் உற்பத்திச் செலவையும் பயன்பாட்டு அடிப்படையிலேயே ஆராய்ந்தார். மனிதன் பெறும் பயன்பாடே மதிப்பைக் கணக்கிட முனைகிறது. செலவை மதிப்புக்கு அடிமையாகவே கருதி, உருவான கோட்பாடுகளே ஆசுத்திரியக் கோட்பாட்டின் சிறப்புக் கூறாகும்.

வீசரின் இறுதிநிலைப் பகுப்பாய்வு சமத்துவத்திற்கும், முதலாளித்துவத்திற்கும் பொருந்தும். இறுதிநிலை இயல், முதலாளித்துவத்தை வெளிப்படையாக வரவேற்கவோ ஆதரிக்கவோ இல்லை. வீசர், பொருளாதாரத்தில் அரசின் பங்கைப் பெரிதும் வரவேற்று, அரசின் தலையீடு தேவை எனவும் கூறியுள்ளார். மனிதத் தேவைகளை மட்டும் நிறைவு செய்யாமல் பாதுகாப்பிற்காகவும் சமூக ஆக்க நலன்களின் வளர்ச்சிக்காகவும் பாடுபடுவது அரசின் குறிக்கோளாயிருக்க வேண்டும். பொருளாதார நாட்டுடைமையையும் பாதுகாப்பையும் ஆதரித்து, வளர்ந்துசெல் வரி விதிப்பை (Progressive Taxation) எதிர்த்தார்.

போகம் பீவார்க்கு தமக்கு முன் வந்த ஆசுத்திரியப் பொருளாதாரக் கருத்துக்களை ஆழமாக ஆராய்ந்து, அவற்றைத் தெளிவுபடுத்தினார். கருத்தியல் ஆராய்ச்சி முறையையே இவரும் பின் பற்றினார். மூலதனம், இயற்கைக்கும் உழைப்புக்கும் இடைப்பட்டது. சேமிப்புக்கும் மூலதன ஆக்கத்திற்கும் நெருங்கியதொடர்பு உண்டு. நுகர் பொருள் உற்பத்தியின் பல கட்டங்களின் வழிமுறைகளினால் விளையும் பலனே மூலதனம். மூலதனப் பொருள்கள் வருங்காலப் பண்டங்கள். முதலீட்டின் மதிப்பு, 1. தேவைகளின் வகைகள், வேறுபாடுகள், இக்கால - பிற்காலத் தேவைக்கேற்றபடி அவற்றைப் பயன்படுத்தும் முறைகள், 2. வருங்காலத்தைக் குறைவாக மதிப்பீடு செய்தல், 3. இக்காலப் பொருள்களின் நுட்பப் பயன் ஆற்றல் ஆகிய மூன்று காரணிகளால் பாதிக்கப்படுகிறது.

விலை வரையறுத்தலுக்கு இறுதிநிலை இணைகள் (Marginal Pairs) என்ற கருத்தை வெளியிட்டார். தனிப்பட்ட பரிமாற்ற விலை, வாங்குபவரின் அகவய மதிப்பீட்டின்படி முடிவு செய்யப்படும். உயர்ந்த நிலைக்கும் விற்பவரின் அகவய முடிவின்படி எழும் குறைந்த மதிப்பீட்டின் நிலைக்கும் நடுவில் முடிவு செய்யப்படும். ஒருவயப்பட்ட போட்டிகளுள்ள (One Sided Competition) வாங்குவோர் அங்காடியில், வாங்குவோரின் அகவய மதிப்பீட்டிற்கும், வாங்க முயன்று கைவிட்ட போட்டியாளரின் அகவய மதிப்பீட்டிற்கும் இடையில் முடிவு செய்யப்படும். அங்காடியில் பங்குபெறும் வாங்குவோர், விற்போர் நடுவில் இரண்டு வாங்குபவர்களும் இரண்டு விற்பனையாளரும் விலையை முடிவு செய்கின்றனர். எனவே, ஓர் இணையில் (In one pair) விற்பவன் கூறும் விலையில் வாங்குபவன் வாங்க இணங்குகின்றான். அடுத்த இணையில், விற்பவனின் விலைக்கு வாங்குபவன் வாங்க மறுக்கிறான். எனவே, இணைகளின் இரண்டு விலைகளுக்கும் அகவய இறுதிநிலை மதிப்பீட்டின்படி விலை முடிவு செய்யப்படுகிறது.

வட்டிவீதம், பேரியற் பொருளியல் முறையில் (Macro Economics) முழு அங்காடிக்கும், 1. குறைந்த அளவு நிதி அளிப்பு, 2. உழைப்பின் அளவு, 3. தொழில் நுட்ப அறிவினால் பெறும் ஆக்கத்திறன் ஆகிய மூன்றையும் அடிப்படையாகக் கொண்டு முடிவு செய்யப்படும். குறைந்த அளவு நிதி அளிப்பு மிகுதியாயிருந்தால் வட்டிவீதம் குறைவாயிருக்கும். உழைப்பும் ஆக்கத் திறனும் மிகுதியாயிருந்தால் வட்டிவீதம் மிகுதியாக இருக்கும்.

ஆத்திரியப் பொருளியல் வல்லுநர்கள், மதிப்புக் கோட்பாடுகளுக்குச் சிறப்பிடம் வழங்கி, சிறந்த மதிப்புக் கோட்பாடுகளை உருவாக்கியுள்ளார்கள். அதுவே அவர்களின் பெயர் நிலைத்து நிற்கப் பெரும்பங்கு ஆற்றியுள்ளது. இவர்களின் தன்னல முடிவு அணுகுமுறையைப் பின் வந்த பொருளியல் வாதிகள் ஏற்றுக்கொள்ளவில்லை. பரவலாகத் தலைதூக்கிய அகவய உணர்வும் கருத்தியல் ஆய்வு முறையும் பகுத்தறி முறையில் உருவாக்கப்பட்ட கோட்பாடுகளும் உளவியல் சார்ந்தவையாக உள்ளமையால் அவை, அறிவியல் முறையில் அளவிடவும் ஒப்பிட்டு ஆயவும் இயலாதவை என்பது, பெருங்குறையாகச்

சுட்டிக் காட்டப்படுகிறது. இறுதிநிலைப் பயன்பாட்டு விதிக்கும் முழுமையான வடிவம் வழங்கப்பட்டு, அதற்கான பொருள் விளக்கமும் பிற்பட்ட காலத்தில்தான் வெளிவந்தது. பயன்பாடு என்பது ஓர் அகவய உணர்வுதான். அதனைப் பொருளியலில் செயற்படுத்த இடர்ப்பாடுகள் உள்ளன. எனினும், விருப்பங்களையும் மனநிறைவுகளையும் அளவிடும் கருவியாகப் பணத்தைப் பயன்படுத்திப் பிற்காலக் கோட்பாடுகள் வளர ஆத்திரியக் கருத்துகள் அடிப்படையாயிருந்தன. தொன்மைப் பொருளியலாளர்களின் கருத்துகளுடன் ஆத்திரியப் பொருளியல் கோட்பாடுகள் ஒப்பிடப்பட்டு, அதன் விளைவாக வந்த ஆராய்ச்சி முடிவுகள், புதிய தொன்மைப் பொருளியலாக (New-Classical Economics) உருவாயின. பொருளியலின் வளர்ச்சிக்கு ஆக்கத் தூண்டுகோலாக விளங்கிய செறிந்த கருத்துத் தொகுப்பு ஆத்திரியப் பொருளியல் வல்லுநர்களின் படைப்பு என்று கூறினால், அது மிகையாகாது.

**ஆத்திரையன் பேராசிரியன்** கி.பி. 10-ஆம் நூற்றாண்டினராகக் கருதப் பெறும் தமிழ் உரையாசிரியர். பேராசிரியர் என்னும் பெயரில் காணப்படுவோர் அனைவரும் தமிழ் இலக்கண அல்லது இலக்கிய உரையாசிரியர்களாவே உள்ளனர். இவர் பெயரிலுள்ள ஆத்திரையன் என்பது இவர் பிறந்த கோத்திரத்தைக் குறிப்பதாகும். அத்திரி கோத்திரத்தைச் சேர்ந்தவர் ஆத்திரேயர் என்று அழைக்கப்படுவர். தமிழில் பேராசிரியர் என அறியப்படுபவர்களுள் இவர் காலத்தால் முற்பட்டவராவார். இவர் தொல்காப்பியத்திற்குப் பொதுப்பாயிரம் செய்துள்ளார் என்பது தெரிகிறது. 'வலம்புரி முத்தின் குலம்புரி பிறப்பும்' எனத் தொடங்கும் 33 அடிகள் கொண்ட நிலைமண்டில ஆசிரியப்பாவே இப்பொதுப் பாயிரம். இதற்கு இவ்வாசிரியரே உரை செய்துள்ளார் என்பது கூறப்படுகிறது. தொல்காப்பிய உரையாளருள் ஒருவராகத் திகழும் பேராசிரியர் மரபியல் நூற்பா உரையில் 'வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும் என்னும் பொதுப்பாயிரம் செய்தான் ஆத்திரையன் பேராசிரியன்' என எழுதுவதால், இவ்வாசிரியர் அவரின் வேறாவார் எனத் தெரிகிறது. நன்னூற் சங்கர நமச்சிவாயர் உரையைத் திருத்தி அமைத்த சிவஞான சுவாமிகள், தம் விருத்தியுரை நூலில் இவரியற்றிய பொதுப்பாயிரத்தைத் தந்து, அதன் ஆசிரியர் பெயரையும் குறிப்பிட்டுள்ளார். இப் பொதுப்பாயிரம் இளம்பூரணருக்கு முன்னர்த் தோன்றியதாகத் தெரிவதால் ஆத்திரையன் பேராசிரியன் காலம் கி.பி. 10-ஆம் நூற்றாண்டாதல் கூடும் என்றும், இப்பொதுப்பாயிரத்தின் உரை, தமிழில் முதற்கண் அமைந்துள்ள சில உரைகளுள் ஒன்று என்றும் திரு மு. அருணாசலம் குறிப்பிட்டுள்ளார். இவரியற்றிய பொதுப்பாயிரத்தில் நல்லாசிரியர் நன்மாணாக்கர் ஆகியோர்க்குரிய இலக்கணங்கள் மிகச் சிறப்பாக விளக்கப்பட்டுள்ளன.

**ஆத்தூர்** சேலம் மாவட்டத்தில், சேலத்திலிருந்து நேர்கிழக்கே 51 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள நகரம். சேலம்-விருத்தாசலம் இருப்புப்பாதையில் உள்ளது. முற்காலத்தில் இது அனந்தகிரி எனப்பட்டது. இதன் இடையில் ஆறு ஓடுவதால் ஆற்றூர் என்று கூறப்பட்டது. ஆற்றூர் ஆத்தூர் என மருவியது. ஆற்றின் வடக்கே கோட்டை ஒன்றுள்ளது. நன்செய்ச் சாகுபடி மிகுதியாக அமைந்த ஊர். ஆத்தூர்க் கிச்சிலிச் சம்பா புகழ்பெற்ற அரிசி வகை. இங்கு அரசினர் கல்லூரி ஒன்றும் உள்ளது.

**ஆத்மநாத தேசிகர்** கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்; வேளூர் என்னும் ஊரில் காளையர் குலத்தில் தோன்றியவர். இவர் வேளூர்க் கருகிலுள்ள சித்தாமூரில் வாழ்ந்த அருணாசல வேளின் விருப்பத்திற் கிணங்கிச் சோழ மண்டல சதகம் என்னும் நூலினை இயற்றியருளினார். இந் நூல், பாடப்பெற்றோர் வரலாறு முதலிய குறிப்புகளுடன் கி.பி. 1916-ஆம் ஆண்டில், இலக்கண விளக்கப் பரம்பரை திருவாரூர்ச் சோமசுந்தர தேசிகரால் பதிப்பிக்கப்பெற்றது.

**ஆத்ரு** இராசபுதனத்தில் உள்ள ஓர் ஊர். பழமை மிக்க அழிந்த நிலையில் உள்ள கோயில்கள் பல இவ் வூரில் உள்ளன. இங்குள்ள கோயில்களில் கட்சகு-கா-மந்திர் (Gadgach-ka-mandir) சிறப்புமிக்க கோயிலாகும். இக்கோயிலின் அருகில் புத்தசாகர் என்னும் குளம் உள்ளது. இக்கோயில் அழிந்துபட்ட நிலையில் இருப்பினும் கோயிலின் தூண்களிலும் அடிப்பகுதியிலும் கட்டிடக் கலையின் சிறப்பியல்புகள் பொருந்தி உள்ளன. சிற்பங்களில் பார்வதிச் சிற்பம் அழகுடன் உள்ளது. இக்கோயில் கி.பி.10-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டது. கோயிலின் தூண்கள் சிலவற்றில் கி.பி.13-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டுகளும் உள்ளன. சுண்ணாம்பும் மணலும் சார்ந்த கலவை இல்லாமல் கருங்கற்களை அடுக்கி இக்கோயில் கட்டப்பட்டுள்ளது. இங்கு வேறு இரண்டு அழிந்த நிலையில் உள்ள சமணக் கோயில்களும் உள்ளன. பார்சுவ நாதரின் சிற்பம் ஒன்றும், மகாவீரரின் சிலை ஒன்றும் இங்கு உள்ளன.

**ஆதம்கான் கல்லறை** குதுப்மினார் மெகராலி சாலையில் உள்ள கல்லறை. ஆதம்கான் அக்பரின் படையில் தளபதியாகவும் பிரபு ஆகவும் இருந்தவர். அக்பருக்குச் செவிலித் தாயாக இருந்த மாகம் அனாகா என்ற பெண்மணியின் மகனாவார். ஆதம்

கான் கி.பி. 1562-ஆம் ஆண்டு அட்காகான் என்பவரோடு சண்டையிட்டு அவரைக் கொலை செய்ததன் விளைவாக அக்பர் இவரை ஆக்ராக் கோட்டை மதிலின் மேலிருந்த உயர்ந்த மேடையிலிருந்து கீழே தூக்கி எறியக் கட்டளை இட்டார். இதனால் ஆதம்கான் இறந்தார். மகன் இறந்த கவலையால் தாயும் நாளடைவில் இறந்தார். இவர்கள் இருவரையும் இக்கல்லறையில் புதைக்க அக்பர் ஆவன செய்தார். இலால்கோட்டுச் சுவர்களுக்கு அருகில் உயர்ந்த முகப்பு மேடையுடன் இக்கல்லறை காணப்படுகிறது. எட்டுப் பக்கங்களுடைய சுவர்களினால் இது சூழப்பட்டு ஒவ்வொரு மூலையிலும் உயரமில்லாத சிகரத்தைக் கொண்டுள்ளது. ஒவ்வொரு சிகரமும் கவிகை மாடத்தினைக் கொண்டு எட்டுப் பக்கங்கள் உடையதாகவும் உள்ளது. இது இசுலாமியர் கட்டிடக் கலைப் பாணியில் 'உலோடி' வகையைச் சேர்ந்ததாகும். இக்கல்லறை தாழ்வாரத்துடன் மூன்று பக்கம் திறந்த நிலையிலும் கைப்பிடிச் சுவர்களுக்குக் கீழ் அமைக்கப்படும் இறவாணம் (Eaves) இல்லாமலும் காட்சி அளிக்கிறது. இதனுள்ளே செல்லச் சிக்கலான அமைப்புடன் கூடிய வழிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

**ஆதம்சன் கல்விக் கருத்துகள்:** ஆதம்சன் என்பவர் இந்நூற்றாண்டின தொடக்கத்தில் தென் ஆப்பிரிக்க நாட்டில் வாழ்ந்த கல்வியாளர். இவர்தம் கல்விக் கருத்துகள், பொதுவாகக் கருத்துக் கொள்கை (Idealism) எனப்படும் தத்துவப் பிரிவினைச் சார்ந்தவை. இவர்தம் கல்விக் கொள்கையில் கல்வி என்பது, கற்போருக்கும் சூழ்நிலைக்கும் இடையேயுள்ள ஒரு பொருத்தப்பாடாகக் கருதப்படுகிறது. இப்பொருத்தப்பாட்டிற்குத் துணைபுரியும் ஒரு கூறாகவே பள்ளி ஆசிரியர் கருதப்படுகிறார். சூழ்நிலை வெறும் பூத உலகு மட்டுமன்று. மனிதருக்கிடையேயுள்ள தொடர்புகளும் ஒருவன் பொருத்திக் கொள்ள வேண்டிய,உண்டாக்கிக் கொள்ள வேண்டிய விழுப்பொருள்களும் சூழ்நிலையின் நுட்பக் கூறுகளாகும்.

தான் பிறந்து, வளர்ந்து, வாழ்ந்து வரும் சூழ்நிலையுடன் தொடர்பு கொண்டு, அதன் இயல்புகளைப் புரிந்துகொண்டு, அதனுடன் பொருந்தி வாழ்தலுக்காகத் தேவைப்படும் அறிவு, திறன்கள், மனப்பான்மைகள் ஆகியவற்றைக் குழந்தை வளர்த்துக் கொள்வதே கல்வியின் நோக்கமாகும் என ஆதம்சன் (Adamson) குறிப்பிடுகிறார். கல்வி, பொருத்தப்பாட்டினைத் தோற்றுவிக்கும் ஒரு செயலாகும். உயிர் வாழ்தலுக்குச் சூழ்நிலையுடன் பொருந்திச் செயற்படுதல் துணையாகும் என்று இசுபென்சர் போன்றோர் கூறியதை விரித்து, கல்வி ஓர் உயர்நிலைப் பொருத்தப்பாடு (Superior Adjustment) என்று ஆர்ன் (Horne) கூறினார்.

இவ்வுயர்நிலைப் பொருத்தப்பாட்டில் ஆசிரியரது பங்கு யாது என்னும் வினாவிற்கு, ஆதம்சன் அளிக்கும் விடை குறிப்பிடத்தக்கது. கற்றல் எனப்படுவது, கற்கும் குழந்தைக்கும் சூழ்ந்திருக்கும் உலகிற்குமிடையே எழும் இடைவினை (Interaction) விளைவாக எழும் அனுபவமாகும். இது ஒரு மறைபொருள் தன்மையுற்ற இணைப்புச் செயலாகும் (Mysterious Synthetic Activity). பொதுவான வாழ்க்கையில் நிகழ்வதைவிட, பள்ளி எனப்படும் களனில் இத்தொடர்பும் இடைவினையும் பரவலாகவும், ஆழமும் செறிவும் உள்ளனவாகவும் உயர்த்தப்படுகின்றன. அடிப்படையில் கல்விச் செயலானது கற்போன், அவன் தொடர்புகொள்ளும் சூழ்நிலை ஆகியவற்றைச் சார்ந்தே அமைவதால், இதில் ஆசிரியருக்கு நேரடியாக எந்தப் பங்கும் பொறுப்பும் இல்லை என்கிறார் ஆதம்சன்.

கல்விச் செயல்முறையில் ஆசிரியருக்கு மறைமுகப்பங்கு உள்ளது என்பதனையும் ஆதம்சன் தெளிவுபடுத்தி, இதனை விளக்கக் கல்வி பற்றிய மும்முனைக் கொள்கையினை (Tripolar Theory) வகுத்துள்ளார். கற்போன், சூழ்நிலையுலகம், ஆசிரியர் ஆகிய மூன்று முனைகளால் கல்விச் செயல் அமைகிறது. ஆசிரியர் பங்கு, வேதியியல் இடைவினைகளில் வினையூக்கிப் பொருள்களைப் போன்றது. இடைவினையில் நேரடிப் பங்கு பெறாமல், இடைவினை நன்கு நிகழத் துணைபுரிவது ஆசிரியரது பொறுப்பாகிறது. கற்போனும் சூழ்நிலையும் ஊடாடி ஒருங்கிணைந்து, ஒன்றின் பாங்கு ஒன்றாகிப் புதியன தோற்றுவிக்கும் மறைபொருள் தன்மையுள்ள கல்விச் செயலில் ஆசிரியருக்கு நேரடிப் பங்கும் பாகமும் இல்லையெனினும், இவர் கற்போனையும், சூழ்நிலையையும் நன்கு அறிந்திருந்தால், இவ்விரு முனைகளையும் அவற்றின் சிறப்புக் கூறுகளையும் மாறி மாறித் தனித்தோ சேர்த்தோ சுட்டியும் ஊக்கியும் கல்விச் செயல் நடக்கத் துணைபுரிதல் கூடும்.

ஆதம்சனின் கல்விச் சூழ்நிலைப் பகுப்பாய்வு குறிப்பிடத் தக்கது. சூழ்நிலையானது இயற்கை உலகு (World of Nature), சமூக உலகு (World of Men), விழுப்பொருள் உலகு (World of Values) என முப்பாற்படும். இவற்றுள், இயற்கை உலகு புறம்பே உள்ளது; மனிதனுக்கு முன்பே நிலைபெற்றது; பலவகைப் பண்புகளைக் கொண்ட புலன் நுகரும் பருப்பொருள்களால் ஆனது; காரண-காரிய அடிப்படையில் அமைந்தது; என்றும் மாறாத அறிவியல் விதிகளுக்கு உட்பட்டது; விதிவிலக்கிற்கு இடம் கொடுக்காதது. புற ஆய்வின் வழி இவ்வுலகின் தன்மையினை உணர்ந்து இதனுடன் பொருந்திப் போதல் இயலும். பல்வேறு அறிவியற் பாடங்கள் இதற்கு

உதவுகின்றன. இயற்கையுலகினைத் தாமே ஆராய்ந்துணர உதவும் அறிவியல் மனப்பான்மையும் ஆராய்ச்சி முறைகளும் மாணாக்கர்களுக்கு உணர்த்தப்பட வேண்டும்.

சமூக உலகானது, மனித வரலாறு, பண்பாடு ஆகியவற்றை உண்டாக்குகிறது. இது மனிதருக்கிடையேயுள்ள இடைவினையை அடிப்படையாகக் கொண்டது. மொழி இவ்வுலகின் நிலைத்தன்மைக்கு உதவுகிறது. சமூகத்தின் முன்னைய திரண்ட அனுபவங்களாலும் கூட்டனுபவங்களாலும் உண்டான சமூக விதிகள் இவ்வுலகை நிலை நிறுத்துகின்றன. ஆனால் இவ்விதிகள் மனிதனுக்கு முற்பட்டவையல்ல; மனிதனால் உண்டாக்கப்பட்டவை. இயற்கை விதிகளைப் போல் இவை மாறாதவையுமல்ல. இவற்றின் நடைமுறையில் சில நீக்குப் போக்குகளும் நெகிழ்வும் பிறழ்வும் கூட உண்டு. இவை மனிதனால் மாற்றப்படக் கூடியவை. இவ்வுலகுடன் பொருந்திச் செயற்படக் கல்வி துணைபுரிதல் வேண்டும். இதற்கு மொழிப் பாடங்கள், வரலாறு போன்றவை உதவுகின்றன. மேலும் சமுதாயத்தின் சிறுபதிப்பாகப் பள்ளி இயங்குவதால், சமூகப் பண்புகள், பொறுப்புகள் ஆகியவை பற்றிய நல்லுணர்வினை மாணாக்கரிடையே எழச் செய்தலில் பள்ளிச் செயல்கள் மிகவும் பயன்படுகின்றன.

விழுப்பொருள் உலகு மனிதருக்கு மட்டும் உரித்தான ஒன்றாகும். மனிதன் முழுமை பெறுதற்கும், தன்னைத்தானே அவன் கண்டெய்துதற்கும் விழுப்பொருள் உலகம் அடிப்படையாகும். குறிக்கோள்களும் நடத்தை முறைகளும் இவ்வுலகில் அடங்கும். இவ்வுலகினை ஒவ்வொருவனும் தானே படைத்து, அதற்கேற்ப நடந்து கொள்ளுதல் வேண்டும். இத்தன்மையை ஆராய்ந்து பார்த்தால், விழுப்பொருள் உலகம் அல்லது விழுமிய உலகம் மற்ற இரு உலகுகளினின்றும் வேறுபடுவது தெளிவாகும். இங்கு, கற்போன், உள்ளான வளர்ச்சியின், தாளாண்மையின், அழகுத் துய்ப்பின், ஆராய்ச்சியின், உயர்வுள்ளலின் அடிப்படையாகத் தானே விதித்துக்கொண்ட அறக் கோள்கள், அறிவாய்வுக் கட்டுப்பாடுகள், அழகு நுகர்வுத் தரங்கள், சமய நெறிகள் ஆகியவற்றின் அடிப்படையில் தன் வாழ்க்கையைத் தானே அமைத்துக் கொள்ள வேண்டும். இருத்தல், பொருத்திக் கொள்ளுதல் என்ற நிலை மாறி, வேட்டல், விழைதல் முதலிய வினைகளைக் காட்டுவது இவ்வுலகு. இது பிறரது தூண்டலால் தொடங்கப்பட்டதெனினும், ஒரு தனிமனிதனின் சொந்த உலகமாகும். வாழ்நாள் முழுவதும் இவ்வுலகைப் படைத்துக் கொள்ளாது வெறும் சமூக அளவிலோ அதற்கும் குறைந்தோ உள்ள நிலைகளில் வாழும் மக்களும் உளர்.

கல்வி ஏற்பாட்டில் இம்மூன்று உலகங்களுடனும் கற்போன் பொருந்தி வாழத் தேவையான பாடங்களும் செயல்களும் அனுபவங்களும் அமைந்திருக்க வேண்டுமென்று ஆதம்சன் சுட்டிக் காட்டியுள்ளார். சூழ்நிலைக் கூறுகளுடன் உயர்நிலைப் பொருத்தப்பாட்டினை மாணாக்கன் பெற உதவும் பள்ளி அமைப்பும் ஆசிரியர் வினை ஊக்கமும் இன்றியமையாதனவென்று ஆதம்சன் வலியுறுத்தியுள்ளார்.

எஸ்.ச.

**ஆதம்சுக் கல்விக் கருத்துகள்:** கற்கும் குழந்தையின் நல்லாற்றல்களையும் நல்லியல்புகளையும் வெளிக் கொணர்ந்து, அவற்றின் முழுமையான இசைவுபெற்ற வளர்ச்சிக்குதவும் சூழ்நிலையினை உருவாக்கித் தருவது பள்ளிக் கல்வியின் அடிப்படை நோக்கம். இதனை இன்று கல்வியாளர் யாவரும் ஒருமுகமாக ஏற்கின்றனரெனினும், கல்வியின் தொடக்க நிலையில், இவ்வடிப்படை நோக்கம் பெருமளவு உணரப்படவில்லை. அன்றைய கல்வி அமைப்பில் ஆசிரியர் மேலாண்மை பெற்றுக் காணப்பட்டதுடன் பல வேளைகளில் கவர்ச்சியும் உடனடிப் பயனும் அற்ற பாடப் பொருளின் செல்வாக்கும் மிகுந்து காணப்பட்டது. இதன் விளைவாகக் கல்வியின் முழுப் பயனைக் குழந்தைகளும் அவர் வழியே சமுதாயமும் போதிய அளவு பெறாத நிலை இருந்தது. இந்நிலை மாறிக் 'குழந்தை மையக் கல்வி' (Child-centred Education) என்னும் கருத்தினை வலியுறுத்தியவருள் முதலிடம் பெறுபவர் கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த பிரெஞ்சுப் புரட்சியாளர் உரூசோ (Rousseau) என்பவராவார். இளம் குழந்தைகளின் தேவைகளை அறவே புறக்கணித்து, அவர்களது வாழ்க்கையினை மகிழ்ச்சியற்றதாக ஆக்கும் கல்விமுறை பயனற்றது மட்டுமன்று; அது அவர்கட்குத் தீமை பயப்பதுமாகும் என்று உரூசோ கருதினார். இவர்தம் கருத்துகளும் பின்னர் வந்த பெசுடலாசி (Pestalozzi), பிரோபெல் (Froebel), சான் டூயி (John Dewey), மாண்டிசோரி அம்மையார் (Montessori) போன்றோரின் கல்விக் கோட்பாடுகளும், குழந்தை மையக் கல்வி அமைப்பின் வளர்ச்சிக்குத் துணை செய்தன. ஆசிரியர், கற்கும் குழந்தைகளிடையே காணப்படும் தனியாள் வேற்றுமைகளைக் (Individual differences) கருத்திற் கொண்டு, அவர்களது தனித்தன்மைக்கு (Individuality) மதிப்பளித்துச் செயற்பட வேண்டும் என்பதனையும், கற்கும் பருவத்தில் குழந்தைகள் இயல்பாக மகிழ்ச்சியுடன் வாழ்ந்து பயனுள்ள அனுபவங்களைப் பெற வாய்ப்பளிக்கப்பட வேண்டுமென்பதையும் குறிப்பிட்டனர். கல்வியில் இம்முற்போக்குக் கொள்கையினை வலியுறுத்திய கல்வியாளருள் சர் சான் ஆதம்சு (Sir John Adams)

ஒருவராவார். இவர் இந்நூற்றாண்டின் முற்பகுதியில் மிருந்த செல்வாக்குடன் விளங்கிய ஆங்கிலேயக் கல்வி வல்லுநர்.

கல்வியின் அடிப்படை, கற்கும் குழந்தையாகும் என்பதனை ஆதம்சு வலியுறுத்துகிறார். "கற்போன்" என்னும பொருளில் "Educand" என்னும் ஆங்கிலச் சொல்லினைக் கல்வியாளர்களுக்கு இவர் அறிமுகப் படுத்தியுள்ளார். கற்போனின் இயல்புகள், தேவைகள், கவர்ச்சிகள், ஆர்வங்கள் போன்றவற்றினை அறிந்திராத ஆசிரியரால், பயனுள்ள வகையில் கல்வி புகட்ட இயலாது என்பதனை ஆதம்சு குறிப்பிடுகிறார். கற்போனைப் பற்றிய அறிவு, கற்பித்தலின் வெற்றிக்கு அடித்தளமாகும். கற்பித்தல், இரண்டு இலக்குகளைக் கொண்டது. 'ஆசிரியர், முரளி என்னும் மாணாக்கனுக்கு ஆங்கில மொழியினைக் கற்பிக்கிறார்' என்னும்போது, ஆசிரியரது கற்பித்தல் செயலினைச் சார்ந்து கற்பிக்கப்படும் பாடப் பொருளான ஆங்கில மொழியும், கற்கும் மாணாக்கனான முரளியும் உள்ளனர். எனவே, ஆசிரியர் கற்பிக்கப்படும் பாடப் பொருளறிவு மட்டும் பெற்றிருத்தல் போதாது; கற்போனைப் பற்றியும் அறிய வேண்டும் என்று ஆதம்சு கூறியது, இன்று கல்வியுலகில் பரவலாக மேற்கோளாகக் கையாளப்படுகிறது; கல்வியில் இன்று குறிப்பிடப்படும் மாணாக்கனது 'நுழைவு நடத்தை' (Entry Behaviour) எனப்படும் கருத்தும், இத்தகைய மாணாக்கர் இயல்பு பற்றிய ஆசிரியரது முன்னறிவினை உணர்த்துவதாகும். இதனைக் கற்பித்தலின் இன்றியமையாக் கூறாக ஆதம்சு தம் நூல்களில் சுட்டிக் காட்டியுள்ளார்.

பயன்மிக்க குழந்தைக் கல்விக்கு உறுதுணையாக அமைபவை, அவர்தம் இயல்பான, தன்னிச்சையாக (Spontaneous) எழும் செயல்களாகும். இவை அவர்களின் உடல், உள்ளம் ஆகியவற்றின் தேவைகள் நிறைவுற அவர்க்கு உதவுவதுடன் மகிழ்ச்சியையும் மன நிறைவையும் தோற்றுவிப்பனவுமாகும். எனவே, குழந்தைக் கல்வியில் இத்தகைய செயல்களுக்கு ஆதம்சு சிறப்பிடம் அளிக்கிறார். கற்பித்தலில் விளையாட்டு முறைகள், கவர்ச்சியான சிறு செயல் திட்டங்கள் போன்ற செயல்களை அடிப்படையாகக் கொண்ட கற்பித்தல் முறைகள் (Activity Methods) கையாளப் படுவதனை இவர் உடன்படுகிறார். பல குழந்தைகளை, அவர்களின் கால வயது (Chronological Age) ஏறத்தாழ ஒத்திருப்பினும், அவர்களை ஒரு குழுவாகச் சேர்த்தமைத்துக் கற்பித்தலை ஆதம்சு வன்மையாகக் கண்டிக்கிறார். இத்தகைய வகுப்புக் கற்பித்தல் கற்போரிடையே காணப்படும் தனியாள் வேற்றுமைகளைப் புறக்கணிக்கிறது. மாண்டிசோரி போன்ற கல்வியாளர்கள் ஒவ்வொரு குழந்தையின் தனித்தன்மையும் ஆசிரியரால் மதிக்கப்படுவதன் சிறப்புத் தன்மையை வலியுறுத்தியுள்ளனர். குழு அமைத்துக் கற்பித்தல் முறை, கல்வித் தொழில் நுட்பத்தின் வளர்ச்சியால் இன்று புகழ் பெற்றுள்ள நிரல்வழிக் கற்பித்தல் (Programmed Instruction), கணிக்கும் பொறி வழிக் கற்பித்தல் (Computer Assisted Instruction) ஆகிய யாவும் தனிக் கற்பித்தலுக்குப் பெருந்துணையாக இருத்தல் குறிப்பிடத்தக்கது.

உரூசோ, பெசுடலாசி ஆகியோருக்குப் பின் வந்த எர்பார்ட்டு (Herbart) என்னும் செருமானியக் கல்வியாளரின் கல்வி உளவியற் கருத்துகளைப் பரப்புவதிலும் ஆதம்சு மிக்க நாட்டம் கொண்டிருந்தார். சிறப்பாக 'முன்னறிவுடன் இணைத்தல்' (Apperception) என்னும் எர்பார்ட்டின் கருத்து, கற்பித்தலில் ஆசிரியர்களுக்குப் பெரும்பயன் அளிப்பது என்பதனை ஆதம்சு தெளிவாக்கியுள்ளார். கற்பித்தலின் வழியே மாணாக்கர் அடையும் புதிய கருத்துகள் அவர்களிடம் ஏற்கெனவே உள்ள கருத்துத் தொகுப்புடன் தொடர்பு கொண்டு இணையும்போதுதான், புதிய கருத்துகள் தெளிவும் பயனும் பெறுகின்றன என் பதனை முன்னறிவோடு இணைத்தல் சுட்டிக் காட்டுகிறது. இவ்வகைப் பயிற்றலை ஆதம்சு வலியுறுத்துகிறார். கற்பித்தல் முறைகள், இத்தகைய இணைப்பினை எளிதாக்க உதவுதல் வேண்டும். கற்பிக்கும் போது 'தெரிந்தவற்றிலிருந்து தொடங்கிப் புதியதற்குச் செல்ல வேண்டும்' என்னும் கோட்பாடு, கற்பித்தலில் கருத்துகளை உளவியல் முறைப்படி அமைத்து அவற்றை மாணாக்கர்களுக்கு அறிமுகப் படுத்துதல், மற்றும் எர்பார்ட்டு விளக்கியுள்ள படிகளின் (Herbartian steps in Teaching) அடிப்படையில் ஆசிரியர் தாம் கற்பித்தலுக்குத் திட்டமிடுதல் போன்றன யாவும் முன்னறிவோடு இணைத்தலுக்கு உதவும் கற்பித்தலின் படிகளில், ஆயத்தம் (Preparation) முதற் கட்டமாகும். இக்கட்டத்தின் நோக்கம் மாணாக்கர்களது முன்னறிவு நிலையினையும் புதிய பாடத்துடன் தொடர்புடைய எக்கருத்துக்களை அவர்கள் ஏற்கெனவே அறிந்துள்ளனர் என்பதனையும் ஆசிரியர் உணர உதவுவதாகும். இதனை அடுத்து எடுத்துக் கூறல் (Presentation), புதிய கருத்துகளை முன்னறிவுடன் தொடர்புபடுத்துதல் (Association), பொதுவிதி காணல் (Generalization) புதிய கருத்துகளின் பொருளுணர்ந்து அவற்றைப் பயன்படுத்துதல் (Application) ஆகிய படிகள் அமைகின்றன. ஆதம்சு, "புதிய கற்பித்தல்" என்னும் தமது நூலில், ஆசிரியர் திறம்படக் கற்பித்தலுக்குதவும் பல புதிய உத்திகளை விளக்கியுள்ளார். எஸ்.சா.

**ஆதம் சுமித்து (கி.பி. 1723-1790):** பொருளியல் தந்தை என்றழைக்கப்படும் இவர் கி.பி. 1723-ஆம்

ஆண்டில் இசுகாட்லாந்தில் (Scotland) உள்ள கிர்கேல்டி (Kirkcaldy) என்னும் சிற்றூரில் பிறந்தார். தம் 14-ஆம் வயதில் கிளாசுகோவிற்குச் (Glasgow) சென்று மேல்படிப்பை முடித்த பின்னர், ஆக்சுபோர்டில் (Oxford) உதவித்தொகை பெற்றுக் கல்வி அறிவினை வளர்த்தார். இளம் வயதிலேயே பிரான்சிசு அட்சன் (Francis Hudson) போன்ற பொருளியல் வல்லுநர்களிடம் கல்வி பயின்றமையால் சிறந்த அறிஞரானார். பேராசிரியர் அட்சனின் வாழ்க்கையும் அவர் எழுதிய நூல்களும் இவரை மிகவும் கவர்ந்தன. இவர் கி.பி. 1748 - ஆம் ஆண்டு முதல் 1751 வரை எடின்பரோப் பல்கலைக் கழகத்தில் அறிவுரையாளராகப் பணியேற்றுச் சிறப்புப் பெற்றார். பின்னர், கிளாசுகோப் பல்கலைக் கழகத்தில் அளவையியல் (Logic) நெறிமுறை மெய்ப்பொருளியல் (Moral Philosophy) ஆகிய துறைகளின் பேராசிரியராகப் பணியாற்றினார். தேவிடு—கியூம் (David Hume) என்பாரின் நெருங்கிய நண்பராகித் தம் அரசியல், பொருளியற் கருத்துகளை அவருடன் பகிர்ந்து அறிவை வளர்த்தார். ஐரோப்பிய நாடுகள் முழுவதும் சுற்றி அரசியல் வல்லுநர்கள் பலரையும் சந்தித்தார். இயற்கை வாதிகளான குயிசுனே (Qusney), தூர்காட்டு (Tourgot) போன்ற பலருடன் கலந்துரையாடி அரசியல் கோட்பாடுகளைப் பகுப்பாய்வு செய்தார்.



ஆதம் சுமித்து

ஆதம் சுமித்தின் புகழ்பெற்ற நூல்களான "அறநெறிக் கோட்பாடுகள்" (Theory of the Moral Sentiments – 1759), "நாடுகளின் செல்வம்" (Wealth of Nations – 1776) போன்றவை இன்றும் பொருளியல் நெறி நூல்களாகவும், அடிப்படைப் பொருளியலுக்கு இன்றியமையாதனவாகவும் விளங்குகின்றன. 'நாடுகளின் செல்வம்' என்ற இந்நூல் மனிதச் சிந்தனையின் ஒரு திருப்ப முனையாகக் கருதப்பட்டது. அரசியல், பொருளியல் கோட்பாடுகளுக்கு அறிவியல் சார்ந்த விளக்கம் அளிக்கப்பட்டதால், பிற்காலத்தில் பொருளியற் சிந்தனை வளரவும் வழிகோலியது. சுமித்தின் மூலதனக் குவிப்பு, வளர்ச்சி, இடையறா மாறுதல்கள் (Secular Changes) ஆகிய கோட்பாடுகள் புதிய பொருளியலில் சிறப்பிடம் பெறுகின்றன. இவர் கிளாசுகோப் பல்கலைக் கழகத்தில் பயிற்றுவிப்பதற்காக உருவாக்கிய குறிப்புகளை டாக்டர் எட்வின் கானன் (Dr. Edwin Canan) என்பவர் முறையாகத் தொகுத்து "நீதி, காவல்துறை, வருவாய், படைக்கலன்கள் ஆகியன சார்ந்த விரிவுரைகள்" என்ற தலைப்பில் நூலாக வெளியிட்டார்.

ஆதம் சுமித்தின் வாழ்க்கையும் அவர் ஆற்றிய பணியும் தொடக்கக் காலம் முதல் இன்று வரை பொருளியல் வரலாற்றுச் சிந்தனையில் சிறப்பிடம் பெற்று விளங்குகின்றன.

துணை நூல்கள்:

Howard Patterson, S., Readings in the History of Economic Thought, Mc Graw Hill Book Company, Inc., New York, 1932.

Haney, Lewis, H., History of Economic Thought, The Macmillan Company, New York, 1968.

**ஆதன் அவினி** சேரமன்னர்களின் மரபில் தோன்றியவன். பதிற்றுப்பத்தில் கபிலரால் சிறப்பிக்கப்பட்ட செல்வக் கடுங்கோ வாழியாதனுக்குப் பின்னர் அவன் பெயரால் ஒரு பழங்குடி நிலவியது என்பது தெரிகிறது. ஆதன் அவினி, ஆதன் எழினி, ஆதன் அழிசி எனவரும் சேரமான்களின் பெயர்கள் இதற்குச் சான்றாகும். ஆதன், வாழியாதன் என்னும் பெயர்களாலும் இம்மன்னன் வழங்கப்படுகிறான். ஓரம்போகியார் என்னும் புலவர் இவனைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். ஐங்குறுநூற்றில் மருதத் திணையைப் பாடவந்த ஓரம்போகியார் 'வேட்கைப் பத்தில்' பாடல்தோறும் இம்மன்னனை 'வாழிஆதன், வாழி அவினி' என்று கூறி வாழ்த்தியுள்ளார். ஆதன் அவினியினுடைய காவற்சிறப்பும், வள்ளன்மைச் சிறப்பும் தோன்ற இப்புலவர் தம் ஐங்குறுநூற்றுப் பாடல்கள் அமைந்துள்ளன.

சே.இரா.

*ஆதன் அழிசி* ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியனின் கண்போன்ற நண்பர் குழாத்துள் ஒருவன். இதனைப் புறநானூறு 'பொய்யா யாணர் மையற் கோமான், மாவனும் மன்னெயிலாந்தையும் உரைசால் அந்துவஞ் சாத்தனும் ஆத னழிசியும், வெஞ்சின வியக்கனும் உளப்படப் பிறரும், கண்போ னண்பில்' என்று குறிப்பிடுகிறது.

சே. இரா.

*ஆதன் எழினி* சங்ககாலத்தில் வாழ்ந்த வீரர்களுள் ஒருவன். இவனைச் 'செல்லிக் கோமான் ...... ஆதன் எழினி' என்று அகநானூற்றுப் பாட்டில் ஐயூர்முடவனார் குறிப்பிட்டுள்ளார். செல்லி என்பது சோழநாட்டுக் கடற்கரையோரமாக உள்ள செல்லூர் ஆகும். மதுரை மருதன் இளநாகனார் பாடிய அகப் பாடலில் சுட்டிச் செல்வதிலிருந்து செல்லூரைப் பற்றிய கருத்து வலுப்பெறுகிறது. ஆதன் எழினி கோசர் மரபினர் என்பது 'கோசர் கண்ணி அயரும் ...... செல்லிக்கோமான்' என்னும் தொடரால் வெளிப்படுகிறது. கோசர்கள் வாள்வடுப்பெற்ற முகத்தர், 'கருங்கட்கோசர்' என்று பாராட்டப்படுவதற்கு ஏற்ப, ஆதன் எழினியும் பெருவீரனாக விளங்கியுள்ளான். ஐயூர் முடவனார் 'எறிவிடத் துலையாச் செறிசுரை வெள்வேல் ஆதன் எழினி யருநிறத் தழுத்திய பெருங் களிற்று எவ்வம்' என்று ஆதன் எழினியின் களிறு எறிந்து பெயரும் ஆற்றலைக் குறிப்பிடுகிறார்.

சே. இரா.

*ஆதன்சு* நகரம் கிரீசு (Greece) நாட்டின் தலைநகர். இந்நகரைக் காப்பதாக நம்பப்படுகிற அறிவுத் தேவதை அத்தீனா (Athena) வின் நினைவாக ஆதன்சு (Athens) என்னும் பெயர் இதற்குச் சூட்டப் பட்டது. கிரீசு நாட்டிலேயே மிகப் பெரிய நகரமாகவும், உலகிலேயே அழகு மிக்க நகரங்களுள் ஒன்றாகவும், மத்திய தரைக்கடல் நாடுகளின் பண்பாட்டு மையமாகவும், மேலைநாட்டுப் பண்பாட்டின் ஊற்றாகவும் இன்று ஆதன்சு விளங்குகிறது. அக்கராப்பாலிசு (Acropolis) என்ற தட்டையான குன்றின் மீது இந்நகர் அமைந்துள்ளது. ஆற்றுப் பாசன வசதிகளைப் பெற்று மிகவும் வளமாக உள்ளது. கிரீசு நாட்டின் தென்கிழக்குப் பகுதியில் மூன்று பக்கங்களிலும் இது குன்றுகளால் சூழப்பட்டுள்ளது. இதன் மேற்கே அய்கலியாசு (Aigaleos) குன்றுகளும், வடக்கே பார்னசு (Parnes) குன்றுகளும் வடகிழக்கே இலிக்காபெட்டசு (Lycabettus), பென்டலிகன் (Pentelikon) குன்றுகளும் கிழக்கே இம்மட்டசு குன்றுகளும் (Hymettus) இந்நகருக்கு அரண்களாக அமைந்துள்ளன.

புதிய கற்காலத்தில் அக்கராப்பாலிசு குன்றும், அதன் சரிவுகளும் அடங்கிய பகுதிகளே ஆதன்சு நகரமாக இருந்தன. உலோகக் காலத்தில் ஆதன்சு



ஆதன்சு

சிற்றரசாக உயர்ந்தது. பின்னர்க் கி.மு.7–ஆம் நூற்றாண்டு வரை ஆதன்சு இருண்ட காலத்தைப் பெற்றிருந்தது. இந்த நூற்றாண்டுகளுக்குப் பின்னர் அட்டிகா (Attica) சமவெளிப்பகுதிகள் அனைத்தும் தேசிய வீரனான தீசியசு (Theseus) என்பவன் முயற்சியால் ஒற்றுமை அடைந்தன. அதன் தலை நகரமாக ஆதன்சு நகரமே தேர்ந்தெடுக்கப்பட்டது. ஆதன்சு கி.மு. 6–ஆம் நூற்றாண்டில் கொடுங்கோலாட்சியினர் கையில் சிக்குண்டது. அவர்கள் அக்கராப் பாலிசு குன்றுக்குத் தெற்கே இல்லிசசு ஆற்றங்கரையில் சியசு(Zeus) எனப்படும் கிரேக்கப் பெருந்தெய்வத்தின் கோயிலையும் கட்டி முடித்து, அந்நகருக்கு அழகைச் சேர்த்தனர். கொடுங்கோலாட்சியும் கி.மு. 5–ஆம் நூற்றாண்டில் வீழ்த்தப்பட்டு, திராக்கோ (Draco), சோலன் (Solon), கிளெய்சுதெனிசு (Cleisthenes) போன்ற சீர்திருத்தவாதிகளாகிய மன்னர்களால் படிப்படியாக மக்களாட்சிக்கான கருத்துகள் புத்துயிர் பெற்றன. நகரைச் சுற்றியுள்ள மதிற்சுவர்கள் கி.மு. 4–ஆம் நூற்றாண்டில் பெலப்பனீசியப் போரின் போது (Peloponnesian War) அழிக்கப்பட்டு, மீண்டும் அச்சுவர்கள் கட்டப்பட்டன. கிரேக்கரின் மேலாதிக்கத்தின் போது கி.மு. 3,2–ஆம் நூற்றாண்டுகளில் ஆதன்சு நகரின் பழம் பெருமை பேசப்பட்டது. வரலாற்று நினைவுச் சின்னங்கள் பாதுகாக்கப்பட்டன. அந்நகரின் நாகரிகமும் பண்பாடும் பெரிக்ளிசு (Pericles) காலத்திலே நிறைவு பெற்றன. ஆதன்சு கி.மு. முதலாம் நூற்றாண்டில் உரோமர் காலத்தில் உன்னதமான நகரமாகக் கருதப்பட்டது. சூலியசு சீசர் (Julius Caesar), அகசுடசு சீசர்

(Augustus Caesar) போன்றவர்கள் ஆதன்சு நகருக்கு வேண்டிய அங்காடிகளையும், பள்ளிக்கூடங்களையும் ஏற்படுத்தி அந்நகரின் அழகைப் பெருக்கினார்கள்.



பெரிக்கிளிசு

சிறப்புமிக்க நீண்ட மதிற் சுவர்கள் ஆதன்சு, பைரேயசு (Piraeus) ஆகிய இரு நாடுகளையும் இணைத்து, அந்நாட்டின் பரப்பளவைக் கூட்டி விட்டன. கிரேக்க மக்களின் விடுதலைப் போரின் விளைவாகக் குடியாட்சி அமைக்க வேண்டிய சூழ் நிலை உருவாகியது. இன்றைய புதிய ஆதன்சு கி.பி. 1834-ஆம் ஆண்டில்தான் கிரீசு நாட்டின் தலைநகர மாக ஏற்றுக்கொள்ளப் பட்டது. இன்றைய ஆதன்சு தலைநகரில் அகன்ற, அழகிய சாலைகளும், அச் சாலைகளின் இரு மருங்கிலும் நடைபாதைகளும் புதிய பாணிக் கட்டிடங்களும், நீதிமன்றங்களும், மைசீ னிய எகிப்திய பண்டைய நாகரிகங்களைச் சார்ந்த வரலாற்றுப் பொருட்களைக் கொண்ட தேசிய அருங் காட்சியகமும், தேசியப் பல்கலைக் கழகமும், தொழிற் கல்விக் கூடங்களும், பல்வேறு சமயச் சார்புடைய அமைப்புகளும், பள்ளிக் கூடங்களும் இருக்கின்றன. ஆதன்சு நகரம் 1910-1930 ஆகிய ஆண்டுகளுக் கிடையே மிக விரைவாக வளர்ந்து, பால்கன் நாடு களின் தலைநகரங்களிலேயே மிகச்சிறப்பாகக் கருதப் பட்டது.

இன்றைய ஆதன்சு, கிரீசு நாட்டுப் பொருளா தாரத்தின் மையமாகவே மதிக்கப்படுகிறது. தேசி யச் சாலைகளும் இருப்புப் பாதைகளும் கிரீசு நாட் டின் பல்வேறு பெரு நகரங்களை ஆதன்சு நகருடன் இணைக்கின்றன. கப்பல் கட்டுதல், மாவரைத்தல், மதுவடித்தல், சவுக்காரம் செய்தல், தரை விரிப்புகள் நெய்தல், ஆடை நெய்தல், வேதியியல் துணைக் கருவி கள் செய்தல், உணவுப் பொருள்களைத் தயாரித்தல், உலோகப் பொருள்கள் செய்தல் போன்ற தொழில் களில் ஆதன்சு நகர மக்கள் ஈடுபட்டுள்ளனர். ஆதன்சு நகரிலிருந்து ஒலிவ எண்ணெய், புகையிலை, மது, தோல், பழவகைகள், வணிகப் படகுப் பகுதிகள், பேருந்து வண்டிப் பகுதிகள், இயந்திரப் பொறிகள், காகிதம் போன்றவை இறக்குமதி செய்யப்படு கின்றன.



அதினா கோயில்

இரண்டாம் உலகப்போரின்போது செருமனி போரில் பங்கேற்று, 1941-ஆம் ஆண்டு ஏப்பிரல் திங் கள் 27-ஆம் நாளன்று ஆதன்சு நகரில் புகுந்து, அதனை வலியப் பற்றிக்கொண்டது. பின்னர் அந்

நகரம் 1944-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்களில் பிரிட்டன் உதவியால் மீட்கப்பட்டது. போரின்போது ஆதன்சு நகரிலுள்ள இயந்திரத் தொழிற்சாலைகள் அனைத்தும் செருமனியின் பீரங்கிப் படைகளுக்கு இரையாகி விட்டன. ஆனால், வரலாற்றுச் சிறப்பு மிக்க நினைவுச் சின்னங்களுக்கு எவ்வித அழிவும் ஏற்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

அமெரிக்கா போன்ற நாடுகளின் கடனுதவியை முறையாகப் பெற்று, இரண்டாம் உலகப் போரின் போது ஏற்பட்ட அழிவுகளை ஆதன்சு மக்கள் புதுப்பித்துக் கொண்டார்கள். போருக்கு முன்னர் எத்தகைய முன்னேற்றத்தை ஆதன்சு பெற்றிருந்ததோ அதைவிட இருமடங்கு முன்னேற்றத்தை இன்று பெற்றுள்ளது. இந்நகரின் மக்கள்தொகை 6,27,564 (1964).

— பொன். சு.

**ஆதனுங்கன்** சங்க காலத்தில் வாழ்ந்தகுறுநில மன்னர்களுள் ஒருவன்; ஒரு வள்ளலுமாவான். கள்ளில் ஆத்திரையனார் என்னும் புலவரை ஆதரித்தான். இவனைக் குறித்து அவர் பாடிய இரண்டு பாடல்கள் புறநானூற்றில் காணப்படுகின்றன. 'கல் இழி அருவி வேங்கடம் கிழவோன்' என்று புலவர் பாடியுள்ள தொடரால் திருவேங்கடத்தைச் சேர்ந்த நாடு இவனுடையது என்பது தெரிகிறது. வேங்கடத்தில் இப்போது திருமால் கோயில் கொண்டிருக்கும் பகுதியே ஆதனுங்கன் ஆட்சி செய்த இடமாகும். இவன் இரவலர் இன்னல் தீர்க்கும் இனிய உள்ளமும், சான்றோர் சால்பறிந்து பேணும் பெருந்தகைமையும் உடையவன். இவனைக் குறித்துக் கள்ளில் ஆத்திரையனார் 'இறைவ, நீ எப்போதும் என் நெஞ்சில் இடம் பெற்றுள்ளாய்; என் நெஞ்சைத் திறப்போர் நின்னை அங்கே காண்பர்; பலரையும் புரத்தலை மேற்கொண்டிருக்கும் அறத்துறையாகிய நின்னை ஒருகாலும் மறவேன்; மறத்தற்குரிய காலமொன்றுண்டாயின் அது என்னுயிர் என் யாக்கையை விட்டுப் பிரிந்தேகும் காலமே யன்றிப் பிறிதில்லை'' என்று கூறியுள்ள பாடல் அவர் இவனிடம் கொண்டிருந்த அன்பினைப் புலப்படுத்துவதோடு, இவனுடைய கொடைச் சிறப்பினையும் உணர்த்துகிறது. இவன் இறந்தபிறகு, கள்ளில் ஆத்திரையனார் வேங்கடத்திலிருந்து ஆட்சி செய்த இவன் வழித்தோன்றலாகிய நல்லோர் முதியன் என்பானைக் கண்டு, ''ஆதனுங்கன் போல நீயும், பசித்த ஒக்கல் பழங்கண் வீட, வீறுசால் நன்கலம் நல்குமதி பெரும!'' என்று வேண்டுகிறார்.

சே. இரா.

**ஆதனோரி** கடையெழு வள்ளல்களுள் ஒருவன். வல்வில் ஓரி, ஓரிஎனவும் வழங்கப் பெற்றான்; கொல்லி மலையையும் அதனைச் சூழ்ந்த நாட்டினையும் அரசாண்டான். இவனைச் சிறப்பித்துப் பரணர், கபிலர், வன்பரணர், பெருஞ்சித்திரனார், கழைதின்யானையார், நல்லூர் நத்தத்தனார், கல்லாடனார் பாலத்தனார் ஆகிய சங்கப் புலவர் எண்மர் பதினான்கு பாடல்கள் பாடியுள்ளனர். ஓரியின் கொல்லி மலை வளம்மிக்கது. இதனைப் பரணர் 'பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லி' என்று பாராட்டுகிறார். கொல்லிமலை மணமிக்கது என்பதால், புலவர்கள் மகளிரின் கூந்தல் மணத்திற்கு இம்மலையின் மணத்தினை ஒப்பிடுவர். பரணர் 'திண்தேர்க் கைவள் ஓரி கானம் தீண்டி எறிவளி கமழும் நெறிபடு கூந்தல்' என்று சிறப்பித்துள்ளார். இவன் நாட்டுக் கொல்லிப் பாவை அழகு மிக்கது; தெய்வநலஞ் சான்றது; தெய்வத்தால் அமைக்கப் பெற்றது; காண்போரைத் தன் அழகினால் கவர்ந்து கொல்லுந் தன்மையது. அது மகளிர்க்கு உவமையாகக் கூறப்படுவதுமாகும். ஓரியினால் பாதுகாக்கப்படுகிற சிறுகுடி மக்கள் வறுமையுறுகிற காலத்து அஞ்சாமை மிக்க யானைக் கொம்பினை விற்று உண்ணும் வல்வில் ஓரி' என்று கபிலர் ஓரியின் வீரத்தைச் சிறப்பிக்கிறார். 'வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி' என்னும் புறப்பாடலில் வல்வில் ஓரியின் அம்பு வேழம், புலி, கலை, பன்றி முதலானவற்றை வீழ்த்தி உடும்போடு சேர்ந்து மண்ணில் தங்கிற்று என்று வன்பரணர் காட்டுகிறார். இத்தகைய ஆற்றலுடையவனை வன்பரணர் 'அடு போர் ஆனா ஆதனோரி' என்று பாராட்டுகிறார். வன்பரணர் 'ஆதனோரி மாரிவண் கொடை காணியநன்றும்' என்றும், கழைதின்யானையார் 'ஓரி' விசும்பில் கருவி வானம் போல, வரையாது சுரக்கும் வள்ளியோய், என்றும் ஓரியின் கொடைச் சிறப்பினைப் புகழ்ந்துள்ளனர். வல்வில் ஓரி கொல்லி மலையை ஆட்சி புரிந்த நாளில் அதியமான் நெடுமானஞ்சி திருக்கோவலூரைக் கைப்பற்றினான். அதனை ஆண்டிருந்த மலையமான் திருமுடிக்காரி தோற்றோடிச் சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறையிடம் அடைக்கலம் புகுந்தான். அச்சேரமான் கொல்லி மலையைத் தான் பெறவேண்டும் என்னும் குறிப்புடையனாதலையறிந்த காரி ஓரியைக் கொன்று கொல்லி மலையைச் சேரனுக்குக் கொடுத்தான். சிறுபாணாற்றுப் படையில் நல்லூர் நத்தத்தனாரும், அக நானூற்றில் கல்லாடனாரும் இவனைப் பாடியுள்ளனர்.

சே. இரா.

**ஆதாம் சிகரம்** இலங்கையின் தலைநகரான கொழும்புக்குக் கிழக்கே 72 கி. மீ. தொலைவில் உள்ளது. இச்சிகரம் 2451 மீ. உயரம் உடையது. சிகரத்தின் உச்சியில் அமைந்திருக்கும் பீடபூமியிலுள்ள காற்சுவட்டை இந்துக்கள், இசுலாமியர்கள் பௌத்தர்கள் ஆகிய அனைவரும் தத்தம் தெய்வத்

தின் அல்லது சமயத்தலைவரின் காலடி என்று கூறுகின்றனர். இக்காலத்தில் இது பௌத்தர்களின் ஆதிக்கத்தில் இருந்துவருகிறது. இக்காலடியை வழிபட மக்கள் ஆயிரக்கணக்கில் வருகின்றனர்.

**ஆதாம் வாராவதி,** இராமேசுவரத்திலிருந்து மன்னார்த் தீவு வரை 48 கி. மீ. தூரம் நீண்டு செல்லும் பாறையும் மணலும் சேர்ந்த திட்டு. வானரர் கட்டிய சேது என்பர். கடல் பெருகும்பொழுது நீர் இங்கு ஒரு மீட்டருக்கும் மேல் நிற்கும். இவ்வாராவதியின் அக்காலப் பெயர் ஆதிசேது என்பதாகும். 'ஆசேது இமாலய பரியந்தம்' என்பது வடமொழி மூதுரை.

**ஆதாமும் ஏவாளும்:** இவர்கள் மனித இனத்தின் பெற்றோர்கள் என்பது கிறித்தவர்களின் நம்பிக்கையாகும். ஆதாம் என்னும் சொல்லுக்குப் பூமி (Adamah) என்னும் பொருளுமுண்டு. மேலும் அந்தச் சொல்லுக்கு உருவாக்கு அல்லது ஆக்கம்செய் (Adam Make or Produce) என்ற பொருளும் உண்டு. ஆதாமை இறைவன் இவ்வுலகத் தூசிகளிலிருந்து படைத்தார் என்றும் அவனுடைய விலா எலும்பிலிருந்து ஏவாளைப் படைத்தார் என்றும் வரலாறுகள் கூறுகின்றன. ஆதாமும், ஏவாளும் ஏதேன் (Eden) தோட்டத்தில் மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வந்தனர். இறைவன் 'அத்தோட்டத்திலுள்ள எல்லாக் கனிகளையும் பறித்து உண்ணலாம்; ஆனால் நன்மை தீமைகளை அறியும் மரத்தின் கனிகளை மட்டும் உண்ணக்கூடாது' என அவர்களுக்குக் கட்டளையிட்டிருந்தார்.

ஆனால், சாத்தான் ஒரு பாம்பு வடிவத்தில் தோன்றி, அம்மரத்தின் கனியினைப் பறித்து உண்ணும்படி ஏவாளை மயக்கினான். அவள் அக்கனியினைப் பறித்து உண்டதோடல்லாமல், அதனை ஆதாமுக்கும் கொடுத்து உண்ணும்படி செய்தாள். கர்த்தரின் ஆணையை அவர்கள் மீறியதனால், அவர்கள் பிறந்த மேனியாக வாழ்ந்து வருவதையும் அவர்களுடைய பாவங்களையும் உணர்ந்தனர். அக்கனியினை உண்ட பின்னர்க் கர்த்தர் அவர்களை ஏதேன் தோட்டத்திலிருந்து வெளியேற்றினார். மனித இனத்திற்குத் துன்பம் பரம்பரையாக வந்து கொண்டிருக்கிறது என்பது, இக்கதையின் மையக் கருத்தாகும். இவர்களுக்குக் காயின், ஆபேல், சேத்து என்ற மூன்று ஆண்மக்கள் இருந்தனர் என்றும், ஆதாம் 930 ஆண்டுகள் வாழ்ந்திருந்தான் என்றும் விவிலிய நூல் கூறுகிறது.

**ஆதாய நோக்கமற்ற நிறுவனங்கள்:** இக்காலத்தில் பணிகளையும் பொருள்களையும் வழங்குகிற பல்வேறு வகையான நிறுவனங்களில் சில நிறுவனங்கள் ஆதாய நோக்கமின்றித் தொண்டு செய்யும் நோக்கத்தில் பணிபுரிகின்றன. அத்தகைய ஆதாயமற்ற நிறுவனங்களின் பங்கு வளர்ந்து வருகிறது. அவற்றின் அமைப்பு முறை, நோக்கங்கள், செயற்பாடு, விளைவுகள் ஆகியவற்றை இங்கு ஆராயலாம்.

நாட்டில் ஏற்பட்டிருக்கும் பல்வேறு பொருளாதார அமைப்பு முறைகளின் விளைவாகப் பலவகை நிறுவனங்கள் செயற்பட்டுக் கொண்டிருக்கின்றன. இவற்றைக் கீழ்க்காணும் முறையில் பகுக்கலாம்.




ஒரு நிறுவனம் ஆதாய நிறுவனமா, ஆதாயமற்ற நிறுவனமா என்பதை அதன் வெளிப்படையான நோக்கத்திலிருந்தும் செயற்பாட்டு முறையிலிருந்தும் தெரிந்து கொள்ளலாம். தொடங்கப் பெற்ற ஒரு நிறுவனம் முதலில் ஆதாய நோக்கத்தோடு செயற்படத் தொடங்கிப் பின்னர் நிறுவனங்களின் உயர்ந்த கொள்கையின் காரணமாகத் தொண்டு நிறுவனமாக (Service Institution) மாறி விடலாம். இதற்கு எடுத்துக்காட்டாக, 'அறங்காவல் நிறுவனமாக'த் (Trusteeship Organisation) தன்னை மாற்றிக் கொள்கிற முதலாளித்துவ நிறுவனத்தைக் கூற

லாம். இதே போலத் தொண்டு செய்யும் நோக்கில் தொடங்கிய நிறுவனம், காலப்போக்கில், நிருவாகிகளின் மாற்றத்தால் ஆதாயம் தேடுவதில் கவனம் செலுத்தலாம். இதற்குச் சான்றாகக் கூட்டுறவு நிறுவனத்தைச் சுட்டிக் காட்டலாம். ஆதாயமற்ற நிறுவனங்களைப் புரிந்து கொள்ள, இப்போதுள்ள அமைப்புகளை நான்கு வகைகளாகப் பிரிக்கலாம்.

முதலாவது கூட்டுறவு நிறுவனம். கூட்டுறவு நிறுவனத்தின் தலையாய நோக்கம் 'ஒருவர் பலருக் காகவும் பலர் ஒருவருக்காகவும்' இணைந்து நின்று பணியாற்றுவதாகும். அதில் பங்குத் தொகையை ஒட்டி, உறுப்பினர்களை வேறுபடுத்துவதில்லை. எல்லோரையும் ஒத்த நிலையில் கருதுகின்றனர். கூட்டு முயற்சியில் தங்கள் தேவைகளை நிறைவேற் றிக் கொள்ள ஏற்ற நடவடிக்கைகளைக் கூட்டுறவுச் சங்கத்தின் மூலம் உறுப்பினர்கள் முயல்வார்கள். இப்படி மேற்கொள்கிற பணிகளின் மூலம் ஆதாயம் கிடைக்கலாம். ஆதாயத்தை முதலீட்டு அடிப்படை யில் பங்கிட்டு அளிப்பதில்லை. சில பொதுப் பணி களுக்கு ஓரளவு ஒதுக்கிவிட்டு, உறுப்பினர்கள் நிறு வனத்தில் பங்கு பெற்ற அளவின் அடிப்படையில் ஊக்கத் தொகையாகப் பகிர்ந்தளிக்கின்றனர். இதிலி ருந்து கூட்டுறவு நிறுவனங்கள் ஆதாயம் பெற்றாலும், அவை ஆதாய நோக்கத்தோடு அமைந்தவை அல்ல என்பதை அறிந்துகொள்ளலாம். இரண்டாவது, அரசு தொடங்கி நடத்துகிற பொதுப் பயன்பாட்டுப் பணி நிறுவனங்கள் (**Public Utility Service Institutions**) ஆகும். மக்களின் நலனைக் கட்டிக் காக்கவும் வளர்க்கவும் அரசு சில நிறுவனங்களைத் தொடங்கி நடத்துகிறது. சில பொருள்களை உற்பத்தி செய்வ திலோ பணிகளைச் செய்வதிலோ எதிர் பார்க்கும் அளவு ஆதாயம் கிடைக்காவிட்டால், தனியார் அவற்றை மேற்கொள்ளமாட்டார்கள். மக்களுக்கு இன்றியமையாத பணிகளைச் செய்யும் நிறுவனங் கள் தனியாரிடம் இருந்தால், அவர்கள் பெருமள வில் ஆதாயம் பெற முயலலாம். இத்தகைய போக் கைத் தவிர்க்கவும் அரசு அவற்றை ஏற்று நடத்த லாம். இதற்கு எடுத்துக்காட்டாக, அஞ்சல் துறை. இருப்புப் பாதைப் போக்குவரத்து, வானொலி, தொலைக்காட்சி, தொழிற் பள்ளிகள், கல்லூரிகள், மருத்துவம் போன்றவற்றை அரசு ஏற்று நடத்து வதைக் கூறலாம். மூன்றாவதாக, அற நோக்கில் அமைந்த நிறுவனங்களைச் (**Trusts**) சுட்டிக் காட்ட லாம். சமுதாயத் தொண்டு செய்ய விரும்புகிறவர் கள், தங்கள் பணிகள் தொடர்ந்து நடைபெற நிறு வனங்களை உருவாக்குகின்றனர். இத்தகைய அமைப்புகள் மருத்துவ நிலையங்கள், பள்ளிகள், கல்லூரிகள் போன்றவற்றை நடத்துகின்றன. இந்தியாவில் பல கோயில்கள் இப்படி அமைந்த நிறுவனங்களே. நான்காவதாக, நாட்டுத் தொண் டிற்காகத் தங்களை உரிமைப்படுத்திக் கொண்டி ருக்கிற தன்விருப்பத் தொண்டு நிறுவனங்கள் (**Voluntary Service Institutions**) உள்ளன. இவற் றைச் சட்டப்படி பதிவு செய்து கொள்ளலாம். அண்ணல் காந்தியடிகள் அமைத்த பல நிறுவனங்கள் இப்படிப்பட்டவை. ஆசிரமங்கள், தமிழ்நாடு சருவோ தய சங்கம் போன்றவற்றை இந்த வகைக்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம். இலக்கிய மன்றங்கள், விளை யாட்டுக் கழகங்கள், கலை வளர்ச்சி நிறுவனங்கள் ஆகியவற்றையும் இந்தப் பிரிவோடு சேர்த்து எண் ணிப் பார்க்கலாம்.

இக்காலத்தில் ஆதாய நோக்கின்றிச் செயற்படு கின்ற நிறுவனங்கள் பல்வேறு காரணங்களினால் சிறப்பிடம் பெறுகின்றன. முதலாளித்துவ அமைப்பு முறையில், தனியார் ஆதாய நோக்கில், செயற்படு கிற பொழுது, பொதுமக்களின் நலன் பாதிக்கப்படு வதைப் பற்றிக் கவலைப்படமாட்டார்கள். எப்படி யும் ஆதாயத்தை அவர்கள் பெருக்க முயலுவதன் விளைவாகக் கலப்படம், கள்ளக் கடத்தல், கறுப்பு அங்காடி போன்றவை தோன்றியுள்ளன. இத்தகைய தீமைகளிலிருந்து மக்களைக் காக்க ஆதாயமற்ற நிறு வனங்கள் முயல்கின்றன. பொதுவுடைமை அமைப் பில் எல்லாம் அரசின் கட்டுப்பாட்டிற்குள் வந்துவிடுவ தால், தனி மனித முயற்சிக்கும் வளர்ச்சிக்கும் இட மில்லாமற் போகிறது. ஆதலால், அத்தகைய அமைப் பில் ஆதாயமற்ற நிறுவனங்களை அமைப்பதையும் செயற்படுத்துவதையும் அரசு ஏற்றுக்கொள்கிறது. ஆன்மிகம் சார்ந்த பணிகளுக்கு ஆதாயமற்ற நிறு வனங்கள் துணை செய்கின்றன. ஆதாய நோக்க மற்ற நிறுவனங்களால் சமுதாயம் இதுவரை எண் ணற்ற நன்மைகளைப் பெற்றிருக்கிறது. குறிப்பாகக் கலை, இலக்கியம், பண்பாட்டு வளர்ச்சி, மருத்து வம், அறிவு, ஆராய்ச்சி, கருத்துப் பரப்புதல் ஆகிய வற்றில் ஆதாயமற்ற நிறுவனங்கள் அரும்பணிகள் செய்து வருகின்றன. இத்தகைய நிறுவனங்களினால் சமுதாயத்தில் வேலை வாய்ப்புகள் பெருகியுள்ளன. அரசின் பொதுநலமும் (**Welfare**) பொறுப்பின் பாரமும் ஓரளவு குறைய இவை துணை செய்கின்றன.

தொண்டு நிறுவனங்களை 'வளர்ச்சித் துறை' (**Growth Sector**) சார்ந்தவையாகக் கருதுகின்றனர். இத்தகைய நிறுவனங்களிடம் நிறைய வளங்களும் உழைப்பாற்றலும் ஆக்கத்திறனும் இருக்கின்றன. இவை சமுதாயத்தின் தேவைகளில் ஒரு பகுதியைத் தாங்கள் உற்பத்தி செய்கிற பொருள்கள், பணிகளின் மூலம் நிறைவு செய்கின்றன. ஆகையால், இவை

திறம்படச் செயற்படுவது நாட்டின் வளர்ச்சிக்குத் தேவையான ஒன்றாக உள்ளது.

**செயற்படும் முறை:** ஆதாயமற்ற நிறுவனங்கள் தங்களுக்கு வேண்டிய நிதியைப் பல வகைகளில் பெறுகின்றன. சிலர் தங்களது செல்வத்தில், வருவாயில் ஒரு பகுதியை முதலாக்கி இப்படிப்பட்ட நிறுவனங்களைத் தோற்றுவிக்கின்றனர். ஒரே குறிக்கோள் கொண்ட சிலர், உறுப்பினர் கட்டணமாகப் பங்குத் தொகைப் பணம் சேர்த்து, ஒரு தொண்டு நிறுவனத்தை (Service Institution) அமைக்கலாம். பலரிடம் நன்கொடை பெற்று உருவான, ஆதாயமற்ற நிறுவனங்களும் பல உள்ளன. ஒரு நிறுவனம் பொருள்களையோ, பணிகளையோ உற்பத்தி செய்ய நிதி தேவைப்படுகிறது. தொடக்க முதலோடு கூட, நாடோறும் செய்யும் பணிகளுக்கும் பணம் வேண்டும். உற்பத்தியில் ஈடுபட்டிருக்கிற சில பொதுப்பணி நிறுவனங்கள், தங்கள் பொருள்கள் நியாயமான விலைக்கு விற்பதன் மூலம் வேண்டிய வருவாயைப் பெறலாம். எடுத்துக்காட்டாகக் கண் தெரியாதவர்களுக்காக ஒரு நிறுவனம் செயற்படுவதாகக் கொள்ளலாம். பார்வையற்றவர்களுக்கு நல்ல முறையில் பயிற்சி கொடுத்து, அவர்களை உற்பத்திப் பணிகளில் ஈடுபடச் செய்து, அவர்கள் உருவாக்கிய பொருள்களை விற்று வரும் பணத்தைக் கொண்டு, அவர்களுக்கு வாழ்வளிக்கலாம். வேறு சில நிறுவனங்கள் தங்கள் பணிகளைப் பெறுபவர்களிடமிருந்து, நிருவாகச் செலவுகளை ஈடு செய்யுமளவிற்குக் குறைந்த அளவில் கட்டணங்களைப் பெறுகின்றன. இப்படி நடைபெறுகிற நூலகங்கள், விளையாட்டு நிறுவனங்கள், இலக்கிய மன்றங்கள் பல நமது நாட்டில் உள்ளன. இவை அவ்வப்போது நன்கொடைகள் பெறுகின்றன. அரசின் உதவித்தொகையோடு செயற்படுகிற ஆதாயமற்ற நிறுவனங்கள் பல உள்ளன. இவற்றைத் தனியாரோ அரசின் அலுவலர்களோ நடத்தலாம். இவற்றிற்கு நிதிச் சிக்கல் இல்லாததால் இவை விரிவாகப் பணி செய்ய வாய்ப்புகள் உள்ளன.

பொதுவாக, ஆதாயமற்ற நிறுவனங்களும் தங்களுக்கென ஒரு வரவு-செலவுத் திட்டத்தை அமைத்துக் கொண்டு செயற்படுகின்றன. இவற்றின் கண்ணோட்டம் பணிகளுக்கேற்ற வகையில் செலவைக் கணக்கிட்டு அதற்கான வருவாயைப் பெறுவதாக இருக்கும். ஒரு நிறுவனம் தனக்கு வேண்டிய நிதியைச் சில தக்க வழிமுறைகளின் மூலம் பெற்றுக் கொள்ளுமானால் அதனைத் 'தானே நிதிபெறும் நிறுவனம்' (Self-Financing Institution) என்று கூறலாம். அவ்வாறன்றி, வெளி நிதி உதவி பெற்று நடைபெறுவனவற்றைச் 'சார்ந்த நிறுவனங்கள்' (Depending Institutions) எனலாம். ஓர் ஆதாயமற்ற நிறுவனம் தனக்கு வேண்டிய வருவாயைத் தானே உருவாக்கிக் கொள்ளும் நிலையிலிருந்தால், அதன் பணிகள் தொடர்ந்து நடைபெற வாய்ப்புண்டு.

**திறமையும் ஆதாயமும்:** ஆதாயமற்ற நிறுவனங்கள் பொதுவாகத் திறமையாகச் செயற்படுவதில்லை என்று குறை கூறுகின்றனர். ஆதாயமற்ற நிறுவனங்களை நிருவகிப்பவர்களுக்கும் அவற்றில் பணி செய்கிற ஊழியர்களுக்கும் மிகக் குறைவாக ஊதியம் தருகின்றனர். நிறுவனங்களின் நோக்கம் தொண்டு என்பதால், அவை ஆதாயமின்றி நடைபெறுவதால், அத்தகைய நிறுவனங்களால் மிகுந்த ஊதியமோ ஊக்கத் தொகையோ (Bonus) கொடுக்க முடிவதில்லை. இதனால் ஊழியர்களுக்குத் தூண்டுதல் இல்லை என்று கருதுகின்றனர். ஆதாய நோக்கு இல்லாததாலேயே திறமை குறைகிறதென்று சிலர் சுட்டிக்காட்டுகின்றனர். காந்தியப் பொருளியலறிஞரான டாக்டர் ஜே.சி. குமரப்பா மனித வளர்ச்சியின் நிலைகளைப் பற்றி ஆராய்கிற பொழுது பொருளாதாரத்தை ஐந்து வகைகளாகப் பகுக்கிறார். மற்றவர்களை அழித்து வாழ்கிற முறையைச் 'சுரண்டல் பொருளாதாரம்' (Parasitic Economy) என்றும், மற்றவர்களை வருத்தி வாழ்கிற வாழ்க்கையைக் 'கொள்ளைப் பொருளாதாரம்' (Predatory Economy) என்றும், உழைத்து வாழ்வதை 'முயற்சிப் பொருளாதாரம்' (Economy of Enterprise) என்றும், மற்றவர்களோடு இணைந்து வாழ்வதைக் 'கூட்டுப் பொருளாதாரம்' (Economy of Gregation) என்றும், தொண்டு செய்து வாழ்வதைத் 'தொண்டுப் பொருளாதாரம்' (Economy of Service) என்றும் வகைப் படுத்திக் கூறுகிறார். சுரண்டல் பொருளாதார முறையிலும் கொள்ளைப் பொருளாதார அமைப்பிலும் வன்முறையும் தன்னலமும் மேலோங்கியுள்ளன. முயற்சிப் பொருளாதாரத்திலும் கூட்டுப் பொருளாதாரத்திலும் தன்னலம் ஓரளவு கட்டுப்படக் கடமையுணர்ச்சியோடு உழைக்கும் மனம் வளர்கிறது. ஆனால், தொண்டுப் பொருளாதாரத்தில் பயன் கருதாமல், மற்றவர்களின் நலன் கருதி உழைப்பதால், அன்பும் அமைதியும் நின்று நிலவும் சமுதாய அமைப்பு முறை உருவாக வழி இருக்கிறது. ஆதாயமற்ற நிறுவனங்கள் தொண்டுப் பொருளாதார அமைப்பு முறையைச் சார்ந்தவை. அவற்றில் பணி செய்கிற ஊழியர்கள் தொண்டு உணர்ச்சியைப் பெற்றவர்களாக இருந்தால் திறமையாகப் பணியாற்றுவார்கள். ஆதாய நோக்கிற்கு மாறாக அன்பும் ஆன்மிகத் தொண்டு மனப்பான்மையும் வளர வேண்டும். இன்றைய போட்டி நிலை மாறிப் பொது நோக்கில் செயற்படுகிற தொண்டு நிறுவனங்கள் பெருகுகிறபொழுது

தான் புதியதோர் உலகை உருவாக்க முடியும். ஆதலால், சிறந்த குறிக்கோளுடையவர்கள் இவற்றில் பணிபுரிய வரவேண்டும்.

வெற்றிபெற வேண்டியவை: ஆதாயமற்ற நிறுவனங்கள் வெற்றி பெற வேண்டுமானால், அவை சிலவற்றில் கவனம் செலுத்திச் செயற்பட வேண்டும். எந்த நிறுவனமாக இருந்தாலும், அது திறமையாகச் செயற்படச் சொத்துகளும் முதலும் உழைப்பும் நிருவாகமும் தேவைப்படுகின்றன. நிறுவனம் இவற்றைச் சீராகவும் நல்ல பலன் விளையும் வகையிலும் பயன்படுத்த வேண்டும். ஆதாயமற்ற நிறுவனங்கள், தங்களிடமுள்ள மூல வளங்களைச் சிக்கனமாகவும், வீணாக்காமலும் பயன்படுத்த வேண்டும். தனியார் நிறுவனங்கள், இருப்பனவற்றை உச்ச அளவில் பயன்படுத்துகின்றன. ஆதாயமற்ற நிறுவனங்கள் 'ஏனோ தானோ' வென்று இருப்பதால், அவற்றின் உற்பத்தி உச்ச நிலையை எட்டிப் பிடிப்பதில்லை. ஆதலால் இருப்பனவற்றைத் திறமையாகப் பயன் படுத்துவதில் தனிக்கவனம் செலுத்த வேண்டும். ஆதாயமற்ற நிறுவனங்கள் தங்கள் நோக்கங்களில் தெளிவோடு செயற்பட வேண்டும். அவற்றின் ஒவ்வொரு நடவடிக்கையும் நோக்கங்களை நிறைவேற்றக் கூடியதாக அமைய வேண்டும். நோக்கங்களை வரையறுப்பதோடு, எதற்கு முன்னுரிமை கொடுப்பதென்பதில் தெளிவு தேவையாகும்.

ஆதாய நோக்கம் இல்லாவிட்டாலும், நிறுவனம் தனக்குத் தேவையான அளவு வருவாய் பெறுவதோடு கூட முடிந்தால் ஓரளவு மிகுதியாகவும் வருவாய் பெற முயல வேண்டும். நிறுவனத்தின் சொத்துத் தேய்மானத்தை ஈடுகட்டுவதற்கும், வருவாய் குறைகிற காலங்களில் பணிகளைத் தொடர்ந்து செய்தற்கும் ஒதுக்கு நிதியை (Reserve Fund) உருவாக்கலாம். நிறுவனத்தை நடத்துகிறவர்கள் நிறுவனத்தின் வரவு செலவுகளைத் திட்டமிட வேண்டும்; கணக்குகளை முறையாக வைத்துக்கொள்ள வேண்டும். நிறுவனத்தின் பணிகளை உரிய கால இடைவெளியில் மதிப்பீடு செய்து, குறைகளைப் போக்க ஆவன செய்ய வேண்டும். ஆதாயமற்ற நிறுவனங்களும் நேர்முக, மறைமுகப் போட்டிகளை எதிர்கொள்ள வேண்டியுள்ளன. திறமையாகப் பணியாற்றவில்லையென்றால் தொடர்ந்து செயற்பட முடியாது. சமுதாயம் இயக்க நிலையில் உள்ளதாதலின் தொடர்ந்து மாற்றங்கள் ஏற்படுகின்றன. மாற்றங்களை ஒட்டிச் சமுதாயத்தின் தேவைகள் மாறுகின்றன. இத்தகைய மாற்றங்களுக்கு ஏற்ப நிறுவனங்கள் தங்கள் பணிகளையும் அவற்றை மேற்கொள்ளும் முறைகளையும் மாற்றவேண்டும். ஆதாயமற்ற நிறுவனங்கள் சிறிய அளவில் நடைபெற்றாலும் பெரிய அளவில் செயற்பட்டாலும், தனியார் துறையில் இருந்தாலும், பொதுத் துறையின் ஒரு பகுதியாக இயங்கினாலும் அடிப்படை ஒன்றுதான். நிறுவனத்தின் தலைமைப் பொறுப்பில் உள்ளவர்கள், நீண்ட காலக் கண்ணோட்டத்தோடு, கடந்த காலப் பட்டறிவின் அடிப்படையில், நிகழ்காலத்தில் கால் ஊன்றி முன்னேற்றத்தை நோக்கி நடை போட வேண்டும்.

அரசின் கட்டுப்பாடு: ஆதாயமற்ற நிறுவனங்களை அவற்றின் விருப்பப்படி செயற்படவாய்ப்பளிக்க வேண்டுமென்றும் அவற்றைக் கட்டுப்படுத்தக் கூடாதென்றும் சிலர் கருதுகின்றனர். ஆனால், ஆராய்ந்து பார்த்தால் அவற்றின் பணிகளையும் நெறிப்படுத்துவது தேவை என்பது விளங்கும். ஆதாயமற்ற நிறுவனங்கள் நாட்டில் உள்ள மூல வளங்களில் ஒரு பகுதியைப் பயன்படுத்துகின்றன. அவற்றில் சில பற்றாக் குறையானவை. பற்றாக் குறையான காரணிகளின் மூலம் மிகுதியாகப் பணிகளையோ பொருள்களையோ உற்பத்தி செய்கிற பொழுதுதான், நாட்டு மக்களின் நலம் பெருகும். ஆதலால், இத்தகைய நிறுவனங்கள் பணத்தையோ பொருள்களையோ வீணாக்காமல் இருக்கின்றனவாவென்பதைக் கண்காணிப்பது இன்றியமையாதது. சில நிறுவனங்கள் அரசிடம் உதவித் தொகை பெற்றுச் செயற்படுகின்றன. பல நிறுவனங்கள் பொது மக்களிடம் நன்கொடை பெறுகின்றன. இந்த வகையில் பொதுப் பணத்தை இவை பயன்படுத்துவதால், இவற்றின் கணக்குகளைத் தணிக்கை செய்வது தேவையாகிறது.

ஆதாயமற்ற நிறுவனம் என்ற பெயரில் சிலர் நிறுவனங்களைத் தங்கள் சொந்த ஆதாயத்திற்குப் பயன்படுத்திக் கொள்ளலாம். சில நிறுவனங்கள் மக்களிடம் ஒற்றுமையைக் குலைக்கவோ அவர்களை வன்முறைச் செயலில் ஈடுபடுத்தவோ முயலலாம். அவற்றை இனங்கண்டு கட்டுப்படுத்துவது மக்களின் நலனைப் பெருக்க உதவியாக இருக்கும். அரசின் கட்டுப்பாடும் அளவு கடந்து போகக் கூடாது. அளவற்ற கட்டுப்பாடுகளால் ஆதாயமற்ற நிறுவனங்களை முடக்கிவிடக் கூடாது. ஆதாயமற்ற நிறுவனங்களைச் சமுதாயப் பொருளாதார அமைப்புகள் (Socio-Economic Organisation) என்று கூறலாம். ஆதலால், இவற்றைப் பொருளாதார அளவுகோல்களை மட்டும் வைத்துக்கொண்டு மதிப்பிடக் கூடாது. சமுதாய - பொருளாதார மதிப்பீடுகளை மையமாகக் கொண்டுதான் இவற்றைப் பற்றி ஆராய வேண்டும். சமுதாயப் பொருளாதார நிருவாக முறை (Socio-Economic Management), குறிக்கோள்களின் மூலம் நிருவகித்தல் (Management By Objectives) ஆகியவை பற்றி ஆராய்ந்து, இத்தகைய ஆராய்ச்சியின் முடிவுகளின் ஆதாயமற்ற அடிப்படையில், நிறு

வனங்கள் சிறப்பாகப் பணிசெய்ய ஊக்குவித்தல் நன்று. எத்தகைய அமைப்பிலும் ஆதாய நோக்க மின்றிச் செயற்படும் நிறுவனங்களுக்கு ஒரு நிலையான இடமிருக்கிறது. நமது நாட்டைப் போன்று நல அரசைக் கொண்ட நாடுகளில் ஆதாயமற்ற நிறுவனங்கள் அரசுக்குத் துணையாகப் பல ஆக்கப் பணிகளைச் செய்ய முடியும். ஆதலால், அவற்றைப் பேணி வளர்ப்பது அரசு, பொதுமக்கள் ஆகியோரின் கடமையாகும். மா.பா.கு.

துணை நூல்கள்:


**Dab D. Mc Conkey,** MBO for Non profit Organisation, AMACON, New York, 1975.

**Peter F. Drucker,** Management, Allied Publishers Private Limited, New Delhi, 1975.

**Kumarappa, J.C.,** Economy of Permanence, Akil Bharat Sarva-Seva Sangh Publications, Koshi, 1958.


**ஆதாயம்** ஒரு தொழிலை நடத்தும் தொழில் முயல்வோர், மொத்த வருவாயில் வாரம், கூலி, வட்டி ஆகியவை கொடுத்தது போக எஞ்சியிருப்பதைப் பெறுகிறார். இது 'ஆதாயம்' (Profit) எனக் குறிப்பிடப்படுகிறது. பொதுவாக அமைப்பாளருக்குக் கிடைக்கும் வருவாய் ஆதாயம். ஆனால் 'ஆதாயம்' என்ற சொல்லைப் பொருளியலில் பல்வேறு பொருளில் பயன்படுத்துகின்றனர். ஒரு நிறுவனத்தின் மொத்த வருவாய்க்கும் மொத்தச் செலவுக்கும் உள்ள வேறுபாடு ஆதாயமாகும். எடுத்துக்காட்டாக,

ஆதாயம் = மொத்த வருவாய் — மொத்தச் செலவு

ஆதாயம் ஒரு 'நிகர வருவாயாக' மொத்த வருவாயில் வாரம், கூலி, வட்டி கொடுத்தது போக மிச்சமிருந்தால் மட்டும்தான் கிடைக்கும். ஆதலால் இது சில வேளைகளில் எதிர்மறையாக (Negative) அமைகிறது. வாரம், கூலி, வட்டி கொடுக்கப் போதுமான அளவு வருவாய் கிடைக்காதபொழுது, தொழில் முயல்வோர் அவற்றை வேறு வருவாயிலிருந்து செலுத்த வேண்டியிருக்கிறது. இப்படிப்பட்ட பற்றாக்குறை, இழப்பு அல்லது நட்டம் (Loss) எனப்படும். ஆதாயம் தொழில் முனைபவரின் சிறப்புப் பணிகளுக்காகக் கிடைப்பது. தொழில் முனைபவர், வணிக நிறுவனத்தின் அச்சாணியாகத் திகழ்கிறார். அவர் நிலம், உழைப்பு, முதல் ஆகிய உற்பத்திக் காரணிகளைத் தேவையான அளவில் இணைத்து, உற்பத்திப் பணியைச் செய்கிறார். தொழில் முனைபவர் இல்லாவிட்டால் ஆக்கக் காரணிகள் பயனற்றுப் போகலாம். முனைப்புத் திறனை ஊதியம் கொடுத்து வாங்க முடியாது. முனைபவர் தாமாகவே செயற்படுகின்றார். அப்படி அவர் தாமே விரும்பி முயன்று செயற்பட ஆதாயம் தூண்டுகோலாக விளங்குகிறது.

ஒரு தொழிலையோ, வாணிகத்தையோ ஏற்று நடத்துகிறவர் அதிலுள்ள இடர்ப்பாட்டை (Risk) ஏற்கிறார். இந்த இடர்ப்பாடு பல வழிகளில் ஏற்படுகிறது. எடுத்துக்காட்டாக, ஓர் உற்பத்தியாளர் முதலில் என்ன பொருளை எந்த அளவில், எப்படி உற்பத்தி செய்வதென்பதை முடிவு செய்ய முற்படுதல் வேண்டும். அவர், குறைந்த செலவில் பொருளை உற்பத்தி செய்வதில் கண்ணும் கருத்துமாக இருப்பார். உற்பத்தி செய்த பொருளை என்ன விலைக்கு, எங்கே விற்பனை செய்வது என்பதை முடிவு செய்வார். உச்ச அளவில் ஆதாயம் கிடைக்கும் வகையில் விலையை வரையறை செய்ய விரும்புவார். திட்டமிட்டபடி உற்பத்தியும் விற்பனையும் நடைபெற்றால் இடர்ப்பாடு இல்லை. ஆனால், நடைமுறையில் இவை எதிர்பார்த்தபடி நடக்கும் என்று உறுதியாகக் கூற முடியாது. உற்பத்தி ஆக்கக் காரணிகள் கிடைப்பதில் சிக்கல்கள் ஏற்படலாம். மூலப்பொருட்கள் வேண்டிய அளவில் உரிய காலத்தில் கிடைக்காமற் போகலாம். தொழிலாளர்களை அமர்த்துவதில், தடைகள் தோன்றலாம். உற்பத்தி செய்த பொருள்களை விற்பனை செய்யும் நிலையில் போட்டி தோன்றி, விலை குறையலாம். இத்தகைய எல்லா இடர்ப்பாடுகளையும் துணிச்சலோடு தொழில் முனைபவர் எதிர்நோக்குகிறார். இதற்குப் 'பரிசு' போல அவருக்கு ஆதாயம் கிடைக்கிறது.

ஆதாயம் கிடைக்கக் காரணம்: மக்களின் பொருளாதார நடவடிக்கைகள் எப்பொழுதும் ஒன்று போல் நடைபெறுவதில்லை. எதிர்பாராத மாற்றங்கள் ஏற்படுகின்றன. சில வேளைகளில் இவை எதிர்பாராதவையாகவும் வியக்கத் தக்கவையாகவும் இருப்பதைக் காணலாம். ஒரு காலத்தில், மக்கள் மட்பாண்டங்களை மிகுதியாகப் பயன்படுத்தினர். பின்னர் உலோகங்களை மிகுதியாக உற்பத்தி செய்யத் தெரிந்த பொழுது, வெள்ளி, பித்தளை, ஈயம் போன்றவற்றைப் பயன்படுத்தினர். இப்பொழுது எவர்சில்வர், பிளாஸ்டிக்குப் பொருள்களை மிகுதியாகப் பயன்படுத்துகின்றனர். இதற்கேற்ப ஆக்கத்திலும் மாற்றங்கள் விளைகின்றன. அறிவாற்றல் மிக்க உற்பத்தியாளர் வர இருக்கும் மாற்றங்களை முன்கூட்டி உணர்ந்து, தெளிந்து, அவற்றிற்கேற்ப உற்பத்தி செய்கிறார். அவர் எதிர்பார்ப்புகள் சரியாக இருந்தால் ஆதாயம் கிடைக்கிறது. இல்லையேல் இழப்பு ஏற்படுகிறது. தொழில், வாணிகம் ஆகியவற்றில் ஏற்படும் இடர்ப்பாடுகளைக் காப்பீடு

செய்ய முடிவதில்லை. ஆதலால் காப்பீடு செய்ய முடியாத இடர்ப்பாடுகளைத் தாங்குவதற்கு ஊதிய மாக முனைபவர் ஆதாயம் பெறுகிறார்.

முதலாளித்துவ அமைப்பில் ஒவ்வொருவரையும் தூண்டிச் செயற்படவைக்க ஒரு 'கருவி' தேவைப்படு கிறது. எடுத்துக்காட்டாக, மிகுதியாகக் கூலி கொடுத் தால் தொழிலாளர்கள் மிகுந்த நேரம் வேலை செய் வார்கள். அதே போன்று ஆதாயம் மிகுதியாகக் கிடைக்கும் வாய்ப்பு இருந்தால் தொழில் முனைப வர்கள், பெருமளவில் இடர்ப்பாடுகளை ஏற்க முன்வரு வார்கள்.

தொழில் முனைவோர்கள் தெள்ளிய மதிநுட்பம் உடையவர்களாகவும், தொடர்ந்த முயற்சி கொண்ட துணிவுடையவர்களாகவும் இருப்பார்கள். சிலர் வாணிகம், தொழில் செய்வதன் மூலம் கிடைக்கும் வருவாயையும் சூதாட்டத்தின் மூலம் அடைகிற வருவாயையும் ஒன்றென்று தவறாகக் கருதுகின்றனர். தொழிலும் சூதாட்டமும் ஒன்று அல்ல. ஆனால் சூதாட்டத்தின் உறுதிப்பாடின்மையைக் கணிக்க இய லாது. ஒருவர் கைப்பொருள் எல்லாவற்றையும் இழந்து தவிக்கும் இடர்ப்பாடு சூதாட்டத்தில் உள் ளது. திருவள்ளுவர் சூதாட்டத்தின் இயல்பையும் அதனை ஒதுக்க வேண்டிய தேவையையும் தம் குற ளில் சுட்டிக் காட்டுகிறார்.

"ஒன்றெய்தி நூறிழக்கும் சூதர்க்கும் உண்டாங்கொல் நன்றெய்தி வாழ்வதோர் ஆறு", என்று கூறு கிறார். அதாவது, சூதாட்டத்தில் ஒரு பொருள் கிடைத்தால் நூறு பொருளை இழக்கக் கூடிய வாய்ப்பு இருக்கிறது. ஆதலால் அதில் ஈடுபட்டவர்களால் அதி லிருந்து மீண்டு, நன்மை பெற்று வாழ முடியாது. வாணிகத்திலும் தொழிலிலும், இருக்கும் இடர்ப் பாடு இயல்பாலும் அளவாலும், முற்றிலும் வேறு பட்டது.

வையத்துள் வாழ்வாங்கு வாழ வழிகாட்டும் வள் ளுவர் வாணிகம், தொழில் செய்து பொருள் தேடு வதைப் போற்றி வரவேற்கிறார். முதல் இல்லார்க்கு ஊதியம் இல்லை என்ற உண்மையை உணர்த்தி, இருக்கும் முதலைப் பெருக்கும் முயற்சியைத் தூண்டு கிறார். ஆனால், முதலீடு செய்கிற பொழுது எவ்வ ளவு கவனமாக இருக்க வேண்டுமென்பதை,

"அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும் ஊதியமும் சூழ்ந்து செயல்" என்னும் குறளின் மூலம் விளக்குகிறார். எந்தப் பொருளாதார நடவடிக்கை யிலும் இழப்பும் ஏற்படலாம்; ஆதாயமும் கிடைக்க லாம். ஆனால் ஏற்படக்கூடிய இழப்பைவிட ஆதாயம் மிகுதியாக இருக்குமென்று எதிர்பார்த்தால் மட்டும் தான் அந்தப் பணியை மேற்கொள்ள வேண்டும். மேலும் எக்காரணத்தைக் கொண்டும் கைம்முதலை இழக்கும் செயலை அறிவுடையவர்கள் மேற்கொள்ள மாட்டார்கள் என்பதை வள்ளுவர்,

"ஆக்கம் கருதி முதலிழக்கும் செய்வினை ஊக்கார் அறிவுடையார்", என்று குறிப்பிடுகிறார். இதிலிருந்து அறிவுடைமையோடும் துணிச்சலோடும் செயற்படுவதற்கு ஆதாயம் ஊதியமாகக் கிடைப் பதை அறியலாம்.

**இருவகைப் பணிகள்:** இன்றைய முதலாளித்துவச் சமுதாய அமைப்பில் ஆதாயம் இருபெரும் பணிக ளைச் செய்கிறது. முதலாவதாக, இக்கால ஆக்க-விற்பனை முறை மிகவும் சிக்கலுடையதாக இருக் கிறது. முற்காலத்தில் தேவையை அறிந்த பின்பு தான் உற்பத்தி செய்வார்கள். எடுத்துக்காட்டாக, ஒருவருக்குச் செருப்புத் தேவை என்றால் அவர் செருப்புத் தைக்கிற தொழிலாளியிடம் சென்று செருப்புத் தைக்கும்படி கூறுவார். அவரும் இவரது காலை அளவெடுத்து வேண்டிய வடிவில் தைத்துக் கொடுப்பார். ஆக்கம் தேவையை ஒட்டி நடைபெறு வதால் விற்பனைச் சிக்கல் இல்லை. இதில் எந்த வகையான இடர்ப்பாடும் இல்லை. இக்காலத்தில் நிலைமை வேறு வகையாக இருக்கிறது. செருப்பு உற்பத்தியாளர்கள் வாங்குபவர்களை எதிர்பார்த்து, எப்படிப்பட்ட உருவமைப்பில் இருந்தால் மக்கள் விரும்புவார்கள் என்று ஊகம் செய்து (Speculation) பெருமளவில் செருப்புகளைச் செய்கிறார்கள். அவற்றை விற்பனை செய்ய விளம்பரம் போன்ற முறைகளைக் கையாள்கிறார்கள். இந்த முறையில் இடர்ப்பாடு பெருமளவில் உள்ளது. உறுதிப்பாடின் மையால் தோன்றும் இடர்ப்பாட்டை உற்பத்தியா ளர்கள் விரும்பி ஏற்கச் செய்வது ஆதாயந்தான். ஆதாயம் தருகிற ஊக்கத்தால் உற்பத்தி-விற்பனை போன்ற பொருளாதார நடவடிக்கைகள் பெருகி வருகின்றன.

இரண்டாவதாக, முதலாக்கத்திற்கு உறுதுணை யாக ஆதாயம் இருக்கிறது. இக்காலத்தில் மூலதனத் தின் தேவை மிகுந்துள்ளது. தொழில், வாணிக நிறு வனங்களைப் பெரிய அளவில் அமைத்தால் மட்டிலுமே போட்டிக்கு ஈடு கொடுக்க முடியும்; ஆதாயமும் பெரிய அளவில் கிடைக்கும். பேரளவில் நிறுவனங் களை அமைக்கத் திரண்ட முதல் வேண்டும். ஆதா யம் மிகுதியாகக் கிடைக்கும்பொழுது, அமைப்பா ளர்கள் அதில் பெரும்பகுதியைச் சேமித்து, மறு முத லீடு செய்வார்கள். இந்த வகையில் ஆதாயம் முதலாக்கத்திற்கும் அதன் மூலம் வளர்ச்சிக்கும் துணையாக இருக்கிறது.

**இடர்ப்பாடும் ஆதாயமும்:** ஒரு பொருளாதார நடவடிக்கையில் இருக்கும் இடர்ப்பாட்டுக்கும் அதிலிருந்து கிடைக்கும் ஆதாயத்திற்கும் நேரடியாகத் தொடர்பு இருக்கிறது. இடர்ப்பாடு மிகுதியாக இருந்தால் ஆதாயம் மிகையான அளவில் கிடைக்கும். இடர்ப்பாடு குறைவாக இருந்தால் ஆதாயமும் குறைவாக இருக்கும். இதனை ஓர் எடுத்துக்காட்டின் மூலம் விளக்கலாம். ஒருவர் வாடிக்கையாளர்களுக்கு உணவு அளிக்கும் ஓர் உணவு விடுதி நடத்துகிறார் என்று கொள்ளும்போது அவருக்கு எத்தனை பேர் வந்து உண்பார்கள் என்பது திட்டவட்டமாகத் தெரியும்.ஆதலால், தேவையான அளவு உணவு சமைத்து வைப்பார். இப்பணியில் இடர்ப்பாடு இல்லை; ஆதாயமும் குறைவு. ஆனால், ஒரு நகரின் மையப் பகுதியில் உணவு விடுதி நடத்தும் ஒருவருக்கு, எவ்வளவு பேர் உண்ண வருவார்களென்பது தெரியாது. ஆதலால், எதிர்பார்த்துச் சமைக்க வேண்டும். இதில் வாணிக அளவைக் கூட்ட வாய்ப்பு உண்டு. ஆனால், இடர்ப்பாடும் உண்டு. இடர்ப்பாட்டை ஏற்கும் அளவிற்கு ஆதாயத்தைப் பெருக்கும் வாய்ப்பு இருப்பதனைக் கவனிக்க வேண்டும்.

**அமைப்பின் அளவும் ஆதாயமும்:** ஒரு பொருளாதார நிறுவனத்தின் அமைப்பிற்கும் அது பெறும் ஆதாயத்திற்கும் நெருங்கிய தொடர்பு உள்ளது. சின்னஞ்சிறு நிறுவனங்களில் மொத்த ஆதாயம் குறைவாக இருக்கும். ஏனென்றால், அவற்றின் பொருளாதார நடவடிக்கைகளின் அளவும், இடர் தாங்கும் ஆற்றலும் குறைவாக இருக்கும். பெரிய நிறுவனங்கள் பெருமளவில் உற்பத்தி செய்து விரிவான அங்காடியில் விற்பனை செய்யும். இதன் மூலம் ஆதாயத்தைப் பெருக்கிக் கொள்ள இயலும்.

**அங்காடியின் இயல்பும் ஆதாயமும்:** தொழில் முயல்வோரின் இடர் தாங்கும் பொறுப்புக்கு மட்டுமன்றி, அங்காடியின் இயல்புக்கும் ஆதாயத்திற்கும் ஓர் இணைப்பு இருக்கிறது. நிறைவுப் போட்டி (Perfect Competition) அங்காடியில் எண்ணற்ற விற்பனையாளர்கள் இருப்பார்கள். எல்லோரும் ஒரே தன்மையான பொருள்களை விற்பனை செய்வார்கள். போட்டி கடுமையாக இருக்கும் பொழுது குறைந்த விலைக்குத்தான் பொருள்களை விற்பனை செய்ய முடியும். இதனால், மிகுதியாக ஆதாயம் கிடைக்காது. இயல்பாகத் தொழிலில் நிலைத்து நிற்கத் தேவையான அளவிற்குக் குறைந்த அளவில் ஆதாயமும் கிடைக்கும். திறமையான உற்பத்தியாளர்கள் குறுகிய காலத்தில் ஓரளவு ஆதாயம் பெறுவார்கள். ஆனால், நீண்ட காலத்தில் அந்த ஆதாயமும் போட்டியின் காரணமாகக் குறைந்து விடும்.

அங்காடியில் முற்றுரிமை (Monopoly) நிலையிலிருந்தால் முற்றுரிமையாளர் நிறைய ஆதாயம் பெற முடியும். இந்நிலையில் விற்பனையாளர் ஒருவராக இருப்பார். அவரால் நினைத்த விலைக்கு அவரது உற்பத்திப் பொருளை உயர்த்தி விற்க முடியும் . அப்படி விலையை வரையறை செய்யும் பொழுது முற்றுரிமையாளர் தேவையின் இயல்பைக் கவனிக்க வேண்டும். விலையைக் கூட்டுவதன் மூலம் தேவை குறையாதென்று கருதினால் விலையை உயர்த்தி ஆதாயத்தின் அளவைப் பெருக்கலாம். சில வேளைகளில் விலையைச் சிறிது குறைத்து, விற்பனையின் அளவை மிகுதிப்படுத்தியும் ஆதாயத்தின் அளவைக் கூட்டலாம். முற்றுரிமையின் கட்டுக் கோப்பிற்கேற்ப ஆதாயம் அமையும்.

முற்றுரிமைக்கும் நிறைவுப் போட்டிக்கும் இடைப்பட்ட நிலையே 'நிறைகுறைப் போட்டி' (Imperfect Competition) எனப்படுவது. இந்நிலையில் உற்பத்திச் செலவைக் குறைக்கவும், விளம்பரம் போன்ற முறைகளின் மூலம் மிகுதியாக விற்கவும், முடிந்த விற்பனையாளர்களால் ஓரளவு ஆதாயம் தேடிக் கொள்ளவும் முடியும். அதே நேரத்தில் திறமை குறைந்த தொழில் முயல்வோர்கள் சிலர் ஆதாயம் இல்லாமலேயே தொழிலை நடத்திக் கொண்டிருப்பார்கள்.

பொருளியல் அறிஞர்கள் ஆதாயம் பற்றி விரிவாக ஆராய்ந்துள்ளார்கள். எதற்காக ஆதாயம் என்னும் வருவாய் கிடைக்கிறதென்றும், எப்படி ஆதாயம் வரையறுக்கப் படுகிறதென்றும் விளக்கிக் கூறியுள்ளார்கள். ஆனால், எல்லோரும் ஒப்புக் கொள்ளும் வகையில் அவர்களால் ஒரு தனிக் கோட்பாட்டை உருவாக்க முடியவில்லை. இருப்பினும், அவர்களின் கோட்பாடுகள், ஆதாயத்தைப் பல கோணங்களில் புரிந்து கொள்ளத் துணை செய்கின்றன. ஆதலால், ஆதாயம் பற்றிய கோட்பாடுகளில் குறிப்பிடத்தக்கவற்றை இங்கே விளக்கிக் கூறலாம்.

**1. ஆதாயத்தின் வாரக் கோட்பாடு:** அமெரிக்கப் பொருளியலறிஞரான பிரான்சிசு வாக்கர் (Francis Walker) என்பவர் நிலத்திற்குக் கொடுக்கிற வாரம் போன்று ஆதாயமும் இருப்பதாகக் கருதி முதன் முதலில் ஆதாயத்தின் வாரக் கோட்பாட்டை (Rent Theory of-Profit) உருவாக்கினார். நாசு வில்லியம் சீனியர் (Nassau William Senior) என்பவரும் சே. எசு. மில் (J.S. Mill) என்பவரும் இக்கோட்பாட்டின் மூலக் கருத்துகளை வழங்கியுள்ளனர்.

நிலத்தில் மூல வளம் இருக்கிறது. ஆதலால், நிலத்தில் ஒருவர் உழைத்துப் பாடுபடும்பொழுது அவர் உழைப்பினால் கிடைப்பதைவிட நிலத்தில் மிகுதியாக விளைச்சல் கிடைக்கிறது. இதனை நிலத்

தில் உள்ள வள வேறுபாட்டின் மூலம் நன்கு அறிய லாம். ஒரே அளவு உழைப்பையும் முதலையும் இரு வகையான வளமுள்ள நிலங்களில் ஈடுபடுத்துவதாக வைத்துக் கொண்டால், மிகுதியான வளமுள்ள நிலத் தில் மிக்க விளைச்சலும், குறைவான வளமுள்ள நிலத்தில் குறைந்த விளைச்சலும் கிடைக்கும். தேவிடு இரிக்கார்டோவின் (David Ricardo) கருத்துப் படி இந்த நிலத்தின் வள வேறுபாட்டிற்குத்தான் வாரம் கொடுக்கின்றனர்.

வாக்கர் இந்த வாரக் கருத்தின் அடிப்படையில், தொழில் முயல்வோரின் தனித்திறமைக்காக ஆதாயம் கிடைப்பதாகக் கருதுகிறார். எல்லாத் தொழில் அமைப்பாளர்களிடமும் ஒரே தன்மையான திறமைகள் இருப்பதில்லை. நிலத்தில் ஆக்கத் திறன் வேறுபடுவது போல, தொழில் முயல்வோர்களின் அமைப்பாற்றலிலும் வேறுபாடு இருக்கிறது.

நல்ல நுட்பமான அறிவாற்றலும் துணிச்சலும் கொண்ட அமைப்பாளர்கள், தங்களது திறமையின் விளைவாக மிகுதியான ஆதாயம் பெறுகின்றனர். திறமை குறைந்தவர்களுக்கு ஆதாயம் குறைவாகக் கிடைக்கிறது. நிலத்தில் வாரம் பெறாத நிலம் (No Rent Land) இருப்பதைப் போல், ஆதாயம் இல்லா மல் தொழில் நடத்தும் அமைப்பாளர்களும் இருக்க லாம்.

ஆதாயம் இல்லாமல் நிருவாகக் கூலி மட்டும் கிடைத்தாலும் தொழிலை நடத்திக் கொண்டிருக்கும் அமைப்பாளர், இறுதிநிலைத் தொழில் முயல்வோர் எனப்படுவார். இவரது வருவாயை அடிப்படையாகக் கொண்டு மற்றவர்களின் ஆதாயம் கணிக்கப்படுகி றது. தொழில் முயல்வோரின் தனித்திறமையை இக்கோட்பாடு சுட்டிக் காட்டுவது இதன் சிறப்பா கும். ஆனால், பொருளியலறிஞர்கள் இதனை ஒரு நிறைவான கோட்பாடாகக் கருதவில்லை. இதிலுள்ள சில குறைகளைச் சுட்டிக் காட்டுகின்றனர்.

வாரத்தைப் போன்றதே ஆதாயம் என்று கூற முடியாது. ஆதாயத்திற்கும் வாரத்திற்கும் அவற்றின் இயல்பில் வேறுபாடு இருக்கிறது. தொழில் முயல் வோர் எப்பொழுதும் ஆதாயம் மட்டில் பெறுவ தில்லை. சில வேளைகளில் இழப்பையும் ஏற்க வேண்டியுள்ளது. ஆனால், நிலக்கிழார்கள் எப் போதும் வாரம் பெறுகின்றனர். வாரத்தில் எதிர் மறையாக எதுவும் இருப்பதில்லை. நிலத்தில் வளம் குறைந்த நிலம் வாரம் பெறாத நிலமாக இருக்க லாம். ஆனால், நடைமுறையில் இதேபோன்று ஆதாயம் பெறாத தொழில் முனைவோர் இருப்ப தில்லை என்று பொருளியில் அறிஞர் சிலர் கருது கின்றனர். பொதுவாக, ஆதாயம் கிடைக்காத தொழில் முயல்வோர்கள் அந்தத் தொழிலில் தொடர்ந்து ஈடுபட மாட்டார்கள். தொழிலை மாற்றிக் கொண்டு, ஆதாயம் கிடைக்கும் பொருளா தார நடவடிக்கையில் ஈடுபடுவார்கள். மேலும், ஆதாயம் தொழில் முயல்வோர்களின் தனித் திறமை யினால் மட்டில் கிடைப்பதாகக் கருத முடியாது. வேறு பல காரணங்களினாலும் ஆதாயம் பெற முடி கிறது. தொழில் முயல்வோர் முற்றுரிமை நிலையில் செயற்படும் பொழுது, பெரு முயற்சி செய்யாம லேயே ஆதாயம் பெறுகின்றனர். நாட்டில் ஏற்படு கிற போர் போன்ற எதிர்பாராத நிகழ்ச்சிகளா லும், பற்றாக்குறைச் சூழ்நிலைகளாலும் தொழில் முனைவோர் அனைவரும் பெருமளவில் ஆதாயம் பெறுகின்றனர். இந்த வகையில் நிலத்திற்குக் கிடைக் கும் வாரத்திலிருந்து ஆதாயம் வேறுபடும்.

**(2) ஆதாயத்தின் கூலிக் கோட்பாடு:** அமெரிக்கப் பொருளியல் அறிஞரான தாசிக்கு (F.W. Taussig) ஆதாயத்தையும் கூலியையும் ஒப்பிட்டு ஒரு கோட் பாட்டை விளக்கியுள்ளார். தாசிக்கின் கருத்துப்படி, தொழில் முயல்வோரின் சிறப்பான தனி வகை உழைப்பிற்குக் கிடைக்கும் கூலியே ஆதாயமாகும். உழைப்பாளர் உழைப்பிற்காகக் கூலி பெறுகிறார். அவரது உழைப்புப் பெரிதும் உடல் உழைப்பாக அமைகிறது. ஆனால், தொழில் முயல்வோரின் உழைப்பில் பெரும்பகுதி மூளை உழைப்பாக இருக் கிறது. இந்த வேறுபாடு இருந்த போதிலும், உழைப்பாளரும் தொழில் முயல்வோரும் தங்களது உழைப்பிற்காகவே வருவாய் பெறுகிறாரென்று தாசிக்கு கூறுகிறார். தொழில் முயல்வோர் தமது உழைப்பை வேறு யாருக்குக் கொடுத்தாலும் ஊதி யம் பெறுவார் என்பது கவனிக்கத்தக்கது. தாமே தம் தொழிலைச் செய்யும்பொழுது, அவருக்குக் கிடைக்கும் ஆதாயத்தில் கூலியும் உள்ளடங்கி இருக் கிறது.

ஆதாயத்தின் கூலிக் கோட்பாட்டில் (Wage Theory of Profit) சிலகுறைபாடுகள் இருப்பதைத் திறனாய்வாளர்கள் சுட்டிக் காட்டுகின்றனர். உழைப் பாளியின் பணியையும் தொழில் முயல்வோரின் பணி யையும் ஒன்றாகக் கருத முடியாது. உழைப்பாளி தமக்குக் கொடுக்கப்படும் வேலையைச் செய்கிறார். தாம் உற்பத்தி செய்த பொருள் விற்பனையாகிறதா இல்லையா என்பதைப் பற்றி அவருக்குக் கவலை யில்லை. அவரது தொழிலில் எந்த வகையான இடர்ப்பாடும் இல்லை. ஆனால், தொழில் முயல் வோரின் பணியில் மிகுதியான இடர்ப்பாடு இருக் கிறது. இந்த இடர்ப்பாட்டைத் தாங்குவதுதான் முனைவோர் செய்யும் பெரும் பணியாகும்.

தொழில் முயல்வோருக்கும் தொழிலாளருக் கும் உள்ள மற்றமொரு வேறுபாட்டையும் சுட்டிக்

காட்டலாம். தொழிலாளர் தமது பணிக்குத் திட்ட வட்டமாக, முன்கூட்டியே ஒப்புக் கொண்டபடி கூலி பெறுகிறார். தொழில் முயல்வோரின் வருவாய் எப்போழுதும் உறுதியானதாக இருப்பதில்லை. அவரது ஆதாயம் எவ்வளவு என்பது இறுதியில்தான் தெரியும். அதுவரை அவர் காத்திருக்க வேண்டும். மேலும், தொழிலாளிக்கு உழைப்புக்கு மட்டும்தான் கூலி கிடைக்கும். ஆனால், தொழில் முயல்வோருக்கு உழைப்புக்குரிய வருவாயோடு சூழ்நிலைகளையும் வாய்ப்புகளையும் ஒட்டி எச்சமாக வரும் வருவாயும் கிடைக்கிறது.

(3) **ஆதாயத்தின் இடர் தாங்கும் கோட்பாடு:** அமெரிக்கப் பொருளியல் அறிஞரான பேராசிரியர் காவ்லி (**Hawley**) என்பவர் இடர் தாங்குவதற்காகவே தொழில் முயல்வோருக்கு ஆதாயம் கிடைப்பதாகக் கருதுகிறார். தொழிலையும், வாணிகத்தையும் நடத்துவதில் இடர்ப்பாடு இருக்கிறது. எந்தப் பொருளை, எவ்வளவு, எப்படி உற்பத்தி செய்வது என்பதைத் தொழில் முயல்வோர் முடிவு செய்கிறார். உற்பத்தி செய்த பொருளை விற்பனை செய்ய இயலாவிட்டால் இழப்பு ஏற்படும். இந்த இடர்ப்பாட்டை ஏற்பதற்காகத்தான் தொழில் முயல்வோருக்கு ஆதாயம் கிடைக்கிறது. இத்தகைய ஆதாயம் கிடைக்காவிட்டால் தொழில் முயல்வோர்கள் துணிச்சலாக இடர்ப்பாட்டை ஏற்க மாட்டார்கள்.

அமைப்பாளர் ஏற்கும் இடர்ப்பாட்டிற்கும் கிடைக்கிற ஆதாயத்திற்குமிடையே நெருங்கிய தொடர்பு இருக்கிறது. மிகுந்த இடர்ப்பாடு உள்ள தொழிலில் மிக்க ஆதாயம் கிடைக்கும். இடர்ப்பாடு குறைவாக உள்ள தொழிலில் குறைவான ஆதாயம் கிடைக்கும். இதனால்தான் தொழிலுக்குத் தொழில் ஆதாயம் வேறுபடுகிறது. தொழில் முயல்வோர்களின் வருவாய்க்கு இருக்கும் வேறுபாட்டை விளக்க இக் கோட்பாடு உதவுகிறது. இடர் தாங்குவதற்காக மட்டிலுமே ஆதாயம் கிடைக்கிறதென்ற கோட்பாட்டில் உள்ள குறைகளைச் சுட்டிக்காட்டலாம். பேராசிரியர் நைட்டு(**Knight**)இடர்ப்பாடுகளை முன்கூட்டியே எதிர்பார்க்கலாம் (**Foreseable Risks**) என்கிறார். தீ, விபத்து போன்ற இடர்ப்பாடுகள் இத்தகையவையாகும். இவற்றைக் 'காப்பீடு' செய்யமுடியும். ஆதலால், முதல்வகை இடர்ப்பாடுகளைக் 'காப்பீடு' செய்யக் கூடிய இடர்ப்பாடுகள் என்றும், இரண்டாம் வகை இடர்ப்பாடுகளை முன்கூட்டியே எதிர்பார்க்க முடியாத இடர்ப்பாடுகள் என்றும் கூறலாம். மக்களின் விருப்பங்களில் ஏற்படும் மாற்றங்கள், விலை ஏற்ற இறக்கங்கள் போன்றவற்றால் ஏற்படும் வாணிக இடர்ப்பாடுகள் இத்தகையவையாகும். இவற்றைக் காப்பீடு செய்யாத இடர்ப்பாடுகள் என்று குறிப்பிடலாம். பேராசிரியர் நைட்டு, தொழில் முயல்வோருக்குக் கிடைக்கும் ஆதாயம் முதல்வகை இடர்ப்பாடுகளைத் தாங்குவதற்காக அன்றுவென்றும், காப்பீடு செய்ய முடியாத இரண்டாம் வகை இடர்ப்பாடுகளைத் தாங்குவதற்குத்தான் என்றும் கருதுகிறார்.

பேராசிரியர் கார்வர் (**Carver**) தொழில் முயல்வோருக்குக் கிடைக்கும் ஆதாயம் இடர்ப்பாட்டைத் தாங்குவதற்காக அன்றுவென்றும், அறிவுடைமையால் இடர்ப்பாட்டை விலக்குதற்குத்தான் என்றும் சுட்டிக் காட்டுகிறார்.

மேலும், தொழில்களை நடத்துபவர்கள் இடர்ப்பாட்டையும் ஆதாயத்தையும் ஒப்பிட்டு, கணித்து விட்டுத் தொழிலைத் தொடங்குவதில்லை. மாத ஊதியம் பெறும் சிலர் சுதந்திரமாகச் செயற்படும் நோக்கில் சொந்தமாகத் தொழிலைத் தொடங்கி நடத்தலாம். அப்படிப் பட்டவர்கள் தொழிலைத் தெரிந்தெடுக்கும் பொழுது, தங்கள் விருப்பத்திற்கு முதலிடமும், இடர்ப்பாட்டிற்கு இரண்டாம் இடமும் தருவார்கள். ஆதலால், இடர்ப்பாட்டிற்கு மட்டிலுமே ஆதாயம் என்று கூறிவிடமுடியாது.

4. **ஆதாயத்தின் உறுதிப்பாடின்மை தாங்கும் கோட்பாடு:** பேராசிரியர் நைட்டு, தொழிலில் இருக்கும் உறுதிப்பாடின்மையை ஏற்பதற்காக (**Uncertainty Bearing**) ஆதாயம் கிடைப்பதாகக் கருதுகிறார். உற்பத்தி, விற்பனைப் பணிகளில் எதிர்பார்க்கிறபடி எல்லாம் நடைபெறுவதில்லை. எது எப்படி நடைபெறும் என்ற உறுதிப்பாடில்லாவிட்டாலும் தொழில் முயல்வோர் உற்பத்திப் பணிகளை மேற்கொள்கிறார். இந்தத் துணிச்சலான முயற்சிக்குக் கிடைக்கும் பரிசுதான் ஆதாயம்.

நைட்டின் இந்தக் கோட்பாட்டிலும் குறைகள் உள்ளன. உறுதிப்பாடின்மையை ஏற்பதனால் மட்டில் ஆதாயம் கிடைப்பதில்லை. உறுதிப்பாடின்மையை ஏற்ற போதிலும் சிலருக்கு ஆதாயம் கிடைக்காமல் இருப்பதும் கவனிக்கத்தக்கது. உற்பத்தியாளர் மேற்கொள்ளும் திட்டமிடுதல், பிற உற்பத்திக் காரணிகளை இணைத்தல், பேரம் பேசுதல், உரிய காலத்தில் சரியான அங்காடியில் விற்றல் போன்ற பல வேறு பணிகளையும் இக்கோட்பாடு கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை என்பதைச் சில திறனாய்வாளர்கள் சுட்டிக் காட்டுகின்றனர்.

5. **ஆதாயத்தின் இயங்குநிலைக் கோட்பாடு:** அமெரிக்கப் பொருளியல் அறிஞரானசே.பி. கிளார்க்கு (**J.B. Clark**) சமுதாய, பொருளாதார அமைப்பிலிருக்கும் இயங்கு நிலைத் தன்மையால்தான் ஆதாயம் கிடைக்கிறதென்ற கோட்பாட்டை (**Dynamic Theory**

of Pro it) வழங்கியுள்ளார். கிளார்க்கின் கருத்துப்படி, மாற்றங்கள் ஏற்படாத, எப்பொழுதும் ஒன்றுபோல் இருக்கும் தேக்க நிலைச்(Static) சமுதாயத்தில் ஆதாயம் தோன்றாது. மாற்றம் இல்லாத சமுதாயத்தில் எதனையும் திட்டவட்டமாகக் கணித்துச் செயற்படமுடியும். உறுதிப்பாடின்மைக்கு இடம் இல்லாததால், ஆதாயம் பெறுவதற்கு வாய்ப்பு இல்லை. இத்தகைய நிலையில் தொழில் முயல்வோரின் வருவாய் அவர் செய்யும் நிருவாகப் பணிக்கு உரியதாகவே இருக்கும். ஆனால், சமுதாயம் எப்பொழுதும் இயக்க நிலையில் இருக்கிறது. அதாவது, ஒவ்வொரு நிமிடமும் மாற்றங்கள் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. கிளார்க்கு தொடர்ந்து நிகழ்கிற இப்படிப்பட்ட மாற்றங்களுள் ஐந்தினைக் குறிப்பிட்டுக் கூறுகிறார்.

முதலாவதாக, மக்கள் தொகையின் அளவில் ஏற்படும் மாற்றம். மக்கள் தொகை தொடர்ந்து கூடுகிறது. எவ்வளவு கூடுமென்பதை உறுதியாகக் கூற முடியாது. தொழில் முயல்வோர் மக்கள் தொகை மாற்றத்தை மதிப்பிட்டு உற்பத்தியின் அளவைப் பெருக்குவது தேவையாகிறது. இரண்டாவதாக, மூலதனத்தின் அளிப்பில் தொடர்ந்து நிகழும் மாற்றம். முதல், சேமிப்பைச் சார்ந்து அமைகிறது. முதலின் அளிப்பை ஒட்டித்தான் தொழில், வாணிக நிறுவனங்களின் அளவை வரையறுக்க முடியும். முதலின் அளிப்பு மாற்றம் பொருளாதார நடவடிக்கைகளைப் பாதிப்பதால், அதன் மாற்றங்களைப் பற்றித் தொழில் முயல்வோர் விழிப்போடு இருக்க வேண்டும். மூன்றாவதாக, அறிவியல் தொழில் நுட்ப வளர்ச்சியை ஒட்டி உற்பத்தி முறைகளில் ஏற்படும் மாற்றம். உற்பத்திச் செலவைக் குறைக்கக் கூடிய முன்னேற்ற வழிமுறைகளைப் பின்பற்ற வேண்டும். இல்லையேல், தொழில் முயல்வோரால் போட்டிக்கு ஈடுகொடுத்து ஆதாயம் பெற இயலாமல் போய்விடும். நான்காவதாக, தொழில் அமைப்பு முறைகளில் நிகழும் மாற்றம். ஒவ்வொரு தொழில் முயல்வோரும் தமது நிறுவனத்தின் காலத் தேவையை ஒட்டித் தக்க மாற்றங்களை ஏற்படுத்த வேண்டும். ஐந்தாவதாக, மனித விருப்பங்களில் காலப் போக்கில் ஏற்படும் பெரிய மாற்றங்கள் சில வேளைகளில் வியத்தகு அளவில் நாட்டின் பொருளாதார நடவடிக்கைகளைப் பாதிக்கின்றன. இவற்றைப் புரிந்து கொண்டு செயற்படும் தொழில் முயல்வோரால் மட்டிலுமே இழப்பைத் தவிர்த்து ஆதாயம் பெற முடியும்.

கிளார்க்கின் கோட்பாட்டிலும் குறைகளிருப்பதைப் பொருளியல் அறிஞர்கள் கூறுகின்றனர். பேராசிரியர் நைட்டு எல்லா வகையான மாற்றங்களினாலும் ஆதாயம் கிடைப்பதில்லை என்றும், எதிர்பார்க்க முடியாத மாற்றங்களினால் மட்டிலுமே ஆதாயம் கிடைக்குமென்றும் குறிப்பிடுகிறார். பேராசிரியர் தாசிக்கு இயங்குநிலை ஆதாயக் கோட்பாடு, ஆதாயமென்றும் நிருவாகக் கூலியென்றும் செயற்கையான வேறுபாட்டைத் தோற்றுவிப்பதாகக் கருதுகிறார்.

**ஆதாயத்தின் புத்தாக்கக் கோட்பாடு:** பேராசிரியர் சோசப்பு ஏ. சும்பீட்டர் (Joseph A. Schumpeter) தொழில் முயல்வோர் உற்பத்தி முறையில் ஏற்படுத்தும் புத்தாக்கங்களுக்காக (Innovation) ஆதாயம் கிடைக்கிறதென்று கூறுகிறார். தொழில் முயல்வோர் புதிய கண்டுபிடிப்புகளைப் பயன்படுத்தி மக்கள் விரும்பக் கூடிய புதுப்புதுப் பொருள்களை உற்பத்தி செய்தால் ஆதாயம் கூடும். யார் முதலில் உற்பத்தியில் புத்தாக்கங்களைச் செய்கிறாரோ, அவர் போட்டியாளர்களைவிட மிகுதியாக ஆதாயம் பெறுவார். ஆதாயம் புத்தாக்கங்களைக் கொண்டுவரத் தூண்டுதலாக அமைகிறது. புத்தாக்கக் கோட்பாட்டையும் பொருளியல் அறிஞர்கள் முழுமையான கோட்பாடாகக் கருதவில்லை. இது ஒரு வகையில் இயங்கு நிலைக் கோட்பாட்டைப் போன்றே இருக்கிறது. ஆதாயம் கிடைப்பதற்குப் பல காரணங்கள் உள்ளன. அவற்றுள் ஒன்றுதான் புத்தாக்கம். இக்கோட்பாடு மற்றைய காரணிகளைப் புறக்கணித்து விடுகிறது.

**பொருளாதார ஏற்றத் தாழ்வுகள்:** சமுதாயத்தில் ஏற்றத் தாழ்வுகள் ஏற்படுவதற்கான காரணங்களுள் ஒன்றாக ஆதாயம் இருக்கிறது. வருவாயைப் பகிர்வதற்குரிய நான்கு உற்பத்திக் காரணிகளில் தொழில் முயல்வோர்தாம் மிகுதியான பங்கைப் பெறுகிறார். நிலம், உழைப்பு, முதல் ஆகியவற்றிற்கு ஒரு குறிப்பிட்டத்தக்க வருவாயைப் பகிர்ந்தளித்து விட்டு, மிஞ்சுவதை எல்லாம் அவர் எடுத்துக் கொள்கிறார். இதனால், அவரிடம் செல்வம் குவிகிறது. செல்வர்கள் மேலும் செல்வர்களாகவும், ஏழைகள் மேலும் ஏழைகளாகவும் மாற ஆதாயம் வழி வகுக்கிறது.

காரல் மார்க்சு, முதலாளித்துவ அமைப்பில் ஆதாயம் என்ற பெயரில் சுரண்டல் (Explcitation) நடைபெறுவதாகக் கூறுகிறார். ஒரு தொழிலாளி ஒரு நாளில் பதினைந்து உருபாய் மதிப்புள்ள பொருளை உற்பத்தி செய்கிறாரென்றால், அவருக்கு முதலாளி அவர் உற்பத்தி செய்த அளவிற்குக் கூலி கொடுக்க மாட்டார். நாள் ஒன்றுக்குப் பத்து உருபாய் கூலி கொடுப்பதாக வைத்துக் கொண்டால் எஞ்சுவதை முதலாளி எடுத்துக் கொள்கிறார். இதனைக் காரல் மார்க்சு 'எச்ச மதிப்புக் கோட்பாடு' (Theory of Surplus Value) என்கிறார்.

தூண்டுதலாக இருக்கும் ஆதாயம் எந்த அளவு இருக்க வேண்டுமென்பதை வரையறுக்க இயல வில்லை. முதலாளித்துவ அமைப்பில் தொழில் முயல்வோர்கள் இடர்ப்பாட்டையும் இழப்பையும் ஏற்கவேண்டியவர்களாக இருப்பதால், அவர்கள்ஆதா யம் பெறுவதை நியாயமாகக் கருதுகின்றார்கள். ஆதாயத்திற்கு அளவு இல்லாததால் திறமை மிக்க தொழில் முயல்வோர்கள் கோடி கோடியாகச் செல் வத்தைக் குவிக்க முடிகிறது. பெரிய தொழில் நிறு வனங்களின் வளர்ச்சிக்கும், முற்றுரிமைகள் ஏற்படுத் துவதற்கும் ஆதாயம்தான் அடிப்படையாக இருக் கிறது.

ஒருகாலத்தில் தனியார் துறையின் வளர்ச்சி நாட்டின் செல்வத்தையும் வளத்தையும் பெருக்கு மென்று கருதினர். இப்பொழுது இக்கருத்து மாறி யுள்ளது. தனியாரின் அளவு கடந்த வளர்ச்சி மக் களின் பொது நலனைப் பாதிக்குமென்ற கருத்துச் செல்வாக்குப் பெற்றுள்ளது. இதனால், தனியாரைக் கட்டுப்படுத்த நல அரசுகள் (Welfare States) முயல் கின்றன. ஆதாயம் போன்று உழைக்காமல் கிடைக் கும் வருவாயின்மீது வரி விதித்து ஏற்றத்தாழ் வுகளைக் குறைக்க நடவடிக்கைகள் எடுக்கின்றனர்.

**ஆதாய நோக்கமற்ற நிறுவனங்கள்:** முதலாளித் துவ அமைப்பின் உயிர்நாடியாக இருக்கும் ஆதாயம் ஏழை எளியவர்களின், குறிப்பாகத் தொழிலாளர் களின் நலனைப் பாதிப்பதால், மாற்று முறையை ஏற்படுத்தும் முயற்சி தோன்றியது. இங்கிலாந்தில் இராபர்ட்டு ஓவன் என்பவர் கூட்டுறவு அமைப்பு முறையைத் தோற்றுவித்தார். ஒவ்வொருவரும் எல்லோருக்காகவும், எல்லோரும் ஒவ்வொருவருக்காக வும் இணைந்து செயற்பட வேண்டு மென்ற உயர்ந்த குறிக்கோளோடு கூட்டுறவு செயற்படுகிறது.

ஆதலால் ‘ஆதாயமும் இழப்பும் இல்லாமல்’(No profit, No Loss) தொழில் வாணிக நிறுவனங்களை நடத்துவதில் கூட்டுறவு முறை வெற்றி கண்டுவரு கிறது. காண்க: ஆதாய நோக்கமற்ற நிறுவனங்கள்.

காரல் மார்க்சு பொதுவுடைமை (Communism) அமைப்பில் ஆதாயத்திற்கு இடம் இராது என்று கருதுகிறார். எல்லாவற்றையும் அரசுடைமையாக்கி விடுவதால், பொதுவுடைமை நாடுகளில் ஆதாயம் அரசுக்குச் செல்கிறது. இதனை அரசு பொது நலன் கருதிச் செலவிடுகிறது. இந்திய நாட்டின் தந்தை யான காந்தியடிகள் மக்களைச் சுரண்டும் கருவியாக இருக்கும் ஆதாயம், இல்லாத புதியதொரு சமுதாய அமைப்பினை உருவாக்க விரும்பினார். அதனைச் சருவோதயம் எனக் குறிப்பிட்டார். ஆதாய வேட் கைக்கு மாற்றாகத் தொண்டு செய்யும் உணர்வை மக்களிடம் ஏற்படுத்தப் பாடுபட்டார். தொழில் முயல்வோர் சமுதாயத்தின் அறங்காவலர்களாகச் (Trustees) செயற் பட்டால் ஆதாயம் என்பதைப் பொருளாதார அமைப்பிலிருந்து விலக்க முடியு மென்று காந்தியடிகள் கருதினார்.

**பொருள் சாராச் சமுதாயம்:** ஆதாயம் என்பது பணமாகவோ பொருளாகவோ வெளிப்படையாகத் தெரியும் வகையில்தான் கிடைக்க வேண்டுமென்ப தில்லை. இக்காலத்தில் கூட்டுப் பங்கு நிறுவனம் (Joint Stock Company) போன்றவற்றில் நிருவாக இயக்குநர்களாக இருப்பவர்கள் வாழ்க்கை வசதி களாகவும் (Comforts), சில தனிவகை உரிமைகளாக வும் (Privilages) ஆதாயத்தைப் பெறுகின்றனர். ஆதாயம் என்ற சொல்லை மிக விரிந்த பொருளில் சமுதாயம், சமயம் ஆகிய துறைகளில் கூடப் பயன் படுத்தும் சான்றோர் உளர். எடுத்துக்காட்டாக, ஆன் மிக ஆதாயம் என்ற சொல்லைக் கூறலாம். எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்வதற்குப் பாடுபடு கிற ஒருவன் ஆதாயம் பெறுகிறான் என்பது சமய நம்பிக்கை. ஆனால், அவன் பெறும் ஆதாயம் இந்த உலகில் கிடைக்கும் பொருள்சார் ஆதாயம் அன்று. மறுமை உலகில் அழியா இன்பம் பெறும் அருள்சார் ஆதாயமாகும்.

**உழைக்காமல் வரும் வருவாயும் ஆதாயமும்:** பொதுவாக, உழைக்காமல்-எதிர்பார்க்காமல்கிடைக் கும் வருவாயை ஆதாயமாகக் கருதுகின்றனர். எடுத்துக்காட்டாக, பரிசுச் சீட்டின் மூலம் ஒருவர் பெறும் வருவாயைக் கூறலாம். ஓர் உருபாய் செல வில் ஒரு கோடி உருபாய் பரிசு பெறும் ஒருவர், ஓர் உருபாய் தவிர மீதியை ஆதாயமாகக் கருதுகிறார். ஆனால், பொருளாதாரக் கண்ணோட்டத்தில் இதனை ஆதாயம் என்று ஏற்க முடியாது. இது புதையல் போன்ற ஒரு வகை வருவாய்.

பொருளியலில் காற்றுவாக்கில் வரும் ஆதாயம் (Windfall Profit) என்று ஒருவகை வருவாயைக் கூறு கின்றனர். இதுவும் முயற்சி இன்றி, திடீரென்று கிடைக்கும் வருவாயைக் குறிக்கிறது. ஒரு வணிகர் இரும்பு வாங்கி இருப்பு வைக்கிறார். இருப்பு வைத்த பின்னர் திடீரென்று எதிர்பார்க்காமல் இரும்பு விலை இருமடங்கு கூடி விட்டால் அவருக்குப் பெரு மளவில் ஆதாயம் கிடைக்கும். இரண்டாம் உலகப் போர்க் காலத்தில் பற்றாக் குறையின் காரணமாக இப்படிப் பலர் வருவாய் பெற்றனர். இதனைக் காற்றுவாக்கில் வரும் ஆதாயம் எனக் குறிப்பிட்ட னர். ஆனால், இத்தகைய வருவாயில் ஆதாயத்தின் இயல்பைவிட, பற்றாக்குறையின் விளைவாய்க் கிடைக்கும் வாரத்தின் இயல்பே மிகுதியாக இருப்ப தாகப் பொருளியலறிஞர்கள் கருதுகிறார்கள்.

ஆதாயம் பெறும் முறைகள்: தொழில் முயல்வோர்கள்-முயற்சியால், அறிவாற்றலால் இடர்ப்பாடு தாங்கும் பொறுப்பினால், புதுமையைப் புகுத்தும் ஆற்றலால் ஆதாயம் பெறும்பொழுது, அவர்களைப் பலரும் போற்றுகின்றனர். அதனைப் பெறும் முறையைப் பற்றிக் கவலைப்படாமல் எப்படியும் ஆதாயத்தைப் பெருக்க முயலும் பொழுது சமுதாயத்தின் வெறுப்புக்கு ஆளாகின்றனர். இக்காலத்தில் ஆதாயம் பெறும் முறைகளைப் பற்றிக் கவலைப்படாமல் வருவாய் தேடும் போக்கு வளர்ந்து வருகிறது. கலப்படத்தின் மூலம் பொருள்களின் அடக்க விலையைக் குறைத்துச் சில வணிகர்கள் ஆதாயம் பெற முயல்கின்றனர். இது மக்களின் நலக்கேடு விளைவிப்பதால் இதனை ஏற்றுக் கொள்ள இயலாது. 'கள்ளக் கடத்தல்' மூலம் வெளிநாடுகளிலிருந்து பொருள்களைக் கொண்டு வந்து, விற்று ஆதாயம் பெறுபவர்கள் உள்ளனர். இவர்கள் இறக்குமதி வரி செலுத்தாமல் அரசை ஏமாற்றி வருவாய் பெற முயல்கின்றனர். இது சட்டத்திற்கும் நாட்டிற்கும் எதிரான முறையில் செய்யப்படுகிற குற்றமாகும். தாங்கள் பெறும் ஊதியத்திற்கு மேல் கையூட்டுப் பெற்றுச் செயற்படுகிற அரசுப் பணி புரிபவர் உள்ளனர். இவர்கள் இத்தகைய வருவாயை ஆதாயமென்று கருதுகிறார்கள். அறமற்ற வழியில் வரும் கையூட்டைச் சமுதாயச் சுமை என்று கூறலாம். பொருளாதாரத்தில், பதுக்கல் மூலம் செயற்கையான பற்றாக்குறையை ஏற்படுத்திப் பொருள்களை மிகுந்த விலைக்கு விற்று ஆதாயம் பெறுவோர் உள்ளனர். இதுவும் பொதுநலனைப் பாதிக்கும் நடைமுறையாகும்.

கலப்படம், கள்ளக் கடத்தல், கையூட்டு, பதுக்கல் போன்ற வழிமுறைகளில் பெறும் வருவாயும், திருட்டு மூலம் பெறுகிற வருவாயும் இயல்பால் ஒன்றாகவே இருப்பதைக் கவனிக்க வேண்டும். நல்ல சமுதாய அமைப்பில் இத்தகைய வருவாய் மூலங்களுக்கு இடமிருக்கக் கூடாது. திருட்டைப் போக்கச் சட்டம், காவல் துறையின் மூலம் கடுமையான நடவடிக்கைகள் எடுப்பதைப் போலவே சமுதாயத்திற்குக் கேடு விளைவிக்கும் செயல்களின் வருவாயையும் தடுத்தாக வேண்டும்.

முதலாளித்துவப் பொருளாதார அமைப்பிலும், கலப்புப் பொருளாதார (Mixed Economy) முறையிலும் எல்லாப் பொருளாதார நடவடிக்கைகளும் ஒரு மையத்திட்டத்தின் கீழ் வருவதில்லை. பொருளாதாரம் செம்மையாகச் செயற்படத் தனியாரின் முயற்சி, உற்பத்தி, மாற்று, பகிர்வு ஆகியவை பணிகளில் தேவைப்படுகின்றன. தொழில்முயல்வோரும் வணிகரும் இத்தகைய பணிகளை விரும்பி ஏற்கத் தூண்டுதல் தேவைப்படுகிறது. இந்தத் தூண்டுதல் ஆதாயமாக அவர்களுக்குக் கிடைக்கிறது. இடர்ப்பாட்டையும், உறுதிப்பாடின்மையையும் தாங்கிக் கொண்டு, துணிச்சலுடன் செயற்படும் தொழில் முயல்வோர்கள் எண்ணிக்கையில் குறைவாக இருக்கின்றனர். இவர்கள் மேலும் மேலும் விரிவாகச் செயற்பட ஆதாயம் ஆக்கமும் ஊக்கமும் தருகிறது. தொழில் முனைவோர்களின் போற்றுவதற்குரிய சாதனைகளை ஒரு சமுதாயம் பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறது. ஏனென்றால் ஒரு நாட்டின் வளர்ச்சி, வளம், முன்னேற்றம் ஆகியன அவர்களையும் சார்ந்திருக்கின்றன.

நல அரசு அமைப்பில், பொது நல நோக்கில், ஆதாயத்தின் உச்ச அளவை வரையறுக்கலாம். மற்றைய ஆக்கக் காரணிகளுக்குத் தகுந்த ஊதியம் கிடைக்கச் செய்வதன் மூலம் ஆதாயம் சுரண்டலாக மாறாமல் கட்டுப்படுத்தலாம். ஆதாயத்தின் மூலம் சமுதாயத்தில் பெரிய அளவில் ஏற்றத்தாழ்வுகள் ஏற்படாமல் தக்க வரிவிதிப்பின் மூலம் தடுக்கலாம். சமுதாயத்திற்கு நலம் விளைவிக்கும் வகையில் ஆதாயம் தூண்டுதல் கருவியாகச் செயற்படுகிறவரை அதனை வரவேற்கலாம். மா.பா.கு.

துணை நூல்கள்:

**Abuja. H.L.**, Advanced Economic Theory, S. Chand and Company, New Delhi, 1982.

**George Leland Bach**, Economics, Prentice-Hall of India Private Limited, New Delhi, 1977.

**James M. Handerson, Richard E. Guanett**, Micro Economic Theory, Mc Graw Hill Kogakusha Limited, London, 1971.

**Water Nicholson**, Micro-Economic Theory, The Dryden Press, Illinois, 1977.

**ஆதார்** என்பது யூதர்களின் ஆண்டுக் குறிப்பேட்டில் (Calender) வரும் பன்னிரண்டாம் மாதம். ஆங்கில மாதங்களான பிப்பிரவரி-மார்ச்சு மாதங்களில் இது வருகிறது. யூதர்களுக்குரிய பூரிம் பண்டிகை (Purim Festival) ஆதார் மாதம் 13-ஆம் நாள் கொண்டாடப்படுகிறது. நாள்மிகை ஆண்டுகளில் (Leap Years) இப்பண்டிகை 13-ஆம் மாதமாகக் கருதப் பெறும். இரண்டாம் ஆதார் மாதத்தில் 14-ஆம் நாள் கொண்டாடப்படும். ஆண்டுக் குறிப்பேட்டில் நாள்மிகை ஆண்டு வரும்போது இரண்டாம் ஆதார் மாதம் முதல் ஆதார் மாதத்தைத் தொடர்ந்து வருகிறது.

**ஆதார்ன் சோதனைகள்**: இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில், அமெரிக்க ஐக்கிய நாடு

களில் இருக்கும் சிகாகோ நகரத்தில்,'வெசுடர்ன் எலக்டிரிக்கு கம்பெனி' (Western Electric Company) என்ற நிறுவனத்தைச் சேர்ந்த ஆதார்ன் தொழிலகத்தில் (Hawthorne Workshop), பணிபுரிந்து வந்த 'தொழிலாளர்களின் உற்பத்தித் திறனில் தொழிற் குழுக்களின் செல்வாக்கு' எவ்வாறுள்ளது என்பதை அறியும் நோக்கத்துடன் நிகழ்த்தப்பட்ட சோதனைகள் ஆதார்ன் சோதனைகள் என்று கூறப்படுகின்றன.

இச்சோதனைகள் தொழிலகச் சமூகவியலுக்கும், குழு இயங்கியலுக்கும் பயனுள்ள கருத்துகளைத் தந்துள்ளன. இச்சோதனைகளில் வெவ்வேறு பணிச் சூழ்நிலைகளில் தனிப்பட்ட பணியாளர் குழுக்கள் ஆராயப்பட்டன. ஆராய்ந்தோர் சோதனைக் கூடக் குழு என்றும், கட்டுப்பாட்டுக் கூடக் குழு (Control Room Group) என்றும் 1924-ஆம் ஆண்டிலிருந்து 1927-ஆம் ஆண்டு வரையில் இரு பிரிவுகளாகப் பிரித்தனர். இந்தக் கூடங்கள் எல்லா வகைகளிலும் ஒத்திருந்தன. கட்டுப்பாட்டுக் கூடத்தில் ஒளி அமைப்பு, மாறுதல் எதுவும் இன்றி ஒரே விதமாக அமைந்திருந்தது. சோதனைக்கூடத்தில் ஒளி மிகுக்கப்பட்டதை ஒட்டி அங்கு உற்பத்தித் திறனும் மிகுதியாயிற்று. இதனைக் கண்டு ஒளி மென்மேலும் மிகுதியாக்கப்பட்டது. ஒளியை ஒட்டி உற்பத்தித் திறனும் மிகுந்து கொண்டே சென்றது. ஆனால், இந்த மிகை உற்பத்தி, ஒளி மாற்றம் ஏற்படுத்தப்படாத கட்டுப்பாட்டுக் கூடத்திலும் மிகுந்து கொண்டே வந்தது. இதற்கான காரணத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை. வேலைச் சூழ்நிலை, வசதிக்குறைவு ஆகியவற்றினிடையேயும் உற்பத்தித்திறன் மிகுவதன் காரணத்தைக் கண்டுபிடிக்கும் நோக்கத்துடன் இச்சோதனை முறை, நேர்மாறாக மாற்றி அமைக்கப்பட்டது. அதாவது சோதனைக் கூடத்தில் ஒளி குறைக்கப்பட்டது. இதனை ஒட்டி அங்கு உற்பத்தித் திறன் குறையும் என எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் வியக்கத்தக்கவாறு அங்கு உற்பத்தி மிகுந்தது. ஒளி அமைப்பில் எவ்வித மாறுதலும் செய்யப்படாத கட்டுப்பாட்டுக் கூடத்திலும் உற்பத்தி மிகுந்தது.

இச்சோதனைகளின் விளைவுகளை மேலும் உறுதிப்படுத்தும்பொருட்டு ஒளியைக் கணிசமாகக் குறைத்த பின்பும் கூடத் தொழிலாளர்களிடம் ஒளி மிகுக்கப் பட்டதாகக் கூறப்பட்டது. அவர்கள் அக்கூற்றில் நம்பிக்கை கொண்டனர். ஆயினும் உற்பத்தியில் எவ்வித மாறுதலும் ஏற்படவில்லை. இதனை, அடுத்து ஒளியில் எவ்வித மாறுதலும் ஏற்படுத்தாமலேயே தொழிலாளர்களிடம் ஒளி குறைக்கப்பட்டதாகத் தெரிவிக்கப்பட்டது. இம்முறையும் உற்பத்தியில் எவ்வித மாற்றமும் காணப்படவில்லை. இத்தகைய ஒளியமைப்பு மாற்றங்கள் தொடர்ந்து நிகழ்த்தப்பட்டன. இம்மாற்றங்களின் ஒரு குறிப்பிட்ட நிலையில், ஒளி பெருமளவில் குறைக்கப்பட்டு, நிலவின் ஒளி போல் மங்கலாக ஆக்கப்பட்டது. இச்சமயத்தில் மட்டில் தொழிலாளர்கள் நன்றாகப் பார்க்க முடியவில்லை என்று கூறினர். ஆனால், உற்பத்தி சிறிதளவே குறைந்தது.

இந்த ஆராய்ச்சி, ஒளியமைப்பின் செறிவுக்கும் உற்பத்தித் திறனுக்கும் இடையே உள்ள தொடர்புகளைக் கண்டறிந்தது. பணியாளர்கள் ஒளியமைப்பைப் பற்றிக் கொண்டிருந்த கருத்தும், மேலாண்மையினர் கொண்டிருந்த கருத்தும் ஒத்துவரவில்லை. மேலாண்மையினர் ஏற்பாடு செய்த நல்ல ஒளியமைப்புக்குத் தொழிலாளர்கள் துலங்க முடியவில்லை. தொழிலாளர்கள் எது நல்ல ஒளியமைப்பு என்று கருதினார்களோ அதனையே விரும்பினார்கள். மின் விளக்கின் குமிழ் மாற்றப்பட வேண்டுமென்று விரும்பினார்கள். அது மாற்றப்பட்டதும், அவர்கள் மனநிறைவுற்றனர். மாற்றப்பட்ட குமிழ் (Bulb) ஒளியில் சிறிதும் மாற்றம் இல்லாதிருந்தும் தொழிலாளர்கள் புதிய குமிழ் மிக்க ஒளி தருவதாகக் கருதினர்.

**இடை மாற்றிடு இணைப்புச் சோதனை (Relay Assembly Test):** வேலைச் சூழ்நிலையினைச் சீர்படுத்துதல் மட்டிலுமே உற்பத்தித்திறன் மிகுவதற்குச் சிறந்த காரணியாகும் என்று கூறிவிட முடியுமா? அதற்கு வேறு காரணிகள் உள்ளனவா? ஆம் எனில், அவை எக்காரணிகள்? என்பன போன்ற உற்பத்தியளவிற்கும் வேலைச் சூழ்நிலைக்கும் இடையே உள்ள தொடர்பு பற்றிய ஐயப்பாடுகளை ஆராய்வதன் தேவையை இச்சோதனைகள் வலியுறுத்தின. சோதனையாளர்கள், ஒளி மாற்றத்துடன் வேறு மாறிகள் (Variables) உற்பத்தித் திறனில் இயங்கியிருக்கலாம் என்றும், அவற்றைத் தவிர்த்திருக்கலாம் என்றும் கருதினர். ஆதலின் இடைமாற்றிடு இணைப்புக்கூட ஆய்வுகள், ஆதார்ன் தொழிலகத்தில், இரண்டாம் கட்டச் சோதனைகளாக அமைந்தன. ஆர்வர்டு பல்கலைக் கழகத்தின் (Harvard University) தொழில் ஆய்வுத்துறை இயக்குநராக இருந்த எல்டன் மேயோ (Elton Mayo 1880-1949) என்பவரும், அவருக்குத் துணையாக இராத்லிசுபர்கர் (Roethlisberger) என்பவரும், அவர்களைச் சேர்ந்த ஆய்வுக் குழுவினரும், ஒருங்கே இச்சோதனைகளை நடத்தினர். தொலைபேசி இடைமாற்றிடு இணைப்புக் கூடத்துடன் ஒரு ஆய்வு அறை அமைக்கப்பட்டது. இதில் பணி செய்தவர்கள் பெண் தொழிலாளர்கள். இவர்களின் பணியைப் பதிவு செய்யத் தானியங்கிப் பொறி ஒன்று அமைக்கப்பட்டது. இதில் பணிசெய்த ஆறு பெண் தொழிலாளர்களுள் ஐவரின் பணி,ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது.

சோதனைகள், பதினான்கு சோதனைக் காலங்களாகப் பிரிக்கப்பட்டுக் கி.பி. 1927-ஆம் ஆண்டிலிருந்து 1932 வரையில் நீடித்தன. இச்சோதனைகளின் சுருக்கமான விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:

ஆய்வுக் காலம் I: 25.4.1927 முதல் 10.5.1927 வரை நீடித்தது. வேலைச் சூழ்நிலையில் எவ்வித மாறுதலும் செய்யப்படவில்லை. ஐந்து பெண் தொழிலாளர்களின் பணி வீதம் உற்றுநோக்கப்பட்டது. பின்னர் நிகழ்த்தவிருந்த சோதனைகளுக்குப் பயன்படுத்தும் வகையில், பணி வீதங்கள் குறித்து வைத்துக் கொள்ளப்பட்டன. தொழிலாளர் ஒருவருக்கு 48 மணி நேரத்தில் சராசரி அடிப்படை உற்பத்தித் திறன் 2400 இடை மாற்றீடுகள் என்ற வீதத்தில் குறிக்கப்பட்டது. (பணி நேரம்: வாரத்திற்கு 48 மணி).

ஆய்வுக் காலம் II: 10.5.1927 முதல் 11.6.1927 வரை. தொழிலாளர்கள் சோதனைக் கூடத்திற்கு மாற்றப்பட்டனர். அங்கு உற்று நோக்குநர் அமர்த்தப்பட்டனர். புதிய இடம் பொருத்தமாக அமையச் சில நாட்கள் தேவைப்படலாம் என்றும், இதற்கு இடைப்பட்ட நாட்களில் உற்பத்தித் திறன் குறையலாம் என்றும் எதிர்பார்க்கப்பட்டது. இவ்வெதிர்பார்ப்பிற்கு மாறாக உற்பத்தித் திறனில் சிறிது கூடுதல் காணப்பட்டது. (பணிநேரம்: வாரத்திற்கு 48 மணி).

ஆய்வுக் காலம் III: 8.8.1927 முதல் 10.9.1927 வரை நீடித்தது. தொழிலாளர்களுக்குத் தகவமைவு ஏற்படும் காலமாக இது அமைந்தது. வேலைக் குழுவின் ஐந்து தொழிலாளர்களுக்குப் பணிவீத ஊதியம் முடிவு செய்யப்பட்டது. குழுவின் பணி மொத்தமாக ஆய்வு செய்யப்பட்டது. ஊதியம் ஐவருக்கும் ஒத்த நிலையில் பங்கிடப்பட்டது. உற்பத்தித் திறன் 2500 இடைமாற்றீடுகள் வரையில் மிகுந்தது. (பணிநேரம்-வாரத்திற்கு 48 மணி).

ஆய்வுக் காலம் IV (சோதனைத் தொடக்கம்: ஐந்து நிமிட ஓய்வு இடைவேளைகள்): காலை 10 மணிக்கு ஒரு இடைவேளையும், நண்பகல் 2 மணிக்கு மற்றொரு இடைவேளையுமாக இரு முறை ஐந்து நிமிட ஓய்வு இடைவேளைகள் கொடுக்கப்பட்டனர். உற்பத்தியில் மாறுதல் எதுவும் காணப்படவில்லை. (பணிநேரம்: வாரத்திற்கு 47.05 மணி).

ஆய்வுக் காலம் V: 12.9.1927 முதல் 8.10.1927 வரை நீடித்தது. ஓய்வு இடைவேளைகளின் காலம் 10 நிமிடங்களாக உயர்த்தப்பட்டது. உற்பத்தித் திறன் முன்பிருந்ததைக் காட்டிலும் பன்மடங்கு பெருகிற்று. (பணி நேரம்: வாரத்திற்கு 46.10 மணி).

ஆய்வுக் காலம் VI: 10.10.1927 முதல் 5.11.1927 வரை நீடித்தது. ஐந்து நிமிட இடைவேளைகள் ஆறுமுறை கொடுக்கப்பட்டன. தொழிலாளர்கள் தங்கள் பணி இத்தகைய இடைவேளைகளால் தடைப்படுவதாகத் தெரிவித்தனர். உற்பத்தித் திறன் சிறிதளவே குறைந்தது. (பணி நேரம்: வாரத்திற்கு 46. 15 மணி).

ஆய்வுக் காலம் VII: 7.11.1927 முதல் 21.1.1928 வரை நீடித்தது. பதினைந்து நிமிட உணவு இடைவேளை காலையில் கொடுக்கப்பட்டது. நண்பகலில் 10 நிமிட இடைவேளை கொடுக்கப்பட்டது. உற்பத்தித் திறன் 2500 இடை மாற்றீடுகள் வரையில் பெருகிற்று. (பணி நேரம்: வாரத்திற்கு 45.40 மணி).

ஆய்வுக் காலம் VIII: 21.1.1928 முதல் 10.3.1928 வரை நீடித்தது. பணியில் ஒத்துழைப்புத் தராத இரு தொழிலாளர்கள் மாற்றப்பட்டு வேறு இரு தொழிலாளர்கள் புதிதாக அமர்த்தப்பட்டனர். வேலைச் சூழ்நிலை முன்பு இருந்தவாறு நீடித்தது. ஆனால், மாலை 5 மணிக்குப் பணியை முடிப்பதற்குப் பதிலாக 4.30 மணிக்கே பணியை முடிக்க அனுமதிக்கப்பட்டனர். உற்பத்தித் திறன் பன்மடங்கு மிகுந்தது. (பணி நேரம்: வாரத்திற்கு 43.10 மணி).

ஆய்வுக் காலம் IX: 10.3.1928 முதல் 7.4.1928 வரை நீடித்தது. வேலைச் சூழ்நிலை முன்பு இருந்தவாறு நீடித்தது. ஆனால், தொழிலாளர்கள் மாலை 4 மணிக்கே வேலையை நிறுத்த அனுமதிக்கப்பட்டனர். அன்றாட உற்பத்தி பெருகியது. ஆனால், வார உற்பத்தி சிறிதளவு குறைந்தது. (பணி நேரம்: வாரத்திற்கு 40.40 மணி).

ஆய்வுக் காலம் X: 9.4.1928 முதல் 30.6.1928 வரை நீடித்தது. வேலைச் சூழ்நிலையில் மாற்றம் எதுவுமில்லை. மாலை 5 மணிக்கு வேலை நிறுத்தப்பட்டது. உற்பத்தித் திறன் 2888 இடைமாற்றீடுகள் வரையில் பெருகியது. (பணி நேரம்: வாரத்திற்கு 45.05 மணி).

ஆய்வுக் காலம் XI: 2.7.1928 முதல் 1.9.1928 வரை நீடித்தது. வேலைச் சூழ்நிலையில் எந்தவித மாறுதலும் இல்லை. சனிக்கிழமை காலை வேலை நிறுத்தப்பட்டது. உற்பத்தித் திறன் பத்தாவது காலத்தில் இருந்தது போல் இருந்தது. (பணி நேரம்: வாரத்திற்கு 41.40 மணி).

ஆய்வுக் காலம் XII: 3.9.1928 முதல் 24.11.1928 வரை நீடித்தது. ஓய்வு இடைவேளைகள், சிற்றுண்டி, வேலைநேரத் தள்ளுபடி போன்ற சலுகைகள் நீக்கப்பட்டன. வேலைச் சூழ்நிலை, காலம் III-இல் இருந்தது போல் மாற்றப்பட்டது. உற்பத்தித் திறன்

2900 இடைமாற்றீடுகளாக மிகுந்தது. (பணிநேரம்: வாரத்திற்கு 49 மணி).

ஆய்வுக் காலம் XIII: 26.11.1928 முதல் 29.6. 1929 வரை நீடித்தது. வேலைச் சூழ்நிலை, காலம் VII-இல் இருந்ததைப் போல் மாற்றியமைக்கப்பட்டது. உற்பத்தித் திறன் 3000 இடைமாற்றீடுகளாகப் பெருகியது. (பணி நேரம்: வாரத்திற்கு 45.40 மணி).

ஆய்வுக் காலங்கள் XIV & XV: 1929 சூலை முதல் 1932 சூலை வரை இவ்விரு சோதனைக் காலங்கள் நீடித்தன. ஆனால், அக்காலத்தில் அமெரிக்காவில் ஏற்பட்ட பொருளாதாரப் பெருமந்தம் (The Great Depression) காரணமாகத் தொழிலாளர்களின் பணி ஆர்வம் குன்றியது. இதனைத் தொடர்ந்து உற்பத்தித் திறன் குறைந்தது. பின்னர்ச் சோதனைக் கூடம் மூடப்பட்டது.

**ஆதார்ன் சோதனை முடிவுகளின் பகுப்பாய்வு:** மாற்றீடு இணைப்புப் பணி ஒரு மணி நேரத்திற்கு ஒன்று என்ற விதத்தில் நடைபெற்றது. ஆதலின் இப்பணியில் உற்பத்தியை அளவிடு செய்தல் எளிதாக இருந்தது. எனவே இப்பணி சோதனைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது.

தேர்ந்தெடுக்கப்பட்ட ஐந்து பெண் தொழிலாளர்களும் சோதனை அறைக்குள் செல்வதற்கு முன்பு இந்த ஆய்வின் முழு நோக்கங்களும் அவர்களுக்கு விளக்கப்பட்டன. ஆய்வு நடைபெற்ற காலத்தில் அவர்களுடைய கருத்துகள் வரவேற்கப்பட்டன. ஒவ்வொரு மாற்றமும் அவர்களைக் கலந்துரை செய்தே நிகழ்த்தப்பட்டது. ஏதேனும் குறிப்பிட்ட ஒரு மாற்றத்தை அவர்கள் விரும்பவில்லை என்றால் அது உடனே புறக்கணிக்கப்பட்டது. வேலைச்சூழ்நிலையில் ஏற்படுத்தப்பட்ட மாற்றங்களுக்கு இடையே உற்பத்தித் திறன் ஒரே சீராக மிகுவதற்குப் பணியாளர்களின் ஆர்வமே காரணம் என்று கூறலாம். நிறுவனத்தின் மேலாண்மையினர், அவர்களுக்குக் கொடுத்து வந்த முக்கியத்துவமும் இதற்கு ஒரு காரணமாக இருந்தது. வேலை நேரம், ஓய்வு, இடைவேளைகள் ஆகியவைகளுக்கும் உற்பத்திக்கும் எவ்விதத்தொடர்பும் இல்லை. ஆனால், அவர்களுடைய வேலை மனப்பான்மை தொடர்ந்து மேம்பாடடைந்து வந்தது. அப்பணியாளர்கள் ஐவரும் ஒரு சமூகக்குழுவாக இருந்ததால் அவர்களிடையே நட்புரையாடல் நடைபெற்றது. உரையாடல் முதலில் தடுக்கப்பட்டிருந்தது. பின்னர் அது அனுமதிக்கப்பட்டது. அவர்களுடைய குழு நடவடிக்கைகள், தொழிலகத்தோடும் தொழிலகப் பணியோடும் நின்று விடவில்லை. தொழிலகத்திற்கு வெளியிலும், தொடர்ந்து அவர்கள் விடுமுறை நாட்களை ஒன்றாகவே கழித்தனர். அவர்களிடையே அமைப்பிலாத் தலைமை உருவாயிற்று. அது உற்பத்தியை மிகும்படி செய்தது. தலைமையின் காரணமாக ஒரு தொழிலாளர் பகைமையை வளர்த்துக் கொண்டதால், உற்பத்தியில் எதிர்மறையான விளைவை ஏற்படுத்தினார். மனித உறவுகள் உற்பத்தியில் காணப்பட்டன. பணியில் ஈடுபட்டிருந்த ஐந்து பெண்களும் வேலைச் சூழ்நிலையிலும் சமூகச் சூழ்நிலையிலும் சுதந்திரமாகவும் மகிழ்ச்சியாகவும் இருந்தனர். ஊதியத் தூண்டு பொருள், களைப்பின்மை, ஓய்வு, இடைவேளைகள் முதலியவை மட்டுமன்றிச் சமூகச் சூழ்நிலையும், வேலை மனப்பான்மைக்கு ஏற்றதாக இருந்து வேலையில் விரைவை ஏற்படுத்திற்று. தொழிலகச் சூழ்நிலையில் சமூகக் காரணிகளும் இயங்குகின்றன என்பதே இச்சோதனைகளின் சிறப்பான முடிவாகும். இதுவே ஆதார்ன் விளைவு (Hawthorne Effect) எனப்படுகிறது.

**துணை நூல்கள்:**

**Pascual Gisbert S. J.,** Fundamentals of Industrial Sociology, Tata Mc Gram Hill Publishing Company ltd. New Delhi, 1972.

**Dwivedi R. S.,** Dynamics of Human Behaviour at Work, Oxford & IBH Publishing Co., New Delhi, 1981.

**ஆதாரக் கல்வி:** இந்திய நாடு ஆங்கிலேயர் ஆட்சியின் கீழ் இருந்த காலத்தில், இந்தியச் சூழலுக்கேற்ப மகாத்மா காந்தியடிகளால் வகுக்கப்பட்ட புதியதொரு கல்வித்திட்டம் ஆதாரக் கல்வி (Basic Education) எனச் சொல்லப்படும். மெக்காலே (Mecaulay) காலத்தில், இந்தியாவில் புகுத்தப்பட்ட மேனாட்டுக் கல்வியானது, வெறும் ஏட்டுக் கல்வியாகவும், ஆங்கில மொழிக்கு முதனிடம் தருவதாகவும் இந்தியக் குடிமகனை உருவாக்கத் தவறியதாகவும் ஊரக மக்கள் பயன்பெற முடியாததாகவும், நகர்ப்புறத் தன்மை மேலோங்கியதாகவும், ஏழை இந்தியருக்கு எட்டாத அளவில் செலவு மிக்கதாகவும் இருந்து வந்தது. இக்குறைகளைக் களைந்து, உழைப்பையும் வேலையையும் கல்விக்கு அடிப்படையாக வைத்து உருவாக்கப்பட்டதே காந்தியடிகளின் ஆதாரக் கல்வித் திட்டமாகும்.

காந்தியடிகளின் கல்வி முறையானது, இந்தியப் பழம் பண்பாடு, குழந்தைகளின் அடிப்படைத் தேவைகள், குழந்தைகளின் அடிப்படைத் திறன்கள் சமுதாயத்தின் அடிப்படையான தொழில்கள், இந்தியாவின் அடித்தளமாக விளங்கும் ஊரக மக்களின் நலன்கள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு, குழந்தைகட்கு ஏழாண்டு அடிப்படைக் கல்வியான தொடக்கக் கல்வியை வழங்கியதால், இவரது கல்வி

முறை ஆதாரக் கல்வி எனப் பொருத்தமான பெயர் பெற்றது. இக்கல்வித் திட்டத்தின் கொள்கைகளையும் செய்முறைகளையும் நாடு முழுதும் பரப்பிய பணியில் பெருங் கல்வியாளர்களான டாக்டர் சாகீர் உசேனும் அறிஞர் அரியநாயகமும் குறிப்பிடத்தக்கவர்கள்.

இந்தியாவின் பல மாகாணங்களில் (Provinces) 1937-ஆம் ஆண்டு காங்கிரசுக் கட்சியின் ஆட்சி நடந்தபோது, இந்திய மக்கள் அனைவருக்கும் சிறந்த கல்வி முறையை அளிக்க வேண்டிய கட்டாயம் காங்கிரசுக் கட்சிக்கு ஏற்பட்டது. காந்தியடிகளின் தலைமையில், 1937-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்களில் வார்தா நகரில் நடந்த தேசத் தொண்டர்கள் மாநாட்டில், காந்தியடிகள் தம் ஆதாரக் கல்விக் கருத்துகளை முறையாக வெளியிட்டார். அம் மாநாட்டில் கீழ்க்காணும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன:

1. இந்தியக் குழந்தைகள் அனைவருக்கும் ஏழாண்டுகள் வரை இலவசக் கட்டாயக் கல்வி வழங்கப்படுதல் வேண்டும்.
2. பயிற்று மொழி, குழந்தைகளின் தாய்மொழியாகவே இருத்தல் வேண்டும்.
3. ஏழாண்டுக் கல்வியானது குழந்தைகளின் சூழலையொட்டிய ஒரு கைத்தொழிலை அடிப்படையாகக் கொண்டு அமைதல் வேண்டும்.
4. இக்கல்வி முறையின் மூலம் குழந்தைகள் உருவாக்கும் பொருள்களை விற்பனை செய்வதன் வழியாக ஆசிரியர்கள் தங்கள் ஊதியங்களைப் பெறுதல் வேண்டும்.

இம்மாநாட்டையடுத்து அரிபுராவில் நடந்த அகில இந்தியக் காங்கிரசு மாநாடு, வார்தா கல்வித் தீர்மானங்களுள் முதல் மூன்றும், இந்தியாவின் தேசியக் கல்வி முறையின் அடிப்படைகளாக அமைய வேண்டும் என முடிவு செய்தது. இக்கல்வித்திட்டம் பற்றி விரிவாக ஆராய்ந்து பாடத்திட்டம் உருவாக்க டாக்டர் சாகீர் உசேன் தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டது. அக்குழு வெளியிட்ட அறிக்கையின் அடிப்படையில், இந்தியத் தேசிய காங்கிரசு ஆட்சிப் பொறுப்பேற்ற மாகாணங்களில் 1937-ஆம் ஆண்டு ஆதாரக் கல்வி முறை பள்ளிகளில் புகுத்தப்பட்டது. இரண்டாம் உலகப் போர் காரணமாகக் காங்கிரசு மந்திரி சபை பதவி விலகியதால், ஆதாரக் கல்வித் திட்டமும் அப்போதைக்குக் கைவிடப்பட்டது.

ஆதாரக் கல்வித் திட்டத்தின் கீழ், ஏழு வயதிலிருந்து பதினான்கு வயதிற்குட்பட்ட அனைத்துக் குழந்தைகளுக்கும் கட்டாய இலவசக் கல்வி கற்பிக்கப்பட்டது. தாய் மொழியே பயிற்று மொழியாக இருந்தது. ஆதாரக் கல்வி, குழந்தைகளின் சூழலுக்கு இணைந்த ஒரு கைத்தொழிலை மையமாகக் கொண்டு இயங்கியது. குழந்தைகள் அவரவர்களுக்கு ஏற்ற ஒரு கைத்தொழிலைத் தேர்ந்தெடுத்துக் கொண்டனர். இக்கைத்தொழில், பள்ளி அமைந்திருக்கும் சமூகச் சூழ்நிலைக்குப் பொருத்தமான வகையில் தேர்ந்தெடுக்கப்பட்டது. கைத்தொழிலுடன் இணைந்த பிற பாடங்களும் கற்பிக்கப்பட்டன. ஆதாரப் பள்ளிகளில் பாடநூல் முதன்மை பெறவில்லை. வெளிமுறைத் தேர்வுகளும் பள்ளிகளில் இடம் பெறவில்லை. மாணாக்கரின் உழைப்பையும் பணிகளையும் ஆசிரியரே சீர்தூக்கி மதிப்பிட்டு அவர்களது முன்னேற்றத்தை அளவிட்டார். தூய்மை, உடல்நலம், குடிமைப் பயிற்சி, வேலை, விளையாட்டு, பொழுது போக்குச் செயல்கள் ஆகியன யாவுமே ஆதாரப் பள்ளிகளில் சிறப்பிடம் பெற்றன.

ஆதாரக் கல்வியில் வேளாண்மை, நூல் நூற்பு நெசவு, மரவேலை, மீன் வளர்த்தல், பழவகைகள், தோட்டப்பயிர் செய்தல் போன்றவற்றுள் ஒன்றினை மாணவர் தேர்ந்தெடுத்துப் பயின்றனர். அதனுடன், தாய்மொழி, கணிதம், வரலாறு, புவியியல் போன்ற சமூகவியல்களும் அறிவியல், இசை, சரித்திரம், இந்தி, உடற்பயிற்சி ஆகியவைகளும் கற்பிக்கப்பட்டன.

இந்தியா சுதந்திரம் பெற்றபின், முதலாம் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில், இளநிலை அடிப்படைப் பள்ளிகளும் (Junior Basic Schools) முதுநிலை அடிப்படைப் பள்ளிகளும் (Senior Basic Schools) முறையே 33,379 பள்ளிகளாகவும் 388 பள்ளிகளாகவும் இருந்தன. நான்காம் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் 1,53,000 இளநிலை அடிப்படைப் பள்ளிகளும், 16,700 முதுநிலை அடிப்படைப் பள்ளிகளும் இயங்கின. நான்காம் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் ஆதாரப் பயிற்சிப் பள்ளிகள் (Basic Training Schools) மொத்தம் 1,424 இருந்தன.

நான்காம் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் (1969-74) ஆதாரக் கல்வி வளர்ச்சி குறையத் தொடங்கியது. இக்கல்வி வளர்ச்சிக்காகப் புதிய திட்டங்கள் ஏதும் தொடங்கப்படவில்லை. இந்திய அரசால் நிறுவப் பெற்ற தேசிய ஆதாரக் கல்வி நிறுவனம் (National Institute of Basic Education) கூட மூடப்பட்டு விட்டது.

ஆதாரக் கல்விக் கருத்துகளான கைத்தொழிலும் தொழிற் கல்வியும், இன்றைய கல்வி முறையில் மீண்டும் ஏற்கப்பட்டுள்ளன. பள்ளிகளில் தொழில் அனுபவமும் தொழிற்கல்வியும் பாடத்துடன் இணைத்துத் தரப்படுகின்றன. 'ஆதாரக் கல்வி' என்ற கருத்தே,

இன்றைய பள்ளிகளில் 'வேலை அனுபவம்' (Work Experience) என்றும், சமுதாயப் பயன்மிக்க உற்பத்திப் பணி (Socially Useful Productive Work) என்றும் மாற்றுப் பெயர்களில் நடைமுறைப்படுத்தப் பட்டுள்ளது. எஸ்.பு.

துணை நூல்கள்:


Agarwal, J.C., Development and Planning of Modern Education, Vikas, New Delhi, 1982.

Agarwal, J.C., Theory and Principles of Education Vikas, New Delhi, 1982.


**ஆதார சுருதி:** கருநாடக இசையில் பாடுவதற்கும் இசைக்கருவிகளை இயக்குவதற்கும் அடிப்படையாக வைத்துக் கொள்ளப்படுவது. மத்தியத் தாயி சட்சமம் (குரல்), ஆதார சுருதி எனப்படும். இசைக் கலைஞர்கள் தத்தம் குரலின் தன்மைக்கு ஏற்றவாறு ஆதார சுருதியை அமைத்துக்கொண்டு பாடுவார்கள். இசைக் கலைஞர் பல தாயிகளில் சஞ்சரித்தாலும் இந்த ஆதார சுருதியிலிருந்து வழுவாமல் பாடவேண்டும்.

**ஆதி** என்பவள் திருவள்ளுவரை ஈன்ற தாயாவாள் என்று அவரைப் பற்றிக் கூறும் செவி வழிக் கதையொன்று குறிப்பிடுகிறது. ஆதி புலைச்சாதியில் தோன்றியவள் என்றும், பகவன் என்னும் உயர் குடியினனை மணந்து கபிலர் முதலிய எழுவரைப் பெற்று, அவர்களைப் பெற்ற அவ்வவ்விடத்திலேயே விடுத்துச் சென்றனள் என்றும், அவ்வெழுவருள் திருவள்ளுவரும் ஒருவர் என்றும் அக்கதை கூறுகிறது. அக்கதையினை அடிப்படையாகக் கொண்டு மிகவும் பிற்பட்ட காலத்தில் தோன்றிய 'கபிலர் அகவல்' என்னும் நூல் இச்செய்திகளுக்குக் கவிதை வடிவம் தந்துள்ளது. இக்கதை கூறும் செய்திகள் அனைத்தும் பொய்மலிந்த கற்பனையே என்று அறிஞர் பலரும் காட்டியமையால், இன்று இக்கதைச் செய்தி மக்களிடையே செல்வாக்கிழந்தது.

**ஆதிக்கப் பொருளாதாரம்:** இது போர்க் காலத்தில் காணப்படும் பொருளாதார அமைப்பு. போர் என்பது மனித வரலாற்றிலும் நாகரிகத்திலும் ஒரு பகுதியாகவே காணப்படுகிறது. படைவீரர்கள் சிறைப்பிடிக்கப்படுவதும் அடியோடு கொன்றொழிக்கப்படுவதும் நிலங்கள், சொத்துகள், படைக்கலங்கள் ஆகியவை பிடிக்கப்பட்டு அழிக்கப்படுவதும் போரில் கையாளப்படும் முறைகளாகும். நாட்டின் மானத்தைக் காக்கவும், பழி தீர்த்துக் கொள்ளவும், இழைக்கப்பட்ட தவறுகளுக்கு மாற்றுக் காணவும், குடியேற்றங்களை ஏற்படுத்திக் கொள்ளவும், சமயத்தைப் பரப்பவும், வாணிக வாய்ப்புகளைப் பெருக்கிக் கொள்ளவும், கொள்ளையடிக்கவும் போர்கள் மேற்கொள்ளப் படுகின்றன. பொதுவாகப் போர் ஒரு நாட்டின் போக்கையும், அங்கு நிலவி வரும் பொருளாதார அமைப்பையும் மாற்றி விடுகிறது. இவ்வாறு மாற்றப்படும் பொருளாதார அமைப்பு ஆதிக்கப் பொருளாதாரம் (Command Economy) எனப்படும்.

**போர்க்காலச் சூழ்நிலையும் நடவடிக்கைகளும்:** போர் தொடங்கி விட்டால், ஒரு நாட்டின் பாதுகாப்புக்கும் தன்மானத்துக்கும் கடுமையான ஊறு நேர்கிறது. மக்களின் உயிருக்கும் உடைமைக்கும் கேடு நேராமல் அரசு பாதுகாப்பு வழங்கினாலன்றி, நாட்டின் முழுப் பொருளாதாரமும் சீர்குலைந்து போகக்கூடும். எனவே போர்க் காலத்தில் திறமையுடன் செயற்பட மிகச் சிறப்பான முயற்சிகள் தேவை. இத்தகைய சூழல்களில், பொருளாதாரக் கொள்கைக்கு ஒரே ஒரு நோக்கம்தான் இருக்கமுடியும்: அது, போரில் முழு வெற்றி பெறவேண்டும் என்பதே. போருக்கான எல்லா ஏற்பாடுகளையும் பற்றிய முடிவையும், போரை நல்ல முடிவுக்குக் கொண்டு வருவதற்கான மற்ற எல்லா முடிவுகளையும் நாட்டின் அரசியல் அமைப்பே மேற்கொள்ள வேண்டும். மக்கள் போர்க் காலத்தில் நாட்டின் நோக்கத்தை வெற்றி பெறச் செய்வதற்காக எதனையும் கொடுப்பதற்கு விருப்பத்தோடு முன்வருகின்றனர்.

போர் அறிவிப்புச் செய்யப்பட்ட உடனேயே இராணுவ அமைப்பு (Military Establishment) உருவாக்கப்படவேண்டும் அல்லது விரிவுபடுத்தப்பட வேண்டும். போர்ப்படைக் கருவிகளும் மிக விரைவாக உண்டாக்கப்பட்டு அவை படை வீரர்களுக்கு வழங்கப்படவேண்டும். படைவீரர்களுக்குச் சத்தான உணவு குறைந்த அளவாவது தட்டுப்பாடின்றிக் கிடைக்க ஏற்பாடு செய்ய வேண்டும். இச்செயல்களை எல்லாம் செய்ய வேண்டுமென்றால் ஏராளமான ஆட்களும் துணைப் பொருள்களும் வேண்டியிருக்கும். அவை போதுமான அளவு கிடைக்காவிட்டால் பெருஞ் சிக்கல்கள் உண்டாகிவிடும். எனவே, மேலே கூறியவை வலுவான முழு முன்னுரிமை பெற்று நடப்பதற்கேற்ற வகையில், இருக்கும் உற்பத்திக் காரணிகளை இத்திசை நோக்கித் திருப்புதல் வேண்டும்.

போர்க் காலத்தில் படைவீரர்களின் எண்ணிக்கையையும் வலிமையையும் மிகுதிப்படுத்துவது உடனடியாகச் செய்ய வேண்டியதாகும். இராணுவத்துக்கு ஆள் எடுக்கும் வழக்கமான முறைகளெல்லாம் போர்க் காலத்துக்குப் பொருந்தா. அமைதிக் காலத்தில் தாமாக முன்வருபவர்களே படையில் சேர்க்கப் படுகின்றனர். அவர்களின் ஊதியங்கள் சலுகைகள் போன்றவை அப்பொழுது நிலவிவரும் ஊதிய நிலையை ஒட்டி அமைக்கப்படுகின்றன. ஆனால், போர்க் காலத்தில் கட்டாய ஆள் எடுப்பு (Conscription) மேற்கொள்ளப்படுகிறது. ஓய்வு பெறும்

வயதை அடையாத எல்லா வலிமையுள்ள மக்களும் சில நெறிமுறை அதிகாரங்கட்குட்பட்டு இராணுவத்தில் சேர்க்கப்படுகின்றனர். பொதுமக்களும், ஆர்வத்தாலும் ஒத்துழைப்பு மனப்பான்மையாலும் உந்தப்பட்டு ஊதியம் பெற்றும் பெறாமலுங்கூடப் படையில் பணியாற்ற முன் வருகின்றனர். தவிர, போர்க் கருவிகள் செய்வதற்கும் பிற முதன்மையான பணிகளை நடத்திச் செல்வதற்கும் தேவையான படை வலிமையும் கட்டாயமாக இருக்க வேண்டும். இங்குங்கூடத் தொழிலாளர்கள் அரசின் கட்டளைக்கு அடிபணிந்தே ஆக வேண்டும்.

நாட்டின் வளங்களைப் பயன்படுத்துவதிலும் கட்டாய முறைகளே பொருந்தும். நாட்டில் பயன்படக்கூடிய எந்த வளமும் பயன்படுத்தப்படாமலோ தேவையில்லாதவற்றில் செலவழிக்கப்பட்டோ வீணாகக் கூடாது. பொருள் இருப்புகளையும் (Stocks) இயந்திரங்களையும் நிலத்தையும் போக்குவரவுக் கருவிகளையும் நெறிப்படுத்தி நடத்த அரசு அதிகாரம் மேற்கொள்ளவேண்டும். தேவையானால், அவை வேறு பயன்கட்குச் செல்லாதபடி தடை விதிக்க வேண்டும். தனியார் துறை (Private Sector), பொதுத் துறை (Public Sector) என்று பிரித்துக் காண்பதும் கூடாது. மக்கள் உயிர் வாழவும், வீரத்தோடு போர் புரியவும் தேவையான அளவு உணவு அவர்கட்கு வழங்கப்பட வேண்டும். இருப்பினும் தனியார் துறை அழிக்கப்பட மாட்டாது. அரசின் ஆணைக்கேற்பத் தனியார் செயலாற்ற அரசு இசைவளிக்கலாம். குறித்த சில இடங்களில் சிறப்பான கருவிக் கூடங்களை நிறுவவும், வெளிநாடுகளிலிருந்து சில பொருள்களை இறக்குமதி செய்யவும் அரசு அவர்களை வேண்டிக் கொள்ளலாம். ஆயினும் போர்க் காலத்தில் இவ்வாணைகளை நிறைவேற்றுவதில் தொழில் இடையூறும் இடர் தாங்கலும்(Risks) ஏற்படலாம். போர் எப்பொழுது முடியும் என்பது யாருக்கும் தெரியாது. தொழிலில் எதிர்பாராத இன்னல் ஏற்பட்டுத் தனியார் துறை அரசின் விருப்பத்தை நிறைவேற்றத் தயங்கினால் அரசே தொழில்களை நடத்த ஆயத்தமாக இருக்க வேண்டும்.

போர்க் காலத்தில் ஏற்படும் தவிர்க்க முடியாத இரு தீமைகளைப் போக்குவதிலும் அரசு நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும். அவை 1. பணவீக்கம், 2. வருமான ஏற்றத்தாழ்வுகள். போர்க் காலத்தில் மொத்த உற்பத்தியின் பெரும்பகுதி பொது மக்களுக்குக் கிடைக்காது. ஆனால், உற்பத்திக்குச் சமமான வாங்கும் திறன் உருவாக்கப்பட்டு மக்களிடையே புழக்கத்தில் இருப்பதால் விலைவாசிகள் உயர்கின்றன. மேலும், போரில் வெற்றி பெறுவதே முதன்மையாகையால் போர்த் துணைப் பொருளுக்கு எவ்வளவு விலை கொடுத்தாலும் ஏற்புடையதாகக் கருதப்படுகிறது. நாட்டின் பல்வேறு தொழிற்சாலைகளும் பற்றாக் குறையாயிருக்கும் உழைப்புக்கும் முதலீடுகளுக்கும் போட்டியிட்டுக் கொள்கின்றன. இக்காரணங்களால் உற்பத்திச் செலவும் விலைவாசிகளும் தாமே உயர்கின்றன. அரசின் ஆணையேற்று நடந்து வரும் தனியார் தொழில் நிறுவனங்கள் செலவும் ஆதாயமும் என்ற அடிப்படையில் (Cost plus profit basis) விலையை உறுதி செய்கின்றன. இதைக் கட்டுப்படுத்துவதற்குப் போர் நெருக்கடியில் அரசுக்கு நேரம் கிடைப்பதில்லை.

விலைகள் உயருவதால் பணக் கூலிகள் பின் தங்கி உண்மைக் கூலிகள் குறைகின்றன. ஆனால், ஆதாயங்கள் பெருகுகின்றன. இவை நாட்டு வருமானப் பகிர்வில் வணிகர்களுக்கும் உழைப்பாளிகளுக்கும் இடையே ஏற்றத் தாழ்வுகளை ஏற்படுத்துகின்றன. இதனால், நாட்டில் பற்றாக்குறையாகக் காணப்படும் பொருள்கள், ஆதாயம் பெறும் நோக்கோடு வாங்கும் திறன் மிகுதியும் கொண்ட வணிக வருக்கத்தினால் மட்டும் வாங்க முடியும். அடிமட்டத்தில் உள்ளவர்களுக்கு எந்தப் பொருளுமே கிடைக்க முடியாத சூழ்நிலை உருவாகக் கூடும். இந்த ஏற்றத்தாழ்வுகளைக் களைவது அரசின் முதன்மைப் பணியாகிறது.

**போர்ச் செலவும் நிதிக்கொள்கையும்:** போர் பல்வேறு வகைகளில் பெருஞ்செலவுகளை ஏற்படுத்துகிறது. இவை போர்ச் செலவுகள் (War Costs) எனப்படும். இச்செலவுகளை நேரிடைப் போர்ச் செலவுகள் (Direct War Costs), மறைமுகப் போர்ச் செலவுகள் (Indirect War Costs) என இரண்டாகப் பிரிக்கலாம். படை எடுத்துச் செல்லும் வீரர்களைக் கட்டிக் காத்தல், போரில் நேருக்கு நேர் அழிக்கப்படும் சொத்துக்கள், போரினால் துன்புற்ற மக்கட்குக் கொடுக்கப்படும் இழப்பீட்டுத் தொகை (Indemnity) ஆகியவற்றால் ஆகும் செலவுகள் நேரிடைச் செலவில் அடங்கும். மக்களின் அன்றாடப் பணிகள் கெடுவதால் அவர்கட்கேற்படும் வருவாய் இழப்பு, மூலதனச் சீர்குலைவு, உயிர் அழிவு போன்றவை மறைமுகச் செலவில் அடங்கும். இந்தச் செலவை எதிர்கொள்ளத் தேவையான நிதியை எவ்விதம் பெறுவது? இழப்பின் சுமையை எல்லா மக்கட்கும் பகிர்ந்தளிப்பது எவ்வாறு? என்ற வினாக்களுக்குப் போர்க் கால அரசு சரியான தீர்வு காணவேண்டும். நிதிக் கொள்கையில் திட்டவட்டமான நோக்கங்கள் உருவாக்கப்பட வேண்டும்.

போர்ச் செலவுக்கான நிதியை வரியின் (Tax) மூலமும், கடன் (Borrowing) மூலமும் திரட்டலாம். போர்க் காலத்தில் அலை அலையாகப் பெருகுகிற

நாட்டுப் பற்றாகிய உணர்ச்சி வெள்ளத்தின் காரண மாக அரசு வரி விதிப்பின் மூலம் தனக்கு வேண்டிய நிதியைப் பெற்றுக் கொள்ளலாம். அத்துடன், வரி விதிப்பால் தனியார் வருமானத்தின் பெரும்பகுதி அரசாங்கத்திற்கு மாற்றப்படுவதால் பணவீக்க எதிர் விளைவுகள் ஏற்பட்டு விலைவாசிகள் குறைய வாய்ப்பு ஏற்படும். ஆனால், போர்க் காலத்தில் பணத்தைவிடக் காலம்தான் சிறப்பிடம் பெறுகிறது. 'போர்' என்பது அறிவித்தஉடனே தொடங்கி விடும். ஆனால், வரி வரு வாய் அரசின் கைக்கு வருதற்குக் காலம் மிகுதி யாகும். ஏனெனில், புதிய வரிகளுக்கான சட்டங்கள் இயற்றி முடிப்பதற்குச் சிறிதுகாலம் தேவைப்படும். அவ்வாறு விதிக்கப்பட்ட வரிகளின் வசூலைத் தொடங்குவதற்கு மேலும் சிறிது காலம் செல்லக் கூடும். இந்தச் சூழ்நிலையில் போர்ச் செலவுக்கான நிதி எழுப்புவதில் குறுகிய காலக் கடன் வாங்கும் முறைக்கு ஒரு தலையாய இடம் இருப்பது தவிர்க்க முடியாது. வரி முன்னோக்குக் கடன் (Tax Anticipation Borrowing) முறையாலும், நீண்ட காலக் கடன் களாலும் போர்ச் செலவுக்கான நிதி திரட்டலாம். போர்க் காலத்தின் தலையாய நிதிக்கொள்கை (Tax Policy Decision), வரிகளை விதிப்பதா? அல்லது நீண்ட காலக் கடன்களை வாங்குவதா? என்பதுவே ஆகும்.

போர்ச் செலவின் சுமை சமுதாயத்தின் பல்வேறு உறுப்பினர்களிடையே எவ்வாறு பங்கீடு செய்யப் படல் வேண்டும் என்பது பற்றியும் அரசு ஒரு கொள் கையை வகுக்க வேண்டும். இந்தச் சுமைப் பங்கீடும், அரசு எந்த அளவுக்கு வரியையும் கடன் வாங்குதலை யும் பயன்படுத்துகிறது என்பதைப் பொறுத்து அமை யும். போர்க் காலத்தில் ஏற்றத் தாழ்வுகள் மலிந்து காணப்படும் சூழ்நிலையில் அரசு தனது போர்ச்செல வுக்காக வணிகர்களின், உபரி ஆதாயங்களின் மீது வரி விதிக்குமேயானால் எல்லா வகுப்புகளும் தத்தம் திறனுக்கு ஏற்ற வீதத்தில் போர்ச் செலவுகளைப் பங்கிட்டுக் கொண்டதாக ஆகும். நிதிகள், கடன் வாங்குவதன் மூலம் எழுப்பப்படுமானால், போரின் போது உண்மையான வருவாயை இழப்பதன் மூல மாக ஒரு முறையும், போருக்குப் பின்னர் அரசாங்கக் கடனைத் திருப்பித் தருவதற்கான வரிகளைச் செலுத்துவதன் மூலமாக ஒரு முறையுமாக இரு முறை உழைப்பாளர்கள் போர்ச் செலவுக்குப் பணம் செலுத்துகிறார்கள் என்று அமையும். ஆதாயம் பெறுபவர்கள், போர்ச் செலவின் விளைவாக நிகர ஆதாயத்தைப் பெறுகிறார்கள். போருக்குப் பிற் காலத்தில் விலைகள் குறையுமானால் போர்ச் செல வைத் தாங்குவதில் உழைப்பாளி வகுப்பினருக்கும் ஆதாயம் பெறுபவர்கட்கும் இடையே உள்ள வேறு பாடு மேலும் கூடுதலாகும்; அப்படிக் கூடுதலான நிலையில், கடனுறுதிச் சீட்டுகளின் உரிமையாளர்கள் போருக்குப் பின் உற்பத்தியில் கூடுதலான உண்மை உரிமையை உடையவர்களாக ஆகிறார்கள். மேலும் கடனைத் தீர்த்தாக வேண்டும் என்னும் கட்டாயம் இல்லாததால் கடன் வாங்குவதன் மூலம் பணவீக்க நிலைமை அகற்றப்பட்டு விடும் என்று எதிர்பார்க்க முடியாது. அதற்கு மாறாகப் பணவீக்கம் மிகுதியாவ தற்கு வாய்ப்புள்ளது. அரசாங்கம் குறிப்பிட்ட தொகையில் எந்த அளவு கடனாகக் கிடைக்க வில்லையோ அந்த அளவைக் கருவூலமானது (Treasury) வங்கிகளிடமிருந்து கடனாகப் பெற்றுக்கொள்ள வேண்டும். அவ்வாறு பெறப்படும் கடன் புதிதாகப் படைக்கப்பட்ட வங்கிக் காப்பு (Bank Reserve) களி லிருந்து உருவாகும் புதிய பணத்திலிருந்து பெறப்படு வதைத் தவிர வேறு வழியில்லை. ஆனால், அவ்வாறு பெறும்போது மக்களின் வாங்கும் திறன் நாட்டி லுள்ள பொருள்களின் மதிப்பை விட மிகுதியாவதால் விலையேற்றம் ஏற்படுகிறது.

இந்தச் சூழ்நிலை தவிர்க்கப்பட வேண்டுமெனில் அரசு, வரி விதிப்புக்கு உள்ளாகாத உபரி வருவாயை அரசாங்கத்திற்குக் கட்டாயக் கடனாகத் தரும்படி செய்யவேண்டும். கட்டாயமாகக் கடன் தரச் செய் யும் திட்டங்கள் வலுக்கட்டாயத் தன்மையைப் (Coerciveness) பொறுத்த வரை வரி விதிப்பைப் போன்றவையே. இத்தகைய திட்டம் நடைமுறையில் இருக்குமானால், வருவாயின் ஒரு பெரும்பகுதி, வரி களாக எடுத்துக் கொள்ளப்படும். அதன் மற்றொரு பகுதி கடனாக எடுத்துக் கொள்ளப்பட்டு, அதற்குப் பதிலாகக் கடனுறுதிச் சீட்டுகள் தரப்படும். இத் தகைய திட்டம் போர்க் காலத்தில் பணவீக்கச் சக்தி களை அகற்றும் என்பது மட்டுமன்று. போருக்குப் பிந்திய காலத்தில் கிடைக்கக் கூடிய எல்லாவகைத் தன்மைகளுடன், அரசாங்கக் கடனின் உடைமை மிகப் பரவலாக அமைந்திருக்கும்படி செய்யும். இம்முறை யினால்தான் (வரி, கட்டாயக் கடன் வாங்குதல்) அரசு போர்ச் செலவின் சுமையைச் சமமாகப் பகிர்ந் தளிக்க இயலும்.

**கூட்டுப் பொருளாதார முறை ஏற்படுதல்:** மேற் கூறிய போர்க் காலச் சூழ்நிலைகளையும் நெருக்கடி களையும் மேற்கொண்டு போர்க் காலத்து நோக் கத்தை நிறைவேற்ற முதலாளித்துவப் பொருளாதார அமைப்புத் தவறி விடுகிறது. இவ்வமைப்பில் காணப் படும் அங்காடியும் விலைக் கருவியும் போர்க்கால நோக்கத்திற்கேற்ப உற்பத்திக் காரணிகளைப் பயன் படுத்தத் திறமையற்றதாகி விடுகின்றன. இதற்கு மூன்று காரணங்களைக் கூறலாம். 1. போர்க்கால உற்பத்தி (War Production). இது செலவைப் பற்றிச்

சிறிதும் கவலைப்படாமல் மிக விரைவாகச் செயற்பட வேண்டிய ஒன்று. அதற்குத் தனியார் துறை, அங்காடி முறை ஆகியவை ஈடுகொடுப்பவையல்ல. அவை ஆதாய நோக்கமுடையவையாதலால் போர்க் கால நெருக்கடியை மேற்கொள்வது மிகக் கடினம். 2. போர்க்கருவியை உண்டாக்குவது, அவற்றைப் பகிர்ந்தளிப்பது ஆகியவற்றிற்காக ஒருங்கிணைந்த திட்டங்கள் (Integrated Plans) தேவை. என்னென்ன பொருள்களை முதலில் உண்டாக்க வேண்டும்? பொருள்களைப் போர் முனைகளுக்கு எம்முறையில் பங்கிட்டளிக்க வேண்டும் என்பதைப் பற்றி இராணுவத் தலைவர்கள் உடனடியாகத் திட்டமிட வேண்டியவராகின்றனர், தனியார் முயற்சிப் பொருளாதார அமைப்பினால் இவற்றையடைய இயலாது. 3. பண வீக்கத்தையும் அதன் விளைவால் ஏற்படும் ஏற்றத் தாழ்வுகளையும் குறைப்பதற்கு மாறாக அங்காடி முறை மிகுதிப்படுத்தும். இக்காரணங்களுக்காக அங்காடிப் பொருளாதார அமைப்பைத் தடுத்துக் கட்டுப்படுத்த வேண்டும், அல்லது முற்றிலும் அழிக்க வேண்டும். ஆட்சியாளர் எல்லாப் பொருளாதார அதிகாரங்களையும் மேற்கொண்டு பொருளாண்மையை ஏற்று நடத்த வேண்டியவராகின்றனர். ஆதலின், போர்க் காலத்தில் முழு அதிகாரம் கொண்ட கூட்டுப் பொருளாதாரம் ஒன்று மையத் திட்டக் குழுவின் அடிப்படையில் உருவாகிறது. மையத் திட்டக் குழுவோடு போர்க் காலப் பொருளாதார நடவடிக்கைகளைக் கவனிப்பதற்குப் பின்வரும் அமைப்புகளும் ஏற்படுத்தப்படும்: அவை 1. பாதுகாப்புத் தேவைகளையும் போர் உற்பத்தித் திட்டத்தையும் கவனித்துக் கொள்வதற்கான உற்பத்தி மேலாண்மை அலுவலகம் (Office of Production Management), 2. போர் உற்பத்தி வாரியம் (War Production Board), 3. விலை ஆட்சி அலுவலகம் (Office of Price Administration) 4. போர்க் கால உணவுக் கட்டுப்பாடு அலுவலகம் (War Food Administration), 5. பாதுகாப்புப் போக்குவரத்து அலுவலகம் (Office of Defence Transportation) ஆகியவாகும்.

போர்க் காலப் பொருளாதாரம் அமைந்தவுடன், போரின் தேவை மேலோங்குகிறது; தனி மனிதரின் உரிமைக்கு மதிப்பில்லாமல் போகிறது. நுகர்பவரின் முழு உரிமையும் பொருள்களின் தேவையும் அளிப்பும் கட்டுப்பாடுகளின் கீழ் (Controls) செயற்படத் தொடங்குகின்றன. இக்கட்டுப்பாடுகள் இரு வகைப்படும். 1. நேரிடைக் கட்டுப்பாடு (Direct Control). இது நேரிடை ஆணைகளாகவும், அறிவுறுத்தல்களாகவும் அமையும். இவ்வாணைகள் உடன்பாடாகவும் (Positive) எதிர்மறையாகவும் (Negative) இருக்கும். உடன்பாட்டு ஆணைகள் மூலம் அதிகாரிகள் போரை வெற்றியாக முடிப்பதற்குத் தேவையான சில இன்றியமையாச் செயல்களைச் செய்யுமாறு குடிமக்களை ஏவலாம். எதிர்மறை ஆணைகள் மூலம் போர் வெற்றிக்குத் தடையாயிருக்கும் செயல்களைச் செய்யாமலிருக்கும்படி பணிக்கலாம். 2. மறைமுகக் கட்டுப்பாட்டின் கீழ் (Indirect Controls) அலுவலர்கள் ஊக்குவிப்பு மூலம் பொருளியல் தெரிவுகளை மாற்றியமைக்க முயல்கின்றனர். இந்த இரு வகையான கட்டுப்பாடுகளும் பின்வரும் விரிவான கட்டுப்பாடுகளை உள்ளடக்கும்.

1. முதலீட்டுக் கட்டுப்பாடு: உற்பத்திக் காரணிகளைச் சிக்கனமாகவும் பொருத்தமாகவும் பயன்படுத்த இது தேவை. தொழில்களிடையே இரட்டிப்பு வேலை (Duplication of Work), வீணான போட்டிகள் (Wasteful Competition) ஆகியவற்றைத் தவிர்த்துத் தொழில்களை ஒருங்கமைக்கவும் முதலீட்டுக் கட்டுப்பாடு (Investment Control) பயன்படுகிறது. முதலீட்டுத் தொகையை வரையறுப்பதும், வாணிகங்களுக்கும் தொழில்களுக்கும் முதலீடுகளைத் தகுந்த வகையில் பங்கிட்டுக் கொடுப்பதும் இக்கட்டுப்பாட்டின் வேலையாகும். போருக்குத் தேவையான துறைகளில் முதலீடு செய்யவும் தேவையில்லாவற்றில் முதலீடு செய்வதைத் தடுக்கவும் இது துணைபுரிகிறது. அயற் செலாவணி, வங்கிகள், கடன் நிறுவனங்கள் ஆகியவற்றையும் இது கட்டுப்படுத்துகிறது.

2. உற்பத்திக் கட்டுப்பாடு: பல்வேறு உற்பத்திப் படிமுறைகள் பற்றிய எல்லாச் செய்திகளையும், நிறுவனங்களுக்குத் தக்கபடி உற்பத்திப் பங்குகளையும் (Production Quotas) இக்கட்டுப்பாடு வரையறுக்கும். அவற்றுக்கு வேண்டிய மூலப் பொருள்களையும் உழைப்பையும் ஒதுக்கீடு செய்யவும் கூலியையும் பொருள்களின் விலையையும் கட்டுப்படுத்தவும் இது உதவி செய்யும். போர் முதன்மை வாய்ந்த தொழில்களுக்கு எவ்வளவு முன்னுரிமை வேண்டுமோ அவ்வளவையும் வழங்குவதும் இவ்வுற்பத்திக் கட்டுப்பாடே (Production Control) ஆகும்.

3. நுகர்ச்சிக் கட்டுப்பாடு: இக் கட்டுப்பாட்டின் வாயிலாகத்தேவையைக் கீழ் எல்லை வரை குறைக்கக் கூடும். நுகர்ச்சிக் கட்டுப்பாட்டுப் (Consumption Control) பங்கீட்டு முறை (Rationing) கையாளப்பட்டுப் பொருள்களின் உச்ச வரம்பு விலை (Ceiling Price) உறுதி செய்யப்படும்.

**போர்க்காலப் பொருளியலின் சில கூறுகள்:**

1. போர்க்காலப் பொருளாதாரம், நெருக்கடியை அடிப்படையாகக் கொண்டது. அது, முழு அதிகாரத்துடன் கட்டுப் படுத்தப்பட்ட

பொருளாதாரம் (Controlled Economy). அதனை, மேலாண்மைக்குட்பட்ட முதலாளித்துவப் பொருளாதாரம் என்றோ (Managed Capitalistic Economy) ஒழுங்குமுறைக்குட்பட்ட முதலாளித்துவப் பொருளாதாரம் (Regulated Capitalistic Economy) என்றோ மக்கள் நலம் கருதும் முதலாளித்துவப் பொருளாதாரம் (Welfare Capitalism) என்றோ குறிப்பிடலாம்.

2. இப்பொருளாதாரத்தில் வளங்கள் தனியார் வசம் இருந்தாலும் அவை பொது நோக்கத்துக்காகப் பயன்படுத்தப்படுகின்றன.

3. வளங்களை ஒதுக்கீடு செய்யும் கருவியாக் இயங்கும் விலைக்கருவி வலுவிழக்கிறது.

4. போரால் அலைப்புண்ட பொருளாதாரத்தில் பொருளாதார உரிமைகள் அடக்கி வைக்கப் படுகின்றன.

**போருக்குப்பின் பொருளாதாரச் சூழ்நிலை:** போர் முடிந்த பிறகு அதன் கடுமையான விளைவுகள் பொருளாதாரத்தைப் பலவகைகளில் பாதிக்கின்றன. நாட்டின் வளத்தைப் போர் உறிஞ்சி விடுகிறது. வேளாண்மை, தொழில் துறை உற்பத்திகள் ஆகியன போர் முடிவதற்குள் மிகக் கேடு தரும் கீழ்நிலைக்குச் சென்று விடுகின்றன. எரிபொருள், இரும்பு, உருக்கு, இயந்திரக் கருவிகள் போன்றவை கிடைப்பதில்லை. போக்குவரவு முறை சீர்குலைந்து விடுகிறது. வாணிகம் சீர்கெட்டு விடுகிறது. போர்க் காலத்தில் பெரிய நிறுவனங்களிடையே உள்ள தொடர்புகள் அழிக்கப் படுகின்றன, தொழிலாளர்கள் சீர்குலைந்து போகின்றனர். உழைப்பவர்கள் பலர் கொல்லப் படுகின்றனர், அல்லது காயப்பட்டுத் தொழிலில் ஈடுபட முடியாத நிலைக்கு ஆளாகின்றனர். பலர் தொழிலிலிருந்தும் வாணிகத்திலிருந்தும் முற்றிலும் விரட்டப்பட்டு வெறும் உழைப்பாளர் நிலையை அடைகின்றனர். மக்களின் இடப்பெயர்ச்சி மிகுதியாகின்றன. மூலதனங்கள் முடங்கிப் போகின்றன. முதலீடுகளையும் இருப்புகளையும் போர் அழித்து விடுவதால், மிக்க குறைந்த வாழ்க்கைத் தரத்தைக் கூடப் பேணிக்காக்க முடிவதில்லை. வழக்கமான தொழில், வாணிகம் ஆகியன போரின் காரணமாக நின்று போவதால், வருவாய் இழப்பு மக்களுக்கு ஏற்படுவது மட்டுமல்லாமல் உற்பத்தி வலிமையும் நிலையாகக் குன்றிப் போகிறது. தனியார் வருவாயும், நாட்டின் வருவாயும் குறைகின்றன.

போர்க் காலக் கட்டுப்பாடுகள் தளர்ந்தவுடனேயே பணவீக்கம் வலுவாக வந்து பற்றிக் கொள்கிறது. போர்க் காலத்தில் இருந்த கடுஞ்சிக்கன வாழ்க்கையினால் பெரிதான முன்னேற்றம் போருக்குப் பிறகு உடனே ஏற்படுவதில்லை. தனிப்பட்டவர்களின் வருவாய்க் குறைவினால், அவர்களுடைய நுகர்ச்சி அளவு போருக்கு முன்னிருந்ததைவிடக் குறைந்து தான் காணப்படும். தெரிவு எல்லையும் குறுகியதாகவே இருக்கும். பற்றாக்குறை, பங்கீட்டு முறை, வரிசையில் நிற்றல் முதலியவை தொடர்ந்துகொண்டு தான் இருக்கும். போருக்குப் பிறகு பல தொழிற் சாலைகளை நடத்துவதற்கும், இருப்புகளைப் பெருக்குவதற்கும் களஞ்சியங்களை நிரப்பிக் கொள்வதற்கும் தேவையான வளங்களும் பொருள்களும் உள்நாட்டில் கிடைக்காததால், வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யவேண்டிய தேவை ஏற்படுகிறது. இதனால், அயல்நாட்டுச் செலாவணிப் பரிமாற்றங்களில் தொல்லைகள் ஏற்படும். எடுத்துக்காட்டாக, முதல் உலகப் போரின் விளைவாகப் பல நாடுகள் தங்கள் தங்க நாணயச் செலாவணி முறையைக் (Gold Standard) கைவிட வேண்டியதாயிற்று. போர் தொடங்கிய சில நாட்களுக்குள்ளாகவே, பல நாடுகள் நாணயங்களைத் தங்கமாக மாற்றிக் கொள்வதை நிறுத்தி வைத்தன. எல்லா ஐரோப்பிய நாடுகளிலும் தங்க நாணயங்கள் புழக்கத்திலிருந்து நிறுத்தி வைக்கப்பட்டன. தங்க நாணயப் புழக்கத்துக்கு மாற்றாகத் தாள் பணம் வெளியிடப்பட்டது. இவ்வாறு சேர்த்துக் கொண்ட தங்கத்தில் ஒருபகுதி, போரில் சேராத நாடுகளிடமிருந்து போர்ப் பொருள் இறக்குமதிக்காகப் பயன்படுத்திக் கொள்ளப்பட்டது. இந்தியாவில் 1965–ஆம் ஆண்டு செப்டம்பரில் பாகிசுத்தானுடன் ஏற்பட்ட போரினால் நாட்டு வளர்ச்சிக்கான பொருள்வளம், பாதுகாப்பு நோக்கித் திருப்பப்பட்டதோடு, வெளிநாட்டு உதவியும் அறவே நிறுத்தப்பட்டது. வெளிநாட்டுச் செலாவணி வரவு குறைந்துவிட்டது. இக்கடுமையான சூழல்களின் காரணமாக இந்திய அரசு 1966–ஆம் ஆண்டு சூன் மாதம் இந்திய உரூபாயின் மதிப்பைக் குறைக்க (Devaluation) வேண்டியதாயிற்று.

இவ்வாறு போருக்குப் பின்பு நாட்டின் பொருளாதார நிலைமை ஒரே சிக்கலாகக் காட்சியளிக்கிறது. அப்படிப்பட்ட காலங்களில் ஒரு நாடு எப்படிப் பொருள் வளத்தைப் பாதுகாப்பது, பொருள்களை ஒதுக்கீடு செய்வது என்பவற்றைத் தெரிந்துகொள்ள வேண்டும். போர் முடியுந் தறுவாயில் மிகக் குறைந்த பொருள் வளத்தை மிகுதியாகப் பயன்படுத்த வேண்டியதாகிறது. அழிந்து போன மூலதனப் பொருள்களை ஈடுசெய்வதற்கும், இருக்கும் நிலையினைக் கட்டிக் காப்பதற்கும், சுருங்கிப் போன அயற் செலாவணி வரவுகளை ஈடுசெய்வதற்கும், இருக்கும் குறைந்த பொருள்களை மக்கள் நுகர்ச்சிக்குச் சரி

யானபடி பங்கிட்டளிப்பதற்கும் போர்க்காலத்தில் மேற்கொள்ளப்பட்ட திட்ட முறைகளையே மேலும் பின்பற்றவேண்டியதாகிறது. இவ்வாறு, போரும் அதன் விளைவுகளும் திட்ட அடிப்படையில் அதிகார முறைப் பொருளாண்மையை நோக்கி உந்துகின்றன. அவ்வாறு ஏற்படும் அதிகாரம் தழுவிய பொருளாதாரம், நிலைமை சீரடைந்த பிறகு, கைவிடப்பட்ட முதலாளித்துவப் பொருளாதாரம் மீண்டும் கொண்டு வரப்படலாம். அல்லது இராணுவத் தலைவர்களும் அரசும் தொடர்ந்து தங்களது அதிகாரத்தைப் பொருளாதாரத்தின்மீது செலுத்தி வரலாம்.

போரினால் உருவாக்கப்படும் பொருளாதார அமைப்பு முறை, பலவிதக் கோட்பாடுகளை அளிக்கிறது. முதலில், அது பொருளாதாரத்தை நடத்திச்செல்வதில் நடுவண் ஆட்சிமுறை நல்ல பயன் விளைவிக்கும் என்பது மெய்ப்பிக்கப்படுகிறது. அடுத்து, போர்க்காலப் பொருளாதாரப் பட்டறிவுகள், வளங்களை ஒதுக்கீடு செய்வதில் விலைக் கருவியும் அங்காடியும் செயலற்றவை என்பதைச் சுட்டிக் காட்டுகின்றன. இதனையடுத்து, எல்லோருக்கும் வேலை வாய்ப்பினை ஏற்படுத்திக் கொடுக்க முடியும் என்பதையும் நன்குணர்த்துகிறது. இறுதியாக, அதிகாரப் பொருளாதாரத்தின் (Authoritarian Economy) சில அடிப்படைக் கூறுகளைப் புரிந்துகொள்ள ஆதிக்கப் பொருளாதாரம் உதவுகிறது. எம்.இரா.

துணை நூல்கள்:

Halm G.N., Economic Systems; A Comparative Analysis, Oxford and I.B.M. Publishing Company, Calcutta, 1978.

Harris S.E., Economic Planning, The World Press Limited, Calcutta, 1951.

Lewis W.A., The Principles of Economic Planning, Denni's Dobson Limited, London, 1949.

Robbins L., The Economic Problem in Peace and War, Mac Millan and Company Limited, London, 1957

Robert Giffin, Economic Inquiries and Studies, George Bell and Sons, London, 1913.

Seth M.L., Theory and Practice of Planning, Sultan Chand and Company, New Delhi, 1980.

**ஆதிக்குடிகள்:** மனித இனம், பண்பாட்டு அடிப்படையில் ஆதிக்குடி, கிராமச் சமூகம், நகரச் சமூகம் என்னும் முப்பெரும் பரந்த வாழ்நிலைத் தகவமைப்புகளுடன் காணப்படுகிறது. மனிதச் சமுதாயம் இன்று கொண்டுள்ள பல்வேறு அமைப்புகளிலும் பின்தங்கிய நிலையினைக் கொண்டுள்ளவர்களே ஆதிக்குடிகள் (Primitive Tribes) என்னும் கருத்துப் பொதுவாக நிலவுகிறது. மனித அறிவியலாகிய மானிடவியல் 'ஆதிக்குடிகள்' குறித்து நுணுக்கமான, துல்லிய வரையறையைக் காட்டுகிறது. இவ்வரையறையைக் காணும்பொழுது ஆதிக்குடிகளையும் இதனைச் சார்ந்து வழக்கில் கொண்டுள்ள 'பழங்குடி' (Tribe), 'முது பழங்குடி' (Aboriginal Tribe), 'ஆதிக்குடி' அல்லது 'தொல் பழங்குடி' (Primitive Tribe), 'தொன்மைச் சமுதாயம்' (Primitive Society), 'எழுத்தறிவிற்கு முந்தைய சமுதாயம்' (Preliterate Society) ஆகிய இச்சொற்களின் வரையறைகளையும் உடன்காணுதல் தெளிவான கருத்திற்கு வழிகோலும்.

சிறு குழுக்கள், குழுக்கள், கால்வழி, பெருங்கால்வழி, சிற்றூர்கள் முதலிய வட்டாரக் குழுக்களை உள்ளடக்கியதும், பொதுவான மொழி அல்லது கிளைமொழியையும் பொதுவான பண்பாட்டையும் கொண்டதுமான சமூக அமைப்பின் ஒரு முறையே 'பழங்குடி' எனப்படும். 'பழங்குடி' என்னும் சொல், அழுத்தமாகப் பகிர்ந்து கொள்ளக் கூடிய முதன்மையான மன உணர்வுகளின் அடிப்படையில் அமைந்த ஒற்றுமையுணர்வையும் கட்டுப்பாட்டுணர்வையும் கொண்ட பெரிய கருத்தினைச் சுட்டுவதாகும். 'பழங்குடி' என்னும் சொல்லை வரையறுப்பதில் சில கருத்துகள் காணப்படினும், பொதுவான மரபுவழிக் கால்வழி, பொதுவான மொழி அல்லது கிளைமொழி, பொதுவான பண்பாடு, பொதுப் பெயர் முதலான அளவைகளை அடிப்படையாகக் கொண்டு விவரிக்கலாம். பழங்குடியின் அனைத்துப் பண்புகளையும் ஏற்கும் ஒரு பழங்குடியினரின் வாழ்விடம், மிகத் தொடக்கக் காலமுதல் அவ்விடத்திலேயே காணப்படின் அப்பழங்குடி 'முதுபழங்குடி' என்றழைக்கப்படுகிறது. இவர்கள் வாழும் நிலப்பரப்பிற்கு முதன் முதலில் குடியேறியவர்களாக இருப்பதால் இவர்களின் பழைமை பல நூற்றாண்டுகளைக் குறிப்பிடும் படியாக அமைந்திருக்கும். ஆயிரக்கணக்கான ஆண்டுகட்கு முன்னரே இடம் பெயர்ந்து, குடியேறித் தங்கள் வாழ்விடத்தை அமைத்துக் கொண்டிருக்கும் பழங்குடியினரே 'தொல்பழங்குடியினர்' ஆவர். அதாவது, இப்பழங்குடியினர் தாம் வாழும் நிலப்பரப்பிலேயே தோன்றியவர்களாக இருக்கமாட்டார்கள். முதுபழங்குடியினர், தொல் பழங்குடியினர், பழங்குடியினர் ஆகியோர் எழுத்தறிவு தோன்றுதற்கு முந்தைய காலத்திலிருந்து வாழ்ந்து வருவதால் அவர்கள் 'எழுத்தறிவிற்கு முந்தைய சமூகத்தினர்' என்றும் சொல்லப்படுகின்றனர்.

தனிமைப்படுத்தப்பட்ட நிலப்பரப்பில் வாழும் ஆதிக்குடிகள், இனம் பண்பாடு ஆகியவற்றின் அடிப்படையில் ஒருபடித்தானவர்களாகவும், பொதுவாக வரையறுக்கப்பட்ட குறுகிய நிலப் பரப்பையும் எளிய, தொன்மையான குடும்பம், திருமணம், உறவுமுறை, ஆட்சியமைப்பு, பொருளாதாரச் செயற்பாடுகள், சமய முறை ஆகியவற்றைக் கொண்டவர்களாகவும் காணப்படுவதால்,கி.பி. 18-ஆம் நூற்றாண்டு முதலே இவர்களைப் பற்றி அறியப் பலர் முற்பட்டனர். உலகெங்கிலும் காணப்படும் நூற்றுக்கணக்கான ஆதிக்குடிகள் பல்வேறு சூழ்நிலைகளில் வாழ்ந்து வருவதால் இவர்களின் ஒவ்வொரு செயற்பாட்டிலும் அமைப்பிலும் பலநூறு முறைகள் காணப்படுகின்றன. ஆதிக்குடிகளின் பல்வேறு சமூக, பொருளாதார, ஆட்சியமைப்பு அடிப்படையில் மானிடவியலார் கீழ்வரும் பொதுவான பெயர்களைக் கொண்டு அவர்களைக் குறிப்பிடுகின்றனர்.

பின் தங்கிய பழங்குடிக் குழுக்களைத் தேர்ந்தெடுப்பதால் அவர்கள் 'வரையறுக்கப்பட்ட பழங்குடியினர்' (Scheduled Tribe) எனவும், குற்றத் தொழிலிலிருந்து விடுபட்டவர்களைக் 'குற்றமரபினர் பட்டியலிலிருந்து நீக்கப்பட்ட பழங்குடியினர்' (Denotified Tribe) எனவும் கூறப்படுகின்றனர்.

ஒரே பண்பாட்டுப் பரப்பில் அல்லது ஒரே பகுதியில் வாழும் ஆதிக்குடிகளிடையே பொருளாதாரச் செயற்பாட்டிலும், புறப் பண்பாட்டிலும் ஒப்புமைகள் காணப்படினும், சமூக, அரசியல் அமைப்புகளிலும் சமூகக் கூட்டமைப்பிலும் வேறுபாடுகள் காணப்படுகின்றன. கால்வழி, உறவுமுறை, திருமணம், குடும்பம் ஆகியவை சமூக அமைப்பில் நாற்பெரும் பகுதிகளாக ஆராயப்படுகின்றன.

தொன்மம் அல்லது உண்மையான ஆண் அல்லது பெண்ணை மூதாதையராகக் கொண்டே பெரும்பா

| சமூக அமைப்பு | பொருளாதார அமைப்பு | ஆட்சியமைப்பு |
|---|---|---|
| கால்வழி: தந்தைவழி ஆதிக்குடி<br>தாய்வழி ஆதிக்குடி | காட்டுவாசி ஆதிக்குடி<br>வேட்டையாடும் ஆதிக்குடி | தலைவனற்ற, எளிய ஆதிக்குடி (Simple Acephalous Tribe) |
| திருமணம்: அகமண ஆதிக்குடி<br>புறமண ஆதிக்குடி<br>பல்கணவர்முறை ஆதிக்குடி<br>பல்மனைவியர்முறை ஆதிக்குடி | உணவு சேகரிக்கும் ஆதிக்குடி<br>நாடோடி ஆதிக்குடி<br>ஆயர் ஆதிக்குடி | தலைவனற்ற பிரிவு கொண்ட ஆதிக்குடி (Acephalous Segmentary Tribe) |
| அதிகாரம்: தந்தைத் தலைமை ஆதிக்குடி<br>தாய்த் தலைமை ஆதிக்குடி | வேளாண் ஆதிக்குடி | அதிகாரம் ஓரிடத்தில் கொண்ட ஆதிக்குடி (Centralized Tribe) |

மேலும், குற்றம் செய்வதை முதன்மைத் தொழிலாகக் கொண்டிருந்தவர்களைக் 'குற்றவாளிப் பழங்குடி' (Criminal Tribe) எனவும், இத்தொழிலை விடுத்து வேறு தொழில்களில் ஈடுபட்டுள்ள இன்றைய நிலையில் இவர்கள் 'முன்னாள் குற்றவாளிப் பழங்குடிகள்' (Ex-Criminal Tribe) எனவும் சொல்லப்படுகிறார்கள். இவற்றைத் தவிர்த்து, இந்திய அரசியலார் நிருவாக அமைப்பிற்காகவும், வளர்ச்சி நல்வாழ்வுத் திட்டம் ஆகியவற்றுக்காகவும் ஒரு சில

லான ஆதிக்குடியினர் கால்வழியினர் (Clan), பெருங் கால்வழியினர் (Phratry), கிளைக் குழுவினரெனப் பிரிக்கப்படுகின்றனர். இக்கால் வழியினர் பெண்ணை மூதாதையராகக் கொண்டு அமையின், தாய்வழிக் குடிகளெனவும் ஆணை மூதாதையராகக் கொண்டு அமையின் தந்தைவழிக் குடிகளெனவும் சொல்லப்படுகின்றனர். இந்தியாவின் வடகிழக்குப் பழங்குடிப் பகுதியிலுள்ள காசி மற்றும் செயந்தி மலைகளில் வாழும் காசி, கேரோ ஆதிக்

குடிகளும், தென்பகுதியில் வாழும் கணிக்கர், முத்துவன், உராளி, மலைப் பண்டாரம் ஆகிய ஆதிக்குடிகளும், தென் அமெரிக்க-இந்தியக் குரோ ஆதிக்குடிகளும், கனடாவின் குட்சின், இலங்கை வெத்தர் ஆதிக்குடிகளும் தாய்வழிக் குடிகளுள் ஒருசிலவாகும். இந்தியாவின் வடகிழக்குப் பகுதியில் வாழும் சீமா நாகர், (Sema Naga), நடுஇந்தியப் பகுதியின் ஒரவன் (Oraon), ஒ (Ho), பிர்கார் (Birhor), காரியா (Kharia) மரியா கோண்டு (Muria Gond), பில் (Bhil), தென்னிந்தியப் பகுதியில் வாழும் செஞ்சு (Chenchu), கோத்தர் (Kota), அமெரிக்க இந்திய ஒமகா (Omaha) ஆகிய குடிகள், தந்தை வழி ஆதிக்குடிகளுள் ஒரு சிலவாகும்.

அகமணம், புறமணம் ஆகிய இரு மணமுறையே ஆதிக்குடிகளிடையேயும் காணப்படுகிறது. ஆதிக்குடிகளில் ஒரு குலக்குறியினர் அல்லது கால்வழிக் குழுவினர் வேறொரு குழுவினருடன் மணம் கொள்ளும் முறை புறமணத் திருமணமாகும். முர்டாக்கின் (Murdock) உலக இனப் பரப்பளவியல் வரைப்டத்தில் (World Ethnographic Atlas) எடுத்தாளப்பட்டுள்ள சமூகங்களுள் மூன்றில் இரண்டு பகுதி புறமண அமைப்பைக் கொண்டுள்ளன. ஓர் ஆதிக்குடியின் பெருங்கால்வழிக் குழுவினர் அல்லது ஓர் ஆதிக்குடியினர் தமக்குள்ளேயே மணம் கொள்ளும் முறை அகமணத் திருமணமாகும். இவ்வகைத் திருமணம், புறமணத் திருமணத்தைப் போன்று பெரும்பாலான சமூகத்தினரிடையே காணப்படாவிடினும், வட ஆப்பிரிக்காவிலும், மத்திய கிழக்கு ஆப்பிரிக்காவின் பெரும்பான்மைக் குடிகளிலும் காணப்படுகிறது. உலகச் சமூகங்களில் 10 விழுக்காடுகளுக்கும் சற்றுக் குறைவான சமூகங்கள், சிற்றூர்க் குழுக்களாக அமைந்திருக்கின்றன. இவ்வகையான சமூகங்களை மிகுதியாகக் கொண்ட தென் அமெரிக்க மழைக் காட்டுப்பகுதியில், அச்சிற்றூர்களுக்குள்ளேயே மணம் கொள்ளும் அகமண முறை காணப்படுகிறது. தோடர்களின் தெவிளியாள், தேர்த்தாள் கால்வழியினர் தத்தம் குழுவினருக்குள் மணம் கொள்கின்றனர். இவ்வாறே பில் குடிகளிலும், உச்சேல்பில், (Uchel Bhil), மெலி பில் (Mele Bhil) ஆகிய இரு அகமணக் கால் வழிக் குழுவினருக்குள் மணம் கொள்ளும் முறை காணப்படுகிறது.

அகமணம், புறமணம் ஆகிய இவ்விரு முறைகளிலும் ஆதிக்குடிகளுள் பெரும்பாலோர் பல்மண முறையைக் கொண்டுள்ளனர். முர்டாக்கின் உலக இனப் பரப்பளவியல் ஆய்வில் குறிக்கப்பட்டுள்ள எடுத்துக்காட்டுகளில் 44 விழுக்காட்டினர் பல் மனைவி குடும்ப முறையைக் கொண்டுள்ளனர். நான்கு பண்பாடுகளில் மட்டுமே பல்கணவர் முறை காணப்படுகிறது. நாகர் (Naga), பெய்கா (Baiga), கோண்டு (Gond), பில் (Bhil), செஞ்சு (Chenchu), யானாதி (Yanadi), கோத்தர் (Kota), காதர் (Kadar) முதலிய குடிகளில் பல் மனைவியர் குடும்ப அமைப்புக் காணப்படுகிறது. எசுகிமோவினர் பல மனைவியரைக் கொண்டிருப்பதை உயர்ந்த தகுதியாகக் கருதுகின்றனர். வட அமெரிக்காவின் சமவெளிப்பகுதியில் வாழும் கொமன்செசு குடிகள் பொருளாதாரச் செயற்பாடுகளுக்கு உதவியாகப் பல பெண்களை மணக்கின்றனர். ஆப்பிரிக்கப் பகண்டா குடிகளில், கணவனின் தந்தைவழிப் பாட்டியின் கால்வழிக் குழுவினரிடமிருந்து பெறப்படும் இரண்டாம் மனைவி, முதன்மைப் பணிகளைப் பொறுப்பேற்று நடத்துகிறாள். அங்கோலாக் (Angola) குடிகளில் தலைவன் பதினொன்றுக்கும் மேற்பட்ட மனைவிகளைக் கொண்டுள்ளான். தோடர் (Toda), கேலாங்கு (Gallong), இலடாக்கி (Ladakhi), போண்டா (Bonda), வட துருவ எசுகிமோக்கள் (Eskimos), ஆப்பிரிக்க திபேத்து, கிழக்கு ஆப்பிரிக்க அமெரிக்க-இந்திய ஆதிக்குடிகள் ஆகியோரிடையே பல்கணவர் முறை காணப்படுகிறது. தோடர் குடிகளில் உடன்பிறந்தோர் அனைவரும் ஒரே பெண்ணை மணந்து கொள்கின்றனர். சூல் கொண்டதனை அறிவிக்கும் சடங்கில் கணவருள் ஒருவன் மட்டும் மனைவியிடம் வில்லைப் பரிசளித்துப் பிறக்கும் குழந்தைக்குத் தந்தை உரிமையைப் பெறுகிறான். பெரும்பாலான பல்கணவர் குடும்ப அமைப்புகளில் பெண் குழந்தை பிறந்தவுடன் கொன்றுவிடுவர். இப்பொழுது இம்முறை தடுக்கப்பட்டு விட்டது. எசுகிமோ, சோசோனியர் குடும்ப அமைப்புச் சற்று வேறுபாடானது. இவர்கள் வாழ்க்கைப் பயணத்தை அடிப்படையாகக் கொண்டதால் இவர்கள் செல்லும் ஒவ்வொரு சிற்றூரிலும் குறைந்தது ஒரு நண்பரையாவது கொண்டிருப்பர். இக்கிராமங்களுக்குச் செல்லும் பொழுது நண்பர்களின் மனைவிகளிடம் உடலுறவு கொள்வர். பயணத்தின்பொழுது தம் மனைவியின் உடலுறவு மற்றும் அன்றாடச் செயற்பாடுகளில் துணைநிற்கப் பொறுப்புள்ள நண்பனை அமர்த்துவர். விழாக்காலங்களிலும், சிறப்பு நிகழ்ச்சிகளின் பொழுதும் மனைவியரை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளும் முறை ஆதிக்குடிகளிடையே பரவலாகக் காணப்பட்டது.

ஆதிக்குடிகளின் பலதார மணமுறையில் "மதனி மணம்" (Levirate) 'மைத்துனி மணம்' (Sororate) முதலானவை உற்று நோக்கத்தக்கன. அண்ணன் இறந்துபட்ட நிலையில் அவன் மனைவியைத் தம்பி மணந்துகொள்ளும் முறை மதனி மணமாகும். சந்தால், கோண்டு, காரியா, நாயர் முதலான குடிகளில்மதனி மணம் காணப்படுகிறது. தன் மனைவி

இறந்துபட்ட நிலையில் அவள் தங்கையை மணக்கும் முறை மைத்துனி மணமாகும். கோண்டு, காரியா குடிகளில் இவ்வித மணமுறை காணப்படுகிறது. மதனி, மைத்துனி மணத்தை ஒத்த 'பல சகோதரர் கணவர் முறை' (Adelphic or Fraternal Polyandry), 'பல சகோதரியர் மனைவியர் முறை' (Sororal Polygyny) ஆகியன ஆதிக்குடிகளிடையே காணப்படுகின்றன. ஒரு பெண் இரண்டு அல்லது இரண்டிற்கும் மேற்பட்ட ஆண்களை மணம் செய்து கொள்ளும் முறை பல கணவர் மணமுறையாகும். இம்முறையில் கணவர்



அந்தமான் ஓஞ்சிப் பழங்குடிகள்



தோடப் பழங்குடி

ஆந்திரப் பழங்குடி – செஞ்சு



பதகப் பழங்குடிப் பெண்கள்



கள் உடன் பிறந்தாராக இருப்பின் அது 'பலசகோதரர் கணவர் முறை' எனப்படுகிறது. இம்முறை தோடர் குடிகளிடையே காணப்படுகிறது. இதைப் போன்றே இரண்டிற்கும் மேற்பட்ட சகோதரிகளை மணம் கொள்ளும் முறை 'பல சகோதரியர் மனைவியர் முறை'யாகும்.

ஆதிக்குடிகளின் பொருளாதாரம் அவர்களின் இயற்கைச் சூழ்நிலைக்கேற்ப அமைந்திருப்பதால் அவர்கள் இயற்கையோடு செயற்படும் முறை, உற்பத்தி முறை, உற்பத்தியைப் பகிர்ந்துகொள்ளும் முறை, விற்பனை முறை, சொத்துரிமை முறை ஆகிய பல்வேறு கூறுகளின் தோற்றம் ஒவ்வொரு ஆதிக்குடியின் சமூக, பண்பாடு அமைப்புகளிலும் ஆழமாகப் பதிந்திருக்கும். வேட்டையாடுதல், உணவு சேகரித்தல், கால்நடை வளர்த்தல், தோட்டப் பயிரிடுதல், வேளாண்மை செய்தல் ஆகியவற்றை முதன்மைத் தொழிலாகக் கொண்ட ஆதிக்குடிகளிடையே காணப்படும் பல்வேறு பொருளாதாரச் செயற்பாடுகளிலும் அச்செயற்பாடுகளுக்கேற்ப ஒருங்கிணைந்த அமைப்புகள் காணப்படும்.

வேட்டையாடுதல், உணவு சேகரித்தல் ஆகிய தொன்மையான பொருளாதாரத்தைக் கொண்ட ஆதிக்குடிகள் பரவலாகக் காணப்படுகின்றனர். ஆப்பிரிக்கா, ஆசுத்திரேலியா, அமெரிக்கா, அந்தமான், பாலினேசியா, மலனேசியா, இலங்கைத்தீவு ஆதிக்குடிகளிடையேயும், திருவாங்கூர், கொச்சி மலைச்சாரலில் வாழும் இந்திய முதுபழங்குடிகளிலேயே தொன்மையானவர்களான காடர், மலைப்பண்டாரம் (Malai Pandaram) ஆகியோரிடையேயும் வேட்டையாடுதலும் உணவு சேகரித்தலுமே முதன்மைத் தொழில்களாகக் காணப்படுகின்றன. உணவு சேகரிக்கும் ஆதிக்குடிகளிலேயே மிகப் பெரிய இந்திய ஆதிக்குடியாக ஆந்திரப் பிரதேசத்தின் செஞ்சுகள் காணப்படுகின்றனர்.

வேட்டையாடுதல் மற்றும் உணவு சேகரிக்கும், ஆதிக்குடிகள் பரவலான பொருளாதாரக் கட்டமைப்புகளைக் கொண்டுள்ளனர். இக்குடியினர் குடும்பமாக, சிறு பிரிவாக, கால்வழிக் குழுவாகப் பிரிந்து வேட்டையை மேற்கொள்ளுவர்.

வேட்டைக்கு முன் விரிவான சடங்கு முறையும், ஆண்டில் ஓரிரு முறை சடங்கு வேட்டையும் இக்குடிகளில் காணப்படும் பொதுப்பண்புகளாகும். வேட்டையாடுதல் உணவு சேகரித்தல் மேற்கொள்ளும் ஆதிக்குடிகளிடையே ஆண், பெண் இருபாலாரும் பொருளாதாரச் செயற்பாடுகளில் சமமாக ஈடுபடுகின்றனர். பொதுவாக இக்குடிகள் மிகுதியான கால்நடைகளை வளர்ப்பதில்லை.

நிலையான வாழிடப் பகுதியையும் உறைவிடத்தையும் கொண்டிராமல் இடம்விட்டு இடம் பெயரும் வாழ்க்கையை மேற்கொள்ளும் குழுக்களே நாடோடிகளாவர். தம் முதன்மைத் தொழிலுடன் சில துணைத் தொழில்களையுங் கொண்டு சீராக இடம் விட்டு இடம் நகர்ந்துகொண்டேயிராமல் குறிப்பிட்ட காலம் வரை இடைக்காலச் சிறு இருப்பிடத்தை அமைத்து வாழ்பவர்கள் அரை நாடோடிகளாவர். நாடோடி ஆதிக்குடிகள் தாம் கொண்டுள்ள தொழிலிற்கேற்பப் பிச்சை எடுக்கும் நாடோடி, உணவு சேகரிக்கும் நாடோடி, கால்நடை வளர்க்கும் நாடோடி, குற்றவாளி நாடோடி எனப் பல வாறாகப் பாகுபடுகின்றனர்.

அடிப்படையில் நாடோடிகள் கால்நடை வளர்த்தலையே முதன்மைத் தொழிலாகக் கொண்டிருக்கின்றனர். நடு ஆசியக் கால்நடை வளர்ப்பவர் ஆசுத்திரேலிய நாடோடிகள், கிழக்கு ஆப்பிரிக்கச் சியே (Siye), மாசி (Masi), வட ஆப்பிரிக்கப் புலானி (Pulani), தென்னாப்பிரிக்க இசுடெப்பிகள், ஏமனின் ஒட்டக, குதிரைத் தரகர்கள், ஆடு வளர்ப்பவர்களான அரேபியர் ஆகிய அனைவரும் இடம் விட்டு இடம் பெயர்ந்து கொண்டே கால்நடைகளை மேய்ப்பதுடன், கால்நடை வணிகத்திலும் ஈடுபடுகின்றனர்.

குற்றவாளி நாடோடி ஆதிக்குடிகளுள் பீகாரின் கார்வால் (Karwal), ஆந்திரப் பிரதேசத்தின் எருகுலர் ஆகியோர் புகழ் பெற்றவர்கள். கார்வால் நாடோடிகள் ஆடுகளைச் சில நொடிகளில் தூக்கிச் செல்வதிலும், 90 அடிக்கும் மேற்பட்ட துணியாலான காக்ராசு என்னும் ஆடையணிந்த கார்வால் பெண்கள் ஆடுகளைக் கத்தவிடாமல் ஆடைக்குள் மறைத்து நெடுந்தூரம் எடுத்துச் செல்வதிலும், பயணம் செய்யும் வண்டிகளிலிருந்து நுணுக்கமான முறையில் தானியங்களைத் திருடுவதிலும் வல்லவர்கள். கார்வால் ஆதிக்குடிகளுள் ஒரு பகுதியினர் பிச்சை எடுக்கும் நாடோடியாகவும் காணப்படுகின்றனர்.

கால்நடை வளர்த்தலை முதன்மைத் தொழிலாகவும், தம் கால்நடைகளில் இருந்து பெறப்படும் பொருள்களின் அடிப்படையில் அமையும் பொருளாதார அமைப்பைக் கொண்டவர்களாகவும் உள்ளவர்கள் ஆயர் ஆதிக்குடிகளாவர். ஆப்பிரிக்காவின் பண்ட்டு (Bantu), அருணாசலப் பிரதேசக்கேலாங்கு, உத்தரப் பிரதேச இமயமலைத் தாழ் பகுதியில் வாழும் சவுன் சாரி ஆகிய ஆதிக்குடிகள் ஆயர் வாழ்க்கையை மேற்கொண்டுள்ளனர். ஆதிக்குடிகளிலேயே சைவ உணவமைப்பைக் கொண்ட நீலகிரி மலையில் வாழும் தோடர்கள் பலகணவர் மணமுறையைக் கொண்டுள்ளனர். மானிடவியலாரிடையே சிறப்பிடத்தைக்

கொண்டுள்ள தோடர்களின் பொருளாதாரப் பிணைப்பும் இத்துறையில் புகழ்பெற்றதாகும். தோடர்கள் தம் கால்நடைகளிலிருந்து பெறப்படும் பால், இறந்துபட்ட கால்நடைகள், சடங்கு நிகழ்ச்சிகளில் வைக்கும் இறைச்சி ஆகியவற்றை வேளாண் ஆதிக்குடிகளான படகர், கைவினை ஆதிக்குடியினரான கோத்தர், உணவு சேகரித்தலும் மந்திரங்கள் கற்றலும்உடைய குறும்பர் ஆகியோர்க்குக் கொடுத்து ஈடாகத் தமக்குத் தேவையான பொருள்கள் அல்லது உதவிகளைப் பெறுகின்றனர்.

ஆப்பிரிக்க நுயர் ஆதிக்குடிகள் கலப்புப் பொருளாதாரத்தைக் கொண்டிருப்பினும் ஆயர் வாழ்க்கையையே முதன்மையாகக் கொண்டுள்ளனர். பால் பொருள்களை மிகுதியாக உண்ணும் இவர்கள் கால்நடைகளின் தோல், குளம்பு, கொம்பு, மயிர் ஆகியவற்றிலிருந்து அடிப்படைப் பொருள்கள் முதல் அலங்காரப் பொருள்கள் வரை பல பொருள்களைச் செய்கின்றனர். பொதுவாக ஆயர் ஆதிக்குடிகள் பாடல் புனைவதிலும் பாடுவதிலும் மிகுந்த விருப்பமும் வல்லமையும் கொண்டிருக்கின்றனர்.

உலக ஆதிக்குடிகளுள் பெரும்பாலானோர் வேளாண்மையை முதன்மைத் தொழிலாக ஏற்றுக் கொண்டு வருகின்றனர். 'பயிர்கள் வளர்த்தல்', 'விலங்கினங்கள் வளர்த்தல்' ஆகிய இவ்விரண்டும் புதுக் கற்காலத்தில் தோன்றியனவாகும். இவ்விரண்டு உற்பத்திக் கூறுகளையும் ஆதிக்குடியினர் ஒருமைப்படுத்திப் பயிர்செய்த முறையிலிருந்து தோன்றியதே 'உழுதல் பண்பாடாகும்'. இடம் விட்டு இடம் பெயர்ந்து காட்டை எரித்துப் பயிரிடும் முறையிலிருந்து உற்பத்தி மிகுந்த நிலையான வேளாண்மை முறை வரை காணப்படும் பல்வேறு நிலைகளைக் கொண்டுள்ள ஆதிக்குடிகளின் பொருளாதார அமைப்பிலும் கீழ் வரும் விரிவான முறைகள் காணப்படுகின்றன.

அமெரிக்க-இந்தியர், ஆசுத்திரேலியர், ஆப்பிரிக்கப் புசுமேன் (Bushman), இலங்கையின் வெத்தர், தாசுமேனியர் குடிகளில் ஒவ்வொரு குழுவும் வேட்டையாடுதற்கும், உணவு சேகரிப்பதற்கும் உரியவட்டாரப் பரப்புகளைத் தனித்தனியாகக் கொண்டுள்ளது. சில ஆசுத்திரேலிய ஆதிக்குடிகளில் அவர்கள் வாழும் பரப்பு இறந்தவர்களின் ஆவியைக் கொண்ட புனிதமான நிலமாகக் கருதப்படுவதால், அவரவர் பரப்புகளிலேயே பொருளாதாரச் செயற்பாடுகளில் ஈடுபடுகின்றனர்.

தோடர், கேலாங்கு, சவுன்சாரி (Jaunsari) ஆயர் ஆதிக்குடிகள் மேய்ச்சல் நிலத்தைப் பொதுவாகக் கொண்டுள்ளனர். ஆப்பிரிக்க ஆயர் குடிகள் மேய்ச்சல் நிலத்தை மழைக் காலத்தில் பொதுவானதாகவும், வறட்சிக் காலத்தில் அவரவர் பரப்புகளிலேயே மேய்க்கும் தன்மையதாகவும் கொண்டிருக்கின்றனர்.

தோட்டப் பயிரிடும் இந்தோனேசிய ஆதிக்குடிகளின் நிலம் பொதுவானது. குழுத்தலைவன் அல்லது சிற்றூர்த் தலைவன் அனுமதி பெற்று நிலத்தைப் பயிரிடுகின்றனர். வேறொரு குழுவின் நிலத்தைப் பயிரிட விழையும்பொழுது, அக்குழுத் தலைவனுக்குப் பணமளித்து ஓராண்டிற்குப் பயிரிடுகின்றனர். பிலிப்பைன்சுத் தீவின் இபுகோவினரும் இம்முறையையே கொண்டுள்ளனர். பியூப்லோ இந்தியக் குடிகளில் சிற்றூர்த் தலைவன் ஒவ்வொருவருக்கும் நிலத்தைப் பங்கீடு செய்கிறான். பங்கீடு செய்யாத பொது நிலத்தினைத் தலைவன் அனுமதி பெற்றுப் பயிரிடுகின்றனர்.

வளர்ச்சி பெற்ற ஆட்சியமைப்புடைய ஆப்பிரிக்க ஆதிக்குடிகளில் நில உரிமையுடைமை பரவலான முறையில் பகிர்ந்தளிக்கப்படுகிறது. கானாவின் அசாந்தி குடிகளில் நிலம் அரசனைச் சார்ந்ததாகும். அரசன் நிலத்தைத் தனக்கடுத்துள்ள தலைவர்களிடம் பகிர்ந்தளிக்கிறான். இந்நிலத்தை ஒவ்வொரு கால்வழித் தலைவனும் பெற்றுத் தன் கால்வழியின் ஒவ்வொரு குடும்பக் குழுக்களுக்கும் பகிர்ந்தளிக்கிறான். பொதுப் பணிகளில் ஈடுபடுத்துதல், வரி வசூலித்துச் செலுத்துதல், படைப் பிரிவில் பணியாற்றச் செய்தல் முதலானவற்றை ஒவ்வொரு கால்வழித் தலைவனும் கண்காணிக்கிறான். ஆதிக்குடிகளில் சொத்துரிமை, தனியொருவரிடமோ கூட்டாகவோ, குழுவிடமோ, அச்சமூகத்திடமோ இருக்கிறது. திரோபிரியாண்டுத் தீவினரின் பொருளாதார அமைப்பில் படகு உரிமை முதன்மையானதாகக் கருதப்படுகிறது. தனியொருவனுக்கு உரிமையானதாக இருப்பினும், தன் கால்வழியினர் மீன் பிடிக்கச் செல்லும்பொழுது படகைத் தர மறுப்பதில்லை. கலிபோர்னியாவின் யூரொக்குக்குடிகளிலும் படகுகள் தனியொருவருக்கே உரிமையானவை என்பது காணப்படுகிறது.

உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களைக் கையாளும் பல்வேறு முறைகளை முதன் முதலில் பொருளியல் ஆய்வாளர் கார்ல் பொலானியா ஆராய்ந்தார். எதிரிடைப் பரிமாற்றம், மறுபகிர்ந்தளித்தல் பரிமாற்றம், சந்தைப் பரிமாற்றம் ஆகிய மூன்று முதன்மையான நிலைகளில் ஆதிக்குடிகளிடையே பொருள்கள் கையாளப்படுகின்றன.

நீலகிரி மலைத் தொடரில் வாழும் வேளாண் ஆதிக்குடியினரான படகர், கைவினை ஆதிக்குடியினரான கோத்தர், மந்திரம் கற்ற உணவு சேகரிக்கும் குறும்பர், ஆயர் ஆதிக்குடியான தோடர் ஆகிய இந்த நான்கு தென்னிந்திய ஆதிக்குடிகளுக்கிடையே நிலவும்

கொண்டு கொடுத்தல் உற்றுநோக்கத்தக்கது. தோடர்கள் தம் பால்பொருள்கள், கால்நடைகள், சடங்கு நிகழ்ச்சிகளில்வைக்கும் இறைச்சி ஆகிய வற்றைக் கொடுத்துப் படகர்களிடமிருந்து தானியங் களையும், கோத்தரிடமிருந்து இரும்புப் பொருள் களையும், குறும்பரிடமிருந்து சடங்கு நிகழ்ச்சிகளில் மந்திரம் சொல்லும் உதவியையும், மந்திரத்தால் நோயைக் குணப்படுத்தும் உதவியையும் பெறு கின்றனர். கோத்தர், படகர், குறும்பர் ஆகியோரும் தத்தம் பொருள்களுக்கு ஈடாகத் தமக்குத் தேவை யான பொருள்கள் அல்லது உதவியினைப் பெற்றுக் கொள்கின்றனர்.

வட அமெரிக்காவின் வடமேற்குக் கடற்கரைப் பகுதிகளில் வாழும் அமெரிக்க இந்தியர்களிடையே காணப்படும் 'பண்டமளிக்கும் விரயச் சடங்கு' **(Potlatch)**, குன்றிய பண்பாட்டினைக் கொண்ட அந்தமானியரின் அன்றாட வாழ்வில் காணப்படும் 'அன்பளிப்புப் பரிமாற்றம்', மலனீசியரின் 'பன்றிப் பரி மாற்றம்', ஆப்பிரிக்கர்களின் 'கால்நடைப் பரி மாற்றம்', நூயர் 'திருமணப்பசு' பரிசமுறை, வட மேற்குக் கரை மலனீசியரின் 'குலா பரிமாற்றம்' **(Kula Exchange)** முதலான புகழ்பெற்ற முறைகள் ஆதிக்குடிகளின் பொருளாதார அமைப்பினை விவரிப்பதாகும்.

அரசன் அல்லது தெய்வத் தன்மையுற்ற தலைவன் அல்லது படைப்பிரிவுத் தலைவனைக் கொண்ட ஆதிக்குடிகளில் ஆணையுரிமை ஓரிடம் குவிந்து காணப்படும். இவர்கள் உற்பத்திப் பொருள்களையும் செயல் உதவிகளையும் தம் சமூகத்தினருக்குப் பகிர்ந் தளிக்கும் உரிமையைக் கொண்டுள்ளனர். 'நாடு' அமைப்பைக் கொண்ட தோட்ட வேளாண்மை செய்யும் ஆதிக்குடி சமூகங்களிடையேயும், ஆப்பிரிக்க ஆதிக்குடி நாடுகளிடையேயும் காணப்படும். இம் முறையில் தலைவன் தன் குழுக்களுக்குப் பகிர்ந் தளித்த நிலத்திலிருந்து வரும் உற்பத்தியை அரசுச் செலவினம் தவிர்த்து எஞ்சியவற்றை மக்களுக்கே பகிர்ந்தளிக்கிறான்.

தொடக்கக் காலச் சந்தைப் பரிமாற்றத்தில் பெரும்பாலும் பண்டமாற்று முறையே காணப் படினும், ஆதிக்குடிகளிடையே 'பணமுறை' ஏற்பட்ட வுடன் பொருள்களை விற்றுத் தேவையான பொருள் களைப் பெறும் முறை பரவலாகியது. மௌனப் பரிமாற்ற முறையும் ஆதிக்குடிகளிடையே காணப் படுகிறது. இப்பரிமாற்றம் ஆதிக்குடிகளிடையே பகைமை நிலவும் காலத்தில் பொதுவான இடத்தில் தங்கள் பொருள்களை வைத்துப் பரிமாற்றம் செய்து கொள்வர்.

ஆதிக்குடிகளிடையே ஆட்சியமைப்பு மூன்று நிலைகளில் காணப்படுகிறது. அவையாவன: எளிய தலைவனற்ற ஆதிக்குடிகள் **(Simple Acephalous Tribes)**, தலைவனற்ற பிரிவுடைய ஆதிக்குடிகள் **(Simple Segmentary Tribes)**, அதிகாரம் ஓரிடத்தில் கொண்ட ஆதிக்குடிகள் **(Centralized Tribes)** ஆகும். இவை தவிர்த்துச் சில மானிடவியலார் நாடற்ற ஆதிக்குடிகளெனவும் **(Stateless Tribes)**, நாடு அமைப்புடைய ஆதிக்குடிகளெனவும் **(State Organized Tribes)** பாகுபடுத்துகின்றனர்.

எளிய தலைவனற்ற ஆதிக்குடிகள் தன்னாட்சி யுரிமை கொண்ட சிறு குழுக்களாகவோ சிற்றூர் களாகவோ காணப்படுகின்றன. மிகுந்த கட்டமைப் பைக் கொண்ட இக்குழுவினர் அனைவருமே உறவினர் களாகக் காணப்படுவர். இபோ, மெண்டே, அத்தா பாசுகன் குடியினர் இவ்வமைப்பைக்கொண்ட ஒரு சிலராவர்.

தலைவனற்ற பிரிவுடைய ஆதிக்குடிகளில் பெரும் பாலோர் ஒரு வழிக்குழுக்களாக **(Unilineal Groups)** அமைந்து ஒவ்வொரு குழுவுக்கும் ஒரு தலைவனைக் கொண்டிருப்பர். ஒவ்வொரு கால்வழிக் குழுவினரும் தனித்தனியான ஆட்சியமைப்பைப் பெற்றிருந்தாலும் சில செயற்பாடுகளில் இரண்டு அல்லது அதற்கு மேற் பட்ட குழுக்களாக இணைந்து செயற்படுகின்றனர்.

ஆப்பிரிக்க ஆதிக்குடிகளிலும் அமெரிக்க-இந்திய ஆதிக்குடிகளில் ஒருசிலரிடையேயும் நடுவண் ஆட்சிய மைப்பு முறை காணப்படுகிறது. இரண்டிற்கும் மேற் பட்ட ஆதிக்குடிகள் அல்லது குழுக்கள், அரசன் அல் லது ஆட்சிக்குழு அல்லது தலைவனைக் கொண்டு ஒரே ஆட்சியின் கீழ்ச் செயற்படுகின்றன. ஆணையுரி மையை ஓரிடத்தில் கொண்ட இத்தகு ஆதிக்குடி களில் இருபிரிவுகள் காணப்படுகின்றன. பெரு ஆண்டிசு, அரவனிசுலா, கிழக்குப் பொலிவியா ஆகிய பகுதிகளில் வாழும் ஆதிக்குடிகளில் தெய்வத் தன்மை யுற்றவரும் சிப்கோ, இராக்குவிசு, மெகா ஆதிக்குடி களில் படைப்பிரிவுத் தலைவனும் தலைமைப் பொறுப்பை ஏற்கின்றனர்.

இந்திய ஆதிக்குடிகளுள் பெரும்பாலானோர் தலைவன் அல்லது சிற்றூர்த் தலைவனை நியமித்துச் செயற்படுகின்றனர். இத்தலைவனுக்கு உதவிபுரியப் பல்வேறு கால்வழிக் குழுக்களிலிருந்து உறுப்பினரைக் கொண்ட ஆட்சிக்குழு **(Tribal Council)** அமைக்கப் படுகிறது. நடு இந்திய ஆதிக்குடிகளிடையே சில சிற்றூர்களுக்குப் பொதுவானதொரு பஞ்சாயத்து அமைத்துச் செயற்படும் முறை உள்ளது.

பன்னாட்டு ஆதிக்குடிகளிடையே இளையவர் கூடங்களின் அமைப்பு சிறப்பிடத்தைக் கொண்டுள்

ளது. இருபாலாருக்கும் பொதுவாகவோ தனித்தனியாகவோ அமைந்து செயற்படும் இளையவர் கூடங்கள் ஒருவன் வாழ்நாளின் முற்பகுதியில் கற்க வேண்டியவற்றைக் கற்பிக்கும் கல்விக் கூடமாகவும் பொருளாதாரச் செயற்பாட்டினைக் கற்பிக்குமிடமாகவும், மந்திரத்தைத் தன்னுட்கொண்ட மதத்தினைப் பயிற்றுவிக்கும் கூடமாகவும், பண்பாட்டின் சிறப்புக் கூறுகளைச் சிதையாமற் காக்குமிடமாகவும், திருமணத்திற்கு முந்தைய நிலையில் உடலுறவுச் செயல்களை அறிமுகப்படுத்துமிடமாகவும், விருந்தினர் தங்குமிடமாகவும் விளங்குகின்றன. ஆதிக்குடிகளில் இதன் சிறப்புத் தன்மை மிகுதியாகக் குறைந்து கொண்டே வருகிறது. காண்க: ஆதிக்குடிகளின் இளையவர் கூடங்கள்.

வயது அடிப்படைக் குழுக்கள் (Age Classes or Age Sets) ஆப்பிரிக்காவின் அனைத்துக் குடிகளிலும் காணப்படுகிறது. நண்டி, சுவாசி, நுயர், நாயக்பூசா குடிகளில் காணப்படும் இக்குழுக்கள் பருவமடைந்த இளைஞர்களைக் கொண்டு, படைப்பிரிவு இயக்கமாகவும் செயற்படுகின்றன.

ஆதிக்குடிகளில் இரகசியச் சங்கங்கள் (Secret Society) காணப்படுகின்றன. குக் கிளக்சு கிளான், எக்போ, பியூப்லோ இந்தியர்களும், கென்யாவின் கிக்கயூ ஆகிய குடிகளில் பருவமடைந்த ஆண்களும் இச்சங்கத்தில் உறுப்பினராகிறார்கள். சடங்குகள், மந்திர வித்தை, பருவமடைந்த நிலைக்குண்டான தகுதியை அறிதல் ஆகிய செயற்பாடுகளைக் கொண்ட குழுவாகக் காணப்பட்டாலும் இது படைப் பிரிவுக் குழுவாகவே செயற்படுகிறது. தலைவனின் கண்காணிப்பிலிருந்து செயற்படும் இக்குழு, சமூக நடத்தைகளைக் கட்டுப்படுத்துவதிலும் மிகுதியாகப் பயன்படுத்தப்படுகிறது. ஒவ்வொரு நைசீரியச் சிற்றூர்களிலும் காணப்படும் இச்சமூகம் 'ஓகோ' என்று சொல்லப்படுகிறது. இவர்களின் நடத்தைகளை 'எக்பீ' ஆவி கட்டுப்படுத்துவதாகக் கருதுகின்றனர். வயது, பால், வாழிடம் ஆகியவற்றின் அடிப்படையில் உறுப்பினர்களைச் சேர்த்துக் கொள்கின்றனர். காண்க: இரகசியச் சங்கங்கள்.

ஆதிக்குடிகளின் பெரும்பாலான சமூகங்கள் ஆவி நம்பிக்கையுடைய சமயங்களையும், இயற்கை வழிபாடு, குலக்குறி வழிபாடு, முதியோர் வழிபாடு முதலானவற்றையும் கொண்டுள்ளன.

ஆவியுலக (Animism) நம்பிக்கை கொண்ட ஆதிக்குடிகள், தங்களைச் சுற்றிக் கண்ணுக்குப் புலனாகாத எண்ணற்ற ஆவிகள் அன்றாடச் செயற்பாடுகளைக் கட்டுப்படுத்துகின்றன என்று நம்புகின்றனர். இவ்வாவிகள் அவர்கள் செயல்களுக்குக் கட்டுப்பாடு விதிக்கவோ ஊறு விளைவிக்கவோ முடியும் என்பதால், ஒவ்வொரு செயலுக்கும் அச்செயலுக்குத் தொடர்புடைய ஆவியை வழிபடுகின்றனர். இதனால் ஆதிக்குடிகளின் வாழ்வில் சடங்குகள் நிறைந்து காணப்படுகின்றன.

இயற்கையிறந்த ஆற்றலின் நம்பிக்கைக்குட்பட்ட உயிரியம் (Animatism) அடிப்படையிலான சமயமும் ஆதிக்குடிகளிடையே காணப்படுகிறது. உயிர் உள்ளதும் புரிந்து கொள்ள முடியாததும் உருவமற்றதும் இயற்கைக்கப்பாற்பட்டதுமாகிய இவ்வாற்றல், மனித ஆற்றலுக்குட்பட்ட அனைத்துச் செயல்களையும் இயக்கவல்லது என நம்புகின்றனர். இவ்வாற்றல் உலகிலுள்ள உயிர்ப்பொருள், உயிரில்பொருள் எல்லாவற்றிலும் குடிகொண்டிருக்கும். இதன் தோற்றம் மனித உணர்வுகளுக்கப்பால் காணப்பட்டாலும், செயல் திறன் வழியாகவோ மிகத் திறனுள்ள மனிதச் செயல்களின் வழியாகவோ வெளிப்படும் இயல்புடையது என்றும் நம்புகின்றனர். மலனீசியர் இவ்வாற்றலை 'மனா' (Mana) என்றும், இந்திய ஆதிக்குடிகள் 'போங்கா' என்றும் குறிக்கின்றனர். ஓ (Ho), முண்டாக் குடியினர் போங்காவிற்கு உருவமோ வடிவமோ ஏற்கும் தன்மை கிடையாதென்றும், விலங்குகளுக்கும் தாவரங்களுக்கும் அது உயிரையும் வளர்ச்சியையும் கொடுக்கக்கூடியது என்றும், மழை, புயல், வெள்ளம், கடுங்குளிர் ஆகியவற்றிற்கும் போங்காவே காரணமென்றும் நம்புகின்றனர். மலனீசியரின் நம்பிக்கையும் இதற்கு இணையானது எனலாம்.

மரம், மலை, ஆறு, சூரியன், சந்திரன் முதலான இயற்கைப் பொருள்களையும் வழிபடும் முறை ஆதிக்குடிகளிடையே காணப்படுகிறது. அசாமின் கேரோக் குடியினர் சூரியனையும் சந்திரனையும், முண்டாக் குடியினர் சூரியனையும் வழிபடுகின்றனர். சரிகட்டாவு, அப்பாச்சி, பகண்டா, அசுதக்குக்குடியினர் இயற்கையிறந்த ஆற்றல்களுடன் மக்களுக்கு மிகுந்த பிணைப்பு இருப்பதாக நம்புகின்றனர். 'மலை ஆவிகள்' இவர்களின் முகவராக இருந்து நல்ல தண்ணீரை வழங்குகின்றன என்று நம்புவதால், மலை ஆவிகளுக்குச் சிறப்பான வழிபாடுகளைச் செய்கின்றனர்.

ஆதிக்குடியினர் சிலர் குலக்குறி (Totem) வழிபாட்டினையும் கொண்டிருக்கின்றனர். குலக்குறி பொதுவாகத் தாவரமாகவோ விலங்காகவோ காணப்படுகிறது. இதிலிருந்தே ஆதிக்குடியினர் அல்லது அவர்களின் கால்வழியினர் தோன்றினர் என நம்புவதால் ஒருசில நிகழ்ச்சிகளைத் தவிர்த்துத் தம் குலக்குறியினைக் கொல்வதோ உண்பதோ கிடையாது. முன்னோர் வழிபாடும் ஆதிக்குடிகளிடையே பரவலாகக் காணப்படுகிறது. தொன்மம் அல்லது

உண்மையான மூதாதையரிலிருந்து தம் குழு தோன்றியது என நம்புவதால் மூதாதையர் வழிபாட்டிலும் விரிவான சடங்குகள் மேற்கொள்ளப்படுகின்றன. மந்திரம், சூனியம் ஆகியவையும் ஆதிக்குடிச்சமயத்தின் முதன்மைக் கூறுகளாகக் காணப்படுகின்றன. காண்க: ஆதிக்குடிகளின் சமயமும் மாயவித்தையும்; ஆவியுலகக் கோட்பாடு; உயிரியம்.

ஆதிக்குடிகளின் கல்வி முறை இருநிலைகளைக் கொண்டிருக்கிறது. குழந்தைப் பருவத்தில் தம் தாய் மொழியையும், தம் குடும்ப உறுப்பினர்களின் செயற்பாடுகளையும் கூர்ந்து நோக்கிக் கற்றுக்கொள்வதோடு தம் பண்பாட்டுக் குணநலன்களையும் அறிகின்றனர். குழந்தைப் பருவத்திற்குப் பின் பெரும்பாலான சமூக, பண்பாட்டு நெறிகள் இளையவர் கூடங்களிலேயே கற்பிக்கப்படுகின்றன. இங்கு முதியவர்கள் தம் இனக் குழுவின் அகப்பண்பாட்டுக் கூறுகளைக் கற்பிக்கின்றனர். இளையவர் கூட முறை பன்னாட்டு ஆதிக்குடிகளிடையே வெகுவாகச் சிதைந்துவிட்ட இன்றைய நிலையில், ஆதிக்குடியினர் தம் பகுதிகளில் அமைக்கப்பட்டிருக்கும் அரசுப் பள்ளிகளிலேயே கற்கின்றனர். எனவே அவர்களின் கல்வி நகர்ப்புறச் சார்புடையதாய் மாறிவருகிறது. இந்தக் கல்விமுறை தங்கள் பொருளாதார மேம்பாட்டிற்கு நேரடியாக உதவுவதையும் நன்கு உணர்ந்து வருகின்றனர்.

இந்திய ஆதிக்குடிகளின் மொழிகளைச் செயல்முறை நோக்கத்தோடு கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் ஆராய முற்பட்டனர். இக்காலத்தில் இசுகாண்டிநேவியர், இந்தியாவில் மேற்கொண்ட சந்தாளி மொழியின் ஆராய்ச்சி வெகுவாகப் பயனளித்ததால், அதிக மக்கள்தொகை கொண்ட பிற ஆதிக்குடிகளின் கிளைமொழிகளும் ஆராயப்பட்டன.

இந்திய-ஐரோப்பிய (ஆரியன்), திராவிட, ஆசுத்திரிக்கு-ஆசியா, திபெத்-பர்மன் ஆகிய நான்கு மொழிக் குடும்பங்களைச்சார்ந்த இந்தியப் பழங்குடிகளின் மொழிகள் அனைத்தும் கிளைமொழிகளாகவே காணப்படுகின்றன. ஆதிக்குடிகளின் வளர்ச்சிக்கென நடத்தப்பட்ட பல கருத்தரங்குகளில் ஆதிக்குடிகளின் மொழிகளிலேயே தொடக்கக் கல்வி கற்பிக்கப்பட வேண்டுமென்ற அறிஞர்களின் கருத்திற்கேற்ப ஒரு சில பகுதியான மக்கள்தொகையுடைய ஆதிக்குடியினர் பேசும் சந்தாளி, முண்டா, கோண்டி, கோல் ஆகிய கிளைமொழிகளில் தொடக்கக் கல்வி கற்பிக்கும் புத்தகங்கள் உருவாக்கப்பட்டு வருகின்றன. ஆதிக்குடிகளின் தாய்மொழிகளிலேயே கல்வி கற்பிக்கும் முயற்சி பல நிலைகளில் பாதிக்கப்படுகிறது. பெரும்பாலான ஆதிக்குடிகளின் குடியிருப்புகள் ஓராசிரியர் கல்விக் கூடத்தையே கொண்டிருக்கும். பாடத்திட்டத்திற்கேற்பப் புத்தகங்கள் அமைத்து ஆதிக்குடிகளின் கிளைமொழிகளைக் கற்று அம்மொழிகளிலேயேயும் கற்பிக்கும் ஆசிரியர் எண்ணிக்கையும் குறைவாகவே இருக்கிறது. நாகர் மலைகளில் எண்ணற்ற கிளைமொழிகளுக்கிடையே பதினாறுக்கும் மேற்பட்ட மொழிகள் பேசப்படுகின்றன. ஒவ்வொரு மொழிக்கேற்பப் பாடப்புத்தகங்கள், ஆசிரியர் பயிற்சியளித்தல் முதலானவற்றில் இடர்ப்பாடு காணப்படும் நிலையில், வட்டார மொழிவழிக் கல்விமுறை பரவிவருகிறது.

இருப்பினும் ஆதிக்குடியினரின் குடும்ப அமைப்பில், ஒவ்வோர் உறுப்பினரும் பொருளாதாரச் செயற்பாட்டில் நேரிடையாக ஈடுபட வேண்டியிருப்பதால், கல்விக் கூடங்கள் வலுவாக அமையவில்லை. பொருளாதாரத்தைச் சார்ந்த கல்விமுறை, ஊக்கத்தொகை, இலவச நூல்கள், உணவு, உடை முதலான அரசின் திட்டங்கள் ஆதிக்குடிகளின் கல்வி வளர்ச்சியை ஊக்குவிக்கும் முதற்படியாக அமைந்திருக்கின்றன. சீ.ப.

துணை நூல்கள்:


Bose, N,K., Tribal Life in India, National Book Trust, New Delhi, 1971.

Gross, D.R., Peoples and Cultures of Native South America: An Anthropological Reader, The Natural History Press, New York. 1973.

James, L. and Gibbs Jr. (Eds). Peoples of Africa, Holt, Rinehart and Winston, Inc., New York, 1965.

Lowie, R.H., Primitive Society, Routledge and Kegan Paul Limited, London, 1921.

Thomas, N.W., Natives of Australia, Archibald Constable Company Limited, London, 1906.


**ஆதிக்குடிகளின் இளையவர் கூடங்கள்:** இளையவர் கூடங்கள் ஆதிக்குடிகளின் முதன்மையான பண்பாட்டுக் கூறுகளில் ஒன்றாகவும் அச்சமூகத்தின் பல்வேறு சமூகக் கட்டமைப்பில்லங்களுள் ஒன்றாகவும் விளங்கின. ஆதிக்குடிகளில் இவ்வமைப்பின் பல்வேறு கூறுகளைப் பல நிலையில் நின்று ஆராயும்பொழுது, அச்சமூகத்தின் பண்பாட்டு வளர்ச்சியில் இது ஒரு நிலை என்று எண்ணத் தோன்றுகிறது. 'ஒத்த வயதுடைய உறுப்பினர்களே மனித நடத்தைகளை வரையறுப்பதில் முதன்மையான பணியினைச் செய்கின்றனர். இவை இளையவர் கூடங்களில் கற்பிக்கப்படும் ஒழுங்குநெறிகளின் கருவாக அமைகின்றன' என இலோவி (Lowie) கருதுகிறார்.

வெரியர் எல்வின் (Verrier Elwin) கருத்துப்படி, 'சமூகம்' குடும்ப வாழ்க்கை ஆகியவற்றை நெறிப்படுத்துவது மட்டுமன்றிப் பொருளாதாரச் செயற்பாடுகளுக்கு மிகுந்த ஊக்கமளிக்கும் அமைப்பாகவும் இளையவர் கூடங்கள் திகழ்கின்றன'. ஒருவன் வாழ்நாளின் முற்பகுதியில் பல்வேறு வயது நிலைகளில் கற்க வேண்டியவற்றைக் கற்பிக்கும் கல்விக் கூடமாகவும் பொருளாதாரச் செயற்பாட்டினை அறிவுறுத்துமிடமாகவும், மந்திரத்தைத் தன்னுள் கொண்ட சமயத்தினைப் பயிற்றுவிக்கும் அல்லது ஊக்குவிக்குமிடமாகவும், பண்பாட்டின் சிறப்புக் கூறுகளைச் சிதையாமல் நிலைநிறுத்தும் களமாகவும், திருமணத்திற்கு முந்தைய நிலையில் உடலுறவுச் செயல்களை அறிமுகப்படுத்தும் இடமாகவும், பொழுது போக்கிடமாகவும், விருந்தினர் தங்குமிடமாகவும் இவ்வமைப்புத் திகழ்கிறது.

இளையவர் கூடங்கள் (Dormitories) தோன்றிய கருத்தைக் கூறுகையில் மானிடவியலாளர் சிலர் இவை சமூகக் கூடங்களின் எச்சம் என்கின்றனர். மக்கள் ஒரே கூரையின் கீழ் வாழ்ந்து வந்த காலத்தில் தனியிடம் அமைக்க முற்பட்டபொழுது அமைந்த முதல் நிலையே இளையவர் கூடங்கள் என அட்சன் கருதுகிறார். பெற்றோர் உடலுறவில் ஈடுபட்டிருத்தலைக் குழந்தைகள் பார்க்காவண்ணமிருக்கவும் இரத்த உறவுடையோருடன் உடலுறவுத் தொடர்பினைத் தவிர்க்கவும் ஏற்பட்டவையே இளையவர் கூடங்கள் என்பது சே.சேக்சுபியரின் கருத்தாகும்.

ஆப்பிரிக்கா, ஆசுத்திரேலியா, தென் அமெரிக்கா, இந்தோனேசியா ஆகிய நாடுகளிலும் அந்தமான், பிலிப்பைன்சு, திரோபிரியாண்டு (Trobriand), போர்னியோ, பாலினேசியா, மைக்ரோனேசியா, மலனேசியா, நியூகினியா ஆகிய தீவுகளிலும் இந்தியாவில் இமயமலைப் பகுதி, அசாம், மத்திய பிரதேசம் பீகார், ஒரிசா, ஆந்திரப் பிரதேசம், தமிழ்நாடு ஆகிய மாநிலங்களில் உள்ள ஆதிக்குடிகளிடையே காணப்படும் இளையவர் கூடங்கள் அவரவர் பண்பாட்டிற்கும் சமூக அமைப்பிற்கும் ஏற்பப் பல்வேறு பணிகளைக் கொண்டிருப்பதைக் காணலாம். ஆதிக்குடிகளின் இளையவர் கூடங்களுக்குப் பல்வகையான பெயர்கள் வழங்கப்பட்டதைப் பின்வரும் அட்டவணையில் காணலாம்.

| ஆதிக்குடிகள் | இருபாலார் கூடம் | இளைஞர் கூடம் | கன்னியர் கூடம் |
|---|---|---|---|
| அங்காமி நாகர் | கிச்சுகி | – | – |
| ஆவோ நாகர் | அரிச்சு | – | – |
| ஒரவன் | சொன்க்கு எர்ப | – | – |
| | தூம்கூரியா | – | – |
| | தங்கர்கூரியா | – | – |
| ஓ(Ho) | கித்தி-ஒர | – | – |
| கச்செய்ர்சு | திமாச | – | – |
| கந்தர் | தங்கரிபசா | – | – |
| குக்கி | நிங்கோன்வால் | – | – |
| குட்டியா கந்தர் | – | தங்கர-இல்லு | தங்கரி-இல்லு |
| கேரோ | தகாசங்கு | – | – |
| | நொக்பந்த்தெ | – | – |
| கொன்யக்கு நாகர் | – | பன் | யொ |
| கோண்டு | கொட்டல்கார் | – | – |
| திரோபிரியாண்டுத் தீவினர் | புக்குமத்துலா | – | – |

| | | | |
|---|---|---|---|
| தொங்கரியா கந்தர் | – | தங்கர-இல்லு | தங்கரி-இல்லு |
| நாகர் | மொருங்கு | – | – |
| | கிக்குச்சி | – | – |
| பிர்கர் | கித்தி-ஒர | – | – |
| பூயியாசு | தங்கரின்பசா | – | – |
| | மந்துகர் | – | – |
| பொண்டோ | – | இங்கர்சின் | செலனிடிங்கோ |
| போட்டியா | இரங்புங்கு | – | – |
| மல்பகாரியா | – | தாங்கர்-மெல | சாகின்-பால் |
| மாலர் | சோன்பகா | – | – |
| மிக்கிர் | விசோமர் | – | – |
| முண்டா | கித்தி-ஒர | – | – |
| முரியா | கோட்டுல் | – | – |
| மெமி நாகர் | – | இக்கூய்சி | இல்லாய்சி |
| மெய்தீசு | பாக்கொன்வால் | – | – |
| இலோடா நாகர் | சம்ப்போ | – | – |

தென்னிந்திய ஆதிக்குடிகளில் இளையவர் கூடங்கள் பரவலாகக் காணப்படுகின்றன. திருவாங்கூர்ப் பகுதியில் முதுவன், மன்னான், புலையன் ஆகிய குடிகளில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியாகக் கூடங்கள் அமைத்திருக்கின்றனர். இரவு உணவிற்குப் பின்னும் அவரவர் இடங்களிலேயே உறங்க வேண்டும். மைசூரின் காடுகளில் வசிக்கும் குறும்பர்களும் இவ்வகை அமைப்பினையே கொண்டுள்ளனர். பொதுவாக உடலுறவுக்கு இக்கூடம் அனுமதியளிப்பதில்லை. காணிக்காரர்களின் இளையவர் கூடங்கள் மணமாகாத இளைஞர் தங்குவதற்கும் விருந்தினர் தங்குவதற்கும் கிராம ஆட்சி நடத்துவதற்கும் பயன்படுகின்றன.

கோத்தர் ஆதிக்குடிகளில் இளையவர் கூடங்கள் காணப்படுகின்றன. நீலகிரியில் வாழும் முதன்மையான ஆதிக்குடியாகிய தோடர்களிடம் இவ்வகையான அமைப்பு இல்லை. குக்கி, கேரோ குடிகளில் காவற் குடில் என்ற மாறுபட்ட அமைப்பினைக் காணமுடிகிறது. இத்தகு குடில்கள் பயிர்களைக் காப்பதற்காக அதிக உயரத்தில் நிலங்களுக்கு அருகில் கட்டப்பட்டிருக்கின்றன. பெரிய அந்தமானிஅர்-யோட்டா கரைவாசிகளும், யெரம்-டகா காட்டுவாசிகளும் பல்வேறு சூழ்நிலைக்காக மூவகையான வீடுகளைக் கட்டுகிறார்கள். அதாவது, ஓரிரு மாதங்களுக்கு சிங்-தொர்ங்கா என்ற குடிசையையும், ஓரிரு வாரங்களுக்கு சாங்-தரங்கா என்ற மிக எளிமையான கூரையையும் தங்கள் வேட்டைத்தளத்திற்கு அல்லது மீன்பிடி இடத்திற்கு அருகாமையில் அமைத்துக் கொள்கின்றனர். ஏனைய காலங்களில் சாங்டேபிங்கா என்ற நிலையான வீட்டை அமைத்துக் கொள்கின்றனர். இவை தவிர, பெரிய அளவிலான சமூகக் குடில்களை நிலையான குடியிருப்புப் பகுதியில் கட்டுகின்றனர். இவை போன்ற சமூகக் குடில்களைப் போர்னியோத் தீவிலும் காணலாம்.

**இளையவர் கூடங்களின் அமைப்பு:** நாகர்களுக்குரிய சமூகக்கூடமான 'மொருங்கு' மூன்று பாகமாகப் பிரிக்கப்பட்டு, முதற்பாகம் பக்கங்களில் அடைக்கப்பட்டுத் தாழ்வாரமாக அமைந்துள்ளது. மொருங்கின் உட்புறத்தைத் தாழ்வான சுவர்களால் தடுத்து நடுவில் கணப்பு வைத்து மரப்பலகை, பாய் முதலான

விரிப்புகளால் பல படுக்கும் அறைகளாக அமைக்கின்றனர். பின்பகுதி அறையில் போர்க் காலத்தில் வெற்றிகொண்ட கவசங்கள், வெற்றிச் சின்னங்கள் ஆகியவை வைக்கப்பட்டுள்ளன. யானை, புலி, ஓணான், மனிதன் ஆகிய உருவங்கள் கருப்பு, வெள்ளை, செம்பழுப்பு முதலான நிறங்களால் சுவரில் வரையப்பட்டுள்ளமையைக் காணலாம். முன் சுவரில் கால்வழிக் குறியீட்டினைப் பெரிய அளவில் வரைந்திருக்கின்றனர். ஒரு சில நேரங்களில் பின்பகுதி அறை, கிடங்காகவும் பயன்படுகிறது.

அபர் குடிகளில் முந்நூற்றுக்கும் மேற்பட்ட இளைஞர்கள் ஒரே நேரத்தில் பல செயல்களில் ஈடுபடும் வகையில் இருநூறடி நீளம் கொண்ட கூடங்கள் பதினாறு அல்லது பதினேழு கணப்புகளைக் கொண்டுள்ளன. சிறிய அந்தமானின் சரவாக்குக் குடில்கள் அறுபதடி விட்டமும் இருபது முதல் முப்பதடி உயரமும் கொண்டவையாக இருக்கின்றன. மேற்கு ஆசுத்திரேலியாவில் இருவர் அரைமணிக்குள்ளாக அமைக்கும் குடில்கள் எட்டடி விட்டமும் நாலரையடி உயரமும் உடையனவாக இருக்கின்றன. போர்னியோ தீவுகளில் காணப்படும் சமூகக் குடில்கள் மிகப் பெரியவை. இருநூறு முதல் முந்நூறு பேர் தங்குவதற்கு ஏற்ற வகையில் ஐந்நூறு அடி நீளமும், இருபது முதல் அறுநூறு பேர் தங்குவதற்கு ஏற்ற வகையில் ஆயிரம் அடி நீளமும் முப்பது முதல் அறுபதடி அகலமும் கொண்டவையாக அமைத்திருக்கின்றனர்.

நாகர் பழங்குடிகளின் மொரூங்கு



தென்கிழக்கு ஆசுத்திரேலிய ஆதிக்குடிகளில் இளையவர் கூடங்களின் இட ஒதுக்கீடு குறிப்பிட்டு நோக்கத்தக்க வகையில் இருக்கிறது. உருஞ்செர்ரி ஆதிக்குடிகளில் கணவன், மனைவி, சிறிய குழந்தைகள் கிழக்குத் திசையிலும் இவர்களுக்கு வடக்கில் கணவனின் சகோதரர்களும், மேற்கில் கணவனின் பெற்றோர்களும், இதே திசையில் இருமடங்கு தூரத்தில் மனைவியின் பெற்றோர்களும் வசிக்கின்றனர். இறுதியில் குறிப்பிட்ட இரு இளையவர் கூடக் குடிகளும் முக்கோணமாக அமைகின்றன. பகலில் பெற்றோர்களும் இரவில் மணமாகாத இளைஞர்களும் தங்குமிடமாகப் பிலிப்பைன்சுத் தீவில் இளையவர் கூடம் திகழ்கிறது. அந்தமான் தீவுகளில் கிராமங்களின் அமைப்புக் கீழ்க்காணுமாறு அமைகிறது.

அ அ இ ஈ உ உ உ இ ஆ இ ஆ அ அ

அ. மணமாகியவர்கள்
ஆ. மணமாகாத இளைஞர்கள்
இ. மணமாகாத இளம் பெண்கள்
ஈ. பொதுச் சமையற்கூடம்
உ. நட்டனத் திடல்

வீட்டிற்குள்ளேயும் இத்தகைய அமைப்பினைக் கையாளுகின்றனர். மணமாகாத இளைஞர்கள் வீட்டின் ஓர் ஓரத்திலும் கன்னியர்கள் மறு ஓரத்திலும் இவர்களுக்கு நடுவில் மணமாகியவர்களும் படுத்துறங்குகின்றனர். பொதுச்சமையற் கூடத்தில் வேட்டையாடிய விலங்குகளைச் சுட்டு அனைவருக்கும் பகிர்ந்தளிக்கின்றனர். மடகாசுகரின் தனாலா ஆதிக்குடியினர் தங்கள் பெண்கள் பதினைந்து அல்லது பதினாறு வயதினையடையும் பொழுது கிழக்குத் திசையில் சிறிய குடிசையை அவர்களுடைய வேலையைச் செய்வதற்காகவும் தோழமைப் பெண்களுடன் கூடி மகிழ்வதற்காகவும் அமைத்துக் கொடுக்கின்றனர். இரவில் அப் பெண்கள் பெற்றோர்களுடன் உறங்குகின்றனர்.

இந்தியாவின் ஆதிக்குடிகளிடையே இளையவர் கூடங்கள் இருபாலாருக்கும் பொதுவாகவோ தனித் தனியாகவோ அமைந்து பல செயல்முறைகளைக் கொண்டு காணப்படுகின்றன. ஒரவன் குடிகளில் இளைஞர்களைப் பதினொன்று அல்லது பன்னிரண்டு வயதிலேயே சொன்க்கு எர்பவில் சேர்த்துவிடுகின்ற னர். முதலிரண்டு குழந்தைகளை ஒருவன் ஈன்றெடுக் கும் வரையில் அவனுக்கு இதில் உறுப்பினராக இருக் கும் வாய்ப்புக் கிடைக்கிறது. முரியாக் கோட்டுலில் சிறு வயதிலேயே இருபாலாரும் சேர்ந்துவிடுகின்றனர். கொன்யக்கு நாகர் இளையவர் கூடத்தில் (பன்) சேர்க் கும் முன்னர் விரிவான ஏற்புச் சடங்கு செய்கின்ற னர். ஆப்பிரிக்காவின், செரன்த்தே ஆதிக்குடியினர் வயது, உடல் வலிமை, செயல் ஆர்வம் ஆகியவற்றின் அடிப்படையில் இளையவர் கூடத்தை ஆறு பிரிவாகப் பிரித்துள்ளனர். எட்டு வயதாக இருக்கும்பொழுதே தம் மகனை ஏதேனும் ஒரு பிரிவில் சேர்ந்துவிடுகின் றனர். அன்று தொடங்கி இப்பிரிவில் அவன் ஆயுள் முழுவதும் உறுப்பினராகிறான். பொதுவாக எல்லா இளையவர் கூடங்களிலும் மூத்த உறுப்பினர்கள், இளைய உறுப்பினர்கள் என்ற பாகுபாட்டைக் காணலாம். மூத்த உறுப்பினர்களுள் சிலர் இளையவர் கூடத்திற்குப் பொறுப்பாளராக நியமிக்கப்படுகின் றனர். இவர்கள் இளையவர்களுக்கு எல்லாத் துறை களிலும் பயிற்சியளிக்கின்றனர்.

இந்திய ஆதிக்குடிகளில் முரியாக் கோட்டுல் வாழ்க்கை புகழ் பெற்றது. மாலை நேரத்தில் கோட்டுல் எதிரில் ஆடிப்பாடுவதுடன் கோட்டுல் வாழ்க்கை தொடங்குகிறது. அந்தி வேளையில் கோட்டுலுக்குள் கணப்பு மூட்டி இதம்டைகின்றனர். மூத்த உறுப்பினர்கள் நாட்டுப்புறக் கதைகள், நாட் டுப்புறப் பாடல்கள், விடுகதைகள் முதலியவற்றைக் கூறி இளையவர்களுக்குத் தங்களினத்து அகப் பண் பாட்டினைப் படிப்படியாகக் கற்பிப்பதுடன், படுக் கைக்குச் செல்லும் முன்னர்த் தத்தம்பாலருக்கு உடலுறவுக் கலையையும் சொல்லிக் கொடுக்கின்ற னர். இளையோர் கோட்டுலில் தத்தமக்குப் பிரிய மானவர்களுடன் நெடுநேரம் கலவியில் ஈடுபடுகின்ற் னர். முரியாக் குடிகளில் இதற்கு முழுச் சுதந்திரம் காணப்படுகிறது. கோட்டுல் வாழ்க்கையில் உடலுற வுக்கே முதன்மையிடம் கொடுக்கப்படுகிறது என எல்வின் கூறுகிறார். தம் குடியிருப்புப் பகுதியிலிருந்து அடுத்த குடியிருப்புக்குச் செல்லும் இளையோர் அங் குள்ள கோட்டுவில் ஆடிப்பாடி விளையாடலாம். ஆனால் அங்குள்ளோருடன் கலப்பில் ஈடுபட அனு மதியில்லை. கோட்டுலுக்கு இளையவர்கள் வரத் தவறினால் தண்டனை கொடுக்கும் முறை உள்ளது.

ஆவோ நாகர் இளம் வயதிலிருந்தே கலவியில் ஈடுபட அனுமதிக்கின்றனர். சீமா நாகர் மிகுந்த சுதந்திரமோ கட்டுப்பாடோ விதிப்பதில்லை. அங் காமி நாகர் விதவைகளைச் சற்று அதிகமாகக் கலவி யில் ஈடுபட அனுமதிக்கின்றனர். பிர்கார் குடிகளில் இருபாலருக்கும் தனித்தனியே கூடங்கள் (கித்தி-ஒர) அமைத்து ஒழுங்கு, கட்டுப்பாடு ஆகியவற்றிற்கு முதன்மை அளிக்கின்றனர். ஆப்பிரிக்க, அமெரிக்க ஆசுத்திரேலியக் குடிகளிலும் இளம் வயதில் உடலுற வுக்கு இளையவர் கூடங்கள் அனுமதிக்கப்படுகின்றன. சக்கோ, பரமா, காரிப்பு முதலான ஆப்பிரிக்கக் குடி களில் கன்னியர்கள் தூய்மையாக இருக்க அத்தையோ அம்மாவோ கண்காணிக்கின்றனர். பிலிப்பைன்சுத் தீவு களில் கொரொத்து (Goroat) உலூசொன் (Luzon) குடிகளில் இளைஞர்களும் கன்னியர்களும் தனித்தனி யாக வைக்கப்பட்டு ஒழுக்கநெறியுடன் வளர்க்கப்படு கின்றனர். திரோபிரியாண்டுத் தீவினரின் 'புக்குமத் தலா' இளம் தம்பதியினருக்குத் தேவைப்படும் சில மணி நேரத் தனியிடமாக அமைவதுடன், இளைஞர் கள் பலருடன் உடலுறவு கொள்ளும் வசதியையும் அளிக்கிறது. பாலினேசியா, புரித்தொய் ஆதிக்குடி யினர், தத்தம் கால்வழியினரை உடலுறவில் மகிழ் விப்பதற்காகவே மூன்று அல்லது நான்கு கன்னி யர்களை அமர்த்துகின்றனர்.

போர்ப் பயிற்சிகளையும் பொருளாதாரச் செயற் பாடுகளையும் தம்முள் கொண்ட அமைப்பாகவும் இளையவர் கூடங்கள் திகழ்கின்றன. நாகர் குடியினர், மொருங்கு இளையவர்களுக்குக் கடினமான போர்ப் பயிற்சி அளிக்கின்றனர். ஒரு பிரிவினருக்கு நீண்டதூர அம்பெய்தல், கோலாட்டச் சண்டை, கவசம் கொண்டு போராடுதல், படகிலிருந்தே போராடுதல், முதலான கலைகளில் தொடர்ச்சியான தீவிரப் பயிற்சியளிக்கப் படுகிறது. மற்றொரு பிரிவினருக்குப் போர் செய்ய வும் வேட்டையாடும் கருவிகளைச் செய்யவும் மற்றப் பிரிவினரைப் போல் இளைய பருவத்திலிருந்தே பயிற்சியளிக்கப்படுகிறது. மொருங்கில் நீண்ட தூரத் திற்கு அம்பு செலுத்தும் போர்வில், வேட்டைவில், அம்பு செய்யும் நுணுக்கங்கள் முதலானவை பகலில் மட்டுமன்றி இரவிலும் நெடுநேரம் கற்பிக்கப்படு கின்றன. பொதுவாக இளையவர்கள் அனைத்துத் துறைகளிலும் தேர்ச்சி பெற்றவர்களாகவே காணப் படுகின்றனர்.

மொருங்கின் போர்க்கால நடவடிக்கைகள் பின் வருமாறு அமைகின்றன. சண்டைக் குடியிருப்புகளைச் சார்ந்த வேற்று இனக் குழுவினர் தம்மை நோக்கிப் படையெடுத்து வருகின்றனர் என்று அறியும் பொழுது மொருங்கில் மூன்றாம் அறையில் கட்டப்பட்டிருக் கும் பெரிய மேளத்திலைச் சீரான இடைவெளி கொண்டு தொடர்ந்து அடிக்கின்றனர். தாங்கவே



[illegible]

படையெடுக்கும் பொழுது தம் வீரர்கள் ஆயத்த நிலையில் மொருங்கின் எதிரில் வந்து சேரவும் மேளத்தையடிக்கின்றனர்.

அமெரிக்காவின் குவாட்டிமாலா **(Guatemala)** ஆதிக்குடியினர் தங்கள் இளையவர் கூடங்களான கால்புலேயில் **(Calpule)** மூத்தவர் ஒருவரைக் கொண்டு ஒரே சமயத்தில் நானூறு இளையவர்களுக்கு எல்லாவகையான போர்ப் பயிற்சிகளையும் முறைப்படி கற்பிக்கின்றனர்.

ஆதிக்குடிகளின் பொருளாதாரம் ஏறக்குறைய அவர்கள் மதத்தோடு இணைந்துள்ளதைக் காணலாம். உணவு சேகரிக்கும் ஆதிக்குடிகள், நாடோடி ஆதிக்குடிகள், தோட்டப் பயிரிடும் ஆதிக்குடிகள், பயிர்த் தொழில் புரியும் ஆதிக்குடிகள் ஆகியோர் வேட்டையாடுவதற்கோ முதல் விதைப்பிற்கோ முதல் அறுவடைக்கோ செல்லுமுன், பல்வகையான சடங்குகளைச் செய்கின்றனர். தெய்வத் தன்மையுற்றவர் செய்யும் இவ்வகைச் சடங்குகளின் செயல்முறைகளை அனைவரும் அறிந்திருந்தாலும் இளையவர் கூடத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒருசில கால்வழியினருக்கு மட்டுமே மூத்த தெய்வத் தன்மையுற்றவர்களால் தனிப் பயிற்சியளிக்கப்படுகிறது. இவை தவிர சமயத்தினைத் தம்முள் கொண்ட மந்திரச் செய்கைகளினால் நோய்களைக் குணப்படுத்தும் முறை, ஏற்புச்சடங்கு, வயது அடிப்படைப்

பாகுபாட்டுச் சடங்கு முதலானவற்றைத் தேர்ந்தெடுக்கப்பட்ட கால்வழியினருக்கு இளையவர் கூடங்களில் கற்பிக்கின்றனர்.

சில ஆதிக்குடிகளிடையே இளையவர்கூட உறுப்பினர்களின் திருமணங்கள், வீட்டைப் புதுப்பித்தல், அறுவடை ஆகிய பணிகளைச் செய்கின்றனர். பிரேசில் நாட்டு போரொரோ ஆதிக்குடிகளின் பகிட்டோ கூடங்களில் பின்னுதல், தறிநெய்தல், போர்க்கருவிகள் செய்தல் ஆகியவற்றை முதன்மைப் பணிகளாக இளையோர் மேற்கொள்ளுகின்றனர். இளையவர் கூடங்களில் இருக்கும் காலத்தில் எப்பொழுதாவது ஒரு முறையே தம் பெற்றோரைச் சந்திக்கின்றனர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. இவ் வகையில் பன்னாட்டு ஆதிக்குடிகளின் இளையவர் கூடங்கள் பல செயற்பாடுகளைக் கொண்டு திகழ்கின்றன என்பதைத் தெளிவாக உணரலாம்.

வளர்ந்து வரும் சமூக அமைப்பில், ஆதிக்குடிகளிடையே இளையவர் கூடங்களின் அமைப்பு, செயற்பாடு ஆகியவை வெகுவாகச் சிதைந்துவிட்டன. பண்பாட்டுத் தொடர்பு, பண்பாட்டுப்பேறு, சமய குருக்களின் பாதிப்பு ஆகியன இவ்வமைப்பின் சிதைவிற்கு முதன்மைக் காரணங்களாக அமைந்தன. சுதந்திரத்திற்குப் பின் இந்திய அரசு ஆதிக்குடிகளின் வளர்ச்சியில் மிகுதியாகக் கவனம் செலுத்தி வருகிறது. இதன் விளைவாக, ஆதிக்குடிகளின் வளர்ச்சிக்கு அறிமுகப்படுத்தப்பட்ட சமூக நற்பணித் திட்டங்கள் ஆதிக் குடிகளின் சமூகப் பொருளாதார அமைப்பினை மிகுதியாக மாற்றியமைத்தன. அரசின் பெரிய தொழில் திட்டங்கள் ஆதிக்குடிகளை இடம் பெயரச் செய்தமை மட்டுமன்றி அவர்களிடையே தொழிலைப் புகுத்துதலையும் செய்தன.

பண்பாட்டுத் தொடர்பினாலும், இந்து, கிறித்தவ, புத்த சமய வாழ்க்கை நெறிகளின் பாதிப்பு ஏற்பட்டுக் காலப்போக்கில் அச்சமய நெறிகளையே முழுமையாக ஏற்க முற்பட்டதன் விளைவாகவும் இளையவர் கூடங்களின் செயல் முறைகள் சிதையத் தொடங்கிவிட்டன. கிறித்தவ சமயக் குருக்கள் இந்திய ஆதிக்குடிகளின் சமூக அமைப்பில் மிக்க பாதிப்பினை ஏற்படுத்தி விட்டனர்.

முரியரின் கோட்டுல், பொண்டோ குடிகளின் இங்கரிசென், செலனி-டிங்கோ, முண்டாக் குடிகளின் கித்தி-ஒர கூடங்களின் சிதைவிற்கு எல்வின், இராய் ஆகியோர் கூறும் கருத்துகள் நோக்கத்தக்கவை. இக்குடிகளின் தொன்மக் கதைகளை எழுதும் பொழுது, இளையவர் கூடங்களின் காவலராக இருந்த முதியவர்கள் அக்கூடத்தின் கதவினைத் தாழிடாமலேயே இரவில் வெளியிற் சென்றபோது, இக்கூடத்திலிருந்த இளையவர்களைப் புலி தாக்கிக் காயப்படுத்தியதாகவும் இதிலிருந்தே இவ்வமைப்பின் செயற்பாடுகள் சிதையத் தொடங்கிவிட்டன என்றும் தெரிவிக்கின்றனர். சீ.ப.

துணை நூல்கள்:


Brown, A.R., The Andaman Islanders: A study in Social Anthropology, Cambridge University Press, Cambridge, 1922.

Brown, A.R., The Social Organisation of Australian Tribes, Macmillan and Company, Melbourne, 1931.

Elwin, V., Muria and their Ghotul, Oxford University Press, London, 1947.

Furer-Haimendorf, C.Von., The Morung System of the Konyak Nagas, Journal of Royal Anthropological Institute, Vol. LXVIII, 1938.

Hose, C., Natural Law: A Record from Borneo Macmillan and Company, London, 1926.

Peal, S.E., The Communal Barracks of Primitive Races, Journal of the Royal Asiatic Society, of Bengal, Vol. LXI, 1893.

Shasi, S.S., Night Life of Indian Tribes, Agam Prakasham, Delhi, 1978.


**ஆதிக்குடிகளின் ஈமச் சடங்குகள்:** மனிதன் பிறந்தது முதல் இறப்பது வரை பல்வேறு சடங்குகளுக்கு உட்படுகிறான். இறப்பு, மனித வாழ்வின் இறுதிநிலை என்றாலும் அதற்குப் பின்னரும் அவன் வாழ்கிறான் என்றும், மீண்டும் இவ்வுலகில் பிறக்கிறான் என்றும் நம்பும் நம்பிக்கை உலகம் முழுதும் வாழும் மக்களிடையே பரவலாக நிலவி வருகிறது. இதனாலேயே மற்ற நிலைகளில் கடைப்பிடிக்கும் சடங்கு முறைகளைக் காட்டிலும் இறந்தவர்களுக்குச் செய்யும் ஈமச் சடங்குகள் மனித வாழ்வில் முதன்மையான இடத்தைப் பெறுகின்றன. இந்நிலை பழங்குடியினர் முதல் தமக்கென ஒரு நாகரிகத்தைக் கொண்டிருக்கும் பல்வேறு சாதிக் குழுவினர் வரை அனைவரிடமும் காணக் கூடியதாகும்.

இறந்தவர்களுக்குச் செய்யும் ஈமச் சடங்குகளை இறந்தவுடன் செய்யும் சடங்குகள், இடுகாட்டில் செய்யும் சடங்குகள், எரியூட்டிய பின் அல்லது புதைத்த பின் செய்யும் சடங்குகள் என்று மூன்று நிலைகளுள் அடக்கலாம். இம்மூன்று நிலைகளுக்குள் எல்லா ஈமச் சடங்குகளும் அடங்கிவிடுகின்றன. இவற்றுள் குறிப்பாக இடுகாட்டுச் சடங்குகள் காணப்

படாத இனக்குழுக்களே இல்லை என்பது கருதத்தக்கது.

வரலாற்றுக்கு முந்தைய காலத்திலேயே ஈமச் சடங்குகள் கடைப்பிடிக்கப்பட்டுள்ளன. பழங்குடியினரிடையே பல்வேறு தொன்மைப் பழக்கங்கள் அவர்களுடைய ஈமச்சடங்குகளில் இருப்பதை மானிடவியலாரின் கள ஆய்வுச் செய்திகள் புலப்படுத்துகின்றன. இக்காலச் சாதிக்குழுவினரிடையே ஈமச்சடங்குகள் இன்றளவும் எவ்வாறு காக்கப்பட்டு வருகின்றன என்பதனைச் சமுதாயவியல், மானிடவியல் ஆகியவற்றின் ஆய்வுகள் தெரிவிக்கின்றன. எனவே, உலகில் வழங்கும் ஈமச்சடங்குகளைப் பற்றி முழுமையாக அறிய இம்மூன்று ஆய்வு நோக்குகளிலும் கருத்தைச்செலுத்துதல் வேண்டும்.

பழைய கற்காலம் முதல் இரும்புக் காலம் வரையிலான காலக்கட்டமே வரலாற்றுக்கு முந்தைய காலம் என்றாலும், புதிய கற்காலத்திலேயே முதன் முதலாக ஈமச்சடங்குகளைப் பற்றிய செய்திகள் கிடைக்கின்றன. இக்காலத்தில், பெரும்பாலும் வயது வந்தவர்கள் குழிகளிலும் குழந்தைகள் தாழிகளிலும் இட்டுப் புதைக்கப்பட்டனர். அல்சின் என்னும் தொல்லியல் அறிஞரால் ஆந்திரப் பிரதேச இரெய்ச்சூர் மாவட்டத்தைச் சார்ந்த பிக்ளிகல்லில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வில் மூன்று புதிய கற்கால இடுகுழிகள் கண்டுபிடிக்கப்பட்டன. அவை, முழுவதும் மக்கிய எலும்புக்கூடுகளைக் கொண்டிருந்தன. ஒரு குழியில், பானை ஓடுகளும் பசால்ட்டுக் கோடரியும், இவற்றிற்கு மேலாக மாட்டின் தோள் பட்டை எலும்பொன்றும் காணப்பட்டன. மற்றோர் இடுகுழியில் எலும்புகளின் பக்கத்தில் பழுப்பு நிற மண்கலயமும் சாடியும் கிடைத்தன. மூன்றாம் குழியில், ஒரு குழந்தையின் எலும்புக்கூடு மட்டும் தோண்டியெடுக்கப்பட்டது. குறிப்பாக இக்காலக் கட்டத்தில், இறந்த குழந்தைகளும் சிறியவர்களும் தாழிகளில் இடப்பட்டு உறைவிடத்தின் முகப்பிலேயே புதைக்கப்பட்டனர். பொதுவாக, வயது வந்தவர்களின் பிணங்கள் வீட்டினுள்ளோ வீட்டிற்கு அருகிலுள்ள இடத்திலோ செவ்வக வடிவக் குழிகளில் நேரடியாக உட்கார்ந்த நிலையில் புதைக்கப்பட்டன. இவ்வாறு வீட்டிற்கருகிலேயே புதைக்கும் வழக்கம் மேற்காசியாவில் புதிய கற்காலம் முதல் வெண்கலக் காலம் வரை காணப்பட்டது.

தென்னிந்தியா முழுவதும் அதைத் தொடர்ந்து வடக்கிலும் தொடக்க இரும்புக் காலத்தைச் சார்ந்த இடுகாட்டுப் பகுதிகள் எண்ணற்றன காணக்கிடக்கின்றன. இங்கு இடப்பட்டவை எல்லாம் சிதைநிலைப் புதைப்புகளே. அதாவது மண்ணின் கீழ்ப் புதைக்கப்பட்டு எலுக்கூடு முழுவதும் சிதைவடைந்த பின்னர்ச் சிற்சில எலும்புகள் மட்டும் பொறுக்கியெடுக்கப்பட்டுச் சமாதியில் இடப்பட்டுள்ளன. என்றாலும், முழுவதும் மக்கிய எலும்புக் கூடுகளைக் கொண்ட இடுகாடுகளும் இக் காலக் கட்டத்தில் இல்லாமலில்லை. பெரும்பாலும், எலும்புக்கூடுகளில் எஞ்சியவை தாழிகளில் இடப்பட்டன. சில வேளைகளில் குளியல் தொட்டி வடிவத்துடன், கால்களையும் கொண்ட சுடுமண் சவப் பெட்டிகளில் இடப்பட்டன.

தாழி அல்லது சுடுமண் சவப்பெட்டி பின்னர் எளிய குழிகளில் அல்லது தரையின் கீழ் அமைக்கப்பட்ட பெருங்கற்களாலான கல்வட்டக் கல்லறைகள் அல்லது கற்குடைவுகளில் இடப்பட்டன. பின் மேற்புறங்களில் மழுக்கப்படாத பெருங்கற்கள் வட்ட வடிவில் அமைக்கப்பட்டு இடுகாட்டுப் பகுதிகள் என்பது தெளிவாகக் குறிப்பிடப்பட்டன. இரும்புக்கால இடு காட்டுப் பகுதிகள் எல்லாம் இவ்வாறு பெருங்கற்களால் அமைக்கப் பட்டிருப்பதனால் 'பெருங்கல் தொகுதி' எனவும் 'பெருங்கால இடுகுழிகள்' எனவும் பேசப்பட்டன. இந்தியாவைப் பொறுத்த அளவில், தெற்கே திருநெல்வேலி முதல் வடக்கே நாகபுரி வரையிலும், மேற்கே கேரளம் முதல் கிழக்கே சோழமண்டலக் கடற்கரைப் பகுதி வரையிலும் காணக் கூடிய எல்லா இடுகாடுகளிலும் ஓரே வகைக் கல்லறைப் பொருள்களே காணக் கிடக்கின்றன. இரும்பினாலான வாள்கள், குற்றுடை வாள்கள் அம்பு முனைகள், கோடரிகள், வெட்டரிவாள்கள், கத்திகள் முதலியன பெரும் அளவிலும் சூலங்கள், ஈட்டிகள், முக்காலிகள் ஆகியவை குறைந்த அளவிலும் கிடைத்திருக்கின்றன. இவற்றுடன் வெண்கல மணிகள், நகைகள், மட்பாண்டங்கள் முதலியனவும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. என்றாலும் சில இடுகுழிகளில் வேறெங்கிலும் காணப்படாத ஈமப் பரிசுகளும் அகழ்ந்தெடுக்கப் பட்டுள்ளன. தென்னிந்திய மூதாதையரின் இறப்புத் தொடர்பான சடங்குகள் நம்பிக்கைகள் ஆகியவை பற்றிய அறிவு இத்தகைய பொருள்களிலிருந்து நமக்குப் புலப்படுகிறது.

தென்னிந்தியா முழுவதும் பரவலாகக் காணப்படும் இரும்புக் காலக் கல்லறைகள், திருநெல்வேலி, கோயம்புத்தூர் மாவட்டங்களிலுள்ள தாழிகள், தென்னார்க்காடு, செங்கற்பட்டு மாவட்டங்களிலுள்ள சுடுமண் சவப்பெட்டிகள், வடஆர்க்காடு, புதுக்கோட்டை மாவட்டங்களிலுள்ள நடுகற்கள், கருநாடக மாநிலத்து மைசூரிலுள்ள பிரமகிரிக் கல்வட்டக் கல்லறைகள், கேரளாவிலுள்ள தொப்பிக்கல், குடைக்கல், ஆந்திர மாநிலம் கடப்பை மாவட்டத்தி

லுள்ள சங்கவரம் செம்மறியாட்டு உருவச் சுடுமண் சவப்பெட்டி ஆகியனவாகும்.

பண்டுக்கல் கால அடக்கங்களில் மூன்று நிலைகள் கடைப் பிடிக்கப்பட்டன. முதலாவது, இறந்தவர்களின் ஆண்டுச் சடங்குகளில் அவர்களின் எலும்புகளையெடுத்து இரண்டாம் முறை அடக்கம் செய்வது. இரண்டாவது, இறந்தவர்களின் எல்லா எலும்புகளையும் அடக்கம் செய்யாமல் குறிப்பிட்ட சில எலும்புகளை மட்டும் எடுத்து அடக்கம் செய்வது. மூன்றாவது, தனி மனிதனின் எலும்புகளை அடக்கம் செய்யாமல் பலருடைய எலும்புகளையும் ஒருசேர அடக்கம் செய்வது.

இத்தகைய வழக்கங்கள் இக்காலத்திலும் பல்வேறு பழங்குடியினரிடையே காணப்படுகின்றன. எடுத்துக் காட்டாக, கேரள மாநில அட்டபாடி மலைகளில் வாழும் முதுகர், முதலில் இறந்தவர்களைக் 'கூடலை' என்னும் இடுகாட்டில் அடக்கம் செய்து, தலைப் பகுதியில் ஒரு கல்லை நடுகின்றனர். ஐந்து, பத்து அல்லது இருபது ஆண்டுகளுக்கொருமுறை மூதாதையர் வழிபாடு நடத்தி அவர்களுடைய எலும்புகளுள் வலத் தாடை அல்லது வலக் கால் எலும்பையெடுத்து மறுபடியும் 'மச்சு' என்னும் கல்லறையில் வைக்கின்றனர். அசாம் காசிகள் குறிப்பிட்ட ஒரு காலத்தில் தம் கால்வழியினரின் எலும்புகளைத் திரட்டிக் கற்பலகைகளால் கட்டப்பட்ட பெரிய கல்லறையில் இடுகின்றனர். சோட்டா நாகபுரியைச் சார்ந்த முண்டர் நினைவுத் தூண் எழுப்பி அங்கு, தம் குடும்பத்தினரின் சிதைவடைந்த எலும்புகளையும் இடுகின்றனர்.

பண்டுக்கல் காலத்தின் தொடர்ச்சியை இந்தியாவின் கிழக்குப் பகுதியில் காணலாம். அனைத்துப் பண்டுக்கற்களும் பழங்குடியினர் வாழிடங்களிலேயே தொடர்ந்து காணக்கிடக்கின்றன. மகாராட்டிரப் பசுதர் மாவட்டத்துக் கோண்டுகளையும், அசாம் காசிகளையும், நாகரையும் நினைவுறுத்தும் வகையில் பிளவுபட்ட மரத்தூண்களை அல்லது செங்குத்துக் கற்களை நடுகின்றனர். சில வேளைகளில் வரிசையாக அடுக்கப்பட்ட கல்வரிசைகளும் அமைக்கப்படுகின்றன. ஐதராபாத்தைச் சார்ந்த இராசு கோண்டுகள் மேற்கூறியவாறு நினைவுத் தூண்களை நிறுவுவதுடன் அத் தூண்களில் பலி கொடுக்கப்பட்ட பசுவின் வாலைக் கட்டி வைக்கின்றனர். ஒரிசாவைச் சார்ந்த கதபரும், போண்டாக்களும் நடுகற்களை எழுப்புகின்றனர்.

நீலகிரித் தோடர் 'முன் ஈமச்சடங்கு', 'பின் ஈமச்சடங்கு' என இருநிலை ஈமச்சடங்குகளை மேற்கொள்கின்றனர். இறந்தவுடன் செய்யும் சடங்கினை முன் ஈமச்சடங்கு என்றும், சில மாதங்களுக்குப் பின்னர் மேற்கொள்ளும் சடங்கினைப் பின் ஈமச்சடங்கென்றும் குறிப்பிடுகின்றனர்.

முதலில், பிணம் 'புத்கூளி' ஆடையால் சுற்றப்பட்டு இதற்கென அமைக்கப்பட்ட குழியின் வெளியே கிடத்தப்படுகிறது. ஆடவர், பெண்டிர், குழந்தைகள் ஆகியோர் பிணத்தை வணங்குகின்றனர். இறந்தது சிறுமி என்றால் அரிசி, வெல்லம், சவ்வரிசி, தேன்கூடு முதலியவற்றுடன் அவளுடைய விளையாட்டுப் பொருள்களும் அவளுடனே புதைப்பதற்கெனத் திரட்டப்படுகின்றன. ஒப்பாரிக்குப் பின்னர்ப் பிணம் வீட்டினுள்ளேயே வைக்கப்படுகிறது. பின் பிணத்தின் கால்கள் பலி எருமையின் நெற்றியில் படுமாறு நிறுத்தப்படுகின்றன. இறந்தவருக்குத் துணையாக ஒருவரை ஏற்பாடு செய்து சில சடங்குகளை மேற்கொள்கின்றனர். அதாவது, இறந்தவருக்குத் துணையாக ஏற்பாடு செய்துள்ளவருக்குப் புத்கூளி அணிவித்து மறுநாள் காலை வரை காக்க வைக்கின்றனர். இறந்தவர், சிறுமி என்றால் சிறுவனும், மணமாகாப் பெண் என்றால் சிறுமியும், மணமாகியும் குழந்தைப் பேறில்லாதவள் என்றால் அவளுடைய கணவனும் இந்தப் புத்கூளிச் சடங்குக்கு உட்படுத்தப்படுகின்றனர். பிறகு, பிணம் இடுகாட்டிற்கு எடுத்துச் செல்லப்பட்டு எரிக்கப்படுகிறது. இப்பொழுது எருமையொன்று பலியிடப்படுகிறது. பின், சாம்பலிலிருந்து தலையெலும்பின் ஒரு பகுதி இறந்தவரின் மாமியாரிடம் ஒப்படைக்கப்படுகிறது. இவள் முன்னர் எடுத்து வைத்துள்ள தலை முடியையும் இதனையும் பின் ஈமச்சடங்கு முடியும் வரை பாதுகாக்கிறாள்.

பின் ஈமச்சடங்கன்று எல்லோரும் ஒரு பெரிய மரத்தினடியில் கூடுகின்றனர். அம் மரப்பொந்தினுள் தலையெலும்பையும், முடியையும் சுற்றி வைக்கின்றனர். பின், முடிக் கற்றை மட்டும் இரும்புக் கரண்டியிலிட்டு எரிக்கப்படுகிறது. துணியின்மீது வைக்கப்பட்ட நெய் பூசிய தலையெலும்பில் தம் நெற்றி படுமாறு கூடியுள்ளோர் ஒவ்வொருவராக வந்து வணங்கிச் செல்கின்றனர். அடுத்து எருமைப் பலிக்குப் பின் சடங்கு முடிவடைகிறது.

ஆந்திர நாட்டுப் பழங்குடிகளான ஏனாதிகள் 'சிறுநாட்சடங்கு' 'பெருநாட்சடங்கு' என்று இரு நிலைகளில் ஈமச்சடங்குகளைச் செய்கின்றனர். நிலத்திற் பெருக்கற்குறியிட்டு அதன்மீதே பிணத்தை வைக்கின்றனர். அருகில் வெற்றிலை, பாக்கு, செப்புக்காசு முதலியன இடப்படுகின்றன. பின்னர், பிணத்தின் முகம் கீழ்நோக்கி இருக்க இடுகுழியில் கிடத்தப்படுகிறது. முதலில் தலைமகனும், பின் உறவினர் எல்லோரும் மண்டியிட்டுக் குழியை மூடுகின்றனர். குளித்துத் திரும்புவோர் இழவு வீட்டின்



பரல் குவியல் வட்டம் (Cairn Circle)



கற்பதுக்கைக் கல்லறை

முன்புறம் வைக்கப்பட்டுள்ள சாம்பல் நீர், மஞ்சள் நீர் சட்டிகளிலிருந்து நீரைத் தெளித்துக்கொண்டு வீட்டினுள் நுழைகின்றனர். உள்ளே எரிந்து கொண்டுள்ள விளக்கின் முன் தலைவணங்கி விருந்து உட்கொள்கின்றனர்.

சிறுநாட் சடங்கான மூன்றாம் நாள் புதுப் பானையில் சமைக்கப்பட்ட சோறு ஆறு உருண்டைகளாக்கப்பட்டு இடுகாட்டுக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. பெருக்கற் குறியிடப்பட்ட இடத்தில் ஓர் உருண்டை இடப்படுகிறது. பிணத்தின் தலைப்பகுதியில் ஒரு கல் நடப்பட்டு உறவினர்களால் பால் ஊற்றப்படுகிறது. பின், இறந்தவரின் மகன் இடுகுழியின் நான்கு மூலைகளிலும் மூலைக்கொன்றாக நான்கு சோற்றுருண்டைகளையிடுகிறான். ஆறாம் உருண்டை மீது பால் ஊற்றப்பட்டுப் பிணத்தின் வயிற்றுப் பகுதியில் வைத்துக் கட்டப்படுகிறது. இடுகுழியின் தெற்கெல்லையில் முக்கோண அமைப்பில் கற்களிடப்பட்டு அதன் மீது புதிய பானையொன்று தண்ணீருடன் வைக்கப்படுகிறது. பின்னர், அப்பானையில் துளையிடப்பட்டுத் தலைப்பகுதியில் நீர் படுமாறு செய்யப்படுகிறது. மறுபடியும், சாம்பல் நீராலும், மஞ்சள் நீராலும் தீட்டு நீக்கும் சடங்கு அல்லது தூய்மைப்படுத்தும் சடங்கு மேற்கொள்ளப்படுகிறது.

பெருநாட் சடங்கு பதினாறாம் நாள் கொண்டாடப்படுகிறது. குடிலின் எதிரில் இறந்தவரின் ஆவியெனக் கூம்பு வடிவில் களிமண் உருப்பிடித்து வைக்கின்றனர். தலைமகன் சோறு சமைத்து இவ்வுருவிற்குப் படைக்கிறார். மீதியுணவு ஆறு உருண்டைகளாக்கப்பட்டுக் குளக்கரைக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. அங்கு, இறந்தவரின் உருவம் ஒன்று உறவினரால் உருவாக்கப்படுகிறது. முன்னர்ச் செய்யப்பட்ட களிமண் உருவம், இந்த உருவத்தின் தலைக்கருகில் அமைவது போல் வைக்கப்படுகிறது. வெற்றிலை, பாக்கு, செப்புக்காசுடன் நான்குச் சோற்றுருண்டைகளும் புதிய உருவத்தின் கை, கால்களினருகே இடப்படுகின்றன. இப்பொழுது, இறந்தவரின் மகன் இவ்வுருவினை வணங்குகிறான். பின், அது நீரினுள் தள்ளப்பட்டு அழிக்கப்படுகிறது. இச் சடங்கிற்குப் பிறகு வந்துள்ளவர்களுக்குத் துணியும் புகையிலையும் அளிக்கப்படுகின்றன. இத்துடன் இவர்களின் ஈமச்சடங்குகளும் முடிவுறுகின்றன.

கேரளத்தைச் சார்ந்த பணியர் என்னும் பழங்குடியினர் பாயிலிட்ட பிணத்தை வடக்குத்தெற்காக, நான்கு அல்லது ஐந்து அடி ஆழத்திற்குத் தோண்டிய குழியில் தலைப்பகுதி வடக்கிலும், கால்பகுதி தெற்கிலும் இருக்குமாறு இடுகின்றனர். சிறிதளவு சோறிட்ட பின் பாய் மடிக்கப்பட்டுக் குழி மூடப்படுகிறது. இவ்வினத்துத் தெய்வத்தன்மையுற்றவன் அன்றிருந்து ஏழு நாட்களுக்குச் சிறிது அரிசிக் கஞ்சியை இடுகுழிக்குச் சற்றுத் தொலைவில் வைத்துத் தன் கையைத் தட்டியழைத்துத் தீய ஆவிகளை உணவில் பங்கு கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறான். அப்பொழுது, தீய ஆவிகளும் இரண்டு காக்கைகள் உருவில் வந்து உண்ணும் எனக் கருதுகின்றனர். மூன்று அல்லது நான்கு ஆண்டுகளுக்கு ஒருமுறை மூதாதைகளுக்குச் செய்யும் வழிபாட்டில் உறவினருள் ஒருவர் தெய்வத்தன்மையால் அருள்வாக்குசொல்லத் தொடங்குகிறார். பிறகு, எல்லோருக்கும் உணவு பரிமாறப்படுகிறது. இந்த விருந்திற்குப் பின் அந்தி வரை ஆடும் நடனத்துடன் ஈமச்சடங்குகளும் நிறைவு பெறுகின்றன.

ஒரிசா மாநில கந்தப் பழங்குடியினர் இறந்தவர்களை எரிக்கின்றனர். இதனைத் தொடர்ந்து சோறாக்கி வட்டிலில் இட்டு எரியூட்டிய இடத்தில் வைக்கின்றனர். மந்திரம் கூறி இறந்தவரின் ஆவியை வரவழைத்து உண்ணுமாறும் தீய ஆவியாகவோ புலியாகவோ மாறிக் கிராமத்தினரைத் துன்புறுத்த வேண்டாமென்றும் கேட்டுக்கொள்கின்றனர். சாவு நிகழ்ந்த நான்காம் நாள் ஒரு சடங்கு மேற்கொள்ளப்படுகிறது. இறந்தவரைப் போன்று வைக்கோலினால் உரு ஒன்று செய்து வீட்டின் முன்போ கூரை மீதோ வைக்கின்றனர். இழவு வீட்டில் கூடும் உறவினரும் நண்பர்களும் ஒப்பாரிக்குப் பின் விருந்தில் கலந்து கொள்கின்றனர். ஒவ்வொருவரும் ஒரு பரிசுப் பொருளைக் கொண்டு வருகின்றனர். மறுநாள் திரும்பும்பொழுது தாம் கொண்டு வந்த பரிசுப் பொருளைவிடச் சிறிது விலையுயர்ந்த பொருளைப் பெற்றுச் செல்கின்றனர். சாவினால் கிராமத்திற்கு ஏற்பட்ட தீட்டை நீக்கித் தூய்மை செய்ய ஏழாம் நாளன்று எருமையைப் பலி கொடுக்கின்றனர். புலியால் கொல்லப்பட்டவர்களுக்குச் செய்யும் தூய்மைப் படுத்தும் சடங்கின் பொழுது பன்றியைப் பலியிடுகின்றனர். இதன்பிறகு ஈமச்சடங்குகள் முடிவடைகின்றன.

இறந்தவரின் உடலைப் பல வகைகளில் அடக்கம் செய்வர். இறந்தவரின் உடலைத் தின்றல், மண்ணின் கீழ்ப் புதைத்தல், குகையில் இடுதல், நீரினுள் இடுதல், மக்க வைத்தல், வீட்டில் பாதுகாத்தல், எரியூட்டல் என்பன உலகின் பல பகுதிகளிலும் காணக்கூடிய சவ அடக்க முறைகளாகும்.

சாகர் குடிகளில் சில பிரிவினர் தம் உறவினரின் பிணத்தைத் தின்கின்றனர். பண்டை தெகாமியரிடையேயும் இத்தகைய வழக்கம் காணப்பட்டது. இவ்வினத்தில் இறந்துபோனவரின் குடும்பப் பூசாரி எரிக்கப்பட்ட சதைப்பகுதிகளைத் தின்பார். பண்டை

இந்தியாவில் தென்னிந்தியப் பழங்குடியினர் பிணத்தின் எரிந்த சதையைப் பக்தியுடன் உண்டனர். இன்றும் வங்காளத்தில் சில மாவட்டங்களில் எலும்பு களைத் தனக்குகந்த முறையில் தெய்வத்தன்மை யுற்றவன் தின்பது காணக்கூடிய ஒன்றாகும்.

பெரும்பாலும் பழங்குடியிரிடையேயும் சாதிக் குழுவினரிடையேயும் மண்ணின் கீழ்ப் புதைக்கும் வழக்கம் நிலவுகிறது,

குகையிலிடும் வழக்கம் பண்டை மனிதரிடையே காணப்பட்ட தொன்றாகும். மத்திய தரைக் கடற் பகுதியில் வாழ்ந்து வந்தவர்கள் இயற்கையான, குகைகளில் அல்லது தாங்கள் செய்த குகைகளில் பிணத்தையிட்டுப் புதைத்து வந்தனர்.

ஆற்றங்கரை நாகரிகத்தில் வாழ்ந்த பண்டை மக்கள் பிணத்தை நீரினுள் தள்ளிவிடும் எளிய முறை யைப் பின்பற்றியிருக்கலாம் என்று எண்ணப் படுகிறது. திபெத்தியர், பாலினேசியர், மேற் காப்பிரிக்கப் பழங்குடியினர், பஞ்சாபின் பாகர் பந்தியினர் ஆகியோர் சில வேளைகளில் பிணத்தைக் கடலிலோ ஆற்றிலோ இட்டுவிடுவதுண்டு. ஏனாதி மற்றும் சில பழங்குடியினரிடையே இன்றளவும் காணக்கூடிய இறந்தவரின் உருவை நீரில் தள்ளும் வழக்கம் இத்தகைய சவ அடக்கத்தின் எச்சநிலை என்று கொள்ளலாம்.

மாயா இனத்தவர் தங்களிடையே யாராவது இறந்துவிட்டால், இறந்தவரின் உடலை அவரது வீட்டில் புதைத்துவிட்டு, அந்த வீட்டைப் புறக் கணித்துச் செல்லும் வழக்கம் நிலவியது.

பண்டை நாளில் திபெத்தியரும், பல அமெரிக்க, ஆசுத்திரேலியப் பழங்குடியினரும் பிணத்தை வெளியே இட்டுவிடுதல் அல்லது விலங்குகளும் பறவைகளும் உண்ண விட்டுவிடுதல் செய்வர். இந்தி யப் பழங்குடியினர் சிலரிடையேயும் இத்தகைய வழக் கத்தைக் காணலாம். அந்தமானியரும், அசாம் நாக ரும், காசிகளும், பசுதர் கோண்டுகளும் மரத்தின்மேல் பரண்போல் கட்டி, அதில் பிணத்தை இட்டுவிடு வார்கள். அசாம் காரோக்கள் பல மாதங்கள் பிணத்தை வெளியில் போட்டு அழுக வைத்த பிறகே பிணத்தைப் புதைக்கின்றனர். பண்டை எகிப்தியரின் 'மம்மி'கள் வீட்டினுள் பிணத்தைக் காக்கும் முறைக்குச் சிறந்த எடுத்துக்காட்டு. இருப்பினும் இம்முறை பரவலாகக் காணப்படவில்லை.

உலகின் பல பகுதிகளிலுமுள்ள மக்கள் பிணத்தைச் சுடுகின்றனர். சிந்து சமவெளி நாகரிக காலத் திலிருந்து இந்தியாவில் எரிக்கும் முறையைக் காண லாம். அக்காலச் சவப்பானைகளில் கிடைத்துள்ள எரிக்கப்பட்ட எலும்புகளின் எச்சங்கள் இதற்குச் சான்றாக அமைகின்றன. இதுவே இந்தியாவின் இந்து சாதிக்குழுவினரிடையே பெரும்பாலும் காணப்படும் வழக்கமாகும். பிணத்தை வெளியே இட்டு மக்க வைத்தாலும், மண்ணின் கீழ்ப் புதைத்தாலும் சுட்டாலும் சில குறிப்பிட்ட எலும்புகளை இறுதியாக இடுகாட்டில் இடும்பொழுதே ஈமச்சடங்குகள் முடி வடைகின்றன. இதனால், சவ அடக்கமுறைகளுள் மண்ணிலிடும் முறை பெறும் சிறப்புப் புலப்படும்.

இந்தியாவிலுள்ள இந்துக்களிடையே ஈமச் சடங்குகள் மூன்று தொடர்ச்சியான நிலைகளைக் கொண்டுள்ளன,

முதல்நிலைச் சிறு சடங்குகள்-பூர்வ கிரியை;

இடைநிலைச் சிறு சடங்குகள்-மத்யம கிரியை;

இறுதிநிலைச் சிறு சடங்குகள்-உத்தரகிரியை ஆகியன வாகும்.

முதல்நிலைச் சிறு சடங்குகளைச் செய்வதனால் விடுபட்ட ஆவி இடைநிலைச் சிறு சடங்குகளில் பங்குபெறும் தகுதியை அடைகிறது. இடைநிலைச் சிறு சடங்குகளைச் செய்வதனால் அது இறுதிநிலைச் சிறு சடங்குகளில் பங்குபெறும் தகுதியைப் பெறு கிறது. இறுதிநிலைச் சிறு சடங்குகளைச் செய்வத னால் பிறகு அது மூதாதையருடன் சேரக்கூடிய 'தந்தை நிலை'க்கு உயர்த்தப்படுகிறது.

வேத காலத்தில், பிணத்தை எரித்தவுடனேயே இறந்தவரின் ஆவி பித்துரு நிலையை அடைகிறது என்பது கருதப்பட்டது. அடுத்து, கிருக காலத்தில் இறந்தவர் முதலில் 'பிரேத நிலை'யை அடைவ தாகவும், சில சடங்குகளுக்குப் பின்னரே தந்தை நிலையை அடைவதாகவும் எண்ணப்பட்டது. அடுத்த காலக்கட்டமான புராணக் காலத்தில் ஆவி முதலில் 'இடைநிலை உடலை' அடைகிறது என்றும், சில சடங்குகளுக்குப் பிறகே பிரேத நிலைக்கு மாறுகிறது என்றும், பின்னர் மாதந்தோறும் செய்யும் சடங்கு களால் தந்தை நிலைக்கு உயர்த்தப்படுகிறது என்றும் கருதப்பட்டது. தந்தை நிலையை அடைந்தவரே வழிபாட்டிற்குரிய மூதாதையருள் ஒருவராகிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

ஈமச்சடங்குகளுக்கிடையே, மரணத்திற்குப் பின்னர் மனித வாழ்வு தொடர்பான மக்களின் நம்பிக்கைகள் இழையோடியிருப்பதைக் காணலாம். இத்தகைய நம்பிக்கைகளுள் சில கீழ்வருமாறு:

அ) மரணத்திற்குப் பின் மனிதன் மறுபடியும் தாயின் கருப்பைக்குள் புகுகின்றான் என்றும், முட்டை வடிவத் தாழிகள் கருப்பையை உணர்த்துகின்றன.

என்றும், இத்தாழிகளின்மீது காணப்படும் கொடி போன்ற அமைப்பு தாயின் கொப்பூழ்க் கொடியை உணர்த்துகிறது என்றும் கருதுகின்றனர்.

ஆ) கேனிசு மேசர், கேனிசு மைனர் என்கிற இரு நாய்கள் சொர்க்கத்தையும் நரகத்தையும் இணைக்கும் பாலத்தைக் காக்கின்றன என்னும் கருத்துக் கிரேக்கரிடையே இன்றளவும் நிலவுகிறது. இந்திய இந்துக்கள் எமனிடம் இரு நாய்கள் இருப்பதாக நம்புகின்றனர். இதனாலேயே சவப்பானை மூடிகளிலும், பிணத்துடன் புதைக்கப்பட்டுள்ள வெண்கலப் பூங்கொத்துகளிலும் நாய் உருவங்கள் பொறிக்கப்பட்டிருக்கலாம் என்று மானிடவியலாளர் கருதுகின்றனர்.

இ) ஆவியை மேல் உலகிற்கு நேராகக் கொண்டு செல்லும் விலங்கு செம்மறியாடு என்று உலகம் முழுவதும் கருதுகிறது. சவப்பானை மூடிகளிலும், பிணத்துடன் புதைக்கப்பட்டுள்ள வெண்கலப் பூங்கொத்துகளிலும் காட்டப்பட்டுள்ள செம்மறியாட்டு உரு இதனையே சுட்டுகிறது என்பர் மானிடவியலாளர். மேலும், கடப்பையில் கிடைத்துள்ள செம்மறியாட்டு வடிவச் சுடுமண் சவப்பெட்டி கூட இதனையே உணர்த்துகிறது என்பர்.

ஈ) கல்வட்டக் கல்லறை, செம்மறியாட்டுச் சவப்பெட்டி போன்றவற்றில் காணப்படும் துளை ஆவி வந்து போவதற்குப் பண்டை மக்கள் ஏற்படுத்திய வழி என்பது மற்றொரு கருத்து.

உ) பிரமகிரிக் கல்வட்டக் கல்லறைத் தொகுதிகளுள் நடுவிலுள்ள பெரிய கல்லறை அரசருடையது என்பதும், அரசர் இறந்தவுடன் தம் வாழ்வை முடித்துக் கொள்ளும் மெய்காப்பாளருக்குரியன சுற்றியுள்ள சிறிய அளவுக் கல்லறைகள் என்பதும் கருதப்படுகின்றன.

ஊ) இறந்தவரின் தசைப்பகுதி முழுவதும் அழியும்வரை இறப்பு முழுமையாகவில்லை என்ற கருத்து, பண்டை மக்களிடம் நிலவியிருந்தது. எரியூட்டுதல் தசைப்பகுதி அழிவை ஊக்குவிக்கிறது என்று மக்கள் நம்பினர். இதனாலேயே புதைக்கும் முறைகளில் பயன்படுத்திய சவப்பெட்டியில் செந்நிறம் தீட்டித் தீயைக் குறிப்பால் உணர்த்தினர் என்றும் நம்புகின்றனர்.

எ) எரியூட்டும்பொழுது ஆவி அனுபவிக்கக்கூடிய துன்பத்தை நீக்க அல்லது குறைக்க விலங்கு ஒன்றினைக் கொன்று அதன் இறைச்சி, கொழுப்பு முழுவதையும் பிணத்தின் மேலிட்டனர். இவ்வழக்கமே நாளடைவில் விலங்குப் பலி என்னும் அளவில் அமைந்தது. உயிர்க்கொலையை விரும்பாதவர்கள் சோற்றுருண்டைகளையே பலியாகக் கொடுத்து வர அவ்வழக்கமே 'பலியுணவு' என்னும் பெயரில் இன்றும் வழக்கத்தில் உள்ளது. ஈமச்சடங்குகளின் நோக்கம் இறந்தவரை இருப்போரிலிருந்து பிரித்து, முன்பு இறந்து போன மூதாதையருடன் சேர்ப்பது என்பதாகும்.

சி.ம.

துணை நூல்கள்:


**Aiyappan, A.,** Rude Stone Monuments of the Perumal Hills, Kodaikanal, Quarterly Journal of Mythic Society of Bangalore, Vol. XXXI, Bangalore, 1941.

**Ayyar, K.V. Krishna,** Disposal of the Dead: From exposive to cremation (abstract), Proceedings of the Indian Science Congress, 47th Session, 1960.

**Anglade, A. & Newton, L.V.,** The Dolmens of the Pulney Hills, Memoir of the Archaeological Survey of India. No.36, Calcutta, 1928.

**Branfill, B.R.,** Rude Megalithic Monuments in North Arcot, Journal of the Asiatic Society of Bengal, Vol.XLIX, 1880.

**Kurtz Donna, C, & Boardman, J.,** Greek Burial Customs, Southampton: The Camelot Press Ltd. London. 1971.

**Leshnik, L.S.,** South Indian Megalithic Burials -The Pandukal Complex, Franz Steiner Verlog GmbH Wiesbaden Germany, 1974.

**Shastri, D.B.,** Origin and Development of the Rituals of Ancestory Worship in India, Book-land Private Limited, Calcutta, 1963.


**ஆதிக்குடிகளின் சமயமும் மாய வித்தையும்:** சமூக வளர்ச்சிக்கும் வாழ்க்கையின் முன்னேற்றத்திற்கும் அடிப்படையாக உள்ள ஒற்றுமை உணர்ச்சி மலைவாழ் மக்களிடையே நிறைந்துள்ளது. அவர்கள் நாகரிகமற்றவர்கள் எனினும் சமய நம்பிக்கையிலும் தெய்வ பக்தியிலும் நிறைந்துள்ளனர். நாகரிக வளர்ச்சியின் ஒரு பகுதிதான் சமயம். ஆனால், ஆதிக்குடிகளின் சமயக் கோட்பாடுகளையும் சமயச் சடங்குகளையும் காணும் போது, நாகரிக மக்களிலிருந்து எவ்வகையிலும் இவர்கள் வேறுபடவில்லை என்பதை அறியலாம். சமய நம்பிக்கை, சமயச் சடங்குகள் இல்லாத ஆதிக்குடிகளே இல்லை. இயற்கைக்கு அப்பாற்பட்ட ஆற்றலின் மீது நம்பிக்கை, இறந்தவரை வழிபடுதல், ஆவியின் மீது நம்பிக்கை, ஆன்ம சக்தியில் நம்பிக்கை, இவற்றைத்தம்

முள் அடக்கி அதனால் பெறும் சக்தியை மாய சக்தியாகப் பயன்படுத்தி வருகின்றனர்.

ஆதிக்குடி மனிதன் தன் அன்றாட வாழ்க்கையில் குறிப்பிட்ட விதிமுறைகளைக் கையாள்கிறான். காலையில் எழுந்து காலைக்கடன்களை முடித்துவிட்டு இறைவனை வழிபடுகிறான். இயற்கையுடன் நேரடித் தொடர்பு கொண்டுள்ளான். உயிர்வாழ் இனங்களுடன் உறவு கொண்டுள்ளான். இதற்கு அவனுடைய மொழி, கல்வி, சமூக அமைப்பு ஆகியன உதவுகின்றன. ஆதி மனிதன் கல்லைக் கருவியாக்கினான்; இயற்கையை வணங்கினான்; தமக்கு மேல் ஒரு ஆற்றல் உண்டென நம்பினான்; விஞ்ஞானத்தை அறியாததால் வான், நிலவு, நீர், காற்று, சூரியன் ஆகிய இயற்கைச் சக்திகளை வழிபட்டான். இடி, மின்னல், புயல் ஆகியவற்றைக் கண்டு அஞ்சினான். மனிதன் தவறுகளுக்கு இவை தண்டனையாக வருகின்றன என்று எண்ணினான்; தவறுகள் செய்யாமல் இருக்க முயன்றான். இறந்தவர் உடலை விலங்குகளுக்கு இரையாக்கினான். செம்புக்கால மனிதன் இறை நம்பிக்கை கொண்டான். கடவுளை வழிபட்டான். சிந்துவெளி அச்சுகளில் இறைவணக்கம் செய்வது பலிகொடுப்பது ஆகிய செய்கைகள் காணப்படுகின்றன.

இரும்புக் கால மனித வாழ்க்கையில் சமய நெறிகள் இருந்தமைக்குரிய சான்றுகள் உள்ளன. இறந்தவர் ஆவியாக வருவர் என்ற நம்பிக்கை அவர்களிடையே இருந்தது. பாவம் செய்பவர்கள் மறுபிறப்பில் மிருகமாகப் பிறக்கலாம் என்றும், மறு உலகில் தண்டனை உண்டென்றும் நம்பினர். இறந்தவரை வழிபட்டனர். இயற்கைக்கு அப்பாற்பட்ட ஆற்றலின் மீது நம்பிக்கை வைத்தனர். இறந்தவன் ஆவி வெளியே நடமாடாமல் இருக்க இறந்தவரை எரித்தபின் எலும்பு, சாம்பலைத் திரட்டி அவர்களின் உடைமைகளைச் சேர்த்துத் தாழியில் வைத்துப் புதைத்தனர். அதன் மீது கல்லையும் வைத்தனர். இத்தகைய செயல்கள் ஆதிக்குடிகளிடையே நிறைந்து காணப்படுகின்றன.

இறந்தவரை வழிபடுவதும், குலக்குறிகளை வணங்குதலும், இயற்கையை வழிபடுதலும் சமயத் தொடர்பானவையே. இயற்கை இறந்த ஆற்றல் மீது நம்பிக்கை வைத்துச் சமயச் சடங்குகள் வாயிலாகவும், ஆடல்பாடல் – பலியிடுதல் வாயிலாகவும் கடவுளின் ஆற்றலைத் தன்னுள் அடக்கி, அவ்வாற்றலைக் கொண்டு நல்ல செயல்களையும் தீய செயல்களையும் செய்யும் மாயவித்தைக்காரர்களின் செயல்களும் ஆதிக்குடிகளிடையே நிறைந்துள்ளன.

நீலகிரியில் வாழும் தொதுவர்கள் சமயநம்பிக்கை மிக்கவர்கள். தமக்குப் பால்தரும் எருமைகளைப் புனிதமாகக் கருதுகின்றனர். பெண்கள் எருமைக் குடிலுக்குச் செல்லக்கூடாது; பெண்களின் தீட்டினால் புனிதம் கெடும் என நம்புகின்றனர். காலையில் எழும்போதே சூரியனை வழிபடும் பொருட்டுக் குடிசைகளின் வாயில் தாழ்ந்து கிழக்கு நோக்கி உள்ளது. இறந்தவருக்குப் பல ஈமச் சடங்குகளைச் செய்கின்றனர். இறந்தவர் உடலை எரித்துவிட்டுப் பின்னர் அதன் எலும்புச் சாம்பல்களுடன் அவர்கள் பயன்படுத்திய பொருள்களையும் புதைத்து அதன் மீது கற்களை அடுக்கி விடுகின்றனர். இறந்தவரது எருமையையும் பலி கொடுத்து விடுகின்றனர். இறந்தவர் உயிரோடு இருக்கும்போது பயன்படுத்திய பொருள்கள் அவர் உடலுடன் புதைக்கப்படவேண்டும். இல்லையெனில் இறந்தவரின் ஆவி மீண்டும் அப்பொருள்களின் மீது தொடர்பு கொள்ளும் என்றும் நம்புகின்றனர்.

தஞ்சை கோடிக்கரையில் வாழும் ஆதிவாசிகள் அய்யனார், மதுரைவீரன், பேச்சிக் கருப்பன், காத்தவராயன் ஆகிய கிராமத் தேவதைகளை வழிபடுகின்றனர். இத்தெய்வங்களுக்குக் கோழி, ஆடுகளைப் பலியிடுவர். பொதுவாக, இத்தெய்வங்கள் மக்களுக்குத் தீமையான காரியங்களைவிட நன்மையானவற்றையே அதிகமாகச் செய்கின்றன. மாரியம்மனை ஒரு நோய் நீக்கும் அல்லது நோய் தடுக்கும் தெய்வமாக வழிபடுகின்றனர். செங்கல், வேல், வேப்பமரம் ஆகிய இவற்றைத்தான் மாரியம்மனாக நினைத்து வழிபடுகின்றனர். இந்த மரத்தினை எவரும் தீண்டக்கூடாது. இந்த ஆதிவாசிகளின் தலைவனுக்குப் பரம்பரையாகத் தெய்வத்தின் அருள் இருப்பதாக நம்புகின்றனர். அந்தத் தலைவனே சமயச் சடங்குகள், திருமணம், ஈமம் பற்றிய சடங்குகள் ஆகியவற்றை நடத்துவான்.

ஆந்திர மாநிலம் கடப்பாவில் 'இராம்' என்ற ஆடு போன்ற மண் உருவ சவப்பெட்டிகளை அமைத்து அதில் இறந்தவர்களின் உடலையோ எரி யூட்டிச் சேகரித்த சாம்பல் எலும்புகளையோ உடைமைகளுடன் சேர்த்துப் புதைக்கின்றனர். இந்தப் புனித ஆடு இறந்தவர்களின் ஆன்மாவை மேலுலகுக்கு எடுத்துச் செல்லும் என்பது இவர்களின் நம்பிக்கை. இதுபோலவே செங்கற்பட்டு மாவட்ட ஆதிக்குடிகள் கால்களுடைய நீண்ட சவப் பெட்டிகளில் இறந்தவரைப் புதைத்துள்ளனர் என்பதற்குச் சான்றுகள் உள்ளன.

பழனிமலை ஆதிக்குடிகளிடையே சமய நம்பிக்கை நிறைந்து காணப்படுகிறது. தம் வருவாயில் ஒரு பகுதியைக் கோயிலுக்கு அளிக்கின்றனர். கோயில் பூசாரி பேய், பிசாசு அண்டியவரைத் தம் சக்தியால்

அவற்றிலிருந்து நீக்குவார் என்னும் நம்பிக்கை உண்டு. பலியருக்கும் முதுவருக்கும் காட்டிலுள்ள பச்சிலை மூலிகை மருந்துகளைப் பற்றி அதிகம் தெரியும். அத்துடன் மந்திர மாயங்களும் அறிவர். 'புலிக்கு வாய்கட்டு'தலென்பது ஒருவகை மந்திரம். ஆடு மாடு மேய்ப்பவர்கள் புலிக்கு வாய் கட்டும் மந்திரவாதியிடம் வந்து தாங்களும் தங்கள் கால்நடைகளும் நடமாட வேண்டிய எல்லையைக் குறிப்பிடுவர். அந்த எல்லைக்குள் புலி சிறுத்தைகள் நடமாடாதவாறு அவர் மந்திரித்து விடுவாராம். அந்த எல்லையின் நான்கு பக்கத்திலும் திசைக்கொன்றாக நரி வால்களைக் கட்டி விடுவார்களாம். அந்த எல்லைக்குள் கொடிய மிருகங்கள் வாரா; வந்தாலும் கால்நடைகளுக்கோ மனிதர்களுக்கோ தீங்கு செய்ய மாட்டாவெனப் பலியர்களும் மலையில் உள்ள பிறரும் நம்புகின்றனர்.

மனிதர்கள் புலியாக மாறி மற்ற விலங்குகளை வேட்டையாடி மீண்டும் மனிதனாக மாறும் மாய சக்தி ஆதிக்குடிகளிடையே உண்டென நம்புகின்றனர். மதுரை மங்களம்கொம்பு மலைக் கிராம முதுகர்களுக்குப் புலிகளின் நடமாட்டம் தெரியும் எனவும், அவர்கள் மாயமந்திர சக்தியில் வல்லவர் எனவும் கூறுகின்றனர். கீழ்ப் பழனி மலையில் உள்ள ஆதிக்குடிகள் பில்லி, சூனியம், மந்திரம் முதலியவற்றைச் செய்வதனால் புலியின் வாய்கட்டுபவர்களும், புலியாக மாறுபவர்களும், ஏவல் புலி விடுபவர்களும் இருக்கின்றனர் என்று நம்புகின்றனர். சில பழங்குடியினர் அம்மை நோய் வந்தவரை அக்குடிசையிலேயே விட்டுச் செல்லும் மூடப்பழக்கமும் தொடர்ந்து இருந்துவருகிறது.

ஆதிக்குடிகள் தங்களின் குலக்குறிகளை நெற்றி, கை, மார்பு முதலிய பகுதியிலும் பச்சை குத்திக் கொள்கின்றனர். நரிக்குறவர்கள் அவர்கள் மதச் சடங்கின்போது விரதம் இருந்து எருமைகளை வெட்டி அதன் குருதியினைக் குடிக்கின்றனர். கொதிக்கும் எண்ணெய்ச்சட்டியுள் கைகளை இடுகின்றனர். அதற்குமுன் சில பச்சிலை நீர்மத்தைத் தங்கள் உடலில் தடவிக் கொள்கின்றனர். இச்செயல் அவர்களின் மாயவித்தையாகவே கருதப்படுகிறது. பேய், பிசாசு பிடித்தவர்களைத் தம் தெய்வசக்தியால் பூசாரிகள் பேச வைத்து, அவற்றை விரட்டுகின்றனர்; அல்லது அவை தீய நோக்குள்ளவைகளாக இருந்தால் குப்பிகளில் அடைத்துக் கடலில் எறிகின்றனர்; அல்லது மரக்கட்டை, உருவப் பொம்மைகளில் மாற்றி எரித்துவிடவும் செய்கின்றனர்.

கேரளாவில் உள்ள ஆதிக்குடிகள் மாயமந்திர வேலைகளில் கைதேர்ந்தவர்கள். மலபாரில் கிடைக்கப் பெற்ற கால்களுள்ள சவப்பானைகளும் இறந்தவருக்கெனப் படைக்கப்பட்ட மண்ணால் ஆன உணவு உருண்டைகளும் புதையலில் கிடைக்கப் பெற்றுள்ளன. நெல்லை மாவட்டம் ஆதிச்சநல்லூரில் வாழ்ந்த ஆதிக்குடிகள் இறந்தவரைத் தாழியில் புதைத்தனர். எலும்புக் கூடுகளும் இறந்தவர் நெற்றியில் கட்டப்பட்ட தங்கப் 'பட்டமும்' இதற்குச் சான்றுகள்.

ஆதிக்குடிகள், கொடும்பாவி எரிப்பதாலும் மாதிரி உருவங்கள் அமைத்து அழிப்பதாலும், மர உருவங்களில் ஆணி அடித்து மந்திர ஆற்றலைப் பயன்படுத்துவதாலும் எதிரிக்கு அதுபோன்ற துன்பங்கள் உண்மையில் நிகழும் என்று நம்புகின்றனர். பழங்குடியினருள் சில பிரிவினர் ஒருவர் ஆடையை மற்றவர் அணிவதில்லை. காரணம் நோய் பரவும் என்பதன்று; முதலில் யார் அந்த ஆடையை அணிந்தார்களோ அவர்தம் உறுப்புகளில் ஒன்றாக அவ்வாடை கருதப்பட்டமை காரணமாகும். முதலில் ஏற்பட்ட தொடர்பு முடிந்த பின்னும் தொடரும் என நம்புகின்றனர். இதனால்தான் இறந்தவரின் உடைமைகள் அவருடன் எரியூட்டப்படுகின்றன. இயற்கையிறந்த ஆற்றலின்மீதுள்ள நம்பிக்கை தொடர்கிறது. இத்தகைய ஆற்றலை ஆதிக்குடிகள் தம்முள் அடக்குதற்காகத் தம் உடலை வருத்தி விரதம் இருக்கின்றனர். ஆடிப்பாடி அருளைப் பெறுகின்றனர். அந்த அருளின் ஆற்றலை மாயவித்தையாகப் பயன்படுத்திக் கொள்கின்றனர். இதுதான் சமயத்திற்கும் மாய வித்தைக்கும் உள்ள அடிப்படையான வேறுபாடு ஆகும். சமயம் என்பது மக்களால் விவரமாகப் புரிந்து கொள்ளப்பட்ட ஒன்றாகும். ஆனால், மாயவித்தை அதைச் செய்பவரைத் தவிர மற்றவரால் அறியப்படாதது.

கொண்டர் ஆதிக்குடிகள் நல்லபாம்பு, புலி, ஆமை போன்ற குலக்குறிகளை வழிபடுகின்றனர். இவர்கள் வழிபடும் பிராணிகளை வேட்டையாடவோ துன்புறுத்தவோ அவற்றின் மாமிசத்தை உண்ணவோ மாட்டார்கள். நாகர்கள் இறந்தவரைப் புதைத்த இடங்களில் புதைகுழியின் மீது அவர்களின் வேலைப்பாடுள்ள தொப்பி, ஆடைகள், துப்பாக்கி, கத்தி போன்றவற்றை வைத்துவிட்டுச் செல்கின்றனர். இறந்தவரின் ஆவி வெளியே வரும்போது அந்த ஆடைகளை அணிந்து கொண்டு வேட்டையாடச் செல்லும் என நம்புகின்றனர். அப்படி உடைமைகள் வைக்கப்படவில்லை என்றால் அந்த ஆவிகள் உறவினருக்குத் துன்பங்கொடுக்கும் என்பதும் இவர்களின் சமய நம்பிக்கையாகக் கருதப்படுகிறது. மேலும் ஆவிகளின் செயல்களைக் கட்டுப்படுத்த மாயவித்தை, சமயத் தொடர்புகள் கொண்ட மரப் பொம்மைகள் செய்யப்பட்டுச் சவக்கிடங்கில் வைக்கும் பழக்கமும் ஆதிக்குடிகளிடையே உள்ளது. ந.சு.

**ஆதிக்குடிகளின் தொன்மங்கள்:** ஆதிக்குடிகளிடையே வழங்கும் தொன்மங்கள் அவர்கள் அடைந்திருக்கும் அறிவு வளர்ச்சியைப் பொறுத்து வேறுபட்டாலும், அவர்கள் சமூகத்தின் எழுதப்படாத தலைமைச் சட்டமாகவும் வழிநடத்திச் செல்லும் பண்பாட்டு முறைமையாகவும் திகழ்கின்றன. அவர்களின் அறிவு வளர்ச்சி அவர்கள் இயற்கையோடு கொண்டிருக்கும் தொடர்போடு பிணைந்திருக்கிறது. மேலும், அது இயற்கையோடு போராடித் தம் வாழ்க்கைக்குத் தேவையான அதன் பொருள்களைப் பயன்படுத்திக் கொள்வதில் அடைந்த வெற்றிகளைப் பொறுத்திருக்கிறது. இவ்வாறு அவர்கள் பெற்றிருக்கும் அறிவிற்கு ஏற்பத் தொன்மங்களைப் புனைந்துள்ளனர்.

பழங்குடிகளிடம் வழங்கும் தொன்மங்களை உலகப்படைப்புக் கதைகள், வானியல் கதைகள், விலங்கியல் தொன்மங்கள், தாவரவியல் தொன்மங்கள், குலமரபுச் சின்னத் தொன்மங்கள் என ஐந்து பெரும் பிரிவுகளாகப் பகுக்கலாம்.

**உலகப் படைப்புக் கதைகள்:** ஆதிக்குடிகளிடையே நிலவும் தன்னுணர்வும், சமூக உணர்வும் எந்த நிலையில் இருந்தனவோ அந்த நிலையில்தான் அவர்கள் உலகம் ஏற்பட்ட வகை பற்றிக் கற்பனை செய்து உலகத் தோற்றக் கதைகளைப் படைத்தனர். தாம் வாழும் நிலையிலிருந்து உலகம் தோன்றிய மிகப் பழங்கால நிலைமையைப் பற்றிச் சிந்தித்தார்கள். இச்சிந்தனையின் விளைவாக, உலகம் தோன்றியதற்கான பல வகைப்பட்ட படைப்புக் கதைகள் தோன்றின.

இவற்றுள் மூன்று வகைத் தொன்மங்களைக் காணலாம். அவை பெண் உலகைப் படைத்தாள், ஆண் உலகைப் படைத்தான். பெண் உலகைப் படைத்தாள், ஆனால் ஆண் குழப்பத்தை நீக்கி ஒழுங்கை ஏற்படுத்தி ஆட்சி செய்தான் எனக் கூறுவனவாகும்.

பெண் படைப்புக் கதை, நான்கு கிரேக்கப் படைப்புக் கதைகளுள் ஒன்று. 'ஆதியில் யூரிநோம் என்னும் உலக மாதா குழப்பத்திலிருந்து அம்மணமாக எழுந்தாள்' என்று தொடங்கி, 'அவளால் முதன்முதலில் படைக்கப் பட்ட மனிதன் 'பெலாசுகசு' என்பான் எனக் கூறுகிறது.

மற்றொன்று, "எல்லாத் தேவர்களும், உயிர்களும் 'ஓசியானசு' என்னும் உலகைச் சுற்றி ஓடும் நீரோட்டத்தில் தோன்றின' என்றும், 'பெதிசு' என்னும் தெய்வம் ஓடியானசு என்னும் தேவனின் குழந்தைகளின் தாயென்று கூறுகிறார்கள்' என்றும் கூறுகிறது.

பிறிதொரு கதை, 'ஆதிகாலத்தில் பூமித்தாய் குழப்பத்திலிருந்து தோன்றி, உறங்கும்பொழுதே யூரானசைப் பெற்றெடுத்தாள். அவன் விமானத்திலிருந்து அவளை அன்போடு நோக்கி அவளுடைய பள்ளத்தாக்குகளை நோக்கி மழை பொழியச் செய்தான். அவள் புல், மலர், மரம், விலங்குகள், பறவைகள் முதலியவற்றை இடத்திற் கேற்பப் பெற்றெடுத்தாள். இம்மழையே ஆறுகளையும், கடல்களையும் உண்டாக்கியது. அவளின் முதற்குழந்தைகள் அரைகுறை மனித உருவ முடையவர்களாக இருந்தனர். பிரையேரியசு, கைகெசு, காட்டுசு என்ற நூறு கைகளையுடைய அரக்கர்கள் பிறந்தனர். பின்னர் ஒற்றைக் கண்ணுடைய அரக்கர்கள் பிறந்தனர்' என்று கூறுகிறது.

இந்தியத் தத்துவ ஞானங்களுள் ஒன்றான சாக்கதமும் உலகைப் பெண்ணே படைத்தாள் என்று கூறுகிறது.

முன்னேறிய வேட்டைச் சமுதாயத்திலும் ஆடுமாடு வளர்ப்பையே தொழிலாகக் கொண்ட பழங்குடிகளின் சமுதாயத்திலும் உலகப் படைப்புக்கு ஆண் காரணமாக இருந்தான் என்னும் நம்பிக்கை நிலவுகிறது. 'இருக்கு வேதம்' புருச சூக்தத்தில் புருடனை வருணித்துவிட்டுப், புருடனைப் பலியிட்டதாகவும், அவன் உடலின் ஒவ்வொரு பகுதியிலிருந்தும் உலகமும் விலங்குகளும் பிராமண, சத்திரிய, வைசிய, சூத்திரர்களும் தோன்றினர் என்பதாகவும் கூறப்பட்டுள்ளது.

உலகில் பெண் அல்லது மாதா அல்லது தாய் குழப்பம் நிலவிய நிலையாகவும் ஓர் ஆண் அல்லது தேவன் தோன்றிக் குழப்பத்தை நீக்கி ஒழுங்கை நிலைநாட்டியதாகவும் பல தொன்மக் கதைகள் வழங்கி வருகின்றன. மிகப்பழைய மெசபடோமியக் கதையான 'எனுமா எலிசு' என்னும் தொன்மக் கதை இதற்குச் சான்றாகும். இனக்குழுக் குடியாட்சியிலிருந்து அரசு தோன்றியபின் முந்திய குழப்ப நிலை பற்றிய ஒரு புனை கதையும் பிந்திய அமைதி நிலை பற்றிய ஒருபுனை கதையும் 'எனுமா எலிசு' என்ற தொன்மத்தில் இணைக்கப்பட்டுள்ளன.

ஆதிக்குடிகளிடையே வழங்கும் புராணங்களில் ஒரு பொதுவான படைப்புத் திட்டம் உள்ளது. அதில் இருள், நீர், படைப்பாளி, பிரிவு, பூமி, வானம், தாவரங்கள்-பூச்சிகள்-விலங்குகள்-மனிதர்கள், இரண்டாவது படைப்பு முதலியன அடங்கும்.

வானமும் பூமியும் ஒன்றாகவே இருந்தது. பிறகு இரண்டாகப் பிரிக்கப்பட்டது என்று பெரும்பாலான தொன்மங்கள் கூறுகின்றன. சில வானம், பூமி, கீழ் உலகம் என்று கூறுகின்றன. வானத்தை ஓர் உருவ

மாகக் கருதிச் சூரியனையும் நிலவையும் அதன் இரு கண்களாகக் கதைகள் கூறுகின்றன. பல புராணங்கள் நிலவுக்கு இன்றியமையாமை அளித்துள்ளன. மேலும் அவை நிலவுக்கு மாய மந்திர ஆற்றல் இருப்பதாகக் கூறுகின்றன.

நிலவைப் பெண்ணாகவும் சூரியனை ஆணாகவும் பல புராணங்கள் சொல்கின்றன. சில பழங்குடிகளின் புராணங்கள் இதற்கு நேர் மாறாகக் கூறுவதையும் காணமுடிகிறது. ஓரளவிற்கு வளர்ச்சி பெற்ற பழங்குடிகளின் புராணங்கள் நிலவை ஆண், பெண் இரண்டு மாகக் கூறுகின்றன.

வானத்திற்கும் அங்குத் தெரிகிற பொருள்களுக்கும் உயிர்-ஆவி ஆகியன உண்டு என்ற நம்பிக்கையைத் தொன்மங்களால் அறிய முடிகிறது.

வானில் தேவர்கள் ஆட்சி பற்றியும் கூறப்படுகிறது. தங்கள் கண்முன் உள்ள உலகில் நடந்த வரலாற்று நிகழ்ச்சிகளையும் பழங்காலத்தில் நிகழ்ந்தனவாகத் தங்கள் கற்பனையில் கருதி வந்த நிகழ்ச்சிப் போலிகளையும், புனைகதைப் பாணியில் தேவருலகில் நடைபெற்றதனையும் கால் உருவங்களாகப் படைத்தார்கள்.

கோண்டுப் பழங்குடியினர் பூமியைப் பெண்ணாகவும் வானத்தை ஆணாகவும் கருதிப் பலிகொடுக்கும் நிகழ்ச்சிகளைத் தொன்மங்களில் இணைத்துக் கூறுகின்றனர்.

மேலுலகம் மிக அருகில்தான் உள்ளது. அங்கிருந்து பொன் ஏணிவழியாகவும் நூல் ஏணி வழியாகவும் பூவுலகத்திற்கு வரலாம் எனவும் தேவர்களும் பிறரும் இவ்வாறு வந்து செல்வர் எனவும் தொன்மக் கதைகள் வழங்குகின்றன.

ஆதிக்குடிகள் அடர்ந்த காடுகளின் நடுவேதான் பெரும்பாலும் வாழ்ந்தனர். தங்களைச் சுற்றிலும் இருந்த நன்மை, தீமை தரும் தாவரங்களை அறிந்தார்கள். இவை எவ்வாறு பயன் கொடுக்கின்றன என அவர்கள் அறிவு பெற்றிருக்கவில்லை. இதன் காரணத்தை விளக்கவும் மேலும் நிறையப் பலன்களைத் தாவரங்களிடமிருந்து பெறவும் புராணக் கதைகளைப் படைத்தனர்.

இப்படிப்பட்ட கதைகளில் ஒன்று 'கற்பகத் தரு' என்பதாகும். பைபிளில் கூறப்படும் ஏடன் தோட்டத்திலிருந்த 'அறிவு தரும் மரம்' இதனோடு குறிப்பிடத்தக்கதாகும். முருகன் 'கடம்ப மரமாக' நின்றதும் சூரபத்மன் 'மாமரமாக' நின்றதும் இப்புராண வளர்ச்சியாகும்.

துளசிச் செடியும் கோயில்களில் உள்ள மரங்களும் ஆதிக்குடிகளின் தாவர புராண வளர்ச்சியைக் குறிப்பனவாகலாம்.

தாவரங்களுக்கு இடையே மனிதன் வாழ்ந்தது போலவே விலங்குகள் சூழ்வும் ஆதிக்குடிகள் வாழ்ந்தார்கள்-வாழ்கின்றனர். இவர்களைச் சுற்றிலும் கொடிய விலங்குகளும் முரட்டுத் தன்மை குறைந்த விலங்குகளும் திரிந்தன. இவற்றின் குணங்களுக்கு ஏற்ப ஆதிக்குடியினர் கற்பனை செய்து புனைந்துரைத்தனர்.

இவற்றில் பாம்பு பற்றிய தொன்மம் உலக அளவில் நிலவுகிறது. பாம்பு தன் தோலை உரித்து விடுவதால் இறவாமல் வாழ்கின்றது எனக் கருதிய மனிதன் அதற்கான புனை கதைகளை உருவாக்கினான். இது செழிப்பைத் தருவது என்றும் 'தீமை' தருவது என்றும் இரு வகையான தொன்மக் கூற்றுகள் நிலவுகின்றன. உலகத்தை 'ஆதிசேடன்' என்னும் ஐந்து தலை நாகப்பாம்பு தாங்குவதாகவும் தொன்மங்கள் கூறுகின்றன. சீனர்களும் கிரேக்கர்களும் தீயுமிழும் பாம்பைக் கற்பனை செய்தனர்.

குரங்கிற்கும் மனிதனைப் போலவே அறிவு உண்டு என்ற கற்பனையில் எழுந்த தொன்மமே 'அனுமான்' ஆகும். கடவுள் கோட்பாடு வளர்ச்சி பெற்ற காலத்தில் ஆதிக்குடிகளிடமிருந்த விலங்கு பறவைத் தொன்மங்கள் கடவுளர் தொன்மங்களோடு இணைக்கப்பட்டுக் கடவுளின் வாகனங்களாக மாறின.

உலகில் வாழும் ஆதிக்குடிகளின் இனங்கள் பெரும்பாலான வற்றிற்கும், குழுவிற்கும் ஒவ்வொரு சின்னம் இருக்கிறது.

குலமரபுச் சின்னத்தைத் தம் குலத்தின் மூதாதையராக ஆதிக்குடிகள் கருதுகின்றனர். காட்டெருமை ஓர் இனக்குழுவின் சின்னமாக மதிக்கப்படுகிறது எனின், அந்தக் காட்டெருமையே தம் இனத்தைத் தோற்றுவித்ததாகக் கூறுகின்றனர். இதற்கெனத் தொன்மைப் புனை கதைகளைப் படைத்தனர்.

சூனி தொன்மத்தில் (Zuni Myth) ஒன்று, முதலில் உலகில் ஒரு மந்திரவாதி இருந்தான் என்றும், புதிதாகப் படைக்கப்பட்ட மனிதனுக்கு நான்கு முட்டைகளைக் கொடுத்தான் என்றும் கூறுகிறது. இவற்றில் ஓர் இணை வானத்தைப் போல நீல நிறமாக இருந்தது. மற்றோர் இணை பூமியைப் போலச் செந்நிறமாக இருந்தது. நீல இணை முட்டையிலிருந்து காக்கைக் குஞ்சுகள் வெளிவந்து குளிர்ந்த வடபகுதிக்குச் சென்றன. செந்நிற இணை முட்டையிலிருந்து 'மெக்கவு' என்னும் பறவைக் குஞ்சு வெளிவந்து வெதுவெதுப்பான தென்பகுதிக்குச் சென்றன என்றும் அக்கதை கூறுகிறது.

குலக் குறிச் சின்னத்தைத் தங்கள் மூதாதையர்களாகவும் புனிதப் பொருளாகவும் நம்புவது சமுதாய ஒழுங்கமைவிற்குப் பெரிதும் பயன்படுவதோடு சமுதாயத்தில் சமத்துவம் சகோதரத்துவம் ஆகியன நிலவுவதற்கும் உதவுகிறது. உலகில் உள்ள அனைத்துப் பொருள்களுக்கும் (கல், மலை, சந்திரன், சூரியன்) உயிர் உண்டு என்ற நம்பிக்கையில் தொல் பழங்காலத்தில் எழுந்த தொன்மங்கள் இவை.

இத்தகைய தொன்மங்களினால் முன்னோர்களாகவும் புனிதப் பொருள்களாகவும் கருதப்பட்ட பல வகைத் தாவரங்கள் அழிக்கப்படாமல் பாதுகாக்கப்பட்டன. பல விலங்குகள் தொழிலுக்காகப் பழக்கப்பட்டன. தங்கள் குலச் சின்னத்தைப் பல முறை வரைந்தாலும் செதுக்கியதாலும் சித்திரம் சிற்பம் முதலிய கலைகள் இவர்களிடையே வளர்ச்சியடைந்தன. ஆடலும் சிறப்புப் பெற்றது. இதனால், காலம் செல்லச் செல்ல இவற்றில் நுட்பங்கள் வளர்ந்தன.

இத்தகைய தொன்மங்களைக் கூறுகிற மக்கள் இவற்றை உண்மையென நம்புகின்றனர். அந்த நம்பிக்கையின் அடிப்படையில் செயற்படுகின்றனர் தனிமனிதனையும் இனக் குழுக்களையும் இவை ஒழுங்குபடுத்தி இயங்கச் செய்கின்றன.

தொன்மங்கள் யாவும் நாகரிகத்திற்கு முற்பட்ட கால மக்களின் வாய்வழிக் கதைகள் ஆகும். இன்றும் பழங்கால நாகரிக நிலையில் வாழும் மக்கள் ஆதிக்குடிகள் தொன்மங்களையும் வாய்வழியாகவே வழங்கி வருகின்றனர்.

பழங்குடிகளாக வாழ்ந்து நாகரிக நிலைக்கு வந்தவர்களின் கதைகள் எழுத்து வடிவம் தோன்றிய பின்னர்த் தனிக் கதைகளாகவும் காப்பியங்களின் பகுதிகளாகவும், சமய நூல்களின் உறுப்புகளாகவும் ஆகிவிட்டன.

சமூகத் தொன்மக் கற்பனைகள் அச்சமூகம் வரலாற்றுப் போக்கில் உருவாகியுள்ள கற்பனைப் படைப்புப் படிமங்களையும் சமூக மாற்றத்தால் ஏற்படும் புதிய சிந்தனைப் படிமங்களையும் ஒன்றாகச் சேர்த்து வளர்த்துச் செல்கின்றன. சமூக வளர்ச்சியில்-மாற்றத்தில்-தேங்கிப் பின்தங்கிவிட்ட இனக் குழுக்கள் பழங்காலத்தில் புனைந்த தொன்மக் கதைகளை நம்புகின்றன. வளர்ச்சி பெற்ற சமுதாயங்கள் வளர்ச்சிக்கு ஏற்ற புதிய கூறுகளைத் தொன்மங்களில் சேர்த்துக் கொண்டே வந்தன. உண்மையான அறிவியல் அணுகுமுறைக் கல்வி நாட்டில் பரவி, கற்றவர் தொகை பெருகிச் சமூகம் மாற்றியமைக்கப்படும் பொழுது, இத்தொன்மங்களுக்குச் சமூக அடிப்படையில் மாற்றம் ஏற்படும். க.கி.

**துணை நூல்கள்:**


வானமாமலை நா., பழங்குடிகளும் பழமொழிகளும், 1980.

Elwin, V., Religion of an Indian Tribe, Oxford University Press, London, 1955.

Frazer, J., Totemism and Exogamy, Macmillan, London, 1970.

Harper E. B., Religion in South Asia, University of Washington Press, Seattle, 1964.

William, C., Religion and Folklore of North India S. Chand Co., Ltd., New Delhi, 1972.


**ஆதிக்குடிகளின் பொருளாதாரம்:** ஆதிக்குடிகளின் பொருளாதார வாழ்க்கை முறை, உற்பத்தி, பகிர்ந்து கொள்ளுதல், உண்ணுதல், என்னும் பகுப்பினைச் சார்ந்ததாகும். பழங்கற்காலத்தில் மனிதன் வேடனாகவும் மீனவனாகவும் வேர்கள், செடிகள், பழவகைகள் முதலானவற்றைச் சேகரிப்பவனாகவும் திகழ்ந்தான். புதிய கற்காலப் புரட்சியின்போது, விலங்குகள் தாவரங்கள் ஆகியவற்றை வளர்த்தல், கால்நடை வளர்த்தல், பயிர்த்தொழில் செய்தல் ஆகியவை பரவலாயின.

பொதுவான அடிப்படையில் ஆதிக்குடிகளின் பொருளாதார அமைப்பு, வேட்டையாடுதல்- உணவு சேகரித்தல், நாடோடியாகவாழ்தல், கால்நடை வளர்த்தல், பயிர்த்தொழில் முதலான தொழில்களைச் சார்ந்திருக்கிறது. பண்பாட்டின் கீழ்நிலையில் இருக்கும் இக்குடிகளின் பொருளாதார முறை எளிமையானதாகும்.

வேட்டையாடுதலும் உணவு சேகரித்தலும் ஆகிய வாழ்க்கையமைப்பு, இன்றளவும் உலக ஆதிக்குடிகளிடையே காணப்படுகிறது. கிழங்குகள், கனிகள், தேன், சாயப் பொருள்களுக்குப் பயன்படும் மரப்பட்டைகள், மூலிகைகள் முதலான காட்டுப் பொருள்களைச்சேகரித்தல், விலங்குகளை வேட்டையாடுதல், மரம் வெட்டுதல் போன்ற தொழில்களை இக்குடியினர் மேற்கொள்கின்றனர். ஆண்கள், பெண்கள், குழந்தைகள் அனைவரும் இத்தொழிலில் முழுமையாக ஈடுபடுகின்றனர். ஆந்திரப் பிரதேசத்தின் செஞ்சு குடிகள் வேட்டையாடுதலையும் உணவு சேகரித்தலையும் செய்யும் மிகப்பெரும் இந்திய ஆதிக்குடியாக விளங்குகின்றனர். காதர், குறவர், கணிக்கர், மலைப் பண்டாரம் முதலிய தென்னிந்தியக் குடிகளும் அந்தமான் பழங்குடிகளும், இலங்கை வெத்தர், ஆப்பிரிக்க அமெரிக்க இந்திய, ஆசுத்திரேலிய, பாலினேசிய மைக்ரோனேசிய குடிகளும் இவ்வகைப் பொருளாதாரத்தைக் கொண்டுள்ளனர்.



ஆந்திரப் பழங்குடி-செஞ்சுக்கள் வேட்டையாடுதல்

நாடோடிகள் நிலையான வாழிடத்தைக் கொண்டிராமல் இடம் விட்டு இடம் பெயர்ந்து கொண்டே வாழ்வர். இவர்கள் உணவு சேகரித்தல், கால்நடை வளர்த்தல், குற்றச் செயல் புரிதல், பிச்சை எடுத்தல் முதலான தொழில்களைக் கொண்டிருக்கின்றனர். கார்வால் நாடோடிகள், உணவு சேகரித்தல், பிச்சை எடுத்தல், குற்றம் செய்யும் தொழில் ஆகியவற்றில் ஈடுபட்டுள்ளனர். ஆந்திரப் பிரதேசத்தின் எருகுளர் குற்றம் செய்யும் தொழிலைக் கொண்டிருந்தனர். இருப்பினும் நாடோடிகள் பெரும்பாலோர் கால்நடை வளர்த்தலையே முதன்மைத் தொழிலாகக் கொண்டுள்ளனர்.

வேளாண்மை ஆதிக்குடிகள் பெரும்பாலோரின் முதன்மைத் தொழிலாகும். காட்டை அழித்து இடம்விட்டு இடம் மாறிப் பயிரிடுதல் (Shifting Cultivation), சாய்வான மலைப்பகுதிகளில் அடுக்கு நிலத்தில் பயிரிடுதல் (Terrace Cultivation) முதலான தொன்மை முறைகளிலிருந்து சமநிலங்களை அமைத்து உழுது பயிரிடும் முறையைப் பின்பற்றி வருகின்றனர்.

இடம்விட்டு இடம் மாறிப் பயிரிடுதல் (Shifting Cultivation) என்பது நீண்ட காலம்வரை ஒரே இடத்தில் பயிரிடாமல், வெவ்வேறு இடம் மாறிப் பயிரிடும் முறையாகும். இம்முறையினை நாகர்கள் சூம் (Jhum) என்றும், பூயியாக்கள், தகி (Dahi) என்றும், கோமன் (Komon) என்றும், மரியா கோண்டுகள் இதனைப் பெண்டா என்றும், கொந்தர் பொடு என்றும், பைகர் பேவா (Bewao) என்றும் சொல்லுகின்றனர். இந்திய ஆதிக்குடிகள் பெரும்பாலோர் வேளாண்மையைப் பெரிதும் சார்ந்திருக்கின்றனர். நீலகிரி, பதகர், ஆந்திரப் பிரதேசச் சவரர், வட இந்தியக் குடிகளான ஒரவன், முண்டர், சந்தாள் முதலானோர் நாட்டுப்புறக் குடியானவர்களைப் போன்றே தேர்ச்சி பெற்ற முறையில் பயிர்த்தொழில் செய்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். இது தவிர்த்து மீன்பிடித்தல், கூடை முடைதல், பாய் பின்னுதல், கால்நடை வளர்த்தல், பட்டுப்பூச்சி வளர்த்தல், குடிசைத் தொழிலில் ஈடுபடுதல் போன்ற துணைத் தொழில்களையும் செய்து வருகின்றனர்.

ஆதிக்குடியினர் பலர் கூடை முடைதல், நெய்தல் போன்ற கைத்தொழில்களையும் செய்கின்றனர். முரியாக் கோண்டுகள், காட்டுப் பொருள்களிலிருந்து சாராயத்தினை வடித்தெடுக்கின்றனர். சவரா, சௌந்தர் கோண்டு ஆகிய ஆதிக்குடியினர் இடையர்களாகவும், உலோகப் பொருள்கள் செய்பவர்களாகவும் ஆடை நெய்பவர்களாகவும், மட்பாண்டம் செய்பவர்களாகவும் பிரம்பில் கைவினைப் பொருள்கள் செய்பவர்களாகவும் திகழ்கின்றனர். குறவர், அகோரியர் ஆகியோர் பண்படாத தொழில் முறையினைக் கொண்டு இரும்பினை உருக்குபவராகத் திகழ்கின்றனர். இவர்கள் மிருகங்களின் மெல்லிய திசுக்களிலிருந்து இசைக் கருவிகளின் தந்தியினையும் செய்கின்றனர்.

தாரு ஆதிக்குடிகள் பண்ணைத் தொழில், இருக்கைகள், தட்டுமுட்டுப் பொருள்கள் செய்தல், கூடைகள், இசைக்கருவிகள், ஆயுதங்கள், கயிறு, பாய்கள் செய்தல் முதலான தொழில்களை மேற்கொண்டுள்ளனர். இருளர் மூங்கில் பாய், கூடைகள், கலப்பையின் கொழு, சக்கரங்கள் போன்றவற்றைச் செய்யும் தொழிலை மேற்கொண்டனர். ஆயர் வாழ்க்கை வாழும் தோடர்களின் வாழ்க்கை முறை எருமைகளைச் சுற்றியே அமைந்துள்ளமையால், இவர்கள் 'எருமையின் குழந்தைகள்' எனச் சொல்லப்படுகின்றனர்.

பெரும்பான்மையரான சந்தால், சௌந்தர் கோண்டு ஆதிக்குடியினர் தேயிலைத் தோட்டப் பணியில் ஈடுபட்டுள்ளனர். நிலக்கரியைத் தோண்டி எடுப்பதில் சந்தால் ஆதிக்குடியினர் சிறந்தவர்களாகத் திகழ்கின்றனர்.

பெண்களைப் பொறுத்தமட்டில், அவர்களுக்கு நேரிடும் மாதவிலக்கு, குழந்தை பிறப்புப் போன்ற காரணங்களால், அவர்கள் சில பணியினை மட்டுமே செய்ய அனுமதிக்கப்பட்டனர். 'தோடர்' ஆதிக்குடியில், பெண்டிர் எருமைகளைத்தொடவோ பால் பண்ணைக்குள் செல்லவோ அனுமதிக்கப்படார்.

ஆதிக்குடிகளிடையே வீட்டைக் கவனித்தல், குழந்தைகளைப் பேணுதல், சமைத்தல் ஆகியவற்று

டன் மீன் பிடித்தல், கூடை முடைதல், பானை செய்தல், போன்றவற்றையும் பெண்கள் கவனித்துக் கொள்கின்றனர். காட்டு மிருகங்களை வேட்டையாடுதல், மரங்களை வெட்டுதல் போன்ற கடுமையான பணிகளை ஆண்கள் செய்கின்றனர்.

தனி மனிதர் சொத்து, குழு அல்லது இணையான சொத்து, சமுதாயச் சொத்து, நிலையானதும் மாற்ற முடியாததுமான சொத்து, உடைமைச் சொத்து அல்லது மாறும் சொத்து, மூலப்பொருளாகவும் பருப்பொருளாகவும் உள்ள சொத்து, உடற்சார்பற்ற சொத்து, நன்கொடை, பண்டமாற்று முறை, விற்பனை ஆகியவற்றுடன் பாரம்பரியமாகக் கிடைக்கும் சொத்து, பறிமுதல் வழிக்கிடைக்கும் சொத்து எனச் சொத்துகள் வகைப்படுத்தப்படுகின்றன. பொருளும் பொருளைச் சுற்றிப் பின்னப்பட்ட சமுதாய அமைப்பு வலையும் 'சொத்து' எனலாம். இதற்குத் தகுந்த எடுத்துக் காட்டாகக் கலிபோர்னியாவிலுள்ள யுரோக்கு (Yurok) ஆதிக்குடிகளைக் கூறலாம். இக்குடியினர் பட்குகளைத் தனிமனிதர் சொத்தாகப் பேணிவந்தார்கள். எனினும், அக்கரைக்கு ஆட்களை எச்சமயத்திலும் ஏற்றிச் செல்ல வேண்டியது இவர்கள் கடமை. அங்ஙனம் ஆட்களை ஏற்றிச் செல்லும் போது, அவர்களுக்கு ஏற்படும் எவ்வகை இழப்புக்கும் அவர்களே பொறுப்பாவர்.

ஆதிக்குடிகளின் பொருளாதார முறையில் சொத்துரிமை எனப்படுவது அரசாங்கத்தின் தொடர்பின்றிச் சட்டத்தின் துணையின்றி, நடத்தப்படும் ஒன்றாகும். இவர்களின் வாழ்க்கையில் நிலம், அன்றாடத் தேவைகளை நிறைவு செய்ய மிகவும் இன்றியமையாத ஒன்றாகத் திகழ்கிறது. மேலும், எவராலும் பயன்படுத்தப்படாத நிலம் பொது நிலமாகக் கருதப்படுகிறது. கொமன்செசு (comonches) ஆதிக்குடியினரிடையே, ஒருவன் வேட்டையாடிக் கொண்டு வரும் மிருக உடலில் எந்த உறுப்பையும் அதனைத் தொடும் ஒருவன் எடுத்துக்கொள்ள உரிமையுண்டு.

வடதுருவப் பகுதியில் காணப்படும் பாபின் நில எசுக்கிமோக்களிடையே நீர்நாயினை முதலில் அம்பெய்பவர் அதன் நீண்ட கோரைப் பல்லினையும், பின்னர் அம்பெய்பவர் அதன் கழுத்து தலைப் பகுதி ஆகியவற்றையும், அதற்கடுத்தவர் அதன் வயிற்றுப் பகுதியினையும் பெறுகின்றனர்.

ஆப்பிரிக்காவிலுள்ள 'புசுமேன்' ஆதிக்குடியினரிடையே, ஒருவன் வேட்டையாடியவற்றைத் தன் சமுதாயத்தார் அனைவருக்கும் அளிப்பதன் வாயிலாகத் தலைவன் நிலையினை அடைகிறான்.

வேட்டையாடும் ஆதிக்குடியினரிடையே ஒரு குறிப்பிட்ட விலங்கினை வேட்டையாடுதல் அல்லது குறிப்பிட்ட மரத்தை வெட்டுதல் தனிஒருவர் உரிமையாகக் காணப்படுகிறது. இவ்விடத்தில் பிறர் வேட்டையாடல் கூடாது என்பது இதன் தனிச் சிறப்பாகும். இதற்கு எடுத்துக்காட்டுகளாக நாமா, ஆட்டன்டாட்டு என்னும் ஆதிக்குடியினர் தேனீக் கூடுகளை வேட்டையாடுதலையும், பியூப்லோ இந்தியர்கள் கழுகுக் கூட்டங்களை வேட்டையாடுதலையும், தெற்குப்பசிபிக்குமக்கள் காட்டுப் பழவகை மரங்களில் வேட்டையாடுதலையும் குறிக்கலாம். ஆயர் வாழ்க்கையினை மேற்கொண்டுள்ள ஆதிக்குடிகள் கால்நடைகளைத் தம் சொத்தாகக்கருதுகின்றனர். சாலமன் தீவினரும், மெலனேசிய ஆதிக்குடியினரும், பன்றிகளைப் பெரும் செல்வமாகக் கருதுகின்றனர்.

பழங்குடிப் பெண்கள் தாங்கள் பயன்படுத்தும் மட்பாண்டங்களையும், ஆடவர்கள் வேட்டையில் பயன்படுத்தும் ஈட்டி, மற்றும் கோடரிகளையும் சொத்தாகப் பாதுகாக்கின்றனர். திரோபிரியாண்டுத் தீவினரிடையே தனிமனிதன் படகினைச் சொந்தமாக வைத்திருந்தாலும், அப்படகில் பணிபுரியும் பணியாளர் அப்படகைப் பயன்படுத்துவதிலும், சொந்தம் கொண்டாடுவதிலும் உரிமையுண்டு.

ஆதிக்குடிகளின் சமுதாயத்தினரிடையே உள்ள சொத்துரிமை பல்வேறு அமைப்புகளிலுள்ளது. இவ்வமைப்பே திருமணம், சட்டம் முதலியவற்றை நிறுவுவது போல், இதன் பொருளாதார வாழ்க்கை முறையினையும் நிறுவுகிறது. மூன்றுவித மாற்று முறைகள் அவர்களிடையே உள்ளன.

**எதிரிடைப் பரிமாற்றம்:** ஒரு சமுதாய அமைப்பில், ஒத்த தகுதியினையுடையவரிடையே காணப்படுகிறது. இதில் கண்டிப்பாக ஒருவர் கொடையளிக்க, அதனைப் பெறுபவர் அதற்கு மாறாகப்பொருள்களையோ உழைப்பினையோ அளிப்பர். திரோபிரியண்டுத் தீவு மக்களிடையே இத்தகைய மாற்றமுறை நிலவுகிறது.

ஆதிக்குடிகளிடையே பிறப்பு, பூப்பெய்தல், திருமணம் தொடர்பான சடங்குகளின்போது கொடையளித்தல் இன்றியமையாததாகும். ஒருவருக்கொருவர் கொடை மாற்றிக் கொள்ளும் முறைக்கு எடுத்துக்காட்டாக, வடமேற்குக் கடற்கரை இந்தியர்கள் அளிக்கும் 'விரயம் செய்யும் சடங்கினைக்' (Potlatch) கூறலாம்.

திருமணமே பல ஆதிக்குடிகளில், ஒருவருக்கொருவர் கொடுத்து வாங்கும் மாற்று முறைக்கு வழியாக அமைந்துள்ளது. எடுத்துக்காட்டாக, ஆப்பிரிக்க ஆதிக்குடியினரிடையே, திருமணத்தில் பெண்வீட்டாருக்கு மாப்பிள்ளை வீட்டார் நாற்பது கால்நடைகளை அளித்தல் வேண்டும். இதனைப்



◀ இருளர் தேன் சேகரித்தல்

▼ பதகப் பழங்குடி முதியவர்



◀ ஓஞ்சிப் பழங்குடிப் பெண் - அந்தமான்

▼ நீலகிரி - தோடர்களின் குடிசைகள்







அம்காராப் பழங்குடி-சந்தைக்குச் செல்லல்



ஆசுத்திரேலியப் பழங்குடி-வேட்டையாடல்



ஓ (ஹ0) பழங்குடிப் பெண் தானியமிடித்தல்



ஆப்பிரிக்கப் பழங்குடி-வேட்டைக்குச் செல்லல்

பெண் வீட்டாரின் உறவினர் பகிர்ந்து கொள்வர். ஒருவருக்கொருவர் கொடுத்துப் பெறும் பண்ட மாற்று முறையில் புகழ்மிக்கது வடமேற்கு மேலனேசிய ஆதிக்குடியினரிடையே காணப்படும் 'குலா' முறையாகும்.

**மறுபங்கீட்டு மாற்றுமுறையில்:** பொருளாதார அல்லது அரசியல் அதிகாரத்தைக் கொண்டுள்ள மரபு வழித் தலைவர், பொருள்கள் அல்லது பணியினைக் கப்பமாகப் பெற உரிமையுண்டு. இதில் பங்கிடுதல் என்பது சமமாகவோ சமமின்றியோ இருக்கும். இம்முறையில் மிகுதியாகக் கிடைக்கும் பொருள்களும், உழைப்புக் கூலியும் கொடையாகவும், கப்பமாகவும் அளிக்கப்படுகின்றன. இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு சுமேரியர் நாகரிகம் ஆகும். மெசபடோமியாவில், பணிகளனைத்தும் கோவில் மதகுருவின் தலைமையிலேயே நடந்தன. ஒவ்வொருவரின் உழைப்புக் கூலியிலும் ஒரு குறிப்பிட்ட தொகை மத குருவினையே சாரும். எஞ்சிய தொகை மற்றவரிடையே மறுபங்கீடு செய்யப்படும்.

இவைபோன்ற மறுபங்கீட்டு மாற்று முறை கி.மு. ஆயிரம் ஆண்டிலிருந்த மாயா நாகரிகத்திலும் கூட காணப்பட்டது. நியூமெக்சிகோவிலுள்ள பியூப்லோ இந்தியர் ஒவ்வொருவரும் பல பணிகளைச் செய்து அதில் கிடைக்கும் கூலியில் ஒரு பகுதியினை எடுத்துக் கொண்டு மற்றவற்றை மறு பங்கீடு செய்கின்றனர்.

**சந்தைவழி மாற்று முறை:** இது நேரடிப் பண்ட மாற்று முறை அடிப்படையிலோ பணத்தைக் 'கொடுத்து வாங்கும் அடிப்படையிலோ அமையும். ஆதிக்குடிச் சமுதாயங்களின் பொருளாதார அமைப்புகளில் சந்தை இடம் பெறும்போது உற்பத்தி அமைப்பின் வழிவரும் அத்துணைப் பொருள்களையும் விற்பதில்லை.

**வாணிகமும் சந்தை மாற்றுமுறையும்:** வாணிகம் என்பது மறுபங்கீடு செய்வதில் அமைந்துள்ளது. சிறிய மற்றும் பெரிய சமுதாய ஆதிக்குடியினரிடையே நிலவும் வாணிகத்தில், தமக்கே உரியனவும் பிற சமுதாயங்களில் காணப்படாதனவுமான பொருள்கள் மாற்றுமுறை செய்யப்படுகின்றன. எடுத்துக்காட்டாக ஒப்பி (Hopi) ஆதிக்குடியினர் சோளத்திற்கு மாற்றாக ஆண் மானின் தோலையும் வண்ணங்களையும் அவசுபாய் (Havasupai) நாட்டினருடனும், காட்டுக் கட்டை, கம்பளம் ஆகியவற்றிற்கு மாற்றாகச் சோளத்தினை நவகோ மக்களிடமும் அளித்து மாற்றுமுறை செய்கின்றனர்.

**மௌன பண்ட மாற்றுமுறை: (Dumb barter system):** ஆதிக்குடியினரிடையே பகைமை நிலவி வந்தபோதிலும், அது அவர்கள் பொருளாதாரத்தைப் பாதிக்காவண்ணம் பார்த்துக் கொண்டனர். இதுவே ஆதிக்குடியினர் சிலரிடையே காணப்படும் மௌன பண்ட மாற்று முறைக்கு அடிப்படையாக உள்ளது. இம்மாற்று முறையில் ஒரு குழு மற்றொரு குழுவினரைப் பார்ப்பதேயில்லை. மலாய் பிக்மியரான செமாங்கு ஆதிக்குடிகள் தங்கள் பொருள்களை வழக்கமான இடத்தில் வைத்து விட்டுச் சென்றுவிடுகின்றனர். இப்பொருள்களை, அவர்கள் எதிரிகளான சகாயினர் (Sakai) எடுத்துக் கொண்டு, அவர்களுக்கு விருப்பமான பொருள்களை அதேயிடத்தில் வைத்துச் செல்கின்றனர்.

இதனைப் போன்றே மலைப்பகுதியில் வசிக்கும் இலங்கை வெத்தர் தாங்கள் வேட்டையாடிய மிருகங்களை இரவினில் சிங்கள கருமான்கள் வீட்டெதிரே போட்டுவிட்டு, அதற்கு மாறாக அவர்கள் வைக்கும் இரும்பு ஈட்டி முனைகளை மறுநாள் இரவு சேகரித்துக் கொள்கின்றனர்.

கார்த்தசீனியர்கள் தங்கள் பொருள்களைக் கடற்கரையில் வைத்துவிட்டுத் தங்கள் கப்பலிற்குச் சென்று, புகைச் சைகைச் செய்தியினை அனுப்புகின்றனர். இதனைக் கண்டவுடன் அந்நாட்டு ஆதிக்குடியினர் அப்பொருள்களை எடுத்துக்கொண்டு அதற்கு மாற்றாகத் தங்கத்தை வைத்துவிட்டுச் சென்றுவிடுவர்.

ஆதிக்குடியினரிடையே காணப்படும் எல்லா வாணிகமும் நேரடியான பண்டமாற்று வழியாக நடைபெறுவது இல்லை. உலகத்தின் பல்வேறு பாகங்களிலும் பல்வேறு வகையான பரிமாற்ற முறை காணப்படுகிறது. சங்குகளே பெருமளவில் பணமாகப் பயன்படுத்தப்படுகின்றன. பசிபிக்குத் தீவு, ஆப்பிரிக்கா ஆகியவற்றில் சோழிகளும், கலிபோர்னியா இந்தியரிடையே வழக்கிலுள்ள தெண்டாலியம் சங்குகளும், கிழக்கிந்தியரால் பயன்படுத்தப்பட்ட வாம்பம் மணிகளும், ஆப்பிரிக்காவில் இரும்பு மண்வெட்டிகளும் பரிமாற்றத்தில் சிறந்த பணமூலங்களாக இருந்தன.

இறகுகள், சுறா மீன் பற்கள், நாயின் பற்கள் போன்றவையும் பணமாகப் பயன்படுத்தப்படுகின்றன. தொன்மைக் காலப் பணங்களனைத்திலும் தனித்தன்மை வாய்ந்தது மைக்ரோநேசியாவில் யாப்புத் தீவினில் காணப்படும் சுண்ணாம்புக் கட்டியால் செய்யப்பட்ட மிகப்பெரிய சக்கரங்களே.

பண்பாட்டுக் கோட்பாட்டின்படி சொத்துரிமை எனப்படுவது, உரிமை மாற்றத்தை மட்டுமல்லாது, தகுதி மாற்றத்தினையும் குறிக்கிறது. மைத்துனி மணம், அண்ணி மணம் ஆகியன வழக்கிலுள்ள

ஆதிக்குடியினரிடையே இறந்தவர்களின் சொத்து, உயிருடன் உள்ள கணவன் அல்லது மனைவியையே சாரும். தாய் வழியிலான தோட்டப் பயிரிடுவோரி டையே பெண்களே பயிர் செய்வதால் இங்குச் சொத்துரிமை தாயிடமிருந்து பெண்ணிற்குச் செல் கிறது. திரோபிரியாண்டுத் தீவினரிடையே தோட்டப் பயிரிடும் பணியினை ஆண்கள் செய்வதால், இங்குச் சொத்துரிமை தாயின் சகோதரனிடமிருந்து, அவன் சகோதரியின் மகனைச் சாரும்.

தந்தை வழிச் சமுதாயத்தில், சொத்துரிமை புதல் வர்க்கே உரியதாகும். தந்தையின் பொருள்களைப் புதல்வரும் தாயின் உடைமைகளைப் புதல்வியரும் பொதுவாகப் பெறுகின்றனர்.

இறுதி விருப்பு: இவ் வேற்பாட்டின்படி, ஒருவன் தன் வழக்கப்படி அல்லது சட்டப்படியுள்ள வாரிசாக நியமிக்கப்படாத ஒருவனுக்குத் தன் சொத்துரிமை யினை மாற்றுகிறான். ஆதிக்குடியினரிடையே காணப் படும் இம்முறையே, இக்காலத்து 'உயில்' எனப்படு கிறது.

எனினும் ஆதிக்குடியினர் பலரிடையே மறுபிறப் புக் குறித்த நம்பிக்கை நிலவுவதால், இறந்தவர் உடைமைகளை அவர்களுடனே புதைத்து விடுகின்ற னர். எனவே இவர்களிடையே சொத்துரிமை எனப் படுவது மிகக் குறைவாகவே காணப்படுகிறது. இதற்கு எடுத்துக்காட்டாக, ஆசுத்திரேலியப் பழங்குடிகள், ஆப்பிரிக்கப் புசுமென், அந்தமான் தீவினர், செமாங்கு கள், எசுக்கிமோக்கள் ஆகியோரைக் கூறலாம்.

ஆதிக்குடியினரிடையே, சொத்துரிமைச் சிக் கலைத் தீர்ப்பதற்கு 'முன் பிறப்புரிமை', 'கடைப் பிறப்புரிமை' என்னும் இருவழிகளைக் கையாளுகின் றனர். முன் பிறப்புரிமையில் அனைத்துச் சொத்தும் மூத்தவரான மகனையோ மகளையோ சாரும். கடைப்பிறப்புரிமையில் இளையவரான மகன் அல்லது மகள் அனைத்துச் சொத்திற்கும் உரிமையாக்கப் படு கின்றனர்.

இங்ஙனம் ஆதிக்குடியினர் எளிமையான சமுதாய அமைப்பினைக் கொண்டிருந்தாலும், அவர்களின் பொருளாதார வாழ்க்கை முறை எளிதானதாக இல்லை. ம.ந.பு.

துணை நூல்கள்:

Barmett, H.G., The Nature of the Potlatch, American Anthropologist, Vol. 40, 1938.

Grierson, P.J.H., The Silent Trade, Edinburgh, 1903.

Herskovits, M., Economic Anthropology, Norton, New York, 1965.

Lowie, R.H., Incorporal Property in Primitive Society, Yale Law Journal, Vol. XXXVII, 1928.

**ஆதிக்குடிகளின் மரபுசார் சட்டங்கள்** என்பது, அக்குடிகளிடையே தொன்று தொட்டுவரும் பழக்க வழக்கங்களின் அடிப்படையில் தடுப்பு நட வடிக்கைகளையும், சமூக அரசியல் கட்டுப்பாட்டைக் காத்திட எவ்வாறு நடக்க வேண்டும் என்ற நியதி களையும் குறிக்கும். எடுத்துக்காட்டாகக் கூடா ஒழுக் கத்தைப் பண்பாடு அனுமதிப்பதில்லை. பிளாக்கு பூடு (Black-Food) என்னும் சமுதாயத்தில் மனைவி நடத்தை தவறினால் கணவன் அவளதுமூக்கை அறுத்து விடுகிறான்; அல்லது அவளோடு கள்ள நட்புக் கொண்டவனிடமிருந்து இழப்பீடு கோருகிறான். இதே சூழ்நிலையில் ஓர் எசுக்கிமோ, தன் மனைவியின் கள்ளக் காதலனைக் கொன்றுவிடுகிறான்; அல்லது அவனும் கள்ளக்காதலனும் ஒருவருக்கொருவர் திட்டித் தீர்த்துக்கொள்ளும் வகையில் பாடல் போட்டி நடத்தி அதில் தங்கள் சிக்கலுக்கு முடிவு காண்கின்றனர். பிளாக்கு பூடும், எசுக்கிமோவும் தங்களுக்கு இணைக் கப்பட்ட ஒரே விதமான அநீதிக்குத் தத்தம் சமுதாய மரபு வழக்கமான இரு வேறு முறைகளில் கழுவாய் தேடிக் கொள்கிறார்கள்.

எழுத்து முறை கண்டுபிடிப்பதற்கு முன்பு, சமு தாயங்களின் சட்ட அமைப்பு முறைகள் அனைத்தும் எழுதப்படாமலும் மரபு வழிப்பட்டனவாயும் இருந் தன. புதிய சமுதாயங்களின் சட்ட அமைப்பு முறை களில் மரபு வழிச் சட்டங்கள் முதன்மைப் பங்கு வகிக்கின்றன. மரபு வழிச்சட்டம் என்பது எழுத்து வடிவில் எழுதப்படாததாகும். இதன் துணையால் கூறப்படும் தீர்ப்புகள் முன்னறிந்து கூறத்தக்கன வல்ல.

ஆதிக்குடிகளின் சமுதாயங்களில் சமூகக் கட்டுப் பாட்டைக் காக்க உதவும் மரபு முறைகளுக்குச் 'சட் டம்' என்ற சொல்லைப் பயன்படுத்துதல் பற்றிப் பலரும் வினவுகின்றனர். சீகல் (Segall) என்பவரின் கூற்றுப்படி சட்டம் நீதிமன்றங்களால் உருவாக்கப் படுவதாகும். மலினோசுகி (Malinowski) யின் கருத் படி நாகரிகப் பாங்கறியாச் சமுதாயங்களில் நீதி மன்றங்களோ சட்டவிதித் தொகுப்புகளோ காவலர் களோ இல்லை என்பதாகும். எனினும் 'சட்டம்' என்பது ஏற்றுக்கொள்ளப்பட்ட அல்லது ஒத்துக் கொள்ளப்பட்ட ஒழுகலாறுகளின் விதிகளையும் அவை மீறப்படின் அளிக்கப்படும் தண்டனைகளை யும் குறிப்பதாகும். 'நீதிமன்றம்' என்பது வேறுபாடு களைத் தீர்த்து வைக்கும் ஓர் அமைப்பைக் குறிப்ப தாகவும் கொண்டால், தன்னாட்சி உரிமையுடைய

மனிதச் சமுதாயங்கள் எல்லாம் 'சட்டத்தையும்' 'நீதிமன்றத்தையும்' பெற்றுள்ளன என்று கருதுவது ஏற்புடையதேயாகும். மரபுவழிச் சட்டங்கள் முன்னோர்களால் உருவாக்கப்பட்டன என்ற கருத்து ஆதிக்குடிகளிடையே நிலவுவதால், அவை மிகவும் தொன்மையானவை என்றும் மாற்றப்படக்கூடியன அல்ல என்றும் அவர்கள் எண்ணுகின்றனர். ஆயினும் சில ஆதிக் குடிச் சமுதாய மன்றங்கள் அல்லது கூட்டங்களில் அவ்வப்போது சூழ்நிலைகளுக்கேற்பத் தீர்ப்புகள் வழங்கப்படுவதுடன், அவற்றின் வழியாக மரபுவழிச் சட்டங்களில் மாறுதல்களும் செய்யப்படுகின்றன. சமூகத்தின் ஒழுங்கு முறைகள் மீறப்படுவதாகக் கருதப்படும்போது மரபு வழக்கங்கள் சட்டமாக மாற்றப்படுகின்றன. ஆதிக்குடிகளிடையே சட்டம் என்பது சிறிது சிறிதாக மக்களின் பழக்க வழக்கங்களும் நடைமுறைகளும் ஒத்துக்கொள்ளப்பட்டு உருவாவதாகும். இத்தகைய சட்டங்கள் தனி அல்லது உயர் ஆணையுரிமை படைத்த எவராலும் இயற்றப்படக்கூடியன அல்ல. இவை உருவாவதற்குச் சமுதாயம் காரணமாக அமைகிறது.

ஆதிக்குடிகளின் சட்டங்களில் உரிமைச் சட்டங்கள், குற்றச் சட்டங்கள் போன்ற பாகுபாடு கிடையாது என்னும் தவறான கருத்து நிலவுகிறது. அவர்கள் வன்முறைப் போக்குடையவர்கள் என்றும் அவர்களுக்குச் சீரான அரசியல் அமைப்புக் கிடையாதென்றும் தவறாகக் கருதப்பட்டதே இதற்குக் காரணமாகும். இத்தகு கூற்றுகளில் உள்ள தவறுகளை இலூவி எடுத்துரைத்தார். தனிப்பட்டவர்களுக்கு இடையேஅவர்களின் தகுதிநிலையின் அடிப்படையிலும், சொத்துகளின் மரபுரிமைகள் வரையறுக்கப்பட்ட வழக்கங்களின் அடிப்படையிலும் உள்ளதாக எடுத்துக் கூறி, ஆதிக்குடிகளிடமும் உரிமைச் சட்டங்கள் காணப்படுவதை விளக்கினார். ஒப்பந்த அடிப்படையிலான உறவுகள் ஆதிக்குடிகளால் அறியப்படாதவை என்பதையும் கூறுகிறார். இலூவியின் கருத்துப்படி ஆதிக்குடிகளின் சட்டமுறைமைகள் புதிய சமுதாயச் சட்டமுறைகளிலிருந்து கீழ்க்காணும் மூன்று வகைகளில் வேறுபடுகின்றன.

1. ஆதிக்குடிகளிடையே சட்டங்கள் பொதுவாக நிலப்பரப்பின் அடிப்படையிலன்றி உறவுமுறையின் அடிப்படையில் அமைந்திருக்கும். ஆனால், புதிய சமுதாயங்களில் சட்டங்கள் அவற்றின் எல்லைக்குட்பட்ட பகுதியில் உள்ளோரைக் கட்டுப்படுத்தும்.

2. ஆதிக்குடிகளின் சட்டங்கள் பொதுவாக ஒழுக்க வரையறைகளையும் பொது மக்கள் கருத்தையும் கொண்டிருக்கும். புதிய சமுதாயங்களின் சட்டங்கள் இவற்றை எப்போதுமே ஒத்திருக்க வேண்டியதில்லை.

3. குற்றத்தையும் குறைகூறுவதையும் ஆதிக்குடிகளின் சட்டங்கள் வேறுபடுத்திக் காட்டுவதில்லை. ஆனால் தனிப்பட்ட குற்றம், பொதுக்குற்றம் என்ற வேறுபாடுகள் புதிய சட்டவியலில் தெளிவாக அறியப்படுகின்றன.

பரப்பளவு பற்றி ஆதிக்குடிகளின் சட்டமுறைகள் கருதுவதில்லை. உறவுமுறை இணைப்புகள்தாம் அவர்களுக்கிடையே ஒருங்கிணைக்கும் ஆற்றலாகும் என்பது கருதப்படுகிறது. சமூக – அரசியல் அமைப்புகள் உறவு முறைகளை அடிப்படையாக வைத்தே இயங்குகின்றன.

ஆதிக்குடிகளின் சட்டமுறைகளில் "பொதுக் கருத்து என்பது தலையாயது. ஆதிக்குடிகளின் பல்வேறு சிக்கல்கள் பொதுக் கருத்தின் வாயிலாகத் தீர்த்து வைக்கப்படுகின்றன. பழங்குடிச் சமுதாயங்கள் மக்கள் தொகையில் மிகக் குறைவாதலின், ஒவ்வொரு பொருளையும் அல்லது கருத்தையும் பற்றி மக்கள் அனைவரின் எண்ணத்தையும் மிக எளிதாகத் தெரிந்துகொள்ள முடிகிறது. பொதுவாக ஆதிக்குடிகளிடம் அவர்கள் சார்ந்துள்ள சமுதாயத்தின் பொதுக்கருத்தில் எந்தவித வேறுபாடுகளும் இருப்பதில்லை. பொதுக் கருத்து ஒரு தனிப்பட்டவருக்கோ ஒரு குழுவுக்கோ சார்புடையது அன்று என்பதால், சமுதாயத்தில் அனைவரும் பொதுக் கருத்துப்படி நடப்பதைத் தங்கள் கடமையாகக் கருதுகின்றனர்.

பழங்குடிகளிடையே ஒருவர் தவறு இழைத்தால் அதற்கு அவர் மட்டும் பொறுப்பேற்கும் பண்பு காணப்படுகிறது. குற்றமிழைக்கப்பட்டவரும் அவர்களின் உறவினரும் குற்றமிழைத்தவரின்மீதும் அவர்களின் உறவினர்கள் மீதும் பழியுணர்வுகொண்டு வஞ்சம் தீர்க்கின்றனர். இப்படி ஒரு செய்கைக்காக இரண்டு குழுக்கள் தாங்களே நேரடி நடவடிக்கைகளில் ஈடுபடும்போது சமுதாயம் ஒட்டு மொத்தமாக இந்தச் சூழலில் தலையிடுவது கிடையாது. ஆனால், இரு உறவினர் குழுக்களின் மோதலில் சமுதாயத்தில் போற்றிக் காக்கப்படும் ஒழுக்க வரையறைகள் மீறப்படுமாயின் அங்குச் சமுதாயத்தின் கூட்டமைப்புத் தலையிட்டு அதைத் தவிர்க்க முயலுகிறது. எடுத்துக்காட்டாகக் கொலைக் குற்றத்திற்குக் கொலையே தண்டனையாகக் கொலையுண்டவரின் உறவினால் விதிக்கப்படுகிறது. ஆனால், இவ்வாறு கொலை செய்தலில் மந்திரம் அல்லது சூனியம் இடம் பெற்றிருந்தால் எசுகிமோ சமுதாயம் ஒட்டுமொத்தமாக அதற்கு நடவடிக்கை எடுக்க முனைகிறது. ஏனெனில் பில்லி, சூனியம் யாரோ ஒருவருக்கு வைக்கப்படுவதாயினும் அது சமுதாயம் முழுமைக்கும் தீங்கினை ஏற்படுத்த வல்லது என இவர்கள் எண்ணுகின்றனர். எனவே

சமுதாயம் முழுமைக்குமான தீங்கு விளைவிக்கும் குற்றத்தை யாராவது செய்தால் அவர் கடுமையான தண்டனைக்குள்ளாக்கப்படுகிறார்.

இக்காலச் சமுதாயங்களில் ஒருவர் செயல், சட்டத்திற்கு உடன்பட்டதா, உடன்படாததா, என்பது அவரது உள்நோக்கைப் பொறுத்து முடிவு செய்யப்படுகிறது. குற்றம் செய்தலுக்குத் தூண்டப்படுதல் முதன்மையான காரணமாகக் கருதப்படுகிறது. ஆனால், ஆதிக்குடிகளின் சமுதாயங்களில் இவற்றையெல்லாம் கருத்தில் கொள்ளுவதில்லை. ஏனெனில் தனிப்பட்ட ஒருவரால் மரபு வழக்கமான ஒழுங்கு வரையறைகள் மீறப்பட்டால், அதனால் அந்தச் சமுதாயம் முழுமைக்கும் இயற்கைக்கு அப்பாற்பட்ட ஆற்றலால் தண்டனை உண்டாகும் எனக் கருதுகின்றனர். மேலும், குற்றங்கள் பாவச் செயலாகக் கருதப்படுகின்றன. எனவே, குற்றத்தினால் ஏற்படுத்தப்பட்ட விளைவைக் கருதுவதல்லாமல், அந்தக் குற்றத்தைச் செய்வதற்கான சூழல், உள் நோக்கம் பற்றியெல்லாம் பழங்குடிகள் ஆய்வதில்லை.

நீதி நெறிமுறைகளில் குற்றத்தை உறுதிப்படுத்துவதற்குச் சான்றுகள் இன்றியமையாதவை. ஆணை அல்லது சத்தியம், சோதனைமுறை ஆகிய இரண்டின் வாயிலாக இவை உறுதிப்படுத்தப்படுகின்றன. குற்றம் சாட்டப்பட்டவர் தாம் குற்றவாளியா இல்லையா என்பதை ஆணையிட்டுக் கூறவேண்டும். பொய்ஆணை செய்தால் இயற்கைக்கு அப்பாற்பட்ட ஆற்றலால் தாம் தண்டிக்கப்பட நேரிடும் என்னும் அச்ச உணர்வை அவர்கள் பெற்றிருக்கிறார்கள். குற்றம் சாட்டப்பட்டவர் பல்வேறு சோதனைகளுக்கு உள்ளாக்கப்படுவதும் உண்டு. கொதிக்கும் நீர் அல்லது எண்ணெயில் கையை வைக்கச் செய்தல், நாக்கைத் துளையிடுதல் போன்றன அவற்றுள் சிலவாகும். குற்றம் சுமத்தப்பட்டவர் இத்தகைய சோதனைகளில் காயமின்றித் தப்பினால் அவர் குற்றமற்றவர் என விடுவிக்கப்படுகிறார். இன்றேல் அவர் குற்றவாளி என முடிவு செய்யப்படுவார். குற்றமற்றவர் இத்தகைய பரிசோதனைகளுக்குட்படும்போது இயற்கைக்கு அப்பாற்பட்ட சக்தியால் காக்கப்படுவார் என்ற நம்பிக்கையைச் சில பழங்குடிகள் கொண்டுள்ளன. மேலும், குற்றங்களை உறுதிப்படுத்துவதற்குச் சாட்சிகளை விசாரிப்பதும் அரிதாகச் சில சமுதாயங்களில் பின்பற்றப்படுகிறது.

புதிய சமுதாயங்களில் குற்றவாளிகளுக்குப் பொருள் தண்டம் விதித்தல், அவர்களைச் சிறையிலடைத்தல் போன்றவை நடைபெறுகின்றன. ஆனால், உகாண்டாவிலுள்ள பழங்குடிச் சமுதாயத்தைத் தவிர வேறெந்தப் பழங்குடிச் சமுதாயத்திலும் சிறையிலடைத்தல் ஒருவித தண்டனையாகக் கடைப்பிடிக்கப்படுவதில்லை. உகாண்டாவில் அரசரோ, தலைவரோ ஒருவனைச் சிறையிலடைத்து விடலாம். சலுகை காட்டும் காவலாளி சிலபோது சிறைப்பட்டவரை இரவு நேரத்தில் மட்டும் வெளியில் செல்ல அனுமதிப்பார். கடுமையான குற்றமிழைத்தவரின் கால்களும் கைகளும் கயிறுகளால் மரங்களில் கட்டப்பெறும். இவ்வாறு கட்டப்பட்டவர் சில நாட்களில் தாமாகவே இறந்து விடுவர். சில குற்றங்களுக்கு உடலுறுப்புகளைச் சிதைத்து முடமாக்குதலும் உண்டு. கொலைக் குற்றவாளிக்கு மரண தண்டனை விதிக்கப்படுவதும் ஆதிக்குடிகளிடம் காணப்படுகிறது. ஆனால், தூக்கிலிடப் படுவது என்னும் தண்டனையை அவர்கள் அறிந்திருக்கவில்லை. கொலையாளியே கொல்லப்பட வேண்டும் என்றில்லாமல், அவரின் குடும்பத்தைச் சார்ந்த யாராவது ஒருவரோ, உறவினர்களில் ஒருவரோ அவருக்கு ஈடாகக் கொல்லப்படுவதும் உண்டு. எனவே, கொலையுண்டவரின் உறவினர்கள் கொலையாளியின் மீது மட்டுமன்றி அவர் உறவினர்கள் மீதும் பழியுணர்வு கொள்ளுகின்றனர். குற்றங்களுக்குத் தண்டனையை உறுதி செய்வதில் சில பாகுபாடுகள் கடைப்பிடிக்கப்படுகின்றன. சில ஆதிக்குடிகளிடையே ஒரே குற்றம் பல நிலைகளில் வைத்து எண்ணப்படுகிறது. எடுத்துக் காட்டாக, ஆப்பிரிக்காவின் சில பகுதிகளில், கூடாஒழுக்கம் பொதுவான குடி மக்களிடையே நிகழ்ந்தால் அது தனிப்பட்ட குற்றமாகவும், அதுவே அரசன் அல்லது தலைவனுடைய மனைவியோடு நிகழ்ந்தன எனில், தலையாய குற்றமாகவும் கருதப்படுகிறது.

புதிய சமுதாயங்களில் உள்ள தண்டனை முறைகளில் ஒன்றான பொருள்தண்டம் பொதுவாகப் பழங்குடிகளிடம் காணப்படுவதில்லை. ஆனால், தீங்கிழைக்கப்பட்டவருக்கு இழப்பீடு தருமாறு குற்றவாளி பணிக்கப்படுகிறார். சில வேளைகளில் குற்றமிழைத்தவர் தாம் இழைத்த குற்றத்திற்குத் தண்டனையாக ஊர்மக்கள் அனைவருக்கும் விருந்தளிக்குமாறும் கட்டளை இடப்படுகிறார். இத்தகைய விருந்துகள் 'தண்டனை விருந்துகள்' (Punitive Primitive feasts) எனப்படும்.

குடிமக்கள் சட்டத்திற்குப் பணிவது ஏன் என்பது மானிடவியலாளர்களின் ஆய்வுக்குரிய பொருளாகும். சட்ட மீறல் பாவச்செயலாகக் கருதப்படுவதுடன் அதனால் ஆவி பற்றிக்கொள்ளும் என்ற அச்சமும் ஆதிக்குடிகளிடம் இருக்கிறது. இதுமட்டுமன்றி, ஆதிக்குடிகள் தாமே முன்வந்து சட்டத்திற்கு இயற்கையாகவே பணியவும் செய்கின்றனர். ஒருவருக்கொருவர் உள்ள தொடர்பும் உறவும் நீடிக்க வேண்டும் என்று

விரும்புவதே இப்பணிதலுக்குக் காரணம் என்று கூறப்படுகிறது. தம் பணியை ஒருவர் ஒழுங்காகச் செய்யவில்லையெனில், தமக்காக மற்றவரிடமிருந்து அவர் எந்தவித எதிர்பார்ப்பும் கொள்ளமுடியாது. அது மட்டுமல்லாமல், எந்த ஒரு தனிமனிதரோ, குடும்பமோ மற்றவர் தொடர்பு இல்லாமல் தன்னிச்சையாக-தன்னிறைவு பெற்ற ஓர் அமைப்பாக-இயங்க முடியாது. எனவே, இத்தகைய கடமைகளே ஆதிக்குடிகளின் சட்டங்களைச் செயலுருப்படுத்துகின்றன. அதனால், இவை அடிமைத்தனத்துடன் பின்பற்றப்படாமல், சமய விருப்பத்தினை நிறைவேற்றிக் கொள்ளும் பொருட்டே பணியப்படுகிறது. ஆகவே பொருளாதார விருப்பு என்பது தன் விருப்பங்களுள் தலையாய ஒன்றாக-சட்டத்திற்குப்பணியும் காரணமாகக் கூறப்படுகிறது.

சட்டங்களை நடைமுறைப்படுத்துவது அரசாங்கம் ஆகும். நீதி, நிருவாகம், அதிகாரம் போன்ற பணிகளை அரசாங்கம் மேற்கொள்ளுகிறது. மார்கன் (Morgan), மெயினி (Mainey) போன்ற சில மானிடவியலாளர்கள் ஆதிக்குடிகளிடையே அரசாங்கம் என்னும் தனிப்பட்ட ஓர் அமைப்புக் கிடையாது என்று கூறியுள்ளனர். உண்மையில் எல்லாப் பழங்குடிகளிடமும் தங்கள் சமூகக் கட்டுப்பாட்டைக் காக்கவும் ஆட்சிக் குழு நிறைவேற்றும் பணிகளை மேற்கொள்ளவும் ஓர் அமைப்பு இருக்கவே செய்கிறது. இத்தகைய அரசாங்க அமைப்புகளில் பழங்குடிகளின் முதியவர்களும் ஏனையோரும் ஒத்த அடிப்படையில் உரிய பங்குகொள்கின்றனர். மேலும், இந்திய அரசு தன் ஆளுமைக்குட்பட்ட பல பகுதிகளில் பழங்குடிகளிடையே தத்தமக்குள் ஒரு தலைவரைத் தேர்ந்தெடுத்து வழிநடத்த அனுமதி வழங்கியுள்ளது.

முன்னேறும் நாடுகளிலுள்ள அரசுகள் தங்கள் ஆட்சிப் பரப்பில் உள்ள பழங்குடிகளின் மரபுவழிச் சட்டங்களைப் பதிவு செய்து, அவற்றை முழுமையான சட்ட ஏற்புக்கான வழிவகைகளைச் செய்து வருகின்றன. இவ்வாறு மரபுவழிச் சட்டங்களை எழுத்தால் பதிவு செய்யும்போது, அவை மாறுதல்களை அடைவதும், புதுப்பிக்கப்படுவதும் தவிர்க்க முடியாததாகின்றன.

பழங்குடிகளிடையே மரபுவழிச் சட்டங்கள் எவ்வாறு செயற்படுகின்றன என்பதை அறிய இந்தியாவில், மத்தியபிரதேசத்தில் வாழும் காமர் என்னும் பழங்குடிகளைப் பற்றிய ஒரு சிறு குறிப்பு உதவுகிறது. ஆங்கிலேயர் ஆட்சியின்போது உண்டான தொடர்பினால், காமர்களின் தொன்று தொட்டு வரும் சட்டவழிமுறைகளிலும் நிருவாகத்திலும் சில மாறுதல்கள் ஏற்பட்டன. இதனால், அவர்கள் தங்கள் சமுதாயத்துக்கே உரிய மரபுவழிச் சட்டங்களைப் பின்பற்ற வேண்டியதுடன், 'இந்தியக் குற்றவியல்' சமூக நடைமுறைச் சட்டங்களையும் பின்பற்ற வேண்டிய நிலை ஏற்பட்டது. எனினும், காமர்கள் இந்திய நீதிமன்றங்களை மிகக் குறைவாகவும், தங்கள் சமுதாயப் பஞ்சாயத்தை மிக அதிகமாகவும் பயன்படுத்துகிறார்கள். காமர்களின் பஞ்சாயத்து, பல்வேறு குற்றங்களுக்கு விதிக்கும் தண்டனைகள், இந்திய நீதிமன்றம் வழங்கும் தண்டனைகளிலிருந்து பெரிதும் வேறுபடுகின்றன. காமர்களிடையே கொலையாளி ஒருவன் ஊர்மக்களுக்குத் 'தண்டனை விருந்து' கொடுத்தால், அவனது கொலைக்குற்றம் மன்னிக்கப்படும். தானியங்களைத் திருடுதலும், கள்ளச் சாராயம் காய்ச்சுதலும் இவர்களால் குற்றமாகவே கருதப்படுவதில்லை. மேலும், இவர்களின் தனிப்பட்ட தகராறுகள் ஒருவருக்கொருவர் முக மலர்ச்சி காட்டுவதன் மூலம் தீர்ந்துவிடுகின்றன.

இயற்கைக்கு அப்பாற்பட்ட ஆற்றலால் குற்றவாளி பிற்காலத்தில் தண்டனைக் குள்ளாவான் என எதிர்பார்க்கப்படும் குற்றங்களுக்கு இவர்கள் தண்டனை விதிப்பதில்லை. எடுத்துக்காட்டாக, நெருங்கிய உறவினர்களிடையே முறையற்ற உடலுறவு கொள்வோர்க்கு உறுதியாக இயற்கைக்கு அப்பாற்பட்ட ஆற்றலால் தண்டனை விதிக்கப்படும் என்று கருதப்படுவதால், அக்குற்றம் புரிந்தவர்களுக்குச் சமுதாயம் எந்தவித தண்டனையும் வழங்குவதில்லை. எனினும், நியதிப்படி இத்தகைய செயலில் ஈடுபட்டோரை ஊரைவிட்டு வெளியேற்றி விடுகின்றனர். காமர் சமுதாய வழக்கத்தின்படி பெண்கள் 'மாதவிடாய்' காலத்தில் பூசை அறை, சமையல் அறை ஆகியவற்றில் நுழைவதைத் தவிர்த்தல் வேண்டும். இதை அவர்கள் மீறினால் அவர்களுக்கு மட்டுமன்றி அந்தக் குடும்பத்திலுள்ள அத்தனை பேருக்குமே இயற்கைக்கு அப்பாற்பட்ட ஆற்றலின் வழியாக தண்டனை அளிக்கப்படும் என்று நம்புகின்றனர். இப்பழங்குடிகளுக்கு அவர்களின் 'பஞ்சாயத்தை'த் தவிர உயர் அதிகாரம் கொண்ட அமைப்பு வேறெதுவும் கிடையாது. ஆங்காங்கு அவர்கள் வசிக்கும் பகுதிகளில் தங்களுக்கென்று ஒரு பஞ்சாயத்தை அவர்களே ஏற்படுத்திக் கொள்ளுகின்றனர். பஞ்சாயத்தார் பெரும்பான்மையினரின் கருத்துப்படி தீர்ப்புக்களை வழங்குவர். கொலைக் குற்றம், பெருத்த உடற்காயங்கள், திருட்டுகள் போன்ற குற்றங்களை இக்காலத்தில் இந்திய நீதிமன்றங்களின் தீர்ப்புக்காகக் கொண்டு செல்லுகின்றனர். தகாப்புணர்ச்சி, தாழ்ந்த வகுப்பினரோடு உண்ணுதல், குதிரையைத் தொடுதல் அல்லது அதன்மீது ஏறிச்செல்லல், பில்லி,

சூனியம், பசு அல்லது எருதைக் கொல்லுதல், பழி வாங்கும் எண்ணம், தாழ்ந்த குழுக்களைச் சேர்ந்த ஒருவரால் அடிக்கப்படுதல், நான்கு கணவர்களை மாற்றிய பின் ஐந்தாவதாக ஒருவனை மணத்தல், உடன் போக்கு, கால்வழிப் புறமணம் மீறப்படுதல் போன்றவை காமர் பழங்குடி மக்களின் சட்டமீறல் செயல்களாகக் கருதப்படுகின்றன. இவர்களிடையே குற்றங்களை மறைத்தல் அல்லது அவற்றிற்கான சான்றுகளை அழித்தல் போன்றவை பெரும்பாலும் இல்லை. காமர் சமுதாயத்தின் முதியவர்கள் சட்டம் ஒழுங்கின் பாதுகாவலராக இருப்பதுடன், தீர்ப்பளிப்பவராயும், சமுதாயத்தின் சட்ட முறைமைகளைத் தங்கள் சந்ததியினருக்கு எடுத்துக் கூறுபவராயும் திகழ்கின்றனர். ஆ. செ.

துணை நூல்கள்:

Archer, W.G., Tribal Law and Justice, Concept Publishing Company, New Delhi, 1984.

Kameshwar Rao, N.V., Customary Law and Politics, Anthropological Survey of India, Calcutta, 1978.

Mainey, M.S., Ancient Law, Beacon Press, Boston, 1963.

Naidu, T.S., Lambadis and their Customary Law, Anthropological survey of India, Calcutta, 1978.

**ஆதிக்குடிகளும் அரசும்:** ஆதிக்குடிகளின் அரசு அமைப்பிலிருந்து இன்றைய அரசு முறை தோன்றியதானாலும்,ஆதிக் குடிகள் அரசு முறையை ஏற்றுக் கொண்டதில்லை. அரசும் தன் நாட்டிற்குள்ளோ, எல்லையோரங்களிலோ பழங்குடிகள் ஒன்றுபட்டு வலிமையோடு இருக்கவிட்டதுமில்லை. மகத நாட்டு மன்னன் அசாதசத்துரு ஆட்சிக் காலத்தில், அவனது ஆட்சி எல்லையை ஒட்டிய பகுதியில் இலிச்சாவியர் என்ற பழங்குடியினர் வாழ்ந்து வந்தனர். இவர்களது கூட்டமைப்பிற்கு 'வச்சியென்கள்' (Vajjians) என்பது பெயர். அசாதசத்துரு இவர்களை வெல்லவேண்டுமென்று விரும்பினான். ஆனால், இலிச்சாவியரின் குலக் கூட்டு (வச்சியென்கள்)வலிமை வாய்ந்ததாக இருந்தது. தன் அமைச்சர் வழியாக அக் குழுவினரிடையே பிரிவை ஏற்படுத்தி, அவர்களுக்குள்ளேயே போட்டியையும் பொறாமையையும் உண்டாக்கினான். பின்னர்ப் படையெடுத்து அவர்களின் தலைநகரான வைசாலியைக் கைப்பற்றினான். இலிச்சாவியர் அடிமையாக விரும்பாமல் இடம் பெயர்ந்து நேபாளத்திற்குச்சென்றுவிட்டனர் என்று வரலாறு கூறுகிறது.

குலக்குழு, பேரரசனின் கூட்டுப் பயிற்சி பெற்ற படையைவிட வலிமை மிக்கது என்பதை அக்கால அரசர்கள் உணர்ந்திருந்தனர். பழங்குடிகள் இரத்த உறவு முறைத் தொடர்பு உள்ளவர்கள். தாம் தோற்று அடிமையாவதை விட இறந்துவிடுவதே சிறப்பெனக் கருதும் தன்மையினர். ஆகவே, பழங்குடிகள் தங்கள் உயிர் வாழ்க்கைக்காகக் கடுமையாகப் போரிட்டனர். பழங்கால மன்னர்களுள் பெரும்பாலோர் பழங்குடிகளைச் சூழ்ச்சியாலேயே வென்றனர்.

அசாதசத்துருவிற்குப் பல்லாண்டுகளுக்குப் பிறகு ஆட்சிக்கு வந்தவன் சந்திரகுப்த மௌரியன். இவனுக்கு அமைச்சராகத் திகழ்ந்த சாணக்கியர் தம் அர்த்தசாத்திரம் என்னும் அரசியல் நூலில் பழங்குடிகளை வெல்லும் முறையைச் சுருக்கிச் சொல்கிறார்.

உளவாளி, பழங்குடிகளிடையே புகுந்து அவர்களிடையே உட்சண்டைக்கு வாய்ப்பாகப் பிளவை ஏற்படுத்தவேண்டும். ஆசிரியராகச் சென்று ஆதிக் குடித் தலைவர்களிடையே குழந்தைத்தனமான சண்டையை உண்டாக்கவேண்டும். அறிவு நுட்பமுள்ள உளவாளி, மது குடிக்கும் இடங்களிலும், விலைமகளிர் விடுதிகளிலும் தலைவனின் கீழ் உள்ளவர்களைப் புகழ வேண்டும். சோதிடர் வேடத்தில் சென்று இளவரசனைப் புகழ்ந்து சொல்ல வேண்டும். இதனால், குழுத் தலைவர்கள் அவனுக்குக் கீழ்ப் படிந்து நடப்பார்கள், தலைவனின் நம்பிக்கையை இதன் வாயிலாகப் பெறலாம். பாடகர், நடிகர், ஆட்டக்காரர், ஆகியோர் பழங்குடிகளிடம் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டபின் இளமையும் அழகும் நிறைந்த பெண்களைக் காட்டித் தலைவனின் காம உணர்வைக் கவரவேண்டும். இப்பெண்ணை வேறு ஒருவன்பால் அனுப்ப வேண்டும் அல்லது மற்றவர்கள் அப்பெண்ணை வலிந்து தூக்கிச் சென்றுவிட்டதாக நடிக்க வேண்டும். இதனால், இவள்மீது காதல் கொண்டவர்களிடையே கொடிய சண்டை உண்டாகிப் பழங்குடிகளின் ஒற்றுமை சிதறிப் போகும் என்று கூறிவிட்டுப் பழங்குடியினரிடையே பிளவை ஏற்படுத்துவதில் பெண்களின் பங்கு எந்த அளவில் இருக்க வேண்டும் என்பதையும் சாணக்கியர் கூறுகிறார்.

அரசு அமைப்பு நன்கு வேரூன்றி வளர்ந்து விட்டதால், இவ்வமைப்பைப் பழங்குடிகள் ஒப்புக் கொள்ள வேண்டியவர்களாயினர். வென்று அடக்கப்பட்ட பழங்குடிகள் பத்து அல்லது பதினைந்து பேர்களாகப் பிரிக்கப்பட்டுத் தொலைதூரங்களில் உள்ள ஒவ்வொரு கிராமத்திலும் குடியேற்றப் பட்டனர். அவ்வாறு குடியேறியவர்களை வேளாண்மைத் தொழிலில் ஈடுபடுத்தினர். மீண்டும் பழங்குடிகள் ஒன்று சேர்ந்து

விடாமல் தடுக்கவே இவ்வாறு செய்தனர். இது இடைக்காலத்திற்கு முன்பே நடந்தேறிவிட்டது.

இதனால் இடைக்காலத்தில் பழங்குடி மக்களும் அரசனின் குடி மக்களாகக் கருதப்பட்டனர். பொருள் உற்பத்தியில் பிரபுக்களுக்கு அடங்கியவர்களாக்கப் பட்டனர். ஆகவே, ஆதிக் குடிகளுக்கும் அரசிற்கும் இடையே மோதல்கள் நடப்பது குறைந்தது. வலிமை மிக்க அரசை எதிர்த்துத் தங்களால் ஒன்றும் செய்ய இயலாத பழங்குடிகள் ஒதுங்கிக் கொண்டனர். அவர்களால் தங்கள் அரசை ஏதும் செய்திட இயலாது என்பதை அறிந்த அரசுகள் தங்கள் நாட்டு எல்லைக்குள் வாழ்ந்த பழங்குடிகளை அப்படியே விட்டு வைத்தன. இருபகுதியினரும் தலையிடாக் கொள்கையைப் பின்பற்றினர் எனலாம். மக்கள் தொகையில் சிறுபான்மையினராகி மலைப் பகுதிகளிலும் அடர்ந்த காடுகளிலும் ஒதுக்குப் புறத்தில் வாழ்ந்த இவர்களை இக்காலக் கட்டத்தில் எழுந்த தொன்மங்கள் பூதங்கள் என்றும், அரக்கர்கள் என்றும் வருணிக்கின்றன.

ஆப்பிரிக்காவில் சில பழங்குடிகளிடம் மட்டில் அரசுத் தோற்றத்திற்கானமுறைகள் காணப்பட்டன. இவையுங்கூட இன்று வரையில் இக்கால அரசு அமைப்பு.அளவிற்கு வளரவில்லை. இவர்களின் அரசில் கூலிப்படை முறையில்லை. பழங்குடிகளின் தலைவன் அமைப்பு முடிவெடுக்கவும் செயற்படுத்தவுமான அதிகாரம் படைத்தவனாகவே மாறியுள்ளான். இதற்கு மேல் இது வளரவில்லை.

பழங்குடிகள் பொதுவாகத் தம் இனத்திற்கு அப்பாற்பட்ட புதிய மனிதர்களிடம் எளிதில் நட்புக் கொள்வதில்லை. பல நேரங்களில் பகைமையே பாராட்டுவர்.

சிறிய அந்தமானில் வாழும் ஓங்கே (Onge) பழங்குடியினர் கி. பி. 1886-ஆம் ஆண்டு வரையிலும் எந்தப் புதிய மனிதர்களோடும் பழகாதவர்கள். ‘அசாம் வேலி’ (Assam Valley) என்ற கப்பலில் கி.பி. 1867-இல் இவர்கள் வாழும் பகுதிக்குச் சென்ற கப்பல் தலைவனும் ஏழு மாலுமிகளும் திரும்பி வரவில்லை. இவர்களைத் தேட அம்ரே என்பார் ‘குவண்டாங்கு’ என்ற கப்பலில் சென்றார். ஓங்கர்களின் கடுமையான தாக்குதலினால் இவர் உடனே திரும்பினார். இதன் பின் டபுள்யூ. எல். மச் என்பாரின் தலைமையில் ஒரு கப்பல் அனுப்பப்பட்டது. பெரும் தொல்லைக்குப் பின் இறந்தவர்கள் போக எஞ்சியவர்கள் மீட்கப்பட்டனர். கர்னல் டி. சடெல்லும் எம்.வி. போர்ட்டுமனும் கி. பி. 1880-இல் அந்தமானியர்களை அனுப்பி நல்லெண்ணத்தின் அறிகுறியாகப் பல பரிசுப்பொருள்களை ஓங்கர்களுக்கு அளிக்கச் செய்தனர். தற்செயலாகக் கி.பி. 1885-இல் 8 ஆண்களையும் 6 பெண்களையும் 10 குழந்தைகளையும் பிடித்து வந்தனர். இவர்களிடமிருந்த நம்பிக்கைஇன்மை, அன்பளிப்பாலும் நன்கு நடத்தப்பட்டதாலும் சிறிது சிறிதாகக் குறைந்தது. போர்ட்மென் கி. பி. 1886- ஆம் ஆண்டு மார்ச் மாதம் சிறிய அந்தமானுக்குச் சென்ற பொழுது விடுவிக்கப்பட்டவர்களுடன் ஏனைய ஓங்கர்களும் நட்போடு வந்து சந்தித்தனர்.

ஆங்கிலேயர்கள் ஆப்பிரிக்கப் பழங்குடிகளிடம் பல முறை மோதிய நிகழ்ச்சிகளும், பிரித்தானியர் சூலு (Zulu), நுபா (Nuba) ஆகிய பழங்குடியினருடன் மோதிய நிகழ்ச்சிகளும் இக்கால வரலாற்றில் காணப்படுகின்றன.

வட அமெரிக்காவில் இந்தியப் பழங்குடிகளாகிய செனிகா, அசுதெக்குப் பழங்குடிகளிடம் போர்ச்சுகீசியரும், இசுபானியர்களும் (Spanish) போரிட்ட செய்திகள் அமெரிக்க இந்திய வரலாற்றில் காணப்படுகின்றன. பழங்குடிகள் தங்களுக்குள் நிலப்பகுதிக்காகப் போரிட்டதும் உண்டு. ஆனால், வென்றவர்கள் தோற்றவர்களை அடிமையாக்குவதில்லை. இரோகுவாய்கள் கி. பி. 1651-ஆம் ஆண்டு அளவில் எரீக்களையும் நடுநிலை இனங்களையும் வென்றபோது அவர்களைக் குலக்குழுக் கூட்டில் ஒத்த அங்கத்தினர்களாகச் சேரும்படி அழைத்தார்கள். தோற்கடிக்கப்பட்டவர்கள் மறுத்தபோதுதான் அவர்கள் தங்கள் பகுதிகளிலிருந்து துரத்தியடிக்கப்பட்டார்கள்.

ஆதிக்குடிகளை நட்பாக்கிக் கொள்வது, அடக்கி ஆள்வது என்ற இருவழிகளில் அரசுகள் இரண்டாம் வழியையே பெரும்பாலும் விரும்பின. நட்பாக்கிக் கொள்வது நீண்ட நடைமுறையைக் கொண்டதும் சமமாக நடத்த வேண்டியதுமாகும். சமமாக நடத்தினால் பழங்குடிகளின் செல்வத்தையும் உழைப்பையும் அடையமுடியாது. ஆகவே பெரும்பாலான அரசுகள் இரண்டாம் வழியை விரும்பியதில் வியப்பில்லை. மக்களாட்சி அமைப்பில் பழங்குடிகளுக்குரிய பங்கினையும் அவர்களுக்குள்ள சிக்கலையும் காணவேண்டும். இத்தியாவை ஆண்ட ஆங்கிலேயர் பழங்குடிகளிடம் கருவிகளின் வன்மையால் உட்புகவில்லை. முதலில் கிறித்தவ மடாலயங்கள் புகுந்தன. மேகாலயாவில் வாழும் காசிகளிடமும் தமிழ்நாட்டு நீலகிரி மலையில் வாழும் தோடர்களிடமும் இவ்வாறே தொடர்பு கொள்ளப்பட்டது. சுதந்திரம் பெற்றபின் இவர்களிடையேயும் மக்கள் பிரதிநிதித்துவம் வந்து சேர்ந்தது. வாக்குரிமையைப் பயன்படுத்தும் உரிமையை அரசியல் அமைப்பு அளித்தது. இவ்வமைப்பில் தமிழ்நாட்டில் உள்ளது போன்று சிறு சிறு தொகையினராகச் சிதறிக் கிடக்கும் பழங்குடிகள் மிகுதியாக விழிப்படையா விட்டாலும் இவர்களே பெரும்பான்மையாக வாழும் மேகாலயா, திரிபுரா, நாகாலந்து, இமாசலப்

பிரதேசம் ஆகிய மாநிலங்களிலிருந்து தங்கள் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்துப் பாராளுமன்றத்திற்கு அனுப்பினர்.

பாராளுமன்றத் தேர்தல் முறையால் கட்சிகளும் போட்டிக் கட்சிகளும் இவர்களிடையேயும் தோன்றியதால் ஓரளவிற்கு அரசியல் விழிப்புணர்ச்சி உண்டாகியது. இதனால் கல்வி கற்போர் தொகை மிக்கது. வெளியுலகுடன் தொடர்பு வசதிகள் பெருகின. பிற மாநிலத்திலிருந்து இங்குச் சென்று வாணிகம் செய்வது பெருகியது. இவற்றால் பண்பாடு கலப்புற்றது.

விழிப்புணர்ச்சியுற்றதன் காரணமாக, இவ்வினங்களின் குழுக்கள் பலவும் ஒன்று சேர்ந்து இந்திய ஆட்சி அமைப்புக்கு உட்பட்ட தனித்தனி மாநிலங்கள் கேட்கத் தலைப்பட்டன. இவ்வாறுதான் அசாம் மாநிலத்திற்குள்ளே பழக்குடிகளுக்கென 2. 4. 1970- இல் மேகாலயா மாநிலம் தோன்றியது. இதனாலும் மனநிறைவு கொள்ளாது தனி மாநிலம் கேட்கத் தலைப்பட்டனர் காசிப் பழங்குடியினர். வெளியார் உட்புகுவதால் தங்களின் தனிப் பண்பாடும் தனித் தன்மையும் அழிகின்றன என்றும் மற்றவர்களால் தாங்கள் சுரண்டப்படுகிறோம்' என்றும் உணர்ந்ததால் அவர்கள் தனி மாநிலம் கேட்டனர். இதனால் இந்திய அரசு இமாசலப் பிரதேசம், மேகாலயா, திரிபுரா, நாகாலாந்து, மிசோராம் ஆகிய இடங்களில் தனி ஆட்சி அமைப்பை ஏற்படுத்தியுள்ளது.

சார்கண்டு இயக்கம் வங்காளம், பீகார், ஒரிசா ஆகிய மாநிலங்களில் வாழும் பழங்குடிகளின் நன்மைக்காகத் தொடங்கப்பட்டது. சார்கண்டியர்களுக்கென இப்பொழுது தனி மாநிலம் வேண்டுமெனக் கேட்கின்றனர். இவர்கள், பிற பகுதிகளிலிருந்து வந்தவர்களால் தங்கள் தனித்தன்மை கெடுகிறது என்றும், வந்து குடியேறியவர்களால் மேலும் ஏழையாக்கப் படுகிறோம் என்றும், மண்ணின் மைந்தர்களுக்கு வேலைவாய்ப்பு வேண்டும் என்றும் காரணங்களைக் கூறி தனி மாநிலம் கேட்டும், அவ்வாறு தனி மாநிலம் அமைந்தால் வெளியாரின் சுரண்டலுக்கும் ஏமாற்றலுக்கும் இடமிருக்காதென்று கூறியும் வாதிடுகின்றனர். இவர்கள் அமைதி வழியில் தம் வேண்டுகோளை வெளியிட்டு வருகின்றனர். மிசோக்களில் ஒரு பகுதியினர் இந்திய அரசின் கீழ் வாழமுடியாது என்றும் சுதந்திரமான தனி நாடு வேண்டும் என்றும் கூறி ஆயுதம் ஏந்திய போராட்டத்தை நடத்தி வருகின்றனர்.

இந்திய அரசும் பழங்குடிகளின் நலனுக்கெனப் பல திட்டங்களைத் தீட்டிச் செயற்படுத்திக் கல்வி, வேலைவாய்ப்பு ஆகியவற்றில் சலுகைகளை அளித்து வந்தாலும் இவர்களுக்கு மன நிறைவு ஏற்படவில்லை. பழங்குடிகளின் இடையே பணிபுரியும் மைய, மாநில அரசு அதிகாரிகள் தொலைதூரங்களிலிருந்து வந்தவர்கள். இவர்களைப் பழங்குடிகளால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. தனி மாநிலம் கேட்பதற்கு இதுவும் ஒரு காரணமாகக் காட்டப்படுகிறது.

பழங்குடிகளுக்கெனத் தனி மாநிலங்கள் அமைக்கப்பட்ட பின்பும் இவர்களிடையே ஏழ்மையும், வேலையில்லாத் திண்டாட்டமும் நிலவுகின்றன. தமிழ்நாட்டில் நீலகிரி, கோயம்புத்தூர், சேலம், வட ஆர்க்காடு ஆகிய மாவட்டங்களில்தான் குறிப்பிடத்தக்க ஆனால் மிகச் சிறுபான்மையினராகப் பழங்குடிகள் வாழ்கின்றனர். இவர்களிலும் நீலகிரி மாவட்டத்தில் உள்ள தோடர்களிடம் கிறித்தவம் சிறிது பரவியுள்ளது. கல்வியறிவும் சிலர் பெற்றுள்ளனர். ஆகவே தமிழ்நாட்டில் வாழும் பழங்குடிகளிடம் அரசியல் விழிப்புணர்ச்சி குறைவு எனலாம். தனி மாநிலமோ தனி மாவட்டமோ கேட்கும் அளவிற்கு எங்கும் பழங்குடிகள் குவிந்த எண்ணிக்கையில் இல்லை; சிதறிக் கிடக்கின்றனர்.

ஊராளி, இருளர் போன்ற பழங்குடிகளைப் படிப்படியாக வேளாண்மைத் தொழிலுக்குக் கொண்டு வருகின்றனர். பலர் வேலை செய்யத் தெரியாமலும் இயலாமலும் ஓடி விடுகின்றனர். இவர்கள் இன்று அரசு அளிக்கும் சலுகைகளைப் பெற்று அரசோடு தங்கள் பண்பாடு மாற்றம் அடையாமல் ஒத்துழைத்து வருகின்றனர். தங்கள் தனித்தன்மையை அரசு மதித்துப் போற்றுவதால் அரசோடு பொதுவாகப் பகையின்றி வாழ்கின்றனர். க.கி.

**ஆதிகாலக் கல்வி:** ஆதிகாலக் கல்விமுறை இயல்பாக எழுந்ததாகும். தனது சூழ்நிலையோடு நன்கு பொருந்தி வாழ்வதற்கான அறிவு, செயலாற்றல்கள் ஆகியவற்றைச் சிறிது சிறிதாகத் தனது அனுபவ வாயிலாக மனிதன் அடைந்து, இவற்றை இளம் தலைமுறையினர்க்கு அறிமுகப்படுத்துதல் ஆதிகாலக் கல்வியின் தலைசிறந்த நோக்கமாக இருந்தது. இதற்கெனத் திட்டமிடப்பட்ட அமைப்பு முறைகளோ பள்ளி போன்ற நிறுவனங்களோ இல்லை. குடும்பம், சமுதாயம் ஆகியவற்றின் அன்றாடச் செயல்கள், தேவைப்படும் கல்வி அனுபவங்களை அளிப்பனவாக இருந்தன. ஆதிகாலக் கல்வி எளிமையானது. இதில் முறைமை, திட்டம், உயர் குறிக்கோள்கள் போன்றன காணப்படவில்லை. பண்டைய சமுதாயம் மக்களின் உயிர்வாழ்தலுக்கின்றியமையாத நாள்தோறும் வேண்டிய தேவைகளைத் தொடர்ந்து நிறைவுசெய்யும் வகையில் ஆதிகாலக் கல்வி உருவாகியது. உணவு தேடுதல், தீங்குகளினின்றும் தம்மைப் பாதுகாத்துக் கொள்ளுதல்,

வில், கத்தி போன்ற கருவிகளை உருவாக்கிப் பயன்படுத்துதலில் பயிற்சி பெறுதல், உறைவிடம் அமைத்தல் போன்ற நடைமுறைப் பயன்மிக்க செயல்கள் கல்வியனுபவங்களின் இலக்குகளாகவிருந்தன. இவ்வகைச் செயல்களில் இளைய மரபினர் தேர்ச்சி பெறும்போது இவற்றுடன் இணைந்த அறிவினையும் பெற்றனர். மேலும், பண்டைய கால மனிதன், பெருமழை, கடுங்காற்றுப்போன்ற இயற்கை நிகழ்ச்சிகளின் தீய விளைவுகளினின்றும் தன்னைக் காத்துக் கொள்ள இவற்றின் பின்னுள்ள புலன்களுக்கப்பாற்பட்ட ஆற்றல்களை மகிழ்விக்க மந்திரங்கள், சடங்குகள் ஆகியவற்றைப் பெரு நம்பிக்கையோடு மேற்கொண்டான். இவைபற்றி அறியும் அறிவும் பழக்க வழக்கங்களும் ஆதிகாலக் கல்வியில் இடம் பெற்றன.

ஆதிகாலக் கல்வி வாய்ப்புகள், அன்றாடக் குடும்ப, சமூக வாழ்க்கைத்தொடர்பான விளையாட்டு, வேலை, விழாக்கள், சடங்குகள் போன்றவற்றினின்றும் எழுந்தன. இவற்றில் குழந்தைகள் பங்கு கொண்டு நேர் அனுபவங்களைப் பெற்றுத் தமக்குத் தேவையான யாவற்றையும் கற்றனர். சமுதாய வாழ்க்கை, கல்விக்கான இடமாக விளங்கியது. பெற்றோர், மூத்தோர், சமயத் தலைவர் ஆகியோர் ஆசிரியர்களைப் போன்று செயற்பட்டனர். இளைஞர்கள், பெற்றோர்களுக்கு உதவியும் பின்னர் வாழ்க்கைச் செயல்களில் நேரடிப் பங்கு பெற்றும் கற்றார்கள். இவ்வகைக் கற்றலில் 'பின்பற்றல்' அல்லது 'பார்த்துக் கற்றல்' (Imitation) சிறந்த இடத்தைப் பெற்றது. கற்கும் முறையும் தவறாகச் செய்துபின் கற்றதாகப் (Learning by Trial and Error) பலபோது அமைந்திருந்தது. ஆதி காலச் சமுதாயங்களில் ஆண் குழந்தைகள் வயது வந்தவுடன் சமுதாய முதியோர் குழுவில் சேர்வதற்கான 'அறிமுகவிழா' (Initiation) நடைபெறுவதுண்டு. இவ்வகை விழாக்கள் இன்றும் பல பழங்குடி மக்களிடையே காணப்படுகின்றன. இச்சமுதாயச் சிறுமியர், தங்கள் தாய்மார்கள், பிற முதிய பெண்கள் ஆகியோர்களின் துணையில் வளர்ந்து, அவர்களைப் பின்பற்றித் தேவையான அறிவு, திறன்கள், பழக்கங்கள், வழக்கங்கள் போன்றவற்றைக் கற்றனர்.

எஸ்.ச.

**ஆதிகிரந்தம்** சீக்கியர்களின் புனித மறை. இதனைக் 'கிரந்த சாகிபு' என்றும் கூறுவர். ஐந்தாம் சீக்கியக் குருவான குரு அருச்சுனசிங்கு என்பவர் குருமார்களின் புனித கூற்றுகளைத் தொகுத்து ஆதிகிரந்தத்தை உருவாக்கினார். இவர் கி.பி. 1581 முதல் 1606 வரை பொறுப்பில் இருந்தவர். தம் முன்னோர்களான நான்கு சீக்கியக் குருக்களின் கவிதைகளைத் திரட்டியதுடன், இராமானந்தர், கபீர், நமாதேவர் போன்ற அனுபூதிமான்கள் இயற்றிய கவிதைகளின் பகுதிகளை இணைத்துத் தம்முடைய கவிதைகளையும் சேர்த்து ஆதிகிரந்தத்தை இவர் தொகுத்தார். பிற்காலத்தில் பத்தாம் குருவான கோவிந்த சிங்கு (கி.பி. 1675-1708) அவர்களின் கவிதைகளும் இதனுடன் இணைக்கப்பட்டன. பத்தாம் குருவின் ஆட்சிக் காலத்தில் வந்த கிரந்தம் ஆதி கிரந்தத்தின் பிற்சேர்க்கையாகும். இந்நூல் பஞ்சாபி, இந்தி ஆகிய மொழிகளில் எழுதப் பெற்றுள்ளது.

**ஆதிச்ச தேவன்** என்பவர் கல்வெட்டிலிருந்து அறியலாகும் தமிழ்ப்புலவர்களுள் ஒருவர். இவர் பெயர் சிறுபெருச்சியூர்க் கொடிக்கொண்டான் பெரியான் ஆதிச்சதேவன் எனக் கல்வெட்டில் காணப்படுகிறது. மாறவர்மன் சுந்தர பாண்டியனது பதினான்காம் ஆட்சியாண்டில் (கி.பி. 1230) பாண்டி நாட்டுப் பெரிச்சி கோயில் என்னும் ஊரிலுள்ள சிவன் கோயிலில் இக்கல்வெட்டு உள்ளது. இப்புலவர், கண்டன் உதயஞ்செய்தான் காங்கேயன் என்னும் தலைவன் மீது 'காங்கேயன் பிள்ளைக்கவி' என்னும் நூலைச் செய்தமைக்காக இவர்க்குச் சாத்தனேரி என்னும் ஊரில் நிலங்கள் அளிக்கப்பட்டன. சுந்தர பாண்டியனின் வாயிற் புலவரான காரணை விழுப்பரையர் ஆதிச்சதேவன் என்னும் இப்புலவரைக் காங்கேயனுக்கு முதன்முதலில் அறிமுகம் செய்வித்தார் எனக் கல்வெட்டுக்கூறுகிறது. பிறிதொரு கல்வெட்டில், காங்கேயன் இந்த ஆதிச்ச தேவனை 'நம் புலவன்' என்று உரிமையொடு குறிப்பிட்டுள்ள செய்தி உள்ளது. மாறவர்மனின் அரசவைப் புலவராலும், அக்காலத் தலைவர்களாலும் பாராட்டப் பெற்றவர் இப்புலவர். இவர் பாடிய காங்கேயன் பிள்ளைக் கவி இப்பொழுது கிடைக்கவில்லை. ஒட்டக் கூத்தரின் குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழுக்குப் பின்னர் அறியப் பெறும் பிள்ளைக்கவி நூல் இதுவேயாகும். இப்புலவர் காலம் கி.பி. 13 ஆம் நூற்றாண்டு ஆகும்.

**ஆதிச்சநல்லூர்** தமிழ்நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில், திருநெல்வேலியிலிருந்து தென் கிழக்காக 24 கி.மீ. தொலைவிலும், கொற்கையிலிருந்து வடக்காக 9 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ள சிற்றூர். பெருங்கற்காலப் பண்பாட்டுச் சிறப்புடையது. ஆதிச்ச நல்லூர் முற்காலத்தில் ஒரு சிறந்த வணிக நகரமாக இருந்திருக்க வேண்டும். கடல் பின்னோக்கிச் சென்றபின் இடைக்காலத்தில் கொற்கை ஒரு துறைமுகமாக ஆகியிருக்க வேண்டும். பெர்லினைச் சார்ந்த டாக்டர் சாகர் என்பவர் ஆதிச்ச நல்லூரில் முதன்முதல் அகழாய்வு செய்து நிறைய மட்பாண்டங்கள், இரும்புப் பொருள்கள், எலும்புக் கூடுகளின் பாகங்கள், மண்டையோடுகள் ஆகியவற்

றைச் சேகரித்தார். பின்னர்ப் பாரிசுப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த எம். உலூயிசு லாபிக்கு (M.Louis Lapicque) நான்கு குழிகளை அகழாய்வு செய்து பல பானை வகைகள், இரும்பு, வெண்கலப் பொருள்கள், தொங்கு விளக்குகள், இரும்பு வாட்கள் போன்ற வற்றைக் கண்டெடுத்தார். அலெக்சாந்தர் இரீ என்பவர் இங்கு மிக்வும் விரிவாக அகழாய்வு செய்து பல அரிய பொருள்களைக் கண்டுபிடித்தார்.

ஆதிச்சநல்லூரின் மேற்குப் பகுதிக்கு அருகில் தாமிரபரணி ஆற்றின் தென்கரையில் ஒரு குன்று காணப்படுகிறது. அதிலிருந்து ஒரு தாழ்ந்த அகன்ற சரளைக்கல் படுகை, தெற்கிலிருந்து மேற்காக நீண்டு செல்கிறது. இங்குத்தான் இந்த இடுகாட்டுப்பகுதி உள்ளது. இந்தக் குன்றின் உச்சியில் தொன்மைமிக்க பாண்டியராசா கோயில் உள்ளது. பாளையங் கோட்டை நவாபுகளால் இடிக்கப்பட்டபின் அக் கோட்டையின் கற்களைக் கொண்டு இக்கோயில் கட்டப்பட்டுள்ளது.

ஆதிச்சநல்லூரில் அகழ்வாராய்ச்சியில் அலெக் சாந்தர் இரீ 1872 பொருள்களைக் கண்டுபிடித் தார்.பின்னர் 4000 க்கும் மேற்பட்ட பொருள்கள் கண்டு பிடிக்கப்பட்டன. அதன் பின்பு மேலும் 3000 பொருள்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. ஆதிச்சநல்லூரில் பழைய கற்காலத்தையோ புதிய கற்காலத் தையோ சேர்ந்த கருவிகள் கிடைக்கவில்லை. வெங் கலத்தால் செய்யப்பட்ட அணிகலன்கள் சமூகத்தில் உயர்ந்தவர்களால் மட்டில் பயன்படுத்தப்பட்டன. பொன்னால் மகுடங்கள் செய்யப்பட்டன. வெண்கலத் தால்செய்யப்பட்ட எருமைகள், வெள்ளாடு, செம் மறியாடு, கொம்பினையுடைய மறிமான் (மானியல் ஆட்டுவகை Antelope) சேவல் ஆகியவையும், புலி, யானை முதலியவையும் இங்குக் கண்டெடுக்கப்பட் டன.

இங்குக் கண்டெடுக்கப்பட்ட தாழிகள் சிவப்பு நிற மும் கூம்பு வடிவத்தில் 3 அடி விட்டமும், சிறிதளவு உயரமும் கொண்டு கனமான, சொரசொரப்பான அமைப்பு உடையவை. தாழிகளின் ஓரங்களில் விரல் பதிந்த வேலைப்பாடுகளோ ஆழமான முக்கோண வடிவிலமைந்த புள்ளிகளோ காணப்படும். இந்தத் தாழிகள் தட்டையான, கூம்பு வடிவ மூடிகளுடன் காணப்படுகின்றன. சில தாழிகளின் கழுத்து உட்புறத் தில் ஆணிபோன்ற அமைப்பு நீட்டிக் கொண்டிருப் பது உட்புறம் பொருட்களைத் தொங்க விடுவதற் காக இருக்கலாம். ஈமத்தாழிகளின் உள்ளே கறுப்பு சிவப்பு நிற மட்பானைகள், கறுப்பு நிற மட்பானை கள், சிவப்பு நிற மட்பானைகள் ஆகியவை காணப் படுகின்றன.

**மட்பாண்ட வகைகள்:** உடையாத நன்முறையில் உள்ள மட்பாண்டங்கள் பல அகழாய்வில் கிடைத் தன. பலவகையான கிண்ணங்கள், உருண்டை வடி





மட்பாண்டங்கள்

வமான பானைகள், குடுவைகள், உருளை வடிவப் பாத்திரங்கள், பெரிய சாடிகள், கிண்ணங்கள் போன்றவை கிடைத்துள்ளன.

வெண்கலப் பொருள்கள்: ஆதிச்சநல்லூரில் கிடைத்த வெண்கலப் பொருள்கள் மிக உயர்ந்த வேலைப்பாட்டினைக் கொண்டவை. வெண்கலத்தினாலான சாடிகள், வட்டமான கிண்ணங்கள் பல கிடைத்துள்ளன. கிண்ணங்கள் மூடிகளுடன் உள்ளன. மூடிகளில், பலவிதமான மிருகங்கள் சித்திரிக்கப்பட்ட வேலைப்பாடுகளும் (சேவல் போன்றவை), மேலும் இயற்கையைச் சித்திரிக்கும் வேலைப்பாடுகளும் (கொடிகள், மொட்டுகள் போன்றவை) காணப்படுகின்றன. ஒரு முழுமையான மூடியின் அமைப்பு மிகவும் அழகாக உள்ளது. பல வெண்கலக் குடுவைகள், வெண்கலத் தாங்கிகள், சல்லடைக் கிண்ணங்கள் ஆகியவை அகழாய்வில் கிடைத்துள்ளன. குடுவைகளின் அடிப்பாகம் விலங்கு உருவங்களைக் கொண்டுள்ளன.

இவற்றைத் தவிர மிகுதியான அளவில் கழுத்தணிகள், கடகம் அல்லது காப்புகள், பலவிதமான வளையல்கள் முதலிய பல அணிகலன்களும் கிடைத்துள்ளன. கடகங்கள் மிகவும் நுண்ணிய உயர்ந்த வளையங்களால் செய்யப்பட்டு, அவற்றுடன் சிறிய மணிகளும் இணைக்கப்பட்டுள்ளன. இவற்றைத் தவிர ஒருகாதணி, மோதிரம், மகுடங்கள் ஆகியனவும்

இரும்புப் பொருள்கள்

கிடைத்துள்ளன. மங்கிய சிவப்பு நிறமுள்ள நேர்த்தியான இரண்டு மணிக்கற்கள் (Cornelian beads) அகழாய்வில் கிடைத்துள்ளன.

இங்குக் கண்டெடுக்கப்பட்ட இரும்புப் பொருள்கள், உயர்ந்த வேலைத் திறமையினையும், மிகுந்த அளவில் உபயோகப்படுத்தப்பட்டமையையும் காட்டுகின்றன. இரும்புக் கருவிகளில் அம்புகள், வாள்கள், ஈட்டிகள், உடை வாள்கள், எறிவேல், புல்லரிவாள்கள், பட்டாக்கத்தி, மண்வெட்டி, கோடரி, விளக்குகள், திரிசூலங்கள் ஆகியவை அடங்கும்.

கல்லினால் ஆன குழவிகள், மாவரைக்கும் கல் (அம்மி) (Grinding stone), நான்கு கால்களையுடைய ஆட்டுக்கல் ஆகியவையும் அகழாய்வில் கண்டுபிடிக்கப்பட்டன. தங்கத்தினாலான பத்தொன்பது மகுடங்கள் இங்குக் கிடைத்துள்ளன. இந்த மகுடங்கள் தகடு போன்றும், இரு முனைகளிலும் தங்கத்தினாலான கயிற்றுடனும் காணப்படுகின்றன. இரண்டு முனைகளிலும் துளைகள் உள்ளன. இந்த மகுடங்கள் சில வற்றில் இணை கோடுகளும் வேறு சிலவற்றில் இலை வடிவ அமைப்பும் காணப்படுகின்றன.



தங்க அணி முடிகள்

எலும்புக் கூடுகள்: ஒரு சில தாழிகளில்தாம் முழுமையான எலும்புகள் உள்ள எலும்புக் கூடுகள் உள்ளன. ஒரு சில தாழிகளில் முழு மண்டையோடுகளும், வேறு சில தாழிகளில் மண்டையோட்டின் சில பகுதிகளும் காணப்படுகின்றன. சில தாழிகளில் எலும்புக்கூட்டின் சில எலும்புகள் மட்டுமே காணப்பட்டன.

சென்னை அருங்காட்சியகத்தைச் சார்ந்த தர்சுடன் என்பவர் எலும்புக்கூடுகளை ஆய்ந்து இங்கு வாழ்ந்த மக்கள் நீண்ட தாடை உடைய இனமக்கள் எனக் கூறியுள்ளார். எலியட்டு சுமித்து என்பவர் இரண்டு மண்டை ஓடுகளை ஆராய்ந்து அவை வேறுபட்ட இனத்தைச் சேர்ந்தவை என்றார். ஒன்று தொன்மை ஆசுட்ரலாயிடு இனத்தைச் (Proto Australoid) சேர்ந்தது என்றும் மற்றொன்று மத்திய தரைக் கடலைச்சார்ந்த இன மக்களது என்றும் கூறுகிறார். மேலும் எலியட்டு சுமித்து இங்கு வாழ்ந்த மக்கள் ஆல்பைன் இனத்தின் ஒரு பிரிவினரான ஆர்மீனிய மக்கள் எனக் கூறுகிறார். திராவிட இனத்தின் ஒரு கலவைக் கூறாக இந்த ஆர்மீனிய இனக்கூறு காணப்படுகிறது.

சீக்கர்மேன் என்பவர் ஒரு மண்டையோட்டை ஆய்ந்து அது திராவிட இனத்தைச் சார்ந்தது எனக் கூறியுள்ளார். இந்தக் குறைந்த அளவு பரிசோதனை மூலம், இந்த இடத்தில் பல இன மக்கள் ஒருவரோடு ஒருவர் இணைந்தோ அல்லது அருகருகே வாழ்ந்தோ இருக்கலாம் எனத் தெரிகிறது.

ஆதிச்சநல்லூரில் செய்யப்பட்ட அகழாராய்ச்சிகளின் வாயிலாக கி.மு. 1000-ஆம் ஆண்டின் முற்பகுதியில் பெருங்கற்காலப் பண்பாட்டு மக்கள் சிறப்பாக வாழ்ந்துள்ளனர் என அறிய முடிகிறது. சி - கி.

**ஆதிசங்கரர் (கி.பி. 788-820)** அத்துவித சித்தாந்தத்தை நிலை நாட்டியவர். துவாரகா, பூரி, காஞ்சி முதலிய சங்கர மடங்களில் காணப்படும் ஏடுகளின் வாயிலாக இவருடைய காலம் கி.பி. 788-820 என்றறியலாம். இவர் மலையாள நாட்டில் உள்ள காலடியில் பிறந்தார். சிவரகசியம் என்னும் இதிகாசத்திலும் அனந்தானந்தகிரி என்பவரால் இயற்றப்பட்ட சங்கரவிசயம் என்னும் நூலிலும் சங்கரரின் வரலாறு காணப்படுகிறது. சிவரகசியத்தில் சிவபெருமான், தாம் சங்கரராகப் பிறக்கப் போவதைப் பார்வதி தேவியிடம் கூறிய விவரம் உள்ளது. வேத வேதாந்தங்களைக் கற்றறிந்த அந்தணர் குலத்தில் சிவபக்தராகத் திகழ்ந்த சிவகுருநாதர் என்பவருக்கும் ஆரியாம்பாள் அம்மையாருக்கும் மகவாகத் தோன்றிய சங்கரர் சிவபெருமானின் திருவருளால் தோன்றியவராதலால் சங்கரர் என்றே பெயர் சூட்டப் பெற்றார். அவர் குழந்தையாய் இருக்கும் போதே தந்தையை இழந்தார்.

ஆரியாம்பாள் குழந்தைக்கு ஐந்தாம் வயதில் பூணூல் அணிவித்து வேதங்களையும் வேதாகமங்களையும் பயில ஏற்பாடு செய்தார். சங்கரரும் சிறு வயதிலேயே அவற்றைப் பயின்று தேர்ச்சி பெற்றார். ஞானம், வைராக்கியம், பக்தி ஆகியவற்றில் சிறந்து விளங்கிய சங்கரருக்கு இவ்வுலக வாழ்க்கையில் பற்றின்மை தோன்றியது. ஆதலால், ஞான நெறியைப் பின்பற்றித் துறவை மேற்கொள்ள விரும்பினார்.

ஆனால், கல்விக் கடலாய்அருளே வடிவாய்த் திகழும் சங்கரரைத் தாயான ஆரியாம்பாள் இழக்க விரும்பவில்லை. இந்நிலையில் தெய்வ அருளால் சங்கரருடைய எண்ணம் நிறைவேறும் வகையில் ஒரு நிகழ்ச்சி நடந்தது.

ஒருநாள் சங்கரர் பூர்ணையாற்றில் நீராடிக் கொண்டிருந்த போது ஒரு முதலை இவரது காலைப் பற்றிக் கொண்டது. இதனைக் கண்ட மக்கள் இவரை விடுவிக்க முயன்றனர். இச்செய்தியை அறிந்த தாய் ஓடோடி வந்து மகனைப் பார்த்துக் கதறி அழுதார். ஞானியாகிய சங்கரர் இதுதான் தக்க சமயம் என்று அன்னையை நோக்கி, 'தாயே' நான் இந்த ஆபத்திலிருந்து தப்பிப்பிழைக்க ஒரே வழிதான் உளது. நான் துறவு மேற்கொள்வதே அவ்வழி. ஆபத்துக் காலங்களில் துறவு மேற்கொண்டு நற்கதி பெறலாம் என்பது சாத்திரக் கொள்கை. அப்படித் துறவு மேற்கொள்வதால் எனக்கு வேறு புதிய பிறவி கிடைத்துவிடுகிறது. அதையொட்டி எனக்கு இந்த இடையூறும் நீங்கி விடும் என்று வேண்டினார்.

எப்படியாவது தன் மகன் பிழைத்தால் போதும் என்ற நிலையில் சங்கரர் துறவு ஏற்றுக்கொள்ள அவர்தம் தாயார் இணங்கினார். அதற்காகவே காத்திருந்தாற் போல முதலையும் சங்கரர் காலை விட, அவர் துறவை மேற்கொண்டார். சங்கரர் மேற்கொண்டது இடையூறு வந்தபோது மேற் கொண்ட துறவே. தக்க ஆசிரியரை நாடி முறைப் படி துறவு நிலைத் தீட்சை பெறவும் வேதாந்த நூல்களைக் கற்கவும் விரும்பிய சங்கரர், தம் தாயின் இறுதிக் காலத்தில் தாம் திரும்பி வந்து தாய்க்குச் செய்ய வேண்டிய ஈமக்கடன்களைச் செய்வதாக வாக்களித்துவிட்டு, வேதாந்த தாகத்தைத் தணிக்கத் தக்க ஆசிரியரைத் தேடிச் சென்றார்.

சங்கரர் வடக்கு நோக்கிப் புறப்பட்டார். நர்மதை ஆற்றங்கரையில் இருந்த பாதர் அவர்களின் மாணவரான கோவிந்த பகவத் பாதரை அடைந்து வணங்கி அவரிடமே முறைப்படி துறவுநிலைத் தீட்சை பெற்று, வேதாந்த சூத்திரங்களின் உட்பொருளைக் கற்றுணர்ந்தார்.

பிறகு, சங்கரர் தம் ஆசிரியர் கட்டளையின் படி வைதிக மதத்தைப் பரப்பும் பணியை மேற் கொண்டு காசிமாநகரை அடைந்தார். ஆயகலைகள் அறுபத்து நான்கும் பயின்ற அறிஞர்கள் நிறைந்த காசியில் பெரிய தருக்க வல்லுநராகவும் வேதாந்தியாகவும் விளங்கிய சங்கரருடைய அறிவுரைகள் அறிஞர்களுடைய மனத்தைப் பெரிதும் கவர்ந்தன. மிகப் பெரிய பண்டிதர்களெல்லோரும் சங்கரரிடம் மாணவர்களாயினர்.

காசியில் சில ஆண்டுகள் தங்கியிருந்து பிரம சூத்திரம், உபநிடதங்கள், பகவத் கீதை முதலிய வற்றிற்கு விரிவுரை நூல்களையும் மேலும் பல தோத்திரங்களையும் இயற்றினார். பின்பு அந்நாள் களில் பாரதநாடு முழுவதும் பரவியிருந்த பௌத்தர் களையும் சமணர்களையும் வாதத்தில் வென்று, வைதிகமான அத்வைதமதத்தை நிலைநிறுத்துவதற் காகக் காசியிலிருந்து புறப்பட்டார்.

காசியை விட்டுப் புறப்பட்ட சங்கரர் தெற்கு நோக்கி வரும்போது கங்கை, யமுனை, சரசுவதி என்னும் மூன்று புண்ணிய நதிகளும் கலக்குமிடமான பிரயாகையில் தங்கினார். காசியைப் போலவே அறிஞர்கள் நிறைந்த இடமான பிரயாகையில் குமரில பட்டர் என்னும் ஓர் அறிஞர் வாழ்ந்து வந்தார். அவர், வேதத்தின் முற்பகுதியாகிய 'பூர்வமீமாம்சை' என்னும் சாத்திரத்தில் வல்லவர்; பௌத்த சமய ஆசிரியர்களிடம் அவர்களின் சமயத்தைக் கண்டிக்க வேண்டிப் பௌத்த சமய நூல்களைப் பயின்றவர்; பின் அந்தப் பௌத்த சமயத் துறவிகளையெல் லாம் வாதத்தில் வென்று வேதமதத்தை நிலை நாட்டியவர். தம் கல்வி பயின்ற ஆசிரியர்களுக்கு விரோதமாக நடந்ததால் ஏற்பட்ட பாவத்தை நினைந்து அதற்குக் கழுவாயாகத் தாமே உமி நிரம் பிய தீக்குழியில் இறங்கி அவர் தம்மை மாய்த்துக் கொள்ள முயன்ற போது சங்கரர் அவரைக் கண் டார்.

சங்கரர் எவ்வளவோ கேட்டுக் கொண்டும் குமரில பட்டர் மனம் மாறாமல் தம் மாணவரான மண்டன மிச்சிரரைச் சந்திக்கும்படி சொல்லிவிட்டு உயிர் நீத்தார். பின்பு சங்கரர் மனச் சோர்வுடன் மண்டன மிச்சிரரைத் தேடி மாகிட்மதி என்னும் நகரத்துக்குச் சென்றார். அவ்விடம் மண்டனமிச்சிரருக்கும் சங்கர ருக்கும் வாதம் நடந்தது. நடுநிலையில் நின்று தீர்ப்புக் கூற மண்டனமிச்சிரரின் மனைவியும் கலைமகளின் அவதாரமுமான உபயபாரதிதேவி அமர்த்தப்பட்டார். அவரும் நடுநிலைமை வகிக்க ஒப்புக்கொண்டு இரண்டு மாலைகளை வருவித்து இருவரையும் அணியச் செய்து இவர்களில் யார் வாதத்தில் தோற்றுவிடுகிறார்களோ அவரது மாலை வாடிவிடும் என்று கூறினார். வாதம் வெகுநாள்கள் நடந்தன. கடைசியில் மண்டனமிச்சிரர் தோல்வியடைந்தார். சங்கரரைப் பணிந்து அவரிடம் துறவு பெற்றுக் கொண்டு சுரேத்வராசாரியார் என் னும் திருநாமம் பெற்று அவர் சங்கரரின் தலைமை மாணவராக விளங்கினார்.

மண்டனமிச்சிரர் துறவியானவுடன் கலைமகளின் அவதாரமான உபயபாரதிதேவி தம் உலகமான பிரம லோகத்திற்குச் செல்ல முடிவு செய்தார். ஞானத்தை விரும்புகிறவர்களுக்கு உபயபாரதியின் வாழ்த்துகள்

வேண்டுமென்ற எண்ணத்தில் அவர் சக்தியை இவ்வுலகிலேயே நிலைநாட்ட வேண்டும் என நினைத்துத் தம்மைப் பின் தொடர்ந்து வருமாறு சங்கரர் கூறினார். அவரும் தாம் தொடர்ந்து வருவதைச் சங்கரர் திரும்பிப் பார்க்கக் கூடாது என்னும் கட்டுப்பாட்டின் பேரில் சங்கரரைத் தொடர்ந்து சென்றார். துங்கா, பத்ரா என்னும் இரு நதிகளும் கூடுகிற கூடலி என்னும் இடத்தில் உபயபாரதியின் சிலம்பு மணலில் புதைந்ததினால் சத்தம் ஏதும் கேட்காது போகவே சங்கரர் திரும்பிப் பார்த்தார். தாம் விதித்த கட்டுப்பாட்டை நினைவூட்டி மேற்கொண்டு தொடர்ந்து வர மறுத்துவிட்டு அவ்விடத்திலேயே தாம் இருப்பதாக உபயபாரதி கூறினார். இந்நிகழ்ச்சியை வாய்மொழி வழியாகக் கர்நாடக நாட்டில் உள்ளவர்கள் அறிந்துள்ளார்கள் என்று வி. சூரியநாராயணராவு என்பவர் சிவகங்கா மடத்துச் சரித்திரம் என்னும் தம் ஆங்கில நூலில் கூறுகிறார்.

சங்கரர் பாரதநாடு முழுவதும் பயணம் செய்து பல மதங்களைக் கண்டித்து அத்துவிதக் கொள்கையை நிலைநாட்டினார். காசுமீர நாடு சென்று அங்குப் பரவியிருந்த பௌத்த–சாக்த–காசுமீர சைவக் கொள்கைகளை அத்துவிதக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டு கண்டித்தார். சங்கரருடைய காசுமீரச் செலவும் ஆன்மிக வெற்றியும் அவருக்கு மிக்க புகழை உண்டுபண்ணின. இன்றும் சங்கராச்சார்ய சிகரம் என்று சொல்லப் பெறும் ஒருமலையின் உச்சியில் சங்கரருக்குக் கோயில் அமைந்துள்ளது.

இதனிடையில் தம் தாய்க்கு முதுமையில் உடல் நிலை கெட்டுள்ளதென்று உள்ளுணர்வால் உணர்ந்து அன்னை இருக்குமிடம் சென்றார். அங்கு அன்னையின் ஆணையின்படி தெய்வ வழிபாடு தோத்திரங்கள் பல இயற்றி அன்னை கேட்கும்படியாகப் பாடினார். உடல்நலம் தேறாமல் அன்னை இறந்தவுடன், சங்கரர் தம் பெற்றோருக்கு ஒரேபுதல்வனாக இருந்தமையால் நீந்தார்கடன் மட்டில் செய்யவேண்டும் என்னும் துறவிகளுக்கு உரிய கடைமையைப் பின்பற்றி அதை மட்டில் செய்தார்.

எல்லா மக்களும் பின்பற்றுவதற்கு உகந்ததும் உருவ வழிபாட்டை அடிப்படையாகக் கொண்டதுமான சைவம், வைணவம், சாக்தம், காணாபத்யம், சௌரம், கௌமாரம் ஆகிய வழிபாட்டு முறைகளை நிறுவியதன் மூலம் சண்மதத்தாபகர் என்னும் சிறப்புப் பெயரைப் பெற்றார். மார்க்கண்டேய சம்கிதை என்னும் நூலிலும் அனந்தானந்தகிரி எழுதிய சங்கர விசயத்திலும் சீர் சங்கரர் ஆகாயவழியாகக் கைலாயத்திற்குச் சென்று அங்கிருந்து தேவியைக் குறித்துள்ள தோத்திரமான சௌந்தர்யலகரி என்னும் நூலை இயற்றி, அங்கிருந்து திரும்பும்போது அந்நூலுடன் ஐந்து இலிங்கங்களைப் பெற்று வந்தார் என்று கூறப்பட்டுள்ளது. இவற்றில் யோக இலிங்கத்தைக் காஞ்சியிலும் மற்றவற்றை நேபாளம் முதலிய இடங்களிலும் நிறுவினார்.

சங்கரருக்குச் சிறந்த மாணவர்கள் நால்வர். அவர்களுள் சீரேசுவரர், நைட்கர்மிய சித்தி என்னும் தனி நூலையும் பிருகதாரண்யகம், தைத்திரீயம் என்னும் இரு உபநிடதங்களுக்கும் சங்கரர் எழுதிய பேருரைகளுக்குப் பொருத்தமான செய்யுள் நடை உரைகளான வார்த்திகங்களையும் எழுதினார். பத்மபாதர் என்னும் மற்றொரு மாணவர் சங்கரரின் பிரம்மருத்ரபாடியத்தின் பகுதி ஒன்றிற்குப் பஞ்சவாதிகா என்னும் உரையை எழுதினார். மற்றொரு மாணவர் தோடகாசார்யர். இவர் தோடகம் என்னும் விருத்தத்தில் 'சங்கர குருவே எனக்குப் புகலிடமாக இரு' என்பதை ஈற்றடியாகக் கொண்ட எட்டுச் செய்யுட்களை இயற்றினார். தோடக விருத்தத்தில் தம் நூலை இயற்றியதால் அவர் தோடகாச்சார்யர் எனக் குறிப்பிடப்படுகிறார். இதைத் தவிர சுருதிகாரசமுத்தரணம் என்னும் நூலை இயற்றினார். உபநிடதங்களின் உட்கருத்தை விளக்கும் இந்நூல் செய்யுள் வடிவில் அமைந்தது. மற்றுமொரு மாணவர் அசுதாமலகாசார்யர். இவர் எழுதிய அத்வைதக் கருத்தை விளக்கும் பாக்களுக்குச் சங்கரரே எழுதிய உரை 'அசுதாமலகீய பாடியம்' என்று புகழ் பெற்று விளங்குகிறது.

சங்கரர் போதித்தது அத்துவிதம். பிரமம் என்பது இரண்டற்றது. அதுவே பரம்பொருள். அதற்கு வேறாகத் தோன்றும் உலகம் மாயையின் காரியமே. பலவாகக் காணப்படும் உயிர்களெல்லாம் உண்மையில் பிரமத்தினின்றும் வேறல்லர். இதையே வேதங்களின் முடிவுப் பகுதிகளாகிய உபநிடதங்கள் கூறுகின்றன. உயிர்களின் இயல்பான தன்மை பிரமமே. இந்த உண்மை, உள்ளுணர்வால் அறியப்படும்போது மாயை விலக உயிர் இயல்பான தன்மையில் இருப்பதே முத்தி. இதுவே அத்துவிதத்தின் சாரம்.

சங்கரர் தம் மாணவர்களுடன் பயணம் மேற்கொண்டு பாரத நாடு முழுவதும் சென்று ஆங்காங்குக் கோயில் வழிபாடு செய்து கொண்டு அங்குள்ள இறைவனைத் தோத்திரங்களால் புகழ்ந்து வழிபட்டார். திருவானைக்கா என்னும் பதியில் அகிலாண்டேசுவரியின் உக்கிரகலையைக் குறைத்து இரத்தினங்களாலான சக்கர தாடகங்களை இறைவியின் காதுகளில் அணிவித்தார். அந்தத் தாடகங்களைப் பழுது பார்த்தல், புதுப்பித்தல் முதலியவற்றைச் செய்து இறைவியின் காதுகளில் அணிவிப்பதைக் காஞ்சி காமகோடி பீடத் தலைவர்கள் உரிமையுடன் இன்றுவரை செய்து வருகின்றனர்.

பின்பு, திருவிடைமருதூரில் மக்களுக்கு அத்துவிதத்தில் உள்ள ஐயத்தைப் போக்க எண்ணி மகாலிங்க மூர்த்தியை 'அத்துவிதமே சத்தியம்' எனப் பலர் அறிய வலியுறுத்திக் கூறுமாறு வேண்டினார். சங்கரரின் வேண்டுதலுக்கிணங்கிச் சிவபெருமான் இலிங்கத்திலிருந்து வெளிவந்து வலக்கையைத் தூக்கி, 'சத்தியம் அத்துவிதம்', 'சத்தியம் அத்துவிதம்', 'சத்தியம் அத்துவிதம்' என மும்முறைகூறி உறுதி செய்தார்.

அத்துவித வேதாந்தத்தில் மனச்சார்பு ஏற்பட இறைவனருள் தேவை. அதை எண்ணி இறைவனையும் இறைவனின் திருஅவதாரங்களையும் பற்றித் தோத்திர நூல்களை இயற்றினார்.

தாம் சென்ற இடங்களிலெல்லாம் அத்துவித வேதாந்தம் வழிவழி மரபாக நீடித்துத் தழைக்க வேண்டிப் பாரத நாட்டின் பல்வேறு இடங்களில் சங்கரர் மடங்களை நிறுவினார். தம்முடைய வாழ்க்கையின் இறுதிக்காலத்தில் சங்கரர் காஞ்சியில் தங்கியிருந்தார். காமாட்சி தேவியின் ஆலயத்தில் தேவியின் திருவுருவிற்கு எதிரே தம் கையாலேயே அவர் 'ஸ்ரீ சக்கரத்தை' வரைந்தார். அங்குச் சாத்திர வல்லுநர்கள் கலைஞர்கள் முதலிய அனைவரையும் வாதத்தில் வென்று 'சர்வக்ஞர்' என்று எல்லோராலும் போற்றப்பட்டுச் சர்வக்ஞ பீடாரோகணம் செய்தார்.

காமாட்சி தேவியை இறைவியாகக் கொண்டு ஒரு மடத்தை நிறுவிச் சங்கரர் தாமே தலைமை ஆசிரியராக விளங்கினார். இன்றும் இதுவே காமகோடிபீடம் என்று புகழுடன் விளங்கி வருகிறது. தாமிரவருணியைச் சேர்ந்தவரும் இளவயதினரும் எல்லாம் அறிந்தவருமான 'சர்வக்ஞாத்மா' என்பவரைத் தமக்குப்பின் காமகோடிபீடத் தலைவராக அமர்த்தி அவரை யோகலிங்கமான சீர்சந்தரமௌலீசுவரரைப் பூசை செய்துவரச் சங்கரர் அமர்த்தினார். சீர்சுரேதவராச்சாரியாரிடம் காம கோடி பீடத்தை உடனிருந்து கவனித்து வரும்படியாகக் கட்டளையிட்டார். பின் சிலகாலம் இருந்து இப்பூவுலக வாழ்வை விட்டுப் பிரமத்துடன் ஒன்றுபடும் பேறு பெற்றார்.

சிவலிங்கங்கள் சந்திரமௌலீசுவரர் என்னும் பெயரால் குறிப்பிடப்படுகின்றன. விசயகண்ட கோபாலன் என்னும் சோழ அரசர், (கி.பி. 1100) காமகோடி பீடத்திற்கு அம்பில் என இப்போது வழங்கும் அம்பிகாபுரம் என்னும் சிற்றூரை நன்கொடையாக அளித்தார். இவ்விவரத்தைக் கொண்ட செப்பேட்டில் அம்பிகாபுரம் என்னும் சிற்றூர் சந்திரமௌலீசுவரரின் அருளினால் பாதுகாக்கப்படுவதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. சங்கரர் காஞ்சியிலேயே பிரமத்தோடு கலந்து பேறு பெற்றார் என்னும் உண்மையைச் சிவரகசியம், அனந்தானந்தகிரி இயற்றிய சங்கர விசயம், இராமபத்திரதீட்சிதர் இயற்றிய பதஞ்சலி சரிதம், இராசகூடாமணி தீட்சிதர் இயற்றிய சங்கராப்யுதம் ஆகிய நூல்கள் உறுதிப்படுத்திக் கூறுகின்றன. காஞ்சியில் காமாட்சி அம்மன் கோயிலுள் சங்கரரின் கோயிலும் சிலையும் உள்ளன. இதுவே அவர் சித்தியடைந்த இடமாகும். காஞ்சியில் உள்ள கோயில்களில் ஒரே தண்டத்தைக் கையில் கொண்ட துறவியின் சிற்பங்கள் உள்ளன. காஞ்சியின் சுற்றுப்புற இடங்களிலும் இவ்விதச் சிற்பங்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இந்த அளவில் மிகுதியான சிற்பங்கள் வேறு எந்த இடத்திலும் காணப்படவில்லை. இதுவே சங்கரர் காஞ்சியுடன் கொண்டிருந்த தொடர்பிற்கும் காஞ்சியிலேயே அவர் தம் எஞ்சிய காலத்தைக் கழித்தார் என்பதற்கும் சான்றாகும். வ.ஆ.தே.

**ஆதிசேடன்.** பாம்பினங்களின் அரசன் ஆவான். இவன் பிரமன் ஆணையால் பாதாள உலகின் தலைமை பூண்டான்; வெண்மை நிறமும் மிக்க அறிவும் பெற்றவன்; அனைத்துக் கலைகளும் அறிந்தவன். ஆதிசேடன் என்னும் பெயரில், ஆதி என்பதற்கு அடிப்படை முதன்மை, கூட்டத்தின் முதல்வர் என்றும், சேடன் என்பதற்குத் தொண்டன் என்றும் பொருள் கொண்டு, தொண்டர் குழாத்தின் முதல்வர் எனப்பொருள் கொள்ளுவது ஒரு மரபு. மற்றப் பாம்புகளின் விடத்தையும், மீறிய செயல்களையும் நினைத்து வருந்தி, நெடுங்காலம் தவம் இயற்றி, அதன் பயனாகத் திருமாலுக்குப் பாயாகவும், குடையாகவும் தொண்டு செய்யும் பேறு பெற்றவன். "சென்றால் குடையாம், இருந்தால் சிங்காசனமாம், நின்றால் மரவடியாம், நீள் கடலுள் என்றும் புணையாம், மணிவிளக்காம், பூம்பட்டாம், புல்கும்மணையாம்," என்று இவன் திருமாலுக்குச் செய்யும் ஏழுவிதத் தொண்டுகளையும் பற்றிப் பொய்கையாழ்வார் ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

இவர் இப்பூமியைத் தாங்கிக் காப்பதாகப் புராணம் கூறுகிறது. ஆதிசேடனே திரேதாயுகத்தில் இலக்குமணனாகவும், துவாபரயுகத்தில் பலராமனாகவும், கலியுகத்தில் இராமானுசராகவும் பிறந்தானெனப் பவுசிய புராணம் கூறுகிறது.

இவனைப் பற்றிப் புராணம் கூறும் செய்திகளுள் சில வருமாறு:- மந்திர மலையைப் பெயர்த்துத் தேவர்க்குதவினான். கருடன் கொணர்ந்த அமுத கலசம் மறைய, ஆண்டிருந்த தருப்பைப் புல்லினை நக்கி, நாக்குப் பிளவுபட்டான். இவனுக்கும் வாயு

வுக்கும் இடையே நிகழ்ந்த பலம் அறி போட்டியில், தேவர்களின் வஞ்சனையால் தோல்வியுற்றான். சிவ நடனங்களைக் காணச் சிதம்பரத்தில் பதஞ்சலியாகத் தவமியற்றி அவ்வாறே பதஞ்சலியாகிச் சிவபூசை செய்தான். சிவபெருமான் முடிமேலிருந்தமையால் இறுமாப்பு எய்த, அவரால் இழுத்தெறியப்பட்டுத் தலை பல பிளவுகளாக, தவஞ் செய்து அவற்றைத் தலைகளாகப் பெற்றான். சுவதி என்னும் பெண்ணை மணந்து, நாக கன்னிகையைப் பெற்று, அரித்துவசனுக்கு மனைவியாக அளித்தான்.

**ஆதி சைவர்:** சிவபெருமானை முதற்கடவுளாகக் கொண்ட சமயம் சைவம். ஆகவே அந்தச் சமயத்தவர் யாவரும் பொதுவாகச் சைவரே. ஆயினும் சைவாகமங்களில் சைவருக்குள் சில பிரிவுகள் சொல்லப்படுகின்றன.

சைவாகமங்களின்படி, ஐந்து திருமுகங்களுடன் சாதாக்கியத் தத்துவத்தில் வீற்றிருக்கும் சதாசிவ மூர்த்தியே, உலகத்தைப் படைத்தல் முதலிய ஐந்து தொழில்கட்கும் முதல்வர். அவரை வழிபட்ட கௌசிகர், காசிபர், பாரத்துவாசர், கௌதமர், அகத்தியர் ஆகிய ஐவரும் ஆதி சைவர். அவர்களது வழியில் தோன்றி வளர்ந்ததே ஆதி சைவ மரபு.

ஆதி சைவர், சிவவேதியர்; ஆதி சைவ அந்தணர், சிவப்பிராமணர் என்றும் சொல்லப்படுகின்றனர். சிவாலயங்களில் பூசை செய்தற்கு ஆதி சைவரே உரியவர் என்று சிவாகமங்கள் கூறும். அவர்கள் ஆகம விதிப்படி சிவதீக்கை பெற்றவர். சமயம் விசேடம், நிருவாணம், அபிடேகம் என்று கூறப்படும் நான்கு வகைப்பட்ட தீக்கைகளில் அபிடேக தீக்கை பெற்றவர்களே ஆசாரியர் ஆவர். ஆதி சைவரில் ஆசிரியர் சிவாசாரியர் எனப்படுவர்.

தமிழ்நாட்டுச் சிவாலயங்களில் ஆதிசைவர் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து பூசையில் ஈடுபட்டு வந்தனர் என்பது கல்வெட்டுகளிலிருந்தும் இலக்கியங்களிலிருந்தும் தெரிய வருகிறது. தேவாரம் பாடிய மூவரில், சுந்தரரைச் சேக்கிழார் ஆதி சைவ மரபில் அவதரித்தார் என்றே கூறியுள்ளது நோக்கற்பாலது.

- சி.அ.

**ஆதித்த கரிகாலன் (இரண்டாம் ஆதித்தன்):** சோழ இளவரசன் இரண்டாம் பராந்தகனான சுத்தரசோழனின் (கி.பி. 985-1016) மகன்; முதலாம் இராசராச சோழனின் உடன்பிறந்தவன்; இளவரசுபட்டம் கி.பி. 960-இல் சூட்டப் பெற்றவன். இவன் கி.பி. 966 முடிய ஆறு ஆண்டுகள் ஆட்சி புரிந்தான். இவனது ஆறாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, பாண்டிச்சேரி மாநிலம் பாகூரில் அண்மையில் கிடைத்துள்ளது. வீரபாண்டியனை வென்றவன் இவனே. இவன் பகைவர்களால் கொல்லப்பட்டான்.

**ஆதித்த சோழன் (கி.பி. 871-890)** விசயாலய சோழனின் மகன். இவன் கி.பி. 871-ஆம் ஆண்டு பட்டம் ஏற்றான். விசயாலயன், பரகேசரி என்றும் ஆதித்த சோழன், இராசகேசரி என்றும் பட்டம் புனைந்திருந்தனர். இவர்களைத் தொடர்ந்து வந்த சோழ அரச குலத்தினர் பரகேசரி, இராசகேசரி என்று பட்டப் பெயரினை ஏற்றனர். இவனது ஆட்சிக் காலத்தில் விசயாலயன் தான் முதுமையுற்றதால் ஆதித்தனுக்கு அறிவுரைகள் கூறியபடி இருந்தான். பாண்டியர்கள் தொடர்ந்து நாட்டை விரிவுபடுத்தும் முயற்சியில் சோழ நாட்டையும் கைப்பற்றி வந்தனர். இரண்டாம் வரகுணனின் படை கி.பி. 880 முற்பகுதியில் சோணாட்டில் புகுந்தது. காவிரியாற்றின் வடக்கில் உள்ள மண்ணி நாட்டிலிருந்த இடவை நகரைக் கைப்பற்றியது. அந்நாளில் சோழ இளவரசனாக விளங்கிய ஆதித்த சோழன் பாண்டியனிடம் போரிட்டு வெற்றிபெற முடியவில்லை. பாண்டியர் விரிவுபெற்று வருவதை அறிந்த அபராசிதவர்ம பல்லவன் ஆதித்தசோழனுக்கு உதவிபுரியப் படையொன்றை அனுப்பினான். அபராசிதனுக்கு உதவி புரிய முதலாம் பிருதிவிபதி படைப்பிரிவினை அனுப்பி வைத்தான். ஆகவே, சோழர், பல்லவர், கங்கர் ஆகியோர் இணைந்து போரிட்டனர். சோழர்படை காவிரிக்கரைப் பகுதியில் கும்பகோணத்திற்கு அருகில் உள்ள திருப்புறம்பியம் என்ற இடத்தில் கி.பி.885-இல் பாண்டியர் படையுடன் மோதியது. ஆதித்த சோழன் வெற்றி பெற்றான். கங்க அரசன் முதலாம் பிருதிவிபதி உயிரிழந்தான். இப்போரின் பயனாக சோழ நாடு முழுவதையும் ஆட்சிபுரியும் உரிமையை ஆதித்த சோழன் பெற்றான். தஞ்சைக்கருகில் உள்ள சில பகுதிகளைப் போரிட்டு வென்றான். ஆதித்தன் பெரும் படையைத் திரட்டி பல்லவ அரசன் அபராசிதன் மீது போர் தொடுத்தான்; பல்லவ வேந்தன் யானை மீது இருந்தபடியே போர்புரிந்தபோது அவனைக் கொன்று பல்லவ நாட்டைப் பெற்றான். பின்னர் ஆதித்த சோழன் கொங்கு நாட்டின் மீது படையெடுத்தான். சேர அரசன் தாணுரவி (Sthanu Ravi) என்பான் தன் படைத்தலைவனான விக்கியண்ணனை அனுப்பித் துணை புரியவைத்தான். ஆதித்தன் இப்படையெடுப்பில் வெற்றி பெற்றான். கொங்கு நாட்டுப் பகுதிகளைச் சோழ அரசுடன் இணைத்தான். காளத்தி முதல் புதுக்கோட்டை வரையில் சோழநாடு இவனது ஆட்சியில் விரிவடைந்தது. ஆதித்தன் கி.பி. 707 வரை ஆட்சி செய்தான்.

ஆதித்தன் சிவ நெறிச் செல்வனாக விளங்கினான். காவிரிக்கரையில் பல சிவன் கோயில்களைக் கட்டியுள்ளான். தில்லைக் கோயிலுக்குப் பொற்கூரை வேய்ந்தான். இவனது இறுதிக்காலத்தில் தொண்டை நாட்டில் உள்ள காளத்தியில் இறந்

தான். இவனை நல்லடக்கம் செய்துள்ள இடத்தில் இவன் மகன் முதலாம் பராந்தகன் இலிங்கம் அமைத்துக் கோயில் எழுப்பியுள்ளான். இது பள்ளிப் படை எனப்படும். இது போன்றதொரு வழக்கம் இந்து சமயத்தவரிடம் இருந்ததில்லை. இது பௌத்தர் களின் தாக்கம் என அறியப்படுகிறது. இவனுக்குப் பின்னர் முதலாம் பராந்தகன் ஆட்சிக்கு வந்தான்.

தீ.வீ.

**ஆதித்தன் கலைப்பாணி:** சோழப் பேரரசனான முதலாம் ஆதித்தன் (கி.பி. 871-905) காலத்திய கட்டிடக்கலையாகும். ஆதித்த சோழன் ஆட்சிக்கு முன்பு கோயில்கள் செங்கற்களாலும் மரத்தினாலும் கட்டப்பட்டன. இவர் ஆட்சிக்காலத் தில் அவை கல்லினால் கட்டப்பட்டுக் கற்றளிகளாக மாற்றப்பட்டன. இக்காலத்தில் கட்டப்பட்ட கோயில்கள் யாவும் கருங்கல்லினால் அமைக்கப்பட்ட கற்றளிகளாகும். இக்காலக் கோயில்கள், ஒன்று முதல் நான்கு தளங்களைக் கொண்ட விமானங்களை உடையதாகவும், கிரீவம், சிகரம், தூபி என்பனவற் றைக் கொண்டும் விளங்கின. சிகரங்கள், சதுரம், வட்டம், எண்கோண அமைப்புகளைக் கொண் டவை. சப்தமாதர் தளிகள், தூங்கானை மாடக் கோயில்கள் ஆகியவற்றின் கூரைகள் வண்டிக் கூட் டினைப் போன்று நீண்டு வளைந்தவை.

இவரது காலக் கோயில்களில் கருவறை சதுர மாக இருக்கும்; அதன் நேர்முன்பாக இடைகழியும் அமைக்கப்பெற்று இருக்கும். கருவறைச் சுவரின் வெளிப்பக்கத்தில் சிலைகளை வைப்பதற்குரிய மாடக் குழிகள் மூன்று அல்லது ஐந்து என்ற எண்ணிக்கை யில் அமைக்கப் பெற்றுள்ளன. மாடக்குழிகளில் தட்சிணாமூர்த்தி, திருமால், பிரமன், கணபதி, துர்க்கை போன்ற தெய்வ உருவங்கள் உள்ளன. இம் மாடக் குழிகளின்மேல் மகர தோரணம் உள்ளது. இவர் காலத்தில் எழுந்த சில கோயில்களில் உள்ள மாடக்குழிகளில் பிட்சாடனர், திரிபுராந்தகத் தேவர், அர்த்தநாரி, இலிங்கோத்பவர், சுப்பிரமணியர் ஆகி யோரும் காணப்படுகின்றனர். நார்த்தா மலையி லுள்ள விசயாலய சோழீச்சுரம் கோயிலில் சுவர் மாடங்கள் இல்லை. மனிதத் தலை அல்லது அன்னப் பறவை வடிவுடன் அமைக்கப்பட்ட கூடுகள், கொடிக் கருக்கு நுனியில் வட்டங்கள் ஆகிய இவற்றால் அழகுசெய்யப்பட்ட கொடுங்கைகளுக்குக் கீழே பூத கண வரிசையும் மேலே யாளிவரிசையும் உண்டு.

இவரது காலக் கோயில்களில் கருவறையைச் சுற்றிலும் எட்டுப் பரிவார தேவதைகளின் கோயில் கள், மதிலை ஒட்டிக் கட்டப்பட்டன. ஆதித்த சோழனின் கோயில்கள் பல நுட்ப வேலைப்பாடு களையும், கலை நுணுக்கங்களையும் கொண்டு மிளிர்கின்றன. இவரது காலத்தில் அம்மன் கோயில் கள் தனித்து அமைக்கப்படவில்லை. அம்மனுடைய செப்புத் திருமேனிகளை வார்த்து நிலைநாட்டினர். பலிபீடம், கொடிமரம், நந்திமண்டபம், தலமரம், திருக்குளம் ஆகிய உறுப்புகளைக் கொண்டு ஆதித் தன் காலத்திய கோயில்கள் விளங்கின.

**ஆதித்தனார், சி. பா.** தமிழகத்தை உருவாக் கிய தலைவர்களுள் குறிப்பிடத்தக்க ஒருவராவார்.

இந்தியத் துணைக் கண்டத்தில் தமக்கென ஒரு தனியிடம் பெற்றுள்ள 'தினத்தந்தி' என்னும் நாளேட்டைப் புரட்சியோடு நடத்திப் பத்திரிகை உலகில் பெரும் சாதனை புரிந்தவர், பால சுப்பிர மணிய ஆதித்தனார்.

ஆதித்தனார் தமிழின்மேல் அளவற்ற பற்றும், தமிழரின் முன்னேற்றத்தில் பேரார்வமும் கொண்ட வர். 'உயிர் தமிழுக்கு-உடல் மண்ணுக்கு' என முழக்க மிட்டு அவ்வண்ணமே வாழ்ந்து காட்டியவர். எண் ணியதை எண்ணியாங்கு முடிக்கும் திண்ணிய செய லுரம் கொண்டவர். கடுமையாக உழைத்த போதி லும் சிக்கனமான எளிய வாழ்வை மேற்கொண்டவர். பகுத்தறிவுச் சிந்தனையாளர்.



சி. பா. ஆதித்தனார்

ஏழை எளியவர்களும் சிறிதளவு கல்வி பெற்ற வர்களும் படித்துப் பயன்பெற வேண்டும் என்னும் குறிக்கோளுடன் இவர் 'தினத்தந்தி' என்னும் நாளி தழைத் தொடங்கினார். பல நூறாயிரக்கணக்கான

படிகள் விற்பனையாகுமளவுக்கு இதன் செல்வாக்கு உயர்ந்தது. தமிழில் பல நாளிதழ்களை, அதுவும் மாவட்டத்துக்கு ஒரு நாளிதழை வெற்றியுடன் நடத்த முடியும் என்பதைச் செயலில் காட்டி, அரிய சாதனை புரிந்தார். தமிழன், தினத்தந்தி, மாலை முரசு, இராணி, இராணிமுத்து ஆகிய இதழ்களைச் சிறப்பாக-மற்றவர்க்கு முன்னோடியாக - நடத்தித் தமிழகச் செய்தி இதழின் தந்தை' என்னும் பாராட்டைப் பெற்றார்.

'தினத்தந்தி' ஏடு, சென்னை, கடலூர், மதுரை, திருச்சி, கோவை, சேலம், நெல்லை, வேலூர், பெங்களூர் ஆகிய இடங்களில் அச்சாகி வெளி வருகிற வரலாற்றினை அடைந்துவிட்டது.

இரண்டாம் உலகப் போர் நெருக்கடியின் காரணமாக மற்றச் செய்தி இதழ்களெல்லாம் அச்சடிக்கத் தாள் கிடைக்காமல் அல்லற்பட்ட நேரத்தில் வைக்கோலிலிருந்தும், உடைமரக் கூழிலிருந்தும் கையினாலேயே காகிதம் தயாரித்து, அச்சிட்டு நாளிதழை நடத்திவந்த பெருமை மிக்கவர் இவர்.

உலகமெங்கும் பரவிக் கிடக்கும் தமிழினத்தை ஒற்றுமைப் படுத்தும் நோக்கத்தோடு 'நாம்-தமிழர்' என்ற இயக்கத்தைத் தொடங்கி நடத்தினார்.

இத்தகைய குண நலங்களை உடைய ஆதித்தர் கி. பி. 1905-ஆம்ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 27-ஆம் நாள் தென்பாண்டி நாட்டில் திருச்செந்தூரை அடுத்துள்ள 'காயாமொழி' என்னும் சிற்றூரில் பிறந்தார். பெற்றோர் சிவந்தி ஆதித்தன்-கனகம் அம்மை ஆவர். பால சுப்பிரமணிய ஆதித்தன் என்பது இவரது இயற்பெயர்.

இளமைக்கல்வியினைச் சீவைகுண்டத்திலும் உயர் கல்வியினைத் திருச்சி புனித சூசையப்பர் கல்லூரியிலும் பெற்றார். இவரே நாடார் வகுப்பில் முதன் முதலில் எம். ஏ. பட்டம் பெற்றவர். பின்னர் இங்கிலாந்து சென்று சட்டக்கல்விபயின்று 'பாரிசுடர' ஆனார்.தாயகம் திரும்பி 1942-இல் 'தினத்தந்தி' யைத் தொடங்கும்வரை வழக்கறிஞர் தொழிலை நடத்தி வந்தார்.

கோவிந்தம்மாளை 1933-இல் வாழ்க்கைத் துணையாகக் கொண்டார். இவர் 1952-53-இல் தமிழ் நாடு சட்டமன்றப் பேரவை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அதன்பின் 1964-67 வரை திருநெல்வேலி உள்ளாட்சி மன்றத் தொகுதியின், சட்டமன்ற மேலவை உறுப்பினராக இருந்து நற்பணி பல புரிந்தார். 1957-62 வரை சாத்தான்குளத் தொகுதியிலிருந்தும் 1967-76 வரை சீவைகுண்டம் தொகுதியிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்ற மேலவை உறுப்பினர் என்னும் பெருமை பெற்றார். தமிழ்நாடு சட்டமன்றப் பேரவைத் தலைவராக 1967-69 வரை விளங்கி எதிர்க்கட்சியாளரும் பாராட்டும் ஏற்றம் பெற்றார். தமிழக அமைச்சரவையில் 1971 முதல் 76 வரை கூட்டுறவு அமைச்சர் பொறுப்பேற்ற இவர் பணி, மக்களால் வரவேற்கப்பட்டது. இவர் 1981-ஆம் ஆண்டு மே திங்கள் 5-ஆம் நாள் சென்னையில் அமரரானார். எழுதிய நூல்கள்: 'தமிழ்ப் பேரரசு' 'பத்திரிகை, எழுத்தாளர் கையேடு'. திருச்செந்தூரில் உள்ள ஆதித்தனார் கல்லூரி இவர் அறக் கொடைகளுள் ஒன்றாகும்.

ஆறு.அ.

**ஆதி திராவிடர் நலம்:** இந்தியாவில் ஆதி திராவிட மக்கள் தீண்டாமைக் கொடுமையின் காரணமாகப் பல இன்னல்களை அனுபவித்து வந்தனர். அவர்களுக்குக் கல்வி, சமூக, பொருளாதார நிலைகளில் சமத்துவம் வழங்குவதற்கும் மேலும் இதர முன்னேற்றங்களுக்கும் இந்திய அரசு, பல்வேறு திட்டங்களை ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் நலத்துறையின்மூலம் செயற்படுத்தி வருகிறது.

தமிழ்நாட்டு மக்கள் தொகையில் 19.41 சதவிகிதத்தினர் ஆதிதிராவிடரும் பழங்குடியினருமாவர். இவர்களது முன்னேற்றத்திற்காக 1983-84-ஆம் நிதி ஆண்டில் உரூ. 44.61 கோடி தமிழ்நாடு அரசால் ஒதுக்கப்பட்டுள்ளது.

**கல்வி:** சமுதாயத்தில் மேம்பாடு அடையக் கல்வியே அடிப்படையானது என்ற நிலையை உணர்ந்து தமிழக அரசு, ஆதிதிராவிடர் நலப்பணிகளுக்கு ஒதுக்கும் மொத்தத் தொகையில் பெரும் பகுதியைக் கல்விக்காகச் செலவு செய்து வருகிறது. இதற்கு 1983-84 ஆம் நிதி ஆண்டில் உரூ. 23.78 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. ஆதிதிராவிடர், பழங்குடியினர் வகுப்பைச் சேர்ந்த மாணவர்களுக்குக் கல்வியில் ஊக்கமளிக்கும் வகையில், வருமானத்தை அடிப்படையாகக் கொண்டு படிப்பு உதவித் தொகையும், விடுதிகளில் தங்கிப் பயிலும் மாணவர்களுக்கு விடுதிக் கட்டணமும் அளிக்கப்படுகின்றன. பள்ளிகளில் படிக்கும் மாணவ மாணவியர்களுக்கு இலவச நோட்டுப் புத்தகங்கள், பலகைகள் ஆகியவற்றோடு ஆண்டொன்றுக்கு இரண்டு சீருடைகளும் வழங்கப்படுகின்றன.

கல்வியில் முதன்மையாக விளங்கும் ஆதிதிராவிட மாணவர்களை ஊக்குவிக்கும் பொருட்டுக் காந்தி நினைவு உதவித் தொகை, தகுதி வழிவகைப் பரிசுத்திட்டம், செயலூக்கத்திட்டம், தகுதிக்கென்று வழங்கப்படும் தனிக்கொடை முதலிய உதவித் தொகைகள் வழங்கப்படுகின்றன. பட்டப்படிப்பு, பொறியியல், வேளாண்மை, மருத்துவம் போன்ற

தொழிற் கல்வி கற்கும் மாணவர்களுக்குப் படிப்புத வித் தொகை கடனாக வழங்கப்படுகிறது.

ஆதிதிராவிடர் நலப்பள்ளிகளில் பயிலும் மாண வர்களுக்கு முதலமைச்சர் சத்துணவுத் திட்டத்தின் வாயிலாக உணவு அளிக்கப்படுகிறது. இதற்கான நிதி ஒதுக்கீடு உரு. 86.82 இலட்சம் ஆகும். இதனால், ஆதி திராவிட மாணவ, மாணவியர்கள் பயனடைந்துள்ள னர்.

பணிபுரியும் மகளிரின் குழந்தைகளைப் பார்த் துக்கொள்ள 200 குழந்தைகள் காப்பகங்கள் செயற் பட்டு வருகின்றன. இதில் வயது 3 முதல் 5 வரை, யுள்ள குழந்தைகள் அனுமதிக்கப்படுகின்றனர்.

இந்திய அரசு கொடுத்துள்ள வழிகாட்டிக்குறிப்பு களை அடிப்படையாகக் கொண்டு ஆதிதிராவிடர் களுக்காகச் சிறப்புக்கூட்டுத்திட்டம் ஒன்றை அரசு தயாரித்துள்ளது. அரசின் பல்வேறு துறைகளின் வாயிலாக இது செயற்படுத்தப்பட்டு வருகிறது. நடப்பு நிதி ஆண்டில் இத்திட்டத்திற்காக மத்திய அரசு தன் பங்காக உரு. 5.30 கோடியும் மாநில அரசு உரு. 126.77 கோடியும் ஒதுக்கீடு செய்துள்ளன.

ஆதிதிராவிடர்களின் வாழ்க்கை நிலையை மேம் படுத்தும் பொருட்டு உழவு மாடுகள், விதைகள் பிற வேளாண்மைக் கருவிகள் முதலியன வாங்குவதற்கு நிதிஉதவி வழங்கப்படுகிறது. கருமார், தச்சர், தையல் தொழில்கள் முதலிய 18 தொழில்களில் தொழில்பயிற்சி பெற்ற ஆதிதிராவிடர்களுக்குத் தொழிற்கருவிகள் இலவசமாக வழங்கப்படுகின்றன. இதற்கான நிதி ஒதுக்கீடு உரு. 9.40 இலட்சமாகும்.

மிதிவண்டிக் கடைகள், உணவகங்கள், மளிகைக் கடைகள் போன்ற தொழில்களை நடத்துவதற்குச் சிறு வணிகக் கடன் அளிக்கப்படுகிறது. வேலை வாய்ப்பளித்தலை நோக்கமாகக் கொண்டு, பால் வழங்கும் கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டுள் ளன. இச்சங்கங்களில் உள்ள ஆதிதிராவிட உறுப் பினர் ஒவ்வொருவருக்கும் உரு. 1500/-நிதியுதவி அளிக்கப்படுகிறது.

ஆதிதிராவிட மாணவ மாணவிகள் ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். போன்ற அனைத்திந்தியப் பணிகளுக் கான போட்டித் தேர்வுகள் எழுதச் சென்னையி லுள்ள முன்னோடிப் பயிற்சி நிலையம் பயிற்சி அளிக் கிறது.

அரசு புறம்போக்கு நிலங்கள் மாவட்ட ஆட்சி யாளர்களால் ஆதிதிராவிடர்களுக்கு வீட்டுமனைக ளாக வழங்கப்படுகின்றன. அரசு நிலங்கள் இல்லாத போது மாவட்ட ஆட்சியாளர் தனியார் நிலங்க ளைக் கையகப்படுத்தி வழங்குகின்றனர். ஒவ்வொரு மனையின் அளவும் 3 செண்டு ஆகும்.

தமிழ்நாடு ஆதிதிராவிடர் வீட்டு வசதிக் கழகம் 1973-74-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டு வீடு களைக் கட்டித்தரும் பணியை மேற்கொண்டுள்ளது.

ஆதிதிராவிடர் குடியிருப்புகளுக்குக் குடிநீர் வச தியும் மின்வசதியும் செய்து தரப்படுகின்றன. இம் மக்களின் திருமணங்கள் நடத்துவதற்கெனச் சமுதாய நலக்கூடங்கள் கட்டப்பட்டுள்ளன. இவர்களின் குழந்தைகளுக்கு நல்ல சுகாதாரப் பழக்க வழக்கங் களை ஏற்படுத்தச் சமுதாய நிலையங்கள் ஏற்படுத் தப்பட்டுள்ளன. ஆதிதிராவிடர்களுக்குச் சலவைத் துறை கட்டித்தரப்படுகிறது.

'குடியுரிமைகள் பாதுகாப்புச் சட்டம்' 1976-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 19-ஆம் தேதி முதற் கொண்டு செயலுக்கு வந்துள்ளது. இதனைச் செயற் படுத்த 20 சுற்றுக்காவல்படைகளும் 4 தனிநீதிமன் றங்களும் செயற்பட்டு வருகின்றன.

சாதிசமய வேறுபாடற்ற சமுதாயம் ஒன்றை உருவாக்கக் கலப்புத் திருமணம் செய்து கொண்ட வர்களுக்கு 14 காரட்டிலான 8 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கமும் பாராட்டுச் சான்றிதழும் வழங்கப் படுகின்றன. மணமக்களின் ஆண்டு வருவாய் உரு 6000/ அல்லது அதற்குக் குறைவாக இருந்தால் திரு மணச் செலவுக்கு உரு. 300/ உடனடிப்பணமாகவும் உரு.4000/ தேசிய சேமிப்பு ஆறாண்டுக் கால பத்திர மாகவும் வழங்கப்படுகின்றன.

மாநில அரசுப் பணிகளில் 18 சதவிகித இடங் கள், ஆதிதிராவிடர்களுக்கும் பழங்குடியினருக்கும் ஒதுக்கப்பட்டுள்ளன. இதனை ஆய்வு செய்ய முதல மைச்சர் தலைமையில் உயர்நிலைக்குழு ஒன்று செயற்பட்டு வருகிறது.

கொத்தடிமையிலிருந்து விடுதலை பெற்ற தொழி லாளர்கள் மீண்டும் அடிமைத்தளையில் வீழ்ந்து விடாமல் நல்வாழ்வு வாழ வகை செய்வதில் அரசு ஆர்வம் காட்டி வருகிறது.

ஆகவே இம்மாநிலத்தில் நல்வாழ்வு வாழ்ந்து வரும் ஏனைய பிரிவு மக்களைப்போல் ஆதி திரா விடர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த அரசு பல திட்டங்களை வகுத்துச் செயலாற்றி வருகிறது.

மு.த.

**ஆதிநகர்ப் போர்** சோழப் பெருமன்னன் முதலாம் இராசேந்திரன் வெற்றி பெற்ற போர். தமிழகத்தின் பெரும் பகுதி, இலங்கை, தென்னகத் தின் சில பகுதிகள் ஆகியவற்றைத் தனது ஆதிக்கத் தில் கொண்டு வந்த இச்சோழ வேந்தன் வட இந்

தியாவின் மீதும் போர்தொடுத்தான். கங்கை வரை படையெடுத்துச் சென்று பல வேந்தரை வென்று, கங்கைநீரைக் கங்கை கொண்ட சோழ புரத்திற்குக் கொண்டு வந்தான். இராசேந்திரனின் படைத்தலைவன் வெற்றிகொண்ட போர்க்களங் களுள் ஆதிநகரும் ஒன்று. ஆதிநகர் வெற்றியின் விளைவாக ஒட்டர தேசமும் கோசலமும் சோழரால் கைப்பற்றப்பட்டன.

ஒட்டரநாட்டையும் தென் கோசல நாட்டையும் இந்திரரதன் ஆண்டுவந்தான். தாரா நகர்ப்பகுதியை ஆண்டுவந்த வேந்தனின் பகைவர்களுள் ஒருவனாகக் குறிக்கப்பெற்றுள்ள இந்திரரதன் இவனாகவே இருத் தல் வேண்டும். சோழப்படைகளால் தோற்கடிக்கப் பட்ட வேந்தருள் ஒட்டரநாட்டு (இக்கால ஒரிசா மாநிலம்) இந்திரரதன் ஒருவனாவான். ஆதிநகர் வெற்றி, சோழப் படை கங்கை செல்லும் வழியில் மேற்கொண்ட வெற்றிகளுள் ஒன்றாகும்.

**ஆதிபகவன்** என்னும் தொடர்ப்பெயர் இறைவனைக் குறிக்கும் பெயராகத் திருக்குறளின் முதற்குறளில் திருவள்ளுவரால் ஆளப்பட்டுள்ளது. திருக்குறளின் முதல் அதிகாரம் கடவுள் வாழ்த்தாக அமைந்துள்ளமையால் ஏனைய ஒன்பது குறள்களி லும் இறைவனைக் குறிக்கும் வேறு தொடர்கள் அமைந்துள்ளன. திருவள்ளுவர் கூறும் அறங்களின் சிறப்பினை உணர்ந்த ஆசிரியர்கள் பலரும் தத்தம் நூல்களில் குறட்கருத்துகளையும் தொடர்களையும் பயன்படுத்தியதோடு, முழுக் குறளையும்கூட எடுத் தாள்வாராயினர். திருக்குறளைப் பயிலும் பிற மொழியினரும் அதன் கருத்தழகில் ஈடுபட்டுப் போற்றுவாராயினர். சமயவேறுபாடுகளும் மாறு பாடுகளும் மலிந்த நிலையில் திருக்குறளைப் பயில் வோர் அவற்றால் அதனைப் புறக்கணிக்காது, ஏற்றுப் போற்றும் வகையில் தம் நூலைச் செய்திருப் பது திருவள்ளுவரின் தனிச்சிறப்பாகும்.

திருவள்ளுவர் தம் காலத்தில் வழங்கிய எந்த ஒரு சமயத்தையும் வெளிப்படச் சாராமல் பொதுமை யில் நின்று கூறியுள்ளார். தம் நூலில் தெய்வத்தைப் பற்றிக் கூற வேண்டிய கடவுள் வாழ்த்துப் பகுதி யிலும், அதனைக் குறிப்பிட நேர்ந்த பிற பகுதிகளி லும் மிகவும் விழிப்பாக இருந்து, தாம் கூறும் அக் கருத்தினைப் பயில்வோர் 'தம் தெய்வம் எம் தெய் வம்' என்று ஏற்றுப் போற்றுமாறு கூறியிருப்பது அறிந்து மகிழத்தக்கதாகும். தெய்வத்தை மறுக்கும் கொள்கையுடையாரும் அவ்வாறு கூறப்பட்டுள்ள தொடர்களுக்குத் தம்கொள்கைக்கேற்ப விளக்கம் காணுமாறு அவை அமைந்துள்ளன. சமயச் சிந்தனை மலிந்த சூழலில் திருக்குறளைப் பயின்றவர்கள் திரு வள்ளுவரின் கடவுட் கொள்கையைத் தத்தம் சமயக் கோட்பாடுகளுக்கு ஏற்ப விளக்கி, அவர், தம் சமயத் தவர் என்றும், அவர் கூறும் கடவுள் தம் சமயக் கடவுளே என்றும் நிறுவியுள்ளனர். தாம் ஒரு சமயத் தின் வழி வந்திருந்தும் அதனை வெளிப்படப் புலப் படுத்தாது இறைப்பொதுமை போற்றிய வள்ளுவரை யும், அவர் வகுத்துக் காட்டும் கடவுளையும் ஒரு சமயத்திற்குள் சிறைப்படுத்திக் காண்பது அறமா காது. தெய்வக் கொள்கையிலும் அறங்கூறுந்திறத்தி லும் வள்ளுவர் மேற்கொண்ட பொதுமைச் சிறப் பினை உணர்ந்து கல்லாடர், 'சமயக் கணக்கர் மதி வழி கூறாது உலகியல் கூறிப் பொருள் இதுவென்ற வள்ளுவன்' என்று மதிப்பிட்டிருப்பது குறிப்பிடத் தக்கது. ஆதிபகவன் என்னும் தொடரைத் தத்தம் சமயக் கருத்திற்கு ஏற்ப அறிஞர் விளக்கஞ் செய்து காட்டியிருப்பனவற்றை ஒருங்கே காண்பது உண்மை காண்பார்க்குப் பேருதவியாக அமையும்.

ஆதிபகவன் என்னும் தொடர் ஆதி, பகவன் என்னும் இரு சொற்களால் ஆகியது. ஆதி என்பது முதன்மையானது எனப் பொருள்படும். பகவன் என் பது சமண புத்த சைவ வைணவ சமய தெய்வங் களைக் குறிக்கும் பொதுப்பெயராகும். அதனால் ஆதி, பகவன் என்னும் சொற்கள் தனித்தனியாகவும், சேர்ந்தும் 'முதன்மையான இறைவன்' என்னும் பொதுவான தெய்வத்தையே சுட்டி நிற்கும். திவா கர நிகண்டு ஆதிபகவன் என்பதனை அருகதேவன் பெயராகவும், புத்தர் பெருமான் பெயராகவும் குறிப்பிட்டுள்ளது. அதனால், இத்தொடர் இவ்விரு வருள் ஒருவரையே சுட்டும் என்று சிலர் கூறுவர்.

ஆதி, ஆதிநாதன், ஆதிநாதர், ஆதிபகவான் ஆகிய பெயர்கள் சமண நூல்களில் அச்சமய ஆதி தீர்த்தங்கரராகிய இடபதேவரைக் குறிப்பனவாக அமைந்துள்ளன. 'போது சாந்தம் பொற்ப ஏந்தி ஆதிநாதற் சேர்வோர் சோதிவானம் துன்னுவாரே' என்றவிடத்து இப்பெயர் அருகபரமேட்டியைக் குறிக்கிறது. ஆதி, பகவன் என்னும் சொற்களும் தொடரும் அருகதேவனை உணர்த்துவனவாகத் திருக்கலம்பகம் முதலிய அச்சமய நூல்களில் மிகப் பலவிடங்களில் ஆளப்பட்டுள்ளன. இவ்வாறு அமைந் துள்ள ஆட்சியைக் கொண்டு, திருக்குறளில் வரும் **ஆதிபகவன்** என்பதற்கு அருகதேவன் என்று சிலர் பொருள் கூறுவர். நீலகேசி உரையாசிரியராகிய சமய திவாகர முனிவர் தம் உரையில் திருக்குறளைச் சுட்டி **'எம் ஒத்து'** என்று குறிப்பிடுவது கொண்டும் திருக்குறள் சமண சமயத்தைச் சார்ந்தது என்று கூறுவர். வள்ளுவர் வலியுறுத்தும் கொல்லாமை, புலாலுண்ணாமை போன்றவற்றையும், மலர்மிசை ஏகினான் போன்ற தொடர்களையும் சான்றாகக் காட்டி, வள்ளுவர் சமயம் சமணம் என்றும், அவர் கூறிய ஆதிபகவன் அருகதேவனே என்றும் வலியுறுத் துவர்.

பகவன் என்னும் சொல்லிற்குப் பொருள்கூற வந்த சூடாமணி நிகண்டு, 'பகவனே ஈசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்' என்று அச் சொல் பல சமயக் கடவுளர்களைக் குறிக்கும் பொதுச்சொல்லாக உள்ளதனைக் குறிப்பிட்டுள்ளது. ஆதி, பகவன் என்னும் சொற்கள் புத்தர் பெருமானுக்கும் வழங்கி வருவது கொண்டும், சேந்தன் திவாகரம் புத்தர் பெருமான் பெயராக ஆதிபகவன், பகவன் முதலியவற்றைக் கூறியிருப்பது கொண்டும், ஆதிபகவன் என்னும் இத்தொடர் புத்தர் பெருமானைக் குறிப்பதாகச் சிலர் கூறுவர். அவர்கள் மலர்மிசை ஏகினான், அறவாழி அந்தணன் போன்ற வள்ளுவத் தொடர்களைத் தம் கருத்திற்கேற்ப விளக்கிச் சான்றாகக் காட்டுவர்.

உலகிற்கு முழு முதலாகிய சிவபெருமானே நிமித்த காரணமாவான் என்றும், அவன் 'தானும் தன்னை விட்டு நீங்காச் சத்தியும்' என இரு நிலையுடையவன் என்றும், சத்தி சங்கற்பத்தாலேயே அனைத்தையும் படைத்தருளுவன் என்றும் சைவ சமயத்தவர் கூறுவர். ஆதிபகவன் என்னும் தொடரில் ஆதி என்பது சிவனை நீங்காச் சத்தியையும், பகவன் என்பது சிவனையும் குறிக்க, ஆதிபகவன் என்னும் தொடர் சத்தி சிவமாக விளங்கும் பரம் பொருளாகிய சிவபெருமானைக் குறிக்கும் என்று குறிப்பிடுவர். மேலும் அவர்கள், துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல் ஆகிய பகுதிகள் முறையே பசு, பதி, பாசம் என்னும் சித்தாந்த சைவங்கூறும் முப்பொருளுண்மையைச் சுட்டி நிற்கின்றன என்று விளக்குவர். தானே இயங்கியும், ஏனைய உயிர், மெய், உயிர்மெய் ஆகியவற்றோடு இயைந்து அவற்றை இயக்கியும் நிற்கும் அகரத்தைப் போல, ஆதிபகவனாகிய சிவபெருமான், உயிர்களொடும், மெய் என்னும் உலகந்தோறும், உயிர்மெய்யினை ஒத்த உடலொடும் இயைந்து அவற்றை இயக்கியருள்வான் என்று முதற் குறளுக்கு விளக்கம் தருவர். இன்னா நாற்பதின் ஆசிரியராகிய கபிலர், சிவபெருமானை 'முக்கட்பகவன்' என்று குறிப்பிட்டுள்ளார்.

ஆழ்வார்களும் தங்கள் இறைவனை ஆதி என்றும் பகவன் என்றும் குறிப்பிட்டுள்ளனர். நம்மாழ்வார் தம் திருவாய்மொழியில் 'அந்தமில் ஆதியம் பகவன்' என்று திருமாலைச் சுட்டியுள்ளார். சூடாமணி நிகண்டு, பகவன் என்னும் பெயர் மாயோனுக்கும் உண்டென்று குறிப்பிட்டுள்ளது. திருக்குறளில் வரும் 'அடிஅளந்தான்', 'தாமரைக் கண்ணான்' என்னும் தொடர்கள் திருமாலினைச் சுட்டுவதாக விளக்கம் செய்துள்ளனர். இவைபோன்றவற்றை உளத்திற்கொண்டு திருவள்ளுவர் மால்நெறியினரே என்றும், அதனால் 'ஆதிபகவன்' என்னுந்தொடரால் குறிப்பிடும் இறைவன் திருமாலே என்றும் சிலர் கூறுவர்.

தெய்வம் இல்லை என்ற கொள்கை உடையவர்களும் திருக்குறளை ஏற்றுப் போற்றுகின்றனர். இடைச்செருகல் எனச் சிலவற்றை ஒதுக்காமல் நூல் முழுவதையும் ஏற்றுக் கொண்ட நிலையில் ஆதிபகவன் போன்ற தெய்வஞ்சுட்டிய தொடர்ப் பெயர்களுக்கு வேறு விளக்கம் காணும் இன்றியமையாமை அவர்களுக்கு ஏற்பட்டது. ஆதிபகவன் என்னும் தொடரினை ஆதிபகவு + அன் எனக் கொண்டு ஆதி பகவு என்பதற்கு 'முதன்மைப் பகுதி' என்று பொருள் கூறி, 'முதன்மையான குணத்தையே 'ஆதிபகவன்' என ஆண்பாலால் கூறினார்' என்று விளக்கமும் தந்துள்ளனர். 'மக்கள் முதன்மையான குணமுடையவராய் வாழ வேண்டுமென்பது கருத்து' எனக் கருத்து விளக்கமும் செய்துள்ளனர். இவர்கள் திருக்குறளில் இடம்பெற்றுள்ள தெய்வச் சார்புடைய தொடர்கள் அனைத்திற்கும் இவ்வாறே தம் கொள்கைக்கேற்பப் பொருள் கண்டுள்ளனர்.

'பகம் என்பது ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் ஆகிய இவ்வாறுக்கும் பொதுப் பெயராதலால் இந்த ஆறு குணங்களையுமுடைய கடவுளைப் பகவன்' என்றார் என்று விளக்கங் கூறி, ஆதிபகவன் என்பது எச்சமயத்தையும் சாராது பொது நிலையில் கடவுளைக் குறிக்கும் என்று சிலர் உணர்த்தியுள்ளனர்.

திருவள்ளுவருடைய வரலாறாக வழங்கும் பொய்ம்மலிந்த ஒரு கற்பனைக் கதையை உளங்கொண்டு சிலர், ஆதிபகவன் என்னுந் தொடரில் ஆதி என்பது அவருடைய அன்னையையும், பகவன் என்பது தந்தையையும் குறிப்பிடும் என்று கூறுவர். இதனை உடன்படாதவர் 'நூல் செய்யும் எவரும் தம்தாய் தந்தையரை உலகம் முதலாக உடையது எனக் கூறார்' என்றும், அப்படிக் கூறுவதாயின் இத் தொடர் ஆதிபகவர் என இருத்தல் வேண்டுமென்றும் கூறி மறுத்துள்ளார்.

இவ்வாறு தெய்வக் கொள்கையை உடன்பட்டும், மறுத்தும் விளங்கும் மக்கள் தத்தம் கொள்கைகளுக்கேற்ப 'ஆதிபகவன்' என்னும் திருவள்ளுவரின் தொடருக்கு விளக்கம் கண்டுள்ளனர். வள்ளுவர் தெய்வக் கொள்கை உடையராதலாலும், குறிப்பிட்ட ஒரு சமயத்தைச் சார்ந்தவர் என்று கருத முடியாதவாறு பொதுமை நெறி நின்று தெய்வம் பற்றிய தம் கருத்துகளை வெளியிட்டிருப்பதாலும், அவரையும் அவர் காட்டும் இறைவனையும் ஒரு சமயச் சார்புடையவராகச் சான்றுகள் காட்டி நிறுவ முற்படுவது பயனில் செயலேயாகும். அவர் காலத்தில் வழங்கிய சமயங்களும், அவருக்குப் பின்னர் இந்த நாட்டிற்கு

வந்த சமயங்களும், புறக்கணிக்காத வகையில் சமயப் பொதுமைபட 'ஆதிபகவன்' என்னும் தொடரால் பரம்பொருளாகிய இறைவனைத் திருவள்ளுவர் சுட்டியுள்ள நயத்தையும் நுட்பத்தையும், வியந்தும் நயந்தும் திருவள்ளுவப் பயனை எய்த முயல்வதே செயற்பாலதாகும்.

**ஆதிபருவத்தாதி பருவம்** தமிழில் அமைந்துள்ள பாரத நூல்களுள் ஒன்று. இதனைக் கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த அம்பலத்தாடுமையர் இயற்றியுள்ளார். இவரே இந்நூலினை இயற்றினார் என்னும் செய்தி, 'பரிவுடன் அம்பலத்தாடும் ஐயரை நீர், ஆதிபருவத்தை எங்கும் விரிவு தரும்படி உரைக்க வேண்டும் என்று மடுவை நகர்த் திம்ம பூபன் வேண்ட இயற்றினார்' என அரங்கநாதக் கவிராயர் தம் பாரதப் பாயிரத்தில் கூறியிருப்பதனால் தெளிவுபடுகிறது. இவர் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்பதனை இவர்தம் இயற்பெயரால் உணரலாம். 147 செய்யுட்களைக் கொண்டமைந்துள்ள வில்லிபாரத ஆதிபருவத்தின் முதற்சருக்கமாகிய குருகுலச் சருக்கச் செய்திகளை விரித்தும் புதியன சேர்த்தும் பாடப்பட்ட 569 விருத்தப் பாடல்களைக் கொண்டு இந்நூல் அமைந்துள்ளது. வில்லிபாரதத்தின் முதற் பருவத்திலுள்ள வேறு சருக்கங்கள் பற்றியும், பிற பருவங்கள் பற்றியும் இந்நூல் குறிப்பிடவில்லை. இந்நூலின் இடையே வில்லிபுத்தூராரின் 177 பாரதச் செய்யுட்கள் இடம் பெற்றுள்ளன. இந்நூலாசிரியர் பாடிய விருத்தங்கள் 392 ஆகும். இந்நூல் கடவுள் வாழ்த்து, பாயிரம் ஆகியவற்றோடு, முகனுரைச் சருக்கம், வினைதைச் சருக்கம், சரத்காரன் சருக்கம், சருப்ப யாகச் சருக்கம், கதைச் சுருக்கச் சருக்கம், வேதவியாசர் சருக்கம், சக உற்பத்திச் சருக்கம், யயாதிச் சருக்கம், துட்டியந்தன் சருக்கம், சந்தனுச் சருக்கம் ஆகிய பத்துச் சருக்கங்களைக் கொண்டுள்ளது. இந்நூலின் விருத்தப் பாடல்கள் எளிமையும் இனிமையுங் கொண்டு, சந்தநயம் மிக்கனவாக உள்ளன. தமிழக அரசின் கீழ்த்திசைக் கையெழுத்துப் பிரதிகள் நூல்நிலையத்தார் 1951-ஆம் ஆண்டில் இந்நூலின் முதற்பதிப்பினை வெளியிட்டுள்ளனர். காண்க: அம்பலத்தாடுமையர்.

**ஆதிபுத்தர்:** இவர் வச்சரயான புத்தசமயத்தில் மிக உயர்ந்த வச்சரதரர் ஆதிபுத்தர் என அழைக்கப்படுகிறார். தெய்வமாகக் கருதப்படும் ஆதி புத்தர் ஒரே கடவுட் கொள்கை உடையவர். இக்கொள்கை நாலந்தா மடாயலத்திலிருந்து கி.பி. 10-ஆம் நூற்றாண்டில் தொடங்கியிருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது. 'காலச்சக்கர தந்திரம்' என்னும் நூல் ஆதிபுத்தருக்குப் படைக்கப் பெற்றுள்ள நூலாகும். இவருக்குத் தீப்பிழம்பு வடிவத்தில் பூசைகள் செய்யப்படும். சுயம்பு புராணத்தின்படி ஆதிபுத்தர் முதன் முதலில் நேபாளத்தில் தீப்பிழம்பு வடிவத்தில் தோன்றியதாகவும், அதற்குப் புகலிடம் கொடுக்கும் நிமித்தமாக மஞ்சுசீ கோயில் ஒற்றைக் கட்டியதாகவும், அதனையே அன்றிருந்து சுயம்பு சைதன்யம் என்றழைக்கிறார்கள் என்றும் கூறுவர்.

**ஆதிமந்தி,** சங்க காலத்தில் வாழ்ந்த ஆட்டனத்தியின் மனைவி; கவிஞருமாவார். திருமாவளவன் எனச் சிறந்து விளங்கிய கரிகாற் சோழனின் மகள். தன் கணவன் காவிரி ஆற்றுப் புனலால் இழுத்துச் செல்லப்பட்டமையினை அறிந்து பல ஊர்களிலும் பல நாடுகளிலும் சென்று தேடிக் காணாளாய்க்கவன்று அலைந்து திரிந்தாள். அப்பொழுது மருதி என்பவள், கடல்வாய்ப்பட்டிருந்த ஆட்டனத்தியை இவளுக்குக் காட்டினாள். ஆதிமந்தி ஆட்டனத்தி வரலாற்றினைக் கொண்டு பாரதிதாசன் 'சேரதாண்டவம்' என்னும் நாடக நூலை எழுதியுள்ளார். ஆதிமந்தி பாடிய பாடல் குறு.. 20-ஆம் பாடலாக அமைந்துள்ளது. இவள் வரலாற்றுக் குறிப்புகள், அகநானூற்றிலும் (45, 76, 222, 236, 376, 396) சிலப்பதிகாரத்திலும் (சிலப். 21: 11-15) காணக் கிடக்கின்றன. த.கோ.

**ஆதி மூர்த்தி:** திருமாலின் சிறிய திருவுருவங்களுள் ஒன்று. ஆதிசேசன் என்னும் பாம்பின் மேல் அமர்ந்த நிலையில் இவர் தோற்றமளிப்பார். ஒரு காலை மடித்தும், பிறிதொரு காலைத் தொங்கவிட்டும் காட்சியளிப்பார். தலையில் மகுடம் அணிந்திருப்பார்; நான்கு கைகளை உடையவர், ஒரு கையினைத் தான் அமர்ந்திருக்கும் இருக்கையின் மீதும், மற்றொரு கையினைக் கால் முட்டியின் மீதும் வைத்திருப்பார். பிற இரண்டு கைகளில் சங்கையும் சக்கரத்தையும் கொண்டிருப்பார். ஆதிசேசன் என்னும் பாம்பின் தலை குடை போன்று காணப்படும். இப்பாம்பின் தலைகள் சில சிற்பங்களில் ஐந்தாகவும் சில சிற்பங்களில் ஏழாகவும் உள்ளன. ஆதிமூர்த்தியின் வலப்பக்கம் பிருகு என்னும் முனிவரும், இடப்பக்கம் மார்க்கண்டேயர் என்னும் முனிவரும் முழங்காலில் மண்டியிட்ட நிலையில் காணப்படுவர். சிவனும் பிரமனும் ஆதிமூர்த்தியை வழிபட்ட வண்ணம் இருபக்கமும் நிற்பர்.

**ஆதியப்பனார்** கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்களுள் ஒருவர். இவர் தொண்டை நாட்டிலுள்ள 'களத்தூர்' என்னும் ஊரில் பிறந்தார். வடமொழியும் தமிழும் நன்கு பயின்றவர். சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்பதை இவர் இயற்றியுள்ள தல புராணங்களால் அறியலாம். இவர், திருக்களர் புராணம், திருக்கொள்ளம் புதூர்ப் புராணம், பருதி வனப் புராணம், மாயூரப் புராணம் ஆகிய தல புராணங்களைப் பாடியுள்ளார். இவர், தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்த அழகிய சிற்றம்பல தேசிகர்

காலத்தில் வாழ்ந்தார். அதனால், இவரது காலம் கி.பி. 18-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்பது உறுதியாகிறது. வி.பா

**ஆதிரை[1]** இருபத்தேழு விண்மீன்களுள் ஒன்று. சிவபெருமானுக்குரிய நாளாக இது கருதப்படுகிறது. இக்காரணத்தினால் சிவபெருமான், ஆதிரை முதல்வன், ஆதிரையான் என்று சிறப்பிக்கப்படுகிறான். ஆண்டுதோறும் மார்கழித் திங்கள் திருவாதிரை நாளன்று சிவன் கோயில்களில் ஆதிரைத் திருநாள் விழா கொண்டாடப்படும்.

**ஆதிரை[2]** மணிமேகலையில் இடம்பெறும் சாதுவனின் மனைவி; கற்பிற் சிறந்தவள். கப்பல் ஏறிச் சென்ற தன் கணவன் இறந்தான் என்னும் செய்தி கேட்டு இவள் உயிர் விடுத்தற்குத் தீயில் பாய்ந்தாள். தீச்சுடாததினால் பெருவருத்தமுற்றாள். 'உன் கணவன் வருவான்' என்னும் உருவிலி வாக்கைக் கேட்டு, நோன்பு நோற்றிருந்தாள். பிறகு கணவன் வந்து சேர அவனோடு மகிழ்ந்து வாழ்ந்திருந்தாள்.

மணிமேகலை அமுத சுரபியைப் பெற்றபின்னர், அதில் முதன்முதல் சோறு பெறுவதற்காக ஆதிரையின் இல்லத்திற்குச் சென்றாள். அப்பொழுது அவளுடைய பிச்சைப் பாத்திரத்தில் 'பாரகம் அடங்கலும் பசிப்பிணி அறுக' எனக்கூறி ஆதிரை சோறிட்டாள். இவள் கற்பின் மேன்மையை 'அரும்பெறல் மரபிற் பத்தினிப் பெண்டிரும், விரும்பினர் தொழூஉம் வியப்பினள் ஆயினள்' என்று பாராட்டுவர் சாத்தனார். த.கோ.

**ஆதில்சா, முகமது** செர்சாவின் (Sher Shah) தமையன் மகன். செர்சா காலமானதும் அவர் இரண்டாம் மகன் சலால் கான் (Jalal Khan) என்பவன் இசுலாம் சா (Islam Shah) என்னும் பெயருடன் அரசனாக முடிசூட்டிக் கொண்டான். ஆனால், அவன் நீண்டகாலம் ஆட்சி செய்யவில்லை. அவன் கி.பி. 1554 ஆம் ஆண்டில் காலமானபோது நாட்டில் குழப்பம் மூண்டது. அவன் இளைய மகன் பிரோசு கானைச் (Firoz Khan) செர்சாவின் தம்பி மகன் முபாரிசு கான் (Mubarizh Khan) கொலை செய்துவிட்டு ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டான். இவனே பின்னர் ஆதில் சா, முகமது (Adil Shah, Muhammed) என்னும் பட்டப் பெயரைச் சூட்டிக் கொண்டான். இவன் திறமையற்றவன். இவனுக்கு முதலமைச்சர் போன்று பணியாற்றியவன் ஈமு (Himu) என்ற பனியா வகுப்பைச் சேர்ந்த இந்து வீரன்.

ஆதில்சா வங்காளத்தையும் மாளவத்தையும் போரில் இழந்து விட்டான். இவன் உறவினரும் கலகஞ் செய்தனர். செர்சாவின் நெருங்கிய உறவினர் இருவர் ஆதில்சாவின் ஆட்சிக்கு உரிமை கொண்டாடினர். இதனிடையில் உமாயூன் (Humayun) மீண்டும் ஆட்சியைக் கைப்பற்றிக் கொள்ளவே மொகலாய ஆட்சி நிலைநாட்டப்பட்டது. உமாயூன் கி.பி. 1556-இல் இறந்தான். அவனுக்குப்பின் அக்பர் அரசரானார். அக்பரின் காவலரான பைராம்கான், ஆதில் சாவின் அமைச்சன் ஈமுவைக் கி.பி. 1556-இல் நடைபெற்ற இரண்டாம் பானிப்பட்டுப் போரில் தோற்கடித்தான். முகமது ஆதில்சாவும் கி.பி. 1556-இல் வங்காளத்தின் ஆளுநருடன் நடந்த மாங்கீர் (Monghyr) போரில் கொல்லப்பட்டான்.

**ஆதிலாபாத்து** தில்லிக்கருகில் இருக்கும் ஒரு சிறு கோட்டை; துக்ளக்காபாத்திற்குத் தெற்கே அமைந்துள்ளது. இது முகம்மது-பின்-துக்ளக்கால் கட்டப்பட்டது. இதன் சுவர்கள் துக்ளக்காபாத்துக் கோட்டைச் சுவர்களுடன் இணைந்துள்ளன. இரு வாயில்களைக் கொண்ட ஆதிலாபாத்துக் (Adilabad) கோட்டையின் ஒரு நுழைவாயில், தென்கிழக்குப் பகுதியில் அமைந்திருக்கும் இரண்டு காவல் அரண்களுக்கு இடைப்பட்ட புற அரணிலும், மற்றொன்று தென் மேற்கிலும் அமைந்துள்ளன. இதன் இரு பிரிவுகளும் ஒரு வெளிச் சுவர் மூலம் தடுக்கப்பட்டுள்ளன. இதன் உள்ளே உள் அரண் சுவர்களுடனும் காவல் அரண்களுடனும், வாயில்களுடனும் காட்சி அளிக்கிறது. இதனுள் அரண்மனையும் உள்ளது. இவ்வரண் முகமதாபாத்து என்றும் குறிக்கப்படுகிறது.

**ஆதிவராககவி** கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் சோழ நாட்டில் வாழ்ந்த ஒரு கவிஞர். அந்தணர் மரபினர். தமிழும் வடமொழியும் வல்லவர். பாண கவி என்பவர் வடமொழியில் காதம்பரி என்னும் சுவைமிக்க நூலைச் செய்துள்ளார். இந்நூல் அவந்தி நகர மன்னன் சந்திராபீடன்மீது காந்தருவ மகளான காதம்பரி கொண்ட காதலை விளக்கியுரைப்பதாகும். ஆதிவராககவி இவ்வடமொழி நூலினைத் தமிழில் மொழிபெயர்த்து அமைத்துள்ளார்.

**ஆதிவாயிலார்** கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப் புலவர். இவர் எழுதிய நூல் பரத சேனாபதியம் ஆகும். இந்நூல் ஒரு நாடகத் தமிழ் இலக்கண நூல்; வெண்பா யாப்பிலமைந்தது. இந்நூலையும் வேறு நான்கு நூல்களையும் அடியார்க்கு நல்லார் குறிப்பிட்டு இவ்வைந்தும் சிலப்பதிகாரமாகிய 'நாடகக் காப்பியக் கருத்தறிந்த நூல்கள் அன்றேனும் ஒரு புடை ஒப்புமை கொண்டு முடித்தலைக் கருதிற்று இவ்வுரையெனக் கொள்க' என்று எழுதியுள்ளார். அடியார்க்கு நல்லார் காலத்தில் இருந்த இப்பரத நாட்டிய நூல் பிற்காலத்தில் மறைந்துவிட்டது. ஆனால், இதே பெயரில் வேறொரு நூலும் இருக்கிறது. இது ஆதி வாயிலார் இயற்றிய பரதசேனாபதியத்திற்கு மிகப் பிற்பட்டதாகும். இதனையே

டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் நூல் நிலையம் வெளியிட்டுள்ளது. ஆதிவாயிலாரின் பரதசேனாபதியத்திலிருந்து அடியார்க்கு நல்லார் மேற்கோளாகக் காட்டியுள்ள பாடல்களில், அரங்கேற்றம் செய்தற்குரியவரின் வயது, பயிற்சிக்காலம், அரங்கம் அமைக்கும் நிலத்தின் இலக்கணம் போல்வன குறிப்பிடப் பட்டுள்ளன. அகத்தியரின் சாபத்தால் இந்திரன் மகன் சயந்தன் மூங்கிலான செய்தி, ஒரு மேற்கோள்பாடற் பகுதியில் காணப்படுகிறது. இந்நூலின் பாடல்கள் மகடூஉ முன்னிலை கொண்டுள்ளன.

**ஆதீனங்கள்** தமிழகத்திலுள்ள சைவ சமயத் திருமடங்களைக் குறிக்கும். உயிர் பெறும் பேறுகளுள் தலையாயதும் நிலையாயதும் ஆய பேறு வீடு பேறேயாம் என்பது தமிழ்ச் சான்றோர்களின் முடிபாகும். அவ்வரிய பேறு, திருவருள் வழி நின்று ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கும் உயர்தவத்தால் வாய்ப்பதாகும். இத்தகைய சூழற்கு மனம் பொறி வழியே போகாது தடுத்தற்கு ஏதுவாகும், உள்ளத் துறவு இன்றியமையாததாகும். இதனைப் பெறுதற்கு உயர்ந்த மலைகளும், அகன்ற நீர்நிலையமைந்த காடுகளும் தக்க சூழலாகும் எனக் கருதிய அருளாளர்கள், அங்கிருந்து முதற்கண் தவம் செய்து உயர்நிலை பெறுவாராயினர். தவம் செய்வார் தம் கருமம் செய்வார் என்னும் இச்சூழல் மாறித் தாம் பெற்ற பேரின்பத்தைப் பிற உயிர்களும் பெற வேண்டும் எனக் கருதும் அருள்நிலை திருவருளால் அவர்களுக்கு வாய்க்கவும், அந்நிலையில் நாட்டில் வாழ்ந்த மக்களும் தாம் எத்துணை வளமும் வாய்ப்பும் பெற்றிருப்பினும் மனஅமைதி பெற இயலாத சூழலில் இவ்வருளாளர்களை நாடுதற்குரிய நிலை ஏற்பட்டது. மேலும் வளர்ந்த கால வளர்ச்சியில் மக்கள் அத்தகைய அருளாளர்களை நாடிச் செல்லும் நிலைக்கு மாறாக, அவர்களையே தம் சூழலில் வாழச் செய்து அவர்களின் அருள் நலத்தைப் பெற விரும்பினர். அவ்விருப்பத்தின் பயனாக அருளாளர்கள் நாட்டு மக்களிடையே வாழும் சூழல் அமையவும், அதற்கு ஏற்பத் தாம் தங்குதற்குரிய இடத்தைப் பெறவும் கருதினர் இந்நிலையிலேயே நாட்டில் மடங்கள் தோன்றலாயின.

சங்க இலக்கியங்களில் இப்பொருளில் மடம் என்னும் சொல்வழக்கு இல்லை. மாறாகப் பள்ளி என்னும் சொல் வழக்கு உள்ளது. அப்பள்ளிகள் அறவோர்களும் சமண பௌத்தத் துறவிகளும் வாழும் இடங்களாக இருந்தன.

திருமூலர் திருமந்திரத்தில்தான் மடம் என்னும் சொல் முதன்முதலாக இப்பொருளிலமைந்து காணப் படுகிறது. இந்நூலில் 'குருமட வரலாறு' என்னும் தலைப்பு ஒன்று உள்ளது. அத்தலைப்பு ஆசிரியரால் அமைக்கப்பட்டதா அன்றா என்பதில் கருத்து வேறுபாடு இருப்பினும், அத்தலைப்பின் கீழ்க் கூறப்படும் வரலாறுகள் திருமட வரலாற்றுக்குரியனவாக இருத்தலின் அத்தலைப்பினை அடித்தளமாகக் கொள்வதில் இழுக்கில்லை. திருமூலரை அடுத்து வாழ்ந்த திருமுறை ஆசிரியர்கள் காலத்தில் மடம் என்னும் சொல் இப்பொருள் வழக்கில் பயின்று வந்துள்ளது. 'சைவர் இருந்து வாழ் மடத்தில்' எனப் படும் சேக்கிழார் வாக்கால் இவ்வுண்மை அறியவருகிறது. இத்தகைய திருமடங்கள் உணவு வழங்கும் அறச்சாலையாகவும், உணர்வு வழங்கும் அருட்சாலையாகவும் அமையலாயின.

சிவபரம் பொருளிடத்து அருளுரை பெற்றவர்கள் பலராயினும் அவருள் இருவர் மரபுகள் வழி வழி வளர்ந்துவரும்சிறப்புடையனவாயின. அவற்றுள்ஒன்று கந்தமரபு எனவும் பிறிதொன்று நந்தி மரபு எனவும் பெயர் பெற்றன. கந்த மரபில் வளர்ந்து வரும் ஆதீனம் சூரியனார் கோயில் ஆதீனமாகும். நந்தி மரபில் வளர்ந்துவரும் ஆதீனங்கள் திருவாவடுதுறை, தருமபுரம், தொண்டை மண்டலம் (காஞ்சிபுரம்), முதலிய ஆதீனங்களாகும். இம்மரபினர் திருக்கயிலாய பரம்பரையினர் எனக் கூறிக் கொள்ளும் சிறப்புடையவர்களாவர்.

அருள் அறச்சாலைகளாகத் தோன்றிய திருமடங்கள் இம்மரபினர் வழியே, ஆதீனம் எனப் போற்றப் பெறும் பெருஞ்சிறப்பினவாயின. காரணம் இந்நிறுவனங்களில் அருளாட்சி செய்தவர்கள், தோய்ந்த சிவ உணர்வும், அனைத்துயிர்களையும் ஒக்கப் பார்க்கும் அருள் உணர்வும் கல்வியும் உடையவர்களாய் இருந்தமையே ஆகும். இச்சிறப்பால் அவ்வக் காலத்துத் தோன்றிய அரசர் பெரு மக்களும், மக்களும் இத்தகைய அருளாளர்களைச் சார்ந்து போற்றவும், பொருள் கொடுத்துச் சிறக்கவும் தலைப்பட்டனர். அச்சிறப்பாலேயே இத்திருமடங்கள் அருளானும் பொருளானும் உயர்ந்த ஆதீனம் எனப் பெயர் பெறலாயின.

ஆதீனம் என்பது உரிமை நிலையம் எனப் பொருள்படும். எனவே அருளாளர்களின் அருள்நலம் கனிந்த உரிமை நிலையங்களாக இவை விளங்கி வரலாயின.

கிழக்கிந்திய வணிகக் குழுவினர் நாட்டாட்சி மேற்கொண்ட போது தமிழ்நாட்டுத் திருக்கோயில்கள் அவ்வச் சமயத்தவர்கள் பொறுப்பில் இருப்பதே தக்கது எனக்கருதி, அதற்குச் சிறந்தோர் இத்தகைய அருளாட்சியில் வீற்றிருப்பவர்களே என முடிவு செய்து அவர்களிடம் ஒப்படைப்பாராயினர். இவ்வகையால் தமிழ்நாட்டுத் திருக்கோயில்கள் பல ஆதீனங்களின் அருள் பாலிப்பில் அமைவனவாயின. இவ்வாறு வளர்ந்த சைவ ஆதீனங்கள் பதினெட்டு என்

பது வழிவழிக் கூறப்பட்டு வருகிறது. அவை வரு மாறு: திருவாவடுதுறை ஆதீனம், காஞ்சிபுர ஆதீனம், (தொண்டை மண்டலஆதீனம்) தருமபுர ஆதீனம், மதுரை ஆதீனம், சூரியனார் கோவில் ஆதீனம், சிதம்பரம் ஆகம சிவப்பிரகாசர் ஆதீனம், பெருங்குளம் செங்கோல் ஆதீனம் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம், இராமேச் சுர ஆதீனம், நீலப்பாடி ஆதீனம், அன்னப்பன் பேட்டை தாயுமான சுவாமிகள் ஆதீனம், சாரமா முனிவர் ஆதீனம், வேளாக் குறிச்சி ஆதீனம், சொக்க புர ஆதீனம், சீர்காழி வள்ளலார் ஆதீனம், வரணி ஆதீனம், நாச்சியார் கோவில் ஆதீனம், துழாவூர் ஆதீனம். இத்திருமடங்களால் பயன்பெற்ற மக்கள் நிலமும் பொருளுமாக அமைந்த தம் உடைமைகளை இவ்வாதீனங்களுக்கு அளிக்கலாயினர். இதனால் ஆதீனங்களின் பொருள் நிலையும் நில உடைமை யும் பெருகலாயின. அதனால் இவ்வாதீனங்கள் அரு ளாட்சியோடு, உடைமைகளைக் காக்கும் பொரு ளாட்சியையும் மேற்கொள்ளலாயின.

இவ்வாதீனங்களுள் சில செழித்து வளர்ந்தும் சில சுருங்கிக் குறைந்தும் உள்ளன. பொதுவாக ஆதீனங்கள் அனைத்தும் சைவமும் தமிழும் தழைக் கவும், சமுதாயத்தில் அவ்வப்போது வேண்டப்படும் அரிய பல தேவைகளை நிறைவு செய்யவுமே அமைந்துள்ளன. சைவ சமயத் திருமடங்களே ஆதீ னம் என்னும் பெயரில் நிலவித் தமிழ்-சைவத் தொண்டுகள் புரிந்து வருகின்றன. ஒவ்வோரா தீனங் கள் பற்றியும் தனித் தனிக் கட்டுரை காண்க. கு. சு.

**ஆந்திரப் பிரதேசம்** இந்தியக் குடியரசில் உள்ள ஒரு மாநிலமாகும். இதன் தலைநகர் ஐதரா பாத்து. மாநிலத்தின் பரப்பளவு 2.75 இலட்சம் ச.கி.மீ.: மக்கள் தொகை 5,34,03,619 (1981). பரப்



ஆந்திரப் பிரதேசம்

பளவிலும் மக்கள் தொகையிலும் ஆந்திரப் பிரதேசம் **(Andhra Pradesh)** இந்தியாவின் ஐந்தாம் பெரிய மாநிலமாகும். இங்குத் தெலுங்கு சிறப்பு மொழி யாகப் பேசப்படுகிறது. உருது முதலிய மொழிகளைப் பேசுபவர்களும் உள்ளனர். இந்தி மொழிக்கு அடுத்தபடியாகத் தெலுங்கு பேசுபவர்களே இந்தியா வில் மிகுதியாக உள்ளனர். இம்மாநிலத்தில் 88% இந்துக்கள், 8% முகம்மதியர்கள் 4% கிறித்தவர்கள் வாழ்கிறார்கள்.

**நிலவியல்:** இந்தியக் குடியரசின் தென்பகுதியில் உள்ள இம்மாநிலத்தின் வடக்கே ஒரிசா, மத்தியப் பிரதேசம் மற்றும் மகாராட்டிரமும், மேற்கே கரு நாடகமும், தெற்கே தமிழ்நாடும் கிழக்கே வங்கக் கடலும் எல்லைகளாக உள்ளன. நிலவியல் அடிப்படை யில் இம்மாநிலம் 1. கடற்கரைச் சமவெளிப் பகுதி 2. கிழக்குத் தொடர்ச்சி மலைகள் 3. மேற்கே உள்ள மேட்டு நிலம் என மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்படு கிறது. கடற்கரையை அடுத்துள்ள சமவெளிப் பகுதி யில் வளமான நிலங்கள் உள்ளன. கோதாவரி, கிருட்டிணா, வடபெண்ணை முதலான ஆறுகளின் மூலம் கால்வாய்ப் பாசனம் நடைபெறுகிறது. கிழக்கு நோக்கிப் பாயும் பல ஆறுகளினால் பள்ளத் தாக்குகள் ஏற்பட்டுள்ளன. மேட்டு நிலப்பகுதி கடல் மட்டத்திலிருந்து 534 மீ. உயரத்தில் உள்ளன.

கோதாவரி, கிருட்டிணா, வடபெண்ணை முத லான பெரிய ஆறுகளாலும், துங்கபத்திரா, பாகனி, முசி, மஞ்ரா, சித்ரா, வம்சதாரா, இலங்குல்யா முத லான மற்ற ஆறுகளாலும் இம்மாநிலத்திற்குத் தேவையான தண்ணீர் கிடைக்கிறது.

மார்ச்சு மாதம் முதல் சூன் மாதம் வரை இம் மாநிலத்திற்குக் கோடைக் காலம். அப்பொழுது பொதுவாக 75 பா. முதல் 85 பா. வரை வெப்பம் நிலவுகிறது. சில இடங்களில் மே மாதம் 115 பா. வரை வெப்பம் உயர்கிறது. சூலை மாதம் முதல் செப்டம்பர் மாதம்வரை தென் மேற்குப் பருவ மழையினால் 90 முதல் 130 செ.மீ. வரை இப்பகுதி மழையைப் பெறுகிறது. அக்டோபர் முதல் பிப்பிர வரி மாதம் வரை குளிர் காலம். இக்காலத்தில் 45 பா. முதல் 55 பா. வரை வெப்பம் நிலவுகிறது. அக்டோபர் - நவம்பர் மாதங்களில் வடகிழக்குப் பருவ மழையினால் 40 முதல் 65 செ.மீ. வரை இப்பகுதி மழையைப் பெறுகிறது. இவ்விரு மாதங்களில் வங்கக்கடலில் தோன்றும் புயலினால் இம்மாநிலத் தின் கடற்கரை மாவட்டங்கள் தாக்கப்படுகின்றன. அதனால் உயிரிழப்பும், பொருளிழப்பும் ஏற்படு கின்றன.

**மக்கள் வாழ்க்கை முறை:** இம்மாநிலத்தில் வாழும் மக்களுள் 74% பகுதியினர் வேளாண்மைத்

தொழிலைச் செய்கின்றனர். நெல், சோளம், கேழ் வரகு, பருப்பு வகைகள், வாழை, வேர்க்கடலை, சர்க்கரை, பருத்தி மற்றும் புகையிலை முதலானவை பெருமளவு இம்மாநிலத்தில் விளைகின்றன. இந்திய ஆமணக்கு உற்பத்தியில் 55 விழுக்காடும் புகையிலை உற்பத்தியில் 94 விழுக்காடும் இங்கு உற்பத்தி செய்யப்படுகின்றன.

நிலத்தடிச் செல்வங்களை எடுப்பதில் பல ஆயிரம் மக்கள் ஈடுபட்டுள்ளனர். பச்சைக் கல்நார் ஆந்திராவில் மட்டுமே மிகுதியாக எடுக்கப்படுகிறது. மங்கனீசுத் தாது உற்பத்தியில் இம்மாநிலம் ஆறாம் இடத்தைப் பெறுகிறது. சிங்கரேணி வயல்களிலிருந்து நிலக்கரி மிகுதியாகக் கிடைக்கிறது. செம்புத்தாது, மைக்கா மற்றும் சுண்ணாம்புக்கல் போன்றவையும் இம்மாநிலத்தில் எடுக்கப்படுகின்றன. ஐதராபாத்திலும் விசாகப்பட்டினத்திலும் பல தொழிற்சாலைகள் உள்ளன. விசாகப்பட்டினத்தில் ஓர் இரும்பாலையும் உள்ளது. இராமகுண்டத்தில் ஓர் இரசாயன எரு உண்டாக்கும் தொழிலகம் அமைக்கப்பட்டுள்ளது.

வேளாண்மைக்கும் தொழிற் கூடங்களுக்கும் வேண்டிய மின்சாரம் இரண்டு வகைகளில் உண்டாக்கப்படுகிறது. மச்குந்து, மேல்சைலேரு, கீழ்சைலேரு, துங்கபத்திரா அணை, நாகார்ச்சுனசாகர், நைசாம் சாகர் போன்ற இடங்களில் நீர்மின் சக்தியும், நெல்லூர், இராமகுண்டம், கோதகுண்டம், விசயவாடா, ஐதராபாத்துப் (உசேன்சாகர்) போன்ற இடங்களில் அனல் மின்சக்தியும் உண்டாக்கப்படுகின்றன.

போக்குவரத்து வசதிகள் தேவையான அளவு உள்ளன. ஐதராபாத்து, விசயவாடா, விசாகப்பட்டினம் ஆகிய இடங்களில் விமான நிலையங்கள் உள்ளன. மாநிலத்தில் 8000 கி.மீ. க்கு மேல் இருப்புப் பாதைகள் உள்ளன; 88,000 கி.மீ. க்கு மேல் சாலைகள் உள்ளன. கோதாவரி, கிருட்டிணா ஆகிய ஆறுகளில் சில இடங்களில் மக்களை ஏற்றிச் செல்லப் படகுகள் பயன்படுத்தப்படுகின்றன.

எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் இம்மாநிலத்தில் மிகக் குறைவு. ஆண்களில் 39.26% பகுதியினரும் பெண்களில் 20.39% பகுதியினரும் எழுத்தறிவுள்ளவர்கள். உயர்நிலைப் பள்ளிவரை இலவசக் கல்வி தரப்படுகிறது. உயர்கல்வி தரும் ஒன்பது பல்கலைக்கழகங்கள் இம்மாநிலத்தில் உள்ளன. அவை உசுமானியாப் பல்கலைக்கழகம் (ஐதராபாத்து - 1918), ஆந்திரப் பல்கலைக்கழகம் (வால்டேர்-1926), வெங்கடேசுவரா பல்கலைக்கழகம் (திருப்பதி-1954), ஆந்திரப்பிரதேச வேளாண்மைப் பல்கலைக்கழகம் (ஐதராபாத்து - 1964), சவகர்லால் நேரு தொழில் நுணுக்கப் பல்கலைக்கழகம் (ஐதராபாத்து - 1972), ஐதராபாத்துப் பல்கலைக்கழகம் (ஐதராபாத்து-1974), காகதியப் பல்கலைக்கழகம் (வாரங்கல்-1976), நாகார்ச்சுனா பல்கலைக்கழகம் (குண்டூர் - 1976), கிருட்டிண தேவராயா பல்கலைக்கழகம் (அனந்தபூர்-1981) ஆகியவையாம்.

பொதுவாக ஆந்திரர்கள் கடவுள் பக்தி மிக்கவர்கள். அவர்கள் திருப்பதி, பத்திராசலம், சிரீசைலம், அகோபிலம் முதலான புனித நகரங்களில் உள்ள கோயில்களுக்குத் திரளாகச் செல்கின்றனர். திருப்பதிக்கு இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலிருந்து பக்தர்கள் வருகின்றனர். இங்குள்ள வேங்கடவனின் நின்றகோலம் பற்றிச் சிலப்பதிகாரத்தில் குறிப்புகள் உள்ளன.

ஆந்திரர்களிடையே சமூகச் சீர்திருத்தங்களைப் பரப்பியவர் கந்துகூரி வீரேசலிங்கம் பந்துலு (கி.பி. 1848-1919) ஆவார். ஊழல், ஒழுக்கக்குறைவு, மாதர் தொடர்பு, குழந்தைகள் திருமணம், சிலைவழிபாடு முதலியவற்றை அவர் எதிர்த்தார். விதவைகள் மறுமணத்தை ஆதரித்தார். தெலுங்கு மொழியில் கால இதழ்களை நடத்தியும் பல நூல்களை எழுதியும் தம் சீர்திருத்தக் கருத்துகளை மக்களிடையே பரப்பினார். அதே நேரத்தில் தெலுங்கு மொழியின் மறுமலர்ச்சிக்கும் அரும்பாடுபட்டார்.



நாகார்ச்சுன கொண்டா புத்தர் சிற்பம்

ஆந்திரப் பிரதேசத்தில் பழம்பெரும் வரலாற்றுச் சின்னங்கள் பல உள்ளன. ஐதராபாத்துக்குத் தென்கிழக்கே 150 கி.மீ. தூரத்துக்கு அப்பால் கிருட்டிணா ஆற்றின் கரையில் உள்ள நாகார்ச்சுனகொண்டாவில் புத்த சமயத் தூபிகளும் மண்டபங்களும் புத்தரின் சிற்பங்களும் உள்ளன. மகாயான புத்த சமயத்தை நிறுவிய நாகார்ச்சுனர் கி.பி. 2 அல்லது

3-ஆம் நூற்றாண்டில் இங்கு வாழ்ந்தார். இங்கே புத்தசமயப் பல்கலைக்கழகமும் அக்காலத்தில் இருந்தது. விசயவாடாவுக்கு மேற்கே கிருட்டிணா ஆற்றின் தென்கரையில் உள்ள அமராவதி மற்றொரு மகாயான புத்தசமயச் சின்னங்கள் மிகுந்த இடமாகும். ஐதராபாத்துக்கு 8 கி.மீ. மேற்கே உள்ள கோல்கொண்டா கோட்டை, குத்பு சாகிச் சுல்தான்களால் கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்டது. ஐதராபாத்தில் கி.பி. 1591-இல் கட்டப்பட்ட, சார்மினார் கட்டடம் இசுலாமியக் கட்டடக்கலையின் மேன்மையை விளக்குகிறது. ஐதராபாத்தில் பார்க்கத்தக்க அருங்காட்சியகமும் உள்ளது. இவை தவிர ஏற்கனவே கூறப்பட்ட இந்துக் கோயில்கள், சிற்பம், கட்டடக்கலை ஆகியவற்றின் முதிர்ச்சியைக் காட்டும் மையங்களாக உள்ளன. இவற்றையெல்லாம் பார்த்து மகிழ உள்நாட்டிலிருந்தும் அயல்நாடுகளிலிருந்தும் சுற்றுலாப் பயணிகள் ஆயிரக்கணக்கில் வருகின்றனர்.



சார்மினார்-ஐதராபாத்து

**வரலாறு:** கி.மு. 500-க்கு முன்னர் எழுதப்பட்ட வடமொழி நூலாகிய அய்திரேய பிராமணத்தில் ஆந்திரர்கள் என்ற சொல் பயன்படுத்துப்பட்டுள்ளது. அவர்கள் விசுவாமித்திரரின் மக்கள் என்றும், ஆரியர்கள் அல்லாதவர்கள் என்றும், அதனால் அவர்கள் விரட்டப்பட்டார்கள் என்றும் அந்நூல் கூறுகிறது. முதலில் விந்திய மலைகளுக்குத் தெற்கே அவர்கள் வாழ்ந்து வந்தனர் என்றும் பின்னர் இன்றைய ஆந்திரப் பகுதிக்கு இடம் பெயர்ந்தனர் என்றும் கூறப்படுகிறது. ஆந்திரர்கள் என்ற மக்களைக் குறிக்கும் சொல்லிலிருந்துதான் அவர்கள் வாழ்ந்த நிலப்பகுதிக்கு ஆந்திரா என்ற பெயர் வந்தது.

வட இந்தியாவில் சந்திரகுப்த மௌரியர் (கி.மு. 322-298) ஆட்சி செய்து கொண்டிருந்தபோது ஆந்திரர்கள் தனியரசு ஒன்றை அமைத்துக் கொண்டிருந்ததாகக் கிரேக்க வரலாற்றாசிரியர் பிளினி (கி.பி. முதல் நூற்றாண்டு) எழுதியுள்ளார். அவ்வரசில் முப்பது கோட்டை நகரங்களும், ஒரு இலட்சம் வீரர்களைக் கொண்ட பெரும்படையும், இரண்டாயிரம் குதிரைவீரர்களும், ஆயிரம் யானைகளும் இருந்ததாக அவர் குறிப்பிட்டுள்ளார். சந்திரகுப்த மௌரியருக்குப்பின் ஆட்சிசெய்த பிந்துசாரரும், அசோகரும் போர் செய்து ஆந்திராவை வென்றதாகச் சான்றுகள் இல்லை. எனினும் மாசுகி, எர்ரகுடி, சித்தபுரம், சாடிங்கா ஆகிய இடங்களில் அசோகரின் பாறைக் கல்வெட்டுகள் உள்ளன. மேலும் ஆந்திராவில் புத்த சமயத்தைப் பரப்பச் சமயக் குழுக்களை அசோகர் அனுப்பியதாகச் சான்றுகள் உள்ளன. எனவே ஆந்திர அரசர்கள் அசோகரின் மேலாதிக்கத்தை ஏற்றுக் கொண்டிருக்கக்கூடும் என்பது தெளிவு.

அசோகருக்குப்பின் ஆந்திராவில் சாதவாகனர்களின் ஆட்சி தோன்றியது. அவர்கள் கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. மூன்றாம் நூற்றாண்டு வரை ஆட்சி செய்தார்கள். அவர்களுள் சிமுகர் (கி.மு. 235-212), அலா (கி.பி. 20-24), கவுதமபுத்திர சதகர்ணி (கி.பி. 70-95), இரண்டாம் புலமாயி (கி.பி. 96-119) முதலானவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். பிரதிசுதானம் அவர்களின் தலைநகரம். இப்பொழுது மகாராட்டிர மாநிலத்தில் அவுரங்காபாத்து நகரத்திற்குத் தெற்கே கோதாவரி ஆற்றின் கரையில் உள்ள பைதான் நகரமே அக்கால பிரதிசுதானம் என்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. ஆந்திராவின் பெரும் பகுதிகளைச் சாதவாகனர்கள் ஆட்சி செய்தார்கள். அவர்கள் கட்டடக்கலை முதலான கலைகளின் வளர்ச்சிக்குத் துணைசெய்தார்கள். உரோமானியப் பேரரசுடன் வாணிக உறவுகளையும் அவர்கள் கொண்டிருந்தார்கள்.

சாதவாகனர்களின் ஆட்சிக்குப் பின்னர்க் கிருட்டிணா ஆற்றின் தெற்கேயுள்ள பகுதிகள் பல்லவர்களின் ஆதிக்கத்திற்கு உட்பட்டன.

கீழைச் சாளுக்கியர்கள் கி.பி. 7-ஆம் நூற்றாண்டிலிருந்து 12-ஆம் நூற்றாண்டு வரை வேங்கியைத்தலைநகராகக் கொண்டு ஆந்திராவின் பல பகுதிகளை ஆட்சி செய்தார்கள். கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த நன்னய பட்டரால்தான் தெலுங்கு, பேசும் மொழியாகவும் எழுதும் மொழியாகவும் முழு வடிவம் பெற்றது. கீழைச் சாளுக்கிய அரசரான

முதலாம் இராசராசன் (கி.பி. 1019-61) நன்னய பட்டரை ஆதரித்தார்.

காகதியர்கள் கி.பி. 12, 13-ஆம் நூற்றாண்டுகளில் வாரங்கலைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்தார்கள். அவர்கள் கிழக்காசிய நாடுகளுடன் வாணிக உறவுகளை வைத்திருந்தனர். அம்மரபின் கடைசி அரசரான பிரதாபருத்திர தேவரை, கி.பி. 1323-ஆம் ஆண்டு தில்லி சுல்தானியத்தின் துக்ளக்கு மரபுச் சுல்தான் கியாசுதீன் துக்ளக்கினால் அனுப்பப் பட்ட படைகள், தோற்கடித்து ஆந்திராவைத் தில்லிச் சுல்தானியத்துடன் இணைத்துக் கொண்டன.

முகம்மதியர் ஆட்சியில் இந்து சமயத்திற்கும் தெலுங்கு மொழிக்கும் இடர் ஏற்பட்டது. எனவே கி.பி. 1336-ஆம் ஆண்டு அரிஅரர், புக்கர் ஆகிய இரண்டு சகோதரர்கள் துங்கபத்திரா ஆற்றின் தென்கரையில் விசயநகரத்தை நிறுவினார்கள். விசயநகரத்தைத் தலைநகராகக் கொண்டு கி.பி. 1336 முதல் 1565 வரை சங்கம, சாளுவ, துளுவ வமிச அரசர்களும் பெனுகொண்டாவைத் தலைநகராகக் கொண்டு கி.பி. 1565 முதல் 1759 வரை ஆரவீடு மரபு அரசர்களும் ஆட்சி செய்தனர். துளுவ வமிசத்தைச் சேர்ந்த கிருட்டிணதேவராயர் (கி.பி. 1509-29) மிகச் சிறந்த அரசர். அவர் காலத்தில் கிருட்டிணா ஆற்றின் தெற்கேயுள்ள தென்னகம் முழுவதும் அவராட்சியின் கீழ்க் கொண்டுவரப் பட்டிருந்தது. அக்காலத்தில் இந்து சமய மறுமலர்ச்சி ஏற்பட்டது. தெலுங்கு, கன்னடம், வடமொழி முதலிய மொழிகள் ஏற்றம் பெற்றன. தென்னகத்தின் பல சிறந்த இடங்களில் பல கோயில்கள் கட்டப்பட்டன; பல புதுப்பிக்கப்பட்டன.

முகம்மது-பின்-துக்ளக்கு தில்லிச் சுல்தானாக இருந்தபோது பேரரசின் பல இடங்களில் கலகங்கள் நடைபெற்றன. தக்காணத்தில் கி.பி. 1347-ஆம் ஆண்டு ஆசன் என்பவர் புரட்சிக்கொடி ஏந்தி அலாவுதீன் பாமன்சா என்ற பெயருடன் தம்மைச் சுதந்திர அரசர் என அறிவித்துக் கொண்டார். குல்பர்கா அவருடைய தலைநகரம். இங்ஙனம் பாமினி அரசு நிறுவப்பட்டது. கோதாவரி-கிருட்டிணா ஆகிய ஆறுகளுக்கிடையே உள்ள ஆந்திராவின் பல பகுதிகள் பாமினிச் சுல்தான்களின் ஆட்சிக்குட் பட்டிருந்தன. பாமினிச் சுல்தான்களுக்கும் விசயநகர அரசர்களுக்கும் இடையே பல போர்கள் நடைபெற்றன. பாமினி அரசு கி.பி. 1481-ஆம் ஆண்டு வீழ்ச்சியுற்றுப் பீசப்பூர், அகமது நகர், பேரார், கோல்கொண்டா, பீடார் ஆகிய ஐந்து அரசுகள் தோன்றின. இவ்வரசுகளின் சுல்தான்களும் அடிக்கடி விசயநகரைத் தாக்கினார்கள். இறுதியாகக் கி.பி. 1565-இல் நடைபெற்ற தலைக்கோட்டைப் போரில் விசயநகரப் படைகள் மிகக் கடுமையாகத் தாக்கப் பட்டுத் தோற்கடிக்கப்பட்டன. விசயநகரத்தில் இருந்த பல கட்டடங்களும் கோயில்களும் இடித்துத் தள்ளப்பட்டன. அதையடுத்து விசயநகர அரசு சரிவடையத் தொடங்கியது.

பாமினி அரசின் அழிவுக்குப் பின்னர்த் தோன்றிய ஐந்து அரசுகளில் கோல்கொண்டா அரசு தலைசிறந்தது. அதை ஆட்சி செய்த குத்பு சாகி மரபுச் சுல்தான்கள் (கி.பி. 1518-1867) கோல்கொண்டாவிலும் அவர்களால் உருவாக்கப்பட்ட புதிய நகரமாகிய ஐதராபாத்திலும் அழகுமிகு பள்ளிவாசல்களையும் கட்டடங்களையும் கட்டினார்கள். தெலுங்கானா பகுதியின் வளர்ச்சிக்கு ஆவன செய்தார்கள். மொகலாயப் பேரரசர் அவுரங்கசீப்புக் கி.பி. 1687-ஆம் ஆண்டு கோல்கொண்டாவை வென்றதன் பின்னர் ஆந்திரா முழுவதும் அவராட்சியின் கீழ் வந்தது.

அவுரங்கசீப்பின் மறைவுக்குப் பின்னர் மொகலாயப் பேரரசு அழியத் தொடங்கியது. நைசாம்-உல்-முல்கு என்பவர் கி.பி. 1725-ஆம் ஆண்டு அசப்சா என்ற பெயருடன் ஐதராபாத்தைத் தலைநகராகக் கொண்டு உரிமைபெற்ற அரசராகச் செயற்பட்டார். அவரும் அவருக்குப் பின் ஆட்சி செய்தவர்களும் 'நைசாம்' என்றே அழைக்கப்பட்டார்கள்.

ஆங்கிலேயர்களும் பிரெஞ்சுக்காரர்களும் கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் தென்னகத்தில் தங்கள் ஆதிக்கத்தை விரிவுபடுத்தும் முயற்சியில் நைசாமின் அரசியல் விவகாரங்களிலும் தலையிட்டார்கள். அத்தகைய தலையீட்டில் ஆங்கிலேயர்கள் வெற்றி பெற்றுக் கி.பி. 1765-66-ஆம் ஆண்டுகளில் நைசாமிடமிருந்து வடசர்க்கார் மாவட்டங்கள் என்று அழைக்கப் பட்ட கஞ்சம், விசாகப்பட்டினம், கோதாவரி, கிருட்டிணா முதலிய மாவட்டங்களைப் பெற்றார்கள். வெல்லெசுலி பிரபு இந்தியாவில் தலைமை ஆளுநராக இருந்தபோது பிரெஞ்சுக்காரர்களின் அரசியல் செல்வாக்கை முறியடிக்கத் துணைப்படைத் திட்டத்தைக் கொண்டுவந்தார். அத்திட்டத்தை ஐதராபாத்து நைசாம் ஏற்றுக்கொள்ளும்படிச் செய்து அவரிடமிருந்து கி.பி. 1800-ஆம் ஆண்டு அனந்தபூர், பெல்லாரி, கடப்பை, கர்நூல் ஆகிய மாவட்டங்களை ஆங்கில அரசு பெற்றது. அவை நைசாமினால் கொடுக்கப்பட்டதினால் 'கொடை மாவட்டங்கள்' என்று அழைக்கப்பட்டன. ஏற்கனவே கருநாடகப் போர்கள், மைசூர்ப் போர்கள் ஆகியவற்றில் ஆங்கிலேயர்கள் வெற்றிபெற்றுத் தென்னகத்தில் பல பகுதிகளைக் கைப்பற்றிக் கொண்டிருந்தனர். அவை எல்லாம் வெல்லெசுலி காலத்தில் ஒன்றாக இணைக்கப்பட்டுச் சென்னை மாநிலமாக அமைக்கப் பட்டது. எனவே, வெல்லெசுலி, 'சென்னை மாநி

லத்தை உருவாக்கியவர்' என்று சிறப்பிக்கப்பட்டார்.

இந்திய விடுதலை இயக்கத்தின்போது ஆந்திரத் தலைவர்கள் ஆங்கில ஆட்சியை எதிர்த்துப் போரிட்டனர். துக்கிராவு கோபாலகிருட்டிணையா 1921-ஆம் ஆண்டு குண்டூர் மாவட்டத்தில் ஆங்கில ஆட்சியை எதிர்த்துச் சத்தியாக்கிரகம் நடத்தினார். மேற்குக் கோதாவரியைச் சேர்ந்த அல்லூரி சீதாராமராசு 1922-24-ஆம் ஆண்டுகளில் ஆங்கிலேயரை எதிர்த்துப் புரட்சிக்கொடி ஏந்தினார். அதன் விளைவாக அவர் சுட்டுக் கொல்லப்பட்டார். காந்தியடிகள் 1930-34-ஆம் ஆண்டுகளில் நடத்திய சட்டமறுப்பு இயக்கத்தின்போது 'ஆந்திரரின் சிங்கம்' என்று சிறப்புப் பெயர்பெற்ற தங்குதூரி பிரகாசம், நாகேசுவரராவ் பந்தலு,திருமதி துர்க்காபாய் முதலானவர்கள் கலந்துகொண்டு நாட்டின் விடுதலைக்காகப் போராடினார்கள்.

மவுண்டுபேட்டன் பிரபு, 1947-ஆம் ஆண்டு வெளியிட்ட சூன் திட்டத்தின்படி இந்தியத் துணைக் கண்டத்தை இந்தியா, பாகிசுத்தான் என்ற இரண்டு நாடுகளாகப் பிரித்துச் சுதந்திரம் கொடுக்கப்போவதாக அறிவிக்கப்பட்டது. மேலும் அப்பொழுது இருந்த 562 சுதேச அரசுகள் 1947-ஆம் ஆண்டு ஆகசுட்டு 15-ஆம் நாளுக்குள் இந்தியாவுடன் அல்லது பாகிசுத்தானுடன் இணைந்துவிட வேண்டும் என்றும், எந்த ஓர் அரசும் தனி நாடாக இயங்குவதை ஆங்கில அரசு அனுமதிக்காது என்றும் திட்டவட்டமாக அறிவிக்கப்பட்டது. அதன்படி இந்தியா சுதந்திரம் பெற்றபோது ஐதராபாத்து, காச்மீரம், சூனாகத்து ஆகிய மூன்று சுதேச அரசுகளைத் தவிர மற்ற எல்லா அரசுகளும் இந்தியா அல்லது பாகிசுத்தானுடன் இணைந்துவிட்டன. ஐதராபாத்து அரசு தனிநாடாக இயங்கும் என நைசாம் அறிவித்தார். இந்தியா சுதந்திரம் பெற்ற பின்னரும் அது தனி நாடாகவே இயங்கிவந்தது. ஆனால் உலக நாடுகளில் எதுவும் அதைத் தனிநாடாக ஏற்றுக் கொள்ளவில்லை. அதே நேரத்தில் ஐதராபாத்துத் தனி நாடாக இயங்குவதை இவ்வரசில் வாழ்ந்த மக்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. அங்கு வாழ்ந்த ஆறு கோடி மக்களில் 85 விழுக்காட்டினர் இந்துக்கள். ஆனால், நைசாம் மட்டும் முகம்மதியர். ஆட்சித் துறையில் இருந்தவர் பெம்பகுதியினர் முகம்மதியர். இந்நிலையில் நைசாமின் துணையுடன் காசிம் ரசுவி தலைமையில் இயங்கிய 'இரசாக்கர்கள்' என்ற சமயவெறி கொண்ட முகம்மதியத் தீவிரவாதிகள் இந்துக்களின் உயிருக்கும் உடைமைக்கும் ஊறு விளைவித்தனர். ஐதராபாத்து அரசில் சட்டம் ஒழுங்கு ஆகியவை சீர்குலைந்தன. இந்திய சுதந்திர அரசு நைசாமுக்கு இறுதி எச்சரிக்கை விடுத்தது. அதை நைசாம் புறக்கணித்தார். இந்தியாவின் தலைமை ஆளுநர் சி. இராசகோபாலாச்சாரியும், தலைமை அமைச்சர் நேருவும், சுதேச அரசுகளின் இணைப்பு அமைச்சர் சர்தார் பட்டேலும், ஐதராபாத்து அரசில் சட்டம் ஒழுங்கை நிலை நாட்டுவது இந்திய அரசின் கடமை என முடிவு செய்தனர். எனவே, 1948-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 13-ஆம் நாள் படைத்தலைவர் செ.என். சவுதிரி தலைமையில் இந்தியப் படைகள் ஐதராபாத்து அரசில் நுழைந்தன. ஐதராபாத்தின் படைத்தலைவர் செப்டம்பர் மாதம் 18-ஆம் நாள் சரணடைந்தார். அடுத்த சில மாதங்களில் சட்டம், ஒழுங்கு ஆகியவை நிலைநாட்டப்பட்டன. பின், 1950-ஆம் ஆண்டு சனவரி மாதம் 26-ஆம் நாள் ஐதராபாத்து அரசு இந்திய அரசுடன் இணைந்தது. நைசாம் பெயரளவில் நிருவாகத் தலைவராக இருக்க இசைந்தார்.

இந்தியா சுதந்திரம் பெற்றபோது, தெலுங்கர்கள் வாழ்ந்த ஒன்பது மாவட்டங்கள் ஐதராபாத்து அரசிலும் மற்றப் பன்னிரண்டு மாவட்டங்கள் சென்னை மாநிலத்திலும் இருந்தன. தெலுங்கு பேசும் மக்களுக்குத் தனி மாநிலம் வேண்டுமென தெலுங்கர்கள் கோரினார்கள். அக்கோரிக்கையை வலியுறுத்திப் பொட்டி சீராமுலு 1952-ஆம் ஆண்டு திசம்பர் மாதம் உண்ணாநோன்பிருந்து இறந்தார். தெலுங்கு மாவட்டங்களில் பதட்டநிலை நிலவியது. எனவே சென்னை மாநிலத்தில் இருந்த தெலுங்கு மாவட்டங்கள் பிரிக்கப்பட்டு 1953-ஆம் ஆண்டு அக்டோபர் முதல் நாள் ஆந்திர மாநிலம் அமைக்கப்பட்டது. கர்நூல் புதிய ஆந்திர மாநிலத்தின் தலைநகராயிற்று.

ஆந்திர மாநிலம் அமைக்கப்பட்ட பின்னர் மொழிவழி மாநிலங்களை உருவாக்கும் பணியை இந்திய அரசு மேற்கொண்டு ஒரு குழுவை நியமித்தது. அக்குழு தன்பணியைச் செய்து கொண்டிருந்த போது ஆந்திராவிலும், ஐதராபாத்து அரசிலும் வாழ்ந்த எல்லாத்தெலுங்கர்களும் இணைந்து விசால ஆந்திராவை அமைக்க வேண்டுமென விரும்பினர். மேற்கூறப்பட்ட குழு இந்திய மாநிலங்களை மொழி வழியாக மாற்றியமைக்கலாம் என்று பரிந்துரைகளை வழங்கியது. மாற்றி அமைத்தற்குரிய வழிமுறைகளையும் அது குறிப்பிட்டது. அப்பரிந்துரைகளை இந்திய அரசு ஏற்று 1956 ஆம் ஆண்டு ஆகசுட்டு மாதம் மாநில எல்லைகளை மாற்றும் சட்டத்தை இயற்றியது. அச்சட்டம் நவம்பர் முதல் நாள் நடைமுறைக்கு வந்தது. அதன்படி இந்தியாவில் 14 மொழிவழி மாநிலங்களும் 6 மத்திய அரசின் நேரடி ஆட்சிக்குட்பட்ட பகுதிகளும் அமைக்கப்பட்

டன. அவற்றுள் ஆந்திரப் பிரதேசம் ஒன்று. இவ்வாறு அமைக்கப்பட்ட ஆந்திராவுடன், ஐதராபாத்து அரசு கலைக்கப்பட்டு அதிலிருந்த தெலுங்கானா என்ற தெலுங்கு மாவட்டங்கள் இணைக்கப்பட்டன. புதிய விசால ஆந்திரப் பிரதேசத்தின் தலைநகரம் கர்நூலிலிருந்து ஐதராபாத்துக்கு மாற்றப்பட்டது.

ஆந்திரத்தில் 1953-ஆம் ஆண்டிலிருந்து காங்கிரசுக் கட்சி ஆட்சி செய்து வந்தது. எனினும் பொருளாதார முன்னேற்றத்திலும், அரசியல் செல்வாக்கிலும் ஆந்திரப்பகுதியைச் சேர்ந்தவர்களே ஏற்றம் பெற்றிருப்பதாக தெலுங்கானா மக்கள் குறைபட்டார்கள். எனவே தெலுங்கானாவைச் சேர்ந்த தெலுங்கர்கள் டாக்டர் எம். சென்னாரெட்டி தலைமையில் தெலுங்கானாவைத் தனி மாநிலமாக அமைக்கப்பட வேண்டுமென 1969-1972-ஆம் ஆண்டுகளில் போராட்டம் நடத்தினார்கள். ஆனால், அக் கோரிக்கையை மத்திய அரசு ஏற்க மறுத்தது. அதே நேரத்தில் தெலுங்கானாப் பகுதியின் வளர்ச்சிக்கு முன்னுரிமை தருவதற்காக மத்திய அரசு ஆறு அம்சத் திட்டத்தை வழங்கியது. அதைத் தெலுங்கானா மக்கள் ஏற்றுக் கொண்டனர். ஆந்திரப் பிரதேச மாநிலம் துண்டாடப்படாமல் ஒருங்கிணைந்த மாநிலமாகத் தொடர்ந்து இயங்கி வருகிறது.

ஆந்திரப்பிரதேசச் சட்டமன்றப்பொதுத்தேர்தல் 1983-ஆம் ஆண்டு சனவரி மாதம் நடைபெற்றபோது புதிதாக அமைக்கப்பட்ட தெலுங்குதேசம் என்னும் கட்சி வெற்றி பெற்றது. அக்கட்சியின் தலைவர் என்.டி.இராமராவ் முதலமைச்சராக இருந்து வருகிறார்.

நா.ப.

**ஆந்திரபோவ் யூரி விலதிமிரோவிச்சு (1914-1984)** சோவியத்து நாட்டின் ஐந்தாம் தலைவராவார். இவர் உலக அமைதிக்குப் பாடுபட்ட தலைவர்களுள் ஒருவர். இவர் 1914-ஜூன் மாதம் 15-ஆம் நாள் ஓர் இரயில்வே ஊழியரின் மகனாகப் பிறந்தார். ஆந்திரபோவ் (Andropov Yuri Viladimirovich) மேற்கல்வி கற்றவர். இவர் 1939-ஆம் ஆண்டு முதல் சோவியத்துப் பொதுவுடைமைக் கட்சியின் உறுப்பினராக இருந்தார்.

பதினாறாம் வயதில் இளம் பொதுவுடைமைக் கட்சியின் உறுப்பினராக இருந்த ஆந்திரபோவ் ஒரு தொழிலாளியாக வாழ்க்கையைத் தொடங்கினார். பின்னர், வோல்கா கப்பல் போக்குவரத்து நிறுவனத்தில் மாலுமியாகப் பணியாற்றினார். நீர்வழிப் போக்குவரத்துத் தொழில் நுட்பப் பள்ளி ஒன்றின் முழு நேரச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். விரைவிலேயே கப்பல் கட்டும் தளத்தில் மையக்குழுவின் அமைப்பாளர் பதவிக்கு உயர்த்தப்பட்டார். அப்பகுதியின் முதற் செயலாளராக இவர் 1938-இல் தேர்ந்தெடுக்கப்பட்டார். கரேலியாவின் மையக்குழுவில் 1940-இல் முதற் செயலாளரானார்.



ஆந்திரபோவ்

இரண்டாம் உலகப் போரின் தொடக்க நாள் முதல் ஆந்திரபோவ் கரேலியாவில் கொரில்லா இயக்கத்தில் பங்கெடுத்துக் கொண்டார். கரேலியப் பொதுவுடைமைக் கட்சி மையக்குழுவில் 1947-இல் இரண்டாம் செயலாளரானார்.

இவர் 1953-இல் அங்கேரிய மக்கள் குடியரசில் பல ஆண்டுகள் சோவியதது உருசியாவின் தூதுவராக இருந்தார். பின்னர் 1957-இல் கட்சியின் மையக்குழுவின் ஒரு பிரிவுக்குத் தலைவரானார்.

இவர் கட்சியின் 22-ஆம் காங்கிரசிலும் அதன் பின்னரும் சோவியத்துப் பொதுவுடைமைக் கட்சி மத்திய குழுவின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அடுத்து, 1962-இல் மத்திய குழுவின் செயலாளரானார். சோவியத்து அமைச்சரவையில் 1967 இல் அரசாங்கப் பாதுகாப்புக் குழுவின் தலைவரானார். அதே ஆண்டில் இவர் சோவியத்துப் பொதுவுடைமைக் கட்சி மைய அரசியல் குழுவின் மாற்று உறுப்பினரானார். இவ்வாறு படிப்படியாக உயர்ந்து, 1982 மே மாதம் ஆந்திரபோவ் சோவியத்துப் பொதுவுடைமைக் கட்சி மையக்குழுச் செயலாளர் ஆனார்.

கட்சியின விருப்பப்படி யூரி ஆந்திரபோவ் வகித்த எல்லாப் பொறுப்புகளிலும் இலெனினது மாபெரும் இலட்சியத்திற்கும் கட்சிக்கும் அவர் பேரார்வம் காட்டினார், கட்சியின் முடிவுகளைச் செயற்படுத்து வதிலும் கம்யூனிசக் கருத்துகள் வெற்றி பெறுவதற் கான போராட்டத்திலும், தம் சக்தி, அறிவாற்றல் அனுபவம் யாவற்றையும் ஈடுபடுத்தினார்.

பொதுவுடைமைக் கட்சி, சோவியத்து அரசு ஆகியவற்றின் புகழ்பெற்ற தலைவர்களுள் ஒருவரான ஆந்திரபோவ் தாயகத்துக்கு ஆற்றிய சேவைக்காகச் சமதரும உழைப்பு வீரர் விருதும், நான்கு இலெனின் விருதுகளும், அக்டோபர் புரட்சி விருதும், செம்ப தாகை விருதும், மூன்று செம்பதாகை உழைப்பு விருதுகளும், மேலும் பல பதக்கங்களும் பெற்றுள் ளார்.

சோவியத்துக் கம்யூனிசுடுக் கட்சிப் பொதுச் செயலாளராக 1982 நவம்பரில் தேர்ந்தெடுக்கப்பட் டார். பின் 1983 சூன் 16-இல் சோவியத்துத் தலை மைக் குழுவின் கட்சித் தலைவராகவும் ஆட்சித் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவர் 1984 பிப்பிரவரி 9-ஆம் நாள் காலமானார்.

த. கோ.

**ஆந்திரனோவ்** திராவிட மொழிகளின் ஆராய்ச்சிக்கு வித்திட்ட மொழியியல் அறிஞர்க ளுள் ஒருவர். திராவிட மொழிகள் பற்றிய ஆராய்ச்சி கி.பி. 16-ஆம் நூற்றாண்டிலேயே தொடங்கிவிட்டது. என்றாலும், கால்டுவெல்லுக்குப் பின்னரே கால் கொண்டு, களம் கண்டது எனலாம். திராவிட மொழி யியல் இன்று சிறந்த வளர்ச்சியைப் பெற்றுள்ளது. பல்வேறு அறிஞர்கள் திராவிட மொழிகளின் பல் வேறு கூறுகள் பற்றி ஆராய்ந்து வருகிறார்கள். இத் தகைய வளர்ச்சிக்கு அடித்தளமாக இருந்த அறிஞர் பலர். திராவிட மொழிகளின் ஒப்பியல் ஆராய்ச்சிக்கு வித்திட்டவர்களும், அதன் வளர்ச்சியைக் கண்டவர் களுள் பெரும்பாலோரும் மேலை நாட்டவர்களே. அவர்களுள் உருசிய நாட்டுப் பேரறிஞர் டாக்டர் ஆந்திரனோவ் (Dr. M. S. Andronov) ஒருவராவர்.

மைக்கேல் எசு. ஆந்திரனோவ் 1931-ஆம் ஆண்டு மாசுகோவில் பிறந்தார். அங்குள்ள கீழை நாட்டு ஆய்வு நிறுவனத்தில் (Moscow Institute of Oriental Studies) பட்டப் படிப்பை முடித்தார். தமிழ் மொழி யையும் வங்காள மொழியையும் 1949-54ஆம் ஆண்டு களில் பயின்றார். 'வங்காளி மொழியில் திராவிடக் கூறுகள்' (Dravidian Elements in the Bengali Language) என்ற ஆய்வேட்டிற்கு 1954-ஆம் ஆண்டில் எம். ஏ. பட்டம் பெற்றார். சோவியத்து நாட்டு அறிவியற் கழகத்தைச் சார்ந்த கீழை நாட்டு ஆய்வு நிறுவனத்தில் 1954-இலிருந்து 1957 வரை முதுகலை மாணவராக இருந்தார். சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையில் 1958-59-ஆம் ஆண்டில் ஆய்வு மாணவராக இருந்தார். இவர் இலக்கணத் துறையில் ஆய்வு செய்து பிஎச்.டி., டி.லிட். ஆகிய பட்டங்களைப் பெற்றார்.

இவர் மாசுகோவிலுள்ள சோவியத்து நாட்டு அறி வியற் கழகத்தைச் சார்ந்த கீழை நாட்டு ஆய்வு நிறுவனத்தில், முதுநிலை ஆய்வாளராகவும் (Senior Research Scholar) தென்கிழக்காசிய மொழித் துறைத் தலைவராகவும் பணி ஏற்றார்.

இந்திய மொழிகள் குறித்து நூற்றுக்கு மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளும் திராவிட மொழிகள் பற்றிப் பதினைந்துக்கு மேற்பட்ட நூல்களும் எழுதியுள்ளார். திராவிட மொழிகளும் அல்டாயிக்கு மொழிகளும் ஒரு கால நிலையில் ஒரே இடத்தில் பேசப்பட்டமையால், ஒன்றின் பண்புகள் மற்றொன்றில் காணப்படுவதன் காரணமாக இவற்றிடையே ஒற்றுமைக் கூறுகளைக் காணமுடிகிறது என்று தம் நூல் ஒன்றில் ('Two Lectures on the Historicity of the Language families' Annamalai University, 1969) குறிப்பிட்டுள்ளார். திராவிட மொழிகளின் ஒப்பு மொழியியலை மட்டு மன்றித் தமிழ், கன்னடம், பிராகுயி (Brahui) மொழி களையும் நன்கு ஆராய்ந்து, தனித்தனி நூல்கள் எழுதியுள்ளார். தமிழ் மொழியின் இலக்கணம் பற் றியும் (The Standard grammar of modern and classical Tamil) நூல் எழுதியுள்ளார். தமிழ்நாட்டு அர சாங்கத்தின் தமிழ் ஆராய்ச்சி வளர்ச்சி நிறுவனம் (Tamil Research and Development Council) 1973-ஆம் ஆண்டு இந்நூலுக்கு முதல் பரிசு அளித்துச் சிறப்பித் துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

திராவிட மொழிகள் பற்றியும் அவற்றின் அமைப்புகள் பற்றியும் உருசிய மொழியிலும் எழுதி யுள்ளார். தமிழ் மொழியில் காணப்படும் கிளை மொழிகள் பற்றியும் விளக்கமாக எழுதியுள்ளார். இந்தோ-ஆரிய மொழிகளுக்கும் திராவிட மொழிக ளுக்குமிடையே காணப்படும் ஒற்றுமை வேற்றுமை கள், இந்திய மொழிகள் பற்றிய ஆய்வுகள், பிராகுயி மொழி ஆகிய இவை போன்ற பல்வேறு துறைகளில் இவர் எழுதியுள்ளார். செக்கு நாட்டு அறிஞர் கமில் சுவலபில் (Kamil Zvelebil) போலவே எல்லாத் துறைகளிலும் எழுதிய பெருமை இவருக்குண்டு. உருசிய-வங்காள அகராதி, உருசிய-தமிழ் அகராதி, மலையாளம்-உருசிய அகராதி, கன்னடம் உருசிய அகராதி போன்ற அகராதிகளைப் படைத்துள்ளார்.

திராவிட மொழிகளின் அமைப்பு, ஒப்பாராய்ச்சி ஆகியவற்றில் நாட்டம் கொண்டவர்களுக்கும்

பொதுவாகத் தென் திராவிட மொழியியல் ஆராய்ச்சியில் ஆர்வம் கொண்டவர்களுக்கும், சிறப்பாகத் தமிழ் மொழியியல் ஆராய்ச்சியில் ஆர்வம் கொண்டவர்களுக்கும் இவர்தம் நூல்களும் ஆய்வுக் கட்டுரைகளும் பெரிதும் பயன்படக் கூடியன.

இவர் செய்த ஆய்வினைப் பின்வருமாறு பகுத்துக் காணலாம். தமிழ்மொழியின் பல்வேறு கூறுகளைப் பற்றிய ஆய்வு, திராவிட ஒப்பியல் ஆய்வு, தமிழ், கன்னடம், பிராகூயி மொழி பற்றி ஆய்வு செய்து தனித்தனி நூல்களாக வெளியிட்டமை, திராவிட-உரோலிக்கு மொழிகளிடையே காணப்படும் ஒற்றுமை பற்றிய ஆய்வு, இந்தோ-ஆரிய மொழிகளுக்கும் திராவிட மொழிகளுக்குமிடையே காணப்படும் உறவு பற்றிய ஆய்வு, அகராதித் துறையில் செய்த ஆய்வு எனப் பலவாறு பகுத்துக் காணலாம்.

திராவிட மொழியியல் துறையில் இவருடைய ஆராய்ச்சி நூல்களும் கட்டுரைகளும் குறிப்பிடத்தக்கனவாகும். தமிழ் மொழியையும் அதன் வாயிலாகத் திராவிட மொழிகளையும் உருசிய நாட்டில் அறியச் செய்த பெருமை இவருக்குண்டு. பேராசிரியர் பர்ரோ, எமனோ, கமில் சுவலபில் ஆகியோரைப் போன்று திராவிட மொழியியல் வரலாற்றில் ஆந்திரனோவ் அவர்களும் குறிப்பிடத் தக்கவராவார். இவருடைய கை வண்ணத்தில் திராவிட மொழியியலும் குறிப்பாகத் தமிழ் மொழியும் சீரும் சிறப்பும் பெற்றன. சு.சக்தி.

**ஆந்தை:** சங்க காலத்தில் வாழ்ந்த ஒரு சிற்றரசன்; பாண்டி நாட்டில் எயில் என்ற ஊரில் வாழ்ந்தவன். அரண் சூழ்ந்த வலிய கோட்டையில் வாழ்ந்தமையால் இவனை 'மன்னெயில் ஆந்தை' என்று மக்கள் அழைத்து வந்தனர். இவன் வாழ்ந்த காலத்தில் மதுரையைப் பூதப்பாண்டியன் என்னும் அரசன் ஆண்டு வந்தான். பூதப்பாண்டியனோடு நெருங்கிய நட்புப் பூண்டு இவன் வாழ்ந்துவந்தான். பூதப்பாண்டியனுக்குக் கண்போல் விளங்கிய நட்புடையோர்கள் பலர் இருந்தனர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்களாகக் கருதப் பெற்றோர், மாவன், அந்துவஞ்சாத்தன், ஆதனழிசி, இயக்கன் முதலானோராவர். அவர்களுள் ஒருவனே ஆந்தையென்பவனாவான். அவர்கள் எல்லோரும் பூதப்பாண்டியனுடைய அவைக்குச் சென்று கலந்து பழகிக் களிப்போடு இருப்பர். அவர்களைப் பாண்டியனுக்குக் கண்போன்ற நட்பினர் என்று அன்று பாராட்டினர்: அந்த அளவிற்குப் பாண்டிய மன்னனுக்கு உறுதுணையாய் இருந்துள்ளனர்.

ஆந்தையென்னும் பெயரில் சங்க காலத்தில் பலர் வாழ்ந்து வந்தனர். பிசிர் என்னும் ஊரைச் சேர்ந்த பெரும் புலவர் ஒருவர் இருந்தார். சோழ மன்னனோடு உயிரனைய நட்புக்கொண்டு; வாழ்ந்தவர் அவரைப் பிசிராந்தையார் என்றனர். அப்புலவரிடமிருந்து வேறுப்படுத்திக் காட்டுவதற்காக, இவ்வாந்தையாரை 'மன்னெயில் ஆந்தை' என்று அழைத்தனர். இவனைப் பற்றிய குறிப்பைப் புறநானூற்று எழுபத்து ஒன்றாம் பாடலில் காணலாம். கே.நா.

**ஆந்தோளிதம்:** இது கருநாடக இசையில் பாடப்படும் பலவகை கமகங்களுள் ஒன்றாகும். கீழே உள்ள ஒரு சுரத்தில் சிறிது நேரம் நின்று, பின் அதிலிருந்து நான்கைந்து சுரங்களுக்கு அடுத்தாற்போல் உள்ள சுரத்தை அதன் சாயல் விளங்கப் பாடி, மீண்டும் கீழ்ச் சுரத்தைத் தொடவேண்டும். இவ்விதம் மேலும் கீழும் ஊஞ்சல் ஆடுவது போல் இந்தக் கமகம் இருக்கும். வடமொழியில் 'ஆந்தோளிதம்' என்றால் ஊஞ்சல் என்பது பொருள். எனவே இந்தக் கமகம் ஆந்தோளித கமகம் எனப் பெயர் பெறும். (எ.டு) சரிசபாப, ரிகரிமாம.

**ஆப் ஆறு:** உருசியாவின் சிறந்த ஆறுகளுள் ஒன்று. இது மேற்குச் சைபீரியாவிலுள்ள ஆல்பாய் மலைகளில் தோன்றி, வடமேற்காக 3,681 கி.மீ. பாய்ந்து, ஆர்க்டிக்குப் பெருங்கடலில் கலக்கிறது. ஆப் ஆற்றில் (Ob River) கப்பல் போக்குவரத்தும் நடைபெறுகிறது. அக்டோபர் முதல் சூன் முடிய இந்த ஆறு பனிக்கட்டியாக உறைந்துவிடுகிறது. கோடைக் காலத்தில் கப்பல்கள் பல இவ்வாற்றின் வழியே செல்கின்றன. இவ்வாற்றின் துணை ஆறு இர்ட்டிசு (Irtish) ஆகும்.

**ஆப்கானிசுத்தானம்** தென்மேற்கு ஆசியாவிலுள்ளதொரு நாடு. இது பெரிய மலைகள், வெப்பமிக்க பாலைநிலங்கள், வளம்கொழிக்கும் பள்ளத்தாக்குகள், அலைஅலையான சமவெளிகள்




ஆப்கானிசுத்தானம்

ஆகியவற்றைக் கொண்டுள்ளதாகும். இந்நாட்டிற்குக் கடற்கரை கிடையாது. வடக்கில் சோவியத்து உருசியாவும், வடகிழக்கில் சீனாவும், கிழக்கிலும் தெற்கிலும் பாகிசுத்தானும், மேற்கில் ஈரானும் இந்நாட்டின் எல்லைகளாகும்.

இந்நாடு உலகில் வளர்ச்சி குன்றிய நாடுகளுள் ஒன்றாகக் கருதப்படுகிறது. ஆப்கானியத் தொழிலாளர்களுள் முக்கால் பகுதியினர் வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். அவர்களும் தொன்றுதொட்டுப் பயன்படுத்தி வந்த பழங் கருவிகளையும், முறைகளையுமே கையாண்டு வருகின்றனர். மக்கள் தொகையில் ஆறில் ஒரு பகுதியினர் நாடோடிகள் ஆவர். அவர்கள் தம் கால்நடைகளுடன் மேய்ச்சல் நிலப்பகுதிகளில் சுற்றித் திரிவார்கள். காபூல் இந்நாட்டின் தலைநகரும், மக்கள் தொகை மிகுந்த நகரமும் ஆகும்.

இந்நாட்டு மக்களுள் பெரும்பாலோர் இசுலாமியர். நாட்டு மக்கள் சற்றேறக்குறைய இருபது இனங்களைச் சார்ந்தவர்கள். பெரும்பாலான இனத்தவர்கள் தங்களுக்கென்று தனித்த மொழியையும் பண்பாட்டு மரபையும் கொண்டுள்ளனர். அதன் பயனாக ஆப்கானிசுத்தானத்தை ஒற்றுமைப் படுத்திப் புத்துலக நாடாக்க இயலவில்லை.

இந்நாட்டுக்கு நெடிய வரலாறுண்டு. அவ்வரலாறும் தொல்லைகள் நிறைந்ததாகும். தொடக்கக் காலத்தில் இந்நாடு இந்தியப் பேரரசின் பகுதியாக இருந்தது. மகாபாரதத்தில் இடம் பெறும் காந்தாரியின் தாயகம் இப்பகுதியாகக் கருதப்படுகிறது. இதனைக் காந்தாரம் என்றழைத்தனர். மௌரியப் பேரரசின் பகுதியாக ஆப்கானிசுத்தானம் இருந்து வந்தது. மௌரியப் பேரரசின் ஆட்சிப்பகுதியாகு முன், பாரசீகர்களும், கிரேக்கர்களும் இதன் மீது படையெடுத்து வெற்றிகண்டனர். பின்னர் மங்கோலியரும் இதனைக் கைப்பற்றினர். அண்மைக் காலத்தில் அந்நிய நாடுகளான இங்கிலாந்தும், உருசியாவும் இந்நாட்டின் நடவடிக்கைகளில் தலையிட்டிருந்தன. உள்நாட்டிலும் ஆட்சியைக் கைப்பற்றும் போராட்டத்தில் பலர் ஈடுபட்டமையால் நாட்டின் ஒருமையுணர்வு குன்றியிருந்தது. அதன் விளைவாக இனக்கலவரங்களும், அரசியல் கொலைகளும் நிகழ்ந்தன.

இதன் பரப்பளவு 6,52,090 ச.கி.மீ. இந்நாட்டின் மக்கள் தொகை 1,62,80,000 (1981). இதில் 25 இலட்சம் பேர் நாடோடிகள். இவர்களுள் 20 இலட்சம் பேர் பாகிசுத்தானிலும், ஈரானிலும் அகதிகளாக வாழ்கின்றனர். தென் ஆசியாவிலேயே ஆப்கானிசுத்தானத்தில்தான் மக்கள் தொகைப் பெருக்கம் குறைவு. மருத்துவ வசதி குறைவாக இருப்பது மக்கள் தொகைக் குறைவாக இருக்கக் காரணமாகலாம். இங்குப் பிறக்கும் குழந்தைகளுள் ஏறத்தாழப் பாதிக்குமேற்பட்டவர்கள் பிறந்த ஓராண்டுக்குள்ளேயே மடிகின்றனர்.

ஆப்கானிசுத்தான இனத்தவரில் புசுத்துன்களே எண்ணிக்கையில் பெரும்பான்மையோராவர். அவர்களைப் பத்தான்கள் என்றும் கூறுவர். பத்தான்களில் பெரும்பாலோர் பாகிசுத்தானில் வாழ்கிறார்கள். ஆப்கானிசுத்தானத்தின் அரசியல் ஆதிக்கம் அவர்கள் கைவசமேயுள்ளது. அரசாங்கத்திலும், படையிலும் உயர் பதவிகள் அவர்கள் வசம்தான் உள்ளன. அவர்கள் பேசும்மொழியைப் புசுத்தோ என்பர். அது ஆப்கானிசுத்தானத்தின் ஆட்சி மொழிகளுள் ஒன்று.



காபூல்

மற்றோர் இனத்தவர் தாசிக்குகள் எனப்படுவர். அவர்கள் நடு, வடகிழக்கு ஆப்கானிசுத்தானத்தில் வாழ்கின்றனர். அவர்களுள் பெரும்பாலோர் நகரங்களில் வணிகர்களாகவும், கைத்தொழில் வல்லுநர்களாகவும் வாழ்கின்றனர். அவர்கள் தரி (Dari) என்னும் மொழியைப் பேசுகிறார்கள். தரி இரண்டாம் ஆட்சி மொழியாகும்.

இந்நாட்டில் 90 விழுக்காடு மக்கள் நாட்டுப்புறங்களில் வாழ்பவர்கள். நாட்டுப்புறங்களிலும், நகர்ப்புறங்களிலும் வாழும் மக்கள் பெரும்பாலோர் கல்லால் கட்டப்பெற்ற வீடுகளிலோ, களிமண் செங்

கற்களினால் கட்டப்பெற்ற வீடுகளிலோ வாழ்கின்றனர். நகரங்களில் வாழும் ஒருசிலர், புதிய வீடுகளிலும், காரைக்கட்டுக் குடியிருப்பு வீடுகளிலும் (Concrete) வாழ்கின்றனர். நாடோடிகள் ஆட்டு உரோமத்தாலான கூடாரங்களில் வாழ்கின்றனர்.

நகர மக்களுள் சிலர் மேலைநாட்டு ஆடைகளை உடுத்தாலும், பெரும்பாலோர் மரபுவழியான ஆடைகளையே உடுத்துவர். ஆண்களும், பெண்களும் நீண்டு, தளர்ந்த, பளிச்சென்று தென்படுகிற வண்ண ஆடைகளை அணிவர். குளிர்காலங்களில் ஆட்டுத்தோலினாலான பளுவான மேல் உடுப்புகளை அணிவர். ஆண்களுள் பெரும்பாலோர் தலைக் கட்டுக் கட்டிக் கொள்வர். நகர்ப்புறப் பெண்களுள் சிலர் சத்ரி (Chadri) எனப்படும் உடையால் கண்களைத் தவிர உடல் முழுவதையும் மூடி மறைத்துக் கொள்வர். நாட்டுப்புறப் பெண்கள் சிறுபோர்வையால் தம் தலைகளை மூடிக்கொள்வர்.

இவர்கள் தட்டையான உரொட்டித் துண்டுகளை உணவாகக் கொள்வர். மேலும் இறைச்சியையும் அரிசியையும் உணவாக உட்கொள்கிறார்கள். பாலாடைக்கட்டி, கொட்டைகள், உலர்ந்த பழவகைகள் ஆகியவை இவர்தம் உணவின் பிறபொருள்கள் ஆகும்.

ஏனைய இசுலாமிய நாடுகளைப் போன்றே ஆப்கானியப் பெண்களும் தொன்றுதொட்டுச் சமூகத்தில் இரண்டாம் தர நிலையில்தான் உள்ளனர். அவர்களைக் கட்டுப்படுத்தும் கட்டுப்பாடுகள் பல. எனவே, அவர்கள் முன்னேற்றம் தடைபட்டு நிற்கிறது. எனினும்,1964-ஆம் ஆண்டுச் சட்டப்படி ஆண்பெண் சரிநிகர் சமமானவர்கள் என்பது அறிவிக்கப்பட்டுள்ளது. இப்போது பெண்களின் சமூகப் பொருளாதார நிலை உயர்ந்துள்ளது.

ஆப்கானியருள் தொண்ணூறு விழுக்காட்டினர் இசுலாமியர்களே. அவர்தம் குடும்பம், சமூகநலம், வாழ்வின் இயல்புகள் போன்றவற்றில் சமயத்தின் செல்வாக்கினைத் தெற்றெனக் காணலாம். ஒவ்வோர் ஆப்கானிய கிராம அல்லது நாடோடிக்குழுவிலும் முல்லாஎனப்படும் சமயத் தலைவர் இருப்பார். பண்டைக் காலங்களில் முல்லாக்கள் இசுலாமியச் சட்டத்தை விளக்கிக் கூறியதுடன், இளைஞர்களுக்குக் கற்பித்தும் வந்தனர். பள்ளிகளில், சமயத் தொடர்பற்ற கல்விக்கு ஆக்கம் கொடுத்து முல்லாக்களின் செல்வாக்கினை அரசு குறைத்துவிட்டது. எனினும் தத்தம் இனங்களில் முல்லாக்களுக்குப் பெரும் செல்வாக்கு இன்னும் நீடிக்கிறது.

ஆப்கானிசுத்தான மக்களுள் பத்தில் ஒரு பங்கினர் மட்டிலுமே எழுதப்படிக்கத் தெரிந்தவராவர். போதுமான பள்ளிகளும், ஆசிரியர்களும் இல்லாத குறையால் எல்லாக் குழந்தைகளும் பள்ளிக்குச் செல்வதில்லை ஆப்கானிசுத்தானத்தில் காபூலிலும், சலாலாபாத்திலுமாக இரு பல்கலைக்கழகங்கள் உள்ளன.

மக்கள் தொகையில் நூற்றுக்குத் தொண்ணூறு பேர் எழுதப்படிக்கத் தெரியாதவர்களாகையால், மக்கள் மரபுவழி இலக்கியம், நாட்டுப்புறப்பாடல், நாட்டுப்புற நாடகம், நடனம் போன்றவை ஆப்கானியரின் வாழ்வில் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளன. அதனால், இவர்கள் தாம் ஏற்றுக் கொண்ட மதிப்புமிக்க வாழ்க்கை மூலங்களையும், மரபுகளையும் வாழையடி வாழையாகப் பேணிக் காத்து வருகின்றனர்.

முரட்டுத் தனமான விளையாட்டுகளிலும், கேளிக்கைகளிலும் ஆப்கானியர் மகிழ்வர். ஆடவருட் பெரும்பாலோர் வேட்டையாடுவர். சிறந்த வேட்டை நாய்களை அதற்காக அவர்கள் பயன்படுத்துவர்.

ஆப்கானிசுத்தானத்தை மூன்று இயற்கைப் பகுதிகளாகப் பிரிக்கலாம். அவை வடக்குச் சமவெளிகள், மத்திய மேட்டுநிலங்கள், தென்மேற்குத் தாழ் நிலங்கள் என்பனவாம்.

வடக்குச் சமவெளிகளில் உள்ள ஆற்றுப் பள்ளத் தாக்குகளிலும், நீர் கிட்டும் மலைப்பாங்கான பகுதிகளிலும் நிலம் செழுமைமிக்கதாகையால் வேளாண்மை செய்கிறார்கள். இங்கு ஆண்டொன்றுக்கு மழையளவு 18 செ. மீ. ஆகும்.

மத்திய மேட்டு நிலங்களில் இந்துகுசு மலைத் தொடரும் அதன் கிளைகளும் உள்ளன. ஆப்கானியருள் பெரும்பாலோர் இந்துகுசு மலைத்தொடரின் குறுகலான சமவெளிகளில் வாழ்கின்றனர். இங்கு ஆண்டுக்கு மழை அளவு 38 செ.மீ. ஆகும்.

தென்மேற்குத் தாழ்நிலங்களில் வறண்ட பாலை நிலங்களையும் வறட்சிமிக்க நிலங்களையும் காணலாம். ஆண்டிற்கு மழை இங்கு 5 முதல் 23 செ.மீ. வரை பெய்கிறது.

மக்களும் தொண்ணூறு விழுக்காட்டினர் வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். கோதுமை முதன்மையான விளைபொருள். பார்லி, தானியங்கள், பருத்தி, பழவகைகள், கொட்டைகள், அரிசி, பீட்கிழங்குகள் போன்றவை பயிரிடப்படுகின்றன. நீர்ப்பாசன வசதிகள் பெருமளவிற்குப் பெருகியிருப்பதால் இப்போது விளைபொருள்கள் மிகுதியாகப் பயிராகின்றன. இருப்பினும் புதிய இயந்திரங்கள், உரம், தரமான விதைகள் போன்றவை போதுமான அளவு கிட்டாமையால் இன்றும் விளைச்சல் குறிப்பிட்ட அளவிற்கே கிடைக்கின்றன. நாடோடிகள் கால்நடைகளை வளர்க்கின்றனர்.

அவற்றிலிருந்து பால்வகைப் பொருள்கள், இறைச்சி, ஆட்டுத்தோல்கள் ஆகியவற்றைப் பெறுகின்றனர்.

ஆப்கானிசுத்தானத்தில் மிகுதியான கனிவளம் உண்டு. ஆனால், அவற்றை வெளிக்கொணரப் போது மான சாதனங்கள் இல்லாமையால் அந்தத்துறை இதுவரை முன்னேறவில்லை. சுரங்கங்கள் அனைத் தும் அரசாங்கத்தின் கட்டுப்பாட்டில் உள்ளன.

உலகிலேயே மிகுதியாக மாணிக்கக்கல் ஆப் கானிசுத்தானத்தில்தான் கிடைக்கிறது. செவ்வந்திக் கல், கெம்புக்கல் போன்ற விலைமதிப்பற்ற கற்கள் இந்நாட்டின் ஏனைய கனிமப் பொருள்களாம். இங்கு 1960-ஆம் ஆண்டளவில் இயற்கைவாயு மிகுதி யாக இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. அதனால், நாட்டின் பொருளாதாரம் விரைவாக முன்னேறி வருகிறது. ஓரளவு நிலக்கரி, செம்பு, தங்கம், உப்புப் போன்ற பொருள்களும் ஆப்கானிசுத்தானத்தில் கிடைக்கின்றன. இந்நாட்டில் நிறைய இரும்புத் தாதுக்கள் இருந்தாலும் அவை நாட்டின் ஒரு மூலையில் இருப்பதால், பயன்படுவது குறைவே யாகும்.

இந்நாட்டில் தொழிற்சாலைகள் குறைவு. சில நூற்பு ஆலைகள், சிறுசிறு சிமிண்டு தொழிற் சாலைகள், தீப்பெட்டித் தொழிற்சாலைகள், உணவு தயாரிக்கும் தொழிற்சாலைகள் உள்ளன. வீடுகளில் தங்கம், வெள்ளியால் ஆகிய அணிகலன்கள், தோல் பொருள்கள், கம்பளம் போன்றன உருவாக்கப் படுகின்றன.

இங்கிருந்து ஏற்றுமதியாகும் பொருள்கள் பருத்தி, பழவகைகள், கொட்டைகள், இயற்கைவாயு, கம்பளங்கள், ஆட்டுத் தோல்கள் முதலியனவாகும். இயந்திரசாதனங்கள், பேருந்து வண்டிகள், பெட் ரோலியப் பொருள்கள், துணிமணிகள் போன் றவை இறக்குமதிப் பொருள்களாம். இந்நாட்டு வாணிகம் உருசியாவுடன் பெரும் அளவில் நடை பெறுகிறது.

ஆப்கானிசுத்தானத்தில் 17,000 கி.மீ. சாலைகள் உள்ளன. இங்கு இருப்புப் பாதைகள் இல்லை. ஆனால், இந்நாட்டின் தலைநகரான காபூலை ஈரா னுடனும், பாகிசுத்தானத்துடனும் இருப்புப்பாதை வழியாக இணைக்கத் திட்டங்கள் தீட்டப்பெற்றுள் ளன. ஆப்கானிய-பாகிசுத்தான் எல்லைப் புறத்தி லிருந்து இந்நாட்டின் போக்குவரத்து கைபர் கண வாய் வழியாக நடைபெறுகிறது. பல நூற்றாண்டு களாக இவ்வழி மிகுதியாகப் பயன்பட்டு வந்துள்ளது. இந்நாட்டில் 15 செய்தித் தாள்கள் வெளியாகின்றன. இங்கு வானொலி நிலையம் ஒன்றும் தொலைக் காட்சி நிலையம் ஒன்றும் உள்ளன. செய்தித் தாள் கள், வானொலி, தொலைக்காட்சி ஆகிய அனைத் தும் அரசாங்கக் கட்டுப்பாட்டின் கீழ் உள்ளன.

ஆப்கானிசுத்தானத்தில் வரலாற்றுக்கு முந்திய காலத்தில் வாழ்ந்த மக்கள் வேட்டையாடி வாழ்ந் தார்கள். அவர்கள் வாழ்ந்த காலம் ஏறத்தாழ ஒரு இலட்சம் ஆண்டுகளுக்கு முற்பட்டதாகும். பல்லாயி ரம் ஆண்டுகளுக்குப் பின்னர் அங்குவாழ்ந்த மக்கள் பண்ணைகளை அமைக்கவும், ஆடுமாடுகளை வளர்க்க வும் முற்பட்டார்கள். பின்னர் அவர்கள் வேளாண்மை யில் ஈடுபட்டிருந்த கிராமங்களை உருவாக்கினார் கள். இக்கிராமங்கள் கி.மு. 4000 முதல் கி.மு. 2000 வரை சிறுநகரங்களாக வடக்கு, தெற்கு ஆப்கானிசுத் தானத்தில் உருமாறின.

ஏறத்தாழ கி.மு. 1500-ஆம் ஆண்டளவில் நடு ஆசியாவில் வாழ்ந்த ஆரியர்கள் ஆப்கானிசுத்தானத் தின்மீது படையெடுத்தார்கள். அங்கு வாழ்ந்த மக்களுள் பலரைக் கொன்றுவிட்டு, அவர்கள் ஏனை யோருடன் கலப்புத் திருமணம் செய்து கொண்ட னர். பாரசீகர்கள் வட ஆப்கானிசுத்தானத்தின்மீது கி.பி. 6-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் படை யெடுத்தனர். அவர்கள் படையெடுத்துத் தாக்கிய பகுதியைப் பாக்டீரியா என்றனர். பாரசீகர்கள் கி.மு. 330 வரை ஆண்டனர். பின்னர்க் கிரேக்கர் களும், மாசிடோனியர்களும் மகா அலெக்சாந்தரின் தலைமையில் படையெடுத்து வந்து பாக்டீரியாவை யும் ஆப்கானிசுதானத்தின் பிறப்பகுதிகளையும் வென்ற னர். பாக்டீரியர்கள் கி.மு. 246-ஆம் ஆண்டளவில் கலகம் செய்தனர். அவர்கள் பாக்டீரியாவையும் ஆப்கானிசுத்தானத்தின் ஏனைய பகுதிகளையும் காலப் போக்கில் கைப்பற்றிக் கொண்டு சுதந்திர மாக ஆண்டனர். அவர்கள் சற்றேறக்குறைய இரு நூறு ஆண்டுகள் ஆட்சிநடத்தினர். அவர்களிட மிருந்து அப்பகுதிகளைக் குசானர்கள் கைப்பற்றினர். பாரசீக சசானியர்களும், ஊணர்களும் நடு ஆசியா விலிருந்து படையெடுத்துக் குசானர்களைத் தோற் கடித்தனர்.

அராபியப் படையினர் கி.பி. ஏழாம் நூற்றாண் டின் பிற்பகுதியில் படையெடுத்து வந்து ஆப்கானிசுத் தானத்தைக் கைப்பற்றி அதனை இசுலாம் சமய நாடாக்கினர். அராபியர் சமயமான இசுலாமியப் பண்பாட்டுச் செல்வாக்குக் கி.பி. 9-ஆம் நூற்றாண் டின் இடைப்பகுதியில் ஆப்கானிசுத்தானத்தில் பெருகி வளர்ந்தது. கிழக்குப் பாரசீகத்திலிருந்தும், நடு ஆசியாவிலிருந்தும் வந்த துருக்கிய மொழி பேசும் மக் கள் ஆப்கானிசுத்தானத்தைக் கி.பி. 900 க்கும் 1200க் கும் இடைப்பட்ட காலத்தில் ஆண்டனர். ஆப்கானி சுத்தானத்தைச் செங்கிசுகான் தலைமையில் வந்த மங்கோலியர்கள் கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்

டில் வென்றனர். தைமூரின் மரபினர் இதனைக் கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் ஆண்டனர்.

பாரசீகத்திலிருந்து சஃபாவித்துகளும் (Safavids), இந்தியாவிலிருந்து மொகலாயர்களும் ஆப்கானிசுத் தானத்தைக் கட்டுப்படுத்தக் கி.பி. 16-ஆம் நூற்றாண் டின் இடைப்பகுதியிலிருந்து 18-ஆம் நூற்றாண்டின் தொடக்கம் வரையிலான காலத்தில் சச்சரவிட்டு வந்தனர். பின்னர்க் கி.பி. 1747-ஆம் ஆண்டில் முதன் முறையாக அனைத்து ஆப்கானிய இனத்த வரும் ஒன்றாக இணைந்தனர். அகமது சா துரானி என்பாரின் தலைமையில் இணைந்த இனங்கள் நாட்டைக் கட்டுப்படுத்தத் தொடங்கின. உள்நாட் டுப் போர் கி.பி. 1819-ஆம் ஆண்டில் மூண்டது. நாட்டை ஆட்சி செய்ய விரும்பிய இனங்கள் மோதிக்கொண்டன. போர் கி.பி. 1835-ஆம் ஆண்டு வரை நீடித்தது. அந்த ஆண்டில் தோசுத்து முகமது கான் என்பார் அமீர் என்னும் பட்டம் பெற்று ஆப் கானிசுத்தானத்தின் தலைவரானார்.

இங்கிலாந்தும், உருசியாவும் ஆப்கானிசுத்தானத் தைக் கட்டுப்படுத்தும் நோக்குடன் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் போட்டியிட்டன. இந்தியப் பெருங் கடலில் செல்லும் வழியைப் பெறும் எண்ணத்துடன் உருசியா ஆப்கானிசுத்தானத்தின் பக்கம் முன்னேற விழைந்தது. இந்தியாவில் நிலைநாட்டப் பெற்றி ருந்த தன் பேரரசைப் பாதுகாத்துக் கொள்ள இங்கி லாந்து விரும்பியது. ஆனால், உருசியாவின் முன்னேற் றம் அந்த நிலையை அச்சுறுத்தும் என்று இங்கி லாந்து எண்ணியது. அப்பகுதியில் உருசியாவின் செல் வாக்கைக் குறைக்கும் பொருட்டுக் கி.பி. 1839-ஆம் ஆண்டில் பிரிட்டிசுப் படைகள் ஆப்கானிசுத்தானத் தின் மீது படையெடுத்தன. இதன் விளைவாக மூண்ட போரே முதல் பிரிட்டிசு-ஆப்கானியப் போர் எனப் பட்டது. பிரிட்டிசுப் படைகள் கி.பி. 1842-இல் திரும்பிச் செல்லும்வரை அப்போர் நீடித்தது. ஆப்கானிசுத்தானத்தில் உருசியாவின் செல்வாக்குக் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் பல்கிப் பெருகியது. மீண்டும் பிரிட்டன் கி.பி. 1878-இல் அந்நாட்டின் மீது படையெடுத்தபோது இரண் டாம் பிரிட்டிசு-ஆப்கானியப் போர் தொடங்கியது.

இந்நிலையில் அப்துர் இரகுமான்கான் கி.பி. 1880-ஆம் ஆண்டில் அமீரானார். அந்த நாட்டின் உள்நாட்டு விவகாரத்தில், அவரது அதிகாரத்தை ஏற்றுக்கொள்ள ஆங்கிலேயர் ஒப்புக் கொண்டனர். அதற்குக் கைம்மாறாக, ஆப்கானிசுத்தானத்தின் வெளியுறவுக் கொள்கையை அப்துர் இரகுமான் இங்கி லாந்துக்குக் கொடுக்க வேண்டியவரானார். தமது ஆட்சிக் காலத்தில், அப்துர் இரகுமான் தேசிய அரசாங்கத்தைத் திறம்படச் செயற்படுத்த வேண்டிப் பணிபுரிந்தமையால், தலைவர்களின் அதிகாரத்தைக் குறைத்தார். அவர் 1901-இல் காலமானபிறகு, அவர்தம் கொள்கைகளை அவர் மகன் அபிபுல்லா கான் தொடர்ந்து கடைப்பிடித்தார்.

விடுதலை: அபிபுல்லாகான் 1919-ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் கொலை செய்யப்பட்டார். அவர் மக்களுள் ஒருவரான அமானுல்லாகான் அமீரானார். அவர் இந்தியாவிலிருந்த ஆங்கிலப் படைகளைத் தாக்கி, மூன்றாம் பிரிட்டிசு ஆப்கானியப் போரைத் தொடங்கினார். ஆங்கிலேயர்கள் ஆப்கானிசுத்தானத் தலையீட்டை நிறுத்திக்கொள்ள விரைவில் முடிவு செய்தனர். ஆப்கானிசுத்தானம் 1919-ஆம் ஆண்டு ஆகசுட்டு மாதத்தில் முழுவிடுதலை பெற்றது.

பல நூற்றாண்டுகளாக நிலவிவந்த தொன்மை யான மரபுகளையும், பழக்க வழக்கங்களையும் விரைவாக மாற்றி, ஆப்கானிசுத்தானத்தைப் புதுமை யாக்க அமானுல்லா பல சீர்திருத்தங்களைத் தொடங்கினார். நாட்டின் முதல் அரசியலமைப்புத் திட்டம் 1923-ஆம் ஆண்டில் செயற்படுத்தப்பட்டதும் 1926-ஆம் ஆண்டில் அமானுல்லா தம் பட்டத்தை அரசர் என்று மாற்றிக் கொண்டார். முகமது நாதிர்கான் 1929-ஆம் ஆண்டின் இறுதியில் அரசரா னார். ஆப்கானிசுத்தானம் புதியதொரு அரசியல் அமைப்புத் திட்டத்தை 1931-இல் உருவாக்கியது. அதன் அடிப்படையில் நாதிர் படிப்படியாகப் பல சீர் திருத்தங்களைச் செயலாக்கும் திட்டத்தை மேற் கொண்டார். ஆனால், அவர் கருதிய சீர்திருத்தங் களில் பலவற்றைத் தொடங்குவதற்கு முன்னரே அவர் 1933-இல் கொலை செய்யப்பட்டார். நாதிர் கானின் மகன் முகமது சாகீர் அரசரானார்.

பொதுவுடைமை நாடுகளுக்கும், அல்லாத நாடு களுக்குமிடையே 1950-ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் மூண்ட கெடுபிடிப் போரின்போது ஆப்கானிசுத்தானம் பொதுவுடைமை அல்லாத நாடுகளுடன் நல்லுறவை நிலைநாட்டிக் கொண்டது. தம் நாட்டை அடுத் துள்ள வலுவான உருசியா ஆப்கானிசுத்தானத்தின் மீது தாக்குதல் நடத்தக்கூடும் என்று ஆப்கானியர் பலர் அஞ்சினர். அரசரின் நெருங்கிய உறவினரான முகமது தாவூத்கான் 1953-ஆம் ஆண்டில் அரசாங் கத்தைக் கைப்பற்றித் தம்மையே தலைமை அமைச் சராக அறிவித்துக் கொண்டார். தாவூத்தின் ஆட்சி யின்போது ஆப்கானிசுத்தானம் கெடுபிடிப்போரில் எப்பக்கமும் சாராது நடுநிலை வகித்தது.

வல்லரசுகளுக்கிடையே மூண்ட கெடுபிடிப் போரின்போது ஆப்கானிசுத்தானம் அமெரிக்க ஐக்கிய நாடு உருசியா ஆகிய இருநாடுகளிடமிருந்தும் பொரு

ளுதவி பெற்றது. இப்பொருளாதார உதவியால் நீர்ப் பாசனத் திட்டங்கள், நீர்மின் திட்டங்கள், சாலைகள், பள்ளிகள், தொழிற் சாலைகள் போன்றவை நாடெங் கிலும் உருவாக்கப் பெற்றன.

பொருளாதாரச் சிக்கல்களின் விளைவாகத் தாவூத்கான் 1963-ஆம் ஆண்டில் பதவி விலக வேண்டியவரானார். ஆப்கானிசுத்தானம் தன் மூன் றாம் அரசியல் அமைப்புத் திட்டத்தை 1964-ஆம் ஆண்டில் ஏற்றபோது, நாட்டில் மக்களாட்சி அரசாங்கம் மலர்ந்தது. எனினும், அரசர் சாகீரும், தேசிய சட்ட மன்றமும் அரசின் சீர்திருத்த நடவடிக் கையை ஏற்றுக் கொள்ள ஒப்பவில்லை. மேலும், ஆப்கானியக் குடிமக்களிடம் அரசாங்க விவகாரத்தில் நாட்டம் செலுத்தும் ஆர்வமோ, அவற்றைத் தெரிந்து கொள்ளத் துடிக்கும் அறிவோ தோன்ற வில்லை. அதனால், மக்களாட்சிமுறை முன்னேற முடியாது தோற்றது.

தாவூத்கான் 1973-ஆம் ஆண்டில் இராணுவப் புரட்சியைத் தூண்டி அரசர் சாகீரைப் பதவியிலிருந்து விரட்டினார். படைத் தலைவர்கள் அரசாங் கத்தைக் கைப்பற்றிக் கொண்டு, ஆப்கானிசுத் தானத்தில் குடியரசை நிலைநாட்டி, தாவூத்தைக் குடியரசுத் தலைவராகவும், தலைமை அமைச்சரா கவும் அறிவித்தனர். இடதுசாரி இராணுவத் தலைவர் களும், சாதாரணக் குடிமக்களும் 1978-ஆம் ஆண்டில் கலகம் செய்து தாவூத்தைக் கொன்றனர். இக்குழுவி னருக்கு உருசியாவின் பொருளாதார, இராணுவ உதவிகள் நிறையக் கிடைத்தன. அதைக் கொண்டு அரசாங்கத்தைக் கைப்பற்றி நாட்டில் பொதுவு டைமை அடிப்படையில் கொள்கைகளை நிலை நாட்டினர். ஆப்கானியர்களுள் பலர் புதிய அரசாங் கத்தை எதிர்த்தனர். அரசாங்கக் கொள்கைகள் இசுலாமியப் போதனைகளுக்கு எதிரானவை என்று அவர்கள் நம்பினர். அரசாங்கத்தில் உருசியாவின் செல்வாக்கு ஊடுருவி நிற்பதையும் அவர்கள் வெறுத் தனர். பெருவாரியான மக்கள் அரசாங்கத்திற்கு எதிராகக் கிளர்ச்சி செய்தனர். கலகக்காரர்களுக் கும், அரசாங்கப் படைகளுக்குமிடையே கடும் மோதல்கள் நாடெங்கும் தோன்றலாயின.

உருசியர், 1979 ஆம் ஆண்டின் பிற்பகுதியிலும் 1980-ஆம் ஆண்டின் முற்பகுதியிலும் ஆப்கானிசுத் தானத்தின் மீது பல்லாயிரக்கணக்கான படைவீரர் களை ஏவிப் படையெடுத்தது. ஆப்கானியக் கலகக் காரர்களுடன் உருசியர்கள் கடும்போர் புரிந்தார்கள். ஆப்கானியக் கலகக்காரர்களைவிட உருசியர்களிடம் போர்த் தளவாடங்கள் மிகுந்திருந்தன. எனினும், ஆப்கானியக் கலகக்காரர்கள் கொரில்லாப் போர் முறைகளைக் கையாண்டு உருசியாவைத் தோற்க டிக்க முயன்றனர். இக்கொரில்லாப் போராட்டம் 1980-ஆம் ஆண்டு வரை தொடர்ந்து நீடித்தது. ஆப்கானிசுத்தானம் உருசியாவின் கைப்பாவையாகி விட்டது. 1982-ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் ஆப்கானிசுத்தானத்தில் ஏறத்தாழ இலட்சம் பேர் களைக் கொண்ட சோவியத்து உருசியப் படைவீரர் கள் இறங்கியுள்ளனர் என்று மதிப்பிட்டுள்ளார்கள்.

**ஆப்கானியப் போர்கள்,** கி.பி. 18, 19, 20 ஆம் நூற்றாண்டுகளில் ஆங்கிலேயருக்கும் ஆப்கானியருக்கு மிடையே நிகழ்ந்த போர்களாகும். பண்டைக் காலம் முதற்கொண்டே இந்தியாவின் வடமேற்கெல்லை அயலவரின் நுழைவாயிலாகவும், இந்தியாவின் அமை திக்குக் கேடு விளைவிக்கும் இடமாகவும் இருந்து வருகிறது. ஆரியர், சகர், யவனர், குசானர், பத் தானியர், மங்கோலியர், துருக்கியர், மொகலாயர் போன்ற பலரும் கைபர், போலன் கணவாய்கள் வழி யாகவே வந்தனர். இவர்கள் ஆப்கானிசுத்தானம், காபூல், பஞ்சாபு, சிந்து (வடமேற்கு இந்தியா), வட இந்தியா, கிழக்கு இந்தியா முதலிய பல இடங்களில் வேரூன்றித் தங்கள் ஆட்சி, பண்பாடு முதலிய வற்றை நிலைப்படுத்திக் கொண்டனர். இவர்கள் இந்தியாவைச் சுரண்டுவதிலும் கொள்ளையிடுவதி லும் இந்திய மன்னர்களுடன் போரிட்டுப் பலனடை வதிலும் தங்கள் முழுச் சிந்தனையைச் செலுத்தினர். எனவேதான், வடமேற்கெல்லைப் புறத்தை 'இந்தியா வின் உடலிலே உறுத்திய முள்' என்றனர்.

சீனாவைக் கி.மு. 250 முதல் 210 வரை ஆட்சி செய்த சிக் ஹுவாய்-டி என்னும் மன்னர் தார்த்தானி யர்கள், ஹுணர்கள் போன்ற முரட்டு வகுப்பினரின் படையெடுப்புகளைத் தடுக்கச் 'சீனாவின் பெருமதிற் சுவர்' என்று அழைக்கப்படும் நீண்ட சுவரினைச் சீனாவின் எல்லையில் கட்டுவித்தார். அதன் நீளம் 3600 கி.மீ. ஆகும். உயரம் 5 முதல் 7 மீட்டர்க ளாகும். இது போன்ற நீண்ட சுவரினை இந்தியா வின் வடமேற்கெல்லையில் மௌரியப் பேரரசர்கள் கட்டாமல் இருந்தனர். அதனால்தான், அயல் நாட் டவர் பலர் இந்தியா மீது படையெடுத்தனர்.

ஆங்கிலேயர்கள் இந்தியாவின் மீது ஆதிக்கத்தை ஏற்படுத்திய போது பஞ்சாபு மாநிலம் சீக்கியர் ஆதிக்கத்திலும், சிந்து மாநிலம் அமீர்கள் ஆதிக்கத் திலுமிருந்தன. எனவே, வடமேற்கெல்லைப்புற நெருக்கடிகளை நேரடியாகச் சந்திக்கும் சிக்கல் சீக்கி யருக்கும், அமீர்களுக்கும் மிகுதியாக இருந்ததே தவிர, ஆங்கிலேயருக்கு இல்லை. இவ்விரு வகுப்பா ரும் ஆங்கிலேயர்களுக்குப் பகைவராகவும், நண்பர்க ளாகவும் மாறி மாறி நின்றனர். இவர்களுடன் ஆங்கி லேய அரசாங்கம் பல போர்களை நடத்தியது. இப் போர்களின் விளைவாக, கி.பி. 1843-இல் சிந்துவும்

கி.பி. 1849-இல் பஞ்சாபும் ஆங்கில ஆட்சியுடன் இணைக்கப்பட்டன. இதற்குப் பிறகுதான் ஆங்கிலேயர்கள் நேரடியாக உருசியர்களோடு போரிட வேண்டிய நிலை ஏற்பட்டது.

உருசியர்கள் அருகிலுள்ள ஆப்கானிசுத்தானத்தின் மீது அதிகாரம் செலுத்தவும், அதன் சில எல்லைப் பகுதிகளைத் தங்கள் ஆட்சியுடன் சேர்த்துக் கொள்ளவும் முயன்றனர். நடு ஆசியாவில் உருசியர்கள் பலமடைந்தால் ஐரோப்பாவிலும் தங்கள் செல்வாக்கிற்குப் பேராபத்து ஏற்படக்கூடும் என ஆங்கிலேயர்கள் எண்ணினர். மேலும் அவர்கள் தங்களின் இந்திய ஆட்சிக்கு அருகேயுள்ள எல்லைப் புறங்களைக் காப்பதற்காக உருசியர்களை ஆப்கானிசுத்தானத்தில் தலையிடாமல் பார்த்துக் கொள்வது தங்கள் கடமை எனக் கருதினர்.

ஆப்கானிசுத்தானத்துக்கும் இந்தியாவுக்குமிடையில் அமைந்துள்ள காடுகளிலும் மலைப்பகுதிகளிலும் பல முரட்டினத்தவர்கள் வசித்து வந்தனர். ஆப்கானிசுதானத்தின் அதிகாரத்திற்குக் கட்டுப்படாமல் இரு நாடுகளுக்கும் அவர்கள் தொல்லைகளைக் கொடுத்தனர். எனவே, ஆங்கிலேயர்களும் ஒரு நிலையான கொள்கையைக் கையாளாமல் சமயத்திற்கு ஏற்றவாறு நடந்து கொண்டனர்.

ஆங்கிலேயர்கள் ஆப்கானிசுத்தானத்துடன் நிலையான நட்புறவு கொள்ளலாமா, வென்று ஆளலாமா, அல்லது வாளாயிருக்கலாமா, என்னும் ஐயப்பாடுகளுடனிருந்தனர். உருசியர்கள் ஆப்கானிசுத்தானத்தில் தலையிடும் போதெல்லாம் உருசியா பற்றிய அச்சம் இந்திய அரசாங்கத்தை மட்டுமன்றி இங்கிலாந்தையும் ஆட்கொண்டது. ஆப்கானிசுத்தானத்தை இணைக்கும்படியாக ஒரு திட்டத்தை மேற்கொண்டு நாற்புறங்களிலிருந்தும் வழிகளை அமைக்கலாம் என்று ஆங்கிலேயர் சிலர் கருதினர். உருசியப் பயணத்தைத் தடுத்து நிறுத்தும் நன்மையைத் தவிர ஆப்கானியத் தொடர்பால் வேறு எவ்விதப் பயனுமில்லை என்பது அவர்களின் வெளிப்படையான கருத்தாகும். உருசியர்களை ஈரட்டுக்கும் அப்பாலுள்ள ஆக்சசு மலைத்தொடருக்கு அப்புறத்திலேயே தடுத்து நிறுத்துவது நல்லது என்று ஆங்கிலேயர் எண்ணினர்.

ஆப்கானியப் போர்களைப் பற்றி அறிவதற்கு முன் அந்நாட்டை ஆட்சி செய்த அரசர்களின் பட்டியலைத் தெரிந்து கொள்ளவேண்டும். அவர்கள் காபூலைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்தனர். பட்டியல் வருமாறு: அகமதுசா அப்தாலி துரானிசா (கி.பி. 1747-1773), தைமூர் சா (கி.பி. 1773-1793), சாமன் சா (கி.பி. 1793 1800). சாமன் சா ஆட்சிக்கு வந்த ஐந்து ஆண்டுகளுக்குள் ஆப்கானிசுத்தானத்தை ஒன்று திரட்டி ஓர் ஆற்றல் வாய்ந்த நாடாக்கினார். வடமேற்கெல்லையில் பல சிற்றரசர்கள் சாமன்சாவினை இந்தியா மீது படையெடுக்கும்படி அழைத்தார்கள். சாமன் சாவின் திறமையை வெல்லெசுலி பிரபு (கி.பி. 1798-1805) நன்குணர்ந்தவர். எனவே, தம் படைகளை வடமேற்கு எல்லையில் குவித்துச் சாமன் சாவைச் சந்திக்க ஆயத்த நிலையில் இருந்தார். இதற்கிடையில் பாரசீக மன்னர், சாமன் சா மீது போர் தொடுத்தார். இப்போரில் சாமன் சா தோற்கடிக்கப்பட்டார். தோல்வியுடன் தம் கண்களையும் இழந்தார். இப்போரின் விளைவாகச் சாமன் சாவின் இந்தியப் படையெடுப்புத் தவிர்க்கப்பட்டுவிட்டது. இறுதியில் சாமன் சா பஞ்சாபிற்கு ஓடிவந்து தம் வாழ்நாள் முழுவதும் ஆங்கிலேயரிடம் உதவித்தொகைப் பெற்று வாழ்ந்து இறந்தார்.

சாமன்சாவுக்குப் பின் மாமூது சா (கி.பி 1800-1803) என்பவர் அரசரானார். பின் கி.பி. 1803 முதல் 1809 வரை சா சீ சா அரசராக விளங்கினார். சா சீ சாவும் பஞ்சாபிற்கு ஓடிவந்து ஆங்கிலேயரிடம் உதவி பெற்று வாழ்ந்து வரலானார். மாமூது சா கி.பி. 1809-முதல் 1816 வரை மீண்டும் அரசரானார். இவருக்குப் பின் ஆயூப்கான் (கி.பி. 1818-1826) அரசரானார்.

தோசுத்து முகமது கி.பி. 1826-முதல் 1863 வரை ஆட்சி செய்தார். திறமையும், சமயப் பற்றும் மிக்க இவர் ஆட்சிக்கு வந்த முதல் பன்னிரண்டு ஆண்டுக் காலம் எத்தகைய இடையூறுமின்றி ஆண்டு வந்தார். சா சீ சா, கி.பி. 1834-இல் காபூல் மீது போர் தொடுத்துத் தோசுத்து முகமதுவிடம் தோல்வியுற்றார். ஆனால், தோசுத்து முகமது சீக்கியரிடம் பெசாவரை இழந்தார். இவர் கி.பி. 1838-க்குப் பின் பல இடையூறுகளைச் சந்திக்க வேண்டியவரானார். நாட்டின் வடக்கில் பல கலகங்கள் தலைதூக்கலாயின. தெற்கில் அவருக்கு எதிராக அவர் உடன்பிறந்தார் ஒருவர் காண்டகாரைக் கைப்பற்றினார். கிழக்கில் சீக்கியர் தலைவர் இரஞ்சித்சிங் அவரை அச்சுறுத்தி வந்தார். இரஞ்சித்சிங்கிற்கு ஆங்கிலேயர் உறுதுணையாக இருந்தனர். மேற்கில் மாமூது சாவும் ஈரட்டில் காம்ரானு மிருந்தனர். பாரசீகமும் உருசியாவும் காபூலைக் கைப்பற்றக் காத்துக் கொண்டிருந்தன. இப்படிப்பட்ட இக்கட்டான சூழ்நிலைகளில் ஆங்கிலேயருடன் நட்புறவு கொள்ள, தோசுத்து முகமது மிர்சா பாரசீகத்தின் அரசரானார். இவர் உருசியாவோடு நெருங்கிய நட்புக் கொண்டவர். உருசியாவின் தூண்டுதலினால் இவர் ஈரட்டை முற்றுகையிட்டார். மத்திய ஆசியாவில் உருசியர்கள் செல்வாக்கு ஓங்கியது. ஆங்கில அரசாங்கம் உருசியாவின் செல்வாக்கை வெறுத்தது. இந்தியாவின் தலைமை ஆளுநர் ஆக்லண்டு பிரபு (கி.பி. 1836-1842) ஆப்கானிசுத்தானச் சிக்கலில் தலையிட விரும்பவில்லை. எனி

னும் ஆங்கில அரசாங்கத்தின் வற்புறுத்தலி னால் அலெக்சாந்தர் பர்னசு (Alexander Burnes) என்பவரை ஆப்கானிசுத்தானத்துக்குத் தூதுவராக அனுப்பினார். தோசுது முகமது பர்னசை வரவேற்று பெசாவரை இரஞ்சித்சிங்கிடமிருந்து பெற ஆங்கி லேயர் உதவ வேண்டும் எனக் கேட்டுக் கொண்டார். இதனை ஆக்லண்டு பிரபு ஏற்றுக் கொள்ளவில்லை. எனவே, காபூலில் தங்கியிருந்த உருசிய நாட்டின் முகவர் விக்கோவிட்சு என்பவரைத் தோசுது முகமது வரவேற்றார். பர்னசு தாம் மேற்கொண்ட முயற்சி யில் வெற்றியடையாமல் இந்தியாவுக்குத் திரும்பி னார்.

முதல் ஆப்கானியப் போர்: ஆக்லண்டுக்குத் தோசுது முகமது மீது கோபம் ஏற்பட்டு அவரைப் பழிவாங்கக் கருதினார். பழிவாங்கும் எண்ணத்துடன் சீக்கியர் தலைவர் இரஞ்சித்சிங்கோடும், சா சீ சா வோடும் கூட்டுச் சேர்ந்தார். முக்கூட்டுறவு முடிந்ததும் காபூலின் மீது படையெடுத்தார். காபூல், காண்ட கார், கசினி முதலிய பகுதிகளைக் கைப்பற்றினார். தோசுது முகமது கைது செய்யப்பட்டுக் கல்கத்தா வுக்குக் கொண்டுவரப்பட்டார். புதியஅமீராகச் சா சீ சா நியமிக்கப்பட்டார். தோசுது முகமதுவின் மகன் அக்பர்கான் தலைமையில் ஆப்கானியர் கொதித்தெழுந்தனர். அவர்கள் பர்னசு, மெக்னாட் டன் முதலிய ஆங்கிலேயர்களைக் கொன்றார்கள். ஆப்கானிசுத்தானத்தை விட்டு வெளியேறிய ஆங்கிலப் படையும் அழிக்கப்பட்டது. முகமது அக்பர்கானிடம் 120 ஆங்கிலேயர்கள் சிறைப்பட்டனர். பிளைட்டன் என்னும் ஒரே ஆங்கிலேயர் மட்டில் உயிர் தப்பிச் சலாலாபாத்தை அடைந்தார். இத்தகைய பெரும் இழப்பிற்குக் காரணமாக இருந்த ஆக்லண்டை (Auckland) ஆங்கிலப் பாராளுமன்றம் வெறுத்து அழைத்துக் கொண்டது. ஆக்லண்டிற்குப் பிறகு எல்லன்பரோப் (Ellenborough) பிரபு (கி.பி. 1842-1844) தலைமை ஆளுநர் ஆனார். அவர் அக்பர் கானைத் தோற்கடித்து, காபூலுக்குப் பெரும் சேதத்தை ஏற்படுத்திப் பழி தீர்த்துக் கொண்டார். காபூல் மக்களின் விருப்பத்திற்கேற்பத் தோசுது முகமதுவைக் கல்கத்தாவிலிருந்து விடுதலை செய்து மீண்டும் காபூலின் அமீராக்கினார். சா சீ சாவை ஆப்கானியரே கொன்று விட்டனர்.

இலாரன்சு பிரபுவும் ஆப்கானியர் உறவும்: ஆங் கிலேயர்களால் மீண்டும் அமீராக்கப்பட்ட தோசுது முகமது அவர்களுடன் நீண்டகாலம் நட்புறவு கொண்டிருந்தார். இதனால், கி.பி. 1857-இல் இந்தி யாவில் நடந்த சிப்பாய்க் கலகத்திலும் ஆப்கானி யரை அவர் ஈடுபடுத்தாது தனித்தே இருந்தார். ஆனால்,கி.பி. 1862-இல் அவர் ஈரட்டின் மீது போர் தொடுத்தார். இதற்கு ஆங்கிலேயர் தங்களுடைய எதிர்ப்பினைத் தெரிவித்தனர். இருப்பினும் ஈரட்டு கிபி. 1863-இல் தோசுது முகமதுவால் ஆக்கிர மிக்கப்பட்டது. வெற்றிபெற்ற சில நாட்களுக்குள் தோசுது முகமது தமது 80-ஆம் வயதில் இறந்துவிட் டார். அவர் இறந்தபின் அவர்தம் பதினாறு புதல் வர்கள் அரியணைக்காக உள்நாட்டுப் போரில் ஈடு பட்டனர். அப்போர் ஐந்து ஆண்டுகள் நடைபெற் றது. வாள் முனையே அப்பிள்ளைகளுக்கு நீதிபதி யாக அமையட்டும் என்று ஆங்கிலேயர் வாளாவிருந் தனர். கடைசியில் செர் அலியே வெற்றி பெற்றுக் கி.பி. 1868-இல் அமீரானார். இவரை இலாரன்சு (Lord Lawrence) பிரபு (கி.பி. 1864-1869) ஏற்றுப் பாராட்டிப் பொருள் உதவியும் செய்தார். இருப் பினும், ஆப்கானிய நாட்டு உள் விவகாரங்களில் தலையிட இலாரன்சுக்கு விருப்பமில்லை. அப்சல் கான், ஆசிம் கான் ஆகிய இருவர் வசீர் அலியை வீழ்த்தி அமீராக விரும்பி இலாரன்சின் உதவியை நாடினர். ஆனால், இலாரன்சு அதனை மறுத்து விட்டார்.

அப்சல்கான் கி.பி. 1868-இல் மரணமடைந்தார். ஆசிம்கான், அதே ஆண்டில் நாடோடியானார். இச் சூழ்நிலையில் செர் அலி ஆப்கானியரின் ஆற்றல் வாய்ந்த அரசராகத் திகழ்ந்தார். இலாரன்சு, இன் னும் அதிகமாகச் செர் அலிக்கு உதவிகள் செய்யத் தொடங்கினார். அவருக்கு ஆறு இலட்சம் உருபாய் பண உதவியையும் செய்தார். அரியணைக்குப் போட்டியிடும் இருவருள் எவரை ஆதரித்தாலும், மற்றொருவர் உருசியா அல்லது பாரசீகத்தின் உதவியை நாடுவார். அதனால் சிக்கல்கள் வளரும் என்பதற்காக இலாரன்சு யாருக்கும் உதவி செய்யாது இருந்தார். ஆப்கானியரைப் பகைத்துக் கொள்ளாமல் கூடியமட்டும் நெருங்கிய நண்பர்களாக வைத்துக் கொண்டால் இந்தியாவின் காவலமைப்பு வலுவுடையுமென்றும் இலாரன்சு கருதினார். இக் கொள்கையை இலாரன்சுக்குப் பின்வந்த மேயோ வும் (Mayo, கி.பி1869-1872) நார்த்புரூக்கும் (North brook,கி.பி. 1872-1876) பின்பற்றினர். இலாரன்சு பின்பற்றிய கொள்கையின் விளைவாக உருசியா தன்னுடைய வலிமையைப் பெருக்கிக் கொண்டது.

மேயோவும் செர் அலியும்: மேயோவும் செர்அலி யும் கி.பி. 1869-இல் அம்பாலாவில் சந்தித்தனர். இச் சந்திப்பின் விளைவாக ஆங்கிலோ-ஆப்கானிய உறவு வளப்படுத்தப்பட்டது. செர் அலியே ஆப்கானிசுத் தானம் முழுமைக்கும் மன்னராகவும், அவர் இளைய மகன் அப்துல்லா கான் என்பவரை அரசராக்கவும், அவருக்குப் பின் அவர் சந்ததியே ஆப்கானிய அரசுக்கு வாரிசாக இருக்கவும், அவருக்கும் அவர் சந்ததிக்கும் ஒரு குறிப்பிட்ட நிலையான ஆண்டு உதவித்தொகை கொடுக்கவும் வேண்டும் என்று மேயோவிடம்

அம்பாலாவில் எடுத்துக் கூறினார். அரசியல் வல்லுநரான மேயோ செர் அலியைப் பகைத்துக் கொள்ளாமலும், மறுத்துக் கூறாமலும் ஆங்கிலேயரின் உதவி என்றும் நியாயத்தின் பக்கமே இருக்குமென்று கூறினார்.

**நார்த்புரூக்கும் செர் அலியும்:** உருசியர்கள் துருக்கியில் தங்கள் ஆட்சியை ஏற்படுத்தி ஆப்கானிசுத்தானத்தை நோக்கி நெருங்கி வந்தனர். உருசிய இராணுவ முன்னேற்றத்தைப் பார்த்து அஞ்சிய செர் அலி நார்த்புரூக்குடன் நட்புக் கொள்ளவும், உதவி பெறவும் முயன்றார். ஆனால், நார்த்புரூக்கு செர் அலியுடன் கூட்டுறவு கொள்ளத் தயங்கினார். திசுரேலி (Disraeli) கி. பி. 1874-இல் இங்கிலாந்தின் தலைமை அமைச்சரானவுடன் பிரிட்டிசாரின் அயல் நாட்டுக் கொள்கையில் மாற்றம் ஏற்பட்டது. இவர், காபூலில் ஓர் ஆங்கிலப் படையை வைக்குமாறு நார்த்புரூக்கைக் கேட்டுக் கொண்டார். ஆனால், நார்த்புரூக்கு அவ்வாறு செய்ய விருப்பமில்லாமல் தம் பதவியைத் துறந்து இங்கிலாந்து சென்றுவிட்டார்.

**இலிட்டனும் (கி. பி. 1876-1880) செர் அலியும்-இரண்டாம் ஆப்கானியப் போர் (கி. பி. 1878-1880):** இங்கிலாந்தின் வற்புறுத்தலின் பேரில், ஒரு பிரிட்டிசுப் படையைக் காபூலில் வைத்துக் கொண்டால் செர் அலி கேட்கும் சலுகைகளுக்குத் தாம் இணங்குவதாய் இலிட்டன் (Lytton) கூறினார். இதற்கிடையில் இங்கிலாந்தும், உருசியாவும் தத்தம் தூதுக் குழுக்களைச் செர் அலியிடம் அனுப்பித், தத்தம் கொள்கைகளை நிறைவேற்றிக் கொள்ள முற்பட்டன. இத்தருணத்தில்தான் செர் அலியின் மகன் அப்துல்லா கான் காலமானார். ஆதலால், பிரிட்டிசுத் தூதுக் குழுவை ஆப்கானியர் வெளியேற்றினர். நிலைமையை நன்கு புரிந்து கொள்ளாத இலிட்டன் ஆப்கானியருடன் போர் தொடுத்தார். ஆப்கானியர் ஆங்கிலேயரிடம் வீழ்ச்சி அடைந்தனர். உருசியரும் செர் அலிக்கு உதவ முன்வரவில்லை. செர் அலி கி. பி. 1879-ஆம் ஆண்டில் நாட்டைவிட்டு ஓடிக் காலமானார்.

**யாகூப்கானும் (கி. பி. 1879-1880) ஆங்கிலேயரும்:** செர் அலி இறந்தபின் யாகூப்கான் ஆப்கானிசுத்தான அமீரானார். இவர் ஆங்கிலேயருடன் கி.பி. 1879-இல் ஓர் உடன்படிக்கையைச் (கண்டமக் உடன்படிக்கை) செய்து கொண்டார். அதன்படி ஆங்கிலேயர்களிடமிருந்து ஆண்டுக்கு ஆறு இலட்சம்ரூபாய் உதவிபெறவும், ஆங்கிலப் படையைக் காபூலில் இருக்கச் செய்யவும், சில பகுதிகளை ஆங்கிலேயருக்குக் கொடுக்கவும் யாகூப்கான் இசைந்தார். ஆப்கானிசுத்தானத்தை அயலவர் தாக்காவண்ணம் காக்க ஆங்கிலேயர் ஒப்புக் கொண்டனர்.

ஆங்கிலப் படை காபூலில் இருக்கலாம் என்பதற்கு யாகூப் கான் இசைந்த போதிலும், மக்கள் எதிர்ப்புத் தெரிவித்தனர். ஆங்கிலப் படையின் தலைவர் சர் இலூயி கெவக்னரியையும், (Sir Louis Cavagnari) மற்றும் சிலரையும் ஆப்கானியர் கொன்றனர். உடனே, செனரல் இராபர்ட்சு (Roberts), தலைமையில் ஓர் ஆங்கிலப் படை அனுப்பப்பட்டது. ஆப்கானியர் பழிவாங்கப்பட்டனர். யாகூப் கான் கைது செய்யப்பட்டு இந்தியாவுக்கு அனுப்பப்பட்டார். வெற்றி ஆங்கிலேயர் வசம் இருந்த போதும் அவர்கள் ஆப்கானிசுத்தானம் முழுவதையும் வென்று தம் ஆட்சியின் கீழ்க் கொண்டு வர விருப்பமின்றியிருந்தனர்.

**இரிப்பனும் (கி.பி. 1880-1884) அப்துர் இரகுமானும்:** இலிட்டன் பிரபு ஆப்கானிசுத்தானத்தைக் காபூல், காண்டகார் ஆகிய இரு பிரிவுகளாகப் பிரித்து முறையே அப்துர் இரகுமான், செர் அலி கான் ஆகியோருக்குக் கொடுத்தார். இச்சமயத்தில் இங்கிலாந்தில் ஏற்பட்ட அமைச்சரவை மாறுதலால் இலிட்டன் பதவியை இழந்தார். இவருக்குப் பின் வந்த இரிப்பன் பிரபு (Lord Ripon) கி.பி. 1880 சூலை, அப்துர் இரகுமானைக் காபூலின் அமீராகக் ஒப்புக்கொண்டார்.

இரிப்பன் பிரபு ஆங்கிலப் படையைக் காபூலில் நிறுத்தும் திட்டத்தைக் கைவிட்டார். ஆபத்தான சூழ்நிலைகளில் உதவுவதாக அப்துர் இரகுமானுக்கு (கி.பி. 1860-1901) இரிப்பன் வாக்களித்தார். மேலும் கி.பி. 1881-இல் காண்டகாரைக் கைப்பற்றி அப்துர் இரகுமானுக்குக் கொடுத்தார். அதே ஆண்டில் ஈரட்டுப் பகுதியை ஆட்சி செய்து கொண்டிருந்த அயூப்கானை ஆங்கிலேயர் தோற்கடித்து அப்பகுதியை அப்துர் இரகுமானுக்குக் கொடுத்தனர். அயூப்கான் பாரசீகத்தில் தஞ்சமடைந்தார். இரிப்பன் கி.பி. 1885 முதல் அமீர் அப்துர் இரகுமானுக்குக் கொடுத்து வந்த உதவித் தொகையை இரட்டிப்பாகக் (12 இலட்சம்) கொடுத்தார். இவ்விதமாக, ஆங்கில நட்பால் காபூல், காண்டகார், ஈரட்டு ஆகிய நாடுகளுக்கு அரசராகி ஆப்கானிசுத்தானத்தின் 'ஒரே அமீர்' என இரகுமான் போற்றப்பட்டார்.

**தப்ரினும் (கி.பி. 1884-1888) அப்துர் இரகுமானும்:** தப்ரின் (Dufferin) காலத்தில் ஆப்கானிசுத்தானத்துக்கும் உருசியாவுக்கும் ஒரு போர் மூளக்கூடிய அச்சம் ஏற்பட்டது. இதனைத் தப்ரின் மிகவும் திறமையாகத் தடுத்து நிறுத்தினார். உருசியர்கள் கி.பி. 1884-இல் மெர்வ் (Merv) என்னுமிடத்தைக் கைப்பற்றினார்கள். ஆப்கானியர் பஞ்சுடே பாலைவனச் சோலையைக் கைப்பற்றினர். தப்ரின் தலையிட்டால்

அமீர், பஞ்சுடேயைக் கைவிட்டார். அதற்கு மாறாக, அமீருக்குக் கல்பிகார் என்னும் பகுதி அளிக்கப்பட்டது. இதனால், அமீருக்கு உருசியாவின் மீது இருந்த பகைமை மறைந்தது.

**இலான்சுடவுனும் (கி.பி. 1886-1893) அப்துர் ரகுமானும்:** இலான்சுடவுன் காலத்தில் ஆங்கிலேயர்கள் 'ஏகாதிபத்தியக் கொள்கை'யைக் கையாண்டனர். இரகுமான் அக்கொள்கையை வெறுத்தார் இருப்பினும் கி.பி. 1893-இல் இருதரப்பாருக்குமிடையே ஏற்பட்ட 'துராண்டு' (Durand) உடன்படிக்கையால் நல்லுறவு ஏற்பட்டு நீடித்தது.

**இரண்டாம் எல்சினும் (கி.பி. 1894-1899) அப்துர் ரகுமானும்:** இரண்டாம் எல்சின் (Elgin II) காலத்தில், துராண்டு உடன்படிக்கை ஏற்பட்டுச் சிட்ரல் (Chitral) என்னும் சிறு நாடு ஆங்கிலேயர் ஆதிக்கத்தின் கீழ் வந்தது. சிட்ரல் நாட்டில் ஏற்பட்ட கலகம் எல்சினால் ஒடுக்கப்பட்டது. இக்கலகத்தின் போதும் அப்துர் இரகுமான் ஆங்கிலேயரிடம் நட்புறவோடு இருந்தார்.

**அபிபுல்லா (1901-1919):** அப்துர் இரகுமானின் மறைவுக்குப் (1901) பிறகு அவர் மகன் அபிபுல்லா அமீரானார். ஆங்கிலேயரிடம் தம் தந்தை செய்து கொண்ட உடன்படிக்கைகளை அபிபுல்லா புதுப்பித்துக் கொண்டார். இரண்டாம் மிண்டோ பிரபு (1905-1910) தலைமை ஆளுநராக இருந்தபோது. 1907-இல் உருசியாவுக்கும் இங்கிலாந்துக்குமிடையே ஓர் உடன்படிக்கை ஏற்பட்டது. அது ஆப்கானிசுத்தானம், பாரசீகம், திபேத்து முதலிய நாடுகளைப் பற்றியதாகும். இவ்வுடன்படிக்கையை அபிபுல்லா ஏற்றுக் கொள்ளவில்லை. முதல் உலகப் போர் நடந்த போதும் அபிபுல்லா ஆங்கிலேயருக்குக் கொடுத்த வாக்குப்படி செருமனி உருசியா ஆகிய நாடுகளுடன் சேராமல் நடுநிலைமை வகித்தார். இந்நிலையில் 1919-ஆம் ஆண்டு பிப்பிரவரியில் அவர் கொலை செய்யப்பட்டார்.

**மூன்றாம் ஆப்கானியப்போர்:** அபிபுல்லாவின் கொலைக்குப் பின் அவர்மகன் அமானுல்லா (1919-1929) ஆப்கானிய அமீரானார். இவர் ஆங்கிலேயருடன் நட்புறவையே பெரிதும் விரும்பினார். ஆனால், அப்பொழுது இந்தியாவில் நடந்த சாலியன்-வாலா பாக்குப் (அமிர் தசரசு) படுகொலை ஆப்கானியர் மன மாற்றத்திற்கு உறுதுணையாய் இருந்தது. எனவே, ஆப்கானியர் ஆங்கிலேயரைத் தாக்கினர். ஆங்கிலேயர்கள் ஆப்கானியரைப் பலவிடங்களில் முறியடித்தனர். அமானுல்லா, அமைதி வேண்டுமென்பதற்காக ஆங்கிலேயரிடம் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டார். அவர் பெற்றுக் கொண்டிருந்த உதவித் தொகையை நிறுத்த ஆங்கிலேயர்கள் முடிவு செய்தனர். இறுதியில் ஆப்கானிசுத்தானத்தின் சுதந்திரத்திற்கு ஆங்கிலேயர்கள் தங்கள் இசைவினை அளித்தனர். சுதந்திரத்திற்குப் பின் அமானுல்லா கான் ஆப்கானிசுத்தானத்தில் மேனாட்டு நாகரிகத்தைப் பரப்பவும், மேனாட்டு முறையில் சமூக, அரசியல் அமைப்புகளைப் படைக்கவும் கருதிச் சீர்திருத்தங்களைக் கொண்டு வந்தார். ஆப்கானிய மக்கள் சீர்திருத்தங்களை விரும்பவில்லை. எனவே, அவர்கள் அமானுல்லாவை எதிர்த்துக் கலகம் செய்தனர். அமானுல்லா முடிதுறந்து கண்டகாருக்கு ஓடிவிட்டார்.

**நாதிர்சா (1929-1933):** அமானுல்லா முடிதுறந்த பிறகு சில அரசியல் மாற்றங்கள் ஏற்பட்டன. இறுதியில் பழைய அரச குடும்பத்தைச் சேர்ந்த நாதிர்சா ஆப்கானிய அரசரானார். இவர் ஆங்கிலேயரோடு நட்புறவுடன் வாழ்ந்தார். இவரும் ஆப்கானியரால் கொலையுண்டார். இவருக்குப் பின் இவர் மகன் சாகிர்சா 1933-இல் ஆப்கானிசுத்தான அமீரானார். இந்திய அரசாங்கமும் ஆப்கானிசுத்தானத்தின் உள்நாட்டுச் செய்திகளில் தலையிடாமல் நடந்து கொண்டது. எல். இரா.

துணை நூல்கள்:

Majumdar, R.C., & Others., An Advanced History of India, Macmillan, Delhi, 1982.

Smith, Vincent A. & Spear, Percival., The Oxford History of India, Oxford University Press, Delhi, 1976.

Roberts, P.E., History of British India, Oxford University Press, Delhi, 1983.

**ஆப்சிரான் தீபகற்பம்**: சோவியத்து உருசியாவின் அசர்பெய்சான் குடியரசில் காசுபியன் (Caspian) கடலுக்குள் 60 கி.மீ. நீண்டுள்ள இத்தீபகற்பம், காகசசு (Cacasus) மலைத்தொடரின் கீழ்க்கோடி முனையில் அமைந்துள்ளது. இது உலகிலேயே மிகப் பெருமளவு பெட்ரோல் கிடைக்கும் தீபகற்பமாகும். சமூர்-திவிச்சி (Samur-Tivichi) கால்வாய் மூலம் கிழ்க் காகசசுப் பகுதியிலிருந்து இத்தீபகற்பத்தின் வறண்ட நிலப் பகுதிக்கு நீர் பாய்கிறது. அசர்பெய்சான் (Azerbaijan) குடியரசின் தலைநகரும் பெரும் துறைமுகமுமான பாகு என்னும் நகரம் காசுபியன் கடலில் இத்தீபகற்பத்தில்தான் உள்ளது. ஆப்சிரான் (Apsheron) தீபகற்பத்தின் தென் மேற்குக் கடற்கரையின் நகரியப் பகுதியாகப் பாகு இருக்கிறது. தீபகற்பம் முழுவதும் பாகுவின் நகர எல்லைக்குள்ளேயே இருக்கிறது. கிழக்குக் கரையிலுள்ள ஆப்சிரான் துறைமுகத்திலிருந்து பெட்ரோல் ஏற்றுமதியாகிறது.

**ஆப்சு தாமசு** (கி.பி. 1586-1679): ஆங்கிலேய நாட்டைச் சார்ந்த தத்துவ அறிஞர். மாலெம்சுபரி (Malemesbury) என்னுமிடத்தில் பிறந்த இவர் ஆக்சு போர்டு பல்கலைக் கழகத்தில் கல்வி பயின்றார். இலண்டனில் பேக்கன் (Bacon), பென்தான் (Benthan) போன்ற அறிஞர்களைச் சந்திக்கும் வாய்ப்பு இவருக்குக் கிட்டியது. இவர் தாம் புலவராக வேண்டும் என்று விரும்பிப் பண்டைக் கவிதைகளையும் வரலாறுகளையும் கற்றார். இதனால், கி.பி. 1628-ஆம் ஆண்டு வரலாற்றாசிரியர் தூசிடைடசு (Thucydides) எழுதிய நூலை மொழி பெயர்த்து வெளியிட்டார். கேவண்டிசு பிரபுவின் (Lord Cavendish) மூத்த மகனுக்கு ஆசிரியராகப் பணி புரிந்தார்.

ஆப்சு இத்தாலி நாட்டிற்குச் சென்று கலிலியோவைச் (Galileo) சந்தித்தார். பாரிசு நகரத்திலும் தத்துவ அறிஞர்கள் பலரைச் சந்தித்தார். இதன்பின் கி.பி. 1629-ஆம் ஆண்டு, யூக்ளிடு (Euclid) என்னும் பழைய கிரேக்கக் கணிதவியலார் இயற்றிய வடிவ கணித (Geometry) நூல்களைப் படிக்க முற்பட்டார். அதிலிருந்து அறிவியலில் மிக்க ஆர்வம் காட்டி வந்தார்.

இங்கிலாந்திற்குத் திரும்பிச் சென்றபோது அங்கிருந்த அரசியல் நிலைமையைக் கண்டறிந்தார். அங்குள்ள ஆட்சியின் உண்மையான தத்துவத்தைக் கண்டால் மட்டிலுமே உண்மையான அரசியல் நிலவும் என்று கருதினார். இங்கிலாந்து நாட்டு அரசனுடைய ஆட்சியை ஆதரித்துப் பல நூல்களைக் கி.பி. 1640-இல் எழுதினார். அவற்றுள் குறிப்பிடத்தக்கது இலெவியதான் (Leviathan) என்பது ஆகும். இந்நூல் கி.பி. 1651-ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. இந்நூலினை வெளியிட்ட பிறகு அந்நாட்டு அரசர் அவரைக் காண மறுத்து விட்டார். இதனால், ஆப்சு தாமசு, பாரிசு நகருக்குச் சென்று சில நாட்களை அங்குக் கழித்தார். பாதிரிமார்களும் இவரை வெறுத்தார்கள். நாடாளுமன்ற உறுப்பினர்கள் ஆப்சு தாமசு வெளியிட்ட நூலைக் கண்டித்தனர். தமது 84-ஆம் வயதில் ஆப்சு தாமசு இலத்தீன் மொழியில் தம் வாழ்க்கை வரலாற்றை எழுதினார்.

இவர் புலன் கடந்த மெய்ப் பொருளியல் (Metaphysics), அறிவு ஆராய்ச்சியல் (Epistemology), கடவுள் (God), இட-நேரக் கோட்பாடு (Space-time theory), புலனுணர்வு (Sensation) முதலியன பற்றி ஆழ்ந்து சிந்தித்துள்ளார்.

கடவுள் என்பவர் முடிவில்லாத நிலையை உடையவர். இவ்வுலகில், இயங்கக் கூடிய எல்லாப் பொருளுக்கும் மேலானவர்.

ஒரு பொருளைப் பற்றிய அறிவை மக்கள் தொடுதல், நுகர்தல், சுவைத்தல், நேர் காணுதல் போன்றவற்றின் மூலமாக அறிய முடிகிறது. ஒவ்வொரு பொருளுக்கும் முதல் தரமானவை, இரண்டாம் தரமானவை என்ற இரண்டு வகையான தன்மைகள் உள்ளன.

இட-நேரக் கோட்பாடு என்பது ஒரு கற்பனைக் காட்சிதான். இக்கோட்பாடு உண்மையான வெளி உலகத்தில் தோற்றமளிப்பதில்லை.

காரணங்களிலிருந்து காரியங்களையும், காரியங்களிலிருந்து காரணங்களையும் உய்த்துணர்கிற அளவை (Deduction Methods), முடிவுகளையே மெய்ப் பொருளிலிருந்து அறிய உதவுகிறது.

மனிதன் தன் சுயநலத்தினை மையமாகக் கொண்டுள்ளான்; அவன் மிருகத் தன்மை படைத்தவன்; குறுகிய வாழ்நாளை உடையவன் என ஆப்சு தாமசு ஆழ்ந்து ஆராய்ந்து வெளிப்படுத்தியுள்ளார். ஆங்கிலேயத் தத்துவ அறிஞர்களான பேக்கனுக்கும் (Bacon), இலாக்குக்கும் (Locke) இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்த அரசியல் தத்துவ அறிஞராக இவர் கருதப்படுகிறார்.

ஆப்சு தாமசு நூல்களைப் படித்து ஆராய்ச்சியில் ஈடுபட்டார். எல்லாவற்றுக்கும் மேலான உண்மைப் பொருள் அசைகிற பருப்பொருள். இந்த அசைகிற பருப்பொருள் மனிதனின் மூளையிலும், இருதயத்திலும், பிற உறுப்புகளிலும் காணப்படுகிறது. எல்லா விதக் கூட்டுச் சங்கங்களின் அமைப்பும் அரசும் இதனைப் பொறுத்திருக்கிறது. எல்லாவிதமான அறிவும் புலன் நுகர்வில் அடங்கியிருக்கிறது. உணர்வுகளும், எண்ணங்களும் உடலில் ஏற்படுகிற அசைவுகளே.

ஆப்சுவின் அற இயலும், அரசியல் தத்துவமும் அகங்காரத்திலும் இன்பக் கோட்பாட்டிலும் அடங்கி இருக்கின்றன. இவரது கருத்துப்படி, முதல் இயற்கை விதி என்னவெனில் மனிதன் அமைதியை நாடிக் கடைப்பிடித்தலாகும். இரண்டாம் விதி, தானும் பிறரும் ஒருவருக்கொருவர் ஒத்துப்போக வேண்டும் என்னும் மனப்பான்மையை வளர்க்க வேண்டும். மூன்றாம் விதி, மனிதர்கள் தமக்குள் நல்ல உடன்படிக்கைகள் செய்து கொள்ள வேண்டும். அப்படிச் செய்து கொள்ளாவிட்டால் அவர்களிடையே உள்ள உறவு பயன் தராது.

மேலும் பத்து இயற்கை விதிகள் தொடர்கின்றன. அவை, நல்ல தீர்மானம், ஒருவருக்கொருவர் இணைந்து போகும் தன்மை, குற்றத்தை ஒப்புக் கொண்டால் மன்னிக்கும் மனப்பான்மை, திருந்துவதற்காகத் தண்டித்தல், பிறரை வெறுக்கும் மனப்பான்மை இல்லாதிருத்தல், எல்லோரையும் சமமாக

நோக்கும் தன்மை, தனக்காக எந்த வித உரிமையை யும் ஒதுக்கி வைத்தல் இல்லாமை, எல்லோருக்கும் பகிர்ந்து கொடுக்கும் மனப்பான்மை, நல்ல பண்பு கள், நீதியின்படி வழக்குகளைத் தீர்வு செய்தல் ஆகியவையாம். இவ்வாறு ஆப்சு ஒரு நல்ல சமுதாய அற இயலுக்கு வழி காட்டினார். இவர் கி.பி. 1679 ஆம் ஆண்டு காலமானார்.

**ஆப்சுபர்க்கு**, ஐரோப்பாவில் அரசாண்ட அரச குடும்பம் ஒன்றின் பெயர். இம்மரபினைச் சார்ந்த உறுப்பினர்கள் நடு ஐரோப்பாவில் கி.பி. 1273 முதல் 1918 வரை முடிமன்னர்களாக ஆண்டனர். மேற் கூறப்பட்ட காலக்கட்டத்தில் சில ஆண்டுகள் அவர்கள் பதவியை இழந்ததுமுண்டு. ஆப்சுபர்க்கு (Hapsburg) என்னும் பெயர் அரச குடும்ப மாளிகையின் பெயரி லிருந்து பிறந்ததாகும். சுவிட்சர்லாந்து நாட்டின் ஆர்காவு (Aargau) மாநிலத்தில் இம்மாளிகையைக் கி.பி. பதினொன்றாம் நூற்றாண்டில் இசுட்ரார்சுபர்க் கின் (Strasbourg) மதகுருவான வெர்னர் (Werner) என்பார் கட்டினார். அப்போது அதன் பெயர் ஆப் சிட்பர்க்கு (Habichteburg) என்று கூறப்பட்டது. அது ஆக்கு என்பாரின் அரண்மனை (Hawk's Castle) எனப் பொருள்படும்.

வெர்னரின் உடன்பிறந்தார் மகன், முதலாம் வெர்னர் எனப்பட்டார். ஆப்சுபர்க்கு மரபினரில் முதல் பிரபு அவரேயாம். அம்மரபினைச் சார்ந்த முதல் உறுப்பினரான உருடால்பு (Rudolf) என் பவரே அரசராக முடிசூட்டிக்கொண்டவர். இவர் கி.பி. 1273-இல் புனித உரோமானியப் பேரரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆப்சுபர்க்குகளே கி.பி. 1438 முதல் கி.பி. 1806 வரை அரசாண்ட பெரும் பாலரான பேரரசர்களாவர். ஆப்சுபர்க்கு மரபைக் கி.பி. 1806–ஆம் ஆண்டில் நெப்போலியன் ஒழித்தார். ஆப்சுபர்க்கு மரபினர்களே கி.பி. 1806–ஆம் ஆண்டுக் குப் பின்னர் ஆசுத்திரியா நாட்டின் பேரரசர்களா யிருந்தனர். அங்கேரி அரசர்களும் கி.பி. 1867–ஆம் ஆண்டுக்குப் பின்னர் ஆப்சுபர்க்கு மரபைச் சார்ந்த வர்களே. முதலாம் சார்லசு (Charles I) என்னும் பெயர் கொண்டவரே ஆப்சுபர்க்கு அரசர்களுள் இறுதியானவர். அவர் ஆசுத்திரியா–அங்கேரி இரண் டையும் கூட்டாட்சி அரசராக ஆண்டவர். முதல் உலகப் போரின்போது முதலாம் சார்லசின் மகன் ஆட்டோ கோமகன் (Arch Duke Otto) என்பார் புனித உரோமானியப் பேரரசராக முடிசூட்டிக் கொள்ள முயன்று தோல்வியுற்றார்.

முதலாம் மாக்சிமிலியன் (Maximilian I) ஐந் தாம் சார்லசு, இரண்டாம் பிரான்சிசு, பிரான்சிசு சோசப்பு, மேரியா தெரசா (Maria Therasa) போன்ற வர்கள் புகழ்மிக்க ஆப்சுபர்க்குப் பேரரசர்கள்.

**ஆப்பனூர்** பாண்டி நாட்டிலுள்ள தேவாரப் பாடல் பெற்ற தலங்களுள் ஒன்று. மதுரை மீனாட்சி யம்மன் திருக்கோயிலுக்கும், வையையாற்றுக்கும் அருகில் உள்ளது. இப்பொழுது இவ்வூர் ஆப்புடை யார் கோயில் என வழங்கப்படுகிறது. திருஞானசம்பந் தரால் பாடப் பெற்ற இத்தலத்திலுள்ள இறைவன் பெயர் ஆப்புடையார் என்பதாகும். அருச்சகர் உலையிவிட்ட வையையாற்று மணலைச் சோறாக் கினார் என்னும் புராண வரலாறு கொண்டு இறை வனுக்கு அன்ன வினோதன் என்னும் பெயரும் வழங்குகிறது. அம்பிகை பெயர் குரவங்கமழுங்குழலி என்பதாகும். சோழாந்தகன் என்னும் பாண்டிய மன்னனுக்காக இறைவன் ஆப்பினிடத்தில் வெளிப் பட்டமையால் இவ்வூர் ஆப்பனூர் எனப் பெய ரெய்தியதாகக் கூறப்படுகிறது. திருஆப்பனூர்ப் புரா ணம் என்னும் பெயரில் கந்தசாமிப் புலவர் இத் தலத்திற்கு ஒரு தலபுராணம் இயற்றியுள்ளார்.

**ஆப்பாடி** தேவாரப் பாடல் பெற்றுள்ள சோழ நாட்டுச் சிவதலங்களுள் ஒன்று. தஞ்சை மாவட்டத்திலுள்ள திருப்பனந்தாளுக்கு அண்மையில் உள்ளது. இதன் அருகே மண்ணியாறு ஓடுகிறது. சண்டேசுர நாயனார் இத்தலத்தில் வழிபட்டுப் பேறு பெற்றார். இத்தலத்திற்குத் திருநாவுக்கரசர் தேவா ரம் உண்டு. இறைவன் பெயர் பாலுகந்த நாதர், இறைவி பெயர் பெரிய நாயகி. தலமரம் ஆத்தியா கும். ஐயடிகள் காடவர்கோன், தம் சேத்திரக் கோவை வெண்பா ஒன்றில் இத்தலத்திறைவனைப் போற்றியுள்ளார்.

**ஆப்பியன் பாதை** பண்டைய உரோமாபுரி யிலிருந்த ஒரு புகழ்பெற்ற சாலை. இது இரண்டாயி ரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது. ஆப்பியசு (Appius) என்னும் அதிகாரி இப்பாதையை அமைத்தமையால் ஆப்பியன் பாதை எனப் பெயர் பெற்றது. இச் சாலைக்கு அருகில் பல தொன்மையான கல்லறைகள் உள்ளன.

**ஆப்பிரிக்கக் குள்ளர்கள்:** ஆப்பிரிக்காவில் ஏறத்தாழ 1,50,000 குள்ளர்கள் (Pygmies) உள்ளனர். ஆப்பிரிக்காவிலுள்ள குள்ளர்களைக் கீழ்நிலப் பகுதி யான நிலநடுக்கோட்டிலுள்ள மலைப் பகுதியினர், மேற்குப் பகுதியிலுள்ள ஆபின், காமரூன் பகுதியி னர், சைபீரியாவிலுள்ள மத்திய கிழக்குப் பகுதியி னர் என்று மூன்று பகுதியினராகப் பிரிக்கலாம். மேல்நிலப் பகுதிக் காடுகளான கரவாண்டா, பரன் திப்பு ஆகிய பகுதிகளில் வாழக் கூடிய குள்ளர்கள் சற்று உயரமானவர்கள்.

ஆப்பிரிக்கக் குள்ளர்கள் பொதுவாகக் கருஞ் சிவப்பு நிறமுடையவர்களாக இருக்கின்றனர். இவர் களின் தலை பெரிதாக இருக்கிறது. இவர்களுடைய

உதடுகள் கால் கைகளைவிடக் குறிப்பிடத் தக்க வகையில் சிறியனவாக இருக்கின்றன. ஏனைய கருப்பு ஆப்பிரிக்கர்களுக்கு இருப்பது போல் இவர்களின் கண்கள் கருமையாக இருக்கின்றன. ஆனால், உதடுகளில் கருநிறப்புள்ளிகள் இல்லை. இவர்களுடைய தலைமயிர் கருப்பாகவும் சுருண்டும் காணப்படுகிறது. ஆனால், கருப்பு ஆப்பிரிக்கர்களைவிட ஆண் குள்ளர்களின் முகத்திலும் உடலிலும் மிகுதியான முடி காணப்படுகிறது.

வேட்டையாடும் தொழிலைக் கொண்ட இவர்கள் ஒன்றாகக் கூடி வாழ்கின்றனர். இவர்கள் சிறு சிறு குழுக்களாகப் பிரிந்து ஒரு குறிப்பிட்ட எல்லைப் பகுதிக்குள் இயங்குகின்றனர். இந்தக் குழுவிற்கென்று எந்தத் தலைவரும் கிடையாது. ஆனால், ஆண்கள் அனைவரும் குழுவாகக் கலந்து எண்ணி ஏற்றுக் கொண்ட பின்பே எந்த ஒரு முடிவும் எடுக்கப்படுகிறது. திருமணமான பின்பு பெண்கள் அவர்களின் கணவன் இருக்கும் குழுவில் சேர்ந்து கொள்ளுகின்றனர். பொதுவாக ஒருதார மணமே ஏற்றுக் கொள்ளப்படுகிறது.



இம்புத்திக் குள்ளர்கள்

வடகிழக்குப் பகுதியிலுள்ள இத்தூரிக் (Ituri) காடுகளில் இம்புத்திக் (Mbuti) குள்ளர் வாழ்கின்றனர். இவர்கள் உணவிற்காக வேட்டையாடும் பொழுது அம்பு, வில், கத்தி, வலை போன்றவற்றைப் பயன்படுத்துகின்றனர். கடினமாக வேட்டையாட வேண்டிய நேரங்களிலும் உயரமான மரங்களிலுள்ள குரங்குகளை வேட்டையாடும் பொழுதும் ஆயுதங்களின் நுனியில் நஞ்சைத் தடவி வேட்டையாடுகின்றனர். யானையை வேட்டையாடிக் கொல்லுவதை இம்புத்திக் குள்ளர்கள் அருஞ்செயலாகக் கருதுகின்றனர். பெண்கள் காட்டிலுள்ள பழங்களையும் கிழங்குகளையும் பூச்சிகளையும் சேகரிக்கின்றனர். மீன் பிடித்தல் இவர்களின் துணைத் தொழிலாகும். இம்புத்திக் குள்ளர்கள் தாங்கள் இருக்கும் பகுதியில் உணவுப் பற்றாக்குறை ஏற்பட்டால் வேறு பகுதிக்குத் தங்கள் குடிசையை மாற்றிக் கொள்ளுகின்றனர். ஆகவே, இவர்களுடைய வீடுகள் மிகவும் எளிய அமைப்புடையனவாக இருக்கின்றன.

மரப் பட்டைகளை ஆடையாகப் பயன்படுத்துகின்றனர். காடுகளிலிருந்து இவர்களுக்குத் தேவையான தண்ணீர், விறகு, மருந்துக்குப் பயன்படும் மூலிகை போன்றவை கிடைக்கின்றன. மணமக்கள் தங்கள் வீட்டிற்குத் தேவையானவற்றைத் தாங்களே ஆயத்தம் செய்து கொள்ளுகின்றனர். மேலும், குடும்பத்தில் மிகவும் நெருக்கமாகவும் அன்பாகவும் பழகுகின்றனர்.

குள்ளர் தாங்கள் வாழும் காடுகளை மிகவும் உயர்வாகக் கருதுகின்றனர். குறிப்பாகத் திருமணம், குழந்தைகள் வயதுக்கு வந்த பொழுது கொண்டாடும் விழா போன்றவற்றிற்குக் காடுகளை மிகுதியாகச் சார்ந்திருக்கின்றனர். இவை போன்ற விழாக் காலங்களில் ஆட்டம், நடனம் போன்ற நிகழ்ச்சிகள் முதன்மையானவையாகக் காணப்படுகின்றன. தங்கள் பகுதிகளில் வாழும் குள்ளர் அல்லாத மற்றவர்களுடன் சமூக, அரசியல் உறவை ஏற்படுத்திக் கொண்டுள்ளனர். இந்தக் குள்ளர்கள் தங்கள் மொழியை இழந்து மற்ற குழுக்களின் மொழியைப் பேசி வருகின்றனர்.

**ஆப்பிரிக்க - திராவிடத் தொடர்புகள்:** ஆப்பிரிக்கருக்கும் திராவிடருக்கும் இடையே ஏற்பட்ட தொடர்புகள் வாசுகோடகாமாவின் இந்திய வருகைக்கு முன்னரே ஏற்பட்டனவாகும். அவருக்கு முன்பே, பல கப்பலோட்டிகளுக்கும் வணிகருக்கும் கிழக்கு ஆப்பிரிக்காவுக்கும் தென்னிந்தியாவுக்கும் இடையே உள்ள கடல்வழி மிகவும் பழக்கமானதாக இருந்தது. செடாக்சு கரியந்தா (Seytax Caryanda) என்ற கிரேக்கக் கப்பலோட்டியே இந்துமாக்கடலைக் கடந்த முதலாமவராவார். அவர் கி.மு. 510-ஆம் ஆண்டிற்கு முன்பே செங்கடலைக் கடந்து இந்துமாக் கடல் வழியாகக் கப்பலைச் செலுத்தி வந்து சிந்து வெளியின் முனைப் பகுதியைத் தொட்டுத் திரும்பினார்.

அலெக்சாந்திரியாவைச் சேர்ந்த கிரேக்கர் ஒருவரால் கி.பி. 60-இல் எழுதப்பட்ட பெரிபுளூசு என்னும் நூல் கப்பல் பயணத்தைப் பற்றிய நூல்களுள் குறிப்பிடத்தக்கதாகும். இந்நூல் ஆப்பிரிக்கா, தென்னிந்தியா ஆகியவற்றின்கடற்கரையில் உள்ள வாணிக மையங்களைச் சுட்டுகிறது. மேலும் இது, ஏறக்

குறைய 7500 சொற்களில் தமிழ்நாடு, உரோம், ஆப்பிரிக்கா முதலிய நாடுகளுக்கிடையே உள்ள ஏற்றுமதி இறக்குமதிகளைப் பற்றி விளக்குகிறது. பெரிபுளூசின் கருத்துக்கு அரணாகக் கீழ்வரும் இரு கருத்துகள் அமைகின்றன. உரோமானியத் தங்க நாணயங்கள் கி.பி. 54-68-இல் அரிக்க மேட்டில் கண்டுபிடிக்கப்பட்டன. உரோமானிய அரசர்களுக்குச் சொந்தமான 46 தங்க நாணயங்கள், கி.பி. 29-இல் கருநாடக நாட்டில் தார்வார் மாவட்டத்தில் கண்டுபிடிக்கப்பட்டன. இந்த இரு நிகழ்ச்சிகளும் பெரிபுளூசின் கருத்துகளுக்கு அரணாக அமைகின்றன.

செடாக்சு கரியந்தா என்ற கப்பலோட்டியின் பெயர் பெரிபுளூசில் குறிப்பிடப்பட்டுள்ளது. அலெக்சாந்தரின் புகழ்மிக்க மாலுமியான நியார்சு என்பார் கி.மு. 327-26ஆம் ஆண்டில், சிந்துவெளி வரை கப்பலோட்டித் திரும்பினார்.

இந்திய வணிகர்களுக்கு, ஆப்பிரிக்கத் தந்தம், இரும்பு, தங்கம் ஆகியவை மிக விருப்பமாக இருந்தன. எல்மசுதி (Elmasudi) என்பவர், கி.பி. 10-ஆம் நூற்றாண்டில், சொபாலா என்பது தங்கம் இருக்கும் நாடு என்று எழுதியுள்ளார். அவர் குறிப்பிடும்போது சாஞ்சு (Zanj) என்ற கிழக்கு ஆப்பிரிக்க நீக்கிரோக்கள் வாழும் இடத்தின் முதன்மையான ஏற்றுமதி தந்தமே என்று கூறுகிறார். இந்தத் தந்தம், இந்தியாவிற்கும் சீனாவுக்கும், ஏமன் என்ற தென் அரேபிய நாட்டிலிருந்து கொண்டு வரப்பட்டது. அப்படிக் கொண்டுவராவிடில் முகமதிய நாடுகளில் (அரேபிய நாடுகளில்) நிறையத் தந்தங்கள் இருந்திருக்கும். அவ்வாறில்லாமல் அவை ஏனைய நாடுகளுக்குக் கொண்டுசெல்லப்பட்டு விட்டன. இரண்டு நூற்றாண்டுக்குப் பிறகு எட்ரிசி என்பவர் கிழக்கு ஆப்பிரிக்கக் கடற்கரையின் தலையாய ஏற்றுமதிப் பொருள் இரும்பாக இருந்தது என்று குறிப்பிடுகிறார். சபேலா என்ற நாட்டின் இரும்பு, அளவிலும் தன்மையிலும் இந்திய இரும்பைவிடச் சிறந்ததாக இருந்தது. அதிலிருந்து நல்ல வாளினைச் செய்ய இந்தியர்கள் நன்கு பழக்கப்பட்டிருந்தனர்.

எட்ரிசி என்பவர் கி.பி. 12-ஆம் நூற்றாண்டின் இடையில் பின்வருமாறு எழுதியுள்ளார்:- சாவா மக்கள் (Javanese) ஆப்பிரிக்காவின் தென்கிழக்குக் கடற்கரை ஓரமாகக் கப்பலோட்டி வந்து அங்குள்ள இரும்புகளை எடுத்து இந்தியாவுக்குக் கொண்டு வருவது வழக்கம். இந்தியாவின் மேற்குக் கரை ஆப்பிரிக்காவின் கிழக்குக் கரையோடு மிக்க தொடர்பு கொண்டிருந்தது. இதற்குக் காரணம், மதிப்பு மிக்க தங்கம் தென் கிழக்கு ஆப்பிரிக்கக் கரையோரம் கிடைக்கப்பெற்றமையாகும். தென்கிழக்கு ஆப்பிரிக்கப் பகுதிகளைத்தவிர மற்றைய ஆப்பிரிக்கப் பகுதிகளில் உலக நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் அளவு தங்கம் கிடைக்கவில்லை. இதனால், தென்கிழக்கு ஆப்பிரிக்கக் கரைப்பகுதியில் தங்க வாணிகத்தை இந்தியாபோன்ற அயல்நாடுகள் நடத்தின. பழைய பயண எழுத்தாளர்கள் கருத்துப்படி தங்கமே ஆப்பிரிக்காவிலிருந்து இந்தியாவுக்கு அனுப்பப்பட்ட முதன்மைப் பொருளாகும். தென் கிழக்கு ஆப்பிரிக்கத் துறைமுகங்களிலிருந்து இந்தியாவுக்குத் தங்கம் ஐந்து அல்லது ஆறு நூற்றாண்டுகளாகப் பெரிய அளவில் ஏற்றுமதி செய்யப்பட்டது.

இன்றளவும் ஆப்பிரிக்காவே தங்க ஏற்றுமதியில் முதன்மையிடம் பெறுகிறது. பழங்காலத்தில் ஐரோப்பியர், முகமதியர் போன்றோர், உலகிலேயே தங்க ஏற்றுமதியில் ஆப்பிரிக்கா புகழ்வாய்ந்தது என்று நம்பினர். ஆப்பிரிக்கத் தங்க நாணயம் பற்றிய கதைகளும் இவர்களிடையே நிரம்ப உள்ளன. அவற்றில் ஒன்று, தங்கம் மரத்தில் வளர்வது என்பது. அதனால் தான் ஐரோப்பிய, இசுலாமிய வணிகர்கள் தங்கத்தைத் தேடி ஆப்பிரிக்க வழியெல்லாம் பயணம் செய்தார்களாம். அந்தோனியோ மால்பந்தே (Antonio Malfante) என்ற வணிகப் பயணி தங்கம் வரும்வழியைக் கண்டுபிடிக்க ஆப்பிரிக்காவிற்கு ஐரோப்பியர்களால் அனுப்பப்பட்டார். இந்திய வணிகர்கள் ஆப்பிரிக்கப் பகுதிகளுக்கு மொழிபெயர்ப்பாளருடன் பயணம் செய்தனர் என்று அவர் குறிப்பிட்டுள்ளார்.

பாசில் தேவிடுசன் என்பவர் ஆப்பிரிக்கக் கல்வி நிலையை உற்று ஆய்ந்த வல்லுநர். கதங்காவில் பண்டு மொழி பேசும் மாநிலத்தில் உள்ளவர்கள் பெரிய அளவில் செம்பை உற்பத்தி செய்தனர். சாம்பியா என்ற ஆப்பிரிக்கப் பகுதியில் இன்னொரு உலோகத்தை உற்பத்தி செய்திருந்தனர். இக்கனிமத்தால் செய்யப்பெற்ற அணிகலன்களும், செம்பால் செய்யப்பெற்ற அணிகலன்களும், தெற்கு சாம்பசியிலிருந்து வரவழைக்கப்பட்ட தங்கத்தால் ஆன அணிகலன்களும் சேர்த்துப் புதைக்கப்பட்டிருந்தன. கி.பி. பத்தாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் மசுதி என்பவர் சாம்பசி பக்கத்திலிருக்கும் வார்லினி என்ற நாட்டைப் பற்றிக் கூறும் போது மேற்சுட்டிய செய்தியை விவரிக்கிறார். இக்காலத்திலேயே தங்க வணிகம் இந்தியக் கப்பல் வாணிகருடன் தொடங்கி விட்டது எனப் பாசில் தேவிடுசன் குறிப்பிடுகிறார்.

தொல்பொருளியல், மானிடவியல், மொழியியற் கல்விகளும் ஆப்பிரிக்க இந்திய உறவுகளை உறுதிப்படுத்தும். கெர்வாசு என்ற ஐரோப்பிய மேலைக் கடலோரத் தொல்பொருளியல் நிபுணர் சஞ்ச்-ஏ-கதி என்னும் தீவில் தென்னிந்தியக் குடியேற்றம் இருப்பதைக் கண்டுபிடித்துள்ளார். சஞ்ச்-ஏ-கதி என்னும் தீவு, கீல்வா தீவின் பக்கத்திலுள்ளதாகும்.

ஆராய்ச்சி வல்லுநரான செர்வாசு, தென்னிந்திய மக்களின் குடியேற்றத்திற்கு அடையாளமான சின்னம் ஒன்றைக் கண்டுபிடித்தார்.

சில நீள்சதுர வீடுகளைக் கொத்தன் மிகவும் அழகாகவும் உன்னிப்பாகவும் கட்டியிருக்கிறான். அந்த வீடுகள், பதினாறு அடி உயரமுள்ள கோட்டை மதிற்சுவரின் பக்கத்தே இணைந்திருக்கின்றன. அழிவுற்ற நிலையில் இச் சின்னங்கள் உள்ளன. இச் சின்னங்களே ஆப்பிரிக்க, இந்திய வணிகத் தொடர்புகளுக்குக் கிடைக்கும் மிகப் பழைய சான்றாகும்.

மேத்யூ என்பவர் கி.பி. 1950-இல் சோங்கோமாரா என்னும் பவழத் தீவில் அகழாய்வு செய்தார். அந்த இடத்தில் அவர், இந்தியாவிலிருந்த மணியும் கார்னிலியன்சும் சேர்த்துக் கோத்த அணிகலன்களைக் கண்டு பிடித்துள்ளார். சிம்பாவ்வேயில் தொல்லியல் அறிஞர்களால், உடைபட்ட கற்களும், தங்கத்தால் செய்யப் பெற்ற பொருள்களும், பிற உலோகங்களால் செய்யப்பெற்ற பொருள்களும், கிழக்குக் கரையிலிருந்து கிடைத்த மட்பாண்டப் பொருள்களும், சைனாவிலிருந்து கிடைத்த பீங்கான் பொருள்களும் கண்டுபிடிக்கப்பட்டன. இந்தியாவின் மணிகள் கி.பி. 8-ஆம் நூற்றாண்டிலேயே மிகுந்த விலை மதிப்புடையனவாக இங்கே கருதப்பட்டன.

இந்தியத் துணிகள் ஆப்பிரிக்காவில் இறக்குமதி செய்யப்பட்டன. அவை மெகாவிலுள்ள வட தெமசுட்ரி என்ற இடத்தில் கண்டு பிடிக்கப்பட்டன. மெகா என்ற இடத்தில் நீர்த்தேக்கம் கண்டுபிடிக்கப்பட்டது. இந்நீர்த்தேக்கம் எகிப்தில் இல்லாத ஒன்று. ஆகையால், இது இந்தியாவிலிருந்தே அறிமுகம் ஆகியிருத்தல் வேண்டும். திராவிடருக்கும் ஆப்பிரிக்கருக்கும் உடற்கூறு, பண்பாடு முதலானவற்றில் நிரம்ப ஒற்றுமைகள் உள்ளன.

சோழிகள் மேற்கு ஆப்பிரிக்காவில் பயன்படுத்தப் படுகின்றன. பண்டைக் காலத்தில் அவை நாணயங்களாகவும் பயன்பட்டன. இந்தச் சோழிகள் தமிழ் நாட்டுக் கடற்கரை, கேரளக் கடற்கரைகளிலிருந்து ஆப்பிரிக்காவிற்குக் கொண்டு வரப்பட்டன. மேலை ஆப்பிரிக்க நகைகள் தென்னிந்திய நகை வேலைப்பாடுகளோடு ஒத்துள்ளன. பிளோரா சா என்பாரின் கருத்துப்படி புலானி என்ற ஆப்பிரிக்க மொழி இந்தியாவிலிருந்து சென்றதாகும். இக்கருத்துக்கள் அனைத்தும் ஆப்பிரிக்கருக்கும் திராவிடருக்கும் உள்ள உறவை உறுதிப்படுத்தும். க.ப.அ.

**ஆப்பிரிக்க நாடுகளின் காப்பிக் கழகம்:** ஆப்பிரிக்காவில் காப்பி உற்பத்தி செய்யும் 7 நாடுகள், 1960-ஆம் ஆண்டு திசம்பர்த் திங்கள் 7-ஆம் நாளில், மலாகசி (Malagasy) நாட்டின் தலைநகராகிய தானாரரைவ் (Thanararive) என்ற நகரில் காப்பிக் கழகம் (Inter-African Coffee Organisation (IACO) என்ற ஓர் அமைப்பை ஏற்படுத்தின. நாளடைவில் உறுப்பு நாடுகள் பெருகி இப்போது 21 ஆப்பிரிக்க நாடுகளை உறுப்பினராகக் கொண்டு ஐவரி கோசுட்டின் (Ivory Coast) தலைநகராகிய அபிட்சான் (Abidjan) நகரில் தன் தலைமைச் செயலகத்தை அமைத்துச் செயலாற்றுகிறது.

நோக்கங்கள்: காப்பி உற்பத்தி செய்யும் ஆப்பிரிக்க உழவர் தம் உழைப்பிற்கேற்ற நியாயமான ஊதியத்தையும் பிற நலன்களையும் அடையவேண்டும் என்பதே இக்கழகத்தின் சிறப்புக் குறிக்கோளாகும். அதற்காக இது உறுப்பு நாடுகள் தங்கள் சிக்கல்களை விவாதிக்கவும், பன்னாட்டு வாணிகக் குழுக்களுடன் கலந்தாய்வு செய்யவும், திட்டங்களை உருவாக்கிச் செயற்படுத்தவும், உறுப்பு நாடுகளை ஒரே அணியின் கீழ்க்கொண்டு வந்து உழைக்கிறது. பன்னாட்டுக் காப்பிக் கழகத்துடன் தொடர்பு கொள்ளவும் வழி வகுக்கிறது.

உறுப்பு நாடுகள்: அங்கோலா, பெனின், புருண்டி (Burundi), கேமரூன், மத்திய ஆப்பிரிக்கக் குடியரசு, காங்கோ, எத்தியோப்பியா, கானா, ஐவரி கோசுட்டு, கென்யா, இலைபீரியா (Liberia), மடகாசுகர், மாலவி, நைசீரியா, உருவாண்டா, சியர் லியோன் (Sierra Leone), தான்சானியா, தோகோ, உகாண்டா, செயர் (Zaire) ஆகியன.

**ஆப்பிரிக்க நிலக்கடலைக் குழு:** இக்குழு 1966-ஆம் ஆண்டு பிப்பிரவரித் திங்களில் செனகல் நாட்டின் தலைநகரான தாகரில் தனது பணியைத் தொடங்கியது. இதற்கான உடன்படிக்கை நகல்களும் 1964-ஆம் ஆண்டு சூன் திங்களில் சட்டமுறையில் எழுதப்பட்டு நடைமுறைக்கு வந்தன. பொதுவாக இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறையாவது இக்குழு கூடுகிற வழக்கம் உண்டு. மேலும் சில மாநாடுகளும் அவ்வப்போது நடைபெற்றன. இக்குழுவின் கடைசி மாநாடு 1981-ஆம் ஆண்டு நைசர் நாட்டில் நியாமியில் நடந்தது.

இக்குழுவின் உறுப்பு நாடுகள், சாம்பியா, மாலி, நைசர், நைசீரியா, செனகல், சூடான் ஆகியவையாம்.

**குழுவின் நோக்கங்கள்,** நிலக்கடலை உற்பத்தியினைப் பெருக்குதல்; அதன் விற்பனை, நுகர்வுத் தொடர்பான நடவடிக்கைகள் எடுத்தல்; நிலக்கடலையின் பயனைப் பன்முகப்படுத்துதல்; இது குறித்துத் திட்டங்கள் வகுத்தல்; தரத்தினை மேம்படுத்துதல்; ஆராய்ச்சியினை மேற்கொள்ளுதல் ஆகியனவாகும்.

இவை தவிர இப்போது பனை, எள், பருத்தி விதைகள் ஆகியவற்றின் வளத்தைப் பெருக்குவதிலும் ஆப்பிரிக்க நிலக்கடலைக்குழு (African Groundnut Council- AGC) ஈடுபட்டு வருகிறது. இக்குழு 1981-ஆம் ஆண்டு நடத்திய ஒன்பதாம் கூட்டத்தில், உலக நிலக்கடலை அங்காடியில் ஏற்பட்ட பாதிப்புக் குறித்து ஓர் ஆய்வு நடத்தப்பட்டது. தொழில் வளர்ச்சியடைந்த நாடுகளில் சோயா, சூரியகாந்தி ஆகியவற்றின் விதைகள் மிக்க அளவில் உற்பத்தி செய்யப்படுவதால், நிலக்கடலையின் விற்பனை பாதிக்கப்பட்டு விலை குறைந்து வருகிறது. இதைத் தவிர்க்க முற்பட்டு நிலக்கடலை பயிரிடுவோரை ஊக்குவிக்கும் திட்டங்கள் வகுக்கப்பட்டன. இவ்வாறான திட்டங்களை மேற்கொண்டு செயலாற்றும் பொருட்டு உறுப்பு நாடுகளின் ஒத்துழைப்பையும், 11 மிலியன் உரூபாய் மதிப்பிற்கான செலவினையும் மேற்கொள்ள உறுப்பு நாடுகளுக்கு அழைப்பு விடுத்துள்ளது. இங்கிலாந்து அரசு, நிலக்கடலைக்கும் அதனைச் சார்ந்த பொருள்களுக்கும் தடை விதித்ததற்கு இக்குழு, தன் கடும் கண்டனத்தைத் தெரிவித்தது.

நிலக்கடலையில் இருக்கக்கூடிய நச்சுத் தன்மையினால் உலகச் சந்தையில் இழந்த வாணிகத்தை ஈடுசெய்யும் வண்ணம், ஐரோப்பியப் பொருளாதாரக் குழு (EEC), ஐக்கிய நாடுகளின் முன்னேற்றத் திட்டம் (United Nations Development Programmes) போன்ற உலக நிறுவனங்களிலிருந்து பல திட்டங்களுக்காக இக்குழு உதவிப் பணம் பெற்று வருகிறது. நிலக்கடலை உற்பத்தி செய்யும் நாடுகளில் ஆய்வுக் கூடங்கள், நச்சுத் தன்மை அகற்றும் தொழிற் கூடங்கள் (Detoxification Plants) போன்றவற்றை அமைப்பதற்கும், தொழில் நுட்ப உதவியை அளிப்பதற்கும் இத்தொகை பயன்படுத்தப்படுகிறது.

**ஆப்பிரிக்கப் பொருளாதார நிறுவனம்:** இது எத்தியோப்பியாவின் தலைநகராகிய அடிசுஅபாபாவில் 1958- ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 29 - ஆம் நாள் நிறுவப்பட்டது.

இதன் சிறப்பு நோக்கங்கள்: 1 ஆப்பிரிக்கப் பொருளாதார முன்னேற்றத் திட்டங்களுக்கேற்ற சூழ்நிலையை உருவாக்குதல், 2 அத்திட்டங்களைச் செயற்படுத்தும் பணியில் பங்கு கொள்ளுதல், 3 சமூக நலத் திட்டங்களுக்குச் சிறப்பிடம் அளித்துப் பொருளாதார வளர்ச்சியைப் பெறவும் மக்களின் வாழ்க்கைத் தரம் உயரவும் வழி வகுத்தல், 4 ஆப்பிரிக்க நாடுகளுடனும் ஏனைய வெளிநாடுகளுடனும் அரசியல் பொருளாதார நல்லுறவை வளர்த்து அவற்றை நிலைபெறச் செய்தல் ஆகியன.

உறுப்புநாடுகள்: வட ஆப்பிரிக்கா, சகாரா துணை மண்டலம் ஆகியவற்றிலடங்கிய 51 தனி நாடுகள் இதன் உறுப்பு நாடுகளாகும். தென் ஆப்பிரிக்கா தன்இனவெறிக் கொள்கையின் காரணமாக 1963-இல் உறுப்பினர் தகுதியை இழக்க நேரிட்டது. பிரான்சு, நமீபியா, இங்கிலாந்து ஆகிய நாடுகள் இதன் இணை உறுப்பு நாடுகளாகும்.

திறமை மிகு செயல்முறை வளர்ச்சிக்காக ஆப்பிரிக்கப் பொருளாதார நிறுவனத்தின் (Economic Commission for Africa) பொறுப்புகள் யாவும் பல துறைப் பிரிவுகளுக்கு ஒப்படைக்கப்பட்டுள்ளன. சமூகப் பொருளாதார ஆராய்ச்சித் திட்டம், பன்னாட்டு வாணிகம், நிதி, சமுதாய முன்னேற்றம், இயற்கை வளங்கள், போக்குவரத்து வசதி, செய்தித் தொடர்பு, சுற்றுலா, பொது நிருவாகம், மேலாண்மை, மனித ஆற்றல், புள்ளியியல், மக்கள்தொகை யியல் ஆகிய பிரிவுகள், ஐக்கிய நாட்டு உணவு வேளாண்மைக் கழகத்துடனும் ஐக்கிய நாட்டுத் தொழில் முன்னேற்றக் கழகத்துடனும் இணைந்து செயலாற்றுகின்றன. இவை தவிர 5 பன்னாட்டுத் திட்டங்களும் அவற்றைச் செயற்படுத்தும் மையங்களும் பல முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்றப் பாடுபடுகின்றன.

ஆப்பிரிக்க நாடுகளுக்கிடையே வாணிகத்தைப் பெருக்குவதற்கும், அந்நாடுகள் பொருளாதாரத் திட்டங்களை வகுத்து நுட்ப அறிவினைப் பொதுக் கருத்தரங்கு வாயிலாக அளிப்பதற்கும் இந்நிறுவனம் முனைந்து செயற்படுகிறது. அடிசுஅபாபாவில் 1980-ஆம் ஆண்டு நடந்த ஆப்பிரிக்க ஆணையர், வாணிக அமைச்சர்கள் மாநாட்டிற்காக உருவாக்கிய இந்நிறுவனத்தின் ஆய்வறிக்கை, செறிவும் தரமும் மிகுந்து பாராட்டுதலைப் பெற்றது. அதன் அடிப்படையில் ஆப்பிரிக்கப் பொருளாதார முன்னேற்றத்திற்கான நடைமுறைத் திட்டம் 'மன்ரோவியாத் திட்டம்' (Manrovia) என்ற பெயரில் உருவானது. இத்திட்டம் இலாகோசில் (Lagos) நடந்த ஆப்பிரிக்க நாட்டுத் தலைவர்களின் பொருளாதார உச்சி மாநாட்டில் ஏற்றுக் கொள்ளப்பட்டு 'இலாகோசு நடைமுறைத் திட்டம்' என்று சொல்லப்படுகிறது.

இத்திட்டம் ஆப்பிரிக்க மண்டல நாடுகளின் பொருளாதாரச் சிக்கல்களைத் தீர்க்க வழிகாணும் நோக்கம் கொண்டது. மேலும் கி.பி. 2000 ஆண்டு வாக்கில் ஆப்பிரிக்கப் பொது அங்காடி (African Common Market) ஒன்றை உருவாக்க முனைந்து செயற்படும் தேவையையும் வலியுறுத்துகிறது. இது மக்களின் குடியிருப்புச் சூழலில் முன்னேற்றம் காணவும் உணவு உற்பத்தி, கட்டிடத் தொழிலுக்கான மூலப்பொருள்கள், எரிபொருள், ஆற்றல் ஆகியவற்றில் தன்னிறைவைப் பெறும் வண்ணம் திட்டங்கள் தீட்டியுள்ளது. உணவுப் பாதுகாப்பு, சேமிப்பு,

வேளாண்மை, மாநிலங்களிடையே தொழில் வளம், மக்கள் வளம், அறிவியல், நுண்ணியல், வாணிகம், பொருளாதாரக் கூட்டுறவு, போக்குவரத்து, செய்தி மக்கள் தொடர்பு, பன்னாட்டு வாணிக நிதி, ஊன முற்றோர் நல்வாழ்வு, கைவினைப்பொருள் உற்பத்தி, நலிவுற்றோர் பாதுகாப்பு, தன்னுதவி ஆகியவை தொடர்பான திட்டங்களின் சிறப்புத் தன்மையை வலியுறுத்துகிறது. இத்திட்டங்களை 20 ஆண்டுக் காலத்தில் செயற்படுத்த முடிவு செய்துள்ளது.

எரிபொருள் பற்றாக்குறையின் காரணமாக ஏற்பட்ட பொருளாதார நெருக்கடியைத் தவிர்க்கக் குறுகிய கால, நீண்டகாலச் செயல்முறைத் திட்டங்கள் வகுக்கப்பட்டு, அவற்றின் மதிப்பீட்டுப் பணியையும் மேற்கொண்டுள்ளது. ஐக்கிய நாடுகளின் ஆதரவுடன் கருத்தரங்குகளும் தொழில் அமைச்சர்களின் மாநாடுகளும் அவ்வப்பொழுது நடத்தப்பட்டு, நுட்ப அறிவுக் கருத்துப் பரிமாற்ற மூலம் ஒருங்கிணைந்த பொருளாதார முன்னேற்றத்திற்கான திட்டங்களை வகுத்துள்ளது. தொழிற் புரட்சிக் கொள்கை குறித்த ஆய்வுக்குப் பின், ஆப்பிரிக்கத் தொழில் முன்னேற்ற வங்கி (African Industrial Development Bank) என்ற அமைப்பை உருவாக்குவதற்கான ஒப்பந்தப் படியை உருவாக்கியுள்ளது. போக்குவரத்து வசதிகளைப் பெருக்க ஆப்பிரிக்க வடகிழக்குப் பகுதிகளில் சாலை அமைக்கும் நோக்கத்துடன் கிழக்குப்புற ஆப்பிரிக்க நெடுஞ்சாலை ஆணையகம் (Trans East African Highways Authority) ஒன்றும் உருவாக்கியுள்ளது.

இந்நிறுவனம் அனைத்து ஆப்பிரிக்கத் தகவல் சேகரிப்பு முறையின் (Pan African Documentation & Information System - PADIS) மூலம் உறுப்பு நாடுகளுக்குத் தேவையான கல்வி, வாணிகம், தொழில், வேளாண்மை, நுண்ணியல், ஆற்றல், போக்குவரத்து ஆகியவை குறித்த புள்ளி விவரங்களை உடனுக்குடன் கொடுத்துதவுகிறது. இப்புள்ளி விவரங்களை ஆணையகத்தின் கணிப்பொறி வங்கியின் (Computerised Data Bank) மூலம் அளிக்கிறது. ஐக்கிய நாட்டு நிறுவனத்தின் உதவியைப் பல திட்டங்களுக்காகப் பெற்றிட முடியும் என்ற எண்ணத்தில் இந்நிறுவனம் ஆப்பிரிக்க முன்னேற்ற நம்பிக்கை நிதிக்காக உரூ. 28.75 மிலியனை வழங்கியுள்ளது. எதிர்காலத் திட்டமாக, நிதித் தொடர்பான மேலாண்மைக்காக நிருவாகக் கழகம் ஒன்றினையும், தென்கிழக்கு ஆப்பிரிக்க நாடுகளின் முன்னேற்றப் பணிகளுக்கெனத் தனி வங்கி ஒன்றினையும் அமைத்திட முயன்று வருகிறது.

**ஆப்பிரிக்கப் பொருளாதார முன்னேற்ற அரபு வங்கி:** அல்சியர்சு நாட்டில் அரபுத் தலைவர்களின் உச்சி மாநாடு 1973-ஆம் ஆண்டு நடைபெற்றது. இதன் விளைவாக 1975-ஆம் ஆண்டு ஆப்பிரிக்கப் பொருளாதார முன்னேற்றத்திற்கான அரபு வங்கி (Arab Bank for Economic Development in Africa - ABEDA) தோற்றுவிக்கப்பட்டது.

வங்கியின் குறிக்கோள்கள், அரபு அல்லாத ஆப்பிரிக்க நாடுகளுக்குப் பொருளாதார முன்னேற்றத்திற்கான உதவிகளை அளித்தல்; முன்னேற்றத் திட்டங்களுக்கு முழுமையான அல்லது பகுதி அளவிலான உதவியை வழங்குதல்; ஆப்பிரிக்காவில் அரபுத் தனியார் முதலீட்டை ஊக்குவித்துத் தொழில்நுட்ப அறிவைக் கொடுத்துதவுதல் போன்றவை ஆகும்.

அரபுச் சங்கத்தின் கீழ் (Arab League) வாராத ஆப்பிரிக்க ஒற்றுமைக் கழகத்தின் மற்ற நாடுகளே இந்நிதி வசதியினைப் பெறும் தகுதி கொண்ட நாடுகளாகும். உறுப்பு நாடுகள் ஒவ்வொன்றுக்கும் ஒரு பேராளராக மொத்தம் பன்னிருவரைக் கொண்ட ஓர் ஆளுநர் குழுவும், ஓர் இயக்குநர் குழுவும் இவ்வங்கியின் மேலாண்மைப் பொறுப்பை ஏற்று நடத்துகின்றன.

**வங்கியின் உறுப்பு நாடுகள்:** அல்சீரியா, பெகரின், எகிப்து, இராக்கு, சோர்டான், குவெயித்து, இலெபனான், இலிபியா, மாரிட்டானியா, மொராக்கோ, ஓமான், சிரியா, பாலசுத்தீனிய விடுதலைக் கழகம், கடார், சவூதி அரேபியா, சூடான், துனீசியா, ஐக்கிய அரபுக் குடியரசு நாடுகள் ஆகியவை இதன் உறுப்பு நாடுகளாகும். எகிப்து, இசுரயேல் நாட்டுடன் 1979-இல் ஏற்படுத்திக் கொண்ட சமாதான உடன்படிக்கையின் விளைவாகத் தன் உறுப்பினர் தகுதியை இழந்தது.

இவ்வங்கியின் தலைமைச் செயலகம் சூடான் நாட்டின் தலைநகரான கார்டூம் (Khartoum) என்னும் நகரில் அமைந்துள்ளது. இவ்வங்கி, 1980-ஆம் ஆண்டில் மட்டிலுமே 21.45 மிலியன் உரூபாய் ($ 1.95 Million) மதிப்புள்ள கடன்களை வழங்கியுள்ளது. இதுவரை கிழக்கு ஆப்பிரிக்க நாடுகளுக்கு 448.95 மிலியன் உரூபாய் ($ 44.45 Million) மதிப்புள்ள கடன்களும், மேற்கு ஆப்பிரிக்க நாடுகளுக்கு 302.5 மிலியன் உரூபாய் ($ 27.50 Million) மதிப்புள்ள கடன்களும் வழங்கப்பட்டுள்ளன. பெரும்பாலும் இக்கடன்களில் 44.8 விழுக்காடு அடிப்படைத் தொழில் வளத்திற்காகவும், 27.8 விழுக்காடு தொழில் துறைக்காகவும், 25.7 விழுக்காடு வேளாண்மைத் துறைக்காகவும், 1.7 விழுக்காடு ஆற்றல் (Energy) வளத்திற்காகவும் கொடுக்கப்பட்டுள்ளது.

இவ்வங்கியுடன் 1977-ஆம் ஆண்டில் அரபுச் சிறப்பு நிதி இணைக்கப்பட்டதால், வங்கியின் புழக்

கத்தில் இருந்த பணத்தின் மதிப்பு உரூ. 42619.6 மிலியனாக உயர்ந்தது. மிகவும் வளர்ச்சி குன்றிய நாடுகளுக்கு உதவி செய்வதையே கடமையாகக் கொண்டு செயற்படுவதால் இவ்வங்கி பெரும்பாலான உதவித் தொகையினை இந்நாடுகளுக்கே வழங்கி வருகிறது.

**ஆப்பிரிக்க முன்னேற்ற வங்கி:** ஆப்பிரிக்க மண்டல நாடுகளின் பொருளாதார முன்னேற்றத் திற்கென 1964-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களில் இவ்வங்கி உருவாக்கப்பட்டது. முதலில் 20 ஆப்பிரிக்க நாடுகளை உறுப்பினராகக் கொண்டு 1966 சூலைத் திங்களிலிருந்து செயற்படத் தொடங்கியது. ஆப்பி ரிக்க முன்னேற்ற வங்கியின் (African Development Bank) தலைமைச் செயலகம் ஐவரி கோசுட்டின் (Ivory Coast) தலைநகராகிய அபிட்சான் (Abidjan) நகரில் நிறுவப்பட்டுள்ளது. ஆப்பிரிக்க மண்டலத் திலுள்ள நாடுகள் மட்டுமே இப்போது உறுப்பு நாடு களாக அனுமதிக்கப் பட்டுள்ளன. ஆப்பிரிக்க ஒற்று மைக் கழகத்தின் (Organisation of African Unity) 50 உறுப்பு நாடுகளும் இவ்வங்கியின் பங்குதாரர் நாடுகளாகும்.

உறுப்பு நாடுகளில் பெரும்பாலானவை மிகவும் பின்தங்கிய பொருளாதார நிலையிலுள்ளவை. ஆப் பிரிக்க மண்டல நாடுகள் மட்டுமே உறுப்பு நாடுகள் என்ற சட்டம் திருத்தப்படாததால், மூலதனம் வழங்கக் கூடிய நாடுகள் தங்களுக்குத் தனிப்பட்ட சலுகைகள், அதிகாரங்கள் ஆகியவற்றைப் பெற விரும்பின. அவை அரசியல் மற்றும் நடைமுறை வழியில் பல சிக்கல்களுக்கு இடம் கொடுப்பதனால் மூலதன வளத்தைப் பெருக்குவதற்கென ஆப்பிரிக்க முன்னேற்ற நிதி என்ற ஓர் அமைப்பு 1972- இல் ஏற் படுத்தப்பட்டது. அதற்கான மூலதனத்தினை வழங் கும் நாடுகளுக்கு நிருவாகத்திலும் அதன் மேலாண் மையிலும் சிறப்புப் பங்கு அளிக்கப்பட்டுள்ளது. இந் நிதிக்கு நிதி வழங்கும் மற்ற மண்டல நாடுகள் அர்செண்டினா, ஆசுத்திரியா, பெல்சியம், பிரேசில், கனடா, தென்மார்க்கு, பின்லாந்து, பிரான்சு, செரு மானியக் கூட்டுக் குடியரசு, இந்தியா, இத்தாலி, சப்பான், கொரியக் குடியரசு, குவைத்து, நெதர் லாந்து, நார்வே, சவூதி அரேபியா, இசுபெயின், சுவீடன், சுவிட்சர்லாந்து, ஐக்கிய அரபுக் குடியரசு கள், இங்கிலாந்து, யுகோசுலாவியா ஆகியன.

செனிவாவில், முதலீட்டுக்கும் முன்னேற்றத்துக் குமான பன்னாட்டு நிதிக் குழு (International Financial Society for Investments and Development in Africa) என்ற அமைப்பு உருவாவதற்கு இவ் வங்கி பெரிதும் பாடுபட்டது. பன்னாட்டு நிதி நிறு வனங்கள், இந்நிதி அமைப்பின் மூலம் பல வகைக் கடன் வசதிகளை வழங்குகின்றன. மேலும் தனியார் துறைக்கும் உற்பத்தித் திறன் மிகுந்த பொருளா தார முன்னேற்றத் திட்டங்களுக்கும் கடன் வழங்க இவ்வங்கி அதிகாரம் பெற்றுள்ளது.

இவ்வங்கி 1980-அம் ஆண்டில் மட்டும் அளித்த கடனின் மதிப்பு 6,555 மிலியன் உரூபாய் ஆகும். கடன் தொகை, வங்கியின் பின்தங்கிய உறுப்பு நாடுகளுக்கெனவே ஒதுக்கப்பட்டது. ஆப்பிரிக்க ஒற்றுமைக் கழகத்தின் உச்சி மாநாட்டு அறிக்கை யின் படி, இவ்வங்கி வேளாண்மை, தகவல் தொடர்பு போன்ற அடிப்படைப் பொருளாதார முன்னேற்றத் திட்டங்களுக்குச் சிறப்பிடம் கொடுக்க முன் வந்துள் ளது. வங்கியின் மூலதன இருப்பு 1981-ஆம் ஆண்டில் 17. 8 பிலியன் உரூபாய் ஆகும். பிற மண்டல நாடு களை உறுப்பினராக அனுமதிக்காவிடினும் 1983-ஆம் ஆண்டளவில் வங்கியின் மொத்த மூலதனத்தை 72. 5 மிலியன் உருபாய் அளவிற்கு உயர்த்தத் திட்ட மிடப்பட்டுள்ளது.

நைசீரியா 1976-ஆம் ஆண்டில் 50 மிலியன் நெயிரா (Nigerian Neire) மூலதனத்துடன் நைசீரி யத் தகுதி நிதி என்ற அமைப்பினை ஏற்படுத்த உடன்பட்டுப் பின்னர் 192. 5 மிலியன் உரூபாயை 1981-இல் வழங்கியது. ஆப்பிரிக்க முன்னேற்ற வங் கிக்கு மிகுதியான தொகையினைச் செலுத்தும் தனி நாடு நைசீரியா ஆகும்.

**ஆப்பிரிக்க மொழிகள்** என்பது இயற்கை வளம் செறிந்த ஆப்பிரிக்க நாடுகளில் அந்நாட்டு மக்களால் வழங்கப் பெறும் மொழிகள் பலவற்றைக் குறிக்கும். இயற்கை வளத்தினைப் போலவே மொழி வளமும் செறிந்து, மொழியியல் அறிஞர்கள் வியக் கும் வண்ணம் பலவித தனித்தன்மைகளைக் கொண்டு விளங்கும் மொழிகள் பலவற்றை இவற் றுள் காணலாம். ஆயிரத்திற்கும் அதிகமான மொழி கள் இங்கு வழங்குவதாக அறிஞர்கள் கருதுகிறார் கள்.

பிளீக்கு (Bleek), மெய்ன் ஆப் (C. Meinhof), தோக்கு (C. M. Doke), வெசுடர்மன் (D. Wester mann), கிரீன்பெர்க்கு (Greenberg) போன்ற மொழி யியல் அறிஞர் பலர் ஆப்பிரிக்க மொழிகள் பலவற் றைப் பற்றி எழுதியிருப்பினும், அங்குள்ள நூற்றுக் கணக்கான மொழிகளின் அமைப்பு, தனிப்பண்புகள் போன்றவை வெளி உலகின் பார்வையிலிருந்து இன் றும் மறைந்தே கிடக்கின்றன.

இம்மொழிகளைக் கி. பி. 15-ஆம் நூற்றாண்டி லிருந்தே பிறர் அறியலாயினர். எனினும் முன்னர்க் குறிப்பிட்ட அறிஞர் பெருமக்களின் அயரா உழைப் பாலும், மார்சுடன் (William Marsden), பிக்கார்டு (F. C.Pichard), வெர்னர் (Alice Verner), போன்ற வேறுசில அறிஞர்களின் தொண்டினாலும் இம்மொழி

களின் அமைப்பும் ஆக்கமும் பற்றிய அறிவு நமக்குக் கிடைத்துள்ளது. இவ்வறிஞர்களுள் சிலர் தத்தம் காலத்திற்கு ஏற்ப இம்மொழிகளைப் பலவேறு பிரிவு களாகப்' பிரித்துள்ளனர். எடுத்துக்காட்டாக, வெசுடர்மன் இவற்றைக் கொய்சன் மொழிகள், நீக்ரோ மொழிகள், எமிட்டோ செமிட்டிக்கு(Hamito-Semitic) மொழிகள் என மூன்று பெரும் பிரிவுகளா கப் பகுத்தார். ஆனால், இவருக்குப் பின்னர்க் கிரீன் பெர்க்கு இம்மொழிகளை, நைசர்-காங்கோ மொழி கள், நைலோ - சகாரன் மொழிகள், கொய்சன் மொழிகள், ஆப்ரிக்க - ஆசிய மொழிகள் அல்லது எமிட்டோ செமிட்டிக்கு மொழிகள் என நான்கு பிரி வுகளாகப் பகுத்துள்ளார். இவர் செய்த வகைப் பாட்டினை இன்று எல்லோரும் ஏற்றுக்கொள்ளு வதில்லையெனினும் இதைவிடச் சிறந்த ஒரு வகைப்பாடு ஏற்படவில்லை.

ஆப்ரிக்க மொழிக் குடும்ப வகையில் நைசர்-காங்கோ மொழிகள் பிரிவே பெரியதாகக் சுாணப் படுகிறது. ஆப்ரிக்காவின் தென்பகுதி முதல் சூடான் நாட்டு எல்லைப்பகுதி வரையிலும் இம்மொழிகள் காணப்படுகின்றன. மேலும் தெற்கு ஆப்பிரிக்கப் பகுதிகளாகிய செனகால், மாரிட்டோனியா போன்ற நாடுகளில் எல்லாம் இப்பிரிவு மொழிக ளைக் காணலாம். இப்பிரிவில் முப்பதுக்கும் அதிக மாகக் கிளைகள் இருப்பினும், கிரீன்பெர்க்கு இதனை ஆறு பிரிவுகளாகவே பிரிப்பார்.

புலானி, உலாப்பு, செரெர், சோலா, நலூ போன்ற பல வடபால் மொழிகளும், மண்டே மொழி களும், கூர் மொழிகளும், குவா மொழிகளும், அட மாவா மொழிகளும், காங்கோ மொழிகளும் இன்னும் இவைபோன்ற பலவேறு மொழிகளும் இப்பிரி வினுள் அடங்கும்.

இப்பிரிவில் காணப்படும் பல மொழிகளும் பத் தாயிரத்திற்கும் குறைவான மக்களாலேயே பேசப் படுகின்றன. சில ஐம்பதாயிரத்திற்கும் அதிக மான மக்களாலும், சில ஒரு இலட்சத்திற்கும் அதிகமான மக்களாலும், சில பலஇலட்சம் மக்களாலும் பேசப்படுகின்றன. சுவாகிலி இப்பிரி வில் காணப்படும் முதன்மையான ஒரு மொழியாகும். தங்கனீக்கா, உகாண்டா, கென்யா ஆகிய இடங் களில் இம்மொழி பேசப்படுகிறது. பத்து மொழிகளில் இதுவே இலக்கிய மொழியாகக் கருதப்படுகிறது. இம் மொழியில் கி.பி. 18-ஆம் நூற்றாண்டு முதல் இலக்கி யங்களைக் காணலாம். இன்று உரோமன் எழுத்து களால் இம்மொழி எழுதப்பட்டாலும் முன்பு அரபு எழுத்துகளே பயன்படுத்தப்பட்டன. நைலோ-சகாரன் மொழிகள், நைசர்-காங்கோ மொழிகளைப் போன்று நீக்ரோ மக்களால் பேசப்படுவனவாகும். இவை நைசீரியா, நைசர், லிபியா, சூடான், எத்தி யோப்பியா, கென்யா போன்ற நாடுகளில் வழங்குகின் றன. முந்திய பிரிவு மொழிகள் பேசப்படும் இடங்கள் ஒரு சிலவற்றிலும், அம்மொழி பேசும் இடங்களுக்கு வடகிழக்கிலும், கிழக்கிலும் உள்ள இடங்களிலும் இம்மொழிகள் வழங்குவனவாகக் கொள்ளலாம். இம் மொழிகளை ஆறு சிறு பிரிவுகளாகப் பிரிப்பர். இவற்றுள் நூற்று முப்பதுக்கும் அதிகமான மொழி கள் உள்ளன. கனூரி, இடிங்கா, சிலுக்கு, மாசெய், இலெண்டோ போன்ற மொழிகள் இவற்றுள் அடங் கும். சாரி, நைல் மொழிகள் முதன்மையான மொழி களாகும். இப்பிரிவினுள் பல்வேறு சூடானிக்கு மொழிகளும் அடங்கும்.

பொதுவாக இம்மொழிகள் பலவற்றில் பால் வேற்றுமை காணமுடியாது. ஆனால் ஒருமை, பன்மை வேற்றுமையைக் காணலாம். மேலும், இம் மொழிகளிலுள்ள வினைச் சொற்கள் காலங்களையும் காட்டுவதில்லை. வினைகளுக்கு முன்னால் சில முன் னுருபுகள் நின்று காலங்களை உணர்த்துகின்றன.

தென் ஆப்பிரிக்காவில் தென் ஆப்பிரிக்கக் குடி யரசு, உரொடீசியா (Rhodesia), அங்கோலா, சாம்பியா, தென்மேற்கு ஆப்பிரிக்கா ஆகிய நாடு களில் வழங்கும் சில மொழிகளைக் கிளிக்கு மொழிகள் என மொழியியலார் குறிப்பிடுவர். இம்மொழிகளைக் குறிக்கும் சொல்லாகக் கொய்சன் என்ற சொல் காணப்படுகிறது. இவை கொய்சன் மொழிகள் எனப்படும். பொதுவாக இம்மொழிகளை அட் டன்ரோ, புசுமன் என இரண்டு பிரிவுகளாகப் பிரிப்பர். சிலர் தான்சானியாவில் வழங்கும் வேறு சில மொழிகளையும் இதனோடு இணைப்பர். அட் டன்ரோ பிரிவில் இருபதுக்கும் மேற்பட்ட மொழி கள் உள்ளன. பொதுவாக, இம்மொழிகளில் மிகுதி யான பதிலிடு பெயர்களைக் காணலாம். நான், நீ, நாம், நாங்கள் போன்றவற்றில் எல்லாம் ஆண், பெண், பொது எனப் பல பிரிவுகளைக் காணமுடியும். இதே நிலையினைப் பிற மூவிடப் பெயர்களிலும் காணலாம்.

இம்மொழியில் வினைச் சொற்கள் காலங்களை முன்னுருபுகள் மூலம் மிக எளிமையாகக் காட்டு கின்றன. 'நீ வேட்டையாடி அதை அடித்துக் கொன்றாய்' எனக் கூறவேண்டின் 'நீ அதை வேட்டையாடு, அடி, கொல்' என்றும், 'இது குளிராக இருப்பதால் இதை, நான் எடுக்கிறேன்' எனக் கூறவேண்டின் 'நான் இதை' எடு, இது குளிர்' என்றும் கூறப்படுகின்றன. 'நான் இதை ஆறு தடவை செய்தேன்' எனக் கூறவேண்டின், செய் என்ற வினையை ஆறுதடவை, ''நான் செய், செய், செய், செய், செய், செய்' என்று கூறுவது குறிப் பிடத்தக்கது.

எமிட்டோ-செமிட்டிக் மொழிகள் மத்திய தரைக் கடலின் கிழக்குப் பகுதிகளிலும், ஆப்பிரிக்கா வின் வடபகுதிகளிலும் பேசப்படுகின்றன. இவ்வின மொழிகளிற் சில வரலாற்று அடிப்படையிலும், நாகரிக முதிர்ச்சியிலும் மிக்வும் சிறப்பானவை. இன்றைய உலகில் காணப்படும் சிறப்பான சமயங் களுள் கிறித்தவம், இசுலாம், யூதம் ஆகிய சமயங்கள் பிறந்த இடங்கள் இம்மொழிகள் வழங்கும் பகுதி களாகும். கிறித்தவ மக்களின் வேதமாகிய விவிலிய மும், இசுலாமிய மக்களின் வேதமாகிய குர்ஆனும் முறையே இவ்வினத்தைச் சார்ந்த ஈபுரூ, அரபிக்கு மொழிகளில் முதன்முதலாக எழுதப்பட்டுள்ளன.

இப்பெயருக்கு ஏற்ப இவ்வின மொழிகளை எமிட்டிக்கு, செமிட்டிக்கு மொழிகள் என இரு பெரும் பிரிவுகளாகப் பிரிப்பர். இவற்றுள் எமிட்டிக்கு மொழிகள் ஆப்பிரிக்காவின் வடபகுதிகளிலும், செமிட்டிக்கு மொழிகள் மத்திய கிழக்குப் பகுதிகளி லும், வடஆப்பிரிக்காவிலும் வழங்குகின்றன.

எமிட்டிக்கு மொழிகளை எகிப்தியமொழி, பெர்பர் மொழிகள், குச்சுதிக்கு மொழிகள், சாடு மொழிகள் என நான்கு பிரிவுகளாகப் பிரிப்பர். இவற்றுள் எகிப்திய மொழி இன்று வழக்கிலில்லை. மிகப் பழமையான மொழிகளுள் எகிப்திய மொழியும் ஒன்று. கி.மு. 5000 ஆண்டிற்கு முன்பே நைல் நதிக் கரையில் தோன்றி வளர்ந்து, ஆயிரக் கணக்கான கல்வெட்டுகளையும், பாப்பிரசு ஏடுகளையும், நிலை நிறுத்திக் கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் பேச்சு வழக் கற்ற மொழி எகிப்திய மொழி. இம்மொழி ஈரோ கிளிபிக்கு எழுத்துகளால் எழுதப்பட்டுள்ளது. இம் மொழியில் இலக்கணக் கூறுகள் உயிர்மாற்றத்தினால் தான் பெரும்பான்மையும் காட்டப்படுகின்றன.

இப்பிரிவின்கண் உள்ள பெர்பர் மொழிகள் ஆப் பிரிக்காவின் வடக்குப் பகுதியில் அட்லாண்டிக்குக் கடல் முதல் எகிப்து வரை நீண்டு கிடக்கும் நிலப் பகுதியில் பேசப்படுகின்றன. இதன்கண் உள்ள மொழிகளுள் சில்கா மொழி குறிப்பிடத்தக்கது. இதுபோன்றே இப் பிரிவின்கண் உள்ள கௌசா மொழியும் குறிப்பிடத் தக்க ஒன்றாகும்.

செமிட்டிக்கு மொழிகளுள் ஒருசில மொழிகள் ஆப் பிரிக்காவில் பேசப்படுகின்றன. அராபிக்கு இவற்றுள் சிறப்பான ஒன்றாகும். இதைப் போன்றே எத்தி யோப்பிய மொழிகளும் குறிப்பிடத்தக்கவை.

பொதுவாக இம்மொழிகளில் உயர்திணை, அஃறி ணைப் பகுப்பு இல்லை. எல்லாச் சொற்களும் ஆண் அல்லது பெண்பால் காட்டுகின்றன. பல மொழி களில் ஒருமை, இருமை, பன்மைப் பகுப்பினையும் எழுவாய், செயப்படுபொருள், உடைமைப் பொருள் வேற்றுமைகளையும் காணலாம். தமிழில் பிற வேற் றுமை உருபுகளால் காட்டப்படும் வேற்றுமைப் பொருள்கள் பல முன்னுருபுகளால் இம்மொழியில் உணர்த்தப்படுகின்றன. முன்னிலையில் ஆண், பெண் வேற்றுமையைக் காணலாம். பெயர், வினைமாற் றங்கள் முன்னொட்டுகளாலும், பின்னொட்டுகளா லும், உள்உயிர் மாற்றங்களாலும் காட்டப்படுகின் றன.

பொதுவாக ஆப்பிரிக்க மொழிகள் (எமிட்டோ செமிட்டிக்கு மொழிகளைத் தவிர) பழமையான கல் வெட்டுகளையோ, இலக்கியங்களையோ கொண் டவை அல்ல. ஆப்பிரிக்க மொழிகளின் முதல் எழுத் துச் சான்றாகக் கருதப்படுவது கி.பி. 10 அல்லது 11- ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகும். எனினும் மொழிக் கூறுகளைப் பொறுத்தமட்டில் இம்மொழி கள் சில தனிப் பண்புகளைக் கொண்டிருக்கின்றன. இத்தன்மையை ஒலியியல், சொல்லியல், தொடரியல் ஆகியவற்றில் எல்லாம் காணமுடியும். கிளிக்கு ஒலி ஆப்பிரிக்க மொழிகளில் காணப்படுகிறது. இவற் றைப் போன்றே பெயர், வினைச்சொல் ஆக்கங்களி லும் ஒருசில புதுமைகளைக் காணலாம். **எஸ். அ.**

**ஆப்பிரிக்கா** உலகிலேயே இரண்டாம் பெரிய கண்டம். ஆசியா இதனைவிடப் பரப்பில் பெரியது. ஆப்பிரிக்காக் கண்டம் மக்கள் தொகையில் மூன்றாம் இடத்தைப் பெறுகிறது. ஆசியா முதலிடத்தையும் ஐரோப்பா இரண்டாம் இடத்தையும் பெறும் கண் டங்கள். பெருமளவில் இயற்கைச் செல்வங்களை யும் மூலப் பொருள்களையும் பெற்றிருந்தாலும், போதுமான பொருள்வசதியின்மையால் தடைபட்ட முன்னேற்றத்துடன் இக்கண்டம் தடுமாறி நிற்கிறது. உலக வைர உற்பத்தியில் முக்கால் பகுதி, ஆப்பிரிக்கா வின் சுரங்கங்களிலிருந்து வெட்டியெடுக்கப் படுகிறது. ஆப்பிரிக்கக் காடுகளில் உறுதி வாய்ந்த மரங்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. அவற்றுள் எபனியும் மகாகனியும் சிறப்பானவை. ஆப்பிரிக்க மக்களுள் 100 க்கு 70 பேர் கறுப்பர்கள். அவர்களை நீக்கி ரோக்கள் என்று கூறுவர்.

ஆப்பிரிக்காவை 100 ஆண்டுகளுக்கு முன் இருண்ட கண்டம் எனக் கூறினர். ஏனெனில், ஐரோப்பிய வெள்ளையர்க்கு அதன் பெரும் பகுதி தெரியாத, புரியாத புதிராக இருந்தது. இன்றும் ஆப்பிரிக்கா வின் பல பகுதிகளைப் பற்றிய விவரங்கள் கிடைப் பது அருமையாகவே இருப்பினும், கல்வியின் தரம் உயர்வதாலும், பிற கண்டங்களிலிருந்து மக்கள் ஆப் பிரிக்காவைக்காண வருவதாலும், இப்புதிர் புரியத் தொடங்குமென எதிர்பார்க்கிறார்கள். மக்கள் பலர் வாணிகத்திற்காக ஆப்பிரிக்கா செல்கிறார் கள். ஆயிரமாயிரம் சுற்றுலாப் பயணிகள் ஆப்பிரிக் காவிற்குச் செல்கிறார்கள். அவர்கள் உலகிலேயே




ஆப்பிரிக்காக் கண்டம் —இருப்பிடம்

மிகவும் நீண்ட நைல் ஆற்றினையும், உலகிலேயே மிகப்பெரிய சகாராப் பாலை நிலத்தையும் காணவும், அங்குள்ள காடுகளில் வேட்டையாடி இன்புறவும், வனவிலங்குகளைப் படம் பிடிக்கவும் செல்கின்றனர். இதன் பலனாக ஆப்பிரிக்காவின் இருள் நீங்கி ஒளிபெற வழியேற்பட்டுள்ளது.

ஆப்பிரிக்கா 1950-ஆம் ஆண்டுக்குப் பின்னர்

பெரிதும் மாறிவிட்டது. ஐரோப்பியக் குடியேற்றப் பகுதிகளாயிருந்தவை விடுதலை பெற்றுவிட்டன. ஒரு சில இன்றும் விடுதலைக்காகப் போராடி வருகின்றன. இருபதாம் நூற்றாண்டின் இடைப்பகுதிக்கு முன், ஆப்பிரிக்க மக்களுள் 80 விழுக்காட்டினரையும், நிலப்பரப்பில் 90 விழுக்காட்டுப் பகுதியையும், ஐரோப்பியர்கள் ஆண்டு வந்தனர். அக்காலத்தில் உரிமை பெற்ற நாடுகள் நான்கே இருந்தன. ஆனால், இப்பொழுது 51 நாடுகள் விடுதலை பெற்றுள்ளன. பெரும்பாலும் ஆப்பிரிக்கரே இன்று இக்கண்டம் முழுவதையும் ஆண்டு வருகின்றனர். தென் ஆப்பிரிக்காவில் மட்டும் ஐரோப்பிய வழிவந்தோர் இன்று ஆள்கின்றனர்.

ஆப்பிரிக்காக் கண்டத்தில் விடுதலை பெற்ற 51 நாடுகளும் பரப்பளவில் மாறுபட்டவை; வேறுபட்டவை. சூடான் பரப்பில் மிகப்பெரிய நாடு; சிசில்சு (Seychelles) மிகச் சிறிய நாடு. மக்கள் தொகையில் நைசீரியா மிகப் பெரிய நாடு. அதன் மக்கள்தொகை ஏறத்தாழ 7½ கோடியாகும்.

விடுதலை பெற்ற நாடுகளுள் பெரும்பாலானவை குடியரசு நாடுகள். பல நாடுகளில் ஒரு கட்சியே செயற்படுகிறது. இராணுவ ஆட்சி 1958-ஆம் ஆண்டுக்குப் பின்னர் ஆப்பிரிக்க நாடுகள் பலவற்றில் நடைபெறுகிறது.

புதிய ஆப்பிரிக்க நாடுகளுக்குச் சில பொது இயல்புகள் உண்டு. சில நாடுகள் விடுதலைப் போராட்டத்தில் தீவிரமாகப் பங்கு கொண்டு அண்மையில் விடுதலை பெற்றன. ஆப்பிரிக்கர் விதவிதமான தேசிய இனங்களைச் சார்ந்தவர்கள். பல்வேறு குழுக்களிடையே எழுந்த கருத்து வேறுபாட்டினால் சண்டை சச்சரவுகள் இங்கு மூண்டதும் உண்டு. இப்புதிய நாடுகளின் மக்கள் வறியவர்களாய் உள்ளார்கள்.

எல்லாப் புதிய நாடுகளிலும் சிக்கல்கள் பல தோன்றக் கூடும். அவற்றைத் தீர்க்கக்கூடிய அரசுகள் ஆப்பிரிக்காவில் திறமையாகச் செயற்பட்டால் அவற்றின் சட்டமுறையிலான அதிகாரத்தை மக்கள் ஏற்றுக்கொள்வர். நாட்டு ஒருமைப்பாட்டிற்கு அவர்கள் பாடுபட்டால் பல்வேறு குழுக்களையும் இணைக்க முடியும். பொருளாதாரத் துறைகளையும் வேகமாக வளர்க்க வேண்டும். எனினும், பயிற்சி பெற்ற நிருவாகிகளின் பற்றாக்குறையே ஆப்பிரிக்காவின் வளர்ச்சிக்குத் தடைக்கல்லாகும்.

ஆப்பிரிக்கர், அனைத்து ஆப்பிரிக்க நாடுகளையும், ஆப்பிரிக்க மக்களையும் இணைக்கும் கூட்டமைப்புக் கொள்கைக்கு ஆதரவு நல்குவர். அதன் அடிப்படையில் ஆப்பிரிக்காவின் பல்வேறு பொது சமூகப் பொருளாதாரச் சிக்கல்களைக் களைய, ஆப்பிரிக்க ஐக்கிய அமைப்பு (OAU) ஒன்றினை 1963-ஆம் ஆண்டில் உருவாக்கியுள்ளனர். உறுப்பினர்களுக்கிடையே எழும் பூசல்களை இவ்வமைப்பு அமைதியான முறையில் தீர்க்க முயலுகிறது. தென்னாப்பிரிக்காவில் சிறுபான்மை வெள்ளையர் ஆதிக்கத்தை எதிர்க்கும் கிளர்ச்சிகளையும் இவ்வமைப்பு ஆதரிக்கிறது.




ஆப்பிரிக்கா-இயற்கைப் பிரிவுகள்

அனைத்து ஆப்பிரிக்க நாடுகளும், ஐக்கிய நாடுகள் அவையின் உறுப்பு நாடுகளாகியுள்ளன. பொதுவுடைமைக் கட்சியைச் சார்ந்த நாடுகளுக்கும் பொதுவுடைமைக் கட்சியைச் சாராத நாடுகளுக்குமிடையே சச்சரவுகள் எழுந்தால், ஆப்பிரிக்க நாடுகள் நடுநிலைமை வகிக்கின்றன. அதன் பயனாகப் பல ஆப்பிரிக்க நாடுகள் வல்லரசுகளுடனும் உறவு கொண்டு பயன்பெறுகின்றன.

**ஆப்பிரிக்காவின் அமைப்பு:** ஆப்பிரிக்காவின் வடக்கில் மத்திய தரைக் கடலும் ஐரோப்பாவும், தெற்கில் இந்தியப் பெருங்கடலும் அட்லாண்டிக்குப் பெருங்கடலும், கிழக்கில் தென் ஆசியாவும் இந்தியப் பெருங்கடலும், மேற்கில் அட்லாண்டிக்குப் பெருங்கடலும் எல்லைகளாக அமைந்துள்ளன.

ஆப்பிரிக்காவின் பரப்பு 3,03,20,000 ச.கி.மீ. தெற்கு வடக்காக இக்கண்டத்தின் நீளம் 8074 கி.மீ. கிழக்கு மேற்காக இதன் அகலம் 7564 கி.மீ. ஆப்பிரிக்காக் கண்டக் கடற்கரைகளின் நீளம் 36,888 கி.மீ. மக்கள் தொகை 47,80,00,000.

மிக உயர்ந்த மலைச் சிகரமான கிலிமாஞ்சரோ (Klimangaro) தான்சானியாவில் உள்ளது ;இதன் உயரம் 5895 மீ.

**ஆப்பிரிக்காவின் சிறப்புக் கூறுகள்:** இக்கண்டத்தில் குறிப்பிடத்தக்க மலைத் தொடர்கள், அகாக்கர், அட்லாசு, திரேக்கன்சுபர்க்கு (Drakensberg), உருவன் சோரி, திபெசுடி ஆகியனவாம்; ஆறுகள், காங்கோ, இலிம்போபா, நைசர், நைல், ஆரஞ்சு, சாம்பசி, செனிகல் ஆகியன; ஏரிகள், ஆல்பர்ட்டு, சாடு, கரிபா, நியாசா, உருடால்பு (Rudolf), தங்கனீகா, விக்டோரியா ஆகியன; பாலைநிலங்கள், சகாரா, கலகாரி, நமீபு ஆகியன; நீர்வீழ்ச்சிகள், சார்சு (George) அரசர் நீர்வீழ்ச்சி, மாலட்சுன்யானே, இசுடான்லி, துகேலா, விக்டோரியா போன்றவை.

இக்கண்டத்தை அடுத்துள்ள முக்கியத் தீவுகள் மடகாசுகர், செய்னியோ, மொரீசியசு, கனேரி, கேப்வர்டு, மடீரா என்பவையாம். அவற்றுள் முதல் மூன்றும் இந்தியப் பெருங்கடலிலும், எஞ்சியவை அட்லாண்டிக்குக் கடலிலும் உள்ளன.

**இயற்கைப் பிரிவுகள்:** இக் கண்டத்தை நான்கு முக்கிய இயற்கைப் பிரிவுகளாகப் பிரிக்கலாம்.




ஆப்பிரிக்காவின் மழையும் காற்றுகளும் - நவம்பர் முதல் ஏப்ரல் வரை

அவை, மழைக்காடுகள், புல்வெளிகள், பாலை நிலங்கள், மத்திய தரைக்கடல் தட்பவெப்பநிலைப் பகுதிகள் என்பனவாம்.

மழைக் காடுகள் வெப்பமண்டல மழைப் பகுதிகளின் பகுதியாக உள்ளன. இக்கண்டத்தின் இடையில் செல்லும் நிலநடுக்கோட்டால், அக்கோடு செல்லும் பகுதிகளில் கடுமையான வெப்பமும் பெருமழையும் நிலவுவதால், அங்கு நீண்டு நெடிதுயர்ந்த மரங்கள் காணப்படுகின்றன. நிலநடுக்கோட்டிற்கு 10° பாகை வடக்கிலும் 10° பாகை தெற்கிலும் உள்ள பகுதிகள் வெப்பமண்டலப் பகுதிகளாகக் கருதப்படுகின்றன. இப்பகுதிகள் உயர்ந்த மேட்டு நிலங்களாக இருப்பதாலும், பருவக் காற்றுகள் கிழக்கிலிருந்து தாக்குவதாலும் பெருமழை பெறுகின்றன. இப்பகுதிகளில் எப்போதும் வெப்பம் மிகுதி; இங்கு வறட்சிநிலை வருவதில்லை; நிலப்பாங்கும் நீர்ப்பாசன வசதிகளும் மிகுதியாக இருப்பதால், காடுகள் பெருமளவில் செழித்து வளருகின்றன. காங்கோ ஆற்றுவடிநிலமும் மேற்கிலுள்ள கினி கடற்கரைப் பகுதிகளும் பெருமழை பெறுகின்றன.




ஆப்பிரிக்காவின் வெப்ப நிலை - சனவரி

மழைக் காடுகளுக்கு வடக்கேயும் தெற்கேயும் புல்வெளிப் பகுதிகள் உள்ளன. இக்கண்டத்தின் வடபகுதியில் உள்ள புல்வெளிகளைச் 'சவன்னா' (Savanna) என்றும், தென் ஆப்பிரிக்காவில் உள்ள புல்வெளிகளை 'வெல்ட்டு' (Velt) என்றும் கூறுவர்.

ஆப்பிரிக்காக் கண்டத்தின் ஐந்தில் இரண்டு பங்கு சவன்னாப் புல்வெளிகளில் அடங்கும். இப்புல்வெளியில் அங்கொன்றும் இங்கொன்றுமாக மரங்களும் புதர்களும் உள்ளன. நிலநடுக்கோட்டின் இருமருங்கிலும், சிறப்பாகக் கிழக்கு ஆப்பிரிக்க மேட்டு நிலம், காங்கோ ஆற்று வடிநிலம், தென் ஆப்பிரிக்கா போன்ற பகுதிகளில் புல்வெளிகள் நிறைந்துள்ளன.

ஆப்பிரிக்காக் கண்டத்தின் ஐந்தில் இரண்டு பங்கு பாலைநிலங்களாக உள்ளன. உலகிலேயே பெரிய பாலைநிலமான சகாரா ஆப்பிரிக்காவின் வட பாகத்தில்தான் உள்ளது. இப்பாலை நிலம் மத்திய தரைக் கடலையொட்டியுள்ள அராபிய நாடுகளையும், மத்திய ஆப்பிரிக்காவிலுள்ள நீக்கிரோ நாடுகளையும் பிரிக்கிறது. பாலைநிலப் பசுஞ்சோலைகள் நீர் கிடைக்கும் இடங்களைச் சுற்றியுள்ளன. அங்கு உழவர்கள் வேளாண்மை செய்கிறார்கள்.

பாலைநிலப் பகுதிகளுக்கு வடக்கிலும் தெற்கிலும் உள்ள சில இடங்களில் ஒருவகையான தட்ப வெப்பநிலை நிலவுகிறது. இதனை மத்தியதரைக் கடல் தட்ப வெப்பநிலைப் பகுதி என்பர். இத்தகைய தட்பவெப்ப நிலையைக் கொண்ட பகுதிகளில் குளிர் காலத்தில் மழையும், கோடைக் காலத்தில் வறட்சியும் காணப்படும்.



ஆப்பிரிக்கக் காண்டாமிருகம்

**விலங்குகள்:** ஆப்பிரிக்காவில் வாழும் காட்டு விலங்குகள் எண்ணற்றன. அவற்றை வேட்டையாட உலகின் பல பாகங்களிலிருந்தும் வேட்டைக்காரர்கள் வருகிறார்கள். ஆப்பிரிக்கச் சிங்கங்களை வேட்டையாடும் 'சபாரி' ஒரு பெரும் பொழுதுபோக்கு. அதே போன்று சிறுத்தைப் புலிகளையும், காண்டாமிருகங்களையும் வேட்டையாடப் பலர் வருகின்றனர். வேட்டையாடலும், புதிய குடியிருப்புகளை அமைத்தலும் விலங்குகளின் எண்ணிக்கையைப் பெருமளவில் குறைத்துவிட்டன. இப்போது இவ்விலங்குகளைக் காக்கக் காப்புக் கழகங்கள் ஏற்படுத்தப் பெற்றுள்ளன.



ஒட்டைச் சிவிங்கிகள்

ஆப்பிரிக்காவின் புல்வெளிகளில் மான் வகைகள், ஒட்டைச் சிவிங்கிகள், வரிக் குதிரைகள் போன்றவை கூட்டங் கூட்டமாக வாழ்கின்றன. கழுதைப் புலி, நரி, சிறுத்தைப் புலி, சிங்கம் போன்ற விலங்குகள் புல்வெளிகளில் வாழும் விலங்குகளை அடித்துத் தின்று உயிர் வாழ்கின்றன. முன்னர், இக்கண்டத்தின் நெடுகிலும் யானைகள் உலாவி வந்தன. ஆனால், அவற்றின் தந்தங்களுக்காக அவை ஆயிரக் கணக்கில் கொல்லப்பட்டன. இன்றும் கிழக்கு, தென்கிழக்கு ஆப்பிரிக்கக் காடுகளில் யானைக் கூட்டங்களைக் காணலாம். இவற்றைத் தவிர சிம்பன்சி, கொரில்லாக் குரங்குகள் போன்ற விலங்குகள் மழைக் காடுகளில் வாழ்கின்றன. பருவக் காற்று வீசும் பகுதிகளில் ஓடும் ஆறுகளிலும் சதுப்பு நிலங்களிலும் முதலைகளும் நீர்யானைகளும் வாழ்கின்றன.

பாலைநிலங்களைத் தவிர, ஆப்பிரிக்காவின் பெரும்பாலான பகுதிகளில் பறவைகளும் பாம்பினங்களும் வாழ்கின்றன. செந்நிற நாரைகள், கடல் நாரைகள் (Pelicon), கொக்குகள் போன்ற பெரிய கடற் பறவைகளைக் கிழக்கு ஆப்பிரிக்காவில் காணலாம். தெற்கு, கிழக்கு ஆப்பிரிக்காவிலும் மேற்குச் சகாராவிலும் நெருப்புக் கோழிகள் உள்ளன. நோய்க் கிருமிகளைச் சுமந்து வரும் கொசுக்களும், திரெட்சி (Tretse) என்னும் ஒருவகை நச்சு ஈக்களும் பருவக் காற்று வீசும் ஆப்பிரிக்காவில் ஏராளமாகத் தென்படுகின்றன. கொசுக்கள் மலேரியாக் கிருமி



ஆப்பிரிக்கச் சிங்கம்

களையும், திரெட்சி ஈக்கள் தூக்கத்தைக் கெடுக்கும் நோய்க் கிருமிகளையும் சுமந்து செல்கின்றன.

**செடியினங்கள்:** நிலநடுக்கோட்டிற்கு அண்மையிலுள்ள வெதுவெதுப்பும் ஈரக்கசிவும் மிக்க பகுதிகளில் பருவக் காற்று மண்டலக் காடுகள் செழித்து வளர்ந்துள்ளன. எண்ணெய்ப் பனைகள், 'இரப்பர்' (Rubber) மரத்தைச் சுற்றிவரும் கொடிவகைகள், பழமரங்கள் போன்றவை இங்கு வளர்கின்றன. எபினி, மகாகனி போன்ற உறுதியான மரங்களும் ஆப்பிரிக்காவில் சிறப்பாக வளருகின்றன. வடிகால்களற்ற ஆப்பிரிக்காவின் கடற்கரைச் சதுப்புநிலங்களில் கண்டல் செடிகள் (Mangrove) வளமாக வளருகின்றன. மலைப் பாங்கான பகுதிகளில் உயரத்திற்குத் தக்கவாறு விதவிதமான செடியினங்கள் வளருகின்றன. மூங்கிலும் 'செடார்' மரங்களும் உயரம் குறைந்த இடங்களிலும், சிறுசிறு புற்கள் செங்கருநீல மலர்வகைகள், கிண்ண வடிவான பொன்னிறப் பூக்கள் ஆகியவை குளிர்ச்சியான, உயரம் மிகுந்த புல்வெளிகளிலும் காணப்படுகின்றன. ஒலிவ மரங்களும் ஓக்கு(Oak), மரங்களும் வடமேற்கு ஆப்பிரிக்காவிலும், ஆப்பிரிக்காவின் தென்கோடி முனையிலும் செழித்து வளர்ந்து, பச்சைப்பசேலெனக் காட்சியளிக்கும் புதர்ச் செடிகளுடன் தென்படுகின்றன.

பருவக் காற்று மண்டலச் சவன்னாப் புல்வெளிகளில் பல்வேறு புல்வகைகள், வேலமரங்கள், பருத்த அடியுடைய மரங்கள் (Boobabs), தென்னை பனை போன்ற மரங்கள், வகைவகையான முட்புதர்ச் செடிகள் முதலானவற்றைக் காணலாம். சவன்னாப் புல்வெளிகளில் மிதமான மழையும் மாறிமாறி வரும் மழைப் பருவமும், கோடைப் பருவமும் தென்படுகின்றன. இப்புல்வெளிகளிலுள்ள புல் கால்நடைத் தீவனமாகப் பயன்படுகிறது. கோடைப் பருவத்தில் சவன்னாப் புல்வெளிகள் கால்நடைக்குச் சீரிய மேய்ச்சல் நிலங்களாக உள்ளன. பாலை நிலங்களுக்கு அண்மையிலுள்ள மிக வறண்ட புற்றரைகளை இசுடெப்பீசு (Steppes) என்பர். அவை மேய்ச்சலுக்கேற்ற பகுதிகள். மித மண்டலத் தென் ஆப்பிரிக்கப் புல்வெளிகளை 'வெல்ட்டு' என்பர். ஆப்பிரிக்கப் பாலைநிலங்களில் சிலவகைப் புல்லும் புதர்களும் காணப்படுகின்றன. அவை அருமையாகப் பெய்யும் மழைக் காலத்தை அடுத்துத் தோன்றும்; காலப் போக்கில் மறைந்து விடும். ஆனால், அவற்றின் வேர்களும் விதைகளும் மண்ணுள் அழியாது இருந்து, மழை பொழிந்தவுடன் உயிர்பெற்றுத் தழைக்கும். பேரீச்ச மரங்கள் பாலைநிலப் பசுஞ்சோலைகளில் வளரும். பேரீச்சம் பழங்களும் மரத்தண்டுகளும் பாலைநில உழவர்களுக்குப் பயன்படுகின்றன.

**வேளாண்மை:** ஆப்பிரிக்காவில் வாழும் உழவர்களுள்பெரும்பாலோர் தம் மூதாதையர் பயன்படுத்திய தொன்மையான வழிமுறைகளையே கையாளுகின்றனர். எனினும், இக்காலத்தில் மிகுதியான உழவர்கள் அறிவியல் முறைகளைக் கற்றுக் கொண்டு நிலத்தை உழுதும், மண் வளத்தைப் பாதுகாத்தும் வருகிறார்கள். கூட்டுறவு முறையில் வேளாண்மைப் பொருள்களையும் கருவிகளையும் வாங்குகிறார்கள்.

ஆப்பிரிக்க நாடுகள் உலக உற்பத்தியில் முக்கால் பங்கு பனை எண்ணெயையும், பனம் பருப்புகள் போன்றவற்றையும் ஏற்றுமதி செய்கின்றன. அவை ஒப்பனைப் பொருள்கள், சவுக்காரம் போன்றவற்றைத் தயாரிக்கப் பயன்படுகின்றன. உலக உற்பத்தியில் பத்தில் மூன்று பங்கு வேர்க்கடலை ஆப்பிரிக்காவில் உற்பத்தியாகிறது. கிழக்காப்பிரிக்கப் பண்ணைகளிலிருந்து உலக உற்பத்தியில் மூன்றிலிரண்டு பங்கு தாழை நார் கிடைக்கிறது. தாழைநாரிலிருந்து கயிறு திரிப்பர். உலக உற்பத்தியில் 70 விழுக்காடு கோகோ மேற்கு ஆப்பிரிக்காவில் கிடைக்கிறது. அதிலிருந்து சாக்லேட்டு செய்கிறார்கள். வாழைப் பழங்கள், பருத்தி, நூல், பருத்திக் கொட்டை, எலுமிச்சம் பழங்கள், காப்பி, பேரீச்சை, ஒலிவம், இரப்பர், தேயிலை, புகையிலை போன்றவை சிறப்பான ஏற்றுமதிப் பொருள்களாம்.

ஆப்பிரிக்காவில் பயிரிடப்பெறும் பொருள்கள் பலவற்றை உள்ளூர் அங்காடிகளில் விற்பர். அவற்றுள் பார்லி, அத்திப் பழம், திராட்சை, கோதுமை போன்றவை சிறப்பானவை. பார்லி, கோதுமை, சோளம், கரும்பு முதலானவை நைல் ஆற்றுப் பள்ளத்தாக்கில் பயிரிடப்படுகின்றன. மத்திய, மேற்கு ஆப்பிரிக்காவில் கூவைக் கிழங்கு, தினை, அரிசி, சோளம் முதலியன பயிராகின்றன. வறண்ட பகுதியில் வாழ்வோர் கால்நடைகளை வளர்ப்பர். தென்னாப்பிரிக்காவில் சோளம், பழவகைகள், புகையிலை, காய்கறிகள், கோதுமை போன்றவை பயிராகின்றன. ஆப்பிரிக்கா பொருளாதாரத் துறையில் முன்னேற்றம் அடையாததால் இன்றும் பின்தங்கிய நிலையிலேயே உள்ளது.

**கனிவளம்:** ஆப்பிரிக்காவில் பலவகைப்பட்ட கனிப்பொருள் கிடைக்கின்றன. அஞ்சனக்கல் (Antimony), கல்நார், பாக்சைட்டு, காசிடெக்ட்டு (Caesitexite) குரோமைட்டு (Chromite), மாங்கனீசு, பாசுபேட்டு, பிளாட்டினம், தங்க்சுடன் (Tungston), உரேனியம், துத்தநாகம் போன்ற கனிப்பொருள்கள் ஆப்பிரிக்காவின் பல்வேறு பகுதிகளில் கிடைக்கின்றன. இக்கனிப்பொருள்களுள் ஒரு சிலவற்றின் பங்கு அதன் உலக உற்பத்தியில் கணிசமானதாகும். உலகில் உற்பத்தி செய்யப்பெறும் வைரத்தில் ஐந்தில் நான்கு பங்கும், தங்கம், கோபால்ட்டு உற்பத்தியில் பத்தில் ஏழு பங்கும் ஆப்பிரிக்காவில் கிடைப்பதாக 1970-ஆம் ஆண்டு மதிப்பீடு கூறுகிறது. உலக உற்பத்தியில் மூன்றில் ஒரு பங்கு பிளாட்டினமும், மாங்கனீசும், குரோமைட்டும் இக் கண்டத்திலிருந்து கிடைக்கின்றன. பத்தில் மூன்று பங்கு அஞ்சனக்கல், நான்கில் ஒரு பங்கு பாசுபேட்டு, ஐந்திலொரு பங்கு செம்பு போன்றவையும் இங்குக் கிடைக்கின்றன.

ஆப்பிரிக்காவில் கிடைக்கும் கனிப்பொருள்களில் பாதிக்குமேல் தென்ஆப்பிரிக்காவில் கிடைக்கின்றன. குறிப்பாக, தங்கம், செம்பு, வைரம் ஆகிய மூன்று கனிப் பொருள்கள் இங்குக் கிடைக்கின்றன. செம்பும் கோபால்ட்டும் சாம்பியாவிலும், பாசுபேட்டு வட ஆப்பிரிக்கா, செனீகல் (Senegal), தோகோ (Togo), போன்ற பகுதிகளிலும், தகரம் செயிராவிலும் நைசீரியாவிலும் கிடைக்கின்றன. இக்கனிப்பொருள்களின் உற்பத்தியில் பன்னாட்டு நிறுவனங்களும் பங்கு கொள்ளுகின்றன.

**மின்சாரம்:** தென் ஆப்பிரிக்காவைத் தவிர ஏனைய ஆப்பிரிக்க நாடுகள் அனைத்திலும் மின்சாரத்தைப் பயன்படுத்துவது மிகக் குறைவு. தென் ஆப்பிரிக்க நாடு மட்டும் ஆப்பிரிக்காக் கண்டத்தின் மின்சார உற்பத்தியில் பாதியைப் பயன்படுத்திக் கொள்கிறது. ஆப்பிரிக்காவில் நிலக்கரியும் இரும்பும் உலக மதிப்பீட்டில் 4 விழுக்காடாகும். இங்குப் பெட்ரோலியம் 11 விழுக்காடும், இயற்கை வாயு 8 விழுக்காடும் இருப்பிருப்பதாகக் கணக்கிட்டுள்ளனர். இவற்றைப் பயன்படுத்த ஆப்பிரிக்கர்களால் இயலவில்லை. ஆப்பிரிக்கர்கள் நீர்மின்சாரத்தை உற்பத்தி செய்தால் உலக உற்பத்தியில் 40 விழுக்காடு ஆப்பிரிக்காக் கண்டத்திலிருந்து கிடைக்கக்கூடும். ஆனால், இன்று கிடைப்பதோ ஒரு விழுக்காடு அளவு தான். கிடைக்கும் மின்சாரமும் அனைத்து ஆப்பிரிக்க நாடுகளுக்கும் சமமாகப் பகிர்ந்து கொடுக்கப்படவும் இல்லை.



சாம்பியாவில் செம்பு உற்பத்தி

**செய்பொருள்கள்:** கைவினைஞர்கள் செய்யும் பொருள்களும், இக்காலத் தொழிற் சாலைகளில் உற்பத்தியாகும் பொருள்களும் இக்கண்டத்தில் உண்டு. மரபு வழியாக ஆப்பிரிக்கக் கைவினைஞர்கள் உருவாக்கும் செய்பொருள்கள் ஆப்பிரிக்காவின் எல்லாப் பகுதிகளிலும் பயன்படுகின்றன. ஆனால், தனிச் சிறப்பு வாய்ந்த செய்பொருள்கள் நகர்ப் புறங்களில் குறிப்பாக, வட ஆப்பிரிக்காவில் பெரும்பாலும் பயன் படுத்தப் பெறுகின்றன. பெரும்பாலான நாடுகளில் தொழிற் சாலைகள் இன்றும் உருவாக்கப் பெறவில்லை. வட ஆப்பிரிக்காவிலும், எகிப்திலும் சிறிதளவு உருக்குத் தொழிற்சாலைகளும் பஞ்சாலைகளும் உள்ளன. தென் ஆப்பிரிக்காவில் தொழிற் சாலைகள் பெருவளர்ச்சி பெற்றுள்ளன.

**மக்கள் தொகை:** ஏறக்குறைய 48 கோடி மக்களைக் கொண்டது ஆப்பிரிக்காக் கண்டம். இக்கண்டத்தில் மக்கள் நெருக்கம் மிகக்குறைவு. இதற்குக் காரணம் இக்கண்டத்தின் மொத்தப் பரப்பில் மூன்றிலொரு பங்கு பாலைநிலமாக இருப்பதாகும். ஏனைய பகுதிகளை முட்புதர்கள் மூடியுள்ளன. ஐரோப்பா, வட அமெரிக்கா, தெற்கு ஆசியா போன்ற கண்டங்களுடன் ஆப்பிரிக்காவை ஒப்புநோக்கினால் இங்குப் பெரும்பாலான பகுதிகளில் மக்களே வாழவில்லையோ என்ற முடிவுக்கு வரக்கூடும். ஆற்று வடிகால் பகுதிகளில் மட்டும் நிறைய மக்கள் வாழ்கின்றனர். குறிப்பாகக் கீழ் நைல் ஆற்று வடிகால் பகுதியில் மக்கள் நெருக்கம் மிகுதி. பத்து இலட்ச மக்களைக் கொண்ட நகரங்கள் ஆப்பிரிக்காக் கண்டத்தில் ஒரு சிலவே உள்ளன. எகிப்தில் கெய்ரோவும் அலெக்சாந்திரியாவும், மொராக்கோவில் காசாபிளாங்காவும், தென் ஆப்பிரிக்காவில் சோகன்சுபர்க்கும் மாநகரங்களாம்.

இக்கண்டத்து மக்களை மூன்று பெரும்பிரிவின

ராகப் பிரிக்கலாம். முதற் பிரிவினர் நீக்கிரோக்கள். இவர்கள் சகாராப் பாலை வனத்திற்குத் தெற்கில் உள்ள நாடுகளில் வாழ்கிறவர்கள். இரண்டாம் பிரிவினர் நீக்கிரோக்கள் அல்லாதவர்கள்.இவர்கள் சகாரவிற்கு வடக்கில் உள்ள நாடுகளில் வாழ்கிறவர்கள். மூன்றாம் பிரிவினர் ஐரோப்பாவிலிருந்து குடியேறியவர்களின் வழித் தோன்றல்கள்.

சகாராவிலும் அதன் வடபாலிலும் வாழும் ஆப்பிரிக்கர்களை ஆமைட்டுகள் என்னும் பொதுப்பெயரால் அழைப்பர். அவர்களில் பெரும்பாலோர் இசுலாமியர்கள்.

சகாராவிற்குத் தென்பால் வாழும் நீக்கிரோக்களை இருபெரும் பிரிவாகப் பிரிக்கலாம். அவர்கள் சூடானிய நீக்கிரோக்கள் என்றும், பண்டு நீக்கிரோக்கள் என்றும் கூறப்படுவர்.

ஐரோப்பிய வழித்தோன்றல்களான வெள்ளைக்காரர்களைத் தென்ஆப்பிரிக்காவில் காணலாம்.

ஆப்பிரிக்காவில் மேலும் மூன்று மக்கள் குழுக்களைக் காணலாம். இவர்கள் குறைந்த எண்ணிக்கை கொண்டவர்கள். இவர்கள் 1. புசுமன் என்னும் குள்ளர்கள். இவர்கள் பெரும்பாலும், கலகாரிப் பாலை நிலத்திலும், தென்மேற்கு ஆப்பிரிக்காவிலும் வாழ்கின்றனர். 2. பிக்மி நீக்கிரோக்கள் – இவர்கள் அடர்த்தியான ஆப்பிரிக்கக் காடுகளில் வாழ்கிறார்கள். 3. ஒட்டன்டோட்டுகள். இவர்கள் தென்மேற்கு ஆப்பிரிக்காவில் வாழ்கிறார்கள்.

தென்ஆப்பிரிக்காவிலும், கிழக்கு ஆப்பிரிக்காவிலும் கணிசமான அளவில் இந்திய வழியின மக்கள் வாழ்கிறார்கள். மலகாசிக் குடியரசில் மலாயா, பாலினேசியத் தொடர்புடைய மக்கள் வாழ்கிறார்கள்.

**வரலாறு:** மனித இனத்தின் மிகத்தொன்மையான மூதாதையர்கள் பத்து இலட்சம் ஆண்டுகளுக்கு முன் கிழக்காப்பிரிக்காவிலும் தென்ஆப்பிரிக்காவிலும் வாழ்ந்திருக்கக் கூடுமென்பது அண்மைக்காலக் கண்டு பிடிப்புகளால் தெரிகிறது. எனினும் சகாராவிற்குத் தெற்கில் இருக்கும் ஆப்பிரிக்காவைப் பற்றிப் பல விவரங்கள் தெரியாமலேயே இருந்தன. அண்மைக் காலத்தில் அவற்றின் வரலாறுகள் புரியத் தொடங்கியுள்ளன. ஆப்பிரிக்கப் பழங்குடியினர் வரலாற்றுக் குறிப்புகளையோ வேறு ஆவணங்களையோ கல்வெட்டுச் சாசனங்களையோ எழுதிவைக்கவில்லை. ஏனெனில் அவர்களுக்கு எழுதப் படிக்கத் தெரியாது. மேலும் ஆப்பிரிக்கா பருவக்காற்று மண்டலத்தில் அமைந்திருப்பதால் தொல்லியல் பொருள்களை நீண்டகாலம் பாதுகாக்கவும் இயலவில்லை. மற்றும் ஆப்பிரிக்காவில் கட்டிடங்களைக் கட்ட மரங்களையும் அதைவிட மென்மையான பொருள்களையும் பயன்படுத்தப்பட்டமையால் காலவெள்ளத்தில் அவற்றில் பெரும்பாலானவை அழிந்தோ மறைந்தோ போய்விட்டன.

சகாராவிற்கு வடக்கில் அமைந்துள்ள எகிப்து நாட்டில் 5000 ஆண்டுகளுக்கு முன்னரே மிகத் தொன்மையான நாகரிகம் தோன்றி வளர்ந்ததை வரலாறு கூறுகிறது. நைல்வெளி நாகரிகம் என்றும் அதனைக் கூறுவர். பண்டைய எகிப்தின் வரலாற்றை மூன்று காலப் பகுதிகளாகப் பகுப்பர். அவை 1. பழைய அரசு 2. நடு அரசு 3. புது அரசு என்பனவாம். இவற்றுள் கி.மு. 3100 முதல் கி.மு. 341 வரையிலான காலக்கட்டத்தில் 30 மரபுகள் சீரும் சிறப்புமாக ஆட்சி நடத்தின. நைல்வெளி நாகரிகத்தில், உருவான உயர்ந்த கூம்புவடிவப் பிரமிடுக்(Pyramid) கோபுரங்களையும், இசுபிங்சுச்(Sphinx)சிற்பத்தையும் அழகான கோயில்களையும் இன்றும் கண்டுகளிக்கலாம். பினீசிய வணிகர்கள், கி.மு. 814–ஆம் ஆண்டில் வட ஆப்பிரிக்காவில், கார்த்தேசு (Carthage) என்னும் நகரை நிலைநாட்டினர். பின்னர்க் கிரேக்கர்களும் உரோமானியரும் வாண்டல்களும் அராபியரும் வடபகுதியைக் கைப்பற்றியிருந்தனர். இப்பகுதி உணவுக் களஞ்சியமாக இருந்தமையால், பண்டைய மத்திய தரைக்கடலைச் சுற்றியிருந்த நாடுகளுக்கு உணவு கொடுத்து வந்தது. இக்காலத்தில் பெரும் நகரங்கள் நிறுவப் பெற்றன. கலைகளும் அறிவியலும் செழித்து வளர்ந்தன. கிறித்தவ சமயம் நிலை நாட்டப் பெற்ற பின்னர், இசுலாமிய சமயம் அதனைத் தொடர்ந்தது. இசுலாமியர் எகிப்து, ஈராக்கு, பாலசுதீனம், பாரசீகம், சிரியா போன்ற நாடுகளின்



இசுபிங்சு சிற்பமும் பிரமிடு கோபுரமும்

மீது படையெடுத்துப் பெரியதொரு இசுலாமியப் பேரரசை நிலைநாட்டினர். பின்னர் இசுலாமியர் துனீசியா, அல்சீரியா போன்ற வடஆப்பிரிக்க நாடுகளையும் வென்றனர்.

சகாராவுக்குத் தெற்கே இசுலாமியச் செல்வாக்குப் பெருகி வளர்ந்தது. இசுலாமிய வணிகர்கள் கிழக்கு ஆப்பிரிக்காவின் துறைமுகப்பட்டினங்களில் வாழ்ந்த மக்களை இசுலாமியராக மதம் மாற்றினார்கள். சோமாலியா, கினியா, தான்சானியா (Tanzania) போன்றவை இசுலாமிய நாடுகளாக மாறின. பின்னர் இச்சமயம் மேற்கு ஆப்பிரிக்காவிற்குச் சென்றது.

இடைக்காலத்தில் அராபிய வணிகர்கள், ஆப்பிரிக்காவின் கிழக்குக் கடற்கரையில் வந்திறங்கினர். இக்காலத்தில்தான் சிம்பாப்வே உருவாகியது. பின்னர் அப்பகுதியே உரொடீசியா எனப் பெயர் பெற்றது. இந்த மையங்களில் காணப்பெறும் அழிவுச் சின்னங்களிலிருந்து அவர்கள் சுரங்கத் தொழிலிலும், தங்கத்தை உருக்கும் தொழில்களிலும் ஈடுபட்டிருக்க வேண்டும் என்பது தெரிகிறது. போர்ச்சுகீசிய மாலுமிகள் ஆப்பிரிக்காவில் மேற்கு, தெற்குக் கடற்கரைகளைத் துருவி ஆராயத் தொடங்கிய கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டிலிருந்து புதிய நாடுகளைக் கண்டுபிடிக்கும் காலம் தொடங்கியது.

**புதிய நாடுகளைக் கண்டுபிடித்த காலம்:** போர்ச்சுகல் நாட்டைச் சார்ந்த இளவரசர் என்றி (Henry, கி.பி. 15–ஆம் நூற்றாண்டில் ஆப்பிரிக்காவின் மேற்குக் கடற்கரையை ஆய்வு செய்தார். இதனால், தான் அவ்விளவரசருக்கு 'மீகான் என்றி' (Henry the Navigator) என்ற சிறப்புப் பெயர் வந்தது. பார்த்தலோமியா தயசு என்னும் போர்ச்சுகீசிய மாலுமி கி.பி. 1488 – ஆம் ஆண்டில் ஆப்பிரிக்காவின் தென் கோடியிலுள்ள நன்னம்பிக்கை முனை வரை சென்று திரும்பினார். அதே நாட்டைச் சார்ந்த வாசுகோடகாமா என்னும் பிறிதொரு மாலுமி கி.பி. 1498–ஆம் ஆண்டில் இந்தியாவின் மேற்குக் கரைப்பட்டினமான கோழிக்கோடு சென்றடைந்தார். வாசுகோட காமாதான் முதன்முதலில் இந்தியாவுக்குக் கடல்வழி கண்டுபிடித்த முதல் ஐரோப்பியராவார். அதற்கு ஏறத்தாழ 150 ஆண்டுகளுக்குப் பின்னர்க் கி.பி. 1652–ஆம் ஆண்டில் தச்சுக்காரர்கள் தென் ஆப்பிரிக்காவில் கேப்டவுனில் தம் குடியேற்றத்தை நிலைநாட்டினர்.

போர்ச்சுகீசியர் ஆப்பிரிக்காவில் அடிமை வாணிகத்தைத் தொடங்கினர். விலை கொடுத்து வாங்கிய அடிமைகளை ஆப்பிரிக்காவில் அவர்கள் தங்கத்திற்கும் தந்தத்திற்கும் விற்றபோதுங்கூட ஆப்பிரிக்காவில் ஐரோப்பியக் குடியேற்றங்கள் உருவாகவில்லை. வட ஆப்பிரிக்காவில் நிலைநாட்டப் பெற்றிருந்த கிறித்தவ சமயத்தைக் கி.பி. 7–ஆம் நூற்றாண்டில் அராபியர்கள் பெரும்பாலும் அகற்றிவிட்டனர். எகிப்திலும் எத்தியோப்பியாவிலும் வாழும் காப்டிக்குக் கிறித்தவர்களைத் தவிர, ஏனையோர் இசுலாமிய சமயத்திற்கு மாற்றப்பட்டனர். துருக்கியர்கள் கி.பி. 16–ஆம் நூற்றாண்டில் அராபியர்களைத் தோற்கடித்து விட்டனர். தென் ஆப்பிரிக்காவிலும் கிழக்குக் கடற்கரைப் போர்ச்சுகீசியக் குடியேற்றங்களிலும் மட்டிலுமே ஐரோப்பியர்கள் காலூன்றினர். ஐரோப்பாவில் ஏற்பட்ட போர்களின் விளைவாகக் கி.பி. 18–ஆம் நூற்றாண்டில் அவர்கள் ஆப்பிரிக்காவை மறந்துவிட்டனர் எனலாம்.

நெப்போலியனுடன் நிகழ்ந்த போர்களின் போது, கி.பி. 19–ஆம் நூற்றாண்டில் தொடக்கத்தில் தென் ஆப்பிரிக்காவின் நன்னம்பிக்கை முனையில் நிலைநாட்டப் பெற்றிருந்த தச்சுக்காரர்களின் குடியேற்றத்தை இங்கிலாந்து கைப்பற்றிக் கொண்டது. ஆப்பிரிக்காக் கண்டப் பகுதிகளைக் கட்டுப்படுத்திக் கொள்வதில் ஏற்படவிருக்கும் பலன்களை மெல்ல மெல்ல அறியத் தொடங்கினர். ஆங்கிலப் பேரரசு முழுவதிலிருந்தும் அடிமை முறை கி.பி. 1833–ஆம் ஆண்டில் அகற்றப்பட்டது. அதன் பின்னர் ஆப்பிரிக்காவைத் துருவி ஆராயும் ஆய்வுகள் தொடங்கின.

**கி.பி. 18, 19–ஆம் நூற்றாண்டுகளில் ஏற்பட்ட ஆய்வுகள்:** ஆப்பிரிக்காவின் உட்பகுதிகளை நுணுகி ஆயும் பணியை முதன்முதலில் தொடங்கியவர்கள் சேம்சு புருசு, மங்கோ பார்க்கு என்னும் இரு இசுகாட்டியர்களாவர் (Scottish). புருசு கி.பி. 18–ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில், நைல் ஆற்றின் தொடக்கத்தையும், மங்கோ பார்க்கு நைசர் ஆற்றின் தொடக்கத்தையும் ஆய்ந்தனர். ஆப்பிரிக்காக் கண்டத்தைத் துருவி ஆராய்ந்து பெரும் புகழ் பெற்றவர் தேவிடு இலிவிங்சுடன் (David Livingston) என்பவராவார். அவர் கி.பி. 1849–ஆம் ஆண்டில் கலகாரிப் பாலைநிலத்தைத் தெற்கிலிருந்து வடக்காகக் கடந்தார். பின்னர், அவர், சாம்பசி ஆற்றினையும் ஆப்பிரிக்காவின் தென்பாலிருந்த பெரும் ஏரிகளையும் ஆராயப் பயணம் மேற்கொண்டார். ஆனால், இலிவிங்சுடன் கி.பி. 1869–ஆம் ஆண்டு மாயமாய் மறைந்து போனார். அவரைக் கண்டுபிடிக்கும் நோக்குடன் அமெரிக்க ஐக்கிய நாட்டைச் சார்ந்த நியூயார்க்கு நகரச் செய்தித்தாள் ஒன்றின் நிருபரான என்றி எம். இசுடான்லி என்பார் அனுப்பப்பட்டார். பின்னர் இசுடான்லி காங்கோப் பகுதியைத் துருவி ஆய்ந்தார்.

இரு நிகழ்ச்சிகள் கி.பி. 1869–ஆம் ஆண்டில் நிகழ்ந்தன. அவற்றின் விளைவாக ஐரோப்பியர்கள் மீண்டும் ஆப்பிரிக்காவின் மீது நாட்டம் கொண்டனர்.

சூயசு கால்வாய் தோண்டப்பெற்றுச் செயற்பட்டதும், தென் ஆப்பிரிக்காவில் வைரங்கள் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டதுமே அவ்விரு நிகழ்ச்சிகளாம்.

**ஆப்பிரிக்காவைப் பங்கிட்டுக் கொள்வதில் ஐரோப்பியர்களின் வெறி:** பெல்சியம் நாட்டின் அரசரான இரண்டாம் இலியோபால்டு (Leopold) என்பவரே ஆப்பிரிக்கப் பகுதிகளைக் கைப்பற்றும் ஐரோப்பியர்களின் வெறியாட்டத்தைத் தொடங்கியவர். அவர் கி.பி. 1880-ஆம் ஆண்டில் பெரும்பரப்பிலான காங்கோப் பகுதியைக் கைப்பற்றிக் கொண்டு அதன் இயற்கைச் செல்வங்களைக் கொள்ளை கொள்ளத் தொடங்கினார். அவரை அடுத்து ஆப்பிரிக்கப் பகுதிகளைப் பிடிக்கும் இவ்வெறியில் செருமனியும் இறங்கியது. அக்காலத்தில்தான் செருமனி ஐக்கியமடைந்திருந்தது. செருமனி பல நாடுகளைப் பிடித்துக் கொள்ளும் ஆர்வத்தில் இருந்த காலம் அது. ஆப்பிரிக்க நாடுகளைக் கைப்பற்றுவதன் வாயிலாகத் தானும் குடியேற்ற நாடுகளை அமைத்துக் கொள்ளவிரும்பியது செருமனி. முன்னரே, இங்கிலாந்து தென் ஆப்பிரிக்காவையும், பிரான்சு அல்சீரியாவையும் கைப்பற்றியிருந்தன. பெல்சியமும் பிரான்சும் காங்கோவில் மோதிக் கொண்டன. செருமனி கிழக்கு ஆப்பிரிக்காவில் முன்னேறிய இங்கிலாந்தைத் தடுத்தது. இங்கிலாந்து சூடானில் பிரான்சின் முன்னேற்றத்தைத் தடுத்தது; ஆனால் காங்கோ ஆற்றுக் கழிமுகத்தில் போர்ச்சுகல் நாட்டிற்கு உதவி செய்தது. செங்கடல் கடற்கரையையொட்டியிருக்கும் எத்தியோப்பியாவை இத்தாலி கைப்பற்றியது. இதனால், ஐரோப்பிய நாடுகளுக்கிடையே பெருங்குழப்பம் மூண்டது. இக்குழப்பத்தைத் தீர்க்கக் கி.பி. 1884-ஆம் ஆண்டில் பெர்லின் மாநகரில் மாநாடு ஒன்று கூட்டப்பெற்றது. பல சட்டதிட்டங்கள் வரையறுக்கப்பட்டன. ஆப்பிரிக்காவில் நாடுபிடிக்கும் திட்டத்தில் ஈடுபட்ட நாடுகளைக் கட்டுப்படுத்தி, அக்கொள்கையைச் சட்டப்படியானவையாக்க, அச்சட்டதிட்டங்கள் வழிவகை செய்தன.

ஆப்பிரிக்காவைப் பங்கிட்டுக் கொண்டவை ஆறு ஐரோப்பிய நாடுகள் ஆகும். இதனால் இந்நாடுகளுக்கிடையே போர் மூளும் சூழ்நிலைகள் கூட எழுந்தன; எனினும் போர் மூளவில்லை. வடமேற்கு ஆப்பிரிக்காவையும், காங்கோ ஆற்றின் வடகரைப் பகுதியையும், மடகாசுகர் தீவையும் பிரான்சு தன் கட்டுப்பாட்டின் கீழ்க் கொண்டு வந்தது. இங்கிலாந்து எகிப்தைப் பிடித்துக் கொண்டது. அது கி.பி. 1882-ஆம் ஆண்டு எகிப்தின் நடவடிக்கைகளில் குறுக்கிட்டது. மேலும் அது, தென் ஆப்பிரிக்காவில் முன்னரே கைப்பற்றியிருந்த பகுதிகளையும் உறுதிப்படுத்திக் கொண்டது. இங்கிலாந்து கிழக்கு ஆப்பிரிக்காவிலும் நைசர்ஆற்றுக் கழிமுகத்திலும் புதிய குடியேற்றங்களை அமைத்துக் கொண்டது. காங்கோவைத் தம் சொந்தச் சொத்துபோல் கருதிய இரண்டாம் இலியோபால்டு 1908-ஆம் ஆண்டுவரை அதைப் பெல்சியம் அரசிடம் ஒப்படைக்கவில்லை. போர்ச்சுகல் மேற்கு ஆப்பிரிக்காவில் அங்கோலாவையும், கிழக்காப்பிரிக்காவில் மொசாம்பிக்கையும் கைப்பற்றிக் கொண்டது. இத்தாலி சோமாலிலாந்தின் நீண்ட பகுதியையும், செங்கடல் பகுதியில் எரிட்ரியா என்னும் சிறு பகுதியையும் பிடித்துக் கொண்டது. பின்னர் அது இலிபியாவில் இருக்கும் திரிபோலியைக் கைப்பற்றியது. அதைப்பிடிக்க இத்தாலி துருக்கியுடன் 1911-12-ஆம் ஆண்டில் போர் செய்தது.

ஆப்பிரிக்காவின் தென்கோடியிலுள்ள கேப்டவுனிலிருந்து (Cape Town) வடகோடி கெய்ரோ வரை தனக்குச் சொந்தமான இடங்களாக இருக்க வேண்டுமென விரும்பிய இங்கிலாந்தின் மண்ணாசையைச் செயற்படுத்த விடாமல் செருமனி தடுத்தது. ஆனால், முதல் உலகப் போரின் போது ஆப்பிரிக்காவில் செருமனிக்குச் சொந்தமாயிருந்த பகுதிகளை இங்கிலாந்து, பிரான்சு, பெல்சியம், போர்ச்சுகல் போன்ற நாடுகள் கைப்பற்றிக் கொண்டன.

நீக்கிரோ மக்களின் வாழ்வில் இப்போது பெருத்த மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. போக்குவரத்துச் சாதனங்களும், செய்தித் தொடர்புச் சாதனங்களுமே இம்முன்னேற்றத்திற்குக் காரணமாகும். இத்துணைக் குறுகிய காலத்திற்குள் இத்துணைப் பெரும் மாற்றம் வேறு எக்கண்டத்திலும் ஏற்பட்டதில்லை.

இரண்டாம் உலகப் போருக்கு முன்னர் ஆப்பிரிக்காவின் இடைப்பகுதியில் வாழ்ந்த மக்களுள் பெரும்பாலோர் பெரிய ஆறுகளிலும் ஏரிகளிலும் பயணம் செய்தனர். சாலைகள் அக்காலத்தில் குறைவாக இருந்தன. வட ஆப்பிரிக்காவையும் தென் ஆப்பிரிக்காவையும் தவிர, ஏனைய பகுதிகளில் இருப்புப்பாதை வசதியே ஏற்படவில்லை. இருப்புப் பாதைகள் இன்றும் பெருகி வளரவில்லை. இருப்புப்பாதைத் தொடர்கள் மொராக்கோ, அல்சீரியா, துனீசியா போன்ற வட ஆப்பிரிக்கா நாடுகளை இணைக்கின்றன. தென் ஆப்பிரிக்காவில் உள்ள இருப்புப்பாதைத் தொடர்கள் சாம்பியா, அங்கோலா, செய்ரே (Zaire) போன்ற நாடுகளை இணைக்கின்றன. ஏனைய ஆப்பிரிக்கப் பகுதிகளில் செல்லும் குறுகிய இருப்புப்பாதைத் தொடர்கள், துறைமுகப் பட்டினங்களை உள்நாட்டிலுள்ள சுரங்க நகரங்களுடனும், வணிகப் பெரு நகரங்களுடனும் இணைக்கின்றன. இத்தொடர்கள் பிற இருப்புப்பாதைத் தொடர்களுடன் இணைவது அருமையிலும் அருமை.

இரண்டாம் உலகப்போருக்குப் பின்னர் நெடுஞ் சாலைகள் அமைக்கப்பட்டதும், வானவூர்திகளுக் கான வசதிகள் பெருகியதும் ஆப்பிரிக்காவில் பெரும் முன்னேற்றத்தை ஏற்படுத்தியுள்ளன. ஆப்பிரிக்க நாடுகள் அனைத்தையும் இன்று பன்னாட்டு வான வூர்தி நிறுவனங்கள் இணைக்கின்றன. இன்று பெருகி வளரும் புதுமுறைப் போக்குவரத்து வசதிகளால் ஆப்பிரிக்காவின் பழங்குடி மக்களின் அமைப்பு, பெரும் பாதிப்புக்கு ஆளாகியுள்ளது. உள்நாட்டுக் குள்ளேயும் பெருத்த முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. முன்னர் நாள்கணக்கில் நடைபெற்ற பயணங்கள் இன்று மணிக்கணக்கில் முடிந்து விடுகின்றன. முன் னர்ப் பழைய வழிமுறைகளைக் கையாண்டு வளர்ச்சி யற்ற நிலையில் சிறு இடங்களில் வேளாண்மையில் ஈடுபட்ட ஆப்பிரிக்கர்கள், இன்று தொழில்வளர்ச்சி பெற்றுள்ள இடங்களுக்குத் தொழிலாளர் தேவையை நிறைவு செய்யப் பயணம் செய்கிறார்கள்.

**எழுச்சி பெறும் இன்றைய ஆப்பிரிக்கா:** இன்றைய ஆப்பிரிக்காவின் வரலாற்றில் பெருமாற்றங்கள் நிகழ்ந்து வருகின்றன. பழையனவற்றைக் கழித்து, புதியனவற்றைப் புகுத்தி ஆப்பிரிக்கர்கள் புதுவாழ்வு வாழ முயன்று வருகின்றனர். ஆப்பிரிக்காவெங்கும் எழுச்சி பெறும் நிலை வந்து கொண்டிருக்கிறது.

இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் ஏற் பட்ட அரசியல் குழப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு, அயலவர் ஆதிக்கத்தில் அவர்களின் குடி யேற்ற நாடுகளாக இருந்தவை விடுதலை பெற்றன. போருக்குப் பின்னர்ப் பதினான்கு ஆண்டுகளில் ஆறு புதிய நாடுகள் தோன்றின. அவை 1.இலிபியா (1951), 2. சூடான் (1956), 3. மொராக்கோ (1956). 4. துனீசியா (1956), 5. கானா (1957), 6. கினி (1958) ஆகும். எரிட்ரியா எத்தியோப்பியாவின் மாநிலமாகிவிட்டது.

பதினான்கு புதுநாடுகள் 1960-ஆம் ஆண்டை ஒட்டி உருவாக்கப்பெற்றன. அவை முன்னர்ப் பிரான் சின் ஆட்சிப் பகுதிகளாயிருந்தன. அவை பின்வரு மாறு: 1. காமரூன், 2. நடு ஆப்பிரிக்கப் பேரரசு, 3. சாடு, 4. காங்கோக் குடியரசு, 5. பெனின், 6. காபன், 7. ஐவரி கோசுட்டு, 8. மடகாசுகர், 9. மாலி, 10. மாரிட்டானியா, 11. நைசர், 12. செனகல், 13. தோகோ, 14. மேலை வோல்டா (Upper Volta). நைசீரியா 1960-இல் விடுதலையடைந்தது. பிரித் தானியச் சோமாலிலாந்தும் (British Somaliland) இத் தாலியச் சோமாலிலாந்தும் இணைந்து சோமாலியா என்னும் நாடாயிற்று. பெல்சிய - காங்கோ மக்க ளாட்சி பெற்று, காங்கோக் குடியரசாகி இன்று செய்ரே என்றழைக்கப்படுகிறது.

சூயசுக் கால்வாயை 1956-ஆம் ஆண்டில் எகிப்து, நாட்டுடைமையாக்கியது. எகிப்தும் ஆசிய நாடுகளில் ஒன்றான சிரியாவும் இணைந்து, 1958-இல் ஐக்கிய அரபுக் குடியரசு எனப் பெயர் பெற்றது. சிரியா இக் கூட்டாட்சி இணைப்பிலிருந்து 1961-இல் பிரிந்து விட்டது.

காமன்வெல்த்து நாடுகளின் அரவணைப்பில் இருந்த நாடுகளிலும் பல மாற்றங்கள் ஏற்பட்டன. வடக்குக் காமரூன் நாடு நைசீரியாவுடனும், தெற் குக் காமரூன் நாடு காமரூனுடனும் 1961-ஆம் ஆண்டில் இணைந்துவிட்டன. ஆங்கிலப் பேரரசின் பகுதியாக இருந்த தென் ஆப்பிரிக்க ஐக்கிய நாடு, குடியரசாகி விட்டது. சீரா இலியோனும், தங்கனீக் காவும் விடுதலை பெற்றன.

அல்சீரியத் தேசியவாதிகளுக்கும், பிரெஞ்சுக் காரர்களுக்குமிடையே நிலவிய சிக்கல் 1962-இல் தீர்ந்து அல்சீரியா விடுதலை பெற்றது. பெல்சியம் நாட்டின் அறக்காப்பில் இருந்த உருவாண்டா-உருண்டி (Ruanda-Urundi) என்னும் நாடு விடுதலை பெற்று, உருவாண்டா (Ruanda), புருண்டி (Burundi), என்னும் பெயருடன் இருநாடுகளாயின. உகாண்டா (Uganda) 1962-இல் விடுதலை பெற்றது.

கென்யாவும் (Kenya), சான்சிபாரும் (Zanzibar) 1963-இல் ஆங்கில ஆட்சியிலிருந்து விடுதலை பெற் றன. அந்த ஆண்டின் இறுதியில் உரொடீசியா-நியா சாலாந்து (Rhodesia-Nyasaland) கூட்டாட்சி கலைக் கப்பட்டது. நியாசாலாந்து 1964-இல் விடுதலை பெற்று மாளாவி என்னும் நாடாகியது. வடரொடீ சியா விடுதலை பெற்றுச் சாம்பியா (Zambia) என் னும் பெயர் பெற்றது. தங்கனீகாவும், சான்சிபாரும் 1964-இல் இணைந்து தான்சானியா (Tanzania) ஐக் கியக் குடியரசாயிற்று. காம்பியா (Gambia) 1965-இல் விடுதலை பெற்றது. உரொடீசியா இங்கிலாந் திடமிருந்து விடுதலை பெற்றதாக அறிவித்துக் கொண்டது. பெச்சு-வானாலாந்து, போட்சுவானா (Botswana) என்னும் பெயரிலும், பசுட்டோலாந்து, இலேசோத்தோ (Lesotho) என்னும் பெயரிலும் 1966-இல் விடுதலை பெற்றன. மொரீசியசு (Mauritius) சுவாசிலாந்து (Swaziland) உலக நடுக்கோட்டில் அமைந்துள்ள கினி (Guinea) போன்ற நாடுகள் 1968-இல் விடுதலை பெற்றன. ஆப்பிரிக்காவில் போர்ச்சுகீசியரின் கடைசிக் குடியேற்ற நாடான கினி என்னும் நாடு கினி-பிசா (Guinea Bissau) என்னும் பெயரில் 1974-இல் விடுதலை பெற்றது. அங்கோலா, வெர்டி முனைத் தீவுகள் (Cape Verde), மொசாம்பிக்கு (Mozambique), சாடோமி பிரின்சிபி (Sao-Tome and Principe) ஆகியவையும் 1975-இல் விடுதலை பெற்றன. மயோட்டி நீங்கலாக இருந்த கொமோரோத் தீவுகளும் (Comoros) விடுதலை

பெற்றனவாக அறிவிக்கப்பட்டன. செசில்சு (Secelles) 1976-இல் விடுதலை பெற்றது. திரான்சுகி (Transkei) என்னும் கறுப்பர் நாடு விடுதலை பெற்றுவிட்டதாகத் தென் ஆப்பிரிக்கா அறிவித்தது. அபார்சு (Afars), இசாசு (Issas) என்ற பகுதிகள் பிரான்சிடம் இருந்து 1977-ஆம் ஆண்டில் விடுதலை பெற்றுச் சிபோத்தி (Djibouti) என்னும் குடியரசாயிற்று. அதே ஆண்டில் போபுதட்சுவானா (Bophuthatswana) வுக்குத் தென் ஆப்பிரிக்கா விடுதலை அளித்தது.

இதுவரை விடுதலையாகாமல் இருக்கும் ஆப்பிரிக்கப் பகுதிகளும் விரைவில் விடுதலை பெற வாய்ப்புண்டு. கீழ்க்காணும் பட்டியல் ஆப்பிரிக்காக் கண்டத்தில் விடுதலை பெற்ற நாடுகளைச் சுட்டிக் காட்டும்.

விடுதலை பெற்ற ஆப்பிரிக்க நாடுகள்

| வ.எண். | நாட்டின் பெயர் | பரப்பு (ச.கி. மீட்டர்களில்) | மக்கள்தொகை (குத்து மதிப்பீடு) | தலைநகரம் | விடுதலைபெற்ற ஆண்டு |
|---|---|---|---|---|---|
| 1. | அங்கோலா | 12,46,700 | 70,80,000 | உலுவாண்டா | 1975 |
| 2. | அல்சீரியா | 23,81,741 | 21,00,000 | அல்சியர்சு | 1962 |
| 3. | உகாண்டா | 2,36,860 | 1,41,21,000 | கம்பாலா | 1962 |
| 4. | உலகநடுக்கோட்டுக் கினி | 28,051 | 3,46,000 | மலபோ | 1968 |
| 5. | எகிப்து | 10,01,449 | 4,40,00,000 | கெய்ரோ | 1922 |
| 6. | எத்தியோப்பியா | 12,21,900 | 3,23,95,000 | அடிசு அபாபா | * |
| 7. | ஐவரி கோசுட்டு | 3,22,463 | 89,20,000 | அபிட்சான் | 1960 |
| 8. | காங்கோ | 3,42,000 | 16,30,000 | பிரேசாவிலி | 1960 |
| 9. | காபன் | 2,67,667 | 2,30,000 | இலிப்ராவிலி | 1960 |
| 10. | காம்பியா | 11,295 | 6,13,000 | பன்சுல் | 1965 |
| 11. | காமரூன் | 4,75,442 | 88,50,000 | யவுன்டே | 1960 |
| 12. | கானா | 2,38,537 | 1,13,10,000 | அக்கரா | 1957 |
| 13. | கினி | 2,45,857 | 52,80,000 | கொனாக்கிரி | 1958 |
| 14. | கினி-பிசா | 36,125 | 3,10,000 | பிசா | 1974 |
| 15. | கினியா | 5,82,646 | 1,65,16,000 | நைரோபி | 1963 |
| 16. | கொமோரோசு | 2,171 | 4,18,000 | மொரோனி | 1965 |
| 17. | சாடு | 12,84,000 | 47,50,000 | நட்சமேனா | 1960 |
| 18. | சா டோம், பிரின்சிபி | 964 | 95,000 | சாடோம் | 1975 |
| 19. | சாம்பியா | 7,52,620 | 57,00,000 | இலுசாகா | 1964 |
| 20. | சிபோத்தி | 23,000 | 3,50,000 | சிபோத்தி | 1977 |
| 21. | சிம்பாப்வே | 3,90,580 | 77,00,000 | அராரே(சாலிசுபரி) | 1980 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 22. | சீராலியோன் | 73,326 | 34,70,000 | பிரிவுடன் | 1961 |
| 23. | சுவாசிலாந்து | 17,363 | 5,80,000 | மொபாபனே | 1968 |
| 24. | சூடான் | 25,05,813 | 1,91,52,000 | கார்ட்டூம் | 1956 |
| 25. | சிசில்சு | 280 | 69,000 | விக்டோரியா | 1976 |
| 26. | செய்ரே | 23,44,885 | 2,97,50,000 | கின்சாசா | 1960 |
| 27. | செனகல் | 1,96,722 | 59,70,000 | தாகர் | 1960 |
| 28. | சோமாலியா | 2,46,201 | 38,80,000 | மொகாதிசியோ | 1960 |
| 29. | துனீசியா | 1,64,150 | 67,50,000 | தூனிசு | 1956 |
| 30. | தோகோ | 56,785 | 28,50,000 | உலோமே | 1960 |
| 31. | தான்சானியா | 9,45,087 | 1,85,00,000 | தொடோமா | 1964 |
| 32. | தென் ஆப்பிரிக்கா | 12,21,037 | 2,55,90,000 | பிரிட்டோரியா | 1931 |
| 33. | நடு ஆப்பிரிக்கக் குடியரசு | 6,22,984 | 25,21,000 | பங்குயி | 1960 |
| 34. | நைசர் | 12,67,000 | 56,20,000 | நியாமி | 1960 |
| 35. | நைசீரியா | 9,23,773 | 9,00,00,000 | இலாகாசு | 1960 |
| 36. | புருண்டி | 27,834 | 43,80,000 | புசும்புரா | 1962 |
| 37. | பெண்ணின் | 1,12,622 | 37,20,000 | போர்ட்டோ நோவோ | 1960 |
| 38. | போட்சுவானா | 6,00,372 | 9,36,000 | கபோரோனே | 1966 |
| 39. | மடகாசுகர் | 5,87,041 | 95,89,000 | அந்தனனாரிவோ | 1964 |
| 40. | மளாவி | 1,18,484 | 62,68,000 | விலாங்குவே | 1964 |
| 41. | மாரிட்டானியா | 10,30,700 | 17,30,000 | நவுக்சோட்டு | 1960 |
| 42. | மாலி | 12,40,142 | 70,20,000 | பமாகோ | 1960 |
| 43. | மேலைவோல்ட்டா | 2,74,122 | 72,90,000 | உவகாடவுரு | 1960 |
| 44. | மொசாம்பிக்கு | 3,08,642 | 1,32,50,000 | மபுடோ | 1975 |
| 45. | மொராக்கோ | 4,58,730 | 2,10,00,000 | இரபாட்டு | 1956 |
| 46. | மொரிசியசு | 2,045 | 9,83,692 | போர்ட்டுலூயி | 1968 |
| 47. | இரவாண்டா | 26,338 | 51,10,000 | கிகாலி | 1962 |
| 48. | இலிபியா | 17,59,540 | 35,00,000 | திரிபோலி | 1951 |
| 49. | இலெசோத்தோ | 30,355 | 13,48,000 | மசிகு | 1966 |
| 50. | இலைபீரியா | 1,12,600 | 19,00,000 | மன்ரோவியா | 1847 |
| 51. | வெர்டிமுனை | 4,033 | 3,30,000 | பிரயா | 1975 |

| | ஆப்பிரிக்காவின் ஏனைய அரசியல் பிரிவுகள் | | | |
|---|---|---|---|---|
| | (பட்டியலில் குறிக்கப்படாதவை) | | | |
| பெயர் | பரப்பு (ச.கி.மீ.) | மக்கள் தொகை | தலை நகர் | ஆட்சி விவரம் |
| கானரித் தீவுகள் | 7273 | 14,87,000 | சாந்தாகுருசு | இசுபானிய ஆதிக்கத் திற்குட்பட்டவை. |
| மடீரா தீவுகள் | 797 | 2,45,000 | பன்சல் | போர்ச்சுகலுக்குட் பட்டவை. |
| இரீயூனியன் | 2510 | 5,39,000 | செயிண்ட்டு தெனிசு | பிரான்சின் ஆட்சிக் குட்பட்டது. |
| செயிண்ட்டு கெலீனா (அசென்சன் திரிசுடன் தாகுன்கா உள்ளிட்டது) | 419 | 6,419 | சேம்சு டவுன் | இங்கிலாந்தின் ஆட்சிக்குட்பட்டது. |
| நமீயியா எனப்பெறும் தென்மேற்கு ஆப்பிரிக்கா | 8,24,292 | 10,27,000 | விண்டோக்கு | தென்ஆப்பிரிக்கக் குடியரசினால் கட்டுப்படுத்தப் பெற்றிருக்கும் பன்னாட்டுப் பகுதி. |
| மேலைச் சகாரா | 2,66,000 | 1,52,000 | எல்அயூன் | முன்னாளில் இசுபெயினின் ஆதிக்கத்திலிருந்தது. |
| மேலைச் சகாரா | | | | இன்று மொராக்கோ உரிமை கொண்டாடுகிறது. |

* எத்தியோப்பியா 2000 ஆண்டுகளுக்கு மேலாகவே விடுதலைபெற்ற நாடு. ☆தங்கனீகாவும், சான்சிபாரும் இணைந்து ஒன்றான ஆண்டு.

துணை நூல்கள்:

Knight, C.G. and Newman, J.L., Ed., Contem-Porary Africa: Geography and Changes, Prentice, 1976.

Theompoon, Elizabeth B., Africa: Past and Present, Houghton, 1966.

**ஆப்பிரிக்காவின் தொல் வரலாறு:** ஆதி காலத்தில் இன்றைய ஐரோப்பாக் கண்டத்திலும், வட அமெரிக்காவிலும் பனிக்கட்டி ஆறுகள் பெருக் கெடுத்து ஓட, அக்கண்டங்கள் முழுவதும் உறைந் திருந்தன. அந்தச் சூழ்நிலையில் உயிரினங்கள் வாழ வழி இல்லை. சிறிது கால இடைவெளிக்குப் பின்னர்ப் பனிக்கட்டிகள் உருகி, நிலப்பரப்பை வெளிக்காட் டின. அப்போது உயிரினங்கள் தோன்றி வாழ முடிந் தது. இக்காலத்தில், கடல் மட்டத்தில் உயர்வு, தாழ்வுகளும் பூமியில் மலைகளும் மடுவுகளும் தோன் றின. அதன் காரணமாக உயிரினங்களின் வாழ்க்கை கடுமையாகப் பாதிக்கப்பட்டது. அவற்றின் உடல் உறுப்புகளில் மாற்றங்களும், உணவுப் பழக்க வழக் கங்களில் மாறுதல்களும் உண்டாயின. இந்த இயற்கை நிலையைப் 'பனிக் காலம்' (Glacial) என் றும், இரண்டு பனிக் காலங்களுக்கு இடையில் ஏற் பட்ட மாறுபட்ட காலக் கட்டத்தை "இடைப் பனிக் காலம்" (Inter-glacial) என்றும் குறிப்பர். இதே காலக் கட்டத்தில், சிறிது வெப்பநிலை படர்ந்த

ஆப்பிரிக்க ஆசிய நாட்டுப் பகுதிகளில் இயற்கைச் சூழல் முற்றிலும் வேறுபட்டிருந்தது. அங்கே, கடுமையான பனிமழை பெய்தது. அதனைப் 'புளுவியல்' (Pluvial) என்பர். இரண்டு புளுவியல்களுக்கு இடைப்பட்ட காலத்தை "இடைப் பருவப் புளுவியல்" என்று கூறுவர். "புளுவியல்' காலத்தில் ஆப்பிரிக்காவின் நிலப் பகுதிகள் நீர்வளத்தால் செழித்தன. கடல் நீரின் மட்டமும், ஏரிகள், நீர் நிலைகள் ஆகியவற்றின் மட்டமும் உயர்ந்தன. நீர் ஊற்றுகள் நீரைப் பாய்ச்சிய படி இருந்தன. அடர்ந்த காடுகள் மண்டின. அடுத்து, இடைப் பருவப் புளுவியல் காலத்தில் தட்பவெப்ப நிலையில் சற்று முன்னேற்றம் காணப்பட்டது. நீர் நிலைகளின் மட்டம் குறையத் தொடங்கிற்று. நீர் ஊற்றுகள் வற்றத் தொடங்கின. அதன் பயனாக உயிரினங்களின் வாழ்க்கையில் ஏற்பட்ட கடுமையான சோதனைகள் குறையத் தொடங்கின. ஆதலால் அவற்றின் வாழ்வில் வளர்ச்சியும் மறுமலர்ச்சியும் தோன்றுவதற்குரிய அறிகுறிகள் தோன்றின. அவற்றை நம்பி உயிர் வாழும் விலங்குகளும் மனிதர்களும் நடமாடத் தொடங்கினர். அதன் பயனாக மனிதச்சமுதாயம் உருப்பெறலாயிற்று. பண்பாட்டுச் சிறப்பியல்புகள் அரும்பத் தொடங்கின. இந்தக் காலக் கட்டத்தைப் 'பிளைசுடுசீன்' (Pleistocene) என்பர். இத்தகைய தட்பவெப்பநிலை மாற்றங்கள் பல இலட்சம் ஆண்டுகளில் சுமார் 15 முறை நிகழ்ந்திருக்க வேண்டும் என்பது கணக்கிடப்பட்டுள்ளது. மனித இனம் கூட்டம் கூட்டமாக இடம் விட்டு இடம் பெயரலாயிற்று. மனித உட்கூறுகள் சிலவற்றில் வளர்ச்சியும் சிலவற்றில் வளர்ச்சியின்மையும் ஏற்படலாயின. அதன் பயனாக மனிதக் குலம் முன்னேற்ற வாழ்வை நோக்கி அடியெடுத்து வைக்கும் வாய்ப்பு உண்டாகியது. இந்தக் காலத்தில்தான் ஆப்பிரிக்காவின் தொல் பழங்கால வரலாறு தோன்றியது. விலங்கினங்களுள் யானை, குதிரை, எருது போன்றவை நடமாடத் தொடங்கின.

'பிளைசுடுசீன்' காலம், 1. கிழக்கு ஆப்பிரிக்கரின் கசேரன் (Gajeran சுமார் 10 இலட்சம் ஆண்டுகட்கு முன்பு), 2. கமாசியன் (Kamasian), 3. காம்பிலியன் (Gambilian கி.மு. 20000-10000) என்று மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இந்தக் காலநிலைகளில் நிலவிய தட்பவெப்ப நிலையினைப் புதுவெப்பக்காலம்(Neothermal) என்பர். புதுவெப்பக் காலம் மக்கலியன் (Makalian), நகுரன் (Nakuran) என்று பிரிக்கப்பட்டது. இந்தக் காலநிலைகளில் தொல் கற்காலம், இடைக் கற்காலம், கடைக் கற்காலம், புதிய கற்காலம் போன்ற வரலாற்றுக்கு முந்தைய கால ஆப்பிரிக்க வரலாறு வெளிப்படத் தொடங்கியது.

ஆப்பிரிக்காவில் முதன் முதலில் மனிதன் தோன்றி வாழ்ந்தமைக்குச் சில இன்றியமையாச் சான்றுகள் கிடைத்துள்ளன. ஆற்றுத் திடல்களினூடே தொல் கற்காலக் கருவிகள் புதைந்து கிடக்கின்றன. ஆதி மனிதனின் பண்பாட்டுச் சின்னங்களான கற்கருவிகளைப் பல இலட்சம் ஆண்டுகளுக்கு மூடி மறைத்துக் காத்து வந்த பெருமை ஆற்றுத் திடல்களையே சாரும். இவ்வாற்றுத் திடல்கள் 100 அடி உயரம் வரை உயர்ந்து பரந்து விரிந்து காணப்பட்டன. கற்கால மனிதனின் ஒரே சொத்து கற்கருவிகளே யாகும். கூழாங்கல்லை உடைத்துச் சில்லுகளை நீக்கி, கற்கருவிகளை உருவாக்குவது என்பது ஒரு கலையாகும். அதனை உலகில் முதன்முதலில் கண்டுபிடித்து மிகுதியாக உண்டாக்கித் தம் அன்றாட வாழ்க்கையில் பயன்படுத்தியவர்களும் ஆப்பிரிக்கர்களே. இக்கருவிகள் ஆயிரக் கணக்கில் கண்டுபிடிக்கப்பட்டிருந்தன.

தொல் கற்காலத்தில் உயிரினங்கள் இருந்தமைக்கு அவற்றின் புதை படிவங்கள் சான்று பகர்கின்றன. ஆதிமனிதன் தோன்றுவதற்குப் பல நூறு இலட்சம் ஆண்டுகட்கு முன்னரே இவ்வுயிரினங்கள் பூமியில் வாழ்ந்து வந்தன. ஆதிமனிதன் நடமாட்டத்தை அடையாளம் காணக் கற்கருவிகள் கிடைத்தால் மட்டிலும் போதாது. அவர்களின் மண்டை ஓடுகளும் எலும்புகளும் கிடைத்தல் வேண்டும். ஏறக்குறைய 2 இலட்சம் ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்த மனிதர்களின் மண்டை ஓடுகள் கிடைத்துள்ளன. இந்தக் கண்டுபிடிப்புகள் ஆப்பிரிக்காப் பகுதியின் தொன்மையை, ஆதிமனிதனின் தோற்றத்தை, உலகுக்கு அறிவித்துள்ளன. ஆதி மனிதனை 'ஆத்திரலோபிதிகசு' (Austrolopithecus) என்று இனம் பிரித்துக் காட்டியுள்ளார்கள். அந்த மண்டை ஓடுகள் தாங்சு (Tanungs), மகபன்சகாட்டு (Makapansgat), இசுடெர்க் பாண்டெயின் (Sterkfontein), குரோம்டிரெய் (Kromdrai), சுவார்ட்கரான்சு (Swartkrans), தங்கனீகா நீர்வீழ்ச்சி, ஓல்டுவாய் (Oldwai) ஆகிய இடங்களில் கிடைத்துள்ளன. இந்த மனிதன் மிகக் குறுகிய சிறிய மண்டை ஓட்டையும், சிறிய பற்களையும், நிமிர்ந்த நடைக்கான கால்களையும் பெற்றிருக்க வேண்டும் என்பது கூறப்படுகிறது. அடுத்த காலக் கட்டத்தில், அவனது மூளை வளர்ச்சியடையத் தொடங்கிற்று. அதன் காரணமாக, மண்டை ஓடு விரிந்து பெரியதாக உருப்பெறலாயிற்று. முகவாய்க் கட்டை எலும்பும், இக்கால மனிதனுக்கு இருப்பது போன்ற வடிவ அமைப்புப் பெறத் தொடங்கியது. இக்கால மனிதனை 'ஓமோ சேபியன்' (Homo-Sapian) என்பர். ஆகவே மனிதக் குலத்தின் மூதாதையர்கள் ஆப்பிரிக்க இன மக்கள் என்று கூறலாம்.

 ஆப்பிரிக்காவின் தொல் வரலாறு

**'பிளைஸ்டோசீன்' காலத்தின் இறுதிப் பகுதியில் உலகின் பல பகுதிகளில் ஆதி மனிதர்களின் கூட்டம் பரவலா யிற்று. ஆப்பிரிக்கா முழுவதும், குறிப்பாக அல்ஜீரியா விலிருந்து தென் ஆப்பிரிக்காவின் முனை வரை அவர் கள் பரவியிருந்தார்கள் எனலாம். அதே காலத்தில்** மேற்கு ஆசியாக் கண்டத்தில் ஈரான் **வரையிலும்,** இந்தியா, தென் கிழக்கு ஆசியா, இந்தோனேசியா போன்ற நாடுகளிலும் அவர்கள் இடம் **பெயர்ந்து** சென்றிருக்கிறார்கள்.

ஆப்பிரிக்காவின் கற்கால வரலாற்றில் பழங் காலம், இடைக் கற்காலம், கடைக் கற்காலம், புதிய கற்காலம், இரும்புக்காலம் அல்லது உலோகக் காலம் என்னும் பெரும் பிரிவுகள் உண்டு.

**பழங்கற்காலம்:** கைக்கோடரிகள் பழங்கற்காலக் கருவிகளுள் முதன்மையாக விளங்குகின்றன. ஒரு கூழாங் கல்லை, மற்றொரு கல்லால் அடித்துச் சில்லுகளைப் பெயர்த்துக் கைக்கோடரி வடிவம் அமைப்பர். இவை வட்டம், நீள்வட்டம், கோழி முட்டை வடிவங்களில் அமைக்கப்பட்டுள்ளன. கருவியைச் சுற்றிச் செல்லும் விளிம்புகளைக் கொத்திக் கூர்மையாக்கியுள்ளனர். கருவியின் இரு பக்கங்களும் செப்பமிடப்பட்டுள்ளன. இக்கோடரி களைக் கையால் பிடித்துக் கொண்டு பயன்படுத்த வேண்டும். நிலத்தினடியில் கிடைக்கும் கிழங்கு, வேர் போன்றவற்றைத் தோண்டி எடுக்கவும், விலங்குகளின் தோலை உரித்து இறைச்சியை எடுக்க வும் இவை பயன்பட்டன. கற்காலக் கருவிகளுள் கைக்கோடரிகளே முதன் முதலில் உருப்பெற்றன வாகும். அடுத்த காலக் கட்டத்தில், சில்லுக்(Flake) கருவிகளும் வடிக்கப்பட்டன. அவை வடிவில் சிறிய தாக இருந்தன. துளையிடும் கருவிகள் (Borers), வெட்டுக் கருவிகள் (Choppers) போன்றவையும் அவற்றில் அடங்கும். ஆப்பிரிக்காக் கைக்கோடரிக ளைப்போன்ற கருவிகள் ஆசியாவிலும், இந்தியாவில் குறிப்பாகத் தமிழகத்திலும் கிடைக்கின்றன. இதனால், ஆப்பிரிக்காவிற்கும் தமிழகத்திற்கும் இடையே பழங்காலத்தில் கருத்துப் பரிமாற்ற மிருந்திருக்க வேண்டும் என்பது தெரிகிறது. ஆப்பிரிக்காவில் உள்ள 'ஓல்டுவாய்' என்னுமிடத்தில் நிகழ்த்தப்பட்ட அகழாய்வுகளில் கற்காலப் பண் பாட்டுச் சிறப்பியல்புகளும், கருவிகளும், விலங்குகளின் எலும்புகளும் கிடைத்திருக்கின்றன. பழங் கற்காலக் குகைகள் பல அங்குள்ளன. அறிவியல் முறைப்படி அந்நாட்டின் பழங் கற்காலம், புதிய கற்காலம் போன்றவற்றின் காலத்தை உறுதிப் படுத்த இந்த அகழாய்வுகள் சான்றுகள் அளித்துள்ளன. பழங் காலத்தில் மனிதன் நாடோடியாக விலங்குகளைப் போன்று அலைந்து திரிந்து வந்தான். அவனுக்கு நிலையான வாழ்க்கை இல்லை. கற்குகைகளில் படுத்து உறங்கினான். கற்பாறைகள், காடுகள், நீர் நிலைகள் நிறைந்த பகுதிகளை அவன் நாடிச் சென் றான்.

பழங் காலத்தை அடுத்து உலகெங்கிலும் மனித வாழ்க்கையின் முன்னேற்றங்கள் ஏற்படலாயின. பல புதிய கண்டுபிடிப்புகள் தோன்றின. வேளாண்மை, விலங்குகளைப் பேணுதல், மட்கலங்களை உருவாக்கு தல் போன்ற தொழிற் கலைகள் உருப்பெறலாயின. பயிர்த்தொழில் அவர்களுக்குத் **தெரிந்திருந்தது.** விலங்குகளுள் யானை, எருது, செம்மறி **ஆடு போன்ற** வற்றை வளர்த்துத் தங்களுக்குத் **தேவைப்பட்ட** போது அவற்றைக் கொன்று **அவற்றின் இறைச்சி** யினை உண்டனர். வட்ட வடிவத்திலும், **கம்பு வடி** வத்திலும் மட்கலங்களைச் செய்து **கொண்டனர்.** பருகும் நீரையும் தானியங்களையும் **சேகரித்து** வைத்துக் கொள்ள அவை **பயன்பட்டன. அதன்** பயனாகத் தண்ணீருக்காகவும் **உணவிற்காகவும்** விலங்குகளைப் போல் மனிதன் **அலைந்து** திரிய வேண்டிய கட்டாயம் இல்லாமல் போயிற்று. அவன் வாழ்க்கையில் நிம்மதியும் நிறைவும் பதட்ட மின்மையும் குடி கொண்டன. அடுத்து, களிமண் ணைக் கொண்டு சுவர்களை எழுப்பி, இலை, தழை, கோரைப்புல் போன்றவற்றால் கூரை வேய்ந்து தம் குடியிருப்புகளை அமைத்துக் கொண்டனர். குகை களையும் வாழும் இடமாகப் பயன்படுத்தி வந்தார் கள். கற்கருவிகள் பளபளப்பாகவும் வழுவழுப்பாக வும் வடிக்கப்பட்டன. வேட்டையாடுவதற்குரிய கூர்மையான அம்புகளையும் கற்களால் செய்து கொண்டார்கள், ஏனெனில் வேட்டையாடுதலும், மீன்பிடித்தலும் அவர்கள் அன்றாட வாழ்க்கையின் முதன்மையான தொழில்களாக இருந்துவந்தன. அவர் கள் வாழ்ந்த கற்குகைகளில் வண்ண ஓவியங்கள் காணப்பட்டன. அவற்றில் வேட்டைத் தொழில் சித்திரிக்கப்பட்டுள்ளது. அடுத்து அவர்களின் இறை வணக்கமும், கோட்பாடுகளும் இக்குகையில் வண்ண ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன. புதிய கற்காலம் கி.மு. 8000 முதல் கி.மு. 4000 வரை நிலைத்தது. புதிய கற்காலத்தில் மக்கள் தொகை பெருக்கமடைந் தது. இந்நிலையில் **அம்மக்களிடையே** மனிதச் செயற்பாடுகளின் ஒருமைப்பாட்டிற்கான அடித்தளம் உருவாகியது. இக்காலத்தில் ஆப்பிரிக்கப் பகுதிகளில் எழுத்து வடிவம் பிற பகுதிகளின் தாக்கத்தால் வளர்ச்சியடைந்தது. மக்கள் வாழ்க்கையின் அடிப் படைத் தேவைகளுக்கான வேளாண்மை ஏற்பட்டது. இதன் விளைவாக அரசும் உருவாக்கப்பட்டது. வேளாண்மைத் தொழிலுக்குத் தேவையான கருவி கள் இரும்பாலும் உலோகத்தாலும் செய்யப்பட்

டன. புதிய கற்காலத்தின் இடைப்பட்ட காலத்தில் உலோகக் காலமும் இரும்புக் காலமும் தொடங்கியிருப்பதற்கு இக்கருவிகள் சான்றாக அமைகின்றன. புதிய கற்காலச் சின்னங்கள் வட ஆப்பிரிக்காவில் பல பகுதிகளில் காணப்படுகின்றன. மேலும், கிழக்கு ஆப்பிரிக்காவிலும் தென் ஆப்பிரிக்காவிலும் புதிய கற்காலக் கைக்கோடரிகளும் மட்பாண்ட ஓடுகளும் குகை ஓவியங்களும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. ஒரு சில இடங்களில் சுடுமண் உருவங்களும் காணப்பட்டன.

புதிய கற்காலத்தை அடுத்து இரும்புக் காலம் பிறந்தது. மனிதச் சமுதாயம் புதிய வரலாற்றைப் படைக்கத் தொடங்கியது. நாகரிகமும் பண்பாடும் அரும்பி மலர்தற்குரிய சூழ்நிலைகள் உருவாயின. வெளி உலகத் தொடர்புகள் சங்கிலித் தொடர் போல நீண்டு படரலாயிற்று. எண்ணும் எழுத்தும் உருப்பெற்றன. மனித வாழ்க்கையினைக் கவ்வியிருந்த இருள் மறையத் தொடங்கியது. அறிவும் அறிவியலும் ஒருங்கிணைந்து, மனிதக் குலத்தின் மேம்பாட்டை உலகுக்கு உணர்த்த வழிவகுத்துக் கொடுத்தன. எஸ்.கு.

துணை நூல்கள்:

Clark, G., World Pre History; A New Outline, Cambridge University Press, Cambridge, 1969.

Clark, J.D.E., The Pre History of Africa, Thames and Hudson, London, 1970.

**ஆப்பு வடிவ எழுத்து**, பழங்காலத்தில் சுமேரியர் உருவாக்கிய ஆப்புப் போன்ற தோற்றமுடைய எழுத்தின் வடிவத்தினைக் குறிக்கும். Cuneiform (கியூனிபாம்)என்னும் சொல், Cuneus forma என்ற இலத்தீன் தொடரிலிருந்து ஆக்கப்பட்ட ஆங்கிலச் சொல்லாகும். Cuneus என்பதற்கு ஆப்பு (Wedge) என்பதும், forma என்பதற்கு வடிவம் என்பதும் பொருள்களாகும். கியூனிபாம் எழுத்துகள் பார்ப்பதற்கு ஆப்பு வடிவத்தை ஒத்து இருத்தலால் அவை ஆப்பு வடிவ எழுத்துகள் (Cuneiform Script) எனப்பட்டன. இந்த எழுத்துகளின் முனை அம்பின் முனைபோலவும் காணப்பட்டமையான், அம்பு வடிவ எழுத்துகள் எனவும் இவை குறிக்கப்பட்டன.

ஆப்பு வடிவ எழுத்துகளின் பிறப்பிடம் மேற்கு ஆசியாக் கண்டத்தில் உள்ள ஈராக்கு (Iraq) நாட்டின் நடுப்பகுதியாகும். இப்பகுதி பண்டைக் காலங்களில் சுமேரியா, பாபிலோனியா, மெசபடோமியா என்றும் அழைக்கப்பட்டது. இந்த எழுத்துகளைக் கி.மு. 3000 ஆண்டுக்கு முன்பே சுமேரியர்கள் உருவாக்கினார்கள்.

ஈராக்கு நாடு மலைகளற்றது: ஆனால் களிமண் நிறைந்தது. அதனால், சுமேரியர்கள் களிமண்ணைக் குழைத்துப் பின் தகடுகளாக்கி, அவற்றில் ஆப்புவடிவ எழுத்து அச்சுகளைப் பதித்து எடுத்துவிட்டுப் பின் அக்களிமண் தகடுகளை வெயிலில் காயவைத்தோ தீயில் சுட்டோ எழுத்துச் சான்றுகளை உருவாக்கினார்கள்.

ஆப்புவடிவ எழுத்துகள் ஓவிய எழுத்துகளிலிருந்து தோன்றியனவாகும். காலப்போக்கில் அவை அசை எழுத்துகளாகவும், ஒலி எழுத்துகளாகவும் மாற்றம் பெற்றன. இதனால், சுமேரியர்கள் பயன்படுத்தியபோது 1000 வகை எழுத்துகளைக் கொண்டிருந்த ஆப்பு வடிவ எழுத்துகள் காலப் போக்கில் பாபிலோனியர்கள், அசிரியர்கள், ஈரானியர்கள் ஆகியவர்களின் கைபபட்டுக் கி.மு.6–ஆம்நூற்றாண்டளவில் 41 வகை எழுத்துகளாகக் குறைந்துவிட்டன. ஆப்பு வடிவ எழுத்துகள் இனந்தெரியாத சுமேரிய மொழிக்காகத் தோன்றிப் பிற்காலத்தில் செமிட்டிக்கு இனத்தைச் சேர்ந்த பாபிலோனியன் மொழி, இந்தோ ஐரோப்பிய இனத்தைச் சேர்ந்த பெர்சியன் மொழி ஆகியவற்றுக்கும் பயன்பட்டன.

ஆப்பு வடிவ எழுத்துச் சான்றுகளில் பெரும்பாலானவை களிமண்ணாலாகிய தகடுகள், பலவகையான உருளைகள், கூம்புகள் ஆகியவற்றில் காணப்படுகின்றன. என்றாலும் பிற்காலத்தில் ஆப்பு வடிவ எழுத்துச் சான்றுகள் பாறைகளிலும் செப்புத் தகடுகளிலும் வரையப்பட்டன. இவையெல்லாம் பல்லவர், சோழர் காலக் கல்வெட்டுகள் போல வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தவையாகும். உலக இலக்கிய வரலாற்றிலேயே மிகமிகத்தொன்மை வாய்ந்தவை இந்த ஆப்பு வடிவ எழுத்துச் சான்றுகளே ஆகும்.

ஆப்பு வடிவ எழுத்துச் சான்றுகளை முதன்முதலில் கண்டுபிடித்துப் படியெடுத்துக் கி.பி. 1621-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் வெளியிட்ட பெருமை இத்தாலிய நாட்டுப் பயணியான வாலே (Valle P.D.) என்பவரைச் சாரும். என்றாலும் ஆப்பு வடிவ எழுத்துக் கல்வெட்டுகளில் மிகவும் இன்றியமையாத மும்மொழிக் கல்வெட்டைக் கண்டுபிடித்துப் படியெடுத்துப் பின்னர் அதன் மொழியைப் புரிந்து கி.பி. 1846-இல் வெளியிட்ட அருமையும் பெருமையும் சர் என்றி இராலின்சன் என்ற ஆங்கிலேயரைச் சாரும். இந்தக் கல்வெட்டு ஈரான் நாட்டில் உள்ள பெகிசுதூன் என்னும் கிராமத்தில் உள்ள ஒரு பாறையில் 300 அடி உயரத்தில் காணப்படுவதாகும்.

ஆப்பு வடிவ எழுத்துச் சான்றுகள் இப்போது அமெரிக்காவில் பென்சில்வேனியாப் பல்கலைக் கழகத்தில் உள்ள அருங்காட்சியகம், சிகாக்கோப் பல்

| ஆதிகாலச் சித்திர எழுத்து | பிற்கால ஆப்பு வடிவ எழுத்து நிலையில் சித்திர எழுத்து | தொடக்க நிலை ஆப்பு வடிவ எழுத்து | தொன்மை அசிரிய வடிவம் | பொருள் |
|---|---|---|---|---|
| | | | | விண் இறைவன் |
| | | | | பூமி |
| | | | | மனிதன் |
| | | | | புதந்தா பெண் |
| | | | | மலை |
| | | | | மலைப் பெண், அடிமைச்சிறுமி |
| | | | | தலை |
| | | | | வாய் பேச |
| | | | | உணவு |
| | | | | உண்ணு |
| | | | | அடிநிலை நீர் |
| | | | | பருக |
| | | | | போகநிற்க |
| | | | | பறவை |
| | | | | மீன் |
| | | | | எருது |
| | | | | பசு |
| | | | | பார்லி அரிசி |
| | | | | சூரியன் நாள் |
| | | | | நிலம் உழு நிலம் பண்படுத்த |

ஆப்பு வடிவ எழுத்து வளர்ச்சி

கலைக் கழகத்தில் உள்ள கீழ்த்திசை நிறுவனம், ஏல் பல்கலைக் கழகத்தில் உள்ள பாபிலோனியாப் பொருட்காட்சியகம் ஆகிய இடங்களில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. அ.கா.

துணை நூல்கள்:

David Diringer, Cuneiform - Encyclopaedia Americana, New York, U. S. A., 1976.

David Diringer, Cuneiform - World University, Encyclopaedia, Washington, U. S. A., 1968.

**ஆப்போ மலை** பிலிப்பைன்சு தீவுகளிலுள்ள எரிமலை. இது இப்போது பல ஆண்டுகளாகச் செயலற்றுக் காணப்படுகிறது. இதன் உயரம் ஏறத்தாழ 2954 மீ. மினடநாவோ (Minadanao) என்பது இதன் மிக உயர்ந்த மலையுச்சியாகும். இது பிலிப்பைன்சுத் தீவுகளின் தென்கிழக்கில் அமைந்துள்ளது.

**ஆபட்டு (சர் சான் சோசப்பு கால்டுவெல்)** (கி. பி. 1821-1893) கனடா நாட்டின் தலைமை அமைச்சராகக் கி. பி. 1891 முதல் 1892 வரை பதவி வகித்தவர். சர் சான் ஏ. மாக்டொனால்டு (Sir, John A. Macdonald) என்பார், பதவியில் இருந்து உயிர் துறந்த பின்னர், ஆபட்டு (Abbot) அவரை அடுத்துத் தலைமை அமைச்சர் ஆனார். பல்வேறு சிக்கல்களைச் சமாளிக்க முடியாதவராய் ஆபட்டு தவித்தார். கனடாவில் ஏற்பட்ட கடும் பொருளாதார மந்தம், ஆங்கில மொழி பேசுவோர்க்கும் பிரெஞ்சு மொழி பேசுவோர்க்குமிடையே மூண்ட பெருங் கலவரங்கள் ஆகிய சிக்கல்களை அவரால் தீர்க்க இயலவில்லை. ஆபட்டு எழுபதாம் வயதில் தலைமை அமைச்சரானார். ஆதலின் உடல்நலக் குறைவால் பதவியைத் துறந்தார். இவர் வழக்குரைஞராகப் புகழ்பெற்றவர்; சட்டமன்றத்திலும் பணி புரிந்தவர். ஆபட்டு கி. பி. 1893-ஆம் ஆண்டில் மாண்ட்ரீயாலில் காலமானார்.

**ஆபர்கிராம்பி, இலேசலசு** (Abercrombie Lascelles) என்பவர் ஓர் ஆங்கிலக் கவிஞர்; சிறந்த திறனாய்வாளர். இவர் கி. பி. 1881-இல் இங்கிலாந்தில் மெர்சி ஆற்றங்கரையிலுள்ள ஆசுடன் (Ashton - on - Mersey) என்னும் ஊரில் பிறந்தவர். முதலாம் உலகப் போருக்கு முன் கவிதை வானில் தோன்றி மிளிர்ந்த உரூபர்ட்டு புரூக்கு (Rupert Brooke), சான் திரிங்க்கு வாட்டர் (John Drink Water), வில்பிரடு கிப்சன் (Wilfred Gibson), வால்ட்டர் தி லா மார் (Walter de la Mare) முதலியோர் அடங்கிய கவிஞர் மன்றத்தின் தலைவராகத் திகழ்ந்தவர். இவர் ஊர்ச்சிசுடர் சயரில் (Worcestershire) உள்ள மால்வன் கல்லூரியிலும், மான்செசுட்டரிலுள்ள ஓவன்சு கல்லூரியிலும் கல்வி கற்றார். கல்வி முடிந்த பின் 1902-ஆம் ஆண்டில் இவர் எழுத்துலகில் புகுந்தார். இவரது தொடக்கக் காலக் கவிதைத் தொகுப்புகள் 1908-1912 ஆகிய ஆண்டுகளில் வெளிவந்தன. முதலாம் உலகப் போர் நடைபெற்ற காலத்தில் தாய்நாட்டுத் தொண்டில் ஈடுபட்டார். போர் முடிந்ததும், இவர் இங்கிலாந்தில் உள்ள இலிவர்ப்பூல் (Liverpool), இலீடுசு (Leeds), இலண்டன் (London) பல்கலைக் கழகங்களில் கி.பி 1919 முதல் 1935 வரை ஆசிரியர் பொறுப்பேற்று மாணவர்களைத் திறமையாகப் பயிற்றுவித்தார். பின்னர் இவர் ஆக்சுபர்டு (Oxford) பல்கலைக் கழகத்தில் கோல்டு சுமித்து (Goldsmith) பெயரில் நிறுவப் பெற்றிருந்த ஆங்கில இணைப் பேராசிரியர் பதவியில் (கி. பி. 1935-38) அமர்ந்து திறம்படப் பணியாற்றினார். இவர் தம் ஐம்பத்து ஏழாம் வயதில் (1938) இலண்டன் மாநகரில் காலமானார்.

இவர் இயற்றிய கவிதைகள் திறனாய்வாளரா லும் மேதைகளாலும் பெரிதும் பாராட்டப் பெற் றன. ஆயின், மக்கள் கவிஞராக இவர் மலர வில்லை. மனித வாழ்வின் கடுமையினின்று நீங்கி ஒதுங்கிய கவிஞராகவே (Ivory – Tower Poet) வாழ்ந்து வந்தார். பொதுவாக, மேல்மட்ட தனி நாகரிகப் போக்கினை இவர் வெறுத்து வந்தார். இதனை இவர் எழுதிய கவிதைகள் நன்கு புலப் படுத்தும். இவர்தம் சிறந்த படைப்புகளில் சில: தாமசு ஆர்டி–ஒரு திறனாய்வு (Thomas Hardy–A Critical Study), உயர்கவிதையின் உட்கருத்து (The Iidea of Great Poetry), கவிதைக் கோட்பாடு (The Theory of Poetry), 'கவிதை என்பது வாழ்க்கை யின் வெளிப்பாடு; வாழ்க்கையின் போலி அன்று' இதுவே இவரது கவிதைத் தத்துவம். யாப்பு வகை யில் இவர் பெரும்பாலும் பழமை விரும்பியே. இவ ரைப் புகழேணியின் உச்சியில் நிறுத்தியது இவரது 'தி சேல் ஆப் செயின்ட்டு தமாசு' (The Sale of St. Thomas) என்னும் கவிதை நாடகமே. காப்பியம் (The Epic), இலக்கியத் திறனாய்வுக் கொள்கைகள் (Principles of Literary Criticism) என்பன இவர் தம் திறனாய்வுப் படைப்புகளாகும்.

**ஆபாசி சோன்தேவர்** மராத்திய மாவீரன்; சிவாசியின் படைத் தலைவர்களுள் ஒருவர். இவர் சிவாசியால் கி.பி. 1657–ஆம் ஆண்டில் கல்யாண் மாநிலத்தைக் கைப்பற்ற நியமிக்கப்பெற்றார். கல் யாண் பீசப்பூரின் ஆளுகைக்குட்பட்டிருந்தது. கல் யாணின் ஆளுநராக இருந்த முல்லா அகமது என்பார், கல்யாணை விட்டுப் பீசப்பூருக்குப் பெரும் பொரு ளைக் கப்பங் கட்டக் கொண்டு சென்றார். அவர் மருமகளையும், மனைவி மக்களையும் கல்யாண் அரண்மனையில் முல்லா அகமது விட்டுச் சென்றார். அத்தருணத்தில் ஆபாசி சோன்தேவர் கல்யாண் மீது படையெடுத்தார். முல்லா அகமதுவின் மருமகள் இளவயதினள்; எழில் மிக்கவள். அவளைச் சோன் தேவர் சிறைப்படுத்தினார். முல்லா அகமதுவின் மருமகளைச் சிவாசிக்குப் பரிசாகக் கொடுக்க எண்ணி அவளைச் சிவாசியின் சபா மண்டபத்திற்குக் கொண்டுவந்தார் ஆபாசி சோன்தேவர். அப்பெண் ணின் பேரழகைக் கண்ட சிவாசி மன்னன் ஆபாசி யின் செயல் தவறானது என்று கடிந்து கொண்டார். சிவாசி அப்பெண்ணைப் பார்த்து, அவள் அழகை மெச்சித் தம் தாயாரும் அவளைப் போன்று அழகாக இருந்திருப்பின் தாமும் இன்னும் அழகாகப் பிறந் திருக்கக் கூடும் என்று கூறினார். தம் ஊழியர்களுக் குச் சிவாசி ஆணையொன்றைப் பிறப்பித்துப் படை யெடுப்பின் போது பெண்களைச் சிறைப்படுத்து வதோ, மானபங்கப்படுத்துவதோ கூடாதென்றும், வழிபாட்டு இடங்களை அழிக்கக் கூடாதென்றும், சமயப் புனித நூல்களைக் கிழிக்கவோ, அவமானப் படுத்தவோ கூடாதென்றும் அறிவுறுத்தினார். முல்லா அகமதுவின் மருமகளும் திருப்பி அனுப்பப் பெற்றாள்.

**ஆபாநேரி,** இராசசுத்தான் மாநிலம் செய்ப் பூர் மாவட்டத்தில் இருக்கும் ஒரு சிற்றூர். இவ்வூர் பண்டக்யூ இரயில் சந்திப்பிலிருந்து 5 கி.மீ. தொலை வில் உள்ளது. இது ஆபாநகரி என்றும் கூறப்படு கிறது. திரும்ப இராசபுத்திரர்களின் பழைய தலை நகரமாக இவ்வூர் இருந்தது. பின்னர் அவர்கள் ஆள் வார் நகரைத் தலைநகரமாக்கிக் கொண்டனர். இங்கு அரசாண்ட 'சந்திரா' என்ற அரசரைப் பற்றி உள்ளூர் மரபு வழிச் செய்திகள் பல கிடைக்கின்றன. இரண்டு புகழ்மிக்க நினைவுச் சின்னங்களுக்கு இவ் வூர் பெயர் பெற்றது. ஒன்று சாந்தபாவேரி; மற் றொன்று அர்சத்துமாடம். இவ்விரு நினைவுச் சின்னங் களும் கி. பி. 8–ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. இவற்றைச் சாந்த அரசர் கட்டியிருக்கலாம். இங் குள்ள சிற்பங்கள் பிற்காலக் குப்தர்களின் காலத்தன. இங்குள்ள சிற்பங்கள் சிறந்த வேலைப்பாடுகளையும்



ஆபாநேரி – பெருங்குளம்

எளிமையான அணிகலன்களையும் பெற்றுள்ளன. இச்சிற்பங்கள் நடனம், இசை போன்றவற்றை விளக்குபவையாகவும், அழகு மிக்கவையாகவும் விளங்குகின்றன. இங்குள்ள சிற்பங்கள் தேவுகர் (Deogarh) சிற்பங்களின் மரபை ஒத்திருக்கின்றன. காதலர்கள் பூங்காக்களில் அமர்ந்திருக்கும் காட்சியும் நடனச் சிலைகளும் கண்கொள்ளாக் காட்சிகளாக அமைந்துள்ளன. இச்சிற்பங்கள் உலகியல் சார்ந் தவையாகவும், சமயச் சார்புடையனவாகவும் உள் ளன. காதலர் சிற்பங்களை அடுத்து நாக அரசன் சினத்துடன் தமது வாளை உருவும் சிற்பம் குறிப்பிடத் தக்கது. இங்குள்ள அர்த்தநாரீசுவர சிற்பம் அழ

கானதும், சமயநோக்குடன் அமைக்கப் பெற்றதுமாகும். இங்கு உயர்ந்த சிகரங்களுடைய கோயில்களும் ஓய்வு விடுதிகளும் பலவாக உள்ளன. ஆதிநாதர், மகாவீரர் ஆகிய இரண்டு சமணக் கோயில்களும் இங்கு உள்ளன.

**ஆபிரகாம் பண்டிதர், மு.,** கி.பி. 20-ஆம் நூற்றாண்டில் தஞ்சையில் பெரும்புகழ் பெற்று வாழ்ந்து தென்னக இசைத் துறையிலும், சித்த மருத்துவத் துறையிலும் பல ஆராய்ச்சிகள் செய்து தமிழகக் கலையை வளர்த்த பெரியாராவார். இவர் கி.பி. 1859-ஆம் ஆண்டு ஆகசுட்டுத் திங்கள் 2-ஆம் நாள் சு. முத்துச்சாமி நாடாருக்கும் அன்னம்மாளுக்கும் மகனாகப் பிறந்தார். திண்டுக்கல்லில் உள்ள ஒரு தொடக்கப்பள்ளியில் ஆசிரியராகத் தம் பணியைத் தொடங்கினார். உண்மையுடன்பணியாற்றி 'யார்க்கு' என்னும் மேலை நாட்டுச் சமயத் தொண்டரின் ஆதரவைப் பெற்று முன்னேறினார். தஞ்சையில் நேப்பியர் பெண் பாடசாலையில் தமிழாசிரியராகப் பணியாற்றினார். அப்போது சங்க இலக்கியங்களைக் கற்றுத் தெளிவு பெற்றார். இவர் தமிழிசையை முதன்முதலில் நெறிமுறையாக ஆராய்ந்து, 1917-இல் 'கருணாமிருத சாகரம்' என்னும் மிகப் பெரிய நூலாக வெளியிட்டார். இதன் முதற் பாகம் பண்டைத் தமிழரின் இசையிலக்கணத்தை விரிவாக விளக்குகிறது; இதன் இரண்டாம் பாகம், பன்னிரு நரம்புகட்கும் உரிய அலகுகள் (சுருதிகள்) 22 அல்ல என்றும், அவை 24 என்றும் மிக விரிவாகத் தருக்க நெறிமுறையில் வாதிட்டு நிறுவுகிறது.



மு. ஆபிரகாம்பண்டிதர்

கருணாமிருத சாகரம் மேலும் பல இனிய இசைச் செய்திகளை விளக்கியுள்ளது. இது இணை, கிளை, நட்பு, நரம்புகளைக் கண்டுபிடிக்கும் முறையை நிலை நாட்டியுள்ளமை பெரிதும் பாராட்டுதற்குரியது.

"இணை கிளை பகை நட்பு என்றிந் நான்கின்" என்று சிலப்பதிகாரம் (சிலப்: 8.3) கூறியுள்ள பகுப்பினைத் தமிழகத்தில் தெளிவுற முதன்முதல் விளக்கிப் பயன்படுத்திக் காட்டிய பெருமை ஆபிரகாம் பண்டிதரையே சாரும்.

மேலும், ஆளத்தியின் (இராகம் பாடுதலின்) இலக்கணம், பண்களைப் புடமிடுதல், ஆங்கில இசை முறையில் தமிழிசையை எழுதுதல், கீர்த்தனைகட்கு இசையமைக்கும் நெறிமுறைகள், வடமொழியிசையியலோடு தென்னக இசையியலை ஒப்பிடுதல் முதலியவை பற்றியும் விரித்துரைத்துள்ளார். பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, சிலப்பதிகாரம் முதலிய நூல்களில் காணப்படும் தென்னக இசை பற்றிய குறிப்புகளைத் திரட்டிக் காட்டி அதன் தொன்மையை விளக்கியுள்ளார்.

தம் தந்தையாருடன் பிறந்த 11 பேர்களையும் கொடுங்கொள்ளை நோய் கொன்றுவிட்டது என்னும் செய்தியை இவர் தம் இளமையில் அறிந்து அளவிலா அதிர்ச்சியும் கவலையும் அடைந்தார். 'எப்படியாவது நோய் தீர்க்கும் மருந்துகளைக் கண்டுபிடித்தல் வேண்டும்' என்னும் உறுதிப்பாடு கொண்டு பல்லாண்டு தொடர்ந்து உழைத்து வந்தார்.

திண்டுக்கல்லில் ஆசிரியராகப் பணிபுரிந்த காலத்தில் திண்டுக்கல் வழியாகப் பழனி செல்லும் துறவியர்களைப் பலகால் சந்தித்து மருந்து செய்முறைகளைத் திரட்டி வந்தார். பலவூர்கள் சென்று மருத்துவ மேதைகளைக் கண்டு மருந்துகளின் செய்முறைகளைக் கற்றார்.

சுருளி மலையில் தவநெறி கொண்டிருந்த சித்தர் பெருமானாகிய கருணானந்தரின் திருவருள் கிடைக்கப் பெற்றார். பல்வேறு மருந்துகளின் செய்முறையினை அவரிடம் கற்றார். மருந்து வகைகளைத் திருந்தச் செய்து எளிய விலைக்கே எல்லோருக்கும் விற்றார். தமிழகத்தில் கி.பி. 1898-ஆம் ஆண்டு எலிக் காய்ச்சல் கட்டி (பிளேக்) என்னும் கொடுங் கொள்ளை நோய் மாந்தரைக் கூட்டங் கூட்டமாய்க் கொன்று குவித்தது. பண்டிதர் முயன்று கண்டுபிடித்த மூலிகை மருந்துகளால்-ஊர்தோறும் மாந்தர் உயிர் பிழைத்தனர்.

தஞ்சையில் ஒரு பெரிய வளமனையைக் கட்டினார். அதற்கருகில் புதிய முறையில் பெரும் பண்ணையை அமைத்தார். பயன்மிகத் தரும் பயிர் வகைகளையும்கனி மரங்களையும் காய்கறி வகை

களையும் விளைவித்து நாட்டு மக்களிடையே புதுமுறை வேளாண்மையில் பற்றுதலை உண்டாக்கினார். சென்னை மாநில ஆளுநர், பண்டிதரின் இல்லம் வந்து தங்கிப் பயன்மிகத் தரும் பண்ணையையும், மருந்துசெய் மாபெரும் சாலையினையும், மின் அச்சகத்தையும் கண்டு வாழ்த்தினார். ஆபிரகாம் அருளாளருக்கு 'இராவ் சாகிபு' என்ற பட்டத்தை ஆங்கில அரசு அளித்தது.

கின்னரி (வயலின்), வீணை, வாய்ப்பாட்டு முதலிய கலைகளைத் தஞ்சையிலிருந்த நல்லாசிரியர்களிடம் பயின்று இசையறிவு பெற்றார். சாமியப்ப பிள்ளை என்னும் மேதையிடம் வாய்ப்பாட்டும், அரண்மனை வீணைப்பெரியார் வெங்கிடாசல ஐயரிடம் வீணையும் கற்றுக் கொண்டார். தம் குடும்பத்தினர் யாவரும் இசை கற்றுக்கொள்ள ஏற்பாடுகள் செய்து உதவினார். வழி வழியாக இசைக் குடும்பமாகப் பண்டிதர் குடும்பம் திகழ்ந்து வருகிறது. இவர் எழுதிய கருணாமிருத சாகரம் என்னும் இசையாராய்ச்சி நூலை வியந்து போற்றித் தமிழகப் புலவர் பலர் பாராட்டியுள்ளனர். வீ.ப.கா.சு.

**ஆபிரர்கள்** பண்டைக் காலத்தில் வட இந்தியாவில் வாழ்ந்திருந்த ஓரினமக்கள். இவர்கள் கீழ்ச் சிந்து வெளியையும் மேலை இராசபுதனத்தையும் ஒட்டியிருந்த நிலப்பரப்பில் வாழ்ந்தவர்கள். பதஞ்சலி என்பார் எழுதிய மாபாடியத்திலும் பெரிபுளுசு என்னும் நூலிலும் தாலமி என்பாரின் நூலிலும் ஆபிரர்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர். சமுத்திர குப்தரின் வீரவெற்றிகளைக் குறிக்கும் அலகாபாத்துக் கற்றூண் சாசனத்திலும் ஆபிரர்கள் குறிக்கப்பட்டுள்ளனர். ஆபிரர்கள் வீரத்திற்குப் பெயர் பெற்றவர்கள். அவர்கள் மேலை இந்தியாவில் காகர்களுக்கும், குப்த மன்னர் சமுத்திரகுப்தனுக்கும் பணியாற்றியவர்கள்.

**ஆபு** புகழ் மிக்க சிகரம். இது இராசசுத்தான் மாநிலத்தில் சிரோகி (Sirohi) மாவட்டத்தில் ஆரவல்லி மலைத்தொடரில் உள்ளது. இங்குள்ள 'குரு சிகரம்' கடல் மட்டத்திலிருந்து 1883 மீட்டர் உயரத்தில் உள்ளது. கி.மு. இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த சாஞ்சிக் கல்வெட்டில் காணப்படும் 'அபோதா' என்ற ஊரே இக்கால 'ஆபு' ஆகும் என்று அறிஞர்கள் கருதுகிறார்கள். பிளினி குறித்துள்ள 'மான்சு காப்பிடாலியா' என்னும் ஊரும் ஆபுவையே குறிக்கும் என்று சிலர் கருதுகின்றனர். மிகுதியான மழையும் (ஆண்டுக்கு 170 செ. மீ.) அடர்ந்த காடுகளும் இங்கிருப்பதுபோல் இராசபுதனத்தில் வேறெங்கும் இல்லை. பர்கூசன் (Fergusan) என்பவர், இங்குள்ள நகிதலம் என்ற ஏரியினைப் போல் அழகான ஏரி இந்தியாவில் கிடையாது என்று கூறுகிறார். மலையின் மேல் இளவேனிற் காலத்தில் பூக்கும் காளப்பூ, பல கி.மீ. தூரம் நறுமணம் வீசும். நீலநிறமுடைய 'காரா' என்ற மலர், ஆறு ஆண்டுகளுக்கு ஒருமுறை மலரும். பில்லர் (Bhils) என்னும் ஆதிக்குடிகள் இங்கு வாழ்கிறார்கள். இந்தியா ஆங்கிலேய ஆட்சியின்கீழ் இருந்தபொழுது 'ஆபு' ஐரோப்பியரின் கோடை வாசத்தலமாக இருந்தது. ஆபுவிலிருந்து 24 கி.மீ. தொலைவில் ஆபு சாலை (Abu Road) என்ற இருப்புப் பாதை நிலையம் உள்ளது.



ஆபு, பரமார அரசர்களின் பிறப்பிடமாகக் கருதப்படுகிறது. ஆபுவில் சைவமும் சமணமும் சிறந்திருந்தன. இங்குக் கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் சைவம் மேலோங்கி இருந்ததாகக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இங்குக் கண்டெடுக்கப்பட்ட ஒரு கல்வெட்டு, உச்சயினில் உள்ள சைவ மடத்தின் தலைவர் ஆபுவில் உள்ள கோட்டேசுரன் கோயிலைப் புதுப்பித்தது, தீர்த்தக் குளத்திற்குச் சுவர் கட்டியது, கற்பலகைகளை அதனைச் சுற்றி அமைத்தது, இரண்டு புதிய கோயில்கள் கட்டியது ஆகியவை பற்றிக் குறிப்பிடுகிறது. மரபுச் செய்திகள் வாயிலாகப் பழங்காலத்தில் இருந்தே ஆபு ஒரு புண்ணியத் தலமாகக் கருதப்பட்டு வந்துள்ளது எனத் தெரிகிறது. இங்குள்ள சீவந்தசாமி சிரீ மகாவீர சமணக் கோயிலில் காணப்படும் கல்வெட்டு ஒன்று, மகாவீரர் 'அற்புத பூமி' என்ற இடத்திற்கு வருகை புரிந்ததைக் குறிப்பிடுகிறது.

ஆபுவில் நான்கு சமணக் கோயில்கள் உள்ளன. இக்கோயில்கள் 'தில்வாரா' என்ற கிராமத்தின் பெயரை வைத்துப் பொதுவாகத் 'தில்வாராக் கோயில்கள்' எனச் சொல்லப்படுகின்றன. இவை கி.பி. 10-ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 14-ஆம் நூற்றாண்டுக்குள் சோலங்கியார் ஆட்சியில் கட்டப்பட்ட கோயில்களாகும். இந்நான்கு கோயில்களுள் இரண்டு கோயில்கள் ஆபுவின் புகழுக்குக் காரணமாக விளங்குகின்றன. இவ்விரண்டு கோயில்களுள் ஒன்று விமலவாசகி கோயில், மற்றொன்று உலூனவாசகி கோயில். விமலவாசகி கோயில் முதல் தீர்த்தங்கரராகிய ஆதிநாதருடையது. இக்கோயிலைப் பரமார அரசர் சோமசிம்மன் ஆட்சிக்காலத்தில் கி.பி. 1230-ஆம் ஆண்டு தேசபாலர் என்பவர் கட்டினார்.

இவ்விரண்டு கோயில்களும் ஒரே கலைப் பாணியைப் பெற்றுத் திகழ்கின்றன. இங்குக் கிடைக்கும் வெண் பளிங்குக் கல்லினால் இவை கட்டப்பட்டுள்ளன.

விமலவாசகி கோயில் சமணக் கோயில்களிலேயே முழு அமைப்பைப் பெற்றுத் திகழும் கோயிலாகும்.



விமலவாசகி கோயில்

இதன் நுழை வாயிலாக அமைந்திருக்கும் முகமண்டபம் சதுர வடிவிலான 6 தூண்களைக் கொண்டது. இக்கோயிலின் உள்ளே இருக்கும் சிறிய அறையில் தீர்த்தங்கரரின் உருவம், மேல் நோக்கிக் கூம்பு வடிவில் அமையப் பெற்ற கூரையில் சென்று முடிகிறது. இந்தச் சிறு அறை ஒரு பெரிய மண்டபத்துடன் இணைந்துள்ளது. இப்பெரிய மண்டபத்தின் கூரை கூம்பு வடிவில் 8 தூண்கள் தாங்கியதாய் அமைக்கப் பட்டுள்ளது. இவை அனைத்தையும் சுற்றி நீளவட்டமான சுற்றுக்கட்டு உள்ளது. இதன் நீள அகலங்கள் முறையே 43×30 மீ. ஆகும். இச்சுற்றுக் கட்டு மண்டபத்தில் இடைவெளிகளுடன் கூடிய இரட்டைத் தூண்கள் பல அமைக்கப் பெற்றுள்ளன. இவை பார்ப்பதற்கு முகமண்டபங்கள் போலவும் பல சிறு அறைகளைக் கொண்டும் காட்சியளிக்கின்றன. இந்த ஒவ்வொரு சிறு அறையிலும் கால்மேல் கால் போட்டு அமர்ந்த நிலையில் உள்ள தீர்த்தங்கரரின் உருவங்கள் உள்ளன. செதுக்குச் சிற்பங்களுடன் கூடிய கூரை அழகுடன் திகழ்கிறது.

தேசு பாலர் கட்டிய நேமிநாதர் கோயில், சுற்றுக் கட்டுடன் கூடிய மண்டபத்தின் உள்ளே உள்ளது. இதன் நீள அகலங்கள் முறையே 52×31 மீ. ஆகும். பார்ப்பதற்கு ஆதிநாதரின் கோயில் போன்றே உள்ளதெனினும் சில வேறுபாடுகள் இக்கோயிலில் உள்ளன. இக்கோயில் அர்த்த மண்டபம், மகா மண்டபம் ஆகியன கொண்டு திகழ்கிறது. இம்மண்டபங்களைத் தாங்கி நிற்கும் தூண்கள் உயரமானவையாகவும் 8 வகையானவையாகவும் உள்ளன. சுற்றுக் கட்டு மண்டபத்தைச் சுற்றிலும் 70 சிறிய அறைகள் அமைக்கப்பட்டுள்ளன. இவ்வறைகளின் முன்பு இடைகழிகள் உள்ளன. ஒவ்வொரு அறையிலும் கால்மேல் கால்போட்டு அமர்ந்த நிலையில் உள்ள தீர்த்தங்கரரின் உருவம் உள்ளது. தூண்களின் உச்சியில் உள்ள போதிகையின் மீது வைக்கப்பட்டுள்ள தூலங்கள் மிகத் திண்மையானவையாக உள்ளன. இதன்மேல் கவிகை மாடத் தூபியும் உள்ளது. கூம்பு வடிவ அமைப்பு உள்ள கூரை, நன்றாக அணி செய்யப் பட்டுள்ளது. பார்வையாளர்களின் கண்களைக் கவரும்படி கூரையின் நடுவில் அமைக்கப்பட்டிருக்கும் தொங்கணி, இக்கோயிற் கட்டிடக் கலையில் மேம்பட்டு விளங்குகிறது.



தேசுபாலர் கோயில்

ஆபுவில் இருக்கும் சமணக் கோயில்களில் காணப்படும் சரசுவதி, அம்பிகை போன்ற அம்மன் திருவுருவங்கள் மிக்க அழகு வாய்ந்தவை. கலைமகள் நான்கு கைகளிலும் வீணை, நூல், உருத்திராட்சம் தாமரை ஆகியவற்றைக் கொண்டுள்ளாள். இச்சிற்பம் விமல வாசகி கோவிலில் உள்ள தூலத்தின் மீது உள்ளது. இக்கோயிலின் கூரையிலுள்ள 16 கைகளுடன் கூடிய கல்விக்குரிய பெண் தெய்வச் சிற்பம் குறிப்பிடத்தக்க மற்றொரு சிற்பமாகும். இத்தெய்வத்திற்கு இருபக் கங்களிலும் நடனமாடும் இரண்டு ஆண் உருவங்கள் உள்ளன. இந்த அம்மன் தாமரைப் பீடத்தின் மீது அமர்ந்துள்ளாள்; தன் கைகளில் தாமரை, சங்கு, நூல், கமண்டலம் ஆகியவற்றையும் ஒரு கையில் வரத முத்திரையையும், மற்றொரு கையில் அபய முத்திரையையும் கொண்டுள்ளாள். எஞ்சியுள்ள கைகளில் உள்ளவை உருக்குலைந்து காணப்படுகின்றன. தேசுபாலர் கட்டிய கோயிலிலும் கலைமகளின்

சிற்பம் உள்ளது. 20 கைகளுடன் கூடிய அம்பிகையின் திருவுருவம் விமலவாசகி கோயிலின் கூரையில் உள்ளது. அம்பிகை சிங்கத்தின் மேல் அமர்ந்துள்ளாள். இவள் தன் கைகளில் கதை, சக்தி, பாம்பு, தடி, கேடயம், கோடரி, கமண்டலம் ஆகியவற்றைக் கொண்டும் அபய முத்திரை, வரதமுத்திரைகளுடனும் விளங்குகிறாள். பிற கைகளின் சின்னங்கள் உடைந்து காணப்படுகின்றன. அம்பிகை, தலையில் மகுடமும், காதணிகளும், கழுத்தணியும், மாலையும், கைகளில் கைவளையல்களும், காலில் சிலம்பும், கீழாடையும், மேலாடையும் அணிந்து காணப்படுகிறாள்.



தேசுபாலர் கோயில் சிற்பம்

ஆபுவில் உள்ள சமணக் கோயில்களின் கூரைகளில் உள்ள பல்வேறு சிற்பங்கள் மகாபாரதம், இராமாயணம் ஆகியவற்றில் வரும் நிகழ்ச்சிகளைப் பின்னணியாகக் கொண்டு செதுக்கப்பட்டுள்ளன. கண்ணனின் பிறப்பும், வளர்ப்பும் இக்கோயில்களில் திறம்படச் செதுக்கப்பட்டுள்ளன. விமலவரசகி கோயிலில் இருக்கும் அரங்க மண்டபத்தில் பரதனுக்கும் பாகுபலிக்கும் நடக்கும் போர் பற்றிய சிற்பங்களும், நேமிநாதரின் திருமண விழாவும் செதுக்கப்பட்டுள்ளன.

தேசுபாலர் இங்கு வந்து வழிபடும் மக்களுக்கு ஏற்பப் பல வசதிகளைச் செய்தார். கடவுளை வழிபடவும் வழிபடுவோருக்கு வசதிகளைச் செய்யவும் தனி அலுவலர்களைப் பணி அமர்த்தினார். ஆபு கோயில்களில் சிறப்பு நிகழ்ச்சிகளும் திருவிழாக்களும் நடைபெற ஆவன செய்தார். சித்திரை மாதத்தில் அமாவாசைக்குப்பின் 3-வது நாளில் தொடங்கித் திருவிழா, எட்டு நாள்களுக்கு நடத்தப்பட்டது. இக்கோயில்கள் யாவும் முசுலிம் படைகளால் அழிக்கப்பட்டன; பின்னர்ப் புதுப்பிக்கப்பட்டும் உள்ளன. ஆபு, சமணர்களின் சிறந்த புண்ணியத்தலமாக இன்றும் விளங்கி வருகிறது. ஆபுவைப் பற்றிப் பல தல புராணங்கள் பிற்காலத்தில் எழுந்தன.

துணை நூல்கள்:

**Kailash Chand Jain, Ancient Cities and Towns of Rajastan, Motilal Banarsidas, Delhi, 1972.**

**Sivaramamurti, C., The Art of India, India Book House, Bombay, 1977.**

***ஆபுத்திரன்*** மணிமேகலைக் காப்பியத்தில் இடம்பெற்றுள்ள கதை மாந்தருள் ஒருவன். தனியே கிடந்த ஆண் குழந்தை, பசுவொன்றினால் பாலூட்டிக் காக்கப் பெற்றமையால் ஆபுத்திரன் என அழைக்கப் பெற்றது.

அபஞ்சிகன் என்பவன் காசியில் வாழ்ந்த ஒரு வேதியன். அவன் மனைவி சாலி. அவள் கற்பு நெறியின்றிக் கருவுற்றமைக்கு அஞ்சித் தென்திசை செல்லும் மக்களுடன் சேர்ந்து குமரித் துறையை அடைந்தாள். திரும்புகையில் கொற்கையின் அருகிலுள்ள ஆயர்பாடியில் குழந்தையைப் பெற்று, அருகிருந்த தோட்டத்தில் போட்டுச் சென்றாள். அக்குழந்தையைப் பசுவொன்று ஏழுநாட்கள் பாலூட்டிக் காத்தது. அக்குழநதையே ஆபுத்திரனாக வளர்ந்தான்.

வயனங்காட்டு வேதியன் அவ்வழியே வந்த போது அக்குழந்தையைக் கண்டு எடுத்து வளர்த்தான். ஆபுத்திரன் வேதங்களைக் கற்றுத் தேர்ந்தான். இவன் ஒரு சமயம் ஒரு வேள்விச் சாலைக்குச் சென்றான். அங்குப் பலியிடுவதற்குப் பசுவொன்று கட்டப்பட்டிருப்பதைக் கண்டு, இரவில் அதனை யாவரும் அறியாவண்ணம் கொண்டு சென்றான். வேள்வி அந்தணர்கள் காவலரோடு வந்து இவனைக் கையுங் களவுமாகப் பிடித்து அடித்தனர்.

இவனால் காப்பாற்றப்பட்ட பசு வேதியர் தலைவன் குடரினைக் கோட்டினால் குத்தி ஒடி மறைந்தது. இவன் கொல்லாமை என்னும் அறத்தை அவர்களுக்கு எடுத்துரைத்தான். அவர்கள் இழித்துப் பேசினர். அதற்கு இவன் 'அசலன் என்ற முனிவனும் பசு பெற்றவன் தானே! தேவதாசி திலோத்தமையின் மக்கள்தாமே, வசிட்டரும் அகத்தியரும்! அப்படியிருக்க என்னைப் பழிப்பதேன்?' என வினவினன்.

ஆயினும் இவனை ஊரைவிட்டே விரட்டினர். அதனால் இவன் பிச்சை எடுத்தான். பிச்சைப் பாத்

திரத்திலும் கல்லைப் போட்டு உடைத்தனர். அதனையும் இழந்து செல்வர் வாழும் தென்மதுரையை அடைந்தான். அங்குள்ள கலைமகள் கோயில் அம்பலத்தில் தங்கினான். வீடுகள் தோறும் பிச்சை எடுத்து வந்து ஊனமுற்ற பலருக்கும் உணவளித்து எஞ்சியதைத் தானுண்டு வாழ்ந்தான்.

ஒரு நாள் மழை கூடிய நள்ளிரவில் சிலர் ஆபுத்திரனிடம் உணவு கேட்டனர். செய்வதறியாது வருந்திய ஆபுத்திரனிடம் சிந்தாதேவி வற்றாது உணவு சுரக்கும் கலம் ஒன்றினை-அமுதசுரபியைத்-தந்தாள். அவனை வணங்கி அன்று முதல் எல்லா உயிர்களுக்கும் உணவு வழங்கும் அறத்தினைச் செய்தான்.

இந்த அறம் இந்திரனது பாண்டு கம்பளத்தினை நடுங்கச் செய்தது. இந்திரன் வேதியன் உருவில் தோன்றி வேண்டும் வரம் யாதென்றான். அவனை ஆபுத்திரன் மதியாது உன்னால் எனக்கு ஆவதொன்றுமில்லை என்றான். வெகுண்ட இந்திரன் நிலவுலகில் வளம் சுரக்கச் செய்தான். ஆபுத்திரன் கையிலுள்ள அமுதசுரபி பயனற்றதாகியது. உணவு பெறுவோரைப் பெறாது வருந்திய அவனெதிரே, மரக்கலத்திலிருந்து இறங்கிய சிலர் சாவக மக்களின் பசித்துன்பம் பற்றிக் கூறினர். உடனே கலத்தில் சாவக நாட்டுக்குப் புறப்பட்டான். மரக்கலம் மணிபல்லவத்தில் சிறிது நேரம் நின்றது. விரைந்து மீண்டும் ஏறிக்கொள்ளாமையால் ஆபுத்திரனை அங்குத் தனியே விடுத்து மரக்கலம் சென்றது. வறிதே அமுத சுரபியுடன் வாழ்வதை விரும்பாத ஆபுத்திரன் அதனை அங்குள்ள கோமுகிப் பொய்கையில் விடுத்து உண்ணாதிருந்து உயிர் துறந்தான்.

அவனே பின்னர்ச் சாவக நாட்டில், மண்முக முனிவனுக்குரியதும் முன்பு தன்னைக் காத்ததுமான பசுவின் வயிற்றில் பிறந்தான். அந்நாட்டு அரசன் பூமிச்சந்திரன் அக்குழந்தையை வளர்த்துத் தனக்குப் பின் அரசனாக்கினான். அ.ந.

**ஆம்கர்சுட்டு** என்பவர் இந்திய அரசப் பிரதிநிதிகளுள் ஒருவர். கல்கத்தாக் குழுவின் மூத்த உறுப்பினரான சான் ஆடம்சு (John Adems) ஆட்சி செய்த ஏழு மாதங்களுக்குப் பிறகு கி.பி. 1823-இல் ஆம்கர்சுட்டுப் பிரபு (Lord Amherst) இந்திய அரசப்பிரதிநிதியாகப் பொறுப்பேற்றார். இவர் வணிகக் குழுவில் இருந்த சிக்கல்களைத் தெளிவான முறையில் திறமையுடன் கையாளவில்லை. இவர் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற காலத்தில் கிழக்கிந்திய வாணிகக் குழுவின் ஆதிக்கத்திலிருந்த பகுதிகளின் அமைதிக்கும் பாதுகாப்பிற்கும் எதிர்ப்புத் தரும் சக்தியாகப் பர்மியர்கள் இருந்தனர். கிழக்கிந்திய வாணிகக் குழுவிற்குச் சொந்தமான சிட்டகாங்கு, தாக்கா (Dhaka), மூர்சிதாபாத்து (Murshidabad), காசிம்பசார் (Cassim Bazar) ஆகிய பகுதிகளைப் பர்மியர்கள் சரணடையும்படி வற்புறுத்தினர்; பல தொல்லைகளையும் கொடுத்தனர். இதற்கிடையில் சையாமியர்களுக்கும் (Siamese) பர்மியர்களுக்கும் நடந்த போரில் பர்மியர்கள் தோற்கடிக்கப்பட்டனர். இதன் விளைவாக ஆங்கிலேயர்களுக்கு அப்பொழுது தொல்லைகளைப் பர்மியர்கள் கொடுக்காமல் இருந்தனர். சையாம் கி.பி. 1822-ஆம் ஆண்டு கைப்பற்றப்பட்டது. மீண்டும் பர்மியர்கள் கிழக்கிந்திய வாணிகக் குழுவுக்குச் சொந்தமான பகுதிகளை அச்சுறுத்தினர். இவர்கள் போர் தொடுக்கவும் ஆயத்தமாக இருந்தனர். ஆம்கர்சுட்டு பர்மியர்களுக்கெதிராகக் கி.பி. 1823-ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதத்தில் சிட்டகாங்கிற்கருகில் உள்ள பாவுரி என்னுமிடத்தில் போர் தொடுத்தார். இதுவே முதலாம் பர்மியப் போர் (கி.பி. 1824-26) ஆகும். ஆங்கிலேயர்கள் பர்மியப் போருக்குத் தீவிர ஏற்பாடுகளை மேற்கொள்ளவில்லை. இரண்டாண்டுகள் செய்த போரில் ஆங்கிலேய வாணிகக் குழுவுக்குப் பெருஞ்செலவு செய்யும் நிலை ஏற்பட்டது. தொடக்கத்தில் போருக்கான ஆயத்தங்களை ஆம்கர்சுட்டுப் பிரபு மேற்கொண்டிருந்திருந்தால் இந்த அளவு பணச் செலவு ஏற்பட்டிருக்காது. இருப்பினும் பர்மியர்கள் தோற்கடிக்கப்பட்டார்கள். ஆம்கர்சுட்டுப் பிரபு பர்மிய அரசருடன் கி.பி. 1826-இல் இயண்டபூ உடன்படிக்கையைச் (Yandaboo Treaty) செய்து கொண்டார். அதன்படி அரகான், தென்னாசரிம் (Tenasserim) ஆகிய இடங்கள் ஆங்கிலேய வாணிகக் குழுவுக்குக் கிடைத்தன. அசாம், கச்சார் (Cacher) ஆகிய பகுதிகளிலிருந்து பர்மியப்படை திரும்பிச் சென்றது. மணிப்பூரின் சுதந்திரத்தைப் பர்மியர்கள் ஏற்றுக்கொண்டனர். பர்மியர்கள் பிரிட்டிசுப் பேராளர் ஒருவரை வைத்துக் கொள்ளவும், ஆங்கிலேயர்களுக்குப் பத்து இலட்சம் பவுன் போர்ச் சேத ஈட்டுத் தொகை அளிக்கவும் உடன்பட்டனர். இந்தப் போரின் இறுதியில் ஆங்கிலேயரே வெற்றியடைந்தனராயினும் ஆம்கர்சுட்டுப் பிரபுவின் திறமைக் குறைவால் மிகுந்த நட்டமும் துன்பமும் ஏற்பட்டன.

வங்காளத்திலுள்ள பரக்பூர் (Barrackpore) என்னுமிடத்தில் இருந்த படைவீரர்கள் கி.பி. 1824-இல் பர்மாவுக்குச் செல்லும்படி கட்டளையிடப்பட்டனர். ஆனால், அவர்கள் அங்குப் போக மறுப்புத் தெரிவித்தனர். தங்கள் சாதியை இழக்க நேரிடும் என்று அஞ்சி அவர்கள் ஆம்கர்சுட்டுப் பிரபுவின் உத்தரவை ஏற்க மறுத்துக் கலகம் செய்தனர். ஆங்கிலேயர்கள் இக்கலகத்தை வன்மையாக அடக்கினர். பல படை வீரர்கள் சுட்டுக் கொல்லப்பட்டனர்.

பரத்பூர் அரசன் (Bharatpur) கி.பி. 1826-இல் இறந்தபிறகு அரசுரிமையை ஏற்பது குறித்துச் சண்டை ஏற்பட்டது. ஆங்கிலேயர்கள் பரத்பூர் இள வரசருக்குத் துணை செய்தனர். இவரை எதிர்த்துப் போட்டியிட்ட துர்சன் சால் (Durjan sal) என் பவரைப் பரத்பூரில் நடந்த போரில் ஆம்கர்சுட்டுப் பிரபு தோற்கடித்துப் பரத்பூரைக் கைப்பற்றினார்.

பர்மியப் போரில் போதிய அளவு திறமையைக் காட்டாததால் ஆம்கர்சுட்டுப் பிரபு செல்வாக்கிழந் தார். பரத்பூரில் நடந்த சிப்பாய்க் கலகம் அவர் மதிப்பிழக்கக் காரணமாக இருந்தது. முதன் முத லாகக் கோடைக் காலத்தில் சிம்லாவில் வந்து தங் கிய அரசப் பிரதிநிதி ஆம்கர்சுட்டுப் பிரபு ஆவார். ஆம்கர்சுட்டுப் பிரபு கவர்னர் செனரல் பதவியைக் கி.பி. 1828 மார்ச்சு மாதத்தில் வேண்டாமென விடுத்துத் தாயகம் சென்றார். இந்தியாவை ஆண்ட அரசப் பிரதிநிதிகளுள் இவர் மிகவும் திறமையற்ற வர் என்று கருதப்படுகிறார். அ.கே.

**ஆம்சுக்கு** சோவியத்து உருசியாவைச் சார்ந்த யூரல் மலைகளுக்கு மேற்கிலுள்ள பகுதி. வேளாண் மையும் கால்நடை வளர்ப்பும் இங்கு நடைபெறும் சிறப்புத் தொழில்கள். இப்பகுதியின் வழியாக இரு இருப்புப் பாதைத் தொடர்கள் செல்லுகின்றன. ஆம்சுக்கு (Omsk) இப்பகுதியின் தலைநகரம். தாரா இரண்டாம் நகரம்.

ஆம்சுக்கு இரு ஆறுகள் இணையும் சந்தியில் இருக்கும் கடல்நகரம்; தலைசிறந்த வாணிக மையம். சைபீரியாவின் குறுக்கே ஓடும் இருப்புப் பாதைத் தொடர் இந்நகரத்தின் வழியாகச் செல்கிறது. இங் குப் பலவிதமான கைத்தொழில்களும் நடைபெறு கின்றன. பல்வகைப் பயிற்சிப் பள்ளிகளின் மையமாக வும் இந்நகரம் விளங்குகிறது. மக்கள்தொகை 10,44,000 (1981).

**ஆம்சுடர்டாம்** நெதர்லாந்து நாட்டின் தலை நகர். ஐரோப்பிய நாடுகளின் அழகான தலைநகரங் களுள் ஒன்று. ஆம்சுடர்டாம் (Amsterdam) பெரும் வாணிக மையமாகும். பொருள்வளமும் தொழில் வளமும் கொண்ட இந்நகரம் பண்பாட்டு மையமு மாகும். வைரத்தைப் பட்டை தீட்டுதல் இங்கு நடைபெறும் சிறப்பான தொழில்களுள் ஒன்று. இது தலைநகராயினும் அரசாங்க அலுவல்கள் எல்லாம் தி ஏக்கு (The Hague) நகரிலேயே நடைபெறுகின் றன. ஆம்சுடர்டாமில் உள்ள பல கால்வாய்கள் இந் நகருக்கு மேலும் அழகூட்டுகின்றன அவை போக்கு வரத்துக்குப் பெரிதும் பயன்படுபவை. இங்கு ஏறத் தாழ 50 கால்வாய்களும் 500 பாலங்களும் உள்ளன. படகுப் பயணம் ஆம்சுடர்டாமைத் தெரிந்து கொள்ள உதவும் அழகிய சாதனம், அதனால் இந் நகரம் ஏறத்தாழ நூறு தீவுகளைக் கொண்டது போல் காணப்படுகிறது. வட ஆலந்து என்னும் மாநிலத்தில் அமைந்துள்ள இந்நகர், ஆம்சுடெல் (Amstel River) ஆற்றங்கரையிலும், அய்சே (IJ) ஆற் றங்கரையிலும் உள்ளது. ஆரஞ்சு மரபினைச் சார்ந்த அரசர்கள் ஆட்சி நடத்தத் தொடங்கிய கி.பி. 1815-ஆம் ஆண்டிலிருந்து தச்சு அரசர்கள் (The Dutch Kings) இங்குள்ள புதிய திருச்சபையில் முடிசூட்டிக் கொண்டனர்.



ஆம்சுடர்டாம் உரோகின் கால்வாய்

ஆம்சுடர்டாம் பிறைச்சந்திரவடிவில் அமைந் துள்ளது. இதன் நடுவில் அணைக்கட்டுச் சதுக்கம் உள்ளது. இங்கு ஆம்சுடர்டாம் பல்கலைக் கழகம் கி.பி. 1632-இல் அமைக்கப்பெற்றது. இந்நகரில் 40 அருங்காட்சியகங்கள் உள்ளன. மக்கள்தொகை 7,00,759 (1982).

**ஆம்ப்சயர்** தென் இங்கிலாந்தின் கடற்கரை யில் அமைந்துள்ள மாவட்டம். இதன் பரப்பு 3772 ச.கி.மீ, மக்கள்தொகை 14,56,367. ஆம்ப்சயர் (Hampshire) மாவட்டம் பாதிக்குமேல் வேளாண் மைக்குப் பயன்படும் கழனிகளைக் கொண்டது. கோதுமை, பார்லி, பால்பண்ணைப் பொருள்கள் போன்றவை சிறப்பான வேளாண்மைத் தொழில் களாம். தென்கிழக்குப் பகுதியில் தோட்டப்பயிர் களாக இசுட்ராபெரி (Strawberry) என்னும் பழவகையும், உருளைக் கிழங்கும் பயிராகின்றன. இம்மாவட்டத்தின் பெரும் பகுதிகளில் காடுகள் நிறைந்துள்ளன. புதுக்காடு (New Forest) என்னும் இம்மாவட்டப் பகுதி முற்காலத்தில் அரச குடும்பத் தினரின் வேட்டைக் காடாகத் திகழ்ந்தது. இப்போது அப்பகுதி சிறந்ததொரு சுற்றுலா மையமாக உள்ளது. ஆல்டர்சாட்டுப் பகுதியைச் சுற்றிலுமுள்ள காடுகளும்

புதர்களும் படைவீரர்களின் ஏய்ப்பு நடவடிக்கைகளின் செயற்களமாகத் திகழ்கின்றன.

இம்மாவட்டத்தின் பெருநகரங்கள் கடற்கரையை யொட்டியுள்ளன. சவுத்தாம்ப்டன் (Southampton) இம்மாவட்டத்தின் பெருந்துறைமுகமும் தொழிற்சாலை நகரமுமாகும். இப்பெருநகரின் மக்கள் தொகை 2,04,406 (1981). போர்ட்சுமத்து(Portsmouth) சிறப்பான கப்பற்படைத் தளமும், தொழிற்சாலை மையமுமாகும். இவ்வூரின் மக்கள்தொகை 1,79,419 (1981). இவ்விரு நகரங்களும் வளர்ச்சியுறும் பகுதிகளாய்க் கருதப்படுகின்றன. பாவ்லி (Fawley) என்னும் ஊர் சவுத்தாம்ப்டன் கடலையொட்டியுள்ள இடமாகும். இங்குள்ள எண்ணெய் தூய்மைப்படுத்தும் பணியும் பெட்ரோ-இரசாயன வளாகமும் சிறப்பானவை.

ஆல்டர்சாட்டு (மக்கள் தொகை 40,000-1981) கி.பி. 1855 இலிருந்து ஒரு படைக்கள நகரமாக இலங்குகிறது. வின்செசுடர் (Winchester – மக்கள் தொகை 30,000 – 1981) இங்கிலாந்தின் பழைய தலைநகராயிருந்தது. இங்கு ஐரோப்பாவிலேயே மிகப் பழைய வரலாற்றைக் கொண்ட திருச்சபை ஒன்றுள்ளது. நார்மானிய மடாலயத் திருச்சபை (கி.பி. 12-ஆம் நூற்றாண்டு) இராம்சேயில் உள்ளது. இது அழகானதாகக் கருதப்படுகிறது.

வைட்டுத் தீவு (Wight Island) இம்மாவட்டத்தைச் சார்ந்தது. சோலண்டு என்னும் கால்வாய் இத்தீவை இங்கிலாந்து நிலப்பகுதியிலிருந்து பிரிக்கிறது.

**ஆம்ப்டன், சான் (கி.பி. 1594-1643),** ஆங்கில அரசியல் வல்லுநர்களுள் ஒருவர். சான் ஆம்ப்டன் (Hampden, John) பக்கிங்காம்சயரைச் சார்ந்த செல்வச் செழிப்பான உயர் குடிமகன். இவர் தேம் இலக்கணப் பள்ளியிலும் ஆக்சுபோர்டு மகதலன் கல்லூரியிலும் கல்வி கற்றார். இவர் இசுடுவேர்ட்டு (Stuart) மரபின் இரண்டாம் அரசரான முதலாம் சார்லசு மன்னரின் நிதிக்கொள்கையையும், சமயக் கொள்கைகளையும் அவ்வரசரின் ஆட்சிக்காலத் தொடக்கத்திலிருந்து எதிர்த்தார்.


ஆம்ப்டன் சான்

இன்பச் சுவையிலும் கட்டுக்கடங்காக் காதல் வாழ்விலும் காளைப் பருவத்தைக் கழித்த இவர், திடீரெனக் பியூரிட்டன் சமயக் கருத்துகளின்பால் ஈடுபாடு கொண்டார். தீவிர பியூரிட்டன் பணியாளராகக் கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் முற்பாதியில் மாறி பிராவிடன்சு தீவுக் குழுவின் உறுப்பினராகி, மேற்கு இந்தியத் தீவுகளில் குடியேற்றங்களை நிலைநாட்டும் பணியில் ஈடுபட்டார்.

பிராவிடன்சு குழுவின் உறுப்பினர்களாயிருந்த பிலிப்பு வார்விக்கு (Philip Warwick), வில்லியம் பின்னெசு (William Fiennes), சான் பிம் (John Pym), ஆம்ப்டன் (Hampton) ஆகியோர் திட்டமிட்டு முதலாம் சார்லசு மன்னரின் நிதிக் கொள்கையையும் கப்பற் பயணத்தையும் எதிர்த்தார்கள். பக்கிங்காம் சயரிலிருந்த தம் சொத்தின்பேரில் விதிக்கப்பட்ட ஒரு பவுன் வரியைக் கட்ட மறுத்தவர் ஆம்ப்டன். இதனால், கருவூல மன்றத்தில் கி.பி. 1637-இல் இவர் மீது நடவடிக்கை எடுப்பதென முடிவாயிற்று. மன்ற நீதிபதிகளின் தீர்ப்பு இவருக்கு எதிராகப் போயிற்று. இருப்பினும் ஆம்ப்டனின் செயல் நாட்டு மக்களைக் கவர்ந்தது. அரசியலில் ஏற்பட்ட திருப்பத்திற்கு இவரே காரணமாயிருந்தார் என்று சொல்லலாம்.

குறுகிய காலப் பாராளுமன்றத்திலும், நீண்ட காலப் பாராளு மன்றத்திலும் ஆம்ப்டன் விடாப்பிடியாய் நின்று, பாராளுமன்றத்தின் உரிமையை நிலைநாட்டப் பாடுபட்ட, முதல் தர அரசியல் வித்தகர் என்று பெயர் பெற்றார். இவர் கி.பி. 1643-இல் காலமான போது, பாராளுமன்றம் தலைசிறந்த பாராளுமன்ற உறுப்பினரை இழந்துவிட்டது என்று அனைவரும் கருதினர். உரூபர்ட்டு (Reubert) என்பாரின் குதிரைப் படையை எதிர்த்துத் தம் படைவீரர்களை அணிவகுத்துக் கொண்டிருந்தபோது ஏற்பட்ட ஒரு புண்ணின் விளைவாக இவர் கி.பி. 1643-ஆம் ஆண்டில் காலமானார்.

**ஆம்பசுதியர்** இராசசூய யாகம் செய்த அரசர். நாரதர் அந்த யாகத்திற்குப் புரோகிதராக இருந்தார். இதை ஐத்திரேய பிராமணம் குறிப்பிடுகிறது. ஆம்பசுதியர்களின் அரசர் என்ற பொருளிலும் இச்சொல் பயன்படுத்தப்பெற்றுள்ளது. ஆம்பசுதியர் என்ற பெயரில் பார்ப்பனரைத் தந்தையாகவும், வைசியப்பெண்ணைத் தாயாகவும் கொண்ட கலப்பினத்தைச் சார்ந்த ஒருவரையும் குறிப்பிட்டுள்ளார்கள்.

**ஆம்பர்** இராசசுத்தான் மாநிலத்தின் தலைநகர். செய்ப்பூரிலிருந்து 10 கி.மீ. தொலைவில் உள்ளது. ஆம்பூரில் இருக்கும் சூரியன் கோயில் கி.பி. 10-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. இக்கோயிலில் உள்ள கற்றூணில் இருக்கும் கல்வெட்டு இதனைத் தனிப் பட்டவர் ஒருவர் கட்டினார் என்று கூறுகிறது. இக் கோயில் பழங்கலைக் கூறுகள் பொதிந்துள்ள கோயிலாகும். ஆம்பரில் உள்ள இலக்குமிநாராயணர் கோயில் பாலாபாய் என்னும் அரசியால் கட்டப் பட்டது. ஆம்பரின் புகழ் அக்பரின் காலத்தில் பரந் திருந்தது. அப்பேரரசர் ஆண்ட காலத்தில்மானசிங்கு என்பவர் இங்குச் செகத்சுவரவன்சி என்னும் கோயிலைக் கட்டினார். இக்கோயிலின் நுழைவாயில் கலைக் கூறுகளும், காண்போரைக் கவரும் வண்ணமும் கொண்டது. மேலும், இங்குள்ள நுட்ப வேலைப் பாட்டுடன் அமைந்த கருடனின் காட்சி மண்டபம் ஒரு சிறந்த கலைக் கூடமாகும். இங்குப் பல அரண் மனைகளும் சமணக் கோயில்களும் உள்ளன. சவாய் செய்சிங்கு மரபினரால் கட்டப்பெற்ற கண்ணாடி மாளிகையை இன்றும் கண்டு களிக்கலாம். குன்றின் மீது கட்டப்பெற்றுள்ள இம்மாளிகையைக் காண மக்கள் நாளும் ஆயிரக் கணக்கில் சென்று வருகின் றனர்.



ஆம்பரிலுள்ள கட்டடங்கள்

**ஆம்பர்க்கு** மேற்குச் செருமனியின் இரண் டாம் பெருநகரமாகும். இதுவே அந்நாட்டின் தலை சிறந்த தொழிற்சாலை மையமுமாகும். ஐரோப்பாக் கண்டத்தில் உள்ள மாபெரும் துறைமுகங்களில் ஆம்பர்க்கும் (Hamburg) ஒன்றாகும்.

ஆம்பர்க்கு மாநகரம் எல்பு ஆற்றங்கரையில், அந்த ஆறு வடகடலில் கலக்கும் நுழைவாயிலான கக்சுகேவன் (Cuxhaven) என்னும் ஊரிலிருந்து 110 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. ஆம்பர்க்கின் குறுக்காக அல்சுடர் ஆறு பாய்ந்தோடி, அந்நகரில் இருபெரும் ஏரிகளைத்தோற்றுவித்துள்ளது. இவ் வேரிகளைப் பினென் அல்சுடர் என்றும் அச்சன் அல்சுடர் என்றும் கூறுவர். நகரின் குறுக்கிலும் நெடுக்கிலும் பல குறுகிய கால்வாய்கள் குறுக்கிடும். ஆம்பர்க்கின் பரப்பளவு 748 ச.கி.மீ.

இரண்டாம் உலகப் போரின்போது வெடிகுண்டு தாக்குதலுக்கு ஆளான செருமானிய நகரங்களுள் ஆம்பர்க்கும் ஒன்றாகும். அப்போரின்போது அந் நகர்த்துறைமுகத்தின் பெரும்பகுதிகளும் வாணிக மையங்களும் தரைமட்டமாயின, பழைய திருச் சபைகள் பலவும் அழகான வீடுகளும் பேரழிவிற் காளாயின. போருக்குப் பின்னர்த் துறைமுகமும் வாணிக மையங்களும் மீண்டும் புதுப்பிக்கப்பட்டன.

இரசாயனத் தொழிற்சாலைகள், இரும்பு- உருக்குத் தொழில்கள், மரமறுக்கும் ஆலைகள் போன்றவை ஆம்பர்க்கின் சிறப்பான தொழில் களாகும். கச்சாப் பொருள்களைப் பயன்படுத்திப்



ஆம்பர்க்கு நகரம்

பண்ணைப் பொருள்கள், தாதுக்கள், உலோகங்கள், மரம் மரக்கூழ் போன்றவற்றை இவ்வாலைகள் பதம் செய்கின்றன. இங்கு நடைபெறும் தொழில்களுள் பல்லாண்டுகளாக மிக்க சிறப்பு வாய்ந்தது கப்பல் கட்டும் தொழிலாகும். கூலவகைகள், காப்பி, இறைச்சி, மீன், புகையிலை போன்றவற்றைப் பதம் படுத்தும் பணியில் இந்நகரம் ஈடுபட்டுள்ளது.

எல்பு ஆற்றின் கரைநெடுகிலும் பரந்துள்ள துறைமுகப் பகுதி, ஆம்பர்க்கின் பொருளாதாரச் செழுமையைப் படம்பிடித்துக் காட்டும். வெளிநாட்டு, உள்நாட்டு கப்பற் போக்குவரத்தின் மையமாகவும் இது விளங்குகிறது. பேருந்துகள், இயந்திரங்கள், கண்களுக்கான கண்ணாடிகள் போன்றவை ஏற்றுமதிப் பொருள்கள். பழங்கள், காப்பி, காகிதம், புகையிலை, கோதுமை போன்றவை இறக்குமதிப் பொருள்கள்.

மேற்குச் செருமனியில் முதலிடம் வகிக்கும் இருப்புப் பாதை மையமாகவும் ஆம்பர்க்கு இலங்குகிறது. இங்கிருந்து ஐரோப்பாவின் அனைத்துப் பகுதிகளுக்கும் இருப்புப் பாதை இணைப்புகள் இருப்பதால், இருப்புப் பாதைப்போக்குவரத்தும் நெருக்கம் மிக்கது. அதேபோல் விமான வழிகள், ஆம்பர்க்கை உலகின் அனைத்துப் பாகங்களுடனும் இணைக்கின்றன.

ஆம்பர்க்கு நகரம் கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் ஏன்சியாடிக் குழுவின் சிறப்புறுப்பினராயிருந்து, வடசெருமானியக் கூட்டாட்சியில் முதன்மை பெற்றிருந்தது. இந்நகரம் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் செருமானியப் பேரரசின் அரசுகளுள் ஒன்றாகக் கருதப்பட்டு, வைமர் குடியரசிலும் இடம் பெற்றிருந்தது.

செருமானியக் கூட்டாட்சிக் குடியரசின் அரசுகளுள் ஒன்று ஆம்பர்க்கு. பான் நகரில் கூடும் நாடாளுமன்றத்தில் இந்நகருக்குப் பிரிதிநிதித்துவம் உண்டு. ஆம்பர்க்கு அரசுக்குச் சொந்தமான அரசியல் அமைப்புச் சட்டம் இருக்கிறது. அச்சட்டம் 1952-இல் நிறைவேற்றப்பட்டதாகும். இந்நகர அரசின் நாடாளுமன்றத்தில் 120 உறுப்பினர்கள் நான்கு ஆண்டுகள் பதவி வகிக்கும் வண்ணம் மக்களால் தேர்ந்தெடுக்கப் படுகிறார்கள். அவ்வுறுப்பினர்கள் 15 பேர்களைக் கொண்ட மேலவையைத் (Senate) தேர்ந்தெடுத்து, அவர்கள் வாயிலாகச் சட்டத்தை நடைமுறைப்படுத்துவார்கள். மேலவையின் தலைமை அதிகாரி அச்சபைக் கூட்டத்திற்குத் தலைமை தாங்குகிறார். ஆம்பர்க்கு மாநகரம் ஏழு நிருவாக மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இதன் மக்கள் தொகை 16,45,095 (1980).

**ஆம்பூர்** வடார்க்காடு மாவட்டத்திலமைந்துள்ள நகரம்; வேலூரிலிருந்து மேற்காகத் திருப்பத்தூர் செல்லும் வழியில் உள்ளது. தோல் பதனிடும் தொழிற்சாலைகள் பெருமளவில் இங்குள்ளன. சென்னை-பெங்களூர் இருப்புப் பாதை இந்நகரத்தின் வழியாகச் செல்கிறது. இந்துக்களும், முசுலிம்களும் இங்கு வாழ்கின்றனர். தீப்பெட்டித் தொழில், எண்ணெய், நெய் வாணிகம் போன்ற தொழில்கள் இங்கு நடைபெறுகின்றன. இந்நகருக்கு அருகில் ஆம்பூர் பேரணாம்பட்டுச் சாலையில் ஒரு கோட்டை உள்ளது.

**ஆம்பூர்ப்போர்:** வடார்க்காடு மாவட்டத்திலுள்ள ஆம்பூர் என்னும் நகரத்தில் கி.பி. 1749-ஆம் ஆண்டில் போர் ஒன்று நடைபெற்றது. சந்தா சாகிபிற்கும் அன்வாருத்தின் என்பாருக்கும் நடைபெற்ற இப்போரில் சந்தா சாகிபு வென்றார். இது கருநாடகத்தில் நடைபெற்ற வரலாற்று நிகழ்ச்சியாகும்.

**ஆம்போரா சாடிகள்** மத்தியதரைக் கடல் நாடுகளில் மது, எண்ணெய் போன்ற திரவப் பொருள்களைப் பாதுகாத்து வைப்பதற்கும், வேற்றிடங்களுக்கு எடுத்துச் செல்வதற்கும் பயன்படுத்தப்பட்ட மண்சாடிகள். இவை இந்தியாவின் பல பகுதிகளிலும் கிடைத்துள்ளன. இவற்றை உரோமாபுரி வாணிகர் இந்தியாவிற்குக் கொண்டுவந்தனர். ஆம்



ஆம்போரா சாடிகள்

போரா சாடிகள் 'அரிட்டைன்' மட்கலன்களை விடக் காலத்தால் முந்தியவை. ஆம்போரா சாடிகள் மேன்மையான களிமண்ணால் செய்யப்பட்டுப் பழுப்பு நிறத்தினைக் கொண்டவை. இவற்றின் அடிப்பகுதி கூர்மையாகவும், வாய்ப்பகுதி மூடுவதற்குரிய மூடியை உடையதாகவும் காணப்படும். ஓரிடத்திலிருந்து இவற்றை மற்றோரிடத்திற்கு எடுத்துச் செல்வதற்கு எளிதாகக் கழுத்துப் பகுதிகளில் கைப்பிடிகளைக் கொண்டும் காணப்படும். மத்திய தரைக்கடல் நாடுகளில் கண்டுபிடிக்கப்பட்ட ஆம்போரா சாடிகளில் ஓவியங்கள் தீட்டப்பட்ட ஆம்போரா சாடிகள் குறிப்பிடத்தக்கவை. இவ்வகைச் சாடிகள் இந்தியாவின் வடமேற்கே தட்சசீலம், நாலந்தா, தமிழகத்தில் அரிக்கமேடு, வசவசமுத்திரம், கரூர் முதலிய இடங்களில் அகழாய்வின் போது கிடைத்துள்ளன. காஞ்சிபுரம் அகழாய்வில் ஆம்போரா சாடிகளின் அமைப்பை ஒத்த உள்நாட்டுக் களிமண்ணால் செய்யப்பட்ட உள்நாட்டுச் சாடிகள் மிகுதியாகக் கிடைத்துள்ளன. இவை கைப்பிடிகள் அற்றவையாகக் காணப்படுகின்றன.

**ஆமந்திரிகை** என்பது பாடலின் இறுதியில் கருவிகளை எல்லாம் கூட்டி இசைக்கப்படும் கூட்டிசையாகும். பாட்டுப் பாடி முடிந்தபின் அதன் அந்தத்தில் இசைப்பது – அந்திரிகை. (அந்தம் = கடைசி) ஆம் + அந்திரிகை = ஆமந்திரிகை. இதனை ஆங்கிலத்தில் 'ஆர்க்கெசுட்ரா' (Orchestra) என்பர். இதனைக் 'கூடுகொள் பல்லியம்' என்றும் குறித்தனர் தமிழர்.

சிலப்பதிகாரத்தில் அரங்கேற்று காதையில், 'ஆமந்திரிகை' என்பது விளக்கப்படுகிறது. மாதவி நடனத்திற்கு முன்னர்த் தோரிய மடந்தையர் தெய்வ வழிபாடாக வாரநடையில் வாரப்பாடல்களைப் பாடினர். பாட்டினிறுதியில் கருவிகள் எல்லாம் கூடி நின்று இசைத்தன என்று கூறியுள்ளார் இளங்கோவடிகள். குழல் வழி யாழும், யாழ் வழித் தண்ணுமையும் (மத்தளமும்), தண்ணுமைவழி முழவுமாகப் பருந்தும் நிழலும் போலக்கூடி நின்று இசைத்தமையை 'ஆமந்திரிகை' என்றனர்.

வீ.ப.கா.சு.

**ஆமர்சோல்டு (கி.பி. 1905-1961)** ஐக்கிய நாடுகள் அவையின் இரண்டாம் பொதுச் செயலர். உலக அமைதிக்காக உயிர் துறந்தவர் என்று இவரைச் சொல்லலாம்.

ஆமர்சோல்டு (Hammarskjold) சுவீடன் நாட்டிலுள்ள சோன்கோபிங்கு (Jonkoping) என்னும் ஊரில் 1905–ஆம் ஆண்டு சூலை மாதம் 29–ஆம் நாள் பிறந்தார். உப்சலாப் பல்கலைக் கழகத்தில் படித்துப் பட்டம் பெற்ற இவர், 1934–ஆம் ஆண்டில் டாக்டர் பட்டத்தை இசுடாக்கோம் பல்கலைக் கழகத்தில் பெற்றார். இவர் 1946–இல் சுவீடன் நாட்டுத் தூதரகப் பணியில் சேர்ந்தார். சுவீடன் நாட்டுத் துணை வெளியுறவு அமைச்சராக 1951–இல் அமர்த்தப் பெற்றார்; அடுத்த ஆண்டு சுவீடன் நாட்டின் ஐக்கிய நாடுகள் அவைக் குழுவின் தலைவரானார். ஐக்கிய நாடுகள் அவையின் முதல் பொதுச் செயலரான திரிக்வி லீ என்பாரின் பதவிக் காலம் 1953–இல் முடிவுற்றது. அடுத்த செயலராக இவர் தேர்ந்தெடுக்கப் பெற்றார்.



ஆமர்சோல்டு

பொதுச் செயலராக ஆமர்சோல்டு இருந்த போது ஐக்கிய நாடுகள் அவையின் உறுப்பினர் எண்ணிக்கை 60–இலிருந்து 101 ஆக உயர்ந்தது. கியூபா, இந்தியா, இசுரேல், எகிப்து, அங்கேரி, கொரியா, இலாவோசு, இலெபனான், வட ஆப்பிரிக்கா போன்ற உலக நாடுகளின் சிக்கல்கள் இவருடைய கவனத்தை ஈர்த்தன. தனிமனிதர்களுடன் நல்லுறவை ஏற்படுத்தி அதன் வாயிலாகச் சிக்கல்களைத் தீர்க்கும் கலையில் கைதேர்ந்தவர் இவர். அரசாங்கத் தலைவர்களை நேருக்கு நேர் சந்தித்து உரையாடுவதை இவர் பெரிதும் விரும்பினார். சீனப் பொதுவுடைமைக் கட்சியால் 1955–ஆம் ஆண்டில் சிறைசெய்யப்பட்டிருந்த அமெரிக்க விமானிகளை விடுவிக்கும் நோக்கத்திற்காக இவர் சீனாவின் தலைநகரான பீகிங்கு நகருக்குச் சென்றார். இவர் 1957–இல் மீண்டுமொருமுறை பொதுச் செயலராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்; பெல்சியம் நாட்டின் பிடியிலிருந்து காங்கோ நாடு விடுதலை பெற்றது. ஆனால், விடுதலை பெற்ற சில நாட்களிலேயே அங்கு

உள்நாட்டுப்போர் மூண்டது. அப்போரைத் தடுக்கும் நோக்குடன் ஆமர் சோல்டு ஐக்கிய நாடுகளின் படையை அனுப்பினார். சோவியத்து உருசியா இவர் அனுப்பிய படையை ஏற்க மறுத்ததுடன், இவரைப் பதவியிலிருந்தும் விலகக் கோரியது. எனி னும் ஐக்கிய நாடுகளின் பொது அவை இவருடைய செயலை ஏற்றுக்கொண்டது.

உள்நாட்டுப் போரைத் தடுத்து நிறுத்த உறுதி பூண்ட ஆமர்சோல்டு 1916-இல் காங்கோ நாட்டுக் கட்டாங்கா (Katanga) மாநிலத்தின் தலைவரைச் சந்திக்கக் காங்கோவிற்குப் பறந்து சென்றார். கட்டாங்காவிற்குச் செல்லும் வழியில் இவரை ஏற்றிச் சென்ற விமானம் 1961-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 17-ஆம் நாள் நொறுங்கி வீழ்ந்தது. அவ்விமானத்தில் பயணம் செய்த அனை வரும் உயிர் துறந்தனர். ஆமர்சோல்டும் கால மானார். காலமான ஆமர்சோல்டுக்கு அமைதிக் கான நோபெல் பரிசு இவர் மறைவுக்குப் பின்னர் அளிக்கப்பட்டது.

**ஆமாத்தூர்,** நடுநாட்டிலுள்ள தேவாரப் பாடல் பெற்ற தலங்களுள் ஒன்று. இக்காலத்தில் திருவாமாத்தூர் என்று வழங்கப்பெறும் இத்தலம் விழுப்புரத்திற்கு அருகே வடமேற்கில் 4 கல்தொலை விலுள்ளது. கோயிலுக்கருகில் பம்பை என்னும் ஆறு ஓடுகிறது. பசுக்களுக்கு (ஆன்மாக்களுக்கு) இறைவன் தாயாக விளங்கி அருளும் தலம். இது இராமர் வழி பட்ட தலம் என்றும் கூறப்படுகிறது. இங்குப் பசு தீர்த்தம் உள்ளது. தேவார முதலிகள் மூவரும் இத் தலத்தினைப் பாடியுள்ளனர். இறைவன் பெயர் அபிராமேசுவரர்; இறைவி பெயர் முத்தாம்பிகை. அருணகிரிநாதர் தம் திருப்புகழில் இத்தலத்தினைப் போற்றியுள்ளார். இரட்டைப் புலவர் திருவாமாத் தூர்க் கலம்பகம் என்றொரு கலம்பகம் பாடியுள் ளார். இவ்வூருக்குத் திருவாமாத்தூர்த் தலபுராணம் உண்டு. அறுவகை இலக்கணம், புலவர் புராணம் முதலியன இயற்றிய வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் தம் இறுதிக் காலத்தில் எல்லைதாண்டா விரத மேற்கொண்டு இங்கு வாழ்ந்து வந்தார். அவ ருடைய சமாதி ஊர்ப்புறத்தே உள்ளது. இங்குள்ள கௌமார மடம் தண்டபாணி சுவாமிகளின் வழிவந் தோரால் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

**ஆமாதன்** ஈரான் நாட்டுத் தொன்மையான நகரம். இந்நகரம் ஈராக்கு நாட்டின் எல்லைக்கு அருகில் அமைந்துள்ளது. விலையுயர்ந்த கம்பளங் கள், போர்வைகள், செப்புப் பொருள்கள் போன் றவை இங்கு உற்பத்தியாகின்றன. இங்குத்தான் எசுத்தர் (Esther), மோர்டிக்காய் (Mordecai) போன்ற



பூங்கா சதுக்கம் - ஆமாதன்

வர்களின் கல்லறைகள் இருப்பதாக ஈரானியர் நம்பு கிறார்கள். ஆமாதன் (Hamadan) கி.மு. 700-ஆம் ஆண்டளவில் உருவாக்கப்பட்டபோது, அதற்கு எக் பட்டானா (Ecbatana) எனப் பெயரிட்டனர். அப் போது இது மிடியா (Media) அரசின் தலைநகரமாக விளங்கியது. அதன் இன்றைய மக்கள் தொகை 1,30,000. இந்நகரம் 1980-இலிருந்து நடைபெற்று வரும் ஈரான்-ஈராக்குப் போரின்போது பலமுறை தாக்கப்பெற்றது.

**ஆமாமாட்சு,** சப்பானிலுள்ள ஆன்சுத் தீவின் (Honshu) தென்கிழக்குக் கரை நகரம்; சப்பானின் சிறப்பான தீவுகளில் உள்ள ஆமாமாட்சு (Hamamatsu) தோக்கியோவிற்கும் (Tokyo) ஒசாகாவிற்கும் நடுவில் அமைந்துள்ளது. இது ஒரு தொழில்வள நகரம். தென்றியூ (Tenryu) ஆற்றுக்கும் அமானா ஏரிக்கும் நடுவில் உள்ள இந்நகரத்தில் பியானோக் கள், ஆர்மோனியங்கள், பிற இசைக்கருவிகள் ஆகியவை உற்பத்தி செய்யப்படுகின்றன. நெசவு நெய்தல், சாயம் போடுதல் போன்ற தொழில்களும் மோட்டார் சைக்கிள்கள், எந்திரக் கருவிகள், தொப்பி, செயற்கைப்பட்டு போன்றவை உற்பத்தி செய்தலும் இங்கு நடைபெறுகின்றன. போக்குவரத்து மையமாக இந்நகரம் நீடித்துள்ளது. மக்கள்தொகை 4,91,000 (1980).

**ஆமில்ட்டன், அலெக்சாந்தர் (கி.பி.1755-1804)** அமெரிக்காவின் தலைசிறந்த அரசியல் வல்லு நர்களுள் ஒருவர். அமெரிக்க ஐக்கிய நாட்டின் முதல் நிதி அமைச்சர்; அமெரிக்க அரசாங்க அமைப்பை உருவாக்கியவர்களுள் ஒருவர்.

ஆமில்ட்டன் கி.பி. 1755-ஆம் ஆண்டு சனவரி மாதம் 15-ஆம் நாள் மேற்கிந்தியத் தீவுகளில் ஒன்

றான நெவிசுத் தீவில் (Nevis) பிறந்தார். அடுத்திருந்த புனித குரோயிக்சு (St. Croix) தீவில் இவர் தம் பிள்ளைப் பருவத்தைக் கழித்தார். அத்தீவு தென்மார்க்கு (Denmark) நாட்டிற்குச் சொந்தமானது. இளம் வயதில் இவர் சொல்லொணா இடர்களையும் ஏமாற்றங்களையும் அடைந்தார். இவர் தந்தையார் சேம்சு ஆமில்ட்டன் (James Hamilton) இசுகாட்டுக் (Scotish) கோமகன் ஒருவரின் இளைய மகன்; வசதி குறைந்த வாழ்வை ஏற்றவர். அவர் தாய் பிரெஞ்சுக் குடிவழி வந்தவர்.



ஆமில்ட்டன் அலெக்சாந்தர்

அலெக்சாந்தர் ஆமில்ட்டன் (Alexander Hamilton) புனித குரோயிக்சு வாணிக அலுவலகம் ஒன்றில் தம் பதினோராம் வயதிலேயே பணியில் அமர்ந்தார். இவர் கற்க வேண்டுமென்னும் மனத்திண்மையும் விருப்பும் கொண்டவர். உலகில் தலைசிறந்தவராக வாழும் விழைவு கொண்ட இவருக்குக் குரோயிக்சு மக்கள் பணம் திரட்டி உதவிபுரிந்து, கல்வி கற்க நியூயார்க்கு நகரத்திற்குக் கி.பி. 1772-இல் அனுப்பினார்கள்.

அரசர் கல்லூரியில் (இன்று அது கொலம்பியாப் பல்கலைக் கழகம்) கல்வி கற்று வந்தபோது, இங்கிலாந்துக்கெதிராக அமெரிக்கக் குடியேற்றவாதிகளின் உரிமைகளை ஆதரித்துத் துண்டு வெளியீடுகளை வெளியிட்டார். புரட்சிப்போர் மூண்டபோது கி.பி. 1775-இல் இவர் கல்லூரியை விட்டு வெளியேறித் துப்பாக்கிப் படையின் அதிகாரியாகச் சேர்ந்தார். போரின்போது இவரது பணியைக் கண்ணுற்றுப் பாராட்டிய சார்சு வாசிங்டன் (George Washington) இவரைத் தம் துணைவராக அமர்த்திக் கொண்டார். அதே பொறுப்பில் ஆமில்ட்டன் சிறப்பான புரட்சிப் போர்களில் பங்குகொண்டு வாசிங்டனின் பெருமதிப்புக்காளானார்.

ஆமில்ட்டன் கி.பி.1780-ஆம் ஆண்டில் எலிசபெத்து இசுசைலர் (Elizabath Schuyler) என்னும் பெண்ணை மணந்துகொண்டார். எலிசபெத்தின் தந்தை பிலிப்பு, நியூயார்க்கு நகரைச் சார்ந்த நிலக்கிழாரும் திறன்மிக்க அரசியல் வாதியுமாவார். இத்திருமணம் ஆமில்ட்டனுக்குச் சமூகச் செல்வாக்கைக் கொடுத்தது.

போரின்போது ஆமில்ட்டன் அமெரிக்கர்களை எதிர்நோக்கியிருந்த இரண்டு பெரும் சிக்கல்களைத் தீர்க்க முயன்றார். வலிமை வாய்ந்த மத்திய அரசை நிலைநாட்டிப் போரில் வெற்றி காண்பதும் அமைதியான சூழ்நிலையில் மக்களின் சுதந்திரத்தைக் காப்பதும் தீர்வுகாண வேண்டிய முதல் சிக்கலாக இருந்தது. நிலையான நாணயமாற்றினைக் கொடுப்பதைக் குறித்தது இரண்டாம் சிக்கல். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசு கி.பி. 1776 முதல் 1789 வரை நலிந்து திறமை குன்றியிருந்தது. அமெரிக்க நாணயமான தாலர் (Dollar) மதிப்புக் குறைந்த நிலையில் இருந்தது.

புரட்சியின் போதும், அதற்குப் பின்னரும் துண்டு வெளியீடுகளின் வாயிலாகவும், நாளேடுகளில் கட்டுரைகள் வாயிலாகவும் அமெரிக்காவில் மாநிலங்கள் சீரிய முறையில் இணைய வேண்டுமென்பதனை வலியுறுத்தி மக்களை வேண்டினார். நாட்டின் முன்னேற்றத்திற்குக் கடன் வாங்க வேண்டுமென்றால், முதலில் பழைய கடன்களைக் கட்டிவிட வேண்டும் என்று இவர் பன்முறையும் வலியுறுத்தினார். பிலடெல்பியாவில் கி.பி. 1787-ஆம் ஆண்டில் கூடிய அரசியல் நிருணய அவைக் கூட்டத்திற்கு இவர் நியூயார்க்கின் பேராளராக அமர்த்தப் பெற்றார். கூட்டாட்சி அரசியல் அமைப்புத் திட்டத்தை இவர் முழு மனதுடன் ஏற்றுக் கொள்ளவில்லை. அத்திட்டம் மிகுதியான அதிகாரத்தை மாநிலங்களுக்குக் கொடுத்துள்ளது என்பது இவர்தம் கருத்தாகும். இருப்பினும் புதிய அரசாங்க அமைப்பினைக் கூட்டாட்சித் தாள்களில் ஆதரித்து எழுதினார். நியூயார்க்கு மாநிலம் அரசியல் அமைப்புத் திட்டத்தை ஏற்கவேண்டுமென்பதற்கும் இவர் உறுதுணையாக இருந்தார்.

புதிய அரசை நிலைநாட்டுவதற்கு இவர் ஆற்றிய தொண்டையும், இவரது பொருளாதார அறிவு நுட்பத்தையும் கண்ணுற்ற குடியரசுத் தலைவர் வாசிங்டன், கி.பி. 1789-ஆம் ஆண்டில் இவரைக் கருவூலச் செயலராக (நிதி அமைச்சராக) அமர்த்தினார். அமெரிக்க ஐக்கிய நாட்டு அரசாங்கத்தின் நிதி அமைச்சரானவுடன், ஆமில்ட்டன் நாடாளுமன்றத்தின் இரு அவைகளையும் வேண்டித் தேசியக் கடனைத் திருப்பிக் கொடுக்குமாறு தூண்டினார், புரட்சியின் போது மாநிலங்கள் வாங்கிய கடன்களையும்கூட

கூட்டாட்சி அரசு திரும்பக் கட்ட வேண்டுமென ஆமில்ட்டன் கூறினார். அமெரிக்கர்கள் பொருள் உதவி கொடுத்தும், காப்பு வரி விதித்தும், இறக்கு மதி வரிகளை விதித்தும் பொருளாதாரத்தை வளர்க்க வேண்டுமென்னும் இவர் கோரிக்கையைக் காங்கிரசு முழுவதுமாக ஏற்றுக் கொள்ளவில்லை.

நிதி அமைச்சராக ஆமில்ட்டன் ஆற்றிய பணி யால் அமெரிக்க ஐக்கிய நாடு, வலுவான நாணயத் தைப் பெற்றதுடன் வணிகர்களின் நிலையும் வலி மையுற்றது. மேலும் மாநிலங்களிலிருந்த சக்தி சம நிலையைக் கூட்டாட்சி அரசுக்குக் கொடுக்க இது வகை செய்தது. பென்சில்வேனியாவைச் சார்ந்த குடியானவர்கள், கி.பி. 1794-இல் தாம் உற்பத்தி செய்த சாராயத்தின் மீது விதிக்கப்பட்ட வரிக்கெதி ராகக் கலகம் செய்தனர். இதைச் சாராயக் கலகம் (Whiskey Rebellion) என்பர். ஆமில்ட்டன் அக்கல கத்தைப் படைவலிமையால் அடக்கினார். அதன் வாயிலாக எந்தவொரு மாநிலமும் கூட்டாட்சியை எதிர்க்க முடியாது என்பதை இவர் எடுத்துக்காட்டி னார்.

ஆமில்ட்டன் கி.பி. 1795-ஆம் ஆண்டில் நிதி அமைச்சர் பதவியிலிருந்து ஓய்வு பெற்று, நியூயார்க்கு நகரில் வழக்குரைஞராகப் பணியாற்றினார். இருப் பினும்இவரைக்குடிமக்கள் எளிமையானவருள் ஒருவர் எனக் கொள்ளலாகாது. இவர் குடியரசுத் தலைவர் வாசிங்டன் அவர்களுக்கும் அவரது அமைச்சரவைக் கும் உற்ற நண்பராகத் திகழ்ந்தார். கூட்டாட்சிக் கட்சியின் தலைவராக, இவர் நியூயார்க்கு மாநில அலுவல்களில் பங்கேற்றதுடன், தேசிய நிகழ்ச்சிகளி லும் அக்கறை காட்டினார். மேலும் பொது மக்க ளைத் தாக்கும் சிக்கல்களை அடிக்கடி நாளேடுகளில் எழுதும் கட்டுரைகள் வாயிலாக வெளியிட்டார். பிரான்சுடன் கடற்போர் ஒன்று வரக்கூடும் என்ற அச்சத்தால் கி.பி. 1798-ஆம் ஆண்டில் ஆமில்ட்டன் படைத் தலைவராக அமர்த்தப்பட்டார். இழுபறி நிலையில் இருந்த இச்சிக்கலின்போது போர் எதுவும் நடக்கவில்லை. இப்போராட்டம் முழுவதும் கடலில் நிகழ்ந்தது. இவர் கி.பி. 1800-ஆம் ஆண்டில் தீவிர மான பொது வாழ்விலிருந்து ஓய்வு பெற்றார்.

அமெரிக்கா பேரரசாக வேண்டுமெனக் கனவு கண்டார் ஆமில்ட்டன். தாமசு செபர்சன் (Thomas Jefferson) தலைமையில் எழுந்த குடியரசுக் கட்சி (இது இக்காலக் குடியரசுக் கட்சியன்று), கி.பி. 1789 முதல் உச்சக்கட்டத்தில் இருந்து வந்த கூட்டாட்சிக் கட்சியின் செல்வாக்கைத் தகர்த்து விடுமோ என்ற அச்சம் எழுந்தது. கூட்டாட்சிக் கட்சியின் தலைவ ராகக் கி.பி. 1800-ஆம் ஆண்டில் நடைபெற்ற தேர் தலில் போட்டியிட்ட சான் ஆடம்சு (John Adams) குடியரசுக் கட்சியிடம் தோல்வியுற்றார். அதிபர் பதவியையும், சட்டமன்றப் பெரும்பான்மையையும் கூட்டாட்சிக் கட்சி இழந்துவிட்டது. ஏமாற்றமுற்ற கூட்டாட்சிக் கட்சியினர் ஆரோன் பர் (Aaron Burr) என்பாரின் உதவியை நாடினர். ஆரோன் பர் குடி யரசுத் துணைத் தலைவராக இருந்தபோதிலும், குடியரசுத் தலைவர் செபர்சனுக்கும் அவருக்கு மிடையே கருத்து வேறுபாடுகள் இருந்தன. பர்ரை நம்பக்கூடாது என்று ஆமில்ட்டன் கருத்துத் தெரி வித்தார். பர்ருடன் இணையக் கூடாதென அவர் கூட்டாட்சி நண்பர்களிடம் கூறினார்.

தம்மைப் பற்றிய கருத்துகளை அறிந்த பர், ஆமில்ட்டனிடம் விளக்கம் கேட்டார். ஆமில்ட்டன் விளக்கம் கொடுக்க மறுத்துவிட்டார். வெகுண்ட பர், ஆமில்ட்டனை மற்போருக்கு வருமாறு அறை கூவல் விடுத்தார். இருவரும் நியூசெர்சி மாநிலத்தில் வீகாகென் (Weehawken) என்னுமிடத்தில் கி.பி. 1804-ஆம் ஆண்டு சூலை மாதம் 11-ஆம் நாள் துப் பாக்கிப் போருக்கு ஆயத்தமாயினர். பர்ரைச் சுடு வதில்லை என்ற முடிவுக்கு வந்திருந்த ஆமில்ட்டன், பர்ரின் துப்பாக்கிச் சூட்டால் குண்டு பாயப்பெற்றுக் காயமுற்றுத் தரையில் சாய்ந்தார். அடுத்த நாள் இவர் உயிர் துறந்தார். நியூயார்க்கு மாநகரிலுள்ள திரினிட்டி (Trinity) திருச்சபையில் இவர் உடல் புதைக்கப்பட்டது.

**ஆமுக்த மாலியதா** தெலுங்கு மொழியி லுள்ள ஐந்து பெருங்காவியங்களுள் ஒன்று. இது, விசயநகரப் பேரரசராக விளங்கிய கிருட்டிண தேவ ராயரால் இயற்றப்பட்டது. தமிழகத்தில் விளங்கிய வைணவ ஆழ்வார்களுள் ஒருவரான பெரியாழ்வாரின் வளர்ப்பு மகளாகவும், ஆழ்வார்களுள் ஒருவராகவும் திகழ்ந்த ஆண்டாள் வரலாற்றினை இந்நூல் விரி வாகக் கூறுகிறது. நாள்தோறும் அரங்கப் பெருமானுக் குச் சூட்டுவதற்காகப் பெரியாழ்வார் கட்டிய மாலை யினை அவருக்கு மகளாகிய கோதை, தான் அணிந்து அழகு பார்த்து வைத்து விடுவாள். அதனை அறியா மல் பெரியாழ்வார் அம்மாலையைப் பெருமாளுக்குச் சூட்டிவந்தார். ஒரு நாள் உண்மை உணர்ந்த அவர், வேறு புதிய மாலை புனைந்து இறைவனுக்குச் சாத்தி வழிபட்டார். இறைவனே, கோதை சூடிய மாலையினைத் தமக்குச் சூட்டுமாறு கூறிய குறிப் புணர்ந்து, அவ்வாறே செய்த ஆழ்வார், 'சூடிக் கொடுத்தாள்' என்று தம் மகளைப் போற்றலானார். இறுதியில் அவள் தன் விருப்பப்படியே திருவரங்கப் பெருமானால் ஆட்கொள்ளப் பெற்றாள். ஆண்டா ளின் வரலாறு கூறும், இக்காவியத்திற்குச் 'சூடிக் கொடுத்தாள்' என்னும் கருத்தினைக் கொண்டு விளங்கும் 'ஆமுத்த மாலியதா' என்னும் பெயரினைக் கிருட்டிண தேவராயர் இட்டு வழங்கியது குறிப்பிடத்

தக்கதாகும். இது அவரது சமய உணர்வினை நன்கு விளக்குவதாகவும் உள்ளது. இந்நூல் பெரியாழ்வாரின் வரலாற்றையும் கூறுவதால் அவரது வேறு பெயராகிய 'விட்டுணு சித்தர்' என்னும் பெயரால் 'விட்டுணு சித்தியமு' (Vishnu Citiyamu) எனவும் வழங்கப்படுகிறது. இந்நூலில் ஆளவந்தார் வரலாறும் இடம் பெற்றுள்ளது.

கிருட்டிண தேவராயர் புலவர்களைப் புரக்கும் புரவலராகத் திகழ்ந்ததோடு, தாமே சிறந்த புலவராகவும் விளங்கினார். இவர் வடமொழி, தெலுங்கு, கன்னடம் ஆகிய மும்மொழிகளில் புலமை நிறைந்தவர். ஆண்டாள் வரலாற்றைத் தம் காப்பியக் கருவாகக் கொண்டமையால் தமிழும் அறிந்தவராதல் வேண்டும். இவர் கலிங்க நாட்டை வென்று 'விசயவாடி' யில் (Vijayawada) இருந்தபோது, சீகாகுளம் சென்று இறைவனை வணங்கி, நோன்பு மேற்கொண்டு அங்குத் தங்கினார். இரவில் உறங்கியபோது, கண்ட கனவின் பயனாக 'ஆமுக்த மாலியதா' என்னும் காவியத்தை எழுதும் எண்ணம் தோன்றி, அதனை எழுதவும் தொடங்கினார் என்பது கூறப்படுகிறது. இவ்வாறு இக்காவியம் கி.பி. 1519–ஆம் ஆண்டு பிப்பிரவரித் திங்களில் தொடங்கப் பெற்றது.

ஆமுக்த மாலியதா என்னும் இக்காவியத்தின் வாயிலாகக் கிருட்டிண தேவராயர், தெலுங்கு மொழி இலக்கிய வளர்ச்சியில் ஒரு புதிய மலர்ச்சியைத் தோற்றுவித்தார். அதன் விளைவாக வடமொழியிலுள்ள நூல்களை மொழி பெயர்த்துத் தெலுங்கில் அமைக்கும் நிலை மாறிப் புலவர்கள் தாமே தெலுங்கு மொழியில் காப்பியம் புனையும் மரபு தோன்றி வளர்ந்தது. 'ஆமுக்த மாலியதா' காப்பியத்தின் நடை மிக உயர்ந்ததாகவும், செறிவுடையதாகவும் விளங்குகிறது. இக்காப்பியம் உவமை முதலிய பொருளணிகளும், சிலேடை என்னும் சொல்லணியும் மிக்குக் கற்பனை வளஞ் செறிந்து திகழ்கிறது. முதலில் பயில்வோர் சற்றுக் கடினமாக உணர்ந்தாலும், ஆழ்ந்து கற்பாரரின் அரும்பொருள் பல நிறைந்து, காப்பியச் சுவை மலிந்து இன்புறுத்துவதனை உணரக் கூடும். இந்நூலில் பல நூறு ஆண்டுகளுக்கு முன்னர் விசயநகர மன்னர் காலத்தில் விளங்கிய, பழக்க வழக்கங்கள், பண்பாட்டுக் கூறுகள், சமய நம்பிக்கைகள் போன்ற பல செய்திகள் சிறப்புறச் சித்திரிக்கப்பட்டுள்ளன. வைணவ சமயக் கோட்பாடுகளும் ஆங்காங்கே இடம் பெற்று விளங்குகின்றன. தொடர்ச்சியான கருத் தோட்டம், பீறிட்டெழும் உணர்ச்சி வெளியீடு, மானிட இயல்புகளை இனிய தொடர்களால் சித்திரிக்கும் திறம் ஆகியவற்றில், இக்காப்பியத்தோடு ஒப்பிடத் தக்க வேறு காப்பியங்கள் தெலுங்கு மொழியில் இல்லை என்று இந்நூலினை ஆராய்ந்த அறிஞர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். தெலுங்கு மொழியில் இடைக் காலத்தில் எழுந்த புதிய இலக்கிய மலர்ச்சியின் முன்னோடியாகவும், தெலுங்கு மொழி இலக்கியத்தில் வைணவ சமயக் கருத்துகள் பெற்றிருந்த செல்வாக்கினை உணர்த்தும் கருவியாகவும் இந்நூல் அமைந்துள்ளது.

இந்நூல் ஏழு பகுதிகளாக அமைந்த 878 பாக்களைக் கொண்டுள்ளது. அவையடக்கத்தில் திருவேங்கடவன் துதி, ஆதிசேடன் வணக்கம், விநாயகர் துதி, விசுவக்சேனர் வணக்கம், பஞ்சாயுத வணக்கம், பன்னிரு ஆழ்வார் துதி ஆகியன உள்ளன. இதன் முதல் பகுதி சீவில்லிபுத்தூர் வருணனை, பெரியாழ்வார் பற்றிய செய்தி ஆகியவற்றைக் கூறுகிறது. இரண்டாம் பகுதி, தென்மதுரை வருணனை, மச்சத்துவசன் என்னும் அரசனின் நற்குணங்கள், வேனிற் கால வருணனை, அம்மன்னன் மனமாற்றம், அவன் பெரியாழ்வாரை எம்மதம் சிறந்தது என ஆராய அழைத்தல், பெரியாழ்வார் வாதம் முதலியன பற்றிக் கூறுகிறது. மூன்றாம் பகுதி, காண்டிக்ய கேசித் துவசன் சம்வாதம், திருமால் புகழ் முதலியன கொண்டிலங்குகிறது. நான்காம் பகுதி, பெரியாழ்வார் விசயம், மேலே கட்டப்பெற்றிருந்த பணமுடிப்பு அவிழ்தல், பெரியாழ்வார் ஊர்வலம், அவர்முன் திருமால் திருக்காட்சி, தசாவதாரக் காட்சி, பெரியாழ்வார் சீவில்லிபுத்தூர் அடைதல், யாமுனாச்சாரி வரலாறு, கார் கால, முன்பனிக்கால வருணனைகள், யாமுனாச்சாரி திக்கு விசயம், இவர்தம் ஞானோதயம், இராசநீதி, தவம் முதலியன கொண்டு அமைந்துள்ளது. ஐந்தாம் பகுதி, கோதைப் பிராட்டிகதை, வசந்த கால வருணனை முதலியன கொண்டு சிறக்கிறது. ஆறாம் பகுதி, மால தாசரி கதை கொண்டது. ஏழாம் பகுதி, பிரம்ம இராட்சசன் கதை, கோதை அரங்க நாதனை வேண்டுதல், தன்னைத் திருமணம் செய்து கொள்ள வேண்டுதல் முதலியன கொண்டு அமைந்து சிறக்கிறது.

இந்நூல் கிருட்டிண தேவராயர் அவையில் அட்டதிக்கசங்களாகத் திகழ்ந்த புலவர் எண்மருள் தலையாயவராக விளங்கிய அல்லசானி பெத்தன்னாவால் இயற்றப் பெற்று, மன்னர் பெயரால் வழங்கப் பட்டது என்று சிலர் கூறுகின்றனர். ஆனால் பெத்தன்னா இயற்றிய மனுசரித்திரம் முதலிய நூல்களின் நடையையும், இலக்கணத் தொடரமைப்புகளையும், ஆமுக்த மாலியதாவின் நடை முதலியவற்றோடு ஒப்பிட்டு ஆராய்ந்த அறிஞர்கள், இந்த நூல் கிருட்டிண தேவராயராலேயே இயற்றப்பட்டது என்னும் உண்மையை நன்கு நிறுவியுள்ளார்கள். இந்நூல் விசய நகர மன்னர் கால அரசியல் சமூக நிலைகளை அறிய

உதவும் குறிப்புகள் பலவற்றைக் கொண்ட வரலாற்றுச் சான்றேடுகளுள் ஒன்றாக விளங்குவதனை அறிந்து, இக்கால வரலாற்றாசிரியர்கள் அவற்றை ஆராய்ந்து, தம் வரலாற்று நூல்களில் வெளிப்படுத்தியுள்ளார்கள். இத்தெலுங்கு மொழிக் காவியத்துள் பல தமிழ்ச் சொற்களும் இடம் பெற்றுள்ளன.

**ஆமுண்சென், ரோவால்டு (கி.பி. 1872-1928)** முதன் முதலாகத் தென்துருவத்தைக் கண்டறிந்த நார்வே நாட்டு ஆய்வுப் பயணி. இவர் கி.பி. 1872-ஆம் ஆண்டு சூலைத் திங்கள் 16-ஆம் நாள் நார்வே நாட்டில் வெட்சென் (Vedsten) என்னும் ஊரில் பிறந்தார்; நார்வே நாட்டுக் கப்பற்படையில் பணியாற்றினார். பெல்சிய நாட்டைச் சார்ந்த ஏட்ரியன்-டி-கெர்லாச்சு(Adrien De Gerlache)என்பாரின் தலைமையில் கி.பி. 1897-ஆம் ஆண்டில் அண்டார்க்டிகாவைக் காணப் புறப்பட்டுச் சென்ற பெல்சிகா என்ற கப்பலின் முதல் அதிகாரியாக ஆமுண்சென் (Amundsen) பணிபுரிந்தார்.

இவர் 1901-ஆம் ஆண்டில் கிரீன்லாந்தை அடுத்துள்ள கடலில் ஆய்வு நடத்தினார். பின்னர் இவர் கோசா என்னும் கப்பலில் 1903-ஆம் ஆண்டு சூன் திங்களில் பயணம் செய்து வட துருவத்தில் காந்த முனை உள்ள இடத்தை நிலைநாட்ட முதன்முதலாக வடமேற்குப் பாதை வழியாகப் பயணம் செய்தார். வட கனடாக் கடற்கரையைச் சுற்றிச் செல்லுங்கால் 1905-ஆம் ஆண்டு ஆகசுட்டுத் திங்களில் இயூகோன் (Yukon) என்னும் பகுதியைச் சார்ந்த எர்ச்செல் (Herschel) தீவுக்குச் சென்றடைந்தார். வடதுருவத்தை 1909-ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள் 6-ஆம் நாள் சென்றடைந்த இராபர்ட்டு பியரி என்பாரின் சாதனையால் கவரப்பெற்று, 1910-ஆம் ஆண்டு ஆகசுட்டுத் திங்களில் தாம் தென் துருவத்தைச் சென்றடைய முயலப் போவதாக அறிவித்தார். இவர் 1911-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 3-ஆம் நாள் பிராம் (Fram) என்னும் கப்பலில் அண்டார்க்டிகாவில் உள்ள வேல்சு விரிகுடாவிற்குச் (Bay of Whales) சென்றடைந்தார். இத்தருணத்தில் காப்டன் இராபர்ட்டுபால்கான்இசுகாட்டு(Falcon Scott)என்ற ஆங்கிலேயரும் தென்துருவத்தைக் காண வந்திருந்தபடியால், இருவரிடையே போட்டி மூண்டது. இசுகாட்டுப் போக்குவரத்துக்காகச் சைபீரிய மட்டக் குதிரைகளைப் பயன்படுத்த ஆமுண்செனோ நாய்கள் இழுத்துச் செல்லும் இசுலெட்சு (Sledge) என்னும் சறுக்கு வண்டிகளைப் பயன்படுத்தினார்.

ஆமுண்சென்னின் அடித்தளம் இசுகாட்டின் அடித்தளத்திற்கு 96 கி.மீ. மேலும் தெற்கே தள்ளி அமைந்திருந்தது. ஆமுண்சென் தம்முடைய திட்டத்தை எச்சரிக்கையோடும், நெடுநோக்கோடும் தீட்டியிருந்தார். ஆய்வுப் பயணம் செய்துவிட்டு வழியில் உணவுப் பொருள்களின் துகள்களை அடையாளம் தெரியும் பொருட்டுப் போட்டு வந்தார்.

மீண்டும் ஆமுண்சென் 1911-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 20-ஆம் நாள் தென்துருவத்தைக் காண நான்கு துணைவர்களுடனும், 52 நாய்களுடனும், இசுலெட்சு என்னும் நான்கு சறுக்கு வண்டிகளுடனும், நான்கு மாதங்களுக்குப் போதுமான உணவுப் பொருள்களுடனும் புறப்பட்டுச் சென்றார். தட்பவெப்ப நிலை அவருக்குத் துணையாக அமைந்திடவே அனைத்தும் திட்டமிட்டபடியே நடைபெற்றது. தென்துருவத்தில் தென்பட்ட 3276 மீ. உயரமுள்ள மலையொன்றின் மீது ஆமுண்சென்னின் கூட்டாளிகள் ஏறியதுடன், அம்மலைக்கு மோடு இராணியார் மலை (Queen Maud Range) என்னும் பெயரையும் சூட்டினார்.



ஆமுண்சென் ரோவால்டு

அவர்கள் 1911-ஆம் ஆண்டு திசம்பர் 14-ஆம் நாள் தென்துருவத்தையே சென்றடைந்தார்கள் என்பதை வானிலைக் கூறுகள் உறுதி செய்தன. அங்கிருந்த சமதள மேட்டு நிலத்திற்கு ஏழாம் ஆக்கோன் (Hackon VII) மேட்டுநிலம் என்று பெயர் வைத்தார். நார்வே நாட்டுக் கொடியும் ஏற்றப்பட்டது. ஆமுண்சென் திசம்பர் 17-ஆம் நாள் வரை அங்கேயே தங்கி அப்பகுதியினைப் பற்றி ஆய்வு நடத்திப் பல்வேறு குறிப்புகளைக் கண்டு பின்னர் அடித்தளத்திற்கு 1912-ஆம் ஆண்டு சனவரி 25-ஆம் நாள் திரும்பினார். அவருடைய வெற்றிக்கு அவருடன் சென்ற கூட்டாளிகளின் துணிச்சலும், இடுக்கண்களைத் தாங்கும் நெஞ்சுரமும், அத்துடன் பயணத்திற்குமுன் அனைத்து விவரங்களையும் எச்சரிக்கையுடன் சேகரித்துச் சென்ற திறமையும் காரணங்களாயின.

இதனிடையில் இசுகாட்டு (Scott) அவருடைய கூட்டாளிகள் சிலரும் சொல்லொணாத் துயருற்றுப் பயணம் செய்து, 1912 சனவரி 17-ஆம் நாள் தென் துருவத்தை அடைந்தார்கள். அங்கு ஆமுண்சென்

ஏற்றிச் சென்ற கொடியையும், கடிதங்களையும் கண்டார்கள், இசுகாட்டும் அவர்தம் துணைவர்களும் திரும்பும் வழியில் மாண்டனர்.

ஆமுண்சென் 1925-மே மாதம் வடதுருவத்தைச் சென்றடைய முயன்று, இசுபிட்சுபெர்சன் (Spitsbergen) பகுதியில் அரசர் விரிகுடாவிலிருந்து விமானத்தில் பறந்து சென்றார். ஆனால், வடதுருவத்திற்கு 218 கி.மீ. தொலைவில் அவர் பயணம் தடைபட்டு நின்றது. அடுத்த ஆண்டில் இத்தாலிய விமானமான நார்சு (Norge) என்பதை ஓட்டிச் சென்ற காப்டன் உம்பர்ட்டா நோபில் (Umberto-Noble) என்பாரின் தலைமையில் 1926-ஆம் ஆண்டு மே மாதம் 13-ஆம் நாள் வடதுருவத்தின் அலாசுகாவைச் சார்ந்த தெல்லர் (Teller) என்னுமிடத்தில் கரையிறங்கினர்.

ஆமுண்சென், நோபிலுக்கு நேர்ந்ததைக் கண்டறிய 1928-ஆம் ஆண்டு சூன் 28-ஆம் நாள் ஐந்து கூட்டாளிகளுடன் வானவெளியில் பறந்து வடதுருவத்திற்குச் சென்றார். ஆனால், அவர்களின் வானவூர்திக்கு என்ன நேர்ந்ததோ? அவர்கள் திரும்பவே இல்லை. ஆமுண்செனின் பயண நூல்கள் பின்னர் வெளியிடப்பட்டன. 'வடதுருவக் காந்த முனையும், வடமேற்கு வழியாகச் சென்ற பயணமும்' என்ற நூல் 1907-இலும், 'தென்துருவம்' என்னும் நூல் 1913-இலும், 'ஆய்வுப்பயணியான என் வாழ்வு' என்னும் நூல் 1927-இலும் வெளியாயின.

**ஆமுராபி** பாபிலோனியாவை ஆண்ட முதல் மரபினைச் சார்ந்த மன்னருள் ஒருவர். இவர் கி.மு. 1792 முதல் கி.மு. 1750 வரை ஆண்டார். இக்காலத்திற்கு அறுபதாண்டுகள் முன்னரோ பின்னரோ இவர் ஆண்டிருக்கக்கூடும் என்று கருதுவோருமுண்டு. பாபிலோனியாவை இணைத்து ஒன்றாக்கிய பெருமை இவரைச் சாரும். மேலுமிவர் அக்காலச் சட்டதிட்டங்களை 'ஆமுராபியின் சட்டத் தொகுப்பு' (Hammurabi's Law Code) என்னும் பெயரில் தொகுத்தளித்து உலகப் புகழ் பெற்றார்.

ஆமோரைட்டு மரபு அரசர்களுள் இவர் ஆறாமவர். இவர் பெயர் பாபிலோனிய மொழியில் எழுதப்பெற்று ஒலிக்கப் பெறாமையால், செமிட்டிய மொழியில் எழுதப்பட்டது. இவர் தந்தையார் சின்-முபாலித்து (Sin-Muballit) என்பார். இறந்தபோது, அவர் மரபினர் ஏறத்தாழ நூறு ஆண்டுகள் ஆட்சி செய்திருந்தனர். ஆமுராபி தொல்லையில்லாமல் வாரிசுரிமை பெற்றார் என்பது தெரிகிறது.

ஆமுராபியின் (Hammurabi) ஆட்சித் தொடக்கக் காலத்தில் மெசபடோமியாவும் வட சிரியாவும் சிறுசிறு நாடுகளாய் ஒன்றோடொன்று மோதிக்



ஆமுராபி

கொண்டன. இவர் ஆட்சியின் முதல் முப்பதாண்டுகளில் இவர் நடத்திய பல்வேறு படையெடுப்புகளைப் பற்றிய குறிப்புகள் இருந்தாலும், அவை இவருக்குப் பெயரையும் புகழையும் கொடுத்தனவா என்பதைப் பற்றி எதுவும் அறிய இயலவில்லை.

இவரது முப்பதாம் ஆண்டு, வாழ்க்கையில் திருப்புமையமாக அமைந்தது. அவ்வாண்டில் இவர் தம் நாட்டிற்குத் தெற்கிலிருந்த இலார்சாவை வென்றார். அவ்வெற்றியால் தென் பாபிலோனியா முழுதும் இவரது ஆட்சிப் பகுதிகளாகி, இவருக்குப் புகழ் சேர்த்தன. அடுத்த சில ஆண்டுகளில் இவர் பெற்ற வெற்றிகளினால் இவருடைய ஆட்சி வளைகுடாப் பகுதியிலிருந்து அசிரியா வரை பரவியிருந்தது.

இவருடைய கடிதங்களிலிருந்து இவர்தம் ஆட்சியை அமைச்சர்களின் உதவியின்றித் தாமே நேரடியாக மேற்கொண்டார் என்பது புலனாகிறது. எளியவற்றையும் இவர் ஆழ்ந்து கவனித்தார். நீர்ப்பாசனத் திட்டங்களைக் காப்பாற்றுவது அரசரது முதன்மைப் பணி என்பதை இவர் நன்கு அறிந்திருந்தார். இவர் ஆட்சிக் காலம் பாபிலோனியாவின் பொற்காலம் எனத்தக்கது.

**ஆமுராபியின் சட்டத் தொகுப்பு:** பிரெஞ்சு அகழ்வாய்வாளர் இருவர் 1901-1902-ஆம் ஆண்டில் ஈரானைச் சார்ந்த சூசா நகரில் 2 மீ. உயரமுள்ள நடுகல் ஒன்றைக் கண்டுபிடித்தனர். அந்நடுகல்லின் உச்சியில்

மெசபடோமியாவின் அரசர்களுள் ஒருவர், கடவுளிடமிருந்து அரசருக்குரிய சின்னத்தைப் பெறும் சிற்பம் ஒன்றும் காணப்படுகிறது. அதற்குக் கீழே அக்காடிய ஆப்பெழுத்துகளில் ஆமுராபியின் தூய்மையையும், நீதியையும் குறித்த செய்திகள் பொறித்து வைக்கப்பட்டுள்ளன. இக்கண்டுபிடிப்பு பெரும் பரபரப்பை உண்டாக்கியது. அதுவரை விவிலிய நூல்தான் மிகத் தொன்மையானது என்று நம்பியிருந்தனர். ஆனால், ஆமுராபியின் சட்டத் தொகுப்பு கி.மு. 18–ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகையால், அது விவிலியத்திற்கும் பல நூற்றாண்டுகள் முந்தியது என்பதே பரபரப்பிற்குக் காரணமாகும். ஆமுராபியின் இந்தச் சட்டத் தொகுப்பு, காலத்தால் தொன்மையானது என்பது மட்டுமன்றிச் சீரிய முறையில், மிகப் பெரிய அளவில் பாதுகாக்கப் பெற்றதாகவும் கருதப்படுகிறது.

'தெய்வமொன்றின் சொத்தைத் திருடியவன் கொல்லப்பட வேண்டும்' என்பதனைக் குறிப்பிடலாம். 282 சட்டங்களைக் கொண்ட அத்தொகுப்பில், 5 சட்டங்கள் மட்டுமே நேரிடையாகத் தவிர்க்க வேண்டியதைக் குறிப்பிடுகின்றன.

சட்டங்கள் பல்வேறு தலைப்புகளில் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றைத் திட்டவட்டமாக ஆய்ந்தறிவது கடினமேயாகும். அத்தலைப்புகள் பின்வருமாறு: 1 முதல் 5 வரையுள்ள சட்டங்கள் நீதி நிருவாகத்தைப் பற்றியவை. தவறான குற்றச்சாட்டுகளுக்கான தண்டனைகள் அவற்றுள் கூறப்பட்டுள்ளன. 6 முதல் 25 வரையிலான சட்டங்கள் சொத்துகள் தொடர்பானவை. திருட்டு, கொள்ளை, தப்பியோடும் அடிமைகளுக்குப் புகலிடம் கொடுத்தல் தொடர்பானவை இவற்றுள் அடங்கும். 26 முதல்



ஆமுராபியின் சட்டத் தொகுப்பு–ஆப்பு வடிவ எழுத்துகள்

125 வரையிலானவை நிலம், வீடுகள் தொடர்பானவை. தீர்வை, வரி, குத்தகை, நட்ட ஈடு முதலானவற்றைப் பற்றியன இதில் அடங்கும். 126–ஆம் சட்டம் வாணிகம் பற்றியது. கடன் கொடுத்தல், கடன் வாங்குதல், வைப்பு நிதி போன்றவை இச்சட்டத்தால் கண்காணிக்கப்படுகின்றன. 127 முதல் 194 வரையுள்ள சட்டங்கள், திருமணம், குடும்பம், சொத்து முதலியவற்றைப் பற்றியவை. குடும்ப உறுப்பினர்களின் நிலை, அந்நிலைக்கேற்ற சொத்து, சட்டப்படியான வாரிசுகள், மக்களை ஏற்பெடுத்தல் (தத்தெடுத்தல்) மரபுரிமையாகப் பெறும் சொத்துகள், பாலுணர்வால் ஏற்படும் குற்றங்கள் போன்றவற்றுக்கான தண்டனைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. 195 முதல் 214 வரையுள்ள சட்டங்கள், தாக்குதல் பற்றியவை. 215 முதல் 240 வரையிலான சட்டங்கள், மருத்துவர், மயிர் வினைஞர், கட்டிடத் தொழிலாளர், படகு கட்டுநர், படகோட்டிகள் போன்ற

ஆமுராபியின் சட்டங்கள் பொறிக்கப்பட்டுள்ள நடுகல்லில், சட்டத் தொகுப்பின் முன்னுரையாக ஒரு பகுதியும் பின்னுரையாக ஒரு பகுதியும் உள்ளன. அப்பகுதிகள் செய்யுள் வடிவிலுள்ளன.

முன்னுரை, அரசரின் நீதித் திறனையும், அவருக்கு மக்கள்பாலிருக்கும் பரிவினையும், மெசபடோமியாவிலுள்ள பல நகரங்களில் நிகழ்ந்த தெய்வ வழிபாட்டு முறைகளையும் புகழ்ந்தியம்புகிறது.

பின்னுரை, ஆமுராபியின் சொந்த அறவாழ்வு பற்றியும் அவர்தம் சட்டங்கள் எவ்வாறு வாழையடி வாழையாக வரும் பின் தலைமுறையினரால் காக்கப்பட வேண்டுமென்பது பற்றியும், அச்சட்டங்களை மாற்ற முயலுவோர் தீராப்பழிக்கு ஆளாவார் என்று மன்னன் கூறுவது பற்றியும் குறிப்பிடுகிறது.

சட்டங்களில் பெரும்பாலானவை கட்டளை வாசகங்களாகவேயுள்ளன. எடுத்துக் காட்டாகத்

தொழிலாளர்களைப் பற்றியவை. 241 முதல் 267 வரையுள்ள சட்டங்கள், வேளாண்மை பற்றியவை. உழுதற்கு மாடுகளை வாடகைக்குப் பிடித்தல், வேளாண்மைத் தொழிலாளர், ஆட்டிடையர் ஆகியோர் உழு கருவிகளையும், உணவுப் பொருள்களையும் தவறாகப் பயன்படுத்தல் பற்றிக் குறிப்பிடுகின்றன. 268 முதல் 277 வரையுள்ள சட்டங்கள் பணியாளர்கள், கைவினைஞர்கள் ஆகியோருக்கும், விலங்குகள் ஆகியவற்றிற்கும் அமைந்த ஊதியம், கூலி வீதங்கள் பற்றிக் கூறுகின்றன. 278 முதல் 282 வரையுள்ள சட்டங்கள் அடிமைகளை விலைக்கு வாங்குவது குறித்தனவாகும்.

மேற்குறிப்பிட்டுள்ள சட்டங்களை ஆராய்ந்தால் சமூக வாழ்க்கையைப் பற்றிய பல விவரங்கள் புலனாகும். அவற்றைத் தெளிவாக விளக்குவதும் அவ்வளவு எளிதன்று.

ஆமுராபிச் சட்டங்களின்படி சமூகத்தை முப்பிரிவுகளாகப் பிரிக்கலாம். சமுதாயத்தின் அடிமட்டத்தில் உள்ள மிகத்தாழ்நிலை மக்கள் வார்டம் (Wardum) அல்லது அடிமைகள் என்றும், மேனிலையிலுள்ளவர்கள் ஆவிலம் (Awilum) அல்லது சுதந்திரக் குடிமக்கள் அல்லது சொத்துள்ளவர் என்றும், இடைநிலையிலுள்ளவர்கள் முசுக்குனம் (Mushkunum) என்றும் குறிப்பிடப்பட்டனர்.

பெண்களுக்கு உரிமைகள் கொடுக்கப்பட்டிருந்தன. பெண்களை மணவிலக்குச் செய்யும் உரிமை ஆண்களுக்கு கொடுக்கப்பட்டிருந்தாலும், பெண்ணிடம் வாங்கிய வரதட்சிணையைத் திருப்பித்தர வேண்டுவதுடன், அவள் பெற்ற பிள்ளைகளுக்கு உதவித் தொகையும் கொடுக்க வேண்டும். தன் கணவன் தவறான வழியில் செல்கிறான் என்பதை உறுதிப்படுத்தும் பெண், அவனை மணவிலக்குச் செய்யலாம். பெண்களும் சமயப் பணிகளில் ஈடுபட்டோரும் சொத்துகளை வைத்துக் கொள்ளலாம்.

ஆமுராபியின் சட்டத்தொகுப்பில் 'பழிக்குப்பழி' வாங்கும் உரிமை இருப்பது கொண்டு, அச்சட்டத் தொகுப்புக் கொடூரமானது காட்டுமிராண்டித் தனமானது என்று குறை கூறுவோருமுண்டு. ஆனால் அத்தகைய தண்டனையை நிறைவேற்றும் பொறுப்பு அரசிடம் இருந்ததேயன்றி, குற்றத்திற்காளானவரிடம் இருக்கவில்லை.

ஆமுராபியின் சட்டத்தொகுப்பை இக்காலச் சட்டத் தொகுப்புகளுடன் ஒப்பிடக்கூடாது. அச்சட்டத்தொகுப்பின் நோக்கமே சமுதாயத்தில் நீதியை நிலைநாட்ட வேண்டும் என்பதாகும்.

**ஆமூர்**[1] சங்க காலத்தில் விளங்கிய ஒரூர். இது அக்காலத்தில் முக்காவல் என்னும் நாட்டில் விளங்கிய ஊர் என்றும், இன்கடுங்கள்ளினால் சிறப்படைந்து விளங்கியது என்றும், சோழன் போர்வைக் கோப்பெரு நற்கிள்ளி இவ்வூரில் திகழ்ந்த சிறப்புடைய மல்லன் ஒருவனொடு போர்புரிந்து கொல்ல இச்சோழனைச் சாத்தந்தையார் சிறப்பித்துப் பாடியுள்ளார் என்றும் புறநானூற்றுச் செய்யுளின் (புறம். 80) அடிக்குறிப்பு உணர்த்துகிறது. 'ஆமூர் முக்காவல் நாட்டிலுள்ளது. ஆமூர்க் கோட்டத்தைச் சேர்ந்த ஆமூர் நாட்டில் மகாபலிபுரம் இருந்ததாகத் தெரிகிறது' என்று டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் குறிப்பிட்டுள்ளார்.

சிறுபாணாற்றுப்படையின் தலைவனான, ஒய்மா நாட்டு நல்லியங் கோடன் நாட்டிலிருந்த மருத நிலத் தூர்களுள் ஒன்று. இவ்வூர் அழகிய இடங்களையும், அரிய காவலையும் அகன்ற அகங்களையும் கொண்டது. சுருங்காத வளத்தொடு அந்தணர் மிக்கு விளங்கிய ஊராகும். இவ்வூர்க்குச் செல்லும் மக்களுக்கு, அங்குள்ள உழவர் மகளிர் சிறந்த அரிசிச் சோற்றினை நண்டும் பீர்க்கங்காயும் கலந்து சமைக்கப்பட்ட கலவையொடு அளிப்பர் என்று நல்லூர் நத்தத்தனார் கூறியுள்ளார் (சிறுபாண். 184-195).

ஆமூர்[2]: ஆமூர், சைவ குரவர் நால்வருள் ஒருவராய திருநாவுக்கரசர் தோன்றிய ஊர். நடுநாட்டிலுள்ள இவ்வூர், பண்ருட்டியிலிருந்து 6 கல் தொலைவிலுள்ளது. திருவாமூர் என வழங்கப்படுகிறது. சேக்கிழார் சுவாமிகள் இவ்வூரைக் குறிப்பிடும்போது 'தெய்வநெறிச் சிவம் பெருக்கும் திரு ஆம் ஊர்–திருவாமூர்' என்று கூறியுள்ளார். திருநாவுக்கரசரை உருவாக்கி, அவர் மீண்டும் சைவ சமயத்திற்குத் திரும்பிச் சிவத்தொண்டு புரிவதற்குக் காரணமாகத் திகழ்ந்த அவர்தம் தமக்கையார் புனிதவதியாரும் தோன்றிய ஊராகும். இச்சிறப்பினை 'மாது புகழை வளர்க்கும் திருவாமூர்' என்று அருணகிரி நாதர் தம் திருப்புகழில் போற்றியுள்ளார். இறைவன் பெயர் பசுபதீச்சுரர். இங்குத் திருநாவுக்கரசருக்குத் தனிக்கோயில் உள்ளது. ஆண்டுதோறும் திருவிழா நடைபெற்று வருகிறது.

**ஆமூர் ஆறு** உருசியாவின் தூரக்கிழக்குப் பகுதியில் ஓடும் சிறப்பான தொரு ஆறு. சில்கா ஆறும் ஆர்கன் ஆறும் இணைந்து ஆமூர் ஆறாக மாறுகிறது. உருசியாவுக்கும் சீனாவுக்கும் எல்லையாக ஏறத்தாழ 1760 கி. மீ ஓடும் இந்த ஆறு அந்நாடுகளின் தெற்கிலும் வடக்கிலும் இயற்கை எல்லையாகும். பின்னர் 1040 கி. மீ. வடகிழக்காக உருசியாவின் குறுக்கில் பாய்ந்து, தாடார் (Tatar) நீர்ச் சந்தியில் கலந்து பசிபிக்குப் பெருங்கடலில் இணைகிறது. இந்த ஆற்றுக்குப் பல துணையாறுகள் உண்டு. இந்த ஆற்றின் மொத்த நீளம் 4320 கி. மீ.

சீனர்கள் இதைக் கரும்வேதாளம் என்பர். பருவக் காற்று மழையால் இவ்வாற்றில் கோடையில் வெள்ளம் கரைபுரண்டோடும். பனிக் கட்டிகள் மே மாதம் முதல் நவம்பர் மாதம் முடிய உருகி விடுவதால் ஆமூர் ஆறு கப்பற் போக்குவரத்துக்கும் பயன்படுகிறது.

**ஆமூர்க் கவுதமன் சாதேவனார்** கடைச் சங்கப் புலவர்களுள் ஒருவர். இவர் பெயரிலிருந்து, ஆமூர் இவரது ஊராகலாம் என்று தெரிகிறது. இவருடைய ஒரே பாடல் அகநானூற்றின் 159-ஆம் பாடலாக அமைந்துள்ளது. இப்பாடலின் ஆசிரியர் பெயர் சில ஏடுகளில் ஆவூர்க் காவிதிகள் சாதேவனார் என்றும் காணப்படுகிறது. பாலைத் திணையிலமைந்த இப்பாடல் பிரிவிடை வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தும் பாங்கில் அமைந்துள்ளது. இவர் தம் பாடலில் வானவன் என்னும் தலைவனை, 'வில்கெழு தடக்கை வெல்போர் வானவன்' என்று பாராட்டியுள்ளார். ஆமூர் கொடுமுடி என்பவனால் காக்கப்படுவதும், நெடிய மதில்களை உடையதுமாகும் என்று அதன் சிறப்பினை விளக்கியுள்ளார். காண்க: ஆவூர்க் காவிதிகள் சாதேவனார்.

**ஆமூர் மல்லன்:** பண்டைத் தமிழகத்தில் 'முக்காவல் நாடு' என்ற பெயரில் ஒரு நிலப்பகுதி இருந்தது. அன்றைய தமிழகத்தில் இருந்த சிறுநாடுகளுள் ஒன்றுதான் முக்காவல் நாடாகும். அம் முக்காவல் நாட்டில் ஆமூர் என்னும் ஓர் ஊர் இருந்தது. அவ்வூரில் வாழ்ந்தவன் ஆமூர் மல்லன். மல்லன் என்ற சொல் செல்வமும் வலிமையும் உடையவன் என்று பொருள் படும். வாழ்ந்த ஊரால் பெயர் பெற்ற அவன், பலரும் போற்றத்தக்க முறையில் ஆமூரில் இருந்து கொண்டு ஆட்சி நடத்தி வந்தான். நல்லாட்சி நடத்தியதால் நாட்டில் வளம் பெருகிறது. அவனை நாடி வந்தோர் பலரும் கள்ளுண்டு களிப்பில் திளைத்தனர். அவன் நாட்டின் வளமும், அவன் உடலின் வலிமையும் திசை எட்டும் பரவின. அவன் வாழ்ந்த காலத்தில் சோழ நாட்டை ஆண்டு வந்தவன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி என்பவனாவான். அவனுக்கும் அக்கிள்ளிக்கும் யாது காரணம் பற்றியோ பகை மூண்டது. பகை முற்றியதால் சோழன், ஆமூர் மீது படையெடுத்தான். சோழனுக்கும் மல்லனுக்கும் கடும்போர் நடந்தது. மல்லனோ போர்த்திறன் மிக்கவன் எனினும் சோழப் பேரரசனுக்குமுன் அவன் ஒரு குறுநில மன்னனே. மல்லில் வல்ல மல்லனோ பலவகை உபாயங்களையெல்லாம் பயன்படுத்திப் போரிட்டான். இறுதியில் பெருநற்கிள்ளியின் ஆற்றலுக்கு ஈடுகொடுக்க முடியாமல் சிதைந்து வீழ்ந்து இறந்தான். பசித்த யானை மூங்கிலை வளைத்து ஒடித்துத் தின்பது போலப் போர் வெறி கொண்ட சோழனோ, மல்லனது தலையுங் காலும் சிதைய மோதிப் போரிட்டு வென்றான் என்று புறநானூற்றின் 80- ஆம் பாடலில் சாத்தந்தையார் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு புலவர் பாடும் பொருநனாகத் திகழ்ந்தவன் ஆமூர் மல்லன் ஆவான். கே. நா.

**ஆமூர் முதலி**[1] கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த காளமேகப் புலவர் காலத்தில் விளங்கிய வள்ளல். ஆமூரைச் சேர்ந்தவராதலின் களப்பாளன் என்னும் பெயருடைய இவர் ஆமூர்முதலி என்று வழங்கப்பெற்றார். காளமேகப் புலவர் இவரிடம் சென்று இவர்மீது வெண்பாப் பாடத் தொடங்கிப் பாதிவெண்பாப் பாடி முடிக்கு முன்னரே, தக்க பரிசளித்துச் சிறப்பித்தான். "உள்ளங்கால் வெள்ளெலும்பு தோன்ற ஒருகோடி, வெள்ளங்காலந் திரிந்து விட்டோமே-உள்ளபடி-ஆமூர் முதலி அமரர் கோன் இங்கிருக்கப் போமூர் அறியாமற் போய்' என்பது காளமேகம் பாடிய வெண்பாவாகும்.

ஆமூர் முதலி[2] நெற்குன்றவாணர் என்னும் பெயர்கொண்ட புலவர்; நெற்குன்றூரில் வேளாண் குலத்தே தோன்றியவர்; கல்விச் செல்வமும் பொருட் செல்வமும் ஒருங்கே பெற்றவர். திருப்புகலூர் அந்தாதி இவரால் பாடப்பட்டது. இவர் பெயர் நெற்குன்றவாண முதலியார் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

**ஆமென்** பண்டைய எகிப்திய நாகரிகத்தில் புதிய இராச்சியத்தின் போது (New Kingdom) அவர்களின் முக்கிய கடவுளாக விளங்கியவர். அந்தத் தேவனை வழிபாடு செய்த முக்கிய மையம் தீப்சு என்னும் ஊராகும். இது மேலை எகிப்தில் இருந்தது. ஆமென் (Amon) என்ற தெய்வத்தை எகிப்தியர்கள் ரீ (Re) என்னும் சூரிய தேவனுடன் இணைத்து, ஆமென்-ரீ-என்றனர். இத்தெய்வத்திற்கு மானுட உருவம் கொடுத்துத் தலையில் இரு இறகுகளையும் கொடுத்தனர். தலையிலிருந்து தோள்வரை நீண்டு தொங்கும் பட்டைக் கயிறு ஒன்றையும் இணைத்துக் கொண்டனர்.

ஆமென் கிரீசில் தீப்சு (Thebes) நகர்க் கோயிலிலுள்ள கடவுளாக இருப்பதோடு கார்னாக்கு (Karnak) என்னுமிடத்திலுள்ள கோயிலிலும் இவரே கடவுளாக இருக்கிறார். ஆமென், எகிப்தியர்களுக்கும் கடவுளாக இருந்தார். சூரியக் கடவுளாக இவரை எகிப்தியர் கருதினர். பாமர மனிதனைப் போல் இவருக்கு உருவம் கொடுக்கப்பட்டது. இலிபியா பாலைநிலத்தில் இவரது கோயிலொன்று இருந்தது. ஆடு இவரது வாகனமாகும். ஆமெனின் மனைவியின்

பெயர் முட்டு. இக்கடவுளின் இசைவினைப் பெற்றே எகிப்தியர்கள் நாட்டை ஆள வேண்டும் என்று கருதினர். இதைக் கருத்தில் கொண்டே மகாஅலெக்சாந்தர் எகிப்தியரை வென்று இக்கோயிலுக்குச் சென்று வழிபட்டார்.

**ஆமோசு** பண்டைய எகிப்திய அரசர்களுள் ஒருவர். இவர் கி.மு. 1570 முதல் 1545 வரை ஆட்சி செய்தார். இவரை முதலாம் அகமாசு அல்லது முதலாம் அமரசிசு என்றும் கூறுவர். ஆமோசுதாம், இக்சாசு என்ற ஆசிய நாடோடிகளிடமிருந்து எகிப்தை இறுதியில் மீட்டவர். இக்சாசு நாடோடிகள் சற்றேறக் குறைய இரண்டு நூற்றாண்டுகள் எகிப்தை வெற்றி கண்டு ஆண்டவர்கள். ஏனைய எகிப்திய அரசர்கள் மேற்கொண்டு முடிக்காமல் விட்ட பணியை ஆமோசு செய்து முடித்தார். அட்வாரட்டு என்னும் இக்சாசு நாடோடிகளின் இறுதிக் கோட்டையைக் கைப்பற்றி, படையெடுப்பாளர்களை எகிப்திலிருந்து விரட்டித் தென் பாலசுத்தீனம் வரை அவர்களைப் பின் தொடர்ந்து, அங்கு அவர்களின் படையை ஐந்தாண்டுகள் முற்றுகையிட்டு, இறுதியில் அவர்களை அழித்தார். பின்னர் ஆமோசு, பாலசுத்தீனத்தின் பெரும் பகுதியைத் தம் ஆட்சியின் கீழ்க் கொணர்ந்து, கிழக்கு மத்திய தரைக் கடற்கரைப் பகுதி வரை எகிப்தியரின் ஆட்சியைப் பரப்பினார். பின்னர்த் தென்பகுதியின் பக்கம் திரும்பி நூபியாவை மீண்டும் கைப்பற்றிக் கொண்டார். அவரையடுத்து அவர் மகன் முதலாம் அமென்கோட்டப்பு என்பார் அரியணை ஏறினார்.

**ஆமோனைட்டுகள்** சோர்டான் நதிக்கரையில் வாழ்ந்த பழங்குடி மக்கள். இசுரேலியர்களின் எதிரிகளாக இவர்கள் பழைய ஏற்பாட்டில் குறிப்பிடப்பட்டுள்ளார்கள். இவர்கள் எபிரேய மதத்தையும் நாட்டையும் பழிப்பவர்களாகக் குற்றம் சாட்டப்பட்டவர்கள். இவர்கள் தாவீது என்பவரை நண்பராகக் கொண்டவர்கள். ஆமோனைட்டுகளும் (Ammonites) இசுரேலியர்களும் கலப்பு மணம் செய்து கொண்டனர். சாலமன் அரசர் இப்பிரிவைச் சார்ந்த பெண்களைப் பெரிதும் போற்றினார். மோலக்கு (Molech) என்ற ஆமோனைட்டுகளின் தேவதைக்கு இவ்வரசர் கோயில் கட்டினார். இப்பிரிவினர் காலப்போக்கில் நபாதீன் அராபியருடன் இணைந்து விட்டனர்.

**ஆமோரைட்டுகள்** செமிட்டிய இனமக்கள்; யூதர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர்கள்; சோர்டானுக்குக் (Jordan) கிழக்குப் பகுதியில் வாழ்ந்தவர்கள். ஆமோரைட்டுகள் (Amorites) தொடக்கக் கால யூதர்களுடன் இடையறாது போரிட்டார்கள். அவர்களைச் சால் (Saul) என்பார் தோற்கடித்தார். தாவீது (David) என்பார் அவர்களைச் சரணடையச் செய்தார். எபிரேய (Hebrew) அரசு சிதறுண்டபோது மீண்டும் அவர்கள் விடுதலையடைந்தனர்.

**ஆய்**[1] சங்ககாலத்தில் வாழ்ந்த வள்ளல்களுள் ஒருவன். அண்டிரன், ஆய் அண்டிரன் எனவும் அழைக்கப் பெற்றான். காண்க: அண்டிரன்.

**ஆய்**[2] மைசூர்ப் பகுதியிலுள்ள திருநாராயண புரத்தில் வாழ்ந்த ஒரு வைணவர்; தமிழும் வடமொழியும் வல்லவர்; ஆண்டாளின் திருப்பாவைக்கு ஈராயிரப்படி, நாலாயிரப்படி என்னும் இரண்டு விரிவுரைகள் (வியாக்கியானங்கள்) செய்துள்ளார். 'மாறன் மனம்' எனப் பொருள்படும் ஆச்சாரிய இருதயம், சீவசன பூடணம் என்னும் நூல்களுக்கும் விரிவுரை எழுதியுள்ளார்.

**ஆய் அண்டிரன்** சங்க கால வள்ளல்களுள் ஒருவன். காண்க : அண்டிரன்.

**ஆய் எயினன்** சங்க காலக் குறுநில மன்னருள் ஒருவனும் வள்ளலுமாவான்; வேளிர் மரபினன். 'வெளியன் வேண்மான் ஆய்எயினன்' விரைந்து செல்லும் குதிரைகளைக் கொண்டவன்; புள்ளிற்குக் காவலாயிருந்தவன்; தன்னைப் பாடியவர்க்குப் பரிசாக யானைகளை ஈயும் இயல்பினன்.

நன்னன் என்பவன், புன்னாட்டைக் கடிந்த காலத்தில், எயினன் பாழியின்கண் 'அஞ்சல்' என்று கூறி, அந்நாட்டினரைப் பாதுகாத்தான். அதனால் நன்னனுக்கும் எயினனுக்கும் பகைமை தோன்றியது. இறுதியில் நன்னனுக்குத் துணையாயிருந்த மிஞிலி என்பவன், இவ்வெயினனோடு பாழிப் பறந்தலையில் போரிட்டான். அப்போரில் எயினன் இறந்து பட்டான். அப்பொழுது பறவைகள் எயினன் உடம்பின் மேல் ஞாயிற்றின் வெப்பம் தாக்காதவாறு சிறகுகளால் வெயிலை மறைத்துப் பறந்து சுழன்றன. நன்னன் அதனைக் காணப்பொறாது மறைந்திருந்தான். எயினன் இறந்து பட்டதை அறிந்து வேளிர் மகளிர் வருந்தி அழுத பூசலை அகுதை என்பவன் தீர்த்து ஆறுதல் செய்தான்.

ஆய்எயினன் வாய்மொழி தவறாதவன்; 'அஞ்சல்' என்ற சொல்லினன்; 'உயிர்கொடுத்தனனே சொல்லியதமையாது' என்று புகழப் பெற்றவன். இவனைப் பரணர் தம் அகநானூற்றுப் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். (அகம். 142, 181, 208, 396). த.கோ.

**ஆய்குடி** சங்க கால வள்ளல்களுள் ஒருவனான ஆய் என்பானது ஊர். ஆய் வள்ளலைப் பாராட்டும் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் அவனுடைய

ஊராகிய ஆய்குடியினையும் பாராட்டியுள்ளார். 'வான்தோய் இமயமலை வடதிசைக் கண்ணேயுள்ளது; தெற்கே அதற்கிணையாக ஆய்குடி இல்லையாயின் இம்மலர்தலையுலகம் பிறழ்ந்து விடுவது உறுதியாகும்' என்று கூறி ஆய்குடியின் இமயம் ஒத்த புகழினைக் குறிப்பிட்டுள்ளார் (புறம் 132).

ஆய்குடி திருநெல்வேலி மாவட்டத்தில் தென்காசிக் கருகிலுள்ளது. அருணகிரிநாதர் தம் திருப்புகழில் இவ்வூரினைப் போற்றிப் பாடியுள்ளார். இங்குக் குழந்தை வடிவில் காட்சியளிக்கும் முருகன் திருக்கோயில் சிறப்பாக அமைந்துள்ளது. கோயில் அனுமன் நதிக்கரையில் உள்ளது. இத்திருக்கோயிலில் பழப்பாயசப் படைப்பு முருகனுக்கு உகந்ததாகக் கருதப்படுகிறது.

**ஆய்ச்சியர்:** காடும் காடு சார்ந்த இடமும் முல்லை நிலம் எனப்படும். முல்லை நிலத்தில் வாழ்பவர் ஆயர்கள். ஆயர்குடி மிகப் பழமையானது. தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள், பிற தமிழ் இலக்கியங்கள் ஆகியன ஆயர்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. ஆயர்கள் கோவலர், அண்டர், பொதுவர், இடையர் எனப் பலவாறு வழங்கப்படுவர். ஆயமகளிரைப் பொதுவர் மகளிர், அண்டர் மகளிர், இடைச்சியர் என்று கூறுவர். ஆயர்கள் பிறருக்குத் தீங்கிழைக்காத, தன்மையுடையவர்கள். அவர்களை 'அறநெறி ஆயர்' எனப் புறநானூறு கூறுகிறது. "ஆகாத்தோம்பி ஆப்பயன் அளிக்கும் கோவலர் வாழ்க்கையோர் கொடும்பாடில்லை" என இளங்கோவடிகள் கூறுகிறார். கவுந்தியடிகள் மாதரி என்னும் இடைக்குல மடந்தையிடம் கண்ணகியை அடைக்கலமாகக் கொடுத்ததும் ஆயர் தம் செவ்விய தன்மையை எடுத்துரைக்கும்.

ஆயமகளிர் கற்பிற் சிறந்தவர். கற்பினுக்கு அடையாளமாக மகளிர் முல்லை மலரினை அணிவது வழக்கம். 'முல்லை சான்ற கற்பின் மெல்லியற் குறுமகள்' என ஆய்மகள் குறிப்பிடப்படுகிறாள். ஒருவனை மனத்தில் கணவனாக ஏற்றுக் கொண்ட பிறகு, ஆயமகளிர் எக்காரணத்தாலும் வேறொருவனை மணத்தல் இல்லை. ஆயர்குல மகளிரை மணக்க விரும்புவோர் அவளுக்காக வளர்க்கப்பட்ட காளையினை அடக்க வேண்டும் என்பது அக்கால வழக்கம். இதனை ஏறு தழுவல் என இலக்கியங்கள் கூறும். எருதின் கூரிய கொம்புகளைக் கண்டு அஞ்சுகிற வீரமில்லா இளைஞனை ஆயமகளிர் இப்பிறப்பிலன்றி மறுபிறப்பிலும் கணவனாக அடைய விரும்பமாட்டார்.

ஆய்ச்சியர் விருந்தினரை, நன்முறையில் உபசரிப்பர். ஆயர் வீட்டில் வேளைப் பூவினைத் தயிரில் இட்டுச் சமைத்த குழம்பும், ஈசலைத் தயிரில் இட்டுச் சமைத்த குழம்பும், பாற் சோறும் கிடைக்கும். தன் வீட்டில் உணவருந்தாத விருந்தினர்க்கு வேண்டிய பாத்திரங்களையும், சமைத்தற்குரிய பண்டங்களையும் கொடுத்துத் தாமே சமைத்து உண்ணச் செய்வர் என்பது சிலப்பதிகாரத்தின் வாயிலாக அறியப்படுகிறது.

தயிர் கடைதலும், மோர், நெய் ஆகியவற்றை வேற்றூர்களில் கொண்டு விற்றலும் ஆய்ச்சியர் தம் தொழிலாகும். மோர் விற்ற காசில் அரிசி பெறுவதும், நெய் விற்ற காசில் பொன் வாங்காமல் இளைய எருமைக் கன்றுகளை வாங்குவதும் ஆய்ச்சியரது பொருளாதாரத் திறனை எடுத்துக் காட்டும். ஆய்ச்சியர் மன்மதனும் கண்டு வியக்கத்தக்க அழகுடையவர் என்றும், தெருவில் மோர் விற்கவரும் ஆய்மகளின் அழகில் மயங்காதவரில்லை என்றும், ஆய்ச்சியர் மோர் விற்க வரும்போது ஏனைய பெண்டிர் தத்தம் கணவரை வெளியே போகவொட்டாமல் தடுப்பர் என்றும் இலக்கியம் எடுத்துரைக்கிறது. கலம்பக இலக்கியத்துள் 'இடைச்சியார்' என்பது ஓர் உறுப்பாகவே கொள்ளப்பட்டுள்ளது.

ஆய்ச்சியர் திருமாலைப் பாடிப் போற்றும் கூத்து, ஆய்ச்சியர் குரவை எனப்படும். மகிழ்ச்சி மிகுந்தாலும், துன்பம் மிகுந்தாலும் ஆய்ச்சியர் குரவையாடித் திருமாலைப் பரவுவது வழக்கமாகும். நா.சி.

**ஆய்தம்** தமிழ் நெடுங்கணக்கிலுள்ள 33 எழுத்துகளுள் ஒரெழுத்தாகும். இம் 33 எழுத்துகளுள் குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்னும் மூன்று எழுத்துகளும் 'சார்ந்துவரல் மரபினை' உடையவை என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். 'குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற முப்பாற்புள்ளியும்' என்னும் தொல்காப்பியத் தொடரை உரையாசிரியர்கள் இருவகையாக விளக்கியுள்ளனர். ஒன்று, 'குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தம் எனப்படும் மூன்று புள்ளி வடிவங் கொண்ட எழுத்தும்' என்பதாகும். மற்றொன்று, 'புள்ளி பெறுவதாகிய மெய் எழுத்தின் தன்மையுடைய, குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்னும் எழுத்துகளும்' என்பதாகும். முப்பாற் புள்ளி என்பதனை ஆய்த எழுத்திற்குரிய பெயராகக் கருதினால், மூன்று சார்பெழுத்துகளில் ஆய்த எழுத்திற்குத் தொல்காப்பியர் வரிவடிவம் குறிப்பிட்டுள்ளார் என்பது பெறப்படும். காண்க: ஃ.

**ஆய்வுப் பயணம்** என்பது சில புதிய இயற்கை வளங்களைக் கண்டறிவதற்கு மேற்கொள்ளும் முனைவாகும். ஆங்கிலச் சொல்லாகிய 'Exploration' என்பதற்கு முற்றாய்தல், புதிய நிலைப்பகுதி முதலியவற்றைக் கண்டறிதற்காக மேற்கொள்ளப்படும் பய

ணம், ஆய்வுப் பயணம் எனப் பொருள் கூறப்படுகிறது. ஆய்வு என்கிற தமிழ்ச் சொல்லிற்கு அகலம், அழகு, ஆராய்தல், நுட்பம், வருத்தம் எனப் பொருள் தரப்படுகிறது. ஆராய்ச்சி, ஆராய்வு, ஆராய்தல் ஆகிய வேறு சொற்களும் ஆய்வு என்னும் சொல்லிற்கு மாற்றுச்சொல்லாக வழங்கப்படுகிறது. பார்த்தல், உற்றுக் கவனித்தல், தேர்ந்து தெளிதல், ஊகத்தை மெய்ப்பிக்க முயலுதல், உண்மையைக் கண்டறிதல், மனித அறிவுக்கு மேலும் வழிகோலுதல் என்றெல்லாம் பலவாறாக ஆய்வுக்கு விளக்கம் அளிக்கப்படுகிறது. நடைமுறை வாழ்க்கையில் கூடக் கீரையை ஆய்தல் என்பதாகப் பேசப்படுகிறது. உலக மக்களின் வாழ்வியல் வளர்ச்சிப் படிகளின் ஒவ்வொரு கட்டத்திலும் ஆய்வு அடிநாதமாய் இருந்து வந்திருக்கிறது. வெளியில் தெரியாமல் இலைமறை காய் போல் இருந்து வந்த ஆய்வு, பின்பு ஓர் இயக்கமாகி இப்போது ஒரு யுகமாகவே வளர்ச்சி அடைந்திருக்கிறது. மனிதச்சமுதாயத்தின் ஆய்வுப் பயண (Exploration) வரலாற்றை ஒரு கோட்டுக்குள் அடக்குவது என்பது இயலாது. எனினும், இங்கு ஒரு சில நிலையில் சுருக்கமாய் விளக்கலாம்.

நில ஆய்வுப் பயணம்: ஆதிகால எகிப்தியர்கள் ஆய்வுப் பயணத்தைக் கருதும்போது, அவர்களது முக்கிய நோக்கமாக இருந்தது வாணிகம் என்பது புலனாகிறது. இவர்கள் நைல் நதியில் வாணிகத்தின் பொருட்டுப் பயணம் செய்தார்கள். கிரிட்டர்கள் (Cretans) இவ்வாறு நில நடுக்கடலின் (Mediterranean) மத்திய கிழக்குப் பகுதிகளை நோக்கிப் புறப்பட்டுச் சென்றார்கள். பொனீசியர்கள் (Phoenicians) இன்னும் முயன்று கி.மு. 800-இல் அட்லாண்டிக்கு நிலப் பகுதிகளுக்குக் கடல் வழியே பயணமானார்கள். வாணிகக் காரணங்களை முதலில் கருத்திற் கொள்ளாமல் காடிரில் (Gadir) ஒரு செழிப்பான குடியேற்றப் பகுதியை உருவாக்கினார்கள். நில நடுக் கோட்டுப் படுகையையும் அதனை ஒட்டிய நிலங்களையும் முறையாகக் கி.மு. முதல் மில்லினியத்தின் (First Millenium) பிற்கால எல்லை வரை கண்டறிய முயற்சி மேற்கொள்ளப்படவில்லை. எகாடன்களும் (Hecatens), எரோடாடசும் (Herodotus) அவர்கள் காலத்துப் பொதுவான நில்வியல் தொடர்பான கணக்குகளையெல்லாம் கி.மு. 6-4 ஆகிய நூற்றாண்டுகளுக்கு இடைப்பட்ட காலக் கட்டத்தில் கைவிட்டு விட்டார்கள். எனினும், அவர்கள் நிலம் தொடர்பான விவரங்களை ஓரளவு கூறியுள்ளனர். அப்படிச் சொல்லப்பட்டவற்றுள் பெரும்பாலன எப்போதும் நம்பும்படியாகவும் இருக்கவில்லை.

ஏறத்தாழ, கி.மு. 350-இல் ஆய்வுப் பயணம் அறிவியல் நோக்கங்களுக்காகத் திசை திருப்பப்பட்டது. இசுட்ராபோ (Starbo), தயோதார்ன்சு (Diodorns), பிளைனி (Pliny) போன்றோர்களால் இத்தகைய முதல் பெரும் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த ஆய்வுப் பயணம் கடல்வழியே மேற்கொள்ளப் பெற்று வெற்றியும் பெற்றது. இதற்குச் சிறிது காலத்திற்குப் பிறகு ஏற்பட்ட அலெக்சாந்தரின் படையெடுப்புகள் மேற்குப்பகுதி உலகு வரை, அதாவது தைகிரிசு (Tigirs), யூப்ரட்டீசு (Euphrates) ஆகிய நிலப் பகுதிகள் வரை நிகழ்ந்தன. இதனால் போக்குவரத்துப் பெருகி, பயணிகளும் வணிகர்களும் அந்நிலங்களைக் குறித்துத் தெளிவில்லாத – ஐயப்பாடான கருத்துகளைக் கொடுத்திருந்தனர். முன்பு அறியப்படாமலிருந்த நிலப் பகுதிகளை நோக்கிச் செல்லும் ஆய்வுப் பயணம் கி.மு. 4-3 ஆகிய நூற்றாண்டுகளிலேயே வளர்ந்திருந்தது. புதிய நிலங்கள் பல கண்டுபிடிக்கப்பட்டன. வடக்குப்பகுதிக் கடல்களில் குளிர் காலங்களில் வீசும் பனிக்காற்றைக் (Freezing of the Northern Seas) பித்தியாசு (Pytheas) கண்டறிந்தார். இதனால், நில நடுக் கோட்டுப் பகுதியிலும் பிற கடல்களிலும் எழும் பெரும் அலை வீச்சுகள் பற்றி ஆராயப்பட்டது.

நீரோ (Nero) வின் தலைமையில் கி.பி. முதலாம் நூற்றாண்டில் உரோமானியர் (Romans) நைல் நதியின் மேற்குப் பகுதியையும் எத்தியோப்பியாவின் மேட்டு நிலங்களையும் சென்றடைந்தனர். அப்போது ஆர்மீனியாவும் (Armenia) அரேபியாவின் வடமேற்குப் பகுதியும் கூட ஆய்வுக்குரியவை ஆயின. உரோமானியர் முன்னரே கடல் தீவுகளைப் பற்றி ஓரளவிற்கு அறிந்திருந்தனர். கடல் பயணங்களில் அக்கறை காட்டத் தொடங்கியதன் விளைவாகப் புதிய பயணங்கள் பல தோன்றலாயின. அவற்றுள் ஒன்று கி.பி. 83-இல் பிரிட்டனில் உரோமானிய ஆளுநராக இருந்த அக்ரிகோலா (Agricola) என்பவர் வடக்குப் பகுதிகள் தொடர்பான அரிய செய்திகளைத் திரட்டித் தமது கடற்படையுடன் அத்தீவுகளுக்குச் சென்றது ஆகும். இடைக்காலத் தொடக்கத்தில் ஆய்வுப் பயணம் ஒரு முடிவுக்கு வந்ததுபோல் தோன்றியது. ஆனால், ஆசியாவில் இந்தியாவிற்குள்ளும், சீனாவிற்குள்ளும் ஊடுருவிய அரேபியர்களால், கி.பி. எட்டு, ஒன்பதாம் நூற்றாண்டுகளில் ஒரு புதிய யுகம் தோன்றலாயிற்று. நபிகள் நாயகத்தின் அடியார்கள் சமய யாத்திரையின் பொருட்டுக் கிழக்கில் சாவா (Java) வரையிலும், தெற்கில் மடகாசுகர் வரையிலும் கி.பி. 10-ஆம் நூற்றாண்டில் பயணம் செய்தார்கள். அப்போது, பல தொலைதூர, குறிப்பிடத் தகுந்த கண்டுபிடிப்புகளுக்குக் காலம் கனிந்து வந்தது. இதற்கிடையில் கி.பி. ஒன்பது, பத்தாம் நூற்றாண்டுகளில் நார்வேக்காரர்கள் வடக்கு அட்லாண்டிக்குப் பகுதிக்கு விரிவான ஆய்வுப் பயணம் மேற்கொண்டார்கள்.

இதன்பின், கி.பி. 1450 – ஆம் ஆண்டிலிருந்து ஏறத்தாழ 150 ஆண்டுகளில், ஐரோப்பியப் பயணிகளால் உலகத்தின் பெரும்பகுதிகள் கண்டுபிடிக்கப் பட்டு, மக்கள் நாகரிகமாய் வாழக்கூடிய இடங்கள் பன்மடங்காக விரிவாக்கப்பட்டன. துருக்கியர்கள் கி.பி. 1453-இல் கான்சுடாண்டிநோபிள் என்னும் நகரைக் கைப்பற்றியதன் விளைவாய்க் கீழை நாடுகளுடன் ஐரோப்பா செய்து வந்த வாணிகம் தடைப் படலாயிற்று. அதனால், கீழை நாடுகளுக்குப் புது வழிகள் கண்டு பிடிக்கவேண்டிய தேவை ஏற்பட்டது. இந்தியாவிற்கு ஒரு கடல்பாதை கண்டு பிடிப்பதில் போர்ச்சுகல், இசுபெயின் (Spain) ஆகிய இரு நாடுகளும் மும்முரமாயின. போர்ச்சுகல் கடல் பயணத்தில் ஆர்வம் கொள்ளக் காரணமாய் இருந்தவர் 'கடற்பயண மீகான்' (Navigator) என்றழைக்கப் பட்ட அந்நாட்டு அரசர் என்றி ஆவார். அவர் மாலுமிகளுக்கான ஒரு பயிற்சிச் சாலையை நிறுவியதோடு கடலில் எழும் புயலையும் சமாளித்துக் கொண்டு செல்லக்கூடிய கப்பல்களையும் கட்டினார். ஆண்டுதோறும் அப்பயிற்சிச் சாலையில் தேர்ச்சி பெற்ற மாலுமிகள் அட்லாண்டிக்குப் பெருங்கடலில் பயணம் செய்து ஆப்பிரிக்காவின் மேற்குக் கடற்கரைப் பகுதிகளைக் கண்டுபிடித்து வந்தனர்.

பார்த்தலோமியூ தயசு (Bartholomew Diaz) என்பவரால் கண்டறியப்பட்ட நன்னம்பிக்கை முனை (Cape of Good Hope)யையும், வாசுகோட காமாவால் அறியப்பட்ட இந்தியாவையும், கிறித்தோபர் கொலம்பசால் கண்டுபிடிக்கப்பட்ட அமெரிக்காவையும், எப்போகல் (Epochal) என்பவர் சாதனைகள் உள்ளடக்கி, உலகின் பரப்பை விரிவாக்கிக் காட்டின. அதோடு, உலகம் உருண்டையானது என்னும் கோட்பாட்டில் துணிகரமான பயண முயற்சியை மேற்கொண்ட பெர்டினாண்டு மெக்கல்லனின் கண்டுபிடிப்பையும் கூட எப்போசலின் முயற்சி உள்ளடக்கிற்று. இசுபானிசு ஆய்வுப் பயணிகளான பால் டி சாடோ (Bal De Soto), கோரோனாடோ (Coronado) ஆகியோர், அமெரிக்காவின் பெரிய பகுதிகளைக் கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் கண்டறிந்தனர். சாமுவேல் டி. சாம்ப்ளைன் (Samuel de Champlain), இலா சாலி (La Salle), உலூயிசு சோலியண்ட்டு (Louis Jollient), சேக்யுசு மார்குயூட்டீ (Jacques Margeutte) போன்ற பிரஞ்சு நாட்டு ஆய்வுப் பயணிகள், கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் வட அமெரிக்காவின் பெரும்பாலான பகுதிகளைக் கண்டுபிடித்தனர்.

இசுபானிசுக்காரர்களுக்கும், போர்ச்சுகீசியர்களுக்கும் மட்டிலுமே உரிமை உடையதாய் இருந்த புதிய வாணிக வழிகள், கீழை நாடுகளுக்கு மற்றொரு வழியைக் கண்டறியும் முயற்சிகளைத் தூண்டலாயின. இதனால், வட கிழக்குக் கணவாயும், வட மேற்குக் கணவாயும் கண்டுபிடிக்கப்பட்டன. மேலும், ஏகபோக உரிமை உடைய இசுபானிசுக்காரர் போர்ச்சுகீசியர் வழிகள், விரைவிலேயே பசுபிக்குப் பெருங்கடலில் மேற்கொண்ட ஆங்கிலேயர், தச்சுக்காரர் பயணங்களால் போட்டிக்கு உரியதாயின. திரேக்கு (Drake), தாசுமான் (Tasman), தாம்பியர் (Dampier), கூக்கு (Cook), பெரிங்கு (Bering), வான் கோன்வர் (Vonconver) போன்றோராலும் மற்றவர்களாலும் மேற்கொள்ளப்பட்ட கடற் செலவுகளின் வாயிலாகப் பசுபிக்கின் பெரும்பாலான பெரிய தீவுகளும் கடற்கரைப் பகுதியும் அறியப்பட்டன. ஆசுத்திரேலியாவின் உட்பகுதி கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இடைக் காலத்தில் ஆய்வுக்குரியதாயிற்று. இதே நூற்றாண்டின் இறுதியில் இருண்ட கண்டமாகிய ஆப்பிரிக்காவின் பெரும்பகுதி ஆராய்ச்சிக்கு உட்படுத்தப்பட்டது.

**ஆர்க்டிக்கு ஆய்வுப் பயணம்:** ஆர்க்டிக்கு, அண்டார்க்டிக்கு ஆய்வுப் பயணம்20-ஆம் நூற்றாண்டில் முதன்மையான சாதனையாயிற்று. எனினும் இந்த நிலங்களைப் பற்றிய முன்னோடி முயற்சிகள் பல உள்ளன. இப்போது மார்செல்லியசு (Marscilles) என்று அழைக்கப்படும் முன்னாளைய கிரேக்கத்தில் மசிலியாவைச் (Massilia) சேர்ந்த பித்தியாசு என்பவர், ஒருகால் முதல் துருவப் (Polar) பயணி என்று கருதப்படலாம். இவர் ஏறத்தாழ, கி.மு. 320-இல் நில நடுக்கோட்டுப் பகுதியிலிருந்து பிரிட்டனுக்கும், அதனைத் தாண்டி ஆர்க்டிக்கு நிலமாகிய தூலுக்கும் (Thule) கடல் பயணம் செய்தார். தூல் ஒரு பனிப் பகுதி; ஐரிசுப் பாதிரிகள் கி.பி. 800-ஆம் ஆண்டளவில் பனிப் பகுதியில் முதன்முதலில் குடியேறினார்கள். நார்வேக்காரர்கள் பனிப்பகுதியையும், கிரீன்லாந்தையும் அடைந்து, கி.பி. 9,10-ஆம் நூற்றாண்டுகளில் அங்குக் குடியேறினார்கள்.

இதன்பின்ஆர்க்டிக்கு ஆய்வுப் பயணத்தில் இடைவெளி தோன்றியது. ஆங்கில, தச்சு வியாபாரிகளால் நின்று போயிருந்த பயணத் தொடர்பு கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் மீண்டும் புத்துயிர் பெற்றது. ஆர்க்டிக்குப் பயணத்தால் அவர்கள் வடகிழக்கு அல்லது வட மேற்குக் கணவாயினைத் தேடிக் கண்டறியும் பொறுப்புக்கு உள்ளானார்கள். இத்தகைய முயற்சியால், தூரக் கிழக்குப்பகுதியைக் கண்டறிவதற்குரிய ஆர்வத்தையும் கூடப் பெற்றார்கள். இதன் விளைவாக இலண்டனில் வீரதீர சாகசக்காரர்களின் குழு ஒன்று (Company of Merchant Adventure) நிறுவப்பட்டது. இந்த அமைப்பு, கி.பி. 1153-இல் சர் கியூ விக்கௌலி (Sir Hugh wikoughley) என்பாரின் தலை

மையில் மூன்று கப்பல்களைப் பயணப் படையெடுப்பாக அனுப்பி வைத்தது. அவர்தம் இரண்டாம் தளபதியான இரிச்சர்டு சான்சிதார் (Richard Chancethor), ஆர்க்கேஞ்சல் (Archangel) பகுதிக்குச் சென்று பின்னர், அங்கிருந்து புறப்பட்டு மண்டலம் முழுவதையும் சுற்றினார். சார் இரானைச் (Czar Iran) சந்தித்து, மிசுகோவி நிறுவனம் (Muscovy Company) ஏற்படுத்துவது தொடர்பாகவும், கி.பி. 1555-இல் அது உருசியாவுடன் வாணிகத் தொடர்பு கொள்வது குறித்தும் பேச்சுவார்த்தை நடத்தினார்.

ஆர்டிக்கைப் பற்றிய முனைப்பான ஆய்வுப் பயணம் கி.பி. 1840-இல் மீண்டும் தொடங்கிற்று. இந்த முயற்சி பிரிட்டிசு ஆய்வாளர் சர் சான் பிராங்கிளின் (Sir John Franklin) முன்னின்று நடத்திய படையெடுப்பின் மறைவிற்குப் பிறகு ஏற்பட்டதாகும். சர் சான் பிராங்கிளின் வடமேற்குக் கணவாயைக் காண்பதற்காகக் கி.பி. 1845-இல் ஆர்டிக்கிற்குப் போயிருந்தார். பிராங்கிளினும் அவருடன் சேர்ந்த 129 பேரும் காணாமற் போனதால், அவர்களைத் தேடிக் கண்டு பிடிப்பதற்காகப் பல குழுக்கள் ஆர்டிக்குப் பகுதியைப் பரிசோதனைக் களமாக்கிக் கொண்டன. ஆயினும் காணாமற் போனவர்களைக் கண்டறிவதில் அவை தோல்வி அடைந்தன. ஆர்டிக்குத் தீவுகளின் வழியே-அதாவது, கனடாவின் வடக்குப் பகுதியின் வழியே, தேடிச் சென்றவர்கள் மேற்கில் தொலைதூரம் பயணம் செய்தார்கள். உரோல்டு அமுண்டுசென் (Roald Amundsen) என்பவர் 1903-1906 ஆகிய ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் கடல்வழிப் பயணம் செய்து, பசுபிக்குப் பெருங்கடலை அடைந்தார். இவரது செயற்பாடு 400 ஆண்டுக் காலமாய் முயன்று வந்த ஆய்வின் வெற்றியாக அமைந்தது. இவரே முதன் முதல் வடமேற்குக் கணவாய்ப் பகுதிகளில் பயணம் செய்தவர் ஆவார்.

ஆர்டிக்கில் நிகழ்ந்த கண்டுபிடிப்புகள் வட துருவ முனையை அடைவதற்கு மேலும் பல முயற்சிகளைத் தூண்டிவிட்டன. அமெரிக்கா ஆய்வாளராகிய இராபர்ட்டு ஈ பியரி (Robert E.Peary) என்பவர் முன்னின்று நடத்திய ஒரு குழு, 1909-இல் வட துருவத்தைச் சென்றடைந்தது. இவரது குழுவில் மேத்தியூ ஏ. என்சன் (Mathew A. Henson) என்பாரும் நான்கு எசுக்கிமோக்களும் இருந்தனர். பியரி, தமது படையெடுப்பிலிருந்து திரும்பி வருவதற்கு ஒரு வாரத்திற்கு முன்னர், மற்றோர் அமெரிக்க ஆய்வாளராகிய பிரடரிக்கு ஏ. குக்கு (Fredrick A. Cook) என்பவர், தாம் வடதுருவத்தை ஓர் ஆண்டிற்கு முன்னதாகவே (1908-இல்) சென்றடைந்து விட்டதாகத் தம்மைப் பிரகடனப்படுத்திக் கொண்டார். விமானக் கண்டுபிடிப்புக்குப் பின்னர் ஆர்டிக்கு, அண்டார்டிக்குப் பகுதிகளில் ஆய்வு மேற்கொள்வது என்பது எளிதாயிற்று. அமெரிக்க ஆய்வாளர்கள் இரிச்சர்டு ஈ பைர்டு (Richard E. Byrd), பிளாய்டு பென்னெட்டு (Floyd Bennett) ஆகிய இருவரும் 1926-இல் நேரடியாகவே வட துருவத்திற்குப் பறந்து சென்றனர். பைர்டும் (Byrd) நார்வே-அமெரிக்கா விமானி பெர்ண்ட்டு பால்கெனும் (Bernt Balchen) 1929-இல் தென் துருவத்தின் மேல் பறந்து சென்றனர்.

**அண்டார்டிக்கு ஆய்வுப் பயணம்:** அண்டார்டிக்கு கி.பி. 1800-இன் தொடக்கத்தில் உலகில் அறியப்படாத ஒரே கண்டமாக இருந்தது. அதன் ஆய்வுப் பயண வரலாறு, தளபதி சேம்சு குக்கின் (Captain James Cook) 'தீர்மானமும், தீரச் செயலும்' (Resolution and Adventure) என்னும் கடற்பயணத்தோடு தொடங்குகிறது. இவருக்கு முன்னே கி.பி. 1772-75-இல் பௌவெட்டு (Bouvet), தால்ரிம்பிள் (Dalrymple) ஆகியோராலும், பிறராலும் தென் அட்லாண்டிக்குப் பகுதியைக் குறித்து ஆய்வுகள் மேற்கொண்டிருந்தன என்றாலும் தளபதி சேம்சு குக்கின் ஆய்வுப் பயணத்தின்போது, அவர் தென் சார்சியாவிலுள்ள தீவினைக் கண்டுபிடித்தார். உருசியக் கடற்படையைச் சேர்ந்த பெல்லிங்சு ஆன்சன் (Bellings Hansen) என்பவர் 1819-21-இல் அண்டார்டிக்குக் கண்டத்தில் ஆய்வுப் பயணம் மேற்கொண்டு தென் சேண்டுவிச்சு (South Sandwich), பீட்டர் (Peter), அலெக்சாந்தர் ஆகிய இடங்களைக் கண்டுபிடித்தார். அவர் அண்டார்டிக்கின் முதன்மை நிலத்தைப் பார்வையிட்டு இருப்பார். ஆனால், அதுவொரு நிலந்தான் என்பதை அவரால் அடையாளங் கண்டுகொள்ள முடியவில்லை. எட்வர்டு பிரான்சுபீல்டு (Edward Bransfield), நத்தானியல் பாமர் (Nathaniel Palmer) ஆகியோரின் தலைமையின்கீழ் ஒரு படையெடுப்பு கி.பி. 1820-இல் நிகழ்ந்தது. அவர்கள் இருவரும் நீர்நாய் (Seal) வேட்டைக்காரர்கள். நீர்நாய் வேட்டையில் எதிர்பாராதவிதமாய்க் கண்ணில் தட்டுப்பட்டது இந்தத் தீபகற்ப ஆய்வுப் பயணம். மேலும் நீர்நாய் வேட்டைக்காரர்களாகிய வெட்டல் (Weddell), பிசுகோ (Biscoe), கெம்ப்பு (Kemp), பெல்லினி (Beleny) போன்றவர்கள் நீர்நாய்க் குடியிருப்புப் பகுதிகளைத் தேடிச் சில இடங்களைக் கண்டுபிடித்தார்கள்.

தேசிய ஆய்வுப் பயணங்கள், தென் கண்டத்தைப் பற்றிய மனித அறிவை மேலும் வளர்த்தன. தூமாண்ட்டு டீ உர்வில்லீயின் (Dumont D' Urville), தலைமையில் நடத்தப்பட்ட கி.பி. 1837-40 கால எல்லையிலான பிரஞ்சுப் படையெடுப்பும், சார்லசு வில்கீசு (Charles Wilkes), பிரிட்டு (Brit) ஆகியோ

ரின் கீழ் இயங்கிய அமெரிக்க ஆய்வுப் பயணமும் (கி.பி. 1838-42), சேம்சு கிளார்க்கு ராசின் (James Clark Ross) தலைமையில் இராயல் சொசைட்டியின் கூட்டு முயற்சியால் அமைந்த ஆய்வுப் பயணமும் (கி.பி. 1839-43), புதிய பகுதிகளைக் கண்டுபிடித்தது டன் விக்டோரியாலாந்தையும் (Victoria land) பரி சோதித்தன. நாரிசு என்பவரின் (Nares) ஆணையோடு முதல் நீராவிக் கப்பல் அண்டார்டிக்கு வட்டத்தைக் கி.பி. 1875-இல் கடந்து சென்றது. இந்த ஆய்வுப் பயணம் கடலின் அகம், புறம் பற்றிய ஆய்வுகளுக்குப் பெரிதும் உதவிற்று. பெல்சியன் ஆய்வுப் பயணம் (கி.பி. 1897-9) செர்லாக்கியின் (Gerlache) தலைமை யில் நடைபெற்றது. திட்டமிடப்பட்ட முதல் கார் கால ஆய்வுப் பயணம், பிரிட்டில் நிகழ்ந்தது. தென் சந்திப்பு ஆய்வுப் பயணம் கி.பி. 1898-1900 ஆண்டு களில் நார்வேசியன் போர்ச்சுகிரீவிங்கின் (Norwegian Borchgrevink) கீழ்த் தோன்றிற்று.

செருமானியர் ஆய்வுப் பயணம் (1901-03), சுவிடிசு எசு. போலார் (Swedish S. Polar) ஆய்வுப் பயணம் (1901-04), இசுகாட்டுத் தேசிய அண்டார்டிக்கு ஆய்வுப் பயணம், ஆர்.எப். இசுகாட்டின் (R.F. Scott) கண்டு பிடிப்பு ஆய்வுப்பயணம் (1901-04) ஆகிய ஆய்வுப் பயணங்கள் நடைபெற்றன. இசுகாட்டு என்பார் முதல் குழுவை நடத்திச் சென்று அண்டார்டிக்காவின் உட்பகுதிகளை ஆராய்ந்தார். எட்வர்டு சாக் கில்ட்டன் (Edward Shackeltan) ஆங்கிலேய அண் டார்டிக்கு ஆய்வுப் பயணத்தை (1907-09) முன் னின்று நடத்தினார். அதில் பங்கு கொண்ட பேராசிரியர் எட்சுவொர்த்து தேவிடு (Prof. Edge-worth David) முதல் தடவையாகத் தென் காந்த துருவத்தை (South Magnetic Pole) அடைந்தார். இசுகாட்டும் அவரது குழுவும் தென் துருவத்தை 1912-ஆம் ஆண்டு சனவரி 17-ஆம் நாள் அடைந்த னர். பின்னர், அவர்கள் தம் நாடு திரும்புகையில் மாண்டனர். சாக்கில்ட்டன் (Shackleton) என்பவர் 1914-16 ஆண்டளவில் அக் கண்டத்தைக் கடக்கும் முயற்சியில் ஈடுபட்டார். ஆனால், அவரது கப்ப லாகிய எண்டியுரன்சு (Endurance) பனிக்கட்டியினால் நாசமாயிற்று.

அண்டார்டிக்காவை நன்கு கண்டறிய எடுத்த முதல் முயற்சியாக அமைந்தது 1928-29-இல் நிகழ்ந்த வில்கின்சு-கார்சட்டு (Wilkins Hearst) அண்டார்டிக் படையெடுப்பாகும். இரிச்சர்டு பைரிடு (Richard Byrd) என்பவரால் மூன்று கட்டப் படையெடுப்புகளாக முறையே 1928-30, 1933-35, 1939-41 ஆகிய ஆண்டுகளில் நடத்தப்பட்டன. பைரிடு தமது முதல் படையெடுப்பைத் தென்துருவத்தின்மீது 1929-இல் மேற்கொண்டார். மற்றொரு அமெரிக்க ராகிய இலிங்கன் எல்சுவொர்த்து (Lincoln Ells-worth) என்பவர், 1935-இல் அண்டார்டிக்கு மீது பயணம் செய்தார். இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு, பிரிட்டு அண்டார்டிக்கு ஆய்வு என்னும் இயக் கத்தின் கீழ், பிரிட்டன் ஒரு முறையான ஆய்வுப் பயண நிகழ்ச்சித் திட்டத்தினால் அண்டார்டிக்கா வின் பிரிட்டுப் பகுதியில் ஆய்வு தொடர்ந்திருக்கிறது. இந்தியக் குழு 1985-இல் நான்காம் முறையாக அண்டார்டிக்கா சென்று திரும்பியது. மீண்டும் ஆய்வுகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. காண்க: த.க. அண்டார்டிகா.

ஆழ்கடல் ஆய்வுப் பயணம்: கடல்களின் ஆழம், கடல் வாழ்வு ஆகியவற்றை அளந்தறிய முதன் முறையாக,கி.பி. 1872-இல் ஆய்வுப் பயணம் தோற்று விக்கப்பட்டது. இதே ஆண்டு இலண்டன் இராயல் கழகம் (Royal Society of London) கப்பல் போட்டி யாளர்களுக்கு (Challengers) இயந்திர உதவிகளைச் செய்து உலகத்தின் ஆழ்கடல்களைப் பற்றிய தகவல் களைச் சேகரிக்குமாறு தூண்டியது. இந்தக் கழகம் ஒரு பிரிட்டிசு அறிவியல் கழகம் ஆகும். சார்லசு வைவில்லி தாம்சன் (Charles Wyville Thomson) என்னும் இசுகாட்லாந்தைச் சேர்ந்த இயற்கைவாதி, கடல் ஆய்வுப் பயணத்திற்குத் தலைமை தாங்கினார். போட்டியாளர்கள் கடலில் மூன்றாண்டுக்கும் மேலாகச் செலவிட்டுச் சுமார் 70,000 (110,000 கி.மீ.) மைல்கள் வரை பயணம் செய்தனர். குறிப்பிடத் தகுந்த இந்தப் பயண ஆய்வு, கடலைப் பற்றிய அறிவியல் ஆய்வின் வளர்ச்சிக்கு அழைத்துச் சென்றது.

நார்வே ஆய்வாளராகிய பிரிடிக்சாட்டு நான்சென் (Fridikjot Nansen) என்பவர் எந்த ஆழத்திலிருந்தும் கடல் நீரின் மாதிரிகளை எடுப்பதற்கும் அவற்றின் வெப்பத்தை அளப்பதற்கும் உரிய கருவிகளை 1900-ஆண்டில் தொடக்கத்தில் உருவாக்கினார். வில்லியம் பீபி (William Beebe) என்னும் அமெரிக்க இயற்கை வாதி 1934-இல் பெர்முடாக் (Bermuda) கடலில் செங் குத்தாகப் பாய்ந்து மூழ்கிக் கடலினுள் அரைமைல் தூரம் சென்றார். இந்த முறையில் இவர் நீர் மூழ் கும் ஒரு பொறியைப் பயன்படுத்திக் கொண்டார். அந்தப் பொறியின் பெயர் பாத்தி இசுபியர் (Bathy Sphere) என்பதாகும். இசுவிசு (Swiss) நாட்டைச் சேர்ந்த இயற்பியல் அறிஞரான ஆங்னசு பிக்கார்டு (Angnste Piccard) என்பவர் கடல் ஆய்விற்குப் பெரு மளவில் தம் பங்களிப்பைச் செய்தார். இவர் நீர்மூழ் கும் இயந்திரமாகிய பாத்திசுகேப்பு (Bathyscaph) என்பதைக் கண்டுபிடித்தார். பிக்கார்டு (Piccard) என்பவரின் மகன் சாக்குயிசு (Jacques) என்பவரும் அமெரிக்கக் கப்பற் படையைச் சேர்ந்த தான் வால்சு (Don walsh) என்பவரும் சேர்ந்து நீர் மூழ்கும் பொறி

யாகிய திரிசுடியுடன் (Trieste) பசுபிக்குப் பெருங் கடலில் உள்ள மரியானா திரெஞ்சு (MarianaTrench) என்னும் பள்ளத்தாக்கில் 1960-இல் மூழ்கிப் பயணம் செய்தார். இந்தப் பகுதிதான் உலகிலேயே மிக ஆழ மான பகுதி என்று கருதப்படுகிறது. அவர்கள் இரு வரும் 400 அடி அடிமட்டத்தில் இருந்து 35,800 அடி ஆழத்தை எட்டினர்.

நீர்மூழ்கும் வண்டிகள் 1970-இல் கடல் தரை ஆய்வாளர்களைச் சுமந்து, பல பகுதிகளுக்கும் சென் றன. அரிய பல செய்திகளைக் கொண்டு வந்தன. இவற்றால், அறிவியல் அறிஞர்கள் கடல்களுக்கு அடி யில் வெளி உலகில் காணக் கூடியது போல மலைச் சரிவுகளும், சமவெளிகளும், பள்ளத்தாக்குகளும், எரிமலைகளும் இருப்பதை அறிந்தார்கள். கடல்துறை வல்லுநர்கள் (Oceanographers) பலவித மீன், நிலம் களைக் கண்டதோடு, இதுவரையிலும் அறியப்படாத கடல் வாழ்க்கையின் பிற கூறுகளையும் கண்டுபிடித் தார்கள். இன்று, ஆய்வாளர்கள் எண்ணெய், இயற்கை வாயு போன்ற தாதுப் பொருள்களுக்காகவும், கடல் தரையைத் தேடி ஆராய்ச்சிகள் செய்கிறார்கள். பிறர் உணவு மூலங்களாகிய விலங்குகள், தாவரங்கள் ஆகியவற்றைத் தேடுகிறார்கள். இன்னும் சிலர் பூமி எவ்வாறு உண்டானது என்பதற்குரிய தடயங்களை அறிய ஆய்வு மேற்கொண்டு வருகிறார்கள்.

விண்வெளி ஆய்வுப் பயணம்: இந்த நூற்றாண் டின் தொடக்கத்தில், விண்வெளி ஆராய்ச்சியின் வர லாற்றுச் சுவடு அடையாளங் காணக் கூடியதாய் உள்ளதென அறிவியல் மேதைகளில் பெரும்பாலோர் கருதுகிறார்கள். இந்தக் காலக் கட்டத்தில்தான் விண்வெளியில் இராக்கெட்டுகளின் பயன் பற்றிய பல முன்னோடிக் கொள்கைகள் வளர்ச்சியடைந்தன. உருசியாவின் இயற்பியல் அறிஞரான கொன்சுடா னியன் ஈ திசியோல்கோவ்சுகி (Konstanian E.Tisiol-Kousky) என்பவர் 1903-இலும் அமெரிக்க இயற்பியல் அறிஞரான இராபர்ட்டு எச். கோடார்டு (Robert H. Goddard) என்பவர் 1919-இலும் அத்தகைய கொள்கைகளை வெளியிட்டனர். செருமானிய இயற் பியல் அறிஞரான எரிமாரியனோ பெர்த்து (Heremariano berth) 1923-இல் மேலும் பல கொள்கைகளை வெளியிட்டார்.

இரண்டாம் உலகப் போரின் போது, விண்வெளி யில் பயன்படுத்தப்படும் இராக்கெட்டுகள், போருக்கு உறுதுணையாகும் வகையில் முன்னேற்றம் அடைந் தன. எடுத்துக்காட்டாக இரண்டாம் உலகப் போரில் செருமனி ஆற்றல் வாய்ந்த வி-2 ($V_2$) என்னும் இராக்கெட்டை உற்பத்தி செய்தது. இத்தகைய இராக்கெட்டுகளை அமெரிக்கா கைப்பற்றி, போருக் குப் பிறகு ஆய்வுக் கருவிகளைச் சுமந்து செல்லப் பயன்படுத்திக் கொண்டன. பின்னர், அமெரிக்காவும் உருசியாவும் ஏவுகணைகளைச் (Rocket Powered Missiles) செலுத்தும் ஆற்றல் வாய்ந்த இராக்கெட்டு களைத் தயாரித்தன. அவை கண்டம் விட்டுக் கண் டம் பறக்கக் கூடியவை. குறிப்பாக, உருசியா தயா ரித்த இராக்கெட்டுகள், 4.10.1957 அன்று வானில் பறந்து, விண்வெளி வரலாற்றில் முதல் கட்டத்தைத் தோற்றுவித்தது. அந்த நாளில் உருசியா வானவெளி யில் செலுத்திய இசுபுட்னிக்கு-1 (Sputnik-I), கோள் களின் மண்டலத்தினுள் புகுந்து பூமியைச் சுற்றிய முதற் செயற்கைக் கோள். அமெரிக்கா, தனது முதல் விண்வெளி ஆய்வுக்களமாகிய எக்சுபுளோரர்-1 (Explorer-I) என்பதை 31.1.1958 அன்று அனுப்பி யது.

பெரும்பாலான விண்வெளிச் சோதனைகள் யாவும் இயந்திரங்களினால் இயக்கப்பட்டன. வேறு வழிமுறையினால் பெற முடியாத செய்திகளைச் சந் திரன், சுக்கிரன், செவ்வாய், போன்ற கோள்களுக்கு அனுப்பி எந்திரங்களினால் திரட்டப்பட்டன. இவை போன்ற கருவிகளின் உதவியால் அறிவியல் அறிஞர் கள் சூரிய மண்டலத்தைப் பற்றியும், அண்டத்தைப் பற்றியும் அறிய முயல்கிறார்கள். உருசிய விமானப் படையைச் சேர்ந்த அறிஞர் யூரி ககாரின் (Yuri Gagarin)முதல் உலகச் சாதனையாக 12.4.1961 அன்று வாண்டோக்கு (Vontok-I) வாயிலாகப் பூமியை ஒரு தடவை சுற்றி வந்தார். வான்கோள் மண்டலத்திற் குள் சென்ற முதல் அமெரிக்கர் சான் எச். கிளென், (John. H.Glenn) தோழமை-7 (Friendship-7) என் னும் விண்வெளிக் கலம் வாயிலாக வான் கோள் மண்டலத்தை மூன்று முறை சுற்றி வந்தார்.

அமெரிக்கா சந்திரனில் மனிதனை இறக்கும் முயற்சியை 1960-இன் பிற்பகுதியில் தீவிரமாகத் தொடர்ந்து மேற்கொண்டது.அதனால் நெயில் ஏ. ஆம் சுடிராங்கு(Neil A. Armstrong), எட்வின் எ.ஆல்டி ரின் (Edwin E.A.Aldrin) ஆகிய இருவரும் சந்திரனில் 20-7-1969-இல் இறங்கி நடந்து ஆய்வுகள் செய் தனர். அடுத்த மூன்று ஆண்டுகளில் மேலும் பத்து அமெரிக்கர்கள் சந்திரனுக்குச் சென்று வந்தனர். அமெரிக்கா தன் முதலாம் வானவெளி ஊர்தியை (Shuttle) 1981-இல் செலுத்தியது. அது இராக்கெட் டைப் போல மேலே எழும்பி, விமானத்தைப் போல நிலத்தில் இறங்கக் கூடியது. வானமண்டலத்திற்குள் 1990-இல் ஒரு நிலையான விண்வெளி நிலைய மொன்று உருவாக்கும் திட்டம் செயற்பட்டு வரு கிறது. அதற்கு, இந்த ஊர்தி, பயணிகளை அங்கு ஏற்றிச் செல்லவும், சரக்குகளைக் கொண்டு போக வும் பயனாகும் முறையில் முயற்சி நடைபெறு கிறது. எப்படியும் கி.பி. 2000-த்திற்கு முன்பாக,

அமெரிக்கா அல்லது உருசியா அல்லது இரண்டு நாடுகளும் விண்வெளிப் பரப்பில் முதல் குடியிருப்புப் பகுதிகளை ஏற்படுத்தி விடலாம் என்று அறிவியல் அறிஞர்கள் சிலர் நம்புகிறார்கள். இவை போன்ற திட்டங்கள் மேலும் பல புதிய கண்டுபிடிப்புகளைத் தோற்றுவிக்க வாய்ப்புகளை ஏற்படுத்தும். வி.எ.

**ஆய்வுமுறை ஒலியியல்** என்பது, மொழிகளுக்குரிய ஒலிகளை ஆராய மேற்கொள்ளும் ஆய்வு முறைகளுள் ஒன்று. பேச்சொலிகளை இயந்திரங்களின் உதவியைக் கொண்டு செயற்கையாகப் பிறப்பிக்கும் முறையை ஒலியியலார், செய்முறை ஒலியியல் (Experimental Phonetics) என்றும், ஆய்வுக் கூடத்தில் கருவிகளின் துணைக்கொண்டு அறிவியல் அடிப்படையில் பேச்சொலிகளை ஆய்ந்தறியும் முறையைப் பொறி ஒலியியல் (Instrumental Phonetics) என்றும் குறிப்பிடுவர். இக்கட்டுரையில் ஆய்வுக் கூடத்தில் இயந்திரங்களின் உதவியைக்கொண்டு பேச்சொலிகளை ஆயும் முறையையே ஆய்வுமுறை ஒலியியல் என்று கொண்டு விளக்கப்படுகிறது.

பேச்சொலிகள் மனிதனின் பேச்சுப் பொறியால் (Vocal Apparatus) பிறப்பிக்கப்படுகின்றன. பிறப்பிக்கப்படும் இவ்வொலிகள் நம்மைச் சூழ்ந்துள்ள காற்றில் ஒலியலைகளாகப் பரவுகின்றன. காற்றின் வாயிலாகப் பரவும் ஒலியலைகள் மனிதனின் செவிப் பறையைத் தாக்கி அதனை அதிரச் செய்கின்றன. இவ்வதிர்வு உணர்வு நரம்புகளின் வழியாக மூளையை அடைந்து, அங்கு ஒலிகளாக உணர்ந்தறியப் படுகின்றன. பேச்சொலிகளை அவற்றின் பிறப்பு (Production), இயக்கம் (Propagation), உணர்வு (Perception) ஆகியவற்றின் அடிப்படையில் ஆராயலாம். பேச்சொலிகள் எவ்வாறு பிறக்கின்றன? அவை பிறப்பதற்குக் காரணமாக உள்ள உறுப்புகள் யாவை? அவ்வுறுப்புகள் எவ்வாறு இயங்குகின்றன? அவ்வியக்கங்களால் மூச்சுக்காற்று எந்நிலையில் தனிப்படுத்தப்படுகிறது என்பனவற்றைப் பற்றி அறியப்படுவனவே பேச்சொலிகளின் பிறப்புப்பற்றி அறியவேண்டிய செய்திகள். இவற்றை ஆய்ந்தறியும் பகுதி பேச்சொலிப் பிறப்பியல் (Articulatory Phonetics) ஆகும். காற்றில் மிதந்து செல்லும் ஒலியலை குறிப்பிட்ட பேச்சொலியின் தன்மைக்கு ஏற்ற அதிர்வு (Frequency), அலைவீச்சு (Amplitude), அலையமைப்பு (Wave Shape) ஆகியவற்றைப் பெற்றிருக்கும். இவற்றை ஆய்ந்தறியும் பகுதி பேச்சொலி இயக்கவியல் (Acoustic Phonetics) ஆகும். காற்றில் மிதந்து வரும் ஒலியலைகள் செவிப்பறையைத் தாக்குகின்றன. இதனால் செவிப்பறை அதிர்வடைகிறது. இவ்வதிர்வுகள் நடுச்செவிப்பகுதியில் உள்ள நுண்ணெலும்புகளை இயக்குகின்றன. இவ்வியக்கங்கள் உட்செவியில் உள்ள உணர்வு நரம்புகளின் வாயிலாக மூளையின் ஒலியுணர்வுப் பகுதியை அடைந்து ஒலிகளாக உணரப்படுகின்றன. இவற்றைப்பற்றிப் பேசும் பகுதி ஒலியுணர்வியல் (Auditory Phonetics) எனப் படும்.

ஒலிப்பிறப்பியல், ஒலி இயக்கவியல், ஒலியுணர்வியல் ஆகியவை அனைத்தையுமே ஆய்வுமுறை அடிப்படையில் ஆய்ந்தறியத் தகுந்த பொறிகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. பிறப்பு, இயக்கம் ஆகியவற்றைப் பற்றி ஆய்வதற்கு மிகவும் நுணுக்கமான பொறிகள் உருவாக்கப் பட்டுள்ளன. இந்த அளவு ஆய்வுவளர்ச்சி ஒலியுணர்வியலில் தோன்றவில்லை. பேச்சொலிகளின் பிறப்பியல் கூறுகளை ஆராய வேண்டுமாயின், ஒலிப்பிறப்பிற்கான மூச்சுக் காற்றோட்டத்தின் திசை, அது தடைப்படுத்தப்படும் விதம், தடைப்படுத்த உதவும் உறுப்புகளின் அமைப்பு ஆகியவற்றை ஆய்ந்தறிய வேண்டும். பேச்சொலிகளின் இயக்கவியல் பற்றி அறிய வேண்டுமாயின் ஒலியின் அதிர்வு, அலைவீச்சு, அலையமைப்பு ஆகியவற்றை ஆய்ந்தறிய வேண்டும். ஒலியுணர்வியல் பெரிதும் மனஉணர்வினை அடிப்படையாகக் கொண்டுள்ளது. இதை அறிய மனித மூளை ஒலிகளை உணரும் பாங்கினைப் பற்றி அறிய வேண்டும்.

மூச்சுக் காற்றோட்டத்தின் திசை, அளவு, வேகம் ஆகியவற்றைக் கண்டறிய உதவும் கருவி அலை வரைவி (Kymograph) எனப்படும். ஒலியுறுப்புகள் இணைந்து மூச்சுக் காற்றைத் தடைப்படுத்தும்போது உள்ள அவற்றின் நிலையையும் இணையும் இடத்தையும் கண்டறிய உதவும் கருவி அண்ணவரைவி (Palatograph) எனப்படும்.

இருவகை அலைவரைவிகள் உள்ளன. ஒன்று புகை அலைவரைவி; மற்றொன்று மின் அலைவரைவி. இக்கருவிகள் தொண்டை, வாயறை, மூக்கறை ஆகிய இடங்களில், நாம் பேசும்போது மூச்சுக்காற்றில் விளையும் மாற்றங்களை அலைவடிவில் உருவாக்கித் தரும்.

இக்கருவியில் மிகவும் மெதுவாக இயங்கக்கூடிய ஓர் உருளை உள்ளது. இவ்வுருளை ஒரு மின்உந்தியால் (Electric Motor) இயக்கப்படுகிறது. இவ்வுருளைக்கு இணையாக இதனோடு மிகவும் நெருங்கிய நிலையில் ஒன்றை அடுத்து ஒன்றாக மூன்று முட்கள் பொருத்தப்பட்டுள்ளன. இம்முட்கள் ஒவ்வொன்றும் காற்றழுத்த மாறுபாட்டின் அடிப்படையில் அதிரக் கூடிய கிண்ணத்தின் மேல் பொருத்தப்பட்டுள்ள சவ்வுடன் ஒட்டப்பெற்றுள்ளன. கிண்ணத்துடன் பொருத்தப்பட்டுள்ள குழாய் ஒவ்வொன்றும் தொண்டை, வாய், மூக்கு ஆகியவற்றுடன் பொருத்தப்படும் வசதி பெற்றுள்ளன. பேசும்போது

தொண்டை, வாய், மூக்கறை ஆகியவற்றில் ஏற்படும் காற்றழுத்த மாறுபாட்டிற்கு ஏற்பக் குழாய்களில் உள்ள காற்றும் மாற்றம் பெறுமாதலால், அவற்றின் மறுமுனையில் உள்ள சவ்வுகளும் மேலும் கீழுமாக அதிரும். இவ்வதிர்வு சவ்வுகளின் மேல் பொருத்தப்பட்டுள்ள முட்களை இயக்கும். இம்முட்கள் சுற்றிக்கொண்டிருக்கும் உருளையின்மேல் பொருத்தப்பட்டுள்ள தாளின்மேல் பூசப்பட்டுள்ள கரிப்பூச்சைச் சுரண்டிக் குழாயில் உள்ள காற்றில் ஏற்படும் அழுத்த அமைப்பிற்கு ஏற்ற அலையமைப்பை உண்டாக்கும். மின்அலை வரைவியில் உள்ள முட்கள் மெல்லிய குழல்களாக உள்ளன. அவற்றின் முனைகள் காற்றின் அழுத்தத்திற்கு ஏற்ப மையை உருளையின் மீது உள்ள தாளின்மேல் தெளித்து அலைகளை உண்டாக்குகின்றன. இவ்விரு அலைவரைவிகளிலுமே காலத்தைக் கணக்கிடும் வகையில் ஒரு வளைகோட்டைக் காற்றழுத்தத்தைக் காட்டும் அலைவரைவிகளுக்கு இணையாக வரையக்கூடிய முள் ஒன்றும் இணைக்கப்பட்டுள்ளது. இதன் உதவியால் ஒலிகளை உண்டாக்கத் தேவைப்படும் காலத்தைக் கணக்கிடலாம்.

அலைவரைவியின் உதவியால் கிடைக்கப்பெறும் படங்கள் அலைவரைவு (Kymogram) எனப்படும். இப்படங்கள் பேச்சொலியின் குரல் (Voice) தன்மை, உயிர்ப்புத் (Aspiration) தன்மை போன்ற விவரங்களைத் தெளிவாகத் தரும். ஓர் ஒலி வாயொலியா மூக்கொலியா அல்லது மூக்கின ஒலியா என்பதனை அறிய உதவும். மேலும் மூக்கின் ஒலியில் மூக்கினச் சாயல் எந்த அளவு உள்ளது என்பதை அறியத் தக்க சான்றினையும் தருகிறது. ஓர் ஒலி அடைப்பொலியா அன்றி உரசொலியா என்று அறிவதோடு அடைப்புரசிகள் பற்றிய விவரத்தையும் அறிய உதவுகிறது. எல்லாவற்றிற்கும் மேலாக ஒலிகள் ஒலிக்கப் பெறும் காலத்தை மிகவும் நுணுகி அறியப் பயன்படுகிறது.

நா மேலண்ணத்தை நெருங்கி ஏற்படுத்தும் இணைப்புகளைப் படமாக்கித் தரும் கருவி அண்ண வரைவியாகும். அண்ணவரைவி மூவகைப்படும். அவை மறைமுக அண்ணவரைவி, நேர்முக அண்ண வரைவி, இயங்கண்ண வரைவி எனப்படும். முன்னிரண்டும் நா, அண்ணம் ஆகியவற்றின் இணைப்பை ஏதாவது ஒரு நிலையில் மட்டுமே தரும். எனவே இவை நிலையண்ண வரைவி எனப்படும். மூன்றாவது நா அண்ணத்தை நெருங்கி இணையத் தொடங்கும் நேரம் முதல் தேவையான இணைப்பை ஏற்படுத்தி விடுபடும் வரை, எந்த நேரத்திலும் அவற்றின் நிலையைப் படமாக்க உதவும். எனவே இது இயங்கண்ண வரைவி எனப்படும்.

மறைமுக அண்ணவரைவி நா அண்ணத்தில் படியும் இடத்தைக் கண்டறிய உதவும் எளிய ஆய்வுச் சாதனமாகும். இம்முறை ஆய்வில் செயற்கை அண்ணம் பயன்படுத்தப்படுகிறது. எனவேதான் இது மறைமுக அண்ணவரைவி எனப்படுகிறது. யாருடைய உச்சரிப்பை ஆராய வேண்டுமோ அவருடைய மேலண்ணத்தில் சரியாகப் பொருந்துமாறு மெல்லிய செயற்கை அண்ணம் ஒன்றினை ஆயத்தம் செய்து கொள்ள வேண்டும். இது பிளாசுடிக்குப் போன்ற ஒரு பொருளால் உருவாக்கப்படுவது. இதை மேலண்ணத்தில் பொருத்திக் கொண்டு பேசிப் பழகவேண்டும். மிகவும் எளிமையாகவும் இயற்கையாகவும் பேசக்கூடிய பழக்கம் வந்தபிறகு செயற்கை அண்ணத்தில் ஒட்டக்கூடிய பொடியைத் தூவியின் உதவியால் சீராகத் தூவிப் பயன்படுத்த வேண்டும். செயற்கை அண்ணத்தைப் பொருத்திக் கொண்டு ஆராயவேண்டிய சொல்லை உச்சரித்தால் நா அண்ணத்தில் படியும் இடங்களில் உள்ள பொடி துடைக்கப்பெற்றுக் குறிப்பிட்ட அவ்வொலி உண்டாகும்போது, நா அண்ணத்தில் இணையும் இடத்தின் அடையாளம் கிடைக்கும்.

நா அண்ணத்தில் படியும் இடத்தைச் செயற்கை அண்ணத்தின் உதவி இன்றிப் படமாக்கிக் கொள்ள உதவும் கருவி நேர்முக அண்ணவரைவி எனப்படும். இக்கருவியில் ஒரு நிழற்படக் கருவி, மின் விளக்கு, வாயின் உள் நுழைக்கும் அளவு அகலம் உள்ள ஒரு நீண்ட கண்ணாடி ஆகியவை உள்ளன. நிழற்படக் கருவிக்கு எதிரில் கண்ணாடி பொருத்தப்பட்டுள்ளது. வாயைத் திறந்து இக்கண்ணாடியை வாயின் உள் நாவிற்கு மேல் படியுமாறு அமைத்தால் அதில் விழும். அண்ணத்தின் நிழலைப் படம் எடுக்கும் அளவுக்கு வசதியாகக் கண்ணாடியும் நிழற்படக் கருவியும் அமைக்கப்பட்டுள்ளன. கண்ணாடியில் விழும் மேலண்ணத்தின் நிழலைப் படம் எடுக்கும் அளவிற்குத் தேவையான ஒளியைப் பெறுவதற்கு வசதியாக மின் விளக்குப் பொருத்தப்பட்டுள்ளது.

இம்முறையில், தூவியின் உதவியால் மேலண்ணத்தில் பொடியைச் சீராகத் தூவ வேண்டும். பிறகு ஆராய வேண்டிய ஒலி அடங்கிய சொல்லைத் தெளிவாக உச்சரிக்க வேண்டும். மேலண்ணத்தின் நிழல் நேராக அண்ணவரைவியில் உள்ள கண்ணாடியில் விழுவதற்கு ஏற்ற வகையில் அமையும்படி, வாயைப் பிளந்து கண்ணாடி நாவின்மேல் படிந்து அமையுமாறு வைத்துக் கொள்ளவேண்டும். இந்நிலையில் மேலண்ணம், கருவியில் உள்ள மின்விளக்கால் தேவையான அளவு ஒளிப்படுத்தப்பட்டுக் கண்ணாடியில் எதிரொளிரும். இதனை நிழற்படக் கருவியின் உதவியால் படமாக்கினால் நா அண்ணத்தில் படியும் இடம் பொடி நீக்கப்பட்டுக் காணப்படும்.

இயங்கண்ண வரைவி, மேலே குறிப்பிட்ட நேர்முக அண்ணவரைவி போன்றே உள்ளது. ஆனால்

இதனோடு பெரிய அளவிலான செயற்கை அண்ணம் ஒன்று, இதன் ஒவ்வொரு பகுதிக்கும் இணையாக அமையுமாறு மின்கம்பிகளால் இணைக்கப்பட்டுள்ளது. இச்செயற்கை அண்ணம் முழுதும் சிறுசிறு மின்விளக்குகள் பொருத்தப்பட்டுள்ளது. நா மேலண்ணத்தை நெருங்கி உண்டாக்கும் இணைப்பிற்குச் சரியான அமைப்பிற்கு ஏற்ப, இச்செயற்கை அண்ணத்தில் உள்ள மின்விளக்குகள் ஒளிபெற்றமையும். இதன் வாயிலாக ஆராய வேண்டிய ஒலியை உண்டாக்கும்போது, நா அண்ணத்தில் படியத் தொடங்குவது முதல் விடுபடும் வரை உண்டாகும் இணைப்பை அறியலாம்.

அண்ண வரைவிகள், நா மேலண்ணத்தில் படியும் இடத்தைப் படமாக்கித் தருகின்றன. இப்படங்கள் நா படிந்துள்ள இடத்தின் பரப்பு, வன்மை முதலிய இணைப்புத் தன்மைகள், நடுஇணைப்பு, மருங்கிணைப்பு ஆகிய இணைப்பு நிலைகள் ஆகியவற்றைக் காட்டும். இவற்றால் ஒலிகளின் பிறப்பு, முயற்சி, வன்மை ஆகியவற்றை அறியலாம். அண்ண வரைவிக் கருவிகளால் கிடைக்கும் படங்கள் அண்ண வரைவுகள் எனப்படும்.

இதழ் வரைவி, ஒலிகள் உண்டாகும்போது இதழ்களின் அமைப்பையும் வாயின் அங்காப்பையும் அறிய உதவும் ஓர் எளிய கருவியாகும். இக்கருவி, ஒலியை உண்டாக்கும்போது வாயின் முன், பக்க அமைப்புகளைப் படமாக்க உதவுகிறது. இப்படம் ஒவ்வொன்றும் ஒலியை உண்டாக்கும்போது வாயின் முன்னமைப்பினையும் அதை அடுத்து இருபக்கத்திலும் வாயின் பக்க அமைப்புகளையும் ஒரு சேரப் பெற்றிருக்கும். இதனால், ஒலிகள் உண்டாகும்போது உள்வாயின் புற அமைப்பினை ஒரு சேரக் காணலாம்.

பேச்சொலியின் பௌதீகத்தன்மைகளான அதிர்வு, அலைவீச்சு, அலை அமைப்பு ஆகியவற்றை அளந்தறியப் பல அரிய மின்னியக்கக் கருவிகள் (Electronic Instruments) கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் முதன்மையானவை ஊசலியக்கத் தோற்றி (Oscilloscope), ஒலிமாலை வரைவி (Sound Spectrograph), தாயி அளவி (Pitch Motor), இசையோட்டத் தோற்றி (Visipitch) ஆகியவையாகும்.

ஒலி உண்டாவதற்கு அடிப்படைக் காரணமாகிய அதிர்வின்போது ஏற்படும் ஊசலியக்கத்தை (முன் பின்னாக இயங்கும் இயக்கம்) அலைவடிவமாகக் கேத்தோடு ரே குழலில் தோற்றுவிக்கும் கருவி ஊசலியக்கத் தோற்றியாகும். இக்கருவி தொலைக்காட்சிக் கருவித் திரை (Television Screen) போன்ற அமைப்பு உடையது. இதனுடன் பொருத்தப்பட்டுள்ள ஒலி வாங்கியில் (Microphone) பேசினால், அவ்வொலிகளின் அதிர்வு, அலைவீச்சு, அலையமைப்பு ஆகியவற்றைக் காட்டும் அலைகள் இக்கருவியின் திரையில் தெரியும். இவ்வலைகளை இக்கருவியுடன் இணைக்கப்பட்டுள்ள நிழற்படக்கருவி படமாக்கித் தரும். இப்போது வந்துள்ள கருவிகள், பேச்சொலி அலைகளைத் தேவைப்படும் கால அளவுக்குத் திரையில் நிறுத்திவைத்துக் கொள்ளக்கூடிய வசதியினைப் பெற்றுள்ளன.

இக்கருவி, ஒலியின் அலை வடிவைக் காட்டுகிறது. ஒரு நொடிப் பொழுதில் எத்தனை அலைகள் உண்டாகின்றன என்பதைக் கொண்டு அவ்வொலியின் அதிர்வெண் அல்லது தாயியையும், அவ்வலைகளின் வீச்சைக்கொண்டு அவ்வொலியின் உரப்பையும், அவ்வலையின் அமைப்பைக் கொண்டு அவ்வொலியின் தன்மை (Quality) யையும் அறியலாம்.

மக்கள் பேசும்போது உண்டாகும் பெரும்பான்மையான ஒலிகள், குரல்வளை மடல் (Vocal Card) களின் அதிர்வுடனேயே பிறக்கின்றன. ஒரு நொடிப்பொழுதில் உண்டாகும் இவ்வதிர்வுகளின் எண்ணிக்கை பேச்சொலியின் தாயியையும், அதிர்வின் வீச்சு அவ்வொலியின் உரப்பையும் குறிக்கின்றன. குரல்வளை மடல்களின் அதிர்வெண்ணிக்கையைக் காட்டும் கருவி தாயி அளவியாகும். அவற்றின் அலை வீச்சின் உயரத்தைத் தெசிபிள் (db) அளவில் காட்டுவது உரப்பளவி (Intensity Meter) ஆகும். இவை இரண்டும் இசையோட்ட அளவியியல் துணைக் கருவிகளாக உள்ளன. இசையோட்ட அளவி தாயி, உரப்பு ஆகிய அளவுகளைக் கொண்ட வரைவைத் (Graph) தன்னிடம் உள்ள கேத்தோடு ரே குழலில் படமாகக் காட்டும். இவ்வரைவின் கிடை அச்சு ஒலியின் தாயியையும், நிலை அச்சு அவ்வொலியின் உரப்பையும் காட்டும்.

தொடர்களின் இசையோட்டத்தைக் (Information) கணக்கிட இக்கருவி உதவுகிறது. இக்கருவியில் உள்ள திரை இசையோட்டத்தை வரைபடமாகக் காட்டும். இவ்வரைபடத்தின் வாயிலாக ஒரு தொடரின் தாயி, உரப்பு ஆகியவற்றை எந்த இடத்தில் வேண்டுமானாலும் அறியலாம். தாயியின் எண்ணிக்கையையும் உரப்பின் சக்தி (db) யையும் இக்கருவித் திரையில் எண்வடிவில் (Digital) காணலாம்.

ஒலிமாலை வரைவி, ஒலியின் அதிர்வு, உரப்பு ஆகியவற்றை அவ்வொலியின் கால அளவிற்கு நேராகக் குறித்துக் காட்டும் கருவியாகும். இது வெப்பத்தால் இரசாயன மாற்றம் பெற்றுத் தீய்ந்து கறுப்பாகக் கூடிய ஒரு தாளில் அதிர்வெண்களை நிலை அச்சிலும், காலத்தைக் கிடை அச்சிலும், உரப்பை ஏற்ற கறுப்பு நிறத்திலும் கொடுக்கும் வரைபடத்தைத் தரும். இதனால், 2, 4 நொடிப் பொழுதளவில் ஒலிக்கும் எந்த ஒலித் தொடரையும் 28000 $H_z$ வரை அளந்து அறிவதோடு உரப்பையும் db யில் அளக்கலாம்.

ஒலிமாலை வரைவி ஒலிவரைவி என்றும் அழைக்கப்படும். இதில் ஒலிவாங்கியின் மூலம் செலுத்தப்படும் ஒலி பெருக்கப்பட்டுக் (Amplified) காந்தத் தட்டு (Magnetic Disc) ஒன்றின் விளிம்பில் பதிவு செய்யப்படும். பதிவு செய்யப்பட்ட ஒலி அதன் அதிர்வு, உரப்பு ஆகியவற்றிற்கேற்ற மின்சக்தியாக மாற்றப்பட்டு ஒரு துண்டூசியின் (Stylus) முனைவழியாகத் தீப்பொறியாக வெளிப்படும். இப்பொறிகள் தட்டின் மைய அச்சையே அச்சாகக் கொண்டு இயங்கும் ஓர் உருளையின்மேல் பொருத்தப்பட்டுள்ள வெப்ப உணர்வுத் (Heat Sensitive) தாளின்மேல் பட்டுக் குறிப்பிட்ட காலத்திற்கு எதிராக அதிர்வெண், உரப்பு இவற்றைக் கண்டறியும் வகையில் கரிப்பட்டைகளை உண்டாக்குகின்றன. இவ்வாறு கிடைக்கும் வரைவு ஒலிமாலை வரைவு (Spectrogram) அல்லது ஒலிவரைவு (Sonagram) எனப்படும்.

ஒலிவரைவுகள் ஒலியின் அதிர்வு, உரப்பு, அது நிலவும் காலம் ஆகியவற்றைக் காட்டுவதோடு பேச்சொலிக்கே சிறப்பாக அமைந்துள்ள உயிர், அடைப்பு, உரசு, மருங்கு, மூக்கினம் ஆகிய தன்மைகளையும் காட்டும். இத்தன்மைகள் ஒலிவரைவியில் கரிய அடையாளங்களாகத் தென்படும். சீரான பட்டையாகத் தோன்றும் குறிகள் உயிரொலிகளையும், வெற்றிடமாக உள்ளவை அடைப்பொலிகளையும், உயரப் போக்கில் தொடர்ச்சியாக அமைந்துள்ள குறிகள் உரசொலிகளையும், கீழ்ப்பகுதியில் தோன்றும் குறிகள் மருங்கொலி, மூக்கின் ஒலி ஆகியவற்றையும் குறிக்கும். இக்குறியீடுகள் மேற்கண்ட பிறப்பு முயற்சிகளோடு பிறப்பிடம், குரல்நிலை ஆகியவற்றை அறியவும் உதவுகின்றன.

இதுவரை கூறப்பட்ட கருவிகள் பேச்சொலிகளை ஆராயப் பயன்படுபவையாகும். இவை பேச்சொலிகளை அவற்றின் இயல்பான சூழலில் ஆராயப் பயன்படுபவை. ஆனால், இயல்பான சூழ்நிலை உள்ள ஒலிகளைச் சிலபோது செம்மையாக ஆராய முடியாது. எனவே, அவற்றைத் தனியாகத் துண்டித்து அல்லது அவை ஒலிக்கும் காலத்தை நீட்டி ஆராய வேண்டும். பேச்சொலி ஒன்றை அதன் சூழலிலிருந்து தனித்து எடுக்க உதவும் கருவிக்கு ஒலித்துணப்பி (Segmentator) என்று பெயர். இதன் உதவியால் உயிரையோ மெய்யையோ தனித்துத் துண்டித்து அதை மட்டும் ஆராயலாம். ஒரு தொடரையோ சொல்லையோ ஒலியையோ அதன் ஒலித்தன்மை கெடாமல் அது நிலவும் காலத்தை மட்டும் கூட்டவோ குறைக்கவோ செய்யலாம். இதற்கு உதவும் கருவி ஒலிவிரவி (Vary vox) எனப்படும். இது மிகவும் நுண்ணிய ஒலிகளையும் ஆராய உதவும். க.மு.

**ஆயத் தீர்வைகள்:** பொதுவாக வரிகளை இரண்டு முக்கியப் பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஒன்று நேர்முக வரி. மற்றொன்று மறைமுக வரி. மைய அரசுக்குச் சேரும் மறைமுக வரிகளுள் சுங்க வரிகளும் ஆயத் தீர்வைகளும் (Excise Duties) அடங்கும். மாநில அரசுக்குச் சேர்வன விற்பனை வரிகளும் ஆயத் தீர்வைகளுமாகும். மாநில அரசுக்குக் கீழ்க்காணும் பொருள்களின்மீது ஆயத் தீர்வைகளை விதிக்க அதிகாரம் உண்டு. சாராயம் போன்ற மதுவகைகள், கஞ்சா, அபின், கெம்பு என்னும் சணல், போதைப் பொருள்கள், மருந்து வகைகள் ஆகிய பொருள்கள் நீங்கலாக எல்லாவிதப் பொருள்களுக்கும் தீர்வை விதிக்க இந்திய அரசியல் சட்டப்படி மைய அரசுக்கு முழு அதிகாரமுண்டு. இத் தீர்வைகளை விதிக்க அரசு சில நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டுள்ளது. அவை:

1. நுகர்வோரின்மீது வரிப்பளுவைச் சுமத்தும் நோக்கில் ஆடம்பரப் பொருள்களின் உற்பத்தி மீது வரி விதித்தல்.
2. மக்கள் நலனுக்குத் தீங்கிழைக்கும் பொருள்களின் நுகர்வைக் குறைக்கும் நோக்கில் அத்தகைய பொருள்களின் மீது வரி விதித்தல்.
3. பெறுகிற நன்மையின் அடிப்படையில் வரிச் சுமையை ஏற்ற பொருள்களின் உற்பத்திமீது வரி விதித்தல்.
4. போர்க் காலங்களில் பணவீக்கம் ஏற்படும் போதும் பற்றாக்குறையுள்ள பொருள்களின் நுகர்வைக் குறைக்கவும் அப்பொருள்களின்மீது வரி விதித்தல்.

வருவாய் பெறும் நோக்கத்தோடு செய்பொருள் வரி, வருமான வரி மற்றும் ஆயத் தீர்வைகளின் வாயிலாகவரும் வருமானம்ஆகியவற்றைமைய மாநில அரசுகள் பகிர்ந்துகொள்ள நிதிக் குழு ஐந்தாண்டுக்கொருமுறை ஆய்ந்து அறிக்கை வெளியிடும். அவ்வறிக்கையின் பரிந்துரை அடிப்படையில் நிதி பகிரப்படுகிறது ஆயத் தீர்வைகளை விதிப்பதும் வசூலிப்பதும் மைய அரசின் பொறுப்பாகும். நிதிக் குழுவின் பரிந்துரையின் அடிப்படையில் இப்போது மைய, மாநில அரசுகள் முறையே 80:20 என்ற விகிதத்தில் நிதியைப் பகிர்ந்து கொள்கின்றன. இதனுடன் நிதிக் குழு, மைய அரசுக்குச் சிறப்பு ஆயத் தீர்வை, துணை ஆயத் தீர்வை போன்ற வரிகளைச் சில பொருள்களின் மீது விதித்திடவும் பரிந்துரைத்துள்ளது.

மைய அரசினால் நேர்முக வரியை மேலும் அதிகரிக்க முடியாத நிலையிலும் அரசாங்கத்திற்கு அதிக

வருவாய் தேவைப்படும்போதும் இத்தீர்வை மேலும் பல பொருட்களுக்கு விதிக்கப்படுகிறது. மோட்டார் தயர் (Tyre), தாவரப் பொருள்கள், புகையிலை, காப்பி, தேயிலை, பாக்குப் போன்ற பொருள்களுக்கு விதிக்கப்படும் தீர்வையை இதற்குச் சான்றாகக் கூற லாம். வரிவிதிப்புத் தகவல் குழு 1954-ஆம் ஆண்டில் அரசாங்கத்திற்குச் சில பொருள்களின் மீதுள்ள வரி விகிதங்களை மாற்றி அமைக்கவும், சில புதிய பொருள்களுக்கு வரி விதிக்கவும் பரிந்துரைத்தது. அதன்படி மைய அரசு 1957-58-ஆம் ஆண்டில் வரி விதிப்புத் தகவல் குழுவின் பரிந்துரைகளை ஏற்றுச் செயற்படுத்தியது. அதன் காரணமாக அரசின் வரு வாய் உயர்ந்தது. மாநில அரசுகள்1957-ஆம் ஆண்டில் துணி வகைகளின் மீதான விற்பனை வரியை நீக்க ஒப்புக்கொள்ள அதனால் உண்டான வருமான இழப்பை ஈடுசெய்ய மைய அரசு சர்க்கரை, புகை யிலை போன்ற பொருள்களின் மீது அதிகப்படியான தீர்வைகளை விதித்தது. அதேபோல் பட்டுத் துணி களின் மீதுள்ள விற்பனை வரியை நீக்கி, அதற்கு மாற்றாக ஆயத் தீர்வையை விதித்தது. இவற்றால் வரக்கூடிய வருமானத்தை, மைய மாநில அரசுகள் பகிர்ந்து கொள்ளவும் வகை செய்யப்பட்டது.

மைய அரசின் ஆயத் தீர்வை அன்றியும் சில குறிப்பிட்ட தொழில்களுக்குத் துணை ஆயத் தீர்வை கள், தொழில் வளர்ச்சியை மேம்படுத்தவும் ஆராய்ச் சியை மிகைப்படுத்தவும் விதிக்கப்படுகின்றன. சில பொருள்களுக்கு, குறிப்பாகப் பருத்தி மூட்டை ஒவ் வொன்றுக்கும், துணி வகைகளுக்குச் சதுர மீட்டர் ஒவ்வொன்றுக்குமென வரி விகிதங்களை அரசு உறுதி செய்துள்ளது. மைய அரசு தொழில்களுக்குப் பாது காப்பு அளிக்க வேண்டும் என்ற நல்லெண்ணத்தில் சில பொருள்களுக்குச் செசு (Cess) என்ற கூடுதல் தீர்வையை விதித்துள்ளது. எடுத்துக்காட்டாக இரப் பர், தேங்காய், நிலக்கரி ஆகியவற்றைக் கூறலாம். மைய அரசுக்கு ஆய வரியின் வாயிலாக வருவாய் ஆண்டுக்கு ஆண்டு உயர்ந்து செல்கிறது. ஆகவே இப் போது மைய அரசின் வருவாய் பாதிக்குமேல் ஆயத் தீர்வைகளின் வாயிலாகக் கிடைக்கிறது. ந.வ.

**ஆயிசா** (கி.பி. 614-678) இசுலாம் சமயத்தை நிலைநாட்டிய நபிகள் நாயகத்தின் மனைவி. அவ்வம் மையாரின் தந்தை அபுபக்கர், ஆயிசா கி.பி. 614-ஆம் ஆண்டில் மெக்காவில் பிறந்தார். இவர் கி.பி. 622-ஆம் ஆண்டில் மெதீனாவிற்குக் கொண்டு செல்லப் பட்டார். அங்கு இவரை நபிகள் நாயகத்திற்கு மணம் செய்விக்க உறுதி செய்யப்பெற்று, கி. பி.623-ஆம் ஆண்டில் திருமணம் நடந்தேறியது. அப்போது நபிகள் நாயகத்திற்கு 50 வயது. அவர்களுக்குப் பிள்ளைப் பேறு கிட்டவில்லை. நபிகள் நாயகத்திற்கு மனைவி யர் பலர். எனினும் இறுதி நாட்களில் நபிகள் ஆயிசா விடமே அடைக்கலம் புகுந்தார். காலிபாக்களின் ஆட்சியின்போது ஆயிசா பங்கு கொள்ளவில்லை. மெதீனாவில் அமைதியாகக் காலத்தைக் கழித்துக் கி. பி. 678-ஆம் ஆண்டில் ஆயிசா காலமானார்.

**ஆயிரத்தளி** பழையாறை என்னும் ஊரின் மறுபெயர். சோழர் அரண்மனைகள் நந்தி புரம், பழையாறை ஆகிய இடங்களில் இருந்தன. சுந்தர பாண்டியன் இங்குத்தான் வீராபிடேகம் செய்து கொண்டான். இது கும்பகோணத்திற்கு அருகில் உள்ளது. முத்தரையர் தலைநகராகிய நியமத்திலும் ஓர் அயிரத்தளி இருந்தது.

**ஆயிரவேலி அயிலூர்** காவிரியின் வடகரை யில் காட்டுப்புத்தூருக்கு அருகில் உள்ள வரலாற்றுப் புகழ்மிக்க ஊர். திருமுக்கூடலுக்கு (திருச்சி மாவட் டம்) எதிர்க்கரையில் உள்ளது. இதற்குச் சீராம சமுத்திரம், புட்பவனகாசி என்ற பெயர்களும் உண்டு. மக்கள் அயிலூர் என்றும் வழங்குவர். இவ்வூர் ஆயிர வேலி நில அளவு கொண்டிருந்தமையின் ஆயிரவேலி அயிலூர் எனப்பட்டது. நெடுஞ்சடையன் பராந்தகன் (கி.பி. 768-815) என்னும் பாண்டிய வேந்தன் இங்கே தான் அதியமான் வேந்தனை வென்று களிறுகளை யும் குதிரைகளையும் கைக்கொண்டான். இங்குப் புகழ்மிக்க வாலீசுவரர் ஆலயம் உள்ளது. இங்கு வாலி மண்இலிங்கத்தை வழிபட்டதாகக் கூறுவர். இக்கோயி லில் சோழர், பாண்டியர் கல்வெட்டுகள் உள. இங் குத் தற்பலியூட்டுச் சிற்பம் ஒன்றுளது. சீவரமங்கலச் செப்பேட்டில் இவ்வூர் குறிக்கப்பெறுகிறது. வடகரை வஞ்சி எனவும் இது சுட்டப்படுகிறது.

**ஆயுத பூசை** பாரத நாட்டில் இந்துக்கள் மேற்கொள்ளும் பண்டிகைகளுள் ஒன்று. ஆயுதம் என்னும் சொல் படைக்கலம், கருவி எனப் பொருள் படும். ஆயுதங்களுக்குப் பூசை செய்து அவற்றைச் சிறப்பிக்கும் பண்டிகை 'ஆயுத பூசை' எனப்படுகிறது.

பாரத நாட்டில் புரட்டாசித் திங்களில் கொண் டாடப்படுவது 'நவராத்திரி விழா'. இதன் பகுதி யாக இறுதியில் அமைவது, ஆயுதபூசை விழா. வீரம், கல்வி, செல்வம் ஆகிய மூன்றையும் பெண் தெய்வங் களாகப் போற்றி வழிபடுவது இந்நாட்டு மரபு. வீரத்தைக் கொற்றவை (துர்க்கை) எனவும், கல்வியை நாமகள் எனவும், செல்வத்தைத் திரு மகள் எனவும் கொண்டு நவராத்திரி விழாவில் வழி படுகின்றனர். 'கொலு' வைத்து ஒன்பது நாட்களிலும் ஆடலும்பாடலும் நிகழ்த்துவர். நாட்டில் நிலவிய தீய ஆற்றல்களை அரக்கர்களாக உருவகப்படுத்தி, அவர் களைக் கடவுளர் அழித்த நிகழ்ச்சிகளைப் புராணங் கள் விரித்துரைக்கின்றன. மக்களுக்கு எண்ணற்ற

இன்னல் விளைத்து வந்த 'மகிடாசுரன்' என்ற எருமைத்தலை அரக்கனைக் கொற்றவை - (வீர அன்னையாகிய துர்க்கை) அழித்தொழித்த நிகழ்ச்சியைக் கொண்டாடுவது 'ஆயுத பூசை விழா'. சக்தி ஒன்பது நாட்கள் கொலுவிலிருந்து பத்தாம் நாள் தன் சூலப்படையால் அரக்கனை அழித்தாள் எனக் கருதி அவ்வெற்றியை விழாவாகக் கொண்டாடுகின்றனர்.

ஆயுத பூசையன்று, ஆயுதங்களும் ஒவ்வொரு வீட்டிலும் உள்ள மரக்கால், படி, தராசு, அரிவாள் மணை, மண்வெட்டி, கோடரி போன்ற தொழிற் கருவிகளும் கொலுவில் வைத்துப் பூசிக்கப்படுகின்றன. தொழிலாளர் தங்களுக்குரிய தொழிற் கருவிகளை வைத்துப் பூசை செய்கின்றனர். இதனால் புத்துணர்ச்சியையும் புது ஊக்கத்தையும் தரவல்ல சமுதாய விழாவாக இப்பண்டிகை அமைந்துள்ளதைக் காணலாம்.

வங்காளத்தில் இவ்விழா சற்று மாறுதலுடன் நடைபெற்று வருகிறது. தஞ்சையை ஆண்ட மகாராட்டிர மன்னர் காலத்தில் வாள், வேல் முதலிய ஆயுதங்கள் பெருங்கொலுவாக வைக்கப் பெற்றுச் சிறப்பாகப் பூசிக்கப்பட்டன என்ற செய்தியை வரலாற்றுக் குறிப்புகள் கூறுகின்றன.

மைசூரில் 'தசரா'க் கொண்டாட்டம் கண்கொள்ளாக் காட்சியாக நடைபெறுகிறது. மன்னரின் 'வீர வாள்' கொலுவில் வைக்கப்பெற்று உலாவாக எடுத்துச் செல்லப்படுகிறது.

இவ்விழாவிற்கு அடுத்த நாளில் குழந்தைகளுக்குப் படிப்புத் தொடங்கல், புதுக்கணக்குத் தொடங்குதல் போன்றவை நிகழ்கின்றன. இதனை 'விசயதசமி' என்கின்றனர். பொதுவாகக் கூறுமிடத்து ஆயுத பூசை தமிழ்நாட்டு மக்களின் வீரம், கல்வி ஆகியவற்றைப் போற்றும் விழாவாகவும் சமுதாய வளர்ச்சி விழாவாகவும் அமைந்துள்ளது எனலாம். ஆ. ந.

**ஆயுதம்** என்பது பெரும்பாலும் போர்க்கருவியைக் குறிக்கும். வேல், வாள், ஈட்டி, சூலம், அரிவாள், பட்டாக்கத்தி, வில், தூண்டில், கழுமரம், கணையம் முதலியன பழங்காலப் போர்க்கருவிகளுள் சில. அன்றியும் பல்வேறு தொழிலாளர்கள் பயன்படுத்தும் கருவிகளும் ஆயுதம் எனப்படும். உளி, அரம் போல்வன எடுத்துக்காட்டு. இவை தெய்வத் தன்மை வாய்ந்தனவாகக் கருதி வீரர்களும் தொழிலாளர்களும் இவற்றிற்குப் பூசை செய்வது உண்டு. காண்க: போர்க் கருவிகள்.

**ஆயுள் அட்டவணை:** இது மக்களின் ஆயுட்காலத்தைக் கணக்கிடும் ஓர் அட்டவணையாகும். ஆயுள் அட்டவணை (Life Table) இறப்பின் நிகழ்ச்சியை விளக்கும் என்பது கிபிட்சு (Keyfitz) என்பாரின் கருத்து. ஒரே நாளில் பிறக்கும் 1,00,000 குழந்தைகளைக் கருத்தில் கொண்டு, அவை ஒரு வயதிலிருந்து அடுத்த வயதுக்குச் செல்லும்போது அவற்றில் எத்தனை இறக்கின்றன என்பதை அத்தனை குழந்தைகளும் இறக்கும் வரையில் கவனித்துக் கணக்கிட்டு இவ் அட்டவணை உருவாக்கப்படுகிறது. அறிவியல் முறையில் உருவாக்கப்பட்ட முதல் ஆயுள் அட்டவணை கி.பி. 1815-ஆம் ஆண்டில், மிலன் (Milne) என்பவரால் வெளியிடப்பட்டது. தேசிய அளவில் உருவாக்கப்பட்டு வந்த ஆயுள் அட்டவணைகள், பின்பு சில நகரங்களுக்கும், நாட்டின் இதர சில பகுதிகளுக்கும் உருவாக்கப்பட்டன. ஐக்கிய நாடுகளின் ஆண்டு மக்கள் தொகை நூல் (Population Year Book), பல்வேறு நாடுகளின் ஆயுள் அட்டவணைகளைக் கொண்டிருக்கிறது. கிபிட்சு (Keyfitz), பிலிசர் (Flieger) ஆகிய இருவரும் சேர்ந்து பல்வேறு நாடுகளுக்காக ஆயுள் அட்டவணைகளை வெளியிட்டிருக்கிறார்கள். வயது சார்புடைய இறப்பு வீதங்களில் இருந்துதான் (Age Specific Death Rates) இவ் ஆயுள் அட்டவணை உருவாக்கப்படுகிறது. இதன் உதவியோடு இறப்புநிலை (Mortality), உயிர்வாழ் நிலை (Survivorship) வாழுங் கால அளவு ஆகியவற்றை அளவிடமுடியும்.

ஆயுள் அட்டவணையின் வகைகள்: குறிப்பு ஆண்டு (Reference Year), வயதுத்தொடர்புடைய விவரங்கள் முதலிய பல்வேறு காரணிகளைப் பொறுத்து ஆயுள் அட்டவணை வேறுபடுகிறது. குறிப்பு ஆண்டைக் கொண்டு நிகழ்கால அல்லது கால ஆயுள் அட்டவணை (Current or Period Life Table) என்றும், தலைமுறை அல்லது குழு ஆயுள் அட்டவணை (Generation or Cohort Life Table) என்றும் இதனை இரண்டாகப் பிரிக்கலாம். முதல் வகை குறுகிய கால இறப்பு அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டது. இரண்டாவது, ஒரு குணத்தைப் பொதுவாகக் கொண்ட ஒரு குறிப்பிட்ட குழுமத்தின் இறப்பு அனுபவத்தை (Cohort Mortality Experience) அடிப்படையாகக் கொண்டு விளங்குவது. இவ்வகை ஆயுள் அட்டவணையின் விதிப்படி, கடைசி மனிதன் இறக்கிற வரை தொடர்ந்து வருகிற ஒவ்வொரு வயதிலும் ஒவ்வோர் ஆண்டும் உற்று நோக்கப்பட்டு எல்லா மனிதரின் இறப்பு அனுபவங்களும் கணக்கிடப்படுகின்றன. இவ்வகையைச் சேர்ந்த ஆயுள் அட்டவணை, இறப்பின் தெரிவு (Projection of Mortality) இறப்பின் போக்கு, (Mortality Trend), கருவளம் (Fertility); இனப்பெருக்கம் (Reproduction) ஆகியவற்றை அளப்பதற்கும் பெரிதும் பயன்படுகிறது.

ஆயுள் அட்டவணை, முழு ஆயுள் அட்டவணை (Complete Life Table) சுருக்கப்பட்ட ஆயுள் அட்டவணை (Abridged Life Table) என்று இரண்டாகப் பிரிக்கப்படுகிறது. முழு ஆயுள் அட்டவணையில் காணப்படும் விவரங்கள் அனைத்தும் பிறப்பிலிருந்து இறக்கும் வரை ஒவ்வொரு வயதிற்கும் கொடுக்கப் பட்டிருக்கும். சுருக்கிய ஆயுள் அட்டவணையில், அனைத்து விவரங்களும் 5 அல்லது 10 ஆண்டு வயது இடைவெளியால் பிரிக்கப்பட்ட குழுமங்களுக்காகக் காணப்படுகின்றன. பொதுவாக, முழுமையான ஆயுள் அட்டவணையைக் காட்டிலும் சுருக்கப்பட்ட ஆயுள் அட்டவணைகள்தாம் பெருமளவில் உருவாக்கப்படு கின்றன. இவ்வகை ஆயுள் அட்டவணையை உரு வாக்குவதும் எளிது. இதில் காணப்படும் விவரங்கள் பொதுவான நோக்கங்களுக்குப் போதுமானவை யாகவே இருக்கும். அது, பயன்படுத்தவும் எளிமை யானது.

ஆயுள் அட்டவணையின் எடுகோள்கள் (Assumptions of Life Table):

1. பொதுக் குண நலன்களைக் கொண்ட ஒரு குழுமம் என்பது ஒரே பாலைச் (Sex) சேர்ந்த ஒரு தகுதியான எண்ணிக்கை அளவு பிறப்பை எடுத்துக் கொள்வது. பொதுவாக ஆயுள் அட்ட வணையில் இக்குழுமத்தில் சொல்லப்படும் பிறப்பின் எண்ணிக்கை 1,00,000 ஆகும். இந்த எண்ணிக்கை அடிமூலம் (Radix) என்று சொல்லப் படுகிறது. இப்படி ஒரு குறிப்பிட்ட தகுதியான எண்ணிக்கையுடைய பிறப்பினை எடுத்துக் கொள்வதன் வாயிலாக மற்ற ஆயுள் அட்டவணை யோடு ஒப்பிட்டுப் பார்ப்பது எளிதாகிறது. ஆண்களுக்கென்றும் பெண்களுக்கென்றும் தனித் தனியாக ஆயுள் அட்டவணை உருவாக்கவும் முடியும்.
2. இக்குழுமத்தில் இடப்பெயர்வு இல்லை என்பது கொள்ளப்படுகிறது. இறப்பு மட்டுமே ஒரு காரணி. இதன் காரணமாகவே ஒவ்வொரு வயதிலும் எண்ணிக்கை குறைந்து கொண்டு வருகிறது.
3. குழுமத்தில் அடங்கும் மனிதர்கள் ஒவ்வொரு வயதிலும் முதலில் சொல்லப்பட்ட, என்றும் மாறா இறப்புப் பட்டியலின் (Mortality Schedule) படி இறக்கின்றனர்.
4. வாழ்க்கையின் முதல் சில ஆண்டுகளைத் தவிர, மீதமிருக்கும் ஒவ்வொரு வயதிலும் இறப்புச் சமமாகப் பங்கிடப்படுகிறது.

ஆயுள் அட்டவணையின் பகுதிகள் (Life Table Columns): அட்டவணை மிக முக்கியமான ஏழு அடிப்படைப் பகுதிகளைக் கொண்டிருக்கிறது:

பகுதி ஒன்று: (x—x+n) என்பது இரண்டு வயதுக்கு இடைப்பட்ட வாழுங் காலத்தைக் குறிக் கிறது (Period of life between two ages). எடுத்துக் காட்டாக, 20-25 வயது என்பது 20 (x) என்னும் பிறந்த நாளுக்கும் 25 (x+n) என்னும் பிறந்த நாளுக் கும் இடையே இருக்கும் 5 ஆண்டு இடைவெளியைக் குறிக்கிறது.

பகுதி இரண்டு: nqx – இக்குழுமத்தில், இரண்டு வயதுகளுக்கு இடையே தொடங்குகிற வயதில் (x) உயிர்வாழ்ந்து கொண்டிருப்பவர் அடுத்து முடிகிற வயதை (x+n) நெருங்குவதற்குள் இறப்ப வர்களின் எண்ணிக்கையை எடுத்துச் சொல்கிறது. எடுத்துக்காட்டாக, 20-25 வயது இடைவெளியில் ஒருவர் இறப்பதற்கான வாய்ப்பு 0.03778 என்று வைத்துக்கொண்டால் 20-ஆம் வயதிலிருக்கும் 66,659 பேர்களில் 25-ஆம் வயதைக் கடப்பதற்குள் 2518 பேர் இறக்கிறார்கள் என்லாம். வேறுவிதமாகச் சொன் னால், x என்ற வயதில் வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு மனிதன் x+n என்ற வயதை நெருங்குவதற்குள் அவன் இறப்பதற்கான நிகழ்தகவு (Probability) எவ்வளவு என்பதைக் குறிக்கிறது.

பகுதி மூன்று: lx- அட்டவணையில் அடிமூல மாக வைத்துக் கொண்ட மொத்தப் பிறப்பில் குறிப் பிடப்பட்டிருக்கும் தொடக்க இடைவெளி வயதில் (x) உயிர் வாழ்கிற மக்களைக் குறிக்கிறது. கொடுக் கப்பட்டிருக்கும் ஆயுள் அட்டவணைப்படி 1,00,000 குழந்தைகள் பிறக்கின்றன என்று வைத்துக் கொண் டால், அவற்றில் 66,659 மட்டிலுமே 20 வயதில் உயிரோடு காணப்படும்.

பகுதி நான்கு: ndx - குறிப்பிடப்பட்டுள்ள வயது இடைவெளிக்குள்ளே (x to x+n), மொத்தப் பிறப்பில் எத்தனை பேர் இறப்பார்கள் என்பதைக் குறிக்கிறது. அட்டவணையில் காணப்படுவதைப் போல் மொத்தம் பிறந்த குழந்தைகளில் 2518 இறப்புகள், 20-25 வயது இடை வெளிக்குள் நிகழ் கின்றன.

பகுதி ஐந்து: nlx - குறிப்பிடப்பட்டிருக்கும் இரண்டு வயது இடைவெளிக்குள் (x to x+n) மொத்தப் பிறப்புகளில் வாழ்பவர் ஆண்டுகளைக் (Person Years) குறிக்கிறது. அட்டவணையில் காணப் படுவதைப் போல், பிறந்த 1,00,000 குழந்தைகள் 20-25 என்ற வயது இடைவெளியில் 327,001 குழந்தை கள் வாழ இருக்கின்றனர்.

பகுதி ஆறு: Tx - குறிப்பிடப்பட்டுள்ள வயது இடைவெளியில் (x to x+n) தொடக்க வயதைக் கடந்த பிறகு குழுமத்தில் (Cohort) எடுத்துக்கொள் ளப்பட்டிருக்கும் 1,00,000 குழந்தைகள் மொத்த

அட்டவணை — 1

இந்திய மகளிர்க்கான சுருக்கப்பட்ட ஆயுள் அட்டவணை

| இரண்டு குறிப்பிட்ட வயதுகளுக்கு (x to x+n) இடையிலான வாழ்க்கைக் காலம் | தொடக்க வயதில் (x) வாழ்பவர் அடுத்த வயதைக் (x+n) கடப்பதற்குள் அவர்களுக்கு நிகழவிருக்கும் இறப்பு வாய்ப்பு | தொடக்க வயது இடைவெளியில் (x) வாழ்பவர் | இரண்டு வயது இடை வெளிக்குள்ள இறப்பவர் (x—x+n) ஆண்டுகள் | இரண்டு வயது இடை வெளிக்குள் (x to x+n) வாழ்பவர் ஆண்டுகள் | இரண்டு இடை வெளி வயதுக்குள், தொடக்க வயதைக் (x) கடந்த பிறகு மொத்த ஆண்டுகள் வாழும் மொத்தப் பிறப்புகள் | இரண்டு வயது இடைவெளியில் (x to x+n) தொடக்க வயதில் (x) மனிதனின் மீதமுள்ள சராசரி வாழ்க்கைக் காலம் |
|---|---|---|---|---|---|---|
| (x—x+n) | (nqx) | (lx) | (ndx) | (nlx) | (Tx) | (e°x) |
| 0—1 | .17189 | 100,000 | 17189 | 87,968 | 4,068,488 | 40.68 |
| 1—5 | .11509 | 82,811 | 9531 | 312,182 | 3,980,520 | 48.07 |
| 5—10 | .03015 | 73,280 | 2209 | 360,878 | 3,668,288 | 50.06 |
| 10—15 | .02976 | 71,071 | 2115 | 350,068 | 3,307,410 | 46.54 |
| 15—20 | .03331 | 68,966 | 2297 | 339,038 | 2,957,342 | 42.89 |
| 20—25 | .03778 | 66,659 | 2518 | 327,001 | 2,618,304 | 39.28 |
| 25—30 | .04249 | 64,141 | 2725 | 313,893 | 2,291,303 | 35.72 |
| 30—35 | .04805 | 61,416 | 2961 | 299,703 | 1,977,410 | 32.20 |
| 35—40 | .05536 | 58,465 | 3237 | 284,233 | 1,677,707 | 28.70 |
| 40—45 | .06524 | 55,228 | 3603 | 267,133 | 1,393,474 | 25.23 |
| 45—50 | .07948 | 51,625 | 4103 | 247,868 | 1,126,341 | 21.82 |
| 50—55 | .10032 | 47,522 | 4767 | 225,693 | 878,473 | 18.49 |
| 55—60 | .13152 | 42,755 | 5623 | 199,718 | 652,780 | 15.27 |
| 60—65 | .19015 | 37,132 | 7061 | 168,008 | 453,062 | 12.20 |
| 65—70 | .25793 | 30,071 | 7756 | 130,966 | 285,054 | 9.48 |
| 70+ | — | 22,315 | — | 154,088 | 154,088 | 6.91 |

*ஆதாரம்:* **J.P. Sinha and S. Lahiri as given in Asha A. Bhende and Tara Kanitkar, "PRINCIPLES OF POPULATION STUDIES" Himalaya Publishing House, Bombay 1982.**

ஆண்டுகள் வாழ இருப்பதைக் குறிக்கிறது. அட்ட வணைப்படி, 20-ஆம் வயதைக் கடந்த பிறகு 2,618,304 குழந்தைகள் வாழ்வார்கள்.

**பகுதி ஏழு:** e°x – குறிப்பிடப்பட்டுள்ள இடைவெளியின் தொடக்க வயதில் (x) வாழும் ஒருவரின் மீதமிருக்கும் சராசரி ஆயுட் காலத்தைக் குறிக்கிறது. இதனை ஒருவர் வாழக்கூடிய அல்லது எதிர்பார்க்கக்கூடிய ஆயுட் காலம் (Expectation of life) எனக் கூறலாம். அட்டவணை தெரிவிப்பதைப் போல், 20-ஆம் பிறந்த நாளை அடையும் ஒரு மனிதனின் சராசரி ஆயுட்காலம் 39.28 ஆண்டுகளாக இருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

ஆயுள் அட்டவணையில் என்னென்ன பகுதிகள் காணப்படுகின்றனவோ அவை அனைத்தையும் சுருக்கப்பட்ட ஆயுள் அட்டவணையில் காணலாம். ஆனால், ஆயுள் அட்டவணையில் உள்ள qx, dx, lx எல்லாம் ஒரு வயது இடைவெளிக்காகக் கொடுக்கப்பட்டவை. மற்றவை lx, Tx, e°x அனைத்தும் இரண்டு ஆயுள் அட்டவணைகளிலும் ஒன்றுதான். qx மதிப்புகளை வைத்துக்கொண்டு ஒரு வரைபடம் (Graph) வரைந்தால் அது ஆங்கில எழுத்து 'U' வடிவத்தில் அமைவதைக் காண முடியும். இவ்வடிவம் மிக இளம் வயதிலும் மிக முதிர்ந்த வயதிலும் நிகழும் மிகுதியான இறப்பைக் குறிக்கிறது.

**வாழும் காலமும் வாழ்நாள் எதிர்நோக்கும்:** வாழும் காலம் (Life Span) என்பது பிறப்புக்கும் இறப்புக்கும் இடைப்பட்ட காலத்தைக் குறிக்கும். வாழும் காலத்தை வயது வாயிலாகவே குறிப்பிட முடியும். வாழும் காலத்தைப் பொறுத்தமட்டில் இறக்கும் வயது மனிதனுக்கு மனிதன் வேறுபடுகிறது. ஒரு மனிதன் எவ்வளவு நாட்கள் வாழமுடியும் என்ற எதிர்பார்ப்பைக் கூறுவது வாழ்நாள் எதிர்நோக்கு (Life Expectancy) எனப்படும்.

**ஆயுள் அட்டவணை வடிவமைத்தல்:** பிறப்பு, இறப்பு, மக்கள்தொகை ஆகியவை தொடர்புடைய விவரங்கள் நிறைவுடன் கிடைக்கும்போது மட்டிலுமே ஆயுள் அட்டவணை அமைக்க இயலும். புள்ளி விவரங்களில் பின்தங்கி இருக்கும் நாடுகளுக்காக மாதிரி ஆயுள் அட்டவணை அமைக்கப்படுகிறது. பிறப்பு, இறப்பு, மக்கள்தொகை ஆகியவை தொடர்புடைய விவரங்கள் உண்மையானவை என்ற அடிப்படையில் ஆயுள் அட்டவணை அமைப்பதற்குக் கணித சூத்திரங்களும் மக்கள்தொகைச் செயல்முறைகளும் (Demographic Procedures) பயன்படுத்தப்படுகின்றன. ஆயுள் அட்டவணை அமைப்பதில் சிறப்பாக ஒன்றைக் கருத்தில் கொள்ளவேண்டும். பயன்படுத்தப்படும் புள்ளி விவரங்களில் தவறுகள் இல்லாதவாறு அவை ஆய்வு செய்யப்பட வேண்டும். ஆயுள் அட்டவணை உருவாக்கத்திற்குத் தேவையான முறையைத் தேர்ந்தெடுப்பது, தொடர்புடைய விவரங்கள் எந்த அளவிற்குப் போதுமானவையாகவும் விரும்பத்தக்கனவாகவும் உள்ளன என்பதைப் பொறுத்தது.

**ஆயுள் அட்டவணையின் பயன்கள்:** 1. ஆயுள் அட்டவணை இறப்புப் பகுப்பாய்வில் (Mortality Analysis) பெருமளவில் உதவுகிறது. ஒரு நாட்டின் மக்கள் தொகையில் இறப்பு நிலையை அளக்கப் பயன்படுகிறது. ஒவ்வொரு பிறந்த தேதியை அடையும்போதும் ஒரு குறிப்பிட்ட மக்களில் எத்தனை பேர் உயிர் வாழ்வதற்கான வாய்ப்புள்ளது என்பதைத் தெரிவிக்கிறது. மனிதன் பிறக்கும்போது அவன் சராசரியாக எவ்வளவு காலம் வாழ்வான் என்ற எதிர்பார்ப்பை அறுதியிட்டுக் கூறுகிறது.

இது நாடுகளுக்கிடையே தத்தம் இறப்பு நிலையை ஒப்பிட்டுப் பார்க்க உதவுகிறது. இதன் காரணமாக நாட்டின் பொதுவான நல்வாழ்வு நிலையை அறிய முடியும். ஆயுள் காப்பீட்டுக் கழகங்கள், இந்த அட்டவணையின் அடிப்படையில் தங்கள் காப்பீட்டாளர்களுக்கான கட்டணத்தைக் கணக்கிடுகின்றன.

2. அடிப்படைப் புள்ளி விவரங்கள் (Vital Statistics) வழங்கும் பதிவேடுகளை ஆழ்ந்து பார்ப்பதற்கு ஆயுள் அட்டவணை உதவுகிறது. இதன் வாயிலாகக் கணக்கிடப்படும் வெவ்வேறு விகிதங்களைக் கொண்டு உண்மையில் பதிவு செய்யப்பட்ட பிறப்பு, இறப்பு விகிதங்களோடு ஒப்பிட முடியும். பிறப்பு இறப்புத் தொடர்பான புள்ளி விவரங்களை வழங்கும் பதிவேடுகள் எந்த அளவிற்கு நம்பத்தக்கனவாக உள்ளன என்பதை அறிய முடியும். பெரும்பாலான பின்தங்கிய நாடுகளில் பெருமளவில் பிறப்பும் இறப்பும் பதிவு செய்யப்படாமலிருப்பது ஒரு பெருங் குறையாகத் தெரிகிறது. இதனைக் குறைவுப்பதிவு (Under Registration) என்று சொல்லுவர். ஆயுள் அட்டவணை வாயிலாகப் பெறப்படும் இறப்பு வீதத்தைப் பதிவு செய்யப்பட்ட இறப்பு வீதத்தோடு ஒப்பு நோக்கி, எத்தனை விழுக்காடு அளவிற்குக் குறைவுப் பதிவு நிகழ்ந்துள்ளதென்பதை அறியமுடியும்.

3. மாதிரி ஆயுள் அட்டவணையின் உதவியால் இறப்புத்தொடர்பான புள்ளி விவரங்களின் தரத்தைச் சோதித்துப் பார்க்க இயலும்.

4. நிகழும் இறப்புகளை அவற்றின் காரணங்களோடு ஒப்பிட்டுப் பகுத்து அறிந்துகொள்ள ஆயுள் அட்டவணை உதவுகிறது.

5. கருவளம், இனப்பெருக்கம் ஆகிய

வற்றின் தொடர்பாகவும் ஆயுள் அட்டவணை உதவுகிறது. குறிப்பிட்ட வயதுச் சார்புடைய இறப்பு விகிதத்தை ஆயுள் அட்டவணையின் உயிர் வாழ் வீதத்தோடு (Survival Rate) சேர்த்து நிகர இனப் பெருக்க வீதம் (Net Reproduction Rate) கணக்கிடப் படுகிறது. ஒரு நாட்டு மக்களின் வயது அமைப்பைப் (Age Structure) பகுத்தாய்வதற்கும் மாறுபடும் மக்கள் தொகையைப் பற்றிப் படிப்பதற்கும் உதவி புரிகிறது.

6. உயிர்வாழ் வீதத்தின் வாயிலாக மக்கள் தொகையில் வயது வாரியாக இடம் பெயர்வோர் எண்ணிக்கையைக் கணிக்க இயலும்.

7. ஆயுள் அட்டவணையில் கிடைக்கும் வெவ்வேறு விகிதங்களைக் கொண்டு, எதிர்கால மக்கள் தொகை அளவினைக் கணிப்பதோடு அவர்கள் எந்தெந்த வயதுகளில் இருப்பார்கள் என்பதையும் முன் கூட்டியே கணக்கிட இயலும்.

8. ஆண்களுக்கென்றும் பெண்களுக்கென்றும் தனித் தனியாகக் கிடைக்கும் ஆயுள் அட்டவணைகளின் வாயிலாகக் கூட்டு உயிர்வாழ் வீதம் (Joint Survival Rate) கண்டறிய முடியும். இவ்வீதத்தின் அடிப் படையில் எத்தனை பேர் விதவைகள் ஆவதற்கான வாய்ப்புள்ளது என்பதையும் அறிய முடியும்.

9) பன்மடங்குக் குறைவு ஆயுள் அட்டவணையின் (Multiple Decrement Life Table) உதவியோடு மக்களின் சமுதாய, பொருளாதார குண நலன்களைப் பற்றிப் பகுத்தறிய முடியும். செயல்முறை ஆயுள் அட்டவணைத் (Working Life Table) தொழிலாளர் பங்கு கொள் வீதங்கள் (Labour Force Participation Rate) வெவ்வேறு வயது இறப்பு வீதத் தோடு சேர்த்து உருவாக்கப்படுகின்றன. இந்த ஆயுள் அட்டவணை, ஒவ்வொரு வயதுத் தொடக்கத்திலும் தொழிலாளர் பங்குகொள் வீதங்களையும் உயிர் வாழ்பவர்கள் வேலை செய்ய எதிர்பார்க்கப் படும் ஆண்டுகளையும் சராசரியாக மீதமுள்ள மிகச் சுறுசுறுப்பாக இயங்கமுடியாத ஆண்டுகளையும் கணக்கிட உதவிபுரிகிறது. பள்ளி ஆயுள் அட்டவணை (School Life Table), பள்ளிப் பதிவு வீதத்தை (School Enrolment Rates) இறப்பு வீதத்தோடு ஒன்று சேர்த்து உருவாக்கப்படுகிறது. இதன் வாயிலாகச் சராசரி ஆண்டுப் பள்ளி வாழ்க்கையை மொத்த மக்கள் தொகைக்கும் பள்ளிகளில் பதிவு செய்யப்பட்டவர்களுக்கும் கணக்கிட முடியும்.

10) ஆயுள் அட்டவணை குடும்ப நலத் திட்டத்தைப் பற்றிய மதிப்பீடு செய்வதற்குப் பயன்படுகிறது. குடும்ப நலத் திட்ட முறைகளின் பயனாக்கத் தைக் (Use Effectiveness) கணக்கிட முடியும். குடும்ப நலத்திட்ட முறைகளில் ஒன்றான கருத்தடை வளையத் (Loop)தின் தொடர் வீதம் (Continuation Rate) அறிதல் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். மேலும், ஆயுள் அட்டவணை மலட்டுத் தன்மை (Sterility), குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்ட இணக்கம் பற்றிக் கருத்தறியவும் உதவுகிறது. எத்தனை பிறப்புகள் குடும்ப நலத்திட்ட முறைகளின் வாயிலாகத் தவிர்க்கப்படுகின்றன என்பதைக் கணக்கிட ஆயுள் அட்டவணையில் காணும் உயிர்வாழ் வீதம் பயன்படுகிறது. எஸ்.இரா.

துணை நூல்கள்:

Bhende A. Asha & Tara Kanitkar, Principles of Population Studies, Himalaya Publishing House, Bombay, 1982.

Mishra D. Bhaskar, An Introduction to the Study of Population, South Asian Publishers Private Limited, New Delhi, 1980.

Raj Hens, Fundamentals of Demography, Surjeet Publications, Delhi, 1981.

Shrivastava, A Text Book of Demography, Vikas Publishing House, Private Limited, New Delhi, 1985.

***ஆயுள் காப்பீட்டுக் கட்டணக் கணக்கிடும் செயல்முறையும்:*** ஆயுள் காப்பீடு மக்களின் நல்வாழ்வுக்கு வழி வகுக்கும் திட்டங்களுள் ஒன்று. மனிதனின் அன்றாட வாழ்வில் அவனுடைய தேவைகளுள் ஒன்றாக இணைந்து கலந்துவிட்ட இந்த ஆயுள் காப்பீட்டில் சில அடிப்படைக் கோட்பாடுகள் உள்ளன. மனித வாழ்வு நிலையில்லாத ஒன்று; வாழுங்காலத்தில் தோன்றுகிற இடர்ப்பாடுகள் பற்பல; அந்த இடர்ப்பாடுகளினால் நேரும் இழப்பு அளவிட முடியாதது. சிற்சில சமயங்களில் அவ்வாறு நேரும் இழப்பு மிக மிகக் கொடுமையானதாகவும் இருக்கக் கூடும். இவ்வாறு 'நிலையாமை' என்பது நிலைத்துவிட்ட வாழ்க்கைப் பாதையில் அவ்வப்போது தோன்றும் 'எதிர்பாரா நிகழ்ச்சிகள்' எத்தகைய மாற்றங்களை உண்டாக்கும் என்றோ, எத்தகைய இழப்புகளைத் தோற்றுவிக்கும் என்றோ எவராலும் கூற முடியாது. ஒருவன் எத்துணையாண்டுக் காலம் நிச்சயமாக வாழ்வான் என்றும், அவன் எப்போது இறப்பான் என்றும் யாராலும் கணிக்க முடியாது. ஆகவே, அறிவும் சிந்தனையும் கொண்ட ஒவ்வொருவரும் தமக்கு எந்நேரத்திலும் நேரவிருக்கக் கூடிய இறப்பு நேருமானால், அதனால் தோன்றக் கூடிய பேரிழப்புக் காரணமாகத் தம் குடும்பத்தினர் வறுமையுற்றுத் தவிக்காமல் இருக்கும் பொருட்

டுச் சில முன்னேற்பாடுகளை முன்கூட்டியே செய்து கொள்ளல் வேண்டும் என்று விரும்புவது இயல்பு. இந்த நேரத்தில்தான், காப்பீட்டின் (Insurance) தேவையும் இன்றியமையாமையும் நன்கு புலப்படும். இறப்பினால் நேரும் இழப்பு, குடும்பத்தாரை நேரடியாகத் தாக்கும்போது, அத்தாக்குதலினின்று தன்னைக் காத்துக் கொள்ள மனிதன் தேடுவதுதான் காப்பீடு.

இவ்வாறு நேரக்கூடிய பேரிழப்பினின்று ஓரளவு வசதியாகத் தன் குடும்பத்தைக் காத்துக் கொள்வதற்கு ஒரு தொகை தேவைப்படும். இத்தொகையினை ஒருவர் தனித்து நின்று சேமித்துக் கொள்வதோ ஈடு செய்வதோ இயலாத ஒன்று. ஆகவே இத்தொகையினைப் பலர் சேர்ந்து, தங்களுக்குள் பங்கிட்டுக் கொள்ளும் ஓர் எளிய முறையே ஒவ்வொரு காப்பீட்டுத் திட்டத்தின் அடிப்படையான கூறாகும். இதனையே, வேறொரு வகையிலும் விளக்கலாம். ஒருவர் அல்லது ஒரு சிலருக்கு நேரக்கூடிய குறிப்பிட்டுச் சொல்ல முடியாத பேரிழப்பின் போது (இறப்பு) தேவைப்படும் தொகையினை, ஈடு கட்டுவதற்குப் பலர் ஒன்று சேர்ந்து ஒரு குறிப்பிட்ட சிறிய அளவு தொகையினைச் (Premium) செலுத்துவதற்கான ஏற்பாட்டினைச் செய்வது காப்பீட்டுத் திட்டம் ஆகும். ஆகவே, காப்பீட்டின் முதன்மையான, அடிப்படைக் கூறு, அந்தச் சிலரிடையே செயற்படுகிற கூட்டுறவே! ஆகவே, இக்காலச் சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு, ஆயுள் காப்பீட்டின் தேவையை உணர்த்தும் சில அடிப்படைக் கூறுகள் வருமாறு:

அ. குடும்ப வாழ்க்கை வருவாயை அடிப்படையாகக் கொண்டது. உணவு, உடை, உறையுள் உட்பட அனைத்துக்கான செலவினங்களையும் ஈடுசெய்ய வருவாய் தேவை.

ஆ. நாள்தோறும் வருவாயைப் பொறுத்தே குடும்பத்தின் வருவாய்நிலை அமைகிறது. எல்லோருமே தங்கள் முன்னோரின் சொத்துகளைக் கொண்டு வாழும் வாய்ப்பினைப் பெற்றிருக்க முடியாது. ஆகவே, ஒவ்வொருவரும் தத்தம் வருவாயை நம்பியே வாழ வேண்டியிருக்கிறது.

இ. வருவாய் ஒரு குறிப்பிட்ட காலத்தில் நின்றுவிடும். முதுமை காரணமாக ஓய்வு மேற்கொள்ளும் போது அதுவரை கிடைத்துவந்த வருவாய் தடைபடும்.

ஈ. ஆகவே அறிவுள்ள மனிதன் தொடக்கத்திலிருந்தே சேமிக்கிறான்; வருங்காலத் தேவைகளை நினைவில் கொண்டு, அத்தேவைகளுக்குத் தக்க ஏற்பாடுகளைச் செய்து கொள்ளும் நோக்கத்துடன் சேமிக்கத் தொடங்குகிறான்.

உ. அன்றாட வருவாய் நின்றுவிடும்போது, இவ்வாறு அவன் சேமிக்கும் தொகையே அவனுக்குப் பிற்காலத்தில் புதிய வருவாயினை அளித்து உதவுகிறது. அதாவது, அவன் எதிர்பாரா வண்ணம் திடீரென்று ஒரு வேளை இறக்க நேர்ந்தால், அவனுடைய குடும்பத்துக்கு உடனடியான பாதுகாப்பினை அளிப்பது இத்தகைய் சேமிப்பினால் பெறக்கூடிய ஆயுள் காப்பீடே.

இவ்வாறாக, இளமைக்கால இறப்பு, முதுமைக் கால ஓய்வு போன்று மனித வாழ்க்கையில் தோன்றும் தவிர்க்க முடியாத சில நிகழ்வுகளின்போது, அவனுக்கோ அவனுடைய குடும்பத்தாருக்கோ ஏற்படும் பொருளாதாரச் சிக்கல்களையும் இழப்புகளையும் ஓரளவு தீர்த்து ஈடுகட்டுவதே ஆயுள் காப்பீட்டின் அடிப்படையான நோக்கமும் கொள்கையும் ஆகும். இந்த அடிப்படை நோக்கத்தைக் கருத்தில் கொண்டே, ஆயுள் காப்பீட்டின் பல்வேறு வகையான திட்டங்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

**ஆயுள் காப்பீட்டின் பலவகைத் திட்டங்கள் தோன்றிய முறை:** தொடக்கக் காலத்தில், ஆயுள் காப்பீடு அப்போதைக்கான காப்பீடாக (Temporary Assurance-குறுகிய கால அளவிலான ஒப்பந்தமாக) வடிவெடுத்தது. பின்னர்க் கி.பி. 19–ஆம் நூற்றாண்டு முடிவுவரை ஆண்டு தோறும் ஒரு குறிப்பிட்ட தொகையினை ஆயுட்காலம் முழுவதும் தொடர்ந்து செலுத்துவோருக்கு முழு ஆயுட்காப்பு (Whole Life Policy) வழங்கப்பட்டது. இந்த இரண்டு திட்டங்களிலும், இறப்பின்போது மட்டுமே பணம் வழங்கும் ஏற்பாடு அமைந்திருந்தது. இவற்றுள் இரண்டாவதாகக் கூறப்பட்ட ஆயுள் முழுமைக்கான ஒப்பந்தம், எதிர்பாராத இறப்பு நேருவதால் குடும்பத்தாருக்கு ஏற்படும் இழப்பினின்று காப்பாற்றுகிற இயல்பு கொண்ட காப்பீட்டுத் திட்டத்தின் அடிப்படையான நோக்கத்தை ஓரளவு நிறைவேற்றுகிறது என்லாம்.

**குறித்த கால ஒப்பந்தம்:** ஒருவருக்கு இறப்பு நேரும் காலத்தில் மட்டுமன்றி அவர் வாழுங்காலம் முடியுமுன்னரே, வருவாய் நின்றுவிடும்போதோ, முதுமை காரணமாகப் பொருள் ஈட்டும் திறன் குறைந்துவிடும்போதோ தவிக்க நேரிடுகிறது. இதை ஓரளவு தவிர்ப்பதற்குரிய வகையில், ஆயுள் காப்பீட்டினை உருவாக்க வேண்டிய தேவை நாளடைவில் உணரப்பட்டது. அதன் விளைவே, குறித்த கால ஒப்பந்தத்தின் (Endowment Policy) தோற்றம். இதன்படி ஒருவர் 25 ஆண்டுகள் என்று குறித்த காலத்திற்கு ஒப்பந்தம் எடுத்துக் கொண்டால் 25 ஆண்டுகள் முடிவுற்றவுடன் அவருக்கு முழுத் தொகையும் கிடைக்கும். இதுவன்றி இடைப்பட்ட காலத்தில் எச்சமயத்தில் இறப்பு நேரினும் அவ்

ருடைய குடும்பத்தாருக்கு முழுத் தொகையும் வழங்கப்படும். இத்தகைய ஒப்பந்தங்கள் இந்த நூற்றாண்டில் மக்களிடையே பெருமளவுக்கு வரவேற்பைப் பெற்றுள்ளன.

மேற்குறிப்பிட்ட காப்பீட்டுத் திட்டங்கள், வீடு கட்டுதல், வீடு வாங்குதல், பெண்களின் திருமணம், பிள்ளைகளின் மேற்படிப்பு, கடனைத் திருப்பிச் செலுத்தல், சொத்துவரி கட்டுதல் போன்று மக்களின் அன்றாடத் தேவைகளுக்கேற்ற வகையில் பல்வேறு வடிவங்களிலும் வகைகளிலும் இக்காலத்தில் வழங்கப்படுகின்றன.

**பன்னோக்கு ஒப்பந்தம்:** இழப்புகள் நேரும் போது ஆயுள் காப்பீடு மொத்தமாக ஒரு தொகை வழங்குவது உண்மை என்றாலும் அந்த இழப்பினால் அந்தக் குடும்பத்திற்கு மாதந்தோறும் கிடைத்துக் கொண்டிருந்த வருமானம் நின்றுவிடுகிறது. இதை ஈடுகட்டுமளவிலும் அதே நேரத்தில் மொத்தமாக ஒரு தொகை (Capital) கிடைக்குமளவிலும் ஏற்பாடு செய்யும் வகையில் ஓர் ஒப்பந்தம் உருவாக்கப்பட்டது. அதுவே, பன்னோக்கு ஒப்பந்தம் (Multi Purpose Policy) எனப்படும். இதன்படி, ஒப்பந்தம் செய்வோர் இடைக்காலத்தில் இறக்க நேர்ந்தால், இறந்த நாள் முதல் அந்த ஒப்பந்தம் முடிவு நாள் வரையிலும் அக்குடும்பத்தாருக்கு மாத வருவாய் அளிக்கப்பட்டுப் பின்னர் முடிவில் ஒரு குறிப்பிட்ட தொகையும் வழங்கப்படும்.

இவ்வாறாக, மக்களின் அன்றாடத் தேவைகளையும் எதிர்பார்ப்புகளையும் கருத்தில் கொண்டு, அவரவர்க்கு ஏற்ற வண்ணம் புதிய புதிய காப்பீட்டுத் திட்டங்கள் அவ்வப்போது உருவாக்கப்பட்டன.

**குழுக் காப்பீடு:** குழுக் காப்பீட்டுத் திட்டமானது 1911-ஆம் ஆண்டில் உருவாக்கப்பட்டது. தனித்தனியாகக் காப்பீடு செய்து கொள்வதினின்று சற்று மாறுபடும் இத்திட்டத்தின்படி, ஒரு குறிப்பிட்ட நிறுவனத்திலோ தொழிற்சாலையிலோ அலுவலகத்திலோ பணியாற்றும் ஊழியர்கள் அனைவருக்கும் ஒட்டுமொத்தமாக அளிக்கப்படும் காப்பீட்டுத் திட்டமே குழுக் காப்பீடு (Group Insurance) ஆகும். மருத்துவ ஆய்வு வற்புறுத்தப்படாமல் காப்பீட்டுக்கான தகுதிகள் அந்த ஊழியர்களுக்கு இருந்தாலும் இல்லாவிடினும், அவர்களுக்குக் காப்பீடு கிடைக்கச் செய்வதே இதன் நோக்கமாகும். இதன் வாயிலாகத் தொடர்புடைய நிறுவனத்தாருக்கும் ஆயுள் காப்பீட்டுக் கழகத்துக்கும் இடையே ஒட்டு மொத்தமான ஒப்பந்தம் (Master Contract) ஒன்று ஏற்படுகிறது. நிறுவனத்தாரின் பேரில் ஒரே ஒப்பந்தம் வழங்கப்படும். அதோடு ஒவ்வோர் ஊழியருக்கும் ஒரு சான்றிதழ் வழங்கப்படும். அதில் அவரவருக்குரிய காப்பீட்டுத் தொகையின் அளவு, அவரால் நியமனம் செய்யப்பட்டவரின் பெயர், அவருடைய உரிமைகள், வாய்ப்புகள் ஆகியவை குறிப்பிடப்பட்டிருக்கும்.

குழுக் காப்பீட்டைப் பொறுத்தவரை, அதற்குரிய கட்டணத்தை (Premium) நிறுவனத்தாரும் ஊழியர்களும் பகிர்ந்து கொள்வது வழக்கம். ஊழியர்களின் பங்கு அவர்களின் மாத வருவாயினின்றும் எடுத்துக் கொள்ளப்படும். மீதித் தொகையினை நிறுவனத்தார் செலுத்திவிடுவர். சில நிறுவனங்களில் நிறுவனத்தாரே முழுக் கட்டணத் தொகையினையும் செலுத்தும் பொறுப்பினை மேற்கொள்வதும் உண்டு. குழுக் காப்பீட்டுத் திட்டத்தினால் சமுதாயப் பயன் மிகுதியாக உண்டு. காரணம், ஓர் ஊழியர் திடீரென்று இறக்க நேர்ந்தால், இறந்த அந்த ஊழியரின் குடும்பத்தாருக்கு உடனடியாக இதன் வாயிலாக உதவி கிடைக்கிறது. அவர்கள் இதன் வாயிலாக வாழ்க்கையினைத் துன்பமின்றி நடத்துகின்றனர். அவர்களது குடும்பம் காப்பாற்றப்படுவது மட்டுமன்றி, நிறுவனத்தாரும் மற்ற ஊழியர்களும் நிதி திரட்டி அந்தக் குடும்பத்துக்கு உதவ வேண்டிய பொறுப்பினின்றும் விடுபடுகிறார்கள்.

இத்திட்டத்திற்கு மற்றொரு சிறப்பியல்பும் உண்டு. அதாவது, உடல்நலக் குறைவின் காரணத்தாலோ பிற காரணங்களினாலோ, காப்பீட்டு ஒப்பந்தம் பெறுவதற்குத் தகுதியில்லாதவர்களுக்கும் இத் திட்டத்தின் வாயிலாகக் காப்பீடு கிடைக்கிறது.

இத்திட்டமானது, முறைப்படி அமைவுற்ற துறையைச் சார்ந்த (Organised Sector) ஊழியர்களுக்கு மட்டுமே செயற்படுத்தப்பட்டு வந்தது. அண்மைக் காலத்தில் முறைப்படி அமைவுறாத துறையினருக்கும் (Unorganised Sector) பயன்படும் வகையில், இத்திட்டம் விரிவாக்கப்பட்டு, சமுதாயத்தின் அடித்தளத்திலுள்ள பல்வேறு பிரிவினருக்கும் உதவும்படி செய்யப் பல்வேறு புதிய முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இத்தகு முயற்சிகள் தொடர்ந்து வளர்ச்சி பெறுமானால் இத்திட்டத்திற்கென்றே தனியானதொரு நிறுவனம் தோன்றுதற்கும் வாய்ப்பு ஏற்படலாம்.

**ஆண்டுத் தொகைகள்:** முழு ஆயுள் காப்பு ஒப்பந்தம் (Whole Life Policy), ஒருவர் இறந்தால் பணம் கிடைக்கவும், குறித்த கால ஒப்பந்தம் ஒருவர் இருந்தாலும் இறந்தாலும் பணம் கிடைக்கவும் வகை செய்கின்றன. நீண்டகாலம் வாழ்வது முடியுமோ முடியாதோ என்று நினைப்பவர்கள் பிற்காலத்தில் தங்களுக்கோ, தங்கள் குடும்பத்துக்கோ வருவாய்க்கான வழிவகை செய்ய முடிவெடுத்து மேற்

கூறிய ஒப்பந்தங்களை எடுத்துக் கொள்கின்றனர். ஆனால் வேறு சிலர், வருவாயினை ஈட்டும் காலம் முடிந்த பின்னரும் தாங்கள் தொடர்ந்து பல ஆண்டுகள் வாழ்வோம் என்ற நம்பிக்கை கொண்டிருக்கிறார்கள். அத்தகையோரின் தேவையினை நிறைவு செய்யும் ஒப்பந்தமே ஆண்டுத் தொகை ஒப்பந்தம் (Annuity Policy), ஆகும். இதன் வாயிலாக வாழ்நாள் முழுவதும் ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட தொகையினை வருவாயாகப் பெற வழி வகுக்கப்பட்டுள்ளது.

தம்மை நம்பியிருப்பவர்களின் நலனுக்காக எடுத்துக்கொள்ளப்படுவது ஆயுள் காப்பீட்டு ஒப்பந்தம். முதுமைக் காலத்தில் தம்முடைய நலனுக்காக எடுத்துக் கொள்ளப்படுவது ஆண்டுத்தொகை ஒப்பந்தம். இவ்வாறாக, இவ்விரண்டு வகைகளும் ஒன்றையொன்று நிறைவு செய்வது போல் அமைந்துள்ளதைக் காணலாம். ஒரு குறிப்பிட்ட தொகையினை, வாங்கு விலையாகச் (Purchase Price) செலுத்தி இத்தகைய ஒப்பந்தங்களைப் பெறலாம். அவ்வாறு பெறுவோரின் விருப்பத்திற்கேற்ப அவருடைய வாழ்நாள் முழுவதும் ஆண்டுதோறும் வட்டியுடன் சேர்ந்த ஒரு தொகை அவருக்கு அளிக்கப்படும். வருவாய் பெறும் வாய்ப்பிழந்தோர்க்கு இது ஒரு வருவாயாக அமையும். இந்த ஆண்டுத்தொகை ஒப்பந்தங்களுக்குக் குறிப்பிடப்பட்ட வட்டி அளிக்கப்படுமே தவிர, மற்றச் சில ஒப்பந்தங்களுக்குரிய மிகையூதியம் (Bonus) அளிக்கப்படமாட்டாது. இதன் கீழ் மூன்று வகையான ஒப்பந்தங்கள் வழங்கப்படுகின்றன.

**1. உறுதியான ஆண்டுத்தொகை:** ஒரு குறிப்பிட்ட தொகையினை வாங்கு விலையாகச் செலுத்தினால், அவ்வாறு செலுத்துவோர் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் கால வரையறைக்குட்பட்டு, அவர் இருந்தாலும் இறந்தாலும் தொடர்ந்து ஆண்டுத்தொகை வழங்கப்படும் ஏற்பாடு இந்த ஒப்பந்தத்தின் கீழ் அமையும். ஆயுள் காப்பீட்டு ஒப்பந்தத்தின் முடிவுக் காலத்தில் கிடைக்கவிருக்கும் உரிமைத் தொகை (Claim Amount) யினை அப்படியே வாங்குவிலையாகச் செலுத்தி ஒருவர் ஆண்டுத்தொகை ஒப்பந்தத்தினைப் பெறத் தொடக்கத்திலேயே இசைவு தெரிவித்தால், எத்தனையாண்டுக்காலம் இத்தவணைகள் அமைய வேண்டும் என அவர் விரும்புகிறாரோ, அத்தனையாண்டுக்காலம் ஒரு குறிப்பிட்ட தொகை, வட்டியுடன் சேர்த்து அவருக்குத் தவணைகளாக வழங்கப்பெறும்.

**2. உடனடியாகத் தொடங்கும் ஆயுட்கால ஆண்டுத் தொகை:** இதன் வாயிலாக, ஒரு குறிப்பிட்ட பெருந்தொகையினை வாங்கு விலையாகச் செலுத்திவிட்டு, ஆயுட்காலம் முழுவதும் ஆண்டுதோறும் தவணைகளாக ஆண்டுத் தொகை பெறும் வசதியுண்டு. முழு ஆயுள் காப்பு ஒப்பந்தத்திற்கு நேர்மாறாக அமைந்தது இந்த ஒப்பந்தம். அந்த ஒப்பந்தத்தின் வாயிலாக ஒரு குறிப்பிட்ட சிறுதொகையினை ஆண்டுதோறும் செலுத்தி இறப்பின்போது மொத்தமாகப் பெறலாம். ஆனால், இந்த ஒப்பந்தத்தின் வாயிலாக முன்னதாகவே பெருந்தொகையினைச் செலுத்தி ஆயுட் காலம் முழுவதும் தவணைகளில் சிறு தொகையினைப் பெறலாம்.

**3. கால எல்லை தள்ளி வைக்கப்பட்ட ஆண்டுத் தொகை:** இதன்படி, குறிப்பிட்ட சில ஆண்டுகளுக்குப் பின்னர் ஆண்டுத்தொகை வழங்கப்படுவது தொடங்கும். மொத்தமாக ஒரு தொகை செலுத்தியும் இதனை வாங்கலாம், அல்லது மாதந்தோறுமோ, காலாண்டு, அரையாண்டு அல்லது ஆண்டுக்கு ஒருமுறையோ ஒரு குறிப்பிட்ட காலம் தொடர்ந்து ஒப்பந்தம் செலுத்தியும் இதனை வாங்கலாம். பின்னர், எந்த ஆண்டு முதல் தொடங்க வேண்டும் என்று வாங்குவோர் விரும்புகிறார்களோ, அந்த ஆண்டு முதற் கொண்டு ஆண்டுத்தொகையானது வழங்கப்படும். ஆண்டுத்தொகை வழங்குதல் தொடங்குவதற்கு முன்னரே, பணம் பெற விரும்புவோர்க்கு, ஒரு குறிப்பிட்ட தொகை திருப்பியளிக்கப்படும், அல்லது இடைக்காலத்தில் இறப்பு நேருமாயின், அதுவரை செலுத்தப்பட்ட தொகை வட்டியின்றி அளிக்கப்படும்.

**ஆயுள் காப்பீட்டு ஒப்பந்தங்களுக்கான கட்டணம்:** ஆயுள் காப்பீட்டு ஒப்பந்தங்களின் தன்மைகளுக்கேற்பவும் தொடங்கும் வயதுக்கேற்பவும் எடுக்கப்படும் காலவரையறைக்கேற்பவும் இது வேறுபடுகிறது. பல்வேறு வகையான ஒப்பந்தங்களுக்குரிய கட்டண விகிதங்கள் பட்டியலாக அமைக்கப்பட்டுள்ளன. இந்தக் கட்டண விகிதங்கள் எவ்வாறு கணிக்கப்படுகின்றன; அவற்றிற்கு அடிப்படையாக அமைந்துள்ளவை யாவை என்பதைச் சுருக்கமாகக் காணலாம்.

**காப்பீட்டுக் கணக்கு மதிப்பிடும் விதிகள்:** காப்பீட்டுக் கணக்கு மதிப்பிடும் கணக்கியல் என்பது மிகவும் இன்றியமையாததும் அடிப்படையானதுமான ஒன்று. இது மிகவும் சிக்கலான கணக்கீட்டு முறைகளைக் கொண்டதாயினும், இதன் அடிப்படைத் தன்மைகளை ஓரளவு அறிய முயலலாம்.

காப்பீடு என்பது இடர்ப்பாட்டினை (Risk) ஓரளவு களைந்து நிலையாமைக்குப் பதிலாக நிலைத்த பலனை அளிக்கவல்லது என்று கூறலாம். இதன் உண்மையான பொருளைப் பின்வரும் எளிய எடுத்துக்காட்டின் வாயிலாகப் புரிந்து கொள்ளலாம்.

நல்ல உடல்நிலையும் 40 வயதும் கொண்ட 10,000 ஆண்கள் ஒன்று சேர்ந்து, ஒரு குழு அமைக்கிறார்கள் என்று வைத்துக்கொண்டால், எதிர்பாராத இறப்பு நேரும்போது ஏற்படக்கூடிய இழப்பினைத் தமக்குள் பங்கிட்டுக் கொள்ளும் நோக்கத்துடன் இவ்வாறு குழு அமைக்கிறவர்கள் அனைவரும் ஏறக்குறைய ஒரே தன்மையான ஆயுட்காலம் கொண்டவர்கள் என்று கருதலாம். இவர்கள் குழு அமைத்த அடுத்த ஆண்டுக்குள் யாராவது ஒருவர் இறந்துவிடுவாரானால் அவருடைய குடும்பத்துக்கு அவரது இறப்பினால் ஏற்பட்ட இழப்பினை ஈடுகட்டப் பண உதவி செய்தல் வேண்டும். இழப்பின் அளவை உள்ளவாறு கூறமுடியாவிடினும், அதனை ஈடுகட்ட ஒரு குடும்பத்துக்கு 5000 உருபாய் போதுமானது என்று வைத்துக் கொள்ளலாம். இவ்வாறு, அந்தக் குறிப்பிட்ட வயதில் ஏற்கனவே இறந்தவர்களின் எண்ணிக்கை பற்றிய அனுபவத்தின் அடிப்படையில், 40 வயதைக் கடந்து அடுத்த ஆண்டில் இறப்பவர்களின் எண்ணிக்கை, 1000க்கு 10 என்று கணக்கிட்டால், அதாவது, இறப்பு வீதம் 1000க்கு 10 என்று கொண்டால், அந்தக் குழுவின் உறுப்பினர்களுள் 100 பேர் அடுத்த ஆண்டில் இறக்க நேரும். அவ்வாறு இறக்கும் 100 பேரின் குடும்பத்துக்கு 5000 உருபாய் வீதம் பண உதவி செய்யப்படுமானால், அடுத்த ஆண்டுக்கு மட்டும் 5 இலட்சம் உருபாய் தேவைப்படும். இந்த 5 இலட்சம் உருபாய்க்கு ஏற்பாடு செய்ய, 10,000 உறுப்பினர்களும் சராசரி 50 உருபாய் வீதம் செலுத்த வேண்டும். இவ்வாறு செலுத்தப்படும் தொகையே கட்டணம் (Premium) எனப்படுகிறது. இவ்வாறாக, ஒரு சிலருக்கு இடர் நேர்ந்து இழப்பு ஏற்படும்போது, உறுதியற்ற இழப்பாகிய (Uncertain Loss) அந்த 5000 உருபாயைப் பெறுவதற்கு, உறுதியான தொகையாகிய 50 உருபாயினை உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் செலுத்த வேண்டும். இத்தொகையே, 40 வயதுடைய ஒருவர் 5000 உருபாய்க்கான ஓராண்டு ஆயுள் காப்பீட்டினைப் பெறுவதற்குச் செலுத்தவேண்டிய தொகை (Cost) என்று கூறலாம்.

இவ்வாறாக ஒருவருக்கு இடர்ப்பாட்டினால் நேரும் இழப்பை ஈடுகட்ட, மக்கள் பெரும்பாலோர் ஒன்று சேர்ந்து, நிச்சயமான ஒரு குறிப்பிட்ட தொகையினைக் கட்டணமாகச் செலுத்தி, அந்த இழப்புக் காரணமாக நேரும் துன்பத்தைக் களைகிறார்கள். இவ்வாறு கணக்கிடப்படும் கட்டணத் தொகை எதிர்கால நிகழ்வுக் கோட்பாடு (Theory of Probability) அடிப்படையிலும் சராசரி விதிகளின் (Laws of Average) அடிப்படையிலும் முடிவு செய்யப்படுகிறது. இதுவும் பலருடைய கூட்டுறவால் இயலுவதாகிறது. இந்தத் தொகை ஓரளவு உண்மைக் கொத்ததாகவும் திருத்தமானதாகவும் இருந்தால் இழப்பினை ஈடுகட்டுவது ஓரளவு தவறின்றி அமையும். இதன் திருத்தமான தன்மை, எதிர்காலத்தில் எந்தெந்தக் காலக் கட்டத்தில் எத்தனைபேர் இறப்பார்கள் என்று கணித்துச் சொல்லக்கூடிய ஆற்றலைப் பொறுத்திருக்கிறது. அதாவது, எதிர்காலத்தில் நேரக்கூடிய இழப்புகளின் அளவு பற்றி நம்பிக்கையோடு முன்கூட்டியே சொல்லக்கூடிய திறமையைப் பொறுத்தது என்றும் சொல்லலாம். இதற்காகக் கடந்தகால அனுபவத்தை அடிப்படையாக வைத்து, அதே போன்ற சூழ்நிலைகளில் எதிர்கால அனுபவமும் இருக்கக்கூடும் என்ற ஊகத்தை மேற்கொண்டு கணக்கிடப்படுகிறது.

**இறப்பு வீதம்:** மேற்கூறியது போல, சராசரி இறப்பு விதிகள் ஆயுள் காப்பீட்டில் மிகத் தலைமையான பங்கினை வகிக்கிறது எனலாம். ஒருவர் தாம் இறக்கவிருக்கும் தேதியைக் குறிப்பிட்டுச் சொல்ல முடியாவிட்டாலும், காப்பீட்டு நிறுவனத்தார் தாம் காப்பீட்டுக்கு எடுத்துக் கொண்ட மக்களுள் எத்தனை பேர் ஒரு குறிப்பிட்ட ஆண்டில் இறக்கக் கூடும் என்று ஓரளவு தவறின்றிக் கணக்கிட்டுக் கூறுவர். இறப்பு வீதக் கணக்குப் பட்டியல் (Mortality Table) என்ற ஒரு பட்டியலின் துணைக்கொண்டு அதன் அடிப்படையில் ஆயுள் காப்பீட்டுக்குரிய கட்டணத்தை உறுதி செய்வர். கடந்த காலத்தில், வெவ்வேறு வயதினர் வெவ்வேறு காலக் கட்டத்தில் எத்தனை பேர் இறந்தனர் என்பது போன்ற பல விவரங்களைத் தெரிவிப்பது இந்தப் பட்டியல். இதன் வாயிலாக, ஒவ்வொரு வயது நிலையினருக்கும் இறப்பு வீதம் எந்த அளவில் அமையும் என்பதையும், ஒரு குறிப்பிட்ட வயதினர் அடுத்த ஆண்டில் இறப்பதற்கான வாய்ப்பு எந்த அளவில் உள்ளது என்பதையும் கடந்த கால அனுபவத்தையொட்டி எடுத்துக்காட்டுவது இந்தப் பட்டியல்.

இறப்பு வீதக் கணக்குப் பட்டியல்களுள் பொருத்தமான ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கட்டணத் தொகை கணக்கிடுவதற்குப் பயன்படுத்திக் கொள்வது மிகவும் சிறப்பானதாகும். கடந்தகால இறப்பு வீதம் பற்றிய அனுபவம் எந்த அளவுக்குச் சரியாகக் கண்டறியப்படுகிறதோ அந்த அளவுக்குச் சரியாகக் கட்டணத் தொகையினை உரிய அளவில் உறுதிப்படுத்துவது இயல்வதாகும்.

இந்தக் கருத்தைப் பின்வரும் அட்டவணை ஒருவாறு விளக்குவதைக் காணலாம். இது சரிப்படுத்தப்பட்ட இறப்பு வீதக் கணக்குப்பட்டியலின்படி (Standard Mortality Table) எடுக்கப்பட்டது.

| வயது | அந்த வயதில் வாழ்கிறவர் எண்ணிக்கை | அந்த வயதைத் தாண்டிய அடுத்த ஆண்டில் இறந்தவர்கள் எண்ணிக்கை | ஆயிரத்துக்கு எத்தனை பேர் இறக்கிறார்கள்என்ற விதம் |
|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) |
| 20 | 10,000 | 13 | 1.30 |
| 30 | 9,872 | 13 | 1.34 |
| 40 | 9,695 | 27 | 2.80 |
| 50 | 9,258 | 71 | 7.72 |
| 60 | 8,170 | 165 | 20.14 |
| 70 | 5,952 | 290 | 48.67 |
| 80 | 2,814 | 303 | 107.73 |
| 90 | 545 | 116 | 212.69 |

மேற்கண்ட அட்டவணையின் முதற்பிரிவில் குறிக்கப்பட்ட வயது நிலையில் 20-இல் தொடங்கி 10,000-க்கு எத்தனைபேர் உயிர் வாழ்கிறார்கள் என்ற எண்ணிக்கையை இரண்டாம் பிரிவு காட்டுகிறது. அந்த வயதைத் தாண்டிய ஓராண்டுக்குள் இரண்டாம் பிரிவில் காட்டப்பட்ட எண்ணிக்கையில் மொத்தம் எத்தனைபேர் இறக்கிறார்கள் என்பதை மூன்றாம் பிரிவு காட்டுகிறது. அவ்வாறு இறப்பவர்கள் ஆயிரத்துக்கு எத்தனை பேர் என்ற விதத்தை 4-ஆம் பிரிவு காட்டுகிறது.

ஒரு குறிப்பிட்ட வயதில் ஓராண்டுக்குரிய ஒப்பந்தத்திற்கு எவ்வளவு கட்டணம் உறுதி செய்யப்படும் என்பதை இந்தப் பட்டியலின் அடிப்படையில் கணக்கிட்டுக் காணலாம். எடுத்துக்காட்டாக 30-ஆம் வயது நிலையில் வாழும் 9,872 பேருக்கும் ஆளுக்கு 1,000 உருபாய் வீதம் காப்பீடு வழங்க முடிவு செய்வதாக வைத்துக் கொண்டால் இவர்களுள் அடுத்த ஆண்டுக்குள் இறக்கக் கூடியவர்களின் எண்ணிக்கை 13. இதனால், அடுத்த ஆண்டு இறுதிக்குள் 13,000 உருபாய் கேட்புரிமைத் தொகையாக (Claim Amount) வழங்கப்படல் வேண்டும். ஆகவே, அடுத்த ஆண்டில் செலவிட வேண்டிய இந்த 13,000 உருபாயினைத் தொடக்கக் காலத்தில் காப்பீடு செய்து கொண்ட 9,872 பேர்களிடமிருந்து வசூலிக்க வேண்டும். இந்த மொத்தத் தொகையினை 9,872-ஆல் வகுத்தால் கிடைக்கும் ஈவு நிருவாகச் செலவுகளுக்காக ஒரு சிறு தொகையுடன் சேர்த்துக் கட்டணமாகக் கணக்கிடப்படும்.

$$\text{கட்டணத்தை உறுதிப்படுத்த அடிப்படையாக அமையும் தொகை} = \frac{13,000}{9,872} = 1.34 \text{ உருபாய்.}$$

இந்தத் தொகையே மேற்கண்ட பட்டியலில், இரண்டாம் வரிசையில் நான்காம் பிரிவில் குறிப்பிடப்பட்டிருப்பதைக் காணலாம். இவ்வாறு அந்தந்த வயது நிலையில் நான்காம் பிரிவில் குறிப்பிடப்பட்டுள்ள தொகையினை அடிப்படையாகக் கொண்டு 1,000 உருபாய்க்கான ஓராண்டுக் காப்பீட்டு ஒப்பந்தத்திற்குரிய கட்டணம் உறுதி செய்யப்படுகிறது. வயது குறைவாக இருக்கும்போது இந்தத் தொகை குறைந்தும், வயது முதிர முதிர அதற்கேற்ப விரைவாக மிகுந்தும் செல்லுவதைக் காணலாம். இந்த முறையில்தான், வெவ்வேறு வகையான ஒப்பந்தங்களுக்கேற்றவாறும் இடர்ப்பாட்டின் தன்மைக்கேற்றவாறும் கட்டணம் கணக்கிடப்படுகிறது.

ஆயுள் காப்பீட்டுக் கழகம் ஏற்கனவே அமைந்துள்ள அத்தகைய கணக்குப் பட்டியல்களை ஆராய்ந்து, தனக்கென்று தனியாக ஒரு பட்டியலை உருவாக்கி அதன் அடிப்படையிலேயே கட்டணத் தொகைகளை உறுதி செய்து வருகிறது.

**முதலீட்டுக் கூறு:** இறப்பு வீதக் கணக்கு எந்த அளவுக்குக் கட்டணத்தைப் பாதிக்கிறது என்பது மேலே விளக்கப்பட்டது. அதுவன்றி, இன்னொரு கூறும் கட்டணத்தைக் கணக்கிடுவதில் சிறப்புப் பங்கினை வகிக்கிறது. அது முதலீட்டுக் கூறு (Investment Element) எனப்படும்.

மற்ற காப்புறுதிகளுக்கும் ஆயுள் காப்பீட்டுக்கும் ஒரு சிறந்த வேறுபாடு அமைந்துள்ளது. அதாவது, நெருப்புக் காப்புறுதி (Fire Insurance), கடல் சார்ந்த காப்புறுதி (Marine Insurance), மற்றக் காப்புறுதிகள் (Miscellaneous Insurance) ஆகிய இவற்றிலெல்லாம் செய்து கொள்ளப்படும் ஒப்பந்தம் குறுகிய கால ஒப்பந்தமே. பொதுவாக, ஓராண்டுக் காலத்துக்குத்தான் அந்த ஒப்பந்தம் செய்து கொள்ளப்படுகிறது. ஓராண்டு முடிந்ததும் அது மீண்டும் புதுப்பித்துக் கொள்ளப்படும். ஆனால், ஆயுள் காப்பீட்டைப் பொறுத்தவரையில், ஓராண்டுக்கால ஒப்பந்தத்துக்கு வாய்ப்பே இல்லை எனலாம். காப்பீட்டு ஒப்பந்தம் நீண்டகால ஒப்பந்தமாகவே இருக்கும். ஏனெனில், எதற்காகக் காப்பீடு செய்து கொள்ளப்படுகிறதோ அது (இறப்பு), உறுதியாக நிகழும். ஆனால், அது எப்போது நிகழும் என்பதைத் தான் சொல்ல முடியாது. மேலும் அந்த இடர்ப்பாட்டினை ஈடு செய்வதற்கான செலவானது வயது மிகுதியாக ஆக, கூடிக்கொண்டே போகும். ஆண்டுக்கு ஒரு முறை புதுப்பிக்கும் முறை இருக்குமானால் ஆண்டாண்டு தோறும் புதுப்பிக்கும்போது கட்டணம் மிகுந்துகொண்டே போய்ப் பின்னர் மிகவும் முதிர்ந்த வயதில், காப்பீடே செய்து கொள்ளவேண்டாம் என்று அச்சுறுத்தும் அளவுக்குக் கட்டணத்தின் தொகை பேரளவு மிகும். இதன் காரணமாகத் தோன்றக்கூடிய வெறுப்பினைக் களையும் பொருட்டு ஆயுள் காப்பீட்டுக்குரிய கட்டணம் தொடக்க முதல் இறுதிவரை ஒரே அளவினதாக அமைக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு ஒரே அளவிலான கட்டணத்தை வசூலிப்பதினால் வெளிப்படையான பலன் ஒன்று கிடைக்கிறது. அதாவது, தொடக்கக் காலத்தில் இறப்பு நேரும் வீதம் குறைவு; அதனால் செலவு செய்யப்பட வேண்டிய தொகையும் குறைவு. ஆகவே, கட்டணமாக வசூலிக்கப்படும் தொகையில் பெருமளவு உபரியாகிறது. இத்தொகையினை ஆயுள் காப்பீட்டு நிதி (Life Insurance Fund) என்ற ஒரு நிதியில் சேர்த்துப் பிற்காலத்தில் தோன்றக்கூடிய மிக்க செலவினத்தை ஈடுகட்டும் அளவுக்கு நிதியைப் பெருக்க வேறு இடங்களில் அது முதலீடு செய்யப்படுகிறது. நிதித் துறையில் அனுபவம் வாய்ந்த வல்லுநர்களின் அறிவுரைப்படி, நிறைவான பலன் கிடைக்கும் வகையில் இந்த முதலீடு செய்யப்பட்டு, அந்த முதலீட்டின் விளைவாகக் கிடைக்கக்கூடிய பலனையும், ஒப்பந்தம் செய்தவர்களுக்கு வழங்க வேண்டிய வட்டியினையும் கருத்தில் கொண்டு, கட்டணம் உறுதி செய்யப்படுகிறது. ஆகவே, ஆயுள் காப்பீட்டு ஒப்பந்தத்தின் நிதிக்கூறுகளைப் பொறுத்தவரை, முதலீட்டுக் கூறு (Investment Element), வட்டிக் கூறு (Interest Element) ஆகியவை சிறப்பான பங்கினை வகிக்கின்றன என்று கூறலாம்.

**வட்டி:** ஒப்பந்ததாரர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டிய வட்டியின் அளவை ஓரளவு முன்கூட்டியே கருதி, அதனையும் உள்ளடக்கிக் கட்டணத்தை உறுதி செய்வது வழக்கம். அவ்வாறு கருதப்படும் வட்டி வீதம் மிகுதியாக இருந்தால் கட்டணம் குறைவாகவும், வட்டி வீதம் குறைவாக இருந்தால் கட்டணம் மிகுதியாகவும் இருக்கும். இவ்வாறு ஒன்றுக்கொன்று எதிர் வீதத்தில் அமையும்.

ஆகவே, மிகச் சிறந்த பங்கினை வகிக்கும் இந்த வட்டிக் கூறு, கட்டணத்தொகையை உறுதி செய்யும் போது எந்த அளவுக்குக் கருதப்பட்டு உள்ளடக்கப்படுகிறது என்பதைப் பின்வரும் எடுத்துக்காட்டால் காணலாம். 35 வயதுடைய ஒருவர் 1000 உருபாய்க்கு முழு ஆயுள் காப்புக்கான ஒப்பந்தத்தை எடுத்துக் கொண்டால் அதற்கான 'நிகரக்' (Net) கட்டணத்தை இது குறிக்கும்.

| வட்டி வீதம் | 2½% | 3% | 3½% | 4% |
|---|---|---|---|---|
| கட்டணம் உரு. | 24.34 | 22.95 | 21.66 | 20.47 |

நீண்டகால ஒப்பந்தங்களைப் பொறுத்தவரையில் கூட்டுவட்டி காரணமாக இந்த வட்டிவிகிதத்தின் பலன் மிகுதியாகவும்,குறைந்த கால ஒப்பந்தங்களைப் பொறுத்தவரை இந்தப் பலன் குறைவாகவும் அமைந்துள்ளது. மேற்கண்ட பட்டியலைப் பயன்படுத்திக் கணக்கிடப்பட்ட எடுத்துக்காட்டு ஒன்றைப் பின் வருமாறு காணலாம். 20 வயதான ஒருவர் 1000 உருபாய்க்குக் குறித்த கால ஒப்பந்தத்தை எடுப்பதாக வைத்துக் கொள்ளலாம். ஒப்பந்தத்தின் காலம் 10 ஆண்டுகளாகவும், 40 ஆண்டுகளாகவும் இருந்தால் முறையே 4 விழுக்காடும் 2 விழுக்காடும் வட்டி கணக்கிடப்பட்டு நிகர கட்டணத்தின் அளவு பின் வருமாறு உறுதிசெய்யப்படும் (பக்கம் 554).

இறப்பு வீதக்கணக்கு வட்டி வீதம் ஆகிய இரண்டையும் பயன்படுத்திக் கட்டணத்தை உறுதிசெய்யும் போது கிடைக்கும் தொகை நிகரக்கட்டணம் (Net Premium) அல்லது அடிப்படைக் கட்டணம் எனப்படும். இந்தத் தொகை, அ. நிருவாகத்திற்கான செலவுகள், ஆ) கருதப்பட்ட இறப்பு வீதம் எதிர்பார்த்தபடி நடைமுறையில் அமையாமல் இருத்தற்குரிய வாய்ப்பு, இ) கருதப்பட்ட வட்டிவீதம் நடைமுறையில் குறையக் கூடிய வாய்ப்பு, ஈ) மிகையூதியம் (Bonus) பெறுதற்குரிய ஒப்பந்தக்காரர்களுக்கு அதனை வழங்க வேண்டிய இன்றியமையாமை ஆகிய இந்த நான்கு கூறுகளையும் கணக்கில் எடுத்துக் கொள்வதில்லை.

| வட்டி வீதம் | 4% | 2% | 4 விழுக்காடு 2 விழுக்காடு இவற்றிற்கிடையே கட்டணம் மிகுதியாகும் விழுக்காடு அளவு. |
|---|---|---|---|
| | உரு. | உரு. | |
| 10 ஆண்டுகள் – கட்டண அளவு. | 82.11 | 91.47 | 11% |
| 40 ஆண்டுகள் – கட்டண அளவு. | 14.47 | 20.27 | 40% |

ஆகவே. இவற்றினால் நேரக்கூடிய செலவினங்களைக் கருத்தில் கொண்டு, ஒரு குறிப்பிட்ட தொகை கூடுதலாகச் சேர்க்கப்படுகிறது. இவ்வாறு கூடுதலாக்கப் பட்டபின் கிடைக்கும் தொகையே அலுவலகக் கட்டணம் (Office Premium) என்று கருதப்படும்.

**நிருவாகச் செலவினங்கள்:** அலுவலகக் கட்டணங்களை உறுதி செய்யும் பொழுது ஒரு குறிப்பிட்ட தொகையினை ஒதுக்கி வைத்தல் தேவையாகிறது. நீண்ட காலத்துக்குக் கட்டணத்தை வசூலிக்க வேண்டிய நிலை இருப்பதால், கடந்தகால அனுபவத்தை யொட்டி, எதிர்காலத்தில் மிகச் சிக்கனமான முறையைக் கடைப்பிடித்தாலும் ஆகக்கூடிய செலவினங்களைக் கூடிய அளவுக்குத் தவறின்றி முன்கூட்டியே கணித்துக் கொள்ளுதல் வேண்டும். அதே நேரத்தில் அவ்வாறு ஆகக்கூடிய செலவினங்கள் அவற்றிற்கென ஒதுக்கப்பட்ட தொகையினையோ அலுவலகக் கட்டணத்தில் கூடுதலாகச் (Loading) சேர்க்கப்பட்ட தொகையினையோ கடந்து போய்விடாமல் கவனித்துக் கொள்ள வேண்டியதும் தேவையாகிறது.

ஒப்பந்ததாரர்கள் செலுத்த வேண்டிய கட்டணத்தின் அளவு தொடக்க நாள் முதல் இறுதி நாள் வரை ஒரே அளவினதாக (Level) அமைகிறது. ஆனால். அவ்வப்போது ஆகும் செலவுகள் ஒரே அளவினவாக அமைவதில்லை. ஒப்பந்தம் வழங்கப்படும் தொடக்கக் காலத்தில், அ) மிக்க அளவிலான முதலாண்டுப் பங்குத் தொகை ஆ) மருத்துவர்களுக்கான கட்டணங்கள், இ) வளர்ச்சிக்கான செலவுகள் ஆகியவற்றின் காரணமாக ஆகும் செலவுகள் மிகுதியாக இருக்கும். இரண்டாம் ஆண்டு முதல் தொடர்ந்த கட்டண வருவாயின்போது (Renewal Premium income) அவற்றின் மீது குறைந்த பங்குத் தொகை (Commission) அளிப்பதனாலும், வணிகம் சம்பந்தப்பட்ட வழிகளை மேற்கொள்வதில் உண்டாகும் குறைவான செலவுகளாலும், மொத்தச் செலவினங்கள் முன்னைக் காட்டிலும் குறைந்து விடும். இத்தகைய செலவினங்களின் நிலைப்பாடு (Incidence) ஒப்பந்ததாரர்களுக்கு அளிக்கப்படும் ஒப்புவிப்புத் தொகை (Surrender Value) யிலும் பெருமளவுக்குத் தோற்றமளிப்பதைப் பின்னர்க் காணலாம்.

**ஆயுள் காப்பீட்டு நிதி:** வளர்ந்து ஒரே அளவினதாக வசூலிக்கப்படும் கட்டணத் தொகை, அவற்றின் மீதான வட்டி ஆகிய இவையிரண்டும் சேர்ந்த தொகையிலிருந்து, கேட்புரிமைகளின் (Claim) பொருட்டுச் செலவிடப்பட்ட தொகையினையும் நிருவாகத்திற்கான செலவினையும் கழித்தால், மீதி வரும் தொகை, தொழில் முறைப்படி, ஆயுள் காப்பீட்டு நிதி (Life Insurance Fund) என வழங்கப் பெறும். பிற்காலத்தில் கட்டண வருவாய் நின்று போக அதே நேரத்தில் கேட்புரிமைத் தொகையினை வழங்கவேண்டிய நிலைகள் தோன்றும்போது ஏற்படும் செலவினங்களை ஈடுகட்ட, இந்த ஆயுள் காப்பீட்டு நிதியைத் தனியாக வைத்திருத்தல் வேண்டும்.

**மதிப்பீடும் மிகையூதியப் பங்கீடும்:** ஆயுள் காப்பீட்டுக் கழகத்தில் இலட்சக்கணக்கானோர் ஒப்பந்தங்களை எடுத்துக் கொள்ளுகின்றனர். இந்த ஒப்பந்தங்கள் இறப்பின் காரணமாகவோ, ஒப்பந்தத்தின் கால இறுதி காரணமாகவோ, கேட்புரிமைத் தொகையாக (Claim amount) வழங்கப்படுகின்றன. இவ்வாறு வழங்குவதற்காகக் காப்பீட்டுக் கழகம் ஒரு குறிப்பிட்ட தொகையினைத் தனியாக ஒதுக்கி வைக்க வேண்டியது தேவையாகிறது. இதன் அளவை உறுதி செய்வதற்காக இரண்டாண்டுகளுக்கொரு முறை, காப்பீட்டு மதிப்பீட்டாளர் (Actuary) இறப்பு வீதக்கணக்கு, வட்டி, நிருவாகச் செலவுகள் ஆகியவற்றைப் பொறுத்தவரையில், எதிர்காலத்தில் ஏற்படவிருக்கும் செலவினங்களை ஒருவாறு கணித்து, அந்த அடிப்படையில் கணக்கிடப்பட்ட ஒரு தொகையினை ஒதுக்கீடு (Allocation) செய்கின்றனர். இந்தத் தொகையே ஒப்பந்தக்காரர் நல ஒதுக்கீட்டுத்

தொகை என்று வழங்கப்படும். இந்தத் தொகையினையும் ஆயுள் காப்பீட்டு நிதியையும் ஒப்பிட்டுப் பார்த்து, ஆயுள் காப்பீட்டு நிதியிலிருந்து நல ஒதுக்கீட்டுத் தொகையினைக் கழித்து மீதியாக உள்ள தொகையே உபரித்தொகை என்று குறிப்பிடப்படுகிறது. இதுவே, மிகையூதியமாக வழங்குவதற்கு உரிய தொகையாகும். இந்த உபரித் தொகையில் 5 விழுக்காடு அளவு ஆயுள் காப்பீட்டுக் கழகச் சட்டத்தின் படி மைய அரசாங்கத்துக்கு அளிக்கப்படுகிறது. மீதியுள்ள 95 விழுக்காடு அளவு, ஒப்பந்ததாரர்களுக்கு, மிகையூதியம் பெறற்குரிய ஒப்பந்தங்களின் மீது மிகையூதியமாக வழங்கப்படுகிறது.

இவ்வாறு ஒப்பந்ததாரர்களுக்கென ஒதுக்கப்பட்ட உபரித்தொகை, 1983 மார்ச்சு முடிவில் வழங்கற்குரிய மிகையூதியமாகவும் (Reversionary Bonus), கால எல்லை மிகையூதியமாகவும் (Terminal Bonus) பிரித்து வழங்கப்பட்டது.

முடிவில் வழங்கற்குரிய மிகையூதியம் (Reversionary Bonus) என்பது, ஒப்பந்தத் தொகையுடன் சேர்க்கப்பட்டு, இறப்பின்போதோ ஒப்பந்தத்தின் கால இறுதியின் போதோ வழங்கப்படும் தொகையாகும்.

கால எல்லை ஊக்குவிப்புத் தொகை என்பது, ஒப்பந்தத்தின் நடப்புக் காலத்தின்போது கிடைத்த ஆதாயத்தை ஒப்பந்ததாரர்களுக்குப் பங்கிடும் வகையில் மேற்குறிப்பிட்ட மிகையூதியத்தோடு சேர்த்துக் கூடுதலாக வழங்கப்படுவதாகும். ஒவ்வொரு மதிப்பீட்டின் போதும் அடுத்த மதிப்பீடு செய்யும் காலத்திற்குள் கேட்புரிமை நிலையினை அடையும் ஒப்பந்தங்களுக்குரிய இந்த மிகையூதியத்தின் அளவானது உறுதி செய்யப்படும்.

ஒப்புவிப்புத் தொகை: ஒப்பந்ததாரர் தம்முடைய ஒப்பந்தத்தின்மீது தமக்குள்ள உரிமைகளையெல்லாம் ஒப்புவித்துவிட விரும்புவாரானால், அவருக்கு ஒரு குறிப்பிட்ட தொகையினை வழங்க வேண்டும். ஒரே அளவிலான கட்டணத்தை வசூலித்துக் கொண்டு சேமிக்கப்பட்டுள்ள நல ஒதுக்கீட்டுத் தொகையினின்று, அந்தக் குறிப்பிட்ட ஒப்பந்தத்துக்குரிய பகுதியானது அப்போது வழங்கப்படுகிறது. அந்தத் தொகையே ஒப்புவிப்புத் தொகை என்று கூறப்படுகிறது. அந்த ஒப்பந்தத்தின்கீழ் வசூலிக்கப்பட்ட கட்டணத் தொகையில் நிருவாகச் செலவுகள் போக, ஒப்பந்தத்தை ஒப்புவிக்கும் நாள் வரையில் அதற்கான செலவுகளையும் கணக்கிட்டு, அவற்றோடு, அதே பிரிவைச் சார்ந்த மற்ற ஒப்பந்தங்களுள் கேட்புரிமை நிலை அடைந்தவற்றிற்கான செலவுகளில் ஒரு பகுதியையும் கழித்த பின்னர், மீதியுள்ள தொகையே ஒப்புவிப்புத் தொகை (Surrender Value) யாக அளிக்கப்படுகிறது.

வழங்கற்குரிய தொகை: ஒப்பந்தக்காரர், ஒப்பந்தத்தின் மீதான உரிமைகள் ஒப்புவித்துவிடாமல், தொடர்ந்து கட்டணம் செலுத்தி வந்து, பின்னர் ஒரு குறிப்பிட்ட காலக் கட்டத்தில் நிறுத்திவிடுவாரேயானால், அந்த ஒப்பந்தம் குறைந்த மதிப்புக் கொண்ட ஒப்பந்தமாக மாற்றப்படுகிறது. அந்த ஒப்பந்தத்தின் பிரிவைச் சார்ந்த பல ஒப்பந்ததாரர்கள் இடைக்காலத்தில் இறப்பதனால் ஏற்படும் செலவு காரணமாகவும், அந்த ஒப்பந்தத்திற்காகத் தொடக்கக் காலத்தில் ஏற்படக்கூடிய மிகுதியான செலவுகள் காரணமாகவும். இவ்வாறு இடையில் நிறுத்தப்படும் ஒப்பந்தங்களின் மதிப்பானது குறைந்துவிடுகிறது. ஏற்கெனவே செலுத்தப்பட்ட கட்டணங்களும், மேலும் செலுத்தப்படவிருக்கும் கட்டணங்களும் கணக்கிடப்பட்டு ஒரு குறிப்பிட்ட வீத அடிப்படையில், இந்த ஒப்பந்தத்தின் கீழ் 'வழங்கற்குரிய தொகையானது' உறுதி செய்யப்படுகிறது. எஸ்.வி.நா.

**ஆயுள் காப்பீட்டுக் கழகம்:** முன் காலத்தில் ஒரு குடும்பத்தில் பொருள் இழப்பு ஏதேனும் ஏற்பட்டால் ஏனைய குடும்பத்தினர் அனைவரும் சேர்ந்து பணமோ, பொருளோ திரட்டி, இடருற்ற குடும்பங்களுக்குக் கொடுத்து உதவி செய்வர். அதாவது, ஒருவருக்கு நேர்ந்த 'இடரினைப்' பலர் பங்கிட்டுக்கொள்வர். இவ்வாறு, ஒருவருக்கு நேர்ந்த துன்பத்தினைப் பலர் பங்கிட்டுக் கொள்ளும் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டு விளங்குவது ஆயுள் காப்பீடு (Life Insurance). இந்த அடிப்படையில்தான் காப்பீடு என்ற கருத்தும் அது பற்றிய உணர்வும் உருவெடுத்தன.

காப்பீடு தோன்றிய வரலாறு: காப்பீட்டின் தேவையை முதன்முதல் உணர்ந்தவர்கள், கடல் வணிகத்தில் ஈடுபட்ட வணிகர்கள். முற்காலத்தில் கடலில் வணிகம் மேற்கொண்டவர்கள் அடிக்கடி பலவகையான இழப்புகளுக்கு ஆளாக நேர்ந்தது. அவ்வாறு நேர்ந்த இழப்புகளிலிருந்து தங்களைக் காத்துக்கொள்ள அவர்களே ஒருவகையான ஏற்பாட்டினைச் செய்தார்கள். கடல் வணிகத்தில் ஈடுபட்ட அனைவரும் ஒன்று சேர்ந்து ஆளுக்கொரு தொகையினை ஒரு நிதியில் சேர்த்தனர். ஒவ்வொரு பயணத்தின் தொடக்கத்திலும் சேர்க்கப்பட்ட அத்தகைய நிதியிலிருந்து, அந்தப் பயணத்தின்போது யார் யாருக்கு இழப்பு ஏற்பட்டதோ அவர்களுக்குப் பண உதவி செய்து வந்தனர். இதனால், இழப்புற்றவர்களின் துன்பம் ஓரளவு துடைக்கப்பட்டது. இவ்வுதவிக்காக, மாதந்தோறும் ஒரு குறிப்பிட்ட தொகை தவணைக் கட்டணமாக வசூலிக்கப்பட்டது.

அவ்வாறு தவணைக் கட்டணம் செலுத்தியவர்களுக்கே காப்பீடு வழங்கப்பட்டது. அந்தக் காப்பீடு, இழப்பு நேர்ந்த காலத்தில் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவியது. இந்த அடிப்படையில் முதலில் தோன்றியது கடல் சார்ந்த காப்புறுதி (Marine Insurance). அதுவே ஆயுள் காப்பீட்டுக்கு முன்னோடியாக அமைந்தது.

**பழைமையான சான்றுகள்:** இத்தகைய கடல் வணிகக் காப்புறுதிகளின் பண்படாத வடிவங்கள், கி.மு. 2000க்கு முன்னரே பாபிலோனியர்கள், கிரேக்கர்கள் ஆகியோரிடையே அமைந்திருந்தன. ஏறக்குறைய மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர்கள் ஒரு வகையான சமுதாயக் காப்புறுதியைத் தத்தம் அன்றாட வாழ்வில் பயன்படுத்தி வந்தார்கள் என்ற உண்மையைச் சில சான்றுகள் தெரிவிக்கின்றன. இவைபோன்றவையே பிற்காலத்தில், கோயில்களிலும் கிறித்தவ ஆலயங்களிலும் மேற்கொள்ளப்பட்டு இழப்புகளினால் இடருற்ற குடும்பங்களுக்கு உதவிசெய்யும் நிலைகள் தோன்றின. கணவனை இழந்த கைம்பெண்ணுக்குப் பாதுகாப்பளித்தல், பிள்ளைகளைப் படிக்க வைத்தல், பெண்களுக்குத் திருமணம் செய்தல் போன்ற பணிகளைக் கோயிலைச் சார்ந்த அறநிறுவனங்கள் மேற்கொண்டன. இவ்வாறு பற்பல உதவிப் பணிகளை மேற்கொண்ட சமுதாய அமைப்பின் வளர்ந்த தோற்றமே கூட்டுக் குடும்ப அமைப்பாகும். இந்தக் கூட்டுக் குடும்ப அமைப்பே, காப்பீட்டுத் துறையின் மிகச்சிறந்த பங்கினை இன்றும் மேற்கொண்டு செயலாற்றி வருகிறது என்று கூறலாம்.

**இந்தியாவில் ஆயுள் காப்பீட்டின் தோற்றம்:** ஆயுள் காப்பீடு மனித இனத்துக்கு மிகவும் தேவையான ஒன்று என்ற எண்ணம் உலக அளவில் வளரத் தொடங்கியது. இந்த எண்ண வளர்ச்சியின் விளைவாக, உலக அரங்கில் முதன் முதலாக அமெரிக்காவில் பிலடெல்பியா (Philadelphia) என்ற நகரத்தில் கி.பி. 1759-இல் ஆயுள் காப்பீட்டுக்கான நிறுவனம் ஒன்று நிறுவப்பட்டது. ஒரு குறிப்பிட்ட பெரிய குடும்பத்திற்காக நிறுவப்பட்ட அந்த நிறுவனத்தினை அடியொற்றிப் பல்வேறு பெயர்களில் உலகின் பல பகுதிகளில் பல நிறுவனங்கள் தோன்றலாயின.

இந்தியாவில் இத்தகைய ஒரு நிறுவனத்தை உருவாக்க வேண்டும் என்று பலர் சேர்ந்து முயன்றதன் பயனாக, கி.பி. 1870-ஆம் ஆண்டில் ஆயுள் காப்பீட்டு அலுவலகம் ஒன்று, 'பம்பாய் பிணைப்புறுதி ஆயுள் காப்பீட்டு நிறுவனம்' (Bombay Mutual Life Insurance Corporation) என்ற பெயரில் தொடங்கப்பட்டது. மிகக் குறுகிய அளவில் பணியாற்றிய இந்த நிறுவனத்தைத் தொடர்ந்து கி.பி 1874-ஆம்ஆண்டில் 'கீழ்த்திசை அரசு பாதுகாப்பு ஆயுள் காப்பீட்டு நிறுவனம்' (Oriental Govt. Security Life Insurance Corporation) என்ற பெயரில் தொடங்கப்பட்ட நிறுவனம், மிகப் பரந்த அளவில் இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் ஆயுள் காப்பீட்டு வணிகத்தை மேற்கொள்ளத் தொடங்கியது. பின்னர்ப் 'பாரத நிறுவனம்' (Bharat Corporation) கி.பி. 1896-ஆம் ஆண்டிலும், 'இந்தியப் பேரரசு நிறுவனம்'(Empire of India Corporation) கி.பி. 1897-ஆம் ஆண்டிலும் நிறுவப் பெற்றன. இவ்வாறாக இந்தியாவில் ஆயுள் காப்பீட்டு வணிகம் தோன்றியது.

இந்தியாவில் பல்வேறு நிறுவனங்கள் தொடங்கப் பெற்று ஆயுள் காப்பீட்டு வணிகத்தை மேற்கொண்ட போதிலும், அவற்றின் மொத்த வணிகத்தின் அளவு மிகவும் குறைவாகவே இருந்தது. காரணம், காப்பீட்டு வணிகத்தின் மேலாட்சி பெரும்பாலும் பிரிட்டன், கனடாவைச் சார்ந்த நிறுவனங்களின் கையில் இருந்ததுதான். அந்த வெளிநாட்டு நிறுவனங்கள் வெளிநாட்டாரின் ஆயுளைக் காப்பீடு செய்வதிலேயே நாட்டம் கொண்டனவாகவும், இந்திய மக்களின் ஆயுளைக் காப்பீடு செய்வதில் அவ்வளவாக அக்கறை காட்டாதனவாகவும் இருந்தன. முதல் உலகப்போர் முடிவுற்றதும், இந்தியாவில் தொழில்துறை முன்னேற்றம் சற்று மிகுதியாயிற்று. சுதேசி இயக்கம் தலைதூக்கியது; அதனால், மக்களின் எண்ணங்களிலும் சிந்தனையிலும் தேசிய உணர்வு ஊடுருவத் தொடங்கி, ஆயுள் காப்பீட்டுத் துறையிலும் தேசியக் கண்ணோட்டம் எதிரொலிக்கலாயிற்று. அதுமுதல் ஆயுள் காப்பீட்டு வணிகம்மிக வேகமாக வளர்ச்சியுற்றது. இதன் விளைவாக, இரண்டாம் உலகப் போருக்குப் பின் இந்தியாவில் முடிக்கப்பெற்ற வணிகத்தில் 90 விழுக்காடு இந்திய நிறுவனங்களின் பங்காக அமைந்தது எனலாம்.

**வணிகம் செய்த நிறுவனங்களின் நிருவாகம்:** நாளடைவில், ஆயுள் காப்பீட்டு வணிகத்தைப் பல்வேறு நிறுவனங்கள் மேற்கொண்டன. போட்டி மனப்பான்மையுடன் வணிகத்தை வளர்க்க முயன்ற இத்தகைய நிறுவனங்களின் எண்ணிக்கை நூற்றுக்கு மேல் பெருகலாயிற்று. அவற்றின் நிறுவாகத்தை நெறிப்படுத்தவும் அவை சேர்த்த பெருமளவு நிதிகளை நேரிய முறையில் முதலீடு செய்கின்றனவா என்பதை ஆய்ந்து கண்டறியவும் அரசாங்கம், 1938-ஆம் ஆண்டில் காப்பீட்டுச் சட்டம் ஒன்றை உருவாக்கியது. இதன்படி, காப்பீட்டுத் துறையை நெறியான முறையில் நிருவகிக்கும் பொறுப்பில் மேலாளர் ஒருவர் அமர்த்தப்பட்டார். அவருடைய கட்டுப்பாடான மேற்பார்வையின் கீழ் வெவ்வேறு நிறுவனங்

களின் காப்பீட்டு நிருவாகம் ஓரளவு நெறிப்படுத்தப் பட்டது.

**நாட்டுடைமையாக்கல்:** ஆயுள் காப்பீடு, நாட்டு மக்களிடையே செல்வாக்குச் செலுத்தத் தொடங்கியதால், அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு தம்மை வளர்த்துக் கொள்ளும் நோக்கத்துடன் தனியார் நிறுவனங்கள் பல தலைதூக்கலாயின. இவற்றைக் களைந்தெறிந்து வணிகத்தை நெறிப்படுத்தவும், பொதுமக்களின் சேமிப்பை முதலீடு செய்வதற்குரிய வாய்ப்புகளைப் பெருக்கவும், வளர்க்கவும், ஊரக மக்களிடையே (Rural Population) ஆயுள் காப்பீடு பற்றிய செய்தியைப் பரப்பவும், 1956-ஆம் ஆண்டில் இந்திய அரசாங்கம் ஆயுள் காப்பீட்டு வணிகத்தை நாட்டுடைமையாக்கும் செயலை மேற்கொண்டது. அதன்படி, 1956-ஆம் ஆண்டு சனவரி 19-ஆம் நாளன்று, ஆயுள் காப்பீட்டு வணிகம் நாட்டுடைமையாக்கப்பட்டது.

இந்தச் செயல்முறை காரணமாக, இந்தியாவிலிருந்த ஏறக்குறைய 250 தனியார் நிறுவனங்கள் நாட்டுடைமையாக்கப்பட்டன. பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட சட்டத்தின் விளைவாக 'ஆயுள் காப்பீட்டுக் கழகம்' 1956-ஆம் ஆண்டு செப்டம்பர் முதல் நாளிலிருந்து செயற்படத் தொடங்கியது.

**நிருவாக அமைப்பு:** ஆயுள் காப்பீட்டுக் கழகத்தின் தலைமை அலுவலகம் பம்பாயில் அமைந்துள்ளது. மத்திய அரசு அவ்வப்போது பிறப்பிக்கும் நெறி முறைகளின் அடிப்படையில், ஆயுள் காப்பீட்டு வணிக வளர்ச்சியினைக் கண்காணிப்பதற்காக, 15 உறுப்பினர்களைக் கொண்ட இயக்குநர் குழு ஒன்றும் அமைக்கப்பட்டது. செயல்முறைக் குழு, முதலீட்டுக் குழு, இணைப்புக் குழு, வளர்ச்சிக் குழு, விளம்பரக் குழு, நிதிக் குழு போன்ற குழுக்கள் அமைக்கப்பட்டு, நிருவாகத்தின் அமைப்பு வடிவம் தேவையான அளவில் விரிவாக்கப்பட்டது.

நாடு முழுவதும் ஐந்து மண்டலங்களாகவும் ஒவ்வொரு மண்டலமும் பல்வேறு கோட்டங்களாகவும் பிரிக்கப்பட்டது. ஒவ்வொரு கோட்டத்தின் கீழும் கிளை அலுவலகங்கள் அமைக்கப்பட்டன. இக்கிளை அலுவலகங்களை மையங்களாகக் கொண்டு, ஆயுள் காப்பீட்டு வணிகம் படிப்படியாகப் பெருகியது. முகவர்கள் புது வணிகத்தைப் பொது மக்களிடமிருந்து பெற்றுக் கிளையலுவலகங்களில் பதிவு செய்து, அதற்குரிய தேவைகளைத் தக்க முறையில் நிறைவு செய்து, மக்களுக்குப் பாதுகாப்பு வழங்கும் காப்பீட்டு ஒப்பந்தங்களைப் பெற உதவுகிறார்கள்.

**ஆயுள் காப்பீட்டு ஒப்பந்தங்கள்:** ஆயுள் காப்பீட்டுக் கழகம், தன்னுடைய ஒப்பந்தத்தை ஏற்றுக்கொண்டவர்களுக்குப் பல்வேறு வகைகளில் அமைந்த ஒப்பந்தங்களை (Policies) வழங்குகிறது. 'முழு ஆயுள்' (Whole Life) காப்பு அளிக்கும் ஒப்பந்தங்கள், ஒப்பந்தத்தை ஏற்றுக்கொண்டவர் மரணத்துக்குப் பின்னர் அவருடைய குடும்பத்துக்குப் பயன்படும் வகையில் அமைந்துள்ளன. ஒப்பந்தம் பெற்றவர் தாம் தேர்ந்தெடுக்கும் காப்பீட்டுக் காலம் முடிவுறும் வரையில் இருந்து பணம் பெறுவதற்கும் அல்லது இடைக்காலத்தில் இறந்தால் அவர்தம் குடும்பத்தார் பணம் பெறுவதற்கும் வழி வகுக்கும் ஒப்பந்தங்கள் காப்புறுதிக் கட்டண ஒப்பந்தங்கள் (Endowment Policies) என வழங்கப்பெறும். இவையன்றி, ஓய்வுக் காலத்தின்போதும் மகளின் திருமணத்தின்போதும் மகனின் கல்லூரிப் படிப்புக்காகவும் இடையிடையே பகுதி பகுதியாகப் பணம் பெற்று வணிகத்துக்குப் பயன்படுத்துவதற்காகவும் குழந்தைகளின் பிற்கால நலனுக்காகவும், இவ்வாறு பொதுமக்களின் பல்வேறு தேவைகளுக்கேற்ற வகையில் பொருத்தமாக அமையக் கூடிய 90 வகையான ஒப்பந்தங்களை வேண்டியவர்களுக்கு வேண்டிய வண்ணம் இந்த நிறுவனம் வழங்கி வருகிறது.

**வீடு கட்ட உதவி:** இவ்வாறு எடுக்கப்பெறும் ஒப்பந்தங்கள் வீடு கட்டுவதற்கான கடனுதவி பெறுவதற்கும் உதவுகின்றன. 'உங்களுக்குச் சொந்தமாக வீடு கட்டும் திட்டம்' (Own Your Home Scheme) என்ற பெயரில் வீடு கட்டக் கடனுதவி அளிக்கும் திட்டம் ஒன்று மிக்க வெற்றியுடன் செயற்பட்டு வருகிறது. வீடு கட்டுவதற்கும் வாங்குவதற்கும் கடன்பெற விரும்பி விண்ணப்பம் செய்பவர்களின் வருமான நிலை, குடும்பநிலை, சொந்த நிலம், கடனைத் திருப்பிச் செலுத்தும் திறன் போன்ற தகுதிகளை அடிப்படையாக வைத்து, 10,000 உருபாய் முதல் 1,50,000 உருபாய் வரை இத்திட்டத்தின் வாயிலாகக் கடனுதவி அளிக்கப்படுகிறது. இத்திட்டத்தின் வாயிலாகக் கடன் பெறுபவர்கள் தத்தம் காப்பீட்டு ஒப்பந்தங்களை அக்கடனுக்கு அடைமானமாக வைப்பதால், கடன் பெற்று வீடுகட்டிய பின்னர், கடன் முழுவதும் திருப்பிச் செலுத்துமுன் மரணமுற நேர்ந்தால், அவருடைய ஒப்பந்தத் தொகையினின்றும் கடன் தொகையினை எடுத்துக்கொள்ளப்பட்டு மீதித் தொகை அவர்தம் குடும்பத்தாருக்கு அளிக்கப்படும். இத்தகைய ஏற்பாடு காரணமாகக் குடும்பத் தலைவரின் திடீர் மறைவால் தவிக்க நேரிடும் குடும்பத்தாருக்குக் கடன் சுமையிலிருந்து ஓரளவு ஆறுதல் கிடைக்கிறது. இதுவே இத்திட்டத்தின் சிறப்பியல்பாகும்.

**ஆயுள் காப்பீட்டு வணிக வளர்ச்சி – அன்றும் இன்றும்:** ஆயுள் காப்பீட்டு வணிகம் நாட்டு

டைமையாக்கப்பட்ட ஆண்டிலிருந்து, இன்றுவரை இடைப்பட்ட 27 ஆண்டுக்காலத்தில், இந்நிறுவனம் கண்டுள்ள வணிக வளர்ச்சி சிறப்பானது. கீழ்வரும் புள்ளி விவரங்கள் இந்த வளர்ச்சியின் சில சிறந்த கூறுகளை எடுத்துக்காட்டுகின்றன.

ஆயுள் காப்பீட்டின் மொத்த வணிகம் 1955-ஆம் ஆண்டில் 260 கோடி உருபாயாக இருந்தது. இது, 1983-ஆம் ஆண்டு மார்ச்சு இறுதியில் 4,000 கோடி உருபாயாகப் பெருகியுள்ளது. இந்தப் பெருக்கத்தின் அளவு 16 மடங்கு ஆகும். வணிக வளர்ச்சி நிருவாகத்தின் உண்மையான அடையாள மாக விளங்குவது நடப்புக் கணக்கில் உள்ள வணிக அளவுதான். இவ்வடிப்படையில், 1955-ஆம் ஆண்டில் 1220 கோடி உருபாயாக இருந்த இந்த அளவு, 1983-ஆம் ஆண்டு மார்ச்சு இறுதியில் 26,400 கோடி உருபா யாக உயர்ந்துள்ளது. மொத்த ஒப்பந்தங்களின் எண் ணிக்கை 2 கோடியே 36 இலட்சமாகும். இந்த வணிக அளவுகள் தனிப்பட்டவர் தொடர்பான காப்பீடு களையே குறிப்பன.

**வணிக வளர்ச்சியில் குழுக் காப்பீடுகளின் பங்கு:** ஆயுள் காப்பீட்டுக் கழகத்தின் வளர்ச்சி வரலாற்றில் 'குழுக் காப்பீட்டுத் திட்டம்' (Group Insurance) குறிப்பிடத்தக்க ஒன்றாகும். ஏறக்குறைய 25 ஆண்டு களுக்குமுன் அறிமுகப்படுத்தப்பட்ட இத்திட்டத்தின் தொடக்கக் காலத்தில் 5 கோடி உருபாய் அளவுக்கு வணிகம் இருந்தது. இன்று 7,500 கோடி உருபாயாக உயர்ந்திருக்கிறது. இத்திட்டத்தின் வாயிலாக 75 இலட்சம் பேருக்குப் பாதுகாப்பு அளிக்கப்படுகிறது. ஆண்டுதோறும் 100 கோடி உருபாய் காப்பீட்டுக் கட்டணமாகக் கிடைக்கிறது.

குழுக் காப்பீடு என்ற பெயர் கொண்ட இந்தத் திட்டத்துடன்குழுப்பணிக்கொடைத் திட்டம் (Group Gratuity Scheme), குழு ஓய்வுக் காலத் திட்டம் (Group Superannuation Scheme) ஆகிய இரு திட் டங்களும் இன்று பல்வேறு நிறுவனங்களில் பணியாற் றும் ஊழியர்களிடையே செல்வாக்குப் பெற்றுள்ளன. இத்திட்டங்களின் மூலம் அந்தந்த நிறுவனங்களில் பணியாற்றும் ஊழியர்களுக்குப் பணிக்கொடை (Gratuity), ஓய்வூதியம் (Pension), ஆயுள் காப்பீடு ஆகிய இவற்றை மிகவும் எளிய முறையிலும் பய னுள்ள முறையிலும் வழங்க முடிகிறது. நிருவாகி கள் ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட தொகையி னைக் கட்டணத் தொகையாகச் (Premium) செலுத்தி விட்டால், அந்த நிறுவனத்தில் பணியாற்றும் ஊழியர் களின் திடீர் மரணத்தின்போது உரிய தொகை அளிக்கவும் பணிக்கால இறுதியில் பணிக்கொடை அளிக்கவும் ஓய்வூதியம் போன்றவற்றை அவ்வப் போது வழங்கவும், ஆயுள் காப்பீட்டுக் கழகம் ஆவன செய்து உதவுகிறது. அவற்றோடு அந்த நிருவாகி கள் இத்தகைய செலவினங்களுக்காகத் தாங்களாக முதலீடு செய்ய வேண்டியதன் தேவையையும் தவிர்த்து, அந்தப் பணியையும் ஆயுள் காப்பீட்டுக் கழகமே மேற்கொள்கிறது. இதன் வாயிலாக 'ஆயுள் காப்பீட்டின்' பயனை எல்லோருக்கும் கிடைக்கச் செய்யும் நற்பணியினை ஆற்றுவதோடு, ஊழியர் களின் வருங்கால நலனுக்காகச் சேமிக்கப்படும் தொகையினைத் தக்க முறையில் முதலீடு செய்யும் பணியினையும் மேற்கொள்கிறது.

**சமுதாய வளர்ச்சித் திட்டங்களில் இந்நிறுவனத் தின் பங்கு:** ஆயுள் காப்பீட்டுக் கழகத்தின் சிறந்த நோக்கங்களில் ஒன்று, மக்களின் சேமிப்புத் தொகை யினைத் திரட்டி, அதை மக்களின் வளனுக்கும் நலனுக்கும் தக்க முறையில் பயன்படுத்துவது என்ப தாகும். நாட்டு வளத்திற்கான திட்டங்களில் இந் நிறுவனம் செய்துள்ள முதலீடுகளின் மொத்த மதிப்பு 1957-ஆம் ஆண்டு திசம்பர் முடிய 410 கோடி உருபாயாக இருந்தது. இதே மதிப்பு 1983-ஆம் ஆண்டு மார்ச்சு 31-ஆம் நாள் கணக்கின்படி 8,499 கோடி உருபாயாக உயர்ந்திருக்கிறது. அதாவது 20 மடங்குக்கு மேல் மிகுதியாகியிருப்பதைக் காணலாம். இந்த முதலீடுகளுள், சமுதாய வளர்ச்சி நோக்குடன் செய்யப்பட்ட முதலீடுகளின் மதிப்பு 4,167 கோடி உருபாயாகும். இன்றைய நிலையில் ஆயுள் காப்பீட் டுக் கழகம், சமுதாய வளர்ச்சிக் கண்ணோட்டத்து டன் செய்துள்ள முதலீடுகளின் அளவைக் கணக்கிட் டுப் பார்த்தால், அது மொத்த முதலீடுகளில் ஐம்பது விழுக்காடாக இருப்பதை உணரலாம்.

**தொழில் துறையிலும் மற்றத்துறைகளிலும் முத லீடு:** இக்கழகம் மின்சார உற்பத்திக்காகவும் அதனை நன்முறையில் பயன்படுத்துவதற்காகவும் 1,459 கோடி உருபாயினை முதலீடு செய்துள்ளது. வீட்டுவசதியை உருவாக்கும் பணியில் 974 கோடி உருபாயும், நகரக் குடிநீர் மற்றும் வடிகால் திட் டங்களுக்கும் கிராமப் பகுதிக் குழாய் நீர்த் திட்டங் களுக்கும் 414 கோடி உருபாயும், விவசாயத்துக்கு 321 கோடி உருபாயும், போக்குவரத்துக்கு வாகனங் களின் மேம்பாட்டுக்கு 89 கோடி உருபாயும், சிறிய நடுத்தரத் தொழில்களுக்கு 94 கோடி உருபாயும், தொழிற்பேட்டைகளை நிறுவுவதில் உதவி செய்வ தற்கு 23 கோடி உருபாயும் முதலீடு செய்துள்ளது.

ஆயுள் காப்பீட்டுக் கழகத்தின் மொத்த முதலீடு கள், பல்வேறு துறைகளுக்குப் பயன்படுகின்றன. பொதுத் துறைக்கு 6714 கோடி உருபாய்-அதாவது 79 விழுக்காடும், கூட்டுறவுத் துறைக்கு 892.5 கோடி உருபாய்-அதாவது 10.5 விழுக்காடும், தனியார்

துறைகளுக்கும் பிற துறைகளுக்கும் 892.5 கோடி உருபாய்–அதாவது 10.5 விழுக்காடும் வழங்கப்பட்டுள்ளன.

**அரசாங்கப் பிணையங்களில் முதலீடு:** ஆயுள் காப்பீட்டுக் கழகம், அரசாங்கப் பிணையங்களில் (Investment in Government Securities) மிகவும் நிறைவான தொகைகளை முதலீடு செய்துள்ளது. அரசாங்கப் பிணையங்களிலும், அங்கீகாரம் பெற்ற பிற பிணையங்களிலும் 1983–ஆம் ஆண்டு மார்ச்சு 31 முடிய முதலீடு செய்யப்பட்டுள்ள தொகையின் அளவு 4,130 கோடி உருபாயாகும். மத்திய அரசின் சிறப்பு வைப்பீடுகளில் மட்டும் 341 கோடி உருபாயினை முதலீடு செய்துள்ளது. இத்தொகைகள் எல்லாம், நாட்டமைப்புப் பணிகளில் செலவிடப்பட்டு, சராசரி மனிதனின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தப் பயன்படுகின்றன.

**ஆதாய மதிப்பீடு:** ஆயுள் காப்பீட்டுக் கழகத்தில் இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை, வரையறுக்கப்பட்ட சில முறைகளின் அடிப்படையில் மதிப்பீட்டாளர்கள் (Actuaries) மதிப்பீடு செய்து, உபரித் தொகையாகக் கிடைக்கும் தொகையில் 5 விழுக்காடு அரசாங்கத்துக்கும் மீதியுள்ள 95 விழுக்காடு ஆயுள் காப்பீட்டுக் கழகத்தில் ஊக்குவிப்புத் தொகைக்கு (Bonus) உரியவர்களாக உள்ள ஒப்பந்தம் ஏற்றோருக்கும் அவரவர்களின் ஒப்பந்தத் தன்மைகளுக்கேற்பப் பங்கிட்டுக் கொடுக்கப்படுகிறது. இவ்வாறு பங்கிடப்படும் தொகையானது, தொடக்கக் காலத்தில் (1957–இல்) முழு ஆயுள் ஒப்பந்தங்களுக்கு ஆயிரத்துக்கு 16 உருபாயாகவும் எண்டோமெண்ட்டு ஒப்பந்தங்களுக்கு 12.80 உருபாய் ஆகவும் இருந்தது. அண்மையில் 1983–ஆம் ஆண்டு ஏப்பிரல் வரை செய்யப்பட்ட மதிப்பீட்டின்படி, இந்த ஊக்குவிப்புத் தொகை பன்மடங்கு பெருகி, முழு ஆயுள் ஒப்பந்தங்களுக்கு ஆயிரத்துக்கு 42.50 உருபாயாகவும், காப்புறுதிக் கட்டண ஒப்பந்தங்களுக்கு ஆயிரத்துக்கு 34 உருபாயாகவும் முடிவு செய்யப்பட்டுள்ளது.

இவற்றோடு, 15 ஆண்டுகளுக்கும் மேற்பட்ட கால அளவில் நடப்புக் கணக்கில் உள்ள ஒப்பந்தங்களுக்குக் கூடுதல் ஊக்குவிப்புத் தொகை (Additional Bonus) 45 ரூபாய் முதல் 135 ரூபாய் வரை வழங்கப்படுகிறது. இத்தொகைகள் அனைத்தும் ஒப்பந்தம் முடியும் காலத்திலோ இறப்பு நேரும் காலத்திலோ கேட்புரிமைத் தொகையோடு சேர்த்து வழங்கப்பெறுகின்றன. எஸ்.வி.நா.

## ஆயுள் காப்பீட்டுச் சட்டம்:

ஆயுள் காப்பீடு என்பது ஒருவகை ஒப்பந்தமாகும். இவ்வொப்பந்தம் காப்பீடு பெறுபவருக்கும் காப்பீடு அளிப்பவருக்குமிடையே ஏற்படுவதாகும். பொதுவாக ஒப்பந்தங்கள் செல்லுநிலை ஆவதற்கு எவையெவை அடிப்படை ஆதாரங்களாக இருக்க வேண்டுமென்பதை இந்திய ஒப்பந்தச் சட்டம் (கி.பி. 1872–Indian Contract Act, 1872) விளக்குகிறது. இவை ஆயுள் காப்பீட்டு ஒப்பந்தத்திற்கும் பொருந்துவனவாகும். ஆயுள் காப்பீட்டிற்கான தனிச் சட்டம் எதுவும் இந்தியாவில் கிடையாது. ஆகவே, 1938–ஆம் ஆண்டு இந்தியாவில் இயற்றப்பட்ட காப்பீட்டுச் சட்டத்தின் (Insurance Act, 1938) வழிவகை ஏற்பாடுகளுக்குட்பட்டே இந்திய ஆயுள் காப்பீட்டுத் தொழில் நடைபெறுகிறது. இந்தியாவில் 1956–ஆம் ஆண்டு இயற்றப்பட்ட ஆயுள் காப்பீட்டுக் கழகச் சட்டத்தினால் (Life Insurance Corporation Act, 1956) ஆயுள் காப்பீட்டுத் தொழில் நாட்டுடைமையாக்கப்பட்டது.

**அடிப்படை விதிகள்:** ஓர் ஆயுள் காப்பீட்டு ஒப்பந்தம் பின்வரும் அடிப்படை விதிகளுக்கு ஒத்ததாயிருத்தல் வேண்டும். 1. முனைவு (Offer), 2. ஏற்பு (Acceptance), 3. மறுபயன் (Consideration), 4. ஒப்பந்தத் தகுதித் திறன் (Contractual Capacity), 5. தன்னிச்சையான இசைவு (Free Consent), 6. பெருமளவான தன்னம்பிக்கை (Utmost Good Faith), 7. காப்பீடு செய்து கொள்ளும் அக்கறை (Insurable Interest).

ஆயுள் காப்பீடு செய்துகொள்ள விரும்புபவர் தமது முனைவினை ஆயுள் காப்பீடு அளிப்பவரிடம் ஒரு முனைவுப் படிவத்தை நிறைவு செய்து கொடுப்பதன் வாயிலாகத் தெரிவித்தல் வேண்டும். இதனைக் காப்பீடு அளிப்பவர் ஏற்ற பின், தக்க காப்பீட்டுக் கட்டணத்தைச் (Premium) செலுத்துதல் வேண்டும். இக்கட்டணத்தைச் செலுத்துபவர் சட்டப்படி ஒப்பந்தம் செய்துகொள்ளத் தகுதி உள்ளவராவர். ஒப்பந்தம் செய்துகொள்ளத் தகுதி உடையவர் யார் என்பதை ஒப்பந்தச் சட்டத்தின் 11–ஆம் பிரிவு கூறுகிறது. அதன்படி, உரிய வயதை அடைந்தவர்களும், நல்ல மனநிலையில் உள்ளவர்களும், எச்சட்டத்தினாலும் மறுக்கப்படாதவர்களும் ஒப்பந்தம் செய்துகொள்ளத் தகுதி உடையவர் ஆவர். எனவே, பதினெட்டு வயதிற்குக் குறைந்தவர், அதாவது இளவல்கள் (Minors), பித்தர் (Lunatics), பிறவி மந்தர்கள் (Idiots), குடிகாரர் (Drunkards) ஆகியோர் ஆயுள் காப்பீட்டு ஒப்பந்தம் செய்துகொள்ளத் தகுதியற்றவர் ஆகின்றனர்.

ஆயுள் காப்பீட்டு ஒப்பந்தத்தில் காப்பீடு அளிப்பவரின் இசைவைப் பெறுவதில் நடந்த நிகழ்ச்சிகளை மறைத்தலோ, மோசடி (Fraud) செய்தலோ, திரித்துக்

கூறுதலோ (Misrepresentation) கூடாது. ஆயுள் காப்பீட்டு ஒப்பந்தம் பெரியதொரு தன்னம்பிக்கை ஒப்பந்தமாகக் கருதப்படுகிறது. இசைவினைப் பெறுவதில் மேற்சொன்ன குறைபாடுகளுள் ஏதேனும் இருந்தால் காப்பீடு அளிப்பவர் அவ்வொப்பந்தத்தைத் தவிர்க்கும் உரிமை பெற்றவர் ஆகிறார். எனவே, முழு உண்மைகளையும் காப்பீடு அளிப்பவருக்குத் தெரிவிப்பது இன்றியமையாததாகிறது. வாணிக ஒப்பந்தங்களுக்குப் பொருந்தும் 'வாங்குநர் கவனிக்க' (Cabeat emptor) என்ற எச்சரிக்கை, காப்பீட்டு ஒப்பந்தங்களுக்குப் பொருந்துவதில்லை. காப்பீடு அளிப்பவர், தீங்கின் தன்மையைத் (Offense) தக்கவாறு மதிப்பிடுவதற்கும், அதற்கேற்ற காப்பீட்டுக் கட்டணத்தை விதிப்பதற்கும், நடந்த முக்கிய நிகழ்ச்சிகளை நடந்தவாறு தெரிவிப்பது மிகவும் இன்றியமையாததாகும். ஒருவர் வயது, வருமானம், தொழில், உடல்நலம், பழக்கவழக்கங்கள், தங்குமிடம், குடும்ப வரலாறு ஆகியவை இத்தகைய முக்கிய நிகழ்ச்சிகளெனக் கூறலாம்.

தன்னம்பிக்கை என்ற கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்ட இக்காப்பீட்டில் கொடுக்கப்பட்ட விவரங்களில் தவறு இருப்பது பின்னர் உணரப்பட்டால், அச்செயல் காப்பீடு பெற்றவரை மிகவும் பாதிக்கும். எனவே, காப்பீட்டுச் சட்டம், 1938–(Insuance Act, 1838)இன் 45–ஆம் பிரிவு இதற்கு வழிவகை செய்துள்ளது. இப்பிரிவின்படி, காப்பீடு பெற்றவர் வேண்டுமென்றே முக்கிய நிகழ்ச்சிகளை மோசடியாகவோ, குறைத்தோ மறைத்தோ இருந்தாலொழிய, ஆயுள் காப்பீடு அளிப்பவர், காப்பீடு உறுதியளிக்கப்பட்ட இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர், முனைவுப் படிவத்தில் (Proposal Form) கொடுக்கப்பட்ட செய்திகள் தவறானவை அல்லது மறைத்து அளிக்கப்பட்டவை (Suppressed) என்ற காரணங்களைக் காட்டித் தமது பொறுப்பினைத் தட்டிக் கழிக்க முடியாது. ஆனால், ஆயுள் காப்பீடு அளிப்பவர்க்கு எப்பொழுது வேண்டுமானாலும் வயது பற்றிய சான்று விளக்கம் கேட்கும் உரிமை உண்டு.

**காப்பீடு செய்து கொள்ளும் அக்கறை:** ஆயுள் காப்பீட்டு ஒப்பந்தத்தைச் செய்து கொள்ள விரும்புபவர் சட்டப்படி காப்பீடு செய்துகொள்ளும் அக்கறை (Insurable Interest) உள்ளவராக இருத்தல் வேண்டும். ஒருவர் மற்றொருவர் காட்டும் அன்பையும் பாசத்தையும் எண்ணி ஆயுள் காப்பீடு செய்து கொள்ள முடியாது. காப்பீடு செய்துகொள்ளும் அக்கறை, ஒருவருக்குத் தம் ஆயுள் மீதோ மற்றொரு மூன்றாமவரின் ஆயுள் மீதோ இருக்கலாம். பின்வகை, தொழில் தொடர்பினாலோ, குடும்ப உறவு முறையினாலோ ஏற்படுவதாகும், முன்வகைக்குச் சான்று விளக்கம் (Proof) தேவையில்லை. ஆனால், பின்வகையினரை ஆயுள் காப்பீடு செய்வதற்கு, ஆயுள் காப்பீடு பெற விரும்புபவர் தக்க சான்று விளக்கம் கொடுக்க வேண்டும்.

சட்டப்படி காப்பீடு செய்துகொள்ளும் அக்கறைக்கு எடுத்துக்காட்டுகளாகப் பின்வருவனவற்றைக் கூறலாம்:

அ. தனிமனிதனுக்குத் தன் சொந்த ஆயுள் வாழ்க்கை ஆகியவற்றின் மீதுள்ள அக்கறை.

ஆ. கணவனுக்கு மனைவியின் ஆயுள் மீதும், மனைவிக்குக் கணவனின் ஆயுள் மீதும் உள்ள அக்கறை.

இ. கடன் கொடுத்தவருக்குக் கடன் வாங்கியவர் மீதுள்ள அக்கறை.

ஈ. கூட்டாளிக்கு (Partner) மற்றொரு கூட்டாளியின் ஆயுள் மீதுள்ள அக்கறை.

உ. பிணையாளருக்குக் (Surety) கடனாளியின் (Debtor) ஆயுள் மீதுள்ள அக்கறை.

ஊ. பெற்றோர்க்குத் தங்கள் மக்களின் மீதுள்ள அக்கறை.

எ. மகனுக்குத் தன்னை ஆதரிக்கும் தந்தை மீதுள்ள அக்கறை.

ஏ. தொழிலதிபருக்கு உயிர்நாடித் தொழிலாளியின் (Key Employee) ஆயுள் மீதுள்ள அக்கறை.

ஐ. அறக்காப்பாளருக்கு (Trustee) அறக்கட்டளையை அனுபவிக்கும் உரிமை உடையவரின் (Beneficiary) ஆயுள் மீதுள்ளஅக்கறை,

ஒ. ஆயுள் காப்பீடு அளிப்பவருக்கு (Insurer), ஆயுள் காப்பீடு பெறுபவரின் ஆயுள் மீதுள்ள அக்கறை. (இதனால் காப்பீடு அளிப்பவர், காப்பீடு பெறுபவரின் ஆயுளை வேறொரு நிறுவனத்தில் மறுகாப்பீடு (Re-insurance) செய்து கொள்ளலாம்.)

பொதுவாகக் காப்பீட்டு ஒப்பந்தங்கள் இழப்பீட்டு ஒப்பந்தங்களாகவே (Contracts of Indemnity) கருதப்படுகின்றன. ஆனால், ஆயுள் காப்பீட்டு ஒப்பந்தம் இதற்கு மாறுபட்டதாகும். ஒருவரின் ஆயுள் இழப்பையோ, உடல் தீங்கையோ காப்பீடு செய்பவர் பணத்தினால் ஈடு செய்ய முடியாது. இவ்வாறு ஈடு செய்தல் தீ, மற்றும் கடல் சார் காப்பீட்டு ஒப்பந்தங்களில் மட்டிலுமே இயலும். எனவேதான், ஆயுள் காப்பீட்டு ஒப்பந்தங்கள் ஓர் எதிர்பாராப் பின்

னிகழ்ச்சி ஒப்பந்தங்களாகக் (Contingent of Contracts) கருதப்படுகின்றன.

சொத்துரிமை மாற்றுச் சட்டக் (Transfer of Properties) கட்டுப்பாடுகளின்படி, ஆயுள் காப்பீட்டு ஒப்பந்தங்கள் மாற்றம் செய்யத் தக்க ஓர் உடைமையாகும். ஆகவே, ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு உடைமை மாற்றம் செய்யப்படுவது உடனே காப்பீட்டாளருக்குத் தெரிவிக்கப்பட வேண்டுவது இன்றியமையாததாகிறது. பா.வ.

துணை நூல்கள்:

Sharma R.S., Insurance - Primiables and Practice, Bombay, 1960.

Arif Khan M., Theory and Practice of Insurance, Aligarh, 1976.

The ... Insurance Act, 1938, Government of India.

Bajpal D.P., Life Insurance, Allahabad, 1957.

**ஆயேசியசு,** (கி.பி. 396-454) ஓர் உரோமானியப் படைத்தலைவர். தம் வாழ்வின் தொடக்கத்தின் ஒரு பகுதியை இவர் நாகரிகம் குறைந்த ஹூணர்களிடமும், கோத்துகளிடமும் பிணையக் கைதியாகக் கழித்தார். பின்னர் ஆயேசியசு (Aetius) ஏனைய நாகரிகம் குறைந்த படை வீரர்களைப் பயன்படுத்திச் சீரழிந்து வந்த உரோமானியப் பேரரசின் மேற்குப் பகுதிகளை நிலைநிறுத்த முயன்றார். இத்தாலியில் கி.பி.424-ஆம் ஆண்டில் சட்டத்தை நிலைநாட்டினார். பின்னர் இவர் கால் (Gaul) நாட்டின் படைத்தளபதியாக அமர்த்தப் பெற்றார். மேற்கில் தம் திறமையையும் தனித்தன்மையையும் வெளிப்படுத்திய படைத்தலைவராக இவர் மதிக்கப் பெற்றார். இவரது புகழைக் கி.பி. 451-இல் நடைபெற்ற சாலோன்சு (Chalons) என்னும் மாபெரும் போர் எடுத்தியம்பும். இப்போரில் ஹூணர்களின் படையைத் தலைமையேற்று நடத்திய அட்டிலாவை, விசிகோத்துகளைக் கொண்டிருந்த ஆயேசியசின் படை தோற்கடித்தது. அடுத்த ஆண்டில் இத்தாலி மீது படையெடுத்த ஹூணர்களுடன் நெருங்கிய உறவு கொண்டிருந்தார் என்ற ஐயத்திற்கு ஆளான ஆயேசியசைப் பேரரசர் மூன்றாம் வேலண்டினியன் (Valentinian III) கொன்றுவிட்டார்.

**ஆர்க்காட்டு நவாபுகள்** கி.பி 18,19-ஆம் நூற்றாண்டுகளில் வடஆர்க்காடு மாவட்டத்திலுள்ள ஆர்க்காடு என்னும் ஊரை மையமாகக் கொண்டு அரசாண்ட இசுலாமிய அரசர்கள். அவுரங்கசீப்புத் தம் தக்காணப் படையெடுப்பின்போது கி.பி.1689-ஆம் ஆண்டில் கோல்கொண்டா கோட்டையைக் கைப்பற்றினார். பின்னர் மராத்தியர்கள் ஆண்ட தஞ்சாவூரும், நாயக்கர்கள் ஆண்ட திருச்சியும் கைப்பற்றப்பட்டுக் கொள்ளையடிக்கப்பட்டன. மராத்தியர்களும், நாயக்கர்களும் மொகலாயரின் மேலாண்மையை ஒப்புக் கொண்டு, கப்பம் செலுத்துவதாக உறுதி அளித்தனர். புதிதாக வென்ற கருநாடகப்பகுதி, வடக்கே ஓங்கோலையும் தெற்கே செஞ்சியையும் கிழக்கே சோழமண்டலக்கரையையும் எல்லைகளாகக் கொண்டமைந்தது. பாலாற்றின் கரையில் உள்ள ஆர்க்காடு தலைநகரமாகியது. அப்பகுதி முகலாயரின் தலைநகருக்கு வெகு தொலைவில் இருந்ததால், அப்பகுதியின் தொடர்பைத் தொடர்ந்து வைத்திருக்கவும், நிலவரி முதலிய வருவாய்களைப் பெறவும், செலவினங்களை மேற்கொள்ளவும் ஆளுநர் ஒருவரை அமர்த்தினார். அவரே 'நவாபு' எனப்பட்டார். சுல்பிகர்கானுக்குத் துணையாக விளங்கிய தாவுத்கானால் கி.பி.1710-ஆம் ஆண்டு சாததுல்லாகான் என்பார் நவாபாக அமர்த்தப்பட்டார். இவரது ஆட்சி, அமைதியாகவும் சீராகவும் சிறப்பாகவும் நடைபெற்றது. இவர் கி.பி.1732 வரை ஆட்சி செய்து இறந்தார். இவர் மகன் தோசுத்து அலி (Dost Ali) கி.பி.1732-இல் நவாபாகப் பொறுப்பேற்றார். இவர் கி.பி.1740 வரையில் ஆண்டார். இவர் மகன் சப்தார் அலி; மருமகன் சந்தா சாகிபு, தோசுத்து அலி இவர்கள் இருவரிடமும் நவாபுப்பொறுப்பை விட்டுவிட்டுத் தாம் ஆட்சி புரியாமல் இருந்தார். சந்தா சாகிபு மராத்தியர் ஆண்ட தஞ்சையையும், நாயக்கர் ஆண்ட திருச்சிராப்பள்ளியையும், மதுரையையும் கைப்பற்றினார். மதுரையை ஆண்ட மீனாட்சி தற்கொலை புரிந்து கொண்டாள். தாம் கைப்பற்றிய பகுதிகள் எல்லாவற்றுக்கும் தாமே நாவாபு எனச் சந்தா சாகிபு அறிவித்தார்.

போரில் தோல்வியுற்ற தஞ்சை மராத்திய அரசர், பீசுவாவின் உதவியைக் கோரினார். பீசுவா, மராத்திய அரசருக்கு உதவி செய்ய இரகோசி பான்சுலே, பத்தேசிங்கு ஆகிய படைத்தலைவர்களுடன் ஒரு பெரும் குதிரைப் படையை அனுப்பிவைத்தார். மராத்தியப் படை நவாபுப் படையுடன் தமால்சேரி கணவாய் என்னும் இடத்தில் கி.பி.1740- இல் போரிட்டுத் தோற்கடித்தது. போரில் தோசுத்து அலி இறந்து விட்டார். அவர்தம் திவானான மீர் ஆசாத்துச் சிறைப்படுத்தப்பட்டார். மராத்தியர்கள் தோசுத்து அலியின் மகனையே நவாபாக மதித்து அவருடன் உடன்படிக்கையொன்றைச் செய்து கொண்டனர். அதன்படி நவாபு, இரகோசி பான்சுலேவுக்கு ஒரு கோடி உருபாய் கொடுத்து அமைதி ஏற்படுத்தினார். மேலும், ஆண்டுதோறும் 'சௌத்து' எனப்படும் நான்

கில் ஒரு பங்கு வரித்தொகையினையும் மராத்தியர்களுக்கு அளிப்பதாகக் கூறினார். மராத்தியப்படை தொடர்ந்து திருச்சிராப்பள்ளியை அடைந்தது. அங்கு ஆட்சிபுரிந்த சந்தாசாகிபைத் தோற்கடித்துக் கைது செய்து, சதாராவில் உள்ள சிறைச் சாலையில் அடைத்தது. திருச்சிராப்பள்ளியில் முராரிராவ் கோர்ப்படே என்பாரை ஆளுநராக அமர்த்தி, அவருக்குக் கீழே சிறந்த படை அமைப்பையும் இரகோசி பான்சுலே ஏற்படுத்தினார். இதனால் சிலகாலம் அங்கு அமைதி நிலவிற்று.

தோல்வியுற்ற, தோசுத்து அலியின் மகனான சப்தார் அலி தொடர்ந்து நவாபாக இருக்க விரும்பவில்லை. அவர் தம் குடும்பத்தினரையும், சந்தா சாகிபு குடும்பத்தினரையும் பிரெஞ்சு கவர்னர் தூமாசு **(Dumas)**, என்பாரின் கீழ்த் தஞ்சம் அடையச் செய்தார். அவர் வேலூர்க் கோட்டையில் இருந்த அவர் மைத்துனர் மூர்த்தாசா அலியுடன் சேர்ந்து கொண்டார். மூர்த்தாசா அலி சூழ்ச்சிகள் மேற்கொண்டு, சப்தார் அலியைக் கொன்று தாமே நவாபாக முயன்றார். அதனை அறிந்த சப்தார் அலியின் போர் வீரர்கள் மூர்த்தாசா அலியை எதிர்த்துக் கலகஞ் செய்தனர். அக்கலகத்தினரை அடக்க இயலாமல் மூர்த்தாசா அலி சப்தார் அலியின் மகனான முகமதுகான் என்பாரை நவாபாக்கினார்.

கருநாடகத்தில் ஏற்பட்ட தோல்விகள், நிசாம் உல்முல்க்கினைக் கலக்கமடையச் செய்தன. அதனால், அவர் இரண்டு இலட்சம் பேர் அடங்கிய பெரிய காலாட் படையையும், எண்பதினாயிரம் வீரர்கள் அடங்கிய குதிரைப் படையையும் கொண்டு, கருநாடகத்திற்குப் புறப்பட்டார். திருச்சிராப்பள்ளியை ஆண்டு வந்த முராரிராவ் கோர்ப்படேவுக்கும், நிசாமுக்கும் இடையே போர் நிகழ்ந்தது. நிசாமின் படையை எதிர்க்க இயலாத முராரிராவ், போர்க்களத்தைவிட்டே ஓடி விட்டார். திருச்சிராப்பள்ளி, நவாபு ஆட்சியின் கீழ் வந்தது. கோசா அப்துல்லாகான் என்பாரைப் புதிய நவாபாக அமர்த்தினார். சாததுல்லாகானின் மரபினர் மாறிப் புதிய நவாபு மரபினரின் ஆட்சி தொடங்கலாயிற்று.

அன்வாருதீன் ஆர்க்காட்டில் நவாபாக வீற்றிருந்தபோது, ஆங்கிலேயர் புனித சார்சுக் கோட்டையைச் **(Fort St. George)** சென்னையில் கட்டிக் கொண்டு வாணிகம் புரிந்து வரலாயினர். அதே போன்று பிரெஞ்சுக்காரர்கள் புதுச்சேரியில் வாணிகம் செய்து வந்தனர். தூப்ளே **(Dupleix)** என்ற பிரெஞ்சுக்காரர் கி.பி. 1742-இல் புதுச்சேரியின் ஆளுநராக அமர்த்தப் பெற்றார். இவர் திறமை மிக்கவர். செய்யும் செயலில் முனைப்புக் காட்டுபவர்; புகழ் பெறுவதில் மிக்க நாட்டமுள்ளவர்.

ஐரோப்பாவில் ஆசுத்திரிய மரபுரிமைப்போர் கி.பி. 1740-இல் தொடங்கியது. ஆங்கிலேயருக்கும், பிரெஞ்சுக்காரருக்கும் நடைபெற்ற அப்போரினை இந்தியாவிலும் மேற்கொள்ள எண்ணினர். ஆங்கிலேயக் கடற்படை கி.பி. 1745-இல், பார்னட்டு என்பாரின் தலைமையில் சென்னை வந்தடைந்தது. நவாபைத் தூப்ளே சந்தித்து, நவாபின் பகுதிக்குள் ஆங்கிலேயர் போரிடுவதைத் தடை செய்யக் கோரினார். அதனை அன்வாருதீன் ஏற்றுக் கொண்டு, ஆங்கிலேயர்கள் பிரெஞ்சுக்காரர்களுடன் மேற்கொள்ள இருந்த போருக்கான அனுமதியினை மறுத்தார். ஆங்கிலேயப் படைகள், போர் புரியாமல் நாடு திரும்பின. ஆயினும் பிரெஞ்சுக் கடற்படையொன்று சென்னையை வந்தடைந்த போது, நவாபு போரிட அனுமதி மறுத்த போதிலும், பிரெஞ்சுப் படை போரிட்டுப் புனித சார்சுக் கோட்டையைக் கைப்பற்றியது. அதனைத் தடுத்து நிறுத்த நவாபு தம் பெரிய படையை அனுப்பினார். அடையாற்றில் கி.பி. 1746-ஆம் ஆண்டில் நவாபு படையும், பிரெஞ்சுப்படையும் போரிட்டன. ஆற்றல் வாய்ந்த படைக் கருவிகளையும் புதிய முறைகளையும் கையாண்டதால், சிறிய பிரெஞ்சுப்படையானது, பெரிய நவாபு படையை வென்றது. தூப்ளே போரைத் தொடர்ந்து செய்து, கடலூரில் உள்ள புனித தாவீது **(St.David)** கோட்டையையும் கைப்பற்றினார். அனுமதியை மீறிய பிரெஞ்சுக்காரர்களை நவாபு தண்டித்து விரட்ட எண்ணினார். ஆங்கிலேயருக்கு உதவி புரிந்து அவர்கள் வழியாகப் பிரெஞ்சுக்காரர்களைத் தோற்கடிக்க நினைத்தார். அக்காலக் கட்டத்தில் ஐரோப்பாவில் கி.பி. 1748-ஆம் ஆண்டில் எய்லாசேப்பெல் என்னும் இடத்தில் ஏற்பட்ட உடன்படிக்கையின்படி, ஆங்கிலேயரும், பிரெஞ்சுக்காரரும் போரை நிறுத்திப் பழைய பகுதிகளை மீண்டும் பெற்றுக் கொண்டனர். இதனால், சென்னையைத் தூப்ளே ஆங்கிலேயரிடம் கொடுத்தார்.

நிசாம் உல்முல்க்கு கி.பி. 1748-ஆம் ஆண்டு இறந்தார். நிசாமின் இரண்டாம் மகன் நாசர் சங்கும், பேரன் முசாபர் சங்கும் நவாபு பதவிக்குப் போட்டியிட்டனர். நாசர்சங்கு நவாபானார். நிசாம் போட்டியில் தோல்வியுற்ற முசாபர்சங்கு நிசாம் பதவியை அடையத் திட்டங்கள் தீட்டலானார்.

சதாரா சிறைச்சாலையில் அடைக்கப்பட்டிருக்கும் தோசுத்து அலியின் மருமகனான சந்தா சாகிப்பை விடுதலை செய்து, கருநாடக நவாப்பாக்கவும் முயன்றார். சந்தா சாகிபின் மகனான இராசாசாகிபு தூப்ளேயைச் சந்தித்துச் சந்தா சாகிபை மராத்தியர் சிறையிலிருந்து விடுவிக்கக் கோரினார். தமக்கு எதிராகச் செயற்பட்ட அன்வாருதீனுக்குப் போட்டியாகச் சந்தாசாகிபை உருவாக்க எண்ணினார்.

மராத்தியர்களிடம் ஏழு இலட்ச ரூபாய் ஈட்டுத் தொகை அளித்துச் சந்தா சாகிபை விடுதலை செய்து அழைத்து வந்தார். சந்தா சாகிபும், முசாபர் சங்கும் இணைந்து அன்வாருதீன் மீது போர் தொடுக்கலாயினர். அப்போர் வடார்க்காடு மாவட்டத்தில் உள்ள ஆம்பூர் என்னும் இடத்தில் நிகழ்ந்தது. போரில் அன்வாருதீன் கொல்லப்பட்டார். அவர்தம் முறைசாரா மகனான முகம்மது அலி என்பவரையே ஆங்கிலேயர் நவாபாக்க முயன்றனர். தூப்ளே சந்தா சாகிபை நவாபாக்க முயன்றார். போர் தொடர்ந்தது. முகமது அலி ஆர்க்காட்டிலிருந்து தப்பிச் சென்று திருச்சிராப்பள்ளிக் கோட்டையில் அடைக்கலம் புகுந்தார். சந்தா சாகிபு ஆர்க்காட்டு நவாபானார். அவர் மீது தூப்ளேயின் ஆதிக்கம் மிகுதியாயிற்று. ஆங்கிலேயரின் செல்வாக்குக் குறையலாயிற்று. மீண்டும் முகமது அலியை நவாபாக்க ஆங்கிலேயர் முயன்றனர். ஆங்கிலேயப் படை திருச்சிராப்பள்ளியில் இருந்த முகமது அலியைப் பாதுகாத்தது. சந்தா சாகிபு முகமது அலியைத் தாக்க எண்ணித் திருச்சிராப்பள்ளியை நோக்கிப் படையுடன் சென்றார். வழியில் ஆங்கிலேயர் உதவியைப் பெற்றிருந்த தஞ்சாவூர் அரசரைப் பணிய வைத்தார். சந்தா சாகிபிற்குத் தஞ்சை அரசர் 70 இலட்ச ரூபாய் கொடுப்பதாக வாக்குறுதி அளித்தார்.

கருநாடகத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் யாவும் நிசாமைக் கலக்கமடையச் செய்தன. நிசாம் முசாபர் சங்கையும், சந்தா சாகிபையும் முறியடிக்கப் பெரும் படையுடன் புறப்பட்டார். ஆங்கிலேயர் உதவியும் அவருக்குக் கிடைத்தது. முசாபர்சங்கு போரில் தோல்வியுற்று நிசாமிடம் சரணடைந்தார். இருப்பினும் நிசாமின் வெற்றி நெடு நாட்கள் நீடிக்கவில்லை. நிசாமாகிய நாசர்சங்கு குறுநிலத் தலைவர் சிலரால் கொல்லப்பட்டார். தூப்ளே முசாபர்சங்கை நிசாமாக்கினார்.

சந்தா சாகிபு திருச்சிக் கோட்டையை முற்றுகையிட்டார். பிரெஞ்சுப் படை அவருக்குத் துணை புரிந்தது. அப்போது ஆர்க்காடு கோட்டை பாதுகாப்பின்றி இருந்ததைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் ஆங்கிலேயர் செயற்படலாயினர்.

இராபர்ட்டு கிளைவு என்பார் கி.பி. 1751-ஆம் ஆண்டு இருநூறு ஆங்கிலேய வீரர்களுடனும் முந்நூறு இந்திய வீரர்களுடனும் சென்று புனித தாவீது கோட்டையைக் கைப்பற்றினார். ஆர்க்காடு கோட்டையும் அவர் வசமாயிற்று. ஆரணி என்னும் இடத்தில் இராசா சாகிபின் படையைத் தோற்கடித்தார். பிரெஞ்சுப் படை காவேரிப்பாக்கம் என்னுமிடத்தில் தோற்கடிக்கப்பட்டது. சந்தா சாகிபு தஞ்சாவூர் அரசரிடம் சரணடைந்தார். தஞ்சாவூர் அரசர் ஆணையால் சந்தா சாகிபு கொல்லப்பட்டார். முகமது அலி ஆர்க்காடு நவாபாக்கப்பட்டார். முகமது அலிக்குச் செய்த உதவிக்காக ஆங்கிலேயர் சில மாவட்டங்களில் வரியினைப் பெறும் உரிமையினைப் பெற்றனர். ஆங்கிலேயர் மிகுதியான வரியைப் பெற்று மக்களை வாட்டியதால் நவாபு ஆட்சியில் மக்கள் துயருற்றார்கள். மேலும், ஆங்கில வாணிகக் குழு ஊழியர்கள் நவாப்பின் பொருட்டுக் கடன் வசூலிப்பவர்களாக விளங்கினர். நவாபின் பகட்டான செலவினங்களுக்குப் பெரும் அளவில் பணம் கொடுத்துப் பலமடங்கு தொகையினைக் கோரினர். ஆங்கிலேயரின் செல்வாக்கு மிகுந்தது.

முகமது அலி தொடங்கிய கால்வழி, வாலாசா கால்வழி எனப்பட்டது. அவர் பெயரில் வாலாசா பாத்து என்னும் நகரம் நிறுவப்பட்டது. அதற்கு வாலாசாவின் இருப்பிடம் என்பது பொருள். அவர் ஆங்கிலேயரின் செல்வாக்கு இல்லாமல் தம்விருப்பப்படி செயற்பட விழைந்தார். இருந்தபோதிலும் அவருடைய பகட்டான செலவினங்கள் அவரை ஆங்கிலேயரின் கடனாளியாக்கியது. மேலும் பணம் பெற விரும்பிய நவாபு, ஆங்கிலேயர் உதவியுடன் தஞ்சாவூர் மீது போர் தொடுத்தார். தஞ்சாவூர் கி.பி. 1773-இல் நவாபு வசமாயிற்று. அதற்கு உடந்தையாக இருந்த சென்னை ஆளுநரை இங்கிலாந்து கண்டித்துச் சிறையிலடைத்தது. அவர் சில நாட்களில் இறந்து விட்டார்.

நவாபு, கடன் கொடுத்தவர்களுக்குக் கொடுக்க வேண்டிய தொகை பெருகவே, அப்போது தலைமை ஆளுநராக விளங்கிய காரன்வாலிசு (Cornwallis) நவாபுக்கு ஆண்டு ஒன்றுக்கு 12 இலட்சம் உரூபாய் கொடுத்துக் கருநாடக நிருவாகத்தைத் தாங்கள் எடுத்துக் கொள்வதாக உடன்படிக்கை செய்து கொண்டார். அதனை மீறமுயன்றபோது நவாபின் மீது ஆங்கிலேயர் போர் தொடுத்தனர். நவாபு கி.பி. 1790-இல் நடைபெற்ற போரில் தோல்வியுற்றார். நவாபுடன் புதிய உடன்பாடு கி.பி. 1792-இல் செய்து கொள்ளப்பட்டது. அதன்படி போரின் இழப்பீட்டுத் தொகையாக மதுரை திருநெல்வேலி ஆகிய பகுதிகளின் வருவாயினை ஆங்கிலேயருக்குக் கொடுக்க நவாபு இசைந்தார். முகமது அலி கி.பி. 1795-இல் இறந்து விட்டார். அவர் மகன் உம்தத் உல் உமாரா, திப்பு சுல்தானுடன் உறவு வைத்திருப்பதாக ஆங்கிலத் தலைமை ஆளுநர் வெல்லசுலி குற்றம் சாட்டினார். கருநாடகத்தின் ஆட்சியினை ஆங்கிலேயர் பெற்றுக் கொண்டு, நவாபு என்ற பட்டப் பெயரையும் கருநாடகத்தின் வருவாயுள் ஐந்தில் ஒரு பங்கினையும் கொடுப்பதாகக் கூறினார். அதனை ஏற்குமுன்னர் உம்தத் உல் உமாரா இறந்தார். அவர் மகனான அலி உசைன் அதனை ஏற்க

வில்லை. அவர் மருமகனான அசீம் உத்தவுலா அதனை ஏற்றுக் கொண்டார். நவாபின் கடன்கள் யாவும் கி.பி. 1824-இல் தீர்க்கப்பட்டன என்பது அறிவிக்கப்பட்டது. எனினும் முப்பது கோடி உரூபாய் புதிய கடன்கள் பெற்றுள்ளார் எனக் கடன் கொடுத்தவர்கள் அறிவித்தார்கள். விசாரணையில் இரண்டரை கோடி உரூபாயே நவாபு உண்மையாகப் பெற்றிருந்தார் என்பது அறிய வந்தது. முகமது கவுசு என்பார் நவாபாக இருந்து கி.பி. 1855-ஆம் ஆண்டில் பிள்ளை இல்லாமல் இறந்தார். அப்போது தலைமை ஆளுநராக விளங்கிய தல்அவுசி பிரபுவின் (Lord Dalhousie) பிள்ளையற்றோரின் சொத்துகளை எடுத்துக்கொள்ளுதல் (Doctrine of Lapse) என்னும் கொள்கையைப் பயன்படுத்திக் கருநாடகப் பகுதியில் நவாபின் சலுகைகள் யாவும் நிறுத்தப்பட்டன. ஆர்க்காடு நவாபு வழித் தோன்றல்கள் இன்னும் சென்னை, திருச்சி, முதலிய நகரங்களில் வாழ்ந்து வருகின்றனர். எல்.இரா.

**துணை நூல்கள்:**

Majumdar, R.C., & Others., An Advanced History of India, Mc Millan, Delhi., 1982.

Sathiyanathaier, R., & Vasudeva Rao T.N., History of India, Part III, P. Varadachari & Co., Madras, 1982.

Spear Percival, Modern India, Oxford University Press, London, 1976.

**ஆர்க்காடு கிழார் மகனார் வெள்ளைக் கண்ணத்தனார்** சங்க காலப் புலவர். வடஆர்க்காடு மாவட்டத்தின் தலைநகராகிய வேலூருக்குக் கிழக்கே ஆர்க்காடு என்னும் பெயரில் ஓரூர் உள்ளது. இவ்வூர் சேந்தன் தந்தை அழிசி என்பானுக்கு உரியது. இவ்வூர் நெல் விளையும் நிலங்களைக் கொண்டது என்று பழந்தமிழ் நூல்கள் கூறுகின்றன.

வளம்மிக்க இவ்வூரில் பிறந்து, அரசர்கள் பாராட்டி அளித்த கிழார் என்ற சிறப்புப் பெயர் பெற்று விளங்கிய ஆர்க்காடு கிழாருக்குப் பிறந்தவரே புலவர் வெள்ளைக் கண்ணத்தனார் ஆவார். அத்தனார் இவர் பெயர் எனவும், உறுப்பின் சிறப்பால் வெள்ளைக் கண் என்னும் அடைமொழி அமைந்தது எனவும் கூறுவர். இவர் பாடிய பாடல் ஒன்று அகநானூற்றில் (64) இடம்பெற்றுள்ளது. என்.இ.இ.

**ஆர்க்னிக் தீவுகள்** பிரிட்டிசுத் தீவுகளுக்கு வடக்கே அமைந்துள்ளன; பென்ட்லாந்து கடற்கழியிலிருந்து (Pentland Firth) 10 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளன. இக்கடல்வழியே இசுகாட்டிலாந்திலிருந்து (Scotland) இத்தீவுகளைப் பிரிக்கிறது. ஆர்க்னித் தீவுகள் (Orkney Islands) 67 சிறு தீவுகளைக் கொண்டவை; 976 ச.கி.மீ. பரப்பளவுடையவை; 160 கி.மீ. கடற்கரைப்பகுதிகளைக் கொண்டவை. இத்தீவுகளுள் 25 தீவுகளிலேயே மக்கள் வசிக்கின்றனர். மெயின்லாந்து (Mainland), ஆய் (Hoy), வடக்கு உரொனால்டுசே (North Ronaldshay), தெற்கு உரொனால்டுசே (South Ronaldshay), பிளோட்டா (Flotta), புர்ரே (Burray), உரூசே (Rousay) சாபின்சே (Shapinsay), இசுட்ரோன்சே (Stronsay), ஈடே (Eday), வெசுட்ரே (Westray), சேண்டே (Sanday) முதலியன குறிப்பிடத்தக்க தீவுகளாகும். இங்கு வாழ்கிற மக்களுள் பெரும்பான்மையோர் இசுகாண்டிநேவிய வழி வந்தவர்கள். இங்கு வேளாண்மையும் மீன் பிடித்தலும் சிறப்பான தொழில்களாகும். மீன், முட்டை ஆகியவை ஏற்றுமதி செய்யப்படும் பொருள்களாகும். முற்காலத்தில் செல்டிய இன மக்கள் இங்கு வாழ்ந்தனர். இங்குச் சிறந்த கடற்படைத் தளமுள்ளது. இதன் தலைநகரம் கிர்க்வால் (Kirkwall) ஆகும். இத்தீவுகள் மிக வடக்கே இருப்பதால் சூரிய வெளிச்சத்தையும் கோடையில் இரவையும் காணமுடியாது.

**ஆர்க்கேஞ்சல்** சோவியத்து உருசியாவின் வடக்கே உள்ள நகரம். இந்நகரத்தின் மாவட்டமும் இதே பெயரைக் கொண்டுள்ளது. ஆர்க்டிக்கு வட்டத்திலிருந்து தெற்கே 160 கி.மீ. தொலைவில் துவினா (Dvina) ஆறு வெண்கடலோடு (White sea) கலக்கும் இடத்தில் அமைந்துள்ளது. ஆர்க்கேஞ்சல் நகரம் (Archangel) கி.பி. 1584-இல் உருவாக்கப்பட்டது. துறைமுக நகரமான இந்நகரிலிருந்து இரண்டாம் உலகப் போரில் பல பண்டங்கள் சோவியத்து உருசியாவிற்கு அனுப்பப்பட்டன. ஆண்டில் ஆறுமாதம் இத்துறைமுகத்தில் பனி உறைந்துவிடும். இன்று இத்துறைமுகம் பெரிய வாணிகத்தலமாக உள்ளது. இந்நகரம் பிற நகரங்களுடன் இருப்புப் பாதையுடன் இணைக்கப்பட்டுள்ளது. மரமறுத்தல் இங்கு நடைபெறுகிற சிறந்த தொழிலாகும்.

**ஆர்க்டிக்குப் பெருங்கடல்** உலகிலேயே மிகச் சிறிய கடல். இதன் பரப்பு 94,85,100 ச.கி.மீ. இது பசுபிக்குப் பெருங்கடலின் அளவில் பத்தில் ஒரு பங்கினைக் கொண்டது. ஆசியா, ஐரோப்பா, வட அமெரிக்கா ஆகிய கண்டங்களுக்கு வடக்கில் ஆர்க்டிக்குப் பெருங்கடல் அமைந்துள்ளது. இதனைத் தனியான பெருங்கடல் என்பதை விட அட்லாண்டிக்குப் பெருங்கடலின் ஒரு பகுதி என்பதே பொருத்தமாகும் என நிலநூல் வல்லுநர் கருதுகின்றனர். ஆர்க்டிக்குப் பெருங்கடலின் மையமாக இருப்பது வடதுருவமாகும். இப்பெருங்கடலின் பெரும்பாலான பகுதிகள் பனியால் மூடப்பட்டுள்ளன. பிதியசு என்னும் கிரேக்க

வல்லுநர் கி.பி. 300-ஆம் ஆண்டளவில் கப்பலில் பயணஞ் செய்து ஆர்க்டிக்கு வட்டத்திற்கு மிக அருகில் சென்று திரும்பினார். கடற்கொள்ளையர் (Vikings) கி.பி. 800-ஆம் ஆண்டளவில் இங்குக் கப்பற் பயணம் செய்து வந்தனர் என்று வரலாற்றாசிரியர் கருதுவர். ஆர்க்டிக்குப் பெருங்கடல் பக்கம் கி.பி. 1900-ஆம் ஆண்டுவரை பயணம் செய்தவர்கள் மிகக்குறைவு. ஆனால், இன்று இப்பெருங்கடல் சிறப்பான வாணிக, இராணுவச் சிறப்புத் தன்மைகள் வாய்ந்ததாக மாறி வருகிறது.

**ஆர்க்டிக்கு வட்டம்** கனடா, அலாசுகா, உருசியா, நார்வே, சுவீடன் ஆகிய நாடுகளின் வட பகுதிகளில் இருப்பதாகக் கருதப்படும் ஒரு கற்பனைக் கோடு. 66·30° வட குறுக்குக் கோட்டிற்கு வடப்பால் உள்ள பகுதிகள் ஆர்க்டிக்கு வட்டத்திற்குள் வரும். சூரியன் அடிவானத்திற்கு மேல் ஒவ்வோர் ஆண்டும் ஒன்று அல்லது பல நாட்கள் மறையாமல் தென்படும். இது ஆர்க்டிக்கு வட்டத்தில் காணப்படும் சிறப்பியல்பாகும். ஒவ்வோர் ஆண்டும் சூன் 21-ஆம் நாள் சூரியன் மறைவதே இல்லை. இதுவே கோடைக் காலத்தின் மிக நீண்ட பகலாகும். திசம்பர் 21-ஆம் நாள் சூரியன் தென்படாத நாளாகும். குளிர்காலத்தில் இதுவே குறுகிய பகலாகும். வடதுருவத்தில் சூன் 21-ஆம் நாளுக்கு முன் 90 நாட்களும் பின் 90 நாட்களும் சூரியன் தென்படுகிறது. வானம் மேக மூட்டமில்லாமல் இருப்பின் இக்காட்சியை அங்கு உறுதியாகக் காணலாம். திசம்பர் 21-ஆம் நாளுக்கு முன்னரும் பின்னரும் அடிவானத்திற்குக் கீழ் சூரியன் தென்படுகிறது.

**ஆர்கலிசு** என்பது, கிரீசு (Greece) நாட்டின் வடகிழக்குப் பெலப்பனீசுவின் (Peloponnesus) பெயராகும். இதன் வடக்கில் காரிந்தும், மேற்கில் ஆர்க்கேடியாவும் எல்லைகளாக உள்ளன. இதே பெயரில் ஒரு மாவட்டமும் உள்ளது. ஆர்கலிசு (Argolis) என்னும் வளைகுடா, ஈசியக் கடலைச் சார்ந்துள்ளது. இங்கு ஆர்காசு (Argos) என்னும் நகரமும், நாப்பிலியா (Nauplia) என்னும் துறைமுகமும் உள்ளன. நாப்பிலியா ஆர்கலிசுவின் தலைநகராகும். அங்குச் சந்தைக்கடையும் புகையிலை பதனிடும் மையமுமுள்ளன. ஆர்கலிசு கி.பி. 1830 முதல் 1834 வரை இக்காலக் கிரீசின் தலைநகராயிருந்தது. இதன் பரப்பு 2214 ச.கி.மீ; மக்கள் தொகை 88,698 (1971).

**ஆர்கன்,** அழுத்தமான காற்றினால் இயக்கப்படும் ஓர் இசைக் கருவியாகும். இக்கருவியிலுள்ள குழாய்கள் ஒவ்வொன்றும் ஒவ்வோர் ஒலியைத் தோற்றுவிக்கும். பெர்லின் அருங்காட்சியகத்தில் காணப்படும் கி.மு. முதலாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஓர் இசைக் கருவியின் உருவம், இக்காலத்து ஆர்கன் என்னும் இசைக் கருவியை ஒத்திருக்கிறது. மண்ணாலான இவ்வுருவம், சிரியா நாட்டைச் சேர்ந்த ஒரு மனிதன் ஆர்கன் என்ற இசைக்கருவியுடன் இணைந்து பாடுவதாக அமைந்துள்ளது. இக்கருவியிலுள்ள குழாய்களைத் துருத்தியுடன் இணைத்து, அத்துருத்தியைத் தன் கால்களினால் அழுத்துவதால் ஒலியெழுப்புவதைப் போன்று இவ்வுருவம் காணப்படுகிறது.

உரோமானிய நாட்டில் பழக்கத்தில் இருந்து வந்த ஆர்கன், மிகுந்த வன்மையான ஒலியை எழுப்பக் கூடியதாக அமைந்திருந்தது. இது துன்பியல் நிகழ்ச்சிகளுடன் தொடர்புடையதாக இருந்ததால் திருச்சபை இக்கருவியைச் சிலகாலம் வரையில் அறவே விலக்கியிருந்தது. இசுபானியத் திருச்சபைக் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிலிருந்தும், இங்கிலாந்துத் திருச்சபைக் கி.பி. எட்டாம் நூற்றாண்டிலிருந்தும் இக்கருவியைப் பயன்படுத்தத் தொடங்கின.

அக்காலத்து ஆர்கன் பெட்டியில் பல குழாய்கள் இருந்தன. காற்றைத் துருத்தியால் அக்குழாய்களின் வழியே உள்ளே செலுத்தி ஒலிக்குமாறு செய்தார்கள். இக்குழாய்களில் ஏதாவது ஒருகுழாயை ஒலிக்காமற் செய்ய அதன் வாயைக் கையால் மூடிக் கொண்டு மற்றவற்றை ஒலிக்குமாறு செய்வார்கள். உலோகத் தகட்டால் குழாய்களை மூடும் வழக்கம் பின்னர் வந்தது. இதன் ஒலி நீண்ட தூரம் கேட்டது. மாதா கோவில்களில் குழு கானத்திற்கு இவ்விசைக் கருவி பயன்படுத்தப்பட்டது. பிறகு கையினால் இசைக்கும் கட்டைகளைத் தவிர காலினால் இயக்கும் மிதிகட்டைகளைப் பயன்படுத்திப் பல ஒலிகளை ஒரே காலத்தில் எழுப்பும் முறை தோன்றியது. சோசப் பூத்து என்ற ஆங்கிலேயர், காற்றின் அழுத்தத்தினால் கட்டைகளை எளிதில் இயக்கும் முறையைக் கண்டுபிடித்தார். மின்சாரத்தால் இயங்கும் கட்டைகள் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் கண்டுபிடிக்கப்பட்டன. இவ்வகை ஆர்கனில் சாவியை அழுத்தினால் மின்காந்தம் இயங்கத் தொடங்கிக் குழாய்கள் ஒலிக்கின்றன.

பெரும்பாலும் நான்கு கட்டைப் பலகைகளையும் (Keyboards) ஒரு மிதி பலகையையும் கொண்டதாக இக்காலத்தில் ஆர்கன் விளங்குகிறது. இது இதன் கட்டைகளிலிருந்து 64 ஒலிகளையும் மிதிபலகைகளிலிருந்து 32 ஒலிகளையும் தரக்கூடியதாக இருக்கின்றது. இங்கிலாந்தில் ஆல்பர்ட்கால் என்னும் அரங்கிலுள்ள ஆர்கன் 9,723 குழாய்களையும், 146 குழாய்த் தொகுதிகளையும் கொண்டிருக்கிறது. இதுவே மிகப் ஆர்கன் என்று கருதப்படுகிறது. இதற்கும் பெரியதாக பெரியலிவர்பூல் என்னுமிடத்திலுள்ள மாதா கோவிலில் அமைக்கப்பட்டு வருகிறது. ஆர்கனுக்குத் தகுந்த

இசையை இயற்றிய வல்லுநர்களுள் பாக்கு (Bach) என்பவர் முதன்மையானவராகக் கருதப்படுகிறார்.

**ஆர்கனாட்டுகள்** கிரேக்கப் புராணத்தில் வரும் வீரர்களையும், அவர்கள் தலைவன் சேசன் (Jason) என்பவனையும் குறிக்கும் சொல்லாகும். ஆர்கோ (Argo) என்னும் கப்பலில் பயணம் மேற்கொண்டதால் ஆர்கனாட்டுகள் (Argonauts) எனக் குறிக்கப்பட்டனர். அக்காலத்தில் கட்டப்பட்ட கப்பல்களுள் ஆர்கோ மிகப் பெரிய கப்பலாக விளங்கியது. இக்கப்பலில் ஏறத்தாழ 50 கிரேக்க வீரர்கள் பயணம் மேற்கொண்டு, கருங்கடற்கரையில் ஒரு பூதம் காத்து வந்த பறக்கும் செம்மறியாட்டின் பொன்மயிர்த் திரளைத் தேடிச் சென்றனர். அங்குச் சேசன், மீடியா என்னும் இளவரசியின் உதவியுடன் அத்திரளைக் கைப்பற்றினான். சேசன் மீடியாவை அழைத்துக்கொண்டு தெசாலி நாட்டுக்குச் சென்றான்.

**ஆர்கான்,** பிரான்சு நாட்டிலுள்ள காடு; பாரிசு மாநகர் வடிநிலத்தையொட்டியுள்ளது. இக்காடுகள் 30 கி.மீ. அகலமும் 40 கி.மீ. நீளமும் கொண்டவை. ஆர்கானில் (Argonne) செங்குத்தான மலைமுகடுகளும் ஆழமான குறுகிய பள்ளத்தாக்குகளும் உள்ளன. இங்குப் போக்குவரத்து வசதிகள் மிகவும் குறைவு. முதல் உலகப் போரின் போது 1918-இல் இப்பகுதியில் செருமானியர் அமெரிக்கருக்கெதிராகக் கடும் போர் புரிந்தனர்.

**ஆர்கிரீவ்சு, சேம்சு (கி.பி.1722-1778)** 'நூற்கும் சென்னி' (Spinning Jenny) என்னும் நூல் நூற்பதற்குப் பயன்படும் கருவியைக் கண்டுபிடித்த ஆங்கிலேயர். நூற்கும் சக்கரங்கள் பலவற்றைக் கொண்டு நூல்கண்டுகளை நேராக வைத்து இயக்கியமை, இந்தக் கருவியின் சிறப்பாகும். இதற்குச் சட்டம் ஒன்றையும் இணைத்து இக்கருவியை உருவாக்கினார்.



நூற்கும் சென்னி

இங்கிலாந்தில் இசுடான்ட்கில் என்னும் ஊரைச் சார்ந்த நெசவுத் தொழிலாளியாகிய ஆர்கிரீவ்சு சேம்சு (Hargreaves James) இக்கருவியைத் தம் வீட்டிலேயே முதன் முதலாகப் பயன்படுத்தினார். இவருடைய எந்திரத்தை இயக்கி மிகுதியாக நூல் நூற்பதைக் கண்ட மற்ற நெசவாளர்கள் பொறாமை கொண்டனர். அவர்கள் ஆர்கிரீவ்சின் வீட்டிற்குள் நுழைந்து இவருடைய எந்திரத்தைத் தீயிட்டுக் கொளுத்தியதுடன், இவரையும் அந்நகரத்திலிருந்து விரட்டி அடித்தனர். அங்கிருந்து இவர் கி.பி. 1768-இல் நாட்டிங்காமிற்குச் சென்றார். அங்கு வளமான நூற்பாலையொன்றை நிறுவ உதவினார். இவருடைய எந்திரம் அவ்வாலையில் பயன்படுத்தப்பட்டது. ஏனைய உற்பத்தியாளர்களும் இவருக்குப் பொருள் ஏதும் கொடுக்காமல் சென்னியைப் பயன்படுத்தினர். ஆர்கிரீவ்சு தம் வாழ்நாளில் இறுதிக் காலத்தை மகிழ்ச்சியாகக் கழித்தார். எனினும் இவர் கண்டுபிடித்த எந்திரத்தால் இவருக்கு மிகுந்த இலாபம் கிட்டவில்லை.

**ஆர்கூசு** தென்மார்க்கு (Denmark) நாட்டின் இரண்டாம் பெருநகரம்; சட்லாந்தின் கிழக்குக் கடற்கரையிலுள்ள துறைமுகப்பட்டினம். ஆர்கூசு (Aarhus) வாணிகத்திற்கும் தொழிற்சாலைகளுக்கும் மையமாக விளங்குகிறது. இங்குக் கி.பி. 1200-ஆம் ஆண்டில் கட்டப் பெற்ற அழகான மாதா கோவிலொன்று உள்ளது. பல்கலைக் கழகமொன்று 1928-இல் இங்கு நிறுவப்பட்டுள்ளது. மக்கள் தொகை 2,46,679 (1982).

**ஆர்செண்டினா** தென் அமெரிக்காவிலுள்ள இரண்டாம் பெரிய நாடு. அமெரிக்காக் கண்டத்தின் தெற்கில் நீண்டு அமைந்துள்ள இந்நாட்டின் வடக்கில் பொலீவியாவும், பராகுவேயும், மேற்கில் சிலியும், வடகிழக்கில் பிரேசிலும், உருகுவேயும், கிழக்கிலும் தெற்கிலும் அட்லாண்டிக்குக் கடலும் எல்லைகளாக உள்ளன.

செபாசுடியன் கேபாட்டு (Sebastian Cabot) என்பார் கி.பி. 1526-ஆம் ஆண்டு தென் அமெரிக்கப் பகுதிகளில் கள ஆய்வு மேற்கொண்ட பொழுது அப் பகுதிகளில் வெள்ளி இருப்பதைக் கண்டறிந்தார். அவர் கண்டறிந்த ஆற்றுக் கழிமுகப் பகுதிக்கு இரியோ-டி லா பிளாட்டா (Rio-de la Plata) எனப் பெயரிட்டார். இதற்கு வெள்ளி ஆறு (River of Silver) என்பது பொருள். இப்பகுதியினைச் சுற்றி

அமைந்த பகுதிகளுக்கு நாளடைவில் 'ஆர்செண்டினா' என்னும் (Argentina) பெயர் ஏற்பட்டது. ஆர்சென் டினா என்பது "வெள்ளி நிலம்" (Land of Silver) என்று பொருள்படும். ஆனால், பிற்காலத்தில் இசு பானியர் (Spanish) பெருவிலுள்ள மலைப் பகுதி களிலேயே பெருமளவில் வெள்ளி இருப்பதைக் கண் டறிந்தனர். இருப்பினும் ஆர்செண்டினா என்னும் பெயர் இந்நாட்டிற்கு நிலைத்துவிட்டது.

இயற்கைப் பிரிவுகள்: ஆர்செண்டினாவின் பரப் பளவு 28,08,602 ச.கி.மீ. ஆகும். இது அமெரிக்க ஐக்கிய நாட்டின் பரப்பளவில் மூன்றில் ஒரு பங்கா கும். புவியியல் அமைப்புப்படி இந்நாட்டை ஐம் பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை வருமாறு:




ஆர்செண்டினா

ஆண்டீசு பிரிவு: ஆண்டீசு மலைத்தொடர்ப் பிரிவு ஆர்செண்டினாவிற்கும் சிலிக்கும் எல்லையாக அமைந்துள்ளது. ஆர்செண்டினாவின் மேற்கிலுள்ள இப்பகுதி, கண்ணையும் கருத்தையும் கவரக்கூடிய உயர்ந்த மலை உச்சிகளைக் கொண்டுள்ளது. ஆண்டீசு மலைத்தொடரில் தெற்குப் பகுதியில் பனி மூடிய மலைகளும்; வடக்கே செல்லச்செல்ல வறட்சி மிக்க உயர்ந்த மலைப்பகுதிகளும் உள்ளன. பெரு மளவில் உப்பு இருக்கும் பகுதி சாலினசு கிராண்டசு (Salinas Grands) ஆகும். ஆண்டீசு மலைத்தொடரின் தெற்குப் பகுதி, சுற்றுலாப் பயணிகள் மிக்க அளவில் வரும் ஆல்ப்சு மலையினைப் போன்றதாகும். இத னால் இத்தென்பகுதி 'ஆர்செண்டினாவின் ஆல்ப்சு' எனப்படுகிறது. இப்பகுதிகளில் சுற்றுலாப் பயணி களின் எண்ணிக்கை பெருமளவில் உயர்ந்துள்ளது.

ஆண்டீசு மலைப் பகுதியில் பழமரங்கள் மிகுதி யாகவுள்ளன. இங்கு விளையும் பழ வகைகள் பெரு மளவில் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றன. பழச்சாறு தயாரிக்கும் தொழிலகங்களும் இப்பகுதி களில் மிகுந்து காணப்படுகின்றன.

சாக்கோப் பிரிவு: ஆர்செண்டினாவின் வடக்கில் அமைந்துள்ள தாழ்நிலப் பகுதியைச் சாக்கோப் (Chaco) பகுதி என்பர். இப்பகுதி விரிந்து பரந்த காடுகளைக் கொண்ட சமவெளிப் பகுதியாகும். இப் பகுதியில் நான்கு பெரிய ஆறுகள் ஓடுகின்றன. அவை பில்கோமாயோ (Pilcomayo), பெர்மிசோ (Permiso), சலாடோ தெல் நார்ட்டி (Salado del Norte), தல்சு (Dulce) என்பனவாம். இதனால், இப்பகுதிகளில் மழைக் காலங்களில் வெள்ளப் பெருக்கு ஏற்படுவ துண்டு.

மெசபொடாமியா: (Mesopotamia) இது பரானா ஆற்றுக்கும் உருகுவே ஆற்றுக்கும் இடைப்பட்ட பகுதியாகும். கிரேக்க மொழியில் மெசபொடாமியா என்பதற்கு ஆற்றிடைப் பகுதி என்பது பொருள். இப்பகுதியின் வடகிழக்கில் பரானா மேட்டுச் சம வெளி உள்ளது. இம்மேட்டு நிலத்திலிருந்து ஆறுகள் பாயும்போது நீர்வீழ்ச்சிகள் ஏற்படுகின்றன. இகுவாசு ஆற்றில் இகுவாசு (Iguvassu) நீர்வீழ்ச்சி உள்ளது. இது 64 மீ. உயரமும் 4 கி.மீ. அகலமும் உள்ளது.

பம்பாப் புல்வெளிப் பிரிவு: பம்பாப் புல்வெளிப் பிரிவு சாக்கோவிற்குத் தெற்கே அமைந்துள்ளது. இப்பகுதி ஆர்செண்டினாவில் உள்ள பண்ணைகளின் மையமாகும். மேற்கில் செல்லச் செல்ல இது உயர்ந்து செல்கிறது. இவ்வளமிக்க பகுதியில், நாட் டின் சாகுபடியில் மூன்றில் இரண்டு பங்கு நடை பெறுகிறது. இதன் மண் வளம் வேளாண்மைக்கும், கால்நடை மேய்ச்சலுக்கும் ஏற்றதாக அமைந் துள்ளது.



பம்பாப் புல்வெளி — கால்நடைகள்

**பெடகோனியா:** பெடகோனியா (Patagonia) என்பதற்கு இசுபானிய அகராதியில் 'பெரும் காலடித் தடங்கள் உள்ள நிலம்' (The Land of People with big feet) என்று பொருள் கூறப்பட்டுள்ளது. இசுபானியர்கள் இந்நாட்டில் முதன்முதல் நுழைந்த பொழுது, இங்கு வாழ்ந்த பழங்குடிகளின் பெரும் காலடித்தடங்களைக் கண்டு இப்பகுதிக்கு இப் பெயரிட்டனர். இது வறட்சி மிகுந்த மேட்டுப் பகுதிகளைக் கொண்டது. இப்பிரிவின் தென்பகுதி மிகக் குளிர்ந்த பகுதியாகும். இங்குக் கோடைக் காலத்தைக் காண முடியாது. ஆர்செண்டினாவின் தென் கோடியிலுள்ள தெர்ராடெல் பியூகோ (Tierra del Fuego) என்னும் தீவும் இந்நாட்டிற்குச் சொந்தமானதால், அதனைப் பெடகோனியாவுடன் இணைத்துள்ளார்கள்.

**தட்பவெப்பம்:** கோடைக் காலம் சனவரியில் தொடங்குகிறது. குளிர்காலம் சூலை மாதமாகும். மழையளவு ஆண்டிற்கு கிழக்குப் பம்பாப் பகுதியில் 97 சென்டிமீட்டரும், மேற்குப் பம்பாப் பகுதியில் 50 சென்டிமீட்டரும் ஆகும். இப்பகுதி, மக்களின் நல் வாழ்வுக்கேற்ற தட்பவெப்ப நிலையைக் கொண்ட பகுதியாகும். சாக்கோ, மெசபொடாமியா என்னும் பிரிவுகளில் வெப்பம் மிகுதி. அப்பிரிவில் மழை குறைவு.

**காடுகள்:** ஆர்செண்டினாவின் நிலப்பரப்பில் 22 விழுக்காடு போக்குவரத்து வசதியுள்ள காடுகளாம். போக்குவரத்தில்லாக் காடுகள் 3 விழுக்காடு அளவின வாகும். இக்காடுகளில் பெரும்பாலானவை அரசுக்குச் சொந்தமானவை. இங்குக் காணப்படும் உறுதி மிக்க மரங்களும், மூங்கில்களும் நாட்டின் பல தொழில்களுக்கு, குறிப்பாகக் காகித உற்பத்திக்குப் பயன் படுகின்றன. 'கெப்ராக்கோ' என்னும் ஒருவகை மரம் இந்நாட்டில் மிகுதியாகக் காணப்படுகிறது. இது தோல் பதனிடும் தொழிலுக்குப் பயன்படுகிறது.

**வேளாண்மை:** ஆர்செண்டினா மக்களின் சிறப்பான தொழில் வேளாண்மை ஆகும். கால்நடைகள் வளர்த்தல் இந்நாட்டின் பழைமையானதும் முதன்மையானதுமான தொழிலாக இன்றளவும் விளங்குகிறது. கோதுமை இந்நாட்டின் சிறந்த விளைபொருளாகும். இது பம்பாப் பிரிவில் பெருமளவில் பயிரிடப்படுகிறது. இன்று கோதுமை ஏற்றுமதி நாடுகளில் ஆர்செண்டினா முதன்மை இடத்தினைப் பெற்றுள்ளது. பார்லி, 'ரை' (Rye) எனப்படும் கம்பு வகை, பிற தானியங்கள், பருத்தி, எர்பாமேட்டு (Yerba mate) என்னும் புதர்களிலிருந்து கிடைக்கும் தேயிலை ஆகியவை பிற வேளாண்மைப் பொருள்களாகும்.

கால்நடை வளர்ப்புப் பெருமளவில் பம்பாப் புல்வெளிப் பிரிவில் நடைபெறுகிறது. உலகின் இறைச்சி விற்பனையில் ஆர்செண்டினா மூன்றாம் இடத்தைப் பெறுகிறது.

**கனிப்பொருள்கள்:** இந்நாட்டில் கிடைக்கும் கனி வளங்கள் வெள்ளி, துத்தநாகம், பொன், தங்குடன் (Tungston), மாங்கனீசு, இரும்பு, பெரிலியம் (Beryllium), செம்பு ஆகியவை ஆகும். பெட்ரோலிய ஊற்றுகள் அண்மைக் காலங்களில் இந்நாட்டில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.

**தொழிலும் வாணிகமும்:** ஆர்செண்டினாவின் தலைநகரான போனசு அயர்சைச் (Buenos Aires) சுற்றிலும் தொழிற்சாலைகள் பெருகியுள்ளன. பிற நகரங்களிலும் தொழிற்சாலைகள் உருவாகி வருகின்றன. இறைச்சியைப் பீப்பாய்களில் அடைத்து வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் தொழில் இந்நாட்டில் பெருமளவில் நடைபெறுகிறது. கம்பள நூற்பாலைகளும், தோல் தொழிற்சாலைகளும் இங்கு மிகுதியாக உள்ளன. இரும்பு உருக்கு ஆலைகள், சர்க்கரை ஆலைகள், எண்ணெய் ஆலைகள், இயந்திரப் பொருள்கள் தயாரிக்கும் தொழிற்சாலைகள் ஆகியவை ஏனைய தொழிற்சாலைகளாகும். பெட்ரோலியம், இயற்கை வாயு இந்நாட்டிற்குப் போதுமான அளவில் கிடைப்பதால் அவை தொடர்பான தொழில்கள் பல இங்கு நடைபெறுகின்றன.

தானியங்கள், கோதுமை, இறைச்சி, பழச்சாறு ஆகியவை சிறப்பான ஏற்றுமதிப் பொருள்களாகும். கனிமங்கள், இரசாயனப் பொருள்கள் (Chemical), இயந்திரப் பொருள்கள் ஆகியவை அமெரிக்க ஐக்கிய

நாட்டிலிருந்தும் ஐரோப்பிய நாடுகளிலிருந்தும் இறக்குமதி செய்யப்படுகின்றன. சுற்றுலாப் பயணிகள் இந்நாட்டிற்குப் பெருமளவில் வருவதன் வாயிலாக அந்நியச் செலாவணி பெருகி வருகிறது.

**போக்குவரத்தும் செய்தித் தொடர்பும்:** அயல் நாட்டின் பொருள் உதவியுடன் இருப்புப் பாதைகள் 40,000 கி.மீ. தொலைவிற்கு நாட்டின் பல்வேறு பகுதிகளில் போடப்பட்டுள்ளன இருப்புப் பாதைகள் அமைக்கக் குறிப்பாக இங்கிலாந்தும், பிரான்சும் உதவியுள்ளன. இருப்புப் பாதைப் போக்குவரத்தை அரசே செயற்படுத்தி வருகிறது. மிக்க அளவில் நாட்டின் பெருவழிச் சாலைகள் அமைக்கும் பணி 1960-ஆம் ஆண்டளவில் தொடங்கியது. சற்றேறக் குறைய 50,000 கி.மீ. தொலைவிற்கு நெடுஞ்சாலைகள் அமைக்கப்பட்டுள்ளன. உள்நாட்டுக் கப்பல் போக்குவரத்து பரானா, உருகுவே, பராகுவே ஆறுகளின் வழியாக நடைபெறுகிறது. உள்நாட்டு விமானப் போக்குவரத்து நாட்டின் பெரு நகரங்களை இணைக்கிறது. போனசு அயர்சிலிருந்து அயல்நாட்டு விமானப் போக்குவரத்து நடைபெறுகிறது.

**நகரங்கள்:** 'போனசு அயர்சு' இந்நாட்டின் தலைநகரமாகவும் சிறந்த துறைமுகப்பட்டினமாகவும் விளங்குகிறது. ஆர்செண்டினாவின் மிகப் பெரிய நகரமும் இதுவேயாகும். இந்நாட்டு மக்கள்தொகையில் மூன்றில் ஒரு பங்கினர் இந்நகரில் வாழ்கின்றனர்.



[illegible] போனசு அயர்சு [illegible]

இரொசாரியோ (Rosario) என்னும் நகரம் பரானா ஆற்றங்கரையில் அமைந்துள்ள நகரமாகும். இந்நகரம் ஆர்செண்டினாவின் இரண்டாம் பெரிய நகரம். இந்நகரத்தில் வெளிநாட்டுக் கப்பல்கள் வந்து செல்லுவதற்கு வாய்ப்பாக ஆறு ஆழமாக இருப்பதால், ஏற்றுமதிப் பொருள்கள் பெருமளவில் இங்கிருந்து வெளிநாடுகளுக்கு அனுப்பப்படுகின்றன.

ஆர்செண்டினாவின் மூன்றாம் பெரிய நகரம் கார்டோபா (Cordoba) ஆகும். இங்கிருக்கும் பல் கலைக் கழகம் மிகப் பழமையானது. இலா பிளாட்டா (La plata), துகுமன் (Tucuman) ஆகிய நகரங்களில் தொழிற்சாலைகள் மிக்குள்ளன.

**மக்கள்:** ஆர்செண்டினாவில் வாழும் மக்களுள் பெரும்பாலோர் ஐரோப்பிய நாட்டிலிருந்து வந்தவர்களின் வழித் தோன்றல்கள் ஆவர். அவர்களில் இசுபானியரும், இத்தாலியரும் பெரும்பகுதியினராவார்கள். இசுபானிய மொழி மக்களின் பொது மொழியும், பேச்சுமொழியுமாகும். இத்தாலிய வழித்தோன்றல்கள் இத்தாலிய மொழியையும் பேசுகின்றனர். மக்களனைவரும் உரோமன் கத்தோலிக்கக் கிறித்தவ சமயத்தைச் சாந்தவர்கள். இருப்பினும் மிகப் பெரிய நகரங்களில் யூதர்களும் பிராட்டசுடண்டுகளும் வாழ்கின்றனர். மக்களுள் மூன்றில் இரண்டு பகுதியினர் நகரங்களிலேயே வாழ்கின்றனர்.

பம்பாச் சமவெளியில் வாழும் மக்கள் கலப்பினத்தவராவார்கள். இவர்களுள் பெரும்பாலோர் தாய் வழியில் அமெரிக்க இந்தியக் குடி வழிவந்தவர்களாகவும், தந்தை வழியில் இசுபானிய வழியில் வந்தவர்களாகவும் உள்ளனர்.

குவாகோ (Guacho) எனப்படும் ஆதிக் குடிகள் கால்நடைகளை மேய்க்கும் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். இவர்கள் குள்ளமான உருவத்தினர். குதிரையேற்றத்தில் தலைசிறந்தவர்கள்.

சிற்றூர்களில் வாழும் மக்களுள் பெரும்பாலோர் வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். உழவர்களுள் சிலர் பெரு நிலக்கிழார்களிடமிருந்து நிலங்களைக் குத்தகைக்கு எடுத்துப் பயிர் செய்கின்றனர். மேலும் நிலமில்லாக் கூலியாட்களும் பண்ணைகளில் வேலை செய்கிறார்கள்.

இரண்டாம் உலகப் போருக்குப் பின் சிற்றூர்களில் வாழ்ந்த மக்கள் பெருமளவில் நகரங்களுக்குக் குடிபெயர்ந்தனர். நாட்டின் மக்கள் தொகை 19-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கணிசமாகப் பெருகியது. இந்நாட்டு மக்கள்தொகை 1980-ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்குப்படி 2,79,49,480 ஆகும்.

**ஆடையும் உணவும்:** குவாகோ ஆதிக்குடிகள் வண்ண உடைகளை உடுக்கிறார்கள். நகரங்களில் வாழ்பவர்கள் மேனாட்டு உடைகளை விரும்பி அணிகிறார்கள். மக்கள் இரவு உணவை நேரங்கழித்தே உண்ணுகின்றனர். மக்களின் விருப்பமான உணவு மாட்டிறைச்சி ஆகும்.

மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்ந்து காணப் படுகிறது. குடும்பத்தில் குறிப்பாகக் குழந்தைகள் இல்லாப் பெண்கள் வேலைக்குச் செல்கின்றனர். பகட்டான உடை அணிந்து இன்ப வாழ்க்கை நடத் தும் இம்மக்களின் பொழுதுபோக்கு நூல் நிலையங் களுக்குச் செல்லல், காற்பந்து ஆட்டல், குதிரையேற் றம் போன்றவையாம்.

வரலாறு: ஆர்சென்டினா கி. பி. 16- ஆம் நூற்றாண்டின் தொடக்கக் காலம் வரை பழங்குடி களின் ஆதிக்கத்திலேயே இருந்தது. இப்பழங்குடிகள் ஆர்சென்டினாவின் காடுகளில் வேட்டையாடி நாடோடிகளாக வாழ்ந்து வந்தனர். இந்நிலையில் ஆர்சென்டினாவின் வடமேற்கில் இன்காப் (Inca) பேரரசின் செல்வாக்கு ஏற்பட்டது. பின்னர் இசு பானியர்கள் அட்லாண்டிக்குக் கடலின் வழியாக இந்நாட்டினுள் நுழைந்தனர். அமெரிக்காவைக் கண்டு பிடித்த இசுபானிய மாலுமி அமெரிக்கோ வெசுபுச்சியை (Amerigo Vespucci) அடுத்து வந்த சுவான் டெ. சோலிசு என்னும் இசுபானிய மாலுமி இரியோ-டி லா பிளாட்டா (Rio-de La Plata)எனும் கழிமுகப் பகுதியில் முதன் முதல் கி. பி. 1516-இல் வந்திறங்கினார். அவர் தென் அமெரிக்காவின் தெற்கு முனையினைக் கண்டறிய முனைந்தபொழுது ஆதிக்குடிகளால் கொல்லப்பட்டார்.

இசுபெயின் மன்னனால் கி. பி. 1536-இல் அனுப்பப்பட்ட பெட்ரோ டி மென்டோசா (Pedro de Mendoza) என்பவர் போனசு அயர்சில் ஒரு குடி யேற்றத்தை ஏற்படுத்தினார். இக்குடியேற்றத்தை அங்கிருந்த ஆதிக்குடிகள் அழித்துவிட்டனர். இத னால்,போனசு அயர்சில் குடியேறியிருந்த ஐரோப்பியர் கள் பலர் பராகுவே பகுதியில் உள்ள அசுன்சியன் (Asuncion) பகுதிக்குக் குடிபெயர்ந்தனர். இசுபானி யர்கள் கி. பி. 1553-இல் நிரந்தரமான ஓர் இசு பானிய நகரைச் சாண்டியாகோ தெல் எசுட்ரோ (Santiago del Estero) என்னும் இடத்தில் நிறுவி னர். இதனை அடுத்து நாட்டின் பிற இடங்களி லும் குடியேற்றங்கள் நிகழ்ந்தன; புதிய நகரங்களும் உருவாக்கப்பெற்றன. இசுபெயின் அரசு கி.பி. 1776-இல் ஆர்சென்டினாவைத் தன் ஆளுகைக்குட் பட்ட பகுதியென அறிவித்தது. அப்போதிருந்து போனசு அயர்சு நாட்டின் தலைநகரமாகவும் துறை முகப் பட்டினமாகவும் விளங்கி வருகிறது.

நெப்போலியனின் இசுபானியப் படையெடுப் பினைக் கேள்வியுற்ற ஆர்சென்டினாவின் ஆதிக் குடிகளான 'போர்டினாசு' (Portenos) என்பவர்கள் இசுபானியரின் ஆர்சென்டினா ஆதிக்கத்தை எதிர்த் தனர். இவர்கள் சோசு டி சான் மார்டின் (Jose de san Martin) என்பவர் தலைமையில் புரட்சி



ஆர்சென்டினா மாமன்றம்

செய்யத் தொடங்கினர். இவர் இசுபானியரிட மிருந்து விடுதலை பெற்றுப் புரட்சி அரசினைக் கி. பி. 1816-ஆம் ஆண்டு சூலை 9-ஆம் நாள் ஏற் படுத்தினார். இருப்பினும் புரட்சி அரசு அமைத்த வுடன் நாட்டில் கலவரங்கள் ஓயவில்லை. இக்கல வரங்கள் உள்நாட்டுப்போர் ஏற்பட வழிவகுத்தன.

சோன் மானுவேல் டே ரோசசு என்பவர் கி.பி. 1829 - ஆம் ஆண்டு முதல் 20 ஆண்டுக்கு மேல் ஆர் சென்டினாவில் ஆட்சி நடத்தினார். இவரது வல் லாட்சியை விரும்பாத மக்கள் கி.பி. 1852-ஆம் ஆண்டு இவரைப் பதவியினின்றும் இறக்கினார்கள். அதன் பின்னர் அமெரிக்க ஐக்கிய நாட்டின் அரசியலமைப் பைப் பின்பற்றி ஆட்சி முறையை ஆர்சென்டினா வகுத்தது.

இங்கிலாந்தின் மன்னராக இருந்த ஏழாம் எட் வர்டு (Edward VII) சிலிக்கும் ஆர்சென்டினாவிற்கும் இடையே நெடுங்காலமாக நிலவி வந்த எல்லைத் தகராற்றைத் தீர்த்து வைத்தார். அமெரிக்க ஐக்கிய நாடு, ஆர்சென்டினா பிரேசில் சிலி ஆகிய மூன்று நாடுகளின் உள்நாட்டுச் சிக்கல்களில் அடிக் கடி தலையிட்டு வந்தது. இதனை விரும்பாத மெக் சிகோ, அமெரிக்க ஐக்கிய நாட்டுடன் பகைமை பூண்டது. இப்பகைமை 1914-இல் முற்றிய போது ஆர்சென்டினா தலையிட்டு 1915-இல் ஓர் உடன் படிக்கை செய்துகொண்டு உறவு பூண்டது.

முதல் உலகப் போர்க் காலத்தில் ஆர்சென்டினா விற்கும் செருமனிக்கும் இடையே இருந்த உறவு முறிந்தது. பின் 1933-இல் பிரேசில், சிலி, பராகுவே,

உருகுவே, மெக்சிகோ ஆகிய நாடுகளுடன் நல்லுறவுக்கான உடன்படிக்கை செய்துகொண்டது.

இங்கு 1943-ஆம் ஆண்டு ஏற்பட்ட திடீர்ப் புரட்சியின் விளைவாக இரமோன் எசு. காசுடிலோ (Ramon S. Castillo) என்னும் குடியரசுத் துணைத் தலைவர் பதவியிலிருந்து நீக்கப்பெற்றதால், செனரல் எடில்மிரோ பெரல் (General Edelmiro-Farrell) என்பவர் பதவியேற்றார். இவர்தம் போர் அமைச்சராகவும் உதவிக் குடியரசுத் தலைவராகவும் இருந்த பெரான் (Juan Domingo Peron) என்பவர் படை உதவியுடன் ஆட்சியினைக் கைப்பற்றினார். பெரான் 1955-ஆம் ஆண்டு வரை குடியரசுத் தலைவராக இருந்தார். கிறித்தவக் கோயில்கள் பல 1955-ஆம் ஆண்டு நிகழ்ந்த படைக் கலவரத்தின் விளைவாகப் போனசு அயர்சில் எரிக்கப்பட்டன. பெரானின் ஆட்சி கவிழ்க்கப்படவே, அவர் ஆர்சென்டினாவை விட்டு வெளியேற அனுமதிக்கப்பட்டார்.

ஆர்சென்டினாவிற்கும் அச்சு நாடுகளுக்கு மிடையே 1945-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் போர் மூண்டது. அவ்வமயம் இரண்டாம் உலகப் போர் முடியும் நிலையில் இருந்தமையால் ஆர்சென்டினா போரில் ஈடுபடத் தேவையில்லாமல் போயிற்று. பெரான் ஆட்சியில் ஆர்சென்டினாவில் முன்னேற்றங்கள் பல ஏற்பட்டன. செனரல் அலிசென்ரோ ஏ லானுசு (General Alejandro A Lanusse) என்பவரின் அழைப்பிற்கிணங்கப் பெரான் இசுபெயினிலிருந்து 17 ஆண்டுகள் கழித்து ஆர்சென்டினா திரும்பினார். இவர் தம் ஆதரவாளர்கள் உதவியுடன் ஆட்சியைக் கைப்பற்றினார்.

துணை நூல்கள்:

**Whitakar, Arthur, P.,** Argentina, Englewood Cliffs, N.J., 1964.

**Fitzgibbon, Russell, H.,** Argentina: A Chronology and Fact Book, Dobbs Ferry, New York, 1973.

**ஆர்ட்போர்டு** அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கனக்டிகட்டு (Connecticut) மாநிலத்தின் தலைநகரும், இரண்டாம் பெரிய நகரமுமாகும். இம் மாநிலத்தில் இதைவிடப் பெரிய நகரமாக விளங்குவது பிரிட்சுபோர்ட்டு (Bridgeport) என்னும் நகரமாகும். ஏறத்தாழ 50 ஆயுள் காப்புக் கழகங்களின் மையமாக ஆர்ட்போர்டு (Hartford) விளங்குகிறது. இதனை ஆயுள் காப்பீடு நகரம் (Insurance City) என்பர். செய்தொழில்களின் மையமாகவும் இந்த ஊர் விளங்குகிறது. கனக்டிகட்டு ஆற்றின் மேலைக்கரை நகரமாக இது பாசுட்டனுக்கும் (Baston) நியூயார்க்கு மாநகருக்கும் இடையிலுள்ளது. நெதர்லாந்து நாடு கி.பி. 1633-இல் ஆர்ட்போர்டு பகுதியில் வாணிகத் தலம் ஒன்றை அமைத்தது. தாமசு ஊக்கர் (Thomas Hooker) என்பவரின் தலைமையில் மசாசுசெட்சுவைச் சார்ந்த ஆங்கிலக் குடியேற்றவாதிகள் கி.பி. 1636-இல் ஆர்ட்போர்டை நிலைநாட்டினர். எர்ட்போர்டு (Hertford) என்னும் ஆங்கில நகரத்தின் நினைவாக இந்நகரம் ஆர்ட்போர்டு எனப் பெயரிடப்பட்டது.

ஆர்ட்போர்டின் பரப்பளவு 52 ச.கி.மீ. இங்கு ஆர்ட்போர்டு பல்கலைக் கழகமும், மேற்கு ஆர்ட்போர்டில் புனித சோசப்புக் கல்லூரியும் அமைந்துள்ளன.

**ஆர்டிஞ்சு** என்னும் பெயருடைய இருவர் இந்தியாவின் அரசப் பிரதிநிதிகளாக இருந்தனர்.

**முதலாம் ஆர்டிஞ்சு (1785-1856):** இவர் கி.பி. 1844 முதல் 1848 வரை இந்தியாவின் அரசப்பிரதிநிதியாக இருந்தார். என்றி ஆர்டிஞ்சு (Henry Hardinge) என்பது இவரது இயற்பெயர். இவர் 14-ஆம் வயதிலேயே படையில் திறம்பட விளங்கினார். ஐரோப்பாவில் நடைபெற்ற தீபகற்பப்போரில் பங்குகொண்டு சில வெற்றிகள் பெற்றார். 'சர்' என்னும் பட்டத்தைக் கி.பி. 1815-ஆம் ஆண்டில் பெற்றார். இவர் ஆங்கில அரசில் பல உயர் பதவிகளைப் பெற்றுத் திறம்பட விளங்கினார். முதலாம் சீக்கியப் போர் இவரது காலத்தில் (கி.பி. 1845-46) நடந்தது. கல்விக்கும் நாட்டின் முன்னேற்றத்திற்கும் திட்டங்கள் தீட்டிச் செயற்படுத்தினார்; இராணுவச் செலவைக் குறைத்து நாட்டின் வளர்ச்சிக்கு அரும்பாடு பட்டார். இங்கிலாந்தின் படைத்தலைவராகக் கி.பி. 1852-இல் அமர்த்தப்பட்டார். இவர் கி.பி. 1856-ஆம் ஆண்டு காலமானார்.

**இரண்டாம் ஆர்டிஞ்சு (1858-1944):** இவர் முதலாம் ஆர்டிஞ்சின் பேரர். இவரது முழுப்பெயர் சார்லசு ஆர்டிஞ்சு (Charles Hardinge). இவர் 1910 முதல் 1916 வரை இந்தியாவின் அரசப் பிரதிநிதியாக இருந்தார். இவர் கி.பி.1858-ஆம் ஆண்டு சூன் மாதம் 20-ஆம் நாள் இங்கிலாந்திலுள்ள ஐகேட்டு (High Gate) என்னுமிடத்தில் பிறந்தார். இங்கிலாந்தின் அரசரான ஐந்தாம் சார்சு மன்னரின் (King George V) முடிசூட்டு விழாவினை, இந்தியாவில் 1911-ஆம் ஆண்டு தில்லியில் 'தர்பார்' ஒன்றைக் கூட்டிக் கொண்டாடினார். வங்கப் பிரிவினையைத் தடுத்து நிறுத்தினார். இவர் இந்தியாவின் தலைநகர் மாற்றும் விழாவிற்கு ஒரு யானையின் மீது பவனி சென்ற பொழுது, இவர் மீது குண்டு வீசப்பட்டது. அதிலிருந்து தப்பிய ஆர்டிஞ்சு இக்குற்றத்தை அவத்பிகாரி, அமிர்சந்து, பால் மோகந்து

(Bal Mokand), பசன்ட்டுகுமார் (Basant Kumar) என்னும் நால்வர் மீது சுமத்தி, அவர்களைக் கைது செய்து மரண தண்டனை விதித்தார். இவரது காலத்தில் தொழில் முன்னேற்றம் அடைந்தது. இந்தியா 1914-இல் முதல் உலகப் போரில் இங்கிலாந்திற்கு உதவி செய்தது. ஆர்டிஞ்சு, 1916-ஆம் ஆண்டு பதவி விலகி இங்கிலாந்து சென்றார். அங்கு 1944-ஆம் ஆண்டு தம் 86-ஆம் வயதில் இறந்தார்.

**ஆர்டென்,** வடக்குப் பிரான்சு, பெல்சியம் இலக்சம்பர்க்குப் பகுதியிலுள்ள மலையும் காட்டுப் பகுதியுமாகும். ஆர்டென் (Ardennes) காடுகளில் மிகப்பெரிய ஒக்கு மரங்களும் பீச்சு மரங்களும் பெருமளவில் வளர்கின்றன. மலைகள் 488 மீ. உயரமுள்ளவை. இப்பகுதியின் வடக்கே இரும்பு, நிலக்கரி, உப்பு ஆகியவை கிடைக்கின்றன. உரோமர்கள் இப்பகுதியை அர்டுயினா (Arduenna) எனக் குறித்தனர். இங்குப் பியூசு ஆறு பாய்கிறது.

**ஆர்த்தாசர்சிசு** என்னும் பெயர் அர்த்தச் சந்திரா என்பதன் சிதைவு. இப்பெயரைக் கொண்ட பாரசீக மன்னர்கள் பலருண்டு.

முதலாம் ஆர்த்தாசர்சிசு (Artaxerxes I) என்னும் பெயர்கொண்ட இவரை மாக்ரோகிர் அல்லது நீண்ட கைகளைக் கொண்டவர் என்றும் கூறுவர். இவர் கி.மு. 464-இல் தம் தந்தை சர்சிசுக்குப் (Xerxes) பிறகு அரசரானவர். பாக்டீரியாவிலும் எகிப்திலும் எழுந்த கலகங்களை இவர் அடக்கினார். அதீனியர்கள் காலியசு உடன்படிக்கையைச் செய்து கொண்டமையால், பாரசீக அரசர்கள் அரசியல் தந்திரத்தில் தோற்றுப்போய் திரேசு, ஆசியாமைனரின் ஒரு பகுதி போன்ற அயோனிய நகரங்களை இழந்தனர். ஆர்த்தாசர்சிசு யூதர்கள்பால் இரக்கம் காட்டினார்.

இரண்டாம் ஆர்த்தாசர்சிசு மன்னரை மெனிமன் (Mnemon) அல்லது சிந்தையுள்ளவர் என்றழைத்தனர். இவர் கி.மு. 404-ஆம் ஆண்டில் தம் தந்தை இரண்டாம் தேரியசை (Darius II) அடுத்துப் பட்டமெய்தியவர். தம் உடன் பிறந்தவரான இளைய சைரசு கலகஞ் செய்து காலமான பின்னர் இவர் இசுபார்ட்டாவுடன் (Sparta) போரிட்டார். அப்போர் அரசரது ஒப்பந்தப்படி முடிவுற்றது. அதில் பெற்ற வெற்றியின் விளைவாகப் பாரசீகம், ஆசியாவில் கிரேக்கர்களுக்குச் சொந்தமான கிரேக்க நகரங்களையும், சைப்பிரசையும் திரும்பப் பெற்றது. இவராட்சிக் காலம் மாநில ஆளுநர்கள் கலகத்திலேயே கழிந்தது. அவர் கி.மு. 358-இல் காலமானார்.

மூன்றாம் ஆர்த்தாசர்சிசு, மேற்கூறிய மெனிமன் என்பாரின் மகனும் அவரையடுத்துப் பட்டமெய்திய மன்னருமாவார். வரவிருந்த துன்பங்களைத் துடைத்தெறிய முயன்றவர். இவரால் ஆசியாமைனரைச் சார்ந்த கலகக்காரர்கள் தோற்கடிக்கப்பட்டனர். இவர் பின்சீயாவில் மூண்ட கலகமொன்றைக் கிரேக்கர்களின் உதவிகொண்டு அடக்கினார். எகிப்தில் இரண்டாம் நெக்டன்போவின் கலகத்தையும் மெண்டார் என்னும் உரோடிய தளபதியின் உறுதுணையால் முறியடித்து வெற்றி கண்டார். மூன்றாம் ஆர்த்தாசர்சிசுக்கு ஆக்சசு என்ற பெயரும் உண்டு. இவருடைய கொடுஞ்செயலால் இவரை அனைவரும் வெறுத்தனர். இவர் பாகேசு (Bagoas) என்பவனால் கி.மு. 338-ஆம் ஆண்டில் நஞ்சிட்டுக் கொல்லப்பட்டார்.

**ஆர்தர்** இங்கிலாந்தை இடைக் காலத்தில் ஆட்சி செய்த புராண அரசர். இவரைப் பற்றிய கதைகள் பல இலக்கியங்களில் வந்துள்ளன. ஆர்தர் (Arther, King) மிக்க திறமையும் அறிவுக் கூர்மையும் உடையவர். இவர் மனைவியின் பெயர் கினிவர் ராணி. இவருக்கு ஆட்சியில் உதவி புரிந்தவர் மெர்லின் என்னும் மந்திரவாதி. இவரது இறப்புக் குறித்து இரு வேறு கருத்துகள் நிலவுகின்றன. இவர் தம் மருமகனுடன் நடத்திய போரில் காயமுற்று ஆவலோன் தீவுக்குச் சென்றார் என்பர் சிலர்; உரோமானியர்களை வென்று மேற்கு ஐரோப்பாவைத் தம் வசப்படுத்திப் பின்னர் இறந்தார் என்பர் சிலர். தாமசு மலாரி (Thomas Malori) என்பவர் ஆர்தரைப் பற்றிய கதைகளைச் சேகரித்துக் கி.பி. 1469-ஆம் ஆண்டு எழுதினார். அதற்குப்பின் இவர் கதையை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு கதைகளும், பாடல்களும் எழுந்தன.

**ஆர்திகோ இராபர்ட்டோ (கி.பி. 1828-1920):** கிரேமோனா (Cremona) என்னும் பகுதியிலுள்ள கேசுடெல் திடோன் என்ற ஊரில் பிறந்தார். இவர் இத்தாலிய நாட்டின் நேர்காட்சிக் (Positivism) கொள்கையில் சிறந்த தொண்டாற்றினார். இவர் ஒரு கத்தோலிக்க மத குருவாவர். பதுவாப் பல்கலைக் கழகத்தில் கி.பி. 1881 முதல் 1909 வரை இத்தாலி நாட்டுத் தத்துவ வரலாற்றினைக் கற்பித்து வந்தார். சிறந்த குறிக்கோள் நெறியின் (Idealism) அடிப்படைக் கருத்துகளை இவர் முப்பது ஆண்டுகள் கற்பித்தார். புலன் நுகர்ச்சியினாலான யாவும் இயற்கைப் பொருள்களும் பொதுப் பொருள்களோடு தொடர்புடையவை; ஆன்மாவும் பொருள்களும் வேறுபட்டவை; புற உறுப்புகளைப் பற்றிய உணர்வுகளும் அவற்றின் புரிந்த நிலையும் பலவகையான இணைப்புகளுடன் தொடர்புடையவை என்பன போன்ற கொள்கைகளை இவர் தெளிவு படுத்தினார்.

கடைசியாக நேர்காட்சி வாதத்திலுள்ள எல்லா விதமான கடுமையான உறுதிப்பாட்டையும் அளவு படுத்தினார். இவர் மாற்றத்தை விரும்பி வலுப் படுத்தினார். மாற்றம் என்பது அடிக்கடி காரணத் தொடர்பில் ஏற்படுகிற இடையூறுகள் நிறைந்த உலகத்தில் ஒழுங்கை ஏற்படுத்துகிறது என்றும் இத்தகைய குறுக்கீடுகள் எதிர்பாராமல் நடைபெறுகின்றன என்றும் கூறினார். இவர் படுவா என்னுமிடத்தில் இயற்கை எய்தினார். இரா. கோ.

**ஆர்நதி** சுவிட்சர்லாந்திலுள்ள மிகப் பெரிய ஆறு. இது பிரின்சு (Brienz) ஏரியாகவும், தூண் (Thun) ஏரியாகவும் பெருகிக் கொண்டு, இரைன் (Rhine) ஆற்றில் கலக்கிறது. இது 289.6 கி.மீ. நீளமுள்ளது. ஆர்நதியின் (Aar) துணை ஆறுகள் இலிம்மாட்டு(Limmat), இரியூசு (Reuss) ஆகியவை. பிரின்சு ஏரியில் கப்பல் போக்குவரத்து நடைபெறுகிறது. பெர்ன் (Berne) நகரம் இவ்வாற்றின் கரையிலமைந்துள்ளது.

**ஆர்ப்பு:** கம்பிகளைக் கொண்ட இசைக்கருவிகளுள் ஆர்ப்பு மிகப் பழைமையானதாகும். இக்கருவியில் ஒவ்வொரு சுரத்திற்கும் தனித்தனியே கம்பிகள் உள்ளன. இவை ஒலிக்கு ஏற்றாற் போன்ற நீளத்தையுடைய கம்பிகள் ஆகும். இவை ஒலிமுழக்கி (Resonator) யுடன் பொருத்தப்பட்டிருக்கின்றன. எகிப்து, மெசபடோமியா போன்ற நாடுகளில் கி.மு. 3000 ஆண்டுக் காலத்திலேயே ஆர்ப்புகள் வழக்கத்தில் இருந்தனவாக வரலாற்றுக் குறிப்புகள் கூறுகின்றன. சுபல் (Jubal) என்பவரால் ஆர்ப்பு கண்டுபிடிக்கப்பட்டது என்ற குறிப்பு விவிலியத்தில் காணப்படுகிறது.



ஆர்ப்பு

காலப்போக்கில் ஆர்ப்புகள், பல மாற்றங்களுக்கு உட்பட்டு உலகெங்கிலுமுள்ள பல நாடுகளிலும் வழக்கத்தில் இருந்து வந்தன. ஐரோப்பிய நாடுகளில் கி.பி. 17-ஆம் நூற்றாண்டிற்குப் பின் ஆர்ப்பு 12 கம்பிகளைக் கொண்டதாக மாறுதல் அடைந்தது. இக்காலத்தில் இசைக்கப்படும் ஆர்ப்பு கி.பி. 1810-ஆம் ஆண்டு செபாசுடியன் எரார்டு (Sebastian Erard) என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டது. இது இருசெயல் மிதிப்பலகை ஆர்ப்பு (Double Action Pedal Harp) எனப்படுகிறது. இது தரையில் நிறுத்தப்பட்டு இரு முழங்கால்களினாலும் அசையாமல் பிடிக்கப்பட்டு, இரு கைகளினாலும் இசைக்கப்படுகிறது. ஆர்ப்பு அயர்லாந்து நாட்டின் தேசியச் சின்னமாகும்.

**ஆர்பியசு** ஒரு கிரேக்கப் புராணக் கவிஞர். இசையில் சிறந்த வல்லுநர். இவர் யூரிடிசு (Eurides) என்னும் பெண்ணை மணம் புரிந்துகொண்டார். இவர் மனைவி பாம்பு கடித்து இறக்கவே ஆர்பியசு (Orpheus), பாதாள உலகம் சென்று, பாதாள உலகத்தின் அரசரையும் அரசியையும் தமது இசையால் மகிழச் செய்து, தம் மனைவியை ஒரு கட்டுப்பாட்டுக்கு உட்பட்டுப் பூவுலகத்திற்கு அழைத்து வந்தார். தம் மனைவியைப் பின்னால் திரும்பிப் பாராமல் அழைத்துச் செல்ல வேண்டும் என்பதே அக்கட்டுப்பாடு. மனைவி வருகிறாளா இல்லையா என்று ஆர்பியசு திரும்பிப் பார்த்துக் கொடுத்த வாக்கை மீறவே இவர் மனைவியும் மறைந்து விட்டாள். பக்கான்இசு என்னும் பெண்களின் காதலை இவர் ஏற்றுக் கொள்ள இசையவில்லை. ஆதலின் அவர்களால் ஆர்பியசு கொல்லப்பட்டார். இவர் மாண்டபின் பாதாள உலகம் சென்று தம் மனைவியை அடைந்ததாகப் புராணக் கதைகள் கூறுகின்றன.

**ஆர்பின்** சீனாவின் பெருநகரங்களுள் ஒன்று. இது மஞ்சூரியாவின் மூன்று மாநிலங்களில் வடகோடி மாநிலமான ஏலுங்கியாங்கின் (Heilung kiang) தலைநகரம். ஆர்பின் (Harbin) சிறந்த இருப்புப்பாதை மையமாகும். மஞ்சூரியாவில் கிழக்கு மேற்காகவும் தெற்கு வடக்காகவும் வரும் இருப்புப் பாதைகள் இந்நகரில் இணைகின்றன. இவற்றில் மஞ்சூரியாவின் மேற்கு எல்லைகளை ஆர்பினுடன் இணைக்கும் இருப்புப் பாதைகளும்; உருசியாவின் கிழக்குக்கோடி நகரமான விளாடிவாசுடாக்கினை (Vladivostok) இணைக்கும் இருப்புப் பாதைகளும் தெற்கில் தெய்ரானையும் (Dairen) கொரியாவின் எல்லையையும் இணைக்கும் இருப்புப் பாதைகளும் சிறப்பானவை. ஆர்பின் சுங்கரி (Sungari) ஆற்றங் கரையில் அமைந்துள்ளது. மண்வளம் மிகுந்த இப் பகுதியைச் சுற்றியுள்ள இடங்களில் மக்காச்சோளம், சோயாபீன்சு, கோதுமை போன்றவை விளைகின்றன. சோயாபீன்சுப் பொருள்களும், கோதுமை மாவும் ஆர்பினிலிருந்து ஏற்றுமதியாகின்றன. உழவுக்குப் பயன்படும் கருவிகள், இரசாயனப் பொருள்

கள், தோல்பொருள்கள் ஆகியவை இங்கு உற்பத்தி யாகின்றன.

**ஆர்பிலாப் போர்:** இது அலெக்சாந்தருக்கும் பாரசீக மன்னருக்கும் ஆர்பூலா என்னும் இடத்தில் நடந்த போர். ஆர்பீலா (Arbela) பண்டைய அசீரி யாவில் சிறந்து விளங்கிய நகரம். இன்று வடகிழக்கு ஈராக்கில் உள்ளது. இசுதார் (Ishter) என்னும் பெண் தெய்வத்தை வழிபடும் மையமாக இந்நகர் விளங் கியது. மோசூலிலிருந்து 80 கி.மீ. தொலைவில் பாக்தாத்திற்குப் போகும் வழியில் இது அமைந்திருக் கிறது. இந்நகர் பண்டைக் கால முதல் இக்காலம் வரை அழியாச் சிறப்புப் பெற்று விளங்குகிறது.

மாசிடோனியாவைச் சேர்ந்த மகா அலெக்சாந் தர் படைபெடுத்து வந்து, பாரசீக மன்னர் மூன்றாம் தேரியசை (Darius III) இசசு என்னும் இடத்தில் தோற்கடித்து, சிரியா நாட்டைக் கைப்பற்றினார். தோல்வி கண்ட மூன்றாம் தேரியசு போர்க் களத்தை விட்டு ஓடிவிட்டார். ஆனால், என்றேனும் மகா அலெக்சாந்தரைப் போர்க்களத்தில் புறங்காண வேண்டும் என்று திட்டமிட்டுத் தம் படை பலத்தைப் பெருக்கினார். மகா அலெக்சாந்தர் எகிப்துக்குச் சென்று திரும்பும் வழியில் தம் தலைமைத் தளபதி பார்மனியோ (Parmenio) என்பவனுடன், ஏறத்தாழ 47,000 படை வீரர்களுடன் தைக்ரிசு ஆற்றின் பக்கம் சென்றார். அங்கே நினேவா (Nineveh) பகுதிக்கு அருகிலுள்ள கோகமாலா என்ற இடத்தில் மூன்றாம் தேரியசு மகா அலெக்சாந்தரின் படைகளைக் கி.மு. 331-ஆம் ஆண்டில் அக்டோபர்த் திங்கள் முதல் நாள் சந்தித்தார். இப்போர் நிகழ்வதற்கு ஒரு சில நாட் களுக்கு முன்னர்த் தோன்றிய வான்கோளின் துணைக்கொண்டு இந்த நாள் கணக்கிடப்பட்டுள் ளது. மகா அலெக்சாந்தர் படைகளும், தேரியசின் படைகளும் தத்தம் வெற்றியை நிலைநாட்டுவதற் காக மிகவும் முயன்று போரில் ஈடுபட்டன. வெற்றி தோல்வியை முடிவு செய்வது எளிதாகவில்லை. தேரி யசு பொலிக் குதிரைகள் பூட்டப்பெற்ற தேர்ப் படை களைப் பெற்றிருந்தார். எனவே, தேரியசின் படை வீரர்களுக்கிடையே ஒரு குழப்பத்தையும், அமைதி யின்மையையும் ஏற்படுத்திய பின்னரே மகா அலெக் சாந்தர் முழுமையாக வெற்றி பெற முடிந்தது.

போர் கோகமாலா என்னும் இடத்தில் நடை பெற்றதெனினும், ஆர்பீலா என்னும் பெயரால் அப் போர் சுட்டப்படுவது இங்குக் குறிப்பிடத்தக்கது. ஏனென்றால், இவ்விடத்தில்தான் மூன்றாம் தேரி யசு தம் படைக்குத் தேவையான படைக் கலங்க ளையும் உணவுப் பொருள்களையும் சேமித்து வைத்து விட்டு, மகா அலெக்சாந்தரின் படைகளைப் போரில் சந்திக்கக் கோகமாலா என்னும் இடம் நோக்கித் தம் படைகளைச் செலுத்தினார். எனவே, ஆர்பீலா என்னும் இடத்தை மையமாக வைத்து இப்போர் நடைபெற்றதால், அப் பெயராலேயே இப்போர் வழங்கப்பெற்றது.

இப்போர் வரலாற்றுச் சிறப்புப் பெற்றதாகும். இப்போரில் மூன்றாம் தேரியசு முழுமையாகத் தோற்கடிக்கப் பட்டதால்தான், மகா அலெக்சாந்தர் மேற்கொண்டு படையெடுத்துச் சென்று பாபிலோ னியா, பாரசீகம் ஆகிய பகுதிகளையும் வென்று, அவற்றைத் தம் மேலாண்மைக்கு உட்படுத்த முடிந் தது. மேலும், மகா அலெக்சாந்தரின் படைகளுக்கு முன்னர்ப் பாரசீகப் படைகள் பயனற்றன என்ற நிலையும் உலகுக்குப் புலனாயிற்று. ஆர்பீலா நகரின் மக்கள் தொகை 25,000 எனக் கணக்கிடப்பட்டுள்ளது.

பொன்.சு.

**ஆர்மடா** என்பது கி.பி. 1588-ஆம் ஆண்டில் இசுபெயின் மன்னர் இரண்டாம் பிலிப்பு இங்கிலாந் தைத் தாக்க அனுப்பிய மிகப் பெரிய கப்பற்படை யின் பெயர். இங்கிலாந்தை எலிசபெத்து ஆண்டிருந்த காலத்தில்'யாராலும் வெல்ல முடியாது' என அழைக் கப்பட்ட ஆர்மடா (Armada), மெடினா சிடோனி யாவின் கோமகன் தலைமையில் சென்றது. பெரு மகன் என்வர்டு, பேர்பெற்ற மாலுமிகள் திரேக்கு பிரோபிசர், ஆக்கின்சு போன்றவர்களைக் கொண்ட ஆங்கிலேயக் கப்பற்படையிடம் ஆர்மடா படுதோல்வி அடைந்து திரும்பியது.




ஆர்மடா போர்முனை

உலகில் எல்லாப் பாகங்களுக்கும் செல்வங்களை ஏற்றிச் சென்ற இசுபானியக் கப்பல்களை ஆங்கில மாலுமிகள் திடீர்த் தாக்குதல் செய்து கொள்ளை யடித்துக் கொண்டிருந்தனர். இதனைத் தகர்த்தெறிய வேண்டும் என்ற எண்ணங்கொண்ட பிலிப்பு மன்னர்

தமது பேரரசின் பல பாகங்களிலிருந்து 7000 மாலுமிகளையும் 17000 படை வீரர்களையும் கொண்ட கப்பற்படையை ஆயத்தம் செய்தார். பகட்டான அரண்மனைகளைப் போல், முழுப்படைக்கலக் காப்புடைய 130 கப்பல்களைக் கொண்ட ஆர்மடா கப்பற்படை ஆறு மாதத்திற்கு வேண்டிய உணவையும் தளவாடங்களையும் ஏற்றி அனுபவமற்ற, செல்ல மனமில்லாத மெடினா சிடோனியா கோமகன் தலைமையில் புறப்பட்டது. கப்பற்படை என்பதைவிட தரைப்படை எனக் கூறும் அளவிற்கு ஆர்மடா அமைக்கப்பட்டிருந்தது. ஆங்கிலேயர் கப்பற்படை 197 கப்பல்களைக் கொண்டிருந்தாலும் அவற்றில் பல மிகச் சிறியவைகளாக இருந்தமையால் அவை பயன்படா என்று கருதப்பட்டன. இரண்டு பக்கங்களிலும் பெரிய கப்பல்களுக்கிடையில்தான் போர் நடைபெற்றது.

ஆங்கிலக் கப்பற் படைக்கு முதன்மையராகச் சார்லசு என்வர்ட்டும், உதவி முதன்மையராகப் பிரான்சிசு திரேக் சான் என்பாரும் இருந்தனர். மேலும் ஆக்கின்சு, சர் மார்டிசு, பிரோபிசர் போன்றவர்களும் ஆங்கிலக் கப்பற்படையில் இருந்தனர். இவர்கள் அனைவருமே ஆண்மையும் புகழும் மிக்க அக்காலக் கடல் மாலுமிகள் ஆவார்கள்.

12 கி.மீ. நீளம் கொண்ட ஆர்மடா பிறைச் சந்திரவடிவில் கி.பி. 1588-ஆம் ஆண்டு சூலை மாதம் 12-ஆம் நாள் ஆங்கிலக் கால்வாயை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. பிளான்டர்சு கரையை அடைந்து, நெதர்லாந்து இளவரசர் பார்மாவிடம் காத்திருக்கும் படைவீரர்களையும் கூட்டிக்கொண்டு, கால்வாயின் மறுபக்கத்தில் உள்ள கெண்ட்டுக்கரையை அடைந்து, திடீர் எனக் கப்பற்படைத் தாக்குதலைத் தொடங்க இசுபானியர் திட்டமிட்டிருந்தனர். சூலை 20-ஆம் நாள் ஆர்மடா பிளிமத்துக் கரை ஓரமாகக் காணப்பட்டது. மோசமான காலநிலை காரணமாக ஆங்கிலக் கப்பற்படை சரியாகக் கடலுக்குள் வருவதற்குத்தான் நேரம் இருந்தது. சூலை 21-ஆம் நாள் ஆங்கிலேயர் காற்றில் பக்கவாட்டில் சென்று இரண்டு மணிநேரம் தொலைவில் நின்று இசுபானியர் கப்பல்களைச் சேதப்படுத்தினர். மறுநாள் காற்று இசுபானியருக்குச் சாதகமாக இருந்ததால் மீண்டும் போராட்டம் தொடர்ந்தது. இம்முறை பிரோவிசர் தனித்து விடப்பட்டு இசுபானியரிடம் அகப்பட்டுக் கொள்ளும் இக்கட்டான நிலை ஏற்பட்டது. ஆங்கிலேயருக்குக் கரையிலிருந்து புதிதாகக் கப்பல்கள் அனுப்பப்பட்டன. கப்பற்படை வலுப்படுத்தப்பட்டது. அவர்டு, திரேக்கு, ஆக்கின்சு, பிரோபிசர் ஆகிய நால்வரின் தலைமையில் ஆங்கிலக் கப்பற்படையை நான்காகப் பிரித்து இசுபானியக் கப்பல்களைக் கால்வாயின் மேல்வழி வரை விரட்டினர். சூலை 22-இல் ஆப்விட்டு என்ற இடத்தில் மீண்டும் கடும் போராட்டம் நடந்தது. இசுபானியர்கள் நல்ல கட்டுப்பாடுடன் இருந்தாலும், திறமைமிக்க ஆங்கிலேய மாலுமிகளிடம் வெகுதொலைவு சுடக்கூடிய துப்பாக்கிகள் சிறப்பாக இருந்தமையால், ஆங்கிலேயருடைய கடலாண்மைக்கும், துப்பாக்கிச் சுடுதலுக்கும் அவர்களால் ஈடு கொடுக்க முடியவில்லை. கப்பல்களில் பல தோற்கடிக்கப்பட்டதால் முற்றிலுமாக இசுபானியர் தோல்வியுணர்ச்சிக்குட்பட்டனர். சூலை 27-ஆம் நாள் கால்வாயைக் கடந்து கலே செல்லும் வழியில் நங்கூரம் பாய்ச்சி நின்றனர். சூலை 28-ஆம் நாள் இரவு எதிரிகளின் கப்பல்களைக் கடலுக்குள் விட முடிவு செய்தனர். ஆங்கிலேயர் ஆறு கப்பல்களில் நாரை ஊற்றித் தீ வைத்து, அந்தக் கப்பல்களைப் பகைவர்களின் கப்பல்களை நோக்கி அலைகளின் மீது மிதக்க விட்டனர். பகைவர்களின் கப்பல்கள் ஒன்றும் தொடப்படாவிட்டாலும் இசுபானியர்களிடையே அச்சம் ஏற்பட்டு நங்கூரங்களை எல்லாம் வெட்டி விட்டுக் கடலுக்குள் செல்லத் தொடங்கினர். சூலை 29-ஆம் நாள் இசுபானியர் கிராவலசு கரையோரமாக அல்லல்பட்டுக் கொண்டிருக்கும்போது திரேக்குத் தலைமையில் கடும் போர் நடந்தது. ஆங்கிலேயர் காற்றின் பக்கவாட்டில் தொலைவில் நின்று மாற்றி மாற்றிச் சுட்டு இசுபானியப் படைக்குக் கடும் சேதம் விளைவித்தனர். திடீரெனக் கடும் புயல் காரணமாகக் காற்றுப்படாத திசைக்கு இசுபானியக் கப்பல்கள் சென்று விட்டதாலும் ஆங்கிலேயரிடம் போர்த் தளவாடங்கள் முற்றிலுமாகத் தீர்ந்துவிட்டதாலும், இரவெல்லாம் கடல் கொந்தளித்ததாலும் போர் நிறுத்தப்பட்டது. சூலை 30-ஆம் நாள் இசுபானியர் கப்பற்படை நியூபோர்டைக் கடந்து மிக இக்கட்டான நிலையில் இருக்கும்போது காற்றுத்திடீரென தென்மேற்காக வீசியதால் வடக்கே சென்று இக்கட்டிலிருந்து தப்பினர்.

வேகமாக வீசிய மேல் காற்றுகளை எதிர்த்துச் செல்லவேண்டிய நிலையில் ஆர்மடா தத்தளித்த போது குடி தண்ணீர்க்குறைவாலும் பெரும் பாதிப் பேற்பட்டது. அயர்லாந்தின் மேற்குக்கரை இசுகாண்டிநேவியா ஆகியவற்றைச் சுற்றித் தாயகம் திரும்ப முயன்றபோது கப்பல்கள் பல மூழ்கிவிட்டன; பல தகர்க்கப்பட்டன. அயர்லாந்தின் அருகில் இசுபானிய மாலுமிகள் மிகக் கொடூரமாகப் படுகொலை செய்யப்பட்டனர். இறக்கும் தறுவாயிலும், நோய் வாய்ப்பட்ட நிலையிலும் உள்ள வீரர்களையும், மாலுமிகளையும் கொண்ட ஆர்மடா எஞ்சிய கப்பல்களோடு ஊர் திரும்பின. இரண்டாம் பிலிப்பு இங்கிலாந்தைத் தாக்கும் நினைவை அறவே மறந்துவிட்டார்.

இசுபானியரின் தோல்விக்குக் காரணம் இசு பானியக் கப்பல்களின் உள்வாய்க் கொள்அளவு மிகப் பெரிதாக இருந்தாலும், ஆங்கிலக் கப்பல்கள் எடை யிலும், எண்ணிக்கையிலும் போர்த்தளவாடங்களின் பங்கீடுகளிலும் மேம்பட்டதாக இருந்தன. ஆங்கிலக் கப்பற்படையில் படைவீரர்களைவிட மாலுமிகள் மிக அதிகம். ஆங்கிலேயர்கள் கப்பற்படை ஒரே மொழிபேசும் தேசிய படையாக இருந்தது. ஆனால், ஆர்மடாவில் பலமொழி பேசும் போர் வீரர்கள் நாட்டின் பல பாகத்திலிருந்து திரட்டப்பட்டி ருந்தனர். எச்.நி.

**ஆர்மா** வட் அயர்லாந்திலுள்ள ஒரு மாநில நகரம். இந்நகரம் சிறிய மலைப் பகுதிகளைச் சுற்றி அமைக்கப்பட்டது. இருண்ட காலத்தில் இந்நகரம் மடாலய வாழ்க்கையில் சிறப்புற்றுக் கலையிலும் கல்வியிலும் சிறந்து விளங்கியது. ஆர்மாவின் (Armagh) வடபாகம் செழிப்பானது. மழை குறைந்த பகுதி. உருளைக்கிழங்கு, ஓட்சு ஆகியவை இங்குப் பயிரிடப் படுகின்றன. கால்நடைகள், பன்றிகள், கோழிகள் இங்கு வளர்க்கப்படுகின்றன. மாநிலத்தின் தலைநக ரம் ஆர்மா, சிறந்த வணிகத் தலமாக விளங்குகிறது. பரப்பளவு 66,733 ச.கி.மீ. மக்கள் தொகை 48,169 (1981).

**ஆர்மா மலை** சென்னை-கிருட்டிணகிரி சாலை யில் ஆம்பூரிலிருந்து பத்து கி.மீ. தொலைவில் மலையாம்பட்டுக் கிராமத்திற்கு அருகிலுள்ளது. இங்குப் புதிய கற்காலக் கருவிகள் சில கிடைத்துள் ளன. இங்குள்ள குகைகளில் சமணப் பெரியார்கள் மண்ணால் இருப்பிடங்கள் அமைத்து வாழ்ந்திருந்த னர். இங்குச் சில சிற்பங்களும் கிடைத்துள்ளன. உருத்தர நந்தி படாரர் என்ற சமணப் பெரியார் இங்கு வாழ்ந்தார். இது ஒரு சமண மையமாகத் திகழ்ந்தது.

இங்குள்ள குகைச் சுவர்களிலும், மேல் விதானத் திலும் ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன; குகையின் மேல் விதானத்தில் அழகிய ஓவியங்கள் உள்ளன. இதில் கொடிகளும், இலை தளிர்களும், அழகிய அன்னப் பறவைகளும் தீட்டப்பட்டுள்ளன. அன்னங் கள் சில சிறகை விரித்துக் கொண்டுள்ளன. அழகிய ஓவியங்கள் சில சதுரமான கட்டங்களுள் காணப்படு கின்றன. சுற்றிலும் எட்டுச் சதுரமாகவும் நடுவில் ஒரு சதுரமாகவும் இக்கட்டம் வரையப்பட்டுள்ளது. இவற்றுள் இரண்டு கட்டங்களில் உள்ள ஓவியங் களே இன்றும் நிலைத்து நிற்கின்றன. பார்ப்பதற்கு இவை திசைக் காவலர் எண்மர் உருவம் போன்றுள் ளன. அக்கினித் தேவன் தன் தேவியுடன் ஆட்டுக் கடாமீதமர்ந்து பறந்து வரும் காட்சி அழகாக உள்ளது. இரண்டாம் கட்டத்தில் எருமைக்கடா ஒன்று முட்டுவதற்குப் பாய்ந்து வருவது போன்று சித்திரிக்கப்பட்டுள்ளது. இது காலனின் வாகனம். காலன் தனக்கே உரிய தென்திசையில் உள்ளான். குகையின் வலப்புறம் மேற்பகுதியில் சமவ சரவண தாமரைப் பொய்கை உள்ளது. இதில் மலர்களும் இலைகளும் காணப்படுகின்றன. இவ்வோவியங்கள் பெரும்பாலும் சித்தன்னவாசலில் உள்ள ஓவியங்களை ஒத்துள்ளன. ஆர்மா மலையில் இடம்பெற்றுள்ள ஓவியங்கள் பல்லவர் காலத்தனவாகக் கொள்ளலாம். ஆர்மா மலைக் குகையை முதன்முதலில் கண்டு சிறு குறிப்புத் தந்த பெருமை இராபர்ட்டு சீவல் என் பாரைச் சாரும். ஆனால், ஓவியங்களைக் கண்டு பிடித்த பெருமை 'மூவே துப்ராய்' அவர்களைச் சாரும்.

**ஆர்மோனியம்:** துருத்திகளை அசைத்துக் காற்றின் உதவியினால் உலோகத் தகடுகளில் அதிர்வு ஏற்படுத்தி ஒலி உண்டாக்கும் இசைக் கருவியாகும். இதற்கு 'இரீடு கருவி' (Reed Organ) என்ற பெயரும் உண்டு.'இரீடு' என்பது மெல்லிய உலோகத் தகட்டி னைக் குறிக்கிறது. உலோகத் தகட்டு இசைக் கருவிகளில், இது குழாய்த் தொடர்பிலாத இசைக் கருவியாகும். ஆர்மோனியத்தில் பல கருப்பு நிறக் கட்டைகளும் வெண்மை நிறக் கட்டைகளும் உள்ளன. ஒவ்வொரு கட்டைக்கும் கீழே உட்புறமாக உலோகத் தகடுகள் அமைக்கப்பட்டுள்ளன. வலக் கையினால் கட்டைகளில் ஏதாவது ஒன்றை அழுத்தி இடக் கையினால் துருத்தியை அசைத்துக் காற்றை உள்ளே அனுப்பும் போது துவாரத்தை மூடி நிற்கும் தகடுகள், மேலும் கீழுமாக அதிர்வு பெறுகின்றன. இந்த அதிர்வு உலோகத் தகட்டின் பருமனையும் நீளத்தையும் பொறுத்து அமைகிறது. ஆர்மோனியத்தில் சுருதி மிகுதியாக ஆகக் கட்டைகளின் கீழிருக்கும் தகடுகள் நீளத்திலும் பருமனிலும் குறைந்து கொண்டே வரு கின்றன. கையினால் துருத்தியை அசைப்பதற்கு மாறாகக் கால்களினால் துருத்தியை அசைக்கும் வகையில் அமைக்கப்பட்ட ஆர்மோனியங்களும் உள் ளன.

ஐரோப்பாவின் வியன்னா நகரத்தில் இருந்த ஆண்டன் ஏகல் (Anton Haeckl) என்பவர் கி.பி. 1818-ஆம் ஆண்டு ஆர்மோனியத்தையொத்திருந்த பிசார்மோனிகா (Physharmonica) என்னும் இசைக் கருவியைக் கண்டு பிடித்தார். இது இயற்பியல் வல்லு லுநர்களை மிகவும் கவர்ந்தது. இக்கருவி செங்கு (Sheng) என்னும் சீன இசைக் கருவியின் அடிப்படை யில் அமைக்கப்பட்டிருந்தது. இது இப்பொழுது பழக் கத்தில் இல்லை. பாரிசு நகரத்தில் கி.பி. 1840-ஆம்

ஆண்டில் வாழ்ந்த அலெக்சாந்தர் திபெயின் (Alexander Debain) என்பவர், முதன் முதலில் ஆர் மோனியத்தைச் செய்தார். இது பாரிசு நகரத்தைச் சேர்ந்த விக்டர் மசுடல் (Victor Mustel) என்பவரா லும், அமெரிக்க ஐக்கிய நாடுகளைச் சேர்ந்த சேகப்பு எசுடே (Jacob Estey) என்பவராலும் பல மாற்றங் களுக்கு உட்படுத்தப்பட்டு இப்போதுள்ள அமைப் பிற்குக் கொண்டுவரப்பட்டது. அக்காலத்தில் இது கிறித்தவ ஆலயங்களிலும், வீடுகளிலும் இசைக்கப் பட்டு வந்தது. ஆர்கன் என்னும் இசைக்கருவி மக்களி டையே பழக்கமாகிய பின்னர், கிறித்தவ ஆலயங்களில் ஆர்மோனியத்திற்குப் பதிலாக ஆர்கன் இசைக்கப் படுகிறது.

இந்தியாவில் இக்காலத் திரைப்படப் பின்னணி இசை அமைப்பாளர்களிடையேயும், நாடகங்களின் பின்னணி இசைக்குழுவினரிடையேயும், முக்கியமாகத் தெருக்கூத்துப் போன்ற கிராமியக் கலை இசைக் குழுவினரிடையேயும் ஆர்மோனியம் பழக்கத்தில் இருந்து வருகிறது.

திரைப்பட இசை அமைப்பாளர்கள் எந்தப் பாட் டாக இருந்தாலும் அதற்கு முதலில் தம் ஆர்மோனி யத்தின் உதவியினாலேயே மெட்டு அமைக்கின்றனர்.

**ஆர்லியன்சு** பிரான்சு நாட்டின் சிறப் பான வாணிகம், போக்குவரத்து ஆகியவற்றின் மையம்; உலோனே (Loinet) என்னும் மாவட்டத் தின் தலைநகரம். இப்பகுதியில் பெரும் பண்ணைகளும் நாட்டுப்புற வீடுகளும் மிகுதியாக உள்ளன. இந்நகரம் உலோயர் ஆற்றங்கரையையொட்டித், தென்மேற்குப் பாரிசில் அமைந்துள்ளது. நூற்பாலைகள், உணவு பதப்படுத்தல், தோல்பதனிடுதல், சாராயம் காய்ச்சு தல் போன்றவை சிறப்பான தொழில்கள். இந்நகர் ஆலைகளில் துணிகள், தித்திப்புகள், சாக்லேட்டுகள், சாராயம், திராட்சைச் சாறு, எந்திரங்கள், மருந்து வகைகள் போன்றவை உற்பத்தியாகின்றன.

சோன் ஆப் ஆர்க்கு (Joan of Arc) ஆர்லியன்சு அம்மை எனவும் அழைக்கப்படுவார். அந்த அம்மை யார் பிரெஞ்சுக்காரர்களை ஆங்கிலேயருக்கெதிராகப் படை எடுக்கும்படி செய்தார். ஆங்கிலேயர் ஆர்லி யன்சைக் (Orleans) கி.பி. 1429-ஆம் ஆண்டில் முற்று கையிட்டனர். இன்றும் இவ்வூரின் பொதுச் சதுக்கத் தில் சோன் ஆப் ஆர்க்கின் உருவச் சிலையைக் காண லாம். ஆர்லியன்சு மாவட்டத்தில் உள்ள புனித கிராய்ச்சு என்பாரின் மாதா கோவில் வரலாற்றுச் சிறப்பு மிக்கதாகும். இந்நகரை இயூகனாட்டுகள் (Huguenots) என்னும் பிரெஞ்சுப் புராட்டசுடெண்டு கள் கி.பி. 1567-இல் அழித்தனர். நான்காம் என்றி யும் (Henry IV) அவர் வழித்தோன்றல்களும் அதை மீண்டும் கட்டினர். இரண்டாம் உலகப் போரின் போது ஆர்லியன்சின் பெரும் பகுதிகள் நாசமுற்றன.

பிரெஞ்சு அரசக் குடும்பத்தின் இருகிளைகளுக்கு ஆர்லியன்சு என்னும் பெயருண்டு. வலாய் ஆர்லியன்சு என்பது ஒன்று; பூர்பன் ஆர்லியன்சு என்பது மற் றொன்று.

**ஆர்லெம்** என்பது அமெரிக்க ஐக்கிய நாட்டி லுள்ள நியூயார்க்கு நகரின் மன்அட்டன் (Manhat-tan) பகுதியிலுள்ள ஒரு மாவட்டம். தொடக்கத்தில் ஆர்லெம் (Harlem) மாவட்டம் ஒரு சிற்றூராக இருந்தது. இது கி.பி. 1731-ஆம் ஆண்டில் நியூயார்க் குடன் இணைக்கப்பட்டது. இங்கு நெருக்கம் மிகுந்த குடியிருப்புகள் உள்ளன. அவற்றில் நீக்கிரோ மரபைச் சார்ந்த அமெரிக்கர்கள் மிகுதியாக வாழ்கிறார்கள். அவர்கள் 1920-1930-ஆம் ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் கலைகளிலும், இலக்கியத்திலும் தலை சிறந்து விளங்கினார்கள். அது புதியதொரு மறு மலர்ச்சியை அவர்களிடையே உண்டாக்கியது. இதனை ஆர்லெம் மறுமலர்ச்சி என்பர்.

**ஆர்வங்களும் மனப்பான்மைகளும்:** தனி மனிதனின் விருப்பங்களையும், ஆசைகளையும் நிறைவேற்ற அவன் ஈடுபடும் செயல்கள் அவனுடைய ஆர்வத்தைக் காட்டுகின்றன. ஆர்வங்கள் மனிதனை ஒரு குறிப்பிட்ட செயலின்பால் ஈடுபடுத்தும் உளச் சார்பு நிலையாகும். ஆர்வங்களை, அகம்சார் ஆர் வங்கள் புறம் சார் ஆர்வங்கள் என இருவகைகளா கப் பிரிக்கலாம். உள்ளார்ந்த ஆர்வங்களினால் மனி தன் தான் மட்டுமே மனநிறைவு பெறுகிறான். புறம் சார் ஆர்வங்களினால் அவனைச் சார்ந்த மற்றவர் களும் பயன் அல்லது புகழடைகிறார்கள். ஆர்வங்கள், பல்வேறு காரணிகளின் அடிப்படையில் உருவாகி வளர்ச்சியடைகின்றன. ஒருவரின் ஆர்வங்கள், அவன் உடல் வளர்ச்சி, நுண்ணறிவு, சூழ்நிலை, சமூகப் பொருளாதாரத் தகுதிகள் போன்றவற்றால் மாற லாம். இளையோர் பருவத்தில், குழந்தைப் பருவத்து ஆர்வங்கள் மறைந்து, சமூக வளர்ச்சியைச் சார்ந்த ஆர்வங்கள் தோன்றி, வளரத் தொடங்குகின்றன. தொடக்கத்தில் தங்கள் திறமைகளைத் தனியாகக் காட்ட விரும்புகிறவர்கள், பின் சூழ்நிலைக்கேற்ப மாற்றிக் கொள்கிறார்கள்.

தாமசு அகியுனசு (Saint Thomas Acquinas), மனிதன் தன்னுடைய ஆர்வங்களை அடைவதற்குப் பிறரோடு சேர்ந்து சமூகத்தை அமைத்துக் கொள்ளு கிறான் என்கிறார். இவருடைய கருத்தைத் தழுவி, ஆல்பியன் சுமால் (Albian Small) என்ற அறிஞர், 'மனிதனுக்கு இன்றியமையாத சில ஆர்வங்கள் உண்டு. அவை உடல்நலம், செல்வம், பிறருடன் கூடி

வாழ்தல், அறிவு, அழகு, நன்னடத்தை ஆகியவை. இவ்வடிப்படை ஆர்வங்களை அடையும் பொருட்டு அவன் சமூகத்தை அமைத்துக் கொள்கிறான் என்று கூறுகிறார். ஆர்வங்கள், ஒத்த தன்மை உடையனவாகவோ பொதுவானவையாகவோ இருக்கலாம். ஒத்த ஆர்வங்கள் போட்டியைத் தோற்றுவிக்கும். ஆனால், பொதுவான ஆர்வங்கள் முயற்சிக்கு வழி வகுக்கும். போட்டியற்ற ஒத்த ஆர்வங்களே பொதுவான ஆர்வங்களாக வளர்ந்து, சமூக வளர்ச்சிக்குப் பயனளிக்கின்றன.

**மனப்பான்மைகள்:** தனிமனிதன் ஒரு பொருள் அல்லது ஒரு சூழ்நிலையின்பால், சொல் அல்லது செயல் வழி வாயிலாகத் தன் உணர்வினை வெளிப்படுத்துவது, அவனுடைய மனப்பான்மையைக் குறிக்கிறது. நியூகோம்பு (NewComb) என்பவர், மனப்பான்மை என்பது, 'நோக்கங்கள் உண்டாவதற்கான ஆயத்த நிலை' என்கிறார். மீடு (Mead J.A.) என்பவர், நடத்தைக்கு முன் எழுகிற மன உணர்வுகள், தூண்டுதல்கள் ஆகியவை மனப்பான்மை என்கிறார். ஒரு தனி மனிதன் தன் சூழ்நிலையிலுள்ள பொருள்கள், மக்கள், இடங்கள் ஆகியவற்றின்பால் நேரிடையாகவோ எதிரிடையாகவோ செயல்புரிய வைக்கிற ஊக்கிகள், புலன்காட்சிகள், சிந்தனைகள், மனவெழுச்சிகள் ஆகியவை ஒருங்கேயமைந்த உளம் சார் ஆயத்த நிலையே மனப்பான்மை என்று ஆல்போர்ட்டு வரையறுக்கிறார். மனப்பான்மைகள், தனிமனிதனின் அக உணர்வுநிலையினைச் சார்ந்தவையாக இருப்பதால், அவனுடைய பெரும்பாலான நடத்தைகளில் செல்வாக்கு உடையனவாக இருக்கின்றன. அவை நடத்தைகளை இயக்கும் உளச்சக்திகளாகவும் இருக்கின்றன. விருப்பங்களுக்கேற்ப மனப்பான்மையும் அமையும். சூழ்நிலையின் காரணத்தால் தனிமனிதன்மீதோ குழுவின்மீதோ ஒருவன் கொண்ட மனப்பான்மைகள் நிலைத்திருக்காமல் மாற்றம் அடையலாம். இத்தகைய மனப்பான்மைகள், உள முரண்பாட்டிற்குக் காரணமாக அமைகின்றன. எடுத்துக்காட்டாக, வெறுப்புகள், தப்பெண்ணங்கள் ஆகியவை நனவடங்கு நிலையில் இருந்துகொண்டு, நடத்தைகளை மிகுதியாகப் பாதிக்கின்றன. முதலில் மனப்பான்மைகள், உளவியல் இயங்குமுறைகளான புலன்காட்சி, கற்றல் போன்றவற்றில் ஆதிக்கம் செலுத்துவனவாக உள்ளன. ஒரு சிறு மரக்கட்டையை ஒரு தோட்டக்காரன் காணும்போது அது தீயெரிக்க விறகாகப் பயன்படும் பொருளாகவும், அதையே ஒரு சிற்பி காணும்போது ஓர் அழகான சிலையைச் செய்யப் பயன்படும் பொருளாகவும் அமைகிறது. புலன்காட்சிகள், மனப்பான்மை வேறுபாட்டைக் காட்டுகின்றன. தனிமனிதனின் மனப்பான்மைகள், தேர்ந்தெடுக்கப்பட்ட நிலையில்தான் தொடர்பு கொள்கின்றன. எடுத்துக்காட்டாக, அவன் தன் மனப்பான்மையைப்போல் ஒத்த மனப்பான்மை உடையவர்களையே தான் பழகுவதற்குத் தேர்ந்தெடுக்கிறான். இதைப் போல், மக்கள் தங்கள் குழுவின்பால் ஒத்த மனப்பான்மை உடையவர்களுடன் தொடர்பு கொள்கிறார்கள்.

மனப்பான்மைகள், ஒரு சில பழக்க வழக்கங்களைத் தடை செய்யும் காரணிகளாகவும் உள்ளன. ஒரு செயலை மனத்தால் நினைத்துச் செயல் புரிய வைக்கிற மனப்பான்மைகள், பழக்க வழக்கங்களைக் காட்டும்போது, வேறு பழக்கத்திற்கான செயலைப் பற்றி எண்ணாமல் இருக்கச் செய்து விடுகின்றன. மனப்பான்மை பிறப்பால் உருவாவதில்லை. ஒவ்வொருவரும் தத்தம் வாழ்க்கைப் போக்கில் பெற்றோருடனும் தம்முடன் ஒத்த குழுவினருடனும், மற்றையோருடனும் கொள்ளுகிற தொடர்பாலும் அனுபவத்தாலும் பெறுகிற படிப்பினைகளின் வாயிலாகத் தாங்களாகவே இம் மனப்பான்மையை உருவாக்கிக் கொள்ளுகின்றனர். சில மனப்பான்மைகள், பிறர் வாயிலாக ஒருவருக்கு உண்டாகி இருக்கலாம். பிறரைப் பற்றிய நூல்களைக் கற்பதன் வாயிலாகவும் ஒருவர் தம் மனப்பான்மையை வளர்த்துக் கொள்ளலாம். மனப்பான்மைகள் வாழ்நாள் முழுவதும் ஓரளவிற்கு மாறாமல் இருக்கும். ஆனால், அனுபவங்களினால் இவை மாற்றப்படலாம். இவை எப்பொழுதுமே நேரிடையாகவோ எதிர்மறையாகவோ ஒரு முடிவான இலக்கு நோக்கியே இயங்குகின்றன. இம்மனப்பான்மைகளை, வெளியிடுகிற ஒருவரின் செய்கைகள், பாவனைகள், நடத்தைகள், உரையாடல்கள் போன்றவற்றின் வாயிலாக மறைமுகமாகத் தெரிந்து கொள்ள முடியுமேயன்றி, நேரடியாகத் தெரிந்து கொள்ளுதல் இயலாது.

ஒருவரின் மனப்பான்மைகளை அவர் மற்றவர்களுடன் தொடர்பு கொள்ளும்போது அல்லது சமூகத் தொடர்பு வைத்துக் கொள்ளும்போது, அறிந்து வகைப்படுத்தலாம். பெரும்பாலும் மனப்பான்மைகளை, மனத்தளவில் இணைக்கிற, பிரிவினை உண்டாக்குகிற, தடுக்கிற மனப்பான்மைகள் (Associative, Dissociative, Restrictive Attitudes) என்றும், தாழ்வு மனப்பான்மைகள், உயர்வு மனப்பான்மைகள், நடுநிலைமை மனப்பான்மைகள் என்றும் பிரிக்கலாம். அச்சம், கூச்சம், நாணம் போன்றவை மனத்தளவில் பிரிக்கிற நிலையிலும், பணிவு, வணங்குதல், பத்தி, ஒரு நோக்கத்தை நிறைவேற்றுவதில் உதவி போன்றவை தடுக்கிற நிலையிலும், நன்றியுடன் இருத்தல், நல்முறையில் செய்ய விரும்பு

தல், தலைவன் வழிபாடு போன்றவை, இணைக்கிற நிலையிலும் தாழ்வு மனப்பான்மைகளைக் குறிக்கும். மிகையான வெறுப்பு, அவமதிப்பு, சகிப்புத் தன்மை, தற்பெருமை போன்றவை பிரிக்கிற நிலையிலும் பெருமை, அரவணைப்பு, அமைதி, தற்கட்டுப்பாடு போன்றவை தடுக்கிற நிலையிலும் பரிதாபம், இரக்கம், பாதுகாக்கும் தன்மை போன்றவை இணைக்கிற நிலையிலும் உயர்வு மனப்பான்மைகளைக் குறிக்கும், வெறுப்பு, எதிர்ப்பு, ஆதாரமற்ற ஐயம் போன்றவை பிரிவினை நிலையிலும் பகைமை உணர்ச்சி, போட்டி, பொறாமை போன்றவை தடுக்கிற நிலையிலும் இரக்கம், விருப்பம், உண்மை, அன்பு, நட்பு, உதவி செய்தல் ஆகியவை இணைக்கிற நிலையிலும் நடுநிலைமையுடைய மனப்பான்மைகளைக் குறிக்கும்.

**சமூகமனப் பான்மை;** ஒவ்வொரு மனிதனும் தன் வாழ்க்கையில், அனுபவத்தால் பல வகையான மனப்பான்மைகளை வளர்த்துக் கொள்கிறான். அவை களுள் ஒரு சில அவனைச் சார்ந்தவையாகவும், மற்றவை சமூகத்துடன் தொடர்புடையவையாகவும் இருக்கின்றன. தனி மனிதனின் வாழ்க்கையும் சமூக வாழ்க்கையும், பிறர்பால் கொள்கிற நல்ல மனப்பான்மையின் செயல்களாலேயே முன்னேற்றம் அடைகின்றன.

ஒரு குழுவிலுள்ள மற்றவர்களுடன் அல்லது குழுவில் இல்லாத மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளப்படும் மனப்பான்மைகள், சமூக மனப்பான்மைகள் எனப்படும். அதாவது, ஒருவர் தம் மனப்பான்மையை மற்றவர்களுடைய மனப்பான்மையுடன் பகிர்ந்து கொள்ளும் நிலை, சமூக மனப்பான்மை எனப்படும். சமூக மனப்பான்மை பொருள்கள், சூழ்நிலைகள், சிக்கல்கள், விளைவுகள் போன்றவற்றுடன் தொடர்புடையனவாகவும், ஒரு குழுவில் அல்லது ஒரு சமூகத்தில் உள்ளவர்களுடன் தொடர்பு உடையனவாகவும் இருப்பதால், யாவருக்கும் பயன் அளிப்பதாக உள்ளது. பொதுவுடைமை, படைக் குறைப்பு, பொருளாதாரத் திட்டம், விதவை மறுமணம், வரதட்சிணை போன்றவற்றில், ஒருவர் தம் மனப்பான்மையை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளுவதால், அவை சமூக மனப்பான்மைகளுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

சமூக மயமாக்கப்படும் முறையில் தனிமனிதனின் சமூக மனப்பான்மைகள், பெரும் பங்காற்றுகின்றன. ஒரு குழு, ஒரு நிலையம், ஒரு சமூக விளைவு போன்றவற்றின் மீது அமைக்கப்படும் மனப்பான்மைகள், நடுநிலைமைத் தன்மை வாய்ந்தவையாக இல்லாமல், துணையாக அல்லது எதிர்த் தன்மை வாய்ந்தனவாக இருக்கும்.

பல்வேறு பண்பாடுகளுடைய மக்கள், தங்கள் உணவுப் பொருள்களைத் தேர்தெடுக்கும்போது, அவை சத்தான பொருள்களா என்பதைப் பற்றி எண்ணாமல் அவர்கள் விரும்புகிற பொருள்களாகவே தேர்ந்தெடுக்கிறார்கள். மேலும் ஒரு சில விலங்குகளின் இறைச்சி அல்லது ஒருசில தாவர உணவு மட்டுமே அவர்கள் சமுதாயத்திற்கு உகந்ததாகக் கருதுகிறார்கள், ஏனையவற்றை அவர்கள் வெறுத்து ஒதுக்குகிறார்கள். இதற்கெல்லாம் அச்சமூகத்தினரின் சமூக மனப்பான்மையே காரணமாகும்.

ஒவ்வொரு சமூகமும் மற்றச் சமூகத்துடன் கொண்டுள்ள நல்ல மனப்பான்மை, ஒன்றுபட்டு வாழ வழி வகுக்குகிறது. எனவேதான், உலகம் ஒன்றுபட்டு வாழ முயற்சி செய்த அரசியல் தலைவர்களும் சமயத் தலைவர்களும் மக்களின் மனப்போக்கை மாற்றுவதில் முதலில் ஈடுபட்டனர். மனப்பான்மையை உருவாக்கினால் மட்டும் போதாது; தேவை ஏற்படின் அதை ஓரளவிற்கு மாற்றவும் வேண்டும். ஒருவன், மற்றொரு சாதியினரிடமோ குழுவினருடனோ கொண்டுள்ள விரும்பத்தகாத மனப்பான்மையை மாற்றிக் கொண்டாலொழிய அவன் அவர்களுடன் ஒன்றுபட்டு வாழ முடியாது.

உலகிலுள்ள ஒவ்வொரு நாட்டு அரசும் அந்நாட்டிலுள்ள பல குழுக்களும் பல்வேறு சிக்கலைப் பற்றிய மக்களின் மனப்பான்மைகளை மாற்றுவதில் ஈடுபட்டிருக்கின்றன. இந்தியாவிலும் நாட்டின் வளர்ச்சியை முன்னிட்டு, புதிய வேளாண்மை முறைகள், இரசாயன உரங்களைப் பயன்படுத்தல், கால்நடையைப் பெருக்குதல், கூட்டுறவுச் சங்கங்கள் ஆகியவற்றில் உழவர்கள் பாமர மக்கள் ஆகியோரின் மனப்பான்மையை மாற்றுதல் போன்ற பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. மேலும் சில வகைத் திட்டங்கள் வெற்றியுடன் செயற்பட, குறிப்பாகக் குடும்பக் கட்டுபாடு,சிறு சேமிப்புப்போன்றவை வெற்றி பெற, முதலில் மக்களின் மனப்பான்மையை மாற்ற வேண்டும்.

நம்பிக்கை அல்லது நம்பிக்கையின்மை, ஏற்றுக்கொள்ளுதல் அல்லது ஏற்றுக்கொள்ளாமை, ஆதரித்தல் அல்லது ஆதரிக்காமை போன்ற உடன்பாடான அல்லது எதிர்மறையான பண்புருபுகளை அளவிடும் வகையில், மனப்பான்மையும் அளவிடப்படுகிறது. ஆராய வேண்டிய விவாதக் கருத்துப் பற்றிய பல தன்மைகளைக் குறிக்கும் குறுகிய கூற்றுகள் கொண்ட அளவுகோல்கள் அமைக்கப்பட்டு, அவற்றின் வாயிலாக மனப்பான்மைகள் அளவிடப்படுகின்றன. வரிசையாகக் கூற்றுகளை அமைத்து அவற்றை அளவுகோலில் மனப்பான்மை அளவுகளாகக் கொள்ளுகின்றனர். ஒவ்வொரு கூற்றும் ஒரு நம்பிக்கையைக்

குறிப்பிட்ட அளவிற்கு ஏற்பதை அல்லது தள்ளுவதைக் காட்டுவதாக அமையும். மேலும், ஒரு நம்பிக்கையை முழுமையாக ஏற்பதிலிருந்து முழுமையாக ஏற்காமல் இருத்தல் வரையுள்ள, கூற்றுகளை, ஒரு மனப்பான்மைத் தொடரில் சம இடைவெளி உடையதாக இருக்குமாறு அமைத்தல் வேண்டும்.

தர்சுடனின் முறையில் ஒருவர் விரும்பும் அல்லது வெறுக்கும் ஒரு கூற்றைச் சுட்டிக் காட்டினால், அதனைக் கொண்டு அவரை அம்மனப்பான்மைத் தொடரில் குறிப்பிட்ட இடத்தில் காட்டுவதாகும். பொருத்தமான, வரிசையான கூற்றுகளைத் தேர்ந்தெடுத்து, எந்த இடத்தில் ஒவ்வொரு கருத்தும், மனப்பான்மைத் தொடரில் அமைக்கிறது எனக் காணுதலாகும்.

இம்முறைப்படி, முதலில் பலரிடமிருந்து ஒரு பொருள் பற்றிய கருத்துகளைப் பல கூற்றுகளாகப் பெறுதல் வேண்டும். கூற்றுகள் யாவும் முழுமையாக ஏற்றுக் கொள்வதிலிருந்து முழுமையாகத் தள்ளுவது வரையிலும் இருக்க வேண்டும். ஒவ்வொரு கூற்றும் ஒரு கருத்தைக் குறிப்பதாக இருக்க வேண்டுமேயன்றி, இதுதான் என்று அறுதியிட்டுக் கூறுவதாக இருக்கக் கூடாது. ஒவ்வொரு கூற்றும் எளிமையானதாகவும் தெளிவானதாகவும் குழப்பமில்லாமலும் அமைந்து, ஏற்கப்படக் கூடியதாகவோ விளக்கப்படக் கூடியதாகவோ இருத்தல் வேண்டும். அடுத்தபடியாகக் கூற்றுகளை மிகவும் பயன்படுவதிலிருந்து (விருப்பு) பயனில்லாதது (வெறுப்பு) வரை தொடர்ச்சியாக வரிசைப்படுத்த வேண்டும். ஆய்வாளர்கள் கூற்றுகளைச் சேகரிக்கும் பொழுதும் பதிப்பிக்கும் பொழுதும் அவர்தாம் முன்பே எண்ணிய எண்ணங்களின் தாக்கங்களைத் தவிர்த்தல் வேண்டும்.

நடுவர்களைக் கொண்டு கூற்றுகளைப் பல அடுக்குகளாகப் பகுத்த பின், கூற்றுகளின் மையப் பயன் மதிப்பைக் (Median Value) கண்டுபிடிக்க வேண்டும். ஒவ்வொரு கூற்றுக்கும் மையநிலை மதிப்பை வரையறை செய்தபின் அடுத்த மனப்பான்மைத் தொடரில் உள்ள ஒவ்வொரு மதிப்பையும் எடுத்துக்காட்டும் சில கூற்றுகளத் தேர்ந்தெடுக்க வேண்டும். தெளிவற்ற அல்லது பொருந்தாதவை என முடிவு செய்யப்பட்ட கூற்றுகளனைத்தும் நீக்கப்பட வேண்டும். இறுதியில், வரிசைப்படுத்தப்பட்ட மனப்பான்மைச் சோதனையைப் பதிலளிப்போருக்குக் கொடுத்து, அவர் ஏற்றுக் கொள்ளும் கூற்றுகளைக் கோடிட்டுத் தெரிவிக்குமாறு கேட்க வேண்டும். இதில் அவர் அடைந்த மதிப்பெண் (Score) அவர் கோடிட்டுக் காட்டிய உறுப்புகளின் மதிப்பெண்களின் மைய நிலையாகும். இவ்வாறாக, ஒருவர், தனது ஏற்பு அல்லது மாறுபாடு என்னும் நிலையை ஒவ்வொரு கூற்றுக்கும் காட்ட வேண்டும்.

**இலிக்கர்டின் கூட்டு அளவீட்டு முறை:** இம்முறை தர்சுடனின் முறையைக் காட்டிலும் எளிதானது. இம்முறையிலும் கூட ஆய்வு செய்வதற்காக எடுத்துக் கொண்ட பொருள் பற்றிய பல கூற்றுகளைச் சேகரித்தல் வேண்டும். ஆட்படுநர், அவருடைய ஏற்றுக் கொள்ளும் மனப்பான்மைத் தன்மையை ஒவ்வொரு கூற்றுக்கும் 5 பிரிவுகள் அளவையில் காட்டுமாறு, கேட்டுக் கொள்ளப்படுகின்றனர். அதாவது, உறுதியான ஏற்பு, ஏற்பினைத் தீர்மானிக்க இயலாமை, ஏற்காமை, உறுதியாக ஏற்காமை என்பன. இவ்விடைகளுக்கு 5-இல் இருந்து 1 வரை அல்லது 1 முதல் 5 வரை அவற்றின் விருப்பு அல்லது வெறுப்பு ஆகியவற்றின் எதிர்வினை அடிப்படையில் எண்மதிப்புகள் கொடுக்கப்படுகின்றன. எனவே, மிகுந்த எண் பெறுதல் விருப்பமான மனப்பான்மையைக் காட்டுகிறது. ஒரு குறிப்பிட்ட மனப்பான்மை அளவுகோலில் ஒரு தனியனின் மதிப்பெண்ணானது அவன் ஒவ்வோர் உறுப்பிற்கும் அளித்த தர எண்ணின் மொத்தமாகும். மதிப்பெண் மிகுதியானதா குறைவானதா என்பதிலிருந்து, தனியனின் மனப்பான்மை மிகுந்த விருப்புடையதா, மிகுந்த வெறுப்புடையதா என்பதன் தொடர்பு அடிப்படையிலேயே, அவனுடைய மதிப்பெண்கள் விளக்கம் கூறப்படுதல் வேண்டும்.

போகார்டசு (Bagordus) குழுக்கள், சமூகங்கள், நாடுகள் போன்றவற்றிற்கு இடையேயுள்ள உறவை முடிவு செய்ய இந்த அளவீட்டு முறையைக் கண்டுபிடித்தார். ஒரு குழுவின் தனியனிடம் ஏழு வகையாகப் பிரிக்கப்பட்ட உறவுமுறையை விளக்குகிற வரிகள் கொடுக்கப்படுகின்றன. அவன் அதில் சோதனையாளர் கூறுகிற அந்தக் குழுவினுடன், சமூகத்துடன், நாட்டுடன், எந்த அளவிற்கு உறவு கொள்ள முடியும் என்று பிரித்து, அவ்வரிகளுக்கு நேராகத் தன் குறியீட்டை இடுகிறான்.

ஓர் இனத்தார் மற்ற இனத்தாரை அல்லது ஒரு நாட்டினர் மற்ற நாட்டினரை எந்த அளவிற்கு ஏற்றுக் கொள்கின்றனர் என்பதை அறியக் கீழ்க் காணும் பகுப்புமுறை பயன்படுகிறது.

1. திருமணம் செய்து கொள்ளுகிற அளவுக்கு உறவு.
2. தன்னளவில் தனிப்பட்ட முறையில் நண்பனாகப் பழகுகிற அளவிற்கு உறவு.
3. தன் தெருவில் பக்கத்து வீட்டுக்காரராக வசிக்க அனுமதிக்கிற வரையான உறவு.
4. தொழில் நிறுவனத்தில் உடன்பணியாற்ற உடன்படுகிற வரையான உறவு.

5. தன் நாட்டில் குடிமகனாக ஏற்றுக் கொள்கிற அளவிற்கான உறவு.

6. தன் நாட்டில் பார்வையாளராக வந்து போக அனுமதிக்கிற வகையான உறவு.

7. நாட்டின் எந்தவிதத் தொடர்பிலிருந்தும் அகற்றி விடுகிற உறவு.

மேற்கண்ட பகுப்பு முறை மிகவும் நெருக்கமான உறவிலிருந்து முற்றிலும் விலக்கி வைக்கின்ற உறவு வரை மெதுவாக உயருகிறது.

இம்முறைப்படி, பெரும்பான்மையினரால் எல்லா வகையிலும் ஒத்துக்கொள்ளப்படுகிற பொதுமக்கள் கருத்தினையே சோதனைக்கு எடுத்துக் கொள்ள வேண்டும். அதாவது பொதுவாக ஒன்றினை ஏற்பவர் அதற்கு எதிர்மாறான மற்றொன்றினை ஒதுக்கியே தன் கருத்தினை வழங்க வேண்டும். இங்ஙனம் முரண்பட்ட வாக்குகளை அதுவும் பெரும்பான்மையினரால் ஓரளவிற்கு ஒரே தன்மையில் பதிலளிக்கப்பட்ட கூற்றுகளையே எடுத்து ஆய்வு செய்வதன் வாயிலாக, மனப்பான்மைகளை அறியலாம். இம்முறை நன்மை பயப்பதாகவும் எல்லோராலும் பயன்படுத்தப்படுவதாகவும் காணப்படுகிறது.

சமுதாயத்தின் தோற்றம், வளர்ச்சி, முன்னேற்றம் போன்றவை மக்களின் ஆர்வங்கள், மனப்பான்மைகளைச் சார்ந்திருப்பதால், சமூக வாழ்க்கையில் அவற்றின் பங்கு தெளிவாகிறது. ஒருவனின் ஆர்வங்களே, மற்றவர்களுடன் சமூகத் தொடர்பு வைத்துக் கொள்வதை முடிவு செய்கிறது. பொதுவான ஆர்வங்கள் இருப்பதால்தான் சமுதாயம் நிலைத்திருக்கிறது. டி. எஸ்.சு.

துணை நூல்கள்:

Mac Iver and Page, Society; An Introductory Analysis, Macmillan, London, 1965.

Sachdeva & Bhushau, An Introduction to Sociology Kitab Mahal, Allahabad, 1978.

Sheriff & Sheriff, An Outline of Social Psychology Narper & Brothers, New York, 1956.

Warren and Jahoda, Attitudes, Penguin Books, Mardmen & Sworth, 1973.

குப்புசாமி, பி., சமூக உளவியலுக்கு ஓர் அறிமுகம், தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனம், சென்னை, 1973.

பரமேசு, செ. ரா. சமூக உளவியல், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1973.

சுப்ரமணியப் பிள்ளை, டாக்டர் மா. இலக்குமண சிங்கு, சமூகவியல், தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1980.

சுப்ரமணியப் பிள்ளை, சமூகவியல், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை,1980.

சுப்ரமணியப் பிள்ளை, இளையோர் உளவியல், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம். சென்னை,

**ஆர்ன் முனை** தென் அமெரிக்காக் கண்டத்தின் தென்கோடியிலுள்ள முனை. இம்முனை ஆர்ன் என்னும் பெயர்கொண்ட தீவிலுள்ளது. இங்குக் கடுங் குளிருண்டு. தென் துருவம் இம்முனைக்கு அண்மையிலிருப்பதே இதற்குக் காரணம். இங்குப் பயிர்கள் முளைப்பதில்லை. இம்முனையை முதன்முதல் கப்பற்பயணம் செய்து அடைந்தவர் ஆங்கில மாலுமியான சர் பிரான்சிசு திரேக்கு (Sir Francis Drake) என்பவர் ஆவார். அவர் கி.பி. 1578-இல் இங்குச் சென்றடைந்தார். பின்னர்க் கி.பி. 1615-ஆம் ஆண்டில் தச்சுக்காரர்கள் இங்குச் சென்றனர். தம் நாட்டிலிருந்து ஓர்ன் (Hoorn) என்னும் மாநிலத்தின் பெயராலேயே இதனை ஓர்ன் முனை என்றழைத்தனர். காலப்போக்கில் ஓர்ன் என்னும் பெயர் திரிந்து ஆர்ன் எனலாயிற்று. பனாமா கால்வாய் தோண்டப்படுமுன் கப்பல்கள் இம்முனையைச் சுற்றிச் சென்றன.

**ஆர்னால்டு, சே.ஆர்,** கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இலங்கையில் வாழ்ந்தவர். இவர் முற்பெயர் இரா.ரா. அருணாசலம் சதாசிவம் பிள்ளை. இலங்கையிலுள்ள மானிப்பாய் என்னும் ஊரினர். கிறித்தவராக மாறிய பின் இவர் பெயரை ஆர்னால்டு (Arnold J.R.) என்று மாற்றிக் கொண்டார். 'உதய தாரகை' என்ற மாத ஏட்டின் ஆசிரியர். இவர் இயற்றிய நூல்கள்: இல்லற நொண்டி (கி.பி. 1887), கீர்த்தனா சங்கிரகம் (கி.பி. 1880), இயேசுநாதர் திருச்சதகம் (கி.பி. 1850), சாதாரண இதிகாசம் (கி.பி. 1858), வானசாத்திரம் (கி.பி. 1861), பாவலர் சரித்திர தீபகம் (கி.பி. 1886), உரிச்சொல் நிகண்டு (பதிப்பு கி.பி. 1898), நன்னெறி மாலை முதலியனவாகும். பாவலர் சரித்திர தீபகம் என்னும் நூல் சைமன் காசிச் செட்டி எழுதிய தமிழ் புளுடார்க்கு (Tamil Plutarch) என்னும் நூலின் மொழி பெயர்ப்பாக வெளியிடப்பட்டது. த.கோ.

**ஆர்னை, காரன்** காண்க: ஆளுமைக்கோட்பாடு.

**ஆரகன்** இசுபெயினிலுள்ள (Spain) ஒரு பகுதி. இதன் எல்லைகளாக வடக்கே பிரனியன் நீர்ச்சரிவும் (Pyrenean Watershed), கிழக்கே நோகுயிரா இரிபகோர்சனாவும் (Noguera Ribagorzana). தெற்கிலும்

மேற்கிலும் ஐபீரியன் (Iberian) மலைகளும் உள்ளன. புராணக் கதைகளில் இந்நகரம் குறிப்பிடப்பட்டுள்ளது. இது இசுலாமியர் வாழும் பகுதியாக இருந்தது. ஆரகன் (Aragon) கடலோனியா, நவார் பகுதிகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டது. இந்நகரிலிருந்து சரகோசா (Saragossa) பகுதிக்குச் சாலைகள் பல செல்கின்றன. ஆரகன் பரப்பளவு 47,669 ச.கி.மீ. ஆகும். மக்கள் தொகை 1,213,099 (1981).

**ஆரஞ்சு ஆறு** தென் ஆப்பிரிக்காவின் மிக நீளமான ஆறு. தச்சிய (Dutch) இளவரசர்களும் பிரபுக்களும் ஆரஞ்சு மரபினைச் சார்ந்தவர்கள். அவர்கள் தென் ஆப்பிரிக்காவில் தம் குடியேற்றத்தை அமைத்தபோது, அவர்களின் பெயராலேயே இந்த ஆற்றை ஆரஞ்சு ஆறு எனக் குறிப்பிட்டனர். இலெசோத்தோ நாட்டின் உயர்ந்த கிழக்கு மலைத் தொடர்களில் தொடங்கி 2090 கி.மீ. மேற்காகப் பாய்ந்து இந்த ஆறு அட்லாண்டிக்குப் பெருங்கடலில் கலக்கிறது. மேல் ஆரஞ்சு ஆறு தென் ஆப்பிரிக்காவின் கேப்பு மாநிலத்திற்கும் ஆரஞ்சு சுதந்திர நாட்டிற்கும் இடையில் அம்மாநிலங்களின் எல்லையாக அமைகிறது. கீழ் ஆரஞ்சு சுதந்திர ஆறு கேப்பு மாநிலத்தையும், தென்மேற்கு ஆப்பிரிக்காவையும் பிரிக்கிறது. வால் ஆறு (Vaal River) ஆரஞ்சு ஆற்றின் மிக நீண்ட கிளையாகும்.

ஆரஞ்சு ஆறு செங்குத்தான கரைகளைக் கொண்டுள்ளது. பாய்ந்தோடும் இந்த ஆறு, இறுதியில் 320 கி.மீ. தொலைவிற்குப் பெரும்பாலும் பாலை நிலத்திலேயே ஓடுகிறது. இது விரைந்து ஓடும் ஆறாகும். இதன் பல போக்கில் சில நீர்வீழ்ச்சிகள் அமைந்துள்ளன. அதில் உள்ள சார்சு அரசர் நீர்வீழ்ச்சியில் தண்ணீர் 120 மீ. உயரத்திலிருந்து விழுகிறது. ஆற்றின் வேகம் பெருமளவில் உள்ளதாலும் மணல் நிறைந்து இருப்பதாலும் கப்பல் போக்குவரத்திற்கு இந்த ஆறு பயன்படுவதில்லை. ஆனால், ஆற்றுநீர் பாசனத்திற்குப் பெரிதும் பயன்படுகிறது.

தென் ஆப்பிரிக்கா அரசு 1962-இல் இந்த ஆற்றை நன்முறையில் பயன்படுத்த முப்பதாண்டுத் திட்டமொன்றைத் தீட்டிச் செயற்படுத்தி வருகிறது. ஏறத்தாழ 700 கோடி உருபாய் செலவில் உருவாகும் இத்திட்டத்தால் ஆரஞ்சு ஆற்றின் குறுக்கே அணைகள் கட்டி, 12 நீர்மின் திட்டங்களை உருவாக்கியுள்ளனர். அதன் விளைவாக 2,91,000 எக்டேர் பரப்பு நிலம் பாசன வசதி பெறுகிறது.

**ஆரஞ்சு சுதந்திர நாடு** தென் ஆப்பிரிக்க நாட்டிலுள்ள ஒரு மாநிலம். இங்குள்ள பரந்த சமவெளிகளில் மிதமான மழை பெய்கிறது. இம் மாநிலத்தின் பரப்பு 1,29,152 ச.கி.மீ. ஆரஞ்சு சுதந்திர நாடு (Orange Free State) மாநிலத்தில் வாழும் மக்களுள் முக்கால் பங்கினர் கருப்பு ஆப்பிரிக்கர் ஆவர். இங்கு ஏறத்தாழ மூன்று இலட்சம் வெள்ளையர் வாழ்கின்றனர். பெரும்பாலான நிலங்கள் அவர்களுக்குச் சொந்தமாக உள்ளன. ஆப்பிரிக்கர்களுள் பெரும்பாலோர் வெள்ளையரின் பண்ணைகளில் பணி செய்கிறார்கள். இம்மாநிலத்தின் வட பகுதியில் வாழும் ஆப்பிரிக்கர்களுள் சிலர் தங்கம், உரேனியச் சுரங்கத் தொழிலாளர்களாக உள்ளனர். கிழக்கு மாவட்டங்களில் உழவர்கள் உணவுப் பயிர்களை விளைவிக்கிறார்கள். புளாம்பான்டேன் (Bloemfontein) இம்மாநிலத்தின் தலைநகர். ஐரோப்பியர் கி.பி. 18-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இப்பகுதியில் முதலில் நுழைந்தனர். கேப்புக் காலனியிலிருந்து வந்த போயர்கள் கி.பி. 1836-ஆம் ஆண்டில் இப்பகுதியில் குடியேறினார்கள். ஆங்கிலேயர் இப்பகுதியைக் கி.பி. 1848-ஆம் ஆண்டில் உரிமை கொண்டாடினர். இதனை அவர்கள் ஆரஞ்சு ஆற்று ஆளுமைப் பகுதி என்று குறிப்பிட்டார்கள். இது கி.பி. 1854-இல் சுதந்திர நாடாக அறிவிக்கப்பெற்று, ஆரஞ்சு சுதந்திரநாடு என்று பெயர் சூட்டப்பெற்றது. இங்குக் கி.பி. 1899-ஆம் ஆண்டில் போயர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் பூசல் மூண்டு, அது போயர் போரில் (கி.பி. 1899-1902) முடிவுற்றது. போயர்கள் தோற்றார்கள். இந்நாடு கி.பி.1900-ஆம் ஆண்டில் மீண்டும் ஆங்கிலேயர் வசமாயிற்று. அதற்கு அவர்கள் ஆரஞ்சு ஆற்றுக் குடியேற்றம் எனப் பெயரிட்டனர். பத்தாண்டுகளுக்குப் பின்னர் அது தென் ஆப்பிரிக்க ஒன்றியத்தின் பகுதியாயிற்று. இப்போது தென் ஆப்பிரிக்கா ஒரு குடியரசு நாடாகும்.

**ஆரணி** வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள நகரம். வேலூரிலிருந்து தெற்காகச் செஞ்சி செல்லும் சாலையில் அமைந்துள்ளது. கோட்டை ஒன்று உள்ளது. இக்கோட்டை, முன்பு படைத்தளமாக இருந்தது. பட்டுப் புடவைகளுக்குப் பெயர்பெற்றது. இது நெசவுத் தொழில் மிக்க பகுதி.

**ஆரணிப் போர்** மொகலாயர்களுக்கும் மராட்டியர்களுக்கும் கி.பி. 1696-இல் ஆரணி என்னுமிடத்தில் நடந்த போர். மொகலாயப் பேரரசர் ஔரங்கசீபு, செஞ்சியிலும் அதனைச் சூழ்ந்த பகுதியிலும் மராட்டியர் ஆதிக்கம் செலுத்துவதைத் தடுக்க முடிவு செய்தார். அதனால் செஞ்சிப் பகுதியை, மொகலாயப் படை முற்றுகையிட்டது. ஔரங்கசீபு தம் கருவூல அமைச்சரான (வசீர்) அசத்கானின் மகன் சுல்பிகர்கான் (Zulfiqar Khan), தளபதி இராவ் ஆகியோர் தலைமையில் பெரும்படை ஒன்றை அனுப்பினார். இவர்கள் கடுமையாகப் போராடிச் செஞ்சிக் கோட்டையை மராட்டியரிடமிருந்து கைப்பற்றினார்கள். சாந்தாசி கோர்ப்படே

(Santaji Ghorpade), தானாசி யாதவ் (Dhanaji Jadav) ஆகிய படைத்தலைவர்களிடையே ஒற்றுமை இன்மையே மராட்டியரின் தோல்விக்குக் காரணமாகியது. செஞ்சியில் மொகலாயப்படை முற்றுகையிட்ட போது, மராட்டியப் படைத்தலைவன் சாந்தாசி தன் புதிய படையுடன் செஞ்சியை நோக்கிச் சென்று கொண்டிருந்தான். அப்போது ஔரங்கசீபு சுல்பிகர் கானின் படைச்செலவுக்காகக் கடப்பையிலிருந்து பெரும்பொருள் அனுப்பச் செய்தார். ஆரணியில் இருதிறத்தாருக்கும் பெரும் போர் மூண்டது. இப்போரில் சுல்பிகர் தோற்கடிக்கப்பட்டான். பெரும் நிதிக்குவை சாந்தாசி வசமாயிற்று. பெரும்பொருள் இழந்த சுல்பிகர் கடப்பை வழியாக ஓடினான். மராத்தியப் படைகள் அவனைத் துரத்திச் சென்றன. இவ்வாறு ஆரணிப் போர் மொகலாயரின் தோல்வியில் முடிந்தது.

**ஆரணியகம்:** வேதங்களில் கூறப்பட்ட மந்திரங்களை ஓதிச் செய்யப்படும் வேள்வி முறைகளை விளக்குவன பிராமணங்கள். அப்பிராமணங்களின் இறுதியில் வரும் பகுதிகளுக்கு 'ஆரணியகங்கள்' எனப் பெயர். இவை காட்டு நூல்கள் என்றும் கூறப்படும். இவற்றில் மறைபொருளான கருத்துகள் அடங்கியுள்ளன. இவற்றில் வேள்வி முறைகளோ செயல்களின் விளக்கங்களோ இல்லை. யாகம் மறைபொருளாய் உணர்த்தும் உண்மையை விளக்குவதே ஆரணியகம். பிரமசாரி, கிரகத்தன், வானப்பிரத்தன், சந்நியாசி என்ற நான்கு வாழ்க்கை நிலை ஒவ்வொருவர் வாழ்விலும் உண்டு. இதில் மூன்றாம் வாழ்க்கை நிலைக்கு ஏற்பட்டவை இவ்ஆரணியகங்கள். வேதங்களின் இறுதியில் இருப்பதால், இவை வேதாந்தம் என்றும் சொல்லப்படும். ஐதரேய ஆரணியகம் என்பது ஒன்று. இவற்றைத் தகுதியற்றவர் கேட்டால் பொருட்கேடு நிகழும் என்று அஞ்சி, யாரும் இல்லாத காடுகளில் மட்டுமே ஓதுவதற்கென அமைந்துள்ளபடியால் இவை ஆரணியகம் எனப்பட்டன. இவற்றில் சனக மன்னனுக்கும் யாக்ஞவல்கிய முனிவருக்கும் 'தத்துவ விசாரம்' நடந்ததைப் போல் வாதங்கள் உண்டு.

**ஆரத்தி** என்பது சமூகச் சடங்குகளுள் ஒன்றாகும். இதனை ஆலாத்தி, ஆலத்தி என்றும் குறிப்பிடுவர். இதனால் கண்ணேறு கழியும் என்று நம்புகின்றனர். இதன் நோக்கம் தூய்மைப்படுத்துவதே ஆகும்.

திருமண விழா முடிந்ததும் மணமக்களுக்கு ஆரத்தி எடுத்துக் கண்ணேறு கழிப்பர். குழந்தைகட்குப் பிறந்தநாள், தொட்டிலிடும் நாள் போன்ற விழாக்களின் போதும், வீரர்களுக்கு வழி அனுப்பு நாள் வெற்றிநாள் போன்ற விழாக்களின் போதும், தலைவர்களுக்குப் பாராட்டுவிழா வரவேற்பு விழா போன்ற விழாக்களின் போதும், பெண்களுக்குப் பூப்பு விழாவின் போதும் ஆரத்தி எடுப்பது வழக்கமாக இருந்து வருகிறது.

மஞ்சளையும், குங்குமத்தையும் நீரில் கரைத்து ஒரு தட்டில் ஏந்தி முகத்திற்கு நேராக மூன்றுமுறை சுற்றித் தரையில் கொட்டுவர். சில இடங்களில் மஞ்சளையும், சுண்ணாம்பையும் கரைத்து வேப்பிலையையும் போட்டுத் தட்டில் ஏந்துவர். இதனை ஆலாத்தம் என்றும் குறிப்பிடுவதுண்டு. ஒரு தட்டில் எண்ணெய்த் திரிகளைக் கொளுத்தி விளக்கு ஆரத்தி எடுப்பதுவும் உண்டு. பெரும்பாலும் பெண்களே ஆரத்தி எடுப்பர். இவர்களுள் சுமங்கலிகளே இதனைச்செய்வர்.

'சுண்ணாம்பும், மஞ்சளும் சுத்தி எறி பாலகர்க்கு' என்றும், "ஆலாத்தி ஆலாத்தி ஐநூறு ஆலாத்தி முத்தாலே ஆலாத்தி முன்னூறு ஆலாத்தி, பாக்காலே ஆலாத்தி பலநூறு ஆலாத்தி, வெத்திலையால் ஆலாத்தி வெகுநூறு ஆலாத்தி" என்றும் அமைந்துள்ள பாடற் பகுதிகள் ஆரத்தி முறைகளை விளக்குகின்றன.

சு. ச

**ஆரம்ப வாதம்:** உலகத்தில் உள்ள பொருள்கள் தோன்றிய முறையைப் பார்க்கும்பொழுது, காரியத்திற்குரிய காரணம் என்ன? அவ்விரண்டிற்கும் உள்ள தொடர்பு என்ன? என்பதை விளக்கத் தோன்றிய கொள்கைதான் காரண காரியத்தொடர்ச்சிக் கொள்கை (Theory of Causation) என்பதாம். காரண காரியத் தொடர்ச்சிக் கொள்கையில் ஏற்பட்ட மாறுபட்ட கருத்தினால் உருவான கொள்கைகள் பல உண்டு. அவை 'ஆரம்ப வாதம்' (Pirmary Cause) அல்லது 'புதியதன் படைப்பு' என்றும், 'பரிணாம வாதம்' அல்லது 'உள்ளது சிறத்தல்' என்றும் வகைப்படுத்தப் பட்டுள்ளன. எல்லா அறிவற்ற பொருள்களின் காரணத்தில் இருந்துதான் எல்லாப் பொருள்களும் உருவாக்கப்படுகின்றன என்ற கருத்து அனைவராலும் ஒத்துக்கொள்ளப்படுவது. காரணத்தில் இருந்து உருவாக்கப்பட்ட காரியம் முற்றிலும் மாறுபட்ட புதிய படைப்பு என்றும், காரியம் காரணத்தில் உள்ளடங்கி இல்லை என்றும், புதியதாகவே கொள்ளத் தக்கவை என்றும் சொல்லப்படுகின்றன. இவ்வாறு முன்னரே உள்ளவற்றுடன் புதிய பொருள்கள் சேரக்கூடும் என்றும் கருத்தை உணர்த்தும் காரண-காரியம் பற்றிய இக்கொள்கை ஆரம்பவாதம் என்றும் பெயர் பெறுகிறது. எடுத்துக்காட்டாக, ஆடை நெய்யும் பொழுது, நூல் இழைகள் ஒன்று சேர்க்கப்பட்டு, நூல் இழைகளுக்கு மேல் ஆடை புதியதாக உண்டாகிறது. புதியதாக உருவாக்கப்

பட்ட பொருள் முற்றிலும் மாறுபட்ட புதிய படைப்பாகவே இருக்கிறது. இதற்கு மாறுபட்ட கருத்தை வலியுறுத்தும் பரிணாமக்கொள்கை, காரியம் காரணத்திலும் அடங்கியுள்ளது என்றும், காரணமும்உள் பொருள்களே என்றும், காரியமும் முதற்காரணத்தின் மாற்றமே என்றும் வலியுறுத்துவதால் இதைச் சத்காரியவாதம் என்று கொள்ளப்படுகிறது. புதியதன் படைப்பு என்னும் கொள்கை இதற்கு முன்னால் இராத காரியம் பின்னர் உருவாக்கப் படுகிறது என்று கூறுவதால், இது அசத் காரிய வாதம் அதாவது 'இல்லாத காரியம் பற்றிய கொள்கை' (Doctrine of Effect Non-Existent) எனவும் பெயர் பெறுகிறது. இவ்வாறு சொல்லப்படும் போது காரியம் காரணமின்றியும் அமையும் என்று பொருள் கொள்ளல் நன்றன்று.

சாங்கியத்தின் காரண காரியக் கொள்கைக்கு எதிராக, வைசேடிகம் ஒத்துக் கொள்கிற புதியதன் படைப்புக் கொள்கையின் சார்பாகச் சில கருத்துகள் சொல்லப்படுகின்றன. காரியம் ஒரு புதிய படைப்பு. அது எந்தப் பொருளில் இருந்து உருவாக்கப்பட்டதோ அதனுடன் சேர்ந்த நிலை என்று கொள்ள முடியாது. காரியம் மூலகாரணம் என்று சொல்லக் கூடிய முதற்காரணத்தில் இருக்க முடியாது. செயற்படுத்துகிற ஒருவன் இல்லாமலேயே காரியம் உருவாகிவிடுகிறது. எந்த ஒரு காரியமும் தோன்றுவதற்கு முன்னால் அறிய இயலாது.ஆரம்ப வாதத்தில் அறியக் கூடிய சிறந்ததொரு பண்பாக அமைவது என்னவென்றால், தோன்றிய எந்தப் புதிய படைப்பும் நிலையற்றது. அசத்காரியத்தின்படி இல்லாத பொருள் உருவாகிறது என்பதோடு அல்லாமல், தோன்றியுள்ள விளைவு அல்லது காரியம் விரைவிலோ அல்லது காலங்கடந்தோ அழிந்தும்விடக் கூடியது, அவ்வாறு அழிவுற்ற விளைவை மீண்டும் தோற்றுவிக்க முடியாது. மேலும் காரணத்தில் இருந்து ஒரு விளைவு ஏற்பட்ட பிறகும் காரணத்தில் எந்த வகை மாற்றமும் இருப்பதைக் காணமுடியாது என்று வைசேடிகம் வலியுறுத்துகிறது.

காரியம் காரணத்தினுள் உள்ளது என்ற சாங்கியரின் கருத்துக்கு மாறாக காரியம் காரணத்தில் எந்தவிதமான நிலையிலும் இல்லை என்று வைசேடிகம் வலியுறுத்துகிறது. ஒவ்வொரு விளைவும் மாறுபட்ட புதிய படைப்பாகவும் ஒவ்வொரு காரியமும் தனித்தன்மை கொள்கிறது என்றும், இதில் இருந்து தெரியவருகிறது. மேற்சொல்லப்பட்ட புதிய படைப்பின் கொள்கை, கருத்துகள் ஆகியவற்றை உள்ளார்ந்து நோக்கும்பொழுது, இதன் கருத்துகள் அனைத்தும் முற்றிலும் மாறுபட்ட கருத்தை எடுத்தியம்பும் உள்ளது சிறத்தல் (பரிணாமக் கொள்கை) என்னும் கொள்கைக்கு எதிரானது என்பது விளங்கும். சு.வ.

**ஆரராட்டு** துருக்கிக்கும் ஈரானுக்கும் இடையே உள்ள எரிமலை. இது 5185 மீ. உயரமுள்ளது. ஈரான் உருசியா, துருக்கி ஆகிய மூன்று நாடுகளும் சந்திக்கும் இடத்தில் ஆரராட்டு (Ararat) அமைந்துள்ளது. இங்குத்தான் ஊழிக்கால வெள்ளப் பெருக்கத்துக்குப் பின், நோவா (Noah) என்னும் புராணத் தலைவரின் தோணி தங்கியதாக விவிலிய நூல் கூறுகிறது. இவ்வெரிமலை கி.பி. 1840-ஆம் ஆண்டில் நெருப்பை உமிழ்ந்தபோது ஆட்சேதமும் பொருட்சேதமும் பெருத்த அளவில் ஏற்பட்டன.

**ஆரல் கடல்** என்பது மிகப் பெரியதோர் உப்பு ஏரி ஆகும். இது சோவியத்துத் துருக்கிசுத்தான் பகுதியில் காசுபியன் கடலுக்குக் கிழக்கே 240 கி.மீ. தொலைவிலமைந்துள்ளது. இந்த ஏரி உலக நாடுகளின் உள்ளே அமைந்து விளங்கும் நீர் நிலைகளுள் மிகப்பெரியது. 66, 459 ச. கி. மீ. பரப்புடையது. இது 17 முதல் 68 மீ. வரை ஆழமுடையது. ஆரல் கடல் (Aral Sea) பல தீவுகளைக் கொண்டது. ஆமு தாரியா(Amu Darya), சிர் தாரியா (Syr Darya) ஆகிய ஆறுகள் இந்த ஏரியில் கலக்கின்றன.

**ஆரல்டு** என்பது ஆங்கில அரசர் இருவர் பெயராகும்.

முதலாம் ஆரல்டு (Harold-I, கி.பி. 1035-1040), கான்யூட்டு (canute) என்பாருக்கும் நார்த்தம்டனைச் சார்ந்த எல்கிவா (Aelfgifa) என்பாளுக்கும் மகனாகப் பிறந்தார். மன்னர் கான்யூட்டு காலமான பின் கி.பி. 1035-இல் ஆரல்டு அரசராக்கப் பெற்றார். விரைந்து ஓடும் பழக்கத்தினராதலால், இவரை முயற்கால் ஆரல்டு (Harold the Harefoot) என்பர். இவரைவிட இவர்தம் ஒன்றுவிட்ட உடன்பிறப்பாளரான ஆர்டி கான்யூட்டு (Harde Canute) என்பாருக்கு அரசுரிமை பெறும் வாய்ப்பு மிகுதியாக இருந்தும், இவரே அரசராக்கப்பட்டார். ஆரல்டின் தாயாரான எல்கிவாவின் செல்வாக்கு மிகுதியாக இருந்தது. இவர் ஆட்சிக் காலத்தில் கொடுமைகள் பல நிகழ்ந்தன. இவர் கி.பி. 1040-இல் இறந்தார்.

இரண்டாம் ஆரல்டு (Harold-II, கி.பி. 1022-1066) என்னும் ஆங்கில அரசர் எட்வர்டு கன்பெசர் (Edward the Confessor) என்பவரையடுத்துப் பட்டம் பெற்றவர். இங்கிலாந்தை ஆண்ட ஆங்கில சாக்சானிய அரசருள் இறுதியில் ஆண்டவர் இவரேயாவார். இவர் தந்தை காட்வினுக்குப் பின்னர்க் கி.பி. 1053-ஆம் ஆண்டில் ஆரல்டு வெசக்சு பிரபுவாகப் பதவியேற்றார். நார்மானியச் செல்வாக்கைத் தடுத்து நிறுத்த, இவர் தந்தையார் கையாண்ட எதிர்ப்புக் கொள்கையை ஆரல்டும் தொடர்ந்து மேற்கொண்டார். எட்வர்டு அரசரின் ஆதரவால் நார்மானியச் செல்வாக்கு மிகுந்திருந்தது.

ஆரல்டு கி.பி. 1064-இல் நார்மண்டி கோமகன் வில்லியத்தினிடம் அகப்பட்டார். வில்லியம், ஆரல்டினைத் தமக்கு அரசுரிமைத் தகுதியுண்டென்று கூறி, ஆதரவு கொடுக்க வாக்களிக்குமாறு வற்புறுத்தினார். ஆனால், எட்வர்ட்டு கன்பெசர் காலமானபோது ஆங்கிலப் பிரபுக்கள் ஆரல்டையே அரசராகத் தேர்ந்தெடுத்தனர். இவரை இரண்டாம் ஆரல்டு என்பர். ஆங்கில அரசுரிமையை ஆரல்டு ஏற்றுக் கொண்ட போது, தமக்கிருந்த அரசுரிமையை நிலைநாட்டும் நோக்குடன் வில்லியம் இங்கிலாந்தின் மீது படையெடுத்தார். ஆரல்டு கி.பி. 1066-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம், ஏசுடிங்சு (Hastings) போரில் தோற்கடிக்கப்பட்டு மாண்டார். பின்னர் இங்கிலாந்து நார்மானியர் ஆட்சியின் கீழ் வந்தது.

**ஆரவாக்கு இந்தியர்** மேற்கு இந்தியத் தீவுகளில் வசித்த பழங்குடிகள். கிறித்தோபர் கொலம்பசு கி.பி. 1492-ஆம் ஆண்டில் அமெரிக்க இந்தியர்கள் என்று கருதப்படும் இவர்களைத்தாம் முதன் முதலில் சந்தித்தார். ஆரவாக்கு இந்தியர்களிடம் தான் இசுபானியர் முதன் முதலாகப் பட்டுகளையும் (Canoe) புகையிலையையும் கண்டனர். ஆரவாக்கு இந்தியர்கள் கரீபியக் கடலில் உள்ள தீவுகளிலும், அமேசான் ஆற்றுப் பள்ளத்தாக்குகளிலும் வாழ்ந்தனர். இவர்களுள் சிலர் தென் பிரேசில் நாடு வரைச் சென்று குடியேறினர். அங்கு அவர்கள் கரீப்பு இந்தியர்களுடன் தொடர்ந்து போராடினார்கள்.

ஆரவாக்கு இனத்தவர்கள் தாம் வாழும் வகையில் பல்வாறாக வேறுபட்டிருந்தனர். ஆனால், அவர்கள் அனைவரும் வேளாண்மை செய்த குடியானவர்களே. காச்சைக் கிழங்கு, பருத்தி, மணியாக்கு என்னும் வேர் போன்றவற்றைப் பயிரிட்டார்கள்.

கரீபியத் தீவுகளில் வாழும் ஆரவாக்கு மக்கள் பெரிய சிற்றூர்களில் வாழ்ந்தார்கள். பேய் பிசாசுகளில் நம்பிக்கை கொண்டவர்கள். நோய்வாய்ப்பட்டும், இசுபானியப் படையெடுப்பால் கட்டாய உழைப்புக்குட்படுத்தப்பட்டும் இவர்களுள் பலர் மாண்டனர். ஆனால், இவர்களுள் ஒரு சில இனத்தவர் இன்றும் பிரேசில் நாட்டுச் சிங்கு ஆற்றங் கரையையொட்டிய பகுதிகளில் வாழ்ந்து வருகின்றனர்.

**ஆராசு** வடகிழக்குப் பிரான்சிலுள்ள ஒரு நகரம். பல்வேறு படையெடுப்புகளால் இந்நகரம் அடிக்கடி அழிவுக்குள்ளாகியது. ஆராசு (Arras) மீண்டும் கட்டப்பெற்று, வாணிகத் தலமாகவும் தொழிற்சாலை நகரமாகவும் எழுந்தது. அட்ரிபேட்சு (Atrebates) என்னும் பெல்சியக் குலத்தின் தலைமை நகரமாக இருந்த போது, இத்னை நிமிட்டோ சென்னா (Nemeto Cenna) என்று உரோமானியர் அழைத்தனர். பின்னர் இது ஆராசு எனப்பட்டது. சூலியசு சீசர் (Julius Caesar) கி.மு. 57-ஆம் ஆண்டில் இந்நகரத்தையும், இக்குலத்து மக்களையும் வென்றார். வாண்டல் இனத்தவர்களும், பிராங்கிய இனத்தவர்களும் கி.பி. 5-ஆம் நூற்றாண்டில் ஆராசு நகரைச் சூறையாடினர். ஐரோப்பாவில் நிறுவப்பெற்ற நிலமானியத் திட்டத்தால், இந்நகரம் பிளாண்டர்சுப் பகுதியின் நிலப்பிரபுவிற்குப் போய்ச் சேர்ந்தது. இடைக் காலத்தில் வடவர்களாலும், பிரான்சு மன்னர் பலராலும் இந்நகரம் சூறையாடப்பெற்றது. இது கி.பி. 1194-ஆம் ஆண்டில் பிரான்சிற்கும், கி.பி. 1384-இல் ஆர்டாய், பிளாண்டர்சு (Flanders) ஆகிய பகுதிகளுடன் ஆராசு பர்கண்டிக் கோமகனுக்கும், கி.பி. 1479-இல் மீண்டும் பிரான்சிற்கும், கி.பி. 1493-இல் ஆப்சுபர்க்கு மன்னர்களுக்கும் சொந்தமாயிற்று. பிரான்சு நாட்டினர் கி.பி 1640-ஆம் ஆண்டில் இதைக் கைப்பற்றிக் கொண்டனர். இதனைக் கி.பி. 1659-இல் பிரன்னீசு உடன்படிக்கை (Treaty of the Pyreneas) உறுதிப் படுத்தியது.

இந்நகர், கி.பி. 11-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கம்பள நெசவுக்குப் பெயர் பெற்றதாய்த் திகழ்ந்தது. மேலும், கி.பி. 14, 15-ஆம் நூற்றாண்டுகளில் ஆராசு நகரத் திரைச் சீலைகள் ஐரோப்பா முழுதும் சிறப்புப் பெற்றிருந்தன.




ஆராசு

அருகில் அமைந்துள்ள உலோகத் தொழிற்சாலைகளும், துவாய், இலென்சு (Lens) என்னும் ஊர்களுக்கருகில் உள்ள நிலக்கரி வயல்களும் இன்றைய ஆராசு நகரின் தொழிற்சாலை வளர்ச்சிக்குப் பெரிதும் உதவுகின்றன. பண்ணைப் பொருள்கள் சர்க்கரை உற்பத்திக்குதவும், பொறிகள், மின்சாரக் கருவிகள் முதலியவற்றை உற்பத்தி செய்யும் தொழிற்சாலை

கள் பல உள்ளன. ஆர்டாய் சமவெளிப் பகுதியின் சந்தைக்கடையாகவும் இந்நகரம் அமைந்துள்ளது.

வடகிழக்குப் பிரான்சின் போக்குவரத்து வழிகள் இந்நகர் வழியாகச் செல்லுகின்றன. இசுகார்ப்பு ஆற்றின் வலக் கரையில் அமைந்துள்ள இந்நகரம் வடபிரான்சைப் பாரிசு மாநகரத்துடனும் பெல்சியத்துடனும் இணைக்கிறது. பாரீசு - தன்கிர்க்கு, பாரீசு-கெண்ட்டு, பாரீசு-பிரச்சல்சு இருப்புப் பாதைகள் அனைத்தும் இந்நகர் வழியாகச் செல்லுகின்றன.

முதல் உலகப் போரின்போது ஆராசு நகரத்தைச் செருமானியர் கைப்பற்றினர். இந்நகரத்தையொட்டியுள்ள பகுதிகளில் பல போர்கள் நிகழ்ந்தன.

இரண்டாம் உலகப் போரின்போது ஆங்கில விரைவுப் படைகள், 1940-ஆம் ஆண்டில் ஆராசுநகரத்தைச் செருமானியத் தாக்குதலிலிருந்து காத்தன. ஆராசை ஆங்கிலப் படைகள் செருமானியரின் பிடியிலிருந்து 1944-இல் விடுதலையடையச் செய்தன.

ஆராசு, பாசு-டி-கலே என்னும் மாவட்டத்தின் தலைநகரமாகும். மக்கள்தொகை 48,494 (1968).

**ஆராய்ச்சி முறைகள்:** ஆராய்ச்சி என்பது அறிவியல் முறையில் உண்மை காணவும் சிக்கல்கட்குச் சீரிய தீர்வு காணவும் மேற்கொள்ளும் முயற்சியாகும்: ஆராய்ச்சியின் விளைவு உண்மை விளக்கமாகலாம்; தொடர்புகளைத் தெளிவு படுத்தலாம்; மாற்றங்கட்குச் சிறந்த வழிமுறைகள் காட்டலாம்; புதிய அறிவு படைக்கலாம். இவ்விளைவுகளை அடைய ஆராய்ச்சியில் பல முறைகளைப் பின்பற்ற வேண்டும்.

சமூகவியல் துறைகளில் நிகழும் ஆராய்ச்சி, அறிவியல் துறைகளில் நிகழும் ஆராய்ச்சியினின்றும் தன்மையிலும் முறைகளிலும் மாறுபட்டிருக்கும். சமூகவியல் உண்மைகளைக் காணவும் விளக்கவும் கையாண்ட முறைகள், தொடக்கக் காலங்களில், அறிவியல் துறைகளில் மேற்கொண்டிருந்த முறைகளை ஒட்டியே அமைந்திருந்தன; உண்மைகளின் இயல்பினைக் கண்டுரைப்பனவாய் (Normative) இருந்தன; தன்மை, நிலை, எதிர்பார்ப்பு, இயல்பு போன்ற கருத்துகளால் உண்மைக்கு விளக்கம் காண முயன்றன. சமூக உண்மைகளுக்கும் தோற்றத்திற்கும், சமூகத்தை உருவாக்குவோரின் நிலையில் இருந்து பொருள் விளக்கம் காணும் (Interpretative) புது முறைகளை, இப்போது சமூகவியல் ஆராய்ச்சியில் பெரிதும் பயன்படுத்துகின்றனர். இப்புது முறைகள் குறியெதிர்ப்பு, நோக்கம், நம்பிக்கை, விருப்பம் போன்ற கருத்துகள் வாயிலாக மக்களின் செயல்களை விளக்கி, அவற்றிற்குப் பொருள் காண முயல்கின்றன. இயல்புரைக்கும் பழைய முறைகள் (Traditional Normative Methods) வெளிப்புறத்தைக் காண்பன. இம்முறைகளைப் பின்பற்றுவோர், சமூக உண்மைகளைத் தாம் முன்னரே கருதிக்கொண்ட ஒரு படிமத்தை ஒட்டியே காண்கின்றனர். ஆய்ந்து காணும் பொருளோடு சாராமல் நடுநின்று, வெளிப்புற அளவைகளைப் பயன்படுத்துகின்றனர். இம்முறையில் திரட்டும் விவரங்கள் மீண்டும் ஆராயத்தக்கன.

புதுமுறைகளோ சமூக உண்மையின் உட்புறம் காண்பன; பொருள் விளக்கம் தருவன. உள்ளார்ந்த குறியீடுகளாலோ மொழியாலோ கூறத்தக்க அளவைகளைப் புதுமுறைகள் பயன்படுத்துகின்றன.

சமூக உண்மைகளைக் கண்டு விளக்குவதே இரு வகை அணுகு முறைகளின் நோக்கமாயினும், இதனை நிறைவேற்றுவதற்கு அவை திரட்டும் செய்திகளின் தன்மை, செய்திகளைச் சேகரிக்கும் முறை ஆகியவற்றில் இம்முறைகள் வேறுபடுகின்றன. செய்திகளைத் தருவோர், அவற்றைப் பெறுவோர் ஆகிய இருவரும் பொதுவாய்த் தேடும் பொருள், திரட்டப்படும் செய்தியில் உண்டு என்னும் கொள்கையடிப்படையில் பழைய முறைகள் செயற்படுகின்றன. இம்முறையில் ஆராய்ச்சியாளர் தாம் முன்னரே கருதிக்கொண்ட கருதுகோள்களின் அடிப்படையில் சமூக உண்மைகளை விளக்குகின்றனர். புதுமுறை அணுகலில், செய்திகளைத் தருவோரும் பெறுவோரும் ஒன்றாய்ப் பொருள் காண்பதில்லை என்னும் கருத்தின் அடிப்படையிலேயே ஆராய்ச்சி நடைபெறுகிறது. ஆராய்ச்சியாளர், செய்தி தருவோருடன் கலந்து பொருளைப் புதிதாய் மாற்றி அமைத்துக் கொள்கின்றனர்.

பழைய முறைகளும் புது முறைகளும் ஒன்றையொன்று நிறைவு செய்வனவாயுள்ளன. இருவகை முறைகளாலும் காணும்போது, சமூக உண்மையின் முழுமை வெளிப்படுகிறது. தனியாய் நிற்கும்போது அவை சமூக உண்மையின் சில இயல்புகளையே காட்டும். அளந்தறி முறை (Survey Method), எடுத்துக்காட்டாய்வு முறை (Case Study), வளர்ச்சி நிலை ஆய்வு முறை (Developmental Method), பரிசோதனை முறை (Exprimental Method), நிகழ்வு-விளைவு ஆய்வு முறை, (Cause-Effect Method), தொடர்பாய்வு முறை (Correlational Method), செயல் ஆய்வு முறை (Action Research) என்பன பழைய முறைகளுள் சிறந்தவையாகும். மூவழி ஆய்வு நிகழ்வு (Triangulation) விளக்கம், பங்கேற்றல், (Role-playing) தனியொருவர் கருதுமுறை, (Personal Construct) உள்ளடக்கப் பகுப்பு முறை

(Content Analysis) என்பன, புது முறைகளில் சிறந்தன.

அளந்தறி முறையில் வேண்டப்படும் செய்திகளைத் திரட்டுவதற்குப் பல அணுகுமுறைகள் பயன்படுத்தப்படுகின்றன. இவற்றிற்கு ஒருசேர அளந்தறி முறை எனப் பெயரிட்டுள்ளனர். உற்று நோக்கல் (Observation), வினா நிரல் (Questionnaire), நேர்காணல் (Interview), பதிவுக் குறிப்புகள் (Records) என்பன செய்தி (விவரம்) சேகரித்தற்கான சில வழிமுறைகள். அளந்தறி முறைகள், பெரும்பாலும் இருக்கும் உண்மைகளைக் கண்டு விவரிப்பன; சமூக உளவியல் மாறிகள் பற்றிய உண்மைநிலை, அவை பரவியுள்ள வகை, ஒன்றோடொன்று கொண்டுள்ள தொடர்பு ஆகியவற்றையும் விளக்குவன. இம்முறைகள் மூலம் கண்டறியத்தக்கவற்றை மோசர் (Moser) என்பார், 1. மக்கள் தொகைத் (Demographic) தொடர்பானவை, 2. சமூகச் சூழல், 3. மக்களின் செயல்கள், 4. அவர்களின் மனப்பான்மைகளும் எண்ணங்களும் என நால்வகைப்படுத்துவார். அளந்தறிமுறை, அளந்தறியத் தக்க சிக்கலைத் தெளிவாகக் கூறுதலில் தொடங்கும். பின், அளந்தறிதலின் நோக்கம், எந்த மக்கட் குழுவினரைப் பற்றியது? எவ்வகை விவரங்கள் தேவைப்படும்? எம்முறையில் ஆராய்ச்சி செய்தல் வேண்டும்? செய்யத் தேவையானவை யாவை? எவை உள்ளன? உள்ளனவற்றை எவ்வாறு பயன்படுத்துவது? இல்லாதவற்றை எவ்வாறு பெறுவது? பெற்ற விவரங்களைக் கொண்டு சிக்கல்களை எவ்வாறு தீர்ப்பது? என்பன போன்ற வினாக்களுக்கு விடை தேடும்.

உற்று நோக்கல் ஆய்வு முறையானது, பங்குகொள் உற்றுநோக்கல், (Participant observation) பங்குகொளா உற்றுநோக்கல் (Non-participant observation) என இருவகைப்படும். பங்குகொள் உற்றுநோக்கல் முறையில் உற்று நோக்குவோர், உற்று நோக்கப்படும் செயலில் பங்கேற்பார்; அச்செயலைப் பிறருடன் தானும் கூடிச் செய்து முடிப்பார். செயல் பற்றிப் பிறர் கருத்தைக் கேட்டறிந்தும், செய்முறையைக் கூர்ந்து நோக்கியும் தாம் சேகரிக்கும் விவரங்களின் பொருளைத் தெளிவார். பங்குகொளா உற்றுநோக்கல், நடைபெறும் செயலிலிருந்து பிரிந்து தனித்திருந்து, செயலை உற்றுநோக்கி, விவரம் திரட்டும் வழிமுறையாகும். தேவைப்படும் விவரங்களைத் திரட்டுவதற்காக உற்றுநோக்குவோர் பெரும்பாலும் உற்றுநோக்கல் அட்டவணை (Observation Schedule) ஒன்றைப் பயன்படுத்துவர். இவ்வட்டவணை உற்று நோக்க வேண்டுவன பற்றிய குறிப்புகளைக் கொண்டிருக்கும்.

வினா நிரல், அளந்தறி முறையில் பெருமளவில் பயன்படும் ஒரு செய்தி திரட்டும் வழிமுறையாகும். தேவைப்படும் விவரங்களைச் செய்தி தருவோரிடமிருந்து பெறுவதற்காக, வினாக்கள் வரிசையாகக் கேட்கப்பட்டிருக்கும். இவ்வினாக்களுக்குச் செய்தி தருவோர் விடைதருவர். விடைதருவோர், ஒவ்வொரு வினாவுக்கும் கொடுக்கப்பட்டுள்ள விடைகளுள் (ஆம், இல்லை; சரி, தவறு) பொருந்தக் கூடிய ஒன்றைத் தேர்ந்தெடுக்கலாம். அன்றி, விடையைத் தாமே கூறலாம். தேர்ந்தெடுக்கப்படாதபோது, செய்தி தருவோர் தாம் விரும்பும் விடை தர உரிமை பெறுகிறார்.

மதிப்பளவுகோல் (Rating Scale), ஒப்புநோக்குப் பட்டியல் (Checklist) என்பன வினா நிரல் வகையைச் சார்ந்த வழிமுறைகள். மதிப்பளவுகோலில் கொடுக்கப்பட்ட கருத்துப் பற்றிச் செய்திதருவோர் தம் எண்ணத்தைப் பல படிநிலைகளில் கூறுதற்கு ஏற்ற வண்ணம் வகைசெய்யப்பட்டிருக்கும். எடுத்துக்காட்டாக, 'வள்ளுவர் கூறும் நல்லறம் இன்றைக்கும் ஏற்புடையது' என்னும் கருத்துப் பற்றிய தம் மன நிலையை ஒருவர், 'முழுதுமாய், பெரும்பான்மையாக, ஓரளவே' என்ற தொடர் அமைப்பில் ஏதேனுமொரு நிலையை ஒட்டிக் கூறலாம். பொருந்துவனவற்றைக் கொடுக்கப்பட்டவற்றிலிருந்து தேர்ந்தெடுத்துக் குறித்துக் காட்டுதல் வேண்டும்.

நேர்காணல் முறையில், ஆராய்ச்சியாளரோ அவர் சார்பில் பிறரோ, செய்தி தருவோரை நேருக்கு நேராய்க் கண்டு, அவரிடமிருந்து விவரம் பெறுவார். வினாநிரல், ஒப்புநோக்குப் பட்டியல், மதிப்பளவுகோல் முறைகளில் அஞ்சல்வழியே செய்திகள் திரட்டப்படலாம். செய்தி தருவோரிடம் இவற்றை நேரில் கொடுத்து அவர் தரும் விடைகளை எழுதித்தரவும் வேண்டலாம். நேர்காணல் முறையில், வேண்டப்படும் விவரங்களைக் கேள்வி வாயிலாகவும் உரையாடல் வாயிலாகவும் செய்திதருவோரிடம் கேட்டறிவர். கேட்டறிதற்கான விவரங்கள் பற்றி முன்னரே முடிவெடுத்து, கேட்கவேண்டிய வினாக்கள், கேட்கும் முறை, வரிசை ஆகியவற்றைத் தீர்மானித்து அட்டவணைப்படுத்தி, இவ்வட்டவணைப் படியே நேர்காண்பது ஒருமுறை. இம்முறை, வரையறுக்கப்பட்ட (Structured Interview) நேர்காணல் முறை எனப்படும். இவ்வாறன்றி, நேர்காண்போர், செய்தி தருவோர் தரும் பதில்களையொட்டி, வேண்டும் விவரங்கள் பற்றிய வினாக்களை நேர்காணும் போதே கேட்டு விவரங்கள் பெறுவது நேர்காணலில் மற்றொருமுறை. இது வரையறுக்கப்படா (Unstructured interview) நேர் காணல் முறை எனப்படும்.

பதிவுக்குறிப்புகள், அளந்தறி முறையில் பிறிதொரு செய்தி சேகரிக்கும் வழி. அலுவலக ஆவணங்கள் (Official Records), தனியார் பதிவுக் குறிப்பு

கள் (Personal Records) எனப் பதிவுக் குறிப்புகள் இரு வகைப்படும். அளந்தறி முறையில், பதிவுக் குறிப்புகள் பிற வழிகளில் திரட்டிய செய்திகளுக்குத் துணை செய்யும்.

**எடுத்துக்காட்டாய்வு** முறை (Case Study) என்பது ஒரு *தனிமனிதன்,* குழு, நிறுவனம் அல்லது நிகழ்ச்சி பற்றிய நுண்ணிய ஆய்வுமுறையாகும். இம்முறையில், ஆய்வுக்கு உட்படுவோர் பற்றிய அல்லது நிகழ்ச்சி பற்றிய அனைத்துச் செய்திகளும் திரட்டப்படவேண்டும். பெரும்பாலும், உற்றுநோக்கல் வழிச் செய்தி சேகரிக்கப்படும். சில சமயங்களில் வினாநிரல், தேர்வுகள் போன்ற அளந்தறி முறைகளும் பின்பற்றப்படலாம். எடுத்துக்காட்டாய்வு முறையில் காணப்படும் முடிவுகள் பொதுமையாக்கக் கூடியனவல்ல. ஒருவரை ஒட்டி அல்லது ஒரு நிகழ்ச்சியை ஒட்டி அமைவனவற்றை அனைவருக்கும் அல்லது அனைத்து நிகழ்ச்சிகட்கும் பொருந்துவன எனக் கொள்ளல் முடியாது. எனினும், பல தனி எடுத்துக்காட்டாய்வுகள் வாயிலாகக் கண்ட முடிவுகளில் பொதுத் தன்மை காணக் கூடுமானால், பொதுமையாக்கல் பொருளுடையதாகலாம். எடுத்துக்காட்டாய்வு முறையில் அறிவியல் அடிப்படைகள் வலுவற்றிருக்கும். ஆயின், தனித்திறன் பெற்றோர், தனித்த நிகழ்ச்சிகள் பற்றிய அறிவும் விளக்கமும் பெற இவ்வாய்வுமுறை உதவும். ஆராயப்படுவனவற்றை, அவை அமைந்துள்ள இயல்பான சூழலில் காண இம்முறை உதவும். இயல்பான சூழலில் வேண்டும் மாற்றங்களை உண்டாக்கி, உண்டாக்கிய மாற்றங்களின் விளைவுகளை ஆராயும் பரிசோதனை முறையை நிறைவு செய்யத் தனி ஆய்வு முறை உதவும்.

வளர்ச்சி நிலை ஆய்வு முறை, தனிமனிதரின் அல்லது ஒரு குழுவின் அல்லது ஒரு நிறுவனத்தின் வளர்ச்சி அல்லது மாற்றத்தின் போக்குப் பற்றி ஆய்வதற்கான முறையாகும். இவ்வளவு நீண்டகால அளவுடையதாக (Longitudinal) அமையலாம். சில வாரங்கள், சில மாதங்கள், சில ஆண்டுகள், பல ஆண்டுகள் என இக்கால அளவு, ஆராயப்படும் பொருளின் தன்மையை ஒட்டி அமையும். குறிப்பிட்ட ஒரு காலத்தில் தொடங்கி, ஒரு பொருள், (குழு, மனிதர்) வளர்ந்து வரும் பாங்கினை, வேண்டும் காலஅளவு வரை (வாரங்கள், மாதங்கள், ஆண்டுகள்) ஆராயும் இவ்வாய்வு முறையில், காலக் கழிவு மிகுதியாகும். இவ்வாறன்றிப் பல்வேறு கால அளவுகளில், ஆராயப்படும் பொருளின் வளர்ச்சி நிலைகள் எவ்வாறமைகின்றன என்பதை வெவ்வேறு கால அளவுகள் கொண்ட அப்பொருளின் மாதிரிகளைத் (Sample) தேர்ந்து, ஒரே சமயத்தில் அவற்றின் வளர்ச்சி நிலைகளை ஆராய்ந்து காணும் முறை, வளர்ச்சிக் கூற்றுப் பொதுமை ஆய்வு முறை (Cross Sectional Method) எனப் பெயர் பெறும். நீண்ட கால ஆய்வுகளில் செய்தி தருவோரைப் பின்பற்றிப் பல்வேறு கால அளவுகளில் அவர் வளர்ச்சி நிலைகள் எவ்வாறமைகின்றன என ஆராயும் முறை, பின்பற்றிச் செல்லும் முறை (Follow Up Method) அல்லது ஒன்று தொட்டுத் தொடர்முறை (Cohort Method) எனப் பெயர் பெறும்.

உற்றுநோக்கல், எடுத்துக் காட்டாய்வு முறை, வளர்ச்சி நிலை ஆகிய ஆய்வு முறைகளில் அறிவியல் அடிப்படை குன்றியிருக்கும். பரிசோதனை முறையில் அறிவியல் அடிப்படை வலுப்பெற்றிருக்கும்.

சமூகச் சூழலில் காணக்கிடக்கும் பல்வேறு மாறிகளுள் ஒன்றில் ஏற்படும் மாறுபாடுகள் பிறிதொன்றில் எவ்வகை மாறுபாடுகளை உண்டாக்குகின்றன எனக் கண்டு கொள்ளப் பரிசோதனை முறை (Experimental Method) பயன்படுகிறது. ஆராய்ச்சி செய்வோர், தாமாக ஒரு மாறியில் மாறுபாடுகளை உண்டாக்கி, இம்மாறுபாடுகள் தாம் தேர்ந்து கொண்ட பிறிதொரு மாறியில் மாறுபாடுகளை ஏற்படுத்தும் பாங்கினை இம்முறையில் ஆய்ந்து முடிவு செய்வார். ஆராய்ச்சியாளர் உண்டாக்கும் மாறிகள், தன்னியலான (Independent) மாறிகள் எனப்படும். அவை ஆராய்ச்சியாளரால் அவர் தேவைக்கேற்ப மாற்றியமைக்கப்படுவன (Manipulated). ஆராய்ச்சியாளரால் மாற்றியமைக்கப்பட்ட மாறிகளுள் ஏற்படும் மாறுபாடுகளால் பாதிக்கப்பட்டுத் தம்முள் மாறுபாடுகளை ஏற்கும் மாறிகள் சார்புடை (Dependent) மாறிகள் எனப்படும். சார்புடை மாறிகளுள் ஏற்படும் மாறுபாடுகள், பிற மாறிகளுள் ஏற்படும் மாறுபாடுகளைச் சார்ந்து அமைவன.

ஒரு மாறியில் (Variable) விளையும் மாறுபாடுகளை (Changes) ஒன்றுக்கு மேற்பட்ட பிற மாறிகள் உண்டாக்கலாம். ஒரு சார்புடை மாறி, தன்னுள் ஏற்படும் மாறுபாடுகளுக்குப் பிறிதொரு மாறியில் ஏற்படும் மாறுபாடுகளை, எவ்வளவிற்கு, எவ்வகையில் சார்ந்துள்ளன எனக் கண்டறிய வேண்டுமானால், அக்குறிப்பிட்ட மாறுபாடுகள் தவிர, அச்சார்புடை மாறுபாடுகளை உண்டாக்கவல்ல ஏனைய மாறுபாடுகளைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்து ஆராய வேண்டும். அவ்வாறு ஆராயும்போது மட்டுமே, சார்புடை மாறியில் உண்டாகும் மாறுபாடுகள், குறிப்பிட்ட மாறியின் பாதிப்பால் விளைவன என உறுதி கூற முடியும். எனவே, சார்புடைய மாறியில் மாறுபாடுகளை உண்டாக்கவல்ல, ஆனால் ஆராய்ச்சியாளர் தாம் மேற்கொண்ட ஆராய்ச்சிக்குத் தேர்ந்து கொள்ளாத மாறிகள், சோதனை முறையில் கட்டுப்பாட்டுக்குள் (Control), வைக்கப்படுகின்றன. மாறி

களை மூவழிகளில் கட்டுப்படுத்த முடியும். ஒன்று, ஆராய்ச்சிக் காலத்தில் மாறுபடாத ஒரே நிலையில் கட்டுப்படுத்தலாம். இரண்டு, ஆராய்ச்சிச் சூழலில் புகாதவாறு மாறிகளைப் புறத்தே நிறுத்தலாம். மூன்று, ஆராய்ச்சிக்கு உட்படுவோரைத் (உட்படு பொருளை) தேர்ந்தெடுப்பதில் ஒவ்வொருவருக்கும் சம வாய்ப்பமையும் முறையைப் பயன்படுத்தலாம்.

சோதனை முறையில் பல அமைப்புகள் (Designs) உள்ளன. எளிய சோதனையில் ஒரு தன்னியல் மாறியும் ஒரு சார்புடை மாறியும் இருக்கும். பிற மாறிகள் கட்டுப்படுத்தப்படலாம்; மாறாகவும் இருக்கலாம். சோதனை விளைவுகளை நன்கு கண்டறியச் 'சோதனைக்குழு' (Experimental Group), 'கட்டுள் பட்ட குழு' (Control Group) என இரு குழுவினைப் பயன்படுத்தலும் உண்டு. சோதனைக் குழு, தன்னிய லான மாறியின் மாறுபாடுகட்கு உட்படுத்தப்படும். கட்டுள்பட்ட குழுவுக்கு இவ்வுட்படுத்தல் (Treatment) இல்லை. பின் இரு குழுக்களிலும் சார்புடை மாறி யின் அசைவுகள் கண்டறியப்படும். இவ்வளவுகளில் உள்ளவேறுபாடு, தன்னியல் மாறியின் மாறுபாடு களால் விளைந்தது என முடிவு செய்யப்படும்.

இவ்வெளிய சோதனை, 'இரு குழு முன் சோதனை – உட்படுத்தல் – பின் சோதனை' (Two-Group Pretest – treatment – Posttest) எனப் பெயர் பெறும். இவ்வமைப்பைப் பின்வருவாறு குறித்துக் காட்டலாம்.

| குழு | முன்சோதனை | உட்படுத்தல் | பின்சோதனை |
|---|---|---|---|
| சோ | $சோ_1$ | உ | $சோ_2$ |
| க | $சோ_1$ | — | $சோ_2$ |

(சோ – சோதனைக்குழு, க-கட்டுள்பட்ட குழு, $சோ_1$-சோதனை, $சோ_2$-சோதனை, உ-உட்படுத்தல்) தன்னியலான மாறியின் வேறுபாடுகள், சார்புடை மாறியில் உண்டாக்கிய விளைவால் ($சோ_2$ – $சோ_1$) அளந்தறியப்படும். இவ்விளைவு, சோதனைக் குழு விற்குக் கட்டுள்பட்ட குழுவைக் காட்டிலும் மிகுந் திருப்பின், சார்புடைமாறி தன்னியலான மாறியின் மாறுபாடுகளால் பாதிக்கப்படுகிறது என முடிவு செய்யலாம்.

காரணம்-விளைவு (Cause-Effect) ஆய்வு முறை யில், இது காரணம், இது விளைவு என நிலை நிறுத்தப்பெறும். இம்முறையில் காணப்படும் விளைவுகட்குக் காரணமாய் அமைந்த காரணிகள், எவையெனக் கண்டறியப்படும். மாணவரிடையே காணப்படும் அமைதியின்மைக்குக் காரணங்கள் யாவை என ஆராய்தல் இவ்வகையில் அடங்கும். கடந்த காலத்திருந்த காரணிகளின் பின் விளைவால் இப்போதுள்ள நிலை ஏற்பட்டது என முடிவு காணு தல், பின் விளைவு ஆய்வு (Ex-post facto) முறை எனப் பெயர் பெறும்.

தொடர்பாய்வு முறை இரு மாறிகட்கிடையே உள்ள மாறுபாடுகளின் இணைந்த தன்மையை (Covariance) ஆராயும். இணைந்து மாறுபடும் தன்மையின் அளவைத் தொடர்புக் குழு (Correlation Coefficient) வாக அளந்து காட்டும். ஒன்றுக்கு மேற்பட்ட மாறிகளிடையே காணப்படும் தொடர்பை, மடங்கு (Multiple) அல்லது பகுதித் (Partial) தொடர்பு வாயிலாக விளக்கலாம். தொடர்பாய்வு, மாறிகட்கிடையேயுள்ள தொடர்பினையே விளக்கும்; காரண காரிய விளைவுகளைக் காட்டாது.

செயலாய்வு என்பது ஓர் உடனடிச் சூழலில் எதிர்ப்பட்ட சிக்கலுக்குத் தீர்வு கண்டு, அத்தீர் வினைச் செயற்படுத்தச் செய்யும் முயற்சியாகும். இவ்வாய்வு, குறிப்பிட்ட ஒரு சூழலுக்கு மட்டுமே பொருந்துவதாய், உடன் பயன்படத்தக்கதாய்ச் சிறிய அளவினதாய் அமையும்; செயலறிவு படைப் பதாய் அமையும். இவ்வாய்வின் முடிவுகளைப் பொதுமையாக்க முடியாது. அறிவியல் அடிப்படை யில் இவ்வாய்வு வலிவற்றது. எனினும், ஆராய்ச்சித் திறன் இல்லாதவர் கூடத் தம் செயற்பாடுகளில் எதிர்ப்படும் எளிய சிக்கலுக்கு நேரிய முறையில் தீர்வு கண்டு, உடன் செயலாக்கி, சிக்கலைத் தீர்த்துக் கொள்ள இம்முறை பயன்படும்.

சமூகவியலில் மூவழி ஆய்வு (Triangulation) என்பது, ஏதாவது ஒரு சிக்கலுக்குத் தீர்வுகாண இரண்டுக்கு மேற்பட்ட முறைகளைப் பயன்படுத்து வதாகும். ஒரு கருத்தினைப் பல வழிகளில் அளந்தறி வதும், ஒரு நிகழ்ச்சியினைப் பலவாறு உற்று நோக்கியறிவதும் அவற்றை முழுமையாகக் காண உதவும். மூவழி ஆய்வு, பயன்படுத்தும் முறைகளின் பன்மை (Plurality) கொண்டுமட்டும் அமைய வேண்டு மென்பதில்லை. காலப்பன்மையும் (Time) இடப்பன் மையும் (Space) கொண்டும் அமையலாம். சமுதாய மாற்றங்கள் உண்டாகும் பாங்கினை ஆய்ந்தறியக் காலம் கொண்ட மூவழி ஆய்வு பெரிதும் உதவும். காலப் போக்கின் மீட்சி, குறுக்குவெட்டு முறைகளில் பெற்ற விவரங்களைக் கூட்டிப்பகுத்தல் ஆகிய முறை யில் ஆய்வு நிகழ்த்துவர். ஒரு நாட்டில் காணப்படும் வெவ்வேறு இன உட்குழுக்களிடையே அமையும் பண்பாட்டு வேறுபாடுகள், வெவ்வேறிடங்களில் வளர்ந்து வந்துள்ள பண்பாடுகளுக்கிடையே குறிப் பிட்ட நடைமுறைகளில் காணப்படும் வேறுபாடுகள் முதலானவற்றை ஆராய்ந்தறிய இடப்பன்மை மூவழி ஆய்வு (Space Triangulation) முறை பயன்படும். ஆய்வுக்கான விவரங்களைத் தனிவிவரக் கூட்டுநிலை

(Aggregative), ஊடாட்ட நிலை (Interactive), தொகுப்பு நிலை (Collectivities) என மூன்று நிலைகளில் திரட்டுதல் கூடும். பெரும்பாலான ஆய்வுகளில் விவரங்கள் தனி விவரக் கூட்டு நிலையிலேயே திரட்டிப் பின் வேண்டியவாறு தொகுத்துப் பகுத்துப் பயன்படுத்தப்படுகின்றன. ஒன்றுக்கு மேற்பட்ட நிலைகளில் விவரங்களைத் திரட்டிப் பயன்படுத்தும் முறை 'நிலைப்பன்மை மூவழி ஆய்வு முறை' (Combined levels of triangulation) எனப்படும்.

ஆராய்ச்சி மேற்கொள்வோர் தம் ஆய்வினை ஒரு கோட்பாட்டின் அடிப்படையில் அமைப்பர். ஆயின் ஓர் உண்மை நிலையை விளக்குவதற்கான பல கோட்பாடுகள்-சில காலங்களில் தம்முள் முரண்படுவனவாகவும் இருத்தல் கூடும். அந்நிலையில் நிலவிவரும் பல கோட்பாடுகளையும் உள்ளடக்கிய ஆய்வுமுறை (Theoretical Triangulation), கோட்பாடுகளிடையே காணப்படும் முரண்பாடுகளைத் தீர்க்க உதவும்.

சமூக வாழ்வின் இணைந்த ஒரு பகுதி அல்லது பிரிவு, நிகழ்ச்சி (Episode) எனப்படும். நிகழ்ச்சிக்கு ஒரு தொடக்கமும், செயல்களின் தொடர்பமைப்பும் (Sequence) முடிவும் இருக்கும். நிகழ்ச்சி விளக்கம் (Account-of-Episode), செயல்களின் இறந்த கால நிகழ்கால, எதிர்காலச் சார்புகள் பற்றி விளக்கும். செயல்களைத் தெரிந்தெடுத்து, அவற்றின் நம்பகத் தன்மையைத் தீர்மானித்து, செய்திகள் பற்றிய விவரங்களைப் பகுத்தாய்ந்து, அவற்றை மதிப்பீடு செய்வதே நிகழ்ச்சி விளக்கமுறை ஆகும்.

பங்கேற்றல் முறை ஒன்றை நினைத்து அதன் வழியே செயற்படுவதாகும். மன, சமூகச் சிக்கல்களின் தீர்வுகட்கு, மன நாடகத்திலும் (Psycho-drama), நல்ல சமூக நாடகங்களிலும் (Socio-drama) பங்கேற்கும் முறையைப் பயன்படுத்துவர். பங்கேற்றல் முறையில் பெறப்படும் முடிவுகள், ஒத்த பிற சூழல்கட்கும் ஏற்றனவாயமையும்; இம்முறையில் கற்பனை முதலிடம் பெறும். சமூகவியல் ஆராய்ச்சியில் மனித வாழ்வின் ஒரு பகுதியாய் விளங்கும் கற்பனை, இடம் பெறல் இயல்பே. சிக்கல்களைத் தீர்க்கும் முறைகள் பற்றியும் இடையூறுகள், பொருத்தமின்மை, முரண்பாடுகள் ஆகியவற்றைச் சமாளிக்கும் முறைகள் பற்றியும் முடிவுகூறும் முறை, முடிவுகளைச் செயற்படுத்தும் முறை ஆகியவை பற்றியும் ஆராய இம் முறை பயன்படும்.

தனியொருவர் கருதுமுறை, ஆளுமை பற்றிய ஆராய்ச்சியில் பயன்படுத்துவதற்குக் கெல்லி (Kelly) என்பவரால் முதலில் கையாளப்பட்டது. ஆளுமை ஆராய்ச்சிகளில் பயன்படும் பிராய்டு (Freud), உரோசர்சு (Rogers) போன்றோரின் முறைகளினின்றும் இம்முறை வேறுபட்டது.

உள்ளடக்கப் பகுப்புமுறை (Content Analysis) கொடுக்கப்பட்ட செய்தியை அடிப்படையாகக் கொண்டு பலதரப்பட்ட சிக்கல்களை ஆராய்வதற்குப் பயன்படும் ஒரு பன்னோக்கு ஆய்வுமுறை. செய்திகளின் தன்மைகளை முறைப்பட, தற்சார்பின்றி ஆய்ந்து, அவற்றினின்றும் புது விவரங்கள் தேடிக் கொள்வது இம்முறையின் நோக்கம். உள்ளடக்கப் பகுப்புமுறை மூன்று வகைகளில் அமையும். ஆய்வுக்கு உட்படும் செய்தியின் தன்மைகள் பற்றிப் பகுப்பாய்வு மேற்கொள்ளலாம். செய்தி தந்தோர் பற்றியும், செய்தி தருதற்கான காரணங்கள் பற்றியும் ஆய்வு செய்யலாம். அன்றிச் செய்தி யாருக்குத் தரப்பட்டதோ அவர் பற்றியோ அவருக்கு இச்செய்தியால் விளைந்த விளைவுகள் பற்றியோ ஆய்வு செய்யலாம்.

சமூகவியல் ஆய்வுகளில் பயன்படும் முறைகளுள் ஒவ்வொரு முறைக்குமான தனித் தன்மைகளும் சிறப்புகளும் குறைகளும் உள்ளன. இவற்றை நன்கறிந்து ஏற்ற முறைகளைத் தக்கவாறு, ஆராய்ச்சியின் நோக்கங்களையொட்டிப் பயன்படுத்துதல் வேண்டும். பி.எஸ்.பா.

துணை நூல்கள்:

Bailey K.D., Methods of Social Research, Gollier Macmillan, London, 1978.

Cohen, L., & Manion L., Research Methods in Education, Croom Helm, London, 1980.

Kerlinger F.N., Foundations of Behavioural Research, Holt, Rinehart and Winston, New York, 1973.

Rosenthal, Robert & Rosnow, Ralph, L., Essentials of Behavioural Research, Mcgraw-Hill Book Company, New York, 1984.

**ஆராய்ச்சியும் பொருளாதார முன்னேற்றமும்:** ஆராய்ச்சி என்பது, பற்பல ஆக்கப் பண்புகளுடைய கூறுகளை ஆழ்ந்த நோக்குடன் திட்டமிட்டுக் கற்றுத் தேர்ந்து, பரந்த வாழ்வியல் — அறிவியல் நெறியில் இதுவரை கண்டுபிடிக்காதவற்றைக் கண்டுபிடிப்பது. அதன் வாயிலாகப் பெறப்படும் அறிவை ஆக்கத்திற்குரிய கருவியாக உருவாக்கிப் பொருள் உற்பத்தியைப் பெருக்கி, மக்களின் வாழ்க்கை நிலையைத் திட்டமிட்டு உயர்ந்த வழி வகுப்பது பொருளாதார முன்னேற்றம் (Economic Development) எனப்படும். பொருளாதார முன்னேற்றம் நாட்டுக்கு நாடும், காலத்திற்குக் காலமும் மாறுமாதலின், திட்டவட்டமாக வரையறுத்து இலக்கணம் கூற இயலாது. குறிப்பிட்ட ஒரு வாழ்க்கைத்தர

நிலையிலிருந்து அடுத்த உயர்ந்த வாழ்க்கைத்தர நிலைமைக்கு உயரத் தொடர்ந்து நடைபெறுவது பொருளாதார முன்னேற்றம். ஆராய்ச்சி முறைகள் (Research Methods) இரு வகையாகப் பிரிக்கப்படும். அவை: 1) அறிவின் அடிப்படைக் கூறுகளை ஆராயும் அடிப்படை ஆய்வு (Basic Research), 2) நடைமுறையில் அறிவைச் செயற் படுத்தும் முறைகளை ஆராயும் செயல் முறை ஆய்வு (Applied Research).

ஆராய்ச்சியையும் பொருளாதார முன்னேற்றத்தையும் ஊக்குவித்து மேம்படுத்தப் பல நிறுவனங்கள் பற்பல நோக்கங்களுடன் செயற்படுகின்றன. அவற்றில் முதன்மை இடத்தைப் பெறுவது, அரசுகள் நாட்டின் சமூகப் பொருளாதாரப் பாதுகாப்புத் தேவைகளின் அடிப்படையில் ஆய்வுகளை மேற்கொள்வது. தனியார் துறைகளில் ஆக்கக் காரணிகளின் அளவுகளையும் தரத்தையும் பெருக்குவதற்கும் புதிய பொருள்களை உற்பத்தி செய்வதற்கும் ஆராய்ச்சி, திறவுகோலாக விளங்குகிறது. கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள், மருத்துவமனைகள், சமுதாய நிறுவனங்கள் ஆகியவை ஆராய்ச்சித் திட்டங்களில் ஈடுபடுகின்றன. தனியார் ஆய்வு நிறுவனங்களுக்கும் தொழிலகங்களுக்கும் அரசு, கொடைகள் வழங்கியும் பிற ஊக்கிகள் அளித்தும் ஆதரவு அளிக்கிறது. பொதுவாக ஆராய்ச்சிக்கான ஊக்கமும் ஆதரவும் வளர்ச்சியடைந்த நாடுகளில் (Developed Countries) தான் வேரூன்றி முன்னேற்றமடைந்து காணப்படுகின்றன. அமெரிக்காவில் தனியார் துறையில் சிறப்பான வகையில், ஆய்வுகள் மேற்கொள்ளப்படுகின்றன. உருசியாவில் ஆராய்ச்சியும் முன்னேற்றமும், அரசின் கட்டுப்பாட்டின்கீழ்ச் சமுதாய முன்னேற்றத்தை அடிப்படை நோக்கமாகக் கொண்டு செயற்படுகின்றன.

பொது நலன்களுக்கான திட்ட ஆய்வுகள் தனி அரசுகளின் முனைவுகள் மட்டுமல்லாமல், பன்னாட்டு ஒத்துழைப்பு, கூட்டுறவு வாயிலாகவும் தனி நாடுகள் பிற நாடுகளுடன் நேரிடை, ஈரிடை (Direct & Bilateral) ஒப்பந்தங்கள் வாயிலாகவும் செயற்படுகின்றன. உணவு வேளாண்மை நிறுவனம் (FAO) போன்ற பிற ஐக்கிய நாடுகளின் நிறுவனங்கள், பன்னாட்டு அணு ஆற்றல் நிறுவனம் (International Atomic Energy Agency), பன்னாட்டுத் தொலைத்தொடர்பு அமைப்பு (International Tele Communication) ஆகிய உலக நிறுவனங்கள், வேளாண்மை, சத்துணவு, சுகாதாரம், மருத்துவம், கல்வி, பண்பாடு போன்ற துறைகளில் ஆய்வுகள் நடத்தி, பொதுநலப் பணிகளில் மிகப் பெரிய செயல்களைச் செய்து காட்டியுள்ளன. தமிழ்நாட்டில் பரவலாகப் பயிர் செய்யப்படும் புதிய ஐ. ஆர். நெல் வகைகள், மணிலாவில் நிறுவப்பட்டுள்ள பன்னாட்டு அரிசி ஆராய்ச்சி நிறுவனத்தின் (International Rice Research Institute) புதிய கண்டுபிடிப்பாகும்.

ஆராய்ச்சிகள் பயனுள்ளவையாயிருப்பதற்கு ஆய்வு நிறுவனங்களிடையே ஒத்துழைப்புத் தேவை. அவ்வொத்துழைப்பு, அடிப்படை ஆய்வுகளின் முடிவுகளை நடைமுறையில் செயற்படுத்தவும், புதுக் கண்டுபிடிப்புகளுக்கும் புதுமை மயமாக்குதலுக்கும் கண்டுபிடிக்கப்பட்டவற்றை மீண்டும் ஆய்வுக்குட்படாமல் நீக்குதற்கும் தொடர்ந்த பொருளாதார முன்னேற்றத்திற்கும் வழி வகுக்கும். அமெரிக்காவை விடச் சப்பான் (Japan) தொழில் நுட்ப அறிவு வளர்ச்சியில் முன்னேற்ற மடைந்திருப்பதற்கு அங்குள்ள ஆய்வு நிறுவனங்களுக்கும் தொழிலகங்களுக்குமிடையேயுள்ள ஒத்துழைப்புத்தான் காரணம் எனக் கருதப்படுகிறது.

பொருளாதார முன்னேற்றம், ஆக்கப் பொருள் அறிவியலின் (Material Science) ஆய்வை மட்டும் சார்ந்ததன்று. சமுதாயத்தின் பண்பாட்டு அமைப்புகளிலும் மாற்றங்கள் (Social Change) ஏற்பட்டு முன்னேற்றம் ஏற்படச் சமூக அறிவியலிலும் (Social Science) ஆய்வுகள் நடத்தப்பட வேண்டும். பொருளாதார முன்னேற்றத்திற்கான ஆய்வு வளர்ச்சி, சமூகம், பண்பாடு, அரசியல் காரணிகள் தவிர, பொருளாதாரக் காரணிகளான மக்கள்தொகை இயல், வருமான வளர்ச்சியும் பங்கீடும், செல்வக் குவிப்பு, நுகர்வோர் செயல், சமூகப் பாதுகாப்பு, விலைகள், நிதி, வரிவிதிப்பு, பொதுத் துறையின் கட்டுப்பாடும் ஒழுங்கீடுகளும், பொது நிறுவனங்கள், மேலாண்மை ஆகியவற்றின் ஆழ்ந்த ஆய்வு வாயிலாகக் கண்டுபிடிக்கப்பட்டவற்றைக் குறிப்பிட்ட காலத்திலும் அளவிலும் தகுந்த இடத்திலும் தெரிந்தெடுத்துச் செயற்படுத்துவதில் உள்ளடங்கியுள்ளது.

சமூக அறிவியலின் 'ஆய்வும் முன்னேற்றமும்' (R & D), ஆக்கப் பொருள் அறிவியலின் முன்னேற்றத்தைப்போல் இன்றியமையாத ஒன்றாகும். இது மிகவும் புறக்கணிக்கப்பட்ட துறையாகக் கருதப்பட்ட நிலைமாற, இப்போது உலகம் முழுவதிலும் இதன் சிறப்பை உணர்ந்திருக்கிறார்கள். அறிவியல் ஆய்வைப் போல் சமூக ஆய்வினையும் கருதி அதன் முன்னேற்றத்திற்கு அரசுகள் முதன்மையான இடம் அளிக்கவேண்டும். உலக வங்கி, இத்துறையில் முன்னோடியாகப் பல சமூக ஆய்வுத் திட்டங்களைப் பன்னாட்டு முறையில் தன் பொறுப்பின் கீழ் நிதி உதவியும் அளித்து நிறைவேற்றுகிறது. எனினும் ஆக்கப்பொருள் அறிவியல், ஆய்வு அளவுக்கு முன்னேற்றமடையவில்லை. சமுதாய மாற்றங்களுக்கும் சமூக ஆய்வுத் திட்டங்களுக்கும் தேவையான நீண்டகாலக் கெடு, பெரும் முட்டுக்கட்டையாக, சிக்கலாக உள்ளது.

ஆய்வு முன்னேற்றத்தால் விளையும் பலன்கள் பயனுள்ளவையாகவும் பயனற்றவையாகவும் காணப்பட்டாலும், அவை ஒருகாலும் முடிவுற்றவையல்ல. ஆய்வுகளின் முடிவு, ஒருவருக்கோ பலருக்கோ உடனடியாகவோ குறுகிய நீண்ட கால இடைவெளிக்குப் பின்போ பலன் அளிக்கலாம். ஆய்வின் விளைவுகளைப் பலர் நுகர்வதின் காரணமாகவோ பிறர் அறிவதின் காரணமாகவோ அவற்றின் தன்மையும் தரமும் அளவும் குறைந்துவிடாமல், சுற்று வட்டாரத்தில் பரவப் பரவ அவை முடிவற்றதாய் மேலும் மேலும் வளர்ந்துகொண்டே போகும்.

நாடுகளிடையே காணப்படும் சமநிலையற்ற ஆய்வு முன்னேற்றத்தைச் சமநிலைப்படுத்த நுட்ப இடமாற்றம் (Transfer of Technology), வருங் காலப் பொருளாதார முன்னேற்றத்திற்கு இன்றியமையாதது. உலக ஆய்வு முன்னேற்றத்தில் 97 விழுக்காடு, அமெரிக்க ஐக்கிய நாட்டில் மட்டும் செறிந்து காணப்படுகிறது. நாட்டின் மொத்த வருமானத்தில் (GNP) அமெரிக்கா 2. 2 விழுக்காடும், உருசியா 3.1 விழுக்காடும், மேற்குச் செர்மனி 2. 4 விழுக்காடும், சப்பான் 1. 9 விழுக்காடும் செலவு செய்கின்றன. ஆனால், வளர்ச்சியடையும் நாடுகளின் செலவு, நாட்டு வருமானத்தை நோக்கும்போது மிகக் குறைந்த அளவில் உள்ளது. பின்தங்கிய நாடுகளுக்கு (Least Developed Countries) வளர்ச்சியடைந்த நாடுகள், தங்கள் நுட்ப அறிவை இடப்பெயர்வு செய்தால் பல நாடுகள் வறுமை நிலையிலிருந்து பொருளாதார முன்னேற்றப்பாதையை அடைய இயலும். ஆனால், வளர்ச்சியடைந்த நாடுகள், தங்களுக்குத் துணையான பயன்களை அடையவும், உதவிபெறும் நாடுகளின் மேல் தங்கள் அதிகாரம், கட்டுப்பாடு ஆகியவற்றைச் செலுத்தவும் முடிந்தால் மட்டுமே நுட்ப ஆய்வு அறிவை இடப்பெயர்வு செய்ய முன் வருகின்றன. மேலும் மூலப் பொருள்களைப் பெறவும் அரசியல் உரிமை செலுத்தவும் உற்பத்திப் பொருள்களை விற்கவும் தங்கள் நலன்களை நிறைவேற்றவும் மட்டுமே மறைமுகமாக ஏழை நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்தில் பங்கேற்று, தொழில் நுட்ப இடமாற்றங்களுக்கு இசைவளிக்கின்றன.

பின்தங்கிய நாடுகளின் சமூகப் பண்பாடுகளும் பொருளாதார ஆக்கமுறைகளும், அடிப்படையில் திடீரென அயல்நாட்டு நுட்ப முறைகளை ஏற்றுக் கொள்ளும் தகுதியற்றதாகப் பல சிக்கல்களையும் முரண்பாடுகளையும் விளைவிக்கக் கூடியவையாக இருக்கின்றன. எத்தகைய அயல்நாட்டு நுட்பமுறைகள் எந்த அளவுக்கான வேகத்தில் எந்தெந்த துறைகளில் புகுத்தப்பட வேண்டும் என்பதிலும் முடிவுகள் எடுக்கப்படுவதில் முன் கவனமும், திட்டமும் ஆய்வும் மிகத் தேவை. பல நாடுகளின் அனுபவமும் விளைவுகளும் அதனைப் பற்றிய முடிவான கருத்துகளை வெளிப்படுத்த இயலாத நிலையிலேயே உள்ளன.

இந்தியா, விடுதலையடைந்த காலத்திலிருந்து ஐந்தாண்டுத் திட்டங்களின் வாயிலாகப் பொருளாதார முன்னேற்றத்தை, அறிவியல் – வாழ்வியல் ஆய்வு வளர்ச்சியின் வாயிலாகப் பெறத் திட்டமிட்டுச் செயற்படுகிறது. இந்தியப் பொருளாதாரம் தானியங்கக் கூடியதாகவும் தன்னிறைவுள்ளதாகவும் செயற்பட வேண்டும் என்பதே திட்டங்களின் சிறப்பு நோக்கமாகும். அதை நிறைவேற்றும் வகையில் நாட்டின் வாணிகம், சமூக அரசிறைக் கொள்கைகள் ஆகியவை பின்பற்றப்படுகின்றன. அயல்நாட்டு உதவியைச் சார்ந்திருப்பதைத் தவிர்க்க இறக்குமதி செய்யும் பொருள்களுக்கு ஈடான மாற்றுப் பண்டங்களை, நாட்டில் உற்பத்தி செய்வதை ஊக்குவிப்பதற்காகப் பல ஆய்வுகள் செய்யப்படுகின்றன. தொழிலகங்களுக்கும் தனியார் துறைகளுக்கும் இறக்குமதிப் பதிலீட்டுப் பொருள் (Import Substitution Goods) கண்டுபிடிப்புகளுக்காக அரசு நிதி உதவி வழங்குகிறது.

ஆராய்ச்சி வசதிகளுடன் இந்தியாவில் 135 பல்கலைக் கழகங்களும் 5 மகத்தான தொழில்நுட்ப மண்டல நிறுவனங்களும் 150 தொழில்நுட்பக் கல்லூரிகளும் 100 மருத்துவக் கல்லூரிகளும் 200 ஆய்வுக் கூடங்களடங்கிய தனித்துறை ஆய்வு (Specialized Research) நிறுவனங்களும் அரசின் நிதிக்கொடைக் கட்டுப்பாட்டுத் துணையுடன் நிறுவப்பட்டுள்ளன. தனியார் துறையில் 700 தொழிலகங்களில் ஆய்வு முன்னேற்றத்திற்கான நுட்ப வசதிகள் உள்ளன. நாட்டு மொத்த வருமானத்தில் 6 விழுக்காடு அறிவியல் நுட்ப ஆய்வுக்காக மட்டில் செலவிடப்படுகிறது. இன்றைய உலக அறிவியல் அறிஞர்களுள் மூன்றில் ஒரு பங்கினர் இந்தியர்கள் என்றாலும், இந்திய மக்கள் தொகையோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது அது வியப்பிற்குரியதன்று.

நாட்டின் வறுமை, ஏழைமை, வேலையில்லாத் திண்டாட்டம், சமனற்ற வருமானப் பகிர்வு (Inequality), சமுதாயத்திலுள்ள ஏற்றத் தாழ்வுகள், பிரிவினைகள், மக்கள்பெருக்கம் போன்ற சிக்கல்களை ஆராய்ந்தால், இன்னும் மிகையான ஆய்வினை முன்னேற்றத்திற்காக இந்தியா மேற்கொள்ள வேண்டும் என்பது தெளிவாகிறது. முன்னேற்றமடைந்த நாடுகளின் தொழில் நுட்ப அறிவையும் வாழ்க்கைத் தரத்தையும் ஒப்பிட்டால், உயர்ந்த மேலோட்ட ஆய்வுகள் மட்டுமல்லாமல், பொது மக்களின் நலனைப் பாதிக்கும் தண்ணீர், நாட்டுமருத்துவம் (Indigenous Medicine), மக்கள் திறன் வளம் (Manpower

Resources) ஆகியவற்றைப் பெருக்குதல் போன்ற வற்றிற்குச் சிறப்பிடம் அளித்து அவற்றில் ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும் என்பது புலனாகும். இதுவரை இந்தியா மேற்கொண்ட ஆய்வுத் துறைகளான வேளாண்மை, மக்கள் தொகைக் கட்டுப்பாடு, வான்கோள் ஆராய்ச்சி, அண்டார்ட்டிகா பயணம் (Antartic Research) முதலியவற்றின் பெருமைகளைப் பாராட்ட வேண்டும். பத்து ஆண்டுகளுக்கு முன் உணவு இறக்குமதி செய்து கொண்டிருந்த நாடு, இன்று ஏற்றுமதி செய்யும் நாடாக மாறிக் கொண்டே போவதற்கு வேளாண்மைத் துறையில் நடந்த தெளிவான பசுமைப் புரட்சி ஆய்வுகளே காரணம். நாட்டின் பொருளாதார ஆய்வு முன்னேற்றத்தையும் அது சுட்டிக் காட்டுகிறது. பா.ந.

**ஆராய்ச்சியும் முன்னேற்றமும்:** பணியாளர் மேலாண்மை என்பது, மனித வளத்தைச் செவ்வனே நிருவகிப்பதாகும். ஒரு தொழிலகத்தைத் தோற்றுவிக்கத் தேவையான பொறி, செல்வம் போன்றவைகளை ஏற்பாடு செய்து, அவைகளைப் பயன்படு முறையில் இயக்க உதவுவது மனித ஆற்றலே ஆகும். ஆதலின் நிறுவன அமைப்பில் மனித ஆற்றலுக்கு முதலிடம் கொடுக்கப்படுகிறது. பொறிகளின் திறனை உறுதியாக மதிப்பீடு செய்ய முடியும். ஆனால், மனிதனிடம் அளவிடற்கரிய ஆற்றல் இருப்பினும் இன்று மிகத் திறமையாக, ஆர்வத்துடன் வேலை செய்பவன், மற்றொரு நாள் அதே ஆர்வம் காட்டத் தவறலாம். இதற்குப் பல காரணங்கள் உள்ளன. அவைகளை ஆராய்ந்து, பணியாளர்களை எப்படி ஊக்குவிப்பது என்பதை உணர்ந்து, ஒவ்வொரு பணியாளரிடமும் உள்ள முழுத்திறனையும் வெளிக் கொண்டு வருவது மேலாளரின் தலையாய கடமை ஆகும். பணியாளர் முன்னேற்றம் குறித்து ஆராய்ச்சி செய்வதைப் பற்றி எட்வின் பிலிப்போ (Edwin Flippo) என்பவர், தம்முடைய பணியாளர் மேலாண்மை விதி (Principles of Personnel Management) என்னும் நூலில் கீழ்க் காணுமாறு குறிப்பிட்டுள்ளார்:

1. வேலைக்கு ஆள் சேர்த்தல்,
2. வளர்ச்சி,
3. ஊதிய நிருவாகம் (Salary Administration)
4. தொழிலாளிகளின் தேவைகளை நிறைவு செய்து, ஒருங்கிணைந்து செயற்படுதல்.
5. வேலை/வேலை செய்யும் இடம், சூழ்நிலை ஆகிய இவைகள் உற்பத்தியையும் தொழிலாளிகளின் மனநிலையையும் எந்த அளவில் பாதிக்கின்றன என்பதை ஆய்தல் ஆகியவை.

இவ்வைந்து துறைகளிலும் எத்தகைய ஆராய்ச்சி தேவை என்பது இங்கு விளக்கப்படுகிறது.

**1. ஆள் சேர்த்தல்:** நிறுவன வெற்றிக்கு அடிப்படைக் காரணமாக அமைவது, அதை உருவாக்கும் மனித ஆற்றலே ஆகும். ஆட்கள் சேர்ப்பதில் தேர்வு நடத்தி, அதில் வெற்றி பெற்றவர்களைப் பணியில் அமர்த்துதல், நேர்காணல் போன்ற பல வழிகள் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன. இத்துறை நன்கு செயற்பட வேண்டுமாயின், ஆட்சேர்த்தலுக்குக் கடைப்பிடிக்கப்பட்டு வரும் வழிமுறைகள், நல்ல பயனைத் தருகின்றனவா, அதாவது இந்த முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டோர் திறமையுடன் பணியாற்றுகின்றனரா என்றும், நம்முடைய பணியில் திறமைக் குறைவு காணப்படின் வழிமுறைகளை மாற்றி அமைக்க வேண்டுமா என்றும் ஆராய வேண்டும். அதே போல ஒவ்வொரு வேலைக்கும் தேவையான பணிவிளக்கம் (Job Description) செய்தல் வேண்டும். அந்தக் குறிப்பிட்ட வேலைக்கு எந்த அளவு ஊதியம் தீர்மானிக்கப்பட வேண்டும் என்பது, அந்த வேலைக்கு உண்டான பொறுப்பு அடிப்படையைக் கொண்டு அறுதியிடப்படுகிறது. பணி விளக்கங்கள், காலப் போக்கில் மாற்றங்களுக்கு உட்படுகின்றன. தேவைப்படும்பொழுது இம்மாற்றங்களை நடைமுறைப்படுத்த வேண்டும். இதனைச் செய்யத் தவறினால் பணியாளர் மனநிறைவின்மை அடைவர். இதன் விளைவாகத் தொழிற்சிக்கல், பணியாட்கள் வேலையை விட்டு வேறு இடம் செல்லுதல் போன்ற விளைவுகள் ஏற்படும். ஆதலின் ஆட்சேர்ப்பதில் ஆராய்ச்சி இன்றியமையாதது.

**2. வளர்ச்சி:** ஒரு நிறுவனம் வளரும்போது அதன் வளர்ச்சிக்குக் காரணமான பணியாளர்களும் முன்னேற வேண்டும். வெற்றிடம் ஏற்படும்போது, பணியாளருள் ஒருவருக்குப் பதவி உயர்வு கொடுத்து, அப்பொறுப்பினைத் தரலாம். ஆனால், எல்லோரும் ஏற்கும் வகையில் பதவி உயர்வுத் திட்டம் தீட்டுவதும், அதே நேரத்தில் வேலை வெற்றிடம் வரும் வரை காத்திராமல், அவரவர் தேவைக்கு ஏற்ப எல்லோருக்கும் பயிற்சி அளிப்பதும், எப்பயிற்சி வாயிலாகத் தொழிலாளிக்கும் தொழிற்சாலைக்கும் நன்மை ஏற்படும் என்று அறிந்து செயற்படுவதும், ஆராய்ச்சியுடன் தொடர்புடையனவாகும். மிகப்பெரிய நிறுவனங்கள், சிறந்த 'பயிற்சியும் முன்னேற்றமும்' (Training & Development) என்ற ஓர் அமைப்பை ஏற்படுத்தி, ஆண்டு முழுவதும் பயனுள்ள பயிற்சித் திட்டங்களைச் செயற்படுத்தி வருகின்றன.

**3. ஊதிய நிருவாகம்:** ஊதிய நிருவாகத்தில் ஆராயப்பட வேண்டிய கூறுகள் பல. ஒரு நிருவாகத்தில் கொடுக்கப்படும் ஊதியம், அக்கம் பக்கத்தில் இருக்கும் நிருவாகங்களுடன் ஒப்பிடப்படும்போது

எந்த நிலையில் இருக்கிறது, மேலும் அதே துறையில் இருக்கும் மற்ற நிருவாகங்களின் நிலை என்ன என்பதைப் பார்க்க வேண்டும். காலப் போக்கில் ஏறி வரும் விலைவாசிகளுக்கு ஏற்ப அகவிலைப்படி உயர்வு (Dearness Allownce) கிடைக்கப் பல இடங்களில் உடன்பாடு இருப்பதைப் பார்க்கலாம். திறமைக்கு ஏற்றபடி சம்பள உயர்வு, மேலும் உற்பத்தியைப் பெருக்க உதவி செய்யும் ஊக்கத்திட்டம் (Incentive Scheme) போன்றவை நல்லமுறையில் அமைக்கப்பட்டுச் செவ்வனே செயற்படவேண்டும். நடைமுறையில் இருக்கும் ஊதிய நிருவாகத்தின்மேல் தொழிலாளர்களுக்கு உள்ள மனநிறைவின்மைதான், தொழிற் சிக்கல்களுக்குப் பெரும்பாலும் அடிப்படைக் காரணமாக இருக்கிறதென்பதைப் பல ஆராய்ச்சியாளர்கள் கண்டு அறிந்திருக்கிறார்கள். இதனால், ஊதிய நிருவாகம் பற்றிச் சீரிய ஆராய்ச்சிகள் செய்வதன் வாயிலாகப் பல தொழில் தகராறுகளைத் தீர்க்க வாய்ப்பு இருக்கிறது.

4. தொழிலாளிகளின் தேவைகளை நிறைவு செய்து, ஒருங்கிணைந்து செயற்படுதல்: பெரிய தொழிற்சாலைகள் நகரங்களிலும் அதன் அருகிலும் அமைக்கப்பட்ட போதிலும், அவைகளில் வேலை செய்யும் தொழிலாளிகள் பெரும்பாலும் கிராமங்களிலிருந்துதான் வருகிறார்கள். அவர்களுள் பெரும்பான்மையோர் மிகக் குறைந்த கல்வியறிவு உடையவர்களே; பலருக்குத் தொழிற்சாலைச் சூழ்நிலையே புதியதாக இருக்கும். உடன்பணியாற்றும் தொழிலாளர்கள் வேறு மொழி பேசுகிறவர்களாகவும் இருக்கலாம். இத்தகைய பலதரப்பட்ட பணியாட்களைக் கொண்டு ஒரு தொழில் அணியை (Work Force) ஒருங்கிணைந்து செயற்படச் செய்து, ஒரு நிருவாகத்தின் குறிக்கோள்களை அடைவது வெறும் சட்ட திட்டங்களால்மட்டும் அடைய முடியாது. தொழிலாளிகளின் தேவைகளை அறிந்து அவைகளை நிறைவேற்றுதலும், தொழிலாளிகளின் சார்பாக நடத்தப்படும் சங்கங்களுடன் பேச்சுவார்த்தை நடத்திச் சிக்கல்களைத் தீர்ப்பதும், சில சிக்கல்கள் தோன்றுவதற்கு முன்பே தடுக்கத் தற்காப்பு நடவடிக்கை எடுப்பதும், மாற்றங்கள் செய்தால் அவற்றின் விளைவு எப்படி இருக்கும் என்பதைக் கருதியுணர்ந்து செயற்படுதலும் ஆகிய இவைகள் பல ஆண்டுப் பயிற்சி, ஆராய்ச்சி ஆகியவற்றால் தான் முடியும்.

5. வேலை/வேலை செய்யும் இடம், சூழ்நிலை—இவை உற்பத்தியையும், தொழிலாளிகளின் மன நிலையையும் பாதித்தல்: தொழிற்சாலைகள், நல்ல சூழ்நிலையில் இயங்க வேண்டும். நல்ல காற்றோட்டம், நல்ல வெளிச்சம், போதுமான இடவசதி, பொருத்தமான பொறிகள் போன்றவை இருந்தால் உற்பத்தித் திறன் பெருகும். சூழ்நிலையில் என்ன மாற்றங்கள் உற்பத்திப் பெருக்கத்திற்கு உதவும் என்பதை ஆராய்ச்சியின் வாயிலாக அறியலாம்.

மேலும், பணியாளர் மேலாண்மைத் துறையில் உளவியல் ஒருபகுதியாகக் கருதப்படுகிறது. அண்மைக் காலத்தில் பெரிய நிருவாகங்கள் உளவியல் படித்தவர்களைச் 'சமூகப் பணியாளர்' என்ற பதவியில் அமர்த்தி, 'சிக்கல் தொழிலாளிகள்' என்பவர்களின் வீட்டிற்குச் சென்று, அவர்களுடைய இன்னல்களைக் கேட்டறிந்து, என்ன காரணத்தினால் அந்தத் தொழிலாளி அடிக்கடி விடுமுறை எடுக்கிறார் — குடிப்பழக்கமா? குடும்பத் தொல்லைகளா? இரண்டுமா? என்பன போன்றவைகளை ஆராய்ந்து, தகுந்த ஆலோசனைகளைத் தருகிறார்கள். தொழிலாளிகளின் தவறுகளை மேலெழுந்தபடி கவனித்து ஒழுங்கு நடவடிக்கை எடுப்பதைவிட, அவர்களுடைய தவறுகளுக்கு என்ன காரணம் என்ற பின்னணியை நோக்கி, அதை எப்படிச் சீர்படுத்தலாம் என்பதை ஆராய்ந்து செயற்படுவது தொழில் உறவுக்கு உதவும். இவையெல்லாம் ஆராய்ச்சியின் வாயிலாகக் கற்றுக் கொள்ள வேண்டியவை.

தொழிலாளி என்பவன் பணி நேரத்தில் வேலை செய்துவிட்டுப் போய்விடும் ஏதோ ஒரு மனிதன் என்று எண்ணும் காலம் கடந்துவிட்டது. அவனுடைய ஓய்வு நேரத்திற்கும் வசதிகள் செய்து தந்து, அவனை ஒரு முழு மனிதனாக ஆக்கித் தொழிற்சாலைக்கும் அவனுடைய குடும்பத்திற்கும் அவனுடைய திறனைப் பயன்படுத்துவதில் அவனுக்கு வேண்டிய உதவிகளைச் செய்யத் தனியார் துறையிலும் பொதுத்துறையிலும் உள்ள பல பெரிய நிருவாகங்கள் ஆவன செய்து வருகின்றன. இதற்கு ஓர் எடுத்துக்காட்டு, பணியாளர்கள் விடுமுறையில் இந்தியாவில் எங்கு வேண்டுமானாலும் சென்று வரலாம் என்ற திட்டம். பணியாளுக்கும் அவனுடைய குடும்பத்திற்கும் இரயில் கட்டணமான தொகை தவிரக் கைச்செலவிற்கும் பல நிருவாகங்கள் பணம் கொடுக்கின்றன. இதனால், சென்னையில் இருக்கும் ஒரு பணியாள், பத்து நாட்கள் விடுமுறை எடுத்துக் கொண்டு குடும்பத்துடன் காசுமீரம் வரை சென்று, அதன் அழகிய சூழ்நிலையை அனுபவித்துவிட்டு வர வாய்ப்பு இருக்கிறது.

இந்தத் துறையில் மேலும் பல ஆராய்ச்சிகள் செய்ய வாய்ப்பு இருக்கிறது. பலதரப்பட்ட வசதிகள் செய்து கொடுத்தும், அவைகள் நல்ல முறையில் பயன்படுத்தப்படுகின்றனவா, அவைகள் பணியாளின் வாழ்க்கைத் தரத்தை எவ்வளவு தூரம் முன்னேற்ற மடையச் செய்திருக்கின்றன, மிகுந்த பண வசதி கிடைப்பதால், அதைப் பயனற்ற வழிகளில் செலவு

செய்து குடும்பத்தைப் பழைய நிலையிலேயே வைத்திருக்கிறார்களா என்பன போன்ற பல கூறுகளை ஆராய வேண்டும். எ.டி.சா.

**ஆரால்டு** என்பது நார்வேயை அதன் தொடக்க காலத்தில் ஆண்ட மூன்று அரசர்களின் பெயர் ஆகும். அவர்களுள் இருவர் சிறப்பானவர். முதலாம் ஆரால்டு (Harold I) நார்வே முழுவதையும் கி.பி. 900 ஆண்டளவில் அரசாண்டவர். இவர் நார்வே நாட்டினைப் பங்கிட்டுக் கொண்ட குறுநில மன்னர்கள் பலரை எதிர்த்துப் போராடி வெற்றி பெற்றார்.

மூன்றாம் ஆரால்டு (கி.பி. 1015-1066) முதலாம் ஆரால்டுவின் வழித்தோன்றல்; துணிவுமிக்கவர்; பைசாண்டியப் பேரரசர்களின் படைக்காவலர் தலைவராக இருந்த இவர்தம் வீரச் செயல்களைக் குறித்து நார்வீசியக் குறிப்பேடுகளில் கதைகள் பல உண்டு. இவர் கி.பி. 1046-இல் அரசராக முடிசூட்டிக் கொண்டார். நார்வீசிய அரியணைக்குத் தேனியர்கள் உரிமை கொண்டாடியதால் இவர் தென்மார்க்குடன் (Denmark) போராடினார். இவர் கி.பி. 1066-ஆம் ஆண்டில், இங்கிலாந்து அரசர் இரண்டாம் ஆரால்டுவின் (Harold II) உடன்பிறப்பான தாசுடிக்கு (Tostig) என்பாருக்கு உதவி செய்யும் நோக்குடன் படையெடுத்தார். தாசுடிக்கு இரண்டாம் ஆரால்டு என்னும் ஆங்கில மன்னருடன் போரிட்டவர். மூன்றாம் ஆரால்டுவும், தாசுடிக்கும் இசுடாம்போர்டு பாலம் (Stamford Bridge) என்னுமிடத்தில் நடந்த போரில் கொல்லப்பட்டனர்.

**ஆராவமுதாச்சாரியார்** 20-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். பாண்டி நாட்டிலுள்ள திருக்கானப்பேருக்கு அருகிலுள்ள திருச்சுழியல் என்னும் ஊரைச் சேர்ந்தவர். இவ்வூர் சுந்தரரால் பாடப்பெற்றதாகும். திருச்சுழியல் புராணம் என்னும் நூல் ஆராவமுதாச்சாரியாரால் இயற்றப்பட்டது. இந்தப் புராணம் அம்பலவாண நாவலர் என்பவரால் 1901-ஆம் ஆண்டில் சென்னையில் அச்சிடப்பட்டது.

**ஆரிகன்** அமெரிக்க ஐக்கிய நாட்டின் 33-ஆம் மாநிலம். இம்மாநிலம் பசிபிக்குப் பெருங்கடலையொட்டியுள்ளது. இதன் வடக்கில் வாசிங்டன் மாநிலம் அமைந்துள்ளது. கொலம்பியா ஆறு இம்மாநிலத்தின் வட எல்லையாகி வாசிங்டனையும் ஆரிகனையும் பிரிக்கிறது. கிழக்கில் இதாகோவும் இசுனேக்கு ஆறும் (Snake River), தெற்கில் நிவாடாவும் (Nevada) கலிபோர்னியாவும், மேற்கில் பசிபிக்குப் பெருங்கடலும் இம்மாநிலத்தின் எல்லைகளாக அமைந்துள்ளன.






ஆரிகன்

ஆரிகன் (Oregon) மாநிலத்தின் பரப்பு 2,51,180 ச.கி.மீ. ஆகும். இதில் உள்நாட்டு நீர் நிலைகள் 2064 ச.கி.மீ. 124 ச.கி.மீ. பரப்புடைய பசிபிக்குக் கடற்கரை நீர்ப்பரப்பு இதில் அடங்காது. அமெரிக்க ஐக்கிய நாட்டின் ஐம்பது மாநிலங்களுள் இது பரப்பளவால் பத்தாம் இடத்தைப் பெற்று விளங்குகிறது. மக்கள்தொகை 26,32,663 (1980).

இம்மாநிலத்தைப் பசிபிக்கு விந்தை நிலம் என்கிறார்கள். ஏனெனில் இயற்கைக் காட்சிகளின் எழில் மிக்கது இம்மாநிலம். கிரேட்டர் ஏரி, காசுகேடு மலைத் தொடர் (Cascade Range), கொலம்பியா ஆற்றுக்கெவிமலைப் பள்ளம், இசுனேக்கு ஆற்றின் குறுக்கேயுள்ள எல்சு கென்யான் என்னும் ஆற்றுக்குடைவு, ஆரிகன் குகைகள், தேசிய நினைவுச் சின்னம் போன்றவை கண்களையும் கருத்தையும் கவருவன.

காசுகேடு மலைத்தொடருக்குக் கிழக்கிலுள்ள வறண்ட நிலம் கால்நடைப் பண்ணைகளுக்குப் பெயர் பெற்றதாகும். உருளைக்கிழங்கு, பீட்டு, காய்கறிகள் முதலியன நீர்ப்பாசன வசதிபெற்ற கிழக்கு ஆர்கனின் விளைபொருள்கள். கோதுமை, ஆரிகன் மக்களின் சிறந்த உணவுப்பொருள். இது வட மத்திய பகுதிகளில் மிகுதியாக விளைகிறது. கூடு (Hood), உரோகு (Rogue) ஆகிய ஆற்றுப் பள்ளத்தாக்குகள் பழத்தோட்டங்களுக்குப் பெயர் பெற்றவை.

கொலம்பியா ஆறு இம்மாநிலத்தின் வடவெல்லையாக அமைந்துள்ளதால், அவ்வாற்றின் குறுக்கே

கட்டப்பட்டுள்ள பெரும் அணைக்கட்டுகளில் நீரைத் தேக்கிப் பெருமளவு நீர்மின்சக்தியை உற்பத்தி செய்கிறார்கள். அணைக் கட்டுகள் நீர்ப்பாசனத்திற்கும் உதவுகின்றன. நீர்நாய்த் தோல்கள் பெருமளவு கிடைப்பதால் இம்மாநிலத்தை நீர்நாய் மாநிலம் (Beaver State) என்பர்.

தொடக்கக் காலக் குடியேற்றவாதிகள், வில்லாமெட்டுப் பள்ளத்தாக்கு (Willametta Valley) ஆரிகனின் வாணிகத்திற்கும் தொழிற்சாலைகளுக்குமான ஒரு மையம் என்பதனை உணர்ந்தார்கள். இப்பள்ளத்தாக்கில்தான் ஆரிகனின் பெருநகரங்கள் அமைந்துள்ளன. போர்ட்லாந்துப் பெருநகரங்களுள் ஒன்று. போர்ட்லாந்து வில்லாமெட்டு ஆற்றின் இருகரைகளிலும் பரவியுள்ளது. சேலம் இம்மாநிலத்தின் தலைநகர். வில்லாமெட்டு ஆறு கொலம்பியா ஆற்றுடன் கலக்கிறது.

வேளாண்மைத் துறையில் இறைச்சிக்கான கால்நடைகள், கோதுமை, பால், உருளைக்கிழங்கு முதலியன உற்பத்தியாகின்றன. இங்குச் செடி கொடிகள் வளர்க்கும் கண்ணாடி வீடுகள், தோட்டப்பயிர் நாற்றுப் பண்ணைகள் முதலியன மிகுதியாக உள்ளன. சால்மன், துனா, சிரிம்ப்பு போன்ற மீன்கள் சிறப்பாகக் கிடைக்கின்றன. மரமறுத்தல், மரத்தினால் பொருள்கள் செய்தல், உணவுப் பொருள் உண்டாக்கல், காகிதம், மின்சாரத் தொடர்பில்லாத இயந்திரப் பொருள்கள், கருவிகள் செய்தல் போன்ற தொழில்கள் நடைபெறுகின்றன. மூல உலோகங்கள், உலோகக் கட்டுமானப் பொருள்கள் போன்றவை இங்குள்ள சிறப்பான செய்தொழிற் பொருள்களாகும். கல், கூழாங்கற்கள், பியூமிசு என்னும் ஒருவகைக்கல் போன்றவை இங்குக் கிடைக்கும் சுரங்கப் பொருள்கள். தங்கம், வெள்ளி, செம்பு ஆகியவை சிறப்பான கனிப்பொருள்கள்.



அசுடோரியா மென்மயிர் வணிக நினைவுச் சின்னம்

ஆரிகனில் முதன்முதலாக மக்கள் கி.பி. 1811-ஆம் ஆண்டில் குடியேறினார்கள். பசிபிக்கு மென்மயிர் (Fur) வணிகக் குழுவினர் அசுடோரியாவில் தொடக்கக்காலத்தில் குடியேறினர். நிலப்பரப்பின் அடிப்படையில் கி.பி. 1834-சூலை 5-ஆம் நாள் அரசு அமைக்கப்பட்டது. அமெரிக்க ஐக்கிய நாட்டின் ஒரு மாநிலமாக ஆரிகன் கி.பி. 1859-ஆம் ஆண்டு பிப்பிரவரி 14-ஆம் நாள் இணைக்கப் பெற்றது.

**ஆரிங்டன், சேம்சு (கி.பி. 1611-1677)** ஆங்கில அரசியல் கொள்கையாளர். இவர் எழுதிய 'ஓசியானா' (Oceana) என்னும் நூல், 'குடியரசு' இருக்க வேண்டிய நிலையை விளக்குகிறது. குடியரசு சொத்தின் அடிப்படையில், ஆழ்ந்த அறிவினால் வழி காட்டப்பட்டு நடைபெறுவதாக அமைய வேண்டுமென்பது இவர் கருத்தாகும்.

இங்கிலாந்து நாட்டில் நார்த்தாம்ப்டன்சயரிலுள்ள அப்டன் (Upton) என்னும் ஊரில் கி.பி.1611 ஆம் ஆண்டு சனவரி 3-ஆம் நாள் இவர் பிறந்தார். முறையான கல்வியை ஓரளவே பெற்றவராயினும், நல்வாழ்வு வாழ்ந்து, நன்கு பயின்று, சிறப்பாகப் பயணம் செய்து, கல்விப்புலமை நிறைவுற்றவராக ஆரிங்டன் (Harrington, James) விளங்கினார்.

இவர் வாழ்ந்த காலத்தில் இங்கிலாந்தை இசுடுவர்ட்டு (Stuart) மரபைச் சார்ந்த முதலாம் சார்லசு மன்னர் ஆண்டு வந்தார். அவர் ஆட்சியின்போது இங்கிலாந்தில் நாடாளுமன்ற உறுப்பினர்களுக்கும் அரசருக்கும் இடையே உள்நாட்டுப்போர் மூண்டது. போருக்கு முன்னரே ஆரிங்டன் அரண்மனையில் அரசரின் அணுக்கத் தோழரானார். அரசரை, நாடாளுமன்றம் கி.பி. 1649 - இல் கழுவேற்றிய போது இவர் அரசருக்குப் பணிவிடைகள் செய்தார்.

நாடாளுமன்றத்திற்கும் அரசருக்கும் ஏற்பட்ட மோதலின் விளைவாகவே இவர் தாம் எழுதிய 'ஓசியானா பொது நலக் குடியரசு' என்னும் நூலைக் கி.பி. 1656-இல் பதிப்பித்தார். குடியரசு ஆட்சிக்கு வழிவகை காணும் பின்னணியில் அமைந்திருந்தது இவருடைய நூலின் போக்கு. இவர் அந்நூலில், இங்கிலாந்தைக் குடியரசாகவும், தம்மை ஆங்கில மக்

களின் சிக்கல்களுக்குத் தீர்ப்பு வழங்கும் அறிஞராகவும் உருவகப் படுத்தியிருக்கிறார். மக்களின் சொத்தாக நிலத்தைக் கட்டுப்படுத்துபவர்கள் எவர்களோ, அவர்களே அரசாங்கத்தைக் கட்டுப்படுத்தும் பொறுப்பு வாய்ந்தவர்களாவர் என்பது இவர்தம் வாதம். அரசாங்கம் அதிகாரத்தின் பிடியிலுள்ளது. அனைத்து மக்களும் இவருடைய நூலை ஆர்வத்துடன் படித்தார்கள். மீண்டும், கி.பி. 1660-இல் இசுடுவர்ட்டுகளின் செல்வாக்கு ஏற்பட்டபோது, இவர்தம் 'குடியரசுக்' கருத்துகள் ஐயத்திற்காளாயின. இரண்டாம் சார்லசு மன்னரைக் கி.பி. 1661-இல் பதவியிலிருந்து அகற்ற முயன்ற சதியில் ஈடுபட்டதாக இவர் குற்றஞ் சாட்டப்பட்டார். இவர் தண்டிக்கப்படவில்லையாயினும் சிறிது காலம் சிறையில் அடைக்கப்பட்டார். இவர் கி.பி. 1677-செப்டம்பர் 7-ஆம் நாள் வெசுட்டுமினிசுடரில் (West Minister) காலமானார்.

**ஆரிசுடைடசு** (கி.மு. 530-468) என்பார் பண்டைய ஆதென்சு மக்களால் 'நேர்மையாளர்' என்று சிறப்பிக்கப் பெற்ற கிரேக்கர். ஆதென்சு நகரின் நற்குடியொன்றில் பிறந்தவர். உயர்ந்த கல்வியும், துணிச்சலும் கொண்டு, சுயநலமற்றவராய்த் திகழ்ந்த பெரியவர். கிரேக்கர்களுக்கும் பாரசீகர்களுக்குமிடையே கி.மு. 490-ஆம் ஆண்டில் நடைபெற்ற போரில் கலந்து கொண்ட கிரேக்கப் படைத் தலைவர்கள் பதின்மருள் ஆரிசுடைடசு (Aristides) ஒருவர். படைவீரர்கள் ஒன்றுபட்டுப் போர் செய்வதே சாலச் சிறந்ததெனக் கருதி மில்ட்டியேடிசு (Miltiades) என்பாரின் தலைமையில் அனைவரையும் ஒருங்கிணைத்த வன்மையர். தெமிசுடாகிளிசு (Themistacles) என்னும் மற்றோர் ஆதென்சு நகரத் தளபதியுடன் கருத்துவேறுபாடு கொண்டு, எதிர்த்தமைக்காக இவர் நாடு கடத்தப்பட்டார். இரண்டாண்டுகளுக்குப் பின் மீண்டும் நாட்டிற்குள் வரவழைக்கப்பட்டார். சாலமிசு (Salamis) போரில் தெமிசுடாகிளீசுக்கு உதவி புரிந்தார். கிரேக்க நாடுகளின் கூட்டமைப்பான தேலியக்குழு (Delian League) என்னும் அமைப்பை உருவாக்க இவர் உதவிபுரிந்தார். உயரிய பொறுப்புகளை ஏற்றிருந்தபோதிலும், இவர் தன்னலத்திற்காக எதையும் செய்யவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இவர் கி.மு. 468-ஆம் ஆண்டு ஏழையாகவே இறந்தபோது, பொதுமக்கள் பணத்தால் இவர் அடக்கம் செய்யப்பட்டார்.

**ஆரிசோனா** அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மாநிலங்களுள் ஒன்று. இது அமெரிக்க ஐக்கிய நாடுகளின் 48-ஆம் மாநிலம். இது 1912-இல் அமெரிக்க ஐக்கிய நாடுகளுடன் சேர்ந்தது.

ஆரிசோனாவின் (Arizona) மேற்கில் கொலொராடோ ஆறு பாய்கிறது. அந்த ஆறு ஆரிசோனாவைக் கலிபோர்னியாவிலிருந்து பிரிக்கிறது. ஆரிசோனாவின் தெற்கில் மெக்சிகோ நாடும் வடக்கில் யூட்டா மாநிலமும் கிழக்கில் நியூமெக்சிகோ மாநிலமும் மேற்கில் கலிபோர்னியா, நிவாடா என்னும் மாநிலங்களும் எல்லைகளாக உள்ளன.




ஆரிசோனா ஆறுகள்

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தென்மேற்குப் பகுதியில் உள்ள மாநிலங்களில் ஆரிசோனாதான் பரப்பில் மிகப் பெரியது. இம்மாநிலம், கலிபோர்னியா வளைகுடாவிலிருந்து 65 கி.மீ. தொலைவிலும் பசிபிக்குப் பெருங்கடலிலிருந்து 235 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது. இதன் வடகிழக்கு மூலையில் உள்ள பகுதியை நான்கு மூலைகள் என்பர். ஆரிசோனா, நியூ மெக்சிகோ, கொலொராடோ, யூட்டா ஆகிய நான்கு மாநிலங்களின் மூலைப் பகுதிகள் சந்திக்கும் இடமாக இருப்பதால் இதனை நான்கு மூலைகள் (Four Corners) என்று கூறுவது பொருத்தமானதே எனலாம்.

**இயற்கைப் பிரிவுகள்:** ஆரிசோனாவை மூன்று இயற்கைப் பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை 1. வடக்கிலுள்ள கொலொராடோ மேட்டு நிலம், 2. ஆரிசோனா மேட்டு நிலம், 3. வடிநிலமும் மலைப் பகுதியும் என்பனவாம்.

கொலொராடோ மேட்டுநிலம், ஆரிசோனா மாநிலத்தின் நாற்பது விழுக்காட்டுப் பகுதியை உள்ளடக்கிக் கொண்டுள்ளது. இப்பகுதியில் பிளாக்குஇசுடாப்பு (Flagstaff) என்னும் நகரம் அமைந்துள்ளது. அம்பிரி மலையுச்சி மிக உயர்ந்த இடம். இம்மேட்டு

நிலத்தில்தான் கிராண்டு கன்யான் (Grand Canyon) பள்ளத்தாக்கு உள்ளது. அது உலகோர் போற்றும் இயற்கை எழில் மிக்க வியக்கத்தக்க பள்ளத்தாக் காகும். இம்மேட்டு நிலத்தின் கிழக்கு மூலையில்தான் நான்கு மூலைகள் என்னும் பகுதியும் இருக்கிறது. இம்மேட்டு நிலத்தின் தெற்கு ஓரத்தில் மொகொ லோன் விளிம்பு (Mogollon Rim) என்னும் பகுதி உள்ளது.

ஆரிசோனா மேட்டுநிலம் மாநிலத்தின் மையப் பகுதியில் வட மேற்கிலிருந்து தென்கிழக்காகப் பரந் துள்ளது. இது மூன்று படிகளைக் கொண்ட தட்டி னைப்போல் காணப்படுகிறது. அம்மூன்றில் ஒன்றை ஆரிசோனா பாலைநில ஆல்ப்சு என்பர். இங்குப் படாம்போர்த்தியது போன்ற புல்வெளிகளையும் பூஞ்சோலைகளையும் காடுகளையும் காணலாம்.

வடிநிலமும் மலைப்பகுதியும் என்பது மேற்குப் பகுதியில் உள்ள பாலைநிலப் பகுதி. இதனைச் சோனோராப் பாலை நிலம் என்பர். இது மிக வறண் டதும், மண்வளம் மிக்கதுமாம். இப்பகுதியில் உள்ள இயூமா என்னும் நகரத்தைச் சுற்றிலும் ஆற்றுப் பள்ளத்தாக்குகள் உள்ளன. ஏனைய பகுதிகளைச் சிலர் பாலைவனம் என்பர். இப்பகுதி ஆரிசோனாவின் சிறப்புமிக்க பகுதியாகும். இப்பகுதியில் பல ஆறு களும் அவற்றின் துணை ஆறுகளும் பாய்கின்றன. இங்குள்ள சன் பள்ளத்தாக்கில்தான் ஆரிசோனா மாநிலத்தின் தலைநகரான பினிக்சு (Phoenix) என் னும் நகரம் அமைந்துள்ளது.

**ஆறுகள்:** ஆரிசோனாவின் சிறப்பான ஆறு கொலொராடோவாகும். அம்மாநிலத்தின் 90 விழுக் காடு நிலப்பரப்பு அவ்வாற்றின் பாசனத்தால் பயன் பெறுகிறது. கொலொராடோ ஆறு மாநிலத்தின் வடமேற்கில் வளைந்து பின்னர்த் தெற்காகத் திரும்பி, ஆரிசோனாவின் மேற்கு எல்லையாய் ஓடு கிறது. சிறு கொலொராடோ, பில் வில்லியம்சு, கிலா போன்றவை அதன் துணை ஆறுகள். அவை ஆண்டின் பெரும்பாலான நாட்களில் வறண்டே இருக்கின்றன. பெருமழை பெய்தலாலும் பனி உரு கிப் பெருகி வரும் வெள்ளத்தாலும் ஆரிசோனா ஆறுகளில் நீர் நிறைந்து காணப்படும்.

சான்பிரான்சிசுகோ மலையுச்சிகளிலும் அதன் அருகிலும், மோகெபலோன் விளிம்பினை அடுத் துள்ள பகுதிகளிலும் சிறுசிறு இயற்கைக் குளங்கள் உள்ளன. எனினும் ஆரிசோனாவின் பெரும்பாலான ஏரிகள் செயற்கையானவை.

**தட்பவெப்பநிலை:** பொதுவாகத் தென் ஆரி சோனா வெதுவெதுப்பும் கதிரொளி மிக்கதும் ஆன பகுதியாகும். மேட்டுநிலமும் பீடபூமியும் வழக்க மாகக் குளிர்ச்சியான வெப்பத்தைக் கொண்டவை.




ஆரிசோனா அரசியற் பிரிவுகள்

கோடைக்காலத்தில் பெருமழை பொழிகிறது. உயர்ந்த பகுதிகளில் 75 செ.மீ.மழை ஆண்டுதோறும் பெய்யும். தென்மேற்கு மூலையில் 12.5 செ.மீ. மழைதான் பொழிகிறது. குளிர்காலத்தில் வட ஆரி சோனாவிலும், ஏனைய பகுதிகளின் உயரம் மிகுந்த இடங்களிலும் தக்சான் (Tucson) மாநகருக்கருகி லுள்ள இலெம்மான் (Mt. Lemmon) மலையிலும் பனியின் வீழ்ச்சி ஏற்படுகிறது. பனியின் அளவு இலே சானது முதல் 150 செ.மீ. வரை இருக்கக்கூடும். உலகின் மிகப்பெரிய நீர் நிலையாக விளங்கும் கூவர் அணை (Hoover Dam) கொலொராடோ ஆற்றில் கட்டப்பட்டுள்ளது.

பத்தில் எட்டு நாட்களுக்கு ஆரிசோனாவில் கதி ரொளி காயும். ஈரக்கசிவு குறைவாக உள்ளபடியால் ஆரிசோனா நல்வாழ்விற்கு ஏற்ற மாநிலம் என்று கருதி, எண்ணற்ற மக்கள் இங்குச் சுற்றுலா வருகின் றனர்.

**இயற்கை வளங்கள்:** உடல்நலம் தரும் தட்ப வெப்பமும் கருத்தைக் கவரும் அழகான இயற்கைக் காட்சிகளும் ஆரிசோனாவின் இயற்கைவளத்தின் இரு கண்களாகும். வண்டல் மண், கனிமங்கள், காடுகள் போன்றவை ஏனைய இயற்கை வளக் கூறுகள். சாகு வாரோ கற்றாழை மலரே ஆரிசோனா மாநிலத்தின் அரசு மலராகும்.

**மக்கள்:** ஆரிசோனாவின் மக்கள் தொகை 1960க்கும் 1970க்கும் இடைப்பட்ட காலத்தில் பெரும் அளவில் பெருகியுள்ளது. ஏனைய மாநிலங்களிலிருந்து வந்தும் இங்குக் குடியேறியுள்ளனர். புதிய தொழிற்சாலைகளில் பணிபுரியப் பலர் இங்கு வந்து குடியேறினர். ஆரிசோனா மாநிலத்தின் பழங்குடிகளான நவாசோ (Navajo), ஒப்பி (Hopi), அப்பாச்சி (Apache), பபாகோ (Papago), பிமா (Pima) போன்ற இனத்தவர்கள் வாழ்கிறார்கள். இவர்கள் அமெரிக்க இந்தியர்களாவார்கள் (செவ்விந்தியர்கள்).

சுரங்கத்தொழிலும் கால்நடை வளர்த்தலும் நீர்ப்பாசனத்தால் பயிராகும் வேளாண்மையும் மக்களின் சிறப்புப் பணிகளாம். பினிக்சு, இடக்சான் ஆகிய இரு இடங்களைச் சுற்றிலுமுள்ள நீர்ப்பாசன வசதிபெற்ற பகுதிகளில் இக்காலத்தில் மக்கள் தொகை பெருகியுள்ளது.

**தொழில்கள்:** அமெரிக்க ஐக்கிய நாடுகளின் உற்பத்தியில் பெரும்பங்கு செம்பு, ஆரிசோனாவின் சுரங்கங்களிலிருந்து வெட்டி எடுக்கப்படுகிறது. அது ஆரிசோனாவின் கனிம உற்பத்தியில் 85 விழுக்காடாகும். ஏனைய கனிமப் பொருள் சுரங்கங்களும் உள்ளன.



வேளாண்மை, தொழில் வளங்கள்

**வேளாண்மை:** மரிகோப்பா கவுன்டியில் (Maticopa) வேளாண்மை உற்பத்தி மிகுதி. பிமா கவுண்டியில் பாசன வசதி பெற்ற பண்ணைத் தொழில் நடைபெறுகிறது. மலைப்பகுதிகளில் கால்நடை மேய்ச்சல் தரைகளைக் காணலாம்.

பென்டரோசா என்னும் பைன் மரங்கள் மிகச் சிறப்பான மரவகையாகும். மரமறுக்கும் தொழிலும் சிறப்பான தொழில்களில் ஒன்றாகும்.

**பிறதொழில்கள்:** மின் உற்பத்திப் பொருள்கள், இயந்திரங்கள், உணவுப் பொருள்கள், அடிப்படை உலோகங்கள், இராணுவத் தளவாடங்கள் ஆகியவை ஏனைய தொழில்கள். ஆண்டு முழுதும் சுற்றுலாப் பயணிகள் வருவதால் ஆரிசோனாவின் சுற்றுலாத் துறையும் சிறப்பாகப் பணியாற்றுகிறது.

**போக்குவரத்துச் சாதனங்கள்:** இருப்புப் பாதைகள் மாநிலம் முழுவதையும் இணைத்துள்ளன. கண்டங் கடக்கும் இருப்புப் பாதைகள் இரண்டு, ஆரிசோனாவில் வருகின்றன. நெடுஞ்சாலைகள் கிழக்கு மேற்காக அமைக்கப்பட்டுள்ளன. வானவெளி வழிகளும் உள்ளன. தக்சன், பினிக்சு போன்ற நகரங்களிலிருந்து வானவூர்திகள் இலாசு ஏஞ்சலீசுடன் இணைகின்றன.



ஆரிசோனாச் சட்ட மன்றம்

**கல்வி:** எண்ணற்ற பள்ளிகளும் கல்லூரிகளும் உள்ள ஆரிசோனாவில் இரண்டு பல்கலைக்கழகங்கள் இயங்குகின்றன. அவை:

1. தக்சனில் அமைந்திருக்கும் ஆரிசோனாப் பல்கலைக்கழகம்.
2. தெம்பேயில் உள்ள ஆரிசோனா அரசுப் பல்கலைக்கழகம்.

**மாநகரங்கள்:** ஆரிசோனாவின் இரு மாநகரங்கள் பினிக்கம் (Phoenix) தக்சனுமாம் (Tucson).

**பினிக்சு:** ஆரிசோனாவின் தலைநகரும் பெருநகரமுமாம். இந்நகரம் செவ்விந்தியர்களின் தொன்மையான அழிவுச் சின்னங்களின்மேல் அமைக்கப்பட்ட நகரம். மக்கள் தொகை 7,89,704, 1980.



பினிக்சு நகரம்

**தக்சன்:** இரண்டாம் பெருநகரம். மக்கள் தொகை 3,30,537 (1980).

**வரலாறு:** கி.பி. 1752-இல் ஆரிசோனாவில் குடியேற்றம் தொடங்கியது. கி.பி. 1863-இல் அது ஓர் ஆட்சிப்பகுதியாக ஆக்கப்பட்டது. அது 1912 பிப்பிரவரி 14-ஆம்நாள் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் ஒரு மாநிலமாயிற்று.

**ஆரிடம்**[1] என்பது இருடிகள் தொடர்பானது எனப் பொருள்படும். அதனால், முனிவர்கள் அருளிய பாடலும் நூலும் ஆரிடம் என வழங்கப்பெறும். இவர்கள் ஆகவும் கெடவும் பாடும் ஆற்றல் வாய்ந்தவர்கள். இவர்களின் ஆருடப் பாடல்களும் அவ்வாற்றல் கொண்டனவாகக் கருதப் பெற்றன. யாப்பருங்கல விருத்தியுரையில் அதன் ஆசிரியர், பாட்டியல் மரபு என்னும் இலக்கண நூலில் ஆரிடச் செய்யுள் பற்றிய இலக்கணங் கூறப்பட்டிருப்பதாகக் குறிப்பிட்டு, அந்நூலிலிருந்து மூன்று நூற்பாக்களை எடுத்தாண்டுள்ளார். 'உலகியற் செய்யுட்கு ஓதிய அளவையில், குறையவும் மிதப்பவும் குறையா ஆற்றல், இருடிகள் மொழிதலின் ஆரிடம் என்ப' என்பது ஆரிடம் பற்றிய இலக்கணம் கூறும் நூற்பாவாகும். கற்றோர் அறியா அறிவு பெற்று, முக்காலமும் முறையாக உணரும் ஆற்றல் சான்றவரே ஆரிடம் பாடுதற்குரியவராவர். மேலும் அவர்கள் 'மனத்தது பாடும் மாண்புடையோரும், சினத்திற் கெடப்பாடும் செவ்வியுடையோருமாகிய முனிக்கணத்தினராவர்.

**ஆரிடம்**[2] வடமொழி வேதத்திற் கூறப் பெற்றுள்ள எட்டு வகையான மணங்களுள் ஒன்றாகும். தக்கான் ஒருவனுக்கு, ஆவும் ஆனேறும் பொற்கோட்டுப் பொற்குளம்பினவாகச் செய்து, அவற்றினிடையே இருத்திப் பொன் அணிந்து 'நீரும் இவை போலப் பொலிந்து வாழ்வீராக' என்று கூறி, நீர் வார்த்துப் பெண்ணைக் கொடுப்பது. இது தமிழில் 'பொருள்கோள்' என்னும் பெயரால் குறிக்கப்பட்டுள்ளது. இந்த வடவர் மணமுறை, தமிழ்ப் பொருளிலக்கண மரபின்படி பெருந்திணையுள் அடக்கப் பெறும் என்று இளம்பூரணர், நசசினார்க்கினியர் ஆகிய தொல்காப்பிய உரையாசிரியர்கள் கூறியுள்ளனர்.

**ஆரிய அண்ணல்** சங்க காலத்தில், வாழ்ந்த ஓர் ஆரிய அரசன் ஆவான். வடநாட்டில் பல்வேறு இடங்களில் பல்வேறு அரசர்கள் ஆட்சி புரிந்து வந்தனர். அவர்களுள் தலைமையாக இருந்து போரிட்ட ஒரு மன்னனே ஆரிய அண்ணல் எனப்பட்டான். சேரன் செங்குட்டுவன் வடநாடு சென்ற போது ஆரிய அண்ணல் என்னும் அரசன் எதிர்த்துப் போரிட்டதாகவும், அப்போரில் அம்மன்னனை அழித்துச் செங்குட்டுவன் கங்கை சென்று நீராடியதாகவும், பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பதிகம் குறிப்பிடுகிறது. இந்த ஆரிய மன்னன் வடநாட்டில்இமயமலைப் பகுதியிலிருந்து ஆண்டவன் என்று கூறுகின்றனர். 'ஆரிய அண்ணலை வீட்டிப் பேரிசை, இன்பல் அருவிக் கங்கை மண்ணி' என்பது அப்பதிகப் பகுதியாகும். செங்குட்டுவன் படையெடுத்துச் சென்று கங்கைப் பேரியாற்றங்கரையில் ஆரிய அரசனொடு போரிட்டு வென்ற செய்தியினைச் சிலப்பதிகாரமும் குறிப்பிடுகிறது. கே.நா.

**ஆரிய அரசன் பிரகத்தன்** சங்க காலக் கபிலர் காலத்தில் வாழ்ந்த அரசர்களுள் ஒருவன். வடநாட்டு வேந்தர்களைப் பொதுவாக ஆரிய அரசர் என்று கூறுவது மரபு. அவ்வாரிய அரசர்களுள் சிலருக்குத் தமிழ்மொழி அறிவு இருந்ததாகத் தெரிகிறது. தென்னாட்டவர் வடமொழியைக் கற்றுப் புலமை பெற்றிருந்தது போல, அக்காலத்தில் ஆரிய அரசரும் தமிழ் இலக்கிய இலக்கணங்களைக் கற்று வந்துள்ளனர்.

சங்க காலத்தில் திறன்மிக்க புலவர்கள் பலர் வாழ்ந்து வந்துள்ளனர். அவர்களுள் கபிலரும் ஒருவர். அக்கபிலர் வாழ்ந்த காலத்தில் பிரகத்தன் என்னும் ஆரிய அரசன் இருந்தான். அவனுக்குத் தமிழின் சிறப்பைக் கேட்டறிய விருப்பம் ஏற்பட்டது. அதனால், அவர் காலத்தில் சிறப்புற்று விளங்கிய

கபிலரிடம் தமிழைப் பற்றிக் கூறுமாறு கேட்டான், தமிழின் சிறப்பை அறிவுறுத்த விரும்பிய கபிலர் குறிஞ்சிப் பாட்டு என்னும் பாடலைப் பாடி, தமிழ்ப் பண்பாட்டையும் தமிழின் அருமைப் பாட்டையும் விளக்கிக் கூறினார்.

ஆரிய அரசர்களுள் ஒருவனான பிரகத்தன் சிந்துலம் என்னும் நகரிலிருந்து அரசு புரிந்து செருக்குடன் வாழ்ந்தான் என்றும் கலை பல கற்றுப் பேரறிஞனாகத் திகழ்ந்தான் என்றும், ஆட்சிப் பெருக்கும் கலை அறிவும் அவனுக்குச் செருக்கைத் தந்தன என்றும், தனக்கு நிகரானவர் இல்லை; தன் மொழிக்கு நிகரான மொழி பிறிது இல்லை எனச் செருக்குடன் கூறினான் என்றும் அதனைக் கேள்வியுற்ற செழியன் படையெடுத்துச் சென்று, வென்று, அவனைச் சிறைப்பிடித்துக் கொண்டு வந்தான் என்றும், கபிலர் வாயிலாகத் தமிழின் பெருமையை உணர்ந்து செருக்கடங்கித் தன் தவற்றினுக்கு வருந்தினான் என்றும் ஒரு கதை கூறப்பெறுகிறது. கே. நா.

**ஆரிய அரசன் யாழ்ப்பிரமதத்தன்** ஒரு சங்கப் புலவர். பிரமதத்தன் என்னும் பெயரில் பலர் வாழ்ந்து வந்துள்ளமையால் அவர்களினின்றும் வேறுபடுத்திக் காட்ட, இவரை யாழ்ப் பிரமதத்தன் என்றழைத்தனர். வடநாட்டு வேந்தரை ஆரிய அரசர் என்று சொல்லுதல் மரபு. வடநாட்டு வேந்தர்களுள் சிலர் தமிழ் இலக்கிய இலக்கணங்களில் புலமை பெற்றவராக வாழ்ந்திருக்கின்றனர். இவர் இயற்றமிழ் அறிவும் கவிபுனையும் ஆற்றலும், யாழிசைப் பயிற்சியில் வன்மையும் பெற்றுச் சிறப்பாக வாழ்ந்தவர் என்பது தெரிகிறது; எனவேதான், இவரை யாழ்ப்பிரமதத்தன் என்று சிறப்பித்துக் கூறியுள்ளனர். குறுந்தொகை 184-ஆம் பாடல் இவர் பாடியதாக உள்ளது. அது தமிழுக்கேயுரிய அகத்திணைப் பொருள் மரபில் இயைந்த பாடலாகும். தலைமகன் ஒருவன் தலைமகள் ஒருத்தியைக் கடற்கரைச் சோலையில் கண்டு உள்ளத்தைப் பறிகொடுத்துவிட்டு வந்து, அவளையே எண்ணி ஏங்குவதாக அமைந்த பாடல். தலைவியின்கண் வலைப்பட்ட நெஞ்சம், அவள் இருக்கும் இடத்திலேயே தங்கிவிட்டதாகவும், தான் மட்டுமல்லாது வழிச் செல்வோர் யாவரும் கண்டு திகைக்கக் கூடிய பேரழகு வாய்க்கப் பெற்றவள் அத்தலைமகள் என்பதாகவும் அப்பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாரிய மன்னர் காவலனாகவும் தமிழ்ப் பாவலனாகவும் திகழ்ந்தார். 'அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க்கு இல்லை' என்று, ஆன்றோர் இயல்பை அழகு தமிழில் எடுத்துக் கூறியுள்ளார். இம்மன்னர் அரசியலறிவும் ஆன்ற தமிழ்ப் புலமையும் இசையறிவும் வாய்க்கப் பெற்றவர். கே.நா.

**ஆரியங்காவு** கேரளாவில், மேற்குத் தொடர்ச்சி மலைப் பகுதியில் அமைந்துள்ள ஓரூர். இது விருதுநகர் கொல்லம் இருப்புப் பாதையில் உள்ள ஒரு புகைவண்டி நிலையமுமாகும். செங்கோட்டையிலிருந்து புகைவண்டி வழியாக 15 கி.மீ. பயணம் செய்து இவ்வூரை அடையலாம். தமிழில் சோலையைக் குறிக்கும் 'கா' என்னும் சொல், காவு என்றும் வழங்கும். ஆரியன் என்பது ஐயனார்க்குரிய பெயர்களுள் ஒன்றாகும். இன்றும் இவ்வூரில் ஐயப்பன் வழிபாடு சிறப்பாக நடைபெற்று வருகிறது. மேற்குத் தொடர்ச்சி மலைச் சரிவில் அமைந்துள்ள எழில் மிக்க நெடிய சோலை ஒன்றில் ஐயப்பன் திருக்கோயில் அமைந்திருப்பதனால், இவ்வூர் 'ஆரியங்காவு' என்னும் பெயர் பெற்றது. சபரிமலை ஐயப்பன் வழிபாட்டிற்குச் செல்லும் பக்தர்கள், இவ்வூர் வழியாகவும் செல்வர். இவ்வூரில் அமைந்துள்ள கோயிலில், ஐயப்பனுக்குப் பக்கத்தில் 'பிரபை' என்னும் பெயரில் ஒரு பெண் தெய்வம் அமைக்கப்பட்டுள்ளது. இக்கோயிலில், கேரள நாட்டு முறையில் வழிபாடுகள் நடைபெறுகின்றன. இவ்வூருக்கு அருகே, மேற்குத் தொடர்ச்சி மலையில் ஒரு கணவாய் அமைக்கப்பட்டு, அதன் வழியாக இருப்புப்பாதைப் போக்குவரத்து நடைபெறுகிறது. தென்னிந்தியாவில், இருப்புப் பாதை அமைப்பதற்காக மலையைக் குடைந்து இயற்றப்பட்ட கணவாய்களுள் இது மிகவும் நீளமானதாகும். இக்கணவாய் 'ஆரியங்காவுக் கணவாய்' என்று வழங்கப்படுகிறது. இங்குக் காப்பி, தேயிலைத் தோட்டங்கள் உள்ளன.

**ஆரிய சமாசம்** என்னும் சமய, சமூகக் கல்வி இயக்கம் கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்திய மறுமலர்ச்சிக்கு வித்திட்ட முதல் அமைப்பாகும். இதனைச்சுவாமி தயானந்த சரசுவதி என்னும் பெரியார் (கி.பி. 1824-1883) பம்பாய் மாநகரில் கி.பி.1875-ஆம் ஆண்டு ஏப்பிரல் 10-ஆம் நாள் நிலைநாட்டினார். இவர் ஈடிணையற்ற சமூகச் சீர்திருத்தக்காரர், தலைசிறந்த பேச்சாளர். இவர் குசராத்து மாநிலத்தில் பிறந்தவர்.

இவர் இலாகூரில் கி.பி.1877-ஆம் ஆண்டில் இரண்டாம் சமாசத்தை நிறுவினார். பின்னால் தொடங்கப் பெற்ற இந்த ஆரிய சமாசமே பெரும் புகழ்பெற்று ஆரிய சமாசத்தின் தலைமைப் பீடமாயிற்று. ஆரிய சமாசம் தோற்றியதிலிருந்து இந்திய மக்களின் வாழ்விலும் சிந்தனையிலும் பெரும் புரட்சி தோன்றலாயிற்று.

**ஆரிய சமாசத்தின் பத்துக் கொள்கைகள்:**

1. இறைவனே எல்லா மெய்யறிவுக்கும் அவ்வறி

வால் அறியப்படும் எல்லாவற்றுக்கும் மூல காரணம்.

2. இறைவன் உண்மை-அறிவு-இன்ப வடிவினர், உருவமற்றவர்; பேராற்றலுடையவர்; நியாய வள்ளல்; அருளாளர்; பிறவாதவர்; எல்லை யற்றவர்; மாறாதவர்; ஆதியற்றவர்; இணை யற்றவர்; அனைத்துக்கும் ஆதாரமானவர்; சர்வேசுவரர்; எங்கும் நிறைந்தவர்; எல்லாம் தூயவர்; அனைத்து உலகுக்கும் மூலகாரணர்; அவருக்கே வணக்கம் உரியது.
3. வேதங்கள் அறிவு நூல்கள். அவற்றைப் படிப்பதும் படிக்கக்கேட்பதும் கற்பதும் கற்பிப்பதும், பிறருக்கு விளக்குவதும் ஒவ்வோர் ஆரியனின் தலையாய கடமையாகும்.
4. உண்மையை ஏற்கவும், பொய்யைப் புறத்தே ஒதுக்கவும், ஒருவர் எப்போதும் ஆயத்தமாக இருக்க வேண்டும்.
5. எச்செயலையும் அறத்துக்கு இசைந்ததாகவே செய்ய வேண்டும். அதாவது நன்மை, தீமைகளை நன்கு ஆராய்ந்து அறிந்து, தீமைகளை விலக்கி, நன்மைகளைச் செய்ய வேண்டும்.
6. மனிதர்களின் உடல்நலம், ஆன்மநலம், சமுதாய நலம் ஆகியவற்றை மேம்படுத்தி உலகுக்கு நன்மை செய்வதே ஆரியசமாசத்தின் சீரிய நோக்கம்.
7. எல்லாரிடத்தும் அன்புடனும் நீதியுணர்வுடனும் தக்க மரியாதையுடனும் நடந்து கொள்ள வேண்டும்.
8. அறியாமை அழிக்கப்பட வேண்டும். அறிவு பரப்பப்பட வேண்டும்.
9. தனது மேன்மையில் யாரும் நிறைவடைந்து விடக்கூடாது. மற்றவர் மேன்மையிலே தன் மேன்மையும் கலந்திருப்பதை உணர வேண்டும்.
10. சமுதாய நன்மைக்காகச் சட்டங்களை ஒப்புக் கொண்டு அவைகளுக்குட்பட்டு நடக்க வேண்டும். ஆனால், பொது நலத்தைப் பாதிக்காத சொந்தச் செய்திகளில் மட்டில் சுதந்திரமாக நடந்து கொள்ள வேண்டும்.

**கொள்கைகளின் விளக்கம்:** முதல் இரண்டு கொள்கைகள், நியதியையும் கடவுள் எத்தகையவர் என்பதையும் விளக்குகின்றன. உண்மை அறிவின் களஞ்சியமாக உள்ளதே வேதம் என்பதை மூன்றாம் கொள்கை எடுத்தியம்புகிறது. திட்ட வட்டமாக அமைக்கப்பெற்றுள்ள சமயத்திற்கு மிக இன்றியமையாத கொள்கைகளாக விளங்குவனவே இம்மூன்று கொள்கைகள். மற்ற ஏழு கொள்கைகள் தனி மனிதன் எவ்வாறு வாழ வேண்டும் என்றும், சமுதாயத்தில் அவன் பங்கு என்னவென்றும் வரையறுத்துக் கூறுகின்றன. மனிதன் மூடநம்பிக்கைகளுக்கு இரையாகக் கூடாது என்பதை எடுத்துக்காட்டுவதற்காக நான்காம் கொள்கை அமைந்தது. பொய்யைப் புறக்கணித்துவிட்டு உண்மைப்பாதையில் செல்ல வேண்டுவதை இது அறிவுறுத்துகிறது. உண்மையை ஏட்டளவில் ஏற்றுக் கொள்ளாமல் வாழ்க்கையில் கடைப்பிடித்துத் திறம்படச் செயலாற்ற வேண்டும் என்றும் அதனைப் போற்றுதற்குரிய கடமையாகவே கொள்ள வேண்டுமென்றும் ஐந்தாம் கொள்கை கூறுகிறது. 'ஆரியசமாசம்' எவ்வித இனப் பாகுபாடுமின்றி உலகிலுள்ள மனிதக் குலத்தின் நன்மையே முதன்மையாகக் கருதிப் பாடுபடும் அமைப்பென்பதை ஆறாம் கொள்கை அறிவிக்கிறது. தனி மனிதன் தன் சொந்த வாழ்வில் நீதி, நேர்மை, அன்பு, அருள் முதலியவற்றைக் கடைப்பிடித்துச் செம்மையாக வாழ்ந்தால் அவனால் சமுதாயம் முழுதும் மேன்மையுறுமென்பதை ஏழாம் கொள்கை எடுத்துரைக்கிறது. அறியாமை இருளகற்றி ஞானஒளி பெற்று விளங்க உறுதுணையாக இருக்க வேண்டுவது எட்டாம் கொள்கை. சமுதாய உறுப்பினன் தனிமனிதன். தனிமனிதன் தன் முன்னேற்றத்தில் மட்டில் நாட்டம்கொண்டால்தன்னலம் உடையவனாகிறான். மற்றவர்களின் நன்மைக்கும் மேன்மைக்கும் பாடுபடும் பெருநோக்கு-பொதுநோக்குப் படைத்தவனாக வேண்டுமென்பதைச் சுட்டுகிறது, ஒன்பதாம் கொள்கை. நாட்டு நன்மையைத் தனி மனித நன்மை எப்போதும் குறுக்கிடாது என்பது பத்தாம் கொள்கை.

**ஆரிய சமாசத்தின் செயல்முறை:** ஆரிய சமாசத்தில் நடைபெறும் வேள்விகள், மந்திரம் கூறுதல் போன்றவை அறிவாற்றலை மனத்தில் பதிப்பதற்கே அன்றி, நம்பிக்கைகள் குறித்து அல்ல. ஆக்க வடிவமான செயல்களும் அச்செயல்களுக்கேற்ற விதி முறைகளும் சம்சுகாரங்கள் (Samakars) எனப்படும். மனித்வாழ்வில் ஆரிய சமாசத்தினர் பதினாறு சமசுகாரங்களைப் பின்பற்றுகின்றனர். அவை, கருப்பதானம், சீமந்தம், குழந்தைக்குப் பாலூட்டும் விழா, பெயர் சூட்டல், முடியெடுத்தல், காதுகுத்தல், கல்வித் தொடக்கம், திருமணம், இறந்தோர்க்காற்றும் கடன் போன்றவை அவற்றுள் சிலவாம். இவை நடத்தப்படும் முறை, அதற்கான வேத மந்திரங்கள், வழி வகைகள், நடவடிக்கைகள் போன்றவற்றைச் 'சம்சுகார விதி' என்னும் நூலில் காணலாம்.

**ஆரியசமாசமும் வேதமும்:** ஆரிய சமாசம் வேதத்தை ஏற்றுக் கொள்கிறது. புராணங்களை ஏற்றுக் கொள்வதில்லை. வேதத்தின் அடிப்படையில் கடவுள் கொள்கையை ஏற்கும் ஆரியசமாசத்தினரின்

தருமக்கோட்பாடுகள், நெறிமுறைகள், சமய நடவடிக்கைகள், விழாக்கள், வணங்கும் முறைகள் போன்றவற்றை இக்கொள்கை திட்டவட்டமாகக் கூறுகிறது. இவ்வியக்கம் வெறும் சீர்திருத்தத்தை மட்டும் அடிப்படையாக கொண்டிருக்காமல், மக்களாட்சி அடிப்படையில் வளர்ந்து வருவதுடன், சமுதாயத்தின் அடிமட்டத்தில் வாழும் தாழ்த்தப்பட்ட மக்களின் நம்பிக்கைக்குரிய அமைப்பாகவும் விளங்கி இந்து சமுதாயத்தில் புரட்சிகரமான, வேறுபாடற்ற தன்மையை உருவாக்குவதால் இன்றும் நீடித்துச் செயலாற்றுகிறது.

**மறுமலர்ச்சி இயக்கம்:** மறுபிறப்பு உண்டு என்பதை ஆரிய சமாசம் ஏற்றுக் கொள்கிறது. ஆரிய சமாசத்திற்குச் சாதிமுறையில் நம்பிக்கையில்லை. இந்து சமயத்தைப் பற்றியிருக்கும் சாதிப்பித்தை ஆரிய சமாசம் ஒழிக்க முயற்சி செய்கிறது.

வேதம் மக்கள் அனைவருக்கும் உரியது. வேதம் கூறும் மெய்ப்பொருளை எல்லோரும் அறிந்து இன்புற வழிவகுத்தது ஆரிய சமாசமே. முன்னாளில் வேதத்திற்கு விளக்கம் அளித்தவர்கள் தத்தம் கருத்துவழி வரலாற்று நிகழ்ச்சிகளாகவும், புனைந்துரைக்கதைகளாகவும், அரசர்களின் போர்களாகவும், அவரவர்கள் கற்ற பிற்கால நூல்களைக் கொண்டு அதற்கேற்ப எழுதியதால் அவைகள் தருக்கவாதத்திற்கும் தத்துவத்திற்கும் ஒவ்வாத நிலையில் இருந்தமையால், மக்கள் பெரும்பாலோர் நல்வாழ்க்கையில் ஈடுபடாதவாறு மறைக்கப்பட்டும் ஒதுக்கப்பட்டும் புறக்கணிக்கப்பட்டும் வந்தன. தயானந்தர் தம் குருவின் ஆணைப்படி வேதத்திற்கு உண்மை உரைவளம் காணும்போது, தருக்கம், இலக்கணம், சந்தசு முதலிய துணைகளோடு கடவுள் தியானத்தில் ஆழ்ந்து, ஒவ்வொரு சொல்லுக்கும் உரை கூறியதோடு, விஞ்ஞானத்திற்கும் காரணகாரியத்திற்கும் தத்துவத்திற்கும் ஏற்ற வகையில் ஒப்புக்கொள்ளும் வண்ணம் விளக்கம் அருளினார்.

இந்து சமயத்தில் மண்டிக்கிடக்கும் பலவிதமான தீமைகளைக் களைந்தெறிவதை 'ஆரியசமாசம்' தன்னுடைய முதன்மையான கடமையாகக் கருதிப் பணிஆற்றிவருகிறது. ஆரிய சமாசம் கூட்டு வழிபாடுகளை நடத்துகிறது.

**'ஆரிய சமாசம்' ஆற்றிய-ஆற்றும் பணிகள்:** 'ஆரிய சமாசம்' பெண்கள் விடுதலைக்கு சிறப்பாகப் பாடுபட்டது. இந்துப் பெண்மணிகளிடையே நிலவியிருந்த பலவகைத் துன்பங்கள், கொடுமைகள், குழந்தைத் திருமணம், பருதா முறை முதலியவை 'ஆரியசமாசம்' எடுத்த நடவடிக்கைகளினால் மறைந்தன. இந்துக்கள் எவ்வித வேறுபாடுமின்றி ஆடவரும் மகளிரும் பூணூல் அணியலாம் என முதன் முதலில் முழங்கியது ஆரியசமாசமே. மந்திரத்தை அனைவரும் சொல்வதற்கு 'ஆரியசமாசம்' அடிகோலியது. 'ஆரிய சமாசமே' இத்தகு சமயப் புரட்சிகளைச் செய்து எல்லா மக்களின் கவனத்தையும் தன்பால் ஈர்த்தது. பெண்களுக்கும் சமுதாயத்தில் உள்ள நசுக்கப்பட்ட கீழ்த்தளத்திலுள்ள சகோதரர்களுக்கும் கல்வி வாய்ப்புகளை அளிப்பதற்காக ஆரிய சமாசம் கல்விக் கூடங்களை ஏற்படுத்தி வழிகாட்டியது. இன்று இந்தியநாடெங்கும் 'ஆரிய சமாசம்' எண்ணற்ற பள்ளிகளையும் கல்லூரிகளையும் நிறுவி நடத்திவருகிறது.

'மனித சமுதாயம் பொதுவாக நன்கு வாழ, சமுதாய நற்பணிக்கூடங்கள், இலவசமாக உள்ள திக்கற்றோர் இல்லங்கள், கைம்பெண் விடுதிகள், முதியோர் இல்லங்கள், நோய் நீக்கும் மருந்தகங்கள், தாழ்த்தப் பட்டோரை மேன்மையுறச் செய்யும் பணிமனைகள் முதலியன இன்றும் இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் நடத்தப்பட்டு வருவது 'ஆரியசமாச'த்தின் ஆக்கப் பணிகளில் சிறந்த கூறாகும்.

உலகோர் எல்லாரும் நலம் பெறவேண்டும் என்றுகருதி உலகவரை உயர்ந்தோராக்க உழைக்கும் இயக்கம் 'ஆரிய சமாசம்'. பி. சி. க.

**துணை நூல்கள்:**

**Datta, K.K.**, Renaissance, Nationalism and Social Changes in Modern India, Bookland Private Ltd., Calcutta, 1965.

**Ranade, M.G.**, Religious and Social Reform, Bombay, 1902.

Andrews, C.F., Indian Renaissance, 1912.

**ஆரியதேவர்** நாகார்ச்சுனர் காலத்திற்குச் சற்றுப் பின்னர் வாழ்ந்த மகாயான தத்துவஞானி. யுவான் சுவாங்கு அவரைத் தேவபுருசர் (தேவ புருடர்) என்று குறிப்பிடுகிறார். நாகார்ச்சுனரால் தொடங்கப்பெற்ற மாத்யமிகக் கோட்பாடுகளின் தலைசிறந்த பேராளராக ஆரியதேவர் விளங்கினார். சீனப்பயணி யுவான் சுவாங்கு அவரைக் குறிப்பிட்டுள்ளார். கிரணநிருபர், கணதேவர், நீல்நேத்திரர், பிங்கல நேத்திரர் என்னும் பெயர்களும் அவருக்குண்டு. ஆரியதேவர் தென்னிந்தியாவில் பிறந்தவர் என்பது யுவான் சுவாங்கின் கருத்தாகும். மகாகோசலம், பிரயாகை, வைசாலி போன்ற தலங்களுக்கு வருகை புரிந்து தம்மை எதிர்த்தோரைத் தம் வாதத்தால் வென்று வாகை சூடியவர் என்றும் சீனப் பயணி ஆரிய தேவரைப் பற்றிக் கூறியுள்ளார். நாகார்ச்சுனரை

இரண்டாம் சந்திரகுப்த விக்கிரமாதித்தியரின் காலத்தவர் என்று கருதுவோரும் உண்டு. மாத்யமிகக் கோட்பாடுகளைக் கூறும் பல நூல்களின் ஆசிரியர் அவர் என்றும் கருதுகிறார்கள்.

**ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்:** சங்க காலத்தில் வாழ்ந்த பாண்டிய மன்னருள் சிறப்புமிக்க ஒருவன். இவன், பாண்டியன் ஆரியப் படைகடந்த நெடுஞ்செழியன் என்றும் குறிக்கப் பட்டுள்ளான். இவனது பாடல் ஒன்று புறநானூற்றில் இடம் பெற்றுள்ளமையால் (183) இவன் சிறந்த புலவன் என்பது தெரிகிறது. இப்பெயருக்கு, 'ஆரியப் படை தந்த நெடுஞ்செழியன்' என்னுமொரு பாடமும் உள்ளது. 'ஆரியப்படை கடந்த' என்னும் அடைமொழி, 'வடவாரியர் படைகளை எதிர்த்து நின்று, போர் செய்து வென்ற இவனுடைய பேராண்மையை' விளக்கி நிற்கிறது. 'உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்' எனத் தொடங்கும் இவனது புறநானூற்றுப் பாடல் கல்வியின் இன்றியமையாமையை எடுத்துக் காட்டுவதாக உள்ளது.

தீர ஆராயாது கோவலனைக் குற்றவாளி என மயங்கிக் கொல்வித்துப் பின் உண்மை உணர்ந்து அரியணையிலிருந்து வீழ்ந்து உயிர் நீத்த பாண்டியன் இவனாவான் என்று சிலர் கூறுகின்றனர். இவன் இறந்தபோது மனைவி கோப்பெருந்தேவியும் உடனுயிர் நீத்தனள். இவனை இளங்கோவடிகள், 'வடவாரியர் படை கடந்து, தென் தமிழ்நாடு ஒருங்கு காணப் புரைதீர் கற்பின் தேவி தன்னுடன் அரைசு கட்டிலில் துஞ்சிய பாண்டியன் நெடுஞ்செழியன்' என்று குறிப்பிட்டுள்ளார். அங்ஙனமாயின் இம்மன்னன் சேரன் செங்குட்டுவன் காலத்தவனாவான்.

**ஆரியப்பப் புலவர்** கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்களுள் ஒருவர். தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த கும்பகோணம் என்னும் திருக்குடந்தையில் பிறந்தவர். வேளாண் மரபினர். இவர் தமிழில் பாகவதத்தினை 4970 விருத்தப் பாக்களால் இயற்றியுள்ளார். பாகவதத்தினைக் கி.பி. 1881-ஆம் ஆண்டில் தமிழில் அச்சிட்ட, கோமளவல்லிபுரம் இராசகோபால் பிள்ளை இந்நூல் ஆரியப்பப் புலவரால் இயற்றப்பட்டது என்று குறிப்பிட்டுள்ளார். ஆனால் இந்நூல் 'இவர் இயற்றியதன்று, செவ்வைச் சூடுவாரால் இயற்றப்பட்டது என்று ஆய்வாளர்கள் தெளிவுபடுத்தியுள்ளனர். 'கம்பனென்றும் கும்பனென்றும்' எனவரும் தனிப்பாடல் வெண்பாவிலுள்ள 'மன்னாவலர் பரவும் வாயல்அன தாரியப்பன்' என்னும் அடியினை, 'மன்னா வலர்புடைசூழ் வாழ் குடந்தை ஆரியப்பன்' என மாற்றிக் கொண்டு, இவ்வடி ஆரியப்பப் புலவரைக் குறிப்பிடுவதாகக் கூறுகின்றனர்.

**ஆரியப்பொருநன்** ஆரியப் பொருநன் என்பவன் சங்க காலத்தே வாழ்ந்த குறுநில மன்னர்களுள் ஒருவன்; பொருநன் என்னும் சொல் அவன் ஓர் அரசன் என்பதைக் குறிக்கிறது. இவன் சேர நாட்டுப் பகுதி ஒன்றை ஆண்டவன். சேர மன்னன் ஒருவனின் படைத்தலைவனாகக் கணையன் என்பவன் ஒரு காலத்தில் இருந்தான்; அக்கணையன் காலத்தில் வாழ்ந்தவன் இந்த ஆரியப் பொருநன்.

பாணன் என்னும் ஒரு குறுநில மன்னனுக்கும் ஆரியப் பொருநனுக்கும் ஒருமுறை மற்போர் நடைபெற்றது. பாணன் பொருநனைக் காட்டிலும் மிகச் சிறந்த வலிமையுடையவன். போர் கடுமையாக நடைபெற்றது. அப்போரில், பாணனுடைய கைப்பிடிக்குள் ஆரியப் பொருநன் மீள முடியாதபடி அகப்பட்டுத் தத்தளித்தான். பாணன் இறுக்க இறுக்க, பொருநன் வலிமையெல்லாம் போய் இறுதியில் இறந்துபோனான். அந்த மற்போரைக் கண்டு கொண்டிருந்தவர்களுள் சிலர் ஆரியப் பொருநனே வெற்றி பெறுவான் எனச் சூளுரைத்திருப்பர் போலும்; அவர்களுள் ஒருவன் கணையன் என்பவன். அவன் சேரன் படைத்தலைவன், பொருநன் இறந்துபட்டதைக் கண்டவுடன், அவன், தான் சூள் உரைத்தமைக்கு நாணிச் சென்றான். நாணிச்சென்ற அக்காட்சியைப் பரணர் தம் அகநானூற்றுப் பாட்டில் (386) குறிப்பிட்டுள்ளார். கே.நா.

**ஆரியபட்டர்** என்பவர் பீகார் மாநிலத்திலுள்ள பாட்னாவைச் சார்ந்தவர். இவ்வூர் முன் காலத்தில் குசும்புரம் என்ற பெயரில் வழங்கப்பட்டது. ஆரியபட்டர் (Aryabhta) கி.பி. 476-இல் பிறந்தார். இவர் கி.பி. 499-இல் 'ஆரியபட்டியம்' (Aryabhatium) என்னும் நூலை எழுதினார். இது வானியல் மற்றும் கணக்கியல் தொடர்பான முதல் நூலாகும். இந்நூலும், அதன்மீது எழுதப்பட்ட பிற்கால விளக்கக் குறிப்புகளும், அதிலிருந்து எடுத்தாளப்பட்ட மேற்கோள்களும் மட்டிலுமே ஆரியபட்டரைப் பற்றியும் இவர்தம் படைப்புகளைப் பற்றியும் தெரிவிக்கும் மூலப் பொருள்களாகும். இவரது குடும்பம் மற்றும் வாழ்க்கை பற்றிய விவரங்கள் எவையும் கிடைக்கப் பெறவில்லை. "அறுபது ஆண்டுகள் கொண்ட அறுபது யுகங்கள் மற்றும் மூன்று யுக பாதங்கள்" முடிந்தபோது தமக்கு 23 ஆண்டுகள் என்று தம் நூலில் ஆரியபட்டர் குறிப்பிடுகிறார்.

**ஆரியபட்டியம்:** இந்நூல் ஆரிய சித்தாந்தம் என்றும் அழைக்கப்பெறும். கி.பி. ஆறாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் எழுதிமுடிக்கப்பட்ட நூல் இது. வானியல் கணக்கியல் ஆகியவைபற்றிப் பொதுவாக அறியப்பட்ட மற்றும் ஏற்றுக் கொள்ளப்பட்ட செய்திகள் கொண்ட நூலாக உள்ள இது நான்கு

பகுதிகளாக அமைந்துள்ளது. தேசகீதிகம் எனப்படும் முதற்பகுதி 10 செய்யுள் பத்திகளைக் கொண்டு வடமொழி நெடுங்கணக்கில் எண்களைப்பற்றி விவரித்துக் கூறுகிறது. இரண்டாம் பகுதியான கணிதப் பாடம் அல்லது கணக்கியல் 33 செய்யுள் பத்திகளைக் கொண்டது. மூன்றாம் பகுதியான காலக் கிரிய பாடம் என்பது காலக்கணக்கீடு குறித்து 25 பத்திகள் கொண்டது. நான்காம் பகுதியான கோளப்பாடம் 50 செய்யுள் அமைந்த பகுதியாகும். இவற்றுள் 108 செய்யுள் பத்திகளடங்கிய இறுதி மூன்று பகுதிகள் கூட்டாக 'ஆரிய சாத்திரம்' என்று சொல்லப்பெறுகின்றன.

வானியல் பற்றிய ஆரியப்பட்டரின் கூற்றுகள் பழமைக் கருத்துகளுக்கு முரண்பட்டவையாகும். அக்கால வைதீகக் கருத்துகளிலிருந்து மாறுபட்டு, பூமி உருண்டை வடிவானதென்றும், ஓர் அச்சில் அது சுழல்கிறதென்றும் இவர் கூறினார். சூரிய சந்திர ஒளி மறைப்புகளைப் பற்றிய உண்மைத் தத்துவத்தை விவரித்து, ஒளி மறைப்புகள் சூரியனால் ஏற்படுவன அல்ல என்றும் பூமி மற்றும் நிலவின் நிழல்களால் ஏற்படுவன என்றும் கூறினார். மேலும் நிலவு இருள் கொண்டதென்றும், கதிரவனால் ஒளிபெறுகிறது என்றும் கூறினார். ஞாயிற்றியக்கக்கோடி பற்றியும் பகலிரவு சமமான நிலை குறித்தும் கண்டறிந்தார். அவற்றை ஓர் ஒழுங்கான அசைவில் வரையறுத்து, அதற்கான எல்லையையும், காலத்தையும் ஒதுக்கினார். கோள் சுழற்சித் தத்துவத்தை விரிவாக்கி கோளியக்க நிலையைப் பற்றியும் கண்டறிந்தார்.

**கணக்கியல்:** குறிக்கணக்கியலுக்கு (Algebra) வித்திட்ட நிலக்கணக்கியலில் (Geometry) புதிய கண்டுபிடிப்புகள் செய்தார். முதற்பாகைக்குரிய உறுதி செய்ய இயலா சமநிலைக்கூற்றுக் கணக்கியலுக்கு (Indeterminate equation of the first degree) விடை காண ஒரு முறையை அறிந்தார். நான்காம் தசம நிலைக்குச் சரியாக 'n' மதிப்பை 3.1416 என்று பெற்றார். ஒளிப்பாதையில் வைக்கப்பட்ட ஒரு பொருளினால் ஏற்பட்ட நிழலின் பருமனைக் கணக்கிட ஒரு வழிமுறையையும் இவர் அளித்தார். இதுவே ஒளி மறைப்புகளைக் கணக்கிடுவதற்கு அடிப்படையாக அமைந்தது. தார்மியற்றிய செய்யுள் ஒன்றில் பிதாகரசு தேற்றத்தை மேற்கோள் காட்டியுள்ளார்.

**எழுத்து முறை இலக்கக் குறிகள்:** (Alphabetical notation of numbers): இலக்கக் குறிகளைக் கொண்டு உயர்ந்த எண்களை வெளிப்படுத்தினார். 15 உயிரெழுத்துகள், 25 முற்றுப்பெற்ற மெய்யெழுத்துகள், மற்றும் 8 பிற எழுத்துகள் ஆகியவை அடங்கிய ஒலிமுறை எழுத்து வரிசை நெடுங்கணக்கைப் பண்டைக்காலத்திய ஒலிமுறை நூலாளர்கள் வகுத்திருந்ததால், இவரால் அவ்வாறு வெளியிட முடிந்தது. ஆரியப்பட்டரின் எழுத்துமுறை எண்குறிப்புக்கு மற்றுமொரு விளக்கம் அளிக்கவேண்டுமெனில், இவர் மகாயுகத்தில் நிலவின் சுழற்சி எண்ணிக்கையை 'Cayagiyinusuchlr' என்னும் சொல்லால் தெரிவித்துள்ளதைக் குறிப்பிடவேண்டும். வலமிருந்து இடமாக இச்சொல்லை அசை அசையாகப் பார்த்தால் 6, 30, 300, 3,000, 50,000, 7,00,000, 50,000,000 என்ற எண்கள் கிடைக்கின்றன. பெரிய அளவில் அடங்காத எண்களை மிகச் சுருக்கமான வடிவில் செய்யுளாக இயற்றும் முறையை இவர் உருவாக்கினார். இவ்வெழுத்து இலக்கக் குறியீட்டு முறை தசகீதிகாவில் மட்டில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**அறிவியல் புதுமையாளர்:** குறிக்கணக்கியலைச் செயற்படுத்திய முதல் இந்திய ஆசிரியர் ஆரியபட்டரே ஆவார். எனினும் இவர்தம் கருத்துகள் பிற்கால அறிஞர்களால் மிகக் கடுமையாகத் தாக்கப்பட்டன. பிரம்மகுப்தர் என்பவர் இவர்தம் கருத்துகளைச் சாடினார். அராபியப் பேரரசில் கி.பி. 8–ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியிலிருந்து, கி.பி. 9–ஆம் நூற்றாண்டின் முற்பகுதி வரை ஆண்ட அப்பாசித்து காலிபுகளான அல்மன் சூர்மற்றும் அல்மானு ஆகியவர்களின் காலத்தில் ஆரியபட்டரின் வானியல் முறை சிறப்புப் பெற்று விளங்கியது. அராபிய மொழியில் 'அர்சதார்' என்று ஆரியபட்டர் வழங்கப்பட்டார். பேரரசர் சூலியனின் காலத்தில் புகழ்பெற்று விளங்கிய மிகப்பெரிய கிரேக்கக் குறிக்கணக்கியல் வல்லுநர் தயோபாண்டசு குறிக்கணக்கியல் அறிவுடன், ஆரியபட்டரின் குறிக்கணக்கியல் அறிவை ஒப்பிடுங்கால், தயோபாண்டசுக்குச் சற்றும் பழக்கமில்லாத 'அறிய இயலாத பல குறிகளடங்கிய சமன் தொடர்கணக்கியலைத் தீர்க்கும் முறைமை' குறித்து ஆரியபட்டர் அறிந்திருந்தார் என்பது விளங்குகிறது. முதல் நிலையின் உறுதிசெய்ய இயலாச் சமன் தொடர் கணக்கைத் தீர்க்கும் பொது முறையை ஆரியபட்டர் அறிந்திருந்தார். இதிலும் இவர் அறிவு தயோபாண்டசை விடச் சிறப்பாக இருந்தது.

ஆரியபட்டர் நூலின் மூலப் பகுதி கிடைக்கப் பெறவில்லை. ஆரியபட்டரின் கணக்கியல் மற்றும் வானியல் கோட்பாடுகளைக் கொண்ட ஆரியபட்டியம் என்னும் நூலைக் கி.பி. 1874-இல் கெர்ன் (Kern) என்பவர் இலேடனில் வெளியிட்டார். இதுவே ஆரியபட்டரைப் பற்றி அறிய மிகவும் துணை செய்கிறது.

**ஆரியபட்டா:** ஆரியப்பட்டா 1 என்னும் முதல் இந்

திய செயற்கைக்கோள் ஆரியபட்டரின் பெயரில் 1975 -ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதம் 19-ஆம் நாள் விண்ணில் ஏவப்பட்டது. உருசியாவை உட்கொண்ட எட்டு நாடுகளின் உதவியோடு இச்செயல் ஆற்றப்பட்டது. ஐந்து கோடி உருபாய் செலவில், 250 இந்தியப் பொறியியலாளர்கள் 26 மாதங்களில் ஆரியபட்டா 1-ஐ உருவாக்கினர். தேவையான சூரியக் கலங்களை உருசியா வழங்கியது. ஆனால், இந்தியக் கட்டுப்பாட்டில் பறக்கவிடப்பட்டது. இரண்டரை யாண்டுக்காலம் பூமியைச் சுற்றிவரும் என்று கணிக்கப்பட்ட ஆரியபட்டா 1 குறித்த காலத்தைத் தாண்டியும் சுழன்றது. ஏறத்தாழ 695 கி.மீ. உயரத்தில் பூமியை ஆரியபட்டா 1 சுற்றியது. இது சுற்றிவரும் காலம் 96.6 நிமிடங்களாகும். ஒரு நாளைக்கு 15 சுற்றுகள் சுற்றும். இதன் வேகம் மணிக்கு 28,800 கி.மீ. அதாவது, பூமியின் வேகவீதத்தில் 71.6 விழுக்காடுகளாகும்.

செந்நீலத்துடன் நீல நிறமும் சேர்ந்து அமைந்தது ஆரியப்பட்டாவாகும். இது 26 முகத் தோற்றங்களைக் கொண்டது. ஏறத்தாழ 1.54 மீ. அகலமும் 1.16 மீ. உயரமும் கொண்டு இது விளங்கியது. இதன் எடை 330கி.கி. ஆகும். ஆரியப்பட்டாவில் 40 துணை அமைப்புகள் உள்ளன. இச்செயற்கைக் கோள் செல்லும் பாதையில் உள்ள தட்பவெப்ப நிலை 170 கெல்வின் (Kelvin) முதல் 370 கெல்வின் வரை மாறுதல் அடைந்தாலும் இதனுள் உள்ள தட்பவெப்ப நிலை ஒரே நிலையில் காத்துவரப்பட்டது. உயர் அழுத்தத்தில் காற்று மண்டலத்திலுள்ள செயலில்லாப் பெருவெளியை நுனியின் வழியாகப் பீறிடச் செய்வதன்வாயிலாகச் செயற்கைக்கோள் சுழல வைக்கப்பட்டது. இக்கோள் செல்லும் பாதையில் அதை நிலைத்திருக்கச் செய்யச் சுழற்சி இன்றியமையாததாகிறது. பூமியைச் சுற்றிக் கொண்டிருக்கும் பிற செயற்கைக் கோள்களுடனும் ஆரியபட்டா 1 தொடர்பு கொண்டது. வெ. பா.

துணை நூல்:

Majumdar, R.C., The Classical Age, History and culture of the Indian people, Vol. III, Bharatiya Vidya Bhavan, Bombay, 1978.

**ஆரியர்:** இந்திய வரலாற்றில் ஆரியர், ஆரியம் என்ற சொற்கள் பயின்று வருகின்றன. ஆரியர்கள் இந்திய நாட்டைச் சேர்ந்தவர்களா, வெளிநாடுகளில் இருந்து இங்கே வந்து குடியேறியவர்களா என்ற கேள்விகள் வரலாற்று அறிஞர்களாலும் மொழியியல் வல்லுநர்களாலும் ஆராயப்பட்டுள்ளன. பொதுவாக, ஆரியர்கள் என்ற சொல் ஆரிய இனத்தையும், ஆரியம் என்ற சொல் ஆரியர்களுடைய மொழியாகிய சமசுகிருதத்தையும் குறிப்பனவாகும். விந்தியமலைக்கு வடக்குப் பகுதியில் ஆரியர்கள் குடியேறியதால் அப்பகுதிக்கு ஆரியவர்த்தம் என்ற பெயரும் வழங்கியது. விந்திய மலைக்குத் தெற்குப் பகுதியிலும், ஆரியர்கள் பரவிக் குடியேறிய போதிலும் பெரும்பாலோர் திராவிட இனத்தைச் சேர்ந்தவர்களாகக் கருதப்பெறுகிறார்கள். ஆரியர்களுடைய வரலாற்றை அறிந்து கொள்ளுவதற்கு வேதகால இலக்கியங்களே சிறந்த சான்றுகளாக உள்ளன.

வேதகால இலக்கியங்கள்: சமசுகிருத மொழியில் உள்ள இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்ற நான்கு வேதங்களும் அவற்றின் பாகுபாடுகளாகிய சம்கிதை, பிராமணம், ஆரண்யகம், உபநிடதங்கள் என்ற பகுதிகளும் வேதகால இலக்கியங்கள் என்று சொல்லப்பெறுகின்றன. வேதம் என்ற சொல் 'வித்' என்ற பகுதியிலிருந்து தோன்றியது என்றும், அது உண்மையான ஞானத்தைப் போதிக்கும் நூல் என்றும் அறிஞர் கூறுவர். வேத இலக்கியங்களில் சம்கிதையும் பிராமணமும் கர்மகாண்டம் என்றும், ஆரண்யகமும் உபநிடதங்களும் ஞான காண்டம் என்றும் கருதப்பெறுகின்றன. நான்கு வேதங்களின் பகுதிகளாகிய சம்கிதை, பிராமணம், ஆரண்யகம், உபநிடதங்களைப் போன்றவை சுருதிகள் அல்லது இறையருள் பெற்ற இலக்கியங்கள் எனக் கூறுவர். இவற்றிற்கு 'அபுருசேயா' (மனிதர்களால் இயற்றப்பெற்றவையல்ல) என்ற பெயர் இருந்தபோதிலும், வேத காலத்தில் வாழ்ந்த முனிவர்களால் இவை அருளப் பெற்றவை என்ற கருத்து நிலவுகிறது. இந்திய நாட்டில் குடியேறிய ஆரியர்களால் இந்த வேத இலக்கியங்கள் இயற்றப்பெற்றுச் செவிவழிச் செய்தியாக மனனம் செய்யப்பெற்றுப் பின்னர் பஞ்சநதி தீரத்தில் ஆரியர்கள் நிலை பெற்ற பிறகு நூல்வடிவில் எழுதப்பெற்றனவெனக் கூறலாம். இந்த வேத இலக்கியங்கள் ஒரே காலத்தில் முழுமையாகத் தொகுக்கப் பெற்றவையல்ல. பல்வேறு காலங்களில் பல இருடிகளால் இயற்றப்பெற்றுப் பின்னர் முழுமையான வடிவைப் பெற்றனவாகும்.

நான்கு வேதங்களில், இருக்கு, யசுர், சாமம் என்ற மூன்றும் திரியை என்ற சிறப்பான பெயரில் குறிக்கப் பெறுகின்றன. ஆரியருடைய வரலாற்றை அறிவதற்கு, இருக்கு, யசுர், அதர்வணம் என்ற மூன்று வேதங்கள் சிறப்பாகப் பயன்படுபவையாகும். அதர்வண வேதம் முதல் மூன்று வேதங்களுக்குப் பிறகு தோன்றியதாயினும், இருக்குவேத காலத்திற்கு முற்பட்ட ஆரியர்களுடைய வரலாற்றைக் கூறும் பல வரலாற்றுண்மைகளைக் கொண்டுள்ளது. பண்டைக் கால ஆரியர்களுடைய வாழ்க்கை வரலாற்றை இருக்குவேதத்தில் காணமுடிகிறது.

ஆரண்யகத்திலும் உபநிடதங்களிலும் பிற்கால ஆரியர்களுடைய வரலாற்றை உய்த்துணரலாம்.

**ஆரியர்களின் ஆதி இருப்பிடம்:** வேதகால இலக்கியங்களைக் கொண்டு ஆரியர்கள் வெளி நாட்டிலிருந்து இந்தியாவிற்கு வந்தனரா அல்லது இந்தியாவிலிருந்து வெளிநாடுகளுக்குச் சென்றனரா என்று ஆராய்வது அமைவுடைத்தாகும். ஆரியர்களின் ஆதி இருப்பிடம் ஐரோப்பியக் கண்டம் என்றும் ஆசியப் பெருங்கண்டத்திலுள்ள நாடுகள் என்றும் இருவேறு கொள்கைகளை ஆராய்ச்சியாளர் பின்பற்றியுள்ளனர். வட்டதுருவத்திலிருந்து பஞ்சநதி தீரம் வரையில் உள்ள நாடுகளில் சில பகுதிகளில் ஆரியர்களின் ஆதி இருப்பிடம் இருந்திருக்கக்கூடும் என்று கருதியுள்ளனர். பேராசிரியர் கைல்சு (Giles) என்பார் அங்கேரி நாடு ஆரியர்களுடைய ஆதி இருப்பிடமாக இருக்கலாம் என்று கூறினார். மொழியியல் துணைக்கொண்டு ஆரிய மொழியான சமக்கிருதம், இந்தோ - ஐரோப்பிய மொழியினத்தைச் சேர்ந்தது என்றும், உருசியாவிற்கு அருகில் உள்ள இலிதுவேனிய மொழிக்கும், சமசுகிருத மொழிக்கும் ஒற்றுமையுள்ளது என்றும், ஆகையால் வடக்கு ஐரோப்பாவில் ஆரியர்கள் ஆதிமுதல் இருந்திருக்கலாம் என்றும் கூறுவர். மற்ற ஐரோப்பிய ஆராய்ச்சியாளர் பிரான்சு நாட்டின் வடபகுதியிலிருந்து யூரல் மலைகள் வரை பரவியுள்ள செருமன் சமவெளியிலும், கருங்கடலுக்கு வடக்கில் உள்ள உருசியப் பகுதியிலும் ஆரியர்கள் பரவி வாழ்ந்திருக்கவேண்டுமெனக் கூறுவர். உலோகமான்ய பாலகங்காதர திலகர் என்பார் தாம் எழுதிய 'ஆரியர்களின் வடதுருவ ஆதி இருப்பிடம்' என்னும் நூலில் வடதுருவத்தில் ஆரியர்கள் வாழ்ந்தனர் என்று கூறுவர். ஐரோப்பியக் கண்டத்தில்தான் இந்தோ-ஐரோப்பிய மொழிகள் வழங்கும் இடங்கள் மிகுதியாக உள்ளன; ஆரிய மொழியாகிய சமசுகிருதமும் இந்தோ-ஐரோப்பிய மொழி இனத்தைச் சேர்ந்ததாகையால் ஆரியர்கள் ஐரோப்பாக் கண்டத்தைச் சேர்ந்தவர்கள் என்று இவர்கள் நம்பினர். இந்தோ-ஐரோப்பிய மொழிகள் வழக்கத்திலுள்ள பகுதிகள் ஐரோப்பாக் கண்டத்தில் மிகுதியாகவும் ஆசியாக் கண்டத்தில் குறைவாகவும் இருப்பதால், இவர்களுடைய கொள்கை வலிவுடையதாகத் தோன்றுகிறது.

ஆரியர்கள் ஆசியாக்கண்டத்தில் இருந்தவர்கள் என்ற கொள்கைப்படி, மத்திய ஆசியாவும் இந்தியத் துணைக்கண்டமும் ஆரியர்களின் ஆதி இருப்பிடம் ஆகும் எனக் கூறுவர். மத்திய ஆசியாவில் இருந்த தங்களுடைய ஆதி இருப்பிடத்திலிருந்து, உலக வரலாற்றின் தொடக்கக் காலத்தில் ஆரியர்கள் ஐரோப்பாவிற்குக் குடியேறினர் என்றும் கூறுவர். 'இருக்குவேத காலத்து இந்தியா' என்ற நூலை எழுதிய ஏ.சி. தாசு (A.C. Doss) என்ற வரலாற்று அறிஞர், சிந்து, சீலம், சீனாபு, ரவி, பியசு, சட்லசு, சரசுவதி என்னும் ஆறுகளால் வளம்பெற்ற சப்த சிந்து நாடே (Sapta Sindhu) ஆரியர்களுடைய ஆதி இருப்பிடம் எனக் கூறுவர். இருக்குவேதத்தில் கூறப்பெற்ற நிலவியல் அமைப்பும், மரம்செடி கொடிகளும் சப்த-சிந்துப் பகுதியில் அடங்கிய காசுமீரப் பள்ளத்தாக்கு, காந்தாமரம், பஞ்சாபு கங்கை ஆற்றின் மேற்குப் பகுதியையும் அங்குள்ள உயிர் விலங்குகளையும் ஒத்துள்ளன. வேதங்களில் ஆரியர் என்ற சொல் தசுயு அல்லது தாசர்கள் என்ற திராவிடர் என்பவர்களை வேறுபடுத்திக் காட்டுவதற்கு வழங்கியது. சப்தசிந்துப் பகுதிக்கும், மேற்கு ஆசிய நாடுகளுக்கும் நிலவழித் தொடர்பிருந்தமையால், ஆரியர்கள் இந்தியாவில் இருந்து ஈரான்-ஈராக்கு ஆகிய நாடுகளுக்குச் சென்றிருக்க வேண்டும் என்றும் கூறுவர். ஆனால், இக்கொள்கையை வரலாற்று அறிஞர்கள் பெரும்பாலோர் ஒப்புக் கொள்ளவில்லை.

வேதகால ஆரியர்களின் ஆதி இலக்கியங்களில் கூறப்பெற்ற பொருள்களும், உயிரின வகைகளும் இந்தியத் துணைக் கண்டத்தில் இருந்தனவாகத் தெரியவில்லை. ஆதி இலக்கியங்களில் கூறப்பெற்றுள்ள பைன் (Pine), ஓக்கு (Oak), வில்லோ, பர்ச்சு முதலிய மரங்கள் இந்தியாவில் இல்லை. சிங்கம், யானை, ஆலமரம், அரிசி முதலியவைகள் பற்றிய செய்திகள் காணப்பெறவில்லை. இந்தியாவில் இருந்த மற்ற இனத்தவர்களின் மொழி, பழக்கவழக்கங்கள் முதலியவை ஆரியர்களுடைய மொழி பழக்க வழக்கங்களிலிருந்து வேறுபட்டுள்ளன. ஆரியர்களின் வேதங்களும், ஈரானியமக்களின் வேதமாகிய செண்டு அவசுதம் (Zend Avesta) என்பதும் பலவிதங்களில் ஒற்றுமையாக உள்ளன. இவ்விரு இலக்கியங்களுக்கும் ஐரோப்பிய மொழிகளாகிய கிரேக்கம், இலத்தீன், செருமன், ஆங்கிலம் முதலிய மொழிகளில் உள்ள இலக்கியங்களுக்கும் பல ஒற்றுமைகள் காணப்பெறுகின்றன. மேற்கூறப்பெற்ற மொழிகள் இந்தோ-ஐரோப்பிய மொழிகள் என்னும் பெரும் பிரிவில் அடங்கியவையாகும். மத்திய ஆசியாவில் வழக்கத்தில் உள்ள சக (Saka), தெக்காரியன் (Tokharian) மொழிகளுக்கும், கிரேக்கம், இலத்தீன் முதலிய மொழிகளுக்கும் இடையே பல ஒற்றுமைகள் காணப்பெறுகின்றன. ஆகவே, முற்கூறப்பெற்ற மொழிகள் இந்தோ-ஐரோப்பிய மொழிகளுக்கும், வேதங்கள், அவசுதம் முதலிய இலக்கிய மொழிகளுக்கும் பிறப்பிடமாகிய ஓர் ஆதி மொழியெனக் கருதலாம். எனவே வேதகால சமசுகிருத மொழியைப் பேசிய ஆரியர்கள் பெரும்பாலும்

மத்திய ஆசியப் பிரதேசத்திலிருந்து இந்தியாவிற்குக் குடிபெயர்ந்திருக்க வேண்டும்.

பலுசிசுத்தானத்தில் உள்ள ஒரு பகுதியில் பிராகுவி (Brahui) என்னும் திராவிட இனமொழி இன்றும் வழக்கில் உள்ளது. இதிலிருந்து ஆரியர்கள் இந்தியாவின்மீது படையெடுத்து வருவதற்குமுன் பலுசிசுத்தானத்தில் திராவிட மொழி வழங்கியிருந்ததெனக் கொள்ளலாம். மேலும், மேற்கு ஆசியாவில் உள்ள கப்படோசியாவில் (Cappadocia) போகாசு-காய் (Bogoa z- Koi) என்னுமிடத்தில் செருமானிய நாட்டுத் தொல்லியல் ஆய்வாளர்கள் கி.மு. 1400-ஆம் ஆண்டிற்கு முன் பொறிக்கப்பெற்ற சில கல்வெட்டுகளைக் கண்டுபிடித்துள்ளனர். இக்கல்வெட்டுகள் அங்கு வாழ்ந்த மக்கள் கூட்டத்தினர்களுக்கு இடையே தோன்றிய சில உடன்படிக்கைகளைப் பற்றிக் கூறுகின்றன. இவ்வுடன்படிக்கைகளில் இந்திரன், வருணன், நசாத்தியர் போன்ற ஆரியக் கடவுளர்களின் பெயர்கள் சாட்சிகளாகக் கூறப்பட்டுள்ளன. ஆகவே, கி.மு. 1400-ஆம் ஆண்டிற்கு முன்னர் இந்தோ-ஈரானிய ஆரியர்கள் மேற்கு ஆசியாவில்குடியேறி இருக்க வேண்டும் என்ற செய்தி உய்த்துணரப் பெறுகிறது. இதனால், ஆரியர்கள் இந்திய நாட்டிற்கு எப்பொழுது குடிபெயர்ந்தனர் என்பது புலனாகாமற்போனாலும் அவர்கள் இந்திய நாட்டின் பழங்குடிகள் அல்லர் என்பது தெளிவாகிறது.

இருக்குவேத காலத்திய ஆரியர்களுடைய புவியியல் அறிவு, அவர்கள் இந்தியாவில் முதன்முதல் எங்குக் குடியேறினர் என்பதைத் தெளிவாக்குகிறது. அவர்களின் இலக்கியங்களில் சிந்து ஆற்றின் கிளை ஆறுகளும் மற்றைய ஆறுகளும் சுமார் இருபத்தைந்திற்குமேல் கூறப்பெறுகின்றன. இந்த ஆறுகள் பாயப்பெற்ற இடங்கள், தென்கிழக்கு ஆப்கானிசுத்தானம், வடமேற்கு எல்லை மாகாணம், பஞ்சநதிதீரம் முதலியவை. இவை இக்காலத்திய பாகிசுத்தான் பகுதிகளாகும். யமுனை ஆறும் கங்கையும் சிற்சில சமயங்களில்தாம் குறிப்பிடப்பெறுகின்றன. இந்த ஆற்றங்கரைகள் ஆரியர்கள் மேற்கிலிருந்து கிழக்கே பரவிய எல்லைகளைக் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். இருக்கு வேதத்தில் ஆரியர்களுக்கும் திராவிடர்களுக்கும் இடையே நடந்த போராட்டங்கள் விவரிக்கப்பெற்றுள்ளன. வடமேற்கு இந்தியப் பகுதிகளில் வாழ்ந்த பழங்குடிமக்களை ஆரியர்கள் வென்று அடக்குவதற்கும், அவர்களிடமிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்வதற்கும் தங்கள் தெய்வங்களை வணங்கியுள்ளனர். இறுதியாகக் காசுமீரம், பஞ்சாபு, இராசபுதனம் முதலிய பகுதிகளில் வாழும் மக்களின் உடலமைப்பும், நிறமும், திராவிட இனத்து மக்களுடைய உடலமைப்பிலிருந்தும், நிறத்தில் இருந்தும் வேறுபட்டுள்ளன. ஆகவே ஆரியர்கள் மத்திய ஆசியப் பகுதியில் இருந்து இந்தியாவில் குடியேறினர் என்பது பகுத்தறிவிற்கேற்ற கொள்கையாகும்.

**ஆரியரின் அரசியல்:** சப்தசிந்துப் பிரதேசத்தில் ஆரியர்கள் குடியேறிய பிறகு தங்கள் நாடோடி வாழ்க்கையை விட்டு வீடுகளை அமைத்துக்கொண்டு நிலையான வாழ்க்கையைத் தொடங்கினர். அவ்வில்லங்களில் திருமணம் செய்துகொண்டு இல்லற வாழ்க்கையை நடத்தினர். கணவன் மனைவி உறவு அன்புடைமையை அடிப்படையாகக் கொண்டிருந்தது. மனைவி, இல்லத்து அரசியாகக் கருதப் பெற்றாள். பெண்களுக்குக் கல்வியறிவும் போதிக்கப்பட்டது. கோசா (Gosha) உலோபாமுத்திரை Lopamuda), அபலா (Apala), முத்கலனி (Mudkalani) முதலிய பெண்கள் சிறந்த கல்வியறிவைப் பெற்றிருந்தனர். ஆரியர்களிடையே பலதார மணங்களும் நடைபெற்றன. திருமண வயது வந்தபிறகே பெண்களுக்குத் திருமணம் நடைபெற்றது. குழந்தைகளை வளர்ப்பதில் தாயும், அவர்களுக்குக் கல்வியையும் நன்னடத்தையையும் போதிப்பதில் தந்தையும் முதன்மைப் பங்கு கொண்டனர். இரத்தத் தொடர்புடைய பல குடும்பங்கள் சேர்ந்தது இனக்குழு (Clan) ஆகும். பல இனக்குழுக்கள் சேர்ந்து வாழ்ந்த இடம் கிராமம் என்றும் பல கிராமங்கள் சேர்ந்தது மக்கள் (Jana) அல்லது மக்கள் கூட்டம் (Tribe) என்றும் கருதப்பட்டது. இருக்கு வேதத்தில் பரதர்கள், மத்சயர், கிரிவிசு, திரித்சுசு முதலிய பல கூட்டங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இக்கூட்டங்களுள் துர்வாசர்கள், யதுக்கள், புருக்கள், துருகூசு, அனுசு என்ற இனக்குழுக்கள் பெருமை பெற்றிருந்தன.

இனக் கூட்டங்களின் தலைவர்கள் போர்க்காலங்களில் தலைமை வகித்துப் போர் செய்தனர். இத்தலைவர்களே நாளடைவில் அரசர்கள் என்று குறிக்கப் பெற்றனர். அரச பதவி வகிப்பதில் தந்தைக்குப் பிறகு மகன் அரசுரிமை பெறுவது வழக்கமாயிற்று. சில இனக்குழுக்களில் பிரபுக்கள் சிலர் சேர்ந்து (Oligarchy) ஆட்சி நடத்தினர்; சில இனக்குழுக்களில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பெற்ற தலைவர்கள் மக்களின் விருப்பப்படி ஆட்சிபுரிந்தனர். அரசன், பிரபுக்கள், மக்கள் தலைவர்கள் ஆட்சிபுரிந்த நிலப்பகுதிகள் நாடு என்று பெயர் பெற்றது. அரசனால் ஆளப்பெற்ற நாடுகளை முடியாட்சி நாடுகள் எனக் கொள்ளலாம். மன்னர்களுக்கு முடிசூட்டு விழாவும் நடைபெற்றது. அரசன் பல அணிகலன்களையும், உயர்ந்த ஆடைகளையும் அணிந்து கொண்டு வீற்றிருந்தான். பல சிற்றரசர்களை அடக்கி ஆட்சிபுரிந்த பேரரசனுக்குச் சாம்ராடு (Samrat) என்ற பெயர் வழங்கியதாக இருக்கு வேதத்திலிருந்து அறியலாம்.

ஓர் இனக்கூட்டத்தின் அரசன் இனக்குழுக்களிடையே நடந்த போர்களில் தலைமை வகித்துப் போர் செய்வது வழக்கம். மற்ற இனக் குழுவினரின் தாக்குதலுக்கு ஆளாகாதபடி அவர்களுடைய உடைமைகளையும், உயிரையும் காப்பாற்றினான். அரசனின் புரோகிதன் மக்களுக்கு நீதி வழங்கினான். புரோகிதனும், படைத்தலைவனும், கிராமணியும் அரசனின் அதிகாரிகளாவர். அரசனுக்கு உதவி செய்வதற்குத் தூதர்களும் ஒற்றர்களும் நியமனம் செய்யப் பெற்றனர். மேற்கூறப்பெற்ற அலுவலாளர்கள் அன்றியும் சபை, சமிதி என்ற இரு அமைப்புகளும் இருந்தன என்று இருக்கு வேதத்திலிருந்து அறியலாம். சபைகளில் கல்வி கேள்விகளிலும் செல்வத்திலும் உயர்ந்த பெருமக்கள் அங்கம் வகித்தனர். சமிதியில் எளிய குடிமக்களும் இடம் பெற்றிருந்தனர். நாட்டில் நடைபெற்ற அன்றாட அரசியல் அலுவல்களில் சமிதி முதன்மைப் பங்கு கொண்டதெனக் கூறலாம்.

சமூக-பொருளாதார வாழ்வு: இருக்குவேத காலத்திய ஆரியர்களின் தலைமைத் தொழில் உழவாகும். உழவுத் தொழிலுக்கு அச்சாணியாக இருந்தவை பசுக்களும் மற்ற ஆடு மாடுகளும் ஆகும். பசுக்கள் முதன்மையான செல்வங்களாகக் கருதப் பெற்றன. நிலத்தை உழுது பயிரிடுவதற்கு ஏற்ற காளைமாடுகள் பயிர்த் தொழிலுக்கு இன்றியமையாதனவாக இருந்தன. பசுக்களிடமிருந்து பெற்ற பால், தயிர், வெண்ணெய் முதலியன சிறப்பான உணவுப்பொருள்களாயின. சிற்றூர்களிலும் நகரங்களிலும் பருத்தி, கம்பளம், பட்டு முதலியவற்றைக் கொண்டு ஆடைகள் நெய்யப்பெற்றன. பருத்தி, கம்பளம் முதலியவற்றைக் கொண்டு ஆடைகள் நெய்யப் பெற்று, சாயம் ஏற்றி, பூவேலைகள் புனைந்து பலவித ஆடைகள் தயார் செய்யப்பெற்றன. இல்லங்களை அமைப்பதற்குக் கொத்தர்களும் தச்சர்களும் கொல்லர்களும் இருந்தனர். மகளிர்க்கு வேண்டிய அணிகலன்களைச் செய்வதற்குப் பொற்கொல்லர்களும் இருந்தனர். தச்சர்களும், கொல்லர்களும், வண்டிகள், தேர்கள், போர்க்கருவிகள் முதலியவற்றைச் செய்தனர். மதுபானங்களைச் சேமித்து வைப்பதற்குத் தோற்பைகளையும், காலணிகளையும் செய்வதற்குத் தொழிலாளர்கள் இருந்தனர். பிணி நீக்கும் மருத்துவர்களும், மந்திரவாதிகளும் இருந்தனர் எனத் தெரிகிறது. பொருள்களை விற்பதும் வாங்குவதுமாகிய வாணிகம் பண்டமாற்று முறையிலும் நிசுகா (Nishka) என்ற தங்க நாணயங்களாலும் நடைபெற்றது.

தொழில் முறையால் தோன்றிய சாதிப்பிரிவினைகள் இருக்கு வேதகாலத்தில் தொடக்க நிலையில் இருந்ததெனக் கூறலாம். வேதங்களைப் பயின்று யாகங்கள் செய்வதும் கடவுள் வணக்கம் கூறும் மந்திரங்களை மனனம் செய்வதும் பார்ப்பனர்களுடைய தொழில்களாயின. போரில் ஈடுபடுவதும், அரசியல் நடத்துவதும் சத்திரியர்களுடைய தொழில்களாயின. இவ்விருவருடைய தொழில்களும் மற்ற மக்களுடைய தொழில்களைவிட உயர்ந்தவை என்ற கருத்துத் தோன்றியது. இத்தொழில்களைச் செய்யாத மக்கள் 'விசு' என்றழைக்கப் பெற்றனர். 'விசு' என்ற சொல்லிலிருந்து வைசியர் என்ற சொல் தோன்றிய தெனக் கூறுவர். மேலே கூறப்பெற்ற தொழில்கள் குலத்தொழிலாகக் கருதப்பெறவில்லை. ஒரே குடும்பத்தில் பிறந்த பலர் பலவகைத் தொழில்களைப் பின்பற்றினர் என்று கூறலாம்.

ஆரிய இனத்தைச் சேராதவர்களும், மற்றப் பழங்குடி மக்களும் தாசர்கள் என்று ஆரியர்களால் அழைக்கப்பெற்றனர். இவர்களைச் சூத்திரர்கள் என்று ஆரியர்கள் அழைத்தனர் என்று ஆராய்ச்சியாளர் கூறுவர். சாதிவேற்றுமை இருக்குவேதத்தின் இறுதிப்பகுதியாகிய புருச சூக்தத்தில்தான் கூறப்பட்டுள்ளது என்றும், இருக்குவேதத்தில் பிறப்பிற்கும் சாதிவேற்றுமைக்கும் இடமில்லை என்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர். இருக்குவேத காலத்தின் இறுதிக் காலத்தில்தான் சாதிப் பிரிவுகளும் குலப்பிரிவுகளும் தோன்றியிருக்கக்கூடும் என்றும் கருதப்பெறுகிறது. புருச சூக்தம் என்ற பாசுரத்தின் இறுதியில்தான் சாதிகள் கூறப்பெற்றுள்ளமையால் பார்ப்பனர், சத்திரியர், வைசியர் என்ற பிரிவுகள் இருக்குவேத காலத்தின் முடிவில்தான் தோன்றி இருக்க வேண்டுமெனத் தெரிகிறது.

ஆரியர்களில் சமய வாழ்க்கை: இருக்கு வேத காலத்து ஆரியர்களின் சமயம் உலகத்தில் காணப்பெறும் இயற்கை சக்திகளைத் தெய்வங்களாகக் கொண்டு அவற்றைத்துதித்து அக்கினியின் வாயிலாக யாகங்களைச் செய்து பல நைவேத்தியங்களை வழங்குவதாகும். பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்ற ஐம்பூதங்களையும் வணங்கினர். ஆகாயத்தில் வசிப்பதாகக் கருதப்பெறும் இந்திரன், வருணன், அசுவினி தேவதைகள் சூரியன், சாவித்திரி, மித்திரன், வருணன் முதலிய தெய்வங்கள ஒருவரே என்ற கொள்கையும் நிலவியது. இந்திரன், இடி, மின்னல், மழையாகிய இயற்கை மாறுபாடுகளுக்குத் தலைவனாக வணங்கப் பெற்றான். தேவர்களுக்குத் தலைவனாகக் கருதப்பெற்ற இந்திரன், ஆகாயத்தில் இருந்து மழைத்துளிகள் விழாத வண்ணம் செய்த விருத்திராசுரனைக்கொன்று மழை பெய்யும்படி செய்தான். அக்கினி, யாகங்களுக்குத் தலைவனாகக் கருதப் பெற்று, அவன் வாயிலாகத் தேவர்களுக்கு உரிய அவிர்ப் பாகங்கள் வழங்கப்பெற்றன. உசசு, ஆரண்யானி, மன்யூ முதலிய மானசீகத் தெய்வங்களும் வணங்

கப்பெற்றன. இதிகாசகாலத்தில் பெருமை பெற்ற உருத்திரன், விட்டுணு, பிரமன் முதலிய கடவுளர்கள் இருக்குவேத காலத்தில் பெருங்கடவுளர்களாகக் கருதப் பெறவில்லை. யாகங்களைச் செய்து அவற்றின் வாயிலாகத் தெய்வங்களுக்கு நைவேத்தியம் அளித்துப் பலவகைப் பேறுகளைப் பெற முடியும் என்று ஆரியர்கள் நம்பினர். "மரணத்திற்குப்பின் ஆன்மாவின் நிலை யாது?" என்பது பற்றி ஆதிகால ஆரியர்கள் ஆராய்ச்சி செய்யவில்லை. வேதகால ஆரியர்களால் வணங்கப் பெற்ற தெய்வங்கள் அவர்களைப்போலவே ஆண்மை, அதிகாரம், செயல் திறமை, வன்மை முதலிய குணங்களை உடையவர்களாகக் கருதப்பெற்றனர். பிற்காலத்தில் சிவனாகக் கருதப் பெற்ற உருத்திரன், திராவிடக் கடவுளாக இருக்கலாம் என்று கூறுவர். யாகங்களைச் செய்வதே முதன்மையான இறைவழிபாடு என்றும் பலர் கருதினர்.

இருக்குவேத காலத்தில் இறுதிக் கட்டத்தில் தோன்றிய உபநிடதங்களில் பல தெய்வ வணக்கம் குறைந்து 'ஒருவனே தேவன்' என்ற கருத்தும் மேலோங்கியது. 'தத்துவம் அசி' என்ற மகாவாக்கியத்தில் சீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றே என்ற மெய்ப்பொருள் கொள்கையும் வளர்ச்சியுற்றது. புண்ணியம், பாவம் ஆகிய கர்மங்களினால் பிறவி ஏற்படுகிறது. இவ்விரண்டிலிருந்து விடுபடுவதே மோட்சம் அல்லது வீடு என்பது உபநிடதங்களிலும் பிராமணங்களிலும் கூறப்பெற்றுள்ளது.

அ.கி.

துணை நூல்கள்:

Majumdar R.C., & Others, The Vedic Age, History & Culture of the Indian People, Vol. 1, Bharatiya Vidya Bhavan, Bombay, 1978.

Majumdar, R.C., Ancient India, Motilal Banarasidas, Delhi, 1975.

Majumdar R.C., & Others, An Advanced History of India, 4th Ed., Macmillan, Delhi, 1982.

**ஆரியான்** கிரேக்க வரலாற்று ஆசிரியர்களுள் ஒருவர். இவர் பெயர் இலத்தீன் மொழியில் 'பிளேவியசு ஆரியானசு' (Flavias Arrianus) என்று கூறப்படும். இவர் கி.பி. 100-ஆம் ஆண்டளவில் கிரீசு நாட்டில் நிகோமீடியா (Nicomedia) என்னும் ஊரில் பிறந்தார். இவர் தந்தையார் ஓர் உரோமானிய உயர்குடிமகன் ஆவார். இவர் எபிரசுப் பகுதியில் நிகோபாலிசு என்னும் ஊரில் படித்தார். பின்னர் உரோமாபுரிக்குச் சென்று, எட்ரியன் என்பார் பேரரசராக இருந்த காலத்தில் அவரிடம் பணி புரிந்தார்.

ஆரியான் (Arrian) கி.பி. 130-ஆம் ஆண்டில் பாதுகாவலர் (Consul) பதவியையும், பின்னர்க் கபாடோசியாவின் (Cappadocia) ஆளுநர் பதவியையும் ஏற்று, இறுதியில் ஆதென்சு நகரில் ஓய்வு பெற்றார். அங்கு இவருக்கு மதிப்புக் குடியுரிமை (Honorary Citizenship) வழங்கப்பட்டது. இவர் கி.பி. 172-ஆம் ஆண்டில் காலமானார்.

ஆதென்சு நகரில் வாழ்ந்தபோது இவர் பல் நூல்களை எழுதியுள்ளார். இந்தியாவைப் பற்றி இவர் எழுதிய நூல் 'இண்டிகா' (Indica) என்பதாகும். அலெக்சாந்தரின் படையெடுப்புச் செய்திகள் அனைத்தையும் ஏழு தொகுதிகள் கொண்ட ஒரு நூலாக எழுதியுள்ளார். இண்டிகா எட்டாம் தொகுதியாகும். இதில் அலெக்சாந்தரின் படைத் தலைவர்களுள் ஒருவரான நியார்க்கசு (Nearchus) என்பார், பாரசீக வளைகுடாவில் நிகழ்த்திய கடற் பயணத்தைப் பற்றியும், இந்தியப் பழக்க வழக்கங்களைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார். மெகசுதனிசு (Megasthenes, கி.பி. 4-ஆம் நூ.) என்பவர் இந்தியாவைப் பற்றி எழுதிய நூலுக்கும் 'இண்டிகா' என்பது பெயர். ஆரியான், 'தாக்டிகா' (Tactica) என்னும் நூலையும் இயற்றியுள்ளார். இந்நூல் தந்திரங்களைப் பற்றிக் கூறுகிறது.

**ஆரினாக்கோ** தென் அமெரிக்காவிலுள்ள ஓர் ஆறு. இது 2,062 கி.மீ. நீளமுள்ளது. பிரேசில் எல்லைக்கு அருகில் வெனிசூலாவிலுள்ள பாரிமா பீடபூமியில் உற்பத்தியாகிறது; கொலம்பியாவிற்கு வடமேற்கே பாய்ந்து கொலம்பியாவிற்கும் வெனிசூலாவிற்கும் எல்லையாக அமைந்துள்ளது. கரிபியன் கடலில் கலப்பதற்கு முன் இந்த ஆறு பல சிறு கால்வாய்களாகப் பிரிகிறது. இந்த ஆற்றில் 800 கி.மீ. தொலைவிற்குக் கப்பல்கள் செல்லும். இதன் தரையிலமைந்துள்ள சியூடாட்பாலிவர், ஆற்றுவாணிகம் நடைபெறும் சிறந்த நகரமாகும். நீராவிக் கப்பல்கள் இந்நகருக்கும் திரினிடாட்டிற்கும் இடையில் செல்கின்றன. இவ்வாற்றின் துணை ஆறுகள் ஆபூர், கரோனி, மேடா என்பனவாம்.

**ஆருணியரசன்** பெருங்கதை என்னுங் காப்பியத்தால் அறியலாகும் ஓரரசன்; பாஞ்சால நாட்டை ஆண்டவன். இவன் பலமிக்க வீரர்களையும் வீரமுள்ள சேனைகளையும் பெற்றிருந்தான். கோசல நாட்டு மன்னனைவென்று, அவன் நாட்டை அழித்து அவன் மகள் வாசவதத்தையையும் மேலும் பல பெண்டிரையும் சிறைப்பிடித்து வந்து தன் அரண்மனையில் தாதியர்களாக அமர்த்தினான். 'மந்திரம்' என்பது இவன் பட்டத்து யானையின் பெயர். இவன் ஆயர் குலத்தார்க்குப் பகைவன். ஆயர்குல மன்னனான உதயணனைச் சிறைப்படுத்திக் கௌசாம்பி நகரைக் கைப்பற்றி அதனைத் தன் தலைநகராக்கி முரசு அறைவித்துப் பின் ஆட்சிபுரிந்தான்.

'காளமயிடன்' என்பவன் இவன்தன் ஒற்றன். 'பூரண குண்டலன்' என்பவன் இவனுக்கு முதன்மை அமைச்சன். உதயணன் சிறையினின்றும் தப்பி இவனோடு போரிட்டு இவனை வெட்டிக் கொன்றான். வெட்டுண்டபோதும் அச்சமின்றி இருந்ததாக இவனது வீரம் 'பெருங்கதை' என்ற நூலில் கூறப்பட்டுள்ளது. இவன் 'பாஞ்சாலராயன்' என்று சிறப்பிக்கப்பட்டுள்ளான். வி.பா.

**ஆருத்திரா தரிசனம்** தமிழ் நாட்டுச் சிவாலயங்களில் கொண்டாடப்பெறும் சிறப்பான திருவிழாக்களுள் ஒன்று. இவ்விழா, மார்கழித் திங்களில், திருவாதிரை நாள் கூடிய பௌர்ணமி நாளில் (முழுநிலா நாளில்) கொண்டாடப்பெறும். இது சிதம்பரத்தில் மிகச் சிறப்பாக நடைபெறுவதாகும். பிற சைவக் கோயில்களிலும் இது கொண்டாடப்படுகிறது. ஆருத்திரை எனப்படும் திருவாதிரை நட்சத்திரம் சிவபெருமானுக்குரியது. சிவ பரம்பொருள் படைத்தல் முதலான தொழில்களைச் செய்ய உருவத் திருமேனி கொண்ட நாள். இந்த நாளில் சிவன்கோயில்தோறும் பஞ்சகிருத்திய விழா நடைபெறும்.

சிதம்பரம் நடராசப் பெருமானுக்கு ஆண்டுக்கு ஆறுமுறை நடக்கும் அபிடேகங்களுள் மார்கழி மாதம் சுக்கில பட்சத்துச் சதுர்த்தசி இரவு முழுதும் நடைபெறும் அபிடேகமே மிகவும் சிறப்புடையது. மறுநாள் காலை தரிசனம் நடைபெறும். வி.பா.

**ஆரூர்** சோழ நாட்டிலுள்ள தேவாரப் பாடல் பெற்ற தலங்களுள் ஒன்று. இவ்வூர் தஞ்சை மாவட்டத்திலுள்ளது; தஞ்சை, குடந்தை ஆகிய ஊர்களிலிருந்து பேருந்தில் சென்றடையலாம். மாயூரம் அறந்தாங்கிப் புகைவண்டிப் பாதையில் அமைந்துள்ள இதனைத் தஞ்சையிலிருந்து நாகை செல்லும் புகைவண்டி வழியாகச் சென்றும் அடையலாம். இவ்வூர் மனுநீதி கண்ட சோழன், அபயகுல சேகர அரசன், அநபாய சோழன் ஆகியோர் அரசாண்ட இடம். பஞ்ச பூதத் தலங்களுள் மண் (பிருதிவி) தலம். சப்தவிடங்கத் தலங்களுள் வீதிவிடங்கத் தியாகரின் அசபா நடனத் தலம். திருவாரூர்த் தேர் அழகு மிக்கது; சிறப்பானது. ஆலயத்திற்குத் திருமூலட்டானம் என்றும், பூங்கோயில் என்றும் பெயர்கள் உள்ளன. இது மிகப் பெரிய கோயில். சுந்தரமூர்த்தி வலக்கண் பார்வை பெற்றதும், பரவை நாச்சியாரிடம் சுந்தரர் பொருட்டுத் தியாகேசர் தூது சென்றதும், விறன்மிண்ட நாயனார், நமிநந்தியடிகள், செருத்துணை நாயனார், தண்டியடிகள், கழற்சிங்கர் முதலிய அடியார்கள் முத்தி பெற்றதும் இத்தலத்தில்தான். விராட் புருடனின் மூலாதாரத் தலமாகிய ஆரூர், இசையுலகு மும்மூர்த்திகளையும் தந்த பெருமை கொண்டது. சுவாமி வன்மீக நாதர்-அம்பிகை அல்லியங்கோதை. கமலாம்பிகை சந்நிதி தனியாக உள்ளது, இங்குள்ள கமலாலயம் என்னும் திருக்குளம் மிகப் பெரியது. அதனுள் சிறுகோயில் ஒன்று உள்ளது. மூவர் பாடிய இத்தலத்திற்குச் சம்பந்த முனிவர் இயற்றிய திருவாரூர்ப் புராணமும், மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் பாடிய தியாகராச லீலையும், அந்தகக்கவி வீரராகவ முதலியார் செய்த திருவாரூர் உலாவும், அருணகிரியார் திருப்புகழும் உள்ளன. மேலும் பல சிற்றிலக்கியங்கள் இத்தலம் பற்றி எழுந்துள்ளன. இக்கோயிலின் மேற்குத் திருச்சுற்றில் உள்ள ஆரூர் அரநெறி என்னும் கோயில் அப்பர் பாடியது. வண்டார் குழலியுடன் அரநெறியப்பர் உறையும் இங்கு நமிநந்தியடிகள் தண்ணீரால் திருவிளக்கு ஏற்றினார். ஆரூர்க் கோயிற் பெரிய தேரின் அருகில் உள்ள தூவாய நாயனார் கோயில், சுந்தரர் பரவிய ஆரூர்ப் பரவையுண் மண்டலி என்னும் தலமாகும். பஞ்சின் மெல்லடியம்மையுடன் தூவாயநாதர் உறையும் இக்கோயிற் குளத்தில் மூழ்கித்தான் சுந்தரர் ஒரு கண்பார்வையினைப் பெற்றார். இரா.கி.

**ஆரூர் அரநெறி** தேவாரப் பாடல் பெற்ற சோழ நாட்டுத் தலங்களுள் ஒன்று. தஞ்சை மாவட்டத்தில் உள்ள திருவாரூரைத் தஞ்சையிலிருந்து புகை வண்டி வழியாகவும் பேருந்து வழியாகவும் சென்றடையலாம். பஞ்ச பூதத் தலங்களுள் இது பிருதிவித்தலம் ஆகும். சப்தவிடங்கத் தலங்களுள் ஒன்று. மூவர் தேவாரப் பதிகங்களும் இத்தலத்திற்கு உள்ளன. இத்திருக் கோயிலின் இரண்டாம் சுற்றில் தனிச் சந்நிதியாக விளங்குவது ஆரூர் அரநெறி. இது மேற்குப் பார்த்த சந்நிதியாகும். ஆரூர் அரநெறியினைத் திருநாவுக்கரசர் தம் திருத்தாண்டகப் பதிகத்தால் பாடிப் பரவியுள்ளார். நமி நந்தியடிகள் இத்தலத் திருக்கோயிலில் நீரால் விளக்கிட்டு வழிபட்டமையினைத் திருநாவுக்கரசர் தம் தேவாரத்தில் குறிப்பிட்டுள்ளார். இறைவன் பெயர் அரநெறியப்பர், இறைவி பெயர் வண்டார் குழலி.

**ஆரூர்ப் பரவையுள் மண்டலி** தேவாரப் பாடல் பெற்ற சோழ நாட்டுத் தலங்களுள் ஒன்று. இத்திருக்கோயில் திருவாரூரில் உள்ளது. தஞ்சை மாவட்டத்திலுள்ள திருவாரூரைத் தஞ்சையிலிருந்து புகைவண்டி வழியாகவும் பேருந்துவழியாகவும்சென்றடையலாம். இது திருவாரூர்த் தியாகேசர் கோயிலுக்கு அருகில் உள்ளது. இந்த ஆரூர்ப் பரவையுள் மண்டலி என்னும் கோயில், துலா நாயனார் கோயில் எனவும் வழங்கப்படுகிறது. தூவாய என்பது துலா

என்று மருவி இவ்வாறாயிற்று. இது துருவாசர் வழி பட்ட திருக்கோயில். இறைவன் தூவாய நாதர்; மண்டேலேசுவரர் எனவும் வழங்கப்படுவார். இறைவி பஞ்சின்மெல்லடியம்மை. இத்தலத்தினைச் சுந்தர மூர்த்தி சுவாமிகள் பாடியுள்ளார்.

**ஆருன்-அல்-ரசீது** (கி.பி.763-809) என் பார் இசுலாமியப் பேரரசின் மன்னர்களுள் ஒருவர்; அப்பாசித்து மரபினரில் ஐந்தாம் காலிபு ஆவார். இவர் தந்தையார் அல்மாக்டி என்பவர். பாரசீகத் தின் தெக்ரான் நகரத்திற்கு அண்மையிலுள்ள இரய்யி (ரக்யோ) என்னும் ஊரில் ஆருன் (Harun-Al-Rashid) பிறந்தார். இவர் பெரும்பாலும் பாக் தாது நகரிலிருந்த அரண்மனையிலேயே தம் அன்னை யாரால் வளர்க்கப்பட்டார். இவர் தமக்கு இருபது ஆண்டுகள் நிரம்புவதற்கு முன்னரே பைசாண் டியப் பேரரசுக்கெதிராக இரு படையெடுப்பு களைத் தலைமை தாங்கி நடத்திச் சென்று வெற்றி பெற்றார். பின்னர் ஆளுநர் பதவியில் சிறப்பாகப் பணியாற்றிய இவர், தம் அண்ணனுக்குப் பின் கி.பி. 786-ஆம் ஆண்டில் காலிபானார். ஆருனுக்கு உறு துணையாகநின்ற இயாகியாவும் அவர்தம் குடும்பத்தி னரும் வரம்பிலா அதிகாரத்தையும் செல்வத்தையும் மதிப்பினையும் பெற்றனர். அடுத்துவந்த பதினே ழாண்டுக் காலம் அவர்கள் நன்னிலையில் வாழ்ந்த னர்.ஆனால் கி.பி.803-ஆம் ஆண்டில் அவர்கள் வீழ்ச்சி யுற்றனர். வீழ்ச்சிக்கான காரணம் தெரியவில்லை.

அப்பாசித்து மரபினராய்ப் பதவியேற்ற ஆருன் பதவிக்குவந்த போது 40 ஆண்டுகள் கூட நிரம்ப வில்லை. அவருக்குப் பலர் தொல்லைகள் கொடுத் தனர். அவரது மரபினை ஏற்றுக்கொள்ளாத பகை வர்களும் ஏமாற்றமுற்ற முந்தைய துணைவர்களும் அவருக்குத் தொல்லை கொடுத்தார்கள். அதனால் நாட்டில் குழப்பம் நீடித்தது. சிரியாவிலும் வட ஆப்பிரிக்காவிலும் ஆருனின் முதல் பத்தாண்டுகளில் தொல்லைகளும் வன்முறைகளும் தொடர்ந்து நீடித் தன. ஆனால் திறன்மிக்க படைத்தலைவர்கள் அமைதியைப் படிப்படியாக நிலைநாட்டினர். பார சீகத்திலும் நடு ஆசியாவிலும் நிலைமை கட்டுக்கடங் காமலே இருந்தது. அந்நாடுகளில் வீறிட்டெழுந்த நாட்டுப் பற்றுணர்வும் சமய மறுமலர்ச்சியுமே இதற்குக் காரணங்கள். வடகிழக்குப் பாரசீகப் படை யெடுப்பு ஒன்றின்போது ஆருன் கி.பி. 809-இல் தூசு (Tus) என்னுமிடத்தில் காலமானார்.

ஆருன்-அல்-இரசீதுக்கு வரலாற்றில் சிறப்பிட முண்டு. 'அராபிய இரவுகள்' என்னும் நூலின் கதைத் தலைவராக உள்ளமையால், இவரை அள வுக்கு மீறிக் கீழை-மேலை நாட்டு இலக்கியங்கள் பெரிதுபடுத்திக் கூறியுள்ளன என்று இக்காலத் தவர் கருதுவர். இவர் ஆட்சிக் காலத்தில், காலிப்பின் ஆட்சிப் பகுதிகளில், இவருடைய பெயரும் புகழும் மிகவும் உயர்ந்து நின்றன. செல்வச் செழிப்பும் பண் பாட்டுப் பெருக்கமும் நன்னிலையில் உயர்ந்திருந்தன. ஒருவகையில் பேரரசின் வீழ்ச்சிக்கும் இவரே காரண மானார் என்பதும் பொருந்தும். பர்மிசைடு குலத் தவர்களின் வீழ்ச்சியால் நிருவாகம் சீர்குலைந்தது. இவர் செய்த பிறிதொரு தவறு, பேரரசைத் தம் மக்கள் மூவருக்கும் பிரித்துக் கொடுத்ததாகும். அத னால் உள்நாட்டுப் போர் மூண்டது; துருக்கிய கூலிப்பட்டாளத்தினரின் கையோங்கியது.

இசுலாமியர், ஆருனை வைதிகராகவும், பைசாண் டியப் பேரரசுக்கெதிரான கொள்கையைக் கொண்ட வராகவும், இசுலாமியர் அல்லாதார்க்கு எதிராகச் சட்டங்களை இயற்றியவராகவும் கருதி இவரைப் போற்றுவர். இது எவ்வாறாயினும் இவர் கலை களைப் புரந்த புரவலர் என்பது உண்மை. இவரு டைய செல்வ வளமும் அரண்மனையின் பகட் டான வாழ்வும் இவர்தம் புகழுக்குக் காரணங்களா யின.

**ஆரோ** இங்கிலாந்திலுள்ள ஒரு நகரம். இங்கு இங்கிலாந்திலுள்ள தலையாய பொதுப் பள்ளிக் கூடம் பல்லாண்டுகளாக நடைபெற்று வருகிறது. சான் இலையான் (John Lyon) என்பார், இப்பள்ளி யினைக் கி.பி. 1571-ஆம் ஆண்டில் நிறுவினார். இவர் செல்வச் செழிப்பு மிக்க நிலக்கிழார்களுள் ஒருவர். இலண்டன் மாநகருக்கு 19 கி.மீ. தொலைவிலுள்ள ஆரோ வட்டத்திலுள்ள ஏழை மாணவர்களுக்குக் கல்வி கற்பிக்கத் தொடங்கப்பட்டது இப்பள்ளி யாகும்.இன்றும் நடைபெற்று வரும் இப்பள்ளியில் இக் காலத்தில் பெரும்பாலான மாணவர்கள் கட்டணம் செலுத்திப் பயில்கிறார்கள். இங்குக் கி.பி. 1800-ஆம் ஆண்டு வரை, பண்டைய இலக்கியப் பாடங்களையே கற்பித்து வந்தனர். இக்காலத்தில் புதிய பாடங் களையும் இணைத்துள்ளார்கள். ஆரோவின் மக்கள் தொகை 1,95,999 (1981). ஆரோ பொதுப் பள்ளி யில், தொடக்கத்தில் மாணவர்கள் குறைவாகவே இருந்தனர். இங்குக் கி. பி. 1612-ஆம் ஆண்டுவரை இப்பள்ளிக்குக் கட்டிடங்கள் கட்டப்பெறவில்லை. இப்பள்ளி 30 மாணவர்களுடன் தொடங்கப்பட்டது. இப்பள்ளியில் பின்னர், அதன் தலைமையாசிரியரின் உதவியைப் பெற்ற 41 எளிய மாணவர்களுக்கு இல வசக் கல்வி கிடைத்தது. தொடக்கத்தில் வட்டார மாணவர்கள் மட்டுமே இப்பள்ளியில் சேர்க்கப்பட்ட னர். அயலார் கி.பி. 1660-ஆம் ஆண்டுக்குப் பின் னர்க் கட்டணம் செலுத்திப் படிக்கச் சேர்ந்தனர். இப்பள்ளியை நடத்தக் கி.பி. 18-ஆம் நூற்றாண்டின்

தொடக்கத்தில் சாண்டோசு பிரபு உறுதுணையாக விருந்தார். பின்னர் ஏனைய பள்ளியைப் போன்று இப்பள்ளியும் நலியத் தொடங்கியது.

இதன் தலைமையாசிரியராகக் கி.பி. 1844 முதல் 59 வரை இருந்த சார்லசு வாகன் (Charles Vaughan) இப்பள்ளியை முழுவதுமாகத் திருத்தியமைத்தார். பின்னர் இது விரைவாக வளர்ச்சியுறலாயிற்று. பொதுப் பள்ளிகள் சட்டப்படி, கி.பி. 1868-ஆம் ஆண்டு இதன் நிருவாகக் குழுவினரும் திருத்தி அமைக்கப் பெற்றனர்.

இப்பள்ளியில் படித்தவர்களுள் எழுவர் தலைமை அமைச்சர்களாகியுள்ளனர். இராபர்ட்டு பீல், பாமர்சுடன் பிரபு, வின்சுடன் சர்ச்சில் போன்றவர்கள் இங்கிலாந்தின் தலைமை அமைச்சர்களாக விளங்கினர். இங்குக் கல்விகற்ற சவகர்லால் நேரு இந்தியாவின் தலைமை அமைச்சரானார்; பைரன் பிரபு இப்பள்ளியில் படித்த தலைசிறந்த ஆங்கிலக் கவிஞராவார்; செரிடன் (Sheridan) மாபெரும் நாடகக் கலைஞராவார். 'வாட்டர்லூ போரை வென்றமைக்கு ஆரோ பள்ளி விளையாட்டுத் திடலில் பயிற்சி பெற்றமையே காரணம்' என்னும் பழமொழி இதன் சிறப்பை விளக்கும்.

**ஆரோவில்** பாண்டிச்சேரிக்கருகில் உள்ள அரவிந்தாசிரமத்திற்குச் சொந்தமான புத்துலக வளாகம். பன்னாட்டுக் குடிமக்களும் வாழ்வதற்காகப் புதுச்சேரியில் அரவிந்தரின் பெயரால் அமைக்கப்பெற்ற முதல் ஊர் என்று இதனைக் கருதுவர். 30 ச.கி.மீ. பரப்பளவில் கட்டுவதற்குத் திட்டமிடப் பெற்ற இவ்வூரை நான்கு வட்டாரங்களாகப் பிரிக்க எண்ணினர். அவை தொழிற்சாலை வட்டாரம், மக்கள் வாழும் குடியிருப்பு வட்டாரம், பண்பாட்டு வட்டாரம், பன்னாட்டு வட்டாரம் என்பனவாம். உலகப் பல்கலைக் கழகம் ஒன்றை நிலைநாட்டவும் திட்டமிட்டார்கள். சற்றேறக்குறைய 50,000 மக்கள் வாழ வசதிகளைப் பெற்ற ஆரோவில், ஐக்கிய நாடுகளின் கல்வி அறிவியல் சமூக பண்பாட்டு நிறுவனத்தின் துணையுடன் நிறுவப்பெற்றது. இது 1968-ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதம் 28-ஆம் நாள் தொடங்கிவைக்கப் பெற்றது. வெளி நாட்டிலிருந்து வந்த அரவிந்தரின் பக்தர்களுக்கும் ஆசிரமவாசிகளுக்குமிடையே எழுந்த சிக்கலின் விளைவாக ஆரோவில் முழுதும் கட்டி முடிக்கப்பெறாத நிலையில் உள்ளது.

**ஆரோன்** பண்டைய இசுரேல் நாட்டின் யூத சமயக் குருமாரான மோசசு என்பாரின் மூத்த சகோதரர் ஆவார். எகிப்தில் அடிமைகளாய் வாழ்ந்த இசுரேலிய மக்கள் விடுதலை பெற ஆரோன், மோசசுக்கு உறுதுணை நின்றார். மோசசு எகிப்தின்மீது பிளேக்கு என்னும் கொடிய நோயை ஏவி விட்டார் என்பர். ஆரோனையும் இவர்தம் ஆண்மக்களையும் இசுரேலின் முதன்மைக் குருமார்களாக மோசசு நியமித்தார். மக்களின் வழிபாட்டிற்கெனப் பொன் கன்றுக் குட்டியொன்றை உருவாக்கிய காரணத்திற்காக ஆரோனை மோசசு கடிந்து கொண்டார். ஆரோன் இறந்தபின் அவரது உடல் ஈடோம் பகுதியில் ஒரு மலையில் நல்லடக்கம் செய்யப்பெற்றது.

**ஆல்ககாலிக்கு அனானிமசு** என்பது மது தவிர்த்தோர் பெயரில் அமைந்த ஓர் அமைப்பாகும். இது மதுப்பழக்கத்திலிருந்து மீள விரும்புவோர் தங்கள் அனுபவங்களைத் தங்களுக்குள் பகிர்ந்து கொள்வதற்கு உதவி செய்வதாகும்.

பில் (Bill. W), டாக்டர் பாப்பு (Dr. Bob. S) என்ற இருவரால் இந்த அமைப்பு உருவாக்கப்பட்டது. பில் என்பவர் மீளாக் குடிகாரர் என்று இகழப்பட்டவராக இருந்தார். அவருக்கு ஏற்பட்ட ஓர் ஆன்மீக உணர்வு காரணமாக 1934-ஆம் ஆண்டில் மதுவை அறவே தவிர்த்தார். சில நாட்களில் அவர் பாப்பு என்னும் குடிகார மருத்துவரை மதுப்பழக்கத்திலிருந்து மீட்க உதவினார். அவ்விருவரும் தாங்கள் மதுவிலிருந்து மீண்ட அனுபவத்தை மற்றவர்களுடன் பகிர்ந்து கொண்டபோது, தங்களின் மது அருந்தும் அவா மறைந்ததை உணர்ந்தனர். இதுபோன்ற அனுபவம் இவ்வமைப்பில் சேரும் ஒவ்வொருவருக்கும் ஏற்படுவதால், இது ஒரு தொடர் விளைவு முறையாகி, இவ்வமைப்பு தொடர்ந்து வளருவதற்குச் சாதகமாயிற்று. 'மது தவிர்த்தோர் பெயரிலி அமைப்பு' என்னும் புத்தகம், 1940-ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. டாக்டர் பாப்பு 1950-ஆம் ஆண்டு மறைந்தார். ஆனால் பில் 1971-ஆம் ஆண்டு வரை இவ்வமைப்பில் மிகுந்த ஈடுபாடு கொண்டு எழுத்தாளராகவும் அமைப்பின் அறிவுரையாளராகவும் இருந்து செயற்பட்டார். இவ்வமைப்பின் அனைத்துலகப் பணி அலுவலகம் ஒன்று, நியூயார்க்கில் அமைக்கப்பட்டு, உலகமெங்கிலும் இருந்து மதுப்பழக்கம் தொடர்பாக வரும் வினாக்களுக்கு விடையளித்துக் கொண்டிருக்கிறது. புதிய கிளைகள் தொடங்குவதற்கும் இது உதவுகிறது.

ஆல்ககாலிக்கு அனானிமசு (Alcoholic Anonimas) இன்று இருபது இலட்சம் உறுப்பினர்களைக் கொண்டு 50,000 கிளைகளாகப் பிரிக்கப்பட்டு, நூறு நாடுகளில் செயற்பட்டு வருகிறது. ஆண்களும் பெண்களும் இரண்டுக்கு ஒன்று என்ற விகிதத்தில் உறுப்பினர்களாக இருக்கின்றனர் என மதிப்பிடப்பட்டுள்ளது. இவ்வமைப்பு மருத்துவத்திலிருந்தும் சமயங்களிலிருந்தும் பல கருத்துகளை இணைத்துத் தனக்கென ஒரு புதிய கோட்பாட்டினை வகுத்துக் கொண்

டுள்ளது. சென்னையில் 91,சாந்தோம் நெடுஞ் சாலையில் இச்சங்கம் செயற்பட்டு வருகிறது.

மதுப்பழக்கத்திற்கு அடிமையானவர்கள் மது விற்கு அடிமையாகக் கூடிய உடற்கூறும், மதுவைத் தொடர்ந்து அருந்த வேண்டும் என்ற மனப்பிடிப்பும் (Obsession) குடிப்பழக்க ஆளுமையும் கொண்டிருப்ப தால், இப்பழக்கத்தை மன உறுதியால் மட்டில் மாற்ற முடியாது. அதாவது மதுவிற்கு அடிமையான வர்கள், என்றும் மதுவின் அளவைக் குறைக்க முடியாது. பலர் அளவோடு குடிக்கவும், மது வினால் அவர்கள் செயல் கெடாமல் பார்த்துக் கொள்ளவும், மதுவருந்த வேண்டும் என்ற எண்ணத் தைக் கட்டுப்படுத்தவும் ஆற்றலைப் பெற்றுள்ளனர். அவர்களுக்கு மதுவினால் எந்தச் சிக்கலும் இல்லை. எனவே இவ்வமைப்பு இவர்களுக்குத் தேவையில்லை.

இவ்வமைப்பின் கூட்டங்கள், உறுப்பினர்கள் தங் கள் அனுபவங்களையும் சிக்கல்களையும் பகிர்ந்து கொண்டு தாங்கள் மதுவின்றி வாழவேண்டும் என்ற ஆர்வத்தினால் உருவாயின. இச்சங்கம் இரண்டுவித மான கூட்டங்களை நடத்துகிறது. முதலாவது திறந்த கூட்டங்கள் (Open Meetings) ஆகும். மதுச் சிக்கலில் அக்கறை கொண்ட எவரும் பங்கேற்கலாம். இவற்றில், உறுப்பினர்கள் தங்கள் குடிப்பழக்க அனுப வங்களையும் அவர்கள் இவ்வமைப்பின் படிப்படியான ஆலோசனைகளைக் கடைப்பிடித்து மதுப்பழக்கத்தி லிருந்து மீண்டு மறு வாழ்வு பெற்றதைப் பற்றியும் கலந்துரையாடுவார்கள்.

இரண்டாவது — மறைவான கூட்டங்கள் (Closed Meetings) ஆகும். மதுவிற்கு அடிமையானவர் மட்டிலுமே இதில் உறுப்பினர்களாக இருப்பர். இவர் கள் தங்களுக்கே உரிய இரகசியமான சொந்தச் சிக் கல்களை மற்றவர்களுடன் பகிர்ந்து, பிறர் கூறும் அறிவுரைகளைக் கேட்டு மனவலிமை அடைகின்றனர். மதுப் பழக்கத்திலிருந்து மீள்வதற்காக இவ்வமைப்பு, உறுப்பினர்களுக்குப் பன்னிரு ஆலோசனைகளை அளித்திருக்கிறது.

இவ்வமைப்பு, ஏற்கனவே மதுவிற்கு அடிமையா னவர்களால் மட்டிலுமே, மதுவிற்கு அடிமையானவர்க ளுக்கு உதவி செய்ய முடியும் என்று நம்புகிறது. இவ்வமைப்புகள் தன்னிறைவுடையனவாக இருக்க வேண்டும். அமைப்புக்கு வெளியிலிருந்து எவ்வித உத வியும் ஏற்கக் கூடாது. உறுப்பினர்கள் மதுவைப் பற் றிய செயற்பாடுகளில் ஒருவருக்கொருவர் ஒத்துழைக் கலாம். ஆனால், பிற அமைப்புகளுடன் இணை யக்கூடாது. உறுப்பினர்கள் சொந்த விளம்பரத்தைத் தவிர்த்துப் பெயரிலிகளாகவே இருக்க வேண்டும். இவ்வமைப்பு உறுப்பினர்களிடமிருந்து எவ்வகைக் கட்டணமும் வசூலிப்பதில்லை. 'மதுவருந்துவதை நிறுத்த வேண்டும்' என்பதே இதன் நோக்கம். இவர் களின் ஒரே செயல் தாங்கள் மதுவைத் தவிர்த்து வாழ்வதும், மற்ற மதுவடிமைகளுக்கு மதுவைத் தவிர்க்க உதவி புரிவதுமாகும். சா.அர.

**ஆல்சிராசு மாநாடு**, 1906-ஆம் ஆண்டு சன வரி மாதம் 16-ஆம் நாள் கூட்டப்பட்டது. சிப்ரால்டரு க்கு மேற்கே 10 கி.மீ. தொலைவில், ஆல்சிராசு வளை குடாவுக்கு மேற்குப் பகுதியில், இசுபெயின் நாட்டி லுள்ள காடிசு மாநிலத்தில் உள்ள நகரம் ஆல்சிராசு (Algeciras). இது ஆப்பிரிக்காக் கண்டத்துடன் கடல் வாணிகத் தொடர்புடைய ஒரு துறைமுகமாகும்; பல்வேறு இருப்புப் பாதை நிலையங்களின் சந்திப்பு நகரமாகவும், மிதமான தட்பவெப்ப நிலையையும் குளிப்பதற்கேற்ற அழகுமிகு இயற்கைக் கடற்கரை யையும் கொண்ட நகரமாகவும், இன்பப் பயணம் மேற்கொள்ளத் தக்க மையமாகவும் இது விளங்கு கிறது.

இந்நகரைக் கி.பி. 711-ஆம் ஆண்டில் அராபியர் கள் கைப்பற்றிக் கி.பி. 1344-ஆம் ஆண்டுவரை தம் வசமே வைத்திருந்தனர். பின்னர், பதினோராம் அல்பான்சோ இந்நகரை மீட்டார்; இருப்பினும் காலப்போக்கில் இருந்த இடம் தெரியாமல் இந்நகர் அழிந்து போய்விட்டது. மூன்றாம் சார்லசு கி.பி. 18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில், இந்நகரை மீண்டும் நிறுவினார். அவர் கி.பி. 1780-1782-ஆம் ஆண்டுகளுக்கு இடையே நடைபெற்ற சிப்ரால்டர் முற்றுகையில் இந்நகரை ஈடுபடுத்தினார்.

சுல்தானின் வலிமைக் குறைவைப் பயன்படுத்தித் தத்தம் ஆதிக்கத்தை மொராக்கோவில் உண்டாக் கும் வகையில் அனைத்து ஐரோப்பிய நாடுகளும் ஈடு பட்டன. செருமனி தன் செல்வாக்கைப் பயன் படுத்தி, மொராக்கோவிற்குச் சொந்தமான ஐந்தி லொரு பகுதியைக் கைப்பற்றிவிட்டது. பிரான்சும் ஒரு சில இடங்களைக் கைப்பற்ற எண்ணி மும்முரமாக முயன்றது. இந்த நிலையில்தான் மொராக்கோவின் சுதந்தரத்தைக் காப்பாற்ற ஏனைய ஐரோப்பிய நாடுகள் முயன்று, 1906-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 16-ஆம் நாளில், ஆல் சிராசு நகரிலே மாநாட்டைக் கூட்டின. அம்மாநாட்டில் பிரிட்டன், பிரான்சு, உருசியா, செருமனி, ஆசுத்திரியா, அங்கேரி, இத்தாலி, இசுபெயின், போர்ச்சுகல், ஆலந்து, சுவீ டன், பெல்சியம், அமெரிக்க ஐக்கியநாடு, மொராக்கோ ஆகிய நாடுகள் கலந்து கொண்டன. மொராக்கோவை ஒரு காப்பு நாடாக மாற்றுவதற் காகப் பிரான்சு, பிரிட்டனின் அனுமதியையும் பெற்று, இசுபெயினுடன் இரகசிய உடன்படிக்கை ஒன்றையும் செய்து கொண்டது. இதனால் அமெ ரிக்கா, பிரான்சு நாட்டை ஐயுற்றது. செருமன் பேரரசர் இரண்டாம் வில்லியம் என்பவர்,

மொராக்கோவின்மீது தமக்குள்ள உரிமைகளை நிலைநாட்டும் வகையிலும், ஏனைய ஐரோப்பிய நாடுகளுக்குப் புத்தி புகட்டும் முறையிலும், 1905-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 31-ஆம் நாளன்று தாஞ்சியர் (Tangir) கரையிலே இறங்கி முகாமிட்டு, மொராக்கோவை ஒரு சுதந்திர நாடாகத் தாம் மதிப்பதாக அறிவித்தார். இந்த அறிவிப்பு ஆல்சசிராசு மாநாட்டிற்கே ஒரு நல்ல முடிவைத் தந்ததாக அமைந்துவிட்டது. மாநாட்டிற்கு வருகை தந்த அனைத்து உறுப்பினர்களும் மொராக்கோவின் சுதந்தரத் தன்மையையும், சுல்தானின் தலைமையையும் முழுக்க முழுக்க ஏற்றுக் கொள்வதாகவும் முடிவெடுத்தனர். அனைத்து ஐரோப்பிய நாடுகளும் அந்நாட்டில் சம உரிமையுடன் வாணிகத்தில் ஈடுபடலாம் எனவும், பிரான்சு, இசுபெயின் ஆகிய நாடுகள் காவல்துறை உதவியுடன் மொராக்கோவின் அமைதியைக் காக்க வேண்டுமெனவும், மொராக்கோவின் வளர்ச்சிக்கு வேண்டிய சீர்திருத்தங்களைச் செய்ய வேண்டுமெனவும், அந்நாட்டின் நிதி வளர்ச்சிக்காகத் தாஞ்சியரில் ஒரு வங்கி ஏற்படுத்துவதெனவும், அவ்வங்கியில் மற்ற நாடுகளைவிடப் பிரான்சு மிகுதியான மூலதனம் போடலாம் எனவும் முடிவு செய்யப்பட்டது. இம்முடிவினால் செருமனி, பிரான்சு ஆகிய இரண்டு நாடுகளுக்குமே ஓரளவுக்கு மனநிறைவு ஏற்பட்டது; மொராக்கோ நாடும் சுதந்தர நாடாக ஆயிற்று.

ஆல்சிராசு நகரின் மக்கள்தொகை 1940-ஆம் ஆண்டில் 20,226 எனவும், 1981-ஆம் ஆண்டில் 86,042 எனவும் கணக்கெடுக்கப்பட்டுள்ளது.

பொன். சு.

**ஆல்ட்டாமிரா** வட இசுபெயினிலுள்ள (Spain) சண்டாண்டர் (Santander) மாநிலத்திற்கு மேற்கே 30 கி. மீ. தொலைவில் அமைந்துள்ளது. இங்குள்ள குகையில் வரலாற்றுக்கு முந்திய கடைக் கற்கால ஓவியங்கள் காணப்படுகின்றன. இக்குகை கி.பி.1868-ஆம் ஆண்டு ஒரு வேடரால் கண்டுபிடிக்கப்பட்டது. சண்டாண்டர் நகரைச் சார்ந்த மார்சிலினோ-டி-சௌடோலா (Marcelino-de-Sautola) என்ற பிரபு கி.பி. 1875-ஆம் ஆண்டு இக்குகையைப் பார்வையிட்டு, இதன் அருகில் எலும்புகளையும் கற்கருவிகளையும் கண்டெடுத்தார். இவர் கி.பி. 1879 ஆம் ஆண்டு மறுமுறை தம் மகளுடன் இக்குகையைப் பார்வையிட வந்தார். இவர் மகள் இக்குகையின் மேற்கூரையில் ஓவியங்கள் இருப்பதைக் கண்ணுற்றாள். ஆல்ட்டாமிரா (Altamira) ஓவியங்கள் பற்றிய நூலினைச் சௌடோலா, கி.பி. 1880-ஆம் ஆண்டு வெளியிட்டார். வல்லுநர் பலர் இவ்வோவியங்கள் போலியானவை எனக் கருத்துரைத்தனர். ஆனால் 20-ஆம் நூற்றாண்டின் தொடக்கக் காலத்தில் அறிஞர் பலர், இவ்வோவியங்கள் வரலாற்றுக்கு முந்திய கற்காலத்தைச் சார்ந்தவையே என வலியுறுத்தினர். இக்குகை ஓவியங்களை 1902-ஆம் ஆண்டு பிரான்சுத் தொன்மை வரலாற்றறிஞர்களான கர்டையில்கக்கு என்பவரும் பிரூயில் என்பவரும் (Cartailhac and Brevil) ஆய்வு செய்தனர். ஆல்ட்டாமிரா குகை 270 மீட்டர் நீளம் உடையது. குகையின் முன்பகுதியில் வரலாற்றுக்கு முந்திய மனிதன் பயன்படுத்திய பொருள்கள் கண்டெடுக்கப்பட்டன. அவற்றுள் அரிக்னேசியன் (Aurignacian), பிந்திய சொலுட்ரன் (Solutrean), முந்திய அல்லது இடை மெக்டலெனியன் (Magdalenian) காலக் கருவிகள் குறிப்பிடத்தக்கன. மேலும் விலங்கின் எலும்பினால் செய்யப்பெற்று, நன்றாகச் செதுக்கப்பட்ட பட்டைக்கத்திகளும் (Blade) கண்டெடுக்கப்பட்டன. குகையின் பக்க அறையில் எண்ணற்ற ஓவியங்கள் காணப்படுகின்றன. அவற்றின் நீள அகலங்கள் 18×9 மீட்டர்களாகும். குகையின் மேற்கூரையிலும் வண்ண ஓவியங்கள் உள்ளன. ஓவியங்கள் சிவப்பிலும் கருப்பிலும் செங்கருநீலத்திலுமாகப் பலவண்ணம் பூசப்பட்டுக் காண்பவரைக் கவரும் வண்ணம் உள்ளன. விலங்குகள் பல்வேறு நிலைகளில் தீட்டப்பட்டுள்ளன. விலங்குகளுள் காட்டெருமைகள் மிகுதியாக வரையப்பட்டுள்ளன. மற்றும் குதிரைகள், பன்றிகள், பெண்மான் ஆகியவையும் மனிதப்பண்பு ஏற்றப்பட்ட இறை உருவங்கள் எட்டும் தீட்டப்பட்டுள்ளன. இங்கு மற்றும் பல குகை அரங்குகள் உள்ளன. இவற்றிலும் ஓவியங்கள் காணப்படுகின்றன.

**ஆல்டாய்** மேற்குஆசியாவிலுள்ள பெருமலைத் தொடர். ஆல்டாய் மலைத்தொடருக்கும் இமய



ஆல்டாய் மலையிலுள்ள ஏரி

மலைத் தொடருக்கும் இடையிலிருக்கும் பரந்த மேய்ச்சல் நிலங்களைத்தான் பன்னெடுங் காலத்திற்கு முன்னர் வரை, நாடோடிகள் புகலிடமாகக் கொண்டு, தம் மக்களுக்கு உணவளித்து வாழ்ந்தனர். இத்தகைய நாடோடிகள் பல்கிப் பெருகி அவ்வப்போது ஐரோப்பாவின் மீதும், தெற்கு கிழக்கு ஆசியப் பகுதிகளின் மீதும் படையெடுத்தனர். ஆல்டாய் மலைத்தொடரின் தென்பாகத்தில் தங்கம் வெள்ளிச் சுரங்கங்கள் மிகுதியாக உள்ளன. மங்கோலிய மொழியில் ஆல்டாய் என்னும் சொல்லுக்குத் தங்கம் என்பது பொருள்.

**ஆல்ப்சு** ஐரோப்பாக் கண்டத்தின் மிகப்பெரிய மலைத்தொடர். நெடிதுயர்ந்து பனிமூடிய மலையுச்சிகளையும், அமைதி நிலவும் அழகான பள்ளத்தாக்குகளையும் கொண்டுள்ள ஆல்ப்சு (Alps), கருத்தைக் கவரும் இயற்கை எழில் மிக்க மலையாகும். பிரான்சு நாட்டின் தென்கோடியில் உள்ள மத்தியதரைக் கடலுக்கு அருகில் வடக்காக எழுந்து, பிரான்சுக்கும் இத்தாலிக்கும் எல்லையாக அமைந்துள்ளது ஆல்ப்சு. கிழக்கில் வட இத்தாலி, சுவிட்சர்லாந்து, இலீச்டென்சுடீன் (Liechtenstein), தென்மேற்குச் செருமனி, ஆசுத்திரியா, வட யூகோசுலாவியா ஆகிய பகுதிகளில் இம்மலைத்தொடர் பரவியுள்ளது. மலைத் தொடரின் மொத்த நீளம் 1200 கி.மீ. தென்மேற்குச் செருமனிக்கும், வடஇத்தாலிக்கும் இடையே ஆல்ப்சுமலைத்தொடர் ஏறத்தாழ 260கி.மீ.



ஆல்ப்சு

அகலமாக உள்ளது. மிகக் குறுகிய அகலமான 48 கி.மீ. அளவு மலையை, வட மேற்கு இத்தாலியில், இலைகுரிய (Liguria) ஆல்ப்சு மலையில் காணலாம். மவுண்ட்டு பிளாங்க்கு என்னும் மலையுச்சி ஆல்ப்சு மலைத்தொடரின் மிக உயர்ந்ததாகும். அதன் உயரம் 4807 மீ. மற்றொரு மலையுச்சி மாட்டர் ஆர்க்கு. அதன் உயரம் 4478 மீ. அவற்றைத் தவிர நூற்றுக் கணக்கான உச்சிகள் 3000 மீட்டர்களுக்கு மேல் உயரமானவை. நெடிதுயர்ந்த மலையுச்சிகளுக்கிடையே உள்ள கணவாய்களில் வளைந்து வளைந்து செல்லும் சாலைகளைக் காணலாம். இத்தாலிக்குள் படையெடுத்த படைவீரர்கள் இச்சாலைகள் சிலவற்றின் வழியாகத்தான் படையெடுத்தனர். ஆல்ப்சு மலையிலுள்ள பிரென்னர்க் கணவாய் இத்தாலியையும் ஆசுத்திரியாவையும் இணைக்கிறது. இதன் நீளம் 1371 மீ. வட இத்தாலிக்குக் குறுக்கே செல்லும் இசுடெல்வியோ கணவாய் மிகப் பெரிய கணவாயாகும். இதன் நீளம் 2757 மீ. இத்தாலியையும் பிரான்சையும் இணைக்கும் மாண்ட்செனிசு கணவாயே போக்குவரத்துக்கு மிகவும் பயன்படுகிறது.


ஆல்ப்சு மலையிலுள்ள சிம்ப்ளான் சுரங்க இருப்புப் பாதை

உலகிலேயே நீளமான சுரங்க இருப்புப் பாதை சிம்ப்ளான் கணவாய் வழியாகச் செல்கிறது. இச்சுரங்கப் பாதையின் நீளம் ஏறத்தாழ 20 கி.மீ. இது இத்தாலியையும் சுவிட்சர்லாந்தையும் இணைக்கிறது. ஆசுத்திரியாவிலுள்ள ஆல்பர்க்கு நெடுஞ்சாலைச் சுரங்கம் 1978-இல் திறந்து வைக்கப் பெற்றது. இதன் நீளம் 14 கி.மீ. உலகிலேயே மிக நீளமானதாகக் கருதப்படும் கொட்டார்டு நெடுஞ்சாலைச் சுரங்கம் 16 கி.மீ. நீளமுள்ளது. இது சுவிட்சர்லாந்தில் உள்ளது.

**ஆல்பர்க்கு** வட தென்மார்க்கிலுள்ள (Denmark) நகரம்; சிமெண்ட்டு உற்பத்தியில் பெரும் புகழ் பெற்றுள்ளது. இது கப்பல் தங்கும் துறைமுகத்தைப் பெற்றுள்ளது. நெசவாலைகளும் இயந்திரப் பொருள்கள் தயாரிக்கும் தொழிற்சாலைகளும் பெருமளவில் உள்ளன. இந்நகரம் கி.பி. 1342-ஆம் ஆண்டு சாசனம் பெற்றுச் சுதந்திர நகரமாயிற்று. இந்நகரத்தில் தொன்மையான அரண்மனையும் காண்பதற்கு அழகுவாய்ந்த வீடுகளும் உள்ளன. மக்கள் தொகை 1,54,218 (1982).

**ஆல்பர்ட் இளவரசர் (கி.பி. 1819-1861)** இங்கிலாந்துப் பேரரசி விக்டோரியா அரசியாரின் கணவர். இவருக்கும் விக்டோரியாவிற்கும் கி.பி. 1840-இல் திருமணம் நடந்தது.

ஆல்பர்ட்டு கி.பி. 1819-ஆம் ஆண்டில் செருமனியில் கூபர்க்கு என்னுமிடத்தில் பிறந்தார். மகாராணியாரின் ஆலோசகராகவும் தனிச் செயலாளராகவும் இவர் பணியாற்றினார். இவர் கி.பி. 1841-இல் இங்கிலாந்தில் நுண்கலைகளை வளர்க்க நியமிக்கப் பெற்ற குழுவின் தலைவராக விளங்கினார். கேம்பிரிட்சுப் பல்கலைக் கழகம் கி.பி. 1847-இல் இவரை வேந்தராகத் தேர்ந்தெடுத்தது. இவருடைய கல்விக் கருத்துகளை ஆக்சுபோர்டுப் பல்கலைக் கழகம் பின்பற்றத் தொடங்கியது. கிருமியப் போரின்போது படையினருக்கான பயிற்சித் திட்டத்தைத் திருத்தி அமைக்க ஆல்பர்ட்டு உதவினார். இவர் கி.பி. 1861-இல் விடக்காய்ச்சலால் காலமானார்.

**ஆல்பர்ட் ஏரி** நடு ஆப்பிரிக்காவில் காங்கோ, உகாண்டா எல்லையில் உள்ளது. பழைய பெயர் ஆல்பர்ட்டு நயான் சா என்பது. இது 160 கி.மீ. நீளமும் 40 கி.மீ. அகலமும் கொண்டது. இவ்வேரியின் வட மூலையிலிருந்து ஒயிட்டு நைல் ஆறு புறப்படுகிறது. விக்டோரியா நைல் ஆறு விக்டோரியா ஏரியுடனும், செமிக்கி ஆறு எட்வர்டு ஏரியுடனும் கலக்கின்றன. ஆர்பர்ட்டு ஏரியின் இருப்பிடத்தைக் கி.பி. 1864-ஆம் ஆண்டு எசு. டபிள்யூ. பேக்கர் என்ற ஐரோப்பியர் முதன் முதல் கண்டுபிடித்தார்; விக்டோரியா அரசியின் கணவர் ஆல்பர்ட்டின் நினைவாக இவ்வேரிக்கு ஆல்பர்ட்டு ஏரி எனப் பெயரிட்டார்.

**ஆல்பர்ட்டா** கனடா நாட்டின் மாநிலங்களுள் ஒன்று. இது அந்நாட்டின் பிரெய்ரி மாநிலங்கள் மூன்றுள் ஒன்றாகும். இம்மாநிலத்திற்குக் கிழக்கில் சாசுகட்சுவான் (Saskatchewan) மாநிலமும், மேற்கில் பிரிட்டிசுக் கொலம்பியா மாநிலமும், வடக்கில் கனடாவின் மாநிலங்களுள் ஒன்றான வடமேற்கு நிலப் பகுதிகள் என்னும் மாநிலமும், தெற்கில் அமெரிக்க ஐக்கிய நாடும் எல்லைகளாக உள்ளன.

ஆல்பர்ட்டா (Alberta) நான்கு சிறப்பான நிலப் பிரிவுகளைக் கொண்டுள்ளது. அவை 1. கனடாவின் கேடயம், 2. சாக்கட்சுவான் சமவெளி, 3. ஆல்பர்ட்டா சமவெளி, 4. இராக்கி மலைத்தொடரும் அடிவாரமும் என்பன. இந்நிலப்பிரிவுகள் வடகிழக்கிலிருந்து தென்மேற்காக அமைந்துள்ளன.

கனடாவின் கேடயப் பகுதி, குதிரை இலாடம் போன்ற அமைப்பைக் கொண்டது. இது மலைப்




ஆல்பர்ட்டா

பகுதி. இங்கு ஊசியிலைக் காடுகளும் பல ஏரிகளும் உள்ளன; மக்கள் நெருக்கம் மிகக் குறைவு.

சாசுகட்சுவான் சமவெளி, மேற்கில் இருக்கும் உள்நாட்டுச் சமவெளியின் பாகமாக விளங்குகிறது. இங்கு மிகுதியான காடுகள் உள்ளன.

ஆல்பர்ட்டா சமவெளி, இம்மாநிலத்தின் மிகப் பரந்த நிலப் பகுதியாகும். ஆல்பர்ட்டா மாநிலத்தின் மூன்றில் இரண்டு பங்கை இச் சமவெளி உள்ளடக்கிக் கொண்டுள்ளது. வடசாசுகட்சுவான் ஆற்றுக்கும் செம்மான் ஆற்றுக்கும் இடையிலுள்ள பகுதியைப் பூந்தோட்டம் என்பர். இதுவே பண்ணை நிலத்திற்குப் பெயர் பெற்றதும், கனடாவின் செல்வச் செழிப்பான பகுதியுமாகும். இங்கு விளைச்சலும் கால்நடைகளும் சிறப்பாக விளங்குகின்றன.

இராக்கி மலைத்தொடரும் அடிவாரமும் ஆல்பர்ட்டாவின் ஒரு பகுதி. இம் மலைத்தொடர், அலாசுகாவிலிருந்து மெக்சிகோ வரை நீண்டுள்ளது. கொலம்பியா என்னும் மலையுச்சி இப்பகுதியில் அமைந்துள்ளது. அதுவே ஆல்பர்ட்டாவின் மிக உயர்ந்த மலையுச்சியாகும். இதன் உயரம் 3747 மீ. கனடாவின் இராக்கி மலைத்தொடர்ப் பகுதி, கண் கவர் இயற்கையழகு கொண்டது.

ஆல்பர்ட்டா மாநில ஆறுகள், ஆர்க்டிக்குப் பெருங்கடலிலும் பசிபிக்குப் பெருங்கடலிலும் அட்சன் விரிகுடாவிலும் மெக்சிகோ வளைகுடாவிலும் கலக்கின்றன. ஆதபாசுகா (Athapasca), ஏ (Hay), பீசு (Peace) ஆறுகளும் அவற்றின் துணையாறுகளும் ஆதபாசுகா, அடிமையாறு, பெரும் அடிமை ஏரி (Great Slave Lake) முதலியவற்றின் வழியாகப் பசிபிக்குப் பெருங்கடலைச் சேர்கின்றன. வட சாசுகட்சுவான் ஆறும் அதன் கிளைகளும், தென் சாசுகட்சுவான் ஏரி வழியாக வின்னிபெக்கு ஏரியில் பாய்ந்து, இறுதியில் அட்சன் விரிகுடாவில் கலக்கின்றன. தென் ஆல்பர்ட்டாவில் பாயும் மில்க்கு ஆறு என்னும் பாலாறு, மிசிசிப்பி ஆற்றுடன் மெக்சிகோ வளைகுடாவில் விழுகிறது.

ஆதபாசுகா ஏரியே ஆல்பர்ட்டாவின் மிகப்பெரிய நீர்நிலையாகும். இவ்வேரியின் பெரும்பகுதி, வடகிழக்கு ஆல்பர்ட்டாவிலும் எஞ்சியது சாசுகட்சுவானிலும் அமைந்துள்ளன. கிளேர், சிறு அடிமை ஏரி ஆகியன வடகிழக்கிலும் நடுப்பகுதியிலும் முறையே அமைந்துள்ள ஏரிகள். பான்ப்புத் (Banff) தேசியப் பூங்காவில் உள்ள இலூசி (Lousie) ஏரி, ஆல்பர்ட்டாவின் தலை சிறந்த ஏரிகளுள் ஒன்று.

ஆல்பர்ட்டா மாநிலத்தின் பரப்பளவில் 6,44,392 ச.கி.மீ. நிலமாகவும், 16,795 ச.கி.மீ. நீராகவும் அமைந்துள்ளன. இதன் மக்கள்தொகை 1982-ஆம் ஆண்டு சூன் மாத மதிப்பீட்டின்படி 23,15,100 ஆகும். ஆல்பர்ட்டா நீண்ட, தண்மையான குளிர் காலத்தையும் குறுகிய வெதுவெதுப்பான கோடைக் காலத்தையும் கொண்டுள்ளது. இம்மாநிலத்தின் பல ஊர்கள், பனியால் உறைந்து விடுகின்றன. மழையளவு ஆண்டிற்கு 30 முதல் 50 செ.மீ. வரை ஆகும்.

**கனிவளம்:** ஆல்பர்ட்டாவில் மிகுதியான பெட்ரோலியப் பொருள்கள் கிடைக்கின்றன. பெரும்பாலான எண்ணெய்க் கிணறுகள், ஆல்பர்ட்டாவின் நடுவிலும் வடக்கிலும் அமைந்துள்ளன. எட்மண்டனுக்கு ஏறத்தாழ 110 கி.மீ. தென்மேற்கில் உள்ள பாம்பினா எண்ணெய்க் கிணறுகள் மிகுதியான பெட்ரோலைக் கொடுக்கின்றன.

ஆல்பர்ட்டாவில் மட்டும் கனடாவின் நிலக்கரிப் படிவத்தில் மூன்றிலொரு பங்கு படிந்துள்ளது. இராக்கி மலையடிவாரத்திலிருந்து நடு, தென் சமவெளிகள்வரை இப்படிவங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. மணலும் சரளைக் கற்களும் தரமிக்கவை. கிழக்கு மலைச் சரிவுகளில் உயர்தரச் சுண்ணாம்புக் கல் கிடைக்கிறது. எட்மண்டனை (Edmonton) அடுத்துள்ள பகுதிகளிலும் வட கிழக்குப் பகுதிகளிலும் உயர்தர, தடித்த உப்புப் படிவங்கள் படிந்துள்ளன. பெண்டோனைட்டு, தோலமைட்டு, சிப்சம், சோடியம் சல்பேட்டு, சல்பர் போன்றவை ஏனைய கனிமப் பொருள்கள் ஆகும்.

காடுகள் மாநிலத்தின் அரைப்பகுதியை அடைத்து நிற்கின்றன. இங்குள்ள நறுமணப் பிசின் கொண்டபர் மரங்கள், பைன், பாப்புலர், இசுபுகுசு மரவகைகள் சிறப்பானவை. மாநில அரசு காடுகளைத் தன் கட்டுப்பாட்டின் கீழ் வைத்துக்கொண்டு மரமறுக்கும் உரிமங்களை வழங்குகிறது. இங்கு மரமறுக்கும் தொழில் சிறப்பான தொழில்களுள் ஒன்று.

வட அமெரிக்க அணில் வகையான சிப்மங்குகள், வளைதோண்டும் அமெரிக்கச் சொறி விலங்கு வகைகள், முயல், அணில் போன்றவை காடுகளிலும் பிரெய்ரி நிலத்திலும் வாழ்கின்றன. கரடி, மான், எல்க்கு, மூசுவகை மான்கள் போன்றவை ஆல்பர்ட்டாவின் விலங்கு வகைகள். ஏனைய விலங்குகளும் நிறையவுள்ளன. பல்வகை மீன்களும் கிடைக்கின்றன.

சுரங்கப் பொருள்களிலிருந்து ஆல்பர்ட்டா மாநிலம், ஆண்டு தோறும் 7000 கோடி தாலர் (Dallar) மதிப்புள்ள பொருளை ஈட்டுகிறது. அதில் பாதியளவு பெட்ரோலியப் பொருள்களிலிருந்து பெறுகிறது. கனடா நாட்டின் பெட்ரோலியத் தேவையில் ஐந்தில் நான்கு பங்கினை ஆல்பர்ட்டா மட்டிலுமே உதவுகிறது. சற்றேறக்குறைய 15,000 எண்




வேளாண்மை, தொழில் வளங்கள்

ணெய்க் கிணறுகளிலிருந்து ஆண்டொன்றுக்கு 40 கோடி பீப்பாய் பெட்ரோல் எடுக்கப்படுகிறது. கூடி கிரீக்கு, பெம்பினா, இரெயின்போலேக்கு, இரெட் வாட்டர், சுவான் கில்சு (Swan Hills) எண்ணெய்க் கிணறுகள் சிறப்பானவை. ஆல்பர்ட்டாவில் எண் ணெய் 1914-ஆம் ஆண்டில் தர்னர் (Turner) பள்ளத் தாக்கில் கண்டுபிடிக்கப்பட்டது. புதிய இடங்களில் 1967; 1978-ஆம் ஆண்டுகளில் எண்ணெய்க் கிணறு களை ஆராய்ந்து கண்டுபிடித்துள்ளார்கள்.

பெட்ரோலைப் போலவே இயற்கை எரிவாயும், கனடாவின் மொத்த உற்பத்தியில் ஐந்தில் நான்கு பங்கு ஆல்பர்ட்டாவில் கிடைக்கிறது. பெட்ரோலை யும்இயற்கை எரிவாயுவையும் குழாய்களின் வழியாக ஆல்பர்ட்டாவின் கிழக்கு, தெற்கு, மேற்குப் பாகங் களுக்குக் கொண்டு செல்கிறார்கள். அவை மாநி லத்தின் வசதியான இடங்களில், அடைக்கும் நீள் உருளைப் பாண்டங்களில் அடைக்கப்பட்டு வெளி யிடங்களுக்கும் ஏற்றுமதியாகின்றன. நிலக்கரிக்கு மாறாகப் பெட்ரோலையும் இயற்கை எரிவாயுவை யும் மிகுதியாகப் பயன்படுத்தி வெப்பத்தையும் மின் சக்தியையும் உற்பத்தி செய்கிறார்கள்.

முதன்முதலாக ஆல்பர்ட்டாவில் காலடி வைத்த ஐரோப்பியர் அந்தோனி எண்டே (Anthony Henday) என்பவராவார். அவர் கி.பி. 1754-ஆம் ஆண்டில் அட்சன் விரிகுடாவிலிருந்து ஆல்பர்ட்டா பகுதியில் வாழ்ந்த செவ்விந்தியர்களுடன் மென்மயிர்த்தோல் வாணிகம் செய்ய வந்தார். அந்நாள் வரை அறியப்படாத தென் ஆல்பர்ட்டாவின் பரந்த நிலப் பரப்பை எண்டே ஆய்ந்தறிந்தார்.



ஆல்பர்ட்டா ஆண்டு விழா ஊர்வலம்

புதிய பிரான்சு கி.பி. 1763-இல் ஆங்கிலேயரிடம் அடி பணிந்தபோது, மென்மயிர் (Fur) வாணிகத்தில் ஈடுபட்டிருந்த வாணிகர்கள், கிழக்குக் கனடாவிலும் அமெரிக்க ஐக்கிய நாட்டிலுமிருந்து மென்மயிர் வாணிகப் பொருள்களைப் பெற முயன்றார்கள். பீட்டர் பாண்டு என்பாரே, ஆல்பர்ட்டாவில் காலடி வைத்த முதல் அமெரிக்கர். அவர் கனக்டிக்கட்டு ஆதாபாசகா மாநிலத்தவர். அவர் கி.பி. 1778-இல் ஆற்றங் கரையில் முதல் வாணிகப் பண்டசாலையை நிறுவினார். அலெக்சாந்தர் மாக்கன்சி, கி.பி. 1789-ஆம் ஆண்டில் ஆர்க்டிக்குப் பெருங்கடலை ஆயும் தம் புகழ்மிக்க பணியைத் தொடங்கினார். அவர் கி.பி. 1793-இல் பசிபிக்குப் பெருங்கடலை ஆராய்ந் தார்.

அட்சன் விரிகுடா வாணிகக் குழுவும் வடமேற்கு வாணிகக் குழுவும், மேற்குக் கனடாவில் மயிர்த் தோல் வாணிகத்திற்காகப் போட்டியில் இறங்கின. விரைவில் அட்சன் விரிகுடாவிற்கும் இராக்கி மலைத் தொடருக்கும் இடையிலுள்ள பகுதியில், போட்டி வாணிகக் குழுக்கள் பண்டசாலைகளை நிறுவின. போட்டி தீவிரமாக இருந்தமையால், சில வேளை

களில் கைகலப்பில் குருதிசிந்தும் நிலையும் ஏற்பட்ட துண்டு. இவ்விரு வாணிகக் குழுக்களும் கி.பி. 1821-இல் இணைந்தபோது இப்பகைமைக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. புதிதாக உருவாக்கப்பெற்றதே அட்சன் விரிகுடா வாணிகக் குழு.

தொமினியன் உரிமையினைக் கி.பி. 1870-இல் பெற்றிருந்த கனடா நாடு, இவ்வாணிகக் குழு பெற்றிருந்த உரிமையை வாங்கிக் கொண்டது. அப் பகுதி வடமேற்குப் பகுதிகள் என்னும் மாநிலத்தின் ஒருபகுதியாயிற்று. அப் பகுதியே பின்னர் ஆல்பர்ட்டா என்னும் பெயர் பெற்றது.

இந்நிலப்பகுதி கனடாவிற்கு மாற்றப்படுவதற்கு முன்னர் ஆல்பர்ட்டாவில் வாழ்ந்தவர்களுள் பெரும்பாலோர் வாணிகர்களே. அவர்களுடன் செவ்விந்தியர்களும், வெள்ளைக்காரர்களுக்கும் செவ்விந்தியர்களுக்கும் பிறந்த கலப்பினத்துக் கனடா நாட்டுக்காரர்களும், கிறித்தவ சமயப் போதகர்களும் இருந்தனர். இவ்வாறு வந்த கிறித்தவ சமயக் குழுக்களுள் செயிண்ட்டு ஆல்பர்ட்டுக் குழு சிறப்பானதாகும். அக் குழு அம்மாநிலத்தை வேளாண்மை வளமிக்க மாநிலமாகச் செய்ய உதவியது.

கனடா நாட்டு அரசு, கி.பி. 1873-இல் வடமேற்குக் குதிரைப்படைக் காவலர் என்னும் அமைப்பை உருவாக்கியது. குதிரைப்படைக் காவலர் நிலையங்கள், ஆல்பர்ட்டாவில் மாக்லாயிடு கோட்டை, சாச்கட்சுவான் கோட்டை, கால்காரிசு கோட்டை போன்ற இடங்களில் உருவாக்கப் பெற்றன. இப்பகுதியில் அமைதியையும் ஒழுங்கையும் இக் குதிரைப்படைக் காவலர்கள் நிலைநாட்டினர். தென் ஆல்பர்ட்டாவில் வாழ்ந்த செவ்விந்திய வாணிகர் செய்து வந்த கள்ளச்சாராய வாணிகத்தை ஒழித்துக் கட்டுவதே அவர்கள் பணிகளுள் ஒன்றாக இருந்தது.

கனடிய, பசிபிக்கு இருப்புப் பாதை, கி.பி. 1883 ஆம் ஆண்டில் கால்காரியை இணைத்தது. இப்பகுதியில் குடியேறியவர்களின் முன்னேற்றத்திற்கு இது ஒரு திருப்பு மையமாக அமைந்தது. போடப்பட்ட புதிய இருப்புப் பாதையைப் பயன்படுத்திக் கொண்ட முதல் குடியேற்றவாதிகள் ஆடு மாடுகளை மேய்க்க வந்த பண்ணைக்காரர்களே. தென்பாகத்தில் செழுமையாக வளர்ந்திருந்த மேய்ச்சல் தரைகளில் அவர்கள் குடியேறினார்கள்.

கனடா நாட்டில் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் வந்து குடியேறிய மக்களுக்குத் தேவையான வீட்டு மனைகளைக் கொடுத்துக் குடியேற்றத்தை அரசு ஊக்குவித்தது. இத்துடன் மேற்குக் கனடாவில் மேலும் புதிய இருப்புப்பாதைத் தொடர்கள் அமைக்கப்பட்டதும் அது புதிய குடியேற்ற வாதிகளைக் கவர்ந்திழுத்தது. அங்ஙனம் வந்தவர்கள், கிழக்குக் கனடாவிலிருந்தும் அமெரிக்க ஐக்கிய நாட்டிலிருந்தும் பிரிட்டனிலிருந்தும் ஏனைய ஐரோப்பிய நாடுகளிலிருந்தும் வந்தனர். இதன் விளைவாக 1901-ஆம் ஆண்டில் 73,000 மக்களைக் கொண்டிருந்த ஆல்பர்ட்டாவின் மக்கள் தொகை, 1911-ஆம் ஆண்டில் 3,75, 000 அளவிற்குப் பெருகி வளர்ந்தது.

ஆல்பர்ட்டா 1905-ஆம் ஆண்டில் தனி மாநிலமாக்கப்பட்டது. முதல் உலகப்போரும், 1930-இல் ஏற்பட்ட பொருளாதார மந்தமும், வறட்சியும் பொருளாதார முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டைகளாயின. வளர்ச்சியின் வேகம் வெகுவாகக் குறைந்தது. இருப்பினும் முதல் உலகப் போருக்கும் இரண்டாம் உலகப் போருக்கும் இடைப்பட்ட காலத்தில், மக்கள் தொகை இரட்டிப்பாயிற்று. இலீடக்கு (Leduc) என்னுமிடத்தில் 1947-இல் பெட்ரோலிய எண்ணெய் கண்டுபிடிக்கப்பட்டது. அதனையடுத்துப் பல்வேறு இடங்களில் இன்னும் மிகுதியான மண்ணெண்ணெய் இருப்பது கண்டுபிடிக்கப்படவே, ஆல்பர்ட்டாவின் வரலாற்றில் இதற்கு முன்னர் எப்போதும் காணப்பெறாத பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டது. மக்கள் தொகை மேலும் பெருகி வளர்ந்தது.

ஆல்பர்ட்டாவின் பெருநகரங்கள் அம்மாநிலத்தின் தெற்கிலும் நடுவிலும் அமைந்துள்ளன. தொடக்கத்தில் அவை ஆற்றங் கரைகளில் அமைந்திருந்தன. அவ் ஆறுகள் போக்குவரத்திற்கும் பயன்பட்டன. இன்று பரந்த அளவில் அமைக்கப் பெற்றுள்ள இருப்புப் பாதைகளும் நெடுஞ்சாலைகளும் வானவூர்தி வழிகளும் எல்லா நகர்ப்புற மையங்களையும் இணைக்கின்றன.

எட்மண்டன் ஆல்பர்ட்டாவின் தலைநகரும் மாநகருமாம். இந்நகரம் ஆல்பர்ட்டாவின் நடுவில் அமைந்துள்ளது. இது தொழிற்சாலைகள் உற்பத்தியாக்கும் செய்பொருள்களையும் வேளாண்மைப் பொருள்களையும் பெட்ரோலியப் பொருள்களையும் சேகரித்தும் பகிர்ந்தும் கொடுக்கும் மையமாகவுள்ளது. போக்குவரத்துச் சாதனங்கள் தக்க முறையில் அமைக்கப்பட்டிருப்பதால், எட்மண்டனுக்கு, வடமேற்குப் பகுதிகள், யூகான் போன்ற மாநிலங்களில் இருக்கும் சுரங்க மையங்களுடன் நல்ல தொடர்பு ஏற்பட்டுள்ளது. இறைச்சியைப் பெட்டிகளில் அடைத்தலும், ஏனைய உணவுப் பொருள்களைப் பதப்படுத்தும் தொழிலும், எண்ணெய்ச் சுத்திகரிப்புத் தொழிலும், உலோக உற்பத்தியும், பெட்ரோலிய-இரசாயனப் பொருள்களின் உற்பத்தியும் இங்கு அமைந்துள்ளன. எட்மண்டனின் மக்கள்தொகை 5,51,314 (1982).

கால்காரி ஆல்பர்ட்டாவின் இரண்டாம் பெரு நகரம்; தென்பாகத்தில் சிறப்பான ஊர். ஆல்பர்ட்டாவின் எண்ணெய் எடுக்கும் தொழிலின் நிருவாக மையம் கால்காரி (Calgary) யாகும். இங்கு இறைச்சி பதப்படுத்தல், மாவரைத்தல், பால்பண்ணைப் பொருள்கள் செய்தல் போன்றவை சிறப்பான தொழில்களாக உள்ளன. கால்காரியின் மக்கள் தொகை 6,23,133 (1982).

இலேத்து பிரிட்சு நகரின் மக்கள்தொகை 56,500 ஆகும். காய்கறிகளைப் பதனிட்டுப் பெட்டிகளில் அடைத்தல் இலேத்து பிரிட்சின் (Leth Bridge) சிறப்பான தொழில். இது வெதுவெதுப்பான கடற்காற்று வீசும் பகுதியில் அமைந்துள்ளதால், இங்கு மிதமான தட்பவெப்பநிலை நிலவுகிறது.

மெடிசின்கேட்டு நகரின் மக்கள் தொகை 40,380. இங்குக் (Medicine Gate) களிமண்ணால் செய்யும் பொருள்களும் மட்பாண்டங்களும் சிறப்பானவை. இங்கு இயற்கை வாயு, எரிபொருளாகத் தொழிற்சாலைகளுக்குப் பயன்படுகிறது. இரெட் டியர் (Red Deer), மக்மர்ரே கோட்டை (Fort Mc Murray) கிராண்டு பிரெய்ரி (Grande Frairie), கம்ரோசு, வெட்டாசுகிவின் (Wetaskiwin), இலாயிட்மினிசுடர், திரம்எல்லர் (Drum Heller) போன்றவை பிற நகரங்களாகும்.

**ஆல்பர்ட்டு, முதலாம் (கி.பி 1249-1308):** இவன் செருமானிய அரசன். இவன் தந்தை உருடால்பு எலிசபெத்து என்பவளை மணந்தான். இவனுக்கும் அடால்பு என்பவனுக்கும் ஏற்பட்ட உள்நாட்டுப் போரில் ஆல்பர்ட்டு (Albert I) வெற்றிபெற்றான். அடால்பை ஆசன்புகெல் என்ற இடத்தில் கொன்றான். இதனால் போப்பு 8-ஆம் பானிபேசுக்கும் இவனுக்கும் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. இத்தாலிமீது படையெடுக்கவேண்டும் என்ற எண்ணத்திலிருந்து ஆல்பர்ட்டு மீண்டதால் பானிபேசு பின்னர் நட்புறவு கொண்டார். சுவாபியா (Swabia) என்னுமிடத்தில் நடந்த கலகத்தை ஆல்பர்ட்டு அடக்கச்சென்ற பொழுது சான் (John) என்பவனால் கி.பி. 1308-இல் கொலை செய்யப்பட்டான்.

**ஆல்பர்ட்டு, முதலாம் (கி.பி. 1875-1934):** பெல்சிய நாட்டு அரசன்; 1909 முதல் 1934 வரை அரசாண்டவன்; முதல் உலகப் போரின் போது திறனுடன் போராடிய படைத் தலைவன். இவன், 1914 செப்டம்பர் மாதத்தில் செருமானியரின் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்த உதவிய பெல்சிய படைத் தலைவன் ஆவான். போர் முடியும் வரை தீவிரமான படைத் தலைவனாகவேயிருந்து, போருக்குப் பின்னர் நாட்டின் சிக்கல்களைத் தீர்த்து, நாட்டை நன்னிலைப் படுத்த உறுதுணை புரிந்தவன். சில ஆண்டுகளில் போரின் விளைவுகளிலிருந்து பெல்சியத்தை மீட்ட பெருமை இவனைச் சாரும்.



முதலாம் ஆல்பர்ட்டு

ஆல்பர்ட்டு, முதலாம், இலியோபோல்டு என்னும் செருமானிய இளவரசரின் பேரன். இலியோபோல்டு கி.பி. 1831-இல் பெல்சியத்தின் அரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர். ஆல்பர்ட்டு, பிரசல்சு நகரில் பிறந்தவன். தன் சிற்றப்பா இரண்டாம் இலியோபோல்டை அடுத்து 1909-ஆம் ஆண்டில் அரசனானவன். இவன் 1900-இல் பவேரியா இளவரசி எலிசபெத்து என்பாளைத் திருமணம் செய்து கொண்டான். ஆல்பர்ட்டு முற்போக்குக் கருத்துக் கொண்டவன்; மக்களாட்சி முறையில் நம்பிக்கை கொண்டவன். இவன் புகழ்பெற்ற விளையாட்டு வீரன். பெல்சியத்தைச் சார்ந்த நாமூருக் (Namur) கருகில் மலையேறும் விளையாட்டின்போது இவன் கொல்லப்பட்டான். இவன் மூத்த மகன் மூன்றாம் இலியோபோல்டு என்னும்பெயரில் முடிசூட்டிக் கொண்டான்.

**ஆல்பனி** அமெரிக்க ஐக்கிய நாட்டில், நியூயார்க்கு மாநிலத்தின் தலைநகரம். இது அட்சன் ஆற்றின் மேற்குக் கரையில் அமைந்துள்ளது. இது தொழில் நகரும் கப்பல் துறையுமாகும். இந்நகரம் அட்லாண்டிக்குப் பெருங்கடலிலிருந்து 24 கி.மீ. தொலைவில் உள்நாட்டில் அமைந்திருப்பினும், சுறுசுறுப்பான துறைமுகத்தைக் கொண்டது. ஆல்பனி (Albany) அமெரிக்க ஐக்கிய நாட்டின் மிகத் தொன்மையான நகரம். இங்குமுதன் முதலில் போர்ட்டு

ஆரஞ்சு என்னுமிடத்தில் தச்சுக்காரர்கள் குடியேறினர். பின்னர் இக்கால ஆல்பனிப் பகுதியில் குடியேற்றங்கள் ஏற்பட்டன. ஆங்கிலேயர்கள், இந்நகருக்கு யார்க் பிரபு ஆல்பனி என்பவரின் நினைவாக ஆல்பனி எனப்பெயரிட்டனர். மக்கள் தொகை 1,01,767. (1980).

கனடாவில் ஆல்பனி என்னும் ஓர் ஆறும் உள்ளது. இது சேம்சு ஆற்றுடன் இணைகிறது; நீளம் 640 கி.மீ.

**ஆல்பார்க்கு** வட தென்மார்க்கின் (Denmark) பொருளாதார மையமான ஒரு நகரம். ஆல்பார்க்கு (Aalborg) இலிம்பியர்டு என்னும் பகுதியின் உள்நாட்டு நகரமாகும். இங்குச் சிமிண்ட்டு, ஆடைகள், சாராயம், இயந்திரங்கள் போன்றவை உற்பத்தி செய்யப்படுகின்றன. இந்நகரம் கி.பி. 1342-இல் சுதந்திரச் சாசனத்தைப் பெற்றது. இங்குத் தொன்மையான கோட்டையொன்றும் கண்களைக் கவரும் வீடுகளும் உள்ளன. இதன் மக்கள் தொகை 1,54,218. (1982)

**ஆல்பாலோங்கா** உரோம் நகரத்திற்குத் தென் கிழக்கே இலேசியம் (Latium) மாவட்டத்தில் அமைந்துள்ள தொன்மையான நகரம். ஆல்பன் ஆற்றுக்கும் ஆல்பன் மலைக்கும் இடையே பாறை முகட்டில் அமைந்துள்ள இந்நகரை ஏனியசு (Aeneas) மகன் அசுகானியசு (Ascanius) அமைத்தார் என்று கூறுவர். ஆல்பாலோங்கா (Albalonga) வில்தான் உரோமாபுரி நகரை அமைத்த உரோமுலசும் இரீமசும் பிறந்தனர் என்பது கூறப்படுகிறது.

**ஆல்பிரடு பூங்கா** உத்தரப் பிரதேச மாநிலம் அலகாபாத்து மாநகரில் உள்ளது. இங்குத்தான் 1931-ஆம் ஆண்டு பிப்பிரவரி 27-ஆம் நாள் புரட்சிவீரர் சந்திரசேகர ஆசாத்து காவல் துறையினரால் கொல்லப்பட்டார். ஆசாத்து இரு கைகளிலும் துப்பாக்கி ஏந்திக் காவல் துறையினருடன் இறுதி வரை போராடினார். காவல் துறையினருக்கும் ஆசாத்துக்குமிடையே நடைபெற்ற போரில் பல காவல் துறையினர் கொல்லப்பட்டனர்; ஆங்கிலக் காவல்துறைக் கண்காணிப்பாளரான நாட்வாதர் என்பாரும் பிசுவேசு என்ற இந்தியக் காவல்துறை அதிகாரியும் காயமுற்றனர். கைகால்களில் பாய்ந்த குண்டுகளுடன் ஆசாத்து போராடிக் கொண்டே உயிர் துறந்தார். ஆல்பிரடு பூங்காவில் இச்செய்தியை அறிவிக்கும் நினைவுக் கல் ஒன்றுள்ளது.

**ஆல்பிரடு, மகா (கி.பி. 849-899)** இங்கிலாந்தை ஆண்ட தலைசிறந்த மன்னர்களுள் ஒருவர். இங்கிலாந்து மக்களைத் தேனியரின் (Danes) தாக்குதலிலிருந்து காப்பாற்றியவர். தேனியரின் தாக்குதலிலிருந்து ஐரோப்பா முழுவதையும் காப்பாற்றிய பெருமை இவரையும் இவர்தம் காலத்தவரான பிரெஞ்சு மன்னர் பாரிசு கவுண்ட்டு (Count of Paris) என்பவரையும் சாரும். இவர் உடன்பிறந்தாரான எதெல்ரெடு (Aethelred) கி.பி. 871-இல் காலமானார். அப்போது ஆல்பிரடு இங்கிலாந்தின் ஒரு பகுதியான வெசெக்சுக்கு மன்னரானார்.

இன்னல் நிறைந்த நேரத்தில் மன்னரான ஆல்பிரடு, தேனியரை எதிர்த்த முதற் கட்டத்தில் வில்டன் (Wilton) என்னும் போர்க்களத்தில் தோல்வியுற்றார். இதனால், தேனியருடன் அமைதி உடன்படிக்கை செய்துகொண்டார். மக்கள் வரிப்பணத்தைத் தங்கமாகத் தேனியருக்குக் கொடுத்தார். இங்கிலாந்தின் வரலாற்றில் அமைதியைப் பெறுவதற்குப் பொருள் கொடுத்த முதல் மன்னர் இவரே. இதன் காரணமாக இவரது நாட்டில் சிறிதுகாலம் அமைதி நிலவியது.

தேனியருக்குப் பாடம் புகட்ட நினைத்த ஆல்பிரடு, தம் கப்பற் படையைப் பலப்படுத்திக் கொண்டு கி.பி. 875-ஆம் ஆண்டு அவர்களைப் போர்முனையில் சந்தித்தார். இப்போரின்போது ஆல்பிரடு தேனியரின் ஏழு கப்பல்களை முறியடித்தார். ஒரு கப்பலைக் கைப்பற்றினார். தேனியர் கி.பி. 876-இல் ஆல்பிரடைத் தோற்கடிக்கும் முயற்சியில், வெசெக்சைக் கைப்பற்றினர். விழிப்பாக இருந்த ஆல்பிரடு அவர்களை வேர்காம் (Warham) என்னுமிடத்தில் முற்றுகையிட்டார். சூழ்நிலையைப் புரிந்துகொண்ட தேனியர் தலைவன் கத்ரம் (Guthrum), ஆங்கிலேயர் பொருள் கொடுப்பின் பின்வாங்குவதாக வாக்குறுதியளித்தான். ஆனால், அவ்வாக்குறுதியை அவன் காப்பாற்றவில்லை. போர்வெறி கொண்ட அவன் எக்சிடார் (Exeter) பகுதியைக் கைப்பற்றி வெசெக்சைத் தாக்க முயன்ற நேரத்தில், கொடும்புயல் ஒன்று வீசி, தேனியப் படைகளை அலைக்கழித்து மாய்த்தது. எஞ்சியிருந்த வீரர்களை ஆல்பிரடின் கப்பற்படையினர் சூழ்ந்து கொண்டனர். பலமாத கால முற்றுகைக்குப் பின்னர்க் கி.பி. 877-இல் தேனியர் தோற்கடிக்கப்பட்டனர்.

தேனியர் மீண்டும் இங்கிலாந்தைத் தாக்கும் பொருட்டு, கி.பி 878-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் தொடக்கத்தில்; 23 கப்பல்களுடனும் 1200 படைவீரர்களுடனும் வெசெக்சில் உள்ள சிப்பன்காம் (Chippenham) நகர் நோக்கி விரைந்தனர். வெசெக்சு எதிரியின் கையில் வீழும் நிலையேற்பட்டவே, ஆல்பிரடு சாமர்செட்டு சதுப்பு நிலங்கட்குச் சென்று, அங்கு அத்லனி (Atheleny) என்னும் இடத்தில் கோட்டை ஒன்று கட்டினார். அங்கிருந்துகொண்டு தேனியர்களை முற்றுகையிட்டார். தேனியர்கள் எடிங்டன் (Edington) என்னுமிடத்தில் தோற்கடிக்கப்பட்டனர்.

பதினைந்து நாட்களுக்குப் பின் தேனியரின் தலைவ ரான கத்ரம் சரணடைந்தான். இவ்வாய்ப்பைப் பயன்படுத்தக் கருதிய ஆல்பிரடு, கத்ரமும் (Guthrum) ஏனைய தேனிய வீரர்களும் கிறித்தவர்களாக வேண் டும் என்று நிபந்தனை விதித்தார். அதனை ஏற்றுக் கொண்ட கத்ரமும் அவர் வீரர்களும் பாரட்டு (Parret) நதிக்கரையிலுள்ள அல்லேர் (Aller) என்னு மிடத்தில் கிறித்தவ சமயத்தைத் தழுவினர். ஆல் பிரடின் முன்னிலையில் நடந்த இச்சமய மாற்றத் துக்குப்பின் கத்ரம், அதல்சுடன் (Athelstan) என்னும் சிறித்தவப் பெயரைச் சூட்டிக்கொண்டான். ஆல்பிர டிற்கும் கத்ரமுக்குமிடையே உண்டான இவ்வுடன் படிக்கை சாமர்செட்டிலுள்ள 'வெட்மூர்' (Wedmore) என்ற இடத்தில் ஏற்பட்டதால் இது வெட்மூர் உடன்படிக்கை என்று பெயர் பெற்றது.

ஆல்பிரடின் வெட்மூர் உடன்படிக்கை வெசெக்சில் அடுத்துவந்த எட்டு ஆண்டுகளுக்கு அமைதியை ஏற் படுத்தியதோடு, தென்மார்க்கு (Denmark) இங்கி லாந்தைத் தன்னாட்சியின்கீழ்க் கொண்டுவராதபடி யும் செய்தது. கத்ரம் கிறித்தவ சமயத்தைத் தழுவிய தால் அவனும் அவன் தொண்டர்களும் ஆங்கிலப் பண்பாட்டோடு இரண்டறக் கலந்தனர். எனினும், இங்கிலாந்தில் பாதிக்கு மேற்பட்டபகுதி தேனியரின் ஆதிக்கத்தின்கீழ் இருந்துவந்தது. வெசெக்சு, ஆங்கில மெர்சியா, வட நார்த்தம்பிரியா போன்ற பகுதிகள் மட்டுமே ஆங்கிலேயரிடம் இருந்தன. பின்னர் ஆல் பிரடு இலண்டனையும் கைப்பற்றி அதனை இங்கி லாந்தின் தலைநகராக்கினார்.

தேனியருடன் 16 ஆண்டுகள் போரிட்ட ஆல்பிரடு, எஞ்சிய பன்னிரண்டு ஆண்டுகளை நாட்டுப்பணிக்குச் செலவிட்டார். நாட்டின் வரிமுறை சீர்திருத்தி அமைக்கப்பட்டுப் பாதுகாப்புச் செலவுக்கு மிகுதியான பணம் ஒதுக்கப்பட்டது. பொதுமக்களுள் பாதிபேர் உழவர்களாக இருந்தனர்; எஞ்சியவர்கள் போர்வீரர் களாயினர். பெரும் நிலப்பரப்பை வைத்திருந்த தேனர் (Thegns) என்ற பெருநிலக்கிழார்கள் மட் டிலுமே படைக்கு உதவ வேண்டுமெனக் கோரப்பட் டனர். புதிய கப்பல்களும் கட்டப்பட்டன. பரோக்கள் (சிறிய நகரங்கள்) பாதுகாப்புக்கேற்ற வகையில் மாற்றியமைக்கப்பட்டன. அனைத்து நிருவாகத் துறைகளும் மாற்றியமைக்கப்பட்டுச் சீர்படுத்தப் பட்டன. இதன் காரணமாகவே கி.பி. 892 முதல் 896 வரையிலும் உள்ள ஐந்தாண்டுகளிலும் தேனியர் தாக்குதல் மேற்கொண்டபோதும் ஆல்பிரடின் படை வீரர்கள் அவர்களை மிக எளிதாகத் துரத்தியடித் தனர். அடுத்துவந்த நூறாண்டுகளுக்கு இதன் காரணமாக எவ்விதப் படையெடுப்பும் நிகழவில்லை. ஆல்பிரடு சமயத் துறையிலும் அறிவுத்துறையிலும் மறுமலர்ச்சி ஏற்பட அடிகோலினார். சாபட்சுபரி (Shaftsbury), அதலனி போன்ற இடங்களில் திருச் சபைகள் நிறுவப்பட்டன. திருச்சபையில் மன்னரின் ஆதிக்கம் வேரூன்றியது.

இவர் காலத்தில் புதிய சட்டத் தொகுப்பு ஒன்று உருவாக்கப் பட்டது. சட்டத்தை மீறுவோருக்குக் கடும் தண்டனை வழங்கப்பட்டது. இலத்தீன் மொழிக்குத் தக்க இடம் கொடுக்கப்பட்டது. இலத்தீன் மொழியிலுள்ள இலக்கியங்கள் கி.பி. 887-இல் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டன. இலத் தீன் மொழி வல்லுநர்கள் இங்கிலாந்துக்கு வருகை புரிந்தனர். செல்வக் குழந்தைகளும் ஏழைக் குழந் தைகளும் எத்தகைய வேறுபாடுமின்றி இலத்தீன் மொழியையும், ஆங்கில மொழியையும் பயின்றனர். மன்னர், திருச்சபையினர் ஆகியோர் இலத்தீன் மொழியிலும், ஏனையோர் ஆங்கில மொழியிலும் உரையாட வேண்டும் என்றும் இவர் கேட்டுக் கொண்டார். வரலாற்றுக் குறிப்பு ஒன்றும் இக் காலத்தில் உருவாக்கப்பட்டது. இதனால் ஆல்பிரடு ஆங்கில மொழியின் தந்தை எனக் கருதப்படுகிறார்.

கிறித்தவச் சமயத்தில் தீவிர ஈடுபாடுடைய ஆல் பிரடு, தம் அரசை இறைவனின் கொடையென்றே கருதினார்.

இருபத்தெட்டு ஆண்டுக்காலம் ஆட்சிபுரிந்த ஆல் பிரடு கி.பி. 899-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 26-ஆம் நாள் காலமானார். இவர் உடல் வின்செ சுடரில் நல்லடக்கம் செய்யப்பட்டது.

ஆங்கிலேயர் அனைவரும் ஒரே நாட்டு மக்கள் என்னும் உணர்வைத் தட்டியெழுப்பி ஆல்பிரடு இங்கிலாந்தின் பெருமைக்கு வித்திட்டார். இவர் வெசெக்சில் நிறுவியது சிறிய அரசேயாயினும், 'சிறிய உடலில் உறுதியும் வலிமையும் வாய்ந்த இதயம்' போன்று இங்கிலாந்தின் எதிர்காலத்தை உருவா கினார் என்று கூறப்படுகிறது. வரலாற்றாசிரியர்கள் இவரை 'மகா ஆல்பிரடு' (Alfred the Great) என்று குறிக்கின்றனர். செ.ப.

**ஆல்பிரடு மார்சல் (கி.பி.1 842-1924):** ஆங் கிலப் பொருளியல் அறிஞர்களில் மிகச் சிறந்தவராகக் கருதப்படுபவர் ஆல்பிரடு மார்சல் (Alfred Marshall). இங்கிலாந்து வங்கியில் காசாளராகப் பணிபுரிந்தவ ரின் மகனாக 1842-ஆம் ஆண்டு, இலண்டன் மாநக ரில் பிறந்தார். இவர் தந்தைக்குத் தம் மகன் இறை பணியில் மிகுந்த ஈடுபாடு கொண்டு, அத்துறையில் முன்னேற வேண்டும் என்பது விருப்பம். ஆனால், இவர் அதற்கு மாறாகத் தமக்கு ஆக்சுபோர்டு பல் கலைக்கழகம் (Oxford University) இறைப் படிப்புக் காகக் கொடுத்த உதவித்தொகையையும் பெற

மறுத்துவிட்டார். கணிதத் துறையில் ஈடுபட்டுக் கேம்பிரிட்சுப் பல்கலைக்கழகத்திலிருந்து (Cambridge University) கி.பி. 1865-ஆம் ஆண்டில் முதுகலைப் பட்டம் பெற்றார். கணித இயலில் பெற்ற அறிவுடன் தத்துவக் கருத்தரங்குகளில் பங்குகொண்டு தம் அறிவை வளர்த்துத் தத்துவ வல்லுநரானார்.

மக்களின் அறிவு வளர்ச்சிக்கான காலத்தைப் பிரிட்டனின் உற்பத்தி வளம் கட்டுப்படுத்துகிறது என்று இவர் கருதினார். கடுமையான பொருளாதார நடவடிக்கைகளும், இவர் கருத்துகளைச் செயலற்றவைகளாக்கின. இவையாவும் மாயை என்பதனைத் தெளிவுபடுத்தப் பொருளியல் ஆய்வில் முழுமையாக ஈடுபட்டார். தொன்மைப் பொருளியல் வல்லுநர்களைப் பெரிதும் மதித்து, அவர்களின் கோட்பாடுகளையும் கருத்துகளையும் ஆர்வமுடன் நன்கு கற்றுத் தேர்ந்தார். தன் கணித அறிவைத் தொன்மைப் பொருளியல் கருத்துகளுடன் தொடர்புபடுத்தி, அக் கோட்பாடுகளுக்குப் புத்துயிர் ஊட்டினார். அவ்வகையில் உருவான இவர் கருத்துகளே 'புதிய தொன்மைப் பொருளியல் கருத்துகள்' எனப் பின்னர் வழங்கலாயின. பழைமைக் கருத்துகளையும் கோட்பாடுகளையும் சீர்தூக்கி முறைப்படுத்தி, கி.பி. 1890-ஆம் ஆண்டில் 'பொருளியற் கோட்பாடுகள் (Principles of Economics) என்ற புகழ்பெற்ற நூலினை வெளியிட்டார். இந்நூல் புதிய தொன்மைப் பொருளியலுக்கு அடித்தளமாகவும் அதற்கான மூல நூலாகவும் கருதப்பட்டு வருகிறது.

கேம்பிரிட்சுப் பல்கலைக்கழகத்தில் அரசியல் பொருளியல் துறையின் பேராசிரியராகப் பணியாற்றிப் பெரும் புகழ் பெற்றார். மார்சலின் கருத்துகள் பொதுவாக 'மார்சலின் பொருளியல்' (Marshallian Economics) என்ற சிறப்புப் பெயருடன் குறிக்கப்படுகின்றன. இவர்தம் கோட்பாடுகளின் 'இறுதிநிலை ஆய்வு' (Marginal Analysis) பொருளியல் ஆய்விற்குச் சிறப்பானதொரு திருப்பு மையமாக அமைந்தது. மேலும், ஓர் அலகு பண்டத்தினை உற்பத்தி செய்ய, அதனால் கிடைக்கும் கூடுதல் வருவாய், அப்பண்டத்தினை உற்பத்தி செய்வதற்கான கூடுதல் செலவு ஆகிய இவ்விரண்டுமே மார்சலின் கோட்பாடுகளில் சிறந்த இடத்தினைப் பெறுகின்றன. குறைந்துசெல் இறுதிநிலைப் பயன்பாடு (Diminishing Marginal Utility), நுகர்வோர் உபரி (Consume's Surplus) போன்ற பொருளியற் கருத்துப் படிவங்களுக்குத் (Concepts) தம் உயர்ந்த ஆய்விற்குப் பின் முழு விளக்கம் கொடுத்தார்.

மார்சலின் கோட்பாடுகள் 1930-வரை முழு அளவில் ஏற்றுக்கொள்ளப்பட்டன. ஆனால், பின்னர் வந்த பொருளியல் வல்லுநர்கள் தத்தம் மாறுபட்ட கருத்துகளை வெளியிட்டு, மார்சலின் கருத்துகள் தரமிக்கவையாக இருப்பினும், நிறைவு பெறாதவை எனச் சுட்டிக் காட்டினர். மார்சலின் கோட்பாடுகள், பல்வேறு கருத்துகள் சேர்க்கப்பட்டும் தனித்து வளர்ந்தும் பொருளியலில் அழியாத சிறப்பிடத்தைப் பெற்றுள்ளன. இதற்குப்பின் வளர்ந்த சிந்தனைகளும் மார்சலின் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டே வளர்ந்தன. இன்றைக்கும் மார்சலின் பொருளியற் கூறுகள் உணரப்பட்டு 'நுண் பொருளியல், (Micro Economics) என்ற பெயரில் விளங்குகின்றன.

துணை நூல்கள்

Roger, Wand, N., 'Economics', Harper & Rao Publishers, New York, 1980.

James, Brown, E., 'Economics Principle & Practices', Charles, E., Merrill Publishing Company, Ohio, 1971.

**ஆல்புகர்க்கு, அல்பான்சோ டி (கி.பி. 1453-1515)** இந்தியாவின் போர்ச்சுகீசியக் குடியேற்றப் பகுதிகளின் இரண்டாம் ஆளுநராகவும், கோவா, மலாக்கா போன்ற பகுதிகளை வெற்றி கொண்டவராகவும் விளங்கியவர். கீழ்த்திசை நாடுகளில் போர்ச்சுகீசிய ஆதிக்கத்தை நிலைநாட்டியவரும் இவரே. அப்பான்சோ டி ஆல்புகர்க்கு (Alfonso de-Albuquerque) கி.பி. 1453 ஆம்-ஆண்டில் போர்ச்சுகல் நாட்டின் தலைநகரான இலிசுபன் (Lisbon) நகருக்கருகில் அல்அண்ட்ரா என்னும் ஊரில் பிறந்தார். இவர் மூதாதையர்கள் போர்ச்சுகீசிய அரசர்களின் செயலர்களாகவும், கடற்கரைத் தலைவர்களாகவும் பணியாற்றியவர்கள். இவர் போர்ச்சுகல் நாட்டின் அரசர் ஐந்தாம் அல்பான்சோ என்பாரின் அரண்மனையில் தம் தொடக்க ஆண்டுகளைக் கழித்தார். இவர் கி.பி. 1481-இல் துருக்கியருக்கெதிராக நடைபெற்ற படையெடுப்பிலும், ஒட்ரண்டோ போரிலும் பங்கு கொண்டார். அரசரின் படையில் மேலும் சில ஆண்டுகள் பணியாற்றியபின், கி.பி. 1503-ஆம் ஆண்டில் ஆல்புகர்க்கு போர்ச்சுகீசியக் கப்பற்படையுடன் கீழ்த்திசை நாடுகளுக்கு அனுப்பப்பெற்றார். கேரள மாநிலத்தில் உள்ள கொச்சி நகரில் கோட்டையொன்றைக் கட்டிய இவர், கி.பி. 1504-ஆம் ஆண்டு போர்ச்சுகலுக்குத் திரும்பினார். இரண்டாண்டுக்குப் பின்னர் எமானுவல் என்னும் அரசர் இவரை ஆசியாவில் இருந்த போர்ச்சுகீசியப் பகுதிகளுக்கு அரசப் பேராளராக நியமித்தார். இவர் கி.பி. 1507-இல் இந்தியாவுக்கு வருகைபுரியும் வழியில் கப்பற்படையின் பெருந்தொகுதியினின்றும் தனியாகக் கிளம்பிச் சென்று ஆர்மசு என்னும் தீவைக் கைப்பற்றினார். எனினும், இசுலாமியர் விரைவில் அத்தீவினைத் திரும்பப் பிடித்துக் கொண்டனர்.

ஆல்புகர்க்கு கி.பி. 1518-ஆம் ஆண்டில் இந்தியாவுக்கு வந்தார். கேரள மாநிலத்தில் உள்ள கண்ணனூரில் பிரான்சிசுகோ டி அல்மேடா என்பவர் போர்ச்சுகீசிய அரசப்பேராளராக இருந்தார். அப்போது அங்குவந்த ஆல்புகர்க்கின் பணியை அல்மேடா ஏற்க மறுத்ததோடன்றி, இவரைச் சிறையிலும் அடைத்தார். போர்ச்சுகீசியக் கப்பற்படையின் பெருந்தொகுதி கி.பி. 1509-இல் வந்து சேர்ந்தபோது, ஆல்புகர்க்கு விடுதலையாகிப் போர்ச்சுகீசிய அரசப் பேராளராகப் பொறுப்பேற்றார். இவர் கி.பி. 1510-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில் கோவாவில் ஆட்சி நடத்திய இசுலாமியருடன் கடுமையாகப் போரிட்டார். இறுதியாக அவ்வாண்டு நவம்பர்த் திங்களில் இசுலாமியரை விரட்டிவிட்டுக் கோவாவைக் கைப்பற்றினார். கோவா போர்ச்சுகீசியர்களின் வாணிக மையமாயிற்று. அடுத்த ஐந்தாண்டுகளில் இவருடைய படையினர் மலபார் கடற்கரை, இலங்கை, சுந்தாத் தீவுகள், மலாக்கா, ஆர்ம்சு தீவு ஆகிய பகுதிகளை வென்றனர். செங்கடலின் நுழைவாயிலில் அமைந்துள்ள ஏடனைக் கி.பி. 1513-ஆம் ஆண்டில் தாக்கிய போது இவரால் வெற்றி கொள்ள இயலவில்லை. அந்நகரை இசுலாமியர் காத்து நின்றனர்.

கீழ்த்திசை நாடுகளுடன் நடைபெற்ற வாணிகம் அப்போது இசுலாமியரின் கையிலிருந்தது. அவர்களை விரட்டியடித்துவிட்டு அரண் செய்யப்பெற்ற போர்ச்சுகீசியத் தளங்களை நிலைநாட்ட வேண்டுமென்பது ஆல்புகர்க்கின் வேட்கையாகும். இவர் மலாக்காவைக் கைப்பற்றியது சிறப்பு வாய்ந்த நிகழ்ச்சியாகும். சீனாவுடனும் ஏனைய கீழ்த்திசை நாடுகளுடனும் இசுலாமியர் நடத்திய நறுமணப் பொருள் வாணிகத்தை மலாக்கா நகரந்தான் கட்டுப்படுத்தி வந்தது.

இந்தியாவில் வெற்றி வீரராகக் கருதப்பெற்ற போதிலும், ஆல்புகர்க்கிற்குப் போர்ச்சுகீசிய அரண்மனையில் பல பகைவர்கள் இருந்தனர். எமானுவல் அரசர், கி.பி. 1515-ஆம் ஆண்டில் ஆல்புகர்க்கின் பகைவர்களில் ஒருவரான உலோப் சோரைசு (Lope Soares) என்பாரை இவருக்குப் பதிலாக அரசப் பேராளராக நியமித்தார். நோய்வாய்ப்பட்டுக் கோவாவிற்குப் பயணம் செய்யும் வழியில் அச்செய்தி அறிந்த ஆல்புகர்க்கு மனம் நொந்து, கோவாவை அடையும் முன்னரே கி.பி. 1515-ஆம் ஆண்டு திசம்பர் 26 ஆம் நாள் உயிர் துறந்தார்.

**ஆல்பெர்ட்டி (இலியோன் பட்டிசுடா)** **(கி.பி. 1404-1472)** இத்தாலி நாட்டு மறுமலர்ச்சிக் காலத்தைச் சார்ந்த சிற்பியும் ஓவியரும் நூலாசிரியருமாவார். நாற்பது வயதுவரை பண்டைய கிரேக்க உரோமானிய நாகரிகங்களைக் கற்றுத் தேர்ந்திருந்தமையால், இவர் மானுடத் தத்துவத்தைப் போற்றுபவராகவும் இலத்தீன் மொழி அறிஞராகவும் சிறப்புப் பெற்றார். இவர் பிற்காலத்தில் தலைசிறந்த கட்டிடக் கலை வல்லுநரானார். பிளாரன்சு, உரூமினி போன்ற புகழ் பெற்ற பல சீரிய கட்டிடங்களுக்கு வரைபடம் போட்டுக் கொடுத்தவர் இவரே. இவர் பல அரிய நூல்களையும் எழுதியுள்ளார். சினோவாவில் பிறந்த இவர் கி.பி. 1472-இல் காலமானார்.

**ஆல்பைன்** என்பது தந்தையும் மகனுமான இரு செருமானிய ஓவியர்களின் குடும்பப் பெயராகும்.

ஆன்சு ஆல்பைன் (கி.பி. 1465-1524), என்பவரை மூத்த ஆல்பைன் என்றும் கூறுவர். இவர் செருமானியச் சமயச் சீர்திருத்தம் எழுந்த தொடக்கக் காலத்தில் ஆக்சுபர்க்கு நகரில் பிறந்து வாழ்ந்தவர். பிளமிய கலைஞர்களின் பாணியைப் போன்று செருமானியத் திருச்சபைப் பலிபீடம்போன்ற சமயத் துறை சார்ந்த பல படங்களை இவர் தீட்டியுள்ளார். மேலும் தம் காலத்தில் வழக்கிலிருந்த ஆடைகளை எடுத்துக் காட்டும் வரைபட நூல்களை யாத்துக் கொடுத்தவரும் இவரே. இவர் மகன் ஆன்சு ஆல்பைன் இளையவர் ஆவார்.

**ஆல்போர்ட்டு, கார்டன்** அமெரிக்க உளவியல் அறிஞர் ஆவார். இவர் கி.பி. 1897-ஆம் ஆண்டு அமெரிக்க ஐக்கிய நாட்டில் இந்தியானா மாநிலத்தில் பிறந்தார்; கிளிவ்லாந்து (Cleveland) என்னும் ஊரில் கல்வி பயின்றார்; பல அமெரிக்கக் கல்லூரிகளில் பேராசிரியராகப் பணியாற்றினார். பின்னர் இவர் 1967-ம் ஆண்டு முதல் ஆர்வர்டு (Harward) பல்கலைக் கழகத்தில் சில காலம் பணியாற்றினார்.

இவர் மெய்ப்பொருளியல், பொருளியல் ஆகிய துறைகளில் தேர்ச்சிபெற்றார். பின்னர் ஐரோப்பாவுக்குச் சென்று, அங்குப் பலபல்கலைக் கழகங்களில் கல்வி பயின்றார். அப்பொழுது இவர் வியன்னா நகரத்தில் புகழ்பெற்ற உளவியல் அறிஞர் பிராய்டைச் (Freud) சந்தித்தார். இவர் உளவியல் துறையில் பல நூல்களை எழுதியுள்ளார். இவருடைய நூல்கள் தெளிவும் கருத்தாழமும் மிக்கவை. "உளவியலில் தனி மனிதன்" (The Individual in Psychology) என்பது, இவர் எழுதிய நூல்களுள் புகழ் பெற்றதாகும். ஆளுமை பற்றிய இவருடைய ஆய்வுகள், இவருக்கு உளவியல் கோட்பாட்டினருள் ஒரு சிறப்பிடத்தைத் தந்துள்ளன.

ஆல்போர்ட்டு (Allport Gordon) தம் தொழில் தொடக்கக் காலத்திலிருந்தே, உளவியல் சிந்தனைகளையும், கருத்துகளையும் அச்சமின்றி எடுத்துரைத்தார். மற்ற உளவியல் அறிஞர்கள் விளங்

சின் நடத்தைகளை அறியும் முறையிலேயே மனித னின் நடத்தைகளையும் அறியவேண்டும் என்று வலி யுறுத்திய காலத்தில், இவர் மனிதன் மாத்திரமே உளவியலின் ஆராய்ச்சிப் பொருளாக இருக்க முடி யும் என்னும் கோட்பாட்டை வலியுறுத்தினார். ஆதலின் இவர் மனித இன உளவியல் கோட்பாட்டி னர் என்று குறிப்பிடப்பட்டார். இயல்பு நிலைக்கும் இயல்பு திரிந்த நிலைக்கும், உயிருக்கும் உயிரிலிக் கும், குழந்தைகளின் உளவியல் கூறுகளுக்கும் வயது வந்தவர்களின் உளவியல் கூறுகளுக்கும் இடையே வேற்றுமைகள் உள்ளன என்று இவர் கூறினார். மேலும் குழந்தைகளின் நடத்தை, விலங்குகளின் இயல்புகள், பொறிகள் இயங்கும் விதம் போன்றவை களை விளக்கும் விதிகளை, நுண்ணறிவுமிக்க மனித இயல்புகளுடன் ஒப்பிட முடியாது என்றும் கூறினார். இவர் மனிதனின் தனித்தன்மை ஆய்வில் ஈடுபட் டார். இவர் மனித நடத்தையின் பொதுவான அடிப் படை விதிகளை அறிய, ஒவ்வொரு மனிதனின் தனித் தன்மையையும், அவனுடைய நடத்தை பற்றிய காரணங்களையும் ஆய்ந்து அறிய வேண்டும் என் றும், தனிமனிதன் உளநிலையை அறிய அதுவே வழி என்றும் கூறினார்.

**ஆல்மகெரா** கிழக்கு இந்தோனேசியாவைச் சார்ந்த மொலுக்கசுத் தீவுக் கூட்டங்களிலுள்ள மிகப் பெரிய தீவு. உலக நடுக்கோட்டிற்குத் தென் பால் அமைந்துள்ள இத்தீவின் பரப்பளவு 19,593 ச.கி.மீ. ஆகும். ஆல்மகெரா (Halmahera) நான்கு பெரும் முந்நீரகங்கள், மூன்று விரிகுடாக்கள் ஆகியவற்றைக் கொண்டுள்ளது. கடற்கரையை அடுத்துள்ள பகுதிகளில் வாழும் மக்கள் மீன்பிடித் தும் முத்துச் சிப்பிகளைத் திரட்டியும் வாழ் கிறார்கள். தீவின் உட்பகுதிகளில் வாழும் மக் கள் வேட்டையாடியும், காடுகளில் உற்பத்தியா கும் பொருள்களைத் திரட்டியும், உணவுக்குப் போதுமான அளவு வேளாண்மை செய்தும் வாழ்கிறார்கள். மக்களுள் பெரும்பாலோர் இசு லாமியர்களாகவோ கிறித்தவர்களாகவோ இருக் கிறார்கள். இருப்பினும், அவர்கள் மரபுவழியாக வரும் விலங்குகள், மரம், செடி கொடிகள் போன்ற வற்றை வணங்கும் பழக்கவழக்கங்களைக் கொண்ட வர்களாகவே இன்றும் இருக்கிறார்கள்.

பொருளாதாரச் சிறப்பற்ற நிலையிலேயே இருந்த ஆல்ம கெராவைக் கைப்பற்றக் கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் ஐரோப்பிய நாட்டினர் முயன்ற னர். நறுமணப்பொருள் வாணிகமையங்களுக்கு அண்மையில் இத்தீவு இருப்பதால், பொருளாதாரச் சிறப்புமிக்க தீவாக விளங்குகிறது. தச்சுக்காரர்கள் (Dutch) கி. பி. 1660க்கும் 1949க்கும் இடைப்பட்ட காலத்தில் இத்தீவின் பெரும்பகுதியைக் கட்டுப்படுத் திக் கொண்டிருந்தனர். இரண்டாம் உலகப் போரின் போது 1942-ஆம் ஆண்டில் சப்பானியர் இத்தீவைக் கைப்பற்றினர். நேச நாட்டுப் படைகள் 1944-இல் பன்முறை ஆல்மகெராவின் மீது விமானத்தாக்குதல் நடத்தின. போருக்குப் பின்னர் இப்பகுதி மீண்டும் தச்சுக்காரர்கள் வசமாயிற்று. இந்தோனேசியா விடுதலை பெற்றபோது (1949) இதுவும் அதன் பகுதியாகிவிட்டது.

**ஆல்மா ஆட்டா** சோவியத்து நாட்டில் காசாக் குடியரசின் தலைநகரம். இலி ஆற்றிலிருந் தும் பால்காசு ஏரியிலிருந்தும் இந்நகர் நீர்ப்பாசன வசதியைப் பெறுகிறது. புகையிலைத் தொழில், நூற்புத் தொழில், காலணிகள் தயாரித்தல் போன் றவை இங்கு நடைபெறும் தொழில்களாம். இது பண்பாடு மிக்க நகரம். இந்நகரின் பழம் பெயர் தீன்சான். இந்நகரத்தில் பல்கலைக் கழகமும் தேசிய நூலகமும் அறிவியல் ஆராய்ச்சி நிலையங் களும் உள்ளன. இந்நகரத்தில்தான் உலகச் சுகாதார நிறுவனம் (WHO) கி. பி. 2000 ஆண்டிற்குள் அனைத் துலக மக்களுக்கும் நல்வாழ்வு கிடைப்பதற்கான திட்டம் வகுத்தற் பொருட்டுக் கூடியது.

**ஆல்வா பிரபு** (கி.பி. 1508-83) இசுபானிய படைத் தலைவர். கோமகன் ஆல்வா என்றும் (Buke of Alva) இவர் அழைக்கப்பட்டார். இவர் கொடுங் கோன்மைக்குப் பெயர் பெற்றவர். பேரரசர் ஐந்தாம் சார்லசின் படைத்தலைவராகப் பிரான்சு நாட்டுடன் நடந்த போரில் கலந்துகொண்டு பல்வேறு இடங்களில் வெற்றி பெற்றார். சார்லசுக்குப் பின் இரண்டாம் பிலிப்பு அரசர் காலத்திலும் படைத்தலைவராக இருந்தார். அப்போது இசுபெயினின் (Spain) அடிமை நாடான நெதர்லாந்தில் கலகம் மூளவே, அதை ஒடுக்க ஆல்வா பிரபு அனுப்பப்பட்டார். இவரை இரண்டாம் பிலிப்பு நெதர்லாந்தின் ஆளுநராக நியமித்தார். ஆல்வா பிரபுவினால் அமைக்கப்பட்ட நீதிமன்றம் ஆயிரக்கணக்கான மக்களுக்குக் கொலைத் தண்டனை விதித்தது. நெதர்லாந்தில் பிராட்டசு டண்டு சமயத்தை ஒழிக்க இவர் முற்பட்டார். இவரால் நியமிக்கப்பட்ட நீதிமன்றம் 'குருதி மன் றம்' (Council of Blood) எனக் கூறப்பட்டது. இவர் 18, 000 மக்களைக் கொன்று குவித்ததாகப் பெருமைப் பட்டுக் கொண்டார். நெதர்லாந்து மக் கள் இவரை எதிர்த்துக் கலகம் செய்ததைத் தாங்க முடியாமல் ஆல்வா பிரபு இசுபெயினுக்குத் திரும்ப நேரிட்டது. போர்ச்சுகல்மீது கி. பி. 1580-ஆம் ஆண்டு படையெடுத்த இவர், அந்நாட்டைக் கைப் பற்றிக் கொள்ளையடித்தார். போர்ச்சுகல் கி. பி

17-ஆம் நூற்றாண்டுவரை இசுபானியரின் ஆளுகைக்குட்பட்டிருந்தது. ஆல்வா பிரபுவின் முழுமையான பெயர் பெர்னாண்டோ ஆல்வரசு தே தோலிடோ (Fernando Alvarez de Toledo) என்பதாகும்.

**ஆலங்காடு** தொண்டை நாட்டிலுள்ள தேவாரப்பாடல்பெற்ற திருத்தலங்களுள் ஒன்று; இன்றும் திருவாலங்காடு என்ற பெயரால் குறிக்கப்படுகிறது. சென்னை, காஞ்சி, திருவள்ளூர் முதலிய இடங்களிலிருந்து பேருந்தில் சென்று இத்தலத்தினை அடையலாம். இங்குப் புகைவண்டி நிலையமும் உள்ளது. தேவார முதலிகள் மூவரும் இத்தலத்திறைவனைப் போற்றிப் பரவியுள்ளனர். சிவபெருமானுக்குரியதாகக் கூறப்படும் ஐந்து சபைகளுள் இரத்தின சபை இங்குள்ளதாகக் கருதப்படுகிறது. சிவபெருமான் காளியொடு ஊர்த்துவ நடனம் ஆடிய இடம் இதுவாகும். இறைவன் பெயர் ஆலங்காட்டீசுவரர். தேவர்சிங்கப்பெருமான் எனவும் இவர் அழைக்கப்படுவார்; இறைவி பெயர் வண்டார் குழலி. பலா தலமரமாகும். திருக்கோயிலுக்குச் சற்றுத் தூரத்தில் காளிக்குக் கோயில் அமைந்துள்ளது. காரைக்காலம்மையார் பேயுருப்பெற்றுச் சிவபெருமான் திருவருளால் அவனுடைய எடுத்த பொற்பாதத்தின் கீழிருந்து சிவானந்தத்தைக் துய்த்துக் கொண்டிருக்கும் தலம் இதுவாகும். இவர் பதினோராம் திருமுறையினைச்சார்ந்த 1. திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகத்தினையும், 2. மூத்த திருப்பதிகத்தையும்பாடியுள்ளார். பட்டினத்தார், அருணகிரியார், கச்சியப்பர், இராமலிங்க அடிகள், பாம்பன் சுவாமிகள் முதலிய அருட் சான்றோர் இத்தலத்திறைவனைப் போற்றிப் பரவியுள்ளனர்.

**ஆலங்கானம்** சங்ககாலத்தே தமிழக வேந்தர் தம்முள் மாறுபட்டுப் போர் செய்த இடங்களுள் ஒன்றாகும். இவ்வூர், தலையாலங்கானம் என்றும் சங்க நூல்களில் வழங்கப்படுகிறது. இளையவனாக விருந்த பாண்டிய மன்னன் நெடுஞ்செழியனை எதிர்த்து, ஏனைய சேர சோழ மன்னர் இருவரும் குறுநில மன்னர் ஐவரும் ஆக எழுவர் போர் செய்த இடமாகும். இப்போரில் இளையனாகிய பாண்டியன் வெற்றிகொள்ள, எதிர்த்த எழுவரும் தோற்றனர். ஒருவரை எழுவர் எதிர்த்தும் தோற்றமையால், சங்ககாலத்தமிழகத்தில் நடைபெற்ற போர்களுள் தலையாலங்கானத்துப் போர் சிறப்புமிக்க ஒன்றாகத் திகழ்ந்தது. இப்போர் வெற்றி பாண்டியன் நெடுஞ்செழியனின் பேராற்றலைப் புலப்படுத்துவதாகவும் அவனுடைய பெரும்புகழுக்கு அடிப்படையாகவும் அமைந்தமையால், அவன் 'தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்' என்று சிறப்பிக்கப்பெற்றுள்ளான். இத்தலையாலங்கானப் போர் நிகழ்ச்சி அக்காலத்தே மக்களால் மிகவும் அறியப்பெற்ற ஒன்றாகத் திகழ்ந்தமையால், சங்கப் புலவர் பலர் இதனை நேர் செய்தியாகவும் உவமையாகவும் தம் பாடல்களில் குறிப்பிட்டுள்ளனர். இப்போரில் பாண்டியன் நெடுஞ்செழியன் ஒரு புறமும் அவனை எதிர்த்துச் சேரன், செம்பியன் ஆகிய பெருமன்னர் இருவரும், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் என்னும் குறுநில மன்னர் ஐவரும் ஆகிய எழுவர் மறுபுறமுமாக நின்று போரிட்டனர். இதில் இவ்வெழுவரையும் பாண்டியன் வென்று விளங்கியமையினை 'எழுவர் நல்வலம் அடங்க ஒரு பகல் முரைசொடு வெண்குடை அகப்படுத்து உரை செலக் கொன்று' என்றும், (அகம். 36), 'எழுவர் நல்வலங் கடந்தோய்', 'புனைகழல் எழுவர் நல்வலமடங்க ஒருதானாகிப் பொருது களத்தடலே' (புறம். 19, 76) என்றும் புலவர்கள் வியந்து பாடியுள்ளார்கள். மதுரைக் காஞ்சியும் பாண்டியனின் இச்சிறப்பினைச் சுட்டிப் போற்றுகின்றது. (மதுரை: 55, 56; 127, 128). கவிஞனான பாண்டியன் நெடுஞ்செழியன் கூறிய வஞ்சினத்தில் 'உடல்சினஞ்செருக்கிச்சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தர்' என்றது இவர்களையே யாகலாம் (புறம் 72). இப்போர் நடைபெற்ற இடத்தினைத் 'தமிழ் தலை மயங்கிய தலையாலங்கானம்' என்று புறநானூறு குறிப்பிடுகிறது (புறம். 19). தலையாலங்கானப் போரினைக் கல்லாடனார், பொதும்பில்கிழார் மகனார், நக்கீரனார், இடைக்குன்றூர் கிழார், மாங்குடி மருதனார், ஆலம்பேரி சாத்தனார் ஆகிய புலவர்கள் தம்பாடலிற் குறிப்பிட்டுள்ளனர்.

இவ்வூர் சோழ நாட்டிலுள்ள தேவாரப் பாடல் பெற்ற தலங்களுள் ஒன்றாகுமென உ.வே.சா. ஐயரவர்கள் குறிப்பிட்டுள்ளனர். இவ்வூர் தேவாரத்தில் திருத்தலையாலங்காடு என்று பேசப்படுகிறது; தஞ்சை மாவட்டக் குடவாயிலுக்கு அருகில் உள்ளது; கபில முனிவர் வழிபட்ட தலமாகும். தாருகாவனத்து முனிவர் அனுப்பிய முயலகன்மீது சிவபெருமான் நடித்தருளிய தலமென்று புராணம் கூறுகிறது. திருநாவுக்கரசர் இத்தலத்திறைவனைத் திருத்தாண்டகப் பதிகமொன்றாற் போற்றியுள்ளார், 'தலையாலங்காடன் தன்னைச் சாராதே சால நாள் போக்கினேனே' என்று இப்பதிகப் பாடல் தோறும் கூறி இரங்கி ஏங்குகிறார். இறைவன் பெயர் ஆடவல்ல நாதர்; இறைவி பெயர் திருமடந்தை.

காண்க: தலையாலங்கானம்.

**ஆலங்குடி** தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணத்திற்கு ஒன்பது கல் தொலைவிலுள்ள ஒரு சிற்றூர். இவ்வூர் பாக்குவெட்டிக்குப் பேர்போனது

என்று கூறப்படுகிறது. இப்பெயரில் தமிழகத்தில் பல ஊர்கள் உள்ளன. சங்கப் புலவர்களுள் ஒருவரான வங்கனார் என்பவர் ஆலங்குடியைச் சேர்ந்தவ ராவார். அதனால் அவர் 'ஆலங்குடி வங்கனார்' என்று அழைக்கப்பட்டார். அவர் பாடியுள்ள ஆறு அகப்பாடல்களும் மருதத்திணைப் பாடல்களாக இருத் தலால், அவர்தம் ஊராகிய ஆலங்குடி மருதநிலத் தைச் சார்ந்ததாக இருக்கலாம் என்பது கருதப்படு கிறது. இந்த ஆலங்குடி புதுக்கோட்டை மாவட்டத் திலுள்ளது என்பதும் கூறப்படுகிறது.

**ஆலங்குடி வங்கனார்** சங்க காலப் புலவர். இவரது இயற்பெயர் வங்கனார்; இவர் புதுக் கோட்டை மாவட்டம் ஆலங்குடி என்னும் ஊரைச் சார்ந்தவராதலால் ஆலங்குடி வங்கனார் என்றழைக் கப் பட்டார். இவர் சோழருடைய தலைநகரான உறையூரையும், அவ்வூரிலிருந்த அறங்கூறவையினை யும் 'மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து அறங்கெட அறியாது... ...'(நற்றிணை 400) என்று சிறப்பித்துப் பாடியுள்ளமையால், சோழநாட்டு ஆலங்குடியினர் என்பர் சிலர். பாண்டியன் கொற்றச் செழியனின் பேராண்மையினையும் வீரத்தையும் பரிசளிக்கும் பான்மையையும் 'ஒளிறுவாள் தானைக் கொற்றச் செழியன்' (அகம். 106) என்று பாடி யுள்ளமையால், பாண்டிய நாட்டைச் சேர்ந்த ஆலங் குடியினராவார் என்பாரும் உளர். மதுரை மாவட்டம் திருமங்கலம் தாலுக்காவில் ஆலங்குடி என்னும் பெயரில் ஓர் ஊர் உள்ளமை இங்குக் குறிப் பிடத்தக்கது.

வங்கம் என்னும் சொல், கப்பல் என்னும் பொருளைக் குறிக்குமாதலின், வங்கன் என்பார் கடல் வாணிகம் மேற்கொண்டவராவர் என்றும் இவர் நெய்தல் நிலத்தைச் சார்ந்தவராவர் என்றும் ஒருசாரார் கூறுவர்.

இவர் பாடிய பாடல்கள் நற்றிணையிலும், (230, 330, 400) அகநானூற்றிலும் (106) புறநானூற்றி லும் (319) குறுந்தொகையிலும் (8, 45) இடம் பெற்றுள்ளன. என்.இ.இ.

**ஆலத்தூர் கிழார்** சங்க காலப் புலவர்களுள் ஒருவர். இவர் இயற்பெயர் தெரிந்திலது. இவர் ஆலத்தூர் என்னும் ஊரில் வாழ்ந்த ஒரு பெருநிலக் கிழார் ஆவர். ஆலத்தூர் என்னும் பெயரில் தமிழகத்தில் பல ஊர்கள் உள்ளன. தொண்டை நாட்டில் புலியூர்க் கோட்டத்தில் ஓர் ஆலத்தூரும், பாண்டி நாட்டில் ஓர் ஆலத்தூரும் இருப்பதாகத் தெரிகிறது. ஆலத்தூர் கிழார் சோழ நாட்டு அரசர்களைச் சிறப்பித்துப் பாடியுள்ளமையால் (புறம் 34, 36, 69, 225, 324), இவர் பிறந்த ஆலத் தூர் சோழ நாட்டில், காவிரியாற்றின் தென்கரை யின்கண் அமைந்துள்ள ஆலத்தூர் ஆகும் என்று கொள்ளலாம். செய்ந்நன்றி கொன்ற மகனுக்கு உய் வில்லை என்னும் திருக்குறள் கருத்தினைத் தம் பாடலுள் ஆளுமிடத்து (புறம் 34) இவர், அந் நூலினை 'அறம்' என்று புகழ்ந்து குறிப்பிட்டுள்ளார். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனின் தானைச் சிறப்பையும், போருக்குச் சென்று பாடி வீட்டில் தங்கும் அவனது ஆண்மையையும், வேற் படையின் மாண்பையும் (புறம் 69), சோழன் நலங் கிள்ளியின் படைச்சிறப்பையும் (புறம் 225) தம் புறப்பாடல்களில் பாடியுள்ளார். இவர்தம் பாடல் கள் இரண்டு குறுந்தொகையிலும், (112, 350) ஐந்து பாடல்கள் புறநானூற்றிலும் (34, 36, 69, 324 325) இடம் பெற்றுள்ளன. என்.இ.இ.

**ஆலந்துத் தீவுகள்** சுவீடனுக்கும் பின்லாந் திற்கும் இடையில் பால்டிக்குக் கடலில் அமைந் துள்ளன. இவை ஏறத்தாழ 6,500 சிறு தீவுக் கூட்டங்களைக் கொண்டவை. இரு தீவுகளில் மட்டுமே மக்கள் வாழ்கின்றனர். இவை பின்லாந்து நாட்டிற்குச் சொந்தமானவை. இந்த ஆலந்துத் தீவுகள் (Aaland Islands) இராணுவச் சிறப்பு வாய்ந்தவை. பின் லாந்து, உருசியா, வடக்குச் சுவீடன் ஆகிய நாடு களுக்குச் செல்லும் வாயிலுக்கு எதிராக இத்தீவுகள் அமைந்துள்ளன.

**ஆலப்புழை** இந்தியாவின் மேற்குக் கடற்கரை யில், கேரள மாநிலத்தில் உள்ளதொரு துறைமுகப் பட்டினம். கொச்சியிலிருந்து 50 கி.மீ. தெற்கில் உள்ள நகரம். ஆலப்புழையை அடுத்துள்ள பகுதி களில் மஞ்சள், இஞ்சி, மிளகு, பெருமளவில் நெல், தேங்காய் முதலிய பொருள்கள் உற்பத்தியாகின்றன. கயிறு திரித்தல், தென்னை நார் எடுத்தல் போன் றவை ஆலப்புழையின் சிறப்பான தொழில்களாம். நார் எடுக்கும் தொழிலின் மையம் என்று இந்நகரைக் கூறலாம். தென்னை நாராலான பாய்களும், பாய்ப் பின்னலும் இங்கிருந்து வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி யாகின்றன. பருவக் காற்றுக் காலங்களில் மட்டும் இது கப்பல் தங்குவதற்குப் பயன்படாது. இவ்வூர், 'திறந்த வெளிக் கப்பல் தங்குமிட' மாகும். மக்கள்தொகை 1,69,934 (1981).

**ஆலம், என்றி** (கி.பி. 1777-1859) தலை சிறந்த வரலாற்றுப் பேரறிஞர். மூலச்சான்றுகளின் அடிப்படையில் தம் முடிவுகளை வருவித்து வரை யறுத்த முதலறிஞர். இவர் கி.பி. 1777-ஆம் ஆண்டு சூலை மாதம் 9-ஆம் நாள் வின்சுட்ர் என்னும் ஊரில் பிறந்தவர்; ஈட்டன், ஆக்சுபோர்டு கல்விக் கூடங் களில் கற்றவர். பிறர் உதவியின்றியே செல்வ ரான ஆலம், என்றி (Hallam, Henry), 'இடைக்கால

ஐரோப்பிய நாட்டினைப் பற்றியதொரு கருத்துரை' (1818) என்னும் தம் முதல் நூலைப் பத்தாண்டுகளில் எழுதினார். அதில் ஐரோப்பாவில் உருவான பெரும் நாடுகளின் வரலாற்றை ஆய்ந்துள்ளார்.

'ஏழாம் என்றி அரியணை ஏறியது முதல் இரண்டாம் சார்சு மன்னர் இறந்த ஆண்டு (1827) முடிய இங்கிலாந்தின் அரசியல் அமைப்பு வரலாறு' என்னும் நூல், இவருடைய சிறப்பு மிக்க நூலெனக் கருதப்படுகிறது. மேலும், கி.பி. '15,16,17-ஆம் நூற்றாண்டுகளில் ஐரோப்பிய இலக்கிய முன்னுரை' என்னும் மூன்று தொகுதிகள் கொண்ட நூலும் இவரால் எழுதப்பட்டதாகும். இந்நூல் கி.பி. 1837-39 ஆகிய ஆண்டுக்காலத்தில் தொகுக்கப்பட்டது. இவர் கி.பி. 1859 ஆம் ஆண்டு சனவரி 21-ஆம் நாள் கெண்டிலுள்ள பென்சுகர்சுட்டு (Penshurst) என்னும் இடத்தில் காலமானார்.

**ஆலம்கிர்பூர்** அகழாய்வு செய்யப்பட்ட ஓர் ஊர். இது உத்தரப்பிரதேச மாநில மீரட்டு மாவட்டத்தில் இண்டன் (Hindon) ஆற்றங்கரையில் அமைந்துள்ளது. இண்டன் ஆறு யமுனை ஆற்றின் துணை ஆறாகும். ஆலம்கிர்பூர் அகழாய்வில் வண்ணம் பூசப்பட்ட சாம்பல் நிற மட்கலன்கள் மிகுதியாகக் கிடைத்துள்ளன. இங்கு அரப்பா (Harappa) நாகரிகத்தில் பயன்படுத்தப்பட்ட பொருள்கள் முதல் பண்பாட்டின் மண்ணடுக்குகளிலும், வண்ணம் பூசப்பட்ட சாம்பல் நிற மட்பாண்டங்கள் இரண்டாம் பண்பாட்டின் மண்ணடுக்குகளிலும் கிடைத்திருப்பதன் மூலம் அரப்பா மக்களின் வழி வந்தோரும், வண்ணம் பூசப்பட்ட சாம்பல் நிற மட்கலக் கால மக்களும் அடுத்தடுத்து வாழ்ந்திருந்தமை தெரிகிறது. இதற்கு அடுத்த பண்பாட்டு மண்ணடுக்குகளில் வட இந்தியப் பளபளப்பான கறுப்பு நிற மட்பாண்டங்கள் கிடைத்துள்ளன.

**ஆலம்கீர்** என்பது மொகலாயப் பேரரசர் அவ்ரங்கசீபு புனைந்து கொண்ட பட்டப் பெயராகும். காண்க: அவுரங்கசீபு.

**ஆலம்கீர், இரண்டாம்** (கி.பி. 1699-1759): மொகலாயப் பேரரசின் அமைச்சராக (வசீராக) இருந்த காசியுதின், கி.பி. 1754, சூன் 2-ஆம் நாள் பேரரசர் அகமத்சாவைச் சிறையில் அடைத்துவிட்டுச் சகந்தர்சாவின் இரண்டாம் மகனான அசீசு-உத்-தீனை மொகலாயப் பேரரசராக ஆக்கினார். ஒரு வாரம் கழித்து முன்னாள் பேரரசர், அவர் அன்னை ஆகியோரின் கண்கள் குருடாக்கப்பட்டன. அசீசு-உத்-தீன் அரியணை அமர்ந்ததும், ஆலம்கீர் என்ற பட்டப் பெயரை புனைந்து கொண்டதால், இரண்டாம் ஆலம்கீர் என்று அழைக்கப்பட்டார். இரண்டாம் ஆலம்கீர் 55-ஆம் வயதில் பேரரசரானார். அவர் அதற்குமுன் தம் வாழ்க்கையின் பெரும் பகுதியைச் சிறையிலேயே கழித்திருந்தார். எனவே போரைப்பற்றியோ அரசாங்க நிருவாகத்தைப் பற்றியோ அவருக்கு ஒன்றும் தெரியாது. காசியுதினிடம் நிருவாகத்தை ஒப்படைத்துவிட்டு, வரலாற்று நூல்களைப் படிப்பதிலும் இறைவழிபாட்டிலும் காலத்தைக் கழித்தார். பேரரசின் பொருளாதாரம் மிகவும் சீர்கேடுற்றது. ஒரு முறை தொழுகைத் திடலுக்குச் செல்ல (இத்கா) ஆலம்கீருக்கு வாகன வசதிகூட கிடைக்காமல், அவர் நடந்தே செல்ல நேரிட்டது. மற்றொரு முறை அந்தப்புரச் சமையற்கட்டில் மூன்று நாட்கள் சமைக்கப்படவில்லை; பசியைப் பொறுக்க முடியாமல் மகளிர் அந்தப்புரத்தைவிட்டு வெளியே ஓடி வந்தனர். அகமத்சா அப்தாலி கி.பி. 1756-இல் இந்தியாவின் மீது படையெடுத்து வந்து, தில்லியில் ஒரு மாதம் தங்கி இருந்தார். ஆலம்கீர் தம் மகளை அப்தாலியின் மகன் தைமூருக்கு மணம் முடித்துக் கொடுத்தார். பின்னர்க் காசியுதினிடமிருந்து தம்மைக் காப்பாற்றுமாறு அப்தாலியிடம் முறையிட்டார். இதனால் கோபமுற்ற காசியுதின், கி.பி. 1759 நவம்பர் 29-ஆம் நாள் ஒரு இசுலாமியத் துறவியைக் காணலாம் எனக்கூறி ஆலம்கீரை அரண்மனைக்கு வெளியே பெரோசுசா கோட்லாவிற்கு அழைத்துச் சென்று, கொன்று யமுனை ஆற்று மணலில் நிருவாணமாகப் போட வைத்தார்; பின்னர் இவர் உடல் அங்கிருந்து எடுத்துச் செல்லப்பட்டு, உமாயூனின் கல்லறையில் புதைக்கப்பட்டது. அ.இரா.

**ஆலம்பாக்கம்** பிற்காலப் பல்லவர் காலத்திலும் முற்காலச் சோழர் காலத்திலும் புகழ்பெற்றிருந்தது. இவ்வூர் இன்றைய திருச்சிராப்பள்ளி மாவட்டம், இலால்குடி வட்டத்தில் திருமழபாடி -திருச்சி சாலையில் 11 கி.மீ. தொலைவில் கொள்ளிடத்தின் வடகரையில் அமைந்துள்ளது. பல்லவர் கல்வெட்டுகளில் தந்திவர்மச் சதுர்வேதி மங்கலம் என்றும், சோழர் கல்வெட்டுகளில் மதுராந்தகச் சதுர்வேதி மங்கலம் என்றும் இவ்வூர் குறிக்கப்பெற்றுள்ளது. இங்குக் கைலாசநாதர் கோயில் (அமிர்தேசுவரர் கோயில்) வரதராசப் பெருமாள் கோயில் (திருமேற்றளி), செல்லியம்மன் கோயில், ஐயனார் கோயில் ஆகியவை உள்ளன. பல்லவர் காலத்தில் கட்டப்பட்ட இவை, பிற்காலச் சோழர் காலத்தில் புதுப்பிக்கப்பட்டுள்ளன. தந்திவர்ம பல்லவன் காலத்தில் இப்பகுதியைத் தலைநகராகக் கொண்டு விசைய நல்லுழான் என்னும் சிற்றரசர் ஆண்டு வந்திருக்கலாம் என்பது தெரிகிறது.

**ஆலம்பூர்** ஆந்திரப்பிரதேச மாநிலம் கர்நூல் மாவட்டத்தில் இருக்கும் ஊர். இவ்வூர் துங்கபத்

திரை ஆறு கிருட்டிணா ஆற்றுடன் கலக்கும் இடத்திற்கு அருகில் உள்ளது. இங்கு 8-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பல கோவில்கள் உள்ளன. இவை முற்கால மேலைச் சாளுக்கியரின் கோயிற் கட்டிடக் கலை அமைப்பைப் பெற்றுத் திகழ்கின்றன. மேலும், இக்கோயில்களின் அமைப்பு, கருநாடக மாநிலப் பட்டடக்கல் கோயில்களின் அமைப்பைப் போன்று காணப்படுகிறது. ஆலம்பூரில் உள்ள கோயில்கள் எண்கோண வடிவமான சிகரங்களைக் கொண்டுள்ளன. இவ்வமைப்புச் சிகரங்கள், தென்னகக் கோயில் கலைப்பாணி வகையைச் சார்ந்தனவாகும். இதன் மேல் உச்சியில் 'அமலகா' என்று சொல்லப்படும் வரிவரியாக உள்ள உருண்டைகள் காணப்படுகின்றன. இவை வட இந்தியக் கோயில்களில் குறிப்பாக ஒரிசாக் கோயில்களில் காணப்படுகின்றன. தென்னகக் கோயில் கலைப்பாணியும் வட இந்தியக் கோயில் கலைப்பாணியும் இணைந்து, ஆலம்பூர்க் கோயில்களில் காணப்படுவது குறிப்பிடத்தக்கதாகும்.

ஆலம்பூரில் இருக்கும் ஒன்பது கோவில்கள் சிவன் கோவில்களாக இருப்பினும் இவற்றின் பெயர்கள் பிரமாவின் பெயர்களைக் கொண்டுள்ளன. 1. பால பிரமா, 2. குமர பிரமா, 3. ஆர்க்க பிரமா, 4. வீர பிரமா, 5. விசுவ பிரமா, 6. தர்க்க பிரமா, 7. கருட பிரமா, 8. சுவர்க்க பிரமா, 9. பத்ம பிரமா என்பன இக்கோயில்களின் பெயர்களாகும். மக்கள் இக்கோவில்களைச் சிறந்தனவாகக் கருதுகின்றனர். கி.பி. 12-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பல் குறுக்கிச் சோமநாதர் (Palkuriki Somanatha) என்பவர் பாண்டித்தார்த்தியா சரித்திரம் (Panditardya Charitra) என்னும் தமது நூலில் ஆலம்பூரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.



ஆலம்பூர்க் கோயில்

இக்கோவில்கள் பொதுவாகக் கருவறையையும் அதனைச் சுற்றி நடைபாதையையும் (சுற்றுப்பிராகாரம்) கருவறைக்கு முன்பு இரண்டு தூண்களுடைய முகவறையையும் கொண்டு காட்சியளிக்கின்றன. இத்தூண்களிலும் இவற்றின் மேலுள்ள கூரைகளிலும் கலைநுட்பம் மிக்க சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. கோவிலைச் சுற்றியுள்ள மாடக் குழிகள் மகர அமைப்புகளுடன் காணப்படுகின்றன. அம்மாடக் குழிகளில் மாடத் தெய்வங்களாகக் கங்காதரர், திரிபுராந்தகர், தட்சிணாமூர்த்தி, கிராதர், நடராசர் ஆகிய உருவங்கள் காணப்படுகின்றன. இவை தவிர மேலும் பல மாடத் தெய்வங்களும் இடம்பெற்றுள்ளன. கோவிலின் முன்கூடத்தில் அமைந்திருக்கும் இலாட வடிவமான சாளரங்களில் நடராசரின் சிற்பங்கள் வைக்கப்பட்டுள்ளன. வீரபிரமன் கோவிலின் முகப்பில் நடராசர் தம் தேவியுடன் இசைவாணர்கள் புடைசூழக் காணப்படுகிறார். 16 கைகளையுடைய சிவன் போர்க் கோலத்துடன் ஆலம்பூர்ச் சுவர்க்க பிரமன் கோவிலில் காட்சி தருகிறார்.

இங்குள்ள கோயில்களில் வீரபத்திரர், ஏழு பெண் தெய்வங்களுடனும் தாய்த் தெய்வத்துடனும் (Mother Goddess) காட்சி அளிக்கிறார். தாய்த் தெய்வம் தலையில்லாமலும், தலையிருக்க வேண்டிய இடத்தில் தாமரை விளங்கப் பிறந்த மேனியாகவும் விளங்குகிறது. கோயில்களில் காணப்படும் கல்வெட்டுகள், பட்டடக்கல் கோயில்களில் காணப்படும் இரண்டாம் விக்கிரமாதித்தனின் கல்வெட்டுகளைப் போன்றும், அவர் மனைவி திரிலோக்கியமகா தேவியாருடைய கல்வெட்டுகளைப் போன்றும் உள்ளன. இக்கோயில்களைக் கட்டிய மேலைச் சாளுக்கிய அரசன் இரண்டாம் விக்கிரமாதித்தன் சிற்பிகளைத் தென்னகத்தில் இருந்து கூட்டிச் சென்றான் என்று கூறுகின்றனர். இக்கோயில்களில் குப்த வாகாடகர் கோயில் பாணிகளும் காணப்படுகின்றன.

ஆலம்பூரில் உள்ள அருங்காட்சியகம் சீரிய சிற்பங்களைக் கொண்டு விளங்குகிறது. இவ்வருங்காட்சியகம் ஆந்திரப் பிரதேச அரசு நிலத்தின் தொல்லியல் துறையின் கண்காணிப்பில் இருந்து வருகிறது.

**ஆலம் பெர்ட்டு சீன் (கி.பி.1717-1783)**

தென்சின் மேடம் அம்மையாருக்கும் (Mmede Tencin) தே தோசெசு (Chevalier Destouches) என்பருக்கும் முறைகேடான (Illegitimate) குழந்தையாகப் பிறந்தார்; பிறந்த சில நாட்களில் கோயிலில் பெயரிடும்பொழுது புறக்கணிக்கப்பட்டார். இவர் சான் செனிசுட்டு (John Jenist) கல்லூரியில் பயின்றார்.

இக்கல்லூரிக்கும் இயேசு சங்கத்தாருக்கும் இடையே நடந்த வழக்கு வாதத்தில் அகப்பட்டுக் கொண்ட இவர் புலன் கடந்த மெய்ப்பொருளியல் (Metaphysics) ஆராய்ச்சியில் ஏற்படும் வாதங்களை வாழ்க்கை முழுவதும் வெறுத்தார்.

சட்டமும் மருத்துவமும் படித்தபிறகு ஆலம்பெர்ட்டுசான் கணிதப்படிப்பில் கவனம் செலுத்தினார். பிறகு கி.பி.1741-இல் 'டிரெயிட் டி டைநாமிக்கு' (Traite, de Dynamique) என்ற நூலை வெளியிட்ட பிறகு இவருக்கு நூலகவியல் கழகத்தில் இடம் கிடைத்தது. தேகார்ட்டும் பேகனும் இவரைப் பெரிதும் கவர்ந்தார்கள். மெய்ப்பிக்க முடியாத அடிப்படை மெய்ம்மை இவருடைய பொறியியல் துறைக்கு (Mechanics) ஆதாரமாக அமைந்திருந்தது. உய்த்துணர் அளவையியலின் முடிவுகள், (Deduction results) நன்கு ஆராய்ந்த ஆய்வு முறையின் அடிப்படையில் அமைய வேண்டும். முடிவின் உண்மை ஆய்வுமுறையில் உறுதி செய்யப்பட வேண்டும். மறைபொருள் உண்மையான அறிவை வலியுறுத்தாது.

ஆலம்பெர்ட்டு சீனும் திடெராட்டும் (Diderot) சேம்பர்சு (Chamber Encyclopaedia). அறிவுத் தொகுதியைப் பிரெஞ்சு மொழியில் மொழி பெயர்த்தார்கள். இவர் 1751-இல் ஒரு சிறந்த தத்துவ நூலை வெளியிட்டார். இலாக்கு (Locke) கூறிய புலன்களால் அறிகின்ற கொள்கையை விரிவுபடுத்தினார். கருதுகோள் (Hypothesis) உலகைப் பற்றிய அறிவுக்கு வழி வகுக்காது. எல்லா அறிவிற்கும் அடிப்படை, புலன்களால் அறிகின்ற தன்மைதான். புலன்களால் அறிகின்ற அறிவிற்குச் சிறப்பிடம் கொடுத்துக் கல்வித் துறையிலும் அதைப் புகுத்தினார். தத்துவம், அறிவியல், இசை ஆகிய மூன்றிலும் ஆராய்ச்சி செய்தார். இறைமையை ஏற்கும் கொள்கை உடையராயிருந்தார். சிறந்த அறிவோடு கூடிய காரணம் இல்லாமல் அறிவுத்திறமையை விவரிக்க முடியாது என்று கூறினார். ஆனால் கி.பி.1760-இல் திடெராட்டினால் இவர் நாத்திகராக மாறினார். பின்னர் வாழ்நாள் முழுவதும் நாத்திகராகவே விளங்கிக் காலமானார். இரா.கோ.

**ஆலம்பேரி சாத்தனார்** சங்ககாலப் புலவர்களுள் ஒருவர். இயற்பெயர் சாத்தனார் என்றும், இவரது ஊர் ஆலம்பேரி என்றும் தெரிகிறது. ஆலம்பேரி என்பது ஆலம் பேரேரி என்பதன் சிதைவு. இது நெல்லை மாவட்டத்து ஊர்களுள் ஒன்று.

இவர் பெயர் ஆருலவிய நாட்டு ஆலம்பேரி சாத்தனார் எனவும், ஆர்வல நாட்டு ஆலம்பேரி சாத்தனார் எனவும் ஏடுகளிற் காணப்படுகிறது. கல்வெட்டுகளிற் காணப்படும் ஆர்வலக் கூற்றமே இவ்வாறு ஆர்வல நாடு எனவும், ஆறாலவிய நாடு எனவும் வழங்கப்பட்டிருக்கக் கூடும்.

இப்புலவர், மதுரை மாவட்டத்திலுள்ள சிறுமலையையும், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனையும், கடலன் என்பானின் புகழ் வாய்ந்த விளங்கில் என்னும் ஊரையும், பிட்டன் என்பவனையும் அவனுடைய குதிரை மலையையும் புகழ்ந்து பாடியுள்ளார். நற்றிணையில் இவர்தம் நான்கு பாடல்கள் இடம்பெற்றுள்ளன. (152, 225, 303, 338). என்.இ.இ.

**ஆலம்பொழில்** தேவாரப் பாடல் பெற்ற சோழநாட்டுத் தலங்களுள் ஒன்று. இது தஞ்சை மாவட்டத்தில் திருப்பூந்துருத்திக்கு ஒரு கல் தொலைவில் உள்ளது; தஞ்சையிலிருந்து பேருந்து வழியாகச் சென்றடையலாம். இது காவிரிக் கரையிலுள்ளது; ஆலமரம் இதன் தலமரமாகும். இது அட்டவசுக்கள் வழிபட்ட இடமாகும். இத்தலத்திற்குத் திருநாவுக்கரசர் தேவாரம் உள்ளது. இறைவன் பெயர் ஆத்மநாதேசுரர்; இறைவி பெயர் ஞானாம்பிகை.

**ஆலமீடா** அமெரிக்க ஐக்கிய நாட்டில், கலிபோர்னியாவிலுள்ள நகரம். இது சான் பிரான்சிசுகோ நகரிலிருந்து 9 கி.மீ. தொலைவில், ஒரு செயற்கைத் தீவில் அமைந்துள்ளது; அழகு மிக்க நகரம்; கல்வி நல்வாழ்வு நிறுவனங்கள் உள்ள நகரமுமாம். பென்சில், தீப்பெட்டி, நீர்இறைக்கும் குழாய்கள் போன்ற குடிசைத் தொழில்கள் ஆலமீடாவில் (Almeida) நடைபெறுகின்றன.

**ஆலவட்டம்** என்பதற்குப் பெருவிசிறி, கால் செய்வட்டம், விசிறி என்னும் பொருள்கள் அகராதிகளில் குறிக்கப்பட்டுள்ளன. இது வட்ட வடிவமான விசிறி; நறுமணமிக்க வேர்களால் அல்லது பனை ஓலையால் அமைக்கப்பட்டிருக்கும். இதனை ஊர்வலங்களின் முன்னே எடுத்துச் செல்வது வழக்கம். பொதுவாகக் கோவில் திருவிழாக்கள், அரசனது உலாக்கள் ஆகியவற்றில் ஆலவட்டம் சுற்றுவது உண்டு.

'படுவேய் வெள் வளையமும் தண்பட்டு ஆலவட்டமும்' என்றும், 'வீசு ஆலவட்டம் அரிவையர் ஏந்தி ஆற்ற' என்றும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இதனால், ஊர்வலத்தில் பதாகை, குடை, கோல், வளையம், சாமரம், கவரி, போன்றவற்றுடன் ஆலவட்டமும் எடுத்துச் செல்லப்பட்டது என்றும், இதனைப் பெண்களே ஏந்தி வந்தனர் என்றும் அறியலாம்.

ஆலவட்டம் பார்வைக்கு அழகாகவும் நறுமணம் மிக்கதாகவும் இருப்பதால் ஊர்வலங்களில் சுற்றும் போது அழகுடன் மணமும் பரவுகின்றன.

ஒருவர் மற்றொருவரைத் தலைமேல் தூக்கிய வண்ணம் தானும் சுழன்று கொண்டு சுழற்றுவதனையும், நின்ற நிலையில் பெரியவர்கள் சிறுவர்களின் இரு கைகளையும் பற்றிச் சுற்றுவதையும் ஆலவட்டம் என்கின்றனர்.

'ஆர் கொடுத்த சேலையடி ஆலவட்டம் போடுதடி' என்ற தெம்மாங்கு வரிகள், ஆலவட்டம் என்பதற்கு அழகுறச் சுற்றுவது என்றே பொருள் தருகின்றன. சு.ச

**ஆலவாய்** மதுரையின் வேறுபெயர்களுள் ஒன்று. திருவிளையாடற் புராணத்தில் ஒரு காண்டம் ஆலவாய்க் காண்டம் என்னும் பெயர் கொண்டுள்ளது. காண்க: மதுரை.

**ஆலன்புருக்கு பிரபு** (கி.பி. 1883-1963) இரண்டாம் உலகப் போரில் பிரிட்டன் நாட்டுப் படைத்தலைவர்களுள் ஒருவர். இவர் தன்கர்க்கிருந்து (Dunkirk) நேசப்படைகள் பின்வாங்கிய நேரத்தில் தலைமையேற்றுச் சிறப்பான இடத்தைப் பெற்றவர். மேலுமிவர் 1941 முதல் 1946 வரை பேரரசுப் பொதுப் படையின் தலைவராகப் பணி புரிந்தார். இவர் இங்கிலாந்தில் இராயல் இராணுவ நிறுவனத்தில் பயின்றார்; முதல் உலகப் போரின் போது, பிரான்சில் போரிட்டார். இரண்டாம் உலகப் போரைப் பற்றி இவர் எழுதிய குறிப்புகளைச் சர் ஆர்தர் பிரியன்ட்டு என்பார் 1950-ஆம் ஆண்டுக்குப் பின்னர்த் தொகுத்து வெளியிட்டார்.

**ஆலாபனை** கருநாடக இசையில் இசைத் தமிழ் நூல்களால் ஆளத்தி என்று கூறப்படுகிறது. இசை நூலார் இதைக்—காட்டாளத்தி; நிறவாளத்தி எனப் பிரித்துள்ளனர். காட்டாளத்தி என்பது குறில் எழுத்துகளால் தாளத்துடன் பாடுவது எனவும், நிறவாளத்தி என்பது நெடில் எழுத்துகளால் தாளத்துடன் பாடுவது எனவும் வகுத்துள்ளனர். ஆலாபனையின் முதற்பகுதி, ஆட்சிப்திகா என்ற சுருக்கமான பகுதியாகவும், இரண்டாம் பகுதியான இராக வர்த்தனி விரிவான பகுதியாகவும் பாடப்படவேண்டும்.

**ஆலால சுந்தரம் பிள்ளை அ. (காஞ்சி)** கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த வடமொழிவல்ல தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். காஞ்சிபுரத்தில் பிறந்தவராதலால் காஞ்சி ஆலால சுந்தரம்பிள்ளை என அழைக்கப்பட்டார். இவர் தந்தையார் பெயர் அமிர்தாநந்தர். அமிர்தாநந்தர் தம் மைந்தர் நல்ல கல்வியும் சிறந்த ஒழுக்கமும் பெறும் பொருட்டு அவரை இளமையிலேயே அச்சுதாநந்தர் என்னும் சான்றோரிடம் அனுப்பிவைத்தார். அவர் தமிழ் வடமொழிப் புலமை, சமய ஒழுக்கம் முதலியவற்றில் சிறந்து, துறவு நெறி மேற்கொண்டவர். அவரிடம் பயிற்சி பெற்றமையால் ஆலால சுந்தரம்பிள்ளை சிறந்த கல்வியாளராகவும் ஒழுக்கசீலராகவும் விளங்கினார். தம் ஆசிரியர் அறிவுரைப்படி திருமணம் புரிந்து கொண்டு இல்லறம் நடத்தி வந்தார். காஞ்சி முத்துக் கச்சபேச சிவாசாரியாரவர்கள்பால் சிவ தீட்சை பெற்றார். பெரியபுராணத்தில் சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தி வந்தார்.

பிற்காலத்தில் சைவ சித்தாந்த சண்டமாருதம் என்று சிறப்பிக்கப்பெற்ற சோமசுந்தரநாயகர், பூவை கலியாண சுந்தரனார் போன்றார் இவருடன் பயின்ற மாணவர்களாவர். தம் ஆசிரியர் மறைவிற்குப்பின்னர் இவர் பலவிடங்களுக்கும், பிறநாடுகட்கும் சென்று சமயச் சொற்பொழிவாற்றலானார். ஞான பானு என்னும் பத்திரிகையினைத் தொடங்கி அதில் சைவ சமயச் சார்பான கட்டுரைகள் பல எழுதி வந்தார். சோடசாவதானம் சுப்பராயச் செட்டியார் முடிக்காது விடுத்த காஞ்சிப்புராணம், திருப்போரூர்ச் சந்நிதி முறை ஆகிய நூல்களின் உரைப் பணியினை நிறைவு செய்தார். பெரியபுராணத்தின் தில்லை வாழ் அந்தணர் சருக்கம், மும்மையால் உலகாண்ட சருக்கம் ஆகியவற்றிற்கு உரை வரைந்துள்ளார். திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் ஆகிய சித்தாந்த சாத்திர நூல்களுக்கும் உரை வரைந்துள்ளார்.

காமாட்சி லீலா பிரபாவம் எனனும் வடமொழி நூலைப் பைரவ சிவாச்சாரியாரோடு சேர்ந்து மொழி பெயர்த்துள்ளார். தேவிபாகவதம், சாதாக்கியம் ஆகிய வடமொழி நூல்களையும் தமிழில் பெயர்த்து ஆக்கியுள்ளார். எழுபது ஆண்டுகள் வாழ்ந்த இவர், கி.பி. 1922-ஆம் ஆண்டில் காலமானார். இவருடைய சமாதி திருவொற்றியூரில் அமைந்துள்ளது.

**ஆலிக்கார்னாசசு** கேரியாவிலுள்ள சிராமிக்கு வளைகுடாவின் வட கடற்கரையிலுள்ள தொன்மையான நகரம். தென்மேற்குத் துருக்கியின் பொட்ரும் (Bodrum) என்னும் நகரம், இக்காலத்தில் ஆலிக்கார்னாசசு (Halicarnassus) இருந்த இடத்தில் அமைந்துள்ளது. இங்குக் கிரேக்கர்கள் கி.மு. 11-ஆம் நூற்றாண்டில் கேரியா குடியேற்றத்தை அமைத்தனர் என்பது மரபு வழக்காகக் கருதப்படுகிறது. இதன் அண்மையில் மைசீனிய நாகரிகச் சின்னங்கள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.

இதன் தொடக்கக் கால வரலாறு புரியாத புதிராக உள்ளது. குரோசியசு என்னும் அரசர் இதை வென்றார். பின்னர் இது பாரசீகர்களின் வசமாயிற்று. அவர்களின் ஆட்சிக் காலத்தில் இதனை உள்ளூரைச் சார்ந்த கொடுங்கோலர்கள் ஆண்டனர். ஆர்ட்டிமிசா என்பவர் இதை ஆண்டபோது, பார

சீகப் பெருமன்னரான செர்க்சு (Xerxes) கிரேக்க நாட்டின் மீது கி.மு. 480-இல் படையெடுத்தார். ஆர்ட்டிமிசாவும் அவருடன் இணைந்து கொண்டார். பின்னர் இது தீலியக் குழுவில் சேர்ந்தது. பாரசீகப் பேரரசுக்குக் கட்டுப்பட்ட சுதந்திரப் பகுதியாகக் கி.மு. 4-ஆம் நூற்றாண்டில் இது உள்ளூர் அரசர்களால் ஆளப்பட்டது. இதனை ஆண்ட சிறப்பு மிக்க அரசர் மாலோசு என்பவராவர். இவர் பெரும் வீரர்; மைலசா என்னும் நகரிலிருந்த தம் தலைநகரைக் கி.மு. 362-ஆம் ஆண்டளவில் ஆலிக்கார்னாசசுக்கு மாற்றினார். மகா அலெக்சாந்தர் இந்நகரைக் கி.மு. 334-ஆம் ஆண்டில் நீண்ட முற்றுகைக்குப் பின்னர்க் கைப்பற்றினார். இதனைக் கி.மு. 281 முதல் கி.மு. 197 வரை தாலமி (Ptolemy) அரசர்கள் ஆண்டனர். பின்னர் மீண்டும் இது விடுதலை பெற்றது. உரோமானியர் ஆட்சியின்போது இது சிறப்பிழந்த நிலையிலிருந்தது.

வட்டவடிவமான துறைமுகமும் அதனையொட்டி வளைந்து காணப்படும் சரிவுகளும் இந்நகரின் சிறப்புக்குக் காரணங்கள். துறைமுகத்திற்குக் கிழக்கில் தீவுபோன்றிருந்த இடத்தில் மாசோலசு (Mausolus) தம் மாளிகையைக் கட்டியதுடன் தமக்குச் சொந்தமான தனித்த துறைமுகத்தையும் அமைத்துக் கொண்டார். செயிண்ட்டு சானின் வீரர்கள் கி.பி. 1402-ஆம் ஆண்டில் கோட்டையொன்றைக் கட்டியிருந்தார்கள். அதன் அழிவுச் சின்னங்களையும், நகரின் சுவர்களையும் இன்றும் காணலாம். இந்நகரத்தின் அழகிய கட்டிடமாகக் கருதப்பட்ட கல்லறை, (Mausoleum) உலகின் ஏழு விந்தைப் பொருள்களுள் ஒன்றாகக், கருதப்பட்டது. இக்கல்லறையைக் கட்டத் திட்டமிட்டவர், மாசோலசின் மனைவியான ஆர்ட்டிமிசியா ஆவாள்.

எரடோட்டசு (Herodotus), தயோனிசசு (Dionysius) போன்ற தலைசிறந்த கிரேக்க வரலாற்றுப் பேரறிஞர்கள் ஆலிக்கார்னாசசில்தான் பிறந்தார்கள்.

**ஆலிப்புலவர்** கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த இசுலாமியத் தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். இவருடைய இயற்பெயர் செய்கு அலி என்பதாகும். இவர் ஆலி என்று அன்பாக அழைக்கப் பெற்றார். தந்தையின் பெயர் செய்கு அபூபக்கர். இவருடைய ஊர் மங்கை நகராகும். இது இப்பொழுது திருநெல்வேலி மாவட்டத்தில் தேச மாணிக்கம், சேரன் மாதேவி ஆகிய ஊர்களுக்கிடையில் அமைந்துள்ள மேலைச் செவ்வல் என வழங்கப்படும் ஊராகும்.

இவரது நூலான மிராச்மாலை (மிஃராஜ்மாலை) 12 படலங்களையும் 745 செய்யுட்களையும்உடையது. இந்த நூல் முசுலீம் புலவர்களுக்கு வழி காட்டியாகவும், தமிழ்க்காப்பியம் போல நாடு நகரப் படலச் செய்யுட்கள் கொண்டதாகவும் உள்ளது. இந்நூல் நபி அவர்களின் விண் ஏற்றத்தைப் பற்றிப் பாடுவதாக அமைந்துள்ளது. இது அரபு மொழியிலிருந்து 'காலி' என்பவரின் உதவியோடு தமிழாக்கம் செய்யப்பட்டது. இந்நூலினைக் கோட்டாற்றில் அரங்கேற்றம் செய்ய முயன்றபோது, அங்குள்ள முசுலீம் மக்கள் உதவி செய்யவில்லை என்றும், அவ்வூரில் இருந்த இவர் மாணவராகிய சிவலிங்கம் செட்டியாரும் பாவாடைச் செட்டியாரும் உதவிபுரிந்தனர் என்றும் கூறுவர். அரங்கேற்றியபோது, நபிகள் நான்காம் முறை விண் சென்றதைப் புலவர் பாடி விளக்கம் செய்தபோது, நபிகள் புலவருக்குக் காட்சியளித் தருளினார் என்னும் செய்தி கூறப்படுகிறது. பாவாடைச் செட்டியாருக்கும் காட்சி தந்து குருடராயிருந்தஅவரை ஒளி பெறச் செய்தார் என்றும் கூறுவர்.

**ஆலிபாக்சு** என்னும் ஊர் கனடா நாட்டின் நோவாசுகோசியா (Nova Scotia) மாநிலத்தின் தலைநகர் ஆகும். இது கனடாவின் நான்கு அட்லாண்டிக்கு மாநிலங்களிலும் மிகப் பெரிய ஊர். இங்குள்ள துறைமுகம் பெரியது. இது கனடாவின் கடற்படைத் தளமும் பரபரப்பான கிழக்குக் கரைத் துறைமுகமுமாகும். ஏனைய கிழ்க்கரைத் துறைமுகங்கள் பனி மூடுவதால் செயல் முடக்கம் ஏற்படும் போதும் இத்துறைமுகம் செயற்படும் என்பது இதன் சிறப்பாகும். நோவாசுகோசியாவின் கிழக்குக் கரையில் ஆலிபாக்சு (Halifax) அமைந்துள்ளது. ஆலிபாக்சு கி.பி. 1749-இல் நிறுவப்பட்டது. ஆங்கிலேயர்கள் அதை இராணுவத் தளமாகவே உருவாக்கினர். வட அமெரிக்காவைக் கட்டுப்படுத்த, பிரான்சுடன் நடைபெற்ற போராட்டங்களின்போது இராணுவத் தேவைகளுக்காக அமைக்கப்பட்டது இந்நகரம்.இவ்வூருக்கு அண்மையிலிருந்த உலூயிபோர்கு (Louis Bourg) என்னுமிடத்தில் பிரெஞ்சுப் படைகள் நிறுத்திவைக்கப்பட்டிருந்தன.

ஆலிபாக்சு பிரபு சார்சு தங்கு (George Dunk, Earl of Halifax) என்பாரின் பெயரால் இவ்வூர் ஆலிபாக்சு எனப்பட்டது. அப்போது இவர் அரசுக் குழுவின் கண்காணிப்பாளராக இக்குடியேற்றப் பகுதியின் நிருவாகத்தைக் கவனித்தார்.

ஆலிபாக்சு கனடா நாட்டின், வரலாற்றுச் சிறப்பு மிக்க நகரங்களுள் ஒன்று. நோவாசுகோசியா மாநிலத்தின் முதல் பிரதிநிதித்துவ அரசின் பொது அவை, ஆலிபாக்சு நகரில்தான் கி.பி. 1758-இல் நிறுவப்பட்டது. அதேபோல் கனடாவின் முதல் பிராட்டசுடெண்டுத் திருச்சபை இங்குத்தான் கி.பி. 1749-



தவுன் டவுன் பகுதி—ஆலிபாக்சு

-இல் கட்டப்பட்டது. மேலும் கனடாவின் முதல் தாளிதழ் கி.பி. 1752-இல் வெளியானதும் இந்நகரி லிருந்தேயாகும். பாசுடனிலிருந்து ஆங்கிலப் படைகள் கி.பி. 1776-இல் விரட்டியடிக்கப்பட்டபோது, அப் படைகள் ஆலிபாக்சுக்குச் சென்றுதான் திருத்தி யமைக்கப்பட்டன. உள்நாட்டுப் போரின்போது (கி.பி. 1812-ஆம் ஆண்டு) ஆங்கிலத் தனியாரின் போர்க் கப் பல் போர்த்தளமாக இது இருந்தது. அமெரிக்க உள் நாட்டுப் போரின்போது இவ்வூர் கூட்டாட்சித் தடுப்பு வீரர்களின் தளமாக இருந்தது. முதல் உலகப் போரின்போது அமெரிக்கா, கனடா நாட்டுப் படை கள் இங்கிருந்து கப்பலில் புறப்பட்டுச் சென்றன. கலகக்காரக் கப்பல் ஒன்று 1917-இல் துறைமுகத்தில் மோதியதால் ஏறத்தாழ 2000 மக்கள் கொல்லப் பட்டனர். ஆலிபாக்சு நகரின் வடபகுதி தரைமட்ட மாகி அழிந்தது. இரண்டாம் உலகப் போர் நடை பெற்ற காலம் முழுதும் நேசப் படைகளுக்குப் போர்த் தளவாடங்களை வழங்கும் சிறப்பான தளமாக இவ் வூர் அமைந்திருந்தது. போர்க் கப்பல்களைப் பகை வர்களின் நீர்மூழ்கிக் கப்பல்களின் தாக்குதலிலிருந்து காக்கும் நோக்குடன் துறைமுகம் முழுதும் உருக்கு வலைகளால் பின்னப்பட்டிருந்தது. இந்நகரம் 1955-ஆம் ஆண்டில் ஆங்கசு எல். மாக்டொனால்டு பாலத் தினால் தார்ட்மத்துத் துறைமுகத்துடன் இணைக் கப்பட்டது. இப்பாலம் துறைமுகத்தின் கிழக்குப் பக்கம் உள்ளது.

ஆலிபாக்சு தார்ட்மத்துத் துறைமுகப் பகுதியில் எண்ணெயைத் தூய்மைப் படுத்தும் ஆலைகள் உள் ளன. மேற்கு இந்தியத் தீவுகளில் உற்பத்தியாகும் சர்க்கரையைப் பதப்படுத்தல், மீன் முதலான உணவுப் பொருள்களைப் பதப்படுத்தல், கப்பல் கட்டும் தொழில், கப்பலைப் பழுதுபார்க்கும் தொழில்; வார்ப்படத் தொழிற்சாலைகள், இயந்திரக் கடை கள், நூற்பாலைகள், கயிறு தொழில்கள் போன் றவை இங்கு நடைபெறும் சிறப்பான தொழில் களாம்.

ஆலிபாக்சு கல்விக்கும் பண்பாட்டிற்கும் மைய மாகத் திகழுகிறது. தல்அவுசி (Dolhousie) பல் கலைக்கழகம், பல்கலைக் கழக அரசர் கல்லூரி, புனித மேரி பல்கலைக்கழகம், நோவாசுகோசியா தொழில் நுட்பக் கல்லூரி, கலைக்கூடப் பள்ளி, இசைப் பாதுகாப்பகம் போன்ற உயர்கல்வி நிறுவனங் கள் இங்கு அமைந்துள்ளன. ஆலிபாக்சு கி.பி. 1842-இல் மாநகரமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. இதன் மக்கள்தொகை 1,14,594 (1981).

**ஆலிபாக்சு, சார்லசு மாண்டேகு (கி.பி. 1661 – 1715)** என்பார் ஆங்கில அரசியல் வல்லுநரும், பொருளியல் வல்லுநருமாவார். ஆலிபாக்சு (Halifax, Charles Montague) இங்கிலாந் தில் நார்த்தாம்ப்டன் சயரிலுள்ள ஆர்ட்டன் (Horton) என்னும் ஊரில், கி.பி. 1661 ஏப்பிரல் 16-ஆம் நாள் பிறந்தார். இவர் சர் என்றி மாண்டேகுவின் (Sri Henry Montague) பேரர். வெசுட்டுமினிசுடர் (West Minister) பள்ளியிலும் கேம்பிரிட்சுத்திரினிட்டித்(Trinity) கல்லூரியிலும் கல்வி பயின்றார். இவர் சர் ஐசக்கு நியூட்டனின் அணுக் கத் தோழராவார். இவரிடம் ஆழ்ந்த இலக்கியப் புலமை மிளிர்ந்தது. இவர் காமன்சு அவைக்குக் கி.பி. 1689-ஆம் ஆண்டு தேர்ந்தெடுக்கப்பட்டார். அப்போது அரசராகப் புது நியமனம் பெற்ற மூன் றாம் வில்லியத்தை இவர் ஆதரித்தார். பாராளு மன்றத்தில் சொல்லாற்றல் மிக்கவராகத் திகழ்ந் தார். இவர் கி.பி. 1692-இல் சட்டமுன்வரைவை உருவாக்கி இங்கிலாந்து வங்கியினை நிறுவினார். பொருளாதாரத் துறையில் இவருக்கிருந்த திறமைக் குப் பரிசாக இவர் ஆலிபாக்சு கருவூலத் தலைவராக (சான்சலர்) நியமிக்கப் பெற்றார். இவர் கி.பி. 1695 முதல் கி.பி. 1699 வரையிலான ஆண்டுகளில் ஆங்கில நாணய முறையைச் சீர்திருத்தி அமைத்தார். நாணயப் புழக்கம் சுருங்கிய காரணத்தால், காகிதப் பணத்தை நடைமுறைப்படுத்தினார். இவர் கி.பி. 1697 முதல் கி.பி. 1699 வரை நிதி அமைச்சராகப் பொறுப்பேற்றுக் காமன்சு சபையைத் தம் கட்டுப் பாட்டிற்குள் வைத்தார். ஆனால், தோரிக் (Tory) கட்சியினர் காமன்சு சபையில் பெரும்பான்மை

பெற்றபோது, ஆலிபாக்சு தம் பதவியை இழந்தார். இவர் கி.பி. 1700-இல் பாரன் பிரபுவாக்கப் பெற்றார். இவர் கி.பி. 1701-இலும் கி.பி. 1703-இலும் முறைகேடாக ஊழலில் ஈடுபட்டாரெனக் குற்றம் சாட்டப்பட்டார். ஆனால்,அக்குற்றங்கள் நிறுவப் படாமற் போயின. இவர் விக்குக் (Whig) கட்சியின் ஆதரவாளர். அதனால், முதலாம் சார்சு கி.பி. 1714-இல் மன்னராக அரியணை ஏறியதை இவர் ஆதரித்தார். பின்னர் இவர் பிரபுவாக நியமிக்கப் பெற்றார். இவர் தலைசிறந்த பொருளியல் வல்லுநர். இவர் கி.பி. 1715-ஆம் ஆண்டு மே மாதம் 15-ஆம் நாள் இலண்டனில் காலமானார்.

**ஆலிபாக்சு பிரபு (கி.பி. 1633-1695)** ஆங்கில அரசியல் வல்லுநரும், எழுத்தாளருமாவார். சார்சு செவில் (George Sevile) என்னும் பெயருடைய இவர் கி.பி. 1633-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 11-ஆம் நாள் யார்க்சயரிலுள்ள தார்ன்கில் என்னும் ஊரில் பிறந்தார். இவர் பாராளுமன்ற உறுப்பினராக இருந்தவர். இவருக்குச் செவில் பாரன் பிரபு என்றும், வைகவுண்ட்டு ஆலிபாக்சு என்றும் விருதுப் பெயர்கள் உண்டு. இவ்விருதுகள் கி.பி. 1688-ஆம் ஆண்டில் கொடுக்கப்பட்டன. இவர் கி.பி. 1679-இல் அரசரால் புதிதாக உருவாக்கப்பெற்ற அரச மன்றத்தின் (Privy Council) உறுப்பினரானார். அப்போது இங்கிலாந்தின் அரசராக இருந்த இரண்டாம் சார்லசு மன்னர் இவர் திறமைகளைப் பாராட்டி இவர்பால் அன்பு கொண்டார். இவருக்கு ஆலிபாக்சு பிரபுப் பட்டம் கொடுக்கப்பட்டது. யார்க் பிரபுவான சேம்சு கத்தோலிக்கச் சமய ஆதரவாளர் ஆதலால் அவர் அரசராக வருவதைஆலிபாக்சு விரும்பவில்லை. அதேபோல் சாப்டுசுபரி (Shaftesbury) பிரபுவின் கையாளாக இருந்த பிராட்டசுடண்டு மான்மத்துப் பிரபு, இரண்டாம் சார்லசுக்குப் பின்னர் அரசராவதையும் இவர் ஏற்றுக் கொள்ளவில்லை. இவர் மிதவாதக் கொள்கையைக் கடைப்பிடித்தவர். இரண்டாம் சார்லசின் தம்பி சேம்சு பட்டத்திற்கு வருவதைத் தடுக்கும் சட்ட முன்வரைவை (மசோதா) இவர் கடுமையாகப் பிரபுக்கள் அவையில் சாடினார். கத்தோலிக்கச் சமயப்பற்றுள்ள அவர் அரசராவதைத் தடுப்பதே இவ்வரைவின் நோக்கமாகும். இச்சட்ட முன்வரைவு நிறைவேற்றப்படவில்லை. இவர் கி.பி. 1681 [illegible] மாதம் முதல் கி.பி 1682-சூன் மாதம் முடிய சார்லசின் சிறப்பு அறிவுரையாளராக இருந்து மிதவாதக் கொள்கையை வற்புறுத்தினார். இவருக்கு இரு கட்சியிலும் சேராதவர் (Trimmer) என்னும் மறுபெயரும் உண்டு. இவர் கி.பி. 1682 ஆகசுட்டு 22-ஆம் நாள் ஆலிபாக்சு கோமகன் என்று சிறப்பிக்கப் பெற்றார். அதே ஆண்டு அக்டோபரில் இவர் முத்திரை நாயகப் பிரபு (Lord of the Privy Seal) ஆனார். இருப்பினும் இவர் இரண்டாம் சேம்சின் கொள்கைகளை அடியோடு ஏற்றுக்கொள்ள மறுத்தார். குருதி சிந்தாப் புரட்சிக்குப் பின்னர், ஆரஞ்சு வில்லியத்தைச் சற்றுத் தயக்கத்துடன் அரசராக ஏற்றுக்கொண்டார். பாராளுமன்றக் கருத்துகளைச் சீரான முறையில் உருவாக்க முயன்றார். இவர் பத்திரிகைச் சுதந்திரத்தை ஆதரித்தார். இவர் கி.பி. 1695-ஆம் ஆண்டு ஏப்பிரல் 5-ஆம் நாள் இலண்டனில் காலமானார். இவர் பல நூல்களை எழுதியுள்ளார். இவர் எழுதிய 'கட்சியில் சேராதவரின் குணவியல்பு' (A Character of Trimmer) என்னும் நூல் 1946-இல் வெளியிடப்பட்டது.

**ஆலியார்** சங்ககாலப் புலவர்களுள் ஒருவர்; ஆலி என்னும் ஊரில் பிறந்தவர். பல சிறு நாடுகளைக் கொண்ட சோழ நாட்டில் ஆலி நாடும் ஒன்று. ஆலி நாட்டின் தலைநகர் ஆலியூர் ஆகும். இது திருவாலி எனவும் வழங்கும். தஞ்சை மாவட்டத்தில் சீர்காழியிலிருந்து திருவெண்காட்டுக்குச் செல்லும் வழியில் இவ்வூர் உள்ளது. திருமால் அடியாராகிய திருமங்கை மன்னன் தோன்றிய பெருமையுடையது இவ்வூர். ஒன்பதாம் திருமுறையைச் சேர்ந்த திருவிசைப்பாப் பாடிய அமுதனார் என்பவரும் இவ்வூரைச் சார்ந்தவரே.

சில ஏடுகளில் இப்பெயர் ஆவியார் என்றும் காணப்படுகிறது. அவ்வாறாயின் இது குடிபற்றி அமைந்த பெயராகும். ஆனியார் என்னும் பாடமும் உண்டு. கரந்தைத் திணையில் நெடுமொழித் துறையாக அமைந்துள்ள இவர்தம் புறநானூற்றுப் பாடல் வீரன் ஒருவனின் ஆண்மைச் சிறப்பினைப் புலப்படுத்துவதாக உள்ளது. 'பகைவர் தம் மதிலைச் சூழ்ந்து, இதழ் மடித்துச் சென்று முந்துக என்று தன்னை அனுப்பாது, தானே முற்பட்டுச் சென்ற தலைவன் இன்னாதவன்' என்று கூறுவதன் வாயிலாக ஒரு வீரன் தன் வீரத்தினை வெளிப்படுத்தியுள்ளான்.

**ஆலே** என்பது கிழக்குச் செருமனியில் சாலே (Saale) ஆற்றங்கரையில் அமைந்துள்ள வாணிக மையம். இந்நகரில் பெருமளவில் உப்பு உற்பத்தியாகிறது. இயந்திரங்கள், இரும்பு, செப்புப் பொருள்கள் போன்றவை ஆலேயின் (Halle) செய் பொருள்கள். பிராண்டன்பர்க்கைச் சார்ந்த மூன்றாம் பிரடரிக்கு என்பவரால் கி.பி. 1694 ஆம் ஆண்டில் நிலைநாட்டப்பெற்ற ஆலே பல்கலைக்கழகம் இவ்வூரில் உள்ளது. பாடலாசிரியரான சார்சு ஆண்டல் என்பார் பிறந்த ஊர் இதுவாகும். இரண்டாம் உலகப் போரின்போது இந்நகரம் பன்முறை விமானத் தாக்குதலுக்காளாயிற்று. மக்கள்தொகை 2,32,217. ஆலே ஒரு மாவட்டத்தின் பெயருமாகும். இம்

மாவட்டப் பரப்பளவு 8771 ச.கி.மீ. இதன் மக்கள் தொகை 18,37,500.

**ஆலேயாக்கலாத்தேசியப் பூங்கா** அவாய்த் (Hawa) தீவுகளில் ஒன்றான மவீ (Mavi) தீவில் உள்ள பூங்காவாகும். இது அவாய்த்தேசியப் பூங்காவாக 1916-ஆம் ஆண்டிலிருந்து இருந்து வந்தது. இதுவே ஆலேயாக்கலாத்தேசியப் பூங்கா (Haleakala National Park)என 1960-இல் பெயர் மாற்றப்பட்டது. இங்குள்ள எரிமலை இக்காலத்தில் எரிவதில்லை. இவ்வெரிமலை அழகும் வனப்பும் மிக்கது. ஆலேயாக்கலா என்பதற்குக் கதிரவன் வீடு என்பது பொருள். இதன் பாறை கவினுறு அமைப்பினைக் கொண்டது. இதன் பரப்பளவு 88 ச.கி.மீ. ஆகும்.

**ஆவஞ்சி** என்பது பழந்தமிழ் நாட்டில் செய்யப்பட்டு வந்த தோற்கருவிகளுள் ஒன்றாகும். இது குடுக்கை, இடக்கை என்ற பெயர்களாலும் வழங்கப்படுகிறது. ஆவின் வஞ்சித்தோலைப் போர்த்தலால் இக்கருவி ஆவஞ்சி எனப் பெயர் பெற்றது. குடுக்கையாக அடைத்ததால் குடுக்கை என்பது பெயராயிற்று. நீத்தார் கடன் செய்யும் போது இடக்கையால் இயக்குதலின் இடக்கை எனப் பெயர்பெற்றது. ஆவஞ்சி என்பது இடக்கையின் மற்றொரு பெயர்.

இக்கருவி தலைக்கருவி வகையில் சேர்க்கப் பட்டுள்ளது; அகமுழவு என்ற வகையைச் சேர்ந்தது. குடுக்கை என்ற பெயரில் மென்மைக்கருவி வகையில் இது சேர்கிறது.

**ஆவடு துறை** சோழ நாட்டிலுள்ள தேவாரப் பாடல் பெற்ற தலங்களுள் ஒன்று. குடந்தையிலிருந்தும் மயிலாடுதுறையிலிருந்தும் பேருந்தில் சென்று இத்தலத்தினை அடையலாம். தஞ்சை விழுப்புரம் இருப்புப் பாதையிலுள்ள நரசிங்கம் பேட்டை நிலையத்தில் இறங்கி இரண்டு கல் தொலைவு கடந்தும் இத்தலத்தினை எய்துதல் கூடும். இறைவன் பெயர் மாசிலாமணீசுவரர்; இறைவி பெயர் ஒப்பிலாமுலையம்மை. தீர்த்தம் கோமுத்தி என்பதாகும். தலமரம் அரசு. பசுவடிவுடன் உமா தேவியார் இறைவனை வழிபட்ட இடமாதலால் ஆவடுதுறை என்று இத்தலம் பெயர் பெற்றதாகக் கூறப்படுகிறது. முசுகுந்த மன்னனுக்கு மகப்பேறு அளிக்கப்பட்ட இடம் என்றும், சித்தர் பலர் அட்ட மாசித்தி அடைந்த இடமென்றும் இது கூறப்படுகிறது. இன்று இத்தலம் திருவாவடுதுறை என்னும் பெயரில் வழங்கி வருகிறது. தேவார முதலிகள் மூவரும் இத்தலத்திறைவனைப் பதிகம் பாடிப் பரவியுள்ளனர். திருவாவடுதுறை ஆதீனம் எனப் பெயரிய சைவத்திருமடம் இத்தலத்தில் உள்ளது. திருமூலர் தம்திருமந்திரத்தினை இத்திருப்பதியிலிருந்து அருளிச் செய்தார். திருவிசைப்பா ஆசிரியர்களுள் ஒருவரான திருமாளிகைத் தேவர் இத்தலத்தில் வாழ்ந்தார். சேந்தனார் தம் திருவிசைப்பாவில் இத்தல இறைவனைப் பாடிப் பரவியுள்ளார்.

**ஆவணக் காப்பகம்** என்பது அன்றாட வாழ்க்கையில் நிகழும் நிகழ்ச்சிகளின் தொடர்பாக உள்ள குறிப்பேடுகளைத் தொகுத்து வைத்துப் பாதுகாக்கும் இடமாகும். அரசுகளுக்குள் ஏற்படும் உடன்படிக்கைகள், கடிதப் பரிமாற்றங்கள், முக்கியக் கொள்கை அறிவிப்புகள், தனிப்பட்டோர்களுக்குள் நிகழும் கொள்வன கொடுப்பன தொடர்பான உடன்படிக்கைகள், உறுதிப் பத்திரங்கள், குழுத் தீர்மானங்கள், ஒழுங்கு விதிகள் போன்றவைகள் எடுத்துக் காட்டுகளாகும்.

வளர்ந்து வருகின்ற சமுதாயத்தில் வரலாற்றுச் சான்றுகளை வளரும் சமுதாயத்திற்காகச் சேகரித்துப் பாதுகாப்பது என்பது, அரிய பணியாகவே உள்ளது. வரலாற்றுப் புகழ்மிக்க பல்வேறு ஆவணங்கள், பொருள்கள், கடிதங்கள், நாட்குறிப்புகள் போன்றவற்றைத் தொகுத்து, அவற்றை வரிசைப் படுத்தி வைப்பது ஆய்வுக்குப் பெருந் துணையாக இருக்கும். ஆகவே கி.பி. 1891-ஆம் ஆண்டு மேற்கண்ட ஆவணங்களைத் தொகுத்துப் பாதுகாக்கும் பொருட்டு இந்திய ஆவணக் காப்பகம் என்ற அமைப்பு, தோற்றுவிக்கப்பட்டது. கல்கத்தாவில் இருந்த இந்தியத் தலைநகரை 1911-ஆம் ஆண்டு தில்லிக்கு மாற்றியபொழுது, அனைத்து ஆவணங்களையும் கல்கத்தாவிலிருந்து புதிய தலைநகரான தில்லிக்கு மாற்றுவது மிகவும் இன்றியமையாததாக இருந்தது. இந்த இடமாற்றும் பணி 1911-ஆம் ஆண்டு தொடங்கப்பெற்று, 1937-ஆம் ஆண்டு நிறைவுபெற்றது. இந்தியா சுதந்திரம் அடைந்ததும் இந்தக் காப்பகத்தின் நிலை, இந்தியத் தேசிய ஆவணக்காப்பகம் என்ற நிலைக்கு உயர்த்தப்பட்டது. ஆவணப் பாதுகாப்பாளர் என்று இருந்த நிலை, ஆவணக் காப்பக இயக்குநர் என்ற நிலைக்கு உயர்த்தப்பட்டது.

இக்காப்பகத்தில் பல இலட்சம் பொது ஆவணங்கள், தேசப் படங்கள், தனியார் கடிதங்கள்,மைக்ரோ பிலிம் ஆவணங்கள் மற்றும் 25 கிலோ மீட்டர் தூரம் வைக்கக் கூடிய நூல்கள் ஆகியவை இங்கு உள்ளன. இக் காப்பகம் கிழக்கிந்தியக் கம்பெனியின் கடிதத் தொடர்பான ஆவணங்களையும், இலண்டன் ஆவண நூலகம், பிரான்சு, நெதர்லாந்து, தென்மார்க்கு முதலிய இடங்களிலிருந்தும், பல்வேறு மூலங்களிலிருந்தும் கி.பி. 1707-48க்கு இடைப்பட்ட காலத்திற்குரிய ஆவணங்களையும் அன்பளிப்பாகவும், விலை கொடுத்தும் வாங்கிப் பாதுகாத்து வருகிறது.

பல்வேறு மாநிலங்களாலும் இயற்றப்பட்ட ஆயிரக் கணக்கான சட்டங்கள், ஏறக்குறைய 1, 05, 000 கட்டுச் செய்யப்பட்ட தொகுதிகள், 54, 00, 000 தனி ஆவணங்கள், 16,830 தேசப் படங்கள் ஆகியவை இக்காப்பகத்தில் இப்பொழுது உள்ளன.

பாரதம் முழுவதிலிருந்தும் ஆய்வுப் பணியாற்றும் ஆராய்ச்சியாளர்கள், ஆவணங்களைப் பார்த்து ஆய்வுசெய்யும் பணி தடைபடாது தொடர்ந்து நடைபெறப் பல்வேறு வசதிகளை இந்திய அரசு செய்து கொடுத்திருக்கிறது. சிறப்பு வசதிகளுடன் கூடிய ஆய்வு அறை, ஏறக்குறைய 45 ஆய்வாளர்கள் தொடர்ந்து ஆய்வு செய்வதற்கு ஏற்ற வகையில் அறிவியல் முறையில் சிறப்புற அமைக்கப்பட்டுள்ளது. ஆவணக் காப்பகம் பற்றிய முறையான கல்விப் பயிற்சியினை ஆசியாவிலேயே இந்தியத் தேசிய ஆவணக் காப்பகம் மட்டுமே அளித்து வருகிறது. தென்கிழக்கு ஆசியாவில் ஆவணக் காப்பகம் பற்றிய பயிற்சியினை ஐக்கிய நாட்டுக் கல்வி, அறிவியல் மற்றும் பண்பாட்டு நிறுவனம் (UNESCO) ஏற்றுக் கொண்டுள்ளது. இக் காப்பகம் இந்தியத் தேசியக் காப்பகங்களுக்கான நெறிமுறைகளை வகுப்பது, தனியார் தேசிய ஆவணங்களையும் பதிவு செய்து பட்டியலிட்டு வெளியிடுவது ஆகியவற்றுடன் ஆண்டிற்கு இரு முறை காப்பகக் கல்வித் தொடர்பான ஓர் இதழையும் வெளியிட்டு வருகிறது.

இந்திய ஆவணக் காப்பகம், பல்வேறு ஆவணங்களையும் அறிவியல் முறையில் பாதுகாத்துப் பல்வேறுமாநிலங்களும் நிறுவனங்களும் பயன்படுத்தும் வகையில் செயற்பட்டு வருகிறது. மறுநகலாக்கப் பிரிவு ஒன்று மிகச் சிறந்த பணியினைச் செய்து வருகிறது. அரசு மற்றும்பொது நிறுவனங்களுக்குத் தேவையான ஆவணங்களைப் படியெடுத்து உதவுகிறது. மேலும், இயங்கும் நுண்புகைப்படப் பிரிவு ஒன்று செயற்பட்டு வருகிறது. இந்த இயங்கும் பிரிவு, உரிய இடங்களுக்குச் சென்று அங்குள்ளவற்றைப் பதிவு செய்து வருகிறது.

மக்களிடையே இக்காப்பகம் தன் சிறப்பினை உணர்த்தும் வகையில், பொதுமக்களுக்காக வரலாற்றுச் சிறப்புமிக்க பல ஆவணங்களையும் பிற பொருள்களையும் மையமாகக் கொண்டு, காட்சிகளை ஆங்காங்கே நடத்தி வருகிறது. இந்தியத் தேசிய ஆவணக் காப்பகத்தின் பிரிவுகள் போபால், செய்ப்பூர், பாண்டிச்சேரி ஆகிய மூன்று இடங்களில் செயற்பட்டு வருகின்றன.

**ஆவணக் காப்பகம், தமிழ்நாடு:** கிழக்கிந்தியக் கம்பெனியின் சென்னைப் பிரிவு, சென்ற நூற்றாண்டின் தொடக்கத்திலேயே மாநில ஆவணங்களை ஒரே இடத்தில் சேர்த்து வைப்பதன் இன்றியமையாமையினை உணர்ந்திருந்தது. சென்னை செயிண்ட் சார்சுக் கோட்டை ஆளுநர் வில்லியம் பெண்டிங்கு பிரபு, இது தொடர்பாக ஒரு குறிப்பு கி.பி.1805-இல் எழுதி வைத்தார். அரசாங்க நிருவாக ஆவணங்கள் வளர்ந்துகொண்டே வருவதால் இவற்றைப் பாதுகாப்பதற்கு ஒரு தனி அலுவலரை நியமிக்க வேண்டுமென்று அக்குறிப்பில் குறிப்பிட்டிருந்தார். அவருடைய பரிந்துரையின்படி, கோட்டைச் சதுக்கத்தின் வடக்கு-மூலையில் ஒரு கட்டிடம் ஆவணங்களை வைப்பதற்காக ஒதுக்கப்பட்டது. இந்த ஏற்பாடுதான், சென்னை ஆவண அலுவலகம் தோன்றுவதற்கு அடிப்படையாக இருந்தது. இந்த அலுவலகம் இன்று தமிழ்நாடு ஆவணக் காப்பகம் என்ற பெயரில் விளங்குகிறது.

இந்திய அரசின் ஆவணப் பாதுகாப்பு அலுவலர் 1902-ஆம் ஆண்டு உருவாக்கிய குறிப்பில் கண்ட கருத்துரைகள், சென்னை அரசாங்கத்திற்கு அனுப்பப்பட்டன. அக்கருத்துரை, கி.பி. 1800-க்கு முற்பட்ட ஆவணங்கள், மாவட்ட அலுவலகங்களிலிருந்து ஒரு மத்திய அலுவலகத்திற்கு மாற்றப்படவேண்டும்; ஓர் ஆவணத்துறை நிறுவப்பட வேண்டும்; இந்திய அரசாங்க ஆவண அலுவலகமும் வங்காள ஆவண அலுவலகமும் ஒருங்கிணைக்கப்பட்டுக் கிழக்கிந்தியக் கம்பெனி கலைக்கப்பட்ட தேதிவரையிலான ஆவணங்கள் அனைத்தும் ஒரே இடத்தில் சேமித்து வைக்கப்பட வழிவகுக்கப்பட வேண்டும் என்று தெரிவித்தது.

இக்கருத்துரைகளை மனத்தில் கொண்டு, பல உயர் அலுவலர்கள் நியமிக்கப்பட்டனர். இந்திய அரசாங்கத்தின் பரிந்துரைகளுக்கு மாற்றம் அனுப்பும் போது சென்னை அரசாங்கம், ஆவணங்களைக் கல்கத்தாவுக்கு அனுப்புவதை ஏற்றுக்கொள்ளவில்லை. அனைத்து ஆவணங்களையும் ஒரே இடத்தில் சேர்த்து வைப்பதால், பகைவர் தாக்குதல், தீ, பூகம்பம் போன்ற பல்வேறு இயற்கையின் சீற்றம் ஆகியவற்றால் ஏற்படும் விபத்துகளால் அனைத்தும் முழுமையாக அழிந்துவிடும் என்பதும் குறிப்பிடப்பட்டது. ஆவணங்கள் கல்கத்தாவுக்கோ இங்கிலாந்துக்கோ மாற்றப்பட்டுவிட்டால், மாவட்ட வரலாற்றுக் குறிப்புகள் உருவாக்குதலில் இடையூறுகள் ஏற்படும் என்பதை உணர்ந்த சென்னை அரசு, இங்கிருந்து கல்கத்தாவிற்கும் இங்கிலாந்திற்கும் ஆவணங்களை அனுப்புவதை வன்மையாக எதிர்த்தது.

இதனை அடிப்படையாகக் கொண்டு, சென்னை எழும்பூரில் 1909-இல் இரண்டு இலட்சத்து இருபதாயிரம் ரூபாய் செலவில் ஒரு கட்டிடம் கட்டப்பட்டது. ஆவணங்களைப் பாதுகாப்பதற்கு உரிய அலமாரிகள், அடுக்குகள் முதலியன உருவாக்கப்பட்டன.

இந்தக் காப்பகத்தை நிருவகிக்க, இந்தியக் கல்வித் துறையின் அலுவலர் ஒருவர் நியமிக்கப்பட்டார். பல்வேறு ஆவணங்களை முறைப்படுத்திப் பட்டியல் செய்தல், தொல்லாவணங்களைச் சீர்ப்படுத்தி அச்சிடுதல், அரசு அனுமதியுடன் ஆவணங்களிலிருந்து சில பகுதிகளைத் தேர்ந்தெடுத்து, குறிப்பிட்ட காலக் கட்டங்களுக்கான ஆவணப்பட்டியல்கள் உருவாக்குதல், அச்சிடுவதற்கான பட்டியல்கள் உருவாக்குதல் முதலிய பணிகள் இந்த அலுவலரின் பொறுப்பாயிற்று.

ஆவணக் காப்பகத்தின் அதிகாரியாக 1911-ஆம் ஆண்டு திரு. தாடுவெல் (Dod well) நியமிக்கப்பட்டார். இவர் ஆனந்தரங்கப் பிள்ளையின் நாட்குறிப்பினை அச்சிடுவதற்கு ஏற்பாடுகள் செய்தார். மாவட்ட விவரத் தொகுப்புச்சுவடிகள் (Gazette) உருவாக்குவதற்காகத் தனி அலுவலர் ஒருவர் 1926-இல் பணி அமர்த்தப்பட்டார். இவ்வாணைக் காப்பகம் 1940-ஆம் ஆண்டில் பிரிட்டிசு ஆவணச் சங்கத்தின் நிறுவன உறுப்பினராயிற்று. இரண்டாம் உலகப் போரின்போது, இந்த அலுவலகத்தின் ஆவணங்கள், சென்னைக்கு வெளியே தொலைவில் ஓரிடத்திற்கு மாற்றப்பட்டிருந்தன. மீண்டும் 1950-இல் ஆவணங்கள் சென்னை அலுவலகத்திற்குத் திருப்பிக் கொண்டு வரப்பெற்றன.

ஆவணக்காப்பகத்திற்கு,கி.பி.1867-ஆம்ஆண்டின் அச்சகம், நூல்கள், பதிவுச் சட்டத்தின் கீழ் வரப்பெற்ற பழைய நூல்கள், 1952-இல் மாற்றப்பட்டன. பல ஆண்டுகளுக்கு முன்னர் உருவாக்கப்பட்ட மாவட்ட விவரத்தொகுப்புச் சுவடிகள் திருத்தி அச்சிடப்படவேண்டுமென்று 1954-இல் அரசுகட்டளை பிறப்பித்தது. ஆவணக்காப்பகத்தின் அலுவலருக்கு இயக்குநர் என்று 1968-ஆம் ஆண்டு பெயர் மாற்றப்பட்டது. காப்பகத்தின் பெயர் 'தமிழ்நாடு ஆவணக் காப்பகம்' என்று மாற்றப்பட்டது.

தமிழ்நாடு ஆவணக் காப்பகத்தில் பல சிறந்த ஆவணங்கள் உள்ளன. தங்கத் தகட்டில் எழுதப்பட்ட சாசனம் ஒன்று 'பிரான்சிசுடே' என்பவருக்குச் சென்னப்ப நாயக்கரால் 22-7-1639-இல் அளிக்கப்பட்டது. இதுவே சென்னை வரலாற்றின் முதல் ஆங்கில ஆவணமாகும். 'பிரான்சிசு டே' என்பவராலேயே இதன் வரைவு உருவாக்கப்பட்டிருக்கலாம் என்பது கருதப்படுகிறது. பல ஆவணங்கள், குறிப்பாக 1639- ஆம் ஆண்டு முதல் 1670-ஆம் ஆண்டு வரையிலான ஆவணங்கள், அந்துப் பூச்சியினாலும் காலப் போக்கில் மக்கியும் அழிந்துவிட்டன. தொடக்ககால 'கன்சல்டேசன் தொகுதிகள்' (Consultation Volumes) 1670-ஆம் ஆண்டிற்குரியதாகும். ஆனால், தொடர்ச்சியான ஆங்கில ஆவணத் தொகுப்புகள் 1672-ஆம் ஆண்டு முதலே உள்ளன. மேலும் 1670-ஆம் ஆண்டிற்கு முற்பட்ட தச்சு, தேனிசு ஆவணங்களும் இக்காப்பகத்தில் உள. சென்னைப் பட்டின அரசரின் சாசனத்தின் மூலம், சென்னைக் கடற்கரையில் (Coromandal Coast)கோட்டையும் அரண்மனையும் கட்டியபிறகு, 'ஆவணக் காப்பு' என்ற சொல்லின் பொருள்விளங்கும் வண்ணம் ஆங்கில ஆவணங்கள் முறையாகத் தொகுக்கப்பட்டன.

கிழக்கில் இந்தோனேசியா முதல் மேற்கில் மொரீசிசு வரையில் நடைபெற்ற பிரிட்டிசு அரசின் நடவடிக்கைகளுக்குச் சென்னையே மையமாகும். எனவேதான் புனித சார்க்கோட்டை ஆவணங்கள் சிறப்புத்தன்மை வாய்ந்தவையாக உள்ளன. இரண்டாவதாக, கன்னியாகுமரி முதல் நருமதை ஆறு வரையிலான பகுதிகள், சென்னையின் கட்டுப்பாட்டின் கீழ் இருந்தன. இவ்வாறாகப் புனித சார்க்கோட்டை ஆவணங்கள், மிகப் பரந்த நிலப் பரப்பிற்குரிய வரலாற்றுச் செய்திகளை உள்ளடக்கியுள்ளன. புதிய காலத் தென்னிந்தியாவின் வரலாறு மிகப் பரந்த நிலப்பரப்பிற்குரிய வரலாற்றுச் செய்திகளை உள்ளடக்கியுள்ளது. புதிய காலத்தென்னிந்தியாவின் வரலாறு, நாகரிகம் பற்றிய விளக்கங்களை இவ்வாவணக் காப்பகம் கொண்டுள்ளது.

இங்குள்ள ஆவணங்கள், வரலாறு நிருவாகத் தொடர்பான பல உண்மைகள் ஆகியவற்றை அறிய, சிறந்த கருப்பொருளான அடிப்படைச் சான்றுகளைக் கொண்டு திகழ்கின்றன. அவை தச்சு ஆவணங்கள் (Dutch Records) மலையாளக் கடற்கரைப் பகுதியான கொச்சியில் தச்சுக்காரர்களின் குடியேற்றம், கேரளத்தில் அப்போது ஆட்சிபுரிந்த உள்நாட்டு மன்னர்களுடன் தச்சுக்காரர்கள் செய்து கொண்ட ஒப்பந்தம், படேவியா — இலங்கை ஆட்சியாளர்களுடன் கடிதப் போக்குவரத்து முதலிய தகவல்களைத் தெரிவிக்கின்றன. பழைய 'மோடி' மொழியில் எழுதப்பட்ட தஞ்சாவூர் அரசு ஆவணங்கள், தஞ்சாவூர் அரண்மனை, கோயில்களைப் பற்றிய நிதிநிலை அறிக்கைகள், தஞ்சை அரசரின் சொத்து, கடன் பற்றிய விவரங்கள், தஞ்சையில் ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் நடந்த நிருவாகத் தொடர்பான கடிதப் போக்குவரத்துகள் முதலியத் தகவல்களைக் கொண்டவை. அவை பாரசீக ஆவணங்கள் (Persian Records), கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் கர்நாடக நவாபு ஆட்சிக்காலத்தில் வரலாற்றுச் சிறப்புமிக்க பல நிகழ்ச்சிகளைக் கூறுகின்றன. இவற்றில் 26.4.1773-ஆம் தேதி முதல் 29.2.1775-ஆம் தேதி வரையில் வாலாசா நவாபு முகமது அலிகான் எழுதிய நாட்குறிப்புகளும் உள்ளன. பாண்டிச்சேரியில் பிரான்சு அதிபர் தூப்ளேயின் திவானாகப் பணியாற்றிப் புகழ்பெற்ற ஆனந்தரங்கப் பிள்ளை தமி

மில் எழுதியுள்ள நாட்குறிப்புகள் வரலாற்றுச் சிறப்பு மிக்கவை. இந்திய மக்களிடம், குறிப்பாகத் தமிழ் மக்களிடம் பிரெஞ்சுக்காரர்களின் தொடர்பு, பழக்க வழக்கங்கள், தூப்ளேயின் அந்தரங்க வாழ்க்கை, அன்றாட நிருவாகம் முதலியவற்றை அறிய இந்த நாட்குறிப்புகள், சிறந்த அடிப்படைச் சான்றுகளாக விளங்குகின்றன. இந்த நாட்குறிப்புகள் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பெற்று, பன்னிரண்டுதொகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளன.

மேற்படி ஆவணங்கள் மட்டுமல்லாமல், தமிழ்நாடு ஆவணக் காப்பக நூலகத்தில் ஏறக்குறைய 5,00,000 நூல்களும் உள்ளன. இவை 1873-ஆம் ஆண்டு முதல் அச்சிடப்பட்டவை; தமிழக அரசு தலைமைச் செயலகத்திலிருந்தும் மாவட்ட ஆட்சித் தலைவர்களிடமிருந்தும் மற்றும் அரசின் பல துறைத் தலைவர்களிடமிருந்தும் மாற்றப்பட்ட நூல்களும் இந் நூல்களுள் அடங்கும். இந்த நூல்கள், தமிழகத்தின் வரலாறு, நாகரிகம், பண்பாடு, வாணிகம் ஆகியவற்றைக் கூறுகின்றன. புனித சார்சுக் கோட்டை ஆவணங்களும் தமிழ்நாடு ஆவணக் காப்பகத்தில் உள்ள நூல்களும், சிறப்பாக ஆசியாவின் வரலாற்றையும், குறிப்பாகத் தென்னிந்தியாவின் வரலாற்றையும் அறிந்துகொள்ளக் கலங்கரை விளக்கம்போல் பயன்படுகின்றன. பல வல்லுநர்களின் அறிக்கைகளும் இக்காப்பகத்தில் உள்ளன. எடுத்துக்காட்டாக 1859-ஆம் ஆண்டு ஏ.சி. காட்டன் அறிக்கையில் வற்றாத நதிகளை இணைத்துக் கால்வாய்ப் போக்குவரத்தை வளர்ச்சி செய்வதுபற்றிய சாத்தியக் கூறுகள் விளக்கப்பட்டுள்ளன. இந்த எண்ணங்கள், இவ்விருபதாம் நூற்றாண்டில் கங்கை-காவிரி நதிகள் இணைப்புத் திட்டம், கிருட்டிணா நதி நீரைத் தமிழகத்திற்குக் கொண்டுவரும் திட்டம் ஆகியவை பற்றி இந்தியத் தேசியவாதிகளால் மிகுந்த அக்கறையுடன் கருதப்படுகின்றன.

இவற்றைத் தவிர, பதினேழு பதினெட்டு பத்தொன்பதாம் நூற்றாண்டுகளைச் சார்ந்த தச்சு, தேனிசு (Danish), பெர்சியன், பிரஞ்சு, போர்ச்சுகீசு, மோடி, மராத்தி ஆகிய மொழிகளில் உள்ள ஆவணங்களும் உள்ளன. இங்குள்ள நூலகத்தில், வேறெந்த நூலகத்திலும் கிடைப்பதற்கரிய அச்சிட்ட பழைய நூல்களும், அரசு வெளியீடுகளும், அரசிதழ்களும் உள்ளன.

அறிவியல் முறையில் ஆவணங்களைப் பாதுகாப்பதற்கும் ஆய்வாளர்கள் வந்து ஆவணங்களைப் பயன்படுத்துவதற்கும் வசதிகள் செய்யப்பட்டுள்ளன. வரலாற்று ஆய்வுக்கு ஊக்கம் அளிப்பதற்காக ஆய்வுக் கூடம் நாள்தோறும் காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரையிலும் செயற்பட்டு வருகிறது.

இங்குள்ள நூலகத்தில் ஆய்வாளர்களுக்குத் தேவையான அடிப்படைக் கருத்துகளும் இரண்டாம்நிலைச் சான்றுகளும் கிடைக்கின்றன. விலை கொடுத்துப் பெற்ற நூல்களும் நன்கொடையாகவும் நூல்மாற்று முறையிலும் பெற்ற நூல்களும், நூற்பதிவுச் சட்டத்தின் கீழ் அனுப்பப்படும் நூல்களும் சேர்க்கப்படுகின்றன. இந்நூலகத்தில் சேர்க்கப்படும் வெளியீடுகள், அவற்றின் தன்மையைப் பொறுத்துப் பல்வேறு பகுப்புகளாகப் பகுத்து வைக்கப்படுகின்றன.

பழைய மன்னர்கள், சமீன்தார்கள், மதத்தலைவர்கள், தனியார்துறை அலுவலர்கள், தனிப்பட்டவர்கள் முதலியோரிடம் உள்ள வரலாற்றுச் சிறப்பு மிக்க பழைய ஓலைச் சுவடிகளையும் ஆவணங்களையும் பெற்று, அவற்றைத் தமிழ்நாடு ஆவணக் காப்பகத்தில் வைத்துப் பாதுகாக்க, வரலாற்று ஆவண மதிப்பீட்டு மாநிலக்குழு (Regional Committee for Survey of Historical Rocords) என்னும் குழுவை அரசு அமைத்துள்ளது. இம்மாநிலக்குழு, ஆவணக் காப்பக ஆணையரின் மேற்பார்வையாலும், உறுப்பினர்களாக உள்ள பல அறிஞர்கள், அலுவலர்கள் ஆகியோர் கருத்துகளாலும் ஒத்துழைப்பாலும் இயங்கி வருகிறது.

**ஆவணச் சான்று**: உரிமை இல்லையேல் வழக்கில்லை. சான்றுகள் இல்லையேல் தீர்ப்புகள் இல்லை. சிக்கலிலுள்ள பொருண்மைகளைச் சான்றுகளைக் கொண்டு மெய்ப்பித்தாலன்றித் தீர்ப்பு வழங்க இயலாது. சான்றுகள் வாய் மொழிச் சான்று, ஆவணச் சான்று என இருவகைப்படும். விசாரணையிலிருக்கும் பொருண்மை தொடர்பான செய்திகளைப் பொறுத்து, நீதிமன்றம் தன்முன் கொடுக்குமாறு சாட்சிகளை அனுமதிக்கும் அல்லது கோரும் உரைகள் வாய்மொழிச் சான்றாகும். நீதிமன்றத்தின் ஆய்வுக்காகத் தாக்கல் செய்யப்படும் ஆவணங்கள் அனைத்தும் ஆவணச் சான்றாகும். ஆவணம் என்பது, ஏதேனுமொரு செய்தியினைப் பதிவு செய்யும் நோக்கத்தோடு எழுத்துகள், எண்கள் அல்லது குறிகள் மூலமாக ஏதேனும் பொருளின் மீது வெளியிடப்பட்ட அல்லது வரையப்பட்ட செய்தி என்று பொருள்படும்.

ஆவணச் சான்றுகள் நம்பத்தக்கவை. வாய்மொழிச்சான்றை ஏற்றுக் கொள்வதைவிட ஆவணச் சான்றை நீதிமன்றங்கள் மிகுதியாக ஏற்றுக் கொள்கின்றன. இருபிரிவினரும் தம்மிச்சையாகத் தங்கள் சொத்துரிமைத் தொடர்பான நடவடிக்கைகளை எழுத்து மூலமாக ஆவணங்களாக்குகிறார்கள். இதற்கு மேல் சட்டத்தின் கட்டாயத்தின்கீழ் ஒரு சில செய்திகள்

எழுத்து மூலமாக இருக்க வேண்டும். எடுத்துக் காட்டாக, நீதிமன்றத் தீர்ப்புகள், விற்பனை, கொடை, வாடகைப் பத்திரங்கள் ஆகியவை ஆவணங்களில் எழுத்து வடிவில் இருக்க வேண்டிய செய்திகள். அவ்வாறின்றேல், இவற்றை மெய்ப்பித்துச் சட்டத் தீர்வு எதுவும் செய்ய முடியாது. ஆவணங்கள் இருக்கும்போது அவற்றின் உள்ளடக்கத்தை அவற்றைக் கொண்டுதான் மெய்ப்பிக்க வேண்டுமென்பது சாட்சிச் சட்டத்தின் அடிப்படைக் கோட்பாடு.

**ஆவணங்களின் வகைகள்:** ஆவணங்கள், முத்திரையிடப்பட்ட அல்லது பதிவு செய்யப்பட்ட ஆவணங்கள், உரிமை ஆவணங்கள், நீதித்துறை ஆவணங்கள், ஒருவருடைய பத்திரம், பலரால் கையொப்பமிடப்பட்ட ஆவணங்கள், தனியார் ஆவணங்கள் எனப் பலவகைப்படும். எவ்வகை ஆவணங்களாயினும், ஆவணங்கள் உயிரில்லாச் சான்றுகளே. அவற்றின் உண்மைநிலை உள்ளடக்கத்தைச் சான்றுகளின் மூலமாகத்தான் நீதிமன்றத்தின் கவனத்திற்குக் கொண்டுவரவேண்டும். ஆவணங்களை நீதிமன்றங்களில் தாக்கல் செய்தால் மட்டும் போதாது. அவற்றை மெய்ப்பிக்கவும் வேண்டும். சான்றுச் சட்டத்தில் 'உயர் சான்று விதி' ஆவணத்தை மெய்ப்பிக்க முதல்தர ஆவணத்தை முதலில் தாக்கல் செய்ய வேண்டும் என்று கூறுகிறது. முதல்தர ஆவணம் என்பது, நீதிமன்றத்தின் ஆய்வுக்காகத் தாக்கல் செய்யப்படும் ஆவணமே. ஓர் ஆவணம் பல்வேறு பகுதிகளாக எழுதிக் கொடுக்கும் நிலையில், ஒவ்வொரு பகுதியும் அந்த ஆவணத்தின் முதல்தரச் சாட்சியமாகக் கொள்ளப்படும். ஒரே விதமாக ஆவணம் அச்சடிக்கப்படுமிடத்து, ஒவ்வொன்றும் மற்றவற்றின் உள்ளடக்கத்திற்கு முதல்தர ஆவணச் சான்றாகும் (இந்தியச் சான்றுச் சட்டம், பிரிவு 62). முதல்தர ஆவணச் சான்றிற்கு இணையான வேறொரு ஆவணம் சட்டத்தில் இல்லை.

முதல்தர ஆவணச் சான்றில்லாவிடத்து, இரண்டாம் நிலைச்சான்று கொடுத்து ஆவணமொன்றின் உண்மைநிலை அல்லது உள்ளடக்கத்தை மெய்ப்பிக்கலாம். இரண்டாம் நிலைச் சான்றாவது:

1. உறுதிச் சான்றளிக்கப்பட்ட படிகள்;
2. இயந்திரப் படிகள், அவற்றுடன் ஒத்துப் பார்க்கப்பட்ட படிகள்;
3. மூலத்திலிருந்து எடுக்கப்பட்ட அல்லது அதனுடன் ஒத்துப்பார்க்கப்பட்ட படிகள்;
4. ஆவணங்களின் படிகள், அவற்றை எழுதிக் கொடுக்காத பிரிவினர்களுக்கெதிராக;
5. தாமே படித்த அல்லது தமக்குப் படித்துக் காட்டிய ஆவணத்தின் உள்ளடக்கத்தைப் பற்றிக் கொடுக்கப்படும் வாய்மொழி விவரிப்புகள். இவை ஆவணச் சான்றல்ல.

இவ்வகை இரண்டாம் வகைச் சான்றுகள், ஒரே தரமானவை. அவற்றுக்கிடையே எந்தவிதமான வேறுபாடுமில்லை என்பது பொதுவிதி. ஆனால் மூலத்தின் உண்மை, அதன் நிலை அல்லது உள்ளடக்கம் எழுத்து மூலமாக ஏற்றுக்கொள்ளப்படின், அந்த எழுத்து மூலமான ஏற்புரைதான் இரண்டாம் நிலை ஆவணச் சான்றாகக் கொடுக்கப்படல் வேண்டும் (பி.65(2)). மேலும் பொது ஆவணங்களை மெய்ப்பிக்க உறுதிச் சான்றளிக்கப்பட்ட படிகளைத் தான் இரண்டாம் வகை ஆவணச்சான்றாகப் பயன்படுத்த வேண்டும் (பி. 65 (5), (6)). இவ்விரு விதிகளுக்கப்பால் எவரொருவரும் இரண்டாம் நிலைச் சான்று கொடுக்க உரிமை பெறுமிடத்து, இவ்வகை இரண்டாம் நிலைச்சான்று எதையும் கொடுக்கலாம்.

இரண்டாம் வகைச் சான்று கொடுக்க விழையும் எப்பிரிவினருக்கும் 65-ஆம் பிரிவில் கூறப்பட்டுள்ள ஏழு சூழ்நிலைகளுள் ஒன்றின் உரிமையிருக்கிறது. அவையாவன:

1. எவருக்கு எதிராக அந்த ஆவணம் மெய்ப்பிக்க முனையப்படுகிறதோ அவருடைய அல்லது நீதிமன்றத்தின் முறைக்கட்டளைக்கு எட்டாத நிலையிலுள்ள அல்லது அதற்கு உட்பட்டிராதவருடைய அல்லது அதைத் தாக்கல் செய்யச் சட்டப்படி கட்டுப்பட்டிருந்தும், தாக்கல்செய்ய அறிவிப்புப் பெற்ற பின் அதைத் தாக்கல் செய்யாத எவருடைய உடைமையிலேனும் அல்லது அதிகாரத்திலேனும் அந்த ஆவணத்தின் மூலம் இருப்பதாகக் காட்டப்படும் போது அல்லது தோன்றும் போது;

2. மூலத்தின் உண்மைநிலையோ உள்ளடக்கமோ எதிர்ப் பிரிவினரால் எழுத்து மூலமாக ஏற்றுக் கொள்ளப்படும்போது:

3. மூலம் அழிந்தோ தொலைந்தோ போயிருக்கும்போது; அல்லது அதைச் சான்றாக அளிக்கவரும் பிரிவினரின் தவறுதலாலோ புறக்கணிப்பல்லாத வேறெந்தக் காரணத்தாலோ நியாயமான காலத்திற்குள் அதைத் தாக்கல் செய்ய முடியாதபோது;

4. எளிதாக எடுத்துச் செல்ல முடியாத அளவுக்கு மூலத்தின் தன்மை இருக்கும்போது;

5. மூலமானது ஒரு பொது ஆவணமாக இருக்கும்போது;

6. மூலமானது ஒரு ஆவணமாக இருந்து அதன் உறுதிச் சான்றளிக்கப்பட்ட படியொன்று கொடுக்கப்படுவதற்கு இந்தியச் சான்றுச் சட்டத்தாலோ இந்தி

யாவில் நடைமுறையிலுள்ள வேறெந்தச் சட்டத்தாலோ அனுமதிக்கப்படும்போது;

7. மூலங்களானவை நீதிமன்றத்தில் வசதியாக ஆய்வு செய்யப்பட முடியாதபடி மிகுதியான கணக்குகளையோ வேறு ஆவணங்களையோ கொண்டவையாக இருந்து, மெய்ப்பிக்க வேண்டிய பொருண்மையானது மொத்தத் தொகுதியின் பொதுவான விளைவாக இருக்கும்போது.

மேற்கூறிய சூழ்நிலைகளிலன்றி வேறு நிலைகளில் இரண்டாம் வகைச் சான்று கொடுப்பதை நீதிமன்றம் அனுமதிக்காது. இரண்டாம் நிலைச் சான்றினால் ஆவணத்தின் உண்மையை மெய்ப்பிக்க முடியாது. மிகத் தொன்மையான ஆவணமாக இருந்தாலன்றி மெய்ப்பிக்கவேண்டியதில்லை. பிற ஆவணத்தின் உண்மையை வேறு வழிகளில் தான் மெய்ப்பிக்க வேண்டும். 65(1)–ஆம் பிரிவில் குறிப்பிடப்பட்ட ஆவணங்களின் உள்ளடக்கத்தைப் பற்றிய இரண்டாம் நிலைச் சான்றினைக் கொடுக்க எண்ணியிருக்கும் பிரிவினர், எந்தப் பிரிவினரது பாதுகாப்பில் அல்லது அதிகாரத்தில் அந்த ஆவணம் உள்ளதோ, அப்பிரிவினருக்கோ அவரது வழக்கறிஞருக்கோ அதைத் தாக்கல் செய்யுமாறு சட்டப்படி உறுதி செய்யப்பட்ட அல்லது நீதிமன்றத்தால் உத்தரவிடப்பட்ட அறிவிப்பை முன்னமே கொடுத்தாலன்றி, அத்தகைய இரண்டாம் நிலைச் சாட்சியம் கொடுக்கப்படல் ஆகாது. இவ்வறிவிப்பை 66–ஆம் பிரிவில் கூறப்பட்டிருக்கும் விதிவிலக்குகளுக்குட்பட்டுக் கொடுக்க வேண்டும். முன்னறிவிப்புப் பெற்று, ஆவணங்களைத் தாக்கல் செய்ய மறுத்தால், அப்பிரிவினர் அதற்குப் பின்பு அவ்வாவணத்தைச் சான்றாகப் பயன்படுத்தலாகாது. மேலும் இந்தியத் தண்டனைச் சட்டம் பிரிவு 175–இன் கீழ் அவர் தண்டிக்கப்படலாம். அல்லது சமூக உரிமையியல் நடைமுறைச் சட்டத்தில் அத்தகையவரை ஆவணம் தாக்கல் செய்யும்படி சிறையிலிட்டுக் கட்டாயப்படுத்தப் பிடியாணையையும் நீதிமன்றம் பிறப்பிக்கலாம்.

**சான்றொப்பமிடப்பட்ட, சான்றொப்பமிடப்படாத ஆவணங்களின் உறுதிப்படுத்துதலும் உண்மையும்:** ஆவணங்களின் உள்ளடக்கத்தை மெய்ப்பிக்கு முன்னர்; அவ்வாவணங்கள், எவரொருவரால், கையொப்பமிடப்பட்டன அல்லது எழுதப்பட்டன என்று புலப்படுகிறதோ, அத்தகையவரால் எழுதப்பட்டன அல்லது கையொப்பமிடப்பட்டன என்று முதலில் அவற்றை மெய்ப்பிக்க வேண்டும்;இது ஆவணங்களின் உண்மையை உறுதிப்படுத்தல் எனப்படும்.

சான்றொப்பமிடப்படாத ஆவணங்களின் உண்மை எவராலேனும் கையொப்பமிடப்பட்டிருப்பதாகவோ எழுதப்பட்டிருப்பதாகவோ கூறப்படுமானால், அவரது கையொப்பத்தைச் சான்றுகளால் உறுதிப்படுத்தி மெய்ப்பிக்கலாம். ஆவணத்தில் கையொப்பமிட்டதை உறுதிப்படுத்தத் தானும் அவ்வாவணத்தில் கையொப்பமிடுவது சான்றொப்பமிடுதல் எனப்படும். ஒருசில ஆவணங்களே சான்றொப்பமிடப்பட வேண்டுமென்று சட்டம் கோருகிறது. எடுத்துக்காட்டாக உயில், அடைமானம், கொடை ஆவணங்கள். சான்றொப்பமிடப் படவேண்டிய ஆவணங்கள், சான்றொப்பமிடப்படாவிடத்து அவற்றைச் சான்றாகப் பயன்படுத்தலாகாது. சான்றொப்பமிட்ட ஆவணங்களின் உண்மையைச் சான்றொப்பமிட்ட சாட்சிகள் இருவருள் ஒருவரையேனும் வரவழைத்துச் சோதனை செய்து மெய்ப்பிக்க வேண்டும். ஆவணத்தை எழுதிக் கொடுத்ததாகச் சொல்லுபவர், உரையினாலும் சான்றொப்பமிடப்பட்ட ஆவணத்தின் உண்மையை மெய்ப்பிக்கலாம். சான்றொப்பமிட்ட சாட்சி, ஆவணம் எழுதிக் கொடுக்கப்பட்டதை மறுப்பாரானால்; அல்லது நினைவு கூரவில்லையானால் அது எழுதிக் கொடுக்கப்பட்டதை மற்றச் சாட்சியத்தால் மெய்ப்பிக்கலாம். அதாவது கையெழுத்து வல்லுநர்களால் (பி. 45), அல்லது அக்கையெழுத்து, கையொப்பத்தோடு பழக்கப்பட்டிருக்கிற எவரொருவராலும் அத்தகைய ஆவணத்தின் உண்மையை மெய்ப்பிக்கலாம். சிக்கலில் உள்ள கையெழுத்து, பிரிவினரால் ஒப்புக்கொள்ளப்பட்ட அல்லது உறுதிப்படுத்தப்பட்ட மற்றொரு கையெழுத்து ஆகியவற்றைக் கையொப்பமுடன் நீதிமன்றம் ஒத்துப் பார்த்து எந்த ஒரு ஆவணத்தின் உண்மையையும் ஏற்றுக்கொள்ளலாம்.

**பொது ஆவணங்கள், தனியார் ஆவணங்கள்:** ஒப்புயர்வற்ற அதிகார அமைப்பின் அரசு அதிகாரம் பெற்ற குழுக்கள், தீர்ப்பாயங்கள், சட்டமன்றத்துறை, நீதித்துறை, நிருவாகத்துறைப் பொது அலுவலர்களின் செய்கைகளாக அல்லது செய்கைகளின் பதிவிதழ்களாக அமைகிற ஆவணங்கள், எந்த மாநிலத்திலேனும் தனியார் ஆவணங்களுக்காக வைத்திருக்கப்படும் பொதுப் பதிவிதழ்கள் ஆகியவை பொது ஆவணங்களாகும். விதிவிலக்குக்கு உட்பட்ட ஒரு சில படிகள் பெற உரிமை பெற்றவர், படிகள் தர மறுக்கப்படுமானால், உயர்நீதிமன்றத்தின் நீதிப்பேராணை பெற நடவடிக்கைகள் தொடங்கலாம். மற்ற ஆவணங்கள் அனைத்தும் தனியார் ஆவணங்களே.

**பொது ஆவணங்களின் சான்றுறுதிகள்:** பொது ஆவணங்களின் உண்மை, சட்டத்தால் துணிவு கொள்ளப்படுவதால் அது மெய்ப்பிக்கப்பட வேண்டியதில்லை. ஆனால், உள்ளடக்கத்தை மூலத்தையோ உறுதிச் சான்றளிக்கப்பட்ட படியினையோ கொண்டு

மெய்ப்பிக்க வேண்டும். சட்டம், பொது ஆவணங்களின் மூலங்களையும், அவற்றின் உறுதிச் சான்றளிக்கப்பட்ட படிகளையும் சமமாகக் கருதுகிறது. உறுதிச் சான்றளிக்கப்பட்ட படியினைத் தாக்கல் செய்து உள்ளடக்கத்தின் உண்மை, பொய்ம்மையை நிரூபிக்க வேண்டும்.

பார்வையிடுவதற்கு யாருக்கும் உரிமையுள்ள ஒரு பொது ஆவணத்தைப் பாதுகாப்பில் கொண்டுள்ள ஒவ்வொரு பொது அலுவலரும் எவர் கோரிக்கையின் பேரிலும், அதற்குண்டான சட்டப்படியான கட்டணம் செலுத்தப் பட்டதன் பேரிலும் அதன் படியொன்றை, அத்தகைய படியின் அடியில் உண்மையான படி என்று எழுதப்பட்ட உறுதிச் சான்றுடன் கேட்டவருக்கு வழங்க வேண்டும். அத்தகைய உறுதிச் சான்று அத்தகைய அலுவலரால் முத்திரை, தேதி ஆகியவை இடப்பட்டு அவரது பெயர் மற்றும் அவரது பதவிப் பெயருடன் அடிக் கையொப்பமிடப்பட வேண்டும். அவ்வாறு உறுதிச்சான்றளிக்கப்பட்ட அத்தகைய படிகள் உறுதிச் சான்றிட்ட படிகள் எனக் குறிக்கப்படுகின்றன (பி.76). உரிமையியல் நடைமுறைச் சட்டம் செயற் கட்டளை 20 விதி 20-இன் கீழ், விசாரணை நீதிமன்றத்தின் தீர்ப்பு, தீர்ப்பாணைகளின் உறுதிச்சான்றளிக்கப்பட்ட படிகள் ஆகியவற்றை மேற் கூறப்பட்ட நடைமுறைச் சட்டத்தின் செயற் கட்டளை 41 விதி 36 இன் கீழ், அதற்குரிய கட்டணத்தைச் செலுத்தி விண்ணப்பம் செய்து பெற்றுக்கொள்ளலாம்.

மற்ற அலுவல் முறை ஆவணங்கள், உறுதிச் சான்றளிக்கப்பட்ட படிகளினாலும், மற்ற ஆவணச் சான்றுகளாலும் மெய்ப்பிக்கப்படலாம். எடுத்துக் காட்டு: மத்திய, மாநில அரசின் துறைகளினால் பிறப்பிக்கப்பட்ட கட்டளைகள் அல்லது அறிவிக்கைகளை அந்தந்தத் துறைகளின் தலைவர்களால் உறுதிச் சான்றளிக்கப்பட்ட அத்துறைகளின் பதிவுக் கட்டுகள் மூலமாகவோ, அத்தலைவரின் கட்டளையினால் அச்சிடப்பட்டதாகப் புலப்படுகிற ஆவணம் ஏதாவதொன்றின் மூலமாகவோ மெய்ப்பிக்கலாம்.

**ஆவணங்களும் துணிபுகளும்:** மெய்ப்பித்தல் என்பது வாய்மொழிச் சான்று, ஆணைச் சான்றுகளைக் கொண்டு ஆவணத்தின் உண்மைநிலை உள்ளடக்கத்தை உறுதிப்படுத்துதல் ஆகும். ஏற்புரையை உறுதிப்படுத்த வேண்டியதில்லை. நீதி முறையில் கவனத்திற்கு எடுத்துக் கொள்ளும் பொருண்மையை மெய்ப்பிக்க வேண்டியதில்லை. அதுபோல், எந்த வொரு பொருண்மையை நீதிமன்றம் துணிவுகொள்கிறதோ, அதைச் சான்றுகளால் மெய்ப்பிக்க வேண்டிய தேவையில்லை. துணிபு என்பது, மெய்ப்பிக்கப்பட்ட அல்லது உண்மையெனப் பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்ட பொருண்மையிலிருந்து தருக்கமுறையில் அல்லது பகுத்தறிவினால் மற்றொரு பொருண்மையின் உண்மையைக் கருதுதல். இதனால் பல நன்மைகள் இருப்பதால், இந்தியச் சான்றுச் சட்டம், நீதிமன்றங்களை ஒரு சில பொருண்மைத் துணிபு கொள்ள வேண்டுமென வகைமுறை செய்வதுடன் பணிக்கவும் செய்கிறது. அத்தகைய பொருண்மைகள் பொய்ப்பிக்கப்பட்டாலன்றி, பொய்ப்பிக்கும்வரை, மெய்யாகவே கொள்ளப்படுகின்றன.

ஆவணங்கள் பற்றிய துணிபுகளுக்கு எடுத்துக் காட்டு: குறிப்பிட்ட ஏதேனுமொரு பொருண்மையின் சாட்சியமாக ஏற்கத்தக்கதாகச் சட்டத்தால் கூறப்படுவதும், மத்திய அல்லது மாநில அரசின் அலுவலர் எவராலேனும் உரியவாறு உறுதிச் சான்றிதழாக அல்லது உறுதிச்சான்றிட்ட படியாக அல்லது வேறு ஆவணமாகப் புலப்படுத்துவதுமாகிய ஒவ்வொன்றையும் மெய்யானதென்று நீதிமன்றம் துணிபு கொள்ள வேண்டும். அதனுடன் அந்த அலுவலர் எவரும் அதில் கையொப்பமிட்டபோது, அத்தகைய ஆவணத்தில் தாம் ஏற்றிருப்பதாகக் குறித்திருக்கும் அரசாங்கப் பதவியை அவர் ஏற்றிருந்தாரென்றும் நீதிமன்றம் துணிபு செய்தல் வேண்டும்.

**தொல்லாவணம்:** முப்பதாண்டுக் காலம் பாதுகாப்பாகப் புலப்படும் அல்லது மெய்ப்பிக்கப்பட்டுள்ள ஆவணம் ஏதேனும், முறையான பாதுகாப்பிலிருந்து தாக்கல் செய்யப்படுமிடத்து, குறிப்பிட்ட எவரது கையெழுத்தேனும் இருப்பதாகப் புலப்படுகிற, அத்தகைய ஆவணத்தில் உள்ள கையொப்பமும் கையெழுத்தும் அவருடையது என்றும், ஆவணமொன்று எவரால் எழுதிக் கொடுக்கப்பட்டுச் சான்றொப்பமிடப்பட்டதாகப் புலப்படுகிறதோ அவரால் அது உரிய முறையில் எழுதிக் கொடுக்கப்பட்டுச் சான்றொப்பமிடப்பட்டது என்றும் நீதிமன்றம் துணிபு செய்யலாம்.

உறுதிச் சான்றிட்ட சாட்சிகள் முப்பதாண்டுகள் வாழ்ந்திருப்பார்களா: வாழ்ந்திருந்தால் சாட்சியம் கொடுக்கத் தகுந்த உடல், மன நிலையில் இருப்பார்களா என்ற ஐயத்தால், அவர்களைக் கொண்டு தொல்லாவணங்களின் உண்மையை மெய்ப்பிக்காமல், அவற்றிலுள்ள கையொப்பம், கையெழுத்து, சான்றொப்பம் முதலியன துணிபு கொள்ளுதல் மூலம் அவ்வாவணங்களின் பொருண்மைத் துணிபு செய்யச் சட்டம் வகை செய்கிறது. ஆனால் தொல்லாவணங்களின் உள்ளடக்கத்தை மற்ற ஆவணங்களைப் போலவே சான்றுகளைக் கொண்டு மெய்ப்பிக்க வேண்டும். தொல்லாவணம் முறையான பாதுகாப்பிலிருந்து தாக்கல் செய்வதன்

நோக்கம் பொய்யான, புனையப்பட்ட ஆவணங்களைச் சாட்சியத்தில் போடாமல் விலக்குவதாகும். ஆவணங்கள் எந்த இடத்தில் எவருடைய பாதுகாப்பில் இயல்பாக இருக்குமோ, அந்த இடத்தில் அவரது பாதுகாப்பில் இருக்குமானால், முறையாகப் பாதுகாப்பில் அவை இருப்பதாகக் கூறப்படும். தொல்லாவணம் பற்றிய துணிபுகள், அது தனியார் ஆவணமாகவும் மூலமாகவும் கையொப்பமிடப்பட்டதாகவும் இருந்தால்தான் எழும். தொல்லாவணங்களின் படிகளுக்கு இத்துணிபுகள் கிடையா.

**ஆவணச்சான்று, வாய்மொழிச்சான்றை ஒதுக்குதல்:** விதி (1) ஓர் ஒப்பந்தம், கொடை அல்லது சொத்துத் தொடர்பான வேறெந்த ஏற்பாட்டின் விதிகள் ஓர்ஆவண வடிவத்தில் அமைக்கப்பட்டிருக்கும் போதும், சட்டப்படி எந்தச் செய்தியேனும் ஒரு ஆணை வடிவத்தில் அமைக்கப்பட வேண்டியுள்ள சூழ்நிலைகள் அமையும் போதும், அத்தகைய ஒப்பந்தம், கொடை அல்லது சொத்துத் தொடர்பான மற்ற ஏற்பாடு அல்லது மற்றச் செய்தியின் விதிகளை மெய்ப்பிப்பதற்கு அந்த ஆவணத்தையே தவிர, அல்லது இரண்டாம் நிலைச்சாட்சியம் ஏற்கத் தக்கதாக உள்ள சூழ்நிலைகளில் அந்த ஆவணத்தின் உள்ளடக்கத்தைப் பற்றிய இரண்டாம் நிலைச் சாட்சியத்தைத் தவிர, வேறெந்த சாட்சியமும் கொடுக்கப்படுதல் ஆகாது.

விதி (2) அத்தகைய ஆவணம் ஏதொன்றின் விதிகளை முரண்படுத்துவதற்கு, மாற்றுவதற்கு, அல்லது அவற்றுடன் கூட்டுவதற்கு, அல்லது அவற்றிலிருந்து குறைப்பதற்கான நோக்கத்திற்காக வாய்மொழி உடன்படிக்கை அல்லது உரை எதையும் பற்றிய சாட்சியம் எதுவும், அத்தகைய ஆவணத்திற்குரிய பிரிவினர்கள் அல்லது அவர்களின் உரிமைப் பேராளர்களுக்கிடையே அனுமதிக்கப்படுதல் ஆகாது. இவ்விரு விதிகளும் சேர்ந்துதான் 'புறச்சான்று விதி' எனக் கூறப்படுகின்றன.

ஆவணத்தின் உள்ளடக்கம் வாய்மொழிச் சான்றினால், பொய்யானதா, உண்மையானதா என்பதையும் உறுதிப்படுத்தலாம், இதுதான் பொது விதி. இதற்கு விதிவிலக்காக இவ்விரு விதிகளில் குறிப்பிடப்பட்டுள்ள ஆவணங்களின் உள்ளடக்கத்தை எழுதப்பட்டிருப்பதைப்போலவே உறுதி செய்ய வேண்டுமேயன்றி, வாய் மொழிச் சான்றினால் உள்ளடக்கம் விதிவிலக்குக்குட்பட்டு, உண்மைக்குப் புறம்பானது என உறுதிப்படுத்த இயலாது.

ஆவணத்தின் விதிகளைத்தவிர மற்றப் பொருண்மைகளை வாய்மொழிச் சான்றினால் உறுதிப்படுத்தலாம். ஒப்பந்தம், கொடை ஆவணங்கள் முதலியன எழுதிக்கொடுக்கப்பட்டன என்ற பொருண்மையை வாய் மொழிச் சான்றினால் மெய்ப்பிக்கலாம்.

ஓர் ஒப்பந்தம், போலி ஒப்பந்தமாக இருக்குமானால், அவ்வொப்பந்தத்தைப் பிரிவினர்கள் நிறைவேற்ற உட்கருத்துக் கொள்ளவில்லை என வாய் மொழிச் சான்றினால் கூறலாம். இரண்டாம் விதி, ஆவணத்திற்குரிய பிரிவினர் அல்லாதாரைக் கட்டுப்படுத்தாது.

ஒரு விற்பனை ஆவணத்தை ஒரு அடைமான ஆவணம் என உறுதிப்படுத்தப் பிரிவினர்களின் உட்கருத்தைச் சாட்சியத்தில் கொடுக்க முடியாது. அது போன்றே தரப்பினர்களின் செய்கை, விடுகை, நடத்தைகளைக் கொண்டு எந்த ஆவணமாகத் தோன்றுகிறதோ, அதை வேறுபட்ட ஆவணமெனவும் நிருபிக்க முடியாது.

இரண்டாம் விதிக்கு விலக்காக உள்ள எடுத்துக்காட்டுகள்; புறச்சான்றினால் மோசடி, மிரட்டுதல், சட்ட விரோதத் தன்மை, மறு பயனின்மை, பொருண்மை அல்லது சட்டம் பற்றிய அவதூறு போன்றவற்றை உறுதி செய்து ஓர் ஆவணம் திருத்தப்பட வேண்டியது என நீதிமன்றக் கட்டளை அல்லது தீர்ப்பாணை பெறலாம். எந்தச் செய்தி அதன் விதிகளுக்கு முரணானதாக இல்லையோ அந்தச் செய்தி பற்றித் தனித்து வாய்மொழி உடன் படிக்கை ஏதேனும் உளதாயிருப்பதை மெய்ப்பிக்கலாம். அத்தகைய ஆவணம் எதையேனும் நீக்கவோ மாறுதல் செய்யவோ ஏற்பட்ட, தனிப்பட்ட, பிந்திய வாய்மொழி உடன்படிக்கை எதையும் மெய்ப்பிக்கலாம்.

**ஆவணங்களை உட்பொருளறிந்து சட்டப்படியாக்குதல்:** வழக்கறிஞர்கள் அல்லாமல் வெறெவரும் ஆவணங்களை எழுதிக் கொடுக்கலாம். ஆனால், அவ்வாவணங்களில்பயன்படுத்தப்பட்ட தொடரானது தெளிவாகவும், கூறப்பட்டுள்ள பொருண்மை நுணுக்கமாகவும் இருக்க வேண்டும். அவ்வாறன்றிப் பயன்படுத்தப்பட்ட தொடரானது வெளிப்படையாக ஐயத்திற்குரியதாகவோ, குறைபாடுள்ளதாகவோ இருக்கும்போது அவ்வாவணம் செல்லாது. ஆனால், ஓர் ஆவணத்தில் பயன் படுத்தப்பட்ட தொடரானது தெளிவாக இருந்தும் பொருள் கொடுக்காததாக இருக்கும்போது, அது ஒரு தனிப்பட்ட பொருளில் பயன்படுத்தப்பட்டது அல்லது சூழ்ந்திருக்கும் பொருண்மைகளுக்கு அதன் தொடர் எந்த முறையில் தொடர்புடையது என்பதையும் காட்டப் புறச்சான்று கொடுக்கப்படலாம்.

பயன்படுத்தப்பட்ட தொடரானது பல்வேறு ஆட்களுள் ஒருவரையோ பல்வேறு பொருள்களுள் ஒன்

றையோ குறிப்பிடுமிடத்து, அந்த ஆட்களில் எவரை அல்லது அந்தப் பொருள்களில் எதனைக் குறிக்கிறது என்பதைக் காட்டும் பொருண்மை பற்றிய சாட்சியம் கொடுக்கலாம். பிரிவினர்களின் உட்கருத்தையும் சாட்சியத்தில் உறுதி செய்யலாம்.

ஓர் ஆவணத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள சொற்கள், ஆவணம் எழுதிக் கொடுத்தவரின் உட்கருத்தினை முழுமையாக வெளிக் கொணரவில்லையெனில் அச்சொற்களின் பொருளறிந்து அவ்வாவணத்தைச் சட்டப்படி செல்லத்தக்க தாக்குவது நீதிமன்றத்தின் கடமை. வி.ஆர்.கு.

**ஆவணம்:** எழுத்துகள், எண்கள், குறிகள் ஆகியவற்றைக் காகிதம், ஓலை, செப்புத்தகடு, கல் போன்றவற்றில் செய்திபாகப் பொறித்து வைக்கப் பெறுவது ஆவணம் (Document) எனப்படும்.

இச்செய்திகள் சட்டத்தில் சான்றாகக் காட்டக் கூடியனவாதலின் ஆவணம் இன்றியமையாததாக உள்ளது.

நம்பி ஆரூரராகிய சுந்தரமூர்த்தி நாயனாரின் மூதாதை ஒருவர், தமக்கு அடிமை ஓலை எழுதிக் கொடுத்திருப்பதாக வழக்குக் கூறிச் சிவபெருமான் அந்த ஓலை ஆவணத்தைச் சான்றாகக் காட்டியதாகப் பெரியபுராணம் கூறுகிறது.

ஒன்றைப் பாதுகாக்கும் நோக்குடன் ஒரு செய்தியை அல்லது பல செய்திகளைப் பதித்து வைத்துக் கொள்ளும் வழக்கம் மக்களிடையே நெடுங்காலமாக இருந்து வருகிறது. அந்தப் பதிவுக் குறிப்புகளும் ஆவணங்கள் என்று பொதுவாகத் தமிழில் குறிப்பிடப்படுகின்றன.

முற்காலத்தில் ஒருவருக்கு அரசர் நிலம் அல்லது வேறு மானியம் வழங்கினால், அந்த விவரத்தைச் செப்பேடுகளில் பதித்து முத்திரையிட்டுக் கொடுப்பது வழக்கம். அரசனது ஆணையைக் குறிப்பெடுத்துக் கொள்பவர் 'திருவாய்க்கேள்வி' என்றும், அதை ஓலையில் எழுதிக்கொள்பவர் 'திருமந்திர ஓலை' யென்றும், பிழையின்றி எழுதப்பட்டுள்ளதா என்று பார்ப்பவர் 'திருமந்திர ஓலைநாயகம்' என்றும் குறிப்பிடப்படுகின்றனர். நிலம் தொடர்பான ஆணையாயின், அது ஆவணக் களரி அலுவலர்களால் பார்க்கப்பட்டுப் பின்னர் 'ஆணத்தி' என்பவரால் நிறைவேற்றி வைக்கப்படுகிறது.

தமிழ்நாட்டில் சோழ மன்னர்கள் காலத்தில் செப்பேடுகள், ஓலைச் சுவடிகள் முதலியவற்றைப் பாதுகாத்து வைப்பதற்காக ஆங்காங்கே காப்பகங்கள் அமைக்கப்பட்டன. அக்காப்பகங்களுக்கு 'ஆவணக் களரிகள்' என்று பெயர். இவை நிலத் தொடர்பான குறிப்பேடுகளையெல்லாம் தம்மகத்தே கொண்டு விளங்கின. இவற்றில் பல அலுவலர் பணியாற்றினர். தலைமை அலுவலர் 'திணைக்கள நாயகம்' என்ற பெயரிலும், மற்ற அலுவலர்கள் 'வரிப் பொத்தகம்' என்ற பெயரிலும் பணியாற்றி வந்தனர்.

கௌடில்யரின் அர்த்த சாத்திரம் 'அட்சபடலா' என்று ஆவணக் காப்பகத்தைக் குறிப்பிடுகிறது. அக்காப்பகத்தில் தலைமைப் பொறுப்பாளர் 'மகா அட்ச பாலிகா' என்று குறிப்பிடப்படுகிறார்.

உலகின் வெவ்வேறு நாடுகளிலும் ஆவணக் களரிகள் இருந்திருக்கின்றன. இக்காலத்தில் அனைத்து நாட்டு அரசுகளும் அரசாங்க ஆவணங்களைப் பாதுகாத்து வருவதற்காக ஆவணக் களரிகள் நிறுவியுள்ளன.

இற்றைக்கு 4000 ஆண்டுகட்கு முன்னதாகச் சிரியா நாகரிகத்தைச் சார்ந்த ஆவணக் காப்பகம் ஒன்று தொல்லியல் வல்லுநர்களால் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. பூமிக்குள், பழைய நகரம் இருந்த பகுதியில் எழுத்துகள் பொறித்த செங்கல் பாளங்கள் ஒரு குவியலாக இருந்ததை ஆராய்ச்சியாளர்கள் கண்டெடுத்திருக்கிறார்கள். அவை அக்காலச் சமுதாயப் பழக்க வழக்கங்களையும் வணிக முறையையும் நாட்டு நடப்புகளையும் குறிப்பனவாக இருக்கலாம் என்று நம்புகின்றனர்.

எகிப்தின் இரோகிளிப்க எழுத்தில் உள்ள முத்திரைகள், சுமேரியர்களின் முத்திரைகள் இந்தியாவில் கண்டுபிடிக்கப்பட்ட மொகஞ்சதாரோ அரப்பா நாகரிகத்தில் எழுத்துப் பொறிக்கப்பட்டுள்ள முத்திரைகள், களிமண் தகடுகள் ஆகியன, அக்கால மக்கள் தங்கள் நடவடிக்கைகளை எழுத்தில் பொறித்துப் பாதுகாத்து வைத்திருந்ததன் அடையாளங்களாகும். பழைய ஆவணங்கள் முந்தைய வரலாற்றை அறிவதற்கும் எழுதுவதற்கும் பெரிதும் துணைசெய்துள்ளன.

சொத்துகளுக்கான உரிமைகளையும் உடைமைகளையும் நிலைநாட்ட ஆவணத்தைச் சான்றாகக் காட்ட வேண்டுமெனச் சட்டம் வற்புறுத்துகிறது. அதனால், இந்தியச் சான்றியல் சட்டத்தின் மூன்றாம் பிரிவில் ஆவணம் என்பதன் இலக்கணம் கூறப்பட்டுள்ளது. எழுதி வைக்கப்பட்ட செய்தியும் அச்சடித்துள்ள செய்தியும் வரைபடம் மூலம் குறிக்கும் செய்தியும் ஆவணங்களே என்று அச்சட்டம் எடுத்துக்காட்டுகிறது.

இந்தியத் தண்டனைத் தொகுப்புச் சட்டத்தின் 29-ஆம் பிரிவில் 'ஆவணம்' என்னும் சொல் விளக்கப்படுகிறது. 'அது எண்ணாலோ எழுத்தாலோ, குறி

யிடுகளாலோ, வரையப்பெறலாம். அது காகிதத்தின் மீதோ வேறு பொருள்களின் மீதோ வரையப்பெற லாம். மேலும், நீதிமன்றத்தில் பயன்படுத்த வேண் டும் என்று கருதியே ஆவணம் உண்டாக்கப்பட வேண்டியது இன்றியமையாதது இல்லை எனவும் அப்பிரிவில் விளக்கம் கூறப்பட்டுள்ளது. காசோலை, அதிகாரப் பத்திரம், வரைபடம் போன்றவை ஆவ ணங்கள் ஆகும் என்பது எடுத்துக்காட்டப்பட்டுள் ளது. வெளிப்படையாகத் தெரிவிக்கப்படாவிட்டா லும் வணிக வழக்காற்றின்படி எடுத்துக்கொள்ள வேண்டிய செய்தி ஆவணமே என்ற விளக்கமொன் றும் கொடுக்கப்பட்டுள்ளது.

சட்டக் கருத்தின்படி ஆவணமாக உள்ளதைப் 'பத்திரம்' என்று குறிப்பிடும் வழக்கம் உண்டு. கிரயப் பத்திரம், அடைமானப் பத்திரம் எனவும், ஆவணம் எழுதுபவரைப் பத்திரம் எழுதுபவர் எனவும் குறிப் பிடும் வழக்கம் இருந்துவருகிறது.

இந்தியாவில் பலவகை ஆவணங்கள் இருந்து வந்தன என்பதை நாரதரின் அர்த்த சாத்தி ரத்திலிருந்து அறியலாம். பாகப்பிரிவினை, நன் கொடை, விற்பனை, ஒப்பந்தம், கோயில் கட்ட ளைகள் போன்றவற்றுக்கு ஆவணங்கள் எழுதிக் கொள்வது பற்றி அந்நூலின் முதல் பாகம் பத்தாவது அத்தியாயம் விவரிக்கிறது. ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் கி.பி. 1876-ஆம் ஆண்டில் இந்துக் கள் சட்டத்தின்படி சொத்துரிமை மாற்றத்தைக் காட்டுவதற்கு ஆவணம் இல்லை என்றும், சொத்தின் உடைமை (சுவாதீனம்) மாறியிருந்தால் போது மானது என்றும் ஒரு தீர்ப்பில் கூறப்பட்டது. இசு லாமியர் சட்டத்தின்படி பணம் கொடுத்துச் சொத்து கைவசம் மாறியிருந்தால் விற்பனை நிறைவடைந்த தாகும். பின்னர்க் கி.பி. 1882-இல் இயற்றப்பட்ட சொத்துரிமை மாற்றச் சட்டம், சொத்து விற்பனை, பரிவர்த்தனை, அடைமானம் ஆகியவை பதிவு செய்யப்பட்ட முறையாவணத்தின் மூலம் நடை பெறுதல் வேண்டும் என விதித்தது. அச்சட்டம் இந்துக்களுக்கும் பௌத்தர்களுக்கும் விலக்கு அளித் திருந்தது. ஆனால், அச்சட்டத்தில் 1929-இல் திருத் தியவாறு அமைந்த சொத்துரிமை மாற்றச் சட்டம், நூறு ரூபாய்க்கும் குறைந்த மதிப்புடைய அசையாச் சொத்துகளின் உரிமை மாற்றத்துக்கு எழுத்து மூல மான ஆவணம் தேவையில்லை எனவும், சொத்துக் கைம்மாறுவதன் மூலம் உரிமை மாற்றம் செய்யலாம் எனவும், விரும்பினால் ஆவணம் எழுதிப் பதிவு செய்யப்படும் ஆவணத்தின் மூலமே நடைபெறுதல் வேண்டும் எனவும் விதித்துள்ளது. சொத்தின் உரிமையைக் காட்டக்கூடிய மூல ஆவணம் அல்லது பத்திர வைப்பு ஏற்படுத்தும்போது பதிவுசெய்ய வேண்டியதில்லை. நன்கொடை, ஓராண்டுக் காலத் துக்கு மேற்பட்ட குத்தகை முதலியவை எழுத்து மூலமான ஆவணத்தால் வழங்கப்படவேண்டும். கூட்டுக் குடும்பத்தினர் சொத்துகளைப் பாகப் பிரிவினை செய்யும்போது எழுத்து மூலம் செய்ய லாம்; வாய் மொழியாகவும் செய்யலாம்.

சொத்து உரிமை மாற்றச் சட்டம் நடை முறைக்கு வந்தபின், இசுலாமியர்கள் விற்பனை, அடைமானம், குத்தகை போன்றவை பொறுத்து அச்சட்டப்படி எழுதிப் பதிய வேண்டியவர்களான போதிலும், சொத்தினைக் கொடையாக அளிக்கும் போது வாய்மொழி மூலம் செய்ய அவர்களுக்கு உரிமை உண்டு. விரும்பினால் ஆவணத்தின் மூலம் கொடை அளிக்கலாம்.

உரிமை வயது வராதவர்கள் உரிமை மாற்றத்துக் கான ஆவணம் எழுதிக் கொடுக்கத் தகுதி அற்றவர் கள். ஆனால் உரிமை வயது வராதவர் பெயரில் சொத்து வாங்க முடியும்.

எந்த ஆவணங்கள் பதிவுசெய்யப்படுதல் வேண்டும் என்பதை இந்திய ஆவணப் பதிவுச் சட்டமும் வேறு சட்டங்களும் குறிப்பிடுகின்றன. இந்தியாவிலுள்ள சொத்தினைப் பொறுத்து அயல்நாட்டில் எழுதிக் கொள்ளப்பட்ட ஆவணமாயின், அது இந்தியாவிற்கு வந்து சேர்ந்த நாளிலிருந்து நான்கு மாதங்களுக்குள் பதிவு செய்யப்படவேண்டும். பதிவாளரிடம் ஆவணம் பதியப் பெறுவதால் ஆவணத்துக்கு உறுதி அமை வதுடன் பலர் அறியவும் வாய்ப்பு ஏற்படுகிறது.

ஆவணம் இன்ன மதிப்புடைய முத்திரைத் தாளில் வரையப்படவேண்டும், இன்னவகை ஆவணத்துக்கு இன்ன அளவு முத்திரை வில்லை வேண்டும் என்னும் விவரங்களை இந்திய முத்திரைச் சட்டம் எடுத் துரைக்கிறது; பல ஆண்டுகளுக்கு முன்பு இங்கிலாந் தில் ஒரு நிலம் விற்பனை மூலம் கைம்மாறுவதற்கு எழுத்துமூலம் ஆவணம் தேவையில்லை என்றிருந்தது. ஏனெனில் அங்கு அரசர்தான் அனைத்து நிலங் களுக்கும் உரிமையாளர். மற்றவரெல்லாரும் அவ ருக்குக் குத்தகையாளர்கள் எனக் கருதப்பட்டனர்.

ஆவணம் இன்மையால் பல ஏமாற்றுதல்கள் தோன் றின. ஆகவே, கி.பி. 1677-இல் இரண்டாம் சார்லசு மன்னர் காலத்தில் 'ஏமாற்றுதல்கள் பற்றிய சட்டம்' என்று ஒரு சட்டம் நாடாளுமன்றத்தால் இயற்றப் பட்டது. நில உரிமை மாற்றங்கள் எழுத்து மூலமே செய்யப்படுதல் வேண்டுமென அச்சட்டம் வற்புறுத் தியது. ஆனால் கி.பி. 1845-இல் இயற்றப்பட்ட அசை யாச் சொத்துகள் சட்டம் 1922-இல் இயற்றப்பட்டு, 1925-இல் திருத்தத்துக்குள்ளான சொத்துகள் சட்டம் ஆகியவை, ஆவணமின்றிச் செய்யப்பெறும் நில உரிமை மாற்றங்கள் செல்லா என்று கூறின.

இந்தியாவில் நிலம் முழுவதும் அரசனுக்கே உரிமையுடையது என்ற கொள்கை இல்லை. யார் காட்டை,அழித்து நிலமாக ஆக்குகிறாரோ அவர் அந்த நிலத்துக்கு உரிமையாளர் ஆவார் என்று மனு நெறி கூறுகிறது. முகம்மதிய அரசர்களும் மக்களுக்கு நிலம் உரிமையாக இருப்பதை அனுமதித்தனர். நில உரிமைக்கு 'மால்' என்ற பெயர் உண்டு. அரசன் தன் தேவைக்கு வேண்டுமென்றால் நில உரிமையுடைய குடிமகனிடம் விலை கொடுத்துப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

இந்தியாவில் ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் சொத்து உரிமை மாற்றங்கள் முறையான ஆவணங்கள் மூலமே செய்யப்படுதல் வேண்டும் எனவும் உரிய முத்திரைத் தாள் கொண்டிருக்க வேண்டுமெனவும் பதிவு செய்யப்படுதல் வேண்டுமெனவும் சட்டங்கள் ஏற்பட்டபின், ஆவணம் எழுதிக்கொடுப்பதற்கென்றே ஆவணம் எழுதுவோர் உருவாயினர். அவர்களுள் பெரும்பாலோர் சட்ட அறிவு உடையவரல்லரேனும் அனுபவ அறிவு உடையவர்கள்.

ஆவணம் எவ்வாறு எழுதப்பெற வேண்டும் என்பதற்கு நடைமுறை விதிகள் உண்டு. ஆவணத்தின் தொடக்கத்திலேயே விற்பனைப் பத்திரம், அடைமான ஆவணம் என்பதுபோல இன்ன செயலுக்கான ஆவணம் என்பதைக் குறிப்பிட்டு விடவேண்டும். அடுத்து, எழுதிக் கொடுக்கப்படும் தேதி குறிப்பிடப்படவேண்டும். அதன்பின் இன்னாருக்கு இன்னார் எழுதிக்கொடுப்பது என்னும் விவரம், பிரிவினர்கள் பெயர், அவர்களின் தந்தையர் பெயர், தொழில், முகவரி முதலியவற்றைத் தெளிவாகக் கொடுக்க வேண்டும். பின்னர், எழுதிக் கொடுப்பவருக்குச் சொத்துக் கிடைத்த உரிமை விவரம் கொடுக்கப்படுதல் வேண்டும். அதனை அடுத்து, என்ன உரிமை மாற்றம் செய்யவிருக்கிறது என்பதனைக் குறிப்பிடுதல் வேண்டும். அதன்பின், எழுதிக்கொடுப்பவருக்கு உரிமை முழுமையாக இருப்பதையும், வில்லங்கம் இல்லை என்பதையும், சொத்தினைப் பெறுபவர் அமைதியாக அனுபவிக்க இயலுமென்பதையும் உறுதிப்படுத்தி, இடர் ஏதேனும் விளைந்தால் அதற்கு எழுதிக் கொடுப்பவர் பொறுப்பாளர் என்னும் உறுதியும் குறிப்பிடப்பெறுதல் வேண்டும். இறுதியில் சொத்துவிவரம் தெளிவாகக் குறிப்பிடப் பெறுதல் வேண்டும். பின் பிரிவினர்கள் கையொப்பமும், சான்றொப்பம் இடுவோர் கையொப்பமும் இடம்பெறுதல் வேண்டும்.

ஓர் ஆவணம் எழுதிக்கொள்ளப்பட்டது என்று சொல்லும்போது அதன் பிரிவினர்கள் அதில் கையொப்பமிட்டிருக்கிறார்கள் என்பது பொருள். ஒருவர் மற்றொருவருக்கு எழுதிக் கொடுக்கிறார் என்றால் எழுதிக் கொடுப்பவர் ஆவணத்தில் கையொப்பமிடுதல் வேண்டும். கல்வி அறிவில்லாதவரானால் அவருடைய இடக்கைப் பெருவிரல் இரேகை பதிக்கப்படுதல் வேண்டும்.

சில ஆவணங்களைப் பொறுத்துச் சான்றொப்பம் இன்றியமையாதது எனச் சட்டம் கூறுகிறது. உயில் என்னும் விருப்புறுதி ஆவணம், அடைமானப் பத்திரம், நன்கொடைப் பத்திரம் ஆகியவற்றில் குறைந்தது இரண்டு சாட்சிகள் சான்றொப்பமிடுதல் சட்டப்படி இன்றியமையாததாகும்.

ஆவண வடிவில் உள்ள செய்தியைப் பொறுத்தும், சட்டப்படி ஆவணமாக எழுதிக் கொள்ள வேண்டிய எவற்றைப் பொறுத்தும் அந்த ஆவணமே சான்றாக அளிக்கப்படுதல் வேண்டும். மூல ஆவணத்தை அளிப்பது தகுநிலைச் சான்றாகும். மூல ஆவணம் இல்லாவிடில் சார்நிலைச் சான்று அளிக்கலாம். ஆனால், வாய்மொழிச் சான்று அளித்தல் இயலாது (சான்றியல் சட்டம் பிரிவு 91). ஆவணச் செய்தியைப் பொறுத்து எந்தெந்தச் சூழ்நிலைகளில் வாய்மொழிச்சான்று அளிக்கலாம் என்பது, சான்றுச் சட்டத்தின் 92 முதல் 99 வரையிள்ள பிரிவுகளில் குறிப்பிடப்பட்டுள்ளது.

மூல ஆவணம் தகுநிலைச் சான்றாவது போல, பகுதி பகுதியாக எழுதிக் கொடுக்கப்பட்டிருந்த ஆவணத்தின் ஒவ்வொரு பகுதியும் தகுநிலைச் சான்றாக அமையும். அச்சடித்தல், புகைப்படம் எடுத்தல் போன்று ஒரே செய்முறையில் பற்பல ஆவணங்கள் உருவாக்கப்படுமிடத்து ஒவ்வொன்றும் முதல்நிலைச் சான்றாக அமையமுடியும். ஆனால், ஒரு மூல ஆவணத்திலிருந்து எடுக்கப்பட்ட படிகளாயின் அப்படிகளை முதல்நிலைச் சான்றாகப் பயன்படுத்த இயலாது.

அசல் ஆவணத்தைக் கொணரமுடியாத சூழலில் அதன்படியினைக் கொண்டு இரண்டாம் நிலைச் சான்று அளிக்கலாம். உறுதிச் சான்றளிக்கப்பட்ட படிகள், இயந்திர முறையில் உருவாக்கப்படும் படிகள், மூலத்திலிருந்து உருவாக்கப்பட்ட படிகள், மூலப்பத்திரத்தைப் பார்த்துள்ள ஒருவர் அதன் உள்ளடக்கம் பொறுத்து அளிக்கும் வாய்மொழிச் சான்று ஆகியவை இரண்டாம் நிலைச் சான்றாக அமையும். சில குறிப்பிட்ட சூழ்நிலைகளில் மட்டுமே சார்நிலைச் சான்று அளிக்க இயலும். பொது ஆவணமாயின் அதனைப் பொறுத்துச் சார்நிலைச் சான்று அளிக்கலாம்.

அரசின் சட்ட ஆக்கத்துறை, நீதித்துறை, நிருவாகத்துறை ஆகியவற்றின் ஆவணங்களும், பதிவு செய்யப்பட்ட தனியார் ஆவணங்களும் பொது ஆவணங்களாகும். பொது ஆவணங்களுக்கான உறுதிச்

சான்றளிக்கப்பட்ட படிகள் சான்றாகக் காட்டப்படலாம். வெளிநாட்டைச் சேர்ந்த பொது ஆவணங்கள் எவ்வாறு மெய்ப்பிக்கப்படலாம் என்பதனைச் சான்றியல் சட்டம் குறிப்பிடுகிறது.

வழக்கில் காட்டப்படும் ஆவணத்தை அது உண்மையானதாயின் நீதிமன்றம் ஏற்றுக் கொள்ளும். ஆவணத்தின் உண்மைத்தன்மையைப் பொறுத்து உரிய சான்று அளிக்கப்படுதல் வேண்டும். சில ஆவணங்களை அவை உண்மையானவை என்று நீதிமன்றம் துணிபு கொள்ளவேண்டுமெனச் சான்றுச் சட்டத்தின் 79 முதல் 80 வரையுள்ள பிரிவுகள் கூறுகின்றன. முறையான உறுதிச் சான்று பெற்ற ஆவணங்கள், அரசுச் சட்டங்கள், அதிகாரப் பத்திரங்கள் போன்றவை அவை. முப்பதாண்டுப் பழைமையுடைய ஆவணம் ஒன்று அது யாருடைய கைவசத்தில் இருப்பது முறையோ, அவருடைய கைவசத்திலிருந்து தாக்கல் செய்யப்படுமிடத்து அதில் குறிப்பிட்டுள்ளபடி உரிய முறையில் எழுதிக் கொடுக்கப்பட்டுச் சான்றொப்பமும் இடப்பட்டது என நீதிமன்றம் துணிபு கொள்ளலாம். கட்டாயம் துணிபு கொள்ள வேண்டியவை யாவை, எவைபொறுத்துத் துணிபு கொள்ளலாம் என்பன சான்றுச் சட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன.

ஆவணச் சான்று சிறப்புத் தன்மை உடையதாக இருப்பதால், சிலர் பொய்யாவணம் புனையவும், அதனை உண்மையானதெனப் பயன்படுத்திப் பலன் பெறவும் முற்படுவதுண்டு. அவ்வாறு செய்வதைக் குற்றம் எனக்கொண்டு தண்டனைகள் வழங்க இந்தியச்சட்டத்தின் பதினெட்டாவது அத்தியாயம் வகை செய்கிறது. அதில் ஆவணங்கள் தொடர்பான குற்றச் செயல்களும் உரிய தண்டனைகளும் கூறப்பட்டுள்ளன. கு.இரா.

**ஆவணி அவிட்டம்** என்பது ஆவணி மாதம் முழுநிலாவில் திருவோண நட்சத்திரத்திலோ அவிட்ட நட்சத்திரத்திலோ தொடங்குவதாகும். பொதுவாகத் தென்னகத்திலும், சிறப்பாகத் தமிழகத்திலும் ஆவணி மாதம் தொடங்கியதும் மழைக் காலம் அல்லது கார்காலம் தொடங்கும். ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை ஆகிய நான்கு மாதங்கள் மழை பொழியும் மாதங்களாகும். இந் நான்கு மாதங்களில் மக்கள் வெளியில் நடமாட முடியாது. எனவே, இக்காலத்தைக் கற்றோரும் மாணாக்கரும் முன் கற்றதை மனப்பாடம் செய்யும் காலமாகப் பயன்படுத்தினர். தாம் கற்ற பாடங்கள் மறந்து விடாமல் மனத்தில் நிலைத்து நிற்கும் வண்ணம், வெளியில் செல்ல இயலாத இம்மழைக்காலத்தைப் பயன்படுத்தி மனப்பாடம் செய்து வந்தனர் பண்டைக்கால மாணாக்கர். இக்காலத்திலும் இம்முறை ஓரளவு பண்டைய மரபில் ஊறியுள்ளவர்களால் பின்பற்றப்படுகிறது.

நம் நாட்டில் பழங்காலக் கல்வி முறையில் இவ்வாறு மனப்பாடம் செய்தல் ஒரு சிறப்பான கல்வி கற்கும் முறையாக ஏற்றுக்கொள்ளப்பட்டது என்பது தெரிய வருகிறது. பண்டைக் காலத்தில், இக்காலத்தைப் போன்று அச்சு இயந்திரம் கண்டுபிடிக்கப்படாத நிலையில், நூல்களைப் பெருமளவில் விரைவாக அச்சிடும் முறையை மக்கள் அறிந்திலர். எனவே, வாய்மொழியாக ஆசிரியர் கற்றுக் கொடுப்பதைச் 'செவி வாயாக நெஞ்சு களனாகக் கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்து' என்ற முறையில் மாணவர்கள் பாடங்களை மனப்பாடம் செய்து கற்றனர். அதனால், வழிவழியே சான்றோர் இயற்றிய பல் வகை நூல்களும் காப்பாற்றப்பட்டன. பண்டைக் காலத்தில் நூல்கள் எழுதி வைக்கப்படவில்லை என்பது நோக்கத்தக்கது. எனவே, மனப்பாடம் செய்வது தேவையான கற்கும் முறையாக அமைக்கப்பட்டது இயற்கையே. ஆனால், சிறந்த முறையில் விரைவாக அச்சிடும் கலை பரவியுள்ள இக்காலத்தில் மனப்பாடம் செய்யும் முறை குறைந்து வருகிறது. எனினும் இந்நாளில் மிகக் குறுகிய அளவில் ஒரு நினைவு அடையாளமாக மட்டுமே இது நடைபெற்று வருகிறது என்று கூறலாம்.

ஓதல் அல்லது மனப்பாடத் தொடக்கத்தைச் சிராவணம் என்றும், ஆவணி அவிட்டம் என்றும் வழங்கினர். தொடக்கம் என்னும் பொருளைத் தன்னகத்துக் கொண்ட உபாகர்மம் என்னும் சொல்லாலும் இது வழங்கப்பட்டது.

வேதங்களுக்கு அடிப்படையான சிறந்த முனிவர்களின் பெயரை இந்த ஆவணி அவிட்டவிழா தொடங்கும்பொழுது கூறித் தருப்பணம் செய்வது முறையாகும்.

'மேதை', 'சிரத்தை' ஆகியன கல்வியின் தேவதைகளாகக் கருதப்படுவது வேதகால மரபு. ஆகவே முதற்கண் இக் கல்வியின் தேவதைகளை வழிபட்டு ஓமம் செய்வர். அந்தணர் முதலியோர், அணிந்துள்ள பழைய பூணூலை நீக்கிவிட்டுப் புதுப் பூணூலை மகிழ்ச்சியுடன் அணிந்து கொள்வர்.

ஆவணி அவிட்ட விழாவெடுக்க இருக்கு வேதிகளுக்குத் திருவோண நட்சத்திரம் சிறப்பானது; யசுர் வேதிகளுக்குப் பௌர்ணமி திதி சிறப்பானது. சாம வேதிகள் புரட்டாசி அத்த நட்சத்திரத்தில் இதைச் செய்வர். பொதுவாக, மழைக்காலம் அல்லது கார் காலம் தைத்திங்களில் முடிவடையும். அப்பொழுது நிறைவுச் சடங்கு நடத்தி, ஓதலை முடித்துக் கொள்வது பண்டைக்கால முறையாகும்.

இக்காலத்தில் ஆண்டு முழுவதும் ஓதல் அல்லது மனப்பாடம் நடைபெறுவதாகக் கருதப்படுவதால், ஓதல் நிறைவு விழாவையும் ஆவணி அவிட்டத் தன்றே செய்துவிடுகின்றனர். ஆவணி அவிட்டத் தில் தமிழகத்தில் செட்டிமார்களுள் ஒரு பிரிவினர், அன்று மணமக்கட்குப் புத்தாடை அளித்துச் சிறப்பிப் பதும் உண்டு. இக்காலத்தில் எல்லாக் கோயில்களி லும் அன்று சிறப்புப் பூசை செய்யப்படுகிறது.

அ. கா. ப.

**ஆவர்கள்,** தான் (Don), வால்கா ஆற்றுப் பகுதிகளில் வாழ்ந்து வந்த கூட்டத்தினராவர். இவர் கள் கி.பி. 6-ஆம் நூற்றாண்டில் ஊணர் (Huns) களைப் பின்பற்றி ஐரோப்பாவில் நுழைந்தார்கள். தான்யூப்பு (Danube) ஆற்றைச் சுற்றிக் குடியேறிய ஆவர்கள் (Avars) உரோமானியப் பேரரசர் சுசுட்டி னியனுக்கு (Justinian) ஆதரவாக இருந்தார்கள். இலம்பார்டியருக்கு உதவிசெய்து பன்னோனியப் பகுதியினைப் பெற்றனர்; பால்கன் தீபகற்பத்தைச் சூறையாடினர். இவர்கள் கருங்கடல் வரை தங்கள் மேலாண்மையை நிலைநாட்டினார்கள். பால்கன் மக்கள் கூட்டாகச் சேர்ந்து கி.பி. 8-ஆம் நூற்றாண் டில் இவர்கள் மேலாண்மையை அழித்தார்கள். பேர ரசர் சார்லிமேனால் (Charlimagne) ஒடுக்கப்பட்ட இவர்கள் முற்றிலும் நசுக்கப்பட்டார்கள். பின்னர்ச் செருமானியர்களோடும், பல்கேரியர்களோடும் கலந்துவிட்டனர்.

**ஆவர்த்தம்** கருநாடக இசையில் ஒரு முழுத் தாளம் அல்லது தாளவட்டம் ஆவர்த்தம் எனப்ப டும். இதனை ஆவர்த்தனம் என்றும் கூறுவர். தாளத் தின் எல்லா உறுப்புகளையும் ஒரு முறை கணக்கிட்டு முடிப்பதற்கு ஆவர்த்தம் என்பது பெயர். தாளத் தின் 16 உறுப்புகளுக்கும் ஏற்ப ஆவர்த்தங்கள் மாறுப டும். ஒரு தாளம் ஒரு முறை முழுவதும் வரிசைப் படிஎண்ணப்பட்டவுடன் அந்தத் தாளத்தின் ஆவர்த் தம் முடிந்துவிட்டதாகக் கொள்ளப்படுகிறது.

இசைக்கலையில் ஆவர்த்தத்திற்கு வாய்ப்பு என்னும் பொருளும் உண்டு. இசை நிகழ்ச்சியில் பாடகர் இசைக்கருவியாளருக்குத் தனி ஆவர்த்தங் கள் நிகழ்த்தும் வாய்ப்புக் கொடுப்பதனால் அவர் களுடைய திறமைகளை அவையினருக்குத் தெரியப் படுத்த முடியும்.

பி.ஆர்.

**ஆவா,** பர்மாவின் தலைநகரமாக இருந்த நகரம். ஐராவதி ஆற்றங்கரையில் மாந்தலேயிலிருந்து (Mandalay) ஒன்பது கி.மீ. தொலைவில் உள்ளது. தடோமின்பாயா என்ற அரசர் கி.பி. 1364-இல் ஆவாநகரை (Ava) உருவாக்கினார். இந்நகரம் நான்கு நூற்றாண்டுகள் தலைநகரமாய் இருந்து இன்று அழிந்த நிலையில் உள்ளது. அரண்மனையின் சில பகுதிகளில் உள்ள கோயில்கள் பெரும்பாலும் அழிந்த நிலையில் உள்ளன. பழங்காலத் தலைநகர மான அமரபுரம் இந்நகருக்கு அருகிலுள்ளது.

**ஆவிசென்னா (கி.பி. 980-1037):** இவர் 10-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். உருசியாவில் உசு பெக்கிசுதானிலுள்ள (Uzbekistan) புக்காரா (Bukhara)விற்கு அருகில் அப்சுகேனா (Afskena) என்னும் ஊரில் பிறந்தார். இவர் இயற்பெயர் அபு-அலில் அசன் இபின் அப்துல்லா இபின் சின்னா (Abu-Ali al Husayn Ibn Abdullah-Ibn Sina) ஆகும். இவர் இசுலாமிய சமயத்தைச் சார்ந்தவர்; தமது 18-ஆம் வயதில் அரபு மொழி, மருத்துவம், கணிதம், அளவை யியல், அறிவியல், தத்துவம் ஆகிய துறைகளில் உயர்ந்த கல்வியறிவைப் பெற்றுச் சிறந்தவராக விளங்கினார். மருத்துவம், தத்துவம் ஆகிய துறை களில் நூல்கள் பல எழுதினார். அவற்றுள் குறிப் பிடத்தக்கது, மருத்துவம் பற்றிய நூலாகும். இந்நூல், கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் சிறந்த மருத்துவ நூலாக மேலை நாடுகளில் கருதப்பட்டது.

**ஆவியர்** தமிழ்நாட்டில் பழங்காலத்தில் பல் வேறு குடியினர் பல்வேறு இடங்களில் வாழ்ந்து வந்தனர். பொதினிமலையைச் சூழ்ந்த நாட்டுப் பகுதியினை ஆண்டு வந்த பழங்குடியினர் ஆவியர் எனப்பட்டனர். இன்றுள்ள பழனிமலையும் அதனைச் சூழ்ந்துள்ள குன்றுங்குழியும் நிறைந்த பகுதியும் சேர்ந்ததே அந்த நாளில் பொதினிமலைப் பகுதியாக வழங்கி வந்தது. அப்பொதினிமலைப் பகுதியை ஆண்டுவந்த பழங்குடியினரை ஆவியர் என்று குறித் தனர். ஆவி என்ற சொல்லுக்குப் புகை என்பது பொருள். புகைபோன்ற மேகங்கள் சூழ்ந்த மலைப் பகுதியை ஆண்டு வந்ததனால் ஆவியர் என்று குறிக் கப் பெற்றனர் போலும்! ஆவி என்ற பழங்குடியின் வழித்தோன்றல்களை ஆவியர் என்றழைத்தனர். அந்த ஆவியர் குடியில் பிறந்தவர்கள் வீரத்திலும் தீரத்திலும் மனஈரத்திலும் சிறந்தவர்களாய்த் திகழ்ந்தனர். அப்பழங்குடியில் தோன்றிப் புகழ் பெற்ற குறுநில மன்னராய்த் திகழ்ந்தவர் பேகன் என்பவராவார். அவர் மயிலுக்கு ஆடை கொடுத்த வள்ளல். ஆவார். அவர், கடையேழு வள்ளல்களுள் ஒருவர். அப்பேகனை 'ஆவியர் கோ' என அழைத் தனர். ஆவியர் குடிக்கே பெருமை சேர்த்தவர் பேகன் என்னும் வள்ளலாவார். இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார், பெருங்குன்றூர் கிழார் முத லான புலவர்கள் ஆவியர் குடியில் பிறந்த பேகனை, 'ஆவியர் கோ' 'ஆவியர் பெருமகன்' எனக் குடியோடு சேர்த்துப் புகழ்ந்து கூறியுள்ளனர்.

கே.நா.

**ஆவியுலகக் கோட்பாடு:** தொன்மைச் சமயத்தைப் பற்றி விளக்க முற்பட்ட முதல் மானிடவியல் கோட்பாடே ஆவியுலகக் கோட்பாடு எனப்படும். இங்கிலாந்தில் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மானிடவியலாளரான எட்வர்டு பர்னட் தைலர் (Edward Burnett Tylor) அடிப்படையில் படிமுறை வளர்ச்சியியலாளராக இருந்தும், கி.பி. 1871-ஆம் ஆண்டில் தம் சிறந்த ஆய்வின் அடிப்படையில் வகுத்த ஆவியுலகக் கோட்பாடு (Animism), தொன்மைச் சமயத்தின் தொடக்க நிலை எவ்வாறு இருந்தது, அனைத்து மக்களிடையேயும் எந்தெந்த நிலையில் காணப்பட்டது, இச்சமயத்திற்கு எத்தகைய பெயர்கள் மக்களிடையே காணப்பட்டன என்பன போன்ற பல வினாக்களுக்கு விடையளிக்க முற்பட்டது.

தொன்மைச் சமயத்தின் தோற்றம் பல முகங்களைக் கொண்டிருப்பதாகக் காணப்பட்டாலும் தைலர் தம் படைப்புக் கொள்கை வழித், 'தன்னைச் சுற்றிலுமுள்ள கண்ணுக்குப் புலனாகாத எண்ணற்ற ஆவிகளுக்கு மனிதன் கட்டுப் படுகிறான்' என்று உறுதியாக நம்பினார். கொள்கை நிலையிலன்றி, மானிடவியலின் எல்லாத் துறைகளிலும் சமயத்தைப் பற்றிய படிமுறைக் கருத்தினைச் சீர்தூக்கிப் பார்க்கும் பொழுதும் இக்கருத்து உறுதிப்படும் என்கிறார். இந்த ஆவிகள், மனிதச் செயல்களுக்குக் கட்டுப்பாடு விதிக்கவோ, உதவவோ ஊறுவிளைவிக்கவோ செய்யும் இயல்புடையன. இத்தகைய எண்ணற்ற ஆவிகளின்பால் மனிதர் கொண்டுள்ள நம்பிக்கையே ஆவியுலகக் கோட்பாடு ஆகும். இவ்வாறு ஆவிகளின் மீது நம்பிக்கை கொண்ட சமயமாகத் 'தொன்மைச் சமயம்' உருப்பெற்றது.

தைலர் தம் அடிப்படைக் கொள்கை வழி, ஒவ்வொரு பண்பாடும், சமயம் அல்லது சமய நம்பிக்கை கொண்டிருக்க வேண்டும் என்றும், அச்சமய நம்பிக்கையே அப்பண்பாட்டின் அடிக்கல்லாக அமையும் என்றும் நம்பினார். பண்பாட்டு வளர்ச்சி ஒரே கோட்டில் செல்ல வில்லையாயினும் சிறிய, எளிய நிலையிலிருந்து சிக்கலான, வளர்ந்த நிலையிலேயே செல்கிறது. அவர், பண்பாட்டின் படிமுறை வளர்ச்சியில், ஆவியுலக நம்பிக்கை ஏற்றுக் கொண்ட பல் வேறு திரிபு நிலைகளையும் மாற்றங்களையும் சமயப் படிமலர்ச்சி இயலாரும் மானுடவியலாரும் ஏற்றுக் கொள்ளும் அளவில் ஆராய்ந்திருக்கிறார். ஆவியுலக நம்பிக்கை, வெவ்வேறு பண்பாடுகளில் அவற்றின் இயற்கைச் சூழ்நிலையோடு ஒன்றிப் பல்வேறு நிலைகளில் காணப்படுகிறது. இத்தகைய வளர்ச்சி நிலையைப் பல்கடவுள் வழிபாட்டிலிருந்து ஒரு கடவுள் வழிபாடு ஏற்பட்டது என்ற தன் கோட்பாட்டோடு இயைபுபடுத்தி ஆராய்கிறார். மேலும், பல்வேறு நிலைகளைக் கொண்ட பண்பாட்டின் படிமுறை வளர்ச்சியை விளக்கும்பொழுது, சமயத்திற்கு முந்தைய பண்பாட்டு நிலையையும் அறுதியிட்டுக் கூற முயல்கிறார். எனினும், இதனை விரிவுபடுத்த எவ்விதத் தனிப்பட்ட கொள்கையும் தைலர் வகுக்காமல், குறுகிய பரப்புக்கொண்ட சமூகப் படிமலர்ச்சிக் கொள்கையோடு நோக்குகிறார்.

ஆவிக் கோட்பாடுடைய ஆதிக்குடிகளின் தொன்மைச் சமயத்தை அறுதியிட்டு விளக்க முற்பட்ட பொழுது இவர் குறைந்த அளவு சமய வரையறையைக் கொண்டு வந்தார். இந்த வறையறைப்படி, ஒவ்வொரு மனிதனும் குறைந்த அளவு ஆவியுலக நம்பிக்கையையாவது கொண்டிருத்தல் வேண்டும். இந்தத் தொடக்க நிலையினைக் கடந்த பின்னரே மனிதகுலம் சமயக் கோட்பாடுடைய பண்பாட்டை அடைந்தது.

உலகத்தில் ஒருசில ஆதிக்குடிகளிடையே ஆவி நம்பிக்கை இல்லாமலிருக்க வாய்ப்புண்டென்று தைலர் கொள்கையளவில் ஒப்புக்கொள்ளுகிறார். மேலும் பொதுவான சமய வரையறையை உருவாக்குதற்கு இத்தகைய ஐயப்பாடுடைய விதிவிலக்கு தடையாகாது என்றும் குறிப்பிடுகிறார். எனவே மக்கள் அனைவரும் ஆவி நம்பிக்கையுடைய சமயத்தை ஏதோ ஒரு வகையில் கொண்டிருந்தனர் என்பது தைலரின் முடிந்த முடிபாகும். இக்கோட்பாட்டைத் தெளிவுபடுத்தத் தொடர்ச்சியான மாதிரி நியதிகள் பலவற்றை முன்வைத்துப் பேச முற்பட்டார். இக்கோட்பாட்டின் ஒரு கூறாக, காடும் விலங்குகளும், வானும் பறவைகளும், தண்ணீரும் மீன்களும் இணைந்திருப்பதைப் போலவே, மனிதனும் ஆவியும் ஒன்றோடொன்று ஒன்றியிருக்கின்றனர் என்கிறார். எனவே, ஆவியில்லாமல் மனிதன் வாழமுடியாது என்பது கருத்தாகும்.

ஆவிக்கோட்பாட்டில் (Doctrine of Spirits) இருந்தே சமயம் தோன்றியது என்றும், இக்கோட்பாடு இறப்பு, கனவு ஆகியவற்றின் சிந்தனைக்குட்பட்ட பிரதிபலிப்போடு ஒன்றியமைந்த உயிர்க்கோட்பாடு (Doctrine of Souls)என்றும் கூறுகிறார்.

கனவின் வியக்கத்தக்க நிகழ்ச்சிகளை மனிதன் உணர்ந்தபொழுது தோன்றியதே ஆவியுலகம் என்று தைலர் உறுதியாக நம்பினார். கனவு ஒருவித மயக்கத்தை உண்டாக்கி மாயையான அனுபவத்தையும் ஏற்படுத்துகிறது. ஆதிக்குடியினர் தங்கள் கனவிலும் தூக்கத்திலும், இறந்த மூதாதையரையும் குளம், நீரோடைகளில் காணப்படும் தங்கள் நிழல் போன்றவற்றையும் உணர்ந்த சூழலில், அவற்றினின்று தம்மை விடுவித்துக் கொள்ள இயலவில்லை. தம் உணர்வு

களுக்கு அப்பாற்பட்ட இவ்வகை நிகழ்ச்சிகளை அன்றாட வாழ்வில் கொண்டிருந்த ஆதிக்குடியினரின் மனத்தில் படிப்படியாக ஒரு சிந்தனை எழுச்சிதோன்றியது. மனிதன் இறக்கும்பொழுது அவனிடமிருந்து கண்ணுக்குப் புலனாகாத 'ஆற்றல்' வெளிப்பட்டிருக்கவேண்டும் என்றும், அதனாலேயே அவன் மரணமடைகிறான் என்றும், அந்த ஆற்றல் உடலினுள் இருக்கும்பொழுது உயிருள்ளவனாகவும் உடலிலிருந்து வெளிப்பட்ட பொழுது இறந்தவனவாகவும் ஆகிறான் என்றும் ஆதிக்குடியினர் கருதினர்.

ஆவியின் உருவம், வடிவம் ஆகியவற்றைத் தொட்டுணர முடியாது. இவர்கள், ஆவி என்னும் சொல் 'நிழல்' அல்லது 'மறைவு' என்பதனைக் குறிக்கும் என்றும், உணரமுடியாத இவ்வாவியின் உணர்வுகளை அது தங்கும் உடல் என்ற கலத்தில் மட்டுமே புரிந்துகொள்ள முடியும் என்றும் கருதினார்கள். ஆதிக்குடியினர் கனவின் எதிரொலியையும் ஆவியின் பல்வேறு செயல்களையும் உணர்ந்து, மனிதனுக்கு 'நிலையற்ற தசைப்பகுதி' 'ஆன்மிகமான ஆவி' ஆகிய இரு பகுதிகள் உள்ளன என முடிவு செய்தனர்.

ஆதிக்குடியினரின் ஆவி-உடல் நம்பிக்கையின் அடுத்த கட்டத்தில், 'உலவும் ஆவி' (Free Soul) 'உடல் ஆவி' (Body Soul) என இரண்டு ஆவிகள் உடலில் உள்ளன என்று நம்பினர். 'உலவும் ஆவி' உடலுக்கு வெளியே சென்று பல செயல்களை உணர்கிறது என்றும், 'உடல் ஆவி' வெளிப்படும் பொழுது இறப்பு நிகழ்கிறது என்றும் அவர்கள் கருதினர். மேலுமவர்கள் உலவும் ஆவி ஒருவரின் மூச்சிற்கும், நிழலிற்கும் காரணமாக அமைகிறது என்றும், உடல் இரத்தம் தலை ஆகியவற்றின் உருவமாக இருக்கிறது என்றும் எண்ணினார்கள்.

உடலிலிருந்து ஆவி வெளிப்பட்டமை - இறந்தமை, நிலைத்ததா நிலையற்றதா என்னும் எண்ணத்தில் விளைந்தவையே 'பச்சைச் சடங்கு', 'உலர்ந்த சடங்கு' எனப்படும் இருவித ஈமச் சடங்குகளாகும். மனிதன் இறந்தவுடன் பச்சைச் சடங்கையும், பின்னர் அவன் ஆவி இனித் திரும்பி வராது என முடிவு செய்யப்பட்ட சிலநாள்களுக்குப் பின்னர் உலர்ந்த சடங்கையும் மேற்கொள்கிறார்கள். உலர்ந்த சடங்கு ஒருவன் ஆவியை முழுவதுமாகக் கட்டுப்படுத்துகிறது என்று நம்புவதால் அச்சடங்கு மிகவும் இன்றியமையாததாகக் கருதப்படுகிறது.

நீலகிரி மலையில் வாழும் தோடர்கள் இந்த இரு வித ஈமச் சடங்குகளையும் வழக்கில் கொண்டுள்ளனர். பச்சை சாவுச் (Pachai Chavu - Wet or Green Funeral) சடங்கை இறந்தவுடனேயும், வரைதன் (Varaidan-Dry Funeral) எனும் உலர்ந்த சடங்கைச் சில நாள்களுக்குப் பிறகும் செய்கின்றனர். இந்த உலர்ந்த சடங்கு இந்துக்கள் 'கருமாதி' என்னும் பெயரில் செய்யும் சடங்கினை ஒக்கும்.

நடு இந்திய ஆதிக்குடிகளான ஒரவன், சந்தால்களிடையேயுள்ள ஆவியுலக நம்பிக்கையை மசினியேத்தான் (Majniyethan) வழிபாட்டில் காணலாம். பயிர், மழை, கால்நடை ஆகியவற்றின் நலனுக்கெனக் குறவர்கள் தனித்தனி ஆவிகளை வழிபடுகின்றனர். சட்டிசுகர் பகுதியில் வாழும் காமர், புன்சியாசு என்னும் குடியினர், உலவும் ஆவியான மட்கி (Madhee)சுடுகாட்டிலும், உடல் ஆவியானசிவ்வு (Jiv) இறைவனிடத்திலும் சேர்கின்றன என்று நம்புகின்றனர். மிகிர் குடிகள், இறந்தவரின் ஆவி குடும்ப நலனுடன் தொடர்புடையது என எண்ணுவதால் குழந்தைகளுக்கு இறந்தவரின் பெயரையே சூட்டுகின்றனர். மேற்கு இந்தியாவில் பில்கள் (Bhils), விர் (Vir) என்ற மூதாதையர் ஆவியை வழிபடுகின்றனர்.

கோத்தர் ஆதிக்குடிகள் பசுதௌ (Pasdau) என்னும் பச்சைச் சடங்கையும், வால்தௌ(Varldau) என்னும் உலர்ந்த சடங்கையும் வழக்கில் கொண்டுள்ளனர். ஆவியைக் கொண்டு நெடுநாள்களுக்கு முன்னர் இறந்த மூதாதையர்களைக் கனவில் உணரமுடிவதால் ஆவியை அழியாத மரணமற்ற, தெய்விகமான பொருளாக ஆதிக்குடியினர் அனைவரும் கருதுகின்றனர்.

ஆவி நம்பிக்கையுடைய கூறுகள் சில, உலகின் பெரிய சமயங்களுள் காணப்படினும், அச்சமயங்கள் ஆவியுலகக் கோட்பாடு உடையவை எனப்படா. ஆனால், பெரும்பாலான ஆதிக்குடிகளின் சிறு சமயங்களில் ஆவியுலக நம்பிக்கையே முதன்மையாகக் காணப்படுவதால், தொன்மைச் சமயம் குறித்த இனப்பரப்பளவியலாய்வு இன்றியமையாததாகிறது.

தைலர், ஆவியுலகக் கோட்பாட்டின் வழி ஆதிக்குடிகளைத் தத்துவ ஞானிகளாகவும் பகுத்தறிவாளர்களாகவும் மிகைப்படுத்தியுள்ளார் என்றும், இவருக்குக் கள ஆய்வு அனுபவம் இல்லாமையால் ஆதிக் குடிகளின் சுறுசுறுப்பான வாழ்க்கையில் தங்களைப் பற்றிச் சிந்தனை செய்யவே அவர்களுக்குக் காலம் இல்லை என்பதை உய்த்துணரத் தவறிவிட்டார் என்றும் மானிடவியலாருள் சிலர்கருத்துத் தெரிவிக்கின்றனர். இவரது ஆய்வு, இயற்கை அறிவியலார் பார்வையிலேயே அமைந்திருப்பதால், ஒரு பகுதித் தொன்மைச் சமயத்தைமட்டும் மிகைப்படுத்தியுள்ளார் என்று மாக்சு முல்லர் (Max Muller), தர்கைம் (Durkheim), மாரட் (Marett) முதலிய அறிஞர் கருதுகின்றனர். ஆயினும், தொல்குடியிலிருந்து நாகரிகமடைந்த மனிதன் வரை அவன் கொண்டுள்ள சில தத்துவத்திற்கு ஆவியுலகக் கோட்பாடு வித்திட்டது என்றால் அது மிகையாகாது. ஓ.ப.

துணை நூல்கள்:

Durkheim E., The Elementary Forms of Religious Life, The Free Press, New York, 1965.

Frazer, J., The Golden Bough, Macmillan Company, New York, 1930.

Lowie, R. H., Primitive Religion, Liveright Publishing Corporation, New York, 1948.

Marett, R. R., The Threshold of Religion, Methuen, London, 1969.

Needham, J., Science, Religion and Reality, Macmillan Company, New York, 1925.

**ஆவுடையம்மாள்** கி. பி. 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த ஒரு புலவர். இவர் தென்காசிக்கருகிலுள்ள செங்கோட்டை என்னும் ஊரைச் சேர்ந்தவர்; வேதாந்தக் கொள்கையுடையவராக விளங்கியவர்; வேதாந்தக் கோட்பாட்டினை நன்குணர்ந்து அதனை விளக்கும் நூல்கள் எழுதியுள்ளார். 'வேதாந்த வித்யா சோபனம்' என்னும் நூல், வேதாந்தக் கருத்துகளைச் சோபனப் பாட்டில் அமைத்து விளக்குகிறது. இந்நூல் கி. பி. 1890-இல் வெளி வந்தது. கி. பி. 1896-இல் வெளிவந்த 'வேதாந்தப் பள்ளு' என்னும் இவரது நூல், வேதாந்தக்கொள்கைகளை, எளிய மக்களின் பேச்சுமொழில் அமையத்தக்க பள்ளு என்னும் சிற்றிலக்கிய வாயிலாக விளக்குகிறது.

**ஆவுடையார் கோயில்,** பாண்டி நாட்டுச் சிவத்தலங்களுள் ஒன்று. இது புதுக்கோட்டை மாவட்டம் அறந்தாங்கி வட்டத்திலுள்ளது. இறைவன் திருக்கோயிலுக்குரிய 'ஆவுடையார் கோயில்' என்னும் பெயரே இன்று ஊர்ப் பெயராக வழங்குகிறது. இவ்வூர் திருமுறைகளிலும், பிற இலக்கியங்களிலும் திருப்பெருந்துறை என்று வழங்கப் பட்டுள்ளது. பழங்காலத்தில் இவ்வூர் ஒரு துறைமுகமாக இருந்திருக்கலாம் என்பது தெரிகிறது. மணிவாசகப் பெருமானாகிய திருவாதவூரடிகளைப் பாண்டிய மன்னன் குதிரை வாங்கிவரப் பணித்தபோது, கடல் கடந்த வெளிநாடுகளிலிருந்து கலங்களில் குதிரைகள் கொண்டுவரப்பெற்று இங்கு இறக்கப்பட்டன என்னுஞ் செய்தி கூறப்பட்டுள்ளது. இங்கு 66 கோடித் தீர்த்தங்கள் உள்ளமையால், இத்தலம் பெருந்துறை என்னும் பெயர் பெற்றது என்று புராணங்கள் விளக்குகின்றன. இத்தலத்திற்குச், சிவபுரம் முதலான ஒன்பது சிறப்புப் பெயர்களும், புரையேகா வனம் முதலிய வேறு பெயர்களும் காரணப் பெயர்களாக அமைந்துள்ளன. இத்தல இறைவன் பெயர் ஆன்மநாயகர்; இறைவி பெயர் சிவயோகநாயகி. தல மரம் குருந்தமாகும். தீர்த்தம், அக்கினி தீர்த்தம் முதலிய அறுபத்தாறு கோடி தீர்த்தம். மணிவாசகப் பெருமான் குருவருள் பெற்றது திருப்பெருந்துறை என்னும் இத்திருத்தலத்திலாகும். இங்குள்ள திருக்கோயில் அழகும் அருமைப்பாடும் கொண்டது. இக்கோயிலில் அமைக்கப்பட்டுள்ள கல்லாலாகிய கொடுங்கை மிகவும் நுட்பமான வேலைப்பாட்டினைக் கொண்டுள்ளது. கல்லினை மெல்லிதாய் இழைத்துச் செய்யப் பெற்றுள்ள இக்கொடுங்கை வேலைத்திறன் அக்காலக் கல்தச்சர்களின் கைவினைத்திறத்திற்கு அரிய எடுத்துக்காட்டாகும். இது தோன்றிய பின்னர் இப்பக்கத்தில் கல்தச்சர்கள் பணி ஒப்பந்தஞ் செய்யுங்கால் 'ஆவுடையார் கோயில் கொடுங்கை நீங்கலாகச் செய்வோம்' என்று கூறும் மரபு சொல்லப்படுகிறது. இக்கோவிலில் மேளம் வாசிக்கப்படுவதில்லை. கோயிலுள் இறைவனுக்கும் இறைவிக்கும் திருமேனிகள் அமைக்கப்படவில்லை. நந்தி வடிவமோ கொடிமரமோ நிறுவப்படவில்லை. திருவிழாக் காலங்களில் மணிவாசகர் திருமேனிப் படிவமே ஊர்வலமாக வரும். இக்கோயில் திருவாவடுதுறை ஆதீனத்தின் ஆட்சிக்குட்பட்டுள்ளது. திருப்பெருந்துறைப் புராணம் என்னும் பெயரில், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களாலும், சுந்தரலிங்க முனிவராலும் இருவேறு தலபுராணங்கள் பாடப்பெற்றுள்ளன. திருப்பெருந்துறையின் வளத்தையும், ஆண்டுக் கோயில் கொண்டு விளங்கும் பெருமானின் திறத்தையும் மணிவாசகர் தம் திருவாசகத்தில் அழகுறக் காட்டியுள்ளார்.

**ஆவூர்** சோழ நாட்டிலுள்ள, தேவாரப் பாடல் பெற்ற தலங்களுள் ஒன்று. கும்பகோணத்திலிருந்தும் தஞ்சையிலிருந்தும் திருக்கருகாவூரிலிருந்தும் பேருந்து வழியாகச் சென்று இத்தலத்தினை அடையாலம். பசுக்கள் வழிபட்ட தலம் ஆதலால் ஆவூர் எனப்பட்டது. இங்குள்ள திருக்கோயிலுக்குப் பசுபதீச்சுரம் என்பது பெயர். ஊர்ப்பெயரோடு கோயிற்பெயரும் சேர்ந்து ஆவூர்ப்பசுபதீச்சுரம் என்று வழங்கப்படுகிறது. இறைவன் பெயர் பசுபதீச்சுரர், மங்களவல்லி, பங்கசவல்லி என்று இரண்டு அம்பாள் சந்நிதிகள் உள்ளன. இங்குள்ள தீர்த்தம் பிரம தீர்த்தம் எனப்படும். இத்தலத்திற்குத் திருஞான சம்பந்தர் தேவாரம் உண்டு.

ஆவூர், என்னும் ஊர்ப் பெயரை முன்னடையாகக் கொண்டுள்ள ஐந்து புலவர்கள் சங்க நூலிற் காணப்படுகின்றனர். அவர்கள் பெயர் வருமாறு:-

ஆலூர் கிழார், ஆலூர்கிழார் மகனார் கண்ணனார், ஆலூர்க் கௌதமன்சாதேவன், ஆலூர் மூலங்கிழார், ஆலூர் மூலங்கிழார் மகனார் பெருந்தலைச் சாத்தனார்.

**ஆலூர்க்காவிதிகள் சாதேவனார்** சங்க காலப் புலவர்களுள் ஒருவர். இவர் ஆலூர் என்னும் ஊரைச் சார்ந்தவர். இவ்வூர் சோணாட்டு ஆலூர்க் கூற்றத்து ஆலூராயிருக்கலாம் எனவும், இது இந் நாளில் பசுபதி கோயில் என வழங்குகிறது எனவும் கூறுவர். பசுக்கள் பூசித்தமையால் ஆலூர் எனப் பெயர் பெற்றது. பழங்காலத்தில் ஆக்களைப் பேணி வாழ்ந்த மக்கள் பலராதலின், ஆலூர்களும் எல்லாப் பகுதியி லும் இருந்துள்ளனவாதலால், இவர் எந்த ஆலூரைச் சேர்ந்தவர் என்று கூறுவதற்கில்லை.

சாதேவனார் என்னும் இயற்பெயரைக் கொண்ட இப்புலவர், அரசர்க்கு அறிவுரை கூறும் அமைச்சர் தொழில் மேற்கொண்டு ''காவிதி' என்னும் சிறப்புப் பெயரைப் பெற்றவர். ஆலூர் என்னும் ஊரில் வாழ்ந்ததனால், ஊர்ப் பெயரும் சேர்த்து ஆலூர்க் காவிதிகள் சாதேவனார் என்று அழைக்கப் பெற் றார். காவிதி என்பது, பாண்டி நாட்டு வேளாளருள் உழவுத் தொழில் செய்வோருக்கு அரசரளிக்கும் பட் டம் என்பர். என்.இ.இ.

**ஆலூர்க் கௌதமன் சாதேவனார்** சங்க காலத் தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். இவர் சங்க நூல்களில் ஆலூர்க் காவிதிகள் சாதேவனார் என்றும் குறிக்கப்பட்டுள்ளார். இவ்விரு பெயர்களும் ஒரு புல வரையே குறிக்கின்றன என்பது கருதப்படுகிறது. ஆலூர் என்னும் பெயர் ஆமூர் என்றும் ஏடுகளில் காணப்படுகிறது. சாதேவன் என்பது இயற்பெயர். இது சகாதேவன் என்பதன் மரூஉ வடிவமாகும். கௌதமன் என்பது இவரது பெயரடையாயின் இவர் கௌதமகோத்திரத்துப் பிறந்த அந்தணராவர். காவிதிகள் என்பது அடையாயின் உழுவித்துண்ணும் வேளாளருள் காவிதிப் பட்டம்பெற்ற ஒருவராவர். இவரது அகநானூற்றுப் பாடல் (159) பாலைத்திணை யில் தோழி கூற்றாக உள்ளது. இதன்கண் குறிப்பிடப் பட்டுள்ள ஆமூர் என்பது, குறும்பொறை மலையின் கீழ்ப்பாலுள்ள பாலைநிலத்தில் அமைந்துள்ளது என்பதனால்,இது சேர நாட்டைச் சார்ந்த ஊர் எனக் கருதுகின்றனர். புலவர் தம்மூரைச் சிறப்பித் துக் கூறும் மரபினால் இதில் குறிப்பிடப்பட்ட ஆமூர் இவருடைய சொந்த ஊராக இருக்கலாம். 'ஆமூர் என்னும் சிறப்புடைய ஊரைப் பெற்றாலும், தலை வன் தலைவியை மறந்து, சென்றவிடத்தில் தங்கிவிட மாட்டான்' என்று இவர் பாடியுள்ளார். இவரது மற்றொரு பாடல் நற்றிணையில் 264 ஆம் பாட்லாக உள்ளது. பாலைத் திணையிலமைந்த இப்பாடல், உடன்போகா நின்ற தலைமகன் கூற்றாக அமைந் துள்ளது. தலைவியை உடன்போக்கில் அழைத்துச் சென்ற தலைமகன் தலைவியிடம், 'தோகை விரித் தாடும் மயில்போல, மலர் சூடிய கூந்தலில் காற்ற டிக்க விரைந்து செல்வாயாக' எனக் கூறுவது (நற். 264) நயமிக்கதாக உள்ளது.

**ஆலூர்கிழார்** கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவர்; ஆலூரினைச் சார்ந்தவர். தமிழகத்தில் ஆலூர்ப் பெயரில் பல ஊர்கள் உள்ளன. இவரது ஆலூர் இன்னதென உறுதியாகக் கூறுதல் இயலாது. இவர் பாடலில் மருத நிலவளம் பேசப்படுவது கொண்டு இவரது ஆலூர் சோழ நாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ள ஊராகலாம் என்பது கருதப் படுகிறது. ஆனால், அப்பாடலில் முல்லை நிலக் குறிப் பும் இடம் பெற்றுள்ளது. இந்த ஆலூர் எவ்விடத்தில் இருந்தாலும், இது பல சங்கப் புலவர்களைத் தோற்று வித்த பெருமை சான்றதாகும். இப்புலவரின் மக்களும் சங்கப் புலவர்களாகக் காணப்படுகின்றமையால், இவர் குடும்பம் தமிழ்ப் புலமை சான்ற ஒரு குடும்ப மாக அக்காலத்தில் விளங்கியுள்ளது. புறநானூற்றின் 322-ஆம் பாட்லாக அமைந்த இவரது ஒரே பாடல் வாகைத் திணை, வல்லாண் முல்லைத் துறையில் அமைந்துள்ளது. இப்பாடல் வேந்தரும் அஞ்சுமாறு வாழ்ந்த ஒரு வீரனின் வீரச் சிறப்பையும் அவன் ஊர்வளத்தையும் விளக்குகிறது. இப்புலவர் பெயர் ஆலூர் அழகியார் என்றும் சில ஏடுகளில் காணப்படு கிறது.

**ஆலூர் கிழார் மகனார் கண்ணனார்** சங்ககாலப் புலவர்களுள் ஒருவர். தமிழ்ப் புலவர் பலரைப் பெற்றெடுத்த ஆலூர் இவர் பிறந்த ஊரா கும். இவர் தந்தை ஆலூர் கிழாரும் சங்கப் புலவர் களுள் ஒருவராக உள்ளார்.

ஆலூர் கிழார் மகனார் பெருந்தலைச் சாத்த னார் என்ற பெயரிலும் ஒரு புலவர் பற்றிக் குறிப்புக் காணப்படுகிறது. அவர் கண்ணனாரின் உடன்பிறந் தார் எனவும் கருதப்படுகிறார். அதனால் ஆலூர் கிழாரின் குடும்பமே புலவர்கள் மிக்க குடும்பமாகத் திகழ்ந்துள்ளது. இவர் பாடியதாக நமக்குக் கிடைத் துள்ளது அகநானூற்றிலுள்ள ஒரே பாடலாகும் (202).

**ஆலூர் மூலங்கிழார்** சங்க காலத்தில் வாழ்ந்த புலவர்களுள் ஒருவர்; ஆலூரில் தோன்றிய வர். ஆலூர் சோழ நாட்டில் காவிரியின் தென் கரை யில் உள்ளது. சங்கப் புலவர்களுள் சிலர், ஆலூர்ப் பெயரோடு காணப்படுகின்றமையால், இவ்வூர் அக் காலத்தே புலவர் பலரைத் தோற்றுவித்த பெருமை பெற்று விளங்கியது என்பது புலனாகிறது. மூலங் கிழார் என்னும் பெயரினை நோக்குங்கால், இப்

பெயர் மூல விண்மீன் நாளில் தோன்றியமையால் அமைந்ததாகும் என்பதனை உய்த்துணரலாம். ஒருவன் பிறந்த விண்மீனால் அவனுக்குப் பெயரிடும் மரபுண்டு.

இவர் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனையும் (புறம். 38,40), சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயனையும் (புறம். 166), மல்லிகிழான் காரியாதி என்னும் பெரு வீரனையும் (புறம். 177), பாண்டியன் கீரஞ்சாத்தன் என்னும் குறுநிலத் தலைவனையும் (புறம். 178), பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனையும் (புறம். 196), பெயர் அறியாப் புரவலன் ஒருவனின் வள்ளன்மை, அவன் இல்லாதபோது அவன் வீடு களையிழந்து காணப்பட்டமை ஆகியவற்றையும் (புறம். 261) பாடியுள்ளார். புறம். 301–ஆம் பாடலும் இவர் பாடியுள்ளதே.

அகநானூற்றில் இவர் பாடிய மூன்று பாடல்கள் முல்லை, மருதம், பாலை (24, 156, 341) ஆகிய திணைகளில் அமைந்துள்ளன.

**ஆவூர் மூலங்கிழார் மகனார் பெருந்தலைச் சாத்தனார்:** கடைச்சங்கப் புலவருள் ஒருவர். இவரது இயற்பெயர் சாத்தனார் என்பதாகும். இவர் இயற்பெயர் குறிக்கப்படாமல் ஆவூர் மூலங்கிழார் மகனார் என்றும் ஏட்டில் குறிக்கப்படுள்ளார். இவரது ஒரே பாடல் அகநானூற்றில் முல்லைத் திணைப் பாடலாக (224) அமைந்துள்ளது. வினைமுற்றிய தலைவன் தேர்ப்பாகனுக்குக் கூறுவதாக இப்பாடல் உள்ளது. ஆவூர் சோழநாட்டில் காவிரியின் தென்கரையில் உள்ளது. இவர் தந்தையார் ஆவூர் மூலங்கிழார் ஆவர். அவரும் சங்கப் புலவர்களுள் ஒருவராகத் திகழ்கின்றார். அவருடைய பாடல்கள் அகநானூற்றிலும் புறநானூற்றிலும் இடம் பெற்றுத் திகழ்கின்றன. சங்கப் புலவர்களுள் ஒருங்கே இடம் பெறும் அளவில் தந்தையும் மகனும் பெரும் புலமை பெற்று விளங்கும் சிறப்பினை இவரது பெயரைக் கொண்டு உணரமுடிகிறது. கி.கோ.

**ஆழ்ந்த சிந்தனை:** ஆற்றலால் மனிதன் விலங்குகளிடமிருந்தும் ஏனைய உயிர்களிடமிருந்தும் வேறுபடுகிறான். பல்வேறான நிலைகளில் மனிதன் தன் சிந்தனை ஆற்றலைப் பல்வேறு முறையில் செயற்படுத்துகிறான். உலகிலுள்ள பொருள்களை இனம் கண்டு கொள்ள அறிவு புலன்களுக்கு உதவுகிறது. அப்பொருள்களைப் பற்றி ஆராயும்போது அவனுடைய நுண்ணறிவுத் திறன் உயருகிறது. அதையே அவன் முறைப்படுத்தி, ஆழ்ந்து அறிவியல் முறையில் ஆராய்ந்தால், அவனுடைய சிந்தனை ஆற்றல் சிறந்து விளங்கும். அடுத்த உயர்ந்த படியில், அவனுடைய சிந்தனை ஆற்றல் வளர்ந்து, உலகத்திலுள்ள பொருள்களின் அடிப்படைத் தன்மையை ஆராய்ந்து, தத்துவ விளக்கங்களைக் கொடுக்க முற்படுகிறது. இந்தக் கட்டத்தில் அவன் அறிவு, பொருள்களின் தனித்தன்மையை ஆராய்வதிலிருந்து வேறுபட்டு, உலகத்தில் மனித வாழ்க்கையின் அடிப்படைகளை ஆராய்வதில் ஆழ்ந்து செல்கிறது. இந்த நிலையில் பிறப்பதே அறிவாகும். மனிதன் மற்ற உயிரினங்களிலிருந்து வேறுபட்டு உயர்ந்து நிற்கிறான் என்றால், அவன் தனக்கு அளிக்கப்பட்ட தனிப்பெரும் சொத்தான அறிவைத் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளும் கருவியாக மட்டும் கொள்ளாமல், அடிப்படை உண்மைகளை அறியும் ஒரு பெரும் ஆற்றலாகவும் போற்றுகிறான். இதையே அறிவு என்றும், மெய்யுணர்வு என்றும் பகுத்தறிவு என்றும் கூறுகிறோம். வெவ்வேறாயினும், இவற்றிற்கெல்லாம் அடிப்படை சிந்தனை ஆற்றலே.

**சிந்தனை என்பது என்ன?** கண்டதைப் பற்றி மனம்போன போக்கில் சிந்திப்பது சிந்தனை ஆகாது. கண்டதை ஒரு வகைப்படுத்திக் காணாததையும் மனத்தில் கொண்டு, கல்வி, கேள்வி ஞானங்களினால் தெளிந்த அறிவை ஒரு நிலையில் பரவவிடுவதே சிந்தனையின் சிறப்பாகும். இதை ஆழ்ந்த சிந்தனை (Deep Contemplation) என்று சொல்லலாம்.

ஆழ்ந்த சிந்தனை சிந்தனையைச் சுழல விடாமல், எண்ணத்தின் எழுச்சியாக இராமல், வெறும் எண்ணக் குவிப்பாக, அறிவுக் குவிப்பாக இருக்க வேண்டும். விவேகானந்தரைப் போன்றவர்கள் மனித இனத்திற்கு அடிக்கடி இதை நினைவு படுத்துகிறார்கள். குருகுலக் கல்வி முறையில் சிலர் ஆழ்ந்த சாத்திர அறிவு பெற முடிந்தது. சிலருக்குத் தற்காப்பிற்கும், நாட்டின் பாதுகாப்பிற்கும் வில், வாள் பயிற்சி அளிக்கப்பட்டது. மற்றும் சிலர் வாழ்க்கைச் சூழ்நிலையைப் பொறுத்துப் பொது அறிவு பெற முடிந்தது. எவ்வகைப்பட்ட கல்வியாயினும், மாணாக்கர்களின் சிந்தனை ஆற்றலே சிறந்த பங்கு வகித்தது. மனத்தை ஒரு நிலைப்படுத்தி, ஒரு சிறந்த சிக்கலை உடன் மாணவர்களுடனும் ஆசிரியருடனும் அலசி ஆராய்ந்து, முழுமையாக உணர்வதற்குப் பயிற்சி பெறுகிறான். ஆசிரியர் ஏட்டுக் கல்வியை மட்டும் கற்பிப்பவராக இல்லாமல், தமது கல்வி அறிவை மாணாக்கருக்குப் பலவகைகளில் தந்து மாணாக்கர் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கச் செய்வார். இக்கல்வி முறையின் சிறப்பு மாணாக்கர் மனத்தை ஒரு நிலைப்படுத்திக் கற்றலாகும். இ

பயிற்சியினால் எந்தச் சிக்கலையும் தீரக் கவனம் செலுத்தி ஆராய்ந்து முடிவு காண முடிந்தது.

மனிதனுக்குப் பகுத்தறிவு இல்லையெனில் மனத்தை ஒரு முகப்படுத்த இயலாது. ஒரு முகப் படுத்தவில்லையெனில் மனம் தெளியாது; தெளிவில்லா நெஞ்சத்தில் கவலைகளும் கெடுதலான எண்ணங் களுமே தலைதூக்கி நிற்கும். மனிதன் உணர்ச்சி களுக்கு அடிமைப் பட்டு ஏனைய உயிரிகளிடமிருந்து வேறுபடாத நிலையில் வாழ்க்கையைக் கழிப்பான்.

மற்ற உயிர்கள் இயற்கைக்கேற்ப வாழ்க்கையை வகுத்துக்கொண்டு காலம் கழிக்கின்றன. மனிதன் தன் பகுத்தறிவைப் பயன்படுத்தி, இயற்கையைத் தன் வசதிக்கேற்ப மாற்ற முயல்கிறான். இயற்கையை மாற்றுவது அவ்வளவு எளிதன்று. இயற்கை வளத்தை அழிப்பது வேறு; அது எல்லா உயிர்களும் செய்வது, மனிதன் இயற்கையையே மாற்ற முயல்கிறான். அதற்கு அவனுக்கு உறுதுணையாக இருப்பன பகுத் தறிவும் (Reason), மனத்திண்மையும் (Determination) மனத்தை ஒரு முகப்படுத்தும் ஆற்றலும் (Contem-plation) ஆகும்.

மனிதனுடைய சிறப்பு, பகுத்தறிவு பெற்றிருத் தல். அதைத் தெளிந்த நிலையில் வைத்து மனத்தை ஒரு முகப்படுத்தி நிலையான வழியை அடைந்த போது, எந்தவொரு கருத்தையும் தெள்ளத் தெளிய ஆராய்ந்து எடுக்கும் முடிவே மனிதனைச் செயலாற்று பவனாகச் செய்கிறது.

கல்வி என்பது, வெறும் எண்ணக் குவியல் அன்று. மனத்தை நல்ல முறையில் செயற்படுத்தப் பெறும் பயிற்சியே கல்வியாகும். எண்ணங்கள் மூளை யிலிருந்து பிறக்கின்றன. பகுத்தறிவு அவற்றைத் தூண்டுகிறது. மனத் திண்மையும் அறிவின் குவிப்பும் எண்ணச் சூழலைத் தனிப்படுத்தி நிலைப்படுத்து கின்றன. ஆகவே மூளை, பகுத்தறிவு, அறிவின் குவிப்பு ஆகிய மூன்றும் இணைந்து இயங்குவதுதான் சிந் தனைச் சக்தி ஆகும். எம்.வெ.

**ஆழ்நிலைத் தியானம்**: பண்டைய காலத் திலிருந்தே உடல் நலம், உள்ளத்தெளிவு ஆகியவற்றை முன்னிட்டு மனிதன் பல்வேறு தியான முறைகளைக் கையாண்டுவந்திருக்கிறான். பதஞ்சலியோக சாத்திர முறையை அடிப்படையாகக் கொண்ட யோகாசனப் பயிற்சிகள் இப்பொழுது புகழ்பெற்று வருகின்றன. இந்தியப் பண்டை மறைநூல்களை அடிப்படையாகக் கொண்ட பல்வேறு தியான வழிகள் அமைந்திருக் கின்றன. எடுத்துக்காட்டாகப் பிராணாயாமம் என் பது முறையாக மூச்சு விடுதலை அடிப்படையாகக் கொண்ட ஒரு தியான முறையே ஆகும். ஆனால், இக்கால மக்கள் எதையும் தம் முன்னோர்கள் செய்தனர் என்பதால் மட்டும் ஏற்றுக்கொள்வதில்லை. பண்டைய தியான முறையாக இருந்தபோதிலும் அது எந்த அளவு மனிதனுக்குப் பலனளிக்கும் என் பதைஅறிவியல் வழியாக ஆராய்ந்த பின்னரே ஏற்றுக் கொள்கின்றனர்.

மகரிசி மகேசு யோகி (Maharshi Mahesh Yogi) என்பவர், சுவிட்சர்லாந்து நாட்டில் குடியேறி 'ஆழ் நிலைத் தியானம்' என்ற யோக முறையை உலக மக்களிடையே பரப்பினார். டி.எம் (T.M.) என்று ஆங் கிலத்தில் சுருக்கமாகக் குறிக்கப்படும் 'ஆழ்நிலைத் தியானம்', இப்போது மகேசு யோகியின் மாணவர் களாலும் அவர்களிடம் பயின்ற மாணவர்களாலும் உலகெங்கும் புகழ்பெற்ற ஒரு தியான முறையாக மட்டுமன்றிப் பல்வேறு உடல் உளப்பிணிகளுக்கு ஒரு மருத்துவ முறையாகவும் பயன்பட்டு வருகிறது.

மனிதன் தன் அகண்ட நனவு நிலையை (Cosmic Conscious State) இத்தியான முறையில் அடைவ தால், அவன் தன் உள்ளத்தில் புதைந்து கிடக்கும், ஆனால் வெளிக்கொணர்ந்து பயன்படுத்தாத படைப் பாற்றல்சார் நுண்ணறிவை (Creative Intelligence) உணர்வதே, ஆழ்நிலைத் தியானமுறையின் அடிப் படைத் தத்துவமாகும். ஆழ்நிலைத் தியானம், முறைப்படி ஆசிரியரால் கற்பிக்கப்படுகிறது. தியா னம் பழகுவோரின் நம்பிக்கைக்குத் தக்கவாறு மந்திரச் சொல் ஒன்று ஆசிரியரால் தேர்ந்தெடுக்கப் படும். இது, கடவுளின் பெயராகவோ, ஒரு நிறம் அல்லது பொருளின் பெயராகவோ இருக்கலாம். பொதுவாகச் சாய்வு இருக்கையில் அமர்ந்து கொண்டே இச்சொல்லை மனத்தளவில் திரும்பத் திரும்பச் சொல்ல வேண்டும். தொடக்கத்தில் இச்சொல்லை விடுத்து மற்ற வேண்டாத எண் ணங்கள் தோன்றக் கூடும். அதைப் பொருட் படுத்தாமல் பயிற்சியில் ஈடுபட்டால் தேர்ந்தெடுத்த சொல் ஒன்றை மட்டும் கவனத்திற்குக் கொண்டுவர முடியும். பின்பு இக்கவனமும் படிப்படியாக நம் எண்ண அலைகளில் மறையும்போது நாம் மனத்தின் ஆழ்நிலையை நோக்கிப் பயணம் புரியத் தொடங்கி விட்டோம் எனப்புரிந்து கொள்ளலாம். இந்நி லைக்கு மனத்தை வழிபடுத்தச் சில மாதங்கள் கூடத் தேவைப்படலாம். குறிப்பாக, முறையான பயிற்சியால் அமைதியான இடத்தில் அமர்ந்த சில நொடிகளிலேயே இந்நிலைக்கு மனத்தைச்செலுத்த ஆயத்தம் செய்து கொண்டோமானால், ஆழ்நிலைத் தியானத்தில் ஓரளவு வெற்றி கண்டுவிட்டதாகக் கொள்ளலாம். காலை மாலை இரு வேளையும் ஏறக்குறைய அரை மணிநேரம் இப்பயிற்சியில் ஈடு பட்டால் நல்ல பயன்பெறுவது திண்ணம். சோர் வின்மை, பயமின்மை, நிம்மதியான தூக்கம், பதற்ற மின்மை, தெளிந்த அறிவு, மறதியின்மை ஆகியவை

ஆழ்நிலைத் தியானத்தினால் ஏற்படும் பலன்களா கும். மேலும் இரத்த அழுத்தம், மூட்டுவலி, இதய நோய், தீராத தலைவலி போன்ற பலவகைப் பிணி களிலிருந்து குணமடைவதும் இம்முறையால் கூடும். சுருங்கக் கூறின், மனிதனின் மன அமைதிக்கு ஆழ் நிலைத் தியான முறை ஒரு சிறந்த வழிகாட்டி என் றால் அது மிகையாகாது. என்.மா.

**ஆழ்வார்களும் ஆழ்வார் பாசுரங்களும்,** தமிழகத்தில் மலர்ந்த பக்தி, இலக்கிய வரலாற்றில் பெற்றுள்ள இடம் குறிப்பிடத் தக்கதாகும்.

நெஞ்சைப் பண்படுத்தும் பண்டைக் காதற் பாடு பொருளும், நினைவை ஊக்குவிக்கும் வீரப் பாடு பொருளும் பின்னர்ப் பக்திப் பாடல்களாக வளர்ந்து மேலோங்கியிருந்த காலம், கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதல் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு வரை நீட்டித்த பக்தி இலக்கியக் காலமாகும். இவ்வாறு தோன்றிய பக்திப் பாடல்கள் பெரும்பாலும், சிவபெருமானை யும் திருமாலையும் அவர்தம் செயற்கருஞ் செயல் களையும் சீரிய குணங்களையும் பாடுபொருளாகக் கொண்டமைந்தனவாகும்.

தொடக்கக் காலத்தில் சிவபெருமானைப் பற்றி எழுந்த பாடல்கள் திருஞானசம்பந்தர், திருநாவுக் கரசர், சுந்தரர் ஆகிய சைவசமயச் சான்றோர் மூவர் பாடியனவாகும். இவை தேவாரம் என்று சிறப்பிக்கப் பெற்றன.

இவ்வாறே திருமாலைப் பற்றி எழுந்த பாடல் களைப் பன்னிரு ஆழ்வார்கள் பாடியருளினர். இவை பாசுரங்கள் என்று போற்றப்பெறுகின்றன. ஆழ்வார் கள் பாடியருளின பாசுரங்கள் சிறப்பாகத் தமிழகத் திலும், பொதுவாக இந்தியாவிலும் வைணவத் தத்துவத்தையும், திருமால் பக்தியையும் பாதுகாத்து வளர்ப்பனவாக விளங்குகின்றன.

திருமாலின் திருக் குணங்களில் ஈடுபாடு கொண் டவர்கள், அவன் பக்திக் கடலிலே அழுந்திக் கிடப் பவர்கள் ஆழ்வார்கள் எனப்பட்டனர்.

ஆழ்வார்கள் திருமாலின் உறுப்புகளாகக் கருதப் படுவர். வைணவத் தத்துவப்படி, திருமாலே தலை வனும் காப்பவனும் எல்லாவற்றுக்கும் காரண முதல் வனும் ஆவார். உயிர்க்குரிய உடல் முதலான பொருள்கள் அனைத்தும் தலைவனாகிய திருமா லுக்கே உரியன. ஆனால், 'நான்' 'எனது' என்னும் உணர்வால் மனிதன், 'தான் திருமாலுக்கு அடிமை' என்பதை மறந்து விடுகிறான். அதனால் திருமாலுக் குப் பணி செய்வதாகிய பேரின்பத்தையும் இழந்து விடுகின்றான். இவ்வாறு தன்னை மறந்து, தலைவ னையும் மறந்து, தனக்கேயுரிய பேரின்பத்தையும் இழந்து நெறியல்லா நெறியிலே சென்று உழல்கின்ற சீவர்களாகிய மனிதர்களைத் துன்பக் கடலிலிருந்து கரையேற்றுவதற்காகத் திருமால் தாமே பல பிறப்பு களை எடுத்தார். அவற்றினாலும் அனைத்து உயிர் களையும் கரையேற்ற இயலவில்லை. அதனால், மானைக் காட்டி மானைப் பிடிப்பவர்போல, மனி தர்களைக் காட்டி மனிதர்களைத் தடுத்தாட் கொள்ள அவர் பேரருள் கொண்டார். அதன் பய னாகத் தம் உறுப்புகளாகிய சங்கு, சக்கரம் முதலிய வற்றை மண்ணுலகில் தோற்றுவித்தார். அத் தோற் றங்களே ஆழ்வார்கள். திருமாலின் நற்குண, நற் செய்கைகளை எல்லாம் அவர்கள் துய்த்து அவ்வாறு தாம் துய்த்த இன்பத்தை உலகெலாம் பெறுமாறு செய்தனர்.

ஆழ்வார்கள் பல சாதியினர்; பல குலத்தவர்; பல தொழிலினர்; பல்வேறு காலத்தவர்; பல்வகை யான வாழ்க்கையினர்; ஆனால், ஒரே குறிக்கோளி னர்.

ஆழ்வார்கள் பன்னிருவராவர். எனினும், பதின் மர் என்னும் கருத்தும் உள்ளது. தென்குருகூர் நம்பிக்கு அன்பனாய், அடியனாய் அமைந்து, அவரையே பாடிய மதுரகவியையும், புதுவையர் கோன் விட்டு சித்தன் மகளாராகிய ஆண்டாளையும் விடுத்து மற்றையோரை ஆழ்வார் பதின்மர் என்று கூறும் மரபும் உள்ளது.

காலக் கண் கொண்டு கருதி ஆழ்வார்களைப் பின்வரும் வரிசையில் தொகுத்தும் வகுத்தும் கூறு வர். அவர்கள் முதலாழ்வார் மூவர், திருமழிசை யாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், குல சேகர ஆழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கை ஆழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், நம்மாழ்வார், மதுரகவி ஆகியோராவர்.

**முதலாழ்வார்கள்:** பொய்கையார், பூதத்தார், பேயார் ஆகிய மூவரும் முதலாழ்வார் ஆவர். இவர் கள் மற்ற ஆழ்வார்களுக்குக் காலத்தால் முந்தியவர் கள்; கிட்டத்தட்ட ஒரே காலத்தில் வாழ்ந்தவர்கள். அன்றியும் காஞ்சி, மாமல்லபுரம், மயிலாப்பூர் ஆகிய இடங்களில் முறையே தோன்றியவர்கள். ஆழ்வார் கள் வரலாறு கூறும் குருபரம்பரை, இவர்கள் மூவரும் திருக்கோவலூரில் சந்தித்து, ஒரே நேரத்தில் திரு மாலைக் கண்டு தொழுத திறத்தைப் பக்திச் சுவை சொட்டச்சொட்ட எடுத்துக்கூறும். இவர்கள் காலம் பற்றிப் பல கருத்துகள் உள்ளன. என்றாலும், மாமல்லையைப் பற்றிய குறிப்புகள் பூதத்தாழ்வார் பாடலில் (பாசுரம். 70) வருதலால் இவர்காலம் மாமல்லை அல்லது மாமல்லபுரம் (மகாபலிபுரம்) தோன்றியதற்குப் பின்னரே ஆதல் வேண்டும். மாமல்லபுரம், பல்லவ வேந்தன் முதலாம் நரசிம்ம

வர்மன் (கி.பி. 630-668) பட்டப் பெயர்களுள் ஒன்றாகிய மாமல்லன் என்னும் பெயரை அடிப்படையாகக் கொண்டது. மேலும், பொய்கை ஆழ்வார் பாசுரத்திலும் (77), பேயாழ்வார் பாசுரங்களிலும் (61,62) குறிக்கப் பெறும் விண்ணகரம், பரமேசுவர விண்ணகரமே என்பதும், அதனைக் கட்டிய பரமேசுவர வர்மன் (கி.பி. 670-680) காலத்தை அடுத்து இந்த ஆழ்வார்கள் வாழ்ந்திருத்தல் வேண்டும் என்பதும் கருதப்படுகின்றன. மேலும் இம்மூன்று ஆழ்வார்களும் சித்தார்த்தி ஆண்டில் பிறந்தவர்கள். எனவே இந்த ஆழ்வார்கள் வாழ்ந்த காலம் கி.பி. 8-ஆம் நூற்றாண்டிலிருந்து தொடங்குகிறது என லாம்.

**திருமழிசை ஆழ்வார்:** குரு பரம்பரை, தேசிகப் பிரபந்தம், திவ்யசூரி சரிதம் என்னும் நூல்களின் படி அடுத்துக் குறிக்கப் பெறும் ஆழ்வார் திருமழிசை ஆழ்வார் ஆவார். இவர்க்குப் பத்திசாரர் என்னும் பெயரும் உண்டு. பார்க்கவ முனிவரின் மகனாய்த் தோன்றித் திருவாளன் என்பவனால் வளர்க்கப் பெற்றவர் இவரென அந்நூல்கள்வழித் தெரியவருகிறது. இவர்க்கு அன்றாடம் பால் அளித்து வந்த இடையன்தான், கணிகண்ணன் என்னும் மாணாக்கனாய் வாய்த்தான்.

தம் காலத்து நிலவிய ஆறு காட்சிகளையும் (தரிசனங்கள்) இவர் அறிந்தார். புத்த, சமண நெறிகளைக் கற்றார். அத்துவித, சைவ, சமயக் கருத்துகளையெல்லாம் சிந்தித்தார். நீண்ட தியானத்தில் அமர்ந்தார். இவர் பொய்கை ஆழ்வாரைச் சந்தித்ததாகவும், சந்தித்து யோக நெறிகளைக் கற்றுக் கொண்டதாகவும் திவ்யசூரி சரிதம் குறிப்பிடுகிறது.

இவர் வாழ்ந்த காலமும் ஏறக்குறைய முதலாழ்வார்கள் வாழ்ந்த காலத்தை ஒட்டியதேயாகும். இவர் பேயாழ்வாரிடமிருந்து தியான நெறி முறைகளைக் கற்றுக் கொண்டதாகக் கூறப்பெறுவது, இவ்வாறு எண்ண இடந்தருகிறது.

**தொண்டரடிப் பொடியாழ்வார்:** விப்பிர நாராயணன் என்பது இவர் இயற்பெயர். தஞ்சை மாவட்டம் மண்டங்குடியில் இவர் பிறந்தார். சோழிய பிராமணர் குலத்தைச் சார்ந்த இவர் வேத சாத்திரங்களைக் கற்றுப் பின்னர்ப் பூங்கா அமைத்துத் திருவரங்கனுக்கு மலர்களை அளித்து வரலானார். இவ்வாறு அமைதியாக வாழ்ந்து வந்த இவர், பரத்தை ஒருத்தியின் தொடர்பால் நெறி தவறினார். அரசன் அவைமுன் குற்றவாளியாக்கப்பட்டார், அரசனது ஏவலர்களால் துன்புறுத்தப்பட்டார். இந்த நிகழ்ச்சியால் திருவரங்கனின் திருவிளையாட்டலை விப்பிர நாராயணர் உணர்ந்து கொண்டார். அன்றிருந்து திருந்தி, இழந்த கைத்திருத் தொண்டினை (கைங்கரியத்தை) மேற்கொள்ளலானார். அடியவர்களுடைய திருவடிகளைக் கழுவி, அந்த நீரைப் பருகுவதன் வாயிலாகத் தம் பாவத்தைப் போக்கிக் கொள்ளலானார். இவ்வாறு குருபரம்பரை கூறுகிறது. இவ்வாறு அடியவர் திருவடிப் பொடியினைக் கழுவித் தம் நெஞ்சத்து அழுக்கினையும் கழுவிக் கொண்டவரானமையால் இவர் தொண்டரடிப்பொடியாழ்வார் ஆயினார். குற்றம் புரிந்தாலும் உண்மையான இறையன்பிருந்தால் இறைவன் திருத்திப் பணி கொள்வான் என்பதற்கு இந்த ஆழ்வார் வரலாறு எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது. இவர் காலம் எட்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதி.

**குலசேகர ஆழ்வார்:** 'கொல்லி காவலன்' என்று தம்மைக் கூறிக் கொள்ளும் குலசேகர ஆழ்வார் சேர மன்னர் பரம்பரையைச் சார்ந்தவராவார். மேலும் தம்மைக் 'கூடல் நாயகன்' என்றும், 'கோழிக் கோன்' என்றும் கூறிக் கொள்வதால் சோழ, பாண்டிய மன்னர்களை அவர் வென்றிருத்தல் கூடும். சேர நாட்டுத் திருவஞ்சிக் களத்தில் இவர் பிறந்தார். அரசைத் துறந்து, தம் நாட்டைப் பிரிந்து திருவரங்கத்துக்கு வந்து, தம் வாழ்நாளைக் கோயில் திருப்பணியில் கழித்து வரலானார். பக்திப் பெருக்கில் நெஞ்சுருகி இவர் பாடிய திருவேங்கடப் பதிகத்தில் படியாய்க் கிடக்கும் பேற்றினை வேண்டுகிறார். அதற்கிணங்கத் திருமால் கோயிலில் கருவறைப் படி, குலசேகரன்படி என வழங்கப் பெறுவதைக் காணலாம். இவரது காலம் எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும்.

**திருப்பாணாழ்வார்:** யாழ்ப்பாணர் குலத்தைச் சார்ந்த இசைவல்லார் இவர். இவர் திருவரங்கன் உகந்தருளிய திருக்கோயிலின் உள்ளே அடியெடுத்து வைத்துச் செல்ல அன்றைய சமுதாய அமைப்புக்கு அஞ்சினார். காவிரியின் தென்கரையிலிருந்தவாறே திருவரங்கனை நோக்கி நாள்தோறும் பாடி வரலானார். இந்த ஆழ்வார்தம் பக்தியிலும் பாட்டிலும் நெகிழ்ந்த திருவரங்கன், லோகசாரங்க முனிவர்க்குக் கூறி ஆழ்வாரைத் தோளில் தூக்கி வருமாறு செய்தார். திருவரங்கன் காட்சியிலே நெஞ்சுருகி அவனைப் பாடியவாறே அவனோடு கலந்து, மறைந்து போனார் இவர் என்று குருபரம்பரை கூறுகிறது. முனிவர் தம் தோளில் தூக்கி வந்ததனால், இந்த ஆழ்வார்க்கு முனிவாகனர் என்னும் பெயரும் ஏற்பட்டது. இவர் எழுபது ஆண்டுகள் வாழ்ந்தார் என்றும், துன்முகி ஆண்டு பிறந்தார் என்றும் குருபரம்பரை கூறுவது கொண்டு இவர் பிறந்தது கி.பி. 781-ஆம் ஆண்டு என்று கணித்துக் கூறுகின்றனர்.

**திருமங்கையாழ்வார்:** தஞ்சை மாவட்டத்துச் சீர்காழிக்கு அருகில் உள்ள திருக்குறையலூரில் இவர் பிறந்தார். இவர் கள்ளர் மரபைச் சார்ந்தவர். நீலன் என்னும் இயற்பெயர் கொண்டவர். சோழர் தளபதியாகவும், ஆலி நாட்டுச் சிற்றரசராகவும் இவர் இருந்தார் என்பது தெரிகிறது. அந்தச் சிறு நாட்டின் தலைநகர் திருமங்கையாக இருந்திருக்கலாம் என்பது இவர் பாடியருளிய பெரிய திருமொழியிலிருந்து தெரியவருகிறது. வைணவ மருத்துவர் ஒருவரின் வளர்ப்பு மகளான குமுதவல்லி என்பவரை இவர் மணந்துகொள்ள விரும்பினார். சிந்தையிலும் செயலிலும் சொல்லிலும் திருமால் அடியவராக இருந்து, ஆயிரத்தெட்டு வைணவ அடியார்களுக்கு நாள்தோறும் உணவளிக்க வல்லவராயின் அவரை மணந்துகொள்வதாக அந்த அம்மையார் கூறினார். அவர் கருத்துக்கு இணங்குவதாக ஒப்புக் கொண்டு, அந்த அம்மையாரை மணந்து, வைணவ அடியாரானார். வைணவத் தொண்டில் தம் நேரமெல்லாம் செலவிட நேர்ந்ததால் சோழ மன்னர் பணியிலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டார். அதன் பின்னர்த் தென் குமரியிலிருந்து வட இமயம் வரை திருப்பயணம் சென்று வந்தார். நூற்றெட்டுத் திருக்கோயில்களுள் எண்பத்தாறு திருக்கோயில்களை இவர் கண்டு, ஆங்காங்கு உகந்தருளியுள்ள திருமேனியிடத்து ஈடுபட்டுப் பாசுரங்கள் பல பாடியுள்ளார். திருவரங்கத்தில் அமைந்துள்ள நான்காம் திருச்சுற்றுமதிலை இவர் கட்டினார். திருமங்கை மன்னன் திருமதில் என்று இன்றும் அது வழங்கப்பெறுகிறது. இவர் தம் இறுதி நாட்களில் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள திருக்குறுங்குடியில் வாழ்ந்திருத்தல் வேண்டும். கலிகன்றி, பரகாலன், அருள்மாரி முதலிய பல சிறப்புப் பெயர்களை இவர் பெற்றுவிளங்கியுள்ளார்.

இவர் பாடல்களில் கி.பி. 670-இலிருந்து 680 வரை ஆண்ட முதலாம் பரமேசுவரவர்மன் கட்டிய காஞ்சி பரமேசுவர விண்ணகரம் (வைகுண்டப் பெருமாள் கோயில்) பற்றிய குறிப்பு உள்ளது. இவர் குறிப்பிடும் வைரமேகன் என்னும் தொடர் நந்திவர்மனின் மகன் தந்திவர்மனைக் (கி.பி. 795-845) குறிக்கும். குருபரம்பரை கூறும், இவர் பிறந்த நள ஆண்டினை இக்காலத்தோடு பொருத்தி நோக்க இவர் கி.பி.776-இல் பிறந்திருத்தல் வேண்டும் என்பது புலனாகிறது. இவர் நூற்று ஐந்து ஆண்டுகள் வாழ்ந்தார் எனக் கூறப்படுகிறது. எனவே, எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து, ஒன்பதாம் நூற்றாண்டின் பெரும்பகுதி முடிய இவர் வாழ்ந்தவராதல் வேண்டும்.

**பெரியாழ்வாரும் ஆண்டாளும்:** திருவில்லிபுத்தூரில் வேயர் குலத்தில் இவர் தோன்றினார். இவர் தந்தையார் முகுந்த பட்டர்; தாயார் பத்மவல்லி அம்மையார். இவர் இயற்பெயர் விட்டு சித்தன் (விஷ்ணு சித்தன்) என்பதாகும். தம் வாழ்வுக்கு வளம் தேடாது திருமால் வாழப் 'பல்லாண்டு' பாடிய தாய்மைப் பேரன்பு கொண்டவராதலால் இவர் பெரியாழ்வார் என்று அழைக்கப் பெறுகிறார். 'பொங்கும்' பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றான் பெரியாழ்வார் என்னும் பெயர்' என்பர் மணவாளமுனிகள். பாண்டியன் வல்லவதேவன் அவையில் சமய வாதம் புரிந்து, திருமால் நெறியை நிலைநாட்டிப் பொற்கிழி பெற்றுப் பட்டர் பிரான் என்னும் பட்டம் பெற்றார் என்பது தெரிகிறது. பூங்கா அமைத்துத் திருவில்லிபுத்தூர்த் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள வடபெருங்கோயிலுடையானுக்கு மாலை தொடுத்து வரலானார். ஒரு நாள் துளசித் தோட்டத்திலே பெண் குழந்தை ஒன்றைக் கண்டெடுத்துக் கோதை என்று பெயரிட்டு வளர்த்து வரலானார். இவர்பால் வளர்ந்து வந்த அப்பெண் திருமால்பால் அன்பும் சமய இலக்கியங்களில் ஈடுபாடும் கொண்டு வளர்ந்து வரலானாள். தந்தையார் தொடுத்த மாலையின் அழகில் மயங்கி அதனைச் சூடி அன்றாடம் கண்ணாடி முன் அழகு பார்ப்பது இவள் வழக்கம். ஒருநாள் அதனைக் கண்டுவிட்ட ஆழ்வார், திருமாலுக்குரிய மாலை தூய்மை இழந்து விட்டதாகக் கருதி வருந்தினார். அதனை இறைவனுக்கு அளிக்கவும் தயங்கினார். ஆனால் திருமாலோ அவள் சூடிக்கொடுத்த மாலையே தமக்குப் பெரிதும் உகந்தது என ஆழ்வார் கனவில் கூறினார். அன்றுதொட்டு ஆழ்வார் தம்மை ஆளவந்த அம்மையாக அவளைக் கண்டு 'ஆண்டாள்' என்னும் சிறப்புப் பெயரளித்துப் பாராட்டலானார். தன் நெஞ்சினுள்ளே வளர்ந்து வந்த தெய்வீகக் காதலைத் தான் சூடி அளித்த மாலையை உகந்து அருளியதால் திருமால் ஏற்றுக் கொண்டான் என்று கருதி, உறுதி கொண்டாள் ஆண்டாள். இறுதியில் திருவரங்கம் சென்று அவனோடு கலந்தாள். 'மானிடவர்க்கு என்று பேச்சுப் படில் வாழகில்லேன்' என்று தன் உறுதியை உலகத்தார்க்கு எடுத்துரைத்தாள். சீமாறன் என்னும் சீவல்லப பாண்டியன் காலத்தவர் இவர் என்று அறியப்படுவதால், இவர் எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து ஒன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதி வரை வாழ்ந்தவராகக் கருதப் பெறுகிறார்.

**நம்மாழ்வாரும் மதுரகவியும்:** திருநெல்வேலி மாவட்டத்தில் இன்று ஆழ்வார் திருநகரி என்று வழங்கப்பெறும் திருக்குருகூரில் வேளாளர் மரபில் நம்மாழ்வார் தோன்றினார். இவர்தம் இயற்பெயர்

மாறன் என்பதாகும். சடகோபன் என்னும் பெயரை இவர் பின்னர்ப் பெற்றிருத்தல் வேண்டும். இவர் குழந்தைப் பருவந்தொட்டே யோகநிலையில் ஒன்றிப் போகலானார். இல்லம் துறந்து புளிய மர நிழலிலே இவர் இறை நினைவில் ஒன்றிப் போயினார். இவ்வாறு இவர் யோகியாக வளர்ந்து பதினாறு வயது அடைந்தபோது, மதுரகவி என்னும் அந்தணச் சான்றோர் இவருக்கு மாணவராக வந்து அடைந்தார்.

மதுரகவி, திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள திருக்கோளூரைச் சார்ந்தவர். இவர் தம் வடநாட்டுப் பயணத்தில் அயோத்தியில் இருந்த போது ஒருநாள் இரவு வான்வழியில் தென்திசையில் ஒரு ஒளிப்பிழம்பு தோன்றுவதைக் கண்டார். அவ்வொளி ஒருதெய்வீகச் சான்றோரைக் குறிப்பதாகக் கருதி அதனை நோக்கித் தொடர்ந்து வரலானார். திருக்குருகூரில் அது மறைந்து போகவே அந்த ஊரில் யோக நிலையில் திகழ்தோங்கிய நம்மாழ்வாருக்கு மாணவரானார். இவ்விருவரும் எட்டாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றி ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தனர் என்பர்.

**ஆழ்வார்கள் அருளிச் செயல்கள்:** ஆழ்வார்கள் அருளிச்செய்த தெய்வத் திருப்பாடல்கள் பாசுரங்கள் எனப் பெயர்பெற்றுள்ளன. இவை அனைத்தையும் நாதமுனிகள் என்பார் திரட்டிச் சேர்த்து, வகைப்படுத்தி உருவாக்கினார். அவ்வாறு அவரால் உருவாகிய நூலே 'நாலாயிரம்' அல்லது 'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்' என்று வழங்கப் பெறுகிறது. இத்தொகுப்பில் இராமாநுச நூற்றந்தாதி நீங்கலாக இருபத்து மூன்று நூல்கள் இடம் பெற்றுள்ளன. ஆயிரம் ஆயிரமாக நான்கு ஆயிரங்களும் வகைப்படுத்தப் பெற்றுள்ளன. ஒவ்வோர் ஆயிரத்திலும் சரியாக ஆயிரம் பாடல்கள் இல்லை என்றாலும் ஏறக்குறைய ஆயிரம் பாடல்கள் அளவு ஒவ்வொரு பகுதியும் கொண்டமைந்துள்ளதால் இவ்வாறு அழைக்கப்பெறுகிறது.

இவற்றில் முதல் ஈராயிரங்களும் இறுதி ஆயிரமாகிய திருவாய் மொழியும் இசைப்பா வகையைச் சார்ந்தனவாக நாதமுனிகள் அமைத்தார். மூன்றாவதாக உள்ள ஆயிரம் 'இயற்பா' ஆகும். இவ்வாறு நான்கு ஆயிரம் கொண்டமைந்த இந்தப் பிரபந்தத்தின் தொடக்கமாகப் பெரியாழ்வாரின் 'திருப்பல்லாண்டு' அமைந்துள்ளது. ஆழ்வார்களுள் சிறப்பானவராகக் கருதப்பெறும் நம்மாழ்வார் பாடல்களோ, காலத்தால் முற்பட்டவராகக் கருதப்பெறும் பொய்கையாழ்வார் பாடல்களோ முதலில் இடம் பெறாமல், இத் திருப்பல்லாண்டு இடம் பெற்றதற்குப் பின்வரும் காரணத்தை வைணவச் சான்றோர் கூறுவர்.

மதுரைப் பெரு வீதியில் விட்டுணு சித்தர் ஊர்வலம் வரும்பொழுது திருமால் ஆழி, வெண்சங்கு முதலியவற்றுடன் காட்சி தந்தார். விட்டுணு சித்தரோ இறைவன்பால் எதனையும் பெறவிரும்பாமல், இவ்வாறு மக்கள் நடமாடும் மதுரைப் பெருவீதியிலே தோன்றிய திருமாலுக்குக் குறையொன்றும் நேரக்கூடாதே என்று அன்பு கொண்டு பல்லாண்டு பாடினார். இதனால் அவர் பெரியாழ்வார் என்னும் பெயர் பெற்றதோடு, அவர் பாடல்களும் திவ்வியப் பிரபந்தத் தொகுப்பில் முதலிடம் பெற்றன.

இசைப்பா வகையைச் சார்ந்த முதலாயிரத்தில் பெரியாழ்வார் திருமொழி, திருப்பாவை, நாச்சியார் திருமொழி, பெருமாள் திருமொழி, திருச்சந்த விருத்தம், திருமாலை, திருப்பள்ளி எழுச்சி, அமலன் ஆதி பிரான், கண்ணி நுண் சிறுத்தாம்பு ஆகிய நூல்கள் இடம் பெற்றுள்ளன.

இரண்டாம் ஆயிரத்தில் திருமங்கையாழ்வார் அருளிச் செயல்களாகிய பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் ஆகியன அமைந்துள்ளன. இந்த ஆயிரமும் இசைப்பா வகையைச் சார்ந்ததே. இதன்கண் 1134 பாசுரங்கள் அமைந்துள்ளன. இறுதி ஆயிரம் நம்மாழ்வார் பாடிய இசைப்பா வகையிலமைந்த திருவாய்மொழி 1102 பாசுரங்களைக் கொண்டு விளங்குகிறது.

'இயற்பா' மூன்றாவது ஆயிரம், இதன்கண் முதல் திருவந்தாதி, இரண்டாம் திருவந்தாதி, மூன்றாம் திருவந்தாதி, நான்முகன் திருவந்தாதி, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் ஆகியன இடம் பெற்றுள்ளன.

இவற்றுள் முதல் திருவந்தாதியைப் பொய்கையாழ்வாரும், இரண்டாம் திருவந்தாதியைப் பூதத்தாழ்வாரும், மூன்றாம் திருவந்தாதியைப் பேயாழ்வாரும், நான்முகன் திருவந்தாதியைத் திருமழிசையாழ்வாரும் பாடியுள்ளனர். திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி ஆகிய இம்மூன்றும் நம்மாழ்வாரால் பாடப் பெற்றன ஆகும். இறுதியாக அமைந்துள்ள திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் மூன்றும் திருமங்கையாழ்வாரின் அருளிச் செயல்களாகும்.

இயற்பாவில் 593 பாசுரங்களே அமைந்துள்ளன. இதன் எண்ணிக்கை பற்றிப் பல சிந்தனைகள் உள. திருவரங்கத்தமுதனார் இயற்றிய இராமாநுச நூற்றந்தாதியை இதனோடு இணைத்தும், கலிவெண்பாவில் அமைந்த பெரிய திருமடலைக் கண்ணி கண்ணியாகப் பகுத்து 78 பாடல்களாகவும், அவ்வாறே சிறிய

திருமடலை 40 பாடல்களாகவும் கொண்டும் நாலாயிரமாக்க முயன்ற முயற்சியும் காணப்படுகிறது. 3776 பாசுரங்கள் கொண்டு நாதமுனிகளால் தொகுக்கப்பட்ட நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம், பின்னர்ப் பதினோராம் நூற்றாண்டில் நாலாயிரமாக நிறைவு செய்யப் பெற்றுள்ளது.

பெரியாழ்வார் பாடி அருளிய பாசுரங்கள் 473ம் 'பெரியாழ்வார் திருமொழி' என்னும் பெயரில் திருப்பல்லாண்டை அடுத்து அமைந்துள்ளன. இவை ஐந்து பத்துகளாக அமைந்துள. முதல் மூன்று பத்துகள் குழந்தை கண்ணனை வளர்க்கும் யசோதையின் மனநிலையையும், இராமவதார நிகழ்ச்சிகளையும் பொருளாகக் கொண்டு அமைந்துள்ளன. நான்காம் பத்து, திருமாலிருஞ் சோலையில் கோயில் கொண்டருளும் கார்க் கடல் வண்ணன், திருக்கோட்டியூர்த் திருத்தலச் சிறப்பு, கண்டமென்னும் திருப்பதியின் பெருமை ஆகியன பற்றி அமைந்துள்ளன. ஐந்தாம் பத்து சொல்தூய்மை, மனத்தூய்மை, திருமாலிருஞ் சோலை எம்பெருமான்பால் பெற்ற அருள் திறன், திருவேங்கடமுடையான் தன் திருவுள்ளத்தினுள் புகுந்தமையால் ஆழ்வார் பெற்ற பேறு பற்றி அமைந்துள்ளது. சூடிக் கொடுத்த சுடர்க்கொடியாகிய ஆண்டாள் பாடிக் கொடுத்த பாமாலை, திருப்பாவையும் நாச்சியார் திருமொழியுமாகும். திருப்பாவை 30 பாசுரங்களைக் கொண்டுள்ள நூலாகும். பாவை நோன்பு பற்றிய செய்திகள், அந்த நோன்பால் பெறும்பயன்கள், அந்த நோன்பின் செய்முறைகள் ஆகியவற்றைக் கொண்டுள்ளன இப்பாவைப் பாடல்கள். ஆன்மா என்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் திருமாலுக்குப் பணி செய்யும் பேற்றினைப் பெறுதற்கு இப்பாவைப் பாடல்கள் வழிகாட்டவல்லன. நாச்சியார் திருமொழி, தென்புதுவை வேயர் பயந்த விளக்காகிய ஆண்டாள், திருவரங்கனுக்கே தன்னைப் பெண்டாக்கிப் பாடுகிற காதற்சுவை மிக்க பாக்கள் கொண்டு, பதினான்கு திருமொழிகளில் அமைந்துள்ளது.

அடுத்து அமைந்துள்ள குலசேகரப் பெருமாள் அருளிச் செய்துள்ள பெருமாள் திருமொழி, பல்வேறு பக்தி அனுபவங்களைப் பாடுபொருளாகக் கொண்டமைந்துள்ள பக்திப் பாடல் நூலாகும். ஆண்டவன் பால் அன்பு; ஆண்டவன் அடியார்பால் அன்பு, அடிமைத் திறத்தின்பால் ஆர்வம், திருவேங்கட மலையின்பால் ஈடுபாடு, திருவித்துவக் கோட்டம்-மானிடம் தன்னை ஒப்புக் கொடுத்து, பிற ஆசைகளினின்றும் பாசங்களினின்றும் தன்னைக் காத்தருளுமாறு வேண்டுதல் ஆகியவற்றைப் பொருளாகக் கொண்ட பாடல்கள் முதல் ஐந்து திருமொழிகளில் அமைந்து விளங்குகின்றன.

ஆறாம் திருமொழி காதல் அன்பினையும், ஏழு, எட்டாம் திருமொழி தாயன்பினையும், ஒன்பதாம் திருமொழி தந்தையன்பினையும் பாடுபொருளாகக் கொண்டவையாகும். பத்தாம் திருமொழியோ இராமாயணக் கதையினைப் பத்துப் பாசுரங்களில் அமைத்துத் தில்லைத் திருச்சித்திரகூடத்துள் பள்ளி கொண்டருளும் திருமாலின் சீர்மையைப் பாடுவதாகும்.

அடுத்து அமைந்துள்ள திருச்சந்த விருத்தம் திருமழிசைப்பிரான் அருளிச் செய்ததாகும். இது 120 எழுசீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தத்தாலாகியது. இறைவனது கடந்த நிலையையும், உலகில் அவதாரம் எடுத்து அவன் அத்தனாய் அன்னையாய் ஆகும் அன்பின் தன்மையையும் பொருளாகக் கொண்டமைந்தது இத் திருச்சந்தவிருத்தமாகும். இப்பாவில் இடம் பெற்றுள்ள நான்முகன் திருவந்தாதியும் இவர் பாடியதே. இதன் கண் அந்தாதியாக அமைந்த 96 நேரிசை வெண்பாக்கள் உள. இதில் நாராயணனின் தலைமையும் காப்பும் அவதாரச் செயல்களும் சிறப்பாகப் பேசப்படுகின்றன.

தொண்டரடிப் பொடி யாழ்வார் அருளிச் செய்த திருமாலை, திருப்பள்ளி எழுச்சி ஆகியன இதன்பின் அமைந்துள்ளன. வைணவ நெறியின் சாரத்தைப் பொருளாகக் கொண்டது திருமாலை என்னும் இந்நூல். 'மற்றொன்றும் வேண்டா மனமே திருமாலைப் பாடும் சீர்த்தொண்டரடிப்பொடி எம் பெருமானை எப்பொழுதும் பேசு' என்பதனால் இதன் சிறப்பு விளங்கும். அரங்கமா நகருள்ளானை விளிப்பனவாக அமைந்துள்ள அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் 45 இதன்கண் உள.

இவர் பாடியருளிய திருப்பள்ளி எழுச்சி திருவரங்கநாதனைத் துயில் உணர்த்துகிற பான்மையில் அமைந்துள்ளது. அது பத்து எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம் கொண்டமைந்துள்ளது.

'அமலன் ஆதிப்பிரான்' எனத்தொடங்கி அழகிய மணவாளனது திருமேனி அழகின் அடிதொட்டு முடிவரை ஈடுபட்டுத் திருப்பாணாழ்வார் அருளிச் செய்த பத்து ஆசிரியத்துறைப் பாசுரங்களைக் கொண்டது அமலன் ஆதிபிரான் என்னும் நூல்.

இந்த முதலாயிரத்தின் இறுதியில் அமைந்துள்ளது மதுரகவி ஆழ்வார் அருளிய கண்ணிநுண் சிறுத்தாம்பு என்னும் நூல். நம்மாழ்வார் பெருமையினையும் அவர்தம் பாசுரத்தின் சிறப்பினையும் பாடுபொருளாகக் கொண்ட பதினொரு கலி விருத்தங்கள் இதன்கண் உள. பிற பாசுரங்கள் எல்லாம் திருமாலைப் பற்றி அமைந்திருக்க, இவை மட்டும் நம்மாழ்வார் பற்றி அமைந்திருத்தல் குறிப்பிடத் தக்கது.

இரண்டாமாயிரத்தில் அமைந்துள்ள பெரிய திருமொழி, திருக்குறுந் தாண்டகம், திருநெடுந் தாண்டகம் ஆகிய அனைத்தும் திருமங்கையாழ்வார் அருளிச் செய்தனவாகும். இயற்பாவில் இறுதியிலமைந்துள்ள திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் ஆகிய மூன்று நூல்களை இயற்றியவரும் இவரே.

பெரிய திருமொழியில் பதினொரு பத்துகள் அடங்கியுள. அவற்றுள் முதல் பத்தின் முதல் திருமொழியில் எட்டெழுத்து மந்திரத்தின் பெருமையைச் சொல்லி, அம்மந்திரப் பொருளாயுள்ள திருமால் இடங்கொண்டிருக்கும் 108 திருப்பதிகளுள் வட நாட்டுத் திருப்பதிகளாகிய திருப்பிரிதி என்னும் திருப்பதியை இரண்டாம் திருமொழியிலும், வதரியாச்சிரமத்தை மூன்று, நான்காம் திருமொழிகளிலும், திருச் சாளக்கிராமத்தை ஐந்தாம் திருமொழியிலும், நைமிசாரணியத்தை ஆறாம் திருமொழியிலும், சிங்கவேள் குன்றத்தை ஏழாம் திருமொழியிலும், திருவேங்கடத்தை எட்டு, ஒன்பது, பத்து ஆகிய மொழிகளிலும் பாடித் தலைக்கட்டியுள்ளார். பின்னர்த் திருவேங்கடத்திற்குத் தெற்கே அமைந்துள்ள தொண்டை நாட்டுத் திருப்பதிகளாகிய திருவெவ்வுளூர், திருவல்லிக்கேணி, திருநீர்மலை, திருக்கடல் மல்லை, திருவிடவெந்தை, திரு அட்ட புயகரம், திருபரமேச்சுவர விண்ணகரம் ஆகியவற்றை ஒன்பது திருமொழிகளிலே மங்களாசாசனம் செய்துள்ளார். பின்னர் நடுநாட்டுத் திருப்பதிகளாகிய திருக்கோவலூரை இரண்டாம் பத்தின் பத்தாம் திருமொழியினாலும், திருவயிந்திரபுரத்தை மூன்றாம் பத்தின் முதல் திருமொழியினாலும் பாடியருளினார். பின்னர்ச் சோழநாட்டுத் திருப்பதிகளாகிய திருச் சித்திர கூடம், திருக்காழிச் சீராம விண்ணகரம், திருவாலி, திருமணிமாடக் கோயில், திரு வைகுந்த விண்ணகரம், திருஅரிமேய விண்ணகரம், திருத்தேவனார் தொகை, திரு வெண் புருடோத்தமம், திருச்செம்மண் செய்கோயில், திருத்தெற்றி யம்பலம், திருமணிக்கூடம், திருக்காவளம் பாடி, திருவெள்ளக்குளம், திருப்பார்த்தன் பள்ளி, திருவிந்தளூர், திருவெள்ளியங்குடி, திருப்புள்ளம் பூதங்குடி, திருக்கூடலூர், திருவெள்ளறை, திருஅரங்கம், திருப்பேர் நகர், திருநந்திபுர விண்ணகரம், திருவிண்ணகரம், திருநறையூர், திருச்சேறை, திருவழுந்தூர், திருப்புலியூர்த் தலசயனம், திருக்கண்ணமங்கை, திருக்கண்ணபுரம், திருக்கண்ணங் குடி, திருநாகை ஆகிய திருப்பதிகளை ஒன்பதாம் பத்து இரண்டாம் திருமொழிவரை அமைந்துள்ள திருமொழிகளிலே பாடிப் பரவியுள்ளார்.

ஒன்பதாம் பத்து மூன்று, நான்கு திருமொழிகளினாலே திருப்புல்லாணியையும் ஐந்து, ஆறு திருமொழிகளாலே திருக்குறுங்குடியையும், ஏழாம் திருமொழியாலே திருவல்லவாழையும், எட்டு, ஒன்பதாம் திருமொழிகளாலே திருமாலிருஞ் சோலையையும், பத்தாம் திருமொழியாலே திருக்கோட்டியூரையும் பாடியுள்ளார்.

பத்தாம் பத்தின் முதல்திருமொழி, பலதிருப்பதிகளையும் சேர்த்து ஆழ்வார் அனுபவிக்கும் பாசுரங்களைக் கொண்டுள்ளது. அதன் பின்னர்த் திருமாலின் அவதாரங்கள் இடம் பெற்றுள்ளன. பத்தாம் பத்தின் இரண்டு, மூன்றாம் திருமொழிகளால் இராமாவதாரத்தையும், நான்கு, ஐந்தாம் திருமொழிகளால் கிருட்டிணாவதாரத்தையும் யசோதை மனோபாவத்தையும், ஆறாம் திருமொழியால் பிற அவதாரங்களையும், ஏழு, எட்டு, ஒன்பதாம் திருமொழிகளால் தாய் மனோபாவத்தையும் தலைமகன் மனோபாவத்தையும், பத்தாம் திருமொழியாலும் பதினோராம் பத்தின் முதல் மூன்று திருமொழிகளினாலும் பிரிவுற்ற தலைவியின் துன்ப அனுபவத்தையும், நான்காம் திருமொழியில் அவதாரச் சிறப்பையும், ஐந்தாம் திருமொழியில் திருமாலின் எளிவந்த தன்மையையும், ஆறாம் திருமொழியில் காப்போனாகிய திருமாலே அடைக்கலம் அடைதற்கு உரியவன் என்பதனையும், ஏழாம் திருமொழியில் திருமால் திறத்தில் ஈடுபடாத உறுப்புகள் பயனற்றன என்பதனையும் விளக்கி இறுதியாக அமைந்துள்ள எட்டாம் திருமொழியில் உடல் தொடர்பை ஒழித்தருள வேண்டும் என்று பாடிப் பெரிய திருமொழியைத் தலைக்கட்டியுள்ளார். இவர் பாடிய திருக் குறுந்தாண்டகத்திலே திருமால் அருள்கிட்டாததால் தரிக்கவொண்ணாமல், அவனை நெஞ்சால் நினைத்து வாயால் பேசி, தலையால் வணங்கி ஒருவாறு தம் தாபத்தை ஆற்றிக் கொள்ள முயல்கிறார்.

திரு வெழுகூற்றிருக்கையில் திருமாலின் இணைத் திருவடிகளில் அடைக்கலம் புகுகின்ற அனுபவங்களைப் பாடியுள்ளார். சிறிய திருமடலில் தமக்கு அருளாத திருமாலின் அவதார நீர்மையையும், நீர்மைக்கு எல்லை நிலமாகக் கோயில்களில் நின்ற திருமேனிச் சீர்மையையும் அழிக்கிறேன் என்றும், பெரிய திருமடலிலே அருளாது போயின் அடியவர் நம்பிக்கை இழந்துவிடுவர் என்றும் வேண்ட, எம் பெருமான் அருள்காட்ட, அதனைப் பெற்றுச் சிறப்போடு திரு நெடுந்தாண்டகத்தைப் பாடி முடிக்கிறார். இவர் பாடல்கள் இறைவனின் ஐவகை நிலைகளிலே அர்ச்சை நிலையில் (வழிபடுதற்குரிய திருமேனி நிலையில்) பொதுவாக ஊன்றியிருப்பன வாகும். மேலும் இவர் அருளிச்செய்த ஆறுநூல்களும்

வேதங்களுக்குரிய ஆறு அங்கங்களை ஒத்தனவாகும் என்பர் வைணவச் சான்றோர்கள்.

நம்மாழ்வார் நெஞ்சத்தில் திருமால் பரத்துவம் முதலான ஐவகை நிலைகளில் எழுந்தருளிய அக அனுபவம், அடங்காமல் நிறைந்து பீறிட்டு எழுந்து திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய் மொழி என்னும் நான்கு நூல்களாக உருப் பெற்றது. இவற்றுள் நூறு பாசுரங்கள் கொண்ட திருவிருத்தத்தை இருக்குவேதப் பிழிவு என்றும், ஏழு பாசுரங்கள் கொண்ட திருவாசிரியத்தை யசுர் வேதப் பிழிவு என்றும், 87 பாசுரங்கள் கொண்ட பெரிய திருவந்தாதியை அதர்வண வேதப் பிழிவு என்றும், 1102 பாசுரங்கள் கொண்ட திருவாய் மொழியை வேதங்களுள் சிறந்த சாம வேதப் பிழிவு என்றும் வைணவச் சான்றோர்கள் கூறுவர்.

இவருடைய பிரபந்தங்கள் திருமந்திரம், துவயம், சரமசுலோகம் என்னும் மறை மூன்றின் விளக்கமாக வும், இறையியல், உயிரியல், ஆற்றியல், பேற்றியல், தடையியல் என்னும் ஐம்பொருள்களைத் (அர்த்த பஞ்சகங்களை) தெளிவு செய்வனவாகவும் இருப்ப தால் 'தமிழ்வேதம்' என்று பாராட்டப் பெறுகின் றன.

'முதல் நூலாகிய திருவிருத்தம்' 'அடியேன் செய் யும் விண்ணப்பமே' என்று உயிரியல்பு அடிமை செய் தலே என்பதைத் தொடக்கமாகக் கொண்டு, ஆற்றி யல் எம்பெருமானே என்னுமாறு 'ஞானப் பிரானை யல்லால் இல்லை நான் கண்ட நல்லதுவே' என்று உறுதி செய்தலால், மும்மறைகளின் முதல் மறை யாகிய எட்டெழுத்து இயல்பினை விளக்கும் முதற் சொல்லான 'ஓம்' என்பதனையும் இரண்டாம் சொல்லான 'நமக' என்பதனையும் விவரிக்கிறது.

இரண்டாம் நூலான திருவாசிரியம், எம்பெரு மானின் வடிவு, குண இயல்புகளையும், பற்றற்ற பக்தியையும் அடியார்க்காற்றும் தொண்டினையும் திருமாலுக்குப் பணிசெய்யும் இன்பத்தையும் விளக்கு தலால், முதல் மறையின் மூன்றாம் சொல்லாகிய நாராயணாய என்னும் சொல்லை விளக்குகிறது. இவ்வாறு முதலிரண்டு நூல்களாகிய திருவிருத்தமும் திருவாசிரியமும், 'ஓம்' நமக நாராயணாய' என் னும் முதல் மறையாகிய திருமந்திரத்தின் விளக்க மாக அமைகின்றன.

மூன்றாம் நூலாகிய பெரிய திருவந்தாதி கன்ம, ஞான முதலிய ஆற்றியல்கள் கைவிடத்தக்கன என்றும், அவனே ஆறும் பேறும் ஆவன் என்றும், அவனை ஆறாகக் கொண்டவர்க்கு அல்லல் இல்லை என்றும், விடத் தக்கனவற்றையும் பற்றத் தக்கன வற்றையும் விரிவாகச் சொல்லுகிறது. எனவே சரம சுலோகத்தின் விளக்கமாக இந்த நூலை வைணவச் சான்றோர் கொள்வர்.

நான்காம் நூலாகிய திருவாய்மொழி மும்மறை யின் ஒன்றான துவயத்தின் விளக்கமாகும். துவயத்தி லுள்ள பத்துப் பொருள்களையும் திருவாய் மொழியி லுள்ள பத்துப் பாசுரங்களும் விவரிக்கிறதென்பர், பிள்ளை லோகாசாரியர். திருவாய் மொழியின் பத்துப் பத்துகளிலும் திருமாலின் கடந்த நிலை, மூலநிலை, கலந்தநிலை, படைக்கும்நிலை, அருள்நிலை, அடைக் கலம் தரும் நிலை, உள்ளுறை நிலை, உண்மை நிலை, காத்தல் நிலை ஆகிய நிலைகள் இடங் கொண்டுள்ளன என்பர் பிள்ளை லோகாசாரியர். இந் நூல் பற்றிய உட்கிடக்கையினை மணவாள மாமுனி களின் 'ஆசாரிய இருதயம்' என்னும் நூலிலும், பிள்ளான் நஞ்சீயர், பெரியவாச்சான் பிள்ளை, வடக்குத் திருவீதிப் பிள்ளை முதலிய வைணவச் சான்றோர்களுடைய விளக்க உரைகளிலும் உணர லாம்.

நூற்றந்தாதியாகிய முதல் திருவந்தாதி இயற் பாவில் முதல் நூலாக அமைந்துள்ளது. இதனை இயற்றியவர் பொய்கை ஆழ்வார் என்பது முன்னரே கூறப்பெற்றது. இவ்வந்தாதி, 'வையம் தகளியா' என்று உலகை முன்வைத்து உரியோனைச் சுட்டு தலால் இறைவனின் இலீலாவிபூதியையும், 'செய்ய சுடராழியான்' என்பதால் இறைவனின் நித்திய விபூதியையும் உபய விபூதிகளோடு கூடியவன் பரம் பொருள் என்பதையும் நிலைநாட்டுகிறது.

'அன்பே தகளி அளித்தானை' என்று திருக் குருகைப் பிரான் பிள்ளான் பாராட்டும், பூதத்தாழ் வார் அருளிச் செய்த இரண்டாம் திருவந்தாதி, 'ஞானச் சுடர் விளக்கு ஏற்றினேன் நாரணற்கு' என்று தொடங்குவதாலே, அப்பரம்பொருள் நாரா யணனே என்று நிலைநாட்டுகிறது.

'திருக்கண்டேன் என்றுரைத்த சீரான்' என்று குருகைக் காவலப்பன் போற்றும் பேயாழ்வார் அருளிச் செய்த மூன்றாம் திருவந்தாதி, திருக் கண்டேன்' என்று தொடங்குகையினாலே, திருமக ளோடு கூடிய தொடர்பினைக் காட்டிப் பரத்துவ நிலையை நிலைநாட்டுகிறது. மூன்று திருவந்தாதி களும் முறையே ஞான, பக்தி, திருக்காட்சி காணும் பிரபத்தியையும், அடைக்கல நெறி அதன் கனிந்த நிலையாய் அவனோடு கூடித் துய்க்கும் பரஞானத் தையும் அதனின் கனிந்த நிலையாய் அவனைப் பிரியில் தரியாமையாகிற பரம பத்தியையும் விளக்கு கின்றன என்று உரைப்பர்.

இவ்வாறு ஆழ்வார்கள் வாழ்வும், அவர்தம் அருளிச் செயல்களாகிய பாசுரங்களும் வைணவத்

தத்துவ விளக்கங்களாகவும், இறை அனுபவ வெளியீடுகளாகவும், தமிழ் இலக்கிய நலங்களை எடுத்துக் காட்டுவனவாகவும் அமைந்து இலங்குகின்றன.

பொன்.சௌ.

**ஆழ்வார் திருநகரி** திருநெல்வேலி மாவட்டத்தில் நெல்லை – திருச்செந்தூர்ச் சாலையில், நெல்லையிலிருந்து சாலை வழியாக 31 கி.மீ. தூரத்திலும், இருப்புப்பாதை வழியாக 33 கி.மீ தூரத்திலும் தாமிரபரணி ஆற்றின் தென்கரையில் அமைந்துள்ளது. மக்கள் தொகை 12,000. மக்களுள் பெரும் பகுதியினர் வேளாண்மை அல்லது அதனுடன் தொடர்புடைய தொழிலை மேற்கொண்டவர்கள். சிலர் ஊதுபத்தி செய்தல், தீப்பெட்டித் தொழில், பாய் முடைதல் ஆகியவற்றிலும் ஈடுபட்டுள்ளனர். ஆண் பெண் இருபாலாரும் சேர்ந்து பயிலும் ஒரு மேல்நிலைப்பள்ளியும், மூன்று நடுநிலைப் பள்ளிகளும், நான்கு தொடக்க நிலைப்பள்ளிகளும் உள்ளன.

குருகூர் அல்லது குருகை எனவும், ஆதிபுரி எனவும் வழங்கப்பட்டு வந்த இவ்வூரின் பெயர், பன்னிரு ஆழ்வார்களுள் தலைமை சான்றவரான நம்மாழ்வார் (காண்க – நம்மாழ்வார்) தோன்றிப் புகழ் பரப்பிய பின்னர், ஆழ்வார்திருநகரி என வழங்கலாயிற்று.

நான்கு மாடவீதிகளும் நான்கு இரத வீதிகளும் மாசித் தெரு, சித்திரைத் தெரு ஆகிய தெருக்களும் கொண்ட இவ்வூரில், திருமலைநாயக்கர் மண்டபம், திருக்குறுங்குடி மண்டபம் உட்பட்ட பல மண்டபங்களும், கோவிந்தப்ப நாயக்கன் சத்திரம் முதலிய பல சத்திரங்களும் அமைந்துள்ளன. தாமிரபரணியில் சங்கணித்துறை புனிதத்துறையாகக் கருதப்படுகிறது. ஊர் சீர்கேடுற்றிருந்த இடைக்காலத்தில் திருவாய்மொழிப்பிள்ளை இவ்வூருக்கு எழுந்தருளி ஊரைச் சீர்திருத்தி, இராமாநுசருக்கு ஒரு திருக்கோயில் அமைத்து, அப்பகுதிக்கு இராமாநுச சதுர்வேதிமங்கலம் எனப் பெயர் சூட்டி விளங்கச் செய்தார். ஆழ்வார் கோயிலைச் சூழ உள்ள இடம் பராங்குச சதுர்வேதிமங்கலம் எனவும் வழங்கப்பட்டு வந்துள்ளது. குருகூரைச் சுற்றி 8 கி.மீ. சுற்றளவுள்ள இடம், திருவழுதி வளநாடு என்றும் பெயர் பெற்றிருந்தது. தாந்தன், சங்கன் ஆகியோருக்கு இவ்வூரில் முத்தியளிக்கப்பட்டதாகத் தலபுராணம் உரைக்கிறது. நம்மாழ்வாரின் சீடரான மதுரகவி ஆழ்வாரின் பிறப்புத் தலமாகிய திருக்கோளூர் இவ்வூரின் அருகில் உள்ளது.

தென்னகத்தின் வைணவ வரலாற்றில் ஆழ்வார் திருநகரி மிகவும் சிறப்பான இடம் பெறத்தக்கது. இவ்வூரில் அமைந்துள்ள ஆதிநாதப் பெருமாள் கோயில், நெல்லை மாவட்டத்திலுள்ள பெருங்கோயில்களுள் ஒன்றாகும். இதன் பரப்பளவு 8.5 எக்டேர். இது மூன்று திருச்சுற்றுகளையும் ஆதிநாதர், நம்மாழ்வார், ஆதிநாச்சியார், குருகூர் நாச்சியார், ஞானப்பிரான், திருவேங்கடத்தான், இலட்சுமி நரசிம்மர், இராமர், சேனைமுதலிகள் ஆகியோரின் சந்நிதிகளையும் கொண்டு விளங்குகிறது.

கோயிலின் உள்ளே ஏழு பெரிய பகுதிகளாக அமைந்துள்ள உறங்காப்புளி என்று சிறப்பிக்கப்படும் மரத்தின் அடியில் நம்மாழ்வார் எழுந்தருளியிருந்து தம் தெய்விகப் பாசுரங்களை இயற்றினார் என்பர். இதன் அடியில் இப்பொழுதைய நம்வாழ்வார் சந்நிதி அமைக்கப்பட்டுள்ளது. இம்மரம் பூத்தல் காய்த்தலோடு நின்று விடுகிறது. காய்கள் பெருத்துப் பழுப்பதில்லை. இலை இரவில் உறங்குவதில்லை. இம்மரம் ஆதிசேடனின் அவதாரமாகக் கருதப்படுகிறது.

கோயிலில் நம்மாழ்வார் சந்நிதி, பெருமாள் சந்நிதி, திருமாமணி மண்டபம், கண்ணாடி மண்டபம் ஆகியவை சிறந்த சிற்பத் திறத்தோடு அமைக்கப் பெற்றுள்ளன. பெருமாள் கோயிலின் முன் உள்ள மூன்று மாடங்களைக் கொண்ட கோபுரத்தில், மரத்தாலாகிய தூண், யாளி, சாளரம், சிங்கப் போதிகை, உத்திரம், மேற்கட்டு ஆகியவை நுட்பமான வேலைத்திறனுடன் விளங்குகின்றன. கோயிலின் விமானம் கோவிந்த விமானம் எனச் சிறப்பிக்கப்படும்.

கோயிலில் மிகவும் சிறப்பான வேலைப்பாடு அமைந்த கல் நாதசுரம் ஒன்று உள்ளது. தட்டினால் இசை எழுப்பும் இசைத்தூண்கள் இக்கோயிலில் அமைந்துள்ளன.

கோயிலுக்குச் சொந்தமான 4 தேர்கள் உள்ளன. அவற்றுள் ஒன்று நம்மாழ்வார் உலாவரும் வெள்ளித் தேர் ஆகும்.

இராமாநுசர், மணவாளமுனிகள், பட்சிராசன், தேசிகர், அழகர், ஆண்டாள், கூரத்தாழ்வார், உய்யக் கொண்டார், பெரியநம்பி பிள்ளைலோகாசாரியார், நம்பிள்ளை, திருக்கச்சிநம்பி ஆகியோருக்குத் தனித் தனி சந்நிதிகள் ஊரின் மற்றைய பகுதிகளில் அமைந்துள்ளன.

இவ்வூரில் மாதம் தோறும் திருவிழா நடைபெறுகிறது. வைகாசி, மார்கழி மாதத் திருவிழாக்கள் சிறப்புடையன. வைகாசி மாதத்தில் 5-ஆம் திருநாளில் இவ்வூரைச் சூழ்ந்துள்ள ஒன்பது வைணவத் திருப்பதிகளிலிருந்தும் பெருமாள்கள் இவ்வூருக்கு எழுந்தருளிக் கருடசேவை அளிக்கிறார்கள். மார்கழி மாதத்தில் 20 நாட்கள் நடைபெறும் அத்தியயனத் திருவிழா மிகவும் சிறப்பானது. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் இவ்விழாக் காலத்தில் ஓதப்பெறும். இராப்பத்துத் திருவிழாவில் திருவாய்மொழிக்கு

இயல், இசை, நாடகப்பாங்குடன் உரை கூறிப் பாடி ஆடி விளக்கும் அரையர் சேவை காணத்தக்கது. நூற்றுக்கணக்கான ஆண்டுகளாகத் தொடர்ந்து அரையர் சேவை நிகழ்த்திவரும் பழமையான குடும்பங்களில் ஒன்றே எஞ்சியிருந்து, இவ்வரிய மரபைக் காத்து வருகிறது. காண்க: அரையர் சேவை.

நம்மாழ்வாரின் தோற்றத்தால் சிறப்புப் பெறும் இவ்வூர், பிற்காலத்தில் தென்னக வைணவம் சிறப்புறப் பலதிறத் தொண்டாற்றிய மணவாளமாமுனிகள் தோன்றிய சிறப்பும் பெற்றது. தொடர்ந்து வைணவ சமயப் பெரியார்கள் இத்தலத்தில் எழுந்தருளிச் சமயத் தொண்டாற்றியும் நூல்களும் உரைகளும் இயற்றியும் வந்துள்ளனர். இடைக்காலத்தில் வழக்கின்றி (அனுசந்தானம்) யிருந்த நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தை, வீரநாராயணபுரத்திலிருந்த நாதமுனிகள் இவ்வூருக்கு எழுந்தருளி,நம்மாழ்வார் வாயிலாகப் பாட்டோலை கொண்டு வெளிப்படுத்தினர்.

இதலாமியர் ஆட்சிக் காலத்தில் கோயில் சிதைவடைந்தது; நம்மாழ்வார் திருமேனி அப்புறப்படுத்தப்பட்டது. பிற்காலத்தில் திருவாய்மொழிப் பிள்ளையும், தோழப்பரும் நம்மாழ்வாரின் திருமேனியைக் கேரளப் பகுதியிலிருந்து மீளக் கொணர்ந்து, காடுமூடிக்கிடந்த கோயிலின் இருப்பிடத்தையும் கண்டுதெளிந்து, புதுப்பித்து, நம்மாழ்வாருக்கும் ஆதிநாதப்பிரானுக்கும் மீண்டும் சந்நிதிகள் அமைத்து நித்திய வழிபாடும் விழாக்களும் எடுத்தனர்.

குருகைமான்மியம், குருகூர்வரி, குருகூர்ப்பள்ளு மாறன் பவனிக் குறம், நம்மாழ்வார் தாலாட்டு என்னும் தமிழ் நூல்கள் இவ்வூரின் சிறப்பை எடுத்தியம்புவன. சடகோபர் அந்தாதி, மாறன் அலங்காரம், நம்மாழ்வார் திருத்தாலாட்டு என்பன நம்மாழ்வாரின் சிறப்புகளைக் கொண்டன.

தாமிரபரணியின் வடகரையில் காந்தீசுவரம் என்னும் சைவத் திருக்கோயில் அமைந்துள்ளது. ஏகாந்தலிங்கம், அறம் வளர்த்த நாயகி ஆகியோருக்கு இங்குக் கோயில்கள் உள்ளன. இத்தலத்தில் கருவூர்ச் சித்தர் வழிபாடு செய்ததாகத் தலபுராணம் கூறுகிறது. இவ்வூரில் கிறித்தவக் கோயில் ஒன்றும் இரண்டு மசூதிகளும் அமைந்துள்ளன.

இரும்புக்காலப் புதை பொருள்கள் அகழ்ந்து எடுக்கப்பட்ட ஆதிச்சநல்லூரின் அண்மையில் உள்ள ஆதிபுரி எனப் பெயர்பெற்றுத் தொன்மைக்காலம் தொட்டு விளங்கியதாகப் புராணங்கள் கூறும் இவ்வூரும் இதன் சுற்றுப்புறங்களும், மேலும் ஆராயப்பட்டால் வரலாற்றுச் செய்திகள் பல புலனாகும்.

**ஆழ்வாரப்பப் பிள்ளை** திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த புலவர்களுள் ஒருவர். இவர் அரசாங்க வருவாய்த் துறையில் அதிகாரியாக அலுவல் பார்த்தவர். சிறந்த சைவ சித்தாந்தி. இவர் முருகதாச சுவாமிகள் என்றும் அழைக்கப்பட்டார். இவரது காலம் கி.பி. 1839-ஆம் ஆண்டிற்கும் 1924-ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்டதாகும். இவர் வள்ளியூர்த் தலபுராணம், வள்ளியூர்க் காவடி வைபவம், கிருகத்தர்மம் ஆகிய நூல்களை இயற்றியுள்ளார். பல கீர்த்தனைகளையும் இயற்றியுள்ளார். வள்ளியூரைப் பற்றி இரண்டு நூல்கள் எழுதியுள்ளமையால், இவரது ஊர் வள்ளியூராக இருத்தல் கூடும். வி.பா.

**ஆள் சாராப் பேரேட்டுத் தணிக்கை** என்பது நிறுவனத்தின் நடவடிக்கைகளுக்குண்டான பதிவுகள் (Entries) முதலில் துணையேடுகளில் பதிவு செய்யப்பட்ட பின்னர், அதற்குரிய பேரேடுகளில் எழுதப்படுவது. ஆள் சாராப் பேரேடுகளில் (Impersonal Ledgers) வணிகத்தைப் பற்றிய கணக்குகள் இடம் பெறுகின்றன. இந்தக் கணக்குகள் பெயரளவுக் கணக்குகளாக அல்லது சொத்துக் (Assets) கணக்குகளாக இருக்கலாம். ஆதாயம், இழப்புகள், வரவு-செலவு இனங்களைச் சார்ந்தவற்றைப் பெயரளவுக் கணக்கு (Nominal), என்றும் சொத்துகளைச் சார்ந்தவற்றைச் சொத்துக் கணக்கு என்றும் குறிப்பிடுவதுண்டு. ஆள் சாராப் பேரேடுகள் பொதுப் பேரேடு (General Ledger), என்றும் பெயரளவுப் பேரேடு (Nominal Ledger) என்றும் குறிக்கப்படுகின்றன. இந்தப் பேரேட்டில் காணப்படும் கணக்குகளைக் கொண்டுதான், நிறுவனத்தின் ஆதாய இழப்புக் கணக்குகளும், இருப்பு நிலைக் குறிப்பும் (Balance Sheet) தயாரிக்கப்படுகின்றன. இந்தப் பேரேட்டில் ஏதேனும் தவறு இருந்தால், அது ஆதாய இழப்புக் கணக்கையும் இருப்பு நிலைக் குறிப்பையும் தவறுடையனவாகச் செய்யும்.

தீய எண்ணம் கொண்டவர்கள், ஆள் சார் கணக்குகளைத் திருத்தி எழுதி, அதற்குச் சமமான புனைவுப் பதிவுகளை ஆள்சாராக் கணக்குகளிலும் எழுதிவிடுவர். ஆகையால், தணிக்கையாளர்கள் (Auditors) ஆள்சாராப் பேரேட்டை மிகவும் கவனமாகச் சீர்தூக்க வேண்டும். இப்பதிவேட்டைத் தணிக்கையர், சான்றாய்வு (Certify) செய்யும்போது சில முக்கிய செய்திகளைக் கவனிக்க வேண்டும். துணை ஏடுகளிலிருந்து இந்தப் பேரேட்டிற்கு எடுத்தெழுதியுள்ள பதிவுகளை நன்கு ஆராய வேண்டும். கைவசப் பண ஏட்டிலிருந்து (Cash Book) பதிவுகள் பல, ஆள் சாராக் கணக்குக்கு எடுத்து எழுதப்பட்டிருக்கும். அவற்றுக்குண்டான ஆதாரச் சீட்டை

நன்றாக ஆராய்ந்து, உரிய கணக்கில், உரிய இனம் எழுதப்பட்டிருக்கிறதா எனப் பார்க்க வேண்டும். கணக்குகளின் இருப்புகள் ஒப்பிடப்பட்டு, இருப்புச் சோதனையில் காணப்படும் இனங்களும், பல்வேறு கணக்குகளின் இருப்புகளோடு பொருந்தி இருக்கின்றனவா எனவும்,முதல் குறிப்பேட்டிலுள்ள ஒழுங்கு செய்யப்பட்ட பதிவுகள் அனைத்தும் உரிய கணக்கில் எடுத்தெழுதப்பட்டிருக்கின்றனவா எனவும் பார்க்க வேண்டும்.

நிறுவனத்தின் ஆதாய இழப்புக் கணக்கின் மூலந்தான், நிறுவனம் அந்த ஆண்டில் எவ்வளவு ஆதாயம் அல்லது இழப்பு அடைந்திருக்கிறது என்பதை அறிய முடிகிறது. அந்த ஆதாயம் அல்லது இழப்பு ஒழுங்காகக் கணக்கிடப்பட்டிருக்கிறதா எனக் கண்டறிய வேண்டும். கணக்கில் அந்த ஆண்டிற்கான செலவினங்கள் அனைத்தும் பற்று வைக்கப்பட்டிருக்கின்றனவா என்றும், வரவு இனங்கள் அனைத்தும் வரவு வைக்கப்பட்டிருக்கின்றனவா என்றும் கண்டறிய வேண்டும். சில செலவினங்கள் பற்றுவைக்கப்படாமல் இருக்கவும், சில வரவினங்கள் வரவு வைக்கப்படாமல் இருக்கவும் வாய்ப்புண்டு. இவற்றைக் கணக்கில் கொண்டுவர முதல் குறிப்பேட்டில் ஒழுங்குபடுத்தும் பதிவுகள் செய்ய வேண்டும். தணிக்கையாண்டில் ஈட்டப்பட்ட வருவாய் அவ்வாண்டு இறுதிக்குள் கைக்கு வாராமல் இருக்கலாம். அவ்வாறு வாராத தொகைகளை ஆதாய இழப்புக் கணக்கில் கொண்டு வந்து, இருப்பு நிலைக் குறிப்பில் சொத்து எனக் காட்ட வேண்டும். பெறுவதற்கான வாய்ப்பே இல்லாத இனங்களைக் கணக்கில் கொண்டுவரக் கூடாது. வரவுக்குரிய வாடகை, கூடிய வட்டி, ஆதாய ஈவு, வரவுக்குரிய கழிவு, உரிமைத் தொகை முதலியவை பெறுதற்குரிய வருவாய்க்கு எடுத்துக் காட்டுகளாகும்.

தணிக்கையாண்டில் செய்யப்பட்ட சில செலவுகளுள் ஒரு பகுதி, நடப்பு ஆண்டுக்குப் பின்வரும் ஆண்டுக்கு உரியதாக இருக்கலாம். அந்தச் செலவு முழுவதையும் ஆதாய இழப்புக் கணக்கில் பற்று வைத்தால், அது மெய்யான ஆதாயத்தைக் குறைத்துக் காட்டும். ஆகையால், அடுத்த ஆண்டுக்கான செலவைக் கணக்கிட்டுக் கழித்து எஞ்சிய தொகையை மட்டும் ஆதாய இழப்புக் கணக்கில் பற்றுவைக்க வேண்டும். அடுத்த ஆண்டிற்காகச் செலவழித்த தொகையை முன் செலுத்திய செலவாகா இருப்பு நிலைக் குறிப்பில் சொத்துக்குரிய பக்கத்தில் எழுத வேண்டும். இது நடப்புச் சொத்தாகக் (Current Asset) கருதப்படும். முன் கூட்டிச் செலுத்திய வாடகை, முன் கூட்டிச் செலுத்திய காப்புறுதிக் கட்டணம், முன் செலுத்திய கழிவு, முன்செலுத்திய வரி வீதங்கள் போன்றவை எடுத்துக்காட்டாக அமைகின்றன. காப்புறுதிக் கட்டணத்திற்குப் பற்றுச் சீட்டை (Receipt) ஒப்பிட்டுப் பார்ப்பர். வாடகைச் செல்லுகளுக்கு, வாடகை அல்லது குத்தகை ஒப்பந்தங்களையும் பணச்சீட்டுகளையும் ஒப்பிட்டுப் பார்ப்பர். கழிவுச் செல்லுகளைக் கட்சியினருக்கும் விற்பனையருக்கும் இடையே உள்ள ஒப்பந்தங்களை அறிந்து ஒழுங்குபடுத்த வேண்டும். வரிகள், வரி விவரத் தாக்கல் படிவங்கள் ஆகியவற்றை வரிப் பணச்சீட்டுகளைக் கொண்டு ஆராய முடிகிறது. விளம்பரச் செலவுகள் சில சமயங்களில் பெரிய அளவில் செய்யப்படுகின்றன. அதன் பயன் 2 அல்லது 3 ஆண்டுகளுக்குக் கூட இருக்கும். அந்நிலையில் ஒரு பகுதிச் செலவு மட்டும் நடப்பு ஆண்டுக் கணக்கில் காட்டப்பட்டு, எஞ்சிய செலவு இருப்பு நிலைக் குறிப்பில் சொத்துப் பக்கத்தில் காட்டப்படுகிறது.

நிறுவனத்தின் பொறுப்புகள் அனைத்தும் கணக்கிற்குட்பட வேண்டும். நடைமுறைச் செலவிற்கான பொறுப்புகள் ஆதாய இழப்புக் கணக்கில் காட்டப்படாவிட்டால், ஆதாய இழப்புக் கணக்கு, உரிய ஆதாயத்தை விட மிகுதியான ஆதாயத்தைக் காட்டும். அனைத்துப் பொறுப்புகளும் கணக்கில் வந்துள்ளனவா என அறிவது அவ்வளவு எளிதானதன்று. சில செலவுகள் மறைக்கப்பட்டிருக்கலாம். பொறுப்பு வாய்ந்த ஓர் அலுவலரிடமிருந்து, அனைத்துப் பொறுப்புகளும் கணக்கில் கொண்டு வரப்பட்டுள்ளன என்று சான்றிதழும் பெற்றிருக்கலாம். கடந்த ஆண்டுச் செலவுகளையும், நடப்பு ஆண்டுச் செலவுகளையும் ஒப்பிட்டு, விட்டுப்போன அல்லது மறைக்கப்பட்ட பொறுப்புகளைக் கண்டறிய முடியும்.

ஈட்டப்படாத வருமானமும் செலுத்த வேண்டிய செலவுகளும் பொறுப்புகளாக அமையும். நடப்பு ஆண்டில் பெறப்பட்டுள்ள வருவாய்கள் சிலவற்றுள் ஒரு பகுதி,அடுத்த ஆண்டிற்கும் சேர்த்துப் பெற்றதாக இருக்கும். முன் கூட்டிப் பெற்ற கழிவு, வட்டி, தள்ளுபடி, முன் பணமாகப் பெற்ற வாடகை முதலியவை எடுத்துக்காட்டாக அமையும். அடுத்த ஆண்டிற்கான தொகையைக் கழித்து விட்டு, பாக்கியைத் தான் வருமானமாக ஆதாய இழப்புக் கணக்கில் காட்ட வேண்டும். நடப்பு ஆண்டில் நிகழ்ந்த செலவுகளுள் ஒருபகுதி செலுத்தப்படாமல் இருக்கும். அவை செலுத்தப்படாவிட்டாலும் அவை செலுத்திய தொகையோடு கூட்டப்பட்டு, ஆதாய இழப்புக் கணக்கில் வந்து பற்று வைக்கப்படவேண்டும். செலுத்தப்படாத தொகை, பொறுப்பாக இருப்பு நிலைக் குறிப்பில் காட்டப்படவேண்டும். வாடகை வீதங்கள், மின் கட்டணங்கள், கூலி, சம்பளம், வண்

டித் சத்தம், சுமைகூலி, கழிவு முதலிய செலவுகளுள் ஒரு பகுதி செலுத்தாத செலவாக இருக்கும். மின் வரி, தொலைபேசிக் கட்டணங்களின் பாக்கி ஆகிய வற்றைக் கேட்புக் குறிப்புகள் வாயிலாகக் (Demand Note) கணக்கிட முடியும். கடன்கள்மீதும் கடனுறுதிச் சீட்டுகள்மீதும் செலுத்தப்பட வேண்டிய வட்டி, இருப்புநிலைக் குறிப்புநாள் வரை செலுத்தப்பட்டா திருந்தால், அது ஒரு பொறுப்பாகக் கருதப்பட்டுக் கணக்கில் சேர்க்கப்பட வேண்டும். கடன் ஒப்பந்தங் கள் மூலமும் கடனுறுதிச் சீட்டுகள் மூலமும் கடனுக் குரிய வட்டி வீதம் அறிந்து கொள்ள முடியும். நடப்பு ஆண்டிற்கான கொடுக்கப்பட வேண்டிய தணிக்கைக் கட்டணமும் கணக்கில் கொண்டு வரப்பட வேண்டும். தணிக்கைக் கட்டணம் எவ்வளவு என வரையறுக்க முடியாத நிலையில், கடந்தகால அனுப வத்தின் பேரில் மதிப்பீடு செய்யப்பட்ட ஒரு தொகையைக் கணக்கில் கொண்டு வர வேண்டும்.

உறுதியில்லாத நிகழ்ச்சி ஒன்றைச் சார்ந்து ஏற் படும் சொத்துரிமை நலன் அல்லது பொறுப்பு நிகழ் வடைவு எனப்படும். அப்படி எதிர்காலத்தில் உண் டாகக் கூடிய அல்லது உண்டாகாது போகவும் கூடிய பொறுப்பு, நிகழ்வடைவான பொறுப்பு (Contingent Liability) என்று கூறப்படும். இருப்புநிலைக் குறிப்பு உருவாக்கிய பின்னர் ஏற்படக்கூடிய நிகழ்வடை வான பொறுப்புகளுக்கும் வகை செய்யும்படி தன் கட்சியினரை அறிவுறுத்துவது தணிக்கையர் கடமை யாகும். நடப்பு ஆண்டில் நிகழ்ந்த நடவடிக்கை களின் அடிப்படையில், வருங்காலத்தில் சில காலங் களில் நிறுவனம் பணம் கட்ட வேண்டி வந்தாலும் வரலாம். இந்த நிச்சயமல்லாத நிலைதான் இதனை இயல்பான பொறுப்பிலிருந்து வேறுபடுத்திக் காட்டு கிறது. கடந்த கால அனுபவத்தை அடிப்படை யாகக் கொண்டு சில நடவடிக்கைகளினால் பின் னால் நிறுவனம் பொறுப்பேற்க வேண்டி வருமா என ஊகிக்கலாம். கடிதப் போக்குவரத்து, கூட்ட நடவடிக்கைக் குறிப்பேடு, கணக்கு ஏடுகள் போன்ற சான்றுகளைக் கொண்டு தணிக்கையர் இவ்வகைப் பொறுப்பைக் கணக்கிடுவர். நிகழ்வடைவான பொறுப்புகளில் சில பொறுப்புகள் இறுதியில் இழப் பாக முடியும். பிறர் வாங்கிய கடன்களுக்குப் பொறுப்புறுதி அளிப்பது, அதற்கு ஈடான சொத்து ஒன்றைப் பெற்றுத் தரக்கூடியதாக இருக்கும். பிற ருக்குப் பணி செய்வதாக ஒத்துக் கொள்ளும் ஒப்பந்தங் களும் இதனுள் அடங்கும். பொதுவாக நிகழ்வடை வான பொறுப்புகள் பின்வரும் நடவடிக்கைகளில் ஏற்பட வாய்ப்புண்டு: (அ) வரவுக்குரிய மாற்றுச் சீட்டுகள் முதிர்வடையுமுன் (Maturity) வங்கியிடம் கொடுத்துத் தள்ளுபடியுடன் தொகையைப் பெறுதல். (ஆ) நீதிமன்றங்களில் நிறுவனத்தால் தொடுக்கப் பட்ட அல்லது நிறுவனத்தின்மீது தொடுக்கப்பட்ட வழக்குகளினால் உண்டாகக்கூடிய பொறுப்புகள், மற்றவர்கள் பெறக்கூடிய கடன்களுக்குப் பொறுப் புறுதி அளித்தல் ஆகியவை இயல்பான, நிகழ் வடைவான பொறுப்புகளாகும். இயல்பான பொறுப்புகள் மட்டும் இருப்பு நிலைக் குறிப்பில் இடம் பெறும். நிகழ்வடைவான பொறுப்புகள் இறுதியில் பொறுப்புகளாக மாற வாய்ப்பு உண்டே தவிர உறுதியில்லை. ஆகையால், இவை இருப்பு நிலைக் குறிப்பில் இடம் பெறா. இவை பொறுப் பாக மாறினால், எந்த அளவுக்கு நிறுவனத்தைப் பாதிக்கும் என்ற நிலை, இருப்பு நிலைக் குறிப் பின் கீழ் ஒரு குறிப்பாகக் காட்டப்படும்.

சில நடவடிக்கைகளினால் சில வேளைகளில் ஏதேனும் சொத்துகள் வரக்கூடிய வாய்ப்பிருக்கலாம். ஆனால், இந்த நிகழ்வடைவான சொத்துகள் பற்றிய குறிப்புகள், இருப்பு நிலைக் குறிப்பின் கீழ் இடம் பெறுவதில்லை. எதிர்பாராது வரும் இழப்புகளால் மட்டில் நிறுவனம் பாதிக்கப்படும்.

நடைமுறைச் செலவுகளிற் சில சிறிதுகாலம் கழித்துப் பல ஆண்டுகளுக்குப் பயன் தருவதாக அமையும். அவ்வகைச் செலவுகள் அனைத்தும் நடப்பு ஆண்டுக் கணக்கில் பற்று வைப்பதில்லை. எவ்வளவு ஆண்டுகளுக்கு அதனால் பயன் விளையும் என்று கணக்கிட்டு, அத்தனை ஆண்டுகளுக்கு அந்தச் செலவு பங்கிட்டு எழுதப்படுகிறது. அச்செலவு பிற் பயன் நடைமுறைச் செலவு. (Deferred Revenue Expenditure) என்று சொல்லப்படுகிறது. நடப்பு ஆண்டிற்காக விகிதாச்சாரப் பகுதி மட்டுமே, ஆதாய இழப்புக் கணக்கில் செலவாகக் காட்டப்படு கிறது. பிற ஆண்டுக்கெனக் கருதப்பட்டவை, இருப்பு நிலைக் குறிப்பில் சொத்துப் பக்கத்தில் காட்டப்படு கின்றன. நடப்பு ஆண்டுச் செலவுக்கு எடுத்துக் காட்டாகச் சிலவற்றைக் கூறலாம். அவை, பெரு மளவு செலவு செய்யும் நிறுவனத்தை வேறு ஒரு வசதியான விளம்பர இடத்திற்கு மாற்றுவதால் ஆகும் செலவுகள், வளர்ச்சிச் செலவு, ஆராய்ச் சிக்காகும் செலவு, பெரும் பழுது பார்த்தல் செலவு, புதிய நிறுவனத்தின் தொடக்கச் செலவுகள், சோதனை நிமித்தச் செலவு முதலியனவாம்.

உண்மையில் பிற்பயன் நடைமுறைச் செலவு மட்டுமே பரவலாக எழுதப்படுகிறது என்பதைத் தணிக்கையர் உறுதி செய்துகொள்ள வேண்டும். சில காலங்களில் ஆதாயத்தை மிகைப்படுத்த வேண்டி, ஓராண்டுக்குரிய செலவுகளைப் பல ஆண்டு களுக்குப் பகிர்ந்து எழுத வாய்ப்புண்டு. தணிக்கையர் இதனை நன்கு அறிந்து செயற்படவேண்டும். வாணி கத்தில் ஏற்படும் செலவு நடைமுறைச் செலவாகவோ

மூலதனச் செலவாகவோ இருக்கலாம். கோட்பாடு களின் அடிப்படையில், செலவுகள் மூலதனச் செலவா கவும் நடைமுறைச் செலவாகவும் பிரிக்கப்படுகின்றன. பின்வரும் செலவுகள், மூலதனச் செலவாகக் கருதப் படுகின்றன. பொருள் உற்பத்திக்குத் துணை செய்யும் நோக்கத்துடன் வாங்கப்பட்ட புதிய சொத்தின் செலவுகள், தொழிலின் பொருளீட்டும் திறனை மிகுதிப்படுத்தல், மதிப்புள்ள உரிமையைப் பெறுதல், சொத்துகளின் ஆயுட்காலத்தை நீடிக்கும் வகை யில் செய்யப்படும் செலவுகள், நிலையான சொத்து களை விரிவு படுத்தக் கூடுதல் சொத்துகளைச் சேர்ப் பதற்காகும் செலவு ஆகியவை மூலதனச் செலவா கும். வாணிகத்தின் நற்பெயரின் பொருட்டு ஆகும் செலவும், காப்புரிமை, பதிப்புரிமை முதலியவற்றின் செலவும் மூலதனச் செலவில் அடங்கும். நிலையான சொத்துகள் வாங்குவதில் ஏற்பட்ட சட்டச் செலவு கள். முத்திரை வரி, கூலி, சுமைக்கூலி முதலியனவும் மூலதனச் செலவாகக் கருதப்படும். பொதுவாகப் பல ஆண்டுகளுக்குப் பயன் தரக்கூடிய செலவுகள் மூலதனச் செலவாகக் கருதப்படுகின்றன.

தொடர்ந்து எழும் தன்மையுள்ளதாகவும் நிறு வனத்தின் அன்றாடத் தொழில் நிகழத் தேவைப் படுவதாகவும் உள்ள செலவுகள், நிலையான சொத்து களைப் பாதுகாத்தற்காகும் செலவுகள், நிறுவனத் தின் வருவாய் ஈட்டும் திறனைக் காக்க ஏற்படும் செலவுகள் முதலியன நடைமுறைச் செலவாகக் கருதப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, கட்டடத் திற்கு வெள்ளையடித்தல், பழுதுபார்த்தற் செல வுகள், வாடகை, ஊதியம், கூலி போன்ற செல வுகள், கழிவு, பயணச் செலவு, தள்ளுபடி போன்ற செலவுகள், சொந்தப் பயன்பாட்டிற்கு அல்லாமல் விற்பனைக்கென்றே வாங்கப்படும் பொருள்களின் செலவுகள் ஆகியவை நடைமுறைச் செலவுகளாகக் கொள்ளப்படும். ஒரு பழைய கட்டடத்தை இடித்து விட்டு, அந்த இடத்தில் புதிதாக ஒரு கட்டடம் கட்டினால் பெருஞ் செலவு ஏற்படும். புதிய கட்டி டத்தின் மதிப்புப் பழைய கட்டிடத்தின் மதிப்பை விட எவ்வளவு மிகுதியாக உள்ளது எனக் கணக்கிட்டு, அதனை மட்டும் மூலதனச் செலவாகக் கொண்டு எஞ்சியதை நடைமுறைச் செலவாகக் கணக்கிட வேண்டும். நடைமுறைச் செலவுகள் அனைத்தும் ஆதாய இழப்புக் கணக்கில் காட்ட வேண்டும். மூல தனச் செலவுகள் அனைத்தும் இருப்பு நிலைக் குறிப் பில் காட்டப்படும். இவற்றில் தவறு ஏற்பட்டால், ஆதாய இழப்புக் கணக்கும் இருப்பு நிலைக் குறிப்பும் பாதிக்கப்படும். நடைமுறை வரவுகள் ஆதாய இழப் புக் கணக்கிலும், மூலதன வரவுகள் இருப்பு நிலைக் குறிப்பிலும் காட்டப்படும். மூலதனச் செலவு, நடை முறைச் செலவாகக் காட்டப்பட்டால், ஆதாயம் குறைந்து போகும். நடைமுறைச் செலவு மூலதனச் செலவாகக் காட்டப்பட்டால், ஆதாயம் மிகுதியாக இருக்கும். இவ்வகை வகைகேடுகள், வருமானவரி, பங்காதாயம் வழங்குதல் முதலியவைகளுக்கு இடை யூறு விளைவிக்கும். பெரிய செலவுகள் மூலதனச் செலவு என்றும், சிறிய செலவுகள் நடைமுறைச் செலவு என்றும் ஒருபோதும் எண்ணி விடக்கூடாது. நிறுவனத்தின் செலவுகள் நடைமுறைச் செலவு, மூலதனச் செலவு என்று முறையான வகையில் பாகு பாடு செய்யப்பட்டிருக்கின்றன. என்று பொறுப்பு வாய்ந்த அலுவலர் ஒருவர் சான்றிதழ் அளிக்க வேண்டும். இந்தச் சான்றிதழினைத் தணிக்கையர் ஏற்றுக் கொண்டு, அந்த விவரத்தைத் தமது அறிக் கையில் குறிப்பிட வேண்டும். பி.இரா.

**துணை நூல்கள்:**

Ghatalia, S.V., Spicer and Pegler's Practical Auditing, Allied Publishers Private Ltd., New Delhi, 1965.

Tandon, B.N., A Hand Book of Practical Auditing, S. Chand & Company, New Delhi, 1970.

**ஆள்நிலம்** என்பது ஆளப்படும் நிலம் எப் பகுதி வரை பரவியுள்ளதோ அதனைக் குறிக்கும். இது ஒரு நாட்டின் சிறப்பு உறுப்புகளுள் ஒன்றாகும். தனக்கென்று ஒரு நிலப்பரப்பு இன்றி ஒரு நாடு இயங்க இயலாது. நாடோடிக் கூட்டம் ஓர் இடத்தில் நிலைத்து வாழ்ந்துவரும்வரை அக்கூட்டத்தை நாடற்றதாகவே கருதுகின்றனர்.

ஆள்நிலம் (Territory) முதலாவதாக, அதன் எல்லைக்குட்பட்ட நிலப்பரப்பையும், இரண்டாவ தாக, உள்நாட்டு நீர்ப்பரப்புகளையும் (குளம், ஆறு, வாய்க்கால் முதலியன), மூன்றாவதாக, கரையோரக் கடலையும் கொண்டதே ஆகும்.

ஒரு நாட்டின் ஆள்நிலப்பரப்பினை அதன் எல்லைகள் குறிப்பிட்டுக் காட்டுகின்றன. அவை ஒரு நாட்டினைப் பிற நாட்டினின்றும் பிரித்துக் காட்டு கின்றன. எல்லைகள் இயற்கையாகவோ செயற்கை யாகவோ அமையலாம். ஆறுகளும் மலைகளும் கடல் களும் ஒருநாட்டின் இயற்கை எல்லைகளாகும். செயற்கை எல்லைகள் சுவர், எல்லைக் கல் முதலி யனவாம். ஆறுகளை நான்கு வகையாகப் பிரிக் கலாம். அவை 1. தேசிய ஆறுகள் (National Rivers), 2. எல்லை ஆறுகள் (Boundary Rivers), 3. நாட்டிடை அல்லாத ஆறுகள் (Non-National Rivers), 4. பன் னாட்டு ஆறுகள் (International Rivers) எனப்படும்.

ஆறுகள் ஒரு நாட்டின் எல்லைக்குள் தோன்றி அந்த நாட்டின் ஆள்நிலப்பரப்பில் ஓடிக் கடலில் கலக்கலாம். சில ஆறுகள் ஒரு நாட்டில் தோன்றிப் பல நாடுகளின் வழியாக ஓடிக் கடலில் கலக்கலாம். எ-டு. ஐரோப்பிய நதிகள்; இந்தியாவில் சிந்து நதி. முதலில் குறிப்பிட்ட ஆறுகளை உள்நாட்டு ஆறுகள் என்றும், அடுத்துக் குறிப்பிட்டவற்றைப் பன்னாட்டு ஆறுகள் என்றும் குறிப்பிடலாம். பன்னாட்டு ஆறுகளிற் பல, இரு நாடுகளின் ஆள் நிலங்களைப் பிரிக்கும் எல்லைக் கோடாக அமையலாம். அவை எல்லை ஆறுகள் என்று பெயர் பெறும்.

உள்நாட்டு ஆறுகள் அந்தந்த நாட்டின் தனிச் சொத்து ஆகும். அயல்நாட்டுக் கப்பல்கள், ஒப்பந்த உரிமை அல்லது அந்நாட்டின் இசைவு இருந்தாலன்றி இவ்வாறுகளில் நுழைதல் கூடாது.

பன்னாட்டு ஆறுகள் எந்த நாட்டுக்குள் ஓடுகின்றனவோ, அந்த நாடுகள் உரிமை கொண்டாடலாம். ஆனால், கீழேயுள்ள கரைநாடுகளுக்கு (Riparian States) இடையூறு ஏற்படும்படியாகத் தண்ணீரைத் தேக்கவோ அவற்றின் ஓட்டத்தைக் குறைக்கவோ கூடாது; கப்பல் போக்குவரத்து கரைநாடுகளின் ஒப்பந்தப்படி நடைபெறும்.

எல்லை ஆறுகளில் அருகிலுள்ள நாடுகள் அவற்றின் எல்லைவரை உரிமை கொண்டாடலாம். எல்லையைக் குறிப்பிட்டு ஒப்பந்தம் செய்து கொள்வதும் உண்டு. இவ்வகையான ஒப்பந்தங்களில் எல்லையைக் குறிப்பிட்டு, ஒரு வரைபடம் அதனுடன் இணைத்து, இரு பக்கக் கரைநாடுகளும் அதில் கண்டுள்ளபடி அவ்வாற்றில் உரிமை கொண்டாடலாம்.

ஒப்பந்தமில்லாத நிலையில் எல்லை ஆறுகளின் எல்லைக்கோடு அவற்றின் நடுவில் இருப்பதாகக் கருதப்படும். ஆகவே, அண்டை நாடுகள் எல்லையாறுகளில் அவற்றின் மையம்வரை உரிமை கொண்டாடலாம். இதனை 'மைய விதி' (Median Line) என்று கூறுவர்.

**பன்னாட்டு ஆறுகளில் நீர்வழியுரிமை:** நெடுங்காலமாக நாடுகளிடையே ஓடும் ஆறுகளில் எல்லா நாடுகளுக்கும் நீர்வழியுரிமையுண்டு (Navigational right) என்ற கருத்து ஏற்பட்டு வருகிறது. இவ்வகை வழியுரிமை ஐரோப்பிய நாடுகளிலும், மற்ற நாடுகளிலும் வழங்கிவரும் வழக்கம், பன்னாட்டுச் சட்டத்தால் (International Law) மரபுப்படி ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது என ஒப்பென்காம் (Oppenheim) கூறுகிறார்; ஆனால், இக்கருத்தினை இசுடார்க்கு (Starke) மறுத்துரைக்கிறார்.

நாடுகளிடையே ஓடும் ஆறுகளில் நீர் வழியுரிமை பற்றி மூன்று கருத்துகள் வழங்கி வருகின்றன.

1. ஒரு சாரார், இத்தகைய வழியுரிமைகள் அமைதிக் காலத்தில் மட்டுமே செயற்படுத்தத் தக்கவை என்று கருதுகின்றனர்.

2. மற்றொரு சாரார், ஆறுகள் எந்தெந்த நாடுகளைக் கடந்து ஓடுகின்றனவோ அந்தந்த நாடுகள் மட்டுமே அவற்றினைப் பயன் படுத்தும் உரிமை பெற்றவை என்று எண்ணுகின்றனர்.

3. மற்றுமொரு பிரிவினர் நாடுகளிடையே ஓடும் ஆறுகள் அமைதிக் காலத்தில் மட்டுமன்றி, அவற்றிற்குரிய நாடுகளுக்கு மட்டுமன்றி, அனைத்துக் காலத்திலும் அனைத்து நாடுகளாலும் பயன்படுத்துவதற்குரியவை எனவும், அவற்றின் மீது உரிமை பெற்ற நாடுகள், தங்கள் நன்மையைப் பாதுகாக்கும் பொருட்டு அவற்றின் பயன்பாடுகளை நெறிப்படுத்தலாம் எனவும் கூறுகின்றனர்.

4. இப்போது, நாடுகளிடை ஆறுகளின் வழியுரிமை, உடன் படிக்கைகள் மூலம் நெறிப்படுத்தப்படுகிறது. இப்பழக்கம் கி.பி. 1814-இல் பாரிசு உடன்படிக்கை ஏற்பட்டது முதல் தொடங்கியது. இறுதியாக, இப்போது பார்சிலோனா உடன்படிக்கைகள் (Barcelona Conventions, 1921), இவ்வகை வழியுரிமைகளை நெறிப்படுத்துகின்றன.

**கால்வாய்கள்:** உள்நாட்டில் ஓடும் கால்வாய்கள் அந்நாட்டின் ஆள்நிலப்பரப்பின் ஒரு பகுதியாகவே கருதப்படும். கால்வாய்கள் செயற்கையாக வெட்டப் படுவன. ஒரு நாட்டின் எல்லைக்குள் இருக்கும் கால்வாய் அந்நாட்டின் சொத்து. அதில் அயல்நாடுகளுக்கு எவ்வித உரிமையும் கிடையாது. ஆனால், சில சமயங்களில் சில கால்வாய்கள், நடுமைக் கால்வாய்களாகவும், பன்னாட்டுக் கால்வாய்களாகவும் ஆக்கப்படலாம். இது, நாடுகள் பல இணைந்து செயலாக்கும் ஒரு திட்டமாகும். உரிமைகள் இத்திட்டத்தின்படி அனுபவிக்கப்படும். கடல்களுக்கிடையே ஓடி இணைக்கும் கால்வாய்களுக்கென்று தனி விதிகள் உண்டு. சூயசு, பனாமா, கீல் (Kiel) ஆகிய மூன்று கால்வாய்களும் இத்தன்மையுடையவை. அதிகாரம் செலுத்தும் உரிமை ஆள் நில நாட்டைச் சேர்ந்தது. ஒரு நாட்டுக்கு அப்படிப்பட்ட கால்வாயையும் நாட்டுரிமையாக்கும் (Nationalisation) உரிமை உண்டு.

**கடல் இடுக்குகள்:** கடலின் இரு நாடுகளின் கரைகள் உள்நோக்கி ஓடிக் கடலைக் குறுக்கி ஏற்படுத்தும் கடல் குறுக்கங்களையே கடல் இடுக்கு (Strait) என்று கூறுவர். ஒவ்வொரு நாடும் தனது கடற்கரை ஓரமாகக் கடலில் ஒரு குறிப்பிட்ட அளவு தூரத்துக்குத் தனது முழு அதிகாரத்தையும் செலுத்தலாம். இது தற்காப்புக்காக ஏற்பட்டதாக

இருக்கலாம். கடற்கரை ஓரமாகக் குறிப்பிட்ட தூர அளவில் (12 மைல்) இந்த அதிகார எல்லையைக் கற்பனையால் உறுதி செய்தால், அந்நாட்டின் நிலப் பரப்பு எல்லையைச் சுற்றிலும் ஒரு கச்சை (Belt) போல் அமையும். இந்தக் கடலைப் பொறுத்த வரை கரையோர நாடு தனது முழு அதிகாரத்தைச் செலுத்தலாம். ஒவ்வொரு நாடும் குறைந்த அளவு மூன்று மைல் அகலக் கரையோரக் கடல் பெற்றிருப் பதால், இக்கடல் இரு சம கூறுகளாக மையக் கோட்டினைக் கொண்டு பிரிப்பதன் மூலமோ, அன்றி உடன் படிக்கைகள் மூலமோ முடிவு செய்யப்படும். இக்கடல் இடுக்குகள், எங்கெங்கு ஆறு மைல் அகலம் உள்ளதோ, அங்கெல்லாம் அதனதன் கரையோர நாட்டைச் சாரும். இவை எங்கெல்லாம் ஆறு மைல் அகலத்தை விட மிகுதியாக உள்ளதோ அங்குச் சிக் கல் எழுவது இயல்பு. இந்தியா அதன் எல்லை யோரக் கடலை 12 மைல் வரை நீட்டியுள்ளது. ஒரு சில நாடுகள், குறிப்பாக எல்சால்வடார்(Elsalvadar), ஈக்குவேடர் (Equador), சிலி (Chile), பெரு (Peru) முதலிய நாடுகள் எல்லையோரக் கடலை 200 மைல் கள் வரை நீட்டியுள்ளன. ஆனால், பிறநாடுகள் இவ்வாறு தங்கள் விருப்பம் போல் எல்லையோரக் கடலை விரிவாக்குவதை ஏற்றுக் கொள்ள வேண்டு மென்பதில்லை. பன்னாட்டுச் சட்டப்படி இன்று எல்லையோரக் கடலின் எல்லை 12 மைல் ஆகும். எல்லையோரக் கடல் 12 மைல்களுக்கப்பால் செல்லு மானால், பன்னாட்டுச் சட்டத்திற்கு முரண்பட்டது ஆகும்.

கடல் வாணிகத்திற்குப் பயன்படுத்தப்படும் நெடு வழிக் கடல்களில் (High Seas) இடைப்படும் இத்த கைய கடலிடுக்குகள் வழியாக அனைத்து நாடுகளுக் கும் தீங்கற்ற வழியுரிமை (Right of Innocent Passage) உண்டு.

நாடொட்டிய கடல் பகுதி: எல்லையோரக் கடல் மற்றும் நாடொட்டிய கடல் பகுதி பற்றிய 1958-ஆம் ஆண்டில் ஏற்பட்ட செனிவா உடன்படிக்கையின்படி, ஒவ்வொரு நாடும் கரையோரத்திலிருந்து 12 மைல் அகலத்தை நாடொட்டிய கடற் பகுதியாகக் (Contiguous Zone) கொள்ளலாம். நாடொட்டிய கடல் பகுதியின் அகலம், எல்லையோரக் கடல் அளக்கப் படும் நிலைகளிலிருந்தே அளக்கப்படும். எல்லை யோரக் கடல் 12 மைல்களுக்குக் குறைவாக இருப் பின், நாடொட்டிய கடற்பகுதி அதற்கப்பாலும் செல்லும். ஆனால், கரையோரத்திலிருந்து 12 மைல் களுக்கப்பால் செல்லாது. கடலோரப் பகுதி நாடு (Coastal State), நாடொட்டிய கடற் பகுதியின் மீது முற்றுரிமைகள் (Sovereign Rights) பெற்றிருப்ப தில்லை. கடலொட்டிய பகுதி அரசு, தனது எல்லை யோரக் கடலிலும் ஆள்நிலத்திலும் அயல்நாட்டினர், சுங்கச் சட்டங்களையும் (Customs Laws), அரசிறை வருவாய்ச் சட்டங்களையும் (Fiscal Laws), குடி புகற் சட்டங்களையும் (Immigration Laws), மக்கள் நல்வாழ்வுச் சட்டங்களையும் (Public Health Laws) மீறினால், தக்க நடவடிக்கை எடுக்கும் உரிமையும் பெற்றுள்ளது. இத்தகைய அரசு மீன் பிடிக்கும் உரிமையை நாடொட்டிய கடற்பகுதியில் பெற்றி ருப்பதும் இல்லாததும் வழக்காற்று உரிமைகளைப் (Customary Rights) பொறுத்துள்ளன.

கண்டத்திட்டு: ஒரு கண்டத்தின் நிலப்பகுதி கடலுக்குக் கீழும் தொடருகிறது. கடலுக்குக் கீழ், கண்டத்தின் தொடர்ச்சி சீரான சாய்வுடன் செல் கிறது. அது, கடலில் ஏறத்தாழ 200 மீ. ஆழத்தை அடையும்பொழுது, திடீரெனக் கடலுக்குக் கீழுள்ள நிலம் அதிகம் சரிவுற்று அடிப்பாகம் நோக்கிச் செல்கிறது. அவ்விடத்தில் கண்டத்தின் தொடர்ச்சி அற்றுப் போகிறது. வேற்றுத் தன்மை யுடைய கடல் கீழ்ப்பகுதியில் காணப்படுகின்றது. கண்டத் தொடர்ச்சி திடீரெனச் சரிந்து போகின்ற வரையிலுள்ள பகுதி கண்டத்திட்டு (Continental Shelf) எனப்படும். கண்டத்திட்டுப் பற்றிய 1958-ஆம் ஆண்டு ஏற்பட்ட செனிவா உடன்படிக்கை (The Geneva Convention of 1958 on the Continental Shelf) கண்டத்திட்டினை வரையறை செய்துள்ளது. அதன் படி, கடல் நீராழம் 200மீ. அடையும்பொழுது ஒரு நாட்டின் கண்டத்திட்டு முடிவுறும் அல்லது அதற் கப்பாலும் எவ்வளவு தூரம், ஆழ்கடலின் ஆழம் இயற்கை வளங்களைச் சுரண்டியெடுக்க அனுமதிக் குமோ அவ்வளவு தூரம் கண்டத்திட்டுத் தொட ரும். மேலும், இந்தச்செனிவா உடன்படிக்கை தீவு களுக்கும் கண்டத்திட்டுக்கும் உண்டு.

மேலும், பொருளாதாரக் கடற் பகுதி (Economic Zone) என்ற ஒரு கடற் பகுதியிலும் நாடுகள் உரிமை கொண்டாடலாம் என்று எண்ணப்படுகிறது. இது கரையிலிருந்து 200 மைல் வரை போகலாம் என்றும் கருதப்படுகிறது.

குளங்களும் உள்நாட்டுக் கடல்களும்: ஒரு நாட்டின் நிலப்பகுதிக்குள்ளேயே அமைந்திருக் கும் குளங்களும் உள்நாட்டுக் கடல்களும் அந்த நாட் டின் ஆள்நிலத்தின் பகுதியாகவே கருதப்படும். அக் குளம் அல்லது கடல், இரண்டு மூன்று நாடுகளின் நிலப்பகுதிகளைத் தொட்டுக் கொண்டு இருந்தால் கரையோரக் கடலின் விதிகள் எடுத்தாளப்படும். இந்தக் கரையோர நாடுகளிடையே ஒப்பந்தமிருக்கு மிடத்து அந்த ஒப்பந்தம் கடைப்பிடிக்கப்படும். அதில் கூறப்பட்டுள்ள உரிமைகள் அனுபவிக்கப்படும்.

வளைகுடாக்களும் விரிகுடாக்களும்: இவற்றின் வாயில் ஆறு மைலுக்குக் குறைவாக இருந்தால் அது உள்நாட்டு நீர்ப்பரப்பாகக் கருதப்படும். ஆறு மைலுக்குமேல் இருந்தால் அதற்குக் கரையோரக் கடல் விதிகள் பொருந்தும். தொன்றுதொட்டு ஒரு குடா அந்நாட்டின் உள்நாட்டு நீர்ப்பகுதியாகக் கருதப்பட்டிருந்தால், அதன் நுழைவாயில் ஆறு மைலுக்கு மேல் இருந்தாலும் உள்நாட்டு நீர்ப்பரப்பாகக் கருதப்படும்.

துறைமுகங்கள்: துறைமுகங்கள், அந்நாட்டின் நிலப்பகுதியாகக் கருதப்படும். அவை அந்நாட்டின் முழு அதிகாரத்திற்குட்பட்டவை. இருந்தபோதிலும், அயல் நாட்டுக் கப்பல்களுக்கு அங்குச் செல்லும் உரிமைகள் உண்டு. கரையோரக் கடல், துறைமுகம், முதலியவிடங்களில் கரையோர நாட்டின் அதிகாரமே செல்லுபடியாகும். கரையோர நாட்டின் சட்டங்களும் அங்கு நடைமுறையிலிருக்கும். ஓர் அயல் நாட்டுக் கப்பல், கரை நாட்டின் சட்டத்திற்கு முரணாக நடந்துவிட்டால், அக்கப்பலைத் துரத்திப் பிடித்துத் துறைமுகத்திற்குக் கொண்டு வந்து தண்டனை விதிக்கலாம். அவ்வாறு துரத்தப்படும் கப்பல், அதன் நாட்டின் எல்லையோரக் கடலிலோ வேற்று நாட்டு எல்லையோரக் கடலிலோ நுழைந்து விட்டால் துரத்திப் பிடிக்கும் உரிமை அற்றுப் போகும்.

விண்வெளி, பூமியின் அடிப்பாகம், ஆழ்கடலின் மேலுள்ள வானம் அதிகாரத்தின் கீழ்க் கொண்டுவரப்படாத நிலப்பரப்பின் மேல் இருக்கும் விண்வெளி ஆகியவை அனைத்து நாட்டினருக்கும் பொதுவானவை. அந்தந்த நாட்டின் நிலப்பரப்பின் மேலுள்ள விண்வெளி, அந்தந்த நாட்டிற்கு மட்டும் உரிமை உடையது ஆகும். ஆயினும், எந்நாட்டு விண்வெளியிலும் தீங்கற்ற வழியுரிமை அனைத்து நாடுகளுடைய வான்கலங்களுக்கும் உண்டு.

நாடுகள் தங்கள் போர் விமானங்களையும் போக்குவரத்துக்குப் பயன்படாத வேறு விமானங்களையும் அயல் நாட்டின் ஆள்நிலத்தின் மேல் அனுப்ப அந்நாட்டின் இசைவினை முன்கூட்டியே பெறவேண்டும்.

ஆள்நிலம் சேர்த்தலும் இழத்தலும்: நாடுகள் ஆள்நிலம் சேர்க்கும் முறைகள் ஆட்சியின் கீழ்க் கொண்டு வரல் (Occupation), இணைத்தல் (Annexation), சேர்ப்பு (Accession), அனுபோகம் (Prescription), கொடுத்தல் (Cession) என ஐந்து வகைப்படும்.

ஆட்சியின் கீழ்க்கொண்டு வரல்: ஒரு நாடு, ஆளும் எண்ணத்துடன் மற்றொரு நிலப்பரப்பினைத் தனது ஆட்சியின் கீழ்க் கொண்டு வரலாம். இம்முறையில் சேர்க்கப்படும் நிலப்பரப்பு அதுவரை எந்த ஆட்சியின் கீழும் இருந்திருக்கக் கூடாது. ஆட்சியும் அரசுமில்லா நிலப்பரப்புகளைக் கண்டு பிடிக்கும் நாடுகள் அவற்றைத் தங்கள் நாடாகக் கருதலாம்.

இணைத்தல்: போரிலே வென்றநாடு, தோற்ற நாட்டை அடிமைப்படுத்தி, அதன் நிலப்பரப்பைத் தனது நிலப்பரப்புடன் சேர்த்தல் இணைத்தல் (Annexation) எனப்படும். போர் முடிந்த பின் ஆள் நில இணைப்பிற்கான அறிக்கை ஒன்று வெளியிடப்பட வேண்டும்.

சேர்ப்பு: இயற்கையாலோ செயற்கையாலோ ஒரு நாட்டின் ஆள்நிலப்பரப்பு மிகுதியாகலாம். ஆறுகள் சிறிது சிறிதாக ஒரு பக்கக் கரையை மிகுதியாக்கலாம். அன்றி, ஒரு கரையிலிருந்து பெரிய நிலப் பகுதியைப் பிரித்துக் கொண்டு வந்து மற்றொரு கரையில் அணைத்து, அந்த அண்டை நாட்டின் ஆள் நிலத்தை மிகுதிப்படுத்தலாம். ஓர் ஆறு வற்றி, அதன் அடிப்பாகம் நிலப்பகுதியாக மாறி ஆள்நிலத்தைப் பெருக்கலாம். கடல், கரையைவிட்டுச் சிறிது தள்ளிச் சென்று விடுவதாலும், புதிய ஆள்நிலப் பரப்புச் சேரலாம். இவை இயற்கையால் நிலம் சேர்தல் (Accession) ஆகும். செயற்கை முறையிலும் ஆள்நிலப் பகுதியை மிகுதிப்படுத்தலாம். எடுத்துக் காட்டாகக் கடலுக்குக் கரைகட்டி நிலத்தை மீட்கலாம்.

அனுபோகம்: நீண்டநாள் அனுபோகம் அந்த நிலப்பரப்பைக் குறிப்பிட்ட நாட்டின் ஆள்நிலமாகச் செய்யும். உள்நாட்டுச் சட்டப்படி ஒருவனது நிலத்தை மற்றொருவன் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்னவனது உரிமைக்கு எதிராக அனுபவித்தால் அந்த நிலம் அனுபோகத்தில் உள்ளவனுடைய உரிமை நிலமாகிவிடும். இது போன்று பன்னாட்டுச் சட்டத்தில் கூட நாடுகள் பிற நாட்டைச் சில ஆண்டுகள் அனுபோகத்தில் வைத்திருத்தலின் மூலம் அந்நாட்டைத் தமக்கு உரிமையாக்கிக் கொள்கின்றன. ஆனால், பன்னாட்டுச் சட்டம் இந்த அனுபோகம் (Prescription) எவ்வளவு காலத்திற்கு இருந்திருக்க வேண்டுமென்று கூறுவதில்லை.

கொடுத்தல்: ஒரு நாடு தனது முழு நிலப்பரப்பையோ, அதன் நிலப்பரப்பில் ஒரு பகுதியையோ மற்றொரு நாட்டுக்குக் கொடுத்து விடலாம். இவ்வாறு கொடுத்தல் (Cession) ஒப்பந்தத்தின் மேல் நடப்பது. இந்த நிலத்தின் ஆட்சியும் அந்த ஒப்பந்தத்தில் குறிப்பிட்டுள்ளபடிதான் நடக்கும். இந்த ஆள்நிலமாற்று ஒப்பந்தம், ஆள்நிலம் கைமாறினால்தான் நடைமுறைக்கு வரும்.

பல நாடுகள் ஒருமுகமாக முடிவுக்கு வந்த ஒரு நிலப்பரப்பை ஒரு நாட்டுக்கு வழங்கலாம். இவ்வாறு நிலம் சேர்க்கப்படுவதைத் தீர்மானப்படி நிலம்

சேர்த்தல் (Adjudication) என்று குறிப்பிடலாம். இது கொடுத்தல் முறையில் நிலம் பெற்றதாகக் கருதப்படும்.

ஒரு நாடு தனது நிலப்பரப்பில் ஒரு பகுதியை மற்றொரு நாட்டுக்குக் குத்தகைக்குக் குறிப்பிட்ட காலத்திற்கு விடலாம். அந்தக் காலம்வரை அந் நிலம் குத்தகைக்கு எடுத்த நாட்டின் நிலமாகக் கருதப்படும். இவ்வாறு குறிப்பிட்ட காலம்வரை நிலப்பரப்பைச் சேர்க்கும் முறையைக் குத்தகை முறையால் (Lease) நிலம் சேர்த்தல் என்று குறிப் பிடலாம்.

ஆள் நிலம் இழத்தல் கொடுத்தல் (Cession), இயற்கையின் விளைவுகள் (Operation of Nature), தோல்வி இழப்பும் அனுபோக இழப்பும் (Subjugation and Prescription), கைவிடல் (Dereliction), கிளர்ச்சி (Revolt) என்று ஐந்து வகைப்படும்.

அனுபோக வசதித்தடை: ஒரு நாடு பயனடையும் படியாக மற்றொரு நாட்டின் ஆள்நிலத்தின்மேல் கட்டுப்பாடுகள் விதித்து, அதற்கேற்ப அதன் ஆள்நில ஆதிக்கத்தை (Territorial Jurisdiction) உடன்படிக்கை மூலம் ஏற்படுத்தும் சிறப்புக் கட்டுப் பாட்டை அனுபோக வசதித்தடை (Servitude) எனலாம்.

அல்சேசு (Alsace) மாகாணத்திலிருக்கும் கியூ னின்சன் (Huiningen) என்னும் எல்லை நகரத்தில், சுவிட்சர்லாந்தின் பகுதியாகிய பாசில் (Basle) நாட் டின் பாதுகாப்புக்காகக் கோட்டை கொத்தளங்கள் என்றுமே எழுப்பப்படுதல்கூடாது என்று உடன் படிக்கை மூலம் ஒத்துக் கொண்டிருப்பது, பன்னாட்டு அனுபோக வசதித்தடைக்குச் சிறந்த எடுத்துக்காட் டாகும்.

இந்த உரிமை, நிலத்தோடு கூடிய நிலைத்த உரிமையாதலாலும், உலகறிந்தது ஆதலாலும், இந்த ஆள் நிலங்கள் கைமாறினாலும்,அவற்றின் மேலுள்ள அனுபோக வசதித்தடை அற்றுப் போகாது.

அனுபோக வசதித்தடைக் கோட்பாடு, உரோமா னிய உள்நாட்டுச் சட்டத்திலிருந்து எடுத்துப் பன் னாட்டுச் சட்ட நூலில் சேர்க்கப்பட்டுள்ளது. ஆனால், பன்னாட்டு அரங்கில் இது வெற்றி பெற வில்லை என்று அறிஞர் கூறுகின்றனர். இதனையே இசுடார்க்கு (Starke) என்னும் மேல்நாட்டு அறிஞர், ஒரு நாட்டு எல்லைக்குள் மற்றொரு நாட்டுக்குக் கொடுக்கப்படும் ஆள்நில வசதி நலன் (Territorial Facilities) என்று கூறுகிறார்.

துணை நூல்கள்:

Starke, J.G., Introduction to International Law, Ed., 8, Butterworths, London, 1977.

பழனிசாமி, அ., சர்வதேசச் சட்டம், பதி. 3, சி. சுப்பய்ய செட்டி & கோ, சென்னை, 1979.

**ஆள்மாறாட்டம் செய்து ஏமாற்றுதல்** என்பது ஒருவர் மற்றொருவராக நடிப்பது; ஒரு வரை மற்றொருவருக்குப் பதிலாக்குவது; தன்னை அல்லது மற்றொருவரை மாற்றி வேறொருவர் என்று தெரிவிப்பது ஆகிய இம்மூன்று வழிகளில் ஒன்றினைக் கையாண்டு அடுத்தவரை ஏமாற்றுதல் (Cheating by Personation) ஆகும். இது ஒரு குற்றம் (Crime) என்று இந்தியத் தண்டனைச் சட் டம் கூறுகிறது.

ஏமாற்றுவதற்குப் பல வகையான உத்திகள் கையாளப்படுகின்றன. அவற்றுள் ஆள் மாறாட்டமும் ஒன்று. ஆள்மாறாட்டம் என்றால், உருமாறி வேடம் போட வேண்டும் என்பதில்லை. தம் நடத்தையால், ஒருவர் மற்றொருவராக நடிப்பதே ஏமாற்றுவ தாகும்.

ஒருவர் பெயரில் உள்ள பயணச் சீட்டினை மற் றொருவர் வைத்துக் கொண்டு பயணம் செய்தல், தேர்வு எழுத வேண்டிய மாணவர் ஒருவருக்குப் பதி லாக மற்றொரு மாணவர் தேர்வு எழுதுதல், காவ லர் அல்லாத ஒருவர், தாம் காவல் துறையினைச் சார்ந்தவர் என்று கூறிப் பிறரை ஏமாற்றுதல் ஆகி யவை, ஏமாற்றுதல் என்னும் குற்றத்தைச் சார்ந்தன ஆகும்.

ஆகவே, ஆள்மாறாட்டம் செய்வது சொல் லாலோ செயலாலோ நடத்தையாலோ இருக்க லாம்.

ஒருவர் இன்னொருவராக ஆள்மாறாட்டம் செய்வது என்றால், 'அந்த இன்னொருவர்' உண்மை யான ஆளாக (Person) இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை; உயிருள்ளவராக இருக்க வேண் டும் என்ற அவசியமும் இல்லை. அவர் கற்பனைப் பெயரினராகவும் இருக்கலாம். இறந்துபோன ஒருவ ராக நடித்து ஏமாற்றுவதும் குற்றமே.

ஆள்மாறாட்டம் செய்து ஏமாற்றுபவருக்கு இந்தியத் தண்டனைச் சட்டப்படி மூன்றாண்டுக் காலம்வரை சிறை, ஒறுப்புத் தொகை ஆகியவை தண்டனைகளாகும்.

**ஆள்வலத் தேவைக் கல்வி:** பொருளா தார வளர்ச்சிக்குக் கல்வி ஒரு தலைசிறந்த காரணி

யாக விளங்குகிறது. மூலதனத்துடன் ஒரு நாட்டின் வளர்ச்சிக்குக் கல்வியின் பங்கும் அடிப்படையாக உள்ளது என்ற கூற்றைப் பொருளியல் வல்லுநர்கள் இப்போது நன்கு உணர்ந்துள்ளனர். மேலும் இன்று கல்விச் செல்வமானது ஒரு 'முதலீடாக'க் கருதப் படுகிறது. இவ்வாறு முதலீடாகக் கருதப்படும் கல்விச் செல்வமானது ஒரு நாட்டின் ஆள்வலத் தேவைக்கு (Man-Power Needs) ஏற்ப அளிக்கப்பட வேண்டும். அப்போதுதான் கல்வி, பொருளாதார வளர்ச்சிக்கு உறுதுணைபுரிய முடியும். ஆள்வலத் தேவைகளுக்கு ஏற்ப இக்காலத்தில் கல்வியை அளிக்க வேண்டியதன் இன்றியமையாமையை இன்றைய வளர்ந்துவரும் நாடுகள் நன்கு உணர்ந்துள்ளன.

ஆள்வலம்: இச்சொல் மனித ஆற்றலைக் குறிக்கிறது. ஆள்வலம் ஒரு நாடு பெற்றுள்ள மனித வளம் ஆகும். ஒரு நாட்டில் கிடைக்கக்கூடிய பல வகைப்பட்ட ஆள்வலம், அந்நாடு பெற்றுள்ள உழைக்கும் மனித வளத்தை உணர்த்துகிறது. சான் வைசி (John Vaizey) என்பவர், பொருளாதார வளர்ச்சி ஒரு குறிபிட்ட அளவிற்குக் கிடைக்கக் கூடிய பல வகைப்பட்ட திறமைகளையும் சார்ந்து இருக்கிறது என்பார். உயர்நிலை ஆள்வலம் என்பது, திறமை வாய்ந்த அலுவலர்கள், பொறியாளர்கள், தொழில் புரிவோர்கள், மற்றும் தொழிலாளிகள், பிற பணியில் உள்ளோர்கள் ஆகியவர்களைக் குறிக்கும்.

ஆள்வலத் தேவை: கோத்தாரிக் கல்விக்குழு (1966), தொடக்க நிலைக்கு மேல் உள்ள கல்வி நிலையங்களில் மாணவர்களின் சேர்க்கையை ஒழுங்கு படுத்த ஆள்வலத் தேவை பற்றிய மதிப்பீடுகள் பயனுடைய அடிப்படைகளாக விளங்குகின்றன எனக் கருதுகிறது. எதிர்காலத்தில் தேவைப்படும் ஆற்றல் வாய்ந்த, பயிற்சி அடைந்த, பயிற்சி அடையாத மற்றும் திறமையற்ற ஆள்வலம் பற்றிய மதிப்பீடுகளை முன்கூட்டியே திட்டமிட்டால், கல்வி நிறுவனங்கள் தேவையான ஆள்வலங்களை உற்பத்தி செய்ய ஏதுவாக அமையும். எ.வி. அலக்சு (Alex, 1983) என்பார், பொருளாதார வளர்ச்சிக்குக் கல்வி பயின்ற மக்களின் தொடர்ந்த பங்கேற்பு தேவைப்படுகிறது 'என்று கூறுகிறார். போதுமான அளவிற்குப் பயிற்சி பெற்ற ஆள்வலம், ஒரு நாடு பெற்றுள்ள நிலையான மனித வளத்தை உணர்த்துகிறது. மேலும் பல்வேறு உற்பத்தித் துறைகளிலும் திறம் வாய்ந்த மக்களின் ஆற்றலை நல்லமுறையில் பயன்படுத்திக் கொள்ளவும் இந்த ஆள்வலம் காரணமாக அமைகிறது.

கல்வி: கல்வி, மாந்தரின் அடிப்படைத் தேவையும் உரிமையும் ஆகும். எல்லோருக்கும் ஒரு குறிப்பிட்ட அளவிற்குக் கட்டாயக் கல்வி இன்றியமையாததாகும். ஏனெனில் ஒருவரது **வேலையின் தன்மையினை அவரது கல்வியே வரையறுக்கிறது. கல்வித் தேவையை உயர்த்த ஆள்வலத் தேவையானது,** மற்ற எல்லாப் பொருளாதாரக் காரணிகளைக் காட்டிலும் தலைசிறந்ததாகக் கருதப்படுகிறது. உயர் கல்வியின் வளர்ச்சிமுறையானது, ஆள்வலத் திட்டமிடுதலைப் பொறுத்திருக்கிறது எனக் கூறலாம். கோத்தாரிக் கல்விக் குழு, இப்போது உள்ள கல்வி முறையில் கல்விக்கும் வேலைக்கும் நேரிடையான தொடர்பு ஏதும் இல்லை எனக் கருதுகிறது. ஆனால் இவை இரண்டுக்குமிடையே ஒரு நெருங்கிய எதிர் மறையான தொடர்பு உள்ளது என்பதற்குப் பல்வேறு சான்றுகள் உள்ளன என மார்க்கு பிளாகு (Mark Blaug 1976) கூறுகிறார்.

ஆள்வலத் தேவை பற்றிய மதிப்பீடுகள்: எதிர்காலத்தில் தேவைப்படும் பல்வேறு ஆள்வலத் தேவைகளைப் பற்றிய மதிப்பீடுகள் எண்களாகத் தரப்படுகின்றன. இவ்வெண்களைக் கணக்கிடும் முன் ஆள்வலம் பற்றிய ஆய்வுகள் (Survey) மேற்கொள்ளப்பட வேண்டும். ஆள்வலத் தேவைகள் பற்றிய மதிப்பீடுகளைக் கணக்கிடச் சிலமுறைகள், நடைமுறையில் பின்பற்றபட்டு வருகின்றன. எடுத்துக்காட்டாக, உற்பத்தித் திறனில் ஏற்படும் மாறுதல்களைப் பொறுத்து, ஆள்வலத் தேவைகளைக் கணக்கிடும் முறை, வரலாற்று அணுகு முறை எனப்படும்.

ஆள்வலத் தேவைகளைத் திட்டமிடுதல்: ஆள்வலத் தேவை பற்றித் திட்டமிடுதல், கல்வித் திட்டமிடுதலின் ஓர் உட்கூறாகக் கருதப்படும். அலெக்சாண்டர் வி. அலெக்சு ஆள்வலத் திட்டமிடுதலில் இரண்டு பகுதிகள் உள்ளன எனத் தெரிவிக்கிறார். அவை 1) நாட்டின் ஆள்வலத் தேவை பற்றிய மதிப்பீடுகளை வரையறுத்தல். 2) ஆள்வலத் தேவைகளை அவை கிடைக்கும் அளவுடன் ஒருங்கிணைத்துப் பார்த்தல். எ.ஆர். இசுமித்து (A.R. Smith) என்பவர் ஆள்வலத் திட்டமிடுதல், ஆள்வலத் தேவை, ஆள்வலம் கிடைக்கும் அளவு ஆகியவற்றை எதிர்நோக்குவதுடன், அவற்றை ஒரு துணையான நிலையில் ஒன்றுக்கொன்று சமப்படுத்த மேற்கொள்ளப்படும் நடவடிக்கையைக் குறிக்கிறது என விளக்குகிறார்.

இந்தியாவில் ஆள்வலத் திட்டமிடுதல்: நம் நாட்டின் மூன்றாம் ஐந்தாண்டுத் திட்டக் கோப்புகளில், கல்வி பற்றிய பகுதியானது, 'கல்வியும் தேசிய வளர்ச்சியும்' என்ற தலைப்பின் கீழ்த் தரப்பட்டுள்ளது. இதேபோல் நான்காம் ஐந்தாம் ஐந்தாண்டுத் திட்டக் கோப்புகளில், கல்வி பற்றிய பகுதி, 'கல்வியும் ஆள்வலமும்' என்ற தலைப்பின் கீழ் உணர்த்தப் பட்டது. இந்தியாவில் இப்போதுதான் ஆள்வலத்

திட்டமிடுதலில் நாட்டம் செலுத்தப்படுகிறது. 1947-இல் தான் முறையான ஆள்வலக்குழு ஒன்று அமைக்கப்பட்டது.

இந்தியாவில் ஆள்வலத் திட்டமிடுதலுக்கான முதற்பணிகள் 1956-ஆம் ஆண்டில் மேற்கொள்ளப்பட்டன. தலைமை அமைச்சரைத் தலைவராகக் கொண்ட அமைச்சர்களை உள்ளடக்கிய ஆள்வலக் குழு ஒன்று அமைக்கப்பட்டது. புதுதில்லியில் ஆள்வல ஆராய்ச்சிக்கான நிறுவனம் ஒன்று 1962-இல் நிறுவப்பட்டது. இப்போது மைய அரசின் கீழ்க்கண்ட நிறுவனங்கள், ஆள்வலத் தேவை மதிப்பீடு நடவடிக்கைகளில் பங்கு பெறுகின்றன. அவை 1. திட்டக் குழுவில் ஓர் உட்கூறான ஆள்வலமும் வேலைப் பகுதியும். 2. உள்நாட்டுத் துறைகளில் உள்ள ஆள்வல இயக்குநரகம். 3. பல்துறை ஆள்வலத் தூண்டற் குழு. இவை தவிர மாநில அளவிலும் ஆள்வலக் குழுக்கள் உள்ளன. மேலும் அறிவியல், தொழில் பற்றிய ஆராய்ச்சி நிறுவனம் (CSIR), வேலை வாய்ப்புப் பயிற்சிக்கான மேலாண்மை இயக்குநரகம் (DGET) ஆகியன ஆள்வலத் திட்டமிடுதலில் சிறந்த பணிகளைச் செய்கின்றன.

**ஆள்வலத் தேவையும் கல்வியும்:** கல்வியின் அமைப்பினையும் வசதிகளையும் ஆள்வலத் தேவைக்கு ஏற்ப அமைத்துத் தருதல் நலம் பயக்கும். இந்நடவடிக்கைகளில் கோத்தாரிக் கல்விக் குழு கீழ்க்கண்ட பரிந்துரைகளைத் தந்துள்ளது. அவையாவன: 1. பள்ளி மற்றும் கல்லூரிக் கல்வி நிலையங்களில் முன்னுரிமை அடிப்படையில் தொழில் நுட்பக் கல்வியினை ஆள்வலத் தேவைக்கு ஏற்ப அளிக்க வேண்டும். 2. வேலையின்மைச் சிக்கல் தவிர்க்கப்பட வேண்டுமானால், திட்டமிடப்படாத, நெறிப்படுத்தப்படாத மாணவர்களின் சேர்க்கைகள் உயர் கல்வி மற்றும் மேல்நிலைக்கல்வி நிலைகளில் தவிர்க்கப்பட்டு வரையறைப் படுத்தப்பட வேண்டும். 3. இந்தியா, பொருளாதார வளர்ச்சிக்காகக் கொண்டுள்ள திட்ட இலக்குகளை அடைய வேண்டுமானால், ஒவ்வொரு வேலையையும் தகுந்த முறையில் செய்து முடிப்பதற்கு வேண்டிய கல்வி வல்லுநர்களின் பங்களிப்புப் போதுமான அளவுடையதாக இருக்க வேண்டும். 4. ஆள்வலத் தேவைகளின் மதிப்பீடுகளை அனைத்து நாட்டு வளர்ச்சித் துறைகளிலும் கணிப்பதற்குத் தேசிய அளவில் திட்டக்குழுவிற்குப் பொறுப்பு உள்ளது. மாநில ஆள்வலக் குழுக்களை ஏற்படுத்தி, மாநில அளவில் ஆள்வல வளர்ச்சிக்கான திட்டங்களைத் தயாரிக்க வேண்டும். இவ்வாறே மாவட்ட அளவிலும் செயற்படுத்த வேண்டும். இவ்வகை நடவடிக்கைகளில் மாநிலத்தில் உள்ள பல்கலைக் கழகங்களும் இணைந்து பணியாற்ற வேண்டும். 5. ஒவ்வொரு கல்வியாளருக்கும் அவருக்குத் தகுந்தாற்போல் வேலையும், குறிப்பிட்ட ஒவ்வொரு வேலைக்கும் தனித்திறன்கள் பொருந்தியுள்ள ஆள்வலமும் இருக்க வேண்டுமென்றால், முழுமையாக்கப்பட்ட வளர்ச்சித் திறன் கொண்டுள்ள ஒரு திட்டம் நிறைவேற்றப்பட வேண்டும். அத்திட்டத்தில் குடும்பநலம், பொருளாதார வளர்ச்சி, கல்விச் சீரமைப்பு என்ற மூன்று பகுதிகளும் இடம் பெற்றிருக்க வேண்டும். இந்நிலை ஏற்படுமானால் ஆள்வலத் திட்டம் சிறந்த முறையில் செயலாகும். 6. உயர் கல்வியின் வளர்ச்சிக்கும், ஆள்வலத் தேவைக்கும் இடையே ஒரு தொடர்பு தேவை என்ற பரிந்துரைகளைக் கோத்தாரிக் குழு ஒப்புக் கொண்டுள்ளது. 7. ஆள்வலத் தேவை பற்றிய மதிப்பீடுகள் அல்லது வேலை வாய்ப்புகள் பற்றிய விவரங்கள், கல்வியின் வளர்ச்சி பற்றிய திட்டமிடுதலுக்கு ஒரு நல்ல அடிப்படையாக அமைந்துள்ளன.

இந்தியாவில் உள்ள படித்த இளைஞர்களிடையே இன்று நிலவும் வேலையில்லாத் திண்டாட்டத்திற்கு ஒரு காரணம், ஆள்வலத் திட்டமிடுதல் மேற்கொள்ளப்படாததாகும். அதனால்தான், கல்லூரிகளில் தேவைக்கும் மிகுதியாக மாணவர்கள் சேர்க்கப்பட்டனர். பொதுவாகப் பொருளாதார வளர்ச்சியில் ஏற்பட்ட முன்னேற்றத்தைக் காட்டிலும் கல்வி வளர்ச்சியில் ஏற்பட்ட முன்னேற்றம் மிகுதியாய் இருந்தது. வளர்ந்து வரும் நாடாகிய இந்தியாவில் ஆள்வலத் திட்டமிடுதல், வளர்ச்சிக்கு நல்ல வழிகாட்டியாக அமையும். எதிர்காலத்தில் தேவைப்படும் ஆள்வல மதிப்பீடுகள். காலப்போக்கில் அறிவியல், தொழில் நுட்பம் ஆகியவற்றால் விளையும் முன்னேற்றம் காரணமாகப் பயனளிக்காமற் போனாலும், அவ்வகை மதிப்பீடுகள், கல்வி நிறுவனங்கள் எத்துறைகளில் நாட்டம் செலுத்த வேண்டும் என்பதற்கும், போதுமான அளவிற்கு எல்லாத் துறைகளிலும் பயின்ற மாணவர்களை அளிப்பதற்கும் ஒரு வழிகாட்டியாக இருக்கும்.

கல்வித் தொடர்பாக இந்தியாவில் அமைக்கப்பட்ட பல்வேறு குழுக்களான 1. திரு. இராதாகிருட்டிணன் தலைமையிலான பல்கலைக் கழகக் கல்விக் குழு, 2. திரு ஏ. எல். முதலியார் தலைமையிலான பள்ளிக் கல்விக் குழு, 3. பொறியியல் வல்லுநர்கள் பற்றிய குழு (Engineering Personal Committe 1956) 4. கோத்தாரிக் கல்விக் குழு ஆகியயாவும், ஆள்வலச் சிந்தனைகளைப் பற்றி நாட்டம் செலுத்தியுள்ளன.

கல்விப் பணி, மக்களுக்கும் அரசிற்கும் நன்மை

பயக்கவும் அவர்களின் முன்னேற்றத்திற்கு உறுதுணை யாக விளங்கவும் கல்வித் திட்டங்கள், ஆள்வலத் தேவை பற்றிய மதிப்பீடுகளைக் கருத்திற் கொண்டு வரையப்பெற்று நடைமுறைப்படுத்தப்பட வேண்டும். ஏனெனில்,கல்வியில் செய்யப்படும் முதலீடு, ஆள்வலத் தேவைக்கு ஏற்ப அமைய வேண்டும் என்பதில் சிறி தும் ஐயமில்லை.

"திறமை உள்ளவர் பற்றாக்குறை, வளர்ச்சி யைத் தடை செய்கிறது' என்ற ஆதம் கர்லியின் (AdamCurlie) கூற்று கல்வியும் ஆள்வலத் தேவையும் ஒன்றுடன் ஒன்று இயைந்து செல்ல வேண்டும் என்ற கருத்தைப் புலப்படுத்துகிறது. ஆர்.சீ.

துணை நூல்கள்:

**Education and National Development** - Report of Education Commission, 1966.

**John Vaizey,** The Economics of Education, Macmillan, London, 1973.

**Mark Blaug,** An Introduction to the Economics of Education, Penguin Book, 1976.

**Alex A.V.,** Human Capital Approach to Economic Development, Metropolitan, New Delhi, 1983.

**Adam Curlie,** Educational Strategies for Developing Societies, TAVI Stock Publications Ltd., London, 1970.

***ஆள்வார்*** இராசபுதனத்தில் இருக்கும் ஒரு பழமையான ஊர். இவ்வூரை ஆம்பர்நாட்டு கசக வாகாக் குடும்பத்தைச் சார்ந்த அலதுராயர் என்பவர் ஏற்படுத்தினார். பெரிசுடா (Ferishta) என்னும் இசுலாமியப் பயணி இந்நகரைப் பற்றித் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார். ஆள்வார் இராசபுத்திரர் களுக்கும், ஆசுமீர் இராசபுத்திரர்களுக்கும் இடையே போராட்டம் கி.பி. 1195-ஆம் ஆண்டு நடந்தது என்று பெரிசுடா குறிப்பிட்டுள்ளார். இவ்வூர்ப் பல் வேறு அரச மரபுகளின் ஆளுகைக்குட்பட்ட வரலாற் றைக் கல்வெட்டுகள் மூலமும் ஏனைய சான்றுகளின் மூலமும் அறியலாம்.

பகாதுர நாகரா என்னும் பெயர்கொண்ட இராசபுத்திரர் ஒருவர் இப்பகுதியின் ஆளுநராக இருந்தார். இவர் சமயம் மாறித் தில்லிச் சுல்தான் பிரோசா துக்ளக்கின் நன்மதிப்பைப் பெற்றார். பாபரின் காலத்தில், ஆள்வார் கோட்டை பாபரின் படை அதிகாரி பாதிகான் வசம் ஒப்படைக்கப்பட் டது. பாபரும் இவ்வூரில் தங்கி இருந்திருக்கிறார். அக்பர் பதேப்பூர் சிக்ரிக்குச் செல்லும்பொழுது ஆள் வாரினைப் பார்வையிட்டுப் பின்னர் பதேப்பூர் சிக்கி ரிக்குச் சென்றார். அவருடன் வரலாற்று ஆசிரியர், பதோனியும் இந்நகருக்கு வருகை புரிந்தார். அப் போது ஆள்வார், இசுலாமிய சமய குரு சேக்முபாரக்கு மௌலானா என்பவரின் உறைவிடமாக இருந்து வந்தது. இவரை அக்பர் சந்தித்ததாகத் தெரிகிறது. 'அயினி அக்பரி' என்னும் நூல், மேவாரின் மூன்று பகுதிகளில் ஆள்வார் ஒரு பகுதி என்றும், ஆள்வார் மேலும் நாற்பத்துமூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட் டது என்றும் கூறுகிறது. இந்நகருக்கு அருகில் அழகு மிக்க வரலாற்றுச் சின்னம் உள்ளது. இதன் பெயர் மோதி தூங்காரி அல்லது பான்னிபிளாசா என்ப தாகும். இங்குப் பல கோயில்களும் மசூதிகளும் கல்லறைகளும் சமண மடாலயங்களும் உள்ளன.

***ஆளத்தி*** என்பது ஆலாபனையைக் குறிக்கும். அகளித்துப்பாடுவது - ஆளத்தி, ஒரு பண்ணுக்குரிய கோவைகளைப் (சுரங்களைப்) பல்வேறு வகை வகை யாகப் பின்னிப் பின்னிப் பிணைந்து மெலிவு, சமன், வலிவு ஆகிய சுரத்தான நிலைகளிலும் (3 தாயிகளி லும்) நிரவிச் சுவை தோன்றப் பாடுவதே ஆளத்தி யாகும்.

ஆளத்தி பாடுதற்குப் பதினோரு வகை இலக் கணங்களைச் சிலப்பதிகார அரும்பத உரை கூறு கிறது. 'இசைப்புலவன், ஆளத்தி வைத்த பண்ணீர் மையை, முதலும் முறையும் முடிவும் நிறைவும் குறைவும், கிழமையும், வலிவும் மெலிவும் சமனும் வரையறையும், நீர்மையும் என்னும் பதினோரு பாகுபாட்டினாலும் அறிந்து, அவை தாளநிலையில் எய்த வைத்த திறம் தன் கவியினிடத்தே தோன்ற வைக்க வல்லன்' என்பது உரைச்செய்தி (சிலப். 3:41-2 அரும்பதவுரை)

பண் பகுதியில் முதலில் தொடுக்கப்படும் சுரமும், அச்சுரத்தைச் சுற்றிச் சுரக்கோப்பு அமைப்பதும் 'முதல்' அல்லது தொடக்கம் எனப்படும்.

பண்ணை வளர்த்துப்பாடும் முறைமைகள்: நாலன் நடை, மூன்றன் நடை, ஐந்தன் நடை, ஏழன் நடை முதலிய நடைகளில் (சதுசுரம், திசுரம், கண் டம், மிசிரம்) சுரங்களை அடுக்கிக் கோத்து வளர்ப் பது முறைமை எனப்படும். இதில் சுர அணி அடுக்கு களும், இரட்டை அடுக்குகளும், தாண்டு அடுக்கு களும் இடம்பெறும்.

மேற்காட்டிய நடைகளைக் கோக்குங்கால், ஒவ் வொரு நடைப்பகுதிக்கும் ஈற்றில் ஒரு முடிவு காட்டு வதே 'முடிவு' எனப்படும். அடுத்த பகுதிக்குச் செல் லப் போவதையும் இம் 'முடிவு' என்பது காட்டுகிறது.

ஒவ்வொரு பண்ணிலும் நீண்டு ஒலித்தற்குரிய சுரங்கள் உண்டு. அவற்றை மரபாக நீள ஒலித்து நின்று நிறைப்பது நிறைவு எனப்படும். இது இன்று பகுத்துவம்' எனப்படும்.

ஒவ்வொரு பண்ணிலும் குறுகி ஒலித்தற்குரிய சுரங்கள் உண்டு. அவற்றைக் கடந்து செல்லுங்கால் மரபாகக் குறுகி ஒலிப்பது குறை எனப்படும். இது இன்று 'அற்பத்துவம்' எனப்படும்.

தென்னக இசையில் குரல் இளிக்கிழமை ('ச-ப' உறவு), குரல் உழைக்கிழமை (ச-ம உறவு), குரல் காந்தாரக் கிழமை (ச-க உறவு) என மூன்று கிழமைகள் உள்ளன. (வேனிற்காதை 39-41) உரை இவற்றை முறையே இணை, கிளை, நட்பு என்றனர். 'இணைகிளை பகைநட்பு என்றிந் நான்கின் இசை புணர் குறிநிலை எய்த நோக்கி, - (சிலப். 8:33 - 4) என்றார் இளங்கோவடிகளார்.

இணை கிளை நட்புகளை வீடுகளில் காணும் முறை வருமாறு:

1. இணை - ஏழாம் நரம்பு இணை:

| ச | ரி | ரி | க | க | ம | ம | ப | = | ச | → | ப |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 0 | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | = | 0 | → | 7 |

2. கிளை - ஐந்தாம் நரம்பு கிளை:

| ச | ரி | ரி | க | க | ம | = | ச | → | ம |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 0 | 1 | 2 | 3 | 4 | 5 | = | 0 | → | 5 |

3. நட்பு - நாலாம் நரம்பு நட்பு:

| ச | ரி | ரி | க | க | = | ச | → | க |
|---|---|---|---|---|---|---|---|---|
| 0 | 1 | 2 | 3 | 4 | = | 0 | → | 4 |

இவ்வரையறைகளைக் கல்லாட நூலுள் ஒரு மேற்கோள்பாடல் காட்டுகிறது. மேற்கண்டவாறு, நின்ற நரம்புக்கு (சுரத்திற்கு) மேலே எண்ணிக் கணக்கிட்டு, எய்தும் நரம்பைக் கண்டு கொள்ளுதல் வேண்டும்; இவ்வாறு ஆளத்தியில் பண்ணிற்குரிய இணை, கிளை, நட்புக் கிழமை நரம்புகளை இணைத்துப்பாடுவது-கிழமை பாடுவதாகும்.

சமன் மண்டிலத்திற்கு (மத்திம தாயினுக்கு) மேலே நாலைந்து சுரங்கள் வரை பாடுவது வலிவுத் தானநிலை பாடுதலாகும் (உச்ச தாயி). சமன் மண்டிலத்திற்கும் கீழே மூன்று நான்கு சுரங்கள் வரை பாடுவது மெலிவுத் தானநிலை பாடுதலாகும் (மந்தர தாயி). சமன் மண்டிலத்திலே பண்ணைப்பாடுதல் சமன் தான நிலை பாடுதலாகும். ஒரு தான நிலையில் நின்று பாடும்போது-பிற தான சுரங்களையும் ஒருவாறு இணைத்துக் கொள்ளல் இன்பம் பயப்பதாகும்.

ஒவ்வொரு பண்ணும் இந்த இந்த நேரத்திற்குரியது என்றும், இந்த இந்தச் சுவைக்குரியது என்றும், இந்த இந்தச் சுரங்களை ஏறு இறங்கு நிரல்களில் கொண்டது என்றும் வரையறைகள் உள்ளன. பண்ணுக்குரிய உயிரான நரம்புகள் பற்றிய வரையறையுமுண்டு.

பண்ணில் நீட்டல் குறுக்கல் இடங்களில் இட வேண்டிய வகைபெறு சுரங்கள் – 'ஈடு கோவை' எனப்படும். பண்ணில் நீக்க வேண்டிய சுரம் 'ஓரீஇக்கோவை' எனப்படும். சொற்களை இசை பூணும்படி வைத்தல், பண்ணைப் பகுதிகளாக வகுத்தல், வகுத்தவற்றைத் தொகுத்தல், விரித்தல்–முதலிய ஆளத்தி முறைகளை இளங்கோ அரங்கேற்று காதையில் குறித்துள்ளார் (சிலப். 3:30-41); பண்ணிலே நிறம் தோன்ற வைத்தல் என்பது வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல் முதலிய உள்ளோசைகளை நிறைத்து உணர்ச்சி தோன்றவைத்தல் ஆகும். இவையே நீர்மை என்னும் பதினோராவது இலக்கணம்.

இவ்வாறு பண்களைப் பகுத்துப் பாடும் முறை சிலப்பதிகாரக் காலத்திலிருந்து வருகிறது. இன்றும் இம்முறைகள் நடைமுறையில் உள்ளன; இவற்றால் தென்னக ஆளத்தி பாடும் முறை மரபாக வருவது அறியலாகும்.

வீ.ப.கா.சு

**ஆளவந்தார்[1]:** (கி.பி. 11-12-ஆம் நூற்றாண்டு) வைணவ ஆசாரிய பரம்பரையில் முதலாவதாகச் சிறப்பிக்கும் பெருமை பெற்றவர். ஆசாரிய பரம்பரையின் முதல்வர் நாதமுனிகள். அவருடைய காலம் கி.பி. 10-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியும் கி.பி.11-ஆம்நூற்றாண்டின் முற்பகுதியும் ஆகும். அவருடைய மாணவர்களுள் சிறப்பானவர் உய்யக்கொண்டார். உய்யக்கொண்டாரின் நெருக்கமான மாணவர் மணக்கால் நம்பி. நம்பியின் தலையான மாணவரே ஆளவந்தார். சிம்மேந்திரர், பெரிய முதலியார், யமுனாசாரியார், யமுனைத்துறைவர் ஆகிய பெயர்களால் விளங்கும் ஆளவந்தார் நாதமுனிகளின் பேரரும், ஈசுவர முனிகளின் மகனும் ஆவார்.

ஆளவந்தாரின் மாணாக்கரான பெரிய திருமலை நம்பி, திருக்கச்சி நம்பி, திருக்கோட்டியூர் நம்பி ஆகியோர் திருப்பெரும்பூதூர் இராமாநுசரின் (கி.பி. 1137) ஆசிரியர் ஆவர். எனவே ஆளவந்தாரின் காலம் கி.பி. 11-12-ஆம் நூற்றாண்டின் இடைப்பட்ட காலம் என்பர். இவர் செய்த நூல்கள் ஆகமப் பிரமாணியம், புருட நிர்ணயம், ஆத்ம சித்தி, கீதார்த்த சங்கிரகம், சிரீதோத்திரம், சதுச்சுலோகி என்பனவாகும்.

த.கோ.

**ஆளவந்தார்[2]:** கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் தமிழகத்தில் வாழ்ந்த வடமொழி வல்ல தமிழ்ப் புலவர்களில் ஒருவர். பாண்டி நாட்டினைச் சார்ந்த வீரை என்னும் ஊரில் பிறந்தவர். அதனால் அவ்வூர்ப் பெயரையும் சேர்த்து வீரை ஆளவந்தார் எனவும் இவர் வழங்கப்படுகிறார். இவரது ஊர் வேம்பத்தூர் என்று கூறுவாருமுளர். இவர் மாதவப் பட்டர் (மகாதேவபட்டர்) எனப் பெயரிய முனிவர் மரபில் தோன்றிய அந்தணராவார். இவர் வேதாந்தக் கோட்பாட்டினை நன்குணர்ந்து தம் மாணவர் பலர்க்கும் அதனை விளக்கி வந்தார். வடமொழியில் அமைந்துள்ள வாசிட்டம் என்னும் வேதாந்த நூலைத் தமிழில் விருத்தயாப்பிலமைத்து, 2055 செய்யுட்கள் கொண்ட சிறந்த நூலாக இயற்றியுள்ளார்.

ஞான வாசிட்டம் என்பது வசிட்ட முனிவர் இராமபிரானுக்கு ஆன்ம ஞானம் உண்டாவதற்காக அறிவுறுத்தியதாகும். அப்பொருளை வான்மீகி முனிவர் பாரத்துவாச முனிவருக்குக் கூறுவதாக நூல் அமைந்துள்ளது. ஆளவந்தார் தமிழில் பெயர்த்தமைத்த இந்த நூலை 'ஞானவாசிட்ட அமல ராமாயணம்' என்றும் வழங்குவர். இது வைராக்கியப் பிரகரணம் முதலாக நிருவாணப் பிரகரணம் ஈறாக ஆறு பிரகரணங்களைக் கொண்டது. பொறையாறு எனப்படும் பிறையாறு என்னும் ஊரில் வாழ்ந்த அருணாசல சாமிகள் இந்நூலுக்குச் சிறப்பான உரை வரைந்துள்ளார். இவ்வுரையாளர், அவர் தம் ஊர்ப் பெயரோடு சேர்த்துப் பிறசை அருணாசல சுவாமிகள் எனஅழைக்கப்பட்டார். இந்த ஞானவாசிட்ட உரை, தரங்கையில் வாழ்ந்த சபாபதி என்பாரின் வேண்டுகோளின்படி எழுதப்பட்டது. முதன் முதலாக கி.பி. 1870-இல் பதிப்பிக்கப்பெற்ற இவ்வுரை, சென்ற நூற்றாண்டில் பலமுறை மீண்டும் பதிப்பிக்கப்பட்டுள்

ளமை கொண்டு, இந்நூலிற்கும் உரைக்கும் இருந்த நன்மதிப்புப் புலனாகும்.

**ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்** திருஞான சம்பந்தர் மீது இயற்றப்பட்ட பிரபந்தங்களுள் ஒன்று. இதனை நம்பியாண்டார் நம்பி இயற்றியுள்ளார். இவர் திருநாரையூரில் தோன்றியவர்; ஆதிசைவ மரபினர். இவர் காலம் கி.பி. 9-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியும் 10-ஆம் நூற்றாண்டின் முற் பகுதியும் ஆகும். இவர் ஆளுடைய பிள்ளையார் என வழங்கப் பெற்ற ஞானசம்பந்தரைத் தம் ஞானாசிரியராகக் கொண்டு வழிபட்டு வந்தார். அவரைப் பாராட்டி ஆறு பிரபந்தங்கள் இயற்றியுள்ளார். அவர் பெயரால் இந்நூல் 'ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்' என்னும் பெயர் பெற்றுள்ளது. இது, சைவத்திருமுறை பன்னிரண்டில், பதினோராம் திருமுறையில் இடம் பெற்றுள்ள 40 பிரபந்தங்களுள் ஒன்றாய்த் திகழ்கிறது. இந்நூல் 49 செய்யுள்களையே கொண்டுள்ளது. அப்பாடல்கள் அந்தாதி அமைப்பில் உள்ளனவேனும், நூலின் தொடக்கமும் இறுதியும் மண்டலித்து முடியாமையால் இதன் ஈற்றில் பாடல்கள் ஏட்டுச் சிதைவால் அழிந்துபட்டிருக்கலாம் என்று ஆய்வாளர்கள் கருதுகிறார்கள். இதன் முதலில் அமைந்துள்ள ஒரு போகு சொச்சக் கலிப்பாவில் தரவு என்னும் பகுதி காணப்படவில்லை. அதுவும் சிதைந்துபட்டிருத்தல் கூடும். இக் கலம்பகப் பாடல்கள், திருஞான சம்பந்தரின் அருட்செயல்கள், அவர்தம் தேவாரத் திருப்பதிகங்களின் சிறப்பு ஆகியவற்றைத் தெளிவுபடக் குறிப்பிடுகின்றன.

**ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம்** சைவ சமயப் பனுவலான பன்னிரு திருமுறைகளுள் பதினொன்றாம் திருமுறையில் அடங்கியுள்ள 40 பிரபந்தங்களுள் ஒன்றாகும். இதனை நம்பியாண்டார் நம்பி இயற்றியுள்ளார். இவர் திருநாரையூரில் ஆதிசைவ மரபில் தோன்றியவர். இவர் காலம் கி.பி. 9-ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியும் 10-ஆம் நூற்றாண்டின் முதற் பகுதியும் ஆகும். இவர் திருஞானசம்பந்தரை ஞான குருவாகக் கொண்டு வழிபட்டு வந்தார். இவர் தம் ஞானகுருவின் மீது பாடியுள்ள 6 பிரபந்தங்களுள் திருச்சண்பை விருத்தம் ஒன்றாகும். ஆளுடைய பிள்ளையார் என்பது திருஞானசம்பந்தரின் வேறு பெயராகும். சண்பை, திருஞானசம்பந்தர் தோன்றிய சீகாழிப் பதிக்குரிய பன்னிரண்டு பெயர்களுள் ஒன்று. இந்நூல் பதினொரு கட்டளைக் கலித்துறைச் செய்யுள்களால் ஆகியது. இறுதியில் அமைந்துள்ள விருத்தம், முன்னர் அமைந்துள்ள பத்து விருத்தங்களின் தொடக்கச் சீர்களைக் கொண்டமைக்கப்பட்ட முதல் நினைப்பு விருத்தமாகும். திருஞானசம்பந்தரின் வரலாறு நிகழ்ச்சிகள் பலவற்றினைக் குறிப்பிட்டுப் போற்றுவனவாக இந்நூலின் பாடல்கள் அமைந்துள்ளன. திருஞானசம்பந்தர் தோன்றிய சீகாழியின் (சண்பை நகர்) சிறப்பினை விளக்குவதால் இந்நூல், ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம் என்னும் பெயர் பெற்றது. சிவபெருமான் அருளைப் பெறத் தமிழில் வழிகண்டவர் என்னும் கருத்தில் 'ஆற தேறும் சடையான் அருள் மேவ, அவனியர்க்கு, வீறதேறும் தமிழால் வழி கண்டவன்' என்று இந் நூல் திருஞானசம்பந்தரைப் போற்றுகிறது.

**ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை:** சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் பதினோராந் திருமுறையில் அடங்கிய 40 பிரபந்தங்களுள் ஒன்று. இது நம்பியாண்டார் நம்பி அவர்களால் இயற்றப்பட்டது. திருநாரையூரில் தோன்றிய இவர், ஆதிசைவ மரபில் வந்தவராவார். இவர் காலம் கி.பி. 9-ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியும் 10-ஆம் நூற்றாண்டின் முதற் பகுதியும் ஆகும். இவர் சைவ சமயாச்சாரியர்களுள் ஒருவரான திருஞான சம்பந்தரை ஞான குருவாகக் கொண்டார். இவர் தம் ஞானகுருவைப் போற்றிப் பாராட்டி ஆறு பிரபந்தங்கள் இயற்றியுள்ளார், அவற்றுள் ஒன்று இப்பிரபந்தம். இதன் பெயரில் அமைந்துள்ள ஆளுடைய பிள்ளையார் என்பது, திருஞான சம்பந்தரைக் குறிக்கும். கலிவெண்பாவில் அமைந்துள்ள இப்பிரபந்தம் 65 அடிகளைக் கொண்டுள்ளது. இந் நூலில் திருஞானசம்பந்தரின் வரலாற்று நிகழ்ச்சிகள், தொடக்க முதல் இறுதி வரை தொடர்ச்சியாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன.

**ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக்கோவை:** நம்பியாண்டார் நம்பி, திருஞானசம்பந்தர் மீது இயற்றிய பிரபந்தங்களுள் ஒன்று. இது சைவத் திருமுறை பன்னிரண்டனுள், பதினொன்றாந் திருமுறையுள் இடம் பெற்றுத் திகழ்கிறது. நம்பியாண்டார் நம்பி திருநாரையூரில் தோன்றியவர்; ஆதிசைவ மரபினர். திருஞான சம்பந்தரை ஞான குருவாகக் கொண்டு வழிபட்டு வந்த இவர், ஞானசம்பந்தர் மீது ஆறு பிரபந்தங்கள் இயற்றிப் போற்றியுள்ளார். அந்த ஆறு பிரபந்தகளும், ஆளுடைய பிள்ளையார் பெயரிலேயே அமைந்துள்ளன. ஞானசம்பந்தரின் வேறு பெயர்களுள் ஒன்று ஆளுடைய பிள்ளையார் என்பதாகும். இந்த மும்மணிக்கோவைப் பிரபந்தம் அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறை ஆகிய மூன்று வகைப்பாடல்களிலும் வகைக்குப் பத்துப் பாடல்களாக முப்பது பாடல்களைக் கொண்டு அமைந்துள்ளது. அந்தாதி

யாப்பில் அமைந்துள்ள இப்பிரபந்தம் 'திங்கட் கொழுந்தொடு' எனத் தொடங்கி, 'திங்கட் கொழுந்தே' என்று மண்டலித்து முடிந்துள்ளது. இதில் திருஞானசம்பந்தரைப் போற்றும் பாக்களும், அவரது தேவாரப்பதிகங்களைப் போற்றும் பாக்களும், அகத்துறைப் பாடல்களும் உள்ளன. இந்நூலிலுள்ள 'அடுசினக்கடகரி' எனத் தொடங்கும் ஆசிரியப்பா, திருஞானசம்பந்தர் நிகழ்த்திய அற்புதச் செயல்கள் பலவற்றையும் தொகுத்துச் சுட்டுகிறது. ஞானசம்பந்தர் தேவாரம் பிறவிக் கடலைக் கடக்க அமைந்த தோணி போன்றது என்பதனைப் 'பிறவி எனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத், துறவி எனும் தோல் தோணி கண்டீர்' என இந்நூல் போற்றுகிறது.

**ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி** சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் பதினோராந் திருமுறையினைச் சார்ந்த பிரபந்தங்களுள் ஒன்று. இதன் ஆசிரியர், திருநாரையூரில் ஆதிசைவ மரபில் தோன்றிய நம்பியாண்டார் நம்பி ஆவார். இவர் காலம் கி.பி. 9-ஆம் நூற்றாண்டின் இறுதியும் பத்தாம் நூற்றாண்டின் தொடக்கமும் ஆகும். இவர் திருஞானசம்பந்தரை ஞானகுருவாகக் கொண்டவர்; அவர் மீது பாடிய ஆறு பிரபந்தங்களுள் இவ்வந்தாதி ஒன்றாகும். ஆளுடைய பிள்ளையார் என்பது திருஞானசம்பந்தரின் வேறு பெயராகும். அந்தாதி அமைப்பில் 100 கட்டளைக் கலித் துறைச் செய்யுள் களைக் கொண்டுள்ள இந்தப் பிரபந்தம், பார்மண்டலம் எனத் தொடங்கிப் பாரகத்தே என்று மண்டலித்து முடிகிறது. இந்நூலாசிரியர், தமது திருத் தொண்டர் திருஅந்தாதியினைப் பாடுவதற்கு முன்னரே இந்நூலினைப் பாடியுள்ளார் என்பது தெரிகிறது. திருஞானசம்பந்தரின் திருப்பெயர்களே ஒருவருக்கு 'உறவும் பொருளும் ஒண் போகமும் கல்வியும் கல்வியுற்ற துறவும் துறவிப்பயனும்' ஆகிய அனைத்தையும் அருளவல்லன என்று இந்நூல் குறிப்பிடுகிறது. இந்நூல் திருஞான சம்பந்தரைக் கவுணியர் தீபன், பரசமயகோளரி, அருகாசனி,தமிழாகரன், தமிழ் விரகன், சைவசிகாமணி முதலிய பெயர்களால் போற்றுகிறது. திருஞானசம்பந்தரைப் பாட்டுடைத் தலைவராகவும் கிளவித் தலைவராகவும் கொண்டமைந்துள்ள அகத்துறை நலஞ் சார்ந்த பாடல்கள் இந் நூலில் இடம் பெற்றுள்ளன.

**ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை** நம்பியாண்டார் நம்பி திருஞான சம்பந்தரைப் போற்றிப் பாடிய பிரபந்தங்களுள் ஒன்று. இந்நூலாசிரியர் திருநாரையூரில், ஆதி சைவ மரபில் தோன்றியவர். இவர் கி.பி. 9ஆம் நூற்றாண்டின் இறுதியும் 10-ஆம் நூற்றாண்டின் தொடக்கமும் கொண்ட காலப்பகுதியில் வாழ்ந்தவராவார் இவர் ஆளுடைய பிள்ளையார் எனப்படும் திருஞான சம் பந்தரை ஞான குருவாகக் கொண்டு வழிபட்டு வந் தார். தம் ஞான குருவைப் பாராட்டிப் போற்றிச் செய்த ஆறு பிரபந்தங்களுள் ஒன்று இத்திருவுலா மாலையாகும். கலிவெண்பாவால் அமைந்த இப் பிரபந்தம் 143 கண்ணிகளைக் கொண்டுள்ளது. இந்நூல் உலா என்று பெயர் பெறாமல், உலா மாலை என்று பெயர் பெற்றமை குறிப்பிடத்தக்கது. பொதுவாக உலாக்களில் உலா வரும் தலைவன் இயல்பும், அவன்பால் காதல் கொண்ட ஏழு பருவப் பெண்கள் இயல்பும் கூறப்படுவது மரபு. இப்பிரபந்தத்தில் உலாத் தலைவரான ஞானசம்பந்தர் இயல்பே பெரிதும் பேசப்படுகிறது. ஏழு பருவப் பெண்களின் செய்தி தனித்தனி விரிவாகப் பேசப்படவில்லை. பொதுப்படவே கூறப்பட்டுள்ளது. அதனால் இந் நூல் உலா மாலை எனப்பட்டது என்று அறிஞர்கள் கருதுகிறார்கள். இதில் அமைந்துள்ள மாலை என் பதன் பொருள் இயல்பு என்பதாகும். திருஞான சம்பந்தர் தம் தேவாரத்தில் திருவிராகம், திருவிருக் குக் குறள், யாழ்முறி, ஈரடிமுக்கால், சக்கர மாற்று முதலிய பெயர்களில் யாப்பு விகற்பங்களாகப் புது மைப்படப் பாடியுள்ள திறத்தினைக் குறிப்பிட்டு இந்நூல் பாராட்டுகிறது.

**ஆளுநர்:** ஆளுநரின் நியமனம் முதலியன பற்றி இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் 153-ஆம் பிரிவு முதல் 162-ஆம் பிரிவு வரையில் உள்ள பத்துப் பிரிவுகள் விளக்கமாகக் கூறுகின்றன. மாநில அரசின் தலைவர் ஆளுநர் (Governor). வடகிழக்கு மாநிலங்களான அசாம், மணிப்பூர், மேகாலயா, நாகாலாந்து, திரிபுரா ஆகிய மாநிலங்கள் நீங்கலாக மற்ற ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஒவ்வொரு ஆளுநர் உண்டு. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்களுக்கு ஒரே ஆளுநரை மைய அரசு பணி அமர்த்தல் செய்யலாம். குடியரசுத் தலைவர், மாநில ஆளுநரைத் தம் கையாலேயே அவரது பணி அமர்த் தல்பற்றிய கட்டளையினை எழுதி, அவரது முத்திரையினைப் பதித்துப் பணி அமர்த்தம் செய்கிறார். ஒவ்வொரு மாநிலத்திலும் உள்ள முதலமைச்சரின் கருத்துகளைக் கேட்டறிந்து பணி அமர்த்தம் செய் யப்படுவது மரபாக உள்ளது. ஆளுநராகப் பணி அமர்த்தம் செய்யப்படுபவர் இந்தியக் குடிமகனாக வும், முப்பத்தைந்து வயது நிறைவு பெற்றவராகவும் இருக்க வேண்டும். இந்தியக் குடியரசுத் தலைவரின் விருப்பத்திற்குட்பட்டு ஆளுநர் ஐந்து ஆண்டுகள் பொறுப்பு வகிப்பார். பதவிப் பொறுப்பினை ஏற் றுக்கொண்டதிலிருந்து ஐந்து ஆண்டுகள் முடிந்த பின்பும், புதியதாக நியமனம் செய்யப்படுபவர் பொறுப்பினை ஏற்கும் வரையில் இவர் பதவியில்

தொடர்ந்து நீடிப்பார். ஆளுநராகப் பொறுப்பேற்றிருக்கும் காலத்தில் அவர் நாடாளுமன்றத்திலோ மாநிலச் சட்ட சபைகளிலோ உறுப்பினராக இருக்க இயலாது. அவ்வாறு இருப்பின், ஆளுநராகப் பொறுப்பேற்றவுடன் அவ்வுறுப்பினர் பதவியை விட்டுவிட வேண்டும். ஆளுநர், ஊதியம் பெறும் எந்தவொரு பொறுப்பினையும் ஏற்கக்கூடாது. ஆளுநர் இலவசமாக உறைவிடமும், பாராளுமன்றத்தினால் உறுதி செய்யப்படும் ஊதியமும், அவ்வூதியம் சார்ந்த உதவித் தொகையும் பிற தனி உரிமைகளும் பெறுவார். ஆளுநர் பதவியேற்பதற்கு முன்னர் அம் மாநில உயர்நீதிமன்றத்தின் அனுபவம் முதிர்ந்த நீதிபதி முன்னிலையில் உறுதி மொழி எடுத்துப் பதவியை ஏற்றுக் கொள்வார். ஆளுநர் இல்லாத சமயத்தில் அவருக்குப் பதிலாகப் பணியாற்றுவதற்குரிய ஒருவரை அரசியல் அமைப்புச் சட்டம் கூறாமல் இருப்பினும், குடியரசுத் தலைவர் அப் பணியினை நிறைவேற்றுவதற்குரிய ஒருவரைப் பணி அமர்த்த வழிவகை செய்வார். மரபுப்படி, ஓய்வு பெற்ற ஆளுநர் ஒருவரோ, அம் மாநில உயர் நீதிமன்றத் தலைமை நீதிபதியோ அப்பணியை ஆற்றுவர். ஆளுநர், மாநில நிருவாக அதிகார எல்லைக்குள் நிலவிவரும் சட்டங்களுக்கெதிராகக் குற்றம் புரிந்தவர்களின் குற்றங்களை மன்னிக்கவும் தண்டனைகளைத் தள்ளிப்போடவும் குறைக்கவும் மாற்றவும் அரசியல் அமைப்புச் சட்டப்படி அதிகாரம் பெற்றுள்ளார். பணியில் ஆளுநரின் சட்டமுறையான நிலை பற்றிப் பம்பாய் மாநில வழக்கொன்றில் தலைமை நீதிமன்றம் தீர்ப்பு வழங்கியுள்ளது. இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் 161-ஆம் பிரிவின்படி ஆளுநரின் அதிகாரத்திற்கு எந்தவிதமான கட்டுப்பாடும் விதிக்கப்படவில்லை. ஆளுநரின் அதிகாரம் கட்டுப்பாட்டிற்கு அப்பாற்பட்டது.

ஆளுநர் தேவையில்லையானால் குடியரசுத் தலைவராலேயே பதவி நீக்கம் செய்யப்பட்டுத் திருப்பி அழைத்துக் கொள்ளப்படுவார். ஆளுநரை நீக்க மாநிலச் சட்டசபைகள் செயற்படுவதையோ அரசியல் அமைப்புச் சட்டத்திற்குப் புறம்பாகச் செல்வதாகக் குற்றம் கூறிப் பதவி நீக்கம் செய்வதையோ செய்ய முடியாதபடி, அரசியல் அமைப்புச் சட்டம் அமைந்துள்ளது. ஆளுநரைத் திரும்பப் பெறும் அதிகாரம் மத்திய அரசுக்கு மட்டுமே உண்டு. ஆளுநர் சட்டசபையின் விருப்பத்திற்கிணங்கிப் பதவியில் நிலைத்து நீடிக்கிறார்.

ஆளுநர் அரசியல் சட்டத்தின்கீழ் இருவகையான பணிகளைச் செய்யக் கடமைப்பட்டுள்ளார். 1. மாநில அரசின் தலைவர், 2. அவர் மத்திய அரசின் பிரதிநிதியாகவும் பணியாளராகவும் செயற்படுகிறார். மாநில அரசின் தலைவர் என்ற முறையில் முதலமைச்சரையும் பிற அமைச்சர்களையும் பணி அமர்த்தம் செய்கிறார். சட்டசபையைக் கூட்டவும் முடித்து வைக்கவும், கலைக்கவும், சில சட்ட முன் வரைவுகளை அவர் குடியரசுத் தலைவரின் அனுமதிக்கு ஒதுக்கி வைக்கவும், சட்டசபை நடைபெறாதபோது ஆணைச் சட்டங்கள் (Ordinance) பிறப்பிக்கவும் செய்கிறார். இப்பணிகளை அவர், அமைச்சரவையின் அறிவுரை பெற்றுச் செயலாற்றுகிறார். இவர் மத்திய அரசின் பணியாளராகவே பணியாற்றுகிறார். மாநிலம் ஒன்றில், அரசியல் அமைப்புச் சட்டப்படி ஆட்சி செய்ய முடியாத சூழ்நிலை உருவானால், குடியரசுத் தலைவரின் ஆட்சியைக் கொண்டு வரலாம்.

**ஆளுபர் (ஆளுவர்)** கருநாடக மாநிலத்தில் வனவாசிப் பகுதியினைக் கி.பி.7 முதல் 11-ஆம் நூற்றாண்டு வரை ஆண்ட சிற்றரசர்கள். சாளுக்கிய மன்னர்களான இரண்டாம் புலிகேசி, விநயாதித்தன் போன்றவர்களின் கல்வெட்டுகளில் இச்சிற்றரசர்களின் சில பெயர்கள் காணப்படுகின்றன. பில்கணர் என்னும் கவிஞர் ஆளுபரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். குணசாகரன், முதலாம் சித்திரவாகனன் என்ற ஆளுப சிற்றரசர்கள் விநயாதித்தனின் காலத்தவர்கள். இவர்களின் தலைநகரம் ஆளுவகேடம் ஆறாயிரம் என்பதாகும். இரண்டாம் சித்திரவாகனனும் இரணசாகரனும் கி.பி. 800-ஆம் ஆண்டு அரசுக்குப் [illegible]. சித்திரவாகனன் முதலில் உடுப்பி நகரைக் கைப்பற்றினான். பின்னர் அந்நகரம் இரணசாகரன் கைவசமாயிற்று. இச்செய்தியை உதியாவரம் என்னும் இடத்திலுள்ள நடுகல் கல்வெட்டுக் குறிப்பிட்டுள்ளது. பிருதிவி சாகரன், மாரம்மன், விசயாதித்தன் போன்ற ஆளுப அரசர்களின் பெயர்களும் கல்வெட்டில் உள்ளன.

**ஆளுமை:** தனிமனிதனுடைய எண்ணங்கள், செயற்படும் முறை, நடத்தைகள், அவன் பிறருடன் பழகும் முறை, மனப்பான்மைகள், அவனுடைய வாழ்க்கைத் தத்துவம், அறிவாற்றல், உணர்ச்சிகள் ஆகிய யாவும் சேர்ந்த தொகுப்பிலிருந்து அவனுக்கு ஏற்படும் ஒரு தனித்தன்மை ஆளுமை எனப்படும். அவனுடைய உடல் தோற்றமும் அவன் உடைப் பாணியும் நடையும் அவனிடம் காணப்படும் அன்பு, பொறாமை, ஊக்கம், அச்சம், இரக்கம், நன்றியுணர்வு, தந்திரம் போன்ற பல விதமான பண்புகளும் அவனுடைய ஆளுமையில் அடங்கும்.

இப்போகிரேட்டிசு (Hippocrates) என்னும் கிரேக்க மருத்துவ அறிவியலார், மனித உடலில் நான்கு வகைகளான நீர்மங்கள் இருக்கின்றன என்றும், அவற்றின் மிகைக்கு ஏற்ப மனித ஆளுமைகளை

வகைப்படுத்தலாம் என்றும் கூறினார். இப்போகிரேட்டிசின் வகைப்படுத்தலின் அடிப்படையில் கேலன் (Galen) என்ற உரோமானிய மருத்துவர், கீழ்க் காணுமாறு ஆளுமையினை வகைப்படுத்தினார்.

| உடல் நீர்மம் (இப்போகிரேடிசின் வகைப்படுத்தல்) | நீர்ம மிகையினுக்கு ஏற்ற ஆளுமை வகை (கேலனின் விளக்கம்) |
|---|---|
| 1. குருதி | நம்பிக்கையும் ஆர்வமும் கலந்த மனப்பாங்கு (Sanguine) |
| 2. கோழை | அமைதியும் பொருட்படுத்தாமையும் கலந்த செயலின்மை (Phlegmatic) |
| 3. கரும்பித்தம் | சோர்வும் மனத்துயரும் கலந்த இயல்பு (Melancholic) |
| 4. மஞ்சள் பித்தம் | எளிதில் சினவயப்படும் தன்மையும் செருக்கும் கலந்த இயல்பு (Choleric) |

இப்போகிரேட்டிசு, கேலன் ஆகிய இவர்களின் விளக்கம் அறிவியல் முன்னேற்றங்களுக்கு ஒவ்வாததாயினும், சில சூழ்நிலைகளில் மக்களின் ஆளுமையை விளக்குவதற்கு இச்சொற்கள் பரவலாகப் பயன்படுத்தப்படுகின்றன. இதுவே ஆளுமை விளக்கத்தின் மிகப் பழைமையான கோட்பாடாகும்.

இத்தாலிய மானிடவியலார் இலம்பராசோ (Lombroso) என்பவர், கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் மக்களின் முக அமைப்பினைக் கொண்டு அவர்களின் ஆளுமையை வகைப்படுத்தலாம் என்று கூறினார். இவருடைய கோட்பாடு, முக அமைப்பியல் (Physiognamy) என்று கூறப்படுகிறது. தலையின் அளவு, கண்களுக்கு இடையில் இருக்கும் இடைவெளி, தாடையின் அமைப்பு, தலைமுடியின் நிறம் ஆகியவற்றைக் கொண்டு மக்களின் ஆளுமையைக் கணக்கிடலாம் என்று இலம்பராசோ கூறினார். மேற்குறிப்பிட்ட ஆளுமை வகைப்படுத்தலே, வகையியற் கோட்பாடுகள் (Typology Theories) எனப்படும். செல்டனின் வகைப்படுத்தல், உளவியல் ஆய்வாளர்களால் ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை. ஆளுமை பற்றிய உளவியல் விளக்கங்கள், பண்டைய கோட்பாடுகளின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன. பெண்டே (Pende), நாகரதி (Naccarati) ஆகிய இத்தாலிய அறிஞர்களும், வகையியற் கோட்பாட்டினைப் பின்பற்றி ஆளுமையினை வெவ்வேறு வகைப்பாடுகளைக் கொண்டு விளக்கினர்.

கால் (Gall, Franz, கி.பி. 1758-1828) என்பார், மனிதனின் நடத்தைகளும் ஆளுமைப்பண்புகளும் நரம்புசார் உடலமைப்புடன் (Neurophysiology) நெருங்கிய தொடர்பு கொண்டவை என்றும், மூளையின் எந்தப்பகுதி மிகுந்த வளர்ச்சியடைந்திருக்கின்றதோ அப்பகுதிக்குரிய பண்பு அல்லது திறன் மனிதனிடம் மிகுந்து காணப்படும் என்றும் கூறினார். காலும் அவருடன் ஆய்வுகளில் ஈடுபட்டிருந்த சுபாசீம் (Spurzheim Johann) என்பாரும் ஒன்று சேர்ந்து, மூளையின் எப்பகுதிகளுக்கு எப்பண்புகள் உரியன என்று விளக்க ஒரு வரை படத்தை உருவாக்கினர். மனிதனின் மண்டையோட்டில் காணப்படும் வளைவுகளும் பள்ளங்களும் அவனுடைய ஆளுமைப் பண்புகளை முடிவு செய்கின்றன என்று கால் கூறினார். இக்கோட்பாடு தலையமைப்பியல் (Phrenology) எனப்படும். காலும் சுபர்சீமும் ஐரோப்பாவின் எல்லா நாடுகளுக்கும் சென்று, தலையமைப்பினை ஆராய்ந்து, மனிதர்களின் ஆளுமைப் பண்புகளைக் கூறினர். மருத்துவ அறிவியலார் இவர்களின் கருத்துகளை ஏற்றுக் கொள்ளவில்லை.

மனிதர்களின் ஆளுமையை உடலின் அமைப்பையொட்டி மூன்று வகைகளாகக் கிரெட்சிமர் (Kretschmer, Ernest) பிரித்துள்ளார். அவை விளையாட்டு உடல்வாகு (Athletic), குறுகிய மெலிந்த உடல்வாகு (Asthenic), பருமனான உடல்வாகு (Pyknic) என்பனவாகும். உளக்கோளாறுகளின் அடிப்படையில் கிரெட்சிமர் முதல் இரண்டு வகைகளையும் இசுகிசோதைம் (Schizothyme) என்றும், மூன்றாம் வகையைச் சைக்ளோதைம் (Cyclothyme) என்றும் பகுத்துள்ளார். இசுகிசோதைம் ஆளுமையோனின் மனநிலையில், கோளாறு ஏற்பட்டால், அவன் பெரும்பாலும் உளச்சிதைவு நோயை அடையக்கூடும். இத்தகையவன் பிறரிடம் நெருங்கிப் பேசவோ பழகவோ அச்சம் கொள்வான். கற்பனைத் திறனும், தாழ்வு மனப்பான்மையும் கொண்டிருப்பான். ஆனால் சைக்ளோதைம் ஆளுமையோன், உளக்

கிளர்ச்சிச் சோர்வு நோயை அடையக்கூடும். இவன் பிறரிடம் அளவளாவுதலில் மிகுந்த விருப்பமும் செயலைச் செய்து முடிக்கத் துடிப்பதான மிக்க மன வெழுச்சிகளையும் கொண்டிருப்பான். ஆனால் இத் தகைய மனவெழுச்சிகளில் அடிக்கடி மாறுதல்கள் தோன்றும். இவ்வகைகளில் சேராத உடல்வாகு உடையோரை நெகிழ்வற்ற தன்மை உடையோர் (Dysplastic Type) என்று கிரெட்சிமர் கூறினார்.

கிரெட்சிமரின் வகைப்படுத்தல், மனிதர்களின் ஆளுமையை உடலமைப்பின் அடிப்படையில் பிரிக்க முடியும் என்று பொதுப்படையாகக் கூறுகிறது என்ற காரணத்தினால், உளவியலார் அதனை ஏற்றுக் கொள்ளவில்லை.

வில்லியம், எச். செல்டன் (William H. Sheldon) என்பார், 1954-ஆம் ஆண்டில் இவ்வகைப்படுத்தலை மேலும் விரிவுபடுத்தி, உடலமைப்பின் அடிப்படையில் மனிதர்களை வரிசைப்படுத்த முடியும் என்று கூறினார். இவ்வகைப் பண்புத்தொகுதிகளை அளவு கோல் முறைப்படி வகைப்படுத்துவதற்காகச் செல்டன், ஆயிரக்கணக்கானவர்களை முன்புறம், பின் புறம், பக்கவாடு ஆகிய மூன்று நிலைகளில் நிழற்படங்கள் எடுக்கச்செய்தார். பல அறிஞர்களின் உதவியைக் கொண்டு இந்நிழற்படங்களை வரிசைப்படுத்தினார். இப்படங்கள் பின்வரும் மூன்று பெரும் பிரிவுகளில் அடங்கின.

1. குறுகிய தோள்பட்டையும் மெலிந்த உடலமைப்பும் கொண்டவர்கள்.
2. அகன்ற தோள்பட்டையும் கட்டமைந்த உடலும் கொண்டவர்கள்.
3. பருமனும் உருண்டையுமான உடலமைப்புக் கொண்டவர்கள்.

செல்டன் இவர்களை முறையே, மெலிந்த (Ectomorphic) கட்டமைந்த (Mesomorphic) பருமனான (Endomorphic) உடலமைப்புடையவர்கள் என்று குறிப்பிட்டார். இவர்களுள் முதல் வகைப்பட்டவர் மெலிந்த நீண்ட எலும்பு சார்ந்த உடலமைப்பினைப் பெற்றிருப்பர். இவ்வியல்பைச் சிந்தனைசார் ஆளுமை (Cerebrotonia) என்பர். இரண்டாம் வகைப்பட்டவர் கட்டமைந்த உடலமைப்பைப் பெற்றிருப்பர். இவ்வியல்பைச் செயல்சார் ஆளுமை (Somatotonia) என்பர். மூன்றாம் வகைப்பட்ட, பருமனான உடலமைப்புடையவரைச் சுக விருப்பமுடைய ஆளுமை உடையோர் (Viscerotonic) என்பர்.

மேற்கண்ட மூவகைப் பண்புத் தொகுதிகளும் ஒவ்வொருவரிடமும் காணப்படும். ஆனால், ஏதேனும் ஒரு பண்புக்கூறு மற்றவைகளைவிட மிகுதியாகக் காணப்படும். இவற்றினை ஓர் 7 புள்ளி அளவுகோலில் குறிப்பிட இயலும் என்று செல்டன் கூறுகிறார்.

இம்மூவகை உடலமைப்புகளுள் ஏதாவது ஒன்று ஒருவனிடம் எந்த அளவுக்கு அமைந்திருக்க முடியும் என்பதைச் செல்டனின் வகைப்படுத்தல் முறை முடிவு செய்தது. சராசரி உடலமைப்புடையவன், ஒவ்வொரு வகைக்கும் உரித்தான ஒருசில உடற்கூறுகளைக் கொண்டிருப்பான். அவனை 4-4-4 என்ற குறியீட்டினால் அடையாளப்படுத்தமுடியும். அதாவது இந்த ஏழுபுள்ளி அளவுகோலில் மிகையான தசையமைப்புகளும் அகன்ற தோள்பட்டைகளும் குறுகிய இடுப்பும் கொண்டவன், மிகைச் செயல்சார் ஆளுமையினனாக 1-7-1 என்று குறிப்பிடப்படுவான். செல்டன் 4000 பேர்களின் உடலமைப்புகளை வரிசைப் படுத்தினார். இவைகளிலிருந்து 76 உடல்வாகுகளை மட்டும் கண்டு பிடித்தார். பின்னர் அளவீட்டு முறையில் சில மாறுதல்களைச் செய்து, 267 உடல் வாகுகளைக் கண்டுபிடித்தார். செல்டனின் ஆய்வுகளின் பயனாக, இயற்கையில் மரபியல் வழி ஒருவனுக்கு அமைந்த உடலமைப்பினைச் சுற்றிச் சூழமைவு, பயிற்சி, வாழ்க்கை முறை, ஊட்ட உணவு ஆகியவற்றினால் ஏற்படும் மாற்றங்கள், அவன் உடல்

| பருமனான உடலமைப்பு | மெலிந்த உடலமைப்பு | கட்டமைந்த உடலமைப்பு |
|---|---|---|
| ஓய்வில் விருப்பம், வசதிகளை நுகர்வதில் ஆசை, நண்பர்களிடம் ஈடுபாடு, உணவு, உறக்கம் போன்றவற்றில் விருப்பம், தனது குழந்தைப் பருவ நிகழ்ச்சிகளில் ஆர்வ மிகுதி. | கட்டுப்பாடுகளுடன் நடந்து கொள்ளுவது, தூண்டல் களுக்குத் துரிதமாக இயங்குவது, சமூகத் தொடர்புகளில்நாட்டமின்மை, வலியைத் தோற்றுவிக்கும் தூண்டல்களை மிக்க அளவு பொருட்படுத்தல். | மனவலுவோடு செயற்படுதல், துணிவுச் செயல்களில் விருப்பம், தைரியம், வலியினைப் பொருட்படுத்தாமை, செயல்களில் மிக்க ஈடுபாடு. |

அமைப்பினை ஓரளவு முடிவுசெய்கின்றன என்று கண்டுபிடித்தார். இவ்வாறு வகைப்படுத்தப் பட்டவர்களுள் நூற்றுக்கணக்கானவர்களை நேர்காணல் முறையில் மதிப்பீடு செய்து, அவர்களின் அன்றாட வாழ்க்கைச் செயல்கள், நேர்காணல் துலங்கல்கள், நடத்தைகள் ஆகியவைகளை உற்றுநோக்கி, 80 பண்புக் கூறுகளைக் கண்டுபிடித்தார். மூன்று பெரும் உடலமைப்புப் பிரிவுகளையும் அவற்றிற்கு உரித்தான மனப்பாங்குகளையும் நடத்தைகளையும் வகைப்படுத்தினார். ஆராய்ச்சியின் முடிவாகச் செல்டன் ஒவ்வொரு உடலமைப்பினரிடமும் 20 பண்புக்கூறுகள் காணப்படும் என்று கூறினார். தம் முடிவுகளை மேலும் நம்பிக்கையுடையனவாக்குவதற்காகச் செல்டன் 200 கல்லூரி மாணவர்களை இப்பண்புத் தொகுதிகளின் அடிப்படையில் வரிசைப்படுத்தினார். பண்புக் கூறுகள் பின் குறிப்பிட்டுள்ளவாறு தொடர்பு கொண்டன என்று செல்டன் கண்டார்.

செல்டனின் வகைப்படுத்தலில் அகவயச் செல்வாக்கு இடையிட்டதைப் பல உளவியலறிஞர்கள் கண்டனர். இதன் காரணமாக அவருடைய ஆளுமை வகைப்படுத்தலில் நம்புந் தன்மை குறைந்து இருக்கலாம் என்று அவர்கள் கருதினர். மேலும் செல்டனின் மூவகைப் பட்ட உடல் அமைப்பினரும், சமூக, பொருளாதார, சூழ்நிலைக் காரணங்களினால், அத்தகையோருக்குச் சமூகத்தில் பொதுவாக உருச்சட்டம் (Stereotype) கொடுக்கப்பட்டுள்ள முறையினின்றும் மாறி, வேறு விதமாகச் செயற்பட்டு, வேறுவிதமான ஆளுமையுடையவராகக் காணப்படுவதும் உண்டு. எ-டு மெலிந்த சிந்தனைவயப்பட்டோன் (Cerebrotonic) அறிவாளனாகவும், கட்டமைந்த உடலமைப்பினன் அடைவு ஊக்கிசார் செயல்களில் ஈடுபடுபவனாகவும், உருண்டையான உடலமைப்பினன் மற்றவர்களின் செல்வாக்கிற்கு எளிதாக வயப்படக்கூடியவனாகவும் இருப்பன் என்றும் மக்கள் கருதுகின்றனர். இப்பொதுமையாக்கத்தின் (Generalisation) அடிப்படையில், செல்டனின் ஆய்வுகளும் வகைப்படுத்தல்களும் அமைந்துள்ளன. உடல் அமைப்பும் அவற்றின் பண்புக்கூறுகளும் மரபணுக்களால் அடுத்தடுத்த பரம்பரைகளுக்கு எடுத்துச் செல்லப்படுகின்றன என்று செல்டன் கூறினார். தனிமனிதனின் ஆளுமையில் சூழ்நிலைக் காரணிகளும் பெருஞ்செல்வாக்குக் கொண்டுள்ளன என்பதைச் செல்டனின் கோட்பாடு வலியுறுத்தவில்லை. இக்காரணங்களால் செல்டனின் வகைப்படுத்தல் கோட்பாட்டினை உளவியலார் ஏற்றுக் கொள்ளவில்லை.

யுங்கு (Jung) என்னும் உளவியலறிஞர் அகமுகப் பட்டவர்கள், புறமுகப்பட்டவர்கள் என இரண்டு வகைகளாக ஆளுமையைப் பிரித்துள்ளார். அகமுகப்பட்டவன் புறஉலக நிகழ்ச்சிகளில் ஈடுபடாமல் எப்பொழுதும் தன்னைப் பற்றிய சிந்தனை, கற்பனை, நினைவுகள் கொண்டு, தன்னுடைய மனவெழுச்சிகளைப் பிறருக்குக் காட்ட மாட்டான். சிறு தோல்வியையும் தாங்கிக் கொள்ளும் மனப்பான்மையற்றவனாக இருப்பான். ஆனால், புறமுக வகைப்பட்டவனோ, தன்னாய்வுத் திறன், ஒளிவுமறைவு இல்லாமை, பிறர் காணும் குற்றங்களைப் பொருட்படுத்தாமை போன்ற இயல்புகளைப்பெற்றிருப்பான். ஒருவருடைய உள் ஊக்குத் திறன் (Libido) எவ்விதம் வெளிப்படுகிறதோ அதுவே அவனுடைய ஆளுமை என உளப்பகுப்புக் கோட்பாட்டினர் கருதுகின்றனர். மக்களையும் பொருள்களையும் நாடிச் சென்று உள்ஊக்குத் திறன் புறத்தே வெளியானால், அது புறமுகம் என்றும், கருத்துகளும் எண்ணங்களும் உள்நோக்கி வெளிப்படும்போது அது அகமுகம் என்றும் கூறுவர். இவ்விரண்டு ஆளுமைப் பண்புகளிலும் எது சிறந்தது, எது தாழ்ந்தது என்ற வினாவிற்குஇடமில்லை. இரண்டும் தனிப்பட்ட முறைகளில் சிறந்த ஆளுமைப் பண்புகளாகும். எடுத்துக்காட்டாக தார்வினின் (Darwin)உள்ஊக்குத்திறன் அவரை வெவ்வேறு உயிரினங்களின் மீதும் தாவரங்களின்மீதும் நாட்டங்கொள்ளச் செய்து, புதிய மலர்ச்சிக் கொள்கையைத் தந்தது. ஆதி சங்கரரின் உள்ஊக்குத்திறன் உள்நோக்கி ஏவப்பட்டதன் விளைவாக, அத்துவிதம் என்ற தத்துவம் பிறந்தது. புறமுக ஆளுமையினரும் அகமுக ஆளுமையினரும் சமூகத்தில் சிறப்பான தொண்டுகளை ஆற்றுகின்றனர். காண்க: ஆளுமைக் கோட்பாடுகள்.

துணை நூல்கள்:

**William Samuel**, Personality, Mc Graw Hill Kogakusha Ltd., Japan, 1981.

**Ernest, R. Hilgard, et. al**, Introduction to Psychology 6th Ed., Oxford and IBH Ltd., New Delhi, 1975.

**ஆளுமைக் கூறுகளும் பேச்சுக் கோளாறுகளும்**: குழந்தைகளிடம் பேச்சுத்திறன் வளர்ச்சிஅடைவதற்கு முன் சொற்களைப் புரிந்து கொள்ளும் திறமை வளர்ச்சியடைந்து காணப்படுகிறது. இதனால் குழந்தை பேசக்கூடிய சொற்களின் எண்ணிக்கையைக் காட்டிலும் மிகுதியான சொற்களைப்புரிந்துகொள்ள முடிகிறது.பேச்சுத்திறன் அடைவதற்குமுன் இளங்குழவி அழுகை, மழலை, மனவெழுச்சி வெளியீடுகள், சைகைகள் ஆகியவற்றைச் சொற்களுக்குப் பதிலாகப் பயன்படுத்துகிறது. ஏறக்குறைய ஒரு வயதாகும்பொழுது குழந்தை முழுச் சொற்களைப் பேசுந் திறனை அடைகிறது. அதற்குப் பின்னர் ஒற்றைச் சொல்லாலான சொற்றொடரைப்

பேசுகிறது. இரண்டு வயதை அடையும்பொழுது சொற்றொடரைப் பேசுகிறது. இரண்டரையிலிருந்து மூன்று வயது வரையிலான பருவத்தில் சிறிய சொற்றொடர்களைப் பேசுந் திறனைப் பெறுகிறது. ஐந்து வயதுப் பருவத்தில் குழந்தை, இலக்கணப் பிழையின்றிப் பேசுந் திறன் பெறுகிறது. ஏறக்குறைய ஏழு வயதில் குழந்தையிடம் சரியான உச்சரிப்புத் திறனைக் காணலாம். எல்லா வயதுகளிலும் ஆண் குழந்தைகளைவிடப் பெண் குழந்தைகளிடம் பேசும் திறனை மிக்க அளவில் காணலாம்.

வயதுக்கேற்ற பேச்சு முதிர்ச்சி அடையாத குழந்தைகளின் சமூக வாழ்க்கை பின்தங்கிவிடுகிறது. அவர்கள் சமூக ஒதுங்கிகளாகக் காணப்படுகிறார்கள். அத்தகைய குழந்தைகளின் பெற்றோரும் தம் குழந்தைகள் பேச்சு முதிர்ச்சி அடையாத காரணத்தால் சமூகத்தில் மற்றவர்களிடம் மிகுதியாகப் பழகுவதில்லை. தம் குழந்தையைப் பேச்சு முதிர்ச்சியடைந்த பின்புதான் பள்ளியில் சேர்க்க முடியுமென்று எண்ணுகிறார்கள். பேச்சு முதிராத குழந்தைகள் மற்ற மாணவர்களுடன் சமமாகப் பழக முடியாது என்ற காரணத்தால் அத்தகைய குழந்தைகளை ஆசிரியர்களும் பள்ளியில் சேர்த்துக் கொள்ளத் தயங்குகின்றனர். பேச்சு முதிராத குழந்தை, பெரும்பாலும் மனவளர்ச்சியடையாத குழந்தையென ஆசிரியர்களால் ஒதுக்கப்படுகிறது.

கேட்பவர்களின் கவனம், பேச்சின் கருத்தை விட்டுவிட்டுப் பேசும்முறை எப்படி இருக்கிறது என்பதில் திருப்பப்பட்டால், பேச்சுக் கோளாறு குழந்தைகளிடம் இருப்பதை அறியலாம். குழந்தைகளிடம் காணப்படும் பேச்சுக் கோளாறுகளில் சிலவற்றைக் கீழே காணலாம்.

1. பேச்சுக் காலந் தாழ்த்தல்
2. தெற்றுதல் (Stuttering)
3. உச்சரிப்புத் தவறுகள் (Misarticulation)
4. குழறுதல் (Slurring)
5. மழலை (Lisping)
6. பொருத்தமற்ற பேச்சு
7. குரல் கோளாறுகள்

தனிமனிதனுடைய ஆளுமைக் கூறுகள் அவன் பேசும் முறையை மிக்க அளவில் பாதிக்கின்றன. ஒருவனுடைய ஆளுமைப் பண்புகளை அறிவதற்கு உளவியல் அறிஞர்கள், அவன் பேசும் முறையை ஒரு சிறந்த சோதனைப் பொருளாக எடுத்துக் கொள்கிறார்கள். குழந்தைகள் வளரும் பருவத்தில் அவர்களது பேச்சும் ஆளுமையும் பிரிக்க முடியாமல் இணைந்து காணப்படுகின்றன. ஆளுமை என்பது, தனிமனிதனின் உடற்பாங்கு, மனப்பாங்கு, பயன்மதிப்புகள், நாட்டங்கள், மனவெழுச்சிகள், நுண்ணறிவு, ஆற்றிய செயல்கள், ஆற்றல்கள் ஆகியன ஒருங்கிணைதல் முறையாகும். இப்பண்புகளைக் கொண்டு தனிமனிதன் எவ்வாறு தன்னைச் சூழ்ந்தோரிடம் பொருத்தப்பாடு கொள்கிறான் என்பதும், அவன் ஆளுமையைச் சுட்டிக் காட்டுகிறது.

மைசூரிலுள்ள அனைத்திந்தியப் பேச்சுக்-கேள்வி நிறுவனத்தில்(National Institute of Speech & Hearing) செய்யப்பட்ட சோதனைகளின் பயனாகப் பேச்சுக் கோளாறுகளுக்கு ஆளான குழந்தைகளிடம் ஆளுமைக் கோளாறுகளும் காண முடியும் என்பதை அறிய முடிகிறது.

பேச்சு முதிராத குழந்தைகள் பிடிவாத குணமுடையனவாகக் காணப்பட்டன. பெற்றோர்களின் அளவுக்கு மீறிய பாதுகாப்பு மனப்பான்மை இதற்குக் காரணமாக இருந்ததை அறிய முடிந்தது. இரண்டு வயதுக் குழந்தை தடையின்றிப் பேச முடியாது. சொல் அசைகளைத் திரும்பத் திரும்பக் கூறுதல், விட்டுவிட்டுப் பேசுதல் ஆகிய இவைகள் அக்குழந்தைகளிடம் காணப்பட்டன. குழந்தைகளின் பெற்றோர்கள், தம் குழந்தைகள் தெற்றிப் பேசுவதாகக் குறிப்பிட்டனர். குழந்தைகளைச் சோதனை செய்த பொழுது அவர்களிடம் எத்தகைய பேச்சுக் கோளாறும் காணப்படவில்லை. அடிக்கடி பிழையின்றிப் பேசு என்று பெற்றோர்கள், தம் குழந்தைகளை அதட்டிக் கூறியதாகத் தெரிய வந்தது. பெற்றோர்களுக்கு அவர்களின் தவறு எடுத்துக் கூறப்பட்டது. மூன்று மாதங்களுக்குப்பின் அக்குழந்தைகளின் பேச்சுக் கோளாறுகள் மறைந்து விட்டன.

ஆறுவயதாகும் வரையில் குழந்தை, தான் தெற்றிப் பேசுவதை உணரமுடிவதில்லை. அதற்குப் பின்னர்ப் பேசுவதைக் கேட்பவரின் முகத் தோற்றத்திலிருந்து குழந்தை தான் பேசுவதை மற்றவர்கள் ஏளனஞ் செய்கிறார்கள் என்பதை உணருகிறது. இத்தகைய குழந்தைகளை ஆசிரியர்கள் வகுப்பில் கேள்வி கேட்பதில்லை. அவர்களை உரக்கப் படிக்கச் சொல்வதில்லை. இதனால் குழந்தை மேலும் மேலும் பின்வாங்குகிறது. நெருங்கிய தோழர்களைத் தவிர மற்றவர்களிடம் பேசுவதைத் தவிர்க்கிறது. அவர்களைச் சோதனை செய்தபொழுது அக்குழந்தைகள் மிகுந்த கவலை அடைந்திருந்தமை தெரியவந்தது. உச்சரிப்புப் பிழை இருக்கும் குழந்தைகளும் இவ்வாறு குழந்தைகளுடன் பேச்சைத் தவிர்க்கின்றன. பிழையாக உச்சரிக்கக் கூடும் என்று கருதுகின்ற சொற்களை அறவே தவிர்க்கின்றன. இவர்களிடம் பின்வாங்கல் மனப்பான்மையும் காணப்படுகிறது.

குரல் கோளாறுகள் குழந்தைகளிடம் பொது வாகக் காணக்கூடிய ஒன்றாகும். தாக்குந் தன்மை யுடைய குழந்தைகள் கரகரப்பான குரலுடையவர் களாகக் காணப்படுகின்றனர். அவைக்கூச்சமுடைய குழந்தைகள் மெதுவாகப் பேசுவதைக் காணலாம். குழந்தைகள் தமக்கு விருப்பமான சூழ்நிலையில் பேசுவதையும், மனஅழுத்தம் கொடுக்கக்கூடிய சூழ் நிலையில் பேசாமல் இருப்பதையும் காணமுடியும். இதைத் தேர்ந்த பேசாமை (Selective Silence) என்று கூறுவர். உளக்கூறுமாற்றக்கோளாறும் (Hysteria) குழந்தைகளிடம் பேச்சுக் கோளாறுகளுக்குக் காரண மாக இருக்க முடியும். ஏ.டி.ப.

துணை நூல்கள்:

Bharath Raj, Stuttering, Causes, remedies, prevention-A Guide book for parents and stutterers, Swayam Siddhan Prakashana, Mysore, 1978.

Bhavani, A.D., Some Psychological Aspects in Speech and Hearing Problems,The Journal of All India Institute of Speech and Hearing-January, 1972.

Kuppuswamy, B., Child Behaviour and Development, Vikas Publishing House, Pvt. Ltd., Delhi, 1974.

Hurlock, E.B., Developmental Psychology, A Life Span Approach, 1980.

**ஆளுமைக் கோட்பாடுகள்:** ஆளுமை யைப் பற்றிய ஆராய்ச்சிகள், கண்டு பிடிப்புகள், அறி வியல்சார் கருத்துகள் ஆகியவற்றின் அடிப்படையில் ஆளுமை என்னும் கருத்தினை விளக்குதலே ஆளுமைக் கோட்பாடு (Personality Theory) ஆகும். ஆளுமை யைப் பற்றிய விளக்கங்கள், ஆளுமையின் வரை யறைகள் ஆகியவற்றை மட்டுங் கொண்டு ஆளுமை யைப் பற்றி நாம் நன்கு அறிந்து கொள்ள இயலாது. புறத்தூண்டுதல்களின் உதவியாலும் நடத்தைக் கோலங்களினாலும் நாம் ஆளுமையைப்பற்றி அறிந்துகொண்ட பிறகே, அதனை விளக்குதற் பொருட்டு, ஒரு கொள்கையினையும் அதற்கேற்ற விதிகளையும் உருவாக்க முடியும். குறிப்பிட்ட சில சூழமைவுகளினால் ஆளுமை எவ்வாறு மாற்றம் அடைகிறது என்பதை ஆராய்ச்சி செய்யவும் ஆராய்ச்சியின் பயனாக நாம் கண்டுபிடிக்கும் முடி வுகளுக்கு விளக்கம் கொடுக்கவும், ஒரு கொள்கை யடிப்படை இன்றியமையாததாகும். ஆளுமை என் னும் கருத்தினைப் பற்றிய ஆழ்ந்த அறிவு பெறுவ தற்கும் இத்தகைய கொள்கை யடிப்படை, பேருதவி யாக இருக்கிறது. மேலும் புதிய சூழமைவுகள் மனிதர்களின் நடத்தையில் எத்தகைய மாற்றங்களை ஏற்படுத்தக்கூடும் என்னும் ஊகங்களுக்கும் இக் கோட்பாடுகள் அடிப்படையாக இருக்கின்றன. உளவியல் அண்மைக் காலத்திய அறிவியல் துறை யாயினும், இத்துறையில் கருத்து வேறுபாடுகளைக் கொண்ட பல ஆய்வாளர்களும் சிந்தனையாளர் களும் ஆளுமையின் பல்வேறு கூறுகளையும் காரணி களையும் விளக்கும் வகையில், பல்வேறு விளக்கங் களைக் கொடுத்துள்ளனர். இவ்விளக்கங்கள் உள வியல் துறையில் ஆளுமைக்கோட்பாடுகளாகக் கருதப் படுகின்றன. இக்கோட்பாடுகள், கொள்கைகளின் அடிப்படையில் பின்வரும் வரிசையில் விளக்கப்பட் டுள்ளன.

1. மனித இன நல-இருத்தல் நிலைசார் கோட்பாடு (Humanistic-Existential Model)
2. வகையியல் கோட்பாடு (Typology Model)
3. உளப்பகுப்புக் கோட்பாடு (Psychoanalystic Model)
4. சமூகத் தன்முனைப்புக் கோட்பாடு (Ego-Social Model)
5. ஆளிடைக் கோட்பாடு (Interpersonal Model)
6. நடத்தைக் கோட்பாடு (Behaviouristic Model)

**1. மனித இன நல-இருத்தல் நிலைசார் கோட் பாடு** என்பது மனித இயல்புகள் பற்றியும், மனித வாழ்க்கையின் சிக்கல்கள் பற்றியும் ஆராயும் கொள்கை ஆகும். இக்கொள்கையினர் விலங்கியல் நடத்தை அடிப்படையில் நிகழ்த்தப்பட்டஆய்வுகளை ஏற்றுக்கொள்ளவில்லை. ஆல்போர்ட்டு, இராசர்சு, மாசுலோ, எரிக்பிரோம் ஆகியோர் இக்கொள் கையினை உருவாக்கியவர்களுள் குறிப்பிடத்தக்கவர் கள்ஆவர். பண்பாடு, சமூகம் இரண்டும் மனிதர்களின் நடத்தைகளை உருவாக்குகின்றன. ஆயினும் மனித இயல்புகளும் ஆற்றல்களும் ஆளுமையின் அடிப்படை களாக அமைந்திருக்கின்றன. மாசுலோ மனிதனின் மேம்பாட்டு நிலையைத் தன்னிறைவு நிலை என்று குறிப்பிட்டார். இராசர்சு மாணவர்களின் தனிப் பட்ட சிக்கல்களுக்குத் தீர்வு காண்பதில் ஆர்வம் காட்டினார். ஆல்போர்ட்டு, பிரோம் ஆகியோரும் சமூகத்தில் மக்கள், தாம் இருக்கும் நிலையைக் காட்டி லும் சிறந்த நிலையை அடையப் பாடுபடுகின்றனர் என்று குறிப்பிட்டனர். மனிதர்களின் நடத்தைகள் அவர்களுடைய தற்கருத்து அல்லது தன்னுணர்வி னால் மாற்றியமைக்கப்படலாம். ஆயினும் மனிதர்க ளின் இயல்புகளுள் சிலவற்றை மாற்றமுடியாது. இக் காரணத்தினால் மக்கள் தம் வாழ்க்கையில் பல சமூ கப் பொருத்தப்பாடுசார் சிக்கல்களைச் சமாளிக்க வேண்டியிருக்கிறது. இவ்வடிப்படையில் எழுந்ததே மனித இனநல இருத்தல் நிலைக் கோட்பாடாகும்.



சி. டபள்யூ ஆல்போர்ட்டு

(அ) ஆல்போர்ட்டு சி. டபள்யூ (கி.பி. 1897–1968): தனிமனிதனின் உடல்உள அமைப்புகளும் உள்ளாற்றல்களும் அவனுடைய சூழ்நிலைகளுடன் பொருத்தப்பாடு பெற்று, அவனிடம் ஒருங்கிணைந்து இருக்கும் நிலைமையே அவனுடைய ஆளுமை ஆகும் என்று ஆல்போர்ட்டு (Allport G.W.) ஆளுமையை வரையறுக்கிறார். ஆல்போர்ட்டின் கருத்துகள் மனித இனநல-இருத்தல் நிலைசார் உளவியலில் (Humanistic Existential Psychology) அடங்கும். தனிமனிதனின் அனுபவங்களும் குழந்தைப் பருவம் முதல் ஏற்படும் கற்றல், அறிதல், ஊக்குவிப்பு ஆகிய இவற்றில் ஏற்படும் மாற்றங்களும் அவனுடைய ஆளுமையில் மிகச் சிறப்பான பங்கு பெறுகின்றன என்று இவர் கருதினார். தற்கருத்து (Self Concept), தன்முனைப்பு (Ego) என்ற சொற்களுக்கு மாறாக ஆல்போர்ட்டு தனித்தன்மை (Proprium) என்னும் சொல்லைப் பயன்படுத்தினார். மனிதனின் தனித்தன்மையை அவனுடைய ஆளுமையின் அடிப்படை என்று ஆல்போர்ட்டுகூறினார். தனிமனிதனுக்குக் குழந்தைப்பருவம் முதல் 20 வயது வரையில் ஏற்படும் அனுபவங்களை ஆல்போர்ட்டு ஏழு நிலைகளாகப் பிரித்து, இந்நிலைகளில் படிப்படியாகத் தற்கருத்து உருவாகிறது என்று கூறினார். பிறப்பு முதல் 1-வயது வரையில் புலனுணர்வு இயக்கங்கள் ஏற்படுவதில்லை. இது உடல்சார் கருத்து நிலை (Bodily-self) யாகும். $1\frac{1}{2}$ வயது முதல் 2 வயது வரையில் குழந்தைக்குத் தான் என்ற உணர்வின் (Self identity) தொடக்க நிலை ஓரளவு ஏற்படுகிறது. இரண்டு வயது முதல் மூன்று வயது வரையில் குழந்தைக்குத் தன்னைப் பற்றிய மதிப்பு ஏற்படுகிறது. இந்நிலையை ஆல்போர்ட்டு தன்மதிப்பு நிலை (Self esteem) என்று குறிப்பிடுகிறார், குழந்தைக்குத் தன்முனைப்பு உருவாகத் தொடங்கும் நிலையும் இதுவே ஆகும். நான்கு வயது முதல் ஆறு வயது வரையில் குழந்தையின் தன் உணர்வு விரிவடைந்து (Self extension) 'நான்'' 'என்னுடையது' என்ற மனப்பான்மைகள் உருவாகின்றன. ஆறு முதல் பன்னிரண்டு வயது வரையில் குழந்தை உள உருவ நிலையை (Self-image) அடைந்து பள்ளிப் பருவம் எய்துகிறது. இந்நிலையில் குழந்தை தன் திறமைகளை உணர்ந்து நிலைமைகளைச் சமாளிக்கத் தெரிந்து கொள்கிறது. இந்த நிலையை ஆல்போர்ட்டு நிலைமை சமாளிக்கும் பருவம் (Self as Rational Coper) என்று குறிப்பிடுகிறார். இதுவே ஆறாம் நிலையாகும். இதற்கு அடுத்த நிலை தகுமுயற்சிப் பருவம் (Propriate Striving Stage) எனப்படும். இது 12 முதல் 20 வயது வரையில் குழந்தைப்பருவம் முடிந்த பின் இளையோர் பருவம் முழுவதும் நீடிக்கிறது. இப்பருவத்தில் இளையோர் தம் ஒப்பார் குழுவின் (Peer group) ஏற்புடைமையைப் பெரிதும் மதிக்கின்றனர். சமூக ஏற்பிலாமையை வெறுக்கின்றனர். இப்பருவத்தில் வாழ்க்கையின் பயன் மதிப்புகளும் மனச் சாட்சியும் உருவாகின்றன. இந்த ஏழு நிலைகளைக் கடந்தபின் வயது வந்தோர் நிலையில் தனித்தன்மை உருவாகிறது.

மனிதர்களின் பண்புக் கூறுகளிலிருந்து அவர்களுடைய தனித்தன்மையை அறியலாம். இப்பண்புக் கூறுகள் அடிப்படைப் பண்புகள் (Cardinal Traits) என்றும், வழிநிலைப் பண்புகள் (Secondary Traits) என்றும் இரு வகைகளாக ஒவ்வொருவரிடமும் காணப்படுகின்றன என்று ஆல்போர்ட்டு கூறுகிறார். ஆல்போர்ட்டு ஆளுமைப் பண்புகள் பலவற்றைத் தொகுத்து, ஒரு பட்டியல் தயாரித்தார். இப்பட்டியலின் உதவியினால், தனி மனிதனிடம் சில பயன் மதிப்புகள் எந்த அளவிற்குக் காணப்படுகின்றன என்று கண்டுபிடிக்கலாம். இப்பயன் மதிப்புகளை ஆல்போர்ட்டு கொள்கைசார், பொருளியல் சார், அழகியல்சார், அரசியல்சார், சமயம்சார் மதிப்பு என ஐந்து பெரும் பிரிவுகளாக வகைப்படுத்தினார்.

தனிமனிதனின் பழக்கங்களைக் காட்டிலும் அவனுடைய நடத்தைக் கூறுகளும் மனப்பாங்குகளுமே பெரும்பாலும் அவனுடைய ஆளுமையின் அடிப்படைகளாக அமைகின்றன. தனிமனிதனின் நடத்தையில் காணப்படும் நிலைத்த ஒருமைப்பாடு, அவன் ஆளுமைக் கூறுகளாக உருவாகிறது. இயல்புநிலை மனிதர்களின் பண்புகளுக்கும், உளக்கோளாறு

நோயாளிகளின் பண்புகளுக்கும் இடையே சில வேறு பாடுகள் உள்ளன என்று ஆல்போர்ட்டு கூறுகின்றார்.

இயல்புநிலை ஆளுமையினரிடம் 1. எதிர்த்து நிற்றல் (Confrontation) 2. மெய்ந்நிலை உணர்தல் (Reality Acceptance) 3. ஒருமைப்பாடு (Integration) 4. தன்னறிவு (Insight) 5. வயதுக்கேற்ற சமாளிக்கும் திறன் (Problem Solving According to Age) 6. கட்டுப் பாடு (Restraint) 7. பரந்த நோக்கு (Broad Perception) ஆகிய பண்புகள் காணப்படுகின்றன. உளக் கோளாறு ஆளுமையினரிடம் 1. தவிர்த்தல் (Avoidance) 2. உண்மை மறுத்தல் (Denial) 3. பிளவு பட்ட ஆளுமை (Splits) 4. உள்நோக்கு இல்லாமை (Lack of Insight) 5. நிலைத்தல் (Fixation) 6. உட் துடிப்பு வயம் (Impulsive) 7. தடைசெய்யப்பட்ட புலன்காட்சி (Restrained Perception) ஆகிய பண்பு கள் காணப்படுகின்றன.

உள முதிர்ச்சியே சமநிலையான ஆளுமையாகும் என்று ஆல்போர்ட்டு கருதினார். ஆல்போர்ட்டு மனித இனநல உளவியலுக்கும் இருத்தல்நிலை உளவியலுக்கும் முன்னோடியாக விளங்கினார். மனிதனைச் சார்ந்துள்ள சிக்கல்களை விளக்கக்கூடிய ஆளுமைக் கோட்பாடே, சிறந்த ஆளுமைக்கோட்பா டாகும் என்று ஆல்போர்ட்டு வலியுறுத்தினார். க.தி.

(ஆ) காரல் இராசர்சு: காரல் இராசர்சின் ஆளு மைக் கோட்பாடு இவரது மருத்துவ அனுபவத்தி லிருந்து உருவானதாகும். இவர் ஆட்படுநர் உள மருத்துவம் என்னும் உளவழி மருத்துவ முறையைத் தம்மிடம் வரும் நோயாளிகளிடம் பெரும்பாலும் பயன்படுத்தி வெற்றி கண்டார். மனிதனின் அனு பவங்கள், உணர்வுகள், அவன் தன்னைப் பற்றியும் உலகத்தைப் பற்றியும் கொண்டுள்ள நோக்கு ஆகிய இவற்றுக்கு இராசர்சு (Carl Rogers) தம் ஆளுமைக் கோட்பாட்டில் சிறப்பிடம் கொடுத்தார். இவருடைய உளவியற் கருத்துகள், மனித இனநலக் கோட்பாட் டைச் (Humanism) சார்ந்துள்ளதாகக் கருதப்படு கின்றன. இவரின் கோட்பாடுகளைப் பின்வருமாறு தொகுத்துக் கூறலாம்.

அகவய அனுபவங்களின் அடிப்படையிலேயே இளங்குழவி புற உலகினை உணர்ந்து கொள்கிறது. தனிமனிதன், 'நான், என்னுடையது' என்று எதனை உணர்கிறானோ அது, அவனுடைய தன்னுணர்வு ஆகி றது. தன்னுணர்வு நன்கு அமையப் பெறாதவன் உளச்சிக்கல்களுக்கு ஆளாகிறான். தனி மனிதனின் தன்னுணர்வுக்கும் அவன் உலகில் பெறும் அனுபவங் களுக்குமிடையே பெரும் வேறுபாடு இருப்பதே முரண் பாடுகளுக்குக் காரணம். இத்தகைய முரண்பாடுகள் தனிமனிதனின் ஆளுமையின்மீது செல்வாக்குக்



காரல் இராசர்சு

கொண்டுள்ளன. குழந்தைகளை நல்ல முறையில் வளர்க்கவேண்டும் என்னும் நோக்கத்துடன் செயற் படும் பெற்றோர்கள், தம்மை அறியாமலேயே குழந்தைகளிடம் எதிர்மறை உணர்வுகளையும் தம் மைப் பற்றிய தாழ்வான மதிப்பீடுகளையும் உரு வாக்கிவிடுகிறார்கள். மிகுந்த கட்டுப்பாடுகளின் காரணமாகக் குழந்தைகளின் தற்கருத்திற்கும் அவர் களின் உண்மையான அகவுணர்வுக்கும் இடையே போராட்டம் நிகழ்கிறது. பெற்றோரும் ஆசிரியரும் குழந்தைகளால் விரும்பப்படாத வகையில் நடந்து கொண்ட போதிலும், அவர்களிடம் அக்குழந்தைகள் எப்பொழுதும் விருப்பமும் மதிப்பும் கொண்டிருக்க வேண்டும் என்று எண்ணுமாறு கட்டுப்பாடுகள் அமைந்துள்ளன. இதன் விளைவாகக் குழந்தைக ளிடம் உளப்போராட்டம் ஏற்படுகிறது. பெரும்பா லும்தனி மனிதனின் தன்னுணர்வும் சமூக எதிர்பார்ப் புகளும் எதிரிடையாக இயங்குகின்றன. தம்முடைய மனவெழுச்சிகளை இயல்பாக வெளிக் காட்டுவதைச் சமூகம் ஏற்றுக் கொள்ளாது என்னும் எண்ணத்தின் காரணமாக மனவெழுச்சிவயப்படும் ஆண்கள், தம் மைப்பற்றித் தாழ்ந்த தற்கருத்தைக் கொண்டுள்ள னர்.

தன்னுணர்வின் இயல்பினை அறிய முடியாத

சூழ்நிலைகளில் சிக்கித் தவிப்பவர்கள் பிறழ்வு நடத்தையினராகின்றனர். சிலரிடம் தன்னுணர்வு அல்லது தற்கருத்து நன்கு அமையப்பெறாமலும் இருக்கக் கூடும். இந்நிலையில் ஆளுமைச் சிதைவு ஏற்படுகிறது. மனவெழுச்சி வெளியீடுகள் மற்றவர்களால் ஏற்றுக்கொள்ளப்படாவிட்டால், தனிமனிதனிடம் அயன்மையாதல் இயங்குமுறைகள் (Alienation Processes) தோன்றுகின்றன. ஆதலின், மனவெழுச்சிகளையும் அவற்றின் விளைவாக ஏற்படும் நடத்தைகளையும் மற்றவர்கள் ஏற்றுக்கொள்வது, ஆளுமைச் சமநிலைக்கு இன்றியமையாததாகும். தற்கருத்து உருவாதலில் தடைகள் ஏற்பட்டால் உளத்தடுமாற்றம் ஏற்படுகிறது.

சமூக எதிர்பார்ப்புகள் தனிமனிதனைத் தானாக அல்லது இயல்பாக இயங்க விடுவதில்லை. பெரும்பாலும் மக்கள் சமூக ஏற்புடைமை எனப்படும் முகமூடி (Persona) அணிந்தே வாழ்கின்றனர். அதாவது மனிதன் தன்னுடைய இயல்பை மறைத்துத் தனக்கு இயைபிலாத முறையில் செயற்கையாக இயங்க வேண்டியிருக்கிறது. பண்பாட்டுச் சூழமைவுகளும் பண்பாட்டின் எதிர்பார்ப்புகளும் பெரும்பாலும் தனிமனிதனுக்கு மனக்குலைவுகளையும் மனஉளைச்சலையும் தருவனவாக இருக்கின்றன. ஆயினும், இத்தகைய பண்பாட்டுச் சூழலை விட்டு முழுமையாக எவரும் விலகி இருத்தல் இயலாது. பண்பாட்டுச் சட்டத்திற்குள்தான் தனி மனிதன் முழுமையாகத் தற்கருத்தை உணரமுடியும். பண்பாட்டுச் சமூகக் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டு இயங்குவதால், மனிதன் சுதந்திரமாக வாழ முடிவதில்லை. அவனுடைய இயங்குமுறைகள் இதைத் தான் செய்யவேண்டும், இதைச் செய்யக்கூடாது என்ற வகைகளில் முன்னரே கட்டுப்படுத்தப்பட்டு விடுகின்றன. ஆயினும் மனிதன் தன் மனச்சாட்சியின் ஆணைப்படி இயங்க முற்படுகிறான். முழுமையான சுதந்திரத்துடன் இயங்கும் மனிதனின் தன்னுணர்வையும் முழுமையான சுதந்திரத்துடன் இயங்க முடியாமல் முரண்பாடு அடைந்த தன்னுணர்வையும் இராசர்சு பின்வருமாறு வேறுபடுத்திக் காட்டுகிறார்.

முழுமையான தன்னுணர்வு, கட்டுப்பாடுகளின்றி இயங்குகிறது; படைப்பாற்றல் கொண்டிருக்கிறது; நிகழ்காலச் செய்திகளுடன் தொடர்பு கொண்டிருக்கிறது; தனிமனிதனின் முழுமையான உள்ளாற்றல்களுக்கு வடிகால் அமைக்கவல்லது; பொய்யுருக்களைத் தவிர்க்கிறது; தன்னிச்சையாக இயங்கும் திறன் கொண்டிருக்கிறது; அகத்தேற்றத்தினின்று (Introjection) விலகிச் சுய ஆணைப்படி இயங்குகிறது. இதற்கு மாறாக முரண்பாட்டுத் தன்னுணர்வு, அகஅனுபவங்களினின்று விலகி நிற்கிறது; ஒன்றுதல் உணர்வு இன்றி அகத்தேற்ற முறையில் இயங்குகிறது; மனக்குலைவு காரணமாக ஏற்படும் உள் துடிப்புகளால் ஆக்கப்படுகிறது; எதிர்மறையான மனவெழுச்சிகளைக் கொண்டிருக்கிறது; தன்னுணர்வின் அமைப்புச் சிதைந்துள்ளது; சமூக எதிர்ப்புச் செயல்களில் தனிமனிதனை ஈடுபடுத்தவல்லது; பல்வேறு கட்டுப்பாட்டு முகமூடிகளைக் கொண்டிருக்கிறது; உள்ளாற்றல்களுக்கும் ஏற்ற வடிகால்களைத் தெளிவாக அறிந்து கொள்ளாமல் இயங்குகிறது.

எஸ். என். து.

(இ) எரிக்கு பிரோம் (1900-1980) ஆளுமைக் கோட்பாட்டினைச் சமூகக் கருத்துகளை அடிப்படையாகக் கொண்ட உளப்பகுப்புக் கோட்பாடு என்று வரையறுத்துள்ளார். மனித நலவியலாரும் சமூக அறிவியலாரும் பண்பாட்டுச் சூழ்நிலை, மரபுநிலை ஆகிய இவ்விரு காரணிகளும், தனிமனிதனின் நடத்தைகளைப் பெருமளவு முடிவு செய்கின்றன என்று சுட்டிக் காட்டியுள்ளனர். எரிக்கு பிரோம் (Eric Fromme), உளப்பகுப்புக் கொள்கையில், சமூகக் காரணிகளுக்கு முதலிடம் கொடுத்தார். பிரோமின் ஆளுமைக் கோட்பாடு, பிராய்டின் கொள்கைகளைப் பெரிதும் ஒத்திருந்தாலும், சில தலையாய கருத்துகளில் வேறுபடுகிறது. சான்றாக, மனிதன் இயற்கையில் பண்படா இயல்பு கொண்டவன் என்று பிராய்டு கூறுகிறார். ஆனால், பிரோம், இயற்கைத் தேவைகளை எந்த அளவுக்கு நிறைவேற்றிக் கொள்ள மனிதனுக்குச் சமூகம் உதவுகிறதோ, அந்த அளவுக்கு அவன் நல்லவனாக இருக்கிறான் என்று கூறுகிறார். பாலுந்து பற்றிப் பிராய்டு கூறிய கருத்துகளைப் பிரோம் முழுமையாக ஏற்றுக் கொள்ளவில்லை.



எரிக்கு பிரோம்

மனிதனிடம் விலங்கு இயல்பும் மனித இயல்பும் கலந்துள்ளன என்கிறார் பிரோம். விலங்குகளின் எல்லா ஊக்கிகளையும் உந்துகளையும் மனித உடல் பெற்றுள்ளது. நேற்று, நாளை என்ற எண்ணமில்லாமல், வாழ்வையும், இனப்பெருக்கத்தையுமே மனித உடல் விரும்புகிறது. ஆனால், உடல் விருப்பம் எல்லாம் நிறைவேறுவதில்லை; ஏனென்றால், மனிதன் தன்னைப் பற்றிய உணர்வு நிலையினைப் பெற்றிருக்கிறான். மனிதன் கடந்த காலத்தை நினைவில் வைத்திருப்பதாலும் பகுத்தறிவதாலும் என்றாவது ஒருநாள் தான் இறக்க வேண்டும் என்பதை உணர்ந்திருக்கிறான். ஆயினும், மனிதன் தொடர்ந்து வாழவே விரும்புகிறான். விலங்குகள் தம் இயல்பூக்கங்களின் மூலம், இயற்கைச் சூழ்நிலையோடு ஒன்றி இருக்கமுடிகிறது, ஆனால், மனிதன் தன்னுணர்வின் காரணமாக, இயற்கையினின்று பிரிந்து விடுகிறான். அவன் இந்நிலையைத் தன் பகுத்தறிவின் மூலமாகவோ சமூகத்தின் பகுத்தறிவு மூலமாகவோ தீர்க்க முயலுகிறான். சமூகம் தனக்கு முதன்மையும் மதிப்பும் கொடுக்காவிட்டாலும் உலகில் தான் தனித்திருக்கும் உண்மை நிலையினை மனிதன் ஏற்றுக்கொள்வதே,இம் முரண்பாட்டு நிலையிலிருந்து விடுபட்டுச் சுதந்திரமாக வாழ வழியாகும் என்று பிரோம் கருதுகிறார்.

தன்னைப் பற்றிய மெய்ந்நிலையுணர்வு கொள்ளும் மனிதன், மக்கள் எல்லோருக்கும் பொதுவான சில தேவைகளை நிறைவேற்ற உதவும் ஒரு சமுதாயத்தை உருவாக்க முனைகிறான். மனிதன் தன்னை இயற்கையுடன் இணைத்துக் கொள்ளுதல், தனது விலங்கியல்பிலிருந்து மேல் எழுதல், புதியன படைக்கும் ஆக்கத்திறன் பெறுதல், தனது தனித் தன்மையைப் பேணுதல், தன்னை முழுமையாக உணர்ந்து கொள்ளுதல், உலகத்தினை உணர்ந்து கொள்ளுதல் ஆகிய அனைத்தையும் மனிதத் தேவைகள் எனலாம். இத்தேவைகளைச் சமூகம் உருவாக்கவில்லை: மனிதனே இவைகளை உருவாக்கினான். ஆனால், இத் தேவைகளை நிறைவு செய்வது சமூகம்தான். மனித இனம் ஒன்றாக வாழக் கற்றுக்கொள்கிற திறமையைப் பெற்றுள்ளது. ஆனால், சமூகம், இத்தகைய அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளுவதற்கு இயலாத வண்ணம், மனித ஆளுமையினைச் செயற் குலைவில் மாட்டி வைத்துள்ளது என்று பிரோம் கருதுகிறார்.

பிறழ்வு நடத்தை, மனிதனின் ஆற்றல்களை வெளிப்படுத்தாத நடத்தை என்று பிரோம் கூறுகிறார். குழந்தைகள் சமூகத்துடன் இணைந்து செயல்படுவதற்கு ஒவ்வொரு சமூகமும், பெற்றோரையும் குடும்பத்தையுமே நம்பியிருக்கிறது. ஆனால், பெற்றோரோ அழிவுமனப்பான்மையும் வெறுப்பும் கொண்டவராக இருக்கும்போது, அவர்கள் தம் குழந்தைகளை ஆதிக்கத்திலும் அளவுக்கு மீறிய பாதுகாப்பிலும் ஈடுபடுத்தி விடுகின்றனர். இத்தகைய பெற்றோரின் நடத்தை, குழந்தைகளைப் பிற்காலத்தில் உளப்பிணி நிலைக்குக் கொண்டு செல்கிறது. பெற்றோரிடமிருந்து அன்பையும் ஆதரவையும் பெறும் குழந்தைகளே, சமூகத்தின் தாக்குதலைச் சமாளித்து நிலைகுலையாமல் நிற்கின்றனர். தன்னை மற்றவருடன் தொடர்புபடுத்த இசையும் வகையில் சமூகத்தை மாற்றாத வரையில், மனிதன் தன்னைத் தானே முழுவதும் உணர்ந்து கொள்ள முடியாது; 'ஆக்கும் அன்பினை' (Productive Love) நுகரவும் முடியாது. இத்தகைய அன்பினால்தான் மனிதன் மற்றவர்களை மதிக்கவும் பேணவும் செய்கிறான்.

பிரோம், சமூகங்களில் பலவகையான ஆளுமைகளைக் காணமுடியும் என்று குறிப்பிடுகிறார். ஏற்பு ஆளுமையினர் (Receptive Type) மற்றவரைச் சார்ந்தும் கீழ்ப்படிந்தும் இருப்பதோடு, தன்னுரிமையை நிலைநிறுத்த அஞ்சுபவராகவும் இருப்பர். 'சந்தர்ப்பவாதிகள்' (Exploitative Type) மற்றவர்க்கு ஆணையிடுவதில் விருப்பம் மிகுந்தவராகவும் சீண்டுவதிலும் கடிவதிலும் ஈடுபடுபவராகவும் இருப்பர். சேமிப்பு வகையினர் (Hoarding Type) பொருட் செல்வத்தைக் குவித்து, அதன்மூலம் பாதுகாப்பும் உறுதியும் தேடுபவராக இருப்பர். வாழ்க்கையையே வணிகமாக்கும் வகையினர் (Marketing Type) தம்மையே சந்தையில் விலைபேசி விற்கும் நிலையில் இருக்கின்றனர். இவர், தம்மையும் ஒரு எந்திரப்பொருளாக நினைத்து நடக்கின்றவர். இறுதியாகப் பிரோம் 'ஆக்கும் வகையினர் (Productive Type), சமூகத்தில் மிகக் குறைந்தவரே என்றும், அவர்கள், 'ஆக்கும் அன்பின்' மூலம் படைப்பாற்றல் உடையோராகவும் மற்ற மனிதருடன் தொடர்பு கொள்வோராகவும் விளங்குகிறார்கள் என்றும் கூறுகிறார்.

துன்புறுத்தும் வேட்கை (Necrophilous Orientation) யில் மனிதன், கீழ்த்தரமாகவும் சுரண்டுபவனாகவும் இருப்பதோடு தாழ்ந்தும் சார்ந்தும் இருக்கிறான். இங்குத் தனிமனிதன் துன்பத்தை விழைபவனாகவோ துன்பத்தை விளைப்பவனாகவோ செயற்படுகிறான். ஆண்டான், அடிமையின் தொடர்பு இவர்களுடைய குவிந்து கிடக்கும் ஆளுமைக்குத் தேவையாகிறது. மேலும், இத்தகைய மனிதர்கள், உலகத்தையே தாம் பெற்றிருக்க வேண்டும் என்ற வீணான முயற்சியால் அதனையே அழிக்கின்றனர். கே.வி.கே.

2. வகையியல் கோட்பாடு: ஐசங்கு எச்.சே. அண்மைக் காலத்தில் ஆளுமையைப் பற்றிய விரி

வான ஆராய்ச்சிகளைச் செய்தவர்களுள் குறிப்பிடத் தக்கவராவர். யுங்கு (Jung), கிரட்சுமர் போன்றவர்களின் ஆளுமை ஆய்வுகளில் ஐசங்கு (Eysenk) ஈடுபாடு கொண்டிருந்தார். ஆளுமை மதிப்பீட்டிற்கு இவர் ஓர் கணக்கெடுப்பு முறையைக் (Inventory) கண்டுபிடித்தார். அகமுக, புறமுக ஆளுமையினரை வேற்றுமைப்படுத்திக் காட்ட இவர் ஒரு சுழலும் தட்டைக் கொண்ட கருவியினைப் பயன்படுத்தினார். இவரது அகமுக-புறமுக வகைப்படுத்தலையும் இக் கருவியின் மூலம் விளக்கினார்

மேலும் இவர் ஒரு வரைபடத்தில் படுக்கைக் கோடிட்டுக்காட்டி, அதன் இடப்புறம் இயல்புநிலைப் பண்புகளையும், வலப்புறம் செல்லச்செல்ல உளச்சம நிலையற்ற உளக்கோளாறு நிலைப் பண்புகளையும் விளக்கினார். அதன்மேல் நெடுங்கோடு ஒன்றிட்டுக் கீழிருந்து மேல்வரை புறமுக, அகமுகப் பண்புகளை விளக்கினார். சண்டையிடும் இயல்பு, பொய்ம்மை ஆகிய பண்புகள் புறமுகம் சார்ந்த உளக் கோளாறு நிலையைக் குறிக்கின்றன. இதற்கு நேர்மாறாகப் பகற்கனவு காணும் சிந்தனை வயப்பட்டவரிடம் அகமுகம் சார்ந்த உளக்கோளாறு நிலை மிகக் குறைந்த அளவில் காணப்படுகிறது. அகமுகப் புறமுகப் பண்புகள் இயல்பு நிலையளவில் பெற்றிருப்பவர்கள், உளக்கோளாறுவயப்படின் தம்மிடம் அமைந்திருக்கும் பண்புகளுக்கு நேர் எதிரிடையான பண்புகளை அடைகின்றனர்.

ஐசங்கு, இலண்டன் நகரில் ஓர் உளமருத்துவ விடுதியில் நோயாளிகளை ஆராய்ந்து தம் சோதனை முடிவுகளை வெளியிட்டார். ஆளுமையில் ஒவ்வொரு வகையிலும் இவர் ஓர் அடுக்கு இருப்பதாகக் குறிப்பிடுகிறார். இந்த அடுக்கில் உள்க்கோளாறு(Neurosis), நிலைத்த தன்மை (Stability), உளப்பிணி (Psychosis), இயல்புநிலை (Normality), அகமுகம், (Intraversion), புறமுகம் (Extraversion) ஆகிய ஆளுமை வகைகளை முதன்மை நிலைகள் என்றும், இந்த ஆளுமை வகைகள் ஒவ்வொன்றிலும் வேறு பல பண்புக் கூறுகள் அடங்கியுள்ளன என்றும் இவர் கூறுகிறார். இவர் கருத்துப்படி உளப்பிறழ் நிலை, தானியங்கு நரம்பு மண்டலத்தின், குறிப்பாக அட்ரினல் சுரப்பியின், செயற்பாடு காரணமாக நிகழ்கிறது.

உளப்பிணியை ஐசங்கு 1 இயல்புநிலை, 2 உளச்சிதைவு நோய் (Schizophrenia), 3 கிளர்ச்சிச் சோர்வு உளப்பிணி (Manis Depressive Psychosis) என மூன்று வகையாக விளக்குகிறார். இடைவெளி காணல், படிக்கும் வேகம், ஆடியில் பிம்பம் பார்த்து வரைதல், எண் வரிசை அடைத்தல் ஆகிய சோதனைகளை இவர் உளப்பிணியை அறிவதற்காகப் பயன்படுத்தினார். கற்றல் முறையை இவர் மிகவும் வலியுறுத்தினார். பாவ்லாவு (Pavlov), அல் (Hule) ஆகியோருடைய கற்றல் முறையை இவர் ஏற்றார். இவர் மனிதனின் ஆக்க நிலையிருத்தலை வற்புறுத்தினார். மனித ஆளுமையைப் பொறுத்து ஒரு வலுவான அளவு கடந்த காரணி கற்றலின் அடிப்படையாகிறது. காண்க: ஆளுமை. தி.சீ.

3. உளப்பகுப்புக் கோட்பாடு: உளப்பகுப்புக் கொள்கை, மனிதனின் ஆளுமையை பற்றிய ஆராய்ச்சியில் நனவிலி உந்துகளுக்கும் போராட்டங்களுக்கும் முதலிடம் கொடுத்துள்ளது. இது நனவிலியின் ஒடுக்கல்களை வெளிக்கொண்டு வந்து தீர்வு காண்பதற்குப் புறத்தேற்றச் சொல் இயைபு போன்ற சோதனைகளையும் பயன்படுத்திற்று. உளப்பகுப்புக் கொள்கையினைத் தோற்றுவித்தவர் சிக்மண்டு பிராய்டு என்பவர் ஆவார். பிராய்டு, யுங் ஆகிய இருவரும் ஆழ்மன உளவியலாளர்கள் எனக் கருதப்படுகின்றனர். ஏனெனில் அவர்கள் உளத்தின் நனவிலி அடுக்குகளைப் பற்றிய ஆய்வில் ஈடுபாடு கொண்டனர். பிராய்டு விளக்கிய ஆளுமைக் கூறுகளான பண்படா உளம், தன்முனைப்பு, மேம்பாட்டுளம் ஆகியன ஆளுமையில் முக்கிய பங்கு கொள்கின்றன என்று மர்ரேயும் கருதினார். உளப்பகுப்புக் கொள்கை, உளஇயங்கியல் கொள்கை எனவும் (Psychodynamic Theory) வழங்கப்படும். மனிதநடத்தையின் காரணங்கள் பெரும்பாலும் நனவு நிலைக்கு அப்பாற்பட்ட நிலையில் இருக்கின்றன என்று இம்மூவரும் கருதினர். உளப்பகுப்பினருக்கு முன் வாழ்ந்த உளவியலார், இருத்தல் நிலைக் கொள்கை வழிக் கருத்துகளைக் கொண்டிருந்தனர். அவர்கள் உளத்தின் உந்துகள் எழுவதற்குக் காரணமாக இருக்கும் ஊக்கிகளை ஆராய்ந்தார்கள். நனவிலி நிலையின் அமைப்புப் பற்றி அறிய அவர்கள் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தனர். மனிதர்கள் சில நேரங்களில் பிறழ்வு நடத்தைகளில் ஈடுபடுவதற்கான காரணங்களை அவர்கள் ஆழ்மன அளவில் கண்டுபிடிக்க முயன்றனர். நனவுநிலைச் செயல்களுக்கு அடிப்படைக் காரணமாக இருப்பவை நனவிலி உந்துகளே என்று இந்த உளஇயங்கியலார் கருதினர்.

உலகில் நடைபெறும் எல்லாச் செயல்களுக்கும் மனித உள்ளமே காரணம் என்று பிராய்டு கருதினார். எல்லோருடைய உள்ளத்திலும், உளத்தின் அடிப்படைத்திறன் (Basic Mental Ability) இருக்கிறது. இத்திறன் எவ்வாறு திசை திருப்பப்படுகிறதோ அதற்கு ஏற்ப மனித நடத்தைகளும் நடத்தைகளையொட்டிய பண்புக் கூறுகளும் காணப்படுகின்றன. நனவிலி உந்துகள், நனவு நிலைச் செயல்களின் மீதும் மிகுந்த செல்வாக்குக் கொண்

டுள்ளன. இனம்புரியாத அச்சங்கள், அடையமுடியாத ஆசைகள், கிலிகள் ஆகிய இவைகள் பிறழ்வு நடத்தைக்குக் காரணமாகின்றன. யுங், கூட்டுநனவிலி (Collective Unconscious) பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னரே மனித சமூகங்களில் உருவெடுத்து, மனிதனின் அடிப்படை உளத்திறனுக்குக் காரணமாக அமைந்தது என்றார். கூட்டு நனவிலி, உளஉருச் சின்னங்களைக் (Archetypes) கொண்டு செயற்படுகிறது. மனிதனின் நனவிலி, இயல்பாகவே ஏற்புடையதாக அமைந்திருக்கிறது என உளப்பகுப்புக் கோட்பாட்டினர் கருதினர்.

**சிக்மண்டு** பிராய்டு (கி.பி. 1881–1939) மனித உள்ளத்தின் பல்வேறு நிலைகளைப் பகுத்தாய்ந்து, தனி மனிதனின் ஆளுமைக்கு அவ்வுள நிலைகள் எவ்வாறு அடிப்படையாக அமைகின்றன என்பதை முதன் முதலில் விரிவாக விளக்கிய உளவியல் அறிஞராவார். இவர் எடுத்துரைத்த ஆளுமை விளக்கங்கள், இவருடைய புகழ் பெற்ற உளப்பகுப்புக் கொள்கையின் (Psycho Analytic Theory) விளக்கத்தில் அடங்குவனவாகும். அக்காலத்தில் பாரிசு நகரத்தில் உளக்கூறு மாற்றக் கோளாறுகளைக் (Hysteria) குணப்படுத்தி வந்த சார்கோ (Charco) என்பவரின் அறிதுயில் மருத்துவ முறைகளை(Hypro Therapy) நேரில் கண்ட பிராய்டு, அறிதுயில் மருத்துவ முறை, உளக் கோளாறுகளுக்குச் சிறந்த மருத்துவ முறையாகாது என்று கருதினார். அக்காலத்தில் வியன்னா நகரத்தில் உளவழி மருத்துவராக இருந்த பிராயர் சோசப்பு (Breur Joseph) என்பாரின் புதிய உளவழி மருத்துவ முறைகளில் ஈடுபாடு கொண்டு, பிராயரின் முறையினை மேலும் சீர்திருத்தித் தாம் பயன்படுத்தினார். உளக்கோளாறு நோயாளிகளை அறிதுயில் நிலைக்குக் கொண்டு வருதலைக் காட்டிலும் அவர்களிடம் உரையாடுதலின் மூலம், அவர்களின் ஆழ்மன ஒடுக்கல்களை வெளிக் கொண்டு வர முடியும் என்று பிராயரைப் போன்று பிராய்டும் கருதினார்.

உளநோயாளிகள் பெரும்பாலும் தங்கள் வாழ்க்கையில் முக்கியமானவர்களிடம் தாம் கொண்டுள்ள விருப்பையோ வெறுப்பையோ தம் உளவழி மருத்துவரிடம் கொண்டிருப்பார்கள் என்றும், தம் மன வெழுச்சிகளை அவர்கள் மீது காட்டுவார்கள் என்றும், இதனை 'உளப்பெயர்ச்சி' (Transference) என்றும் பிராய்டு கூறினார்.

**உள்ளத்தைப்** பற்றிப் பிராய்டின் முதற்கூற்றுகள்: மனத்தில் பல நிலைகள் இருக்கின்றன என்றும், அவை சிற்சில சமயங்களில் ஒன்றுக்கொன்று முரண்பாடாக இயங்கக்கூடும் என்றும் பிராய்டு கூறினார். உள்ளத்தைப் பிராய்டு நனவு, நனவடங்கு (Pre-conscious), நனவிலி என மூன்று நிலைகளாகப் பிரித்தார். மனத்தில் நனவு நிலையும் நனவுக்குப் புலனாகாமல் உறைந்து ஒடுங்கிக் கிடக்கும் நிலைகளும் உள்ளன. உறைந்து கிடக்கும் மனநிலை நனவிலி (Unconscious) எனப்படும். இது தனி மனிதனால் நேரிடையாக உணரப்படாதது. நனவு நிலையில் தனி மனிதனுக்கு ஏற்படும் சிந்தனை, அவன் மன அனுபவங்களில் மிகச் சிறிய பகுதியே ஆகும். ஆயினும் மனித விருப்பு வெறுப்புகள், நடத்தைகள் மற்றுமுள்ள எல்லாச் செயல்கள் ஆகியவற்றிற்கும் நனவிலியே காரணமாக அமைகிறது. நனவு நிலையின் அனுபவங்கள் பெரும்பாலும் நனவிலி அளவில் உறைந்து கிடக்கும் உண்மையான ஊக்கிகளின் உருத்திரிபுகள் (Distortions) ஆகின்றன. முரண்பட்ட ஊக்கிகள், தனி மனிதனுக்கு மிகுந்த மனக்குலைவை ஏற்படுத்துகின்றன. இதனால், இம்முரண்பட்ட ஊக்கிகள் விழிப்புணர்வுக்கு அப்பால் தள்ளப்படுகின்றன. ஆனால், இவை தாமாகவே இயங்கித் தனி மனிதனின் ஆளுமையைப் பாதிக்கின்றன. மனத்துக்கு இதமளிக்காத வாழ்க்கை அனுபவங்கள், மன ஆழ்தளத்தில் ஒடுங்கிக் கிடக்கின்றன. மனத்தளவில் ஒடுங்கிக் கிடந்த போதிலும் மனிதனின் வாழ்நாள் முழுவதும் இவை உயிருடன் இருக்கின்றன. இவற்றைப் பிராய்டு ஒடுக்கல்கள் (Repressions) என்று குறிப்பிட்டார். இவை மனித நடத்தைகளைப் பெரும்பாலும் பாதிக்கின்றன. உளப்பகுப்புக் கொள்கையைப் பிராய்டு நனவிலியின் அறிவியல் (Science of the Unconscious) என்று வரையறுத்தார். எல்லா உளக்கூறுகளுக்கும் நடத்தைகளுக்கும் மனத்தின் ஒடுக்கல் நிலையில் காரணங்கள் இருப்பதாகப் பிராய்டின் உளமுன்னேற்பாட்டுவாதம் (Psychic Determinism) கூறுகிறது. உணரப்படும் மனம் நனவு எனப்படும். நனவுக்கும் நனவிலிக்கும் இடைப்பட்ட உள்ளடங்கிய மனநிலை, நனவடங்கு (Pre-Conscious) ஆகும். நனவு, நனவடங்கு, நனவிலி இவற்றின் தொடர்பினைப் பின்வரும் அட்டவணையில் சுருக்கமாகக் காணலாம். (பக்கம் 690)

நனவிலி என்பது, பிராய்டின் உளப்பகுப்புக் கோட்பாட்டில் மைய இடத்தைப் பெற்றிருக்கிறது. தனி மனிதனின் மறக்கப்பட்ட மற்றும் ஒடுக்கப்பட்ட அனுபவங்களும் எண்ணங்களும் மனத்தின் பெரும்பகுயை நிரப்பிக் கொண்டிருக்கின்றன. எடுத்துக்காட்டாக, பள்ளிச் சிறுவன் தன் ஆசிரியரைக் காரணமின்றி வெறுப்பதைக் கூறலாம். இதற்குரிய காரணம் அவனுடைய நனவுநிலைக்கு அப்பாற்பட்டது. அவனுடைய நனவிலியில் ஒடுக்கப்பட்டுக் கிடக்கும் அனுபவங்களை வெளிக் கொணர்ந்

| நனவு | நனவடங்கு | நனவிலி |
|---|---|---|
| வெளித் தூண்டுதல்களால் அறியப்படும் மனநிலை | தாமாகவோ இயைபுகளினாலோ எழும் உள்ளடங்கிய நினைவுகள் | கட்டுத் திட்டங்களுக்கு அப்பாற்பட்டது. |
| அறிவுக்கெட்டிய நிகழ்காலம் | நனவுக்கும் நனவிலிக்கும் இடைப் பட்ட காலம் | கடந்த காலத்திய மனப் பெட்டகம் |
| அடையாளம் தெரிந்த மனநிலை | நனவுக்கும் நனவிலிக்கும் இடைப் பட்டதை வடிகட்டி எடுத்த நிலை | அறிவால் உணர முடியாதது. |

தால், இந்த வெறுப்பின் காரணத்தை அறியலாம். ஆசிரியர் தன்னிடம் மிகுந்த கவனம் காட்டவேண்டும் என்று அவன் விரும்பியிருக்கலாம். அவனுக்கு அது கிடைக்காதபோது அந்தக் கசப்பான உண்மை, அவன் நனவிலியில் ஒடுக்கப்பட்டு, அது ஆசிரியரிடம் அவன் கொண்டுள்ள வெறுப்பாக உருவெடுக்கிறது.



சிக்மண்ட் பிராய்ட்

இவ்வாறு ஒடுக்கப்பட்ட எண்ணங்கள் எப்பொழுதும் நனவிலியில் இருக்கின்றன. இவை எப்பொழுது வேண்டுமானாலும் நனவுக்குக் கொண்டு வரப்பட லாம். அன்றாட வாழ்வில் ஒரு சிலர் விபத்துக்கு உள்ளாகும் தன்மையினராக இருப்பதைக் காண் கிறோம். 'விபத்துட்படு ஆளுமை' (Accident Prone Personality) என்று இதனைப் பிராய்டு கூறுகிறார். இத்தகையோரின் நனவிலியில் தம்மைத்தாமே வருத்திக்கொள்ளும் விருப்பம் அடைபட்டு, ஒடுக்கப் பட்ட நிலையில் இருக்கிறது. நனவிலியளவில் இருக்கும் இந்த விருப்பமே, இவர்களை விபத்துக் குட்படும் தன்மையினராக்குகிறது. வேறுசிலர் தாம் குற்றம் செய்வதையும் அதனால் தண்டனை கிடைக் கும் என்பதனையும் அறிந்தே குற்றம் செய்கின்றனர். இவர்களின் நனவிலியில் தாம் தண்டிக்கப்பட வேண்டும் என்னும் அழிவாசை (Death Wish) ஒடுக் கலாக இருப்பதுதான், இதற்குக் காரணம்.

இந்த அழிவாசையை பிராய்டு, தானடாசு (Thanatos) (கிரேக்க இலக்கியத்தில் மரணத்தின் உருவம்) எனக் குறிப்பிடுகிறார். மனித உள்ளத்தின் இயல்புகளுக்கு ஏற்றவாறே ஒவ்வொருவரின் ஆளு மையும் அமைகிறது. இந்த இயல்புகள், பண்படா உளம் (Id), தன்முனைப்பு (Ego), மேம்பாட்டுளம் (Super Ego) ஆகிய மூன்று உளநிலைகளால் ஏற்படு கின்றன.

பண்படா உளம்: ஆக்க ஆசை (Life Wish) அழிவாசை (Death Wish) என இருகூறுகளைக் கொண்டதாகப் பண்படா உளம் (மனம்) அமைகிறது. இவ்விரு கூறுகளையும் மனத்தின் இரு மாறுபட்ட இயல்புகள் எனலாம். பிறப்பிலிருந்தே பண்படா மனம் ஒவ்வொருவருக்கும் அமைந்துள்ளது. குழந்தை வளர வளரத் தன்முனைப்பும் மேம்பாட்டுளமும் உருவாகின்றன. மரபு வழிவந்த இயல்புகள், இயல் பூக்கங்கள், முதனிலை உந்துகள் ஆகிய இவற்றைக் கொண்டதே பண்படா உளம் ஆகும். முதனிலை உந்துகள் (Primary Drives), உயிரியின் இயங்கு முறை யுடன் தொடர்பு கொண்டவை. ஆசாபாச உணர்வு களும் இவற்றில் சேரும். இவ்வுந்துகள், மேலே கூறிய மூன்று உளஅமைப்புகளும் செயற்படுவதற்கான உள் திறனைக் கொடுக்கின்றன. இந்த உள்திறன் உடன் பாடாக ஆக்கச் செயற்படுவதால், இதனைப் பிராய்டு உள் ஊக்கு திறன் (Psychic Energy)என்கிறார். இந்தத் திறன் மிகுந்து பண்படா உளம் மனத்தை நெருக்கிறது.அதனால், பண்படா உளம், இவ்வுள் திறனின் இன்பியல் உள்துடிப்புகளையும் (Libido)

பண்பாட்டற்ற முரட்டு ஆசைகளையும் நிறைவேற்றிக் கொள்ள வழி தேடுகிறது. இவ்வாசைகளை, ஈராசு (Eros) என்ற (கிரேக்கக் காதற்கடவுளின்) பெயரால் பிராய்டு குறிப்பிட்டார். இவ்வாறு ஆசை நிறைவேற்றலால் உயிரி சமநிலை அடைகிறது. பிறந்ததிலிருந்து குழந்தையின் பண்படா உளம், இன்பவிதிக்கு (Pleasure Principle) உட்பட்டு இயங்குகிறது. அதனால், குழந்தை துன்பத்தைத் தவிர்க்கிறது; பசி மற்றும் தட்பவெப்ப மாற்றங்கள் ஏற்பட்டால் அழுகிறது. இவை நீங்கினால் அழுகை நிற்கிறது. மிகையான உள்திறனால் ஏற்படும் நெருக்கடியைச் சமாளிக்கப் பண்படா உளம், இல்பொருட் காட்சிகளை (Hallucinations) உருவாக்கி, அவற்றுடன் இயைபுகளை (Associations) இணைக்கிறது. பட்டினி கிடக்கும் ஒருவனின் இல்பொருட் காட்சி வடிவத்தில் அது உணவை இயைபு கொள்ளச் செய்கிறது. இத்தகைய முரண்பட்ட இயைபுகளே எல்லாச் சிந்தனைகளுக்கும் அடிப்படையாகும். இவை நிறைவேறாத ஆசைகளின் உருவடிவு ஆகும். இவை காரண காரியங்களுக்கும் அறிவுக்கும் ஒவ்வாதனவாகவும் கூட இருக்கலாம். இந்த முரண்பட்ட இயைபுகளையும் இல்பொருட் காட்சிகளையும் கொண்ட சிந்தனை முறையை பிராய்டு முதனிலை இயங்கு முறைச் சிந்தனை (Primary Process Thinking) என்றார். இந்த முதனிலை இயங்கு முறைச் சிந்தனைக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகக் கனவு காண்பதைக் கூறலாம். கனவில் தனி மனிதர்கள் சிறு பொருள்களாகக் கூட உருவெடுக்கலாம்.

தனிமனிதன் தன் நடத்தைக்குக் காரணமாகக் கூறுவது பலசமயங்களில் உண்மையான காரணமாக இருப்பதில்லை. இதற்குக் காரணம் நனவுக்கும் நனவிலிக்கும் உள்ள வேறுபாடே. ஒரு தந்தை தன் மகனை மிகவும் நேசிப்பதாக நினைக்கலாம். நேசம் காரணமாக அவனைக் கண்டிப்பதாகவும் நினைக்கலாம். அவரால் ஏற்றுக்கொள்ள முடியாத கசப்பான உண்மை ஒன்று அவர் நடத்தைக்குக் காரணமாக இருக்கும். தனக்கு ஒருமகன் இருப்பதை அவருடைய நனவிலியில் வெறுக்கலாம். இந்த உண்மைக் காரணத்தை நனவுக்கு ஒப்பானதாக மாற்றி 'நான் என் மகனைக் கண்டிப்பது அவன் மீது கொண்டுள்ள விருப்பத்தினால் தான்' என்னும் காரணத்தைத் தன் உள்ளத்தில் உருவாக்குகிறார்.

தன்முனைப்பு: பண்படா உளத்தின் உந்துகளை வாழ்க்கையின் மெய்ந்நிலையுடன் இணைத்துச் செயற்படுத்துவதே தன்முனைப்பின் முக்கியமான பங்கு ஆகும். பண்படா உளத்தின் உந்து, பசித்த மனிதனை உணவு உட்கொள்ளத் தூண்டுகிறது. உணவு உட்கொண்டால்தான் அவன் உடல் சமநிலை அடையும். ஆனால், தன்முனைப்பு அந்த விருப்பத்தை அப்பொழுதே நிறைவேற்றிக் கொள்ள விடுவதில்லை. காலம், இடம், நேரம், இவற்றையொட்டியே உணவு உட்கொள்ளக்கூடிய சமூகவயமான உயிரியாக அவன் திகழ்கிறான். இந்த மெய்ந்நிலையை அவனுக்கு உணர்த்தி, அவனுடைய பண்படா உளத்து ஆசைகளை நிறைவேற்றுவது தன்முனைப்பு ஆகும். பால் உந்துகளின் காரணமாக எழும் ஆசைகளை உடனுக்குடன் அடையவேண்டும் என்று, பண்படா மனத்தளவில் விருப்பங்கள் எழலாம். இவற்றைச் சந்தர்ப்பச் சூழ்நிலைகளுடன் இணைத்து வாழ்க்கையின் சட்டதிட்டங்களுக்கு ஏற்றவாறு செயற்படுத்துவது, தன்முனைப்பாகும். பண்படா உளத்திற்கும் மேம்பாட்டுளத்திற்கும் இடையே ஒரு பொறுப்பான அலுவலராகத் தன்முனைப்பு பணி புரிகிறது. தன்முனைப்பில் இவ்வாறு ஏற்படும் சிந்தனைகளைப் பிராய்டு வழிநிலை இயங்குமுறைச் சிந்தனை என்று குறிப்பிட்டார்.

மேம்பாட்டுளம்: பெற்றோர்களாலும் சமூகத்தாலும் எடுத்துரைக்கப்பட்ட அறநெறிகளும் பயன் மதிப்புகளும் மேம்பாட்டுளம் எனப்படும். தன்முனைப்பின் விருப்பங்களும் செயல்களும், சமூக, சமயக் கட்டுத் திட்டங்களுக்கு ஏற்றவை தாமா என்பதைத் தீர்மானிப்பது மேம்பாட்டுளத்தின் செயலாகும். குழந்தையின் மனத்தில் உருவாகியிருக்கும் பெற்றோர் கருத்துச் சீர்மையும் மனச்சாட்சியுமே மேம்பாட்டுளம் ஆகும். தன்முனைப்பின் உந்துகளைச் செயற்படுத்துவதில் தன்முனைப்பிற்கும் மேம்பாட்டுளத்திற்கும் இடையே போராட்டம் நடைபெறுவதுண்டு. மேம்பாட்டுளம் தன்முனைப்பின் மீது மிகுந்த அளவில் ஆதிக்கம் செலுத்தி வந்தால், தனிமனிதனின் ஆளுமை, மேம்பாட்டுள ஆளுமையாகி விடுகிறது. அவன் வலிமையற்ற தன்முனைப்பு உடையவனாக ஆகிறான். மேற்கண்ட மூன்று உளக் கூறுகளும் ஒருங்கிணைந்து செயற்பட்டால்தான், தனிமனிதனின் ஆளுமை சமநிலை அடைய முடியும். இவற்றுள் பண்படா உளம், தன்முனைப்பையும் மேம்பாட்டுளத்தையும் அடக்கியாளும் நிலைமை ஏற்படின், தனிமனிதன் பண்படாத முரட்டு உந்துகளைச் செயற்படுத்துவதில் ஈடுபடுகிறான். உளவியல் அறிஞர்கள், தன்முனைப்பு வலிமை பொருந்தியதாக இருப்பதே தனி மனிதனின் ஆளுமைச் சமநிலைக்கு ஏற்றதாகக் கருதுகின்றனர். பண்படா உளத்தின் உந்துகளையும் மேம்பாட்டுளத்தின் கட்டளைகளையும் மீறி, மேலோங்கி நிற்கும் தன்முனைப்பே, தனிமனிதன் சமூகத்தின் இயைபுகள், இணைப்புகள், முரண்பாடுகள் ஆகியவற்றைச் சமாளிக்கும் திறனைக் கொடுக்கிறது.

மேம்பாட்டுளம் இருகூறுகளைக் கொண்ட தாகும். பண்பாட்டு விலக்குகள் மனச்சாட்சியாகவும், உடன்பாட்டு விதியமைப்புகள் (Positive Prescriptions) தன்முனைப்புக் கருத்தியலாகவும் (Ego Ideal) அமை கின்றன. மேம்பாட்டுளத்தின் ஆணைகளை எதிர்த்து இயங்கும் பண்படா உள உந்துகள், தன்முனைப்பு நிலையில் குற்ற உணர்வு, தண்டனை விருப்பு, பதற் றம் ஆகிய உளநிலைகளை ஏற்படுத்துகின்றன. கசப்பான மெய்ந் நிலைமைகளைச் சமாளிக்க முடி யாத சூழ்நிலைகள், தன்முனைப்பிற்குப் பதற்ற நிலையை ஏற்படுத்துகின்றன. இத்தகைய சூழ்நிலை களில் தன் முனைப்பு, சில தற்காப்பு வழிமுறை களைக் (Defence Mechanisms) கையாண்டு, பதற்ற நிலை ஏற்படாவண்ணம் சமாளிக்கிறது. இத்தற் காப்பு வழிமுறைகள், தனிமனிதனின் கசப்பான அனுபவங்களினால், அவனுக்கு ஏற்படக்கூடிய ஆளுமைச் சிதைவைத் தடுக்கின்றன.

**பதற்றம் (Anxiety):** பதற்ற நிலையைப் பிராய்டு புறவயப் பதற்றம் (Objective Anxiety), உளக் கோளாறுசார் பதற்றம் (Neurotic Anxiety), அற நெறிசார் பதற்றம் (Moral Anxiety)என மூன்று வகைகளாகப் பிரிக்கிறார். புறவயப் பதற்றம் அச்சத் தின் அடிப்படையில் எழுவதாகும். இதமளிக்காத மனவெழுச்சிகள், இத்தகைய பதற்ற நிலை தோன்று வதற்கு அறிகுறிகளாகும். பண்படா உளத்தைக் கண்டு தன்முனைப்பு, அச்சம் கொள்ளும்பொழுது உளக்கோளாறுசார் பதற்ற நிலை தோன்றுகிறது. பண்படா உள நிலையில் இருக்கக்கூடிய உள்துடிப்பு களுக்குத் தன்முனைப்பு வலுவான ஒடுக்கல்களை ஏற்படுத்தி, அடக்கி வைத்திருக்கிறது. சில நேரங் களில் இந்த ஒடுக்கல் அரண்கள் வலுவிழக்க, பண் படா உள உந்துகளும் வெளிப்படத் தொடங்குகின் றன. இவ்வாறு வெளிப்பட்டால் நேரக்கூடிய விளைவுகளை எண்ணித் தன்முனைப்பு, அச்சம் கொள்கிறது. இந்த அச்சம் இனம்புரியாத அச்சமாக இருந்த போதிலும், தன்முனைப்பு இதனை எதிர் கொண்டு சமாளிக்கும் திறனை அடைகிறது. அற நெறிசார் பதற்றத்திற்கு மேம்பாட்டுளமே காரணம். தன்மதிப்பிழத்தல், குற்றஉணர்வு, தண்டனை விழைவு போன்ற உணர்ச்சிகளை மேம்பாட்டுளம் அனுபவிக்கிறது. மேம்பாட்டுளம் வலுவானதாக இருப்பின் இத்தகைய உணர்ச்சிகள், பதற்ற நிலையைத் தோற்றுவிக்கின்றன. உலகில் பலர் தாம் செய்யும் செயல் நியாயமானதா, தாம் திறம் படச் செயல்புரிய வல்லவரா என்ற அச்சங்களை எப்பொழுதும் தாங்கியபடியே வாழ்கின்றனர். இவ் வுணர்வுகள் ஒருவகையான பாதுகாப்பின்மையை உள்ளத்தில் தோற்றுவிக்கின்றன. பண்படா உளத் தின் உந்துகள், இத்தகையோருக்கு மிகையான பதற்ற நிலையைத் தோற்றுவிக்கின்றன.

இம்மூன்று வகையான பதற்ற நிலைகளும் தன் முனைப்புக்கு ஏற்படுகின்றன. பதற்ற நிலைகளின் உளைச்சல் மிகுதியாக இருந்தால், தன்முனைப்பு பாதிக்கப்பட்டு, மனிதன் உளக்கோளாறுகளுக்கு உள்ளாகிறான். இவ்வாறு உளக்கோளாறு ஏற்படா வண்ணம் தடுப்பதற்குத் தன்முனைப்பு, தற்காப்பு வழிமுறைகளைப் பயன்படுத்துகிறது. இத்தற் காப்பு வழிமுறைகள், தன்முனைப்புப் பாதிக்கப்படா மல் இருப்பதற்கு உதவி செய்கின்றன. தற்காப்பு வழி முறைகளை மிகுதியாகப் பயன்படுத்தும் பொழுது, ஒருவனுடைய உளஊக்குத்திறன் (Psychic Energy) முழுவதும் அதற்காகவே செலவழிக்கப்படு கிறது. அதாவது அவன் வேறு எதன் மீதும் கவனம் செலுத்தமுடியாமல் போய்விடுகிறது. பிராய்டு எடுத்துரைத்த தற்காப்பு வழிமுறைகளுள் சில இங்கு விளக்கப்பட்டுள்ளன. ஒடுக்கல், தற்காப்பு வழிமுறை கள் எல்லாவற்றிலும் காணப்படுகிறது. இதமளிக் காத அனுபவங்களையும் நினைவுகளையும் தன் முனைப்பு நனவிலியுளவிற்குத் தள்ளிவிடுவதே ஒடுக் கல் ஆகும். இந்த அனுபவங்கள் நனவிலியில் எப் பொழுதும் உயிருடன் இருக்கின்றன. இவை எப் பொழுது வேண்டுமானாலும் நனவு நிலைக்கு வர லாம். அவ்வாறு நிகழாத வண்ணம் தன்முனைப்பு எப்பொழுதும் தடுத்துக்கொண்டே இருக்கிறது. இதனால், தன்முனைப்பு சில கட்டாயச் செயல்களி லும் எண்ணங்களிலும் ஈடுபட நேரிடலாம். உளப் பகுப்பாய்வு முறையின் உதவியால் ஒடுக்கல்களை வெளிக்கொணர்ந்து அழித்துவிடுவதே, தன்முனைப்பு சீராக இயங்குவதற்குச் சிறந்த வழியாகும். காரணம் கற்பித்தல் என்பது ஒருவன் தன்னுடைய நடத்தை களும் ஆசைகளும் முறையானவைதாம் என்று உறுதிப்படுத்துதலே. ஒருவன் தன் சொந்த ஒழுக்கக் கோட்பாடுகளுக்கு முரணாக நடந்துகொண்ட பொழுது, அவன் தன் மனச்சாட்சியை 'எல்லோரும் இப்படித்தான் நடந்து கொள்கின்றனர்; நான் மட் டும் விதிவிலக்கு அல்லேன்' என்று சமாதானப்படுத் துதலை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். மற்ற வர்கள் கையூட்டு வாங்கினால் அதனைக் குற்றமாகக் குறிப்பிடும் ஒருவன், தான் கையூட்டு வாங்கும் பொழுது அதனைத் ''தொழில் நீதி'' என்று சமா தானம் கூறுவதும் காரணம் கற்பித்தலே ஆகும். நம் மிடம் இருக்கும் குறைகளைச் சமாதானப் படுத்திக் கூறுதலும் இத்தகைய தற்காப்பு வழிமுறையே ஆகும். தனக்குக் கிட்டாத ஒருபொருளைக் குறைவாக மதிப்பீடு செய்து 'இந்தப்பழம் புளிக்கும்' என்ற முறையில் சமாதானம் கொள்வதும் காரணம் கற் பித்தலாகும்.

**புறத்தேற்றம்:** நம்மிடம் இருக்கும் குற்றம் குறைகளைப் பிறரிடம் இருப்பதாகக் கூறுதலும் எண்ணுதலும் ஆகும். இம்முறையினால் நம் குறைகளைப் பற்றிய குற்ற உணர்வுகளை மறைக்க முடிகிறது. எடுத்துக்காட்டாக மற்றவர்களிடம் பொறாமை கொள்பவன் மற்றவர்கள் தம்மீது பொறாமை கொண்டிருக்கின்றனர் என்று புறத்தேற்றுதலைக் கூறலாம்.

**விளைவாக்கம்** என்பது மனச்சாட்சியின் கட்டளைகளுக்கு முரணான உந்துகள், நேர் எதிரிடையான உந்துகளால் தடுக்கப்படலாம். ஒழுக்கப் பிறழ்வு நடத்தையினர், தம் தவற்றை உணர்ந்து ஒழுக்கம் பற்றிய கொள்கைப் பரப்பலில் ஈடுபடுதலை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

**இடமாற்றம்** என்பது அலுவலகத்தில் மேலதிகாரியின் சினத்திற்கு இலக்காகிய மனிதன், தன் மன உளைச்சலையும் மனக் குலைவையும் தன் மனைவி மக்கள் மீது காட்டுதலாகும். நம்முடைய அன்புக்கு உரியவர்கள் எப்பொழுதும் நம்முடன் இருக்கின்றனர். ஆதலின் இத்தகைய இடமாற்றத்திற்கு இலக்காகிறார்கள். அதனால் அவர்கள் மீது காரணமின்றிச் சினம் காட்டுதல் நிகழ்கிறது.

**மேம்படுத்தல்:** ஒருவன் தன்னுடைய முயற்சியில் தோல்வி கண்டால் ஏமாற்றம் காரணமாகத் தன் முனைப்புப் பாதிக்கப்படுகிறது. அந்த ஏமாற்றத்தினால் தன்முனைப்புப் பாதிக்கப்படாதவாறு அவன் வேறு முயற்சிகளில் முழுமையாக (Sublimation) ஈடுபடலாம். இதனால் தன்முனைப்பு ஏமாற்றத்தை உணர்வதற்கு நேரம் கிடைக்காமல் போய்விடுகிறது. தொழிலில் அல்லது காதலில் தோல்வியடைந்தவர்கள் கவின் கலைகள் அல்லது விளையாட்டில் ஈடுபாடு கொண்டு முழு மூச்சுடன் முன்னேறுவதை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். இவைகளைத் தவிரப் பிராய்டு மனவெழுச்சிப் பாதுகாப்பு (Emotional Insulation), தனிமைப்படுதல் (Isolation), பரிகாரம் (Atonement), பின்னோக்கு (Regression), ஒன்றுதல் (Identification), தன்வய உணர்வு (Introjection) ஈடுசெய்தல் (Compensation), மறுத்தல் (Denial) போன்ற பல தன்முனைப்புத் தற்காப்பு வழி முறைகளையும் எடுத்துரைத்துள்ளார்.

இத்தற்காப்பு வழிமுறைகள் தனிமனிதனுக்கும் தன்முனைப்பிற்கும் நலம் பயப்பதாயின் இவைகளால் எத்தீமையும் ஏற்படாது. ஆனால், மிகையாகத் தற்காப்பு வழிமுறைகளைப் பயன்படுத்துதல் தனிமனிதனின் ஆளுமையைப் பாதிப்பதாகும்.

**வளர்ச்சியின் உளம்சார் பால் நிலைகள்:** தனி மனிதனின் ஆளுமையில் குழந்தைப் பருவத்துப் பண்புக்கூறுகள் பல காணப்படுவது உண்டு. குழவிப் பருவத்து நிலைத்தல்களே அவற்றிற்குக் காரணமாகின்றன என்று பிராய்டு கருதினார். இக்கருதுகோளின் மேல் பிராய்டு வளர்ச்சியின் உளம்சார் பால்நிலைக் கோட்பாட்டினை அமைத்தார். குழந்தைப் பருவத்தில் ஏதாவது ஒரு குறிப்பிட்ட தேவை மிகையாகக் கிடைத்தாலோ தேவையான அளவு கிடைக்காமல் மனக்குலைவு ஏற்பட்டாலோ அக்குழந்தை வளர்ந்த பின், குறிப்பிட்ட சில ஆளுமைக் கூறுகள் குறைந்தோ மிகுந்தோ அதனிடம் காணப்படலாம். இதையே பிராய்டு 'நிலைத்தல்' என்று கூறினார். தனி மனிதனின் ஆளுமைக்கு அவன் குழந்தைப் பருவ அனுபவங்கள் மிகுந்த அளவில் காரணமாக அமைகின்றன என்பது பிராய்டின் கருத்து. இதனை விளக்குவதற்காகப் பிராய்டு தனிமனிதனின் வளர்ச்சி, சில உளம்சார் பால் நிலைகளின் அடிப்படையில் அமைந்துள்ளது என்னும் கோட்பாட்டினை எடுத்துரைத்தார். ஆளுமை வளர்ச்சியில் பால் இயல்பூக்கங்களுக்கு இக்கோட்பாட்டில் பிராய்டு மிக முக்கியமான இடத்தை அளித்தார். இளங்குழவிப் பருவத்திலும் குழந்தைப் பருவத்திலும் ஏற்படும் பால் இயல்பூக்கத்தை (Sex Instinct) பிராய்டு புலன் மகிழ்ச்சி (Sensual Pleasure) என்னும் பொருள்படக் கூறினார். பால் இயல்பூக்கம் குழந்தைப் பருவத்தில் புலன் மகிழ்ச்சியாக மலர்ந்து குழந்தையின் உடலில், பல உறுப்புகளையொட்டி அமைகிறது. குழந்தைப் பருவம் முடிந்து இளமைப் பருவம் அல்லது குமரப் பருவம் தொடங்கும் பொழுது, இப்புலன் மகிழ்ச்சி பால் இயல்பூக்கமாக மாறுகிறது. இவ்வாறு சுவைத்தல் நிலை (Oral Stage), கழிவு நிலை (Anal Stage), பால் உணர்வு நிலை (Phallic Stage), உட்செறிவு நிலை (Latency Stage), பால் உறுப்பு நிலை (Genital Stage) என்னும் ஐந்து உளம்சார் பால்நிலைகளைப் பிராய்டு விளக்கியுள்ளார். பால் உணர்வு நிலையைப் பிராய்டு ஈடிபசு நிலை, எலக்டிரா நிலை என்ற இரு பிரிவுகளாகப் பிரித்துள்ளார். இவ்வைந்து நிலைகளைப் பின்வருமாறு பிராய்டு விளக்கியுள்ளார்.

வளர்ச்சி நிலைகளில் குழந்தைக்கு ஏற்படக்கூடிய கட்டுப்பாடுகள், நிறைவின்மை, மகிழ்ச்சி, மகிழ்ச்சியின்மை ஆகியவை குழந்தை வளர்ச்சியடைந்த பின்னும் அதன் ஆளுமையைப் பாதிக்கின்றன. அது மட்டுமன்றி இந்நிலைகளில் உருவாகக்கூடிய பண்புத் தொகுதிகள், குழந்தை வளர்ச்சியடைந்த பின் எத்தகைய ஆளுமையுடையவனாக இருப்பான் என்பதையும் தீர்மானிக்கின்றன. நிலைத்தல் காரணங்களினால் ஏற்படும் குண இயல்புகள், ஆளுமைப் பண்புகளாக மாறித் தனி மனிதனின் ஆளுமை வகையைத் தீர்மானிக்கின்றன. குழந்தை வளரும் பருவத்தில்,

அதன் உடலின் சில குறிப்பிட்ட பகுதிகள் அதன் கவனத்திற்கு இலக்காகின்றன என்ற தம்முடைய அடிப்படைத் தத்துவத்தையே பிராய்டு, வளர்ச்சி நிலைகளாக விரித்துரைத்தார் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

**சுவைத்தல் நிலை:** பிறந்தது முதல் 18 மாதங்கள் வரையில் குழந்தையின் புலனுணர்வுகள் அதன் வாயினைச் சார்ந்த செயல்களிலேயே (சுவைத்தல், கடித்தல் போன்றவை) அமைந்துள்ளன. இந்நிலையில் குழந்தைக்குக் கிடைக்கக் கூடிய கட்டுப்பாடுகளின் மிகையோ குறைவோ குழந்தை வளர்ந்த பின்னரும் அவனுடைய ஆளுமையைப் பாதிப்பனவாக இருக்கின்றன. கட்டுப்பாடுகளின் குறைவு அல்லது மிகை, குழந்தையிடம் மனநிறைவு அல்லது மனநிறைவின்மையைத் தோற்றுவிக்கின்றன. இவ்விரு காரணங்களும் குழந்தை வளர்ந்தபின் இருவேறுபட்ட பின்வரும் பண்புக் கூறுகளைத் தோற்றுவிக்கும் என்று பிராய்டு கூறுகிறார்:

| நலநோக்கு | துயர்நோக்கு |
|---|---|
| எளிதில் நம்பிவிடும் தன்மை | சந்தேக மனப்பான்மை |
| செயற் சூழ்ச்சித் திறன் | அறிவு மந்தம் |
| வியந்து புகழ்தல் | பொறாமை |
| தற்புகழ்ச்சி | தன்இகழ்வு |

இவ்விரு வேறுபட்ட பண்புக்கூறுகளுக்கும் இடைப்பட்ட நிலையில் அமைந்திருக்கும் பண்புகளே, தனிமனிதனிடம் ஆளுமைச் சமநிலையைத் தோற்றுவிக்கும். இவ்விரு பண்புத் தொகுதிகளும் மிகைவிளிம்புகளில் அமைந்துள்ளன. இப்பண்புகள் தனிமனிதனின் சமூகப் பொருத்தப்பாட்டிற்கு வெவ்வேறு அளவுகளில் தேவைப்படுகின்றன. இப்பண்புகள் மிகையாக அல்லது மேற்குறிப்பிட்ட மிகைவிளிம்பு நிலையில் ஒருவரிடம் காணப்பட்டால், அதத்தகைய வரின் ஆளுமையினைச் சுவைத்தல் ஆளுமை (Oral Personality Type) என்று பிராய்டு குறிப்பிட்டார்.

**கழிவுநிலை:** 1½ வயது முதல் 3 வயது வரையில் குழந்தையின் புலனுணர்வு அதன் கழிவு உறுப்புச் செயல்களின்மீது திரும்புகிறது. இந்நிலையில் குழந்தைக்கு ஏற்படக்கூடிய மிகைக்கட்டுப்பாடு அல்லது கட்டுப்பாடின்மை, குழந்தை இந்நிலையை விட்டு நீங்கி வளர்ச்சியடைந்த பின்னரும் அவன் ஆளுமையைப் பாதிக்கிறது. இவ்வாறு பாதிக்கும் ஆளுமைக் கூறுகள் பின்வரும் இரு மிகை விளிம்புகளில் அமைந்துள்ளன. இவற்றின் நடுநிலையான பண்புகளைக் கொண்டவர்கள் ஆளுமைச் சமநிலை அடைவர்.

| கருமித்தனம் | மிகையான தாராளம் |
|---|---|
| சுருங்கிய மனப்பான்மை | விரிந்த மனப்பான்மை |
| பிடிவாதம் | விட்டுக் கொடுத்தல் |
| மிகை ஒழுங்குப்பற்று | தாறுமாறாதல் |
| நேரம் தவறாமை | கால தாமதம் செய்தல் |
| மிகைத் துப்புரவு | துப்புரவின்மை |
| திட்டவட்டமான செயல் | தெளிவிலாமை |

மனிதர்கள் சமூகத்துடன் இயைபுற வாழ்வதற்கு இவ்விரு பண்புத் தொகுதிகளும் தேவைப்படுகின்றன. இப்பண்புகள் ஒவ்வொருவரிடமும் குறைந்தோ மிகுந்தோ காணப்படுகின்றன. மேற்கண்ட இரு மிகை விளிம்புகளில் அமைந்திருக்கும் ஆளுமைக் கூறுகளைக் கழிவு வகை ஆளுமை (Anal Personality) எனப் பிராய்டு குறிப்பிட்டார்.

**பால்உணர்வு நிலை:** மூன்று வயதிலிருந்து ஆறு வயதுவரையில் குழந்தையின் புலனுணர்வுகள் அதன் பிறப்பு உறுப்பின் மீது திரும்புகின்றன. இந்நிலையில் குழந்தை ஆண் பெண் என்ற பால்வேறுபாட்டை உணர்கிறது. இப்பிறப்புறுப்பு நிலையில் தம் பெற்றோருடன் இருக்கும் இடையுறவு சார்பாகச் சிறுவர்களுக்கும் சிறுமியருக்கும் எழக்கூடிய மன உளைச்சல்களின் காரணத்தினால் உளச்சிக்கல்கள் ஏற்படலாம். இந்நிலையில் ஆண்குழந்தைக்குத் தன் தாயின் மீது மிகையான பற்று ஏற்படுவதனால் அப்பற்று, தந்தையின் மீது இனம்புரியாத ஆழ்மனத்தளவில் பகைமையுணர்வாக மாறுகிறது. இப்பகைமையுணர்வு அச்சம் மரியாதை என்ற உணர்வுகளின் அடிப்படையில் ஏற்படுகிறது. அச்ச உணர்வு, ஆண்மையழிப்பு அச்சம் (Castration Anxiety) காரணமாகவும், தந்தையைப் பற்றிய மரியாதை குழந்தைக்குத் தன்னைப் போன்ற ஒரு பெரிய வளர்ந்த பெற்றோர் என்ற உணர்வின் காரணமாகவும் எழுகிறது. இந்நிலையில் தாய் தந்தை இருவரில் எவராவது ஒருவர் அல்லது இருவரும் குழந்தைக்குத் தேவையான மனவெழுச்சிக் காப்புணர்வினைக் கொடுக்கத் தவறுவதாலும், மிகையான கட்டுப்பாடுகளைக் குழந்தைக்கு ஏற்படுத்தி மனக்குலைவு உண்டாக்குவதாலும், தாயோ, தந்தையோ குழந்தைக்கு மிகையான சலுகைகளைக் கொடுப்பதாலும், குழந்தை இந்தக் குழப்பமான நிலையைச் சிக்கலின்றிக் கடந்து, அடுத்த வளர்ச்சி நிலைக்கு வரமுடியாமற் போகிறது. இச்சூழ்நிலைகள், குழந்தையிடம் ஈடிபசு சிக்கல் (Oedipus Complex) என்னும் மனக்குழப்பத்தை ஏற்படுத்து

கின்றன. இந்நிலைமையைப் பிராய்டு ஈடிபசு நிலை என்று கூறுகிறார். ஈடிபசு சிக்கலினால் ஆண் குழந்தை வளர்ச்சியடைந்த பிறகு, முழுமையான பொருள் நிறைந்த பால்சார் தொடர்புகளை எதிர்பாலின ருடன் ஏற்படுத்திக் கொள்வதில் மனத்தடைகள் காணப்படுகின்றன. அவன் மனச்சாட்சியும் பாதிக்கப் படுகிறது. தன் வாழ்வில் முழுமையான தந்தை உள உருவை உணர்ந்து கொள்வதிலும் தடை ஏற்படு கிறது. அவன் ஆளுமை பாதிக்கப்படுகிறது. இந்நிலை யில் பெற்றோர் மிகைக் கண்டிப்பு, மிகைச் சலுகை, பெற்றோர் இருவரிடையே முரண்பாடு ஆகிய குறைகளின்றி, ஆண் குழந்தையிடம் சமநிலையான அன்பும் கண்டிப்பும் ஆதரவும் காட்டிவந்தால், வளர்ந்த பிறகு அவனிடம் ஆளுமைச் சமநிலை ஏற் படுகிறது.

ஆண்குழந்தைக்கு ஈடிபசு சிக்கல் ஏற்படுவதைப் போல், பெண் குழந்தை தன் தாயிடம் இருப்பதைக் காட்டிலும் தந்தையிடம் மிகையான பற்றுடன் இருக்கிறாள். இதனால், தன் ஆழ்மன அளவில் அவள் தன் தாயிடம் இனம் புரியாத பகைமையுணர்வை யடைகிறாள். இப்பகைமை, குழப்பம் நிறைந்த தாக இருக்கிறது. இது தீராத குழப்பமாக இருக்கிறது என்று பிராய்டு கூறுகிறார். தன் தந்தை யுடன் மிகையான பற்றுக்கொண்ட மகளின் இனம் புரியாத மனக்குழப்பத்தைப் பின்வருமாறு பிராய்டு விளக்குகிறார்.

தன் தந்தையைப் போன்ற உடலமைப்பு தனக்கு இல்லையே என்று ஆழ்மன அளவில் ஏக்கம் கொள் ளும் மகள், தான் தாயைப் போன்ற உடலமைப்பு கொண்டிருப்பதற்குத் தன் தாயே இதற்குக் காரண மாக இருக்கலாம் என்ற உணர்வினால் அவள்மீது பகைமை கொள்கிறாள். பின்னர் ஆண்குறிப் பொறாமை (Penis Envy) என்னும் உணர்வாக உரு வெடுக்கிறது என்று பிராய்டு கூறுகிறார். ஆனால், அவளுக்குத் தன் தாயின் மீது நேசமும் இருக்கிறது. இத்தகைய இனம்புரியாத குழப்பங்கள் வெளிப்படை யாக ஏற்படாமல் ஆழ்மன அளவில் ஏற்படுகிறது. இந்நிலையில் பெண் குழந்தைக்குத் தேவையான அன்பும் ஆதரவும் கண்டிப்பும் தக்க அளவில் கிடைத் தால், அவள் வளர்ந்த பின், ஆளுமைச் சமநிலை அடைகிறாள். அதற்கு மாறாக இந்நிலையில் பெற் றோரிடமிருந்து மிகையான கண்டிப்பு அல்லது மிகைச் சலுகைகள் அவளுக்குக்கிடைத்தால் அவள் 'எலக்டிரா சிக்கல்' (Electra Complex) என்னும் மனக்குழப்பத்தை அடைகிறாள். வளர்ந்தபின் அவள் எதிர்பாலினருடன் பொருள் நிறைந்த நல்லுறவுகளை வளர்த்துக் கொள்ள இயலாத மனநிலையை அடை கிறாள். மணமானபின் அவள் பாலுணர்வின்மை, மாதவிலக்குக் கோளாறுகள் இவற்றினால் பாதிக்கப் படுகிறாள். அவள் ஆளுமை இதனால் பெருமளவில் பாதிக்கப்படுகிறது. பாலுறுப்பு நிலையின் சிக்கல் களால் ஏற்படக் கூடிய பண்புக் கூறுகளின் மிகை விளிம்பு நிலைகளைப் பின்வருமாறு தொகுக்கலாம்.

| | |
|---|---|
| தற்பெருமை | தன்மீது வெறுப்பு |
| செருக்கு | அடக்கம் |
| கண்மூடித்தனமான தைரியம் | கோழைத்தனம் |
| சமூகஉணர்வு விருப்பம் | தனிமை விருப்பம் |
| கவனத்தை ஈர்க்கும் உடைப்பாணி | எளிமை |
| எதிர்பாலினருடன் மிகையாகப் பழகுதல் | எதிர்பாலினரைத் தவிர்த்தல் |
| பால் ஒழுக்கமுடைமை | கட்டுப்பாடற்ற பாலுறவு |
| மகிழ்ச்சியாரவாரம் | வருத்தம் |

இப்பண்புக் கூறுகளின் இரு மிகை விளிம்புகளுக் கும் இடைப்பட்ட இயல்பினர், ஆளுமைச் சமநிலை யுடையவர்களாகின்றனர். எ-டு கண்மூடித்தனமான அஞ்சாமை, கோழைத்தனம் ஆகிய மிகைப்பண்பு களை ஒரு நேர்கோட்டில் அளவீடு செய்தால், அதில் இடைப்பட்டவர்களிடம் கண்மூடித்தனமான தைரியம் என்னும் பண்பின் அடங்கிய நிலை அதா வது ஓரளவிற்குத் தைரியமுள்ள என்ற பண்பும், கோழைத்தனம் என்னும் பண்பினுக்கு ஓரளவு தொடர்புடைய எதிரியைக் கண்டு அச்சம் வன்முறை கண்டு அச்சம்போன்ற பண்புகளும் ஒன்று சேர்ந்து அமைந்துள்ள தனிமனிதன், ஆளுமைச் சமநிலையுடை யவனாகிறான். ஆனால்,இவ்விரு பண்புக்கூறுகளுள் ஏதேனும் ஒன்றினை முழுமையாகப் பெற்றிருப்பவ னின் ஆளுமை சமநிலையுடையதன்று.

உட்செறிவு நிலை: இம்மூன்று வளர்ச்சி நிலை களையும், மனக் குழப்பங்களும் சிக்கல்களும் இன்றிக் கடந்து வந்த குழந்தை 6 வயதிலிருந்து 12 வயது வரையில் உட்செறிவு நிலை என்னும் நிலையை அடைகிறது. இந்நிலையில் குழந்தைக்கு இதற்கு முந்திய நிலைகளில் கிடைத்த அனுபவங்களை யொட்டி, அதன் உடல் உள வளர்ச்சிகள் ஏற்படு கின்றன. மேலும் குழந்தை தன் பெற்றோர் உல கத்தைவிட்டுப் புதிய ஆர்வங்களில் ஈடுபாடு கொள் கிறது. உடல், உள, சமூக மாறுதல்களை எதிர் நோக்கி வெளி உலகத்தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்கிறது. இந்நிலையைப் பற்றிப் பிராய்டு மிகுதி யான விளக்கங்களைக் கொடுக்கவில்லை.

**பால் உறுப்புநிலை:** பன்னிரண்டு வயதிற்குப் பிறகு குழந்தைப் பருவத்திலிருந்து இளையோர் பருவத்தை அடையும் எதிர்பாலின உறவு நிலையைக் (Hetero Sexual Stage) குழந்தை அடைகிறது. பாலுறுப்பு நிலையிலும் அதற்கு முந்திய நிலைகளிலும் குழந்தையிடம் காணப்பட்ட பலவிதமான புலனுணர்வுகள் இப்பொழுது ஒருங்கிணைந்து, இளையோர் குடும்பத்திலும் சமூகத்திலும் தம் பங்கு என்ன என்பதை உணர்ந்து, தனிப்பட்ட ஆணாகவோ பெண்ணாகவோ உடல் உள வளர்ச்சி வழிகளில் இயங்கக் கூடிய முதிர்ச்சிகளையும் அடைகிறார்கள். இந்நிலையில் எதிர் பாலினருடன் ஏற்படக்கூடிய இடைத் தொடர்களையொட்டி எழும் மகிழ்ச்சிகளும் மனக் குலைவுகளும் இளையோரின் கவனத்தை ஈர்க்கின்றன. பாலுறவு பற்றிய ஆராய்வு இயல்பூக்கங்களும் (Curiosity) ஐயங்களும் அச்சங்களும் இளையோரிடம் காணப்படுகின்றன. இந்நிலையில் இளையோரிடம் காணப்படும் ஆளுமை அவர்களுக்குக் குழந்தைப் பருவத்து வளர்ச்சி நிலைகளில் கிடைத்த அனுபவங்களையொட்டி அமைகிறது.

வளர்ச்சி நிலைகளில் ஏதேனும் ஒன்றிலோ பலவற்றிலோ நிறைவின்மையையோ மனக்குலைவுகளையோ அவன் அடைந்திருந்தால், நிலைத்தல் (Fixation) என்னும் நடத்தைச் சிக்கல் தோன்றுகிறது. அதாவது, வளர்ச்சி நிலைகளில் அந்தந்தப் பருவத்திற்கு அல்லது நிலைகளுக்கு ஏற்ற நடத்தைக் கூறு காணப்படுவதற்குப் மாறாக, அதற்கு முந்திய பருவத்திற்கு அல்லது நிலைக்கு உரிய நடத்தைக் கூறுகள் காணப்படுகின்றன. இத்தகைய நிலைத்தல்கள், எதிர்பாலின உறவுநிலையில் இளையோரின் ஆளுமையைப் பாதிக்கின்றன. வளர்ச்சி நிலைகளுக்குரிய சிக்கல்கள், அந்தந்த நிலைகளிலேயே சீர்பெறத் தீர்க்கப்பட்டுக் குழந்தை அடுத்தநிலைக்கு ஆயத்தமாக வைக்கப்பட்டிருந்தால், நிலைத்தல் தொல்லை ஏற்படுவதில்லை. குழந்தை இளையோனாகவும் வயது வந்தோனாகவும் ஆளுமைச் சமநிலையை அடைகிறான். வயது வந்தோரிடம் காணப்படும் நிலைத்தல்களைப் பிராய்டு 'இளங்குழவித்தனம்' (Infantilism) என்று குறிப்பிடுகிறார். பிராய்டின் ஆளுமைக் கருத்துகள் பலத்த தாக்குதல்களுக்கு உள்ளாயின. குழந்தையின் வளர்ச்சி நிலைகள் பாலுந்து சார்புடையனவாக இருக்கின்றன என்ற பிராய்டின் வாதத்தைப் பல உளவியலறிஞர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. தந்தையிடம் மகள் அதிக பாசம் வைத்திருப்பதும் தாயிடம் மகன் அதிக பாசம் வைத்திருப்பதும் இயல்பானவையேயன்றிப் பிராய்டின் ஈடிபசு சிக்கல், எலக்டிரா சிக்கல் பற்றிய விளக்கங்கள், இந்த உறவுகளுக்கு ஒவ்வாதனவாகும் என்றும் பலர் கருதுகின்றனர்.

தனி மனிதனின் ஆளுமை குழந்தைப் பருவத்திலேயே உருவாகிறது என்னும் பிராய்டின் கூற்றைக் கடுமையாக எதிர்த்தவர் யுங்கு (Jung) ஆவார். இவர் பகுப்பு உளவியல் (Analytical Psychology) கோட்பாட்டைத் தோற்றுவித்தார். பிராய்டின் நனவிலி பற்றிய கருத்துகள் ஆதாரமற்றவை என்று எரிக்சன் (Erikson) கூறினார். பிராய்டின் உளப்பகுப்புக் கோட்பாட்டினைப் பின்பற்றிய உளவியலறிஞர்களும் அவருடைய கருத்துகளை முழுமையாக ஏற்றுக் கொள்ளவில்லை. ஆர்னை (Horney), சல்லிவன் (Sullivan) போன்ற உளப்பகுப்பாளர்கள், ஆளுமை வளர்ச்சியில், பாலுணர்வைக் காட்டிலும் காப்புணர்வு, சமூக இடைத் தொடர்புகள் போன்றவை முக்கியமான பங்கு பெறுவதாகக் கருதுகின்றனர். ஆட்லர் என்பாரும் பிராய்டின் கருத்துகளை முழுமையாக ஏற்காமல், தனியாள் உளவியல் கோட்பாட்டினைத் தோற்றுவித்தார். இராசர்சு, மாசுலோ, எரிக் பிரோம், ஆல்போர்ட்டு ஆகிய மனிதாபிமான உளவியல் கோட்பாட்டினர்கள், ஆளுமையின் அடிப்படைக்குப் பிராய்டு அளித்த விளக்கங்களை ஏற்கவில்லை.

இசுகின்னர் (Skinner), பாவ்லாவு (Pavlov) போன்ற நடத்தைக் கோட்பாட்டினர், பிராய்டின் உளப்பகுப்பு முறை, தடையிலா இயைபு, கனவுப் பகுப்பாய்வு, பண்படா உளம், தன்முனைப்பு, மேம்பாட்டுளம் போன்ற கருத்துகளை முழுமையாக ஏற்றுக் கொள்ளவிலை.

அக்காலத்தில் பிராயர் (Breuer Joseph) என்னும் உளமருத்துவர் உளக்கூறு மாற்ற நோயாளிகளைக் குணப்படுத்தி வந்தார். இந்நோயாளிகளின் உடல் பிணிகள் உளத்தின் அடிப்படையில், எழுந்தவை. பிராயர் கையாண்டு வந்த உளவெளியீட்டு முறையில் (Catharsis) நோயாளியை அறிதுயில் நிலைக்குக் கொண்டு வந்து பின்னர் அவரைத் தம் நோயினைப் பற்றிய செய்திகளைக் கூறச் செய்து நோயின் உள அடிப்படைக் காரணத்தைக் கண்டு பிடித்தார். இம்முறையை மாற்றி பிராய்டு தடையிலா இயைபு, கனவுப் பகுப்பாய்வு, பெயர்ச்சி விளைவு நீக்குதல் (Counter Transference), தடையாற்றல் போன்ற முறைகளைக் கையாண்டு உளநோயாளிகளைக் குணப்படுத்தினர். இம்முறை உளப்பகுப்பாய்வு வழி உளமருத்துவம் (Psychoanalytic Psychotherapy) என்று கூறப்படுகிறது.

உளநோயாளியிடம் அவன் மனத்தில் தோன்றும் எண்ணங்கள் யாவற்றையும் ஒளிக்காமல் கூறச் செய்வது இம்முறையின் முதற்படியாகும். இம்முறையினால் நனவிலியில் கிடக்கும் ஒடுக்கல்களை வெளிக் கொணரமுடியும். நனவிலிப் போராட்டங்களே

பெரும்பாலும் உளநோய்களுக்குக் காரணங்களா கின்றன. அதனால், ஒடுக்கல்களுக்குத் தீர்வு காண வேண்டும்.

உளப்போராட்டம் அல்லது நிறைவேறாத ஆசைகள் கனவுகளாக உருவெடுக்கின்றன. நோயாளி யின் கனவுகளைப் பகுத்தாய்வதன் மூலம் அவ னுடைய நனவிலியில் இருப்பவற்றை அறியலாம். நோயாளி மனத்தடையின்றித் தன் மனத்தில் தோன் றும் எண்ணங்களைக் கூறிக்கொண்டிருக்கும்பொழுது திடீரெனத் தடையுற்றுப் பேசுவதை நிறுத்தி விட்டால் நனவிலியில் ஏதோ ஓர் சிக்கலான பகுதியை அடைவதாகக் கருதலாம்.

பிராய்டின் கொள்கைகளைப் பின்பற்றிய உள வியலறிஞர்கள் உளப்பகுப்புக் கோட்பாட்டினர் (Psychoanalysts) என்றும், பிராய்டைப் பின்பற்று வோர் (Freudians) என்றும் பொதுவாகக் கூறப்படு கின்றனர். பிராய்டின் கருத்துகளை முழுமையாக ஏற்காதவர்களான பலர், தங்களுடைய ஆளுமைக் கொள்கைகளைக் குறிப்பிட்டுள்ளனர். யுங் என்பார், பிராய்டின் கருத்துகளினின்றும் இரு முக்கிய நிலை களில் வேறுபடுகிறார்.

ஆட்லர் (Adler) என்னும் உளவியல் அறிஞர், உயர்வு மனப்பான்மையின் சிறப்பை வலியுறுத்து கிறார். தாழ்வுச் சிக்கல் மனிதனின் ஆளுமையையும் சமூக உறவுகளையும் பெருமளவில் பாதிக்கிறது என் றும், ஒருவனது ஆளுமை வளர்ச்சியில் அடிப்படை இயல்பூக்கங்களைக் காட்டிலும் சமூக உந்துகளின் செல்வாக்கு மிகுந்து காணப்படுகிறது என்றும் ஆட் லர் கூறினார். மென்னிங்கர் (Menninger) என்னும் அமெரிக்க உளவியலார், பிராய்டின் உளப்பகுப்புக் கொள்கையின் கருத்துகளை ஏற்றுக் கொண்டவர் களுள் முக்கியமானவர் ஆவார்.

யுங்கு: ஆளுமையைப் பற்றிய விரிவான கருத்து களை எடுத்துரைத்தவர்களுள் காரல் கசுதவ் யுங்கு (Jung, Carl Gustav) என்னும் உளவியலறிஞர் ஒரு வர். தனிமனிதனின் உள்ளக்குத்திறன் (Psychic Energy) சமூக அழுத்தங்களுக்கும் மரபுகளுக்கும் உட்பட்டு, ஒரு குறிப்பிட்ட உருவத்தைக்கொண்டு ஒரு குறிப்பிட்ட 'பங்கினை' மட்டும் செய்து முடிக்கும் நோக்கத்துடன் இயங்குகிறது. உள்ளக்குத்திறனின் இத்தகைய சமூகப்பங்கு நாளடைவில் ஓர் முகமூடி யாக (Persona) அமைந்து விடுகிறது என்றும், சமூக ஏற்புக் கிடைக்காத விருப்பங்களும் உந்துகளும் ஒடுக் கப் பட்டுத் தனி நனவிலியாக (Personal unconcious) அமைந்து விடுகின்றன என்றும் யுங்கு கூறினார். குழந் தைப் பருவத்திலிருந்து ஏற்படும் அனுபவங்களின் அடிப்படையில், தனி நனவிலி உருவாக்கப்படுகிறது. பெரும்பாலும் தன்முனைப்பினால் ஏற்றுக்கொள்ள முடியாத ஆசைகள், உள்துடிப்புகள், உந்துகள் ஆகி யவை தனிநனவிலியில் இடம் பெறுகின்றன. தனி நனவிலியின் முக்கியமான கூறு உளச்சிக்கல் ஆகும். மனிதனின் ஆளுமையினுள் மற்றொரு ஆளுமையாக உளச்சிக்கல் அமைந்திருக்கிறது. இது தன்னைச் சுற் றிப் பல்வேறு எண்ணங்களும் உணர்ச்சிகளும் உளப் பான்மைகளும் கொண்ட ஒரு மையக் கூறு அமைப் பாக இருக்கிறது. உளச்சிக்கலைக் கண்டுபிடிப்பதற்கு யுங்கு, சொல் இயைபுச் சோதனை (Word Association Test) என்னும் முறையைக் கண்டுபிடித்தார். ஆட் படுநர்களிடம் சில சொற்களைக் கூறி அவர்கள், உட னடியாக அச்சொற்களுக்கு வேறு எந்தச் சொல் லைத் துலங்கலாகச் சொல்கின்றனரோ அதனைக் கொண்டு, அவர்களின் உளச் சிக்கலைக் கண்டுபிடிக்க முடியும் என்று யுங்கு கூறினார். துலங்கல் சொல்லைக் கூறுவதற்குத் தாமதம் ஏற்பட்டாலோ துலங்கல் சொல் புதுமையானதாக இருந்தாலோ அது உளச் சிக்கலின் அறிகுறியாகும். மனவெழுச்சிகளும் உடல் சார் துலங்கல்களும் கூட உளச்சிக்கல் இருப்பதற்கு அறிகுறியாகும் என்று யுங்கு கருதினார். இக்காலத்தில் இத்தகைய மெய்ப்பாடுகளைப் பாலிகிராப் என்னும் கருவியின் மூலம் கண்டுபிடிக்கின்றனர். பல துலங் கல்கள் ஒரே மையக் கூறான உளச்சிக்கலுடன் இயைபு கொண்டு இருக்கலாம். எடுத்துக்காட்டாக ஒருசிலர் எத்தகைய பொதுக்கருத்துபற்றி உரையாடினபோதி லும் தம் உரையாடலுக்கு நடுவிலோ இறுதியிலோ பெண்களைப் பற்றி ஏதேனும் செய்தி அல்லது கருத் தினைக் கூறுவர். இது அவர்களின் உளச் சிக்கலைக் காட்டுவதாகும். தனி நனவிலியின் மையக் கூறு தன் முனைப்பில் கட்டுப்பாட்டிற்குள் இயங்காமல் தனித்து இயங்குவதால், அதனை மறைப்பது கடினம். மக்கள் தம்மை அறியாமலேயே தம் உளச் சிக்கல்களைக்



காரல் யுங்கு

காட்டிக் கொடுக்கும் வகையில் பழகவோ செயல் புரியவோ உரையாடவோ செய்கின்றனர். உளச் சிக்கல்கள் எப்பொழுதும் சுதந்திரமாக இயங்குவதற்குத் தடையாக இருக்கவேண்டுமென்பதில்லை. உளச் சிக்கல்கள், சில நேரங்களில் ஆக்கவழியில் தனிமனிதனை இயங்கச் செய்யும் ஊக்கிகளாகவும் இருக்கின்றன.

மக்கள் தம் வாழ்க்கையில் பெறும் அனுபவங்கள் கருத்தியல்களாக மாறி மூல உருச்சின்னங்களாக (Archetypes) அமைகின்றன. குழந்தைப் பருவத்தில் அன்பு கொள்ளும் பெற்றோர், குடும்பத்தில் எல்லோருடைய நலன்களிலும் ஈடுபாடு கொண்டுள்ள உறவினர் அல்லது நண்பர் ஆகியோர் குழந்தைகளுக்கு மூல உருச்சின்னங்களாக அமைந்துவிடுகின்றனர். இக்கருத்தியலுடன் இயைபிலாத அனுபவங்களை நாம் அடையும்பொழுது இவ்வுருவங்கள் மாறுதல்கள் அடைகின்றன. மூல உருச்சின்னங்களில் மாறுதல்கள் ஏற்படாவிட்டால், அத்தகைய மனிதர்களின் ஆளுமையில் கருத்தியல்களின் ஆதிக்கம் ஏற்படுகிறது. சுருங்கக் கூறின் யுங்கின் கருத்துப்படி குழந்தைப்பருவத்து மூல உருச் சின்னங்கள் வளரும் பருவத்தில் மாறுதல்களுக்கு உள்ளாக வேண்டும். கல்வி, அனுபவங்கள் ஆகியவற்றின் வழி நம் உள்ளம் மாறுதல் அடைய வேண்டும். கூட்டு நனவிலி (Collective Unconscious) என்பது மனிதர்கள் பரம்பரை பரம்பரையாகத் தம்முன்னோரிடமிருந்து பெற்றிருக்கும் கருத்துகளைக் குறிக்கும். இக்கருத்துகள் அனுபவ அடிப்படையில் மூல உருச் சின்னங்களாகின்றன. எடுத்துக்காட்டாக ஒருவனுக்குத் தன் வாழ்க்கையில் தாய், உடன்பிறந்தவள் போன்ற முக்கியமான பங்கு கொண்டபெண்களுடன் எத்தகைய அனுபவங்கள் ஏற்பட்டனவோ அவற்றிற்கு ஏற்பப் பெண்களைப் பற்றிய மூலஉருச்சின்னம் அவன் உள்ளத்தில் ஏற்படுகிறது. இதனைப் போன்றே ஒரு பெண்ணுக்குத் தந்தை, தம்பி, தமையன்போன்ற தன் வாழ்க்கையில் முக்கியமான உறவுத் தொடர்பு கொண்டவர்களுடன் எத்தகைய அனுபவங்கள் ஏற்பட்டனவோ அவற்றிற்கு ஏற்ப அவள் உள்ளத்தில் ஆண்களைப் பற்றிய மூலஉருச்சின்னம் ஏற்படுகிறது. எடுத்துக்காட்டாகத் தாய் என்னும் உள உருவம் ஒருவனுக்குக் காப்பாற்றுபவள், அறநெறி வழிகாட்டி, மந்திரக்காரி, அறிவின் உருவம் போன்ற பல வகைகளுள் ஏதேனும் ஒன்றாக உள்ளத்தில் அமையலாம். அக்குறிப்பிட்ட உளஉருவத்திற்கு ஏற்ப மனிதனுக்கு வாழ்க்கை அனுபவங்கள் ஏற்படின், அவ்வுருவமே மூல உருச்சின்னமாக நிலைத்து நிற்கிறது.

பிறப்பு, இறப்பு, ஆண்மை, வளர்ச்சி போன்ற உலக நிகழ்வுகள், கடவுள், தாய், ஞானி, பிசாசு போன்ற தனிப்பட்டவர்கள் ஆகியவையாவும் கூட்டு நனவிலியினுள் அடங்கும். இறப்பு என்பதைத் தனிப்பட்ட மனிதர்கள், வெவ்வேறு பொருள்களில் வெவ்வேறு அணுகுமுறைகளில் புலன் காண்கிறார்கள். ஒருவனுக்கு இறப்பு என்பது அனைத்தும் அழிந்த நிலையாகக் காணப்படலாம். மற்றொருவனுக்கு அது அழிவிலா ஆன்ம நிலைக்குச் செல்லும் அப்போதைய உறக்கமாகத் தோன்றலாம். இருளில் தோன்றும் கள்ளன் போன்ற கரிய உருவம் என்று இறப்பை வேறொருவன் எண்ணலாம். தனிமனிதனின் பண்பாட்டுப் பின்னணிக்கு ஏற்ப இறப்புப்பற்றிய புலன்காட்சி அமைகிறது. கடவுளைப் பற்றிய உள உருவமும் இம்முறையிலேயே மனிதர்களுக்கு அமைகிறது. குழந்தைகளிடம் இத்தகைய மூல உருச்சின்னங்கள் அமைவதைத் தெளிவாகக் காணலாம். குழந்தையின் புலனுணர்வில் அதன் தந்தை அறிவிற் சிறந்த, எல்லாத் திறமைகளும் அமையப் பெற்ற இணையற்ற மனிதராகக் காணப்படுகிறார். இதனைப் போன்றே குழந்தையின் புலனுணர்வில் மருத்துவர், காவலர், ஆசிரியர், மதகுரு ஆகியோரும் காணப்படுகின்றனர். இவர்கள் சாதாரண மனிதர்களைப் போன்று குற்றம் குறைகள் அமையப் பெற்றவர்கள் என்ற புலனுணர்வு குழந்தைக்கு ஏற்படுவதில்லை. வளர்ச்சியடைந்த பின் மனிதனிடம் இவ்வுள உருவங்கள் நிலைபெற்று அதன் காரணமாக அவன் பெரும்பாலோரிடம் மிகச்சிறந்த இயல்புகள் இருப்பனவாக எண்ண நேரிடலாம். அப்பொழுது தன் உள உருவத்தின் சிறப்பியல்புகள் தனிப்பட்டவரிடம் இருப்பனவாக எண்ணி ஏமாற்றம் அடைகிறான். தந்தை என்ற உளஉருவத்துடன் பல சிறப்பியல்புகளை இணைத்துக் கொண்ட மனிதன், மேலதிகாரியைத் தந்தை உளஉருவமாகத் தன்புலனுணர்வில் காண்கிறான். அதாவது மேலதிகாரியின் உண்மையான இயல்புகளைக் காணாமல், தான் கொண்டிருக்கும் மூலஉருச் சின்னத்தின் இயல்புகளை, தான் காண விழையும் இயல்புகளைத், தன் முனைப்புப் புறத்தேற்ற முறையில் மேலதிகாரியிடம் காண்கிறான். இதனால், அவன் பிறரை மதிப்பீடு செய்வதில் தவறுகள் ஏற்படலாம். சில மூல உருச்சின்னங்கள் மனிதர்களுக்குப் பயன் தருவனவாக உள்ளன. கூட்டு நனவிலியுடன் தன்முனைப்பு இணைந்து செயற்படுவதற்கு இவ்வுருச்சின்னங்கள் இன்றியமையாததாகின்றன. ஆயிரக் கணக்கான ஆண்டுகளாகப் பல தலைமுறைகளில் உருவான நினைவுகளும் நம்பிக்கைகளும் சமயப் பண்பாட்டுச் சார்புகளும் ஒருங்கிணைந்து, தனிமனிதனின் உள்ளத்தில் கூட்டு நனவிலி என்ற உணர்வாக உருவெடுத்து இருக்கின்றன. இக்கூட்டு நனவிலியுடன் மனிதர்

களின் தனிநனவிலி (Personal Unconscious) இணைந்து இயங்குகிறது.

உயிரிகளிடம் காணப்படும் இருபாலினத் தன்மைக்கு (Androgyny) யுங்கு, பின்வரும் விளக்கத்தினைக் கொடுத்துள்ளார். ஆண்களிடம் அமைந்துள்ள பெண்மைப் பண்புகளை யுங்கு, அனிமா (Anima) என்றும், பெண்களிடம் அமைந்துள்ள ஆண்மைப் பண்புகளை அனிமசு (Animus) என்றும் குறிப்பிட்டார். யுங்கு ஆண்களின் உளவியலையும் பெண்களின் உளவியலையும் வேறுபடுத்தித் தனிப்பட்ட விளக்கங்கள் கொடுத்தார். இருபாலினரிடமும் வேண்டுவன, வேண்டாதன, ஏற்புடையன, ஏற்பிலாதன ஆகிய பண்புகள் இருக்கின்றன. ஆதரவு காட்டுதலும் அன்புடன் பழகுதலும் பெண்களின் சிறப்பியல்புகள் என்றும், சிக்கல்களுக்குத் தீர்வு காண்பது ஆண்களின் சிறப்பியல்பு என்றும் யுங்கு குறிப்பிட்டார். இருபாலாரின் ஆளுமைச் சமநிலையையும் அவர்கள் தம் வாழ்க்கையில் தன்னிறைவு அடைவதையும் பொறுத்து அவர்களின் சிறப்பியல்புகள் அமைகின்றன. சமூக ஏற்புடைமைக்காக, மக்கள் எதிர்பார்க்கும் வகையிலான முகமூடிக்காக இருபாலாரும் தத்தம் அடிப்படைப் பண்புகளின் இயல்பு நிலையைக் கடுமையாக முயன்று மாற்றியமைக்கின்றனர். இதனால், அவர்கள் உள நெகிழ்ச்சியற்றவர்களாகிவிடுகின்றனர். யுங்கு குறிப்பிட்ட பெண்மைப் பண்புகள் குழந்தைப் பருவத்திலேயே மூலஉருச் சின்னங்களாக ஒருவனிடம் அமைந்து விடுகின்றன. இவ்வாறே ஆண்மைப் பண்புகள், பெண் குழந்தையிடம் அமைந்து விடுகின்றன. பிறக்கும்பொழுது இயல்பாகவே அமைந்த பெண்மைப் பண்புகள், தம் வாழ்க்கையில் சில முக்கியமான பெண்களுடன் உண்டாகிய அனுபவங்கள், பரம்பரை பரம்பரையாகப் பெண்களுக்குப் பண்பாடு வழங்கிவரும் உள உருவங்களின் அடிப்படையில் எழும் கூட்டு நனவிலி, ஆகிய மூன்று அமைப்புகளும் ஆண்களிடம் பெண்மைப் பண்புகள் அமைவதற்குக் காரணமாகின்றன. பெண் ஒரு ஆணுக்குத் தெய்வமாகவோ, பிசாசாகவோ, அன்புத் தாயாகவோ, காதலுக்குரிய துணைவியாகவோ, மயக்குக்காரியாகவோ, பரத்தையாகவோ காணப்படுவது அவனுடைய குழந்தைப் பருவத்து அனுபவங்களையொட்டியதாகும். குழந்தைப்பருவத்து மூலஉருச் சின்னங்கள் நிலைத்து விடா வண்ணம் ஒருவனுக்குப் பல்வேறு வகையான அனுபவங்கள் ஏற்படின், அவனுடைய ஆளுமை பிறழ்வு அடைவதில்லை. குறிப்பிட்ட ஒரேவிதமான அனுபவங்களின் காரணமாக உறுதிப்படும் மூல உருச்சின்னம், மனிதனின் தன்முனைப்பின் மீது மிகுந்த ஆதிக்கம் செலுத்துகிறது. பெண்களிடம் காணப்படும் ஆண்மை இயல்புகளையும் ஆண்மைப் பண்புகள் என்று குறிப்பிட்டார். அனிமா எனப்படும் பண்புகளை எவ்வாறு ஆண்கள் புறத்தேற்றுகின்றனரோ அவ்வாறே அனிமசு எனப்படும் ஆண்மைப் பண்புகளைப் பெண்கள் புறத்தேற்றுகின்றனர். இப் பண்புகள், பெண்ணின் தன்முனைப்பையும் முகமூடியையும் வலுவாக்கி, அறிவுசார் முறையில் அவளை இயங்க வைக்கின்றன. பெண்களிடம் இருக்கும் ஆண்மைப் பண்புகள் ஒடுக்கப்பட்டால், பண்பாடுகளின் ஏற்புடையதரங்களுக்காகப் (Norms) பெண்மிகையாகப் பெண்மைப் பண்புகளை ஏற்கவும் ஆணுடன் போட்டியிடும் தன்மையை வளர்த்துக் கொள்ளவும் நேரிடலாம். ஆண்மைப் பண்புகள் பெண்மையின் குணங்களைச் சமன் செய்து, ஆண்களுடன் நலமிகு இடைத் தொடர்புகளை ஏற்படுத்திக்கொள்ள வழி செய்கின்றன. அதனால், பெண் தன்னிடம் இயற்கையில் அமைந்திருக்கும் ஆண்மைப் பண்புகளை நல்ல வழியில் திசை திருப்பவேண்டும். இருபாலாரும் தம்மிடம் அமைந்துள்ள எதிர்பாலினப் பண்புகளை முழுமையாகப் புறக்கணித்தால் ஆளுமைச் சமநிலையை இழக்க நேரிடுகிறது.

பெண்ணிடம் குழந்தைப் பருவத்திலிருந்தே தன் வாழ்க்கையில் முக்கியமான பங்குகளை ஏற்கும் ஆண்களைப் பற்றிய உளஉருவம் ஏற்படுகிறது. இவ்வுருவம் குழந்தைப் பருவத்து அனுபவங்களையொட்டியே ஏற்படுகிறது. இதனையொட்டியே அவள் ஆண்களைப் புலன்காணும் முறையும் அவர்களுடன் பழகும் முறையும் அமைகின்றன. துணிகரச் செயல் புரிவோன், மயக்கி ஏமாற்றுபவன், கற்பழிப்பவன், காப்போன், தந்தையன்பு கொண்டவன், குதிரை மேல் வேகமாக வந்து தன்னைக்கவரும் கனவுக் காதலன் என்ற பல்வேறு வகைகளுள் ஏதேனும் ஒரு உருவத்தில் ஆண்களைப் பெண் புலன் காணலாம். எந்த உருவத்திற்கு ஏற்ப அனுபவங்களை அவள் அடைகிறாளோ அதுவே உளஉருவாக அவளிடம் நிலைத்து நிற்கிறது. எடுத்துக்காட்டாக முதலில் கூறப்பட்ட வகையில் அவன் உளஉருவம் ஏற்படின் (துணிகரச் செயல் புரிவோன்) அவள் ஆணைப் பற்றித் தான்கொண்டுள்ள உள உருவத்திற்கு ஏற்ப, ஆணிடம் தான் காணவிழையும் பண்புகளை, அவை அவனிடம் அமைந்திராவிட்டாலும் இருப்பனவாக எண்ணி, கண்டதும் காதல் கொள்கிறாள். இதற்கு அவளிடம் ஆண்களைப்பற்றி ஏற்பட்டிருக்கும் மூல உருச்சின்னமே காரணமாகும். எதிர்பாலினருடன் நலமிகு தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்ள இயலாதவர்கள் தம்முடைய மூலஉருச்சின்னங்களை வாழ்க்கையின் உண்மைகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கத் தவறியவர்கள் ஆவார்கள். மூல உருச்சின்னங்களை

உலகில் காணப்படும் பல்வேறு வகைப்பட்டவர்களு டன் ஒப்பிட்டு ஆய்ந்து, நடைமுறைக்கு ஏற்ற உள உருவங்களாக மாற்றுவதே இருபாலாரின் கடமை யாகும். ஒவ்வொருவரிடமும் அமைந்துள்ள எதிர் பாலினப் பண்புகளைக் கட்டுப்படுத்தித் தன்முனைப் புக்கு இயைபுற அகத்தேற்றம் செய்தாலும், ஆணிடம் இயல்பாக அமைந்திருக்கும் பெண்மைப் பண்புகளும் பெண்ணிடம் இயல்பாக அமைந்திருக்கும் ஆண்மைப் பண்புகளும் தக்க பொருத்தப்பாடுகளைக் கொண்டு கட்டுப்படுத்தப்பட்டு ஏற்றுக்கொள்ளப்பட்டால்தான் ஆளுமை ஒருங்கிணைவு ஏற்படுகிறது. அவ்வாறின்றி இப்பண்புகள் ஒருங்கிணைவு ஏற்படாமல் பண்பட்ட நிலையிலேயே இருந்தால், அப்பண்புகள் அந்நிலையி லேயே அகத்தேற்றம் செய்யப்பட்டால், ஆணிடம் பெண்மைப் பண்புகளும் பெண்ணிடம் ஆண்மைப் பண்புகளும் மிகுதியாகக் காணப்படும். இருபாலினரும் தம்மிடம் அமைந்துள்ள எதிர்பாலினத் தன்மையைத் தம் ஆளுமையின் இயல்பான கூறாக ஏற்றுக் கொள்ளவேண்டும். ஆணிடம் அமைந்துள்ள பெண் மைப் பண்புகள் அவனுக்கு இரக்கம், அன்பு, நலம் விழைதல் போன்ற ஆளுமைப் பரிமாணங்களை ஏற் படுத்துகின்றன. பெண்ணிடம் அமைந்துள்ள ஆண் மைப் பண்புகள் பகுத்தறிதிறன், உறுதி போன்ற பரி மாணங்கள் ஆகியவற்றை அவளுடைய ஆளுமையில் ஏற்படுத்துகின்றன. ஒரு ஆண் தனக்கு எவ்வகையி லும் பொருந்தாத பெண்ணிடம் ஈர்க்கப்பட்டாலோ, ஒரு பெண் தனக்கு எவ்வகையிலும் பொருந்தாத ஆணிடம் ஈர்க்கப்பட்டலோ 'இது அறிவுக்குப் பொருந் தாததே! ஏனோ என் உளத்தில் இத்தகைய ஈடு பாடு ஏற்பட்டுள்ளது'! எனக்கே தெரியவில்லை' என்று உளக்குழப்பம் அடைகின்றனர். இத்தகையவர்கள் எதிர்பாலினரிடம் உண்மையாக அமைந்திருக்கும் இயல்புகளைப் புறவயநோக்குடன் புலன் காண் பதைத் தவிர்த்துத், தம்மிடம் ஒருங்கிணைவு பெறா மல் கிடக்கும் எதிர்பாலினப் பண்புகளைத் தாம் காணும் எதிர்பாலினரிடம் புறத்தேற்றி, அச்சீரிய பண்புகள் அவர்களிடம் இருப்பனவாகக் கற்பனை செய்து கொள்கின்றனர். இவ்வாறு பொருத்தமிலாத வகையில் ஈர்க்கப்படும் பெண் எப்பொழுதும் ஓர் புதிராகவே இருக்கிறாள். அவளிடம் தந்திர உள்ளம், வெகுளித்தனம், கடினம், மென்மை போன்ற நேர் எதிரிடையான பண்புகள் ஒருங்கிணைவு பெறாமல் முரண்பாடுகளுடன் காணப்படும். பொருத்தமிலாத அல்லது முன்பின் அறியாத ஆணிடம் ஈர்க்கப்படும் பெண், தன்னுள் முரண்பாடுகள் எனத் தன்னால் ஒதுக்கப்பட்ட ஆண்மைப் பண்புகளைக் கொண்ட வனே சிறந்த ஆண் என்னும் புறத்தேற்ற முறையில் உள உருவம் கொள்கிறாள். இவ்வுள உருவிற்கு ஏற்ப ஆண்மைப் பண்புகள், தான் இதுவரை கண்டி ராத வேற்றுமனிதனிடம் இருப்பதாகக் கற்பனை செய்து கொள்கிறாள்.

இருபாலாரிடமும் அமைந்திருக்கும் எதிர்பாலி னத் தன்மைகள் **(Anima & Animus)**, அவர்களின் வாழ்நாள் முழுவதும் மாறுதல்களுக்கு உட்படுகின் றன. முதல் நிலையில் ஆண் பெண்ணை ஒரு பாலுற வுப் பொருளாக, அழகிய உருவமாகக் காண்கிறான். அடுத்தநிலையில், தன்னுடைய ஆசைகளைத் தணிக் கும் காதலின் கருத்தியல் உருவமாகக் காண்கிறான். மூன்றாம் நிலையில் பெண்ணை ஒருவனிடமே தன்னை முழுமையாக அர்ப்பணிக்கும் வெள்ளை உள்ளம் படைத்த அழகிய கன்னியாகக் காண் கிறான். நான்காம் நிலையில் பெண்ணை அறிவும் ஆதரவும் உள உறுதியும் கொண்ட ஆன்மிக வழி காட்டியாகக் காண்கிறான். பெரும்பாலும் இயல்பு ஆளுமையினர் இத்தகைய நிலைகளை முறையாகக் கடந்துவிடுகின்றனர். இவ்வாறு கணவன் மனைவிய ரிடையே ஒருவருக்கொவர் மதிப்பும் அன்பும் மன வெழுச்சித் தேவைகளைப் பகிர்ந்து கொள்ளும் மனப்பாங்கும் ஏற்பட்டால், திருமணம் பொரு ளுடைத்ததாகிறது. பெண்ணிடம் அமைந்துள்ள ஆண்மைப் பண்புகளும் இவற்றைப் போன்ற நிலை களைக் கடந்து வருகின்றன. ஒவ்வொரு நிலையிலும் வேறுபட்ட இயல்புகளுடன் ஆடவர் புலன் காணப் படுகின்றனர். முதல் நிலையில் ஆண், வலிமையும் மிருகத் தன்மையும் கொண்ட பாலுறவுப் பொரு ளாகத் தோன்றுகிறான். இரண்டாம் நிலையில் பெண்ணின் உள்ளத்தைக் கவரும் உருவம் கொண்ட காதலனாகத் தோன்றுகிறான். மூன்றாம் நிலையில் திறமையும் நிலைமையைச் சமாளிக்கும் ஆற்றலும் அதிகாரமும் நிறைந்தவனாகக் காணப்படுகிறான். நான்காம் நிலையில் ஆதரவும் நிலைத்த அன்பும் கொண்ட மூதறிஞனாகக் காணப்படுகிறான். இந் நிலைகளில் ஆண் காணப்படுவதற்குப் பெண் தக்க துணையாகவும் தூண்டுபொருளாகவும் இருப் பது தேவை.

ஆணிடம் இருக்கும் பெண்மைப் பண்புகள் அவ னுடைய ஆன்மாவையும், ஆண்மைப் பண்புகள் வீரம், ஆதிக்கம் போன்றவைகளையும் குறிப்பிடுகின் றன.

ஆண்மைப் பண்புகளும் பெண்மைப் பண்புகளும் எவ்வாறு இயல்பு நிலையிலும் பிறழ்வு நிலையிலும் மனித நடத்தையைப் பாதிக்கின்றன என்பதைப் பின் வருமாறு யுங்கு விளக்கினார்.

ஆடவரிடம் அமைந்திருக்கும் பெண்மைப் பண்பு கள், தன்முனைப்புடன் ஒருங்கிணைவு பெற்று இயல்பு நிலையில் காணப்பட்டால், அத்தகைய ஆடவர் தம்

மனவெழுச்சிகளை அறிந்தவர்களாகவும், படைப் பாற்றலும் தன்னிச்சையும் உள்ளுணர்வும் மிக்கவர் களாகவும், மற்றவர்களின் தேவைகளையும் உணர்வு களையும் மதித்து நடப்பவர்களாகவும், பெருந்தன் மையாளராகவும் இருப்பர். அவ்வாறின்றிப் பெண் மைப் பண்புகள் தன்முனைப்புடன் ஒருங்கிணைவு பெறாமல் இருந்தால், அத்தகையவர்கள், அற்பத் தனம் மிக்கவராகவும், வாழ்க்கையில் சலிப்பும் வெறுப்பும் கொண்டவர்களாகவும், மற்றவர்களுடன் பழகும் பொழுது உளநிலை மாற்றங்களுக்கு உட்படு பவராகவும், மற்றவர்களைப் பற்றித் துருவி ஆராய்ந்து வம்பு பேசுபவராகவும், சமூகத் தொடர் புகளை நன்கு ஏற்படுத்திக் கொள்ளும் உளவலிமை யற்றவர்களாகவும் இருப்பர்.

இதனைப் போன்றே பெண்களிடம் காணப் படும் ஆண்மைப் பண்புகள் தன்முனைப்புடன் ஒருங் கிணைவு பெற்ற இயல்பு நிலையில் இருந்தால், அத்தகைய பெண்டிர், வாழ்க்கையில் மெய்ந்நிலை யுணர்வு மிக்கவராகவும், சிக்கல்களுக்குத் தீர்வு காண் பவராகவும், சிக்கலான நிலைமைகளை உளச்சம நிலையுடன் அணுகுபவராகவும், இலக்குசார் நடத் தையினராகவும், ஆண்களிடம் அமைந்திருக்கும் பெண்மைப் பண்புகளைப் படைப்பாற்றல் வழித் திசை திருப்புபவராகவும், வாழ்க்கையின் குறிக் கோளை உணர்ந்தவராகவும் உள உறுதி படைத்த வராகவும், தன்னம்பிக்கையுடன் சுதந்திரமாகச் சிந் திக்கும் திறன் பெற்றவராகவும் இருப்பர். அவ்வா றின்றி ஆண்மைப் பண்புகள் தன்முனைப்புடன் ஒருங்கிணைவு பெறாமல் பிறழ்வு நிலையில் காணப் பட்டால், அத்தகைய பெண்டிர், பகுத்தறிவு வய மற்றவராகவும், மனவெழுச்சி வயப்பட்டவராகவும், அளவுக்கு மீறிய அகநோக்குடையவராகவும், ஆளு மைச் சமநிலையற்றவராகவும், முரண்பாடான நடத் தையுடையவராகவும், ஆடவரைப் பற்றிய சார் பெண்ணங்களை உடையவராகவும், ஆடவருடன் போட்டியிடுபவராகவும், பெண் என்னும் முறையில் வாழ்க்கையில் இயங்க வேண்டிய முறையைத் தவிர்த்து ஆடவரின் இயங்கு முறையில் தொல்லை தருபவராகவும், வாதாடுபவராகவும் தாழ்வு மனப் பான்மையும் காப்புணர்வின்மையும் கொண்டவராக வும் இருப்பர்.

மருத்துவர்கள், ஆசிரியர்கள் போன்ற பல்வேறு தொழில்துறை வல்லுநர்கள், வெவ்வேறு வகையான முகமூடிகளைக் கொண்டிருக்கின்றனர். அதாவது அவர்களுடைய தோற்றம், நடை உடை, வாழ்க்கை முறை, செயல், உரையாடல் ஆகியவற்றில் சமூகம், சில பண்புகளை எதிர்பார்க்கிறது. இதற்கு ஏற்ப அவர்கள் நடந்து கொண்டால், சமூகம் அவர்களை ஏற்கிறது. அதனால், அவர்கள் பெருமுயற்சி மேற் கொண்டு தங்களைச் சமூகம் எதிர்பார்க்கும் வகை யில் தோற்றமளிக்கின்றனர். இம்முயற்சியை யுங்கு முகமூடி என்று குறிப்பிட்டார். சமூக ஏற்புடைமை யைப் பெறுவதற்காக மக்கள் தம் இயல்புப் பண்பு களை மறைத்து முகமூடி அணிகின்றனர். மக்களின் இயல்பான பண்புகளுக்கும் அவர்களின் முகமூடிக்கும் இடையே பெரும் வேறுபாடு இருந்தால், வாழ்க்கை பொருளற்றதாகி விடுகிறது. பெரும்பாலானவர்கள் தம் தொழிலுக்கு ஏற்பத் தோற்றம், நடையுடை, வாழ்க்கை முறை ஆகியவைகளைக் கொண்டிருக் கின்றனர். தொழிலகம், அலுவலகம், விழாக்கள் போன்ற இடங்களில், மக்கள் முகமூடியைக் கொண் டிருக்கலாம். அதே முகமூடியைப் பல்வேறு சூழ் நிலைகளிலும் கொண்டிருப்பது விரும்பத்தக்கதன்று. முகமூடி நடைமுறைக்கு ஏற்ப அமைய வேண்டும்.

தன் முனைப்பு என்பது நனவு உள்ளத்தைக் குறிக்கும் என்றும், தான் அல்லது தன்னுணர்வு (Self) என்பது நனவு, நனவிலி இரண்டையும் குறிக் கிறது என்றும் யுங்கு கூறினார். தன் முனைப்பிலி ருந்து விடுதலை பெற்ற 'தன்னுணர்வு' (Self), நன விலியின் பக்கம் இயங்குகிறது. இதுவே தனிமனித னின் உண்மையான ஆளுமை ஆகும்.




யுங்கின் பகுப்பு உளவியல் கோட்பாட்டு விளக்கம்

தமக்குள் அமைந்திருக்கும் முரண்பாடுகளைச் சமநிலைப்படுத்தித் தன்முனைப்புடன் அவற்றை ஒருங்கமைவுறச் செய்யும் பொறுப்பு ஒவ்வொருவ ரின் தன்னுணர்வுக்கும் ஏற்படுகிறது. முரண்பாடுகள் போராட்டமின்றி தன்முனைப்புடன் ஒருங்கமையப் பெறுபவன் தனித்தன்மை (Individuation) அடைகி றான். தனித்தன்மை அடைந்த ஆடவர் ஆண்மை யுடன் நடந்துகொண்டபோதிலும் தம்மிடம் அமைந் திருக்கும் மனவெழுச்சிவயப்பட்ட நடத்தையை மறைப்பதில்லை. இதனைப் போன்ற தனித்தன்மை



யுங்கின் ஆளுமை ஒருங்கிணைவுக் கருத்து விளக்கம்

அடைந்த மகளிர் தம் சுதந்திரத்தையும், தன்னம்பிக்கையையும் பெறுகின்றனர். அதாவது முகமூடி, நிழல் (உள்ளார்ந்த குறை) ஆண்மை அல்லது பெண்மைப்பண்புகள், தன்னுணர்வு மூலஉருச் சின்னங்கள் அகமுகப் பண்புகள், புறமுகப் பண்புகள் ஆகிய எல்லாக் கூறுகளும் ஒன்றுடன் ஒன்று இணைவு பெறுகின்றன. இக்கூறுகள் ஒருங்கிணைவு பெறாதவர், தனித்தன்மை அடையாதவர் (Unindividuated Persons) என்று யுங்கு குறிப்பிடுகிறார்.

மெய்ந்நிலை வழி இயங்கும் தன்முனைப்பு, சிந்தனை எனப்படுகிறது. இயங்கா நிலையில் இருக்கும் தன்முனைப்பு, உள்ளுணர்வு எனப்படுகிறது. அறிவுசார் வழிகளில் உள்ளுணர்வு இயங்கும் பொழுது அது உணர்ச்சி என்றும், அறிவுசாரா வழிகளில் இயல்பாக இயங்கும் பொழுது அது உணர்வு என்றும் கணிக்கப்கிறது. ஒரு சதுரக் கட்டத்தின் நான்கு மூலைகளிலும் இந்த இயங்குமுறைகளை அமைத்தால், அச்சதுரத்தின் மையத்தில் இவ்வியங்குமுறைகளின் கட்டிணைப்பு (Synthesis) ஏற்படுவதைக் காணலாம். யுங்கு, இந்தக் கட்டிணைப்பை மண்டலம் என்று குறிப்பிட்டார். மனிதர்களிடம் இந்தக் கட்டிணைப்புக் காணப்படுவதில்லை, அதற்கு மாறாக இந்த நான்கு இயங்கு முறைகளுள் ஏதேனும் ஒன்று, மற்றவற்றைவிட வன்மையாக இயங்குகிறது, அதுவே அவனுடைய ஆளுமையைப் பெருமளவில் பாதிக்கிறது. இந்த நான்கு இயங்குமுறைகளுடன் மிக வலிமை குறைந்திருப்பது, முழுமையாக அடக்கப்பட்டு விடுகிறது.

அகமுகத்தோர் தம் உள் ஊக்குத் திறனை வெளி உலகினின்று வேறுபடுத்தித் தம்முள் திசை திருப்புகின்றனர். புறமுகத்தோர், தம் உள் ஊக்குத் திறனை வெளி உலகின் செயல்களையும், பொருள்களையும் நோக்கிச் செலுத்துகின்றனர். மனப்பாங்கின் காரணமாக அகமுகத்தோர் தம்வயப்பட்டவராகவும் புறமுகத்தோர் புற உலகின் வயப்பட்டவராகவும் இயங்குகின்றனர். எல்லா மனிதர்களிடமும் அகமுகப் பண்புகளும் புறமுகப் பண்புகளும் காணப்படுகின்றன. அவற்றுள் எப்பண்புகள் தனி மனிதனிடம் வலிமையானவையாக இருக்கின்றனவோ அவற்றினைப் பொறுத்து அவன் ஆளுமை அமைகிறது. புறமுகத்தோர் பெரும்பாலும் நட்பு விழைபவராக இருப்பதனால், அவர்கள் சமூக ஏற்புடைமையுடையவராக இருக்கின்றனர் என்றும், அகமுகத்தோர் சிந்தனை வயப்பட்டவராக இருப்பதனால் அவர்கள், சமூகத்தில் பெரும்பாலும் ஏற்புடைமை அற்றவராக இருக்கின்றனர் என்றும் பெரும்பாலான மக்கள் கருதுகின்றனர். அதாவது அகமுகம் பிறழ்நிலைப் பண்பு எனவும் புறமுகம் இயல்பு நிலைப் பண்பு எனவும் மக்கள் கருதுகின்றனர். இந்தக் கருத்து தவறு. அகமுகத்தோரிடம் புறமுகப் பான்மைகள் அடக்கப்பட்டு விடுகின்றன. அதனால், அடக்கப்பட்ட இயல்புகள், நனவிலியளவில் இயங்குகின்றன. அதாவது, அகமுக ஆளுமையினரிடம், புறமுகப் பண்புகளை அடைய வேண்டும் என்ற நனவிலியளவிலான ஏக்கங்களும், புறமுக ஆளுமையினரிடம், அகமுகப் பண்புகளை அடைய வேண்டும் என்ற நனவிலியளவிலான ஏக்கங்களும் காணப்படும். ஆளுமையின் குறிக்கோள் தன்னுணர்வு அடைதலாகும். ஆளுமையின் நனவிலிக் கூறுகளைத் தன் முனைப்பில் ஒருங்கிணைத்தலும் தன்முனைப்பின் நான்கு இயங்குமுறைகளையும் சமநிலைப் படுத்தலும், அகமுக, புறமுகப் பண்புகளைச் சூழ்நிலைக்குத் தக்கவாறு தக்க அளவில் அடைதலும் ஆகிய மூன்றும் தன்னுணர்வினைக் குறிப்பிடும். புறமுகத்தோர், மற்றவர்களின் தன்மதிப்பைப் பெறுவதில் மிகுந்த நாட்டம் கொண்டு இயங்குவதனால், தம்முடைய சொந்த மனவெழுச்சிகளையும் உணர்வுகளையும் புறக்கணிக்கின்றனர். மண்டலம் என்று யுங்கு குறிப்பிட்ட இந்த உளக் கட்டிணைப்புச் சீராக இயங்கினால் ஆளுமை சமநிலையுடையதாகிறது.

உயிரியின் நனவிலியளவிலான விருப்பங்களை யுங்கு சின்னங்கள் (Symbols) என்று குறிப்பிட்டார். மக்களின் வாழ்க்கையில் சின்னங்கள் பெரும் பங்கு

கொள்கின்றன. மொழி, ஒரு சிறந்த சின்னமாகும். மொழியினால் மனிதர்கள், பொருள்கள், தொடர்புகள் போன்ற பலவற்றைக் குறிப்பிட முடியும். ஒரு சொல் ஒரு பொருளையோ நிகழ்ச்சியையோ செயலையோ குறிப்பிடுகிறது. சொல்லிலாச் சின்னங்களும் சில நேரங்களில் சொற்களின் பங்கினைக் கொள்கின்றன. சில வழக்கங்கள், சடங்குகள், கைகுலுக்குதல், புன்னகை, பரிசுகொடுத்தல் போன்றவை பல செய்திகளைக்குறிப்பிடுவனவாக இருக்கின்றன. திருவிழாக்கள், பண்டிகைகள், திருமணம் இவற்றை யொட்டிய பல சடங்குகள், மக்களின் வழக்கமாகி விட்டன. இக்காலத்துச் சமூகங்களில் தேசியக் கொடி செல்வம், பதவி, அதிகாரம் போன்றவற்றைச் சின்னங்களுக்கு எடுத்துக்காட்டுகளாகக் கூறலாம்.

ஒவ்வொரு மனிதனின் ஆளுமையிலும் பண்படா நிலையில் உள்ளார்ந்த குறைகள் அல்லது நிழல்கள் (Shadows) இருக்கின்றன என்று யுங்கு கருதினார். சில நேரங்களில் இந்தக் குறைகள் தகாத பாலுறவு, அழிவு, தன்னலமிகுதி போன்ற உந்துகள் அடிப்படை நிலையில் இருக்கின்றன. இந்த அடிப்படை உந்துகள், மனிதர்கள் அணியும் முகமூடிக்கு முரணானவைகளாக இருக்கின்றன. முகமூடியின் உதவியுடன் மனிதர்கள் தங்களைச் சிறந்த இயல்பினராகக் காட்டிக் கொள்ள முயற்சி செய்கின்றனர். ஆனால், உள்ளார்ந்த குறைகள், அவர்களின் இயல்புகளை உள்ளவாறு காட்டிக் கொடுக்கும். பெரும்பாலான மக்கள் தம்மிடம் தீய இயல்புகள் இருப்பதாக உணர்வதில்லை. நம்மிடம் உள்ள குறைகளை நாம் அறிந்து கொள்ளுதல் நம்முடைய ஆளுமைச் சமநிலைக்குப் பெரும் உதவியாக இருக்கும். நமக்குத் தெரியாமலே நம்மிடம் அமைந்து இருக்கும் குறைகளை நாம் கட்டுப்பாட்டிற்கு உட்படுத்த இயலாது. ஆதலின், இவை இன்னல் தரத்தக்கவை. ஆயினும், உள்ளார்ந்த குறைகள், ஆளுமையின் பரிமாணத்திற்குத் தேவையாக இருக்கின்றன. முழுமையாக நல்லியல்புகளே கொண்ட மனிதர்கள் உலகில் இருந்தால், அவர்களுடன் நம்மால் இயைபு கொள்ள முடியாது. ஏனெனில் நம்மிடம் இருக்கும் குறைகளுள் சிலவற்றை நாம் அறிவோம். அவற்றை மற்றவர்களிடமும் காண விழைகிறோம். பொதுவாக உள்ளார்ந்த குறைகள் நனவிலியளவில் இருக்கின்றன. இக்குறைகள் தன்முனைப்பின் கட்டுப்பாட்டினுள் அடங்குவன அல்ல. ஆயினும் இக்குறைகள் தன்னுணர்வின் கூறுகளாகும். இக்குறைகளை நனவிலியளவிலிருந்து நனவு நிலைக்குக் கொண்டுவருவதே ஆளுமைச் சமநிலையடையச் சிறந்த வழியாகும்.

சில நேரங்களில் ஆண்களின் பெண்மைப் பண்புகளும் பெண்களின் ஆண்மைப் பண்புகளும் ஒடுக்கப்பட்டு உள்ளார்ந்த குறைகளாக இருக்கலாம். அவை தன்னுணர்வுடன் ஒருங்கிணைவு அடைவதே ஆளுமை வளர்ச்சிக்குத் துணை செய்யும். இவ்வாறின்றி ஒடுக்கப்படும் குறைகள் பெரும்பாலும் கசப்பானவையாகவோ முகமூடியுடனோ தன்முனைப்புடனோ ஒருங்கிணைய முடியாதனவாகவோ இருக்கின்றன. இத்தகைய கசப்பான குறைகள் புறத்தேற்ற முறையில் மற்றவர்களிடம் இருப்பனவாகத் தனிமனிதனால் உணர முடியும். 'என்னிடம் சிறு குறைகள் இருக்கலாம். மற்றவர்களிடம் பெருங்குறைகள் இருக்கின்றனவே' என்று தன்முனைப்பைச் சமாதானம் செய்து கொள்கிறான்.

தனிமனிதனின் உள்ளார்ந்த குறைகள், பெண்மைப் பண்புகள், முகமூடி ஆகியவற்றை நனவிலியிலிருந்து உள்ளத்தின் நனவு நிலைக்குக் கொண்டு வருகின்றன. இவ்வாறு தன்முனைப்பு உள்ளத்தின் மையக் கூறாக இயங்கத் தொடங்குகிறது. தன்முனைப்பு மனிதனுடைய ஆளுமையின் மையக் கூறாகவும் இயங்குகிறது.

மனிதர்களின் தன்முனைப்பு, பல முரண்பட்ட இயக்குத் திறன்களுக்கு உள்ளாகிறது. மனிதன் சமூக ஏற்பினை அடைய வேண்டும் என்பதற்காக முகமூடி முயற்சி செய்கிறது. இதற்கு நேர் எதிராக உள்ளார்ந்த குறைகள், தன்முனைப்பிற்குப் பல பண்படா உந்துகளைத் தந்து, அவற்றை நிறைவேற்றிக் கொள்ள முயற்சி செய்கின்றன. இவை அவனைச் சமூகத்திற்கு எதிரான செயல்களிலும் ஈடுபடத் தூண்டலாம். அவனுடைய பெண்மைப் பண்புகளோ அன்பு, படைப்பாற்றல், பற்று போன்ற இயல்புகளை வெளிக்கொணர முயற்சி செய்யும். ஆனால், இவ்வியல்புகள் அவன் பண்பாட்டு ஏற்புக்காக அணிந்திருக்கும் முகமூடிக்கு எதிரிடையாக இருக்கும். தன்னுணர்வு முதிர்ச்சியடைந்த நிலையை மனிதன் எய்தும் பொழுது இம் முரண்பாடுகளுக்குத் தீர்வு காண்கிறான். மனிதர்கள் மற்றவர்களுடன் பழகும் பொழுது இயைபின்றி முரண்பாடுகளையும் போராட்டங்களையும் கொண்டிருப்பதற்கு அவர்களுடைய தன்முனைப்பில் ஏற்படும் இத்தகைய போராட்டமே காரணமாகிறது.

அலுவலகங்களில் பணியாற்றும் கீழ்நிலை அதிகாரிகளும் சுதந்திரமாக இயங்குவதற்கு விரும்புகிறார்கள். பெண்கள் அன்பு, அழகு ஆகிய இயல்புகளுடன் மனஉறுதி, சிக்கலுக்குத் தீர்வு காணல் போன்ற திறமைகளையும் கொண்டிருக்கின்றனர். இவ்வாறு முரண்பாடுகள் ஒருங்கிணைவு பெற்று ஆளுமைச் சமநிலை ஏற்படுகிறது.

**மர்ரே, என்றி அலெக்சாந்தர்:** இவர் தனி மனிதனின் ஆளுமையை மதிப்பீடு செய்வதற்கு அவன் பண்புகளனைத்தையும் ஒருங்கே சேர்த்து முழுமையாக ஆராய்வது இன்றியமையாததாகும் என்று கருதினார்.

ஆளுமையை மதிப்பீடு செய்வதற்கு முதன்முதலில் புறத்தேற்றச் சோதனைகளை (Projective Tests) உருவாக்கியவர் மர்ரே (Murray) ஆவார். இச்சோதனைகளுள் உளவியல் துறையினரால் மிகுதியாகப் பயன்படுத்தப்படுவது, பொருள் இணைத்தறி சோதனை (Thematic Apperception Test) ஆகும். இச்சோதனைக்கு மர்ரே முதலிடம் கொடுத்துள்ளார்.



என்றி அலெக்சாந்தர் மர்ரே

மர்ரேயின் கொள்கையில், பிராய்டு, யுங்கு ஆகியோர் தத்தம் கொள்கை நிலைகளில் பயன்படுத்திய கருத்துகள் காணப்படுகின்றன. பண்படா உளம், தன் முனைப்பு, மேம்பாட்டுளம் போன்ற கருத்துகளைச் சற்றுத் திருத்தி, மர்ரே தமது கொள்கையில் சேர்த்துக் கொண்டிருக்கிறார். உளப்பகுப்பு வல்லுநர்கள் கருதுவது போன்றே மர்ரேயும், குழந்தைப் பருவச் சூழ்நிலை, வயது வந்தோர் ஆளுமை வளர்ச்சிக்குப் பெரிதும் தொடர்புடையது என நினைக்கிறார். ஆனால், மர்ரே, பிராய்டு பால் உந்துதலுக்கும் ஆட்லர் ஆதிக்கம் விரும்பும் இயல்பு நிலைக்கும் தத்தம் கொள்கைகளில் மிகுந்த இடம் தருகிறார்கள் எனக்கூறி அவற்றை ஏற்றுக் கொள்ளவில்லை.

மர்ரே, புறத்தேற்றச் சோதனைகள் மூலமும் நேர்காணல் மூலமும் பல மனிதர்களுடைய ஆளுமையைச் சோதித்துக் குறிப்பாக, இருபத்தெட்டுத் தேவைகள் கொண்ட பட்டியல் ஒன்றை அமைத்தார். இந்த 28 தேவைகளில் அடைவுத் தேவை, ஆக்கிரமிப்புத் தேவை, தன்னுரிமைத் தேவை, ஆதிக்கத் தேவை ஆகியவை சிறந்தவையாகும். இவற்றைத் தவிர மனிதர்களிடம் சுதந்திரத்தேவை (n Autonomy), அரவணைப்புத்தேவை (n Nurturance), பணிவுத் தேவை (n Abasement), பால் உறவுத் தேவை (n Sex), கைவிடல் தேவை (n Rejection), தீங்கு தவிர்த்தல் தேவை (n Avoidance), ஒழுங்குத் தேவை (n Order), தெரிந்துகொளல் தேவை (n Understanding), கவனத்தேவை (n Exhibition), விளையாட்டுத் தேவை (n Play), புலன் மகிழ்ச்சித் தேவை (n Sentience), புதுமைத் தேவை (n Novelty), தளராத முயற்சித் தேவை (n Perseverence), உளப் பகுப்புத் தேவை (n Intraception), இணைப்புத்தேவை (n Affiliation), தலைமை ஏற்புத் தேவை (n Deference), எதிர்பாலின உறவுத் தேவை (n Heterosexual Relation) ஆகிய தேவைகள் இருக்கின்றன என்று மர்ரே குறிப்பிட்டார். மர்ரேயின் கூற்றுப்படி இந்தத் தேவைகள் யாவும், எல்லா மனிதர்களிடமும் வெவ்வேறு அளவில் காணப்படுகின்றன. ஒவ்வொரு தேவையின் அளவையும் ஐந்து முறைகளில் முடிவு செய்யலாம். 1. நடத்தையின் முடிவு, 2. நடத்தைக் கோலம், 3. எந்தத் தூண்டுதலுக்கு மிகுந்த கவனம் செலுத்தப்படுகிறது என்பது, 4. மனவெழுச்சி வெளியீடுகள், 5. இலக்கை அடைந்தவுடன் ஏற்படும் மன நிறைவு, இலக்கை அடைய முடியாவிட்டால் தோன்றும் மன வெறுப்பு ஆகிய இவற்றின் குறிப்பிட்ட தேவையின் அளவை அறிதல். தேவைகள், ஒவ்வொரு மனிதனுக்குள்ளேயும் இருந்து கொண்டு அவனுடைய நடத்தைக்கு வழிகாட்டுகின்றன. மனிதனுடைய நடத்தை, சூழ்நிலைக் கூறுகளினாலும் பாதிக்கப்படுகிறது. அச்சூழ்நிலைக் கூறுகளை மர்ரே 'அழுத்தங்கள்' எனக் குறிப்பிடுகிறார். முதன்மையான அழுத்தங்களையும், தேவைகளையும் ஒன்றுக்கொன்று தொடர்புபடுத்திக் காட்டுகிறார். பொருள்களின் இயல்பு நிலையை முதனிலை அழுத்தம் (Alpha Press) எனவும், அப்பொருள்கள் மனிதனுக்கு எவ்வாறு காட்சியளிக்கின்றன என்பதை இடைநிலை அழுத்தங்கள் (Beta Press) எனவும் மர்ரே குறிப்பிட்டார். எல்லாத் தேவைகளும் ஒருங்கிணைந்து ஏற்படும் தேவை ஒருங்கிணைவு (Need Integrate) என்பதை உட்பொருள் (Theme) என்று மர்ரே குறிப்பிட்டார். இணைப்

புத் தேவையுடன் தொடர்பு கொண்ட இணைப்பு அழுத்தம் (Press Unity), ஒருவனிடம் இணைப்புத் தேவையை ஏற்படுத்தலாம். இத்தகையவன் மற்றவர் களின் நட்பைப் பெரிதும் விரும்பலாம். ஆதலின் நட்பு என்னும் உட்பொருள், நண்பர்கள் என்னும் குறிப் பிட்ட அழுத்தத்தினை ஏற்படுத்துகிறது. எடுத்துக் காட்டாக நட்பு மிக்க ஒரு விற்போன் (Salesman), ஆக்கிரமிப்புத் தேவை, கைவிடல் தேவை ஆகியவை களையும் விரும்பலாம். மர்ரே குறிப்பிட்டதேவை களின் அடிப்படையில் எட்வர்டு என்பார் தம் சுய விருப்ப அட்டவணை என்னும் சோதனையை அமைத் தார்.

உட்பொருள், மனிதர்களின் ஆளுமையின் மீது பெரும் அளவில் செல்வாக்கு உடையதாயின், அதனை ஒன்றிய உட்பொருள் என்று மர்ரே குறிப்பிட்டார். ஒன்றிய உட்பொருள், குழந்தைப் பருவத்திலேயே அமைந்துவிடுகிறது. வாழ்க்கைச் சூழ்நிலை, அனுபவங் கள் ஆகியவற்றின் காரணமாக உருவாகி, வாழ்க்கை யின் முக்கியமான கட்டங்களில் மனிதர்களைப் பாதிக்கின்றன. எரிக்பெர்ன் (Eric Berne) என்பவர் 'மக்களின் வாழ்க்கை உரை' (Scripts People Live By) 'விளையாட்டிற்கும் உரைக்கும் அப்பால்' (Beyond Games & Scripts) என்னும் நூல்களில் குறிப்பிடும் 'உரை'க்கு, மர்ரே குறிப்பிடும் உட்பொருள், இணையானதாக இருக்கிறது. மனிதனுக்கும் அவனு டைய சூழ்நிலைக்கும் இடையே உள்ள தொடர் பினை இரட்டைக்கூறு (Dyad) என்று குறிப்பிட்டார். சூழ்நிலை ஒருவனிடம் குறிப்பிட்ட துலங்கல்களை ஏற்படுத்துவது. அதன் காரணமாக அவன் ஒருவகை யான நடத்தையில் ஈடுபடலாம். இத்துலங்கல்களும் நடத்தைகளும் அவனுக்குத் தனித்தன்மையைக் கொடுக்கும் உட்பொருள் (Theme) ஆகின்றன. மனி தர்களின் முதன்மையான தேவைகளையும் அவற்றை யொட்டிய உட்பொருள்களையும் பின்வருமாறு மர்ரே தொகுத்துள்ளார்.

பெரும் பொருளீட்டுவதற்குப் பாடுபடுதல், செயற்கரிய செய்து பாராட்டு அடைவதற்கு முயற்சி செய்தல், தம்முடன் பணி செய்பவரைக் காட்டிலும் சிறப்புற இயங்குதற்கு முயற்சி செய்தல் ஆகியவை அடைவுத் தேவையின் (n Achievement) உட்பொருள் களாகும். நெருங்கிய நண்பனை அடைதலும் பலரை மனநிறைவு கொள்ளச் செய்தலும் குழுவினர் அல்லது மற்றவருடன் இணைந்து செயலாற்றலும் இணைப்புத் தேவையின் (n Affiliation) உட்பொருள் களாகும்.

தமக்குப் போட்டியாக இருப்பவரின் எதிர்ப்பை முறியடித்தலும், மற்றவர்களைத் தமக்குப் பணியச் செய்தலும், மற்றவர்களைச் சொல்லாலும் செயலா லும் துன்புறுத்துதல் மூலம் அவர்களைக் காட்டிலும் தான் பெரியவன் என்று உணர்த்துதலும் ஆக்கிர மிப்புத் தேவையின் உட்பொருள்களாகும்.

பெற்றோர் தம்மீது விதிக்கும் கட்டுப்பாடுகளை எதிர்த்தலும், தம்மிலும் பதவியில் உயர்ந்தவர் தமக்கு இடும் ஆணைகளைத் தெரிந்தே மீறுதலும், தமக்கு விருப்பமான பொருள்கள் பற்றிக் கட்டுப் பாடின்றித் தம் கருத்துகளை வெளியிடுதலும் சுதந் திரத் தேவையின் உட்பொருள்களாகும். தம் விருப் பப்படி தத்தம் சூழ்நிலைகளை மாற்றி அமைத் தலும், தம் உடன் மாணவர்கள், நண்பர்கள், பெற் றோர் ஆகியோர் நடத்தைகளை இயக்குதலும், சூழ்நிலைகள், தலைவர், மேலதிகாரி ஆகியோ ரைக் கட்டுப்படுத்துதலும், மற்றவர்களைக் கட்டா யப்படுத்துதலும் தடுத்தலும் ஆதிக்கத் தேவையின் உட்பொருள்களாகும். எதிர்பாலினரின் கவனத்தை ஈர்த்தலும் தம் வாழ்க்கையில் முக்கியமானவர் கள் என்று கருதப்படுபவர்களை உளக்கிளர்ச்சியுறச் செய்தலும் குழப்பமடையச் செய்தலும் தம் தோற் றத்தினாலும் நடத்தையினாலும் மற்றவர்களின் கவனத்தை ஈர்த்தலும் கவன ஈர்ப்புத் தேவையின் உட்பொருள்களாகும். தம்மைக் காட்டிலும் பெரிய வர்களை வியந்து போற்றுதலும் தலைவன், வீரன், ஆசிரியர் போன்றவர்களைப் புகழ்வதும் தம் மேலதி காரி செயற்படுவதைப்போல் தாமும் செயற்படுதலும் தலைமை விழைதல் தேவையின் உட்பொருள்களா கும். அன்பும் பாசமும் கொண்டவர்களுக்குக் கட்டுப் படுதலும், மேலதிகாரி தம் மீது சுமத்தும் குற்றத்தை மறுப்பின்றி ஏற்றுக் கொள்ளுதலும், தாம் செய்த தவ றுகளை ஒருசிலரிடம் எடுத்துக்கூறி கழிவிரக்கம் கொள் ளுதலும், பணிவுத் தேவையின் உட்பொருள்களா கும். சிறுகுழந்தைகள், சிறு விலங்கினம், தவிக்கும் உயிரி னங்கள் போன்றவைகளால் கவரப்படுதலும், இளை ஞர்கள், குழந்தைகள் ஆகியோருக்கு உதவி செய்த லும், அவர்கள் சிக்கல்களுக்குத் தீர்வு காண்பதும், துன்புறுவோருக்கு இரக்கம் காட்டி உதவி செய்தலும் அரவணைப்புத் தேவையின் உட்பொருள்களாகும். தம்மீது பரிவு காட்டுபவரிடம் நெகிழ்ச்சி கொள் வதும் பரிவுள்ள நண்பரின் அறிவுரைகளைப் பெற விழைதலும் பரிவு விழைதல் தேவையின் (n Succor-ance) உட்பொருள்களாகும். அறிந்தோரிடம் தம் ஐயப்பாடுகளைக் கேட்டுத் தெளிதலும், நிகழ்ச் சிகளின் காரண காரியங்களைக் கண்டறிய முயற்சி செய்தலும் தெரிந்து கொள்ளல் தேவை யின் உட்பொருள்களாகும். பால் உறவு பற்றி ஈடுபாடு கொள்வதும் தம்மைவிட வயதில் மூத்த எதிர்பாலினரால் கவரப்படுதலும் பால்உறவுத் தேவையின் உட்பொருள்களாகும். சிலரிடம் செருக்கு மனப்பான்மையுடன் நடந்து கொள்வதும், தெரிந்தே

சிலரைத் தவிர்ப்பதும், தவிர்த்தல் தேவையின் உட்பொருள்களாகும். விளையாட்டின் மூலம் மகிழ்ச்சியடைதலும், மற்றவர்களுடன் நகைச்சுவையாக உரையாடுதலை விரும்புவதும், விளையாட்டுத் தேவையின் உட்பொருள்களாகும். பயணம் அல்லது திட்டத்தை வகுத்து அதனை எடுத்து நடத்துதலும், எதனையும் ஒழுங்குறச் செய்தலும், குழப்பங்களுக்கு நல்ல தீர்வு காண்பதும், ஒழுங்குத் தேவையின் உட்பொருள்களாகும். புலன் சார் மகிழ்ச்சி தரும் செயல்களில் ஈடுபடுதல் புலனுணர்வுத் தேவையின் உட்பொருளாகும். பழைமைப் பாதையிலேயே வாழ்தலும் எதிர்பாராத விளைவுகளுக்கு அஞ்சிப் புதுமையைத் தவிர்த்தலும் தீங்கு தவிர்ப்புத் தேவையின் உட்பொருள்களாகும். மேற்குறிப்பிட்ட தேவைகள் மனிதனின் ஆளுமையைப் பெருமளவிற்குப் பாதிக்கின்றன என்று மர்ரே கருதினார். வ·தே·சு

ஆபிரகாம் மாசுலோ: 1908-ஆம் ஆண்டு நியூயார்க்கில் பிறந்தார். விசுகான்சின் (Wisconsin) பல்கலைக்கழகத்தில் உயர்மட்டக் கல்வி கற்றார். விசுகான்சிசிலும் புருக்லின் (Brooklyn) கல்லூரியிலும் உளவியல் பேராசிரியராகப் பணியாற்றிய மாசுலோ 1967-ஆம் ஆண்டு அமெரிக்க உளவியல் சங்கத்திற்குத் தலைவரானார். உளவியல் துறையில் பெரும் புகழ் பெற்று 1970-ஆம் ஆண்டு இறந்தார். மனிதனின் தேவைகள் எந்த அளவில் நிறைவுபெறுகின்றனவோ அந்த அடிப்படையில், அவனுடைய ஆளுமை அமைகிறது என்று கூறுகிறார். ஒவ்வொருவனுக்கும் தன்னுடைய முழுத்திறன்களின் வளர்ச்சியில் நாட்டம் உண்டு என்னும் கருத்தினை மாசுலோ (Abraham Maslo) வலியுறுத்துகிறார். மனிதனின் தேவைகள் பல நிலைகளில் உள்ளன என்றும், இவைகளுள் ஆதாரத் தேவைகள் நிறைவு பெற்றால்தான் உயர்நிலைத் தேவைகள் (Meta Needs) எழும் என்றும் மாசுலோ கருதுகிறார். தன்னுடைய திறமைகளுக்கு ஏற்பத் தன்னிறைவு (Self Actualisation) பெறுபவன் ஆளுமைச் சமநிலை அடைகிறான். இத்தகைய ஆளுமையைப் பெற்றவனிடம் இயல்பான படைப்பாற்றல் மிக்க நடத்தை காணப்படும் என்று அவர் கருதுகிறார்.

மனிதர்களிடம் உடல் சார் ஊக்கிகள் வலுவாகக் காணப்படுகின்றன. இவை மனிதனின் அடிப்படைத் தேவைகளுடன் தொடர்பு கொண்டவை. இவைகளுக்கு மேல் அடுத்த தளத்தில் பாதுகாப்பு உணர்வுடன் தொடர்பு கொண்ட தேவைகள் (Safety Needs) காணப்படுகின்றன. அவைகளை அடுத்துச் சமூகத்தில் பிறருடன் தொடர்பு கொள்வதுடன் ஒட்டிய வேறு பல தேவைகள் அமைகின்றன (Affiliation Needs).



ஆபிரகாம் மாசுலோ

இத் தேவைகள் நிறைவு பெற்றால் மனிதனிடம் சுயமதிப்புடன் தொடர்பு கொண்ட வேறு பல தேவைகள் (Esteem needs) காணப்படுகின்றன. இறுதியாக, மக்களை அவர்களுடைய திறமைகளுடன் இணைத்துத் தன்னிறைவு அடையச் செய்யும் தேவைகள் (Self Actualisation Needs) காணப்படுகின்றன. இவற்றைத்தவிர, அறிந்து கொள்ளத் தூண்டும் தேவை (Desire to Know), அழகியல் தேவைகள் (Aesthetic Needs) ஆகியனவும், தேவை அடுக்கின் மேல் தளத்தில் காணப்படுகின்றன. அடித்தளத்தில் உள்ள முதல் மூன்று வகைத் தேவைகளைக் குறைபாட்டுத் தேவை(Deficiency Needs)களின் அடிப்படையில் எழுபவை என்றும், மாசுலோ கூறுகிறார். குறைபாட்டுத் தேவைகள் ஓரளவேனும் நிறைவு பெற்றால்தான் வளர்ச்சித் தேவைகள் எழும். உண்மையான வளர்ச்சியும் தன்னிறைவும் கொண்டவன், சுதந்திரமாகவும் இயல்பாகவும் மகிழ்ச்சியோடும் படைப்பாற்றலுடனும் இயங்கிச் சமூக ஏற்புடைமையை அடைகிறான். அத்தகையவனுடைய ஆளுமை சமநிலை உடையதாக இருக்கிறது.

குறைபாட்டுத் தேவைகள் ஊக்குவித்தல் தேவைகளுடன் தொடர்பு கொண்டவை என்றும், உயர்நிலை ஊக்குவித்தல் (Metamotivation) தேவைகள் வளர்ச்சித் தேவைகளுடன் தொடர்பு கொண்டவை என்றும் உயர்நிலை ஊக்குவிப்புகள், எப்பொழுதும் நிறைவு பெறாத இயல்புடையன என்றும் மாசுலோ கூறினார். மக்களுள் ஒரு சிலர் மட்டுமே தன்னலமற்றவராகவும் பொதுநலம் கருதுபவராகவும் வாய்மை, தியாகம் ஆகியவற்றின் வழி இயங்குபவராகவும் இருக்கின்றனர். இதற்குத் தனிப்பட்ட காரணங்

களை எவராலும் கண்டுபிடிக்க முடியவில்லை. மாசுலோ தன்னிறைவு அடைபவர்களிடம் இத்தகைய உயர்நிலை ஊக்குவிப்புகளைக் காண முடியும் என்று கூறினார். எல்லாத் தேவைகளும் நிறைவு பெற்றா லும் ஏதோ ஒரு குறைபாடு தம் வாழ்க்கையில் இருப்பதாக இந்த உயர்நிலை ஊக்குவிப்பினர் கருது கின்றனர். வாழ்க்கையின் உயர்வான பயன்மதிப்பு களைக் குறிக்கோள்களைக் கொண்டு இத்தகையவர் இயங்குகின்றனர். குறைபாட்டுத் தேவைகளின் குறிக்கோள்களை மாசுலோ குறைவு மதிப்புகள் (D. Values) என்றும், புறத்தேவைகளின் குறிக் கோள்களை நடத்தை மதிப்புகள் (B. Values) என் றும் குறிப்பிட்டார். குறைவு மதிப்புகள் நடத்தை யில் தேக்கத்தை ஏற்படுத்துகின்றன. நடத்தை மதிப்புகள் நடத்தையில் முன்னியக்கத்தைத் தூண்டுகின்றன. நடத்தை மதிப்புகள் மனிதன் தன் வாழ்க்கையின் முழுமையான பொருளை உணர்ந்து கொள்ள உதவுகின்றன.

தன்னிறைவுத் தேவையிருப்பவர்கள், தம் வாழ்க் கையில் ஒரு குறிப்பிட்ட உயர் நோக்கம் இருப்பதாக எண்ணி அத்தகைய நோக்கத்தின் அறைகூவலை எதிர்பார்த்திருக்கின்றனர். இத்தகைய நோக்கம் இவர்களின் தொழில் அல்லது பணியைப் பற்றியதாக இருக்கலாம். அறிவியல் ஆராய்ச்சியாளர் தாம் குறிப்பிட்ட ஏதேனும் ஓர் உண்மையை அல்லது பொருளைக் கண்டு பிடிக்க வேண்டும் என்னும் ஆர் வத்தினால் உந்தப்பட்டு வாழ்நாள் முழுவதும் அதற் காகவே செலவிடுகிறார். வேறுசிலர் வாழ்க்கையில் ஒழுங்கமைவு அழகியலமைவு ஆகியவற்றைப் பெரி தும் போற்றி மதிக்கிறார்கள். அவற்றிற்காகவே தம் வாழ்நாளைச் செலவிடுகிறார்கள். தாய் தன் குழந் தையின் மீது காட்டும் பரிவும் இத்தகையதே. இப் பரிவு பயன் கருதாதது. வாழ்க்கையின் இயல்புடன் இணைந்துவிட்ட ஓர் இயங்கு முறையாக இத்தகைய உயர்நிலைத் தேவைகள் இருக்கின்றன.

மாசுலோ குறிப்பிட்ட தேவை அடுக்கில் (Need Hierarchy) உடல்சார் தேவைகள் அடிப்படைத் தேவைகளாக அமைந்திருக்கின்றன. சில நேரங்களில் மனிதர்கள் தம் உடல்சார் தேவைகளைப் புறக் கணித்து விட்டுச் சமூக நலனுக்காகவோ, குடும்ப நலனுக்காகவோ, நாட்டு நலனுக்காகவோ உணவு உயிர் ஆகியவைகளைத் தியாகம் செய்கின்றனர். உயர் மட்டத் தேவைகள் நிறைவு பெறுதலினால் கிடைக்கும் மன மகிழ்வு உடல்சார் தேவைகளைப் புறக்கணிக்கத் தூண்டுகிறது. பெரும்பாலானவர் களுக்குத் தம் உடல்சார் தேவைகள் நிறைவு பெறின் காப்புத்தேவைகள் எழுகின்றன. வாழ்க்கையில் நிலையான வருமானம், நல்ல உறுதியான இருப் பிடம், பகைவர்களிடமிருந்து பாதுகாப்பு ஆகியவை காப்புத் தேவைகளாகும். மக்கள் பெரும்பாலும் புதிய பாதைகளை வகுப்பதிலும் புதிய முயற்சிகளை மேற் கொள்வதிலும் தயக்கம் அடைவது காப்புணர்வின் மையைப் பற்றிய அச்சம் அவர்களின் மனத்தில் தோன்றுவதால்தான் என்று மாசுலோ கூறுகிறார். அன்புத் தேவைகளும் சார்புத் தேவைகளும் முன் குறிப்பிட்ட இருவகைத் தேவைகள் நிறைவுபெறின் ஏற்படுகின்றன. நகரப்புறங்களில் வாழ்பவர் ஒரு வரையொருவர் அதிகமாகத் தெரிந்து கொள்ளாமல் ஒதுங்கியே வாழ்கின்றனர். இவர்களுக்குத் தனிமை யுணர்வு ஏற்படுகிறது. அன்புத்தேவை என்பது இளம்பருவத்தினர் எதிர்பாலினத்தவருடன் கொள் ளும் உறவுகளையொட்டியதாகும். இத்தேவைகள் பாடல்களின் வழியிலும், இசை நாடகங்களின் வழி யிலும் வெளிப்படுத்தப்படுகின்றன. மதிப்புத் தேவை களைத் தன்மதிப்பு, தன்னலம், சுயமரியாதை போன்ற தேவைகள் என்றும் மற்றவர்கள் நமக்குக் கொடுக்கும் ஏற்றநிலை, புகழ், பெருமை போன்ற தேவைகள் என்றும் இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். இத்தகைய தேவைகள் மற்ற மூன்று அடிப்படைத் தேவைகள் நிறைவு பெற்ற பின்னரே தோன்றும் என்று மாசுலோ கூறுகிறார். தன்னிறைவுத் தேவை கள் தனிமனிதன் தன் திறமைகளை முழுமையாக வெளிப்படுத்தி அவற்றினால் அவனும் மற்றவர்களும் பயன்பெற்றுள்ளனர் என்ற உணர்வினை அடைய விழையும் விருப்பத்தைக் குறிக்கும். பல்வேறு தொழில் களிலும் பணிகளிலும் இருந்து ஓய்வு பெற்றவர்கள் பெரும்பாலும் தாம் செய்து வந்த தொழிலை வாழ்நாள் முழுவதும் தொடர்ந்து செய்ய விருப்பம் உள்ளவர்களாகக் காணப்படுகிறார்கள். தன்னிறைவு அடைபவர்கள் முழுமையான சுதந்திரத்தை விரும்பு கிறார்கள். இவர்கள் புரட்சிக்காரர்களாகவோ அரசுக் கட்டுப்பாடுகளை எதிர்ப்பவராகவோ இருப் பதில்லை. தன்னிறைவுத் தேவைகளுக்கும் அப்பால் எல்லை கடந்த தேவைகள் (Trancendence Needs) உள்ளன. இத்தேவையுள்ளவர்கள் தம் வாழ்க்கையின் பயன் மக்களுக்காக உழைப்பதே ஆகும் என்ற உணர் வினை உடையவராக இருக்கிறார்கள். நல்ல பதவி யில் இருப்பவர் ஒருவர் நாட்டின் விடுதலைக்காகப் பாடுபட எண்ணித் தம் பதவியைத் துறத்தலும் நல்ல பணியில் அமர்ந்திருப்பவர் நாடுகளிடையே அமை தியை உண்டாக்குவதற்காகத் தன் பணியைத் துறத் தலும் எல்லை கடந்த தேவையைக் குறிக்கின்றன. அட்டவணை 2-இல் மாசுலோவின் தேவை அடுக்கு விளக்கப்பட்டுள்ளது.

மேற்குறிப்பிட்ட தேவைகளைத் தவிர அழகுணர்

வுத் தேவைகளும் பலரிடம் காணப்படுகின்றன. எப்பொருளையும் அழகுணர்ச்சியுடன் காண்பது, ஒழுங்கமைவில் விருப்பம், முழுமை காணல் ஆகியவை அழகுணர்வுத் தேவையினுள் அடங்கும்.

தேவை அடுக்கில் காணப்படும் தேவைகள் நிறைவு பெறாமல் இருந்தாலோ அளவுக்கு அதிகமாகக் கிடைத்தாலோ மனிதன் பிறழ்வு ஆளுமையை அடைகிறான் என்று மாசுலோ கருதினார். அளவுக்கு மீறிய உணவு நோய்க்குக் காரணமாகும். அளவுக்கு மீறிய பால் நடத்தை பால்வினை நோய்களுக்கும், குற்ற உணர்வுக்கும் காரணமாகிறது. ஆதலின் அடிப்படைத் தேவைகளுக்கு ஓர் அளவும் கட்டுப்பாடும் இருப்பின் அடுத்த தேவைகளை நோக்கி மனிதன் நடைபோடுகிறான் என்று மாசுலோ கூறினார். காப்புத் தேவையும் இவ்வாறே அளவுக்குக் குறைவாக இருப்பின் குழந்தைகளிடம் காப்புணர்வின்மை உணர்வு காரணமாக எழும் ஆளுமைக் கோளாறுகளை ஏற்படுத்துகின்றன. அதேபோல் அளவுக்கு மீறிய கட்டுப்பாடுகளும் குழந்தையின் ஆளுமையைப் பாதிக்கின்றன. அன்புத் தேவைகளைப் புறக்கணித்தலே பலவேறு உளக்கோளாறுகளுக்குக் காரணமாக அமைகிறது. அன்புத் தேவை ஒருவனுடைய வாழ்க்கையின் எப்பகுதியில் புறக்கணிக்கப்படுகின்றதுவோ அப்பகுதியையொட்டியே உளக்கோளாறுகள் ஏற்படுகின்றன. ஒருவருடைய முதுமையில் அன்புத் தேவை புறக்கணிக்கப்படின் அவர் உலகினின்று ஒதுக்கப்பட்டவராக உணர்கின்றார். ஏனெனில், முதுமை அடையும் பொழுது மனிதர்கள் தம் வாழ்க்கையில் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தவர்களை விட்டுப் பிரிந்தோ, அத்தகையவர்கள் மரணமடைந்து விட்டதனால் தனிமைப்பட்டோ விடுகின்றனர். குழந்தைப் பருவத்தில் தாயன்பும் பாசமும் கிடைக்காவிடில் அவர்களின் ஆளுமைச் சமநிலை பாதிக்கப்படுகிறது. மனச்சாட்சி, தன்னுணர்வு தன்முனைப்பு ஆகியவற்றின் வளர்ச்சியில் ஒன்றுதல், பரிவு, ஒத்துணர்வு, குற்றஉணர்வு, அவமானம், போன்ற உணர்வுகள் பெரும்பங்கு கொள்கின்றன. ஒருசிலர் மேற்கூறப்பட்ட உணர்வுகள் சற்றும் இன்றி நடந்துகொள்கின்றனர். இவர்கள் உளப்பிறழ்வு ஆளுமையினராகவோ உணர்வுகள் அற்ற கடின உளம் படைத்த வணிகராகவோ மற்றவர்களை இரக்கமின்றி அழிக்கும் அரசியல்வாதிகளாவோ இருக்கின்றனர். இதற்குக்காரணம் அன்புத் தேவை இவர்களுக்கு உரிய காலத்தில் கிடைக்கப் பெறாமையே ஆகும் என்று மாசுலோ கருதினார். இளங்குழவிப் பருவத்தில் ஏற்படும் அன்புத் தேவை நிறைவின்மை குழந்தையின் வாழ்நாள் முழுவதும் அதனைப் பாதிக்கிறது. இத்தகையவர்கள் வளர்ச்சியடைந்தபின் தம் முழுத் திறமைகளையும் பயன்படுத்த இயலாதவர்களாகி விடுகின்றனர். அறநெறிக் கருத்துகளும் மனச்சாட்சியும் இத்தகையவர்களிடம் உருத் திரிபடைந்து விடுகின்றன. இத்தகையவர்களிடம் இனம்புரியாத மன உளைச்சல், உள இறுக்கம், பதற்றநிலை போன்ற இயல்புகள் அன்பிலாமையின் எதிரொலிப்புகளாகக் காணப்படுகின்றன. தாம் எதிர்பார்க்கும் மதிப்பும் மரியாதையும் வாழ்க்கையில் பலருக்குக் கிட்டுவதில்லை. இதுவே, அவர்களின் உளச்சமநிலையைப் பாதிக்கிறது. இதனால், மனக்குலைவுகளும் 'நான் எதற்கும் பயனற்றவன்' என்ற உணர்வும் அவர்களிடம் ஏற்படுகின்றன. மற்றவர்களால் இழிவு, குற்ற உணர்வு ஆகியவற்றிற்கு ஆளாக்கப்பட்டவர்கள் தாழ்வு மனப்பான்மையை வளர்த்துக் கொள்கின்றனர்.

தேவையுணர்வு மனிதனுக்கு உடல்நிலையிலும் மாறுதல்களை ஏற்படுத்துகிறது. சில தேவைகள் மனிதனால் உணரப்படாமலே அவனிடம் உயர்நிலைப் பிறழ்வு நிலைகளைத் (Metapathologies) தோற்றுவிக்கின்றன. ஒருவனுக்கு உயிர்ச் சத்து சி இல்லை என்ற உணர்வு ஏற்படாமலே இருக்கலாம். ஆனால் அவனுக்கு அதனால் உண்டாகும் இசுகர்வி (Scurvy) போன்ற நோய்கள் ஏற்படுகின்றன.

சமநிலையான சூழமைவில் வளர்ந்தவர்கள் தன்னிறைவுத் தேவைகளை உணருகின்றனர். தேவை அடுக்குகளை முறையாக அளவுடன் அடைந்தவர்கள் ஆளுமைச் சமநிலை அடைகிறார்கள். நல்ல சூழமைவு, தேவைகளின் நிறைவு, சிறந்த உடல்நலம் இவை அடையப் பெற்றவர்கள் வாழ்க்கையில் தன்னிறைவு அடைகின்றனர். மாசுலோ தன்னிறைவு அமைந்தவர்களின் வாழ்க்கையை ஆராய்ந்து பல உண்மைகளை வெளியிட்டார். உயர்நிலைத் தேவைகள் நிறைவு பெறாமையால் ஏற்படும் மனக்குலைவுகளின் காரணமாக எழும் கோளாறுகள் உயர்நிலைப் பிறழ்வு (Metapathology) எனப்படும்.

சிலர் தம்மைச் சுற்றிலும் நிகழும் அநீதிகளையும் தவறுகளையும் எவ்வித மனவெழுச்சியுமின்றிப் பார்த்துக் கொண்டிருக்கின்றனர். இவர்கள் புதிய கருத்துகளையும் செயல்களையும் வரவேற்பதில்லை. உலகில் எந்த நிகழ்ச்சியையும் எந்த மனிதனையும் பொருளையும் ஆழ்ந்து உணர்ந்து அவற்றின் மீது ஈடுபாடு கொள்ள இயலாமையையும், அறநெறிமுறைகளுக்கும் ஒழுக்கத்திற்கும் எவ்வித மதிப்பு அளிக்க முடியாத நிலைமையையும் தனிமனிதனின் திறமைகளை உணரமுடியாத நிலைமையையும் உயர்நிலைப் பிறழ்வு (Metapathology) என்று கூறலாம்.

தன்னிறைவுத் தேவை நிறைவு பெற்ற பல்வேறு

மனிதர்களை மாசுலோ ஆராய்ந்து பின்வரும் இயல்புகள் அவர்களிடம் இருப்பதாக அறிந்தார்.

1. மெய்ந்நிலை பற்றிய தெளிவான புலன் காட்சி, மெய்ந்நிலையுடன் ஒன்றி இயங்கும் இயல்பு, அறியாத ஒன்றைப் பற்றி ஆராய்ந்து அறிந்து கொள்ளும் ஆராய்வூக்கம்.

2. தன்னையும், மற்றவர்களின் இயல்பு நிலையையும் ஏற்றுக் கொள்ளல்.

3. எளிமை, இயல்பு நிலை, தம் பயன்மதிப்புகளைத் தாமே தேர்ந்தெடுத்தல், தனித்தன்மை வாய்ந்த உள வாழ்க்கை.

4. இலக்குசார் முடிவுகள் மனவெழுச்சிவயமின்றி எடுக்கப்படல். பணிவுடன் தாமும் ஒன்றுபடல்.

5. எதிலும் மிக்கப் பற்றிலாமை. தனிமை நாடுதல். (இவர்கள் தம் சிந்தனைகளைத் திசை திருப்பவும் மதிப்புகளைச்சீர்தூக்கவும் தனிமை நாடுகின்றனர்).

6. உளத்தில் முடிவெடுத்தல், தம்நடத்தை பற்றி முடிவெடுத்தல், தன்னிச்சையாக இயங்குதல்.

7. சுதந்திரம் விரும்புதல், சூழமைவு நிலைமைகளினின்று தனித்து நின்று இயங்குதல்.

8. எதனையும் வியந்து போற்றும் இயல்பு, மிகச் சாதாரண நிகழ்ச்சிகளிலும் கூட மகிழ்வெய்தல்.

9. மிகைநிலை அனுபவங்கள் தன்னை மறந்து, சூழ்நிலையை மறந்து எல்லை கடந்த தம் சிந்தனையில் ஆழ்ந்து, வியப்பில் மூழ்கி மன மகிழ்ச்சியில் திளைத்தல்.

10. எல்லோருடனும் உடன்பிறப்புத் தன்மை உணர்வு (Gemeinschaftsgefuhl) அன்பு, பரிவு, பாசம் ஆகியவற்றை மற்றவர்களிடம் தாராளமாகக் காட்டுதல்.

11. மிகச்சில நண்பர்களைப் பெற்றிருத்தல், அந்நட்பு வலுவுடையதாயிருத்தல்.

12. மற்றவர்களுடன் உரிமைகளைப் பகிர்ந்து கொள்ளும் பண்பு, தன்னிறைவுவடைந்தவர்கள் எல்லாவகை மக்களையும் ஏற்றல்.

13. தம் வாழ்க்கையின் குறிக்கோள்களைப் பற்றிய தெளிவான அறிவினை உடையராயிருத்தல்.

14. புறவயமான தீங்கற்ற நகைச்சுவையுணர்வு. தம்முடைய சொந்த முரண்பாடுகளையும் குறைகளையும் கண்டு தாமே நகைக்கும் இயல்புடைமை.

15. படைப்பாற்றலும் புதுமை மனப்பாங்கும் கொண்டிருத்தல்.

இத்தகைய இயல்புகளைக் கொண்டிருக்கும் தன்னிறைவாளர்கள் பெரும்பாலும் சமூகத்தில் மற்றவர்களுடன் பொருத்தப்பாடு அடைவதில்லை. மாசுலோவின் கருத்துப்படி சிறந்த இயல்புகளைக் கொண்டவர்கள் பண்பாட்டுத் தரங்களுக்கு அப்பால் தன்னம்பிக்கையுடனும் சுதந்திர மனப்பான்மையுடனும் வாழ்கிறார்கள். இவர்கள் சமூக ஏற்புத் தரங்கள், பண்பாட்டுத் தரங்கள் என்னும் கூரிய சுத்திகளால் மழுங்கவைக்கப்படுவதில்லை. தன்னிறைவாளர்கள் முரண்பாடு கடந்த நிலையினராகவும் (Transcendence of Dichotomies) காணப்படுகின்றனர். அதாவது தன்னலம்,பொதுநலம், கருமித்தனம், தாராள மனப்பான்மை, பகுத்தறிவு வயம், மனவெழுச்சி வயம், குழந்தைத்தனம், வயதுவந்தோர் நிலை போன்ற நேர் எதிரிடையான பண்புகள் இவர்களிடம் ஒருங்கிணைவு பெற்றுக் காணப்படுகின்றது. பெரும்பாலான மக்கள் இந்த நேர் எதிரிடைப் பண்புகளின்ஏதேனும் ஒரு விளிம்பு நிலையில் இருக்கின்றனர். இத்தகைய இரு விளிம்பு நிலைகளுக்கு இடையில் இருக்கும் இடைவெளி மிகுதியாக இருப்பின் அத்தகையவர்கள் உளநோயாளிகளாக ஆவதற்கு வாய்ப்புகள் அதிகம் உள்ளன என்று மாசுலோ கருதுகிறார். எடுத்துக்காட்டாக, வேலை-விளையாட்டு என்னும் இரு வேறு விளிம்பு நிலைகளில் இல்லாதவர்கள் தம் வேலை அல்லது தொழிலிலேயே விளையாட்டின் மூலம் கிடைக்கும் மன மகிழ்வை எய்துகிறார்கள்.

மாசுலோவின் கருத்துகள் மேலாண்மை உளவியலாரால் பெருமளவில் ஆராய்ச்சி செய்யக் கூடியனவாகக் கருதப்படுகின்றன. மேலாண்மை உளவியலில் மாசுலோவின் தேவை அடுக்கு, உயர்நிலைத் தேவை, தன்னிறைவு போன்ற கருத்துகள் இடம் பெற்றுள்ளன.

அட்டவணை 1

குறைபாட்டுத் தேவைகளும் வளர்ச்சித்தேவைகளும் ஆளுமைக் கோளாறுகளைப் பாதிக்கும் முறை (மாசுலோ)

| குறைபாட்டுத் தேவைகள் | | | வளர்ச்சித் தேவைகள் | | |
|---|---|---|---|---|---|
| | உளப்பிறழ்வு | ஆளுமைக் கோளாறுகள் | இயல்பு நிலை | உயர்நிலை பிறழ்வு | நிறைகாணல் |
| உளப்பிணி உளச்சிதைவு | உளக்கோளாறு பதற்றம், உளக் | கருத்துத் திரிபு, ஆளுமை, | உளப்பெருாத்தப் பாடு, சமூகவியல், | சலிப்பு, மெய்வழிச் சாராமை, குறை | படைப்பாற்றல், இயல்புவயம், |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நோய், கருத்துத் திரிபு நோய், உளக் கிளர்ச்சிச் சோர்வுப்பிணி முதுமைச் சோர்வுப்பிணி | கூறு மாற்றம், கிலி, உளப் பிடிப்புக் கட்டாயக் கோளாறு, சோர்வுக் கோளாறு, கற்பனை நோய்க் கோளாறு. | உளச்சிதைவு ஆளுமை உளத்தடு மாற்றம், சமூக எதிர்ப்பு, பணிவெதிர்ப்பு. | மனவெழுச்சிச் சமநிலை, மெய்ந் நிலை சார் தற் கருத்து, உடன் பாடான தன் உரு வகம், பிறருக்கு மதிப்புக் கொடுக் கும் இயல்பு, உளநிறைவு. | யறிவு, அயற் படுத்தல், பொரு ளற்ற செயல், குறைவான குறிக் கோள்கள், படைப்புணர்விலா வாழ்க்கை. | ஆராய்வூக்கம். உள்ளார்ந்த திறன்களைப் பயன்படுத்தல், நடத்தைப் பயன் மதிப்புகளைச் செயற்படுத்தல், உளநிறைவு அனுபவங்கள், பணியில்ஈடுபாடு, உடன்பிறப் புணர்வு. |

அட்டவணை 2

தேவை அடுக்கமைவும் ஆளுமை இயங்குமுறை நிலைகளும் (மாசுலோ)

| தேவை அடுக்கமைவு | குறைபாட்டு நிலை | நிறைவுநிலை | எடுத்துக்காட்டு |
|---|---|---|---|
| 1. உடல்சார் தேவைகள் | பசி, தாகம், பாலஉந்து, இறுக்க நிலை, களைப்பு, உடல்நோய், வசிக்கத் தகுந்த இடமின்மை. | மனமகிழ்வு, இறுக்க நிலை நீங்குதல், உடல்நலம். | நல்ல உணவு உண்டபின் தோன்றும் மனநிறைவு |
| 2. காப்புத் தேவைகள் | காப்புணர்வின்மை, ஏக்கம், இழப்பு உணர்வு, அச்சம், உளப்பிடிப்பு, உளக் கட்டாயம். | காப்புணர்வு, நலம், சமநிலை, அமைதி. | நிரந்தரமான முழுநேர வேலையில் அமர்ந்து காப்புணர்வு அடைதல். |
| 3. அன்புத் தேவைகள் | தன்னைப்பற்றிய மிகை யான உணர்வு, மற்றவரால் விரும்பப்படாமை, தான் 'உதவாக்கரை' என்ற உணர்வு, வெறுமை, தனிமை நிறைவின்மை, ஒதுக்கப்படுதல் | மனவெழுச்சி வெளியீடு, நிறை உணர்வு, நல உணர்வு, தன் வலிமை உணர்தல். | அன்பின் காரணமாக மற்றவர்களால் முழுமை யாக ஏற்றுக்கொள்ளப் படுதல். |
| 4. மதிப்புத் தேவைகள் | தான் திறமையற்றவன் என்ற உணர்வு, எதிர்மறை உணர்வு, தாழ்வுமனப் பான்மை. | நம்பிக்கை, செயல் திறமை, தன் மதிப்பு. | ஏதேனும் ஒருசெயலைத் திறம்படச் செய்து முடித்ததும் அதற்காகப் பாராட்டப்படுதலும் |
| 5. தன்னிறைவுத் தேவைகள் | அந்நிய உணர்வு, உயர் நிலைப்பிறழ்வுகள், வாழ்க் கையில் பொருளற்ற நிலை, சலிப்பு, வேறுபாட்டற்ற வாழ்க்கை முறை, குறை வான செயல்கள். | ஆராய்வூக்கம், நிறை அனு பவம், நடத்தை மதிப்புகள் உள்ளார்ந்த திறன்களைப் பயன்படுத்தல், படைப் பாற்றல் மிகுந்த வாழ்க்கை. | நிகரற்ற அக அனுபவம் அடைதல். |

அட்டவணை 3

தேவை அடுக்கமைவும் தேவைகள் மனநிறைவைக் கொடுக்கக் கூடிய தொழில்களும் (மாசுலோ)

| | தேவைகள் | தொழில்சார் மனநிறைவுகள் |
|---|---|---|
| 6. | உயர்நிலைத் தேவைகள் | உடன் உழைப்பவருக்கு உதவி செய்தல், தொழிலில் முழுமூச்சுடன் பயன் கருதாது தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்ளுதல், நிறுவனம் தன்னிடம் எதிர்பார்க்கும் பணித்திறன் அளவுக்கு மேல் மிகையான பணித்திறன் காட்டுதல். |
| 5. | தன்னிறைவுத் தேவைகள் | படைப்பாற்றல்சார் நடத்தை, திறமைகளைப் பயன்படுத்தல், நாட்டங்களின் வழி இயங்குதல், ஆக்கவழிச் செயல்கள். |
| 4. | மதிப்புத் தேவைகள் | சுதந்திரமும் பொறுப்பும் மிக்க பணிகளைச் செய்தல், பணியின் வழி மதிப்புப் பெறுதல், தன்னுடன் பணி செய்வோரினால் போற்றப்படுதல் |
| 3. | அன்புத் தேவைகள் | உளத்திற்கு உகந்த குழுவினருடன் பணிசெய்தல், தன்னுடன் வேலை செய்பவர்களாலும் மேலதிகாரிகளாலும் விரும்பப்படுதல். |
| 2. | காப்புத் தேவை | குடியிருக்க வீட்டை வாடகைக்கு எடுத்தல்,வீடு வாங்குதல், நிறுவனத்தில் கிடைக்கும் ஊதியம்சார் பயன்கள், ஓய்வு ஊதியம், சேமிப்பு, உடை, சொத்து, மனைத்துணைப் பொருள்கள் ஆகியவற்றை வாங்குதல். |
| 1. | உடல்சார் தேவைகள் | உணவு, தண்ணீர், உயிர் வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களைப் பெறுதல். |

சமூகத் தன்முனைப்புக் கோட்பாடு: இது மனிதனின் ஆளுமை வளர்ச்சியைச் சமூகத்தின் முனைப்புக் காரணிகளின் அடிப்படையில் விளக்குகிறது. இக்கோட்பாட்டினர் சமூகப் பண்பாட்டுக் காரணிகளை ஆய்வதில் ஈடுபாடு கொண்டனர். எரிக்கு எரிக்சன் (Erik Erikson), ஆல்பிரெடு ஆட்லர் (Alfred Adler), காரன் ஆர்னை(Karen Horney) ஆகிய மூவரும் சமூகத் தன்முனைப்புக் கோட்பாட்டினர்களுள் (Ego-Social Model) முதன்மையானவர்கள். உள்ளம் பற்றிப் பிராய்டு கூறிய அடிப்படைக் கருத்துக்களை எரிக்சன் ஏற்றுக் கொண்டார். உளவளர்ச்சியின் நிலைகள், பிராய்டு கூறியதைப் போல் பால் உந்து அடிப்படையில் அமைய வில்லை. அதற்கு மாறாக அவை உளச் சமூகக் காரணிகளின் அடிப்படையில் அமைகின்றன என்று எரிக்சன் கருதினார். வளர்ச்சி நிலைகளைக் கடந்து வரும்பொழுது தன்முனைப்பு, பல நெருக்கடி நிலைகளைச் சமாளிக்க வேண்டியிருக்கிறது. இந்நெருக்கடி நிலைகளைச் சமாளித்து வெற்றிகாண்பது தன்முனைப்புக்கு ஏற்படும் வெற்றி என்று எரிக்சன் கருதினார் வாழ்க்கை முறை அமைவதில் தன்முனைப்பின் பங்கு முதன்மையானது என்று பிராய்டு கருதினார். மனிதனின் சமூக ஈடுபாடு இயற்கையிலேயே அமைவதாகும். பிராய்டு கூறியதைப் போல் தற்காப்பு வழி முறைகளில் தன்முனைப்பு அமைவதில்லை என்று ஆட்லர் கருதினார். உண்மையான தன்னுணர்வினை ஒருவன் அடையாத காரணத்தினால் பிறழ்வு நடத்தை ஏற்படுகிறது. மனிதனின் சமூகத் தேவைகளும் சூழ்நிலைகளும் அவனுடைய ஆளுமையை உருவாக்குவதில் பெரும்பங்கு கொள்கின்றன. பண்பாட்டின் எதிர்பார்ப்புகளின் காரணமாகப் பல சிக்கல்களைத் தனிமனிதன் எதிர் நோக்க வேண்டியிருக்கிறது என்று ஆர்னை கருதினார். உளப்பகுப்புக்

கோட்பாட்டின் அடிப்படையில் நின்று, தன்முனைப்புப்பற்றிய கோட்பாடுகளைச் சமூகத்தின் முனைப்புக் கோட்பாட்டினர், சமூகக் காரணிகளுடன் ஒட்டி அமைத்தனர்.



எரிக்கு எரிக்சன்

**எரிக்கு எரிக்சன்:** இவர் தனிமனிதனுடைய தேவைகளுக்கும் சமூகத்தின் எதிர்பார்ப்புகளுக்கும் இடையே எழும் தொடர்பு, ஆளுமை வளர்ச்சியின் அடிப்படையாக அமையும் என்று கூறினார். இவர் தனி மனிதனின் சமூகவளர்ச்சி அவன் வாழ்நாள் முழுவதும் பரவி இருப்பதாகவும் அதனைத் தெளிவுபட்ட எட்டு வெவ்வேறு உளம்சார் சமூக நிலைகளாகப் (Psycho-Social Stages) பிரித்து அறியமுடியும் என்றும் தெரிவித்தார். வளர்ச்சியின் ஒவ்வொரு நிலையிலும் ஒரு நெருக்கடி எழும் என்றும், இந்த நெருக்கடி இருவேறுபட்ட இயல்புகளுக்கு இடையே நிகழும் போராட்டத்தைக் குறிக்கும் என்றும் குறிப்பிட்டுள்ளார். இப் போராட்டங்களைப் பின்வருமாறு விளக்கலாம்.

**முதல் நிலை:** இந்நிலையில் எழும் போராட்டம் நம்பிக்கைக்கும் நம்பிக்கையின்மைக்கும் இடையே நிகழ்வதாகும். இது இளங்குழவிப் பருவத்தில் நிகழ்கிறது. இளங்குழவியின் தேவைகளை அதனைச் சார்ந்தோர் தக்க தருணத்தில் நல்ல முறையில் நிறைவேற்றி வந்தால் குழந்தையிடம் நம்பிக்கை வளர்கிறது. தன்னுடைய தேவைகள் உற்ற நேரத்தில் கிடைக்கப் பெறாவிட்டால் குழந்தையிடம் நம்பிக்கையின்மை வளர்கிறது. இப்பண்பு குழந்தையின் ஆளுமையிலும் பங்கு பெறுகிறது.

**இரண்டாம் நிலை:** இந்நிலையில், மனப்பான்மைக்கும் சந்தேகம் அவமானம் ஆகியவற்றிற்குமிடையே போராட்டம் நிகழ்கிறது. இது குழந்தைப் பருவத்தில் நிகழ்கிறது. பெற்றோரின் ஏற்பு, அன்பு ஆகியவற்றை அடையும் குழந்தை, சுதந்திர மனப்பான்மையை வளர்த்துக் கொள்கிறது. தற்செயலாக நிகழும் நிகழ்ச்சிகளால் பெற்றோர்களின் நம்பிக்கையையும் அன்பையும் பெற முடியாத குழந்தை, அவமானத்தையும் சந்தேகத்தையும் வளர்த்துக் கொள்கிறது. இந்நிலைக்கு ஏற்ற சிறப்பியல்புகள் தற்கட்டுப்பாடு, மனஉறுதி, வீரம் ஆகியவை. ஏற்புடைய செயல்களையும் தவறான செயல்களையும் பிரித்தறியும் திறன் குழந்தைக்கு இந்நிலையில் ஏற்படுகிறது.

**மூன்றாம் நிலை:** இந்நிலையில் ஏற்படும் போராட்டம், ஊக்கத்திற்கும் குற்ற உணர்விற்கும் இடையே நிகழ்வதாகும். இந்நிலை குழந்தையின் விளையாட்டுப் பருவத்தில் நிகழ்வதாகும் (நான்கிலிருந்து ஐந்து வயது வரை). இதனை இளம் பள்ளிப் பருவம் என்றும் கூறலாம். இந்நிலையில் எரிக்கு எரிக்சன், பிராய்டு எடுத்துரைத்த ஈடிபசு எலக்ட்ரா சிக்கல்களை, ஆண் குழந்தைகளும் பெண் குழந்தைகளும் முறையே அனுபவிப்பதாகக் கூறுகிறார். ஆண் குழந்தை, தன் தாயின் கவனத்தைத் தன் தந்தையிடமிருந்து தன்னிடம் திருப்புவதற்காக மிகுந்த முயற்சி எடுத்துக் கொள்கிறது. இந்த முயற்சியில் குழந்தை மேம்பாட்டுளத்தின் கட்டளைகளுக்கு ஏற்ப நடந்து வெற்றி பெற்றால், ஊக்கம் உடையதாகிறது. பெண்குழந்தை இந்நிலையில் தன் தந்தையிடம் மிகுந்த அன்புடையதாகிறது. தந்தையின் கவனத்தைத் தாயிடமிருந்து தன் மீது திருப்புவதற்காக அது பல முயற்சிகளில் ஈடுபடுகிறது. இம்முயற்சிகளில் தன் மேம்பாட்டுளத்தின் கட்டுப்பாடுகளுக்கு ஏற்ப நடந்து வெற்றி பெற்றால், அது ஊக்கம் உடையதாகிறது. இம்முயற்சியில் வெற்றி பெறாவிடில் குழந்தையிடம் குற்ற உணர்வு வளர்கிறது. இந்நிலையின் சிறப்பியல்பு ஊக்கமாகும். இந்நிலையில் குழந்தையின் குறிப்பிடத்தக்க சாதனை, குடும்பத்தில் தன்னுடைய பங்கு என்ன என்பதை உணர்வதாகும்.

**நான்காம் நிலை:** இந்நிலையின் போராட்டம் விடாமுயற்சிக்கும் தாழ்வு மனப்பான்மைக்குமிடையே நிகழ்வதாகும். இந்நிலை குழந்தையின் பள்ளிப் பருவத்தைச் சேர்ந்ததாகும். குழந்தை தன் பெற்றோர் உலகத்தை விட்டுப் பள்ளியிலும் வேறிடங்களிலும் வெளியுலகத்தைக் காண்கிறது. சமூகத்தின் ஏற்பினையும் அங்கீகாரத்தையும் அடைவதில் குழந்தை வெற்றி பெற்றால் அது முயற்சி உடையதாகிறது. ஏற்பும் அங்கீகாரமும் குழந்தைக்குக் கிடைக்காவிட்டால் அது தாழ்மை உணர்வு அடைகிறது. இந்நிலையின்

சிறப்பியல்புகள் திறமையும் ஒழுங்கும் ஆகும். இந் நிலைக்கேற்ற சாதனை திறன்களைக் கற்றலாகும்.

ஐந்தாம் நிலை: இந்நிலையின் போராட்டம், ஒன்றுதலுக்கும் பங்குக் குழப்பத்திற்கும் இடையே நிகழ்வதாகும். இதனை ஒன்றுதல் நெருக்கடி (Identity Crisis) என்று எரிக்சன் குறிப்பிடுகிறார். இந் நிலை பள்ளிப் பருவக் குழந்தை ஊக்கநிலை அடையும்பொழுது தொடங்கி, இளமைப் பருவம் முழுவதும் நீடிக்கிறது. இளமைப் பருவத்தினர், தம் ஆர்வங்கள் சமூக அங்கீகாரம் அடைய வேண்டும் என்று விரும்புகின்றனர். இதில் வெற்றி பெற்றால் இளையோரிடம் ஒன்றுதல் வளர்கிறது. சமூகத்தின் ஒதுக்கலுக்கு ஆளாகாமல் இருப்பதற்காக இளையோர், பல கர்லப்பாணிகளிலும் (Fashion) சிறு குழுவமைப்புகளிலும் ஈடுபாடு கொள்கின்றனர்; இளைஞர் தலைவர்களுடன் தம்மை அடையாளப்படுத்திக் கொள்கின்றனர். தம்முயற்சியில் வெற்றி பெறாவிட்டால் அவர்கள் சமூகத்தில் கொள்ளும் பங்கு என்ன என்பது குறித்துக் குழப்பம் அடைகின்றனர். இந் நிலையின் சிறப்பியல்புகள் நம்பிக்கையும் ஈடுபாடும் ஆகும். இந்நிலையில் இளையோரின் சாதனை, வாழ்க்கையின் நோக்கத்தைத் தெரிந்து கொள்வதாகும்.

ஆறாம் நிலை: இந்நிலையின் போராட்டம், மன நெருக்கத்திற்கும் ஒதுக்கலுக்கும் இடையே நிகழ்வதாகும். இளமைப் பருவத்துப் போராட்டத்திற்குப்பின் வயது வந்தோர் பருவத்தின் முதல் நிலையில், தெளிவான சமூக இடையுறவுகளை அடைவதில் வெற்றி பெற்றால், தனிமனிதன் மன நெருக்கத்தினை உணர்கிறான். ஆனால், புதுமைக் காலத்துச் சமூக அழுத்தங்களின் விளைவாகத் தனி மனிதன் பெரும்பாலும் சமூக ஒதுக்கலுக்கு ஆளாகிறான். இந்நிலையின் சிறப்பியல்புகள், அன்பும் இணைத்தலுமாகும். இந்நிலையில் தனிமனிதனின் குறிப்பிடத்தக்க சாதனை, மற்றவர்களுடன் மன நிறைவு தரும் சமூகத் தொடர்புகள் கொள்ளுதலாகும்.

ஏழாம் நிலை: இது நடுத்தர வயதுப் பருவத்தைச் சேர்ந்த நிலையாகும். இந்நிலையின் போராட்டம் ஆக்கச் செயலுக்கும் தேக்கத்திற்கும் இடையே நிகழ்வதாகும். தனிமனிதன் தான் வாழும் வழியினை வகுக்கும் நிலையை அடிப்படையாகக் கொண்டது இந்நிலையாகும். தனக்குப் பின்வரும் தலைமுறையினருக்குப் பயனுள்ள வகையில் ஆக்கத்திற்கான செயல்களில் ஈடுபடும் தனிமனிதனின் வாழ்க்கை இப்பொழுது தன்னிறைவு அடைகிறது. இம்முயற்சியில் வெற்றி பெறாமல் தோற்றுவிடும் மனிதன் சோர்வு அடைகிறான். அவன் வாழ்க்கை தேக்கம் அடைவதை உணர்கிறான். இந்நிலையின் சிறப்பியல்புகள் ஆக்கமும் பாதுகாப்பும் ஆகும். இந்நிலையில் தனிமனிதனின் சாதனை, பண்பாட்டு வளர்ச்சிக்கு வழிவகுத்தலாகும்.

எட்டாம் நிலை: இது தனிமனிதனின் வாழ்க்கையின் இறுதிநிலையாகும். இது முதுமைப் பருவத்தில் நிகழ்கிறது. இந்நிலையின் போராட்டம் தன் முனைப்புச் சமநிலைக்கும் சோர்வுக்கும் இடையே நிகழ்கிறது. தன் வாழ்க்கையின் வெற்றி தோல்விகளுக்கு இடையில் தனிமனிதன் தானும் மனித வரலாற்றில் தன் பங்கினைச் செய்து முடித்துவிட்டதாகக் கொள்ளும் உணர்வு, அவனுக்குத் தன் முனைப்புச் சம நிலையை ஏற்படுத்துகிறது. ஆனால் வாழ்க்கையில் ஏற்பட்ட வெற்றி தோல்விகள் யாவற்றிற்கும் தானே காரணம் என்ற கட்டாய உணர்வும், வாழ்க்கையை இழந்துவிட்டதாக எண்ணும் சோர்வு மனப்பான்மையும், வாழ்க்கைத் தோல்வியினை அவனுக்கு உணர்த்துகின்றன. இந்நிலையின் சிறப்பியல்பு மெய்ந் நிலை அடைதல் ஆகும். இந்நிலையில் தனிமனிதனின் சாதனை, வாழ்க்கையின் முழுமையையும் முடிவையும் ஏற்பதாகும்.

எரிக்கு எரிக்சனுடைய கருத்துகள் குழந்தை உளவியல் அறிஞர்களால் மிகுந்த அளவில் வரவேற்கப்பட்டன. குழந்தையின் ஒவ்வொரு வளர்ச்சி நிலையிலும் ஏற்படக்கூடிய இயல்புநிலைத் தன்முனைப்பு வளர்ச்சி, இயல்பு பிறழ்ந்த தன்முனைப்பு வளர்ச்சி ஆகியவற்றைப் பற்றியும், அவை ஆளுமை வளர்ச்சிக்கு எவ்வாறு அடிகோலுகின்றன என்பதைப் பற்றியும், எரிக்சன் விரிவாக எடுத்துரைத்தார்.

ஆளுமைக் கூறுகளைப் பற்றிய எரிக்சனது அடுக்கமைவு, அறிவியல் உலகத்தினர் அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்படுவதாகும். எரிக்சன் எடுத்துரைத்த குழந்தைப் பருவ நிலைகள், பிராய்டின் வளர்ச்சியின் உளம் சார் பால் நிலைகளை (Psycho Sexual of Development) ஒட்டியதாக இருக்கின்றன. தனி மனிதனது ஆளுமை, சமூகத்துடன் ஒட்டி அமைகிறது என்பதை எரிக்சன் வலியுறுத்தியுள்ளார். வாழ்க்கையின் பல நிலைகளிலும் தனிமனிதன் புரியக் கூடிய சாதனைகளையும் அவனிடம் காணப்பட வேண்டிய சிறப்பியல்புகளையும் எடுத்துரைத்த எரிக்சன், அவ்வியல்புகளை அடைதல், அச்சாதனைகளில் வெற்றி பெறுதல் ஆகியவற்றிற்குரிய வழி முறைகளை எடுத்துரைக்கவில்லை.

ஆ. ஆட்லர் ஆல்பிரெடு (கி.பி.1870-1937): தனி மனிதஉளவியல் (Individual Psychology) கோட்பாட்டைத் தோற்றுவித்த உளவியல் அறிஞர் ஆவார்.

இவர் பிராய்டின் உளப்பகுப்புக் கோட்பாட்டிலிருந்து வேறுபட்டு, ஆழ்ந்த சிந்தனையைத் தூண்டும் உளவியல் கருத்துகளை எடுத்துரைத்தார். தனி மனிதனின் உள் ஊக்குத் திறனாகச் சமூக உந்துகளே விளங்குகின்றன என்றும், அவன் தன் வாழ்க்கைப் போராட்டங்களுக்குத் தன்னிறைவில் மட்டுமே தீர்வு காண முடியும் என்றும் எடுத்துரைத்தார்.



ஆல்பிரெடு ஆட்லர்

வியன்னா நகரத்தில் கி.பி. 1870-ஆம் ஆண்டு பிறந்த ஆட்லர் 1935-ஆம் ஆண்டு வரையில் அங்கு வாழ்ந்து, அதற்குப் பின்னர்ச் செருமானிய நாசிப் படையினருக்கு அஞ்சி, அமெரிக்க ஐக்கிய நாடுகளில் குடியேறினார். இவர் 1937-ஆம் ஆண்டு இசுகாட்டுலாந்தில் இறந்தார். இவர் தொடக்கத்தில் கண் மருத்துவராகப் பயிற்சி பெற்றிருந்த போதிலும் பின்னர் உளவழி மருத்துவத்தில் ஈடுபாடு கொண்டார். பிராய்டின் கொள்கைகளைக் கற்று, ஆட்லர் உளப்பகுப்புக் கோட்பாட்டினரானார். உளவியல் சிந்தனைகளில் ஆட்லரின் ஈடுபாடு கண்டு பிராய்டு, இவரை உளப் பகுப்புக் கோட்பாட்டுக் கழகத்தின் தலைவராக அமர்த்தினார். ஆனால், சில காலத்தில் ஆட்லரின் கருத்துகள் உளப் பகுப்புக் கருத்துகளை விட்டு முழுமையாக விலகி நின்றதைக் கண்ட பிராய்டு, 1911-ஆம் ஆண்டு உளப்பகுப்புக் கோட்பாட்டுக் கழகத்தின் கூட்டத்தில் ஆட்லரைத் தம் உளவியல் கருத்துகளைத் தெளிவுற எடுத்து வைக்குமாறு கோரினார். ஆட்லரின் உரையிலும் அதற்குப் பின் கூட்டத்தினரிடையே நிகழ்ந்த கலந்துரையாடலிலும் ஆட்லரின் கருத்துகள், பிராய்டின் கருத்துகளினின்று முழுமையாக வேறுபட்டிருந்தது தெளிவாயிற்று. அக் கலந்துரையாடலின் நடுவில் ஆட்லர் கழகத்தை விட்டு வெளியேறினார். இவருடன் வேறு சில கழக உறுப்பினர்களும் வெளியேறினர். பின்னர் ஆட்லர் தனியாள் உளவியல் கோட்பாட்டினை விரிவாக உருவாக்கினார்.

ஆட்லர் குழந்தைகளின் உளநலத்தில் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தார். வியன்னா நகரத்தில் குழந்தைகள் வழிகாட்டு அமைப்பு ஒன்றை ஏற்படுத்தினார். ஆட்லர் செய்த ஆய்வுக் கருத்துகளும் கோட்பாடுகளும் அவருக்கு உளவியல் துறையில் ஒரு தனி இடத்தைத் தேடிக் கொடுத்தன. இந்த ஆய்வுகள் பின்வரும் பொருள்களைப் பற்றி அமைந்திருந்தன.

தனிமனிதனின் தன்தாழ்வுச் சிக்கல்களை எதிர்த்து வாழ்க்கையில் முன்னேறுகிறான். மக்கள் பாதுகாப்பினைக் கருதியே காலப்பாணியைப் பின்பற்றுகின்றனர். பெண்களுக்குச் சமூகத்திலும் அரசியலிலும் சம உரிமை வழங்கப்பட வேண்டும். வாழ்க்கையில் உயர்வு நிலை எய்த இயல்பு நிலையிலும் பிறழ்நிலையிலும் மக்கள் பாடுபடுதல் வேண்டும்.

மக்கள் தம் வாழ்க்கையில் உயர்நிலையை அடைவதற்காக வாழ்நாள் முழுவதும் பாடுபடுகின்றனர். குழந்தைப் பருவத்திலிருந்தே போட்டி மனப்பான்மையும் மற்றவர்களைவிடச் சிறந்து விளங்க வேண்டும் என்ற ஆர்வமும் எல்லோரிடமும் காணப்படுகின்றன.

சமூகத்தில் தனிமனிதனின் வாழ்க்கை, போராட்டங்கள் நிறைந்ததாக இருக்கிறது. மக்கள் எப்பொழுதும் பாதுகாப்பின்மையை எதிர்த்து இயங்கி வருகின்றனர். மற்றவர்கள் மீது அதிகாரம் செய்வதன் பொருட்டும் பொருள் ஈட்டுகின்றனர்; பாதுகாப்பின்மை உணர்வு காரணமாக ஆக்கிரமிப்புத் தன்மையுடன் இயங்குகின்றனர்; மற்றவர்களைக் காட்டிலும் பொருளாதாரத்தில் மேம்பட்டு இருக்க வேண்டும் என்றும் விழைகின்றனர். சமூகத்தில் பெண்களுக்கு ஆண்களுடன் சமமான ஏற்புத்தரம் கொடுக்கப்படவில்லை. பிறப்பில் பெண்கள் ஆண்களைப் போல் சமமான திறமையுடன் விளங்குகிறார்கள். பெண்கள் குறையறிவு உள்ளவர்கள் என்று பிராய்டு கூறியதை ஆட்லர் எதிர்க்கிறார்.

மனிதர்களின் தாழ்வு மனப்பான்மை நீண்ட காலம் நீடித்து இருந்தால் அவர்கள் உளநலம்

பாதிக்கப்படும். குழந்தையின் நடத்தைகள், தன் குறைகளை நீக்குவதற்காக மேற்கொள்ளப்படும் செயல்களே. உடல்சமநிலை அடைவதற்கும் துன்பங்களிலிருந்து விடுபடுவதற்கும் மனிதன் முயற்சியை மேற்கொள்ளுவதில்லை. அவனுடைய முயற்சிகள் யாவும், தன்னுடைய தாழ்ந்த நிலையிலிருந்து உயர்ந்த நிலைக்குச் செல்வதற்கே செலவழிக்கப்படுகின்றன. உயர்நிலை விழைதல் உந்து, மனிதனின் நடத்தைகளைப் பல்வேறு வகைகளில் செலுத்துகிறது. கற்பனை நோய்க் கோளாறுடையோரும், (Hypochondriacs) அதிகார வெறி கொண்டு அலையும் உளம் பிறழ்ந்தோரும், தம்முடைய முன்னேற்றத்தில் கண்ணும் கருத்துமாக இருக்கின்றனர். குழந்தைகளும் மாணவர்களும் தம்முடைய விளையாட்டுகளில் வெற்றி பெறுவதற்காகவே விளையாடுகின்றனர். வாழ்க்கை எப்பொழுதும் போட்டி நிறைந்ததாக இருக்கிறது. மனிதன் தன் சொந்தக் குறைகளை நீக்குவதில் ஈடுபட்டு அதற்காக முயற்சி செய்வது, விரும்பத்தக்க முறையில் அமைந்த உயர்வு விழைதலின் பாற்படும்.

வருங்காலத்தில் அடைய விரும்பும் இலக்குகளுக்காக மக்கள் ஈடுபடும் நடத்தை, அவர்களின் நிகழ்காலச் செயல்களாக அமைகின்றன. இலக்குகளைப் பற்றிய உணர்வு இல்லாதவர்களும் தம்மையறியாமலே ஏதேனும் ஒரு பொருளை அடைவதற்காக எப்பொழுதும் பாடுபடுகின்றனர். தனிமனிதனின் நடத்தையைப் பற்றி ஆராயவேண்டுமென்றால் அவனுடைய இலக்குகள் என்ன என்பதை அறிந்து கொள்வதே பொருத்தமாகும். சில நேரங்களில் ஒருவன் எதைத் தவிர்க்கிறான் என்பதும், சமூகத்திலிருந்து ஒதுங்கியிருத்தல், பொருள் தேடுதல், புகழ் விழைதல், அழகு விழைதல் ஆகியவையும் மக்களின் இலக்குகளுள் சில என்று கூறலாம்.

அன்சு வைகிங்கர் (Hans Vaihinger) என்னும் தத்துவ அறிஞர் இயற்றிய நூல் (The Philosophy of 'As If') ஆட்லரைப் பெரிதும் கவர்ந்தது. வாழ்க்கையில் சில இலக்குகளை அடைதலைப் பயன்மதிப்புகளாக மக்கள் எண்ணுகின்றனர். இவர்கள் இலக்குகள், அடைய முடியாத இலக்குகளாக இருக்கலாம். ஆயினும் இவர்கள், அவற்றை அடையலாம் என்னும் நம்பிக்கையுடன் பாடுபடுகின்றனர். இதனால் இவர்களுடைய இலக்குகள் கற்பனைகளாகி விடுகின்றன. சில கற்பனைகள் தமக்கும் மற்றவர்களுக்கும் தீங்கு விளைவிக்காதனவாக இருக்கின்றன. எ-டு. வாய்மையே வெல்லும். வேறு சில கற்பனைகள் மனிதர்களைத் தொல்லைகளில் ஆழ்த்தி விடும். ஆனால் 'வணிகர் உண்மையைக் கடைப்பிடிப்பர்' என்ற கற்பனை சோதித்து அறிந்து கொள்ள வேண்டியதாகும். வணிகர் எப்பொழுதும் உண்மையாக இருப்பர் என்ற முழு நம்பிக்கையுடன் ஒருவன் பல்வேறு செயல்களில் ஈடுபட்டால் அவனுக்குச் சிக்கல்கள் ஏற்படலாம். சில கற்பனைகள் கருத்தியல்களாக (Ideals) உருக்கொள்கின்றன. ஆசிரியர், மருத்துவர் போன்றவர்கள் தம் தொழிலில் மிகையான சிறப்பு நிலை அடைய வேண்டும் என்ற கருத்தியல்களைக் கொண்டிருக்கலாம். அதன் காரணமாக அவர்கள் பாடுபடலாம்.

மக்கள் தம் வாழ்க்கையில் முதன்மையானவர்களிடம் வைத்திருக்கும் நம்பிக்கை அவர்களுடன் தாம் கொள்ளும் இடையுறவைச் சிறப்புடையதாக்குகிறது. மருத்துவர் தன் நோயை நீக்கி விடுவார் என்ற நம்பிக்கை, நோயாளியை மருத்துவரின் கட்டளைகளை முழுமையாக ஏற்று அவற்றின் வழி நடக்கச் செய்கிறது.

ஒரே மனிதனுக்குப் பல இலக்குகள் இருக்கலாம். அவற்றையடைய வேண்டும் என்ற உணர்வு எப்பொழுதும் அவனுடைய நனவடங்கு நிலையில் இருக்கிறது.

தனிமனிதனின் பண்புகளும் திறன்களும், அவனுக்கு ஒரு தனிப்பட்ட வாழ்க்கைப் பாணியை அமைக்கின்றன. தனிமனிதனின் வாழ்க்கைப் பாணியை அமைப்பதில் அவன் பெற்றோர்களும் குடும்பத்தினரும் பெரும்பங்கு கொள்கின்றனர். குழந்தைப் பருவத்திலேயே வாழ்க்கையின் பொருள் பற்றிய கருத்துப் படிப்படியாக அமைந்துவிடுகிறது. பரம்பரை, குடும்பத்தில் அவனுடைய பிறப்புநிலை, பெற்றோர்கள் அவன் மீது காட்டும் அன்பு, எதிர்பார்ப்புகள், சில மாற்றமுடியாத நிகழ்ச்சிகள் போன்றவை வாழ்க்கைப் பாணியை அமைப்பதில் பெரும் பங்கு கொள்கின்றன. குழந்தைப் பருவத்தில் பெற்றோர்களுடைய அன்பு கிட்டாத குழந்தைகள், தவறான வாழ்க்கைப் பாணியை அமைத்துக் கொள்கின்றன. உடல் ஊனமுற்ற குழந்தைகளும் நோயுற்ற குழந்தைகளும் மனவெழுச்சிப் பாதுகாப்புக் கிடைக்கப் பெறாத குழந்தைகளும் தாழ்வு மனப்பான்மையை வளர்த்துக் கொள்கின்றன.

தனிமனிதனின் செயல்கள், சமூக ஈடுபாடுகள் ஆகியவற்றின் அடிப்படையில் அவனுடைய ஆளுமையை ஆட்லர் வகைப்படுத்தினார். ஆட்லரின் வகைப்படுத்தலைப் பின்வருமாறு விளக்கலாம். ஆளும் வகையினர் (The Ruling Type) தம் சொந்த நலனுக்காகத் தீவிரமாகப் பாடுபடுகின்றனர். தாம் விரும்பும் பொருள்களையும் இலக்குகளையும் அடைவதற்காகக் கடுமையாக உழைக்கின்றனர். இவர்கள் மற்றவர்களைத் தம் சொந்த நலனுக்காகப் பயன்படுத்திக்

கொள்ளத் தயங்க மாட்டார்கள். இவர்கள் குறைவான செயல்களும் மிகையான சமூக ஈடுபாடும் கொண்டவர்கள். அடையும் வகையினர் (The Getting Type) குறைவான செயல்களையும் மிகுதியான சமூக ஈடுபாடுகளையும் கொண்டவர்களாக இருப்பர். இவர்கள் நட்பு விழைபவர். தம் சொந்த ஈர்ப்புத் திறன் வாயிலாக மற்றவர்களிடமிருந்து உதவியும் பயனும் அடைவர். தம் பொறுப்புகளைத் தாமே செயற்படுத்த இயலாதவர். அதனால் மற்றவர்களைச் சார்ந்திருப்பர். தவிர்த்தல் வகையினர் (The Avoidance Type) குறைவான செயல்களும் குறைவான சமூக ஈடுபாடும் கொண்டவர்கள். இவர்கள் பொறுப்புகளை ஏற்கத் தயங்குவார்கள்; ஏமாற்றங்கள் மனக்குலைவுகள் போன்றவற்றைச் சமாளிக்க முடியாதவர்கள், மற்றவர்களிடம் பயனுறும் வகையில் பழகமாட்டார்கள். தம் வாழ்க்கையைப் பெரிய சிக்கலாக்கிக் கொள்வார்கள்.

இயல்பு வகையினர் (The Normal Persons): இவர்கள் செயல்கள், சமூக ஈடுபாடு ஆகியவற்றில் மிகுந்து காணப்படுவர். இவர்கள் சிக்கல்களை வெல்லும் திறன் கொண்டவர்கள்; தம் குற்றம் குறைகளை உணர்ந்தவர்கள்; தவறுகளைத் திருத்திக் கொண்டு வாழத் தெரிந்தவர்கள்; வாழ்க்கையில் வெற்றி அடைபவர்கள்.

மனிதர்களின் தன்னுணர்வு (Self), படைப்பாற்றல் மிக்கது என்று ஆட்லர் கருதினார். தனிமனிதன், தன் கட்டுப்பாடுகளின் வாயிலாகத் தன் நடத்தையையும் பண்புகளையும் மாற்றிக் கொள்ளலாம். சமூகப் பொருத்தப்பாடுடைய மனிதரிடம் பின்வரும் பண்புகளைக் காணலாம் என்று ஆட்லர் கூறினார். வாழ்க்கையின் பயன்மதிப்புகளை அறிந்துள்ளவர் தாமாகச் சிந்திக்க வல்லவர்; தாழ்வு மனப்பான்மையை அகற்றுபவர்; மற்றவர்களுடன் சமநிலையுடனும் நட்புடனும் பழகுபவர்; மக்களினத்தை நேசிப்பவர்; வசதிக் குறைவுகளைப் பொருட்படுத்தாமல் அவற்றுடன் இயைந்து வாழ்பவர்; உலகியல்புடன் இயைபு கொண்டவர்; சமய, அறநெறி உணர்வுகள் கொண்டவர்; அழகியலுணர்வு நோக்குடையவர்; உளச் சமநிலை உடையவர். ஆட்லர், தனியாள் உளவியல் துறையில், தம் வாழ்நாள் முழுவதும் பல ஆய்வு அறிக்கைகளையும் நூல்களையும் எழுதினார். ஆட்லர் 1937-ஆம் ஆண்டு இசுகாட்லாந்தில் விரிவுரைப் பயணம் மேற்கொண்டிருந்த பொழுது காலமானார்.

ஆர்னை, காரன் (கி. பி. 1885-1952): இருபதாம் நூற்றாண்டில் சிறந்து விளங்கிய உளவியல் அறிஞர்களுள் ஒருவர். மெய்ந்நிலைத் தன்னுணர்வுக்கும் கற்பனையில் மேம்பாட்டு நிலைக்கு உயர்த்தப்படும் தன்னுணர்வுக்கும் இடையில் காணப்படும் வேற்றுமைகளை, முதன் முதலில் எடுத்துரைத்த உளவியலார் இவரே. காரன் ஆர்னை (Karen Horney) கி.பி. 1885-ஆம் ஆண்டு செருமனி நாட்டிலுள்ள ஆம்பர்க்கு (Hamburg) நகரத்தில் பிறந்தார். பெர்லின் பல்கலைக் கழகத்தில் மருத்துவக் கல்வி பயின்ற ஆர்னை, உளமருத்துவத்தில் ஈடுபாடு கொண்டார்; பெர்லின் உளப்பகுப்புக் கழகத்தில் 1918-ஆம் ஆண்டு முதல் 1932 வரையில் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். இவர், 1932-ஆம் ஆண்டு அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்குச் சென்று அங்குச் சிகாகோ உளப்பகுப்புக் கழகத்தின் இணை இயக்குநராக இருந்தார். இவர் பிராய்டின் உளப்பகுப்புக் கொள்கைகளை முழுமையாக ஏற்றுக் கொள்ளவில்லை. இவர் நியூயார்க்கு உளப்பகுப்புக் கழகத்தில் 1934-ஆம் ஆண்டு பணிபுரிந்தார். உளப்பகுப்புப் பற்றிய தம்முடைய சொந்தக் கருத்துகளை வலியுறுத்தும் பொருட்டு ஆர்னை உளப்பகுப்பு முன்னேற்றச் சங்கத்தை (Association for the Advancement of Psycho-Analysis) நிறுவினார். பெண்களின் உளநிலை, உளச்சிக்கல் ஆகியவை பற்றிப் பிராய்டு எடுத்துரைத்த கருத்துகளை ஆர்னை ஏற்கவில்லை. எலக்டிரா சிக்கல் காரணமாகப் பெண்கள் ஆண்களின் தொழில்களையும் பொறுப்புகளையும் ஏற்க



காரன் ஆர்னை

விரும்புவர் என்ற பிராய்டின் வாதத்தை ஆர்னை ஏற்கவில்லை. சூழ்நிலை அழுத்தங்கள், குழந்தையின் உள்ளத்தில் அடிப்படைப் பதற்ற நிலையைத்தோற்று விக்கின்றன. குழந்தை இதனைச் சமாளிப்பதற்காகச் சில வழிமுறைகளைத் தேடுகிறது. இவ்வழிமுறைகள் நாளடைவில் தேவைகளாக மாறிவிடுகின்றன. பெற்றோர்களின் மிகைக் கண்டிப்பு, குழந்தையின் தன்னுணர்வு நசுக்கப்படுதல், அன்பிலாமை போன்ற காரணங்களினால் இச்சூழ்நிலைகள் உருவாகின்றன.

இவ்வழிமுறைகள் சிலரிடம் உளக்கோளாற்றுத் தேவைகளாகவும் ஆகலாம் என்றும், பத்து உளக் கோளாற்றுத் தேவைகளை மக்களிடம் பெரும்பாலும் காணலாம் என்றும் ஆர்னை கூறினார். இத் தேவைகளைப் பின்வருமாறு ஆர்னை தொகுத்துள்ளார்.

1. மக்களிடம் நெருங்கவைக்கும் தேவைகள்:

அ. அன்பு, ஏற்புடைமை ஆகியவற்றின் தேவை. இதனால், மனிதன் எல்லோரையும் மனைநிறைவடையச்செய்ய முயற்சி செய்கிறான். எல்லோராலும் விரும்பப் படவும் விழைகிறான்.

ஆ. வாழ்வில் எப்பொழுதும் சார்ந்திருப்பதற்கும் ஆளுமை ஒன்றுதலுக்கும் ஒரு துணை தேவை.

2. மக்களுக்கு எதிராகச் செயற்பட வைக்கும் தேவைகள்: அ. மற்றவர்களின்மீது ஆதிக்கம் செலுத்துவதற்கும் மற்றவர்களை விடத் தான் மிகுந்த அறிவாளி என்று தெரியப்படுத்துவதற்கும் அதிகாரம்.

ஆ. மற்றவர்களைச் சுரண்டல் செய்யும் தேவை.

இ. மதிப்பு, பொது மரியாதை ஆகியவற்றை யடையும் தேவை.

ஈ. தன்னை மிகையாக மற்றவர்கள் மதிக்க வேண்டும் என்னும் சுயமரியாதைத் தேவை.

உ. அடைவுத்தேவை - மற்றவர்களுக்கு முக்கியமல்லாத எளிய சாதனைகளை நிறைவேற்ற விழையும் தேவை.

3. மக்களை விட்டுப் பிரிய வைக்கும் தேவைகள்:

அ. சுதந்திரத் தேவைத் தன்னிறைவு: மற்றவர்களிடம் நன்கு பழக முடியாத காரணத்தினால் தனிமையை நாடுதல்.

ஆ. செயல் சீர்மைத் தேவை. மற்றவர்கள் தன்னிடம் தவறு கண்டுபிடித்து விடுவார்களோ என்ற, அச்சத்தினால் எக்காரியத்தையும் சீர்படச் செய்தல்.

இ. தன் தேவைகளைச் சுருக்கிக் கொள்ளுதல். தன்னடக்கமானவராகவும் தன்னிடம் தவறு காண்பவராகவும் இருத்தல்.

மனிதர்களின் தற்கருத்து அவர்களுடைய உண்மையான தன்னுணர்வையொட்டியதாக அமைந்திருப்பதில்லை. பெரும்பாலும் தன்னுணர்வு கருத்தியல் வயப்பட்டதாக (Idealised) அமைந்திருக்கிறது. அதாவது நம்மைப் பற்றிய உள உருவம் கருத்தியல் வயப்பட்டதாக அமைந்திருக்கிறது,

ஒருவன் தன்னைப் பற்றிக் கொண்டுள்ள உள உருவம் அவனுடைய உண்மையான உளஉருவத்தைக் காட்டிலும் வேறுபட்டதாக இருக்கலாம். இவ்வேறுபாட்டினை உணராதவர்கள் தம்முடைய தவறான தற்கருத்தினால் உண்மையான உளஉருவத்திற்கும் இன்னல் விளைவிக்கின்றனர். இந்த முரண்பாடே உளக்கோளாறுகளுக்குக் காரணமாக அமைந்துள்ளது.

இவைகளைத் தவிர மக்களிடம் சிறப்புத்தேவை (Need for Perfection), உளக்கோளாறுசார் ஆசை, (Neurotic Desire) இகழ்ந்து கூறும் ஆசை (Desire to Humiliate) ஆகிய மூன்று தேவைகள் புகழ்த்தேவை என்ற அடிப்படைத் தேவையுடன் இணைந்து காணப்படுகின்றன. கருத்தியல் சார்ந்த உளஉருவங்களைத் தம்முடைய தன்னுணர்வு எனத் தவறாக எண்ணுபவர்கள், அதாவது தம்மைப் பற்றிய மிகச் சிறந்த கருத்துக் கொண்டிருப்பவர்கள் மற்றவர்களைக் காட்டிலும் தாம் அறநெறியிலும் திறமைகளிலும் சிறந்து விளங்குபவராகவும் குற்றங்குறைகளற்றவராகவும், தூய்மையானவர்களாகவும் மக்களுள் மதிக்கத்தக்க மனிதர்களாகவும் இருக்கிறோம் என்று எண்ணுகிறார்கள். இவ்வுணர்வு சிறப்புத்தேவை எனப்படுகிறது. எந்தப் போட்டியிலும் தானே வெற்றியடையவேண்டும்; இலக்குகள் எத்தகையன வாயினும் அடைதற்கரியனவாயினும் வெற்றியே தன் குறிக்கோள் என்னும் உணர்வு உளக்கோளாறு ஆசை (Neurolic Desire) என்னும் தேவையாகும். இகழ்ந்து கூறும் தேவை என்பது, முதல் இரு தேவைகளும் அடையப் பெறாவிட்டால் மக்கள் ஈடுபடும் நடத்தையைக் குறிப்பதாகும். அதாவது அடைய முடியாத இலக்குகளும் மற்றவர்களைக் காட்டிலும் எல்லாத் திறமைகளிலும் சிறந்து விளங்க வேண்டும் என்ற ஆசையும் நிறைவு பெறாத நிலையை மக்கள் அடைதலாகும். இதனால் மனக்குலைவு ஏற்படுகிறது. இதன் காரணமாக மற்றவர்கள்மீது, முக்கியமாகத் தம் மேலதிகாரிகள்மீதும், தம்மீது அதிகாரம் செலுத்துபவர்கள்மீதும் தம்மைக் காட்டிலும் திறமைமிக்கவர்கள் மீதும் இனம்புரியாத வெறுப்பு

ஏற்படுகிறது. இந்த வெறுப்பு, மற்றவர்களைத் தம் சொற்களினால் இகழ்ந்து குற்றங்காணும் நோக்குடன் பேசும் இயல்புகளை இவர்களுக்கு ஏற்படுத்துகிறது. இத்தகைய தேவைகள் உள்ளத்தில் எழும் பொழுதே இவை அடையமுடியாதனவோ என்ற அச்சம் உடன் எழுகிறது. அதனால் இத்தேவைகளை உடனடியாக அடைய வேண்டும் என்ற துடிப்பும் உண்டாகிறது. பெருந்தலைவர்கள், எதேச்சாதிகாரிகள் போன்றோர் உயர்ந்த நிலையில் இருந்தாலும் தாம் வீழ்ச்சியடைய நேரிடுமோ என்ற அச்சத்தினால் அடங்காத அதிகார ஆசை கொள்கின்றனர். அச்சமே இவர்களின் புகழ்த் தேவைக்குத் தூண்டு பொருளாக இருக்கிறது.

உளக்கோளாறு ஆளுமையினர், எப்பொழுதும் கனவிலும் கற்பனையிலும் மிதக்கின்றனர். இவர்களால் பிறருடன் பொருளுடைய நிலைத்த உளத் தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்ள முடிவதில்லை. இவர்கள் தம்முடைய உண்மையான உளஉருவத்துடனோ தன்னுணர்வுடனோ இயைந்து இயங்குவதில்லை. தங்கள் தன்னுணர்வு பற்றிய மிகுந்த பெருமை வாய்ந்த கருத்தினைக் கொண்டுள்ளனர். இக்கற்பனைக் கருத்தை நிலை பெறச் செய்வதற்காக இவர்கள் பின்வரும் நான்கு சிறப்பான முறைகளைக் கையாளுகின்றனர்.

உளக்கோளாறு சார் செருக்கு: இவர்கள் தம்மிடம் இருக்கும் ஏற்பிலாப் பண்புகளைக் கற்பனையில் ஏற்புடையனவாக்கித் தாம் மிகச் சிறந்தவர்களாகவும் மற்றவர்களை அறிவிலிகளாகவும் எண்ணுகின்றனர். தம்முடைய உளத் தேவைகளைச் சிறப்பியல்புகளாக மாற்றி விடுகின்றனர். எடுத்துக்காட்டாக எளிதில் மற்றவர்களின் கருத்தேற்றத்திற்கு வயப்படும் தன்மை ஏற்பிலாப் பண்பாகப் பெரும்பாலானவர்களால் கருதப்படுவதால், இவர்கள் தம்மிடம் அத்தகைய பண்பு இருந்தால், அதனை மற்றவர்களின் உணர்வுகளுக்கு மதிப்புக் கொடுக்கும் பண்பு என்று மாற்றி விடுகின்றனர். இத்தகைய பண்பு தம்மிடம் இருப்பதாகச் செருக்குக்கொள்கின்றனர். இதனைப் போன்றே தன்னலம், ஆதிக்கம் போன்ற பண்பினைப் போட்டி மனப்பான்மை, நிகரற்று விளங்கும் விழைவு போன்ற பண்புகளாக மாற்றி விடுகின்றனர். மிகச் சிறிய எதிர்ப்பைக்கூட இவர்களால் தாங்க முடியாது. ஏனெனில் தம்முடைய அடிப்படை உளவலுவின்மை வெளிப்பட்டுவிடுமோ என்ற மிகை அச்சம் கொள்கிறார்கள்.

உளக்கோளாறுசார் உரிமை: (Neurotic Claim) உலகில் வாழ்வதற்கும் மிகச்சிறந்த பொருள்களைப் பெறுவதற்கும் தமக்கு உரிமை உண்டு என்று இவர்கள் எண்ணுகிறார்கள். குழந்தைப் பருவத்தில் குடும்பத்தினரால் மிகையான கவனத்திற்கும் அன்புக்கும் இலக்கான குழந்தை, வளர்ச்சியடைந்த பருவத்தில் மற்றவர்களின் அன்பும் கவனமும் தனக்கு உரிமைப் பொருள்களாகும் எனவும் பிறர் தன்னிடம் அன்பு செலுத்தக் கடமைப்பட்டுள்ளனர் எனவும் எண்ணுகிறது. அவர்கள் தன்னிடம் கவனம் காட்ட வேண்டியவர்கள் என்றும் எண்ணுகிறது. இத்தகைய கவனமும் அன்பும் கிடைக்கப் பெறாவிட்டால் இவர்கள் மனக்குலைவு அடைகிறார்கள். மக்களுடன் நெருங்கிப் பழகும் இயங்கும் முறையில் இவர்கள் ஈடுபட்டால், பிறரிடமிருந்து கைம்மாறு கருதா அன்பினை எதிர்பார்க்கிறார்கள். இத்தகைய அன்புக்கும் கவனத்திற்கும் இவர்கள் தாம் தகுதியுடையவரா என்று எண்ணிப் பார்ப்பதில்லை. மக்களுக்கு எதிராக இயங்கும் முறையில் இவர்கள் ஈடுபட்டால், உலகில் உள்ள எல்லாச் சிறந்த பொருள்களும் தமக்கு உரியனவே; பிறர் இதனை அடையும்போது தாம் மட்டும் ஏன் 'அடையக்கூடாது'? என்ற மனப்பான்மையையும் உருவாக்கிக் கொள்கின்றனர். உலகில் காணப்படும் சிறந்த பொருள்களும் சந்தர்ப்பங்களும் தமக்குக் கிடைப்பதற்கேற்ற தகுதி தமக்கு இருக்க வேண்டும் என்ற உணர்வு இவர்களுக்கு ஏற்படுவதில்லை. மக்களிடமிருந்து ஒதுங்கி இயங்கும் முறையில் இவர்கள் ஈடுபட்டால் இவர்கள் நிகழக்கூடிய எச்செயலுக்கும் தாம் பொறுப்புடையரல்லர் என்றும் எண்ணுகின்றனர். தாம் எவ்வாறு மற்றவர்களைக் குறை கூறாமல் ஒதுங்கி இருக்கிறார்களோ அதே போன்று மற்றவர்களும் தம்மிடம் குறைக்காணக் கூடாது என்பது இவர்களின் அடிப்படைக் கருத்து.

இத்தகைய உளக்கோளாறு நடத்தைகளை மாற்றுவதற்குத் தனிமனிதன் தன்னைப் பற்றிய உண்மையான தன்னுணர்வும் உளஉருவமும் பெறுதல் இன்றியமையாததாகும். தங்கள் குறைகளைச் சிறப்பியல்புகளாக மாற்றுவதைத் தவிர்ப்பதும், மனக்குலைவைத் தடுப்பதற்கான வழியாகும். நடைமுறைக்கு ஏற்ற எதிர்பார்ப்புகளை மனிதர்கள் தமக்குத் தாமே ஏற்படுத்திக் கொள்வதும் இதற்கு வழியாகும்.

வாழ்க்கையில் பல வசதிகளை அடையவும் சமூகப் படிநிலையில் நல்ல இடத்தைப் பெறவும் தனிமனிதன் தன் வாழ்நாள் முழுவதும் உழல்கிறான். பெரும்பாலோருக்கு இந்த இலக்குகள் அடைய முடியாதனவாக ஆகிவிடுகின்றன. அதனால் தனிமனிதனின் மெய்யான தற்கருத்து மனக்குலைவடைகிறது. கற்பனையில் தோன்றிய அடைய முடியாத தற்கருத்துத் தனித்து நிற்கிறது.

ஆர்னையின் உளவியல் கருத்துகள் உள, சமூகவியல் வல்லுநர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டன.

இவர் எழுதிய உளவியல் நூல்களுள் நம் காலத்திய உளக்கோளாறு ஆளுமை (The Neurotic Personality of Our Time, 1937), நம் உளப்போராட்டங்கள் (Our Inner Conflicts, 1945), மகளிர் உளவியல் (Feminine Psychology, 1967) ) என்பவை குறிப்பிடத்தக்கவை ஆகும்.

வ.தே.சு

**ஆளிடைக் கொள்கை - எரிக்குபெர்ன்:** இரு மனிதர்களுக்கிடையே ஏற்படும் இடையுறவுகளின் இயல்புகளைப் பகுத்தாய்வது இடையுறவுப் பகுப்பாய்வு (Transactional Analysis) எனப்படும். இருவரிடையே இடையுறவுகள் சிற்சில நேரங்களில் வினை-எதிர்வினை, இயங்குமுறை, சொல்லாடல் வழி நிகழ்வதைத் தவிர மனவெழுச்சிகளின் எதிர் வினைகளாகவும் அமைவதுண்டு. இத்தகைய மன வெழுச்சிப் பரிமாற்றல்களும் இடையுறவுகளுடன் சேர்த்துப் பகுத்தாய்வு செய்யப்படுவதால், இதனை இடைவினை என்று கூறுவதற்கு மாறாக இடையீடு என்று கூறுதல் சாலப் பொருத்தமாகும்.

இடையுறவுப் பகுப்பாய்வு, பிராய்டு விளக்கிய உளப்பகுப்புக் கோட்பாட்டின் அடிப்படைக் கருத்துகளைக் கொண்டதாகும். எரிக்கு பெர்ன் (Eric Berne) என்னும் இசுகாட்லாந்து அறிஞர், 1959-ஆம் ஆண்டு தம்முடைய 'மக்கள் விளையாடும் விளையாட்டுகள்' (Games People Play) என்னும் நூலில், இடையுறவுப் பகுப்பாய்வுக் கருத்துகளை வெளியிட்டார். இவரைத் தொடர்ந்து சேம்சு ஆரிசு (James Harris) என்பார் எழுதி வெளியிட்ட 'அயாம் ஓகே யூவார் ஓகே' (I'm Ok You're Ok) என்னும் நூலில், இடையுறவுப் பகுப்பாய்வு பற்றி எளிதாகப் புரிந்து கொள்ளும் விதத்தில் விளக்கங்களைக் கொடுத்தார். இடையுறவுப் பகுப்பாய்வு முறையைப் பயன்படுத்தி, நிறுவனங்களில் மனித உறவுகள், நடத்தைக் கோலங்கள் ஆகியவை பற்றிய செயல்முறை ஆய்வுகளை மேற்கொண்ட பெருமை தோரதி சோங்வார்டு (Dorothy Jongeward) என்னும் அம்மையாரையும் சேம்சு மூரியல் (James Muriel) என்னும் உளவியல் பகுப்பாளரையும் சாரும். இவர்களைத் தவிர வேறு ஆய்வாளர்களும் இடையுறவுப் பகுப்பாய்வு பற்றி நூல்கள் எழுதியுள்ளனர்.

மனித உள்ளத்தின் பலநிலைகளைப் பிராய்டு, இட்டு என்னும் பண்படா உளம், தன்முனைப்பு, மேம்பாட்டுளம் ஆகிய மூன்று கூறுகளாகப் பிரித்தார். இக்கூறுகளில் பண்படா உளம் என்பது, மனிதனின் பண்படாத அடிப்படை உந்துகளையும் ஆசைகளையும் நிறைவேற்றிக் கொள்ளும் உளக்கூறாகவும், தன்முனைப்பு என்பது பண்படா உளத்தின் உந்துகளை வாழ்க்கையின் மெய்ந்நிலையோடு ஒட்டி நிறைவேற்றும் உளக்கூறாகவும், மேம்பாட்டுளம் என்பது சமயம், சமூகம், பண்பாடு, மனச்சாட்சி ஆகியவற்றோடு ஒட்டிய கட்டுப்பாடுகளை ஏற்படுத்தித் தன்முனைப்பை அவ்வப்பொழுது கண்காணிக்கும் உளக்கூறாகவும் விளக்கலாம். இம்மூன்று உளக்கூறுகளுக்கும் இணையான உளக்கூறுகளைத் தன்முனைப்பு நிலை என்ற ஆளுமை அடிப்படையில் இடையுறவுப் பகுப்பாய்வு விளக்குகிறது. இவ்வுளக் கூறுகளைப் பின்வருமாறு எரிக்கு பெர்ன் ஆராய்கிறார்.

| | | |
|---|---|---|
| பெற்றோர் தன்முனைப்பு நிலை | | |
| வயதுவந்தோர் தன்முனைப்பு நிலை | → | தனிமனிதனின் ஆளுமை |
| குழந்தை தன்முனைப்பு நிலை | | |

ஒரு குறிப்பிட்ட நேரத்தில் தனிமனிதன் இம்மூன்று தன்முனைப்பு நிலைகளுள் ஏதாவது ஒன்றிலிருந்து இயங்குகிறான். ஒரு மனிதன் பெரும்பாலும் எந்தத் தன்முனைப்பு நிலையிலிருந்து இயங்குகிறான் என்பதைப் பொறுத்து அவன் ஆளுமை அமைகிறது. இவற்றுள் பெற்றோர் தன்முனைப்பு நிலை (பெ) என்பது, கண்டிப்பும் குற்றங் காணும் இயல்பும் நிறைந்த உளநிலை ஆகும். வயது வந்தோர் தன்முனைப்பு நிலை (வ) என்பது, அறிவுடன் பொருந்திய முறையில் சிக்கலைத் தீர்வு காணும் உளநிலை ஆகும். குழந்தைத் தன்முனைப்பு (கு) என்பது, மனவெழுச்சி வயப்பட்ட, உள்துடிப்புடன் பொருந்திய இயங்குமுறைக்கு ஏற்ற உளநிலை ஆகும். மற்றவர்களுடன் பழகும்பொழுது குறிப்பிட்ட எந்த நேரத்திலும் தனிமனிதன் இம்மூன்று உளநிலைகளுள் ஏதாவது ஒன்றிலிருந்து இயங்குகிறான். அவ்வாறு இயங்கும்பொழுதுதான் இடையீடு கொள்ளும் மனிதனின் ஏதாவது ஒரு குறிப்பிட்ட உளநிலைக்கு ஏற்ப அவன் நடத்தை அல்லது இயங்குமுறை அமைகிறது. இடையுறவு கொள்ளப்பட்டவன், தன்னுடைய ஏதேனும் ஒரு குறிப்பிட்ட உளநிலையிலிருந்து இயங்கலாம். இதனைப் பின்வரும் எடுத்துக்காட்டின் வாயிலாக விளக்கலாம்.

இராமன் : இப்பொழுது மணி ஐந்தாகிவிட்டதா?

கிருட்டிணன்: நான் கடிகாரமல்ல. எத்தனை முறை உனக்குக் கூறுவது? மணி என்ன என்று தெரிய வேண்டுமானால் கடிகாரத்தைப் பார்.

இந்த உரையாடலைப் பின்வருமாறு பகுத்தாய்வு செய்யலாம்.




இராமன் மணி என்ன என்று கேட்கும்பொழுது தன்னுடைய வ. தன்முனைப்பு நிலையிலிருந்து கிருட்டிணனின் வ. தன்முனைப்பு நிலைக்குத் தூண்டல் செய்கிறான். ஆனால் கிருட்டிணன் அதற்கு இணையாகத் துலங்கியிருந்தால் இப்பொழுது மணி ஐந்து என்றோ, எனக்குச் சரியாகத் தெரியவில்லை என்றோ கூறியிருக்கலாம். அதற்கு மாறாக அவன் கண்டிப்பு நிறைந்த குற்றம் காணும் பெ. தன் முனைப்பு நிலையிலிருந்து இராமனின் கு. தன் முனைப்பு நிலைக்குத் தொடங்குகிறான். அதாவது தான் பெ. நிலையிலிருந்து இராமனை ஒரு சிறு வனைப்போல் அதட்டுகிறான்.

நிறுவனத்தில் பணிபுரியும் இருவரிடையே நிகழக் கூடிய பின்வரும் இடையீட்டினை வேறோர் எடுத்துக் காட்டாகக் காணலாம்:

மேலாளர்: நீ தட்டச்சுச் செய்திருக்கும் மடலைப் பார். இவ்வாறு நீ பணிபுரிந்தால் விரைவில் பணி நீக்கம் செய்யப்படுவாய். நீ எதற்கும் பயப் படாதவன்.

தட்டச்சர்: ஐயா, இனிமேல் கவனமாகப் பார்த்துத் தட்டச்சுச் செய்கிறேன்.

மேற்கண்ட உரையாடலின்/இடையுறவுகளைப் பின்வருமாறு பகுத்தாய்வு செய்யலாம்.




இந்த மேலாளர் பெ. நிலையிலிருந்து தட்டச்சரின் கு. நிலைக்குத் தூண்டல் கொடுக்கிறார். தட்டச்சர் இதற்கு மேல் என்னால் சரியாகப் பணி செய்ய இயலாது என்று கூறியிருந்தால் கு. நிலையிலிருந்து தொடங்கியிருப்பார். ஆனால், தட்டச்சர் தகஅமைவுக் குழந்தை நிலையிலிருந்து மேலாளரின் நிலைக்குத் தொடங்குகிறார். மேலாளர் 'நீ தட்டச்சு செய்யும் கடிதங்களில் மிகையான தவறுகள் காணப்படுகின்றனவே. அச்சு இயந்திரம் சரியாக இயங்க வில்லையா? அல்லது உனக்குக் கவனக் குறைவு ஏற்படுத்தக்கூடிய சூழ்நிலைகள் காரணங்கள் எவையேனும் இருக்கின்றனவா? இம்மடல்கள் மிக இன்றியமையாதவை இவைகளில் தவறு இருத்தல் கூடாது'- இவ்வாறு இயங்கியிருப்பதால் அவர் தன்னுடைய வ. நிலையிலிருந்து தட்டச்சரின் வ. நிலைக்கு இயங்குகிறார் அல்லது தூண்டல் செய்கிறார் என்று கொள்ளலாம்.

பெ. நிலையைப் பெர்ன் (Berne) மேலும் பல கூறுகளாகப் பிரிக்கிறார். கண்டிப்பும் கட்டுப்பாடும் குற்றம் காணலும் நிறைந்த நிலையைக் கண்டனப் பெற்றோர் நிலை என்றும், ஆதரவும் அரவணைப்பும் அன்பும் கொண்ட பெ. நிலையை, அரவணைப்புப் பெற்றோர் நிலை என்றும் கூறுகிறார். இதனைப் போன்றே கு. நிலையையும் பல கூறுகளாகப் பிரிக்கிறார். இவற்றுள் முதன்மையானவை அழிவு விழையும் குழந்தை நிலையும் மகிழ்ச்சிக் குழந்தை நிலையும் ஆகும். தனிமனிதன் தனக்குத்தானே துன்பத்தைத் தேடிக்கொள்ளும் விதத்தில் அவனுடைய கு. நிலை இயங்கினால், அவன் தன்னுடைய அ.கு நிலையிலிருந்து இயங்குகிறான் என்றும், சூழ் நிலைக்கேற்ப அடங்கி நடக்கும் தன்முனைப்பு நிலை தக அமைவுக்குழந்தை நிலை என்றும் சார்பு நிலையில் சமூக வயப்பாடு நிறைந்த முறையில் உட்டுடிப்பு வழி இயங்கும் தனிமனிதன் மகிழ்ச்சிக் குழந்தை நிலையிலிருந்து இயங்குகிறான் என்றும் இடையுறவுப் பகுப்பாய்வு கூறுகிறது. அ.கு. நிலையை மேலும் இரு உட்பிரிவுகளாகப் பிரிக்க முடியும். புரட்சிக் குழந்தைநிலை அதாவது தன் கடமைகளையும் பொறுப்புகளையும் வேண்டுமென்றே செய்ய மறந்துவிடுவதும் – செய்ய மறப்பதும் பு.கு. நிலையாகும். இதற்கு மாறாகப் பெ.வ. நிலைகளிலிருந்து மற்றவர்கள் எதைக் கூறினாலும் அதனை ஏற்றுக் கொள்வதும் அதனைச் செயற்படுத்துவதும் ஆகிய இத்தகைய இயங்குமுறை இணக்கக் குழந்தைநிலை ஆகும். இம்மூன்று அடிப்படை உளக்கூறுகளில் வ. நிலை மிகச் சிறந்ததாகக் காணப்பட்டபோதிலும், தனிமனிதனின் ஆளுமைச் சமநிலைக்கு ஓரளவு அரவணைப்புப் பெ. நிலையும், அதனைப் போன்றே ஓரளவு ம.கு. நிலையும், கலந்த முழுமையான வ. நிலை இன்றியமையாதனவாகும். ஏனென்றால் முழுமையான வ. நிலை மட்டும் தனிமனிதனை வறட்சியான உளம்படைத்த பணியடிமையாக்கிவிடக் கூடும். ஆதலின் வ. நிலை மிகுந்தும் அ.பெ. நிலை குறைந்தும் ம. கு. நிலை சிறிதளவு கலந்தும் இருப்

பவன், வாழ்க்கையிலும் நிறுவனத்திலும் நன்கு இயங்க முடியும். அத்தகையோரிடம் ஓரளவு கண்டிப்பும் சிக்கல் தீர்க்கும் சிறந்த ஆற்றலும் அவ்வப்பொழுது ம.கு. நிலைக்கு வந்த மற்றவர்களிடம் உள்துடிப்புவய நடத்தையும் கலந்து காணப்படும்.

**வாழ்க்கை நிலைகள்:** தனிமனிதனின் வளர்ச்சிப் பருவத்தில் அவனுக்குத் தன்னைப்பற்றிய முழுமையான கருத்தும் மற்றவர்களைப் பற்றிய கருத்தும் உருவாகின்றன. இக்கருத்துருவாதலை இடையுறவுப் பகுப்பாளர், வாழ்க்கை நிலை (Life Position) என்று கூறுகின்றனர். தனிமனிதனின் தன்முனைப்புநிலை அவன் சூழ்நிலைக்கு ஏற்றவாறு மாறுதல் அடைகிறது. ஆனால், அவன் வாழ்க்கை நிலை மாறாமல் இருக்கிறது. ஏனெனில், இது அவனுடைய அனுபவங்களையும் அவனுக்குக் கிடைத்த வலுப்படுத்திகளையும் பொறுத்து அமைகிறது. இதன் பயனாக அவன் வாழ்க்கையில் ஒருசில முற்கோள்களை உருவாக்கிக் கொள்கிறான். இம்முற்கோள்கள் 'நலம்' என்ற நிலையின் அடிப்படையில் உருவாகின்றன. இந்த நலநிலைகளைப் பின்வருமாறு இடையுறவுப் பகுப்பாய்வு விளக்குகிறது.

**'நான் நலமில்லை நீ நலமில்லை':** இது கண்டனப் பெற்றோரின் வாழ்க்கை நிலையாகும். மற்றவர்கள் செய்வது எப்பொழுதும் தவறாக இருப்பதாக அவர்கள் எண்ணுகின்றனர். தன் முடிவே சரியானது என்றும் எண்ணுகின்றனர். இதனால் மற்றவர்களிடம் எப்பொழுதும் குற்றம் காண்கின்றனர். நான் நலமில்லை நீ நலம்: இந்நிலை சார்புக் குழந்தை நிலையிலிருந்து தோன்றுவதே. நான் நலம் நீ நலம்: இத்தகைய நிலையிலுள்ளோர் வாழ்க்கையில் வெற்றி பெறுகின்றனர்.

**நான் நலம் நீ நலம்:** பொதுக் கல்வியினாலும் பணிச்சூழ்நிலைகளாலும் மனநலம் உடையவர்கள், இந்நிலையில் இயங்குகிறார்கள். இவர்கள் மற்றவர்களிடம் நம்பிக்கை வைத்துள்ளவர்கள். தனிமனிதனின் வாழ்க்கையில் சமநிலையான ஆளுமையைப்பெற இது உதவியாக இருக்கிறது. இடையுறவுகள் திறந்தவையாகவோ மூடியவையாகவோ அமையலாம்.

திறந்த இடையுறவுகள்

இராமன் : நீ மேலாளரைப் பார்த்தாயா?

கிருட்டிணன்: ஆம். கண்டேன்.




இந்த இடையுறவு திறந்த இடையுறவாக இருக்கிறது. இந்தத் தூண்டல் துலங்கல் இயங்குமுறை பின்வருமாறு அமைந்தால் அது மூடிய இடையுறவாக ஆகிவிடுகிறது.




'மேலாளரை எப்பொழுது பார்க்க வேண்டும் என்பது எனக்குத் தெரியும்; இதற்காக இப்படியொரு கேள்வி கேட்கவேண்டாம்'. இது மூடிய இடையுறவாக ஆகிவிட்டது. இந்நிலை நான் நலமில்லை என்னும் வாழ்க்கை நிலையிலிருந்து எழுகிறது.

உலகில் எல்லோருக்கும் ஏற்புடைமை நிகழ்வு (Stroke) தேவைப்படுகிறது. ஏற்புடைமை உடன்பாடாகவோ எதிர்மறையாகவோ அமையலாம். நாம் காலையில் பள்ளிக்கோ அலுவலகத்திற்கோ வரும்பொழுது நம்மைப் பார்த்த மற்றவர் நலமா? என்றோ, 'வணக்கம்' என்றோ கூறி ஏற்றுக் கொள்ளுதலும், கண்ணோக்கினால் புன்முறுவல் காட்டி வரவேற்றலும், இத்தகைய செயல்முறைகளில் நாம் இயங்கும்பொழுது மற்றவர்களும் அதேபோன்ற இயங்குமுறைகளின்வழி நம் தூண்டலுக்குத் துலங்கினால் அது உடன்பாடு ஆகிறது. ஏற்புடைமை அறவே இல்லாத நிலை மக்களால் சகித்துக்கொள்ள முடியாத நிலையாகும். ஏற்புடைமை எதுவும் இல்லாமல் இருப்பதைக் காட்டிலும் ஏதாவது எதிர்மறைத் துலங்கலேனும் மனிதர்களுக்குத் தேவைப்படுகிறது. பெற்றோராலும் மற்றவர்களாலும் வெறுத்து ஒதுக்கப்பட்ட குழந்தை, ஏற்புடைமைக்காக ஏங்குகிறது. பிறரால் ஒதுக்கித் தள்ளப்பட்டு ஏற்புடைமை எதுவும் இன்றி வாழ்பவர்களும், ஏற்புடைமைக்காக ஏங்குகின்றனர். இத்தகையோர் தாம் மற்றவர்களின் ஏற்புடைமையைப் பெறுவதற்காகப் பலவிதமான தற்காப்பு வழிமுறைகளைக் கையாளுகின்றனர். இம்முறைகளை இடையுறவுப் பகுப்பாளர், உள விளையாட்டுகள் என்று கூறுகின்றனர்.

தனிமனிதனின் தன்முனைப்பு நிலைகளையும், அவனுடைய வாழ்க்கை நிலைகளையும் அவன் எந்த அளவிற்கு உள விளையாட்டுகளை விளையாட நேரிடுகிறது என்பதையும் பொறுத்தே அவர்னுடைய தற்கருத்து உருவாகிறது. இத்தற்கருத்தை இடையுறவுப் பகுப்பாளர் வசனம் (Script)

என்று கூறுகின்றனர். வாழ்க்கையில் எல்லோருக்கும் வசனங்கள் அமைந்திருக்கின்றன.

இக்காலத்தில் இடையுறவுப் பகுப்பாய்வு மேலாண்மைத்திறன் முன்னேற்றத்தில் பெரும்பங்கு கொண்டிருக்கிறது. பணியாளர்கள் பல்லாயிரக்கணக்கானோர் இணைந்து பணிசெய்யும் நிறுவனங்கள் பல்வேறு வகையான மனித நடத்தைக் கோலங்களையும் இடையுறவுகளையும் சமாளிக்க வேண்டியுள்ளன. அதிகாரிகள் தம் மேலாளருடனும் தம் உடன் அதிகாரிகளுடனும் தம் கீழ்ப்பணி புரிபவர்களுடனும் சிறந்த முறையில் இயங்குவதற்கு இடையுறவுப் பகுப்பாய்வுப் பயிற்சி தரப்படுகிறது. இப் பயிற்சி, மனக்குலைவுசார் நடத்தைகளையும், பிறருக்கு ஊறு செய்யும் உரையாடல், இடையுறவு, செயல்கள் ஆகியவற்றையும் தவிர்க்கும் குறிக்கோளுடன் நடத்தப்படுகிறது. நிறுவனங்களில் மட்டுமன்றி, மருத்துவ இல்லங்களிலும், கல்வி நிலையங்களிலும், குடும்பத்திலும் இடையுறவுப் பகுப்பாயின் உதவியால் மக்கள் தத்தம் தன்முனைப்பு நிலை பற்றியும் பிறருடைய தன்முனைப்பு நிலை பற்றியும் அறிந்து, சிக்கல்களுக்குத் தீர்வு காண இயலும்.

**நடத்தைக் கோட்பாடு:** இது ஆளுமைக் கோட்பாடு பற்றிய அண்மைக் கால விளக்கமாகும். தனி மனிதனின் சூழ்நிலைத் தூண்டல்களுக்கு ஏற்ப அவனுடைய ஆளுமை அமைகிறது. ஆளுமைப் பண்புகள் நிலையாக அமைவதில்லை. அவை குறிப்பிட்ட தூண்டல்களுக்கு ஏற்ப அமைகின்றன என்ற அடிப்படைக் கருத்துகளைக் கொண்ட ஆளுமைக் கோட்பாடு நடத்தைக் கொள்கையாகும் (Behaviourism). நடத்தைக் கோட்பாட்டினருள் முதன்மையானவர்கள் வாட்சன் (Watson), அண்டர் (W. S. Hunter) இலாசுலே (Lashley. K.S) கத்ரி (Guthrie), கோல்ட்டு (Holdt), அல் (Hull), தார்ன்டைக்கு (Thorn dike Edward. L), பாவ்லவ் (Pavlov Ivan. P), இசுகின்னர் (Skinner. B. F), ஆகியவர்கள். இசுகின்னர் தானியங்கு ஆக்கநிலையிருத்தம் பற்றிய விரிவான சோதனைகளைச் செய்துள்ளார்.

பாவ்லவ் தம் பரிசோதனைகளின் வாயிலாக ஆக்க நிலையிருத்தம், கற்றல் நிகழ்முறை ஆகியவை பற்றிச் சில முடிவுகளை வெளியிட்டார். இம்முடிவுகள் உயிரியை ஒரு குறிப்பிட்ட நடத்தையை நோக்கிச் செலுத்தும்; உந்து, நடத்தையைத் திசைப்படுத்தும் தூண்டல், தூண்டலுக்கான துலங்கல், வலுப்படுத்திகள் ஆகியவை பற்றிய கருத்துகளைத் தெளிவு படுத்தும்.

மனிதனின் வெளிப்படையான நடத்தையை மட்டிலுமே ஆராய்ந்து அவனுடைய ஆளுமையை அறியலாம் என்பதே நடத்தைக் கொள்கையாகும். மனித நடத்தை, இயக்க நடத்தை, குரல் நாண்களின் அசைவுகள், உள் உறுப்புகளின் இயக்கத்தினின்று எழும் நடத்தைகள் என மூன்று வகைப்படுத்தப்படுகிறது. உள்ளத்தின் செயல்களும் உடல் இயக்கங்களின் விளைவாக ஏற்படுவனவே என்று வாட்சன் குறிப்பிட்டார். தூண்டல்-துலங்கல் தொடர்புகளாக ஏற்படும் மறிவினைகளே நடத்தையின் அடிப்படை ஆகும். இவை ஆக்கநிலையிருத்தலால் மாறுபட்டுப் பல்வேறு வகைப்பட்ட நடத்தைக்கோலங்களாக உருவெடுக்கின்றன என்று நடத்தைக் கொள்கையினர் கூறுகின்றனர். இவர்கள் மனிதனின் நடத்தையைப் பொருள்முதல் அணுகுமுறையில் (Materialistic Approach) நோக்குகின்றனர்.

தாலர்டு, மில்லர் (Dollard, Miller) ஆகியோர், ஆளுமை வளர்ச்சியில் அச்சம் முதன்மைத் தூண்டலாக விளங்குகிறது என்றும், அச்சத்தைத் தவிர்க்க உதவும் நடத்தைகள் ஆளுமையில் சிறப்பிடம் கொண்டுள்ளன என்றும் கூறினர். ஆல்பர்ட்டு பண்டுரா (Albert Bandura), இரிச்சர்டு வால்டர்சு (Richard Walters) போன்றோரின் கோட்பாடுகளும் சமூக நிலைமைகளில் கற்றலின் சிறப்பை வலியுறுத்துகின்றன. பண்டுரா தம்முடைய நடத்தை மாற்ற விதிகள் (Principles of Behaviour Modifrotin) என்னும் நூலில், இக் கருத்தினைக் கூறியுள்ளார்.

இக்காலத்தில் நனவு அனுபவ இயல் (Phenomenology) மனிதநல இயல் (Humanism) போன்ற கருத்துகளைச் சார்ந்த ஆளுமைக் கொள்கைகள் புகழ் பெற்று விளங்குகின்றன.

துணை நூல்கள்:

**Maslow A.H.**, Motivation & Personality, Harper & Row, New York, 1970.

**Erich Fromme.**, Beyond the Chains of illusion: My encounter with Mars and Freud, Simon and Schuster: New York, 1962.

**Freud, Sigmund**, An Outline of Psychoanalysis, Norton, Newyork, 1949.

**Dicaprio Nicholas S.**, Personality Theories, CBS College Pub. Co., New York, 1983.

**Samuel William**, Personality, Mc Graw Hill, London, 1981.

**Alfred Adler**, The Individual Psychology, Harper & Row, New York, 1956.

**ஆளுமைக் கோளாறுகள்** தனி மனிதனின் சமூகச் செயல்களில் மிகுந்த அளவில் சிதை

வினை ஏற்படுத்தும் நடத்தைக் கூறுகள், ஆளுமைக் கோளாறுகள் என்று கருதப்படுகின்றன. ஆளுமைக் கோளாறுகளை அடையாளம் கண்டுகொள்ளும் உளவியல் துறை அண்மைக் காலத்தில் தோன்றிய தாகும்.

பண்டைக் காலங்களில் இக்கோளாறுகளை உடையவர்கள் குற்றவாளிகளாகவோ நிலை தடு மாறி நடப்பவர்களாகவோ கருதப்பட்டனர். அமெ ரிக்க உளமருத்துவக் கழகத்தின், 1980-ஆம் ஆண்டு தொகுக்கப்பட்ட நோயறியியல், புள்ளியியல் தொகு தியில் (Diagnostic & Statistical Manual) ஆளுமைக் கோளாறுகள் பட்டியல்படுத்தப்பட்டுள்ளன.

தனிமனிதனின் ஆளுமைக் கூறுகள், குழந்தைப் பருவத்திலிருந்தே அவன் பழக்க வழக்கங்களுடன் ஒன்றி வருபவையாகும். ஆனால், தனிமனிதனின் ஆளுமைக் கோளாறுகளுள் பல, அவனுடைய சமூகப் பொருத்தப்பாட்டினுக்கு இடையூறு விளைவிப்பன வாக விளங்குகின்றன. இக்கோளாறுகளை உடைய வர்கள், பெரும்பாலும் தொல்லைக்கு உள்ளாவ தில்லை. இவர்கள் தம்மை இயல்பு நடத்தையின ராக எண்ணுகின்றனர். ஆளுமைக் கோளாறுகளுள் முதன்மையான சிலவற்றைப் பற்றிய விளக்கங்களை இங்குக் காணலாம்.

1. கருத்துத்திரிபு ஆளுமை (Paranoid Personality): கருத்துத்திரிபு ஆளுமையினரிடம், கருத்துத் திரிபு உளநோயாளிகளைப்போல் திரிபுணர்வுகளோ (Delusions) மனநோய் அறிகுறிகளோ காணப்படு வதில்லை. ஆனால், இவர்களிடம் பரவலான ஒரு சந்தேக மனப்பான்மையும் மற்றவரிடம் நம்பிக்கை யின்மையும் அதிக அளவில் காணப்படும். சிறு செயல் களில் மிகுந்த கவனம் செலுத்துவர். ஆனால், மிகச் சிறிய செயல்களிலும் காரணமின்றி ஐயப்படுவர். தங்களது நம்பிக்கையிலா மனப்பாங்கைச் சுட்டிக் காட்டுபவரிடம் ஐயப்படுவர். இது மிகை விழிப்பு மனப்பான்மை (Hyper Vigilant Attitude) எனப்படும். இவர்கள் தம்முடைய மிகை விழிப்பினால் எப்பொழு தும் ஒருவிதமான அச்சுறுத்தலை உணர்கிறார்கள். இவர்களுடைய நம்பிக்கைகளும் எண்ணங்களும் ஐயப்போக்கிலேயே உறைந்து விடுகின்றன. பெரும் பாலும் மற்றவர்களின் நட்பை இவர்கள் விரும்பு வதில்லை. தம்மிடம் மற்றவர்கள் நட்பாக இல்லா மைக்கு இவர்கள், மற்றவர்கள் தங்கள் மீது பொறா மை கொண்டிருக்கிறார்கள் என்னும் தற்காப்புக் காரணம் கற்பிக்கிறார்கள். இவர்கள் தனிமையை விரும்புபவர்கள்; நகைச்சுவையும் மெல்லுணர்வுகளும் அற்றவர்கள்; மிகவிரைவில் சினவயப்படுபவர்கள்; மற் றவர்களின் நடத்தைகளையும் செயல்களையும் மிகுந்த கண்காணிப்புடன் ஆய்வு செய்பவர்கள்; மற்றவர்கள் தம்மீது குற்றம் கண்டுபிடிப்பதை வெறுப்பவர்கள். இத்தகைய கருத்துத்திரிபு ஆளுமையினரால், குடும் பத்தில் மற்றவர்கள் மிகுந்த மனவேதனைகளையும் துன்பங்களையும் அனுபவிப்பர். இத்தகையோர் எவர்களிடம் நெருங்கிய உறவு கொண்டிருக்கிறார் களோ அவர்களின் வாழ்க்கை, துயரம் மிக்கதாகி றது. ஏனெனில் கருத்துத்திரிபு ஆளுமையினர் எப் பொழுதும், தம் குடும்பத்தினர் தமக்கு எதிராகச் சதி ஆலோசனை செய்கின்றனர் என்று குற்றம் சாட்டு வர். இவர்கள் கருத்துத் திரிபு ஆளுமைக் கூறுகளைக் கொண்டவரேயன்றிக் கருத்துத் திரிபு உளப்பிணி யாளர்கள் அல்லர்.

2. உளச்சிதைவு ஆளுமை (Schizoid Personality): உளச்சிதைவு ஆளுமையினர் தனிமையை விரும்புவர்; மற்றவரிடமிருந்து ஒதுங்கியிருப்பர்; நெருங்கிய நண்பர்கள் இல்லாமையால் இவர்கள் தனி மையில் செய்யக்கூடிய பணிகளில் ஈடுபடுவர். இவர் கள் பயனுள்ள சமூக உறவுகளை ஏற்படுத்திக் கொள்ள முடியாதவர். மற்றவர்களின் துன்பங் களைப் பற்றி இரக்கமோ கவலையோ கொள்ளமாட் டார்கள். மற்றவரிடம் தமக்குள்ள பகைமையை வெளிப்படையாகத் தெரிவிக்க மாட்டார்கள். அவர் கள் தம்மைப் புகழ்வதால் பெருமிதம் அடைய மாட்டார்கள். மாபெரும் அறிவியல் ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கும் வித்தகர்கள் சிலரிடம் இத்தகைய ஆளுமையைக் காணமுடியும். ஓரளவு தனிமை இருந் தால்தான் இவர்களுள் சிலர் ஏதாவது அருஞ்செயல் புரியக்கூடியவர்களாயிருப்பர். இவர்கள் மனவிரிசல் நோயாளிகளைப் போல் திரிபுணர்வுகளும் இல் பொருள் உணர்வுகளும் (Hallucinations) உடைய வர்கள் என்று எண்ணக்கூடாது. இவர்கள் உளச் சிதைவு ஆளுமையினரேயன்றி (Schizophrenic Predisposition) உளச்சிதைவு நோயாளிகள் அல்லர்.

3. தவிர்ப்பு ஆளுமை (Avoidance Personality): தவிர்ப்பு ஆளுமையினர், மற்றவர்களால் வெறுக்கப் படுவதையோ அவமானப்படுத்தப்படுவதையோ பொறுத்துக் கொள்ள முடியாதவர்கள். இதனால் இச்சூழ்நிலைகளை இவர்கள் பெரும்பாலும் தவிர்க் கின்றனர். இவர்கள் மற்றவர்களால் தாம் குறை கூறப்படுவதைத் தாங்க முடியாதவர்கள். தாம் எத் தன்மையினராயினும் எப்பொழுதும் மற்றவர்களால் ஏற்பினை எதிர்நோக்குபவர். தம் திறமைகளையும் அருஞ்செயல்களையும் குறைவாக மதிப்பிடுபவர்கள். உளச்சிதைவு ஆளுமையினர் மற்றவர்களைத் தவிர்க் கின்றனர். ஆனால், தவிர்ப்பு ஆளுமையினர் மற்ற வர்களை விரும்புகின்றனர். மற்றவர்கள் தங்களை

ஏற்றுக் கொள்வார்களோ என்ற ஐயப்பாடும் கொள்கின்றனர்.

4. வரம்பு ஆளுமை (Borderline Personality): இவர்களிடம் நிலையிலா நடத்தைக் கோலங்களும் மனநிலை மாற்றங்களும் காணப்படும். சில சமயங்களில் மனம் தளர்ந்த நிலையினராக இருப்பர்; மறுகணமே சினம் கொள்வர்; இவர்கள் அடங்காச் சினம் கொள்வதும் உண்டு. இவர்கள் தனிமையை வெறுப்பவர்கள்; சிற்சில சமயங்களில் தம்மைத் தாமே வருத்துபவராகவும் மாறிவிடுவர்.

5. நடிப்பு (Histrionic Personality): இவர்கள் மற்றவர்களை மிகையாகச் சார்ந்திருப்பவர். இவர்கள் மற்றவர்கள் துன்பங்களைப் பற்றிக் கவலை கொள்ளாதவர்கள். தம்முடைய வாழ்க்கையின் மிக எளிய நிகழ்ச்சிகளையும் மிகுந்த மனவெழுச்சிகளுடன் வெளியிடுவர். தம் துயரங்களே இவர்களுக்கு மிகத் தலையாயவை. தம் மகிழ்ச்சியே மாபெரும் மகிழ்ச்சி எனக் கொள்வர். தம்மைப்பற்றிய செய்திகளைக் கூறி மற்றவர்களைச் சலிப்படையச்செய்வர். இவர்கள் மற்றவர்களிடம் மிக எளிதில் நட்புக்கொள்வர். ஆனால், தன்னலம் மிக்கவர்களாக இருப்பர். எப்பொழுதும் மற்றவர்களின் கவனம் தம்மைச் சுற்றியே இருக்க வேண்டும் என்று விழைவர். அதற்கான வகைகளில் தம் நடத்தைகளை அவ்வப்போது மாற்றங்கள் செய்வர். ஆண்களைவிடப் பெண்கள் மிக்க அளவில் இத்தகைய ஆளுமையை உடையவர்களாக இருப்பதைக் காணலாம். இத்தகையோரைப் பண்டைக் காலங்களில் உளக்கூறுமாற்ற ஆளுமையினர் (Hysterical Personality) என்று குறிப்பிட்டனர்.

6. தன்வழிபாட்டு ஆளுமை (Narcissistic Personality): இத்தகைய ஆளுமையினர், தன்னைப் பற்றி மிக உயர்ந்த கருத்துக் கொண்டிருப்பர். தம் திறமைகள், வெற்றிகள் ஆகியவற்றைப் பற்றிய கனவிலேயே மிதப்பர். நார்சிசசு (Narcissus) என்ற பண்டைய கிரேக்க மனிதன், ஒரு குளத்து நீரில் தெரிந்த தன்னுடைய உருவத்தைக் கண்டு அதன்மீது காதல் கொண்டான் என்றும், அதனிடமிருந்து தன்னைப் பிரித்துக் கொள்ள முடியாமல் அவன் அதை நோக்கியபடியே பட்டினிகிடந்து இறந்தான் என்றும், கிரேக்கக் கதைகள் கூறுகின்றன. தன்வழிபாட்டு ஆளுமையினர், நார்சிசைப் போன்று தன்வயப்பட்டவராகவும் மற்றவர்கள் தம்மை எப்பொழுதும் புகழ வேண்டும் என்றும் விரும்புவர். மற்றவர்கள் தம்மைக் குறைகூறுவதையோ பொருட்படுத்தாமையையோ அணுவளவும் பொறுத்துக்கொள்ளமாட்டார்கள். மற்றவர்களின் மனஉணர்வுகளையும் விருப்பு வெறுப்புகளையும் பற்றிக் கவலைப்படமாட்டார்கள்.

7. சார்பு நிலை ஆளுமை (Dependent Personality): இத்தகையவர் தம் வாழ்க்கையின் முதன்மையான பொறுப்புகளை மற்றவர்களின் பொறுப்பில் விடுவர். தன்னம்பிக்கையில்லாமையே இதற்குக் காரணம் ஆகும். தம்முடைய தேவைகளை முதன்மையாகக் கருதாமல், தமக்காகப் பொறுப்பு ஏற்பவர்களை எப்பொழுதும் தம்முடனேயே வைத்துக்கொள்வர். இவர்கள் மற்றவர்களிடம் தமக்காக எதையும் எதிர்பார்ப்பதில்லை. வாழ்க்கையில் மிகச் சாதாரண முடிவுகளைக் கூட இவர்களால் தனித்து எடுக்க முடிவதில்லை. சொல்லொணாத தொல்லைகளை அனுபவித்து வந்த போதிலும் இவர்கள் தம்முடன் இருப்பவர்களைப் பிரியாமல் அவர்களைச் சார்ந்தே வாழ்வர்.

8. கட்டாய ஆளுமை (Compulsive Personality): இவர்கள் தம் வாழ்க்கையில் கட்டுத்திட்டங்கள் ஒழுங்குமுறை ஆகியவற்றிற்கு மிகுந்த சிறப்பிடம் கொடுப்பவர்கள். இவர்கள் நகைச்சுவையுணர்வு அற்றவர்கள்; வேலையே தலையாயது எனக் கருதுபவர்கள். இவர்கள் குறிப்பிட்ட பணியின் சிறுசிறு பகுதிகளுக்குச் சிறப்பு அளித்துவிட்டு, வேலையின் நோக்கத்தை மறந்துவிடுவார்கள். எந்தப்பணியையும் செவ்வனே செய்வதற்கு ஒரே ஒரு வழிதான் உள்ளது என்றும் அவ்வழி தாம் செய்யும் வழியே என்றும் பிடிவாதமாக இருப்பார்கள். சமூகத்தின் தொடர்புகளில் இணக்கமற்றவராக இருப்பார்கள். சிறு காரியங்களிலும் முடிவெடுக்க முடியாமல் தவிப்பார்கள். இவர்களுடைய கட்டாய மனப்போக்கு, இவர்கள் எடுத்த பணியினைக் கால அளவிற்குள் முடிப்பதற்கும் மற்றவர்களுடன் இவர்கள் கொள்ளக் கூடிய சமூக உறவுகளுக்கும் பெருந்தடையாக இருக்கும். இவர்கள் எச்செயலிலும் நிறைவை (Perfection) எதிர்பார்ப்பவர்கள்.

9. பணிவு-தாக்குதல் ஆளுமை(Passive-Aggressive Personality): மற்றவர்களின் எதிர்பார்ப்புகளுக்கு ஏற்பப் பணிவெதிர்ப்பு நிலை (Passive resistence) வாயிலாகத் தம்முடைய தாக்குதல் மனப்பான்மையை உணர்த்துபவர், பணிவுதாக்குதல் ஆளுமையினர் எனப்படுகின்றனர். வேலைத் திறமையின்மை, வேலையில் மறதி, பிடிவாதம், உறுதியின்மை போன்றவைகளால், பணிவெதிர்ப்பினை இத்தகையோர் வெளிப்படுத்துகிறார்கள். இத்தகையோர் தமக்குக் கிடைக்க வேண்டியவை கிடைக்கப் பெறாமையால் சமூக எதிர்ப்பினை இவ்வாறு வெளிப்படுத்துவர். மற்றவர்கள் தம்மிடம் மிகுதியாக எதிர்பார்ப்பதாக எண்ணுவர்.

சமூக எதிர்ப்பு ஆளுமை: குழந்தைப் பருவத்தில் உருவாகும் அதிகார எதிர்ப்பு, பொய் கூறுதல், பள்ளி

செல்லாமை, வீட்டிற்கு வராமல் இரவில் வெளியே தங்கி விடுதல், திருடுதல் போன்ற நடத்தைக் கூறுகள் வயது வந்தோர் பருவத்தில் தொடர்ந்து காணப்படின் இவை, தனிமனிதனிடம் சமூக எதிர்ப்புக் கூறுகளாகின்றன.

எர்வி கிளக்சுபி (Hervey Ceeckspey) என்பார் பின்வரும் ஆளுமைக் கூறுகள் சமூக எதிர்ப்பு ஆளுமை யினரிடம் காணப்படுவன என்று வரையறுத்துள்ளார்.

1. மிகையான நுண்ணறிவு, கவர்ச்சி, நட்பு ஆகிய பண்புகள் காணப்படும். வரவேற்கத்தக்க முதல் கருத்துப்பதிவை (First Impression) ஏற்படுத்துவர்.
2. திரிபுணர்வு, திரிபுச் சிந்தனை, மனநிலை மாற்றம் ஆகியவை இல்லாதவர்-இயல்பான மனநிலை யுடையவர்.
3. பதற்ற நிலை அடையாதவர்.
4. பொறுப்பற்ற தன்மையினர்-தம்மைச் சார்ந்திருப்போரிடம் (எ-டு. தம் குழந்தைகள்) பொறுப்பில்லாதவர்.
5. பொய்வயப்பட்டவர்; நம்பிக்கை அற்றவர்; உண்மையை ஏளனமாக எண்ணுபவர்-கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்ற மாட்டாதவர்.
6. மற்றவர்களுக்குத் தாம் இழைக்கும் துன்பங்களுக்காக மனம் வருந்தாதவர்.
7. தகுந்த ஊக்கியின்றியே சமூக எதிர்ப்புச் செயலில் ஈடுபடுபவர்.
8. விவேகமற்றவர் - தம் செயல்களின் விளைவுகளைக் கண்டு மனம் தெளியாதவர்.
9. மற்றவர்களை விரும்பிய போதிலும் அன்பு செலுத்த முடியாதவர்; தன்னலவயப்பட்டவர்.
10. உவகை, களிப்புப் போன்ற மனவெழுச்சிகளை உணர முடியாதவர்.
11. அகநோக்குத்திறன் அற்றவர். தம் செயல்களைத் தாமே மதிப்பீடு செய்யமுடியாதவர்.
12. மற்றவர்களுடன் பயனுள்ள தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்ள முடியாதவர்.
13. விந்தையான நடத்தையுடையவர்.
14. தமக்குத்தாமே ஊறுவிளைவித்துக் கொள்ள மாட்டாதவர்.
15. சொந்த வாழ்க்கையில் இல்லற உறவு, மனநிறைவு தருவதாகவோ நிலைத்ததாகவோ இருக்காது.
16. வாழ்க்கையில் இலக்கு எதுவும் இல்லாதவர்; நிகழ்காலச் சம்பவங்களிலேயே வாழ்பவர்.

சமூக எதிர்ப்பு ஆளுமைக்குப் பரம்பரையும் காரணமாக இருக்கலாம். பொதுவாக ஆண் உயிரணுப்பிரிவில் 'எக்சு, ஒய்' என்ற உயிரணுக்கோல்களும் பெண் உயிரணுப் பிரிவில் 'எக்சு, எக்சு' என்ற உயிரணுக்கோல்களும் காணப்படுகின்றன. குற்ற நடத்தையில் ஈடுபட்டவர்களுள் பெரும்பாலோர் எக்சு (X), ஒய் (Y), ஒய் (Y), என்ற உயிரணுப்பிரிவை (அதாவது மிகையான ஓர் ஒய் உயிரணுக்கோல்) உடையவர்களாக இருக்கிறார்கள் என்று ஆய்வுகள் கண்டுபிடித்துள்ளன. ஆனால், இத்தகையோர் குறைந்த நுண்ணறிவினரா என்பதைப் பற்றி இன்னும் எந்த முடிவுக்கும் வரவில்லை. சமூக எதிர்ப்பு ஆளுமையினரிடம் மின் மூளைமானியின் (Electro Encephalogram) உதவியுடன் செய்யப்பட்ட ஆய்வுகள், இத்தகையோரிடம் மூளை அலைப்பிறழ்வுகள் காணப்படுவதாகக் கூறுகின்றன. அதாவது மின் மூளை அலைகள் முதிர்ச்சியடையாத நிலையில் இருப்பதைக் காட்டுகின்றன. இவ்வலைகள் முதிர்ச்சி நிலையை அடைவதற்குப் பல ஆண்டுகள் ஆகின்றன. ஆதலின் இத்தகையோர் நுண்ணறிவு முதிர்ச்சி குன்றியவர்களாக இருக்கலாம் என்று கருத இடமுள்ளது. மனவெழுச்சிக்கான வலிமை வாய்ந்த சாதாரண மனிதனுக்குத் தூண்டல்களாக அமையக் கூடியநிகழ்ச்சிகள், சமூக எதிர்ப்பு ஆளுமையினரின் தானியங்கு நரம்பு மண்டலத்தை, மனவெழுச்சி நிலைக்கு எழுப்புவதில்லை. குடும்பச் சூழ்நிலையும் சமூக எதிர்ப்பு ஆளுமைக்குக் காரணமாக அமைகின்றன. மேலும் மேம்பாட்டுளம், பயனுள்ள தன்முனைப்பு ஆகியவை உருவாகுவதற்கு இவர்களின் பெற்றோர் இவர்களுக்கு உறுதுணையாக இருக்காத காரணத்தினால், இவர்கள் பண்படா மனத்தின் கட்டளைகளை நிறைவேற்றுபவர்களாக இருக்கின்றனர்.

துணை நூல்:

Joseph Mehr, Abnormal Psychology, CBS College Publishing, New York, 1983.

**ஆளுமை மதிப்பீடு** என்பது, தனிமனிதனின் பண்புகளை உளவியல் விதிகளின் உதவியுடன் பலகூறுகளில் ஆராய்தலாகும். அன்றாட வாழ்க்கையில் ஒருவனுக்குப் பல்வேறு வகையான சமூக உறவுகள் ஏற்படலாம். இவ்வுறவுகளையொட்டிய நடத்தைகளைப் புரிந்து கொள்வதற்கு அவனுடைய ஆளுமையைப் பற்றிய அறிவு தேவைப்படுகிறது. தனிமனிதனிடம் காணக் கூடிய நிலையான நடத்தைக் கூறுகளை அவனுடைய ஆளுமைப் பண்புக்கூறுகள் என்று

கூறலாம். தன்னம்பிக்கையின்மை, பணிவு போன்ற இயல்புகள் ஆளுமைப் பண்புக் கூறுகள் எனப்படும். இவை ஒவ்வொருவரிடமும் எந்த அளவில் காணப் படுகின்றன என்பதனை அறிய, ஆளுமை மதிப்பீட்டு (Assessment of Personality) முறைகள் பயன்படுத்தப் படுகின்றன.

எல்லா மொழிகளிலும் ஆளுமைக் கூறுகளைக் குறிக் கும் எண்ணற்ற சொற்கள் உள்ளன. ஆல்போர்ட்டு (Allport) என்னும் உளவியல் அறிஞர், ஆங்கில மொழியின் அனைத்துச் சொற்களுள்ளும் கிட்டத் தட்ட ஐந்து விழுக்காட்டுச் சொற்கள், பண்புக் கூறு களைக் குறிப்பனவாகும் என்று கணக்கிட்டுள்ளார். அடிப்படையாகக் கொள்ளக்கூடிய ஆளுமைப் பண் புக் கூறுகளைப் பற்றி உளவியல் அறிஞர்கள், பல ஆராய்ச்சிகள் செய்துள்ளனர். இந்த ஆய்வுகள் கீழ்க் காணும் சிக்கல்களை எழுப்புகின்றன:

1. பண்புக் கூறுகள் பெயர்கள் ஆகியவற்றைக் கொண்ட பட்டியலுக்கு வரம்பு இருக்க முடியாது. இதனால்,ஆயிரக்கணக்கான பண்புச் சொற்களுக்கு ஏற்ற பண்புக் கூறுகளை வைத்துத் தனிமனிதனின் ஆளுமையை முடிவு செய்வது கடினமாகிறது.

2. இந்தப் பண்புக் கூறுகளுள் பல, ஒன்றை யொன்று சார்ந்திருப்பவையாகும். அவற்றைக் குழுக் களாகச் சேர்க்க முடியும். குறிப்பிட்ட சில பண்புக் கூறுகள், வேறுசில பண்புக்கூறுகளைச் சார்ந்திருப்ப வையாக இருக்கின்றன. இதனால், குறிப்பிட்ட சில பண்புகள் ஒருவரிடம் காணப்பட்டால், அவரிடம் அவற்றிற்கு ஒவ்வாத வேறுசில பண்புகள் காணப்பட மாட்டா என்று கூற முடியும்.

3. இப்பண்புக் கூறுகளுள் சில, ஒருவனிடம் எப் போதும் காணப்படலாம்; சூழ்நிலைக்கு ஏற்ப ஒரு வனிடம் அளவில் கூடியும் குறைந்தும் காணப்பட லாம்.

இரேமண்டு காட்டெல் (Raymand Cattell) என் பார், மனிதர்களின் ஆளுமையைப் பற்றிய செய்தி களை மூவகைகளாகப் பிரித்துள்ளார். அவையாவன:

1. **வாழ்க்கைச் செய்திகள்:** மற்றவர்கள் ஒரு தனி மனிதனின் நடத்தையைப் பற்றிய உற்று நோக்கல் களின் அடிப்படையில் பெறும் செய்திகளும் மதிப்பீடு களும் வாழ்க்கைச் செய்திகள் எனப்படுகின்றன. எ-டு. மனவெழுச்சி வயப்பட்ட அமைதியான, மரபு ஒட்டிய/மரபு நீங்கிய, அக்கறையுள்ள / அக்கறை யற்ற, பண்புகள்.

2. **தன் விளக்க வினா நிரல்கள்:** இவை ஆட்படுநர் தம்மைப்பற்றித் தாமே கொடுக்கும் செய்திகளாகும்.

3. **அமைப்புசார் புறவயச் சோதனைச் செய்திகள்:** ஆட்படுநருக்குத் தாம் மேற்கொள்ளும் சோதனை எத்தகைய பண்புகளை மதிப்பீடு செய்வதற்காகக் கொடுக்கப்படுகிறது என்பது தெரியக்கூடாது. காட் டெலும் வார்பர்ட்டனும் (Warburton) நானூறுக்கு மேற்பட்ட இத்தகைய சோதனைகளை அமைத்துள் ளனர். வாழ்க்கைச் செய்திகளும் ஒன்றுக்கொன்று முரண்பாடு இன்றி இருக்கின்றனவா என்று சோதித் துப் பார்த்த பின்னர்க் காட்டெல் அவற்றின் பண் புத் தரமிட்டு புள்ளிகளுக்கு ஏற்ப அவற்றை வரிசைப் படுத்தினார். இவ்வரிசைப்படுத்தலைப் பின்னுள்ள அட்டவணையில் காணலாம். ஆளுமைச் சோதனை களின் நுட்பங்கள் மக்கள் எல்லோருக்கும் தெரிந்து விடுவதால், ஆட்படுநர், தம்மிடம் உள்ள எத்தகைய பண்புகளை அளவீடு செய்வதற்கு எத்தகைய சோத னைகள் பயன்படுத்தப்படுகின்றன என்பதையும், சோதனையில் பயன்படுத்தப்படும் குறியீடுகள் எப் பண்புகளைக் குறிப்பிடுகின்றன என்பதையும் அறிந் திருந்தால், சோதனையின் முடிவுகள் நம்பிக்கைக் குரியனவாக இருக்க முடியாது. ஏனெனில் ஆட்படு நர் தம் சொந்தப் பண்புகளை மறைத்துத் தம்மிடம் இல்லாத பண்புகளை இருப்பனவாகக் கொண்டு, விடைகளை முரண்பாடாகக் கொடுப்பர். இக்கார ணத்தினால் காட்டெல், எவருக்கும் புரியாத பெயர் களைப் பண்புகளுக்குக் கொடுத்தார். பாதுகாக்கப் பட்ட மனவெழுச்சிக் கூருணர்ச்சி (Protected emoi-tional Sensitivity) என்பதனைப் பிரெம்சியா (Premsia) என்று காட்டெல் குறிப்பிட்டார். அட்டவணையில் காணப்படும் பதினாறு ஆளுமைப்பண்புகளும் ஒருவனி டம் எந்த அளவுக்குக் காணப்படுகின்றன என்பதை அளவீடு செய்வதற்காக அவர் ஓர் எழுதுகோல்-தாள் சோதனையை (Paper and Pencil Test) அமைத்தார். இது ஆளுமையின் பதினாறு காரணி-வினாநிரல் (Sixteen Personality Factor Question naire) எனப்படும். இப்பதினாறு காரணிகளைத் தவிர வேறு சில காரணிகளும் இருக்கலாம் என்று காட்டெல் எண்ணினார். அட்டவணையில் காணப் படும் விளக்கச் செய்திகள் உண்மையாக வாழ்க்கைச் செய்திகள் ஆகும் என்றும், கொடுக்கப்பட்டுள்ள நான்கு விளக்கக் காரணிகளைத் தவிர $வி_5$ $வி_6$ $வி_7$ என்னும் காரணிகளும் இருக்கின்றன என்றும் அவர் எண்ணினார். எல்லாக் காரணிகளைக் காட்டிலும் முதன்மையிடம் பெற்றிருப்பவை உணர்ச்சி மாறு நிலை 'அ', மிகை அறிவு 'ஆ', மிகைத் தன்முனைப்புத் திறன் 'இ', என்னும் மூன்று காரணிகளே ஆகும் என் றும் அவர் கருதினார். அ காரணியுடன் தொடர் புள்ள செய்திகள் இன்முகம், இனிய தன்மை, இணக் கம், ஒத்துழைப்பு, மற்றவர்களிடம் அக்கறை, தகவமைவு ஆகிய பண்புகளைக் குறிப்பிடும் உடன்

பாட்டு நிலையும், குற்றம் காணும் தன்மை, வளைந்து கொடுக்காத தன்மை ஆகிய பண்புகளைக் குறிப்பிடும் எதிர்மறை நிலையும் ஆகும். இவ்விரு எல்லைகளுக்கும் இடையில் நடுத்தர நிலையில் காணப்படும் பண்புகள், இயல்பு நிலையைக் குறிக்கின்றன. ஆ காரணி, மனப்பாங்கு, நுண்ணறிவு ஆகியவற்றைக்காட்டிலும், ஆற்றலையே மிகுதியாக மதிப்பீடு செய்கிறது.

ஆளுமையின் பதினாறு காரணி வினா நிரலில் இ காரணிக்கு மிகைப் புள்ளிகள் எடுப்போர், தம் நெடுநாளைய பழக்க வழக்கங்களைத் தேவைகளுக்கும் சூழ்நிலைக்கும் தக்கவாறு மாற்றிக் கொள்ளும் இயல்பும், இலக்குகளை அடையப் பெறாவிடில் ஏற்படும் மனக் குலைவினை ஏற்றுக் கொள்ளும் இயல்பும் உடையவராக இருப்பர். இத்தகையோர், அமைதியும் மெய்ந்நிலை உணர்வும் (Realistic), முதிர்ந்த அறிவும் கொண்டவராக இருப்பர். இ காரணியின் எதிர்மறைநிலையில் இருப்போர், உளத் தடுமாறல்களும் முடிவெடுக்க இயலாமையும் கொண்டவராகக் காணப்படுவர். இவர்கள் இ காரணியில் குறைவான புள்ளிகள் எடுப்பர். இவர்கள் மனநிலை மாற்றங்களும் உளச் சிக்கல்களும் நிறைந்தவராக இருப்பர்.

அட்டவணையில் காணப்படும் பதினாறு காரணிகளையும் காட்டெல், ஆதாரப் பண்புகள் (Source Traits) என்று குடுப்பிட்டார். சில ஆதாரப் பண்புகள் பரம்பரை வழி அமைந்தவை என்றும், மற்றவை சூழ்நிலைக்குத் தக்கவாறு மாற்றம் பெறுகின்றன என்றும், இவை இரண்டினின்றும் மேற்பரப்புப் பண்புகள் (Surface Traits) உருவாகின்றன என்றும், காட்டெல் கருதினார். மேற்பரப்புப் பண்புகளைப் புறவயச் சோதனைகளின் உதவியால் அறியலாம். இச்சோதனைகளிலிருந்து பெறப்படும் செய்திகள் சோதனைச் செய்திகள் (T. Data) எனப்படுகின்றன. சோதனைச் செய்திகளிலிருந்து பெறப்படும் காரணிகள், விளக்கச் செய்திகளிலிருந்தும் வாழ்க்கைச் செய்திகளிலிருந்தும் பெறப்படும் காரணிகளிலிருந்து வேறுபடுகின்றன. ஆயினும் பதினாறு ஆளுமைக் காரணிச் சோதனைகளை ஏற்கும் ஆட்படுநர்களின் விடைத்தாள்களில் காணப்படும் அளவைப் புள்ளிகள், ஒன்றுடன் ஒன்று இணைப்புள்ளனவா என்று சோதிக்கப்பட்டு, அப்பதினாறு பண்புகளை மட்டுமே காரணிப் பகுப்பாய்வு செய்ய முடியும். உளவியலில் ஆளுமை, நுண்ணறிவு போன்ற கூறுகளை உருவாக்குவதற்கு அடிப்படையாக இருக்கும் காரணிகளைக் கண்டுபிடித்துப் பல்வேறு சோதனைகளுக்கிடையில் காணப்படும் இணைப்பினை அறிய உதவும் புள்ளியியல் முறை, காரணிப்பகுப்பாய்வு எனப்படும். இதனைக் காரணிப் பகுப்பாய்வின் காரணிப்பகுப்பாய்வு என்றும் சொல்லலாம். இப்பகுப்பாய்வின் முடிவாகப் பெறப்படும் பண்புக் கூறுகள் இரண்டாமிடக் காரணிகள் எனப்படுகின்றன. இவ்விரண்டாமிடக் காரணிகள், சோதனைச் செய்திகளுடன் தொடர்புள்ளனவாகச் சில சமயங்களில் காணப்படுகின்றன.

காட்டெலின் பதினாறு ஆளுமைக் காரணி வினா நிரல் அளவீடு செய்யும் பண்புகள்

புள்ளிகளின் விளக்கங்கள்

| | காரணி | மிகை | குறை |
|---|---|---|---|
| 1. | அ | உணர்ச்சி மாற்ற நிலை தாராளமாகப் பழகுதல்<br>Affectothymia-Outgoing | உணர்ச்சி மாறா நிலை கட்டுப்பாட்டுடன் பழகுதல்<br>Sizothymia – Reserved |
| 2. | ஆ | மிகை 'நு' – நுண்ணறிவு மிகை<br>High 'g'-Intelligent | குறை 'நு' நுண்ணறிவுக் குறை<br>Low 'g' Less intelligent |
| 3. | இ | தன்முனைப்பு வலிமைமிகுதி-நிலையான<br>High ego strength-Stable | தன்முனைப்பு வலிமைக்குறைவு மனவெழுச்சி வயப்பட்ட<br>Low ego strength – Emotional |
| 4. | ஈ | ஆதிக்கம் – வலியுறுத்தும்<br>Dominance-Assertiveness | பணிவு – அடக்கமான<br>Submissiveness – Humble |

| | | | |
|---|---|---|---|
| 5. | உ | உற்சாகம் - கவலையற்ற<br>Surgency-Happy-go-lucky | உற்சாகமற்ற - காரியமனப்பான்மை கொண்ட<br>Sober - Desurgency |
| 6. | ஊ | மிகை மேம்பாட்டுளம்-மனச்சாட்சி வயப்பட்ட<br>High Super ego-Conscienteous | குறை மேம்பாட்டுளம் - சந்தர்ப்ப வயமான<br>Low Super ego - Expedient |
| 7. | எ | பார்மியா - புதுச் செயல் ஈடுபாடு<br>Parmia-Venturesome | திரெக்டியா - கூச்சமுள்ள<br>Threctia - Shy |
| 8. | ஏ | பிரெம்சியா - நெகிழ்வுளம்<br>Premsia-Tenderminded | ஆரியா - கடின உளம்<br>Harria - Tough minded |
| 9. | ஐ | இறுக்க உளம் - ஐயங்கொண்ட<br>Protension-Suspicious | தளர்உளம் - நம்பிக்கை கொண்ட<br>Alaria - Trusting |
| 10. | க | ஆடியா - கற்பனைத்திறன் உள்ள<br>Autia-Imaginative | பிராக்சர்னியா - செயல்வழியமைந்த<br>Praxernia- Practical |
| 11. | த | தேரறிவு - தேரறிவு வாய்ந்த<br>Shrewdness-Shrewd | கூரறிவற்ற - வெளிப்படையான<br>Artlessness - Forthright |
| 12. | ப | குற்றப்பாங்கு - அச்சமடையும்<br>Guilt proneness-Apprehensive | உறுதிப்பாங்கு - அமைதியான<br>Assurance - Placial |
| 13. | வி$_1$ | தீவிரச் செயற்பாடு - சோதனைசெய்யும்<br>Radicalism-Experimenting | பழமைப்பாங்கு - பழமைப்பாங்குடைய<br>Conservatism - Conservative |
| 14. | வி$_2$ | தன்னிறைவு - தன்னிறைவுள்ள<br>Self sufficiency-self sufficient | குழுச்சார்பு - குழுச்சார்புள்ள<br>Group adherence-Group dependent |
| 15. | வி$_3$ | மிகைத் தற்கருத்து - கட்டுக்கடங்கிய<br>High self concept-controlled | ஒருங்கமைவுக்குறை - கட்டுப்பாடற்ற<br>Low integrative - Indisciplined |
| 16. | வி$_4$ | வேலைகாரணமாக மிகுதியான உள இறுக்கம் - உள இறுக்கமான<br>Ergic tension-tense | வேலை காரணமாக குறை உள இறுக்கம் - ஒய்வு மனப்பான்மையுள்ள<br>Low ergic tension - relaxed. |

குறிப்பிட்ட செயலில் ஒருவர் ஈடுபடும்பொழுது அவருடைய நடத்தையில் காணப்படும் கூறுகளை மேற்பரப்புப் பண்புக் கூறுகள் என்று காட்டெல் கூறினார். ஆதாரப் பண்புக் கூறுகள் என்பன, ஒருவனிடம் வேரூன்றி விட்ட பண்புக் கூறுகளைக் குறிக்கின்றன. இவற்றை நேரடியாக உற்று நோக்க இயலாது. ஆனால், இவை தனிமனிதனின் நடத்தைகளை முடிவு செய்கின்றன. ஆதாரப் பண்புக் கூறுகள் மேற்பரப்புப் பண்புக் கூறுகளை முடிவு செய்கின்றன. மேற்பரப்புப் பண்புக் கூறுகள் நிலைத்த தன்மையனவாக இருப்பதில்லை. எடுத்துக்காட்டாக, தற்காப்பின்மை உணர்வு ஓர் ஆதாரப் பண்புக் கூறாகும். அதை நேரடியாக உற்று நோக்க இயலாது. ஆனால் அதனை ஒருவன், தன்னுடைய பொதுவான அமைதியின்மை, அச்சம் மனவெழுச்சிச் சமநிலையின்மை ஆகிய ஆதாரப் பண்புக் கூறுகள் வாயிலாகவும் வெளிப்படுத்தலாம். காட்டெல் வகைப் படுத்திய ஆதாரப்பண்புக் கூறுகளைப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

| அடிப்படைப் பண்புக் கூறுகள் | அடிப்படைப் பண்புக் கூறுகளுக்கு நேர் எதிரான பண்புக் கூறுகள் |
|---|---|
| 1. ஆர்வமுள்ள, ஏற்குந்தன்மையுள்ள பெருந்தன்மையுள்ள | ஏற்குந்தன்மையற்ற, பகைமையுள்ள |
| 2. நுண்ணறிவுடைய, சுதந்திரச் சிந்தனைத் திறமுள்ள | முட்டாள்தனமான, சிந்திக்கும் திறனற்ற |
| 3. மனவெழுச்சிச் சமநிலை, மெய்ந்நிலையுணர்வு | மனவெழுச்சிச் சமநிலையின்மை, மெய்ந்நிலை உணர்வின்மை |
| 4. ஆதிக்க மனப்பான்மை, தன்கருத்தை வலியுறுத்துகிற | பணிவு மனப்பான்மை, தன்கருத்தை வலியுறுத்தாத |
| 5. மகிழ்ச்சியான | துன்பமான |
| 6. பரிவுகாட்டுகிற | கடின உள்ளம் கொண்ட |
| 7. அழகியல் சிந்தனை உணர்வு | பண்பாடற்ற உணர்வு |
| 8. மனச்சாட்சிக்கு ஏற்ப நடத்தல், பொறுப்பான நடத்தை | முன்கோபம்-பொறுப்பற்ற நடத்தை |
| 9. ஒத்துழைக்கும் தன்மை | ஒதுங்கியிருக்கும் தன்மை |
| 10. தீவிரம் – விரைவு | ஊக்கமின்மை - உற்சாகமின்மை |
| 11. மிகையுணர்வு | குறையுணர்வு |
| 12. நட்பும் நம்பிக்கையும் | ஐயமும் பகையும். |

ஆளுமைச் சோதனைகளை அமைக்கும் பொழுது அவற்றில் நம்பகத்தன்மை (Reliability), ஏற்புத் தன்மை (Validity) ஆகிய இரு தகுதிகளும் இருக்கின்றனவா என்பதைச் சோதித்துப் பார்த்தலும், இத்தகுதிகளுள் ஏதேனும் ஒன்றோ இரண்டோ அமையப் பெறாவிடின் இத்தகுதிகள் அமையுமாறு சோதனைகளை மாற்றியமைத்தலும் இன்றியமையாதனவாகும். ஆட்படுநர்களிடம் ஆளுமைச் சோதனைகள் ஒருமுறை கொடுக்கப்பட்டதன் விளைவாகப் பெறும் மதிப்பீட்டு அளவைகளுக்கும் அதே ஆட்படுநர்களிடம் அதே சோதனைகளை மறு முறை கொடுத்துப் பெறும் மதிப்பீட்டு அளவைகளுக்கும் வேறுபாடுகள் இல்லையென்றாலும் அத்தகைய வேறுபாடுகள் மிகக் குறைவாக இருந்தாலும் அத்தகைய சோதனைகள் நம்பகத்தன்மை உடையவை என்று கூறப்படும்.

காரணிப் பகுப்பாய்வு முறையை விளக்கும் பொருட்டு மாணவர்குழு ஒன்றினுக்கு எவரேனும் ஒரு குறிப்பிட்ட தலைவரின் அரசியல் வாழ்க்கை பற்றிய ஒரு செய்திப்படத்தைக் காட்டிய பின்னர், அவர்களிடம் அத்தலைவரின் பல ஆளுமைக் கூறுகளை ஒரு பத்துப்புள்ளி அளவையில் குறிப்பிடுமாறு கூறுவதாக வைத்துக் கொண்டால், அப்புள்ளிகள் முற்றும் இல்லை (0) என்பதிலிருந்து மிகையாக (10) என்னும் விடை வரையில் பரவியிருப்பதாகவும், தலைவரின் பண்புகள், அடக்கம், ஆதிக்கத்தன்மை, ஒழுங்கமைவு, தன்னம்பிக்கை, திறமை, படைப்பாற்றல், புறமுகம் என்னும் வரிசையில் பட்டியல் படுத்தப்பட்டிருப்பதாகவும் வைத்துக் கொள்ளலாம். இப்பண்புத் தொகுதிகளில் ஒவ்வொன்றிற்கான தனித்தனிப் பண்புகளும் மற்றப் பண்புத் தொகுதிகளுடன் இணைப்பாய்வு செய்யப்பட்டால், அட்டவணையில் காட்டியுள்ளபடி இணைப்பு (Correlation Matrix) அமையும்.

ஆளுமைப் பண்புகளின் காரணிப் பகுப்பாய்வு அட்டவணை

| | ஆதிக்கம் | ஆரவாரம் | அடக்கம் | ஒழுங்கமைவு | தன்னம்பிக்கை | திறமை மிக்க | படைப் பாற்ற லுடைய |
|---|---|---|---|---|---|---|---|
| ஆதிக்கம் | — | +0.9 | −0.6 | 0.1 | 0.0 | 0.1 | −0.1 |
| ஆரவாரம் | | — | −0.7 | 0.0 | —0.1 | —0.1 | 0.1 |
| அடக்கம் | | | — | 0.1 | 0.1 | 0.1 | 0.0 |
| ஒழுங்கமைவு | | | | — | 0.0 | 0.1 | —0.1 |
| தன்னம்பிக்கை | | | | | — | 0.8 | 0.6 |
| திறமைமிக்க | | | | | | — | 0.9 |
| படைப்பாற்றலுடைய | | | | | | | — |

ஆதிக்கம், அடக்கம் ஆகிய இரு பண்புத் தொகுதி களுக்கும் இடையே உள்ள இணைப்பு என்ன என்று கண்டுபிடிக்க வேண்டுமாயின், ஆதிக்கம் என்ற இடத் திலிருந்து வலப்புறமாகச் சென்று அடக்கம் என்னும் இடம் வரை செல்ல வேண்டும். அந்த இடத்தில் இருக்கும் எண் - 0.6. அட்டவணையின் குறுக்கு வெட் டாகச் சில புள்ளிகளில் சிறு கோடுகள் காணப்படுகின் றன. இப்புள்ளிகள் ஒவ்வொரு மாறிக்கும் (Variable) காணப்படும் இணைப்பைக் குறிக்கின்றன. இவ் விணைப்பு எப்பொழுதும் 1 எனவே இருக்கும். இவ் விணைப்புக் குறியீட்டுக் கோடுகளுக்குக் கீழே எண் எதுவும் காணப்படவில்லை. ஏனெனில் அந்த எண்கள் குறுக்குக் கோட்டிற்கு மேலே காணப்படும் எண் களையே ஒத்திருக்கும். இந்தக் குறுக்குக் கோடு, அட்டவணையை இரு சரிபாதியாகப் பிரிக்கிறது. இரு பாதிகளும் ஒன்றையொன்று எல்லா வகைகளி லும் ஒத்திருக்கின்றன. ஆதலின் குறுக்குக் கோட்டின் கீழே இருக்கும் எண்கள் காட்டப்படுவதில்லை. அட்ட வணையில் ஆதிக்கம் ஆரவாரம் ஆகியவை ஒன்றுடன் ஒன்று உடன்பாடாக இணைப்புப் பெறுகின்றன. (+0.9). இவை ஒவ்வொன்றும் அடக்கம் என்பதனு டன் எதிர்மறையாக இணைவு பெறுகிறது. (-0.6; -0.7) இம்மூன்று பண்புகளும் பகட்டுத்தன்மை (Flamboyance) என்றே ஒரே ஆளுமைக் கூறினுக்குள் அடங்கும் எனக் கொள்ளலாம். தன்னம்பிக்கை- திறமை (0.8), தன்னம்பிக்கை-படைப்பாற்றல் (0.6), திறமை-படைப்பாற்றல் (0.9) ஆகிய தொகுதிகளுக் கிடையே காணப்படும் இணைப்புகள் உடன்பாடா னவை ஆகும். இவை மூன்றும் ஆற்றல் என்னும் பொதுவான பண்புடன் தொடர்பு கொண்டவை என்று கருதலாம். பகட்டுத்தன்மைத் தொடர்பான பண்புக் கூறுகள் ஆற்றல் தொடர்பான பண்புக் கூறு களுடன் மிக மெல்லிய இணைப்பையே கொண்டுள் ளன. (கெழு:-0-1 இலிருந்து 0.1 வரை). ஆதலின் பகட்டுத்தன்மை, ஆற்றல் ஆகியவை மாணவர் களின் புலன்காட்சியில் இத்தலைவரிடம் காணப்படும் இருவேறு காரணிகள் என்று அறியலாம். அதா வது பகட்டு என்னும் பண்பு இத்தலைவரிடம் மிகை யாக இருப்பதாகக் காண்பவர், அவரிடம் ஆற்றல் மிகுந்தோ குறைந்தோ இருப்பதாகக் காண்பர். பகட்டுத்தன்மை அவரிடம் குறைந்து இருப்பதாகக் காண்பவரும் இதைப்போன்றே உணரலாம். ஒழுங் கமைவு என்னும் பண்பு, அட்டவணையில் மற்ற எந் தப் பண்புடனும் இணையாமல் இருப்பதால், இது முன் குறிப்பிட்ட இரு பண்புகளுடனும் தொடர்பற்ற தனிப்பண்பு எனக் கொள்ளலாம். அதாவது, ஒருவர் இத்தலைவரை பகட்டுத்தன்மையுடையவர் என்று கருதினாலும், ஆற்றல் மிக்கவர் என்று கருதினாலும், அக்கருத்திற்கு எவ்விதப் பாதிப்பும் இன்றி அவர் ஒழுங்கமைவு பெற்றவர் அல்லது அற்றவர் எனக் கருத முடியும்.

தனிமனிதனின் பண்புக் கூறுகளைப் பற்றிய தொடர்பற்ற தாறுமாறான செய்திகளைக் கணிதத் திட்பத்துடன் எடுத்துக் கூறும் திறன், காரணிப் பகுப் பாய்வின் சிறப்பாகும். மாணவர்கள் கொடுக்கும் தலைவரின் பண்பு பற்றிய கருத்துகளைப் பகட்டுத் தன்மை, ஆற்றல், ஒழுங்கமைவு என்னும் மூன்று

பெருந்தலைப்புகளின் கீழ் வகைப்படுத்தலாம். பெரிதும் மிகுதியான பண்புகள் வகைப்படுத்தப்படும் பொழுது, காரணிப்பகுப்பாய்வில் கணிப்பொறி முறை (Computer System) பயன்படுத்தப்படுகிறது. ஒவ்வொரு காரணியின் தொடர்பான பண்புகளையும் துல்லியமாக மதிப்பீடு செய்து, காரணிகளை ஒன்றுக்கொன்று குறுக்கீடு இல்லாமல் தனிப்பட்டவைகளாக் குவதற்காக, இத்தகைய கணிப்பொறி முறை பயன்படுகிறது. மேலும் காரணிகள் பகுக்கப்படும்பொழுதும் பெயரிடப்படும்பொழுதும் அகவயப்பட்ட மதிப்பீடுகள் ஏற்பட வாய்ப்புகள் மிகையாக இருக்கின்றன. எடுத்துக்காட்டாக, பகட்டுத்தன்மை என்னும் பண்புக் கூறு சிலரால், வெளிப்பகட்டு என்றோ வேறு சிலரால் மக்களிடையே புகழ் என்றோ குறிப்பிடப்படலாம். ஆற்றல் என எடுத்துக் கொள்ளப்பட்ட பண்புக்கூறு, சுதந்திர மனப்பான்மை என்று குறிப்பிடப்படலாம். இதுவே காரணிப் பகுப்பாய்வு முறையின் குறை என்று கருதப்படுகிறது.

காட்டெல் குறிப்பிட்ட புறவயப்பட்ட, கவலையற்ற, புதுமைச் செயல் ஈடுபாடு கொண்ட என்னும் மூன்று பண்புகளின் ஒருங்கிணைவு, ஐசங்கினால் அமைக்கப்பட்ட ஆளுமைப்பட்டியலை ஒத்திருக்கிறது. காட்டெல் ஆதாரப் பண்புகளைத் தேர்ந்தெடுத்த முறை, மேலெழுந்தவாரியாகவும் புள்ளியல் கட்டுத்திட்டங்களுக்கு உட்படாததாகவும் இருப்பதாக உளவியலார் பலர் குறைகூறுகின்றனர். ஆயினும் காட்டெலின் ஆளுமைச் சோதனை முறை, இன்றும் நிறுவனங்களில் பயன்படுத்தப்படுகிறது. ஆளுமையின் பதினாறு காரணிச் சோதனைமுறையின் உதவியால் வெளிப்படையாகக் கூறும் தன்மை (அ) கட்டுப்பாட்டுடன் உரையாடும் இயல்பு, பதற்ற நிலை (ஆ) தன்முனைப்பு வலிமை, அகமுகம்/புறமுகம், மன வெழுச்சி உறுதி/ மனவெழுச்சி உறுதியின்மை ஆகிய பண்புகளை இச்சோதனை முறையிலும், ஐசங்கின் ஆளுமைப்பட்டியலால் செய்யும் மதிப்பீட்டு முறைகளிலும் ஆய்ந்து காணும்போதும், ஒற்றுமைகள் காணப்படுகின்றன. புறத்தேற்றச் சோதனைகளில் ஆட்படுநர், தம்மை இயல்பு ஆளுமையினராகத் தெரிவிக்குமாறு விடைகளை அளித்து, இச்சோதனையின் நம்பகத்தன்மையைக் குறைக்க முடியும். மேலும் ஆட்படுநர் சோதனையை ஏற்கும்பொழுது, இருக்கும் மனநிலையைப் பொறுத்துச் சோதனைக்கு அளிக்கப்படும் துலங்கல்களும் விடைகளும் அமையும். இதனால் ஆட்படுநரின் உண்மையான ஆளுமைக் கூறுகள் கண்டுபிடிக்கப்படாமல் மறைந்து விடுகின்றன. இச்சோதனை, தனிமனிதனின் பண்புகள் அவனுக்குத் தெரியாமலே கண்டு பிடிக்கப்பட்டுச் சில சந்தர்ப்பவாதிகளால் பாழ்பயனுக்கு ஆளாக்கப்படக் கூடிய வாய்ப்பினையும் ஏற்படுத்துகிறது என்று சமூகவியலார் கூறுகின்றனர்.

தனிமனிதனின் ஆளுமைப் பண்புகளை அறியச் சோதிடம், கைரேகைஇயல், கையெழுத்தியல் போன்ற பல்வேறு முறைகள் மிகப் பழைய காலத்திலிருந்தே கையாளப் பட்டு வந்திருக்கின்றன. ஆளுமையின் ஒரு சில பண்புக் கூறுகளை அறியக் கால் (Gall) என்பார், தலையமைப்பியல் (Phrenology) என்னும் முறையைத் தோற்றுவித்தார். இலம்பிரோசோ (Lombroso) என்பார், முகஅமைப்பியல் (Physiognamy) என்னும் முறையையும் தோற்றுவித்தார். இவை உளவியல் அறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்படவில்லை.

ஆளுமை மதிப்பீட்டு முறைகளில் தலையாய சிலவற்றை இங்குக் காணலாம்:

1. **நேர்காணல் முறை:** இம்முறையில் தனிமனிதனை நேரில் கண்டு உரையாடி அவன் பேசும் முறை, விடையளிக்கும்போது ஏற்படும் தடைகள், நேர்காணலில் அவனுடைய மனவெழுச்சிகள் வெளிப்படும் முறை, ஆகியவற்றைக் கருத்தில் இருத்தி, அவனுடைய ஆளுமைப் பண்புகள் பற்றிய முடிவுக்கு வரமுடியும். நேர்காணலில் கேட்கப்படும் வினாக்கள் வரிசைப்படி அமைக்கப்பட்டு நேர்காணல் முறைகள் தரப்படுத்தப்பட்டிருக்கும்.

ஆட்படுநர் எல்லோருக்கும் ஒரே தன்மையான நேர்காணல் முறை கையாளப்படும். சூழ்நிலை மாற்றம், ஆட்படுநரின் சமூகப் பண்பாட்டு நிலை ஆகியவற்றிற்கு ஏற்ற நேர்காணல்கள் மாற்றியமைக்கப்படும். நேர்காணல் முறையில் ஆட்படுநரின் ஒப்புதல் இருப்பின், அவருடைய வரலாறு எழுதுமாறு கேட்கப்படும். தன்வரலாறுகளில் குடும்ப வரலாறு, குழந்தைப் பருவ அனுபவங்கள், உடல் வளர்ச்சி பற்றிய விவரங்கள், பள்ளி வாழ்க்கை பற்றிய குறிப்புகள், ஆர்வங்கள், நண்பர்கள் பற்றிய விவரங்கள், எதிர் காலத்திட்டங்கள் போன்றவை இடம்பெறும். நேர் காண்பவர், ஆட்படுநருடன் மன இணைப்பு ஏற்படுத்துதல் இன்றியமையாததாகும். நேர்காணல் நோக்கமும் ஆட்படுநருக்குத் தெளிவுபடுத்தப்பட வேண்டும். ஆட்படுநரின் ஒப்புதலுடன் நேர்காணல், நாடாப் பதிவு செய்யப்படலாம். ஒப்புதல் இல்லையெனில் நேர் காண்போர் குறிப்புகள் எடுத்துக் கொள்ளலாம். நேர்காணல் முறையில் ஒருவனின் ஆளுமையைப் பற்றிய முடிவான மதிப்பீடு செய்வது கடினமான முறையாகும். இம்முறை அகவயப்பட்டதாகும். ஒருவனைப் பற்றிய முரண்பாடான முடிவுகளை நேர் காண்போர் பலர் தெரியப்படுத்தினால், எது உண்மையானது என்று முடிவு செய்தல்

இயலாது. நேர்காணலின்போது நேர் காண்போர், தம் மனப்பான்மைகளையும் மனவெழுச்சிகளையும் வெளிப்படுத்தலாகாது.

**தரஅளவு கோல்:** குறிப்பிட்ட ஆளுமைப்பண்புகள், தனிமனிதனிடம் எந்த அளவிற்கு அமைந்திருக்கின்றன என்று அறிய உதவும் முறையே, தரஅளவு கோல் எனப்படும். ஒருவனிடம் காணப்படும் ஆளுமைப் பண்பின் அளவு, பொதுவாக 5, 7 அல்லது 9 புள்ளிகள் கொண்ட ஓர் அளவு கோலில் குறிக்கப்படுகிறது. இப்புள்ளிகள் அப்பண்பின் பல நிலைகளைக் குறிப்பவையாகும். ஒவ்வொரு புள்ளிக்கும் குறிப்பிட்ட மதிப்பு அல்லது தரஅளவு கொடுக்கப்பட்டிருக்கும். ஆளுமை மதிப்பீடு செய்பவரின் முடிவுகளை, பல அலகுகள் கொண்ட அளவுகோலில் குறிக்க முடியும். தரஅளவு கோல்கள் பலவகைப்படும்.

வருணனைத் தரஅளவுகோலில் மதிப்பிடப்படும் பண்பின் பல அளவுகளைக் குறிக்கவல்ல பல வருணனைகள் காணப்படும். இவ்வருணனை அளவுகளுக்குக் குறிப்பிட்ட மதிப்பெண்கள் தரப்பட்டிருக்கும். எடுத்துக்காட்டாகத் 'தன் கருத்தை வலியுறுத்தல்' என்னும் ஆளுமைப்பண்பு பற்றிய அளவுகோல் கீழே கொடுக்கப்பட்டுள்ளது: காண்க: படம் 1.

வரைபடத் தரஅளவுகோலில் ஒரு நேர்கோட்டின் மேல் அலகுகள் குறிக்கப்பட்டிருக்கும். இவை தரப்படுத்தப்படவேண்டிய பண்பின் மிகக் குறைந்த அளவிலிருந்து மிகுந்த அளவுவரை வரிசைப்படி குறிப்பனவாக அமைந்திருக்கும். மதிப்பிடப்படும் பண்பின் தரத்தினைத் தெளிவாக, அதற்கேற்ற அலகுக்கு நேராகக் குறிப்பிடல் வேண்டும். காண்க: படம் 2.

**தரமிடுதலின் பிழைகள்:** பிறருடைய பண்புகளை அளவிடும் பொழுது எல்லோரையும் அப்பண்புகளின் சராசரி அளவைக் குறிக்கும் புள்ளியிலேயே வைப்பது இயற்கையாக நிகழக்கூடும் பிழையாகும். இது தாராளமனப்பான்மைப் பிழை (Generosity Error) எனப்படும். ஒரு குறிப்பிட்ட பண்பு ஒருவனிடம் உள்ள அளவைக் கொண்டு, அதனுடன் தொடர்பு கொண்ட வேறு பண்புகளும் அதே அளவுக்கு அவனிடம் உள்ளன என்று முடிவு கட்டுவதே இப்பிழையாகும். இது ஒளிவிளைவு (Halo Effect) எனப்படும்.

காப்புணர்வின்மை, ஒதுங்கியிருத்தல் போன்ற சில பண்புகளைத் தரமிடுதல் கடினம். இப்பிழைகளைத் தவிர்க்க இப்பண்புகளின் பெயர்களோடு அவற்றை விவரித்தல் வேண்டும். பண்புகளின் பெயர்களுடன் அவை வெளிப்படக்கூடிய நடத்தைகளை

படம் 1.

பண்புக்கூறு: (தன்கருத்தை வலியுறுத்தல்)

| | தரஅளவுகள் | | | |
|---|---|---|---|---|
| +2 | +1 | 0 | −1 | −2 |
| பிறர்கருத்தை ஏற்காத தன்மை—பிறர் கருத்திற்கு மதிப்பு அளிக்காமை-ஆதிக்கப் போக்கு—தன்கருத்தே சிறந்தது என்று வாதாடுதல். | தன்கருத்திற்கு மறுப்புத் தெரிவிக்கப்பட்டால் அதனை ஏற்காமை—தீவிரமாகத் தன் கருத்தை வலியுறுத்தல். | சூழ்நிலை, காரண காரியம், தன் கருத்தின் சிறப்பு—இவற்றை ஆராய்ந்து இடம் பொருள் அறிந்து தன் கருத்தை வலியுறுத்தல். | தன்கருத்திற்கு மறுப்புத் தெரிவிக்கப்பட்டவுடன் மறுப்பின்றித் தன்கருத்தை விட்டு விடல் — மறுப்பை உடனே ஏற்றுக் கொள்ளல். | தான் என்னும் உணர்வு இல்லாத தன்மை—பணிவு மனப்பான்மை. |

படம் 2.

எ.டு: பண்புக்கூறு -(ஊக்கமுடைமை.)

| மிக்க அதிகம் | அதிகம் | சராசரி | குறைவு | மிகக்குறைவு |
|---|---|---|---|---|
| +2 | +1 | 0 | −1 | −2 |

விவரித்தலும், தரமிடுதலில் நம்பகத்தன்மை கூடு தற்கு ஏதுவாகும். தரமிடுவோர்க்கு அதில் பயிற்சி யளித்தலும் நன்மை பயக்கும்.

தனி மனிதனின் பல பண்புகளைத் தொகுத்து ஒருங்கு காட்டும் வரைபடம், ஆளுமையின் வடிவுருவம் (Personality Profile) என்று கூறப்படும். இதற்கு எடுத்துக் காட்டாக ஒருவனுடைய ஆளுமை வடிவுருவத்தை வரைபடத்தில் கொடுக்கப்பட்டுள்ள வாறு விளக்கலாம்.




ஆளுமை உரு வரை படம்

**தன்விவரப்பட்டியல்கள்:** இம்முறை, நேர்காணல் முறையைப் போன்றதாகும். இதனைத் தரப்படுத் தப்பட்ட நேர்காணல் என்றும் கூறலாம். இதனைக் குழுச் சோதனையாகவும் நடத்தலாம். தரப்படுத்தப் பட்ட தூண்டுதல் வினாக்கள் அடங்கிய தாள்களை ஒரே நேரத்தில் பலருக்குக் கொடுத்துச் சோதனைக் குட்படுத்தலாம். வினாக்களுக்கான விடைகள் ஆம், இல்லை, அறுதியிட்டுக் கூற முடியாது என்று அமைக் கப்பட்டிருக்கும். முதன்முதலில் தன்விவரப் பட்டி யலை உருவாக்கியவர் உட்வர்த்து (Woodworth) என்பவர். முதலாம் உலகப் போரில் பங்கு பெற்ற போர் வீரர்களுக்கு ஆளுமைச் சோதனை முறையை உருவாக்க வேண்டுமென்று பேர்சிங்கு (General Pershing) என்பார் விரும்பினார். அவருடைய தூண்டுதலின் பயனாக உட்வர்த்து இச்சோதனை முறையை உருவாக்கினார்.

இப்பட்டியலிலிருந்து சில எடுத்துக் காட்டுகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

நீ வாழ்க்கையில் தோல்வியடைந்து விட்டாயா?
நீ திக்குதல் தெற்றுதல் இன்றிப் பேசுகிறாயா?
நீ குருதியைக் கண்டு அருவருப்போ மயக்கமோ அடைவதுண்டா?

நான் பிறக்காமல் இருந்திருக்கக் கூடாதா என்று நீ சில சமயங்களில் எண்ணுகிறாயா?
மக்கள் உன்னைப் புரிந்து கொண்டு உன்மீது பரிவு காட்டுவதாகக் கருதுகிறாயா?
பிறர் உன்மீது மிகையாகக் குற்றம் காண் கின்றனரா?

தலைவலி, மயக்கம் ஆகியவை உனக்கு வருவ துண்டா?

மினிசோட்டா பன்முக ஆளுமைப்பட்டியல், இச்சோதனை முறையின் அடிப்படை விதிகளின் மீது அமைக்கப்பட்டதே ஆகும்.

குறிப்பிட்ட பல வினாக்கள் அடங்கும் நிரலுக்கு, ஆட்படுநர் அளிக்கும் விடைகளின் அடிப்படையில், அவருடைய ஆளுமையை மதிப்பீடு செய்தல் வினா நிரல் முறை எனப்படும். இம்முறையில் பல சிறு வினாக்கள் ஒரு தாளில் அச்சடிக்கப்பட்டு ஆட்படு நரிடம் தரப்படும். ஒவ்வொரு வினாவுக்குப் பக்கத் திலும் பல விடைகள் கொடுக்கப்பட்டிருக்கும். அவற் றுள் தமக்கு ஒப்பாகும் விடையை மட்டும் ஆட்படு நர் குறிப்பிட வேண்டும், இதற்கு ஆளுமைப் பட்டியல் கள் பயன்படுத்தப்படுகின்றன. இத்தகைய வினாக் களைக் கொண்ட பல ஆளுமை வினா வரிசைகளும் பட்டியல்களும் தரப்படுத்தப்பட்டுள்ளன. ஆல்போர்ட் டின் ஆதிக்கப்பணிவு விளைவறிவும் வினா நிரல் (Allport's Ascendance-Submission Reaction Scale), பெல் பொருத்தப்பாட்டுப் பட்டியல் (Bell Adjustment Inventory), மினிசோட்டா பன்முக ஆளுமைப் பட்டி யல் (Minnesota Multiphasic Personality Inventory), நெமேன் கோல்சுடெட்டு குறையறி சோதனை (Neymen Kohlstedt Diagnostic Test), போன்றவை இவற்றுள் சிலவாகும். மினிசோட்டா ஆளுமைப் பட்டியலில் 550 கூற்றுகள் காணப்படுகின்றன. இவற் றைக் குழுச் சோதனை முறையாகவும் பயன் படுத் தலாம். ஆட்படுநர் தம் சொந்த மனப்பான்மை களை வெளியிடாமல் மறைத்துப் பிறரால் ஏற்கக் கூடிய கருத்துகளை மட்டில் தெரிவிக்க முற்படுவர்.

ஆளுமையை அளவிடலில் சில தரப்படுத்தப் பட்ட நிலைமைகளைத் தோற்றுவித்து, அந்நிலை மைகளில் வெவ்வேறு மனிதர்கள் எவ்வாறு நடந்து

கொள்கிறார்கள் என்பதைக் கவனித்து, அவர்களின் ஆளுமைப் பண்புகளை அளவிடும் முறையில் நிலைமைச் சோதனைகள் பயன்படுத்தப்படுகின்றன.

பத்து அல்லது பன்னிரண்டு ஆட்படுநர் கொண்ட குழுவிடம் ஒரு நடைமுறைச் சிக்கல் கொடுக்கப்படுகிறது. எடுத்துக்காட்டாக, ஓரிடத்தில் தீப்பிடித்துக் கொண்டுள்ளது என்று கற்பனை செய்து கொண்டு குழுவினர் சேர்ந்து தீயைப் பரவாமல் அணைத்தல், கிணற்றில் விழுந்து விட்ட ஒருவரைக்காப்பாற்றுதல் போன்றவைகளைக் குறிப்பிடலாம்.

சில வேலைகளில் ஒரு குறிப்பிட்ட பண்பு ஒருவனிடம் அமைந்திருக்கிறதா என்று மதிப்பீடு செய்வதற்கு அப்பண்பு வெளிப்படக் கூடிய நிலைமையைத் தோற்றுவித்து, அந்நிலையில் ஒருவனைச் செயற்படவும் செய்யலாம். இராணுவத்தில் பெரிய பொறுப்பான பதவிகளுக்குத் தேவையான தகுதியை அறிய இத்தகைய நிலைமைச் சோதனைகள் நடத்தப்படுகின்றன. நெருக்கடி நிலைகளிலும் மனக் குலைவு தோற்றுவிக்கும் நிலைமைகளிலும் ஒருவன் எவ்வாறு நடந்து கொள்கிறான் என்பதும், தலைமைத் தகுதி, சூழ்நிலைக்கேற்ப முடிவெடுத்தல் போன்ற பண்புகளும், இவற்றில் மதிப்பிடப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, வெள்ளத்தில் சிக்கித் தவிக்கும் ஏதேனும் ஒரு குறிப்பிட்ட ஊருக்கு, ஒருவன் சில துணை ஆட்கள், தேவைப் பொருள்கள் ஆகியவற்றுடன் அனுப்பப்படுகிறான். பணியாள்களின் உதவியை அவன் பயன்படுத்துந்தன்மை தலைமைப் பண்பு, செயல் தெளிவு, அறிவு நுட்பம், ஒத்துழைக்கும் மனப்பான்மை ஆகியவற்றை அவன் செயற்பாடுகளிலிருந்து அளவிடலாம்.

தன்னைத்தானே கவனித்து ஒரு குறிப்பிட்ட ஆளுமைப்பண்பு எந்த அளவில் தன்னிடம் இருக்கிறது என்று உணர்ந்து, தரஅளவு கோலில் குறிப்பது தன்னைத் தரமிடுதல் (Self rating) ஆகும்.

ஆய்வாளர் ஒரு குறிப்பிட்ட ஆட்படுநரைக் கூர்ந்து கவனித்து, ஒரு குறிப்பிட்ட பண்பு எந்த அளவில் அவரிடம் காணப்படுகிறது என்று முடிவு செய்வது, ஆய்வாளர் தரமிடுதலாகும். இவ்விரு முறைகளிலும் தரமிடுதலில் அகவயப்படும் வாய்ப்பு மிகுதியாக உள்ளது. இதைத் தவிர்ப்பதற்குக் கீழ்க் காணும் முறைகளைக் கையாளலாம்.

1. பல ஆய்வாளர்களைக் கொண்டு ஆட்படுநரைத் தரமிடுதல்.

2. ஒரே ஆய்வாளர் சில காலம் கழித்து மீண்டும் ஆட்படுநரின் அதே பண்பின் அளவைத் தரமிடுதல்—இவ்விரு அளவைகளும் மாறுபடாமல் இருந்தால் தரமிடுதல் நம்பகத்தன்மையுடையது என்று கொள்ளலாம்.

3. ஒரு குறிப்பிட்ட பண்பிற்கு இரு வேறு பெயர்களைக் கொடுத்து ஆய்வாளரைக் கொண்டு ஆட்படுநரைத் தரமிடுதல். இரண்டிலும் முரண்பாடு இல்லையெனில் தரமிடுதல் நம்பகத்தன்மையுள்ளது எனக் கொள்ளலாம்.

**புறத்தேற்றச் சோதனைகள்:** ஆளுமைச் சோதனையில் கொடுக்கப்படுகின்ற நிலைமை, பொருள்கள் மனிதர்கள் ஆகியவற்றோடு ஆட்படுநரின் உள்ளம் இயல்பாக இயங்கும் தன்மையை அறியும் நுண்முறைகளே புறத்தேற்றச் சோதனைகள் (Projective Tests) என்று கூறப்படுகின்றன. தன்னுடைய உள்ளத்திற்குத் துயரத்தையும் இயைபிலாமையையும் அளிக்கிற பண்புக் கூறுகளை, ஆட்படுநர் மற்றவரிடத்துப் பொருத்திப் பார்க்கும் உளப்பகுப்பாய்வுக் கருதுகோளே, புறத்தேற்றம் ஆகும். தனிமனிதனின் உள்ளத்தில் ஏற்படும் ஆழ்ந்த போராட்டங்களையும் அச்சங்களையும் மற்றவரிடத்துக் காணும் இயங்குமுறையைப் பிராய்டு புறத்தேற்றம் என்று கூறினார். ஆளுமை அமைப்பினைப் பாதிக்கிற சில குறிப்பிட்ட உள இயங்குமுறைகளையும் புறத்தேற்றச் சோதனைகள் வெளிப்படுத்துகின்றன. இவை ஆட்படுநரின் விடைகளுக்கு அப்பால் சென்று உளநிலைகளைத் துருவி ஆராய்வன ஆகும். இவ்வகையைச் சார்ந்த சோதனைகளுள் மிகவும் சிறப்புடையதான இரு சோதனைகள், சொல் இயைபுச் சோதனையும் (Word Association Test) சொற்றொடர் நிறை சோதனையும் (Sentency Completion Test) ஆகும். மனக்குலைவுச் சோதனை (Frustration Test), பல்வேறு வகைகளைச் சார்ந்த ஓவியச் சோதனைகள், பெண்டரின் பார்வை—இயக்க முழுமைச் சோதனை (Bender Visual Motor-Gedalt Test), உரோர்சாக்கின் பொருள் இணைத்தறி சோதனை (TAT) ஆகியவை புறத்தேற்றச் சோதனைகள் ஆகும். புறத்தேற்றச் சோதனைகளை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். அவை விளக்கிப் பொருள் கூறும் சோதனைகள், மைத்தடச் சோதனைகள் எனப்படும்.

ஆட்படுநரின் பழைய அனுபவங்கள், அச்சங்கள், நம்பிக்கைகள், உளச்சிக்கல்கள் ஆகியவற்றைப் பொறுத்துத் தெளிவற்ற தூண்டல் வடிவம், உள்ளடக்கம் ஆகிய உள இயக்கங்கள் அமைகின்றன. இம்முறையில் அவனுடைய ஆழ்ந்த உள இயங்கு முறைகள் வெளிக் கொணரப்படுகின்றன. இக்காரணத்தினால் சோதனைத் தூண்டல்கள், உருவத்திலும் உள்ளடக்கத்திலும் தெளிவற்றதாக அமைக்கப்படவேண்

டும். இத்தகைய தூண்டல்கள், அமைப்பிலாத் தூண்டல்கள் எனப்படும். இத்தகைய தூண்டல்களுக்கு ஒருவர் அளிக்கும் துலங்கல், அவரின் ஆளுமையை நேரடியாக அவர் அறியாமலேயே வெளிக்காட்டுகிறது.

புறத்தேற்றச் சோதனைகள் எல்லாவற்றிற்கும் அடிப்படையாக அமைந்திருப்பது இக்கொள்கையே ஆகும். இத்தகைய புறத்தேற்ற நுண்முறைகளில் மைத்தடச் சோதனையும் பொருள் இணைத்தறி சோதனையும் இன்றியமையாதனவாகும்.

**மைத்தடச் சோதனையை** முதன் முதலில் சுவிட்சர்லாந்தைச் சேர்ந்த எர்மன் உரோர்சாக்கு (Rorschach, Hermann) என்னும் உளமருத்துவர் பயன்படுத்தினார். இச்சோதனையில் ஒரே பகுதிகளைக் கொண்ட பத்து மைத்தட உருவங்கள் பயன்படுத்தப்படுகின்றன. எல்லாப் படிவங்களும், 8" அகலமும் 10" நீளமும் கொண்ட கெட்டியான தாள்களில் ஒட்டப் பெற்று அளிக்கப்படுகின்றன. கருப்பு வண்ண மைத்தடங்கள் (Inkblots) ஐந்தும், கருப்பும் சிவப்பும் சேர்ந்தவை இரண்டும், பல்வேறு வண்ணங்களைக் கொண்டவை மூன்றும் காணப்படும். ஆட்படுநரிடம் இந்த அட்டைகள் ஒவ்வொன்றாகக் காண்பிக்கப்படுகின்றன. மைத்தடங்களைப் பாத்தவுடன் ஆட்படுநரின் உள்ளத்தில் தோன்றும் எண்ணங்களும் துலங்கல்களும் எழுதிக் கொள்ளப்படுகின்றன. ஒரு மைத்தடம் பற்றிய துலங்கலைக் கூறிமுடித்தபின், அடுத்த மைத்தடம் காட்டப்பட வேண்டும். சோதனை முடிந்தவுடன் ஐயத்திற்குரியவை ஆட்படுநரின் உதவியுடன் தெளிவாக்கிக் கொள்ளப்படுகின்றன. இவ்வினாக்கள் சோதனை முடிவை மேலும் நம்பகத் தன்மையுள்ளனவாக்க உதவுகின்றன.

உரோர்சாக்கின் துலங்கல்களினால் ஆட்படுநரைப் பற்றிய கீழ்க்காணும் செய்திகளைப் பெற முடியும்:

1. ஆட்படுநர் தம் அனுபவங்களையும் செயல்களையும் ஒழுங்கு முறையினுட்படுத்த உதவுகிற அறிவுக் கட்டுப்பாட்டின் தன்மை.
2. சிக்கல்களை ஆட்படுநர் அணுகுகிற முறை.
3. ஆட்படுநரின் படைப்பாற்றல், கற்பனைத் திறன்.
4. பிறழ்வு அச்சங்கள், கிலிகள், மனக்குறைகள்.

ஆட்படுநர் அளிக்கிற பல்வேறு துலங்கல்கள் மூன்று கூறுகளில் மதிப்பிடப்படுகின்றன. அவையாவன: இருக்குமிடம், முடிவு செய்வது, உள்ளடங்கிய பொருள்கள்.

**இருக்கும் இடம்:** மைத்தடத்தின் எப்பகுதி ஆட்படுநரின் விடைக்கு மையமாக அமைந்துள்ளது என்பதைக் குறிப்பது. (முழு மைத்தடம், பெரும் பகுதி, சிறு பகுதி) இத்தொடர்பில் பயன்படுத்தப்படுகிற சில குறியீடுகளாவன:

மு (W) — முழுப்பகுதி

வி₁ (D) — மிகுதியான விவரங்கள்

வி₂ (d) — பொதுவான சிறு விவரங்கள்

வெ (S) — வெள்ளை நிறமான இடம்

**முடிவு செய்வது:** ஆட்படுநர் அளித்த விடையின் தன்மையை முடிவு செய்தற்கு மைத்தடத்தின் எந்தக் கூறு காரணியாக அமைந்தது என்பது.

அ (M) — அசைவு

உ (F) — உரு

நி (C) — நிறம்

ப (K) — மேற்பரப்பான தோற்றத்தைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது.

**உள்ளடங்கிய பொருள்கள்:** மைத்தடங்களில் காணப்படும் பொருள்கள் (மனிதர்கள், உயிரற்ற பொருள்கள் போன்றவை). இதற்கான பொதுவான குறியீடுகள்:

ம (H) — மனித உருவம்

ல (A) — விலங்கு உருவம்

மவி (Hd) — மனித விவரங்கள்

லவி (Ad) — மிருக விவரங்கள்

பொ (Obj) — மனிதனால் செய்யப்பட்ட பொருள்கள்

த (Pl) — தாவரம்

உவி (At) — உடல்சார் விவரங்கள்

'மு', 'வி₁' ஆகிய குறியீடுகளால் பெரும்பாலும் அறிவுசார் செயல்கள் குறிக்கப்படுகின்றன. வெளிப்படையான மன எழுச்சிகள் 'நி' அல்லது 'நிஉ' என்று குறிக்கப்படுகின்றன. 'அ' என்ற குறியீடு உள்ளார்ந்த மனவெழுச்சி வயத்தைக் குறிக்கிறது.

மைத்தடச் சோதனையில் அளிக்கப்படும் விடைகளுக்குப் பொருள் காண்பதில் சில அடிப்படைக் கோட்பாடுகள் பின்பற்றப்படுகின்றன. அவையாவன:

1. தம் மனவெழுச்சிகளைப் புறப்பொருள்களோடு இணைத்துத் தெளிவாக வெளிப்படுத்தும் இயல்புடையோர் அளிக்கும் விடைகள், மைத்தடங்களின் வண்ணங்களைக் கொண்டு பெரும்பாலும் முடிவு செய்யப்படுகின்றன.

2. பல மைத்தடங்களுக்கான விளக்கங்கள், முழுத்தடம் அல்லது அதன் பகுதியினால் முடிவு செய்யப்படும்பொழுது ஆட்படுநரின் வாழ்க்கைச் சிக்கல்களுக்கு முழுமையாகத் தீர்வு காணும் மனப்போக்கு, அறிவுத்துறையில் முன்னேற அவா, கருத்துகளை நன்கு தொகுப்பவராவதற்கு அவா போன்ற பண்புகள் ஆட்படுநரிடம் காணப்படும் என்று கருதப்படுகிறது.

3. மைத்தடத்தின் பெரும்பகுதியின் விவரங்கள், விளக்கங்களை முடிவு செய்வனவாக அமைந்தால், படித்தறிவின் அடிப்படையில் வாழ்க்கை நடத்துதல், செயல்களில் ஈடுபாடு போன்ற பண்புகள் காணப்படும்.

4. மைத்தடங்களின் இயக்கத்தோடு தொடர்புடைய பல விளக்கங்களைக் கூறுபவர்கள் கற்பனை மிகுந்தவராக இருப்பர்.

5. மைத்தடங்களின் உருவம் அல்லது வடிவத்தை அடிப்படையாகக் கொண்டு விளக்கங்கள் கொடுக்கப்பட்டிருந்தால், ஆட்படுநர் எதிலும் முனைப் பற்றவர் என்று கொள்ளலாம்.

மைத்தடங்களை ஒரே காலத்தில் திரையில் பலருக்குக் காண்பித்துக் குழுச் சோதனையாகவும் செயற்படுத்தலாம். மைத்தடங்களைப் பல்விடைத் தேர்வு முறையிலும் பயன்படுத்தலாம். இம்முறையில் தனிப்பட்ட மைத்தடத்திற்குப் பொருந்தக்கூடிய பலவிடைகள் தரப்பட்டிருக்கும். இவற்றுள் தமக்குப் பொருத்தமாகத் தோன்றும் ஒன்றை ஆட்படுநர் தேர்ந்தெடுக்க வேண்டும். 2½ அல்லது 3 வயது குழந்தைப் பருவத்திலிருந்து எல்லோருக்கும் மைத்தடச் சோதனை அளிக்க முடியும்.

மேற்குறிப்பிட்ட மைத்தடச் சோதனை முறை மிகவும் எளிமையாக்கப்பட்ட சோதனை முறையாகும். சோதனையைப் பற்றிய நல்ல அறிவும் பிறழ்வு உளவியலை நுணுக்கமாக அறிந்திருத்தலும் மருத்துவமனை அனுபவமும் இச்சோதனையைக் கடைப்பிடிப்போர் பெற்றிருக்க வேண்டும்.

ஒல்ட்சுமன் (Holtzman, Wayne, H.) என்பார், உரோர்சாக்கின் மைத்தடச் சோதனைகளில் பல மாற்றங்களைச் செய்து, அவைகளின் நம்பகத்தன்மையை மிகுதியாக்க எண்ணினார். இவர் அமைத்த சோதனை ஒல்ட்சுமன் மைத்தடச் சோதனை நுண்முறை (Holtzman Inkblot Technique – HIT) எனப்படுகிறது. இம்முறையில் 45 அட்டைகள் பொருந்திய இரு இணை மைத்தடத் தொகுதிகள் இருக்கின்றன. இந்த அட்டைகள் ஆட்படுநரிடம் ஏற்படுத்தும் தூண்டல்களும் ஏறக்குறைய ஒரே தன்மையாக இருக்கும். ஆட்படுநரின் துலங்கல்களுக்குக் கொடுக்கப்படும் விளக்கங்களும் உரோர்சாக்கு விளக்கங்களையொட்டி அமைந்திருந்தபோதிலும், இவை 22 வரையறுக்கப்பட்ட மாறிகளின் அடிப்படையில் இருக்கின்றன. துலங்கல்களுக்கு எடுத்துக் கொண்ட காலம், உருவின் தெளிவு, சாயல்கள், உருவின் இயக்கம், தெளிவற்ற சொற்கள், பகைமை, மக்கள் ஏற்பு போன்றவைகளை இந்த மாறிகளுள் சில என்று குறிப்பிடலாம்.

**பொருள் இணைத்தறி சோதனை:** தனிமனிதன் குறிப்பிட்ட ஒரு படத்துடன் பொருந்தக்கூடிய கதையை உருவாக்கும் பொழுது, அவனுடைய நனவிலி, அவன் மீது மிகுந்த செல்வாக்கைக் கொண்டிருக்கிறது என்ற கருதுகோளின்மீது எழுந்த சோதனையாகும். பொருள் இணைத்தறி சோதனை மர்ரே (Murry) என்பவரால் உருவாக்கப்பட்டது. மார்கன் (Morgan) என்பார், இச்சோதனையை 30 படங்கள் கொண்ட அட்டைகளும் ஒரு வெற்று அட்டையும் கொண்ட சோதனையாக அமைத்தார். இருபது அட்டைகள் கொண்ட நான்கு பிரிவுகளாக, இவ்வட்டைகள் தேர்ந்தெடுக்கப்பட்டன. 30 அட்டைகளைக் கொண்ட நான்கு பிரிவுகள் ஏற்படுத்தப்பட்டதால், பல அட்டைகள் நான்கு பிரிவுகளிலும் இருந்தன. இவை சிறுவர், சிறுமியர், 14 வயதுக்கு மேற்பட்ட பெண்கள், 14 வயதுக்கு மேற்பட்ட ஆண்கள் என நான்கு குழுவினருக்கும் ஏற்றவாறு, அந்நான்கு பிரிவுகளும் அட்டைகளில் ஏற்படுத்தப்பட்டன. சோதனையில் ஆட்படுநருக்கு ஒவ்வொரு பிரிவிலும் உள்ள இருபது அட்டைகள், ஒன்றன்பின் ஒன்றாக அளிக்கப்பட்டன. இப்படங்களுள் பெரும்பாலானவை, சில நிலைமைகளில் உள்ள மனிதர்களின் உருவங்களைக் கொண்டிருக்கின்றன. இப்படங்களில் உள்ள மனித உருவங்கள் தெளிவாக இருக்கின்றன. புறத்தேற்றச் சோதனையின் தூண்டல், தெளிவற்ற அல்லது அமைப்பற்ற முறையில் இருக்க வேண்டும் என்பது பொதுவான விதியாகும். ஆனால், பொருள் இணைத்தறி சோதனையின் தெளிவில்லாத் தன்மை, படத்தின் பொருளைப் பற்றியதேயன்றி தனித்த உருவங்களைப் பற்றியதன்று. ஆட்படுநரிடம் முதலில் 10 நிமிடங்களும் முறைப்படி காட்டப்படும். இப்படங்களில் எந்த நிகழ்ச்சிகள் சித்திரிக்கப்படுகின்றன? நிகழ்ச்சிகளின் காரணங்கள், விளைவுகள் எவையாக இருக்கக்கூடும்? என்பன போன்ற தூண்டல் வினாக்கள், ஆட்படுநரிடம் கேட்கப்படுகின்றன. ஆட்படுநர் கூறும் கதைகளை அல்லது செய்திகளை ஆராய்ந்து, அவற்றினின்றும் அவருடைய ஆளுமைப் பண்புகளின் தன்மையைப் பற்றிச் சோதனையாளர் அறிய இயலும். குடும்ப உறவுகள், ஊக்கி இயங்குமுறைகள், உள்ளார்ந்த கனவுகள், அவாக்களின் நிலைகள், சமூக உறவுகள், பால்

உந்து செயற்படுதல், மன வெழுச்சிச் சிக்கல்கள், எதிர்காலம் பற்றிய நோக்கு போன்ற பல தூண்டல்கள் இப்படங்களில் இருப்பது ஏற்றுக் கொள்ளப் படுகிறது. ஆட்படுநர், படத்திலுள்ள மனித உருவங்களில் ஏதாவது ஒன்றுடன்தான் ஒன்றுதலை உணர்வார் என்றும் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. மேலும் கதைகளில் தனிமனிதனின் தேவைகள், சமூகச் சூழ்நிலை, குடும்பச் சூழ்நிலை ஆகியவை அவனுக்கு எந்த அளவுக்குத் தூண்டல்களைக் கொடுக்கின்றன என்பதும் தெளிவாக்கப் படுகிறது.

பொருள் இணைத்தறி சோதனை, பெரும்பாலான உளநல மருத்துவ மனைகளில் பயன்படுத்தப்படுகிறது. வெவ்வேறான பண்பாட்டுக் குழுக்களில் இருந்து வருகிற ஆட்படுநர்களுக்கு ஏற்ற வகையில் சோதனைப் படங்கள் அமைக்கப்படுகின்றன. மாறுதலுக்கு உள்ளாக்கப்பட்டுப் பலராலும் பயன்படுத்தப்படும் பெல்லாக்சுச்சோதனை (Bellacs Test) 3 முதல் 11 வயது வரையிலான குழந்தைகளுக்காக ஏற்படுத்தப்பட்டுள்ளது. இது குழந்தைகளின் இணைத்தறி சோதனை (Children's Apperception Tets) ஆகும். இதில் மனிதர்களின் படங்களுக்கு மாறாக, விலங்குகளின் படங்கள் காட்டப்படுகின்றன. இவ்விலங்குகள் மனிதர்களின் குடும்ப, சமூக வாழ்க்கையில் இருப்பது போன்ற நிலைமைகளில் காட்டப்பட்டிருக்கும். இப்படங்கள் பற்றிய கதைகளைக் குழந்தைகள் கூற வேண்டும். அவர்களின் கதைகளை ஆராய்வதன் வாயிலாகத் தம் பெற்றோர், உடன் பிறந்தோர் ஆகியோரிடம் குழந்தைகள் கொண்டுள்ள மனவெழுச்சி நிலைகளையும் குழந்தைகளின் உளச்சிக்கல்களையும் அறியலாம். இச்சோதனையின் நுண்முறைகள் மிகவும் சிக்கலானவை, திறமையும் பயிற்சியும் மிக்க உளவியலறிஞர்கள் மட்டுமே இவற்றைப் பயன்படுத்த முடியும். பள்ளி முன் பருவத்துக் குழந்தைகளிடம் இச்சோதனை பயனுள்ளதாகக் காணப்படுகிறது.

பொருள் இணைத்தறி சோதனைகள், உரோர்சாக்கின் மைத்தடச் சோதனையின் அடிப்படைக் கருத்துகளின் மீது அமைந்தவையாகும். இவ்விரு சோதனை வகைகளிலும் துல்லியமான மதிப்பீடு செய்தல் கடினமாகும். இச்சிக்கலைத் தீர்வு செய்யும் பொருட்டு மக்ளிலாந்து (McCleelland)என்பார் அமைத்த, அடைவுத் தேவை அளவீட்டினை உளவியலார் பயன்படுத்துகின்றனர். மக்ளிலாந்தும் அட்கின்சனும் (McClelland & Atkinson) இணைந்து, 1950-ஆம் ஆண்டில் ஒரு மதிப்பீட்டு முறையை அமைத்தனர். பல்கலைக் கழக மாணவர்களிடம் சோதனைகள் நிகழ்த்தப்பட்டன. இம் மாணவர்களுள் சிலர், கவலையற்ற நிலையிலும் வேறுசிலர் மனஉளைச்சல் நிலையிலும், மற்றும் சிலர் போட்டியிடும் நிலையிலும் இருந்தனர். போட்டிநிலையில் இருந்தவர்களிடம் அவர்கள் சோதனையில் தோற்றுவிட்டனர் என்பது கூறப்பட்டது. இதனால் அவர்களிடம் அடைவுத் தேவையுணர்வு உண்டாகலாம் என்று எதிர்பார்க்கப்பட்டது. சோதனைகளை நடத்திய பின், ஆட்படுநர் எல்லோரிடமும் பொருள் இணைத்தறி சோதனை ஒன்று கொடுக்கப்பட்டு, படங்களுக்கு ஏற்ற கதைகளை அல்லது நிகழ்ச்சிகளை எழுதுமாறு கூறப்பட்டது. கவலையற்ற மாணவர்களின் விடைகளுக்கும் மனஉளைச்சல் நிலையிலிருந்த மாணவர்களின் விடைகளுக்கும் பல வேறுபாடுகள் காணப்பட்டன. இச்சோதனை முடிவுகளைக் கொண்டு மக்ளிலாந்து பின்வரும் முடிவுக்கு வந்தார். மன உளைச்சல், போட்டிநிலை ஆகிய சூழமைவுகளுக்கு உட்பட்ட மாணவர்களால் எழுதப்பட்ட கதைகளின் கருப்பொருள், கவலையற்ற நிலையில் இருக்கும் மாணவர்கள் அடைவுத் தேவையினால் உந்தப்பட்டுச் செயற்பட்டால், அவர்களின் கதைகளிலும் காணப்படும். ஆதலின் பொருள் இணைத்தறிசோதனைப் படத்திற்கான கதையில் அடைவு உருவகம் (Achievement Imagery) இருக்கின்றதா என்று கண்டுபிடித்து, அதனை மதிப்பீடு செய்தல் வேண்டும். கருப்பொருள் பட்டியலில் குறிப்பிடப்பட்டுள்ள பண்புக் கூறுவகைகள் எவ்வகையினைச் சார்ந்தனவாகும் என்று கண்டுபிடிக்க வேண்டும். பொருள் இணைத்தறி கதையில் செயல் உருவகம் (Test Imagery) (அதாவது குறிக்கோளின்றிச் செயலைச் செய்து முடிக்கும் இயங்குமுறை மட்டில் காணப்பட்டால்) அல்லது தொடர்பில்லா உருவகம் காணப்பட்டால், அடைவு உருவகமாகக் கருதப்படுவதில்லை. விளக்கப்பட்டியலில் கொடுக்கப்பட்டிருக்கும் தனிப்பட்ட பகுதிகளின் அடிப்படையில், பொருள் இணைத்தறி சோதனைக் கதை அளவீடு செய்யப்பட்டால், அதிகப்படியாக 11 புள்ளிகள் தாம் பெற முடியும். ஒவ்வொரு பண்புக் கூறினுக்கும் கீழ்க்காணுமாறு ஒவ்வொரு புள்ளி வீதம் கொடுக்கப்பட்டது: அஉ, தே, இஅ, இஅ-, கசெ, இ. இ-, த(2), த (4), உப, அக. மக்ளிலாந்து, பொருள் இணைத்தறி சோதனை அட்டைகளில் நான்கு அட்டைகளை மட்டும் அடைவுத் தேவையை அளவீடு செய்யப் பயன்படுத்தினார். ஆயினும் இம் முறையில், சோதனை-மறு சோதனை-நம்பகம் (Test-Retest - Reliability) மிகக் குறைவாகவே காணப்பட்டது. இதற்குக் குடும்பம், பெற்றோர், சமூகச் சூழ்நிலைகள் ஆகியவை காரணம் என்று மக்ளிலாந்து கூறினார். மக்ளிலாந்து பல நாடுகளில் வெளியிடப்பட்ட குழந்தைகளுக்கான கதைகளிலிருந்து அடைவு உருவகத்தைக் கண்டு பிடிக்கும் ஒரு மாபெரும் ஆய்வுக்கு அடிகோலினார்,

அடைவுத்தேவையை அளவீடு செய்வதற்கு மக்ளிலாந்து ஏற்படுத்திய பண்புக் கூறுகள்:

| பண்புக் கூறு | பொருள் | விவரம் |
|---|---|---|
| அஉ | அடைவு உருவகம் | கதையில் ஏதாவது ஒரு பாத்திரம் குறிப்பிட்ட சிறப்பு நிலையை அடைய முயற்சி செய்து, அதில் வெற்றி பெறுதல். |
| தே | தேவை | கதையில் ஏதாவது ஒருவர் குறிப்பிட்ட அடைவு இலக்கை அடைய விரும்புகிறார் என்னும் கூற்றுக் காணப்படுதல். |
| இஅ± | இலக்கு அடைதல் | கதையில் ஏதாவது ஒரு பாத்திரம் இலக்கை அடைவதில் வெற்றி (+) அல்லது தோல்வியை (-) எதிர் பார்த்தல். |
| கசெ | கருவிசார் செயல் (Instrumental activity) | கதையில் ஒரு பாத்திரம் இலக்கினை அடைவதில் ஈடுபாடு கொண்டு செயலாற்றுதல். |
| இ± | இலக்குசார் நடத்தை | உடன்பாடான அல்லது எதிர்மறையான நடத்தைக் கூறுகள் இலக்கு அடைதலில் காணப்படுதல். |
| த(2) | அகத்தடை (Personal Block) | பாத்திரத்தின் ஒரு குறிப்பிட்ட பண்பின் காரணமாக இலக்கினை அடைய இயலாமை. |
| த(4) | புறத்தடை (World Block) | இலக்கு அடைவதில் புறத்தடைகள் இருத்தல். |
| உப | உதவி/பரிவு | இலக்கினை அடைவதற்கு ஏதேனும் ஒருவர் உதவி செய்தல் அல்லது பரிவு காட்டல். |
| அக | அடைவுக் கருப்பொருள் (Achievement Thema) | கதையின் கருப்பொருளுடன் அடைவு உருவகம் ஒன்றியிருத்தல். |

மக்கின்லி (Mckinley), ஆதாவே (Hathaway) என்னும் இரு உளமருத்துவர்கள், உளவியல் வல்லுநர்களிடமிருந்து ஆயிரத்திற்கு மேற்பட்ட கேட்கப்படக் கூடிய வினாக்களையும் சொற்றொடர்களையும் திரட்டி, அவற்றின் உதவியைக் கொண்டு, சமூக மனப்பான்மை அளவையை வெளியிட்டனர். இவ் வினா நிரலில் எந்தப் பகுதிகளுக்கான விடைகளில், இயல்பு ஆளுமையினரால் கொடுக்கப்பட்டவற்றிற் கும் பிறழ்வு ஆளுமையினரால் கொடுக்கப்பட்டவை களுக்கும் இடையே மிகுந்த வேறுபாடுகள் காணப் பட்டனவோ, அவை,தனியாகத் தேர்ந்தெடுக்கப்பட் டன. இவ்வினாக்களும் சொற்றொடர்களும் மின்னி சோட்டா பன்முக ஆளுமைப்பட்டியலாக (Minnesota Multiphasic Personality Inventory) அமைக்கப் பட்டன. இப்பட்டியலைக் கொண்டு சோர்வுப் பிணியினரையும் உள நோயாளிகளையும் அறிதல் எளிதாக இருந்தது. இப்பட்டியல், மின்னிசோட்டா மருத்துவ இல்லத்தில் இருந்த நோயாளிகளிடம் கொடுக்கப்பட்டு நம்பகமுடையதாக்கப்பட்டது. இறுதியில் 550 பல்வேறு வினாக்களும் சொற்றொடர்களும் 10 உளநோக்கு அளவைகளாகப் பிரிக்கப்பட்டன. இயல்பு நிலையினர் 50 அல்லது அதற்குக் குறைவான புள்ளிகளை இச்சோதனையில் எடுக்குமாறு வினாக்கள் அமைக்கப்பட்டன. ஆதலின் 50 என்பது சோதனைப்

புள்ளி (T Score) என்று குறிப்பிடப்படுகிறது. பெரும்பாலும் மக்கள் இந்தக்கீழ்மட்டச் சராசரிசோதனைப் புள்ளியிலிருந்து சிறிது மாறுபட்டு, 60 அல்லது 65 என்ற புள்ளி அளவில் இருப்பதால், பொதுவாக மனிதர்கள் சோதனை வினாக்களுக்கு விடை கூறும் பொழுது, 50-இலிருந்து 65 வரையிலான சொற்றொடர் அல்லது வினாக்களுக்குப் பிறழ்வு நிலையான விடைகள் கொடுக்கக்கூடும். சராசரிப் புள்ளியாகிய 50 உடன் தரவிலக்கப் புள்ளிகளையும் சேர்த்து அடிப்படைப் புள்ளி 70 என்று எடுத்துக் கொள்ளப் படுகிறது. இந்தப் பத்து உளநோய் நீக்கு அளவைகளும் (Clinical Scales) கீழ்க்காணும் உளக்கூறுகளை அளவீடு செய்கின்றன.

| அளவீடு செய்யப்படும் உளக்கூறுகள் | உளவியலாரின் குறியீடு |
|---|---|
| 1. கற்பனைப் பிணிக் கோளாறு Hypochondiasis | க HS |
| 2. சோர்வுப் பிணி Depression | சோ D |
| 3. உளக்கூறுமாற்றம் Hysteria | உ HY |
| 4. உளப்பிறழ்வு நிலை Psychopathic Deviance | பி PD |
| 5. ஆண்மை/பெண்மை Masculinity/Feminity. | ஆ பெ MF |
| 6. கருத்துத்திரிபு நோய் Paranoia | கு Pa |
| 7. தன் ஐயப்பாடு Psychasthenia | ஐ Pt |
| 8. உளச்சிதைவு நோய் Schizophrenia | சி SC |
| 9. இளநிலைக் கிளர்ச்சி Hypomania | இ Ma |
| 10. சமூக அகமுகம் Social Introversion | ச Si |

இந்த அளவைகள் கீழ்க்காணும் அட்டவணையில் விரிவாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன:

| அளவை எண் அளவையின் பெயர் | இயல்பு | பண்புத் தொகுதி | மிகை விளிம்பினர் இயல்புகள் |
|---|---|---|---|
| 1. கற்பனைப் பிணிக் கோளாறு(க) | வெளிப்படையான | என்வயிற்றில் பட்டுப்பூச்சி சலசலப்பது போல் அடிக்கடி உணருகிறேன். (மெய்) | உடல்நலம் குறித்து மிகையானகவனம் – கற்பனையான அல்லது உண்மையான உடற் பிணிகளை முக்கியமானதாகக் கருதுதல். |
| | நுட்பமான | சிறிய மாற்றங்களுக்கும் என் உடல் கூருணர்ச்சியுடையது. (மெய்) | ——— |
| 2. உளச்சோர்வு (சோ) | வெளிப்படையான | பலநாள்களாகத் தொடர்ந்தாற்போல் நான் மனவருத்தத்திலிருந்து மீள முடியாமல் இருந்திருக்கிறேன். (மெய்) | வருங்காலம்பற்றிய மனத் தளர்ச்சி – நம்பிக்கையின்மை |
| | நுட்பமான | என்னைநான் துடிப்பு மிகுந்தவன் என்று கருதுகிறேன். (பொய்) | ——— |

| | | | | |
|---|---|---|---|---|
| 3. | உளக்கூறுமாற்றம் (உ) | வெளிப்படையான | என் உடலின் பலபாகங்கள் நடுக்க முறுவதாக நான் உணருகிறேன். (மெய்) | ஆய்ந்தறியாத ஆர்வமுடைமை சிக்கலான சந்தர்ப்பங்களில் உடல்நோயை ஒரு காரணமாகக் காட்டுதல். |
| | | நுட்பமான | யாராவது என்னைவைத்து ஒரு நகைச்சுவை நிகழ்ச்சியை நடைமுறைப் படுத்துவதை நான் விரும்புவதில்லை. (பொய்) | —— |
| 4. | உளம்சார்பிறழ்வு (பி) | வெளிப்படையான | நான் கண்டுபிடிக்கமாட்டேன் என்று நன்கு தெரிந்திருந்தாலும் பிறர் பொருள்களை எடுக்கமாட்டேன். (பொய்) | குற்ற நடத்தைப் பாங்கு-மற்றவர் மனவெழுச்சிகள் இன்னல்கள் ஆகியவற்றை உணராததன்மை, ஆராயாது செய்யும் செயல். |
| | | நுட்பமான | நான் எந்தச் சொல்வாதத்தில் ஈடுபட்டாலும் அதில் வெற்றியடைவேன். (பொய்) | —— |
| 5. | ஆண்மை (அ) பெண்மை ஆ/பெ | வெளிப்படையாக | செயல்திறம் மையமாகக் கொண்ட காதல் காட்சிகள் இல்லாத திரைப்படங்களே சிறந்த திரைப்படங்கள். (பொய்) | ஆண்களிடம் பெண்மை, பெண்களிடம் ஆண்மை. |
| | | நுட்பமான | நான் சூதாட்டத்தை விரும்புவதில்லை. பணையம் இல்லாத விளையாட்டுகளே மனமகிழ்ச்சிதரக்கூடியவை. (பொய்) | —— |
| 6. | கருத்துத்திரிவு நோய் (கபு) | வெளிப்படையான | என் பகையாளியாக நான் எவரையும் எண்ண முடிவதில்லை. (பொய்) | மிகைத் தற்காப்பு-ஐயப்பாடு - காழ்ப்பு |
| | | நுட்பமான | அடிக்கடி மணியொலியைக் கேட்கிறேன். (மெய்) | —— |
| 7. | தன் ஐயப்பாடு (ஐ) | வெளிப்படையான | மிதியடி இல்லாவிட்டாலும் நான் வெளியிலிருந்து உள்ளே வரும்பொழுது காலகளைத் தேய்த்த பின்னரே உள்ளே வருகிறேன். | உளப்பிடிப்புகளும் கட்டாயங்களும். அச்சம் ஐயப்பாடு சார்ந்த மிகை உள்நோக்கு. |
| | | நுட்பமான | நான் கனவுகள் காண்பது அரிது. (பொய்) | —— |

| | | |
|---|---|---|
| 8. உளச்சிதைவுநோய் (சி) வெளிப்படையான | என் நினைவுகளே எனக்கு அச்சம் விளைவிப்பனவாக இருக்கின்றன. (மெய்) | மெய்ந்நிலைதிரிந்த உணர்வு. விபரீத எண்ணங்கள் தாறுமாறான மனவெழுச்சி வெளியீடு. |
| நுட்பமான | நான் வெற்றி பெற மாட்டேன் என்று கருதக்கூடிய எத்தகைய விளையாட்டிலும் ஈடுபடுவதில்லை. (மெய்) | —— |
| 9. இளநிலைக் கிளர்ச்சி (இ) வெளிப்படையான | விரைவான வேலையில்லாமல் இருந்தாலும் நான் எப்பொழுதும் விரைவுடையவனாகவே காணப்படுகிறேன். (மெய்) | மிகைச் செயற்பாங்கு. எரிச்சலுறுந்தன்மை. இலக்கு பற்றிய மெய்யுணர்வு இல்லாமை. |
| நுட்பமான | நான் வெளியில் எங்காவது உண்ணும்பொழுது நான் இருப்பதைக் காட்டிலும் வீட்டில் உண்ணும் பொழுது கட்டுப்பாடின்றி நடந்து கொள்கிறேன். (பொய்) | —— |
| 10. சமூக அகமுகம் (ச) வெளிப்படையான | மற்றவர்களுடன் கலந்து உரையாடுதலை நான் மிகுதியும் விரும்புகிறேன். | அச்சமுள்ள - கூருணர்ச்சி வாய்ப்பட்ட. |
| நுட்பமான | தம்முடைய உரிமைகளுக்காக முன்வந்து போராடுவதைப் போல் மற்றவர்களின் உரிமைகளுக்காக முன்வந்து போராடுபவர் மிகச் சிலரே. (மெய்) | —— |
| ? அறுதியிட்டுக் கூற முடியாது | —— | ஏற்புத்தன்மை காட்டி |
| | | தவிர்ப்பு, தப்பித்துக் கொள்ளல், ஒத்துழையாமை. |
| பொ பொய் | மற்றவர்களின் தவறுகளை நான் கேலி செய்வதுண்டு. | தனனிடம் தவறு இல்லை என்ற மனப்பான்மை. |
| அ அலைவு | என் மூக்கு அடிக்கடி வீங்கி விடுகிறது. அதனால் அது மிகப் பெரிதாக ஆகிவிட்டது. | விபரீதமான எண்ணங்களும் புலன் காட்சிகளும். |
| தி திருத்தம் | நான் அடிக்கடி ஐந்து வயதுப் பிள்ளையாக ஆகிவிட விரும்புகிறேன். | தற்காப்பு வயம். |

மின்னிசோட்டா பன்முக ஆளுமைப் பட்டியலின் இறுதியில் காணப்படும் ஏற்புத்தன்மை அளவைகள், 10 நோயறி அளவைகளின் (Diagnostic Scales) திட்ப நுட்பத்தை மதிப்பீடு செய்வதற்காக அமைக்கப்பட்டுள்ளன. இந்த அளவைகளுள் முதலாவது 'அறுதியிட்டுக் கூறமுடியாது'. அல்லது '? அளவை' எனப்படும். 'மி ப ஆ ப' வில் எல்லாப் பகுதிகளிலும் அறுதியிட்டுக் கூறமுடியாது என்ற விடை சேர்க்கப்பட்டிருக்கிறது. ஆதலின் ஆட்படுநரின் விடைத்தாளில்வெற்றிடமாக விடையெதுவும் கொடுக்கப்படாத இடங்களும், அறுதியிட்டுக் கூற முடியாது, என்று விடையளிக்கப்பட்டிருக்கும் பகுதிகளும் '?அளவை' என்பதில் சேர்க்கப்படுகின்றன. ஆட்படுநர், பெரும்பாலும் பட்டியலில் காணப்படும் எல்லாப் பகுதிகளுக்கும் விடையளிக்குமாறு சோதனையாளரால் ஊக்குவிக்கப்படுவதால், விடைத்தாளில் மிகையான '? அளவை' காணப்படுமாயின், ஆட்படுநர் விடையளிப்பதைத் தவிர்க்க விரும்புகிறார் என்றும், அவருடைய மற்ற விடைகள் நம்பத்தக்கவை அல்ல என்றும் அறியலாம். பொய் அளவை (L Lie Scale) அடுத்த ஏற்புத் தன்மை அளவை ஆகும். இதில் காணப்படும் 15 பகுதிகளும் பொதுவாக எல்லோரிடமும் காணப்படும் குறைகளாகும். இவைகளைப் பெரும்பாலும் பலர் ஒப்புக் கொள்வர். தற்காப்புவயமான மனிதர்கள் மட்டிலுமே இக்குறைகள் தங்களிடம் இல்லை என்று மறுப்பர். அ (அலைவு) அளவை என்பது, மூன்றாம் ஏற்புத்தன்மையாகும். இதில் விபரீத எண்ணங்களையும் சாதாரண அனுபவங்களையும் புலன்காட்சிகளையும் மறுக்கும் தன்மையைச் சார்ந்த 64 பகுதிகள் இருக்கின்றன. ஏதேனும் ஒரு குறிப்பிட்ட தனிப்பகுதி இயல்பு, ஆளுமையினரால் ஏற்றுக் கொள்ளப்படலாம். ஆனால், மிகை அ அளவு, ஒருங்கிணையாச் சிந்தனையைக் குறிக்கிறது. உளத் தொந்தரவுக்கு ஆளானவர்களையும் தடையிலா இயங்கு முறை ஆளுமையினரையும் வேறுபடுத்தி அறிதல் பொருட்டு, தி அளவை சேர்க்கப்பட்டுள்ளது. மனத்தடையற்றவர்கள் 'நான் ஐந்து வயதுப் பிள்ளையாக இருக்க அடிக்கடி விரும்புகிறேன்' என்ற கூற்றினை ஒப்புக் கொள்வர். ஆனால், தற்காப்பு வயமானவர்கள் இக்கூற்றைப் பின்னோக்கக் கற்பனைகள் (Regressive Fantasies) தம்மிடம் இருப்பதாக ஒப்புக் கொள்வதைப்போல் எண்ணி, இதனை மறுப்பர். ஆதலின் மிகைச் சோதனை அளவை, தற்காப்பு வய ஆளுமையைக் குறிக்கிறது. குறைவான சோதனை அளவை, தன்வெளிக் காட்டுதல் தன்மையைக் (Self-Revealingness) குறிக்கிறது. இந்த அளவையைத் துல்லியமாக்கிக் காட்டுவதற்காகச் சோதனை அளவையின் புள்ளிகளுடன், 1,4,5,8,9 ஆகிய அளவைகளின் புள்ளிகளைக் காட்டுகின்றனர். இத்தகைய அளவைத் திட்ப நுட்பங்கள், மற்ற அளவைகளுக்குத் தேவையில்லை. க, சோ, உ ஆகிய முதல் மூன்று அளவைகளும் உளக்கோளாறு முக்கூறுகள் என்று கூறப்படுகின்றன. உளக்கூறு மாற்றக் கோளாறு, கற்பனைப் பிணி ஆகிய இரண்டு அளவைகளும் மிகுதியாகவும் சோர்வு மட்டும் மிகையாகவும் காணப்பட்டால், அது உளக்கூறுமாற்றம் என்று கூறப்படுகிறது. இது பதற்ற ஆளுமையைக் குறிக்கிறது.

உளப்பிணிகளைக் குறிக்கும் நாற்கூறு, 6,7,8,9 ஆகிய நான்கு அளவைகளாலும் அறியப்படுகிறது. இதைக் கருத்துத் திரிபுப் பகுதி (Paranoid Valley) என்று கூறுவர். சிறு மனக்குழப்பங்களும் இத்தகைய கருத்துத் திரிபுப் பகுதியினைச் சோதனையில் காட்டும். சோதனையில் பதற்ற முக்கூறு காணப்படும் பொழுது, மூன்றாம் அளவையின் புள்ளியைக் காட்டிலும் முதல் அளவையில் புள்ளி மிகுதியாக இருந்தால் 31 என்றும், குறைவாக இருந்தால் அது 13 என்றும் குறிக்கப்படுகிறது. கருத்துத் திரிபுப்பகுதி 68 அல்லது 86 என்று குறிக்கப்படுகிறது. குற்றவாளிகள் கைதிகள், இளங்குற்ற நடத்தையினர் ஆகியோர் 4,8,9 ஆகிய அளவைகளில் மிகுந்த புள்ளிகள் எடுக்கின்றனர். இளங்குற்ற நடத்தையினர் பி அளவையிலும் 'இகி'யிலும் மிகுந்த புள்ளிகள் எடுக்கின்றனர்.

இக்காலத்தில் மேலை நாடுகளில் மி,ப,ஆ,ப சோதனைகள் கணிப்பொறியின் உதவியுடன் நடத்தப்படுகின்றன. இச்சோதனை பெரும்பாலும் நடைமுறையில் இருந்து வந்தபோதிலும் இதில் சில குறைபாடுகள் காணப்படுகின்றன.

இச்சோதனையில் காணப்படும் கூற்றுகள் இக்காலத்திற்கு ஏற்றனவாக இல்லை. ஆதலின் முடிவுகள் முழுமையாக ஏற்றுக் கொள்ளப்பட முடியாது. மேலும் இச்சோதனையின் மறுசோதனை நம்பகம் (Test Retest Reliability) மிகக் குறைவாகக் காணப்படுகிறது. மி,ப,ஆ, ப வின் குறைகளை நீக்கும் நோக்கத்துடன் கலிபோர்னியா உளவியல் பட்டியல் (California Psychological Inventory) என்னும் ஆளுமைச் சோதனையை ஆரிசன் (Harrison) என்பவர் உருவாக்கினார்.

கைவிரல் நகத்தினால் வரையப்படும் படங்களின் உதவியினாலும் ஆட்படுநரின் கையெழுத்தின் உதவியினாலும் ஆளுமைப் பண்புகளை ஆராய்வதும் வேறுசில புறத்தேற்ற நுண்முறைகள் ஆகும்.

மி ப ஆ ப: எடுத்துக்காட்டு ஒரு முகத் தோற்றப் படம்: (அடுத்த பக்கம்)

6, 8 அளவைகளில் காணப்படும் மிகைப் புள்ளிகளும், 7, 9 அளவைகளில் காணப்படும் குறைப்புள்ளிகளும், கருத்துத் திரிபுசார் உளச்சிதைவு நோயுடன் தொடர்புள்ள ஏற்ற இறக்கங்களைக் காட்டுகின்றன.



மின்னிசோட்டா பன்முக ஆளுமைப் பட்டியல்—வரைபடம்-1



மின்னிசோட்டா பன்முக ஆளுமைப் பட்டியல்—வரைபடம்-2

1, 3 அளவைகளில் காணப்படும் மிகைப்புள்ளிகளும் 2–இல் காணப்படும் குறைப்புள்ளியும் பதற்ற நிலையுடன் தொடர்புள்ள 'உளக்கூறு மாற்ற V' வடிவத்தைக் காட்டுகின்றன.

சார்சு கெல்லி (George Kelly) என்பார், பண்புத் தொகுதி உருச்சட்டம் (Repertary Grid) என்னும் அமைப்பின் உதவியால் ஆட்படுநர் எவ்வாறு தம் பண்புகளை மதிப்பீடு செய்யமுடியும் என்று விளக்கினார். கெல்லி தம் ஆளுமைக் கொள்கை விளக்கத்தைத் தனிச்சிறப்புக் கட்டமைப்பு(Personal Construct) என்று குறிப்பிட்டார். மனிதன் தன்னுடைய எதிர்பார்ப்புகளுக்கு இயைபுற இயங்குகிறான் என்னும் கருதுகோளின்மீது, கெல்லியின் ஆளுமை விளக்கம் அமைந்துள்ளது. மக்கள் தம் உள்ளத்தில் ஒன்றுக்கொன்று எதிரிடையான கருத்துகளைக் கொண்ட இயல்பு இணைகளைக் கொண்டுள்ளனர் என்றும், அவை கருத்துக் கட்டமைப்புகள் (Ideographic Constructs) ஆகும் என்றும், எடுத்துக்காட்டாக மக்களை அகமுகத்தோர் புறமுகத்தோர் என்றோ இன்முகத்தினர் சிடுசிடுப்பு முகத்தினர் என்றோ அறிவாளிகள் முட்டாள்கள் என்றோ இருவகைப் பிரிவுகளுள் ஏதேனும் ஒரு பிரிவினைச் சேர்ந்தவர்கள் என்றும் பிரித்து உணர்கின்றனர். இப்பாகுபாடு தனிமனிதனின் அனுபவங்களின் அடிப்படையில் அமைந்ததாகும். தம் நடத்தைகளையொட்டி நிகழக்கூடிய செயல்கள் நிகழ்ச்சிகள் ஆகியவற்றையும் பகுத்துப் புலனுணர்கின்றனர். தனிமனிதனின் கருத்துக்கட்டமைப்பு (Construct) அவனுடைய அனுபவங்களுக்கு ஏற்ப அமைகிறது. எடுத்துக்காட்டாக மக்கள், நாடுகள், விலங்குகள் போன்றவை நட்புள்ள, நட்பற்ற என்னும் பாகுபாட்டினுள் அடங்குவன. இத்தகைய பாகுபாடு எந்திரங்கள், குழாய்க்கிணறுகள் போன்ற பொருள்களுக்குப் பொருந்தாது. செயல்கள் சூழமைவுப் பொருள்கள் ஆகியவைகளைத் தனிமங்கள் (Elements) என்று கெல்லி குறிப்பிட்டார். கெல்லி, மக்களின் கருத்துக் கட்டமைப்புக்களை நெகிழ் கருத்துக் கட்டமைப்பு (Permeable Constructs) என்றும், நெகிழ்விலாக் கருத்துக்கட்டமைப்பு (Impermeable Constructs) என்றும், இரு பிரிவுகளாகப் பிரித்தார். எடுத்துக்காட்டாக, நட்புள்ள, நட்பற்ற என்னும் கருத்துக் கட்டமைப்பு நெகிழ் வகையினதாகும். மரங்களினின்று சில வகையான மரங்களை மட்டில் பாகுபடுத்தி இலையுதிர் மரங்கள் என்று குறிப்பிடுவது, நெகிழ்விலிக் கட்டமைப்பு ஆகும். ஏனெனில் நெகிழ் கருத்துக் கட்டமைப்புத் தனிமனிதனின் அனுபவங்களுக்கும் சூழமைவுகளுக்கும் ஏற்ப மாறுதல் அடையலாம். பதற்றம், அச்சம், குற்ற உணர்வு, பகைமை எனப் பல பண்புகளையொட்டிய கருத்துக் கட்டமைப்புகள் அனுபவங்களின் அடிப்படையில் மாறலாம். மனிதர்கள் தம் பண்புகளைத் தாமே மதிப்பீடு செய்துகொள்ளக் கூடிய உருச்சட்டம் ஒன்றைக் கெல்லி அமைத்தார். அதன் விளக்கம் வரைபடத்தில் கொடுக்கப் பட்டுள்ளது (படம்-பக்கம் 744)

வரைபடத்தில் முதல் வரிசையில் மூன்று இடங்களை உளச் சோதனையாளர் வட்டமிட்டுக் குறிப்பிடுகிறார். ஆட்படுநர் இவற்றுள் ஒன்றுக்கொன்று இயைபுடைய இடங்களைக் குறியிட்டுக் காட்ட வேண்டும் இவ்விரண்டு இடங்களிலும் குறிப்பிடப் பட்டிருக்கும் சொற்களுடன் தொடர்புகொண்ட ஏதேனும் ஒரு பண்பை அந்த வரிசையின் இறுதியில் எழுதவேண்டும். இவ்விரண்டு இடங்களுக்கும் உரிய

| நான் | தாய் | தந்தை | அண்ணன்/தம்பி | தமக்கை/தங்கை | கணவன்/மனைவி | முன்னர் பகைவராக இருந்தவர் | இறந்த நண்பர் | முன்னர் நண்பராக இருந்தவர் | தன்னை ஏற்றுக் கொள்ளாதவர் | இரங்கத்தக்கவர் | அச்சுறுத்துபவர் | அழகுமிக்கவர் | ஏற்றுக் கொள்ளப்பட்ட ஆசிரியர் | ஏற்றுக் கொள்ளப்படாத ஆசிரியர் | மேலதிகாரி | வெற்றி பெற்றவன் | மகிழ்ச்சியுடையவன் | அறநெறி வழி நிற்பவன் | அண்டை வீட்டுக்காரன் | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ⊗ | ⊗ | | O | X | | X | | | X | | X | X | | | X | X | X | X | இரக்கமுள்ள — இரக்கமற்ற |
| | | | | | | | O | X | ⊗ | | ⊙ | | | X | X | X | | | | அச்சமூட்டவல்ல — மென்மையான |
| | | X | X | X | | | X | | | | | X | X | | X | ⊗ | ⊗ | ⊙ | | கவலையற்ற — மனசாட்சி வயப்பட்ட |
| | X | | X | | ⊗ | O | ⊗ | | | | | X | X | | | X | X | X | X | அக்கறையுள்ள — அக்கறையற்ற |
| O | | X | X | X | ⊗ | | ⊗ | | X | | | X | X | | X | X | X | | | தன்னம்பிக்கையுள்ள — கவலையுள்ள |
| X | ⊗ | X | | X | ⊗ | O | | X | | X | | | | X | X | X | X | | X | கூரறிவுள்ள — கூரறிவற்ற |

கெல்லியின் ஆளுமை மதிப்பீட்டு உருச்சட்டம்

பண்புக்கு நேர் எதிரிடையான பண்பினைக் குறிக்கும் சொல்லினை அதற்கு அருகில் எழுதவேண்டும். இப்பண்பு மூன்றாமிடத்திற்குரிய சொல்லிற்கு இயைபு கொண்டதாக ஆட்படுநரால் கருதப்படுகிறது. வரைபடத்தில் 2,3 ஆகிய இடங்களில் தாய் தந்தை என்ற சொற்கள் இருக்கின்றன. ஐந்தாம் இடம் சோதனையாளரால் வட்டமிடப்பட்டுள்ளது. ஆனால் ஆட்படுநரால் விடப்பட்டது. அங்குத் தமக்கை/தங்கை என்னும் சொற்கள் உள்ளன. இச்சொல் ஆட்படுநரின் உள்ளத்தில் இரக்கமற்ற என்னும் பண்புடன் இயைபுடையதாகத் தோன்றுகிறது. சோதனையாளர் மற்ற வரிசைகளையும் வட்டமிட்டுக் குறிப்பிடுகிறார். ஆட்படுநர் இவற்றை X குறியிட்டுப் பண்புக்கூறுகளை எழுதி, முடித்தபின் இச்சோதனையின் அளவைகள் காரணிப் பகுப்பாய்வு செய்யப்படுகின்றன, பின்னர்ப் பகுப்பாய்வு முடிவுகள் மதிப்பீடு செய்யப்படுகின்றன. இம்மதிப்பீட்டு முறை சிக்கலானது. இதற்கு உளவியலாரின் தொழில் நுட்ப அறிவு தேவை. கெல்லியின் முறையைப் பயன்படுத்தி ஆட்படுநர் தம் ஆளுமைப் பண்புகளைத் தாமே அறிந்து கொள்ளமுடியும்.

சொல் இயைபுச் சோதனைகள்: இச்சோதனையில் ஆட்படுநரிடம் ஒரு சொல் கூறப்பட்டு, அச்சொல் இயல்பாக அவருடைய உள்ளத்தில் எழுப்புகிற வேறு ஏதேனும் ஒரு சொல்லைக் கூறும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார். ஆட்படுநருக்கு முதலில் கொடுக்கப்பட்ட சொல் தூண்டலாகவும், இயைபுச் சொல் துலங்கலாகவும் அமைகின்றன. ஆட்படுநர், துலங்கல் சொல்லை அளிக்க இயலாதிருத்தல் அல்லது தூண்டல் சொல்லை மட்டில் திருப்பிச் சொல்லுதல் போன்ற இயங்குமுறைகள், ஆட்படுநரின் மனவெழுச்சித் தடைகளைப் புரிந்து கொள்வதற்கு உதவுகின்றன. இச்சோதனைச் சூழ்நிலையில் ஆட்படுநர், விரைவாகத் துலங்கல் சொல்லை அளிக்க வேண்டியிருப்பதால் அவர் சற்றும் எதிர்பாராத விதமாக அவருடைய நனவிலி இயங்குமுறைகள் இயைபினை அளித்து விடுகின்றன என்பதே இச்சோதனையில் உட்கருத்தாகும். இச்சோதனையை யுங்கு என்பார், தடையிலா இயைபுச் சோதனை (Free Association) என்னும் பெயரில் புறத்தேற்றச் சோதனையாக அமைத்தார். இச்சோதனையில் ஒரு சொல் கூறப்பட்டவுடன்

உள்ளத்தில் உடனடியாகத் தோன்றும் வேறொரு சொல்லை ஆட்படுநர் கூறவேண்டும். மறு சொல் கூற எடுத்துக் கொள்ளப்படும் நேரம், கூறப்படும் மறு சொற்களின் தன்மை ஆகியவை சோதனை யாளரால் ஆராயப்படும். மறு சொல் கூற நேரம் மிகுதியானால், அது ஆட்படுநரின் உளத்தடைகளைக் குறிக்கும்.

**முடிவுறாச் சொற்றொடர்ச்சோதனை:** ஆட்படுநருக்குச் சொற்றொடரின் முதல் பகுதிச் சொல் அல்லது சொற்கள் மட்டில் கொடுக்கப்பட்டிருக்கும். சொற்றொடரை அவர் முடிக்க வேண்டும். இச்சோதனை முதலில் சொல்லறிவுத் திறனைச் சோதிப்பதற்காக எபிங்காசு (Ebbinghaus) என்பவரால் அமைக்கப்பட்டது. இக்காலத்தில் இச்சோதனை ஆளுமையை மதிப்பிடுகிற முறையாகப் பயன்படுத்தப்படுகிறது. சொல் இயைபுச் சோதனையைப் போன்று இதிலும் ஆட்படுநர் விரைவில் ஒரு சொற்றொடரை முடிக்கும் பொழுது அவருடைய நனவிலி இயங்குமுறைகள் துலங்கல்களை இயக்குகின்றன.

உரோட்டர், இராபர்ட்டி என்னும் இரு உளவியலாளர்கள், முதன்முதலில் இச்சோதனையைப் புள்ளி அளவீட்டு முறையில் அமைத்தனர். சொற்றொடர் முடிவுகள், மிகைஉளப்போராட்டம் (6), உளச் சமநிலை (3), உடன்பாடான (0) என்னும் அளவுகளைக் குறித்தனர். சில முடிவுறாச் சொற்றொடர்த் தொடக்கங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

என் தந்தை எப்பொழுதும் ..................

மகிழ்ச்சி நிறைந்த நேரம் ..............................

என் தாயும் நானும் ...........................

நான்...... குறித்து மிகவும் கவலைப்படுகிறேன்.

நான் மனக்கவலை அல்லது சினத்துடன் இருக்கும் பொழுது ............

மேற்குறிப்பிட்ட சொற்றொடர்களுள் முதலாவது சொற்றொடருக்கு அச்சுறுத்தி வந்தார் என்பது போன்ற முடிவுகள் 6 புள்ளிகளும், கடினமாக உழைப்போர் என்பது போன்ற முடிவுகள் 3 புள்ளிகளும், என்னிடம் நேசம் கொண்டு என்னை எப்பொழுதும் மகிழ்விப்பார் என்பது போன்ற முடிவுகள் 0 உம் பெறுகின்றன. இத்தகைய 40 கூற்றுகள் கொடுக்கப்பட்டு அவற்றின் மொத்தப் புள்ளிகள் கணக்கிடப்படுகின்றன. இச்சோதனை, பல துறையினரால் பயன்படுத்தப் பட்டு வருகிறது. உலோவிங்கர் (Loevinger) என்னும் உளவியறிஞரால் 1976-ஆம் ஆண்டு மற்றொரு சொற்றொடர் முடிவுச் சோதனை உருவாக்கப்பட்டது. இச்சோதனையில் 36 முடிவுறாக் கூற்றுகள் இருக்கின்றன. இவற்றின் முடிவுகளைக் கொண்டு தன்முனைப்பு வளர்ச்சித் தன்மைகள், மதிப்பீடு செய்யப்படுகின்றன. உள்துடிப்பு வயம், சந்தர்ப்பவயமான, உடன்பாடான, மனச்சாட்சிக்கு ஏற்ற, தன்னிச்சையான, தனியாள் போன்றவை உலோவிங்கர் கூறும் தன்முனைப்புத் தன்மைகளுள் சிலவாகும்.

சொற்புறத்தேற்றச் சோதனையில், ஒரு கதையை உருவாக்கவல்ல மையக் கருத்துகளைக் கொண்ட சொற்கள் ஆட்படுநரிடம் அளிக்கப்படுகின்றன. பொருள் இணைத்தறி சோதனையைப் போன்றே இங்கும் மையக் கருத்தைக் கொண்ட ஒரு கதையைக் கூறும்படி அல்லது எழுதும்படி ஆட்படுநர் கேட்டுக் கொள்ளப்படுகிறார். மையக் கருத்து, அமைப்பிலாத் தூண்டல்களாகக் கொடுக்கப்படுகிறது. சான்றாக, 'அவன் சோர்வுடன் ஆற்றங்கரையில் அமர்ந்திருக்கிறான்' — அருகில் இருவர் பேச்சொலி கேட்டுத் திரும்புகிறான்' இத்தகைய இருபது அமைப்பிலாத் தூண்டல்கள் ஆட்படுநரிடம் அளிக்கப்படுகின்றன. ஒவ்வொரு தூண்டலின் அடிப்படையிலும் ஒரு கதையைக் கூறுமாறு அல்லது எழுதுமாறு சொல்லப்படுகிறது. இச்சோதனையைப் பண்பாட்டுச் சமநிலைச் சோதனையாகவும் (Culture Free Test) எளிதாகப் பயன்படுத்தலாம். வரைவுச் சோதனைகளில் ஆட்படுநர் வீடு, மரம், மனிதன் இயற்கைக் காட்சி போன்றவற்றை வரையுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார். ஆட்படுநர் எத்தகைய மனப்பாங்குகள் கொண்டிருக்கின்றனர் என்பதைத் தாம் வரையும் படத்தில் புறத்தேற்றுவர் என்னும் கருதுகோளின்மீது இச்சோதனை அமைக்கப்பட்டிருக்கிறது. வரையப்பட்ட உருவத்திலுள்ள மாறுதல்கள், விடப்பட்ட விவரங்கள், வரைபடத்தாளின் எந்தப் பகுதி வரையப்பட்டிருக்கிறது ஆகியவை யாவும் கவனமாக ஆராயப்படுகின்றன. மனிதன் – வரை-சோதனை (Draw - a - man-test) என்பது, பெரும்பாலும் பயன்படுத்தப்படும் சோதனையாகும்.

நிறுவனங்களில் பணியாளர்கள், அதிகாரிகள், தொழில்துறை வல்லுநர்கள், தொழிலாளிகள் போன்ற பல்வேறு வகையினரைப் பணியில் அமர்த்தும் பொழுது ஆளுமை மதிப்பீட்டு முறைகளும் சோதனைகளும் பயன்படுத்தப்படுகின்றன. இச்சோதனைகளை நிறுவனங்கள் அவ்வப்பொழுது தேவைக்கேற்ப மாற்றியமைக்கின்றன. இச்சோதனைகளால் எந்தப் பணிக்காக அமர்த்தப் படுகின்றனரோ அந்தப்பணிக்குத் தேவையான மன உறுதியும் வேறு உளநிலைகளும் அவர்களிடம் காணப்படுகின்றனவா

என்பதை எளிதில் அறிந்து கொள்ள முடிகிறது. பணியாளர் தேர்வு நிகழும்பொழுதே அவர்களிடம் தாக்குதல் தன்மை (Aggression), வன்முறை (Violence), கருத்துத்திரிபு மனப்பாங்கு (Paranoid Tendency), பிடிவாதம், கருத்துவயமாதல்(Suppressibility) போன்ற உளக்கூறுகள் காணப்படுகின்றனவா என்பதைக் கண்டு பிடிக்கலாம். இவ்வாறு பண்புக் கூறுகளைக் கண்டுபிடிப்பதனால் தொழிலமைதி, நிறுவன ஒழுங்கு போன்றவற்றினுக்கு ஊறு செய்யக் கூடியவர்களைப் பணியில் அமர்த்துவதைத் தவிர்க்கலாம். பணியில் இருக்கும் அதிகாரிகளுக்குப் பதவி உயர்வு செய்யப்படும் பொழுதும் இத்தகைய சோதனைகளைப் புதியனவாக அவ்வப்பொழுது அமைத்துப் பயன்படுத்துகின்றனர்.

கல்வி நிலையங்களிலும் இச்சோதனை, மாணவர்களின் பண்புக் கூறுகளைக் கண்டுபிடித்து அவர்களுக்கு ஆவன செய்யப் பேருதவியாக இருக்கிறது. இராணுவத்தில் அதிகாரிகளைத் தேர்ந்தெடுப்பதிலும் ஆளுமைச் சோதனைகள் பெருமளவில் பயன்படுத்தப் படுகின்றன.

இத்துறையில் தனிப்பட்ட பயிற்சி பெற்றவர்களாலும் உளநோய் நீக்கு உளவியலாளர்களாலும் மட்டிலுமே ஆளுமைச் சோதனைகளை உருவாக்குதலும் அமைத்தலும் பயன்படுத்தலும் இயலும்.

இக்காலத்தில் பெரும்பாலும் பயன்படுத்தப்படும் ஆளுமைச் சோதனைகளுள் சில இங்குக் கொடுக்கப் பட்டுள்ளன. அவையாவன:

பதற்ற அளவை (Anxiety Scale), மாட்சுலி ஆளுமைப் பட்டியல் (Maudsley's Personality Inventory), ஐசங்கு ஆளுமைப் பட்டியல் (Eysenk Personality Inventory), உளச்சோர்வு அளவை (Depression Scale), வாழ்க்கை நிகழ்ச்சிகள் அளவை (Life Events Scale), பொது உளக் கோளாறு அளவை (General Neurotic Scale), கில்போர்டு சிம்மர்மன் மனப்பாங்கு அளவீடு (Guilford-Zimmerman Temperament Survey), மூனி சிக்கல் சீராய்வுப் பட்டியல் (Mooney Problem Check List), தார்ன்டைக்கு மனப்பாங்குப் பரிமாணங்கள் (Thorndike Dimensions of Temperament), கென்ட்டு உரோசனாப்புத் தடையிலா இயைபுச் சோதனை (Kent Rosanoff Free Association Test), படக் கதைச் சோதனை (Make A Picture Story-MAPS Test), உரோசன்சுவெர்கு மனக் குலைவுப் படச் சோதனை (Rozcnzwerg Picture-Frustration Study P-F Study), பிளாக்கி படங்கள் (Blacky Picture), முதியோர் பொருள் இணைத்தறி சோதனை (Gerontological Appreception Test), பதினாறு ஆளுமைக் காரணிப் பட்டியல், மின்னி சோட்டா பன்முக ஆளுமைப் பட்டியல், உரோர் சாக்கு மைத்தடச் சோதனை.

துணை நூல்கள்:

Anne Anastasi, Psychological Testing, Collier Macmillian International Edition, NewYork, 1976.

William Samuel, Personality, McGraw Hill Inc, New York, 1981.

Lee J. Cronbach, Essentials of Psychological Testing, Harper & Row Publishers, New York, 1949.

Ernest R. Hilgard, et al, Introduction to Psychology, Harcourt Brace Jovanovich, New York, 1975.

**ஆற்றலும் ஆணையுரிமையும்:** ஆற்றலைப் போன்ற தன்மையுடையது செல்வாக்கு. ஆனால் இரண்டும் ஒன்றன்று. ஆற்றல் வேறு; செல்வாக்குவேறு. 'செல்வாக்கு மற்றவர்களை ஒரு குறிப்பிட்ட நிலையான வழியில் நடக்குமாறு தூண்டும் தன்மை கொண்டது. ஆனால், ஆற்றல் (Power) மற்றவர்களை ஒரு நிலையான வழியில் நடக்குமாறு கட்டாயப்படுத்தும் தன்மை கொண்டது'. செல்வாக்கிற்கு ஒருவர் தம் விருப்பத்தோடு இணங்குகிறார். ஆனால், ஆற்றலுக்கு அவர் விரும்பினாலும், விரும்பாவிடினும் அடிபணிய வேண்டியிருக்கிறது. ஆகவே, அவர் ஆற்றலுக்குக் கட்டாயமாக அடிபணிகிறார். எடுத்துக்காட்டாக, ஒரு சமூகத் தொண்டர் ஆடு, கோழிகளைக் கோயில்களில் பலியிட வேண்டாம் என்று மக்களிடம் கேட்டுக் கொள்ளும்போது, அவருடைய வேண்டுகோளை மக்கள் ஏற்றுக் கொள்ளும் நிலையில், செல்வாக்கு இடம்பெறுகிறது. ஆனால், ஓர் அரசாங்க அதிகாரி அத்தகைய சூழலில் ஆடு கோழிகளைப் பலியிடக் கூடாது என்று மக்களைக் கேட்டுக் கொள்ளும்போது ஆற்றல் இடம்பெறுகிறது. மக்கள் ஆற்றலுக்கு அடிபணிகிறார்கள்.

மேலும், ஒருவர் தம் செல்வாக்கைப் பயன்படுத்தும்போது அது உரிமை அடிப்படையில் நிகழ்வதில்லை. ஆனால், ஆற்றலைப் பயன்படுத்தும்போது அது உரிமை அடிப்படையில் நிகழ்கிறது. எனவே ஆற்றலைப் பயன்படுத்துவதில் உரிமை அடங்கியிருக்கிறது.

ஆற்றல் பயன்படுத்தப்படும்போது அதைப் பயன்படுத்துபவர் அதற்கு உட்படுபவர் என்ற தொடர்பு நிலை - (ஆற்றல் தொடர்பு நிலை) உண்டாகிறது. இந்த நிலை உண்டாவதற்கு, ஆற்றலைப் பயன்

படுத்துபவர்களும், அதற்கு உட்படுபவர்களும் ஒரு பொதுச் சமூக உறவுத் தளத்தில் இருப்பவர்களாக, தமக்கிடையே சமூகத் தொடர்பு கொண்டவர்களாக இருத்தல்வேண்டும். அத்தகைய சூழ்நிலையில்தான் அவர்கள் ஆற்றல் தொடர்பில் ஆட்பட்டு, ஒருவர் அதைப் பயன்படுத்தவும், மற்றவர்கள் அதற்கு உட்படவும் கூடும். எடுத்துக்காட்டாக, இரு வாணிகக் குழுமங்கள் வாடிக்கையாளரைக் கவர்ந்துகொள்வதில் போட்டி போடக்கூடும். அப்பொழுது ஒரு குழுமம் மற்றொரு குழுமத்தின் மீது தம் ஆற்றலைச் செலுத்தி அதனைக் கட்டுப்படுத்த முனையலாம். அந்த நிலையில் அவ்விரண்டு குழுமங்களுக்கும் ஆற்றல் தொடர்பு உண்டாகிறது. அவ்வாறே இரு குழுக்களும் (நிருவாகத்தினரும், தொழிலாளர்களும் போல்) முரண்பட்ட பற்றுக்கோடுகள், கருத்துகள் காரணமாக மோதுகிற சூழ்நிலையில், ஒன்று மற்றொன்றின் மீது தன் ஆற்றலைச் செலுத்த முனைகிறது. அந்த நிலையில் அவற்றுக்கிடையே ஆற்றல் தொடர்பு ஏற்படுகிறது. (சமூகத்தொடர்பு இல்லாத குழுக்களில் ஆற்றல் உறவு நிலை தோன்றுவதில்லை).

ஆன்சு கெர்த்து, இரைட் மில்சு (Hans Gerth and Wright Miles) ஆகியோர் ஆற்றல் தொடர்புக்கு இன்னொன்றும் தேவை என்கின்றனர். ஆற்றலைப் பயன்படுத்துபவருக்கும், ஆற்றலுக்குட்படுபவருக்குமிடையே, ஆற்றலைச் செலுத்துதல் தொடர்பாக ஒரு கருத்திசைவு இருக்க வேண்டும் என்கின்றனர். இக்கருத்திசைவு, இரு சாராரும் அமைத்துக் கொண்ட உடன்படிக்கை காரணமாகவோ, உடன்பட்டு ஏற்றுக் கொண்ட விதிமுறைகளின் காரணமாகவோ, இயற்கை விதியின் காரணமாகவோ அமைகிறது. இக் கருத்திசைவின் அடிப்படையிலேயே ஆற்றலுடையார் பிறர் மீது தம் ஆற்றலைச் செலுத்தவும், பிறர் அதற்கு உட்படவும் நேரிடுகிறது. அதாவது தமக்கிடையே ஆற்றல் தொடர்பை ஏற்படுத்திக் கொள்ள நேரிடுகிறது. கருத்திசைவு இல்லாவிடில் ஆற்றல் தொடர்பு ஏற்பட வாய்ப்பில்லை.

ஆற்றலுடையார் தம் ஆற்றலைப் பிறர்மீது மூன்று வடிவங்களில் செலுத்தக்கூடும் என்று எர்பர்ட் கோல்தரும், கோல்டு காமரும், எட்வர்டு ஏ. சீல்சும் கூறுகின்றனர். முதலாவது, ஆற்றலுடையார் தமக்கு அடங்கியவர்களை அடித்தோ அடைத்து வைத்தோ, அவர்களை ஒரு குறித்த வழியில் நடக்கச் செய்வது ஆகும். இது தாக்காற்றல் (Force) எனப்படும். இரண்டாவது, ஆற்றலுடையார், அடங்கிய நிலையினரிடமிருந்து தாம் எத்தகைய நடத்தையை எதிர்பார்க்கிறார் என்பதை ஓர் ஆணையின் வாயிலாகவோ ஒரு வேண்டுகோளின் வாயிலாகவோ வெளிப்படுத்தி அவர்களை அதற்கேற்ப நடக்கவைப்பதாகும். இதற்கு ஆதிக்கம் (Domination) என்பது பெயர். மூன்றாவது, தாம் எந்த முறையான நடத்தையை அடங்கிய நிலையினரிடமிருந்து எதிர்பார்க்கிறார் என்பதை வெளிப்படுத்தாமல், அவர்களைச் சூழ்ச்சித்திறத்தோடு வயப்படுத்திக் குறித்த வழியில் நடக்கச் செய்வதாகும். இதற்குச் சூழ்ச்சித் திறத்துடன் கையாள்தல் (Manipulation) என்பது பெயர். அடங்கிய நிலையினரின் அறியாமையைப் பயன்படுத்தியோ, விதிமுறைகளைத் தமக்கு உதவியாகுமாறு பயன்படுத்தியோ ஆற்றலுடையார் இவற்றைச் செய்வதுண்டு.

பிறர் நடத்தையைத் தம் விருப்பத்திற்கேற்ப உறுதி செய்து, கட்டுப்படுத்தும் ஆற்றல் பலரிடம் இருத்தல் கூடும். ஆயினும் அவர்கள் எல்லாரும் தம் ஆற்றலைப் பயன்படுத்தி மற்றவர்களைக் கட்டுப்படுத்த முடியாது. ஒரு சிலருக்கே அந்த ஆற்றலைப் பயன்படுத்தும் உரிமை உண்டு. அவ்வுரிமைக்கு ஆணையுரிமை (Authority) என்பது பெயர்.

மாக்சு வேபர் (Max Weber) ஆணையுரிமை மூன்று வழிகளில் அமைகிறது என்கிறார். முதலாவது, ஒருவனுக்கு மற்றவர்களிடம் இல்லாத ஓர் இயல்பு மீறிய குணம் இருந்தால் அதன் அடிப்படையில் அவனுக்கு ஆணையுரிமை அமையக் கூடும் என்பதாகும். அவனிடம் உண்மையில் இயல்பு மீறிய குணவியல்பு இல்லாவிட்டாலும், அப்படிப்பட்ட ஒரு குணவியல்பு அவனிடம் இருப்பதாகப் பிறர் நம்பினாலும் போதும். அந்த நம்பிக்கையைப் பயன்படுத்தி அவர்கள் மீது ஆற்றலைப் பயன்படுத்தும் ஆணையுரிமை எய்தலாம். இவ்வாறு ஓர் இயல்புமீறிய குணவியல்பின் அடிப்படையில் ஆற்றலைப் பயன்படுத்தும் ஆணையுரிமை அமைந்தால், அது வியப்பாற்றல்சார் ஆணையுரிமை (Chasematic Authority) எனப்படும். மந்திரவாதிகளும் வருவதுரைப்போரும் தங்களைப் பின்பற்றுவோர் மீது வியப்பாற்றல்சார் ஆணையுரிமையின் அடிப்படையில்தான் தம் ஆற்றலைப் பயன்படுத்துகிறார்கள்.

வியப்பாற்றல் சார் ஆணையுரிமை அமையப் பெற்றவர்கள் அதன் அடிப்படையான இயல்புமீறிய பண்பு இருக்கும் வரை அல்லது அந்தப் பண்பு அவர்களிடம் இருப்பதாக மக்கள் நம்புகிறவரைதான் ஆணையுரிமை செலுத்த முடியும். அது மறைந்தாலோ, மறைந்துவிட்டது என்று மக்கள் நம்பத் தொடங்கினாலோ வியப்பாற்றல் சார் ஆணையுரிமை நலிந்துவிடும்.

இரண்டாவது அறிவார்ந்து இயற்றப்பட்ட சட்ட நியதிகளின் பின்னணியில் ஒருவரிடம் ஆணையுரிமை

அமைவதாகும். அது அறிவு சார் சட்டமுறை ஆணையுரிமை (Rational-Legal Authority) எனப் படும். இவ் ஆணையுரிமை அனைவருக்கும் அமை யாது. சட்ட அடிப்படையிலான தகுதிகளைக் கொண்டவர்களிடம் மட்டுமே அமையும். அரசாங்க அலுவலர்களிடம் அமைகிற ஆணையுரிமை இந்த வகையைச் சேர்ந்ததாகும். அவர்கள் சட்ட முறை யான தகுதிகளின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப் படுகிறார்கள். அரசியல் சாசனத்தைக் கொண்டு இயற்றப்பட்ட சட்ட நியதிகள், விதிமுறைகள் ஆகிய வற்றின் அடிப்படையில் அவர்களுக்கு ஆணையுரிமை வழங்கப்படுகிறது.

மூன்றாவது வழிவழியாக வருகிற மரபின் அடிப் படையில் ஆணையுரிமை அமைதல் ஆகும். இத்தகைய ஆணையுரிமை மரபுசார் ஆணையுரிமை (Traditional Authority) எனப்படும். தந்தையாட்சிக் குடும்பங் களில் மூத்த மகனுக்கே குடும்பத்தைக் காக்கும் பொறுப்பும் ஆணையுரிமையும் அமைகின்றன. இதற் குக் காரணம் மரபே. மூத்த மகன் குடும்பத்தை நடத்தி வரும் மரபுடைய குடும்பங்களில் அவனுக்கே குடும்பத்தை நடத்தும் ஆணையுரிமை அமைகிறது. இந்த ஆணையுரிமை மக்கள் மரபைப் போற்றிப் பேணி வருகிற வரையில்தான் நீடிக்கும். மக்களுக்கு மரபின் மீதுள்ள மதிப்புக் குறையுமானால் இவ் வாணையுரிமை வலிமை குன்றும்.

எவரிடம் ஆணையுரிமை அமைந்திருக்கிறதோ, அவரே ஆற்றலைப் பிறர் மீது செலுத்த முடியும். அவ்வாறு செலுத்தும் ஆற்றலே முறைமையான ஆற் றல் (Legitimate Power) எனப்படும். ஆணையுரிமை அமையாதவர்கள் பயன்படுத்தும் ஆற்றல் முறை கேடானது.

ஆற்றலைச் செலுத்துபவருக்கும் (ஆணையுரிமை யுடையார்), செலுத்தப்படுபவருக்குமிடையே ஒரு கருத்திசைவு நிலவுகிறது. இந்தக் கருத்திசைவின் காரணமாகத்தான் ஆணையுரிமையுடையார் தம் உரிமையைப் பயன்படுத்தி ஆற்றலைச் செலுத்து தலும், செலுத்தப்படுபவர்கள் அதை ஏற்றுக் கொள்ளுதலும் நிகழ்கின்றன.

ஆணையுரிமை பெற்றிருப்பதாலேயோ, கருத் திசைவு இருப்பதாலேயோ மட்டும் ஆணையுரிமை யுடையார் செலுத்தும் ஆற்றல் முறைமையானதாக அமையாது. ஆணையுரிமையுடையார் எந்த அளவி லும் எல்லைக்குள்ளும் தம் ஆணையுரிமையைச் செலுத்தலாம் என்னும் வரையறை உண்டு. இந்த வரையறையை உடன்படிக்கைகள், விதிமுறைகள், சட்ட நியதிகள் மரபு வழி நெறிகள் ஆகிய இவற்றுள் ஒன்று முடிவு செய்கிறது. இவ்வாறு வரையறுக்கப் பட்ட எல்லையைக் கடந்து ஆணையுரிமையுடையார் தங்கள் ஆணையுரிமையைச் செலுத்தல் கூடாது. அப்படிச் செலுத்தினால் அது முறையற்றதாக அமை யும்.

ஆணையுரிமையுடையார் தம் ஆற்றலை நேரிடை யாகவோ மறைமுகமாகவோ செலுத்துகிறார்கள். இடையீட்டாளர் இல்லாமல் ஆணையுரிமையுடை யார் தம் ஆற்றலைப் பிறர் மீது நேரடியாகச் செலுத்தினால் அது நேரடியான ஆற்றல் செலுத்து தல் எனப்படும். ஓர் ஆசிரியர் தம் மாணவர் மீது ஏவும் ஆற்றல் இத்தகையது. தமக்குக் கீழ்ச் சிலரை அமர்த்திக் கொண்டு அவர்கள் வழியாகப் பிறர் மீது ஆணையுரிமையுடையார்கள் தம் ஆற்றலைச் செலுத்து தலுண்டு. அது ஆற்றலை மறைமுகமாகச் செலுத்து தல் எனப்படும். தொழிலதிபர்கள், மேற்பார்வை யாளர்கள் வழியாகவே தம் ஆற்றலைத் தொழி லாளர்கள் மீது செலுத்துகின்றனர். இந்த நேரத் தில், அவர்கள் தங்கள் ஆணையுரிமையை இடை யீட்டாளருக்கு வழங்குகிறார்கள். ஆயினும், அவர் கள் ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள்தான் தாம் பெற்ற ஆணையுரிமையைப் பயன்படுத்த முடியும்.

ஆணையுரிமையின் அடிப்படையில் தமக்கு அடங் கியவர் மீது ஆற்றலைச் செலுத்தும்போது அவரிட மிருந்து கீழ்ப்படிதலை எதிர்பார்க்க உரிமை உண்டு. கீழ்ப்படியத் தவறினால் ஒழுங்கு நடவடிக்கை எடுக்க அவருக்கு உரிமை உண்டு. இந்த உரிமை ஆணை யுரிமையின் ஒரு பகுதியாகும். இந்த ஒழுங்கு நட வடிக்கையை ஆணையுரிமையுடையார் நேரடி யாகவோ, இடையீட்டாளர் வழியாகவோ எடுக்க லாம். ஒழுங்கு நடவடிக்கை எடுப்பதன் வாயிலாக ஆணையுரிமையுடையார் தம் உரிமையை நிலைநாட் டிக் கொள்ளுகிறார்; தம் தகுதியைத் தக்க வைத் துக் கொள்ளுகிறார்.

சி.என்.ந.

துணை நூல்கள் :

Brown J.M. 'Power', A Dictionary of the Social Sciences, Ed. by Julius Gould and William L. Kolb. New York, 1964.

Coser, Lewis. A. & Rosenberg, Bernard, Ed. Sociological Theory: A Book of Readings, London Collier Macmillan Limited, 1966.

Dahl, Robert. L., Power, International Encyclopaedia of the Social Sciences, Ed. by David. L. Shills, Macmillan Company, New York. 1968.

Friendrich. C. J. Authority, A Dictionary of the

Social Scienees, Ed. by Julius Gould and William L. Kolb, New York 1964.

Tiamsheff, N.S., Sociological Theory, Its Nature and Growth Random House, New York, 1967.

**ஆற்றுப்படை இலக்கியம்**: ஆற்றுப்படை என்பது சங்கச் சான்றோர் பாடுதற்கு மேற்கொண்ட துறை வகைகளுள் ஒன்று. தொல்காப்பியர் புறத்திணையியலில், "கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும், ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப், பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச், சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமும்' என்னும் நூற்பாப் பகுதியில் ஆற்றுப் படையின் இலக்கணம் கூறியுள்ளார். ஆற்றுப்படையென்பது கூத்தர் முதலானவருள் ஒருவர் ஒருவள்ளல்பால் தாம் பெற்ற பெருஞ் செல்வத்தை எதிர்வந்த இரவலர்க்கு அறிவுறுத்தி அவரும் அவன்பாற் சென்று தாம் பெற்றது போலப் பெறுமாறு வழிப்படுத்துவதாகும். ஆறு-வழி; படை-படுத்துதல் என்பதாம். ஒரு திணைக்குரிய துறை வகையாக அமைந்த ஆற்றுப்படை, அதன் சிறப்பினால், வளர்ச்சியுற்றுத் தனியே ஓர் இலக்கிய வகையாக அமைந்தது. பின்னர்ச் சிற்றிலக்கியங்களாகிய பிரபந்தங்கள் தொகுக்கப்பட்டபோது, அவற்றுள் ஒன்றாக இடம்பெற்றது. பிரபந்த இலக்கணங் கூறும் பாட்டியல் நூல்கள் இதன் இலக்கணத்தைக் குறிக்கலாயின.

இவ்விலக்கணம் பின்னர்த் தோன்றிய இலக்கண நூல்களில் விரிவடைந்து காணப்படுகிறது. கூத்தர் பாணர் பொருநர் விறலியர் போலவே புலவரையும் புரவலன்பால் 'செல்கென விடுப்ப தாற்றுப்படை' என்றும், 'புலவராற்றுப்படை புத்தேட்கும் உரித்தே' என்றும் பன்னிருபாட்டியல் விதி வகுக்கிறது. தொல்காப்பியத்தில் புலவரை ஆற்றுப்படுத்துதல் என்பது இடம்பெறாது போகவே, புறநானூற்றில் இடம் பெறும் புலவராற்றுப்படை, பத்துப்பாட்டில் இடம் பெறும் திருமுருகாற்றுப்படை இவற்றை நினைந்து இவ் விலக்கணம் பின்னர் எழுதப்பட்டதாகக் கொள்ளலாம்.

சங்கவிலக்கியங்களுள் புறநானூற்றிலும் பதிற்றுப்பத்திலும் ஆற்றுப்படைப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. புறநானூற்றில் பாணாற்றுப்படை, விறலியாற்றுப்படை, புலவராற்றுப்படை ஆகிய துறைக்குரிய சில பாடல்களும், பதிற்றுப்பத்தில் பாணாற்றுப் படை விறலியாற்றுப் படை ஆகிய துறைக்கான சில பாடல்களும் காணப்படுகின்றன.

இவ்விரு இலக்கியங்களிலும் இடம்பெறும் ஆற்றுப் படைப் பாடல்களில் பாணரின் அல்லது விறலியரின் வறுமைநிலை, அவர்தம் இசைக்கருவிகள், மன்னர்களின் போர்ச்சிறப்பு, நாட்டுச்சிறப்பு, ஊர்ச்சிறப்பு ஆகியவை குறிக்கப்படினும், கொடையாளிகளின் கொடைச் சிறப்பே மையப்பொருளாக அமையக் காணலாம். 'எத்துணை யாயினும் ஈதல் நன்று' (புறம். 141) என்று புரவலர்கள் ஈதலையே அழகிய செயலாகத் தம் வாழ்நாளிற் கொண்டனர் என் பதையும், அவ்வீதல் தானும்அவரால் மறுமை நோக்கிச் செய்யப்பட்டதன்று, பிறர் வறுமை நோக்கிச் செய்யப்பட்டது என்பதையும் அறிய முடிகிறது. எந்நாளும் உடுத்தாது; போர்த்தித் திரியாது என அறிந்துவைத்தும் மயிலுக்குப் போர்வையளித்த பேகனின் கொடை மடம் கூறப்படுகிறது. பேகனைக் காணா முன்பு 'நின்னினும் புல்லியேம்' என்றும், அவனைக் கண்டபின்பு, 'இனியே இன்னேம் ஆயினேம்' என்றும் பாணன் கூறும் கூற்றுகள் பேகனின் வண்மையை எடுத்துக்காட்டுகின்றன. ஊடற்காலத்துத் தம் மகளிர் சினந்துபார்த்த பார்வைக்கு அஞ்சு தலைக் காட்டிலும் இரவலர்தம் பசித்துன்பத்தை அஞ்சுகின்ற நெஞ்சினன் என்று ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கைபாடினியார் பாடுவதும், 'பிறன்கடை மறப்ப நல்குவன் (புறம். 68) என்று நலங்கிள்ளியைக் கோவூர்கிழார் பாடுவதும், இரவலர் வறுமையைப் போக்குவது மட்டுமேயன்றி, அவர்கள் மீண்டும் இரவாது வாழ வேண்டும் என்று எண்ணிய அன்றைய கொடையாளிகளின் அருள் உள்ளங்களையும் தெரிவிக்கின்றன.

புறத்திலும், பதிற்றுப்பத்திலும் இடம்பெறும் பாடல்கள் சிலவடிகளையே கொண்டனவாதலின் இரப்பார், வள்ளல்கள், அவர்தம் நாடுகள், தமிழகத்தின் நிலவளம் போன்றவை பற்றிய செய்திகள் அவற்றில் விரிவாகக் கூறப்படவில்லை. இவற்றை விரிவாகக் கூறவேண்டும் என்று புலவர்கள் எண்ணிய எண்ணத்தின் விளைவே பத்துப்பாட்டுள் இடம் பெற்றுள்ள ஆற்றுப்படை இலக்கிய நூல்களாகும்.

பத்துப்பாட்டுள் செம்பாதி ஆற்றுப்படை இலக்கியங்களாக இடம் பெறுவதினின்றும் அக்காலத்தே இவ்விலக்கிய வகை பெற்றிருந்த செல்வாக்கை உணரலாம். அவை முருகாற்றுப்படை, பொருநராற்றுப் படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப் படை, கூத்தராற்றுப்படை (மலைபடுகடாம்) என்பனவாகும்.

முருகாற்றுப்படை நக்கீரரால் இயற்றப்பட்டது. முருகாற்றுப்படை என்னுந்தொடருக்கு, 'வீடுபெறுதற்குச் சமைந்தானோர் இரவலனை வீடுபெற்றானொருவன் முருகனிடத்தே ஆற்றுப்படுத்தது' என்று நச்சினார்க்கினியர் பொருள் விளக்கம் தந்துள்ளார். இது பிற ஆற்றுப்படைகளினின்றும் வேறுபடுகிறது. பிற ஆற்றுப்படைகள் ஆற்றுப்படுத்தப் படுபவர்களின் பெயரொடு சார்த்தி வழங்கப்பட, இவ்வாற்றுப்

படை முருகன் திருப்பெயரால் முருகாற்றுப்படை எனப் பாட்டுடைத் தலைவன் பெயரொடு சார்த்தி வழங்கப்படுகிறது. பிற ஆற்றுப்படைகளில் சிறப் பிக்கப்படும் தலைவர்கள் மக்களுட் சிறந்த முடிமன் னரும், குறு நிலத்தலைவருமாவார்கள். அவர் வழங் கிய பெருவளம் பொன்னும் மணியுமான உலகியற் செல்வங்கள். முருகாற்றுப்படையில் முருகனே தலை வனாவான். அவன் வழங்கும் பரிசுப் பொருளோ திருவருள் ஞானம். இதனை ஆசிரியர் நக்கீரர் 'பெற லரும் பரிசில்' (295) எனச் சுட்டுவர். இப்பாடல் முருகக் கடவுள் எழுந்தருளியிருக்கும் திருப்பரங் குன்றம் முதலாகிய படைவீடுகளைப் பாராட்டி முருகப் பெருமானின் அருளாட்சியின் மாண்பை எடுத்தோதுகிறது. இதனை முருகு எனவும், புல வராற்றுப்படை எனவும் வழங்குப.

பொருநராற்றுப்படை முடத்தாமக் கண்ணியா ரால் பாடப்பட்டதாகும். பரிசில் பெறக் கருதிய ஒரு பொருநனைப் பரிசில் பெற்றானொருவன் கரிகாற் பெருவளத்தானிடத்தே ஆற்றுப்படுத்தியதாக அமைந் தது. இப்பாடலில் கரிகாற் பெருவளத்தான் பற்றிய செய்திகளும் அவன் ஆண்ட சோணாட்டின் வளமும் சிறப்பிடம் பெறுகின்றன. 'நசையுநர்த் தடையா நன்பெரு வாயில்' (66) என்று அவன் அரண்மனை வாயில் சிறப்பிக்கப்படுவதால், கரிகாலனின் அரசப் பண்பு நன்கு விளக்கமுறுகிறது. பழகிய நண்பனைப் போல் உறவு கொண்டு, பருகுவன்ன காதல் உள்ள மொடு பொருநனை அருகிருத்தி, ஈரும்பேனும் கலந்த ஆடை போக்கிப் பூத்தொழில் பொருந்திய அரவுரி யன்ன ஆடை நல்குவான் என்று கரிகாலனின் கொடைத்திறம் சிறப்பிக்கப்படுகிறது.

'அவைபுகு பொழுதிற்றம் பகைமுரண் செலவும்' என்னும் சொற்றொடர் கரிகாலன் வழக்கு மாறு பட்டு வந்தார்க்கு அவ்வழக்கு விடறுத்துப் பெரி தாண்ட அரச வாழ்வினை எடுத்துரைக்கிறது. 'வேலியாயிரம் விளையுட் டாகக் காவிரி புரக்கும் நாடு' என்றும், 'மாமாவின் வயின்வயின் நெற்கூடு கெழீஇய நாடு' என்றும் முறையே காவிரியின் பெரு மையும், சோணாட்டின் வளமும் பாராட்டப்படுகின் றன.

சிறுபாணாற்றுப்படை இடைக்கழி நாட்டு நல் லூர் நத்தத்தனாரால் பாடப்பட்டதாகும். பரிசில் பெறக் கருதிய பாணனொருவனைப் பரிசில் பெற்றா னொருவன் ஓய்மானாட்டு நல்லியக் கோடன்மாட்டு ஆற்றுப்படுத்துவதாகப் பாடப்பட்டது. சிறுபாணனை ஆற்றுப்படுத்துவதால் இப்பாட்டல் இப்பெயர் பெற் றது எனக் கூறுவ 'இன்குரற் சீறியாழ் இடவயிற் றழீஇ' என்னும் சொற்றொடர் இந்நூலுள் இடம் பெறுவதால் இந்நூற்பெயருக்கு யாழும் ஒரு காரண மாக அமைகிறது. என்பர். தக்கயாகப் பரணி உரை யாசிரியர் இந்நூலை, 'சிறப்புடைத்தான சிறுபா ணாற்றுப்படை' எனப் பாராட்டிக் கூறுவது இந் நூலின் சிறப்புக்கு நல்ல எடுத்துக்காட்டாகும்.

நெய்தல் நில இயல்பு, எயிற்பட்டினத்து நுளை யர்தம் வாழ்க்கைமுறை, முல்லை நில இயல்பு, வேலூர் எயிற்றியர் விருந்தோம்பும் பண்பு, மருத நில இயல்பு, ஆமூர் உழவர் மகளிர் ஒழுகலாறுகள் போன்ற செய்திகள் இந்நூலுள் விளக்கமாகக் கூறப் படினும், வஞ்சி மதுரை உறந்தையென்னும் தமிழ் வேந்தர்களின் தலைநகரங்களின் சிறப்புகளும், கொடைக்கடன் பூண்டு, பழிபடா வகையில் உலகு காத்த கடையெழு வள்ளல்களின் பெருமைகளும் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன.

பெரும்பாணாற்றுப்படை கடியலூர் உருத்திரங் கண்ணனாரால் பாடப்பட்டதாகும். காஞ்சியில் அர சோச்சிய தொண்டைமான் இளந்திரையனிடம் பெரும்பாணனை ஆற்றுப்படுத்துவதால் இப்பாடல் இப்பெயர் பெற்றதென்பர். 'இடனுடைப் பேரியாழ் முறையுளிக் கழிப்பி' (462) என்று இப்பாட்டுள் இடம்பெறும் சொற்றொடர், யாழ் காரணமாகவும் இப்பாடல் இப்பெயர் பெற்றது என்பதற்குச் சான் றாக அமைகிறது. பாணாறு எனவும் இப்பாடல் வழங்கப்பெறும்.

ஐந்திணை பற்றிய வருணனைகள், அவ்வத்திணை யிலுள்ள பல்வகைச் சாதியார் இயல்புகள், காஞ்சி நகரின் சிறப்புகள், இளந்திரையன் வரம், கொடை போன்ற செய்திகள் இப்பாடலில் இடம் பெற்றுள் ளன. வறிய பாணர் குடும்பத்துக்குப் பாலை நிலத்து மக்கள் புல்லரிசிச் சோற்றுடன், வாடூனையும், நெற் சோற்றுடன் ஞமலி தந்த உடும்பின் பொரியலையும் உவந்து தந்ததும், முல்லை நில மக்கள் தினையரிசிச் சோற்றையும் வரகரிசிச் சோற்றையும் பாலுடனும் பருப்புடனும் கலந்து தந்து மகிழ்ந்ததும், மருதநில மக்கள் நெற்சோற்றினைக் கோழிப் பொரியலுடன் உண்பித்ததும், பார்ப்பன மக்கள் ஆகுதிக்குப் பயன் படும் இராசான்னம் என்னும் பெயர் கொண்ட நெற் சோற்றை மாதுளங்காய்ப் பொரியலுடனும் மாங் காய் ஊறுகாயுடனும் உண்பித்ததும் ஆய செய்தி களால் தமிழக மக்களின் விருந்தோம்பும் பண்பினை யும், விருந்தோம்புங்கால் அவர்கள் மேற்கொண்ட உணவு வகைகளையும் அறிந்து கொள்ளலாம்.

உவமைச் சிறப்பு, பெரும்பாணாற்றுப்படையின் தனிச்சிறப்பாகும். 'பழுமரந் தேரும் பறவை போல' (20), 'புகழா வாகைப்பூவி னன்ன, வளைமருப் பேனம்' (109-10), 'முள்ளரைத் தாமரைப் புல்லிதழ்

புரையும் நெடுஞ்செவிக் குறுமுயல்' (114-15), 'நீடு குலைக் காந்தளஞ் சிலம்பிற் களிறுபடிந்தாங்குப், பாம்பணைப் பள்ளி யமர்ந்தோன்'(371-73) போன்ற உவமைகள் படித்து மகிழத்தக்கன.

கூத்தராற்றுப்படை, இரணியமுட்டத்துப் பெருங் குன்றூர்ப் பெருங்கௌசிகனாரால் பாடப்பட்டதா கும். நன்னன் என்னும் வள்ளலிடம் கூத்தரை ஆற்றுப்படுத்துவதால் இப்பாடல் இப்பெயர் பெற் றது என்பர். இப்பாடல் பத்துப்பாட்டுள் 'மலைபடு கடாம்' என்னும் பெயருடன் இடம்பெற்றுள்ளது.

மதம்பிடித்த யானையின் பல்வகை ஒலிகள் போல நன்னனின் நவிரமலையில் பல்வகையான ஒலி கள் எழுகின்றன. இதனை 'மலைபடு கடாஅ மாதி ரத்து இயம்ப' (348) என இந்தப் பாட்டு புகழ்கிறது. இதன் அழகு நோக்கி இந்தப் பாடல் 'மலைபடு கடாம்' என்று பெயர் பெற்றது. 'மலைக்கு யானையை உவமித்து அதன்கட் பிறந்த ஓசையைக் கடாமெனச் சிறப்பித்ததனால் இப்பாட்டிற்கு மலைபடுகடாம் என்று பெயர் கூறினார்' என்னும் நச்சினார்க்கினியர் கூற்று ஈண்டு நோக்கத் தக்கது. இவ்வாறு, சிறந்த பொருள் பொதிந்த தொடரால் ஒரு பாடல் பெயர் பெறுவதனைப் பதிற்றுப்பத்தால் அறிதல்கூடும்.

இப்பாடலில் பல்வகை இசைக் கருவிகளின் பெயர்கள், யாழ் வருணனை, குறவர்களும் வேடர் களும் விருந்தோம்பும் பண்பு, நன்னனது செங் கண்மா ஊர்ச் சிறப்பு, அவன் வண்மை போன்றன கூறப்படினும், அவனது சேயாற்றுச் சிறப்பும், நவிரமலை மாண்பும், அம் மலையில் தோன்றும் பல்வேறு ஒலிகளும் சிறப்பிடம் பெற்றுள்ளன.

சங்க காலத்துத் தோன்றிய ஆற்றுப்படை இலக் கியங்கட்குப் பிறகு நெடுங்காலமாக இவ்வகை இலக் கியங்கள் தோன்றவில்லை என்பது தெரிகிறது. கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் சிவஞான சுவாமிகளின் மாணவரான கச்சியப்ப முனிவர் 'திருத்தணிகை ஆற்றுப்படை' என்னும் நூலை இயற்றியுள்ளார். ஆற்றுப்படையின் பெயர் மக்கள் பெயரோடும், தெய் வப் பெயரோடும் இயைந்தமைந்த நிலை மாறித் தெய்வம் கோயில் கொண்டுள்ள இடத்தின் பெய ரொடு இயைந்தமையும் இயல்பு இங்குக் காணப்படு கிறது. இந்த நூற்றாண்டில் 'புலவர் ஆற்றுப்படை' என்னும் பெயரில், வடமலையப்பப் பிள்ளை மீது திருக்குருகூர்ச் சிறிய இரத்தினக் கவிராயர் ஒரு நூல் இயற்றியுள்ளார்.

இவ் வகை இலக்கியங்கள் இருபதாம் நூற்றாண் டில் பல நிலைகளில் பல்கிப் பெருகின. பாண்டித் துரைத் தேவரால் நடத்தப் பெற்ற மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் புலவருள் ஒருவராய் விளங்கிய குலாம் காதிறு நாவலர் என்பவர், அச் சங்கத்தின் பால் ஒரு புலவரை ஆற்றுப்படுத்துவதாக ஒரு நூல் இயற்றியுள்ளார். 'புலவர் ஆற்றுப்படை' என்பது அந்நூற் பெயராகும். அமிர்தம் சுந்தரநாதம் பிள்ளை என்னும் புலவர், பெத்தாச்சி செட்டியார் என்னும் வள்ளல்பால் புலவர் ஒருவரை ஆற்றுப்படுத்தி எழுதியுள்ள ஒரு நூலும் இதேபெயரில் வழங்கு கிறது.

சைவ ஆதீனத் தலைவர்கள் மீதும் ஆற்றுப் படை இலக்கியங்கள் இயற்றப்பட்டுள்ளன என்பது தெரிகிறது. திருக்கோவலூர் ஆதீனத் தலைவராய் விளங்கிய திருப்பெருந்திரு சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் மீது கவிராச பண்டிதர் திம்மப்பையர் 'ஞானியார் ஆற்றுப்படை' என்னும் நூலை இயற்றியுள்ளார். இது போன்றே தருமபுர ஆதீனத் தலைவர் திருப்பெருந்திரு சண்முக தேசிக பரமாசாரிய சுவாமிகள் மீதும், திருவாடுதுறை ஆதீ னத்தைத் தோற்றுவித்த நமச்சிவாய மூர்த்திகள் மீதும் ஆற்றுப்படை இலக்கியங்கள் இயற்றப்பட்டுள் ளன. மன்பதை ஆற்றுப்படை, வட அரங்க ஆற் றுப்படை ஆகிய நூல்கள் வேலூருக்கு அண்மையி லுள்ள பள்ளிகொண்டான் என்னும் தலத்துப் பெரு மாள் மீது பாடப்பட்ட நூல்களாகும்.

இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இவ் வகை இலக்கியங்கள் பொருண்மை நிலையில் மாற் றம் எய்தின. குடந்தை நகர உயர்நிலைப்பள்ளி யில் தமிழாசிரியராக இருந்த பின்னத்தூர் நாராயண சாமி ஐயர், அப்பள்ளியில் படிக்குமாறு பழைய மாணவன் ஒருவன் புதிய மாணவன் ஒருவனை ஆற் றுப்படுத்துவதாக ஒரு நூலை இயற்றியுள்ளார். இந்நூல் 'மாணாக்கர் ஆற்றுப்படை' எனப்படு கிறது. கரந்தைக் கவியரசு அவர்களும், சி. இலக் குவனார் அவர்களும் இப்பெயரில் நூல்கள் இயற்றி யுள்ளார்கள் எனத் தெரிகிறது. பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயர் இறையனாராற்றுப்படை என்னும் பெயரில் ஒரு நூல் இயற்றியிருப்பது தெரிகிறது. அ. சிதம்பரநாதன் மாணவனாற்றுப் படை என்னும் நூலைக் கி. பி. 1931-இல் இயற்றி யுள்ளார்.

தமிழ் கற்றுத் தாய் நாட்டிற்குத் தொண்டு புரி வதற்காகத் தமிழ் மகனை தமிழ்த் தாயிடம் ஆற்றுப் படுத்தி எழுதப்பட்ட நூல்களும் இந்நூற்றாண்டில் இடம் பெறுகின்றன. அ. கி. பரந்தாமனார் அவர் களின் 'தமிழ் மகன் ஆற்றுப்படை', சுந்தர சண்முக னாரின் 'செந்தமிழ் ஆற்றுப்படை', ஆகிய நூல்கள் இவ்வகையைச் சார்ந்தன. சபரிமலையில் கோயில்

கொண்டு விளங்கும் ஐயப்பன்பால் ஆற்றுப்படுத்தும். 'ஐயப்பன் ஆற்றுப்படை' என்னும் நூலும் அண்மையில் தோன்றியுள்ளது. இவ்வாறு ஆற்றுப்படை இலக்கியங்கள் ஆற்றுப்படை அமைப்பில் மாறாது, பல பொருள் அடிப்படையில் தமிழில் தோன்றிச் செழித்துள்ளன. இரா.செ.

**ஆற்றுப் பள்ளத்தாக்குப் பன்னோக்குத் திட்டம்**: இத்திட்டம் ஆற்றுப் பள்ளத்தாக்குகளின் இயற்கை வளங்களைப் பயன்படுத்தப் பன்முக நோக்குடன் ஒருங்கிணைந்து செயலாற்றுவதாகும். ஒரே காலத்தில் இத்திட்டங்கள் பல நோக்கங்களை உள்ளடக்கிச் செயலாற்றுவதால் மொத்தச் செலவில் மிகையான சேமிப்போடு, வளங்கள் வீணாவது தடுக்கவும்படுகின்றது. நாட்டுப் பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிப்படைத் தேவையான முதலாக்கத்திற்கு (Capital Formation) இத்திட்டங்கள் அடிகோலுகின்றன. வேளாண்மை வளத்திற்கான நீர்ப்பாசனத் திட்டங்கள், தொழில் வளர்ச்சிக்கான மின் உற்பத்தி, போக்குவரத்துக்கான நீர்வழிப் போக்குவரவு வசதிகள், இவற்றுடன் தொடர்புடைய பிற தொழில்கள், குடிதண்ணீர் வசதித் திட்டங்கள் போன்றவை இத்திட்டத்தின் மூலமாக நிறைவேற்றப்படுகின்றன. இவை பொருளாதாரத்தின் அகக் கட்டுமானங்கள் (Infrastructure) ஆகும்.

இத்திட்டங்களின் நோக்கங்களாகக் குறிப்பிடத்தக்கவற்றுள் முதலிடம் பெறுவது நீர்ப்பாசனமாகும். ஆறுகளில் பெருகியோடும் தண்ணீர் கடலில் சென்று சேருமுன், அணைகள் வாயிலாகத் தேக்கப்பட்டு, நிலங்களுக்கு நீர்வளம் தந்து உணவு உற்பத்தியைப் பெருக்க உதவுகிறது. இத்திட்டத்தால் பயிரிடப்படாத நிலங்கள், வறண்ட நிலங்கள் முதலியன நீர்ப் பாசனம் பெற்று வேளாண்மை வளம் சிறக்கிறது. முன்னரே பயிரிடப்படும் நிலங்கள் மிகுதியான நீர் வளம் பெறுவதால் கால இடைவெளியின்றி ஆண்டு முழுவதும் அவை பயிரிடப்படுகின்றன. நீர்வளம் பெறும் நிலங்களின் மதிப்பு (Value of Land) உயர்வதால், குடியானவர்களின் வருமானமும் உயருகிறது. அணைக்கட்டின் கட்டிடப் பணி வழியாகக் கட்டிடத் தொழிலும், புதுக் குடியிருப்பும், இவற்றைத் தொடர்ந்து வாணிகம் போன்ற தொழில்களும் தொடங்கப் பட்டுச் சுற்றுப்புறம் முன்னேற்றமடைகிறது. அணைக்கட்டுகள் நீர்ப்பாசன வளத்தைப் பெருக்குவன மட்டுமல்லாமல், வெள்ளக் கட்டுப்பாட்டிற்கும் நில அரிப்பைத் தடுப்பதற்கும் குடிநீர் வசதிகளுக்கும் பெரிதும் உதவுகின்றன. அழிவுக்குட்பட்ட நிலங்கள் பாதுகாக்கப்படுகின்றன. நிலங்களின் ஆக்கத்திறன் மிகுதிப்பட்டுப் பக்கத்திலுள்ள நிலங்களும் செறிந்த அளவில் பயன்படுத்தப் (Intensive Use) படுகின்றன. வெள்ளப் பெருக்கினால் ஆண்டுதோறும் மக்களுக்கு ஏற்படும் இன்னல்களும் இழப்புகளும் தவிர்க்கப்படுகின்றன. குடிநீர் வசதிகள் இல்லாத இடங்களுக்கும், சுத்தம் செய்யப்பட்ட குடிநீர் பெறாத இடங்களுக்கும் தொழிற்சாலைகளுக்கும் தேவையான தண்ணீர் கிடைக்கும்படி இத்திட்டங்கள் நிறைவேற்றப்படுகின்றன. திட்டத்திற்குட்பட்ட இடங்களும் சுற்றுப் புறங்களும் மீன்வளம், வனவிலங்கு, பொழுதுபோக்கு, சுற்றுலா போன்ற துறைகளின் வளர்ச்சிக்கும் ஆய்வு நிலையங்களுக்கும் ஏற்ற இடமாக விளங்குகின்றன. ஆற்றுப் பள்ளத்தாக்குப் பன்னோக்குத் திட்டம் (Multi-Purpose River Valley Project), உள்நாட்டு நீர்வழிப் போக்குவரத்துத் திட்டங்களையும் செயலாற்றுகிறது; புது நீர்வழித் தடங்களை (Routes) உருவாக்குகிறது; நீர்வழிப் போக்குவரத்திலுள்ள இடர்களைப் போக்கியும், தாமதங்களைத் தவிர்த்தும், சாலை, இரயில்வே போக்குவரத்துத் தடங்களுக்கு ஏற்ற வகையில் திட்டங்களை வகுத்தும் திறமையான, நீண்டதூர, குறுகிய நீர்வழிப் போக்குவரத்து வசதிகளைப் பெருக்குகிறது.

ஆற்றுப் பள்ளத்தாக்குப் பன்னோக்குத் திட்டத்தின் கீழ்ச் செயற்படும் நீர் மின்சாரத் திட்டங்கள், (Hydro-Electric Power Projects) குறைந்த செலவில் மின்சாரத்தை உற்பத்தி செய்கின்றன. அவை தொழிற்சாலைகளுக்கும் சுற்றுப் புறங்களுக்கும் மின்சாரம் அளிப்பதால், ஆக்கத்திறனும் பொருளாதார முன்னேற்றமும் விரைவில் ஏற்படுகின்றன. இந்தியாவில் ஐந்தாண்டுத் திட்டங்களின் வாயிலாகப் பன்னோக்குத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன.

**தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டம்**: இத் திட்டம் தாமோதர், போரகார் (Borakar) ஆற்றுப் பள்ளத்தாக்கில் ஏற்படும் வெள்ளப் பெருக்கத்தைத் தவிர்க்கவும், நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்கவும், மின்சாரம் உற்பத்தி செய்யவும், நீர்வழிப் போக்குவரத்து வசதியை உருவாக்கவும் தொடங்கப்பட்டது. திலையா (Tilaiya), கோனார் (Konar), மெதான் (Maithon), பன்செட் மலை (Panchet Hill), ஆகிய நான்கு இடங்களிலும் பெரிய நீர்த்தேக்க அணைகளும் நீர்மின் நிலையங்களும் அமைக்கத் திட்டமிடப்பட்டு, நான்கு அணைகளும் கட்டி முடிக்கப்பட்டுவிட்டன. பொகாராவில் 2,25,000 கி.வா. மின் ஏற்றம் கொண்ட அனல் மின் நிலையம் (Thermal Power Station), 800 கல் தூர மின்விசை அலை ஆற்றல் இணைப்பு (Power Transmission Grid) ஆகியவை நிறுவவும் துர்க்காபூரில் ஒரு குறுக்கணை கட்டவும், 1550 கல் நீள நீர்ப்பாசனக் கால்வாய் வெட்டவும், அதனைக் கூக்ளி (Hooghly) நதி வரை 85 கல் தூரத்திற்குப் போக்குவரத்திற்குப் பயன்படுத்தவும் திட்டமிடப்பட்டது. அமெரிக்காவிலுள்ள தென்னசிப்

பள்ளத்தாக்கு ஆணையத்தின் (Tennessee Valley Authority) அமைப்பில் இத்திட்டம் நிறைவேற்றப் பட,1948-ஆம் ஆண்டு தாமோதர் பள்ளத்தாக்குக் கழகம் ஒன்று உருவாக்கப்பட்டது. இதுவரை 1225 கோடி உருபாவுக்கு மேலாகச் செலவு செய்யப் பட்டுள்ளது. திட்டங்கள் தொடர்ந்து நிறைவேற்றப் பட்டு வருகின்றன. இத்திட்டம் மேற்கு வங்காளம், பீகார் மாநிலங்களுக்குப் பயன்படுவதாக உள்ளது.

இராகுட் அணைத்திட்டம் (Hirakud Dam Project): இது 1937-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. இவ்வணை உலகிலேயே நீளமானதாகக் கருதப்படு கிறது. கட்டாக்கு (Cuttack), பூரி (Puri), மாவட்டங் களில் 8000 சதுரக்கல்லுக்கு மேல் வெள்ளப் பெருக் கினால் பாதிக்கப்படும் இடங்கள்,200 கோடி உரு பாவுக்கு மேல் செலவு செய்யப்பட்ட இத்திட்டத் தால் பாதுகாப்புப் பெற்றுள்ளன. இங்கு உற்பத்தி யாகும் மின்சாரம் ஒரிசா மாநில வேளாண்மைத் தொழில் வளர்ச்சிக்கு அடிகோலுவதாக உள்ளது.

பக்ரா-நங்கல் திட்டம்: இத் திட்டத்தினால் பக்ரா, நங்கல் அணைகளும் மின் நிலையங்களும் தோற்றுவிக்கப்பட்டு, பஞ்சாபு (Punjab), இராசசுத் தான் (Rajastban) மாநிலங்கள் வேளாண்மையிலும் தொழில் துறையிலும் வளமடைந்துள்ளன. இங்கு 1946-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட திட்ட வேலை கள் தொடர்ந்து நடைபெறுகின்றன.

பிற திட்டங்கள்: பீகார் மாநில வெள்ளப் பாதுகாப்புக்காக ஏற்படுத்தப்பட்ட கோசி திட்டம் 1955-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. எனினும், பிற திட்டங்களைப் போல் இது முடிவு பெறவில்லை. இத்திட்டத்தினால் 36 இலட்சம் ஏக்கர் நிலத் திற்கு நீர்வளம் கிடைத்துள்ளது. அன்றியும், 20 ஆயிரம் கி.வா. மின்சாரம் உற்பத்தி செய்யப்படு கிறது. ஆந்திர மாநிலம் முழுமையும் பயன்பெறும் நாகார்ச்சுனசாகர் திட்டத்தின் (Nagarjunasagar Project) மூலம் கிருட்டிணா ஆற்றின் மேல் அணை கட்டப்பட்டுள்ளது. மத்திய பிரதேசம், இராசசுத் தான் மாநிலங்களின் சம்பல் பள்ளத்தாக்குத் திட் டம் 1952-இல் தொடங்கப்பட்டது. இராசசுத் தானில் ஓடும் சம்பல் ஆற்றின் மேல் கட்டப்பட்ட அணையின் மூலம் உருவாக்கப்பட்ட காந்தி சாகர் நீர்த் தேக்கமும், கோதா (Kotah) குறுக்கணையும் நீர்ப் பாசன வசதியையும் மின்சார ஆக்கத்தையும் மிகுதிப்படுத்தியுள்ளன. உத்தரப் பிரதேசத்தில் ஓடும் இரீகண்டு (Rihand) ஆற்றின் குறுக்கே அமெரிக்க ஐக்கிய நாட்டின் உதவியுடன் 1955-ஆம் ஆண்டு ஓர் அணை கட்டி, அதன் மூலம் 2.50,000 கி.வா. ஆற்றல் உள்ள நீர்மின் நிலையம் நிறைவேற் றப்பட்டுள்ளது. மகாராட்டிர மாநிலத்திலுள்ள கொய்நா திட்டம் 1954-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டு 50 கோடி உருபாவுக்கு மேல் செலவு செய்யப்பட்டு முடிவு பெற்றுள்ளது.

பன்னோக்குத் திட்டங்கள் பல, முடிவு பெற்றவை எனக் குறிப்பிட்டாலும், அவற்றின் பல நோக்கங் கள் நிறைவேற்றப்படாமல், பல திட்டங்களில் நிறுத்தி வைக்கப்பட்டும், சிலவற்றில் வேலைகள் தொடர்ந்து நடைபெற்றும் வருகின்றன. இத் திட்டங்களின் திட்ட வரைவுகள் (Designs) பணப் பற்றாக்குறைகளினாலும், நுட்பத் தேவையின் காரணமாகவும், தொழிலாளர் போராட்டங்களி னாலும் எதிர் பார்த்த காலத்தில் முடிவு பெற வில்லை; எதிர்பார்த்த பலன்களும் அளிக்கவில்லை. குறைபாட்டுத் திட்டங்களினாலும், தனியார் ஒப்பந் தக்காரர்களின் ஆதாய நோக்கங்களினாலும்,திறமை யற்ற மேலாண்மையினராலும் வளங்கள் பெருமள வுக்கு வீணடிக்கப்பட்டுள்ளன. திட்டங்கள் நிறை வேற்றப்பட்ட இடங்கள் பெரும்பாலும் முன்னேற்ற மடையாத நிலையிலிருந்தமையால், உருவாக்கப் பட்ட ஆக்கத் திறன், முதலாக்கம் ஆகியவை முழுமை யாகப் பயன்படுத்தும் பக்குவம் பெறவில்லை. சுற்றுப் புறங்கள் தொழிலிலும், வேளாண்மையிலும் வளர்ச்சியடையா நிலையில் உண்டாக்கப்பட்ட நீர்ப் பாசன, மின்சார வசதிகள் முழுப்பயனை அடைய வில்லை. இத் திட்டங்களின் பாதுகாப்புச் செலவு மிகுதியான அளவிலிருப்பதால், அண்மைக் காலங்களில் புதுத்திட்டங்களுக்குச் சிறப்பிடம் அளிக்கப்படுகிறது. முதல் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களிலும் சிறப் பிடம் பெற்று நிறைவேற்றப்பட்ட பன்னோக்குத் திட்டங்கள்,பசுமைப் புரட்சிக்கும் தொழிற்புரட்சிக்கும் அடிப்படைக் காரணியாகவும் நாட்டின் பொரு ளாதார அகக் கட்டுமான அடிப்படை மூலதனமா கவும் விளங்குகின்றனஎனலாம். இத் திட்டங்களின் நன்மைகளை உடனுக்குடன் அறிய இயலாது. இவை இயங்கத் தொடங்கி, நீண்டகாலம் செயற்பட்ட பிறகு, ஆய்வுகள் மூலம் ஆக்கச் செலவின் பயன் விகிதத்தை அறியலாம். அ.இரா.

**ஆறகளூர்** தென்னாட்டில் பண்டைக்காலத் தில் மகதம் என்று வழங்கிய ஒரு சிறு பகுதியின் தலைநகரம். அம்மகதம் இன்றைய சேலம் மாவட்டத்தின் கீழ்ப் பகுதியும், தென்னார்க்காடு மாவட்டத்தின் மேற்குப் பகுதியும் கொண்டது. இந் நாட்டினைப் பாணர்கள் (Banas) ஆண்டனர். அவர் கள் வாணர்கள், வாணாதிராசர், வாணகோவரை யர் முதலான பெயர்களாலும் அழைக்கப்பட்டனர். அவர்கள் குறுநில மன்னர்கள். ம.இரா.

**ஆறுகள்** இயற்கையான நீர்ப் பெருக்கையும் நிலையான போக்கையும் கொண்டு நிலத்தில்

பாய்ந்து செல்வன. அவற்றுக்கான நீர், பொழியும் மழையினாலும் உருகும் பனியினாலும் பெறப்படும். அவை குறிப்பிட்ட வழியில் பெரும்பாலும் ஓடுபவை. சில ஆறுகளில் ஆண்டு முழுவதும் நீர் வரத்து இருக்கலாம். சிலவற்றில் ஆண்டின் குறிப்பிட்ட மாதங்களில் மட்டில் நீர் வரத்து இருக்கலாம். அவை குறுகிய சிற்றாறுகளாகவோ வெள்ளப் பெருக்கெடுத்துக் கரைபுரண்டோடும் பேராறுகளாகவோ இருக்கலாம்.

ஆறுகள் ஒரு நாட்டின் செல்வமாகக் கருதப்படுகின்றன. மக்களுக்குத் தேவையான நீரைக் கொண்டு வருவதால் ஆறுகள் மக்கள் வாழ்வுக்கு இன்றியமையாதனவாகும். வாணிகத்திற்கும், போக்குவரத்திற்கும், நீர்மின்சக்தி, உற்பத்திக்கும் பயன்படுவதால் அவை சிறப்பாகப் போற்றப்படுகின்றன. 'ஆறில்லா ஊருக்கு அழகு பாழ்' என்னும் முதுமொழி இச்சிறப்பினை உணர்த்தும்.

ஆற்று வெளிகளில் தொன்மையான நாகரிகங்கள் வளர்ந்து முதிர்ச்சி பெற்றமையை வரலாறு சுட்டிக்காட்டுகிறது. எடுத்துக்காட்டாக, சிந்து ஆற்று வெளியில் தோன்றிய நாகரிகமும், கங்கை யமுனை ஆறுகளின் வெளியில் தோன்றிய நாகரிகமும், காவிரி ஆற்று வெளிநாகரிகமும் இந்திய நாகரிகத்தின் தொன்மையை விளக்குவனவாக உள்ளன. அதேபோல் சீனாவில் யாங்கட்சி ஆற்று வெளியிலும், மேற்கு ஆசியாவில் தைகிரிசு-யூபரெட்டிசு ஆறுகளின்வெளியிலும் தோன்றிய நாகரிகங்கள், ஆசியாவின் தொன்மையான நாகரிகங்களாகும். ஆப்பிரிக்காவின் வடபகுதியில் நைல் ஆற்றங்கரையில் தொன்மையான எகிப்திய நாகரிகம் தோன்றியது. புது உலகமான வட அமெரிக்கக் கண்டத்தில் மிசிசிப்பி, செயிண்ட்டு இலாரன்சு (St. Lawrence) ஆறுகள் புதிய இடங்களைக் கண்டுபிடிக்க வழிவகுத்துக் கொடுத்தன. தென் அமெரிக்காவில் பாயும் அமேசான் பெரிய ஆறாகக் கருதப்பட்டாலும் அது அவ்வளவாகப் பயன்படுவதில்லை.

ஆறுகள் புவியின் மேற்பரப்பை அழகூட்டுவனவாகவும் அமைகின்றன. எடுத்துச்காட்டாக, வட அமெரிக்காவில் மிசிசிப்பி ஆற்றுப் பள்ளத்தாக்கும், கொலொராடோ ஆற்றில் அமைந்துள்ள கிராண்டு கன்யான் (Grand Canyon) என்னும் நீர்வீழ் பெரும் பள்ளத்தையும் குறிப்பிடலாம். தென் அமெரிக்காவில் ஆண்டீசு மலைத் தொடரில் வரும் நீர்வீழ் பள்ளம், ஆப்பிரிக்காவில் நைல் ஆற்றுக் கழிமுகம், இந்தியாவில் கங்கை-பிரமபுத்திரா கழிமுகம், சீனாவில் மஞ்சள் ஆற்றுக் கழிமுகம், இந்தோ சீனா முந்நீரகத்தில் மீகாங் கழிமுகம் போன்றவை கண்களையும் கருத்தையும் கவருவன வாகும்.

ஆறுகள் நீர்ப் பெருக்காலும், நீர்ப் பெருக்கு பலவாயாலும் ஏற்படுகின்றன. மழை பெய்த நீரின் பெருமளவு ஆவியாகிவிடும். செடி கொடி மரங்களும், நிலமும் உறிஞ்சிய நீர் போக, எஞ்சிய நீர் கால்வாய்களாக ஓடிவரும் போது ஆறுகள் உண்டாகும். மலையுச்சிகளில் உறைந்திருக்கும் பனிக்கட்டிகள் கோடைக்காலத்தில் உருகுவதாலும் வெள்ளப் பெருக்கேற்பட்டு ஆறுகள் உண்டாகலாம். பாய்ந்து வரும் ஆறுகளுடன் துணையாறுகள் இணைந்து சென்று நாடுகளை வளமாக்கி இறுதியில் கடலில் கலக்கும்.

ஆண்டு முழுதும் வற்றாத நீர்வரத்தைக் கொண்டுள்ள ஆறுகள் சீவநதிகள் அல்லது வற்றாத ஆறுகள் எனப்படும். நைல், அமேசான், சிந்து, கங்கை, பிரமபுத்திரா, ஐராவதி, யாங்கட்சி, தான்யூபு, வோல்கா போன்றவை வற்றாத ஆறுகளாகும். மழைக் காலத்தில் மட்டும் நீர் ஓடும் ஆறுகள், வற்றும் ஆறுகள் ஆகும்.

வற்றாத ஆறுகளைக் கொண்ட நாடுகள் உலகில் வளமானவையாகத் திகழ்கின்றன. அதனால்தான் ஆறுகள் வழிபாட்டிற்குரிய சிறப்பைப் பெற்றன போலும்! இந்தியாவில் இந்துக்கள் கடல்களுக்கும் ஆறுகளுக்கும் குளங்களுக்கும் தீர்த்த யாத்திரை செல்லும் பழக்கத்தைப் பல்லாயிரம் ஆண்டுகளாகக் கொண்டுள்ளனர். இராமேசுவரம் கடலிலும், கன்னியாகுமரிக் கடலிலும் நீராடும் வைதிகர்களை இன்றும் காணலாம். இந்துக்கள் கங்கையாறும் யமுனையும் சரசுவதியும் இணையும் திரிவேணி சங்கமத்தில் நீராடுவதைச் சமயக் கடமைகளுள் ஒன்றாகக் கருதுவர். தமிழகத்தே திருநெல்வேலி மாவட்டத்தில் தாமிரபரணி ஆற்றுடன் கலக்கும் சித்திரா ஆறும் கோதண்டராம ஆறு என்னும் கயத்தாறும் கூடுமிடத்தை முக்கூடல் என்பர். மூன்று ஆறுகள் கூடும் இடம் இந்தியாவில் சிறப்பாகவே கருதப்பட்டு வந்துள்ளது. குடந்தையிலுள்ள மகாமகக் குளத்தில் பன்னிரண்டு ஆண்டுக்கொருமுறை நடைபெறும் மகாமகத் திருவிழாவும் புனித நீராட்டைச் சிறப்பிப்பதேயாகும். வட இந்தியாவில் பிரயாகையிலும் (அலகாபாத்து) அரித்துவாரத்திலும் கும்பமேளா என்னும் திருவிழாவில் நீராட வரும் கோடிக்கணக்கான மக்கள், கங்கை நீரில் நீராடுவதையே குறிக்கோளாகக் கொண்டனர் என்பதை வரலாறு குறிப்பிடுகிறது.

ஆறுகள் மலை அல்லது குன்றுகளிலிருந்து தொடங்குகின்றன. தொடங்கும்போது அது சிறிய ஊற்றிலிருந்தோ உருகும் பனிக்கட்டியிலிருந்தோ தொடங்கும். இந்தியாவில் ஓடும் கங்கையாறு பெருமையாகப் பேசப்படும் ஆறுகளுள் ஒன்று. அது இமயமலையில் கங்கோத்திரி என்னுமிடத்தில் சொட்டுச் சொட்டாகச் சொட்டும் நீரில் தொடங்குகிறது என்பர். காவிரி ஆறு, மேற்குத் தொடர்ச்சி மலை

யில் குடகு நாட்டுச் சைய மலையில், அமைந்துள்ள சிறியதொரு சதுர வடிவமான குளத்தில் ஊறும் ஊற்றில் தோன்றுகிறது. ஆறு பாய்ந்து ஓடி வரும் போது, ஏனைய ஓடைகளும் அதில் இணைகின்றன. ஆற்று நீர் நிலத்தில் கசிந்து விடும். அதன் விளை வாக அதன் அகலம் பெருக வாய்ப்புண்டு. ஆறு குறிப்பிட்ட வாய்க்கால்களில் பாயத்தொடங்கும். நீர் பாயும் வாய்க்காலின் அடிமட்டத்தை ஆற்றுப் படுகை (Bed) என்பர். ஆற்றுப் படுகையின் பக்கங்கள் கரைகள் (Banks) எனப்படும். ஆற்றைப் பார்க்கும் போது நீரின் போக்கை ஒட்டிப் பார்ப்போரின் வலப் புறம் இருக்கும் கரையை வலக்கரையென்றும், இடப் புறம் இருக்கும் கரையை இடக்கரை என்றும் கூறுவர். ஆற்றுடன் வந்து இணையும் ஆறுகள் துணையாறுகள் (Tributaries) எனப்படுகின்றன. ஆற்றையும் அதன் துணையாறுகளையும் சேர்த்து ஆற்றமைப்பு (River System) எனக்கூறுவர். பெரும் ஆற்றிலிருந்து ஆறுகள் பிரிவதும் உண்டு. இவற்றைக் கிளையாறுகள் (Distributaries) என்பர். கிளையாறுகள் மீண்டும் பெரிய ஆற்றுடன் இணைவதில்லை. ஆறும் அதன் துணை யாறுகளும் சேர்ந்த ஆற்றமைப்பை ஆற்றுவடிநிலம் (Basin) என்பர் தமிழகத்தில் பாய்ந்து செல்லும் காவிரியையும் அதன் கிளையாறுகளையுங் கொண்டு படுகை, கரைகள், துணையாறுகள், கிளையாறுகள், வடி நிலம் ஆகியவற்றை உணர்ந்து கொள்ளலாம்.

ஆறுகள் மலைகளிலும் பாறைகளிலும் பாய்ந் தோடி வரும்போது, சிறுகற்களையும், உறுதி குறைந்த மென்மையான பாறைகளையும் உருட்டிச் செல்லும். ஆற்றங்கரைகள் சிலவற்றில் விதவிதமான கூழாங் கற்கள் காணப்படும். கரடுமுரடான கற்கள் ஆற்று வெள்ளத்தால் அடித்து உருட்டி வரப்பட்ட மையால் அவை அத்தகைய வடிவத்தைப் பெற்றன.

வேகமாகப் பாய்ந்து வரும் ஆறுகளில் நீர்வீழ்ச்சி களும் ஆற்றுக் குடைவுகளும் உருவாகக் கூடும். வட ஆப்பிரிக்காவிலுள்ள நைல் ஆற்றின் குறுக்கே பல நீர்வீழ்ச்சிகள் உள்ளன. காவிரியாற்றின் குறுக்கே சிவசமுத்திரம் நீர்வீழ்ச்சியும், ஒகனேக்கல் நீர்வீழ்ச்சி யும் உள்ளன. வட அமெரிக்காவில் பாயும் கொலொ ராடோ ஆற்றின் குறுக்கே பெரும் ஆற்றுக் குடைவு (Grand Carnon) ஒன்று உள்ளது. இது அழகான காட்சிகளைக் கொண்டுள்ளதால் ஆயிரமாயிரம் சுற்றுலாப் பயணிகள் இதனைக் கண்டுகளிக்க நாள் தோறும் வருகிறார்கள். கனடா நாட்டிலுள்ள செயிண்ட்டு இலாரன்சு ஆற்றிலும் நீர்வீழ்ச்சிகள் உள்ளன.

ஆறு மெதுவாகப் பாய்ந்து கடலிற் கலக்குமுன் அதன் வெள்ளம் அடித்துக்கொண்டுவரும் வண்டல் மண் அதன் முகத்திற் படிந்து நிலத்திட்டுகளை உரு வாக்கலாம். இவ்வாறமையும் நிலப்பகுதிகள் கழி முகம் எனப்படும். கங்கையாறு கடலில் கலக்குமுன் உருவாகியுள்ள கழிமுகத்தில்தான் சுந்தரவனங்கள் எனப்படும் சதுப்பு நிலக் காடுகள் உள்ளன. நைல் ஆற்றுக் கழிமுகமும், மிசிசிப்பி ஆற்றுக் கழிமுகமும் புகழ் பெற்றவை.

ஆறுகள் எப்போதும் மக்களுக்குப் பலவகைகளில் உறுதுணையாக இருந்து வந்துள்ளன. பண்டைக் காலத்தில் ஆறுகளே முதன்மையான போக்குவரத் துச் சாதனமாகக் கருதப்பட்டன. இன்று ஆழம் மிகுந்த ஆறுகளில் கப்பல் போக்குவரத்துக்கான வாய்ப்பு இருக்குமானால் அது சிறப்பாகக் கருதப் படும்.

ஆறுகள் பண்ணைநிலங்களுக்கு நீர்ப்பாசனத்திற் கும், தொழிற்சாலைகளை இயங்க வைக்கும் நீர் மின்சக்திக்கும் பயன்படுவன. பல ஆறுகளின் குறுக்கே அணைகள் கட்டப்பட்டு, நீரைத் தேக்கி நீர்ப்பாசனத் திற்கும் நீர்மின்சக்திக்கும் பயன்படுத்துகிறார்கள். நீர்வீழ்ச்சிகளின் சக்தியையும் பயன்படுத்தி நீர்மின் சக்தி உற்பத்தி செய்யலாம்.

சில ஆறுகள் அவற்றில் கிடைக்கும் மீன்களால் சிறப்புப் பெறும். ஆற்றுப் படுகைகளில் சில வேளை களில் பொன், படிகக்கல் போன்ற கனிமப் பொருள் கள் கிடைக்கின்றன.

இக்காலததில் ஆறுகளும் ஓடைகளும் கழிவு நீர்ச் சேர்க்கையால் தூய்மை கெடுகின்றன. இந்தியா வில் கங்கை ஆற்றை இந்தக் கேட்டிலிருந்து காத் துத் தூய்மைப்படுத்த அரசு தீவிர நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது. தூய்மைகெட்ட நீர், குடிப்பதற் கும் மீன்கள் வாழ்வதற்குமேயன்றிப் பொழுதுபோக் கிற்கும் கூடப்பயன்படுவதில்லை. தூய்மைக் கேடுள்ள ஆறுகள் நல்வாழ்வுக்கு ஊறு செய்பவை; அவற் றால் விடக்காய்ச்சல் ஏற்படுவதும் உண்டு. அது பெரும் தொத்து நோயாகவும் மாறிடலாம்.

ஆறுகளில் மழைக் காலத்தில் ஏற்படும் வெள்ளப் பெருக்கால் பல்வேறு அழிவுகள் நேரிடுகின்றன. கங்கையாற்றின் துணை ஆறுகளில் உண்டாகும் வெள்ளப் பெருக்கால் உத்தரப்பிரதேசம், பீகார், வங்காளம் போன்ற மாநிலங்கள் தொல்லையுற்று அல்லற்படுகின்றன. அரசுகள் வெள்ளத் தடுப்பு நட வடிக்கைகளை மேற்கொள்ளும் திட்டங்களையும் தீட்டி வருகின்றன.

சில வேளைகள் ஆறுகள் தம் போக்கை மாற்றிக் கொள்வதும் உண்டு. சீனாவின் துயரம் என்று கூறப் படும் ஓயாங்கோ (Hu ang Ho) ஆறு அடிக்கடி அதன் போக்கை மாற்றிக் கொள்வதாகக் குறிப்பிடுகிறார் கள்.

உலகின் சிறப்பான ஆறுகள் சிலவற்றைக் கீழ்க் காணும் பட்டியலில் காணலாம்.

| இந்தியா | நீளம் (கி.மீ) |
|---|---|
| பிரமபுத்திரா | 2897 |
| கங்கை | 2510 |
| கோதாவரி | 1450 |
| கிருட்டிணா | 1280 |
| நருமதை | 1245 |
| தபதி | 950 |
| மகாநதி | 885 |
| காவிரி | 765 |
| **பாகிசுத்தான்** | |
| சிந்து | 2897 |
| **ஆசியா** | |
| யாங்கட்சி | 6300 |
| ஓயாங்கோ | 4828 |
| இரிட்டிசு | 4442 |
| ஆமூர் | 4353 |
| இலேனா | 4270 |
| மீகாங்கு | 4184 |
| எனிசி | 4184 |
| ஒப்பு | 3681 |
| யூபரெட்டீசு | 3597 |
| **ஐரோப்பா** | |
| வோல்கா | 3690 |
| தான்யூபு | 2858 |
| **ஆசுத்திரேலியா** | |
| மர்ரே டார்லிங் | 3718 |
| **ஆப்பிரிக்கா** | |
| நைல் | 6738 |
| காங்கோ | 4700 |
| நைசர் | 4184 |
| **வட அமெரிக்கா** | |
| கென்மசி | 4241 |
| மிசிசிப்பி | 3779 |
| மிசூரி | 3726 |
| செயிண்ட்டு இலாரன்சு | 3058 |
| இரியோ கிராண்டு | 3034 |
| யூகான் | 2849 |
| நெல்சன் | 2575 |
| அர்கன்சா | 2334 |
| கொலொராடோ | 2334 |
| **தென் அமெரிக்கா** | |
| அமேசான் | 6337 |
| புருசு | 3380 |
| மடீரா | 3240 |
| சாவோ பிரான்சிசுகோ | 3199 |
| பரானா | 2940 |
| சாபுரா | 2816 |
| தாகண்டிசு | 2699 |
| பராகுவே | 2549 |
| நீக்கிரோ | 2253 |

***ஆறுநாட்டார் மலை*** திருச்சி மாவட்டம் கரூர் வட்டத்தில் அமைந்துள்ள வேலாயுதம் பாளையம் கிராமத்தின் தென்பகுதியில் உள்ளது. இம் மலையை ஆர்நாட்டார் மலை, ஆர்நாட்டா மலை, புகழி மலை, ஆறுநாட்டார் மலை முதலான பல பெயர்களால் குறிக்கின்றனர். 1. அரையநாடு, 2. தலைய நாடு, 3. தட்டைய நாடு, 4. கீழங்க நாடு, 5. வெங்கால நாடு, 6. குறுப்பு நாடு ஆகிய ஆறுநாட்டினருக்கும் உரிமை உடைய மலையாதலின் இது ஆறுநாட்டார் மலையாயிற்று என வழக்காறுகள் குறிக்கும். இம்மலையின் உச்சியில் முருகப் பெருமானின் கோயில் உள்ளது. இக்கோயிலில் பூசனை உரிமை பெற்றவர்கள் வேட்டுவர் ஆவர். இம்மலையின் உச்சியில் தென் புறமும் வட புறமும் பத்துக்கும் மேற்பட்ட சமணப் படுக்கைகள் உள்ளன. இப்படுக்கைகளின் அருகிலும், குகை வாயிலின் மேற்புறத்திலும், வெளிச்சுவர்களிலும் தமிழ் பிராமி எழுத்தில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகள் உள்ளன. இவற்றுள் ஒரு கல்வெட்டு கோ ஆதன் செல்லிரும்பொறை, இவன் மகன் பெருங்கடுங்கோன், இவன் மகன் இளங் கடுங்கோன் என்ற மூன்று சேர மன்னர்களைப் பற்றிக் குறிப்பிடுகிறது.

**ஆறுமுக அடிகள்**[1] கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்களுள் ஒருவர்; திருநெல்வேலி மாவட்டம் இராசபாளையம் தோப்புப் பட்டியைச் சேர்ந்தவர்; ஏழு வயதில் செய்யுள் இயற்றும் திறம்பெற்றவர்; பன்னிரண்டு வயதில் வழிபாட்டில் ஈடுபட்டவர். பேய்ச்சிமுத்து அம்மையை மணந்து, ஐந்து ஆண்டுகள் இல்லறம் நடத்திய இவர் காஞ்சி நிச்சல இராமாநந்த சுவாமிகளிடம் உபதேசம் பெற்றுத் துறவியானார். தொண்டைநாட்டு ஆர்க்காட்டை அடுத்த தார்சர்புரத்தில் மடம் அமைத்து, வாழ்ந்து, மறைந்தார். இவர் இயற்றிய வள்ளலார் புராணம் வடலூர் இராமலிங்க அடிகளின் வரலாறு கூறுவதாகும். 3000 பாடல்கள் கொண்ட சிதானந்த சாகரம் என்னும் நூலில் வேதாந்தக் கருத்துகளைக் கூறியுள்ளார். இவர் குருவருட் புகழ் என்னும் நூலும் செய்துள்ளார்.

**ஆறுமுக அடிகள்**[2] கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தருமபுர ஆதீனத் தம்பிரான்களுள் ஒருவர். சாசிமடத்துத் தலைவர் மீது பல தனிப்பாடல்கள் செய்துள்ளார்.

**ஆறுமுக அடிகள்**[3] கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் திருவெண்காட்டில் வாழ்ந்தவர்; பண்டார மரபில் வந்தவர்; காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் விருத்தம், காஞ்சிபுரம் காமாட்சியம்மன் விருத்தம் ஆகிய நூல்களை இயற்றினார்; திருப்புகழினைப் பதிப்பித்துள்ளார்.

**ஆறுமுக அடிகள்**[4] கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்களுள் ஒருவர். இவரது ஊர் இராமநாதபுரம் மாவட்டத்தில் காளையார் கோயிலுக்கு அருகிலுள்ள மரக்காத்தூர். பெற்றோர் நாகலிங்கம் பிள்ளை, காமாட்சியம்மாள் ஆவர். வேளாண் மரபில் தோன்றிய இவர் இளமையில் இல்லறம் துறந்து கோயிலூரில் முத்துக் கருப்ப சாமிகளிடம் உபதேசம் பெற்றார். வேதாந்த மடங்கள் பல சென்று, வேதாந்தம் கற்றார். காசி சென்று மீண்ட இவர், மதுரையில் தங்கி வேதாந்த நூல்களைக் கற்பித்தார். முருகப் பெருமானிடம் ஈடுபாடு உள்ளவர். ஞான வாசிட்டம், கிளிக்கண்ணி, விவேக சூடாமணி, அத்துவித உண்மை ஆகிய நூல்களை இயற்றியுள்ளார்.

த.கு.மு.

**ஆறுமுக ஆச்சாரி** தமிழ்நாட்டைச் சார்ந்த ஒரு சுதந்திரப் போராட்ட வீரர்; இராமநாதபுரம் மாவட்டம் தேவகோட்டையைச் சார்ந்தவர். 'வெள்ளையனே வெளியேறு' என்ற போராட்டம் மூண்ட காலத்தில் 1942-ஆம் ஆண்டு ஆகஸ்ட் 17-ஆம் நாள் தேவகோட்டையில் நிகழ்ந்த துப்பாக்கிச் சூட்டில் இவர் குண்டடிபட்டு இறந்தார்.

**ஆறுமுக சாமிகள்**[1] கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்களுள் ஒருவர்; தஞ்சை மாவட்டத்திலுள்ள தருமபுரத்தைச் சேர்ந்தவர். இவர் மாயூரம் முத்துச்சாமிப்பிள்ளை இயற்றிய 'திருப்பனந்தாட் சிலேடை வெண்பா', 'தருமை சொக்கநாதர் மாலை' முதலிய நூல்களுக்குச் சிறப்புப்பாயிரம் எழுதியுள்ளார்.

**ஆறுமுக சாமிகள்**[2] கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஆங்கிலம் வல்ல தமிழ்ப் புலவர். இவர் 'இங்கிலீசும் தமிழுமாகிய ஒக்கபுலேரியும் டையலாக்கும்' (English and Tamil Vocabulary and Dialogue) என்னும் நூலினைக் கி.பி. 1881-ஆம் ஆண்டு எழுதியுள்ளார். இதில் ஆங்கிலச் சொற்கள் தமிழ் எழுத்துகளில் எழுதப்பட்டுள்ளன. இதனால் தமிழ் மட்டும் அறிந்தவர்கள் ஆங்கிலச் சொற்களை எளிதாக அறிந்து கொள்ளலாம். மேலும் இவர் 'சேந்தன் திவாகரம்-தெய்வப் பெயர்த் தொகுதி மூலம்', 'மாரியம்மன் தாலாட்டு', 'நன்னூல் மூலமும் காண்டிகை உரையும்', 'வைத்திய ரத்தினச் சுருக்கம்', 'மதுரைவீர சாமி கதை', 'கைவல்ய நவநீதம் என்னும் நூலுக்குப் பிறையாறு அருணாசல சாமி இயற்றிய உரை' ஆகிய நூல்களைப் பதிப்பித்துள்ளார்.

**ஆறுமுகஞ்சேர்வை** 20-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்களுள் ஒருவர். இராமநாதபுரம் மாவட்டத்தில் சிவகங்கை அருகே உள்ள செம்பூர் இவர் ஊராகும். கொட்டாம்பட்டிக் கருப்பையாப் பாவலரிடம் பயின்று, முறையூர்ச் சண்முகம் செட்டியாரின் சமூகவித்துவானாக இருந்தார். பின் சென்னையில் 'ஆனந்த போதினி' இதழாசிரியராகப் பணி செய்தார்.

இவர் நாலடியார், நரிவிருத்தம், சிறுபஞ்சமூலம், நளவெண்பா, குமரேச சதகம், கபிலர் அகவல், விவேக சிந்தாமணி முதலிய நூல்களுக்கு உரை எழுதியுள்ளார். அரிச்சந்திர புராண வசனம், அருணாசல புராண வசனம், குசேலோபாக்கியான வசனம், அண்டப் புளுகன் முதலிய உரைநடை நூல்களும், கம்பராமாயணச் சுருக்கம் என்னும் தொகுப்பு நூலும் செய்துள்ளார். த.கு.மு.

**ஆறுமுக நயினார்ப்பிள்ளை** 20-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். திருநெல்வேலி நகரினைச் சேர்ந்த பேட்டையில் பிறந்தவர். சைவ வேளாள மரபில் வந்த இவர்தம் தந்தையார் பெயர் தருமசிவ பிள்ளை. கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்களிடம் இலக்கண இலக்கியக் கல்வி கற்றார். விருதைச் சிவஞானயோகி வரலாறு, மகா சைவர்

புராணம் ஆகிய நூல்களை இயற்றியுள்ளார். புராணச் சொற் பொழிவாற்றும் திறம்பெற்ற இவர், இலங்கை சென்று சைவ சமயத் தொண்டு புரிந்துள்ளார்.

**ஆறுமுக நாவலர்** கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஈழநாட்டுத் தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். இவர் கி.பி. 1822-ஆம் ஆண்டு யாழ்ப்பாணத்து நல்லூரில், கந்தப்பிள்ளைக்கும் சிவகாமியம்மைக்கும் ஐந்தாவது மகனாகத் தோன்றியவர். அரசு அலுவல் மேற்கொண்டிருந்த இவர்தம் தந்தையார் பல நாடகங்கள் எழுதித் தமிழ் மொழிக்குச் சிறந்த தொண்டாற்றியுள்ளார். அவ்வகையில் ஆறுமுக நாவலரும் தமிழின்பால் மிக்க ஈடுபாடு கொண்டிருந்தார். தந்தையார் தம் மக்கள் மூவரையும் ஆங்கிலக் கல்வியும் தமிழ்க் கல்வியும் கற்கச் செய்தார். இவரைத் தவிர ஏனைய உடன்பிறந்தார் நால்வரும் அரசு அலுவலில் ஈடுபட்டனர். ஆனால் நாவலர் தமிழார்வம் மிக்குச் சரவண முத்துப் பிள்ளையிடமும் சேனாதிராயரிடமும் தமிழ் கற்றுத் தேர்ந்தார். மேலும், இளமையில் தாமாகவே நீதி நூல்களையும், நிகண்டு முதலிய கருவி நூல்களையும் கற்றார். தம் தந்தையார் எழுதி முடிக்காமல் குறையாக விட்டுச் சென்ற நாடகத்தை இவர் எழுதி நிறைவு செய்தார்.



ஆறுமுக நாவலர்

இவர் ஆங்கிலம் கற்கும் ஆர்வம் கொண்டு, பார்சிவல் துரை நடத்திவந்த பள்ளிக்குச் சென்று கல்வி கற்றார். தம் பத்தொன்பதாம் வயதில் அப்பள்ளியிலேயே ஆசிரியர் தொழிலில் ஈடுபட்டு மேல் வகுப்புக்குத் தமிழும், கீழ்வகுப்புக்கு ஆங்கிலமும் கற்பித்தார். பார்சிவல் துரை, இவரிடம் விவிலிய நூலை மொழி பெயர்க்குமாறு வேண்டினார். அதனை ஏற்று, விவிலியக் கருத்துகள் சிறிதும் மாறுபடாத வாறு மொழிபெயர்த்துத் தந்தார். சென்னைக் கிறித்தவ சபையினரும் ஒரு மொழி பெயர்ப்புச் செய்தனர். இரண்டு மொழி பெயர்ப்புகளையும் ஒப்பிட்டு, நாவலருடைய மொழிபெயர்ப்பே சிறந்தது என்னும் முடிவுக்கு வந்தனர். இதனால், இவர்தம் ஆங்கிலப் புலமையும், மொழி பெயர்க்கும் திறனும் நன்கு புலனாயின. இவர் வடமொழியையும் தாமே கற்றுச்சிறந்த புலமையுடையவராக விளங்கினார்.

சைவமும் தமிழும் இருகண்களென எண்ணிய இவர் மற்ற சமயத்தினர் ஆற்றும் சமயத் தொண்டினைக் கண்டு, தாமும் அவ்வாறு செய்து சைவசமயத்தை வளர்க்கத் திட்டமிட்டார். இதற்கு மொழியுணர்வு இன்றியமையாதது எனக் கருதி, நாடெங்கிலும் பள்ளிகள் அமைக்க எண்ணினார். இதன் விளைவாக இவர் யாழ்ப்பாணத்து நல்லூரில் கி.பி. 1848-ஆம் ஆண்டு 'சைவப் பிரகாச வித்தியாசாலை' என்னும் பள்ளியைத் தொடங்கினார். இதற்காகும் செலவை ஈடு செய்யப் படியரிசி பெற்று அவற்றைப் பயன்படுத்தினார். புத்தகங்களைப் பிழையின்றிப் பதிப்பிக்க எண்ணித் தாமே கி.பி. 1849-ஆம் ஆண்டு 'வித்தியாநுபாலன யந்திரசாலை' என்னும் அச்சகம் ஒன்றை அமைத்தார். நாவலர் தாம் பதிப்பித்த நூல்களில் எழுத்துப்பிழை, இலக்கணப்பிழை, கருத்துப்பிழை, குறுயீடுகளில்லாமை போன்றவற்றை நீக்கிச் செம்மையாக வெளியிட்டார் என்று அறிஞர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். முற்றுப்புள்ளி, அரைப்புள்ளி, காற்புள்ளி, முதலிய நிறுத்தக் குறியீடுகளைத் தமிழ் நூல்களில் முதன் முதலில் பயன்படுத்தியவர் இவரேயாவார். இவர் சிதம்பரத்திற்கு வந்து, கி.பி. 1865-ஆம் ஆண்டு 'சைவப் பிரகாச வித்தியாசாலை' என்னும் பெயரில் பள்ளியொன்றைத் தொடங்கினார். அதுவே இன்று 'ஆறுமுக நாவலர் மேல்நிலைப் பள்ளி' யாக வளர்ச்சியடைந்துள்ளது. மேலும், கி.பி. 1872-ஆம் ஆண்டு யாழ்ப்பாணத்தில் 'சைவ ஆங்கில வித்தியாசாலை' என்னும் பள்ளியையும் தொடங்கினார்.

'ஒவ்வொரு கோயிலிலும் சைவ சமய உண்மைகளை மக்களுக்குத் தாய் மொழியிலேயே கற்பித்தல் வேண்டும்' என்பது காமிகாகமத்தில் இறைவனால் விதிக்கப்பட்டுள்ளது என்னும் செய்தியினை எடுத்துணர்த்தினார். நாவலர் பேச்சுக் கலையில் சிறந்து விளங்கியதால் சமயச் சொற்பொழிவாற்றுவதிலும், பள்ளிகளில் பயிற்றுவதிலும்

தம் திறமையை வெளிப்படுத்தினார். இவர் சென்னையினின்றும் குடந்தைக்கு வந்ததைக் கேள்வியுற்ற மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை இவரைத் திருவாவடுதுறை மடத்திற்கு அழைத்துச் சென்றார். அங்கு, இவர் சொற்பொழிவைச் செவி மடுத்து மகிழ்ந்த ஆதீனத் தலைவர் இவருக்குப் பல சிறப்புகளைச் செய்ததோடு, 'நாவலர்' என்னும் பட்டத்தையும் அளித்துப் பாராட்டினார். இவர் இராமலிங்க சுவாமிகளின் பாக்களை அருட்பா என ஒத்துக் கொள்ளாமையால், அது தொடர்பாகச் சென்னை உயர்நீதி மன்றத்தில் ஒரு வழக்கினைத் தொடர்ந்தார். இறுதியில் இருவரிடையேயும் ஒற்றுமை உண்டாயிற்று.

இவர் தமிழ் இலக்கிய இலக்கணங்களுக்கு எளிய முறையில் உரையெழுதி வெளியிட்டார். உரையெழுதிய நூல்கள் வருமாறு: நன்னூல், ஆத்திசூடி, கொன்றை வேந்தன், நல்வழி, கோயில் புராணம், சைவசமய நெறி, திருச்செந்தில் நிரோட்டக யமகவந்தாதி, திருமுருகாற்றுப்படை, மறைசை யந்தாதி. இவர் எழுதிய நன்னூல் உரை, காண்டிகை உரையாகும்.

இவர் பல நூல்களுக்கு உரை கண்டதோடு பல துறை மக்களும் மாணவர்களும் எளிதாகப் பயிலுமாறு நூல்கள் பல எழுதியுள்ளார். அவை வருமாறு: இலக்கணச் சுருக்கம், இலக்கண வினாவிடை, அனுட்டான விதி, குருவாக்கியம், உடையவர் உபயம், சிவ சேத்திராலய மகோற்சவ உண்மை விளக்கம், சிவாலய தரிசன விதி, சுப்ரபோதம், சூசனம், சைவசமயம் (தலைமைப் பேருரை), சைவ தூடணப் பரிகாரம், சைவ வினாவிடை, நன்னெறி, நித்திய கரும விதி, பாலபாடம் (ஒன்று முதல் நான்கு வகுப்புகளுக்கு), திருவிளையாடற் புராண வசனம், யாழ்ப்பாணச் சமய நிலை, வள்ளியம்மை திருமணப் படலம், விநாயகர் கவசம், சிவகவசம், சக்தி கவசம், சரசுவதி தோத்திரம், இலக்குமி தோத்திரம் முதலியன.

இவர் பதிப்பித்த நூல்கள்: அருணகிரியந்தாதி, இலக்கணக்கொத்து மூலமும் உரையும், உபநிடதம் மூலமும் உரையும், கந்தபுராணம், கந்தரலங்காரம், கந்தரநுபூதி, காசித் துண்டி விநாயகர் திருவருட்பா, சிங்கைச் சிலேடை வெண்பா, சிவஞானபோதமும் பொழிப்புரையும், சிவதத்துவ விவேகம், சிதம்பர மும்மணிக்கோவை, சூடாமணி நிகண்டு மூலமும் உரையும், சேதுபுராண மூலம், திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும், தருக்க சங்கிரகமும்-தருக்க சங்கிரக தீபிகையும், திருக்கருவை வெண்பா வந்தாதி, திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி, திருக்கோவையார், திருச்செந்தூரகவல், திருவாசகம், திருவேங்கடையர் செய்த உபமான சங்கிரகம், தெய்வானையம்மை திருமணப்படலம், தேவாரத் திரட்டு, தொல்காப்பியம் (சொல்லதிகாரம்-சேனாவரையருரை), நன்னூல் (சிவஞான முனிவர் விருத்தியுரை), பட்டினத்துப் பிள்ளையார் அருளிச் செய்த திருப்பாடல் திரட்டு, பதினோராம் திருமுறை, பிரயோக விவேக மூலமும் உரையும், புட்ப விதி, மகா பாரதம், மருதூரந்தாதி முதலியனவாகும்.

இவ்வாறு தமிழுக்கும் சைவத்திற்கும் தொண்டு புரிந்த நாவலர் கி.பி. 1870-ஆம் ஆண்டு யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணையில் உள்ள தம் இல்லத்தில் காலமானார்.

**ஆறுமுகம் பிள்ளை, பூ.,** கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்களுள் ஒருவர். இவர் இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள முதுகுளத்தூரைச் சேர்ந்தவர். தந்தையார் பெயர் பூலாறுசாமிப்பிள்ளை. ஆசிரியர் சரவணப் பெருமாள் கவிராயர். இவர் தமிழில் செய்யுள் இயற்றும் திறம் பெற்று விளங்கினார். உடல்நலக் குறைவு ஏற்பட்ட பொழுதும் செய்யுள் இயற்றும் பழக்கம் கொண்டிருந்தார். ஒரு சமயம் உடல் நலக் குறைவால் படுக்கையிலிருந்தபொழுது வீடு தீப்பற்றி எரிந்தது. அவ்வமயம் இவர், உதவி நாடிப் பழ. சி. சண்முகம் செட்டியாருக்குப் பல பாடல்கள் இயற்றி அனுப்பினார் என்பதும் அவர் இவருக்குத் தேவையான உதவிகளைச் செய்தார் என்பதும் கூறப்படுகின்றன. இவர் விநாயகர் திரிபு வெண்பா அந்தாதி, குழந்தாபுரிக் குமரேசர் மாலை, சித்தி விநாயகர் மும்மணிமாலை, தாயுமான சுவாமிகள் புராணம், தில்லை நடராசர் பதிகம், மதுரை யமக அந்தாதி, திருத்தொண்டர் வந்தனைக் கோவை, திருவுத்தர கோச மங்கைப் பதிகம், மருதூர் இரட்டை மணிமாலை, பஞ்சாதசத் திருப்புகழ், காரைக்குடிக் கொப்புடையம்மன் பதிகம், குழந்தாபுரிப் பதிற்றுப் பத்துப் பதிகம், கொடுமனூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி, சித்தி விநாயகர் பதிகம், முகவைத் திரிபுரசுந்தரியம்மை பதிகம், அரிச்சந்திர வண்ணம் ஆகிய 16 நூல்கள் இயற்றியுள்ளார். அந்நூல்கள் சோடசப் பிரபந்தம் என்னும் பெயரில் கி.பி. 1899-ஆம் ஆண்டு ஒரே தொகுதியாக வெளியிடப்பட்டன. இவர் இயற்றியவற்றுள் 13 செய்யுள்கள், தனிச் செய்யுட் சிந்தாமணியில் இடம் பெற்றுள்ளன.

**ஆறுமுக முதலியார் வரகவி** கி.பி. 19 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்களுள் ஒருவர். இவர் தொண்டை நாட்டுக் கருவம்பாகை என்னும் ஊரில் காராள மரபில் தோன்றியவர். இவர் தந்தை முத்தய்யா முதலியார். சென்னை வரதராச முதலி

யாரிடம் இவர் தொல்காப்பியத்தினைப் பயின்றார். விரைந்து கவிதை புனையும் ஆற்றல் பெற்றிருந்த தால் இவர் வரகவி எனப்பட்டார். இவர் இயற்றிய 'பூம்பாவை விலாசம்' என்னும் நாடகம், சென்னை மயிலையில் திருஞானசம்பந்தர் எலும்பைப் பெண்ணாக்கிய அற்புதத்தைக் கூறுவது. இது செய்யுளும் உரைநடையும் கலந்தது. த.கு.மு

**ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகள்** கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு புலவர்; கர்நூல் மாவட்டத்தில் ஆத்மகூரில் சுப்பம்மாள், சுப்பிரமணிய ஐயர் மகனாகத் தோன்றியவர். கல்வி முடிந்ததும் திருவண்ணாமலை குகை நமசிவாயர் மடத்தில் ஆளும் முறையில் வந்த குகை நமசிவாய அடிகளிடம் சிவலிங்க தாரணமும், தூல பஞ்சாக்கர உபதேசமும் பெற்றவர். இவர் செய்த நூல்கள் நிட்டாநுபூதி சாரம், வீரசைவ உண்மை அகவல், சதுர்லிங்க தச கோத்திர சதகம், இட்ட லிங்கத் திருத்தலமாலை, சிவசோடசமாலை, ஆசைச்சோடச மாலை, உய்யபத்து, ஓலபத்து, கரதலபத்து, கரதல நாயக பஞ்சகம், ஆடுதுறைக் குற்றம் பொறுத்தார் தோத்திரம், இட்டலிங்கப் பதிகம், சண்முகர் உரை, கரதலத் திருப்புகழ், தென்பாங்கு, மாசிலாமணிப் பதிகம், சிவசிவ பதிகம், சிவசிவ அரகர பதிகம், வீரட்டேசுவர மகாகுக அனுபவ தோத்திரக் கலிப்பா, கலித்துறை, தோத்திர மங்களம், இலிங்கப் புலம்பல். அருள்வாம உண்மை விளக்கம், பிரமதீர்க்க நிச்சயம், வெற்றருலா, உண்மையுரை, பரமஉபதேச ஒழுக்கம், சிவாத்வைதக் கும்மி, ஞானிகள் நிலைமை, மேன்மைப் பதிகம் முதலியனவாகும் த.கு.மு.

**ஆறைகிழார்** கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்களுள் ஒருவர்; ஆறை நாட்டு அவிநாசி என்னும் ஊரினர்; வைதிக சமயத்தவர்; கொங்குமண்டல வேளாளர்; திருநாராயணபுரத்தி லுள்ள வைணவ சமயத்தவரான மாதவ யோகியின் மாணவர். இவர் தம் ஆசிரியரின் குலமான கார்காத்த வேளாளர் மரபைப் புகழ்ந்து 'கார்மண்டல சதகம்' பாடியுள்ளார். இறுதியில் எட்டுச் செய்யுள்கள் கார்மண்டலச் சிறப்புக் கூறுவன. இந்நூலுக்கு முத்துத் தாண்டவராயப்பிள்ளை என்பவர் உரை எழுதியுள்ளார். அரிசில்கிழார், அதியன், அன்னி, ஆலியார், இளங்கோ வேண்மான், உமட்டூர் கிழார், உம்பற்காட்டிளங் கண்ணனார், எருமையூரன், எவ்வி, கங்கர், கூடலூர் கிழார், வெள்ளி வீதியார் முதலிய சங்ககால வள்ளல்களும் புலவர்களும், நாதமுனி, நம்பியாண்டார் நம்பி ஆகியோரும் கார்காத்த வேளாளராவர் என்று இந்நூல் கூறுகிறது. த.கு.மு.

**ஆன் (கிளீவ்சு - கி.பி. 1515-1557):** ஆன் இங்கிலாந்து மன்னர் எட்டாம் என்றியின் நான்காம் மனைவியாவார். மணமான ஆறாம் திங்களில் இவரை அரசர் மணவிலக்கம் செய்தார். இவர் கி.பி. 1515-ஆம் ஆண்டில், கிளீவ்சு கோமகன் சானின் (John Duke of Cleves) மகளாகப் பிறந்தவர். என்றி அரசருக்கு இவளைத் திருமணம் செய்விக்க உறுதி செய்தபோது, அரசர் இவளைப் பார்த்ததில்லை. இத் திருமணம் அரசியல் காரணங்களுக்காக நடத்தப் பெற்றதாகும். கத்தோலிக்கப் பிரான்சுக்கும், புனித உரோமானியப் பேரரசுக்கும் எதிராக நடைபெற்ற இத்திருமணம், பாராளுமன்ற ஆணையின்படி முறிக்கப் பெற்றது. இத்திருமணத்தைச் செய்விக்க உறுதுணையாக விளங்கிய தாமசு கிராம்வெல் கொல்லப்பட்டார். இங்கிலாந்திலேயே வாழ்ந்த ஆன், கி.பி. 1557-இல் காலமானார்,

**ஆன் (தென்மார்க்கு - கி.பி. 1574-1619)** தென்மார்க்கைச் சார்ந்தவர். இங்கிலாந்து மன்னர் முதலாம் சேம்சின் (James I) துணைவியார்; பகட்



ஆன் (தென்மார்க்கு)

டான காதல் வாழ்விற்கும் பெயர் பெற்றவர். இவர் கி.பி. 1574-இல் நார்வே - தென்மார்க்கு அரசர் இரண்டாம் பிரடரிக்கின் மகளாகப் பிறந்தவர். அரசரை நேரில் காணாமலேயே இவர் கி.பி. 1589-இல் முதலாம் சேம்சை மணந்தார். அப்போது சேம்சு, இசுகாட்லாந்து அரசர் ஆறாம் சேம்சு என்று அழைக்கப்பெற்றார். இவர் எடின்பரோவில் அரசியாக முடிசூட்டிக் கொண்டார். முதல் இசுடுவர்ட்டு அரசராகச் சேம்சு கி.பி. 1603-இல் அரியணையேறிய

போது ஆன் இராணியார் வின்சர் (Windsor) மாளிகையில் முடிசூட்டிக் கொண்டார். சமூக, உள் துறைப் பணிகளில் இவர் சிறந்த பணிகளை ஆற்றினார். இவர் கி.பி. 1619–ஆம் ஆண்டில் 'ஆம்ப்டன் கோர்ட்' (Hampton Court) என்னுமிடத்தில் உயிர் துறந்தார்.

**ஆன் (பொகிமியா - கி.பி. 1366-1394)** பொகிமியாவைச் சேர்ந்த அம்மையார் ஆவார். இவர் இங்கிலாந்து அரசர் இரண்டாம் இரிச்சர்டு (Richard II) மன்னரின் துணைவியார். ஆன் கி.பி. 1366–ஆம் ஆண்டில் பொகிமியாவில் உள்ள பிராக்கு நகரில் பிறந்தார். தந்தையார் பேரரசர் நான்காம் சார்லசு; தாயார் பொமரானியாவைச் சார்ந்த எலிசபெத்து. இவர் தந்தையார் செல்வச் செழிப் பற்றவர்; உடல் வலி குறைந்தவர். ஆன் பதினைந்து வயதில் இரண்டாம் இரிச்சர்டுக்குத் திருமணம் செய்விக்கப்பட்டார். இத் திருமணத்தால் பயன் ஒன்றுமில்லையென்பதை அறிந்த மக்கள் ஆன் அம்மையாரை வெறுத்தனர். இரிச்சர்டுக்கும் ஆனுக்கும் கி.பி. 1382–ஆம் ஆண்டில் திருமணம் நடை பெற்றது. ஆன் இறந்தபின் இரண்டாம் இரிச்சர்டு பதவி நீக்கம் செய்யப் பெற்றுச் சிறையில் அடைக்கப் பெற்றார். மகப்பேறின்றிப் பிளேக்கு என்னும் கொள்ளை நோய்க்கு ஆளாகி ஆன் கி.பி. 1394–இல் காலமானார்.

**ஆன் இராணியார் (ஆசுத்திரியா- கி.பி. 1601-1666):** ஆசுத்திரிய நாட்டைச் சார்ந்த ஆன் (Anne) இராணியார் பிரான்சு நாட்டு இள வரசரின் புரவலராக இருந்தவர். இசுபெயின் நாட்டில் வல்லோடோலிட்டு என்னும் ஊரில் கி.பி. 1601–ஆம் ஆண்டு பிறந்தார். இவர் தந்தையார் இசுபெயின் நாட்டு அரசர் மூன்றாம் பிலிப்பு என்பவராவார்; தாயார் ஆசுத்திரிய நாட்டு மார்கரெட்டு.



ஆன் (ஆசுத்திரியா) இராணி

ஆன் இராணியார் பிரான்சு அரசர் பதின்மூன்றாம் உலூயியைக் கி.பி. 1615–ஆம் ஆண்டில் மணந்து கொண்டார். இவர்களின் மணவாழ்வு மகிழ்ச்சியாக அமையவில்லை. ஏனெனில் உலூயியின் அமைச்சர் கார்டினல்இரிசில்யூ ஆசுத்திரியாவின் செல்வாக்கை வெறுத்தார். கணவரால் புறக்கணிக்கப் பெற்ற ஆன், தம் மகன் பதினான்காம் உலூயியின் புரவலராக இருந்தார். பதின்மூன்றாம் உலூயி மன்னர் கி.பி.1643-இல் காலமானபோது, மாசரின் என்ற அமைச்சரின் துணையுடன் ஆட்சி நடத்தினார். நாட்டில் பல கலகங்கள் மூண்டபோதும், மாசரினும் ஆன் இராணியாரும் அவற்றை அடக்கினர். பதினான்காம் உலூயி கி.பி. 1661–இல் அரசராக முடிசூட்டிக் கொண்ட பின், இராணியார் மடாலயம் ஒன்றில் வாழ்ந்து வந்தார். இவர் கி.பி. 1666–இல் காலமானார்.

**ஆன் இராணியார் (இங்கிலாந்து- கி.பி. 1665-1714)** இங்கிலாந்தை ஆண்ட இசுடுவர்ட்டு (Stuart) மரபின் இறுதி அரசியார். இவரை நல்லாட்சி நடத்திய ஆன் இராணியார் (Queen Anne) என்பர். இரண்டாம் சேம்சு மன்னரின் முதல் மனைவிக்குப் பிறந்தவள் ஆன். சேம்சு மன்னர் கத்தோலிக்கரானபோது, ஆன் அம்மையாரும் அவர் தம் சகோதரி, மேரியும் பிராட்டசுடெண்டுகளாகவே இருந்தனர். கி.பி. 1688–ஆம் ஆண்டில் குருதி சிந்தாப் புரட்சியின்போது இரண்டாம் சேம்சு நாட்டை விட்டு விரட்டப்பெற்று, மூன்றாம் வில்லியமும் மேரியும் அரியணையில் அமர்த்தப் பெற்றனர். ஆன் கி.பி. 1702–ஆம் ஆண்டில் அரசியாக முடிசூட்டிக் கொண்டார். மால்பரோ பிரபு இவருக்கு அறிவுரை வழங்கினார். இவரது தலைமையில் பிரிட்டன், இசுபானிய வாரிசுரிமைப் போரில் பங்குபெற்றுப் பிரான்சு நாட்டு மன்னர் பதினான்காம் உலூயியின் பேராசையை முடிவுக்குக் கொண்டு வந்தது . உட்ரெக்ட்டு உடன்படிக்கையால் (1713) பிரிட்டனுக்குச் சிப்ரால்டரும், அமெரிக்காவில் சில இடங்களும் கிடைத்தன. இப்போரை ஆன் இராணியாரின் போர் என்பர். இவரது ஆட்சிக் காலத்தில்தான் கி.பி. 1707–ஆம் ஆண்டில், இங்கிலாந்தும், இசுகாட்லாந்தும் ஒருமைச் சட்டத்தால் ஒருங்கிணைந்தன. ஆன் இராணி கி.பி. 1683–ஆம் ஆண்டில் தென்மார்க்கு இளவரசர் சார்சை மணந்து கொண்டார். பதினேழு குழந்தைகளைப் பெற்றாலும், ஒன்று கூட இவருக்குப் பின்னர் உயிர் வாழவில்லை. இவர் கி.பி. 1714-இல் காலமானார். இவருக்குப் பின்னர் முதலாம் சார்சு மன்னரானார்.

**ஆன் இராணியார் (பிரிட்டனி - கி.பி. 1476-1514)** பிரிட்டனியைச் (Brittany) சார்ந்தவர். பிரிட்டனி பிரான்சு நாட்டின் பகுதியாகும். கி.பி. 1477–ஆம் ஆண்டில் நான்டெசு (Nantes) என்னும்



ஆன் இராணி (பிரிட்டனி)

பிரிட்டனியின் இரண்டாம் பிரான்சிசு (Francis II) என்பாருக்கும் மார்கரெட்-டி-பாய்க்சு (Marguerite -de-Foix) என்னும் அம்மையாருக்கும் மகளாகப் பிறந்தார். பிரான்சு ஆசுத்திரியா (Austria) ஆகிய இருநாடுகளுடனும் ஆன் இராணியாருக்குத் தொடர்பிருந்தது.

ஆன் கி.பி. 1490-இல் ஆசுத்திரியாவின் மாக்சிமிலியன் என்பாரை மணந்து கொண்டார். ஆனால் அடுத்த ஆண்டிலேயே அத் திருமணம் முறிந்தது. கி.பி. 1491-ஆம் ஆண்டின் இறுதியில் ஆன், பிரான்சு மன்னர் எட்டாம் சார்லசை மணந்தார். சார்லசு கி.பி. 1498-இல் இறந்தார். ஆன் பன்னிரண்டாம் லூயியை மணந்து கொண்டார். பிரிட்டனியைப் பிரான்சு இணைத்துக்கொள்ள விரும்பினாலும், பிரிட்டனி பிரான்சின் பகுதியாகவில்லை. ஆன் இராணியார் கி.பி. 1514-இல் காலமானார்.

**ஆன்சு** சப்பான் நாட்டின் மிகப்பெரிய தீவு. இதன் பரப்பளவு 2,27,414 ச.கி.மீ. சப்பான் நாட்டின் பெரு நகரங்கள் இத்தீவிலேயே அமைந்துள்ளன. எனவே இந்நாட்டின் ஏறத்தாழ எண்பது விழுக்காடு மக்கள் ஆன்சுத் தீவில் (Honshu) வாழ்கிறார்கள். இத்தீவின் மக்கள் தொகை 1981-ஆம் ஆண்டு மதிப்பின்படி ஏறத்தாழ 8 கோடியாகும்.

ஆன்சுத் தீவின் நடுவில் சப்பான் நாட்டின் உயர்ந்த மலையான சப்பானிய ஆல்ப்சு மலைத்தொடர் உள்ளது. இம்மலைத்தொடருக்குக் கிழக்கில் சங்கிலித்தொடர் போன்று பல எரிமலைகளைக் காணலாம். சப்பான் நாட்டின் மிகப் பரந்த தாழ் நிலமான காண்டோ சமவெளி, நடு ஆன்சு மலைத்தொடரிலிருந்து பசிபிக்குப் பெருங்கடல்வரை பரவியுள்ளது. ஆன்சுவின் தென்மேற்குப் பகுதியில் பல சிறு சமவெளிகளும் தாழ்நிலங்களும் இருந்தாலும், அவை உள்நாட்டிலும் கடற்கரையையொட்டியும் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் காணப்படுகின்றன.

சப்பான் நாட்டின் தலைநகரான தோக்கியோ (Tokyo) மிகப் பெரிய நகரம்; அது காண்டோ சமவெளியில் அமைந்துள்ளது.

வட ஆன்சுத் தீவில் மூன்று மலைத்தொடர்கள் ஒன்றையடுத்து ஒன்றாக நிற்பது, கண்களையும் கருத்தையும் கவருவது. எரிமலைகள் மேற்கு மலைத்தொடர்களையொட்டியுள்ள மலைகளில் உள்ளன. இம்மலைகளுக்கு மேற்கில் உள்ள நிகாடா சமவெளி சப்பான் கடல்வரை நீண்டுள்ளது. இம்மலைத்தொடர்களுக்குக் கிழக்கில், பசிபிக்குப் பெருங் கடலைத் தொட்டு இருப்பது செந்தைச் சமவெளியாகும்.

ஆன்சுத் தீவில் வெந்நீர் ஊற்றுகள் உள்ளன. இத்தீவின் பல குறுகிய ஆறுகள் வேகமாகப் ஓடுகின்றன. அவற்றைப் பயன்படுத்தி நீர் மின்சக்தி எடுக்கப்படுகிறது. மலைப் பகுதிகளில் அடர்ந்த காடுகளைக் காணலாம்.

சப்பான் நாட்டின் மிக உயர்ந்த மலையுச்சியான பியூசியாமா இத்தீவில்தான் அமைந்துள்ளது.

**ஆன்சு ஆல்பைன்** (கி.பி. 1465-1524): இவரை மூத்த ஆல்பைன் என்றும் கூறுவர். ஆல்பைன் என்பது குடும்பப்பெயர். செருமானிய சமயச்சீர் திருத்தம் எழுந்த காலத்தில் ஆச்சுபர்க்கு நகரில் பிறந்து வாழ்ந்தவர். பிளமியக் கலைஞர்களின் பாணியைப் போன்று செருமானியத் திருச்சபைப் பலிபீடம் போன்ற சமயத்துறை சார்ந்த பல படங்களை இவர் தீட்டியுள்ளார். அத்துடன் தம் காலத்தில் வழக்கிலிருந்து ஆடைகளை எடுத்துக்காட்டும் வரைபட நூல்களை இயற்றிக் கொடுத்தவரும் இவரே. இவர் தம் மகனே, ஆன்சு ஆல்பைன் இளையவர் ஆவார்.

**ஆன்சு ஆல்பைன் இளையவர்**(கி.பி.1497-1543): இவர் செருமானியச் சமயச் சீர்திருத்தக் கால மாபெரும் ஓவியக் கலைஞர். இங்கிலாந்து மன்னர் எட்டாம் என்றியை ஓவியத்தில் வரைந்து பெயரும் புகழும் பெற்றவர் இவர்; என்றி மன்னரின் பல மனைவியரையும் ஓவியத்தில் தீட்டியுள்ளார். ஈராசுமசு, பிலிப்பு மெலஞ்தான், சர் தாமசு மூர் போன்ற பெரியார்களின் திருவுருவங்களையும் ஓவியங்களாகத் தீட்டிய இவர், அவர்களை நேரே அறிந்தவர்.

**ஆன்செம்** (கி.பி. 1033-1109) இத்தாலி நாட்டைச் சார்ந்த தத்துவ அறிஞர்; பீடுமாண்டிலுள்ள (Piedment) அசோத்தா (Asota) என்னுமிடத்தில் பிறந்தார். இவர் கி.பி. 1060-ஆம் ஆண்டு கிறித்தவ மதகுருவானார். இவர்தம் ஆசிரியரான இலான் பிராங்குக்குப் (Lanfranc) பிறகு இங்கிலாந்தில் காண்டர்பரித் தலைமைக் குருவாகப் (Canterbury Arch-bishop) பதவி ஏற்றார். இரண்டாம் வில்லியம் என்னும் அரசருடன் ஒத்துழைக்க இயலாமையினால் உரோம் நாட்டிற்குச் சென்று சிறிது காலம் கழித்துத் திரும்பி வந்தார். அப்போது அரசராயிருந்த முத

லாம் என்றியோடும் ஒத்துழைக்க இயலாமல் நாட்டை விட்டு வெளியேறினார். அச்சமயத்தில் ஆன்செம் (Anselm) போப்பாண்டவரின் அதிகாரத்திற்குத் துணை செய்ததால் இங்கிலாந்தில் அரசனுடைய அதிகாரம் குன்றியது. இவர் கி.பி. 1494-ஆம் ஆண்டு திருத்தொண்டர் (Saints) குழுக்களுள் ஒருவராகச் சேர்த்துக் கொள்ளப்பட்டார். கடவுள் உண்மையை வலியுறுத்தப் பல அடிப்படைகள் உண்டு என்றும் அறிவிற்கும் நம்பிக்கைக்கும் முரண்பாடு இருப்பதாகக் கருதுவது தவறு என்றும் எடுத்துக் காட்டியதால் ஐரோப்பா முழுவதும் இவர் புகழ் பெற்றார். தத்துவத் துறையில் தெய்விக இயலைப் (Theology) பற்றித் தெளிவான கருத்துகளை வெளியிட்டுள்ளார்.

**ஆன்ட்ராசு, சர் எட்மண்டு (கி.பி. 1637-1714)** என்பவர் அமெரிக்காவில் ஆங்கிலக் குடியேற்றப் பகுதியின் ஆளுநராகப் பணியாற்றியவர். இவர் தந்தையார் முதலாம் சார்லசு மன்னர். படையில் பணியாற்றிய பின், ஆன்ட்ராசு நியூயார்க்குக் குடியேற்றப் பகுதியின் ஆளுநராகக் கி.பி. 1674-ஆம் ஆண்டில் நியமிக்கப்பட்டார். இவர் கி.பி. 1681-ஆம் ஆண்டில் திருப்பி அழைக்கப்பெற்றார். யார்க்குக் கோமகன் இரண்டாம் சேம்சு என்னும் பட்டத்துடன் முடிசூட்டிக் கொண்ட பின், ஆன்ட்ராசு கி.பி. 1686-ஆம் ஆண்டில் நியூ இங்கிலாந்தின் ஆளுநராக்கப் பெற்றார். மேலும் பல புதிய பகுதிகள் கி.பி. 1688-இல் இவருடைய ஆளுகைக்கு உட்படுத்தப்பட்டன. மூன்றாம் வில்லியம் அரசரானபோது, ஆன்ட்ராசு இங்கிலாந்திற்குத் திருப்பி அனுப்பப்பட்டார். இவர் கி.பி.-1692-இல் வர்சீனியாவின் ஆளுநராகப் பொறுப்பேற்று, பிற பதவிகளையும் வகித்துக் கி.பி. 1714-ஆம் ஆண்டில் இலண்டனில் காலமானார்.

**ஆன்ட்ரூசு, சி. எப் (கி.பி. 1871-1940)** இந்தியச் சமூக, சமுதாய, அரசியல் மறுமலர்ச்சிக்குத் தொண்டாற்றிய ஆங்கிலேயர். 'கிறித்துவைப் பார்க்கவேண்டும் என விரும்பும் நாங்கள் உம்மில் கிறித்துவைக் காண்கிறோம்; நீர் இந்தியாவில் வாழ்ந்த முப்பது ஆண்டுகளும் கிறித்துவைப் போலவே வாழ்ந்தீர்,' என இந்து நண்பர் ஒருவர், இங்கிலாந்தில் தங்கியிருந்த கிறித்துவ நண்பர் ஒருவருக்கு மடல் ஒன்றை வரைந்தார். அந்தக் கிறித்துவ நண்பர் 'சார்லி' என்று காந்தியடிகளால் அன்புடன் அழைக்கப்பட்ட 'தீனபந்து' சி.எப். ஆன்ட்ரூசு அவர்களாவர். தேசியத் தலைவர்களான தாகூர், காந்தியடிகள் போன்றவருடன் இணைந்து இந்தியச் சமூக, சமுதாய, அரசியல் மறுமலர்ச்சிக்குத் தொண்டாற்றிய ஆன்ட்ரூசு, சார்லசு சான் எட்வின் ஆன்ட்ரூசு, மேரி சார்லெட்டு என்னும் தம்பதிகளின் மகவாய், இங்கிலாந்தில், நியூகேசில் என்னும் இடத்தில் கி.பி.



சி.எப். ஆன்ட்ரூசு

1871-ஆம் ஆண்டு பிப்பிரவரித் திங்கள், 12-ஆம் நாள், பிறந்தார்.

பள்ளிப் படிப்பிற்குப்பின் சிறப்பூதியம் பெற்றுக் கேம்பிரிட்சுப் பல்கலைக் கழகத்தில் கல்வி கற்றார். பேராயர் வெசுட்காட்டின் (Westcott) சமயக் கொள்கைகள் ஆன்ட்ரூசின் உள்ளத்தில் பதிந்தன. கிறித்தவ நீதி நெறிகளை, இவ்வுலக சமூக, பொருளாதாரச் சிக்கல்களுக்குத் தீர்வு காண்பதற்குப் பயன்படுத்துவதே முதன்மையானது என்பதை ஆன்ட்ரூசு ஏற்றுக்கொண்டார். கேம்பிரிட்சுப் பல்கலைக்கழகப் படிப்பைக் கி.பி. 1895-இல முடித்துக் கொண்டு மத குரு பணியில் சேர்ந்தார். எட்வின் ஆன்ட்ரூசு தம் மகனுக்குச் சிறுவயதில் இந்தியாவைப் பற்றிய செய்திகளை அடிக்கடி கூறுவார். இந்தியாவைப் பற்றிய கதைகளும் வரலாற்று நிகழ்ச்சிகளும் ஆன்ட்ரூசைக் கவர்ந்தன. பேராயர் பேசில் வெசுட்காட்டின் (பேராயர் வெசுட்காட்டின் புதல்வர்) மறைவிற்குப் பின் அவர் பொறுப்பை ஏற்றுக்கொள்ள இந்தியாவினின்றும் அழைப்பு வந்தது. இந்தியாவிற்குச் சென்று பணி செய்யவேண்டும் என்னும் நெடுநாளைய கனவு ஆன்ட்ரூசுக்கு நிறைவேறியது.

ஆன்ட்ரூசு (Andrews) 1904-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 20-ஆம் நாள் பம்பாய் வந்தடைந்தார். அந்நாள், 'தான் இந்தியனாகப் பிறந்த நாள்' என்று கூறினார். புனிதர் இசுடீபன் கல்லூரியில் பயிற்றுநர் பொறுப்பேற்றார் ஆன்ட்ரூசு இந்தியா வந்த

சமயத்தில் சப்பான் உருசியாவைப் போரில் தோற்கடித்தது. இந்தியாவில் தீவிர தேசியவாதிகளின் இயக்கம் பரவியபோது, ஆங்கில அரசு, தேசியவாதிகளைக் கடுமையாகத் தண்டித்துத் தேசிய இயக்கத்தை நசுக்கமுயன்றது. ஆங்கில ஏகாதிபத்தியத்தின் பொருளாதாரச் சுரண்டல் கொள்கையை ஆன்ட்ருசு வெறுத்தார். குடியேற்றச் சட்டம், பத்திரிகைச் சட்டம் ஆகியவற்றை எதிர்த்துக் காங்கிரசு போராடிய போது ஆன்ட்ருசு தமது ஆதரவை நல்கினார். இவர் முழுச் சுதந்திரமே இந்தியாவின் வளர்ச்சிக்கு உதவும் எனக் கருதினார்; தாதாபாய் நௌரோசி, இலாலா லசபதிராய், காளிசரண் பானர்சி ஆகியோரின் நண்பரானார்.

புனிதர் இசுடீபன் கல்லூரி நண்பர்களுடன் இணைந்து, சுற்றுப்புறங்களில் ஏழை எளியவர்களுக்குப் பணிசெய்வதில் தீவிர பங்கு கொண்டார். இந்திய தத்துவ, சமய நெறிகள் கிறித்துவத்தில் முற்றுப் பெற்றதாகக் கருதினார். சமயப் பரப்புநர்கள் இந்தியப் பண்பாட்டுக் கொள்கைகளை வெறுப்பதை இவர் விரும்பவில்லை. இந்தியக் கிறித்துவம் இந்தியமயமாக்கப்பட வேண்டும் என்னும் கருத்தைத் தமது 'மாறுபடும் கால இந்தியா (India in Transition)', 'இந்தியாவில் கிறித்து (Chrst in India)' 'கிழக்கும், மேற்கும் (The East and the West)' என்னும் கட்டுரைகளில் திறம்பட எடுத்துக் கூறினார். தேசிய சமயப் பரப்பூழியர் கழகம் (National Missionary Society), இளைஞர் கிறித்துவ இயக்கம் (Young Men Christian Assoeiation), மாணவர் கிறித்துவ இயக்கம் (Student Christian Movement) ஆகியவற்றுடன் இணைந்து பணியாற்றினார். பல்வேறுபட்ட கிறித்துவ சபைகளைச் சார்ந்த சமயப் பரப்பூழியர்கள் தங்கள் வேறுபாடுகளை மறந்து, சிம்லாவில் ஆன்ட்ருசின் தலைமையில் 1911 இல் ஒன்று கூடினர். இக்கோடைப்பள்ளி பின்னாட்களில் 'இந்தியத் திருச்சபை' ஏற்பட வித்திட்டது எனலாம்.

தொழிலாளர் நலனிலும் தீவிர பங்கு கொண்டார் ஆன்ட்ருசு. வெளிநாடுகளுக்குச் சென்று குடியேறிய இந்தியத் தொழிலாளர் சிக்கல்களுக்குத் தீர்வு காண்பதில் ஆன்ட்ருசு வெற்றி கண்டார். இவர் தீர்வுகண்ட சிக்கல்களுள் சென்னை நெசவுத் தொழிலாளர் (1918), சாந்த்பூர் தொழிலாளர் (1919) சிக்கல்கள் குறிப்பிடத்தக்கவையாகும்.

புனிதர் சி.எப். ஆன்ட்ருசு இந்தியத் தேசிய சிற்பிகளுள் ஒருவராவார். இலண்டனில் தாகூரை 1912 சூன் திங்களில் சந்தித்தபின் இருவரும் நெருங்கிய நண்பர்களாயினர். சாந்திநிகேதனின் வளர்ச்சியில் ஆன்ட்ருசின் பணி சிறப்பானது. ஆங்கில ஏகாதிபத்தியத்தையும் இந்தியத் தேசிய இயக்கத்தையும் இணைக்கும் பாலமாக இவர் விளங்கினார். இந்திய விடுதலை இயக்கப் போராட்டத்தைப் பற்றிய அவரது கட்டுரைகள் இலண்டன், அமெரிக்கா பத்திரிகைகளில் வெளிவந்தன. 'மகாத்மா காந்தியின் கருத்துகள்' (1929), 'மகாத்மா காந்தி: அவரது சொந்தக்கதை' என்னும் நூல்களையும், 'இலண்டனில் மகாத்மா காந்தி' (1932) என்னும் கட்டுரையையும் இவர் எழுதி வெளியிட்டார். இவ்வெளியீடுகள் இந்தியத்தேசிய இயக்கத்தைப் பற்றிய உண்மை நிலையை ஆங்கிலேயர் அறிந்துகொள்ள உதவின. வட்ட மேசை மாநாட்டில் காந்தியடிகளுக்கு உதவியாக ஆன்ட்ருசு 1932-இல் இலண்டனுக்குச் சென்றார். இம்மாநாடு தோல்வியுற்றதால் இந்தியாவில் ஒத்துழையாமை இயக்கம் தீவிரமடைந்தது; தம்மைச் சிறையிலிட்டபோது காந்தியடிகள் காலவரம்பற்ற உண்ணா நோன்பினை மேற்கொண்டார். அவர் உடல்நிலை சீர்கெட்டது. ஆன்ட்ருசின் முயற்சியால் ஆங்கில அரசு பேச்சுவார்த்தைக்கு இணங்கியது; காந்தி உண்ணா நோன்பைக் கைவிட்டார்.

கல்வி இயக்க வளர்ச்சியிலும் ஆன்ட்ருசு தீவிர அக்கறை காட்டினார். கிறித்துவக் கல்லூரிகள் தொடர்ந்து கல்விப் பணியில் செயற்படவேண்டுமென வலியுறுத்தினார். பல்கலைக் கழகங்கள், நகர மக்களையும் கிராம மக்களையும் இணைக்கும் பாலமாகச் செயற்பட வேண்டும் என்பதைச் சுட்டிக் காட்டினார். கேம்பிரிட்சு (1935, 1937), நியூசிலாந்து, ஆசுத்திரேலியா (1937), கல்கத்தா (1938) மைசூர் (1938) ஆகிய புகழ்பெற்ற பல்கலைக் கழகங்களில் சிறப்புச் சொற்பொழிவாற்றும் பேறுபெற்றார். தாகூர், ஆண்ட்ருசைச் சாந்திநிகேதனின் துணைத் தலைவராக நியமித்தது, இவரது சிறப்பிற்குச் சான்றாகும். இவரது முயற்சியால் சாந்தி நிகேதனில் 'இந்தி பவனம்', தொடங்கப்பட்டது.

ஆன்ட்ருசு தம் உடல், பொருள் அனைத்தையும் ஏழை எளியவர்களுக்காகவும் இந்தியாவின் வளர்ச்சிக்காகவும் நல்கினார். தமக்கென்று ஒன்றையும் சேமித்து வைத்துக் கொள்ளவில்லை; மிக எளிமையான வாழ்க்கையை மேற்கொண்டார். ஓய்வு நேரங்களில் மருத்துவ மனைக்குச் சென்று நோயாளிகளைக் கண்டு ஆறுதல் கூறுவார். சலவைக்குப் பணம் மிகுதியானபடியால் தாமே துணிதுவைத்துச் சலவை செய்து கொள்ளுவார். 'கிறித்துவின் முதல் சீடரைப் போன்றவர்; கலப்பற்றவர், எளிமையானவர்', என ஆங்கிலப் பார்வையாளர் ஒருவர் இவரைப்பற்றிக் குறிப்பிட்டார்.

அயராத உழைப்பினால் ஆன்ட்ருசின் உடல் நிலை சீர்கெட்டது. இவர் 1939 ஆம் ஆண்டு திசர்

பர் மாதத்தில் கடுமையான நோய்வாய்ப்பட்டார். கல்கத்தா அரசு மருத்துவமனையில் கவலைக்கிடமாக இருந்த ஆன்ட்ரூசைக் காணக் காந்தியடிகள் விரைந்து சென்றார். நண்பரைக் கண்ட ஆன்ட்ரூசின் முகம் மலர்ந்தது: 'மோகன், சுயராச்சியம் வந்து கொண்டிருக்கிறது', என மகிழ்வுடன் மெல்லிய குரலில் முணுமுணுத்தார். சிலநாட்களுக்குப் பின் 1940 ஏப்பிரல் திங்கள் 5-ஆம் நாள் ஆன்ட்ரூசின் ஆவி பிரிந்தது. இவரது உடல் இவர் விரும்பிய படி கல்கத்தா கதீடரல் ஆலயத்திற்கு அருகில் நல்லடக்கம் செய்யப்பட்டது. சி.எப். ஆன்ட்ரூசு ஆங்கிலத்தில் பல நூல்களை எழுதியுள்ளார். பி.கி.அ.

துணை நூல்கள்:

**Roy Chaudhury, A.C., C.F. Andrews: His Life and Times.**

**Andrews, C.F. and Mookerjee, Girija, The, Rise, Growth of the Congress in India, London, 1938.**

**ஆன்ட்ரோசு தீவு** புதிய உலகத்தில் மேற்கு இந்தியத் தீவுகளுள் ஒன்றான பகாமாத் தீவுகளுடன் இணைந்ததொரு பகுதி. ஆன்ட்ரோசு தீவு (Andros) 4144 ச. கி. மீ. பரப்புடையது. இது 160 கி. மீ. நீளமும் 64 கி.மீ. அகலமும் கொண்டது. இதன் மிக அகன்ற பகுதியின் அகலம் 64 கி.மீ. ஆகும். தாழ்ந்த, மணற்பாங்கான இத்தீவில், கப்பற் போக்குவரத்துக்குப் பயன்படும் பல கால்வாய்கள் இடையிடையே இருக்கின்றன. கூசு ஆற்றங்கரையின் மீது ஆன்ட்ரோசு என்னும் நகரமும் உள்ளது. இதுவே இத்தீவின் மிகப் பெரிய நகரமாகும். மக்கள் தொகை 8397, (1980).

**ஆன்ட்வெர்பு** பெல்சியத்தின் மாபெரும் நகரம்; ஐரோப்பாவிலேயே மிகப்பெரிய துறைமுகப் பட்டினம். இத்னைப் பிளமிய மொழியில் (Flemish Language) ஆன்ட்வெர்பன் என்றும், பிரெஞ்சு மொழியில் ஆன்வெர்சு என்றும் கூறுவர். இந்நகரம் செல்ட்டு ஆற்றங்கரையில் வடகடலிலிருந்து ஏறத்தாழ 88 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

ஆன்ட்வெர்பு (Antwerb) தொடக்கத்தில் கோட்டையையும் சந்தைக் கடையையும் கொண்ட சிற்றூராக இருந்தது. இது சதுப்பு நிலத்தைக் கொண்ட ஆற்றங்கரை நகரம். இங்குக் கி.பி. 12 ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட புயலொன்று செல்ட்டு வாயிலில் இருந்த கால்வாயை அப்புறப்படுத்திவிடவே, ஆன்ட்வெர்பு துறைமுகப் பட்டினமாயிற்று. இது வாணிக வளம்மிக்க நகரமாக மாறி, ஏன்சியாட்டியக் குழுவில் ஏனைய பெரு நகரங்களுடன் இணைந்து கொண்டது. இந்நகரம் கி.பி. 1560 ஆம் ஆண்டளவில் செல்வச் செழிப்பில் திளைத்தது. இந்நகரைக் கி.பி.1576-இல் இசுபானியர் சமயப் பூசல்கள் காரணமாகத் தாக்கி அழித்தனர். முப்பதாண்டுப் போருக்குப் பின்னர் வந்த உடன்படிக்கை செல்ட்டு ஆற்று மூலம் வந்த கப்பற் போக்குவரத்தைத் தடுத்து விட்டது. நெப்போலியன் இந்நகரின் சிறப்பை உணர்ந்து இதன் துறைமுகத்தை மீண்டும் கட்டினான். பெல்சியம் கி.பி. 1830-ஆம் ஆண்டில் ஆலந்திலிருந்து பிரிந்தது. தச்சியர் (Dutch) செல்ட்டு ஆற்று வாயிலில் நடைபெற்ற வாணிகத்தின்மீது பெரும் வரிச்சுமையை விதித்தனர். ஆனால், அவ்வரிகள் கி.பி. 1863-இல் நீக்கப்படவே, மீண்டும் வாணிகம் தழைத்தோங்கலாயிற்று.



ஆன்ட்வெர்பு

முதல் உலகப்போரின்போது செருமானியர் இந்நகரைக் கைப்பற்றினர். இரண்டாம் உலகப்போரின் போது செருமானியப் படை வீரர்கள், ஆன்ட்வெர்பைக் கைப்பற்றி 1940 மே முதல் 1944 செப்டம்பர் முடியத் தம்மிடம் வைத்திருந்தனர். இந்நகர் 1945-இல் செருமானியரின் குண்டுமாரிக்கு இலக்காயிற்று. இந்நகர் பெல்சியம், பிரான்சு, செருமனி ஆகிய மூன்று நாடுகளுக்கும் பயன்படுகிறது. வைரத்தைச் சாணை பிடிக்கும் தொழிலில் ஆம்சுடர்டாமுடன் போட்டியிடும் இந்நகரில் பல அழகிய கட்டடங்களும் ஓவியங்களும் உள்ளன. மக்கள் தொகை 1,83,025.

**ஆன்டிதெம்** என்பது ஒரு சிற்றூர். ஐக்கிய அமெரிக்காவின் மேற்கு வர்சீனியா (West Virginia) வில் இவ்வூர் அமைந்துள்ளது. அமெரிக்க உள்நாட்டுப் போர் கி.பி. 1862-ஆம் ஆண்டு இவ்வூர்ப் பகுதியில் மிகக் கடுமையாக நடைபெற்றது. இரு தரப்பிலும் எண்ணற்ற வீரர்கள் உயிர் துறந்தார்கள். போரில்

இறந்துபட்ட வீரர்கள் நினைவாக அமைக்கப்பட்ட 'ஆன்டிதெம் தேசியக் கல்லறை' (Antietam National Cemetery) இதனருகில்தான் உள்ளது.

**ஆன்டிபோட்சு தீவுகள்** தென் பசிபிக்குப் பெருங்கடலில் நியூசிலாந்து தீவுகளுக்குத் தென்கிழக்கில் உள்ள தீவுக்கூட்டம். இத்தீவுக் கூட்டம் நியூசிலாந்து நாட்டின் நிலவியல் எல்லைகளுக்கு உட்பட்டுள்ளது. இத்தீவுகள் 49.4° தென் குறுக்குக் கோட்டிலும் 118° கிழக்கு நெடுக்கோட்டிலும் அமைந்துள்ளன. 402மீட்டர் வரை உயர்ந்துள்ள ஆண்டிபோட்சு தீவுகள் (Antipodes) வறண்டவை. இவற்றின் பரப்பளவு 62 ச.கீ.மீ. வடகிழக்கு, தென் கிழக்குப் பக்கங்களில் கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சி நிற்கும். இங்கு மக்கள் வாழவில்லை. இங்கிலாந்தைச் சார்ந்த கேப்டன் வாட்டர் அவுசு (Capt. Waterhouse) என்பார், கி.பி. 1800 – ஆம் ஆண்டில் இத்தீவுக்கூட்டத்தைக் கண்டுபிடித்தார்.

**ஆன்டிலீசு** என்பது மேற்கிந்தியத் தீவுகளின் மற்றொரு பெயர். கியூபா, சமைக்கா, ஐட்டி, போர்ட்டோரீக்கோ மற்றும் பல சிறு தீவுகளைக் கொண்டது பெரிய ஆன்டிலீசு என்றும், எஞ்சிய சிறு தீவுகள் சிறிய ஆன்டிலீசு என்றும் கூறப்படும். பகாமாத் தீவுகளை ஆன்டிலீசுடன் இணைப்பதில்லை.

**ஆன்டேரியோ** கனடாவில் உள்ள ஒரு மாநிலம். கனடாவில் வாழும் மக்களுள் மூன்றிலொரு பங்கினர் இங்கு வாழ்கின்றனர். ஆன்டேரியோ (Ontario) குவிபெக்கைவிட நிலப்பரப்பில் பெரியது. இதன் பரப்பளவு 10,68,630 ச.கி.மீ. ஆன்டேரியோவின் வடக்கில் அட்சன் ஆறும் சேம்சு விரிகுடாவும். கிழக்கில் குவிபெக்கும், மேற்கில் மனிடோபாவும் (Manitoba) தெற்கில் பென்சில்வேனியா, நியூயார்க்கு, ஒகையோ, மிச்சிகன், விசுகான்சின், மின்னிசோட்டா (Minnesota) போன்ற அமெரிக்க ஐக்கிய நாட்டின் மாநிலங்களும் எல்லைகளாக உள்ளன. இம்மாநிலத்தின் தலைநகர் தொரான்டோ (Toronto). கனடாவின் தலைநகரான ஒட்டாவா(Ottawa), தென்கிழக்கு ஆன்டேரியோவில் ஒட்டாவா ஆற்றங்கரையில் அமைந்துள்ளது. பண்ணைகள் இம்மாநிலத்தில் பெருமளவில் உள்ளன. தொழிற்சாலைகள் மிகுந்த அளவில் காணப்படுகின்றன. இதனால் இம்மாநிலம், கனடாவின் தொழிற்சாலை எனச் சிறப்பித்துக் கூறப்படுகிறது. பேருந்து வண்டிகள் செய்யும் தொழிற் சாலைகள் இங்குப் பெருமளவில் உள்ளன. இம்மாநிலத்திலுள்ள ஆமில்டன் (Hamilton) நகரம் இரும்பு, எஃகுத் தொழிற்சாலைகள் உள்ள நகரமாகும்.



ஆன்டேரியோ

இம்மாநிலத்தில் கோழிப்பண்ணைகள் நிறைந்துள்ளன. இங்கு முட்டைகள், பழவகைகள், காய்கறிகள் போன்றவற்றின் விற்பனை மிகுதி.

இராயல் ஆன்டேரியோ அருங்காட்சியகம், தொரான்டோவில் உள்ளது. இவ்வருங்காட்சியகத்திலுள்ள சீன நாட்டு அரும்பொருள்கள் உலகப்புகழ் பெற்றவை. தொரான்டோப் பல்கலைக் கழகம் இங்குக் கி.பி. 1827-இல் நிறுவப்பட்டது. மேலும் 14 பல்கலைக் கழகங்கள் இம்மாநிலத்தில் உள்ளன. மக்கள் தொகை 86,25,107 (1981).

**ஆன்பொருநை** தமிழகத்தில் ஓடும் ஆறுகளுள் ஒன்று. பொருநை எனவும் இந்த ஆறு குறிக்கப்பட்டுள்ளது. ஆன்பொருநை, பொருநை என வந்துள்ள இடங்களில் புறநானூற்று உரையாசிரியர் ஆன்பொருந்தம் என்று பொருள் கூறியுள்ளமை கொண்டு ஆன்பொருந்தம், பொருந்தம், என்னும் பெயர்களும் இந்த ஆற்றினுக்கு வழங்கியமையினை உணர்தல் கூடும். சங்க இலக்கியங்களில் இந்த ஆறு சேரர்க்குரியதாகவும், அவர்கட்குரிய கருவூர் என்னும் வஞ்சிமாநகர் இதன் கரையில் விளங்கியதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. 'தண்பொருநைப் புனல் பாயும் விண்பொரு புகழ் விறல்வஞ்சி' (புறம்.11), 'புல்லிலை வஞ்சிப் புறமதில் அலைக்கும் கல்லென்

பொருநை (புறம். 387), 'நெடுந்தேர்க் கோதை, திருமா வியனகர்க் கருவூர் முன்றுறைத், தெண்ணீர் உயர்கரைக் குவைஇய தண்ணான் பொருநை' (அகம் 93) என்று இவ்வாற்றினையும், இதன் கரையி லமைந்த சேரர் தலைநகரினையும் சங்க இலக்கியங் கள் சுட்டுகின்றன. சிலப்பதிகாரத்திலும் இவ்வாறே கூறப்பட்டுள்ளது. 'பூந்தண் பொருநைப் பொறை யன்' (சிலம்பு.23) 'வாழியரோ வாழி வருபுனல் நீர் ஆன்பொருநை சூழ்தரும் வஞ்சியார் கோமான்' (சிலம்பு.29) என்னும் இளங்கோ வாக்குகள் இதனை உணர்த்துகின்றன.

பின்னர், பொருநை ஆன்பொருநை என்னும் பெயர்கள், திருநெல்வேலி மாவட்டத்தில் ஓடும் தாமிரபருணி ஆற்றினைக் குறிக்கவும் இலக்கியங் களில் பயன்படுத்தப்பட்டுள்ளன. பொருநை என்னும் பெயரால் இரண்டு ஆறுகள் குறிப்பிடப்பட்டு வழங்கியபோது, அந்த ஆறுகளை வேறுபடுத்திக் காட்டத் 'தண்பொருநை', 'ஆன் பொருநை' என் னும் பெயர்கள் வழங்கப்பெற்றன. இதனைக் காவிரியும் தண்பொருநையும் ஆன்பொருநையும் வையையும் போலும் யாற்றிலும்' என்னும் நச்சி னார்க்கினியரின் தொல்காப்பிய உரைத்தொடரால் உணரமுடிகிறது. பிற்காலத்தில் பொருநை என்னும் பெயர் தாமிரபருணிக்குரிய பெயராகவே வழங்கப் பட்டதனைக் "காவிரி தென்பெண்ணை பாலாறு' தமிழ், கண்டதோர் வையை பொருநை நதி" என் னும் பாரதியார் பாடற்பகுதி உணர்த்துகிறது. காண்க: தாமிரபருணி.

**ஆன்மா** உயிர்ப்பது என்னும் பொருளுடைய 'அன்' என்னும் வேர்ச் சொல்லிலிருந்து பிறந்ததாகும். இதுஉயிர் என்னும் பொருளுடைய பிராணன் என்னும் சொல்லுடனும் தொடர்புடையது. ஆன்மாவை வட மொழியில் ஆத்மா என்பர். இந்தச் சொல் இருக்கு வேதத்தில் ஏறக்குறைய முப்பது முறை பல பொரு ளில் வந்துள்ளது. பொதுவாக ஆன்மா என்பது, உடலி னின்று வேறுபட்டதும், உடல் இறந்த பிறகும் உள்ளதும், உடல் போனபின் பூமியில் செய்த செயல்களின் பலன்களைத் துய்ப்பதுமான மனித ஆவியையே குறிக்கிறது. உபநிடதங்களிலும் ஆன்மா, இந்தப் பொருளிலேயே ஆளப்பட்டிருக்கிறது. சில வேளைகளில் இது உபநிடதச் சொல்லான பிரமம் என்பதற்கு மாற்றுச் சொல்லாக வந்துள்ளது. அப் பொழுது இதன் பொருள் உலகத்தின் மூலதத்துவம் என்பதாகும்.

சாருவாகர்கள் உடலினின்றும் வேறான ஆன்மா ஒன்றை ஒப்புக்கொள்ளவில்லை. மதப் பிரிவினர் சிலர் இந்திரியங்களையோ பிராணனையோ மனத்தையோ ஆன்மா என்று கூறுகின்றனர். புத்தர், ஆன்மா ஆற்றொழுக்குப் போன்று நிலையில்லாமல் செயற் பட்டுக் கொண்டிருப்பதொன்று என்று கூறுகிறார். புத்தருக்குப் பின் பௌத்த மதத்தினர் நான்கு பிரிவினராகப் பிரிந்தனர். அவர்களுள் மாத்திமிகள் என்போர், ஆன்மா என்பது தனிப்பட்ட வெறுமை தான் என்று கூறுகிறார்கள். ஆன்மா வேறு, உடம்பு வேறு என்றும், அவை இரண்டும் ஒரே அளவை உடையன என்றும், ஆன்மா விரியவும் சுருங்கவும் கூடிய ஆற்றல் வாய்ந்தது என்றும் சமணர்கள் கூறு கிறார்கள்.

வைதிக தரிசனங்கள் என்னும் இந்து தத்துவ சாத்திரங்கள் ஆறும் அழிவில்லாத ஆன்மா வேறு, அழியும் உடல்வேறு என்பதை ஏற்றுக் கொள்கின்றன. இந்தத் தரிசனங்களிடையே சில சிறுசிறு வேறுபாடு கள் காணப்படினும், புறத்தேயிருந்து வந்து உடலில் புகுந்துவிட்ட குற்றங்களை எல்லாம் நீக்கிவிட்டால் எஞ்சி நிற்பது ஆன்மா என்பதே, அவை அனைத்தும் கூறும் முடிவாகும்.

ஆன்மா என்பது சடப் பொருள்களாகிய பருவுடல், ஐம்பொறிகள், நுண்ணுடம்பு, பிராண வாயு முதலியவற்றுள் ஒன்று அன்று; வெறுமையும் அன்று; அறிவே வடிவாகிய பரம்பொருளும் அன்று; அது ஒரு தனி முதல் என்று சைவ சித்தாந்தம் கூறும்.

இயற்கையில் ஆணவத்தால் கட்டுண்டு கிடக்கும் ஆன்மா, அக்காரணம் பற்றிப் 'பசு' என்று குறிக்கப் படுகிறது. பசு என்பதற்குப் பாசத்தால் கட்டப் பட்டது என்பது பொருள்.

உயிர்கள் எண்ணில்லாதவை. ஓர் உயிர் ஓர் உடம்பில் நின்று அனுபவிக்கும் இன்ப துன்பங்கள் மற்றோர் உயிருக்கு இல்லாமையால், ஒவ்வோர் உடம்பில் உள்ளதும் வேறு வேறு உயிரே என்பது விளங்கும். ஆதலால் உயிர் ஒன்றன்று; பல என்பது தெளிவாகும்.

பதியாகிய கடவுட் பொருளும் அறிவுடையது. பசுவாகிய உயிரும் அறிவுடையது. ஆயினும், பதி எல்லாவற்றையும் ஒருங்கே இடைவிடாது அறிந்து நிற்பதாகிய முற்றறிவு உடையதாகும். பசுவினது அறிவு அவ்வாறன்றி ஒவ்வொன்றாகவே அறியும்; அதனையும் விட்டு விட்டு அறியும்; அதனால் அவ் வறிவு சிற்றறிவு ஆகும். பதியின் அறிவு, தானே அறிவது; மேலும், உயிரின் அறிவுக்கும் அறிவாய் நின்று அதனையும் அறியச் செய்வது; அதனால் அது சூக்கும சித்து எனப்படும். பசுவின் அறிவு அவ் வாறன்றி அறிவித்தால் அறியும் தன்மை மட்டுமே உடையது. அதனால் அது தூல சித்து எனப்படும்.

பதியின் அறிவு ஒன்றை அறியுங்கால் அதில் அழுந்தி அதன் தன்மையைப் பெறாது, தன்னியல் பினின்றே அறியும். பசுவின் அறிவு அறியப்படும் பொருளில் அழுந்தி அதன் தன்மையைப் பெறுவது. இவ்வியல்பு 'சார்ந்ததன் வண்ணமாதல்' எனப்படும். இவ்வியல்பை விளக்குவதற்குப் படிகத்தையும் கண்ணையும் உவமைகளாக எடுத்துக்காட்டுவர் சைவ சித்தாந்திகள். பளிங்கு நீலமணியைச் சார்ந்தால் நீலமாயும் செம்மணியைச் சார்ந்தால் செம்மையா யும் மாறுகிறது. ஆயினும் கண்ணிற்கென்று ஓர் ஒளி உண்டு. அவ்வாறே பசுவாகிய உயிருக்கும் ஓர் அறிவு உண்டு. அவ்வறிவு அறியப்படும் பொருளின் தன்மையாய் மாறும் இயல்புடையது.

இவ்வாறு பதியாகிய இறைவனுக்கும் பசுவாகிய உயிருக்கும் இடையே இத்துணை வேற்றுமை இருத் தலால் 'பதி அறியுடையதாகலின், வேறோர் அறிவு உண்டு என்றல் மிகை என்னும் குற்றமாம்' என்னும் கருத்துப் பொருந்தாது என்று சைவ சித்தாந்தம் கூறுகிறது.

சைவ சித்தாந்தத்தில், 'அசத்து' என்பதற்குத் தோன்றியும் அழிந்தும் வருதலாகிய மாற்றத்தை உடையது என்பதே பொருள். 'சத்து' என்பதற்கு அத்தகைய மாற்றம் இல்லாமல் என்றும் ஒரு பெற்றி யாய் உள்ளது என்பதே பொருளாகும். பாசம் நிலை மாற்றத்தை உடையதாகலின் அசத்து எனப்படும். பதி என்றும் மாறாத செம்பொருளாதலின் அது சத்து எனப்படும். உயிருக்குத் தோற்றமும் அழிவும் இல்லை யாயினும் அது பாசத்தோடு கூடி அறிவு கெட்டும் தோன்றியும் வருதலால் சத்து எனப்படாது அசத்து எனத்தக்கதாயும், பதியைச் சார்ந்தபின் அத்தகைய மாற்றம் அடையாமல் ஒரு நிலையாய் இருத்தலால் சத்து எனத்தக்கதாயும் உள்ளது. சார்ந்ததன் வண்ண மாம் தன்மை உடைமையினால் ஆன்மா சத்தைச் சார்ந்தபோது சத்தாயும் அசத்தைச் சார்ந்த போது அசத்தாயும் நிற்கும். அதுபற்றி ஆன்மா சதசத்து எனப்படும்.

ஆன்மா கருவிகளோடு கூடியும் பிரிந்தும் ஐந்து அவத்தைகளை அடையும். 'அவத்தை' என்பதற்கு 'நிலை' என்பது பொருள். அவ்வைந்தவத்தைகள் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியா தீதம் என்பன. அவை முறையே நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிரிப்படக்கம் எனத் தமிழில் வழங்கப்படும்.

ஆன்மாவின் இயல்பு பற்றிப் பல்வேறு சமயத் தார் பலபடக் கூறுவர். 'ஆன்மா இயற்கையில் சடமே; அது மனத்தோடு கூடியபொழுது அறிவுடைய தாய் நிற்கும்' என்பர் தருக்க நூலார். 'ஆன்மா அறிவேயாகிய குணமாவதன்றி அறிவினை உடைய குணி அன்று' என்பர் சாங்கியர். 'ஆன்மா எடுத்த உடம்பின் அளவினதாய் நிற்கும்' என்பர் சமணர். 'ஆன்மா அணுவளவிதாய் நிற்கும்' என்பர் பாஞ்ச ராத்திரிகள். இக்கொள்கைகள் எல்லாம் சைவ, சித்தாந்த நூல்களில் மறுக்கப்படுகின்றன.

ஆன்மா இறைவனைப் போல எங்கும் நிறைந்த பொருளே; ஆயினும் இறைவனது எங்கும் நிறைந்த தன்மையில் அடங்கியுள்ளதாகும். ஆணவமலம் உயிரின் எங்கும் நிறைந்த தன்மையை மறைத்த லினால், ஆன்மா முதலில் தோன்றாமலே இருந்து பின் மாயையாகிய உடல் சேர்ந்தபோது, அறிவு விருப்பம் செயல்கள் ஆகியவை சிறிது விளங்கப் பெற்று, அணுப் போலத் தோன்றுகிறது. எங்கும் நிறை பொருளாகிய ஆன்மா, இங்ஙனம் அணுத் தன்மைப்பட்டு நிற்பது, ஆணவ மலத்தால் ஆகிய செயற்கையேயன்றி அதற்குள்ள இயற்கையன்று.

பிறப்பிற்கு வாராத கேவல நிலையில் ஆணவ மலத்தால் முற்றிலும் மறைக்கப்பட்டு அறிவின்றிக் கிடந்த ஆன்மா, இறைவனது மறைப்புச் சத்தியால் பிறப்பு நிலையாகிய சகலத்தில் வந்து சிறிது அறிவு விளங்கப்பெற்றுப் பிறப்பு இறப்புகளை மாறி மாறி எய்திப் பக்குவம் வந்தபின், இறைவனது அருட்சத்தி யால் ஞானம் பெற்றுத் தனது இயற்கையான எங்கும் நிறைந்த நிலையைத் தலைப்பட்டுச் சிவத் தோடு இரண்டறக் கலந்து நின்று பேரின்பத்தை நுகரும். அ. ச.

**ஆன்மிக உளவியல்:** மனிதர்கள் தம் புலன்களின் உதவிகள் இன்றியே சூழ்நிலையுடன் தொடர்பு கொள்ளுதல் சில சூழ்நிலைகளில் இயலும். இத்தகைய தொடர்பு பற்றி ஆராயும் உளவியல் துறை 'ஆன்மிக உளவியல்' எனப்படும். ஐம்புலன் களின் உதவியில்லாமலே மற்றோரிடத்தில் நடக்கும் நிகழ்ச்சிகளை ஒருவர் தெளிவாகக் கூற முடியுமா னால் அது, 'புலன் சார்பற்ற உணர்வு' (Extra Sensory Perception (ESP) எனப்படும். எடுத்துக் காட்டாகக் கண்ணால் பார்க்காமலே அடுத்த அறை யில் அல்லது மிகத் தொலைவில் ஒருவரின் நட வடிக்கைகளைச் சரியாகச் சொல்வது, புலன் சார்பற்ற அறிவின்பாற்படும். இதைத் தவிர, தனிப் பட்ட எவரையேனும் தொடாமலோ மற்றப் புலன் களின் வழி அவருடன் எவ்விதத் தொடர்பும் கொள்ளாமலோ, அவருடைய நடத்தைகளை ஒரு வரால் கட்டுப்படுத்திச் செயற்படுத்த முடியுமா னால், அதனைப் புலனில் இயங்குதிறன் (Psycho kinesis) என்று கூறலாம். இத்தகைய புலனில் திறனை ஆன்மிக உளவியல் ஆய்ந்தறிகிறது. ஆன்

மிக உளவியலில், ஒருவர் மனத்தில் தோன்றும் எண்ணங்களை மற்றவர்கள் அனுமான முறையில் ஊகித்தறிவது 'மன ஆய்வுத் திறன்' (Telepathy) என்றும், மற்றவர் உடலில் ஏற்படும் மாற்றங்களை அறிவது 'இயக்க ஆய்வுத் திறன்' (Clairvoyance) என்றும் கூறப்படும். இவ்விரு திறன்களும் ஒருங்கிணைந்து இயங்குவதே 'புலன் சார்பற்ற உணர்வு (ESP) ஆகும். இவ்வுணர்வின்றி எதிர்காலத்தை எடுத்துரைப்பது 'முன்னறிவு' (Precognition) எனப் படும். இக்கூற்றுகள் அறிவியல் முறைப்படி கூறப் படுவனவா, அவை தற்செயலாக நிகழ்பவையா என்பதைக் கண்டறிய அறிஞர்கள் பல ஆய்வுகளை நடத்தியுள்ளனர். இவற்றுள் ஒன்று, பல உருவச் சீட்டுகளை ஒருவர் எந்த முறையில் எடுக்கிறார் அல்லது அடுக்குகிறார் என்பதை அவரைக் காணாமலேயே அறையின் மறுபுறம் அல்லது வேறு அறையில் உள்ள ஒருவரால் கூறச்செய்வது. இச்சோதனைகளிலும் இத்தகைய புலன்சார்பற்ற திறன்களில் முழு நம்பிக்கை கொண்டவர்களின் அனுமானங்களே, மற்றவர்களின் அனுமானங்களைக் காட்டிலும் பொருத்தமானவைகளாகக் காணப்பட்டன. நம் முன்னோர்களிலும் தவ வலிமை பொருந்திய பல ஆன்றோர்கள், மனத்தை ஒருநிலைப்படுத்துவதால் தம் எதிரில் நிகழாத பல நிகழ்ச்சிகளையும் எதிர்காலத்தில் நிகழக்கூடியவைகளையும் தவறாமல் கணக்கிட்டுக் கூறி வந்தனர். இவற்றையெல்லாம் கொண்டு மனக்கட்டுப்பாடு, உளத்திறனைப் பாழ்படுத்தாமல், நற்பயன்படுத்தும் திறமை ஆகியவற்றின் உறுதுணையோடு இதுபோன்ற ஆன்மிகப் பயிற்சியில் ஒருவர் பண்பட முடியும் என்பது ஆன்மிக உளவியலின் வாதம் ஆகும். உளக்கோளாறுகளால் (Neurosis) அவதியுறுபவரைக் குணப்படுத்த உளவழி மருத்துவர்களுக்கு இம்முறை பயன்படலாம். பிணியாளரின் மனத்தில் உளவழி மருத்துவர் பற்றிய மதிப்பீடு ஏற்படுவதும் உண்டு. சிலர் தமக்கு ஏற்படும் கனவு வாயிலாகவும் அறிய வாய்ப்புண்டு. எதையும் ஆராயாமல் ஏற்றுக்கொள்ள மறுப்பவர், உண்மையிலேயே சிலருக்கு இந்த உளத்திறன் ஏற்படுவதைத் தவறான மூட நம்பிக்கைகள் என ஒதுக்க நேரிடலாம். உண்மையில் கனவு மூலம் வருவதுரைக்கும் திறன் இல்லாதிருந்தும் அத்திறன் இருப்பதாகத் தவறாக நினைத்து, அதனால் குழப்பமடைந்து, மனநோயினால் பீடிக்கப்பட்டவர்களும் உள்ளனர். அத்தகையோர் உளநோய் மருத்துவ இல்லங்களுக்கு வருவதும் உண்டு. மனம் என்னும் ஆழ்கடலில் புலப்படாத பல புதிர்கள் இருப்பது உண்மை. ஆன்மிக உளவியல் பற்றிய ஆய்வும் அப்படிப்பட்டதொன்றே. அதனால் முறையான ஆன்மிக உளவியல் ஆய்வு, எல்லிருப் புதிரையும் பகுத்தறிவுக்கு ஒப்பவிடுக்கும் என்ற நம்பிக்கையோடு செயற்படுகிறது. என்.மா.

**ஆன்மிகக் கல்வி**: ஆன்மிகம், ஆன்மத் தொடர்புடையது. ஆன்மா உடம்பை இடமாகக் கொண்டு விளங்கும். ஆன்மிகக் கல்வி (Spiritual Education) ஆன்மாவை உணரவும், பண்படுத்தவும் துணை செய்யும் கல்வி. உடம்பையும் உலகையும், உணர்ந்தன்றி இவற்றை இடமாகக் கொண்டு விளங்கும் ஆன்மா, இறை என்பவற்றை உணர்தல் அரிது. ஆதலின் உலகம், ஆன்மா, இறை என்னும் மெய்ப் பொருள்களைப் பற்றிய அனுபவ வழிப்பட்ட அறிவு விளக்கத்தைத் தரும் கல்வியே ஆன்மிகக் கல்வி. சமயங்கள் உணர்த்துவது இதனையே. ஆன்மிக வளர்ச்சிக்கு அடித்தளமாக அமைவது நல்லொழுக்கப் பண்புகளின் வளர்ச்சியாகும்.

கல்வியின் நோக்கம், மக்கட் பண்பினை வளர்த்து முழுமையுறச் செய்தலாம். இங்ஙனம் முழுமை பெற்றவரே, உலகியல் துறையிலும் ஆன்ம இயல் துறையிலும் பிறரின் மேம்பட்டு விளங்கும் ஆளுமைத் திறம் நிறைந்தவர். தொல்காப்பியர், திருவள்ளுவர், சங்கச் சான்றோர், சமயச் சான்றோர் ஆகிய அனைவரும் கல்வியின் நோக்கமும் பயனும் பண்பாட்டு வளர்ச்சி என்றே உணர்த்தியுள்ளனர்.

இக்காலச் சூழ்நிலைக்குப் பழங்காலத்திற் போலக் குருகுலவாசம் பொருந்தி வாராது. ஆதலின் ஆன்மிகக் கல்வியைப் பள்ளிக்கூடத்தில்தான் கற்பித்தல் வேண்டும். இந்திய நாட்டில் ஊர்தோறும் கோயில் உண்டு. இக்கோயில்களை அவ்வூர் மக்களுக்கு ஆன்மிகப் பயிற்சியளிக்கும் நிலையங்களாகத் திட்டமிட்டு மாற்றியமைத்தால் மக்களுக்குப் பெரும் பயன் விளையும். கோயில்களும் விளக்க முற்றுத் திகழும்.

தொடக்கத்தில் குழந்தைகளுக்கு இசையுடன் கூடிய பக்திப் பாடல்களைக் கற்பிக்கலாம். இசையில் குழந்தை மகிழும். இசையின் வழியே பாடல் மனப்பாடமாகும். பின்னர் உரிய காலத்தில் விளக்கம் தானாகப் புலனாகும். பக்தி நெறிச் சான்றோர்களின் வாழ்க்கையை எளிய கதை வடிவங்களாக உணர்த்தலாம். தத்துவக் கருத்துகளையும் உருவகக் கதைகளாகக் கற்பிக்கலாம்.

எந்தப் பண்புகள் பிறருடன் முறையாக நடந்து கொள்ள உதவுகிறதோ, அப்பண்புகளின் தொகுப்பே நல்லொழுக்கம் எனப்படும். தன்னலத்திலிருந்து விடுபட்டு, பிறருக்காகத் தியாகம் அல்லது ஆன்மிகக் காரியங்களில் ஈடுபடுவதும் நல்லொழுக்கத்தின் கூறுகளாகும்.

நல்லொழுக்கக் கல்வியைச் சிறுவயது முதல் குழந்தைகளுக்குப் பயிற்றல் இன்றியமையாதது. இணக்கமான நடத்தையையும், பழக்க வழக்கங் களையும் நல்லொழுக்கக் கல்வி வாயிலாக மாணவர் பெறுதல் வேண்டும்.

ஒழுக்கம், ஆன்மிகப் பண்புகளை வளர்ப்பதில் தொடக்கப்பள்ளிகள் அடித்தளம் இடுகின்றன. காலையில் தினந்தோறும் இறைவழிபாட்டுக்காகச் சில மணித்துளிகள் மாணவர்களைக் கூட்டுவதும், மதத் தலைவர்கள், சமயப் பெரியோர்கள், சான்றோர்கள் ஆகியோரின் அறிவுரைகளையும் வாழ்க்கை வரலாற்றையும் மொழி நூல்களில் சேர்ப்பதும், ஆன்மிகப் பண்புகளைக் குழந்தைகளிடம் வளர்க்க எண்ணியே ஆகும். பெருந்தலைவர்கள், சான்றோர்கள் முதலியோர்களின் புகைப்படங்களையும், திரைப் படங்களையும் ஒவ்வொரு பள்ளியிலும் குழந்தைகளுக்குக் காட்டுதல், பள்ளிப் பாட வேளைகளில், சில வேளைகளை நீதி நெறிக் கதைகளுக்காக ஒதுக்குதல், அந்தப் பாட வேளைகளில் ஆசிரியர்கள் மதங்கள் காட்டும் சிறந்த கதைகளை விவரித்தல் ஆகியவை மூலம் சிறு குழந்தைகளின் ஒழுக்க நெறிப் பண்புகளை வளர்க்கப் பள்ளிகள் முயற்சி செய்கின்றன. 'செய்யும் தொழிலேதெய்வம்' என்ற எண்ணம் இளம் உள்ளங்களில் பதியுமாறு, பள்ளிச் செயல்கள் அமைதல் சிறப்பு. பள்ளிகளில் சிறு குழந்தைகள் கூடியும் ஓடியும் விளையாடும் விளையாட்டுகளால் ஒற்றுமை, உறுதி போன்ற நல்ல பண்புகளைக் குழந்தைகள் பெறுகின்றன என்பதும் தெளிவு.

உயர்நிலை, மேல்நிலைப் பள்ளிகளில் ஒழுக்க நெறிப் பண்புகளை மாணவர்களிடம் வளரச் செய்வது ஆசிரியர்களின் கடமைகளுள் ஒன்று. குமரப் பருவம் அடைந்த மாணவ மாணவியர்கள் மேல் நிலைப் பள்ளி வகுப்புகளில் பயிலுவதால், ஒழுக்கப் பண்புகளை அவர்களிடம் போற்றி வளர்த்தல் ஆசிரியரின் பெரும் பொறுப்பாகும். ஒவ்வொரு நாள் காலையிலும் பள்ளி மாணவர்கள் ஒன்று கூடி, இரண்டு மணித்துளிகள் அமைதி காத்து, பின் சிறிய அளவில் ஆன்மிகச் சொற்பொழிவு நிகழ்த்துதலும் மறைநூல்களின் நீதிக் கதைகளைச் சொல்லுதலும் மாணவர்களின் நற்பண்புகளை வளர்க்க உதவும். உலக மதங்கள் காட்டும் சிறந்த நெறிமுறைகள் பள்ளிப் புத்தகங்களில் இடம் பெறலாம். நீதி நெறி கற்பித்தலுக்காக, மேல் நிலைப்பள்ளி வாரம் ஒரு மணி நேரம் பாட வேளை ஒதுக்குதலும், அந்தப் பாட வேளையில் மாணவர்களுக்கிடையே அறநெறி உரையாடலை ஊக்குவித்தலும், ஆன்மிகப் பேச்சாளர்களை அழைத்துச் சொற்பொழிவு ஆற்றச் செய்தலும் மாணவர்களின் நற்பண்புகளை வளர்க்கப் பயன்படும். ஒவ்வொரு மதத்தினரின் திருவிழாக் களையும் அனைத்து மத மாணவர்களும் இணைந்து கொண்டாடுதல் சிறப்பு. வகுப்புத் தேர்ச்சியில் ஒழுக்கப் பண்புகளுக்கென்று மதிப்பெண்கள் ஒதுக்கலாம்.

பல்கலைக்கழக மாணவர்கள் வளர்ச்சியும் முதிர்ச்சியும் அடைந்தவர்கள். ஆகையால், அவர்களை ஒருசில மணி நேரம் சாலை வேளைகளில், மனத்தை ஒருமுகப்படுத்தும் ஆழ்நிலை எண்ணங்களில் (Meditation) ஈடுபடச் செய்யலாம். இராதா கிருட்டிணன் தலைமையில் அமைந்த பல்கலைக்கழகக் குழு (1948-1949), அறநெறிப் பண்புகளை வளர்த்தல் குறித்துச் சில பரிந்துரைகள் செய்தது. அவையாவன: முதலாண்டுப் பட்டப் படிப்பில், புத்தர், சாக்ரட்டீசு, ஏசு கிறித்து, சங்கரர், இராமானுசர், முகமது நபி, கபீர், நானக்கு, காந்தி போன்ற சான்றோர்களின் வாழ்க்கை வரலாற்றைப் பாடப் பகுதியாக்கல், இரண்டாம் ஆண்டில், அனைத்து மதங்களின் பொதுத் தன்மைகளை ஆய்தல்; மூன்றாம் ஆண்டில் மதக் கொள்கைகளின் சிக்கல்களை ஆராய்தல்; அனைத்து மதங்களையும் ஒப்புநோக்கித் தெளிய, ஒரு பட்ட மேற்படிப்புத் தொடங்குதல் ஆகியனவாகும். தொடக்கப் பள்ளி, மேல்நிலைப் பள்ளி, பல்கலைக் கழகம் ஆகியவற்றில் ஆன்மிகக் கல்வி முன் விவரித்த அடிப்படைகளில், படிப்படியாக இடம் பெறுதல் வேண்டும்.

துணை நூல்:

Aggarwal, J. C., Development and Planning of Modern Education, Vikas, New Delhi, 1982.

**ஆன்மிகக் கொள்கை:** ஆன்மிகம் என்பது மனிதனது உலக வாழ்க்கையினின்றும் வேறுபட்டதோ முரண்பாடு கொண்டதோ அன்று. இவ்வாழ்க்கை மனிதனோடு பின்னிப் பிணைந்துள்ளது. மனித உயிர் கண்ணுக்குப் புலப்படாவிடினும், அது உண்மையான உணரக் கூடிய பொருளன்று என்று கூறமுடியாது. உடல் இயக்கமற்றது; அது கீழே விழும்போது, அவ்வுடலின் இயக்கத்திற்குக் காரணமான உயிரின் தன்மையை உணர முடிகிறது. எனவே உடலோடு ஒன்றி அதற்கு உயிர்ப்பை அளிக்கும் உயிருக்கு, அது இருப்பதைப் பிறர் உணர்வதற்குக் காரணமாக இருக்கும் உடலின் உதவி தேவையாகிறது. ஒரு நாணயத்தின் இருபக்கம் போல மனித வாழ்வின் இரு கண்களாக விளங்கும் அன்றாட நடைமுறை வாழ்வு, ஆன்மிக வாழ்வு ஆகிய இரண்டையும் மனிதன் உணரவேண்டும். சாதாரண நடைமுறை வாழ்வின் பயன், ஆன்மிக வாழ்வின் அடிப்படையில் கட்டப்பட்ட கொள்கைகளின் விளைவாக இருத்தல் வேண்டும். ஆன்மிகர்

என்பது, ஆன்மாவை அறியும் வழியின் சிறப்பினைக் குறிக்கிறது.

இளமையிலேயே திருடர்களால் கவர்ந்து கொண்டு செல்லப்பட்டு, வளர்க்கப்பட்ட இளவரசன் ஒருவன், வளர்ந்து பெரியவனான பின்பும் தன்னை ஒரு திருடனாகவே எண்ணுகிறான். ஆனால், இடையில் ஒருவர் வாயிலாகத் தன் பிறப்பின் இரகசியத்தை அறியும்போது, தான் இளவரசன் என்பதை உணர்கிறான். ஆன்மிகம் என்பதும் தாம் இதுநாள் வரை அறியாது மறந்திருந்த ஆன்மாவை அறிவதாகும். 'எவன் பிரமத்தை அறிகிறானோ, அவன் பிரமமாகவே ஆகிறான்' என்கிறது உபநிடதம். ஆன்மாவை அறிவதே மக்கள் துன்பத்தினின்றும் உய்வதற்கான வழி.

உலக வாழ்க்கை துன்பமயமானது. ஆனால் எளிதில் மனிதன் இதை உணருவதில்லை. **'தலைவலியும் துன்பமும் தனக்கு வந்தால் தான் தெரியும்' என்பது** பழமொழி. மனிதன் தன் **பட்டறிவால் பெறும்** அறிவே அறிவாகும். உலக **வாழ்க்கையில் நன்கு அடி** பட்டுத் துன்பத்தில் உழன்று தவிக்கிற மனமே, அதிலிருந்து விடுபட விழைகிறது. உலகம் துன்பமயமானது என்பது எல்லா மெய்யுணர்வாளர்களின் ஒன்றுபட்ட கருத்தாகும். இத்துன்பச் சூழலில் தவித்த மனம், எல்லையற்ற பேரின்பத்தில் ஆழ்த்தவல்ல ஆன்மிக வாழ்வில் திளைக்க முயற்சி செய்கிறது.

வேதங்களின் முடிவாகக் கூறப்படும் வேதாந்தம் ஆன்மாவை அறிவதே முத்தி என்கிறது. வேதாந்தம் ஆன்மா அழிவற்றது என்று கூறுகிறது. எந்த ஒரு கொள்கையும் வெறும் ஏட்டளவுக் கொள்கையாக இருக்குமாயின், அது 'வறட்டு வேதாந்தம்' எனப்படும். கொள்கைகள் செயலாக மாறும்பொழுது அவற்றின் பெருமை கூடுகிறது. மேலும் பல மக்களும் உய்வடையும் பாதையில் செல்லவும் அவை ஊக்கமளிக்கின்றன.

எனவேதான் அத்துவிதம், விசிட்டாத்துவிதம், துவிதம் போன்றவை மனிதன் துன்பத்தினின்றும் உய்வடையும் வழிகளைக் கூறுகின்றன. இவ்வாறு நடைமுறை வாழ்விற்கும் ஆன்மிக வாழ்விற்கும் பாலம் இடும் இவ்வழி முறைகளை வேதாந்தம் விளக்குவதால், சுவாமி விவேகானந்தர் வேதாந்தத்தை 'நடைமுறை வேதாந்தம்' (Practical Vedanta) என்று கூறினார்.

துன்பம் அறியாமையின் விளைவாதலால், அதை நீக்க ஆன்மிக வழிகளைப் பின்பற்ற வேண்டும். ஆன்மிக வழிகளைப் பின்பற்றும் மனத்தில் அறியாமையின் தீச்செயல்கள் சிறிது சிறிதாகக் குன்றந்து நாளடைவில் அறியாமை இருந்த இடம் தெரியாமல் நீங்கிவிடுகிறது. மனம், நன்கு தூசு நீங்கத் துடைக்கப்பட்ட கண்ணாடிபோல் தூய்மையடைகிறது. இத்தகைய கண்ணாடிமுன் வைக்கப்படும் பொருளின் உருவம் கண்ணுக்கு நன்றாகப் புலனாகும். இது போன்றேஅறியாமை நீங்கிய மனம், கடவுளைத் தன் மனக்கண்ணாடியிலேயே கண்டு களிப்புறுகிறது. இந்நிலையே ஆன்ம அறிவு பெற்றவனின் நிலையாகும். ஆன்மாவை அறிவதே அறியாமை நீங்கும் வழியாகும். இதுவே முத்தியாகும்.

முத்தி (மோட்சம்) என்பது மீண்டும் மீண்டும் பிறந்து இறக்கும் துன்பத்திலிருந்து விடுபடும் நிலையாகும். முத்தி மனித வாழ்வின் பயன்களாகச் சொல்லப்பட்ட நான்கினுள் முதன்மையானதாகும். முத்தி என்பது ஞானிகளின் கற்பனையில் விளைந்த ஒரு கருத்தன்று. அதை இங்கேயே இப்பொழுதே அடையலாம் என்று அத்துவித வேதாந்திகள் கூறுகின்றனர். மனிதன் தன் வாழ்நாளிலேயே அடையக் கூடிய முத்தி சீவன் முத்தி என்று கூறப்படுகிறது. தேர்வில் வெற்றி அடைய விரும்புபவன் நன்கு பாடு பட்டுப் படிக்க வேண்டும். வெற்றிக்கு உழைப்பு இன்றியமையாதது. இதுபோன்ற ஆன்மிக வாழ்வின் வெற்றியாகிய முக்தியை அடைய விரும்புபவன் நல் வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும்.

நல்வாழ்வு என்பது ஒழுக்க வாழ்வாகும். ஒருவன் பொருள்(அர்த்தம்) இன்பம் (காமம்) போன்றவற்றை அடைய விரும்புவது தவறாகாது. ஆனால், அவற்றை அடையும் வழிமுறை அறத்தில் மாறாததாக இருக்க வேண்டும். இதுவே முத்திக்கு வித்திடும் வழியாகும். இராமகிருட்டிண பரமகம்சர், மனிதன், பெண், பொன் (காமினி, காஞ்சனம்) ஆகியவற்றின்மீது கொள்ளும் முறையற்ற ஆசையையே கண்டித்தார்.

பொருள், இன்பம் ஆகியவற்றையே வாழ்வில் சிறந்ததாகக் கருதி ஒருவன் விரும்புவானாயின், அவற்றால் அவன் பெறும் இன்பம் கீழ்ப்பட்ட இன்பம் என்று சொல்லப்படும். இங்ஙனமின்றி அறத்தோடு இயைந்து வாழ்ந்து, முத்தியை அடைய விரும்புபவன் பெறும் இன்பம் மேம்பட்ட இன்பம் என்று போற்றப்படும்.

மேம்பட்ட இன்பம் என்று போற்றப்படும் முத்தியைப் பெறுவதே மனித வாழ்வின் சிறப்புத் தன்மையாகும். மனிதன் ஒருவனே தான் அடைய விரும்பும் பாதையின் தன்மையை அறிந்தவன். இதை அறிந்து ஒழுகுவதே நடைமுறை வேதாந்தத்தின் கொள்கையாகும். இதுவே ஆன்மிகக் கொள்கையுமாகும். ஆன்மிகம் கூறும் கொள்கைகள் நடைமுறையில் உதவுவது ஆன்மிகச் சாதனைகளாகும். இந்த ஆன்

மிகச் சாதனைகளே அறியாமை நீக்கும் வழிகளாகும். ஆன்மிகச் சாதனையில் ஈடுபட விரும்புபவனை ஆன்மிகச் சாதகன் என்று கூறலாம். ஆன்மிகச் சாதகனுக்கு வேண்டிய குணங்கள் இருத்தலின் ஒருவனை ஆன்மிகச் சாதகன் எனலாம். ஆன்மிகச் சாதகனுக்கு வேண்டிய குணங்களாவன:

1. நோயினின்றும் குணம்பெற விரும்புபவன் மருத்துவன்மீதும் அவன் அளிக்கும் மருந்துகளின் மீதும் அவற்றால் குணம் பெறுவது உறுதி என்பதிலும் நம்பிக்கை கொண்டிருத்தல் வேண்டும். ஆன்மிகச் சாதகனுக்கு வேத சாத்திரங்களிலும் அவை கூறும் முத்தியிலும், அதை அடைய வழிசெய்யும் ஆசிரியனிடத்திலும் நம்பிக்கை வேண்டும்.

2. நம்பிக்கையின் அடிப்படையில் உலகிலுள்ள பொருள்களின் நிலையற்ற தன்மையையும், எல்லையற்ற பரம்பொருளின் அழிவற்ற தன்மையையும் அறிய வேண்டும். இவ்வாறு உண்மைப் பொருளை உண்மையற்ற பொருள்களின் தன்மையினின்றும் அறிவது அறிவு எனப்படும்.

3. உண்மையை அறிவதோடல்லாமல் அதை அடைய நல்வழிகளையும் மேற்கொள்ள வேண்டும் இதற்குத் திடமான மனம் வேண்டும். இதுவே மன உறுதி. நல்லதைச் செய்யவும் வேண்டும்; தீயவற்றை விலக்கவும் வேண்டும்.

4. நல்ல செயல்களைச் செய்வதால், அவற்றைச் செய்தவனுக்குச் செருக்கு (ஆணவம்) உண்டாகும் நிலை ஏற்படுகிறது. செருக்கு மேலோங்குமாயின், மீண்டும் மனிதன் தான் முன்பிருந்த நிலையாகிய அறியாமைக்கே அடிமையாக நேரிடும். இதிலிருந்து விடுபடும் வழி யாதெனில், நல்ல செயல்களைச் செய்வதோடு, அதன் பலன்களைத் தனக்கெனக் கொள்ளாமல், தான் நம்பிக்கை கொண்டுள்ள பரம்பொருளுக்கே உரிமையாக்கப் பழக வேண்டும். இது பரம்பொருளிடத்து அல்லது கடவுளிடத்து எல்லையற்ற அன்பு (பக்தி) கொண்டவர்க்கே கைகூடும். நம்பிக்கையின் முதிர்ந்த நிலையே பக்தியாகும். இவ்வாறு பலன் கருதாது செய்யும் செயலையே பகவத்கீதை 'நிட்காமிய கர்மம்' என்கிறது. நல்ல பலனை இறைவனுக்கு உரிமையாக்க உரிமையாக்க அவனது பக்தி மேலும் திடப்படுகிறது. இதன் வாயிலாகச் செயலைச் செய்பவன் மனத் தூய்மை பெறுகிறான்.

மனம் என்பது தெளிந்த நீரோடை போன்றது. சிறு காற்று அடித்தாலும் அசையுந்தன்மையுடையது. சாதனைகளில் மனம் தூய்மையடைந்தாலும் உலக வாழ்வில் சிக்கியுள்ளதால் சில வேளைகளில் அதன் மனத்தூய்மையைக் கெடுக்கும் புற இன்னல்களும் ஏற்படக்கூடும். இடைவிடாது இறைவனது பெயரை வணங்குவது, நல்ல மக்களின் கூட்டத்தில் இருப்பது, நல்ல நூல்களைப் படிப்பது போன்றவை, மனத்திற்குப் புறத்திலிருந்து ஏற்படும் இன்னல்கள், மனம் அவற்றால் ஏற்படும் மனச் சுழற்சிகள் ஆகியவை நீங்க வழி செய்யும்.

மனத்தை உள்முகமாகத் தியான நிலையில் நிறுத்தும்பொழுது அதன் தூல நிலையில் வராத பகுதியைக் கிளறி விடுகின்றனர். இவ்விதம் நுண்மையாக மறைந்திருப்பனவற்றைத் தாக்க முயல்வதை மனம் இயல்பாக விரும்புவதில்லை; எதிர்க்கிறது. இந்த உள்ளூறத் தோன்றிய எதிர்ப்பு, புற நிலையிலும் காணப்படுகிறது.

ஆன்மிகச்சாதனையின் விளைவாகச் சில ஆன்ம அனுபவங்கள், ஒளிநிலைகள் விரைவிலோ நாளடைவிலோ ஏற்படும். இதைக் கொண்டு தன் மனம் தூய நிலையைப் பெற்றுவிட்டது என்ற முடிவுக்கு ஒரு சாதகன் வரக் கூடாது. மனத்தின் மூலை முடுக்குகளில் சில குப்பைகளும் கூளங்களும் இருந்து வரும். இவற்றையும் அப்புறப் படுத்த முயல வேண்டும்.

உலகத்திலுள்ள பொருள்களுக்கெல்லாம் அடிப்படையாக ஒரே பொருள்தான் இருக்கிறது. அது தான் அத்துவிதம்; பிறப்பற்றது; அழியாதது; மாறுதலற்றது. இதே உண்மையைத்தான் உபநிடதங்களும் விளக்குகின்றன என்று கௌடபாதர் தமது காரிகையில் எடுத்துக்காட்டுகிறார்.

மெய்யுணர்வாளன், பரம்பொருளின் மெய்யுணர்வு வந்தவுடன், பரம்பொருள் ஒன்றுதான் உண்மை, மற்றவை எல்லாம் உண்மையல்ல; அவை மாயையால் தூண்டப்பட்ட தோற்றம் என்ற அறிவு கிடைக்கப் பெறுகிறான்.

கௌடபாதர் முழுமையான மெய்ப்பொருளின் தத்துவத்தைச் சொல்வதோடு விட்டுவிடாமல், ஒரு சாதகனுக்கு எந்த எந்த வகையான இடையூறுகள் நேரக் கூடும், அவற்றை எவ்வாறு கடந்து பேருறக்க நிலையை அறியக் கூடும் என்ற வழியையும் கூறியுள்ளார்.

இருவகை நோக்கு உண்டாவதற்கு மனந்தான் காரணம். கனவு நிலையில் ஒருவன் மனத்தில் உண்டாகும் கொந்தளிப்பினால் கனவு உலகத்தை உண்டாக்கி அவ்வுலகப் பொருள்களுடன் இணைந்து கொண்டு நுகர்கிறான். அதுபோலவே விழித்திருப்பவனின் மனமும் மாயையின் மயக்கத்தால் உண்டாகிய கொந்தளிப்பினால் பரம்பொருளைப் பல பொருள்களான வெளிஉலகமாகக் கண்டு, கூடி விளையாடுகிறது. மனத்தை நேரிய வழியில் செலுத்தி, அதில் உண்டா

கும் பலவிதமான எண்ணங்களையும் நினைவுகளையும் அமைதி நிலைக்குக் கொண்டு வருவதுதான் தலைசிறந்த படி என்கிறார் கௌடபாதர். உலகம் உண்மையன்று. உலகத்திலுள்ள எல்லா உயிர்களும் முதலும் முடிவும் இல்லாத பிரமமே ஆகும். ஆனால் இந்த ஒளி வெளியில் தெரியாதவாறு மறைக்கும் திரை, அறியாமை என்னும் திரையாகும். அறியாமை நீங்க உயிர் தான் நுகரும் மூன்று நிலைகளின் தன்மையை உணர வேண்டும். இதைத் தவிர மூன்றுவித உண்மைகளை அறிய வேண்டும். அவை தொடக்க நிலை உண்மை, இடை நிலை உண்மை, இறுதிநிலை உண்மை எனப்படும் தொடக்கநிலை வெளிப்படை.

இடைநிலை உண்மை (வியாவகாரிக சத்தை) என்பது முதலில் உண்மை போலத் தோன்றிப் பின்பு ஆராய்ச்சி முதிர்ச்சியில் அதாவது மெய்யுணர்வால் பொய் என்று உணர்வது. அறியாமையில் மூழ்கியிருக்கும் உயிர், அதனிடத்தில் அறியாமை இருக்கும் வரையில் உலகையும் உலகிலுள்ள பொருள்களையும் நிகழ்ச்சிகளையும் கண்டு உண்மை இதுதான் என்று மகிழ்கிறது. பின்பு சாத்திரங்களைப் படிப்பதனாலும், நல்லவர்களுடன் பழகுவதனாலும், அறிவில் முதிர்ச்சியடைந்து, பலநாள் ஆழ்ந்து சிந்தனை செய்து, முடிவில் தான், இது நாள் வரை உண்மை என்று நினைத்த உலகம் பொய்யானது என்று உணருகிறது.

இறுதிநிலை உண்மை (பாரமார்த்திக சத்தை) என்பது எவ்வித மாறுபாடுகளுக்கும் இடம் கொடுக்காதது; மூன்று காலங்களிலும் ஒரே நிலையாக நிலைத்திருப்பதாகும். இந்த உண்மையே பிரம்ம் ஆகும்.

ஒவ்வொரு செயலினால் உண்டாகும் பயனும், விருப்பு, வெறுப்பு, சினம், ஆசை முதலியவற்றால் தூண்டப்பட்டு, அனுபவமாக மாறி, மனத்தில் நினைவுகளாகப் பதிந்து விடுகிறது. இந்த நினைவுகளே எண்ணப் பதிவுகளாகின்றன. இவைதாம் 'வாசனைகள்' என்று சொல்லப்படும் தன்மைக்கும் காரணமாகின்றன. இவை வெளிப்படையாகத் தோன்றுவதற்குத் தக்க வலிமை இல்லாத போதிலும் அந்தக் காரணத்தின் உள்ளே அடங்கியிருந்து, தொழில் செய்யும் இயல்புடையன. முன்பு சேமித்து வைத்திருந்த வாசனைகள்தாம், இன்று இருக்கும் நிலைமையை உருவாக்குகின்றன.

எத்தகைய உடலில் இருந்துகொண்டு, எந்தவிதமான தொழில்களில் ஈடுபட வேண்டுமோ, எந்தவிதமான இன்ப துன்பங்களை அனுபவிக்க வேண்டுமோ — அவை எல்லாம் இந்த நினைவுகளின் பயனாக விளைந்தவையாகும்.

மனித வாழ்க்கையின் குறிக்கோளையும் உலகம் உயிர் இறைவன் ஆகிய மூன்றின் உறவையும் ஆன்ம ஞானம் அடையும் வழியையும் தீர ஆராய்ந்து, இசு-மிருதிகளில் கூறிய உண்மைகளை ஆசிரியன் வாயிலாகக் கேட்டும், தானாகவே சிந்தித்தும், தியானம் செய்தும் அறியவேண்டும். இதுதான் ஆன்ம ஆராய்ச்சி (அல்லது பிரம்மவித்தை) என்று சொல்லப்படுகிறது.

ஆன்மாவானது தத்துவக் கூட்டங்களில் கட்டுண்டு, உடம்பு, பொறிகள், கரணம் முதலியவற்றையே தான் என்று கருதி, ஐம்பொறிகளோடு கூடி மயங்கித் தன்னை அறிய முடியாத நிலையில் இருக்கிறது. காரணம், ஆன்மா மும்மலங்களால் மறைப்புண்டு கிடப்பதுதான். இவற்றை மெய்யுணர்வால் அறியவேண்டும்.

மெய்யுணர்வு என்பது அழியாப் பொருளைச் சிந்தனையால் அறியக் காரணமான அறிவு; அழியாப் பொருளான பரம பிரமம்தான் எல்லாவற்றிற்கும் அடிப்படை என்று தெளிவடைந்த பிறகும், எல்லாப் பொருள்களிடமும் தன்னையும் எல்லாப் பொருள்களையும் தன்னிடமும் பார்க்கும் சமபாவம் உண்டாகித் தன் அனுபவத்தால் அதை நேரில் உணர்வது விஞ்ஞானம் என்று சொல்லப்படும்.

அதுபோல இராமகிருட்டிணர் கூறியதை நினைவு படுத்திக் கொள்ளலாம். பெயர் உருவங்கொண்டு வேறுபாடு கொள்வது அஞ்ஞானம். பரமபிரமமும் ஆன்மாவும் ஒன்றே என்று அறிவது ஞானம். ஆனால், எதிலும் ஊடுருவி நிலைத்திருக்கும் பரம் பொருளை இயங்குதிணை, நிலைத்திணை என்று சொல்லப்படும் எல்லாப் பொருள்களிலும் கண்டு உணர்ந்து, மேன்மக்கள் – கீழ்மக்கள், நல்லது – கெட்டது, இன்பம் – துன்பம் ஆகியவற்றிலும் அன்றாட வாழ்க்கையிலும் சமபாவத்துடனும் சமாதி நிலையிலும் உணர்ந்து அனுபவிப்பதுதான் விஞ்ஞானம்.

ஆன்மிக வாழ்க்கையில், யோகசாதனையில் இயமம், நியமம் ஆகிய இரண்டும் முதல் இரண்டு படிகளாகத் திகழ்கின்றன. இவற்றைக் கைக்கொள்ளாமல் ஒரேயடியாக மூன்றாவது படிக்குத் தாண்டுவது நேரிதன்று. இயமம், நியமம் ஆகிய இரண்டுந்தாம் ஆன்மிக வாழ்க்கைக்குத் தேவையான உடல் வலிமையையும் மன வலிமையையும் தருகின்றன.

ஆன்மிக முன்னேற்றம், நீண்ட ஆயுள் இவற்றுக்கெல்லாம் அடிப்படையாக இருப்பது பிரமசரியமே. மெய்யுணர்வாளர்களும் யோகிகளும் பிரமசரியத்தின் மூலமாகவே பிரமத்தை அடைய முயல்கிறார்கள். அவா, விழைவு, காமம், சினம், முதலிய தீய எண்ணங்களை அழிக்கும் படையாக இது விளங்குகிறது. பிரமசரியத்தின் மூலமே ஆன்மிகக் கொள்

கையைப் பெற முடியும். பிரமசரியத்தைப் பருமை, நுண்மை என இருவகையாகக் கூறலாம். உடல் அடக்கத்தைக் காப்பது பருமை. மன அடக்கத்தைக் காத்துக் கெட்ட எண்ணங்கள் உள்ளே வராமல் தடுப்பது நுண்மைப் பிரமசரிய நிலையாகும். நுண்மை நிலையைக் கடைப்பிடிப்பது, பருமை நிலையை விட மிகக் கடினம். ஆனாலும், தீவிரப் பிரமசாரிகள் நுண்மைப் பிரமசரியத்தையே மேலான குறிக்கோளாகக் கொள்ள வேண்டும்.

உடல், மனம், ஆன்மா ஆகிய மூன்றையும் நல்ல நிலையில் வைத்திருக்க உதவுவது பிரமசரியம். ஆற்றல் நிறைந்த பிரமசரிய விரதத்தைக் காப்பது எளிதான காரியமன்று. அது உடல் அடக்கத்தில் தொடங்கி, எண்ணம் செயல் இறைவன் என்ற நிலை வரையில் சென்று முழுமை அடைகிறது. இறைவனிடம் முழுமையான அடைக்கலம் புகுவது என்பது ஒரு பிரமசாரியால் மட்டுமே முடியக் கூடியது.

அச்சமின்மை, உறுதி, துணிவு, ஒளி, ஆன்மசக்தி, வலிமை முதலிய குணங்களே வீரியம் எனப்படுகின்றன. புலனடக்கத்தினால் ஆற்றல் பெருகி ஒழுங்காக மாறுகிறது. இதனால் பிரமசாரி அஞ்சா நெஞ்சத்துடன் துணிவு கொண்டு, பொறுமை நிறைந்து, உறுதி பெற்று, ஒளியுடன் திகழ்கிறான். புலனடக்கம் இல்லாதவர்களிடம் வலிமை வேண்டுமானால்; காணப்படலாம். ஆனால் மற்றச் சிறப்புக் குணங்கள் இருப்பதில்லை.

பிரமசாரி எப்பொழுதும் விழிப்புடன் இருந்து தனது எண்ணத்தில் அசைவுகள் ஏற்படாமல் காக்க வேண்டும். தீய எண்ணங்கள் மனத்தில் நுழையும் போது அது தூல உடலுக்கு மாறவிடாமல் தடுத்து நிறுத்த வேண்டும். இதற்குத் திட மனவலிமையும் உறுதியும் இருந்தால்தான் முடியும்.

தனிமனிதனின் ஆன்ம சாதனைக்கு மட்டுமல்லாமல் சமுதாயத்தை உருவாக்குவதற்கும் பிரமசரியம் மிகவும் இன்றியமையாதது. இதனை உணர்ந்தே காந்தியடிகள் பிரமசரியத்தைக் கடைப்பிடித்து அரிய செயல்களைப் புரிந்தார். ஆன்மிக வாழ்க்கை ஓர் உயர்ந்த வாழ்க்கையாகும். எ.எஸ்.பி.

துணை நூல்கள்;

Bargara Wayler, Modern Spirit, Rockliff publishing Corporation Ltd., London, 1951.

Date, V.H., The Loga of the Saints, Munshiram Manoharlal Publishers Pvt., Limited, New Delhi, 1974.

**ஆன்யாங்கு** சீனா நாட்டின் ஹுப்பே மாநிலத்தில் உள்ள தொழிற்சாலை நகரம். இக்காலத்தில் இது ஹுகானின் பகுதியாக விளங்குகிறது. யாங்க்சி ஆற்றின் வடகரையிலும் ஆன் (Han) ஆற்றின் மேற்கரையிலும் அமைந்துள்ள நகரம். மூன் ஏரி (Moon Lake) ஆன் ஆற்றையொட்டிக் கிழக்கேயுள்ளது. யாங்சியையொட்டி மேற்காக இருப்பது பேரோட்டுக் கடற்கரையாம். போசூல் ஏரி இதற்கு வடக்கில் உள்ளது. சூ மரபினர் (Chou Dynasty) இந்நகரத்திற்குப் பெயர் சூட்டினர். பல மாதங்களுக்குப் பின், யூவான் மரபினர் மீண்டும் இதை ஆன்யாங்கு (Hanyang) என்று பெயரிட்டு அழைத்தனர். தைப்பிங்கு கலகத்தின்போது இந்நகரம் பெரும் அழிவிற்கு ஆளானது.

முற்காலத்தில் இவ்வூரில் இரும்பு உருக்குத் தொழில்கள், படைக்கலப் பொருள்கள் செய்தல், வெடிமருந்துவேலைகள் போன்றவை நடைபெற்றன.

**ஆன்வே** என்பது மத்திய சீனாவின் மாநிலங்களுள் ஒன்று. இதைத் தாப்பேசான் என்னும் ஆறும் யாங்க்சி ஆறும் மூன்று பகுதிகளாகப் பிரிக்கின்றன. இங்குப் பருத்தி ஓரளவு விளைகிறது. இரும்பு நிலக்கரிப் படிவங்கள் சிறப்பாக இம்மாநிலத்தில் உள்ளன. ஓபே (Hofei) இதன் தலைநகரம். ஆன்வே (Anhwei) வேளாண்மை மையமாகும். இங்குப் பருத்தி, பட்டு நூற்பாலைகள் உள்ளன. ஆங்கிங்கு (Anking) இதன் பழைய தலைநகர். இங்கு நெல், கோதுமை ஆகியவை விளைகின்றன.

இதன் பரப்பு 13,99,000 ச.கி.மீ. மக்கள்தொகை 4,80,30,000.

**ஆனந்தக்களிப்பு** என்பது மிக்க மகிழ்ச்சியினால் உள்ளம் கிளர்ச்சியுற்றுப் பாடும் ஒருவகை இசைப்பாடல். இது பொதுவாக நாதநாமக்கிரியை இராகத்தில் சாபு தாளத்தில் அமைத்துப் பாடப்படும். இதுவே பின்னர் இந்த அமைப்பில் பாடப்பெறும் இசைப்பாடல் வகையினைக் குறிக்கும் பெயராகவும் அமைந்தது. 'சங்கர சங்கர சம்போ-சிவ-சங்கர சங்கர சம்போ' என்றமையும் இப்பாடலின் ஓசை, பண்டாரப் பாட்டு என்று சொல்லத் தக்க ஒருவகையான நாட்டுப் பாடலிசைக்கு அடிப்படையாக அமைந்தது. எண்சீரான் அமையும் இதன் அடி ஒவ்வொன்றிலும் நான்காவது சீர் தனிச்சீராக அமையும். ஒரெதுகையில் அமைந்த இரண்டு அடிகள் கொண்ட ஒரு கண்ணி ஆனந்தக் களிப்பின் ஒரு பாடல் ஆகும்.

இவ்வகைப் பாடல்களை முதன்முதலாகச் சித்தர் பாடல்களில் காண முடிகிறது. அக்கால மக்களிடையே வழங்கிய நாட்டுப்புற இசைவடி

வத்திலிருந்து இப்பாடல் வடிவம் உருவாகியிருத்தல் கூடும். 'பாபஞ் செய்யாதிரு மனமே', 'நந்த வனத்தி லோராண்டி' எனத் தொடங்கும் பாடல்கள் ஆனந்தக் களிப்பு இசையில் அமைந்தனவாகும். பின்னர்த் தோன்றிய தாயுமானவர், இராமலிங்கர் போன்ற சமய இலக்கியக் கவிஞர்களும் இவ்வகை யிலமைந்த பாடல்களைப் பாடியுள்ளனர். ஆனந்தக் களிப்பு வகையிலமையும் இசைப்பாடல் உடற்கூறு முதலிய பிறபொருள் பற்றியும் தோன்றலாயிற்று. வாலையானந்த அடிகள் பழனியாண்டவர் பேரில் உடற்கூற்று ஆனந்தக் களிப்பு இயற்றியுள்ளார். 'தூங்கையிலே வாங்குகின்ற மூச்சு-மேலே சுழிமாறி வாங்கையிலே போனாலும் போச்சு, என்பது அப் பாடலில் பலரும் அறிந்த ஓரடியாகும். இவ்வகைப் பாடலின் இசை பொதுமக்களிடம் கொண்டுள்ள செல்வாக்கினை உணர்ந்து பாரதியாரும், இந்த இசையமைப்பில் 'தாயின் மணிக்கொடி பாரீர்' என் னும் பாடலைப் பாடியுள்ளார். இசை எளிமை நோக்கி, சோதிடம் போன்ற பிற துறைச் செய்தி களைக் கொண்டும் இவ்வகை இசைப் பாடல்கள் பிற்காலத்தில் தோன்றலாயின.

**ஆனந்தக் கூத்தர்** பாண்டி நாட்டில் பொருநை நதிக்கரையிலுள்ள வீரவ நல்லூரில் பிறந்தவர். இவர்தம் ஞானாசிரியர் திருவாரூரி லிருந்த சத்தியஞானி என்னும் பெயருடைய கமலை ஞானப்பிரகாசர் ஆவார். இவர் கூத்தருக்குச் சிவ பூசை எழுந்தருளச் செய்வித்தார். இவருடைய காலம் கி.பி. 16-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி.

இவர் திருவாரூரில் சத்தியஞானியிடம் சிவபூசை யும் ஞானோபதேசமும் பெற்ற பின்னர்த் தல யாத்திரை செய்து கொண்டு காளத்தியையடைந்து அங்குப் பலநாள் தங்கியிருந்தார். அப்போது அங்கி ருந்த பெரியோர்களின் வேண்டுகோளை ஏற்றுத் திருக்காளத்தித் தலபுராணத்தைத் தமிழில் இயற்றி னார்.

வீரை ஆனந்தக் கூத்தர் செய்த இத்தல புரா ணம் மிகவும் விரிவானது; பாயிரமும் 33 அத்தியா யங்களும் கொண்டது. இத்தலத்திலுள்ள சுவாமி காளத்திநாதர்; அம்பிகை ஞானப் பூங்கோதை. அகண்ட வில்வம், கல் ஆல் என்னும் இரு தல மரங் கள் உள்ளன. ஊர் அருகே பொன் முகலியாறு ஓடுகிறது. இத்தமிழ்ப் புராணம் வடமொழியில் கண்ட மூன்று நூல்களில் உள்ள 33 அத்தியாயங் களை மொழி பெயர்த்தமைவது என்று நூல் கூறு கிறது.

திருக்காளத்திப் புராணம் சிவதருமங்களையும் சாத்திரப் பொருளையும் கூறுவதற்கென்றே எழுந்த புராணம் ஆகும். பண்டைய மரபையொட்டிச் சிறப்பாகக் காப்பிய அமைதிகள் பொருந்த ஆசிரியர் இதனை இயற்றியுள்ளார். இந்நூல் 1912 ஆம் ஆண்டில் டாக்டர். உ.வே. சாமிநாத ஐயரவர் களால் பதிப்பிக்கப்பட்டது. வி.ப.

**ஆனந்தகுமாரசாமி** (கி.பி. 1877 1947) கி.பி. 1877-ஆம் ஆண்டு ஆகஸ்ட்டுத் திங்கள் 22 ஆம் நாள் இலங்கையின் தலைநகரான கொழும்பில் பிறந்தார். இவர் தந்தை இலங்கை யாழ்ப்பாணத் தமிழர் சர். முத்துக் குமாரசாமி (கி.பி. 1834 1879); தாய் இங்கி லாந்து நாட்டைச் சேர்ந்த எலிசபெத்து கிளேபிபி அம்மையார் (கி.பி. 1851-1939). இவருடைய முழுப் பெயர் ஆனந்த கெண்டிசு குமாரசாமி. தந்தை முத்துக் குமாரசாமி கி.பி. 1863-ஆம் ஆண்டு இங்கிலாந்தில் 'பாரிசுடரான' முதலாவது கீழை நாட்டவர். பன் மொழி இலக்கியங்களை அறிந்த முத்துக்குமாரசாமி ஆங்கிலத்தில் 'அரிச்சந்திரா' என்ற நாடகத்தை எழுதி அதை விக்டோரியா மகாராணிக்குப் படையல் செய்தார். இவர் சிறு குழந்தையாயிருக்கும்போது தாயார் இவருடன் கி.பி. 1879-ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதம் இங்கிலாந்துக்குப் புறப்பட்டுச் சென்றார். மனைவியையும் மகனையும் தொடர்ந்து இங்கிலாந்து செல்லவிருந்த சர். முத்துக்குமாரசாமி கி.பி. 1879-ஆம் ஆண்டு மே மாதம் 5-ஆம் நாள் கொழும்பில் திடீரென்று காலமானார். தந்தை காலமானபிறகு தாயின் அரவணைப்பில் இங்கிலாந்தில் வளர்ந்த ஆனந்தகுமாரசாமி அங்கேயே கல்வி பயின்று 1900-ஆம் ஆண்டில் இலண்டன் பல்கலைக்கழகத் தேர்வில்



ஆனந்தகுமாரசாமி

நில நூலையும் தாவர நூலையும் பாடங்களாய்க் கொண்டு முதல் வகுப்பில் பி.எசு சி. பட்டம் பெற்றார். இவர் 1903-ஆம் ஆண்டு இலங்கை தாதுப் பொருள் ஆராய்ச்சிப் பகுதியில் இயக்குநராகச் சேர்ந்து 1906-ஆம் ஆண்டுவரை பணியாற்றினார். அப்பொழுது இவர் தோரியனைட்டு என்ற கனிமத்தைக் கண்டறிந்தார். இவர் இலங்கைச் சமூகச் சீர்திருத்தச் சங்கம் நிறுவி அதன் தலைவராக 1905 முதல் 1906 வரை பணியாற்றினார். யாழ்ப்பாணத் தமிழ்ச்சங்கம் 1906 ஆம் ஆண்டு சூன் திங்கள் 10-ஆம் நாள் இவருக்கு 'வித்தியா வினோதன்' என்ற விருதை வழங்கியது. அதே ஆண்டில் இவர் இலண்டன் பல்கலைக்கழக வெளிமாணாக்கராய் நிலவியல் ஆராய்ச்சியில் டாக்டர் (டி. எசுசி) பட்டம் பெற்றார்.

ஆனந்தகுமாரசாமி வடஇந்தியாவில் 1910-1911-இல் சுற்றுப் பயணம் செய்தும், பல கலைப்பொருள்களைச் சேகரித்தும் அலகாபாத்தில் ஒரு கலைக் காட்சியை நடத்தினார். இவர் 1917-ஆம் ஆண்டு அமெரிக்காவுக்குச் சென்று பாசுட்டன் அருங்காட்சியகத்தின் காப்பாளராகச் சேர்ந்து முப்பதாண்டுகள் பணியாற்றி ஓய்வு பெற்றார்.

**சிவபெருமான் திருநடனம்:** சிவபெருமான் ஆடும் திருமேனிபற்றியும் அத்திருமேனி விதந்தோதும் தத்துவம் பற்றியும் ஆனந்தகுமாரசாமி எழுதிய அரிய கட்டுரை உலக இலக்கியமாகிவிட்டது. சிவபெருமான் ஆடல்கள் எல்லாவற்றிலும் பொதிந்துள்ள ஆழமான கருத்து 'ஒன்றேயாகும்.' அதுவே இறைவன் பேராற்றலை வெளிப்படுத்துகிறது. சிவபெருமான் ஆடலின் அடிப்படையான உட்பொருளை மூன்று வகைகளாகக் குமாரசாமி பிரிக்கிறார். அவையாவன: மாலை நடனம், தாண்டவ நடனம், நாதாந்த நடனம். மாலை நடனம் அல்லது அந்தி நிருத்தம் பற்றிய வருணனை சிவப்பிரதோச தோத்திரத்தில் இடம் பெறுகிறது. அந்திநிருத்தம் கதாசரித சாகரத்தின் தொடக்கத்திலுள்ள இறை வணக்கத்திலும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. சிவபெருமானின் தாண்டவம் வைரவனாகவும் வீரபத்திரனாகவும் உள்ள அவனுடைய தாமச குணத்தைக் காட்டுகிறது. மூன்றாவதான நடராசரின் நாதாந்த நட்டம் தில்லைப் பொன்னம்பலத்தில் நிகழ்கிறது. கோயிற் புராணத்தில் இது விவரிக்கப்படுகிறது. நடராச உருவ அமைப்பு விஞ்ஞானம், சமயம், கலை என்பன பின்னிப்பிணைந்த ஒன்று. ஒரு குழுவுக்கோ இனத்துக்கோ மட்டும் அமைதி தாராமல் - ஒரு நூற்றாண்டுச் சிந்தனையாளர்க்குமட்டில் ஏற்புடைத் தென்றில்லாமல் உலகனைத்துமுள்ள தத்துவ ஞானி, நுகர்வோன், கலைஞன் ஆகியவர்க்கு எக்காலத்துக்கும் எந்த நாட்டுக்கும் ஏற்புடைத்தான கருத்தை நடராச உருவம் வழங்குகிறது என்பதுவும் ஆனந்தகுமாரசாமியின் ஆழமான கருத்தாகும்.

**ஓவியங்கள்:** இதுவன்றி இராசபுத்திர ஓவியங்களைப்பற்றியும், சமண ஓவியங்களைப்பற்றியும் இவர் ஆராய்ந்தார். குறிப்பாக இராசபுத்திர, மொகலாய ஓவியங்களுக்கிடையே உள்ள வேறுபாட்டை முதன் முதலில் ஆய்வு அடிப்படையில் பகுத்துக்காட்டியவர் இவரே. இராசசுதானி, பகாடி என இவற்றை இரு கிளைகளாகப் பிரித்தார். பகாடி ஓவியத்தை மேலும் இரு கிளைகளாக்கினார். இந்த ஆய்வு, பின்வந்த ஆய்வாளருக்குப் புதிய ஒளியைத் தந்தது.

**இடைக்காலச் சிங்களக் கலை:** 'இடைக்காலச் சிங்களக்கலை' என்ற 1908-ஆம் ஆண்டுவெளி வந்த நூலில், இயந்திர அரக்கன் வாய்ப்பட்டும் தொன்மையான கலைகள் புறக்கணிக்கப்பட்டும் தேசீயக் கலைகளின் அழிவு தொடங்கிவிட்டது என்று குமாரசாமி குறிப்பிடுகிறார். இந்தியாவைப் போன்று இலங்கையிலும் மேற்கு நாடுகளுடன் நேரடியாகவும் மறைமுகமாகவும் உண்டான தொடர்பு, கலைக்குக் கூற்றுவனாயமைந்தது என்பதுவும், அடிப்படையில் சிங்களக் கலை இந்தியக்கலையே என்பதுவும் குமாரசாமியின் விழுமிய கருத்துகளாகும்.

**கிரேக்க இந்தியக் கலைகள்:** கோப்பன் ஆகனில் 1908-ஆம் ஆண்டில் நடைபெற்ற அனைத்து நாடுகளின் கீழைநாட்டுக் காங்கிரசின் பதினைந்தாம் கூட்டத்தில் 'இந்தியக் கலை மீது கிரேக்கத்தின் செல்வாக்கு' என்ற பொருள் குறித்து ஆனந்தகுமாரசாமி ஆற்றிய உரை குறிப்பிடத்தக்கதாகும். மேலை நாட்டு அறிஞர் அதுவரை வைத்திருந்த கருத்துக்கு மறுப்பாக ஆனந்தகுமாரசாமியின் உரை அமைந்தது

'கிரேக்க-இந்தியக் கலைகளுக்கும் தத்துவங்களுக்கும் நடுவில் இரு துருவங்களின் இடைவெளி உள்ளது. கிரேக்கக் கடவுளரின் உருவங்கள் கிரேக்கச் சமயத்தின் ஒலிம்பிக் கண்ணோட்டத்தில் அமைந்தவை. அதற்கு மாறாக இந்தியக் கலை காலம், வெளி அனைத்தையும் கடந்து நிற்பது. மாசற்ற மனிதனை அது சுட்டுவதன்று; காணமுடியாத தெய்விகத்தின் முடிவில்லாத ஒரு பொருளின் குறியீடாகும் அது' என்று கூறினார்.

**இந்திய-இந்தோனேசியக் கலை வரலாறு:** ஆனந்தகுமாரசாமியின் 'இந்திய-இந்தோனேசியக் கலை வரலாறு' என்ற நூல் 1927-ஆம் ஆண்டு வெளிவந்தது. 'இராசபுத்திர ஓவியம்' என்ற நூலும், 'இந்திய இந்தோனேசியக் கலை வரலாறு' என்ற நூலும் மாறுபட்ட கோணங்களிலிருந்து எழுதப்பட்டவையாகும்.

ஆனந்தகுமாரசாமி ஐந்நூற்றுக்கும் மேற்பட்ட

ஆராய்ச்சிக் கட்டுரைகளையும், நூல்களையும் எழுதினார். ஒன்றிரண்டைத் தவிர அனைத்தும் ஆங்கிலத்தில் எழுதப்பட்டவையாகும். அறிவியல் பயிற்சியில் அரும்பிய ஆனந்தகுமாரசாமி கலை அழி விலும் வரலாற்றிலும் போதாகி மெய்ஞ்ஞான உணர் வில் மலர்ந்தார். செப்புத் திருமேனிகள் செப்பும் குறியீடுபற்றியும், புத்தர் பற்றியும் உலகுக்கு உணர்த் தியவர் ஆனந்தகுமாரசாமி. உலகின் பல சமய நூல் களிலும் நீதி நூல்களிலும் காணப்படும் பொதுக் கருத்துக்களை எடுத்தியம்புவதில் இவர் ஆர்வம் காட்டினார். 'வேதங்களை அணுகும் புதிய முறை' என்ற அரிய நூல் எழுதியுள்ளார். தென்னிந்திய இசைக்கு எவ்வாறு கிரேக்க இசை கடமைப்பட்டுள் ளது என்பதை இவர் சுட்டிக்காட்டியுள்ளார்.

தம்முடைய இறுதிக்காலத்தை இமயமலைப் பகு தியில் கழிக்கவிருந்த ஆனந்தகுமாரசாமி மாசச்சு செட்டில் நீடம் என்ற இடத்தில் 1947 -ஆம்ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 9-ஆம் நாள் காலமானார்.

க.சி.க.

துணை நூல்கள்:


Ananda Coomaraswamy K., The Dance of Siva, Sunwise Turn, New York, 1918.

Essays on National Idealism, Colombo Apathecaries, Colombo, 1909.

History of Indian and Indonesian Art, Dover Publications, New York, 1965.

Rajput Painting (2 Vols), Oxford University Press, 1916.

Mediaeval Sinhalese Art, Broad Campden 1908. (Own Publication).

A New Approach to the Vedas, Luzac & Co., London, 1933.

Durai Raja Singam S., (Ed.) Ananda Coomaraswamy-Remembering & Remembering- Again & Again. Petaling Jaya, Malaysia, 1974.

Kamaliah K.C., Ananda Coomaraswamy - Wise Man from the East, Madras, 1977, (Own Publication).

Literary Theory of Ananda Coomaraswamy, Journal of Tamil Studies, (International Institute of Tamil Studies).

Bibliography of Ananda Coomaraswamy's Writings, Ibid.


**ஆனந்த சங்கர துருவர்** கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் குசராத்து மாநிலத்தில் தோன்றிச்சிறப் புடன் விளங்கிய எழுத்தாளர். தாய்மொழி, வட மொழி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் புலமை மிக்கவர். தருமங்களிலும் தத்துவஞானத்திலும் பயிற்சி யுடையவர். இவருடைய எழுத்து நடை, குசராத் தியும் வடமொழியும் கலந்த மணிப்பிரவாள நடை யாகும்; எளிமையும் இனிமையும் மிக்கது. 'வசந்த' என்னும் திங்கள் இதழில் பல கட்டுரைகள் எழுதி வந்துள்ளார். பொது வாழ்க்கையில் மிக்க ஈடுபாடு கொண்டிருந்தார். 'இந்து தர்மன்', 'பால போதீ', 'ஆபணோதர்ம' ஆகியன இவர்தம் படைப்புகளா கும். ஆங்கில இலக்கியத்துறையிலும் இவர் ஈடு பட்டுள்ளார்.

**ஆனந்த சதுர்த்தசி:** ஆனந்த சதுர்த்தசி என்பது திருமாலை வழிபடுவதற்குரிய ஒரு விரதம். புரட்டாசி மாதம் சுக்கில பட்சச் சதுர்த்தசி நாளை ஆனந்த சதுர்த்தசி என்பர்.

**ஆனந்த தீர்த்தர்** தென்னிந்தியாவில் தோன்றிய புகழ் பெற்ற வைணவ சமயத் தத்துவ ஆசாரியர்களுள் ஒருவராவார். இவர் மத்துவர், பூர்ணபிரக்ஞர் என்ற வேறு பெயர்களாலும் அழைக்கப்படுகிறார். இவர் தோற்றுவித்த சமயத்தை மத்துவ மதம் என்றும் பிரம சம்பிரதா யம் என்றும் வழங்குவது மரபு.

ஆனந்த தீர்த்தர் கருநாடக மாநிலத்தில், உடுப் பிக்குத் தென்கிழக்கில் சுமார் 13 கி.மீ. தொலைவில் உள்ள பில்வ கிராமத்தில் கி.பி. 1238-இல் பிறந் தார். தந்தை மத்தியகேக பட்டர்; தாய் வேதவதி. பெற்றோர் இவருக்கு வைத்த பெயர் வாசுதேவன். இவர் ஏழாம் வயதில் பூணூற் சடங்கு செய் விக்கப்பட்டு அச்சுதப் பிரேட்சர் என்பவரிடம் அனுப்பி வைக்கப்பட்டார். அவர் வாசுதேவனுக்கு வேத வேதாங்கங்கள் கற்பித்த ஆசிரியராக மட்டுமல்லா மல் ஞானாசிரியராகவும் இருந்தார். கல்வி கேள்வி களில் சிறந்து விளங்கிய வாசுதேவன், தமது இருபத் தைந்தாம் வயதில் துறவு பூண்டு தீக்கை பெற்றுப் பூர்ணபிரக்ஞர் என்ற பெயரைப் பெற்றார். பின்னர், ஆசாரியாபிடேகம் செய்விக்கப்பட்டு ஆனந்த தீர்த்தர் என்றழைக்கப்பட்டார். சிறிது காலம் கழிந்த பின்னர், ஆசிரியருக்கும் மாணவருக்கு மிடையே தத்துவக் கொள்கை தொடர்பாக ஆழ மான கருத்து வேற்றுமை ஏற்பட்டது. ஆசிரியர் கற் றுக் கொடுத்த அத்துவிதக் கொள்கையை மாணவர் ஏற்க மறுத்து விட்டார். இவர் தம் சிந்தனையின் விளைவாகப் பிறந்த துவைதக் கொள்கையை நாடு முழுவதும் பரப்ப வேண்டும் என எண்ணினார். பல்

வேறு மதத்தினரை வாதில் வென்று தாம் நிறுவிய துவித மதமே தலை சிறந்தது என நிலை நாட்டினார். பொதுவாக, பிற மதக் கொள்கைகளைக் கண்டித்த போதிலும் இவர் கவனமெல்லாம் ஆதி சங்கரரின் மாயாவாத அத்துவிதக் கோட்பாடுகளைத் தாக்குவதிலேயே சென்றது. இவர் கி.பி. 1318-இல் தமது 79-ஆம் வயதில் இறைவனடி எய்தினார்.

இவர் சமய தத்துவம் தொடர்பான முப்பத்தேழு நூல்களை இயற்றியுள்ளார். அவை வடமொழியில் எழுதப்பட்டுள்ளன. இவரியற்றிய நூல்களின் தொகுதியைச் 'சர்வமூலம்' (எல்லாவற்றுக்கும் மூலமான நூல்கள்) என்ற சொல்லால் வழங்குவது மத்துவ சம்பிரதாயத்தினர் மரபு. அந்த முப்பத்தேழு நூல்களையும் நான்கு பிரிவுகளில் அடக்கலாம்.

1. பிரத்தானத்திரயம் எனப்படும் உபநிடதங்கள், பகவத் கீதை, பிரம சூத்திரம் ஆகியவற்றின் உரை நூல்கள். இவர் கீதைக்கு, கீதா பாடியம், கீதா தாத்பர்ய நிர்ணயம் என்ற இரண்டு நூல்களை எழுதியுள்ளார். பிரம சூத்திரத்திற்கு, சூத்திர பாடியம், அணு பாடியம், அநுவியாக்யானம், நியாய விவரணம் என்ற பெயர்களில் நான்கு உரை நூல்கள் இயற்றியுள்ளார். இவற்றைத் தவிர, பத்து உபநிடதங்களுக்கும் உரை வகுத்துள்ளார். இவ்வுரை நூல்களின் வாயிலாக ஆனந்த தீர்த்தர் தமது துவைத் நெறியை விளக்கியுள்ளார்.

2. ஆனந்த தீர்த்தர் தமது கொள்கையை விளக்கி எழுதியுள்ள பத்துச் சிறு நூல்களின் தொகுதி தசப்பிரகரணம் எனப்படும். இவற்றில் இவர் தமது மதக் கருத்துகளைத் தெளிவாக அறிவுறுத்தியும் சங்கர மதக் கோட்பாடுகளை மறுத்தும் எழுதியுள்ளார். பிரமாண லட்சணம், உபாதி காண்டம், பிரபஞ்ச மித்தியாத்துவானுமான கண்டனம், மாயவாத கண்டனம், தத்துவசங்கராயனம், தத்துவ விவேகம், தத்துவோதயம், விட்டுணு தத்துவ நிருணயம், கர்ம நிருணயம் ஆகிய பத்து நூல்கள் 'தசப் பிரகரணம்' எனப்படும்.

3. இருக்கு பாடியம், மகாபாரத தாத்பரிய நிருணயம், பாகவத தாத்பரிய நிருணயம் ஆகிய மூன்று நூல்களும் ஆனந்த தீர்த்தரின் தாத்பர்ய பிரபந்தங்கள் எனப்படுகின்றன.

4. யமகபாரதம், நரசிம்ம நகத்துதி, துவாதச தோத்திரம் முதலான துதி நூல்கள் இப்பகுதியில் அடங்கும்.

ஆனந்த தீர்த்தர் பரம வைணவர்; மகா விட்டுணுவை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபட்டவர். விட்டுணுவின் அவதாரங்கள் அனைத்தும் அம்சாவதாரங்கள் அல்ல; பூர்ணாவதாரங்களே என்று அவர் கருதினார். பரமாத்மா என்னும் சொல் விட்டுணுவைத் தான் குறிக்கும்; அவன் எல்லாக் குணங்களையும் கொண்டவன்; பரிபூரணன்; ஞானம், ஆநந்தம் முதலான சிறந்த குணங்களையே உடலாகக் கொண்டவன். அவன் என்றுமுள்ளவன்; தன்னிச்சைப்படி செயலாற்றுபவன். அவனை வழிபட்டு அவனை அடைவதே மனித வாழ்க்கையின் குறிக்கோள் என்பது மக்களுக்கு இவர் விடுத்த செய்தியின் சாரமாகும்.

ஆதி சங்கரர் பிரமம் ஒன்றே உண்மையானது. உலகம் பொய்யானது என்று கூறினார். ஆனந்த தீர்த்தர் சங்கரரது இக்கொள்கையை முழுமூச்சுடன் எதிர்த்தார். இவர் ஈசன், சீவன், உலகம் அல்லது இயற்கை ஆகிய மூன்றும் வேறு வேறு என்பதை மிக அழுத்தமாகக் கூறினார். இந்த வேறுபாடு கற்பனையில் தோன்றியதன்று; உண்மையானதே என்பது இவரது உறுதியான கருத்து. இவ்வேறுபாடு தம்தம்மில் ஐவகையானது. 1. ஈசனும் சீவனும் வேறு வேறு; 2. ஈசனும் உயிரில் பொருள்களும் வேறு வேறு; 3. சீவனும் உயிரில் பொருள்களும் வேறு வேறு; 4. ஒரு சீவனும் மற்றொரு சீவனும் தம்தம்மில் வேறு வேறு; 5. ஓர் உயிரில்பொருள் பிறிதொரு உயிரில் பொருளினின்றும் வேறுபட்டது. இந்த வேறுபாடுகள் உலக வாழ்வில் மட்டுமன்றி மோட்சநிலையிலும் உள்ளது என ஆனந்த தீர்த்தர் அறிவுறுத்தினார். இவ்வகையான வேறுபாடுகள் காண்பதினால்தான் ஆனந்த தீர்த்தரின் மதம் துவைத மதம் எனப்பட்டது. கூ.ரா.ந.

**ஆனந்தர்**[1] புத்த பிரானின் சீடர்களுள் ஒருவர்; புத்தரின் உறவினருமாவார்; புத்தரிடம் அளவற்ற பற்றும் பாசமும் கொண்டவர்; இவர் தந்தையான அமிதோதனரும் ஒரு சாக்கியரே; ஆனந்தரின் சகோதரர்கள், மகாநாமர், அநிருத்தர் என்பவர்கள். இவர்களை ஆனந்தரின் ஒன்றுவிட்ட சகோதரர்கள் என்பாருமுண்டு. கௌதமர் ஞானம் பெற்றுப் புத்தரான ஓராண்டுக்குப் பின்னர் இவரும் புத்த சங்கத்தில் சேர்ந்தார். ஆனந்தரைப் புத்தரே புத்த சங்கத்தில் சேர்த்து அமர்த்தினார். ஞானம் பெற்ற இருபது ஆண்டுகளுக்குப் பின்னர் புத்தர், ஆனந்தரைத் தம் அணுக்கப் பணியாளராகத் தேர்ந்தெடுத்தார். புத்தபிரானுக்கு 25 ஆண்டுகள் உண்மைத் தொண்டராகப் பத்தியுடன் பணியாற்றினார். புத்தர் தெரிந்து கொள்ள வேண்டிய நிகழ்ச்சிகள் அனைத்தையும் ஆனந்தர் கூறிவந்தார்.

தவிர்க்கக் கூடியதொல்லைகளிலிருந்துஇவர் அவரைக் காப்பாற்றினார். பேசவேண்டிய பொருளுக்கு ஏற்ற உவமைகளைச் சுட்டிக் காட்டியும் தேவைப்பட்ட போது பல சுத்தங்களை நினைவு கூர்ந்தும் புத்த ருக்கு உதவி செய்தார். இவர் அடிக்கடி சொற் பொழிவாற்றினார். சாரி புத்தர், மொக்கலானா, மகாகசியப்பர், அநிருத்தர், கான்காரேவதா போன் றவர்கள் இவருடைய குறிப்பிடத்தக்க நண்பர்கள். புத்தர் நிருவாணம் எய்திய பின்னரே ஆனந்தரும் அருகததானார். புத்தரின் போதனைகளைச் சிறிய அளவிலும் பெரிய அளவிலும் விளக்கிக் கூறும் திறமை இவருக்கிருந்தது. அதனால், இவர் தம்ம- பண்டாகாரிகா என்னும் விருதுப் பெயர் பெற்றார். நீண்டகாலம் இவர் உயிர் வாழ்ந்தார். புத்தரின் இறுதி நாட்கள் வந்து கொண்டிருக்கின்றன என் பதை உய்த்துணர்ந்த இவர், புத்த பிரானை இராசகிருகத்திற்காவது, அல்லது சிராவத்திக்காவது செல்லுமாறு வேண்டினார். ஆனால், குசி நகரத்தின் பெருமைகளை உணர்ந்த புத்தர் குசிநகரத்தில் இருப்பதே நல்லதுஎனக் கருத்துக் கொண்டார். புத் தரிடத்தில் இவருக்கிருந்த நெருக்கத்தையும் நட் பினையும் தெரிந்திருந்தும் கூட, இவரைக் குறை கூறியவர்களும் இருந்தனர். புத்தரிடமிருந்து போத னைகளையும் பெண்களைப் புத்த சங்கத்தில் சேர்ப் பது குறித்துப் போதிய ஆணைகளையும் இவர் பெறவில்லை என்று குற்றம் சாட்டப்பட்டது. எனி னும் இவர் புத்தபிரான் இறந்தபின்னர் அருகத்து நிலைக்கு உயர்த்தப்பட்டார். பல சாதகக் கதை கள் இவரைப் பற்றி உள்ளன.

ஆனந்தர்[2] என்னும் பெயரில் சமண சமய பைரவர் ஒருவர் வாழ்ந்தார். சமண தெய்வமான சேத்திர பாலரைத் தொடர்ந்து சென்ற பைரவர் களுள் ஒருவர் இவர்.

சுவேதாம்பர தெய்வங்களுள் சேத்திரபாலராகக் கருதப்படும் சமண தெய்வத்திற்கும் ஆனந்தர் என்னும் பெயருண்டு. இவருக்கு இருபது கைகளும் இருபது ஆயுதங்களும் நீண்ட சடாமுடியும் பாம்பா கிய பூணூலும் நாய் வாகனமும் இருந்ததாகக் குறிப்பிடப் பட்டுள்ளது.

ஆனந்தர்[3] திருமாலின் திருவுருவம். இவர் பெரும் வலிமையைப் பெற்றவராகக் கருதப்படுகிறார். இவர் நான்கு முகங்களையும் பன்னிரு கைகளையும் பெற்றுக் கருடனின் மேல் அமர்ந்த வண்ணம் காட்சியளிப்பார். இவர் தம் வலக் கைகளில் வரத முத்திரையையும், கதை, சக்கரம், வச்சிரம், அங்குசம், கட்கம் முதலான போர்க் கருவிகளையும், இடக் கைகளில் சங்கு, கேடயம், வில், தாமரைமலர், தண்டம், பாசக்கயிறு ஆகியவற்றையும் கொண்டு காட்சி யளிப்பார்.

**ஆனந்தரங்கப் பிள்ளை (கி.பி. 1709-1761)** சென்னை மாநகரின் ஒரு பகுதியான பெரம் பூரில் கி.பி. 1709-ஆம் ஆண்டில் பிறந்தார். ஆனந்த ரங்கப்பிள்ளையின் தந்தையாரான திருவேங்கடம் பிள்ளை தலைசிறந்த வணிகர். அவர் மைத்துனர் நைனியப்பப் பிள்ளையின் தூண்டுதலால் திருவேங் கடம் பிள்ளை புதுச்சேரியில் குடியேறினார். அவரது துணையுடன் புதுச்சேரியில் அப்போது நிறுவப்பெற் றிருந்த பிரெஞ்சுக் கிழக்கிந்திய வாணிக்குழுவினர் தம் வாணிகத்தைப் பெருக்கிக் கொண்டனர். திருவேங் கடம் பிள்ளை கி.பி. 1726-ஆம் ஆண்டில் இறந்தபின் ஆனந்தரங்கப் பிள்ளை சிறு வணிகராகத் தம் தொழி லைத் தொடங்கினார். இவரது வாணிகம் படிப்படி யாக விரிவடைந்து பல்கிப் பெருகியது. அப்போது பிரெஞ்சு ஆளுநராக இருந்த இலெனாயர் (Lenoir), தூமா மற்றும் தூப்ளே போன்றவர்களின் நல்லெண் ணத்தையும், ஆதரவினையும் பெற்றார் ஆனந்தரங் கப்பிள்ளை. தூப்ளே இவருக்குப் பேராதரவு நல்கி னார். தூப்ளேயின் மனைவி இவரை வெறுத்தபோதி லும், இவர் தூப்ளேயின் சிறப்பு மொழிபெயர்ப் பாளராக நியமிக்கப் பெற்றார். இப்பதவியைக் கி.பி. 1746 – ஆம் ஆண்டில் இவர் பெற்றார். தமிழ் மொழியில் ஆழ்ந்த புலமை பெற்றிருந்த இவர்



ஆனந்தரங்கப் பிள்ளை

பாரசீக மொழியும் பிரெஞ்சுமொழியும் தெரிந்திருந்தார்.

தூப்ளே ஆளுநராகப் பொறுப்பேற்றபோது அவரது சிறப்புப்பகர ஆளாக இருந்த ஆனந்தரங்கப் பிள்ளையின் செல்வாக்கும் பெருமளவிற்கு உயர்ந்தது. அக்காலத்தில் இவர் புதுச்சேரியில் வாழ்ந்த சிறந்த வணிகராயும், சீரிய அரசியல் செல்வாக்குப் பெற்றவராயும் கருதப் பெற்றார். மொகலாய அரண்மனையில் 3000 குதிரைவீரர்களுக்குத் தலைவரான மன்சப்தார் பெரும்பதவி வகித்த பெருமக்கள், இளவரசர்கள் போன்றோர் இவரது கருத்தறிந்து செயற்பட்டனர். அதன் விளைவாகப் புதுச்சேரியில் மிகுந்த செல்வாக்குற்ற இந்தியராக இவர் கருதப்பெற்றார். ஆனால், கி.பி. 1754-இல் தூப்ளேயின் வீழ்ச்சியால் இவர் பெருவருத்தமுற்றார். தூப்ளேயின் மனைவி இவர் துயர்களுக்குக் காரணமாயிருந்தார்.

தூப்ளேயின் வீழ்ச்சிக்குப் பின்னர் ஆளுநரான இலாலியின் பதவிக்காலத்தில் மீண்டும் ஆனந்தரங்கப் பிள்ளையின் செல்வாக்குப் பெருகத் தொடங்கியது. ஆனால், கி.பி. 1761-ஆம் ஆண்டு சனவரி திங்கள் 12-ஆம் நாள் புதுச்சேரியிலேயே ஆனந்தரங்கப் பிள்ளை காலமானார்.

ஆனந்தரங்கப் பிள்ளையின் நாள் குறிப்பேடுகள் ஆங்கிலப் பிரெஞ்சுக் காரர்களின் ஆட்சியை அறிய உதவும் மூலச் சான்றுகளாம். அக்குறிப்புகள் கி.பி 1736-ஆம் ஆண்டு முதல் கி.பி. 1760-ஆம் ஆண்டு வரையிலான காலத்திற்குப் பெரிதும் உதவுவன. இவரது அரசியல் தீர்வுகள் இவர் திறமைக்கு எடுத்துக்காட்டாகும். வரலாற்று மாணவர்களுக்கு அக்குறிப்புகள் சிறப்பாக உதவுகின்றன. குறிப்பாக தூப்ளேயின் ஆளுநர் காலத்தை நன்கறிய அவை பயன்படுகின்றன. ஆசப் சா (Asaf Jah) காலமானதும் தென்இந்தியாவில் அரசியல் குழப்பம் மூளும் என்று இவர் ஏற்கெனவே குறிப்பிட்டிருந்தார். இது ஓரளவு உண்மையாயினும், இலாலியின் வருகையால் கருநாடகத்தில் பிரெஞ்சுச் செல்வாக்கு உயரும் என்று இவர் கூறிய கருத்துப் பின்னர் நிகழ்ந்த நிகழ்ச்சிகளால் பொய்த்து விட்டது.

இக்குறிப்புகள், கலுவா மொம்பிரேன் , என்பார் ஆனந்தரங்கப் பிள்ளையின் வீட்டில் இருப்பதைக் கண்டறிந்தார். அக்குறிப்புகளின் சில பகுதிகளைப் பிரெஞ்சு மொழியில் சூலியேன் வென்சோன் என்பார் மொழிபெயர்த்தார். ஆங்கில மொழிபெயர்ப்புப் பணியும் தொடங்கப்பெற்றுப் பல தொகுதிகள் வெளிவந்தன.

துணை நூல்கள்:

Sathianathaier, R., Vasudeva Rao, T.N., A Political and Cultural History of India, Vol., III, S. Viswanathan & Co., 1982.

Chopra, P.N., Ravindran, T.K., Subramanian, N., History of South India, Vol., III, S. Chand & Company, New Delhi,

**ஆனந்தவர்த்தனர்** காசுமீர நாட்டு மன்னன் அவந்திவர்மன் காலத்தில் (கி.பி. 856-883) வாழ்ந்தவர். இவர் எழுதிய தேவிசதகம் என்னும் தோத்திர நூலிலிருந்து இவர் தந்தையார் பெயர் நோணர் என்பது தெரிகிறது. இவருடைய 'தொனியா லோகம்' என்னும் நூலில் எடுத்தாளப்படும் மேற்கோள் செய்யுட்களை நோக்கும்போது இவர் சிறந்த கவியும் சுவைஞரும் ஆவர் என்பது புலனாகிறது. இவர் இந்நூலில் தம் நூல்களாகச் சில நூல்களைக் குறிப்பிட்டுள்ளார். பிராமண விநிச்சய தீகா விவிருதி என்பது பௌத்தநியாய நூல் ஒன்றினுக்கு இவர் எழுதிய விளக்க உரையாகும். விடம்பாணலீலை என்பது மன்மதன் வெற்றி பற்றிப் பிராகிருத மொழியில் எழுதப்பட்ட காவியமாகும். அருச்சுன சரித மகாகாவியம் என்பது ஒரு காவியமாகும். மதுமதன விசயம் என்பது கிருட்டிண ருக்குமணி திருமணம் பற்றிய பிராகிருத காவியம். தத்துவாலோகம் என்பது அபிநவ குப்தரால் தொனியாலோக லோசன உரையில் குறிப்பிடப்படுகிறது. இது காசுமீர சைவத்தை விளக்கும் நூலாகும். இவ்வைந்து நூல்களும் இன்று கிடைக்கவில்லை.

பரதர் காலம் முதலாகத் தோன்றிய அலங்கார சாத்திரங்களுள் தலைமையானது எனப் போற்றப்படுவது இவரது தொனியா லோகம் ஆகும். தாம் ஒரு சுவைஞன் என்னும் நிலையில் இவர் இந்நூலை ஆக்கியுள்ளார். இவரை மேற்கோளாகக் காட்டும் சிலர், இவரைச் 'சக்ருதயர்' என்றும் குறிப்பிடுகின்றனர். சக்ருதயன் என்னும் சொல் ஒரு கவிஞனுக்கு இருப்பது போன்ற பண்பட்ட இதயம், ஒரு சுவைஞனுக்கும் இருத்தல் வேண்டும் என்பதைக் குறிக்கும்.

ஆனந்தவர்த்தனர் காலத்திற்கு முன்பு 'தொனி' (குறிப்புப் பொருள்) என்பதொன்று உண்டென்பாரும் இல்லை என்பாரும் இருந்தனர். உண்டு என்பவர்களிடையே எது 'தொனி' என்பதில் கருத்து வேற்றுமை இருந்தது. அதனால் 'தொனி' என்பது யாது, அதை ஏன் காவியத்தின் உயிர்நாடி என்று ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பனவற்றைத் தெளிவாக வரையறை செய்து நிறுவியவர் ஆனந்தவர்த்தனர் ஆவார்.

பழங்கால அலங்கார சாத்திர ஆசிரியர்கள் காவியத்தின் உயிர்நாடியை நாடாமல் அதன் புற

அமைப்பிலேயே கவனம் செலுத்தி வந்ததனை மாற்றியமைக்க வேண்டி, இவர் 'தொனி லோகத்தை' எழுதினார். நாட்டிய சாத்திர ஆசிரியரான பரதர், காவியத்தில் கூறப்படும் பொருள் அதன் உடல் என்றும், இரசமே இன்றியமையாதது என்றும் கருதினார். பாமகரும் தண்டியும் அலங்காரங்களை விரிவாக ஆராய்ந்தனர். இரசத்தோடு கூடிய வாக்கியத்தைப் பாமகர் ஓர் அலங்காரமாகக் கருதினார். தண்டி இரசத்தோடு கூடியதாக ஒரு வகை அலங்காரத்தையும், 'மாதுரிய' குணத்தையும் கண்டார். வாமனர் இரசத்தோடு கூடியதான 'தீப்தி' குணத்தைக் கண்டார். உருத்ரடர் காவியத்தில் இரசத்தின் இன்றியமையாப் பங்கை ஆராய்ந்துள்ளார்.

தொனி என்னும் சொல் 'சப்த பிரம்மவாதி'யான இலக்கணக்காரர்களால் முன்பே ஆளப்பட்டிருந்தது. மக்கள் ஒலிக்கும் சொற்கள் வியஞ்சகமாக நின்று அவை முழுமையான இசுபோடம் (ஸ்போடம்) என்பதைத் தொனிப்பிக்கின்றன. அந்தத் தொனியே பொருளைக் குறிக்கிறது என்றனர். இலக்கணக்காரர் போல் வியங்கியப் பொருளை வெளிப்படுத்தும் (வியஞ்சக) சொற்களுக்கும், வியங்கியப் பொருளுக்கும் மட்டிலுமன்றி, வியங்கியப் பொருளைத்தரும் அச்சொல்லின் ஆற்றலுக்கும் 'தொனி' என்னும் சொல்லை ஆனந்தவர்த்தனர் பயன்படுத்தியுள்ளார்.

பாமகர், தண்டி, வாமனர் போன்றோர் காவிய அணியைப் பற்றியும், காவியக் குணத்தைப் பற்றியும் காவிய நடையைப் பற்றியுமே சிறப்பாக எழுதி வந்த முறையை மாற்றிக் காவியங்களையும் நாடகங்களையும் எழுதும் கவிஞனுக்கு இருக்க வேண்டிய இரசிகத் தன்மை, கதை மாந்தர்களின் உணர்ச்சி, காவியத்தைப் படிப்போர், நாடகத்தைக் காண்போர் பெறும் இன்ப உணர்வு ஆகியவற்றை மையமாகக் கொண்டு, காவியத்தில் தொனி பெறும் சிறப்பிடத்தினை வலியுறுத்துவதில் ஆனந்தவர்த்தனர் வெற்றி கண்டார்.

கவிஞனது வாக்கியத்தினின்றும் பெறப்படும் நேரிடைப் (வாச்சிய) பொருளைக் காட்டிலும் மிகுதியாகச் சுவை பயக்கக் கூடியது, அவன் அவ்வாச்சியப் பொருள் வாயிலாக உணர்த்தக் கருதும் தொனிப் பொருளே எனவும், இத்தொனிப் பொருள் ஒரு நங்கையின் முழுமையான அங்க அழகு போன்றது எனவும் இவர் நிறுவியுள்ளார். இத்தொனிப் பொருளை ஒருவன் அறிந்து மேலான இன்ப அனுபவத்தைப் பெற வேண்டுமானால், கவிஞன் அதற்கேற்ற மனோதர்மத்தைக் கற்பனை செய்து பார்க்கும் திறத்தைப் (பிரதிபையை) பெற்றவனாக இருக்க வேண்டும். காவியத்தைப் படிப்பவனுக்கும் நாடகத்தைக் காண்பவனுக்கும் இத்தகைய திறம் இருக்க வேண்டும் என்பதையும் இவர் எடுத்துக்காட்டியுள்ளார்.

தொனியாலோகம் நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதற் பிரிவு தொனி என்னும் ஒன்று இல்லை என்பாருக்கும், இருப்பினும் முன்பே ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ள அபிதை, இலக்கணை போன்றவற்றின் வாயிலாகவே அதைப் பெறக்கூடும் என்பாருக்கும் மறுமொழி கூறும்வகையில் அமைந்திருக்கிறது.

இரண்டாம் பிரிவில், தொனிப் பொருள் ஒரு செய்தியாகவோ அணியாகவோ உணர்வாகவோ இருக்கலாம் எனவும், காவியத்தில் தொனிப் பொருள் பெறும் சிறப்பினை ஒட்டி அது தொனிக்காவியம், குணீபூதவியங்கிய காவியம், சித்திரகாவியம் என மூவகைப்படும் எனவும், பிறவகைகளிலும் தொனியை வகைப்படுத்தலாம் எனவும் மேற்கோள்களுடன் எடுத்துக்காட்டியுள்ளார். அலங்காரம், குணம், சாதி முதலானவற்றிற்கும் தொனிக்கும் உள்ள தொடர்பையும் விளக்கியுள்ளார்.

மூன்றாம் பிரிவில், காவியம் இயற்றுவதில் கவிஞன் கையாள வேண்டிய முறைகள், உத்திகள், காவியப்பொருள், கதைமாந்தர், உணர்வு இவற்றிற்கிடையே இருக்கவேண்டிய இயைபு (ஔசித்யம்) ஆகியவை கூறப்பட்டுள்ளன.

நான்காம் பிரிவில், ஒவ்வொரு கவிஞனுக்கும் தனிப்பட்ட கவிதை படைக்கும் ஆற்றல் இருப்பதால் இராமகதை போன்ற காவியப் பொருள் ஒன்றேயானாலும், ஆண்டுதோறும் வசந்தத்தில் மலரும் புதுமலர்போலக் காவியங்கள் என்றென்றும் புதுப் பொலிவுடன் தோன்றிக்கொண்டே இருக்கும் என்றும் விளக்கியுள்ளார்.

காவியத்தில் கூறப்படும் பொருளுக்கும் இரசத்திற்கும் உள்ள தொடர்பு, உடலுக்கும் உயிருக்கும் இருப்பது போன்றது என்று ஆனந்தவர்த்தனர் கூறுகிறார். உடலின் வாயிலாக உயிர் செயற்படுவதைப் போலக் காவியத்தில் வரும் இராமன், சீதை போன்றோருடைய கதையின்றி இரசம் ஏற்படுவதில்லை. இரசானுபவம் ஏற்படும் நேரத்திலும் அப்பொருளோடு தொடர்புடையதாகவே அந்த இரசம் உணரப்படுகிறது.

சிருங்காரம் முதலான எட்டு இரசங்களுக்கு மேலாகச் 'சாந்தம்' என்னும் இரசம், காவியங்களில் ஏற்றுக் கொள்ளத்தக்கதா என்பதில் அலங்கார சாத்திர ஆசிரியர்களிடையே கருத்துவேறுபாடு இருந்துள்ளது. சாந்தரசம் உண்டு என்பதற்கு ஆனந்தவர்த்தனர் மகாபாரதத்தில் சாந்தமே இன்றி

யமையாததாக இருப்பதை எடுத்துக்காட்டியுள்ளார்.

கவிஞனுடைய படைப்பு நான்முகன் படைப்பைப் போன்றதன்று. நான்முகன் படைப்பில் இன்ப துன்பங்கள் உள்ளன. காவியக் கவிஞன் தன் கதை மாந்தர்களையும் பிறவற்றையும் உலகியலினின்றும் சற்றுவேறுபட்டிருக்கும் வகையில் உருவாக்குகிறான். அத்தகைய காவியத்தைப் பயில்பவர்கள் மேலான இன்பம் ஒன்றையே நுகர்கின்றனர். இவ்வின்பத்தின் தரம் கவிஞனின் ஆற்றலையும் சுவைஞனின் உள முதிர்ச்சியையும் சார்ந்ததாகும் என்பதை ஆனந்த வர்த்தனர் நன்கு எடுத்துக்காட்டியுள்ளார். பி.தி.

**ஆனந்த விக்கிரம ஆண்டு** இந்திய நாட்டில் வழங்கும் பல ஆண்டுகளுள் ஒன்று. இது கி.பி. 33-ஆம் ஆண்டில் தொடங்குவதாகக் கூறுவர். சந்த் பர்தாய் என்னும் கவிஞர் தில்லியை ஆண்ட பிருதிவிராச சௌகானின் அரண்மனைக் கவிஞராவார். இவர் எழுதிய சந்த் இராய்சா என்னும் நூலில் இந்த ஆண்டைப் பயன்படுத்தியுள்ளார்.

**ஆனாசி தத்தோ** மராத்திய மாவீரர், சிவாசியின் அமைச்சர்களுள் ஒருவர். அட்டப் பிரதானில் சச்சிவா என்னும் பொறுப்பை வகித்தவர். அப்சல் கானைச் சிவாசி சந்திக்கச் சென்றபோது, சிவாசியின் தாயார் சீசாபாயும் ஆனாசிதத்தோவும் பாலாசி ஆவ்சியும் பிரதாப்கர் கோட்டையில் தங்கி நிருவாகத்தைக் கவனிக்கச் சிவாசியால் நியமிக்கப் பெற்றனர். பன்கலா கோட்டையைக் கைப்பற்ற வேண்டும் என்று பணிக்கப் பெற்றவரும் ஆனாசி தத்தோ தான். அதைக் கி.பி. 1673-இல் கைப்பற்றி வெற்றி வாகை சூடினார். பீசப்பூருக்குச் சொந்தமான போண்டாவையும் கி.பி. 1674-இல் இவர் கைப்பற்றினார். சாம்பாசியைச் சிவாசியின் வாரிசாக்கக் கூடாதென்று எதித்தவர்களுள் இவரும் ஒருவர். இவர் கி.பி. 1681 அக்டோபர் 12-ஆம் நாள் சதிக் குற்றத்திற்காகச் சாம்பாசியால் தூக்கிலிடப்பட்டார்.

**ஆனாய நாயனார்** திருத்தொண்டர் புராணம் கூறும் அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர். சோழநாட்டின் உட்பிரிவுகளுள் ஒன்றாய் விளங்கிய மேன்மழ நாட்டுத் திருமங்கலம் என்னும் ஊரில் ஆயர் குலத்தில் தோன்றியவர். இவ்வூர் திருச்சி மாவட்டத்திலுள்ள பூவாளூருக்கு அருகில் உள்ளது. இவர் சிவபெருமானிடம் அன்பு நிறைந்தவர். பசுக்களை மேய்க்கும் தொழில் பூண்ட இவர், புல்லாங்குழல் இசைப்பதில் வல்லவராக விளங்கினார். அக்குழலில் சிவபெருமானின் ஐந்தெழுத்தினை ஏழிசைச் சுருதி பெற அமைத்து இசைப்பார். கார்காலத்தே ஒருநாளில் இவர் வழக்கம்போல மாடுகளை மேய்க்கச் சென்றபோது அங்கே கொன்றை மரம் ஒன்று அழகுற மலர்ந்து நிற்பதனைக் கண்டார்; சிவபெருமானே அவ்வடிவில் நிற்கிறார் என உணர்ந்து உணர்ச்சி வயப்பட்டு, திருவைந்தெழுத்தினை உள்ளுறையாகக் கொண்டு புல்லாங்குழலில் இனிய இசையினை இசைத்தார். உலக முழுதும் உள்ள சர, அசரப் பொருள்கள் அனைத்தும் அந்த இசைவயப்பட்டு மயங்கின. சிவபெருமானின் திருச்செவியிலும் அக்குழலிசை பெருகி நின்றது. ஏழிசையாய் இசைப்பயனாய் விளங்கும் சிவபெருமான் காட்சி கொடுத்துத் தம் உலகிற்கு ஆனாயரை அழைத்துக் கொண்டார். வானோர் பூமாரி பெய்தனர்.

இவர் முத்தியடைந்தது கார்த்திகை - அத்தம் ஆகும். 'அலைமலிந்த புனல்மங்கை ஆனாயர்க்கு அடியேன்', என்று இவரைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம் திருத்தொண்டத் தொகையில் போற்றியுள்ளார். வி.பா.

**ஆனிபால் (கி.மு. 247-183)** வட ஆப்பிரிக்காவின் பண்டைய நகரமான கார்த்தேசின் மிகப் பெரும் படைத்தலைவர் ஆவார். இராணுவ தந்திரத்திற்கும் திறமைமிக்க தலைமைக்கும் பெயர் பெற்ற ஆனிபால் (Hannibal), சொல்லொணாத் தொல்லைகளை எதிர்த்து நின்று தம் படையை விடப் பெரும் படைகளைத் தோற்கடித்த மாவீரர்; தமதாணைக்குட்பட்டிருந்த பல்வேறு மக்களையும் ஒன்றாக்கி இணைத்த பெருவீரர். வசதிகள் குறைந்த நிலையிலும் அவர்தம் படை வீரர்கள் நம்பிக்கையிழக்காது அவரைப் பின் தொடர்ந்தனர்.

ஆனிபால் கார்த்தேசில் (Carthage) பிறந்தார். அவர் தந்தையார் அமில்க்கார் பார்க்கா என்பாரும் ஓர் இராணுவத் தலைவரே ஆவார். அமில்க்கார் பார்க்கா, உரோமானியரைத் தம் நகரத்தின் பகைவரெனக் கருதி வெறுத்தார். உரோமாபுரிக்கெதிராகவே இருக்க வேண்டுமெனத் தம் மகனைச் சூளுரை எடுக்க வைத்தவராவர் என்று மரபுகள் கூறும். பிள்ளைப்பருவத்தில் ஆனிபால் தம் தந்தையாருடன் இசுபெயின் நாடு சென்றார். அப்போது அந்நாடு கார்த்தேசின் ஒரு பகுதியாக இருந்தது. ஆனிபால் இளைஞராயிருந்தபோது இசுபானிய குலத்திற்கெதிராகப் படைநடத்திச் சென்றார். அதனால் இசுபெயினில் கார்த்தேசின் அதிகாரத்தை விரிவாக்க வழி பிறந்தது. அவர் இருபத்தைந்தாண்டு நிரம்பிய போதே இசுபெயினில் கார்த்தேசின் படைத் தலைவராகப் பொறுப்பேற்றார்.

ஆனிபாலின் படை ஆற்றலையும் பேரரசை விரிவாக்கும் ஆற்றலையும் கண்ணுற்றதால் உரோமானியருக்கும் கார்த்தேசு நாட்டினருக்கும் கி.மு. 220-



ஆனிபால்

ஆம் ஆண்டில் போர் மூண்டது. உரோமாபுரியின் இசுபானியத் துணையாய் நின்ற சகுண்டம் என்ற பகுதியை அவர் கி.மு. 219-ஆம் ஆண்டில் தாக்கினார். உரோமாபுரி கார்த்தேசின் மீது போர் தொடுத்தது. இப்போரையே இரண்டாம் பியூனிக்குப் போர் என்பர். இது கி.மு. 218-இல் நடைபெற்றது.

**ஆனிபாலின்படையெடுப்புகள்:** போரின் தொடக்கத்தில் ஆனிபால் துணிச்சலான சூழ்ச்சித் திறனைக் கையாண்டு உரோமானியரைத் திகைப்படையச் செய்தார். இசுபெயினிலிருந்து 60,000 படைவீரர்களுடன் புறப்பட்ட அவர், பிரான்சில் பிரனிசு மலைத் தொடரையும் இத்தாலியின் வடபால் அமைந்துள்ள ஆல்ப்சு மலைத் தொடரையும் கடந்து உரோமானிய இத்தாலியில் நுழைந்தார். பனியும் குளிரும் மலைவாழ் மக்களின் கடும் தாக்குதலும் ஆல்ப்சு மலை மீது பல கார்த்தசீனியர்களைப் பலி வாங்கின. வட இத்தாலியில் போ ஆற்றுப்பள்ளத் தாக்கை நெருங்கியபோது அவரிடம் 26,000 படைவீரர்களும் 6000 குதிரைகளுமே கைவசமிருந்தனர். தம்முடன் ஒரு சில யானைகளையும் அவர் கொண்டு வந்தார். பின்னர் அவர் 10,000 முதல் 15,000 வரை காலியப் படைவீரர்களைத் தம் படையில் சேர்த்துக் கொண்டார். போ பள்ளத்தாக்கில் வாழ்ந்த காலியர்கள் உரோமாபுரியின் எதிரிகளாக விளங்கியவர்கள்.

சிசிலியிலிருந்து கொண்டுவரப்பெற்ற உரோமானியப் படை, ஆனிபாலின் முன்னேற்றத்தைத் தடுக்க முயன்றது. ஆனால், சூழ்ச்சித் திறன் மிக்க அவர் அவர்களை மறைந்திருந்து தாக்கி திரெபியா ஆற்றங்கரைப் போரில் தோற்கடித்தார். அவர் கி.மு. 217-ஆம் ஆண்டில் நடு இத்தாலியின்மீது பாய்ந்தார். அங்கு, அவர் உரோமானியப் படையைத் தம்மைத் தொடர்ந்து வரும்படி தூண்டி மறைந்திருந்து, திரேசிமீனோ ஏரிக்கரையில் உரோமானியரை அழித்தார்.

தென்இத்தாலியில் உள்ள கானீ என்னுமிடத்தில் கி.மு. 216-ஆம் ஆண்டில் தம் படையைவிட உரோமானியப் படைகள் மிகுதியாக உள்ளதை அவர் அறிந்தார். சூழ்ச்சித்திறன் மிக்க அவர் தம் படைகளைப் பிறை வடிவில் நிற்க வைத்தார். உரோமானியர் அவரைத்தாக்கியபோது பிறைவடிவில் நின்ற படையின் நடுப்பாகம், தாக்குதலுக்காளாகி புறமுதுகுக் காட்டிப் பின்வாங்குவதாகப் போக்குக் காட்டியது. அப்போது வளைவின் இருமருங்கிலுமிருந்த குதிரைப்படை உரோமானியர்களைச் சுற்றி வளைத்து அழித்து விட்டது. அன்று நடந்த ஒரு நாள் போரில் கார்த்தசீனியர்கள் 50,000 உரோமானியர்களைக் கொன்று தீர்த்தனர்.

கானீ போருக்குப் பின்னர் ஆனிபாலின் எதிர்காலம் நன்கு இருக்கும் என்று எதிர்பார்த்தனர். ஆனால், விரைவில் அவருக்கும் கார்த்தேசுக்கும் பொல்லாதகாலம் பிறந்தது. தென்இத்தாலி, மாசிடோனியா சிராகூசு, சிசிலி போன்ற பகுதிகளில் ஆனிபாலுக்குத் துணைவர்கள் கிடைத்தனர். ஆனால் அவர் துணைவர்களுள் சிலர் தத்தம் சிக்கல்களில் கவனம் செலுத்தியமையால், ஆனிபாலுக்கு அவர்களால் உதவமுடியவில்லை. நடு இத்தாலியில் இருந்த உரோமானியர்களுக்குத் துணைவர்களும் பெரும் படை பலமும் இருந்தபடியால், அவர்களால் ஆனிபாலுக்குப் பக்கபலமாகச் சேரும் படைகளைத் தடுக்க முடிந்தது. இதனிடையில் உரோமானியப் படைத் தலைவரான சிப்பியோ என்பார் கார்த்தசீனியர்களை இசுபெயினிலிருந்து விரட்டியடித்தார். சிப்பியோ கி.மு. 204-இல் வடஆப்பிரிக்காவின் மீது படையெடுத்தார். இறுதியாகச் சிப்பியோ ஆனிபாலை வட ஆப்பிரிக்காவில் சாமா (Zama) என்னுமிடத்தில் கி.மு. 202-இல் தோற்கடித்தார். போர் கி.மு. 202 இல் முடிவுற்றது. உரோமானியர் வென்றனர்.

தம்மைத்தாமே ஆளும் உரிமையைப் போருக்குப் பின் உரோமாபுரி கார்த்தேசுக்கு வழங்கிற்று. ஆனிபால் அரசாங்கத்தைத் தலைமையேற்று நடத்தினார். மீண்டும் அவர் தலைமையில் கார்த்தேசு புத்துயிர் பெற்று விரைவாக முன்னேறியது. ஆனால், உரோமானியர் அவரைக் கீழ்ப்படியக் கோரப் போவதாகக் கேள்வியுற்ற ஆனிபால், கி.மு. 195-ஆம் ஆண்டு கிழக்குநோக்கித் தப்பியோடினார். சிரியாவை ஆண்ட மூன்றாம் ஆண்டியாக்கசு அவருக்குப் புகலிடம் கொடுத்தார். மூன்றாம் ஆண்டியாக்கசு

உரோமாபுரியுடன் போருக்குப் போகும் தருணத்தில் இருந்தார். ஆண்டியாக்கசு ஆனிபாலைப் பயன்படுத்திக்கொள்ளவில்லை. அவர் கி.மு. 189-ஆம் ஆண்டில் தோற்றார். ஆனிபால் பித்தினியாவுக்கு ஓடினார். பித்தினியா என்பது துருக்கி நாட்டின் பண்டைய பெயர். உரோமானியர் ஆனிபாலைக் கீழ்ப்படிய வேண்டுமென்று கோரியபோது ஆனிபால் தற்கொலை செய்துகொண்டார்.

**ஆனே, மாதவ சிரீஅரி (கி.பி. 1880 1968)** என்பார் மகாராட்டிர மாநிலத்தைச் சார்ந்த விதர்ப்பம் (**Vidarbha**) என்னும் பகுதியில் வாழ்ந்த அரசியற் பேரறிஞர்.



ஆனே

இவர்தம் மூதாதையர் இன்றைய ஆந்திரப் பிரதேசத்தின் பகுதியான தெலிங்கானாவில் வாழ்ந்த அந்தண மரபினர். இவர் தந்தையார் சிரீஅரி ஆனே (**Shrihari Aney**); தாயார் இருக்மாபாய் (**Rakhmabai**). சிரீஅரி புகழ்பெற்ற வேத பண்டிதர்.

ஆனே இருக்குவேத சம்கிதையையும் வேள்வி செய்யும் சடங்கு முறைகளையும் தம் தந்தையாரிடம் கற்றுக்கொண்டார். இவருக்குக் கி.பி. 1898 ஆம் ஆண்டு திருமணம் நடைபெற்றது. மனைவியின் பெயர் யமுனாபாய். இந்த அம்மையார் இளம் வயதிலேயே நான்கு மக்களுக்குத் தாயாகி 1925 ஆம் ஆண்டில் காலமானார்.

ஆனே தம் உயர்நிலைப் பள்ளிப் படிப்பைச் சாந்தா (**Chanda**) என்னும் ஊரில் முடித்தார். இளங்கலைப் (**B.A.**) பட்டத்தை நாகபுரிப் பல்கலைக் கழகத்தில் பெற்றார். கல்கத்தாவில் 1907 ஆம் ஆண்டு சட்டப்படிப்பை முடித்து இயோத்மால் (**Yeotmal**) என்னும் நகரத்தில் வழக்குரைஞராக வாழ்வைத் தொடங்கினார். அப்போது இவர் பொதுப் பணிகளிலும் ஈடுபட்டார்; அரிகிசோர் (**Harikishor**) என்னும் வார இதழில் எழுதத் தொடங்கினார். இந்திய நாட்டின் முழு விடுதலையை இந்த ஏடு வலியுறுத்திப் பரப்பியது. இந்தியக் குற்றவியல் சட்டத்தின்படி இவர் எழுதிய கட்டுரைகளுக்காகத் தண்டிக்கப்பட்டதுடன் ஓராண்டுக் காலத்திற்கு வழக்குரைஞராகப் பணியாற்றக் கூடாதெனத் தடைசெய்யவும் பட்டார்.

ஆனே 1915 ஆம் ஆண்டில் திலகரின் தன்னாட்சிக் குழு இயக்கத்தில் (**Home Rule Movement**) தீவிரமாக ஈடுபாடு கொண்டார். பின்னர், தன்னாட்சிக் குழுவின் துணைத் தலைவராகவும், திலகரின் நம்பிக்கைக்கு உரியவராகவும் ஆனார். மேலும் திலகர் தொடங்கிய கேசரி (**Kesari**) என்னும் இதழை வெளியிடும் பொறுப்பையும் ஏற்றார்.

திலகரால் அமைக்கப்பட்ட காங்கிரசு மக்களாட்சிக் கட்சி (**Congress Democratic Party**) மாண்ட்டுபோர்டு சீர்திருத்தங்களை (**Montford Reforms**) நடைமுறைப்படுத்த முடியுமா என்று சந்தேகப்பட்டது. காந்தியடிகளின் ஒத்துழையாமைக் கொள்கையை அக்கட்சி ஏற்க மறுத்தது. திலகர் 1920 இல் காலமான பின்னர், ஒத்துழையாமை இயக்கத்திற்கெதிரான இயக்கமொன்றை ஆனே தலைமை தாங்கி நடத்தினார். இவரது கட்சியின் அனைத்து முயற்சிகளும் இறுதியில் தோல்வியுற்றன. கல்கத்தாவில் கூடிய சிறப்புக் காங்கிரசு மாநாட்டில் ஒத்துழையாமை இயக்கம் குறித்த தீர்மானம், பெருவாரியான வாக்குகளைப் பெற்று நிறைவேறியது. ஒத்துழையாமை இயக்கத்திற்கு எதிராக ஆனே செயற்பட்டாரெனினும், கதர், மதுவிலக்குப் போன்ற ஆக்கத்திற்குரிய ஏனைய நடவடிக்கைகளை இவர் முழுமையாக ஏற்று அயராது உழைத்தார். காந்தியடிகளின் அறைகூவலை மனமுவந்து ஏற்றுக்கொண்டதற்கு அடையாளமாக ஓராண்டுக் காலத்திற்கு இவர் தம் வழக்குரைஞர் தொழிலை நிறுத்தி வைத்தார்.

இலாலா இலசபதிராயும், பண்டித மதன்மோகன மாளவியாவும் 1926 ஆம் ஆண்டுத் தேர்தலுக்குப்பின் சட்டமன்றப் பேரவையில் தேசியக் கட்சியை உருவாக்கியபோது, ஆனே அதன் தலைவராக நியமிக்கப்பட்டார். சைமன் என்பாரின் தலைமையில் 1928-இல் வந்த குழுவுக்கெதிரான இயக்கத்தை ஆனே தலைமை தாங்கி நடத்தினார். அனைத்துக் கட்சிகள் மாநாட்டில் அமைக்கப்பட்ட இந்தியஅரசியல் அமைப்புச்

சீர்திருத்தங்கள் குறித்த மோதிலால் நேரு குழுவின் அறிக்கையை வரைவதில் இவர் சிறப்பாகத் தொண்டாற்றினார்.

இந்தியத் தேசியக் காங்கிரசு இயக்கத்தில் இவர் பல பொறுப்புகளை வகித்தார். அனைத்து இந்தியக் காங்கிரசுக் குழுவின் உறுப்பினராகவும், (1920-30) காங்கிரசு நிருவாகக் குழுவின் உறுப்பினராகவும், (1924-25) விதர்ப்ப மாநிலக் கங்கிரசுக் குழுவின் தலைவராகவும் (1930-ஆம் ஆண்டு வரையிலும்) இவர் பொறுப்பு வகித்தார்.

உப்பு வரிக்கெதிராகக் காந்தியடிகள் தண்டிப் பயணத்தைத் தலைமையேற்று நடத்தியபோது, சட்டமன்றப் பேரவையின் உறுப்பினர் பதவியை இவர் துறந்தார். பின்னர்க் காட்டுச் சத்தியாக்கிரகம் (Jungle Satyagraha) என்னும் போராட்டத்தை இவரே ஏற்பாடு செய்தார். அரசுக்குச் சொந்தமான பாதுகாக்கப்பட்ட காடுகளில் சிறிதளவு புல்லை வெட்டிச் சத்தியாக்கிரகம் செய்தார். இதனால் இவருக்கு ஆறு மாதம் சிறைத் தண்டனை வழங்கப்பட்டது.

காந்தி-இர்வின் ஒப்பந்தத்திற்கான பேச்சுகள் நடந்துகொண்டிருந்தபோது, தமக்கு உறுதுணையாக இருக்குமாறு காந்தியடிகள் ஆனேயைத் தில்லி வருமாறு அழைத்தார். இந்தியத் தேசியக் காங்கிரசுக் கட்சியின் நிகழ்நிலைத் தலைவராக (Acting President) 1933-இல் நியமிக்கப்பட்டார்.

திரிபுராக் காங்கிரசின் போது (1939) காங்கிரசு நிருவாகக் குழு, சுபாசு சந்திரபோசுக்கு எதிராகக் கொண்டு வந்த தீர்மானத்தை இவர் எதிர்த்தார். இரண்டாம் உலகப்போர் 1939-இல் மூண்டபோது சட்டமன்றப் பேரவை உறுப்பினர் பதவியை இவர் துறக்கவில்லை. மேலும், 1941-ஆம் ஆண்டில் இந்திய அரசப் பேராளரின் நிருவாகக் குழுவின் உறுப்பினராகப் பொறுப்பேற்று, வெளிநாடுகளில் வாழும் இந்தியர்கள் பற்றிய துறையின் பொறுப்பாளராக்கப் பட்டார். அப்போது அரசப் பேராளராக இருந்த இலின்லித்கோ பிரபு, காந்தியடிகளை ஆகாகான் (Agakhan) மாளிகையிலிருந்து விடுதலை செய்யுமாறு இவர் வேண்டியதை ஏற்க மறுத்தார். அதனால் ஆனே மத்திய நிருவாகக் குழுவின் உறுப்பினர் பதவியைத் (1943) துறந்தார். பின்னர், இவர் இந்தியத் தூதராக (1943-47) இலங்கைக்கு அனுப்பப்பட்டார். பண்டித சுவகர்லால் நேருவின் கருத்தினை ஏற்றுக்கொண்டு, அரசியல் நிருணய அவையின் உறுப்பினராகப் பொறுப்பேற்றபோது இந்தியத் தூதர் பதவியைத் துறந்தார். பின்னர்ப் பீகார் மாநில ஆளுநராக இவர் 1948-இல் அமர்த்தப்பெற்றார். அன்றியும், இந்திய நாடாளுமன்றப் பேரவையின் (Lokh Sabha) உறுப்பினராக 1959-முதல் 1966 வரை நீடித்தார்.

வேத இலக்கியங்களிலும், வடமொழிச் செம்மொழி இலக்கியங்களிலும் ஆனே தலைசிறந்த வல்லுநர். இவர் உலோகமானிய பாலகங்காதர திலகரைப் பின்பற்றிய சீரிய தொண்டர். பொதுவாழ்விலிருந்து ஓய்வுபெற்ற பின்னர், திலகரின் வாழ்க்கை வரலாற்றை வடமொழியில் இதிகாசச் செய்யுள் வடிவில் 11,000 செய்யுட்களில் எழுதினார். இவர் கடுமையான உழைப்பாளி; சமய ஈடுபாடு மிக்கவர்; சமூகச் சீர்திருத்தக்காரர்; சீரிய தேசியவாதி; இந்தியாவின் பண்பாட்டு மரபு குறித்துப் பெருமிதம் கொண்ட பெருந்தகையாளர்; சிந்தனைச் சிற்பி; ஒழுக்கநெறியில் கட்டுப்பாடு குலையாதவர்; இந்தியச் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபாடு கொண்டு உழைத்தவர்; அரசியல் அமைப்புச் சட்ட வல்லுநர்; திலகர், காந்தியடிகள், பண்டித நேரு போன்றவர்களிடம் பெரும் பதவிகளை வகித்த பெருமையுடையவர். நேர்மையான கருத்து வேறுபாடுகள் கொண்டிருந்தபோதும், இவர் மேற்கூறிய தலைவர்களுடன் நெருக்கமான தொடர்பினைக் கொண்டிருந்தார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இந்தியக் குடியரசுத் தலைவர் 1968-ஆம் ஆண்டு சனவரி மாதம் 26-ஆம் நாள் இவருக்குப் 'பத்ம விபூசன்' (Padmavibhushan) என்னும் விருதினை வழங்கிப் பாராட்டினார். அதே ஆண்டில் தம் 88-ஆம் வயதில் இவர் காலமானார். வி.டி.தி.

**ஆனை – ஐயா** கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் தஞ்சையில் வாழ்ந்த இரு இசைப்புலவர்களாவர். இவ்விருவரும், தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னர் சரபோசிக் காலத்தில் (கி.பி.1800-கி.பி. 1832) அவருடைய அரசவையில் அரசவைப் புலவர்களாகத் திகழ்ந்தனர். தஞ்சைக்கருகிலுள்ள வையைச்சேரி என்னுமூரில் பிறந்த இவ்விருவரும் உடன் பிறந்தோராவர்; அந்தண மரபினர். ஆனை ஐயர், ஐயாவையர் எனப் பெயர் பெற்ற இவர்களை மக்கள் 'ஆனை–ஐயா' என்று அழைத்தனர். தமிழ், தெலுக்கு, வடமொழி ஆகிய மொழிகளிலும், இசையிலும் புலமை மிக்கவர்கள். தமிழிலும் தெலுங்கிலும் உமாதாசன் என்னும் முத்திரை அமையப் பல இசைப்பாடல்களை இயற்றியுள்ளனர். வையைச்சேரி, திருவையாறு ஆகிய இடங்களிலுள்ள இறைவன்மீது பல இசைப் பாடல்கள் இயற்றியுள்ளனர். இசையுலகில் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் பெருமை பெற்று விளங்கிய மகாவைத்திய நாதையர் தொடக்க நிலையில் இவர்களிடம் இசைப்பயிற்சி பெற்றார்.

**ஆனைக்கா** சோழ நாட்டிலுள்ள தேவாரப்பாடல் பெற்றதலங்களுள் ஒன்று. இவ்வூர் திருச்சிராப்பள் ளிக்கு வடக்கே ஒரு கல்தொலைவில் உள்ளது; காவிரிக் கும் கொள்ளிடத்திற்கும் இடைப்பட்ட பகுதியில் அமைந்துள்ளது. இது பஞ்சபூதத் தலங்களில் (அப்பு) நீர்த்தலம்; வெண்நாவல் (சம்பு) மரத்தடியில் இறை வன் எழுந்தருளியுள்ளதால் சம்பு கேசுவரம் என்னும் பெயர் பெற்றது; மிகப் பெரிய கோயில். இறை வன் பெயர் சம்புகேசுவரர்; இறைவி – அகிலாண்ட நாயகி. அம்பிகையின் கோயில் தனியாக உள்ளது. சிலந்தியும் ஆனையும் பூசித்த இத்தலம் விராட்புருட னின் சுவாதிட்டானத் தலமாகக் கருதப்படுகிறது. கோச் செங்கட் சோழ மன்னன் கட்டிய இத்திருக் கோயிலில், ஐந்து திருச்சுற்றுகள் உள்ளன. சிவபெரு மான் சித்தராக வந்து வேலைக்குத் தகப் பொன்னா கும்படி திருநீற்றையே கூலியாகக் கொடுத்துக் கட்டுவித்ததாகக் கூறப்படும் 'திரு நீறிட்டான் மதில்' சிறப்பானது. மூவரும் பாடிய இத்தலத்தை அருண கிரியார் தம் திருப்புகழில் போற்றியுள்ளார். காள மேகப் புலவர் அருள்பெற்றது இத்தலத்தில்தான். இத்தலத்தருகில் திருவரங்கம் உள்ளது. இரா. கி.

**ஆனைகுண்டி** ஓர் ஊரின் பெயர். யானைப் பள்ளம் என்பது இதன் பொருள். விசயநகரப் பேரர சில் விசயநகரத்தின் ஒரு பகுதியை ஆனைகுண்டி என்றனர். இக்காலத்தில் இதை அம்பி என்று கூறு கிறார்கள். இங்குத்தான் விசயநகரம் புதிதாக நிறு வப் பெற்றது. ஒரு காலத்தில் இது சமண சமய மையமாக இருந்தது. அரிஅரர்-புக்கர் என்னும் இரு சகோதரர்கள் இவ்விடத்தில் இந்துப் பேரரசு ஒன்றினை உருவாக்கி, முசுலிம் படையெடுப்பாள ரைத் தடுத்து நிறுத்தும் எண்ணத்துடன் அமைக்கப் பட்டவிசயநகரப்பேரரசு,இங்குத்தான் கால்கோளிடப் பெற்றது. மாதவ வித்தியாரண்யர் என்னும் ஆசா ரியர் இவர்களுக்கு உறுதுணையாக இருந்தார்.

**ஆனைமங்கலச் செப்பேடுகள்** சோழர் வரலாற்றை அறிய உதவும் செப்பேடுகள். ஆனை



ஆனைமங்கலச் செப்பேடுகள்

மங்கலச் செப்பேடுகள் பெரியவை, சிறியவை என வும், பெரிய இலெய்டன் செப்பேடுகள், சிறிய இலெய் டன் செப்பேடுகள் எனவும் சொல்லப்படுகின்றன. ஆனைமங்கலம் என்னும் சிற்றூரைப் பள்ளிச்சந்தமாக அளித்ததாக இச்செப்பேடுகள் கூறுவதால், ஆனை மங்கலச் செப்பேடுகள் என்றும், இந்தியாவில் தச்சுக் குடியேற்றங்களை அமைத்த தச்சுக்காரர்களின் மூலம் இச்செப்பேடுகள் ஆலந்து நாட்டிலுள்ள இலெய்டன் அருங்காட்சியகத்திற்குக் கொண்டு செல்லப்பட்டதால் இலெய்டன் செப்பேடுகள் என்றும் கூறப்படுகின்றன.

கடார வேந்தனாகிய மாறவிசயதுங்கவர்மன் நாகப்பட்டினத்தில் தன் தந்தை சூடாமணிவர்மரின் பெயரில் 'சூடாமணி வர்ம விகாரம்' என்னும் புத்த விகாரைக் கட்டுவதற்கு முதலாம் இராசராச சோழன் தனது 21-ஆம் ஆட்சி ஆண்டில் அனுமதி அளித்ததுடன் 'ஆனை மங்கலம்' என்னும் சிற்றூரைப் பள்ளிச் சந்தமாகவும் அளித்தான். இப்புத்த விகாரம் முதலாம் இராசேந்திரன் காலத்தில் முடிவுற்றதால், இவன் தன் தந்தையின் அறக்கட்டளையைச் செப் பேடுகளில் பொறித்தான். இவையே 'ஆனை மங்க லச் செப்பேடுகள்' (பெரியவை) எனக் குறிக்கப் பெறுகின்றன. இவை 21 தகடுகளைக் கொண்டவை. 21 செப்பேடுகளுள் முதல் ஐந்து செப்பேடுகள் வட மொழியில் கிரந்த எழுத்திலும் மீதமுள்ள 16 செப் பேடுகள் தமிழ் மொழியில் தமிழ் எழுத்திலும் எழுதப் பட்டுள்ளன. இச்செப்பேடுகள் ஒரு பெரிய வளையத் தில் கோக்கப் பட்டுச் சோழ இலச்சனையுடன் காணப்படுகின்றன. இவை சோழ மரபுவழிப் பட்டி யலையும் அவ்வரசர்களின் வெற்றிகளையும் கூறுகின் றன.

**ஆனைமங்கலச் செப்பேடுகள் (சிறியவை)** முத லாம் குலோத்துங்க சோழன் ஆட்சிக் காலத்தில் வெளியிடப்பெற்றன. இச்செப்பேடுகளும் இலெய் டன் அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளன. இவ் விரண்டிற்கும் வேறுபாடு தெரியுமாறு, இதனைச் சிறிய இலெய்டன் செப்பேடுகள் எனக் குறிப்பர். முதலாம் இராசராசன் காலத்தில் அளிக்கப்பட்ட ஆனைமங்கலச் சிற்றூரின் பள்ளிச்சந்த உரிமை முடி வுற்றதால், அதனைப் புதுப்பிக்கும் பொருட்டு இச் செப்பேடுகள் முதலாம் குலோத்துங்கன் காலத்தில் அளிக்கப்பட்டன.

**ஆனை மலை** தமிழ்நாட்டில் மதுரை மாவட்டத்தில் உள்ள ஒரு குன்று. இக்குன்று மதுரை நகரிலிருந்து 13 கி.மீ. தொலைவில் மதுரை–மேலூர் பெருவழியில் ஒத்தக்கடை என்னும் சிற்றூருக்கு அரு கில் உள்ளது. யானை ஒன்று தன் துதிக்கையை நீட் டிப் படுத்திருப்பது போன்ற தோற்றம் கொண்டுள்ள

மையின் இது ஆனைமலை எனப்பட்டது. இங்கிருந்த சமணத் துறவிகள் தங்களது மந்திரத் திறத்தால் ஒரு யானையை உருவாக்கிச் சைவம் தழைத்தோங்கிய மதுரை நகரை அழிக்க முனைந்தனர். அந்த யானையின்மீது சிவபெருமான் அம்பொன்றினை எய்து அதனை அசையாததொரு மலையாக்கிவிட்டார் என்று திருவிளையாடற் புராணம் கூறுகிறது. இம்மலையில் உள்ள சில குகைகளில் பிராமி வடிவக் கல்வெட்டுகள் பல உள்ளன. வரலாற்றுச் சிறப்புடைய இம்மலையில் நரசிம்மப் பெருமானுக்கு ஒரு குடைவரை கோயிலும், முருகப் பெருமானுக்கு ஒரு குடைவரை கோயிலும் உள்ளன. இதனருகில் சமண தீர்த்தங்கரர் படிமங்களும் சமண முனிவர்கள் வாழ்ந்ததற்குரிய அறிகுறிகளும் கல்வெட்டுகளும் உள. மலைக் குகைகளில் சமணப் படுக்கைகளும், கல்வெட்டுகளும் உள. நரசிம்மர் குடைவரை கோயில், பாண்டிய மன்னன் நெடுஞ்சடையன் பராந்தகனின் முதலமைச்சனான மூவேந்த மங்கலப் பேரரையன் ஆகிய மாறன் காரி என்பானால் குடையப்பட்டது. இது முற்றுப் பெறுமுன் மாறன்காரி இறந்தான். எனவே இவன் தம்பி மாறன் எயினன் இதனை முற்றுப்பெற வைத்தான். இவ்விரு குடைவரைகளும் கி.பி. 8-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. இக்குகைக் கோயிலிலுள்ள கல்வெட்டொன்று தமிழும் வட்டெழுத்தும் கலந்து எழுதப்பட்ட இருமொழிக் கல்வெட்டாக இருக்கிறது. இங்கிருக்கும் பல தூண்கள் கூடிய மண்டபம், கோபுரம் ஆகியவை பிற்காலத்தில் கட்டப்பட்டவையாகும். இதன் மூலச் சன்னிதி ஒரு குகையாகும். இக்குகையில் இரண்டு பெரிய தூண்களும் சுவருடன் ஒட்டிய தூண்களும் இருக்கின்றன. திருப்பரங்குன்றம் கோயில் போன்று இங்கிருக்கும் குகையும் மண்டபத்திற்குப் பின்புறமுள்ளது.

இதற்கு அருகில் இலாடமுனிக் கோயில் உள்ளது. இக்கோயிலும் நரசிம்மர் குகைக் காலத்தைச் சார்ந்ததேயாகும்; இக்குகைக் கோயில் முருகனையும் அவர்தம் துணைவியாரையும் கொண்ட கோயிலாகும். படிக்கட்டுகளுடன் கூடிய மண்டபத்தின் பின்னால் முருகன்சன்னிதி உள்ளது. மண்டபம் இரு பெரிய தூண்களுடனும் அவற்றுடன் ஒட்டிய தூண்களுடனும் உள்ளது. இக்குகைக் கோயிலிலுள்ள இரண்டு குள்ளமான தெய்வ கணங்கள், கூரையில் உள்ள சிற்ப வேலைப்பாடு அமைந்த பிதுக்கத்தைச் சிலையுருவத் தூண்கள் போன்று தாங்கி உள்ளன. மூல அறை நுழைவாயிலின் இருபக்கங்களிலும் மயிலும் சேவலும் சிலைவடிவில் உள்ளன. இங்கு நன்றாகச் செதுக்கப்பட்ட அடியார்களின் சிற்பங்கள் இறைவனுக்குப் பூமாலை சாத்துவதுபோன்று செதுக்கப்பட்டுள்ளன. முருகன் தம் தேவி தேவசேனையுடன் அமர்ந்த நிலையில் உள்ளார்.



ஆனைமலை, சுப்பிரமணியர் குகைக் கோயில் நுழைவாயில்

 தமிழ் நெடுங்கணக்கில் மூன்றாம் உயிரெழுத்து; குற்றெழுத்துகள் ஐந்தனுள் இரண்டாவது.

**ஒலி:** ஒலிப்பு முறையில் மேல் (**High**), முன் (**Front**), இதழ்குவியா (**Unrounded**), ஒலிப்புடை (**Voiced**), நெகிழ் (**Lax**), குற்றுயிர் (**Short Vowel**) எனக் குறிப்பர். இவ்வெழுத்து, முதல் இடை கடையென மொழி மூவிடத்தும் வரும்.

**வடிவம்: பிராமி:** இன்றைய வழக்கில் ஈ என நெட்டெழுத்தாக எழுதப் படுவது பழங்காலத்தே ·|· என்ற வடிவில் எழுதப்பெற்றது. அக்காலத்தே இவ்வெழுத்துக்குரிய ஒலிப்பு, குறிலாகவும் நெடிலாகவும் இருந்துள்ளது. அதாவது, குறில், நெடிலாகிய இரண்டொலிப்புகட்கும் ·|· என்னும் ஒரெழுத்தினையே பயன்படுத்தியுள்ளனர். இகரத்தைக் குறிக்க முப்பாற் புள்ளி இடும் வழக்கு கி.பி. 1, 2–ஆம் நூற்றாண்டுகளிலிருந்தே தொடங்குகிறது. தொல்காப்பியர் முப்பாற் புள்ளி எனக் குறிப்பது '·|·' என்ற வடிவமேயாகும். கோட்டினையும் புள்ளியெனல் பழைய மரபு. தமிழகத்தே காணப்படும் பல கல்வெட்டுகளில் காணப்படும் இம்முறைகளைக் கீழே காண்க:

மாங்குளம் கல்வெட்டு
(கி.மு. 2-1. நூ.) (=இ) ·|·

மாங்குளம் கல்வெட்டு
(கி.மு. 2-1. நூ.) (=ஈ) ·|·

திருவாதவூர்க் கல்வெட்டு
(கி.மு. 2-1. நூ.) (=இ) ·|·

கொங்கர் புளியங்குளம் கல்வெட்டு
(கி.மு. 2-1. நூ.) (=ஈ) ·|·

கீழ்வளவுக் கல்வெட்டு
(கி.மு. 2-1. நூ) (=இ) ·:·

மேட்டுப்பட்டிக் கல்வெட்டு
(கி.மு. 2-1. நூ.) (=இ) ·|·

சித்தன்னவாசல் கல்வெட்டு
(கி.மு. 2-1. நூ.) (=ஈ) ·|·

சித்தன்னவாசல் கல்வெட்டு
(கி.மு. 2-1. நூ.) (=இ) ·|·

அழகர்மலைக் கல்வெட்டு
(கி.மு. 2-1. நூ.) (=இ) ·|·

திருப்பரங்குன்றம் கல்வெட்டு
(கி.பி. 1-2. நூ.) (=ஈ)

யானைமலைக் கல்வெட்டு
(கி.பி. 1-2. நூ.) (=இ)

புகழூர்க் கல்வெட்டு
(கி.பி. 3-4. நூ.) (=இ) ·|·

பூலாங்குறிச்சிக் கல்வெட்டு
(கி.பி. 4-5. நூ.) (=இ)

**வட்டெழுத்து:** வட்டெழுத்துகளின் வளர்ச்சிப் போக்குகளைக் கொண்டு கி.பி. 950 வரையிலான வற்றை முற்கால வகையென்றும், கி.பி. 14–ஆம் நூற்றாண்டு வரையிலானவற்றை இடைக்கால வகையென்றும், கி.பி. 18–ஆம் நூற்றாண்டு வரையிலானவற்றைப் பிற்கால வகையென்றும் பகுப்பர்.

இவ்வளர்ச்சிப் போக்கில் ... ...

இகரவெழுத்து அடைந்த நிலைகளைக் கீழே காணலாம். இவை பெரும்பான்மையும் பாண்டியர் கல்வெட்டுகளில் காணப்படுபவை.

(i) முற்காலம் (கி.பி. 950 வரை)

(சு. கி.பி. 760) சடிலவர்மன் பராந்தகன் நெடுஞ்செழியன் செப்பேடுகள் (சென்னை, அருங்காட்சியகம்). ...

(சு. கி.பி. 760) சடிலவர்மன் பராந்தகன் நெடுஞ்செழியன் யானைமலைக் கல்வெட்டு. ...

(சு. கி.பி 760) சடிலவர்மன் பராந்தகன் நெடுஞ்செழியன் வேள்விக்குடிச் செப்பேடுகள். ...

(கி.பி. 870) பாண்டியன் வரகுணன் ஐவர்மலைக் கல்வெட்டு. ...

(கி.பி. 870) பாண்டியன் வரகுணன் – திருச்செந்தூர்க் கல்வெட்டு.

(கி.பி. 10-ஆம் நூ.) பாண்டியன் இராசசிம்மன் - சின்னமனூர்ப் பெரிய செப்பேடுகள். ...

(ii) இடைக்காலம் (கி.பி. 1350 வரை)

(கி.பி. 939) முதலாம் பராந்தகன் (சோழன்) - யானைமலைக் கல்வெட்டு. ...

(கி.பி. 11-ஆம் நூ.) பாசுகரரவிவர்மன் - வேணாடு - திருக்கடித்தானக் கல்வெட்டு. ...

(கி.பி. 1188) உதயமார்த்தாண்டவர்மன் - ...

(கி.பி. 1188) கொல்லூர் மடச் செப்பேடுகள். ...

(iii) பிற்காலம் (கி.பி. 18-ஆம் நூ. வரை)

(சு. கி.பி. 15-ஆம் நூ.) கல்பாத்திக் கல்வெட்டு. ...

(கி.பி. 1663) பாளையம் செப்பேடுகள் (கொச்சி அரசன் - தச்சுக் கிழக்கிந்தியக் கம்பெனி). ...

(கி.பி. 1770) மீஞ்சிறை மடச் செப்பேடுகள். ...

**தமிழ்:** தமிழ் எழுத்து மரபினையும் முற்காலம், இடைக்காலம், பிற்காலம் என முப்பகுப்புகளாகக் குறிப்பர். கி.பி. 7-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 9-ஆம் நூற்றாண்டின் இறுதிவரை காணப்படுவனவற்றை முற்காலத்தனவென்றும், கி.பி. 10-11 ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 12-13-ஆம் நூற்றாண்டு வரை காணப்படுவனவற்றை இடைக்காலத்தனவென்றும், அவற்றிற்குப் பின் வருவனவற்றைப் பிற்காலத்தனவென்றும் குறிப்பர். இவ்வளர்ச்சிப் போக்குகளைக் கீழே காண்க:

முற்காலம் (கி.பி. 7- கி.பி.9-ஆம் நூ.)

(கி.பி. 7-ஆம் நூ. முற்பகுதி) பல்லவன் - மகேந்திரவர்மன் I- வல்லம் பாறைக் கல்வெட்டு. ...

(சு. கி.பி. 755) பல்லவன் நந்திவர்மன் - காசாக்குடிச் செப்பேடுகள் (அழகோவிய எழுத்து). ...

(சு. கி.பி. 795) பல்லவன் நந்திவர்மன் - திருவல்லம் கல்வெட்டு. ...

(சு.கி.பி. 795) பெரும்பிடுகு முத்தரையன்/சுவரன் மாறன் - செந்தலைக் கல்வெட்டு (அழகோவிய எழுத்து). ...

(கி.பி. 9-ஆம் நூ. இறுதி) நிருபதுங்கவர்மன் - இலால்குடிக் கல்வெட்டு. ...

இடைக்காலம் (கி.பி. 10-11 முதல் கி.பி. 12-13-ஆம் நூ. வரை)

(கி.பி. 1011) இராசராசன் I - தஞ்சைப் பெருவுடையார் கோயிற் கல்வெட்டு. ...

(கி.பி. 1014) இராசராசன் I - மேல்பாடி சோழேச்சுவரர் கோயிற் கல்வெட்டு (அழகோவிய எழுத்து) ...

(சு. கி.பி. 1025) இராசேந்திரன் I - திருவாலங்காட்டுச் செப்பேடுகள் ...

(கி.பி. 1112) சோழன் குலோத்துங்கன் I -திருக்கழுக்குன்றக் கல்வெட்டு. ...

(கி.பி. 1204) சோழன் குலோத்துங்கன் III -திருக்களர்ச் செப்பேடுகள் ...

பிற்காலம்:

(கி.பி. 1343) இராசநாராயணச் சம்புவராயன் -குன்றத்தூர்க் கல்வெட்டு. ...

(கி.பி. 1534) விசயநகரவரசன் அச்சுததேவராயன் திருவரங்கம் கோயிற் கல்வெட்டு. ...

இக்காலம்: 'இ' அடுப்புக் கூட்டுப் போல முப்புள்ளியாகவும் நடுவுவாங்கியிட்டும் எழுதுவரென உரையாசிரியர் நச்சினார்க்கினியர் (கி.பி. 14 ஆம் நூ.) குறிப்பிடுவர். நடுவுவாங்கியிட்டுச் சுழித்து எழுதியமையே இன்றைய இகர வடிவிற்கு அடிப்படை எனலாம்.

குறியீட்டு நிலை: ½ என்ற பின்ன எண்ணைக் குறிப்பதற்கும் இவ்வெழுத்துக் கணக்கெழுதுவோரால் பயன்படுத்தப் பெறுகிறது. அவ்வாறெழுதுவர்

போது என்னும் வடிவையும் மாற்றுவடிவாகப் பயன்படுத்துவர்.

பொருள்:

i) சுட்டுப் பொருளில் வரும்.

சுட்டினை அகச்சுட்டு என்றும் புறச்சுட்டு என்றும் பகுப்பர். 'இவன்' என்ற சொல்லில் வரும் இகரம் அகச்சுட்டு. சொல்லின் ஒரு கூறாக வருதலின் இங்ஙனம் குறிப்பர். இகரம் 'இப்பையன்' என்ற வழக்கில் வரும்போது சொல்லின் புறத்தே வந்து புறச்சுட்டு எனப்படும். சுட்டினை அண்மைச்சுட்டு (Proximate), இடைமைச்சுட்டு (Intermediary), சேய்மைச்சுட்டு (Remote) எனவும் பகுப்பர். இவ்வகையில் இ- அண்மைச் சுட்டாக அமையும்.

ii) பெயர் விகுதியாக வரும்.

அ) இருதிணை முக்கூற்றொருமை விகுதி: செவியிலி

ஆ) ஆண்பால் (ஒருமை) விகுதி : வில்லி

இ) பெண்பால் (ஒருமை) விகுதி : கூனி

ஈ) ஒன்றன்பால் விகுதி : நாற்காலி

உ) வினைமுதற்பொருள் விகுதி : அலரி

ஊ) செயப்படுபொருள் விகுதி : ஊருணி

எ) கருவிப்பொருள் விகுதி : பாக்குவெட்டி

iii) வினை விகுதியாக வரும்.

அ) எதிர்கால முன்னிலை ஒருமை விகுதி : வருதி

ஆ) ஏவலொருமை விகுதி : செல்லுதி

இ) வியங்கோள் விகுதி : வாழி

iv) வினைஎச்ச விகுதி : ஓடி

v) தொழிற்பெயர் விகுதி : வெகுளி (திருக்கோவையார் - 151, உரை.)

vi) பகுதிப்பொருள் விகுதி : உருளி (சீவகசிந்தாமணி 532.)

பயன்பாடு:

i) ய, ர, ல என்னும் எழுத்துகளை மொழிமுதலாகக் கொண்ட பிறமொழிச் சொற்களைத் தமிழில் எழுதும் போது இன்னிசை முந்து நிலையாக (Prothetie Vowel) வரும்.

எ-டு. இயக்கன் (< யட்சன்)
இராமன் (< ராமன்)
இலங்கை (< லங்கை)

ii) தமிழில் வாராத கூட்டெழுத்துகளைப் பிரிக்க வரும் இன்னிசை இடைநிலை எழுத்தாக (Epenthetical Vowel) வரும்.

எ-டு. இரத்தினம் (< ரத்னம்)
வாக்கியம் (< வாக்யம்)
கிரமம் (< க்ரமம்)
சுக்கிலம் (< சுக்லம்)

iii) வருமொழியில் வரும் யகரத்தின் சார்பால் அண்ணச்சாயல் பெற்று (Palatalization) இதழ்ச் சாயல் நீங்கிய (Labial) குற்றியலுகரத்தின் பதிலொலிக் குற்றியலிகரமாக வரும்.

எ-டு. காடு + யாது = காடியாது.

iv) ஞ், ண், ந், ம், ன், ர், ல், வ், ழ், ள் என்பவற்றின் பின் வருமொழி முதலில் யகர ஆகாரம் வரும்போது இடையே வழுக்கொலியாக (Glide) வரும் என்பாரும் உண்டு. எ-டு. பேர் + யாறு > பேரியாறு.

v) மொழி இறுதியில் யகரத்தோடு விரவி வரும்

அ) நாய் ~ நாஇ; போய் ~ போஇ

ஆ) பாளி ~ பாளிய் (= பாழி = மாங்குளம் கல்வெட்டு)
பாளி ~ பாளிஇ (கீழவளவுக் கல்வெட்டு)

vi) மொழியிறுதியில் இகரத்தின் நீட்டொலியாகவும் வரும்.

எ-கா. தாரணி ~ தாரணிஇ (அழகர் மலைக் கல்வெட்டு)

vii) வடமொழி ஈற்று யகரத்தின் தமிழ் ஒலியாகவும் வரும்

எ-டு. கன்ய > கன்னி

viii) இலக்கிய வழக்கில் உகரத்தின் மாற்றெழுத்தாகவும் வரும் என்பர்.

எ-டு. சிறு > சிறி; சிறியிலை.

ix) மலைநாட்டு வழக்கில் உகரத்தின் மாற்றெழுத்தாக வரும்.

எ-டு. இருவர் > இரிவர் இரு > இரி

x) வடதமிழ்நாட்டு வழக்கில் (தெலுங்கு மொழி உறவால்) உகரத்தின் மாற்றெழுத்தாக வரும்

எ-டு. கத்திக்கு > கத்திக்கி

xi) பேச்சு வழக்கில் இது எகரமாதலும் உண்டு:

எ-டு. இலை > எலே

பேச்சு வழக்கில் இது இடம்பெயர்ந்து எகரமாதலும் உண்டு:

இரண்டு > ர்இஅண்டு > ரெண்டு கோ.வி.

**இக்கி தாமசு** (கி.பி. 1740-1822) என்பார் ஓர் ஓவியர். இவர் கி.பி. 1740-ஆம் ஆண்டில் பிறந்தார். கருநாடக மாநிலத்தைச் சார்ந்த சீரங்கப்பட்டணத்தில் கி.பி. 1799-இல் இவர் பல வரலாற்றுத் தொடர்பான படங்களைச் சித்திரித்தார். 'பழங்குறிப்பு வழி ஓவிய, சிற்பக் கலை வரலாறு' (The History of Painting and Sculptures from the Earliest Accounts, 1788) என்னும் நூலை இவர் கி.பி. 1788-ஆம் ஆண்டில் வெளியிட்டார். இவர் கி.பி. 1822-ஆம் ஆண்டில் காலமானார்.

**இக்கு** ஒரு சப்பானியப் புதின எழுத்தாளர். சிப்பென்சா இக்கு (Jippensha Ikku) என்பது இவரது முழுப்பெயராகும். இவர் கி.பி. 1765-1831-ஆம் ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்தவர். இவர் எழுதிய "கிசாகுரிசு" (Hizakurige) என்னும் புதினம், சப்பானிய நகைச்சுவைப் புதினங்களுள் தலைசிறந்தது. இவர் இந்த நூலை இருபது ஆண்டுக் காலத்தில் பன்னிரண்டு பகுதிகளாக வெளியிட்டார். விரிந்து பரந்து விளங்கும் இந்நூல், கொச்சை மொழியும் கேலிப்போக்கும் கொண்டது. இப்புதினம், சமுதாயத்திலுள்ள எளிய, நடுத்தர வகுப்பினரின் வாழ்க்கை நிலையினை அங்கதப்படுத்திக் காட்டுகிறது. இது, ஈடோ (Edo) நகரத்திலிருந்து ஒசாகா செல்லும் நெடுஞ்சாலையில் பயணம் செய்யும் இரண்டு குறும்பர்களின் நிகழ்ச்சிகளைச் சித்திரிப்பதாக உள்ளது. இது மிடுக்கான நடையில் நகைச்சுவை ததும்ப அமைந்துள்ளது. சமுதாய அடிப்படையில் மெய்ம்மை கூறும் இப்புதினப் பாங்கினை ஒட்டிப் பல புதினங்கள், சப்பானில் கி.பி. 18-ஆம் நூற்றாண்டிலும், 19-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் தோன்றலாயின. இவர் பல நாடகங்களையும் எழுதியுள்ளார்.

**இக்குடோசா** என்பவர் ஒரு திறமை வாய்ந்த இந்தியச் சிற்பக் கலைஞர். இவரைப் பற்றிய விவரத்தைக் கருநாடக மாநிலத்தைச் சார்ந்த தவாண்கரே (Davanagere) என்னும் ஊரில் கிடைத்த கல்வெட்டொன்று கூறுகிறது. இக்கல்வெட்டு கி.பி. 1113-ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது.

**இக்குவான்** என்னும் அரபுச் சொல்லுக்கு உடன் பிறந்தவர் என்பது பொருள். வகாபிகள் (Wahabs) என்னும் இசுலாமியக் குழுவினருக்கு இப்பெயர் சூட்டப்படுகிறது. அப்துல் வகாபு என்பாரின் போதனைகளைப் பின்பற்றுபவர்கள் வகாபிகள் எனப்படுவர். இவர் வகாபிக் குழுவைக் கி.பி. 1745-இல் நிலைநாட்டினார். இசுலாமியச் சமயத்தைச் சீர்திருத்த வந்தவர் என்று இவர் தம்மை அறிவித்துக் கொண்டார். திருகுர்-ஆன் என்னும் இசுலாமியச் சமய மறைநூல் ஏற்றுக் கொள்ளாத அனைத்து நடைமுறைகளையும் இவர் எதிர்த்தார். இபின் சாடு (Ibn Saud) என்பார் 1912-ஆம் ஆண்டில் சவுதி அராபியாவின் மன்னரானார். இவர் வகாபிகள் ஆயிரக்கணக்கானோரை வேளாண்மைக் குடியிருப்புகளில் குடியேற வைத்தார். இக்குடியிருப்புகளை இக்குவான் (Ikhuvan) என்றும் கூறுவர்.

**இக்கேடா அயாட்டோ** என்பவர் சப்பான் நாட்டுத் தலைமை அமைச்சராயிருந்தவர். இவர் 3-12-1899-இல் இரோசிமா (Hiroshima) விலுள்ள உயோசினா (Yoshina) வில் பிறந்தார். கியோட்டா இம்பீரியல் பல்கலைக் கழகத்தில் 1925-இல் பட்டம் பெற்ற இக்கேடா அயாட்டோ (Ikeda, Hayato) அரசாங்க வரி அலுவலராகப் பதவியேற்றார். பதவிகளில் படிப்படியாக உயர்ந்து 1945-ஆம் ஆண்டில் தேசிய வரிக் குழுவின் தலைவரானார். இவர் 1947-இல் யோசிதா (Yoshida) அவர்களின் முதல் அமைச்சரவையில் துணை நிதி அமைச்சராகப் பணிபுரிந்தார்.



அயாட்டோ இக்கேடா

பாராளுமன்றத்தின் மக்கள் அவையின் உறுப்பினராக 1949-இல் தேர்ந்தெடுக்கப்பெற்ற இக்கேடா, சிறிது காலத்திற்குள் யோசிதா அவர்களின் மூன்றாம் அமைச்சரவையில் நிதி அமைச்சராகவும், 1950-இல் பன்னாட்டு வாணிகம், தொழில் ஆகிய துறைகளின் அமைச்சராகவும் பதவி வகித்தார். இவர் 1951-இல்

சான் பிரான்சிசுகோ அமைதி மாநாட்டிற்குச் சப்பானியத் தூதுக் குழுவின் உறுப்பினராகச் சென்றார். பின்னர் முற்போக்குக் கட்சியின் பொதுச் செயலரானார். சிறிதுகாலமே பதவி வகித்த இசிபாசி (Ishi-bashi) அவர்களின் அமைச்சரவையிலும் இவர் நிதி அமைச்சராகப் பதவி வகித்தார். இவர் கிசி (Kishi) என்பாரின் அமைச்சரவையிலும் அமைச்சர் பதவி வகித்துச் சப்பானியப் பொருளாதார வளர்ச்சிக்காகப் பாடுபட்டார். அமெரிக்க ஐக்கிய நாடுகளுடன் நெருங்கிய பொருளாதார உறவுகளையும் பாதுகாப்பு ஏற்பாடுகளையும் கட்டிக் காத்ததுடன், பொதுவுடைமை நாடுகளுடனும், குறிப்பாக உருசியாவுடனும் சீனாவுடனும் வாணிகத் தொடர்புகளை வைத்துக் கொள்வதில் இவர் ஆர்வம் காட்டினார். நோய் வாய்ப்பட்டதன் விளைவாக இவர் 1964-இல் பதவியிலிருந்து விலகினார். இவர் 1965-ஆம் ஆண்டு ஆகசுட்டு மாதம் 13-ஆம் நாள் தோக்கியோவில் (Tokyo) காலமானார்.

**இக்கேரி நாயக்கர்கள்** மைசூர் மாநிலத்தில் சிமோகா பகுதியினையும், தென் கன்னடம் சேர்ந்த பழைய கருநாடகப் பகுதியினையும் ஆண்டவர்கள். இவர்கள் இக்கேரி என்ற நகரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தனர். இதனால், இவர்கள் இக்கேரி நாயக்கர்கள் என்ற பெயரைப் பெற்றனர். இவர்களின் மரபு, பசப்பர் என்பவரின் மகன் சௌடப்பா என்பவரின் காலம் முதற்கொண்டு தொடங்குகிறது.

பசப்பர் என்பார் சில காலம் கெ-ள-தி என்னும் ஊரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்தார். இவருக்குப் பிறகு இவர் மூத்த மைந்தர் சதாசிவ நாயக்கர் என்பார் அரியணை ஏறினார். இவர் கி. பி. 1513 முதல் 1560 வரை வாழ்ந்தவர்; திறமைகள் பல பெற்று விளங்கியவர்; நாட்டு மக்களுக்கு நல்லாட்சி தந்தவர். இவர் காலத்தில் விசய நகரப் பேரரசு பாமினிச் சுல்தான்களுடன் போரிட்டு வந்தது. அப்போரில் விசயநகரப் பேரரசரான இராமராயருக்குச் சதாசிவ நாயக்கர் உதவி புரிந்தார். பீசப்பூர், பீடார் சுல்தான்களைப் போரில் வென்றார். கருநாடகத்தில் உள்ள பாரகூர், மங்களாபுரம், சந்திரகுத்தி போன்ற கோட்டைகளை வென்றார். இவர் இக்கேரி நகரில் ஈசுவரருக்கு எழில் மிக்க கோயில் ஒன்றைக் கட்டினார். இதன் பின்னர், அரசியலை விட்டு விலக எண்ணிய சதாசிவர், தம் தம்பியான பத்திரப்ப நாயக்கருக்கு முடிசூட்டிவிட்டுத் துறவறம் பூண்டார். பத்திரப்ப நாயக்கர், இம்மடி சதாசிவ நாயக்கர் என்றும் அழைக்கப்பட்டார். இவர் சிறிது காலம் ஆட்சிப் பொறுப்பேற்று அமைதியாக ஆட்சிபுரிந்து வந்தார்.

இவர் காலத்தில்தான் கெ-ள-தி என்னும் இடத்தில் இருந்த தலைநகர், இக்கேரி என்ற இடத்திற்கு மாற்றப்பட்டது. இவருக்குப் பின்னர்ச் சதாசிவ நாயக்கரின் மக்களான தொட்டசங்கண்ண நாயக்கரும் சிங்கசங்கண்ண நாயக்கரும் ஆட்சி புரிந்தனர்.

சிங்கசங்கண்ண நாயக்கர் பீசப்பூர் சுல்தானின் படைத் தலைவனான மஞ்சுலகான் என்பவனைத் தோற்கடித்தார்; கேரு சொப்பாவில் ஆண்டு வந்த பைரதேவியை வென்றார். இவர் இக்கேரியில் புதிய நகர் ஒன்றையும் அரண்மனை ஒன்றையும் கட்டி முடித்தார்.

இவருக்குப் பின்னர் இவர் தமையனாரின் மகனான முதலாம் வேங்கடப்ப நாயக்கர் பட்டம் பெற்றார். இவர் கி. பி. 1582–1629 வரை வாழ்ந்தவராவார். இந்த மரபில் சிறந்து விளங்கிய அரசர் இவராவார். இவர் காலத்தில் விசய நகரப் பேரரசு வாரிசுரிமைப் போட்டிகளாலும், உள் நாட்டுக் குழப்பங்களாலும் கி. பி. 1616 முதல் சீர் குலையத் தொடங்கிற்று.

இதனால், இவ்வரசர் தன்னாட்சி பெற்றார். போர்ச்சுகீசியர்கள் இவரது நட்பை விரும்பிப் பெற்று வாணிகஞ் செய்யத் தொடங்கினர். இத்தாலி நாட்டுப் பயணி ஒருவர் கி. பி. 1623-இல் இவரது நாட்டில் பயணம் மேற்கொண்டார் என்ற குறிப்புக் காணப்படுகிறது.

இவருக்குப் பின், இவர் தமையனாரான வீர பத்திரர் அரியணை ஏறினார். இவர் கி. பி. 1630–1645 வரை நல்லாட்சி புரிந்தார். இக்கேரியில் இருந்த தலைநகரை இவர் கி. பி. 1638-இல் பிதுநூருக்கு மாற்றினார். இவருக்குப் பின் ஆட்சி செய்த சிவப்ப நாயக்கர் என்பார் கி. பி. 1645–1660 வரை ஆட்சி புரிந்தார். இவர் விசய நகர அரசரான மூன்றாம் சீரங்கதேவருக்கு நண்பராக விளங்கினார்; அவருக்காகப் பீசப்பூர், கோல்கொண்டா ஆகிய சுல்தான்களோடு போர் புரிந்தார்.

சிவப்ப நாயக்கருக்குப் பின்னர் இரண்டாம் வெங்கடப்ப நாயக்கரும் இரண்டாம் பத்திரப்ப நாயக்கரும் ஆட்சி புரிந்தனர். பின்னர், முதலாம் சோமசேகரர் அரியணை ஏறினார். இவர் காலத்தில் இவர் நாட்டிற்குத் துறைமுகமாக விளங்கிய பார்சிலோர் (Barcelor) கொள்ளை அடிக்கப்பட்டது. இவர் நாட்டிலுள்ள பிரபுக்கள் கி. பி. 1671-இல் இவரைக் கொலை செய்தனர். இவரைத் தொடர்ந்து இவர் மனைவி சென்னம்மாசி கி. பி. 1697 வரை ஆட்சி புரிந்து வந்தார். இக்காலத்தில் மராட்டியர்கள் இந்நாட்டின் மீது படையெடுத்துச்

'சௌத்து' என்ற வரியினைப் பெறும் உரிமையைப் பெற்றனர். பின்னர்ச் சென்னம்மாசியின் வளர்ப்பு மகனான பசப்பர் என்பார் பட்டம் பெற்றுக் கி. பி. 1697-1714 வரை ஆட்சி புரிந்தார். இவர் சிறந்த கல்விமான்; ஒழுக்கசீலர்; வடமொழியில் 'சிவதத்துவ ரத்தினாகரம்' என்ற நூலை எழுதியுள்ளார். ஐதர் அலி கி. பி. 1763-இல் இந்நாட்டை வென்று தம் நாட்டுடன் இணைத்தார். இதனுடன் இவர்களின் மரபு முடிவுற்றது. தி. வீ.

***இக்சு தாமசு*** (கி.பி. 1823-1890) என்பார் அமெரிக்க நாட்டைச் சார்ந்த ஓவியர். இவர் (Hicks Thomas) கி.பி. 1823-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 18-ஆம் நாள் பென்சில்வேனியா மாநிலத்தைச் சார்ந்த நியூடவுன் என்னும் ஊரில் பிறந்தார். இவர் பென்சில்வேனியா, நியூயார்க்கு, பாரிசு போன்ற நகரங்களில் படித்தார். இவர் கி.பி. 1849- ஆம் ஆண்டில் நியூயார்க்கு மாநகரில் நிலையாகத் தங்கலானார். இவர், மக்களை உருவமைக்கும் ஓவியர் (Portrait Painter). இக்கலையில் இவர் பெரும் புகழ் பெற்றார். இக்சு தாமசு (Hicks Thomas) கி.பி. 1890-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 8-ஆம் நாள் நியூயார்க்கு மாநிலத்தில் திரெண்டன் பால்சு (Trenton Falls) என்னுமிடத்தில் காலமானார்.

இக்சு தாமசு, ஆபிரகாம் இலிங்கன் (Abraham Lincoln) வில்லியம் கல்லன் பிரியாட்ண்டு (William Cullen Bryant), என்றி வேர்டுசுவொர்த்து இலாங்கு பெலோ (Henry Wadsworth Long Fellow) போன்றவர்களின் படங்களை வரைந்துள்ளார். இப் பெரு மக்கள் இக்சு தாமசின் முன்னர் அமர்ந்து அவருக்குப் படமெழுத வாய்ப்பளித்தார்கள். இம்முறை கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் பழக்கத்தில் இருந்தது.

***இக்தா*** என்பது இசுலாமியக் கலிபாக்களின் படையைச் சார்ந்த அலுவலர்களுக்கு மாதந்தோறும் வழங்கப்பெறும் ஊதியத்திற்குப் பதிலாக கொடுக்கப்பட்ட கொடைநிலம். இக்தா (Iqta) முறை கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் நிலைநாட்டப்பட்டது. நாட்டின் கருவூலத்தில் ஏற்பட்ட பொருட் பற்றாக் குறையைத் தவிர்க்க இம்முறை கையாளப்பட்டது.

நிலத்தைக் கொடையாகப் பெற்றவர் 'முக்தா' எனப்பட்டார். படைத்தலைவருக்கு வழக்கமாகக் கொடுக்கப்படும் ஊதியத்தைக் கணக்கெடுத்து, அதற்கு ஈடாக வருவாய் கிட்டும் நிலத்தை 'முக்தா' பெற்றார். இம்முறை ஈரானிய மரபினைச் சார்ந்த பூயுத்து அலுவலர்களின் ஆட்சிக் காலத்தில் நடைமுறைப்படுத்தப்பட்டது. நிலத்தைக் கொடையாகப் பெற்ற அலுவலர் பெரும்பாலும் நகரத்திலேயே வாழ்ந்து வந்தமையால் அவர் இக்தா நிலத்திற்கு வெகு தொலைவில் வாழவேண்டியவரானார். அதன் விளைவாக அவருக்கு மானிய நிலத்தின்மீதும் அதனை உழுது பயிரிடும் உழவர்களின்மீதும் அக்கறை தோன்றவில்லை. அதனால், நிலம் அடிக்கடி மாறுவதும் உண்டு. இக்தா முறை செல்சுக்குத் (Seljuk) துருக்கர்களின் ஆட்சிக் காலத்தில் மாநிலங்களிலும் புகுத்தப்பட்டது. இது கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் மங்கோலியப் படையெடுப்புகளின்போதும் நீடித்தது. ஆனால், அதனை அடுத்து வந்த உதுமானியரின் (Ottoman) ஆட்சியின்போது இம்முறை மாற்றப் பட்டுத் திமர் (Timar) முறை புகுத்தப்பட்டது. மீண்டும் இக்தா முறை, ஈரானில் இல்கான் (Ilkhan) களின் ஆட்சியின்போது தோன்றலாயிற்று. கொடையாக வழங்கப்பட்ட நிலம், பரம்பரை பரம்பரையாகவோ, குறிப்பிட்ட காலக்கட்டத்திற்கோ வழங்கப் பட்டது. எகிப்தில் அயூபிதியர்களின் (Ayyubid) ஆட்சியின்போதும் மாம்லுக் குகளின் (Mamluk) ஆட்சியின்போதும் இக்தா முறை கலிபாக்களின் (Caliphs) ஆட்சிப்பகுதிகளில் நடைமுறைப்படுத்தப் பட்டது. இந்தியாவுக்கு வந்த துருக்கியச் சுல்தான்கள் வருவாய்த் துறைத்தொடர்பாக நிலத்தைப் பல வகையாகப் பிரித்தார்கள். அவற்றுள் ஒன்று இக்தா நிலமாகும். இத்தகைய கொடை நிலங்கள், ஒருசில குறிப்பிட்ட ஆண்டுகளுக்கோ, வாழ்நாள் முழுவதற்குமோ கொடுக்கப்பட்டனவாகும்.

***இக்தியார் உதீன் அல்தூனியா*** என்பார் சுல்தானா இரசியாவுக்கு எதிராகக் கலகம் விளைவித்த இசுலாமியப் பிரபுக்களில் ஒருவர். இக்தியார்-உதீன்அல்தூனியா (Ikhtiyar-ud-din-Altuniya), அடிமை வம்சத்தைச் சார்ந்த சுல்தானா இரசியா Sultana Raziya) என்பவள் ஆட்சி செய்த காலத்தில், சர்கிந்துவின் ஆளுநராக (Governor of Sirhind) இருந்தவர். அவரைக் கலகம் செய்யும்படி அரண்மனையில் இருந்த பிரபுக்களுள் சிலர் தூண்டிவிட்டனர். இதனை அறிந்த இரசியா அரசியார் கலகத்தை அடக்கப் பெரும்படையுடன் அணிவகுத்துச் சென்றார். ஆனால், அப்போது நடைபெற்ற போரில் இரசியாவின் அன்புக்கு உரியவராயிருந்த சலாலுதின் யாகூத்து (JalaluddinYakut) என்பாரைக் கலகம் செய்த பிரபுக்கள் கொன்றுவிட்டு, சுல்தானா இரசியாவையும் சிறையில் அடைத்தனர். சுல்தானா இரசியாவைக் காக்கும் பொறுப்பு, இக்தியார்-உதீன்-அல்தூனியாவிடம் ஒப்படைக்கப்பட்டது. அவளுடைய தம்பி முசி உத்தீன் பக்ராம் (Muiz-ud-din Bahram), சுல்தானாக அறிவிக்கப் பெற்றார். இக்கட்டான இச்சூழலிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்ளச் சுல்தானா இரசியா அல்துனியாவைத் திருமணம் செய்து கொண்டாள். எனினும், பலன் ஒன்றும் ஏற்படவில்லை. தம் கணவருடன் இரசியா தில்லி நோக்கிப் படையுடன் அணிதிரட்டிக் கொண்டு சென்றாள்.

படைகள் கெய்தால் (Kaithal) என்னும் ஊரை அடைந்தபோது, அல்தூனியாவின் துணைவர்கள் இரசியாவைக் கைவிட்டுவிட்டுச் சிதறி ஓடினர். முசிஉத்தீன பக்ராம், இரசியாவைக் கி.பி. 1240 -ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 13-ஆம் நாள் நடைபெற்ற போரில் தோற்கடித்தார். இரசியாவும் அவள் கணவரான, இக்தியார்-உதீன்-அல்தூனியாவும் அடுத்த நாள் கொல்லப்பட்டனர்.

**இக்தியார்-உதீன்-காசிசா** வங்காளத்தை ஆண்ட பக்ருதீன் முபாரக் சா (Fakhr ud-din-Mubarak Shah) என்பாரின் மகன். பக்ருதீன் முபாரக் சா நல்ல தரமான நாணயங்களை வெளியிட்டார். இந்நாணயங்கள், சோனார்காவ் (Sonargaou) என்னும் இடத்தைத் தலைநகராகக் கொண்டு சுதந்திர ஆட்சி நடத்திய வடக்கு வங்காள அரசினைச் சார்ந்தவர்களால் வெளியிடப்பட்டன. சோனார்காவ் கலைஞர்கள் இத்தகைய உயர்தரமான நாணயங்களை வெளியிட்டுப் புகழ்பெற்றவர்கள். பக்ருதீன் முபாரக் சாவின் ஆட்சிக்குச் சான்று பகர்புவை இந்நாணயங்களே ஆகும். இந்நாணயங்களிலிருந்து, பக்ருதீன் முபாரக் சா இயற்கையாகவே இறந்துபட்டார் என்றும், அவருடைய ஆட்சி தொடர்ந்து பத்தாண்டுகள் நீடித்தது என்றும் அறிய முடிகிறது. பக்ருதீன்-முபாரக் சாவின் மகனே இக்தியார்-உதீன்-காசி சா (Ikhtiyar-ud-din Ghazi Shah). இவர் ஆட்சியைப் பற்றிய விவரம் போதுமான அளவு கிடைக்கவில்லை.

**இக்தியார்-உதீன்-முகமது** வட இந்தியாவில் இசுலாமிய ஆட்சியை நிலைநாட்டிய முகமது கோரியின் (Muhammad Ghori) படைத்தலைவருள் ஒருவர். குத்புதீன் அய்பெக்கும் இக்தியார் உதீன் முகமதுவும் (Qutb ud din Aibek and Ikhtiyar-ud-din Muhammad) முகமது கோரியின் இசுலாமிய ஆட்சியை வட இந்தியாவில் பரப்பக் காரணமாயிருந்தவர்கள்.

இக்தியார்-உதீன் முகமது, பீகாரையும் மேற்கு வங்காளத்தின் ஒரு பகுதியையும் வென்றி கண்டு, முகமது கோரியின் அரசுடன் இணைத்தார். இவர், பக்தியார் கில்சியின் மகன். பக்தியார் கில்சி, முகமது கோரியின் ஆட்சியைக் கிழக்கு வங்காளம் வரை பரப்பினவர். இக்தியார் உதீன் முகமது கி.பி. 1206-இல் காலமானார்.

**இக்பால், சர் முகமது (கி.பி. 1877-1938)** என்பார் உருது மொழியிலும் பாரசீக மொழியிலும் சிறந்த கவிஞர். இவர் இன்றைய பாகிசுத்தானின் மேற்குப் பஞ்சாபு மாநிலத்தைச் சார்ந்த சியால்கோட்டு (Sialkot) என்னும் ஊரில் பிறந்தார். இலாகூரில் கல்லூரிப் படிப்பை முடித்து, 1905-ஆம் ஆண்டு வரை ஆசிரியராகப் பணியாற்றினார். பின்னர் இங்கிலாந்து சென்று, கேம்பிரிட்சுப் பல்கலைக் கழகத்தில் மூன்றாண்டுகள் தத்துவம் கற்றார்; இங்கிலாந்தில் 'பார்-அட்-லா' பட்டம் (Bar-at-Law) பெற்றார். செருமனி நாட்டில் மியூனிச்சுப் பல்கலைக் கழகத்தில் 1908-ஆம் ஆண்டில் 'பாரசீக புலன் கடந்த மெய்ப் பொருளியலின் வளர்ச்சி' என்னும் ஆய்வுக் கட்டுரைக்கு டாக்டர் பட்டம் பெற்றார். இக்பால் (Iqbal, Sir Muhammad) நாட்டுப்பற்றுப் பாடல்களையும், இசுலாமிய சமயப் பாடல்களையும் ஆழ்ந்த உள்ளுணர்வோடு பாடிப் பலரை மகிழ்வித்த பெரியார்.

பாகிசுத்தானின் சிந்தனையின் தந்தையென இக்பால் கருதப்படுகிறார். அலகாபாத்து நகரில் 1930-ஆம் ஆண்டில் நடைபெற்ற 'முசுலீம் லீகு' (Muslim League) மாநாட்டில், வடமேற்கு இந்தியாவில் முசுலீம்களின் எதிர்காலம் உறுதியாக நிலைநாட்டப்பட வேண்டுமெனில், அங்கு இசுலாமிய அரசை நிலைநாட்டுவது தவிர்க்க முடியாததென அறைகூவல் விடுத்தார். இவர் கேட்டதெல்லாம் 'இந்தியாவுக்குள் ஒரு இசுலாமிய இந்தியா' என்பதேயாம். தனிச் சுதந்திர நாட்டை இவர் கேட்கவில்லை. மாறாக, இந்தியா முழுமைக்கும் நெகிழ்ச்சியுள்ள கூட்டாட்சி அமைப்பு முறையே போதுமென்று கேட்டார். இவர் இக்கருத்தினை 1930 இல் முதன் முதல் வெளியிட்டார். மீண்டும் இதனை 1939 இல் இசுலாமியர் வேண்டினர். அக்காலத்தில் இவர் கருத்து ஏற்றுக் கொள்ளப்படவில்லை. ஆனால், இவர் இறந்த ஒன்பதாண்டுகளுக்குப் பின்னர், 1947-இல் பாகிசுத்தான் (Pakistan) ஏற்பட்டதன் மூலம் இவரது கனவு நனவாகியது. இவரது நினைவாகப் பாகிசுத்தான் அரசு, 1951-ஆம் ஆண்டில் சட்ட முறையான அமைப்பாக 'இக்பால் கழகம்' என்பதை நிறுவி, இக்பாலின் நூல்களைக் கற்கவும், புரிந்துகொண்டு மேம்பாடு அடையவும் வழிவகை செய்துள்ளது. இக்பாலின் தத்துவக் கொள்கையை 'இறைமைக் கோட்பாட்டில் பன்மை வாதம்' (Theistic Pluralism) என்பர். இவர் 1938-ஆம் ஆண்டில் காலமானார்.

**இக்பால் நாமா-இ-சகாங்கிரி** என்பது ஒரு நூலின் பெயர். இதனை இயற்றியவர் முத்தாமித் கான் (Mutamid Khan) என்பவர். இவர் சகாங்கிர் மன்னரின் ஆட்சிக்காலத்தில் வாழ்ந்த அவைப்புலவர். இந்நூல் சகாங்கிரின் ஆட்சியை அறிந்துகொள்ள உதவும் மூலச்சான்றாகப் பயன்படுகிறது. இது பாரசீக மொழியில் எழுதப்பட்டுள்ளது.

இந்நூலிலிருந்து நூர்சகான் என்ப்படும் மிகருன்னிசா (Mihr-un-nisa) என்பவள், மிர்சா கியாசுபெகு (Mirza Ghiyas Beg) என்பாரின் மகள் என்பது அறியக் கிடக்கிறது. இவர் பாரசீகத்திலிருந்து பிழைப்புத் தேடி அக்பர் காலத்தில் இந்தியாவுக்கு வந்தவர் என இக்பால் நாமா-இ-சகாங்கிரி (Ikbal-nama-i-Jahangiri), அறிவிக்கிறது.

**இக்லூ** என்பது எசுகிமோ இன மக்களின் இருப்பிடத்தைக் குறிக்கும் பெயர். இது கித்தான் திரையினாலோ, விலங்குகளின் தோலினாலோ ஆன வீடு; பனிக்கட்டி அல்லது கல்லினால் கட்டப்பட்ட கட்டிடம் எனவும் கூறலாம். நடுக் கனடா நாட்டின் எசுகிமோக்களின் குளிர்காலப் பனிவீடு இக்லூ (Igloo) வுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகச் சுட்டிக் காட்டப்படுகிறது. நன்கு இறுகிய நிலையிலுள்ள பனிக்கட்டிப் பாகங்கள் 61 முதல் 91 செ.மீ. நீளமும், 30 முதல் 61 செ.மீ. அகலமும் கொண்டதாய் வெட்டப்படுகின்றன. இவை சுருள் வட்டங்களாக இணைக்கப் பெற்று, மேலே செல்லச் செல்லக் குறுகிக் குவிமாடம் போல் வடிவமைக்கப்படும். குவிமாடத் தின் உச்சியில் சிறு துளையொன்றும் போடப்படும். அதன் வழியாக நல்ல காற்று உள்ளே செல்லும். இக்லூ குடிலுக்குள் அடிக்கடி தீயையும் பற்ற வைப்பர்.

தரைப் படம்
இ
ஆ
அ
அ
இ
அ - நுழைவாயில்
ஆ - தூங்கும் பகுதி
இ - சேமிப்புப் பகுதி
ஆ
இ
அ 90 செ.மீ அ
தரை

இக்லூவின் அமைப்பு

நுழைவாயில் சுரங்கப்பாதை போல் அமைக்கப்படு வதால் குளிர்ந்த காற்றை உள்ளே விடாமல் தடுக்க இயலும்.

பனிக்கட்டிச் சுவரில் சாரளத்திற்காக மெல்லிய சிறு துண்டை வெட்டிவிடுவர். மேலும், சுவரில், பண்டங்களை அடுக்கி வைக்க நிலைக்கால் தட்டுகளையும் வெட்டிவிடுவர். எசுகிமோக்கள் பனிக்கட்டியால் அமைந்த மேடையின் மீது உரோமத் தோல்கள் போர்த்தப்பட்ட இடத்தில் உண்டு உறங்கி வாழ்வர். இவர்களின் குடும்ப வீடு மூன்று மீட்டர் அகலமுள்ளது. இக்காலத்தில் நன்கு உரு வாக்கப்பெற்ற வீடுகள் இக்லூவைச் சிறிது சிறிதாக அகற்றி வருகின்றன.

**இக்னேசியசு இலயோலா:** கி.பி. பதினைந் தாம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் ஏற்பட்ட மறு மலர்ச்சி, மக்களிடையே சீர்திருத்த மனப்பான்மை யைத் தோற்றுவித்தது. சமயத் துறையில் மார்ட்டின் லூதர் (Martin Luther) என்பவரின் சமயச்சீர்திருத்தப் பணியின் காரணமாக ஐரோப்பாவில் பல நாடுகளில் கிறித்தவச் சீர்திருத்தவாதிகளின் (Protestants) சமயம் பரவியது. கத்தோலிக்கச் சமயமும், போப் பாண்டவரின் தலைமைப் பீடமும் ஆட்டங்கண்டன. இங்கிலாந்தில் கத்தோலிக்கத் தொடர்பு அறுந்தது. வடசெருமனி, பிரான்சு, சுவிட்சர்லாந்து, சுவீடன், நார்வே ஆகிய நாடுகளில் சீர்திருத்தவாதிகளின் சமயம் மிகுதியாகப் பரவிவிட்டது. பல நூற்றாண்டு களாக ஐரோப்பிய மக்களின் ஒரே சமயமாகத் தனிச் சிறப்புடன் விளங்கிய கத்தோலிக்க அமைப்பு சீர்குலைந்து விட்டது. போப்பாண்டவர்களுக்குக் கி.பி. பதினாறாம் நூற்றாண்டில் விழிப்புணர்ச்சி ஏற் பட்டது. சீர்திருத்தச் சமயம் பரவும் வேகத்தைத் தடுக்க விரும்பினர், தங்களது கத்தோலிக்கச் சமயம் மறைந்து போய் விடாதபடி பாதுகாக்க எவ்வித முயற்சியையும் எடுக்க ஆயத்தமாயினர். கத்தோலிக் கத் திருச்சபையில் சீர்திருத்தங்களைக் கொண்டு வரவேண்டிய தேவையை உணர்ந்தனர். இத்தருணத் தில் கத்தோலிக்கச் சமயத்தினிடமும், போப்பாண்ட வரிடமும் நம்பிக்கை கொண்ட பெரியோர்கள் தங்களால் முடிந்த பணியைச் செய்து, அயராது உழைத்துக் கத்தோலிக்கச் சமயத்தைக் காக்க முயன் றனர். அத்தகைய பெரியோர்களுள் ஒருவர்தான் இசுபெயின் நாட்டைச் சேர்ந்த இக்னேசியசு இலயோலா.

வாழ்க்கை வரலாறு: இக்னேசியசு இலயோலா (Ignatius Loyola) ஒரு போர் வீரராக வாழ்க்கை யைத் தொடங்கினார். இசுபெயின் (Spain) நாட்டுப் பேரரசர் ஐந்தாம் சார்லசின் படையில் சேர்ந்து



இக்னேசியசு இலயோலா

போரிடும் பொழுது இவருக்குப் பலத்த காயம் ஏற்பட்டது. இவர் மருத்துவ விடுதிக்கு எடுத்துச் செல்லப்பட்டார். பல மாதங்கள் படுக்கையிலேயே இருக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. அப்பொழுது இவர் பொழுது போக்கிற்காகப் பெரியோர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் படித்து அவர்களின் சாதனைகளைக் கண்டு பெரிதும் வியந்தார். அவர்களைப் போலத் தாமும் ஏதாவது சிறப்பான காரியத்தைச் செய்து முடிக்க வேண்டுமென்று பெரிதும் விரும்பினார். சீர்திருத்தச் சமயத்தால் மிகவும் பாதிக்கப்பட்டிருந்த கத்தோலிக்கச் சமயத்தைப் பாதுகாக்கப் பாடுபடவேண்டுமென உறுதி எடுத்துக் கொண்டார். எவ்விதக் கடினமான உழைப்பையும் மேற்கொள்ள உறுதிபூண்டார்.

இவர் நன்கு படித்த அறிஞரல்லர். தாம் மேற்கொண்டிருந்த பணிக்குப் படிப்பறிவு தேவை என்பதை உணர்ந்தார். முப்பத்து மூன்று வயதை அடைந்திருந்தபோதிலும் கல்வி கற்பதெனத் தீர்மானித்தார். சிறுவர்களுடன் தானும் உட்கார்ந்து கல்வி கற்றுக் கொண்டார். மேற்படிப்பிற்காக இசுபெயின் பல்கலைக் கழகத்திலும், பாரிசுப் பல்கலைக் கழகத்திலும் சேர்ந்து சமயத்தைச் சார்ந்த கல்வியைச் சிறப்பாகப் பெற்றார். பாரிசு பல்கலைக் கழகத்தில் படிக்கும்போது உடன் பயிலும் மாணவர்களுடன் பாலசுத்தீனத்திற்குச் சென்றார்; வெனிசு நகரை அடைந்தார். அப்பொழுது வெனிசிற்கும் துருக்கிக்கும் போர் நிகழ்ந்து கொண்டிருந்தது. எனவே பாலசுத்தீனப் பயணத்தை ஒத்தி வைத்தார்.

**இயேசு சங்கம் நிறுவுதல்:** வெனிசு (Venice) நகரிலிருந்து உரோம் நகருக்குச் சென்று கி.பி. 1534-இல் ஆறு உறுப்பினர்களுடன் இயேசு சங்கமென்ற (Society of Jesus) ஒரு சங்கத்தை நிறுவினார். இச்சங்கம் கி.பி. 1540-இல் அதிகார முறையில் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இக்னேசியசு இலயோலா போர் வீரராகப் பணியாற்றியதால் இராணுவ ஒழுக்கமும் கீழ்ப்படியுந் தன்மையும் உள்ளவராக இருந்தார். அதனால், இவர் இயேசு சங்கத்தில் சேர்ந்தவர்கள் ஒழுக்கமுடையவர்களாகவும், கீழ்ப்படிந்து நடப்பவர்களாகவும், உண்மைக் கிறித்தவர்களாகவும், உற்சாகமுற்றவர்களாகவும், கத்தோலிக்கச் சமயப் பற்றுள்ளவர்களாகவும், போப்பாண்டவர் அதிகாரத்திற்குக் கட்டுப்பட்டவர்களாகவும், எளிய வாழ்க்கையைப் பின்பற்றுபவர்களாகவும் இருக்க வேண்டுமென பல கட்டுப்பாடுகளை விதித்தார். நல்லொழுக்கமுள்ளவர்களே மற்றவர்களிடம் கடவுள் பக்தியையும் சமயக் கொள்கைகளையும் பரப்ப முடியுமென்று இவர் நம்பினார். இவர் இறக்கும்பொழுது இயேசு சங்கத்தில் ஏறக்குறைய ஆயிரம் உறுப்பினர்கள் சேர்ந்திருந்தனர். அவருக்குப் பின்பு இச்சங்க உறுப்பினர்களின் எண்ணிக்கை பன்மடங்கு பெருகியது. கத்தோலிக்கச் சமயத்தைப் பரப்புவதே இயேசு சங்கத்தின் முதன்மையான குறிக்கோள் ஆகும்.

**சமயத் தொண்டு:** உரோமன் கத்தோலிக்கத் திருச்சபைக்கு இவர் புத்துணர்ச்சி ஊட்டினார். கத்தோலிக்கத் திருச்சபையால் உலகிறகு உன்னதமான தொண்டு செய்ய முடியுமென்று உலகம் உணரச் செய்தார். படிப்பறிவுள்ள, தன்னலமற்ற ஒழுக்கமிக்க பாதிரிமார்களை ஊக்குவித்துக் கடவுளுக்கும் கத்தோலிக்கச் சமயத்திற்கும் திருப்பணி செய்ய வைத்தார். இயேசு போதித்தவாறு தூய்மையான, எளிய வாழ்க்கையை மேற்கொள்ளுமாறு கத்தோலிக்கச் சமயத்தவருக்கு அறிவு புகட்டினார். இவர் தம் களங்கமற்ற வாழ்க்கையும், உயர்நோக்கும், தெளிவான கொள்கை விளக்கமும், தொண்டுகளும் ஐரோப்பாவின் பல நாடுகளில் வாழ்ந்த சீர்திருத்தச் சமயத்தவரைக் கத்தோலிக்கச் சமயத்திற்கு மீண்டும் வரச் செய்தன. பெல்சியம், போலந்து, செக்கோசுலோவாக்கியா, அங்கேரி, பவேரியா போன்ற நாடுகள், கத்தோலிக்கச் சமயத்தைப் பின்பற்றத் தொடங்கின. அமெரிக்கா, இந்தியா, சீனா, சப்பான் போன்ற நாடுகளிலும் கத்தோலிக்கச் சமயம் பரவியது. இவரையும் இவரது இயேசு சங்கத்தையும் கண்டு சீர்திருத்தச் சமயத்தினர் அச்சமுற்றனர். மிக வேகமாகப் பரவிக் கொண்டிருந்த சீர்திருத்தச் சமயத்திற்குத் தடை ஏற்பட்டது. தென் செருமனி, பிரான்சு, சுவிட்சர்லாந்தின் பெரும் பகுதி, சாவாய் போன்ற நாடுகள் கத்தோலிக்கச் சமயத்திற்குத் திரும்பின. இத்தாலியிலும் இசுபெயினிலும் சீர்திருத்தச் சமயம் அறவே ஒழிக்கப்பட்டது. இன்று உரோமாபுரிக் கத்தோலிக்கத் திருச்சபை உலகில் உயர்ந்ததோர் இடம் வகிக்கிறது என்றால் அதற்கு இக்னேசியசு இலயோலா பெரிதும் காரணமாவார்.

**பிற தொண்டுகள்:** கத்தோலிக்கச் சமயத்தைக் காப்பதோடு கல்வியை மக்களிடையே பரப்புவதிலும் இக்னேசியசு இலயோலா மிக்க ஆர்வம் காட்டினார். தாம் நிறுவிய இயேசு சங்கத்தின் உதவி கொண்டு ஆயிரக்கணக்கான பள்ளிகளையும் கல்லூரிகளையும் இவர் ஐரோப்பா, இந்தியா, சீனா, பிரேசில் போன்ற நாடுகளில் தொடங்கினார். இயேசு சங்கத்தைச் சார்ந்தவர்கள், உலகின் பல பாகங்களிலுமிருந்த பல்கலைக் கழகங்களில் சிறப்பு மிக்க பேராசிரியர்களாகப் பணியாற்றினர்; அரசியல் வல்லுநர்களாகவும் அரசுத் தூதுவர்களாகவும் சிறந்த தொண்டு செய்தனர்; மேலும் நோய்வாய்ப்பட்ட மக்களுக்கும் அருந்தொண்டு செய்தனர். மருத்துவமனைகள் கட்டி மருத்துவ உதவிக்கு ஏற்பாடுகளும் செய்தனர்.

இக்னேசியசு இலயோலாவின் சீரிய சேவையால் திருச்சபைகளின் குறைகள் நீங்கின. உயர்ந்த நன்னடத்தையை மக்களிடையே உருவாக்குவது தான் சமயத்தின் குறிக்கோளும் கடமையும் ஆகும் என்பதை யாவரும் உணர்ந்தனர். அதற்கேற்பச் சமயத்துறையில் இருந்தவர்கள் செயற்பட்டனர்.

போரில் காயமுற்று, மருத்துவமனையில் மருத்துவம் செய்து கொண்டே, பல பெரியோர்களின் வாழ்க்கை வரலாற்றைப் படித்து, இனிப் படைவீரராகப் பணி செய்வதைவிட இறைவன் தொண்டு செய்யும் வீரராக வாழ்வதே சிறந்ததென்று முடிவு செய்த இக்னேசியசு இலயோலா, 'தெய்வீகப் பயிற்சிகள்' (The Spiritual Exercises) என்ற நூலையும் இயற்றினார். இந்நூல் கத்தோலிக்கச் சமயத்தினரின் நல்வாழ்விற்குச் சிறந்த வழிகாட்டியாக அமைந்துள்ளது. இக்னேசியசு இலயோலா கி.பி. 1556-இல் இவ்வுலக வாழ்க்கையை நீத்தார். காண்க: இயேசு சங்கம்.

கி.பி.

**இகபானா** சப்பானிய மலரழகுக்கலை எனப்படும். இக்கலையில் மலர்களின் வரிசை, உருவம், காம்பு, இலை, கிளை ஆகியன அழகுற அமைக்கப்படுகின்றன. இகபானா (Ikebana) என்னும் சொல் சப்பானிய மொழியில், இகேரு (பாதுகாப்புச் செய்: உயிர்வாழ்) என்னும் சொல்லும் 'அனா' (மலர்) என்னும் சொல்லும் சேர்ந்ததாகும்.

இக்கலை கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் சப்பானிய நாட்டில் பௌத்தமதம் பரவிய காலத்திலிருந்தே பழக்கத்தில் இருந்துவருகிறது. இகபானா என்பது வெறும் மலரழகுக் கலை மட்டுமன்று; இது சமயச்சார்புடைய தூய்மையை உணர்த்தும் கலையுமாகும். இக்கலை ஒரு பௌத்தத் துறவியால் கண்டுபிடிக்கப்பட்டது. பிற்காலத்தில் இக்கலை சப்பானியத் தேநீர்ச்சடங்கிலும் பயன்படுத்தப்பட்டது.

இகபானா மலரமைப்பின் அடிமட்டத்தில் ஒரு முக்கோணச் சட்டம் இருக்கிறது. மலர்களை வைக்கும் இடம் வானுலகு, பூமி, மனிதன் ஆகிய மூன்றையும் குறிப்பதாகும். முழுமையாக அலர்ந்த மலர்களும் உலர்ந்த இலைகளும் கடந்த காலத்தையும், மொட்டுகள் வருங்காலத்தையும் குறிக்கின்றன. வேனிற்கால மலர் அமைப்பு இலையுதிர்கால மலர் அமைப்பினின்றும் மாறுபட்டதாக இருக்கிறது. இக்காலத்தில் பலவிதமான புதிய மாற்றங்களும் உத்திகளும் இகபானாவில் பயன்படுத்தப்படுகின்றன. சில வேளைகளில் மலர்கள் இன்றியே வேர், தண்டு, உலோகம் போன்றவற்றாலும் இகபானா அமைக்கப்படுகிறது. இக்காலக் கட்டடக்கலையுடன் அழகுறப் பொருந்தியிருப்பதால் இது உலகெங்கிலும் வரவேற்கப்படுகிறது.

இக்கலையைக் கற்றுக்கொடுப்பதற்குச் சப்பான் நாட்டில் பல கல்விக்கூடங்கள் இருக்கின்றன. ஆசிரியர்கள் பல்லாயிரக் கணக்கானோர் இக்கலையைக் கற்றுத் தருகிறார்கள்.

**இகாப் பழங்குடியினர்** தென் அமெரிக்காவில் கொலம்பியா நாட்டின் வட பகுதியில் அமைந்திருக்கும் சியர்ரா நெவதா டி சண்டா மார்டா (Sierra Nevada de santa marta) மலைப் பகுதியில் வாழும் அமெரிக்க இந்தியர்களாவர். இம்மலைப்பகுதி 18, 000 அடி உயரம் கொண்டதாய்க் கரிபியன் கடலாலும், தாழ்வான சமநிலப் பகுதிகளாலும் சூழப்பட்டுள்ளது. பனி படர்ந்த இதன் உச்சிப் பகுதி, பனி ஓடைகளாகவும் பனி ஏரிகளாகவும் காட்சியளிக்கிறது.

உருவத் தோற்றத்தில் இகாப் பழங்குடியினர் (Ika Tribe) மங்கலாயிடு இனத்தை ஒத்துக் காணப்படுகின்றனர். இவர்கள் நடுத்தரமான உயரம், நீண்ட மூக்கு, சுருளற்ற முடி, அகன்ற கன்னம் ஆகிய உடலமைப்புகளைக் கொண்டிருக்கின்றனர். இகாப் பழங்குடியினரது ஆடை சற்று மாறுபட்டது. மங்கலான நிறமுடைய 'பொன்சோ' (Poncho) என்னும் ஆடையைத் தாங்களே நெய்து அணிகின்றனர். கழுத்து எலும்பிலிருந்து பாதிக் கை வரையிலும், முழங்காலுக்குச் சற்றுக் கீழ் வரையிலும் மறையுமாறு அணிகின்றனர். இவ்வாடையின் மேல், கழுத்திலிருந்து தொங்கும் நீண்ட துணிப் பட்டையையும் அணிகின்றனர். இதனுடன் முழங்காலுக்குச் சற்றுக் கீழ் வரை கால் சட்டையையும் தலையில் தொப்பியையும் அணிகின்றனர். பெண்கள் தூய்மையான வெண்ணிற ஆடையுடன் நீண்ட துணிப் பட்டையையும் அணிகின்றனர். அவர்கள் பெரும்பாலும் நீண்ட பையைத் தோளில் அணிந்தே செல்வர். இருபாலாருமே நீண்ட முடியைக் கொண்டிருக்கின்றனர்.

இகாவினர் தனித்தனியான குடும்பக் குழுக்களாக வாழ்கின்றனர். திருமணத்தின்போது கணவன், மனைவியின் தந்தை கொடுத்த சீதனத்தில், ஒரு குழந்தையைப் பெறும்வரையில் மாமனார் வீட்டில் வாழ்கிறான். இகாக் குடிகளிடையே ஆண்களுக்குச் சொத்துரிமை இல்லை.

பெரும்பாலான பழங்குடிகளைப் போன்றே இகாவினரும் காட்டை எரித்து, இடம் விட்டு இடம் மாறிப் பயிரிடும் முறையைக் கொண்டுள்ளனர். மக்காச்சோளம், வாழை, கரும்பு, காப்பி முதலான பயிர் வகைகளை மலைப் பகுதியில் வெவ்வேறு உயரத்தில் உள்ள தங்கள் நிலங்களில் பயிரிடும் இவர்கள், ஒவ்வோரிடத்திலும் பயிரைக் காவல் செய்யச் சிறு குடிசையை அமைக்கின்றனர். இது தவிர்த்து, நிலையான வாழிடத்தையும் கொண்டுள்ளனர். இகாக் குடியினரின் குடிசைகள் கற்களையும் மண்ணையும் கொண்டு கட்டப்பட்டுக் கூரை வேய்ந்தனவாகும். கூடை பின்னுதல், திரி நெய்தல், மட்பாண்டங்கள் செய்தல் முதலானவை இவர்களின் துணைத் தொழில்களாகும்.

இகாவினரின் சமூக வாழ்க்கையைப் போன்றே இவர்களின் சமய முறைகளும் சற்று மாறுபட்டவை. இகாப் பழங்குடியினரின் சியாரா மலைப் பகுதியைச் சுற்றி வாழும் இதர அமெரிக்க இந்தியப் பழங்குடிகளான கோகி (Kogi), மலாயோ (Malayo) ஆகியோரிடமிருந்து தங்கள் பகுதியைக் 'கருப்புக் கோடு' (Black Line) ஒன்று பிரிப்பதாக எண்ணுகின்றனர். சியாரா மலை அடிவாரத்தில் செல்லும் இக்கோடு, இவர்களது புராண நம்பிக்கைக்குட்பட்ட எல்லையாகும். பனியாறுகளால் நிரம்பிய இம்மலை உச்சியைச் 'சுந்துவா' (Chundua) என்றும், இப்பகுதியே இவர்கள் வழிபடும் இறைவனின் இடமென்றும் கருதுகின்றனர். மலைகள், ஆறுகள், விண்மீன்கள், விண்கோள்கள், தாவரங்கள், விலங்குகள், சுற்றுப்புறம் ஆகியவை எல்லாம் சிக்கலான பிணைப்பில் ஒன்றை ஒன்று சார்ந்து நிற்கின்றன. இப்பிணைப்பு நடுநிலையில் நிற்க வேண்டுமாயின், குறிப்பிட்ட காலக் கட்டங்களில் இயற்கைக்கும், தாம் சார்ந்து நிற்கும் பூமிக்கும், வழிபாடுகளும் சடங்குகளும் மேற்கொள்ள வேண்டுமென்பதே இகாவினரின் சமய நம்பிக்கையாகும். இவ்வாறு செய்யத் தவறுவதாலேயே புயல், வெள்ளம், வறட்சி, நில நடுக்கம் முதலானவை ஏற்படுகின்றன என இவர்கள் நம்புகின்றனர். இயற்கையின் விதிகளனைத்தும் அறியும் தெய்வத் தன்மையுற்றவர்களை 'மமோ' (Mamo) என அழைக்கின்றனர்.

காட்டுப் பகுதிகளிலும் மலைப்பகுதிகளிலும் வாழும் அமெரிக்க இந்தியர்கள் 'கோகோ' என்னும் ஒருவகைப் போதை தரும் இலையைப் பகல் முழுவதும் மென்று கொண்டே இருப்பர். இந்த இலைக்கும், இவர்களது சமயத்திற்கும், புராணத்திற்கும் நேரிடைத் தொடர்புள்ளதாகக் கருதுகின்றனர். இகாவினர் ஒவ்வொருவரும் தங்கள் தோற்பட்டைப் பையில் கோகோ இலையை எடுத்துச் செல்கின்றனர். நண்பர்கள் இருவர் சந்திக்கும்போது கை நிரம்பக் கோகோ இலையைப் பரிமாற்றம் செய்து கொள்வர்.

பல சிக்கலான அடிப்படையில் கணிக்கப்படும் முறையைக் கொண்டு பிறந்த ஆண்குழந்தையை 'நல்ல' இரத்தம் உடையவனா என அறிகின்றனர். நல்ல இரத்தம் உடைய குழந்தைகளைப் பருவமடையும் வரை உப்பு, இறைச்சி ஆகியவற்றைப் பயன்படுத்துதல், உடலுறவு கொள்ளுதல் முதலியனவற்றிலிருந்து தவிர்த்து, தெய்வத்தன்மையுற்றவர்களைக் கொண்டு இவர்களுக்குச் சமய நெறிகளைக் கற்பிக்கின்றனர்.

சிப்சா (Chibcha) மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மொழியை இகாப்பழங்குடியினர் பேசுகின்றனர். கி.பி. பதினாறாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் சியாரா மலைப்பகுதியில் குடியேறிய இசுபானியர்கள் (Spaniards) இம்மலை அடிவாரத்தில் வாழ்ந்த இகாப் பழங்குடியினரைத் தம் திக்கற்றவர் பள்ளியில் சேர்த்துக் குழந்தைகளுக்கு இசுபானிய (Spanish) மொழியில் கற்பித்தனர். பின் 1916-ஆம் ஆண்டில் இகாவினரின் நிலங்களையும் தம்வசப்படுத்தத் தொடங்கினர். இதனைத் தொடர்ந்து படிப்படியாக இகாப் பழங்குடியினரின் சமூக, சமய வாழ்விலும் தம் பண்பாட்டைப் புகுத்தப் பல கொடுமையான நடவடிக்கைகளை எடுத்தனர். இறுதியில் 1968-ஆம் ஆண்டு கொலம்பிய அரசாங்கத்திடம், தங்களிடமிருந்து இசுபானியர் கைப்பற்றியுள்ள 10,000 ஏக்கர் நிலத்தை மீண்டும் உரிமை பெற இகாவினர் விரும்பினர். அவ்வாண்டிலேயே அரசும் உரிமையைப் பெற்றுத் தந்தது. இக்காலத்தில் இகாவினர் 'அர்குவாகோ' (Arhuaco) என்றே தம்மை அறிமுகப்படுத்திக் கொள்கின்றனர். தம் பழங்குடியினரின் பண்பாட்டை நிலை நிறுத்தவும் வெளியார் சுரண்டுதலைத் தடுக்கவும் 'அர்குவாகோ இந்தியர்களின் அமைப்புக் குழு' (The Organizational Council of the Arhuaco Indians) என்ற புனை பெயரிலேயே இவ்வமைப்பை ஏற்படுத்தியுள்ளனர்.

**இங்கர்சால்,** கனடா நாட்டின் தென் ஆன்டாரியோ (Ontario) மாநிலத்தில் உள்ளதொரு நகரம். கனடாவிலுள்ள இலண்டன் நகருக்கு 28 கி.மீ. கிழக்கில் அமைந்துள்ளது இவ்வூர். இது பால்

பண்ணைப் பொருள்கள் விளையும் மையமாகும். கனடா நாட்டில் முதன்முதல் நிலைநாட்டப்பெற்ற பாலடைக்கட்டித் தொழிற்சாலை, இங்குத்தான் கி.பி. 1864-ஆம் ஆண்டில் அமைக்கப்பெற்றது. பாலைப் பதப்படுத்தும் தொழிலும் இங்குச் சிறப்பாக நடைபெறுகிறது. மரம்றுத்தல், மரச்சாமான்கள் செய்தல், திருகாணிகள், சுரைகள், அடுப்புகள், செயற்கை உரங்கள் போன்றவை செய்தல் இங்கர்சாலில் (Ingersoll) நடைபெறும் ஏனைய தொழில்களாம்.

மசாசுசெட்சிலிருந்து (Massachusetts) சென்று கி.பி. 1793-இல் குடியேறிய படைத்தலைவர் தாமசு இங்கர்சால் (Thomas Ingersoll) என்பவரின் பெயரில் அமைந்தது இந்நகரம். இங்குக் கி.பி. 1812-ஆம் ஆண்டு நடைபெற்ற போரில் இவருடைய மகள் இலாரா செகார்டு (Laura Secord) பாராட்டுப் பெற்ற வீராங்கனையானாள். அமெரிக்கர்கள் தாக்குவார்கள் என்று அந்த வீராங்கனை ஆங்கிலேயருக்கு எச்சரிக்கை விடுத்தாள். இந்நகரின் மக்கள்தொகை 7249.

**இங்கர்சால், இராபர்ட்டு கிரீன்** (கி.பி. 1833-1899) என்பார் அமெரிக்காவின் வழக்குரைஞர்களுள் ஒருவர்; அரசியல் வல்லுநர்; எழுத்தாளர். வைதிகக் கிறித்தவச் சமய நம்பிக்கைகளைத் தாக்கிப் பேசி ஏறத்தாழ முப்பது ஆண்டுகள் நாத்திகராகத் திகழ்ந்தவர் இவர். இருப்பினும் குற்றவியல் சட்டம், நிறுவனங்களுக்கிடையேயான சட்டம் ஆகியவற்றைப் பற்றிய வழக்குரைஞராக இவர் பணியாற்றினார். 'கடவுளும் ஏனைய உரைகளும்' (1876), 'மோசசு என்பாரின் சில தவறுகள்' (Some Mistakes of Moses—1879), 'பேருரைகள்' (1887) போன்ற நூல்களை இவர் எழுதினார்.

இங்கர்சால் (Ingersoll) கி.பி. 1833-ஆம் ஆண்டு நியூயார்க்கு மாநிலத்தில் திரசுடன் (Dresden) என்னும் ஊரில் பிறந்தார். இவர் கி.பி. 1862-ஆம் ஆண்டில் அமெரிக்க உள்நாட்டுப் போரில் 11 ஆம் இல்லியனாய்சுக் குதிரைப்படையின் தலைவராகப் பணியாற்றினார். மக்களாட்சிக் கட்சியின் உறுப்பினராக இவர் அரசியலில் நுழைந்தார்; ஆனால் உள்நாட்டுப் போருக்குப் பின்னர்த் தலைசிறந்த குடியரசுக் கட்சியாளராக மாறினார். இவர் கி.பி 1876-ஆம் ஆண்டில் குடியரசுக் கட்சியின் தேசிய மாநாட்டில், சேம்சு பிளெய்ன் (James Blaine) என்பாரைக் குடியரசுக் கட்சியின் வேட்பாளராக அதிபர் போட்டிக்கு நிறுத்தி இவர் ஆற்றிய உரை, இவருக்குப் பேரையும் புகழையும் ஈட்டித் தந்தது.

இவருடைய தந்தையார் பிரெசுபிடேரியச் (Presbyderian) சமயப் போதகர். இவர்தம் தந்தையாரின் சமயப் பற்று, இங்கர்சாலை இளமையிலேயே நாத்திகராக்கியது. இவர் கோட்பாடுகள் பின்வருவன: 1. நல்வாழ்வே நன்மை பயக்கவல்லது. 2. நல்வாழ்வு வாழ விரும்புகிறவன் மற்றவர்களும் நல்வாழ்வு வாழ உதவ வேண்டும். 3. நல்வாழ்வைப் பெறுவது இவ்வுலகில்தான். 4. இன்பமாக வாழ்வதற்கான நல்ல காலமும் இதுவேதான்.

இவர் கி.பி. 1878-இல் வழக்குரைஞராக வாசிங்டனில் பணியாற்றினார்; ஏழாண்டுகள் கழித்து நியூயார்க்கிலும் சென்று பணியாற்றினார். இங்கர்சால் கி.பி. 1899-ஆம் ஆண்டு சூலை மாதம் 21-ஆம் நாள் தோப்சு பெர்ரி (Dobbs Ferry) என்னுமிடத்தில் காலமானார்.

**இங்கர்மன் போர்** கிரிமியாப் போரின் (Crimean War) போது நடைபெற்ற போர்களுள் ஒன்று. இப்போர் கி.பி. 1854-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 5-ஆம் நாள் நடைபெற்றது. இங்கர்மன் என்பது ஒரு மலை. இது கிரிமியாத் துறைமுகத்தின் பக்கத்தில் உள்ள செவாசுடபோல் (Sevastopol) என்னும் நகரை நோக்கி அமைந்துள்ளது. காலை வேளையில் கொட்டும் மூடுபனியில் மறைந்துகொண்டு உருசியர்கள் செவாசுடபோல் கோட்டையிலிருந்து புறச்சலெனப் புறப்பட்டு நெருக்கமான அணிவகுப்புடன் ஆங்கிலப்படையின்மீது பாய்ந்தார்கள். தொடக்கத்தில் ஆங்கிலேயர்கள் தம் துப்பாக்கிப் படையின் துணைக் கொண்டு எதிர்ப்பை முறியடிக்க முயன்றதால், போர் இரு சாராருக்கும் மாறி மாறி வெற்றி தோல்வி தருவதுபோல் ஊசலாடியது. ஒரு காலை வேளையில் மட்டும் ஏழு முறை வெற்றி வாய்ப்புக் கைம்மாறியது. இறுதியில் ஆங்கிலப் படைகளுக்கு உதவப் பிரெஞ்சுப் படைகள் வந்தன. உருசியர்கள் பின்வாங்கினர். ஆனால், நேசப்படைகள் சோர்வுற்ற நிலையிலிருந்ததால் அவர்களைப் பின்தொடரவில்லை.

இங்கர்மன் போரைப் 'படைவீரர்களின் போர்' என்றும் கூறுவர். ஏனெனில், இப்போரில்தான் இருபிரிவினரும் கைகளால் போரிட்டனர். என்னற்ற ஆங்கிலப் படைத் தலைவர்கள் இறந்துபட்டதால் அவ்வீரர்களை வழிநடத்தும் தலைவர்கள் இல்லாது போயினர். நேசப் படையினருள் ஏறத்தாழ 4000 பேரும், உருசியப் படையினருள் 12,000 பேரும் இங்கர்மன் போரின்போது உயிர் துறந்தனர்.

**இங்கல்சு, சான் சேம்சு** (கி.பி. 1833-1900) என்பார் அமெரிக்க அரசியல் தலைவர். மசாசுசெட்சு மாநிலத்திலுள்ள மிடில்டன் (Middleton) என்னும் நகரில் கி.பி. 1833-ஆம் ஆண்டு பிறந்த இவர், வில்லியம்சுக் கல்லூரியில் சட்டம் பயின்று பட்டம் பெற்றபின், மசாசுசெட்சு வழக்குரைஞர்

கழகத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டார். பின்னர்க் கி.பி. 1858-ஆம் ஆண்டில் கான்சாசு மாநிலத்திற்குக் குடிபெயர்ந்தார். உள்நாட்டுப் போரின்போது கான்சாசு (Kansas) தொண்டர்படையின் நீதிபதி வழக்குரைஞராகப் பணியாற்றினார். இங்கல்சு (Ingalls, John James) கி.பி. 1862-ஆம் ஆண்டில் மாநில மேலவையின் உறுப்பினரானார். ஆனால், இவர் இணை ஆளுநர் பதவிக்குப் போட்டியிட்டு இருமுறை தோற்றுப் போனார். 'சுதந்திர வெற்றி வீரன்' (Freedom's Champion)என்னும் இதழை இவர் கி.பி.1863-65-ஆம் ஆண்டுகளில் பதிப்பித்தார். பின்னர்க் 'கான்சாசு பத்திரிகை' (Kansas Magazine) என்னும் இதழையும் நிலைநாட்ட உதவினார்.

குடியரசுக் கட்சியினர் இங்கல்சைக் கி.பி. 1873-ஆம் ஆண்டு அமெரிக்க செனட்டுச் சபைக்குத் தேர்ந்தெடுத்தனர். இவர் தொடர்ந்து இரு முறை அப்பதவியில் பணியாற்றினார். இவர் பேச்சாற்றல் மிக்கவர்; வேடிக்கையாகப் பேசும் திறமை பெற்றவர். எனினும், கி.பி.1890-ஆம் ஆண்டு மக்களாட்சிக் கட்சியினரின் ஒருங்கிணைந்த குழுவொன்றினால் இவர் தோற்கடிக்கப்பட்டார். அதன் பின்னர் இவர் அரசியலைத் துறந்துவிட்டு மேடைப் பேச்சாளராகவும் செய்தியாளராகவும் பணியாற்றினார். இவர் 1900-ஆம் ஆண்டு ஆகசுட்டுத் திங்கள் 16-ஆம் நாள் இலாசு வேகாசு (Las Vegas) என்னுமிடத்தில் காலமானார்.

**இங்கிரே** புகழ்பெற்ற பிரெஞ்சு ஓவியக் கலைஞர். இவர் கி.பி. 1780-ஆம் ஆண்டு மாண்டாபான் (Mountaubon) என்னுமிடத்தில் பிறந்தார். துலூசின் கவின்கலைக் கழகத்தில் (Academy of Fine Arts, Toulouse) பயின்ற இவர் பின்னர் இத்தாலிக்குச் சென்று அங்குக் குடியேறினார். இத்தாலியில்



இவர் இரபேலின் ஓவியங்களிலும் பிளாரன்சுக் கலைஞர்களின் ஓவியப்படைப்புகளிலும் ஈடுபட்டார். இங்கிரே (Ingres) கி.பி. 1808-ஆம் ஆண்டு தீட்டிய 'ஈடிபசும் சுபிங்சும்' (Oedipus & the Sphinx) என்னும் ஓவியமும், கி.பி. 1814 ஆம் ஆண்டு தீட்டிய ஒடலிசுக்கு (Odalisque) என்னும் ஓவியமும் புகழ்பெற்றவை ஆகும். இவ்விரண்டு ஓவியங்களையும் உலூவர் (Louvre) என்னும் ஊரில் காணலாம்.

இவர் கி.பி. 1824-ஆம் ஆண்டு பாரிசுக்குத் திரும்பினார். அங்குக் கவின்கலைக் கழகத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். பின்னர்க் கி.பி 1835-ஆம் ஆண்டு உரோம் நகரத்திலுள்ள பிரெஞ்சுக் கழகத்தின் இயக்குநராக நியமிக்கப்பட்டார். இவர் கி.பி. 1867-இல் பாரிசில் மறைந்தார். இவருடைய படைப்புகளில் கோதிக்கு (Gothic) ஓவியமுறையின் செல்வாக்கு அதிகமாகக் காணப்படுகிறது. 'மூலம்' (The Source), 'துருக்கியக் குளியல்' (The Turkish Bath), 'பதின்மூன்றாம் உலூயியின் சபதம்' (The vow of Louis XIII) என்பவை இவருடைய ஓவியங்களுள் சிறப்பு வாய்ந்தவை ஆகும். இந்த ஓவியங்களை மாண்டாபான், உலூவர், இலண்டன் ஆகிய கலைக் கூடங்களில் காணலாம்.

**இங்கிலாந்து:** உலக வரைபடத்தில் சிறிய தாகக் காட்சியளிக்கும் இங்கிலாந்து சாதனைகளால் உயர்ந்தோங்கி விளங்கும் நாடாகும். இது அரசியல், பொருளாதார, அறிவியல் துறைகளில் பல்வகைச் சிறப்புகளை ஒருங்கே பெற்ற நாடாகத் திகழ்கிறது. வரலாற்றுச் சிறப்பு, உலகைக் கவர்ந்த ஆங்கில மொழி, உணர்ச்சியூட்டும் இலக்கிய மரபு, மேன்மைக்குரிய மக்களாட்சி, அரசியலமைப்பின் அரணாய் விளங்கும் முடியாட்சி, சீரான அரசியல் பண்பாடு, பாராளுமன்றத்தின் பிறப்பிடம், புரட்சியமைந்த தொழில் வளர்ச்சி, மனிதகுலம் தழைக்கச் செய்த அறிவியல் கண்டுபிடிப்புகள் போன்ற பெருமைகளுக்கெல்லாம் இங்கிலாந்து உறைவிடமாகும்.

நிலஇயல்: ஐரோப்பாக் கண்டத்தின் வடமேற்கில் அமைந்துள்ள பிரிட்டிசுத் தீவுகளின் (British Isles) பெரும்பகுதி இங்கிலாந்து ஆகும். இங்கிலாந்து, வேல்சு (Wales), இசுகாட்லாந்து (Scotland), வட அயர்லாந்து (North Ireland) ஆகியவைகளின் கூட்டமைப்பினை ஐக்கிய அரசு (United Kingdom) எனக் குறிக்கின்றனர். தெற்கில் ஆங்கிலக் கால்வாய் (English Channel), தோவர் நீர்ப்பிரிவு (Strait of Dover); கிழக்கில் வடகடல், வடக்கில் இசுகாட்லாந்து, மேற்கில் ஐரிசுக் கடல் (Irish Sea), அட்லாண்டிக்குப் பெருங்கடல் (Atlantic Ocean) ஆகியவைகளால் இங்கிலாந்து சூழப்பட்டுள்ளது.




இங்கிலாந்தும் வேல்சும்

இங்கிலாந்தினுடைய மொத்த நிலப்பரப்பளவு 130,365 ச.கி.மீ. ஆகும். இந்நாட்டின் வடமேற்குப் பகுதிகள் மேட்டு நிலங்களைக் கொண்டுள்ளன; தென்கிழக்குப் பகுதிகள் தாழ்ந்த நிலங்களாகும். இங்கிலாந்தின் நடுப் பகுதியில் பென்னைன் (Pennine) மலைகள் உள்ளன. நாட்டினுடைய மிகப்பெரிய ஆறு தேம்சு (Thames) ஆகும். மேலும் செவர்ன் (Severn), தைன் (Tyne), வேர் (Wear) ஆகிய ஆறுகள் நாட்டிற்கு வளம் சேர்க்கின்றன. இங்கிலாந்தினுடைய கடற்கரை மிகவும் பிளவுபட்டுள்ள காரணத்தினால், பல சிறந்த இயற்கைத் துறைமுகங்கள் இந்நாட்டில் உள்ளன.

இங்கிலாந்தினுடைய இயற்கை வளங்களுள் முதன்மையானது நிலக்கரி ஆகும். ஏனைய இயற்கை வளங்களுள் இரும்புத்தாது, பெட்ரோலியம், நிலவாயு போன்றவை குறிப்பிடத்தக்கனவாகும். நிலக்கரியும் இரும்புச் சுரங்கங்களும் நாட்டினுடைய வடமேற்குப் பகுதியில் காணக்கிடக்கின்றன. பருத்தி விளைச்சலுக்கேற்ற மண்வளம் வடக்குப் பகுதியில் மிகுந்துள்ளது. கோதுமை, பார்லி ஆகியவை நாட்டில் விளைகிற முக்கிய உணவுப் பொருள்களாகும் மேய்ச்சல் நிலங்களும், சமவெளிப்பகுதிகளும் நாட்டில் நிறைந்துள்ளபடியால், ஆடு மாடுகள் மிகுதியாக வளர்க்கப்படுகின்றன. இதனால், பண்ணைத் தொழில் சிறந்து விளங்குகிறது. வட கடல், ஐரிசுக் கடற் பகுதிகளில் மீன்வளம் நிறைந்துள்ளது.

பெருநகரங்கள்: இங்கிலாந்தின் தலைநகரான இலண்டன் (London) தேம்சு ஆற்றங்கரையில் அமையப் பெற்று, தொழிலுக்கும் வாணிகத்திற்கும் ஏற்ற மையங்களுள் ஒன்றாகத் திகழ்கிறது. இலண்டன் பெரு




நகரின் மக்கள்தொகை 6,765,100 (1981) ஆகும். வரலாற்றுப் புகழ்மிக்க கட்டடங்களும், திருச்சபைகளும் இந்நகரின் அழகை மிகுதிப் படுத்துகின்றன. வெசுட்மினிசுடர் மடம் (Westminster Abbey), வெசுட்மினிசுடர் மன்றம் (Westminster Hall), வெள்ளை மாளிகை (White Hall), புனித பால் திருச்சபை (St. Paul's Cathedral), இலண்டன் அருங்காட்சியகம் (London Meseum) போன்றவை இந்நகரில் பார்க்கத்தக்கவையாகும். பருத்தி ஆலைகளுக்குப் புகழ் வாய்ந்த மான்செசுட்டர் (Manchester), இலிவர்பூல் (Liverpool), கம்பளி நெசவுக்குப் பெயர்பெற்ற யார்க்சையர் (Yorkshire), நாட்டிங்காம் (Nottingham), நிலக்கரி, இரும்புத் தொழிற்சாலைகளுக்குச் சிறப்புப்பெற்ற



தேம்சு ஆறு

நியூகாசல் (Newcastle), இலீசெசுடர் (Leicester), தொழில் வளமும் துறைமுகங்களுங் கொண்ட சுந்தர் லாந்து (Sunderland), பால்மத்து (Palmouth), பிளிமத்து (Plymouth), பிரிசுடல் (Bristol), கால்நடைப் பண்ணைகள், பாற்பொருள் தொழிற் சாலைகள் நிறைந்த கிளசுடர் (Gloucester), செசுடர் (Chester), தெர்பி (Derby), பல்கலைக்கழக நகரங்களான ஆக்சுபோர்டு (Oxford), கேம்பிரிட்சு (Cambridge), இலீட்சு (Leeds) ஆகியவை இங்கிலாந்தில் குறிப்பிடத் தக்க நகரங்களாகும்.

பொருளாதாரம்: கி.பி. பதினெட்டாம்நூற்றாண்டில் ஏற்பட்ட தொழிற்புரட்சியைத் தொடர்ந்து, உலகில் மிகப்பெரிய தொழில் மையமான நாடுகளுள் ஒன்றாக இங்கிலாந்து விளங்கி வருகிறது. இங்கிலாந்தினுடைய கனிவளத்தில் 65 விழுக்காடு உற்பத்தி நிலக்கரியாகும். இந்நாட்டில் மட்டும் 191 நிலக்கரிச் சுரங்கங்கள் உள்ளன. எனவே, தொழில் வளர்ச்சிக்கு அடிப்படையான எரிசக்தி நிலக்கரியிலிருந்து கிடைக்கிறது. இதனையடுத்துப் பெட்ரோல், எரிவாயு, அணுச்சக்தி



பிரிசுடல் துறைமுகம்

ஆகியவை தொழில் வளர்ச்சிக்கு ஆதாரமாக அமைகின்றன. மோட்டார் கார்கள், இரும்புப் பொருள்கள், இரசாயனப் பொருள்கள், பருத்தி, கம்பளி ஆடைகள், கப்பல்கள், விமானங்கள், போர்த் தளவாடங்கள் ஆகியவற்றை இங்கிலாந்து உற்பத்தி செய்கிறது. உலகச் சந்தையில் மதிப்புடன் விளங்கு கிற சாகுவார் (Jaguwar), உரோவர் திரையம்பு (Rover Triumph), உரோல்சு ராய்சு (Rolls Royce) போன்ற கார்கள் இங்கிலாந்தில் தயாரிக்கப்படுகின் றன. இரசாயன மருந்துகள், இரப்பர்ப் பொருள்கள் போன்றவற்றின் உற்பத்தியிலும் இந்நாடு முன்னணி யில் நிற்கிறது. உணவுத் தானியங்கள், கால்நடைத் தீவனங்கள், பண்ணைப் பொருள்களான முட்டை, பால், இறைச்சி ஆகியவை மிகுதியாக உற்பத்தி செய்யப்படுகின்றன. கண்ணாடித் தொழிற்சாலைகள் இங்கிலாந்தினுடைய மற்றொரு சிறப்பாகும். இத் தொழிலின் மூலப்பொருளான சிலிகா மணல் சர்டிலி மலைப் பகுதியில் கிடைக்கிறது.

**வரலாறு:** இங்கிலாந்தின் பழம்பெரும் குடிகளுள் ஒன்றான கெல்ட்டுகள் (Celts) மீது கி.மு. முதல் நூற்றாண்டில் நடந்த உரோமானியப் படை யெடுப்பும், அதனைத் தொடர்ந்து ஏற்பட்ட குடி யேற்றமும் இங்கிலாந்தின் வரலாற்றைத் தொடங்




ஆங்கிலோ சாக்சானிய அரசுகள்

கிய நிகழ்ச்சிகள் ஆகும். சூலியசு சீசரின் (Julus Caesar) படையெடுப்பிற்குப் பிறகு கி.மு. 55-இல் உரோமானிய ஆதிக்கத்தின் கீழ் இங்கிலாந்து ஏறத் தாழ முந்நூறு ஆண்டுகளுக்கு மேல் இருந்தது. இக் காலத்தில்தான் இலத்தீன் மொழி பிரிட்டனில் பரவியது.

செருமனி, உருசியப் பகுதிகளைத் தங்கள் முந்தைய வாழ்விடங்களாகக் கொண்ட ஆங்கில் (Angle), சூட்டு (Jute), சாக்சன் (Saxons) ஆகிய ஆங்கிலோ-சாக்சானிய(Anglo-Saxon)இனத்தவர்கள் கி.பி. ஐந்து, ஆறு நூற்றாண்டுகளில் இங்கிலாந்து மீது படையெடுத்துக் குடியேற்றங்களை நிறுவினர். அதன் விளைவாக இங்கிலாந்தில் ஆங்கிலோ -சாக் சானியர்களுடைய இனக்கலப்பு ஏற்பட்டது. எனவே, இன்றைய இங்கிலாந்து மக்களைப் பழங்கால ஆங்கிலோ-சாக்சானியர்கள் வழி வந்தவர்கள் எனக் கருதலாம். ஆங்கிலோ-சாக்சானிய ஆட்சிக்காலத் தில், பெருமைமிகு கிரிகரி (Gregory, the Great) என்னும் போப்பாண்டவரது முயற்சியினால் இங்கிலாந்தில் கிறித்தவ சமயம் பரவலாயிற்று.

இங்கிலாந்து மீது கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வட ஐரோப்பாவிலிருந்து தேனிய மக்கள் (Danes) ஆக்கிரமிப்பு நடத்தினர். மேற்குச் சாக்சானிய அரச ராகக் கி.பி. 871-இல் பதவியேற்ற ஆல்பிரடு(Alfred) என்பாரை, இங்கிலாந்தின் முதல் அரசராகக் கருது கிறார்கள். நார்மானியர்கள் கி.பி. பதினொன்றாம் நூற்றாண்டில் இங்கிலாந்தைத் தாக்கினர். அவர்கள் பிரான்சிலுள்ள நார்மண்டியிலிருந்து வந்தனர். நார் மானிய ஆட்சி கி.பி. 1066 முதல் 1216 வரை நீடித்தது. நார்மானிய அரசர்களுள் முதலாம் வில்லியம், முத லாம் என்றி (Henry I) ஆகிய மன்னர்கள் குறிப்பிடத் தக்கவர்களாவர். முடியாட்சி முறை என்பது, நார் மானியர் வெற்றிக்குப் பின்னரே இங்கிலாந்து அரசிய லில் வேரூன்றி வளரத் தொடங்கியது. வரலாற்றுப் புகழ்மிக்க மகாசாசனம் அல்லது 'மாக்ன கார்ட் டா'வை (Magna Carta) சான் (John) என்னும் அரசர் கி.பி. 1215-இல் வழங்கினார். பின்னர், கி.பி. 1399 முதல் 1485 வரை இலங்காசுடர் (Lancaster) அரசர்களும் யார்க்கு (York) அரசர்களும் இங்கிலாந்தை ஆண்டனர்.

தியூடர்களின் (Tudors) ஆட்சிக்காலம் (கி.பி. 1485-1603) வரலாற்றுச் சிறப்புடையதாகும். அவ் வமயம், முடியாட்சி மேன்மையுற்று, இடைக்காலத் தில் தோன்றிய நிலமானிய முறை அழிவுற்றது. சமுதாயத்தில் பிரபுக்களின் ஆதிக்கம் ஒழிக்கப் பட்டது. நாட்டில் இலக்கிய, சமய சீர்திருத்த இயக்கங்கள் தோன்றின. தியூடர் அரசர்களான



முதலாம் வில்லியம் கட்டிய வின்ட்சர் கோட்டை

எட்டாம் என்றியும் (கி.பி. 1509-47), ஆறாம் எட்வர்டும் (கி.பி. 1547-53), அரசி மேரியும் (கி.பி. 1553-58), அரசி முதலாம் எலிசபெத்தும் (கி.பி. 1553-1603) புகழ் வாய்ந்தவர்களாவர்.

அடுத்து இங்கிலாந்தை ஆண்ட இசுடுவர்ட்டு களுடைய (Stuart) ஆட்சியின்கீழ்(கி.பி. 1603-1614) பல முன்னேற்றங்கள் ஏற்பட்டன. முடியாட்சியைத் தெய்விக உரிமையெனக் கருதிய இசுடுவர்ட்டு அரசர்கள், தங்கள் அதிகாரங்களைப் பாராளுமன்றத்துடன் பகிர்ந்துகொள்ளத் தவறியதால், அரசர்களுக்கும் பாராளுமன்றத்திற்குமிடையே இடைவிடாத போராட்டம் ஏற்பட்டது. அதன் விளைவாக, வரம்பற்ற வல்லரசு முறை மாறி, வரம்புக்குட்பட்ட முடியரசு (Constitutional Monarchy) தோன்றியது. இசுடுவர்ட்டுகளது வரிசையில் வந்த முதலாம் சேம்சு (James I. கி.பி. 1603-25), முதலாம் சார்ல்சு (கி.பி. 1625-49), இரண்டாம் சார்ல்சு (கி.பி. 1660-85) ஆகிய அரசர்கள் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

ஆனோவர் (House of Hanover) வமிசத்தினர், கி.பி. 1614-இலிருந்து 1901 வரை இங்கிலாந்தில் ஆட்சி செலுத்தினர். முதலாம் சார்சின் (George I) ஆட்சிக் காலத்தில் (கி.பி. 1714-27) அமைச்சரவை ஆட்சியும் (Cabinet) அரசியல் கட்சிகளும் வளரத் தொடங்கின. இங்கிலாந்தில் கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டில் தொழிற் புரட்சியும் வேளாண்மைப் புரட்சியும் ஏற்பட்டன. நெசவுக்கான விசைத்தறிகள், நீராவி இயந்திரங்கள் ஆகியவை இக்காலத்தில் கண்டுபிடிக்கப்பட்டு, இங்கிலாந்து தொழில் மயமாக்கப்பட்டது.

பத்தொன்பதாம் நூற்றாண்டில், இங்கிலாந்தினுடைய வெளிநாட்டு உறவுகள் சிறப்பெய்தின. நெப்போலியனது தலைமையில் எழுச்சியுற்ற பிரான்சு நாட்டிற்கெதிராக, இங்கிலாந்து பல போர்களில் ஈடுபட்டது. இறுதியாக, கி.பி. 1815-இல் வாட்டர்லூ போரில் (Battle of Waterloo) பிரான்சை முறியடித்து இங்கிலாந்து வெற்றி வாகை சூடியது. அப்போர்கள் இங்கிலாந்தினுடைய அரசியல், பொருளாதார, இராணுவ வலிமையை வெளிப்படுத்தின.

புகழ்பெற்ற விக்டோரியா அரசியாரின் ஆட்சிக் காலத்தில் (கி.பி. 1837-1901), இங்கிலாந்து மேலும் சிறப்பெய்தியது. பீல் (Peel), பால்மர்சுடன் (Palmerston), கிளாடுசுடன் (Gladstone), திசுரேலி (Disraeli) ஆகிய தலைமை அமைச்சர்கள் அப்போது அரும் பணியாற்றினார்கள். முதல் உலகப் போரில் (1914-18) நேசநாடுகளில் ஒன்றான இங்கிலாந்து, செருமனியின் தோல்விக்கு முக்கியக் காரணமாகும். ஆங்கிலேயப் பிரதமர் இலாயிடு சார்சு (Lloyd George, 1916-22) முதல் உலகப் போரைத் திறம்பட நடத்தி இங்கிலாந்திற்கு வெற்றியைத் தேடித் தந்தார். இராம்சே மெக்டொனால்டு (Ramsay Mac Donald) என்பவரது தலைமையில் தொழிற்கட்சி (Labour Party) 1924-இல் முதல் முறையாகப் பதவிக்கு வந்தது. இரண்டாம் முறையாக 1929-இல் பதவியேற்ற மெக்டொனால்டு, அப்பொழுது ஏற்பட்ட பொருளாதார நெருக்கடியைச் சமாளிக்க அனைத்துக் கட்சிகளது ஆதரவுடன் கூட்டு அமைச்சரவையை நிறுவினார். ஐந்தாம் சார்சு மன்னரது மறைவுக்குப் பிறகு, 1936-இல் பதவியேற்ற அரசர் எட்டாம் எட்வர்டு அமெரிக்க மங்கையைக் காதல் திருமணம் செய்து கொண்டதன் விளைவாக முடி துறந்தார். இரண்டாம் உலகப் போரில் (1939-45) இங்கிலாந்து செருமனியோடு நடத்திய போர்களில் மிகவும் குறிப்பிடத்தக்கது பிரிட்டன் போர் (1940-41, Battle of Britain) ஆகும். இத்தருணத்தில் இங்கிலாந்தின் தலைமை அமைச்சராயிருந்த வின்சுடன் சர்ச்சில் (Winston Churchill) போரைத் திறம்பட நடத்திப் புகழ்பெற்றார். பின்னர் 1945-இலிருந்து 1951 வரை தலைமையமைச்சர் பதவியிலிருந்த அட்லிக்குப் (Atley) பிறகு, மீண்டும் 1951-இல் சர்ச்சில் இரண்டாம் முறையாகத் தலைமை அமைச்சரானார். இப்பொழுது தலைமை அமைச்சர் பதவி வகிக்கும் கன்சர்வேட்டிவ் கட்சியைச் சார்ந்த திருமதி மார்கரெட்டு தாட்சர் (Mrs. Margaret

Thatcher) 1979-இலிருந்து இங்கிலாந்தில் முதல் பெண் தலைமை அமைச்சராகத் திகழ்ந்து வருகிறார்.



மார்கரெட்டு தாட்சர்

அரசியலமைப்பு: இங்கிலாந்தின் அரசியலமைப்பு உலகிலேயே மிகப் பழமையானதாகும். இதனை எழுதப்படாத அரசியலமைப்பு என்பர். ஒரு குறிப்பிட்ட காலக்கட்டத்தில் எழுதப்படாமல், பலவகையான சட்டங்கள், நீதிமன்றங்களின் தீர்ப்புகள், மரபுகள் (Conventions) ஆகியவை பரம்பரை பரம்பரையாக இங்குக் கடைப்பிடிக்கப்படுகின்றன. வரம்பிற்குட்பட்ட முடியாட்சி (Constitutional Monarchy), அமைச்சர் அவை ஆட்சிமுறை (Cabinet Government), பாராளுமன்றத்தினுடைய உயர் அதிகாரம் (Sovereignty of Parliament) ஆகிய சிறப்புகளை ஆங்கில அரசியலமைப்புப் பெற்றுள்ளது. சட்ட ஆதிக்கக் கொள்கையினை (Rule of Law) இவ்வரசியலமைப்பு மிகவும் வலியுறுத்துகிறது.

இங்கிலாந்தின் அரசியலமைப்பின் தலைமைப் பொறுப்பு முடியாட்சியிடம் இன்றும் நிலைத்து நிற்கிறது. இன்றைய அரசியாரான இரண்டாம் எலிசபெத்து 1952-இல் அரியணையேறினார். இவர் ஆறாம் சார்சு மன்னரின் மகளாவார். அரசியார் காமன்வெல்த்து நாடுகளது அமைப்பின் (Commonwealth) தலைவராவார்.

கட்சிமுறை: பாராளுமன்ற மக்களாட்சி முறையை (Parliamentary Democracy) இங்கிலாந்து பின்பற்றுகிறது. அதன் சிறப்பு அம்சமான ஆளுங் கட்சி, எதிர்க்கட்சி என்ற இருகட்சி ஆட்சிமுறை (Two Party System) இங்கிலாந்தில் நன்கு நிலை பெற்றுள்ளது. ஆளுங்கட்சியின் பணிகளைக் கண்காணிக்கும் பொறுப்புடைய எதிர்க்கட்சியை, 'மேன்மை தங்கிய அரசியாரின் எதிர்க்கட்சி' (Her Majesty's Opposition) எனக் கண்ணியத்துடன் அழைக்கின்றனர்.

கன்சர்வேட்டிவ் கட்சி (Conservative Party) தொழிற் கட்சி (Labour Party) ஆகிய இரு கட்சிகளே மாறி மாறி ஆட்சியைக் கைப்பற்றுகின்றன. பண்டைய தோரிகளுடைய (Tories) வழியில் வந்தவர்களே கன்சர்வேட்டிவ் கட்சியினர் ஆவர். கானிங்கு (Canning) என்னும் அமைச்சர், கி.பி. 1824-இல் கன்சர்வேட்டிவ் என்ற பெயரைத் தோரிக் கட்சிக்குச் சூட்டினாரெனினும், கட்சியை வளர்த்த பெருமை சர் இராபர்ட்டு பீல் (Sir Robert Peel) என்பாரைச் சாரும். பாராளுமன்றத்தில் தொழிலாளர்களுக்குப் பிரதிநிதித்துவம் (Representation) வேண்டுமென்று பேபியன் கழகம் (Fabian Society) வற்புறுத்தியதைத் தொடர்ந்து, கி.பி. 1893-இல் கேர் ஆர்டி (Keir Hardie) என்பவரால் தன்னியல் தொழிற் கட்சி (Independent Labour Party) நிறுவப்பட்டது. இதன் விளைவாகத் தொழிலாளர் பிரதிநிதித்துவக் குழு (Labour Representation Committee) ஏற்படுத்தப்பட்டது. அதுவே நாளடைவில் தொழிற்கட்சி எனப் பெயர் பெற்றது. இங்கிலாந்தின் மற்றுமொரு கட்சியான தாராளக் கட்சி (Liberal Party) என்பது, கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டில் சிறப்புற்றிருந்த விக்குக் கட்சியின் (Whigs) வழித்தோன்றலாகும்.

பாராளுமன்றம்: இங்கிலாந்துப் பாராளுமன்றத்தில் பிரபுக்கள் அவை என்னும் (House of Lords) மேலவையும், மக்கள் அவை என்னும் (House of Commons) கீழவையும் உள்ளன. பிரபுக்கள், பரம்பரையாக வருகிற மேட்டுக்குடிப் பிரதிநிதிகள், இளவரசர்கள், இளவரசிகள், குருமார்கள் ஆகியோர் மேல் சபையில் பிரதிநிதித்துவம் பெறுகின்றனர். ஐந்தாண்டிற்கொருமுறை தேர்தல் வாயிலாக மக்கள் அவை அமைக்கப்படுகிறது. மேல் அவையில் 1983-ஆம் ஆண்டுக் கணக்குப்படி, 1196 உறுப்பினர்களும் கீழ்அவையில் 635 உறுப்பினர்களும் இடம்பெற்றனர்.

சமயம்: இங்கிலாந்தில் 'பிராட்டசுடண்டு' (Protestant) சமயத்தைச் சார்ந்தவர்கள் பெரும்பான்மையினராவர். இவர்கள் இங்கிலாந்தின் திருச்சபையுடன் (Church of England) இணைந்துள்ளனர். மதகுருமார்களுள் முதல்வரான கான்டர்பரிப் பேராயரை (Archbishop of Canterbury) அரசியார்



இங்கிலாந்துப் பாராளுமன்றம்

நியமிக்கிறார். பதினாறாயிரத்திற்கும் மேற்பட்ட திருச்சபைகள் இங்கிலாந்தில் உள்ளன.

நாற்பது இலட்சத்திற்கு மிகுதியான உரோமானியக் கத்தோலிக்கர்கள் நாட்டில் உள்ளனர். இரண்டு இலட்சத்திற்கு மிகுதியான யூதர்கள் (Jews) இலண்டனில் வாழ்கின்றனர். இங்கிலாந்து அனைத்துச் சமயப் பிரிவினர்களுக்கும் சமமான வழிபாட்டு உரிமைகளை வழங்குகிறது. எனவே, இங்கிலாந்தில் குடியேறியுள்ள இந்து, இசுலாமிய, சீக்கிய, பார்சி மக்கள் தத்தம் சமய, வழிபாட்டுரிமையைப் பெற்றுவாழ்கின்றனர்.

**கல்வி:** இங்கிலாந்தில் கல்விமுறைக்கு அடிகோலிய கல்விச் சட்டம் (Education Act) 1944-இல் இயற்றப்பட்டது. கல்வித்துறையின் சிறப்புக் கூறு தன்னாட்சி உரிமை (Autonomy) ஆகும். தொடக்கப் பள்ளிகள், உயர்நிலைப் பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் ஆகியவற்றின்மீது அரசு கட்டுப்பாடு கிடையாது. 5 முதல் 11 வயது வரை தொடக்கக் கல்வியும், 12 முதல் 19 வயது வரை உயர்நிலைக் கல்வியும் வழங்கப்படுகிறது. தொடக்கக் கல்வி கட்டணமின்றியும் கட்டாயக் கல்வியாகவும் கடைப்பிடிக்கப்படுகிறது. தனியார் துறையில் செயற்படும் பொதுப்பள்ளிகள் (Public Schools) தரம் வாய்ந்த கல்விக்குச் சான்றாகும்.

தன்னாட்சி உரிமை பெற்ற 33 பல்கலைக்கழகங்கள் முதுகலை, ஆராய்ச்சிக்கான பட்டங்களை வழங்குகின்றன. திறந்தவெளிப் பல்கலைக்கழகம் (Open University) இங்கிலாந்தில் மக்கள் ஆதரவைப் பெற்றுள்ளது. மான்செசுட்டர் பல்கலைக்கழகத்தின் அறிவியல் தொழில் நுட்பக் கழகம் (University of Manchester Institute of Science and Technology), வணிகவியலைச் சார்ந்த பள்ளிகள் (London and Manchester Business School) ஆகியவை வல்லுநர் கல்விக்குப் பெருந் தொண்டாற்றி வருகின்றன.

**இலக்கியம்:** ஆங்கிலோ-சாக்சானியர்கள் காலத்தில் தொடங்கிய பண்டைய ஆங்கில மொழியின் (Old English) வளர்ச்சி படிப்படியாகச் சீரடைந்தது. ஆங்கிலக் கவிஞர் சாசருடைய (Chaucer) காலத்தை (கி.பி. 1340-1400) ஆங்கிலக் கவிதையூழியின் தொடக்கமெனக் கருதலாம். காக்சுட்டன் (Caxton) என்பவர் கி.பி. 1476-இல் இங்கிலாந்தில் அச்சு இயந்திரம் அறிமுகப்படுத்தியதைத் தொடர்ந்து, இலக்கிய வளர்ச்சி மேலும் விரிவடைந்தது. கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டைய ஆங்கில இலக்கியத்தில் மனிதத் தன்மையைச் (Humanism) சித்திரிக்கிற பாங்கினைக் காணலாம். முதலாம் எலிசபெத்து அரசியாரின் ஆட்சியை (கி.பி. 1558-1603) ஆங்கில இலக்கியத்தின் பொற்காலமெனக் கருதலாம். சிறப்பு மிகு 35 நாடகங்களை உருவாக்கிய நாடகாசிரியரான வில்லியம் சேக்சுபியர், மார்லோ, பென் சான்சன் (Ben Jonson) ஆகியோர் அக்காலத்தைச் சார்ந்தவர்களாவர். புனித நூலான விவிலியத்தின் (Bible) அதிகார முறையிலமைந்த ஆங்கிலப் பதிப்பு முதலாம்

சேம்சு மன்னரது காலத்தில் (கி.பி. 1603-1625) வெளியிடப்பட்டது. இணையற்ற கவிஞர் மில்ட்டன் (Milton) கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் 'துறக்க நீக்கம்' (Paradise Lost) என்னும் அழியாக் காப்பியத்தைப் படைத்தார். சாமுவல் சான்சன் (Samuel Johnson) கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் ஆங்கில அகராதியை உருவாக்கினார். புத்துணர்வுக் கவிஞர்களான (Romantic Poets) வார்ட்சுவர்த்து, கோல்ரிட்சு, பைரன், கீட்சு, செல்லி (Shelley) ஆகியவர்களும் கி.பி.



செல்லி

பத்தொன்பதாம் நூற்றாண்டில் இங்கிலாந்தின் அரசவைக் கவிஞரான தென்னிசன், இராபர்ட்டு பிரௌனிங்கு, மாத்யூ ஆர்னால்டு ஆகியோரும் நாவலாசிரியரான தாமசு ஆர்டியும் ஆங்கில இலக்கிய வரலாற்றில் அழியாப் புகழ்பெற்றவர்களாவர். இருபதாம் நூற்றாண்டில் இங்கிலாந்தினுடைய தலைசிறந்த இலக்கியப் படைப்பாளர்களான டி.எச். இலாரன்சு, டி.எஸ். எலியட்டு, அயர்லாந்தைச் சார்ந்த பெர்னார்டு சா (Bernard Shah), அண்மையில் இலக்கியத்திற்கான நோபல் பரிசு பெற்ற வில்லியம் கோல்டிங்கு இசுடப்சு, மாரியட்டு, போலார்டு ஆகியோர் போற்றத்தக்கவர்களாவர். கிரீன், திராவெலியன், வின்சுடன் சர்ச்சில், கீத்லிங்கு போன்றோர் சிறந்த வரலாற்றாசிரியர்கள் ஆவர்.

அறிவியல்: மனிதக் குலத்தின் அறிவியல் வளர்ச்சிக்கு இங்கிலாந்து பெரும் பங்கை ஆற்றியுள்ளது. வில்லியம் ஆர்வி (William Harvey) கி.பி. 1616-ஆம் ஆண்டில் மானிட உடலில் நிகழும் இரத்த ஓட்டத்தை முதன் முறையாகக் கண்டறிந்தார். உலகப் புகழ் பெற்ற ஐசக்கு நியூட்டன் (Issac Newton) கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் புவிசர்ப்புச் சக்தியைக் கண்டறிந்தார். மேலும், சார்லசு டார்வின் (Charles Darwin) மனிதனுடைய பரிணாம வளர்ச்சியை உலகுக்கு விளக்கினார். எர்னசுட்டு உரூதர்போர்டு (Ernest Rutherford) 1918-இல் முதல் முறையாக அணு ஆராய்ச்சியில் மாபெரும் சோதனையைக் கேம்பிரிட்சிலுள்ள காவென்டிசு (Cavendish Laboratory) ஆய்வுக்கூடத்தில் நடத்தி, அணுவைப் பிளக்கும் முதல் சாதனையை நிகழ்த்தினார். அலெக்சாண்டர் பிலமிங்கு (Alexander Flemming) 1929-இல் பென்சிலின் என்னும் நோய் தீர்க்கும் மருந்தை இலண்டனிலுள்ள செயின்டு மேரிசு மருத்துவமனையில் சோதனை வாயிலாகக் கண்டுபிடித்தார். 'செட்டு' விமானத்தை (Jet) உருவாக்கிய பெருமை பிராங்கு விட்டில் (Frank Whittle) என்பாரைச் சாரும். இன்றைய உலகில் மிகப்பெரிய போர் விமானங்களான கன்கார்டு (Concorde), சாகுவார் (Jaguar) ஆகியவற்றை இங்கிலாந்து உற்பத்தி செய்கிறது. உலக வல்லரசுகளுள் ஒன்றாக இங்கிலாந்து இன்று விளங்குவதற்கு முதன்மையான காரணம் அந்நாட்டினுடைய அறிவியல் வளர்ச்சியேயாகும். சி.எஸ்.கி.

துணை நூல்கள்:

Stamp, Laurence, D., and Behaver, S. H., The British Isles, Longmans. 1964.

Elton, Geoffrey, R., England Under the Tudors, Methuen, 1962.

Moorman, John, R.H., A History of the Church of England, Morehouse. 1967.

Piggott. Stuart, British Prehistory, Oxford, 1949.

**இங்கிலாந்து நாட்டில் கல்வி** கிரேட் பிரிட்டன் (Great Britain) என்னும் அகன்ற நாட்டில் இங்கிலாந்து, வேல்சு, வடக்கு அயர்லாந்து, இசுகாட்லாந்து (Scotland) ஆகிய நான்கு நாடுகள் அடங்கியுள்ளன. இங்கு மூவகைக் கல்வி முறைகள் உள்ளன. இங்கிலாந்து, வேல்சு ஆகிய இரு நாடுகளிலும் ஒரே வகைக் கல்வி முறையும், இசுகாட்லாந்து நாட்டில் மற்றொரு வகைக் கல்வி முறையும், வடக்கு அயர்லாந்தில் வேறொரு வகைக் கல்வி முறையும் உள்ளன.

இங்கிலாந்து, வேல்சு ஆகிய இருநாடுகளில் 5 வயதிலிருந்து 15 வயது வரை கல்வி கட்டாயமாக்கப்பட்டுள்ளது. பள்ளிப்படிப்பை முடிக்கும் வயது 1970-ஆம் ஆண்டிலிருந்து 16 ஆக உயர்த்தப் பட்டுள்ளது. தொடக்கப் பள்ளிக் கல்வி, கி.பி. 1870-ஆம் ஆண்டு இயற்றப்பட்ட தொடக்க நிலைக் கல்விச் சட்டத்தின்படி கட்டாயமாக்கப்பட்டது.

குழந்தைகள் 2 அல்லது 3 வயதில் மழலையர் பள்ளிகளில் சேருகின்றனர். இவர்கள் காலை 9 மணி முதல் பிற்பகல் 3 மணி வரை மழலையர் பள்ளியில் இருக்க வேண்டும். இங்கு இவர்களுக்குப் பிற்பகலில் சத்தான உணவு தரப்படுகிறது. உணவுக்குப் பின்னர் குழந்தைகளை உறங்கச் செய்வர். அரை நாள் கற்றல்மட்டிலுமே எதிர்பார்க்கப்படுகிறது. குழந்தைகளின் விருப்பத்திற்கேற்ப அதற்குரிய நேரம் காலையாகவோ மாலையாகவோ இருக்கலாம். இவர்களுக்குக் குறிப்பிட்ட பாடங்கள் என்பது இல்லை. குழந்தைகளுக்கு வேண்டிய விளையாட்டுப் பொருள்கள் பள்ளியில் நிறைய உள்ளன.

அரசு நிதியுதவியில் நடைபெறும் தொடக்கப் பள்ளிகளிலும் உயர்நிலைப் பள்ளிகளிலும் 95 விழுக்காடு மாணவர்கள் பயில்கின்றனர். பிற மாணவர்கள் தனியார் பள்ளிகளில் பணம் செலுத்திப் பயில்கின்றனர். தனியார் பள்ளிகளில் குறிப்பிடத்தக்கவை பெருமக்கள் பள்ளிகள் (Public Schools) ஆகும். பெரும்பாலான தனியார் பள்ளிகள் ஆண்கள் தங்கிப் பயில்கிற வசதி கொண்டவை. இப்பள்ளிகளில் பணக்கார மாணவர்களே சேர்ந்து பயில முடியும். ஈட்டன் (Eton), ஆரோ (Harrow), வின்செசுட்டர் (Winchestor) ஆகியன புகழ்பெற்ற பெருமக்கள் பள்ளிகளாகும். ஆக்சுபோர்டு (Oxford) கேம்பிரிட்சு (Cambridge) ஆகிய புகழ்பெற்ற பல்கலைக் கழகங்களில் சேர்ந்து படிப்பதற்கு ஏற்ற வகையில் மாணவர்களைப் பெருமக்கள் பள்ளிகள் தயார் செய்கின்றன. இப்பள்ளிகளில் உயர்நிலைக் கல்வி பயிலும் மாணவரின் கல்வித்தரம், ஐக்கிய அமெரிக்க நாடுகளில் உள்ள கல்லூரிக் கல்வித் தரத்திற்கு இணையாகக் கருதப்படுகிறது.

அரசுப் பள்ளிகளில் ஈரடுக்குக் கல்வி முறை (Two tier System) பின்பற்றப்படுகிறது. இக்கல்வி முறையில் தொடக்கப் பள்ளிகளும் இடைநிலைப் பள்ளிகளும் அமைந்துள்ளன. மாணவர்கள் 5 வயதிலிருந்து 11 வயது வரை தொடக்கப் பள்ளிகளிலும், 12 வயதிலிருந்து 18 வயது வரை இடைநிலைப் பள்ளிகளிலும் சேருகின்றனர். இங்கிலாந்து, வேல்சு நாட்டு உயர்நிலைப் பள்ளிகளில் 11-ஆம் வயதில் தகுதித் தேர்வு எழுதிய பின்பே, மாணவர்கள் சேரும் முறை 1965-ஆம் ஆண்டு வரை இருந்து



இளநிலைப்பள்ளியின் சோதனைச் சாலையில் மாணவர்கள்.

வந்தது. இப்பொழுது அம்முறை மாற்றப்பட்டு விட்டது. ஆண்களும் பெண்களும் தொடக்கப் பள்ளியிலிருந்து சேர்ந்தே படிக்கின்றனர். இடைநிலைப் பள்ளிகளுள் 50 விழுக்காடு பள்ளிகளில் பெண்களும் சேர்ந்து படிக்கின்றனர். ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடைநிலைப் பள்ளிகள் தனித்தனியாகவும் இயங்கி வருகின்றன. இப்பள்ளிகள் பலவற்றிற்கு விடுதிகள் உள்ளன.

அரசு நடத்தும் தொடக்கப் பள்ளிகள் இரண்டு வகைப்படும். 1. மாவட்ட மன்ற ஆட்சியிலுள்ள பள்ளிகள் (County Schools). இவை வட்டாரக் கல்வி ஆணைக் குழுக்களால் நடத்தப்படுகின்றன. 2. தன்னியலாட்சிப் பள்ளிகள் (Voluntary Schools). இடைநிலைப் பள்ளிகள் சிறப்பாக மூன்று வகைப்படும். 1. கல்லூரிக் கல்விக்கு மாணவர்களைத் தகுதிப்படுத்தும் இலக்கணப் பள்ளிகள் (Grammar Schools), 2. மொழிகள், பொதுக் கல்வி வழங்கும் இடைநிலைப் பள்ளிகள் (Modern Secondary Schools), 3. தொழிற் கல்வி வழங்கும் தொழிற்பயிற்சிப் பள்ளிகள் (Technical Schools), ஆகியனவாகும். இவற்றைப் பெரும்பாலும் வட்டாரக் கல்வி ஆட்சிக்குழுவினர் நடத்துகின்றனர். இன்று பலவகைப் பயிற்சிகளையுடைய அனைத்துக் கல்வி வளாகப் பள்ளிகள் (Comprehensive Schools), மேலே கூறப்பட்ட மூவகைப் பள்ளிகளுக்குப் பதிலாக உருவாகி வளர்ந்து விட்டன.

தேர்வுகளை ஒவ்வொரு வகுப்பிலும் ஆண்டு இறுதியில் நடத்துவதில்லை; ஒவ்வோர் ஆண்டும் மேல் வகுப்பிற்கு மாணவர்கள் ஆசிரியர்களால் அனுப்பப்படுகின்றனர். பள்ளியிறுதித் தேர்வு இல்லை. ஆனால், மேல்நிலைக் கல்வியின் இறுதியில் மாணவர்கள் இடைநிலைக் கல்விச் சான்றிதழ் (Certificate in Secondary Education-CSE) பெறுவதற்காகத் தேர்வு எழுதலாம்; அல்லது, மிகவும் உயர் தகுதியானதாகக் கருதப்படும் பொதுக் கல்விச் சான்றிதழ் (General Certificate of Education-GCE) பெறுவதற்காகவும் தேர்வு எழுதலாம். பொதுவாக, இத்தேர்வுகள் 16 வயதில் நடைபெறுகின்றன.

கல்வியியற் கல்லூரிகளுள், மிகச் சிறிய கல்லூரியில் 250 மாணவர்களும், பெரிய கல்லூரியில் 1000 மாணவர்களும் பயில்கின்றனர்; பெரும்பான்மையினரான மாணவர்கள் விடுதிகளில் தங்கிப் படிக்கின்றனர். இங்கிலாந்திலும் ஆசிரியர்கள் பற்றாக்குறை உள்ளது. ஆசிரியர்களாக வருவதற்குக் கல்வியியற் கல்லூரிகளில் மூன்றாண்டுகள் பயிற்சி பெறுதல் வேண்டும். முன்னரே ஆசிரியர் பயிற்சி பெற்றிருந்தபழைய மாணவர்கள் சிலருக்கு மட்டில் ஓராண்டுப் பயிற்சி தரப்படுகிறது. ஆசிரியர்களுக்கு 20 கல்வி நிறுவனங்கள் மூன்றாண்டுப் பயிற்சி அளிக்கின்றன. பயிற்சி நிறுவன உறுப்பினர்களும், வட்டாரக் கல்வி ஆட்சிக் குழுவினரும், அந்தப் பகுதியிலுள்ள ஆசிரியர்களும் கல்வி நிறுவனத்தை நடத்துவதில் பெரும்பங்கு வகிக்கின்றனர். ஆசிரியர்கள் படிக்க வேண்டும் பாடங்கள் குறித்தும் ஆராய்ச்சி குறித்தும் அக்கறை காட்டுகின்றனர்.

பிரிட்டனில் நாற்பது பல்கலைக் கழகங்களுக்கு மேல் உள்ளன. இப்பல்கலைக் கழகங்களுக்கு ஆகும் நிருவாகச் செலவில் முக்கால் பகுதியை அரசே வழங்குகிறது. இருப்பினும், பல்கலைக்கழக நடைமுறைகளில் நேரிடையாக அரசு தலையிடுவதில்லை. பல்கலைக்கழகப் பாடத்திட்டங்கள், ஆட்சிமுறை ஆகியவை பல்கலைக் கழகங்களின் பொறுப்புகளாகும். சிறப்பு வாய்ந்த ஆக்சுபோர்டு, கேம்பிரிட்சுப் பல்கலைக் கழகங்கள் முறையே கி.பி. 12, 13-ஆம் நூற்றாண்டுகளில் தொடங்கப் பெற்றவை. ஒவ்வொரு பல்கலைக் கழகத்திலும் 11,000 மாணவர்கள் சேர்ந்து பயில்கின்றனர். பிரிட்டனில் மிகப் பெரிய பல்கலைக் கழகம் இலண்டன் பல்கலைக் கழகம் ஆகும். இதில் மட்டும் 34,500 மாணவர்கள் பயில்கின்றனர். இங்கிலாந்தில் பல்கலைக் கழகப் பட்டம் பெற 3 அல்லது 4 ஆண்டுகள் படித்தல் வேண்டும். பொது மருத்துவம், பல் மருத்துவம், கால்நடை அறிவியல் ஆகியவற்றில் பட்டம் பெற மாணவர்கள் 5 அல்லது 6 ஆண்டுகள் படிக்க வேண்டும்.

நிருவாகம்: இங்கிலாந்து, வேல்சு ஆகிய இரண்டிலும் 'கல்வி-அறிவியல்' (Department of Education Science) துறையினரால் கல்வி நிறுவனங்கள் நடத்தப்படுகின்றன. எல்லாப் பல்கலைக் கழகங்களும் இலண்டனிலுள்ள கல்வி, அறிவியல் துறையினர் பொறுப்பில் நடைபெறுகின்றன.

இந்நாட்டில் கி.பி. 1870-ஆம் ஆண்டு இயற்றப் பட்ட கல்விச் சட்டம் முதல் பல்வேறு சட்டங்களால் அரசு நடத்தும் கட்டாயத் தொடக்கப் பள்ளிகள் ஏற்படுத்தப் பட்டன. பின்னர் 1902-ஆம் ஆண்டுக் கல்விச் சட்டத்தின்படி வட்டாரக் கல்வி ஆணைக் குழுக்களின் (Local Educational Authorities) உதவியுடன், தேசியக் கல்வி முறை ஏற்படுத்தப்பட்டது. இங்கிலாந்திலுள்ள இன்றைய கல்வி முறை 1944-ஆம் ஆண்டு இயற்றப்பட்ட கல்விச் சட்டத்தினால் வரையறை செய்யப்பட்டுள்ளது. கல்வி- அறிவியல் துறையிடம் முழு அதிகாரம் இருந்தாலும் உடனுக்குடன் நடத்தத் தக்க கல்விப் பொறுப்புகள்வட்டாரக் கல்வி ஆணைக்குழுக்களிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளன.

கல்வியை நிருவகிக்கும் மைய அதிகாரம் மூன்று பிரிவாக உள்ளது. அவை: 1. துறை (Department), 2. மைய அறிவுரை மன்றங்கள் (Central Advisory Councils), 3. குடிமுறைப் பணித்துறை (Civil Service). இங்கிலாந்தின் தலைமை அமைச்சரால் அமர்த்தப்படும் கல்வியமைச்சர் பரந்த கல்விக் கொள்கைக்கும், அதனைச் சீராக நடத்துவதற்கும் பொறுப்பாவார். நாடாளுமன்றம் அவ்வப்போது இயற்றும் சட்டங்களுக்குட்பட்டுக் கல்வியமைச்சர் தம் துறையை நடத்தி வருகிறார். உள் நிருவாகத்தைக் (Internal Administration) குறித்துக் கல்வியமைச்சருக்கு இரண்டு மைய மன்றங்கள் அறிவுரை வழங்குகின்றன.

வட்டார அளவில் கல்விக் கொள்கையின் விளக்கம் (Interpretation), அறிவிப்பு (Communication) ஆகியவற்றைக் குடிமுறைப் பணித்துறை கவனிக்கிறது. கல்விக் கொள்கையானது செயற்படுவதற்கும், தொடர்ந்து நடைபெறுவதற்கும் நிலையான கல்வித் துறைச் செயலர் பொறுப்பாவார். குடிமுறைப் பணித் துறையைச் சேர்ந்த ஆய்வாளர்கள், கல்வித்துறை அமைச்சகத்தின் பெருங்கடமைகளை ஆற்றுகிறார்கள். அவையாவன: 1. அரசால் ஒதுக்கீடு செய்யப் பட்ட தொகைகள் அறிவுக்குப் பொருத்தமான வகையில் செலவழிக்கப்படுகின்றனவா என்பதை உறுதிப்படுத்துதல், 2. கல்விச் சட்டத்திற்கு இணங்கத் துறையின் செயல்கள் நடக்கின்றனவா என்பதைக் கவனித்தல், 3. கல்வி பற்றிய தெளிவான எண்ணங்களை நாடெங்கிலும் பரப்புதல், 4. கல்வியின்

நடப்பு நிலை குறித்து அவ்வப்போது கல்வி அமைச்சகத்திற்கு அறிவித்தல்.

பள்ளியின் கொள்கைகளையும் திட்டங்களையும் செயற்படுத்தும் பணி, பள்ளித் தலைமையாசிரியரிடம் தரப்பட்டுள்ளது. வட்டாரக் கல்வி ஆய்வாளர், கல்விக் கருத்துரையாளர் ஆகியோர் துணையுடன் கல்வித்துறை இயக்குநர், இதனைச் செம்மையாக நடத்தி வருகிறார். வட்டாரக் கல்வி ஆணைக்குழுவிற்கும் தேசியக் கல்வித் துறைக்கும் பொறுப்பாக இயக்குநர் இயங்கி வருகிறார்.

ஒரு பள்ளிக்கூடம் எப்படியிருக்க வேண்டும் என்பதை வட்டாரக் கல்வி ஆணைக்குழுக்கள் முடிவு செய்கின்றன. பள்ளியிலுள்ள ஆளுநர்கள் (Governors) பாடத்திட்டம் முறையாக நடைபெறுவதைக் கவனித்துக் கொள்கின்றனர். பொதுத் தேர்வுகள் நடைபெறுவதால் ஒரு சீரான பாடத்திட்டம் எல்லாப் பள்ளிகளிலும் ஏற்றுக் கொள்ளப்படுகிறது. இருப்பினும், தலைமையாசிரியர்கள் தம் கருத்துக்கேற்பப் பள்ளியை நடத்திவரும் உரிமை பெறுகின்றனர். கல்வித் திட்டங்கள், பாடநூல்கள், பாடமுறைகள் ஆகியவை குறித்து ஆசிரியர்கள் தாமே முடிவெடுக்கலாம்.

தொடக்கப் பள்ளியில் படிக்கும் ஊட்டச் சத்துக் குறைந்த பிள்ளைகளுக்கு அற நிறுவனங்கள், சத்தான உணவுகள் வழங்குவதில் ஈடுபட்டன. ஆனால், படிக்கும் எல்லாப் பிள்ளைகளுக்கும் வழங்க இயலவில்லை. இரண்டாம் உலகப் போருக்கு முன்னர் ஒரு சட்டம் இயற்றி, உணவு வழங்கும் முறையை அரசே மேற்கொண்டது. பள்ளி மாணவர்களுள் மூன்றில் ஒரு பகுதியினர், 1939-ஆம் ஆண்டுக்குப் பின்னர் பகல் உணவு பெறும் வாய்ப்பைப் பெற்றனர். விரும்புகிற குழந்தைகளுக்கெல்லாம் 1944-ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டத்தின்படி உணவு வழங்கப்பட்டது. பகல் உணவு 1960-ஆம் ஆண்டிலிருந்து தரமாக அளிக்கப்பட்டதன் காரணமாகக் குழந்தைகள் உடல் நலமும் உரமும் பெற்றனர். பால் வழங்கும் முறையும் 1934-ஆம் ஆண்டிலிருந்து படிப்படியாக இடம் பெறலாயிற்று.

வட்டாரக் கல்வி ஆணைக்குழுக்களால் நிருவகிக்கப்படும் பள்ளிகளில் படிக்கும் குழந்தைகளுக்கும் சமய அறிவுரை தருவதற்கென்றே ஒரு தனியான பாடத் திட்டம் வகுக்கப்பட்டுள்ளது. பெற்றோர்கள் தம் குழந்தைகளுக்குச் சமய அறிவுரை தேவையில்லை என்று எழுதித் தெரிவித்தால், அந்தக் குழந்தைகளுக்கு அதிலிருந்து விலக்கு அளிக்கப்படுகிறது.

சிறப்புக் கல்வி: உடல் வகையிலோ மன வகையிலோ குறைபாடுடைய குழந்தைகளுக்குச் சிறப்புக் கல்வி தரப்படுகிறது. குறைபாடுடைய குழந்தைகளுக்குச் சிறப்புக் கல்வி தரும் பணியை வட்டாரக் கல்வி ஆட்சிக் குழுவினர் செய்கின்றனர். உடலூனம் உள்ள குழந்தைகளைக் கண்டறிந்து, அவர்களுக்கு உரிய வகையில் தொண்டாற்றுகிறார்கள். பெற்றோர்களை அணுகி, அக்குழந்தைகளின் நிலைமைகளை அவர்களுக்கு விளக்கிச் சோதனை செய்வதற்கு ஏற்பாடு செய்கிறார்கள். உடலூனமுள்ள மாணவர்களைப் பல்வகையாகப் பிரித்துள்ளனர். கண்பார்வையற்றோர், அரைகுறைப் பார்வையுடையோர், காதுகேளாதவர், அரைகுறைக் காதுகேட்போர், குறைந்த அறிவுடையோர், காக்காய் வலிப்புடையோர் (Epileptic), நடத்தைப் பிறழ்வுடையோர் (Maladjusted), உறுப்புக் குறைபாடுடையோர், பேச்சுக் குறைபாடுடையோர் ஆகியவர்களுக்குச் சிறப்புக் கல்வி தரப்படுகிறது. குறைபாடுடைய குழந்தைகளுள் மெல்லக் கற்கும் குழந்தைகளின் (Slow Learners) எண்ணிக்கை மிகுதியாக இருப்பதால், அவர்களுக்கென்று பல சிறப்புப் பள்ளிகள் அமைக்கப்பட்டுள்ளன. இத்தகைய சிறப்புப் பள்ளிகள் வட்டாரக் கல்வி ஆட்சிக் குழுவினரால் நடத்தப்படுகின்றன.

பள்ளிதோறும் இளைஞர் வேலைவாய்ப்பு அலுவலர்கள் (Junior Employment Officers) வட்டாரக் கல்வி ஆட்சிக் குழுவினரால் அமர்த்தப்படுகின்றனர். இளைஞர் வேலைவாய்ப்பு அலுவலர்கள், மாணவர்கள் பள்ளியை விட்டுச் செல்லும்போது அவர்களுக்குப் பலவகையான கல்வி வாய்ப்புகள் குறித்தும் விளக்குவர். மேலும், இப்போது தேவைப்படும் தொழில் திறமைகள் குறித்தும் தெளிவுபடுத்துவர். மாணவர்கள், வேலை தரும் நிறுவனத்தார்கள், பெற்றோர்கள், ஆசிரியர்கள் ஆகியவரோடு இவ்வலுவலர்கள் சேர்ந்து அரும்பணியாற்றி வருகின்றனர். இவர்கள், உடலூனமுற்ற குழந்தைகளுக்கும் வேலை தேடித் தருவதில் ஈடுபடுகின்றனர்.

பள்ளி மாணவர்களின் உடல்நிலையைப் பேணுவதில் வட்டாரக் கல்வி ஆட்சிக்குழுவினர் ஈடுபடுகின்றனர். குழந்தைகள் பள்ளிகளில் சேர வரும்போதே மருத்துவச் சோதனை செய்யப்படுகின்றனர். பல் பரிசோதனையும் செய்யப்படுகிறது. இச்சோதனைகளின் வாயிலாகக் குறையிருப்பதாகத் தெரிய வந்தால், உடனே பெற்றோர்களுக்கு அதைக் குறித்து அறிவிக்கின்றனர். குழந்தைகளுக்கு இன்றியமையாத மருத்துவச் சோதனைகள் நடத்தும்போது பெற்றோர்களையும் உடன் இருக்குமாறு செய்கின்றனர். குழந்தைகளுக்கு நோய் வருமுன்னர்த் தடுப்பதும், வந்த நோயைப் போக்குவதும் மிகவும் இன்றியமை

யாதன என்பதை உணர்ந்து சிறந்த பணி செய்கின்றனர்.

நடத்தைப் பிறழ்வுடைய குழந்தைகளுக்கு ஏற்றவாறு அறிவுரை கூறும் மருத்துவமனைகளும் உள்ளன. இவற்றை வட்டாரக் கல்வி ஆட்சிக்குழுவினர் செம்மையாக நடத்தி வருகின்றனர். இவ்வகையில், தனியார் நிறுவனங்களும் பெருந்தொண்டு புரிகின்றன. மருத்துவப் பயிற்சி அளிக்கும் நிலையங்களில் உளவியல் அறிஞர்களும் உளநோய் மருத்துவர்களும் பணிபுரிகின்றனர். கற்பதற்குத் துன்பப்படும் குழந்தைகளுக்கு உளவியல் அறிஞர் வழிகாட்டுகின்றனர்; உணர்ச்சி வயப்படும் குழந்தைகளின் பெற்றோர்களையும் ஆசிரியர்களையும் அடிக்கடி சந்தித்து அவர்களை எப்படி நடத்த வேண்டும் என்பது குறித்தும் தெளிவுபடுத்துகின்றனர். இக்குழந்தைகளின் குடும்பம், குடும்பச் சூழ்நிலை ஆகியவற்றைக் கூர்ந்து அறிந்து, உளநோய் மருத்துவர் ஏற்ற வகையில் அறிவுரை வழங்குகிறார்.

பள்ளியில் மாணவர் நலத்தைக் கவனிப்பதற்கு மேலாளர் ஒருவரை வட்டாரக் கல்வி ஆணைக்குழு அமர்த்துகிறது. இந்த மேலாளர், பள்ளிகளுக்கும் குழந்தைகளின் வீடுகளுக்கும் இடையே ஒரு பாலம் போலத் தொடர்பு-அலுவலராகப் (Liasion-Officer) பணியாற்றுகிறார். வீடுதோறும் சென்று மக்கள் தொகைக் கணக்கு (Census) எடுத்து, வயது வந்த எல்லாக் குழந்தைகளும் பள்ளியில் சேர வழிவகை செய்கிறார்.

குழந்தைகளை அக்கறையோடு மேற்பார்வையிடும் பயிற்சி பெற்ற சமூகப் பணியாளர்களை வட்டாரக் கல்வி ஆணைக்குழு அமர்த்துகிறது. தொடக்கப் பள்ளியிலும் இடைநிலைப் பள்ளியிலும் பயிலும் மாணவர்களை இச்சமூகப் பணியாளர்கள் விழிப்புடன் கவனிக்கின்றனர். குழந்தைகளுக்கு இருக்கும் நோயைப் பள்ளி மருத்துவர் தெரிவித்தால் உடனே அதைப் பெற்றோர்களுக்கு இவர்கள் அறிவிப்பார்கள். மனமகிழ்விற்கான வசதிகள் (Recreational facilities), உடற் கல்வி ஆகியவை மிகவும் சிறந்தனவாக எண்ணப்படுகின்றன. பள்ளியில் படிக்கும் மாணவர்கள் எண்ணிக்கைக்கேற்ப விளையாட்டுத் திடல்கள் ஏற்படுத்த வேண்டிய பொறுப்பு வட்டாரக் கல்வி ஆணைக்குழுக்களைச் சேர்ந்ததாகும். பல இடைநிலைப் பள்ளிகளில் உடற் பயிற்சிக் கூடங்கள் (Gymnasiums) உள்ளன. சில பள்ளிகளில், நீச்சல் பயிற்சி, குத்துச் சண்டைப் பயிற்சி, சிலம்பக்கலை மற்பயிற்சி ஆகியவற்றிற்கும் வசதிகள் உள்ளன.

**வயது வந்தோர் கல்வி:** இங்கிலாந்தில் வயது வந்தோர் கல்வியென்பது 18 வயதுக்கு மேற்பட்டவர்களுக்குத் தரப்படுகிறது. வயது வந்தோர் கல்விப்பள்ளிகளைவட்டாரக் கல்வி ஆணைக்குழுக்கள் நடத்தி வருகின்றன. பள்ளிகளில் வயது வந்தோருக்கு மாலை வகுப்புகள் நடத்தப்படுகின்றன. சமையற்கலை, குழந்தைப் பாதுகாப்பு, மொழிகள், நாடகம், இசை முதலிய பாடங்கள் கற்பிக்கப்படுகின்றன. வட்டாரக் கல்வி ஆட்சிக் குழுவினர் வயது வந்தோர் கல்விக் கல்லூரிகளை நடத்தி வருகின்றனர். இக்கல்லூரிகளில் வயது வந்தோர் சில நாட்கள் தங்கிப் படிப்பதற்கு வாய்ப்புகள் நல்கப்படுகின்றன. பெரும்பான்மையானவர்கள் வாரத்தில் நான்கு நாட்கள் வகுப்புகளுக்கு வருகிறார்கள். பகலில் வேலை செய்வோர், இரவு வகுப்புகளுக்கு வருகிறார்கள். வயது வந்தோர் கல்விக்குரிய பல சேவை நிறுவனங்களும் இத்துறையில் உதவி வருகின்றன. சு.ந.சொ.

**துணை நூல்கள்:**

Department of Education and Science, Annual Report. Her Majesty's Stationary Office, London, 1980.

Department of Education and Science, Education Statistics for the United Kingdom, 1979, Her Mejesty's Stationary Office, London, 1982.

**இங்கிலாந்து வங்கி:** உலக வாணிகத்திற்கும் தொழிற் புரட்சிக்கும் முன்னோடியாக அமைந்த பிரிட்டனின் பொருளாதாரம் நிலையான வளர்ச்சியைப் பெற உறுதுணையாயிருந்தது அந்நாட்டின் வங்கி முறையாகும். பிரிட்டனின் மைய வங்கி (Central Bank) யாகச் செயற்படும் இங்கிலாந்து வங்கி (Bank of England) அரசின் வங்கியாகவும், பணவாக்க நிதி அமைப்புகளின் அச்சாணியாகவும், வங்கிகளுக்கெல்லாம் வங்கியாகவும் (Bankers Bank) விளங்குவதோடு, தலையாய பொறுப்பேற்றுப் பொருளாதார அமைப்பு ஒழுங்கான முறையில் செயற்படத் தேவையான வங்கியியற் பணிகளையும் ஆற்றுகிறது. அயற் செலாவணி, பன்னாட்டு வாணிகம், பன்னாட்டுச் செலுத்து நிலை (Intenational Balance of Payments), பன்னாட்டு நிதி நடவடிக்கைகள் போன்றவைகளின் செயற்பாட்டினால், உள்நாட்டிலும் உலகப் பண அங்காடிகளிலும் செலாவணி மதிப்பில் ஏற்றத்தாழ்வுகள் ஏற்பட்டு, நிதி நெருக்கடிகளும் பொருளாதார மந்த நிலையும் (Economic Depression) ஏற்படாதபடி கொள்கைகளை வரையறுத்து, நடவடிக்கைகளைக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு செல்லும் பொறுப்பையும் அதிகாரத்தையும் இங்கிலாந்து வங்கி சிறப்பாக நிறைவேற்றி வருகிறது.

**வரலாறு:** உலக நாடுகளின்மைய வங்கிகளுள்

முதலில் தொடங்கப்பட்டது கி.பி. 1656-ஆம் ஆண்டு உருவான, சுவீடன் (Sweden) நாட்டு இரிக்சு வங்கி (Riks Bank) யாகும். அடுத்த இடத்தைப் பெறுவது கி.பி. 1694-ஆம் ஆண்டு நிறுவப்பட்ட இங்கிலாந்து வங்கி. முதலாம் எலிசபெத்துக் (Elizabeth-I) காலத்தில் பண முதலீட்டிற்குச் (Capital Investments) சட்டமுறையில் வட்டி வீதம் (Legal Interest Rate) வரையறுக்கப்பட்டது. அதனைத் தொடர்ந்து ஆங்கிலேய வங்கித் தொழில், பல வகைகளில் செயற்படத் தொடங்கியது. அதுவே காலப்போக்கில் படிப்படியாக வளர்ச்சியடைந்து இன்றைய வங்கியியல் முறைக்கு அடிப்படையாக அமைந்தது. பொற்கொல்லர்கள் (Goldsmiths) அயற் செலாவணித் தொடர்பான நடவடிக்கைகளில் ஈடுபட்டு, வணிகர்களுக்கும் அரசுக்கும் அயல்நாட்டுச் செலுத்தல்களில் (Foreign Payments) துணையாயிருந்தனர். இரண்டாம் சார்லசு (Charles II) காலத்தில் வைப்புகளுக்குப் (Deposits) பொற்கொல்லர்கள் வட்டி கொடுத்தனர். வைப்புகளைப் பெற்றுக் கொண்டதாக அளிக்கப்பட்ட வரவுச் சீட்டுகளே (Receipts) பின்னர்க் காசோலைகளாகவும் (Cheques), வங்கித் தாள்களாகவும் (Bank note) வழங்கலாயின. கிராம்வெல்லும் (Cromwell) இரண்டாம் சார்லசும் பொற்கொல்லரிடமிருந்து தடையில்லாமல் பெருமளவில் கடன்களைப் பெற்றனர். ஆனால், அவற்றைத் தீர்க்க அரசின் கருவூலம் கி.பி. 1671-ஆம் ஆண்டு தவறியதைத் தொடர்ந்து நிதி நெருக்கடி நிலை ஏற்பட்டது.

அக்கால அரசியற் சூழ்நிலையும், அரசின் கட்டுப்பாட்டுடன் கூடிய வங்கியின் தேவையை வலியுறுத்தியது. மூன்றாம் வில்லியம் (William-III) இங்கிலாந்தை அப்போதைய பிரிட்டனோடு இணைப்பதற்காகப் போரிட்டு மிகுதியான பணத்தை அதில் செலவழித்தார். தோரிக் கட்சி (Tory Party) யினைச் சார்ந்தவர்கள் இரண்டாம் சேம்சை (James-II) ஆதரித்ததால், செல்வர்களும் அதிகாரமிக்க வணிகர்களும் அடங்கிய விக்குக் கட்சியினரை (Whigs) மட்டிலுமே சார்ந்து அரசுக்குத் தேவையான பணத்தை மூன்றாம் வில்லியம் பெற வேண்டியதாயிற்று. இசுடுவர்ட்டு (Stuart) மரபினைச் சார்ந்தவர் எவரும் வலிமை கொள்வதை மக்களுள் பெரும்பாலோர் விரும்பாததால், மூன்றாம் வில்லியம் தம் நிதி பெருக்கும் திட்டத்தில் வெற்றி கண்டார். அதுவே இங்கிலாந்து வங்கியாக வளர்ச்சியடைந்தது.

ஒரு செல்வர் குழு, அரசுக்கு £ 1,200,000-ஐக் கடனாக வழங்க முன்மொழிந்ததை அடிப்படையாகக் கொண்டு ஒப்பந்தங்கள் எழுதப் பட்டு, இங்கிலாந்து வங்கிக்கான ஆவணம் (Crarter) கி.பி. 1694-ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. இக்கடன் தொகை நாட்டு நிதியக் கடனாகக் (National Funded Debt) கருதப்பட்டு, அதனைத் திரும்பச் செலுத்துவதற்கான வாக்குறுதி எதுவும் ஆவணத்தில் குறிக்கப்படவில்லை. ஆனால், நாட்டு வருவாயில் ஒரு பகுதியைக் கடனுக்குரிய வட்டியாக 8 விழுக்காடு வீதம் சீரான முறையில் தடங்கலின்றி வழங்குவதற்கென ஒதுக்க முடிவு செய்யப்பட்டது. மதுபான வகைகளின் (Liquors) மேல் விதிக்கப்பட்ட புது வரிகளின்மூலம் பெறும் வருவாய், இவ்வட்டியைச் செலுத்துவதற்கென ஒதுக்கப்பட்டது. வட்டியை வங்கித் தாள்கள் மூலம் வாங்கிக் கடனீந்தோருக்கு (Creditors) அளித்தது. அவற்றை அரசிடமிருந்து எக்காலத்திலும் தங்கமாக மாற்றிக் கொள்ளக் கருவூலம் அனுமதித்தது. இவ்வகையில், தேவையான நிதியைப் பணமாகத் திரட்டுவது அரசுக்கு எளிமையாகத் தென்பட்டது. இதனால், போர்ச்செலவு போன்றவற்றால் விளையும் பயன்களை அனுபவிக்கும் வருங்காலத் தலைமுறையினருக்குக் (Generations) கடனின் பளு மாற்றீடு செய்யப்பட்டது. தொடர்ந்து வங்கி செயற்பட அதன் ஆவணம் கி.பி. 1697, 1707, 1742, 1764, 1781 முதலிய ஆண்டுகளில் அரசால் புதுப்பிக்கப்பட்டது. நாடாளுமன்றப் பாதுகாப்புடன் இணைந்த அரசுக் கருவூலத்திற்கு, வங்கி மூலம் கடனளிப்பது சிறந்த முதலீடு எனக் கருதிப் போர்க் காலத்திலும், பிற சூழ்நிலைகளிலும் செல்வர்கள் தயக்கமின்றி நிதியளித்தனர்.

வளர்ச்சி: இங்கிலாந்து வங்கி, அரசுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு ஓர் அரசு வங்கி போல் செயற்பட்டது. நிதியகக் கடன் (Funded Debt) மதிப்பின் அளவுக்கு வங்கி, காகிதப் பணங்களை வெளியிட்டது. இக்காகிதப் பணங்களை எக்காலத்திலும் மக்கள் வங்கியிடமிருந்து தங்கமாக மாற்றிக் கொள்ளலாம். கடனுறுதிச் சீட்டுகளைக் கழிவு செய்யவும் வாணிகத்திற்குக் கடனளிக்கவும், வாணிகத்தில் ஈடுபடவும் வங்கி அதிகாரம் பெற்றிருந்தது. தனியார் துறையில் முடங்கிப் பதுக்கப்பட்டிருந்த பெருஞ் செல்வம், இவ்வங்கியின் மூலம் தொழிற்றுறைக்கும் வாணிக வளர்ச்சிக்கும் பயன்பட்லாயிற்று. தகாவட்டி முறையினால் (Usury) நிலையற்றிருந்த வட்டி வீதம் குறைக்கப்பட்டு, ஓர் உறுதியான நிலையையடைந்தது. அயற்செலாவணியின் ஏற்றத்தாழ்வுகளும் கட்டுப்படுத்தப்பட்டன. இவற்றால் குறிப்பாக வாணிகம் உள்நாட்டிலும் அயல்நாடுகளிலும் செழித்தோங்கிச் சிறப்புற்றது.

கூட்டு இருப்பு வங்கிகள் (Joint Stock Banks) நிறுவப்படுவதற்கான உரிமை, சட்டமுறையில் கி.பி. 1697-ஆம் ஆண்டிற்குப் பின் அனுமதிக்கப்படாததால், இங்கிலாந்து வங்கி முற்றுரிமையுடன் (Mono

poly) செய்யப்பட்டது. தனியார் வங்கித் தொழில் நடத்துவதும் வரையறுக்கப்பட்டது. தனியார் வங்கியிலும் ஆறு பேருக்கு மேல் கூட்டாக வங்கித் தொழிலில் ஈடுபடக்கூடாது என, கி.பி. 1708-ஆம் ஆண்டுச் சட்டம் வரையறுத்தது. இங்கிலாந்து வங்கியின் முற்றுரிமையைக் கி.பி. 1800-ஆம் ஆண்டுச் சட்டம் உறுதிப்படுத்தியது. வங்கி பெற்ற சிறப்புரிமைகளுடன் (Privileges) வங்கியின் பொறுப்பும் பணிகளும் சிக்கல்களும் எதிர்ப்புகளும் வளர்ந்து கொண்டே போயின. கடன் அளிப்பதன் அடிப்படையில் மாற்றங்கள் ஏற்பட்டுப் பல கடன் கருவிகள் (Credit Instruments) உருவாயின. மிகுதியான கடன்கள் வழங்கப்பட்டன. நாணய வெளியீடு (Issue of Currency) பெருகவும் வங்கி உதவியது.

தொழிற்புரட்சியின் விளைவாகத் தொழில் முனைவோரின் (Entrepreneur) கடன் தேவைகள் பெருகின. தனியார் நிதி நிறுவனங்களும் வங்கிகளும் வளர்ச்சி பெற்று, இக்கடன் தேவைகளை நிறைவு செய்தன. இங்கிலாந்து வங்கிக்கு அரசியற் பின்னணி பாதுகாப்பாக இருந்தமையால், எதிர்ப்புகள் தொடக்கக் கால முதல் இருந்து வந்தன. அவை பெரும்பாலும் நியாயமற்றவையாகவும் நிதி, வாணிகம், பொருளாதாரம் ஆகியவற்றின் வளர்ச்சிக்குப் பொருத்தமற்ற முரண்பாடுள்ளவையாகவும் இருந்தன. வங்கி மேலாண்மையிலும், பணத்தாள்களை வெளியிடுவதிலும், நுட்ப அறிவும் அனுபவமும் இல்லாமையால், வங்கி இயக்குநர்கள் பல சிக்கல்களுக்குள்ளாயினர். பொற்கொல்லர்கள் வங்கியின் தீவிரப் பகைவர்களாய் இருந்தனர். எனினும், வங்கி சிறப்பாகத் தன் பணிகளைத் தொடர்ந்து செயலாற்றி வளர்ச்சி பெற்றது.

**கட்டுப்பாடுகள்:** பிரிட்டனின் அரசியல், பொருளாதார, வாணிகத் துறைகளில் வங்கி இன்றியமையாத சிறப்பிடம் பெறும் அளவிற்கு வளர்ந்துவிட்டமையால், அதன் நடவடிக்கைகளைச் சட்டமுறையில் கட்டுப்படுத்தும் தேவை உணரப்பட்டது. வங்கியியல் கோட்பாட்டினரும் (Banking School), நாணயவியல் கோட்பாட்டினரும் (Currency) முரண்பாடான கொள்கைகளைக் கொண்டு, சில வரையறைகளின் படி வங்கி செயற்பட வேண்டும் என வலியுறுத்தினர். வங்கியியல் கோட்பாட்டினர், பணத்தாள்களை எக்காலத்திலும் நாணயமாகவோ (Coins), தங்கமாகவோ மாற்றிக் கொள்ளக்கூடிய வகையில் தங்கத்தைப் பிணையமாக வைத்துக் கட்டுப்பாடின்றி, அவற்றை வெளியிடலாம் எனக் கருதினர். நாணயவியற் கோட்பாட்டினர், கட்டுப்பாடின்றிப் பணத்தாள்களை வெளியிடுவது மிகுந்த ஊறு (Danger) விளைவிக்கும் என எச்சரித்தனர். நாணயவியல் கோட்பாட்டினரின் கொள்கைகள் ஏற்றுக்கொள்ளப் பட்டுக் கி.பி. 1844-ஆம் ஆண்டு சட்டமுறையில் உறுதி செய்யப்பட்டது. இதுவே வங்கியைப் பாதித்த முதற் சட்டமாகும்.

இச்சட்ட விதிமுறைகளின்படி வங்கியின் வெளியீட்டுத் துறையும் (Issue Department), வங்கியியல் துறையும் (Banking Department) தனித்தனியாகப் பிரிந்து செயற்பட்டன. அதனால் உபரியாகப் பணத்தாள்கள் வெளியிடப்படுவது கண்காணிக்கப்பட்டுக் கட்டுப்படுத்தப்பட்டது. வெளியீட்டுத் துறை, £ 14 மிலியன் மதிப்புக்குப் பிணையங்களின் அடிப்படையில் (Against securities) பணத்தாள்களை வெளியிடலாம். அதற்கு மிஞ்சிய மதிப்பிற்குப் பணத்தாள்கள் வெளியிட்டால், அவற்றிற்கு ஈடான தங்கம் பிணையமாக வங்கியிடம் இருப்பு இருக்கவேண்டும். அவை தங்கச் சான்றிதழ்களாகக் (Bullion Certificate) கருதப்பட்டன. நம்பக வெளியீட்டு முறையின் (Fiduciary Issue System) வாயிலாகப் பணத்தாள்களை வெளியிட்டு வந்த பிற தனியார் வங்கிகள், £ 8.6 மிலியன் மதிப்புக்கு மட்டிலுமே அத்தகைய வெளியீடுகளை வெளியிட அனுமதிக்கப்பட்டன. அவ்வங்கிகள் அதற்கு மிஞ்சிப்பணத்தாள்களை வெளியிடுவது முற்றிலுமாகத் தடை செய்யப்பட்டது. தனியார் வங்கிகள் பிற வங்கிகளுடன் கூட்டுச் சேர்ந்தாலோ (Amalgamation), இலண்டனில் கிளை அலுவலகம் நிறுவினாலோ அவற்றின் பணத்தாள்கள் வெளியிடும் உரிமை தடை செய்யப்பட்டது (Ceased). அவ்வாறு நிறுத்தப்பட்ட வெளியீட்டில் மூன்றில் இரண்டு பாகம், இங்கிலாந்து வங்கியின் நம்பக வெளியீட்டுத் தொகையுடன் சேர்க்கப்பட்டது. இச்சட்டத்தினால் இங்கிலாந்து வங்கி, பணத்தாள் வெளியிடுவதில் முழு முற்றுரிமையைப் பெற்றது.

இங்கிலாந்தில் நிதி நெருக்கடிகள் ஏற்படுவதைத் தடுப்பதே இச்சட்டத்தின் குறிக்கோள். ஆனால், நடைமுறையில் இக்குறிக்கோள் நிறைவேறவில்லை. பணத்தாள் வெளியீட்டிலிருந்த நெகிழ்ச்சியற்ற நிலை (Inelasticity) நெருக்கடிக் காலத்தில் கையிருப்பிற்காக (Liquid cash) வங்கியை நாடி மக்கள் ஓடுவதைத் தவிர்த்தது. இந்நெகிழ்ச்சியற்ற தன்மையினால், நிதி நெருக்கடிக் காலத்தில் சட்டத்தைச் செயற்படுத்தாமல் ஒத்தி வைக்க (Suspended) வேண்டிருந்தது. நாட்டுச் செலாவணி அயலார் தலையீடின்றித் தானியங்கியாக (Automatic) விளங்க வேண்டுமென்பது, சட்டத்தின் சிறப்பு நோக்கமாயிருந்தது. தங்கத்தின் இருப்பையும் அதன் மதிப்பில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளையும் பொறுத்துச் செலாவணியின் அளவு வரையறுக்கப்பட்டது.

தங்கத்தின் இருப்பு நாட்டில் மிகுந்தால் செலாவணியின் அளவும் மிகும்; தங்கம் நாட்டைவிட்டு வெளியேறினால் தங்கப் பற்றாக்குறையினால் செலாவணியின் அளவும் குறையும். எனவே, தங்கத்தின் மதிப்பு செலாவணியின் மதிப்பை உறுதிசெய்யும். செலாவணியின் மதிப்பைப் பாதுகாக்கும் பொறுப்பு, செலாவணியின் அளவைக் கட்டுப்படுத்தும் பொறுப்பு ஆகியவை இங்கிலாந்து வங்கியின் தலையாய பணிகளாகக் கருதப்பட்டன. வங்கி வீதத்தைக் (Bank Rate) கருவியாகப் பயன்படுத்தியும், தங்கம் நாட்டைவிட்டுக் கட்டுப்பாடின்றி வெளியேறாமல் தடுக்கப்பட்டது.

காசோலை முறை (Cheque System) இங்கிலாந்தில் தொடக்கக் கட்டத்திலிருந்தமையால் சட்டம் அதைக் குறித்து எதுவும் கூறவில்லை. காசோலை முறை, சட்ட வரையறைகளைச் செயற்படுத்துவதில் அடிப்படை மாற்றங்களை ஏற்படுத்தியது. இம்முறை, தங்கத்தின் இருப்பு, மதிப்பு ஆகியவற்றிற்கு அப்பாற்பட்டுத் தனித்தன்மையுடன் செயற்பட்டது. எனினும், கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் இறுதிவரை, சட்ட முறையில் எவ்வித மாறுதல்களும் ஏற்படாமல் இங்கிலாந்து வங்கி செயற்பட்டது.

விரைவாகப் பேரளவில் வளர்ச்சிபெற்ற வாணிகத் தொழில் துறைகளுக்குத் தனியார் வங்கிகளும், நிதி நிறுவனங்களும் முறையற்ற வகையில் கடன்களை அளித்தமையாலும், நெப்போலியப் போர்களினாலும் (Napoleonic Wars) நாட்டின் நிதி நிலைமை சீர்குலைந்து, பல தனியார் வங்கிகள் எதிர்பாராத காலங்களில் நொடித்தன. அதனைத் தொடர்ந்து கி.பி. 1847, 1857, 1866, 1914, 1931-ஆம் ஆண்டுகளில் நிதி நெருக்கடி நிலை (Financial Crisis) உருவானமையால், அக்காலங்களில் தங்கத் திட்டம் (Gold Standard) நிறுத்தி வைக்கப்பட்டது. அதனால், பணத்தாள்கள் தங்கமாக மாற்ற இயலாமல், அவற்றின் செலாவணி பெருகியது. பொருள்களின் விலைகள் உள் நாட்டில் உயர்ந்து ஏற்றுமதிகள் கட்டுப்படுத்தப்பட்டன.

முதலாம் உலகப்போர்க் காலத்தில் (1914-1918) மீண்டும் தங்கத் திட்டம் நிறுத்திவைக்கப்பட்டு, நம்பக வெளியீட்டு வறையறையை மீறிப் பணத்தாள்கள் வெளியிடப்பட்டன. போர் முடிவுற்ற பின்னர்த் தங்கத் திட்டம் கைவிடப்பட்டு, 1923-ஆம் ஆண்டு தங்கக் கட்டித் திட்டம் (Gold Bullion System) மீண்டும் பின்பற்றப்பட்டது. இதனால், இங்கிலாந்து வங்கி தங்கத்தை மட்டிலுமே அடிப்படைப் பிணையமாகக் கொள்ளாமல், வங்கிப் பணத்தைப் (Bank Cash) பிணையமாகக் கொண்டும் செலாவணி மேலாண்மையை மேற்கொள்ளும் உரிமையைப் பெற்றது. இங்கிலாந்து வங்கியிடமிருந்து வாங்கப்படும் பிணையங்களின் அடிப்படையில், பிற வங்கிகள் தங்கள் கடன் வளங்களைப் பெருக்கிக் கொண்டன. தங்கத்தின் விலையை (மதிப்பை) முடிவு செய்யும் உரிமை இங்கிலாந்து வங்கியிடம் ஒப்படைக்கப்பட்டது. போர்க் காலத்தில் அரசு, தான் வெளியிட்ட பணத்தாள்களை இங்கிலாந்து வங்கியிடம் 1928-ஆம் ஆண்டு ஒப்படைத்தது. வங்கியின் நம்பக வெளியீட்டு அளவின் வரையறையை £ 24 மிலியனிலிருந்து £ 260 மிலியனாக உயர்த்தியது. ஆறுமாத காலத்திற்கு மிகாமல் குறிப்பிட்ட நம்பக வெளியீட்டு அளவிற்கும் மிகுதியாக, ஆனால் கட்டுப்பாடான அளவில், வெளியீட்டு வரையறையைத் தளர்த்திக் கொள்ளவும், வங்கிக்கு உரிமை அளிக்கப்பட்டது. இதனால், செலாவணி ஆக்கத்தில் நெகிழ்ச்சித் தன்மை (Elasticity) புகுத்தப்பட்டது. நம்பக வெளியீட்டு வரையறையை மீறி, இரண்டு ஆண்டுகளுக்கு மேல் தொடர்ந்து செலாவணித் தாள்கள் வெளியிடப்பட்டால், அதற்கான மக்களவையின் (Parliament) ஒப்புதலைப் பெற வேண்டும்.

**இருபதாம் நூற்றாண்டில் அரசின் வங்கி:** இங்கிலாந்து வங்கியின் பொறுப்புகளும் உரிமைகளும் தொடர்ந்து பெருகிக் கொண்டேயிருந்தமையால், அது நாட்டின் மைய வங்கியாகச் சட்டமுறையில் உறுதிசெய்யப்பட்டு, 1946-ஆம் ஆண்டு நாட்டுடைமையாக்கப்பட்டது. தங்கத் திட்டம் கைவிடப்பட்ட உடனேயே பணவாக்கக் கொள்கையின் (Monetary Policy) கோட்பாட்டு முடிவுகளை எடுக்கும் பொறுப்பு, வங்கியிடமிருந்து அரசின் கருவூலத்திற்கு (Treasury) மாற்றப்பட்டது. ஆனால், அரசின் பணவாக்கக் கொள்கையைச் செயற்படுத்தும் கருவியாக இங்கிலாந்து வங்கி தொடர்ந்து விளங்கியது. நாட்டுடைமையாக்கப்பட்டதன் மூலம், முன்பே பல ஆண்டுகளாக இயல்பாகவங்கியிடம் ஒப்படைக்கப்பட்ட பொறுப்புகள், நிதி நெருக்கடியைத் தவிர்ப்பது, போர்க்கால நடவடிக்கைகள் ஆகியவற்றின் காரணமாக அவ்வப்போது வங்கி பின்பற்றிய பல்வேறுபட்ட கொள்கைகள், முறைகள் ஆகியவற்றிற்குச் சட்ட முறையிலான ஒப்புதல்கள் உறுதி செய்யப்பட்டன.

மேலும், 1946-ஆம் ஆண்டு இங்கிலாந்து வங்கிச் சட்டப்படி வங்கியின் மூலதன இருப்பு (Capital Stock) அரசுக் கருவூலத்தோடு இணைக்கப்பட்டது. கருவூலத்திற்கு இங்கிலாந்து வங்கியின் மேல் சட்டமுறையிலான அதிகாரம் அளிக்கப்பட்டது. இங்கிலாந்து வங்கி, வணிக வங்கிகளின் மேல் அதிகாரம் செலுத்தி அவற்றின் நடவடிக்கைகளைக் கண்காணிக்

கும் பொறுப்பைப் பெற்றது. இச்சட்டத்தின்படி, வங்கியின் ஆளுநரையும் (Governor) துணை ஆளு நரையும் இயக்குநர்களையும் அமர்த்தும் அதிகாரம் இங்கிலாந்து அரசினுக்கு (Crown) அளிக்கப்பட்டது. கருவூலம், பொதுமக்களின் நலனைக் கருதி, வங்கியின் ஆளுநருடன் கலந்தாலோசித்து, அவ்வப்போதைக் குத் தேவையான கொள்கைக் கோட்பாட்டு இலக்கு களை வங்கிக்கு வழங்குகிறது. அரசின் பிணையங் களும், கடனுறுதிச் சீட்டுகளும், கருவூல உண்டியல் களும் (Treasury Bills) இங்கிலாந்து வங்கியின் தலை யாய சொத்தாகும். அரசுக்கு வங்கி அளிக்கும் நேர டிக் கடன்களும் வழிவகைக் கடன்களும் (Ways and Means of Advances) சொத்தாகவே கருதப்படு கின்றன.

வங்கிகளின் வங்கி; இறுதிக்கடன் ஈவோன்: வணிக வங்கிகள், தங்களிடமுள்ள மொத்த வைப்பு களில் (Deposits) 8 விழுக்காட்டுச் சொத்தினை இங்கி லாந்து வங்கியிடம் கெட்டிப்பணக் காப்பாக (Cash Reserve) வைக்க வேண்டும். இவ்வங்கிகள் அரசுப் பிணையங்களை (Government Securities) வாங்கி னால், காப்புத் தொகை 8 விழுக்காட்டிலிருந்து குறைவாக இருக்க அனுமதிக்கப்படும். வணிக வங்கி களுக்கு நிதி தேவைப்படும்பொழுது அவை கருவூல உண்டியல்கள், கடனுறுதிச் சீட்டுகள் போன்றவற்றை இங்கிலாந்து வங்கியிடம் மறுகழிவு செய்து கொள் கின்றன. கடன் கழிவு செய்தல், முன்பணம் (Discounts & Advances) அளித்தல் போன்ற பணிகளை வணிக வங்கிகளுக்கு இங்கிலாந்து வங்கி, கழிவுத் தீர்வகங்கள் வாயிலாகச் (Discount House) சிறப்பா கச் செய்கிறது. கழிவு அங்காடிக்கு(Discount Market) எப்பொழுது வேண்டுமானாலும் இங்கிலாந்து வங்கி கடன் அளிக்கும். ஆனால், அக்கடன் உயர்ந்த தண்டனை வட்டிவீதத்துடன் (Penalty Rate) அளிக் கப்பட்டதாயிருக்கும்.

வணிக வங்கிகள், சிக்கலான காலத்தில் மட்டில் வேறு வழி வகைகள் மூலம் (Ways and Means) நிதிக் கடன் பெற இயலாதபோது; கழிவு அங்காடி மூலம் தண்டனை வட்டியுடன் கடனைப்பெற்று, நிதி நெருக்கடியைத் தீர்த்துக் கொள்கின்றன. இவ் வகையில் இங்கிலாந்து வங்கி, இறுதிக் கடன் ஈவோ னாக (Lender of Last Resort) வணிக வங்கிகள் நொடித்துப் போகாமல் அவற்றிற்கு உதவுகிறது. வணிக வங்கிகள், நெருக்கடிக் காலத்தில் இங்கிலாந்து வங்கியிடம் தாங்கள் காப்பாக வைத்திருக்கும் 8 விழுக்காடு வைப்பிலிருந்தும் இறுதிக்கடனாக உதவித் தொகை பெறுகின்றன. வங்கிகளின் இருப்பில் ஒரு பகுதியைத் தன்னிடம் காப்பாக வைத்திருப்பதால், இங்கிலாந்து வங்கி, அவற்றிற்குப் பாதுகாப்பு அளிப் பதும், ஆலோசனைகள் வழங்குவதும், தொழிலில் கட்டுப்பாடுகளை விதிப்பதும், முறிவுகளைத் தவிர்ப் பதற்குத் தேவையான நடவடிக்கைகளை எடுப்பதும் தன் கடமை எனக்கருதி அவற்றைப் பொறுப்புடன் நிறைவேற்றும் சிறந்த பாதுகாவலனாகப் பணி யாற்றுகிறது. இதனால், பொதுமக்களுக்கு வணிக வங்கிகளிடமுள்ள நம்பிக்கையும் உறுதி செய்யப்படு கிறது.

கடனைக் கட்டுப்படுத்தல்: நாட்டின் பொது நிதி நலனைக் கருதி, கடன் நிலைமையைக் (Credit Situation) கட்டுப்படுத்துவதற்காக இங்கிலாந்து வங்கி, அறிவுரை மூலம் குறிப்பிட்ட சில வழிகளில் செயற்படுமாறும், சில வழிகளில் செயற்படாதிருக்கு மாறும் தொடர்பான வங்கிகளுக்குக் கட்டுப்பாடு விதிக்கிறது.

வங்கிவீதக் கொள்கை (Bank rate Policy) மூலம் கடனைக் கட்டுப்படுத்தல் (Cerdit control) மிகுந்த பயன்களை அளிப்பதால், இக்கோட்பாடு முதன்மை யிடத்தைப் பெறுகிறது. வணிக வங்கிகள், கழிவு அங்காடி ஆகியவற்றின் நடவடிக்கைகள், இங்கி லாந்து வங்கியின் வங்கி வீதத்தைச் சார்ந்துள்ளன. தங்கத் திட்டக் காலத்திலும், அது கைவிடப் பட்ட பின்னரும் சில காலத்திற்கு வேறுபாடுகளும் ஏற்றத் தாழ்வுகளும் காணப்பட்ட போதிலும், 1951–ஆம் ஆண்டிற்குப் பின் கழிவுத் தீர்வகங்கள், இங்கி லாந்து வங்கியின் அங்காடி முகவராகப் (Market Agent) பின்னணியிலிருந்து (Back door) செயலாற்று கின்றன. நிதிப் பற்றாக்குறைக் காலத்தில் கருவூல உண்டியல்களைக் கழிவு செய்யக் கழிவுத் தீர்வகங் கள் முன்வருவதால், வணிக வங்கிகள், அங்காடி விலைக்கு அவற்றை வாங்குகின்றன. இத்தீர்வகங்கள் மூலம் அங்காடி விலையை இங்கிலாந்து வங்கி வரை யறுக்கிறது. பணவீக்கக் (Inflation) காலத்தில் உயர்ந்த வங்கிவீதம், வாணிக வங்கிகளின் வட்டி வீதத்தையும் உயரச் செய் றது. அதனால், வணி கர்கள் கடன் பெறுவதைக் கட்டுப்படுத்திப் பங்கு அங்காடிகளில் பங்குகளை விற்றுக் கடன்களைத் தீர்க்கின்றனர். இவற்றால் கடன் பெருக்கமும், செல வும் வருமானமும் ஒன்றையொன்று பாதித்து (குறைந்து) இறுதியில் நிதிநிலை சமன்பாடடைகிறது. வங்கிகளின் கடன் வழங்கும் ஆற்றலும் குறைந்து விடுகிறது. உயர்ந்த வட்டிவீதத்தில் சேமிப்புப் பெரு கத் தேவைகள் குறையலாம்: விலைகளும் இறங்க லாம். பணவாட்டக் (Deflation) காலத்தில் வங்கி வீதம் குறைக்கப்படுவதால், இவற்றிற்கு எதிர் மாறான விளைவுகள் நிகழும்.

திறந்த அங்காடி நடவடிக்கைகள் (Open market Operations), வங்கி வீதக் கொள்கை அடிப்படையி

லேயே செயற்படுகின்றன. திறந்த அங்காடியில் கருவூல உண்டியல்களை வாங்குவது, விற்பதன் மூலம் பணச் செலாவணியின் அளவு வரையறுக்கப் படுகிறது. பண அங்காடியின் நிதி நடவடிக்கைகள் யாவும் ஒழுங்குற்ற முறையில் அமைய (Organised Sector) இங்கிலாந்து வங்கி, இலண்டன் கழிவு அங்காடியைப் (London Discount Market) பாலமாகக் கொண்டு செயற்படுகிறது. வங்கி வீதக் கொள்கையும், திறந்த அங்காடி நடவடிக்கைகளும் பொருளாதார மலர்ச்சிக் காலத்தில் நல்ல விளைவுகளை அளித்தாலும், மந்தக் காலங்களில் மிகுந்த பயன்களைத் தருவதில்லை.

அயற் செலாவணி, பன்னாட்டு வாணிகம், பன்னாட்டுச் செலுத்துநிலை ஆகியவற்றில் சீரான நிலை காணப்பட இங்கிலாந்து வங்கி, அரசின் சார்பில் தலையிட்டுப் பன்னாட்டு நிதிநிலைக்கிணங்கத் தேவையான கோட்பாடுகளை உருவாக்கி, அவற்றைச் செயற்படுத்துவதில் அரசுக்கு உறுதுணையாயிருக்கிறது.

**துணை நூல்கள்:**

**Briggs & Jordan, 'Economic History of England, University Tutorial Press Limited, London, 1962.**

**Benjamin Haggot Beckhart, Ed., Banking Systems, Columbia University Press, New York, 1967.**

**Dubey, R. N., The Economic Development of England, Kitab Mahal W.D., Private Limited, Allahabad, 1964.**

***இச்சுகாக்கு ஆல்பிரெடு* (கி.பி.1899-1980)** ஆங்கிலத்தில் மர்மக் கதைகளைக் கொண்ட திரைப் படங்களைச் சிறப்பாகத் தயாரித்து வெளியிட்ட திரைப்பட இயக்குநர் ஆவார். இவர் கி.பி. 1899-ஆம் ஆண்டு இலண்டனில் பிறந்தார். தம்முடைய முதல் திரைப்படத்தை 1925-இல் இயக்கினார். தொடக்கக் காலத்தில் இவர் எடுத்த திரைப்படங்களுள் 'அச்சுறுத்தல்' (BlackMail), 'மிக அதிகம் அறிந்த மனிதன்' (The Man who knew too much), '39 படிகள்' (Thirty Nine Steps), 'மங்கை மறைகிறாள்' (The Lady Vanishes) என்பனவற்றைச் சிறந்தவையாகக் குறிப்பிடலாம். இவர் 1939 ஆம் ஆண்டு அமெரிக்க ஐக்கிய நாட்டில் குடியேறினார். ஆலிவுட்டில் (Holly Wood) 40 ஆண்டுகள் பல படங்களைத் தயாரித்து வெளியிட்டார். அப்படங்களுள் இரெபெக்கா (Rebecca), ஒரு சந்தேகத்தின் நிழல் (Shadow of a Doubt), இசையிலி (Notorious), இரயிலில் புதிய மனிதர்கள் (Strangers in the Train), பின்பலகணி


ஆல்பிரெடு இச்சுகாக்கு

(Rear Window), உளம் பிறழ்ந்தோன் (Psycho), பறவைகள் (The Birds) போன்ற படங்கள் உலகப் புகழ்பெற்றவை. குடும்பச் சந்திப்பு (Famliy Tryst) என்பது இவர் எடுத்த இறுதிப்படம் ஆகும். ஓர் ஒலிப்பதிவின்மீது வேறோர் ஒலியைப் பதிவு செய்வது, அமைதியான காட்சிகளின் மூலம் அச்சத்தைத் தோற்றுவிப்பது போன்ற பல மர்மப்பட உத்திகளை இச்சுகாக்கு ஆல்பிரெடு (Alfred Hitchcock) முதன் முதலில் தம் படங்களில் பயன்படுத்தினார். இவர் படங்கள் யாவும் அச்சம், மர்மம் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டு எடுக்கப்பட்டவை. இவை மக்களிடையே இவருக்குப் பெரும் புகழை ஈட்டித்தந்தன.

***இசக்கி கதை*** என்பது, இசக்கி அம்மன் என்னும் சிறுதெய்வத்தைப் பற்றி நாட்டுப்புற இலக்கிய அமைப்பில் அமைந்துள்ள ஒரு கதையாகும். இந்த அம்மன், கொடுமைகளுக்கு அஞ்சாதவள் என்று திருநெல்வேலி, இராமநாதபுரம், கன்னியாகுமரி ஆகிய மாவட்டக் கிராம மக்களால் போற்றப்படும் சிறு தேவதையாகும். அகால மரணமடைந்த ஒரு பெண்ணே இச்சிறு தெய்வமானாள் என்று கருதப் படுகிறது. வஞ்சம் செய்தவரை அவர் வாழும் ஊரோடு அழித்த தன்மையே இவளைச் சிறு தெய்வமாக்கியது. இயல்பான செவிவழிக் கதை இவளை ஒரு பொதுமகளாகச் சித்திரிக்கிறது.

இவள் இயற்பெயர் இலட்சுமி என்பதாகும். நகைமீது ஆசை கொண்டு இவளைக் கொன்று விடு

கிறான் ஆசை நாயகன் வேதியன். செல்லும் வழியில் இவன் பாம்பு கடித்து இறந்து விடுகிறான். இலட்சுமியின் அண்ணன், தங்கையின் பிரிவு தாங்காது தீயில் விழுந்து இறந்துவிடுகிறான். மூவரும் மறுபிறவி எடுக்கின்றனர். அண்ணனும் தங்கையும் சோழனுக்கு இரட்டைக் குழந்தையாகவும், வேதியன் காவிரிப் பூம்பட்டினத்தில் ஒரு வணிகனுக்கு மகனாகவும் பிறக்கின்றனர். இரட்டைக் குழந்தையாகப் பிறந்தவர்க்குப் பசியடங்காது, இரவில் பேய் வடிவம் கொண்டு எருமை, பசு போன்ற விலங்குகளைத் தின்று பசிபோக்கி, விடியற்காலையில் பிள்ளையாக மாறித்தொட்டிலில் வந்து படுத்திடுவர். இச்செயலைச் சோழ மன்னன் உணர்ந்து, இவர்களைக் காட்டில் விட்டுவிடச் செய்தான். அவ்வூர்க் காட்டு வேப்பமரத்தில் தங்கியிருந்த இலட்சுமியின் அண்ணன், அவ்வூர் மக்கள் மரத்தை வெட்டும்பொழுது இறந்துவிடுகிறான். இவள் மட்டும் தன் ஆசைநாயகனைப் பழிவாங்க அலைந்தாள். வணிக மகன் ஒருநாள் இவள் இருக்கும் வழியே வர நேர்ந்தது. கள்ளிக் கொம்பினைக் குழந்தையாக்கி, 'நான் உன் மனைவி, என்று குழந்தையைச் சாட்சியாகக் காட்டினாள்'. அவன் மறுக்கவே ஊர்ப் பஞ்சாயத்தைக் கூட்டி நியாயம் கேட்பேன் என்று கூறினாள். ஊர்மக்களும் இவளை நம்பினர். ஊர்மடத்தில் அன்று இரவு தங்கி இருந்தபோது தான் எண்ணியதை முடித்தாள். பின்னர் வணிகனின் தாயாக வடிவம் எடுத்துத் தன் மகனைக் கொன்ற குற்றத்திற்காக ஊரார் அனைவரையும் அழித்துப் பழிதீர்த்துக் கொள்கிறாள். முடிவில் தென்னாட்டில் உள்ள முப்பந்தல் என்னும் ஊரில் யாவரையும் நடுங்க வைக்கும் தெய்வமாக நிலைகொண்டாள்.

வில்லுப்பாட்டுக் கலைஞர்கள் இவளை ஒரு தலைவியாக்கிக் கதை சொல்வர். பழையனூர் நீலியுடன் இசக்கியையும் இணைத்துக் கூறுவது வழக்கில் உண்டு. இரா. கு.

**இசசு** பண்டைய எகிப்தியர்கள் வணங்கிய மிகச் சிறப்பான பெண் தெய்வம். இவள் ஆசுரிசு (**Osiris**) என்பவரின் தங்கையாகவும் மனைவியாகவும், ஓரசு என்பானின் தாயாகவும் கருதப்படுகிறாள். இசசு (Isis) வழிபாடு மெம்பிசு (**Memphis**) என்னும் ஊரை மையமாகக் கொண்டு எகிப்து முழுவதிலும் பெருகி வளர்ந்தது. இவ்வழிபாடு கி.மு. 100–ஆம் ஆண்டளவில் கிரீசு, உரோமாபுரி போன்ற இடங்களைச் சென்றடைந்தது.

இசசு அனைத்துப் பொருள்களின் தாயாகவும், அனைத்து மூலங்களின் அம்மையாகவும் அனைத்துக் காலங்களுக்கும் முற்பட்டவளாகவும் கருதப்பட்டாள்.



இசசு

பயணிகளும், மாலுமிகளும் இசசுவைத் தம் புரவலராகக் கருதினர்.

**இசபகான்** என்னும் நகரம் ஈரான் நாட்டின் நடுவில் செயந்தா (Zayandah) என்னும் ஆற்றின் கரையில் அமைந்துள்ளது. இசபகான் (Isfahan or **Esfahan**) தொன்மை வாய்ந்த அழகுமிக்க நகரம். இதற்கு நெடிய வரலாறுண்டு. இங்குக் கவின்மிகு கம்பளங்கள், கைகளால் அச்சடிக்கப்படும் துணிமணிகள், உலோகப் பொருள்கள் போன்றவை தயாரிக்கப்படுகின்றன. புதிய பஞ்சாலைகளும் உருக்கு ஆலைகளும் எழுந்துள்ளன. சசானியர் (Sassanid) தம் ஆட்சிக் காலத்திலேயே சிறப்புப் பெற்ற இந்நகரைக் கி.பி. 7–ஆம் நூற்றாண்டில் அவர்கள் கைப்பற்றிய போது அவர்தம் பேரரசின் தலைநகரமாக இதை ஆக்கினர். மங்கோலியர் இந்நகரைக் கி.பி. 13–ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கைப்பற்றினர். தாமர்லேன் என்று கூறப்பட்ட தைமூர், இசபகானைக் கி.பி. 1388–ஆம் ஆண்டில் வெற்றி கண்டார். ஆனால், இந்நகர மக்கள் அவருக்கெதிராகக் கலகம் செய்தார்கள். வெகுண்ட தைமூர் ஏறத்தாழ 7,000 மக்களைக் கொன்று பழிதீர்த்துக் கொண்டார். இறந்தவர்களின் மண்டையோடுகளைக் கொண்டு இவர் பெரிய குன்று ஒன்றினைக் கட்டியதாகக் கூறுவர். முதலாம் சா அப்பாசு (Shah Abbas I) என்பாரின் ஆட்சிக் காலத்தில் இசபகான், கி.பி. 1598–இல்



இசபகான் நகரிலுள்ள மசூதி

மீண்டும் தலைநகராக்கப் பட்டது. இவர் இந்நகரில் அழகான கட்டடங்களைக் கட்டினார். அவற்றுள் கவர்ச்சி மிக்கது பேரரசு மசூதியாகும் (Imperial Mosque). இம்மசூதி உலகக் கட்டடக் கலைக்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகக் கருதப்படுகிறது. அக்காலத்தில் இது புகழ்மிக்க உலக நகரங்களுள் ஒன்றாகத் திகழ்ந்தது. இதனை ஆப்கானியர் கி.பி 1723-ஆம் ஆண்டில் கைப்பற்றியபோது இதன் புகழ் குறையலாயிற்று. அவர்கள் இந்நகர மக்களுள் பெரும்பாலோரைக் கொன்று குவித்தார்கள். உருசியப் படைகள் இசபகானை 1916-ஆம் ஆண்டில் கைப்பற்றிக் கொண்டன. இசுபானின் மக்கள் தொகை 6,71,825 (1975).

**இசபெல்லா** இசுபெயின் நாட்டின் வரலாற்றில் சிறப்பிடம் பெற்ற அரசியாவார்; காசுடைல் (Castile), ஆரகான் (Aragon) என்னும் இரு பகுதிகளையும் ஆண்டவர். இந்த அம்மையார் கி.பி. 1469-ஆம் ஆண்டில் ஆரகானைச் சார்ந்த பெர்டினாண்டு என்பாரை மணந்து கொண்டார். இத்திருமணத்தின் பயனாக இரு பேரரசுகள் இணைந்தன. இவ்விணைப்பு இசுபெயினின் (Spain) பெருமைக்கும் புகழுக்கும் அடிக்கல் நாட்டியது.

இசபெல்லா (Isabella), பெர்டினாண்டு (Ferdinand) ஆகியோரின் ஆட்சிக்காலத்தில் புதிய சாலைகள் அமைக்கப்பட்டன. நாணயங்கள் இரு நாடுகளிலும் ஒரே மதிப்புடையவையாக ஆக்கப் பெற்றன. இசுபானியச் சட்டம் தொகுத்து வரையறுக்கப்பட்டது. அரசர்கள் நீதி நிருவாகத்தைத் தாமே மேற்கொண்டனர். அவர்கள் பிரபுக்களின் அதிகாரத்தைக் குறைத்தனர். இசபெல்லாவும் பெர்டினாண்டும் இணைந்து மூர்கள் (Moors) எனப்படும் இசுலாமியருடன் போராடினர். அக்காலத்தில் தெற்கு இசுபெயினின் ஒரு பகுதியை இசுலாமியர் கைப்பற்றியிருந்தனர். மூர்களின் வலிமை வாய்ந்த இடமான கிரனடாவை (Granada) கி.பி. 1492-இல் இவர்கள் கைப்பற்றினார்கள். அதன்பின், அங்கு வாழ்ந்த யூதர்கள் அனைவரையும் இசுபெயினை விட்டு வெளியேற வேண்டும் அல்லது கிறித்தவர்களாக மதம் மாறவேண்டும் என்று வற்புறுத்தினர்.



இசபெல்லா

மேற்றிசையில் கடற் பயணம் செய்து இந்தியாவுக்கு வழி கண்டுபிடிக்கலாம் என்று கிறித்தோபர் கொலம்பசு (Christopher Columbus) கூறிய கருத்து ஆழ்ந்து சிந்திக்கத்தக்கது என்று இசபெல்லா எண்ணியமை, அவரது மதிநுட்பத்தைச் சுட்டிக்காட்டும். தாம் காட்டிய ஆதரவினால் கொலம்பசு கண்டுபிடித்த அமெரிக்கப் பகுதிகளில், இசுபெயினுக்குச் சில இடமும் உரிமையும் கிட்டின. மேற்கில் இசுபானியப் பேரரசு வளர இதனால் வாய்ப்பேற்பட்டது.

**இசாமி** என்பவர் தக்காண இசுலாமிய வரலாற்றாசிரியர்களுள் ஒருவர். பாமினி அரசர் முதலாம் அலாவுதீன் இவரை ஆதரித்தார். இசாமி (Isami) கி.பி. 1349-ஆம் ஆண்டில் வரலாற்று நூல் ஒன்றை இயற்றினார். வரலாற்றுத் தொடர்பான நிகழ்ச்சிகள் நடைபெற்ற முப்பதாண்டுகளுக்குள் அவற்றை இசாமி, தம் வரலாற்று நூலில் குறிப்பிட்டுள்ளார். தாம் எழுதிய நிகழ்ச்சிகளுக்கு ஆதாரமாகக் காட்டிய சான்றுகளே இவருடைய வரலாற்றுக் குறிப்பேட்டின் சிறப்பாகும். இவருடைய வரலாற்றுப்

பார்வையை நம்ப முடியாத கட்டுக்கதை என்று புறக்கணிக்க இயலாது. யாதவ அரசர் இராமச்சந்திரரும், காகதீய அரசர் பிரதாபருத்திரரும் இசாமியின் காலத்தவர்கள். இவருடைய குறிப்புகளில் இவ்விரு அரசர்களைப் பற்றிய வரலாற்றுச் செய்திகளையும் அறியலாம். தக்காணத்தில் அரசினை நிலைநாட்டிய முகமது பின் துக்ளக்கின் அரசியலை இசாமியின் வரலாற்று நூல் குறை கூறுகிறது.

மு. அ. ர.

**இசார்** என்னும் நகரம் அரியானா மாநிலத்தில் இசார் மாவட்டத்தின் தலைநகரமாகும். யமுனைக் கால்வாயின் மேல்கரையில் சர்கிந்து (Sirhind) வாய்க்காலின் கிளையில் இந்நகரம் அமைந்துள்ளது. இசார் (Hissar) நகரம் இம்மாவட்டத்தின் இருப்புப் பாதைகளும் சாலைகளும் சந்திக்கும் பெருமையமாகும். இங்குப் பருத்தியைக் கொட்டையிலிருந்து பிரிக்கும் ஆலையும் கைத்தறி நெசவும் சிறப்புப் பெற்றவை. இந்நகரத்தைக் கி.பி. 1356-ஆம் ஆண்டில் பேரரசர் பிரோசு சா (Firoz Shah) என்பார் நிலைநாட்டினார். பிற்காலத்தில் மொகலாயரின் ஆட்சியின்போதும் இந்நகரம் முதன்மையான மையமாகக் கருதப்பட்டது. இந்நகரம் கி.பி. 18-ஆம் நூற்றாண்டில் மக்கள் தொகை குறைந்து சிறப்பிழந்து நின்ற நிலையில், சார்சு தாமசு (George Thomas) என்னும் பிரிட்டிசு ஆய்வாளர் மீண்டும் இதனைக் கைப்பற்றினார். இசார் கி.பி. 1867-ஆம் ஆண்டில் ஒரு நகராட்சி நகரமாயிற்று.

இந்நகரைச் சுற்றிலும் நான்கு நுழைவாயில்களைக் கொண்ட மதிற்சுவர் கட்டப்பெற்றுள்ளது. இதனுள் பிரோசு சாவின் கோட்டையும் அரண்மனையும் பண்டைக்கால மசூதிகள் பலவும் உள்ளன. சகாசு (Jahaj) என்பது இன்று சமணக் கோயிலாக உள்ளது. இங்குள்ள மருத்துவமனையும் நான்கு கல்லூரிகளும் ஒரு கால்நடை மருத்துவக் கல்லூரியும் பஞ்சாப் பல்கலைக்கழகத்துடன் இணைக்கப்பட்டுள்ளன.

இசாரின் மக்கள் தொகை 1,31,194 (1981). இசார் மாவட்டத்தின் பரப்பு 13,934 ச.கி.மீ. இம்மாவட்டம் தார் பாலைநிலத்தின் வடகிழக்குக் கோடியில் அமைந்துள்ளது. இது அறுபடாத சமவெளியையும் தென்மேற்கில் ஆரவல்லி மலைத்தொடரின் குன்றுகளையும் கொண்டு விளங்குகிறது. காகர் (Ghaggar) என்னும் ஆறு ஒன்றே இம்மாவட்டத்தில் பாய்கிறது. மேற்கு யமுனை, பாக்ரா, சர்கிந்து, காகர் கால்வாய்கள் மூலம் நீர்ப்பாசனம் நடைபெறுகிறது. இம்மாவட்டத்தில் கால்நடைகள் மிகப் பெருமளவில் வளர்க்கப்படுகின்றன. இசாரில் வட இந்தியாவிலேயே மிகப்பெரும் கால்நடைப் பண்ணை ஒன்று அமைந்துள்ளது. இம்மாவட்டத்தின் மக்கள் தொகை 21,17,519 (1981).

இசி பழங்குடியினர், வடமேற்கு ஆப்பிரிக்க நாடுகளான நைசீரியாவிலும் காமரூனிலும் வாழ்பவர்கள். காமரூன் குன்றுகளிலிருந்து பரவிக் கிடக்கும் தொடர்ச்சியான மலைகளும் குன்றுகளும், மேற்குக் காமரூன், மம்பிலா பீடபூமி, அதமாவா மேட்டு நிலங்கள் முதலான பகுதிகளை உள்ளடக்கியுள்ளன. இதனை அடுத்த தாழ்நிலப் பீடபூமியை மந்தரா மலைகளும் சாட்டு ஏரியும் இருபுறங்களிலும் அரவணைத்திருக்கும் இப்பரப்பில்தான் இசி பழங்குடியினர் வாழ்கின்றனர். இப்பகுதி முன்னர்ச் செருமானியர் குடியேற்றமாக இருந்தது. முதலாம் உலகப் போருக்குப் பின்னர், இசி பழங்குடியினரின் பகுதிகள் ஆங்கிலேயராலும் பிரெஞ்சுக்காரர்களாலும் பகிர்ந்து கொள்ளப்பட்டன.

இசி பழங்குடியினர் கருத்த மேனியையும் சுருட்டை முடியையும் அகன்ற தாடையையும் நல்ல உயரத்தையும் கொண்டுள்ளனர். இவர்கள் நீக்ரிட்டோ இனத்தைச் சார்ந்தவர்கள். ஆப்பிரிக்க வரலாற்றில் இசி பகுதியும் சூடான் பகுதியும் சிறப்பிடம் பெற்றவை. அரசியல், பண்பாடு, சமயம், தொழில் நுட்பங்கள் முதலானவை இப்பகுதியைக் கடந்தே கிழக்கிலும் மேற்கிலும் பரவின. மேற்குச் சூடானில் 6000 ஆண்டுகளுக்கு முன்பே நடைபெற்ற பயிர்த்தொழில் இசி பகுதியின் வழியே பரவியுள்ளது. இதற்கிடையே, பண்டைய எகிப்திலிருந்து நைல் ஆற்றுப் படுகைக்குப் பரவிய கால்நடை வளர்த்தலும் இப்பகுதிக்குப் பரவியது.

இசி பழங்குடியினர், பயிர்த்தொழில் நுணுக்கங்களை மேற்கிலிருந்தும் கிழக்கிலிருந்தும் பெற்று அடிப்படை உணவிற்காகச் சாமை, சோள வகைகளைப் பயிர் செய்தனர். இப்பொழுது வெங்காயம், வாழை, நெல், கிழங்கு வகைகள், பட்டாணி, மிளகு, வேர்க்கடலை முதலானவற்றையும் பயிரிடுகின்றனர். எகிப்தியரிடமிருந்து கால்நடை வளர்த்தலையும் புலானியரிடமிருந்து பால் கறக்கும் முறையையும் இவர்கள் கற்றனர்.

இசி குடிகளில் ஏற்புச் சடங்கு முடிவுற்ற பின்னரே ஒருவர் மணம் செய்துகொள்ள முடியும். தந்தை தான் விரும்பும் மருமகளை அடைய அவளின் தந்தையிடம் அன்பளிப்புகளைத் தருவார். பெண்ணின் தந்தை அன்பளிப்பை ஏற்றுக்கொண்டால், திருமணத்திற்கு ஒப்புதல் அறிவிப்பதாகும். மணமகன் ஏற்புச் சடங்கை முடித்தவுடன் அவளின் உறவினர்கள் மணமகளை அழைத்துவருவர். எனினும், தன் மகளின் 'பரிசப் பணத்தை'க் கொடுத்த

பின்னரே அனுப்பி வைப்பர். ஒருத்தி இரண்டாம் கணவனை மணம் கொள்ளும்பொழுது இரண்டாம் கணவன் முதல் கணவனுக்கு ஈடு ஏதும் செய்யத் தேவையில்லை. அப்பெண்ணின் தந்தைக்கு ஆடு, உப்பு முதலானவற்றைப் பரிசமாக அளிப்பர். இரண்டாம் கணவன் பரிசப் பணத்தைக் கொடுத்தபின்னர்ப் பிறக்கும் குழந்தைகளுக்கு இவனே தந்தையாகும் உரிமையைப் பெறுகிறான். முதல் கணவனால் பெறப்பட்ட குழந்தைகளைத் தாய் தன்னுடனே எடுத்துக் கொள்வதற்கும், தாயிடமிருந்து முதல் கணவன் குழந்தைகளைப் பெற்றுக் கொள்வதற்கும், ஈடுகட்டும் முறையை வைத்துள்ளனர். இம்முறையில் பெரும்பாலும் சச்சரவு ஏற்பட்டு இரத்தம் சிந்தும் சண்டையும் (Blood feud) நடைபெறுகிறது.

இசி பழங்குடியினரின் அரசியல் வாழ்வில், பண்பாட்டாலும் அரசியல் அமைப்பாலும் வளர்ச்சியடைந்த புலானியர் பெரும் பங்கு வகித்தனர். இவர்கள் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் சமயப்போர் (Holy War) நிகழ்த்தி இசியினரைத் தம் வசப்படுத்தினர்; சிலரை அடிமைகளாகவும் நடத்தினர். புலானியர் மட்டுமல்லாது இப்பகுதியைச் சார்ந்துவாழும் கனூரி, புலாலா முதலிய மக்களும் பரவலான வகையில் இசி பழங்குடியினரைத் தம் கட்டுப் பாட்டுக்குள் கொண்டு வந்தனர். இதனுடன் தம் பண்பாடு, சமய முறைகளையும் திணித்தனர். இவர்களிடையே தலைவன் அமைப்புடைய அரசியல் கட்டமைப்பு இல்லை. சமூகச் செயற்பாடுகளைக் கண்காணிப்பதில் உறவுமுறைக் குழுவே தலையாய பங்கேற்கிறது.

இசி மக்களிடையே ஒற்றுமையுணர்வும் கட்டுப்பாட்டுணர்வும் வளர்ப்பதில் சமயம் முதன்மையான பங்கினை வகிக்கிறது எனலாம். தலைவனற்ற இக்குடியில் பல உறவுமுறைக் குழுக்களே அரசியல் நடவடிக்கைகளைக் கண்காணிக்கின்றன. இக்குழுவினர் அனைவருக்கும் அந்தந்த வட்டாரச் சமயக் குருக்களே வழிபாடுகளையும் சடங்குகளையும் நடத்துகின்றன.இசி பழங்குடிகள் 'வட்டாசிரா' (Wata Sira) என்னும் சூரியனாகிய கடவுளையும், தங்கள் விளை நிலங்களைக் காக்கும் 'அயல்' (Hyel) என்னும் ஆண் கடவுளையும், மழையைக் கொடுப்பவள் என நம்பும் 'இகி' (Ikhi) என்னும் பெண் கடவுளையும் வழிபடுகின்றனர்.இப்பழங்குடிகளிடையே சமயக் குருமார்களின் மரபுவழி சற்று மாறுபட்டது. தம் தந்தையிடமிருந்தோ தந்தையின் உடன்பிறந்தோரிடமிருந்தோ சமயக் குருமாராகப் பணிபுரிய அதிகாரம் பெறுகின்றனர். இதனுடன் இறந்த அவர்களின் தலை முடியின் ஒரு சிறு கற்றையைப் பெறுவர். இம்முடியைத் தம் மரபு வழிப்படி தலையில் மழிக்காத ஒரு பகுதி முடியுடன் இணைத்துக்கொள்வர்.

இறந்தவர்களுக்கு விரிவான ஈமச்சடங்குகள் நடைபெறுகின்றன. சமயக் குருமார்கள் இறக்கும் பொழுது மேலும் விரிவான சடங்கு முறைகளை மேற்கொள்கின்றனர். இறந்தவர்களை இரு நாட்களுக்கு வைத்திருப்பர். இவ்விரண்டு நாட்களில் இறந்தவரின் வலக் கை சோளம் நிரப்பப்பட்ட பானையிலும் இடக் கை வேர்க்கடலை நிரப்பப்பட்ட பானையிலும் இருக்குமாறு வைப்பர். இரண்டாம் நாள் இரவே புதைப்பர். மறுநாள் பிணத்தின் மேற்றோலை எடுத்த பின்னர் மரத்திலிருந்தும் ஆட்டின் கொழுப்புப் பொருள்களிலிருந்தும் பெறப்பட்ட சிவப்புச் சாயத்தால் கழுவி உடை அணிவித்துப் பின்னரே இறுதியாகப் புதைப்பர். சமயக் குருமார்களை இடுகாட்டில் தனிப் பகுதியில் புதைப்பர்.

சாடிக்கு (Chadic), ஆப்பிரிக்க-ஆசியக் குடும்பம், நைலோ-சகாரன் (Nilo-Saharan) குடும்பம், காங்கோ-கொர்டோபானியன் (Congo-Kordofanian) குடும்பம் முதலான மொழிக் குடும்பங்களைச் சார்ந்த மொழியையே இசி பழங்குடியினர் பேசுகின்றனர்.

**இசிடோர் (கி.பி. 560-636):** இசுபெயின் நாட்டைச் சேர்ந்த செவில் என்ற நகரத்தில் தலைமைக் கிறித்தவக் குருவாக இருந்த இசிடோர் என்பவர் (Isidore, Archbishop of Seville), உரோமானியக் கத்தோலிக்கக் கிறித்தவத் திருச்சபைக்குத் தம் அரிய கருத்துகளின் வாயிலாக அருந்தொண்டாற்றிய ஒரு சிந்தனையாளராவர். இவர் பிறந்தது கி.பி. 560-ஆம் ஆண்டாகக் கருதுவர். இவர் கி.பி. 636-ஆம் ஆண்டுவரை வாழ்ந்தார். இளமையில் தம் தமையனார் புனிதர் இலியாண்டர் (St. Leander) என்பவரின் பாதுகாப்பில் இவர் சிறந்த கல்விப் பயிற்சி பெற்றார். இசுபெயின் நாட்டில் குடியேறி இருந்த கோதிக்கு இன (Goths) மக்களின் ஒரு பிரிவினரான விசிகோத்து (Visigoths) இனமக்களும் கிறித்தவ நெறியினராக இருந்தாலும், இசுபெயின் நாட்டுத் திருச்சபைக்கும், உரோமானியக் கிறித்தவத் திருச்சபைக்குமிடையே பல வேறுபாடுகள் இருந்தன. அவற்றைப் போக்கி, உரோமானிய, கோதிக்கு நிறுவனங்களை முரணின்றி, ஒரே தேசியக் கலையாக இணைத்தல், இரு சாரார்க்கும் உதவிசெய்தற்கு ஏற்றதாக இருக்குமென்று இசிடோர் எண்ணினார். அதன் பொருட்டு இவர் விசிகோத்து இன மக்களையெல்லாம் உரோமானியக் கிறித்தவ நெறிக்கு மாற்றியும், கல்விப் பயிற்சியை மீண்டும் அம்மக்களுக்கு அளித்தும், பல திருச்சபை

மன்றங்களைக் கூட்டித் தீர்மானங்கள் பலவற்றை நிறைவேற்றியும் தொண்டாற்றினார். இவர் கூட்டிய மன்றங்களுள் கி.பி. 633-ஆம் ஆண்டில் கூட்டப்பட்ட தோல்டோ மன்றம் (Council of Toledo) மிகவும் சிறப்புடையது; இது விடுத்த ஆணையின் விளைவாகக் கிறித்தவ மக்கள் வாழும் ஒவ்வொரு சமய முதல்வருடைய மாவட்டப் பிரிவிலும் (Diocese), திருச்சபையினால் நடத்தப்படும் பள்ளிக்கூடங்கள் நிறுவப்பட்டன; இவற்றில் உலகியல் வாழ்வு தூய்மை பெறும் பொருட்டுச் சமய, ஒழுக்க விதிகளில் பயிற்சி அளிக்கப்பட்டது; குருமார்களாகப் பட்டமேற் போருக்கு உயர்ந்த தகுதிகள் விதிக்கப்பட்டன; கிறித்தவத் திருக்கோயில்களில் வழிபாட்டு முறைகளெல்லாம் ஒரே சீராக்கப்பட்டன. இவர் ஒரு சிறந்த எழுத்தாளர்; பல்கலைப் புலவருமாவார். இவர் ஒரு சொல் வரலாற்று நூல் எழுதினார். இவரெழுதிய ஓர் அறிவுத்திரட்டு அல்லது களஞ்சிய நூல் (Etymologiae), இவருக்கு முற்பட்ட காலத்திய களஞ்சியத் தொகுப்பாளர்களின் நூல்களிலிருந்தும், இலத்தீன் ஆசிரியர்களும் வல்லுநர்களும் எழுதிய 7 தாராளக் கலைகள், மருத்துவம், சட்டம், வரலாறு, இறை இயல், மானிடஇயல், விலங்கியல், புவியியல், உளவியல், கட்டடக்கலை, வேளாண்மை, மொழியியல், இயற்கை அறிவியல் முதலிய பல்வேறு துறைகளைப் பற்றிய சிறந்த கருத்துகளிலிருந்தும் திரட்டி எடுக்கக்கப்பட்ட சிறந்த நூலாகும். இடைக்காலத்தில் (Middle Ages) இந்நூல் ஒரு பாடநூலாகப் பயிலப்பட்டது. இவர் விசிகோத்து இன மக்களுடைய வரலாற்றையும் எழுதினார். கிறித்தவ மறையாகிய விவிலியத்தில் (Bible) கூறப்படும் 80 பெரியோர்களுடைய வாழ்க்கை வரலாறுகளையும் எழுதினார். ஒழுக்க இயல் நூலொன்றும் இவர் எழுதியுள்ளார். கார்ட்டசினா (Cartagena) குடும்பத்தைச் சேர்ந்த இவர், செவில் நகரத்தில் கி.பி. 636-ஆம் ஆண்டில் மறைந்தார். இவரை ஒரு புனிதர் என (Saint) உரோமானியக் கிறித்தவத் திருச்சபை கி.பி. 1598-ஆம் ஆண்டில் அறிவித்தது. இவர் இசுபானியக் களஞ்சிய ஆசிரியர் (Spanish Encyclopaedist), இறைநெறியாளர் (Theologian), வரலாற்றாசிரியர் (Historian) எனப் புகழப்பட்டார். திருச்சபை இவரை கி.பி. 1722-ஆம் ஆண்டில் திருச்சபைப் பேரறிஞர் (Doctor of the Church) என்று அறிவித்தது.



இசிடோர்

துணை நூல்கள்:

Lindsay, W.M., The Book of Etymologies of Isidore, Bishop of Seville, 1911.

Brehaut, E., An Encyclopeadist of the Dark Ages, 1912.

Ford, G.B., Isidore of Seville's History of the Goths, Vandals and Suevi, 1970.

**இசிபட்டணம்** என்பது பண்டைக்காலச் சிற்றூர் ஒன்றின் பெயர். இசிப்பட்டணத்தில்தான் கௌதம புத்தர் தம் சமயத்தின் விளக்க உரையாகக் கருதப்படும் தருமச் சக்கரப் பரிவர்த்தன சூத்திரத்தை முதன் முதல் விளக்கினார். அதனை அவர் பஞ்சவாக்கிவ பிக்குகள் என்னும் தம் ஐந்து சீடர்களுக்கு விளக்கிக் கூறி, அவர்களைப் புத்த சமயத்தைச் சாரச் செய்தார். இசிப்பட்டணத்தை இக்காலத்தில் சாரநாதம் என்று கூறுகின்றனர். இது வாரணாசிக்கருகிலுள்ளது; புத்தசமயம் பற்றிய வரலாற்றுப் புகழ்பெற்ற நினைவுச் சின்னங்களை இன்றும் இந்நகரம் கொண்டுள்ளது.

**இசிரா ஆண்டு** இசுலாம் மதத்தை நிறுவிய முகம்மது நபி, மெக்கா என்னும் இடத்திலிருந்து மெதினா என்னும் இடத்திற்குச் சென்ற காலத்தை இசுலாம் சமயத்தினர், இசிரா ஆண்டின் (Hijira Era) தொடக்கமாகக் கொண்டு கணக்கிட்டுள்ளனர். முகம்மது நபி கி.பி. 622-ஆம் ஆண்டு சூலை மாதம் 15-ஆம் நாள் மாலை மெக்காவிலிருந்து மெதினாவிற்கு ஓடினார். இந்நாளிலிருந்து இசிரா ஆண்டு தொடங்குகிறது. முகம்மது நபியின் இறப்பிற்குப் பின் உமர் என்னும் கலிபா, இசிரா ஆண்டை நடைமுறைப் படுத்தினார். இசிரா ஆண்டுக் கணக்கீட்டு முறை

இந்தியாவின் மீது இசுலாமியர் படையெடுத்ததன் விளைவாக இந்தியாவில் புகுந்தது. இந்தியாவில் முதன்முதலில், கசினி மாமூதுவின் (Ghazni Mahmud) இருமொழி நாணயங்களில் இசிரா ஆண்டு காணப் படுகிறது. இந்நாணயங்களில் இசிரா ஆண்டு 418, 419 (கி.பி. 1027, 1028) என்று உள்ளது. இந்நாண யங்கள் முகம்மதுபுரியிலிருந்து (லாகூர்) வெளியிடப் பட்டுள்ளன. இசிரா ஆண்டு அராபிய, பாரசீக மொழிக் கல்வெட்டுகளில் மட்டிலுமன்றி, இந்திய மொழிகளில் குறிப்பாக, வடமொழிக் கல்வெட்டு களிலும் காணப்படுகிறது.

**இசுகிநெபரசுகா கற்றல் நாட்டச் சோதனை** என்பது உடல் ஊனமுற்றோருக்காக அமைக்கப்பட்ட உளவியல் சோதனைகளுள் ஒன்றா கும். முழுமையான செவிட்டுத் தன்மையுடைய குழந் தைகளுக்காகவும் காது நன்றாகக் கேளாத குழந்தைக ளுக்காகவும் இசுகிநெபரசுகா கற்றல் நாட்டச் சோதனை (Hiskey-Nebraska Test of Learning Aptitude) உருவாக்கப்பட்டது. இச்சோதனை, 3 வய திலிருந்து 16 வயது வரையிலான குழந்தைகளுக்கு ஏற்ற சோதனைப்பகுதிகள் கொண்டது. சோத னையை விரைவாகச் செய்து முடிக்க வேண்டும் என்னும் செய்தியை இக்குழந்தைகளுக்குத் தெரியப் படுத்துவது கடினமாகுமாதலின் விரைவு என்னும் பகுதி மட்டில் நீக்கப்பட்டது. பிறசோதனைகளில் சேர்க்கப்படும் பகுதிகளைக் காட்டிலும் மிகுதியான பகுதிகள் இதில் சேர்க்கப்பட்டிருந்தன. செய்கை களின் மூலம் செய்தியைத் தெரியப்படுத்தல், இச் சோதனையில் முதன்மையான இடத்தைப் பெற் றிருந்தது. இச்சோதனையில் பின்வரும் பல பகுதிகள் அடங்கியிருந்தன. அவையாவன;

1. மணிகளால் உருவமைப்புச் செய்தல் (Bead Patterns)
2. நிறங்களை நினைவிலிருத்தல் (Memory for Colour)
3. படங்களைத் தெரிந்து அடையாளம் காட்டு தல் (Picture Identification)
4. பட இயைபுகள் (Picture Associations)
5. காகித மடிப்பு உருவமைப்புகள் (Paper Folding Patterns)
6. பார்வைக்கவன வீச்சு (Visual Attention span)
7. கட்டை உருவமைப்புகள் (Block Patterns)
8. படம் நிறைவு செய்தல்
9. எண்களை நிறைவு கொள்ளல் (Memory for Digits)
10. இடத்தொடர்ப அறிதல் (Spatial Reasoning).

இச்சோதனைகள், 1079 செவிட்டுக் குழந்தைகளுக் கும் 1074 செவிட்டுக்குறை சிறிதும் இல்லாத குழந் தைகளுக்கும் அளிக்கப்பட்டன. இக்குழந்தைகள் 3 முதல் 17 வயது வரையிலானவர்கள். இச்சோதனை முடிவுகள் ஆய்வு செய்யப்பட்டுத் தரப்படுத்தப்பட்ட பொழுது சோதனை நம்பக எண்கள் (Split half Reliabities), 90-ஐ அடுத்து இருவகைக் குழந்தைகளி டமும் காணப்பட்டன. சோதனையில் அடங்கியுள்ள 12 சோதனைகளின் இணைப்புத்தொடர்புகள் (Inter-correlations), 3 முதல் 10 வயது வரையிலான குழந் தைகளின் சோதனை முடிவுகளில் 30-இல் இருந்து 0.70-ஐ அடுத்தும், 11 வயது முதல் 17 வயது வரை யிலான குழந்தைகளின் சோதனைகளில் 0.20-இல் இருந்து 0.40-ஐ அடுத்தும் காணப்பட்டன. இசுட்டான் பர்டு பினே (Stanford Binet), வெக்சுலர் குழந்தை களுக்கான நுண்ணறிவுச் சோதனை (Wechsler Intelligence Scale for Children) போன்ற சோத னைகளின் முடிவுகளுக்கும் இசுகிநெபரசுகாச் சோதனை முடிவுகளுக்கும் இடையே காணப்பட்ட இணைப்புகள் (Correlations), 0.78-இல் இருந்து 0.86 வரையில் இருந்தன. இச்சோதனைக் குறிப்பில் (Manual) காதுகேளாத குழந்தைகளுக்கு இச்சோத னையை அளிக்க வேண்டிய முறைகள் நன்கு விளக் கப்பட்டுள்ளன.

இதனைப் போன்றே பார்வையற்ற குழந்தைகளுக் கும் வேறு வகைகளான உடல் ஊனமடைந்த குழந் தைகளுக்கும் கொடுக்கக்கூடிய உளவியல் நுண்ணறி வுச் சோதனைகள் தனித்தனியே அமைக்கப்பட்டுள் ளன.

**இசுகின்னரின் கல்விக் கோட்பாடு:** இசகின்னர் என்ற உளவியல் அறிஞரின் கற்றற் கொள்கை; கருவி வழிப் பழகுதல் அல்லது பயிலுதல் (Operant or Instrumental Conditioning) எனப்படு கிறது. கற்பவரின் ஒரு செயலைப் பாராட்டிப் பரிசு reward) தந்தால், அச்செயலை அவர் திரும்பச் செய்வார் என்பது இசுகின்னரின் (B.F. Skinner) கற்றற் கொள்கையின் அடிப்படைக் கருத்தாகும்.

இசுகின்னரின் கொள்கைப்படி, கருவிவழிப் பயிலுதல் நடைபெற மூன்று வெளிக்கட்டுப்பாடுகள் இருத்தல் வேண்டும். 1. கற்பவரின் செயலை வலுப்படுத்திட ஒரு தூண்டல் (Stimulus) இருத்தல் வேண்டும். 2. செயல் வெளிப்பட்டவுடன் (Response) தூண்டல் வழங்கப்படுதல் வேண்டும். 3. செயல் வெளிப்பாட்டைத் தொடர்ந்து வழங்கப்படும் தூண் டல், பலமுறை நிகழ வேண்டும். இத்தகைய கற்ற லில். கற்பவரே ஒரு செயலைச் செய்தல் ஓர் உள்

கட்டுப்பாடாகும். இசுகின்னரின் கற்றற் கட்டுப் பாடுகளை (Learning conditions) 'இசுகின்னர் பெட்டி' (Skinner Box) யின் உதவியால் அறியலாம். இசுகின்னர் பெட்டி என்பது, கருவிவழிப் பழக்குதலை அல்லது பயிலுதலை விளக்கிட இசுகின்னர் என்பார் உருவாக்கியது. இப்பெட்டியில் ஒரு கொக்கி (lever) உண்டு. இக்கொக்கியை ஒவ்வொருமுறை அழுத்தும் போதும், உணவு விழுமாறு அமைக்கப்பட்டிருந்தது. இசுகின்னரின் சோதனையில், பசியோடு இருக்கும் ஓர் எலி பெட்டிக்குள் விடப்படும். இச்சோதனை யின் நோக்கம், எலி எவ்வாறு உணவைப் பெற்றுக் கொள்ளக் கற்றுக் கொள்கிறது என்பதை விளக்கு தல் ஆகும்.

பெட்டியில் எலியை விட்டவுடன், கொக்கியை எப்படி அழுத்தி உணவைப் பெறுவது என்பது தெரியாமல், எலி அங்குமிங்கும் ஓடியது. அவ்வாறு ஓடும்பொழுது, தற்செயலாகக் கொக்கியை எலி அழுத்திட, எலிக்கு உணவு கிடைத்தது. உணவை உண்ட எலி, மேலும் பெட்டிக்குள் ஓடும்பொழுது கொக்கியை அழுத்த, எலிக்கு உணவு மீண்டும் கிடைத்தது. இதுவரை, கொக்கியை அழுத்தினால் உணவு கிடைக்கும் என்பதைக் கற்காதிருந்த எலி, அச்செயலைக் கற்கிறது. பின்பு, உணவு வேண்டும் போதெல்லாம், அங்குமிங்கும் ஓடாமல், நேரடியாகக் கொக்கியை அழுத்தி உணவைப் பெறுவதைக் கற்றுக் கொள்கிறது.

இச்சோதனையில், கொக்கியை அழுத்துதல் என்ற செயலைச் செய்ய, உணவுதான் தூண்டலாக (Stimulus) அமைந்து விடுகிறது. கொக்கியை அழுத் தும் போதெல்லாம் உணவு என்ற பரிசு கிடைத்து விடுவதால், கொக்கியை அழுத்துதல் என்ற செயலை (Response) எலி மிக விரைவில் கற்றுக் கொள்கிறது. கொக்கியை அழுத்தும்போது உணவு கிடைக்காமல் இருந்திருக்குமேயானால், கொக்கியை அழுத்துதல் என்ற செயலை எலி கற்றிருக்க முடி யாது என்பது இசுகின்னரின் கருத்து. கருவிவழிப் பயிலுதல் என்ற கல்விக் கோட்பாடானது, நிரல் வழிக் கற்றல் முறையில் (Programmed Learning) பயன்படுகிறது. இதே கொள்கையைப் பயன்படுத்திக் கற்பித்தற் பொறிகள் (Teaching Machines) செய்யப் படுகின்றன.

துணை நூல்:

**Bourne, Jr. L.E. and B.R. Ekstrand**, Psychology: Its Principles and Meanings, New York, 1982.

**இசுட்டிராங்கு-காம்பெல் தொழில் நாட்டச் சோதனை:** இது மக்கள் தொழிலில் கொண்டுள்ள நாட்டத்தரத்தைக் கண்டுபிடிப்பதற் காக இக்காலத்தில் பயன்படுத்தப்படும் உளவியல் சோதனைகளுள் சிறந்ததாகக் கருதப்படும் சோதனை முறையாகும். இச்சோதனையை அமைத் தவர் இசுட்டிராங்கு (Strong E.K.) என்பவர் ஆவார். இவர் அமைத்த தொழில் நாட்ட விளக்கப்பட்டியலைப் போன்று சில மாறுதல்களுடன் அமைக்கப்பட்டவை, மின்னிசோட்டாத் தொழில் நாட்டவிளக்கப்பட்டியலும் (Minnesota Vocational Interest Inventory) தொழில் நாட்டம் அளவாய்வு (Occupational Interest Survey) என்று குறிப்பிடப் படும் கூடர் பட்டியலும் (Kuder Form DD) ஆகும். இசுட்டிராங்கின் பட்டியல் சீரமைக்கப்பட்டபின் அதில் 825 தொழில் வகைகள், ஏழு பெரும் பகுதிகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. முதல் ஐந்து பகுதிகளில் 'ஆட்படுநர் விருப்பம்', 'கருத்து எதுவும் இல்லை' 'விருப்பமில்லை' (Like, Indifferent, Dislike) என்ற விடை வகைகளில் ஏதேனும் ஒரு விடையைக் கொடுக்க வேண்டும். இந்த ஐந்து பகுதிகளிலும் தொழில்கள், பள்ளிப்பாடங்கள், கடிகாரம் செப்ப னிடுதல், நிதி திரட்டுதல் போன்ற செயல்களில் ஈடுபடுதல், வேடிக்கைகள், மக்களுடன் தொடர்பு கொண்ட தொழில்கள் போன்றவை இடம் பெறு கின்றன. மற்ற இரண்டு பகுதிகளும் இணைக் கூற்றுகளாக அமைந்துள்ளன. இவற்றுக்கு ஆட்படுநர் 'ஆம், இல்லை, என்ன அல்லது ஏன்' என்னும் மூன்று வகை விடைகளுள் ஏதேனும் ஒன்றைக் கொடுக்க வேண்டும். இவ்வாறு அமைக்கப்பட்ட இசுட்டிராங்கின் பட்டியல், இசுட்டிராங்கு காம்பெல் நாட்ட விளக்கப் பட்டியல் (Strong-Campbell Interest Inventory) என்று குறிப்பிடப்படுகிறது. இப்பட்டியல் கணிப்பொறி முறையில் மதிப்பீடு செய்யப்படுகிறது. அட்டவணையில் 27 ஆட்படுநரின் தொழில் நாட்ட உருவரை கொடுக்கப்பட்டுள்ளது. இதில் மெய்ந்நிலைவயமான, கலைவயமான, ஆராய்ச்சியான, சமூகவயமான, புதிய தொழிலாக்க வயமான, பழைமைவயமான என்னும் ஆறு தொழிற் பிரிவுகளாகிய அளவைகளும் கவன மின்மையைக் கண்டுபிடிப்பதற்கான நிருவாக அலகு களும், கல்வி வயம், அகமுகம், புறமுகம் போன்ற வற்றைக் கண்டுபிடிப்பதற்கான அளவைகளும் உள்ளன.

ஒவ்வொரு தொழில்வகையும், அந்தக் குறிப்பிட்ட தொழிலுக்கு ஆட்படுநர் முழுமையான பொருத்த முடையவரா என்பதைக் கண்டுபிடிக்கும் முறையில் அமைக்கப்பட்டுள்ளது. ஆய்வுக்கு 300 ஆண்களும் 300 பெண்களும் மாதிரியாக எடுத்துக்கொள்ளப் பட்டனர். அகமுக-புறமுக அளவை (IE), மின்னி சோட்டாப் பன்முக ஆளுமைப் பட்டியலிலிருந்து எடுக்கப்பட்டது.

அட்டவணை 1

| பொதுவான தொழில்வகைகள் | | | நிருவாக அலகுகள் | | | |
|---|---|---|---|---|---|---|
| வகை | தரமிடப்பட்ட புள்ளி | விளைவு | (சோதனையாளர் பயன்படுத்த) | | | |
| மெய்ந்நிலை (மெ) | | ஓரளவு மிகையான புள்ளி | மொத்த விடைகள் | | | 325 |
| | | | ஒன்றிருமுறைதரப்பட்ட விடைகள் | | | 4 |
| கலை (க) | | மிகையான புள்ளிகள் | விடை% | | | |
| | | | | வி | க | வி |
| ஆராய்ச்சி (ஆ) | | மிகையான புள்ளிகள் | | | இ | — |
| | | | தொழில் | 34 | 11 | 54 |
| | | | பள்ளிப்பாடம் | 42 | 11 | 47 |
| சமூகவயம் (ச) | | குறைந்த புள்ளிகள் | செயல்கள் | 35 | 6 | 59 |
| | | | மனமகிழ் செயல் | 67 | 10 | 23 |
| தொழிலாக்கம் (தொ) | | மிகவும் குறைந்த புள்ளிகள் | மக்களின்வகை | 42 | 12 | 46 |
| | | | சிறப்பு விருப்பங்கள் | 40 | 47 | 13 |
| பழைமை (ப) | | ஓரளவு குறைந்த புள்ளிகள் | பண்புகள் | 86 | 7 | 7 |
| | | | சிறப்பு அளவை / நிருவாக அலகு | 60 / அ | | 53 / 4 |

இசுட்டிராங்கு காம்பெல் நாட்ட விளக்கப் பட்டியலின் ஒருமுகத் தோற்றங்கள்: பொதுவாக ஆறு வகைகளாகப் பிரிக்கப்படக்கூடிய தொழில்களும், சோதனைக்குத் துலங்கும் முறை, சோதனையில் கவனமின்மை ஆகியவற்றைக் கண்டுபிடிக்கக் கூடிய நிருவாக அளவைகளும் வேறு பல சிறப்பு அளவைகளும் இந்த அட்டவணையில் காட்டப்பட்டுள்ளன. இப்பட்டியலின் எல்லாப் பகுதிகளுக்கும் புள்ளிகள் தர அடிப்படையில் கொடுக்கப்பட்டுள்ளன. (திட்டம்: 50 திட்டவிலக்கம்: 10).

அட்டவணை 2

அடிப்படை நாட்ட அளவையின் ஒரு பகுதி

| | அளவை | தரமிடப்பட்ட புள்ளி | மிகக் குறைவு | குறைவு | சராசரி | அதிகம் | மிகவும் அதிகம் |
|---|---|---|---|---|---|---|---|
| | வேளாண்மை | 39 | | | | | |
| | இயற்கை | 40 | 30° | | | | 70° |
| மெ. | வீரவிளைவு | 67 | | | | | |
| | படைச் செயல்கள் | 55 | | | | | |
| | எந்திரம்சார் செயல்கள் | 55 | | | | | |
| | அறிவியல் | 59 | 30° | | | | 70° |
| | கணிதம் | 63 | | | | | |
| க. | மருத்துவவியல் | 68 | | | | | |
| | மருத்துவப்பணி | 38 | | | | | |
| | இசை, நாடகம் | 61 | 30° | | | | 70° |
| ஆ. | ஓவியக்கலை | 53 | | | | | |
| | படைப்பிலக்கியம் | 48 | | | | | |
| | கல்வி கற்பித்தல் | 43 | 30° | | | | 70° |
| | சமூகப்பணி | 26 | | | | | |
| | விளையாட்டுகள் | 45 | | | | | |
| ச. | மனைசார் கலைகள் | 41 | | | | | |
| | சமயம்சார் செயல்கள் | 31 | | | | | |
| | மேடைப் பேச்சு | 55 | 30° | | | | 70° |
| | சட்டம்/அரசியல் | 51 | | | | | |
| தொ. | வணிகம் | 44 | | | | | |
| | விற்பனை | 42 | | | | | |
| | தொழில் மேலாண்மை | 40 | | | | | |
| ப. | அலுவலக நிருவாகம் | 36 | 30° | | | | 70° |

அட்டவணை 2-இல் 23 அடிப்படை நாட்ட அளவைகளுக்கான புள்ளிகளும் இச்சோதனைத் தொழில்களின் 6 பொதுவான—வகைகளும் விளக்கப்பட்டுள்ளன. இந்தப் பொது அளவைகள் தொழில்வகை அளவைகளைக் காட்டிலும் ஒன்றுடன் ஒன்று தொடர்புடையனவாகும். ஒவ்வோர் அளவைக்கும் சம எண்ணிக்கையான ஆண்களும் பெண்களும் மாதிரிகளாக எடுத்துக்கொள்ளப்பட்டனர். அட்டவணையில் கோடிட்ட துண்டுகள்(Shaded Bars)பெண்களின் துலங்கல்களையும், நிரப்பப்படாத துண்டுகள் (Empty Bars) ஆண்களின் துலங்கல்களையும் காட்டுகின்றன. இதில் உள்ள 124 அளவைகளுள் 67 ஆண்களும் 57 பெண்களும் உள்ளனர்.

அட்டவணை 3

தொழில் அளவைகள்

| அளவை | ஆ/பெ | திட்ட அளவை | முழுமையாக வேறுபட்டது | வேறுபட்டது | சராசரி | ஒற்றுமைகள் | மிகுந்த ஒற்றுமை |
|---|---|---|---|---|---|---|---|
| உழவர் | ஆ | 7 | | | | | |
| பொறிப்பகுதி இணைப்பாளர் | பெ | 16 | | | | | |
| வேளாண்மை ஆசிரியர் | ஆ | 10 | | | | | |
| உணவுச்சத்து வல்லுநர் | ஆ | 30 | | | | | |
| காவல் அதிகாரி | ஆ | 25 | | | | | |
| நெடுஞ்சாலை அலுவலர் | ஆ | 15 | | | | | |
| இராணுவ அதிகாரி | பெ | 47 | | | | | |
| உடற்பயிற்சி ஆசிரியர் | பெ | 35 | | | | | |
| கைத்தொழில் வல்லுநர் | ஆ | 22 | | | | | |
| வன அதிகாரி | ஆ | 19 | | | | | |
| பேச்சு மருத்துவர் | பெ | 58 | | | | | |
| பேச்சு மருத்துவம் | ஆ | 59 | | | | | |
| உளவியலார் | பெ | 61 | | | | | |
| உளவியலார் | ஆ | 48 | | | | | |
| மொழி வல்லுநர் | பெ | 51 | | | | | |
| கட்டடப்பொறியாளர் | ஆ | 49 | | | | | |
| விளம்பர அதிகாரி | பெ | 49 | | | | | |
| ஓவியர் | பெ | 48 | | | | | |
| ,, | ஆ | 46 | | | | | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| கலையாசிரியர் | பெ | 27 | | | | | |
| நிழற்படவல்லுநர் | ஆ | 51 | | | | | |
| இசைவாணர் | பெ | 51 | | | | | |
| ,, | ஆ | 51 | | | | | |
| நகைச்சுவை நடிகர் | பெ | 52 | | | | | |
| உள்அழகுக் கலைஞர் | பெ | 34 | | | | | |

இசுட்டிராங்கு காம்பெல் நாட்ட விளக்கப் பட்டியலின் ஒருமுகத்தோற்றப்படத்தின் ஒரு பகுதி. பட்டியலில் ஒவ்வொரு தொழிலுக்கும் ஒரு குறியீட்டு எழுத்து பயன்படுத்தப்பட்டுள்ளது.

அட்டவணை 3-இல், ஒவ்வொரு தொழிலுக்கும் குறியீட்டு எழுத்துகள் கொடுக்கப்பட்டுள்ளன. இந்த எழுத்துகளுள் ஒவ்வொன்றும் 1 முதல் 3 வரையிலான தொழில் வகைகளைக் குறிப்பிடுகிறது. எடுத்துக்காட்டாக உளவியலார்-நாட்டங்கள், அறிவியல் ஆய்வு அல்லது நுண்ணறிவு ஆய்வு, கலைவயம் சமூக வயத்தொழில்கள் ஆகியவற்றுடன் இயைபு கொண்ட தொழிலாகக் கருதப்படுகின்றன. இச்சோதனையைத் தரப்படுத்தும் பொழுது தொழில் வகைகளில் கிடைத்த இணைத்தொடர்பின் (Correlation) அடிப்படையில், இந்த வகைப்படுத்தல் செய்யப்பட்டுள்ளது. குறைந்தது 3 ஆண்டுகள் குறிப்பிட்ட தொழில்களில் ஈடுபட்டுத் தொழில் வெற்றியும் தொழில் மனநிறைவும் கொண்ட 100 முதல் 500 வரையிலான ஆட்படுநர்களுக்கு இச்சோதனை, கொடுக்கப்பட்டுத் தரப்படுத்தப்பட்டுள்ளது. முதலில் எந்த ஆட்படுநர்களுக்கு இச்சோதனை கொடுக்கப்பட்டதோ அந்த ஆட்படுநர்களுக்கு மறுபடியும் இது கொடுக்கப்பட்டுச் சோதனையின் ஏற்புடைமை (Validity) பரிசோதிக்கப்பட்டது. மேலும் ஒரே தொழிலில் ஈடுபட்டிருந்த வெவ்வேறு ஆட்படுநர் குழுவினர்களுக்கு 30 ஆண்டு இடைவெளிக்குப் பின்னர் இச்சோதனை கொடுக்கப்பட்டும், இதன் அளவைகள் தரப்படுத்தப்பட்டுள்ளன. இந்த ஆண்டு இடைவெளிச் சோதனைகள் இரண்டிலும் திட்டப்புள்ளிகளும் (Standard Scores) திட்டவிலக்கமும் (Standard Deviation) ஒன்றுபோலக் கிடைத்தன. இதனைக் கொண்டு இச்சோதனைகளின் நம்பகத்தன்மை (Reliability) உறுதி செய்யப்பட்டுள்ளது. வெவ்வேறு தொழில் வகைகளுக்கான அளவைகளுக்கு இடையே காணப்படும் இணைத்தொடர்பின் விகித எண், மிகைநிலையில் காணப்படுவதால், இச்சோதனையின் அமைப்பு ஏற்புடைமை (Construct Validity) உறுதி செய்யப்பட்டுள்ளது. குறிப்பிட்ட தொழில்களில் ஈடுபடுவதற்கு முன்னர்ச் சிலருக்கு இச்சோதனைகள் கொடுக்கப்பட்டு, அவர்கள் தம் தொழில்களில் ஈடுபட்டபின்னர் பல ஆண்டுகள் வரையில் வெவ்வேறு சூழமைவுகளில் இச்சோதனை அவர்களுக்குத் திரும்பத்திரும்பக் கொடுக்கப்பட்டு, இந்தச் சோதனைப் புள்ளிகளிடையே பெருமளவில் இயைபு காணப்பட்டதைக் கொண்டு, இச்சோதனையின் முற்கூற்று ஏற்புடைமை (Predictive Validity) உறுதி செய்யப்பட்டுள்ளது. இவற்றையன்றி, ஒரே தொழிலில் ஈடுபட்டுள்ள பல்வேறு நாட்டினர்களுக்கு இச்சோதனை கொடுக்கப்பட்டு இது பண்பாட்டுக் கட்டுப்பாடில்லாச் சோதனையின் (Culture Free Test) தகுதியை அடையமுடியும் என்றும் கருதப்படுகிறது.

இசுட்டிராங்கு தொழில்நாட்டச் சோதனையின் நம்பகத் தன்மையை விளக்கும் முறையில் ஆலந்து (Holland) என்பவர், தொழில்களின் பொதுவான வகைகளின் அறுகோண ஆய்பொருள் (Hexagonal Model of General Occupational Themes) ஒன்றை வெளியிட்டார். இதில் ஒவ்வோர் இணைத் தொழில் வகைகளிலும் முதல் இணைத்தொடர்பு (Correlation) பெண்களுக்கான மாதிரித் தொகுப்பின் துலங்கல்களையும், இரண்டாம் இணைத் தொடர்பு ஆண்களுக்கான மாதிரித் தொகுப்பின் துலங்கல்களையும் குறிப்பிடுகின்றன. இந்த அறுகோணத்தின் சுற்றுக்கோட்டை (Perimeter) யொட்டிய அடுத்தடுத்த பகுதிகளில் இணைத்தொடர்பு அதிகமாகக் காணப்படுகிறது. அதில் காணப்படும் குறுக்குக் கோட்டின் எதிர்ப்புறங்களில் மிகவும் குறைந்த இணைத்தொடர்புகள் காணப்படுகின்றன.

குறிப்பிட்ட ஒரு தொழிலில் ஈடுபட்டுள்ள ஆண்கள் தம் தொழில் தொடர்பான சில குறிப்பிட்ட கூறுகளையொட்டிய செயல்களையே விரும்புகின்றனர் என்று இசுட்டிராங்கு கருதினார். விருப்பங்களின் அடிப்படையிலேதான் தொழில் மனநிறைவும் ஏற்படுகிறது என்றும் அவர் கருதினார். பொறியியல்

வல்லுநர்களிடம் காணப்படும் ஆர்வங்களை விரும்பும் உயர்நிலைப்பள்ளி மாணவர்கள், தாம் பொறியியல் வல்லுநர்களுக்கான பயிற்சி பெறுதல் சிறந்ததாகும். வேறு வகையான ஆர்வங்களைக் கொண்டுள்ள மாணவர்கள் பொறியியல் வல்லுநர் பயிற்சியில் திறமையாகச் செயற்பட முடியாது.

அட்டவணை 4-இல், ஒரு குறிப்பிட்ட தொழிலில் மனநிறைவு கொண்டவர்களின் சோதனைத் துலங்கல்களுடன் வெவ்வேறு தொழில்களில் வெற்றியுடன் ஈடுபட்டிருக்கும் பொதுவான சிலரின் துலங்கல்கள் ஒப்பு நோக்கப்படுகின்றன. இங்குப் பொறியியல் வல்லுநர்களின் துலங்கல்களுடன் வேறு சில தொழில்களில் ஈடுபட்டுள்ளவர்களின் துலங்கல்கள் ஒப்பு நோக்கப்பட்டுள்ளன. நடிகர் (திரைப்படநடிகர்கள் அல்லர்) என்ற தூண்டலுக்குப் பொறியியலார் பெரும்பாலும் விருப்பமில்லை என்ற துலங்கலைத் தந்துள்ளனர். ஆனால், கலை வல்லுநர்களுள் 40 விழுக்காட்டினர் நடிகர் என்ற தூண்டலுக்கு விருப்பம் என்னும் துலங்கலைக் கொடுத்துள்ளனர். ஆதலின் கலை வல்லுநர்களின் அளவையில் +1 என்பதை வி + என்பதற்கும், 0 என்பதை க. இ. வி- ஆகியவற்றுக்கும் உரிய புள்ளிகளாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. பொறியியலாரின் அளவையில் +1 என்பது, வி என்னும் துலங்கலின் மிகைப் புள்ளியாக எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது.

அட்டவணை 4

இசுட்டிராங்குத் தொழில் நாட்டப் பட்டியலில் பொறியியலாரின் ஆர்வங்களின் மதிப்பீடு

| இ.தொ.நா.ப. முதல் 10 பகுதிகள் | பொதுமக்களின் துலங்கல்கள்% | | | பொறியியலாரின் துலங்கல்கள் % | | | வேறுபாடுகள் % | | | பொறியியல் நாட்டங்களின் அலகுகள் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | வி | க இ | வி— | வி | க இ | வி— | வி | க இ | வி— | வி | க இ | வி— |
| நடிகர் (திரைப்பட நடிகர் அல்லர்) | 28 | 33 | 39 | 9 | 31 | 60 | —19 | —2 | 21 | —1 | 0 | 1 |
| விளம்பர அதிகாரி | 31 | 40 | 29 | 14 | 37 | 49 | —17 | —3 | 20 | —1 | 0 | 1 |
| இராணுவ அதிகாரி | 29 | 28 | 43 | 31 | 33 | 36 | 2 | 5 | 7 | 0 | 0 | 0 |
| கலைஞர் | 32 | 36 | 32 | 28 | 39 | 33 | — 4 | 3 | 1 | 0 | 0 | 0 |
| வாணியலார் | 33 | 41 | 26 | 38 | 44 | 18 | 5 | 3 | —8 | 0 | 0 | 0 |
| விளையாட்டு இயக்குநர் | 34 | 38 | 28 | 15 | 51 | 34 | —19 | 13 | 6 | —1 | 1 | 1 |
| படைப்பிலக்கிய ஆசிரியர் | 41 | 36 | 23 | 22 | 44 | 34 | —19 | 8 | 11 | —1 | 0 | 1 |
| ஏலமிடுவோர் | 8 | 26 | 66 | 1 | 16 | 83 | — 7 | —10 | 17 | —1 | 1 | 1 |
| தொழில் நுட்ப நூலாசிரியர் | 41 | 36 | 23 | 59 | 32 | 9 | 18 | — 4 | —14 | —14 | 0 | 1 |

இசுட்டிராங்கு சில தொழில்கள், வேறுசில தொழில்களுடன் இயைபும் தொடர்பும் கொண்டுள்ளன என்று கண்டுபிடித்து, அத்தொடர்புகளைப் பின்வரும் உலக வரைபட முறையில் குறிப்பிட்டார். இப் படத்தில் காணப்படும் தொழில் இயைபுகளின் அடிப்படையில் பின்வருந் தொழில் தொகுதிகள், பெரும்பாலும் சோதனைகளில் பயன் படுத்தப்படுகின்றன.

தொகுதி I உயிரியல்சார் அறிவியல் (உளவியலார், மருத்துவர்)

தொகுதி II இயற்பியல் அறிவியல் (தொழில் நுட்பம்) (கணிதவியலார், இயற்பியலார், பொறியியலார்)

தொகுதி III தொழில்நுட்ப மேற்பார்வை (உற்பத்தி மேலாளர், விமானப்படை அதிகாரி)

தொகுதி IV தொழில் நுட்பம் (வேளாண்மை, தச்சு, வனப்பணி)

தொகுதி V சமூகப்பணி (பொது மக்கள் நிருவாகி, ஊழியஇயக்குநர், சமூகவியல் ஆசிரியர், பள்ளி நிருவாகி)

தொகுதி VI கலைவயம் (இசைவாணர், கலைஞர், நூலகர்)

தொகுதி VII முறையான குறிப்பு அமைத்தல் (கணக்கர்)

தொகுதி VIII வணிக விவரம் (அலுவலக ஊழியர், வங்கித்தொழிலர்)

தொகுதி IX வணிக ஒப்பந்தம் (விற்பனை மேலாளர், மனைச்சொத்து, விற்பனையாளர், ஆயுள் காப்பீட்டு விற்பனையாளர்)

தொகுதி X உரையாடல், எழுத்து (விளம்பர அதிகாரி, வழக்கறிஞர், பத்திரிகையாளர்)

இசுட்டிராங்கின் தொழில்நாட்ட அளவைகளில் சில மாறுதல்களை ஏற்படுத்தி, கூடர் என்பார் ஒரு பட்டியலைத் தயாரித்தார். இது தொழில்நாட்டக் கணக்கீடு (Occupational Interest Survey) என்று குறிப்பிடப்படுகிறது. இசுட்டிராங்கின் அளவையில் தூண்டல்களுக்குரிய வி கஇ வி- ஆகிய துலங்கல்கள் -1, 0, + 1 எனக் குறிப்பிடப்படுகின்றன. கூடரின் அளவையில் பல ஆட்படுநர்களின் துலங்கல்களுக்கான சராசரி கணக்கிடப்பட்டு, இவை 0.09, 0.31, 0,60 எனக் குறிப்பிடப்படுகின்றன. கூடரின் அளவையில் பொதுவான மக்களின் (Men in General) துலங்கல்கள் இடம் பெறவில்லை. கூடரின் அளவை முறைக்கும் இசுட்டிராங்கின் அளவைமுறைக்கும் இடையே பல வேறுபாடுகள் உண்டு.

பொறியியலாரும் மருத்துவரும் பொதுமக்களிலிருந்து வேறுபடுகின்றனர் என்பதுதான் முதன்மையான முடிவாகும். அதாவது இந்த இரு தொழில் வல்லுநர்களிடமும் காணப்படுகிற ஆர்வங்கள், மற்றவர்களிடம் காணப்படுவதில்லை.

அட்டவணை, 5-இல், 80 தொழில்களுக்கான அளவைகள் காணப்படுகின்றன. இந்த அளவைகள், தொழில் மன நிறைவு கொண்டவர்களாகவும் பல ஆண்டுகள் தம் தொழிலில் நிலைத்து இருப்பவர்களாகவும் உள்ளவர்களின் விடைகளின் அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளன. 20 உயர்தரக் கல்வித் துறைகளுக்கான அளவைகளும் உள்ளன. 36 அளவைகள் பெண்களுக்காக அமைக்கப்பட்டுள்ளன. மற்ற அளவைகளுள் பல பெண்களுக்கும் கொடுக்கப்பட்டன.

அட்டவணை—5

கூடர்தொழில் நாட்டக் கணக்கீட்டுப் பட்டியலின் ஒரு பகுதி (எடுத்துக்காட்டு)

| தொழில் அளவைகள் (ஆ) | | | | கல்லூரி மாணவரின் அளவைகள் (ஆ) | |
|---|---|---|---|---|---|
| கணக்கர் | .47 | வனவியலார் | .49 | வேளாண்மை | .49 |
| கட்டடக் கலைஞர் | .50 | ஆயுள் காப்பீட்டு விற்பனையாளர் | .40 | கட்டடக்கலை | .49 |
| உந்து சீர்செய்பவர் | .38 | உள் அழகு | | உயிரியல் துறை | .49 |
| உந்து விற்பனையாளர் | .38 | வல்லுநர் | .37 | வணிகக் கணக்கும் நிதியும் | .50 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ரொட்டி செய்பவர் | .43 | பத்திரிக்கையாளர் | .37 | வணிகமும் விற்பனைத் துறையும் | .47 |
| வங்கி வணிகர் | .43 | வழக்கறிஞர் | .38 | வணிக மேலாண்மை | .46 |
| முடிதிருத்துபவர் | .38 | நூலகர் | .37 | பொருளியல் | .48 |
| புத்தக விற்பனையாளர் | .42 | பொறிஞர் | .37 | வேதியியல் சார் பொறியியல் | .55 |
| செங்கல் வழங்குபவர் | .40 | கணிதவியலார் | .43 | பொறியியல் | .55 |
| கட்டட ஒப்பந்தக்காரர் | .42 | உயர் நிலைப் பள்ளிக் கணித ஆசிரியர் | .43 | மின்பொறியியல் | .56 |
| வனவியலார் | | வானிலை ஆய்வாளர் | .45 | பொறிசார் பொறியியல் | .55 |
| | | சமயகுரு | .25 | | |
| | | நாற்றுப் பண்ணையாளர் | .49 | (ஆ. ஆண்கள்) | |

குழந்தைப்பருவத்து நாட்டங்களும் ஆர்வங்களும் வயது முதிர்ச்சியடையும்பொழுது ஏற்படும் ஆளுமை வளர்ச்சிக்கு இயைபுற மாற்றம் அடைகின்றன. குழந்தைகளின் ஆர்வங்களைப் பற்றிய விரிவான ஆய்வுகளை நடத்திய இலியோனா டைலர் (Leona Tyler) என்பவர், குழந்தைப் பருவத்து ஆர்வங்கள் அவர்களுடைய ஆளுமை வளர்ச்சியின் நிலைகளைக் குறிப்பிடுகின்றன என்று கூறுகிறார். ஆக்கிரமிப்பு, முரட்டுத்தனம், புத்தக வயம் போன்ற ஆளுமை நிலைகள் குடும்பச் சூழமைவு, பள்ளிக்கூடம், ஒப்பார் குழு ஆகியவற்றால் உருவாகின்றன. கல்வி நிலையங்களில் மாணவர்களுக்கு அளிக்கப்படும் வாய்ப்புகளையொட்டி ஆர்வங்கள் வளர்ச்சியடைகின்றன. வாழ்க்கைத் தொழில் வழிகாட்டலும் (Vocational Guidance) இதற்குத் துணை புரிகிறது. தொழில் நாட்ட விளக்கத்தொகுதிகளின் அடிப்படையில் பொறியியல் துறையினரின் ஆர்வங்களுக்கு ஏற்ப அவர்களை வகைப்படுத்த முடியும். ஆராய்ச்சி, உற்பத்தி, விற்பனை ஆகிய துறைகளில் நாட்டம் கொண்டுள்ள பொறியியலாளர்களின் ஆர்வங்களை இந்தச் சோதனையை உருவாக்கியவர்கள் வெளிப்படுத்திக் காட்டியுள்ளனர்.

ஆர்வங்களைத் துல்லியமாக மதிப்பீடு செய்வதன் மூலம் ஒருவரின் தொழில் மனநிறைவைக் கணக்கிடுதல் எளிது. ஆர்வங்களும் ஆற்றல்களும் இணைந்திருப்பின் தொழில்தகுதியும் தொழில் மனநிறைவும் ஏற்படுகின்றன. ஊழியர்கள் தம் திறமைகளுக்கும் ஆர்வங்களுக்கு ஏற்பத் தொழில்களை மாற்றிக்கொள்கின்றனர். தம் ஆர்வங்களுக்கு ஏற்ற தொழில் புரிவோர் அதனை மாற்றுவதில்லை என்றும் இசுட்டிராங்கின் ஆய்வுகள் குறிப்பிடுகின்றன. தொழிலார்வமும் தொழில் மனநிறைவும் எவ்வாறு இயைபு கொள்கின்றன என்பதை அட்டவணையில் காணலாம்.

அட்டவணை : 6

தொழிலார்வமும் தொழில் மன்நிறைவும்

| ஊழியரின் விடைகள் | அ பிரிவு (25) ஆர்வங்களும் ஆற்றல்களும் தொழிலுக்கு ஏற்றவை | ஆ பிரிவு (34) ஆர்வங்கள் ஏற்றவை. ஆனால் ஆற்றல்கள் ஏற்றவையல்ல | இ பிரிவு (49) ஆர்வங்கள் ஏற்றவையல்ல |
|---|---|---|---|
| இதுவே எனக்கு மிகவும் ஏற்ற தொழில் | | | |
| இத்தொழிலை மிகவும் விரும்புகிறேன் | | | |
| ஓரளவு விரும்புகிறேன் | | | |
| இத்தொழில் பற்றிக்கருத்து எதுவும் இல்லை | | | |
| இத்தொழிலை விரும்பவில்லை | | | |

ஆர்வங்கள் மட்டுமே ஒருவனுடைய தொழிலை முடிவுசெய்வதில்லை. இக்காலத்தில் வேலை வாய்ப்பு, வேலையில்லாநிலை, சமூக அரசியல் காரணிகள் ஆகிய யாவும் ஒருவனுடைய தொழிலை முடிவு செய்கின்றன. செல்வர்கள், செல்வாக்காளர்கள் ஆகியோரின் பிள்ளைகள் சில குறிப்பிட்ட தொழில்களில் அவர்களுடைய ஆர்வங்களுக்கு எதிராகப் புகுத்தப்படுகிறார்கள். கெல்லி (E.L. Kelly) என்பவர், உளநோய் நீக்கு உளவியலார், பயிற்சி பெறத் தேர்ந்தெடுக்கப்பட்ட மாணவர்களின் உளநோய் நீக்குந் திறனையும் ஆராய்ச்சித் திறனையும் ஒப்பிட்டுப்பார்த்தார். இதனை இசுட்டிராங்குத் தொழில் நாட்டப்பட்டியலில் அளவைகளுடன் ஒப்பு நோக்கினார். அட்டவணை 7, இந்த மதிப்பீடுகளுக்கும் இசுட்டிராங்கு தொழில்நாட்ட விளக்க அளவைகளுக்கும் உள்ள இணைத்தொடர்புகளை விளக்குகிறது.

அட்டவணை 7

| | | மதிப்பீடுகளுடன் இணைத்தொடர்புகள் | |
|---|---|---|---|
| | | உள்நோய் நீக்குந் திறன் | ஆராய்ச்சித் திறன் |
| தொகுதி I | உயிரியல் துறை | 10—22 வரை | 22—இல் இருந்து 34 வரை |
| தொகுதி II | தொழில் நுட்ப இயற்பியல் | —04—.09 | .27—.36 |

| | | | |
|---|---|---|---|
| தொகுதி III | தொழில் நுட்ப மேற்பார்வை | —25 | — 10 |
| தொகுதி V | சமூகப்பணி | —03—. 06 | — 15 — —.01 |
| தொகுதி VIII | வணிகவிவரம் | —24 — —.08 | —.30 — —.25 |
| தொகுதி X | உரையாடல் | .24 — .35 | .15 — .27 |
| உளநோய் நீக்கு உளவியலார் | | .26 | .01 |
| பரிசோதனை உளவியலார் | | —.08 | .16 |

உளநோய்நீக்கு உளவியல் மாணவர்களின் ஆசிரியர் கொடுத்த மதிப்பீடுகளுக்கு இசுட்டிராங்குத் தொழில்நாட்ட விளக்க அளவைகளுடன் காணப்பட்ட இணைத்தொடர்புகள்.

**துணை நூல்கள்:**


Anastasi, A., Psychological Testings, Colber Macmillan Publishers (International), New York, 1976.


**இசுட்டிராசு, இரிச்சர்டு** (1864-1949) என்பவர் செருமானிய இயலிசைப் புலவர் ஆவார். இசுட்டிராசின் தந்தை இசைநாடகக் குழுவில் இசைக் கருவியாளராக இருந்தார். இசுட்டிராசு (Strauss Richard) தம் பன்னிரண்டாம் வயதிலேயே பாடலை இயற்றி அதற்கு இசையமைத்து வெளியிட்டார். மியூனிச்சுப் (Munich) பல்கலைக் கழகத்தில் கல்வி கற்ற பின்னர் இசுட்டிராசு, மெனிங்கென் (Menningen) மியூனிச்சு (Munich), வெய்மர் (Weimar) பெர்லின் ஆகிய நகரங்களில் இசைக்குழு இயக்குநராகப் பணிபுரிந்தார், இவர் வியன்னா அரசின் இசை நாடக அமைப்பிற்குச் சில காலம் தலைவராக இருந்தார். இவருடைய இசைப்படைப்புகளுள் இசைக் கவிதைகள், இசை நாடகங்கள், பாடல்கள் ஆகியவை இடம் பெற்றுள்ளன. இவர் வாக்னர் (Wagner) என்னும் புகழ் பெற்ற இசை நாடக வல்லுநரின் முறையைத் தம் படைப்புகளில் பயன்படுத்தினார். இலிசுட்டு (Liszt) என்னும் புகழ்பெற்ற இசை நாடக வல்லுநர் இசுட்டிராசைக் கவர்ந்தவர்களுள் ஒருவர். இவர் காலத்தில் வாழ்ந்த சோன்பர்க்கு (Schoenberg) என்னும் இசை நாடக வல்லுநரின் முறையையும் தம் படைப்புகளில் ஓரளவு பயன்படுத்தினார். இவருடைய தொடக்கக் காலப் படைப்புகளுள் சலோமி (Salome), எலக்டிரா (Elektra) என்னும் இரு இசை நாடகங்களும் புகழ்பெற்றவை ஆகும். இவருடைய இசைக்குழு நிகழ்ச்சிகள் வியப்பூட்டும் வகையில் அமைந்திருந்தன. தம் குழுவினரின் திறமைகளை இவர் நன்கு பயன்படுத்திக் கொண்டார். பல அரிய நுட்பங்களைத் தம் இசை நிகழ்ச்சியில் புகுத்தி வெற்றி கண்டார். இசுட்டிராசின் இசைக் கவிதைகளுள் தான் சுவான் (Don Juan), தில் யுலன்சுபிகல் (Till Eulenspiegel), ஆல்சோ சுபாக்கு சரதுட்டிரா (Also Spach Zarathushtra), தான் குவிக்சோட்டு (Don Quixote) என்பனவும்



இசுட்டிராசு இரிச்சர்டு

இவருடைய ஒத்திசைப் படைப்புகளுள் (Symphony) சிம்போனியா தொமசுதிகா (Symphonia Domestica), ஆல்பைன் சிம்பனி (Alpine Symphony) என்பனவும் புகழ்பெற்றவை ஆகும். இவருடைய கீதங்களுள் 'சுய மாற்றங்கள்' (Metamorphoses) 'நான்கு இறுதிப் பாடல்கள்' (Four Last Songs) ஆகியவை குறிப்பிடத் தக்கவை ஆகும்.

**இசுட்டிராசு யோகான்** (கி.பி.1804-1849)என்பவர் கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் புகழ்பெற்று விளங்கிய இயலிசைப் புலவர்களுள் ஒருவர் ஆவார். இவர் ஆசுத்திரியா நாட்டைச் சேர்ந்தவர். இவர் இசையில் தேர்ச்சி பெற்று யாழ் (Violin) இசைப்பவராகவும் இசைக்குழு நடத்துநராகவும் இயலிசைப் புலவராகவும் திகழ்ந்தார். தொடக்கக் காலத்தில் இசுட்டிராசு யோகான் (Strauss, Johann) ஆசுத்திரியாவில் புகழ்பெற்ற இசைக் குழு அமைப்பாளரான இலானர் (Lanner) என்பவரின் குழுவில் சேர்ந்து இசை நிகழ்ச்சிகளில் பங்கேற்று வந்தார். இவர் சொந்த இசைக்குழுவைக் கி.பி. 1825-இல் அமைத்தார். இவர் இருநூற்றுக்கு மேற்பட்ட பாடல்களை இயற்றி இசையமைத்துள்ளார். வியன்னா முறையிலமைந்த வால்டசு (Viennese Waltz) என்னும் வகையைச் சேர்ந்த இசைக்கு இலக்கணம் வகுத்தவர்களாக இலானரும் இசுட்டிராசும் கருதப்படுகின்றனர். இசுட்டிராசின் மகன் தம் தந்தையைப் பின்பற்றிச் சிறந்த யாழ் இசைப்பவராகவும், இசைக்குழு நடத்துநராகவும், இயலிசைப் புலவராகவும் விளங்கினார். இவர் கி.பி 1844-ஆம் ஆண்டு தம் சொந்த இசைக்குழுவை அமைத்தார். அப்பொழுது இசுட்டிராசுக்குத் தம் மகன் இசை பயின்று தேர்ச்சி பெற்றுவிட்ட செய்தி தெரிய வந்தது. அதற்குப்பின் இசுட்டிராசு தம் மகனைத் தடுக்கவில்லை. இளைய இசுட்டிராசு பல



இளைய இசுட்டிராசு

இசை நாடகங்களை இயற்றினார். இவர் கூட்டு நடனங்களுக்கு (Ballet) இசையமைத்துள்ளார். இவர் இயற்றிய வால்டசு இசையமைப்புகளுள் 'நீல தானியுபு' (The Blue Danube) 'தென்திசை ரோசா மலர்கள்' (Roses from the South) 'ஆயிரத்தோர் இரவுகள்' (A Thousand and one Nights) என்பன வற்றைப் புகழ் பெற்றனவாகக் குறிப்பிடலாம். இவற்றைத் தவிரத் தம் தந்தையைப் போலவே பல நாட்டுப்புறப் பாடல்களையும் இயற்றி இசையமைத்துள்ளார்.

**இசுட்டிரியா** வடமேற்கு யூகோசுலாவியாவிலுள்ள மலைப் பாங்கான முந்நீரகம். இதன் பரப்பளவு ஏறத்தாழ 3900 ச.கி.மீ. ஆகும். திரியசுட்டே (Trieste), பியூம் (Fiume) வளைகுடாக்களுக்கிடையில் வடஏட்ரியாட்டிக்குக் கடலில் இம்முந்நீரகம் உள்ளது. இதன் வடமேற்குப் பாகத்தின் ஒரு பகுதி இத்தாலி நாட்டுக்குச் சொந்தமானது. இசுட்டிரியா (Istria) அடர்ந்த காடுகளைக் கொண்டுள்ளதாயினும் வேளாண்மைக்கு உகந்ததாயுமுள்ளது. இங்கு இல்லீரியப் பழங்குடிகள் குடியேறியிருந்தனர். இது கி.மு. 2-ஆம் நூற்றாண்டளவில் உரோமாபுரியின் ஆளுகைக்குட்பட்டது. இசுட்டிரியா கி.பி. 8-ஆம் நூற்றாண்டுவரை பெயரளவுக்குப் பைசாண்டியர்களின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. ஆசுத்திரியாவும் வெனிசும் கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் இதன் பகுதிகளை இணைத்துக் கொண்டன. முதலாம் நெப்போலியன் காலத்தில் முடிவான காம்போ போர்மியோ 1797 (Campo Formio) உடன்படிக்கையும், வியன்னா மாநாடும் (கி.பி. 1815) வெனிசியாவின் வசமிருந்த பகுதிகளை ஆசுத்திரியாவுடன் இணைத்துவிட்டன. பின்னர் 1919-ஆம் ஆண்டில் அனைத்து இசுட்டிரியப் பகுதிகளும் இத்தாலிக்குக் கொடுக்கப்பட்டன. ஆனால் 1947-இல் முடிவான இத்தாலிய அமைதி உடன்படிக்கை, இதன் பெரும்பாலான பகுதிகளை யூகோசுலாவியாவுக்குக் கொடுத்தது.

**இசுடர்** சுமேரிய அக்காடியப் பெண் தெய்வங்களுள் முதன்மைத் தெய்வம். சுமேரியாவில் இசுடர் (Ishtar), இனான்னா (Inanna) எனக் கூறப்படுகிறாள். அசுடார்ட்டு (Astarte) எனப்படும் மேற்குச் செமிட்டிய இன மக்களின் தெய்வத்திற்கு ஒப்பானவளாக இவள் கருதப்படுகிறாள். இசுடர் என்னும் சொல் நிலையற்றது எனப் பொருள்படும். பாபிலோனியாவிலும் அசிரியாவிலும் இத்தெய்வம் கையில் போர்க்கருவிகளுடன் ஒரு சிங்கத்தின்மீது உள்ளவாறு சித்திரிக்கப்பட்டுள்ளது. பாபிலோனிய அரசர் ஆமுராபி (Hammurabi) இசுடரைப் போர்க் கடவுளாக வழிபட்டார். இவள் அன்புக் கடவுளா

கவும் கருதப்பட்டாள். இப்பெண் தெய்வம் நிலக் கடவுளான சின்னின் (Sin) மகளும் சூரியக் கடவுளான சாமாசின் (Shamash) சகோதரியும் ஆவாள். சுமேரியாவின் மரபுக் கதைகளில் இசுடர், என்கி (Enki) என்ற தெய்வ மகளாகக் கருதப்படுகிறாள். என்கி, ஆரிடு (Eridu) நகரின்தெய்வமாகும். இத்தெய்வத்திடமிருந்து இசுடர் தெய்விகத் தன்மையைப் பெற்று, உருக்கு (Uruk) நகரத்திற்குச் சென்றாள் என்று மரபுவழிச் செய்திகள் கூறுகின்றன. அசிரிய-பாபிலோனிய நகரங்கள் பலவற்றில் இத்தெய்வ வழிபாடு சிறந்து விளங்கியது.

**இசுடான்பர்டு - பினே நுண்ணறிவுச் சோதனை:** இது மாணவர்களின் நுண்ணறிவினை மதிப்பீடு செய்வதற்காக அமெரிக்க ஐக்கிய நாட்டில் 1916-ஆம் ஆண்டு தெர்மன் (Terman L.M.) என்பவரால் உளவியல் முறையில் அமைக்கப்பட்ட நுண்ணறிவுச் சோதனையாகும். தெர்மனுக்கு முன்னர் ஆல்பிரெடு பினே (Alfred Binet) என்பவரால் அமைக்கப்பட்ட உளவியல் நுண்ணறிவுச் சோதனையின் விரிவாக்கமே, இசுடான்பர்டு-பினே நுண்ணறிவுச் சோதனைகள் (Stanford-Binet Tests of Intelligence) ஆகும். இச்சோதனைகள் இசுடான்பர்டு பல்கலைக் கழகத்தினால வெளியிடப்பட்டன. உளவியல் முறையில் நுண்ணறிவுத்திறனை மதிப்பீடு செய்வதற்காக அமைக்கப்பட்ட பல்வேறு சோதனைகளுள் கி.பி. 1890-ஆம் ஆண்டு ஆல்பிரெடு பினே (Alfred Binet) என்பவர் முதன் முதல் அமைத்த விரிவான சோதனை அடுக்கே (Test Battery), நுண்ணறிவுச் சோதனைகளின் முறையான தொடக்கம் எனக் கருதப்படுகிறது. கல்வித்திறனில் பிற்பட்ட குழந்தைகளிடமும், மீத்திறன் கொண்ட குழந்தைகளிடமும் நுண்ணறிவு எவ்வாறு வேறுபட்டுக் காணப்படுகிறது என்பது பற்றி முடிவான கருத்தை அடைவதற்காகப் பினே கி.பி. 1893-ஆம் ஆண்டு முதல் 1911-ஆம் ஆண்டு வரையில் பல சோதனைகளை நடத்தினார். பினேக்கு முன் வாழ்ந்த உளவியல் அறிஞர்கள் இத்தகைய சோதனைகளை முறையாக அமைக்காத காரணத்தினால், தொடக்கத்தில் பினே, எண்களை நினைவு மீட்டல், கருத்தேற்றம் (Suggestibility), தலையமைப்பு, கையெழுத்தியல் (Graphology) போன்ற பல்வேறு அணுகுமுறைகளைப் பயன்படுத்திச் சோதனைகளை நடத்தினார். அக்காலத்தில் செல்வர், செல்வாக்காளர் போன்றோர் குடும்பங்களைச் சேர்ந்த குழந்தைகளுள் சிலர், கல்வித்திறனால் பிற்பட்டுக் காணப்பட்ட காரணத்தினாலும், அத்தகைய குழந்தைகளை நுண்ணறிவுத் திறன் குறைந்தவர்கள் எனக் கூறுவதற்கு ஆசிரியர்கள் தயக்கம் கொண்ட காரணத்தினாலும், பிரெஞ்சு அரசு நடுநிலைதவறாத நுண்ணறிவுச் சோதனைகளை அமைக்குமாறு பினேயைக் கேட்டுக்கொண்டது. பினே, சைமன் (Simon) என்னும் உளவியலறிஞருடன் இணைந்து அமைத்த நுண்ணறிவுச் சோதனைகள், 1905-ஆம் ஆண்டு வெளியிடப்பட்டன. இச் சோதனைகளில் பகுத்தறியும் திறன், நினைவுத் திறன், கவனம், புலன்களைக் கொண்டு பிரித்தறிதல் போன்ற திறன்களுக்கான தனிப்பட்ட சோதனை அடுக்குகள் அமைக்கப்பட்டிருந்தன. பினேயின் சோதனைகளைக் கொண்டு உலூயி. எம். தெர்மன் என்னும் அமெரிக்க உளவியலறிஞர், 1910-ஆம் ஆண்டு பல ஆய்வுகளை நிகழ்த்தி, அவற்றின் விளைவாக 1916-ஆம் ஆண்டு ஒரு புதிய சோதனை அடுக்கினை அமைத்தார். இச்சோதனைகள் அமெரிக்காவில் உள்ள இசுடான்பர்டு பல்கலைக்கழகத்தால் (Standford University) வெளியிடப்பட்டன. இக்காரணம் பற்றி இவை இசுடான்பர்டு-பினே சோதனைகள் (Stanford Binet Tests) என்று குறிப்பிடப்படுகின்றன. இச்சோதனைகள் கல்வி நிலையங்களைத் தவிரப் பல்வேறு துறையினராலும் வரவேற்கப்பட்டன. இவை அவ்வப்பொழுது தரப்படுத்தப்பட்டு வந்துள்ளன. நுண்ணறிவு பல்வேறு ஆற்றல்களின் தொகுதி என்பதும், நுண்ணறிவினை மதிப்பீடு செய்வதற்கு அமைக்கப்படும் சோதனைகளில் பல பகுதிகளைக் கொண்ட விரிவான சோதனை அடுக்குகள் இருத்தல் வேண்டும் என்பதும் இசுடான்பர்டு-பினே சோதனைகளின் முதற்கோள்கள் (Postulates) ஆகும். ஒவ்வொரு குழந்தையிடமும் உள வயது (Mental Age) காணப்படுகிறது என்றும் பினே கூறினார். எடுத்துக்காட்டாக, ஒரு குழந்தை 9 வயதுக்கான சோதனைகளில் மிகுதியான புள்ளிகள் எடுத்திருந்தால் அக்குழந்தையின் உளவயது 9 என மதிப்பிடலாம். பிறந்ததிலிருந்து குழந்தைகளுக்கு ஒன்று, இரண்டு, மூன்று என ஆண்டுகள் நிறைவடையும்பொழுது காலத்தின் அடிப்படையில் கணக்கிடப்படுவது கால வயது (Chronological age) எனப்படும். கால வயது உள வயதினின்று வேறுபட்டதாகும். எடுத்துக்காட்டாக, ஆறுவயதுக் குழந்தை 9 வயதுக் குழந்தைகளுக்கான சோதனைகளில் சராசரிப் புள்ளிகள் எடுத்திருந்தால் அக்குழந்தையின் உள வயது அதன் கால வயதினைக் காட்டிலும் மேம்பட்டது என அறிதல் வேண்டும். இதனைப் போன்றே 11 வயதுக் குழந்தை 9 வயதுக் குழந்தைகளுக்கான சோதனைகளில் மட்டிலுமே சராசரிப் புள்ளிகள் எடுக்கக்கூடியதாகவும், அதற்கடுத்த வயதுக்கான சோதனைகளில் சராசரியை விடக் குறைவான புள்ளிகள் எடுக்கக் கூடியதாகவும் இருந்தால், இக் குழந்தையின் உள வயது 9 என அறிதல் வேண்டும். இவ்வாறு, ஒவ்வொரு வயதுக்கும் ஏற்ற சோதனைகளை அமைத்து, அவற்றின்

அடிப்படையில் குழந்தைகளின் உள வயதைக் கணக்கிடுவதில் பல சிக்கல்கள் உள்ளன. ஏனெனில், ஆறுவயதுக் குழந்தை ஆறுவயதுக் குழந்தைகளுக்கான சோதனைகளில் மிகுதியான புள்ளிகளை எடுப்பதும், 7 வயதுக்கான சோதனைகளில் குறைவான புள்ளிகளை எடுப்பதும் பெரும்பாலும் நிகழக் கூடியவையே ஆகும். இதன் அடிப்படையில் ஒரு குழந்தையின் நுண்ணறிவுத் திறனைத் துல்லியமாகக் கணக்கிட முடியாது. இச்சிக்கலைத் தவிர்ப்பதற்காகப் பினேச் சோதனைகளில் ஒவ்வொரு மாத வயதுக்கும் ஏற்ற சோதனைகள் அமைக்கப்பட்டுள்ளன. அதாவது 7 வயதுக்குரிய சோதனைகளுக்கு அடுத்தபடியாக 7வயது 1 மாதம், 7 வயது 2 மாதம் என்னும் வரிசையில் வெவ்வேறு வயதுக்குரிய சோதனைகள் அமைக்கப்பட்டுள்ளன. ஏழு வயது நிரம்பிய இருகுழந்தைகளின் உள வயதை மதிப்பீடுசெய்வதாக வைத்துக்கொண்டால் இவர்களுள் ஒரு குழந்தை ஏழு வயதுக்குரிய சோதனைகள் எல்லாவற்றிலும் மிகுதியான புள்ளிகளை எடுத்து (7.1, 7.2 ஆகிய வயதுக்குரிய சோதனைகளிலும்) எட்டு வயதுக்குரிய சோதனைகளில் 6 பகுதிகளுள் 4 பகுதிகளைத் தவறின்றி முடித்து, 2 மாத உள வயதை மிகுதிப் புள்ளியாகப் பெறுகிறது. இக்குழந்தை பின்னர் 9 வயதுக்குரிய சோதனைகளில் 6 பகுதிகளுள் 2 பகுதிகளைத் தவறின்றி முடிக்கிறது. 10 வயதுக்குரிய சோதனைகளுள் இக்குழந்தை புள்ளிகள் எதுவும் எடுக்கவில்லை. இக்குழந்தையின் உள வயது 7 வயது + 8 மாதம் + 4 மாதம் = 7 ஆண்டு + 12 மாதம் = 8 வயது எனக் கணக்கிடப்படுகிறது. பினேச் சோதனைகளின் சிறப்பு, அவர் நுண்ணறிவைக் கணக்கிடுவதற்குக் கொடுத்த சமன்பாடு ஆகும். இவர் அமைத்த சோதனைகளில் ஒருவர் அடையும் புள்ளிகளைக் கொண்டு உள வயது கணக்கிடப்படுகிறது. உள வயதின் அடிப்படையில் நுண்ணறிவு ஈவு (Intelligence Quotient) கணக்கிடப்படுகிறது. பினேயின் நுண்ணறிவு ஈவுச் சமன்பாட்டைப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

$$\text{நுண்ணறிவு ஈவு} = \frac{\text{உள வயது}}{\text{கால வயது}} \times 100$$

இந்தச் சமன்பாட்டில் சராசரி அறிவுடைய குழந்தையின் நுண்ணறிவு 100 எனக்கொள்ளப்படுகிறது. அதாவது, ஒரு குறிப்பிட்ட வயதில் 100 க்கு மேற்பட்ட நுண்ணறிவு ஈவு உள்ளவர்கள், அந்த வயதைக் காட்டிலும் மேம்பட்ட உள வயதுடையவர்கள் எனக் கணக்கிடப்படுகிறது. நூற்றுக்குக் குறைவான நுண்ணறிவு ஈவு உள்ளவர்கள், அவர்களுடைய வயதைக் காட்டிலும் குறைவான உள வயதுடையவர்கள்



எனக் கணக்கிடப்படுகிறது. முன்னர் உள வயது கணக்கிடப்பட்ட குழந்தையின் நுண்ணறிவு ஈவினைப் பின்வருமாறு குறிப்பிடலாம். அக்குழந்தை 6 வயது நிரம்பியதாக இருப்பின் அக்குழந்தையின் நுண்ணறிவு ஈவு, 8/6 × 100 = 133 ஆகிறது. இச்சமன்பாட்டின் உதவியால் ஒரு குழுவில் அல்லது ஒரு வகுப்பில் உள்ள மற்றக் குழந்தைகளின் நுண்ணறிவு ஈவினைக் கணக்கிடும்பொழுது பின்வரும் சமன்பாடு பயன்படுத்தப்படுகிறது.

$$\text{நுண்ணறிவு ஈவு} = \frac{\text{குழந்தை சோதனைகளில் எடுத்த புள்ளிகள்}}{\text{அந்த வயதுக் குழந்தைகளின் சராசரிப் புள்ளிகள்}} \times 100$$

குழுவினை அல்லது வகுப்பினரைக் காட்டிலும் மிகுதியான புள்ளிகள் எடுக்கும் குழந்தையின் நுண்ணறிவு ஈவு, 100-ஐ விட அதிகமாக இருக்கும்; குறைவான புள்ளிகள் எடுக்கும் குழந்தையின் நுண்ணறிவு ஈவு, 100-ஐ விடக் குறைவாக இருக்கும். உளவியல் வல்லுநர்கள், குழந்தைகளுக்கு 15 வயது நிறையும் வரையில் உள வயது வளர்ச்சியடைந்து கொண்டே செல்கிறது; அதற்குப்பின்னர் உள வயது வளர்ச்சியடைவதில்லை என்று கருதுகிறார்கள். அதாவது, 15 வயதில் குழந்தைகள் உள வயதின் உச்சவரம்பை அடைகின்றனர். அதற்குப் பின்னர் அவர்கள் அடையும் கல்வி, அனுபவம், பயிற்சி இவற்றின் அடிப்படையில் அறிவு வளர்ச்சிஏற்படலாம். ஆனால், நுண்ணறிவு அதே நிலையில் இருக்கிறது. ஆதலின், 15 வயதிற்கு மேற்பட்டவர்களின் உள வயதை 15 எனவே குறிப்பிடுகிறார்கள். 25 வயதுடையவரின் நுண்ணறிவு ஈவு கணக்கிடப்படும்பொழுது சோதனைகளில் எடுத்த புள்ளிகளின் அடிப்படையில் உளவயது,

$$\frac{\text{(அல்லது புள்ளிகள்)}}{15} \times 100$$

என்ற சமன்பாடு பயன்படுத்தப்படுகிறது.

பினேச் சோதனைகளிலிருந்து இரு பகுதிகள் எடுத்துக்காட்டாக இங்குக் கொடுக்கப்பட்டுள்ளன. (1960-ஆம் ஆண்டு தரப்படுத்தப்பட்டது)

**(5 வயது)**

1. கை கால்கள் வேறு சில உறுப்புகள் வரையப்படாத மனித உருவத்தில் அவற்றை வரைதல்.
2. ஒரு சதுரக் காகிதத்தை இரு முறை மடித்து ஒரு முக்கோணம் உண்டாக்குதல் (ஒரு முறை சோதனையாளர் இதனைச் செய்கிறார்).
3. பந்து, தொப்பி, அடுப்பு போன்ற சொற்களை விளக்குதல்.

4. ஒரு சதுரத்தைப் பார்த்து மற்றொரு சதுரம் வரைதல்.
5. இரு படங்களிடையே ஒற்றுமை வேற்றுமைகளைக் கண்டறிதல்.
6. இரு முக்கோணங்களைச் சேர்த்து ஒரு நீண்ட சதுரம் அமைத்தல்.

12 வயது

1. விரைவு, உரை, தொழில்நுட்பம் போன்ற 14 சொற்களுக்கு விளக்கம் கூறுதல்.
2. 'இரவு நெடுநேரமாகிய பின்னரும் சூரியன் உதிக்கவில்லை' போன்ற முரண்பாடான சொற்றொடர்களில் காணப்படும் முரண்பாடுகளைக் கண்டறிதல்.
3. முரண்பாடுகள் நிறைந்த படத்திலுள்ள முரண்பாடுகளைக் கண்டறிதல்.
4. ஐந்து இலக்கம் கொண்ட எண்ணைத் தலைகீழாகத் திருப்பிச் சொல்லுதல்.
5. இரக்கம், பொறுமை போன்ற பண்புப் பெயர்களுக்கு விளக்கம் கூறுதல்.
6. நிறைவுறாச் சொற்றொடர்களை நிறைவு செய்தல்.

இசுடான்பர்டு கல்வித்திறன் சோதனை என்பது உளவியல் முறையில் குழந்தைகளின் கல்வியறிவுத் திறனைச் சோதனை முறையில் அளவீடு செய்வதற்கு முதன் முதல் பயன்படுத்தப்பட்ட முறையாகும். இசுடான்பர்டு கல்வித்திறன் சோதனைகள் (Stanford Tests of Academic Skills) பல சோதனைகளைக் கொண்ட சோதனை அடுக்கு ஆகும். இச்சோதனைகள் பன்முறை தரப்படுத்தப்பட்டுப் பல மாற்றங்களுடையதாய்க் காலத்திற்கும் அறிவு வளர்ச்சிக்கும் ஏற்பக் கூடுதல் பகுதிகளும் இணைக்கப்பட்டுப் பல நாடுகளிலும் இன்று உளவியல் வல்லுநர்களால் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. இச்சோதனை முதலாம் வகுப்பு முதல் ஒன்பதாம் வகுப்பு வரையிலான மாணவர்களுக்குப் பயன்படுத்தக் கூடிய ஆறு சோதனை அடுக்குகளைக் கொண்டதாகும். இவற்றுள் பல சோதனைகளில் 4 மணி நேரம் முதல் 6 மணி நேரம் வரையில் நீடிக்கும் பகுதிகள் உள்ளன. குறைந்த நேரப் பகுதிகளில் அமைக்கப்பட்ட சோதனை அடுக்குகளும் இவற்றில் உள்ளன. எடுத்துக்காட்டாக, படித்தல், கணிதம் ஆகியவற்றுக்கான சோதனைகள் தனித்து ஒரு குறைந்த நேரச் சோதனை அடுக்காகக் கொடுக்கப்படலாம். குழந்தைகளுக்கு இச்சோதனைகளை ஏற்பதற்கான பயிற்சியும் இவற்றில் அடங்கியுள்ளன. இச்சோதனை எவ்வாறு அமைக்கப்பட்டிருக்கிறது என்பதை விளக்குவதற்காக ஐந்தாம் வகுப்பு மாணவருக்கான சோதனையின் ஒரு பகுதி எடுத்துக்காட்டாக இங்குக் கொடுக்கப்பட்டுள்ளது. இச்சோதனைப் பகுதியில் பின்வரும் 11 சோதனைகள் அமைந்துள்ளன.

1. சொல் தொகுதிச் சோதனை: மாணவர்களின் (அவர்களுடைய படிக்கும் திறனுக்கு அப்பாற்பட்ட) சொல்வளத்தை அளவீடு செய்வதற்காகச் சில நிறைவுறாச் சொற்றொடர்கள் சொல்லப்படுகின்றன. எ-டு. எப்பொழுதும் இனிமையற்ற உளநிலையில் இருப்பவனை ......... என்று கூறலாம். (துறவி, நகைச்சுவை நடிகன், மாணவன்,) விடப்பட்ட இடத்தை மாணவன் இச்சொற்களுள் ஏதேனும் ஒன்றை வைத்து நிரப்பவேண்டும்.

2. படித்ததை உணர்தல் சோதனை; இச்சோதனையில் மாணவன் படித்த ஓர் உரைநடைப் பகுதி அல்லது கவிதையைத் தேர்ந்தெடுத்து, அதன் உட்பொருள், அதனைப்பற்றி எழக்கூடிய அனுமானங்கள், அதனைப் பற்றிய நிகழ்ச்சித் தொடர்கள் போன்றவற்றையொட்டிய வினாக்கள் கேட்கப்படுகின்றன.

3. சொற்கற்றல் திறன்கள்: மாணவர்களிடம் சில சொற்களின் பகுதிகள் மட்டும் கொடுக்கப்பட்டு முழுச் சொற்கள் அமைக்குமாறு கூறப்படுகிறது. (எ-டு) அர..., விளை...... போன்ற சொற்பகுதிகளுக்கு மாணவன் அரசன், அரங்கு, அரண்மனை, அரசவை, விளையாட்டு, விளைச்சல், விளைவு போன்ற எத்தனைச் சொற்களைக் குறிப்பிட்ட நேரத்திற்குள் கூறமுடிகிறது என்று கணக்கிட்டு அளவீடு செய்யப்படுகிறது. இச்சோதனையை ஒரு சொல்லமைவின் மூலம் (Monitoring Device) மாணவர்களுக்கு எழுத்துகளைக் காட்டி, அவற்றைப் படிக்கச் செய்யும் முறையும், படித்து அவற்றிலிருந்து வேறு சொற்களைக் கூறுமாறு செய்யும் முறையும், சில எழுத்துகளின் ஒலியை வெளிப்படுத்திக் காட்டி அவற்றிற்கு இயைபுள்ள சொற்களைக் கூறுமாறு செய்யும் முறையும் இதில் அடங்கியுள்ளன. கணிதக் கருத்துகளைத் தெரிந்து கொள்ளுதல், குறியீடுகள், கணிதமுறைகள் பின்னங்கள், தொகுதிகள், நூற்றுமானம் (Percentile), வரை கணிதக் கருத்துகள் ஆகியவற்றை அறிதல், கணிதக் கணிப்பு; கணிதமுறைகள் கணித எண்மான முறையில் கொடுக்கப்படுகின்றன.

கணிதநடைமுறை: வாய்மொழியாக எடுத்துரைக்கப்படும் கணக்குகள், அன்றாட வாழ்க்கை நிகழ்ச்சிகளையொட்டிய சிக்கல் கணக்குகள், காரண காரியப் பிரச்சினைக் கணக்குகள், அளவுக்

கணக்குகள், வரைபடக் கணக்குகள், அளவை வரைபடங்கள் போன்றவை.

எழுத்துப் பிழையின்மை: ஒரே ஒலியுள்ள இரு சொற்களைப் பிரித்தறிதல் (மறம், மரம்).

மொழி – பெயர் வினைச்சொற்களைப் பிழையின்றிப் பயன்படுத்தல்.

சமூகவியல் – பகுத்தறியும் திறனைச் சோதித்தல். புவியியல், வரலாறு, பொருளாதாரம், அரசியல், மானிடவியல் ஆகிய துறைகளினின்று கருத்துகளைத் தேர்ந்தெடுத்தல்.

இசுடான்பர்டு அடைவுச் சோதனையின் எடுத்துக்காட்டு; அறிவியல், உயிரியல், இயற்பியல் துறைகளின் அடிப்படைக் கருத்துகளைத் தெரிந்து கொள்ளுதல்.

கேட்டு அறிந்துணர்தல்: கொடுக்கப்பட்ட ஓர் உரைநடைப் பகுதியைப் படித்து அதிலிருந்து சில கேள்விகளைக் கேட்டல்.

**இசுடிராம்பர்குத் திறமைச் சோதனை** என்பது கை, விரல் நிறம், புலன்காட்சி ஆகிய மூன்றும் இணைந்து இயங்கும் திறனை மதிப்பீடு செய்யும் உளவியற்செயற்சோதனையாகும். ஒருபலகையில் மூன்று நிறங்கள் கொண்ட சிறு உருளைகள் இருக்கும். இதற்குப் பக்கத்தில் வேறொரு பலகையில் இம்மூன்று நிறங்களும் வரிசைப்படுத்தப்பட்டுச் சிறு பள்ளங்கள் காணப்படும். நிற உருளைகளை அவற்றின் நிறத்திற்குரிய பள்ளத்தில் விரைவாக வைக்கவேண்டும். இச் சோதனையின் உதவியால் ஆட்படுநர் நிறப்புலன் காட்சியுடன் கை இயக்கத்தையும் ஒன்றுபடுத்துகிறாரா என்பது மதிப்பீடு செய்யப்படுகிறது. இச் சோதனை, தொழிலகங்களில் பயன்படுத்தப் படுகிறது. இசுடிராம்பர்குத் திறமைச் சோதனை(Stromberg Dexterity Test), பல்வேறு மாறுதல்களுக்கு உட்பட்டுக் கடினமான சோதனையாகப் பல நிறங்களும் சிக்கல் நிறைந்த வரிசையமைப்புகளும் கொண்ட சோதனையாக அமைக்கப்படுகிறது.

**இசுடிராவின்சுகி** (கி.பி. 1882-1971) உருசிய நாட்டு இயலிசைப் புலவராவார். இவர் இளம் பருவத்தில் பியானோ இசைக் கருவியில் தேர்ச்சி பெற்றார்; பின்னர்ச் சட்டக்கல்வியை மேற்கொண்டார். இரிமிசுகி கார்சுசோவ் (Rimsky Karkosov) என்பவர் இவருக்கு இசையாசிரியராக இருந்தார். இசுடிராவின்சுகியின் (Stravinsky) இசையறிவைக் கண்டு தயாகிலேவ் (Diagilev) என்னும் இசை நடத்துநர் இவரை ஒரு பாலே நிகழ்ச்சிக்கு இசையமைக்குமாறு கூறினார். இந்த இசை 1910-ஆம் ஆண்டு அமைக்கப்பட்டது. இது இசுடிராவின்சுகிக்குப் பெரும் புகழைத் தேடித் தந்தது. இவர் புதிய முறையில் இசையமைக்கத் தொடங்கினார். பாலே நிகழ்ச்சிகளை விட்டு வேறு இசை நிகழ்ச்சிகளுக்கு இசையமைக்கத் தொடங்கினார். இசுடிராவின்சுகியின் குடும்பத்தினர் உருசியாவை விட்டு வெளியேறிச் சில காலம் சுவிட்சர்லாந்திலும் பின்னர்ப் பிரான்சிலும் வாழ்ந்தனர். இரண்டாம் உலகப்போர் தொடங்கியவுடன் இசுடிராவின்சுகி அமெரிக்க ஐக்கிய நாட்டில் ஆலிவுட்டில் குடியேறினார். இவர் அமெரிக்கக் குடிமகனானார். ஆலிவுட்டில் பல சிறந்த இசைப்படைப்புகளை இவர் செய்துள்ளார். இவர் இசையில் கற்பனை வளமும் செறிவும் மிகுந்துள்ளன.



இசுடிராவின்சுகி

**இசுடீன்கீம் மனிதன்:** ஆதி மனிதனின் படிமுறை வளர்ச்சிக்குச் சான்றுகளாக மிகவும் அரிதான சில புதைபடிவங்கள் கிடைத்துள்ளன. பல்வேறு இடங்களில் கண்டெடுக்கப்பட்ட மனிதக்குரங்குகள், ஆதி மனிதர்களின் எலும்புகள், புதைபடிவங்கள் ஆகியவை மனிதன் படிமுறை வளர்ச்சியடைந்த காலத்தை வரையறுக்கவும் உதவுகின்றன. சாவா (Java), சீனா போன்ற தூரக்கிழக்கு நாடுகளில் கண்டெடுக்கப்பட்ட ஆதி மனித எலும்புகளும் பற்களும் தற்கால மனிதனின் முன்னோர் அவ்விடங்களில் வாழ்ந்ததற்குச் சான்றுகளாகத் திகழ்கின்றன. இதே போன்று ஐரோப்பிய நாடுகளில் கண்டெடுக்கப்பட்ட ஆதிமனிதனின் மண்டையோடுகள், மனிதனின் சமகாலப் பழமையைச் சான்றாகப் பகர்கின்

றன. அவ்வாறு கண்டெடுக்கப்பட்ட ஆதி மனிதனின் மண்டையோடுகளில் அய்டல்பெர்கு மனிதன் (Heidel berg Man), சுவான்சு கோம்பு மனிதன் (Swanscombe Man), இசுடீன்கீம் மனிதன் (Steinheim Man) முதலியோரின் புதைபடிவங்கள் மிகவும் முதன்மையானவை. ஏனெனில் அவையனைத்தும் ஒன்றுடன் ஒன்று ஒத்த அமைப்பை உடையன.



இசுடீன்கீம் மண்டை ஓடு

முதலாம் ஆதி மனிதர்கள் என்று பித்தகாந்திரோபசைக் (Pithecanth Ropus) கூறலாம். பித்தகாந்திரோபசு மூளையின் கொள்ளளவு சுமார் 90 க.செ.மீ. இருந்ததாகக் கணக்கிடப்பட்டுள்ளது. இந்தக் கொள்ளளவு, இக்காலப் பெரிய மனிதக் குரங்கின் மூளைக்கும் (மூளையின் கொள்ளளவு சுமார் 500 க.செ.மீ) இக்கால மனிதனின் மூளைக்கும் (மூளையின் கொள்ளளவு சுமார் 1350 க.செ.மீ.) இடைப்பட்ட அளவாகும். இந்த ஆதி மனிதர்கள் இக்கால மனிதனிலிருந்து மிகுந்த வேறுபாடுகள் உடையவர்கள் அல்லர். அதனால், இவர்கள் ஓமோ (Homo) என்ற பேரினத்தைச் சேர்ந்தவர்களென்று குறிப்பிடலாம். எனவே பித்தகாந்திரோபசு எரெக்டசு (Pithecanth Ropus Erectus) என்ற இந்த இனம் இப்போது ஓமோ எரெக்ட்சு (Homo Erectus) என்று குறிக்கப்படுகிறது. இந்த முதலாம் ஆதி மனிதர்கள் சாவாவில் வாழ்ந்ததாகச் சான்றுகள் கூறுகின்றன.

இந்த ஆதி மனிதர்களுக்குப் பிறகு சீனாவில் சினாந்திரோபசு (Sinanthropus) என்ற ஆதி மனிதர்கள் வாழ்ந்தார்கள். இவர்களின் எலும்புகளை ஒப்பு நோக்கிப் பார்த்தபோது அவை பல பொதுப் பண்புகளில் பித்தகாந்திரோபசை ஒத்திருந்தன. எனவே இவர்களும் ஓமோ எரெக்டசு இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதற்குச் சான்றாக உள்ளது. இருப்பினும் இம் மனிதன், ஓமோ எரெக்டசின் பண்புகளிலிருந்து சில வேறுபாடுகள் பெற்று, மனிதக் குரங்குகளின் சில குறிப்பிடத்தக்க பண்புகளையும் பெற்றிருந்தான்.

மேற்குறிப்பிட்ட ஆதி மனிதர்களுக்கு நெருங்கிய தொடர்புடையவன் 'அய்டல்பெர்கு மனிதன்' ஆவான். இவனுடைய கீழ்த்தாடை எலும்புகள், மேற்குச் செருமனியிலுள்ள அய்டல்பெர்கின் அருகே மாவர் கிராமத்தின் மணல்பாறை அகழ்வில் 1907-ஆம் ஆண்டில் கண்டெடுக்கப்பட்டன. இவ்வெலும்புகள் 24.1 மீட்டர் ஆழத்தில் மிகத் தொன்மைக் காலப் படிவிலிருந்து கண்டெடுக்கப்பட்டன. இந்தக் கீழ்த்தாடை எலும்புகள், பிலைசுடோசீன் (Pleistocene) காலத்தின் முற்பகுதியில் வாழ்ந்த குதிரை காண்டாமிருகம், மற்றும் பல பாலூட்டிகள் ஆகியவற்றின் பற்களுடனும் எலும்புகளுடனும் கலந்திருந்தன. அய்டெல்பெர்கு மனிதனின் மண்டை ஓட்டின் பிற பகுதிகளைப் பற்றிய விவரங்கள் கிடைக்கவில்லை. இம்மனிதனின் தாடை திண்மையானது. மேவாய் பிதுக்கம் அற்றது. எனவே இந்த ஆதி கால கற்படியுருவ மனிதன் மனிதக் குரங்கையே பெரிதும் ஒத்திருந்தான் என்று கூறப்படுகிறது.

இருப்பினும் அய்டல்பெர்கு மனிதன், இக்கால மனிதனின் இயல்பான அடையாளங்களையும் பெற்றிருந்தான். அவையாவன: பற்கள் இடைவெளியின்றி நெருக்கமாக அமைந்திருந்தன. பெரிய கடைவாய்ப் பற்களின் மேல் மேடுகளும், அவற்றிற்கு நடுவே பள்ளங்களும் இருந்ததைக் காட்டும் வரி அமைப்புகள் உள்ளன. கோரைப்பற்கள் பல் வரிசையிலிருந்து துருத்தி இருக்கவில்லை. அவற்றின் முகடுகளும் சிறியவை. தாடை வட்ட வடிவானது.

அடுத்ததாக, சுவான்சுகோம்பு (Swanscombe) என்னுமிடத்தில் பாறை அகழ்வில் கண்டெடுக்கப்பட்ட மண்டை ஓட்டின் எலும்புகள், ஆதி மனிதனைப் பற்றி அறிய மற்றொரு சான்றாக உள்ளன. சுவான்சுகோம்பு மனிதனின் மண்டை ஓட்டின் மூன்று எலும்புகளும் ஒரு பிடர் எலும்பும் (Occipital) இரு நடு மண்டை ஓட்டு எலும்புகளும் வேறு சில விலங்குகளின் எலும்புகளுடன் கண்டெடுக்கப்பட்டன. இம்மண்டை ஓட்டின் மற்ற எலும்புகள் கிடைக்கவில்லை. சுவான்சுகோம்பு மனிதனின் எலும்புகள், அவன் இக்கால மனிதனின் உடலமைப்பை ஒத்திருந்ததற்கான கருத்தைத் தெரிவிக்கின்றன.

சுவான்சுகோம்பு மண்டை ஓட்டைப் போன்றே, 1933-ஆம் ஆண்டில், செருமனியில், 'இசுடீன்கீம்' (Steinheim) என்னுமிடத்தில் மற்றொரு புதைபடிவ மண்டை ஓடு கண்டெடுக்கப்பட்டது. இம்மண்டை ஓட்டின் தொன்மையைப் பற்றி உறுதியற்ற கருத்துகள் இருந்தாலும், இது மிகத் தொன்மையானதாகக் கருதப்படுகிறது. இது இரண்டு அல்லது மூன்றாம் இடைப்பனிக்காலத்தைச் (Interglacial Period) சேர்ந்ததாகக் கூறப்படுகிறது. இசுடீன்கீம் மனிதனின் மண்டை ஓட்டைத் தவிரக் கீழ்த்தாடை எலும்புகளோ வேறு எந்த எலும்புகளோ கிடைக்கவில்லை. இம்மண்டை ஓட்டின் புறப்பகுதி பெரிதும் அரிக்கப்பட்டிருந்தது. இது இப்போது 'இசுடட்கார்ட்டு' இயற்கையியல் வரலாற்று அருங்காட்சியகத்தில் (Stuttgart Natural History Museum) பாதுகாக்கப்பட்டுள்ளது. இதன் நீளம் சுமார் 18 மி.மீ. இம்மண்டை ஓட்டின் முன் பகுதி, குறிப்பாகத் தெளிவான புருவ மேடுகளையும், வலிமையான மேல் தாடைகளையும் பெற்றுத் தொன்மையான அமைப்புகளைத் தெளிவாகக் காட்டுகிறது. இதன் கண் குழிகள், அகன்ற அமைப்பை உடையன.

மேலும் இம்மண்டை ஓட்டில் மூக்கமைப்பு, நியாண்டர்தால் (Neanderthal) மனிதனுடைய மூக்கமைப்பிலிருந்து வேறுபட்டுள்ளது. பிடர் எலும்பின் மேலுள்ள தசை மேடுகளின் (Muscular Ridges) அமைப்பு, ஓமோ எரெக்டசு மனிதனின் மண்டை ஓட்டில் இருந்ததைப் போன்றே மிகைப்பட்ட வளர்ச்சியுறாமல் காணப்பட்டது.

இசுடீன்கீம் மண்டை ஓடும், சுவான்சுகோம்பு மண்டை ஓடும் ஒத்த அமைப்புடையன. மேலும் இசுடீன்கீம் மண்டை ஓடு, நியாண்டர்தால் மனிதனின் மண்டை ஓட்டிலிருந்து வேறுபட்டு, இக்கால மனிதனின் மண்டை ஓட்டைப் பெரிதும் ஒத்துள்ளது. எனவே சுவான்சுகோம்பு மனிதனும், இசுடீன்கீம் மனிதனும் சம காலத்தவர்கள் என்பது கருதப்படுகிறது. இரு மண்டை ஓடுகளும் இடைப்பட்ட பனிக்காலப் படிவங்களிலிருந்து (Inter Glacial Deposit) கண்டெடுக்கப்பட்டன. எனவே சுவான்சுகோம்பு மனிதனும் இசுடீன்கீம் மனிதனும் ஒரே சிறப்பினம் (Species) அல்லது துணை இனத்தைச் (Sub Species) சேர்ந்தவர்களாக இருக்கலாம் என்ற கருத்தும் நிலவுகிறது.

இசுடீன்கீம் மனிதனின் மண்டை ஓட்டின் பின் புறப்பகுதி, இக்கால மனிதனின் மண்டை ஓட்டைப் போன்று வட்டமான அமைப்பை உடையது. அவன் சரிவான முன் தலையையும், மிகப் பெரிய தெளிவான புருவ மேடுகளையும் பெற்றிருந்தான். இசுடீன்கீம் மனிதனின் தெளிவான புருவமேடுகள், ஓமோ எரெக்டசின் இயற்கைக்கு மாறான தசை வளர்ச்சியைப் பெற்ற கண் நீட்சி எலும்புகளின் (Supra Orbita) அமைப்பின் தொடர்பைத் தெளிவாக்குகின்றன. இசுடீன்கீம் மனிதனின் மூளையின் கொள்ளளவு சுமார் 1000 க.செ.மீட்டருக்கு மேல் இருக்காது என்று கணக்கிடப்பட்டுள்ளது.

மேலும் இசுடீன்கீம் மனிதனின் மேல் தாடை அமைப்பு, மிகப் பெரிய மேல் தாடையுடைய ஓமோ எரெக்டசின் தாடையிலிருந்து வேறுபட்டு இக்கால மனிதனின் மேன்மையடைந்த மேல்தாடையை ஒத்துள்ளது. இதன் பிடர் எலும்பிலுள்ள மட்ட நிலைக்கோடு, ஓமோ எரெக்டசிற்கு உள்ளது போன்று கோணமாகவும் கூராகவும் இல்லாமல் இக்கால மனிதனின் மண்டை ஓட்டில் உள்ளது போன்றே வட்டமான நிலைக் கோடுகளுடன் உள்ளது.

எனவே, இசுடீன்கீம் மனித மண்டை ஓடு, ஒரு புது சிறப்பினத்தை, அதாவது 'ஓமோ இசுடீன்கீம் என்சிசு' (Homo Steinheimensis) என்ற இனத்தைச் சேர்ந்தது என்ற கருத்தை உருவாக்கியது. ஆனால், இக்காலத்தில் வாழும் தொன்மையான மனித இனங்களின் உடலமைப்புகளை ஒப்பிட்டால், இசுடீன்கீம் மண்டை ஓடு, சுவான்சுகோம்பு மற்றும் எரிங்சுடார்பு (Ehringsdorf) மண்டை ஓடுகள் ஆகியவற்றை இக்கால மனிதனிலிருந்து முறைப்படி வேறுபடுத்த இயலுமா என்ற ஐயமும் உண்டாயிற்று.

எனவே, முடிவாக, இசுடீன்கீம் மனிதனின் மண்டை ஓடு, அவன் பொதுவாக உடலமைப்பில், ஓமோ எரெக்டசு மனிதனுக்கும் ஓமோசிசப்பியனுக்கும் (Homo Sapien) இடைப்பட்டவனாகவும், தொடர்புடையவனாகவும் இருக்கலாமென்ற கருத்தையும் குறிப்பாக எடுத்துக்காட்டுகிறது. பா.ஜ.

**இசுடுவேர்ட்டு தியூகல்டு (கி.பி. 1753-1828)** இசுகாட்லாந்து நாட்டைச் சார்ந்தஅறவியல் தத்துவ அறிஞர்ஆவார். இவர்கி.பி. 1753-ஆம்ஆண்டு நவம்பர் 22-ஆம் நாள் எடின்பரோ (Edinburgh) என்னுமிடத்தில் மேத்தியூ இசுடுவேர்ட்டு (Mathew Stewart) என்ற கணிதப் பேராசிரியரின் மகனாகப் பிறந்தார். இவர் எடின்பரோப் பல்கலைக்கழகத்தில் ஆடம் பர்க்குசன் என்பவரின் மாணவராகி அறிவியல், தத்துவம் ஆகியவற்றைக் கற்றார். இளம் வயதில் தாமசு ரெய்டு (Thomas Reid) என்பவரின் சொற்பொழிவுகளைக் கேட்டுப் பேரறிவு பெற்றார். இசுகாட்லாந்து நாட்டின் 'பொது அறிவுப் பள்ளி' (Commonsense School), யினைத் தோற்று வித்தவரும், அறவியல் பேராசிரியருமான ஆடம் சுமித்து (Adam Smith) என்பவரின்

அறவியல் தத்துவக் கருத்துகளையும் கேட்டறிந்திருந்தார். இவர் தந்தையார் உடல்நலக் குறைவால் பணியாற்ற இயலாத போது, இவரே அவருக்குப் பதிலாகச் சில காலம் கணித ஆசிரியராக வேலை பார்த்தார். அதன் பின்னர், கி.பி. 1775-ஆம் ஆண்டு முதல் தன் தந்தையாருடன் சேர்ந்து கணிதத் துறையில் பணியாற்றினார். அதன் பின்னர், கி.பி. 1785-ஆம் ஆண்டு பர்கூசன் (Ferguson) பல்கலைக்கழகத்தில் அறவியல் பேராசிரியராகப் பணியாற்றும் வாய்ப்பினைப் பெற்றார்.



தியூகல்டு இசுடுவர்ட்டு

இசுடுவர்ட்டு தியூகல்டு (Stewart Dugald) சிறந்த சிந்தனையாளர். இவருடைய முக்கியப் பணிகளாகக் குறிப்பிடத்தக்கன, தாமசு ரெய்டு (Thomas Reid) என்பவரின் தத்துவக் கருத்துகளை ஆழ்ந்து ஆராய்ந்தமையும், கார்டீசியன் தத்துவக் கருத்துகளுடன் வரையறை செய்யப்பட்ட உளவியல் விதிமுறைகளை ஒப்புநோக்கி இருவர் கருத்துகளிலும் உள்ள பொருள் தொடர்பு வேறுபாட்டினைத் தெளிவுபடுத்தியமையும் ஆம்.

இவர் பல நூல்களை வெளியிட்டுள்ளார். அவைகளுள் குறிப்பிடத் தக்கன; 'மனித மனத்தின் கூறுகள்' என்னும் மூன்று தொகுதிகளும் (The Three Volume Elements of the Philosophy of the Human mind), தத்துவக் கட்டுரைகள் (Philosophical Essays 1840) என்னும் கட்டுரைத் தொகுப்பும் ஆம். இவர் சிறந்த பேச்சுவன்மையும், அனைவரையும் கவரக்கூடிய எடுப்பான தோற்றமும் உடையவர். இவர் சிறந்த தத்துவ அறவியல் சொற்பொழிவுகளை ஆற்றியதின் வாயிலாகப் பேரும் புகழும் அடைந்தார். இசுடுவர்ட்டு தியூகல்டு கி.பி. 1828-ஆம் ஆண்டு சூலை 11-ஆம் நாள் எடின்பரோ என்னுமிடத்தில் காலமானார்.

**இசுடுவர்டு சூலியன் எயின்சு** (1902-1972): ஓர் அமெரிக்க மானிடவியலார். பண்பாட்டுப் படிமலர்ச்சி, குடியானவர்களின் சிற்றூர் அமைப்பு, (Peasant Village Organization) புத்துலக நாகரிகம் (New World Civilization) முதலான இவர் ஆய்வுகள் மானிடவியல் துறையில் சில கோட்பாடுகளை உருவாக்குவதில் பெரிதும் துணை நின்றன. சூலியன் எயின்சு இசுடுவர்டு (Julian Haynes Steward) 1902-ஆம் ஆண்டு சனவரி 31-ஆம் நாள் வாசிங்டனில் பிறந்தார். இவர் இலோவி (Lowie), குரீபர் (Kroeber) முதலான தலைசிறந்த மானிடவியலாரின் மாணாக்கராவார். இவர் பண்பாட்டுப் படிமலர்ச்சியினைப் புதிய முறையில் கண்டறிய முனைந்தவர். மார்கனும் (Morgan) தைலரும் (Tylor), கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் பண்பாடு, ஒருவழிப் படிமலர்ச்சியாகத் (Unilinear Evolution) தோன்றியது என்னும் கோட்பாட்டை அறிவித்தனர். இதன் பின்னர் ஒயிட்டு (White) வெளியிட்ட தம் கோட்பாட்டில், பண்பாடு உலகளாவியதாகத் (Universal) தோன்றியது எனக் குறிப்பிட்டார். இவ்விருவர் கருத்தையும் ஆழ்ந்து ஆராய்ந்த இசுடுவர்டு சூலியன் பலவழிப் படிமலர்ச்சிக் (Multinear Evolution) கோட்பாட்டை வகுத்தார்.



சூலியன் எயின்சு இசுடுவர்டு

மனிதச் சூழலியல் பரப்பிலும் மானிடவியலிலும் இவருடைய கோட்பாடுகள் சிறப்பிடம் பெற்றுவிட்டன. இவர் பண்பாட்டுச் சூழலியல் (Cultural Ecology) என்னும் தனித் துணைப் பரப்பை ஏற்ப

டுத்தி, தொழில் நுணுக்கத்திற்கும் சூழ்நிலைக்கும் உள்ள தொடர்பு, ஒரு குறிப்பிட்ட பகுதியில் உள்ள வாழ்க்கை ஆதாரப் பொருள்களைத் திரட்டும் மக்களின் நடத்தைக் கோலம், இந்த நடத்தைக் கோலம் ஏனைய பண்பாட்டுக் கூறுகளைப் பாதிக்கும் முறைகள் முதலானவற்றை ஆராய்ந்தார்.

இசுடுவர்டு சூலியன், வாசிங்டனில் உள்ள இசுமித்சோனியன் நிறுவனத்தின் ஓர் உறுப்பான அமெரிக்கா இனக்குழு ஒப்பாய்வியல் செயலகத்தில்(American Bureau of Ethnology) சேருமுன், பல உயர்ந்த பொறுப்புகளை ஏற்றிருந்தார். இவருடைய முதன்மையான படைப்புகளுள் ஒரு சில பின்வருவன: தென் அமெரிக்க இந்தியரைப் பற்றிய கையேடு, ஏழு தொகுதிகள்-1946-59 (Hand book of South American Indians), பண்பாட்டு மாற்றத்தின் கொள்கைகள்: பலவழிப் படிமலர்ச்சியின் முறையியல்-1955 (Theory of culture change: The methodology of multinear Evolution), நீர்ப்பாசன நாகரிகங்கள்-1955 (Irrigation Civilization); மரபுவழிச் சமுதாயங்களில் ஒரே காலத்தின் மாற்றங்கள் மூன்று தொகுதிகள்-1967 (Contemporary Change in Traditional Societies). இசுடுவர்டு சூலியன் 1972-ஆம் ஆண்டு பிப்பிரவரித் திங்கள் 6-ஆம் நாள் அர்பானாவில் (Urbana) காலமானார்.

**இசுடோக்சு. எம்:** இவர் இந்தியாவில் ஆங்கிலேய ஆட்சி நடைபெற்ற போது, அரசுப்பணி ஏற்றுச் சென்னை மாநிலத்திற்கு வந்த ஆங்கில அதிகாரிகளுள் ஒருவர். இசுடோக்சு (Stokes. M) கி.பி. 1826-ஆம் ஆண்டில் சென்னை மாநில அரசுப் பணியில் அமர்த்தப்பட்ட போதிலும், 9-1-1827-ஆம் நாளில் தான் இந்தியா வந்து சேர்ந்தார். 1-7-1842-இல் மாவட்ட ஆட்சித் தலைவர்களுள் ஒருவராகப் பதவி ஏற்றார். சென்னைக்கு வந்த பின்னர்த் தம் அலுவல் நிமித்தமாகத் தமிழ் கற்க முற்பட்ட இவர், குமரகுருபர சுவாமிகள் இயற்றிய நீதிநெறி விளக்கம் என்னும் நூலை(The Light of the Path of Virtue) ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டார். இவர் தம் ஆங்கில மொழியாக்கத்தினை மறைத்திரு டாக்டர் போப்பு அவர்கள் மிகவும் பாராட்டியுள்ளார்கள். அம்மொழிபெயர்ப்பு நூலின் முன்னுரையில், அந்நூல் அண்மைக் காலத்தது என்றாலும், தென்னாட்டில் கல்விப் பயிற்சி உடையோரிற் பெரும்பாலோர் அதனைக் கற்றனர் எனக் குறிப்பிட்டுள்ளார். அம்முன்னுரையில் இவர், குமரகுருபரரின் வரலாற்றுச் சுருக்கத்தைத் தந்துள்ளதோடு அவர் இயற்றிய நூல்களுள் பதினான்கினைக் குறிப்பிட்டுமுள்ளார். குமரகுருபரரின் நடைத் தூய்மையினையும் அழகினையும் வடமொழிக் கலப்புக் குறைந்த அளவில் உள்ளமையினையும் விளக்கிக் காட்டியுள்ளார். மேலுமிவர் அருஞ்சொற்களுக்கு ஆங்கிலத்திலும் தமிழிலும் விளக்கம் எழுதியுள்ளார். தம் மொழி பெயர்ப்புப் பணிக்குச் சில தமிழ்ப் புலவர்களின் துணையினைப் பெற்றிருந்தார். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர், தாண்டவராய வாத்தியாராவார். இவர் தம் விளக்கவுரையில் திருக்குறள், ஔவையார் பாடல்கள் ஆகியவற்றிலிருந்து மேற்கோள் காட்டியுள்ளார். இவர் தமது விளக்கவுரையில் எல்லிசு (Ellis) அவர்களின் கருத்துகளைப் பலவிடங்களிலும் ஆண்டுள்ளார். இவரது இலக்கியப் பணி, பின்னர்த் தமிழாராய்ச்சி மேற்கொண்டோருக்கு உதவியாக அமைந்தது.

**இசுடோகில்** என்பவர் மேலாண்மையியலில் தலைமைப் பண்புகளைப் பற்றிய விரிவான ஆராய்ச்சிகள் செய்தவராவார். இவர் தலைமை பற்றிய ஆய்வினைப் பல ஆண்டுகள் தொடர்ந்து செய்து 1974-ஆம் ஆண்டு முடித்தார். இந்த ஆராய்ச்சியில் இசுடோகில் (Stogil) ஏறக்குறைய 3000 நூல்களையும் பல கட்டுரைகளையும் பார்வையிட்டுச் செய்திகளைச் சேகரித்தார். இதன் காரணமாக இவருடைய ஆய்வறிக்கை மிகப் பெரியதாக அமைந்தது. தம்முடைய ஆய்வுகளின் முடிவாக இவர் பின்வரும் தலைமைக் கோட்பாடுகளைக் கண்டுபிடித்தார். நுண்ணறிவு, கல்வியறிவு, பொறுப்பு, நம்பிக்கை, சமூகவியல்பு, பொருளாதாரப் பின்னணி ஆகிய காரணிகளுக்கும் தலைமைப் பண்பிற்கும் இடையே நெருங்கிய தொடர்பு அமைந்துள்ளது என்று இவர் கூறினார். தலைமைப் பண்பு இல்லாதவர்களிடம் இத்தகைய காரணிகளைக் காண முடியாது. இவருடைய தலைமைக் கோட்பாடுகள் பல மேலாண்மை வல்லுநர்களால் ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ளன. இவர் கூறும் தலைமைப் பண்புகள், தலைமை நடத்தைகள் என இக்கால மேலாண்மையினரால் விளக்கப்படுகின்றன. இசுடோகிலின் ஆராய்ச்சிகள், பீட்லர் (Fiedler), பிளான்சர்டு (Blanchard) போன்ற மேலாண்மை வல்லுநர்களால் விரித்துரைக்கப் பட்டுப் புதிய மேலாண்மைத் தலைமைக் கோட்பாடுகளாக உருப்பெற்றுள்ளன. இத்தகைய கோட்பாடுகளுள் நிலைமைக்கேற்ற தலைமை (Situational Leadership) என்னும் கோட்பாடு, மேலாண்மையியல் வல்லுநர்களால் வரவேற்கப் படுகிறது.

**இசுடோப்பிசு மாரி** (கி.பி. 1880-1958) பெண்களுக்குத் திட்டமிட்ட குடும்பத்தின் இன்றியமையாமையைப் பற்றி எடுத்துரைத்த சமூகச்சீர் திருத்தக்காரராவர். இசுடோப்பிசு (Stopes, Marie) இங்கிலாந்தைச் சேர்ந்தவர். இவர் இலண்டன், மியூ



மாரி இசுடோப்பிசு

விச்சுப் பல்கலைக் கழகங்களில் கல்வி பயின்றார். மான்செசுட்டர் பல்கலைக் கழகத்தின் முதல் பெண் ஆசிரியராகப் பணியாற்றினார். இவர், பெண்களுக்குப் பால் உணர்வுத் தொடர்பான செய்திகளைப் பற்றிய முழுமையான அறிவு இருக்க வேண்டும் என்றும் இத்தகைய அறிவு பெண்களின் மணவாழ்க்கைக்கு இன்றியமையாதது என்றும் வலியுறுத்தினார். திட்டமிட்ட குடும்பத்தை அமைப்பதில் பெண்களுக்கு முழுச் சுதந்திரம் இருக்க வேண்டும் என்று இவர் கூறினார். இவர் 1918–ஆம் ஆண்டில் எழுதிய 'அறிவுள்ள பெற்றோர் வாழ்க்கை' (Wise Parenthood) என்னும் நூலில் கருத்தடை முறைகளைப் பற்றி எழுதினார். 'பாதுகாப்புக் காலம்' என்னும் முறையைப் பின்பற்றிக் கருத்தடை செய்தல் எளிது என்று இவர் கருதினார். இவர் இங்கிலாந்தின் முதல் கருத்தடை மருத்துவ விடுதியை 1921–இல் தோற்றுவித்தார். தொடக்கக் காலத்தில் இவருடைய கருத்துகளுக்குச் சமய எதிர்ப்பும் சமூக எதிர்ப்பும் மிகுதியாக இருந்தன. நாளடைவில் மக்கள் இவருடைய கருத்துகளை ஆதரிக்கத் தொடங்கினர். இசுடோப்பிசு பெண்களின் உரிமைக்காகவும் பாடுபட்டார்.

**இசுடோனெஞ்சு** தெற்கு இங்கிலாந்தில் சாலிசுபரியிலிருந்து (Salisbury) 11 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள தொல்லியற் சிறப்பு வாய்ந்த ஒரு நினைவுச் சின்னம். இங்கிலாந்தில் காணப்படும் எஞ்சு (Henge) நினைவுச் சின்னங்களுள் இசுடோனெஞ்சு (Stonehenge) நினைவுச் சின்னமே பெரும் புகழ் வாய்ந்தது. இச்சின்னத்தை முதன் முதலில் சான் ஆவ்பரி (John Avbrey) என்பவர் கண்டறிந்து ஓர் ஆய்வுக் கட்டுரையை, கி.பி. 1666–இல் வெளியிட்டார். பின்னர், வில்லியம் இசுடெக்லி (William Stukeley) என்பவர் இதன் சிறப்பை உலகிற்கு உணர்த்தினார். சான் ஆவ்பரி தமது அறிக்கையில் இந்நினைவுச் சின்னத்தை, இங்கிலாந்திற்கு வந்து குடியேறிய கிறித்தவரல்லாத கெல்ட்டு இன மக்களின் (Celts) சமய குருமார்களான துரூயிடுகள் (Druids) அமைத்த கோயில் என்று கூறினார். இங்குப் பல அகழாய்வுகள் 20–ஆம் நூற்றாண்டில் தொல்லியல் அறிஞர்களால் நடத்தப்பெற்று, சான் ஆவ்பரியின் கருத்து மறுக்கப்பட்டது. முதன் முதலாக இசுடோனெஞ்சில் 1919–ஆம் ஆண்டு அகழாய்வு நடத்தப்பட்டது. பின்னர் 1950–க்கும் 1964–க்கும் இடைப்பட்ட காலத்தில் பல்வேறு அகழாய்வுகள் இங்கு நடத்தப்பட்டன. இவ்வகழாய்வுகளின் மூலம் இசுடோனெஞ்சின் வரலாறு ஒருவாறு கணிக்கப்பட்டது. இந்நினைவுச் சின்னத்தை, கி.மு. 2000 முதல் கி.மு. 1500 ஆண்டு வரை வாழ்ந்த மூவகைப் பண்பாட்டுக் கால (Cultural Periods) மக்கள் கட்டினர் எனக் கண்டறியப்பட்டது.



இசுடோனெஞ்சு

**முதற் பண்பாட்டுக் காலம்:** கி.மு. 2200-இல் இங்கிலாந்துக்கு வந்த புதிய கற்கால (Neolithic) மக்கள், நாளடைவில் நிலையான வாழ்க்கையைத் தொடங்கிக் கால்நடைகளை வளர்த்தும்வேளாண்மை செய்தும் வந்தனர். இவர்கள் பெருங்கற்கால (Megalithic) மக்களுடன் இணைந்து வாழ்ந்தனர். புதிய கற்காலத்தின் கடைப்பகுதியில் இசுடோனெஞ்சில் வட்ட வடிவமான மேடும், மேட்டைச் சுற்றிக் கால்வாயும் அமைக்கப்பட்டன. இம்மேட்டின் உயரம் 2 மீ. இதன் குறுக்களவு 107 மீ. இப்பொழுது இம்மேடு ¾ மீட்டர் உயரமே உள்ளது. மேட்டின் உட்பகுதியில் வட்டமாக 56 குழிகள் உள்ளன. ஒவ்வொரு வட்டக் குழியும் 1.3 மீ. ஆழமும் 2 மீ. விட்டமும் கொண்டது. இக்குழிகளுக்கு இச்சின்னத்தை முதன் முதலில் கண்டு பிடித்த ஆவ்பரியின் நினைவாக ஆவ்பரிக் குழிகள் (Avbrey holes) எனப் பெயரிடப்பட்டது. இக்குழிகளின் உள்ளே சாம்பல் காணப்பட்டது. அகழியும் மேடும், மேட்டின் உள்ளே உள்ள குழிகளும் வட்ட வடிவில் அமைக்கப்பட்டு, ஒரு திறந்த வெளி ஆலயமாக அக்காலத்தில் இருந்திருக்க வேண்டும். இவ் வட்டப் பகுதியினுள் நுழைவதற்கு வட கிழக்காக ஒரு பாதை முதற் பண்பாட்டுக் காலத்திலேயே அமைக்கப்பட்டது. இது 12 மீ. அகலமுடையது. இக்காலத்தில் பாதையின் நடுவில் மேட்டிற்கு வெளியே ஒரே ஒரு கல் மட்டில் நடப்பட்டது. இக் கல் மணற்பாறை (Sandstone) வகையைச் சார்ந்தது. இது குதிக்கால் கல் (Heel Stone) எனக் கூறப்படுகிறது. இக்கல்லின் உயரம் ஏறத்தாழ 7 மீ. ஆகும். இசுடோனெஞ்சின் முதற் பண்பாட்டுக்காலம் கி.மு. 2100-க்கும் 1600-க்கும் இடைப்பட்டது என இங்குக் கிடைத்த கரியைக் கொண்டு கரிமம்-14 முறைப்படி (Carbon-14 Method) கண்டறியப்பட்டது.

**இரண்டாம் பண்பாட்டுக் காலம்:** இக்காலத்தில் இசுடோனெஞ்சின் மையப் பகுதியை அச்சாகக் கொண்டு சுற்றிலும் இரண்டு வரிசையில் வட்டமாக மயில்-துத்த நீலநிறப் பாறைக் கற்களை நட்டனர். முதல் வட்டத்தின் விட்டம் 25 மீ. இரண்டாம் வட்டத்தின் விட்டம் 29மீ. ஒவ்வொரு கல்லும் 5 கண்டி (Ton) எடை உள்ளது. இக்கற்கள், இசுடோனெஞ்சிலிருந்து 400 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள பெம்புரோக்சயரிலுள்ள (Pembrokshire) பிரிசிலி (Prescelly) மலைகளிலிருந்து கொண்டு வரப்பட்டிருக்க வேண்டுமென இங்கிலாந்தைச் சார்ந்த மண்ணூல் வல்லுநர் (Geologist) எச். எச். தாமசு (H.H. Thomas) என்பார் 1923 இல் கூறினார். இவை இம்மலைகளிலிருந்து நீர்வழியாக மிதவைகளின் மூலம் கொண்டுவரப்பட்டு, நிலப் பகுதியில் மூங்கில்களாலான சறுக்குகளின் உதவியுடன் இசுடோனெஞ்சிற்குக் கொண்டுவரப்பட்டிருக்க வேண்டும். வட்டமாக அமைக்கப்பட்ட இக்கற்களின் எண்ணிக்கை 82 ஆகும். இவ்விரண்டாம் பண்பாட்டுக் காலத்தில் இசுடோனெஞ்சின் பாதை மேலும் விரிவுபடுத்தப்பட்டது. இப்பாதை 40 அடி அகலம் உடையது. ஆவானுக்கும் (Avon) இசுடோனெஞ்சிற்கும் உள்ள தூரம் 1.6 கி.மீ. ஆகும். பாதையின் மையப்பகுதியும் இசுடோனெஞ்சின் மையப்பகுதியும் ஒரே நேர்கோட்டில் உள்ளவாறு இப்பாதை அமைக்கப்பட்டுள்ளது.



இசுடோனெஞ்சின் அமைப்பைக் காட்டும் படம்

**மூன்றாம் பண்பாட்டுக் காலம்:** இக்காலம் மேலும் மூன்று துணைப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இது வெசக்சு (Wessex) மக்களின் காலமாகும். இது முதற் செப்புக் காலத்தைச் சார்ந்தது. இசுடோனெஞ்சு முழுமையான அமைப்பைப் பெற்றுத் திகழ்ந்தது இக்காலமே ஆகும். இரண்டாம் காலத்தைச் சார்ந்த நீலப் பாறைகள் நீக்கப்பட்டு, அக்குழிகள் அடைக்கப்பட்டன. மிகப் பெரிய அளவுடையதும் ஒரே கல்லினால் ஆனதுமான 30 மணற் பாறைக் கற்கள் புதிதாக வட்ட வடிவில் அமைக்கப்பட்டன. இது சார்சன் வட்டம் (Sarson Circle) எனப்படும். இவைகளின் மேல் உத்தரக் கற்கள் வட்டவடிவில் வைக்கப்பட்டன. இவை வட்ட வடிவமாகப் பொருந்துமாறு வளைவாக வெட்டப்பட்டுள்ளன. சார்சன் வட்டக்கல் ஒவ்வொன்றும் 50 கண்டி (Ton) எடை உடையது. இவை தவுன்சு

(Downs) பகுதியிலிருந்து இவ்விடத்திற்குக் கொண்டு வரப்பட்டன. இசுடோனெஞ்சிலிருந்து வடக்காகத் தவுன்சு 38 கி. மீ தொலைவில் அமைந்துள்ளது. சார்சன் வட்டத்தின் உட்பகுதியில், இலாட வடிவில் ஐந்து சுமை தாங்கிகள் போன்ற அமைப்புடைய கற்பலகைகள் நடப்பட்டன. இச்சுமை தாங்கிக் கற் பலகை 10 மீட்டர் நீளமும் 28 கண்டி எடையும் உடை யது. மேட்டிற்கு அருகில் உட்பகுதியில் நிலை யிடக் கற்கள் (Station Stones) இரண்டு எதிர் எதிராக நடப்பட்டுள்ளன. இவை இரண்டும் இம்மூன் றாம் காலத்தைச் சார்ந்தன. சார்சன் வட்டத்தைச் சுற்றி இரண்டு வரிசையில் வட்டக்குழிகள் உள்ளன. இவை 'ஒய்', 'இசட்'குழிகள் (Y, Z holes) எனக் கூறப்படுகின்றன. இலாட வடிவச் சுமை தாங்கிகளின் உட்பகுதியில் வழிபாட்டுப் பீடக் கல் ஒன்று (Altar Stone) உள்ளது. இது தட்டையான அமைப்புடையது. இக்கல்லின் நீளம் 5 மீட்டரும் எடை 6½ கண்டியும் ஆகும். இக்கல் நின்ற நிலையில் இருந்திருக்கவேண்டும்; இப்பொழுது இது சாய்ந் துள்ளது.

இசுடோனெஞ்சின் அமைப்புத் திட்டமும் இதன் கட்டட அமைப்பும் இங்கிலாந்து நாட்டின் பழமை யைக் குறிப்பவை. இதைப்போன்ற கட்டட அமைப்பு இங்கிலாந்தைத் தவிரப் பிற இடங்களில் காணப் பெறவில்லை. அம்புத் தலைக் கருவிகள், இசுடோ னெஞ்சுக் கற்பலகைகளில் செதுக்கப்பட்டுள்ளன. இவை இங்கு வாழ்ந்த தொன்மைக் குடிகளின் சின்னமாகும்.




இசுடோனெஞ்சுக் கற்களைக் கொண்டுவரப் பயன்பட்ட வழி

இசுடோனெஞ்சு எதற்காக அமைக்கப்பட்டது என்பது, இன்னும் முழுமையாக அறியப்படாமலேயே உள்ளது. இச்சின்னம் சமயத் தொடர்பு உடையது எனப் பல அறிஞர்கள் கருதுகின்றனர். இது சூரிய னுக்காக எழுப்பப்பட்ட கோயில் என்று சிலர் கருது கின்றனர். இக்கற்பலகைகளை அமைத்திருக்கும் வகை மிகவும் வியக்கத்தக்கது. இவை கால மாறு தலை அறிந்து கொள்ளப் பயன்பட்டன என்றும் சிலர் கருதுகின்றனர். செரால்டு எசு ஆக்கின்சு (Gerald S.Hawkins) என்ற சுமித்சோனிய வானிலை அறிஞர், 1963-இல் இசுடோனெஞ்சில் ஆய்வு செய்து, இக்கற்களின் மையத்தின் அச்சும் சூரியனும் நேர் கோட்டில் ஒரே திசையில் சந்திக்கின்றன என்பதைக் கண்டுபிடித்தார். அதற்கேற்றவாறு இசுடோனெஞ் சின் மையக் கற்பகுதி, பாதை, அதன் நடுவில் இருக்கும் குதிக்காற் கல் (Heel Stone) ஆகிய மூன் றும் அமைக்கப்பட்டுள்ளன என்று இவர் கூறினார். இவற்றைக் கணிப்பொறியின் உதவி கொண்டு இவர் கண்டுபிடித்தார். இச்சின்னங்கள் அக்காலத்தில் ஓராண்டில் ஏற்படும் பருவ நிலை மாற்றத்தைத் தெரிவிக்கும் கருவிகளாகப் பயன்பட்டன என இவர் கருதினார். சூரிய கிரகணம், சந்திர கிரகணம் ஏற்படும் நாளை இசுடோனெஞ்சின் மூலம் மக்கள் அறிந்தனர் என இவர் கருத்துத் தெரிவித்தார். இது அக்கால மக்களின் அறிவியல் திறனை நன்கு வெளிப்படுத்துகிறது.

பெரிதும் அழிந்த நிலையில் இருந்த இசுடோ னெஞ்சின் கற்களைப் பாலங்கள், ஆலைகள், அணை கள் முதலியவற்றைக் கட்ட மக்கள் எடுத்துச் சென் றனர். எஞ்சிய கற்பலகைகளின் அமைப்பினைக் கொண்டு இதன் முழுமையான அமைப்பை வல்லு நர்கள் ஒருவாறு ஊகித்தறிந்தனர். ஆங்கில அரசு கி. பி. 1922-இல் இதன் அழிபாடுகளைக் காத்து, இதனை மீண்டும் புதுப்பித்துப் பாதுகாத்து வருகி றது.

துணை நூல்கள்:

Tull, G. K., Early Civilisations, Blandford Press, London, 1968.

Alkinson, Richard J. C., Stonehenge, Macmillan, 1956.

**இசுதாக்கியர் நாடகம்** கி.பி. 19-ஆம் நூற்றாண்டில், யாழ்ப்பாணத்திலிருந்த தம்பிமுத்துப் பிள்ளை என்பவரால் வெளியிடப்பட்டது. தமிழ் நாடக வளர்ச்சியில் கிறித்தவர் பங்கு குறிப்பிடத் தக்கது. முதல் ஐரோப்பியத் தமிழறிஞர் எனப் போற்றப் பெறும் என்றிக்கு அடிகளார் (Fr. Hen-rique) காலத்திலேயே தமிழில் இயேசுவின் பிறப்பு, மூவிராசாக்கள் போன்ற நாடகங்கள் எழுதப் பெற் றுக் கிறித்தவர்களால் நடிக்கப்பட்டன. நாடகக் கலை வளர்ச்சியில் தனி இடம் பெறத்தக்க இசை

கெழுமிய நந்தனார் சரித்திரக் கீர்த்தனை, இராம நாடகக் கீர்த்தனை போன்று, ஆரோக்கிய நாயகர் இயற்றிய தேம்பாவணிக் கீர்த்தனையும் போற்றத் தக்கது. அதன் பின்னர்க் கிறித்தவரால் எழுதப் பட்டும், தமிழகத்தில் நடிக்கப்பட்டும் வந்தவற்றுள் இசுதாக்கியர், ஞானசௌந்தரி, பிலோமினம்மாள், செபசுதியார், அருளானந்தர் ஆகியோர் பற்றிய வரலாற்று நாடகங்கள் குறிப்பிடத்தக்கன. இவற்றுள் பத்துக்கு மேற்பட்ட நாடகங்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டில் மட்டும் அச்சில் வந்துள்ளன.

இசுதாக்கியர்' நாடகம் கி.பி. 1890–ஆம் ஆண்டில் வெளிவந்த பின்னர், கி. பி.1896–இல் ஞானப்பிரகாசம் பிள்ளையால் 'நூதன அர்ச் இசுதாக்கியர்' என்னும் பெயரில் மற்றொரு நாடகம் வெளிவந்தது. அச்சில் வாராமல் ஆங்காங்கே தமிழகத்தில்கிறித்தவப் புலவர்களால் எழுதப்பட்டும், கிறித்தவ விழாக்களில் அண்மைக்காலம் வரை நடிக்கப்பட்டும் வந்துள்ள இந்நாடகம், கையெழுத்துப் படிகளாகச் சில விடங்களில் காணக் கிடக்கிறது.

அனுமந்தன்பட்டி அந்தோணி முத்துப்பிள்ளை எழுதி அச்சுக்கு வாராமல் இருக்கும் நாடகங்களில் 'இசுதாக்கியர்' என்பதும் ஒன்று. அவ்வட்டாரத்தில் இந்நாடகம் நான்கு அல்லது ஐந்து முழு இரவுகள் நடிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது.

உரோமைப் படைத்தலைவராகிய இசுதாக்கியர் வேட்டைக்குச் செல்லும்பொழுது தலையில் சிலுவையுடன் கூடிய ஒரு மானைக் காணுகிறார். கிறித்தவ மறைகளை மான் விரித்துக் கூறக் கிறித்தவத் திருமறையைத் தழுவுகிறார் இசுதாக்கியர். அதன் பயனாக உரோமை அரசரால் அவரும் அவர்தம் மனைவி ஞானபூடணி, இரு புதல்வர்கள் ஆகியோரும் நாடு கடத்தப்படுகின்றனர். எகிப்து நாடு செல்லக் கடற்கரைக்கு வருகின்றனர். கப்பலில் செல்லப் பணமில்லை. கப்பல் தலைவன் ஞானபூடணியின் அழகில் மயங்கிப் பணமின்றி ஏற்றிக் கொள்கிறான். ஆனால் இறங்கும்பொழுது பணத்திற்கு ஈடாக அவளை விட்டுச் செல்லுமாறு கூறுகிறான். வேறு வழியின்றி மனைவியை விட்டு விட்டுப் பிள்ளைகளுடன் இசுதாக்கியர் செல்கிறார். வழியில் ஆற்று வெள்ளம் குறுக்கிடுகிறது. ஒரு பிள்ளையைத் தோளில் சுமந்து மறு கரையில் வைத்துவிட்டு அடுத்த பிள்ளையைத் தூக்கிச் செல்லத் திரும்பி வருகிறார். இந்நிலையில் இரு கரையிலுமிருந்த பிள்ளைகளைப் புலியும் ஓநாயும் கவர்ந்து செல்கின்றன. பின்னர்த் தனிமையில் சென்று ஓரிடத்தில் கூலி வேலை செய்து பிழைத்து வருகிறார்.

தன்னிடம் கப்பல் தலைவன் தகாத முறையில் நெருங்கிவர, ஞானபூடணி மரியன்னையிடம் வேண்டுகிறாள். அவன் கண்கள் குருடாகின்றன. கப்பல் தலைவனின் மனைவி மரியன்னையிடம் வேண்டத் திரும்பக் கண் பெற்று மனம் திருந்துகிறான். பணம் கொடுத்து ஞானபூடணியை வேற்றூருக்கு அனுப்பி விடுகிறான்.

இதற்கிடையில் உரோமைக்கும் துருக்கிக்கும் போர் ஏற்பட, உரோமை அரசன் இசுதாக்கியரைத் தேடிக் கொணர ஆணையிடுகிறான். வரும் வழியில் இசுதாக்கியர், ஞானபூடணி உள்ள உணவு விடுதியில் தங்குகிறார். பிள்ளைகளும் அங்கு எதிர்பாராமல் வந்து சேர்கின்றனர். உரையாடலால் ஒருவரையொருவர் கண்டு கொண்டு மகிழ்கின்றனர். போரில் இசுதாக்கியர் வெற்றி பெறுகிறார். பழைய பதவியும் செல்வமும் மீண்டும் கிடைக்கின்றன. இவ்வரலாற்றைக் கொண்ட நாடகம் 'எசுதாக்கியர்' எனவும் வழங்கப்படுகிறது. கத்தோலிக்கக் கிறித்தவரால் அண்மைக்காலம் வரை நடிக்கப்பட்டு வந்த இந்நாடகம் மறக்கப்பட்டு மறைந்து வருகிறது. சூ.இ.

**இசுதான்புல்** துருக்கி நாட்டின் மிகப் பெருமை மிக்க மாநகரமாகும். முன்னர் இந்நகரம் உதுமானியப் பேரரசின் தலைநகராயிருந்தது. இதனைப் பைசாண்டியம் என்றும் கான்சுடாண்டி நோபில் என்றும் முன்காலத்தில் கூறினர். பைசாண்டியப் பேரரசின் தலைநகராயிருந்தபோது பைசாண்டியம் எனப்பட்டது. கான்சுடைன் என்னும் பேரரசர் இதனைக் கான்சுடாண்டிநோபில் என்றுபெயர் மாற்றம் செய்தார். துருக்கிய மொழியில் இசுதான்புல் என்பது இசுலாம்புல் என்பதன் திரிபு என்பர். இசுலாம்புல் என்றால் இசுலாம் சமயத்தின் செல்வாக்குப் பெற்றது என்பது பொருள். 1930–ஆம் ஆண்டுவரை இதனைக் கான்சுடாண்டி நோபில் என்றே கூறினர். பின்னர் இதை இசுதான்புல் **(Istanbul)** என்று பெயர் மாற்றஞ் செய்தனர்.

ஆசியா, ஐரோப்பா ஆகிய இரு கண்டங்களிலும் அமைந்துள்ளது இந்நகரத்தின் தனிச்சிறப்பாகும். வடமேற்குத் துருக்கியின் பகுதியான பாசுபரசு நீர்ப்பிரிவின் தென் முனையிலுள்ளது இசுதான்புல். பாசுபரசு நீர்ப்பிரிவு, கருங்கடலையும் மார்மராக் கடலையும் இணைக்கிறது. இப்போது இது தலைநகரமாக இல்லாவிடினும் தொழிற்சாலைகள், வாணிகம், பண்பாடுபோன்ற பல்வேறு துறைகளின் சிறந்த மையமாக விளங்குகிறது.

இசுதான்புல், கி.பி. 330 முதல் 1433 வரை கான்சுடாண்டிநோபில் என்னும் பெயருடன் பைசாண்டியப் பேரரசின் தலைநகரமாய்த் திகழ்ந்தது. இந்நகரம் கி.பி. 1453 முதல் 1922 வரை உதுமானியப் பேரரசின் தலைநகராயிருந்தது.

துருக்கியக் குடியரசு 1923-இல் நிலைநாட்டப் பெற்றபோது, அங்காரா துருக்கியின் தலைநகராயிற்று. இசுதான்புல்லில் அமைந்துள்ள கடைவீதிகள், அருங்காட்சியகங்கள், அரண்மனைகள், உலகப் புகழ் பெற்ற மசூதிகள் போன்றவற்றைக் கண்டு களிக்க ஆயிரமாயிரம் சுற்றுலாப் பயணிகள் இங்கு வந்து செல்கிறார்கள்.

**பரப்பு:** இந்நகரத்தின் பரப்பளவு 238 ச.கி.மீ. ஆகும். பாசுபரசு பாலம் உலகிலேயே நான்காவதான நீண்ட தொங்கு பாலமாகும். இப்பாலம் இசுதான்புல்லின் ஆசிய-ஐரோப்பியப் பகுதிகளை இணைக்கிறது.

**மக்கள் தொகை:** இசுதான்புல் மாநகரத்தின் மக்கள்தொகை 1980-ஆம் ஆண்டுக் கணக்குப்படி 27, 72, 708 ஆகும். மக்கள்தொகையில் ஐந்தில் நான்கு பகுதியினர் ஐரோப்பியக் கண்டப் பகுதியில் வாழ்கின்றனர்.

மலைப்பாங்கான பகுதியில் இந்நகரம் அமைந்துள்ளமையால், இதன் தெருக்கள் செங்குத்தானவை. பழைய நகர்ப் பகுதிகளில் மட்டும் இன்னும் குறுகிய சந்துபொந்துகளையும், உருளைக்கல் தளம் போடப்பட்டுள்ளதையும் இன்றும் காணலாம்.

இசுதான்புல் பரந்த சாலைகளையும் பெரும் பூங்காக்களையும் சோலைகளும் சதுக்கங்களையும் காணலாம். குறிப்பிட்ட சில பொருள்கள் விற்பனையாகும் தெருக்களும் இங்குள்ளன. எடுத்துக்காட்டாக, துணிக்கடைகள் மிகுந்த தெரு, செப்புக் கொல்லர் தெரு, புத்தகக்கடைத் தெரு என்ற தனித் தெருக்களையும் கண்டுகளிக்கலாம். போர்வை போர்த்தது போன்று மூடப்பட்டுள்ள கடைத் தெருவொன்றில் ஆயிரக்கணக்கான கடைகள் அமைந்துள்ளன.

இசுதான்புல் நகரில் மட்டும் ஏறத்தாழ 500 மசூதிகளும் புகழ்பெற்ற மாளிகைகளும் நிரம்பியுள்ளன. சுல்தான் அகமது மசூதியை நீல மசூதி என்பர். மசூதிக்குள் நீலநிற ஓடுகள் வேயப்பட்டிருப்பதால் அதற்கு அப்பெயர் வந்தது. கலைமிளிர்விய மசூதி உதுமானியக் கட்டிடக் கலை வல்லுநரான சினான் என்பவரால் கி.பி. 1557-இல் கட்டி முடிக்கப் பெற்றது. பைசாண்டியப் பேரரசர் சசுடீனியன் **(Justinian)** என்பவரால் கி.பி. 530-இல் கட்டப்பெற்ற கிறித்தவத் திருச்சபையொன்றும் இங்குள்ளது. அதனைப் புனித சோபியா ஆலயம் என்பர். இத் திருச்சபையைப் பிற்காலத்தில் மசூதியாக மாற்றினர். இது 1935 இலிருந்து ஓர் அருங்காட்சியகமாக் கப்பட்டுள்ளது. இன்றும் இசுதான்புல்லில் பைசாண்டியக் கட்டிடக்கரல்வாய்கள், பண்டைய நகரச் சுவர்கள் போன்றவற்றின் அழிவுச் சின்னங்களைக் காணலாம். இன்றைய நகரின் வடபகுதியில் பாசுபரசின் எதிர்ப்புறத்தில் கி.பி. 1452-இல் கட்டப்பெற்ற கோட்டையொன்றுள்ளது. அதனை உருமேலி இசார் **(Rumeli Hisar)** என்பர்.



புனித சோபியா ஆலயம்

இசுதான்புல் நகரில் வாழும் மக்களுள் பெரும்பாலோர் துருக்கிய முசுலிம்கள் ஆவர். அர்மீனிய கிரேக்கக் கிறித்தவர்களும், யூதர்களும் இங்கு வாழ்கின்றனர்.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து இசுதான்புல் நகரின் மக்கள் தொகை வெகுவாகப் பெருகியுள்ளது. இந்நகரத்தின் 1970-ஆம் ஆண்டில், மக்கள்தொகை 1950-ஆம் ஆண்டை விட இருமடங்காகி, 1953-ஆம் ஆண்டை விட மும்மடங்காகியுள்ளது. இன்று அங்கு வாழும் மக்களுள் பாதியளவினர் இசுதான்புல்லிலேயே பிறந்தவர்கள். ஏனையோர் ஆசியத் துருக்கியின் நகரங்கள், கிராமங்கள் போன்றவற்றிலிருந்து வந்து குடியேறியவர்கள்.

மக்கள் தொகைப் பெருக்கத்தால் இசுதான்புல்லில் பல சிக்கல்கள் தோன்றியுள்ளன. மின்வசதி, எரிவாயு, குடிநீர் போன்றவை போதுமானதாக இல்லை. புதிதாக வந்து குடியேறியவர்கள் நகரின் வெளிப்புறத்தில் குடிசைகளில் வாழ்கிறார்கள். ஏனையோர் இக்கால மாடிவீட்டுப் பகுதிகளிலும் மர வீடுகளிலும் நெரிசலான மலைப்புறங்களிலும் வாழ்கின்றனர்.

இசுதான்புல் பல நூற்றாண்டுகளாகத் துருக்கியின் பண்பாட்டு மையமாகத் திகழ்கிறது. இசுதான்புல் பல்கலைக்கழகம், துருக்கிப் பல்கலைக்கழகங்களுள் மிகத் தொன்மையானதும் பெரியதுமாகும். இசுதான்புல் தொழில்நுட்பப் பல்கலைக்கழகமும்,

பாசுபரசுப் பல்கலைக்கழகமும் ஏனைய உயர்கல்வி நிலையங்களாகும்.

இசுதான்புல்லில் 15 பெரும் நூலகங்கள் உள்ளன. துருக்கியின் பெரும் நூற்பதிப்பகங்களும் நாளிதழ் வெளியீட்டாளர்களின் அலுவலகங்களும் இங்குள்ளன. மாநகரின் பொழுதுபோக்குக் கூடங்கள், நாடக மேடைகள், கலையரங்குகள் பல இங்குக் காணப்படுகின்றன.

பைசாண்டிய, இசுலாமிய, துருக்கியக் கலைகளின் சிறப்புகளை இன்றும் இங்குக் கண்டுகளிக்கலாம்.

பொருளாதார நிலை: துருக்கி நாட்டின் செய்பொருள் தொழிற்சாலைகளில் பாதிக்கு மேற்பட்டவை இசுதான்புல் பகுதியிலேயே அமைந்துள்ளன. சிமிண்டு, மருந்து வகைகள், மின்சாரத் துணைக்கருவிகள், கண்ணாடிப் பொருள்கள், தோல் பொருள்கள், எந்திரங்கள், பிளாசுட்டிக்குப் பொருள்கள், துணிமணிகள் போன்றவை இசுதான்புல் தொழிற்சாலைகளில் உற்பத்தியாகின்றன. பேருந்துகள், பாரவண்டிகள் போன்றவை உற்பத்தியாகும் தொழிற்சாலைகளும் இம்மாநகரில் அமைந்துள்ளன. துறைமுகத்தை யொட்டியுள்ள பாசுபரசுப் பகுதியிலும், பொன்கொம்புப் (Golden Horn) பகுதியிலும் கப்பல் கட்டும் கூடங்களும் கப்பல் பழுது பார்க்குமிடங்களும் உள்ளன.

இசுதான்புல்லின் அமைவிடம், வாணிகத்திற்கும் போக்குவரத்திற்கும் பெரும் மையமாக உள்ளது. துருக்கியின் சிறப்பான துறைமுகமாக இந்நகரம் கருதப்படுகிறது. பண்டங்களைச் சுமந்து வரும் கப்பல்கள், ஆசிய-ஐரோப்பிய இசுதான்புல் கடற்கரைகளில் தங்குகின்றன. ஆசியாவையும் ஐரோப்பாவையும் இணைக்கும் பாரவண்டித்தடம் ஒன்று இம்மாநகரின் வழியாகச் செல்கிறது. இருப்புப்பாதைத் தொடர்கள், ஐரோப்பிய இசுதான்புல்லை மேற்கு ஐரோப்பிய நாடுகளுடனும் ஆசிய இசுதான்புல்லைச் சிரியா, ஈராக்குப் போன்ற நாடுகளுடனும் இணைக்கின்றன. எசுல்காய் (Yesilkoy) விமான நிலையத்தில் உள்ளூர் விமானங்களும் பன்னாட்டு விமானங்களும் வந்திறங்குகின்றன.



இசுதான்புல்

நகர மக்கள் பேருந்துகள், படகுகள், வாடகைக் கார்கள் போன்றவற்றில் பயணம் செய்வர்.

வரலாறு: ஆசிய இசுதான்புல்லில் ஏறத்தாழ கி.மு. 3000 ஆண்டளவிலேயே மக்கள் வாழ்ந்தனர். கிரேக்கக் குடியேற்றத்தினர் கி.மு. ஏழாம் நூற்றாண்டின் இடையில் பைசாண்டியம் என்னும் பெயரில் ஐரோப்பியக் கடற்கரையில் நகரொன்றை அமைத்தனர். பின்னர் இந்நகரம் உரோமானியப் பேரரசின் பகுதியாயிற்று. முதலாம் கான்சுடன்டைன் என்னும் உரோமானியப் பேரரசர், கி.பி. 324-ஆம் ஆண்டில் பைசாண்டியத்தைத் தம் தலைநகராக்கிக் கொண்டார். இது கி.பி. 330-இல் அதிகார முறையிலமைந்த தலைநகரம் என்றறிவிக்கப்பட்டது. கான்

சுடன்டைன் நினைவாக இந்நகரம் கான்சுடாண்டி நோபில் எனப்பட்டது.

உரோமானியப் பேரரசு கி.பி. 395-இல் இரு கூறுகளாகப் பிரிந்தது. காட்டு மிராண்டிக் கூட்டத் தைச் சார்ந்தவர்கள் கி.பி. நான்காம் நூற்றாண் டின் இடையில் மேலை உரோமானியப் பேரரசை வென்றார்கள். கான்சுடாண்டிநோபில் கீழை உரோ மானியப் பேரரசின் தலைநகராய்த் தொடர்ந்தது. இதைப் பைசாண்டியப் பேரரசு என்றும் கூறினர். கி.பி. 532-ஆம் ஆண்டில் முதலாம் சசுடீனியன் என் பாரின் ஆட்சிக்கால்த்தில் ஏற்பட்ட அரசாங்கத்திற் கெதிராக நடைபெற்ற கலகங்களின்போது நகரின் பெரும்பாகங்கள் அழிந்து போயின. சசுடீனியன் அதைப் புதுப்பித்தார். அவர் கட்டிய கட்டடங் களில் ஒன்றுதான் சோபியா திருச்சபையாகும்.

அடுத்து வந்த பல நூற்றாண்டுகளில் கான்சு டாண்டிநோபில் பாரசீகர், அராபியர், காட்டு மிராண்டி இனத்தவர்கள் போன்றோரின் தாக்குத லுக்கு இலக்கானது. இந்நகரைக் கி.பி. 1204-இல் நான்காம் சிலுவைப்போரின் தாக்குதலுக்கு ஈடுபட்ட வர்கள் கைப்பற்றிக் கொண்டனர். அப்போது இந் நகரம் பெரும் அளவில் அழிவுற்றது. சிலுவைப்போரில் ஈடுபட்ட அரசர்கள் இந்நகரைக் கி.பி. 1261-ஆம் ஆண்டு வரை ஆட்சி செய்தனர். அந்த ஆண்டில் அதனைப் பைசாண்டிய அரசர்கள் திரும்பக் கைப் பற்றிக் கொண்டார்கள்.

உதுமானியத் துருக்கியர்கள், கான்சுடாண்டி நோபிலைக் கி.பி. 1453-இல் கைப்பற்றி அதை உது மானியப் பேரரசின் தலைநகராக்கிக் கொண்டனர். துருக்கியர்கள்தாம் இந்நகரை இசுதான்புல் என் றழைத்தனர். இந்நகரம் கி.பி. 16-ஆம் நூற்றாண் டின் இடைப்பகுதியில் ஏறத்தாழ ஐந்து இலட்சம் மக்களுடன் பெரும் வாணிகப் பண்பாட்டு மையமா யிருந்தது.

உதுமானியப் பேரரசு கி.பி. 17-ஆம் நூற்றாண் டின் பிற்பகுதியில் நலியத் தொடங்கியது. பேரர சைத் திறனுள்ளதாகவும் ஐரோப்பிய மயமாகவும் ஆக்கச் சுல்தான்கள் கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் பல சீர்திருத்தங்களை மேற்கொண்டனர். மேற்கத் தியப் பாணியில் பள்ளிகளும் பல்வேறு வளர்ச்சித் திட்டங்களும் இசுதான்புல்லுக்குக் கொணரப்பட்டன.

முதல் உலகப் பெரும் போரின்போது, நேசப் படையினர் உதுமானியப் பேரரசைத் தோற்கடித்த னர். அவர்கள் 1918 முதல் 1923 வரை இசுதான் புல்லைத் தம் வயமாக்கிக் கொண்டனர். கமால் பாட்சா முசுதாபா ஆட்டாட்டர்க்கு என்பார் 1922-ஆம் ஆண்டில் துருக்கியின் அரசைக் கைப்பற்றிக் கொண்டு சுல்தானிய ஆட்சிமுறையை அகற்றினார். துருக்கி 1923-இல் ஒரு குடியரசு நாடாகியது. அங்காரா அதன் தலைநகராயிற்று. இசுதான்புல்லின் மக்கள் தொகை இருபதாம் நூற்றாண்டின் இடைப்பகுதி யில் பெருமளவிற்குப் பெருகி வளர்ந்தது. பின்னர் 1973-இல் கட்டப்பெற்ற பாசுபரசுப் பாலம் தொழில் வளர்ச்சிக்கு ஆக்கம் தந்ததுடன், இசுதான்புல்லின் சிறப்பினைத் தொடர்ந்து காக்க வழிவகை செய் தது. தொன்மையான பல வரலாற்று நினைவுச் சின்னங்கள் இன்றும் நன்கு பாதுகாக்கப் பெற்றுச் சீரும் சிறப்புமாக உள்ளன. உலகப் புகழ்பெற்ற பெருநகரங்களுள் இசுதான்புல்லும் ஒன்று.

**இசுநாபக சஞ்சுவாம் அம்மானை** கி.பி. 19-ஆம் நூற்றாண்டில் தோன்றிய கிறித்தவத் தமிழ் இலக்கியம். இது யாழ்ப்பாணத்தினைச் சேர்ந்த புவி மன்ன சிங்க முதலியார் என்னும் புலவரால் இயற் றப்பட்டது. இது புனிதயோவான்மீது பாடப்பட்ட ஒரு தோத்திர நூல். இது அம்மானை இலக்கிய வகையில் அமைந்தது. இந்நூல், கி.பி. 1892-ஆம் ஆண்டில் அச்சியற்றி வெளியிடப்பட்டது.

**இசுபாக்கு, பெஞ்சமின்** குழந்தைகளின் மனநிலையையும் வளர்ச்சிநிலைகளில் அவர்களிடம் காணப்படும் நடத்தைகளின் பொருளையும் முழுமை யாக ஆராய்ந்து, பல நூல்களை எழுதிய உளமருத்து வர் ஆவார். இசுபாக்கு (Spock Benjamin) இரண் டாம் உலகப் போரில் மருத்துவராகப் பணிபுரிந்தார். பின்னர்ப் பிட்சுபர்க்குப் பல்கலைக் கழகத்தில் (குழந் தைகளின் வளர்ச்சித் துறையில்) இவர் பேராசிரிய ராகப் பணியாற்றினார். இவர் குழந்தைகளின் நலனுக்காகவும் பெற்றோர் அறிவு வளர்ச்சிக்காகவும் பல நூல்களை எழுதியுள்ளார். அவற்றுள் 'இளங் குழவி குழந்தை நலம்' (Baby and child care) என்னும் நூல் உலகெங்கிலும் ஆயிரக்கணக்கான பெற்றோர் களால் விரும்பிப் படிக்கப்பட்ட நூலாகும். இசு பாக்கு குழந்தைகளுக்குக் கடுமையான தண்டனை கொடுப்பதையும் உளக்குலைவு ஏற்படக் கூடியவாறு அவர்களைக் கடிந்து கொள்வதையும் எதிர்த்தார். குழந்தைகளின் உளப் பாங்கை அறிந்து அதற்கேற்ப அவர்களிடம் அன்புடன் நடந்து கொள்வதே குழந் தைகளின் மனநலத்திற்கு இன்றியமையாததாகும் என்று கருதினார். குழந்தை வளர்ப்பில் பெற்றோர் களின் கடமை என்ன என்பதைப் பற்றியும் விரிவான நூல்களை இவர் எழுதியுள்ளார்.

**இசுபாண்டினி (கி.பி. 1774-1851)** என்பவர் இத்தாலியில் வாழ்ந்த இயலிசைப் புலவராவார். இவர் தொடக்கக் காலத்தில் இசை நாடகங்களை எழுதி வந்தார்; இத்தாலிய இசைக் கழகத்திற்குச் சில காலம் தலைவராக இருந்தார்; சில காலம்

செருமனியிலும் வாழ்ந்தார்; இறுதிக்காலத்தில் இவர் பாரிசு நகரத்தில் வாழ்ந்தார். அக்காலத்தில் இவர் புகழ்பெற்ற பிரெஞ்சு இசைநாடகங்களை இயற்றினார். இசுபாண்டினியின் (Spontini) இசைநாடகங்களுள் ஒலிம்பி (Olimpie), பெர்னாண்டு கார்டெ (Fernand Cotez), சூலீ (Julie), மில்ட்டன் (Milton) போன்றவை புகழ்பெற்றவை. இவர் சில பாடல்களையும் இயற்றி இசை அமைத்துள்ளார்.

**இசுபார்ட்டா** கிரீசிலுள்ள இலக்கோனியா (Laconia) மாநிலத்தின் தலைநகரம். இது தொன்மையான வரலாற்றுச் சிறப்புடையது. தெற்குப் பெலப்பனேசசில் (Southern Peloponnesus) ஏரோட்டசுப் பள்ளத்தாக்கில் (Eurotas valley) அமைந்துள்ளது. இந்நகரம் இயற்கையால் அமைந்த மலை அரண்களை மூன்று பக்கங்களிலும் கொண்டுள்ளது. இன்றைய இசுபார்ட்டா (Sparta) நகரம் கி.பி. 1834-ஆம் ஆண்டு பழைய இசுபார்ட்டா நகரம் அமைந்த இடத்திலேயே அமைக்கப்பட்டுள்ளது. இந்நகரத்தின் மக்கள் தொகை 15,915 (1981). இங்கு ஒலிவ எண்ணெய், ஆரஞ்சுப்பழம் போன்றவை பெருமளவில் உற்பத்தியாகின்றன.

தொன்மை மிக்க இசுபார்ட்டா நகரத்தின் இடிபாடுகள் பல இங்கு நடைபெற்ற அகழாய்வின் மூலம் தெரியவந்தன. இந்நகரம் கி.மு. 5-ஆம் நூற்றாண்டில் அழிந்த நிலையில் இருந்ததாகத் தூசிடைடிசு (Thucydides) என்னும் வரலாற்று ஆசிரியர் கூறுகிறார். இங்குச் சில இடிந்த கோயில்களும் சிதைவுற்ற கட்டடங்களும் மட்டும் இருந்ததாக அவர் கூறுகிறார். மைசீனியர்களின் காலத்தில் (Mycenean Age - கி.மு. 1600-கி.மு. 1200) இசுபார்ட்டா ஒரு சிறந்த நகரமாக விளங்கியது. இந்நகர அரசரின் மனைவியான எலன் என்பவளைப் பாரிசு என்பவன் தூக்கிச் சென்றான். இதன் விளைவாகத் திரோசன் போர் (Trojan Wor) ஏற்பட்டது. இப்போர் கி.மு. 11-ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்ததாகச் சொல்லப்படுகிறது.

தோரிய (Dorian) இனத்தவர் இந்நகரத்தினைக் கைப்பற்றினர். இவர்களது கொடுங்கோலாட்சியினால் பிற்காலத்தில் இதன் வரலாறு மாறுபட்டது. இவர்கள் பிடித்த பகுதிகளில் வாழ்ந்த இசுபார்ட்டாவின் பழங்குடிகள் அடிமைகளாக்கப்பட்டனர். இவர்கள் எலாட்டுகள் (Eelots) எனப்பட்டனர். இலக்கோனியாவின் பிற பகுதிகளில் வாழ்ந்த தோரியர்களுக்கு முன்னர் வாழ்ந்தவர்கள், பிரியோக்கி (Periocci) எனப்பட்டனர். இவர்களுக்கு அரசியல் உரிமை மறுக்கப்பட்டது. ஆனால் சுதந்திரமாக இருந்தனர். இவர்கள் போரிடும் தொழிலில் ஈடுபட்டிருந்தனர்.

இந்நகரத்தின் மக்கள்தொகை கி.மு. 8-ஆம் நூற்றாண்டில் உயர்ந்து காணப்பட்டது. இக்காலத்தில் இசுபார்ட்டாவின் மக்கள், மலைகளைக் கடந்து சென்று மெசினியாவின் (Messenia) மீது படையெடுத்தனர்; அங்கிருந்த மக்களை அடிமைப்படுத்தினர். இப்படையெடுப்பின் விளைவாக இசுபார்ட்டா புகழ் பெற்றது. அது பல கலைகள் விளங்கும் நகரமாகக் கருதப்பட்டது. பிறநாட்டுக் கவிஞர்களையும் கலைஞர்களையும் இந்நகரம் தன்பால் ஈர்த்தது. இசுபார்ட்டா மக்கள், கி.மு. 668-இல் நீண்ட நாட் பகைவர்களான ஆர்கசு (Argos) எனப்படுவோரால் தோற்கடிக்கப்பட்டனர். அப்போது மெசினியாவிலும் கிளர்ச்சி ஏற்பட்டது. இதனால் இசுபார்ட்டா மக்கள் தங்களது இராணுவ அமைப்பை வலிமை மிக்கதாகத் திருத்தி அமைத்துக் கொண்டனர்.

இசுபார்ட்டா மக்கள் கி.மு. ஆறாம் நூற்றாண்டில் பெலப்பனேசியாவின் பல பகுதிகளைக் கைப்பற்றினர். இந்நாடுகளில் செல்வராட்சிக்குத் துணை நின்று அவர்களைப் பெலப்பனேசிய சங்கத்தில் இணைத்தனர்.

மக்கள்: தொன்மைக் காலத்தில் இசுபார்ட்டிய மக்களுள் பெரும்பாலோர் வேளாண்மையில் ஈடுபட்டிருந்தனர். சில உயர்குடி மக்கள் சொந்தமான நிலங்கள் வைத்திருந்தனர். நாட்டின் நிலங்கள் அனைத்தும் அரசிற்குச் சொந்தமானவை. அவற்றில் பலர் வேலை செய்தனர்.

பெரிய குடும்பம் ஒன்றைக் காக்க முடியாத அளவிற்கு இம்மக்களின் பொருளாதாரம் சீர்கெட்ட நிலையில் இருந்ததால், பெரும்பாலோர் தங்களுக்கு வேண்டாத பிள்ளைகளை உயர்ந்த மலைகளுக்கு அழைத்துச் சென்று மலைமீதிருந்து அவர்களைத் தள்ளிக் கொன்றனர்.

அக்காலத்தில் இசுபார்ட்டா மக்கள் ஆண்பிள்ளைகளைப் பெற்றவுடன் தத்தம் பிள்ளைகளை நாட்டுப் பணிக்கென விட்டுவிட்டனர். தாயிடமிருந்து 7 வயதுச் சிறுவன் பிரிக்கப்பட்டு 15 சிறுவர்களடங்கிய ஒரு குழுவில் சேர்க்கப்பட்டான். ஒன்றாகச் சேர்ந்தே அவன் உணவு உட்கொள்ள வேண்டும். இச்சிறுவர் குழுவில் திறமையும் அறிவுக்கூர்மையும் மிக்க ஒருவன், அக்குழுவின் தலைவன் ஆனான். பிறர் அவனுக்குக் கீழ்ப்படிந்து நடந்தனர். 12 வயதானபின் சிறுவர்களுக்குப் பல கடுமையான பயிற்சிகள் அளிக்கப்பட்டன. நாணல் படுக்கையே அவனுக்கு அளிக்கப்படும், நாணலைக் கைகளால் அச்சிறுவனே ஒடிக்க வேண்டும். குதித்தல், தாண்டுதல், ஓடுதல், மற்போர், போர்க்கருவிகளை இயக்குதல் போன்ற பயிற்சிகள் சிறுவர்களுக்கு அளிக்கப்பட்டன. கல்வி கற்பது



இசுபார்ட்டா

முதன்மையாகக் கருதப்படவில்லை. எனினும் 'இலியது' (Illiad) என்ற நூலைக் கற்றனர்; போர்கள் பற்றிய பாடல்களைப் பாடினர்.

அச்சிறுவன் இருபது வயதானபின் குடியுரிமை பெறுகிறான். திருமணம் செய்துகொள்ளும் உரிமையும் வழங்கப்படுகிறது. இவ்வயதிலிருந்து அறுபது வயதுவரை போர்த்தொழிலில் நாட்டிற்காக ஈடுபடுத்தப்படுகிறான். அரசு நடத்தும் சட்டமன்றக் கூட்டங்களிலும் கலந்துகொள்கிறான். 60 வயதிற்குப் பின் பிற சிறுவர்களுக்குப் போர்ப்பயிற்சி அளித்து எஞ்சிய இறுதிக் காலத்தைக் கழிக்கிறான். இத்தகைய கடுமையான பயிற்சியின் காரணமாக இசுபார்ட்டா மக்கள் உறுதியான உள்ளமும் திறனும் அஞ்சா நெஞ்சமும் அமைதியான இயல்பும் கொண்டிலங்கினர்.

பெண்கள் உரிமையுடன் இருந்தனர். அவர்களும் உடற்பயிற்சிகள் பல மேற்கொண்டனர். திருமணமானவர்கள் வீட்டின் பொறுப்புகளைக் கவனித்து வந்தனர். பல பெண்கள் வாணிகத்தில் ஈடுபட்டுச் செல்வர்களாகத் திகழ்ந்தனர்.

பாரசீகர்கள் கிரீசின் மீது படையெடுத்தபோது இசுபார்ட்டா மக்கள் அப்போரில் கலந்துகொள்ளவில்லை. முதல் பாரசீகப் படையெடுப்பில் இசுபார்ட்டா, தனது உதவியை ஆதினியர்களுக்கு அளிப்பதாக உறுதிமொழி அளித்தது. ஆனால் அவர்கள் மராத்தான் (Marathon) என்ற இடத்திற்குச் செல்வதற்கு முன் ஆதினீயர்கள் வெற்றி பெற்றுவிட்டனர். ஆதென்சுடன் ஆர்கசு (Argos) கி.மு. 461-இல் இணைந்து, இசுபார்ட்டாவின் மேலாண்மையை எதிர்த்தது. தனக்ரா (Tanagra) என்ற இடத்தில் கி.மு. 458-இல் நடைபெற்ற பெரும்போரில் இசுபார்ட்டா வெற்றி பெற்றது. இதனால் ஆதென்சு கடலில் தம் வல்லமையைச் செலுத்த முயன்றது. இந்நாடுகளுக்கு இடையில் கி.மு. 445-இல் 30 ஆண்டு அமைதி உடன்படிக்கை ஏற்பட்டது. இதன் விளைவாக இசுபார்ட்டா தனது மேலாண்மையை நிலப்பகுதிகளில் நிலைநிறுத்திக் கொள்ளவும், ஆதென்சு கடல் மேலாண்மையைப் பெறவும் வழி வகுக்கப்பட்டது.

30 ஆண்டு அமைதி உடன்படிக்கை கி.மு. 431 இல் முடிவடைந்தவுடன், இசுபார்ட்டா, மீண்டும் ஆதென்சின் மீது படையெடுக்கப் போவதாக அறிவித்தது; சில பகுதிகளின் மீதும் படையெடுத்தது. இப்படையெடுப்பு பெலப்பனேசிசுப் போர் எனப்பட்டது. முதல் 10 ஆண்டுகள் இரண்டு நாடுகளும் வெற்றி தோல்வியின்றிப் போரிட்டன. இப்போரில் பல பகுதிகளை இருநாடுகளும் கைப்பற்றின. அமைதி உடன்படிக்கை ஒன்று கி.மு. 421-இல் ஏற்பட்டது.

இருப்பினும் இருநாடுகளும் தங்களுக்குள் மோதிக் கொண்டன.

இசுபார்ட்டா, அட்டிகாவிலிருந்த திசிலியா (Decelea) என்ற இடத்தில் தனக்கு நிலையான ஒரு அரணை அமைத்துக் கொண்டது. இலைசாண்டர் (Lysander) என்னும் திறமை மிக்க இசுபார்ட்டாவின் கடற்படைத் தலைவர், தமது கடற்படையைப் பாரசீகர்களின் உதவி கொண்டு அமைத்தார். இவர் ஆதென்சின் கடற்படையை ஏகோசுபாட்டமி (Aegospotami) என்ற இடத்தில் கைப்பற்றி அழித்தார். ஆதென்சினுள் எப்பொருளும் நுழையாமல் தடுத்து அவர்களைப் பசியினால் வாடச் செய்து, இசுபார்ட்டாவின் மேலாண்மையை ஏற்றுக் கொள்ளச் செய்தார். இத்துடன் இப்போர் முடிவுற்றது.

பிற்காலத்தில் இசுபார்ட்டாவின் நிலை தாழ்ந்தது. இந்நகரம், கி.பி. 396-இல் அலரிக்கு என்பவரின் தலைமையின் கீழ் வந்த விசிகோத்துகளால் அழிக்கப்பட்டது.

**இசுபால்டிங்கு, மறைத்திரு:** இவர் சென்ற நூற்றாண்டில் கிறித்தவ சமய ஊழியத்திற்காக அமெரிக்காவிலிருந்து தமிழகத்திற்கு வந்த அமெரிக்கர்களுள் ஒருவர். இவரது முழுப் பெயர் மறைத்திரு இலெவி இசுபால்டிங்கு (Rev Levi Spaulding) என்பதாகும். இவர் கி.பி. 1791-ஆம் ஆண்டு ஆகசுட்டுத் திங்கள் 22-ஆம் நாள் ஐக்கிய அமெரிக்க நாட்டில் (U.S.A.) பிறந்தார். இவர் தார்ட்டுமத்து நகரிலுள்ள கல்லூரியில் (Dartmo[illegible] College) பயின்று பட்டம் பெற்றார்; அந்தோவர் இறையியற் கல்லூரியில் சமயக்கல்வி பயின்றார். கி.பி. 1820-ஆம் ஆண்டு இவர் கிறித்தவ சமய ஊழியம் புரிவதற்காக ஈழ நாட்டிற்கு வந்தார். அந்நாட்டிலுள்ள மானிப்பாய் என்னுமிடத்தில் பல ஆண்டுகள் இருந்து தொண்டாற்றினார். பின்னர் இவர், உடுவில் என்னுமிடத்திலிருந்து ஒரு மகளிர் பள்ளியின் நிருவாகப் பொறுப்பேற்றுத் தம் மனைவியாரொடு கி.பி. 1833-ஆம் ஆண்டில் அங்குச் சென்றார். அங்கு நாற்பதாண்டுகள் பணிபுரிந்தார். இவர், கி.பி. 1844-ஆம் ஆண்டு அமெரிக்க ஐக்கிய நாட்டிற்குச் சென்று கி.பி 1846-ஆம் ஆண்டில் மீண்டும் ஈழநாடு வந்து பணிபுரிந்தார். இவர் கிறித்துவசமயம் பற்றிய இருபதிற்கும் மேற்பட்ட தமிழ்நூல்களை எழுதியுள்ளார். சில கிறித்தவ இசைப் பாடல்களையும் இயற்றியுள்ளார். மோட்சப் பயணம் (Pilgrims Progress) என்னுமொரு மொழி பெயர்ப்பு நூலையும் ஆக்கியுள்ளார். மறைத்திரு நைட்டு என்பார் உருவாக்க முயன்ற தமிழ் அகராதியினை அவருக்குப் பின்னர், ஈழநாட்டுப் புலவர் சந்திரசேகரன் போன்றார் உதவியொடு நிறைவு செய்து கி.பி. 1842-ஆம் ஆண்டில் வெளியிட்டார். யாழ்ப்பாணம் அகராதி அல்லது மானிப்பாய் அகராதி என்று அது வழங்கப் பெற்றது. அந்த அகராதி வீரமாமுனிவரின் சதுரகராதியின் அடிப்படையில் அமைந்திருந்தாலும், அளவிலும் தரத்திலும் உயர்ந்ததாக விளங்கியது. விவிலிய நூற்பயிற்சிக்குப் பயன்படும் ஓர் அகராதியையும் இவர் உருவாக்கினார். இவர் கி.பி. 1874-ஆம் ஆண்டு சூன் திங்கள் 8-ஆம் நாள் இறந்தார். ஓராண்டிற்குள் இவர்தம் மனைவியாரும் காலமானார்.



**இசுபான் ஒதுமார் (கி.பி. 1878-1950)** ஆசுத்திரிய நாட்டுத் தத்துவ, சமூகவியல் அறிஞர் ஆவர். இவர் வியன்னா (Vienna) என்ற நகரில் பிறந்தார்; அந்நகரிலேயே கல்வி பயின்றார்; அந்நகரில் சமூகவியல், பொருளாதார இயல் ஆகிய இரு துறைகளிலும் பேராசிரியராகப் பணியாற்றினார்.

இவரது சமூக அமைப்பு புதிய சமூக அமைப்புக் கோட்பாடு (Neo Romantic Universalism) எனக் கூறப்பட்டது. இச்சமூக அமைப்பில் தனித்து வாழும் இயல்புடைய மனிதன், சமூக அமைப்பியலின் ஒரு பகுதியாக உள்ளான். பல்வேறு கோட்பாடுகளைக் கொண்ட சமூகவியல் அமைப்புகளில் மனிதனின் நிலைகள் பாகுபடுத்தப்பட்டுள்ளன.

பல்வேறு கோட்பாடுகளாவன: ஆடம் இசுமித்து, தேவிடு இரிக்கார்டோ (Adam Smith and David Ricardo) ஆகியவர்களின் பொருளாதார முற்போக்குக் கொள்கை, பயன்பாட்டாளர் கொள்கை (Utilitarianism), பல்வகையான சமூக ஒப்பந்தக் கோட்பாடு, இயற்கைச் சட்டம், சமூகவியல் கோட்பாடு (Theory of Social Life), ஆட்சி வேண்டாக் கொள்கை (Anarchism), மாக்கியவல்லியனிசம் (Machiavellianism), மார்க்சியம் (Marxism), ஆகிய கோட்பாடுகளில் மனிதன் நிலைகள் வேறுபடுத்தப்பட்டுள்ளன.

இவற்றுள், பல வகையான கூட்டமைப்புகளின் கருத்துகளை ஒன்று சேர்த்து அறிவு ஆராய்ச்சிப் பணியில் ஈடுபடுமிடத்து, தனிப்பட்டவரின் நன்மைகள் குறைவாகக் காணப்பட்டன. இத்தகைய சமூக அமைப்புக் கோட்பாடுகள் தவறானவை என்று குற்றம் சுமத்தினர். மனிதனின் உரிமைகளைக் காக்கும் அரசு, பொது உலகச் சமூக அமைப்புக் கோட்பாட்டுடன் தொடர்புடையது. இதையே பிற்காலத்தவர் பின்பற்றலானார்கள். இசுபான் ஒதுமாரின் உலகளாவிய சமூகக் கோட்பாடு (Universalism), பாசியர் (Facists) களால் முழுவதும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆன்மிகப் பண்பு என்பது மனிதனிடத்திலுள்ள தனிச் சிறப்பாகும். இது மற்ற உயிரினங்

களிடத்துக் காணப்படுவதில்லை. இவ்ஆன்ம வளர்ச்சி மனிதன் தன்னை மட்டும் உணர்வதோடு நின்று விடுவதன்று. இவ்வான்மா மற்றவர்களின் உணர்ச்சி களைப் புரிந்து கொள்ளும் தன்மை பெற்றது.

இசுபான் ஒதுமார் (Spann Othmar) என்பவரால் அமைக்கப்பட்ட செசுவெயிங் (Gezweing) என்னுங் கோட்பாட்டில் ஆன்மீக வளர்ச்சியின் தொடர்ச்சி உள்ளது.

மனிதர்கள் சமூக அமைப்பில் மிக நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளவர்கள் என்ற உண்மை, ஆன்மிக உணர்ச்சிகளின் விளைவுகளிலிருந்து தெரிந்து கொள்வதற்கு முன்னதாகவே உணரக்கூடியதாக இருந்தது. கலைஞன், பொதுமக்கள்; தாய், குழந்தை; ஆசிரியர், மாணவர்; இது போல் சமூகம், மனிதன் ஆகிய இவை இரண்டும் ஒன்றுடன் ஒன்று தொடர் புடைய கருத்து. மனிதர்களின் கூட்டமைப்பு இல்லை யெனில், சமூக அமைப்பு ஏற்படாது.

இக்கூற்றை இசுபான் ஒதுமார் ஒழுங்குமுறைப் படியுள்ள அளவையியலின்படி கூறவில்லை. இதை நேர் எதிர்மாறாக விளக்கிக் கூறுகிறார். மற்றவர் களால் ஆசிரியர் என அழைக்கப்படுபவர் முன்பு மாணவராக இருந்து பின்புதான் ஆசிரியராக வர முடிந்தது என்பதை வலியுறுத்தினார்.

ஆசிரியர் மாணவர்களின் அனுபவத் தன்மை களைக் குறிப்பிடுகையில், ஆசிரியர் பாடங்களை நடத்துவதனால் கருத்துகளைத் தெரிந்து கொள்ள வாய்ப்பு உண்டாகிறது. ஆனால் மாணவர்கள் ஆன் மிகப் பண்புகளை ஒன்று சேர்த்துத் தம் மனத்தினுள் அனுபவத் தன்மைகளை ஏற்றுக் கொள்கிறார்கள் எனக் கூறியுள்ளார்.

இவர் கலை, குடும்பம், கல்வி ஆகிய நிறுவனங் களில், முன்னதாக ஆசிரியர், மாணவர், சமூகம் மனிதன், கலைஞன், பொதுமக்கள் ஆகியோர் பற் றிய தொடர்புகள் உள்ள அமைப்பு முற்காலத் திலேயே இருந்து வந்துள்ளது என்றும், இந்நிறுவனங் கள் மனிதனால் செய்து பெறப்படும் உயர்ந்த உண்மை, மதிப்பு ஆகியவற்றைப் பெற்றுள்ளன என் றும் கூறுகின்றார்.

ஆசிரியர் மாணவர் தொடர்பில் கல்வியினைப் பற்றி ஒருவர் நன்கு புரிந்து கொண்டால்தான், மற்றவர்களுக்குக் கல்வியின் பொருளை விளக்கிக் கூற முடியும்; இல்லையெனில் விளக்கிக் கூற முடி யாது.

உலக அமைப்பில், சமூக அமைப்பு உயர்ந்த இடத்தைப் பெற்றுள்ளது. ஆனால், கல்வி, குடும்பம், கலைஞன் ஆகியவை இந்த அமைப்பில் ஒரு பகுதி யாகும். உலகளாவிய தோற்ற அமைப்பில், சமூகம் ஒரு நிலையான தோற்றத்தைப் பெற்றுள்ளது. இது படிமரபு மதிப்பைப் பெற்றுள்ளது. உலகளாவிய தோற்றமும் சமூக அமைப்பும் ஒன்றோடொன்று இணைந்த ஒரு பொதுமைக் கருத்தாகும்.

இயற்கையின் சமூக அமைப்பு எவ்வாறு ஏற் பட்டது எனில், யார் ஒருவர் ஒரு சமூக அமைப்பை நடத்திச் செல்கின்றாரோ அவரே அச்சமூக அமைப் பிற்குத் தலைவர். உடல் வலிமை வளர்ச்சி குறைந்த வர்கள், உடல் வலிமை வளர்ச்சி பெற்றவர்களிடம் பணிந்து செல்ல வேண்டும் எனப்பழங்காலச் சமூகக் கோட்பாட்டில் காணப்படுகிறது.

சமூகவியல் கோட்பாட்டில், நீதிப் பங்கீட்டுக் கோட்பாடானது சமநிலையின்மைச் செயலின் அடிப் படையைத் தழுவி அமைக்கப்பட்டது. சமூகவியல் மதிப்பீட்டில் தன்னுரிமை நிலை (Liberty) அடிப் படையானதாகும்.

இவரது சமநிலையின்மைக் (Inequality) கோட் பாடு அரசியல் தத்துவத்தில் இடம்பெற்றுள்ளது. இவரது நில உரிமைக் கோட்பாடு, மனித நலன் கருதி அதிகாரங்கள் அனைத்தும் மத்தியில் ஒரு நிலை யான அதிகாரியிடம் ஒப்படைக்கப்பட வேண்டும் என்றும் அதில் சமூகவியல் அடிப்படையில் மனித நலன் கருதி மேற்கூறிய நிறுவனங்கள் செயற்பட வேண்டும் என்றும் கூறுகிறது.

**இசுபானியத் தத்துவம்** இராமன் லல் (கி.பி. 1232–1316) முதன் முதலாக இசுபானியத் தத்து வத்தை ஆய்வு செய்யத் தொடங்கினார். இசுபானி யத் தத்துவக் கருத்துகள், உள்ளுணர்வு (Intution) அடிப்படையில் அமைந்ததாகவும், உலகம், இறை வன் பற்றிய கருத்துகள் நிறைந்ததாகவும், பகுத் தறிவிற்கு அடங்காததாகவும் அமைந்திருந்தன. அவர்களுடைய பண்பாடு, செழிப்பானதாகவும் கற் பனை நிறைந்ததாகவும் மன எழுச்சியுடையதாகவும் துடிப்புடையதாகவும் உள்ளது. ஆனால் தத்துவக் கருத்துகள் குறைவாகக் காணப்படுகின்றன. இவ் வாறு இசுபானியத் தத்துவம் மேல் நாட்டுத் தத்து வத்தோடு இணைய முடியாத நிலை பதினேழாம் நூற்றாண்டு வரை நிலவியது.

செனக்காவின் (Seneca) தத்துவம், இசுபானியத் தத்துவமாகக் கருதப்பட்டது. அவர் ஓர் ஆழ்ந் தாய்ந்த தத்துவ ஞானியாகக் கருதப்படவில்லை. ஆயினும் அவர் மிகவும் கடினமான ஒழுக்க விதி களைப் போதித்தார்.

அரேபிய இசுபானியக் கல்வி நிலையங்கள், அரி சுடாட்டில், புதிய பிளேட்டோனிசம், பிளோட்டி

னசு முதலியவர்களின் கருத்துகளை மதிப்பீடு செய்வன வாக அமைகின்றன. இசுபினோர் முகம்மதிய ஆய்வு கள், குரானின் மதிப்பீடுகளாகவும் பகுத்தறிவையும் நம்பிக்கையையும் இணைப்பனவாகவும் அமைந்திருக் கின்றன. ஒரு பெரிய மதப்புரட்சி கி.பி. பன்னிரண் டாம்நூற்றாண்டின் முடிவில் ஏற்பட்டது.அதுகொலை யையும் பல நூல் நிலையங்களின் அழிவையும் ஏற் படுத்தியதல்லாமல் அவரோசு (Averroes), மைமோ னிடசு (Maimanides) ஆகியோரையும் நாடு கடத் தியது. அதன்பிறகு அல்-கசாலி (Al-Ghazali) யின் பெர்சிய மறைப்பொருளின் கொள்கைகள், அரேபிய இசுபானிய நாட்டில் பரவலாயின. கிறித்தவர்களை எதிர்த்து நடத்திய புனிதப் போராட்டத்தில் மூன்று நூற்றாண்டுகளாக நிலவிய இராணுவத்துற வுத் (Military Asceticism) தொடர்பான தத்துவச் சிந்தனைக்கு எதிரான சூழ்நிலை உருவாகியது.

கிரேக்கச் சிந்தனைகள் மேற்கு ஐரோப்பிய நாடுகளில் பரவின. அவரோசு (Averroes, கி.பி. 1126-1198) என்னும் இசுபேனோ அரேபிய தத்துவ ஞானி, அரிசுடாட்டிலின் தத்துவக் கருத்துகளை மதிப்பீடு செய்தார். அவருடைய நூல்கள் கிடைக்க வில்லை. அவரோசு 'இரட்டை உண்மை' (Double Truth) என்ற கொள்கையை வலியுறுத்தினார். மனத்தில் குரானை நினைவுறுத்திப் பலவகையான பொருள்படும்படி கூறினார்.

பருப் பொருள்(Matter) நிலையானதாகவும் இயங்கும் தன்மையுடையதாகவும் உள்ளது. முதற் கொள்கை, சூனியத்திலிருந்து எதுவும் வரவில்லை; இயக்கம்தொடர்ச்சியாக நடந்து கொண்டிருக்கிறது; பருப்பொருள் எப்பொழுதும் உள்ளது: தனிப்பட்ட அறிவு கிடையாது; மனித இனத்தின் அறிவு தான் உண்டு என்று கூறுகிறது.

**இடைக்காலத் தத்துவ ஞானிகள்:** இசுபேனோ-அரே பியத் தத்துவத்தில் இவர்கள் (Medieval Jewish Philosophers) கருத்துகள் அடங்கியிருக்கின்றன. அவி சுபிரான் (Avicebron), எல்லாப் பொருள்களும் சடப் பொருள்கள்; உருவம் உடையவை; நிறைவு பெறு மானால் ஆன்மாவோடு சம்பந்தப்படுத்தலாம் என்று கூறுகிறார்.

மோசசு மைமோனிடசு (கி.பி. 1135-1204) இவர் அவரோசின் காலத்தவர். இவரை வலுக்கட்டாயப் படுத்தி இசுலாமிய மதத்தைத் தழுவச் செய்தார்கள். பிறகு இவரை நாடு கடத்தினார்கள். இவர் தத்துவ நூல்கள் பல எழுதியிருக்கிறார். பழைய ஏற்பாட்டில் கூறிய நம்பிக்கையும், அரிசுடாட்டில் கூறிய பகுத்தறி வும் மோசசு மைமோனிடசின் (Moses Maimonids) நூலில் காணப்படுகின்றன. தத்துவ வாதிகளுக்கும் மதவாதிகளுக்கும் குறிக்கோள் இறைவனைப் பற்றி அறிவதேயாகும் என்று இவர் கூறினார்.

இராமன் லல் (Raman Lull) என்பவர் ஒரு சிறந்த இசுபானியத் தத்துவ ஞானி. இவரை வட ஆப்பிரிக்காவில் கி.பி. 1316-ஆம் ஆண்டில் கல்லால் அடித்துக் கொன்றதாகக் கூறுகிறார்கள். மதங்களின் ஒற்றுமை, அரசியல் கோட்பாடுகளின் ஒற்றுமை, மொழிகளின் ஒற்றுமை, கருத்துகளின் ஒற்றுமை ஆகியவற்றிற்காக இவர் அரும்பாடுபட்டார்; இசுலாமிய, கிறித்தவச் சண்டைகளைப் பார்த்து மனம் வருந்தினார். இசுலாமியர்களை அடக்கு முறையில்லாமல் அறிவைப் பயன்படுத்தி வெற்றி கொள்ள வேண்டும் என்றார்.

**மறுமலர்ச்சித் தத்துவ ஞானிகள்:** இசுபானிய நாட்டில் ஒரு சிலரே கலைப் பள்ளிக்குரிய புலமை மிக்க ஐந்து கொள்கைகளை எதிர்த்தனர். சுயன் லூயிசு வைவ்சு (Juan Luis Vivs, கி.பி. 1492-1540) என்பவர் ஒழுக்கவியல், ஏழைகளின் நன்மைக்காக அரசு செய்ய வேண்டிய பணிகள், ஆசிரியத் தொழி லுக்குரிய நூல்கள், பெண்கல்வி முதலியவைகளைப் பற்றி நூல்கள் எழுதியிருக்கிறார். தத்துவத்தில் எல் வற்றையும் உட்படுத்திக் கருத்துணர்வை எதிர்க்கி றார். ஒவ்வொரு மனிதனும் சுதந்திரமாகத் தன் எண்ணங்களையும் எந்தவிதமான அதிகாரங்களுக்கும் உட்படாமல் முடிவுகளையும் கூற உரிமை வேண்டும் என்றும் கூறினார்.

**மறுமலர்ச்சிக்கு எதிர்ப்புக் கூறிய தத்துவ ஞானிகள்:** மறுமலர்ச்சிக் காலத்தில் இசுபானியத் தத்துவம், இயற்கையான மனிதத் தன்மையையும் இயற்கைத் தத்துவக் கருத்துகளையும் ஒத்துக் கொள் ளாமல், இரண்டையும் எதிர்ப்பதாகவும் மாணவருக் குரிய அல்லது கலைப்பள்ளிக்குரிய கொள்கைகளை ஆதரிப்பதாகவும் அமைந்திருந்தது.

பிரான்சிசுகோ சுயரெசு (கி.பி.1548-1617) இவர் சிறந்த புதிய கலைப் பள்ளிக்குரிய சமய சித்தாந்தம் பற்றிய நூல்கள் எழுதியவர். இவர் எழுதிய நூல் 26 தொகுப்புகளைக் கொண்டது. சமய சித்தாந்தத் திலிருந்து புலன்கடந்த நுண்பொருள் ஆராய்ச்சி நூல் வேறுபட்டது. தாமசின் தத்துவம் சமய சித் தாந்தத்தை முழுமை பெறச் செய்து பலப்படுத்தும் என்று கூறினார். ஆனால் பிரான்சிசுகோ சுயரெசு (Francisco Suares), சமய சித்தாந்தத்திற்குப் புலன் கடந்த நுண்பொருள் ஆராய்ச்சி அடிப்படை வேண் டும் என்றார்.

பால்மெசு (கி.பி. 1810 1848): இவர் இசுபானிய நாட்டில் தத்துவ விசாரணையைப் பலப்படுத்த விரும் பினார். பால்மெசு (Balmes) எழுதிய தத்துவத்தின்

சரித்திரம் (Philosophy of History) என்னும் நூல் இசுபானிய நாட்டில் புகழ் வாய்ந்தது.

கிரௌசிசம்: கார்ல் சி. எப்.கிரௌசு (கி.பி. 1781-1832) மறை பொருளுள்ள, மறைமெய்ம்மை சார்ந்த ஆன்மிகவாதி. இவருடைய தத்துவம் மனி தத்தன்மையுடன் தொடர்புடையது. கிரௌசிசம் (Krausism) ஒரு சிறந்த தத்துவமாக இசுபானிய நாட்டில் 1910 வரை கருதப்பட்டது.

இசுபானியக் கிரௌசிசம் (Spanish Krausism) என்பது பகுத்தறிவு வாய்ந்த மதம். இது மனிதனின் நிறைவைப் பற்றியும், சமூக முன்னேற்றம் பற்றியும், ஒரு சிறந்த உலகைப் படைக்கும் வழிகளைப் பற்றி யும் கூறுகிறது.

**அண்மைக் காலத்து இசுபானியத் தத்துவ ஞானிகள்:**

**உனாமுனோ** (கி.பி. 1864-1936): இவர் ஆன்மா, இறப்பு, அறியாமை, துக்கம், மனித ஒழுக்கத்தில் தத்து வத்தின் பங்கு ஆகியவைகளைப் பற்றி ஆராய்ந்தார். இவர் உளதாம் தன்மைக் கொள்கை (Existentialists) படைத்தவர்களுக்கு ஒரு முன்னோடியாகத் திகழ்ந் தார். உனாமுனோ (Unamuno) கொண்ட பகுத் தறிவுக்கு மாறான கொள்கை ஒருதலை முடிவானது.

**ஓர்டிகா** (கி.பி. 1883-1955): இவர் ஒரு சிறந்த சிந் தனையாளர். இவர் ஒரு கல்வி நிலையத்தை ஏற் படுத்தினார்; மாட்ரிடில் (Madrid) 1910 முதல் 1936 வரை புலன் கடந்த நுண்பொருள் ஆராய்ச்சிப் பேரா சிரியராகப் பணி செய்தார். பொருளும் அறிபவனும் ஒருங்கிணைய வேண்டும். அவை ஒன்றுக்கொன்று தொடர்புடையன. நான் என்பது நானும் சூழ்நிலை யும் (I am-I plus my Circumstances) எனக் கூறினார்.

**துணை நூல்கள்:**

**Trend, J. B.**, The Origins of Modern Spain, New York, 1934.

***இசுபானியோலா*** என்பது மேற்கிந்தியத் தீவுக் கூட்டத்திலுள்ள இரண்டாம் பெருந் தீவு. இத் தீவில் அய்ட்டி (Haiti), தொமினிக்குக் குடியரசு (Dominican Republic) என்னும் இரு சுதந்திர நாடு கள் அமைந்துள்ளன. இதன் பரப்பளவு 77,000 ச.கி.மீ. ஆகும். இத்தீவு கியூபாவிற்கும் போர்ட்டோ ரிகோ (Puerto Rico) விற்கும் இடையில் அமைந்துள்ளது. இதனைக் கொலம்பசு கி.பி. 1492-ஆம் ஆண்டில் தம் முதற் பயணத்தின்போது கண்டறிந்தார். அவர் இத்தீவிற்கு இலா அய்லா இசுபானோலா (La Isla Espanola) என்று பெயரிட்டார்

இசுபானியோலா (Hispaniola) வை இசுபானி யர், சாந்தோ தொமிங்கோ (Santo Domingo), என்றும் அழைத்தனர். சான் தொமிங்கோ, அய்ட்டி, (San Domingo & Haiti) என்பன இதன் ஏனைய பெயர்கள். இத்தீவின் மேற்குப் பகுதியில் மூன்றி லொரு பங்கில் அமைந்துள்ளது அய்ட்டி. எஞ்சிய தைத் தொமினிக்குக் குடியரசு என்பர்.

இத்தீவின் நடுவிலுள்ள கார்டிலேராப் பகுதி கரடுமுரடானது. இது பருவக்காற்று மண்டலத் தட்பவெப்ப நிலையை ஓரளவு கொண்டுள்ளது. காப்பி, கோக்கோ, கரும்பு போன்ற வேளாண்மைப் பயிர்கள் இங்குப் பயிரிடப்படுகின்றன இங்கு மிகுதி யான மழை பெய்கிறது. பாக்சைட்டுச் சுரங்கங்களும் இங்குள்ளன.

சாந்தோ தொமிங்கோ என்னும் நகரம் தொமி னிக்கக் குடியரசின் தலைநகராகும். இக்குடியரசின் மக்கள்தொகை 52,00,000 (1980). அய்ட்டிக் குடி யரசின் தலைநகரம் போர்ட்-ஆப்-பிரின்சு (Port of Prince) என்னும் ஊராகும். அய்ட்டிக் குடியரசின் மக்கள் தொகை 60,00,000 (1982).

***இசுபினோசா, பெனிடிக்ட்டு*** (கி.பி. 1632-1677) கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் விளங்கிய அறிவு வழிக் கொள்கையினராவர். இவர் தச்சு (Dutch) நாட்டைச் சார்ந்த அறவியல் (Ethics) தத்துவ அறிஞர். இவர் தத்துவ வரலாற்றில் புலன் கடந்த மெய்ப்பொருளியல் முறையினை மன நிறை வுடன் ஒழுங்கு படுத்திய பகுத்தறிவு அறிஞர்களுள் குறிப்பிடத்தக்கவர் ஆவர். அறவியல், புலன் கடந்த மெய்ப்பொருளியல் (MetaPhysics) ஆகியவற்றில் பகுத்தறிவின் பங்கை வலியுறுத்தி, அழுத்தத்துடன் விளங்க வைத்தவர். இவரது இயற்பெயர் ஈபுரு (Hebrew) மொழியில் பாருச்சு (Baruch) எனப் பல முறை வழங்கப்பட்டு வந்துள்ளது. இசுபினோசா பெனிடிக்ட்டு (Spinoza Benedict) வின் தந்தையும் தாயும் யூத (Jewish) மதத்தைச் சார்ந்தவர்கள். இவர்கள் இருவருக்கும் மகனாக கி.பி. 1632-ஆம் ஆண்டு நவம்பர் 24-ஆம் நாள் ஆம்சடர்டாம் (Amsterdam) என்னும் இடத்தில் பிறந்தார்.

இசுபினோசாவின் தந்தையும் தாத்தாவும் யூத மதத்தைச் சார்ந்த போர்த்துகீசியர்கள். இசுபானிய இடைக்கால உயர் வழக்கு மன்றம், அவர்களைக் கிறித்தவ மதத்தில் சேருமாறு கட்டாயப்படுத்தியது. அதன் பின்பு ஆலந்து (Holland) நாடு, இசுபெயின் நாட்டிற்கு எதிரான கலகத்தை வெற்றியுடன் செய்து முடித்த பின்பு, சமய சுதந்திரம் வழங்கப்



பெனிடிக்ட்டு இசுபினோசா

பட்டது. அதன்பின்பு அவர்கள் ஆம்சுடர்டாம் நகரில் அடைக்கலம் புகுந்தனர்.

அதன்பின்பு இசுபினோசா யூதமதத்தில் மதிப்பிற்குரிய உறுப்பினராகவும், சிறந்த வணிகராகவும் விளங்கினார். பின் இவர், தம் சொத்துரிமையின் மீது வழக்குத் தொடர்ந்தார்; இவ்வழக்கில் வெற்றியும் பெற்றார். தம் வளர்ப்புச் சகோதரியுடன் சிறிது காலம் இருந்தபின்பு தம் சொத்துகளை இவரே அனுபவித்து வரலானார்.

இவரது படிப்பு முழுவதும் யூத மதத்தைப் பற்றியதுதான். ஆயினும் இவர் எதையும் பகுத்தறிவுடன் சிந்திக்கத் தொடங்கினார். இவர் யூத மதத்திற்கு அப்பாலும் சில கருத்துகளை அறிய விரும்பித் தமது பழக்கமான யூதமதப் படிப்பு ஆர்வத்தை விட்டுக் கடவுள் நம்பிக்கை பெற்ற வேதகாலக் கருத்துகளையும் விளக்கங்களையும் படிக்க விரும்பினார். படித்தபின்பு கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் இவர் பழமைக் கருத்துகளையும் வேத உறுதிக் கோட்பாடுகளையும் எதிர்க்கத் தொடங்கினார்.

யூதர் சமயத் திருக்கோயில் கூட்டத்தின் மேலாண்மையுரிமையில் மாறான கருத்துகளை இசுபினோசா வெளியிட்டார். இசுபினோசா மாணவர்களுடன் கலந்துரையாடும்போது கடவுளுக்கு எந்த ஒரு உருவமும் கிடையாது என்றும், இதற்குக் கிறித்தவ விவிலிய (Bible) நூலில் எந்த ஒரு ஆதாரமும் கிடையாது என்றும், அந்தத் தேவதூதன் உண்மையில் உலகில் இருக்கிறார் என்றும், அவ்இறைவனின் ஆன்மா இறவாமை பெற்றது என்றும் கூறினார். மேலும், இவர் தம் இறை நம்பிக்கையை விவிலிய நூலைக் காட்டிலும் அறிவுள்ள வேறு யாரும் இவ்வுலகில் இல்லை என்றும், தெய்விக இறைவன் அருள் வழிப்படி இயங்கும் மாணவர்கள் உள்ளனர் என்றும் கூறுவதன் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார்.

இதனால் யூதமதச் சமயக் கோவில் மேலாண்மையுரிமை அதிகாரிகளின் (Excommunicate) சமய விலக்குக் கைக்கூலிகளினால் பயமுறுத்தப்பட்டு, 1656-ஆம் ஆண்டு சூலைத் திங்கள் சமயத்திலிருந்து விலக்கி வைக்கப்பட்டு, ஆம்சுடர்டாம் என்ற இடத்திலிருந்து சில காலத்திற்குச் சிவில் அதிகாரிகளினால் நாடு கடத்தப்பட்டார்.

இவர் யூதசமயத் திருக்கோயில் வழிபாட்டுத் திட்டத்தினை1655- ஆம் ஆண்டு திசம்பர் 5-ஆம்தேதி ஏற்படுத்தும் வாய்ப்பினைப் பெற்றார். இவர் சமய உலகிலிருந்து விலகியிருந்த காலக்கட்டத்தில், பேசும் வாய்ப்பு கிடைத்தது. இவ்வாய்ப்பில் இவர் யூத சமயத்திருக்கோயிலின் சமயத்திற்குப் பாதுகாப்பான கருத்துகளைத் தெரிவித்தார்.

இவரது பணி ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. 1. இயற்கையின் உண்மையை இசுபினோசா கடவுள் எனக் குறித்தார். இக்கடவுள் இவரால் படைக்கப்பட்ட உலகத்துடன் தொடர்பு கொண்டுள்ளார். 2. மனம் அற ஒழுக்க நெறிகளுடன் தொடர்புடையது. 3. மனித மனவிருப்பம். 4. மனித மனவிருப்பத்தின் உறுதித் தன்மையினால் அறஒழுக்க நெறியின் இணைப்பு அளவிடப்படுகிறது. 5. நல்லொழுக்க நெறி, தன்னுரிமை, மனிதச்சாதனைகள் அனைத்தும் அறிவின் வளர்ச்சியில் அடங்கியிருக்கின்றன.

காரணம், மூலப் பொருள், மூலப்பொருளின் தன்மைகள், சுதந்திரம், தீர்மானித்தல் முதலியன பற்றிய ஆராய்ச்சிதான் இசுபினோசாவின் சிறப்புக்குக் காரணமாகும். மேற்கூறியவைகள் அனைத்தும் நன்கு ஆராய்ந்து பார்த்தற்குரியவை. ஒரு பொருள் இருக்கிறது என்பதை அறிந்து கொள்ள அப்பொருளைப் பற்றிய காரணம் தேவை. உலகம் ஒரு பொருளிலிருந்துதான் படைக்கப்படுகிறது. ஒன்றுமில்லாததிலிருந்து உலகம் படைக்கப்படுவதில்லை. ஒரு பொருளைப் படைக்க ஓராற்றல் தேவை. அது தான் இறைவன். இவர் இறைக் கொள்கையைப் பின்பற்றியவர். ஒரு பொருள் ஒரு சக்தியினால்தான்

செயற்படக் கூடியது என்ற கருத்தை உடையவர் இவர்.

பொருளைச் செயற்படுத்தும் ஆற்றல் உண்மையானது. இந்த ஆற்றல் பல முறைகளில் செயற்படுகிறது. இதில் மனமும் அடங்கும். எண்ணங்களும் பொருளும் ஒன்றோடொன்று தொடர்புடையவை. அதே போல் மனமும் உடலும், ஒன்றுடன் ஒன்று தொடர்புடையவை. இவர் மூலப் பொருள் ஒன்று உண்டு என்றும் அது யாவற்றையும் உட்படுத்தும் பொருளாகும் என்றும் கருதினார்.

இசுபினோசாவின் தத்துவம் அவர் எழுதிய அறநூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவர் பல நூல்கள் எழுதினார். அவற்றுள் அறநூல் முதன்மையான ஒன்றாகும். மேலும் இவர் சமயம், அறவியல் ஆகிய துறைகளை அளவைத்திறன் கொண்டு நன்கு ஆராய்ந்து தம் கருத்தினை வெளியிட விரும்பினார்.

இவர் மெய்ப்பொருளியற் கருத்துகள், புலன் கடந்த மெய்ப்பொருளியல் உண்மைகளை அடிப்படையாகக் கொண்டவை. சமயத்தையும் ஒழுக்க இயலையும் மரபுக் கட்டுப்பாடுகள் அற்ற நிலையில் ஆராயலானார்.

மனத்தின் இருப்பு மெய்ப்பொருளியலின் முதற்கொள்கை ஆகியது. உள்பொருள்களுள் இறைவன் முதற்பொருளாக விளங்கினார். பொருள் என்ற சொல்லிற்கு உரியவராக இறைவனே விளங்கினார். இருவரிசைகள் குறிக்கப் பெறுகின்றன. ஒன்று எண்ணங்களின் வரிசை. மற்றொன்று, உள்பொருளின் வரிசை. இவ்விரண்டு வரிசைகளுள் முரண்பாடுகள் நிகழ்வன. அவற்றை இசுபினோசா நீக்க முயன்றார்.

பொருள்கள் காணப்பெறுகின்ற நிலையில் தொடர்ந்து இருப்பனவே. இவற்றின் இருப்பின்காலம், உறுதியான பருமை நிலை உடையது அன்று. எளிதில் புலனாகாத கருத்துப்பொருளும் ஆகும். காலத் தொடர்ச்சியின் இயல்புகள் உள்பொருளின் உண்மை இயல்போடு பொருந்தாதனவாகும். ஆகையினால், உள் பொருள் காலத் தொடர்ச்சியின் வரையறைகள் கடந்தது என்று கருதினார். மெய்ப்பொருளுக்குரிய நிலை அறிவு கடந்த ஒரு நோக்கமாகும். இசுபினோசாவின் கருத்துப்படி மனம் என்றும் உள்ள, நிலையான, முக்கிய நிலையிலே உளதாகும் பொருள். பொருள் எல்லையில்லாததாகும். இவர் எண்ணத்தை, பொருளுக்குரிய பண்பைக் கொண்டார். பரப்பும் எண்ணமும் ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்க முடியாதன என்பது நன்கு புலனாகிறது. ஆகையினால், எண்ணமும், பரப்பும் ஒரே பொருளின் பண்புகளாக விளங்குதல் வேண்டும். பண்புக் கொள்கையில் முக்கியமானதாக இரண்டைக் குறிப்பிடுகிறார். அவை பொருளுக்குரியதாகும் பண்பு ஒவ்வொன்றும் எல்லையற்றதாக விளங்குகின்றது என்பதும், பொருளுக்கு எண்ணிறந்த பண்புகள் உண்டு என்பதும் ஆகும்.

பொருள்களினிடையே விளங்கும் வேறுபாடுகள், பொருள்களினால் அல்லது அவற்றின் புலப் பண்புகளால் (Sensible Qualities) காணப்படும் நிலைகளாலேயாகும். இந்நிலைகளை உலக நிகழ்ச்சிகளால் பொருள்கள் அடைகின்றன; இயக்கத்தாலும் இயக்கமற்ற நிலையாலும் அடைகின்றன. இவற்றைப் பரப்பின் உடனடியான, எல்லையற்றதான, என்றும் உள்ளதான மாறுநிலை (Mode) என்று இசுபினோசா கூறினார்.

மெய்ப்பொருளியல், அடிப்படைப் புலன்கடந்த பொருளியல் கொள்கையை அடிப்டையாகக் கொண்டது. தனிப் பொருள்கள் மனங்கள் யாவும் தம்மியல்பால் உள்ளார்ந்த ஆற்றல் உள்ளனவாக விளங்குகின்றன. இவ்வாற்றல்களின் வெளிப்பாடு, முக்கிய நிலையில் இருப்பு அல்லது இறைவனின் என்றுமுள நிலையில் அமைகிறது. இவர் இன்றும் தத்துவ அறிஞர்களுள் தத்துவ அறிஞராக விளங்குகிறார். இவ்வாறு ஐரோப்பாவில் தத்துவ அறிஞர்களால் போற்றப்பட்ட இவர் கி.பி. 1677-ஆம் ஆண்டு பிப்பிரவரி 21-ஆம் நாள் ஆகு (Hague) என்ற இடத்தில் காலமானார்.

துணை நூல்கள்:

Joachim H.H., A Study of Spinoza's Ethics, Oxford 1901.

Parkinson G.H.R., Spinoza's Theory of Knowledge, Oxford, 1954.

Wolfson H.A., The philosophy of Spinoza, 2 vols., Cambridge, Mass, 1954, New York, 1958.

**இசுபெங்களர் ஆசுவால்டு** (கி.பி. 1880-1936) செருமன் நாட்டு வரலாற்று ஆசிரியரும் அரசியல் தத்துவ அறிஞரும் ஆவர். இவர் கி.பி. 1880-ஆம் ஆண்டு மே 29-ஆம் நாள் செருமனி நாட்டிலுள்ள பிளங்கன்பர்கு - ஆம்-அர்சு (Blankenburg-om-Horz) என்னும் இடத்தில் பிறந்தார். ஆல் (Halle) பல்கலைக் கழகத்தில் இவர் படித்த பின்பு மியூனிச்சு (Munich), பெர்லின் (Berlin) ஆகிய நகரங்களில் உள்ள பள்ளிகளில் 1911-ஆம் ஆண்டு வரை பணி புரிந்தார். அதன் பின்பு இவர் தமது வாழ்க்கையை மியூனிச்சு நகரில் அமைத்ததிலிருந்து எழுதும் பணியில் முழுவதுமாக ஈடுபடத் தொடங்கினார். இவர் இயற்றிய குறிப்பிடத்தக்க நூல் 'தெர் அந்தர்கேங் தெ அபென்லண்டசு' (Der Untergang des Abendlandes) என்பது.

மேற்கு நாடுகளின் வீழ்ச்சி அல்லது தேய்வு (The Decline of the West) என்பது அந்நூலின் பொருளாகும்.

கட்டுரை இயற்கையுருவ ஆராய்ச்சியைப் பற்றிக் குறிப்பிடுகிறது; தெளிவான இயற்கையுருவ வளர்ச்சியைப் பண்பாட்டு வரலாற்றில் நிருணயிக்கிறது. வரலாறு, முந்திய வளர்ச்சிகளைக் கூறும் முன் மதிப்பீட்டுரை இயலாக உள்ளது என்பதை இவரது கட்டுரை குறிப்பிடுகிறது.



ஆசுவால்டு இசுபெங்களர்

மேற்கத்திய நாகரிகத்தின் பண்பாடு சிறிது, சிறிதாக நலிந்து வருவதால், இந்நலிவு கடைசியாக உலகப் போராட்டத்தில் கொண்டு செல்லும் என்று தமது தீர்க்க தரிசனத்தின் வாயிலாகக் குறிப்பிட்டுள்ளார். இவர் செருமன் நாட்டு மக்களிடத்துப் பேசுகையில் குடியாட்சி, முற்போக்குக் கொள்கை ஆகியவற்றை மறுத்தும் வல்லாட்சிக்கு ஆதரவு அளித்தும் பேசினார். இவரது பேச்சு வல்லாட்சிக்கு ஆதரவு அளித்ததால் பொதுமக்கள் இவரை ஆதரித்தனர். வரலாற்று அறிஞர்களும் தத்துவ ஞானிகளும் இவர் கருத்துகளை வெறுத்தனர். இக்கருத்துகள் இட்லரின் (Hitler) புரட்சிக் கருத்துகளுக்கு வழி வகுத்தன.

இவர் மேற்கத்திய நாகரித்தைக் குறிப்பிடுமிடத்து, மேற்கத்திய நாடுகள் நுண்கலைகளை வளர்க்கும் பணியில் ஈடுபடாமல் வேறு நவநாகரிகப் பணியில் செயற்படத் தொடங்குகின்றன என்றார். பண்பாட்டிலிருந்து விலகி நவநாகரிக வளர்ச்சிக்கு மேற்கத்திய நாடுகள் முக்கியத்துவம் அளிப்பது வியக்கத் தக்க ஒன்றாகும். மேற்கத்திய நாட்டு மக்கள் தொடக்கக் காலத்தில் சமயம், தத்துவம், கலை போன்ற துறைகளின் தெளிவுடனிருந்தனரென்றும் பிற்காலத்தில் இந்நுண்கலைகள், பகுத்தறிவினாலும் கூட்டுச் சூழ்ச்சித்திறனாலும் பொருளாதாரம், உலகியல் பருப்பொருள் வளர்ச்சி ஆகியவைகளினாலும் மாறுதலுற்றன வென்றும் கூறினார்.

**இசுபெங்களர் ஆசுவால்டின் அரசியல் தத்துவம்:** இசுபெங்களர் செருமன் நாட்டு மக்களுக்கு அரசியல் தத்துவத்தை 1920-ஆம் ஆண்டு தமது 'பிரசியனிசம் சோசியலிசம்; (Prusianism and Socialism) என்ற நூல் வாயிலாகவும் பேச்சுகள் வாயிலாகவும் விளக்கினார்.

செருமன் நாட்டுச் சமதருமக் கொள்கை என்பது அரசுதான். மனிதர்களும் மக்கள் பிரிவுகளும் அரசுக்கு உட்பட்டுச் செயற்படக்கூடியவர்கள் என்ற சமதரும (Socialism) தத்துவத்தை விளக்கினார். இதன்படி அரசு அமைவது உருசியா நாட்டின் மரபு ஆகும் என்றும், மேலும் செருமன் நாட்டு மக்கள் முற்போக்குச் சமதருமக் குடியாட்சியைக் கைவிடுவதில் உறுதியுடன் திகழவேண்டும் என்றும் அந்நாட்டு மக்களுக்கு நினைவூட்டினார். இசுபெங்களர் ஆசுவால்டின் கருத்துகள் உலக நாடுகளில் போருக்கு வித்திட்டன. இவர் அரசியல் கருத்துகள் அனைத்தும் 'தீர்ப்பளிக்கும் காலம்' (The Hour of Decision) என்ற நூலிலிருந்து வந்தவையாகும்.

இவர் செருமன் நாட்டு முற்போக்குக் கொள்கையின் (Liberalism) வீழ்ச்சிக்குப் பெரிதும் உதவினார். இருப்பினும் இவர் கருத்தளவில் (Ideological) இட்லரின் முன்னோடியாக விளங்கினார். ஆனால் இவர் உயிரினங்களின் இனவேறுபாட்டுக் கொள்கையை மறுத்ததாலும், சோர்வு மனப்பான்மையை மக்களிடத்துச் சொற்பொழிவு செய்ததனாலும், இவரை அந்நாட்டுச் சமதருமவாதிகள் வெறுத்தனர். அதன் பின்பு இட்லர் பதவி ஏற்றபின்பு, இவர் சாகும்வரை தனித்து வாழ்ந்து வந்தார். மியூனிச்சு (Munich) என்னும் இடத்தில் 1936-ஆம் ஆண்டு மே 8-ஆம் நாள் இசுபெங்களர் ஆசுவால்டு காலமானார்.

**இசுபெயின்** ஐரோப்பிய நாடுகளுள் ஒன்று. இது மேற்கு ஐரோப்பாவிலுள்ள ஐபீரியா எனப்படும் தீபகற்பத்தின் ஒரு பகுதியாகும்.

இசுபெயினை உலகத் தலைவியென்றும் கடலரசி என்றும் மேலை ஐரோப்பிய நாடுகள் கருதின. புது உலகத்தில் குடியேற்றப் பகுதிகளைக் கண்டறிந்து செல்வச் செழிப்பில் செழித்தது இந்நாடு. கத்தோலிக்கக் கிறித்தவச் சமயத்தை அப்பகுதிகளில் பரப்பப்பாடுபட்டவர்களும் இசுபானியரேயாவார். பெரும் பேரரசைக் கடல் கடந்தும் நிலைநாட்டிப் புகழ் சேர்த்த இசுபெயின், தொடர்ந்து அதனைக் கட்டிக் காக்கவில்லை என்பதும் வரலாற்று உண்மை.




இசுபெயின்

இதனுடைய பழம் பெயர் இசுப்பெனியா (Hispania) என்பதாகும்.

எல்லைகள்: இசுபெயினின் வடக்கில் பிசுகே (Biscay) விரிகுடாவும் பிரனீசு (Pyrennes) மலைத் தொடர்களும், கிழக்கிலும் தெற்கிலும் மத்திய தரைக்கடலும் சிப்ரால்டர் (Gibralter) நீர்ப்பிரிவும், தென்மேற்கில் அட்லாண்டிக்குப் பெருங்கடலும், மேற்கில் போர்ச்சுகல் நாடும் அட்லாண்டிக்குப் பெருங்கடலும் எல்லைகளாகும்.

பரப்பு: இந்நாட்டின் மொத்தப் பரப்பு 5,04,750 ச. கி.மீ. ஆகும். இதில் பாலியாரிக்குத் தீவுகளும், கனேரித் (Canary islands) தீவுகளும், சீயுட்டா, மிலீலா (Ceuta and Melilla) என்னும் நகரங்களும் அடங்கும். சீயுட்டா, மிலீலா நகரங்கள் வட ஆப்பிரிக்காவில் மத்திய தரைக்கடலில் மொராக் கோவின் வடகரையையொட்டியுள்ளவை. பாலி யாரிக்குத் (Balearic Islands) தீவுகள் மத்திய தரைக் கடலிலும், கனேரித் தீவுகள் அட்லாண்டிக்குப் பெருங் கடலிலும் அமைந்துள்ளன.

மக்கள்தொகை: இசுபெயின் நாட்டின் மக்கள், தொகை 1981 ஆம் ஆண்டு மதிப்பீட்டின்படி 3. 77, 50.000 ஆகும். இந்நாட்டில் ஆண்களை விடப் பெண்கள் மிகுதியாகவுள்ளனர்.

நிலம்: இசுபெயின் ஐரோப்பாவின் மூன்றாம் பெரு நாடாகும். ஐபீரிய முந்நீரகத்தின் மொத்தப் பரப்பில் ஆறில் ஐந்து பாகம் இசுபெயின் நாடாகும். இம்முந்நீரகம் ஏறத்தாழச் சதுர வடிவமானது. வடக்குத் தெற்காக இதன் நீளம் 800 கி.மீ. களும். கிழக்கு மேற்காக ஏறத்தாழ 960 கி.மீ. களுமாகும். தென்கோடியில் அமைந்துள்ள சிப்ரால்டர் நீர்ப் பிரிவு சற்றேறக்குறைய 13 கிலோமீட்டர் அகல முடையது. இது இசுபெயினை வட ஆப்பிரிக்காவி லிருந்து பிரிக்கிறது. சிப்ரால்டர் மிகச் சிறியது. எனினும் இன்றும் இதனை இங்கிலாந்து தம் வசம் வைத்துக் கொண்டுள்ளது. இசுபெயினின் வடகிழக்கில் அண்டோரா (Andora), என்னும் சின்னஞ்சிறு குடி யரசு நாடு அமைந்துள்ளது. இதனை இசுபானிய நாட்டு ஊர்கள் (Urgel) என்னும் பகுதியின் சமயக் குருவும், பிராசுன் நாட்டுக் குடியரசுத் தலைவரும் இணைந்து ஆட்சி செய்கின்றனர். நிறைந்த மலைப் பகுதிகளும், குறைந்த அளவு மழையும் இசுபெயினில் குறிப்பிடத் தகுந்தவையாகும்.

வடமா நிலங்களைத் தவிர ஏனைய பகுதிகள், மேற்கூரிய இரு தன்மைகளாலும் பாதிக்கப்படுகின் றன. இசுபெயினின் இதயம் போன்றமைந்திருப்பது அதன் மையத்தில் அமைந்துள்ள பெரிய நடு மேட்டு நிலமாகும். இதனை மெசீட்டா மேட்டுநிலம்

என்பர். மெசிட்டா மேட்டுநிலத்தைச் சுற்றிலும் அறுபட்ட மலைத்தொடர்கள் அமைந்துள்ளன. இசுபெயினின் வட கிழக்கில் உள்ள பிரனீசு (Pyrenees) மலைத்தொடர் மிக உயர்ந்தது. சியெரா நெவாடா (Sierra Nevada) மலைத்தொடர், தென்கிழக்கில் உள்ளது. சியெரா நெவாடா என்பது பனிமலை என்று பொருள்படும். இசுபெயினின் மிக உயர்ந்த மலையுச்சியான மூலாதேன் (Mullaten) சியெரா நெவாடாவில் உள்ளது. மெசிட்டா மேட்டுநிலத்தின் வடக்கிலும் வடமேற்குக் கோடியிலும் கன்டாபிரியன் (Cantabrian) மலைத்தொடர்கள் எழுந்துள்ளன. 'சியெரா மொரானா' (Sierra Morena) என்னும் மலைத்தொடர் தென்கோடியில் உள்ளது. சியெரா மொரானா என்பது கருப்பு மலைத்தொடர் எனப் பொருள்படும். சியெரா தே கிரேதொசு, சியெரா தே கூடாரமா, மாண்டெசு தே தோலேதோ போன்ற மலைத்தொடர்கள் மெசிட்டா மேட்டு நிலத்தைப்பிரிக்கின்றன.

**ஆறுகள்:** கடற்கரைச் சமவெளி குறுகலானது. இதனைத் தவிர ஏனைய தாழ்நிலப் பகுதிகள் மிகுதியாக இல்லை. குவாதால்கிவீர் (Guadalqivir) ஆறு தென்பாகத்தில் பாய்கிறது. தூரு (Duro),



உலகப் புகழ்பெற்ற திருக்கோயில்—பார்சிலோனா

தேகசு (Tagus), குவாதியானா (Guadiana) போன்றவை ஏனைய ஆறுகளாகும். இவ்வாறுகள் இசுபெயினிலும் போர்ச்சுகலிலும் பாய்ந்து அட்லாண்டிக்குப் பெருங்கடலில் கலக்கின்றன. வடகிழக்கில் பாயும் எபிரோ (Ebro) ஆறு மத்திய தரைக்கடலில் கலக்கிறது. இந்த ஆறு பாய்வதால் பள்ளத்தாக்குப் பகுதிகள் வறட்சியிலிருந்து மீட்சிப்பெற்றுச் செழுமையாகத் தென்படுகின்றன. வட கடற்கரைத் தாழ்நிலத்தில் பல துறைமுகங்களும் தொழிற்சாலை நகரங்களும் காணக்கிடக்கின்றன. மத்திய தரைக் கடற்கரையையொட்டியுள்ள பரந்த தாழ் நிலங்களில் பார்சிலோனா (Barcelona), வேலன்சியா (Valencia), கார்டசீனா (Cartagena) போன்ற துறைமுகப்பட்டினங்கள் சிறப்பானவையாகும்.

**தட்பவெப்பநிலை:** இசுபெயினின் வடக்கிலும் வடமேற்கிலும் மட்டும் போதுமான மழை பொழிகிறது. இவ்விரு பகுதிகளுக்கும் ஈரக்கசிவான காற்று அட்லாண்டிக்குப் பெருங்கடலிலிருந்து வீசுவதால் மழை பெய்கிறது. இங்குக் கடுங்கோடையும் குளிரும் இல்லாமல் ஆண்டு முழுவதும் மிதமானதட்பவெப்ப நிலை நிலவுகிறது. ஈரக்கசிவானதும் செழுமை மிக்கதுமான வடபகுதிகளை விட்டுத் தெற்கே செல்லும்பொழுது இசுபெயின் தட்பவெப்ப நிலை மத்திய தரைக்கடல் வெப்பநிலையைப் போன்றதாகி விடுகிறது. குளிர்காலத்தில் மிதமான வெப்பமும் மழையும் கோடைக்காலத்தில் மிகுந்த வெப்பமும் வறட்சியும் காணப்படுவதை மத்திய தரைக்கடல் வெப்பம் என்பர். இங்கு ஆண்டு தோறும் 50 செ.மீ. மழை மட்டும் பெய்கிறது. மேற்கு ஐரோப்பாவில் மிகக் குறைந்த மழைப் பொழிவு இதுதான். வட இசுபெயினைத் தவிர ஏனைய பகுதிகளில் செழுமை குறைந்த மண்வளமும், பற்றாக்குறை நீர்வளமும் நிலவுவதால் மக்கள் போராட்டமான வாழ்வையே மேற்கொள்கின்றனர் எனக் கூறலாம்.

**கனிமச் செல்வங்கள்:** இசுபெயினின் மழைக் குறைவையும் செழுமை குறைந்த மண்வளத்தையும் அதன் கனிமச் செல்வங்கள் ஈடு செய்கின்றன. இரும்பு, நிலக்கரி, துத்தநாகம் போன்றவை வடக்கில் கண்டாபிரியன் மலைப்பகுதிகளில் கிடைக்கின்றன. தென் மேற்கிலுள்ள இரியோடின்டோ என்னும் பகுதியில் செம்பு கிடைக்கிறது. சீரா மொழினா என்னும் இடத்திற்கு அண்மையில் பாதரசம் கிடைக்கிறது. இதனுடன் ஈயம், மாங்கனீசு, பொன், வெள்ளி, தகரம் போன்றவையும் கிடைக்கின்றன. இசுபெயினில் போதிய (எண்ணெய் பெட்ரோல்) வளமில்லை. மாறாக மலைகளிலிருந்து பாய்ந்து வரும் ஆறுகளின் குறுக்காக அணைகள் கட்டிப் போதிய அளவு நீர் மின்சக்தியை இந்நாடு பெறுகிறது.

இசுபெயினுக்குச் சொந்தமான கடல்கடந்த பகுதிகள்: இடைக்காலத்தில் இசுபானியப் பேரரசு பெருகி வளர்ந்திருந்தது. ஐரோப்பியர்கள் குடியேற்றக் கொள்கை தோல்வியுற்றபோது இப்பேரரசும் மறைந்துவிட்டது. எனினும் இன்றும் வட ஆப்பிரிக்காவில் இரு சிறு பகுதிகள் இதன் வசம் உள்ளன. அவ்விரண்டும் அயல்நாட்டினால் சூழப்பட்ட பகுதிகளாகும். இசுபெயினுக்கு மிக அண்மையில் அவை அமைந்திருப்பதால் அவற்றை ஆட்சி செய்வது எளிமையாக உள்ளது. சீயுட்டா, மிலீலா (Ceuta & Melilla) என்பவை அச்சிறு பகுதிகள் ஆகும்.

சிப்ரால்ட்டர் (Gibraltar) என்னும் பகுதி, இன்றும் ஆங்கிலேயர்களின் கட்டுப்பாட்டிலேயே உள்ளது. இந்நகரம், இசுபெயினின் தென்கோடியில் அட்லாண்டிக்குப் பெருங்கடலையும் மத்திய தரைக் கடலையும் இணைக்கும் வாயிலில் அமைந்துள்ளது. இசுபெயின் இதன்மீது தனக்குள்ள உரிமையை விட்டுக் கொடுக்கவில்லை. இச்சிக்கலைத் தீர்க்க நடைபெற்ற வாக்கெடுப்பில் பெரும்பாலான மக்கள் இங்கிலாந்துடன் இணைந்திருப்பதை விரும்பி, இசுபெயினுக்கு எதிராக வாக்களித்துவிட்டனர். இன்றும் சிப்ரால்டர் ஆங்கிலேயர் வசமேயுள்ளது.

பொருளாதாரம்: அண்மைக்காலத்தில் இசுபெயின் நாட்டின் பொருளாதாரம் சீரிய முறையில் வளர்ந்துள்ளது. எனினும் இலட்சக்கணக்கான இசுபானியர் கிராமப்புறங்களிலிருந்து பெரும் நகரங்களுக்கும் வெளிநாடுகளுக்கும் வேலை தேடிக் குடிபெயர்ந்து செல்கிறார்கள். இசுபெயின் இக்காலத் தொழில் நுட்பக் கலைகளின் பெருவளர்ச்சிக்கும், பொருளாதார முன்னேற்றமடையாத நிலைக்கும் இடையில் சிக்கித் தவிக்கிறது.

பொருளாதார வல்லுநர்களும் சமூகவியலாரும் இசுபெயினை மூன்று பகுதிகளாகப் பிரித்துள்ளனர். அவை 1. தொழில்வளம் மிக்க ஏழு மாநிலங்கள், 2. நடு மாநிலங்கள், 3. தென்மாநிலங்கள் என்பனவாம். முதலில் கூறியுள்ள தொழில்வளம் மிக்க ஏழு மாநிலங்களே செல்வ வளத்தால் செழுமையுற்றவையாகும். நடு மாநிலங்கள் சராசரி வருமானமுள்ளவை. தென்மாநிலங்கள் வளர்ச்சி குன்றியவை எனலாம்.

தொழில்வளம் மிக்க ஏழு மாநிலங்கள் என்பவை மாட்ரிடு (Madrid), பார்சிலோனா (Barcelona), ஆலவா (Alava), குவிபூசுகோவா (Guipuzcoa), விசுகயா (Vizcaya), சண்டாண்டர் (Santander), ஓவியிடோ (Oviedo) ஆகியவை ஆகும். ஆலவா, குவிபூசுகோவா, விசுகயா என்னும் மாநிலங்களைப் பாசுக்கு (Basque) மாநிலங்கள் என்பர். இங்கு



மாட்ரிடு

வாழும் பழங்குடியினர் பாசுக்கு மொழியைப் பேசுவதால் இம்மாநிலங்கள் அப்பெயர் பெற்றன.

மாட்ரிடு, நாட்டின் தலைநகரம். இது ஒரு வணிக, பொருள் முதலீட்டு மையமாகும். இங்கு வீடுகட்டும் தொழில் சிறப்பானது. இம்மாநிலம் தொழில்வளம் மிக்கது.

பார்சிலோனா மத்திய தரைக் கடலையொட்டியுள்ள மாநிலம்; வாழ வசதியான தட்பவெப்பநிலை கொண்டது. பண்ணைப் பொருள்கள் சிறப்பாக விளைகின்றன. நல்ல மழை பொழிகிறது. இது பேருந்து வண்டிகள் உற்பத்தி செய்யப்படும் மையமாகும். பழவகைகள் பெருமளவில் விளைகின்றன. வட பார்சிலோனா ஒரு சுற்றுலா மையமாகும். எனவே இம்மாநிலம் செல்வ வளம் மிக்கது.

விசுகயா, குவிபூசுகோவா, ஆலவா என்னும் பாசுக்கு மாநிலங்கள் உடலுக்கு நலம் தரும் தட்பவெப்பநிலையையும் நல்ல மழையையும் பெறுவன. இசுபெயின் நாட்டிலேயே பச்சைப்பசேலென்றுள்ளவை இம்மாநிலங்களே. இங்கு நல்ல துறைமுகங்களும் உள்ளன. இம்மூன்று மாநிலங்களில் உள்ள தொழிற் சிறப்பு என்னவெனில், இசுபெயினின் மற்ற மாநிலங்களில் ஒட்டுமொத்தத் தொழில்களையும் பாசுக்கு மாநிலங்களின் தொழில்கள் விஞ்சுவனவாம். வங்கிகள், இரும்பு உருக்குத் தொழில், கப்பல்கட்டும் தொழில் போன்றவற்றால் இங்கு வருமானம் மிகுதியாகவுள்ளது. பிற மாநிலங்களைச் சார்ந்த மக்கள் வேலைதேடி இம்மாநிலங்களில் குடியேறுகின்றனர்.

ஓவியிடோ மாநிலம் நிலக்கரிச் சுரங்கங்களுக்கும் தொழில்களுக்கும் சிறந்தது.

மாட்ரிடைச் சுற்றியுள்ள வேளாண்மைப் பகுதி களான இலா மன்சா (La Mancha), எசுடிரிமதுரா (Estremadura), கலிசியா (Calicia) போன்றவை நடு மாநிலங்களாம். கலிசியாவில் கப்பல் கட்டும் தொழில் நடைபெறுகிறது. நடு மாநிலங்களில் வேலையற்றோர் மிகுதியாக வாழ்கின்றனர். தென் மாநிலங்களைவிட நடுமாநிலங்கள் ஓரளவு செல்வச் செழிப்புள்ளவை. தென் மாநிலங்கள் பார்ப்பதற்கு அழகானவை. இப்பகுதிகளில் செவில் (Seville), கிரா னடா (Granada), கார்டோபா (Cordoba), கேடிசு (Cadiz), மாலகா (Malaga) போன்ற நகரங்கள், கலை களுக்கும் கட்டடக் கலைகளுக்கும் பெயர்பெற்ற இடங்களாகும். இங்குப் பல்வேறு கிறித்தவத் திருச் சபைகள், வழிபாட்டிடங்கள், மசூதிகள் போன்ற வற்றை இன்றும் காணலாம். தென் மாநிலங்களில் தாம் பிளாமன்கோ (Flamenco) என்னும் இசு பானிய நாடோடிகள் வாழ்கின்றனர். பிளாமன்கோ பெண்கள் மிக்க அழகுடையவர்கள். அவர்கள் ஒரு வகையான ஆட்டத்திலும் பாட்டிலும் கைதேர்ந்த வர்கள். இப்பகுதியில்தான் ஐரோப்பாவில் வாழும் ஆப்பிரிக்க மூர்கள் என்னும் முசுலிம்கள் வாழ்கின்ற னர். இப்பகுதி விளையாட்டிற்குப் பெயர் பெற்றது.

மேற்கூறப்பட்ட பகுதி, மலைகள் நிறைந்துள்ளமை யால் போக்குவரத்து வசதி குறைந்தது. இங்கு மழை குறைவு. எனவே தென் மாநிலத்தவர்கள் வேலைதேடிப் பிறபகுதிகளுக்குக் குடிபெயர்கின்ற னர். காளைகளும் குதிரைகளும் வளர்க்கப்படுகின் றன. காளை மாட்டுச் சண்டைக்கு இசுபெயின் சிறப்புமிக்கது.

**இயற்கைச் செல்வங்கள்:** இசுபெயின் நாடு இயற் கைச் செல்வங்கள் குறைந்த நாடு. நல்ல பண்ணை நிலங்கள் இங்குக் குறைவு. தொழிற் சாலைகளுக்குத் தேவையான சிறப்பான கச்சாப்பொருள்கள் இங்குக் கிடைக்கவில்லை.

**இசுபானிய மக்கள்:** பொருளாதார முன்னேற் றம் 1950 க்கும் 1960 க்கும் இடையில் ஏற்பட்டது. இதற்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்த பெரும்பா லான இசுபானியர்கள், வறுமையில் உழன்ற கிராம மக்கள் ஆவார்கள். அவர்களுள் பலர் சிறு பண்ணை களின் சொந்தக்காரர்களாயிருந்தனர். ஏனையோர் பெரும் பண்ணைகளில் பணியாற்றினர். மக்கள் தத்தம் பகுதிகளிடம் பற்றும் பாசமும் கொண்டி ருந்தனர். ஏனைய பகுதி வாழ் மக்களுடன் அவர் கள் பெருமளவு தொடர்பு கொள்ளவில்லை. மக்கள் அனைவரையும் இணைக்கும் மையப் புள்ளியாக உரோமானியக் கத்தோலிக்கத் திருச்சபை விளங்கு



கார்டோபா நகரம்

கிறது. பெரும்பாலான இசுபானியர்கள் உரோமன் கத்தோலிக்கக் கிறித்தவர்களே.

இன்று இசுபெயின் தொழில் வளம் மிகுந்த நாடாகி வருகிறது. மக்களும் நகர்ப்புறங்களில் வாழ்கிறார்கள். இக்கால இசுபானிய மக்கள் நன்கு உண்டு உடுத்துச் சீரிய வீடுகளில் வாழ்கின்றனர். பகுதி வாழ் பற்றும், உரோமன் கத்தோலிக்கத் திருச்சபையும் இசுபானியர் வாழ்வில் பெரும் பங்கு கொண்டுள்ளன. எனினும் விரைந்து வளர்ந்து வரும் பொருளாதார, சமூக மாற்றங்களினால் மேற்கூறிய வற்றின் பிடிப்புத் தளர்ந்து குறைந்து வருகிற தெனலாம்.

இசுபெயினில் மக்கள் வாழ்க்கை பல்லாயிர மாண்டுகளுக்கு முன்னர்த் தொடங்கியுள்ளது. ஐபீரிய மக்கள் 5000 ஆண்டுகளுக்கு முன் இங்கு வாழ்ந்த னர். அடுத்து வந்த நாலாயிரம் ஆண்டுகளில் வெற்றி வீரர்களாகவும் குடியேற்றவாதிகளாகவும் வணிகர் களாகவும் பல குழுவினர் இசுபெயினுக்கு வந்தனர். பினீசியர்கள், கெல்ட்டுகள், கிரேக்கர்கள், கார்த்த சீனியர்கள், உரோமானியர்கள், செருமானியர், மூர்கள் போன்றோர் அடுத்தடுத்து வந்து குடியேறி னார்கள். இம்மக்கள் குழுக்கள் ஒன்றோடொன்று கலந்து, இன்று காணும் கலப்பட இசுபானியர்கள் உருவாகியுள்ளனர்.

இசுபெயின் நாட்டின் மக்கள் தொகை ஏறத் தாழ 3 கோடியே 77 இலட்சமாகும். இவர்களில் பாதிக்கும் மேலானவர்கள் நகர்ப் புறங்களில் வாழ் கிறார்கள். மாட்ரிடு இசுபெயினின் தலைநகரம். பார்சிலோனா பிறிதொரு பெரு நகரமாகும். இவ் விரு நகரங்கள் ஒவ்வொன்றிலும் பத்து இலட்சத் திற்கும் மிகுதியான மக்கள் வாழ்கிறார்கள். மேலும் 46 நகரங்களில் ஒவ்வொன்றிலும் ஒரு இலட்சத்திற் கும் மிகுதியானவர்கள் வாழ்கிறார்கள்.

**மொழி:** காசுடிலிய இசுபானிய மொழி **(Castilian Spanish)**, இந்நாட்டின் ஆட்சி மொழியாகும். பெரும்பாலான மக்கள் இம் மொழியையே பேசு கின்றனர். இம்மொழிக்கு வட்டார மொழி வடிவம் கிடையாது. ஆனால், பகுதிக்குப் பகுதி சிற்சில உச்சரிப்பு வேறுபாடுகள் இருக்கும்.

வட பகுதியிலுள்ள கட்டலோனியா, பாசுக்கு மாநிலங்கள், கலீசியா ஆகிய இடங்களில் காசுடிலிய இசுபானிய மொழியுடன் இரண்டாம் மொழியொன் றும் பயன்படுத்தப்படுகிறது. கட்டலோனியா மக்க ளுள் பலர் கட்டலான் **(Catalan)** என்னும் மொழி யைப் பேசுவர். பாசுக்கு மாநில மக்கள் பாசுக்கு மொழி பேசுவர். இதனை இசுகேரா அல்லது இசுகரா என்றும் கூறுவர். கலிசியாவில் போர்த்துகீசிய மொழியுடன் உறவு கொண்ட கலீசியன் மொழி பேசப்படுகிறது.

**நகர வாழ்க்கை:** இசுபானிய நகரங்களின் வாழ்க்கைத்தரம் 1950-ஆம் ஆண்டுக்குப் பின்னர் வெகுவாக உயர்ந்துள்ளது. இன்றைய நகர வாழ்க்கை முறை மக்களை மிகுதியாகக் கவர்ந்திழுக் கிறது எனலாம். பெரும்பாலான நகர மக்கள் சொந்த வீடுகளில் சிறுகுடித்தனம் நடத்துகின்றனர். வாடகை வீடுகளில் வாழ்வோர் குறைவு. எல்லா வீடுகளுச்கும் மின் வசதியுண்டு. மேற்கத்திய பாணி யில் உடுத்துகின்றனர். பெரும்பாலான குடும்பங்கள் தாமியங்கி வண்டிகளையும் தொலைக்காட்சிப் பெட்டிகளையும் வைத்துள்ளன. இருப்பினும் சுற்றுப் புறச்சூழல் பாழ்படுதலும், போக்குவரத்து நெரிச லும் மக்களை வாட்டுகின்றன.

புத்துலகப் பாணிகளைப் பின்பற்றினாலும், நகர மக்கள் இன்றும் பழைய பழக்க வழக்கங்களை யும் கடைப்பிடித்து வருகின்றனர். எடுத்துக்காட் டாக, பெரும்பாலான இசுபானியத் தொழிற் சாலைகள், கடைகள், அலுவலகங்கள் மதிய உண விற்கு மூன்று மணி நேர இடைவெளி விடுகின்றன. பின்னர்த் திறக்கப்பட்டு மாலை 7 மணி வரை பணி யாற்றுகின்றன. மதிய உணவிற்குப்பின் இடைவெளி விட்டுச் சிற்றுண்டி அருந்துவர். மாலை உணவுக்கு முன்னர் இசுபானியர்கள் காலார நடந்து மகிழ் கிறார்கள். இரவு உணவு 10 அல்லது 11 மணிக்கு உண்பர். வழிகளில் உள்ள சிற்றுண்டிச் சாலைகளுக் கும் சாராயக் கடைகளுக்கும் நண்பர்களுடன் சென்று காப்பி, சோடா, பிராந்தி போன்றவற்றை அருந்தி மகிழ்கிறார்கள்.

நாட்டுப்புற வாழ்க்கை நகர வாழ்க்கையைவிட ஓரளவு மாறுபட்டுள்ளது. மின்வசதியாலும் பண் ணைத் தொழில் வளர்ச்சியாலும், இக்கால, வசதி யான கருவிகளைப் பயன்படுத்துவதாலும் 1960 க்குப் பின்னர், இசுபானிய உழவர்கள் நல்வாழ்வு வாழ்கிறார்கள் எனலாம். ஆனால் பொருளா தாரத் துறையில் வேளாண்மையின் சிறப்பு குறைந்து தொழிற் சாலைகளின் மதிப்பு உயர்ந்துள்ளது. நகர்ப் புற மக்களின் வாழ்க்கைத் தரத்தைவிட நாட்டுப்புற மக்களின் வாழ்க்கைத்தரம் மிகக் குறைந்து காணப் படுகிறது. பல இலட்சம் குடியானவர்கள், வேலை தேடி 1960 க்குப் பின்னர் பெரு நகரங்களுக்கும் அயல் நாடுகளுக்கும் செல்கின்றனர்.

பெரும்பாலான குடியானவர்கள் சிற்றூர்களிலோ சிறு நகரங்களிலோ வாழ்கிறார்கள். ஒவ்வொரு நாளும் காலையும் மாலையும் அவர்கள் அழுக் கான சாலைகளில் வீடுகளிலிருந்து கழனிகளுக்கு நடந்தோ கழுதை பூட்டிய கட்டைவண்டிகளிலோ

பயணம் செல்கின்றனர். நகரமக்களைப் போலன்றி கிராம மக்கள் பகல் உணவின்போது குறைந்த நேரத்தையே இடைவேளையாகக் கொள்கின்றனர். ஆனால் நகர மக்கள்போல் கிராம மக்களும் மாலைப் போதில் இன்ப உலாவை மேற்கொண்டு மகிழ்கின்றனர். தத்தம் ஊர் அல்லது நகர முற்றத்தில் அமர்ந்து பேசிப் பொழுது போக்கி இன்புறும் வழக்கமும் அவர்களிடமுண்டு.

கிராமப்புற வீடுகள் பெரும்பாலும் களிமண்ணாலும் கற்களாலும் கட்டப்பட்டவை. சூரிய வெப்பத்திலிருந்து தம்மைக்காத்துக்கொள்ள வீடுகளுக்கு ஒரு வகையான வெண்நிறச் சாந்து பூசுகின்றனர். பெரும்பாலான வீட்டுக் கூரைகள் ஓடுகளால் வேயப்பட்டுள்ளன.

குடியானவர்கள் நகர மக்களைவிட எளிய உடை உடுத்துவர். ஆண்கள் வெண்பருத்தி அங்கிகளையும், கக்சையுடன் கூடிய கருப்புக் காலுறைகளையும் கருப்பு நிற உருண்டைவடிவமான குல்லாய்களையும் அணிவர். பெண்கள் முழுநீளப் பாவாடைகளையும் மார்புச்சட்டைகளையும் அணிந்து கொள்வர்.

**உணவு:** இசுபானியர்கள் கடலிலிருந்து கிடைக்கும் மீன், நண்டு போன்ற கடலுணவுப் பொருள்களை உண்டு மகிழ்கிறார்கள். அவை மலிவானவை; மிகுதியாகவும் எளிமையாகவும் கிடைக்கப்பெறுபவை. அதை அவர்கள் பல்வேறு வகையாகச் சமைக்கிறார்கள். மக்கள் அனைவரும் விரும்பி உண்ணும் ஒரு வகைக் கறியைப் பயெல்லா (Paella) என்பர். அதாவது நண்டு, கோழி, பன்றி, காய்கறிகள் ஆகியவற்றை அரிசியுடன் கலந்து சமைப்பதாகும். வேறு வகை உணவு வகைகளையும் உண்பர். கோடைக்காலத்தில் கசுப்சேர் (Gazpacho) என்னும் ஒருவகைக் கூட்டு உண்டு மகிழ்கிறார்கள். ரொட்டித் துண்டுகள், துண்டு வெள்ளரிக்காய், வெங்காயம், தக்காளி ஆகியவற்றின்மீது அதைத் தெளித்து உண்பர்.

கோழி, செம்மறியாடு, ஆடு, பன்றி, முயல் போன்றவற்றின் இறைச்சியை எளிய மக்களும் உண்டு களிப்பர். மாடுகள் பற்றாக்குறையினால் மாட்டுக்கறி விலை மிகுதியாகும். வெள்ளை ரொட்டியைச் சுட்டு உண்கிறார்கள்.

இசுபானியர் விரும்பி அருந்தும் குடிவகைகளில் திராட்சைச் சாற்றிலிருந்து கிடைக்கும் மது ஒன்றாகும். சிற்றுண்டி வேளையைத் தவிர்த்து ஏனைய வேளைகளில் இதனைப் பருகுவர். சங்கிரியா (Sangria) என்பது ஒருவகைக் குடியாகும். கறுப்புக்காப்பி, சுடச்சுடச் சாக்லேட்டு போன்றவை ஏனைய குடி வகைகள் ஆகும்.

**பொழுது போக்கு:** இசுபானியர்கள் ஓய்வு நேரத்தை வீட்டிற்கு வெளியே சென்று கழிக்கின்றனர். ஊர்ப்புறச் சிற்றுண்டிச்சாலைகளில் பல மணி நேரங்கள் அமர்ந்து பொழுதுபோக்குவர். கோடைக் காலத்தில் அழகான கடற்கரைகளுக்குச் சென்று இனிதே பொழுதுபோக்குவர். நகர மக்கள் வார இறுதியில் கிராமப் புறங்களுக்கு இன்பச் செலவு செல்வர்.

சாக்கர் என்னும் காற்பந்துப் போட்டியில் இசுபானியர் மிகுந்த ஆர்வம் காட்டுகிறார்கள். பல நகரங்களில் இலட்சம்பேர் அமர்ந்து பார்க்க வசதியுள்ள அரங்கங்களைக் காணலாம். காளை மாட்டுச் சண்டை இசுபானியர் விரும்பிப்பார்க்கும் களியாட்டங்களில் சிறப்பானதாகக் கருதப்படுகிறது. இவ் விளையாட்டில் பங்கு கொள்ளும் வீரர்களை மட்டாடர் (Matador) என்பர்.



காளை மாட்டுச் சண்டை

**சமயம்:** இசுபெயின் நாட்டு மக்களில் 99 விழுக்காட்டினர் உரோமானியக் கத்தோலிக்கக் கிறித்தவர்கள். ஏறத்தாழ 50,000 புராட்டசுடெண்டுகளும் ஒருசில யூதர்களும் இந்நாட்டில் வாழ்கிறார்கள். முற்காலத்தில் கத்தோலிக்கர்களுக்குச் சிறப்பான சலுகைகள் கொடுக்கப்பட்டிருந்தன. புதிய அரசியலமைப்புத்திட்டம் 1978-ஆம் ஆண்டில் நடைமுறைப் படுத்தப் பட்டபோது, சமயச் சுதந்தரம் கொடுக்கப் பட்டு, எல்லாச் சமயங்களையும் ஒரு தன்மையதாகக் கருதும் நிலை ஏற்பட்டுள்ளது.

**கல்வி:** இசுபெயின் நாட்டில் இன்று நூற்றுக்குத் தொண்ணூற்றேழு பேர் படித்தவர்கள். இந்

நாட்டுச் சட்டம், 6 வயது முதல் 13 வயது வரையிலான எல்லாக் குழந்தைகளும் பள்ளி செல்ல வேண்டுமெனக் கூறுகிறது. எனினும் குழந்தைகளின் எண்ணிக்கை மேல்வகுப்புகளுக்குச் செல்லச் செல்லப் படிப்படியாகக் குறைகிறது.

தொடக்கப் பள்ளிகளுக்கு மாணவ-மாணவியர் எட்டாண்டுகளுக்கும் உயர்நிலைப்பள்ளிகளுக்கு நான்காண்டுகளுக்கும் செல்வர். பல்கலைக் கழகம் செல்லுமுன் ஓராண்டு சிறப்புப்பாடம் பயிலுகின்றனர். அரசாங்கமே தொடக்கப்பள்ளிகளையும் உயர்நிலைப்பள்ளிகளையும் நடத்துகிறது. தனியார் பள்ளிகளும் நடைபெறுகின்றன. இசுபெயினில் 18 பல்கலைக் கழகங்கள் உள்ளன. அவற்றில் ஏறத்தாழ 30,000 மாணவர்கள் படிக்கிறார்கள்.

**அருங்காட்சியகங்கள்:** மாட்ரிடிலுள்ள பரடோ (Prado) அருங்காட்சியகம் இசுபெயினில் முதன்மையானது. உலகப் புகழ்பெற்ற கலைச் செல்வங்கள் அங்குக் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. மாட்ரிடில் அமெரிக்க அருங்காட்சியகம், தேசியத் தொல்பொருள் அருங்காட்சியகம் போன்றவையும் உள்ளன. செவில் நகரத்திலுள்ள மாநில அருங்காட்சியகமும், பார்சிலோனாவிலுள்ள கட்டலான் கலை அருங்காட்சியகமும் ஏனைய சிறப்பான கண்காட்சிச் சாலைகளாகும்.

**நூலகம்:** மாட்ரிடிலுள்ள தேசிய நூலகம் இசுபெயினின் பெரிய நூலகமாகும். இதில் 30 இலட்சம் நூல்கள் இருக்கின்றன. மாட்ரிடிலேயே உள்ள நகராட்சி இதழ்கள் நூலகம், உலகிலுள்ள இதழ்களை வாங்கும் பெரும் நூலகமாகும்.

**இசுபானிய வரலாறு:** இசுபெயினில் இலட்சம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே மக்கள் வாழ்ந்து வருகின்றனர். வரலாற்றுக்காலத் தொடக்கத்தில் இசுபெயினின் பெரும்பகுதிகளில், ஐபீரியர்கள் என்னும் மக்கள் வாழ்ந்தனர். பண்ணைகளை உருவாக்கிச் சிற்றூர்கள், நகரங்கள் போன்றவற்றை அவர்கள் அமைத்தனர். கார்ட்டசீனா (Cartazena) அவர்கள் அமைத்த நகரங்களுள் ஒன்று. அதனை இன்று தர்ரகோனா (Tarragona) என்று குறிக்கின்றனர். இசுபெயினில் உருவான முதல் நகரங்களுள் இதுவும் ஒன்று.

மத்திய தரைக்கடலின் கிழக்குக் கரையில் வாழ்ந்த பினீசியர்கள் கி.மு. 1000-ஆம் ஆண்டளவில் இசுபெயினின் கிழக்கு, தெற்குக் கடற்கரைகளில் குடியேற்றங்களை நிலைநாட்டத் தொடங்கினர். பினீசியர்கள் தம் குடியேற்றப் பகுதிகளுடன் வளமான வணிகத்தைச் செய்துவந்தார்கள். கேடிசு (Cadiz), மாலகா (Malaga) போன்ற நகரங்கள் அவர்கள் தோற்றுவித்தவையாகும். அவை இன்றும் நிலைத்து நிற்கின்றன.

கெல்ட்டிய மக்கள், கி.மு. 9-ஆம் நூற்றாண்டளவிலும் மீண்டும் கி.மு. ஆறாம் நூற்றாண்டிலும் வடக்கிலிருந்து இசுபெயினுக்குள் நுழைந்தனர். அவர்கள் இந்நாட்டின் வடபகுதிகளில் குடியேறி வாழ்ந்தனர். ஏறத்தாழ கி.மு. ஆறாம் நூற்றாண்டிலேயே கிரேக்கர்களும் இசுபெயினுக்குள் காலடி வைத்தனர். பின்னர்க் கிழக்குக் கடற்கரையையொட்டியுள்ள பகுதிகளில் வணிக மையங்களை நிலைநாட்டினர்.

வட ஆப்பிரிக்காவில் வலிமையுடன் வாழ்ந்த கார்த்தேசு (Carthage) நகரத்தினர், கி.மு. 400-ஆம் ஆண்டளவில் பெரும்பகுதி இசுபெயினை வென்றனர். கார்த்தசீனியர்களின் மாபெரும் படைத்தலைவரான ஆனிபால் (Hannibal) என்பார், உரோமானிய இத்தாலியைக் கி.மு. 200-ஆம் ஆண்டளவில் இசுபெயினிலிருந்து தாக்கினார். ஆனால் இரண்டாம் பியூனிக்குப் (Punic) போரில் (கி.மு. 218-201) உரோமானியர் ஆனிபாலைத் தோற்கடித்தனர். அதுமட்டுமல்லாமல் அனைத்துக் கார்த்தசீனியர்களையும் இசுபெயினிலிருந்து விரட்டியடித்தனர்.

இரண்டாம் பியூனிக்குப் போரின்போது இசுபெயினை உரோமானியர் வென்றார்கள். ஆனால் முரட்டுக் குணமும் விடுதலை விரும்பிகளுமான இசுபானியப் பழங்குடி இனத்தவர்கள் அனைவரையும் வெற்றிகொள்ளத் திறல் வாய்ந்த உரோமானியப் படைகளுக்கு ஏறத்தாழ இருநூறு ஆண்டுகள் சென்றன. இன்றைய போர்ச்சுகல் நாட்டையும் அப்போது உரோமானியர் வென்றர். ஐபீரிய முந்நீரகத்தின் வரலாற்றிலேயே முதன் முறையாக அப்போதுதான் அம்முந்நீரகம் முழுவதும் ஓர் அரசின் கீழ் வந்ததெனலாம். ஐபீரிய முந்நீரகத்தை உரோமானியர் ஒரு தனி மாநிலமாக்கி, அதனை இசுபானியா (Hispania) என்றனர். இசுபானிய மொழியில் இசுபானா (Espana) என்று இசுபெயின் நாட்டை அழைக்கிறார்கள். இசுபானியா என்ற சொல்லிருந்துதான் இசுபானா பிறந்தது.

உரோமானியப் பேரரசில் இசுபெயின் முதன்மையான மாநிலமாகக் கருதப்பட்டது. பல உரோமானியர்கள் அங்குக் குடியேறி வாழத் தலைப்பட்டனர். இசுபெயினில் உரோமானியர் பல நகரங்களை உருவாக்கி, அனைத்துப் பகுதிகளுக்கும் அழகான சாலைகளையும் அமைத்தனர். ஆறுகளின் குறுக்கே பெரும் அணைகளைக் கட்டி வறண்ட பகுதிகளுக்கு நீர்ப்பாசன வசதிகளையும் அவர்கள்தாம் செய்த



இசுபெயினிலுள்ள உரோமானியக் கட்டடங்கள்

னர். ஏட்ரியன் (Hadrian), திரேசன் (Trajan) போன்ற உரோமானியப் பெரும் பேரரசர்களுள் பலர் இசுபெயினிலேயே பிறந்தவர்கள். மார்சியல் (Martial), செனக்கா (Seneca) போன்ற உரோமானியப் பேரறிஞர்களும் இசுபெயினில் பிறந்தவர்களே.

உரோமானியர் இலத்தீன் மொழியை இம் மாநிலத்தில் புகுத்தினார்கள். இசுபானியர்கள் பேசிய இலத்தீன் மொழியிலிருந்து படிப்படியாக வளர்ச்சியுற்றதுதான் இசுபானிய மொழியாகும். உரோமானிய ஆட்சியின்போதுதான் இசுபெயினில் கிறித்தவ சமயமும் புகுத்தப்பட்டது. அதுவே அம் மாநிலத்தின் அரசாங்கச் சமயமாயிற்று. இத்தருணத்தில் உரோமானியப் பேரரசு, கீழை உரோமானியப் பேரரசு என்றும், மேலை உரோமானியப் பேரரசு என்றும் இரு கூறுகளாகப் பிரிந்தது. இசுபெயின் மேலை உரோமானியப் பேரரசின் பகுதியாயிற்று.

செருமனியிலிருந்து படையெடுத்து வந்த பழங்குடி இனத்தவர்கள் மேலை உரோமானியப் பேரரசை நிலை குலையச் செய்து, கி.பி. 476-ஆம் ஆண்டில் அதனை அழித்துவிட்டனர். அவர்களில் விசிகாத்துகள் (Visigoths) என்னும் இனத்தவர்கள் இசுபெயின் மீது படையெடுத்து, அங்குத் தனித்ததொரு சுதந்திர அரசாங்கத்தை அமைத்தனர். சுதந்திரமானதும் தனித்ததுமான அரசாங்கம் அம் முந்நீகரத்தில் அமைக்கப்பட்டது. விசிகாத்துகள் கிறித்தவ சமயத்தவர்கள். அவர்கள் உரோமானியரின் பண்பாட்டைப் போன்றதொரு நாகரிகத்தை நிலைநாட்ட முயன்றனர். ஆனால் விசிகாத்து பிரபுக்களிடையே தொடர்ந்து நடைபெற்ற சண்டைகளாலும், அரசர்களுக்கெதிராகப் பிரபுக்கள் அடுத்தடுத்து விளைவித்த கலகங்களாலும் நாடு வலிமை குன்றலாயிற்று.

**இசுபெயினில் முசுலிம் ஆட்சி:** விசிகாத்துகள் இசுபெயினை எட்டாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை ஆண்டனர். அந்நூற்றாண்டின் தொடக்கத்தில் வட ஆப்பிரிக்காவிலிருந்து மூர்கள் என்னும் முசுலிம்கள் இந்நாட்டின் மீது படையெடுத்தனர். இப் படையெடுப்பு கி.பி. 711-ஆம் ஆண்டில் தொடங்கியது. மூர்கள் பெரும்பாலான விசிகாத்து அரசை கி.பி. 718-ஆம் ஆண்டிற்குள் வென்று விட்டார்கள். வட கோடி இசுபெயினிலிருந்த குறுகிய மலைப் பகுதியில் மட்டும் மூர்களின் ஆட்சி நுழையவில்லை.

மூர்களின் ஆட்சியின் விளைவாக இசுபானியர்களில் பலர் முசுலிம்களாகச் சமயம் மாறினர். இடைக் கால ஐரோப்பாவின் பெரும் பகுதிகளில் நிலவி

யிருந்த பண்பாட்டைவிட உயர்ந்ததும் முன்னேற்ற நோக்குடையதுமான ஒரு பண்பாட்டை முசுலிம்கள் கொண்டிருந்தனர். கணக்கியல், மருத்துவம், இன்னும் ஏனைய துறைகளிலும் முசுலிம்கள் புதிய கண்டுபிடிப்புகளைச் செய்தனர். பண்டைய கிரேக்க, உரோமானிய, நடு கிழக்கு நாடுகளில் நிலவிய நாகரிகங்களின் இலக்கியங்களைக் காத்தவர்கள் அவர்களேயாவர். இசுபெயினில் இருந்த முசுலிம்கள் இவ்விலக்கியங்களை ஐரோப்பிய அறிஞர்களுக்கு வழங்கினர். மூர்கள் இசுபெயினில் பல அழகான கட்டடங்களைக் கட்டினார்கள். கவின்மிகு மசூதிகள், மதில்களால் சூழப்பட்ட மாளிகைகள் போன்றவற்றை அமைத்தார்கள். இத்தகைய மாளிகைகள் அல்கசார்கள் (Alcazars) எனப்படும்.

கி.பி. பதினோராம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இசுபெயினில்நிலைநாட்டப்பட்டிருந்த மூர்களின் ஆட்சி சீர்குலைந்து அழிந்தது. அவர்களுக்கிடையே மூண்ட சண்டை சச்சரவுகள்தாம் அதன் அழிவிற்கு காரணமாகும். இதன் பின்னர் இசுபெயின் சிறுசிறு மூர் அரசுகளாகவும் சுதந்திர நகரங்களாகவும் பிரிந்துபோயிற்று.

**இசுபெயினில் மீண்டும் கிறித்தவ அரசுகள்:** மூர்களின் வெற்றிக்குப் பின்னர் இசுபெயினின் வடகோடியிலிருந்த விசிகாத்து இனக் குழுக்களும், ஏனைய கிறித்தவர்களும் சுதந்தரமாகவே செயற்பட்டனர். இக்குழுக்கள்,இசுபெயினின் வடமேற்குக் கடற்கரையிலிருந்து மத்தியதரைக்கடல் வரை பற்பல அரசுகளை நிலைநாட்டியிருந்தன. கி.பி. பதினோராம் நூற்றாண்டில் இவ்வரசுகள், பெருகி வளர்ந்து ஆங்காங்கே எஞ்சியிருந்த மூர்களைத் தென் பாகத்திற்கு விரட்டியடித்தன.

நடு இசுபெயினின் வடபகுதியாகிய காசுடைல் (Castile) சிறப்பாக வளர்ச்சி பெற்றுத் திறன்மிகுந்த கிறித்தவ அரசாக உருப்பெற்றது. மூர்களுக்கு எதிரான போரைக் காசுடைலின் படைவீரர்கள் தலைமை தாங்கி வழிநடத்தினர். எல் சிடு (El Cid) என்னும் பெயர் கொண்ட காசுடைலியர் ஒருவர் இசுபானியத்-தேசியக் கிறித்தவ வீரர்களின் தனிப்பெரும் தலைவராகப் பொறுப்பேற்றார்.

கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் மக்களின் ஆதரவைப் பெறும் நோக்குடன் இசுபானிய அரசர்கள் பலர், கோர்டெசு (Cortes) என்று கூறப்பெறும் நாடாளுமன்றத்தை அமைத்தார்கள். ஒவ்வொரு நாடாளுமன்றக் கூட்டத்தின்போதும் நடுத்தர மக்கள், பெருங்குடிமக்கள், உரோமானியக் கத்தோலிக்கத் திருச்சபையினர் போன்றவர்களின் பிரதிநிதிகள் அரசாங்கத்தில் வந்து சேர்ந்தனர். ஆனால், இசுபானிய அரசர்கள் கோர்டெசுக்கு எந்தவொரு அதிகாரத்தையும் கொடுக்கவில்லை; அப்படிக் கொடுத்திருந்தால் அது மிகச் சிறு அதிகாரமாகவே இருந்தது.

அதே நூற்றாண்டில் இன்று வட போர்ச்சுகலில் இணைந்திருக்கும் பகுதி,காசுடைலிலிருந்து சுதந்தரம் பெற்றது. இதனிடையில் இசுபானியக் கிறித்தவர்கள் தொடர்ந்து மூர்களுடன் போரிட்டார்கள். இசுபெயினில் வெகுவாகப் பரவியிருந்த முசுலிம் பகுதி கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதிக்கட்டத்தில் சிறிது சிறிதாகக் குறைந்து தெற்கில் கிரானடா என்னும் பகுதியுடன் முசுலிம் ஆதிக்கம் நின்றுவிட்டது. ஏனைய இசுபானியப் பகுதியில் ஆரகான் (Aragon), நவார் (Navarre), காசுடைல் போன்ற பகுதிகளைக் கிறித்தவ அரசுகள் கட்டுப்படுத்தின. பெரும்பாலான கிழக்கு இசுபெயினின் பெரும் பகுதியையும் பாலியாரிக்குத் தீவுகளையும் ஆரகான் ஆண்டது. ஆரகானுக்கு வட மேற்கிலிருந்த சிறு பகுதியை நவார் ஆண்டது. இசுபெயினின் ஏனைய பகுதிகள் காசுடைலின் கட்டுப்பாட்டின் கீழ் இருந்தன. காசுடைல் கி.பி. 14, 15-ஆம் நூற்றாண்டுகளில் மிகப் பெரியதும் மிகத் திறன் வாய்ந்ததுமான இசுபானிய அரசாகத் திகழ்ந்தது.

**இசுபானிய அரசுகள் இணைதல்:** ஆரகானின் இளவரசர் பெர்டினான்டு கி.பி. 1469-ஆம் ஆண்டில் காசுடைல் இளவரசி இசபெல்லா என்பவளைத் திருமணம் செய்து கொண்டார். இசபெல்லா கி.பி. 1474-இல் காசுடைலின் அரசியாகவும், கி.பி. 1479-இல் பெர்டினான்டு ஆரகானின் அரசராகவும் ஆனார்கள். இசுபெயினின் பெரும்பாலான பகுதிகள் அவர்களின் ஆட்சியின் கீழ் வந்தன.

பெர்டினான்டும் இசபெல்லாவும் இசுபெயின் நாட்டை வலிமை மிக்கதாகவும் ஒன்றுபடுத்தப்பட்டதாகவும் ஆக்க விழைந்தார்கள். இக்குறிக்கோளுக்குத் தடையாக இசுபெயினில் வாழும் யூதர்களும் முசுலிம்களும் இருக்கக்கூடும் என்று அவர்கள் கருதினார்கள். இசுபானிய இன்குசிசன் (Spanish Inquisition)என்னும் சிறப்பு நீதிமன்றத்தைக் கி.பி. 1480-இல் நிறுவி,அதன் வாயிலாக உரோமானியக் கத்தோலிக்கச் சமயக் கொள்கைகளைப் பின்பற்றாதவர்கள் என்று சந்தேகப்பட்டவர்களைச் சிறையிலடைத்தோ கொன்றோ அழித்தார்கள். இந்த இன்குசிசன் நீதிமன்றம் முந்நூறு ஆண்டுகளுக்கு மேலாகத் தொடர்ந்தது. அதே ஆண்டில் (கி.பி. 1480-இல்) பெர்டினான்டும் இசபெல்லாவும் கிரானடாவிலிருந்த முசுலிம்களையும் விரட்டத் தொடங்கினர். அவர்களின் கூட்டுப்படைகள், முசுலிம்களைக் கி.பி. 1492-ஆம் ஆண்டில் தோற்கடித்தன. கத்தோலிக்கக் கிறித்தவர்களாக மாற மறுத்த எஞ்சியிருந்த இசுபானிய யூதர்களும்

அதேயாண்டு கொல்லப்பட்டோ நாட்டை விட்டு விரட்டப்பட்டோ அழிக்கப்பட்டனர். பெர்டினான்டு கி.பி. 1512-ஆம் ஆண்டில் சிறு அரசாகவிருந்த நவாரையும் கைப்பற்றி, ஓரரசின் கீழ் ஒன்றுபட்ட இசுபெயினை உருவாக்கினார்.

**இசுபானியப் பேரரசு:** மேலும் ஒரு முக்கியமான நிகழ்ச்சி கி.பி. 1492-இல் நடைபெற்றது. இசுபானிய அரசர்களின் சார்பாகக் கிறிசுதோபர் கொலம்பசு அமெரிக்காவைக் கண்டுபிடித்தார். அடுத்த ஐம்ப தாண்டுகளில் இசுபானியப் படைவீரர்கள், ஆய் வாளர்கள், புதுநாடுகளைக் கண்டுபிடிக்கும் ஆர்வ முள்ளவர்கள் புத்துவகமான அமெரிக்காவை ஆய்ந் தறிய விரைந்தனர். வாசுகோ நூநெசு தெ பால்போ (Vasco Nunez de Balboa) என்பார், கி.பி. 1513-ஆம் ஆண்டில் நடு அமெரிக்காவைக் கடந்தார். 'பசிபிக் குப் பெருங்கடலின் கிழக்கரையைப் பார்த்த முதல் ஐரோப்பியர் அவரேயாவார். எர்நாண்டோ கார் டெசு (Hernando Cortes) கி.பி. 1521-இல் மெக்சி கோவிலிருந்த சக்திவாய்ந்த அசுடெக்கு நாட்டை வெற்றிகண்டார். தென் அமெரிக்காவின் மேற்கி லிருந்த மாபெரும் இன்கா பேரரசைக் கி.பி. 1535-ஆம் ஆண்டளவில், பிரான்சிசுகோ பிசாரோ (Francisco Pizarro) என்பார் வெற்றி கொண்டார். மேற்கூறிய வர்களும் ஏனைய இசுபானியர்களும் பெரும்பாலான தென் அமெரிக்காவையும் வட அமெரிக்காவின் தென் பாகத்தையும் கண்டாய்ந்தனர்.

மெக்சிகோ, நடு அமெரிக்கா, பெரும்பாலான மேற்கு இந்தியத் தீவுகள், இன்றைய தென்மேற்கு அமெரிக்க ஐக்கிய நாடு தென் அமெரிக்காவின் மேலைப்பகுதியின் பெரும்பாகம் போன்ற பகுதிகளை கி.பி. 1550-ஆம் ஆண்டளவில், இசுபெயின் கட்டுப் படுத்தியது. இசுபெயினும் போர்ச்சுகலும், தென் அமெரிக்கா அனைத்தையும் கி.பி. 1494-இல் தமக் குள் பங்கிட்டுக் கொள்ள முயன்றன. இதனைக் குறிக்கும் எல்லையொன்றையும் வரையறுத்துக் கொண்டன. எனினும் அவைகளால் கண்டம் முழு வதையும் தமக்குச் சொந்தமாக்கிக் கொள்ள இயல வில்லை. இங்கிலாந்து, பிரான்சு, நெதர்லாந்து போன்ற நாடுகள், அக்கண்டத்தில் பெரும் பரப்பு களை உரிமை கொண்டாடின.

அமெரிக்காவில் அதன் பேரரசு பெருகி வளர்ந்த போதே இசுபெயின், ஐரோப்பாவிலும் வட ஆப் பிரிக்காவிலும் பல பகுதிகளைக் கைப்பற்றிக் கொண் டது. தென் பிரான்சின் மாநிலமான உரூசிலோன் (Rousillon), இத்தாலியின் பெரும்பகுதி, கனேரித் தீவுகள், வட ஆப்பிரிக்காவின் பகுதி போன்றவற்றை யும் இசுபானியப் படைவீரர்கள் வென்று கொண்ட னர். பெர்டினான்டு, இசபெல்லா ஆகியோரின் பேர ரான முதலாம் சார்லசு கி.பி. 1516-ஆம் ஆண்டில் இசு பெயினின் மன்னரானார். பெல்சியம், இலக்சம்பர்க்கு, ஆலந்து எனப்படும் தாழ்நில நாடுகளை (Low Countries) அவர் ஆண்டு கொண்டிருந்தார். இந்நாடுகளை அவர் இசுபானிய அரசுடன் சேர்த்துக்கொண்டார். ஆப்சுபர்க்கு மரபிலிருந்து வந்த இசுபானிய அரசர் களின் வரிசையில் முதலாக முடிசூட்டிக்கொண்டவர் சார்லசே. ஆப்சுபர்க்கு மன்னர்கள் நடு ஐரோப்பாவில் பெரும் பரப்பில் அமைக்கப்பெற்றிருந்த புனித உரோ மானியப் பேரரசை ஆண்டார்கள். சார்லசும் கி.பி. 1519-ஆம் ஆண்டில் புனித உரோமானியப் பேரரச ரானார். இப்பேரரசை அவர் ஐந்தாம் சார்லசு என் னும் பட்டத்துடனும், இசுபெயினை முதலாம் சார் லசு என்னும் பெயருடனும் ஆட்சி செய்தார்.

சார்லசு மன்னரின் மகன் இரண்டாம் பிலிப்பு என்பாரின் ஆட்சிக் காலத்தில், இசுபானியப் பேரரசு உச்சக் கட்டத்தை எட்டியிருந்தது. அவர் கி.பி.1556-இல் அரசரானார். போர்ச்சுகல் கி.பி. 1580-ஆம் ஆண்டில் இசுபெயினுடன் இணைக்கப்பட்டது. பசி பிக்குப் பெருங்கடலில் உள்ள பிலிப்பைன் தீவுகளும் கி.பி. 16-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இசுபெயி னின் ஆதிக்கத்தின் கீழ் வந்தன. பிலிப்பின் ஆட்சிக் காலம் பொற்காலம் எனலாம். இக்காலத்தில்தான் எழுத்தாளர்களும் ஓவியர்களும் இசுபெயினின் மாபெரும் கலைப்பொருள்கள் சிலவற்றைப் படைத் தார்கள். இவருடைய ஆட்சியில்தான் பேரரசின் நலிவும் தொடங்கியது எனலாம்.

இசுபெயினின் அதிகாரம் உச்சக் கட்டத்தை அடைந்த அதே நூற்றாண்டில், இசுபானியர்களின் நலிவும் தொடங்கிவிட்டது. நலிவுக்குப் பல காரணங் கள் இருந்தன. அடுத்தடுத்து வந்த பல போர்களி னால் பெரும் பொருள்கள் சேதமுற்றன. போர்கள் படைவீரர்களையும் குன்ற வைத்தன. மோசமான தட்பவெப்பநிலை, நிருவாகத் துறையில் ஏற்பட்ட குறைகள், வரவுக்கு மிஞ்சிய செலவு போன்றவற்றால் நாட்டின் பொருளாதாரம் சீர்குலைந்தது. போதாக் குறைக்கு இசுபானியப் பகுதிகள் பலவற்றில் மக்கள் கலகம் செய்தனர்.

இங்கிலாந்தை வென்று தம் இன்னல்களைப் போக்கிக்கொள்ளலாம் என்று பிலிப்பு மனப்பால் குடித்தார். 130 கப்பல்களைக் கொண்ட ஆர்மடா எனப்படும் கப்பற்படையைக் கொண்டு கி.பி. 1588-ஆம் ஆண்டில் இங்கிலாந்தைத் தாக்க ஏவினார். ஆனால் திறன் படைத்த இங்கிலாந்தின் கப்பற்படை யும் கடும் புயலும் ஆர்மடாவைப் பாதி அளவிற்கு அழித்துவிட்டன.

பிலிப்புக்குப் பின்னர் அரியணையேறிய வலுவற்ற மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் இசுபெயின் மேலும் நலிந்து மெலிந்தது. பேரரசுப் பகுதிகளில் மூண்ட கலகங்கள், சீர்குலைந்த பொருளாதாரம், அண்டை நாடுகளுடன் அடுத்தடுத்து நிகழ்ந்த போர்கள் போன்றவற்றால் அது தொடர்ந்து நலிவுற்றது. போர்ச்சுகல் கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில், தன்னைச் சுதந்தர நாடென அறிவித்துக் கொண்டது. இசுபெயினின் வடகிழக்கு மாநிலங்கள் பலவற்றைப் பிரான்சு கைப்பற்றிக் கொண்டது.

பிரெஞ்சுப் படைகள் கி.பி. 17-ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் இசுபெயினைத் தொடர்ந்து தாக்கின. இத்தாக்குதல்களை நிறுத்துவான் வேண்டி இசுபெயினின் அரசரான் இரண்டாம் சார்லசு, பிரெஞ்சுப் பெருங்குடி மக்களுள் ஒருவரான ஆஞ்சு(Anjou) வைச் சார்ந்த பிலிப்பு என்பவரை இசுபானிய அரியணையின் வாரிசென அறிவித்தார். இரண்டாம் சார்லசுக்கு மகப்பேறு இல்லை. அவர் கி.பி. 1700-இல் காலமானதும், ஆஞ்சுவைச் சார்ந்த பிலிப்பு, ஐந்தாம் பிலிப்பு என்ற பட்டத்துடன் இசுபெயினின் அரசரானார். இவர் பிரான்சின் பெருமன்னர் பதினான்காம் லூயி என்பாரின் பேரராவார் பிரெஞ்சு பூர்பன் (Bourbon) மரபிலிருந்து வந்த இசுபானிய அரசர்கள் வரிசையில் இவர் முதலானவராகக் கருதப்படுகிறார்.

ஐந்தாம் பிலிப்பு இசுபானிய அரியணைக்கு வாரிசாக நியமிக்கப்பெற்றதால் ஏற்பட்டதுதான் இசுபானிய வாரிசுரிமைப் போர் (கி.பி. 1701-1714). இசுபானிய முடியைப் பிரெஞ்சுக்காரர்கள் கைப்பற்றியதை ஏற்க மறுத்த இங்கிலாந்து, நெதர்லாந்து, ஏனைய ஐரோப்பிய நாடுகள் ஆகியவற்றை எதிர்த்துப் பிரான்சு போராடியது. இப்போரில் பிரான்சு தோற்றுவிட்டது. அமைதி உடன்படிக்கையின் படி பிலிப்புத் தொடர்ந்து இசுபெயினின் அரசராக நீடித்தாலும், ஐரோப்பாவிலிருந்த பகுதிகள் அனைத்தையும் இசுபெயின் இழந்தது. இங்கிலாந்து சிப்ரால்டரையும் மினார்க்காவையும் பெற்றது.

கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டில் இசுபானிய பூர்பன் அரசர்கள், பல சீர்திருத்தங்களை மேற்கொண்டனர். வரிகள் குறைக்கப்பட்டதுடன் அவற்றை வசூலிப்பதிலும் அவர்கள் நேர்மையாக நடந்துகொண்டனர். சாலைகள் அமைத்தும் பொதுப்பணிகள் பலவற்றை நிறைவேற்றியும் அவர்கள் அருந்தொண்டாற்றினர். அதன் விளைவாகப் பொருளாதார நிலை பெருகி வளர்ந்தது. இதனிடையில் இசுபெயினுக்கும் பிரான்சிற்குமிடையே வலுவான நல்லுறவு வளர்ந்தது. ஏனெனில், இப்போது இரு நாடுகளிலும் பூர்பன் இனத்தவர்களே அரசராக இருந்தார்கள்.

**இங்கிலாந்துடன் மோதல்:** இசுபெயினுக்கும் இங்கிலாந்துக்கும் கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் மோதல் ஏற்பட்டது. இவ்விரு நாடுகளும் அமெரிக்காவில் குடியேற்றப் பகுதிகள் பெறுவது குறித்து மோதிக் கொண்டன. மேலும், இங்கிலாந்து கைப்பற்றியிருந்த சிப்ரால்டர், மினார்க்கா போன்ற பகுதிகளை இசுபெயின் திரும்பப் பெற விழைந்தது. இம் மோதலின் விளைவாக இசுபெயின் வேறுபல ஐரோப்பிய நாடுகளுடன் இணைந்து, பிரிட்டனுடன் போரிட்டது.

அமெரிக்கக் குடியேற்ற நாடுகள், கி.பி. 1775-1783-ஆம் ஆண்டுகளில்இங்கிலாந்துடன் சுதந்திரத்திற்காகப் போராடியபோது, இசுபெயின் அமெரிக்கக் குடியேற்ற நாடுகளுக்கு உதவிற்று. இசுபானியப் படைகள் கி.பி. 1781-ஆம் ஆண்டில் பிளாரிடாவின் மீது படையெடுத்தன. இங்கிலாந்திற்கும் அமெரிக்கக் குடியேற்ற நாடுகளுக்குமிடையே மூண்ட இப்போர் கி.பி. 1783-இல் முடிவுற்றது. இதன் முடிவில் நடைபெற்ற பாரிசு உடன்படிக்கையின்படி, பிளாரிடா இசுபெயினின் ஆதிக்கத்தின் கீழ் வந்தது. இசுபானியப் படைகள் கி.பி. 1782-இல் மினார்க்காவைக் கைப்பற்றியிருந்தன. அதுவும் இசுபெயினின் ஆதிக்கத்திற்குள் இருப்பதையே பாரிசு உடன்படிக்கை ஏற்றுக்கொண்டது. இங்கிலாந்துப் படைகள் கி.பி. 1798-இல் மீண்டும் மினார்க்காவைப் பிடித்துக் கொண்டன. ஆனால் பிரிட்டன், கி.பி. 1802-இல் இத்தீவினை இசுபெயினுக்குத் திருப்பிக் கொடுத்துவிட்டது.

பிளாரிடா கிடைத்ததால் அமெரிக்காவில் இசுபெயினின் பேரரசு உச்சக்கட்ட நிலையை அடைந்ததெனலாம். ஆனால், பிரிட்டனுடன் இசுபெயின் செய்த போராட்டத்தினால் அதன் வலிவு குறைந்து நலிந்தது.

**நெப்போலியனும், இசுபெயினும்:** முதலாம் நெப்போலியன் கி.பி. 1799-இல் பிரான்சைக் கைப்பற்றித் தம் ஆதிக்கத்தை நிலைநாட்டினார். தொடக்கத்தில் பிரான்சிற்கும் இசுபெயினுக்கும் நல்லுறவு இருந்தது. ஆனால், கி.பி. 1808-ஆம் ஆண்டில் பிரெஞ்சுப் படைவீரர்கள், இசுபெயின்மீது படையெடுத்து மிக விரைவில் அதன் அரசாங்கத்தைத் தம் கட்டுப்பாட்டின் கீழ்க் கொண்டுவந்தனர். அப்போது இசுபெயின் அரசராக இருந்தவர் ஏழாம் பெர்டினான்டு என்பவர். அவரைப் பதவியிலிருந்து நெப்போலியன் வலியுறுத்தி விலக்கிவிட்டுத் தம் உடன்பிறப்பான சோசப்பு நெப்போலியனை இசுபெயினின் அரசரென அறிவித்தார். பிரெஞ்சு மக்கள் நெப்போலியனின் அத்துமீறிய செயலை வன்மையாகக் கண்டித்து எதிர்த்தனர். அவர்கள் கொரில்லாப்போர்

முறையைக் கையாண்டு நெப்போலியனை அலைக்கழித்தனர். இவ்வெதிர்ப்பின் விளைவாகத் தொடங்கியதே முந்நீரகப் போர் ஆகும். இப்போர் கி.பி. 1808-ஆம் ஆண்டின் பிற்பகுதியில் தொடங்கி 1813-ஆம் ஆண்டில் முடிவுற்றது. பிரெஞ்சுக்காரர்கள் முந்நீரகத்திலிருந்து துரத்தப்பட்டனர்.

முந்நீரகப் போரின்போது மக்களாட்சிக் கருத்துகளின் அடிப்படையில் புதியதொரு அரசியல் அமைப்புத் திட்டத்தைக் கார்டெசு (Cortes) தயாரித்தது. புதிய அரசியலமைப்புத் திட்டம் உரோமானியக் கத்தோலிக்கத் திருச்சபையின் அதிகாரத்தைக் குறைத்ததுடன், தனிமனித உரிமைகளையும் சுதந்திரங்களையும் விரிவாக்கியது. எனினும் இசுபானிய முடியாட்சியும் தொடர்ந்து நீடித்தது. இப்புதிய அரசியலமைப்புத் திட்டத்திற்கு ஆதரவு நல்கியவர்கள் முற்போக்குவாதிகள் என்றழைக்கப் பெற்றனர்.

இசுபானியப் பேரரசு நலிந்து மெலிதல்: ஏழாம் பெர்டினாண்டு கி.பி. 1814-ஆம் ஆண்டில் மீண்டும் அரசராக இசுபானிய அரியணை ஏறினார். பதவிக்கு வந்தவுடன் அவர் புதிய அரசியலமைப்புத்திட்டத்தை நீக்கியதுடன் முற்போக்கு வாதிகளையும் ஒறுத்தார். முந்நீரகப் போரின்போது பெரும்பாலான அமெரிக்கக் குடியேற்றப் பகுதிகள் கலகத்தில் இறங்கியதோடு தாம் விடுதலை பெற்றுவிட்டதாகவும் அறிவித்தன. அவற்றை மீண்டும் தம் கட்டுப்பாட்டின் கீழ்க் கொணர அவர் முயன்றார்.

இசுபானியப் படைவீரர்கள் அதற்கிணங்கவில்லை. அதையடுத்து நாடு தழுவிய இராணுவக் கலகம் உருவாகியது. பிரெஞ்சுப் படைவீரர்களின் துணையுடன் பெர்டினாண்டு கி.பி. 1823-இல் கலகத்தை அடக்கினார். பெர்டினாண்டின் ஆதரவாளர்களுக்கும், முற்போக்குவாதிகளுக்குமிடையே மூண்ட இக்கருத்து வேறுபாடு, இசுபெயின் நாட்டை அரசியல் அடிப்படையில் இரு கூறுகளாகப் பிரித்துவிட்டது. கியூபா, போர்ட்டோ ரிகோ (Puerto Rico) ஆப்பிரிக்காவில் இருந்த பல காவல் அரண்கள், பிலிப்பைன்சு, குவாம் தீவு போன்ற சில பகுதிகளைத் தவிரக் கடல் கடந்து கைப்பற்றப்பெற்றிருந்த பேரரசுப் பகுதிகள் அனைத்தையும்,கி.பி. 1825-ஆம் ஆண்டில் இசுபெயின் இழக்க வேண்டியதாயிற்று.

பெர்டினாண்டின் மகள் இரண்டாம் இசபெல்லா என்னும் பட்டப்பெயருடன் கி.பி. 1833-ஆம் ஆண்டில் அரியணை ஏறினார். அவளுடைய ஆட்சியை எதிர்த்த கார்லிசுடுகள் என்போர், பெர்டினாண்டின் மூத்த சகோதரரான தான் காரோலேசு (Don Carlos) என்பாரே அரசராக வேண்டுமென விழைந்தனர். முற்போக்குவாதிகள் மற்றும் ஏனைய அரசியல் குழுக்களிடையே மூண்ட சண்டை சச்சரவுகள் இசபெல்லாவின் ஆட்சிக்காலம் முழுவதிலும் குழப்பத்தை ஏற்படுத்தின. படை அதிகாரிகள் கி.பி. 1868-ஆம் ஆண்டில் கலகம் செய்தனர். அவர்கள் பொது மக்களின் ஆதரவைப் பெறவே, இசபெல்லா பதவியிலிருந்து தூக்கியெறியப்பட்டார். இசுபெயினில் கி.பி. 1873-ஆம் ஆண்டில் குடியரசு நிலைநாட்டப்பட்டது. ஆனால் கார்லிசுடுகளுக்கும் முற்போக்குவாதிகளுக்குமிடையே உள்நாட்டுப் போர் மூண்டது. அதன் விளைவாக இசபெல்லாவின் மகன், இசுபெயினுக்குக் கொண்டுவரப்பட்டுப் பன்னிரெண்டாம் அல்பான்சோ என்னும் பெயரில் அரசராக்கப்பட்டார்.

பன்னிரண்டாம் அல்பான்சோ கி.பி. 1885-இல் காலமானார். அதன் பின்னர் அவர் மகனான பதின்மூன்றாம் அல்பான்சோவின் சார்பில் அவர் தாயார் மேரியா கிறிசுட்டியானா என்பவர் அரசாண்டார். அவர் ஆசுத்திரியா நாட்டு இளவரசி. அவர் ஆட்சி கி.பி. 1902-ஆம் ஆண்டு வரை நீடித்தது. அவ்வாண்டில் உரிய வயதை அடைந்த அல்பான்சோ ஆட்சியைத் தாமே நடத்தலானார்.

இசுபெயினின் மிகச் சிறப்பான குடியேற்றப் பகுதிகளான கியூபாவிலும் பிலிப்பைன்சிலும் கி.பி. 1890-ஆம் ஆண்டில் கலகங்கள் தோன்றின. அமெரிக்க ஐக்கிய நாடுகள் கியூபாவிற்கு ஆதரவு கொடுத்ததுடன் கி.பி. 1898-ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதத்தில் இசுபெயின் மீது போர் தொடுத்தது. ஆகசுட்டு மாதத்தில் இசுபானிய-அமெரிக்கப் போர் இசுபெயினின் தோல்வியுடன் முடிவுற்றது. கியூபாவின் சுதந்தரத்தை இசுபெயின் ஏற்றுக்கொண்டது. குவாம் (Guam), பிலிப்பைன்சு போர்ட்டோ ரீகோ (Puerto Rico) போன்ற பகுதிகள், அமெரிக்க ஐக்கிய நாட்டிடம் சரணடைந்தன. வட ஆப்பிரிக்காவில் ஒரு சில சிறு படையரண்களைத் தவிர ஏனைய பேரரசுப் பகுதிகள் அனைத்தும் இசுபெயினின் பிடியிலிருந்து நழுவின.

கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் கார்டெசின் ஆதிக்கமும், தலைமை அமைச்சரின் அதிகாரமும் பெருகி வளர்ந்தன. அதே தருணத்தில் இசுபானிய அரசியல் கட்சிகளும், தொழிற் சங்கங்களும் மேன்மேலும் அதிகாரத்தைப் பெருக்கிக் கொண்டிருந்தன. முற்போக்குவாதிகளுக்கும் பழமை விரும்பிகளான கன்சர்வேட்டிவ்களுக்குமிடையே அரசாங்க அதிகாரம் கைம்மாறிக் கொண்டிருந்தது. பழமை விரும்பிகள் இசுபானிய மரபு வழிவந்த வாழ்க்கை முறையைத் தொடர்ந்து கடைப்பிடிக்க வேண்டினர். தீவிரவாதிகள் தீவிரமான சீர்திருத்தங்களை ஆதரித்தனர். தொழிற்சங்கத் தலைவர்கள் அரசாங்கத்திற்கெதிராகத் தொடர்ந்து ஆரவாரம் செய்தனர்.

முதல் உலகப் போரின்போது (1914-18) இசுபெயின் நடு நிலைமை வகித்தது. தம் நாட்டில் உற்பத்தியான தொழிற்பொருள்களைப் போரில் பங்கு கொண்ட இரு தரப்பினர்களுக்கும் விற்று இசுபெயின் பெரும் பொருள் ஈட்டியது. ஆனால் போர் நின்றபோது இசுபெயினில் பரவலான வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்பட்டது. வேலைபெற்றிருந்த இசுபானியர்கள் குறைந்த ஊதியம் பெற்று அல்லலுற்றனர். மேற்கூறிய தொல்லைகளின் விளைவாக ஏற்கனவே அல்பான்சோவின் ஆட்சியை வெறுத்தவர்களின் எண்ணிக்கை பெருகி வளர்ந்ததோடு, வெறுப்பும் பெருகி வளர்ந்தது.

இசுபெயின் 1912-ஆம் ஆண்டில் மொராக்கோவின் பல பகுதிகளைத் தம் கட்டுப்பாட்டின் கீழ்க் கொண்டு வந்தது. ஆனால் மொராக்கியர்கள் இசுபெயினின் ஆட்சியை ஏற்றுக்கொள்ளவில்லை. அவர்கள் 1921-ஆம் ஆண்டில் கலகம் செய்து 10,000-க்கும் மிகுதியான இசுபானியப் படைவீரர்களைக் கொன்று குவித்தார்கள். அச்சுறுத்தும் இக்கொடுமையான நிகழ்ச்சியால் இசுபானியர்கள் வெகுண்டெழுந்தனர். மொராக்கோவில் சண்டைகள் மேலும் மிகுதியாயின. இசுபெயினில் நிலவிய அரசியல் குழப்பமும், பொருளாதார அவலநிலையும் மொராக்கோ கெடுபிடியும் இணைந்துகொள்ளவே இசுபெயின் முழுவதிலும் வேலைநிறுத்தங்களும் வன்முறை நிகழ்ச்சிகளும் மூண்டன. மிகல் பிரிமோதெ ரிவேரா என்னும் படைத்தலைவர் 1923-ஆம் ஆண்டில் படைவீரர்களின் கலகம் ஒன்றிற்குத் தலைமை தாங்கி, அரசாங்கத்தைக் கைப்பற்றி, இசுபெயினில் அமைதியை நிலைநாட்ட முயன்றார். அல்பான்சோ கலகக்காரர்களை ஆதரித்தார். பிரிமோ தலைமை அமைச்சரானார். அவர் நாட்டிலே வல்லாட்சியாளராக ஆண்டார்.

தம் ஆட்சிக்காலத்தில் பிரிமோ, மொராக்கோவிலும் இசுபெயினிலும் அமைதியை நிலைநாட்டி நாட்டில் அரசியலமைப்பின் அடிப்படையில் பணியாற்றும் அரசொன்றையும் மீண்டும் அமர்த்தப் போவதாக உறுதி கூறினார். ஆனால் இவ்வுறுதி நிறைவேற்றப்படாமல் பலமுறை ஒத்திப்போடப்பட்டது. படைவீரர்களே 1930-ஆம் ஆண்டில் பிரிமோவுக்கெதிராகக் கிளர்ச்சி செய்து, அவரைப் பதவியிலிருந்து விலகுமாறு வற்புறுத்தினர்.

இதனிடையில் குடியரசு முறையில் ஓர் அரசினை அமைக்கக்கோரி, அரசியல் இயக்கமொன்று இசுபெயினில் பெருகி வளர்ந்தது. முற்போக்கு வாதிகள், சமதருமவாதிகளான சோசியலிசுட்டுகள், இசுபெயினில் முடியாட்சியை வேண்டாத ஏனையோர் அனைவரும் இவ்வியக்கத்திற்கு ஆக்கமும ஊக்கமும் கொடுத்தார்கள். பிரிமோ 1931-ஆம் ஆண்டின் தொடக்கத்தில் படிப்படியாகத்தேர்தல்களை நடத்த விழைந்தார். அதனையடுத்து மாநிலத் தேர்தல்களையும், பின்னர் நாடாளுமன்றத் தேர்தல்களையும் நடத்தலாம் என்று எண்ணி, 1931 ஏப்பிரல் மாதத்தில் நகர மன்றத் தேர்தல்களை நடத்தினார். அத்தேர்தல்களில் குடியரசுக் கட்சி வேட்பாளர்கள் பெரும் அளவு வாக்குகளைப் பெற்று வெற்றி பெற்றனர். இதனைக் கண்டஞ்சிய அல்பான்சோ, நாட்டை விட்டு வெளியேறினார். எனினும் அவர் முடிதுறக்க மறுத்துவிட்டார்.

**குடியாட்சி மலர்ந்த நிலையில் இசுபெயின்:** அல்பான்சோ இசுபெயினை விட்டகன்ற பின்னர்க் குடியரசுக் கட்சியைச் சேர்ந்த தலைவர்கள் அரசாங்கத்தைத் தம் கட்டுப்பாட்டின் கீழ்க் கொணர்ந்தனர். நாடாளுமன்றத் தேர்தல்களை 1931-ஆம் ஆண்டு சூன் மாதத்தில் நடத்தினர். அத்தேர்தல்களில் முற்போக்கு வாதிகள், சோசியலிசுட்டுகள், ஏனைய குடியரசுக் கட்சிகளைச் சார்ந்தவர்கள் நாடாளுமன்றத்தேர்தலில் பெரும் எண்ணிக்கையில் வாக்குகளைப் பெற்று வெற்றி பெற்றனர். புதிய பாராளுமன்றம் உடனடியாக மக்களாட்சி அடிப்படையில் அரசியலமைப்புத் திட்டத்தை உருவாக்கும் பணியை மேற்கொண்டது. நாடாளுமன்றம் 1931-ஆம் ஆண்டு திசம்பர் மாதத்தில் அதை ஏற்றுக்கொண்டது. அதே மாதத்தில் நாடாளுமன்றம் நிசிடோ அல்கலா சாமோரா (Niceto Alcala Zamora) என்னும் பெயர் கொண்ட முற்போக்குக் கட்சித் தலைவர், குடியரசின் முதல் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

அரசாங்கம் குடியரசு வாதிகளின் கட்டுப்பாட்டின் கீழ் வந்தாலும், நாட்டில் அரசியல் அமைதியின்மை தொடர்ந்து நீடித்ததெனலாம். இசுபானியர்களுள் பலர், முடியாட்சி தொடர்வதையே விரும்பினார்கள். மேலும், குடியாட்சிக் குழுக்களிடையே வலுவான இணைப்பும் ஏற்படவில்லை. தீவிர வாதிகள் அரசாங்கத்தைச் சீர்குலைக்க நாடெங்கும் பல கலகங்களை விளைவித்தனர். இசுபெயினின் ஏற்றுமதிப் பொருள்கள், 1930-ஆம் ஆண்டில் ஏற்பட்ட பொருளாதாரத் தேக்க நிலையால் உரிய விலைக்குப் போகாமல் தேங்கிக் கிடந்தன. மக்களிடையே வறுமை நிலவியது.

புதிய அரசு, உரோமானியக் கத்தோலிக்கத் திருச்சபையின் அதிகாரத்தைக் குறைத்துத் தொழிற் சங்கங்களுக்கு மிகுந்த அதிகாரத்தைக் கொடுத்தது. நிலச்சுவான்தாரர்களிடம் முடக்கப்பட்டுக் கிடந்த பெரும் பண்ணைகள் பலவற்றை அரசே

எடுத்துக் கொண்டதுடன், பண்ணைத் தொழிலாளர்களின் ஊதியத்தையும் பெருமளவு உயர்த்தியது. கட்டலோனியா என்னும் பகுதியைச் சார்ந்த தேசியவாதிகள் 1932–ஆம் ஆண்டில் தாம் வாழும் பகுதிக்கு ஓரளவு தன்னாட்சி அளிக்கப்படவேண்டுமென்ற கோரிக்கையை எழுப்பியபோது நாடாளுமன்றம் அக்கோரிக்கையை ஏற்றுக்கொண்டது. பிற பகுதிகளும்அதுபோன்ற சுதந்திரத்தைக் கோரின.

குடியரசு அரசாங்கத்தின் நடவடிக்கைகளினால் இசுபானியர்களில்— அரசினை எதிர்த்தவர்களின் எண்ணிக்கையும் மிகுதியாகி வந்தது. அவ்வாறு எதிர்த்தவர்களுள் ஒருசாரார் கன்சர்வேட்டிவ் கட்சியினராவார். இந்தக் கன்சர்வேட்டிவ்கள் உரோமன் கத்தோலிக்கத் திருச்சபையினை ஆதரித்து, இசுபெயினில் மீண்டும் முடியாட்சியைக் கொணர விழைந்தனர். புதியநாடாளுமன்றத் தேர்தலை 1933-இல் அரசு நடத்தியது. அத்தேர்தலில் புதிதாக உருவாக்கப் பெற்றிருந்த கன்சர்வேட்டிவ் கட்சியொன்று இசுபெயினின் அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றி வலிமை மிகுந்த கட்சியாக உருவெடுத்தது. இக்கட்சியை இசுபானியத் தன்னாட்சி வலதுசாரிக் கட்சிகளின் கூட்டமைப்பு (Spanish Confedeation of Autonomous Rightist Parties) என்பர்.

சோசியலிசுடுகளும், கட்டலான் தேசியவாதிகளும் அரசுக்கெதிரான கலகமொன்றை 1934-ஆம் ஆண்டின் பிற்பகுதியில் தலைமைதாங்கி நடத்தினர். இக்கலகம் விரைவாக நாடு முழுவதிலும் பரவலாயிற்று. அரசுப் படை வீரர்கள் இக்கலகத்தை அடக்கினர். ஆனால், ஆயிரத்திற்கும் மேற்பட்ட மக்கள் அவர்களால் கொல்லப்பட்டனர். இதன் விளைவாக இசுபெயினில் அரசியல் பிளவுகள் மேலும் பெருகி விரிவடைந்தன. படைத்தலைவர்கள், முடியாட்சிவாதிகள், உரோமான் கத்தோலிக்கக் குழுவினர் போன்றோரை வலதுசாரிகள் எனலாம். பொதுவுடைமைக்காரர்கள்,சோசியலிசுட்டுகள், தொழிற் சங்கத்தவர்கள், முற்போக்குவாதிகள் போன்றோரை இடது சாரிகள் எனலாம்.

குடியரசுத் தலைவரான அலகலா, நாடாளுமன்றத்தைக் கலைத்துவிட்டு, 1936-ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதத்தில் குடியரசை ஒற்றுமையாக்கத் தேர்தல் ஒன்றை நடத்த ஆணையிட்டார். இடது சாரி அணியினர் ஒன்றாக இணைந்த அணி பொதுமக்கள் அணி என்றழைக்கப்பட்டது. நடைபெற்ற தேர்தலில் இவ்வணியினர் சிறிய அளவு பெரும்பான்மையுடன் வெற்றிபெற்றனர். அவர்களின் வெற்றியால் இசுபெயினில் வன்முறைகள் மிகுந்தன. வலதுசாரிகளும், இடதுசாரிகளும் தெருக்களில் எல்லாம் சண்டையிட்டுக் கொண்டனர். படைக்கலமேந்திய கும்பல்கள், எதிராளிகளை அவர்களின் வீடுகளிலிருந்து வெளியே இழுத்துவந்து கொலை செய்தார்கள். அரசியல் கொலைகள் எங்கும் நடைபெறலாயின.

**உள்நாட்டுக்கலகம்:** மொராக்கோவில் நிறுத்தி வைக்கப்பெற்றிருந்த இசுபானியப் படைகள் 1936–ஆம் ஆண்டு சூலை மாதத்தில் இசுபானிய அரசுக்கெதிரான புரட்சியொன்றில் ஈடுபட்டன. இசுபெயினிலிருந்த பல படைகளும் கலகத்தில் இறங்கின. விரைவில் அவை நாட்டின் மூன்றிலொரு பகுதியைத் தம் ஆதிக்கத்தின் கீழ்க்கொண்டுவந்தன. விரைவாக அரசாங்கத்தையும் வீழ்த்திவிடலாம் என்று கலகக்காரர்கள் நம்பியதுடன், நாட்டில் அமைதியையும் நிலைநாட்ட முடியும் என நம்பினர். ஆனால், பொதுமக்கள் அணியினர் படைகளுக்கெதிராகப் படைக்கலம் ஏந்திப் போரிட்டனர்.



பிரான்சிசுகோ பிராங்கோ

கலகக்காரர்களின் தலைவர்கள் அக்டோபர் மாதத்தில் பிரான்சிசுகோ பிராங்கோ என்பாரைப் படைத்தலைவராகத் தேர்ந்தெடுத்தனர். அவர்கள் அவரைப் புரட்சிவாதிகளின் அரசின் தலைவராகவும் அமர்த்தினர். தேசியப் பாதுகாப்புக்குழு என்ற

அமைப்பையும் அமைத்தனர். இத்தருணத்தில் கலகம் முழு அளவிலான உள்நாட்டுப் போராகப் பெருகி வளர்ந்திருந்தது. பிராங்கோவின் படைவீரர்களைத் தேசியவாதிகள் அல்லது கலகக்காரர்கள் என்றழைத்தனர். இசுபெயினின் பாசிச அரசியல் அணியினரும் பிராங்கோவின் கட்சிக்கு உதவினர். குடியரசைக் காப்பாற்றக் கங்கணம் கட்டிக்கொண்டு போராடிய படைகள் குடியரசு வாதிகள் எனப்பட்டனர்.

இசுபானிய உள்நாட்டுப் போர் உலகப் பன்னாடுகளின் கவனத்தை ஈர்த்தது. செருமானிய நாசிகளும் இத்தாலியப் பாசிசுடுகளும், பிராங்கோவின் படைகளுக்கு உதவினர். உருசியாவின் பொதுவுடைமைக் கட்சியினர் குடியரசுக் கட்சிக்கு ஆதரவு நல்கினர். இதனுடன், அமெரிக்க ஐக்கிய நாடுகளும் ஏனைய நாடுகளும் குடியரசுக் கட்சிக்கு ஆதரவு கொடுத்தன.

இசுபெயினில் 1937-ஆம் ஆண்டின் இறுதியில் தேசியவாதிகளின் கை ஓங்கியிருந்தது. அவர்கள் 1936-ஆம் ஆண்டு கோடைக்காலத்தில் மேற்கு இசுபெயினின் பெரும்பாலான பகுதிகளைக் கைப்பற்றிக் கொண்டனர். குடியரசுக் கட்சியின் படைகள் கிழக்குப் பாகத்திற்கும் வட பாகத்திற்கும் விரட்டியடிக்கப்பட்டன. உருசியா 1938-இல், குடியரசுக் கட்சிக்குக் கொடுத்த பெருமளவு உதவியை நிறுத்திவிட்டது. அதே ஆண்டில் பிராங்கோ குடியரசுக் கட்சியின் படைகளின்மீது கடும் தாக்குதல் ஒன்றை மேற்கொண்டார்.

பிராங்கோ 1939-ஆம் ஆண்டு மார்ச்சு மாத அளவில் மாட்ரிடு மாநகருக்குள் நுழைந்தார். எஞ்சியிருந்த குடியரசுவாதிகளும் ஏப்பிரல் மாதம் முதல் நாளன்று சரணடைந்தனர். பல நூறாயிரம் இசுபானியர்கள் இப்போரில் உயிரிழந்தனர். இசுபெயினின் பெரும்பகுதிகள் சுடுகாடாயின. குறுகிய காலமே நீடித்திருந்த குடியரசைப் பிராங்கோவின் வல்லாட்சி கைப்பற்றிக் கொண்டது. இசுபெயினில் குடியாட்சி அழிந்து வல்லாட்சி ஏற்படுத்தப்பட்டது.

இசுபானிய உள்நாட்டுப்போர் முடிவுற்ற ஐந்து மாத இடைவெளிக்குப் பின்னர் இரண்டாம் உலகப் பெரும்போர் (1939-1945) மூண்டது. இப்போரின் போது இசுபெயின் பெயரளவில் நடுநிலைமை வகித்தது. ஆனால், 1940 ஆம் ஆண்டில் பிரான்சு வீழ்ச்சியுற்ற போது, பிராங்கோ செருமனியுடன் நெருங்கி உறவாடத் தொடங்கினார். அப்போது போரில் செருமனி வென்று விடும் என்ற நிலை காணப்பட்டது. போர் 1942-ஆம் ஆண்டின் பிற்பகுதியில் செருமனிக்கு எதிராகத் திரும்பியிருந்தது. அந்நிலையில் பிராங்கோ, இங்கிலாந்து அமெரிக்க ஐக்கிய நாடு மற்றும் ஏனைய நேச நாடுகளுடன் உறவாடி நட்புப் பாராட்டினார்.

**கெடுபிடிப்போரில் இசுபெயின்:** பிராங்கோவிற்கு எதிராக, 1945-ஆம் ஆண்டில் அவருடைய அரசைக் கவிழ்க்க வேண்டுமென உருசியா அணியொன்றை அமைத்தது. மேற்கத்திய நாடுகள் உருசியாவின் அணிக்கு உதவி செய்தன. ஏனெனில் பிராங்கோவின் வல்லாட்சிக் கோட்பாடுகளை அவர்கள் எதிர்த்தார்கள். மேலும் பிராங்கோ இரண்டாம் உலகப் பெரும் போரின்போது செருமனிக்கும் இத்தாலிக்கும் உதவியவர். உலகின் பெரும்பாலான நாடுகள் 1945. 1946-ஆம் ஆண்டுகளில் இசுபெயினுடன் தம்முடைய அரசுமுறை உறவுகளை கத்தரித்துக் கொண்டன.

தமக்குப்பின் இசுபெயினில் முடியாட்சி மலரும் எனப் பிராங்கோ அறிவித்தார். இவ்வறிவிப்பின் மூலம் தமக்கு உலகநாடுகளில் நிலவும் எதிர்ப்புணர்வைக் குறைக்க முடியுமெனப் பிராங்கோ நம்பினார். ஆனால் இத்தருணத்தில் கெடுபிடிப்போர் பெருகி வளரலாயிற்று. இதன் விளைவாக மேற்கத்திய நாடுகள் இசுபெயின்பால் தமக்கிருந்த பகைமையுணர்வை மாற்றிக்கொண்டு உறவாடலாயின.

பிராங்கோ, பொதுவுடைமை நாடுகளைக் கடுமையாகச் சாடினார். அமெரிக்க ஐக்கிய நாடு மேற்கு ஐரோப்பாவின் பாதுகாப்பினை வலுவூட்டப் பிராங்கோவின் உதவியை நாடின. இசுபெயினும் அமெரிக்க ஐக்கிய நாடும் 1953-ஆம் ஆண்டில் படைபலம் பொருளாதாரம் பற்றிய பத்தாண்டு உடன் படிக்கை யொன்றைச் செய்து கொண்டன. அமெரிக்க ஐக்கிய நாடுகள் இசுபெயினில் படைத்தளங்களை அமைத்துக்கொள்ளப் பிராங்கோ அனுமதியளித்தார். கைம்மாறாக அமெரிக்க ஐக்கிய நாடு இசுபெயினுக்கு ஆயிரம் கோடி டாலர் பொருளை நன்கொடையாகவும், கடனாகவும் அளித்தது. இவ்வுடன்படிக்கை அன்றிருந்து இன்று வரை திரும்பத் திரும்பப் புதுப்பிக்கப் பட்டு வந்துள்ளது எனினும், இசுபெயினுக்குக் கொடுத்து வந்த பொருளாதார உதவியை அமெரிக்க ஐக்கிய நாடு பெருமளவு குறைத்து விட்டது.

இசுபெயின் 1950க்கும் 1960க்கும் இடைப்பட்ட ஆண்டுகளில் உலகிலேயே முதலிடத்தைப் பெறுமளவிற்குப் பொருளாதார வளர்ச்சி பெற்றது. பேருந்துத் தொழிற் சாலைகள், கட்டுமானப்பணித் தொடர்பான வேலைகள், இரும்பு உருக்குத் தொழிற்சாலைகள் போன்றவை பெருவளர்ச்சியுற்றதால் செல்வச் செழிப்பு மிகுதியாயிற்று. இசுபானியச் சுற்றுலாத் துறையும் இசுபெயினின் வளத்தால் சிறப்புற்று விளங்

கியது. இதன் பயனாகப் பெரும்பாலான இசுபானியர்களின் வாழ்க்கைத்தரம் வெகுவாக உயர்ந்தது.

தனியார் சுதந்திரம் பற்றி இருந்த சில கட்டுப்பாடுகளை 1960க்கும் 1970க்கும் இடையில் அரசு தளர்த்த முற்பட்டது. பத்திரிகைத் தணிக்கை முறைகளை 1966-ஆம் ஆண்டில் தளர்த்திற்று. ஆயினும் அரசுக்கு எதிராகக் கண்டனங்கள் எழும்பின. பார்சிலோனா, மாட்ரிட் பல்கலைக்கழகங்களில் 1968-இல் மாணவர்கள் ஆர்ப்பாட்டத்தைத் தொடங்கினர். மக்களும் கிளர்ந்தெழுந்தனர். பாசுக்கி மாநிலப் பகுதிகளில் வாழ்ந்த சில மக்கள் அப்பகுதிகளுக்குச் சுதந்திரம் வேண்டுமெனக் கோரினர். கட்டலோனியா, வாலென்சியா, ஆண்டலூசியா, கலீசியா போன்ற பகுதிகளில் வாழ்ந்தவர்கள் சுதந்திரத்திற்குப் பதிலாக அதிகமான அதிகாரங்களைக் கேட்டனர். 1967-69-ஆம் ஆண்டுகளில் பாசுக்குகள் சிலர் இசுபானிய அரசுக்கெதிராக வன்முறை நடவடிக்கையைத் தொடங்கினர். பிராங்கோவின் ஆட்சியாளர்கள், பல பாசுக்குகளையும் ஏனைய இசுபானியரையும் புரட்சிவாத நடவடிக்கைகளுக்காகச் சிறையிலடைத்தனர். ஐந்து வன்முறையாளர்களை 1975-ஆம் ஆண்டு கழுவேற்றிக் கொன்றது பிராங்கோவின் அரசு.

**அண்மைக்கால இசுபெயின்:** இசுபானியப் பொருளாதாரம் 1970-ஆம் ஆண்டுக்குப் பின்னர்த் தொடர்ந்து பெருகி வளர்ச்சியுற்றது. ஆனால், தீவிரப் பணவீக்கமும், தொழில்நுட்பத் துறையில் ஏற்பட்ட வளர்ச்சியின்மையும் பொருளாதாரத்தைப் பெரிதும் பாதித்தன.

பிராங்கோ 1975-ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் காலமான பின்னர், இசுபெயின் நாட்டில் பெரும் அரசியல் மாற்றம் ஏற்படலாயிற்று. பிராங்கோவின் வல்லாட்சிக்கு மாறாக மக்களாட்சி முறையில் அமையும் புதிய அரசாங்கத்தை நிலைநாட்டுவதற்கான வழிமுறைகளை இசுபானியர் விரைந்து தொடங்கலாயினர்.

சுவான் சார்லசு பதின்மூன்றாம் அல்பான்சோவின் பேரர் ஆவார். ஏற்கனவே அறிவித்திருந்தபடி பிராங்கோ இறநத இரண்டு நாட்களுக்குப் பின்னர்ச் சுவான் கார்லோசு அரசரானார். மன்னர் 1976-இல் அடால்போ சுரேசு கன்சாலெச (Adolfo Suarez Gonzalez) என்பாரைத் தலைமை அமைச்சராக நியமித்தார். சுவான் கார்பேசு, சுரேசு மற்றும் உள்ள இசுபானியர்கள் நாட்டில் வல்லாட்சிக்கு மாறாக மக்களாட்சி மலர்வதையே விழைந்தனர்.

இசுபெயினின் புதிய அரசு 1976-இல் அரசியல் கட்சிகளுக்கெதிராகப் பிராங்கோ விதித்திருந்த தடையை நீக்கியது. பிராங்கோ தன் கட்சி ஒன்றையே நாட்டில் நிலைநாட்டியிருநதார். இத்தடை நீக்கத்தால் பல அரசியல் கட்சிகள் செயற்படும் முறை வந்தது குறிப்பிடத் தக்கதாகும். பின்னர், 1977-இல் நடைபெற்ற நாடாளுமன்றத் தேர்தலில் பல கட்சிகள் போட்டியிட்டன. இசுபானியர்களுக்கு நாடாளுமன்றத் தேர்தலில் விருப்பப்பட்ட கட்சிகளுக்கு வாக்களிக்கும் உரிமை 1936-ஆம் ஆண்டுக்குப் பின்னர் இப்போதுதான் கிட்டியது. மக்களாட்சி மைய ஒன்றியம் (Union of Democratic Centre) என்னும் கட்சியின் தலைவராகவும் தலைமை அமைச்சராகவும் விளங்கிய சுரேசு என்பாரின் கட்சி, நாடாளுமன்றத்தில் பெரும்பான்மையான இடங்களைக் கைப்பற்றியது.

இசுபானிய வாக்காளப் பெருமக்கள் 1978-ஆம் ஆண்டில் மக்களாட்சிக் கோட்பாடுகளின் அடிப்படையில் அமையும் புதிய அரசியலமைப்புத் திட்டத்தை ஏற்றுக் கொண்டனர். புதிய அரசியல் அமைப்புத் திட்டத்தின் அடிப்படையில் புதிய தேர்தல்கள் நடைபெற்றன. மக்களாட்சி மைய ஒன்றியக் கட்சி மீண்டும் நாடாளுமன்றத்தின் பெரும்பாலான இடங்களைக் கைப்பற்றி வெற்றி பெற்றது.

இசுபெயினின் மக்களாட்சி அரசு, நாடு முழுவதிலுமிருந்த தல ஆட்சி அமைப்புகளின் அதிகாரங்களை விரிவாக்கும் பணியைத் தொடங்கிற்று. அதன்படி காலப்போக்கில் மாநிலங்களில் நாடாளுமன்றங்கள் அமைக்க வழிவகுத்தது. பாசுக்கு மாநிலங்களும் கட்டோலினியாவும் 1980-ஆம்ஆண்டில் மாநில நாடாளுமன்றங்களைத் தேர்ந்தெடுத்தன. இந்நாடாளுமன்றங்கள் தல வரிவிதிப்புகளையும் ஏனைய தல விவகாரங்களையும் கட்டுப்படுத்தும் சில அதிகாரங்களைப் பெற்றன.

இராணுவப் புரட்சியொன்று 1981-ஆம் ஆண்டு பிப்பிரவரி 21-ஆம் நாள் ஆட்சியைக் கைப்பற்ற முயன்றது. நாடாளுமன்றத்தின் கீழ்ச்சபை உறுப்பினர்களும், அமைச்சரவையும் பதினெட்டு மணிநேரம் பிணையக் கைதிகளாயினர். அரசர் ஒருவர் மட்டும் சுதந்திரமானவராய் இருந்தார். அரசர் கலகக்காரர்களைக் குருதிப்பெருக்கின்றிப் பணிய வைத்து வெற்றி கண்டார்.

பொதுத் தேர்தல் 1982-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 28-ஆம் நாள் நடைபெற்றது. இத்தேர்தலில் கீழ்ச்சபையின் உறுப்பினர்களாக 30 பேர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இசுபானியத் தொழிலாளர்கள் சோசியலிசுட்டுக் கட்சி 202 உறுப்பினர்களையும் கன்சர்வேட்டிவ் கட்சி 106 உறுப்பினர்களையும்

கொண்டுள்ளன. எஞ்சியோர் ஏனைய கட்சியைச் சார்ந்தவர்கள்.

மேலவையான செனட்டு அவையில் 208 உறுப்பினர்கள் உள்ளனர். அவர்களுள் இசுபானியத் தொழிலாளர்கள் சோசியலிசுட்டுக் கட்சியைச் சார்ந்தவர்கள் 134 பேரும் கன்சர்வேட்டிவ் கட்சியைச் சார்ந்தவர்கள் 54 பேரும் ஏனையோர் உதிரிகளுமாவர்.

இன்று இசுபெயின் பெரிதும் மாறி வருகிறது. பொருளாதாரத் துறை, அரசியல், சமூக வாழ்க்கை போன்றவற்றில் இசுபெயின் புதிய கருத்துகளையும், புதிய வழிவகைகளையும் கற்று வருகிறது. இசுபெயின் மேற்கு ஐரோப்பிய மக்களாட்சி நாடுகளுடன் இணைந்துவிடவே பெரிதும் விழைகிறது. அதன் பயனாக, 1982-இல் இசுபெயின் வட அட்லாண்டிக்கு உடன்படிக்கை அமைப்பில் சேர்ந்துள்ளது.

துணை நூல்கள்:

**Clissold, Stephen.**, Spain, Walker, 1969.

**Lane-Poole, Stanley,** Moors in Spain, Verry, 1967.

**Altamia, Rafael** , A History of Spain, tr. by Muna Lee, Van Noestrand, 1949.

**Trythalf, J.W.D.**, Franco: A Biography, Int. publications, 1971.

**Madariaga, Salvador de.**, Spain, Praeger, 1958.

**இசுபெயின் நாட்டில் கல்வி**: இசுபெயினில் (Spain) இரண்டு வயதிலேயே குழந்தைகள் மழலையர் பள்ளிகளில் சேர்க்கப்படுகின்றனர். மழலையர் கல்வி, குழந்தைகளுக்கு ஐந்து வயது வரை தரப்படுகிறது. ஆறுவயதில் குழந்தைகள் தொடக்கப்பள்ளியில் சேருகின்றனர். பத்து வயது வரை குழந்தைகளுக்குத் தொடக்கக் கல்வி அளிக்கப்படுகிறது. நடுநிலைப் பள்ளிக் கல்வி, பதினொரு வயதிலிருந்து பதின்மூன்று வயது வரை குழந்தைகளுக்குக் கொடுக்கப்படுகிறது. உயர்நிலைப் பள்ளிகளில் பதினான்கு வயதில் மாணவர்கள் சேருகின்றனர். பதினாறு வயதுவரை உயர்நிலைப் பள்ளிகளில் மாணவர்கள் பயில்கின்றனர். இசுபெயின் நாட்டில் மதப் பிரிவினர் நடத்தும் பள்ளிகளில்தான் எண்பது விழுக்காடு மாணவர்கள் சேர்ந்து கல்வி பெறுகின்றனர்.

இந்நாட்டில் பள்ளிக் கல்வி முடிந்தவுடன், பல்கலைக் கழகங்களில் மாணவர்கள் நேரடியாகச் சேர்ந்துவிட முடியாது. பல்கலைக்கழகத்தில் சேருவதற்குமுன், ஓராண்டுப் பல்கலைக்கழக நுழைவு வகுப்பில் மாணவர்கள் சேர்ந்து பயின்று தகுதி பெற்றிருத்தல் வேண்டும். பல்கலைக் கழகங்களில் தொழிற்கல்வி, உயர்நிலைத் தொழிற்கல்வி, மொழியியல், அறிவியல், கலையியல் போன்ற பாடங்களை மாணவர்கள் தேர்ந்தெடுத்துப் படிக்கின்றனர். இசுபெயின் நாட்டுப் பல்கலைக் கழகங்கள், முதல் இரண்டாண்டுப் படிப்புக்கு ஒரு பட்டமும், அடுத்த இரண்டாண்டுப் படிப்புக்கு ஓர் உயர்பட்டமும் மாணவர்களுக்கு வழங்குகின்றன.

உயர்கல்வியில், பதிவாளர் (Gerente) நிறுவாகப் பொறுப்பை ஏற்றுக் கொள்கிறார்; துறைத் தலைவர்களிடம் (Departmentos) கற்பித்தல் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டுள்ளது; துறை மேலாளர்கள் (Intitutos) ஆராய்ச்சியில் ஈடுபடுகின்றனர். பயிற்றுநர்கள் (Tutors) மாணவர்களுக்குக் கல்வி கற்றலில் உதவி செய்வதோடு அறிவுரையும் வழங்குகின்றனர்.

ஒவ்வொரு புலத்திலுமுள்ள (Faculty) ஆசிரியர்களுக்கும் கற்பித்தல் முறைகளில் பயிற்சி தரப்படுகிறது. பல்கலைக் கழகத்துறைக் குழுக்களில் மாணவர்கள் இடம் பெற்றுள்ளனர். பல்கலைக்கழகத்தில் மாணவர்கள் சேருவதற்கு நுழைவுத்தேர்வு முறை இருப்பதால், பட்டப்படிப்பு நிலையில் பல்கலைக் கழகத்திற்கு வராமல் பாதியில் நின்றவர்களின் (Drop-outs) எண்ணிக்கை இந்நாட்டில் குறைவாக உள்ளது.

இசுபெயினில் மொத்தம் பதின்மூன்று பல்கலைக் கழகங்கள் உள்ளன. அவற்றை அரசே ஏற்று நடத்துகிறது. அவையன்றித் திருச்சபையினரால் நடத்தப்படும் தனியார் பல்கலைக் கழகங்களும் இசுபெயின் நாட்டில் உள்ளன. இந்நாட்டின் தலைநகரான மாட்ரிடு (Madrid) நகரில் உள்ள பல்கலைக் கழகத்தில், தேசியக் கல்வி ஆராய்ச்சி வளர்ச்சி மையம் உள்ளது. ஆய்வுத் திட்டமிடல், ஆய்வுகளை ஒழுங்குபடுத்துதல் ஆசிரியர் பயிற்சி போன்ற பணிகளை இம் மையம் ஒவ்வொரு பல்கலைக் கழகத்திலும் நிறைவேற்றிடத் துணையாக நிற்கிறது.

**இசுபென்சர், எர்பர்ட்டு (கி.பி. 1820-1903)** ஓர் ஆங்கிலேய தத்துவ ஞானி. இவர் படிமுறை வளர்ச்சிக் கோட்பாட்டினை (Evolutionary Theory) எல்லா அறிவியல் தொகுதிகளுக்கும் பயன்படுத்தினார். இவர் தெர்பி (Derby) என்ற இடத்தில் பிறந்தார். இவர் தகப்பனார் வில்லியம் சார்சு இசுபென்சர் (William George Spencer) மிகவும் சுதந்திர எண்ணம் படைத்தவராயும் புத்திக் கூர்மையுடையவராயும் இருந்தார். இசுபென்சர் தமக்கு விருப்பமான பாடங்களைப் படித்தார். இவர் பன்னிரண்டாம் வயதில் சிறிதளவு இலத்தீன் அல்லது கிரீக்கு, வரலாறு, ஆங்கிலம், கணிதம் முதலிய பாடங்களைப்

படித்தார்; அறிவியலில் விருப்பமுடையவராய்ப் பௌதிகம், இயைபியல் (Chemistry) உடற்கூற்று நூல் (Anatomy) முதலியவைகளைப் படித்தார்; பதின்மூன்றாம் வயதில் இவர் மாமனாரான இரெவரண்டு தோமசு இசுபென்சரிடம் (Reverend Thomas Spencer) கல்வி பயில்வதற்காக அனுப்பப்பட்டார். அங்கே கட்டுப்பாடு அதிகமானதினால் அங்கிருந்து ஓடி விட்டார். நூற்றுப் பதினைந்து மைல்கள் மூன்று நாட்கள், உணவும் தூக்கமுமில்லாமல் நடந்து தெர்பி வந்தடைந்தார். மீண்டும் இவர் தம்முடைய மாமனாரிடம் அனுப்பப்பட்டார்; பதினாறாம் வயதில் கணிதத்தை ஓரளவு படித்தார்; ஆனால் வரலாற்றிலும் மொழி இயலிலும் அறிவு அதிகம் பெறவில்லை.



எர்பர்ட்டு இசுபென்சர்

பதினேழாம் வயதில் உதவிப் பள்ளி ஆசிரியரானார். மூன்று மாதத்தில் அப்பதவியை விட்டு நீங்கி இலண்டன், பர்மிங்காம் (London and Birmingham) புகைவண்டி அமைப்பகத்தில் பொறியியல் வல்லுநரானார். அந்தச் சமயத்தில் கல்வியிலும் அரசியலிலும் சமயக் கல்வியிலும் ஆர்வமுடையவராயிருந்தார்.

பர்மிங்காம், கிளாசெசுடர் இரயில்வேக்கள் கி.பி. 1841-இல்அமைத்து முடித்தவுடன் இசுபென்சரையும் மற்றப் பொறியியலறிஞர்களையும் வேலையிலிருந்து நீக்கினார்கள். நீக்கப்பட்ட இவர் வீட்டிற்குச் சென்று புதிய கண்டுபிடிப்புகளில் ஈடுபட்டார். அவற்றுள் இயற்கை வரலாறு, சிற்பம், மண்டை அமைப்பாராய்ச்சி நூல் (Phrenology) ஆகியவை முக்கியமானவை. பைலட்டு என்ற மொழியுரிமைப் பத்திரிகையின் துணைப்பதிப்பாசிரியராக இவர் வேலை பார்த்தார். பிறகு அதிலிருந்து விடுதலை பெற்றார். பின்னர்ப் பொருளாதாரம் (Economist) என்ற பத்திரிகையின் துணைப்பதிப்பாசிரியராகக் கி.பி. 1848-ஆம் ஆண்டு அமர்ந்தார்.

இசுபென்சர் எர்பர்ட்டு (Spencer, Herbert) சமூகப் பொருள்களின் அசையா நிலை (Social Statics) பற்றிய நூலைக் கி.பி. 1850-ஆம் ஆண்டு வெளியிட்டார். அது தார்வின் (Darwin) பரிணாமக் கொள்கையைப் போல் அமைந்திருந்தது. இவர் கி.பி.1854-ஆம்ஆண்டு உளநூலின் கொள்கைகள் (Principles of Psychology) என்னும் இரண்டாம் நூலை எழுதிக் கி.பி. 1855-ஆம் ஆண்டு வெளியிட்டார். தார்வினின் நூல் கி.பி. 1859-ஆம் ஆண்டு வெளிவந்தது. இசுபென்சர் எல்லா அறிவியல்களுக்கும் பொருத்தமாகப் பரிணாமக் கொள்கை அமையும்படி நூல்கள் எழுதினார். இவர் கி.பி. 1860 முதல் 1893 வரை புலன் கடந்த நுண்பொருள் ஆராய்ச்சி நூல், உளநூல், சமூக நூல், அறஇயல், உயிர்நூல் முதலியன எழுதினார். இவருடைய நூல்களை உலகோர் மதித்தனர்.

இவர் திருமணம் செய்து கொள்ளவில்லை. இவருடைய நூல்கள் இவருக்குப் போதிய பொருள் வருவாயை அளிக்கவில்லை. இவர் 1903-ஆம் ஆண்டு நெடுநாள் நோய்வாய்ப்பட்டிருந்து காலமானார்.

அறிவுக் கொள்கை: இசுபென்சரின் தத்துவ முதற் கொள்கைகள் (First Principles, கி.பி. 1862) என்ற நூலிலும், அறஇயலின் ஆறு பகுதிகள் (The six Part Principles of Ethics) என்ற நூலிலும் இவர் அறிவுக் கொள்கை காணப்பட்டது. வில்லியம் ஆமில்டன் (William Hamilton), செ.சு. மில் (J.S. Mill) ஆகியோர் கொள்கைகளை இவர் ஆதரித்தார்.

இசுபென்சர் காண்ட்டு (Spencer Kant) கூறியது போல இரண்டு ஆட்சிப் பகுதியை (Domain) இவர் ஒத்துக் கொள்கிறார். ஒன்று அநுபவம் (Experience), மற்றொன்று உண்மை (Reality). நம்முடைய அநுபவம், நாம் உயிரினங்களுடன் தொடர்பு கொள்ளும் உண்மையான நிகழ்ச்சிகள் ஆகியவை வெளியே உள்ள ஊக்க மூட்டுகிற பொருள்களைச் சார்ந்தனவாகும்.

சமய அறிவு (Religious Knowledge): உண்மையான பொருளின் காரியத்தை (Effect) மக்கள் அறிகிறார்களேயொழிய, அதைப் பற்றி அதிகம் தெரிந்து கொள்வதில்லை. ஆனால் அறிய முடியாத ஒரு பொருள் இருப்பதை உணருகிறார்கள். மக்கள் புலன்களால் அறிகிற அறிவைச் சார்ந்திருக்கிறார்கள். ஆகையால், அறிய முடியாத

கடவுளை ஏதாவதொரு தெய்விகமான பொருளு டன் ஒத்துப் பார்க்க முடியுமா என்று சொல்ல முடியவில்லை.

பகுத்தறிவு (Reasoning) என்பது இசுபென்சரைப் பொறுத்தமட்டில் உடல் சம்பந்தப்பட்ட திறமை (Physical Ability) யாகும். அதன் மூலமாகச் சூழ் நிலையில் ஏற்படுகிற சிக்கல்களைத் (Problem) தீர்க்க முடியும். ஆனால், காணமுடியாத பொருள்களைப் பற்றிய சிக்கல்களை மக்கள் அறிய முடியாது; அதே போல் கடவுளையும் பகுத்தறிவு கொண்டு அறிய முடியாது. கடவுள் எப்படித் தோன்றினார்? அவரைத் தோற்றுவித்தது யார் முதலான வினாக்கள் தீர்க்க முடியாத சிக்கல்களாகும். அவர் தம்மைத் தாமே படைத்தார் என்றால், எந்தப் பொருளிலிருந்து படைத்தார்? எந்தப் பொருளிலிருந்தும் படைக்க வில்லை என்றால் இல்லாத பொருளிலிருந்து ஒரு பொருளைப் படைக்க முடியுமா? இசுபென்சர் கருத் துப்படி கடவுட் கொள்கை (Theism), அறிய முடியாத பொருளை அறிவதற்கும் அதற்கும் நமக்குமுள்ள தொடர்பை உணருவதற்கும் பயன்படவில்லை. மாயாவாதம் (Pantheism) அல்லது உலகே கடவுள் என்னும் கொள்கையும் தோல்வியடைந்து விட்டது. கடவுள் ஓர் உள்ளார்ந்த சக்தி என்று கூறப்படும். உலகே கடவுள் என்னும் கொள்கை, கடவுள் கொள் கையில் எழுப்பும் வினாக்களுக்குப் பொருத்தமான விடைதருவதாக இல்லை.

ஆகையினால் இவர் கொள்கை நாத்திக வாதத்திற்கு அழைத்துச் செல்கிறதா என்று கேட் டால், இல்லை என்று கூறுகிறார். கடவுள் இருக் கிறார் என்பதை அறிய முடியவில்லை என்றால் கடவுள் இல்லை என்று பொருள் கொள்ள முடியாது. காணாப் பொருளை அறிய முடியாது (Agnosticism) என்று கூறுவதுதான் சமயம் என்று கூறுகிறார்.

இவர் எல்லாவிதமான மதத் தொடர்பான திட்டங்களையும் குறைகளையும் கண்டித்தார். இவர் காலத்தில் பல சமயங்கள் பொருளற்ற நம்பிக்கை களைக் கொண்டிருந்தன.

நாகரிகம் குறைந்த மனிதனுக்கும் நாகரிகம் தோன்றிய காலத்திலுள்ள மனிதனுக்கும் ஆன்மா; பேய் பற்றிய கருத்துகள் தோன்றின. அவர்கள் கனா, நிழல் முதலியவைகளுக்குக் காரணம் காட்டவில்லை. மனிதர் இருவகைக் குணமுடையவர்களாயிருந் தார்கள்; ஒன்று மாற்றமில்லாத்தன்மை. மற்றொன்று மாறும் தன்மை. இதிலிருந்துதான் அழியாத, மாறாத, எல்லாவல்லமையுமுள்ள கடவுளை நினைத்தனர். கடவுளுக்குத் தீமை செய்யும் குணமோ நன்மை செய்யும் குணமோ இல்லை. மனிதனுக்குத்தான் இவை உண்டு.

கோப்பர்நிகசு (Copernicus), தார்வின் முதலியோ ரின் கோயிலை (Church) எதிர்க்கும் கொள்கையை இவர் விரும்பவில்லை. எத்தகைய எதிர்ப்புகள் இருந்தபோதிலும், மனிதர்களிடையே நல்ல எண் ணத்தை வளர்ப்பதற்கும் பழைய காலத்திலேயிருந்து வந்த மதிப்பீடுகளை நிலை பெறச் செய்வதற்கும் மதம் பயன்பட்டது என்ற கருத்தை இவர் கொண் டிருந்தார்.

அறிவியல் அறிவு (Scientific Knowledge): எல்லாப் பொருள்களிலும் பலதரப்பட்ட ஆற்றல் (Energy) அல்லது சக்தி அமைந்திருக்கும். அறிய முடியாத சக்தியின் வெளிப்படையான தோற்றங்கள் அவை. மனிதர்களின் அறிவானது, அறிய முடியாத தின் வெளிப்பாடேயாகும். அறிவியல் என்பது, அத்தகைய அடிப்படையில் அமைந்தது. அறிவியலின் நோக்கமே பல தீர்வுகளுக்கு ஆதாரமானவைகளைச் சேர்த்து, அதன் அடிப்படையில் பொது விதிகளைக் கண்டுபிடித்து, பிறகு ஒவ்வொரு தனிப்பட்ட துறைக்கும் அவற்றைச் செயற்படுத்துவது ஆகும்.

இதுபோல் இயற்பொருளைப் (Physics) பற்றிப் படிப்பது இயக்க நூல். இதிலிருந்துதான் ஆற்றலின் குணங்களையும், பொருள்களின் அழிக்க முடியாத தன்மையையும் உணரலாம். அதே போல் உயிரி யல் வாயிலாக உயிரினங்களைப் பற்றி அறிந்து பரிணாமத்தையும் வளர்ச்சியடையச் செய்யும் விதிகளையும் அறியலாம். இந்த விதிகளெலலாம் செயலறிவு சார்ந்த (Empirical)பொது விதிகளாகும். இவ்விதிகள் அறியமுடியாதவைகள் உலகில் தோன்ற வழிவகுக்கும்.

மக்கள் காண்கிற பொருள்களில் உருவமோ குணங்களோ கற்பிப்பதில்லை. அதற்கு மாறாக வெளியே உள்ள ஊக்கிகள், அவர்மீது கட்டுப்பாடு களையும் வரையறையையும் விதிக்கின்றன.

இடம், காலம் பற்றிய காண்டின் கொள்கையை இசுபென்சர் மறுத்தார். இடம், காலம் ஆகியவற்றிற் குப் பொருளில் உள்ளதுபோல் குணங்கள் இல்லை. அவை அகப் பொருளுமில்லை (Subjective). மேலும் மனத்தில் அவை இயல்பாய் அமைந்துள்ள கருத்து கள் ஆகா. ஆற்றல் (Force) காரணம், இயக்கம் (Motion) பொருள், இயற்பொருள் (Matter) முதலி யவை இசுபென்சரின் ஆய்வுப்படி விரித்துரைக்க முடியாத கருத்துகள். நடைமுறையில், காலம் என் பது புலன்களுக்கப்பாற்பட்ட குறிப்பிடத்தக்க நிகழ்ச் சிக்கு அடுத்து வருவது. இடம் என்பது ஒரே சமயத் தில் காணப்பெறுகிற எல்லாவற்றையும் தன்னகத்தே கொண்டிருப்பது.

படிமுறை வளர்ச்சிக் கோட்பாடு (Evolution): இது எல்லாவிதமான பொருள்களுக்குமுள்ள தொடர்பைப் பற்றிக் கண்டுபிடிக்க முனைவதில்லை. தத்துவ ஞானிகள் எல்லாவிதக் கொள்கைகளையும் ஆய்வார்கள். கடந்த காலத்தில் அவர்களுடைய கொள்கைகள், புலன் கடந்த நுண்பொருள் ஆராய்ச்சியாக அமைந்ததால் அவை ஏற்றுக் கொள்ளப்படவில்லை. ஆனால் இசுபென்சர் தார்வின் ஆகியோரின் கோட்பாடு உண்மையான தத்துவக் கொள்கைக்கு மையமாக அமைகிறது. பரிணாமக் கோட்பாடு முதல் தத்துவக் கருத்தாகும். அதில் அறிவியல் கருத்தும் தொகுப்பளவையும் அடங்கி இருக்கும்.

இதன் அடிப்படையில் உள்ளம், உடல் தொடர்புடையவை எல்லாம் பரிணாமக் கோட்பாட்டின் அடிப்படையில் அடங்கும். ஒவ்வொரு பொருளும் குறிப்பிட்டத்தக்க ஒன்றிலிருந்து பலவற்றிற்கு மாறுகிறது. உயிரியலிலும் (Biology) மனித இனவரலாற்று நூலிலும் (Anthropology) ஏற்பட்ட வளர்ச்சியையும், மாற்றத்தையும் எங்கும் காணலாம். இசுபென்சர், பரிணாமக் கொள்கை ஒரு முடிவான நோக்கத்துடன் செயற்படுகிறது என்பதை மறுக்கிறார். தொடக்கம், நடுநிலை முடிவு அவைகளுக்குண்டு. இவை ஒரு குறிப்பிட்ட இடத்திலும் காலத்திலும் அமையும். ஒரு மனிதன் பிறக்கிறான், வளர்கிறான், இறக்கிறான். அதே போல் ஒருசமுதாயமும் தோன்றுகிறது; வளர்ச்சியடைகிறது. கடைசியில் உள்ளே ஏற்பட்ட அல்லது வெளியில் ஏற்பட்ட காரணங்களால் அழிகிறது.

பொருள்களைச் சுற்றித் தோன்றுதலும் அழிதலும் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. ஆனால், உலகம் முழுவதும் அத்தகைய நிலையை அடைகிறது என்று கூற இயலாது. அதுபோல ஒரு வினா அறிய முடியாத பொருளை நோக்கி எழுப்பப்படுகிறது. அதற்கு விடை இல்லை. பரிணாமம் என்பது பொருள்களின் தொடர்பு நிலையில் பேசப்படுகிறது.

பரிணாமம் என்பது பருப்பொருளின் ஒருமைப்பாடும், உடன் நிகழ்கிற அசைவின் (Motion) சிதறச் செய்தலுமாகும். அதேசமயத்தில் வரையறையில்லாத ஒழுங்கில்லாத தன்மையிலிருந்து, வரையறையுள்ள, ஒழுங்கான மாற்றம் ஏற்படும். உயிரியல் பற்றிய கொள்கையில் (கி. பி. 1864-1867) இசுபென்சர் சூழ்நிலையின் காரணமாக அமைப்பில்லாத உயிரினங்கள் பிரிந்து விடுகின்றன என்று கூறுகிறார். நாகரிகமற்ற காலத்திலுள்ள உயிரினங்களின் எல்லா இயக்கங்களையும் உடம்பு செய்யும். ஆனால் சிறிது வளர்ச்சியடைந்த நிலையில் உடம்பின் பல்வேறு பாகங்கள் பல்வேறு வேலைகளைச் செய்யும். இப்படியாக அமீபாவின் உடம்பின் பாகங்களில் வேற்றுமையில்லை. ஆனால் மனித உடம்பில் பல்வேறு பாகங்கள், பல தொழில்களைச் செய்கின்றன. பல்வேறு வேலைகளைச் செய்தாலும் அவைகளுக்குள் ஒரு முழுமையாக்கும் (Integral) தன்மை ஏற்படுகிறது.

இருதயமானது ஒரு விரிந்த குருதிக் குழாயாக இருந்தது. பிறகு நான்கு அறையுள்ள பெரிய இருதயமாக மாறிற்று. ஓர் உறுப்பினைப் பயன்படுத்தினாலோ பயன்படுத்தாமலிருந்தாலோ வருங்காலத்தில் அதன் செயலில் மாற்றம் ஏற்படும்.

அறிவுக்கூர்மை: ஓர் உயிரினம் ஒரு கடினமான சூழ்நிலையில் எதிர்த்துச் செயற்பட்டு நல்லமுறையில் தன்னை அமைத்துக் கொள்வதுதான் அறிவுக்கூர்மை எனப்படும். மிருகங்கள் சூழ்நிலையிலிருந்து ஏற்படுகிற உணர்வுகளைப் புலன்கள் வாயிலாக அறிகின்றன. அவை மெய், வாய், கண், மூக்கு, செவி முதலிய நுழைவாயில்கள் வழியாக வருகிற அறிவைப் பெறுகின்றன. பிறகு அந்தப் புலன்களுக்கு எட்டாத பொருள்களை அறிய முயற்சி செய்கின்றன. ஓர் அமீபா (Amoeba) அதைத் தொட்டவுடன் செயலாற்றுகிறது. ஆனால் மேலான உயிரினங்கள் ஒரு பொருள் தூரத்திலிருந்தாலும் இயக்கத்தைக் காட்டுகின்றன. பிறகு அவைகளை உணரும் சக்தி ஏற்படுகிறது. மிருகங்கள் அப்பொழுது நடக்கிற செயல்களை அறியும். ஆனால் மனிதன் கடந்த காலத்தையும் எதிர்காலத்தையும் அறிந்து எதிர்ப்புகளைச் சமாளிக்கக் கற்றுக் கொள்கிறான்.

ஒத்துணர்வும், அனுதாபமும்: பரிணாம முறைப்படி உணர்வுகள் தோன்றும். உயிர், வாழ நினைக்கிறது. ஆனால் இன்ப உணர்வுகள் வாழ்வுக்குத் தேவை. வாழ்விற்கு ஒத்துழைப்புத் தேவை. சமூகத்திற்கு மற்ற உயிரினங்கள் போல் குழந்தைப் பருவம், வாலிபப் பருவம், முதிய பருவம் என்று மூன்று பருவங்கள் உண்டு. உயிரினங்களுக்கும் சமூகத்திற்கும் முக்கியமான வேறுபாடுகள் உள்ளன. உயிரினத்தில், மூளையில் உணர்வு இருக்கும்; மற்றப் பகுதிகளில் இருக்காது. ஆனால் சமூகத்தில் தனியான பகுதிகளில் இருக்கும். ஒரு சமூகம் அதன் உறுப்பினர் நன்மைக்காக அமைந்திருக்கிறது. இசுபென்சர் எல்லாப் பொதுவுடைமைக் கொள்கைகளையும் எதிர்த்தார். அரசியல் கட்டுப்பாடற்ற வாணிகக் கோட்பாட்டை (Laissez-faire) ஆதரித்தார். பொதுவுடைமைக் கொள்கை (Socialism) ஓர் அரசாங்கத்தில் அமைந்தால், அது ஓர் இராணுவக் கொடுங்கோலாட்சியாக மாறும் என்று கூறினார்.

எல்லாச் சமூகங்களும் வெளிநாட்டுச் சிக்கல்களாலோ உள்நாட்டுக் குழப்பத்தினாலோ அழிந்து

விடும் என்று கூறினார். மேல்நாட்டு நாகரிகம், நல்ல முறையில் முன்னேறி வருகிறதென்று குறிப்பிட்டார். நாடுகள் போரை விரும்புவதில்லை; அவை தம் மிடையேயுள்ள வேறுபாடுகளை அமைதியாகத் தீர்க்க முயல்கின்றன; பேச்சுரிமை, மதம், அச்சுக் கூடங்கள் முதலியவைகளுக்கு உத்தரவாதம் அளிக்கின்றன. முறையான கல்வி அளித்தலினால் சமூகம் நீண்டநாள் வளர்ச்சியடையும். ஓர் ஒழுக்க முறையினைப் பல தலைமுறைகளுக்கு மக்களுக்குப் பயிற்றுவித்தால் இனவுறவுடையதாகி (Congenital) விடும். ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய மூதாதையர்களிடமிருந்து சில கருத்துகளைப் பெற்றுக் கொள்கிறான். பிறகு வருங்காலச் சந்ததியாருக்குப் பகிர்ந்தளிப்பதால் அவர்கள் முற்காலத்தில் இருந்தவர்களை விடச் சிறந்து விளங்குகிறார்கள்.

அற இயல்: இசுபென்சர் ஒரு சிறந்த பயனீட்டுக் கொள்கையை (Utilitarian) வளர்ச்சியடையச் செய்தார். நல்லது என்பது காலப்போக்கில் இனிமையைத் தருவது. அறஇயல் ஓர் ஒழுங்கான அறிவியல் (Science of Conduct). ஒழுக்கமென்பது செயல்களை நல்ல முடிவு நோக்கிச் செயற்படுத்துவது. கீழான மிருகங்கள் கூடச் சூழ்நிலையை நன்றாகப் பயன்படுத்தி இன்பத்தையடைகின்றன. மனிதர்களும் அவ்வாறே செய்கின்றனர். சூழ்நிலைக்கேற்ப ஒழுகினால் இன்பமும், எதிர்த்தால் துன்பமுமுண்டாகின்றன.

மக்கள், தம் இன்பத்தைக் கவனிக்க வேண்டும். ஆனால் அறிவைப் பயன்படுத்த வேண்டும். எதிர்காலத்தைப் பற்றியும் அறிய மக்களுக்கு வாய்ப்புண்டு. நிகழ்கால இன்பங்கள் சில சமயங்களில் எதிர்காலத்தில் துன்பங்களைத் தரும்.

ஒழுக்கத்தைப் பற்றிய தன்னறிவு (Moral Consciousness) என்பது தனக்கும், சமுதாயத்திற்குமுள்ள பலனைக் கருதிச் செயற்படுவது. கடமை என்பது எதிர்காலத்திலுள்ள பலன்களை நினைத்து நிகழ்காலத்திலுள்ள கவர்ச்சிகளுக்கு இடம் தராதிருத்தல்.

தான் என்ற எண்ணத்திற்கும் (Egoism) பிறர் நலத்திற்கும் (Altruism) உள்ள வேறுபாட்டைத் தவிர்த்தல். இசுபென்சரின் கருத்துப்படி தன்னலமும், பொது நலமும் ஒன்றிற்கொன்று முரண்பட்டவை.

துணை நூல்கள்:

Bowae, B.P., The Philosophy of Herbert Spencer, New York -1874.

Duncan, David, Life and Letters of Herbert Spencer, 2 Volumes. New York, 1908.

Hudson, W.H., An Introduction to the Philosophy of Herbert Spencer, 2nd Edition, London, 1904.

## இசுபென்சரின் கல்விச் சிந்தனைகள்:

கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டுச் சிந்தனையாளர்களுள் இசுபென்சரும் (Spencer) ஒருவர். இவர் இங்கிலாந்தில் பின்பற்றப்பட்டு வந்த பழைய கல்விமுறைகளை மாற்றியவர். இவர், கல்வியானது அறிவியல் அடிப்படையில் அமைதல் வேண்டும் என்றும், அக்கல்வி மக்களை நிறைவுபெற்ற வாழ்க்கைக்கு ஆயத்தப்படுத்தவேண்டும் என்றும் கருதியவர். தம் கல்விக் கருத்துகளை நான்கு இதழ்களில் (கி.பி. 1854-1859) வெளியிட்டார். அவை புத்தக வடிவில் கி.பி. 1861-ஆம் ஆண்டு 'கல்வி, அறிவு, அறநெறி, உடல் நலம்' (Education: Intellecutal, Moral and Physical) என்ற தலைப்பில் வெளி வந்தன.

முழுமையான, நிறைவு பெற்ற வாழ்க்கைக்கு ஆயத்தப்படுத்துவதே (Preparation for Complete Living) கல்வியின் நோக்கமாகும் என்பது இசுபென்சரின் கருத்து. இங்கிலாந்தில் நிலவிய இலக்கியக் கல்விக்கு (Classical Learning) எதிராக இசுபென்சர் இக்கருத்தை வெளியிட்டார். தனி மனிதனின் முன்னேற்றத்தில் அரசு தலையிடக் கூடாது எனக் கருதினார். எனவே, கல்வி தனி மனிதனை முழுமையான வாழ்க்கைக்கு ஆயத்தப்படுத்த வேண்டும். முழுமையான வாழ்க்கை என்பது சில வாழ்க்கை வசதிகளை மட்டில் பெற்று வாழ்தல் அன்று. உடல், உள்ளம், ஆன்மா ஆகிய அனைத்திலும் வளர்ச்சி பெற்று வாழ்வதாகும். 'இசைந்த வளர்ச்சி' (Harmonious Development) பெறுவதே கல்வியின் நோக்கமாகும் என்று கல்வி பற்றிய தமது கருத்தை வெளியிட்டார். முழுமையான வாழ்க்கை வாழ 'எந்த அறிவு பயனுள்ளது?' (What Knowledge is Most Worthy?) என்ற வினாவிற்கு இவர் 'இயற்கை அறிவியல்' அறிவுதான் பயனுள்ளது என்று விடையளிக்கிறார். அறிவியல் என்பது பாடம் மட்டுமன்று; முழுமையான வாழ்க்கைக்குத் தேவையான எல்லாப் பாடங்களுமே அறிவியலாகும் என்று கருதினார்.

முழுமையான வாழ்க்கைக்கு ஆயத்தப்படுத்த உதவும் கல்விப் பாடங்களை, இசுபென்சர் இன்றியமையாமையின் அடிப்படையில் ஐந்து பகுதிகளாகப் பிரித்தார். அவை, 1. தற்காப்புக்கு நேரடியாக உதவக் கூடிய பாடங்கள்: இதற்கு உடலியல், உடல்நலவியல் ஆகிய பாடங்களைக் கற்க வேண்டும் என்றார். 2. தற்காப்புக்கு மறைமுகமாக உதவக்

கூடிய பாடங்கள்: இதற்கு வாழ்க்கைக்கு மிகத் தேவையான உணவு, உடை, உறைவிடம் ஆகியவை பற்றி அறிவு புகட்டும் பாடங்களான இயற்பியல், வேதியல், உயிரியல், கணிதம் ஆகியபாடங்கள் கற்பிக்கப்பட வேண்டும் என்றார். 3. குழந்தைகளைச் சிறந்த முறையில் வளர்ப்பதற்கான கல்வி: நல்ல குடும்பம், நல்ல குழந்தைகளை உருவாக்கும். எனவே, பெற்றோர்கள் இளமையிலேயே மாணவர்களுக்குச் சிறந்த அறிவைப் புகட்ட வேண்டும் என்றார். இதற்கு உடல்நூல் (Physiology), உடற்கூற்றுநூல் (Anatomy), உளவியற் பண்பாடு ஆகிய பாடங்கள் கற்பிக்கப்பட வேண்டும் என்றார். 4. சிறந்த குடிமகனாகவும் சமூகத்தில் நல்ல உறுப்பினராகவும் ஆக்குதல்: இதற்குச் சமூக, அரசியல் வாழ்க்கை பற்றிய அறிவு புகட்டப்பட வேண்டும் என்றும், அரசர்களையும் போர்களையும் பற்றிய வரலாறு கற்பிக்கப்படக் கூடாது என்றும், சமூகத்தின் வளர்ச்சி, நாகரிகம் ஆகியவை பற்றிய பயனுள்ள வரலாறு கற்பிக்கப்பட வேண்டும் என்றும் கூறினார். 5. ஓய்வு நேரத்திற்கான கல்வி: ஓய்வு நேரத்தைப் பயனுள்ளதாகக் கழிக்க இலக்கியம், நுண்கலைகள் ஆகியவை கற்பிக்கப்பட வேண்டும் என்றார். இசுபென்சர் காட்டும் பாடப் பகுதியில், முதல் இரண்டு பிரிவுகளுக்கும் இன்றைய கல்வியில் சிறப்பிடம் அளிக்கப்படுகிறது. ஓய்வுக்கான கல்விக்குச் சிறப்பிடம் அளிக்கப்படவில்லை. இசுபென்சர் தமது 'அறிவுக் கல்வி' (Intellectual Education) என்னும் கொள்கையில் கற்பித்தலுக்கு உதவக் கூடிய சில கோட்பாடுகளை உருவாக்கியுள்ளார். அவை. 1. எளியதனின்றும் சிக்கலானதற்குச் செல்லுதல்: கற்றலின்போது தொடக்கத்தில் எளிமையான பாடங்களில் தொடங்கிப் பின் சிக்கலான பாடங்களைக் கற்பிக்க வேண்டும். 2. திட்டமற்றதிலிருந்து திட்டமானதற்குச் செல்லுதல். 3. காட்சிப் பொருள்களினின்று கருத்துப் பொருள்களுக்குச் செல்லுதல்: கற்பிக்கும்போது கற்பிக்கப்படும் கருத்துகளை உண்மைப் பொருட்களுடனோ அனுபவப் பொருட்களுடனோ தொடர்பு படுத்த வேண்டும். இவ்வாறு செய்வதால், கற்றல் எளிமையானதாகவும் முழுமையானதாகவும் இருக்கும். 4. அனுபவத்தினின்று அனுமானத்திற்குச் செல்லுதல்: கற்பிக்கும்போது தெரிந்த அனுபவங்களைக் கூறிப் பின் அனுபவப் படாததோடு இணைக்க வேண்டும். 5. ஞாபக மூட்டுதல்: கற்றலின் போது கற்ற பாடங்களைத் திருப்புவதன் (Recapitulation) மூலம், அவை மனத்தில் நிலையாக்கப்படுதல். 6. ஆர்வமூட்டல்: கற்பித்தலின்போது தாமே கற்பதற்கு மாணவர்களிடம் ஆர்வ மூட்ட வேண்டும். அப்போதுதான், மாணவர்களிடம் தாம் அறிந்து கொள்ள வேண்டும் என்ற மனப்பான்மை தோன்றி, ஆராய்ச்சி மனப்பான்மை வளரும்.

இசுபென்சர் தம் அறநெறிக் கல்வியில் உருசோவைப் (Rousseau) போல இயற்கை விளைவுகளின் (Natural Consequences) துணைக் கொண்டு, ஒழுக்கப் பயிற்சி அளிப்பதை ஆதரித்தார். இயற்கையாகக் கிடைக்கும் தண்டனையைத் தான் செய்த தவறுக்குக் காரணமாகவும் தவறின் விளைவாகவும் குழந்தை ஏற்கும் எனக் கருதினார். இக்கருத்து குழந்தைகளைப் பொறுத்தமட்டில் முழுதும் ஏற்புடையதன்று.

இசுபென்சர் மாணவர்களுக்கு நல்ல உணவு, உடை, தூய்மையான காற்று, நல்ல உடற்பயிற்சி, நல்ல தூக்கம் ஆகியவை கிடைக்க வழி செய்ய வேண்டும் என்று உடற்பயிற்சிக் கல்வியில் குறிப்பிடுகிறார்.

இவர் இங்கிலாந்தில் தோன்றிய சிந்தனையாளராயினும், அவர்தம் சிந்தனைகள் அவரது நாட்டைத் தாண்டி உலகமெங்கும் பின்பற்றப்படுகிறது. அறிவியல் அடிப்படையில் கல்வி அமைய வேண்டும் என்றும், முழு வாழ்க்கைக்கு ஆயத்தப்படுத்துவதாக இருக்க வேண்டும் என்றும் வலியுறுத்தி, அக்கல்வியைத் தெளிவாகக் கற்பிப்பதற்குப் பின்பற்ற வேண்டிய கல்விக் கோட்பாடுகளையும் வகுத்துக் கொடுத்துக் கல்வி உலகில் நிலையான வெற்றியைக் கண்டார் இசுபென்சர். ம.ச.

துணை நூல்கள்:

Curtis, S. J. and Boultwood, M. E. A., A Short History of Educationl Ideas, University Tutorial Press Ltd., London, 1961.

Eby Frederick, The Development of Modern Education in Theory, Organization and Practice (2nd Edn.) New Delhi, 1964.

சந்தானம், எஸ். கல்வியின் தத்துவ, சமூக அடிப்படைகள், பழனியப்பா பிரதர்சு, சென்னை, 1981.

**இசுமவேல்** ஆபிரகாம் என்பாருக்கும், ககர் என்னும் எகிப்தியப் பெண்ணுக்கும் மகனாகப் பிறந்தவர் என்று பழைய ஏற்பாடு கூறுகிறது. ககர் (Hagar) ஆபிரகாமின் மனைவி சாரா (Sarah) என்பவளின் வேலைக்காரி. ககரைத் தன் கணவருக்குக் காமக்கிழத்தியாக அனுப்பியவரும் சாராவேயாவாள். அவள் மூலமாகவாவது ஆபிரகாமுக்குக் குழந்தை பிறக்கும் என்ற நம்பிக்கையில் சாரா இதைச் செய்தாள். இசுமவேலும், ககரும் சாராவின் பொறாமையால் ஆபிரகாமின் வீட்டிலிருந்து விரட்டப்பட்ட

னர். இசுமவேல் கானான் (Canaan) என்னும் பகுதிக்குத் தெற்கில் பரன் (Paran) என்னுமிடத்தில் வாழத் தொடங்கிய போது, எகிப்தியப் பெண்ணொருத்தியை மணந்துகொண்டார். அவர்களுக்கு 12 ஆண் மக்கள் பிறந்தனர் என்றும் அவர்களை '12 இளவரசர்கள்' என்றும் விவிலியம் கூறுகிறது. இசுமவேலே அராபியர்களின் மரபுவழி மூதாதையர் என்று கருதப்படுகிறார். இசுலாமிய சமயத்தில் அவரும் தீர்க்கதரிசிபோல் கருதப்படுகிறார்.

**இசுமிட்டு விரிகுடா** மேற்காசியாவில் துருக்கி நாட்டிலுள்ளது. வடமேற்குத் துருக்கியில் இசுமிட்டு (Izmit) என்னும் துறைமுகப்பட்டினம் கொகெய்லி மாநிலத்தின் தலைநகர். இசுமிட்டு விரிகுடா, மர்மாராக் (Marmara)கடலின் கிழக்கோடியில் அமைந்துள்ளது. இசுமிட்டு நகரம் புகையிலை விளையும் பகுதியின் மையமாகவுள்ளது. இங்கு ஒலிவ மரங்களும் சிறப்பாக வளர்கின்றன. ஒலிவக் கொட்டைகளிலிருந்து ஒலிவ எண்ணெய் எடுக்கிறார்கள். பீர், காகிதம், காகிதப் பொருள்கள் போன்றவை இசுமிட்டு நகரில் உற்பத்தியாகின்றன.

**இசுமித்சோனியன் நிறுவனம்:** அமெரிக்காவில் வாசிங்டன் டி.சி.இல் இந்நிறுவனம், ஆங்கில அறிவியல் அறிஞர் சேம்சு இசுமித்சன் (James Smithson) என்பவரால் நிறுவப்பட்டது. இசுமித்சோனியன் நிறுவனம் (Smithsonian Institution) இன்று அமெரிக்க அரசு ஏற்று நடத்திவரும் மிகப் பெரியதோர் அறிவியல், பண்பாட்டு நிறுவனமாகும். மக்களிடையே அறிவின் வளர்ச்சிக்கும் பரவலுக்கும் வழிவகுக்க, சேம்சு இசுமித்சன் தாம் இறக்கும்போது இதன் உரிமையை இறுதிப் பத்திரம் ஒன்றின் வாயிலாக அமெரிக்க அரசுக்கு ஒப்படைத்தார். சி. கால்கௌன் (C. Calhoun) என்பவரும் இதர அமெரிக்கக் கூட்டாட்சி அரசின் சட்டமன்ற (Congress) உறுப்பினர்களும் இதன் பொறுப்பைப் பெற்றாலும், இத்தகைய பெரிய நிறுவனத்தைக் கொடையாகப் பெற அதிகாரம் பெற்றிருக்கவில்லை. இதன்பின்னர்ச் சான் குயின்சி ஆதம்சு (John Quincy Adams) இந்நிறுவனத்தை ஒழுங்குபடுத்திச் செயற்படுத்தப் பெரு முயற்சிகள் எடுத்ததன் பயனாக, கி.பி. 1846-ஆம் ஆண்டு, வாசிங்டன் டி.சி. கூட்டாட்சிச் சட்டமாமன்றத்தின் சட்டத்தால் (Congressional Act), இந்நிறுவனம் தேசிய அறிவியல், பண்பாட்டு மையமாக நிறுவப்பட்டது. இன்று அமெரிக்காவின் குடியரசுத் தலைவர், உதவிக் குடியரசுத்தலைவர், தலைமை நீதிபதி, மூன்று ஆட்சிப் பேரவையாளர்கள் (Senator), மூன்று பேராளர்கள், அறுவர் அலுவலரல்லாதவர்கள் ஆகியோர் அடங்கிய குழு, இந்நிறுவனத்தைப் பொறுப்பேற்று நடத்தும் உரிமையைக் கொண்டுள்ளது. ஆனால் இந்நிறுவனத்தின் நிருவாகத்தைத் தலைமைச்செயலரே கவனித்து வருகிறார். இவருக்கு ஒவ்வொரு துறையின் இயக்குநர்களும் உடன் துணை புரிவர்.



இசுமித்சோனியன் நிறுவனம்

இசுமித்சோனியன் நிறுவனம், அறிவியல், வரலாறு, கலை, முதலான அனைத்துத் துறைகளிலும் 65 மிலியனுக்கும் மேற்பட்ட பொருள்களைக் கொண்டுள்ளது. மேலும் இது கல்விசார் செயல்களையும் பன்னாடுகளுக்கிடையே தலை சிறந்த வெளியீடுகளைப் பரிமாற்றும் செயல்களையும் கொண்டுள்ளது. பிற்காலத்தில் பொதுநலச் சேவையும் இதன் செயற்பாடுகளில் ஓர் உறுப்பாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

பல அருங்காட்சியகங்களைத் தன்னுள் கொண்ட இந்நிறுவனத்தில் 'தேசிய இயற்கையியல் வரலற்று அருங்காட்சியகம்'(National Museum of Natural History)தலைசிறந்தஅறிவியல் பிரிவாகும். இது 'அமெரிக்க ஐக்கியத் தேசிய அருங்காட்சியகம்' (U.S. National Museum) எனவும் கூறப்படுகிறது. இந்த அருங்காட்சியகத்தில் அனைத்துத் தொகுதி விலங்கினங்களும் ஆசிய, அமெரிக்க, ஆப்பிரிக்கப் பண்பாடுகளை விளக்கும் பொருள்களும், கனிமவியல், மண்ணியல், மானிடவியல் முதலான அனைத்துத் துறைப் பொருள்களும் சேகரிக்கப்பட்டுக் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. 'தேசிய விலங்கியல் பூங்கா' (National Zoological Park) கி.பி. 1890-இல் தொடங்கப்பட்டு, இப்போது 800 க்கும் மேற்பட்ட வகைகளையுடைய பாலூட்டிகள், பறவைகள், ஊர்வன ஆகியவற்றைக் கொண்டிருக்கிறது. 'இசுமித்சோனியன் வான இயற்பியல் கூடம்'(Smithsonian Astrophysical Observatory) கி.பி. 1890-இல் கேம்பிரிட்சைத் தலைமையிடமாகக் கொண்டு இயங்கி வருகிறது. இசுமித்சோனியன் வெப்பப் பகுதி ஆய்வு மையம், 1946-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டு உலகெங்கும் பல ஆய்வு மையங்களைக் கொண்டுள்ளது. இதே ஆண்டில் 'தேசிய வான விண்வெளி அருங்காட்சியகம்' (National Air and Space Museum) தொடங்கப்பட்டது. அதில் இரைட்டு (Wright) சகோதரர்கள் கண்டுபிடித்த ஆகாயவிமானம் முதல் அண்மைக்கால விமானங்கள் வரையுள்ள விமானங்கள் சேகரித்து வைக்கப்பட்டுள்ளன. 'கதிரியக்க உயிரியல் சோதனைக் கூடம்' (Radiation, Biology Laboratory), 1965-ஆம் ஆண்டு வான இயற்பியல் கூடத்திலிருந்து பிரிக்கப்பட்டுத் தனிப்பிரிவாகச் செயற்படத் தொடங்கியது.

'வரலாறு, தொழில்நுட்பத் தேசிய அருங்காட்சியகம்' (National Museum of History and Technology) இசுமித்சோனியன் நிறுவனத்தின் பழம்பெரும் அறிவியல் சார்புற்ற அருங்காட்சியகமாகும். இந்த அருங்காட்சியகம் அமெரிக்க வரலாறு, பண்பாடு ஆகியவற்றின் வரலாற்றினையும் உலகத்தின் தொழில் நுட்ப வரலாற்றினையும் கொண்டுள்ளது. இக்கூடங்களில் எறிஉந்துகள், இரயில், கப்பல், துப்பாக்கிகள், வேளாண்மைப் பொருள்கள், தொலைபேசி, தபால் தலைகள், நாணயங்கள், இசைக் கருவிகள், ஆடை அணிகள் முதலான பல்வேறு பொருள்களைச் சேகரித்துக் காட்சிக்கு வைத்துள்ளனர். 'தேசிய ஓவியக்கூடம்' (National Gallery of Art) 1906-இல் தொடங்கப்பட்டது. இதில் பெரும்பான்மையானவை அமெரிக்க ஓவியங்களாகும். இதனை 'அமெரிக்க ஓவியத் தேசிய அருங்காட்சியகம்' (National Museum of American Art) என்று கூறுவதும் உண்டு. சார்லசு லாங் பிரீர் (Charles Lang Freer) என்பவர், 1906 -ஆம் ஆண்டு 'பிரீர் ஓவியக் கூடம்' (Freer Gallery of Art) என்னும் கூடத்தை நிறுவி, அதற்கான கொடை நிதியையும் ஏற்படுத்திக் கலைத்துறை வளர வழிவகை செய்தார். இதில் கிழக்கிந்திய ஓவியங்களும் இசுலாமிய ஓவியங்களும் மிகுதியாக இடம் பெற்றுள்ளன.

'தேசிய இராணுவப் படை அருங்காட்சியக ஆலோசனைக் குழு' (National Armed Forces Museum Advisory Board) 1961-இல் நிறுவப்பட்டு, அமெரிக்காவின் இராணுவப் பொருள்களின் மாதிரிகளைப் பாதுகாத்து வருகிறது. 'தேசிய உருவப்படக் கூடம்' (National Portrait Gallery) 1962-ஆம் ஆண்டு தொடங்கப் பெற்று, நன்கு வளர்ச்சியடைந்து வருகிறது. 'சோசப் எச். இர்சுஆர்ன் அருங்காட்சியகமும் சிற்பப் பூங்காவும்' (Joseph H. Hirshhorn Musem and Sculpture Garden) என்னும் அருங்காட்சியகம், 4000க்கும் மேற்பட்ட சிற்பங்களையும் 2000க்கும் மேற்பட்ட வண்ண ஓவியங்களையும் கொண்டுள்ளது. இதில் ஆப்பிரிக்க வெண்கலச் சிற்பங்களும் அடங்கும். நியூயார்க்கில் 'கூப்பர் எவிட்டு ஒப்பனை ஓவிய அருங்காட்சியகமும் வடிவமைப்புக் கூடமும்' (Cooper -Hewitt Musem of Decorative Arts and Design) கி.பி. 1897-இல் நிறுவப்பட்டு, 1968-இல் இசுமித்சோனியன் நிறுவாகத்தில் கொண்டு வரப்பட்டன.

இசுமித்சோனியன் நிறுவனம் பல பரிமாற்றச் சேவைகளையும் செய்து வருகிறது. தொடக்கக் காலத்திலிருந்தே 'பன்னாட்டுப் பரிமாற்றச் சேவை' (International Exchange Service) என்னும் அமைப்பு இயங்கி வருகிறது. இது அமெரிக்க அரசின் வெளியீடுகளையும் சில தனியார் வெளியீடுகளையும் வெளிநாடுகளுக்கு அனுப்பி வைக்கிறது. வெளிநாட்டு வெளியீடுகளைப் பெற்றுக் கேட்கும் அமெரிக்கர்களுக்கு அவற்றை அனுப்பிவைக்கிறது. 'அறிவியல் செய்திப் பரிமாற்றத்துறை' (The Science Information Centre) என்னும் பிரிவு வெளியிடப்படாத அறிவியல் தகவல்களை (Data) அமெரிக்க அரசிற்கும் தனியார் நிறுவனங்களுக்கும் கொடுத்துதவுகிறது. 'சான்.எபு. கென்னடி கலை நிகழ்ச்சி மையம்' (John F. Kennedy Centre for Performing Art) 1958-இல் நிறு



இசுமித்சோனியன் நிறுவன அருங்காட்சியகத்தின் ஒரு பகுதி

வப்பட்டது. இது பின்னர்த் தேசியப் பண்பாட்டு மையமாக 1971-இல் மாற்றப்பட்டது. 'உட்ரோவில் சன் பன்னாட்டு ஆய்வாளர்கள் மையம்' (Woodrow Wilson International Centre for Scholars) 1968-இல் நிறுவப்பட்டது. இம்மையம் அறிஞர்கள் கூடும் இடமாகவும் ஆய்வாளர்களின் பணிக்கூடமாக வும் திகழ்கிறது. இந்நிறுவனம் 'அண்டைய அனாகாசுடியா அருங்காட்சியகத்தை'ப் (Anacostia Neighbourhood Museum) பொறுப்பேற்று நடத்து கிறது. இசுமித்சோனியன் நிறுவனத்தில் மிகப்பெரும் நூலகம் ஒன்று இயங்கி வருகிறது. அமெரிக்க இந்தி யர்களைப் பற்றிய மிகுதியான வெளியீடுகளையும், அமெரிக்க ஓவியங்களைப் பற்றிய ஓர் ஆவணக் காப்பகத்தையும், ஆண்டு அறிக்கைகளையும், இந் நிறுவனத்தின் பல்வேறு அமைப்புகளின் வெளியீடு களையும் மிகுதியான எண்ணிக்கையில் இந்த நூலகம் கொண்டுள்ளது. இந்நிறுவனத்தின் பெயரி லேயே ஒரு மாத இதழும் வெளியாகிறது.

துணை நூல்கள்:

Karp, Walter, The Smithsonian Institution, Smithsonian Institute, 1965.

Neal, Harry E., Treasures By the Million, The Story of the Smithsonian Institution, Messner, 1961.

**இசுமீர்** துருக்கி நாட்டின் துறைமுக நகரங்க ளுள் ஒன்று. இது ஈசியக் கடலின் (Agean Sea) கிழக் குக் கடற்கரையில் அமைந்துள்ள வணிக மையமுமா கும். இந்நகரம் இசுதான்புல்லுக்கு (Istanbul) 320 கி.மீ. தென்மேற்கில் உள்ளது. குரோம்தாதுக்கள், புகையிலை, உலர்ந்த பழவகைகள், பருத்தி, ஒலிவ எண்ணெய் போன்றவற்றை இசுமீர் துறைமுகத்திலி ருந்து ஏற்றுமதி செய்கிறார்கள். இசுமீர் (Izmir) மாநிலத்தின் தலைநகராகவும் இவ்வூர் அமைந் துள்ளது. இதன் பழம் பெயர் சிமிர்னா (Symrna) என்பதாகும்.



இசுமீர்

இந்நகரைக் கி.மு. 6-ஆம் நூற்றாண்டிலிருந்தே பல்வேறு மரபினர் ஆண்டு வந்துள்ளனர். கிரேக்கர், உரோமானியர், செல்சுத் துருக்கியர் (Selju Turks), மங்கோலியர், உதுமானியத்துருக்கியர்(Ottoman Turks) போன்றோர் இந்நகரை ஆட்சி செய்த வர்களுள் சிலர். இந்நகரம் கி.பி. 1424-ஆம் ஆண்டிலி ருந்து இன்றுவரை (இடையில் மூன்றாண்டுகளைத் தவிர) துருக்கியரின் கட்டுப்பாட்டுக்குள்ளேயே இருந்து வந்துள்ளது. இதன் மக்கள்தொகை 7,57,854 (1980).

**இசுமெயில் (கி.பி. 1645-1727)** மொராக்கோ நாட்டை ஆண்ட இரண்டாம் அரசர்; அலவி மரபினைச் சார்ந்தவர். இவர் கி.பி. 1672 முதல் 1727 வரை நீண்டகாலம் ஆட்சி செய்த அரசர். அலவி மரபினரின் (Alawi Dynasty) ஆட்சி இவர் காலத்தில் உறுதிப்பட்டது. ஐரோப்பிய நுட்பங்களைக் கற்றறிந்து, அதன் அடிப்படையில் இராணுவத்தை வலுவூட்டியவர் இவர். மொராக்கோவில் பிரெஞ்சு மொழி செல்வாக்குப் பெறவும் இவர் காரணமானவர்.

இசுமெயிலின் முழுப்பெயர் மவுலாய் இசுமெயில் இபின் சாரீபு (Mawlay Ismail Ibn Sharif) என்பதாகும். இவர் இளம் பருவத்தைப் பற்றிய செய்திகள் கிடைத்தில. இவர் தமையனாரான மவுலாய் ஆர். இரசீது இம்மரபினை நிலை நாட்டியவர். அவர் கி.பி. 1672-ஆம் ஆண்டில் திடீரெனக் காலமானபோது, இசுமெயில் ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டு தம்மையே அரசராக அறிவித்துக் கொண்டார்; இவரைப் பலர் எதிர்த்தனர். எதிர்த்தவர்களை உதுமானியத் துருக்கர்கள் ஆதரித்தனர். எனவே வாரிசு உரிமைப்போர் ஐந்தாண்டுகள் நடைபெற்றது. போரிட்டவர்கள் தோற்கடிக்கப்பெற்றுக் கொல்லப்பட்டார்கள். எனினும் உறவினர்களிடமிருந்து இவருக்குப் பல தொல்லைகள் ஏற்பட்டன. இறுதியாக, அவர்களுக்கும் ஓரளவு சுதந்திர அரசை நிலைநாட்டும் உரிமை கொடுக்கப்பட்டதால், தொல்லைகள் முடிவுற்றன.

இசுமெயில் கி.பி. 1673-ஆம் ஆண்டில் அடிமைகளைக் கொண்ட கறுப்பர் படையொன்றை உருவாக்கினார். அது காலப்போக்கில் பெரும் படையாக உருவெடுத்தது. இவர் ஐரோப்பியர்களை வெறுத்த போதும், அவர்களிடமிருந்து படைக்கலன்களை விலைக்கு வாங்கிக் கொண்டார். பின்னர் இவர் மொராக்கோ துறைமுகங்களில் குடியேறியிருந்த ஐரோப்பியக் குடியேற்றக்காரர்களுடன் போர் செய்தார். மமூரா (Mamurah) என்னும் துறைமுகத்தை இவர் இசுபானியர்களிடமிருந்து கைப்பற்றிக்கொண்டார். ஆங்கிலேயரைத் தாஞ்சியர் (Tangier) என்னும் முறைமுகத்திலிருந்து வெளியேற்றினார். இசுபெயினைப் பகைத்துக் கொண்டதால், இவர் பிரான்சு மன்னர் பதினான்காம் உலூயி (Louis XIV) என்பாரிடம் நட்புக் கொண்டார். இதனால் மொராக்கோவில் பிரெஞ்சியர் செல்வாக்கு மிகுந்தது. பிரெஞ்சு அலுவலர்கள் மொராக்கோவின் படைவீரர்களைப் பயிற்றுவிக்கவும், பொதுப்பணித் துறைக் கட்டடங்களைக் கட்டவும் துணை நின்றனர். மெக்னசு (Meknes) என்னும் ஊரில் கட்டப்பெற்ற மாளிகை, வெர்சே மாளிகை போன்று கட்டப்பட்டது.

இசுமெயில் அயல் வாணிகத்தை முற்றுரிமையாகக் கொண்டு, படைக்கும் கட்டடங்களுக்கும் தேவையான பொருளைத் திரட்டினார். நபிகள் நாயகத்தின் வழித்தோன்றல் என்று கூறிக்கொண்ட இவர், தம்மை ஆன்மிக அருள் பெற்றவர் என்றும் அதனால் ஆட்சி செய்யப் பொருத்தமானவர் என்றும் நம்பினார். உலகியல் வாழ்வில் மட்டுமன்றி ஆன்மீகத் துறையிலும் மக்கள் தம் சொல்லுக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டுமென விழைந்தார்.

இசுமெயில் கொடுமையானவர் என்றும், மனம் போன போக்கில் போகிறவர் என்றும் குறைகூறப் பட்டாலும், தம் மரபினரின் ஆட்சியை நிலைநிறுத்த அவை தேவை என்று கருதினார். இவருக்கு 700 ஆண்மக்களும் எண்ணற்ற பெண்மக்களும் இருந்தனர்எனக் கூறுவர். இவர் கி.பி. 1725-ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் மெக்னசு நகரில் காலமானார்.

**இசுமெயில் ஏதில்கான் (கி.பி. 1510-34):** பிசப்பூர் அரசை நிறுவிய ஏதில்சா வம்சத்தின் முதல் அரசராகிய யூசுப்பு ஏதில்கான் கி.பி. 1510-இல் காலமான போது, அவர் மகனாகிய இசுமெயில் ஏதில்கான் தம் பதின்மூன்றாம் வயதில் சுல்தானாக்கப்பட்டார். யூசுப்பால் பாதுகாவலராக நியமிக்கப்பட்ட கமல்கான், நிருவாகப் பொறுப்பை மேற்கொண்டார். யூசுப்பு இறந்தவுடனேயே கோவாவைப் போர்ச்சுகீசியர் கைப்பற்றிக் கொண்டனர். விசயநகர அரசர் கிருட்டிண தேவராயர் கி.பி. 1511-இல் இரெய்ச்சூர் இடைநிலத்தைப் பிடித்துக் கொண்டார். கமல்கான் அரியணையைக் கவர்ந்து கொள்ளத் திட்டமிடுகிறார் என்றறிந்த சுல்தானின் தாயார் கி.பி. 1511-இல் அவரைக் கொன்றுவிட்டு அசத்கான் என்ற பாரசீகப் பிரபுவைப் பாதுகாவலராக நியமித்தார். இவர் கடைசி வரையில் இசுமெயில் ஏதில்சாவுக்குப் பாதுகாவலராகவும் பின்னர் அமைச்சராகவும் இருந்து நம்பிக்கைக்குரியவராக விளங்கினார். கமல்கானின் உறவினர்கள் கிளர்ச்சி செய்தனர். அவர்களை நசுக்கிவிட்டு இசுமெயில் ஏதில்கானே நிருவாகத்தை நேரடியாக மேற்கொண்டார். கமல்கானால் அகற்றப்பட்டிருந்த சியா சமயம் மறுபடியும் அதிகார முறையிலமைந்த சமயமாகப் புகுத்தப்பட்டது. தக்காண இசுலாமியப் பிரபுக்கள் உயர்பதவியிலிருந்து அகற்றப்பட்டுப் புதியவர்கள் என்றழைக்கப்பட்ட அயற் பிரபுக்கள் மீண்டும் நியமிக்கப்பட்டனர்.

பாமினிச் சுல்தான் மகமூதின் பெயரில் உண்மையில் நிருவாகத்தை நடத்தி வந்தவரான அமீர் பாரீது (Barid), குல்பர்க்காவை மீட்க எண்ணி அதில் வெற்றியும் பெற்றார். அடுத்த ஆண்டிலேயே குல்பர்க்காவை ஏதில்சா மீட்டார். மேலும் பீடார்,

அகமது நகர், கோல்கொண்டா ஆகியவற்றின் கூட்டுத் தாக்குதலை முறியடித்துக் கி.பி. 1514-இல் குல்பர்க்காவை அவர் காத்தார். கிருட்டிண தேவராயர் ஒரிசா அரசருடன் போர் நடத்தியபோது இசுமெயில், இரெய்ச்சூரை மீட்டுக் கொண்டார். ஆனால் கிருட்டிண தேவராயர் கி.பி. 1520-இல் மீண்டும் படையெடுத்து வந்து இரெய்ச்சூர் இடைநிலத்தைக் கைப்பற்றியதோடு நில்லாமல் பீசப்பூரைக் கைப்பற்றிக் குல்பர்க்காவை அழித்தார். ஆயினும் கிருட்டிண தேவராயரின் மரணத்துக்குப் பின் கி.பி. 1529-இல் இரெய்ச்சூர் இடைநிலம் ஏதில்சாவால் மீண்டும் கைப்பற்றப்பட்டது. அகமது நகர், பீடார், பேரார் ஆகியவை பீசப்பூர் மீது கி.பி. 1525, 1531-இல் படையெடுத்துத் தோல்வியுற்றன. இசுமெயில் ஏதில் சா கி.பி. 1530-இல் பீடார் மீதும் கி.பி. 1534-இல் கோல்கொண்டா மீதும் படையெடுத்து வெற்றி பெற்றார். இவர் சமய வெறுப்புக் கொள்ளாமல் இந்துக்களையும் ஆதரித்தார். இசை கவிதை ஓவியம் ஆகியவற்றில் இவர் சிறந்து விளங்கினார். இர.ஆ.

**இசுமெயில் சா** என்பான் விசயநகரப் பேரரசர் கிருட்டிண தேவராயரின் சமகாலத்தவன். இவன் பீசப்பூர் அரசன். விசயநகரப் பேரரசுக்குச் சொந்தமான இரெய்ச்சூரைக் கைப்பற்றுவதற்காகக் கிருட்டிணதேவராயருடன் போரிட்டவன். விசயநகரப் பேரரசரின் பத்து இலட்சம் படைவீரர்கள் இப்போரில் ஈடுபட்டனர் என்று நூனிசு (Nuniz) என்பாரின் குறிப்புகள் கூறுகின்றன. இசுமெயில் சாவும் (Ismail Shah) பெரும்படையுடன் வந்தான். இருவருக்கும் கி.பி. 1520-ஆம் ஆண்டு மே மாதம் 19-ஆம் நாள் போர் மூண்டது. விசயநகரின் தாக்குதலைச் சமாளிக்க முடியாது பீசப்பூர் படைகள் பின்வாங்கின. எனினும் அவர்களிடமிருந்த துப்பாக்கிப் படைவீரர்கள் இராயரின் படைகளைச் சுட்டு வீழ்த்தினர். விசயநகரப் படைகள் பின்வாங்கின. கிருட்டிண தேவராயர் எஞ்சிய படைகளுடன் இரண்டாம் தாக்குதலை நடத்திப் பீசப்பூரைப் படுதோல்வியடையச் செய்தார். இசுமெயில் சா உயிர் தப்ப யானை மீதேறி ஓடினான். இசுமெயில் சாவின் அரண்மனைத் தூதன் ஆசத்கான் இலாரி (Asad Khan Lari) இராயருடன் உடன்படிக்கை செய்து கொள்ள அனுப்பப்பட்டான். உடன்படிக்கையின்படி இசுமெயில் சா அல்லது தாயார் கிருட்டிண தேவராயரைச் சந்திக்க வேண்டுமென முடிவாயிற்று. ஆனால், உடன்படிக்கையின்படி நடக்காததால் இராயர் மீண்டுமொரு முறை பீசப்பூரைத் தாக்கினார். குல்பர்க்காவிலிருந்த கோட்டை அழித்துத் தரைமட்டமாக்கப்பட்டது. இசுமெயில் சா சிறைப் படுத்தப்பட்டான்.

**இசுமெயில் நிசாம் சா இரண்டாம் (கி.பி. 1589-91)** அகமதுநகர் சுல்தானாகக் கி.பி. 1565-88-இல் அரசோச்சிய முதலாம் முர்தசாவை அவர் மகனான இரண்டாம் உசேன் கொன்று சுல்தானானார். இவரும் பத்தே மாதங்களில் அமைச்சர் மிர்சாகான் என்பவரால் கொல்லப்பட்டார். அடுத்து, உசேனின் சித்தப்பாவான பர்கானுதீனின் இரண்டாம் மகனான இசுமெயிலை, மிர்சாகான், இரண்டாம் இசுமெயில் நிசாம் சா என்ற பெயரில் கி.பி. 1589-இல் அரசராக்கினார். முர்தசாவின் காலத்தில் அரியணையைக் கைப்பற்றுவதற்காக அவர் தம்பி பர்கானுதீன் படையெடுத்து வந்து தோல்வியுற்று, மொகலாயப் பேரரசர் அக்பரது அவையில் அடைக்கலம் புகுந்திருந்தார்.

அமைச்சர் மிர்சாகானைச் சமால்கான் என்ற மற்றொரு பிரபு கொன்றுவிட்டு நிருவாகத்தை மேற்கொண்டார். இவர் தக்காண இசுலாமியப் பிரபுக்களுக்குத் தலைவர். அயல் இசுலாமியப் பிரபுக்களின் தலைவராயிருந்தவர் மிர்சா கான். எனவே அயல் இசுலாமியர் பலர் சமால்கானால் கொல்லப்பட்டனர். சமால்கான், மக்தவி என்ற ஒரு இசுலாமியப் பிரிவை நாட்டில் புகுத்த ஆணையிட்டார். இதனால் மேலும் பலர் அவருக்குப் பகைவராயினர். பீசப்பூர் சுல்தானாகிய இரண்டாம் ஏதில்சாவின் அமைச்சரான திலாவர்கான் சமால்கான்மீது படையெடுத்து வந்தார். பெரும்பொருளைப் பரிசாக அளித்துக் கி.பி. 1589-இல் சமால்கான் சமாதானம் செய்துகொண்டார். இவ்வாறு நிலவிய குழப்பங்களைக் கண்டு தமக்கு உதவிபுரியுமாறு பர்கானுதீன், பேரரசர் அக்பரை வேண்டிக் கொள்ளவே அவரும் ஒரு படையைக் கொடுத்து உதவினார். இந்த மொகலாயப் படை, கி.பி. 1591-ஏப்பிரலில் சமால்கானைத் தோற்கடித்துக் கொன்றது. இதன்பின்னர் அகமது நகரையும் பர்கானுதீன் கைப்பற்றித், தம் மகனைச் சிறையிலிட்டு, பர்கானுதீன் இரண்டாம் பர்கான் நிசாம் சா என்ற பெயரில் கி.பி. 1591-இல் முடிசூட்டிக் கொண்டார். மொகலாயரைத் தக்காண இசுலாமியர்கள் விரும்ப மாட்டார்கள் என்பதால் பர்கான் என்பவர் பீசப்பூர் மற்றும் காந்தேச அரசர்களின் உதவியோடு ஆட்சியைக் கைப்பற்றினர் எனவும் சிலர் தெரிவிக்கின்றனர். இர.ஆ.

**இசுமெயில் பேக்கு** என்பவர் கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டில் வட இந்தியாவில் வாழ்ந்த இசுலாமியப் படைத்தலைவர்களுள் ஒருவர். இவர் உறவினரான முகமதுபேக்கு, மொகலாயப் பேரரசர் நசப்கானின் (Najaf Khan) ஏற்பு மகன் அப்ராசுயாப் கான் (Afrasyab Khan) பட்டத்திற்கு வந்தபோது அவரை எதிர்த்துப் போர்க்கொடி உயர்த்தியவர். அவர்

ஆக்ராவின் ஆளுநராக இருந்தவர். மொகலாயப் பேரரசர் அப்ராசுயாப் கான் மகதாசி சிந்தியா என்னும் மராத்தியப் படைத்தலைவரின் உதவியை நாடி முகமது பேக்கை அடக்க முற்பட்டார். அப்போது நடைபெற்ற போரில் முகமது பேக்கு இறந்து விட்டார். அவர் உடன்பிறந்தாரின் மகன்தான் இசுமெயில் பேக்கு (Ismail Beg) ஆவார். இவர் செய்ப்பூர், சோத்பூர் இராசபுத்திர அரசர்களுடன் இணைந்து செயற்பட்டமையால் மீண்டும் தலையெடுத்து முன்னுக்கு வந்தார். இவருடைய கூட்டுப் படைகள் மகதாசி சிந்தியாவை விரட்டியடித்தன. இசுமெயில் பேக்குடன் குலாம் காதீர் (Ghulam Kadir) என்பாரும் சேர்ந்துகொண்டு ஆக்ராவை முற்றுகையிட்டார். இத்தருணத்தில் மகதாசி சிந்தியா ஆக்ராவைக் கைப்பற்ற முயன்று தோல்வியுற்றார். குலாம் காதிர் தம் சொந்த நிலப்பகுதியைத் தாக்கிய சீக்கியர்களிடமிருந்து அதனைக் காத்துக்கொள்ள ஓடவேண்டியவரானார். மகதாசி சிந்தியாவின் படைத்தலைவர்களுள் ஒருவரான டி பாய்கினே (De Boigne) என்னும் பிரெஞ்சுக்காரர் இசுமெயில் பேக்கைக் கி.பி. 1788-இல் பத்தேபூர் சிக்ரி (Fathpur Sikri) என்னும் இடத்தில் தோற்கடித்தார். பேக்கிற்கு உடலில் காயங்கள் ஏற்பட்டன.

இசுமெயில் பேக்கும் குலாம் காதிரும் மீண்டும் இணைந்து தில்லியைத் தாக்கினர். எனினும் மொகலாயப் படைகள் அவர்களைத் தில்லியில் நுழையவிடவில்லை. இருப்பினும் இவ்விருவரும் எப்படியோ நகருக்குள் நுழைந்து பேரரசரின் கருவூலத்தைக் கேட்டனர். பேரரசர் மறுக்கவே அவர் பதவியிலிருந்து விலக்கப்பட்டு, கசையால் அடிக்கப்பெற்றுக் குலாம் காதரால் குருடாக்கப்பட்டார். இவர்களின் படைவீரர்கள் தில்லியைச் சூறையாடினர். குலாம் காதர் பெண்களை மானக் குறைவு படுத்தினார். இத்தகைய கொடுமைகளைக் கண்ணுற்ற இசுமெயில் பேக்கு, குலாம் காதரை வெறுத்தார். தம்மைக் காப்பாற்றிக் கொள்ள இசுமெயில் பேக்குக் கி.பி. 1788-இல் மகதாசி சிந்தியாவின் உதவியை நாடினார். உதவிக்கு வந்த மகதாசியின் படைகளைக் கண்ட குலாம் காதர் அஞ்சிப் பின்வாங்கித் தப்பியோடினார். அவர் பிடிபட்டு, மகதாசியினால் மானக்குறைவு படுத்தப்பட்டுச் சித்திரவதைக் குள்ளாகிக் கி.பி. 1789-இல் கொல்லப்பட்டார். மகதாசி மீண்டும் தில்லியைக் கைப்பற்றிக் கொண்டார். இசுமெயில் பேக்கு, இராசபுத்திரர்களுடன் சேர்ந்துகொண்டார்.

**இசுமே பிரபு ஏசுடிங்சு இலைனல் (கி.பி. 1887-1965)** என்பார் கி.பி. 1887-ஆம் ஆண்டு இந்தியாவில் நைனிடால் என்னும் நகரில் பிறந்தார். இவர் சர் இசுடான்லி இசுமே என்பவரின் இரண்டாம் மகன். இவர் இங்கிலாந்திலுள்ள சார்ட்டர் அவுசு (Charter House), சாண்டகட்டு (Sandhust) என்னும் நகரங்களில் கல்வி கற்றார். படிக்கும் போது கல்வியிலும் இராணுவப் பயிற்சியிலும் இவர் திறமை மிக்கவராகக் காணப்பட்டார். இங்கிலாந்தில் இவர் 1905-ஆம் ஆண்டு இராணுவத் தலைவராகச் சேர்ந்தார். பின்னர் 1907-ஆம் ஆண்டு இந்திய இராணுவத்திலுள்ள 21-ஆம் குதிரைப் படையில் சேர்ந்தார். இந்தியாவின் வடமேற்கு எல்லைப் பகுதியில், இமயத்தின் அடிவாரத்தில் 1908-இல் இசுமே பிரபு (Ismay, Hastings Lionel) சிறப்பாகப் பணியாற்றினார்.



இசுமே பிரபு

இவருடைய திறமையை நன்குணர்ந்த ஆங்கிலேயர்கள் இவரைச் சோமாலிலாந்துக்கு (Somaliland) அனுப்பினார்கள். அங்கு 1914 முதல் 1920 வரை இராணுவத்தில் பணி புரிந்தார். இராணுவ உதவிச் செயலராக 1926 முதல் 1940 வரை பணியாற்றினார். இப்பதவிகளில் திறமையாகவும் செம்மையாகவும் பணியாற்றியதால் இவர் இராணுவத் தளபதியாக 1940-இல் பதவி உயர்த்தப்பட்டார். இராணுவத்திலிருந்து ஓய்வுபெற்றது முதல் பிரபுவாக நியமிக்கப்பட்டார். பின்னர் இந்தியாவுக்குத் திரும்பி வந்து இறுதி அரசப் பேராளரான மவுண்டுபாட்டனின் நிருவாகத்தில் தலைமை அதிகாரியாகச் செயலாற்றினார். இந்தியாவின் விடுதலைக்குப்பின் காமன்வெல்த்து நாடுகளின் தொடர்புச் செயலராக நான்கு ஆண்டுகள் தொண்டாற்றினார். வட அட்லாண்டிக்குக் கூட்டு ஒப்பந்த அமைப்பு (NATO) நாடுகளின் பொதுச் செயலராகவும் இவர் பணியாற்றினார். இவ்வாறு பல உயர்ந்த பதவிகளைப் பெற்றிருந்த இசுமே பிரபு 1957-இல் தம்முடைய பொதுப்பணியிலிருந்து ஓய்வுபெற்றார். பல உயர் பதவிகளைப் பெற்றுத் திறமையுடன் நடத்தி இராணுவத்தில் சிறந்த சேவைகளைச் செய்த இசுமே பிரபு, 1965-இல் இங்கிலாந்திலுள்ள பிராடுவே என்ற இடத்தில் காலமானார். பொ.க.

*இசுமோ* சிறந்த சப்பானிய நாடகாசிரியருள் ஒருவர். இவர் கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். இவர் பெயர் தகேடா இசுமோ (Takeda Izumo) என்பதாகும். இவர் கி.பி. 1748-ஆம் ஆண்டில் 'கனதேகோன் சியூசின்குரா' (Kanadehon Chushingura) என்னும் பெயரில் ஒரு சிறந்த நாடகம் இயற்றியுள்ளார். இது பொம்மலாட்ட நாடகத்தில் புகழ் வாய்ந்த ஒன்றாகத் திகழ்கிறது. பின்னர் இது, கபுகி (Kabuki) நடிகர்களுக்குத் தக்க வாறு மாற்றி அமைக்கப்பட்டது. இவர் இந்த நாடகத்தைத் தம் கூட்டாளிகளுடன் சேர்ந்து இயற்றினார். இவர்கள் சப்பானிய நாடக மேடையில் மிக்க செல்வாக்குப் பெற்ற பல நாடகங்கள் தோன்றுவதற்குப் பொறுப்பாளர்களாகத் திகழ்ந்தனர். இசுமோ கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் விளங்கிய இராச தந்திரி சுகவாராவின் வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு ஒரு நாடகமும் இயற்றியுள்ளார். இவருடைய புகழ்மிக்க படைப்புகளுள் இதுவும் ஒன்றாகும். இவர் கி.பி. 1756-ஆம் ஆண்டில் காலமானார்.

*இசுரவேல்* பழைய ஏற்பாட்டில் இசுரேல் நாட்டு மக்களின் மூன்றாம் குலத்தலைவராவார். இவர் ஆபிரகாமின் பேரரும், ஐசாக்கு, இரெபெக்கா என்பவர்களின் மகனுமாவார். இவருக்கு யாகோபு (Jacob) என்ற பெயருமுண்டு. யாகோபும் ஈசா (Esau) வும் இரட்டையர்கள்; யாகோபு இளையவர். இரெபெக்கா கருவுற்றிருந்த காலத்தில் மூத்த மகனின் பிறப்புரிமைகளையும், தந்தையாரின் வாழ்த்தினையும் பெற்றுக் கொடுத்தாள். ஈசாவின் கோபத்திற்கு அஞ்சிய யாகோபு தம் தாய்மாமனிடம் ஓடிப்போனார்.

யாகோபு எனப்படும் இசுரவேலுக்கு 13 குழந்தைகள்: அவர்களுள் பதின்மரே இசுரேல் இனத்தை உருவாக்கியவர்கள்.

*இசுரேல்* மத்தியதரைக் கடலின் கிழக்குக் கரையில் அமைந்துள்ளதொரு சிறுநாடு. இந்நாடு 1948 ஆம் ஆண்டில் உருவாக்கப்பட்டது. உலகில் பல்வேறு நாடுகளில் வாழும் யூதர்களின் தாயகமாக இசுரேல் கருதப்படுகிறது. யூதர்களைத் தவிர இந் நாட்டில் வாழும் ஏனையோர் அராபியர்கள்.

எருசலம், இசுரேல் (Israel) நாட்டின் தலைநகரம். தெல் அவிவ் (Tel-Aviv) இந்நாட்டின் பெருநகரமும் துறைமுகமுமாகும்.

விவிலிய நூலில் புனித நிலமெனப் போற்றப் படும் பாலத்தீனத்தின் பெரும் பகுதிகளைக் கொண்டு இசுரேல் உருவாக்கப்பட்டுள்ளது. பண்டைக் காலத்தில் யூதர்கள் தமக்கென்று தனித்ததொரு நாட்டினைப் பாலத்தீனத்தில் உருவாக்கினர். ஆனால், பாலத்தீனத்தின்மீது பல்வேறு தாக்குதல்கள் நடைபெற்றன. வெற்றிவீரர்கள் பலர் அதை வீழ்த்தினார்கள். யூதர்களுள் பெரும்பாலோர் கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் பாலத்தீனத்தை விட்டு வெளியேறினர். பின்னர்ப் பாலத்தீனம் அராபியரின் கைவசமாயிற்று. துருக்கியர்கள் அராபியரிடமிருந்து அதைக் கைப்பற்றினர். எனினும் யூதர்கள் தொடர்ந்து அங்கு வாழ்ந்து வந்தனர். முதல் உலகப் பெரும் போரின்போது 1918-ஆம் ஆண்டில் பாலத்தீனம் பிரிட்டனின் கட்டுப்பாட்டின் கீழ் வந்தது.




இசுரேல்

பிறநாடுகளில் வாழ்ந்த யூதர்கள் சமய ஒறுத்தலுக்கு ஆளானார்கள். அவர்கள் அக்கொடுமைகளிலிருந்து தப்புவதற்கு ஒரே வழி, பாலத்தீனத்தில் தமக்கொரு நாட்டை உண்டாக்குவதுதான் என்ற முடிவுக்கு வந்தனர். அத்தகையதொரு நாட்டை உருவாக்கும் நம்பிக்கையில் கி.பி. 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வெளிநாடுகளில் குடியேறியிருந்த யூதர்கள் அங்கிருந்து பாலத்தீனத்திற்கு வரத் தொடங்கினர். அவர்கள் சதுப்பு நிலங்களைத் திருத்தி உழுநிலமாக்கினர். பாலை நிலங்கள் பசுஞ்சோலைகளாயின; கிணறுகள் தோண்டப்பட்டன; காடுகள் வளர்க்கப்பட்டன. பண்ணைகள் தோன்றியதால்

பாழ் நிலங்கள் வளமான பகுதிகளாயின. துணிச்சல் பெற்ற யூதர்கள் 1948-இல் இசுரேல் நாட்டைச் சுதந்திர நாடென அறிவித்தனர். விடுதலை பெற்ற பின்னர், அவர்கள் அந்நாட்டை மேலும் வளப்படுத்தினர். அவர்கள் தொழிற்சாலைகள், பள்ளிகள், நகரங்கள் போன்றவற்றை அமைத்துச் செய்பொருள்களின் மூலம் தம் வருவாயைப் பெருமளவில் பெருக்கினர். மேற்காசியாவில் இசுரேல் மிக முற்போக்கான நாடு என்று சொல்லுமளவிற்கு அதனைச் செழுமையுடைய தாக்கினர்.

சுதந்திரமும் செழுமையும் இசுரேலுக்கு அமைதியையும் பாதுகாப்பினையும் அளிக்கவில்லை. இசுரேல் நாட்டின் எல்லையிலுள்ள அராபிய நாடுகள், இசுரேல் நாடு உருவாக்கப்பட்டதை வன்மையாகக் கண்டித்தன; இன்றும் கண்டிக்கின்றன. ஏனெனில் பாலத்தீனம் முழுதும் அராபியர்களின் நாடென்பது அவர்கள் கருத்து. யூதர்களின் நாடென இசுரேலை அறிவித்த மறுநாளே அதன்மீது அராபியர்கள் படையெடுத்துப் படுதோல்வியுற்றனர். அராபியர்கள் இன்றும் இசுரேலை ஏற்றுக்கொள்ளவில்லை. அதை அழித்துவிட உறுதி கொண்டுள்ளனர். மீண்டும் அராபிய-இசுரேலியப் போர்கள் 1956, 1967, 1973-ஆம் ஆண்டுகளில் மூண்டன. இசுரேல், 1967-ஆம் ஆண்டு நிகழ்ந்த போரின்போது கிழக்கு எருசலத்தைக் கைப்பற்றிக் கொண்டது. அப்பகுதி யூதர்கள், கிறித்தவர்கள், முசுலிம்கள் போன்றோரின் தொன்மையான புனிதத் தலங்கள் இருக்கும் இடமாகும். இசுரேலிய எகிப்து உறவுகள் 1977-ஆம் ஆண்டில் நன்முறையில் முன்னேற்றமடைந்தன.

இசுரேல் நாட்டில் மக்களாட்சிக் குடியரசு நிலவுகிறது. மக்களால் தேர்ந்தெடுக்கப் பெற்ற நாடாளுமன்றத்தை நெசத்து (Knesset) என்பர்.

மக்கள் தொகையில் 85 விழுக்காட்டினர் யூதர்கள்; எஞ்சியோர் கிறித்தவம், திருசசு (Druses), பகாய் (Bahais) எனப்படும் பிற சமயத்தவர்கள். இசுரேல் நாட்டில் சமயப் பொறை நடைமுறையிலுள்ளது.

இசுரேல் நாட்டில் ஈபுரு மொழியும் அராபிய மொழியும் ஆட்சி மொழிகள். இரு மொழிகளும் ஒத்த நிலையில் கருதப்படுகின்றன.

அரசின் தொடக்கப்பள்ளிகளில் கல்வி இலவசம்: உயர்நிலைப்பள்ளிகளில் குறைந்த அளவு கட்டணம் வசூலிக்கிறார்கள். இசுரேலில் பல்கலைக் கழகங்களும் கல்லூரிகளும் உள்ளன. எருசலத்தில் அமைந்துள்ள ஈபுருப் பல்கலைக்கழகம் பெரியது. அப்பா என்னும் இடத்தில் இசுரேலியத் தொழில்நுட்ப நிறுவனம் பணியாற்றுகிறது.

இராணுவத்தில் ஆண்களும் மணமாகாப் பெண்களும் கட்டாய இராணுவப்பணி செய்ய வேண்டும். தரைப்படை, கப்பற்படை, விமானப்படை ஆகிய அனைத்திலும் 18 வயதைக் கடந்த ஆண் பெண் இருபாலாரும் பயிற்சி பெறுகிறார்கள். படையில் 70,000 ஆண் பெண் படைவீரர்களும், 2,50,000 சேமப் படை வீரர்களும் உள்ளனர்.

பரப்பு: இசுரேல் நாட்டின் பரப்பளவு 20,770 ச.கி.மீ ஆகும்.



அய்பா துறைமுக நகர்

மக்கள்தொகை: இசுரேல் நாட்டின் மக்கள் தொகை 39,96,000 ஆகும் (1981).

இலட்சம் பேர்களுக்கு மேல் மக்கள்தொகை கொண்ட இசுரேலிய நகரங்கள் ஆறு. அவை தெல் அவிவ்-யாபோ (Tel Aviv-Yafo), எருசலம் (Jeru selam), அய்பா (Haifa). இரமத் கான் (Ramatgan), பட்யாம் (Batyam), ஒலோன் (Holon) என்பனவாம். இசுரேல் நாட்டின் மூன்றிலொரு பங்கு மக்கள் இந்நகரங்களில் வாழ்கிறார்கள்.

இயற்கைப் பிரிவுகள்: யூதர்கள் 1967-இல் அராபியரிடமிருந்து கைப்பற்றிய நிலங்களையும் சேர்த்து இசுரேலை ஐந்து சிறப்புப் பகுதிகளாகப் பிரிக்கலாம். அவை கடற்கரைச் சமவெளிகள், யூடோ-கலிலிய மேட்டு நிலங்கள், பிளவுப் பள்ளத்தாக்கு, நெகிவ்-சைனாய் பாலைநிலம், சைனாய் மேல் நிலங்கள் என்பனவாம்.

கடற்கரைச் சமவெளிகள், வட தென் கடற்கரைகளைக் கொண்டு அய்பாவில் சந்திக்கின்றன. பெரும்பாலான இசுரேலியர்கள் இப்பகுதியில்தான் வாழ்கிறார்கள். ஏனெனில் இப்பகுதியில்தான் தொழிற்சாலைகளும் வேளாண்மையும் நடைபெறுகின்றன. குசான் ஆறு இப்பகுதியில் பாய்கிறது.

சூடோ-கலிலிய மேட்டுநிலப்பகுதியில் கலிலி, கோலான் மேட்டு நிலங்கள், சூரியக் குன்றுகள் ஆகியவை அடங்கும். ஏசுநாதர் கலிலியில்தான் தம் வாழ்நாளில் பெரும் பகுதியைக் கழித்தார். இப்போது இங்குப் பெரும்பாலான அராபியர்கள் வாழ்கிறார்கள். நசரத்து அராபியர்களின் பெரும் மையமாகும். இப்பகுதியில்தான் 1208 மீட்டர் உயரமுள்ள மெரோன் மலையுச்சியுள்ளது. கலிலிக்குக் கிழக்கில் உள்ள கோலான் மேட்டு நிலங்களை இசுரேல் 1967-இல் சிரியாவிடமிருந்து கைப்பற்றியது. தலைநகரான எருசலம், சூரியக் குன்றுப் பகுதியில் அமைந்துள்ளது. இதுவும் 1967-இல் சோர்டானிலிருந்து பிடிக்கப்பட்ட இடமாகும்.

பிளவுப் பள்ளத்தாக்கு இசுரேலின் வடவெல்லையிலிருந்து சைனாய் தீபகற்பத்தின் தெற்குக் கோடி வரை நீண்டுள்ளது. இப்பள்ளத்தாக்கின் விளிம்புகள் செங்குத்தானவை. இப்பகுதியில்தான் இறந்த கடல் (Dead Sea) உள்ளது. அது உப்புநீர் ஏரியாகும். கடல் மட்டத்திலிருந்து 396 மீட்டர் தாழ்வாக உள்ளது. இப்பகுதியே உலகின் மிகத் தாழ்ந்த பகுதியாகும். ஒரு சில வளமான பகுதிகளைக் கொண்ட இப்பள்ளத்தாக்கில் சோர்டான் ஆறு பாய்கிறது.

நெகிவ்-சைனாய் பாலைநிலம் இசுரேலின் மிக வறண்ட பகுதியாகும். இங்கு மழை குறைவு; மேய்ச்சல் தரைகள் உள்ளன. நெகிவ் பகுதியில் நீர்ப்பாசன வசதியமைப்பு உள்ளபடியால் வேளாண்மை செய்கிறார்கள்.

சைனாய் மேட்டுநிலப்பகுதி கருங்கல் பாறைகளைக் கொண்ட மலைப்பகுதி. இதை இசுரேல் 1967-இல் எகிப்திடமிருந்து கைப்பற்றியது. இசுரேல் 1975-இலும் 1979-இலும் தம் படைகளை இப்பகுதியிலிருந்து விலக்கிக் கொண்டது.

தட்பவெப்பநிலை: இசுரேல் சூடானதும் வறண்டதுமான கோடைக்காலத்தையும் குளிர்ந்த மழைக் காலத்தையும் சொண்டுள்ளது. தட்பவெப்பநிலை உயரத்திற்குத் தக்கபடி மாறுபடுவதால் ஒரே சீராக இருப்பதில்லை.

மழை, குளிர் காலத்தில் பெய்கிறது. குறைந்த அளவு 3 செண்டி மீட்டரும், உயர்ந்த அளவு 100 செண்டி மீட்டரும் மழையளவுகளாம்.

பொருளாதாரம்: இயற்கைச் செல்வங்கள் மிகக் குறைவாக இருந்தாலும், இசுரேல் ஆண்டிற்கு 10 விழுக்காடு என்ற அளவில் விரைந்து முன்னேறியுள்ளது. கனிம இருப்புகளும் நீர் வரத்தும் போதுமானதாக இல்லை. பெரும்பாலான பகுதி பாலைநிலம். பெரும்பாலான கருவிகளையும், கச்சாப்பொருள்களையும் இசுரேல் இறக்குமதி செய்கிறது. அதன் விளைவாக ஏற்றுமதியை விட இங்கு இறக்குமதிப் பொருள்கள் மிகுதி. நாட்டின் வருவாய் சுற்றுலாப் பயணிகளாலும், பிறநாடுகள் கொடுக்கும் மானியங்கள், கடன்தொகை ஆகியவை போன்றவற்றாலும் பெருகியுள்ளது. நாட்டின் வாணிகத்தில் பாதியளவு தனியாருக்குச் சொந்தமானது; கால்பங்கு அரசுக்குச் சொந்தமானது. தொழிற்சங்கங்களின் ஒன்றியமான இசுட்டாடுருட்டு (Histadrut) என்பதும், பண்ணைகள் தொழிற்சாலைகள் போன்றவையும் எஞ்சியுள்ள கால் பகுதி வாணிகத்தை நடத்துகின்றன.

தெல்-அவிவைச் சுற்றி இசுரேலியரின் சிறந்த கைப்பொருள் மையங்களைக் காணலாம். இசுரேலின் பாதி தொழிற்சாலைகள் இங்குள்ளன. உணவைப் பதமாக்கும் தொழில் இங்கு நடைபெறும் சிறப்புத் தொழிலாகும். நூற்பாலைகளும் இங்கு மிகுதி.

வேளாண்மை: இசுரேலிய உழவர்கள் நாட்டிற்குத் தேவையான உணவுப் பொருளில் முக்கால் பங்கை உற்பத்தி செய்கிறார்கள். ஆரஞ்சு எலுமிச்சை, முட்டை, பால், கோழி ஆகியன பண்ணை உற்பத்திப் பொருள்கள். இங்குக் கூட்டுறவுப் பண்ணை முறையில் வேளாண்மை நடைபெறுவது குறிப்பிடத்தக்கது.

சுரங்கப் பொருள்கள்: இரசாயன உப்பு, பொட்டாசு, புரோமைன் போன்றவை சுரங்கப் பொருள்கள். பாசுபேட்டுகள், களிமண், சிப்சம், மணல் போன்றவை பிற பொருள்கள்.

போக்குவரத்து: இசுரேல் நாட்டில் 3860 கிலோ மீட்டர் நீளமுள்ள சாலைகள் உள்ளன. அரசாங்க இருப்புப்பாதைத் தொடர்கள் பெருநகரங்களை இணைக்கின்றன. வான்வழித் தொடர்பு 17 நாடுகளுடன் உண்டு. பெரும் விமானத்தளம் இலாடு (Lod) என்பதாகும். அய்பா பெருந்துறைமுகம்.

இச்சிறுநாட்டில் 25 செய்தித்தாள்கள் அச்சாகின்றன.

வரலாறு: இசுரேல், 1948-ஆம் ஆண்டு மே மாதம் 14 ஆம் நாள் தேவிடு பென்குரியன் (David Ben Gurion) என்பாரது தலைமையில் உருவாக்கப்பட்டது. அதுவரை இந்நாடு இங்கிலாந்தின் கட்டுப்பாட்டின்



எருசலத்திலுள்ள இசுரேல் அருங்காட்சியகம்

கிழிருந்தது. அடுத்த நாளே இந்நாட்டினை ஐந்து அராபிய நாடுகள் தாக்கின.

எகிப்து, ஈராக்கு, இலெபனான், சிரியா, சோர்டான் ஆகிய ஐந்து நாடுகளும் 1948 மே 15-ஆம் நாள் இசுரேலின் மீது படையெடுத்தன. இதை முதல் அராபிய-இசுரேல் போர் என்பர். எண்ணிக்கையிலும், படைத் தளவாடங்களிலும் மிகக் குறைவாக இருந்த போதிலும், இசுரேலியர்கள் பகைவர்களைத் தடுத்து நிறுத்தினர். அராபியர்கள் 1948-ஆம் ஆண்டு இறுதியில் தோற்றனர். ஐ.நா. 1949-இல் பல போர் நிறுத்த உடன்படிக்கைகளை ஏற்பாடு செய்தது; இறுதியில் உடன்படிக்கை கையெழுத்தாயிற்று. எனினும் இசுரேல் உருவாக்கப்பட்டதை அராபிய நாடுகள் ஏற்றுக்கொள்ளவேயில்லை.

இசுரேலில் 1949-இல் முதல் தேர்தல் நடைபெற்றது. சேய்ம் விசுமன் என்பாரைக் குடியரசுத் தலைவராகவும், பென் குரியனைத் தலைமை அமைச்சராகவும் நாடாளுமன்றம் அமர்த்தியது.

**இரண்டாம் அராபிய-இசுலாமியப்போர்:** எகிப்து, காசாப் பகுதியிலிருந்து இசுரேலின் மேல் 1955-ஆம் ஆண்டளவில் படையெடுத்தது. யூதர்களும் அதன் மீது படையெடுத்தனர். சூயசு கால்வாயைப் பயன் படுத்துவதிலும் இருநாடுகளுக்குமிடையே சிக்கல்கள் இருந்தன. எகிப்து சூயசுக்கால்வாயை 1956 சூலை மாதத்தில், அதன் உரிமையாளர்களான இங்கிலாந்து, பிரான்சு ஆகிய நாடுகளிடமிருந்து பிடித்துக் கொண்டது.

இசுரேல் 1956-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 29-ஆம் நாள், எகிப்தின்மீது படையெடுத்தது. இரண்டு நாட்களுக்குப் பின்னர் இங்கிலாந்தும் பிரான்சும் எகிப்தைத் தாக்க இசுரேலுடன் இணைந்து கொண்டன. இசுரேலியர் 1956 நவம்பர் மாதம் 5-ஆம் நாள் காசாப்பகுதியையும், சைனாய் பகுதியையும் பிடித்துக் கொண்டனர். இங்கிலாந்து பிரெஞ்சுப் படைகள், சூயசுக்கால்வாயின் வடக்கு நுழைவாயிலைப் பிடித்துக்கொண்டன. ஐ.நா. படைவீரர்கள் காசாப்பகுதியையும் சைனாய் தீபகற்பத்தின் பகுதிகளையும் பாதுகாத்தனர். அக்காபா வளைகுடாவில் வந்து இறங்கிய ஐ.நா. படைகள், இசுரேலியக் கப்பல்களுக்குக் கால்வாயில் போய்வரப் பாதுகாப்பளித்தன. இதனிடையில் இசுரேலின் பொருளாதாரம் பெருவளர்ச்சியுற்றது.

**ஆறுநாள் போர்:** ஐ.நா. படைவீரர்கள், 1956-ஆம்

ஆண்டுப் போருக்குப் பின்னர் இசுரேலிய எகிப்திய அத்து மீறல்களைத் தடுத்து நிறுத்தினர். ஆனால் அராபியப் படைகள் சிரியாவிலிருந்தும் சோர்டானிலிருந்தும் இசுரேலைத் தாக்கின. இசுரேலும் அந்நாடுகளைத் திருப்பித் தாக்கியது. இத்தாக்குதல்கள் 1965-இலிருந்து மிகுதியாக உயர்ந்தன.

இசுரேலிய விமானங்கள், 1967 சூன் 5 ஆம் நாள் எகிப்து, சோர்டான், சிரியா நாட்டு விமானத் தளங்களைத் தாக்கின. இசுரேலியர்கள் அராபிய விமானப் படைகளைப் பெரும்பாலும் அழித்துவிட்டனர். பின்னர் அராபியத் தரைப்படைகளையும் தோற்கடித்தனர். இசுரேலியப் படைகள் சூன் 8 ஆம் நாள் காசாப் பகுதி, சைனாய் தீபகற்பம், சோர்டான் ஆற்றுக்கு மேற்குப் புறத்திலுள்ள சோர்டானியப் பகுதிகள், எருசலத்தின் பாதிப்பகுதி ஆகியவற்றைக் கைப்பற்றிக் கொண்டன. இசுரேல் சூன் 10-ஆம் நாள் சிரியாவின் கோலான் குன்றுகளையும் கைப்பற்றியது. இதை ஆறுநாள் போர் என்பர். போர் முடிவுற்றது.

இப்போர் முடிந்த நிலையில் இசுரேல், தன் நாட்டின் பரப்பளவைப் போல் மும்மடங்கு நிலப் பரப்பை அராபிய நாடுகளிடமிருந்து கைப்பற்றியது. சோர்டானைச் சார்ந்த எருசலம் நகரின் பாதிப்பகுதியை 1967 சூன் மாதத்தில் இசுரேல் தன் பகுதியாக்கிக் கொண்டது.

இசுரேலின் பிரதம மந்திரியான எசுக்கோல் (Eshkol) என்பார் 1969-இல் இறந்து போனார். அவரை அடுத்துத் திருமதி கோல்டா மேயர் என்னும் அம்மையார் பிரதம மந்திரியானார். இசுரேலிய-அராபிய எல்லைகளில் தொடர்ந்து தாக்குதல்கள் இருதரப்பிலும் நீடித்தன. இசுரேல், எகிப்து, சோர்டான் ஆகிய நாடுகள் 1970-இல் போர் நிறுத்தத்தை ஏற்றுக் கொண்டன.

எகிப்திய-சிரியாப் படைகள் 1973 அக்டோபரில் இசுரேலைத் தாக்கின. மீண்டும் அராபிய-இசுரேல் போர் பெருமளவில் மூண்டது. சைனாய் தீபகற்பத்திலும் கோலான் குன்றுகளிலும் கடும் சண்டைகள் நடந்தன. நவம்பரில் ஏற்பட்ட போர் நிறுத்த உடன்பாட்டால் எகிப்துடன் போர் நின்றது. இசுரேலும் எகிப்தும் 1974 சனவரியில் சைனாய் பகுதியிலும் தத்தம் படைகளைத் திரும்பப் பெற்றுக் கொள்ள இசைந்தன. இசுரேலுக்கும் சிரியாவுக்குமிடையே 1974 மே மாதம் முழுதும் தொடர்ந்து போர் நீடித்தது.

இசுரேல் அரசு நடத்திய போர் முறையைப் பல இசுரேலியர்கள் 1973-ஆம்ஆண்டு, குறைகூறிக் கண்டித்தனர். அதன் விளைவாக 1974-இல் தலைமை அமைச்சர் கோல்டா மேயர் பதவியைத் துறந்தார். இட்சக் கிராபின் என்பார் அந்த அம்மையாரை அடுத்துத் தலைமை அமைச்சரானார். எகிப்தும் இசுரேலும் 1975-இல் புதியதொரு ஒப்பந்தத்தைச் செய்து கொண்டன. அதன்படி இசுரேலியப் படைகள் மேற்குச் சைனாயை விட்டு நீங்கின. தொழிலாளர் கட்சி 1977-ஆம் ஆண்டு வரை தொடர்ந்து ஆட்சியில் இருந்தது. ஆனால் 1977-இல் இலிக்குடுக் (Likud) கட்சி தேர்தலில் வெற்றி பெற்று ஆட்சியைக் கைப்பற்றியது. மெனசிம் பெசின் என்பார் தலைமை அமைச்சரானார்.

அராபியர்களின் எதிர்ப்பு 1960-இலிருந்து பாலத்தீன விடுதலை இயக்கத்தின் மூலம் வந்தது. இவ்வியக்க உறுப்பினர்களால் அமைந்த கொரில்லாக் குழுவொன்று, 1978-இல் இசுரேலியக் குடிமக்கள் பலரைக் கொன்றது. இசுரேலியர் அதனை முறியடிக்கத் தென் இலெபனான் மீது தாக்குதல் நடத்தினர். அங்குத்தான் கொரில்லாக்களின் தளங்கள் இருந்தன.

இசுரேலியத் தலைமை அமைச்சர் பெகினும், எகிப்திய அதிபர் அன்வர் அல் சதாத்தும் 1977 ஆம் ஆண்டின் இறுதியில் இசுரேலிலும், எகிப்திலும் சந்தித்துத் தமக்கிடையேயிருந்த சிக்கல்களைத் தீர்த்துக் கொள்ள வழிவகைகளை ஆய்ந்தனர். அமெரிக்க ஐக்கிய நாட்டின் தலைவர் சிம்மி கார்ட்டரின் கருத்தினை ஏற்று, 1978 செப்டம்பர் மாதத்தில், பெகின், சதார், சிம்மி கார்ட்டர் (Jimmy Carter) ஆகிய மூவரும் அமெரிக்காவில் சந்தித்துப் பேசினர். அப்பேச்சினால் நல்லதோர் உடன்பாடு ஏற்பட்டது. அதன்படி ஏறத்தாழ ஐந்தாண்டுகளில் இசுரேலியப் படைகள் சைனாய், காசாப்பகுதி, சோர்டான் ஆற்றுக்கு மேற்கிலிருந்த சோர்டானியப் பகுதி போன்றவற்றிலிருந்து படிப்படியாக விலகுவதென முடிவாயிற்று. மற்றும் இசுரேலுக்கும் எகிப்துக்குமிடையே அமைதி உடன்படிக்கை யொன்றும் உருவாகியது. இவ்வமைதி உடன்படிக்கை 1979-இல் கையெழுத்தாயிற்று. அதே ஆண்டில் இசுரேலியப் படைகள், சைனாய் தீபகற்பத்தின் மேற்குப் பகுதி முழுவதிலிருந்து திரும்பிச் செல்ல வேண்டுமென முடிவாயிற்று. அதன்படி 1980 சனவரி 26-ஆம் நாள் ஒரு பகுதிப் படையும், 1982 ஏப்பிரல் 26-ஆம் நாள் எஞ்சியிருந்த படையும் திரும்பிச் சென்றன.

**இசுரேல் அரசாங்கமும், சட்டமும்:** மேற்காசியாவில் நடுத்தரைக் கடலின் கிழக்குக் கடற்கரையில் 8019 சதுர கல் பரப்பளவுள்ள இசுரேல் என்னும் மிகச் சிறிய நாடு (Israel), ஐக்கிய அமெரிக்க அரசாங்கத்தின் உதவியோடு யூதமக்களால் (The Jews) 1948-ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் நிறுவப்பட்டது. இதனை நாற்புறமும் சூழ்ந்

துள்ள அரபிய நாடுகள் இதனை நீக்கிவிட்டு, முழுவதையும் அராபிய பாலசுதீனக் குடியரசாக ஏற்படுத்தும் நோக்கத்தோடு முயற்சி செய்ததனால், இசுரேலுக்கும் அண்டைய அரபுநாடுகளுக்கும் 1948, 1958, 1967, 1973-ஆம் ஆண்டுகளில் பெரும் போர்கள் நடைபெற்றன; இப்போர்களில் இசுரேல் வெற்றி பெற்றது. எருசலேம் பட்டணத்தின் பெரும் பகுதி (Jerusalem) இசுரேல் வசமாயிற்று. இப்போது இதுவே இந்நாட்டின் தலைநகரமாகும். இந்த நாடு பரப்பில் மற்றைய அண்டை நாடுகளை விடச் சிறியதாக இருப்பதாலும், இதனுடைய செல்வ வளங்கள் வளர்ந்து வரும் இந்நாட்டு மக்களுடைய வாழ்க்கைத் தரத்துக்குப் போதுமானதாக இல்லாததாலும், இதனைச் சூழ்ந்துள்ள அராபிய நாடுகளெல்லாம் இதற்கு எவ்வகைப் பொருளாதார உதவியும் செய்யாமல் இதனை ஒதுக்கி வைத்துப் பகை நாடாகக் கருதுவதாலும், இந்நாட்டின் யூதமக்கள் தமது கூர்த்த அறிவின் திறத்தாலும் கடும் உழைப்பினாலும் இந்நாட்டில் வேளாண்மையும் தொழிலும் கணிசமான அளவுக்கு வளரச் செய்துள்ளனர். வேளாண்மையில் எலுமிச்சை மரங்கள் பயிரிடுதல் (Citrus Fruits), முட்டை, பால், உற்பத்தி, கோழி வளர்த்தல் முதலியவையும், தொழில்களில் இரசாயனப் பொருள்கள் செய்தல், நெசவு, மணிகள் செய்தல் ( Diamonds), உணவு பதப்படுத்துதல், வண்டி வாகனக் கருவிகள் செய்தல், மரப் பொருள்கள் செய்தல், சுரங்கங்களிலிருந்து இரசாயன உப்புகளும் செம்பும் பாசுபேட்டும் (Phosphotes), எடுத்தல் ஆகியவையும் முக்கியமானவையாகும். இந்நாட்டில் மக்கள்-தொகை பெருகியும் செல்வவளங்கள் சுருங்கியும் இருப்பதால், பொதுவுடைமை முறையான கூட்டுப் பண்ணை முறை (Collective Farming System or Kibbatsim) பின்பற்றப்படுகிறது. இந்நாட்டில் சமூக அமைப்பும் அரசியலமைப்பும், இதனுடைய இந்தச் சமூக, பொருளாதாரச் சூழ்நிலைகளினாலேயே உருவாக்கப்பட்டுள்ளன. மேலும் இந்நாட்டின் சமூக அமைப்பும் சமயநெறிமுறைகளும் பண்டைக்கால வரலாறும், இந்நாட்டின் அரசாங்க அமைப்பையும் சட்ட வகைகளையும் உருவாக்கியுள்ளன. இந்நாட்டில் உள்ள மக்களில் யூதர்கள் 85 சதவிகிதமும், அராபியர்கள் 15 சதவிகிதமும் இருக்கின்றனர். யூதர்களெல்லாரும் யூதேய சமய நெறியையும் (Judaism), அராபியர்களில் 80 சதவிகிதத்தினர் இசுலாம் சமய நெறியையும், எஞ்சியுள்ள அராபியர்கள் கிறித்தவ நெறியையும் பின்பற்றுகின்றனர். நாட்டின் அலுவலக மொழிகளாக ஈபுரு (Hebrew) மொழியும், அராபிய மொழியும் (Arabia) ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கின்றன. இருமொழிகளும் நீதிமன்ற ஆய்வுகளிலும் அரசாங்க ஆய்வுகளிலும் அறிக்கைகளிலும் கையாளப்படுகின்றன. ஈபுரு கற்பிக்கப்படும் பள்ளிக் கூடங்களில் அரபியும் கற்றுக் கொடுக்கப்படுகிறது. இசுரேலின் முசுலிம் குடிமக்களுக்கு வாரத்தில் வெள்ளிக்கிழமையும், யூதமக்களுக்குச் சனிக்கிழமையும், கிறித்தவ மக்களுக்கு ஞாயிற்றுக்கிழமையும் தொழுகைக்குரிய புனித நாட்களாகக் (Sabbath) கருதப்படுவதால், இம் மூன்று நாட்களிலிருந்துதாம் அவரவர்கட்குரிய வேலைவாரம் (Workweek) தொடங்கப்படுதல் வேண்டுமென்றும், எல்லாச் சமயநெறியாளருக்கும் முழுச் சமய உரிமைப் பாதுகாப்பு அளிக்கப்படுமென்றும், ஒவ்வொரு நெறியாளரும் தத்தம் தொழுகை நாளில் ஓய்வு எடுத்துக் கொள்ளுதற்கு உரிமையளிக்கப்படுவர் என்றும் இசுரேலியச் சட்டம் கூறுகிறது. இந்தச் சட்டத்தைப் பின்பற்றியே இசுரேலிய நகரங்களும் பட்டணங்களும் ஆட்சி செய்யப்படுகின்றன. இந்நாட்டின் யூதமக்களுள் பெரும்பாலோர் உலகின் பல்வேறு நாடுகளிலிருந்தும் வந்து குடியேறியவர்களாவர். கலப்பு இனமக்களாக இவர்கள் இருந்தாலும், சமய நெறியால் இவர்கள் ஒன்றுபட்டவர்களாகையினால், இந்நாட்டில் ஏற்றுக் கொள்ளப்பட்ட மேலைநாட்டு வாழ்க்கை முறையை இவர்கள் பின்பற்றுகின்றனர். இந்நாட்டின் அரசாங்கமும் சட்டமுறைகளும், இதனைப் பண்டைக்காலத்தில் ஆட்சி செய்த துருக்கிய அல்லது உதுமானியப் பேரரசின் சட்டமுறையிலிருந்தும், கிரேட் பிரிட்டனின் சட்டமுறையிலிருந்தும் பெறப்படுபவையாகும். யூதமக்கள் பழங்காலத்தில் வரைந்த சட்டத்தொகுதிகள் தோரா (Tohra), மிசுனா (Mishna) தால்மடு (Talmud) என்றழைக்கப்பட்டன. பாலசுதீனப் பகுதியைக் கி.பி.15 ஆம் நூற்றாண்டுக்கு முன்னரே துருக்கி கைப்பற்றித் தனது பேரரசின் ஒரு பாகமாக ஆண்டு வந்தது. ஆகையால் துருக்கியர் ஏற்படுத்தியிருந்த சமய நீதிமன்றங்களை (Religious Courts) இந்நாடு இப்பொழுதும் தொடர்ந்து ஏற்படுத்தியுள்ளது. ஒவ்வொரு சமயநெறியாளரும் ஏற்படுத்தியுள்ள நீதிமன்றங்கள், அவ்வச் சமய நெறிக்குரிய திருமணங்களை நடத்தி வைத்தல், மணமுறிவு வழக்குகளை (Divorce Cases) ஆய்வுசெய்தல், அவ்வச் சமயத்தவருடைய தனிப்பட்ட பொருள்களைக் (Personal Matters) கேட்டறிந்து ஆவன செய்தல் ஆகியவற்றைச் செய்கின்றன. எனவே ஒவ்வொரு சமய நெறியாளருடைய தனிப்பொருள் சட்டத்துக்கும் (Personal Laws) இசுரேல் நாட்டில் மதிப்புக் கொடுக்கப்படுகிறது. ஆனால் எந்த ஒரு சமய நீதிமன்றமும் வேறுபட்ட சமயநெறியாளர்களுக்கிடையே திருமணம் செய்து வைத்தல் இயலாது; அத்தகைய திருமணம் அங்கு நடைபெறுதலும் இயலாது; இவ்வாறு அந்நாட்டு மக்களுடைய சமய வாழ்க்கையில் துருக்கியருடைய ஆட்சியின் சுவடுகள்

காணப்படுகின்றன. இந்நாட்டின் சட்டம், பிரிட்டிசாரின் எழுதப்படாத, ஆனால் சட்டமாக நீதிமன்றங்களால் ஒப்புக் கொள்ளப்பட்ட வழக்கங்களின் (Customs) தொகுப்பாகிய பொதுச் சட்டத்தினின்றும் (Common Law) வருவிக்கப்பட்டதாகும். முதலாம் உலகப் போரில் (1914–18) பிரிட்டனின் பகை நாடாகிய செருமனியோடு துருக்கி சேர்ந்து போரிட்டுத் தோற்று, தனது மேற்காசியப் பேரரசை இழந்தது. பின்னர்ப் பிரிட்டன் பாலசுத்தீன நாட்டைத் துருக்கியப் பேரரசினின்றும் கைப்பற்றி, 1919-ஆம் ஆண்டு முதல் 1947-ஆம் ஆண்டு நவம்பர் 29-ஆம் நாள் வரை சருவதேசச் சங்கத்தின் ஆணைக்குட்பட்ட நாடாக வைத்து ஆண்டது. அந்நாளில் ஐக்கிய நாட்டுச் சபையின் தீர்மானத்தின்படி, பாலசுத்தீனம் ஒரு யூதநாடாகவும், ஓர் அராபிய நாடாகவும் பிரிக்கப்பட்டது; இப்பாலசுத்தீனப் பிரிவினையை ஏற்றுக் கொண்ட யூதர்கள் தங்களுடைய பகுதியை இசுரேல் என அழைத்து அதை 1948 ஆம் ஆண்டு மே மாத நடுவில் நிறுவினர்; அராபியர்கள் இப்பிரிவினையை ஒத்துக் கொள்ளாமல், பாலசுத்தீனம் முழுவதையும் ஓர் அராபிய நாடாக ஆக்க முயலவே, இருபிரிவினருக்கும் போர்கள் ஏற்பட்டன. பிரிட்டிசாரின் பொதுச் சட்டமுறையை ஐக்கிய அமெரிக்க நாடு ஏற்றுக் கொண்டுள்ளதைப் போன்று இசுரேல் நாடும் ஓர் எளிய அரசியலமைப்பையும் பொதுச் சட்டமுறையையும் உருவாக்கியுள்ளது. வரலாற்று வழியாகப் பார்க்குமிடத்து யூதமக்களும் அராபிய மக்களும் ஓரினத்தைச் (செமிட்டிக் இனத்தை, Semitic) சேர்ந்தவர்கள் தாம். பண்டைய ஈபுரு மக்கள் கூட்டத்தாருடைய தலைவராகிய ஆபிரகாம் (Abraham), ஏறக்குறைய 4000 ஆண்டுகட்கு முன்னர்த் தம் கூட்டத்தாரை அழைத்துக் கொண்டு, காணான் (Canaan) என்ற நிலப்பகுதிககுச் சென்று குடியேறினாரென்றும், (காணான் பகுதியே பின்னர்ப் பாலசுத்தீனம் என்றும், இசுரேல் என்றும் அழைக்கப்பட்டது), கடவுள் இந்த நாட்டையே ஆபிரகாமுக்கும், அவருடைய வழித்தோன்றல்களுக்கும் உரிய தாய் நாடாக (Homeland) வழங்கினாரென்றும் கிறித்தவ வேதநூலாகிய பைபிள் கூறுகிறது. யூதர்களும் அராபியர்களும் தங்களை ஆபிரகாமின் வழிவந்தவர்களென்றும், ஆகையால் பாலசுத்தீனம் தத்தமக்கே உரியது என்றும் கூறுகின்றனர். ஆபிரகாமின் இரு ஆண்மக்களுள் இளையவராகிய ஐசக்கு (Issac) என்பவருடைய பின்தோன்றல்களே யூதர்களாவர்; எனவே இவர்கள் கடவுளால் வாக்குறுதி வழியாக பாலசுத்தீனம் நாடு தமக்குக் கொடுக்கப்பட்டதென்றும், தாம் அதில் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வாழ்ந்து, தமது சமய நெறியை வளர்த்தனரென்றும் கூறுகின்றனர். ஆபிரகாமின் மற்றொரு மகனாகிய இசுமெயில் (Ismail) ஐசக்கை விட மூத்தவர்; ஆனால் இவர் தாய் ஆபிரகாமின் முறைப்படி மணம் செய்து கொண்ட மனைவி அல்லள். கடவுள், காணான் நாட்டை ஐசக்கிற்கே அளித்து அவரைத் தம் பின் தோன்றலாக ஆக்கும்படி ஆபிரகாமுக்குக் கூறினாரென்று பைபிள் கூறுகிறது. இசுமெயிலின் வழிவந்தவர்களே அராபி



இசுரேலியப் பாராளுமன்றம் – 'நெசெந்து'

யர்கள். அவர்கள் பாலசுதீன நாட்டைக் கி.பி.600 ஆம் ஆண்டில் கைப்பற்றி, அக்காலமுதல் அதில் வாழ்ந்து வருகிற காரணத்தினால் அந்நாடுமுழுதும் (இசுரேல் உள்பட)தமக்கே உரியதென்று கூறுகின்றனர். இரு பிரிவுகளைச் சேர்ந்த மக்களுக்கும் சமவாய்ப்புகளை யும் ஒத்த உரிமைகளையும் அளித்தே அரசியலமைப்புச் சட்டம் வரையப்பட்டுள்ளது. பிரிட்டனைப் போலவே இந்நாடும் முழுவதும் எழுத்து வடிவத்தில் வரையப் பட்டுள்ள ஓர் அரசியலமைப்பை உடையது அன்று. பிரிட்டிசு பொதுச் சட்டமென்னும் வழக்கங்களே மக் களால் கையாளப்படுகின்றன.

இது ஒரு குடியாட்சிக் குடியரசு (A Democratic Republic) ஆகும். குடியரசின் தலைவர் (President). இசுரேலியப் பாராளுமன்றமாகிய நெசத்து (Knesset) என்னும் மன்றத்தால் 5 ஆண்டுகளுக்குத் தேர்ந் தெடுக்கப்படுகிறார். அவருடைய நிலை பிரிட்டிசு அரசியாருடைய நிலையை ஒத்துள்ளது; அவருக்கு ஆட்சி அதிகாரங்களோ பொறுப்புகளோ இல்லை. அவருடைய பணிகளெல்லாம் ஒரு சடங்காகவே இருக்கின்றன. நாட்டின் தலைவராக குடியரசுத் தலைவர் இருக்க, எல்லா அதிகாரங்களும் (பிரிட்ட னைப் போன்று) நாட்டின் பாராளுமன்றமாகிய நெசத்திடமே இருக்கின்றன. இதனுடைய 120 உறுப் பினர்களும் 4 ஆண்டுக் காலத்துக்கு, நாடு முழுவதி லிருந்தும், பட்டியல்-முறையையுடைய (List System) விகிதாசாரப் பிரதிநிதித்துவ முறையில் தேர்ந்தெடுக் கப்படுகின்றனர். அரசாங்கத்தின் தலைவர் (Head of Government) தலைமை அமைச்சராவார் (Prime Minister). அவரே அரசியல் கட்சி அடிப்படையில் அமைச்சரவையை (Cabinet) அமைக்கிறார். இந்த அமைச்சரவை அரசாங்கத்தின் பல்வேறு ஆட்சித் துறைகளை நடத்துகிறது. எந்த அமைச்சரவையும் பாராளுமன்றத்தின் ஒப்புதலைப் பெற்றால்தான். அது பதவியில் நீடித்து இருத்தல் இயலும்: பாராளு மன்றத்தால் அமைச்சரவைக்கு ஒப்புதல் வழங்கப் படாவிட்டால், அது உடனே பதவி துறத்தல் வேண் டும்.

இசுரேல் நாடு உள்ளாட்சிக்காகப் பல சிறு பிரிவு களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பிரிவுக்கும் ஒரு மன்றம் (Council) ஆட்சி மன்றமாக இருக்கிறது. வாக்காளர்களால் ஒவ்வொரு மன்றத்துக்கும் 4 ஆண் டுக் காலத்துக்கு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படு கின்றனர். ஒவ்வொரு மன்றமும் ஒரு மன்றத் தலை வரைத் (மேயர்-Mayor) தேர்ந்தெடுக்கிறது. அராபி யருக்கும் இசுரேலியருக்கும் 1967-ஆம் ஆண்டில் நடைபெற்ற போரின் விளைவாக இசுரேலியருக்குக் கிடைத்த நிலப்பகுதிகளில் இராணுவ ஆளுநர்கள் அமர்த்தப் பட்டுள்ளனர்.

இந்நாட்டிற்கு ஒரு தலைமை நீதிமன்றம் (Supreme Court) இருக்கிறது: மற்றவையெல்லாம் கீழ்நிலை நீதிமன்றங்களே; இதனுடைய 10 நீதிபதி களும் குடியரசுத் தலைவரால் வாழ்நாள் முழுமைக் கும் அமர்த்தப்படுகின்றனர். இந்த நீதிமன்றங் களைத் தவிர சமயநெறிக்கு ஏற்பத் தனிப்பட்ட பொருள்களில் (Personal Matters) நீதி வழங்கும் சமய நீதிமன்றங்களும் இருக்கின்றன. இந்நாட் டில் வயதுவந்த இருபாலாருக்கும் வாக்குரிமை உண்டு: வாக்காளர்களுக்குப் பதினெட்டோ அதற்கு மேலோ வயது இருத்தல் வேண்டும். இசுரேல் நாட் டில் பல அரசியற் கட்சிகள் இருக்கின்றன; இவற்று ளெல்லாம் இலிக்குடு (Likud) என்ற கட்சியும் தொழிற்கட்சியும் மிகப் பெரிய கட்சிகளாகும்.

இசுரேல் தற்காப்புக்காக ஒரு பெரிய திறமிக்க படையை எப்போதும் ஆயத்த நிலையில் வைத் திருக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுள்ளது. அத னால் அது 18 வயதடைந்த எல்லா யூத ஆண்களும், மணமாகாத யூதப் பெண்களும் தரை, கடல், வானப் படைகளில் பணி செய்தலைக் கட்டாயமாக்கியுள்ளது. மணமாகாத யூதப் பெண்கள் படைப்பணி தங்களு டைய சமய நெறிமுறைக்கு முரணானது என்று எடுத் துக் காட்டினால், அதினின்றும் அவர்களுக்கு விலக்கு அளிக்கப்படும். ஆண்கள் 3 ஆண்டுகளும், பெண்கள் 2 ஆண்டுகளும் கட்டாயமாகப் படைப்பணி செய்தல் வேண்டும். அராபியக் குடிமக்கள் படையில் சேர்த்துக் கொள்ளப்படுவதில்லை. இசுரேலியப் படையில் 70,000 ஆண்களும், பெண்களும் உள்ளனர்; நிலைப் படையில் (Reserve Force) 2,50,000 பேர் இருக்கின் றனர்.

இசுரேலிய அரசாங்கம் முழுவதும் அதனுடைய பாராளுமன்றமாகிய நெசத்து நிறைவேற்றும் சட்டங்களினடிப்படையில்தான் அமைந்து இருக்கி றது: அரசாங்கத்தின் அமைப்பையும் அதிகாரங்களை யும் தீர்மானிக்கிற அடிப்படை அல்லது ஆதாரச்சட் டங்களை (Fundamental Laws) மாற்றவோ நீக்கவோ வேண்டுமென்றால், பாராளுமன்ற உறுப்பினருள் மூன்றில் இரண்டு பங்கினருடைய வாக்குகள் வேண் டும்; மற்றச் சட்டங்களை மாற்றுதற்குப் பாராளு மன்றத்தின் சாதாரணப் பெரும்பான்மை வாக்கு இருந்தால் போதும். பாராளுமன்றத்தினால் நிறை வேற்றப்பட்ட பல ஆதாரச் சட்டங்களும், பின் னொரு காலத்தில் நாட்டிற்கு எழுதப்பட்ட முழு வடிவமான அரசியலமைப்பாகத் தொகுக்கப்படுவ தற்கு ஏற்ற வகையில்தான் ஆக்கப்பட்டுள்ளன.

துணை நூல்கள்:

**Dror, Y. and Gutmann, E.(Editors), The Government of Israel, (1964).**

Baker, Z.E., The Legal System of Israel, (1968).
Vilnay, Z., The guide to Israel, (1968).

**இசுரேல் நாட்டில் கல்வி:** இசுரேல் நாட்டில் 1949-ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டத்தின்படி, ஒவ்வொரு குழந்தையும் தனது ஐந்தாம் வயதில் கட்டாயமாக ஓராண்டு மழலையர் பள்ளியிலும் எட்டு ஆண்டுகள் தொடக்கப் பள்ளியிலும் சேர்ந்து படித்தாக வேண்டும். ஓராண்டு மழலையர் பள்ளிக் கல்வியும், எட்டாண்டுத் தொடக்கப் பள்ளிக் கல்வியும் கட்டணமின்றிக் கிடைக்கும் என்பது குறிப்பிடத் தக்கது.

மழலையர் கல்வி இந்நாட்டில் கட்டாயமாக்கப்பட்டதற்கு முதல் காரணம், புதிதாகக் குடிவந்தவர்களின் குழந்தைகள், வசதியற்ற சூழலிலிருந்து (disad-vantaged) வரும் குழந்தைகள் ஆகியோர் தொடக்கப் பள்ளியில் எந்த்விதத் துன்பமும் இன்றி எளிதில் சேர்ந்து பயில வேண்டும் என்பதேயாகும்.

மழலையர் பள்ளிகளை அரசு மட்டுமே நடத்துவதில்லை; தனியார்களும் நடத்துகின்றனர். மழலையர் பள்ளிகளில் மூன்று, நான்கு வயதுக் குழந்தைகள் அனைவருக்கும் மழலையர் பள்ளிக் கல்வியைக் கட்டணமின்றித் தருவது என்று, கல்வி-பண்பாடு அமைச்சகம் (Ministry of Education and Culture) முடிவு செய்துள்ளது. 1981-ஆம் ஆண்டுக் கணக்கின்படி, மூன்று வயதில் 88.6 விழுக்காடு யூதக் குழந்தைகளும் நான்கு வயதில் 96.5 விழுக்காடு யூதக் குழந்தைகளும் மழலையர் பள்ளிகளில் சேர்ந்து பயின்றனர்.

**பழைய கல்வி முறை:** 1968-ஆம் ஆண்டு வரை, 8+4 என்ற கல்வி முறை இருந்து வந்தது. இது, எட்டாண்டுத் தொடக்கக் கல்வியும், அதைத் தொடர்ந்து நான்காண்டு உயர்நிலைப் பள்ளிக் கல்வியும் ஆகும். உயர்நிலைப் பள்ளிகளில் பொதுக் கல்வி, தொழிற் கல்வி, வேளாண்மைக் கல்வி போன்றவை வழங்கப்பட்டன. இவை இரண்டிலிருந்து, நான்காண்டுக் காலம் வரை, கற்பிக்கப் பட்டன.

**புதிய கல்வி முறை:** 1969-ஆம் ஆண்டில், கட்டாயக் கல்விச் சட்டம் (Compulsory Education Act) திருத்தப்பட்டது. அதன்படி, மாணவர்கள் தங்கள் பதினான்கு, பதினைந்து வயதுகளில் படிக்கும் ஒன்பதாம் வகுப்பு, பத்தாம் வகுப்புக் கல்வியும் கட்டணமின்றி வழங்கப்பட்டது. இப்புதிய சட்டத்திற்கேற்பக் கல்வி அமைப்பும் 6+3+3 என்ற புதிய முறைக்கு மாற்றப்பட்டது. இப்புதிய முறைக் கல்வி அமைப்பின்படி, தொடக்கப் பள்ளியில் ஆறு ஆண்டுகளும், உயர்நிலைப் பள்ளியில் (Junior Secondary School) மூன்றாண்டுகளும், மேல்நிலைப் பள்ளியில் (Senior Secondary School) மூன்றாண்டுகளும் மாணவர்கள் பயில வேண்டும்.



[illegible] இசுரேலிய மாணவர்கள்

நிதிப்பற்றாக்குறையின் காரணத்தால், புதிய கல்வி முறை நாடெங்கிலும் முழுவதுமாக இன்னும் செயற்படுத்தப்படவில்லை. எனவே இப்பொழுது, பழைய கல்வி முறையும் இந்நாட்டில் இருந்து வருகிறது.

உயர் கல்வி: மேல்நிலைப் பள்ளிக் கல்வி படித்த மாணவர்களுக்கு இந்நாட்டில் பல கல்வி சாரா நிறுவனங்கள் (Non Academic Post-Secondary Institutions) உள்ளன. இவை ஆசிரியர், தொழில் நுட்பப் பணியாளர் (Technician), பிற இடைநிலைப் பணியாளர் (Semi - Professionals) ஆகியோருக்குப் பயிற்சி தருகின்றன.

உயர் கல்விக்காக ஐந்து பல்கலைக் கழகங்கள், ஒரு தொழில் நுட்பக் கல்வி நிறுவனம், ஓர் அறிவியல் கல்வி நிறுவனம் ஆகியவை இந்நாட்டில் செயற்படுகின்றன. இவை அந்தந்தத் துறைகளில் மூன்றாண்டுகள் கல்வி பயின்றோருக்கு இளநிலைப் பட்டங்களையும், அதற்குப்பின் ஈராண்டுகள் பயின்றோருக்கு முதுநிலைப் பட்டங்களையும் வழங்குகின்றன. டாக்டர் பட்டத்திற்கான ஆய்வுகளை முதுநிலைப் பட்டம் பெற்ற மாணவர்கள் மேற்கொள்கின்றனர். அரசு நடத்தும் முதிர்நிலைத் தேர்வு (Maturity Examination) களில் வெற்றி பெற்றவர்களே உயர்கல்வியில் சேர்க்கப்படுகின்றனர். 1980-ஆம் ஆண்டுக் கணக்கின்படி, யூதப் பெரும்பான்மையினர் 24 விழுக்காடும் அராபியச் சிறுபான்மையினர் 9 விழுக்காடும், உயர் கல்விக்கான தேர்வுகளில் வெற்றி பெற்றனர்.

வயது வந்தோர் கல்வி: அரசு நிறுவனங்கள் நற்பணி மன்றங்கள், பல்கலைக் கழகங்கள் ஆகியவை பல்வகையான முறை சாராக் கல்வித் திட்டங்களை ஒவ்வொரு குறிப்பிட்ட மதிப்பிலக்கு மக்களின் (Target Population) தேவைகளை யொட்டிச் செய்து வருகின்றன.

முறைசாராக் கல்வி மையங்களில் இசுரேலில் புதிதாய்க் குடிவந்தோர்களுக்கு ஈபுரு (Hebrew) மொழி கற்பிக்கப்படுகிறது; அவர்களுக்கு இசுரேல் நாட்டுப் பண்பாட்டையொட்டிய பழக்க வழக்கங்கள், வரலாறு, சமூக அமைப்புகள் போன்றவையும் கற்பிக்கப்படுகின்றன.

முறையான கல்வி பெறாத வயது வந்தோருக்குக் கல்வியறிவு (Literacy), அடிப்படைக் கல்வி (Basic Education) ஆகியன கற்பிக்கப்படுகின்றன.

பள்ளியில் படிப்பைப் பாதியிலே நிறுத்திய மாணவர்களுக்குப் (Drop-outs) பள்ளிப் புறக் கல்வி (Out of school education), பண்பாட்டுப் பயிற்சி, சமுதாயப் பங்கேற்ட ஆகியவற்றில் பயிற்சி தரப்படுகிறது.

முறைசாரக் கல்வி மையங்களில் இளைஞர்கள் தொழில் திறன் வளர்த்திடப் பயிற்சி பெறுகிறார்கள். இக்கல்வி மையங்களில், படிப்பைப் பாதியிலேயே நிறுத்திய திறமை மிக்க இளைஞர்கள், உயர் கல்வியில் சேர்ந்து பயிலும் வகையில் உயர்கல்வி நுழைவுப் பாடங்களில் (Preacademic Preparatory Courses) பயிற்சி பெறுகின்றனர்.

தொழிலாளர் நல அமைச்சகம் (Ministry of Labour) 1980-இல் நடத்திய தொழிற் பயிற்சியில் மட்டில் 31,300 பேர் பங்கேற்றனர். 1981-ஆம் ஆண்டில் இளைஞர்கள், குறிப்பாக மகளிர், நாட்டில் இருந்த 60 மையங்களில் எழுதப் படிக்கும் திறனையும் அடிப்படைக் கல்வியறிவையும் பெற்றனர். இதே ஆண்டில், 8,000 க்கும் மேற்பட்ட இளைஞர்கள், பல்கலைக் கழகம் நடத்திய உயர் கல்வி நுழைவு வகுப்புகளில் சேர்ந்து பயின்றனர். 1981-ஆம் ஆண்டு தொடங்கப்பட்ட திறந்த வெளிப் பல்கலைக் கழகத்தில் ஏறத்தாழ 12,000 மாணவர்கள் முறைசாராக் கல்விக்காகத் தங்களைப் பதிவு செய்து கொண்டனர்.

ஆசிரியர், ஆசிரியர் பயிற்சி: மேல்நிலைக் கல்வி பயின்றவர்கள் இரண்டு அல்லது மூன்றாண்டு ஆசிரியர் பயிற்சிக்குப் பின், மழலையர் பள்ளி, தொடக்கப் பள்ளி ஆசிரியர்களாகின்றனர். 1981-ஆம் ஆண்டில் மொத்தம் 47 ஆசிரியப் பயிற்சிக் கல்லூரிகள் யூதர்கள் வாழும் பகுதியிலும், இரு கல்லூரிகள் அராபியர் மிகுதியாக வாழும் பகுதியிலும் இருந்தன. இவற்றுள் சில கல்லூரிகள், நான்காண்டுகள் ஆசிரியர் கல்வி தந்து, கல்வியில் இளநிலைப் பட்டம் (Bachelor of Education) வழங்குகின்றன. இக்கல்வித் தகுதி பெற்றவர்கள், உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்கள் ஆகின்றனர். இளநிலைப் பட்டமும், கல்வியில் பட்டமும் பெற்றவர்களே மேல்நிலைப் பள்ளி ஆசிரியர்களாகின்றனர்.

கல்வியியல் ஆய்வு: தனி ஆய்வு நிறுவனங்கள், பல்கலைக் கழகத்துடன் இணைந்த கல்வி நிறுவனங்கள், பல்கலைக் கழகச் சமூக அறிவியற் புலங்கள், கல்வியியற் புலங்கள் ஆகியவற்றில், ஆராய்ச்சி மாணவர்களும் ஆசிரியர்களும் ஆராய்ச்சி மேற்கொள்கின்றனர். சோல்டு ஆய்வு நிறுவனம் (Szold Institute of Research) நடத்தை அறிவியல் துறைகளில் (Behavioural Sciences) சிறப்பான ஆய்வு செய்து வருகிறது.

இசுரேல் நாட்டுக் கல்வியானது சில சிக்கல்களுக்குத் தீர்வு காண வேண்டியுள்ளது. யூதர்களுக்கும்

அராபியர்களுக்கும் இடையேயுள்ள பிளவினை இந் நாட்டுக் கல்வியே தீர்க்க வேண்டும். இசிரேலில் வந்து குடியேறுபவர்கள் மிகுந்து வருவதால், யூதர் களின் தனித் தன்மையைக் கல்வி வழியே காத்தல் வேண்டும். இசுரேல் நாட்டு அரேபியர்களுக்கு வழங் கப்படும் கல்வியின் குறிக்கோள்கள் அறுதியிடப் பட வில்லை என்பது மட்டிலுமன்றி, ஓர் இசுரேலியக் குடி மகனாவதற்குத் தேவையான அடிப்படைகளை, அராபியர்களுக்கு இப்போது செயற்பட்டு வரும் கல்விமுறை தருவதாகவும் இல்லை.

**இசுரேலி ஐசக்கு பென் சாலமன் (C 855-955):** இசுரேலி என்பவர் சிறந்த மருத்துவ அறிஞராக இருந்தார். இவருடைய நூல்கள் இலத் தீன் மொழியில் கையெழுத்துப் படிவங்களாகக் கி.பி. பதினாறாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பரவின. அவற்றில் தத்துவக் கருத்துகளும், அறிவியல் சார்ந்த கருத்துகளும் அடங்கி இருந்தன. இவருடைய புகழ் எங்கும் பரவியது.

இசுரேலி ஐசக்கு பென் சாலமன் (Israeli Isaac Ben Solmon) எகிப்திய நாட்டைச் சார்ந்தவர். இவர் வட ஆப்பிரிக்காவிற்கு மருத்துவம் பயிலச் சென்றார். பிறகு அரசவையில் மருத்துவராக அமர்ந்தார். வட ஆப்பிரிக்காவில் உபயதுல்லா அல் மாடி (Ubaya dullah al- Mahdi) என்ற பாத்திமிடு(Fatimid) அரச மரபை நிறுவியவரின் அரசவையில் மருத்துவராக இருந்தார். இவர் இயற்றிய 'முதற் பொருள்கள், (Book of elements) என்ற நூலில் தத்துவக் கருத்து கள் அமைந்திருந்தன. மேலும் 'விளக்க உரை' என்ற நூலும் (Book of Definition) இவர் எழுதினார். இவர் எழுதிய 'உயிரும் ஆன்மாவும்' (Book of Spirit and Soul), 'பொருள்கள்' (Book of Substances) என்ற நூல்களும் சிறந்து விங்கின. மேற்கூறிய நூல்களிலிருந்து இவரை ஒரு சிறந்த புதிய பிளேட் டோனிசு (Neo Platonist) என்று கொள்ளலாம்.

இவருடைய நூல்கள், இறைவன் ஒரு சிறந்த படைப்புத் தொழில் செய்கிறார் என்றும், அவரு டைய சிறப்பு சூனியத்திலிருந்து உலகைப் படைப் பதே என்றும், அவருடைய எண்ணம் (Will) திறமை உடையது என்றும் விளக்கிக் கூறுகின்றன.

இசுரேலி வெளிப்படுத்தல் கொள்கை (Doctrine of emanation) உடையவர். கடவுள் அவருடைய நல்ல எண்ணத்திலிருந்து உலகைப் படைத்தார். படைப்பு முடிவில்லாமல் நடந்து கொண்டே இருக் கிறது. வெளிப்படுத்தல் பற்றிய இந்த இரண்டு கருத்துகளையும் இசுரேலியத் தத்துவத்தில் பொருந் தச் செய்ய முடியவில்லை.

உலகத்தைப் பற்றி இசுரேலியின் கருத்து,பருப் பொருள் தன்மை வாய்ந்ததாகவும் அரிசுடாட்டிலின் கொள்கையைச் சார்ந்ததாகவும் இருக்கிறது. கிரேக்கக் கொள்கை, உலக அநுபவங்களை நிலம், நீர், நெருப்பு, காற்று ஆகிய அடிப்படையின் கூட்டுச் சேர்க்கை என்கிறது. விளக்கவுரை என்ற நூலில் மேற்கூறிய நான்கு பொருள்களும், உண்டானதற்குக் காரணம், வானத்தின் இயக்கம் என்கிறார். ஆனால் முதற்பொருள்கள் என்ற தம் நூலில் நான்கு பொருள்களும் உண்டானதற்குக் கார ணம், இறைவனின் சக்தி என்று கூறுகிறார். இந்த இரண்டு கொள்கைகளும் முரண்பாடுடையனவாக இருக்கின்றன.

அதே போல் இருவகைக் கருத்துகள் இசுரேலின் ஆன்மாக் கொள்கையில் காணப்படுகின்றன. ஓர் அண்டத்துக்குரிய (Cosmic) ஆன்மாவைப் பற்றிக் குறிப்பிடுகிறார். அது தனியாக, உடலோடு தொடர்பில்லாமலும் காணப்படுகிறது. பகுத்தறிவு டைய நிலையிலும் மிருக நிலையிலும் செடிகள் நிலை யிலுமாக மூவகை நிலையிலும் அவ்வான்மா வெளிப் படுகிறது. இதனோடு ஒரு தெய்விகப் பொறி மனி தனுள்ளே இருக்கிறது. அது மேல் நோக்கி அண்டத் துக்குரிய ஆன்மாவை நோக்கிச் செல்கிறது. புதிய பிளேட்டோனிசக் கொள்கையின்படி மனிதன் ஒரு சிற்றண்டம். ஆன்மாவைப் பற்றிய அறிவு என்பது, உடலைப் பற்றியும் ஆன்மாவைப் பற்றியும் அறிவது. ஒருவன் தன்னைப் பற்றி உடலோடு ஆன்மாவையும் அறிந்தால், எல்லாவற்றையும் அறிந்தவனாகிறான். அவன் ஒரு தத்துவ ஞானி என்ற பெயருக்கேற்றவன் ஆகிறான் என்று விளக்கந் தருகிறார்.

துணை நூல்கள்:

Isaac Husik, History of Medieval Jewish Philosophy, New York, 1916.

Joseph L. Blau, The Story of Jewish Philosophy, New York, 1962.

A. Altmann and S.M. Stern, A Neoplatonic Philosopher of the Early Tenth Century, Scripta Judaica, London, 1958.

**இசுலாபு இசுடீபன் (கி.பி. 1817-1863)** என் பவர் கிறித்தவச் சமயப் போதகர்களுள் ஒருவர். இவர் கி.பி. 1817-ஆம் ஆண்டு பிறந்தார்; மகாராட் டிரத்தைச் சார்ந்த விதர்ப்பா என்னும் பகுதியிலிருக் கும் நாகபுரியில் சமயப் பணிக்காக அனுப்பப்பட்டார். நாகபுரி மாநகரின் ஒரு பகுதியான சீதாபர்டியில் பணியாற்றினார். இவர் பம்பாய் சுதந்திரத் திருச் சபையைச் சார்ந்த சமயப்போதகர். இவர் பல இந்

தியமொழிகளில் தேர்ச்சி பெற்றிருந்தார். மொழியியல், தொல்லியல் ஆய்வு, மண்ணூல், இயற்கை வரலாறு, தாவரவியல், விலங்கியல், பூச்சியினஇயல், சங்குஆய்வியல் போன்ற துறைகளில் இவர் ஆர்வம் கொண்டவராக விளங்கினார். கோண்டுகளையும் ஏனைய மத்திய இந்தியப் பழங்குடிகளையும் பற்றி இவர் எழுதிய கட்டுரைகளை சர் ஆர். தெம்பிள் (Sir R. Temple) என்பார் பின்னர்த் தொகுத்தார். இசுலாப்பு இசுடீபன் (Hislop Stephen) கி.பி. 1863-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 4-ஆம் நாள் கரை புரண்டோடும் ஆற்றினைக் கடக்க முயன்றபோது நீரில் மூழ்கி இறந்தார். நாகபுரியில் இவர் பெயரில் சட்டக் கல்லூரி ஒன்று அமைக்கப்பட்டுள்ளது.

**இசுலாம்** உலகத்திலுள்ள பல்வேறு சமயங்களுள் ஒன்று. இசுலாம் என்ற சொல்லுக்கு அரபு மொழியில் அமைதி, சாந்தம், அடைக்கலம் புகுதல், சான்றாண்மை என்ற பொருள்களுண்டு. இசுலாம் சமயத்தைத் தழுவியவர்கள் இசுலாமியர் என்று சொல்லப்படுகின்றனர்.

பொதுவாக, ஒரு சமயத்திற்கு அச்சமயத்தைத் தோற்றுவித்தவரின் பெயரைச்சூட்டுவதுமரபு. புத்தரால் தோற்றுவிக்கப்பட்டது புத்த சமயம்; ஏசு கிறித்துவால் தோற்றுவிக்கப்பட்டது கிறித்தவம். ஆனால், முகமது நபியால் போதிக்கப்பட்ட சமயம் அவரது பெயரால் வழங்கப்படாமல் இசுலாம் என்று சொல்லப்படுதல் குறிப்பிடத்தக்கது.

**இசுலாத்தின் தோற்றம்:** கி.பி. 570-ஆம் ஆண்டு அரேபியாவிலுள்ள மெக்காவில் பிறந்த முகமது இளம் வயதில் தாய் தந்தையர்களை இழந்து, எழுத்தறிவின்றி, உறவினர்களால் வளர்க்கப்பட்டு, வாணிகத்தில் ஈடுபட்டு, கதீசா என்ற ஒரு விதவைச் சீமாட்டியை மணந்தார். ஆழ்ந்த இறை நம்பிக்கையுடன் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்துகொண்டிருந்த முகமதிடம் ஒரு நாள் கேபிரீல் அல்லது சீபிரீல் (Gabriel or Jibril) என்ற தேவமனிதன் தோன்றி சில கூற்றுகளைக் கூறி, அக்கூற்றுகள் இறைவனின் கூற்றுகளென்றும், அவற்றை மக்களிடம் கூறும்படியும் சொன்னார். இவ்வாறு சீபிரீல் பல ஆண்டுகள் பற்பல நேரங்களில் தோன்றி, முகமதிடம் கூறிய கூற்றுகளின் தொகுப்பே திருக்குரான் என்று கூறப்படுகிறது. குரானின் கூற்றுகள் முகமது நபியின் கூற்றுகளாகக் கருதப்படுவது கிடையாது; குரானின் கூற்றுகள் இறைவனின் கூற்றுகளெனக் கருதப்படுகின்றன.

**திருக்குரான் போதனைகளின் சாரம்:** இறை ஒருமைப்பாடு, முகமதுவை நபியாக (இறைத்தூதர்) ஏற்றுக்கொள்ளல், ஐங்காலத்தொழுகை, ஈகை அல்லது சக்காத்து (சக்காத்து-ஒருமனிதனின் வருவாயில் 2½ சதவிகிதத்தை ஏழைகளுக்காக ஈவது), ஆண்டில் ஒரு திங்கள் (இரமலான் மாதம்) உண்ணா நோன்பு இருத்தல், வாழ்வில் ஒரு முறை உலகில் வாழும் ஏனைய இசுலாமியருடன் ஒன்று கூடி உடன் பிறப்புத் தன்மையையும், மனித ஒருமைப்பாட்டையும் வலியுறுத்தும் வகையில் 'கச்சு' (Haj) என்னும் புனிதப் பயணத்தை மேற்கொள்ளுதல் ஆகியவை இன்றியமையாப் போதனைகளாகும்.



திருக்குரான் படிக்கும் இசுலாமியச் சிறுவன்

**சுன்னத்தும் அதீசும் (Sunnath and Hadis)** உலகெங்கிலுமுள்ள இசுலாமியர் திருக்குரானின் கூற்றுகளுக்கு இணங்க வாழ்ந்து வந்தாலும், முகமது நபியை எடுத்துக்காட்டாகக் கொண்டு, அவர் தம் வாழ்நாளில் நடந்து காட்டியவற்றைச் சுன்னத்து என்று கூறி, அதேபோன்று தாங்களும் தங்கள் வாழ்நாளில் நடந்து கொள்கின்றனர். அதுபோன்றே, முகமது நபியின் கூற்றுகளை இசுலாமியர் அதீசு என்ற அரபுச் சொல்லால் குறிப்பிட்டு, அக்கூற்றுகளுக்கு இணங்கவும் தங்கள் வாழ்க்கை முறையை அமைத்துக் கொள்கின்றனர்.

**இசுலாம் பரவுதல்:** முகமதுவின் போதனைகளை ஏற்றுக்கொள்ளாத அராபியர்கள் அவரை

மெக்காவை விட்டு விரட்டினர். அவர் கி. பி. 622-ஆம் ஆண்டில் மெக்காவை விட்டுத் தம் நண்பர்களுடன் மதீனா என்ற நகரை நோக்கிப் புறப்பட்டார். இவ்வாறு அவர் புறப்பட்டுச் சென்றதை இசுலாமியர் இசிரா (Hijira) அல்லது நெடும்பயணம் என்று குறிப்பிடுகின்றனர். அவ்வாண்டே இசுலாமியரின் பஞ்சாங்கத்தில் முதல் ஆண்டாகும். முகமது நபி பல போர்களைச் செய்து, பல பிரிவினர்களாகப் பிரிந்து கிடந்த அராபிய மக்களை ஒன்று சேர்த்து, அவர்களின் தலைவராக ஆட்சி செய்தார். அவர் இறப்பதற்கு முன் ஏறக்குறைய அராபியா முழுவதிலும் இசுலாம் பரவியது. ஆண் வாரிசு இல்லாமல் முகமது நபி கி. பி. 632-ஆம் ஆண்டு இறந்த பின், அட்சிப்பீடத்தில் அமர ஒருவர் பின் ஒருவராக கலீபாக்கள் (பிரதிநிதிகள்) தேர்ந்தெடுக்கப்பட்டனர். அபூபக்கர், உமர், உதுமான், அலி ஆகிய நான்கு கலீபாக்களின் காலத்தில், அராபியப் படைகள் ஆப்பிரிக்காவின் பல பகுதிகள், சிரியா, பாரசீகத்தில் சிலபகுதிகள் முதலியவற்றைக் கைப்பற்றின. பழம் பெரும் பேரரசுகளான பைசாண்டியப் பேரரசும் (Byzantium) பாரசீகப் பேரரசும் (Persia) அராபியர்களின் தாக்குதல்களால் தள்ளாடின. இதே வேளையில் கத்தியின்றி இரத்தமின்றி வணிகர்களின் வாயிலாகவும் இசுலாம் பரவியது. இசுலாத்தின் தோற்றத்திற்கு முன்பே அராபியர்கள் இந்தியாவின் மேற்குக் கரைப்பகுதிகளுடன் வணிகத் தொடர்பு கொண்டிருந்தனர். அவ்வாறு சென்ற சிலர் இந்தியப் பெண்களை மணந்தனர். அவர்களின் வழித்தோன்றல்கள் இன்னும் நவாயத்து முசுலீம்கள் என்றும், மாப்பிள்ளை முசுலீம்கள் என்றும், மரக்காயர்களென்றும் சொல்லப்படுகின்றனர்.

**இசுலாம் சமயத்தில் பிளவு சியாக்கள் (Shiahs):** கலீபா அலி கொலை செய்யப்பட்டு மாண்டார். அவருக்குப் பின் அவர் மைந்தர் அசன் (Hasan) என்பவர் கலீபாவாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனால், மென்மையான உள்ளமும், இரக்கக் குணமும் படைத்த அசனால் திறம்பட ஆட்சி செய்ய முடியவில்லை. சிரியா மாநிலத்தில் ஆட்சியாளராக இருந்த முகுவியா என்பவர் தமது படைபலத்தாலும், அரசியல் ஞானத்தாலும் அசனை ஒய்வு பெறச் செய்து, தாம் கலீபாவாகப் பதவியேற்றார். அசனும் சிறிதுகாலத்தில் நஞ்சூட்டப்பட்டு இறந்தார். முகுவியா தமக்குப்பின் தம் மைந்தர் எசீது (Yezid) என்பவரைக் கலீபாவாக அமர்த்தினார்.




உலகநாடுகளில் இசுலாமியர்

ஆட்சித்திறனும், நற்பண்புகளுமில்லாத எசீதின் நியமனத்திற்குக் காலஞ்சென்ற கலீபா அலியின் மற்றொரு மைந்தரான உசேன் எதிர்ப்புத் தெரிவித்தார். அவர் கலீபா பதவிக்கு எசீதுடன் போட்டியிட விழைந்தார். நண்பர்களின் வேண்டுகோளுக்கு இணங்க எசீதுடன் போர் செய்யவும் ஆயத்தமானார். ஆனால், எசீதின் பெரும்படைகள், கர்பலா என்ற இடத்தில் கி. பி. 680-ஆம் ஆண்டு நடந்த போரில் சிறுபான்மையினரான உசேனையும், அவர் தம் உற்றார் உறவினர்களையும் ஈவு இரக்கமின்றிக் கொன்றன. உசேனும் வீரப்போர் புரிந்து வீழ்ந்தார். இசுலாமிய வரலாற்றில் கர்பலாப்போர் மிகச் சிறப்பு வாய்ந்தது.

இப்போர் இசுலாமிய சமயத்தில் ஒரு பெரும் பிளவை (Schism) ஏற்படுத்தியது. கலீபா அலியும் அவர் வழித்தோன்றல்களும் இறந்த முறையைக் கண்ட பலர் கொதித்தெழுந்தனர். இவர்கள் முகமது நபிக்குப் பின், அவர்தம் சிறிய தந்தையின் மகனான அலியும், அவருக்குப்பின் அவரின் வழித்தோன்றல்கள் மட்டிலுமே கலீபாக்களாக வந்திருக்க வேண்டும் என்று கூறினர். ஏனைய கலீபாக்களை அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. கலீபா அலியின் வழித்தோன்றல்களை இவர்கள் இமாம்கள் அல்லது தலைவர்கள் என்று குறித்தனர். இவர்கள்தாம் சியாக்களென்று குறிப்பிடப்படுகின்றனர். ஏனைய இசுலாமியர் சன்னியர்களென்று (Sunnis) குறிப்பிடப்படுகின்றனர்.

இசுலாமிய சமயத்தில் தோன்றிய இப்பிளவு அரசியல் அடிப்படையில் தோன்றியதாக இருப்பினும், காலப்போக்கில் இப்பிளவு கோட்பாடுகள் அளவிலும் பரவியது. சன்னியர்கள் முகமதுநபியை நற்பண்புகளுள்ள, உயர்ந்த மனிதராகவும், திருமறையாம் குரானை உலகத்திற்கு அளிக்க உதவியவராகவுமே கருதுகின்றனர். ஆனால், சியாக்கள் முகமது நபி இறைப்பண்புகள் உள்ளவரென்றும், அப்பண்புகளை அவரின் திருமகள் பாத்திமாவின் வழியாக அவர் வழித்தோன்றல்களும் பெற்றிருந்தனரென்றும் கருதுகின்றனர். சியாக்களுள் சில தீவிரவாதிகள், இமாம்களை இறைவனின் அவதாரங்கள் என்றே கூறுகின்றனர்.

காலப்போக்கில் சியாக்கள் பல பிரிவுகளாகப் பிரிந்தனர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்களான இசுமாயிலிகள் (Ismailis) கர்பலாப்போரில் உசேன் வீரமரணமடைந்த நாளான, இசுலாமிய ஆண்டின் முதல் மாதமான முகரம் மாதத்தின் பத்தாம் நாளைத் துயர நாளாகக் கருதுகின்றனர். உசேனின் சடலம் புதையுண்டிருக்கும் கர்பலா, சியாக்களின் புனிதத் தலங்களுள் தலையாயது. இன்று சியாக்கள் உலகில் பல இசுலாமிய நாடுகளில் வாழ்ந்து வந்தாலும், ஈரான் நாட்டில்தான் மிகப் பெரும்பான்மையாக வாழ்கின்றனர்.

**ஈதுல் பிதிர், ஈதுச்சுகா (Id-ul-Fitr, Id-uz-Zuha)** உலகெங்கிலுமுள்ள இசுலாமியர் ஆண்டுதோறும் இரண்டு திருவிழாக்களைச் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர். அதில் ஒன்று இரம்சான் அல்லது ஈதுல் பிதிர். இரமலான் (இரம்சான்) மாதத்தில்தான் உசுலாமியர் உண்ணாநோன்பு நோற்கின்றனர். அந்த மாதத்தில்தான் முதல் முதலாகத் திருக்குரான் அருளப்பட்டது. அந்த மாத இறுதியில் உண்ணாநோன்பின் முடிவாக, அதற்கு அடுத்தமாதமாகிய சவ்வால் (Shawwal) மாதத்தின் முதல் நாளன்று ஈதுல்பிதிர் கொண்டாடப்படுகிறது. பொதுவாக, இசுலாமியர் இம்மாதத்தில் சக்காத்துக் கொடுப்பதால் இந்நாளைத் தமிழக இசுலாமியர் ஈகைத்திருநாளென்று குறிப்பிடுகின்றனர்.

மற்றொன்று பக்ரீத்து அல்லது ஈதுச்சுகா. இது இசுலாமிய ஆண்டின் இறுதிமாதமான சுல்கச்சு (Zul Haj) மாதத்தின் ஒன்பதாம் நாள் கொண்டாடப்படுகிறது. இந்த மாதத்தில்தான் இசுலாமியரால் கச்சுப் புனிதப் பயணம் மேற்கொள்ளப்படுகிறது. மேற்கு ஆசியாவில் வாழும் செமிட்டிக்கு (Semitic) இனமக்களின்குலபதியாகக் கருதப்படும் இபுராகீம் தம் மகனான இசுமாயில் (Ismail) என்பவரை இறைவனுக்காகத் தியாகம் செய்ய முனைந்ததை நினைவு கூர்கிறது இந்நாள். எனவே, தமிழக இசுலாமியர் இத்திருநாளைத் தியாகத் திருநாளென்று குறிப்பிடுகின்றனர். இபுராகீமால் முதல் முதலாக இறைவனுக்காகக் கட்டப்பட்ட இல்லம்தான், மெக்கா நகரிலுள்ள காபா என்னும் சதுரவடிவமுள்ள ஒரு கட்டடம். கச்சுப் புனிதப்பயணம் மேற்கொள்வோர் இக்கட்டடத்தைச் சுற்றி வருவது சிறப்பான ஒரு சடங்கு. இசுலாம் சமயத்தில், இசுலாத்தின் தோற்றத்திற்கு முன் வாழ்ந்த சமயத் தலைவர்களான இபுராகீம் (Ibrahim), மோசசு (Moses), கிறித்து முதலியோர்களும் போற்றப்படுவது குறிப்பிடத்தக்கது. இசுலாம் சமயம், அப்பெரியோர்களின் போதனைகளை மீண்டும் வலியுறுத்தவே தோன்றியது என்பது திருக்குரானின் கூற்று.

**சரியத்து அல்லது சட்டதிட்டங்கள்:** இசுலாமிய மக்கள் குரானின் கூற்றையும், முகமது நபி காட்டிய வழியையும், அவர் கூறிய அறிவுரைகளையும் ஏற்று நடந்து வந்தாலும், பல பெரிய சமயத் தலைவர்கள் தோன்றிச் சில சட்டதிட்டங்களை உருவாக்கினர். இச்சட்டதிட்டங்களை இசுலாமிய மக்கள் சரியத்து (Shariat) என்று சொல்கின்றனர். அவ்வாறு தோன்றிய சமயத் தலைவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் அல்சாபி (Al-Shabi A.H. 150-204), அபு அனிபா

(Abu Hanifa A.H. 150), மாலிக்-இபின்-அனாசு (Malikibn-Anas A.H. 179), அகமது பின் அன்பால் (Ahmed bin Hanbal A.H. 241) ஆகியோராவர். சாபியின் கோட்பாடுகளைப் பின்பற்றுபவர்கள் சாபிகள் என்றும், அனிபாவைப் பின்பற்றுபவர்கள் அனபிகளென்றும், மாலிக்கின் கோட்பாடுகளை ஏற்றுக் கொள்பவர்கள் மாலிக்கிகள் என்றும், அன்பாலின் ஆதரவாளர்கள் அன்பாலிகளென்றும் அழைக்கப்படுகின்றனர்.

சூபிகள் (Sufis) அல்லது இறை அன்பர்கள்: சட்டதிட்டங்களை உருவாக்கிய பெரும் தலைவர்களைப் போன்று, ஆன்மிகத் துறையிலும் பல தலைவர்கள் தோன்றி மக்களிடம் இறை ஒருமைப்பாட்டையும், இறை நம்பிக்கையையும் ஆழமாக வேரூன்றச் செய்தனர். உயர்ந்த எண்ணங்களுடைய எளிய வாழ்வின் சிறப்பை எடுத்துக் கூறினர்; தாங்களும் வாழ்ந்துகாட்டினர். 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' என்ற உயர்ந்த கோட்பாட்டை வலியுறுத்தினர். இசுலாமியர்பால் காணப்பட்ட பொருளற்ற சடங்குகளைச் சாடினர். அவர்களின் வாழ்க்கை சமயக் கட்டுப்பாடுகளுக்கு அப்பாற்பட்டதாக அமைந்திருந்தது. அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் அல் கசாலி (Ai-Gazzali), உரூமி (Rumi), கவுதுல் ஆலம் அப்துல் காதர் சீலானி (Ghaud-ul-Alam Abdul Khadar Jilani) முதலியோர். இவர்கள் சூபிகள் என்று சொல்லப்பட்டனர். சுபா (Suba) என்பதற்கு அரபுமொழியில் கம்பளி உடை என்பது பொருள். இவர்கள் கம்பளி உடைகளை அணிந்திருந்ததால் சூபிகள் என்று குறிக்கப்பட்டனர். இந்த இறை அன்பர்கள் இசுலாம் சமயம் பரவுவதற்குக் காரணமாகவும் இருந்தனர்.

உமையது கலீபாக்களின் ஆட்சி (கி.பி. 661-750): உமையதுகள் (Umayats) உமையா என்பவரின் வழித்தோன்றல்கள். இவர்களுள் முதலாவதாகக் குறிப்பிடத்தக்கவர் கலீபா முசுவியா. இவரது காலத்தில் இசுலாமிய அரசு வலுப்பெற்று மேலும் பரவியது. பின்பு அப்துல்மாலிக்கு, அல்வலீத்து ஆகிய கலீபாக்களின் காலத்தில் இசுலாமியப் படைகள் இந்தியாவிலும் காலடி வைத்தன; மத்திய ஆசியாவில் பல பகுதிகளையும் கைப்பற்றின. ஆப்பிரிக்காவில் பல பகுதிகளையும் கைப்பற்றி, அந்நாட்டின் வடபகுதி வழியாக இசுபெயின் (Spain) நாட்டிலும் நுழைந்தன. அங்குப் பல பகுதிகளைக் கைப்பற்றி இவர்கள் ஆட்சி செய்தனர். தமாசுகசு (Damascus) இவர்களின் தலைநகராக இருந்தது. முதல் முதலாக இசுலாமியருக்கு உமையதுகள் காலத்தில்தான் மேலை நாடுகளுடன் கலை, பண்பாட்டு உறவுகளில் நெருக்கம் ஏற்பட்டது. உமையது கலீபாக்களின் ஆட்சியில் கட்டப்பட்ட கட்டடங்களுள் குறிப்பிடத்தக்கது அப்துல்மாலிக்கு (Abdul Malik) எருசலத்தில் கட்டிய மசூதியாகும் (The Dome of the Rock, Jerusalem).

இசுபெயின் நாட்டில் உமையது மரபினர் ஆட்சி: உமையது மரபைச் சேர்ந்த முதலாம் அப்துல்ரகுமான் என்பவர், கி.பி. 765-ஆம் ஆண்டு இசுபெயின் நாட்டைக் கலீபாக்களின் ஆட்சிக்கு உட்படாத தனி நாடு என்று அறிவித்து, அந்நாட்டிற்குத் தம்மை அமீர் அல்லது தலைவர் என்று கூறிக்கொண்டார். இவர் சார்லிமேன் என்ற சிறப்புமிக்க பிரான்சு நாட்டு அரசரை வென்று பிரான்சை நோக்கித் தம் படைகளை அனுப்பினார். இவருக்குப்பின் குறிப்பிடத்தக்க அரசர் மூன்றாம் அப்துல் ரகுமான். இசுபெயினில் வாழ்ந்த இசுலாமியர் மூர்கள் என்று கூறப்பட்டனர். இவர்களின் ஆட்சியின்போது கார்டோவா, அல்காம்ரா (Cordova, Alhambra) போன்ற இடங்களில் கவின்மிகு கட்டடங்களும், மசூதிகளும் கட்டப்பட்டன. இவர்களுக்குக் கார்டோவாவே தலைநகராக இருந்தது. அங்கு மூன்றாம் அப்துல் ரகுமானால் கட்டப்பட்ட அல் சகரா (Al Zahara) என்ற அழகு மாளிகை, இசுபெயின் நாட்டில் இசுலாமியக் கட்டடக் கலையின் சிகரமாகக் கருதப்படுகிறது. இசுபெயினில் வாழ்ந்த இசுலாமியருக்கு மேல்நாட்டுக்கலை, அறிவியல், தத்துவம் முதலியவற்றுடன் தொடர்பு ஏற்பட்டது. அத்தாக்கத்தின்விளைவாகப் பலதத்துவ மேதைகளும், அறிவியல் வல்லுநர்களும் தோன்றினர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் இபின் இரசீத்து (Ibn Rashid), இபின் சின்னா (Ibn Sinna) முதலியோர்.

அப்பாசிய கலீபாக்கள் (750-1258): இவர்கள் அப்பாசு (Abbas) என்பவரின் வழித்தோன்றல்கள். இவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் அல்மன்சூர், காரூன்-அல்-ரசீத்து, அல் முதவக்கீல் முதலியோர். அப்பாசியப் பேரரசின் தலைநகராக இருந்தது பகுதாது (Bhagdad). இது ஈராக்கிலுள்ள தைகிரிசு (Tigris) நதிக்கரையில் அமைந்த உலகப் புகழ்பெற்ற நகரம். அப்பாசிகளின் காலத்தில் இசுலாமியக் கவின் கலைகளும், அறிவியல்களும் உச்சக் கட்டத்தை அடைந்தன. இசுலாமியர் கிரேக்கத் தத்துவங்களையும் அறிவியல் நுட்பங்களையும் கற்று, அவைகளை மேலும் வளர்த்தனர். கிரேக்க நூல்கள் அராபிய, பாரசீக மொழிகளில் எழுதப்பட்டன. கலீபா மன்சூர் காலத்தில், அரிசுடாட்டில், பிளாட்டோ போன்ற தத்துவ மேதைகளின் நூல்களும், கேலன் (Galen), இப்போகிரீட்டசு (Hippocrates) ஆகிய மருத்துவ நிபுணர்களின் நூல்களும் மொழிபெயர்க்கப்பட்டன. தத்துவ மேதைகள் அல்கிந்தி (Al Kindi), அலபராபி (Al-Farabi), மருத்துவ மேதை அல்ராகி, கணித மேதை அல்குவாரிசாமி (Al-Kwarizami), வேதியல் மேதை சமீர்-பின்-கயான், புவிஇயல் மேதை அல்

யாக்கூபி, வரலாற்று வல்லுநர்கள் அல்மசூதி முதலியோர் அப்பாசிகளின் ஆட்சிக் காலத்தில் சிறப்புற்றிருந்தனர்.

**அப்பாசிய கலீபாக்களின் வீழ்ச்சி:** அப்பாசிய கலீபாக்களின் ஆட்சி கி.பி. 1258-ஆம் ஆண்டு, அவர்களின் தலைநகர் பாக்தாது மங்கோலியர்களால் பிடிக்கப்பட்டுக் கலீபா கொல்லப்பட்டதுடன் முடிவடைந்தது. அவர்களின் ஆட்சிக்கு உட்பட்ட பகுதிகளில் பல புதிய மரபினர் ஆட்சி செய்யத் தொடங்கினர். இப்புதிய மரபினருள் பாரசீகத்தில் சிராசு (Shiraj) பகுதியில் ஆட்சிசெய்த புவாகிதுகளும் (Buwayhids), ஆப்பிரிக்காவின் வடபகுதியில் ஆட்சிசெய்த பாத்திமீது (Fatimids) களும், பாரசீகத்தின் கிழக்குப் பகுதியில் ஆட்சி செய்த சாம்னிதுகளும், பொக்காரா பகுதியில் ஆட்சிபுரிந்த செல்சுக்குத் துருக்கர்களும் குறிப்பிடத்தக்கவர்கள். இவ்வாறு, பல இடங்களிலும் ஆட்சி செய்த பல மரபினரின் ஆட்சியின்போதும் அறிஞர் பலர் சிறப்புற்றனர். எடுத்துக்காட்டாக, அல்பெருனி என்ற கணிதமேதையும், வரலாற்று ஆசிரியரும் சாம்னீது ஆட்சிக்காலத்தில் வாழ்ந்தனர். பாத்திமீதுகள் காலத்தில்தான் கெய்ரோ நகரம் உருவாக்கப்பட்டது. உலகப் புகழ்பெற்ற அல்லசார் (Al-Azhar) மசூதி கட்டப்பட்டது. செல்சுக்குச் சுல்தான் மாலிக்சா (Maliksha) வின் காலத்தில் வாழ்ந்தவர்தான் கணிதமேதையும் தத்துவக் கவிஞருமான உமர்கையாம்.

இந்தியாவிலும் கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் துருக்க இனத்தைச் சேர்ந்தவர்கள் ஆட்சியைக் கைப்பற்றினர். முகமதுகோரியின் படைத்தலைவரான குத்புதீன், கி.பி. 1206-ஆம் ஆண்டு தில்லிச்சுல்தானியத்தை நிறுவினார். தில்லிச் சுல்தான்கள் காலத்தில் கட்டப்பட்டதுதான் குதுப் மினார். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் அலாவுதீன் கில்சி (Allauddin Khilji), முகமதுபின் துக்ளக்கு முதலியோர். இவர்களின் ஆட்சி கி.பி. 1526 வரை நீடித்தது. அதன்பின்னர் மொகலாயர்கள் ஆட்சியைக் கைப்பற்றி, கி.பி. 1857-ஆம் ஆண்டுவரை ஆட்சி செய்தனர். மொகலாய மன்னர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள்அக்பரும் அவர் பேரர் சாசகானுமாவார்கள். அக்பர் பதேபூர்சிக்ரி என்ற அழகான நகரத்தை உருவாக்கி அதைத் தமது தலைநகராக்கிக் கொண்டார். சாசகான் (Shajahan) உலகப் புகழ் பெற்ற



மெக்கா மசூதியில் புனித கபா கட்டடம்

தாசுமகாலைக் (TajMahal) கட்டினார். இந்தியாவி லுள்ள தக்காணப் பகுதியிலும் பாமினிச் சுல்தான்கள் ஆட்சி செய்தனர். இந்தியாவில் பரவிய இசுலாம் இந்தியாவோடு நிற்கவில்லை. வாணிகத்திற்காகக் குசராத்து முதலிய பகுதிகளிலிருந்து கிழக்கு ஆசிய நாடுகளான மலாக்கா, சாவா (Java), சுமித்திரா, போர்னியோ, சரவக்கு (Saravak) முதலிய இடங்களுக்குச் சென்ற இசுலாமியர் அங்குள்ள பெண்களை மணந்தனர். அங்கு வாழ்ந்த சில அரசர்கள் இசுலாம் சமயத்தைத் தழுவினர். அரசர் எவ்வழி மக்கள் அவ் வழி என்று அங்குள்ள மக்களும் இசுலாம் சமயத்தைத் தழுவத் தொடங்கினர். இன்றும் அப்பகுதிகளில் இசு லாமியர் பெரும்பான்மையினராக வாழ்கின்றனர்.

**உதுமானியத் துருக்கியர்கள்:** கி.பி.பதினான்காம் நூற்றாண்டின் தொடக்கத்தில் துருக்கிய இனத்தைச் சேர்ந்த உதுமான் என்பவர் தோன்றி, மத்திய ஆசியாவில் பல பகுதிகளைக் கைப்பற்றித் தமது ஆட்சியை நிலை நிறுத்தினார். இவர்தம் வழித் தோன்றல்கள் உதுமானியத் துருக்கர்களென்று சொல்லப்படுகின்றனர். உதுமானிய அரசர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் முகமது, சலீம், சுலைமான் முதலியோர். இவர்கள் இசுத்தான்பூல்(Istanbul)என்ற இடத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த னர். இவர்கள் ஆட்சியின் உச்சக்கட்டத்தில் இவர் களது பேரரசு, ஆப்பிரிக்காவின் வடபகுதி, ஆசியா மைனர், அங்கேரி, பால்கன் பகுதிகள், கிரீசு, உரோட்டுத்தீவு முதலிய பகுதிகளில் பரவிக் கிடந் தது. கி.பி. பதினேழாம் நூற்றாண்டு முதல் இவர்க ளது ஆட்சி நலிவடையத் தொடங்கி, ஐரோப்பாவின் 'நோயாளி' என்ற நிலை ஏற்பட்டு, படிப்படியாக ஐரோப்பியர்களின் ஆட்சிக்கு உட்பட்டு 1924-ஆம் ஆண்டு வரை நீடித்தது.

**பத்தொன்பது இருபதாம் நூற்றாண்டுகளில் இசு லாமிய உலகம்:** கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் அரசியல் ஆன்மிக அடிப்படையில் பல புதிய கோட் பாடுகள் உருவாயின. அக்கோட்பாடுகளைப் பின் பற்றியவர்கள் நாளடைவில் தனிப் பிரிவினர்களாக மாறிவிட்டனர். பாரசீகத்தில் பகாவுல்லா (Bahaullah கி.பி.1817-92) என்பவர், இசுலாம் சமயத்தினின்றும் மாறுபட்ட ஓர் உலக சமயத்தை உருவாக்க நினைத் தார். அவரைப் பின்பற்றியவர்கள் பகாய்கள் என்று சொல்லப்படுகின்றனர். இந்தியாவில் பஞ்சாபு மாநிலத்தில் குலாம் அகமது என்ற ஒருவர் தம்மை இறைவனின் மறு உருவம் என்று கூறிக்கொண்டு தம் தத்துவங்களை அறிவுறுத்தினார். இவரைப் பின்பற்றி யவர்கள் அகமதியர்கள் என்று சொல்லப்படுகின்ற னர். ஆப்பிரிக்காவில் சூடான் பகுதியில் முகமது அகமது என்பவர் தம்மை இசுலாத்தின் காவலரென் றும், இறையருள் பெற்றவரென்றும் கூறினார். மேலும், தாம் இறவா வரம் பெற்றவர், அல்லது மகதி என்றும் கூறிக்கொண்டார். இவர் ஆதரவாளர் கள் மகதிகள் என்று சொல்லப்பட்டனர். அரேபியா வில் அப்துல்வகாபு என்பவர் தோன்றித் தாம் இசுலாம் சமயத்தைத் தூய்மைப்படுத்துவதாகக் கூறினார். எந்தச் சமயத்தின் அல்லது பண்பாட்டின் தாக்குதல்களும் இசுலாத்தில் இருக்கக் கூடாது என்று கூறினார். எந்தப் புதிய அல்லது சீர்திருத்தக் கருத்துகளையும் ஏற்றுக்கொள்ள மறுத்தார். இவர் ஆதரவாளர்கள் வகாபிகள் என்று குறிக்கப்படு கின்றனர். இவர்தம் நெருங்கிய உறவினரான இபுன் சவூத்து என்பவர், அரேபியாவின் ஆட்சியைக் கைப் பற்றினார். இவர்கள் இசுலாமிய சமாதிகள் பல வற்றைத் தகர்த்தெறிந்தனர். அவ்வாறு சமாதிகள் கட்டுவது இசுலாமியக் கோட்பாடுகளுக்கு ஒவ்வாதது என்று கூறினர்.

இரண்டு உலகப் போர்களுக்குப் பின் உது மானியப் பேரரசு மறைந்து பல இசுலாமிய நாடுகள் தோன்றின. எகிப்து, இலிபியா, ஈரான், ஈராக்கு, சிரியா, சோர்டான், இலெபனான் முதலிய நாடுகள் தனித்து இயங்கத் தொடங்கின. அரேபியர்கள் வாழ்ந்து வந்த பாலசுதீனப் பகுதியிலிருந்து அவர் கள் வெளியேற்றப்பட்டனர். இசுரேல் நாடு அங்கே உருவாக்கப்பட்டது. இப்பகுதியை விட்டு வெளி யேறிய அராபியர்களுக்கும் இசுரேலியர்களுக்கு மிடையே நீங்காத பகை ஏற்பட்டது. இந்தியத் துணைக் கண்டத்தில் பாகிசுத்தானும், வங்க தேச மும் சமய அடிப்படையில் தோன்றின. இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அரபு நாடுகளில் பெட் ரோல் எண்ணெய் மிகுதியாகக் கண்டுபிடிக்கப்பட்டு அங்கெல்லாம் பொருளாதார விழிப்பு ஏற்பட்டது.

அதேநேரத்தில் சில சீர்திருத்தவாதிகள் தோன்றி இசுலாமியப் பேரரசுகள் விரைவாக வீழ்ந்ததற்கும் இசுலாம் நலிவுற்றதற்கும் காரணங்களை ஆராய முற் பட்டனர். இசுலாமிய நாடுகள் ஐரோப்பியர்களுக்கு அடிமைப்பட்டிருப்பதைக் கண்டு உள்ளம் வெதும் பினர். இசுலாம் நலிவடையக் காரணம் சில மூட நம்பிக்கைகளும் பிற்போக்கு எண்ணங்களுமே என் பதை உணர்ந்தனர். குரான், சரியத்து முதலியவை களுக்கு இக்காலத் தேவைகளுக்கு ஏற்றாற் போல விளக்கமளிக்க வேண்டுமென்று கூறினர். இந்தியாவில் சர் சையது அகமதுகான், இக்பால், அமீர் அலி முதலியோர் குரான், அதீசு, சரியத்து முதலியவற்றிற்குக் காலத்திற்கேற்ப விளக்கம் கொடுத்தனர். இசுலாமிய மக்கள் மேலைநாட்டுக் கல்வி கற்று அறிவியல்களில் சிறப்புற வேண்டு மென்று கூறினர். இந்திய இசுலாமியர்களுக்காக

அலிகார் பல்கலைக்கழகம் தொடங்கப்பட்டது. அதே போல் துருக்கியில் கமால் பாசா (Kamal Pasha) தோன்றி மூடப்பழக்க வழக்கங்களைத் துருக்கியை விட்டுத் துரத்தினார். இன்று உலகெங்குமுள்ள இசுலாமிய நாடுகளில் முற்போக்குக் கருத்துகள் பரவி வருகின்றன. பாகிசுத்தானில் முகமது அசுராபு (Muhammed Ashraf) என்பவர், 'இசுலாமிய இலக்கியம்' (The Islamic Literature) என்ற இதழைத் தொடங்கி அதன்மூலம் புதிய கருத்துகளை மக்களிடம் பரப்பி வருகிறார். இந்தியாவில் இசுலாமியக் கல்விக்கழகம் (Muslim Educational Society) அப்பணியைச் செய்கிறது. 'இக்கால உலகில் இசுலாம், (Islam in the Modern World) என்ற இதழும் இம் மக்களிடையே முற்போக்குக் கருத்துகளைப் பரப்பி வருகிறது. மு.அ.ர.

துணை நூல்கள்:

**Ameer Ali,. Syed, The Spirit of Islam, London, 1922.**

**Alfred Guillaume, Islam, Pelican , 1954.**

**Hitti P.K., History of the Arabs, London, 1946.**

**Muir.W., The Caliphate, its Rise, Decline and Fall, Edinburgh, 1924.**

**இசுலாம்கான் லோடி** தில்லிச் சுல்தானிய அரச மரபுகளுள் ஒன்றான உலோடி மரபினைச் சார்ந்தவர். உலோடிகள் ஆப்கானியர்கள். தில்லியில் அரசோச்சுவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன் இவர்கள், இந்தியாவில் இலம்கான் (Lamghan), மூல்தான் போன்ற வடமேற்கு இந்தியப் பகுதிகளில் தோராயமாகக் கி.பி. 970-இல் குடியேற்றங்களை அமைத்திருந்தனர். அடிமை மரபைச் சார்ந்த பால்பனின் ஆட்சிக் காலத்தில் உலோடிகள் அவரிடம் பணிபுரிந்தனர். இந்தியாவில் உலோடி மரபை நிலைநாட்டக் காரணமாயிருந்த மலிக் சாகு (Malik Shahu) என்பார், மூல்தானின்மீது படையெடுத்து அதன் ஆளுநரைக் கொன்றுவிட்டார். எனினும் முகமது பின் துக்ளக்கு எடுத்த உடனடி நடவடிக்கையால் அங்கு நிலையான ஆட்சியை அமைக்க முடியவில்லை. சாகுவின் வழித் தோன்றல்கள் இந்தியாவில் வாணிகம் செய்துவந்தார்கள். சாகுவின் பேரர்களுள் ஒருவரான மலிக்கு பக்ராம் (Malik Bahram). மூல்தானில் பிரோசு சாவின் ஆட்சிக் காலத் தொடக்கத்தில், அவருடைய ஆளுநரான மாலிக்கு மர்தான் தௌலத்து (Malik Mardhan Dhaulat)என்பாரிடம் பணிபுரிந்தார். பக்ராமின்மூத்த மகன், மலிக்கு சுல்தான் சா உலோடியிடமும் (Malik Sultan Shah Lodi) பின்னர்க் கிசிர்கான் (Khigrkhan) என்பாரிடமும் பணிபுரிந்தார். அவருக்காகச் செய்த போரில் பக்ராம், கிசிர்கானின் கடும் பகைவரான மல்லூ இக்பால்கான் என்பாரைப் போரில் கொன்றார். கிசிர்கானையே வரலாற்றில் இசுலாம் கான் உலோடி என்பர். இவரே பின்னர்ச் சர்கிந்தின் (Sirhind) ஆளுநராக நியமிக்கப்பட்டார். இவர் ஆட்சியே பின்னால் வந்த உலோடி மரபுக்கு அடிக்கல் நாட்டியது எனலாம்.

இசுலாம் கான், கோக்கர்களையும் மொகலாயர்களையும் வீரமாக எதிர்த்துப் போராடி முகமது சா (Muhammad Shah) வின் ஆட்சிக்காலத்தில் காலமானார். சாகும் முன்னர் அவர் தம் மருமகன் பகுலுல் லோடியை தமக்குப் பின்னர் அரசரென அறிவித்துவிட்டுக் காலமானார்.

**இசுலாம் சா செர்.** (கி.பி. 1545-1554) தில்லிச் சுல்தானாயிருந்த செர்சாவின் இரண்டாம் மகன். இவர் தம் தந்தைக்குப் பின்னர் அரசேற்று ஒன்பதரை ஆண்டுகள் ஆட்சி புரிந்தார். இவரது இயற்பெயர் சலால்கான். செர்சா இறந்தபொழுது இவர் இரேவா (Rewa) விலும், மூத்த மகனான ஏதில்கான் இராந்தம்பாரிலும் இருந்தனர். ஏதில்கான் முயற்சியும் சுறுசுறுப்பும் குன்றியிருந்த காரணத்தினால் முக்கியப் பிரபுக்கள் சேர்ந்து போரில் வல்லவரும் திறமை மிக்கவருமான சலால்கானை அரசாளும்படி வேண்டினர். இரேவாவிலிருந்து வரும் வழியில் காலிஞ்சரில் கி.பி. 1545-இல் இசுலாம் சா என்ற பட்டத்தோடு முடிசூட்டிக்கொண்ட சலால் கான், பின்னர்த் தலைநகரான ஆக்ராவினை அடைந்தார்.

ஏதில்கானோ இராந்தம்பாரிலேயே இருந்து கொண்டு இசுலாம் சாவின் ஆட்சியினை ஏற்க மறுத்தார். இதனால் சில பிரபுக்கள் உடன்பாடு செய்து வைக்க எண்ணி ஏதில்கானைத் தலைநகருக்கு அழைத்தனர். அவரைக் கொல்வதற்கு இசுலாம் சா திட்டமிட்டார். ஏதில்கான் தப்பித்து வெளியேறிவிட்டார். மேலும் பல முறை இசுலாம் சா தம் தமையனைச் சிறை பிடிக்க முயன்றார். இச் செயல்களால் பல பிரபுக்கள் இசுலாம் சாவுக்குப் பகையாக ஏதில்கானை ஆதரிக்கலாயினர். முடிவில் ஆக்ராவிற்கு அருகில் போர் நடைபெற்றது. இசுலாம் சா வெற்றி பெற்றார். ஏதில்கானும் அவரை ஆதரித்த பிரபுக்களும் தோல்வியுற்று ஓடினர். ஏதில்கான் பண்டேல்கண்டில் அடைக்கலம் பெற்றுச் சுவடு ஒன்றும் தெரியாமல் மறைந்து போனார்.

முக்கியப் பிரபுக்கள் சிலர் ஏதில்கானை ஆதரித்ததால் பெரும்பாலான பிரபுக்களின் மீது இசுலாம் சா ஐயமும் ஆத்திரமும் கொண்டார். இவர்

பிரபுக்களுள் ஒவ்வொருவரையும் பல்வேறு காரணங்களைச் சொல்லிச் சிறைப்படுத்தியும் போர்செய்தும் கொன்று தீர்த்தார். செர்சாவின் நிதானக் கொள்கையானது பிரபுக்களைப் பொறுத்தவரையில் கைவிடப்பட்டது. ஏராளமான பிரபுக்கள் மரண தண்டனை அடைந்தனர். இதனால் இவரைக் கொல்வதற்குக் கூட இரண்டு மூன்று முறை அவர்கள் திட்டங்கள் தீட்டினர். அவை தோல்வியில் முடிந்தன. இசுலாம்-சா கி.பி. 1554 நவம்பர் 22-இல் இயற்கை மரணம் எய்தினார்.

தமது தந்தையைப் போலவே இசுலாம்-சா சிறந்த ஆட்சித் திறனைப் பெற்றவராகத் திகழ்ந்தார். அரசரது உயர் நிலையும் அதிகாரமும் கண்ணியமும் இவரால் நன்கு பேணப்பட்டன. பொதுப்பணியிலும் இவர் சிறந்து விளங்கினார் என்று அக்கால நூலாசிரியர் எழுதி இருக்கின்றனர். பயணிகளின் நலனைக் கருதிச் சாலை ஓரங்களில் பல விடுதிகளும் மசூதிகளும் கட்டப்பட்டன. பயணிகளுக்கு இலவச உணவுக்கும் இவரால் ஏற்பாடு செய்யப்பட்டது. எனவே செர்சாவின் திறமையான ஆட்சியின் தொடர்ச்சியாக இசுலாம்-சாவின் ஆட்சியையும் குறிப்பிடுகின்றனர். இசுலாமிய சமயத்தின் வைதீகமான சுன்னிப் பிரிவைச் சேர்ந்தவராக இவர் இருந்தாலும், சமயப்பொறையோடு நடந்துகொண்டார். அரசு வேறு, சமயம் வேறு என இவர் கருதினார். பிரபுக்களிடத்தில் கடுமையாக நடந்து கொண்டது ஒன்றையே இவரது குறையாகக் கூற முடியும்.

**இசுலாம், சையது நசுருல்** பங்களா தேசத்தின் குடியரசுத் துணைத் தலைவராயிருந்தவர். கிழக்குப் பாகிசுத்தான் என்ற பெயரில் பாகிசுத்தான் நாட்டின் பகுதியாயிருந்த கிழக்கு வங்காளத்தில், சேக்கு முசுபுர் இரகிமான் என்பாரின் தலைமையில் அமைக்கப்பட்டிருந்த அவாமி லீகுக் கட்சி மாபெரும் வெற்றி பெற்றிருந்தபோதும், அதனை ஆளவொட்டாமல் பாகிசுத்தானின் குடியரசுத் தலைவரான யாகியா கான் தடுக்க முற்பட்டார். இதனை எதிர்க்க முசுபுர் ரகிமான் ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடங்கினார். பாகிசுத்தான் இவ்வியக்கத்தைக் கடுமையான இராணுவ நடவடிக்கைகள் மூலம் ஒடுக்க முயன்றது. அது போராக உருமாறியது. கிழக்கு வங்காள மக்கள் 1971-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 28 ஆம் நாள் வெற்றிபெற்றுப் பங்களாதேசம் என்னும் புது நாட்டை அமைத்துக் கொண்டவர். அப்போது குடியரசுத் தலைவராக இருந்தவர் சேக்கு முசுபுர் இரகிமான். அவருக்கு உறுதுணையாக இருந்த சையது நசுருல் இசுலாம் என்பார் குடியரசுத் துணைத் தலைவரானார். முசுபுர் இரகிமான் சிறையில் இருந்தபோது சையது நசுருல் இசுலாம் குடியரசுத் தலைவராகப் பொறுப்பேற்றார். சையது நசுருல் இசுலாம், அவாமிக் கட்சியின் தலைவரான தாசுதீன் அகமது என்பாரைத் தலைமை அமைச்சராகக் கொண்ட அறுவர் அமைச்சரவையை நியமித்தார்.

**இசுலாமாபாத்து** பாகிசுத்தான் நாட்டின் புதிய தலைநகர். இந்நகரம் வட பாகிசுத்தானத்தில் இமயமலை அடிவாரத்தில் அமைந்துள்ளது.

இசுலாமாபாத்து திட்டமிட்டுக் கட்டப்பெற்ற நகரங்களுள் ஒன்று. பாகிசுத்தானத்தின் தலைநகராக 1960-இல் இதனைக் கட்டினர். இக்காலக் கட்டடக் கலைப் பாணியையும் மரபுவழியாக வரும் இசுலாமியக் கட்டடக் கலைப் பாணியையும் இணைத்துப் பல கட்டடங்கள் இந்நகரில் கட்டப் பெற்றுள்ளன.

இந்நகரத்தை நான்கு நிருவாக வட்டாரங்களாகப் பிரித்துள்ளனர். அவை நிருவாக வட்டம், வெளிநாட்டுத் தூதரக வட்டம், வாணிக வட்டம், குடிமக்கள் வட்டம் எனப்படும்.

இசுலாமாபாத்தின் வடக்கிலுள்ள நிருவாக வட்டத்தில் பெரும்பாலும் அரசாங்க அலுவலகக் கட்டடங்களும், பண்பாட்டு மையங்களும் அமைந்துள்ளன. இங்குத்தேசியச் சட்டமன்றக் கட்டடமும், குடியரசுத் தலைவரின் மாளிகையும், மக்களின் திறந்தவெளிப் பல்கலைக் கழகமும் அமைக்கப்பட்டுள்ளன. இசுலாமாபாத்தின் வடமேற்கு மூலையில் அமைந்துள்ளது வெளிநாட்டுத் தூதரக வட்டம். இங்கு அயல்நாட்டுத் தூதுவர்களின் அலுவலகங்களும் தங்குமிடங்களும் காணப்படுகின்றன. வாணிக வட்டமே தலைநகரின் மையப் பகுதியாகும். குடிமக்கள் வட்டத்தை இரு பகுதிகளாகப் பிரிக்கலாம். ஒரு பகுதி வாணிக வட்டத்தின் வடபாலும், பிறிதொரு பகுதி தென்பாலும் அமைந்துள்ளது. குடிமக்கள் வட்டம் ஒவ்வொன்றும் சொந்த மாவட்ட வாணிகத்தையும் நலவாழ்வு மையத்தையும் பள்ளியையும் மசூதியையும் கொண்டுள்ளது.

இசுலாமாபாத்து மக்களுள் பெரும்பாலோர் அரசு ஊழியர்களே. அவரவர் தரத்திற்குத் தக்க வீடுகள் ஒதுக்கப்பட்டுள்ளன. எழுத்தர் போன்றோர் மொட்டை மாடி வீடுகளில் வாழ்கின்றனர். அத்தகைய வீடுகள் வரிசை வரிசையாகக் குடிமக்கள் வட்டத்தில் கட்டப்பட்டுள்ளன. உயர் பதவி வகிக்கும் அரசு அதிகாரிகள், மாளிகை போன்ற மனைகளில் பெரும்பரப்புள்ள நிலத்தில் அனைத்து வசதிகளுடனும் வாழ்கிறார்கள். அரசு ஊழியத்தில் இல்லாத மக்கள், இசுலாமாபாத்தில் வாழ்வது எளிதன்று.

வாடகைக்கு வீடுகள் கிடைப்பது அருமை. அத்தகையோர் அண்மையிலுள்ள இராவல்பிண்டி நகரில் வாழ்கிறார்கள்.

கராச்சியை 1959-இல் விட்டுவிட முடிவு செய்த பாகிசுத்தான் அரசு, இசுலாமாபாத்தைத் தலைநகரின் பொருட்டுக்கட்டத் தீர்மானித்தது. புதிய தலைநகருக்கான கட்டடப் பணிகள் 1961-இல் தொடங்கின. பாகிசுத்தானத்தின் பெரும்பாலான அரசு அலுவலகங்கள் 1969-க்குள் இசுலாமாபாத்திற்குக் கொண்டு செல்லப்பட்டன. இசுலாமாபாத்தின் மக்கள் தொகை 2,35,000 (1982).

**இசுலாமியக் கல்வி:** கல்விகற்பித்தல் ஒரு புனிதமான கடமையாகஇசுலாமியச் சமயத்தினரால் போற்றப்படுகிறது. கல்விக்கும் ஆசிரியருக்கும் இச்சமயத்தினரிடையே என்றைக்கும் சிறந்த மதிப்புண்டு. இசுலாமியப் பள்ளிகளில் பணிபுரிந்த ஆசிரியர்கள் சிறந்த அறிவும் நல்லொழுக்கமும் கொண்டவர்களாகவும் சமுதாயத்தினரின் நல்லெண்ணத்தைப் பெற்றவர்களாகவும் இருந்தனர். ஓரளவு வயதில் மூத்த மாணவர்கள், ஆசிரியருக்குத் துணையாக இருந்து பள்ளியில் புதிதாகச் சேர்ந்த மாணாக்கர்களுக்குக் கற்பித்து வந்தனர்.

இசுலாமிய மதம் இந்தியாவில் பரவி நிலைத்த பின்னர், சமயப் பணிக்காகப் பல பள்ளிவாசல்கள் (Mosques) நிறுவப்பட்டன. இவற்றுடன் பள்ளிகளும் இணைந்து செயற்பட்டன. இசுலாமியப் பள்ளிகள் இருவகைப்படும். மக்தாபுகள் (Maktabs) எனப்படும் தொடக்கப்பள்ளிகள், பள்ளிவாசல்களுடன் இணைந்து செயற்பட்டன. இவற்றின் தலைசிறந்த பணி, இசுலாமியப் புனித நூலான திருக்கொரானிலிருந்து நாள்தோறும் தொழுகைக்குத் தேவைப்படும் பகுதிகளை மாணாக்கர்க்குக் கற்பிப்பதாகும். அதனுடன் படிக்கவும் எழுதவும் கணக்குப் போடவும் இப்பள்ளிகளில் மாணாக்கர் பயிற்சி பெற்றனர். தனிப்பட்ட செல்வர்களின் இல்லங்களிலும் இத்தகைய சிறு தொடக்கப்பள்ளிகள் செயற்பட்டன.

மதரசாக்கள் (Madarasahs) எனப்படும் பள்ளிகள் உயர்கல்விக்கான பள்ளிகளாகக் கருதப்பட்டன. இவையும் பொதுவாகப் பள்ளிவாசல்களுடன் இணைந்தே செயற்பட்டன. இவற்றில் இலக்கணம், சொற்கோப்புக்கலை (Rhetoric), தருக்கம், தத்துவம், சட்டம், சமயவியல் (Theology), அறிவியல் போன்றவை கற்பிக்கப்பட்டன. பாரசீக மொழிதான் இப்பள்ளிகளில் பயிற்று மொழியாக விளங்கியது. அரபு மொழியினையும் இப்பள்ளி மாணாக்கர் கற்றனர். இசுலாமிய மன்னர்களின் காலத்தில் தில்லி, ஆசுமீர், ஆக்ரா போன்ற பல இடங்களில் பல கல்லூரிகள் சிறப்பாகப் பணியாற்றின.

இசுலாமியப் பள்ளிகள், தொடக்கத்தில் சிறுபான்மையினராகவிருந்த இசுலாமிய மக்களுக்கு மட்டுமே உதவி வந்தன. எனினும், காலம் செல்லச் செல்ல நாட்டின் பல்வேறு பிரிவினரின் குழந்தைகளும் இப்பள்ளிகளில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். சாதி வேறுபாட்டினைக் களைந்து இந்திய மக்களிடையே பண்பாட்டு ஒருமைப்பாட்டினை வளர்க்க இது உதவிற்று.

**துணை நூல்:**

சந்தானம், எசு., கல்வியின் தத்துவ, சமூக அடிப்படைகள், பழனியப்பா பிரதர்சு, சென்னை 1981.

**இசுலாமியச் சட்டம்:** மதக்கோட்பாட்டின்படி 'இசுலாம்' என்ற சொல்லுக்கு, ஆண்டவனின் ஆணைக்கு உட்படுத்துதல் என்பது பொருளாகும். உலகியல் சார்ந்த முறையில் அச்சொல், அமைதியை நிலைநாட்டுதல் என்று பொருள்படும். இசுலாம் (இஸ்லாம்) மதக் கோட்பாட்டைக் கடைப்பிடிப்பவர்களைத் தமிழில் முகமதியர்கள் என்று அழைப்பர். ஆண்டவன் ஒருவரே என்றும் அவருடைய தீர்க்கதரிசி முகமது நபிநாயகம் என்றும் நம்புபவன்தான் முகமதியன். அவன் பிறப்பினாலும் வேறு மதத்திலிருந்து முகமதிய மதத்துக்கு மாறியவனாகவுமிருக்கலாம்.

உலக மக்களுள் பலர் முகமதிய மதக் கோட்பாட்டைக் கடைப்பிடித்து வருகிறார்கள். இந்தியாவில் இந்து மதத்துக்கு அடுத்த நிலையில் எண்ணிக்கையளவில் இரண்டாம் பெரிய மதமாக முகமதிய மதம் திகழ்கிறது. முகமதிய மதத்தை உருவாக்கிய முகமது நபிநாயகம் அவர்கள், மெக்கா நகரில் கி. பி. 571-ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதம் 22-ஆம் நாளன்று தோன்றினார். (மற்றொரு கருத்துப்படி 29. 8. 570 என்று கூறப்படுகிறது). அவர் கி. பி. 632-ஆம் ஆண்டு சூன் மாதம் 8-ஆம் நாள் காலமெய்தினார். நபி நாயகம் அவர்கள், ஆபிரகாம் என்பவருக்கு அசரா (Hajarah) என்ற பெண் வழித் தோன்றிய மரபில் தோன்றியவர். அதே ஆபிரகாம் என்பவருக்குச் சாரா என்ற பெண்மணி மூலம் தோன்றிய மரபில் தோன்றியவர் இயேசுநாதர்.

நபிநாயகம் இரா (Hira) என்று அழைக்கப்பட்ட குகைக்குப் பல முறை சென்று தியானம் செய்யும் வழக்கத்தைக் கடைப்பிடித்து வந்தார். அப்போது அவருக்கு ஆண்டவனது நற்செய்திகள் காபிரியல் என்ற தேவதூதர் மூலம் கிடைத்ததாக முகமதியர்கள் நம்புகிறார்கள். அந்த நற்செய்திகளை நபிநாயகம் அவர்கள், அரேபிய நாட்டிலுள்ள மக்களிடம் அறிவித்தார்கள். அதற்கு நல்ல வரவேற்பு இருந்தது. நபிநாயகத்தைப் பின்பற்றுவதற்கு எண்ணிக்கையற்ற

மக்கள் முன்வந்தார்கள். அவர்களை ஒன்று திரட்டி மதமும் அரசியலும் சம்பந்தப்பட்ட அமைப்பாக நபிநாயகம் உருவாக்கினார். இவ்வாறு முகமதிய மதம் தோன்றியது.

காலப்போக்கில் இம்மதத்தில் பல உட்பிரிவுகள் தோன்றின. அவற்றுள் முதன்மையான பிரிவுகள் சுன்னி, சியா (Shiah) என்பனவாகும். தனக்கு வாரிசு எவரையும் நபிநாயகம் அவர்கள் நியமிக்க வில்லை. நபிநாயகத்தின் மறைவுக்குப்பின் அவர் மனைவியின் தகப்பனாரான அபுபக்கர் என்பவர் மதத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் முதலாம் கலீபா என்ற பதவியை ஏற்றார். நபி நாயகத்தின் சிறிய தந்தை மகனும், நபிநாயகத்தின் மகளைத் திருமணம் செய்தவருமான அலி என்ப வர் தாம், நபிநாயகத்தின் வாரிசாக நியமிக்கப்பட் டிருக்க வேண்டும் என்று ஒரு பிரிவினர் கருதினர். அலியை ஆதரித்தவர்கள் சியா வகுப்பினர் என்றும், அதற்கு மாறுபட்ட கருத்தைக் கொண்டவர்கள் சுன்னி வகுப்பினர் என்றும் அழைக்கப்பட்டனர். காலப்போக்கில் மேற்படி இரண்டு பிரிவுகளிலும் பல உட்பிரிவுகள் தோன்றின.

சுன்னி வகுப்பில் நான்கு முக்கியப் பிரிவுகள் உள் ளன. அவை அனாபி பிரிவு (Hanafi School), மாலிக்கி பிரிவு (Maliki School), சபி பிரிவு (Shafei School), அகமது பிரிவு (School of Ahmad Ibn Hanbal) எனப்படும்.

சியா வகுப்பில் மூன்று உட்பிரிவுகள் உள்ளன. அவை ஆத்னா ஆசாரியாசு (Athna Asharias), இசு மயிலியாசு (Ismailyas), சைடியாசு (Zaidyas) எனப் படும்.

சியா வகுப்பினர் பாரசீக நாட்டில் மட்டில் பெரும்பான்மையினராக இருக்கிறார்கள் என்றும், ஏனைய இடங்களில் உள்ள முகமதிய வகுப்பில் அவர்கள் சிறுபான்மையினராக இருக்கிறார்கள் என்றும் சொல்லப்படுகிறது. இந்தியாவில் உள்ள முகமதியர்களுள் பெரும்பான்மையினர் சுன்னிப் பிரிவை, அதிலும் அனாபி உட்பிரிவைச் சேர்ந்தவர் களாக இருக்கிறார்கள். இந்தியாவில் நடக்கும் வழக்குகளில் தொடர்புடைய முகமதியன் சுன்னி வகுப்பைச் சேர்ந்தவன் என்று அனுமானிக்கப்படு வான். அவன் சியா வகுப்பைச் சேர்ந்தவன் என்று கோரினால், அவன்தான் அதை மெய்ப்பிக்க வேண் டும். எனவே இக்கட்டுரையில் சுன்னிச் சட்டந் தான் முதன்மையாக விவரிக்கப்படுகிறது. உரிய இடங்களில் தேவைப்பட்டால் சியாச் சட்டமும் சொல்லப்படும்.

முகமதியச் சட்டத்துக்குத் (Mahomedan Law) திருக்குரான் ஏடிச அல்லது சுன்னா (Hadis or Sunna) இசுமா (Ijmaa), கியாசு (Qiyas), பத்வாசு (Fatawas), உர்பு என்ற பழக்க வழக்கம் (மரபியல் சட்டம்) ஆகியவை முக்கிய ஆதாரங்களாகும்.

திருக்குரான் எப்போது புத்தக வடிவில் உருவாக் கப்பட்டது என்பது குறித்து மாறுபட்ட கருத்துகள் நிலவுகின்றன. நபிநாயகம் உயிருடனிருக்கும்போதே அது புத்தக வடிவில் வந்து விட்டது என்பது ஒரு பிரிவினரின் கருத்து. நபி நாயகத்துக்குப் பின்னால் வந்த கலீபா என்ற மதத்தலைவர்கள் காலத்தில் அது புத்தக வடிவில் உருவாக்கப்பட்டது என்பது மற்றொரு கருத்து ஆகும். ஆனால் நபிநாயகத்துக்கு ஆண்டவன் அனுப்பிய நற்செய்திகள்தாம் திருக் குரானில் அடங்கியுள்ளன என்று எல்லா முகமதியர் களும் நம்புகிறார்கள். திருக்குரானில் மொத்தம் ஆறாயிரம் வாசகங்களிருக்கின்றன. அவற்றுள் இருநூறு வாசகங்கள் சட்டக் கோட்பாடுகள் சம்பந்தப்பட்டவை; 80 வாசகங்கள்தாம் ஒரு முகமதியனின் தனிப்பட்ட விவகாரங்கள் சம்பந்தப் பட்டவையாகும்.

ஏடிசு அல்லது சுன்னா என்பது, நபிநாயகம் சொன்னவை, நபிநாயகம் செய்தவை என்பது, நபி நாயகம் முன்னிலையில் அவர் ஒப்புதலுடன் பிறர் செய்தவை எனப் பொருள்படும். இவை முகமதிய சட் டத்துக்கு ஓர் ஆதாரமாகும். இசுமா என்பது, முகம திய, கற்றறிந்த பெரியவர்கள் ஒரு மனப்பட்டு ஒப்புக் கொண்ட கருத்தைக் குறிக்கும். கியாசு என்பது முதல் மூன்று மூல ஆதாரங்களிலிருந்து பாகுபாடு செய்து அடையும் முடிவு ஆகும்.

மேற்கூறிய நான்குதான் முக்கிய மூல ஆதாரங் களாகும். பத்வாசு என்பது நீதிபதிகளின் தீர்ப்புகள். அவை மூல ஆதாரம் என்று கருதப்படாவிட்டாலும் முகமதிய இனச் சட்டம் வளர்ச்சியடைவதற்கு அந் தத் தீர்ப்புகள் முக்கியக் காரணமாக இருந்தன. பத் வாசு என்பவை பேரரசர் அவுரங்கசீபு காலத்தில் தொகுக்கப்பட்டன.

உர்பு என்ற பழக்க வழக்கம் (மரபியல் சட்டம்) முக்கியப் பங்கு வகித்தது. ஆனால் 1937-ஆம் ஆண் டில் இயற்றப்பட்ட சாரியத்துச் சட்டத்தின் மூலம் (Shariat Act 1937) மரபியல் சட்டம் ஒதுக்கப்பட்டு விட்டது.

இந்திய முகமதியர்களைப் பொறுத்தமட்டிலும் சட்டங்களை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். 1. முகமதியர்களுக்குச் செல்லுபடியாகும் என்று தெளி வாகச் சொல்லப்பட்ட சட்டங்கள். அவற்றுள் முக்கி யமானது 1937-ஆம் ஆண்டில் பிறப்பிக்கப்பட்ட

சாரியத்துச் சட்டமாகும் முகமதியர்களின் திருமணம், மணவிலக்கு, பராமரிப்பு, காப்பாளர், தானம், அறக் கட்டளை, விவசாயநிலம் தவிர ஏனைய சொத்துகள் தொடர்பான வாரிசுரிமை, பெண்களின் தனிப்பட்ட சொத்துகள் தொடர்பான விவகாரங்கள் ஆகியவைபற் றிய முகமதிய இனச் சட்டம் செல்லுபடியாகும் என்று மேற்படி சாரியத்துச் சட்டத்தில் சொல்லப்பட்டுள் ளது. அதற்கு மாறுபட்ட மரபியல் சட்டம் செல்லாது என்று மேற்படி சாரியத்துச் சட்டத்தில் சொல்லப் பட்டுள்ளது. தமிழ்நாட்டில் 1949–ஆம் ஆண்டில் செய் யப்பட்ட திருத்தத்தின் மூலம் முகமதிய இனச் சட்ட மானது, தமிழ்நாட்டிலுள்ள விவசாய நிலம் தொடர் புடைய வாரிசுரிமைக்கும் செல்லத்தக்கதாகும். 2. அரசினால் இயற்றப்பட்ட சட்டங்களினால் தடை செய்யப்படாதிருக்கும் நிலையில் நீதி, நேர்மை, நல் மனச் சான்று (Justice, Equity and Good Conscience) ஆகியவற்றின் அடிப்படையில், சில விவகாரங்கள் தொடர்பாக, முகமதிய இனச்சட்டம் கடைப்பிடிக்கப் படுகிறது. எடுத்துக்காட்டாக, ஒரு சொத்தை வாங்கு வதிலுள்ள முன்னுரிமைத் (Right of Pre-Emption) தொடர்பாக முகமதியர்களுக்கு அவர்களது இனச் சட்டம் சில மாநிலங்களில் கடைப்பிடிக்கப்படுகிறது. வேறு சில மாநிலங்களில் அதற்கென்று தனிச் சட்ட மிருப்பதால், முகமதிய இனச்சட்டம் செல்லத்தக்கது அன்று. தமிழக உயர் நீதிமன்றம் மேற்படி முகமதிய னுக்குள்ள முன்னுரிமையை ஏற்றுக் கொள்ளாத தால், அந்த முன்னுரிமை குறித்துத் தமிழ்நாட்டில் முகமதிய இனச் சட்டம் செல்லத்தக்கது அன்று. 3. முகமதிய இனச் சட்டத்தில் குற்றவியல் சட்டமும், சாட்சிச் சட்டமும் இருந்தபோதிலும் அவை இந்திய முகமதியர்களுக்குச் செல்லத்தக்கன அல்ல. ஏனெனில் எல்லா இந்தியக் குடிமக்களுக்கும் பொதுவான இந் தியத் தண்டனைச் சட்டமும், இந்தியச் சாட்சிச் சட் டமும் இயற்றப்பட்டன. எனவே குற்றவியல், சாட் சியம் தொடர்பாக முகமதிய இனச்சட்டம் ஒதுக்கப் பட்டுள்ளது. இது மூன்றாம் வகையாகும்.

**வாரிசுரிமை (Law of Inheritance):** சுன்னிச்சட் டம்; ஒரு முகமதியன் உயிருடனிருக்கும் வரையில் அவனுடைய சொத்துகளில் அவனுடைய குடும்ப உறுப்பினர் எவருக்கும் பங்குரிமை கிடையாது. பிறப்பினால் சொத்துரிமை கிடைப்பது இந்துச் சட் டத்தில் தான் உண்டு. முகமதிய சட்டத்தில் பிறப் பினால் சொத்துரிமை கிடைப்பதில்லை. சொத் துடைய முகமதியன் காலமான பின்புதான் அவ னுடைய வாரிசுகளுக்கு சொத்துகளில் பங்கு கிடைக்கும். ஒரு முகமதியன் காலமானவுடன், அவ னது இறுதிச் சடங்குகள் செய்யச் செலவழித்தது, கடன்களை அடைத்தது, உயில்படி காரியங்கள் செய் தது போக மீதியுள்ள சொத்துகளைத்தான் வாரிசு முறைப்படி பிரித்துக் கொள்ளமுடியும்.

சுன்னி பிரிவிலுள்ள அனாபி உட்பிரிவினரின் சட்டப்படி, கீழ்க்காணும் மூன்று வகை வாரிசுகள் உள்ளார்கள். அவ்வாரிசுகள் பங்குதாரர்கள் (Sharers), எஞ்சியதைப் பெறுபவர்கள் (Residuaries), தூரத்து உறவினர்கள் (Distant Kindred) எனப்படுவர்.

பங்குதாரர்களுக்கு ஒரு குறிப்பிட்ட விகிதாச் சாரப்படி பங்கு கிடைக்கும். சில சூழ்நிலை யில் அப்பங்கு மாறக்கூடியது. சில சூழ்நிலையில் பங்குதாரர்களில் சிலர் எஞ்சியதைப் பெறுப வர்களாக மாறுவார்கள். பங்குதாரர்களுக்குப் பிரித்துக் கொடுத்தது போக மீதமுள்ள சொத்து எஞ்சியதைப் பெறுபவர்களுக்குப் பிரித்துக் கொடுக் கப்படும். பங்குதாரர் எவரும் இல்லாத நிலையில் காலமானவனின் சொத்து, எஞ்சியதைப் பெறுபவர் களுக்குப் பிரித்துக் கொடுக்கப்படும். எஞ்சியதைப் பெறுபவர்கள் எவருமில்லாத நிலையில் பங்குதாரர் களுக்குப் பிரித்துக் கொடுத்தது போக மீதம் ஏது மிருந்தால் அவ்வாறு மீதமானது பங்கு தாரர்களுக் குப் பிரித்துக் கொடுக்கப்படும். இதற்குத் 'திரும்புதல்' (Return) என்று பெயர். ஆனால் பங்குதாரர்களாக உள்ள கணவன் அல்லது மனைவிக்கு வேறு பங்கு தாரர், (அவர் தூரத்து உறவினராகவிருந்தாலும் கூட) இல்லாத நிலையில்தான் இவ்வாறு திரும்பிய பங்கு கிடைக்கும். பங்குதாரர்களும் எஞ்சியதைப் பெறுபவர்களும் இல்லாவிட்டால் தூரத்து உறவினர் களுக்குச் சொத்து பிரித்துக் கொடுக்கப்படும்.

**பங்குதாரர்கள்:** மொத்தம் 12 பங்குதாரர்கள் உள்ளார்கள். 1. காலமான சொத்துரிமையாளரின் தந்தை. காலமானவருக்குக் குழந்தையோ காலமானவரின் மகனின் குழந்தையோ (அக்குழந்தை எவ்வளவு தூரம் கீழ் வரிசையிலிருந்தாலும் அதாவது Child of a son how low so ever) இருந்தால், தந்தைக்கு 1/6 பங்கு கிடைக்கும். அவ்வாறான குழந்தைகள் இல்லாவிட்டால் எஞ்சியதைப் பெறுப வர் பட்டியலில் தந்தை சேர்க்கப்படுவார்.

**2. உண்மையான பாட்டனார் (True Grand Father).** காலமானவருக்கு ஆண் வழியில் மட்டும் மூதாதையராக இருப்பவர் அவ்வாறு அழைக்கப்படு வார். எவ்வளவு எட்டிய தொலைவில் மூதாதைய ராக இருந்தாலும் அப்பெயர் உண்டு. ஆனால் அந்த மூதாதையருக்கும் காலமானவருக்கும் நடுவில் எந்தப் பெண்ணும் இருக்கக்கூடாது. தந்தையின் தந்தை, அவர் தந்தை, அவர் தந்தை போன்றவர் கள் இந்த விளக்கத்தில் அடங்குவார்கள். அவ்வா றான ஆண் மூதாதையருக்கும் காலமானவருக்கும்

நடுவில் ஒரு பெண் இருந்தால், அவர் பொய்யான பாட்டனார் (False Grand Father) என்று அழைக்கப்படுவார். காலமானவருக்குத் தந்தை அல்லது நெருங்கிய உண்மையான பாட்டனார் இருந்தால் இவருக்குப் பங்கு கிடைக்காது. அதாவது காலமானவருக்குத் தந்தையிருந்தால் அத் தந்தையின் ஆண் வழி மூதாதையர் எவருக்கும் பங்கு கிடையாது. அதுபோல் தந்தையில்லாத நிலையில், அத்தந்தையின் தந்தை பங்குதாரர் ஆவார். அந்தத் தந்தையின் தந்தையான உண்மையான பாட்டனார் இருந்தால், அந்தப் பாட்டனாரின் தந்தைக்குப் பங்கு கிடைக்காது.

பங்குதாரர்களுக்கும் எஞ்சியதைப் பெறுபவர்களுக்கும் பங்கு பிரித்துக் கொடுப்பதில் இரண்டு முக்கியக் கோட்பாடுகள் கடைப்பிடிக்கப்படுகின்றன. எவன் ஒருவன் காலமானவனுக்கு மற்றொருவன் மூலம் உறவினனாக இருக்கிறானோ, அந்த மற்றவன் உயிருடனிருக்கும்போது அந்த உறவினனுக்குப் பங்கு கிடையாது. இது முதற் கோட்பாடு. நெருங்கிய இரத்த உறவினன் தூரத்து இரத்த உறவினனை ஒதுக்குவான் என்பது இரண்டாம் கோட்பாடு. உண்மையான பாட்டனார் தந்தை மூலம் உறவு ஆயினும், தந்தை பாட்டனாரைக் காட்டிலும் நெருங்கிய உறவு. எனவே தந்தையிருந்தால் உண்மையான பாட்டனாருக்குப் பங்கு கிடைக்காது. அதுபோல் மகனிருந்தால் மற்றொரு காலமான மகனின் மகனுக்குப் பங்கு கிடைக்காது. இந்து சட்டமாயிருந்தால் அந்த மகனின் மகன் அதாவது பேரன், காலமான மகனின் பிரதிநிதி என்ற முறையில் (On Principle of Representation) பங்கு கிடைக்கும். அந்தக் கோட்பாடு முகமதியச் சட்டத்தில் இல்லை.

அவ்வாறு தந்தையும் நெருங்கிய உண்மையான பாட்டனாரும் இல்லாத நிலையில் உண்மையான பாட்டனாருக்கு 1/6 பங்கு கிடைக்கும். ஆனால் காலமானவருக்குக் குழந்தையோ மகன் வழிக் குழந்தையோ (அக்குழந்தை எவ்வளவு கீழ்ப்படியிலிருந்தாலும் இருக்கலாம்) இருந்தால்தான், அந்த 1/6 பங்கு கிடைக்கும். அவ்வாறான குழந்தைகள் இல்லாவிட்டால், இந்தப் பாட்டனார் எஞ்சியதைப் பெறுபவர் பட்டியலுக்கு மாற்றப்படுவார். ஆனால், தந்தையோ நெருங்கிய உண்மையான பாட்டனாரோ இருந்தால் அதுவும் கிடைக்காது.

3. **கணவன்:** காலமானவளுக்குக் குழந்தையோ மகன் வழிக் குழந்தையோ (அக்குழந்தை எவ்வளவு கீழ்ப்படியிலிருந்தாலும் இருக்கலாம்) இருந்தால், காலமானவளின் கணவனுக்கு 1/4 பங்கு கிடைக்கும். அவ்வாறான குழந்தைகள் இல்லாவிட்டால் 1/2 பங்கு கிடைக்கும்.

4. **மனைவி:** காலமானவருக்குக் குழந்தையோ மகன் வழிக் குழந்தையோ (எவ்வளவு கீழ்ப்படியிலிருந்தாலும் இருக்கலாம்) இருந்தால், காலமானவரின் மனைவிக்கு 1/8 பங்கு கிடைக்கும். மேற் கூறிய குழந்தைகள் இல்லாவிட்டால் 1/4 பங்கு கிடைக்கும். ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியிருந்தால் எல்லா மனைவிகளும் சேர்ந்து கூட்டாகப் (1/8 அல்லது 1/4 பங்கை) பிரித்துக்கொள்ள வேண்டும்.

5. **தாய்:** காலமானவருக்குக் குழந்தையோ அல்லது மகன்வழிக் குழந்தையோ (எவ்வளவு கீழ்ப்படியிலிருந்தாலும் இருக்கலாம்) அல்லது இரண்டு இரண்டுக்கும் மேற்பட்ட சகோதரர்களோ அல்லது இரண்டு இரண்டுக்கும் மேற்பட்ட சகோதரிகளோ அல்லது ஒரு சகோதரனோ ஒரு சகோதரியோ இருக்கும் நிலையில், தாய்க்கு 1/6 பங்கு கிடைக்கும். (இங்குச் சகோதர சகோதரிகள் என்று குறிப்பிடும்போது அவர் ஒரே பெற்றோர் மூலமோ அல்லது தந்தை மூலம் மட்டிலுமோ அல்லது தாய் மூலம் மட்டிலுமோ உறவினராக இருக்கலாம்). அவ்வாறான குழந்தைகள் இல்லாவிட்டால் 1/3 பங்கு கிடைக்கும். அவ்வாறு குழந்தைகள் இல்லாத நிலையில் ஒரு சகோதரன் அல்லது ஒரு சகோதரி மட்டிலுமிருந்தால், அதே 1/3 பங்கு கிடைக்கும். ஆனால் ஒன்றுக்கு மேற்பட்ட சகோதரன் அல்லது சகோதரியிருந்தால் 1/6 பங்குதான் கிடைக்கும். மேலும் 1/3 பங்கு கிடைக்கக்கூடிய நிலையில் காலமானவரின் தந்தையோ மனைவி அல்லது கணவனோ இருந்தால், அந்தக் கணவன் அல்லது மனைவிக்குக் கொடுத்தது போக மீதியுள்ளதில் 1/3 பங்கு தாய்க்குக் கிடைக்கும்.

6. **உண்மையான பாட்டி:** இவள் காலமானவரின் மூதாதையர். ஆனால் இருவருக்கும் நடுவில் பொய்யான பாட்டனார் இருந்தால் இவள் பொய்யான பாட்டி என்று அழைக்கப்படுவாள். தந்தையின் தாய், தாயின் தாய், தந்தையின் தந்தையின் தாய், தாயின் தாயின் தாய் ஆகியோர் உண்மையான பாட்டிகளில் சிலர் ஆவார்கள். தாயின் தந்தையின் தாய் பொய்யான பாட்டிக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். இந்த உண்மையான பாட்டிக்கு 1/6 பங்கு கிடைக்கும். உண்மையான பாட்டி ஒன்றுக்கும் மேற்பட்டவர் இருந்தால், அவர்கள் எல்லோரும் மொத்தமாக 1/6 பங்கைப் பிரித்துக் கொள்ள வேண்டும். ஆனால் காலமானவருக்குத் தாயோ அல்லது தந்தையோ அல்லது தாய் அல்லது தந்தை வழி நெருங்கிய உண்மையான பாட்டியோ அல்லது இடைப்பட்ட உண்மையான பாட்டனாரோ (Intermediate True Grand Father) இருந்தால், இந்தப் பாட்டிக்கு எவ்விதப் பங்கும் கிடைக்காது.

7. மகள். காலமானவருக்கு மகனில்லாவிட்டால் காலமானவரின் மகளுக்கு 1/2 பங்கு கிடைக்கும். மகனில்லாத நிலையில் ஒன்றுக்கு மேற்பட்ட மகளிருந்தால் மகள் பலருக்கும் சேர்த்து 2/3 பங்கு கிடைக்கும். ஆனால் மகனிருந்தால், மகள் எஞ்சியதைப் பெறுபவர் பட்டியலுக்கு மாற்றப்படுவாள். (மகன் பங்குதாரர் பட்டியலில் கிடையாது. மகன் எஞ்சியதைப் பெறுபவர் பட்டியலில் உள்ளார். மகளும் அந்தப் பட்டியலுக்கு வந்தால் மகளைக் காட்டிலும் இரட்டிப்புப் பங்கு மகனுக்குக் கிடைக்கும்).

8. மகன் வழி மகள்: (எந்தக் கீழ்ப்படியிலிருந்தாலும் சரி. அந்த மகளுக்கும் காலமானவருக்கும் நடுவில் பெண்கள் இருக்கக் கூடாது. அதாவது ஆண் வழியில் தோன்றிய மகள்). காலமானவருக்கும் மகன், மகள், மேல்படியிலுள்ள மகனின் மகன், மேல் படியிலுள்ள மகனின் மகள், அல்லது சமமான நிலையிலுள்ள மகனின் மகன் இல்லாவிட்டால் 1/2 பங்கு மேற்படி மகன் வழி மகளுக்குக் கிடைக்கும். (எடுத்துக் காட்டாக மகனின் மகன், மகனின் மகனின் மகளைக் காட்டிலும் மேல் நிலையிலுள்ள மகனின் மகன் ஆவான்). ஒன்றுக்கு மேற்பட்ட அவ்வாறான வாரிசுகள் இருந்தால் அவர்கள் எல்லோருக்கும் சேர்ந்து 2/3 பங்கு கிடைக்கும். காலமானவருக்கு ஒரே மகள் அல்லது ஒரே மேல் நிலையிலுள்ள மகனின் மகள் இருந்து, ஆனால் மகனோ அல்லது உயர்நிலையிலுள்ள மகனின் மகளோ அல்லது சமஅளவில் உள்ள மகனின் மகனோ இல்லாதிருந்தால், மேற்படி மகள் அல்லது உயர்நிலையிலுள்ள மகனின் மகளுக்கு 1/2 பங்கும் வாரிசுதாரரான மகன் வழி மகளுக்கு 1/6 பங்கும் கிடைக்கும். ஒதுக்கக்கூடிய வாரிசு இல்லாத நிலையில், இந்த வாரிசும் சமஅளவில் உள்ள மகனின் மகனும் எஞ்சியதைப் பெறும் வாரிசாக மாறுகிறார்கள். மகள் நெருங்கிய உறவினர் என்றாலும் ஒரு மகனின் மகளை ஒதுக்குவதில்லை. ஆனால் மகள் இருவர் இருந்தால் மகளின் மகள் ஒதுக்கப்படுவாள்.

9 &10. தாய் வழிச் சகோதரன் அல்லது சகோதரி: (Uterine Brother or Sister) காலமானவரும் இந்த வாரிசுதாரரும் ஒரே தாயின் பிள்ளைகள். ஆனால் இருவருக்கும் வெவ்வேறு தந்தை. இந்த வாரிசுதாரருக்கு 1/6 பங்கு கிடைக்கும். ஆனால் ஒன்றுக்கு மேற்பட்டவராக இருந்தால், அவர்கள் எல்லோருக்கும் சேர்ந்து மொத்தம் 1/3 பங்கு கிடைக்கும். ஆனால், காலமானவருக்குக் குழந்தையோ மகன் வழிக் குழந்தையோ (எவ்வளவு கீழ்ப்படியிலிருந்தாலும் இருக்கலாம்) தந்தையோ அல்லது உண்மையான பாட்டனாரோ இருந்தால் இந்த வாரிசுதாரர் ஒதுக்கப்பட்டு விடுவார். பங்கு ஏதும் கிடைக்காது. எஞ்சியதைக் கூடப் பெற மாட்டார்.

11. உடன் பிறந்த சகோதரி (Full Sister): காலமானவரும் இந்த வாரிசும் ஒரே பெற்றோரின் குழந்தைகள். 1/2 பங்கு கிடைக்கும். ஒருவருக்கு மேற்பட்டவராயிருந்தால் 2/3 பங்கு கிடைக்கும். ஆனால், காலமானவருக்குக் குழந்தையோ மகன் வழிக் குழந்தையோ(எவ்வளவு கீழ்ப்படியிலிருந்தாலும் இருக்கலாம்) தந்தையோ உண்மையான பாட்டனாரோ அல்லது உடன் பிறந்த சகோதரனோ இருந்தால் பங்கு கிடைக்காது. அவர்களில் உடன் பிறந்த சகோதரன் மட்டுமிருந்தால் அவனுடன் சேர்ந்து எஞ்சியதைப் பெறும் வாரிசாக மாறுவார்.

12. இரத்த உறவுச் சகோதரி (Consanguine Sister): இந்த வாரிசுதாரரும் காலமானவரும் ஒரே தந்தையின் குழந்தைகள். ஆனால் தாய்கள் வேறு. இவருக்கு 1/2 பங்கு கிடைக்கும். ஒன்றுக்கு மேற்பட்டவராக இருந்தால் 2/3 பங்கு கிடைக்கும். ஆனால் காலமானவருக்கு, குழந்தை, மகன் வழிக் குழந்தை (எவ்வளவு கீழ்ப்படியிலிருந்தாலும் இருக்கலாம்) தந்தை, உண்மையான பாட்டனார், உடன் பிறந்த சகோதரன், உடன்பிறந்த சகோதரி அல்லது இரத்த உறவுடைய சகோதரியிருந்தால் பங்கு கிடையாது. ஆனால், ஒரே ஒரு உடன்பிறந்த சகோதரி மட்டிலுமிருந்து அவளுக்குப் பங்கு கிடைக்கும் நிலையில், இந்த வாரிசுதாரருக்கு வேறு எந்தத் தடையுமில்லாத நிலையில் 1/6 பங்கு கிடைக்கும்.

எஞ்சியதைப் பெறுபவர் பட்டியல்: இந்தப் பட்டியலில் மொத்தம் 19 பேர் இருக்கிறார்கள். 1. மகன் மகள் மகனுடன் சேர்ந்து எஞ்சியதைப் பங்கு பிரிப்பாள். மகனுக்கு மகளைக் காட்டிலும் இரட்டிப்புப் பங்கு சேரும். 2. மகன் வழி மகன் (எவ்வளவு கீழ்ப்படியிலிருந்தாலும் இருக்கலாம்.) நெருங்கிய உறவினன் தூரத்து உறவினனை ஒதுக்குவான். சமநிலையிலுள்ள மகன் வழி மகன் இருவர், சமபங்கு பெறுவார்கள். மகன் வழி மகள், சம அளவிலுள்ள மகன் வழி மகனுடன் எஞ்சியதைப் பங்கு பிரித்துக் கொள்வாள். கீழ்நிலையிலுள்ள மகன் வழி மகனுடனும் சேர்ந்து பங்குதாரராக இல்லாத மகன் வழி மகள், எஞ்சியதைப் பங்கு பிரித்துக் கொள்வாள். ஆணுக்குப் பெண்ணைக் காட்டிலும் இரட்டிப்புப் பங்கு உண்டு. கீழ்ப்படியிலுள்ள மகனின் மகனுடன் சேர்ந்து மகன் வழி மகள், பங்கு பிரித்துக்கொள்ளும் நிலையில் அந்தக் கீழ் நிலையிலுள்ள மகனின் மகனுக்குச் சமமாக மகனின் மகளிருந்தால் அவர்கள் எல்லோருக்கும் சம உரிமை உண்டு. 3. தந்தை. 4. உண்மையான பாட்ட

னார் (நெருங்கிய உறவினர் தூரத்து உறவினரை ஒதுக்குவார்). 5. உடன் பிறந்த சகோதரர். உடன் பிறந்த சகோதரியுடன் சேர்ந்து எஞ்சியதைப் பிரித்துக் கொள்வர். ஆணுக்கு இரட்டைப் பங்கு. 6. உடன் பிறந்த சகோதரி. மேற்கூறிய வாரிசுகள் இல்லாத நிலையில் இவளுக்கு எஞ்சியது கிடைக்கும். ஆனால் மகள் அல்லது பெண்மக்கள், அல்லது மகன் வழி மகள் அல்லது மகன் வழிப் பெண்மக்கள் இருக்க வேண்டும். அல்லது ஒரு மகளும், ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட மகன் வழி மகளும் இருக்க வேண்டும். 7. இரத்த உறவுச் சகோதரர். 8. இரத்த உறவுச் சகோதரி. இவள் இரத்த உறவுச் சகோதரனுடன் சேர்ந்து எஞ்சியதைப் பங்கு பிரித்துக் கொள்வாள். அச்சகோதரனுக்கு இவளைக் காட்டிலும் இரட்டிப்புப் பங்கு கிடைக்கும். மேற்படி 1 முதல் 7 என்ற வாரிசுகள் இல்லாத நிலையில் இவளுக்கு எஞ்சியது கிடைக்கும். ஆனால் அதற்கு மகள் அல்லது பெண் மக்கள், மகன் வழி மகள் அல்லது பெண்மக்கள் இருக்க வேண்டும். ஒரு மகளாவது ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட மகன் வழி மகளாவது இருந்தாலும் போதும். 9. உடன் பிறந்த சகோதரரின் மகன். 10. இரத்த உறவுச் சகோதரனின் மகன். 11. உடன் பிறந்த சகோதரனின் மகனின் மகன். 12. இரத்த உறவுச் சகோதரனின் மகனின் மகன். 13. தந்தையின் உடன் பிறந்த சகோதரன். 14. தந்தையின் இரத்த உறவுச் சகோதரன். 15. தந்தையின் உடன்பிறந்த சகோதரனின் மகன். 16. தந்தையின் இரத்த உறவுச் சகோதரனின் மகன். 17. தந்தையின் உடன்பிறந்த சகோதரனின் மகனின் மகன். 18. தந்தையின் இரத்த உறவுச் சகோதரனின் மகனின் மகன். 19. தூரத்து உண்மையான பாட்டனாரின் ஆண் வாரிசுகள்.

ஏற்கனவே குறிப்பிட்டபடி எஞ்சிய உரிமையாளர்களில் நெருங்கிய உறவினன் தூரத்து உறவினனை ஒதுக்குவான். சில விதிவிலக்குகள் உண்டு. எடுத்துக்காட்டாக மகன், மகனின் மகனை ஒதுக்குவான். ஆனால் ஒரே மகளிருந்தால் அவள், மகனின் மகளை ஒதுக்குவதில்லை. தந்தை இருந்தால் அவர் சகோதர சகோதரிகள், தந்தையின் தந்தை ஆகியோரை ஒதுக்கி விடுவார். அவ்வாறு ஒதுக்கப்படுபவர்கள் எல்லாம் தந்தை மூலந்தான் காலமானவருக்கு உறவு. எனவே அவர்கள் அவ்வாறு ஒதுக்கப்படுகிறார்கள். ஒதுக்கப்படுபவரும் சில வேளைகளில் மற்றவரைப் பாதிப்பதுண்டு. எடுத்துக்காட்டாக, தந்தையிருந்தால் சகோதரிகளுக்குப் பங்கு கிடையாது. ஆனால் இரண்டு சகோதரிகளிருந்தால், தாய்க்கு 1/3-க்குப் பதிலாக 1/6 பங்குதான் கிடைக்கும்.

எஞ்சியதைப் பெறும் மேற்குறிப்பிடப்பெற்ற 19 வாரிசுகளும் வாரிசு முறைப்படி கீழ்க்காணும் நான்கு வகுப்புகளாகப் பிரிக்கப்பட்டுள்ளார்கள். 1. முதல் வகுப்பில் மகனும், மகனின் மகனும் இருக்கிறார்கள். இவர்கள் காலமானவரின் மரபு வழித் தோன்றல்கள். 2. இரண்டாம் வகுப்பில் தந்தையும் உண்மையான பாட்டனாருமிருக்கிறார்கள். இவர்கள் காலமானவரின் மூதாதையர்கள். 3. 5 முதல் 12 என்ற எஞ்சியதைப் பெறும் வாரிசுகள் 3-ஆம் வகுப்பிலிருக்கிறார்கள். இவர்கள் காலமானவரின் தந்தையின் மரபு வழித் தோன்றல்கள். 4. 13 முதல் 19 வரையுள்ளவர்கள் 4-ஆம் வகுப்பில் இருக்கிறார்கள். இவர்கள் எல்லோரும் உண்மையான பாட்டனாரின் மரபு வழித்தோன்றல்கள் ஆவார்கள். மேல் வகுப்பிலுள்ள வாரிசுகள் கீழ் வகுப்புகளிலுள்ள வாரிசுகளை ஒதுக்குவார்கள். அந்தந்த வகுப்பிலுள்ள வாரிசுகளில் நெருங்கிய உறவினர் தூரத்து உறவினரை ஒதுக்குவர்.

எஞ்சியதைப் பெறுபவர்கள் பட்டியலில் உள்ள 19 வாரிசுகளும் காலமானவருக்கு ஆண் மூலம் உறவினர்களாக இருப்பவர்கள். அவர்களுள் அறுவர் பங்குதாரர்களாகவுமிருக்கிறார்கள். அந்த அறுவருள் இருவர் ஆண்கள், அதாவது தந்தையும் உண்மையான பாட்டனாரும் ஆவார்கள். அந்த இருவர் மட்டில், சில கட்டத்தில் ஒரே காலத்தில் பங்குதாரராகவும், எஞ்சியதைப் பெறுபவராகவுமிருக்கிறார்கள். காலமானவருக்குத் தந்தையும் ஒரு மகளும் மட்டும் வாரிசுகள் என்று எடுத்துக் கொண்டால் மகளுக்கு 1/2 பங்கு கிடைக்கும். மகளிருப்பதால் தகப்பனுக்குப் பங்குதாரர் என்ற முறையில் 1/6 பங்கு கிடைக்கும். மீதமுள்ள 1/3 பங்கானது தந்தைக்கு எஞ்சியதைப் பெறுபவர் என்ற முறையில் கிடைக்கும். எஞ்சியதைப் பெறுபவர் பட்டியலில் தந்தை 3-ஆம் இடத்திலிருக்கிறார். முதலிரண்டு இடங்களில் உள்ள மகனும், மகனின் மகனுமில்லாததால் தந்தைக்கு அந்த எஞ்சிய பங்கு கிடைக்கிறது.

மேற்குறிப்பிட்ட ஆறு வாரிசுகளுள் உள்ள நான்கு பெண்கள் எப்போதும் சம அளவிலுள்ள ஆண் வாரிசுகளுடன் சேர்ந்து எஞ்சியதைப் பெறுகிறார்கள். ஆனால், மகனின் மகள் மட்டில் கீழ்ப்படியிலுள்ள மகனின் வழி மகனுடன் சேர்ந்து எஞ்சியதைப் பங்கு பிரித்துக்கொள்வாள். எஞ்சியதைப் பெறுபவர் பட்டியலில் உள்ள மகன் பங்குதாரராக இல்லாததால், எந்த நிலையிலும் அவனுக்கு எஞ்சியது கிடைக்குமாறு வகை செய்யப்பட்டுள்ளது.

எந்தக் கட்டத்திலும் ஐந்து பங்குதாரர்களும் எவராலும் ஒதுக்கப்படுவதில்லை. அவர்கள் குழந்தை, தந்தை, தாய், கணவன், மனைவி எனப்படுவர். மேற்படி ஐவரும் முதன்மையான வாரிசுகள் (Primary Heirs) ஆகக் கருதப்படுவார்கள். அவர்களுள் குழந்

தைக்கு மகன் வழிக் குழந்தையும், தந்தைக்கு உண்மையான பாட்டனாரும், தாய்க்கு உண்மை யான பாட்டியும் மாற்று வாரிசுகளாகக் (Substitute Heirs) கருதப்படுவார்கள். கணவனுக்கும் மனைவிக் கும் மாற்று வாரிசுகள் இல்லை. முதன்மையான வாரிசுகள் இருக்கும்போது மாற்று வாரிசுகளுக்குப் பங்கு கிடையாது. இதற்கு ஒரு விதிவிலக்கு உண்டு. ஒரே ஒரு மகளிருந்தால், அவள் மகனின் மகளை ஒதுக்குவதில்லை. இரண்டு மகள்கள் இருந்தால், மக னின் மகள் ஒதுக்கப்படுவாள்.

**சில எடுத்துக்காட்டுகள்:**

1. தந்தை – 1/6
தாய் – 1/6
மகள் – 1/2
4 மகனின்
மகள்கள் – 1/6 (ஆளுக்கு 1/24 பங்கு)

மகளிருப்பதால் தந்தைக்கும் தாய்க்கும் ஆளுக்கு 1/6 பங்கு கிடைக்கிறது. ஒரே மகளிருப்பதால் மக னின் பெண்மக்கள் ஒதுக்கப்படவில்லை. மகள் இரு வர் இருந்தால் மகனின் பெண்மக்கள் ஒதுக்கப்பட் டிருப்பார்கள். எஞ்சியது இருந்திருந்தால் அது தந்தைக்குச் சேர்ந்திருக்கும். ஆனால் எஞ்சியது இல்லை.

2. தந்தை – 1/6
தாய் – 1/6
3 மகனின் பெண்மக்கள்
அவர்களுள் இருவர் ஒரு
மகனின் பெண்மக்கள் – 2/3 (மூன்று மகள்களுள் ஒவ்வொருவருக்கும் 2/9 பங்கு)

மகன் வழிக் குழந்தை இருப்பதால் தந்தைக்கும் தாய்க்கும் ஆளுக்கு 1/6 பங்கு கிடைக்கிறது. மீத முளள 2/3 பங்கை மூன்று ஆண்மக்களின் பெண்மக் கள் சமமாகப் பிரித்துக் கொள்ள வேண்டும். அந்த 2/3 பங்கை இரண்டாகப் பிரித்து, அதில் பாதியை ஒரு மகனின் மகளுக்கும் மீதிப் பாதியை மகன் இரு வரின் பெண்மக்களுக்கும் கொடுப்பது தவறு ஆகும்.

3. தாய் – 1/6
2 சகோதரிகள் – இல்லை
தந்தை – 5/6

தந்தையிருப்பதால் இரண்டு சகோதரிகளும் ஒதுக்கப்படுகிறார்கள். இரண்டு சகோதரிகளிருப்ப தால், தாய்க்கு 1/3-க்குப் பதில் 1/6 பங்கு கிடைக் கிறது. எஞ்சிய 5/6 பங்கு தந்தைக்குக் கிடைக்கிறது.

4. காலமானவள் பெண். அவளுக்குக் கணவ னும் இரண்டு உடன் பிறந்த சகோதரிகள் இருவரும் இருக்கிறார்கள் என்று வைத்துக் கொண்டால் கணவனுக்கு 1/2 பங்கும் உடன் பிறந்த சகோதரிகள் இருவருக்கும் சேர்த்து 2/3 பங்கும் ஒதுக்க வேண்டும். அந்த 1/2 பங்கையும், 2/3 பங்கையும் கூட்டினால் ஒரு பங்குக்கு மேல் ஆகிறது. எனவே அவ்வாறு கூடுதலா யிருக்கும் பங்கு, ஒவ்வொரு பங்குதாரருக்கும் கிடைக் கக்கூடிய விகிதாச்சாரப்படி குறைக்கப்படும். 1/2 பங்குக்கும் 2/3 பங்குக்கும் சமீபத்திலுள்ள பின்னத் தின் பொது தொகுதிக் கூற்றெண் 6 ஆகும். அதை வைத்துக் கணக்குப் போட்டால் மேற்படி பின்னங் கள் 3/6 என்றும் 4/6 என்றும் ஆகின்றன. மேற்படி 6 என்ற இலக்கத்தை 7 ஆக்க வேண்டும். அதாவது மேற்படி பின்னங்களின் மேல் பகுதியிலுள்ள 3 மற் றும் 4 ஐக் (தொகுதிகளைக்) கூட்டினால் 7 ஆகிறது. அவ்வாறு பின்னத்தின் பொதுத் தொகுதிக் கூற்றெண் 7 என ஆக்கினால், பங்கு விகிதாச்சாரம் 3/7 மற்றும் 4/7 என்று ஆகிறது. கணக்கு சரிக்கட்டப்படுகிறது.

எஞ்சியதைப் பெறும் வாரிசுகள் எந்த அடிப் படையில் நான்கு வகுப்புகளாகப் பிரிக்கப்பட்டுள் ளார்களோ அதே அடிப்படையில், தூரத்து உறவினர் களும் நான்கு வகுப்புகளாகப் பிரிக்கப்பட்டுள்ளார் கள். முதல் வகுப்பில் காலமானவரின் மரபுவழித் தோன்றல்களும், இரண்டாம் வகுப்பில் காலமான வரின் மூதாதையர்களும், மூன்றாம் வகுப்பில் கால மானவரின் தந்தையின் மரபுவழித்தோன்றல்களும், நான்காம் வகுப்பில் காலமானவரின் உண்மையான பாட்டனாரின் மரபு வழித் தோன்றல்களும் சேர்க் கப்பட்டிருக்கிறார்கள். மேல் வகுப்பில் உள்ள வாரிசு கள் கீழ்வகுப்பில் உள்ள வாரிசுகளை ஒதுக்கி விடுவார்கள். ஒவ்வொரு வகுப்பிலும் உள்ள வாரிசு களில் எவருக்குப் பங்கு கிடைக்கும் என்று முத லில் முடிவு செய்து, பின்பு விதிமுறைப்படி பங்கு பிரித்துக் கொடுக்கப்படும். அந்த விதிமுறைகள். இசுலாமியச் சட்டத்தில் விரிவாகச் சொல்லப்பட்டுள் ளன. (முல்லாவின் முகமதிய சட்டத்தைக் காண்க). எடுத்துக்காட்டாக, முதல் வகுப்பில் உள்ள வாரிசு களில், நெருங்கிய உறவினர் தூரத்து உறவினரை ஒதுக்குவர்; சம நிலையில் உள்ள வாரிசுகளில் பங்கு தாரர், எஞ்சியதைப் பெறுபவர் ஆகியோரின் வாரிசு களுக்கு முதலிடம் கொடுக்கப்படும்.

மேற்கூறிய தூரத்து உறவினர் எவருமில்லா விட்டால் காலமானவருடன் ஏற்பட்ட ஒப்பந்த அடிப்படையில் இருக்கும் வாரிசுகளுக்கு வாரிசு உரிமை கிடைக்கும். அவருமில்லாவிட்டால், எவ்வாறு உறவினரென்று தெரியாதிருக்கும் ஒருவரைத் தம் உறவினர் என்று காலமானவர் ஏற்றுக் கொண்டிருந்

தால், அந்த உறவினருக்கு வாரிசுரிமை கிடைக்கும். அவரும் இல்லாவிட்டால் காலமானவர் எழுதி வைத்திருக்கும் உயில் மூலம் பலனடையக்கூடிய வருக்கு வாரிசுரிமை கிடைக்கும். ஒரு முகமதியன் தன் சொத்துகளைப் பொறுத்த மட்டிலும் 1/3 பங்குக்கு மேல் உயில் எழுதக் கூடாது. முழுப்பங்கும் உயில் மூலம் எழுதப்பட்டிருந்தால் சட்டப்படி செல்லாத அந்த உயில் மூலம் ஏற்படுத்தப்பட்டுள்ள வாரிசுக்கு, அவ்வாறு அடுத்த நிலையில் வாரிசுரிமை கிடைக்கும். மேற்கூறிய வாரிசுகள் எவருமில்லாவிட்டால், காலமானவனின் சொத்துகள் அரசுடைமையாகிவிடும்.

சீயா சட்டம்: இச்சட்டப்படி வாரிசு உரிமையினர் இரண்டு வகைகளாகப் பிரிக்கப்படுகின்றனர். திருமணத்தின் மூலம் ஏற்படும் உறவினர்கள் அதாவது கணவன், மனைவி ஒரு வகையாகும். இவ்விருவரும் எவராலும் ஒதுக்கப்படமாட்டார்கள். ஆனால் சூழ்நிலைக்குத் தகுந்தாற்போல் இவர்களது பங்கு மாறும். இரத்த உறவு மூலம் ஏற்படும் உறவினர்கள் மற்றொரு வகையாகும். இந்த இரத்த உறவு உறவினர்கள் மூன்று வகுப்புகளாகப் பிரிக்கப்பட்டுள்ளார்கள். முதல் வகுப்பில் பெற்றோரும் குழந்தைகளும் ஏனைய மரபு வழித் தோன்றல்களும் இருக்கிறார்கள். இரண்டாம் வகுப்பில் பெற்றோரின் பெற்றோர்களும், சகோதர சகோதரிகளும் அவர்களின் மரபு வழித் தோன்றல்களுமிருக்கிறார்கள். மூன்றாம் வகுப்பில் காலமானவரின் தந்தையின் சகோதர சகோதரிகளும் அவர்களின் மரபுவழித் தோன்றல்களும், காலமானவரின் தாயின் சகோதர சகோதரிகளும் அவர்களின் மரபு வழித் தோன்றல்களும். அது போலவே காலமானவரின் பெற்றோர், அப்பெற்றோரின் உடன்பிறந்த சகோதர சகோதரிகளும் அவர்களின் மரபு வழித் தோன்றல்களும் அடங்கியுள்ளார்கள். மேல் வகுப்பிலுள்ள வாரிசுகள் கீழ்வகுப்பிலுள்ள வாரிசுகளை ஒதுக்கி விடுவார்கள். ஒரே வகுப்பிலுள்ள வாரிசுகளில் நெருங்கிய உறவினருக்குத் தூரத்து உறவினரைக் காட்டிலும் முதலிடம் கொடுக்கப்படும். சீயா சட்டத்தில் சொல்லப்பட்டுள்ள வாரிசுகள் இல்லாவிட்டால் காலமானவரின் சொத்து அரசுடைமையாகிவிடும்.

சுன்னி சட்டப்படி, பங்குதாரரும் எஞ்சியதைப் பெறுபவரும் இல்லாவிட்டால்தான், தூரத்து உறவினருக்குப் பங்கு கிடைக்கும். ஆனால் சீயா சட்டப்படி, தூரத்து உறவினர்கள், பங்குதாரர்கள் எஞ்சியதைப் பெறுபவர்கள் ஆகியோருடன் இணைந்து வாரிசுகளாகிறார்கள். பெண்கள் மூலம் ஏற்படும் உறவினர்களைக் காட்டிலும் ஆண்கள் மூலம் ஏற்படும் உறவினர்களுக்குச் சுன்னி சட்டம் முதலிடம் அளிக்கிறது. சீயா சட்டத்தில் அந்த வேறுபாடு இல்லை. நெருங்கிய உறவினருக்குச் சீயா சட்டத்தில் முதலிடம் அளிக்கப்படுகிறது. சுன்னி சட்டப்படி, சொத்துரிமையாளரை, வேண்டும் என்றோ தவறுதலாகவோ கவனக் குறைவினாலோ தற்செயலாகவோ இறக்கும்படி செய்தால், அந்த வாரிசு வாரிசுரிமையிலிருந்து நீக்கப்படுவார். ஆனால் சீயா சட்டப்படி வேண்டும் என்றே இறப்பினை விளைவித்தால் வாரிசுரிமை பாதிக்கப்படும். சுன்னி சட்டப்படி, சட்ட நெறியில் இல்லாத குழந்தை (Illegitimate Child) தாய்க்கு மட்டில் வாரிசாகும்; தந்தைக்கு வாரிசாகாது. ஆனால் சீயா சட்டப்படி, அக்குழந்தை பெற்றோர் உட்பட எந்த உறவினருக்கும் வாரிசு ஆகாது. சீயா சட்டப்படி, குழந்தையில்லாத விதவைக்குக் கணவனது நிலங்களில் பங்கு கிடைக்காது. ஆனால், அந்த நிலங்களில் உள்ள மரங்கள் கட்டடங்கள் கணவனின் அசையும் பொருள்கள் ஆகியவற்றின் மதிப்பில் அவ்விதவைக்கு 1/4 பங்கு கிடைக்கும். இத்தடை சுன்னி சட்டத்தில் இல்லை.

உயில்: உரிமை வயது அடைந்தவனும் நல்ல மனநிலையிலுள்ளவனுமாகிய ஒரு முகமதியன் உயில் எழுதலாம். உயில் சம்பந்தப்பட்டமட்டில் உயில் எழுதுபவர் 18 வயது நிறைவடைந்திருக்க வேண்டும். ஆனால், நீதிமன்றத்தால் நியமிக்கப்பட்ட காப்பாளர் இருந்தாலோ காப்பாயம் (Court Wards) செயற்பட்டாலோ 21 வயது முடிவடைய வேண்டும். முகமதிய சட்டப்படி 15 வயது முடிந்தால் உரிமை வயது எட்டுகிறது, இவ்வயது திருமணம், மணவிலக்கு ஆகியவற்றிற்குச் செல்லத்தக்கது. ஆனால் உயிலைப் பொறுத்தமட்டிலும் இந்திய உரிமை வயது அடையும் சட்டத்தின்படி (Indian Majority Act 1875) வயது நிருணயம் செய்யப்படுகிறது. வாய்மொழியாகவோ எழுத்து மூலமோ உயில் ஏற்படுத்தலாம். எழுத்து மூலமிருந்தால் கையெழுத்திட வேண்டியதில்லை. சாட்சிகளின் கையெழுத்துத் தேவையில்லை. பத்திரமும் பதிய வேண்டியதில்லை. சொத்துரிமை வாரிசுக்கு உயில் மூலம் பலன் அளிப்பது செல்லாது. ஆனால் ஏனைய வாரிசுகள், உயில் எழுதியவர் காலமானபின் ஒப்புதல் அளித்தால் செல்லத் தக்கன. அவ்வாறு ஒப்புதல் அளிக்கும் வாரிசின் பங்கைப் பொறுத்தமட்டிலும் உயில் செல்லத்தக்கது ஆகும். இறுதிச் சடங்குகளுக்காக ஆகும் செலவு, கடன்களைச் செலுத்துதல் போக மீதமுள்ள சொத்தில், 1/3 பங்குக்கு மட்டும் உயில் எழுதலாம். அதற்கு மேற்பட்ட பங்குக்கு உயில் எழுதினால், அந்த அதிக அளவு பங்கைப் பொறுத்த மட்டில் உயில் எழுதியவர் காலமானபின்

சொத்துரிமை வாரிசுகள் ஒப்புக் கொண்டால், உயில் செல்லத்தக்கது ஆகும். ஒப்புதல் கிடைக்கும் விகிதாச்சாரப்படி உயில் செல்லத்தக்கது. பிறவாத குழந்தையின் பேரில் உயில் எழுதக் கூடாது. ஆனால் கருவில் இருக்கும் குழந்தைக்கு உயில் எழுதலாம். உயில் எழுதுபவர் காலமாகும் போது இருக்கக் கூடிய பொருள் தொடர்பாக உயில் எழுதலாம். அப் பொருள் உயில் சமயத்தில் இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. உயில் எழுதியவருக்கு உயிலை மாற்றுவதற்கு உரிமை உண்டு.

நன்கொடை: இபா (Hiba) என்று சொல்லப் படும் நன்கொடை வழங்குவதற்கு உரிமை வயது அடைந்தவரும், நல்ல மனநிலையிலுள்ளவருமாகிய முகமதியருக்குத் தகுதி உண்டு. உயில் எழுதுவதற்கு ஏற்பட்ட உரிய வயதுதான் நன்கொடைக்கும் செல்லத்தக்கது. எவ்வகை மறுபயனையும் எதிர் பாராமல் ஒருவர் மற்றொருவருக்குத் தமது அசை யும் அல்லது அசையாப் பொருளைக் கொடுப்பது நன்கொடை என்று சொல்லப்படுகிறது. ஒரு முகமதியன் தனது முழுச் சொத்தையும், தனது வாரிசுக்குக் கூட நன்கொடையாகக் கொடுக்கலாம். முகமதியன் செய்யும் நன்கொடைக்குச் சொத்து மாற்றுச் சட்டம் (Transfer of Property Act) பொருந் தாது. எனவே அசையாப் பொருளாக இருந்தாலும் ஒரு முகம்மதியன் அதை வாய்மொழியாகவே நன் கொடையாகக் கொடுக்கலாம். அதற்குப் பத்திரம் தேவையில்லை. முகமதியன் செய்யும் நன்கொடைக்கு மூன்று முக்கியக் கட்டுப்பாடுகள் உள்ளன. 1. நன் கொடை கொடுப்பவர் அவ்வாறு கொடுப்பதாக அறிவிக்க வேண்டும். 2. நன்கொடையைப் பெறு பவர் அல்லது அவர் சார்பில் வேறு ஒருவர், நேரடி யாகவோ மறைமுகமாகவோ நன்கொடையை ஏற்றுக் கொள்ள வேண்டும். 3. நன்கொடை பெறு பவரிடம் பொருள் உரிமை கொடுக்கப்பட வேண்டும். நன்கொடைக்குக் கட்டுப்பாடு ஏதும் விதிக்கப்பட்டி ருந்தால் அந்தக் கட்டுப்பாடு செல்லாது. ஆனால் நன்கொடை செல்லத்தக்கது ஆகும்.

நன்கொடைத் தொடர்பான பொருளை உரி மைப்படுத்துவதற்கு முன் நன்கொடை கொடுப்பவர் அதனை நீக்குதல் செய்யலாம். ஏனெனில் உரிமைப் படுத்துவதற்கு முன்பு நன்கொடை நிறைவடை வதில்லை. பொருளின் உரிமை கொடுத்தபின்பும் நன்கொடையை நீக்கிவிடலாம். ஆனால் நீதிமன்றம் பிறப்பிக்கும் ஆணையில்லாத நிலையில் நன் கொடையை நீக்க முடியாது. மேலும் கீழ்க்காணும் எட்டு நிலைகளில் உரிமை கொடுத்தபின்பு நன் கொடையை நீக்க இயலாது. 1. கணவன் மனைவிக் குக் கொடுத்த நன்கொடை அல்லது மனைவி கணவ னுக்குக் கொடுத்த நன்கொடை. 2. நன்கொடை பெற்றவர், நன்கொடை கொடுத்தவருக்குத் தடுக்கப் பட்ட உறவு நிலையிலிருத்தல். 3. நன்கொடை பெற்றவர் இறந்து விட்ட நிலை. 4. நன்கொடை பெற்றவர் நன்கொடையாகப் பெற்ற பொருளை மற்றவருக்கு விற்பது, நன்கொடை கொடுப்பது போன்ற செய்கைகளின் மூலம் தன் மனநிலை இழந்த நிலையில் இருப்பது. 5. நன்கொடைப் பொருள் காணாமல் போதல் அல்லது அழிந்து போதல். 6. நன்கொடைப் பொருளின் மதிப்பு நன் கொடைக்குப்பின் அதிகமாகிவிட்ட நிலை. 7. நன் கொடைப் பொருள் அடையாளம் காட்ட முடியாத அளவுக்கு உருவமாற்றம் அடைந்த நிலை. கோதுமையை மாவாக அரைப்பது ஓர் எடுத்துக் காட்டு ஆகும். 8. நன்கொடை கொடுத்தவர் நன் கொடைக்காக மறுபயன் அடைந்த நிலை.

மறு பயனைப் பெற்றுக் கொண்டு நன்கொடை கொடுப்பதும் செல்லத்தக்கது. அதற்கு இரண்டு முக்கியத் தேவைகள் உண்டு. 1. எவ்வளவு சிறிய அளவுடையதாக இருந்தாலும் நன்கொடை பெறு பவர் உண்மையாகவே நன்கொடை பெற்றதற்கு அடையாளமாக நன்கொடை கொடுத்தவருக்குக் கைம்மாறாகிய பயனைக் கொடுத்துவிட வேண்டும். 2. நன்கொடைப் பொருளில் தமக்குள்ள உரிமையை நன்கொடை கொடுப்பவர் பெறுபவருக்கு உடனடி யாக மாற்ற வேண்டும் என்ற நல்ல எண்ணம் நன் கொடை கொடுப்பவருக்கு இருக்க வேண்டும்.

இறப்பை எதிர் நோக்கி மரணப் படுக்கையி லிருக்கும் முகமதியன் கொடுக்கும் நன்கொடைக்குச் சாதாரண நன்கொடை செல்லத் தக்கதற்கு என்ன கட்டுப்பாடுகள் நிறைவு செய்யப்படவேண்டுமோ அவையாவும் நிறைவு செய்யப்பட வேண்டும். ஆனால் இறுதிச் சடங்குகள் செய்வதற்கான செலவு, கடனை அடைத்தல் ஆகியவற்றைக் கழித்தது போக மீதமுள்ளதில் மூன்றில் ஒரு பங்குக்கு அதிக மாக உள்ளது தொடர்பாக, மரணப்படுக்கையி லிருந்து கொடுக்கும் நன்கொடை செல்லத்தக்கது அன்று. மேலும் அந்த நன்கொடை காலமானவரின் வாரிசுக்குக் (Heir) கொடுக்கப்பட்டிருந்தால் அது முழுமையாகச் செல்லாது. ஆனால் நன்கொடை கொடுத்தவர் காலமானபின்பு அவருடைய வாரிசுகள் ஏற்றுக் கொண்டால், மேற்குறிப்பிட்ட இரண்டு வகையான நன்கொடைகளும் செல்லத்தக்கவை யாகும்.

உரிமை வயதை அடைந்தவனும் நல்ல மன நிலையிலுள்ளவனுமான ஒரு முகமதியன் சமயத் தொடர்புடையதும், அறத் தொடர்புடையதுமான அறச் செயல்களுக்கு நிலையாகத் தனது சொத்து

களை வழங்கலாம். அந்த அறக்கட்டளைக்கு வக்பு (Wakf) என்று பெயர். அவ்வாறான அறக் கட்டளையை உயில் மூலமோ நன்கொடை போன்ற பத்திரங்கள் மூலமோ ஏற்படுத்தலாம். தனது முழுச் சொத்துகளையும் மேற்கூறிய காரணங்களுக்காக வழங்கலாம். மரணப் படுக்கையில் எழுதப்படும் உயில் மூலம் அவ்வாறு வழங்கினால் வாரிசுகள் ஒப்புக் கொண்டாலல்லது அந்த உயில் சொத்தில் மூன்றில் ஒரு பங்கு அளவுக்கு மேல் செல்லாது. உயில்மூலம் அறக்கட்டளை ஏற்படுத்தப்பட்டால், அதை உண்டாக்கியவர் இறப்பதற்கு முன்பு நீக்குதல் செய்யலாம். வேறு வகைகளில் ஏற்படுத்தப்பட்ட அறக்கட்டளைகளை நீக்குவதற்குரிய அதிகாரத்தைத் தம்மிடம் அதை உண்டாக்குபவர் வைத்திருப்பாரேயானால் அந்த அறக்கட்டளை செல்லாது. ரூபாய் நூறு மற்றும் அதற்கு மேற்பட்ட மதிப்புள்ள அசையாப் பொருள்கள் தொடர்பாக அறக்கட்டளை ஏற்படுத்த வேண்டுமானால், அதற்காகப் பத்திரம் எழுதிப் பதிவு செய்யவேண்டும்.

திருமணம்: 'நிக்கா' என்று சொல்லப்படும் திருமணம், முகமதியர்களைப் பொறுத்தமட்டிலும் ஒப்பந்த அடிப்படையில் ஏற்படக் கூடியதாகும். நல்ல மனநிலையில் உள்ளவரும் பூப்புப் பருவம் (Puberty) அடைந்தவருமான ஒரு முகமதிய ஆண் அல்லது பெண் திருமண ஒப்பந்தம் செய்து கொள்ளலாம். பித்துத் தன்மையுள்ளவர்கள், பூப்புப் பருவம் அடையாதவர்கள் ஆகியோர் சார்பில் அவர்களின் காப்பாளர்கள் மண ஒப்பந்தம் செய்து கொள்ளலாம். பூப்புப் பருவம் அடைந்ததற்குப் போதுமான சான்றில்லாத நிலையில் 15 வயது நிரம்பியவுடன் பூப்புப் பருவம் அடைந்ததாக அனுமானிக்கப்படும். இசுலாமியச் சட்டப்படி திருமணம் செய்வதற்கு வயது வரையறை செய்யப்படவில்லை. முகமதியர்கள் திருமணம் தொடர்பாகச் சாரியத்துச் சட்டப்படி அவர்களது இனச் சட்டம் மட்டும் செல்லத்தக்கது. அரசால் இயற்றப்பட்ட சட்டங்கள் செல்லாது. 15 வயதை அடைவதற்கு முன்பே பூப்புப் பருவம் எய்தியிருந்தால் ஓர் முகமதிய ஆண் அல்லது பெண் திருமண ஒப்பந்தம் செய்து கொள்ளலாம். பூப்பு எய்தியது பற்றிப் போதுமான சான்று இல்லாத நிலையில் 15 வயது நிரம்பியவுடன் பூப்புப் பருவம் எய்தியதாக அனுமானிக்கப்படும். பூப்புப்பருவம் அடைந்தவரது இசைவு இல்லாமல் செய்யும் திருமணம் செல்லத்தக்கது அன்று (Void).

ஒரு திருமணத்துக்குத் தொடர்புடைய தரப்பினருள் ஒருவரோ அவர் சார்பில் வேறு ஒருவரோ முதலில் திருமணக் கோரிக்கையை விடவேண்டும். அதை அடுத்த தரப்பினரோ அவர் சார்பில் வேறு ஒருவரோ ஏற்றுக் கொள்ள வேண்டும். இது இரண்டு ஆண் சாட்சிகள் காது கேட்கும்படியோ ஒரு ஆண், இரண்டு பெண் சாட்சிகள் ஆகியோர் கேட்கும்படியோ ஒரே நேரத்தில் நடைபெற வேண்டும். ஒரு முகமதிய திருமணம் செல்லத்தக்கதாவதற்கு இது மிகவும் இன்றியமையாதது. இவ்வாறு திருமண ஒப்பந்தம் ஏற்படுவதற்கு எழுத்துத் தேவையில்லை. மதச் சடங்கும் தேவையில்லை. சாட்சிகள் இல்லாமல் ஏற்படும் திருமண ஒப்பந்தம், ஒழுங்கில்லாத திருமணம் ஆகுமேயொழிய, செல்லாததான திருமணம் அன்று.

ஒரு முகமதிய ஆண் ஒரே சமயத்தில் நான்கு மனைவிகளைத் திருமணம் செய்து கொள்ளலாம். இத்தடையை மீறி ஐந்தாம் மனைவியைத் திருமணம் செய்தால், அது ஓர் ஒழுங்கீனமான திருமணமேயொழிய செல்லாததான திருமணம் அன்று. தொடக்கத்திலிருந்தே செல்லாத திருமணம் அன்று. ஆனால் கணவனை மணவிலக்குச் செய்யாமல் ஒரு முகமதியப் பெண் வேறு ஒருவனைத் திருமணம் செய்துகொள்ளக் கூடாது. அதை மீறிச்செய்தால் அத்திருமணம் செல்லாதது ஆகும்.

ஒரு முகமதிய ஆண் முகமதிய மதத்தைச் சேர்ந்த பெண்ணையோ அல்லது கிட்டாபியா (Kitabia) என்று சொல்லப்படும் கிறித்தவ அல்லது யூத மதத்தைச் சேர்ந்த பெண்ணையோ திருமணம் செய்து கொள்ளலாம். ஆனால் சிலை அல்லது நெருப்பை வணங்கும் பெண்ணைத் திருமணம் செய்யக் கூடாது. ஆனால், அத்தடையை மீறிச் செய்யும் திருமணம் ஒழுங்கீனமானதேயொழிய செல்லாத திருமணம் அன்று. ஒரு முகமதியப் பெண் முகமதியனைத் தவிர வேறு யாரையும் திருமணம் செய்யக் கூடாது. ஆனால் அத்தடையை மீறிச் செய்யும் திருமணம் ஒழுங்கீனமான திருமணமேயொழிய செல்லாத திருமணம் அன்று. ஒரு முகமதிய ஆணுக்கும் கிறித்துவப் பெண்ணுக்கும் நடக்கும் திருமணத்தை, கி.பி. 1872-ஆம் ஆண்டைய இந்தியக் கிறித்தவத் திருமணச் சட்டப்படி பதிவு செய்யலாம். ஆனால் ஒரு முகமதியப் பெண்ணுக்கும் கிறித்தவ ஆணுக்கும் நடக்கும் திருமணத்தை மேற்கண்ட கிறித்தவத் திருமணச் சட்டப்படி பதிவு செய்ய முடியாது. ஏனெனில் முகமதியப்பெண் வேறு மதத்தைச் சேர்ந்த ஆணைத் திருமணம் செய்வதில் தடை உள்ளது. ஓர் இந்துக்கும் முகமதிய இனம் உட்பட வேறு இனத்தைச் சேர்ந்தவருக்கும் நடக்கும் திருமணத்தை 1955-ஆம் ஆண்டைய இந்துத் திருமணச் சட்டம் ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால் எம்மதத்தைச் சேர்ந்தவராயினும் இந்தியாவில் ஓர்

ஆணும் பெண்ணும் 1954-ஆம் ஆண்டைய சிறப்புத் திருமணச் சட்டத்தின்படி திருமணம் செய்து கொள்ளலாம்.

'இத்தாத்' (Iddat) என்ற கோட்பாட்டைக் கடைப் பிடிக்கும் முகமதியப் பெண்ணை ஒரு முகமதியன் திருமணம் செய்யக் கூடாது. 'இத்தாத்' என்பது மணவிலக்குச் செய்யப்பட்ட அல்லது விதவையான முகமதியப் பெண் மறுமணம் செய்து கொள்ளாமல் தனிமையாகச் சில காலத்தைக் கழிப்பது. இவ்வாறு குறிப்பிட்ட காலம் கடந்த பின்புதான் அவள் மறுமணம் செய்யலாம். பழைய கணவன் மூலம் அப்பெண் கருவுற்றிருக்கிறாளா இல்லையா என் பதைக் கண்டுபிடிக்கத்தான் இவ்வாறு 'இத்தாத்' என்ற கட்டுப்பாடு விதிக்கப்பட்டுள்ளது. மணவிலக்குச் செய்யப்பட்ட பெண், மாதவிலக்கு ஏற்படக்கூடிய வளாக இருந்தால் மணவிலக்குப் பின் மூன்று மாத விலக்கு ஏற்படும் வரைஇத்தாத் கடைப்பிடிக்க வேண் டும். மாதவிலக்கு ஏற்படாதவளாக இருந்தால் சந்திர கணக்குப்படியான மூன்று மாதகாலம் (Three lunar months) இத்தாத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். சந்திரனை வைத்துக் கணக்கிடும்போது ஒரு மாதத் துக்கு 27 நாட்கள் என்று ஏற்படுகிறது. மணவிலக்குச் சமயத்தில் அப்பெண் கருவுற்றிருந்தால் குழந்தை பிறந்ததும் இத்தாத் முடிவடைகிறது. கணவனும் மனைவியும் உடலுறவு கொள்ளாத நிலையில் மண விலக்கு ஏற்பட்டால் அந்த மனைவி இத்தாத்தைக் கடைப்பிடிக்க வேண்டியதில்லை. விதவையானவள் கணவன் இறந்த நாளிலிருந்து நான்கு மாதம் 10 நாள்கள் இத்தாத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். கணவன் இறந்தபோது மனைவி கருவுற்றிருந்தால் 4 மாதம் 10 நாள்கள் அல்லது குழந்தை பிறப்பது இவ் விரண்டில் எதற்கு அதிக காலம் பிடிக்குமோ அது நாள் வரை இத்தாத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். கணவன் இறந்த செய்தி கிடைக்காவிட்டால் இத் தாத்தைக் கடைப்பிடிக்க வேண்டியதில்லை.

மேற்கூறியவாறு இத்தாத்தைக் கடைப்பிடிக்கும் பெண்ணைத் திருமணம் செய்வது ஒழுங்கீனமான திருமணம் என்று கருதப்படும்; செல்லாத திருமணம் (Void) அன்று.

இரத்த உறவு காரணமாக ஒரு முகமதியன் 1. தன் தாய் அல்லது பாட்டி (எவ்வளவு தொலைவி லிருந்தாலும் சரி) 2. தன் மகள் அல்லது தன் பேர்த்தி (எவ்வளவு தூரமிருந்தாலும் சரி) 3. தன் உடன் பிறந்த சகோதரி, தாய் மூலம் மட்டும் உற வான சகோதரி, தந்தை மூலம் மட்டும் உறவான சகோதரி 4. சகோதரன் மற்றும் சகோதரி வழி மகள் (எவ்வளவு கீழ்படியிலிருந்தாலும்) 5. தந்தை மற் றும் தாயின் சகோதரிகள் (எவ்வளவு தூரத்து உற வாக இருந்தாலும் சரி) ஆகியோரைத் திருமணம் செய்யக் கூடாது. இத்தடையை மீறிச் செய்யும் திருமணம் செல்லாததாகும்.

ஒரு முகமதியன் திருமண மூலம் ஏற்பட்ட கீழ்க் கண்ணும் உறவினர்களைத் திருமணம் செய்யக் கூடாது. 1. தன் மனைவியின் தாயார் அல்லது பாட்டி (எவ்வளவு தூரத்து உறவானாலும்) 2. தன் மனைவியின் மகள் அல்லது பேர்த்தி (எவ்வளவு தூரத்து உறவானாலும்) 3. தன் தந்தை அல்லது தந்தைக்குத் தந்தையின் (எவ்வளவு தொலைவி லிருந்தாலும்) மனைவி, 4. மகனின் மனைவி, அல்லது மகனுக்கு மகனின் மனைவி, மகளுக்கு மகனின் மனைவி (எவ்வளவு தூரத்து உறவானாலும்). மனைவியுடன் ஏற்பட்ட திருமணத்தை உடலுறவு கொள்வதன் மூலம் நிறைவு செய்திருந்தால்தான் மனைவியின் மகள், பேர்த்தி ஆகியோரைத் திரு மணம் செய்வதற்குத் தடையுள்ளது. இத்தடையை மீறிச் செய்யும் திருமணமும் செல்லாததாகும்.

இரத்த உறவு, மண உறவு ஆகியவற்றின் மூலம் ஏற்படும் உறவினர் எவர் எவரை ஒரு முகமதிய ஆண் திருமணம் செய்யத் தடையுள்ளதோ அவ் வாறு தடை செய்யப்பட்டவரின் வளர்ப்பு உற வினரையும் (Foster relations) திருமணம் செய்யக் கூடாது. இத்தடையை மீறிச் செய்யும் திருமணம் செல்லாததாகும். ஆனால் இதற்கு விதிவிலக்கு உண்டு. சகோதரியின் வளர்ப்புத்தாய், வளர்ப்புச் சகோதரியின் தாய் வளர்ப்பு மகனின் சகோதரி, வளர்ப்புச் சகோதரனின் சகோதரி ஆகியோரைத் திருமணம் செய்வதற்குத் தடையில்லை.

செல்லாததான திருமணத்தின் மூலம் பிறக்கும் குழந்தைகள் சட்டத்துக்குப் புறம்பாகப் பிறந்த குழந்தைகளாகக் (Illegitimate Children) கருதப்படு வார்கள். அவ்வாறான திருமணம் அதில் சம்பந்தப் பட்ட ஆண் பெண் இருவருக்குமே எவ்வித உரி மையோ கடமையோ ஏற்படுத்துவதில்லை.

ஒழுங்கற்ற திருமணத்தில் தொடர்புடைய கணவனோ மனைவியோ அத்திருமணத்தை முடி வடைவதாகத் தெளிவாகச் சொல்லி, முடிவடையச் செய்து விடலாம். இவ்வாறு உடலுறவு ஏற்படுதற்கு முன்போ அல்லது பின்னரோ செய்யலாம். உட லுறவு ஏற்பட்ட பின்பு திருமணத்தை முடிவடையச் செய்தால், மகர் (Mahr) என்று சொல்லப்படும் திரு மணத்தின் பொருட்டுக் கொடுப்பதாக ஒப்புக் கொண்ட தொகையையோ பொருளையோ மனைவி பெற்றுக் கொள்ளலாம். மனைவி இத்தாத்துக் கடைப்பிடிக்கக் கடமைப்பட்டவள். அவ்வாறான

திருமணத்தின் மூலம் பிறக்கும் குழந்தைகள் சட்டப் படி முறையான குழந்தைகள். ஆனால் கணவன் மனைவிக்கோ அல்லது மனைவி கணவனுக்கோ வாரிசு ஆக மாட்டார்கள்.

சீயா வகுப்பினரிடம் மட்டும் ஒரு குறிப்பிட்ட காலத்துக்குக் கணவன் மனைவியாக வாழ்வதற்கு ஒப்பந்தம் செய்து கொள்ளும் வழக்கம் இருக்கிறது. இது முட்டா திருமணம் (Muta Marriage) என்று சொல்லப்படும். ஒப்பந்தத்தில் குறிப்பிட்ட காலம் முடிவடைந்தவுடன், இத்திருமணஉறவு முடிவடைந்து விடும். கணவன் மனைவிக்குள் வாரிசுரிமை ஏற் படாது. ஆனால் இத் திருமணத்தில் பிறக்கும் குழந்தை களுக்குப் பெற்றோர் சொத்தில் வாரிசுரிமை உண்டு. சுன்னி வகுப்பில் இவ்வகைத் திருமணம் கிடையாது.

பூப்புப் பருவம் அடையாத ஆண் அல்லது பெண் ணுக்குத் தந்தை, தந்தை வழிப்பாட்டன் சகோதரன் அல்லது தந்தை வழி ஆண் உறவினர் காப்பாளராகச் செயற்பட்டுத் திருமணம் நடத்தலாம். மேற்படி உற வினர் இல்லாத நிலையில் தாய், தாய்வழி உறவினர் ஆகியோருக்கு அவ்வாறு காப்பாளராராகச் செயற் படும் உரிமை கிடைக்கிறது. அவ்வாறு பூப்பெய்வதற்கு முன்பு காப்பாளர் மூலம் திருமணம் செய்து வைக் கப்படும் பெண், பூப்பெய்தியபின் அத்திருமணத்தை ஏற்றுக் கொள்ள மறுக்கலாம். முகமதியதிருமண முறி வுச் சட்டம் 1939-ஆம் ஆண்டில் (Dissolution of Mus lim Marriage Act 1939) இயற்றப்பட்டது. ஆனால் 18 வயது அடைவதற்கு முன் அவ்வாறு திருமண மானபெண் இச்சட்டப்படி பூப்பெய்தியபின், தன் திருமணத்தை ஏற்றுக் கொள்ள மறுக்க வேண்டும். ஆனால் பூப்பெய்திய பின் 18 வயது அடைவதற்குள் கணவனுடன் உடலுறவு கொண்டால் அப்பெண் ணுக்கு அவ்வாறு ஆன திருமணத்துக்கு மறுப்புத் தெரிவிக்கும் உரிமை கிடையாது. பூப்பு அடையும் வயதுக்குள் காப்பாளர் மூலம் திருமணமான முகமதிய ஆணுக்குப் பூப்பு வயதை. அடைந்தபின், உடலுறவு கொள்வது போன்ற செய்கையால் அத் திருமணத்தை ஏற்றுக் கொள்ளும் வரை, மறுப்புத் தெரிவிக்கும் உரிமை உண்டு. அவ்வாறு மறுப்புத் தெரிவிப்பதால் மட்டும் மணவிலக்கு ஏற்படாது. நீதிமன்றத்தின் மூலம் மேற்படி மறுப்புத் தெரிவித் தலையொட்டி மணவிலக்கு ஏற்பட வேண்டும். பூப்புப் பருவம் அடையாதவர்களுக்குச் செல்லுபடி யாகும் திருமணச் சட்டம், பித்துத்தன்மை உள்ளவர் களுக்கும் செல்லத்தக்கது ஆகும்.

மகர் (Dower or Mahr) என்பது திருமணத்துக் காக மனைவிக்குக் கணவன் கொடுப்பதாக ஒப்புக் கொண்ட பணம் அல்லது பொருளைக் குறிக்கும். மகர் என்பது குறைந்தது பத்து திராம் (Ten Dirhams) இருக்க வேண்டும். அதற்கு உச்சவரம்பு ஏதுமில்லை. மகர் என்பது திருமணத்துக்கு முன்போ திருமணக்காலத்திலோ திருமணத்திற்குப் பின்போ நிருணயம் செய்யப்படலாம். மகர் எவ்வளவு என்று நிருணயம் செய்யப்படாத நிலையில் எது நியாயமோ அதைக் கொடுக்கவேண்டும். மகர் இரண்டு வகை யாகப் பிரிக்கப்படும். ஒன்று உடனடியாக கொடுக் கப்படவேண்டியது (Prompt). அதாவது மனைவி கேட்கும்போது கணவன் கொடுக்கக் கடமைப்பட்ட மகரை உடனடியாகக் கொடுக்க வேண்டியது என்று சொல்லப்படும். தள்ளி வைக்கப்பட்டுள்ள (Deferred) மகர் இரண்டாம் வகையாகும். இவ்வகை மக ரானது மணவிலக்கு ஏற்படும்போதோ மனைவி விதவையாகும்போதோ கொடுக்கப்படும். திருமணக் காலத்தில் அந்த மகர் உடனடியாகக் கொடுக் கப்படவேண்டியதா பின்னர்க் கொடுக்கப் பட வேண்டியதா என்று முடிவு செய்யாதிருந்தால், அது உடனடியாகக் கொடுக்கப்பட வேண்டிய மகர் என்று கருதப்படவேண்டும் என்று ஒரு வழக்கில் சென்னை உயர்நீதிமன்றம் தீர்ப்பு அளித்துள்ளது.

மணவிலக்கு: பூப்புவயதை அடைந்தவனும் நல்ல மனநிலையிலுமுள்ளவனுமான ஒரு முகமதியன் தன் விருப்பம்போல் எப்போது வேண்டுமானாலும் தன் மனைவியை மணவிலக்குச் செய்யலாம். அதற்கு எவ்விதக் காரணமும் காட்டத் தேவையில்லை. நீதி மன்றத்துக்குச் செல்ல வேண்டியதுமில்லை. அவ் வாறு மணவிலக்குச் செய்வதற்குத் 'தலக்' என்று சொல்வதுண்டு. 'தலக்' (Talak) என்று சொல்லப் படும் மணவிலக்கை வாய் மொழியாகவோ எழுத்து மூலமாகவோ செய்யலாம். எழுத்து மூலமிருந்தால் பத்திரம் எழுதிக் கையெழுத்திட்டவுடன் மாற்ற முடியாத மணவிலக்கு ஏற்பட்டு விடுகிறது.

வாய்மொழியாக மணவிலக்குச் செய்வதில் மூன்று வகைகள் உள்ளன. தூர் (Tuhr) என்று சொல்லப்படும் காலத்தில் (மாதவிலக்குகள் ஏற்படு வதற்கு இடையேயுள்ளகாலத்துக்குத் தூர் என்ற பெயர் உள்ளது) மணவிலக்குச் செய்வதாக ஒரு தடவை மட்டும் கணவன் அறிவித்து அதைத் தொடர்ந்து, இத்தாத்துக் காலம் முடிவடையும் வரை உடலுறவு கொள்ளாதிருந்தால், இத்தாத்துக் காலம் முடிவடைந்தவுடன் மாற்ற முடியாத மண விலக்கு ஏற்பட்டுவிடுகிறது. இம்முறைக்கு 'தலக் ஆசன்' (Talak Ashan) என்று பெயர்.

ஒவ்வொரு தூர் காலத்தில் ஒருதடவை வீதம் வரிசையான மூன்று தூர் காலங்களில் மொத்தம் மூன்று தடவைகளில், மணவிலக்குச் செய்வதாகக் கணவன் வாய் மொழியாகத் தெரிவிப்பது 'தலக்

ஆசன்' (Talak Hasan) என்று சொல்லப்படுகிறது. அவ்வாறான மூன்று தூர் காலங்களுக்கிடையில் உடலுறவு ஏற்படக்கூடாது. மூன்றாம் முறையில் தலக் சொல்லும்போதே மாற்ற முடியாத மண விலக்கு ஏற்பட்டு விடுகிறது.

ஒரே தூர் காலத்தில் ஒரே சமயத்தில் மண விலக்குச் செய்வதாக மூன்று தடவை கணவன் வாய்மொழியாக அறிவித்தால், உடனடியாக மாற்ற முடியாத மணவிலக்கு ஏற்படுகிறது. இம்முறைக்கு 'தலக் பாடை' (Talak Badai) என்று பெயர். மேற் கூறிய மூன்று வகையில் தலக் சொல்லும்போது மனைவி இருக்க வேண்டும் என்ற கட்டாயம் கிடை யாது.

சீயா சட்டப்படி கணவன், தகுதிவாய்ந்த சாட்சிகள் முன்னிலையில் வாய்மொழியாகக் கூறி மணவிலக்குச் செய்யலாம். அவ்வாறு வாய்மொழி யாக மணவிலக்குச் செய்யத் தகுதியில்லாவிட்டால் தான், எழுத்து மூலம் கணவன் மணவிலக்குச் செய்யலாம்.

முகமதிய மனைவியானவள் தன் விருப்பம்போல் மணவிலக்குச் செய்ய முடியாது. திருமணத்துக்கு முன்னரோ அல்லது பின்னரோ கணவன் மனைவிக் குள் ஒப்பந்தமிருந்தால் அந்த ஒப்பந்தப்படி, மனைவி கணவனை மணவிலக்குச் செய்யலாம். ஆனால் மண விலக்குக்கான காரணங்கள் முகமதியச் சட்டத்துக்கு மாறானவையாக இருக்கக் கூடாது.

கணவன் மனைவி இருவரும் இசைவு தெரிவித்து மணவிலக்குச் செய்து கொள்ளலாம். அதற்கு மனைவி காரணமாக இருந்து, திருமணத் தொடர் பிலிருந்து விடுதலை பெறுவதற்காகக் கணவனுக்கு மனைவி பொருள் கொடுக்கச் சம்மதித்தால், அதற்கு 'குலா' (Khula) முறை மணவிலக்கு என்பது பெயர். மேற்படி மணவிலக்கு ஏற்படக் கணவன் மனைவி இருவருமே காரணமாக இருந்தால், அதை முபராத்து முறை (Mubaraat) என்று கூறுவார்கள்.

கணவன் மனைவி இருவருக்கும் தனித்தனியே நீதிமன்றத்தின் மூலம் மணவிலக்குப் பெற முகமதியச் சட்டப்படி உரிமை உண்டு. அவ்வாறு முகமதியப் பெண்ணுக்குள்ள உரிமை குறித்து 1939-ஆம் ஆண்டில் இந்திய அரசானது முகமதிய மணமுறிவுச் சட்டத்தை (Dissolution of Muslim Marriage Act 1939) இயற்றி யுள்ளது. இச்சட்டத்தின் 2-ஆம் பிரிவில் மனைவி மணவிலக்குப் பெறுவதற்கான காரணங்கள் கொடுக் கப்பட்டுள்ளன. அவையாவன: 1. கணவனது இருப் பிடம் நான்கு ஆண்டுக் காலமாகத் தெரியாமலிருப் பது. 2. மனைவியைக் கணவன் பாதுகாக்க இரண்டு ஆண்டுக் காலமாகத் தவறிவிடுவது. 3. ஏழு ஆண்டு களோ அதற்கு மேற்பட்ட காலமோ சிறைத்தண் டனை அனுபவிக்குமாறு கணவனுக்குத் தண்டனை விதிக்கப்பட்டிருப்பது. 4. நியாயமான காரணங்கள் இல்லாத நிலையில் கணவன் தன் திருமணக் கடமை களை மூன்று ஆண்டுகளாகச் செய்யாதிருத்தல். இக் காரணத்தின் அடிப்படையில் பிறப்பிக்கப்படும் நீதி மன்ற ஆணையானது, ஆறுமாதகாலத்துக்குச் செயற் படத்தக்கது அன்று. அந்த ஆறுமாத காலத்துக்குள் கணவன் நேரிலோ அல்லது அதிகாரம் பெற்ற பேராளர் மூலமோ நீதிமன்றத்தில் தோன்றி, மண வாழ்க்கைக்குரிய கடமைகளைச் செய்யத் தயாராக இருப்பதாக நீதிமன்றத்தைத் திருப்தி செய்தால்மேற் கூறிய நீதிமன்றஆணை நீக்கம் செய்யப்படவேண்டும். 5 திருமணக் காலத்திலிருந்து தொடர்ந்து கணவன் உடலுறவு கொள்ள முடியாத நிலையில் இருப்பது. ஓராண்டுக் காலத்தில் உடலுறவு கொள்வதற்கான வலுவை அடைவதற்குக் கணவனுக்கு நீதிமன்றம் அவகாசம் அளிக்க வேண்டும். 6. இரண்டு ஆண்டு களாகக் கணவன் பயித்திமாக இருத்தல் அல்லது கண வன் தொழுநோயால் துன்புறுதல் அல்லது முற்றிய நிலையிலுள்ள பால்வினை நோயினால் கணவன் துன்புறுதல். 7. மனைவி 15 வயது அடைவதற்குள் அவள் தந்தை அல்லது காப்பாளர் அவளது திரு மணத்தை நடத்தி வைத்திருந்த நிலையில், மனைவி யானவள் தான் 18 வயது அடைவதற்குள் அவளது திருமணத்தை மறுத்திருந்தால், அக்காரணத்தைக் காட்டி, மனைவி மணவிலக்கு வேண்டலாம். ஆனால் கணவனுடன் உடலுறவு கொண்டிருந்தால் மேற் சொன்ன காரணத்திற்காக மனைவியானவள் மண விலக்குக் கேட்க முடியாது. 8. மணவாழ்க்கையை கணவன் நரகமாக்குதல் - ஒழுக்கம் கெட்ட பெண் களுடன் கணவன் தொடர்பு வைத்திருத்தல் - ஒழுக்கம் கெட்ட வாழ்க்கையை கணவன் நடத்துதல் -மனைவியைத் தீய வாழ்க்கை நடத்துமாறு கணவன் வற்புறுத்துதல் - மனைவியின் சொத்தை விற்று விடுதல் - மனைவி தன் சொத்துக்களில் உள்ள உரிமைகளை அனுபவிக்க முடியாமல் கணவன் தடுப் பது - மனைவியானவள் அவள் விருப்பம்போல் மதக் கோட்பாடுகளைக் கடைப்பிடிக்க முடியாமல் கணவனால் தடுக்கப்படுவது - ஒருத்திக்கு மேற்பட்ட மனைவிகள் இருக்கும் நிலையில் குரானில் சொல்லிய படி எல்லா மனைவியரையும் சமமாக நடத்தக் கணவன் தவறிவிடுதல். 9. முகமதியச் சட்டத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட வேறு காரணங்கள்.

முகமதியக் கணவன் மதம் மாறினால் அது மண முறிவு ஏற்படக் காரணமாக அமையும். முகமதிய மனைவி மதம் மாறினால் அதே நிலைதான் முதலில் இருந்தது. ஆனால் 1939-ஆம் ஆண்டைய முகமதிய மணமுறிவுச் சட்டம் இயற்றப்பட்ட பின்பு நிலைமை

மாறிவிட்டது. இச்சட்டம் செயல் முறைக்கு வந்த பின்பு மனைவி மதம் மாறினால் அதனால் மட்டும் மணமுறிவு ஏற்படாது. அவ்வாறு மதம் மாறும் மனைவிக்கு மேற்கூறிய சட்டத்தின் 2-ஆம் பிரிவில் சொல்லப்பட்டுள்ள காரணங்களில் ஏதாவது ஒன்றைக் காட்டி, மனைவி மணவிலக்குக் கோரலாம். ஆனால் முதலில் அப்பெண் வேறுமதத்தினளாயிருந்து முகமதிய மதத்தைத் தழுவி, மறுபடியும் முதலிலிருந்த மதத்துக்கே அப்பெண் மாறுவாளாயின் அது உடனடியாக மணமுறிவுக்குக் காரணமாயிருக்கும்.

மணவாழ்வில் உடலுறவு ஏற்பட்டிருந்தால் மணவிலக்கு ஏற்பட்ட பின்னர் மனைவியானவள், இத்தாத்துக் கடைப்பிடித்த பின்புதான் வேறு திருமணம் செய்யலாம். மணவாழ்வில் உடலுறவு ஏற்படாத நிலையில் மணவிலக்கு ஏற்பட்டவுடனேயே மனைவி வேறு ஒருவனைத் திருமணம் செய்து கொள்ளலாம். மணவாழ்வில் உடலுறவு ஏற்பட்டிருந்தால் மணவிலக்கு ஏற்பட்டவுடனேயே மனைவிக்குச் சேர வேண்டிய பாக்கி மகர் பணம் செலுத்தப்பட வேண்டும். உடலுறவு இல்லாத நிலையில் மகர் பணம் நிருணயிக்கப்பட்டிருந்தால் அதில் பாதியும், மகர் பணம் நிருணயிக்கப்படாதிருந்தால் மூன்று அடைகள் மட்டும் மனைவிக்குக் கிடைக்க வேண்டும். மணவிலக்கானது மாற்ற முடியாத நிலையை அடையும் வரை கணவன் மனைவிக்குள் வாரிசுரிமை நீடிக்கும். அது மாற்ற முடியாத நிலையை அடைந்த பின்பு ஏற்படும் உடலுறவு மூலம் பிறக்கும் குழந்தைகள், சட்டத்துக்குப் புறம்பானவர்களாகக் (Illegitimate) கருதப்படுவார்கள்.

தலக்கு ஆசன் மற்றும் தலக்கு பாடை மூலம் **(Talak Hasan and Talak Badai)** மணவிலக்கு ஏற்பட்டால், அந்த மனைவி வேறு ஒருவனைத் திருமணம் செய்து மறுபடியும் மணவிலக்கு ஏற்பட்ட பின்பு, அல்லது மறு மணவாழ்க்கையில் உடலுறவு ஏற்பட்ட பின் மறு கணவன் இறந்த பின்பு, அப்பெண்ணும் முதல் கணவனும் மறுபடியும் திருமணம் செய்து கொள்ளலாம். இவ்வாறு ஒரு திருமணம் குறுக்கிடாத நிலையில் அத்தம்பதிகள் மறுபடியும் திருமணம் செய்து கொண்டால் அது ஒழுங்கு கெட்டதேயொழிய செல்லாததன்று. வேறு வகைகளில் மணவிலக்குச் செய்து கொண்ட தம்பதிகள் உடனடியாகவே தங்களுக்குள் மறு திருமணம் செய்து கொள்வதில் தடை ஏதும் இல்லை.

கணவன் தன் மனைவியைப் பாதுகாக்கக் கடமைப் பட்டவன். முகமதியச் சட்டப்படி மணவிலக்குச் செய்யப்பட்ட மனைவியை இத்தாத்துக் காலம் முடியும் வரை கணவன் பாதுகாக்க வேண்டும். ஆனால் அவ்வாறு மணவிலக்குச் செய்யப்பட்ட மனைவி தன்னைத்தானே பாதுகாத்துக் கொள்ளமுடியாத நிலையிருந்தால் அவளை அவள் மறுமணம் செய்யும் வரை, குற்ற விசாரணை முறைச் சட்டம் 125-ஆம் பிரிவின் படி கணவன்பாதுகாக்க வேண்டும் என்று உச்ச நீதி மன்றம் ஒரு வழக்கில் தீர்ப்பு அளித்துள்ளது. மகர் பணமானது மணவிலக்குச் சமயத்தில் கொடுக்கப்பட்டாலும் அது மணவிலக்குக்காகக் கொடுக்கப்படும் பொருள் அன்று என்று மேற் கூறிய தீர்ப்பில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. மேலும் குற்ற விசாரணை முறைச்சட்டம் 125-ம் பிரிவுக்கும் முகமதியச் சட்டத்துக்கும் முரண்பாடு எதுவுமிருந்தாலும், அந்த விவகாரம் குறித்துக் குற்ற விசாரணை முறைச் சட்டம் 125-ம் பிரிவு செல்லத்தக்கது என்று மேற்படி தீர்ப்பில் கூறப்பட்டுள்ளது.

குழந்தையின் ஆள்மை சம்பந்தமான காப்பாளர் **(Personal Guardian):** 7 வயது நிறைவு அடையாத ஆண்குழந்தையும் பூப்பு எய்தாத பெண் குழந்தையும் தாயின் பாதுகாப்பில் இருக்க வேண்டும். தாய் இல்லாவிட்டால் தாய்வழி உறவினரிடமும், அவர்கள் இல்லாவிட்டால் தந்தை, தந்தையில்லாத நிலையில் தந்தை உறவினரிடமும் குழந்தை இருக்க வேண்டும். 7 வயது நிறைவு அடைந்த ஆண் குழந்தையும் பூப்பு அடைந்த ஆனால் திருமணமாகாத பெண் குழந்தையும் தந்தையின் பாதுகாப்பில் இருக்க வேண்டும். தந்தையில்லாத நிலையில் தந்தை வழி உறவினரிடமிருக்க வேண்டும். குறிப்பிட்ட கட்டத்தில் தாயிடம் குழந்தை இருக்க வேண்டும் என்றாலும், தாய் குழந்தைக்கு உறவினர் ஆகாதவனைத் திருமணம் செய்து கொண்டால் அல்லது மணவாழ்க்கை நடைமுறையிலிருக்கும் நிலையில் குழந்தையின் தந்தை வாழும் இடத்தை விட்டுத் தொலைவில் தாய் வாழ்ந்தாலோ அல்லது தாய் ஒழுங்குகெட்ட வாழ்க்கையை மேற்கொண்டாலோ அல்லது குழந்தையைத் தாய் நல்ல முறையில் பாதுகாக்கத் தவறி விட்டாலோ குழந்தையைத் தன்வசம் வைத்திருக்கக்கூடிய உரிமையைத் தாய் இழந்துவிடுவாள். திருமணமான பெண்ணுக்குக் கணவன்தான் காப்பாளன். ஆனால் அந்தத் திருமணமான பெண் பூப்பு எய்தாதிருந்தால் அந்தப் பெண் அவள் தாயின் பாதுகாப்பிலிருக்க வேண்டும். சட்டத்துக்குப் புறம்பான குழந்தைக்கு அவள் தாய்தான் காப்பாளர் ஆவாள்.

குழந்தையின் சொத்துத் தொடர்புடைய காப்பாளர் **(Property Guardian):** முகமதியச் சட்டப்படி பூப்பு அடையாத அல்லது 15 வயது அடையாத குழந்தை உரிமை வயது அடையாத குழந்தையாகக் கருதப்படும். ஆனால் செயல் சட்டப்படி 18 வயது நிறைவு அடையாதவரை உரிமை வயது அடையாத குழந்தையாகக் கருதப்படும். நீதிமன்றக் காப்பாளர் அல்லது

காப்பாயம் (Court of Wards) நியமிக்கப்பட்டிருந்தால் அவ்வயது 21 ஆக உயரும். உரிமை வய்து அடையாத குழந்தையின் சொத்துக்குத் தந்தையும், உயில் மூலம் தந்தையால் நியமிக்கப்பட்ட காப்பாளரும், தந்தையின் தந்தையும், அவ்வாறான தந்தையின் தந்தையால் உயில் மூலம் நியமிக்கப்பட்ட காப்பாளரும் இயற்கையான காப்பாளர்கள் ஆவார்கள். இயற்கையான காப்பாளர் (Natural Guardian) இல்லாத நிலையில், கி.பி. 1890–ஆம் ஆண்டைய காப்பாளர் மற்றும் காப்பிலுள்ளோர் சட்டப்படி நீதிமன்றத்தால் காப்பாளர் நியமிக்கப்படுவார்.

கீழ்க்காணும் காரணங்களுக்காக மட்டும் இயற்கையான காப்பாளர் தமது காப்பிலுள்ளோரின் அசையாப் பொருள்களை விற்கலாம். 1. சொத்தின் மதிப்பைக் காட்டிலும் இரட்டிப்புப் பங்கு பணம் கிடைத்தால், 2. காப்பிலுள்ளோருக்கு வேறு சொத்து இல்லாதிருந்து, காப்பிலுள்ளோரின் பாதுகாப்பிற்குச் சொத்தை விற்க வேண்டிய நிலை ஏற்பட்டால், 3. கடன்களை அடைக்க வேறு வழி இல்லாவிட்டால், 4. காலமான சொத்துரிமையாளரின் விருப்பாவணம் மூலம் கொடுக்கவேண்டிய பணத்தைச் செலுத்த வேறு வழியில்லாவிட்டால், 5. சொத்தின் வருமானத்தைக் காட்டிலும் செலவு அதிகமாக இருந்தால், 6. சொத்தானது அழிவு நிலையை நோக்கிச் சென்று கொண்டிருந்தால், 7. சொத்தை வேறு ஒருவர் கைப்பற்றி அதைத் திருப்பிப் பெறும் வாய்ப்பில்லாத நிலையிலிருந்தால்.

நடைமுறைக் காப்பாளர் (Defacto Guardian) காப்பிலுள்ளோரின் அசையாப் பொருளைப்பராதீனம் செய்தால் அது செல்லாதது ஆகும். நீதிமன்றத்தால் நியமிக்கப்படும் காப்பாளர், நீதிமன்றத்தின் அனுமதியின்றிக் காப்பாளரின் பொறுப்பிலுள்ள அசையாப் பொருளைப் பராதீனம் செய்யக்கூடாது.

**இசுலாமியத் தத்துவம்**: தீர்க்கதரிசிமுகமதின் கொள்கையைப் பின்பற்றியோர் இசுலாம் மதத்தினர். இசுலாம் (Islam) என்ற அரேபியச் சொல்லுக்குக் கீழ்ப்படிதல் என்பது பொருள். அரேபியா நாட்டில் கி.பி.ஏழாம் நூற்றாண்டில், மனிதனுக்கும் கடவுளுக்குமுள்ள உறவு பற்றி முகமது போதித்தது இசுலாமியக் கொள்கையாகும்.

இசுலாமிய மதக் கொள்கைகள் பரவுவதற்கு முதற்காரணம், அக்காலத்தில் மக்கள் பண்பாடற்ற முறையில் ஒருவரை ஒருவர் கொன்றும், மது அருந்தியும் காலத்தை வீணாக்கிக் கொண்டிருந்தமையே யாகும்.

வரலாற்றுக் காலத்துக்கு முந்திய அரேபியர்கள், தத்துவ சிந்தனை இல்லாதவர்களாயிருந்தார்கள். அவர்கள் காலத்தைப் பற்றி மட்டில் குறிப்பிட்டிருந்தார்கள். முகமது, காலத்திற்கும் அப்பால் ஒரு சக்தி இருக்கிறதென்றும், அது எல்லோருடைய வாழ்க்கையையும் வரையறுக்கிறதென்றும், இந்த உலக வாழ்க்கைக்குப் பிறகும் அச்சக்தி ஒரு சிறந்த வாழ்க்கைக்குத் துணை புரிகிறதென்றும் கூறினார். பாலை வனத்தில் வசித்த அரேபியர் கல்லிலும் மரத்திலும் தண்ணீரிலும் ஒருவித ஆவி இருக்கிறதென்று நம்பினர். ஆகையினால், சில மாதங்களில் அவர்கள் மெக்காவிலுள்ள (Mecca) காபா (Kaaba) என்ற கோயிலுக்குச் சென்றார்கள். முகமதின் காலத்திற்கு முன்பே மெக்கா பெரிய வாணிகத்திற்குரிய இடமாக விளங்கியது.

முகமது, யூத, கிறித்தவ மதங்களை நன்றாக அறிந்தவர். வணிகர்கள் நிறையப் பணம் திரட்டினார்கள். பிறகு மக்களுக்குக் கடன்கொடுத்து, மிகுதியான வட்டி வாங்கிக் கொடுமைப்படுத்தினார்கள். இத்தகைய ஒரு சூழ்நிலை, முகமதுவிற்கு நல்ல மதத் தொடர்பான போதனைகளைக் கூறி மக்களைத் தம் வசப்படுத்த உதவியது.

முகமது பிறந்த ஆண்டு கி.பி. 570 என்று கூறப்படுகிறது. அவர் மெக்காவில் ஓர் ஏழைக் குடும்பத்தில் பிறந்தார். அவர் பிறக்குமுன் தந்தையார் இறந்தார்; தாயும் இறந்துவிட்டார். அவர் மாமன் அபுதாலிபு (Abu Talib) அவரை வளர்த்தார். அவர் கதீசா என்ற செல்வம் நிறைந்த கைம்பெண்ணை மணந்தார். இவர் முகமதைவிட வயதில் முதிர்ந்தவர்.

முகமதுவிற்கு முப்பது வயதிற்கு மேல் நாற்பது வயதிற்குள் ஓர் அனுபவம் ஏற்பட்டது. மெக்காவில் மலைக்கு மேல் உள்ள ஒரு குகைக்கு வழிபாட்டிற்குச் சென்றார். அங்கே ஒரு தேவதூதன் தோன்றி இறைவன் பெயரை உச்சரிக்கக் கூறினான். முகமது சிறிது நேரம் ஆராய்ந்தார். உடனே அவன் முகமதுவின் கழுத்தைப் பிடித்து அமுக்கினான். முகமதுவின் மனம் மாறிவிட்டது. பலர் அவரை எதிர்த்தனர். அவர் பிறகு மதினாவிற்குச் சென்றார். இறைவன் ஒருவரே; அவர் அல்லா எனப்படுவார்; அவர் இந்த உலகைப் படைத்தார்; அவரே இந்த உலகைக் காக்கிறார். இதை நம்பிக் கடவுளுக்குப் பயந்து நடக்கிறவன் விண்ணுலகை அடைகிறான். மற்றையோர் நரகலோகத்தை அடைந்து துன்பம் அனுபவிப்பர் என்று முகமது கூறினார்.

பிறகு வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய விதிகளைப் பற்றியும் அவர் கூறினார். அவர் ஒரு தெய்வீக மனிதன் என்று யாரும் கருதவேண்டா. அவர் அற்புதங்கள் செய்து காட்டவில்லை. அவர் இறைவன் கையில் தம்மை ஒப்படைத்தார்,

சூபிகள் (Subis) முகமதை ஒரு தெய்விக ஒளியாகக் கருதினார்கள். அவர் மூலமாக இறைவனை விரைவில் அடையலாம் என முகமதியர்கள் நம்பினார்கள்.

குர்-ஆன்: முகமதியர்கள் குர்-ஆனை (The Koran) இறைவனின் வாய்மொழிகளாகக் கருதினார்கள். யூதர்களும், கிறித்தவர்களும் இயேசு போதித்த நல்ல கருத்துகளைக் கெடுத்து விட்டார்கள். ஆகையினால், இறைவன் குர்-ஆனை மக்களைக் காப்பாற்றக் கொடுத்தார் என்று முகமதியர்கள் கருதினார்கள். குர்-ஆனை மற்ற மொழிகளில் மொழிபெயர்க்க அவர்கள் விரும்பவில்லை. பிற மொழிகளில் பெயர்த்தால் அதன் தூய தன்மை கெட்டுவிடும் என்று நினைத்தார்கள்.

குர்-ஆனில், திருமணம் பற்றியும், திருமணவிலக்குப் பற்றியும், மரபுரிமை பற்றியும், ஒப்பந்தங்கள் பற்றியும், வழிபாடுகள் பற்றியும், விரதங்கள் பற்றியும் கருத்துகள் நிறைய உள்ளன.

சுன்னா: இசுலாமிய மரபில் நபிநாயக வாய்மொழிப் பதிவாகக் கொள்ளப்படும் கட்டளைச் சட்டம் சுன்னா (Sunna) எனப்படும். இசுலாமிய அரேபியர்களுக்கு முந்தியவர்கள் பழைய கொள்கையில் விருப்பமுள்ளவர்கள். முகமது பழைய கொள்கையைத் தீமை வாய்ந்தது என்று கூறியதை அவர்கள் வெறுத்தார்கள். இசுலாமிய அரேபியர்களுக்கு முந்திய முகமதியர்கள் பழைய கொள்கைகளுக்குப் புதிய விளக்கத்தைக் கொடுத்தார்கள்.

மியூட்டாசுலைட்டுகள்: அவர்கள் நியாயத்திற்கும் ஒற்றுமைக்கும் சிறப்பளித்தவர்கள். மதத்தைப் பகுத்தறிவு கொண்டு ஆராய்பவர்கள். கடவுள் நீதி வடிவானவர்; எப்பொழுதும் நன்மையே செய்பவர்; தீமைக்கு அவர் காரணமானவர் அல்லர்; மனிதனுக்கு அறிவு இருக்கிறது; அவ்வறிவால் நன்மை எது, தீமை எது என்று தெரிந்து கொள்ள வேண்டும் என்பன மியூட்டாசுலைட்டுகளின் (Mutazlites) நம்பிக்கை.

அல்-அசாரி: இவர் இறைவனின் பெருமையைத் தெரிந்து பயந்து நடப்பவர்; சுதந்திரமான எண்ணத்திற்கு இடம் அளிப்பவர். அல்-அசாரி (Al-Ashari) குர்-ஆன் கூறியதை ஒத்துக் கொண்டார்: கடவுளுக்கு அதிகாரமும் அறிவும் நல்ல எண்ணமும் உண்டு என்று கூறினார். அல் அசாரியின் தோழர்கள் அணுக் கொள்கையைக் கடைப்பிடித்தார்கள். அவர்கள் கடவுள் ஒவ்வொரு அணுவிலும் உலகத்தைத் திரும்பப் படைக்கிறார் என்று கூறினார்கள்.

சட்டம்: இசுலாம், சட்டத்திற்கு (Law) மதிப்பளிக்கிறது. அது கடவுளை எப்படி அமைதிப்படுத்த முடியும் என்றும், அவர் அன்பை எப்படிப் பெறுவது என்றும் கூறுகிறது.

சாரியா: இது ஒரு பாதை என்று பொருள் படும். கடவுள் விரும்பும் மனிதன், நடக்க வேண்டிய பாதையினை இது காட்டுகிறது. மனிதன் நல்லது எது, கெட்டது எது என்று அறிய முடியாதவனாகிறான். ஆகையினால், தீர்க்கதரிசிகள் இறைவனால் அனுப்பப்பட்டு அவர்களுக்கு நல்வழி காட்டுகிறார்கள். சாரியா (Sharia) என்பது தாபூதி (Taabbudi): அதாவது, ஓர் அடிமை தன் மேலதிகாரியிடம் கீழ்ப் படிதல் வேண்டும். சட்டத்தை விடச் சாரியா மேலானது. கட்டுப்படுத்த வேண்டிய உணவுகள், அணிய வேண்டிய ஆடைகள், கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கங்கள் ஆகியவை இதில் அடங்கும். சாரியாவை இரண்டாகப் பிரிக்கிறார்கள். ஒன்று இபாதத்து (Ibadat). இது இறைவனுக்குச் செய்ய வேண்டிய கடமைகளை விவரிக்கும்; மற்றொன்று மியாமலத்து (Muamalat). இது மனிதனுக்கும் சமுதாயத்திற்கும் செய்ய வேண்டிய கடமைகளைச் சுட்டும்.

சூபிசம்: ஏறத்தாழ 500 ஆண்டுகளாக இசுலாமிய மதத்தில் இறைநிலை இணைவுப்பான்மை அல்லது இறைமை இணைவுப் பண்பு (Mysticism) என்ற இயக்கம் சமுதாயத்தில் புகுந்தது. சமய சித்தாந்தமும் (Theology) சட்டமும் (Law) பெரிய அறிவாளிகளிடையே பரவியிருந்தன. அதிகமான கல்வியறிவில்லா மக்களிடம் நடைமுறைக்கேற்ப இறைநிலை இணைவுப்பான்மை மேலோங்கி வளர்ந்தது.

இசுலாமிய இறைநிலை இணைவுப்பான்மையைச் சூபிசம் (Sufism) என்று கூறினர். சுப் (Sub) என்பது அரேபிய வார்த்தையிலிருந்து வந்தது. 'சுப்' என்பது கம்பளி எனப் பொருள்படும். முதலில், அவர்கள் கம்பளியால் செய்த ஆடைகளை அணிந்தார்கள். அல்-கசன், அல் பாசுரி, ராபியா (Al-Hasan, Al-Basuri, Rabia) முதலானோர் இறைவனோடு மிகுதியான அன்பு கொண்டவர்களாயிருந்தார்கள்.

குர்-ஆன் இறைவனின் எங்கும் பரவியிருக்கும் தன்மையைக் கூறுகிறது. அது முகமதியர்கள் இறைவனை எப்பொழுதுமே சிந்திக்க வேண்டும் என்றும், அன்பாக இருக்க வேண்டும் என்றும் கூறுகிறது. இறைவனோடு இணைந்த அனுபவத்தையும் அது விவரிக்கிறது. கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு முதல் ஒரு புதிய கருத்து சூபிசத்தோடு சேர்த்து உணரப்பட்டது. அதாவது, ஒழுங்கு படுத்திய சகோதரத் தன்மை, இசுலாமிய உலகம் முழுவதும் பரவியது.

தாரிகா (Tariqa) என்பது இறைவனுடன் சேருவதற்குரிய வழி. ஒவ்வொரு ஒழுங்கு முறைக்கும் ஒரு

தலைவர்; செயிக்கு (Sheikh) என்பது அவர் பெயர். அவர்தம் தொண்டர்கள் மியுரிடு(Murid)எனப்படுவர். இவர்களுக்கு இறை நிலை இணைந்த பான்மையைப் பற்றிய அறிவைப் புகட்டுவார்கள். சூபிகள் மக்களுக்கு ஆன்மிக ஆலோசனைகள் கூறுவார்கள்; உணவு, மருத்துவ வசதிகள் முதலியன செய்து தருவார்கள்; பொருளுதவியும் செய்வார்கள்.

**துறவிகள்**: மக்கள் இவர்களுக்குச் சிறந்த மரியாதைகள் செய்வார்கள். இவர்களுக்கு ஓர் ஆன்மிகச் சக்தி உண்டு. அதற்குப் பாரக்கா (Barakah) என்பது பெயர். இவர்கள் அற்புதங்கள் செய்வர். அதற்குக் காராமத்து (Karamat) என்பது பெயர். இவர்கள் இறந்தால், சமாதி கட்டி வணங்குவர். இப்பொழுது படித்தவர்களிடம் சூபிசக் கருத்துகள் குறைவாகக் காணப்படுகின்றன. கிராம மக்களிடையே அக்கருத்துகள் மேலோங்கி நிற்கின்றன.

**இசுலாமிய வழிபாடு**: முகமதியர்கள் கடவுளுக்குச் செய்ய வேண்டிய அடிப்படையான கடமைகளை ஐந்து தூண்கள் என்று கூறலாம். முதலாவது, சாகதாவை (Shahada) திரும்பத் திரும்பக் கூறுதல். அதாவது, ஒரே ஒரு கடவுள், முகமது அவர் தூதர் என்று கூறுவது. இரண்டாவது, சாலத்து (Salat). முகமதியர்கள் நாடோறும் ஐந்து முறை வழிபாடு செய்வர். அதிகாலை, நடுப்பகல், நடுப்பகலுக்குப் பிறகு, சூரியன் மறைந்தவுடன், இரவு ஆகிய ஐந்து வேளைகளில் மெக்கா இருக்கும் திசை நோக்கி வழிபாடு செய்வார்கள். வெள்ளிக்கிழமை கூட்டு வழிபாட்டிற்காக மசூதியில் சந்திப்பார்கள். மூன்றாவது தூண் சாகத்து (Zakat) என்பது. அதாவது, ஏழைகளுக்கு உதவி செய்தல். ஒவ்வொருவரும் அவருடைய சொத்தில் ஒரு பகுதியை ஏழைகளுக்கும் வழிப்போக்கர்களுக்கும் கொடுக்க வேண்டும். நான்காவது தூண் இரமதான் (Ramadan) மாதத்தில் விரதம் (Fast) இருத்தல். பௌர்ணமி மாதத்தில் (Lunar Month) பகல் நேரத்தில் உணவும் தண்ணீரும் அருந்தக் கூடாது. விரதம் அதிகாலையில் தொடங்கிச் சூரியன் மறைந்தவுடன் முடியும். இரவு மசூதியில் அல்லது தனியான அறையில் குர்-ஆனைப் படிப்பதும், வழிபடுவதும் செய்ய வேண்டும். புண்ணியப் பயணம் செய்வோர், கருவுற்றோர், தொழிலாளிகள், மற்றும் சிலர் இதற்கு விதிவிலக்காவர். இரமதான் முடிந்ததும் ஒரு விலக்க முடியாத விருந்து நடைபெறும். அதிலிருந்து பல நாட்கள் விழா நடைபெறும். இந்தச் சமயத்தில் முகமதியர்கள் ஒருவரையொருவர் சந்திப்பார்கள்; புதிய ஆடைகள் வாங்குவார்கள்; நன்கொடை அளிப்பார்கள். ஐந்தாவது தூண் புண்ணியப் பயணம் (Haj ). அதாவது, மெக்காவிலுள்ள காபாவிற்குச் செல்லுதல். ஒவ்வொரு வலிமையுள்ள முகமதியரும் இந்தப் பயணத்தை மேற்கொள்ள வேண்டும். இதோடு பல சடங்குகளும் உண்டு. அதாவது, சிறந்த ஆடை அணிய வேண்டும்; காபாவைச் சுற்றி ஏழுமுறை வலம் வர வேண்டும்; காபாவின் மூலையிலுள்ள கறுப்புநிறக் கல்லை முத்தமிட வேண்டும். புண்ணியப் பயணம் புறப்பட்ட பத்தாம் நாள் மினா (Mina) என்ற பள்ளத்தாக்கில் ஒரு விலங்கைப் பலி கொடுக்க வேண்டும்.

பெரிய பைராம் (Greater Bairam) என்ற தியாகத் திருவிழா (Sacrifical Festival) முகமதியர் வாழும் உலகம் முழுவதும் கொண்டாடப்படும். ஆயிரக்கணக்கான மக்கள் ஆண்டுதோறும் மெக்காவிற்குச் செல்வார்கள். பலர் மதினா (Medina) விற்கும் சென்று தீர்க்கதரிசியின் சமாதியை வணங்குவார்கள்.

தீர்க்கதரிசியான முகமதின் பிறந்த நாள் ஆண்டுதோறும் கொண்டாடப்படும். சிட்டே (Shite Muslims) முகமதியர்களிடையே, முகரம் (Muharram), மாதத்தில் பத்தாம் நாள், கர்பாலா (Karbala), போர்க்களத்தில் உயர் குறிக்கோளுக்காக உயிர்விட்ட தீர்க்கதரிசி முகமதின் பேரன் குசேயின் (Husayn) நினைவு நாளாகக் கொண்டாடப்படும்.

**சியா**: முகமது இறந்தவுடன் தலைமைப் பதவிக்காக ஒரு கூட்டம் போராடியது. சியா (The Shia) என்பது ஒரு கூட்டம் அல்லது கட்சியைக் குறிக்கும். சியா கட்சியினரின் நம்பிக்கை என்னவெனில், கடவுள் இமாம்களை (Imams) சமுதாயத்தின் தலைமைப் பதவிக்குத் தேர்ந்தெடுத்திருக்கிறார்; அவர்களுடைய உதவியால்தான் இசுலாமை நன்றாகப்புரிந்து கொண்டு நடக்க முடியும் என்பதாகும். இவர்கள் பன்னிரண்டு (The Twelvers) இமாம்களை ஒத்துக் கொண்டிருக்கிறார்கள். இவர்களுள் கடைசியானவர் மறைந்தாலும் இன்றும் உலகில் அவர்கள் இருப்பதாக நினைக்கிறார்கள். மற்றுமொரு கூட்டத்தார், ஏழு தலைவர்களை ஒத்துக் கொண்டிருக்கிறார்கள். இப்பொழுது ஈரான் நாட்டில் சிட்டே (Shite) முகமதியர்கள் இருக்கிறார்கள்.

**இசுலாமும் இக்கால உலகமும்**: பண்பாட்டிலும் அரசியலிலும் முகமதியர்கள் திரும்பவும் மறுமலர்ச்சியுடன் காணப்படுகிறார்கள். மேல்நாட்டு நாகரிகமும் ஐரோப்பிய நாட்டின் ஆதிக்கமும் அவர்களுக்குப் பெரிதும் தடையாக இருந்தன. கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டில் மூன்று பெரிய முகமதியப் பேரரசுகள் இருந்தன. அவை ஒட்டோமான் (Ottoman) பேரரசு, சபாவித்துப் (Safavid) பேரரசு, முகலாயப் பேரரசு ஆகும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் கடைசியில் அவை மறைந்தன. ஐரோப்பிய ஆதிக்கம்அந்த இடங்களிலெல்லாம் தோன்றியது. இருபதாம் நூற்றாண்டில்

திரும்பவும் நிலைமை மாறியது. குடியேற்ற ஆதிக்கம் மாறியது. இந்தோனிசியாவிலிருந்து அட்லாண்டிக்கு வரை சுதந்திர முகமதிய நாடுகள் தோன்றின.

இன்றைய உலகில் முகமதியர்கள் தாங்கள் இழந்த பண்பாட்டைத் திரும்பப் பெற்றனர். இப்பொழுது அவர்கள் எண்ணிக்கையிலும் செல்வ நிலையிலும் சிறந்து விளங்குகிறார்கள். இசுலாம் மீண்டும் நல்ல புதிய இயக்கமாக விளங்குவதால், முகமதியர்கள் சிறந்த இடத்தை உலகில் வகித்து வருகின்றனர்.

துணை நூல்கள்:

Gubb H.A.R., Mohammedanism, New York, 1955.
Lammers, Henri, Islam, Beliefs and Introduction by E. Denison Ross, London, 1929.

Walt. W., Montgomery, Muhammad; Prophet and Statesman, London, 1961.

இராகுல்சாங்கிருத்யாயன், இசுலாமியத் தத்துவஇயல், நியு செஞ்சுரி புக் உறவுஸ் பிரைவேட் லிமிட்டெட், 1985.

## இசுலாமியத் தமிழிலக்கியங்கள்

தமிழகத்தில் இசுலாம் சமயம் பரவிய பின்னர்த் தமிழில் தோன்றிய இசுலாமிய சமயச் சார்பான நூல்களாகும்.

தமிழை நிலைக்களனாகக் கொண்டு தமிழகத்தில் சமயங்கள் பரவத் தொடங்கி நிலைபெற்றன. இவ்வகையில் சைவமும் வைணவமும் தமிழுடன் இணைந்து பரவிய காலத்திற்குப் பின், இசுலாமும் கிறித்தவமும் தமிழைத் தாம் பரவுவதற்கான கருவியாகக் கொள்ளத் தொடங்கின. தமிழகத்தில் பரவிய சமயங்கள் தமிழுடன் இணைந்த பின்பே இங்கு வலுப்பெற்றன. ஒவ்வொரு சமயமும் வெவ்வேறான தமிழிலக்கிய வகைகளின் வாயிலாகத் தமிழ் மொழியுடன் தொடர்பினை ஏற்படுத்திக் கொண்டது. இத்தொடர்பின் காரணமாகத் தமிழகத்தில் இலக்கிய வளர்ச்சியும் சமய வளர்ச்சியும் ஒன்றையொன்று சார்ந்தே அமைந்துள்ளன. எனவே தமிழிலக்கிய வரலாற்றில் சமயங்களுக்குரிய முதன்மை மறைக்கத் தக்கதன்று.

பல்சந்த மாலை என்னும் இலக்கியத்தின் வழியாகத் தமிழிலக்கிய உலகில் கால்கோள் கொள்ளத் தொடங்கிய இசுலாமியத் தமிழிலக்கியப் பிரிவு, இன்று இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட பல்வேறு தமிழிலக்கியங்களைத் தன்னகத்தே கொண்டு, தனக்கெனச் சுட்டிக்காட்டத்தக்க இலக்கிய வரலாற்றுப் பின்னணியைப் பெற்று, பெரும் வளர்ச்சிநிலையை அடைந்துள்ளது.

விரிந்துபட்ட இலக்கிய வரலாற்றுப் பின்னணியைப் பெற்றுள்ள இசுலாமியத் தமிழிலக்கியங்களின் அறிமுகம் என்ற நிலையில் இசுலாம் தந்த தமிழிலக்கியங்களைப் பின்வரும் பெரும் தலைப்புகளில் சுருக்கிக் காண முயல்கிறது இக்கட்டுரை.

1. தொடக்கக்கால இசுலாமியத் தமிழிலக்கியங்கள்
2. இசுலாமியத் தமிழ்க் காப்பியங்கள்
3. இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள்
4. இசுலாமியத் தமிழிலக்கிய வடிவங்கள்
5. இசுலாமியத் தமிழ் ஞான இலக்கியங்கள்
6. பிற இசுலாமியத் தமிழிலக்கியங்கள்

### தொடக்கக் கால இசுலாமியத் தமிழிலக்கியங்கள்

இசுலாமியத் தமிழிலக்கியங்களின் தொடக்க நிலையில் பல்வேறு கருத்து வேறுபாடுகள் காணப்படினும், இன்று இசுலாமியத் தமிழிலக்கிய வரலாற்றின் தொடக்கம், பல்சந்த மாலை என்னும் தமிழிலக்கியத்தின் வாயிலாகவே நிகழ்ந்துள்ளதென்பது சான்றுகளுடன் கண்டறியப்பட்டுள்ளது. இதன் காலத்தை அறுதியிடும் டாக்டர் உவைசு, பல்வேறு சான்றுகளின் அடிப்படையில் இது கி.பி. 12–ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது என வரையறை செய்துள்ளார். எனவே கி.பி. 12–ஆம் நூற்றாண்டு முதல் 20–ஆம் நூற்றாண்டு வரையிலான 9 நூற்றாண்டுக் கால எல்லையை இசுலாமியத் தமிழிலக்கியப் பிரிவு தன்னகத்தே உள்ளடக்கியுள்ளது. இந்த ஒன்பது நூற்றாண்டுக் கால எல்லைக்குள் 2000–க்கும் மேற்பட்ட தமிழிலக்கியங்களை இசுலாமிய நெறி ஆக்கித் தந்துள்ளது.

தொடக்கக் கால இசுலாமியத் தமிழிலக்கியங்கள் என்னும் நிலையில் பல்சந்த மாலைக்கு அடுத்த நிலையில் யாகோபுச் சித்தர் பாடல்கள் (15–ஆம் நூற்றாண்டு), ஆயிரமசலா (கி.பி. 1572), மிகுராசு மாலை (கி.பி. 1590), திருநெறி நீதம் (கி.பி. 1613) கனகாபிடேகமாலை (கி.பி. 1648), சக்கூன் படைப்போர் (கி.பி. 1686), முதுமொழி மாலை(17–ஆம் நூற்றாண்டின் இறுதி) முதலான ஒன்பது இலக்கியங்கள் இடம் பெறுகின்றன. ஆக இசுலாமியத் தமிழிலக்கிய வளர்ச்சியில் 12–ஆம் நூற்றாண்டு முதல் 17–ஆம் நூற்றாண்டு வரையுள்ள 6 நூற்றாண்டுக் கால இடைவெளியில் தோன்றியுள்ள மேற்சொன்ன ஒன்பது இலக்கியங்கள் மட்டுமே தொடக்கக் கால இசுலாமியத் தமிழிலக்கியங்களாகக் கொள்ளத் தக்கன.

இசுலாமியத் தமிழிலக்கிய வளர்ச்சியில் இடம்

பெற்றுள்ளதாகக் கருதப்படும் 2000 க்கும் மேற்பட்ட இலக்கியங்களுள் மேற்குறிப்பிட்டுள்ள தொடக்கக் காலத் தமிழிலக்கியங்களைத் தவிர்த்த ஏனைய அனைத்தும், பெரும்பாலும் கி.பி 18, 19, 20-ஆம் நூற்றாண்டுகளிலேயே தோன்றியுள்ளன என்பது குறிப்பிடற்பாலது. இந்த மூன்று நூற்றாண்டுக் காலங்களே இசுலாமியத் தமிழிலக்கிய ஆக்கத்தின் பொற்காலமாகத் திகழ்ந்தன.

தமிழிலக்கிய வரலாற்றில் காலத்திற்கேற்பத் தோன்றியுள்ள பல்வேறான இலக்கிய வகைகளிலும் இசுலாமியப் புலவர்கள், தங்கள் பங்கினை நிலை நாட்டி, இசுலாமியத் தமிழிலக்கியத்திற்கு அழியாத இடத்தைத் தமிழிலக்கிய வரலாற்றில் ஈட்டித் தந்துள்ளார்கள்.

**இசுலாமியத் தமிழ்க் காப்பியங்கள்:** முசுலிம் புலவர்களின் தமிழ்க் காப்பியப் பங்கேற்பு, தமிழிலக்கிய வரலாற்றில் முதன்மையும் சிறப்பும் வாய்ந்த தாகும். கனகாபிடேக மாலையின் வாயிலாக இசுலாமியத் தமிழ்க் காப்பிய உலகில் கால்கோள் கொண்ட இசுலாமியத் தமிழ்க் காப்பியப் பிரிவு, ஏறக்குறையப் பதினைந்திற்கும் மேற்பட்ட காப்பியங்களைப் பெற்று வளர்ந்துள்ளது. டாக்டர் உவைசு அவர்களின் முசுலிம் தமிழ்க் காப்பியங்கள் **(Muslim Tamil Epics)** என்னும் நூல், இசுலாமியத் தமிழ்க் காப்பியங்களின் பல்வேறு வளர்ச்சி நிலைகளையும் விரிவாக ஆராய்கிறது.

கனகவிராசரின் கனகாபிடேக மாலை (கி.பி. 1648)யைத் தொடர்ந்து உமறுப்புலவரின் சீறாப் புராணம் (17 ஆம் நூற்றாண்டின் இறுதி), கேசாதி நயினான் அவர்களின் திருமணக் காட்சி (கி. பி. 1710), பனியகுமது மரைக்காயரின் சின்னசீறா (கி. பி. 1730). வண்ணக்களஞ்சியப் புலவரின் குத்பு நாயகம் (கி. பி. 1814), பத்றுத்தீன் புலவரின் முகியித்தீன் புராணம் (கி. பி. 1816), சேகனாப் புலவரின் திருமணிமாலை (கி. பி. 1816), புதூகுசாஅம் (கி. பி. 1821), வண்ணக்களஞ்சியப் புலவரின் தீன் விளக்கம் (கி. பி. 1821), ஐதூறூசு நயினார் புலவரின் நவமணிமாலை (கி. பி. 1855), சேகனாப்புலவரின் திருக்காரணப்புராணம் (கி. பி. 1863), குலாம் காதிறு நாவலரின் நாகூர்ப் புராணம் (கி.பி. 1882), ஆரிபு நாயகம், (கி. பி. 1894), முதலிய பதினைந்து இசுலாமியத் தமிழ்ப் பெருங்காப்பியங்களும் முழுக்க முழுக்கத் தமிழ் இலக்கியக் காப்பிய மரபுகளுக்கேற்ப அமையப் பெற்றனவாகும்.

மேற்குறிப்பிட்டுள்ள பதினைந்து காப்பியங்கள் தவிர்த்து வேறுசில இசுலாமிய இலக்கியங்கள் சிறு காப்பியங்கள் என்று சுட்டிக் காட்டத்தக்க அளவில் காணப்படுகின்றன. இவற்றுள் குறிப்பிடத்தக்கன, குஞ்சு மூசுப் புலவரின் இரவு சுகூல் படைப் போர், முகியதீன் லெப்பையின் சாதுவிநாயகம், முகம்மது நூறுத்தீன் புலவரின் மூசாநபி முதலானவையாகும். அவை தமிழ் இலக்கண நூல்கள் குறிப்பிடும் காப்பிய இலக்கணங்களுள் ஒன்றிரண்டு இயல்புகள் குறைந்து, சிறுகாப்பியம் எனச்சொல்லத்தக்கனவாகும்.

மேலே குறிப்பிட்டுள்ள அனைத்து இசுலாமியத் தமிழ்க்காப்பியங்களும், தமிழ்க் காப்பிய மரபுகளுக்கேற்ப அமைந்திருப்பினும், அவை இசுலாமிய நெறி என்னும் எல்லை வரம்பிற்குள்ளாகவே அமைந்திருக்கின்றன. காவியக் கருவிற்கேற்ப வெவ்வேறான காவியப் போக்கினைப் பெற்றிருப்பினும், இசுலாமிய சமயக் கருத்துகளை எடுத்துரைப்பதிலும், அவற்றை நெறிப்படுத்தி வலியுறுத்துவதிலும் அனைத்து இசுலாமியத் தமிழ்க் காப்பியங்களும் தவறவில்லை. இக்காப்பியங்களுள் சீறாப்புராணம் தவிர்த்த ஏனைய அனைத்தும் தமிழிலக்கிய உலகில் அறிமுக மற்றனவாகும். இவை தனித்தனியாக விரிவான காப்பிய ஆய்விற்குரியன.

**இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள்:** இசுலாமியத் தமிழிலக்கியங்களுள் பெரும்பாலன சிற்றிலக்கியப் பிரிவினையே சாரும். தொடக்கக் காலம் முதல் இன்றுவரையில் பல்வேறு தமிழ்ச் சிற்றிலக்கியப் பிரிவுகளைச் சார்ந்தனவாக எழுநூறுக்கும் குறையாத இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் உள்ளன.

ஏறத்தாழ நூற்றுக்கும் மேற்பட்ட தமிழ்ச் சிற்றிலக்கியப் பிரிவுகளுள் குறிப்பாகச் சதகம், கலம்பகம், தூது, கோவை, அந்தாதி, மாலை, பிள்ளைத் தமிழ், பதிகம், இன்னிசை, குறவஞ்சி, தசரத்தினம், அலங்காரம், சரமகவி, பல்சந்தமாலை, திருமண வாழ்த்து, வாயுறை வாழ்த்து, ஒருபா ஒருபஃது, பஃறொடை சதுர் பிரபந்தம், பள்ளு, ஆற்றுப்படை, மஞ்சரி முதலான சிற்றிலக்கியப் பிரிவுகளே காணப்படுகின்றன. ஒவ்வொரு பிரிவிலும் ஒன்றுக்கு மேற்பட்டு இருநூறு வரையுள்ள எண்ணிக்கையில் இலக்கியங்கள் தோன்றிப் பெருகியுள்ளன.

இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள், அந்தந்தக் காலத் தமிழ்ச் சிற்றிலக்கியப் பிரிவுகளின் வடிவத்திற்கேற்ப யாப்பமைதிகளையும், ஏனைய பிற இலக்கண வரையறைகளையும் பெற்றுள்ளன. வடிவம் என்ற நிலையில் இவற்றை ஏனைய பிற தமிழ்ச் சிற்றிலக்கியங்களிலிருந்து வேறுபடுத்திக் காட்டும் இயல்பு, அவற்றின் மொழியே ஆகும். இசலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் அனைத்தும் அரபு, பார

சீகச் சொற்கள் கலந்த தமிழ் யாப்பமைதியைப் பெற்றுச் சிறக்கின்றன. இவற்றின் பாடுபொருள்கள், பெரும்பாலும் அரபு நாட்டு இசுலாமிய வரலாற்றையும் பின்புலத்தையுமே அடிப்படையாகக் கொண்டுள்ளன. எனவே முசுலிம் தமிழ்ப் புலவர்கள் தம் சிற்றிலக்கியப் படைப்பிற்கு எடுத்துக்கொண்ட பாடுபொருளை நன்கு உணர்த்துவதற்கு அரபு, பாரசீகச் சொற்கள் கலந்த மொழியமைப்பைப் பயன்படுத்திக் கொண்டனர்.

உள்ளடக்கம் என்ற நிலையில் அனைத்து இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களும், அவை சார்ந்துள்ள சிற்றிலக்கிய வடிவத்தின் இலக்கண வரையறைகளுக்கேற்ப, ஏதாவது ஒரு வகையில் இசுலாமியக் கருத்துகளுடன் தொடர்புடையனவாக அமைந்துள்ளன. எனவே இசுலாமியச் சிற்றிலக்கியங்களை அவை சார்ந்துள்ள உள்ளடக்கத்தின் அடிப்படையில் பின்வரும் பத்துப் பெரும் பிரிவுகளுக்குள் அடக்கலாம்.

1. இசுலாமிய அடிப்படைச் சமயக் கருத்துகளையும் நெறிமுறைகளையும் மட்டுடிலுமே எடுத்துரைக்கும் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் பல உள்ளன. குறிப்பாக, இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களின் தொடக்கக் காலத்தில் இத்தகைய சிற்றிலக்கியங்களே மிகுதியாகத் தோன்றின. காரணம், இசுலாம் தொடர்பான அறிவுப் பெருக்கத்திற்கு இத்தகைய நூல்களே தேவைப்பட்டன. இவ்வகையிலான இசுலாமியத் தமிழ்ச்சிற்றிலக்கியங்களில் பாட்டுடைத் தலைவர் என்று யாரையும் சுட்டிக்காட்ட முடியாது. இதன்கண் அமைந்த சிற்றிலக்கியச் செய்யுட்கள் யாவும், முழுக்க முழுக்கச் சமயக் கருத்துகளை எடுத்துரைப்பனவாகவே இருக்கும். சான்றாக, மச்சரேகைச் சித்தரின் பேரின்ப சதகத்தை எடுத்துக் கொண்டால், இதில் ஆசிரியர், சதக இலக்கிய வடிவத்திற்குட்பட்டுச் செய்யுட்களை யாத்துள்ளார். பேரின்ப நிலையை, இசுலாத்தின் அடிப்படை இறைவழிபாட்டு நெறியின் வாயிலாக அடையும் வழியை வகுத்துக் காட்டுகிறார். இதே போல் சாமுநைனா லெப்பை ஆலிம் இயற்றிய அதபு மாலை என்னும் சிற்றிலக்கியத்தை எடுத்துக்கொண்டால், இதில் இசுலாத்தின் அடிப்படையில் தம் வாழ்வை மேற்கொள்ளும் ஒவ்வொருவரும், ஒவ்வொரு நாளும் மேற்கொள்ளவேண்டிய நெறிமுறைகளை ஆசிரியர் விளக்கம் பெறச் செய்துள்ளார். ஒருவர் உண்மையான முசுலிம் என்றால் அவர் எத்தகைய நெறிமுறைகளை, சமயச்சட்டதிட்டங்களைப் பின்பற்றவேண்டும் என்பதை அதபுமாலை வரையறுத்துக் காட்டுகிறது. இசுலாத்தின் அடிப்படைக் கருத்திற்கிணங்கக் கலிமா (இசுலாத்தின் மூலமந்திரம்), ஈமான் (நம்பிக்கை), சக்காத்து (தருமம்) போன்ற எல்லாக் கருத்துகளும் இந்நூலில் விளக்கம் பெற்றுள்ளன. பெரும்பாலும் இப்பிரிவின்கீழ் எழுந்த இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் முசுலீம்களின் சமய அறிவை வளர்க்கும் பொருட்டே இயற்றப்பட்டன. இவ்வாறு இசுலாமிய சமய அறிவினை மட்டிலுமே புகட்டுவனவாக எண்ணிறந்த இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள், பல்வேறு சிற்றிலக்கியவடிவத்தில் தோன்றியுள்ளன.

2. இசுலாமிய வரலாற்று நிகழ்ச்சிகளை உள்ளடக்கமாகக் கொண்டுள்ள சிற்றிலக்கியங்களாகும். இவ்வகையில் அடங்கும் சிற்றிலக்கியங்களுக்கு இசுலாமிய சமயத்தில் குறிப்பிடத்தக்கதாகக் கருதப்படும் ஏதாவது ஒரு வரலாற்று நிகழ்ச்சியே பாடுபொருளாக அமையும். எடுத்துக்காட்டாக, மாலை என்னும் இலக்கிய வடிவத்திலமைந்த ஆலிப்புலவரால் இயற்றப்பட்ட மிகுராசு மாலையைக் குறிப்பிடலாம். இந்த இலக்கியத்தின் பாடுபொருள், இசுலாமிய வரலாற்றில் குறிப்பிடத்தக்க முதன்மை பெற்ற நபிகள் நாயகம் (சல்) அவர்களின் விண்ணேற்றப் பயணமாகும். இவ்விண்ணேற்றப் பயணத்தின்போதே நாயகம் (சல்) அவர்களை வானவர் கோன் சிப்றயீல் (அலை) அவர்கள் விண்ணிற்கு அழைத்துச் சென்று, அங்குள்ள அற்புதங்களைக் காட்டினார்கள். அத்துடன் அறுசிற்கும் (அல்லாகுவின் சிம்மாசனம்) நபி (சல்) அவர்கள் சென்று, அங்கு அல்லாகுவின் பல்வேறு கட்டளைகளையும் பெற்று வந்தார்கள். இசுலாமிய வரலாற்றில் இத்தகு காட்சி நிலை யாருக்கும் கிட்டியதில்லை. இச்சிறப்புப் பெற்ற வரலாற்று நிகழ்ச்சியான விண்ணேற்றப் பயணமே, மிகுராசு மாலையில் உள்ளடக்கமாக அமைந்துள்ளது. இதே போல் அபூசகுமா மாலை, திருப்பாலைக்குடி செய்தக்காதிப் புலவர் அவர்களால் இயற்றப்பட்டதாகும். இதில் மூன்றாம் கலிபா (பேராளர் என்று பொருள்படும் இச்சொல், இசுலாமிய நெறியில் ஆட்சிசெலுத்தியவர்களைக் குறிக்கப் பயன்படுகிறது). உமறு இப்னு கத்தாபு (றலி) அவர்கள் தம் ஆட்சியில் இசுலாமிய நீதிமுறையை நிலைநாட்டுவதற்காகத் தம் மகனைத் தண்டித்த வரலாற்றுச் செய்தி இடம் பெற்றுள்ளது. இதனைப் போன்ற பிற இசுலாமிய வரலாற்று நிகழ்ச்சிகள், பல்வேறு சிற்றிலக்கியங்களுக்கும் உள்ளடக்கச் செய்தியாக அமைந்துள்ளன. இதனடிப்படையில் தோன்றும் இசுலாமியச் சிற்றிலக்கியங்களில் இடம்பெறும் பாத்திரங்களைவிட வரலாற்று நிகழ்ச்சியே அதிக முதன்மை பெற்றுள்ளது.

3. அல்லாகுவின் இறுதித் தூதராம் பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்களை மட்டிலுமே பாட்டுடைத் தலைவராகக் கொண்டு எழுந்துள்ள

இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களாகும். இசுலாமியச் சிற்றிலக்கியங்களுள் எண்ணிக்கையில் அதிக அளவில் உள்ள சிற்றிலக்கியங்கள் இப்பிரிவில் அடங்கும். காரணம் இசுலாமிய ஆண்டு முறையில் முறையான வரலாற்றுத் தொடக்கம் அண்ணல் நபி (சல்) அவர்களின் காலத்திலேயே தோற்றம் பெறுகிறது. மேலும் ஏனைய பிற தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் இறைவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொள்ளுதல் போல், இசுலாமியத் தமிழிலக்கியம் அல்லாகுவைப் பாட்டுடைத் தலைவனாகக் கொள்ளவில்லை. பிற சமயத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் பலவும் இறைவனுக்கு முதன்மை அளிக்கின்றன. அவனையே பாட்டுடைத் தலைவனாகக் கொண்டன.அதனைப்போன்ற சிறப்பானதோர் இடத்தை முசுலிம் புலவர்கள் அல்லாகுவின் தூதுவர்களுள் முதன்மையான இடத்தைப் பெற்ற நபி (சல்) அவர்களுக்கு அளித்தனர். இதன் பயனாய் நபி (சல்) அவர்களையே பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பல்வேறு இசுலாமியச் சிற்றிலக்கியங்களை இயற்றியுள்ளனர். செய்யது அனபியா சாகிபு அவர்களின் நபிகள் நாயகம் பிள்ளைத்தமிழ், அபீபு முகமது லெப்பை அவர்களின் மக்காக் கலம்பகம், கவிக்களஞ்சியப் புலவர் அவர்களின் நபியவதார அம்மானை போன்ற இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் பெருமானார் நபி (சல்) அவர்களையே பாட்டுடைத் தலைவராகக் கொண்டுள்ளன. மேலே குறிப்பிட்டுள்ள இசுலாமியச் சிற்றிலக்கியப் பிரிவுகளான கோவை, சதகம், அந்தாதி, பதிகம் முதலான சிற்றிலக்கிய வடிவங்கள் ஒவ்வொன்றிலும் ஒரு சிற்றிலக்கியமாவது அண்ணல் நபி (சல்) அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டுள்ளது.

4. அல்லாகுவின் அருள்பெற்ற இறைநேசச் செல்வர்களான மைதீன் ஆண்டவர், நாகூர் ஆண்டவர், கௌது நாயகம், போன்ற ஒலிமார்களைப் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு எழுந்துள்ள இசுலாமியச் சிற்றிலக்கியங்கள் இப்பிரிவில் அடங்கும். இதற்குக் குலாம் காதிறு நாவலரால் இயற்றப்பட்ட குவாலீர் கலம்பகம் ஓர் எடுத்துக்காட்டாகும். இதில் கலம்பக இலக்கணத்திற்கேற்ப அமைந்த நூறு செய்யுட்கள் இடம் பெற்றுள்ளன. கவுது என்னும் பெயரால் அழைக்கப்படும் அவுலியாவே (இறைநேசச் செல்வர்) இக்கலம்பகத்தின் பாட்டுடைத் தலைவராவார். இவர் வாழ்ந்து மறைந்த நகரமாகிய குவாலீர் நகரத்தின் பெயரிலமைந்த இக்கலம்பகத்தில், கவுது நாயகத்தின் பல்வேறு சிறப்புகளும், கலம்பக உறுப்புகளுக்கேற்ப விரித்துரைக்கப்படுகின்றன. இது போன்றே பிற ஒலிமார்களைப் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்ட இசுலாமியச் சிற்றிலக்கியங்களில் அந்தந்த இறைநேசச் செல்வர்களின் பெருமையும் சிறப்பும் வரலாற்று முக்கியத்துவமும் விரித்துரைக்கப்படுகின்றன.

5. சில இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் புலவர்களைப் பாட்டுடைத் தலைவர்களாகப் பெற்றுள்ளன. இவற்றில் தமக்குப் பொருள் ஈந்து தம்மை வளப்படுத்தித் தம் புலமையைப் பாராட்டிய பல வள்ளல்களின் கொடைத்தன்மையும் நல்லியல்புகளும் சிறப்பிக்கப்பட்டிருக்கும். சான்றாக மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் புலவராற்றுப்படையைக் கூறலாம். இந்நூல் குலாம் காதிறு நாவலர் அவர்களால் இயற்றப்பட்டது. மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவரிடத்துச் சென்று சிறப்புப்பட்டமும் பரிசிலும் பெற்ற ஒருவர் அச்சிறப்பினைப் பெறாத புலவரிடத்துத் தாம் பெற்று வந்த பெருமையை எடுத்துக்கூறி ஆற்றுப்படுத்துவதாக இந்நூல் அமைந்துள்ளது. இது போன்று தனி ஒருவரின் வள்ளல் தன்மையை இசுலாமியக் கருத்துகளுடன் இணைத்துப் பாடும் சிற்றிலக்கியங்கள் சிலவே உள்ளன.

6. **பல இசுலாமியச் சிற்றிலக்கியங்கள்:** இசுலாமிய வரலாற்றில் சிறப்பிடம் பெறும் புண்ணிய இடங்களைப் புகழ்ந்துரைப்பதைப் பொருளாகக் கொண்டுள்ளன. இதன் அடிப்படையில் முசுலீம்களின் புண்ணிய இடங்களான மக்கா, மதீனா, பக்தாது, குவாலீர், அசுமீர், நாகூர் போன்ற பல நகரங்கள் இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களின் வாயிலாகச் சிறப்புப் பெறுகின்றன. இவற்றில் இந்தப் புண்ணிய இடங்களின் பெருமைகளும் சிறப்பும் விதந்தோதப்படுகின்றன. இவற்றுடன் இவற்றின் சிறப்புக்குக் காரணமான முசுலிம் ஞானிகளின் வரலாற்றுப் பின்புலம் இவற்றில் இடம்பெற்றிருக்கும். இவ் உள்ளடக்கங் கொண்டு அந்தாதி, கலம்பகம் போன்ற சிற்றிலக்கியப் பிரிவுகளுள் பல, இசுலாமியத் தமிழ் இலக்கியங்களில் தோன்றியுள்ளன. குலாம் காதிறு நாவலரின் திருமக்காத் திரிபந்தாதியில் முசுலிம்களின் முதல் புண்ணிய நகரமாகிய மக்காவின் எழில் வளமும் வரலாற்றுச் சிறப்பும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. இப்பிரிவில் அடங்கும் சிற்றிலக்கியங்களில், மாந்தர் வரலாற்று நிகழ்ச்சிகளைக் காட்டிலும், அவற்றிற்குக் காரணமான இடத்திற்கே மிக்க முதன்மை அளிக்கப்படுகிறது.

7. அகப்பொருளினை அடிப்படையாகக் கொண்ட இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களை உள்ளடக்கத்தினடிப்படையில் தனிப்பிரிவாகக் கொள்ளலாம். இப்பிரிவில் சிறப்பிடம் பெறும் இலக்கிய வகைகள் கோவை, தூது ஆகியனவாகும். செவத்த மரைக்காயரால் எழுதப்பட்ட திருமக்காக் கோவை, கோவை இலக்கியத்திற்குரிய அகப்பொருட்சுவையை உள்ளடக்கமாகப் பெற்றுச் சிறக்கிறது. இதில் மகாக்

நகரில் வாழும் தலைவன் தலைவியரின் குண நலன்கள் இடம் பெறுகின்றன. மேலும் இசுலாமியத் தமிழ்க் கலம்பகங்களிலும் கலம்பக உறுப்புகளுக்கேற்ப அகப்பொருள் சார்ந்த உள்ளடக்கக் கருத்துகள் இடம் பெறுவதும் குறிக்கத்தக்கது. மொத்தத்தில் இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களுள் அகப்பொருட் சுவையமைந்த உள்ளடக்கச் செய்யுட்கள் மிகக் குறைவே ஆகும். காரணம் ஏனைய பிற தமிழ்ச் சிற்றிலக்கியங்களைப் போல் அகப்பொருள் கருத்துகளைப் பாட்டுடைத்தலைவன் தலைவி ஆகியோருடன் தொடர்புபடுத்திப் பாடுவதற்கு இசுலாமிய நெறி இடம் தராமையே. அகப்பொருட் சுவையில் அமைந்த செய்யுட்களில் கூட நேரிடையாகப் பாட்டுடைத் தலைவர்களை அகப்பொருட் செய்தியொடு தொடர்புபடுத்தி முசுலிம் புலவர்கள் பாடவில்லை.

8. ஏதேனும் குறிப்பிட்ட இசுலாமிய சமய விழாக்களில் படிப்பதற்காக மட்டிலுமே எழுதப்பட்ட உள்ளடக்கங்களைப் பெற்றுச் சில இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் தோன்றியுள்ளன. சான்றாக நபிகள் நாயகம் (சல்) அவர்கள் பிறந்த மாதமாகிய இரபியுலவ்வலில் (மூன்றாவது இசுலாமிய மாதம்), அண்ணல் நபி (சல்) அவர்களின் பெயரில் உணவளிப்பது சிறிய விழாவாக எல்லா முசுலிம்களின் வீட்டிலும் மேற்கொள்ளப்படும். இதனைக் கந்தூரி என்றும் குறிப்பர். இவ்வாறு மேற்கொள்ளப்படும் கந்தூரி விழாவில் நாயகம் (சல்) அவர்கள் பேரில் மௌலிது ஓதப்படும். மௌலிது என்பதன் நேரடியான பொருள் பிறந்தநாள் என்பதாகும். இச்சொல், பெரும்பாலும் பெருமானார் அண்ணல் நபி (சல்) அவர்களுடைய பிறந்த நாளையும் ஏனைய பிற இறைநேசச் செல்வர்களின் பிறந்த நாளையும் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது. இம்மௌலிது நாயகம் (சல்) அவர்களின் பிறந்த நாளான இரபியுலவ்வல் பிறை பன்னிரெண்டில் ஓதப்படும். அந்நாளில் மௌலிதுவிற்கு முன்னர்க் கசீதத்துல் புறுதா என்னும் அறவு நூல் படிக்கப்படவேண்டும். இது நபி (சல்) அவர்களின் வாழ்க்கை வரலாற்றினைக் கூறுவதாகும். இதனைப் பாடுவது கடினமென உணர்ந்த காரணத்தினால், இத்தகு சிறப்பு நிகழ்ச்சிகளில் மட்டிலுமே படிக்கத்தக்கதாக இறசூல் மாலை என்னும் இசுலாமியச் சிற்றிலக்கியம் இயற்றப்பட்டுள்ளது. இந்நூலின் முழுப் பெயர் நபியுல்லா மாலை என்னும் இறசூல் மாலை என்பதாகும். இந்நூலை இயற்றியவர் காயற்பட்டினத்தைச் சேர்ந்த காமு நெயினார் லெப்பை என்பவராவர். இப்போது கந்தூரி விழாக்களில் மௌலிது ஓதுவதற்கு முன்னர் அண்ணல் பெருமானாரின் வாழ்க்கை வரலாற்றைச் சுட்டும் 'இறசூல் மாலை' என்னும் சிற்றிலக்கியமே படிக்கப்படுகிறது. இம்முறையில் குறிப்பிட்ட காலத்தில் பயன்படத்தக்க இசுலாமியச் சிற்றிலக்கியங்கள் ஒரு சிலவே உள்ளன.

9. முசுலிம் மக்கள் வாழ்வின் குறிப்பிட்ட நிகழ்ச்சிகளில் பயன்படத்தக்க பொருள்களை உள்ளடக்கமாகக் கொண்டும் சில இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் தோன்றியுள்ளன. ஒருவர் இறக்குங்கால் அல்லது இறந்தபின் அவர் உறவினரும் பிள்ளைகளும் கடைப்பிடிக்கத்தக்க நெறிமுறைகளை உள்ளடக்கமாகப் பெற்றதே ஒசியத்து மாலை என்னும் சிற்றிலக்கியமாகும். ஒசியத்து என்னும் அரபுச் சொல் ஒருவன் இறக்கும்போது தன் உறவினர்களுக்கு இறுதியாகக் கூறுவதையே குறிப்பதாகும். இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. ஒசியத்து மாலை, பொதுவாக மேற்குறித்த காலங்களில் பயன்படுத்தப்படுகிறது. இத்தகு உள்ளடக்கங்களைப் பெற்ற இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் ஒரு சிலவே உள்ளன.

10. மேற்குறித்த ஒன்பது உள்ளடக்கப் பிரிவுகளிலும் அடங்காத பிற இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களைத் தனியானதொரு பிரிவாகக் கொள்ளலாம். சில இசுலாமியச் சிற்றிலக்கியங்கள், மேற்குறித்த பிரிவுகளில் ஒன்றிற்கு மேற்பட்ட பிரிவுகளுடன் தொடர்புடையதாக இருக்கும். அவற்றை இப்பிரிவில் அடக்கலாம். மதீனக் கலம்பகம் இதற்கு எடுத்துக்காட்டாகும். இதன்கண் மதீன நகரம் பல பாடல்களில் பாடுபொருளாக அமைந்துள்ளது. அதேபோல நபிகள் நாயகத்தின் சிறப்பும் பெருமையும், பல செய்யுட்களில் பாட்டுடைத் தலைவர் என்ற நிலையில் உள்ளடக்கக் கருத்தாக இடம் பெற்றுச் சிறக்கின்றன. அத்துடன் கலம்பக உறுப்புகளுக்கேற்ப ஆங்காங்கே அகப்பொருட்சுவையை மட்டிலுமே உணர்த்தக்கூடிய பாடல்களும் இடம் பெற்றுள்ளன. எனவே இது உள்ளடக்கத்தின் அடிப்படையில் அமைந்த மேலே கூறிய பாகுபாட்டுப் பிரிவுகள் பலவற்றோடு தொடர்புடையதாகத் தோன்றுகிறது. இதுபோன்ற சிற்றிலக்கியங்களைப் பத்தாம் பிரிவாகக் கொள்ளலாம். இப்பத்துப் பிரிவுகளுக்குள்ளேயே அனைத்து இசுலாமியத் தமிழ்ச் சிற்றிலக்கியங்களும் அடங்கும்.

**இசுலாமியத் தமிழிலக்கிய வடிவங்கள்:** இசுலாமியத் தமிழிலக்கிய வளர்ச்சியில் குறிப்பிடத்தக்க முதன்மையும் சிறப்பும் வாய்ந்ததாகும் இப்பிரிவு. இசுலாமியத் தமிழிலக்கியங்கள் தமிழிலக்கிய வரலாற்றின் இலக்கிய வடிவங்களுக்கு ஏற்பவே தோன்றியிருப்பினும், அவற்றுட் சில இசுலாமியத் தமிழுக்கேயுரிய சிறப்பு இலக்கிய வடிவங்கள் என்று சொல்லத்தக்க அளவில் அமைந்துள்ளன. அவை

கிசா, முனாசாத்து, நாமா, படைப் போர், மசாலா முதலான இலக்கிய வடிவங்கள் ஆகும். இத்தகு இலக்கியப் பிரிவுகள், தமிழிலக்கிய வரலாற்றில் எங்கும் காணப்படாமையினால் இவற்றை இசுலாமியத் தமிழுக்கேயுரிய சிறப்பிலக்கிய வடிவங்களாகக் கொள்ளலாம்.

இசுலாத்திற்கும் அரபு,பாரசீக மொழிகளுக்கும் உரிய பிணைப்புப் பிரித்தற்கரியது. காரணம், இசுலாம் முதலில் உலகில் வேரூன்றிப் பரவத் தொடங்கியது அரபு பாரசீக மொழிப் பகுதிகளிலேயாகும். எனவே,அரபு பாரசீக மொழித் தாக்கங்களின் பயனால் அம்மொழிகளில் உள்ள இலக்கிய வகைகளை அடிப்படையாகக் கொண்டு, முசுலிம் புலவர்கள் தமிழ் மொழியில் இலக்கியம் படைத்ததுடன் அவற்றிற்கு அம்மொழிகளின் அடிப்படையிலேயே அரபு பாரசீகப் பெயர்களையும் கிசா, நாமா, முனாசாத்து, மசாலா என வைத்தனர்.

மேற்சொன்ன ஐந்து இலக்கியப் பிரிவுகள் ஒவ்வொன்றிலும் பற்பல எண்ணிக்கையில் இசுலாமியத் தமிழிலக்கியங்கள் தோன்றி வளர்ந்துள்ளன.

கிசா என்பதன் பொருள் 'கதை' என்பதாகும். முனாசாத்து என்பது 'இரகசியம் பேசுதல்' என்பதாகும். நாமா என்னும் பாரசீகச் சொல் 'கதை' அல்லது 'நூல்' என்றும், மசாலா என்னும் அரபுச் சொல் 'வினா' என்றும் பொருள்படும். இசுலாமியத் தமிழிலக்கிய வடிவங்களாகக் குறிப்பிடப்பட்டுள்ள ஐந்து இலக்கிய வடிவங்களுள் படைப் போர் என்னும் ஒரே ஒரு இலக்கிய வகை மட்டிலுமே தமிழ்ப் பெயரைப் பெற்றமைந்துள்ளது. இப்படைப்போர் இலக்கிய வகையும், அரபு மொழியில் இப்னுல் உமல்ரு வாக்கிதி என்பவரால் இயற்றப்பட்ட கிதாபுல் மகாசி (போர்களின் நூல்) என்னும் நூலினை முன்னோடியாகக் கொண்டு எழுந்ததாகும். தமிழிலக்கிய வரலாற்றில் போர் இலக்கியம் என்று சொல்லத்தக்க பரணி இலக்கியங்களிலிருந்து உருவ உள்ளடக்கங்களில் படைப் போர் இலக்கியங்கள் முழுவதும் வேறுபட்டுப் புதுவகை இலக்கியப் பிரிவாகத் திகழ்கின்றன. படைப் போர் இலக்கியங்களுக்கு அடிப்படையாகவுள்ள போர்ச் செய்திகள் முழுவதும், இசுலாமிய நெறி வரலாற்றில் இடம் பெற்றவைகளே. பெருமானார் நபிகள் நாயகம் அவர்கள் வாழ்வுடன் தொடர்புடைய பல்வேறு இன்றியமையாத வரலாற்று நிகழ்ச்சிகளும் படைப்போர் இலக்கியங்களில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. இசுலாம் இவ்வுலகில் பரவத் தொடங்கிய காலத்திலிருந்து வேரூன்றிய காலம் வரையில் எதிர்கொண்ட போர்க்களங்கள் எண்ணற்றனவாகும். அவற்றுள் சிலவற்றிற்கே முசுலிம் தமிழ்ப் புலவர்கள், படைப் போர் என்னும் இலக்கியப் பிரிவின் கீழ் இலக்கிய உருவமளித்துத் தமிழக மக்களுக்கு இசுலாமிய நெறி வரலாற்றுப் போர்களை அறிமுகம் செய்துள்ளனர்.

**இசுலாமியத் தமிழ் ஞான இலக்கியங்கள்:** ஞானம் என்பது அறிவு, கல்வி, பரஞானம், தெளிவு, நல்லொழுக்கம் முதலிய பல பொருள்படும் ஒரு சொல்லாகும். பொதுவாக இறைவனை அடைவதற்கு வழி செய்யும் இறைஞானத்தைக் குறிக்க ஞானம் என்னும் இச்சொல் பெரிதும் பயன்படுகிறது. இசுலாமிய ஆன்ம ஞானம் (Islamic Mysticism), தசவுபு (Taswwuf) அல்லது சூபித்துவம் (Sufism) என்று சொல்லப்படுகிறது. இந்நெறியில் தோன்றும் ஆன்ம ஞானியைச் 'சூபி' என்பர். சூபியை முசுலிம் சித்தர், ஆன்மஞானி, இறைநேசர் என்று தமிழில் கூறலாம்.

இத்தகு இறைநேசச் செல்வர்களின் இலக்கிய ஆக்கம் இசுலாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் குறிப்பிடத்தக்க இடம் பெற்றுத் தனிப் பெரும் பிரிவாக உள்ளது. தமிழகத்தில் தோன்றிய இசுலாமியச்சூபிகள், தங்கள் அருட்பெரும் ஞானத்தைத் தமிழ் மரபுடன் இணைத்து இலக்கிய உருவமளித்துள்ளார்கள். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் குணங்குடி மசுத்தான், தக்கலை பீர்முகமது சாகிபு, கோட்டாறு செய்குத்தம்பி ஞானியர் சாகிபு, காலங்குடி மச்சரேகைச் சித்தர், ஐயம்பேட்டை அப்துல் கனி சாகிபு, கோடைநகர் செய்க்கு முகயித்தின் மலுக்கு முதலியார், வாலை மசுத்தான், காயல் செய்யிது முகம்மது காதிரி, கணியபுரம் செய்கனா செய்கு உதுமான் ஒலி, மேலப்பாளையும் முகையத்தீன் பசீரொலி, கோட்டாறு செய்குபாவா சூசெய் சுலைமான், காயலம்பதி அம்சாலெப்பை, செய்யது அலிவாலை குருமசுத்தான், மணவாளபுரம் ஆழ்வார் திருநகரி செய்கு முகம்மது அப்துல்லா முதலானவர்களாவர். இவர்கள் ஒவ்வொருவரும் பல்வேறான ஞான இலக்கியங்களைத் தமிழுலகிற்குப் படைத்தளித்துள்ளார்கள். சான்றாக, மெய்ந்நிலை கண்ட மெய்ஞ்ஞானி சேக் பீர்முகம்மது சாகிபு அவர்களைக் கூறலாம். அவர்கள் ஞானப்புகழ்ச்சி, ஞானமணிமாலை, ஞானரத்தினக் குறவஞ்சி, ஞானப்பால், ஞானப்பூட்டு, ஞானக்குறம், ஞான ஆனந்தக் களிப்பு, ஞானசித்தி, திருமெய்ஞ்ஞானச்சரநூல், ஞானமுச்சுடர்ப் பதிகங்கள், ஞானவிகட சமர்த்து, ஞானக்கண், ஞானத்திறவுகோல், ஞான நடனம், மெய்ஞ்ஞான அமிர்தகலை, மெய்ஞ்ஞானக் களஞ்சியம், பிசுமில் குறம், ஞானமலை வளம், ஞான உலக உருளை முதலான இருபதுக்கும் மேற்பட்ட ஞான இலக்கியங்களை அளித்துள்ளார்கள். இவ்வாறே பிற மெஞ்ஞானியரும் பல்வேறு ஞான இலக்கியங்களை ஆக்கித் தந்துள்ளார்கள்.

இசுலாமிய ஞான இலக்கியங்களை உருவாக்கித் தந்த சூபிகள் இசுலாமிய நெறியைச் சார்ந்தவர்கள் எனினும், அவர்களிடம் மனிதக்குல ஆன்மிக உயர்வே உள்ளொளியாக விளங்கியது. அதனை இவர்களின் படைப்புகள் வாயிலாக உணர்தல் கூடும். பாமர மக்களின் இலக்கிய வடிவங்களான எளிய கும்மி, குறவஞ்சி போன்றவற்றின் வாயிலாக இவர்கள் இசுலாமிய ஞானபோதங்களைப் பாடினர். அத்தகு பாடல்கள், மக்கள் மத்தியில் ஒரே இறைவழிபாட்டு ஒளியை வீசித் தமிழகத்தில் ஆன்மிக நெறி தழைத்திட வழி செய்தன.

பிற இசுலாமியத் தமிழிலக்கியங்கள்: மேற்குறித்த பிரிவுகளுள் அடங்காத ஏனைய அனைத்து இசுலாமியத் தமிழிலக்கியங்களையும் இப்பிரிவின் கீழ் அடக்கலாம் இதில் சிறப்பாக இடம் பெறத் தக்கன தற்காலத்தமிழ் இலக்கியங்களாகக் கருதத்தக்க சிறுகதை, புதினம், நாடகம் முதலான இலக்கியப் பிரிவுகளே ஆகும். இருபதாம் நூற்றாண்டின் இடைக்காலப் பகுதிக்குப் பின்பே, முசுலிம் சமூக வாழ்க்கையையும் இசுலாமிய நெறிக் கருத்துகளையும் உள்ளடக்கமாகப் பெற்ற சிறுகதை, புதினம், நாடகங்கள் வரத்தொடங்கின. இத்தகு இலக்கிய ஆக்கத்திற்குப் பெரும் பங்காற்றியிருப்பவை முசுலிம் பத்திரிகைகள் என்பது குறிப்பிடத்தக்கது.

முசுலிம் தமிழ்ச் சிறுகதையின் தொடக்கக் கால எழுத்தாளர்களாக மதுரைப் புலவர் மு.க.மு. காதிர் முகியித்தீன் மரைக்காயர், டி.எம்.ஆர். மசூலி சாகிபு, பா. தாவூத்சா முதலானவர்களைக் குறிப்பிடலாம். இவர்கள் காலம் 1935 முதல் 1940 வரையிலான குறுகிய காலமே. அடுத்த நிலையில் 1950-க்குப் பின் இசுலாமியத் தமிழ்ச் சிறுகதை ஆக்கத்தில் ஒரு புத்துணர்வு ஏற்பட்டது. முசுலிம் முரசு, மணிவிளக்கு, பிறை ஆகிய முசுலிம் பத்திரிகைகளின் பங்கு இக்காலத்தில் குறிப்பிடற்பாலது. இதன்பின் குறிப்பிடத்தக்க இசுலாமியச் சிறுகதை எழுத்தாளர்கள் சமீலா, திருச்சி இரசூல், மகுதூம், ஆர்.பி. மல்லாரி, வி. நூர்முகமது, சேக்கோ, சேயெம், மகதி, கவுசு, சாரணபாசுகரன், சே. எம். சாலி, க.அப்துல் சத்தார் முதலியோராவர்.

இவர்கள் சிறுகதைகளுக்குரிய பின்னணியாகத் தமிழக முசுலிம் மக்களின் வாழ்க்கைச் சிக்கல்களும் சடங்கு முறைகளும் அமைந்தன. இத்தகு பின்னணிகளுக்குக் குறிக்கோள் நோக்கு அமைக்கப் பொன்மொழிகளையும் பெருமானார் நபிகள் நாயகத்தின் வாக்குகளையும் தம் கதைகளில் பயன்படுத்திக் கொண்டார்கள்.

இசுலாமியத் தமிழ்ப் புதினங்கள் என்னும் பிரிவு, இன்றைய நிலையில் பல்லோராலும் தனிப் பிரிவாக எண்ணிப் பார்க்கப்படாமல் உள்ளது. காரணம், அத்தகு புதினங்கள் வெளியுலகிற்கு நன்றாக அறிமுகமாகாததே ஆகும். முதல் தமிழ்ப் புதினமான பிரதாபமுதலியார் சரித்திரத்திற்கு அடுத்த நிலையில் வெளியிடப்பட்டது, இலங்கை எழுத்தாளர் முகம்மது காசீம் சித்தி லெப்பை அவர்களின் அசன்பே சரித்திரம் என்னும் புதினமாகும். இப்புதினம் இசுலாமியத் தமிழ்ப் புதின உலகின் முதல் புதினமாகவும், தமிழ்ப் புதின உலகின் இரண்டாம் புதினமாகவும் உள்ளது.

கிட்டத்தட்ட ஒரு நூற்றாண்டுக் காலப் புதின இலக்கியப் பின்புலத்தை இசுலாமியத் தமிழ்ப் புதினங்கள் பெற்றுள்ளன எனலாம். புதின எழுத்தாளர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் என்.பி.அப்துல் சப்பார், ஆசன், மகதி, சுசித்தி, சாதா பேகம், சேயெம், டி.சி. துபாசு போன்றவர்களாவர். இவர்களுள் ஆசன் மக்சபீன், புனித பூமியிலே, மேற்கு வானம், சிந்து நதிக்கரையினிலே, சொர்க்கத்துக் கன்னிகை ஆகிய பல புதினங்கள் எழுதியுள்ளார். இசுலாமியத் தமிழ்ப் புதினங்களை வரலாற்றுப் புதினங்கள், சமூகப்புதினங்கள், மருமப் புதினங்கள், மொழிபெயர்ப்புப் புதினங்கள் என நான்கு பெரும் பிரிவுகளாக வகைப்படுத்திக் காணலாம்.

இசுலாத்தில் பொதுவாக நாடகக் கலைக்கு வரவேற்புக் கிடையாது. காரணம், நாட்டியம், நாடகம் போன்றன இசுலாமிய நெறிக்கு மாறுபட்டனவாகும். எனினும் முசுலிம் எழுத்தாளர்கள் இசுலாமிய நெறியை எளிய முறையில் பாமர மக்களுக்கு விளக்கிக் காட்டிட நாடக இலக்கிய அமைப்பையும் பயன்படுத்திக் கொண்டார்கள். இத்தகு முறையில் எழுந்த நாடகங்களுள் குறிப்பிடத்தக்கன அப்பாசு நாடகம், அலாவுதீன் நாடகம், கபுகரகு நாடகம், உருபி நாடகம், தையார் சுல்தான் நாடகம், அலி பாதுசா நாடகம், இலால்கௌகத்து நாடகம் ஆகியவையாம். இவற்றுள் கபுகரகு நாடகம், சாந்தரூபி நாடகம் ஆகிய இரண்டும் நாட்டுக்கூத்து முறையில் அமைந்துள்ளன.

முசுலிம் நாடக இலக்கியங்களுள் இசைப்பாடல்கள் மிகமிகக் குறைவாக அமைந்து, உரையாடல் பகுதிகளே மிகுதியாக இடம் பெற்றுள்ளன. இவற்றுள் இறைப்பற்றுப் பெரிதும் வலியுறுத்தப்படுகிறது. இசுலாமிய நாடக இலக்கியங்களுள் ஆசிரியர்களின் ஆழ்ந்த நெறிப் பற்றும், அவற்றைப் பரப்புவதில் அவர்கள் கொண்டுள்ள ஆர்வமும் நன்கு புலப்படுகின்றன.

தமிழிலக்கியப் பிரிவுகள் ஒவ்வொன்றிலும் தங்கள் பங்கினை நிலைநாட்டியவர்கள் முசுலிம் தமிழ்ப் புலவர்கள். எனவே விரிந்துபட்ட எல்லைப் பரப்பினைப் பெற்றுள்ள தமிழிலக்கியப் பிரிவிற்கு இசுலாமியத் தமிழிலக்கிய வரலாற்றில் உரிய முதன்மை அளிக்கப் படல் வேண்டும். பீ.மு.அ.

***இசுலாமிய முன்னேற்ற வங்கி***: இசுலாமிய நாடுகளின் பொருளாதார, சமூக முன்னேற்றத் திற்காகப் பாடுபடும் வங்கி ஒன்று நிறுவப்பட வேண்டும் என 1973-ஆம் ஆண்டு கூடிய இசுலாமிய நாட்டு நிதி அமைச்சர் மாநாடு வலியுறுத்தியதன் விளைவாக, 1975-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் இவ் வங்கி உருவாக்கப்பட்டுச் செயற்பட்டு வருகிறது.

குறிக்கோள்கள்: 1. இவ்வங்கி (Islamic Development Bank-IDB) யின் உறுப்பு நாடுகள், இசுலாமிய சாரியச் (Sharia) சட்ட ஒழுங்கு முறைகளின் வழியில் இசுலாமியச் சமுதாயத்தின் சமூகப் பொருளாதார நலனுக்காகக் கூட்டாகவும் தனியாகவும் பாடுபடுதலும், அதற்கான திட்டங்களை உருவாக்கவும் செயற்படுத்தவும் உறுப்பு நாடுகளிலும் இசுலாமிய மக்கள் வாழும் பிற நாடுகளிலும் ஆய்வுகள் மேற்கொள்ளுதல்; 2. வளர்ச்சிப் பணிகளுக்குத் தேவையான தொழில் நுட்ப அறிவை இடப் பெயர்வு (Transfer of Technology) செய்ய ஆவன செய்தல்; 3. வட்டிக்குக் கடன் அளிப்பதைத் தடை செய்யும் இசுலாமியச் சட்டத்தைக் கடைப்பிடித்தல்; 4. அதற்கு மாறாகக் கடன் நிதித் திட்டங்களின் மேலாண்மைக் காகும் செலவுகளைப் பணிச் செலவுகள் எனப் பகிர்ந்து கொள்ளவும், ஆதாயங்கள் பங்கிடப்படத் தக்கனவாகவும் ஒப்பந்தங்கள் எழுதப்படுதல்; 5. நாடுகளின் நிதி நிறுவனங்கள், வங்கிகள், பன்னாட்டு நிதி நிறுவனங்கள் ஆகியவற்றுடன் கலந்தாலோசித்துக் கூட்டுறவுடன் உறுப்பு நாடுகளின் பொருளாதார முன்னேற்றத்திற்காகவும் பிற நாடுகளிலுள்ள இசுலாமியச் சமுதாயங்களின் நலனுக்காகவும் பாடுபடுதல். இவையே இசுலாமிய முன்னேற்ற வங்கியின் குறிக்கோள்களாகும்.

அமைப்பு: இசுலாமிய முன்னேற்ற வங்கியின் தலைமைச் செயலகம், சவுதி அரேபியாவின் தலைநகரமான செட்டா(Jiddah) வில் நிறுவப்பட்டுள்ளது. வங்கியின் மேலாண்மை முடிவுகளை வரையறை செய்யும் பணிகளை மேற்கொள்ள ஆளுநர் குழுவும் (Board of Governors), இயக்குநர் குழுவும் அமைக்கப்பட்டுள்ளன. உறுப்பு நாடுகளின் நிதித்துறை அமைச்சர்கள் ஆளுநர் குழுவின் உறுப்பினர்களாவார்கள். இவ்வங்கியில் உறுப்பு நாடாகும் தகுதி இசுலாமிய மாநாட்டில் கலந்து கொள்ளும் நாடுகளுக்கு மட்டிலுமே உண்டு. இப்போதைய உறுப்பு நாடுகள் ஆப்கனிசுத்தான், அல்சீரியா, பெகரின், பங்களாதேசு, காமரூன் (Cameroon), சாடு (Chad), காமோரோ தீவுகள் (Camero Islends), சிபோத்தி (Djibouti), எகிப்து, காபான் (Cabon), காம்பியா, கினியா, கினியா-பிசாவ் (Cuinea-Bissaw), இந்தோனேசியா, இராக்கு, சோர்டான் (Jordon), குவைத்து (Kuwait), இலெபனான், இலிபியா, மலேசியா, மாலத்தீவுகள், மாலி, மாரிடானியா, மொராக்கோ, நைசர் (Niger), ஓமான், பாகிசுத்தான், பாலத்தீன விடுதலைக் கழகம் (PLO), கட்டார், சவுதி அரேபியா, செனகல், சோமாலி, சூடான், சிரியா, துனிசியா, துருக்கி, உகாண்டா, ஐக்கிய அரபு நாடுகள் (United Arab Emirates), அப்பர் வோல்டா (Upper Volta), ஏமன் அரபுக் குடியரசு (Yeman Arab Republic), ஏமன் மக்கள் குடியரசு (Peoples Democratic Republic of Yemen).

பணிகள்: இசுலாமிய முன்னேற்ற வங்கி, அதன் உறுப்பு நாடுகளின் தேவைக்கேற்றபடி நிதி உதவிகளையும் பன்னாட்டு வாணிகம் சிறக்கக் கடன் வசதிகளையும் அளித்து வருகிறது. ஆளுநர் குழு 1980-ஆம் ஆண்டு இறுதியில் 790 மிலியன் தாலர் கடனாகவும், 500 மிலியன் தாலர் பன்னாட்டு வாணிகத்திற்காகவும், 275 மிலியன் தாலர் திட்ட நிதியாகவும், 15 மிலியன் தாலர் தொழில் நுட்ப உதவியாகவும் ஆக மொத்தம் 1,580 மிலியன் தாலர் உடனடியாக வழங்க முடிவுகள் எடுக்கப்பட்டு உறுப்பு நாடுகளுக்கு வழங்கப்பட்டது. வங்கி தனது 5-ஆம் ஆண்டில் (1980), 62 திட்டங்களுக்காக 647 மிலியன் தாலர் வழங்கியது. இத்தொகை, 1979-ஆம் ஆண்டின் ஒதுக்கீட்டை விட 30 விழுக்காடு மிகுதியாகும். பின் தங்கிய நாடுகளுக்கு உதவுதற்கெனத் 'தனி நிதி' (Special Fund) ஒதுக்கப்பட்டுள்ளது. அதன் கீழ் நான்கு நாடுகளிலும் ஒரு பன்னாட்டு நிறுவனத்திலும் 10.35 மிலியன் தாலர் மதிப்புப் பெறும் திட்டங்கள் செயற்படுகின்றன.

வங்கியின் 1981-ஆம் ஆண்டுக்குழு (Subscribed), மூலதனத்தை 957 மிலியன் தாலரிலிருந்து 2.4 பிலியன் தாலராக உயர்த்தவும், பின் தங்கிய இசுலாமியச் சமுதாயங்கள் வாழும் பகுதிகளின் முன்னேற்றத் திட்டங்களுக்காகத் தீவிர நடவடிக்கைகள் எடுக்கவும், முடிவுகள் எடுத்து, அறிக்கை வெளியிட்டது.

***இசுவெசுதியா*** என்பது, உருசிய நாட்டின் தலைமைப் பாராளுமன்றத்தின் (Supreme Soviet) சிறு குழுவாகிய பிரிசிடியம் (Presidium) என்னும் மன்றத்தினால் அந்நாட்டின் தலை நகரமாகிய மாசுகோவிலிருந்து வெளியிடப்படும் நாள் ஏடு அல்லது செய்தித் தாள் (Daily Newspaper) ஆகும்.

இந்நாளேட்டின் பெயருக்கு, 'உருசிய சோவியத்து ஒன்றியத்தின் மக்கள் சார்பாளர்களின் மன்றங் களைப் பற்றிய செய்திகள்' (News of the Councils of People's Deputies U.S.S.R.) என்பது பொருளா கும். இது உருசிய நாட்டின் சோவியத்து அரசாங்கம், அலுவலக முறையிலே தேசிய வெளியீடாக வெளி யிடும் செய்தித் தாளாகும். உருசிய நாட்டின் இயற்கை வளங்களும், தொழில்களும், வேளாண்மை யும், வாணிகமும் உழைப்பாளர்களாகிய நாட்டு மக்கள் யாவருக்கும் பயன்படுமாறு அரசாங்கத்தின் உடைமைகளாக ஆக்கப்பட்டு, அரசாங்க அலுவலர் களால் நடத்தப்படுகின்றன; மார்க்சியப் பொது உடைமைக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டு, உருசிய நாட்டின் பொருளாதார அமைப் பும் சமுதாய அமைப்பும் அரசியலமைப்பும் உருவாக்கப்பட்டுள்ளபடியால், 1936-ஆம் ஆண்டின் சோவியத்து அரசியலமைப்புச் சட்டத்தின்படி, அர சாங்கத்தில் பங்கு கொள்ளுதற்கு அரசியலமைப்புச் சட்டத்தால் ஒப்புக் கொள்ளப்பட்ட ஒரே அரசியல் கட்சி, உருசிய பொதுவுடைமைக் கட்சி ஆகும்; இக் கட்சியைச் சாராதவர்கள், அரசாங்கம் அமைத்தற்கு, பொதுவுடைமைக் கொள்கைகளை ஒட்டிச் செயற் படுதற்கு இசைதல் வேண்டும். மாற்றுக் கட்சியோ, மாற்றுக்கட்சி அரசாங்க அமைப்போ ஏற்படுதற்கு உரிமையும் வாய்ப்பும் இல்லை. எனவே உருசிய நாடு 15 சோவியத்துச் சமூகச் சமநிலைக் (Socialist) குடியரசுகளையுடைய ஒரு கூட்டாட்சி நாடு என்று (Federation of Soviet Socialist Republics) அரசியலமைப்பில் கூறப்பட்டாலும், உறுப்பு மாநிலம் ஒவ்வொன்றின் சோவியத்து எனப்படும் சட்டமன்றத் திலும், அமைச்சரவையிலும், நடுவண அரசாங்கத் தின் தலைமைச் சோவியத்துப் பாராளுமன்றத்திலும், அமைச்சரவையிலும் பொறுப்புகளையும், அலுவல் களையும் ஏற்றிருப்பது உருசியப் பொதுவுடைமைக் கட்சியினர்தாம். சோவியத்து என்பது வேளாண் தொழிலாளரும், ஆலைத் தொழிலாளரும் உறுப் பினராகவுள்ள மன்றம் (Council of Workers and Peasants) எனப் பொருள்படும். கூட்டாட்சி இயல்பு கள், வயதுவந்தோருக்கு வாக்குரிமை, குறிப்பிட்ட காலங்களில் தேர்தல்கள், இரகசிய வாக்கெடுப்பு முதலிய பாராளுமன்றக் குடியாட்சி முறையின் அமைப்புகளெல்லாம் இருந்தாலும், நடைமுறையி லியங்குவது ஒரே கட்சி ஆட்சி தான். இந்நாட்டின் அரசியலமைப்பில் காணப்படுகிற ஒரு புதுமையான நிறுவனம், பிரிசிடியம் (Presidium) என்னும் நிறுவன மாகும். தலைமைப் பாராளுமன்றம், அமைச்சர் ஆகி யோரைத் தவிர இந்த நிறுவனமும் உயர்தர அதி காரங்களைக் கையாளுகிறது. சோவியத்துப் பாராளு மன்றத்தின் கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்தலும், அதன் இருமன்றங்களுக்குமிடையே இணக்கம் ஏற் படாதபோது அவற்றைக் கலைத்தலும், புதிய தேர் தல்களுக்கு ஏற்பாடு செய்தலும், உறுப்பு மாநிலங் களான ஒன்றியக் குடியரசுகளின் (Union Republics) வேண்டுகோளின்மீதோ, தனது விருப்பத்தின்மீதோ பொதுமக்கள் வாக்கெடுப்பிற்கு (Referendum) ஏற் பாடு செய்தலும், பாராளுமன்றம் கூடியிராத காலங் களில் அமைச்சரவையிலிருந்து அமைச்சர்களை நீக்கு தலும், அமர்த்துதலும், படைத்தளபதிகளை அமர்த்துதலும், நீக்குதலும், நடுவண, உறுப்புமாநில அரசாங்கங்களின் ஆணைகளையும், நடுவண, உறுப்பு மாநிலச் சட்டமன்றங்களின் சட்டங்களையும், அரசிய லமைப்புச் சட்டத்துக்கு முரணானவை என்று கருதித் தள்ளுபடி செய்தலும் ஆகிய விரிவான அதிகாரங் களைப் பிரிசிடியம் கையாளுகிறது. பிரிசிடியத்தின் 33 உறுப்பினர்களும் பொதுவுடைமைக் கட்சியாளர்களே யாதலாலும், இந்நிறுவனத்துக்கு மிக விரிவான உயர் தர அதிகாரங்களிருப்பதாலும், உருசிய அரசாங்கத் தின் உள்நாட்டு, வெளிநாட்டுக் கொள்கைகளை யெல்லாம் உருவாக்குகிற ஒருநிறுவனமாக இது இயங்குகிறது. இத்தகைய பிரிசிடிய மன்றத்தின் நாளேடாகவே இசுவெசுதியா (Izuestia) வெளிவரு கிறது. இவ்வேடு 1917-ஆம் ஆண்டில் உருசிய போல்சு விக்குப் (பொதுவுடைமைப்) புரட்சியின் ஒரு கருவி யாகப் (Organ) பெட்ரோகிராடு என்னும் நகரத்தில் நிறுவப்பட்டது. இவ்வேட்டின் அலுவலகங்கள், 1918-ஆம் ஆண்டில் மாசுகோ நகரத்துக்குக் கொண்டு செல்லப்பட்டன. இந்த நாளேடு 1924-ஆம் ஆண்டில் 3,54,000 பேர்களாலும், 1932-ஆம் ஆண்டில், 15,00,000 பேர்களாலும் நாடோறும் படிக்கப்பட்டது. அவ்வளவுக்கு விரைவாக வளர்ந்து வந்த இந்த நாளேட்டின் வளர்ச்சி, இரண்டாம் உலகப் போர்க் காலத்திலும், இசுடாலினின் (Stalin) கட்டுப்பாட்டு முறைகளினாலும் சிறிது குறைந்தது. ஆனால், பின் னர்த் தலைமை அமைச்சர் குருசேவின் மருமகன் அலக்சி அடுசுபை (Alexei Adzhubai) என்பவர், இந் நாளேட்டின் பதிப்பாசிரியரானார். அப்போது இது பல புகைப்படங்களும். பெரிய தலைப்புகளும், உயர்தரமான அமைப்பும் கொண்டு பலராலும் விரும் பிப் படிக்கத் தக்கதாக ஆயிற்று. உருசிய நாட்டில் ஒரே கட்சி அரசாங்கம் இருப்பதால், அந்நாட்டின் சோவியத்து அரசாங்கக் கொள்கைகளை அதுவே உரு வாக்குகிறது; அக்கொள்கைகளை நாட்டு மக்களுக் குப் புகட்டுவதற்கு அரசாங்கக் கருவியாக இசு வெதியா நாளேடு செயற்படுகிறது. இது அனைத்து நாடுகளின் உறவுகளை மிக விரிவாகக் குறிப்பிட்டு வெளியிடும் முறையிலேயே சோவியத்து அரசாங்கத் தின் கொள்கைகளையும் வெளிப்படுத்துகிறது. இது பல சிறுகதைகளையும் வெளியிடுகிறது. எனினும் சோவியத்து அரசாங்கத்தின் அயல்நாட்டுக் கொள் கையை வெளியிடும் ஒரு முக்கிய கருவியாகவே இது

செயற்படுகிறது. நாட்டின் மற்ற எல்லாச் செய்தித் தாள்களையும் போல இதுவும் சோவியத்து அரசாங் கத்தின் கட்டுப்பாட்டில் வெளிவருவதாகும்.

**இசுவோல்சுகி, அலெக்சாந்தர்** (கி.பி. 1856-1919) என்பார் உருசியாவின் அரசியல் வல்லு நர். இவர் கி.பி. 1875-ஆம் ஆண்டில் அரசியல் தூதராகப் பணியில் சேர்ந்தார்; தென்மார்க்கின் (Denmark) தலைநகரான கோபன்ஏகனுக்கு (Copenhagen) 1903-ஆம் ஆண்டில் மாற்றப்பெற்றார். அங்கு இவர், உருசியாவுக்கும் தேனிய அரச குடும்பங்களுக்கு மிடையே இருந்த உறவை வளர்க்க அரும்பாடுபட் டார். இதன் விளைவாகச் சார் மன்னர், இவரை 1905-ஆம் ஆண்டில் வெளியுறவு அமைச்சராக அமர்த்தினார். இப்பதவி உயர்வு இசுவோல்சுகிக்கே (Izvolski, Alexander) வியப்பூட்டியது. இவர் வெளி யுறவு அமைச்சராக இருந்த ஐந்தாண்டுக் காலத்தில் இரு பெரும் செயல்களைச் செய்தார். அவை, உருசிய-சப்பானிய உறவில் ஏற்படுத்திய நல்வளர்ச்சியும், ஆங்கில-உருசிய உடன்பாட்டை நிறைவுறச் செய்த தும் ஆம். இவர் 1908-9-ஆம் ஆண்டில் ஏற்பட்ட பாசுனிய (Bosnia) நெருக்கடியால் தோல்வியுற்ற தால், இவருக்குச் சிறிதளவு இழுக்கு நேரிட்டது. உருசியாவைக் கேட்காமல் பாசுனியா எர்சிகோவி னாவை (Bosnia-Herzekovina) ஆசுத்திரியா கைப் பற்றிக் கொண்டது, இவ்விழுக்கு ஏற்படக் காரணமா யிற்று. இசுவோல்சுகி 1910 முதல் 1916 வரை பாரி சில் தூதராகப் பொறுப்பேற்றார். அக்காலத்தில் இவர் மிக முயன்று பிரான்சுக்கும் உருசியாவுக்கு மிடையே இராணுவ உடன்படிக்கை வலுப்பெற வழிவகை செய்தார்.

**இசை:** கவின்கலைகளுள் முதன்மையானது இசையே. இசை எக்காலத்திலும்எந்நாட்டு மக்களா லும் ஏற்றுக்கொள்ளப்படக் கூடிய விதி முறைகளைக் கொண்டு வளர்க்கப்பட்ட ஒரு முழுமையான கலை யாகும். இந்தியாவில் ஆயுர்வேதம் (மருத்துவக்கலை) தனுர்வேதம் (வில்வித்தை) அருத்தசாத்திரம் (அரசி யல்) என்னும் மூன்று துணைமறைகளுடன் சேர்த்து இசை நான்காம் துணைமறையாகக் கந்தருவ வேதம் என்று வழங்கப்படுகிறது. உலகில் பல நாடு களுக்கும் ஏழிசை பொருந்துவதாகும். இந்திய இசை இறை வழிபாட்டுடன் தொடர்புடையதாக உள்ளது. 'ஏழிசையாய் இசைப்பயனாய்' என்ற தேவாரப் பாடல் அடியினை (சுந்தரமூர்த்தி நாயனார்-திருவா ரூர்ப்பதிகம்) இதற்கு ஒரு சான்றாகக் கூறலாம்.

ஒலியே (நாதம்) இசைக்கு அடிப்படை ஆகும். ஒலியினின்று சுருதிகளும் சுருதிகளினின்று சுரங்களும் சுரங்களினின்று இராகங்களும் தோன்றின. ஒலி தோன்றும் முறைகளையொட்டி அதனைக் கீழ்க் காணுமாறு பல வகைகளாகப் பிரிக்கலாம்.

இசையைப் பொதுவாக இன்னிசை, ஒத்திசை, தொகுப்பிசை என்னும் மூன்று பிரிவுகளாகப் பிரிக்க லாம். இசையின் தனிப்பட்ட ஒலிக்குறிப்புகள் சுரங் கள் எனப்படும். ஒற்றைச் சுரங்கள் இனிமையாகத் தொடர்ந்து வந்து இசையை அமைக்கும் முறையை இன்னிசை என்று கூறுவர். இந்திய இசை இன் னிசை என்னும் வகையைச் சேர்ந்ததாகும். இவ்வாறு தனித்தனிச் சுரங்கள் தொடர்ந்து ஒலிக்காமல் ஒத்த சுரங்களின் சுர அடுக்குகள் (Chords) ஒன்றையொன்று தொடர்ந்து வருவது, ஒத்திசை (Harmony) ஆகும். மேனாட்டு இசை இந்த வகையினைச் சேர்ந்தது.

ஒலி (நாதம்)

| | | |
|---|---|---|
| 1. ஆகத நாதம் | 1. வாய்ப்பாட்டு | 1. குரலினின்று உண்டாகும் ஒலி |
| 2. அநாகத நாதம் | 2. இசைக்கருவிகளால் தோன்றும் ஒலி | 2. வில்லினால் இசைக்கருவியில் தோன்றும் ஒலி |
| | 3. குழல், நாககரம் போன்ற கருவிகளில் தோன்றும் ஒலி. | 3. காற்றுக் கருவிகளில் எழும் ஒலி |
| | | 4. தோற்கருவிகளில் எழும் ஒலி. |
| | | 5. கஞ்சக் கருவிகளில் எழும் ஒலி. |

ஒரே சுரத் தொகுதியில் ஒத்த சுரங்கள் பல, ஒரே நேரத்தில் இனிமையாக ஒலிக்கின்றன. எந்தச் சுரங்களை ஒருங்கமைத்தால் இனிய இசை உண்டாகும் என்று தேர்ந்தெடுப்பதில்தான் ஒத்திசையின் சிறப்பு உள்ளது. இசைக்கருவிகளின் தோற்றத்திற்குப் பிறகே ஒத்திசை தோன்றியது. பாக்கு (Bach), மோசார்ட்டு (Mozart), பீதோவன் (Beethoven), வாக்னர் (Wagner) ஆகியநால்வரும் ஒத்திசையின் வளர்ச்சிக்குக் காரணமாக இருந்தவர்கள்.. தொகுப்பிசையில் (Polyphony) ஒவ்வொரு சுரத்திற்கும் வேறோர் இணைச்சுரம் சேர்க்கப்பட்டு இரண்டும் ஒன்றாக இசைக்கப்படும். முதலில் உள்ள சுரவரிசை ஆதார கீதம் எனப்படும். இணைச்சுரங்கள் ஒன்று சேர்ந்து அமைக்கும் ஆதார கீதத்தில் வரும் சுரங்களுள்ஒவ்வொன்றிற்கும் மூன்று நான்கு சுரங்களைச் சேர்த்து இசையுண்டாக்கும் போது பல ஆதேய கீதங்கள் உண்டாகின்றன. ஆதலின் தொகுப்பிசை முறையில் விரிவான பாடல்களை அமைக்கமுடியும். பாலசடிரீனா (Palestrina) என்னும் இத்தாலிய இயலிசைப் புலவர். இம்முறையில் பல பாடல்களை இயற்றியுள்ளார்.

இந்தியாவில் இந்துசுத்தானி இசை, கருநாடக இசை என்னும் இரு பெரும் இசைப் பிரிவுகள் இன்று காணப்படுகின்றன. இந்துசுத்தானி இசை தென்னகத்து இசையிலிருந்து தோன்றியதாகும். இக்காலத்தில் இந்தியாவில் வழங்கிவரும் இசை முறைகள் பலவற்றையும் ஆராய்ந்தால், அவற்றிற்கு ஒரு பொதுவான அடிப்படை இருப்பதைக் காணலாம். இந்திய இசை வகைகள் யாவும் இன்னிசையின் பாற்பட்டவையே. இசையின் இலக்கணத்தைக் கி.மு. 5-ஆம் நூற்றாண்டில் பிதாகோரசு (Pythagoras) என்னும் கிரேக்க அறிஞர், இந்தியாவுக்கு வந்து கற்றுக்கொண்டு சென்று தம் நாட்டில் விளக்கினார். இவருடைய இசை விளக்கத்தில், இன்று இசையளவைகள் அல்லது மேளங்கள் (Scales) என்று குறிப்பிடப்படும் கருத்துகளுக்குக் கணிதமுறையில் விளக்கம் காணப்படுகிறது. இம்முறை ஒத்திசை முறையாக மேனாடுகளில் பரவிற்று. ஆதலின் உலகின் பல நாடுகளுக்கு இசையை வழங்கியது இந்தியாவே என்று கூறுதல் மிகையாகாது. இசையின் ஒலிக் குறிப்புச் சுரம் எனப்படும். சுரம் என்ற சொல் இனிமையுடையது எனப் பொருள்படும். ஏழிசையின் பெயர்கள் நாரதப்பரிவிரச உபநிடதத்தில் முதன் முதல் காணப்படுகின்றன. இப்பெயர்களின் முதலெழுத்துகள் சுரங்களாயின. (சட்சம்-ச, ரிடபம்-ரி, காந்தாரம்-க, மத்தியமம்-ம, பஞ்சமம்-ப, தைவதம்-த, நிசாதம்-நி.) சங்க இலக்கியங்களில் குரல் (ச) துத்தம் (ரி) கைக்கிளை (க) உழை (ம) இளி (ப) விளரி (த) தாரம் (நி) என்னும் பெயர்கள் வழங்கப்பட்டன. ஏழு சுரங்களுள் சட்சம், பஞ்சமம் (ச, ப) ஆகிய இரு சுரங்களும் வேறுபாடற்றுக் கீழ்மேல் இயக்குகளில் ஒலிப்பவை. பிற சுரங்கள் வலியன (தீவிரம்) மெலியன (கோமளம்) என இருவகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன. சுரங்களுள் இயல்பு சுரங்கள் என்றும் வேறுபாட்டுச் சுரங்கள் என்றும் இரு பிரிவுகள் உள்ளன. ச,ப இரண்டும் இயல்பு சுரங்கள். கமபதநிஆகிய ஐந்தும் வேறுபாட்டுச் சுரங்களாகும். பண்டைத் தமிழ் இலக்கியங்கள் இவ்வைந்து சுரங்களையே அடிப்படைச் சுரங்கள்என்றும் இவற்றினின்று தோன்றியவையே இயல்பு சுரங்கள் என்றும் குறிப்பிடுகின்றன. சுரங்கள் பின்வருமாறு குறியிட்டுக் காட்டப்படுகின்றன.

| சுரங்களின் பெயர்கள் | | | சுரக்குறியீடுகள் |
|---|---|---|---|
| சட்சம் | | ச | ச |
| சுத்த ரிடபம் (மெலியது) (கோமள சுரம்) | | ரி | $ரி_1$ |
| சதுச்ருதி ரிடபம் (வலியது) (தீவிர சுரம்) | | ரி | $ரி_2$ |
| சாதாரண காந்தாரம் | | க | $க_1$ |
| அந்திரகாந்தாரம் | | க | $க_2$ |
| சுத்தமத்தியமம் | (மெ) | ம | $ம_1$ |
| பிரதிமத்தியமம் | (வ) | ம | $ம_2$ |
| பஞ்சமம் | | ப | ப |
| சுத்ததைவதம் | (மெ) | த | $த_1$ |
| சதுச்ருதிதைவதம் | (வ) | த | $த_2$ |
| கைசிகிநிசாதம் | (மெ) | நி | $நி_1$ |
| காகிலிநிசாதம் | (வ) | நி | $நி_2$ |

இயற்பியல் வல்லுநர்கள் எட்டுச்சுரங்களைக் கொண்ட இசைக்கவையைச் (Tuning Fork) செய்திருக்கிறார்கள். இதனின்று எழும் ஒலி, இந்திய கருநாடக இசையில் ச எனப்படும் சட்சத்தைத் தொடக்கமாகக் கொண்டு, சரிகமபதநிச எனப்படும் சங்கராபரணமேள ராக சுரங்களைக் குறிப்பது தெரியும். இந்த எட்டுச், சுரங்களுக்கும் இடைவெளிகள் உள்ளன. இதைப் பின்வருமாறு விளக்கலாம்.

| மேனாட்டு இசை | | கருநாடக இசை | |
|---|---|---|---|
| C | டோனிக்கு | ச | சட்சம் |
| D | இரண்டாவது (Second) | ரி | இடபம் |
| E | மேசர் மூன்றாவது (Major Third) | க | காந்தாரம் |
| F | True Fourth | ம | சுத்த மத்தியமம் |

| | | | |
|---|---|---|---|
| G | True Fifth | ப | பஞ்சமம் |
| A | Major Sixth | த | தைவதம் |
| C[1] | Octave | ச | மேல்சட்சம் |

இந்த ஒலி அந்தரங்கள் அல்லது இடைவெளிகள், ஏழாம் அல்லது ஐந்தாம் சுரவரிசைக் கோவைகளாக, (Octave & the Fifth) அமைந்திருக்கின்றன. உயர் ஒலி, கீழ் ஒலியைப் போன்று இரண்டு பங்கு உண்மையாக ஒலிக்கிறது. இம்முறை கிரேக்க இசையில் காணப் பட்டது. பழங்காலத்து இசை அளவையில் எப்.சி.எப் (FCF) என்ற அளவை காணப்படுகிறது. சி என்பது எப்-(F) என்னும் சுரத்திலிருந்து ஐந்தாம் சுர மாகும். ஆதலின் FCFGC என்ற சுரவரிசை அமைக் கப்படின், ஒன்றிலிருந்து அடுத்தது ஐந்தாம் சுரம் என்ற முறை ஏற்படுகிறது. இது CDFGA என்ற ஏழிசைச் சுரவரிசையை (Pentatonic Scale) ஏற் படுத்துகிறது. இந்தச் சுரங்கள் எல்லாவற்றையும் பியானோவின் கீழ் ஒலிக்கட்டைகளினால் இசைத் தால், இவ்வொலி வரிசையைக் கேட்கலாம். பண் டைக்காலத்துச் சீன இசையும் இசுகாட்லாந்து இசையும் இத்தகைய ஏழிசை முறையில் அமைந் திருந்தன. இவ்வரிசையில் ஐந்தாம் சுரங்களுக்கு மாறாக ஏழாம் சுரங்களின் இடைவெளிகளைக் கொண்டு சுர வரிசை அமைக்கப்பட்டால், அது ஏழிசை அளவை (Diatonic Scale) எனப்படும். இம்முறை பிதாகரசு என்னும் பண்டைய கிரேக்க அறிஞர் அமைத்ததாகும். இது பிதாகரசு அளவை (Pythagorian Scale) எனப்படுகிறது. ஒவ்வொரு கீழ்ச் சுரத்திற்கும் அதற்கடுத்த மேல் சுரத்திற்கும் இடையே இருக்கும் பரவல் விகிதம் (Frequency Ratio) 1.5 முறையாகும். G என்ற சுரம் அதற்கடுத்த C ஐ விட 3/2 பங்கு பரவல் அதிகமுள்ளது. இதைப் போன்றே G D ஐ விட D 3/2 பங்கு அதிகமான பரவல் விகிதம் $(3/2)^2 \div 2 = 9/8$ A/B = 1.125 ஆகும். இந்த இடைவெளியைப் பிதாகரசு A-B ஓர் இயக்கு (Tone) என்றார். இந்த இயக்கு C&D; D&E F/G G/A A/B ஆகியவற்றுக்கு இடையே ஏறபடு கிறது. EF, BC ஆகியவற்றிற்கு இடைப்பட்ட இடை வெளி 9/8-க்கும் குறைவானது. இது அரை இயக்கு (Hemitone) ஆகும் என்று பிதாகரசு கூறினார். அவர் இதனை 256/243 - 1.0535 என்று கணக்கிட்டார். கிரேக்க இசையில் இந்த ஏழு சுரங்களும் இருந்தன. இது ஐரோப்பிய இசைப்புலவர்களால் பின்பற்றப் பட்டது. ஐரோப்பிய இசையில் இரண்டு இயக்குகளில் சுரவரிசைகள் அமைக்கப்பட்டன. இவை மேசர், மை னர் (Major, Minor) என்று வழங்கப்பட்டன. ஏழு சுரங்களை ஒரு முறை இசைத்த பின், திரும்பவும் அதே சுரங்கள் இசைக்கப்படுகின்றன. சுரவரிசை, இயக்கு (தாயி) எனப்படும். இயக்குகள் மெலிவு, சமன், வலிவு என மூவகைப்படும். இம்மூன்றையும் மந்தரம் மத்தியமம், தாரம் என வடமொழி இசை நூலார் வழங்குவர். மந்தரத்தாயி 'தக்கு' என்றும், தாரம் 'எச்சுதாயி' என்றும் வழங்கப்படும். சங்கீதரத்னா கரம் என்னும் நூல், இதயத்தில் உண்டாகும் ஒலியை மெலிவியக்கு (மந்தரம்) என்றும், கழுத்தில் உண்டா கும் ஒலியைச் சமனியக்கு (மத்தியமம்) என்றும், தலை யில் உண்டாகும் ஒலியை வலியியக்கு (தாரம்) என் றும் குறிப்பிடுகிறது. வலியியக்கு மெலிவியக்கைப் போல் இரட்டிப்பாகவும், சமனியக்கு மெலிவியக்கைப் போல் இரட்டிப்பாகவும் இருக்கும். ஒரு சுரத்திற்கும் அதன் நேர் வலியியக்குச் சுரத்திற்கும் உள்ள சுருதி 1:2 என்ற விகிதத்தில் உள்ளது. மெலிவியக்குச் சுரம் ஒருபங்கானால், அதன் நேர் சமனியக்குச் சுரம் இரண்டு பங்காகும் அதன் நேர் வலியியக்குச் சுரம் மெலிவியக்குச் சுரத்தின் நான்கு பங்காகும். மெலி வியக்குக் குரல் (சட்சம்) வினாடிக்கு 120 அதிர்வெண் கள் ஆனால், சமனியக்குக் குரலுக்கும் வலியியக்குக் குரலுக்கும் முறையே 240, 480 அதிர்வெண்கள் ஆகும். இம்மூன்று இயக்குகளுக்கும் அப்பாற்பட்டு ஒலிக்கும் அனுமந்தரத்தாயி (மெலிவியக்கினைக் காட்டிலும் தாழ்ந்து ஒலிக்கும் சுரம்) அதிதாரத் தாயி (வலிவியக்கின் மேற்பட்டு ஒலிக்கும் சுரம்) என் னும் இரண்டு இயக்குகள் உள்ளன. (இவை பக்கம் 934-இல் குறியிடப்பட்டுள்ளமை காண்க).

ஏழு சுரங்களும் ஒன்றை விட மற்றது வலியது என்ற வரிசையில் ஒலிக்கும்பொழுது அது ஆரோசை எனவும், இறங்கும் வரிசையில் ஒலிக்கும்பொழுது அமரோசை எனவும் குறிப்பிடப்படும். இவற்றை வடமொழி இசைநூலார் ஆரோகணம் என்றும் அவ ரோகணம் என்றும் குறிப்பிடுவர். சுரத்தைப் பழந் தமிழ் நூல்கள் கோவை எனக் குறிக்கின்றன. ஐந்து சுரங்களும் அவற்றின் வலியன மெலியன என்ற பிரிவுகளும் சேர்ந்து, 12 சுரங்களாகின்றன. இப் பன்னிரண்டு சுரங்களும், ஐந்தாம் சுர வரிசையாக (Fifth Scale) இச்சுரங்கள் ஒன்றிலிருந்து மற்றொன்று வரும் முறையாக அமைக்கப்பட்டுள்ளன. சரிகமபதநி - சுரவரிசையில் குரலிலிருந்து (ச) இளி (ப) 5-ஆம் சுரம் ஆகும். அமரோசை முறையில் குரலிலிருந்து (ச) 5-ஆம் சுரம் உழை (ம) ஆகும். குரல்-இளி (ச-ப) குரல்-உழை (ச-ம) முறையில் 12 சுரங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. சிலப்பதிகாரத்தில் குழலோ னின் அமைதி கூறுமிடத்து, அவன் குரல் இளி சேரும் சரியான ஒலி ஒருங்கிணைவை உணர்ந்தவனாக இருந்தான் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

> ஏற்றிய குரலிளியென்றிரு நரம்பி
> னொப்பக் கேட்குமுணர்வினனாகி (சிலம்பு
> அரங். 59-60)

... ... ... ... ... ... ...
ச ரி க ம ப த நி
↑ அதிதாரத்தாயி

. . . . . . .
சரிகமபதநி
வலியியக்கு (தாரத்தாயி)

சரிகமபதநி
சமனியக்கு (மந்தரத்தாயி)

சரிகமபதநி
. . . . . . .
(மெலிவியக்கு (மந்திரத்தாயி)
↓
ச ரி க ம ப த நி
... ... ... ... ... ... ...

(அனுமந்தரத்தாயி)

ஏழு சுரங்களுள் முதல் 4 சுரங்களும் அவற்றின் வேறுபாட்டுச் சுரங்களும் முதனிலைச் சுரங்கள் (பூர்வாங்கம்) என்றும், அடுத்த 3 சுரங்களும் அவற்றின் வேறுபாட்டுச் சுரங்களும் இறுதிநிலைச் சுரங்கள் (உத்தராங்கம்) என்றும் குறிப்பிடப்படும். இளி முறையில் தோன்றிய பன்னிரண்டு சுரங்களினின்றும் 16 சுரங்கள் பிறக்கின்றன. இவ்வாறு ஓர் இயக்கியிலுள்ள 12 சுரங்கள் தோன்றுவதைப் பின்வருமாறு விளக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| 1. | சட்சம் | ச | குரல் |
| 2. | சுத்தரிடபம் | $ரி^{2}$ | குறைத்துத்தம் |
| 3. | சதுசுருதி ரிடபம் அல்லது சுத்தகாந்தாரம் | $ரி^{4}$ $க^{2}$ | நிறைத்துத்தம் |
| 4. | சட்சுருதி ரிடபம் அல்லது சாதாரண காந்தாரம் | $ரி^{6}$ $க^{4}$ | குறைக் கைக்கிளை |
| 5. | அந்தர காந்தாரம் | $க^{6}$ | நிறைக்கைக்கிளை |
| 6. | சுத்தமத்தியமம் | $ம^{2}$ | குறை உழை |
| 7. | பிரதிமத்தியமம் | $ம^{4}$ | நிறை உழை |
| 8. | பஞ்சமம் | ப | இளி |
| 9. | சுத்ததைவதம் | $த^{2}$ | குறை விளரி |
| 10. | சதுசுருதி தைவதம் அல்லது சுத்தநிசாதம் | $த^{4}$ $நி^{2}$ | நிறை விளரி |
| 11. | சட்சுருதிதைவதம் அல்லது கைசிகி நிசாதம் | $த^{6}$ $நி^{4}$ | குறைத்தாரம் |
| 12. | காகிலி நிசாதம் | $நி^{6}$ | நிறைத் தாரம் |

இக்கால இசைப்புலவர்கள், இச்சுரங்களின் இயல்பு நிலைகளையே அந்தந்தச் சுரங்களின் கலப்பற்ற நிலை எனக் குறிப்பிடுகின்றனர். இச்சுரங்களை வேறுபடுத்தியறியும்பொருட்டு இவற்றைப் பின்வருமாறு எழுதுகின்றனர்.

| | | |
|---|---|---|
| சட்சம் | | – ச |
| ரிடபம் | சுத்த – | – ர |
| | சதுசுருதி | – ரி |
| | சட்சுருதி | – ரு |
| காந்தாரம் | –சுத்த | – க |
| | – சாதாரண | – கி |
| | – அந்தர | – கு |
| மத்தியமம் | – சுத்த | – ம |
| | – பிரதி | – மி |
| | – பஞ்சமம் | – ப |
| தைவதம் | – சுத்த | – த |
| | – சதுசுருதி | – தி |
| | – சட்சுருதி | – து |
| நிசாதம் | – சுத்த | – ந |
| | – கைசிகி | – நி |
| | – காகிலி | – நு |

இம்முறையில் ஏதேனும் ஓர் இராகத்திற்கான ஆரோசை–அமரோசைகளை எழுதும் பொழுது பின்வருமாறு எழுதியபோதிலும், அவற்றைச் சரிகம... என்ற முறையிலேயே பாடுகின்றனர்.

(எ–டு. சரகுமபதநுச – தநிதபமகுரச – மாயாமாளவ கௌளம், சரிகுபதிச–சதிபகுரிச–மோகனம்)

இராகங்கள்: இந்திய இசை, இராகத்தை அடிப்படையாகக் கொண்டது. பண்டைத்தமிழ் மக்கள் இராகத்தைப் பண் என்று குறிப்பிட்டனர். விடியற்காலை, நண்பகல், மாலை போன்ற நேரங்களுக்கு ஏற்ற இராகங்களும் உள்ளன. தேவார இசை, பகற்பண், இராப்பண், பொதுப்பண் என மூன்று வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

பூபாளம், மலயமாருதம், பௌளி, கலகடம், வலசி, தேசாட்சி, இரேவகுப்தி போன்றவை விடியற்காலையில் பாடவேண்டிய இராகங்கள். பிலகரி, கேதாரம், தன்னியாசி போன்றவை ஆதவன் உதயத்திற்கு முன் பாட வேண்டிய இராகங்கள். அசாவேரி, சாவேரி, தேவமனோகரி போன்றவை முற்பகலில் பாடவேண்டிய இராகங்கள். சிரிராகம், மணிரங்கு, மத்தியமாவதி, பிருந்தாவனசாரங்கா, புட்பதிலகம் போன்றவை நண்பகலில் பாடவேண்டிய இராகங்கள். முகாரி, பேகடை போன்றவை பிற்பகலில் பாடவேண்டிய இராகங்கள். கல்யாணி, வசந்தம் போன்றவை மாலையில் பாடவேண்டிய இராகங்கள். கேதார கௌளம், நீலாம்பரி போன்றவை ஆதவன் மறையும் நேரத்தில் பாடவேண்டிய இராகங்கள். பைரவி, காம்போதி, சங்கராபரணம், ஆரபி போன்றவை காலவரையின்றி எல்லா நேரங்களிலும் பாடப்படும் இராகங்களாகும்.

ஒன்பது சுவைகளையும் உணர்த்தும் இராகங்கள் உள்ளன. சில இராகங்கள் ஒன்றுக்கு மேற்பட்ட சுவைகளையும் உணர்த்துகின்றன. சகானா, புன்னாகவராளி, நாதநாமக்கிரியை போன்றவை இரக்கச் சுவையையும், உசேனி, கமாசு, சுருட்டி போன்றவை இன்பச் சுவையையும், அடாணா, ஆரபி போன்றவை வெகுளிச் சுவையையும், தேவகாந்தாரி, பிலகரி, நாட்டை போன்றவை வீரச்சுவையையும், சாரங்கா, இந்துசுத்தானி பியாக்கு போன்றவை வியப்புச் சுவையையும், சாமா இராகம் அமைதிச் சுவையையும் குறிப்பிடும் இராகங்களாகும்.

சங்கீத மகரந்தம் என்னும் இசை நூலில், இத்தகைய இராகங்களுக்கான விளக்கங்கள் காணப்படுகின்றன. அன்னமாச்சாரியார் என்னும் இயலிசைப் புலவர் 91 இராகங்களில் பாடல்களை இயற்றியுள்ளார். இவர் கி.பி. 15–ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தார். கோவிந்த தீட்சிதர் என்பவர் கி.பி. 16–ஆம் நூற்றாண்டில் தஞ்சையை ஆண்டுவந்த அச்சுதப்ப நாயக்கரின் அமைச்சராக இருந்தார். இவர் சிறந்த இசை வல்லுநராகத் திகழ்ந்தார். இவர் மகன் வேங்கடமகி என்பவர் தஞ்சை மன்னர் விசயராகவ நாயக்கரின் (கி.பி. 1633–1673) அமைச்சராக இருந்தார். வேங்கடமகி சதுர்தண்டிப் பிரகாசிகை என்னும் இசை நூலை இயற்றினார். இவர் இந்நூலில் 72 மேளகர்த்தாக்களின் அமைப்பை விளக்கியுள்ளார். இவர் 19 மேளகர்த்தா இராகங்களே பழக்கத்திலிருந்தன என்றும், மற்ற 53 மேளகர்த்தா இராகங்கள் விளக்கப்படவில்லை என்றும் இந்நூலில் குறிப்பிட்டுள்ளார். முதலாம் துளசா மன்னர் (கி.பி. 1728–1736) இயற்றிய சங்கீத சாராமிருதம் என்னும் நூல் 72 மேள கர்த்தாக்களைப் பற்றிக் குறிப்பிபட்டுள்ளது. ஆனால், அவற்றின் பெயர்கள் குறிப்பிடப்படவில்லை. கோவிந்தாச்சாரியார் என்பவர் இயற்றிய சங்கீத சூடாமணி என்னும் நூலில் 72 மேளகர்த்தா இராகங்களின் பெயர்கள் காணப்படுகின்றன. மேளகர்த்தா இராகங்களில் ஏழு சுரங்களும் ஆரோசையிலும் அமரோசையிலும் வரிசையாக வரும். ஆரோசையில் எந்த வரிசையில் சுரங்கள் வருகின்றனவோ அந்த வரிசையில் அமரோசை

யில் சுரங்கள் வரும். வேங்கடமகியின் 72 மேளகர்த்தா அமைப்பு, தென்னிந்திய இசையை (கருநாடகஇசை) வடஇந்திய இசையினின்றும் பிரித்து வேறுபடுத்தியது. இது மேளகர்த்தாச் சக்கரம் என வழங்கப்படுகிறது. இச்சக்கரத்தின் உதவியினால் இதில் உள்ள எந்த இராகத்திற்கும் உடனே விளக்கம் கூறிவிடலாம். இச்சக்கரம் இருசமமான பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதல் பகுதியில் வரும் மேளகர்த்தாக்கள் பூர்வ மேள கர்த்தாக்கள் என்றும், இரண்டாம் பகுதியில் வரும் மேளகர்த்தாக்கள் உத்தர மேளகர்த்தாக்கள் என்றும் குறிப்பிடப்படுகின்றன. பூர்வமேளகர்த்தாக்களில் சுத்தமத்தியமச் சுரமும் (குறை உழை) உத்தர மேளகர்த்தாக்களில் பிரதி மத்தியமச் (நிறை உழை) சுரமும் வரும். இந்த 72 மேளகர்த்தாக்கள் பின்வரும் 12 சிறிய சக்கரங்களின் கீழ் வகுக்கப்பட்டுள்ளன.

1. இந்து - (மதி) ஒரே மதி இருப்பதனால் இது 1 என்னும் எண்ணைக் குறிக்கும்.
2. நேத்திரம் - (கண்) உயிரிகளுக்கு இரண்டு கண்கள் இருப்பதால், இது 2 என்ற எண்ணைக் குறிக்கும்.
3. அக்கினி - தக்கணம், ஆகவனீயம், காருகபத்தியம் என்னும் மூவகை அக்கினிகள் இருப்பதால், இது 3 என்னும் எண்ணைக்குறிக்கும்.
4. வேதம்-இருக்கு, எசுர், சாமம், அதருவம் என்னும் நான்கு மறைகள் இருப்பதால், இது 4 என்னும் எண்ணைக் குறிக்கும்.
5. பாணம்-காமனுடைய மலரம்புகள் தாமரை, மாம்பூ, அசோகு, முல்லை, நீலோற்பலம் என்னும் ஐந்து ஆதலின், இது 5 என்னும் எண்ணைக் குறிக்கும்.
6. இருது-வசந்தம், வேனில், கார், சரத்து, வேமந்தம், சிசிர் என்னும் பருவ காலம் ஆறு ஆதலின், இது 6 என்னும் எண்ணைக் குறிக்கும்.
7. இருடி - கௌதமர், பரத்துவாசர், விசுவாமித்திரர், சமதக்கினி, வசிட்டர், காசியபர், அத்திரி ஆகிய முனிவர் எழுவராதலின், இது 7 என்னும் எண்ணைக் குறிக்கும்.
8. வசு - ஆப, தருவ, சோம, தர, அனில, அலை, பரத்யூச, பிரபாச என வசுக்கள் எண்மராதலின், இது 8 என்னும் எண்ணைக் குறிக்கும்.
9. பிரமன்-பிரமர் ஒன்பதின்மராதலின் இது 9 என்னும் எண்ணைக் குறிக்கும்.
10. திசை- கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு, வடகிழக்கு, தென்கிழக்கு, வடமேற்கு, தென்மேற்கு, ஆகாயம், பாதாளம் எனத் திசை பத்தாதலின், இது 10 என்னும் எண்ணைக் குறிக்கும்.
11. உருத்திரர்-உருத்திரர்கள் பதினொருவராதலின் இது 11 என்னும் எண்ணைக் குறிக்கும்.
12. ஆதித்தியர் - ஆதித்தியர் பன்னிருவராதலின் இது 12 என்னும் எண்ணைக் குறிக்கும்.

பண்டைத் தமிழ்நாட்டில், 32 தாய் இராகங்களை மக்கள் பாடி வந்தனர். இடபம், காந்தாரம் ஆகிய சுரங்களின் நான்கு கிளைகள் ஒவ்வொன்றுடனும் தைவதம், நிசாதம் ஆகியவற்றின் சுரங்களில் நான்கு சுரவேறுபாடுகள் உண்டாகும் பொழுது 16 பிரிவுகள் உண்டாகின்றன. இவற்றுடன் சுத்த மத்தியமம், பிரதி மத்தியமம் ஆகிய இரு சுரங்கள் கூடும்பொழுது 32 ($4 \times 4 \times 2 = 32$) இராகங்கள் தோன்றுகின்றன. வேங்கடமகி விளக்கம் தந்த மேளகர்த்தா இராகங்கள் பின்வரும் முறையில் அமைக்கப்பட்டன.

3 ரிடபம் + 3 காந்தாரம் = 6சுர வேறுபாடுகள்

3 தைவதம் + 3 நிசாதம் 6 "

2 மத்தியமம் 2 "

$6 \times 6 \times 2 = 72$ இராகங்கள்.

சுத்த காந்தாரம், சட்சுருதி இடபம், சுத்த நிசாதம், சட்சுருதி தைவதம் ஆகிய 4 சுரங்களும் விவாதிச் சுரங்கள் எனப்படும். இவற்றுள் 9 அல்லது 2 விவாதிச் சுரம் வரும் மேளம் விவாதிமேளம் எனப்படும். மேளகர்த்தா இராகங்கள் தாய் இராகங்கள் ஆகும். இவற்றில் பிறந்த இராகங்கள் கிளை இராகங்கள் அல்லது சன்னிய இராகங்கள் ஆகும். சன்னிய இராகங்களின் பகுப்பினைப் பக். 937-இல் காண்க. கிளை இராகங்கள் வருச்சம், வக்கிரம், பாசாங்கம் என மூவகைப்படும். ஓர் இராகத்தின் ஆரோசை அமரோசை ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றிலோ இரண்டிலோ ஒன்று அல்லது இரண்டு சுரங்கள் விலக்கப்பட்டிருந்தால், அது வருச்ச இராகம் எனப்படும். ஆறுசுரங்களையுடைய ஆரோசை அல்லது அமரோசைக்குச் சாடவம் என்று பெயர். ஆரோசை அமரோசையில் 5 சுரங்கள் இருந்தால், அது திறம் அல்லது ஔடவம் எனப்படும். மூன்று சுரங்கள் விலக்கப்பட்ட கிளை இராகம் சுராந்தரம் அல்லது கிளை எனப்படும். வருச்ச இராகங்கள் எட்டு வகைப்படும். ஓர் இராகத்தின் ஆரோசை அமரோசை ஆகிய இரண்டிலுமோ ஏதேனும் ஒன்றிலோ சுரங்கள் வரிசையாக வராமல் திரிந்து வந்

சன்னிய இராகம்

சன்னிய, சம்பூரண இராகம், வக்கிரமற்ற உபாங்கம், பாசாங்கம்

வருச்ச இராகம்

சம்பூரண, சாடவ, ஔடவ, சுராந்தரம், வக்கிரம், வக்கிரமற்ற, பாசாங்கம், உபாங்கம்

வருச்சம்

சம்பூர்ண சாடவ ஔடவ

வருச்சமற்ற

உபாங்கம் பாசாங்கம்

வக்கிர இராகங்கள்

உபாங்கம் பாசாங்கம்

வருச்ச வருச்சமற்ற வக்கிர வக்கிரமற்ற

தால் அத்தகைய இராகங்கள் வக்கிர இராகங்கள் எனப்படும். இவற்றைப் பிறழ்ச்சிப் பண்கள் எனக் குறிப்பிடலாம்.

எ.டு. சரிகமபாமதாநிசா
சநிதபமகாமமரீகரிச

சில கிளை இராகங்களில் இனிமையின் பொருட்டு அவற்றின் தாய் இராகங்களில் காணப்படாத சுரங்கள் இடம் பெறுகின்றன. இத்தகைய இராகங்கள் பாசாங்க இராகங்கள் எனப்படும். தாய் இராகத்தின் சுரங்களையே கொண்டு அமைந்திருக்கும் கிளை இராகங்கள் உபாங்க இராகங்கள் எனப்படும். சாடவ – சம்பூரண முறையில் 6 கிளை இராகங்களும் ஔடவ சம்பூரண முறையில் 15 கிளை இராகங்களும், சம்பூரண-ஔடவ முறையில் 15 கிளை இராகங்களும், சாடவ-சாடவ முறையில் 36 இராகங்களும், இவற்றைப்போல் வேறு பல முறைகளில் இன்னும் பல இராகங்களும் கிடைக்கின்றன. இத்தகைய வருச்ச இராகங்கள் 483 என்று இசைவல்லுநர் கணக்கிட்டுள்ளனர். வருச்சவக்கிரபேத இராகங்களின் அட்டவணையைப் பக். 938-இல் காண்க.

இந்திய இசை இவ்வாறு எல்லையற்ற இயல்பினைக் கொண்டிருக்கிறது. இதில் பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளான பின்னரும் பலர் புதிய இராகங்களைக் கண்டுபிடிக்கலாம். இராகத்தை விளக்கமாகப் பாடும் முறை ஆளத்தி அல்லது ஆலாபனை எனப்படும். இதனை ஒருவர் மற்றவருக்குச் சுரப்படுத்தி எழுதிக் கற்றுக் கொடுக்க முடியும் என்றாலும் பழக்கத்தில் அவ்வாறு நடைபெறுவதில்லை. இசை மாணவர்கள் தாமே கற்பனையில் இராக ஆலாபனை செய்கிறார்கள். இராக ஆலாபனையில் இராகங்களின் போக்கு, சஞ்சாரம் எனப்படுகிறது. இராகங்களில் மிகுதியாகக் காணப்படும் சுர அடுக்குகள் மூர்ச்சனைகள் என்றும் நுட்பமான ஆலாபனைப் பகுதிகள் பிர்க்காக்கள் என்றும் குறிப்பிடப்படுகின்றன. இக்காலத்தில் இசை மாணவர்கள் புகழ்பெற்ற இசை வல்லுநர்களின் இராக ஆலாபனை இசைப் பதிவு நாடாக்களை வைத்துக்கொண்டு, அவற்றைத் திரும்பத் திரும்பக் கேட்டு ஆலாபனையைக் கற்றுக் கொள்கிறார்கள். இராக ஆலாபனையில் இராகம், தாளம், பல்லவி, நிரவல் ஆகிய பகுதிகள் உள்ளன. இவை பழந்தமிழ் நாட்டில் ஆளத்தி என்று குறிப்பிடப்பட்டன. ஆளத்தி, காட்டாளத்தி, (தாளத்துடன் நிகழ்வது) நிறவாளத்தி (இராக ஆலாபனை மட்டும்) பண்ணாளத்தி (பண்ணுடன் இணைந்த கீதம், கீர்த்தனம், பதம் போன்றவை) என மூவகைப் படும். இராக ஆலாபனையில் 5 குற்றெழுத்துகளும் 7 நெட்டெழுத்துகளும் த, ந, ம ஆகிய மூன்று உயிர் மெய் எழுத்துகளும் மட்டிலுமே பயன்படுத்தப்பட வேண்டும் என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. இதனைத்தவிர 'ம்' எனத் தொடங்கி இராகவிளக்கம் செய்யும் முறையும் சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டுள்ளது. (அரங். 26-36 அடியார்க்கு நல்லார் உரை) தாளத்தில் த, ந, ம, ஆகிய 3 எழுத்துகளும் பயன்படுத்தப்படுகின்றன.

தாளம் இசையின் இன்றியமையாத பகுதியாகும். தாளம் கையினால் கொட்டப்படுவதால் அது கொட்டு அல்லது பாணி (கை) எனப்பட்டது. இசையைக் கால அளவிற்குள் கட்டுப்படுத்துவது தாளமே. பழந்தமிழ் மக்கள் பயன்படுத்தி வந்த 108 தாளங்களின் விளக்கம் பஞ்சமரபு என்னும் நூலில் காணலாம். இந்நூலில் தாள மரபு என்னும்

இராக அட்டவணை

| வ. எண். | இராக வகைகள் | எண்ணிக்கை | சாடவ-சாடவம் | ஔடவ ஔடவம் | வக்கிர சம்பூரணம் | வக்கிர சாடவம் | வக்கிர ஔடவம் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | சம்பூரணம் | 1 | 6 | 15 | 38 | 144 | 210 | 414 |
| 2. | சாடவ-சாடவம் | 6 | 36 | 90 | 228 | 864 | 1260 | 2484 |
| 3. | ஔடவ-ஔடவம் | 15 | 90 | 225 | 570 | 2160 | 3150 | 6210 |
| 4. | வக்கிர-சம்பூரணம் | 38 | 228 | 570 | 1444 | 5472 | 7980 | 15732 |
| 5. | வக்கிர சாடவம் | 144 | 864 | 2160 | 5472 | 20736 | 30240 | 59616 |
| 6. | வக்கிர ஔடவம் | 210 | 1260 | 3150 | 7980 | 30240 | 44100 | 86940 |
| | மொத்தம் | 414 | 2484 | 6210 | 15732 | 59616 | 86940 | 171396 |

பகுதியில் தாளத்தின் உறுப்புகளாகக் கணம், இலவம், காட்டை, நிமிடம், துடி, துருதம், இலகு, குரு, புலுதம் ஆகியவையும் அவற்றின் கால அளவுகளும் குறியீடுகளும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாகத் துருவத்தின் வடிவு வட்டமதி என்றும், இலகுவின் வடிவு செங்கோல் என்றும், குருவின் வடிவு இளம் பிறை என்றும், புலுதத்தின் வடிவு படமெடுத்த நாகம் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனைத் தவிர, சச்சபுட வெண்பா என்னும் தாளநூல், கி.பி. 17–ஆம் நூற்றாண்டில் வரகுண பாண்டியன் என்னும் மன்னரால் இயற்றப்பட்டது. இந்நூலில் 108 தாளங்களின் உறுப்புகள், கால அளவு போன்ற விவரங்கள் வெண்பா வடிவில் காணப்படுகின்றன. தாளத்திற்கு அனுத்ருதம், துருதம், இலகு, குரு, புலுதம், காகபதம் ஆகிய ஆறு உறுப்புகள் உண்டு. தாளத்தின் ஓர் எண்ணிக்கை அட்சரகாலம் எனப்படுகிறது. நான்கு அட்சர காலங்கள் கொண்டது ஒரு மாத்திரை. இவற்றைப் பின்வருமாறு விளக்கலாம்.

| தாளத்தின் உறுப்பு | தாளக்குறி | கால அளவு |
|---|---|---|
| அனுத்ருதம் | U | $\frac{1}{4}$ மாத்திரை<br>1 அட்சரகாலம் |
| துருதம் | O | $\frac{1}{2}$ மாத்திரை<br>2 அட்சரகாலம் |
| இலகு | 1 | 1 மாத்திரை<br>4 அட்சரகாலம் |
| குரு | 8 | 2 மாத்திரை<br>8 அட்சரகாலம் |
| புலுதம் | 1<br>8 | 3 மாத்திரைகள்<br>12 அட்சரகாலம் |
| காகபதம் | + | 4 மாத்திரைகள்<br>16 அட்சரகாலம் |

இக்காலத்தில் முதல் மூன்று உறுப்புகளே எல்லாத் தாளங்களிலும் காணப்படுகின்றன. அனுத்ருதம் ஒரு தட்டு இதன் குறி U. துருதத்திற்கு ஒரு தட்டும் வீச்சும் இதன் குறி O. இலகுவிற்கு ஒரு தட்டும் 3 விரல் எண்ணிக்கையும் உண்டு; இதன் குறி 1. இலகுவில் திரிச்சிர இலகு, சதுர்ச்சிர இலகு, கண்ட இலகு, மிச்சிரஇலகு, சங்கீரண இலகு ஆகிய ஐந்து வகைகள் உள்ளன. இவற்றை 3 | 4 | 5 | 7 | 9 என அட்சர கால வேறுபாடுகளைக் காட்டும் முறையில் எழுதலாம். இவற்றுக்கு ஒருதட்டும் முறையே 2,3,4,6,8 ஆகிய விரலெண்ணிக்கைகளும் உள்ளன. அட்சர காலம் பின்வருமாறு குறியீடு செய்யப்படுகிறது.

எ-டு. ப — $\frac{1}{2}$ அட்சரகாலம் பா;, – 4 அட்சரகாலம்
ப — 1 ,, பா;; – 5 அட்சரகாலம்
பா — 2 ,, பா;; – 6 ,,
; — 2 ,,
, — 1 ,,

இக்காலத்தில் துருவதாளம், மட்டிய தாளம், உருபக தாளம், சம்பைதாளம், திரிபுடைதாளம், அடதாளம், ஏகதாளம் ஆகிய 7 தாளங்களே பழக்கத்தில் இருக்கின்றன. இந்த 7 தாளங்களும் இவற்றுடன் இலகுவின் வகைகளும் சேர்ந்து $7 \times 5 = 35$ தாளங்களாகின்றன. இலகுவைத் தவிர ஏனைய தாள உறுப்புகள் திச்சிரகதி, சதுர்ச்சிரகதி, கண்டகதி, மிச்சிரகதி ஆகிய கதி வேறுபாடுகள் கொண்டனவாக இருப்பதால், 35 தாளங்களும் இந்த 5 தாள உறுப்புகளுடன் சேர்ந்து $35 \times 5 = 175$ தாளங்களாகின்றன. தாளமும் பாட்டும் ஒரே நேரத்தில்

தொடங்கினால் அது சம எடுப்பு என்றும், தாளத்திற்குப் பின் பாடல் தொடங்கினால் அது அனாகத எடுப்பு என்றும்,தாளத்திற்கு முன் பாடல் தொடங்கினால் அது அதீத எடுப்பு என்றும் சொல்லப்படும். தாளம் அதன் போக்கின் அடிப்படையில் முதற் காலம், இரண்டாம் காலம், மூன்றாம் காலம், நான்காம் காலம் என்று நான்கு வகைப்படுகின்றன. இந்த நான்கு கால வரிசைகளையும் பண்டைத் தமிழ்மக்கள் முதல் நடை (விளம்பகாலம்), வாரம் (மத்திமகாலம்), கூடை (துரித காலம்), திரள் (அதி துரிதகாலம்) என்று குறிப்பிட்டனர். இக்காலத்தில் ஆதிதாளம், உரூபக தாளம், சாபு தாளம், சம்பை தாளம், ஏகதாளம் போன்ற தாளங்களே பழக்கத்தில் உள்ளன. கண்டசாதி அடதாளம் சில வருணங்களில் காணப்படுகிறது.

இந்திய இசையில் ஒத்திசையின் அடிப்படைக் கருத்துகளும் காணப்படுகின்றன. சுரங்களுக்கு இடையே இருக்கும் நட்பு அல்லது பகையின் அடிப்படையில் ஒத்திசை அமைந்துள்ளது. தொடர்பற்ற பல சுரங்களை ஒரே நேரத்தில் இசைத்தால் அது இனிமையாக இருக்க முடியும் என்றும், அவ்வாறு இனிமையாக ஒலிப்பதற்கு அச்சுரங்கள் பகைச்சுரங்களாக இருத்தல் கூடாது என்றும் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே இந்திய இசைப் புலவர்கள் அறிந்திருந்தனர். சில சுரங்கள் ஒன்றுடன் ஒன்று பொருந்தி ஒலிக்கும். வேறு சில சுரங்கள் பொருந்தாமல் ஒலிக்கும். இந்தப் பொருத்த நிலையை 'இசைபுணர்குறி நிலை' என இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார்.

'இணைகிளை பகை நட்பென்றிந் நான்கின்
இசைபுணர்குறிநிலை எய்தநோக்கி' (சிலப். 8: 33-34).

நின்ற சுரத்திற்கு ஏழாம் சுரம் இணைச்சுரமாகும்

எ-டு. ச-ப இணைச்சுரங்களாகும் (சரிரிககமமப
1234567).

ரி-த இணைச்சுரங்களாகும் (ரிரிககமமபத
1234567).

'இணை எனப்படுவது கீழும் மேலும்
அணையத்தோன்றும் அளவின என்ப' (சிலப். 8; 33 அடியார்க்கு நல்லார்).

ஆரோசையில் இணைச்சுரங்கள் அமைவதைப் போல் அமரோசையிலும் இணைச்சுரங்கள் அமைகின்றன. (எ-டு.).

எ-டு. நி-க இணைச்சுரங்களாகும் (நிநிததபமமக
1234567).

நின்ற சுரத்தினின்று ஐந்தாம் சுரம்-கிளைச்சுரம் அல்லது சுற்றம் எனப்படும்.

எ-டு. - க-த கிளைச்சுரங்களாகும் (ககமமபத
12345) ஆரோசை.

ப-ரி ,, (பமமககரி
12345) அமரோசை.

நின்ற சுரத்திற்கு நான்காம் சுரம் நட்புச் சுரமாகும்.
எ-டு. ரி.

ரி-ம நட்புச் சுரங்களாகும்.
(ரிரிககம
1234) ஆரோசை.

த–ம நட்புச்சுரங்களாகும் (ததபமம அமரோசை.
1 2 3 4)

நின்ற சுரத்திற்கு ஆறாம் சுரமும் மூன்றாம் சுரமும் பகைச் சுரங்களாகும்.

எ–டு. ச–ம பகைச் சுரங்களாகும் (சரிரிககமம
123456).

க–ம ,, (ககமம
123).

இணை, கிளை, நட்பு, பகை ஆகிய சுரத் தொடர்புகளைப் போல் வடமொழி நூலார் வாதி, சம்வாதி, அனுவாதி, விவாதி என்று சுரங்களின் தொடர்புகளை வகைப்படுத்தியுள்ளனர்.

சுரங்களுக்கு இடையே காணப்படும் இணை கிளை நட்பு பகை என்னும் தொடர்புமுறை, சோதிடத்தில் பன்னிரு இராசிகளில் கோள்களுக்குக் குறிப்பிடப்பட்டிருக்கும் தொடர்புகளைப் போன்று காணப்படுகிறது. சோதிட நூல் பன்னிரு இராசிகளுள் 1 4 5 7 9 ஆகிய இடங்கள் சுபமான இடங்கள் என்றும், 2 3 6 8 11 ஆகியவை சுபமில்லாத இடங்கள் என்றும் கூறுகிறது. சோதிடக் கணக்கின் படி ஒரு கோள் நின்ற இராசியிலிருந்து ஐந்தாம் இடம் என்று கணக்கிடும்பொழுது நின்ற இராசியை ஒன்று எனக் கூட்டுகின்றனர். எ–டு. மேடத்திலிருந்து ஐந்தாமிடம் சிம்மம் ஆகிறது. ஆனால் இசை நூல்கள், நின்ற சுரத்திற்கு அடுத்த சுரத்திலிருந்து ஒன்று, இரண்டு, மூன்று எனக் கணக்கிடுகின்றன.

இசைக்கும் சோதிடத்திற்குமுள்ள நெருங்கிய தொடர்பைப் பன்னிரு இராசி வீடுகளின் இடச் சிறப்புகளிலிருந்து அறியலாம்.

எ–டு. ஒருகோள் நின்ற இராசியிலிருந்து

| | | |
|---|---|---|
| ஐந்தாமிடம் | புத்திர இடம்; | (சுபமான இடம்) |
| ஏழாமிடம் | களத்திர. இடம்; | ,, |
| ஒன்பதாமிடம் | பிதா இடம் | ,, |
| நான்காமிடம் | மாதா இடம் | ,, |
| பதினொன்றாமிடம் | இலாப இடம் | ,, |
| ஆறாமிடம் | பகைவன் இடம் | (சுபமில்லாத இடம்) |
| எட்டாமிடம் | மரண இடம் | ,, |
| பன்னிரண்டாமிடம் | மோட்ச இடம் | இலய இடம் |

பன்னிரு இராசி வீடுகளுக்கு அதிபதிகளும் அவர்களின் பகை நட்புத் தொடர்புகளும் இசைச் சுரங்களின் தொடர்புகளுக்குப் பொருந்துவனவாக இருக்கின்றன. இந்த இராசி வீடுகளில் இருக்கக் கூடிய கோள்களிடையேயும் பகை, நட்பு உறவுகள் உள்ளன.

| மீனம்<br>(நி$^{1}$<br>பகை<br>(10) | மேடம்<br>(நி$^{2}$)<br>நட்பு<br>(11) | இடபம்<br>ச<br>நின்ற சுரம்<br>(12) | மிதுனம்<br>ரி$^{1}$<br>(1) |
|---|---|---|---|
| த$^{2}$<br>இணை<br>(9) | | | கடகம்<br>ரி$^{2}$<br>(2) |
| மகரம்<br>த$^{1}$<br>பகை<br>(8) | | | சிம்மம்<br>க$^{1}$<br>பகை<br>(3) |
| தனுசு<br>ப<br>இணை<br>(7) | விருச்சிகம்<br>ம$^{2}$<br>பகை<br>(6) | துலாம்<br>ம$^{1}$<br>கிளை<br>(5) | கன்னி<br>க$^{2}$<br>நட்பு<br>(4) |

**இசைக்கருவிகள்:** உலகில் ஒலி எழுப்பக்கூடிய எப்பொருளையும் இசைக் கருவியாக்க முடியும். ஆனால், இசையோடு தொடர்பு கொண்ட கருவிகள் மட்டிலுமே இசைக் கருவிகள் எனப்படுகின்றன. வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே மனிதர்கள் பல்வேறு இசைக்கருவிகளைப் பயன்படுத்தி வந்துள்ளனர். எலும்புகளினாலும் மரத்தின் அடிப் பாகத்தினாலும் பல விதமான இசைக் கருவிகள் செய்து வந்தனர். 50 ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்திய குகைச் சுவர்ச் செதுக்குச் சித்திரங்கள், பிரான்சின் தென்பகுதியில் உள்ள இலெ திராய் பிரெரெ (Les Trois Freres) என்னும் இடத்தில் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. அச்சித்திரங்களுள் ஒன்று விலங்கின் தோலைப் போர்த்திக் கொண்டிருக்கும் மந்திரவாதி ஒருவன் குழல் இசைப்பதைக் காட்டும் சித்திரம் ஆகும். தொடக்கக்கால மனிதன் சடங்குகளுக்கு இசைக் கருவிகளைப் பயன்படுத்தினான் என்பது இதிலிருந்து தெரிகிறது. மிகத் தொன்மை வாய்ந்த காலங்களில் இசைக் கருவிகள், மிகுந்த வன்மையான ஒலி எழுப்புவனவாகவே அமைந்திருந்தன. மனிதனின் நாகரிகம் வளரவளரப் பல்வேறு வகையான இசைக்கருவிகள் தோன்றின.

உலகில் இசைக்கப்படும் எல்லா இசைக்கருவிகளுக்கும் அடிப்படையான இசைக்கருவிகள் கிழக்கு நாடுகளில்தாம் தோன்றின. பண்டைத் தமிழகத்தில் இசைக்கருவிகள் நான்கு வகைகளாகப் பிரிக்கப்பட்டன. அவை தோற்கருவிகள், துளைக்கருவிகள், நரம்புக் கருவிகள், கஞ்சக் கருவிகள் எனப்படும். இந்நான்கு வகைக் கருவிகளும் சேர்ந்து இசைக்கும் பொழுது இசையை மிடற்றினால் பாடுபவரின் ஒலியுடன் சேர்ந்து 'பஞ்சமாசத்தம்' எனப்பட்டது. பேரிகை, படகம், இடுக்கை, உடுக்கை, மத்தளம், சல்லி, கரடி முதலியன தோற் கருவிகள். வங்கியம் கொம்பு, தாரை, குழல் (குறுங்குழல், நெடுங்குழல்) காளம், சங்கு முதலியன துணைக்கருவிகள். யாழ், வீணை, கின்னரி (கின்னரம்) முதலியவை நரம்புக் கருவிகள். கைமணி, தாளம், கஞ்ச தாளம், கொண்டி (கொடி) முதலியன கஞ்சக் கருவிகள். பஞ்சமரபு என்னும் பண்டைய இசைத் தமிழ் நூல், பாடகர் பாடுவது மிடற்றுக் கருவி என்று குறித்துள்ளது.

மேற்குறிப்பிட்ட வகைப்படுத்தல்களை யொட்டிய மேனாட்டு இசைக் கருவிகளும், இசைக்கருவிகளினின்று எழும் ஒலிக்கேற்ப ஐந்து வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

**இடியோபோன்கள்:** தானே ஒலி எழுப்பக் கூடியவை (**Idiophones**).

**காற்று ஒலிக் கருவிகள்:** ஏரோபோன்கள் (**Aero-**

phones) சாக்சோபோன், மவுத்து ஆர்கன், பைப்பு, ஆர்மோனியம்.

மெம்பரபோன்கள்: தோற்கருவிகள், திரம் (Drum).

கார்டோ போன்கள்: (Chordophones) நரம்புக் கருவிகள், இலியூட்டு, இலயர், ஆர்ப்பு.

எலக்டிரோபோன்கள்: மின் உதவியால் ஒலியை மிகுதியாகக் கொடுக்கும் கருவிகள்.

இசைக்குரிய கால அளவுகளைத் தீர்மானிப்பது தாளமே ஆகும். தாளம் முறைமாறினால் இசை மாறும். இசைக்குத் தாளமே உயிர் எனப்படும். இசைபாடுவோரே தம் கைகளினால் தாளம் போடுவதற்கு மாறாக இசைக்கருவியின் உதவியினால் தாளம் போடத் தொடங்கினர்.

தோற்கருவிகள் இசைக்குத் துணையாகவும் செய்திகளை ஓரிடமிருந்து மற்றோரிடம் அனுப்புவதற்கும் பயன்பட்டன. அரசர்களின் ஆணைகள், கொள்ளைக்காரர்களின் வருகை போன்ற செய்திகள் தோற் கருவிகளால் அறிவிக்கப்பட்டன. சில தோற் கருவிகள் தாமே முழங்குவன (தமருகம், உடுக்கை போன்றவை). குச்சியினால் ஒருபக்கம் அடித்துத் தாக்குவதாலும் மறுபக்கம் தடவி வருடி உராய்வதாலும் முழங்குவது மற்றொரு வகை. (பெருமாள் மாடு வாத்தியம்). இக்கருவிகளை ஒரு முகமுடைய கருவிகள் என்றும் பலமுகமுடைய கருவிகள் என்றும் பிரித்துக் கூறலாம். உடுக்கை, பஞ்சமுக வாத்தியம் போன்ற தோல் மட்டில் பரப்பப்பட்ட மையமுடைய வெவ்வேறு வகையான முகமுடைய கருவிகள் என்றும் அவற்றை வகைப்படுத்தலாம். மிருதங்கம், தவில், கஞ்சிரா போன்றவை இசைக் கச்சேரிகளில் பயன்படுத்தப்படுகின்றன. நகரா, பேரி போன்றவை வேறு வகைகளில் பயன்படுத்தப்படுகின்றன. தோற் கருவிகளுள் முழவு, வன்மை மென்மை சமம், முதல், இடை, கடை, உத்தமம், மத்திமம், அதமம், நாள், காலம், வீரம், அகம், அகப்புறம், புறம், புறப்புறம், பன்மை என்னும் 17 முறைமைகள் உடையதாகும். முழவுகளின் பெயர்களைப் பஞ்ச மரபு பின்வருமாறு தொகுத்துரைக்கிறது. பேரிகை, படகம், இடக்கை, உடுக்கை, மத்தளம், சல்லிகை, கரடிகை, திமிலை, குடமுழா, தக்கை, கணப்பறை, தமருகம், தண்ணுமை, தாவில் தடாரி (தவில்), அந்தரி, முழவு, சந்திரவளையம், மொந்தை, முரசு, கண்விடுதூம்பு, நிசாளம், துடுமை, சிறுபறை, அடக்கம், தகுணிச்சம், விரலேறு, பாகம், தொக்கு உபாங்கி (தொக்கவுபாங்கம்) துடி, பெரும்பறை ஆகிய முப்பதும் தோற் கருவிகளான முழவுகளாகும். இவை அக முழவு, அகப்புறமுழவு, புற முழவு, புறப்புறமுழவு பண்ணமை முழவு, நாண் முழவு, காலை முழவு என ஏழு வகைப்படும் (சிலம்பு-உரை). முழவுகள் வன்மை, மென்மை, சமம், தலை. இடை, கடை, வீரம் என ஏழு வகைப்படும். இவற்றுள் வன்மைக் கருவிகள் நிசாளம், துடுமை, முரசு, பேரிகை, தேசி, திமிலை, குடமுழா பாகம், (தப்பு) கணப்பறை, அடக்கப்பறை, சிறுபறை, மொந்தை, பெரும்பறை நாழிகைப்பறை. துடி என்னும் பதினைந்தும் ஆம் எனக் கூறுவர். தக்கை, குடுக்கை, தகுணிச்சம், தண்ணுமை, உடுக்கை, பாங்கி, (விரலேறு பாங்கி) முழவு (அந்தரி முழவு), சந்திரவளையம், மொந்தை தடாரி, (பைந்தொழில் தடாரி, தூம்பு, (கண்விடு தூம்பு) தமருகம் என்னும் பன்னிரண்டும் மென்மைக் கருவிகள். மத்தளம், சல்லி, படகம், கரடி என்னும் நான்கும் சமக் கருவிகள். கூத்த நூல் முழவை அகம், புறம், அகப்புறம், புறப்புறம், பன்மை, நாள் என ஆறாகக் கூறுகிறது. மத்தளம், சல்லி, இடக்கை, கரடிகை, பேரிகை, படகம், குடமுழவம் என்னும் ஏழும் தலைக் கருவிகள் (உத்தமக் கருவிகள்) ஆகும். தண்ணுமை, தக்கை, உடுக்கை, தகுணிச்சம் கண் விடு தூம்பு, விரலேறு, தமருகம், தடாரி, துடி, உபாங்கி, அமுதகுண்டலி, அந்தரி முழவு ஆகிய பன்னிரண்டும் இடைக்கருவிகள் (மத்திமமான கருவி). பறை, பாகம், சிறுபறை, அடக்கம் என்னும் நான்கும் அதமமான கடைக்கருவி. முரசு, நிசாளம், திமிலை, துடுமை என்னும் நான்கும் பன்மை முழவு. நாழிகைப்பறை என்பது நாள் முழவு. துடி என்பது காலை முழவு.

மத்தளத்திற்கு அதிதேவதை நான்முகன். சல்லிக்கு அதிதேவதை நாராயணன். ஆவஞ்சிக்கு அதிதேவதை உருத்திரன். இடக்கையினால் வினைக் கிரியைக்கு இசைக்கப்படுவதால் இடக்கை எனப் பெற்றது. முதற் கருவிகள் ஏழும் பிரமன், விட்டுணு உருத்திரன் ஆகியோர் மூவருக்கும் இசைக்கப்படும். இடைக்ககருவிகள் பன்னிரண்டும் வயிரவன், முருகன், துர்க்கை ஆகிய மூவருக்கும் இசைக்கப்படும். காளி சாத்தன், காடுகாள் என்னும் மூவருக்கும் கடைக் கருவிகள் இசைக்கப்படும். மூவேந்தருக்கும் வீர முழவுகள் ஒலிக்கப்படும்.

முழவுகள் எந்த மரங்களினால் செய்யப்பட வேண்டும் என்பதும் அவற்றின் அளவுகள், அவற்றினின்று பிறக்கும் தாளச் சொற்கள், அச்சொற்களுக்குப் பிறப்பிடமான எழுத்துகள் ஆகியனவும் பஞ்ச மரபில் விளக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

நரம்புக்கருவிகள் மீட்டுக்கருவிகள், வில் கருவிகள் என இருவகைப்படும். யாழ், வீணை, கோட்டு வாத்தியம், சிதார், சரோது, சுரசிங்காரம், மாண்ட

லின், சிதார், ஆர்ப்படி போன்ற கருவிகளை மீட்டுக் கருவிகளாகக் கூறலாம். வயலின், சாரங்கி, தில் ரூபா போன்ற கருவிகளை வில் கருவிகளுக்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம். குழல், கிளாரினெட்டு, நாகசுரம், சுந்தரி, செனாய், சங்கு, கொம்பு போன்ற கருவிகள் துளைக்கருவிகள் ஆகும்.

இசைக்கருவிகள் வேறு அடிப்படைகளிலும் வகைப்படுத்தப்படலாம். தம்புரா, ஒத்து, தோனை, ஏக்தார் போன்றவை சுருதிக் கருவிகள். இக்காலத்தில் சில இசைக்கருவிகள் இசை நிகழ்ச்சிகளில் முதன்மையான இசைக் கருவிகளாக அமைகின்றன. (எ-டு. வயலின், வீணை, நாகசுரம், குழல், கோட்டு வாத்தியம், சிதார்). கடம், தவில், கஞ்சிரா போன்ற கருவிகள் இசையின் துணைக் கருவிகளாக மட்டிலுமே இசைக்கப்படுகின்றன. குடமுழா, திருச்சின்னம், பூரி, சங்கு, பஞ்சமுக வாத்தியம், துந்துபி, தாரை, செண்டை, சுத்தமத்தளம், கனகதப்பட்டை போன்ற கருவிகள் கோவில்களில் மட்டிலுமே இசைக்கப்படுகின்றன. தந்திபானை, கும்மடி, வில்லடிக் கருவி, சக்கை, சிப்ளா போன்றவை நாட்டுப் புறங்களில் இசைக்கப் படுகின்றன. கிளாரினெட்டு என்னும் மேனாட்டு இசைக்கருவி நம் நாட்டில் எல்லா இடங்களிலும் இசைக்கப்படுகிறது. தாளக் கருவிகளுள் மோர்சிங்கு, சலதரங்கம் போன்றவைகளைக் குறிப்பிடலாம். இக்காலத்தில் நம்நாட்டில் விளங்கும் தோற் கருவிகளுள் மிருதங்கம், தபலா, தோலக்கு, தவில் போன்றவைகளைக் குறிப்பிடலாம். தென்னிந்தியாவில் பெரும்பாலும் இசை நிகழ்ச்சிகளில் இசைக்கப்படும் தோற்கருவி மிருதங்கம் ஆகும். இக்கருவியின் அமைப்பு இதில் இனிமையான ஒலியை எழுப்பக்கூடிய வகையில் உள்ளது. இதனைப் போன்றே தபலாவும் இனிமையான ஒலியை எழுப்ப வல்லது. இவை இசைக்கு மட்டிலுமன்றி நடனத்திற்கும் தாளக்கருவிகளாக இருக்கின்றன. இசைக்கருவிகளை அவற்றின் ஒலி எல்லைக்கு ஏற்றவாறு பல வகைகளாகப் பிரிக்கலாம். எ—டு. இரண்டரை ஒலி எல்லைக் கருவி (குழல்) மூன்றரை ஒலி எல்லைக் கருவி (வீணை) நான்கு ஒலி எல்லைக் கருவி (வயலின்). இந்திய இசைக்கருவிகளில் எல்லா ஒலிக் குறிப்புகளையும் கமகங்களையும் இசைக்க முடியும். மேனாட்டு இசைக் கருவிகளை (பியானோ, ஆர்கன், ஆர்ப்பு) ஏழரை ஒலி எல்லை வரையில் இசைக்க முடிந்தாலும் அவற்றில் கமகங்களை இசைக்க முடியாது.

நம்நாட்டு இசைக் கருவிகளுள் நாகசுரம், குழல் போன்றவைகளில் ஒரே நேரத்தில் ஒரு சுரத்தை மட்டிலுமே இசைக்க முடியும். ஆனால் வீணை, கோட்டு வாத்தியம், ஆர்மோனியம்போன்ற கருவிகளில் ஒரே நேரத்தில் இரண்டு மூன்று சுரங்களை இசைக்க முடியும். வீணை, கோட்டு வாத்தியம், ஆர்மோனியம் போன்ற கருவிகளில் ஒரே நேரத்தில் இரண்டு மூன்று சுரங்களை இசைக்க முடியும். வீணை, கோட்டுவாத்தியம், மகுடி, நெடுங்குழல் ஆகியவற்றில் சுருதியும் இசையுடன் ஒலிக்கும். வயலின், குழல் போன்ற கருவிகளில் சுருதியையும் உடன் இசைக்க முடியாது.

இசையியல் என்பது இசையைப் பற்றி அறிவியல் ஆய்வு முறையில் கற்கும் துறை ஆகும். இது இக்காலத்தில் ஒரு தனித் துறையாக அமைந்துள்ளது. இசைப் புலவர்கள், இசைக் கருவிகள், இசை வகை, இசைக் குறியீடு போன்றவைகள் இசையியல் (Musicology)என்னும் துறையினுட்பட்ட பொருள்களாகும். பிரெடரிக் கிரிசாண்டர் (Friedrich Chrysander) என்னும் செருமானிய இசை வல்லுநர், கி.பி. 1863-இல் இசையியல் (Musicolgy) என்னும் சொல்லை (Musikwissenschaft) முதன்முதல் உருவாக்கினார். அறிவியல் துறைகளைப் பயிலும் முறையில் தொடக்கம், வளர்ச்சி என்ற படிப்படியான நிலைகளில் இசைத் துறையையும் பயின்று, உலகெங்கிலுமுள்ள இசைப் புலவர்களின் படைப்புகளை ஆய்வு செய்து, விரிவான முறையில் இசையியலை அமைகக வேண்டும் என்று கிரிசாண்டர் முயற்சி செய்து, அதில் வெற்றி கண்டார். அவர் பாக்கு (Bach) ஆண்டெல் (Handel) போன்ற இசைப் புலவர்களின் இசைப் படைப்புகளை முழுமையாகவும் ஆழ்ந்தும் ஆராய்ச்சி செய்தார். இவரைப் பின்பற்றிப் பல இசை வல்லுநர்கள், இசை ஆராய்ச்சிகள் நடத்தி இசைக் களஞ்சியம் உருவாக்கினர். இது ஆக்சுபர்டு இசை அகராதி (Oxford Dictionary of Music) என இரு தொகுதிகளாக வெளிவந்தது. உல்பிரிட்சு (Woolbridge) என்பவர் இதனை 1901-ஆம் ஆண்டு வெளியிட்டார். கிடோ ஆட்லர் (Guido Adler) என்பவர், 'ஆசுத்திரியாவின் இசை நினைவுச் சின்னங்கள்' (Monuments of Music in Austria) என்னும் பெயரில் 80 இசையியல் தொகுதிகளைக் கி.பி. 1894-இல் வெளியிட்டார். இவை உலகெங்கிலும் இசைக் களஞ்சியம் இயற்றும் கலைக்குத் தொடக்கமாயின.

இக்காலத்தில் இன இசையியல் (Ethnomusicolgy) என்னும் துறை, மேனாடுகளில் பெருமளவில் இசைக் கல்லூரிகளில் கற்றுத் தரப்படுகிறது. இது மானிடவியல், சமூகவியல், மொழியியல், இயற்பியல் போன்ற துறைகளுடன் நெருக்கமான தொடர்புடையதாகும். பன்னாட்டு இசையின் வகைகள், முறை, தொடக்கம், பன்னாட்டு இசைக் கருவிகள், இசை வல்லுநர்கள் ஆகியவை பற்றிய முழுமையான அறிவு

பெற்றவர்கள் இசையியல் வல்லுநர் (Musicologist) என்று குறிப்பிடப்படுகின்றனர்

துணைநூல்கள்:

ஆபிரகாம் பண்டிதர், கருணமிருத சாகரம், தஞ்சாவூர், 1917.

அறிவனார், பஞ்சமரபு, (பதி.) வெ.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர், ஈரோடு, 1975.

தனபாண்டியன், து.ஆ., புதிய இராகங்கள், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1985.

Sambamurthy, P., A Practical Course in Karnatic Music, Indian Music Publishing House, Madurai, 1982.

# பொருளடைவு

# கலைச்சொற் பட்டியல்

| | | |
|---|---|---|
| அகக்காட்சி | ... | Intuition |
| அகத்தடை | ... | Personal Block |
| அகத்தேற்றம் | ... | Introjection |
| அகநிலைக் கொள்கை | ... | Subjectivism |
| அகமுகம் | ... | Introversion |
| அகவல் நடை | ... | Blank Verse |
| அகவிலைப்படி உயர்வு | ... | Dearness Allowance |
| அடிப்படைப் பண்புகள் | ... | Cardinal Traits |
| அடையும் வகையினர் | ... | The Getting Type |
| அடைவு உருவகம் | ... | Achievement Imagery |
| அடைவுக் கருப்பொருள் | ... | Achievement Thema |
| அடைவுத் தேவை | ... | Need Achievement |
| அண்ணவரைவி | ... | Palatograph |
| அமைப்பியல் முறை | ... | Structural Approach |
| அயன்மையாதல் இயங்குமுறைகள் | ... | Alienation Processes |
| அரவணைப்புத் தேவை | ... | Need Nurturance |
| அலை வரைவி | ... | Kymograph |
| அழகியல் தேவை | ... | Aesthetic Need |
| அழிவாசை | .. | Death Wish |
| அளவையியல் | ... | Logic |
| அறக்கொடை | ... | Charitable endowment |
| அறவியல் | ... | Ethics |
| அறிஞர் புறப்பெயர்ச்சி | ... | Brain — Drain |
| அறிதல்சார் உளவியல் | ... | Cognitive Psychology |
| அறிதல்சார் மானிடவியல் | ... | Cognitive Anthropolog; |
| அறிதல்சார் முரண்பாடு | ... | Cognitive Dissonance |
| அறிதுயில் | ... | Hypnosis |
| அறிதுயில் பகுப்பாய்வு | ... | Hypnoanalysis |
| அறிதுயில் மருத்துவமுறை | ... | Hypnotherapy |
| அறிமுகவிழா | ... | Initiation |
| அறியொணாமைக் கொள்கை | ... | Agnosticism |
| அறிவாராய்ச்சியியல் | ... | Epistemology |
| அறிவுசார் சட்டமுறை | ... | Rational Legality |
| அறிவுப்புயல் | ... | Brain Storm |
| அறிவு மடக்கம் | ... | Brain Washing |
| அறிவுமுதற் கொள்கை | ... | Rationalism |
| அறிவுரை பகர்தல் | ... | Counselling |
| அனுபவ வழிக் கொள்கை | ... | Empiricism |
| அனைத்திறைக் கொள்கை | ... | Pantheism |
| ஆக்க ஆசை | ... | Life-Wish |
| ஆக்கநிலையிருத்தம் | ... | Conditioning |
| ஆக்கும் வகையினர் | .. | Productive Type |

| | |
|---|---|
| ஆட்சி வேண்டாக் கொள்கை | ... Anarchism |
| ஆண்மையழிப்பு அச்சம் | ... Castration Anxiety |
| ஆணைக்குழு | ... Commission |
| ஆணைச் சட்டம் | ... Ordinance |
| ஆணையுரிமை | ... Authority |
| ஆதாரக் கல்வி | ... Basic Education |
| ஆதாரப் பண்புகள் | ... Source Traits |
| ஆதிக்கப் பொருளாதாரம் | ... Command Economy |
| ஆதிக்கம் | ... Domination |
| ஆதிக்கம்-வலியுறுத்தம் | ... Dominance - Assertiveness |
| ஆதிக்குடி | ... Primitive Tribe |
| ஆப்பு வடிவ எழுத்துகள் | ... Cuneiform Script |
| ஆய்வுப் பயணம் | ... Exploration |
| ஆயத்தீர்வை | ... Sonagram |
| ஆயுள்காப்பீடு | ... Life Insurance |
| ஆவணம் | ... Document |
| ஆவியுலகக் கோட்பாடு | ... Animism |
| ஆளிடை | ... Interpersonal |
| ஆளுமை | ... Personality |
| இசைவணி | ... Onomatopoeia |
| இட-நேரக் கோட்பாடு | ... Space-time Theory |
| இடைத்தரகர் | ... Middle man |
| இடைநிலை அழுத்தம் | ... Beta Press |
| இடைப்பனிக்காலம் | ... Interglacial Period |
| இடையுறவுப் பகுப்பாய்வு | ... Transactional Analysis |
| இணங்குவித்தல் | ... Persuasion |
| இணைத்தறிதல் | ... Apperception |
| இணைப்பு அழுத்தம் | ... Press Unity |
| இணைப்புத் தேவை | ... Need Affiliation |
| இணையடிக் குறள் | ... Heroic Couplet |
| இம்மை மறுமைக் கோட்பாடு | ... Eschatology |
| இயக்க ஆய்வுத் திறன் | ... Clairvoyance |
| இயங்குமுறைச் சிந்தனை | ... Primary Process Thinking |
| இயல்புநிலை | ... Normality |
| இயல்பு வகையினர் | ... The Normal Persons |
| இயற்கைச் சட்டம் | ... Natural Law |
| இயற்கைப் பால் பகுப்பு | ... Natural gender |
| இரகசியச் சங்கங்கள் | ... Secret Society |
| இரட்டைக் கூறு | ... Dyad |
| இராணுவ நீதிமன்றம் | ... Court-Martial |
| இருபாலினத் தன்மை | ... Androgyny |
| இருமொழி வழக்கு | ... Bilingualism |
| இல்பொருட் காட்சிகள் | ... Hallucinations |
| இளங்குழவித்தனம் | ... Infantilism |
| இளநிலைக் கிளர்ச்சி | ... Hypomania |

| | | |
|---|---|---|
| இறப்புப் பட்டியல் | ... | Mortality Schedule |
| இறுக்க உளம் | ... | Protension |
| இறுதி விருந்துச் சடங்கு | ... | Eucharist |
| இறுதிவிழா | ... | Mass |
| இறைமை | ... | Sovereignty |
| இன்பவிதி | ... | Pleasure Principle |
| இன அறிவியல் | ... | Ethnoscience |
| இன இசையியல் | ... | Ethnomusicology |
| இன உயிரியல் | ... | Ethnobiology |
| இன ஒப்பாய்வியல் | ... | Ethnology |
| இனச்சொற் பொருளியல் | ... | Ethnosemantics |
| இனத்தாவரவியல் | ... | Ethnobotany |
| இனப்பரப்பியல் | ... | Ethnography |
| இனமையக் கொள்கை | ... | Ethnocentrism |
| இனவிலங்கியல் | ... | Ethnozoology |
| ஈரேழ்வரிப்பாக்கள் | ... | Sonnets |
| உட்செறிவு நிலை | ... | Latency Stage |
| உட்துடிப்பு வயம் | .. | Impulsive |
| உட்பொருள் | ... | Theme |
| உடல்சார் கருத்துநிலை | ... | Bodily self |
| உடன்பாட்டு விதியமைப்புகள் | ... | Positive Prescriptions |
| உணர்ச்சி மாற்ற நிலை | ... | Affectothymia |
| உணர்ச்சி மாறா நிலை | ... | Sizothymia |
| உய்த்துணர் அளவை | ... | Deduction |
| உயர்நிலைத் தேவை | ... | Meta Need |
| உயர்நிலைப் பிறழ்வு | ... | Metapathology |
| உயர்பாலூட்டி | ... | Primate |
| உயிரியம் | ... | Animatism |
| உருத்திரிபுகள் | ... | Distortions |
| உருபனியல் | ... | Morphology |
| உரைக்கோவைக் கூட்டாய்வு | ... | Symposium |
| உள்ஊக்கு திறன் | ... | Libido |
| உள்ளன்பு | ... | Affection |
| உள இயங்கியல் | ... | Psychodynamics |
| உள இறுக்கம் | ... | Ergic tension |
| உளஉருச் சின்னங்கள் | ... | Archetypes |
| உள ஊக்குதிறன் | ... | Psychic Energy |
| உளக்கூறு மாற்றம் | ... | Hysteria |
| உளச்சிதைவு | ... | Schizoid |
| உளநோய் மருத்துவர் | ... | Psychiatrist |
| உளப்பகுப்பு | ... | Psychoanalyis |
| உளப்பிணி | ... | Psychosis |
| உளப் பிறழ்வு நிலை | ... | Psychopathic Deviance |
| உளப்பெயர்ச்சி | ... | Transference |
| உளப் போராட்டம் | ... | Inner Conflict |

உளமருத்துவம் ... Psychotherapy
உளமுன்னேற்பாட்டு வாதம் ... Psychic Determinism
உளவயது ... Mental Age
உளவெளியீட்டு முறை ... Catharsis
உற்சாகமற்ற-காரிய மனப்பான்மை ... Sober-Desurgency
உற்றுநோக்கல் ... Observation
உறுதிப்பாங்கு ... Assurance
எதிர்த்து நிற்றல் ... Confrontation
எதிர்பாலின உறவு நிலை ... Hetero Sexual Stage
எதிரிடைப் பரிமாற்றம் ... Reciprocal Exchange
எல்லை கடந்த தேவை ... Trancendence Need
ஏற்பு ஆளுமை ... Receptive Type
ஏற்புத் தன்மை ... Validity
ஏற்ற இறக்க உணர்வுகள் ... Status Consciousness
ஐயக் கொள்கை ... Scepticism
ஒடுக்கல்கள் ... Repressions
ஒத்துணர்வு ... Empathy
ஒப்பந்தம் ... Policy
ஒப்பார் குழு ... Peer Group
ஒப்புநோக்குப் பட்டியல் ... Check list
ஒருங்கமைவுக் குறை ... Low Integrative
ஒருமைப்பாடு ... Integration
ஒருவழிப் படிமலர்ச்சி ... Unilinear Evolution
ஒலிமாலை வரைவி ... Spectrogram
ஒலியன் ... Phonemes
ஒலியியல் ... Phonetics
ஒன்றுதல் ... Identification
ஒன்றுதல் நெருக்கடி ... Identity Crisis
ஓய்வூதியம் ... Pension
கட்டிணைப்பு ... Synthesis
கடனாளி ... Debtor
கடின உளம் ... Tough Mindedness
கணக்கெடுப்பு ... Inventory
கணிப்பொறி ... Computer
கணிப்பொறித் தரவு வங்கி ... Computerised Data Bank
கணிப்பொறி முறை ... Computer System
கருத்துக் கட்டமைப்புகள் ... Ideographic Constructs
கருத்துத் திரிபு ... Paranoid
கருத்துத் திரிபு நோய் ... Paranoia
கருத்துப் பட்டறை ... Work-Shop
கருத்து முதற்கொள்கை ... Idealism
கருத்துவயமாதல் ... Suggestibility
கருவளம் ... Fertility
கருவிசார் செயல் ... Instrumental activity
கருவிமொழி ... Meta-Language

கல்வித் தொழில்நுட்பவியல் ... Educational Technology
கலப்புப் பொருளாதாரம் ... Mixed Economy
கழிவிரக்கம் ... Repentence
கழிவு நிலை ... Anal Stage
கற்பனை நோய்க் கோளாறு ... Hypochondriacs
காட்சி வில்லை ... Slide
காப்பீடு ... Insurance
கால்வழி ... Clan
காலப்பாணி ... Fashion
கால வயது ... Chronological Age
கிளர்ச்சிச் சோர்வு உளப்பிணி ... Manis Depressive Psychosis
கிளைமொழி ... Dialect
குலக்குறி ... Totem
குழுக் கற்பித்தல் முறை ... Team Teaching
குழுச்சார்பு ... Group Adherence
குற்றப்பாங்கு ... Guilt Proneness
குற்றவாளிப் பழங்குடி ... Criminal Tribe
குறிக்கணக்கியல் ... Algebra
குறியீட்டு முறை ... Sign System
குறியீடு ... Symbol
குறுநாடகம் ... Interlude
குறைபாட்டுத் தேவை ... Deficiency Need
கூட்டுச் சொற்கள் ... Compounds
கூர்நோக்கு ... Observation
கூரறிவற்ற ... Artless
கையெழுத்தியல் ... Graphology
கொள்கைப் பொருளாதாரம் ... Predatory Economy
சந்தர்ப்ப வயம் ... Expedient
சமூக அகமுகம் ... Social Introversion
சமூகத் தன்முனைப்பு ... Ego-Social
சமூக முதிர்ச்சி ... Social Maturity
சமூகவியல்பாதல் ... Socialisation
சார்பெண்ணங்கள் ... Prejudices
சில்லு ... Flake
சில்லோர் போட்டி ... Oligopoly
சுங்க வரி ... Customs Duty
சுதந்திரத் தேவை ... Need Autonomy
சுமை கூலி ... Freight
சுரண்டல் ... Exploitation
சுரண்டல் பொருளாதாரம் ... Prarasitic Economy
சுவைத்தல் நிலை ... Oral Stage
சூரிய நாள் ... Solar Day
சூழ்ச்சித் திறத்துடன் கையாளுதல் ... Manipulation
செயல் வெளியீடுகள் ... Tasks

| | |
|---|---|
| சேமிப்பு வகையினர் | ... Hoarding Type |
| சொல் இயைபு | ... Word Association |
| சொல்லமைப்பு | ... Word order |
| சொற்பொருள் மருத்துவம் | ... Semantic Therapy |
| சோர்வுப் பிணி | ... Depression |
| தகாவட்டி | ... Usuary |
| தகு முயற்சிப் பருவம் | ... Propriate Strining Stage |
| தடையிலா இயைபு | ... Free Association |
| தண்டனை விருந்துகள் | ... Punitive Primitive Feasts |
| தலைமுறைப் பிளவுகள் | ... Generation Gaps |
| தலைமை ஏற்புத் தேவை | ... Need Deference |
| தலையமைப்பியல் | ... Phrenology |
| தவிர்த்தல் வகையினர் | ... The Avoidance Type |
| தளர் உளம் | ... Alaria |
| தற்கருத்து | ... Self-Concept |
| தற்பாலுணர்ச்சி | ... Homosexuality |
| தன் ஐயப்பாடு | ... Psychasthenia |
| தன் மதிப்பு நிலை | ... Self-Esteem |
| தன்வழிபாட்டு ஆளுமை | ... Narcissistic personality |
| தன்னுரை | ... Monologue |
| தன்னைத் தரமிடுதல் | ... Self-Rating |
| தனிமங்கள் | ... Elements |
| தனிமைப்படுத்துதல் | ... Isolation |
| தாக்காற்றல் | ... Force |
| தாராள மனப்பான்மை | ... Generosity |
| திட்ட விலக்கம் | ... Standard Deviation |
| திரிவு | ... Inflection |
| திறனாய்வு | ... Critical Study |
| தீவிரச் செயற்பாடு | ... Radicalism |
| துணை ஆகாயப்படை | ... Auxiliary Air Force |
| துணைவினை | ... Auxiliary Verb |
| துறைமுகக் கட்டணம் | ... Dock Dues |
| துன்புறுத்தும் வேட்கை | ... Necrophilous Orientation |
| தூண்டல் | ... Stimulus |
| தேர்ந்த பேசாமை | ... Selective Silence |
| தேரறிவு | ... Shrewdness |
| தேவை அடுக்கு | ... Need Hierarchy |
| தேவை ஒருங்கிணைவு | ... Need Integrated |
| தொகுப்பு இசை | ... Polyphony |
| தொடர் தேர்வு நிலை | ... Continuous Evaluation |
| தொடர்பு வழிக் கற்பித்தல் முறை | ... Communicational Approach |
| தொடரியல் | ... Syntax |
| தொல் பழங்குடி | ... Primitive Tribe |
| தொன்மைச் சமுதாயம் | ... Primitive Society |
| தொன்மைப் பொருளியல் | ... Classical Economics |

நடத்தை ... Behaviour
நடத்தைக் கொள்கை ... Behaviourism
நடத்தை மருத்துவம் ... Behaviour Therapy
நடிப்பு ஆளுமை ... Histrionic personality
நம்பகத் தன்மை ... Reliability
நல்லறிவு நலம் ... Sanity
நல்லுணர்வு மெல்லுணர்வு ... Sense & Sensibility
நல அரசு ... Welfare-State
நனவடங்கு ... Pre-conscious
நனவிலி ... Unconscious
நனவு அனுபவ இயல் ... Phenomenology
நிரல் வழிக் கற்றல் ... Programmed Learning
நிலநடுவரை ... Equator
நுண்ணறிவுக் குறை ... Less Intelligent
நுண்ணறிவு மிகை ... High-Intelligent
நுண்புலக் கவிதை ... Metaphysical Poetry
நெகிழ் கருத்துக் கட்டமைப்புகள் ... Permeable Constructs
நெகிழ்வுளம் ... Tendermind
நேர்காட்சிக் கொள்கை ... Positivism
நேர்முக முறை ... Direct Method
நேரியல் உறவு ... Positive Correlation
நோக்கு ... Perception
நோயறி புள்ளியியல் ... Diagnostic Statistics
பகட்டுத் தன்மை ... Flamboyance
பண்படா உளம் ... Id
பண்பாட்டுக் கூறுகள் ... Cultural Traits
பண்பாட்டுச் சூழலியல் ... Cultural Ecology
பண்பாட்டுப் பரப்புகள் ... Culture Areas
பண்பாட்டு முழுமை ... Cultural Whole
பண்புத் தொகுதி உருச்சட்டம் ... Repertary Grid
பணக்கொடை ... Gratuity
பணப் பெயர்ச்சி ... Money-Drain
பணவீக்கம் ... Inflation
பணியிடைப் பயிற்சி ... In-Service Education
பணிவுத் தேவை ... Need Abasement
பணிவு-தாக்குதல் ஆளுமை ... Passive-Aggressive-Personality
பதற்றம் ... Anxiety
பதிலிடு பெயர்கள் ... Pronouns
பயன்வழிக் கொள்கை ... Utilitarianism
பயன்வழிக் கோட்பாடு ... Pragmatism
பரிகாரம் ... Atonement
பல்கணவர் மணமுறை ... Polyandry
பல்மணம் ... Polygamy
பல்மனைவி மணமுறை ... Polygyny
பல சகோதரர் கணவர்முறை ... Adelphic or Fraternal polyandry

பல சகோதரியர் மனைவியர் முறை ... Sororal polygyny
பலவழிப் படிமலர்ச்சி ... Multilinear Evolution
பழங்குடி ... Tribe
பழமைப்பாங்கு ... Conservatism
பற்றாணை அலுவர்கள் ... Warrant Officers
பன்மை உருபு ... Plural Suffix
பனிக்காலம் ... Glacial period
பார்த்துக் கற்றல் ... Imitation
பால் இயல்பூக்கம் ... Sex Instinct
பால் உணர்வு நிலை ... Phallic Stage
பால் உறுப்பு நிலை ... Genital Stage
பிணையாளர் ... Surety
பிரிவு விழைதல் தேவை ... Need Succourance
பின் ஒட்டு ... Suffix
பின்னோக்கக் கற்பனைகள் ... Regressive Fantasies
பின்னோக்கு ... Regression
புதைபடிவம் ... Fossil
புலன் மகிழ்ச்சி ... Sensual Pleasure
புலன்வழி அனுபவக் கொள்கை ... Empricism
புலனுணர்வு ... Sensation
புறத்தடை ... World Block
புறத்தேற்றச் சோதனை ... Projective Test
புறமுகம் ... Extroversion
புறவயத் தன்மை ... Objectivity
புனிதச் சடங்கு ... Sacrament
பெயர்ச்சி விளைவு நீக்குதல் ... Counter Transference
பெயரீட்டு விழா ... Baptism
பெருங்கால்வழி ... Phratry
பொது அங்காடி ... Common Market
பொதுவுடைமைக் கொள்கை ... Communism
பொய் அளவை ... Lie Scale
பொருள் இணைத்தறி சோதனை ... Thematic Apperception Test
பொருள்முதல் அணுகுமுறை ... Materialistic Approach
பொருள் முதற் கொள்கை ... Materialism
மகளிர் உளவியல் ... Feminine psychology
மண இணைவு ... Match-making
மணத்துறவு ... Celibacy
மதனி மணம் ... Levirate
மதிப்பீடு ... Evaluation
மயக்கப் பகுப்பாய்வு ... Narcoanalysis
மரபு ... Tradition
மரபுச் சட்டம் ... Customary Law
மலட்டுத்தன்மை ... Sterility
மறுகாப்பீடு ... Re-Insurance
மறுமலர்ச்சி ... Renaissance

